# மாமலர் - 1

## 1. காற்றின் களி

இமயத்தின் அடிவாரத்தில் கோமதி நதிக்கரையில் அமைந்த கோதவனம் என்னும் காட்டில் கிளைவிரித்துப் பரந்து சிறுபசுஞ்சோலைகளைச் சூடி நின்ற சாலமரங்கள் நான்கை ஒன்றுடன் ஒன்று மூங்கில்களால் கட்டி தளமிட்டு அதன் மேல் எழுப்பப்பட்ட ஏழு அறைகள் கொண்ட குடிலில் பாண்டவர்கள் தங்கியிருந்தனர். அடுமனையும் மகளிர்அறையும் தனியாக வேறு இரு சாலமரங்களில் இருந்தன. அவற்றுக்குச் செல்ல மூங்கில்களால் ஆன பாலம் இருந்தது.

சுற்றிலும் இருந்த புதர்க்காட்டைத் திருத்தி அழகிய மலர்த்தோட்டத்தை நகுலனும் சகதேவனும் உருவாக்கியிருந்தனர். கோமதிக்குச் செல்லும் ஓடை ஒன்றை கால்திருத்திக் கொண்டுவந்து பரப்பியிருந்தனர். அதன் ஈரம்படர்ந்த பாத்திகளில் தெச்சியும் அரளியும் குருக்கத்தியும் செங்காந்தளும் தழல்சூடி நின்றன. மும்மூங்கில்நிலைகளில் இருவாட்சியும் முல்லையும் வெண்முத்துக்கள் சூடி படர்ந்தேறியிருந்தன. நந்தியாவட்டையின் நிழல்களில் பேணாமலேயே வளரும் கொடுவேரிகள் செறிந்திருந்தன.

மலர்ச்சோலையைச் சுற்றி யானைகள் தயங்கும்படி இடையளவு ஆழமுள்ள அகழி வெட்டப்பட்டிருந்தது. தாவி கடந்துவிடும் மான்களையும், இறங்கி ஏறமுனையும் இளைய எருதுகளையும் தடுக்கும்பொருட்டு காட்டுமரங்களை பெருந்தடிகளால் இணைத்துக் கட்டி வேலி அமைத்திருந்தான் பீமன். மரக்கிளைகளில் தொற்றி வந்து உள்நுழைய விழையும்

கரடிகளை அச்சுறுத்துவதற்கு மரமணிகள் கோக்கப்பட்ட சரடுகளை கிளைகளுக்குள் கரந்து கட்டியிருந்தான்.

பீமனுக்கு உகந்த குரங்குப்படை ஒன்று எப்போதும் அக்குடிலை காவல் காத்தது. உயர்ந்த மரக்கிளை ஒன்றில் திசை நோக்கி அமர்ந்திருந்த நீள்நோக்குக் குரங்கு யானையோ புலியோ நெடுந்தொலைவில் தோன்றும்போதே வயிற்றை கையால் அடித்தபடி கொப்பரைகளை சேர்த்து அறையும் ஒலியில் எச்சரிக்கைக் குரல் எழுப்பியது.

அக்கணமே அங்கு இலைச்செறிவுக்குள் வால்பற்றி இழுத்துச் சீண்டியும் ஒன்றன் மேல் ஒன்று தாவியும் விளையாடிக்கொண்டிருந்த குட்டிக்குரங்குகள் அன்னையை நோக்கி பாய்ந்துசென்று ஒற்றை உடல்தொகையாக ஆயின. கிளைக்கவருக்குள் அமர்ந்திருந்த அன்னையரும், உச்சிக்கிளைகளில் கைகால் தொங்க வால் வளைந்து நெளிய விழிசொக்கிப் படுத்திருந்த ஆடவரும் கூட்டுஒலியெழுப்பியபடி கிளையுலைய வந்து அத்தவச்சாலையை சுற்றிக்கொண்டனர்.

குரங்குகளின் ஒலி கேட்டு தன் அறையில் சுவடி நோக்கிக்கொண்டிருந்த தருமன் எழுந்து வந்து குடில் முகப்பில் நின்று “புலியா?” என்றார். “ஆம், யானை என்றால் அவை நம்மிடம் சொல்லவரா. அங்கு சென்று அதை விரட்டவே முயலும்” என்று உள்ளே அமர்ந்து அம்புகளை கூர்தீட்டிக் கொண்டிருந்த நகுலன் சொன்னான். குரங்குகள் குடிலைச்சூழ்ந்து நின்று கூச்சலிட்டன. தருமன் வெளியே சென்று கையசைத்ததும் அவர் அறிந்துவிட்டதை உணர்ந்து அவை முனகி பற்களைக் காட்டின. பின்னர் வழிநடத்திவந்த பெருங்குரங்கு திரும்பிச் சென்றது. மற்ற குரங்குகள் அதைத்

தொடர்ந்து சென்றமை காற்று இலைகளுள் ஊடாடிக் கடப்பதுபோல தெரிந்தது.

“மந்தன் இவ்வேளையில் எங்கு சென்றான்?” என்று தருமன் சலிப்புடன் கேட்டார். “இக்காட்டில் குளிர் குறைவு என்பதனால் இங்கு தங்க முடிவெடுத்தோம். இதுவோ ஊன்விலங்கும் மதவிலங்கும் செறிந்ததாக உள்ளது. நாள்தோறும் ஒன்றேனும் நாடிவருகின்றது. காடு நம் மீது வஞ்சம் கொண்டு தன் தூதர்களை அனுப்பிக்கொண்டே இருப்பதுபோல.”

ஓலையில் ஏதோ எழுதிக்கொண்டிருந்த சகதேவன் “மூத்தவர் நேற்றிரவு காட்டுக்குள் சென்றார்” என்றான். “எப்போது?” என்றார் தருமன். “அறியேன்” என்றான் சகதேவன். “எங்கு செல்கிறான் எப்போது மீள்வான் ஏதும் தெரியாது நமக்கு. அவன் நம்முடன் இருக்கிறான். நாம் அவனுடன் இல்லை” என்றார் தருமன். வெளிமேடையில் நின்றபடி காற்றில் பறந்த தன் மேலாடையை தோளில் இழுத்துப் போட்டுக்கொண்டு “இக்காட்டில் அவன் என்னதான் செய்கிறான்?” என்றார்.

“காடு அவருக்கு கற்றுத் தீராத காவியம் போல. இங்கு வந்த இவ்விரண்டாண்டுகளில் விழித்திருக்கும் கணமெல்லாம் அதை அறிந்துகொண்டே இருக்கிறார். ஒவ்வொரு நாளும் புதியதொரு செய்தியுடன் இங்கு வருகிறார்” என்றான் சகதேவன். நகுலன் புன்னகைத்து “ஆம், ஒவ்வொரு செய்தியைச் சொல்லும்போதும் அவரது பேருடலில் எழுந்து வரும் அச்சிறுவனைப்போல் நம் உளவிருப்புக்குரியது இப்புவியில் பிறிதில்லை. அவருடன் இருக்கும் வரை நமக்கு மூப்பு என்பதே இல்லை” என்றான்.

தருமன் உள்ளே வந்து “இளையோனே, நான் அவனைப் பார்த்தே நெடுநாட்களாகின்றன. அவன் குரல் கேட்டு வருவதற்குள் அகன்றுவிடுகிறான். என் விழிக்குள் இருக்கும் அவன் தோற்றம் இப்போது எப்படி மாறியிருக்கிறது என்றே நான் அவ்வப்போது வியந்து கொள்வதுண்டு. இரவில் எப்போதோ எவருமறியாமல் வருகிறான். புலரிக்குள் திரும்பிச் செல்கிறான். அவனைப் பார்த்துவிடுவோம் என்று நான்குமுறை அவன் அறைக்குள் சென்றேன். மஞ்சத்தில் அவன் படுத்த சுவடே இல்லை” என்றார்.

நகுலன் சிரித்து “அவர் இரவுகளில் வருவதும் குறைவே” என்றான். “எப்போதுதான் துயில்கிறான்?” என்றார் தருமன். “மூத்தவரே, பெருவிலங்குகள் உச்சிவெயில் எழுந்து சாய்வெயில் அணைவதுவரை புதர்களுக்குள் துயில் கொள்கின்றன” என்றான் நகுலன். “புதர்களுக்குள்ளா? நாகங்கள் நிறைந்த இக்காட்டிலா?” என்றபின் தருமன் பெருமூச்செறிந்து “ஆம், அங்குதான் அவன் நிறைவுடன் இருக்க முடியும் போலும். அவனுக்கு முலையூட்டியது நம் அன்னை அல்ல, புதர்களுக்குள்ளிருந்து இறங்கி வந்த பெருங்குரங்கு ஒன்று. அது அளித்த மெய்மை அவனுக்குள் உண்டு” என்றார்.

“அவர் காற்றின் மைந்தர்” என்றான் நகுலன். “பெருமரங்களை கடைபுழக்கவும் சுவடிலாது ஒழுகவும் அறிந்தது காற்று.” தருமன் திரும்பி குரங்குகளை நோக்கினார். ஒரு பெருங்குரங்கு கிளைநுனியில் குடிலை நோக்கியபடி அமர்ந்திருந்தது. அதன் வால்நுனி கீழே தொங்கி அதன் உள்ளோடும் எண்ணங்களுக்கேற்ப மெல்ல வளைந்து அசைந்துகொண்டிருந்தது. தருமன் “அந்த அன்னையின் குருதியின்பொருட்டே சூழ்ந்தமர்ந்து நம்மைக் காக்கின்றன

இக்குரங்குகள். முன்பு ராகவ ராமனுக்கு துணை நின்ற கிஷ்கிந்தையின் படையினர் போல்” என்றார்.

“மூத்தவர் வரும்போது தங்களை சந்திக்கும்படி சொல்கிறேன்” என்றான் நகுலன். தருமன் “நன்று” என வெளியே செல்ல சகதேவன் புன்னகைத்து குரல் தாழ்த்தி “அதற்கு தாங்கள் அவரைப் பார்த்து எத்தனை நாட்கள் ஆகின்றன, மூத்தவரே” என்றான். நகுலன் தன்னை அறியாது வாய்விட்டு சிரித்து விட்டான். “உண்மைதான். நானும் பார்த்து நெடுநாட்கள் ஆகின்றன” என்றான்.

தருமன் வெளியே குடில்முகப்பில் நின்றபடி “புலி திரும்பிவிட்டது என்று நினைக்கிறேன். மரமானுடர் தங்கள் இயல்புக்கு மீண்டுவிட்டார்கள்” என்றார். “இங்கு வந்தபோது இது மண்ணில் ஒரு விண்ணுலகு என்று தோன்றியது. இவ்வாற்றின் கரையின் குளிர்காற்றும் பசுமை மாறா செடிகளும் குடைமரங்களும் மண்ணும் மலரும் கலந்த இன்மணமும் உயர்ந்த எண்ணங்களுக்கென்றே அமைக்கப்பட்டவை என எண்ணினேன். இங்கு அமர்ந்திருக்கும் ஒவ்வொரு நாளும் தவமென்றே நினைத்தேன்.”

“...இன்று அறிகிறேன், எந்தக் காடும் எந்த மலையும் நம்மைத் தவத்திற்கு கொண்டு செல்வதில்லை. நம் உள்ளிருந்து ஊறுவதே தவமென்றாகும்” என்றார் தருமன். விழிகள் ஒளிநிழலாடிய காட்டுவெளி நோக்கி தாழ்ந்து நின்றிருக்க சற்றுநேரம் சிலைநிலை கொண்டு மீண்டு திரும்பி “இளையோரே, ஒரு முனிவனென்று என்னை எண்ணிக்கொள்ள எப்போதும் விழைந்து வந்திருக்கிறேன். இன்று நான் அடைந்த மெய்யறிதலென்பது ஒன்றே, நான் முனிவனல்ல. என் இளையோர் மீதான அன்பிலிருந்து எனக்கு விடுதலை இல்லை.

அது என் தலையல்ல, அணி என உணர்ந்ததே என் வீடுபேறு” என்றார்.

“ஆனால் உலகியலான் காட்டில் வாழ்வதென்பது எளிதல்ல” என அவர் தொடர்ந்தார். “தக்கையை நீர் என உலகியலானை காடு வெளித்தள்ளிக்கொண்டே இருக்கிறது. ஆனால் மந்தன் காட்டில் மகிழ்ந்திருக்கிறான். அவனை நகரங்கள் வெளியே தள்ளிக்கொண்டிருந்தன. அப்படியென்றால் அவன் உலகியலான் அல்லனா? ஒருவகை யோகியா?” அவர்கள் அவர் சொல்வதை கேட்டுக்கொண்டு பேசாமல் அமர்ந்திருந்தார்கள்.

“இல்லை, நீங்கள் சொல்வதைப்போல களிமாறா இளமைந்தனேதானா? மைந்தர்களுக்கு நாடென்றும் காடென்றும் வேறுபாடில்லையே! அவர்களை அக்கணம் அள்ளி ஆழ்த்தும் ஒரு சூழல் மட்டுமல்லவா அவர்கள் விழைவது?” அவர் திரும்பி குரங்கை நோக்கினார். “அல்லது இக்குரங்குபோல. இது நகர்களில் வாழ்வதை விரும்பாது. காட்டில் காட்டின் துளியென இருக்கிறது.”

அவர் நோக்கியதை உணர்ந்து அந்தக் குரங்கு கண்சிமிட்டி இடையை சொறிந்தது. பற்களை இளித்தபடி எதையோ விரல்களில் எடுத்து கூர்ந்து நோக்கியது. அதை பல்லில் வைத்துக் கடித்தபின் மீண்டும் தோள் தொய்ந்து இயல்படைந்தது. தருமன் “சலிப்பில்லாது அமர்ந்திருக்கிறது. இன்றும் நாளையும் இவ்வண்ணமே இங்கிருக்க அதனால் முடியும். இளையோனே, சலிப்படைந்த காட்டுவிலங்கை நான் கண்டதே இல்லை. நாட்கணக்கில் காத்திருக்கின்றன பூனைகளும் புலிகளும். பதுங்கி அசையாதிருக்கின்றன முயல்களும் நாகங்களும். அசைபோட்டு விழிசொக்கிக் கிடக்கின்றன காளைகளும் மான்களும்… இருத்தலே

அவற்றுக்குப் பேரின்பம். மானுடர் மட்டும் இருத்தலில் சலிப்பு கொள்கிறார்கள். இயைவதும் இயல்வதும் அல்ல, எழுவதும் செல்வதுமே தங்கள் இன்பமென்று எண்ணுகிறார்கள்" என்றார்.

"இங்கிருந்து கிளம்பிச் சென்று திசைகளை வெல்லவேண்டுமென்று தோன்றவில்லை. நான் அடைவதற்கு இதற்கப்பால் ஏதோ ஒன்று உள்ளதென்றும் இப்போது என் உளம் உணரவில்லை. நான் நினைவறிந்த நாள் முதலே அங்கு அங்கு என்று தேடிக்கொண்டிருந்தேன். அப்பயணத்தின் இறுதியில் இங்கு அமைவதெப்படி என்று தெளிந்தேன். இளையோர்களே, இன்று இச்சிறு சோலைக்கு அப்பால் நான் விழைவதெதுவும் இல்லை..."

"...இருந்தும் நாட்கள் சலிப்பூட்டுகின்றன. காலம் இழுபட்டு நீண்டு கிடக்கிறது. இருப்பதன் சலிப்பே மனிதனை காமம் குரோதம் மோகம் மூன்றுக்கும் அழைத்துச் செல்கிறது. சலிப்பின்றி இருக்கத் தெரிந்தவன் யோகி. சித்தமடக்கி சொல்லற சும்மா இருத்தலே யோகம் என்கின்றனர் முனிவர். ஒவ்வொரு ஒலித்துளியாலும் அச்சொற்களை இங்கு நான் முழுதுணர்கிறேன்" என்றார் தருமன். திரும்பி அக்குரங்கை நோக்கி "காட்டுவிலங்குகளெல்லாம் யோகிகள் போலும். விலங்காக மாறும்பொருட்டுதான் இங்கு வருகிறார்களா மெய்யுசாவிகள்?" என்றார்.

"நான் விரும்புவதென்ன என்று சென்ற சில நாட்களாக எண்ணிக்கொண்டே இருந்தேன். இந்திரப்பிரஸ்தமா? பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தியென மணிமுடி சூடி அமரும் தருணமா? யயாதிக்கு நிகரான மன்னனென சூதர்கள் பாடும் பெரும் புகழா? எது? இரக்கமற்ற எதிரியைப்போல வினாக்களை எனக்கு நானே கேட்டுக்கொண்டேன். இல்லையென்றே அகம்

சொல்கிறது. அஸ்தினபுரியில் இருக்கும் என் மைந்தரைக் காண மீண்டு செல்ல வேண்டுமென்றுகூட உள்ளம் எண்ணவில்லை. பிறகென்ன என்னுள் இருப்பது?”

கைகளைக் கட்டியபடி காற்றிலாடும் ஆடையுடன் காட்டிலைகள் ஆடிய ஒளிநிழலாட்டம் முகத்தில் ததும்ப தருமன் நின்றார். பின்பு பெருமூச்சுடன் கலைந்து “சொற்களிலாக்குவதென்றால் இப்படி கோக்கலாம். ஒவ்வொன்றையும் மீளக் கண்டுபிடிப்பதே பொருள்வய உலகின் இன்பம் எனப்படுகிறது. புதுமலர், புதுத்தளிர், புதுநிலம், புதிய எண்ணம், புதிய மனிதர்கள். புதிய எனும் சொல்லில் உள்ளது இப்புவியில் நாம் வாழும் புற வாழ்வு. இங்கெதுவும் புதிதல்ல என்று ஒருகணமும் ஒவ்வொரு கணத்துளியும் புதிதென்று மறுகணமும் மாறிமாறிக் கண்டடையும் உவகையால் நெய்யப்பட்டுள்ளது வாழ்வு” என்றார்.

“இங்கு நான் இழந்திருப்பது புதிது என உளமெழும் தருணத்தை. இதோ, இங்கிருந்து இறங்கிச் சென்றால் நான் பார்க்கும் எந்தக் கிளையில் மலர் மலர்ந்திருக்கும் என்று இப்போதே தெரிகிறது. உற்று நோக்கினால் கோமதியில் எத்தனை அலைகள் எழுகின்றன என்பதைக் கூட என் அகம் முன்னறிந்திருப்பதுபோலப் படுகிறது. இதே வானம், இதே காற்று... என் எண்ணங்கள் கூட ஒன்று மற்றொன்றென மீள நிகழ்கின்றன. இங்கு வந்த சில நாட்களில் என்னுள் எழுந்த அதே எண்ணங்களைத்தான் இப்போதும் அடைகிறேன்.”

“ஏனெனில் இப்போதும் என்னைச் சுற்றியிருக்கும் இப்பொருட்கள் மாறுபடுவதில்லை. அப்படியானால் இப்பொருட்களால் உருவாக்கப்படுவதுதானா என் அகம்? என் எண்ணங்கள் அனைத்தும் இப்பொருள்வயப் புடவியின் நீட்சிகள்

மட்டும்தானா? அறியேன்...” தருமன் எதையோ விட்டெறிவதைப்போல் கையை வீசினார்.

“சென்ற சில மாதங்களாகவே நீங்கள் நிலையழிந்திருப்பதைக் கண்டோம், மூத்தவரே” என்றான் நகுலன். “உண்மையில் இளையவர் சென்று இத்தனை நாட்களாகியும் மீளாததே அத்துயருக்குப்பின் என்று எண்ணிக்கொண்டோம்.” தருமன் துயரம் படிந்த புன்னகையுடன் “ஒருவகையில் அது உண்மை. அவனை எண்ணாமல் ஒருநாளும் துயின்றதில்லை. விழித்ததுமே அவன் எண்ணமே என்னுள் நிறைகிறது. ஆனால் அவனைப்பற்றி அச்சமில்லை. அவன் வெல்வதற்கென்று மட்டுமே பிறந்தவன். செல்லும் திசை எதுவும் அவனைப் பணியும். அடைந்து நிறைந்து கனிந்து மீள்வான். அதில் எனக்கு ஒருபோதும் ஐயம் வந்ததில்லை” என்றார்.

“ஆனால் நால்வரில் ஒருவர் என் அருகே இல்லாதபோதுகூட நான் உணரும் பெரும் இடைவெளியைத்தான் நுணுகியும் கூர்ந்தும் எண்ணிக்கொள்கிறேன். நான் முழுமையற்றவன், உங்கள் நால்வரால் நிறைக்கப்படுகையில் மட்டுமே நிலைகொள்பவன். இங்கிருக்கையில் நாம் அவனுக்காக காத்திருக்கிறோமென்ற உணர்வு இருக்கிறது. அதுவே துயர் நிறைக்கிறது. இலக்கு ஒன்று வேண்டும், செல்வதற்கும் அடைவதற்கும். அது இங்கிருக்கும் இருப்பின் பொருளை வெறும் காத்திருப்பென்று ஆக்காமல் இருக்கும் பொருட்டு மட்டுமே.”

மேலும் சொல்ல நாவெடுத்து தலையசைத்து தன்னைக் கலைத்தபின் தருமன் படிகளில் இறங்கி மலர்த்தோட்டம் நோக்கி சென்றார். காட்டுக்கொடிகளை முறுக்கிச் செய்த கயிற்றால் மரக்கிளைகளைக் கட்டி உருவாக்கப்பட்டிருந்த

படிகளில் அவர் கால்கள் பதிய அவை இறுகி மீளும் முனகலோசை கேட்டு அடங்கியது.

நகுலன் “மிகச்சரியான சொற்களில் துயரையும் சலிப்பையும் தனிமையையும் சொல்வதற்கு பயின்றிருக்கிறார். பிறந்த நாள் முதலே இதில் பயிற்சி செய்துவந்திருக்கிறார் என்பதால் உவகையையும் எழுச்சியையும் மெய்மையையும் தொடும் மொழியை அவர் அடையவே இல்லை” என்றான். சகதேவன் நகைத்து “துயரினூடாகத்தான் அனைத்தையும் அறிய வேண்டுமென்று சிலருக்கு ஊழ் அமைந்துள்ளது. அதற்கு நாம் என்ன செய்ய இயலும்?” என்றான்.

தருமன் தோட்டத்தை அடைந்து சூழ்ந்திருந்த மலர்களை இடையில் கைவைத்து நோக்கிக்கொண்டிருந்தார். ஒட்டுமொத்தமாக அந்த மலர்ப்பரப்பு பொருளிலாத வண்ணக்குவியலெனத் தோன்றியதும் குனிந்து ஒவ்வொரு மலராக நோக்கினார். அவற்றின் பலவகையான மலர்வுகளும் குவிகைகளும் விரிதல்களும் குமிழ்தல்களும் உள்ளத்தை ஈர்த்தன. மென்மையென்பதும் தண்மை என்பதும் வண்ணமென்றானவை.பின்னர் எப்போதோ அவர் பீமனைப்பற்றி எண்ணிக்கொண்டிருப்பதை உணர்ந்தபோதுதான் மலர்கள் சலிப்பளித்துவிட்டிருப்பது தெரியவந்தது. அத்தனை வடிவமாறுபாடுகளுக்கும் அப்பால் அவை ஒன்றே. விரித்து தன்னைக்காட்டும் வண்ணக்குவளைகள். அறிவிலா அழகியர் போல வெறும் தேனேந்திகள்.

கிளம்பிவிடவேண்டும் என்ற வெறி எழுந்து உடலை துடிக்கச்செய்தது. பிறிதொரு காடு, பிறிதொரு நதி, புத்தம் புதிய

ஒரு மலை.இங்கு இனிமேல் இருக்கமுடியாது. அவையும் இவைபோன்றவையே. எங்கும் புவி ஒன்றே. எழுந்த வான் ஒன்றே. மீளமீள ஒன்றையே மலரென விரிக்கிறது. நதியென உருக்கி இழுத்து நீட்டுகிறது. மலையென அள்ளிக் குவிக்கிறது. பிறிதொன்றறியா பேதைப்பெரும்பரு, ஆனால்இன்னொரு நிலம் மேலும் சிலகாலம் ஆழ்த்தி வைத்திருக்கக்கூடும். இது புதிது என்னும் மாயையை பேணிக்கொண்டு அங்கு மேலும் சற்று வாழ்வை உந்திக்கழிக்கமுடியும்.

திரும்பவும் படிகளினூடாக குடிலை நோக்கி செல்லும்பொருட்டு கால்களைத் தூக்கி வைத்தபோது அவர் காவல்குரங்கை நோக்கினார். அது அவரருகே ஒரு கிளையில் வந்து அமர்ந்து அவரை நோக்காமல் உடல் குறுக்கி அமர்ந்திருந்தது. கால்கள் மட்டும் கிளைகளைப் பற்றியிருக்க கைகள் தொய்ந்துகிடந்தன. தோள் தொய்வால் அது துயில்வதுபோல் தோன்றியது. ஆனால் அவர் அசைவுகளை உடலால் நன்கறிந்தபடி விழிகளை அப்பால் காட்டின் புதர்களுக்குள் நாட்டியிருக்கிறது என்றும் தெரிந்தது.

ஏனென்றறியாமல் ஒரு அகவிரைவு எழ அவர் வேலியை மூடியிருந்த படலை கட்டவிழ்த்து மெல்ல உந்தினார். மறுபக்கம் கட்டப்பட்டிருந்த எடையால் படல்கதவு துலாபோல ஓசையின்றி மேலெழுந்தது. வெளியே சென்று கயிற்றை இழுத்து அதை மூடிவிட்டு காலடிப்பாதையில் நடந்தார். அவர் தலைக்கு மேல் குரங்கு கிளையுலைய இலையுதிர பதறியபடி வந்தது. உப் உப் என்று அது குரலெழுப்பக் கேட்டதும்தான் எங்கு செல்ல எழுந்தோம் என்பதை அவரே உணர்ந்தார். அந்தப் புலி… வெறுங்கையுடன் அதன் முன் சென்று நின்றிருக்கவேண்டும். இந்த நாளை அசைவுறச்செய்ய அதனால்

இயலும்.அதுவும் திகைக்கக்கூடும், இன்றைய சலிப்பை அதுவும் கடக்கக்கூடும்.

புன்னகையுடன் அவர் நடக்க அவர் மீது குரங்குகள் பெருகிக்கொண்டிருந்தன. அவை அவரை அழைப்பதுபோலவே குரல்கள் ஒலித்தன. ஓரிரு குரங்குகள் தாவி இறங்கி தாழ்கிளைகளில் ஆடி அவரை நோக்கி மேலுதடு குவித்து கூச்சலிட்டன. கிளைகளில் நின்று ஆடி ஆடி குதித்தன. அவர் மேலும் களிகொண்டார். புலன்கள் கூர்பெற சற்றுநேரத்திலேயே புலியின் காலடிகளை கண்டுவிட்டார். பெரிய புலி. அதன் பின்னங்கால்களுக்கிடையே இருந்த தொலைவை வைத்து ஆண்புலி எனத் தெளிந்தார். பூழிமென்மையில் பதிந்த தடத்தை குனிந்து நோக்கினார். ஊன்துளி இல்லை என்பதைக்கொண்டு அது இரைகொண்டிருக்கவில்லை என்று கணித்தார்.

குரங்குகள் முன்னால் சென்றுவிட்டிருந்தன. அங்கே அவற்றின் பூசலோசை எழுந்தது. அவை அவரைக் காக்கும்பொருட்டு புலியைத் துரத்துவதற்காக சென்றிருக்கின்றன என்று உணர்ந்தார். புலி அஞ்சி விலகிச்சென்றுவிடலாகாது என்று எண்ணி விரைந்து காலடி எடுத்துவைத்தார். சுற்றிலும் நோக்கியபடிச் சென்றபோது அவர் புன்னகைத்துக்கொண்டிருப்பதை அவரே அறிந்தார். முகத்தசைகளின் விரிவை உணர்ந்தகணம் புன்னகைத்தே நெடுநாட்களாகிவிட்டிருப்பது தெரிந்தது. கைவீசி கூச்சலிட்டு துள்ளிக்குதித்தார். பின்னர் அறிந்தார், அது அவருக்குள்ளேதான் நிகழ்ந்தது. அவர் அதே கூன்தோளும் தளர்நடையுமாகத்தான் சென்றுகொண்டிருந்தார்.

கோமதியின் இடைவளைவு என அமைந்த சதுப்பு அது என்று தெரிந்தது. மட்கிய சேற்றின் மணம் வரத்தொடங்கியது. குரங்குகளின் ஓசை வலுத்து பின் தொலைவில் அகன்று தேய்ந்தது. பின் இளங்குரங்குகளின் ஓசையை கேட்டார். அவை சிறுவர்கள்போலவே கூச்சலிட்டன. நிறைய இளையவாலோர் இருக்கக்கூடும் அங்கு என தோன்றியது. அவர்களனைவரும் அங்கு எப்படி சென்றனர்? அங்கே சற்றுமுன்னர்தான் பெரும்புலி சென்றிருக்கிறது. அவர் குனிந்து அதன் பாதத்தடங்களை நோக்கி அச்செலவை உறுதிசெய்துகொண்டார். ஈரம் கசியும் மென்கதுப்பில் நால்விரல் பதிவுகள் விரியிலை வடிவில் தெரிந்தன.

கோமதியின் ஒளி இலைகளின் நடுவே அலையலையென தெரியத் தொடங்கியது. இளவாலோர் குரல்கள் அணுகியபோது அவர் தெளிவடைந்து நடை தளர்ந்தார். பீமனின் குரல் ஊடே ஒலித்துக்கொண்டிருந்தது. அது குரங்குமொழியில் பேசுவது எருது உறுமுவதுபோலவும், செம்புக்கலம் முட்டுவதுபோலவும் ,முழவில்கோல் வருடுவதுபோலவும், தோல்வாரில் வாள்தீட்டுவதுபோலவும் ஒலித்தது. அவர் அருகணைந்து ஒரு பெரிய அரசமரத்திற்குப் பின்னால் நின்று நோக்கினார்.

காற்றில் அலையுலைந்த நாணல்பெருக்கினுள் வால்சொடுக்கி வளைந்து நின்றிருக்க புலி தவித்துச் சுழன்று, கோட்டுப்பல் காட்டி உறுமி, எம்பிக்குதித்து கைமடித்து காற்றிலறைந்து நின்றிருக்க அதன் மேல் குட்டிக்குரங்குகள் சிறுசில்லைகளில் தொங்கி ஆடி கும்மாளமிட்டன. வால்எழுந்து வளைந்திருக்க ஒரு சிறுவன் நாணலுக்குள் குதித்து எழுந்து நின்று வயிற்றைப் பிராண்டியபடி ஹூஹூஹூ எனறான். புலி அவனை நோக்கி உறுமியபடி பாய நால்வர் அதன் பின்பக்கம் குதித்து

வாலைப்பற்றி இழுத்தனர். அது சீறிச் சுழல பாய்ந்து கிளைச்சில்லையில் தொற்றி ஆடிநின்ற தோழரின் கைபற்றி மேலேறிக்கொண்டனர்.

கிளைகளெங்கும் காய்க்குலைகள்போலச் செறிந்திருந்த குரங்குகள் ஹூஹூஹூஹூ என ஓசையிட்டு எம்பிக்குதித்தன. இலைகள் சுழன்று புலிமேல் விழ அது ஒவ்வொரு இலைக்கும் அஞ்சி உடல்விதிர்த்து முதுகுவளைத்து ஒண்டியது. அதன் விலாவெலும்புகள் வரித்தோல் மடிப்புகளுக்குள் அசைவுகொண்டன. பிடரியும் பின் தொடையும் ஆங்காங்கே தசையதிர்ந்தன.மரங்களின் மேல் பீமன் தலைகீழாக கால்களால் கிளைபற்றி கைவீசி தொங்கிக்கிடந்து ஹூஹூஹூ எனக் குரலெழுப்பினான். புலி பின்னால் காலடி எடுத்துவைத்து நடுநடுங்கியபடி சென்று கோமதியின் சேற்றுவிளிம்பை அடைந்து சரிவில் கால்வழுக்கிச் சென்றது.

கால்களை எடுத்து வைக்கும்தோறும் வழுக்க அது பூனைபோலவே முனகியபடி தலைதாழ்த்தியது. முன்னங்கால்களால் களிமண்ணை அள்ளிப்பற்றி மேலேற முயன்றபோது பின்னங்கால் நீண்டு கீழிறங்க தொங்கவிடப்பட்டதுபோல அதன் உடல் நெடுகியது. குரங்குச்சிறுவர் ஒவ்வொருவராக நாணலில் குதித்தனர். பீமன் இறுதியாக தலைகீழாகக் குதித்து கைகளை ஊன்றி கால்கள் காற்றில் நடக்க ஆணைகளை இட்டபடி பின்னால் நடந்தான். புன்தலை மயிர் சிலிர்த்திருக்க குரங்குக்குட்டிகள் புலியின் அருகே சென்று நின்றன. அதன் உறுமல் கேட்டு மெய்விதிர்க்க பாய்ந்து ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டன. மீண்டும் துணிவுகொண்டு அணுகின.

புலி வயிற்றை எக்கி உறுமியது. மீசைமயிர்முட்கள் விடைக்க தலையைத் தாழ்த்தி குருதிநிற வாய்திறந்து அலறியது. துணிவுகொண்ட குரங்கு ஒன்று மெல்ல அருகே சென்றது. மேலும் நெருங்கி கைநீட்ட புலி துள்ளித் துள்ளி அமறியது. அவ்வசைவில் மேலும் சேற்றில் வழுக்கியது. குட்டி தன் சிறுகை நீட்டி புலியின் மீசையைப்பிடித்து இழுத்து விட்டு ஹூஹூஹூ என ஓசையிட்டபடி பின்னால் பாய்ந்தது. மற்ற குரங்குகளும் கூவியபடி அதனுடன் சேர்ந்துகொண்டன. இன்னொன்று முன்னால் சென்று மீண்டும் புலியின் மீசையைப் பிடித்து இழுத்தது. இன்னொன்று ஒரே பாய்ச்சலில் புலியின் தோள்மேல் தொற்றி ஏறிக்கொண்டு எழுந்து நின்று ஹூஹூஹூ என்றது. அதன் சிறுகுறி பிஞ்சுப்பலாக்காய் என புமயிருடன் விடைத்திருந்தது அத்தனை குரங்குக்குட்டிகளும் பெருங்குரலில் ஓசையிட்டன.

புலி வயிற்றை சேற்றில் அழுத்தி கால்களை நன்றாகப் பரப்பி புலித்தோல் இருக்கைபோலவே ஆகியது. அவ்வாறே காலையும் விரித்தபோது அதனால் நீந்துவதுபோல முன்னகர முடிந்தது. நாணலில் முன்கால் சிக்கியதும் ஒரே பாய்ச்சலில் எழுந்து துள்ளிச் சுழன்றது. குரங்குகள் கூச்சலிட்டபடி சேற்றில் விழுந்து நான்குபக்கமும் சிதறி ஒன்றை ஒன்று கைபற்றியும் வால்தொற்றியும் கிளைகளில் ஏறிக்கொண்டன. சில குரங்குகள் ஓடி பீமன் காலைப்பற்றி கைகளில் தொற்றி இடைமேல் ஏறின. பதைத்து ஓடிய ஒரு குட்டி நீரைநோக்கிச் சென்று திகைத்து திரும்பி எதிரில் புலியைக் கண்டு அஞ்சி மயிர்சிலிர்த்து வாய் இழுபட்டு இளிக்க அசைவற்று நின்றது. புலியும் அஞ்சி முகம்தாழ்த்தி உறுமியபடி நின்றது.

குரங்கு மெல்ல அசைந்தபோது புலியும் திடுக்கிட்டு அசைந்தது. குரங்கின் சிறுசெவி மட்டும் முன்னும் பின்னும் அசைய புலியின் வால் ஐயத்துடன் சுழித்து நெளிந்தது. மேலே குரங்குகள் கூச்சலிட்டு கிளையை உலுக்கின. பீமனின் உடல்மேல் தொற்றியிருந்த குரங்குகள் மேலேறி தலைமேலும் தோள்களிலும் நின்று எம்பி எம்பி கூச்சலிட்டன. புலி ஐயத்துடன் முன்னங்காலைத் தூக்கி காற்றில் மெல்ல வீசியது. மீசை விடைக்க உடலை நிலம்சேர்த்து முன்னகர்ந்து மீண்டும் கைநீட்டியது. குரங்குக்குட்டி ஈஈஈ என ஓசையிட்டு தொழுவதுபோல கைசேர்த்து ஒடுங்கியது.

அக்கணம் ஓடிவந்த பீமன் புலியை வால்பற்றித் தூக்கி அதே விசையில் மும்முறை சுழற்றி நாணல்மேல் வீசினான். உள்ளே விழுந்து, செந்நிற ஆடை அலைவு என துள்ளி எழுந்து, மீண்டும் அமிழ்ந்து, மீன் போல அப்பால் தோன்றி, துள்ளித்துள்ளித் தெறித்து அது விலகி ஓடியது. அதன் வால்சுழல்வது தொலைவில் தெரிந்து மறைந்தது. அஞ்சி நின்றிருந்த குரங்கு கையூன்றி விழுவதுபோல் மண்ணிலமர்ந்தது. பின் ரீச் என ஓசையிட்டு சிறுநீர் பீய்ச்சியபடியே ஓடி வந்து பீமனை அணுகி அவனை அறைந்தது. பல்காட்டிச் சீறி கடித்தும் உதைத்தும் கூச்சலிட்டது. அதன் முகக்குழிகள் பதைத்தன. என்ன செய்வதென்று தெரியாமல் சுற்றிச்சுற்றி வந்து மண்ணை அள்ளி வீசியது.மண்ணில்படுத்துப் புரண்டு எழுந்தது அதைச் சூழ்ந்து குட்டிகள் குதித்தன. அவை சேர்ந்து ஓசையிட்டபடி எம்பிக்குதித்தன. கிளைகளில் தொற்றி ஏறிக்கொண்டு அங்கிருந்தபடி கூட்டோசையிட்டன.



பீமன் அவர்களிடம் ஏதோ கூச்சலிட்டு பேசியபடி ஓடிவந்தான். அவன் விழிகள் தன் மேல் பதிவதை உணர்ந்தபோது தருமன் அறியாமல் பதுங்க முயன்றார். பீமன் அவரை அறியவே இல்லை எனத் தெரிந்தது. கூவியபடி பாய்ந்து கிளைமுனையைப்பற்றி ஆடி மேலேறி இலைத்தழைப்புக்குள் சென்று அகன்றான். கிளைகள் கலைந்து அலையெழுப்ப அவர்கள் காட்டின் ஆழத்திற்குள் மறைந்தனர். மீன்கூட்டம் மூழ்கியபின் நீர்ப்பரப்பு என பசப்பு அசைவிழந்தது. தருமன்

அதை நோக்கியபடி சற்றுநேரம் நின்றபின் தன்னை உணர்ந்து உடல் மீண்டு நீள்மூச்செறிந்தார்.

# மாமலர் - 2

## 2. கதிர்முன் நிற்றல்

அறைவாயிலில் காலடியோசை கேட்டு தருமன் திரும்பினார். விரைவாக உள்ளே வந்த திரௌபதி கையிலிருந்த மரக்குடுவையை அவரருகே பீடத்தில் வைத்துவிட்டு "பால்" என்றபின் ஆடைநுனியால் ஈரக்கையை துடைத்தபடி திரும்பிச் செல்லப்போனாள். அவர் எட்டி அவள் கையைப்பற்றி "என்ன விரைவு? சற்று நில்... உன்னிடம் பேசவேண்டுமென்றாலே அடுமனைக்கு வரவேண்டியிருக்கிறதே!" என்றார். அவள் திரும்பி அடுமனையை நோக்கியபின் "சொல்லுங்கள்..." என்றாள். "என்ன?" என்று அவர் கேட்டார். "ஏதோ சொல்லவேண்டும் என்றீர்களே? நான் செல்லவேண்டும். உலையேற்றும் நேரம் இது" என்றாள்.

எரிச்சலுடன் அவள் கையை விட்டு "செல்!" என்றார் தருமன். "ஏன்? என்ன சொல்லவந்தீர்கள்?" என்றாள் அவள். "வேதங்கள் நான்கு, ரிக் யஜூர் சாம அதர்வம். அதைச் சொல்லவந்தேன்" என்று அவர் சொல்ல அவள் அரைச்செவியுடன் கேட்டு "ஆம்... இன்று உலையேற்ற பிந்திவிட்டது. பெருங்கலம் ஏற்றவிருக்கிறேன்" என்றபடி "நான் செல்லவா?" என்றாள். அவர் சினத்துடன் "செல்! போ... இனி உள்ளே வராதே. ஏதாவது வேண்டுமென்றால் நானே வருகிறேன்" என்றார். அந்த உரத்த குரல் அவளை திகைக்கச் செய்தது. "என்ன ஆயிற்று? ஏன் கூச்சலிடுகிறீர்கள்?"

அவர் மெல்ல தணிந்து “ஒன்றுமில்லை. செல்!” என்றார். “எப்போதும் இப்படித்தான் இருக்கிறீர்கள். நிலையமைவதே இல்லை” என்றபின் “பால் அருந்துக! சுக்கும் மிளகும் போட்டிருக்கிறது” என்றவள் மீண்டும் வெளியே செல்லத்திரும்பினாள். “எடுத்துக்கொண்டு போ!” என்று தருமன் கூவினார். “ஏன்?” என அவள் கேட்க “எடுத்துக்கொண்டு போடி... எடுத்துக்கொண்டு போகச்சொன்னேன். போ...” என்றார். “என்ன ஆயிற்று உங்களுக்கு?” என்றாள் அவள். “போ வெளியே... உன்னை போகச் சொன்னேன்.” அவள் அவரை புதிராக நோக்கியபின் பாலை எடுத்துக்கொண்டு வெளியே சென்றாள்.

மூச்சிரைத்தபடி அவர் குனிந்து அமர்ந்திருந்தார். முடியிழைகள் முகத்தில் சரிய எரிச்சலுடன் அவற்றை பின்னால் தள்ளி நிமிர்ந்தார். பின்னர் கூரையின் மூங்கில்வேய்வை நோக்கிக்கொண்டிருந்தார். சற்றுநேரம் கழித்து மீண்டு வந்து ஓலையை எடுத்து விழியோட்டலானார். ஆனால் சொற்கள் பொருளென்றாகவில்லை. அதை மூடி கட்டிவைத்துவிட்டு கைகளைக் கட்டியபடி கீழே தெரிந்த காட்டை நோக்கிக்கொண்டு வெறுமனே இருந்தார்.

கொடுவேரிப் புதர்களுக்குள் செம்போத்துகள் இரண்டு எழுந்து சிறகடித்து புதைந்துகொண்டிருந்தன. கிளைகளில் ஒரு சிறு குரங்கு மட்டும் அரைத்துயிலில் அமர்ந்திருந்தது. அது காணும் கனவுகளை அதன் வால்நுனியில் அசைவுகளாக அறியமுடிந்தது. பின்காலையின் வெயில் நீராவியை எழுப்பத் தொடங்கிவிட்டிருந்தது. காடெங்கும் அதன் மென்மயக்கம் பரவியிருந்தது. காட்டின் உணர்வுநிலைகளை அதிலெழும் பறவையோசையே காட்டிவிடுவதை அவர் உணர்ந்திருந்தார். காலையில் கொப்பளிக்கும் அவ்வோசை வெயிலெழுகையில்

மெல்ல தொய்வடைந்து உச்சியில் அமைதியாகி முன்மாலையில் மயங்கியெழுந்து முன்னந்தியில் மீண்டும் அலையடிக்கும். இருள் எழுகையில் புதைந்து மறைந்து இரவுக்குள் ஆங்காங்கே சில வினாக்களும் விடைகளுமாக ஒலித்துக்கொண்டிருக்கும்.

பறவையோசையை செவிகூர்வது எப்போதும் உள்ளத்தை அமைதியுறச்செய்கிறது. அவர் எழுந்தபோது உள்ளம் தெளிந்து முகம் இயல்புகொண்டிருந்தது. வெளியே சென்றபோது குடிலின் பேரறையில் எவருமிருக்கவில்லை. நகுலனின் மேலாடை மட்டும் மூங்கில் வளையத்தில் கிடந்தது. குனிந்து நோக்கியபோது மலர்த்தோட்டத்தின் தென்மூலையில் அவன் மண்வெட்டியால் வெட்டிக்கொண்டிருப்பது தெரிந்தது. அவன் மூச்சொலியும் மண்வெட்டி விழும் ஒலியும் காட்டில் பட்டு எதிரொலித்து வேறெங்கோ என கேட்டன. அவனருகே இரு குரங்குகள் வேடிக்கை நோக்கியபடி அமர்ந்திருந்தன. ஓர் அன்னைக்குரங்கு மடியிலிருந்த சிறுபைதலின் தலையை வருடி பேன் நோக்கிக்கொண்டிருந்தது.

மூங்கிலால் ஆன பாதை வழியாக தருமன் இணைக்கப்பட்டிருந்த அடுமனைக்குச் சென்றார். அங்கே திரௌபதியின் பேச்சுக்குரலும் உடன் சகதேவனின் குரலும் கேட்டது. அவர் காலடிகளை நன்கு தேய்த்தபடி உள்ளே நுழைந்தார். அவர்கள் ஏதோ பேசி சிரித்துக்கொண்டிருந்தனர். சகதேவன் கீழே மணையில் அமர்ந்து காய்கறிகளை நறுக்க அவள் அப்பால் குனிந்து அடுப்பில் வைக்கப்பட்டிருந்த மிகப்பெரிய மண்பானையில் நீரை ஊற்றிவிட்டுத் திரும்பினாள். அவள் விழிகள் மாறுபட்டன. "பால் கொண்டுவரவா?" என்றாள். அவர் "இல்லை. அதற்காக வரவில்லை" என்றார்.

“உணவு ஒருங்க இன்னும் பிந்தும். இன்று சற்று கூடுதலாகவே சமைக்கவேண்டும்” என்றாள். “ஏன்?” என்றார் தருமன். “இன்று மூத்தவர் உணவுக்கு வரக்கூடும் என்று எண்ணுகிறாள் தேவி” என்றான் சகதேவன். “அவருக்கு உகந்த ஊன்சோறு சமைக்கலாமென எண்ணினோம். புல்லரிசி நிறையவே இருக்கிறது. காலையிலேயே இரு காட்டுப்பன்றிகளை வேட்டையாடி கொண்டுவந்தோம்.” தருமன் திரௌபதியின் இடைக்குமேல் எழுந்திருந்த மண்பானையை நோக்கிவிட்டு “ஆம், அவனுக்கென்றால் இப்பெருங்கலமே போதாது” என்றார்.

“கலமல்ல சிக்கல், மூத்தவரே. பெருமளவில் சமைக்கையில் சேர்வைமுறை கைநிற்பதில்லை. உப்போ புளியோ எரிவோ மிஞ்சிப்போகிறது. ஆகவேதான் ஊனுணவு. இதில் உப்பு மட்டுமே இடர். அதை வேண்டுமென்றால் கூட்டிக்கொள்ளவும் ஆகும். ஊன் மிகுந்தாலும் பழுதில்லை” என்றான் சகதேவன். திரௌபதி விறகைச் சரித்து எரியை எழுப்புவதை தருமன் ஆர்வத்துடன் நோக்கி “வேள்வியேதான்” என்றார். “வேள்வியில் எரி நம் உணவை உண்ணும் விருந்தினன். இங்கு அது விருந்து சமைக்கும் அடுமடையன்.” சகதேவன் சிரிக்க திரௌபதியும் உடன் சிரித்தாள்.

“என்ன?” என்றார். “இல்லை, நீங்கள் வரும்போது உங்களைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தோம்” என்றான் சகதேவன். “என்னைப்பற்றியா?” என்றார் தருமன். “ஆம், நீங்கள் சினம்கொண்டதை தேவி சொன்னாள். நீங்கள் சினம்கொண்டால் அதன் பொருள் மெய்மையை அணுகிக்கொண்டிருக்கிறீர்கள் என்பதுதான் என்றேன். வெகுளி கணமேனும் காத்தல் அரிது என்றல்லவா தொல்நூல் கூற்று?” அதிலிருந்த நுண்ணிய அங்கதத்தை உணர்ந்ததும் தருமன்

சிரித்தார். “உண்மையில் நான் சினந்தது தேவியிடம் பேசமுடியவில்லையே என்பதனால்தான். வெறும் அடுமனையாட்டியாகவே இங்கு வந்தபின் மாறிவிட்டாள். நாங்களிருவரும் சேர்ந்தமர்ந்து சொல்லுசாவி எத்தனை காலமாயிற்று தெரியுமா?”

“உண்மை, மூத்தவரே. இக்காடு சொல்லில்லாதது. நானே அவ்வப்போது திடுக்கிடலுடன் உணர்வதுண்டு, சொல்லாய்ந்து எத்தனை நாளாயிற்று என்று. ஓடிச்சென்று சுவடிகளைப் பிரித்துக்கொண்டு அமர்ந்தால் அனைத்தும் பொருளிழந்திருக்கும். நேற்றும் நாளையும் பின்னும் இன்றுகளின் தொடராக காலத்தை நோக்குகிறது நிமித்திகநூல். இன்று மட்டுமேயான காடு இது” என்றான் சகதேவன். உடனே சிரித்துக்கொண்டு “இதில் திளைக்க மூத்தவரால் மட்டுமே முடியும்” என்றான். திரௌபதி புல்லரிசியை எடுத்தபடி “ஏனென்றால் சோறு நேற்றிலும் நாளையிலும் இல்லை, இன்று கண்முன் இருந்தால் மட்டுமே பொருளுடையது” என்றாள்.

“அவன் வருவான் என எப்படி தெரியும்?” என்றார் தருமன். “தோன்றியது” என்றாள் திரௌபதி. “தேவி காலையில் கனவில் அவர் வருவதைக் கண்டாளாம்” என்றான் சகதேவன். “கனவிலா? என் கனவில்கூடத்தான் அவன் நாளும் வருகிறான்” என்றார் தருமன். “பசியுடன் வந்திருக்கிறார். அப்படி அவர் வந்தபோதெல்லாம் நேரிலும் வந்துள்ளார்” என்றான் சகதேவன். “நன்று” என்று சொல்லி புன்னகைத்த தருமன் “அந்தப் பாலை எடு… அதை அருந்தாமல் நிலைகொள்ளவில்லை” என்றார். “ஆறிவிட்டது…” என்றாள் திரௌபதி. “சூடுசெய்து கொடு… ஏன் வீணாக்கவேண்டும்?” என்றார் தருமன்.

“நீங்கள் முதன்மையாக எதையாவது சொல்ல விழைந்தீர்களா, மூத்தவரே?” என்றான் சகதேவன். தருமன் முகம் மலர்ந்து “நான் இப்போது வாசித்துக்கொண்டிருப்பது என்ன நூல் தெரியுமா?” என்றான். சகதேவன் “நூல் என்பதே அயலாகிவிட்டது, மூத்தவரே” என்றான். “வேதங்கள் பல, வகுத்த நான்கே நாடறிந்தது. அதை நீங்களும் அறிந்திருப்பீர்கள்” என்றார் தருமன். “அசுரர்களின் ஆசுரமும் நாகர்களின் மாநாகமும் தொல்வேதங்கள். அசுரதெய்வங்களாக இருந்த வருணனுக்குரியது வாருணம். இந்திரனுக்குரியது மாகேந்திரம். வருணனையும் திசையரசர்களையும் இந்திரன் வென்று முழுமுதலோனாக எழுந்தபோது உருவானது மகாவஜ்ரம். இடையே அசுரப்பேரரசன் இரணியன் அமைத்த தனி வேதம் ஹிரண்யம். அதை மீறி அவன் மைந்தன் பிரஹலாதனில் எழுந்தது மகாநாராயணம். இன்று பாரதவர்ஷத்தை ஆளும்பொருட்டு பரவிக்கொண்டிருக்கிறது அது.”

சகதேவன் காய்களை அரிவதை நிறுத்திவிட்டு நிமிர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். “இன்றிருக்கும் அனைத்து வேதங்களும் ஆசுரம் என்னும் அன்னையின் வயிற்றில் தோன்றியவையே. மாநாகம் எதனுடனும் இணையாமல் ஆழத்தில் கரந்து தனித்தொழுகுகிறது. அதன் துளிகள் அதர்வத்தில் உள்ளன” என்று தருமன் தொடர்ந்தார். “இங்கு வரும்வழியில் சௌரமதத்தினராகிய சுலபரைக் கண்டேன். அவர் அவர்களின் முதலாசிரியரான அர்வாவசு அமைத்த சௌரவேதத்தை எனக்களித்தார். மந்தணவேதம் என அது அழைக்கப்படுகிறது. பிற வேதமரபுகள் அனைத்தும் அதை ஒதுக்கிவிட்டன. முழுமுதல்தெய்வமாக சூரியனை முன்கொள்கிறது இது.”

“இது வேதம் பெருகிய நிலம்” என்றபடி சகதேவன் மீண்டும் காய்களை அரியத் தொடங்கினான். “மேலும் வேதங்கள் இம்மண்ணில் இன்னும் இருக்கக்கூடும். அகழுந்தோறும் இங்கு சிவக்குறிகள் கிடைக்கும் என்பார்கள். இம்மொழியை அகழ்பவர்கள் வேதங்களையே கண்டடைவார்கள்” என்றார் தருமன். “இன்று சௌரவேதத்தை வாசித்துக்கொண்டிருந்தேன். பல வரிகள் ரிக்வேதத்தில் சற்றே ஒலிமாறிய வடிவிலமைந்துள்ளன. இதுவே தொன்மையானது என எண்ணுகிறேன். இதிலிருந்து அங்கு சென்றிருக்கலாம்.” அக்கணம் தோன்றிய உள எழுச்சியால் அவர் திரௌபதியை அணுகி “கேள் தேவி, இந்த வேதம் கிழக்கே காமரூபத்திற்கு அப்பால் நாகர்களின் நிலத்திற்கும் அப்பாலிருந்து எழுந்தது. கிழக்கு இந்திரனுக்குரியது. சூரியனுக்கும் உரியது. இந்திரன் வேதமுதல்வனாக எழுந்தபோது இது அழிந்ததா?” என்றார்.

அவள் புல்லரிசியைக் கழுவி நீரில் அள்ளி அள்ளிப் போட்டபடி “அர்வாவசு எந்த மண்ணைச் சேர்ந்தவர்?” என்றாள். “நாம் கந்தமாதனத்திற்கு வரும்போது வழியில் லோமசர் பல தூநீர்ச்சுனைகளின் கதைகளைச் சொல்லிவந்தார். அப்போது மதுபிலசமங்கம் என்னும் சுனையைப்பற்றி சொன்னார். அது காமரூபத்திற்கும் மணிபூரகத்திற்கும் நாகநிலத்திற்கும் அப்பால் மாமேருவின் கரையில் அமைந்திருக்கிறது என்றார். அதுதான் சௌரநெறியினரின் முதன்மை நீர். அச்சோலையில் ரை◌ஃப்யர், பரத்வாஜர் என இரு முனிவர்கள் குருநிலை அமைத்து தங்கியிருந்தனர். அவர்கள் சௌரவேதத்தின் தொல்முனிவர்கள். அவர்கள் இயற்றிய எண்பத்தெட்டு பாடல்கள் இந்நூலில் உள்ளன.”

🐾பரத்வாஜருக்கு யவக்ரீதன் என்னும் மைந்தன் பிறந்தான். ரைஃப்யரின் மைந்தர்களாகிய அர்வாவசுவும் பராவசுவும் மணம்புரிந்து அறமியற்றினர். அர்வாவசு சௌரவேதத்தின் செய்யுட்களைத் திரட்டி சொற்பழுதுபோக்கி ஒன்றாக்கினார். பராவசு அவற்றுக்கு சந்தம் வகுத்தார். பரத்வாஜரின் மைந்தனாகிய யவக்ரீதன் காட்டுக்குச் சென்று வேதமெய்மையை அறியவிழைந்து கடுந்தவம் புரிந்தான்.

பல்லாண்டுகள் தவம் செய்தும் சூரியதேவன் தோன்றி அருளவில்லை. ஏனென்றால் அறியவேண்டுமென்னும் பெருவிழைவே அறிதலுக்குத் தடையாக ஆவதை அவன் உணரவில்லை. அவன் உளம்தளர்ந்த பொழுதில் அவன் முன் தோன்றிய இந்திரன் அவன் விரும்பும் வரத்தை அருள்வதாகச் சொன்னான். மெய்யென இப்புவியிலுள்ள அனைத்தையும் அறியவேண்டும் என யவக்ரீதன் கோரினான். "இதோ உனக்கு மெய்யருளினேன்" என்றான் இந்திரன். அதன்முன் 'என்' எனும் சொல்லை நாவிலேயே மறைத்துக்கொண்டான்.

இந்திரமெய்மையாகிய பெருங்காமத்துடன் யவக்ரீதன் குடில் திரும்பினான். தன்னைச் சூழ்ந்து திகழ்ந்தவை அனைத்திலும் காமத்தையே கண்டான். உயிர்கள் காமத்திலாடின. அனலும் காற்றும் புணர்ந்தன. ஒளியும் வானும் ஒன்றாகி மகிழ்ந்தன. குடிலுக்கு வரும் வழியில் அர்வாவசுவின் துணைவி ரம்யையும் பராவசுவின் மனைவி பிரதமையும் வருவதைக் கண்டான். அவர்கள் சுனைநீராடி திறந்த தோள்களில் கூந்தலைப் படரவிட்டு ஒற்றை ஆடை அணிந்து வந்துகொண்டிருந்தனர்.

யவக்ரீதன் தன் கைகளை விரித்து அவர்களை அணுகி அள்ளிப்பற்றிக்கொண்டான். அவர்களின் ஆடைகளைக் களைந்து வீசி அருகே இருந்த புதர்களுக்கு இழுத்துச்செல்ல முயன்றான். அவர்களின் அலறல் ஓசை கேட்டு உள்ளிருந்து ஓடிவந்த அர்வாவசுவும் பராவசுவும் தங்கள் துணைவியரை காப்பாற்ற முயன்றனர். ஆனால் இந்திரவல்லமை கொண்டிருந்த யவக்ரீதன் தன் ஒற்றைக்கையால் இரு மகளிரையும் பிடித்தபடி மறுகையால் அவர்கள் இருவரையும் அறைந்து வீழ்த்தினான்.

குடிலுக்குள் இருந்து ரை◌ஃப்யர் ஓடிவந்தார். மைந்தர் குருதி கக்கிக் கிடப்பதையும் அவர்களின் துணைவியருடன் யவக்ரீதன் புதர்களுக்குள் சென்றுவிட்டதையும் கண்டு என்ன செய்வதென்றறியாமல் திகைத்தார். ஓடிச்சென்று சூரியன் முன் நின்று தன் சடைக்கற்றை ஒன்றைப் பறித்து வீசி "சூரியனே, உன்னை ஓதி நான் கொண்ட தவத்தின் பயன் இந்தச் செஞ்சடை. நீ தெய்வமென்றால் இங்கெழுக!" என்று கூவினார். "என் தவமனைத்தும் உருகி எழுக! என்னில் இனி வஞ்சமே திகழ்க! இக்கணமே வருக, இறைவா!" என்றார்.

சூரியவெம்மைகொண்டு அந்தச் சடை தீப்பற்றி எரிந்தது. தீ மூண்டெழுந்து புதர்களைச் சுற்றிப் படர்ந்தேறியது. வெம்மை தாளாமல் எழுந்த யவக்ரீதனை தீச்சுடர்கள் கவ்விக்கொண்டன. அவன் அலறியபடி ஓடி உடல்வெந்து விழுந்து மறைந்தான். அவன் பிடியிலிருந்த இரு தேவியரும் அவ்வனலிலேயே உடல் நீத்தனர். காடு பசுமை பொசுங்கி தழல்சூடி எரியலாயிற்று. எரிமணம் உணர்ந்து அலறலோசை கேட்டு பரத்வாஜர் தன் தவச்சாலையிலிருந்து ஓடிவந்தார். மைந்தன் எரிந்துகொண்டிருப்பதைக் கண்டார். "என் தவம் மெய்யென்றால்

நீ உன் மைந்தனாலேயே கொல்லப்படுவாய். ஆணை!” என்றபின் தானும் எரியில் புகுந்தார்.

ரைஃப்யரும் இரு மைந்தரும் மதுபிலசமங்கத்தின் தெற்குக் காட்டுக்குச் சென்று குடியமர்ந்தனர். அங்கே அனைத்தையும் மறந்து மீண்டும் சௌரவேதமெய்மையில் மூழ்கலாயினர். கடும் வறுமையில் காட்டிலிருந்து தேனும் அரக்கும் சேர்த்து அருகே சிற்றூர்ச் சந்தையில் கொண்டுசென்று விற்று ஈட்டிய சிறுசெல்வத்தைக் கொண்டு அங்கே வாழ்ந்தனர். மீண்டும் துணைவியரைத் தேட இருவரும் விழைந்தாலும் கன்னிப்பொருள் அளிக்க செல்வமில்லாதிருந்தனர். ஒரு பொன்னேனும் ஈட்ட முடிந்தால் இருவரும் சேர்ந்து ஒரு பெண்ணை மணம்கொள்ளலாமே என்று எண்ணிக்கொண்டனர்.

ஒருநாள் மணிபூரகத்தைக் கடந்து பிருஹத்யும்னன் என்னும் அந்தணன் அவர்களிடம் வந்தான். வற்கடம் சூழ்ந்த காமரூபத்தின் அரசன் மழைமங்கலம் வேண்டி ஒரு சௌரவேள்வியை நிகழ்த்தும்பொருட்டு பெருஞ்செல்வத்தை அளித்திருப்பதாகவும் அவ்வேள்வியை இளையோர் இருவரும் வந்து நின்று நடத்தியளிக்கவேண்டும் என்றும் கோரினான். தெய்வச்சொல் என அதைக் கேட்டு ரைஃப்யர் மகிழ்ந்தார். இரு மைந்தரும் பொருள்கொண்டுவந்தால் மணம்புரிந்து மைந்தரைப் பெறக்கூடும் என்றும் புத் எனும் கீழுலகில் நீரும் அன்னமும் இன்றி தவிக்கும் நிலை தனக்கு வராது என்றும் அவர் கூறினார்.

அர்வாவசுவும் பராவசுவும் பிருஹத்யும்னனுடன் கிளம்பிச் சென்றனர். அந்த அந்தணன் இந்திரனால் அனுப்பப்பட்டவன் என்பதை இருவரும் உணர்ந்திருக்கவில்லை. எளிய அந்தணனை நம்பி அத்தனை பெருஞ்செல்வத்தை ஓர் அரசன்

அளிக்கக்கூடுமா என்று எண்ணும் அளவுக்கு உலகியலறியாத மலைமக்களாக இருந்தனர் அவர்கள். சூரியமானசம் என்னும் சுனைக்கரையில் காட்டுக்குள் பந்தலிட்டு பிருஹத்யும்னன் எடுத்த வேள்வி பன்னிருநாட்கள் நீடித்தது. அர்வாவசுவும் பராவசுவும் தலைநிற்க நூற்றெட்டு அந்தணர் அதிலமர்ந்து வேதச் சொல்லோதி அவியிட்டனர்.

வேள்வி முடிந்ததும் இருவரும் முதுகொடியச் சுமக்குமளவுக்கு பெருஞ்செல்வத்தை பிருஹத்யும்னன் அவர்களுக்கு அளித்தான். இருவரும் அச்செல்வத்துடன் மதுபிலசமங்கம் நோக்கி நடக்கத்தொடங்கினர். முதலில் அது பொன்னாக இருந்தது. பொழுது செல்லச்செல்ல அவர்களின் விழைவென்று அது மாறியது. பின்னர் அச்சமென்றாகியது. இறுதியில் ஐயமென்று இருண்டது. தங்கள் காலடிகளையே ஐயுற்றவர்களாக ஒருவரை ஒருவர் வேவு பார்த்தவர்களாக அவர்கள் காட்டுப்பாதையில் நடந்தனர்.

அவர்கள் வருவதை தொலைவிலேயே ரைஃப்யர் கண்டார். தன் புலித்தோல் மேலாடையை எடுத்து அணிந்தபடி உவகையுடன் அவர்களை நோக்கி வந்தார். புதர்களுக்குள் அவர் வரும் ஓசையைக் கேட்ட பராவசு அக்கணமே தன் வேலை எடுத்து வீசினார். “மைந்தா!” என்றலறியபடி ரைஃப்யர் விழுந்து துடித்தார். வேல் பாய்ந்த நெஞ்சுடன் மூச்சிரைக்க “அவன் சொன்னபடியே” என முனகி உயிர்விட்டார். இருவரும் திகைத்து உடல்பதற அவர் அருகே நின்றனர். ரைஃப்யரின் கால்களைப் பற்றியபடி பராவசு கதறி அழுதார்.

“நான் புலி என்று எண்ணினேன்... புலியைத்தான் கொல்லமுயன்றேன்” என்று பராவசு அழுதார். “இனி ஒன்றும் செய்வதற்கில்லை, இளையோனே. தந்தைக்குரிய

இறுதிச்சடங்குகளை செய்வோம்” என்றார் அர்வாவசு. “உடலை இங்கே எரியூட்டுவோம். நீர்க்கடன்களை மூத்தவனாகிய நான் செய்கிறேன். நீ சென்று ஊரில் வாழும் அந்தணர்களிடம் நடந்ததைச் சொல். பிழைநிகர் சடங்கு செய்து அந்தணர் ஆயிரவருக்கு அன்னமூட்டுவோம். நாம் அறிந்து செய்தது அல்ல இது. மணம்கொண்டு மைந்தரைப்பெற்று நீர்க்கடன் செய்தால் தந்தை விண்நிறைவார்.”

“அவ்வண்ணமே” என்று சொல்லி வணங்கினார் பராவசு. அர்வாவசு காட்டுமரங்களாலும் அரக்காலும் தேன்மெழுகாலும் தந்தைக்கு சிதைகூட்டி அதில் அவரை படுக்கச்செய்து எரியூட்டினார். பராவசு செல்வக்குவைகளை அருகே ஒரு அரசமரத்தின் அடியில் புதைத்து வைத்துவிட்டு கைப்பிடியளவு பொன்னுடன் ஊருக்குள் சென்றார். செல்லும் வழியிலேயே அவர் உள்ளம் மாறலாயிற்று. இந்திரவிழைவின் விந்துத்துளியென கையிலிருந்த பொன் தண்ணென்று எண்ணங்களைத் தொட்டுத் தூண்டியது. மூத்தவன் அகற்றப்படுவான் என்றால் முழுச்செல்வத்திற்கும் தலைவனாக முடியும் என்றும் மாளிகையும் மகளிரும் மைந்தரும் என அனைத்தும் கொள்ளமுடியும் என எண்ணம் ஓடியது.

ஊருக்குள் சென்ற பராவசு நெஞ்சிலறைந்து அழுதபடி மன்றில் நின்று “என் தமையன் தந்தையைக் கொன்று எரியூட்டிவிட்டான்... என்னையும் கொல்லமுயல்கிறான். நான் அஞ்சி ஓடிவந்தேன்” என்று கூவினார். ஊர்த்தலைவனிடம் “எந்தையைக் கொன்றவனிடமிருந்து என்னைக் காத்தருளுங்கள்... எனக்கு அடைக்கலம் கொடுங்கள்” என்று கண்ணீர்விட்டார்.

அவர் சொல்கேட்டுத் திரண்ட ஊரார் அவருடன் காட்டுக்குச் சென்றனர். அங்கே தந்தையின் சிதையருகே அமர்ந்திருந்த அர்வாவசு அவர்கள் திரண்டுவருவது தன் தந்தையின் சாவூட்டுச்சடங்குக்காகவே என எண்ணினார். எழுந்து அவர்களை முறைப்படி வணங்கி முகமன் சொல்வதற்குள்ளாகவே பாய்ந்து வந்த பராவசு தமையனை ஓங்கி அறைந்து வீழ்த்தினார். மேலே ஒரு சொல்லும் சொல்லமுடியாதபடி அவரை அவர்கள் தாக்கினர். கைபிணைத்துக் கட்டி தூக்கி நிறுத்தியபோது பற்கள் உடைந்து உதடுகள் வீங்கி சொல் எழாதவராக அர்வாவசு ஆகிவிட்டிருந்தார்.

அவரை ஊருக்கு இழுத்துவந்து மன்றில் நிறுத்தி விசாரித்தனர். அர்வாவசுவால் ஒரு சொல்லும் சொல்லமுடியவில்லை. அந்தணன் என்பதனால் அவரை அவர்கள் கொல்லவில்லை. முடியை மழித்து முகத்தில் புலையந்தணன் எனப் பொருள்படும் காகத்தின் படத்தை பச்சைகுத்தி காட்டில் துரத்திவிட்டனர். மீண்டும் மதுபிலசமங்கத்திற்கே வந்த அர்வாவசு அங்கே அமர்ந்து தான் அடைந்த பழிக்கு நிகர்செய்யவேண்டும் என வஞ்சினம் கொண்டார். சௌரவேதத்தை சொல்சொல்லெனத் தேர்ந்து பொருள்கொண்டு ஊழ்கத்திலமர்ந்து உணர்ந்தார்.

வேதத்தவம் முழுமைகொண்டபோது அவர் முன் ஆடியெனக் கிடந்த மதுபிலசமங்கச் சுனையில் அகலில் சுடர் என சூரியன் எழுந்து “விழைவதென்ன, மைந்தா?” என்றான். வேதமுழுமையை உணர்ந்தமைந்த அர்வாவசு “ஏதும் விழைகிலேன். இப்புவியில் எவரிடமும் கடனிலேன், எவருடனும் பகையுறவும் அற்றுள்ளேன். முழுமையன்றி

கோருவது பிறிதில்லை" என்றார். அவ்வண்ணமே என்று சொல்லி சூரியன் மறைந்தான். சுனையில் இறங்கி அர்வாவசு நிறைவடைந்தார். அவர் தொகுத்த சௌரவேதம் அங்கே குடிலில் மரப்பேழையில் ஆயிரம் சுவடிகளில் எழுதப்பட்டு நூறு தலைமுறைக்காலம் காத்திருந்தது.



பராவசு தன் பெருஞ்செல்வத்தைக் கொண்டு மதங்கமலை அடிவாரத்தில் பன்னிரு ஊர்களை அமைத்தார். பன்னிரு

அரண்மனைகளில் பன்னிரு மனைவியரை குடியமர்த்தினார். அந்நிலம் சௌரவம் எனப்பட்டது. அவர் அதன் அரசரென ஆண்டார். அவருடைய மைந்தர்கள் அனைவருமே அவரைப்போல பொருள்விழைவு மிக்கவர்களாக இருந்தனர். மூத்தவனாகிய ராகு தந்தையைக் கொன்று தன் முதன்மையைப் பெற எண்ணினான். அதை அறிந்த பராவசு அவனைக் கொல்ல தன் இளைய மைந்தன் அர்வனிடம் ஆணையிட்டார். ராகுவை அர்வன் கொன்றான். அர்வனை ராகுவின் உடன்பிறந்தவர்களாகிய அனசனும் அக்ரனும் கொன்றனர்.

உடன்பிறந்தார் நடுவே பூசல் முற்றியது. அனசனும் அக்ரனும் மாறிமாறி போரிட்டனர். அனசனை அக்ரன் கொல்ல அக்ரனை பாரவன் கொன்றான். தன் மைந்தர் அனைவரும் மாறிமாறி கொன்று கண்ணெதிரே அழிவதைக் கண்டு நோயில் விழுந்து நொய்ந்து பராவசு மடிந்தார். அயல்நிலத்து கிராதர் படைகொண்டுவந்து சௌரவத்தை வென்று சூறையாடினர். அங்கிருந்த மக்கள் சிதறி பல ஊர்களிலாக பரவினர். அந்நிலம் புதர்மூடி மறைந்தது. அங்கு சேற்றுக்கு அடியில் அதன் மாளிகையிடிபாடுகள் மட்டும் எஞ்சின. மொழியில் சில கதைகளும் மிஞ்சியிருந்தன.

சௌரவேதத்தை நூறு தலைமுறைகளுக்குப் பின் மதுபிலசமங்கத்திற்கு வந்த மெய்யுசாவியான சமதன் என்னும் அந்தணச்சிறுவன் கண்டடைந்தான். அவன் அர்வாவசுவை தன் முதலாசிரியராக உளம்நிறுத்தி அதைப் பயின்றான். அவன் அர்வாவசு மெய்மரபின் இரண்டாம் ஆசிரியன் என்று அழைக்கப்பட்டான். அவனும் பின்னர் வந்த மாணவநிரையும் அர்வாவசு என்றே பெயர்கொண்டனர்.

“ஆனால் அர்வாவசு தந்தையைக் கொன்றவர் என்றே மக்களால் அழைக்கப்படுகிறார். எனவே அவரது வேதம் அந்தணரால் முழுமையாக புறக்கணிக்கப்படுகிறது. எந்த வேள்வியிலும் அதன் ஒரு சொல்லும் ஓதப்படுவதில்லை” என்றார் தருமன். சகதேவன் புன்னகைத்து “அது ஏன் உங்களைக் கவர்கிறது எனத் தெரிகிறது, மூத்தவரே” என்றான். “ஏன்?” என்று தருமன் புருவம் சுளித்தபடி கேட்டார். “தோற்கடிக்கப்பட்டவர்களும் பழிசுமத்தப்பட்டவர்களும் மறக்கப்பட்டவர்களும் உங்கள் விருப்பத்திற்குரியவர்கள். அவர்களை நீங்கள் உங்கள் அகத்துள் மீட்டு எழுப்பிக்கொள்கிறீர்கள்” என்றான் சகதேவன்.

“மெய்தான்” என்றபின் தருமன் திரும்பினார். கீழே நகுலனின் குரல் கேட்டது. “ஊனை மேலே கொண்டுவருவதற்காக அழைக்கிறார்” என்றபடி அவன் எழுந்து தொங்கும் ஏணிவழியாக கீழிறங்கிச் சென்றான். “நகுலன் என்ன செய்கிறான்?” என்றார் தருமன் குனிந்து நோக்கியபடி. “பன்றிகளின் ஊன் எச்சத்தைப் புதைக்க குழிதோண்டுகிறார். அதன்மேல் நட்டால் குருக்கத்திகள் பெரிதாக மலர்கொள்கின்றன” என்றாள் திரௌபதி. நீர் புல்லரிசியுடன் தளதளவென கொதிக்கத் தொடங்கிவிட்டிருந்தது.

“இந்தக் கதையை நான் ஏன் இப்போது சொன்னேன் என எண்ணிக்கொள்கிறேன்” என்றார் தருமன். திரௌபதி புன்னகைத்து “மீண்டும் போட்டிகளும் வஞ்சங்களும் வெற்றிதோல்விகளும் நிறைந்த உலகை விரும்புகிறது உங்கள் உள்ளம்” என்றாள். சினத்துடன் “என்ன சொல்கிறாய்?” என்றார் தருமன். “சலிப்பு. அதை வெல்ல மீண்டும் பகடை” என்றாள். தருமன் மெல்ல தளர்ந்து “மெய்யாக இருக்கலாம். நான்

சொல்வதற்கொன்றுமில்லை. ஆனால் இன்று சௌரவேதத்தை வாசித்தபோது அதிலிருந்த விழைவைத்தான் என் உள்ளம் தொட்டறிந்தது” என்றார்.

சகதேவன் மேலே வந்து சகடையில் கட்டப்பட்டிருந்த கயிற்றை இழுத்து வலைக்கூடையை மேலே தூக்கி வைத்தான். செந்நிறமான பிண்டிமரத் துண்டுகள் போல பன்றியின் ஊன் அதிலிருந்தது. தொடைகளை எடுத்து காய்களின் அருகே விரிக்கப்பட்டிருந்த ஈச்சம் பாயில் வைத்தான். தருமன் ஊனையே நோக்கிக்கொண்டிருந்தார். பன்றியூனில் குருதி எளிதில் உறைந்துவிடுவதனால் அவை ஆழ்செம்மை நோக்கி சென்றுகொண்டிருந்தன. சகதேவன் கீழே நகுலன் எடுத்து வைத்த ஊன்பாளங்களை எடுத்து அடுக்கினான்.

“இத்தனை ஊனையும் வெட்டித் துண்டுகளாக்குவதற்குள் அரிசி வெந்துவிடும்” என்றான் சகதேவன். ஐந்தாவது கூடை மேலே வந்தபோது உடன் நகுலனும் ஏறிவந்தான். அவன் உடலெங்கும் குருதியும் மண்ணும் வியர்வையில் நனைந்து வழித்தடங்களுடன் இருந்தன. “இன்று மந்தன் வரவில்லை என்றால் இவ்வுணவை என்ன செய்வது? ஐம்பதுபேர் உண்ணுமளவுக்கு இருக்குமே?” என்றார் தருமன். “தேவியின் கனவில் வந்தால் அவர் வராமலிருப்பதில்லை” என்றான் நகுலன்.

சிரித்தபடி “சரி, நிகழ்க!” என்றார் தருமன். “அவன் வந்ததுமே எனக்கு சொல்லுங்கள்” என்றபடி வெளியே சென்றார். பீமனை காட்டில் பார்த்ததை சொல்லலாமா என எண்ணியபின் தவிர்த்தபடி மையக்குடில் நோக்கி நடந்தார்.

# மாமலர் - 3

### 3. நன்னீராட்டு

தருமன் தன் அறைக்குள் சென்றமர்ந்து சுவடிக்கட்டை கையில் எடுத்தபோது குரங்குகளின் ஓசை படைவருகைபோல கேட்டது. ஒருகணம் திகைத்தாலும் உடனே முகம் மலர்ந்து அவர் வெளியே ஓடி குடில்விளிம்பில் நின்று எட்டிப் பார்த்தார். மரக்கிளைகளில் சுழற்காற்று வீசுவதுபோலிருந்தது. நூற்றுக்கணக்கான குட்டிக்குரங்குகள் ஹூஹூஹூஹூ என கூச்சலிட்டபடி கிளைகளில் தொங்கி ஊசலாடி, பாய்ந்து கிளை பற்றி, தாவி காற்றில் பறந்து, கிளைகளில் தொற்றி பெருங்காற்று கொண்டுவரும் சருகுகள்போல வந்தன. குடிலின் கூரைமேல் அவை காய் உதிர்வதுபோல விழுந்தன.

இறைவாணத்திலும் கழுக்கோல்முனைகளிலும் தொங்கி ஆடி உள்ளே வந்து விழுந்து அவ்விரைவில் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்து தன்னைத்தான் சுற்றிக்கொண்டு வால் சொடுக்கி அங்குமிங்கும் தாவின. ஒரு குட்டி தருமனின் ஆடையைப்பற்றி இழுத்தது. இன்னொன்று சுவடிக்கட்டை ஆவலாக எடுக்கப்போக தருமன் “ஆ... போ போ போ” என கூவியபடி அதை விரட்டி சுவடிகளை எடுத்து பெட்டிக்குள் வைத்தார். சற்றுநேரத்தில் குடில்முழுக்க குரங்குகளின் உடல்கள் நிறைந்து சாம்பல்நிறம் எங்கும் நெளிந்தது. முந்தையநாளின் மழைக்குப்பின் அவையனைத்தும் நீராடி புதிய உடலுடன் இருந்தன.

அவை ஒன்றுடன் ஒன்று தழுவி ஒன்றன் மேல் ஒன்று ஏறி விழுந்து பல்காட்டி சீறின. வாலைப்பற்றி இழுத்து பூசலிட்டன. கூரைமூங்கிலில் உறிகள் போலத் தொங்கி ஆடின. தாளாத ஆர்வத்துடன் ஒன்று ஒரு தாலத்தை எடுக்க ஐந்து குரங்குகள் பாய்ந்து அதைப்பற்றி இழுத்து பிடுங்க முயன்றன. தாலம் பேரோசையுடன் தரையில் விழ தூசுப்பரப்பு காற்றில் விலகுவதுபோல குரங்குத்தொகை நாலாபக்கமும் சிதறி அகன்றது. வெளியே இருந்து ஒரு பெருங்குரங்கு கையூன்றி அரசநடையுடன் உள்ளே வந்தபோது அத்தனை குரங்குகளும் உடல் வணங்கி விலகின.

பெருங்குரங்கு மெல்ல நடந்துசென்று தாலத்தை தொட்டுப்பார்த்து 'அஞ்சும்படி ஒன்றுமில்லை' என்று முகம் காட்டிவிட்டு திரும்ப ஒரு குட்டி தாலத்தின் விளிம்பை மிதித்தது. எழுந்த தாலத்தைக் கண்டு அஞ்சி விலக தாலம் மீண்டும் ஓசையெழுப்பியபடி விழுந்து அதிர்ந்தது. அறியாது மெய்விதிர்த்து விலகி ஓடிய பெருங்குரங்கு சினம்கொண்டு குட்டியை கடிக்க ஓடியது. அது பாய்ந்து கூரைக்கழுக்கோலைப் பற்றி கூரையின் நடுமடிப்பு வரை சென்றது. பெருங்குரங்கால் அதை தொடரமுடியவில்லை. அங்குமிங்கும் நோக்கியபடி உறுமிவிட்டு தருமனை நோக்கி 'ஒன்றுமில்லை, சின்னப்பிள்ளைகள்' என்று முகம் வலித்தது. இன்னொரு குட்டி வேண்டுமென்றே தாலத்தில் குதிக்க பெருங்குரங்கு துள்ளி விழுந்து சீறியபடி அதை பிடிக்க ஓடியது. பிறிதொன்று தாலத்தின் மேல் குதித்தது. பெருங்குரங்கு திகைத்து பக்கத்து அறைநோக்கி நடக்க குட்டிகள் ஹூஹூஹூ என கூவியபடி அதை தலைக்குமேல் தொடர்ந்து சென்றன.

அடுமனையில் திரௌபதியின் சிரிப்பும் கூச்சலும் கேட்டது. நகுலன் தோள்களிலும் தலையிலும் மூன்று குரங்குக்குட்டிகள் தொற்றி அமர்ந்திருக்க வெளியே வந்து நடைபாலத்தில் நின்றபடி "மூத்தவர் வருகிறார்" என்றான். "எங்கே?" என்றார் தருமன். "தொலைவில்... அவர் வரும்போதுதான் குரங்குகளின் இந்த வகையான ஒலி கேட்கும்." தருமன் செவிகூர்ந்து "அதே ஒலிதானே? காட்டையே கலக்கிக்கொண்டிருக்கிறார்கள் வாலர்கள்" என்றார். "இல்லை, இது வேறுவகை ஒலி... இது அலையலையாக எழும்" என்றான் மேலும் சில குரங்குகள் தலைமேல் அமர்ந்திருக்க வந்த சகதேவன்.

பீமனின் மஞ்சள்நிற உடல் இலைப்பசுமைக்குள் இருந்து எழுந்தது. அவன் தாவி வந்து கூரைமேல் குடிலே அதிரும்படி இறங்கி அதன் ஈச்சையோலைப்பரப்பைக் கிழித்து ஊடுருவி உள்ளே இறங்கி தருமனைக் கண்டு "வணங்குகிறேன், மூத்தவரே" என்றான். தருமன் முதலில் அறியாமல் சற்று சிரித்து உடனே சினந்திரட்டி "வீட்டுக்குள் நுழைய வாயில் என ஒன்று உள்ளது, மூடா" என்றார். குழப்பமாக வாயிலை நோக்கிய பீமன் "ஆம்" என்றபின் வாயில்வழியாக வெளியே சென்று உடனே அவ்வழியே உள்ளே நுழைந்து "வணங்குகிறேன், மூத்தவரே" என்றான். "ஒழிந்து போ... உன்னைப் பார்த்தாலே எரிச்சலாக இருக்கிறது. அஸ்தினபுரியின் பாண்டுவின் மைந்தனா நீ? இல்லை குரங்கா?" என்றார் தருமன்.

"நானா?" என்ற பீமன் "மூத்தவரே, நான் அஸ்தினபுரியின் இளவரசனாகிய குரங்கு... அல்லது..." என்றபின் திரும்பி சகதேவனிடம் "இளையோனே, பசிக்கிறது!" என்றான். "அடுமனையில் உனக்காகத்தான் சமையல் நிகழ்கிறது. போ!

அண்டாவோடு உண்டுவிட்டுச் செல்" என்றார் தருமன். பீமன் "நான் இங்கே உணவிருக்காதென எண்ணினேன். நல்ல பன்றி ஒன்றை பிடித்துக்கொண்டுவர நாசிகனையும் சூசிகனையும் செப்பனையும் அனுப்பினேன். நாகபுச்சனும் சூசிமுகனும் உடன் சென்றனர்" என்றான். "இங்கே எல்லாமே சித்தமாகிக்கொண்டிருக்கிறது. தங்களுக்குப் பிடித்த ஊன்சோறு" என்று நகுலன் சொன்னான்.

கையில் அகப்பையுடன் பின்னால் வந்து நின்ற திரௌபதி "சென்று எத்தனை நாளாகின்றன என்று தெரியுமா?" என்றாள். "நாட்கணக்கெல்லாம் காட்டில் இல்லை, தேவி" என்றான் பீமன். "நீராடும் வழக்கம் உண்டா, அல்லது இனிமேல்தானா?" என்று அவள் கேட்டாள். "நீராடவேண்டும்" என்றான் பீமன். அவள் விழிகள் கனிந்த நகையுடனிருந்தன. இதழ்கள் சிரிப்பில் நீண்டிருந்தன. பீமன் அவளருகே சென்றதும் அவள் அவன் தலையில் கைவைத்து "முடியெல்லாம் நார்போலிருக்கிறது... முதலில் சற்று எண்ணை பூசவேண்டும்... வருக!" என்றாள். அவன் கையைப் பற்றியபடி "வரவர கையா காலா என்றே தெரியவில்லை" என அழைத்துச்சென்றாள்.

"அன்னை போலிருக்கிறாள்" என்றார் தருமன். "அன்னையர்தான் இப்படி சலித்துக்கொள்வார்கள். வேறு எவரும் எக்குறையும் சொல்வதற்கு முன்னரே தாங்கள் அதை சொல்லிவிடுவார்கள்." சகதேவன் "நீங்களும் தந்தைபோலத்தான் இருக்கிறீர்கள், மூத்தவரே" என்றான். தருமன் சினத்துடன் "பின் இல்லாமல்? இவனை இப்படியே விட்டால் இங்கிருந்து அஸ்தினபுரியின் இளவரசனை நாம் அழைத்துச்செல்லமுடியாது. கழுத்தில் சரடுகட்டி குரங்கு ஒன்றை இழுத்துச் செல்வோம். கண்டிப்பதற்கு தயங்கியமையால்தான் இப்படி

ஆகிவிட்டிருக்கிறான். மூடன்...” என்றார். “முற்றிலும் உண்மை” என்றான் நகுலன். “இவனை இப்படியே விடமுடியாது” என்றபடி தருமன் தன் பீடத்தை நோக்கி செல்ல அங்கே உடல் ஒன்றாக அமர்ந்திருந்த மூன்று குரங்குகள் “உர்ர்” என்றன.

“இதில் மூன்று தலைவேறு” என்று சலித்துக்கொண்ட தருமன் “நான் இங்கே எங்கே அமர்வது?” என்றார். “அமர்வது நல்ல எண்ணம் அல்ல, மூத்தவரே. நாம் அமர்ந்தால் நம்மை இவை பீடமாக கொள்கின்றன” என்றான் நகுலன். மீண்டும் சிரிப்பு எழ முகத்தை திருப்பிக்கொண்டு “இலங்கையரசன் எப்படி வீழ்ந்தான் என இப்போது புரிகிறது. இவற்றை பார்ப்பதற்கு பத்துமுகமும் இருபது கண்ணும் போதாது” என்றபடி தருமன் “என்ன உண்கிறானா இல்லையா?” என்றார். “நீராடுகிறார் என நினைக்கிறேன்” என்றான் நகுலன். “இளையவன் எங்கே?” என்றார் தருமன். “அவர் நீராடுவதைப் பார்ப்பது இளையவனுக்கு மிக விருப்பமானது” என்ற நகுலன் “எனக்கும்...” என்றபடி அங்கிருந்து அகன்றான்.

நகுலன் செல்வதை ஒருகணம் நோக்கியபின் தருமன் “நானும் வருகிறேன். வேறு எப்போது அந்தக் குரங்கிடம் பேசுவது? நீராடி உணவுண்டால் உடனே கிளம்பவும் வாய்ப்புண்டு” என்றபடி உடன் நடந்தார். கீழே தோட்டத்தில் சிறிய மரப்பீடத்தில் இடையில் தோல் கோவணத்துடன் அமர்ந்திருந்த பீமன் உடலில் சகதேவன் இளஞ்சூடான எண்ணையை கொப்பரையில் இருந்து அள்ளித் தேய்த்துக்கொண்டிருந்தான். அருகே திரௌபதி ஈஞ்சைப்பட்டையை உரித்து சுருட்டிக்கொண்டிருந்தாள். நிறைய குரங்குகள் திகைத்தவைபோலவும் வியந்தவைபோலவும் அவர்களைச் சூழ்ந்து நின்றிருந்தன. ஒரு பெருங்குரங்கு எண்ணையைத்

தொட்டு நோக்கியபின் திரும்பி ‘ஒன்றுமில்லை, கெடுமணம் மட்டுமே’ என்றது.

“அவன் பெயர் சக்ரநாபன்…” என்றான் நகுலன். ஏணியில் அவன் இறங்க தருமன் மேலேயே நின்றபடி “நீ சென்று குளிப்பாட்டு உன் தமையனை. நான் இங்கேயே நின்றுகொள்கிறேன்” என்றார். நகுலன் புன்னகையுடன் கீழிறங்கிச் சென்றான். இரு குரங்குகள் ஓடிவந்து அவனிடம் கைசுட்டி பீமனைக் காட்டி ஏதோ சொல்லின. குட்டி ஒன்று ‘என்னைத் தூக்கு’ என்று கையைக் காட்டியது. அவன் அதை கைபிடித்துச் சுழற்றி எடுத்துக்கொண்டு அணுகினான். சகதேவன் எண்ணை பூசும்படி சொல்ல நகுலன் கொப்பரையை வாங்கிக்கொண்டான்.

எண்ணைப்பூச்சில் பீமனின் உடல் வெண்கலம்போல ஒளிவிட்டது. ஒவ்வொரு தசையும் இறுகி முழுமையடைந்திருந்தன. தோள்தசை அவ்வளவு பொங்கி எழமுடியுமா, முதுகுப்பள்ளம் அப்படி ஆழ இறங்கமுடியுமா? நரம்போடிய பெரும்புயங்கள். இரு பலகை விரிந்த நெஞ்சு. வயிற்றில் நரம்புகள் பின்னியிருப்பதை வேறெங்காவது பார்த்திருக்கிறோமா? அவர் கண்ட செஞ்சிலை உடல்களெல்லாம் சிறியவை. பேருடல்கள் எங்கேனும் ஏதேனும் பெருத்தவை. அனைத்தும் அமைந்த உடல். ஏன் அன்னை இவனை ஒருகணமும் விழிநிறுத்தி நோக்க மறுக்கிறாள் என இப்போது புரிகிறது.

திடுக்கிட்டு தருமன் மீண்டார். கண்ணேறு தொட்டிருக்குமோ? தந்தைகண்போல் தீயதில்லை என்பார்கள். என்ன செய்வது அதற்கு? ஒரு துளிக் குருதி அளித்தால் போதுமென்பார்கள் என எண்ணம் வந்தது. இடையைத் தொட்டபோது கத்தியில்லை என தெரிந்தது. மூங்கில் முனை ஒன்று நீட்டி நின்றது. அதில்

தன் புறங்கையை வைத்து அழுத்தி இழுத்தார். கிழிந்து குருதி வழிந்தது. கையை நீட்டி “ஸ்வாஹா… விழியில் வாழ்பவளே, மூத்தவளே, இருண்டவளே, ஸ்வாஹா” என மூன்று சொட்டுகள் உதிர்த்து விழிமூடி வேண்டிக்கொண்டார்.

ஆனால் அவனை நோக்காமலிருக்கவும் முடியவில்லை. இனி நோக்கலாம், குருதி அளிக்கப்பட்டுவிட்டதே என எண்ணியபடி மீண்டும் பார்த்தார். நகுலன் குதிரையை தோலுருமிவிட்டுத் தேர்ந்த கைகளால் பீமனின் உடலை அழுத்தி தேய்த்தான். எப்போதும் எதனையும் மேலிருந்து கீழ்நோக்கியே இழுபடும்படி அவன் கையசைவுகள் அமைந்திருந்தன. சகதேவன் கீழே அமர்ந்து கால்களை கைபொத்தி இழுத்து வழித்திறக்கினான். திரௌபதி அவன் குழலில் எண்ணை பூசி விரல்களை உள்ளே செலுத்தி நீவிச் சுழற்றி கொண்டைபோல சுற்றிக்கட்டினாள்.

குரங்குகள் குறையா ஆர்வத்துடன் நோக்கி அமர்ந்திருந்தன. ஒரு குரங்கு தானும் பீமனை தடவ வந்தபோது நகுலன் அதை விலக்கினான். அது திரும்ப மற்ற குரங்குகள் ஹோஹோஹோ என ஓசையிட்டன. எண்ணை பூசிமுடித்ததும் நகுலன் அருகே இருந்த பெரிய மரக்குடைவுத் தொட்டியில் நிறைந்திருந்த நீரில் அப்பாலிருந்த அடுப்பில் எரியும் கனலில் சுட்டுப்பழுத்துக் கிடந்த பெரிய உருளைக்கற்களை எடுத்து போடத்தொடங்கினான். பின்னர் அவற்றை எடுத்து மீண்டும் அடுப்பிலிட்டான். மெல்ல நீர் வெம்மைகொண்டு ஆவியெழத் தொடங்கியது. கைவிட்டுப் பார்த்து அதன் வெம்மையை மதிப்பிட்ட திரௌபதி தன் ஆடையை இடையில் செருகிக்கொண்டு பெரிய சுரைக்குடுவையில் நீரை அள்ளி பீமனின் தலையில் விட்டாள்.

குரங்குகள் கூச்சலிட்டுக்கொண்டு பாய்ந்து பின்வாங்கின. பெருங்குரங்குகள் கைகளைத் தூக்கியபடி போருக்கெழுந்தன. பீமன் மெல்லிய உறுமலால் அவற்றிடம் பேச அவை திரும்பி பிற குரங்குகளிடம் 'ஒன்றுமில்லை' என விளக்கின. ஒவ்வொரு குரங்காக அணுகி அச்சத்துடன் நோக்கிநின்றது. ஒவ்வொரு குடுவையசைவுக்கும் அவற்றின் உடல்களும் உடனசைந்தன. ஒரு குரங்கு பீமனைச் சுட்டிய கையை அப்படியே வைத்திருந்தது. ஒன்று சுற்றிவளைத்துச் சென்று நீர்த்தொட்டியைத் தொட்டு நோக்கி ஹீஹீஹீ என ஓசையிட்டது.

பீமனின் உடலில் இருந்து ஆவியெழுந்தது. நகுலன் மேலும் நீர் கொண்டுவிட்டு சுடுகற்களை போட்டுக்கொண்டிருந்தான். சகதேவனும் திரௌபதியும் அள்ளி அள்ளி நீரூற்றினர். திரௌபதி அவன் குழலை விரல் செலுத்திக் கழுவினாள். சகதேவன் உருளைக்கல்லால் அவன் தோளையும் மார்பையும் தேய்த்தான். திரௌபதி ஈஞ்சைப்பட்டையால் அவன் காதுமடல்களையும் கன்னங்களையும் கழுத்தையும் தேய்த்தாள். யானை நீராட்டு என தருமன் எண்ணிக்கொண்டு உடனே அது கண்ணேறாகுமா என அஞ்சி தலையை அசைத்தார். நீராட்டுவதில் அவர்கள் மேலும் மேலுமென ஆழ்ந்து சென்றனர். அவன் உடலின் ஒவ்வொரு பகுதியையும் தேய்த்து உரசிக் கழுவினர்.

பின்னர் திரௌபதி மேலேறிச்சென்று மரவுரிகளை எடுத்துவந்தாள். அதைக் கொண்டு அவன் தலையை அவள் துவட்ட நகுலனும் சகதேவனும் அவன் உடலை துடைத்தனர். புதிய தோலாடையை இடைசுற்றியபடி பீமன் எழுந்தபோது குரங்குகள் மெல்ல உளம் எளிதாகின. ஒரு குரங்கு

அஹஹஹாஹ் என ஓசையிட மற்ற குரங்குகளும் சேர்ந்துகொண்டன. அவர்கள் மேலேறிவரும்போது முந்தியபடி குரங்குகள் தொற்றி மேலே வந்தன. பல குரங்குகள் ஒரேநேரத்தில் அடுமனைக்குள் செல்ல பேரோசை கேட்டது. உணவுக்கலம் கவிழ்ந்துவிட்டது என்று தருமன் எண்ணினார்.

அடுமனைக்குள் எட்டிப் பார்த்தபோது அது உண்மை எனத் தெரிந்தது. பெருங்கலத்தின் விளிம்பிலேறிய குரங்குகள் அதைக் கவிழ்த்து ஊன்சோறு ஆவியுடன் அடுமனைத்தரையில் குவியச் செய்திருந்தன. கவிழ்த்த குரங்குகள் அஞ்சி மேலேறி கூரையில் தொற்றி குற்றவுணர்வுடன் தலைதிருப்பி சுவரை நோக்கிக்கொண்டிருந்தன. மேலேறிவந்த திரௌபதி "என்ன செய்திருக்கிறார்கள்? இதோ, அத்தனை பேரையும்…" என சொல்லவர பீமன் "ஒன்றும் நிகழவில்லை… நான் அங்கே காட்டில் வெறும்பாறையிலிட்டு உணவுண்பவன். மண்கலக்கா உணவு எனக்கு சுவைப்பதில்லை" என்றபடி அங்கேயே அமர்ந்துகொண்டான்.

அவன் ஊன்சோற்றை அள்ளி உண்ணத்தொடங்க நகுலன் திரும்பி தருமனை பார்த்தான். "சேர்ந்துண்ணலாம் என எண்ணினேன், மூத்தவரே" என்றான். தருமன் "அதற்கென்ன? அவன் உண்பதை நாம் உண்ணலாகாதா?" என்றபடி அருகே வந்து அமர்ந்தார். நகுலன் முகம் மலர்ந்து "ஆம், இன்றைய உணவு இப்படியாகுக!" என்றபடி உணவுக்குவையின் அப்பால் அமர்ந்தான். சகதேவனும் அமர்ந்தான். தருமன் ஒரு கவளம் உருட்டி திரௌபதிக்கு நீட்ட அவள் சிரித்தபடி அதை பெற்றுக்கொண்டாள். "இனிது" என்றார் தருமன். "இத்தனை சுவையாக அரசி சமைப்பாள் என நான் எண்ணவே இல்லை."

நகுலன் “மூத்தவருக்காக சமைக்கையில் மட்டுமே இச்சுவை அமைகிறது” என்றான். “இவன் உண்பதைப் பார்த்தால் சுவைதேர்பவன் போலவே தெரியவில்லையே” என்றார் தருமன் ஊனுணவை உண்டபடி. “மூத்தவரே, பேருணவுண்ணும் யானையே நுண்சுவை அறிவதிலும் கூர்ந்தது. நோக்குக!” என்றபின் முற்றிலும் உணவிலாழ்ந்திருந்த பீமனிடம் “மூத்தவரே, இப்பன்றி எத்தனை அகவை கொண்டது?” என்றான். பீமன் “இதில் இரு பன்றிகள் உள்ளன. ஒன்றுக்கு மூன்று வயது இன்னொன்றுக்கு ஐந்து வயது” என்றான். பார்த்தீர்களா என்பதுபோல திரும்பிநோக்கி நகுலன் புன்னகைத்தான்.

“இளையவனே, எதைக்கொண்டு அறிகிறாய்?” என்றார் தருமன். “ஒரு பன்றி தசைமூப்பு கொண்டு கொழுப்புசேரத் தொடங்கிவிட்டிருக்கிறது. இன்னொன்று இன்னமும் கன்று. இளந்தசை” என்றான் பீமன். “இதிலிட்ட காய்கறிகள் ஒவ்வொன்றும் என்ன வகை எவ்வளவு மூப்பு என்றுகூட சொல்லிவிடுவான்போல” என்று தருமன் சிரித்தார். பீமன் “இதில் இடப்பட்ட வழுதுணைகள் கீழே கோமதியின் சேற்றுக்கரையில் விளைந்தவை. சற்று கறைமிகுந்துள்ளன” என்றான். தருமன் “இதற்குமேல் நான் எதையுமே கேட்க விரும்பவில்லை” என்று சிரித்தார்.

குரங்குகள் அவர்கள் உண்பதை சூழ்ந்து அமர்ந்து நோக்கின. “அவை அட்ட உணவை உண்பதில்லையா?” என்றார் தருமன். “அவற்றுக்கு உப்பு உவப்பதில்லை” என்றாள் திரௌபதி. “இவனுடன் உண்ணவேண்டுமென்றால் பருக்கைகளாக உண்ணவேண்டும் போலுள்ளது” என்றார் தருமன். “மூத்தவரே, தாங்கள் இங்கு அடிக்கடி வருவதில்லை என மூத்தவர் வருந்தினார்” என்றான் சகதேவன். “வந்து மீள்கிறாரே?” என்றாள்

திரௌபதி. தருமன் “நான் இவன் உடல் தேய்ந்திருப்பான் என அஞ்சினேன். நன்று, காடுதான் இவனுக்குரிய இடம்” என்றார். நகுலன் “மொழியே மறந்தவர் போலிருக்கிறார்” என்றான்.

அவர்கள் உண்டு எழுந்தபின்னரும் பீமன் உண்டான். அவர்கள் கடித்துப்போட்ட எலும்புகளை எடுத்து வாயிலிட்டு நொறுக்கி விழுங்கினான். “சீ, என்ன செய்கிறாய்?” என்றார் தருமன். “அவர் எப்போதும் செய்வதுதானே?” என்றாள் திரௌபதி. தருமன் எழுந்து கைகழுவிவிட்டு கைகளை மார்பில் கட்டியபடி நின்று அவன் உண்பதை நோக்கினார். நகுலன் “தங்களுக்கு உணவு போதுமானதாக உள்ளதா, மூத்தவரே?” என்றான். “எஞ்சியதை வெளியே சென்று உண்பேன்... என் நண்பர்களிடம் நல்ல பெரும்பன்றி ஒன்றை கொண்டுவரச் சொல்லியிருக்கிறேன்” என்றான் பீமன்.

“இதற்கு மேலுமா?” என்ற தருமன் “நன்று, உண்க இளையோனே! இப்புவியில் ஐம்பெரும் பருக்களும் உன்னை வாழ்த்தி மண்ணுக்கு அனுப்பியிருக்கின்றன” என்றார். பீமன் உண்பதை அவர்கள் நோக்கிநின்றனர். கை துலாபோல எழுந்தமைந்தது. தாடை இறுக வாய் அசைந்தது. முகம் ஊழ்கநிலைகொண்டிருந்தது. ஒரு சோறு சிந்தவில்லை. ஒரு துளி சிதறவில்லை. உருட்டி அள்ளப்பட்ட அத்தனை கவளங்களிலும் ஊனும் சோறும் ஒரே அளவில் இருந்தன. நெடுங்காலம் கற்றுத்தேர்ந்த கலைஞனின் அசைவுகள். பழுதற்றவை, பிறிதற்றவை.

ஒரு பருக்கைகூட எஞ்சாமல் அவன் உண்டுமுடித்தான். கலத்தை உருட்டி அதில் ஒட்டியிருந்தவற்றையும் சுரண்டி உண்டான். பெருத்த ஏப்பத்துடன் அவன் எழுந்தபோது அப்பகுதியில் உணவுண்ணப்பட்டதற்கான தடமே

எஞ்சவில்லை. இதுவே வேள்வி என தருமன் எண்ணிக்கொண்டார். மேலுமொரு ஏப்பம் விட்டபின் பீமன் கலத்தை எடுக்கப்போக நகுலன் “அதை அங்கேயே விடுங்கள், மூத்தவரே. நாங்கள் கழுவிக்கொள்கிறோம்” என்றான். பீமன் கைகழுவ திரௌபதி நீர் வார்த்தாள். அவன் கையைப் பற்றி அவளே தேய்த்து கழுவிவிட்டாள். அவன் வாயை தன் மேலாடையால் துடைத்துவிட்டு “நிறைந்ததா?” என்றாள். “சுவையில் நிறைவென்பதில்லை” என்றான் பீமன்.

வெளியே குரங்குகளின் ஓசை கேட்டது. மரக்கிளைகளில் இருந்த குரங்குகள் கூச்சலிட குடிலை நிரப்பியிருந்த குரங்குகள் எதிர்க்கூச்சலிட்டன. செவிநிறைந்த கூச்சலைக் கேட்டு “ராகவராமன் தெய்வக்கூறுள்ளவன். இல்லையேல் கிஷ்கிந்தையரை அவன் தாங்கிக்கொண்டிருக்கமாட்டான்” என்றார் தருமன். பீமன் எழுந்துசென்று நோக்கினான். எட்டு பெருங்குரங்குகள் ஒரு கரிய குள்ளமனிதனை தூக்கிக்கொண்டு வந்தன. ஆடையற்ற அவன் உடல் சிறுவனளவுக்கே இருந்தாலும் கொழுத்து உருண்டிருந்தது. பெரிய வெண்ணிறப் பற்கள் மட்டும் காற்றிலென மின்னி மின்னித் தெரிந்து அணுகின.

“யார் இவன்?” என்றான் நகுலன். “அறியேன், நான் இவர்களிடம் பன்றியை கொண்டுவரும்படிதான் சொன்னேன்” என்றான் பீமன். அவனை குரங்குகள் கொண்டுவந்து உள்ளே போட்டன. பலகைப்பரப்பில் ஓசையுடன் விழுந்த அவனைச் சூழ்ந்து இருகால்களில் எழுந்து நின்றபடி நெஞ்சை அறைந்து ஓசையிட்டன. “இவனை உண்ணப்போகிறாயா, மந்தா?” என்றார் தருமன். பீமன் “உண்ணுதற்குரிய ஊன் கொண்டவனே. வாலோர் எண்ணியது பிழையல்ல” என்றபின் “வேறேதும்

கிடைக்காத காலத்திற்காக உடன்வைத்திருக்க ஏற்றவன்” என்றான்.

பீமனின் குரல்கேட்டு “என்ன?” என்று குழறியபடி குள்ளன் எழுந்து அமர்ந்து சூழ்ந்து நின்றிருந்த குரங்குகளைப் பார்த்ததும் அலறியபடி வலிப்புகொண்டு மீண்டும் மயங்கினான். அவன் கால்கள் இழுபட்டன. வாயிலிருந்து எச்சில் குமிழியாக வெடித்து வழிந்தது. “எளிய ஆன்மா… அதை உன் தோழர்கள் வதைத்திருக்கிறார்கள்” என்றார் தருமன். “இல்லை மூத்தவரே, அவர்கள் அவனை ஒன்றும் செய்யவில்லை” என பீமன் குனிந்து அவனை நோக்க அவன் உடல் எம்பி விழுந்தது. “ராமன்! ராமனிடம்!” என்று அவன் குழறினான். இமைகளுக்குள் விழிக்குமிழிகள் ஆடின.

சகதேவன் “விலகுங்கள் மூத்தவரே, உங்களைப் பார்த்தால் அவர் நெஞ்சடைத்து செத்தே போய்விடுவார்” என்றபின் அமர்ந்து அவன் தலையைப் பிடித்து உலுக்கினான். அவன் மெல்ல இமையதிர்ந்து வாய்நெளிய முனகினான். விழிதிறந்து சகதேவனைப் பார்த்ததும் அலறியபடி எழுந்து கைகளால் தோளை வளைத்துப் பற்றிக்கொண்டான். உடல் அதிர அவன்மேல் தொற்றி ஏற விழைபவன்போல கைகளாலும் கால்களாலும் பின்னி இறுக்கியபடி வெறிகொண்டு அலறினான். “குரங்குகள்… குரங்குகள்” என்றான்.

“அமைக! அமைக!” என்றான் சகதேவன். “காப்பாற்றுங்கள்… காப்பாற்றுங்கள்…” என்றான் அவன். “நீ பாதுகாப்பாக இருக்கிறாய்… நோக்குக! இது இந்திரப்பிரஸ்தத்தின் முன்னரசர் யுதிஷ்டிரரின் இல்லம்…” என்றான் சகதேவன். அவன் அதைக் கேட்டதாகத் தெரியவில்லை. மீண்டும் மீண்டும் சொன்னபோது அகம் தெளிந்து சொல்கொண்டு பெருமூச்சுவிட்டு பிடி

தளர்ந்தான். வாய்திறந்து தருமனையும் சகதேவனையும் மாறிமாறி நோக்கினான். பெரிய இமைகள் இருமுறை மூடித்திறந்தன. “அவருக்கு இங்கு குரங்குகள்தான் குடிகளா?” என்றான்.

தருமன் வாய்விட்டு சிரித்துவிட்டார். சகதேவன் புன்னகையுடன் “இல்லை, அவை இரண்டாமவரின் நண்பர்கள்” என்றான். அவன் எழுந்து தலையால் நிலம்தொட்டு வணங்கி “இந்திரப்பிரஸ்தத்தின் அரசரை வணங்குகிறேன். என் பெயர் குஸ்மிதன். அறிவைப் பெருக்கும்பொருட்டு நான் உடல்வளர்ச்சியை முன்னரே நிறுத்திக்கொண்டவன். எனவே என்னை முண்டன் என்று அழைப்பார்கள்” என்றான். முகத்தில் வெண்பற்கள் தோன்றி மறைய சூழ நின்றிருந்த குரங்குகளை நோக்கியபின் “உங்கள் இளையவர் மீது கொண்டுள்ள அதே கட்டுப்பாட்டை குரங்குகள் மீதும் கொண்டிருக்கிறீர்கள் என எண்ணுகிறேன்” என்றான்.

தருமன் சிரித்தபடி “வாழ்க! நீங்கள் பகடிக்கலைஞர் என எண்ணுகிறேன்” என்றார். “ஆம், கழைக்கூத்தும் கயிற்றாட்டமும் விழிமாயமும் செவிமாயமும் செய்வேன். இங்கு காட்டுச்சந்தை ஒன்றில் திறன்காட்டி பொன் பெற வந்தேன்” என்றான். “இங்கா?” என்றார் தருமன். “ஆம், நகர்களில் முனிவர்களே அனைத்தையும் காட்டிவிடுகிறார்கள்” என்று அவன் சொல்ல தருமன் சிரித்து உடனே சினம்காட்டி “மிகைபகடி வேண்டாம்” என்றார். “ஆணை” என அவன் வணங்கி “பொன் கிடைத்தது. அதைக் கண்டு ஒரு மலையழகி என்மேல் காதல்கொண்டாள். அவளும் என்னைப்போலவே குள்ளம். ஆகவே நான் அவளை மணந்துகொண்டு அவள் குடிலிலேயே தங்கினேன்” என்றான்.

“பிறகு?” என்றாள் அப்பால் வந்து நின்றிருந்த திரௌபதி. “அரசியை வணங்குகிறேன். அவள் கற்புடையவள் அல்ல. என் பொன்னையெல்லாம் பெற்றுக்கொண்டபின் மைந்தனைப் பெற பிறிதொருவனை சேர்த்துக்கொண்டாள். என்னிடம் சொல்லியிருந்தால் இருவருமே அவளுக்கு கணவர்களாக இருந்திருக்கலாம். கற்பில்லாதவளுக்கு அது புரியவில்லை.” தருமன் முகம் சிவந்து ஏதோ சொல்ல நாவெடுக்க திரௌபதி சிரித்தபடி “எளிய பெண்போலும்” என்றாள்.

“ஆம் அரசி, மிக எளியவள். அவளும் அவள் காதலனும் சேர்ந்து எனக்கு மது அளித்து மயங்கச்செய்து தூக்கிக்கொண்டுவந்து காட்டுக்குள் போட்டுவிட்டார்கள். என் ஆடைகளையும் கொண்டுசென்றுவிட்டனர். ஆடையில்லாதவனாக காட்டுக்குள் வந்த நான் குரங்குகள் வரும் ஒலி கேட்டு மக்கள் என எண்ணி புதருக்குள் பதுங்கினேன். என்னை அவை தூக்கிக்கொண்டு வந்துவிட்டன.” நகுலன் “பன்றி என எண்ணிவிட்டிருக்கின்றன” என்றான். “நான் முன்பு ஹனுமான் சஞ்சீவி மலையை கொண்டு சென்றதுபோல என்றல்லவா எண்ணினேன்” என்றான் முண்டன். “இப்போது என்ன? என்னை சமைக்கப்போகிறீர்களா? எனக்கு புளி பிடிக்காது.”

“இப்போது உண்பதாக இல்லை” என்றான் பீமன். “வணங்குகிறேன் பேருடலரே, நீங்கள்தான் காற்றின்மைந்தர் போலும். நேற்று முன்னாள்கூட உங்களைப்பற்றி பேச்சு வந்தது. நீங்கள் காற்றிறைவனின் மைந்தர் என்று ஒருவன் சொன்னன். இல்லை, பேருணவு கொள்பவர் என்பதனால் கீழ்க்காற்று வெளியேற்றம் மிகையாகி அப்பெயர் கொண்டீர்கள் என நான் சொன்னேன். முதியசூதர் எல்லா கதைகளுமே மெய் என்றார். நாங்கள் நான்கு குவளை கள்ளை முன்வைத்து ஆம்

என்றோம்” என்றான். எழுந்து திரௌபதியை வணங்கி “நான் பசித்திருக்கிறேன். அரசியிடம் உணவிரக்கலாகாதென்பதனால் ஒரு செய்தியாக இதை சொல்கிறேன்” என்றான்.

திரௌபதி புன்னகையுடன் “வருக... உடனே உணவிட்டு அளிக்கிறேன்” என்றாள். அவன் சிறுவன்போல துள்ளி எழுந்து அவளுடன் சென்றான். தருமன் “இவன் இங்கிருக்கட்டும். எல்லாச் சொல்லிலும் நம்மை புன்னகைக்கச் செய்யமுடிகிறது இவனால்” என்றார். பீமன் “ஆம், உண்மையை சொல்லக் கற்றிருக்கிறான்” என்றான்.

வெண்முரசு விவாதங்கள்

# மாமலர் - 4

### 4. ஏட்டுப்புறங்கள்

அடுமனையின் தரையில் அமர்ந்து முண்டன் உணவுண்டான். அப்போதுதான் உலையிலிருந்து இறக்கிய புல்லரிசிச்சோற்றை அவன் முன் இலையில் கொட்டி புளிக்காயிட்டு செய்த கீரைக்குழம்பை அதன்மேல் திரௌபதி ஊற்றினாள். அவன் அள்ளுவதைக்கண்டு “மெல்ல, சூடாக இருக்கிறது” என்றாள். “உள்ளே அதைவிடப் பெரிய அனல் எரிகிறது, அரசி” என்றான் முண்டன். “சிற்றனலை நீர் அணைக்கும். காட்டனலை காட்டனலே அணைக்குமென்று கண்டிருப்பீர்கள்.” அவன் பெரிய கவளங்களாக உருட்டி உண்பதைக்கண்டு “உன் உடல் இப்படி கொழுப்பது ஏன் எனத் தெரிகிறது” என்றாள்.

“நான் அதைத் தடுக்க முயல்வதில்லை” என்று முண்டன் சொன்னான். “ஏன்?” என்று அவள் கேட்டாள். “அரசி, நான்

குள்ளன் என்பதே என் படைக்கலம். கொழுத்திருக்கையில் நான் குழந்தையுடல் கொள்கிறேன். கொழுவிய கன்னங்களும் பதிந்த மூக்குமே என்னை நோக்கி புன்னகையுடன் அன்னமிடுகையில் உங்கள் நெஞ்சு நெகிழச்செய்கிறது” என்றான். அறைவாயிலில் வந்துநின்ற தருமன் “மெய்தான்... நீ குழவியென்றே விழிக்கு தோன்றுகிறாய்” என்றார். “நீங்கள் மட்டும் முதியவராகவே தோன்றுகிறீர்களே. உங்களை வெளியே எடுத்ததுமே வயற்றாட்டி மூத்தவரே என்றழைத்திருப்பாள்” என்றான் முண்டன்.

சிரித்தபடி நகுலனும் சகதேவனும் வந்து அடுமனைக்குள் அவனைச் சூழ்ந்து நின்றனர். “மந்தன் எங்கே?” என்றார் தருமன். நகுலன் “துயில்கிறார். குரங்குகளும் காட்டுக்குள் சென்றுவிட்டன” என்றான். “உணவுக்குப்பின் துயில்வது நன்று, உணவல்லாதவற்றை கனவுகாணமுடியும்” என்றான் முண்டன். “உன் குடியும் குலமும் பதியும் எது?” என்றார் தருமன். “நான் மிதிலைநாட்டான். அங்கே போர்மறவர் குடியில் பிறந்தேன். எந்தை நான் பிறந்தபோது ஒருமுறை குனிந்து நோக்கி முகம் சுளித்தார். மூதாதையர் செய்த பழி என்றார். அக்கணமே என் அன்னையைக் கைவிட்டு அகன்றார்” என்றான் முண்டன்.

“என் கால்கள் வளைந்திருந்தன. இரட்டைப்பெருமண்டை. பிறக்கையிலேயே பற்களுமிருந்தன. பிறந்த அன்றே முண்டன் எனப் பெயர்கொண்டேன்” என அவன் தொடர்ந்தான். “உயரமற்றவர்களை தங்களைவிடத் தாழ்ந்தவர்கள் என்று எண்ணுவதிலிருந்து மானுடர் ஒழியவே முடியாது. குள்ளர்களின் பெருந்துன்பம் அவர்கள் எப்போதும் மேலிருந்தே பார்க்கப்படுகிறார்கள் என்பதுதான். அவர்கள் அதன்பொருட்டே உரத்தகுரலில் பேசத் தொடங்குகிறார்கள். தங்களை

அறியாமலேயே நுனிக்கால்களில் எம்பி நின்றுகொள்கிறார்கள். வெற்றியினூடாக பிறரைவிட மேலெழ முனைகிறார்கள்.”

“ஆகவே சூழ்ச்சிக்காரர்களாக சீண்டுபவர்களாக இரக்கமற்றவர்களாக இருப்பதற்கும் அஞ்சாமலாகிறார்கள். தன் தலைக்குமேல் நிகழும் உலகை தன்னை நோக்கி இழுக்க ஒவ்வொரு கணமும் முயன்றுகொண்டிருக்கிறார்கள்” என்றான் முண்டன். “ஆனால் அவர்கள் தொடர்ந்து கனிவுடன் பார்க்கப்படுகிறார்கள். பொறுத்தருளப்படுகிறார்கள். அரசி, ஒரு குள்ளனை குழந்தைபோல கொஞ்சுவதைப்போல அவனை சினம்கொள்ளச்செய்யும் செயல் பிறிதில்லை.”

கைகளை நக்கியபடி முண்டன் தொடர்ந்தான் “ஆனால் மானுடரால் அதைச் செய்யாமலிருக்க முடியாது. ஏனென்றால் குள்ளர்களை அவர்களின் ஆழுள்ளம் குழந்தைகளுடன் ஒப்பிட்டுக்கொள்கிறது.” திரௌபதி “ஆம், உன்னையும் அவ்வாறே எண்ணிக்கொண்டேன்” என்றாள். “அதனால்தான் என் சொற்களிலிருந்த நஞ்சுக்கு நீங்கள் நகைத்தீர்கள்” என்றான் அவன். அவள் சிரித்து “ஆம். மட்டுமல்ல, நான் இங்கு அவ்வாறு பிறிதொருவகை பேச்சைக் கேட்டே நெடுநாட்களாகின்றன” என்றாள்.

“இளமையில் நெடுநாட்கள் நான் அன்னையரின் குழவியாகவே இருந்தேன். என்னை இடையிலேயே வைத்திருந்தாள் என் அன்னை. அவள் தோழியரும் என்னை இடையிலெடுத்துக்கொள்வார்கள். பெண்கள் நடுவே அமர்ந்துகொண்டு அவர்களின் சழக்குப் பேச்சை கேட்பேன். என்னை செவியென்றும் விழியென்றுமுணராமல் வெறும் பைதலென எண்ணி பேசிக்களிப்பார்கள். ஆடைகளைந்து நீராடுவார்கள். பூசலிட்டு மந்தணங்களை அள்ளி இறைப்பார்கள்.

ஒரு கைப்பொருளென என்னை எங்கேனும் வைப்பார்கள். மறந்து சென்றுவிடுவதுமுண்டு.”

“நான் முதிரத் தொடங்கியபோது அவர்கள் என்னை சற்றே விலக்கலாயினர். கொஞ்சல்கள் குறைந்தபோது அவர்களுடனேயே நீடிக்கும்பொருட்டு நானும் சழக்கு பேசலானேன். அவர்களை சிரிக்கச்செய்வதெப்படி என்று கண்டுகொண்டேன். அரசி, பெண்கள் விரும்புவது காமச் சொல்லாடலே. ஆனால் அச்சொல்லாடலை முன்னெடுப்பவள் விடுநா கொண்டவள் என்று பெயர் பெறுவாள். நாணிலாதவள் என அவள் தோழிகளாலேயே பழிக்கப்படுவாள். ஆகவே அதை எவரேனும் சொல்ல தான் கேட்டு மகிழ்ந்து பின் நாணி பொய்ச்சீற்றம் காட்டுவதே பெண்கள் விழையும் ஆடல். நான் அவ்விடத்தை ஆடலானேன்.”

“ஒவ்வொருநாளும் துளித்துளியாக எல்லை மீறுதலே அவர்களை நகையுவகை கொள்ளச்செய்கிறதென்று கண்டேன். ஒருகட்டத்தில் அவர்கள் நடுவே எதையும் சொல்பவனாக அமர்ந்திருந்தேன். என்னை மானுடனென அவர்கள் எண்ணவில்லை. பேசும் கிளியென்றும் ஆடும் குரங்கென்றும் கண்டனர். எனவே எதுவும் பிழையெனப் படவில்லை. அவர்களின் கொழுநரும் அவ்வாறே எண்ணினர். அவர்களின் கொழுநர்களைக் கண்டு என்னுள் வாழ்ந்த ஆண் அஞ்சினான். எனவே அவர்களை நான் அணுகியதே இல்லை.”

“என் வயதுக்கு மிக இளையவர்களாகிய சிறுமைந்தருடன்தான் நான் விளையாடி வந்தேன். பெண்கள் நடுவே என் உள்ளம் வளர்ந்தபோது அவர்களுடன் ஆடுவது இயலாதாயிற்று. ஆண்களின் உலகில் நுழைய விழைந்தேன். மிகத் தற்செயலாக அதற்கான வழியை கண்டடைந்தேன். ஒருநாள்

நூற்றுவர்தலைவன் ஒருவனைப்பற்றி அவன் புறக்காதலி சொன்ன சீண்டும் சொல்லை அவனிருந்த மன்றில் சொன்னேன். சொல்லிவிட்டதுமே அஞ்சி உடல்குளிர்ந்தேன். அவன் தோழர் வெடித்து நகைத்தனர். அவனும் உடன் நகைத்து என் மண்டையைத் தட்டினான். அன்று அறிந்தேன், நான் என்ன சொன்னாலும் எவரும் பெரிதாக எடுத்துக்கொள்ளப்போவதில்லை என்று.”

“அதன்பின் அதுவே என் வழியென்றாகியது. நான் பகடிபேசுபவனாக ஆனேன். நச்சுநாவை கூர்தீட்டிக்கொண்டேன். ஆனால் அதைக் குறித்த தன்னிழிவும் என்னுள் திரண்டுகொண்டே இருந்தது. என் அன்னை இறந்தபோது அவ்வூரில் இருக்க விரும்பாமல் கிளம்பினேன். ஊர்தோறும் அலைந்து ஒரு சந்தையில் நின்றிருக்கையில் கழைக்கூத்தாடிகளைக் கண்டேன். அவர்களுடன் என்னை சேர்த்துக்கொண்டார்கள். அவர்களின் மூத்தாசிரியன் எனக்கு தாவுகலையையும் உடல்நிகர்கலையையும் கற்பித்தான். கைமாயங்களையும் விழிமாயங்களையும் மூதன்னை ஒருத்தி பயிற்றுவித்தாள்.”

“அன்று அம்மூத்தவள் என்னிடம் நீ என்ன செய்தாலும் நகைப்பர். ஏனென்றால் உன் உடல்வழியாக படைப்போன் ஓர் இளிவரலை முன்னரே செய்துவிட்டிருக்கிறான் என எண்ணுகிறார்கள் என்றாள். இப்புவியில் பிறிதொரு மானுடரைக் காண்கையில் மானுடர் முகம் இயல்பாக மலர்வதில்லை. ஒருகணம், கணத்திலொரு துளி, அது சுருங்குகிறது. ஐயுறுகிறது, அளவிடுகிறது, முடிவெடுக்கிறது. அதன் பின்னரே இன்சொல்லும் புன்சிரிப்பும் எழுகின்றன. உன்னைக்கண்ட கணமே முகங்கள் விரிகின்றன.

இளங்குழவியரை காண்பதுபோல. துள்ளும் குருளைகளையும் பூஞ்சிறகுக் குஞ்சுகளையும் காண்பதுபோல. வளர்ந்த பின்னரும் அப்புன்னகையைப் பெறுபவை குரங்கும் யானையும் மட்டிலுமே என்றாள்.”

“அன்றறிந்தேன், எனக்களிக்கப்பட்ட நற்கொடை இவ்வுடல் என. அன்றுமுதல் இதைக் கொண்டாடலானேன். இதைக்கொண்டு என் சூழலைக் கொண்டாடினேன். அரசி, இவ்வுடல் ஒரு அகப்பை. இதைக்கொண்டு நானிருக்குமிடத்தை கலக்குகிறேன். இது ஒரு முழைதடி. இதைக்கொண்டு இம்முரசுகளை ஒலிக்கச்செய்கிறேன்” என்றான் முண்டன். “கண்ணறிவதை கருத்தறியாது செய்வேன். கருத்தறிவதை களவென்றாக்குவேன். களவனைத்தும் நிகழச்செய்வேன். காலத்தை கலைத்தடுக்குவேன்.”

சொல்லிமுடிவதற்குள்ளாகவே நின்றிருந்த இடத்திலேயே ஒருமுறை தலைகீழாகச் சுழன்று நின்று “இப்படி எப்போதுவேண்டுமென்றாலும் இப்புவியின் ஒரு ஏட்டை என்னால் புரட்டிவிடமுடியும்...” என்றான். “இது நாளை. அரசி இன்று தலையில் குழல்சுருட்டிக் கொண்டையிட்டு செண்பகப்பூ சூடியிருக்கிறார். அங்கே அஸ்தினபுரியில் கங்கைக்கரைக் கன்னிமாடத்தில் வாழும் மாயை குழல்நீட்டி குருதிகாத்திருக்கிறாள் என எண்ணியபடி அம்மலரை சூட்டிக்கொண்டார்.”

மீண்டுமொருமுறை பின்னோக்கிச் சுழன்றுநின்று “நான் எங்கே விட்டேன்?” என்றான். நகுலன் “கால ஏட்டைப் புரட்டுகிறாய்” என்றான். “ஆம், கொடிது அது. மொத்தமும் சொற்பிழைகள், எழுத்துப்பிழைகள்” என்றான் முண்டன். “முன்பு அதை ஏதோ கைதிருந்தா குழந்தை எடுத்து விளையாடியிருக்கிறது போலும்.

அரசே, நடுநூல் அறுந்துள்ளது. அடுக்குகுலைந்த ஏடுகளிடையே ஆயிரம் ஏடுகள் விடுபட்டுள்ளன என்று தோன்றும்.”

நகுலன் சிரித்து “காவியமும் கற்றுள்ளாய் போலும்” என்றான். அவன் கைகளை நக்கிக்கொண்டு “நற்செயல்கள் காவியமாக ஆவதுபோல் இன்னுணவு நறுமணமாக ஆகிறது என்பார்கள்” என்றான். உடனே ஏப்பம் விட்டபடி “ஆனால் சற்று மிகையானால் கீழ்க்காற்றாக ஆவதும் உண்டு” என்றான். தருமன் “சீ… இவனுடன் சொல்லாடுவதே இழிவென்றுபடுகிறது” என்றார். “ஆகாதா?” என்றான் முண்டன். தருமன் திரும்பி தன் அறைக்கு சென்றார். நகுலன் “வருக, மூத்தவரை மகிழ்விக்கும் சிலவற்றை சொல்க!” என்றான். “நான் என்னை மகிழ்விப்பதை மட்டுமே சொல்லும் வழக்கம் கொண்டவன்” என்றான் முண்டன். “சரி, அதைச் சொல்!” என அவன் தலைமேல் கைவைத்து தள்ளிக்கொண்டு சென்றான் நகுலன்.

தருமனின் அறைக்குள் சென்றதும் நகுலன் “சினம் கொள்ளவேண்டாம், மூத்தவரே. அவனே சொன்னபடி அவன் அனைத்துக்கும் கீழிருப்பவன். அங்கிருந்து நம்மை நோக்க அவனுக்கு உரிமை உண்டு” என்றான். “நான் பாதாளத்திற்குக்கூட சென்று நோக்குவேன்” என்றான் முண்டன். “அரசர் இப்போது நோக்கும் நூல் என்னவென்று நான் அறிவேன்.” தருமன் “என்ன நூல்? சொல்!” என்றார். “சௌரவேதம்” என்றான் முண்டன். தருமன் வியந்து “எப்படி தெரியும்?” என்றார். “உங்கள் உளம்பயின்று அறிந்தேன்” என்றான் முண்டன்.

“மேலுமென்ன பயின்றறிந்தாய்?” என்று தருமன் கேட்டார். “இதை சூரியமைந்தரான அங்கரின் வேதமாக நீங்கள்

எண்ணுகிறீர்கள்” என்றான் முண்டன். “விளையாடுகிறாயா?” என தருமன் சீறினார். முண்டன் அஞ்சி நகுலனுக்குப் பின்னால் சென்று ஒளிந்துகொண்டான். “பொருட்படுத்தவேண்டாம், மூத்தவரே. இவனை ஒரு இனிய விளையாட்டுப்பொருளாக மட்டுமே எண்ணுக!” என்றான். தருமன் “அவன் அத்துமீறுகிறான்” என்றார்.

முண்டன் அஞ்சிநடுங்கி நகுலனுக்குப் பின்னால் பாதிமறைந்து ஒரு கண் மட்டும் காட்டி “இனிமேல் இல்லை” என்றான். “என்ன இல்லை?” என்றார் தருமன். “இனிமேல் உண்மையை சொல்லமாட்டேன்” என்று முண்டன் சொன்னான். தருமன் சிரித்துவிட்டார். “இவனை என்ன செய்வதென்றே தெரியவில்லை” என்றார். “உண்மைகளை நான் வேண்டுமென்றால் பொய்யாக்கிவிடுகிறேன்” என்றான் முண்டன். “அய்யோ” என தருமன் தலையில் அடித்துக்கொண்டார். “காவியமாக்குவதைவிட இது எளிது…” என்றான் முண்டன்.

“இவன் கால ஏட்டைப் புரட்டுவான் என்கிறான்” என்றான் நகுலன். சகதேவன் பின்னால் வந்து நின்று “அதை நாம் கண்களாலேயே காணமுடியும்” என்றான். திரௌபதியும் வந்து கதவருகே நின்று “என்ன இருந்தாலும் நாம் அவனை மட்டுமே நோக்கும்படி செய்துவிடுகிறான்” என்றாள். “காலத்தைப் புரட்டுவாயா?” என்றார் தருமன். “தெரியாமல் செய்துவிட்டேன்” என்றான் முண்டன். “எங்கே, புரட்டு பார்ப்போம்” என்றார் தருமன். “எவருடைய காலத்தை?” என்றான் முண்டன். “மூடா, உன்னுடைய காலத்தைத்தான்…” என்றார் தருமன். “நீ என் கையால் அறைவாங்குவாயா இல்லையா என்று சொல்!”

“முன்னோக்கிச் செல்… நாளை என்ன நடக்கப்போகிறது என்று பார்த்துச் சொல்” என்றான் நகுலன். “ஆம்” என்று சொல்லி அவன் நான்குமுறை சுழன்று நின்று “ஆ!” என்றான். “என்ன?” என்றான் நகுலன். “என்ன?” என்றார் தருமன் திகைப்புடன். “எனக்கு பன்றிக்கறியிட்ட ஊன்சோறு அளிக்கப்படுகிறது.” நகுலன் சிரித்து “அதைவிட சற்றே முதன்மைகொண்ட சிலவற்றைச் சொல்லலாம்” என்றான். “அரசி தேன்சேர்த்த கனிக்கூழை எனக்கு அளிக்கிறார்கள்.” நகுலன் “சரி, வேறு?” என்றான். “காட்டுக்குள் ஒரு யானை வந்து அகழிக்கு அப்பால் நின்று துதிதூக்கி நுண்மணம் கொள்கிறது. இரண்டு குரங்குகள் அதன் மேலே கிளையிலமர்ந்து அதை அச்சுறுத்தி துரத்துகின்றன. அதன் மேல் காக்கை எச்சம் வெண்சுண்ணமாக வழிந்துள்ளது.”

நகுலன் சலிப்புடன் “நன்று, அனைத்தையும் பொதுவாகவே உன்னால் சொல்லமுடியும் போலும். நீ விழைவது நிகழ்க!” என்றான். “தேன்பழக்கூழை தாடியும் முடியும் நீண்ட ஒரு விருந்தினருக்கு அளிக்கிறார்கள் அரசி” என்று முண்டன் சொன்னான். “அரசரை எட்டுறுப்பும் நிலம்தொட விழுந்து கால்தொட்டு வணங்கிவிட்டு பீடத்திலமர்ந்திருக்கும் அவர் ஓர் இளமுனிவர் என எண்ணுகிறேன். இன்சுவையை அவர் அருந்துகிறார். அவர் கண்கள் வண்டுகள்போல ஒளிகொண்டிருக்கின்றன. கரிய சிறு உடல் குதிரைக்குட்டியின் இறுக்கம் கொண்டது.”

“அப்போது பெருங்குரல் எழுகிறது. பேருடலர் முன்னரே செய்தியறிந்து வந்திருக்கிறார். வந்த விரைவிலேயே இளமுனிவரை அவர் அள்ளிஎடுத்துச் சுழற்றி தன் தோளிலேற்றிக்கொண்டு நடனமிடுகிறார். இருவரும் குடிலே

அதிரும்படி நகைக்கிறார்கள். குரங்குகள் அதைக் கண்டு திகைக்கின்றன. ஓரிரு குட்டிகள் மட்டும் கிளையிறங்கி வந்து சுவர்விளிம்பில் அமர்ந்து அவர்களின் நடனத்தை விரும்பி நோக்குகின்றன." தருமனின் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. கைகளை கோத்து நெஞ்சோடு சேர்த்துக்கொண்டார்.

"மற்ற குரங்குகள்?" என்றான் சகதேவன். "அவை இளமுனிவரை அஞ்சுகின்றன. அவர் தோள்களெல்லாம் தழும்பாக இருக்கின்றன. அவர் மாவில்லவராக இருக்கவேண்டும்." தருமன் "என்ன சொல்கிறாய்?" என்று கூச்சலிட்டபடி ஓடிவந்து குள்ளனைப் பிடித்து உலுக்கினார். "என்ன சொல்கிறாய்? பார்த்தன் வரப்போகிறானா? நாளை மறுநாளா? உண்மையாகவா?" நகுலன் "நம் உள்ளத்தின் விழைவைத் தெரிந்துகொண்டு விளையாடுகிறான், மூத்தவரே" என்றான். "நான் விளையாடித் தெரிந்துகொள்பவன், அரசே" என்றான் முண்டன். "நீங்கள் அழுவதை காண்கிறேன். அரசி வாயிலருகே சாய்ந்து நின்று கண்ணீர் ஒளிவிட நோக்குகிறார். இவர்கள் இருவரும் அழுகையும் சிரிப்புமாக நின்றிருக்கிறார்கள்."

"எப்படி அறிந்தாய்? சொல்?" என்றார் தருமன். "நான் நாட்களைப் புரட்டுகிறேன். முன்னால் சென்றால்தானே நீங்கள் அஞ்சுகிறீர்கள். இதோ, பின்னால் வருகிறேன்" என்றபடி அவன் எதிர்த்திசையில் சிலமுறை குதித்து "ஆ!" என்றான். "என்ன?" என்றான் நகுலன் எரிச்சலுடன். "அடுமனையில் புல்லரிசிக்கஞ்சி கொதிக்கிறது. புளிக்காய்த் துவையல் அரைக்கிறார் அரசி." நகுலன் "சரி" என்றான். "புலி ஒன்று வருகிறது. குடிலை தொலைவில் நின்று நோக்கியபின் கோட்டுவாய் விரித்து தலையை உலுக்கி உடுக்கோசையாக காதடித்து திரும்பி பொத்துக்கால் வைத்து நடந்தகல்கிறது.

அதன்மேல் நூற்றுக்கணக்கான குரங்குகள் கூடி கூச்சலிட்டு எம்பிக் குதிக்கின்றன. அதன்மேல் சுழலும் ஈக்கள் இளவெயிலில் ஒளிவிட்டு அனல்துளிகளாகின்றன.”

“உண்மை” என்றார் தருமன். நகுலன் அவனை கண்களைச் சுருக்கி நோக்கினான். “அரசர் சலிப்புடன் பேசிக்கொண்டிருக்கிறார். பின்னர் கீழிறங்கி தோட்டத்திற்குச் செல்கிறார். வெறும் கைகளுடன் புலியை தேடிச்செல்கிறார். புலிக்கால்தடத்தைத் தேர்ந்து சென்று கோமதிக்கரை நாணல்வெளியில் அப்புலியை காண்கிறார். ஏராளமான குரங்குக்குட்டிகள் புலியைச் சூழ்ந்து சீண்டி விளையாடுகின்றன. அவர்களுடன் சேர்ந்து பேருடலரும் ஆடிக்கொண்டிருப்பதை அரசமரத்திற்குப் பின்னால் நின்று நோக்குகிறார்.”

திகைப்புடன் “ஆம், இது நடந்தது!” என்றார் தருமன். “உண்மை! அப்படியென்றால் இளையோன் வரப்போவதும் உண்மை!” என்று கூவியபடி மீண்டும் அருகே சென்று “உண்மையிலேயே வந்துகொண்டிருக்கிறானா? எங்குள்ளான்?” என்றார். சகதேவன் “நான் முன்னரே அதைக் கணித்து அரசியிடம் சொல்லியிருந்தேன், மூத்தவரே. இந்த மழைக்காலம் அணுகுவதற்குள் விஜயர் திரும்பிவருவார்” என்றான். தருமன் நெஞ்சைப்பற்றியபடி மெல்ல பின்னடைந்து பீடத்திலமர்ந்தார். விழிகள் சுரந்து வழியலாயின. “வரப்போகிறானா? நலமாகத்தான் இருப்பான். எப்படி மாறியிருப்பான்?” என்றார். தலையை அசைத்து “என் இளையோன்… என் மைந்தன்! விஜயன்!” என்றார்.

விழிநீரை சுட்டுவிரலால் துடைத்தபடி மூக்கை துடைத்தார். “எவ்வண்ணம் ஆகியிருந்தாலும் அவன் பார்த்தன். எப்படி இருந்தாலும் நம் உடன்குருதியன்” என்றார். “ஆம் மூத்தவரே,

அவர் என்றும் நம் காவலர்” என்றான் நகுலன். “சற்றுமுன் சேர்ந்து உணவுண்ணும்போது ஒரு கணம் சவுக்குச் சுண்டுதல்போல அவ்வெண்ணம் வந்தது என்னுள். ஒரு கை குறைகிறது என்று. ஒன்று குறைந்தாலும் நாம் முழுமையர் அல்லர் என்று. தெய்வங்களே, மூதாதையரே, என் நெஞ்சக் கனலை நீர் கண்டீர்.” பெருமூச்சுடன் மலர்ந்து “தேவி, இளையவன் வரப்போகிறான்.... நம்முடனிருக்கப்போகிறான்!” என்றார். திரௌபதி புன்னகையும் கண்ணீருமாக “ஆம்” என்றாள்.

முண்டன் மீண்டும் இருமுறை சுழன்று நின்று நிலைகொள்ளமுடியாமல் மீண்டும் மீண்டும் சுழன்றான். “என்னால் நிறுத்தமுடியவில்லை. ஏடுகள் புரள்கின்றன, அரசே” என்று கூவினான். மிக விரைவாகச் சுழன்றபோது அவன் ஒரு காற்றாடிபோல கண்ணுக்குத் தெரியாதவனானான். அப்படியே எம்பி சாளரம் வழியாக வெளியே தெறித்து அலறியபடி கீழே சென்றான். அவர்கள் ஓடிச்சென்று நோக்க கீழே சாலமரத்திலிருந்து சென்ற கொடி ஒன்றில் தொற்றி ஆடி மீண்டும் சுழன்று கீழே விழுந்து “ஆ!” என்றான்.

“என்ன?” என்றார் தருமன். “நான் நெடுந்தொலைவு வந்துவிட்டேன். இங்கே எல்லாமே வேறுவகையில் உள்ளன. மிகப்பெரிய அரண்மனைகள் செறிந்த தெருக்கள். வணிகர்களின் பெருவண்டிகள். இது ஒரு நகரம்...” நகுலன் “அதன் பெயரென்ன?” என்றான். அவன் “கேட்டுச்சொல்கிறேன்” என்றபின் “இது பாடலிபுத்திரம் என்கிறான்” என்றான்.

“பாடலிபுத்திரமா? எங்குள்ளது அது?” என்றான் சகதேவன். “கங்கைக்கரையில். கங்கையில் பெருநாவாய்கள் பாய்த்தொகை புடைக்க சென்றுகொண்டிருக்கின்றன. இது மகதர்களின்

தலைநகர்." நகுலன் "மகதர்களின் தலைநகர் ராஜகிருஹம் அல்லவா?" என்றான். "அப்படியா?" என்றான் முண்டன். சகதேவன் "ராஜகிருஹத்தைப்பற்றி கேட்டுச் சொல்" என்றான். "ராஜகிருஹம் கைவிடப்பட்டது. தாம்ரலிப்தி மண்மூடி அழிந்ததுமே அதுவும் பொருளிழந்தது" என்றான். சகதேவன் பெருமூச்சுவிட்டு "நன்று" என்றான்.

"இந்திரப்பிரஸ்தம் பற்றி கேள்" என்றார் தருமன். "வேண்டாம்" என்று சகதேவன் உரக்க சொன்னான். "ஏன்?" என தருமன் திரும்ப "வேண்டியதில்லை" என்று சகதேவன் உறுதியுடன் சொன்னான். தருமன் "அஸ்தினபுரி பற்றி..." என கேட்கத் தொடங்கியதும் சகதேவன் "அதுவும் வேண்டியதில்லை" என்றான். திரௌபதி "ஆம், வேண்டியதில்லை" என்றாள். தருமன் அவளை புரியாமல் திரும்பி நோக்கினார். "துவாரகை குறித்து..." என சொல்லெடுத்த பின் தருமன் அடக்கிக்கொண்டார்.

"அய்யய்யோ அய்யய்யோ" என்று முண்டன் அலறினான். "என்ன ஆயிற்று எனக்கு? பித்தனாக ஆகிவிட்டேன் போலும்..." நகுலன் "என்ன?" என்றான். "நான் ஏட்டுச்சுவடிகளை நோக்கி பேசிக்கொண்டிருக்கிறேன். ஆ, ஏட்டுச்சுவடியில் இருப்பவர்கள் என்னிடம் பேசுகிறார்கள்." கைதூக்கி அனலில் நிற்பவன்போல துள்ளி "காப்பாற்றுங்கள். எனக்கு என்னவோ ஆகிவிட்டது. மருத்துவர்கள் எங்கே?" என்று கூச்சலிட்டான். நகுலன் "யார் உன்னிடம் பேசுகிறார்கள்?" என்றான். "நீங்களெல்லாம்தான்... இவையெல்லாம் ஜயசேனர் எழுதிய கல்யாணசௌகந்திகம் என்னும் நூலில் உள்ளவை!" என்றான் முண்டன். "எவை?" என்றான் நகுலன். "இதோ, நான் பேசுவது உட்பட அனைத்தும்" என்றான் முண்டன்.

முண்டன் விம்மியழுதபடி “என்ன செய்வேன்...? நான் இந்நூலில் இருந்து வெளியே தெறித்து வந்துவிட்டேன்... என்னை உள்ளே இழுங்கள்” என்றான். தருமன் “பித்தனைப்போல் பேசுகிறான்” என்றார். முண்டன் “உயிருடன் நூலுக்குள் புகமுடியுமா? பாண்டவர்கள் காவியத்திற்குள் பிறந்தார்கள் என்கிறார்களே... நேரடியாகவே நூலுக்குள் ஐந்து குட்டிகள் போடப்பட்டிருக்கின்றன” என்றபடி தவித்துப் பரிதவித்து காற்றிலேயே முட்டிமோதி “அய்யய்யோ, வழியே இல்லையே. எல்லா பக்கங்களையும் உரையெழுதி மூடிவைத்திருக்கிறார்களே மூடர்கள்” என்றான்.

அவனுக்குப் பின்னால் ஒரு பெருங்குரங்கு வந்து இறங்கியது. “யார் நீர்?” என அவன் திடுக்கிட்டுத் திரும்பி கேட்டான். அது “ர்ர்ர்” என்றது. அவன் அலறியபடி மீண்டும் பல சுழற்சிகளாக எழுந்து சென்றதுபோலவே மீண்டு அறைக்குள் வந்தான். “அனுமன்! அனுமன்!” என்றபின் கண்களைத் திறந்து “ராமகதைக்குள் விழுந்துவிட்டேனா? என்ன இது? இங்கிருந்து ஏதாவது வேதத்திற்குள் சென்றுவிழுந்தால் வாய் ஓயாத பெருந்தவளையாக ஆகிவிடுவேனே?” என்றான். நகுலன் அவனை உலுக்கி “விழித்துக்கொள்” என்றான்.

முண்டன் தலையைத் தட்டியபடி “என்ன ஆயிற்று?” என்றான். “நீ எங்கோ சென்றாய்” என்றான் நகுலன். “ஆம், ஒரு நூலுக்குள்... அல்லது நூலில் இருந்து வெளியே வந்தேனா?” சகதேவன் “அந்த நூல் எது?” என்றான். “அது ஒரு இன்பச்சுவைக் காவியம்... ஜயசேனர் அதை உக்ரசிரவஸ் சௌதி பாடிய பாரதப்பெரும்பாடல் என்னும் நாவுரை காவியத்திலிருந்து எடுத்து விரிவாக்கியிருக்கிறார். உக்ரசிரவஸ் சௌதி தன் பாடல்களை வைசம்பாயனரும் பைலரும்

சுமந்துவும் ஜைமினியும் எழுதியவற்றைக் கொண்டு அமைத்தார். அவர்கள் மகாவியாசராகிய கிருஷ்ண துவைபாயனரின் மாணவர்கள். அவர் எழுதிய வெற்றிக்காவியத்தை அவர்கள் விரித்தெழுதினார்கள்.”

“வியாசர் உண்மையில் சூதர்கள் பாடியதைக் கேட்டுத்தான் எழுதினார். சூதர்கள் வேறு சூதர்கள் பாடியதைக் கேட்டு பாடினர். வேறு சூதர்கள் மக்கள் சொன்னதைக் கேட்டு பாடினார்கள். மக்கள் பிறர் சொன்னதைக் கேட்டு சொன்னார்கள். அந்தப் பிறர் மேலும் பிறர் சொன்னதைக் கேட்டு சொன்னார்கள். அந்த மேலும் பிறர் பொதுவாக சொல்லப்பட்டதைக் கேட்டு சொன்னார்கள். உண்மையில் அவர்கள்...” என்று அவன் சொல்ல இடைமறித்த சகதேவன் “நன்று. நீ சென்று ஓய்வெடுக்கலாம்” என்றான். முண்டன் கைதூக்கி சோம்பல் முறித்து “உணவருந்திவிட்டு ஓய்வெடுப்பதே என் வழக்கம்” என்றான்.

திகைப்புடன் “இப்போதுதானே உணவருந்தினாய்?” என்றான் நகுலன். “நான் அப்படி முறைமைகளை கைக்கொள்வதில்லை” என்றபின் முண்டன் திரௌபதியிடம் “அரசி, மீண்டும் அன்னமிட உங்கள் உள்ளம் எண்ணுவதை அறிகிறேன்” என்றான். திரௌபதி சிரித்து “வா” என்றாள். “உணவிடச்செல்லும் பெண்கள் பேரழகிகள். உணவுடன் வருகையில் அவர்கள் மேலும் அழகியராகிறார்கள்” என்றபடி முண்டன் அவளைத் தொடர்ந்து சென்றான். கீழே கிடந்த தாலமொன்றை காலால் தட்டி மேலெழுப்பி கையிலேற்றி சுட்டுவிரல்முனையில் சுழற்றியபடி “பாண்டவனே கேளாய்... அறநிலையாகிய குருநிலையில்...” என்று சொன்னபடி போனான்.

“பெருநடிகன்” என்றான் நகுலன். “நடிக்கும்போது நடிக்கப்படுவதாக மாறிவிடுகிறான். மானுடன் எப்படியும் தன்னை ஆக்கிக்கொள்ளமுடியும்” என்றான் சகதேவன். தருமன் “அவன் சொல் பொய்க்காதென்று என் உள்ளம் சொல்கிறது. இளையோன் வரவிருக்கிறான்” என்றார்.

# மாமலர் - 5

### 5. இனிதினிது

குரங்குகள்தான் முதலில் அறிவித்தன. அவற்றின் ஓசை நூறு முழவுகளின் தாளம்போல கேட்டது. நகுலன் அதைக் கேட்டு ஒருகணம் திகைத்து உடனே புரிந்துகொண்டு எழுந்துசென்று குடில்முகப்பில் நின்று “வந்துவிட்டார்!” என்று கூவினான். அவன் கைகள் பதறின. என்ன செய்வதென்று அறியாமல் “வந்துவிட்டார்” என்று கூவியபடி அடுமனை நோக்கி ஓடி வழியிலேயே நின்று திரும்பி ஓடிவந்து கயிறேணியைத் தவிர்த்து கழுக்கோலில் தொங்கி கீழே பாய்ந்து வாயில்படல் நோக்கி ஓடி அதைத் திறந்தான். உடனே அதை மூடி, ஏன் அதைச் செய்கிறோம் என வியந்து மீண்டும் திறந்து காட்டுக்குள் ஓடினான்.

சகதேவன் உள்ளறையிலிருந்து கையில் ஒரு சிறு கோடரியுடன் ஓடிவந்து குடில்முகப்பில் நின்று “நெடுந்தொலைவில் வந்துகொண்டிருக்கிறார் என நினைக்கிறேன்” என்றான். கோடரியை கொக்கியில் மாட்டிவிட்டு அறையிலிருந்து எழுந்துவந்து நின்ற தருமனிடம் “வந்துசேர ஒரு நாழிகையாவது ஆகும்” என்றான். “இவன் எங்கே?” என்றார் தருமன் புருவங்களைச் சுளித்தபடி. “யார்?”

என்றான் சகதேவன். “மந்தன்தான்…” என்றார் தருமன். “காலையில் வந்துவிடுவதாக சொல்லிவிட்டுச் சென்றார்” என்றான் சகதேவன். “அவனிடம் இருநாட்கள் எங்கும் செல்லாமல் இங்கே இருக்கும்படி சொல்லியிருந்தேனே?” என்றார் தருமன்.

சகதேவன் நூலேணி வழியாக இறங்கிச்செல்வதை ஆர்வமில்லாமல் நோக்கியபடி நின்றபின் தருமன் பெருமூச்சுவிட்டார். பின் நிலையழிந்து அறைக்குள் சென்று அங்கே அமரமுடியாமல் மீண்டும் வந்து குடில் விளிம்பில் கைகளைக் கட்டியபடி நின்று வெளியே நோக்கினார். மூங்கில் நடைபாதை முனக அடுமனையிலிருந்து ஓடிவந்த திரௌபதி “வந்துவிட்டாரா?” என்றாள். “வருகிறான் என்கிறார்கள்” என தருமன் திரும்பிநோக்காமலேயே சொன்னார். “நடந்தா வருகிறார்?” என்றாள் திரௌபதி.

தருமன் திரும்பிநோக்கி ஏளனத்துடன் “இல்லை, தேர்யானைபுரவிகாலாள் படைசூழ வருகிறான். அவன் எங்கு சென்றான் என நினைக்கிறாய்?” என்றார். திரௌபதி “அவர் அரசணிக்கோலத்தில் வருவதாக நான் கனவுகண்டேன்” என்றாள். தருமன் “கனவு நன்று. இந்தக் காட்டில் வேறேது உள்ளது?” என்றபடி திரும்பிக்கொண்டார். அவள் ஆடைகள் மந்தணமூச்சுபோல ஒலித்துக்கொண்டிருப்பதை கேட்டார். அவள் மூச்சொலி உடன் இணைந்தது. கையிலணிந்திருந்த சங்குவளையல்கள் அடிக்கடி குலுங்கின. அவளைத் திரும்பிப்பார்க்க விழைவு எழுந்தாலும் அடக்கிக்கொண்டார். அது முறையல்ல, ஒருவகை அத்துமீறல் எனத் தோன்றியது.

முண்டன் பின்னால் வந்துநின்று “அடுமனையில் அத்தனை சமையலும் பாதியில் நிற்கிறது. இங்கே என்ன செய்கிறீர்கள்,

அரசி?” என்றான். “போ, நீயே சமைத்து வை. அள்ளிக்குழைத்து தின்கிறாய் அல்லவா?” என்றாள் திரௌபதி. “நான் என்ன அரசியா சமைப்பதற்கு?” என்றபடி அவன் உள்ளே சென்றான். “நானெல்லாம் சந்தையில் நின்றாலே பொன்னாகக் கொட்டும். வணிகர்கள் சிரிப்புக்கெல்லாம் பணம் கொடுப்பார்கள்” என்றான்.

“ஆமாம், எழுத்துக்கு லட்சம் அளித்தார்கள்… பேசாமல் போ” என்று அவள் சொன்னாள். “வணிகர்கள் பொய்யாகச் சிரித்துச் சிரித்து முகமே சிரிப்புக்கோடுகளுடன் இருக்கும். நான் என்ன சொன்னாலும் அறியாமல் சிரிப்பு வந்துவிடும் அவர்களுக்கு” என்றான் முண்டன். “இந்திரப்பிரஸ்தத்தின் அரசர் யுதிஷ்டிரர் என ஒருமுறை சொன்னேன். நூறுபேர் விழுந்துவிழுந்து சிரித்தனர்.” திரௌபதி “போகிறாயா இல்லையா?” என்றாள். “நான் சென்று நெடுநேரமாகிறது” என்றான் முண்டன்.

“நல்ல துணை உனக்கு” என்றார் தருமன். “உண்மையிலேயே நல்ல துணை. ஓர் இனிய வீட்டுவிலங்கு போல.” தருமன் “அவ்வப்போது பிராண்டும்” என்றார். “அதுவும் தேவையாக உள்ளது…” என்றாள் திரௌபதி. கீழே நின்ற நகுலன் “சரிவில் ஏறிவருகிறார். கோமதியின் கரையில் குரங்குகளின் ஒலிகள் கேட்கின்றன” என்றான். சகதேவன் “சென்று அழைத்து வருவோம்” என்றான். நகுலன் “நான் செல்கிறேன். நீ இங்கு இரு… அவர் வரும்போது மூத்தவருடன் நில்” என்றபடி வெளியே சென்றான்.

“நான் அவனை ஒவ்வொருநாளும் எண்ணிக்கொண்டிருந்தேன்… அவன் வருவதை ஆயிரம் முறை நெஞ்சில் நிகழ்த்தி நோக்கிவிட்டேன். ஆகவேதான்போலும் அவன் நேரில் வருகையில் அதுவும் ஓர் உளநாடகமாக ஆகி இயல்பாகத் தெரிகிறது” என்றார் தருமன். அவள் ஒன்றும் சொல்லாமல்

தூணைப்பற்றியபடி நோக்கி நின்றிருந்தாள். அவளை விழி சரித்து நோக்கி “இந்நாட்களில் நீ மிகவும் மாறிவிட்டாய்” என்றார் தருமன். “அங்கிருக்கையிலும் அவர் ஒவ்வொருமுறையும் எங்கிருந்தாவது திரும்பிவருவது இனிதாகவே இருந்தது” என அவள் சொன்னாள்.

அவள் கன்னங்களில் முற்றத்தின் ஒளி மின்னுவதை தருமன் நோக்கினார். விழிகள் பெரிய நீர்த்துளிகள்போல நீர்மைகொண்டிருந்தன. “ஆனால் இங்கிருக்கையில் எளிய பெண்ணாக ஆகிவிட்டதுபோலத் தோன்றுகிறாய்” என்றார். “இக்காட்டில் அப்படி ஆகாமலிருக்க முடியுமா என்ன?” என்றாள் திரௌபதி. “ஆம், லோமசர் இங்கு வந்தபோது அதை என்னிடம் சொன்னார். காடு ஒவ்வொன்றாக உதிர்க்கவேண்டிய இடம் என்று.” அவர் பெருமூச்சுவிட்டு “இங்கிருந்து மீண்டும் நகர்களுக்குச் செல்ல என்னால் இயலுமா என்றே ஐயமாக இருக்கிறது. நேற்றெல்லாம் நான் எண்ணிக்கொண்டிருந்தது அன்னையை மட்டும் இங்கு கொண்டுவந்துவிடலாம் என்று. இதுவே நம் வாழ்வென நிறையலாகும் என தோன்றியது” என்றார்.

அவள் ஒன்றும் சொல்லவில்லை. சற்றுநேரத்தில் தருமன் மெல்ல உடல்நெடுக்கு தொய்ந்து “நான் சென்று எதையாவது படிக்கிறேன். இங்கு வெறுமனே நிற்பது சோர்வளிக்கிறது” என்று அறைக்குள் சென்றார். அவர் செல்வதை திரும்பி நோக்கி வெறுமனே புன்னகைத்த பின் அவள் காட்டுப்பாதையை நோக்கியபடி ஆடையை விரலால் சுழற்றிக்கொண்டு தூணில் உடல்சாய்த்து நின்றாள். தருமன் உள்ளே சென்று பீடத்திலமர்ந்து ஒரு சுவடியை எடுத்து விழியோட்டினார். உள்ளம் எழுத்துக்களில் நிலைக்கவில்லை என உணர்ந்ததும்

பிறிதொரு சுவடியை எடுத்து அதில் எழுதத் தொடங்கினார். எழுத்து அவரை ஈர்த்துக்கொண்டது. ஏட்டை எழுத்தாணி கீறிச்செல்லும் ஒலி தெளிவாகக் கேட்டது.

பலாப்பழம் விழுவதுபோல கிளைகளை ஊடுருவியபடி ஒரு குரங்கு பாய்ந்து வந்து திரௌபதி முன் விழுந்து எழுந்து இரு கைகளாலும் விலாவை வருடியபடி ஹுஹுஹு என்றது. எம்பி எம்பி குதித்து தன்னைத்தானே சுற்றி வாலைத்தூக்கி வளைத்தபடி "ர்ர்ர்ர்" என்றது. "வருகிறாரா? பார்த்தாயா?" என்றாள் திரௌபதி உவகைப்பதற்றத்துடன். மேலும் குரங்குகள் வந்து அவள் முன் நின்று எம்பி எம்பி கூச்சலிட்டன. சற்றுநேரத்தில் முற்றம் முழுக்க குரங்குகள் நிறைந்தன. மரக்கிளைகளில் அவற்றின் ஓசையும் அசைவும் கொந்தளித்தன. அவள் உதடுகளை அழுத்தியபடி மூச்சடக்கி நோக்கிநின்றாள்.

தொலைவில் அசைவு தெரிந்தது. திரும்பி "வருகிறார்கள்" என்றாள். "நன்று" என்றபடி தருமன் தொடர்ந்து எழுதிக்கொண்டிருந்தார். "தெரிகிறார்கள்" என்று அவள் மீண்டும் சொன்னாள். "வரட்டும்..." என்றபடி தருமன் தொடர்ந்து எழுதினார். அவள் நகுலனைத்தான் முதலில் கண்டாள். அவன் அணிந்திருந்த மான்தோல் மேலாடையின் மஞ்சள் நிறம் பச்சையிலைகள் நடுவே தெரிந்து தெரிந்து மறைந்தது. அவள் திரும்பி தருமனிடம் "வாருங்கள், தெரிகிறார்" என்றாள். பின் இயல்பாகத் திரும்பியபோது அவனை கண்டுவிட்டாள். "இங்கேதானே வருகிறான்?" என தருமன் சொன்னதை அவள் கேட்கவில்லை.

அவர்கள் நடைவழியில் தோன்றியபோது திரௌபதி உரக்க "வந்துவிட்டார்கள்" என்று கூவியபடி மெல்ல குதித்தாள். ஆடைநெகிழ ஓடி தொங்குபடிகளில் இறங்கி

தோட்டத்தினூடாக விரைந்தாள். வாயிலில் நின்றிருந்த சகதேவனும் அவளுக்கு முன்னால் சென்று நின்றான். அர்ஜுனன் மெலிந்து களைத்து நரைகலந்த நீண்ட தாடியும் குடுமியாகக் கட்டிவைத்த குழலுமாக இளமுனிவன் போலிருந்தான். அவள் வேலிமரத்தைப் பற்றியபடி நின்றாள். சிரிப்பும் அழுகையுமாக உடல் ததும்பியது. நகுலனின் கைகளைக் கோத்து பற்றியிருந்த அர்ஜுனன் "நலமா, இளையோனே?" என்று சகதேவனிடம் கேட்டான். சகதேவன் வெறுமனே விம்மினான். அருகே வந்த அர்ஜுனன் அவன் தோளைத் தொட்டதும் தளர்ந்து அவன் தோளில் முகம்சேர்த்துகொண்டான். அர்ஜுனன் அவன் இடைவளைத்து அணைத்து மெல்ல தோளில் தட்டியபடி திரௌபதியை நோக்கினான்.

நகுலன் "தொலைவில் வருவதைப் பார்த்ததுமே தெரிந்துவிட்டது. பிற எவருக்குமில்லை இந்த நடை" என்றான். இரு தம்பியரையும் இரு கைகளால் அணைத்தபடி அர்ஜுனன் அணுகி அவளை நோக்கி புன்னகைத்தான். விழியொளிரும் அப்புன்னகையின் வழியாக அவன் முதன்முதலாக அவள் கண்ட அந்த இளைஞனாக மாறினான். "நலமா, தேவி?" என்ற குரலில் மேலும் இளமை இருந்தது. "நலம்" என அவள் சொன்னாள். ஆனால் குரல் எழவில்லை. விழிகளில் நீர் நிறைய தலைகுனிந்தாள். "மூத்தவர் மேலே இருக்கிறாரா?" என்றான் அர்ஜுனன். "ஆம்" என்று அவள் தலையை அசைத்தாள்.

அவன் அவளைக் கடந்துசெல்ல அவள் நகுலனை நோக்கி புன்னகை செய்தாள். சகதேவன் "இரண்டாமவர் காட்டுக்குள் சென்றார். நீங்கள் வரும் செய்தி அவருக்கு சென்றிருக்கும்.

இக்காடு முழுக்க அவரது குடிகளால்தான் ஆளப்படுகிறது” என்றான். அர்ஜுனன் கயிற்றேணியில் ஏறினான். அவனைத் தொடர்ந்து ஏறியபடி நகுலன் “மூன்றாண்டுகளாக இங்கு வாழ்கிறோம், மூத்தவரே. மூத்தவருக்கு இவ்விடம் சலித்துவிட்டது. நாங்கள் இங்கு இருந்தது இவ்விடம் முனிவரனைவருக்கும் தெரியும் என்பதனால்தான். எந்த குருநிலையில் கேட்டாலும் அவர்கள் உங்களை இங்கே ஆற்றுப்படுத்திவிடுவார்கள் என எண்ணினோம்” என்றான்.

சற்றே பின்தங்கி நின்ற திரௌபதியிடம் “அருகே செல்வதுதானே?” என்றான். அவள் நெற்றியும் மேலுதடும் வியர்த்திருந்தன. கழுத்துக்குழியில் மூச்சு துடித்தது. “விழிகளும் குரலும் மட்டுமே அறிந்தவைபோலுள்ளன” என்றாள் அவள். “அவைதான் பார்த்தர். வில்லறிந்த கைகளும்” என்றான் நகுலன். அவள் “ஆம்” என மூச்சுத்திணறுவதுபோல சொன்னாள். அவன் அண்ணாந்து நோக்கி “மூத்தவர் அறைக்குள்ளேயே இருக்கிறார் போலும்” என்றான். “ஆம், அவர் தன்னை காட்டிக்கொள்ளக்கூடாதென்று எண்ணுகிறார்” என்றாள். “ஆம், இந்திரப்பிரஸ்தத்தின் பேரரசர்...” என்று நகுலன் சொல்ல “அதை அவர் கடந்து நீணாளாகிறது. இன்று விண்விளிம்பில் மண்ணில் நின்றிருக்கும் மூதாதை மட்டுமே” என்றாள்.

அவர்கள் மேலே ஏறிச்சென்றபோது அர்ஜுனன் தன் தோல்மூட்டையையும் அம்புத்தூளியையும் வில்லையும் வைத்துவிட்டு கைகளைக் கூப்பியபடி தருமனின் அறைக்குள் நுழைவதைக் கண்டார்கள். உடன்சென்ற சகதேவன் “மூத்தவரே” என்று தருமனை அழைத்தான். கையில் எழுத்தாணியுடன் சுவடியை நோக்கியபடி தலைகுனிந்து அமர்ந்திருந்த தருமனின் தோளில் மெல்லிய அதிர்வு

ஏற்பட்டது. அர்ஜுனன் ஓசையில்லாது நடந்து உள்ளேசென்று குனிந்து தமையனின் கால்களைத் தொட்டு வணங்கினான். அவர் தலைதிருப்பாமல் இடக்கையை அவன் தலைமேல் வைத்து “நீள்வாழ்வும் புகழும் நெடுங்குலமும் திகழ்க!” என்றார். வலக்கையில் எழுத்தாணியை கட்டாரிபோல பற்றியிருந்தார். கழுத்தில் நரம்பு ஒன்று இறுகி அசைந்தது.

அர்ஜுனன் மெல்லிய மூச்சொன்றை விட்டபின் கைகூப்பி இன்னொருமுறை வணங்கிவிட்டு பின்காலடி எடுத்துவைத்து வெளியே வந்தான். தருமன் மெல்ல விசும்பிய ஒலி அனைவரையும் கூர்வாள்முனை என தொட்டது. நகுலன் மெல்லிய சிலிர்ப்பை அடைந்து கைநீட்டி திரௌபதியின் தோளை தொட்டான். அவள் நோக்கியபோது ஏட்டுச்சுவடிகளின்மேல் விழிநீர்த்துளிகள் உதிர்வதைக் கண்டாள். அந்த மெல்லிய ஒலிகூட அனைவருக்கும் கேட்டது. தருமன் உதடுகளை மடித்து அழுகையை அடக்கிக்கொண்டார். நகுலன் ஏதோ சொல்லமுயல திரௌபதி வேண்டாம் என தலையசைத்துக்காட்டி விழிகளால் பின்னுக்கு அழைத்தாள்.



அவர்கள் நுனிக்கால்களால் நடந்து பேரறைக்கு வந்தனர். அங்கே இரு குரங்குகள் உள்ளேவந்து அர்ஜுனனின் மூட்டையைப் பிரித்து ஆராய்ந்துகொண்டிருந்தன. உள்ளே இரு பழைய மரவுரிகளும் ஒரு சுரைநீர்க்குடுவையும் மட்டும் இருந்தன. ஒரு குரங்கு மரவுரியை நீட்டி நோக்கி கீழுதட்டைப் பிதுக்க இன்னொன்று ஒழிந்த குடுவையை வாயில் கவிழ்த்து நீர் அருந்துவதுபோல நடித்தது. அப்பால் ஒரு பெரிய குரங்கு

‘பாவம், சிறுவர்கள்’ என்னும் முகக்குறியுடன் அமர்ந்து தன் வால்நுனியை தானே பேன் பார்த்துக்கொண்டிருந்தது.

“மூத்தவரின் குலத்தார்” என்று சகதேவன் சிரித்தபடி சொன்னான். “இங்கே அவர் ஒரு பேரரசை உருவாக்கிவிடுவார் என்றே அஞ்சுகிறார்கள் அரசர்கள்.” அர்ஜுனன் புன்னகைத்து “விலங்குகளில் குரங்குகளிடமிருக்கும் அச்சமின்மை வியப்பூட்டுவது. அறிவின் துணிவு அது” என்றான். குரங்கு அவனை நோக்கி குடுவையை நீட்டியது. “வேண்டாம்” என்றான் அர்ஜுனன். அது குடுவையை தலைமேல் கவிழ்த்துக்கொண்டு எழுந்து நின்றது. “அறிவிலிருந்து கேலியும் ஐயமும் எழுகின்றன” என்றான் நகுலன். சகதேவன் “குரங்குகளின் நினைவாற்றலும் வஞ்சமும் அச்சமூட்டுபவை” என்றான்.

திரௌபதி “இன்னீர் அருந்துகிறீர்களா?” என்றாள். அவள் தொண்டை சற்று அடைத்ததுபோலிருந்தது. “ஆம்” என்றான் அவன். அவள் ஆடையைச் செருகியபடி திரும்ப “இங்கு அடுமனைச்சேடியர் இல்லையா?” என்றான். “இல்லை. இங்கு நாங்கள் மட்டிலுமே” என்றான் சகதேவன். “அதனால்தான் தேவி மாறிவிட்டாளா?” என்று அர்ஜுனன் சிரித்தான். திரௌபதி “உண்மையிலேயே சமைப்பதும் விளம்புவதும் உள்ளத்தை மாற்றிவிடுகின்றன” என்றாள். அச்சிரிப்பினூடாக அவள் இயல்பானாள். “நீங்கள் விழைவதை எல்லாம் சமைக்கிறேன். என் கைச்சுவை அரிது என்கிறார்கள் முனிவர்” என்றாள். அர்ஜுனன் “ஆம், உண்பதற்காகவே வந்துள்ளேன்” என்றான். அவள் சட்டென்று நாணி முகம்சிவக்க “நன்று” என உள்ளே சென்றாள். அர்ஜுனன் முகத்திலும் அந்நாணத்தின் எதிரொளி இருந்தது. சகதேவனும் நகுலனும் அவன் முகத்தை நோக்குவதை தவிர்த்தனர்.

முண்டன் வந்து வாயிலில் நின்று தலைவணங்கி “நான் முண்டன். இங்கு வளர்க்கப்படுகிறேன்” என்றான். அர்ஜுனன் சிரித்துவிட்டான். “எதன்பொருட்டு?” என்றான். “வளர்ப்பவர்களின் ஆணவத்தின் பொருட்டுதான். எல்லா வளர்ப்புவிலங்குகளையும்போல. விஜயரே, உங்களுக்கு இன்னீரும் சுட்டகிழங்கும் சித்தமாக உள்ளது. உச்சிப்பொழுதுக்கு ஊனுணவு சமைக்கவேண்டும்... அதற்குமுன் பெருவயிறர் வருவாரா என உறுதிசெய்யவேண்டும்” என்றான்.

“இவன் அடுமனையாளனா?” என்றான் அர்ஜுனன். “இல்லை. அடிப்படையில் நான் பகடிக்கலைஞன். சமையலில் மட்டும்தான் பகடிக்கு இடமே இல்லை.” அர்ஜுனன் “வில்வித்தையில் உள்ளதோ?” என்றான். “மூத்த அரசர் அம்புவிடுவது வேறென்ன?” என்றான் முண்டன். “அய்யோ” என்றான் அர்ஜுனன் பதறி திரும்பிநோக்கியபடி. “தேன் கலந்த பழக்கூழ் இனிது. நான் சற்று முன்னர்தான் முதற்சுவை நோக்கினேன்” என்றபின் அவன் திரும்பிச்சென்றான்.

அர்ஜுனன் “எளியவன் அல்ல, ஆனால் நேர்மையானவன்” என்றான். “ஆம், அதை நானும் கணித்தேன்” என்றான் சகதேவன். மூங்கில்கூடையை கவிழ்த்திட்டு அர்ஜுனன் அமர்ந்தான். அவன் அருகே நகுலனும் சகதேவனும் அமர திரௌபதி அடுமனைக்குள் சென்றாள். “அனைவருமே மாறிவிட்டிருக்கிறீர்கள். தோற்றத்தில் மட்டுமல்ல. உள்ளேயும்” என்றான் அர்ஜுனன். “நீங்கள் மாறிவிட்டிருக்கிறீர்கள். அதைத்தான் பார்க்கிறீர்கள்” என்று நகுலன் சொன்னான்.

திரௌபதி உள்ளிருந்து கனித்தாலத்துடன் வந்து அவனருகே வைத்தாள். அர்ஜுனன் “தேவி நூறு பெயர்மைந்தர்களின் பேரன்னைபோல கனிந்திருக்கிறாள்” என்றான். திரௌபதி

கண்கள் பொங்க சிரித்து “குருகுலத்தவரின் குருதியையும் சேர்த்தால் நூறென்ன, ஆயிரங்கள் கூட அமையும்” என்றாள். முண்டன் இரு கைகளிலும் இன்னீரும் அப்பத்தட்டுமாக ஓடிவந்தான். அவ்விரைவிலேயே இருமுறை தலைகீழாகச் சுழன்று நின்று “நெடுந்தொலைவு சென்றுவிட்டேன். மீண்டு வரவேண்டியிருந்தது” என்றான். அவன் கையிலிருந்தவை துளியும் சிந்தவில்லை.

அர்ஜுனன் “நீ நிகருடல் திறனுடையவன், ஒப்புகிறேன்” என்றான். “திறன் வளர்த்து ஒருநாள் உங்கள் அம்பொன்றை கையால் பற்றுவேன்” என்றான் முண்டன். “சற்றுமுன் நான் சென்ற தொலைவில் ஒரு மலைவேடன் உங்கள் அம்புகளை கையால் பற்றுவதைக் கண்டேன்.” அதை அவன் உள்ளே சென்றபடி சொன்னதனால் அர்ஜுனன் கேட்கவில்லை. அவன் தேன்பழநீரை அருந்தியபின் கிழங்கை உண்ணத் தொடங்கினான். முண்டன் மீண்டும் பலமுறை சுழன்று வந்து அவர்கள் முன் தேன்பழநீர் குடுவையையும் குவளைகளையும் வைத்தான்.

திரௌபதி குவளைகளில் ஊற்றி அவர்களுக்கு அளித்தாள். அதைச் சுவைத்தபடி “எங்கெல்லாம் சென்றீர்கள், மூத்தவரே?” என்றான் சகதேவன். “நான்கு திசைகளிலும் நெடுந்தொலைவு” என்றான் அர்ஜுனன். “மேற்கே நிலைக்கடல் முதல் கிழக்கே பறக்கும் மலைகள் வரை. திசைத்தேவர்களை வென்று நிகரற்ற படைக்கலங்களுடன் வந்துள்ளேன்.” அறைவாயிலில் தோன்றிய தருமன் “உன்னை வென்றாயா?” என்றார். அர்ஜுனன் தெளிந்த விழிகளுடன் அவரை ஏறிட்டுநோக்கி “ஆம்” என்றான். அவர் “நன்று” என்றார். கைகளைக் கட்டியபடி நின்று அர்ஜுனனை கூர்ந்து நோக்கினார். “நன்கு மெலிந்துள்ளாய்.”

“கொழுப்பதற்கு இங்கு நிறைய நாட்கள் உள்ளன, மூத்தவரே” என்றான் அர்ஜுனன். “ஆம், இவள் இப்போது நன்கு சமைக்கிறாள்” என்று தருமன் சொன்னார். முகத்தை கடுமையாக வைத்துக்கொள்ளும்பொருட்டு பற்களைக் கடித்து வாயை இறுக்கியிருந்தார். “நீ கற்றவற்றில் சிலவற்றை இவர்களுக்கு சொல்லிக்கொடு. இங்கே தோட்டக்காரர்களாகவே ஆகிவிட்டிருக்கிறார்கள்” என்றார். அர்ஜுனன் “ஆணை” என்று சொல்லி நகுலனை நோக்கி சற்றே புன்னகைத்தான். அவர் உடல் விழியாகி அவனை பார்ப்பதுபோலிருந்தது. நோக்கு வேறெங்கோ இருந்தது. காற்று செடிகளில் என அவர் வருகை அங்கிருந்த அனைவர் உடலிலும் நிலைமாறுபாட்டையும் மெல்லசைவையும் உருவாக்கியது.

“உன் தமையன் இன்னும் வரவில்லையா?” என்றார் தருமன் வெளியே நோக்கியபடி. “வந்துகொண்டிருக்கிறார் என நினைக்கிறேன்” என்றான் நகுலன். “எங்கு சென்றான்? மூடன்! இங்கேயே இருக்கும்படி நான்குமுறை நானே சொன்னேன்” என்றபடி மேலும் ஏதோ சொல்லவந்தார். பின்பு “சரி சரி, உண்ணுக!” என்றபின் மீண்டும் உள்ளே சென்றார். அவர்கள் இயல்புநிலைமீளும் அசைவுகள் ஏற்பட்டன.

முண்டன் வந்து “உரியநடிப்புகள் முடிந்துவிட்டன என்றால் இருவர் வந்து அடுமனையில் உதவவேண்டும். பெருவயிறருக்கு சமைக்க தனியாக என்னால் இயலாது” என்றான். நகுலன் “இவன் தலைகீழாகக் குதித்து காலத்தின் ஏடுகளை புரட்டத்தெரிந்தவன். நீங்கள் வரவிருப்பதை சரியாகச் சொன்னான்” என்றான். “இப்போது சற்றுமுன் தலைகீழாகப் பாய்ந்து வந்தானே?” என்றான் அர்ஜுனன். “நான் பலநாட்களுக்கு முன்னால் சென்றுவிட்டிருந்தேன்” என்றான் முண்டன். “எங்கே?

என்ன கண்டாய்?” என்றான் அர்ஜுனன். “விஜயரின் வில்லுக்கு வேலை வந்துவிட்டிருப்பதைக் கண்டேன்” என்றான் முண்டன் கைதூக்கி. “அம்புகள் பறக்கும் ஒரு பெரும்போர்!” என்று கூவினான்.

அவன் குரல் மறையும்படி தடதடவென கூரைமேல் குரங்குகள் விழும் ஓசை கேட்டது. “இந்த இல்லத்தையே ஒருநாள் இழுத்து கீழே போட்டுவிடுவான் அறிவிலி!” என்றார் தருமன் அறைக்குள். பீமன் உள்ளே வந்தபோது கூடவே ஏழெட்டுக் குரங்குகளும் வந்தன. அனைத்துமே கைகளில் தேன்தட்டுகளை வைத்திருந்தன. பீமன் பாளையால் முடையப்பட்ட பெருங்கூடையில் தேன்கூடுகளை நிறைத்து எடுத்துவந்திருந்தான். அவன் உடலெங்கும் தேன் வழிந்தது. “இளையோனே” என்று கூவியபடி தன் பெரிய கைகளை நீட்டிக்கொண்டு ஓடிவந்து அர்ஜுனனை பற்றிக்கொண்டான். அர்ஜுனன் “எங்கு சென்றீர்கள்?” என்று சொல்லி அவன் தோள்களைத் தழுவினான்.

உரக்க நகைத்தபடி பீமன் அர்ஜுனனை அணைத்து தூக்கிச்சுழற்றினான். அவனை காற்றில் எறிந்து பிடித்தான். வெறிகொண்டவன்போல ஓங்கி ஓங்கி அறைந்தான். தேன் ததும்பி தரையில் விழ அதில் இருவரும் வழுக்கி நிலையழிந்து சிரித்தபடியே நின்றனர். அறைவாயிலில் வந்துநின்ற தருமன் “போதும், குடிலை சரித்துப்போடவேண்டியதில்லை” என்றார். பீமன் அர்ஜுனனை கீழே விட்டுவிட்டு “மலைத்தேனும் கனிகளும் எடுத்துவரச் சென்றேன், மூத்தவரே” என்றான். “ஏற்கெனவே அவனுக்கு மதுபர்க்கம் அளித்தாகிவிட்டது. நீ முதலில் குளி” என்றார் தருமன்.

அவன் தலையசைக்க “குரங்கு” என்றபின் பிற குரங்குகளை நோக்கி “இவை இவனைவிட பண்பறிந்தவை” என்றார். நகுலன் சிரிப்பை அடக்க அவர் திரும்பி உள்ளே சென்றார். ஒரு குரங்கும் அவரைப்போலவே தளர்நடையிட்டு உடன்சென்றது. அவர் கதவை மூடிக்கொண்டார். “என்ன செய்வதென்றே தெரியவில்லை அவருக்கு” என்றான் நகுலன். “அள்ளி மடியிலிட்டு சற்றுநேரம் அழுது பின் கொஞ்சி உணவூட்டினால் நெஞ்சமைவார். அதைச் செய்ய முடியாமையால் நிலையழிகிறார்” என்றான் சகதேவன்.

பீமன் தேன்கூட்டை எடுத்து “மலைத்தேன்! இனிய தேனிருக்கும் இடம் குரங்குகளுக்கு மட்டுமே தெரியும். இனிய கனிகளை அவைதான் தெரிவுசெய்யமுடியும்... இவற்றை உண்டு பார்” என்றபடி தேன்தட்டு ஒன்றை எடுத்து அர்ஜுனன் வாயில் ஊட்டப்போனான். “நான் பிழிந்து கொண்டுவருகிறேன்” என்றாள் திரௌபதி. “இதை இப்படியே உண்ணலாம்” என பீமன் தூக்கிக் காட்ட சொட்டிய தேனை அர்ஜுனன் நக்கிக்குடித்தான். “நன்று... இத்தனை இனிய தேனை உண்டதே இல்லை” என்றபடி இன்னொரு தட்டை எடுத்து திரௌபதியிடம் நீட்டினான். அவள் விழிகளில் பதற்றம் எழ வேண்டாம் என தலையசைத்தாள்.

“அருந்துக! இது அரிய மலைத்தேன்” என்றான் பீமன். அவள் தலையசைக்க சகதேவன் எழுந்து “நான் விறகு கொண்டுவரச் செல்லவேண்டும்... மூத்தவரே, வருகிறீர்களா?” என்றான். பீமன் “விறகு கொண்டுவருவதெல்லாம் ஒரு வேலையா? என் படையிடம் சொன்னால் போதுமே” என எழுந்துசென்றான். நகுலன் “முண்டன் என்ன செய்கிறான் என பார்க்கிறேன்” என்று எழுந்து உள்ளே சென்றான். அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் விழிதொடுத்து நோக்கினர்.

திரௌபதி நோக்கில் எழுந்த கூரொளியுடன் “சென்ற இடங்களில் எத்தனை துணைவியர்?” என்றாள். “ஏன்? அதைத்தான் முதலில் கேட்கவேண்டுமா?” என்றான். “சொல்லுங்கள்!” அர்ஜுனன் “பலர்” என்றான். “ஆனால் அனைவரும் உன் வடிவங்களே.” அவள் சிரித்து “ஆம், பேசுவதை மட்டும் நன்கு பயின்று வைத்திருக்கிறீர்கள்” என்றாள். தாழ்ந்த குரலில் “அனைத்துக் கலைகளையும் கற்றவன் என்கிறார்கள் என்னை” என்று சொன்னபடி அவள் கையை அவன் பற்ற “அய்யோ, இது நடுஅறை” என்றாள் அவள். “அப்படியென்றால் உள்ளறைக்குச் செல்வோம்” என்றான் அர்ஜுனன். “இப்போதா?” என்றாள். “அதை உணர்ந்துதான் அனைவரும் சென்றுவிட்டார்கள்” என்றான். “அய்யோ, எண்ணவே கூச்சமாக இருக்கிறது” என்றாள். “இதென்ன, அச்சமும் நாணமும் மடமும் பயிர்ப்பும் எப்போது வந்தன?” அவள் “வந்தன… அவ்வளவுதான்” என்றாள்.

# மாமலர் - 6

### 6. ஐம்பொருட் சாறு

வெயில் மூத்துக்கொண்டிருந்த பின்காலையில் அர்ஜுனனும் சகதேவனும் தோட்டத்தில் மலர் நோக்கிக்கொண்டிருந்தனர். அப்பால் நகுலன் மண்வெட்டியால் பாத்தி வெட்டிக்கொண்டிருந்தான். “இங்கு மலர்கள் மட்டும்தானா?” என்றான் அர்ஜுனன். “ஆம், இங்கே காட்டில் காய்கனிகளுக்கு குறைவே இல்லை” என்றான் சகதேவன். “மலர்களும் குறைவில்லையே!” என்றான் அர்ஜுனன். “ஆமாம், ஆனால் அனைத்து மலர்களையும் ஓரிடத்தில் காணமுடியவில்லை.

ஆகவே இங்கே இத்தோட்டத்தை அமைத்தோம். ஒருமுறை விழியோட்டினால் நூறுவகை மலர்களை பார்க்கமுடியும்.”

அர்ஜுனன் “விந்தைதான்… எங்கும் நாம் சமைக்கும் அழகு நமக்குத் தேவைப்படுகிறது” என்றான். “இங்கு தேவல முனிவர் வந்திருந்தபோது இதையே சொன்னார். இத்தோட்டம் ஒரு காவியம் என்றார். காடு எனப் பூத்திருப்பவை நாவளர் பாடல்கள்.” ஏணிப்படிகள் முனக பீமன் கீழிறங்கி வருவதைக்கண்டு இருவரும் திரும்பிநோக்கினர். புயங்களில் தசையுருளைகள் எழுந்தமைய கைகளை தலைக்குமேல் தூக்கி சோம்பல்முறித்தபடி வந்த பீமன் “நன்கு துயின்றுவிட்டேன், இளையோனே. காலை வந்ததை அறியவில்லை” என்றான்.

“இது காலையல்ல, உச்சி அணுகிக்கொண்டிருக்கிறது” என்றான் அர்ஜுனன். கோட்டுவாயிட்டபடி “அதைத்தானே நானும் சொன்னேன்” என்றான் பீமன். “நேற்று நீங்கள் உறங்கியபின் நான் காட்டுக்குள் சென்றேன். கோமதியில் அவ்வேளையில் யானைகள் நீராடும். உடன்நீந்துவது இனிது.” அர்ஜுனன் “ஆம், நீங்கள் இரவுகளில் குடிலில் இருப்பதை விரும்புவதில்லை என அறிந்தேன்” என்றான். “பகலில் இருக்க குரங்குகள் விடுவதுமில்லை” என்றான் சகதேவன்.

“நீங்கள் உணவருந்திவிட்டீர்களா, மூத்தவரே?” என்றான் அர்ஜுனன். “எழுந்ததுமே அடுமனைக்குத்தான் சென்றேன். எளிய உணவுதான். பல்தேய்த்து குளித்துவிட்டு மீண்டும் முறையாக உண்ணவேண்டும்” என்றபடி பீமன் அருகேவந்து குந்தி அமர்ந்தான். சகதேவனிடம் “அடேய், தள்ளிப்போ. நான் இளையோனிடம் சில அரசமந்தணங்கள் பேசவேண்டியிருக்கிறது” என்றான். “என்ன அப்படி?” என்று சகதேவன் கேட்க “செல்கிறாயா இல்லையா?” என்றான்.

சகதேவன் “அரசியலுக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு?” என முணுமுணுத்தபடி நகுலனின் அருகே சென்று நின்றான்.

பீமன் தாழ்ந்த குரலில் “இளையோனே, உண்மையில் நான் நேற்று காட்டுக்குள் சென்றது இன்தேறல் கொண்டுவருவதற்காக” என்றான். அர்ஜுனன் “தேறலா? எங்கிருந்து?” என்றான். “காட்டில் வைத்திருக்கிறேன். நானே வடித்தது. மேலே ஒரு குகையில் புதைத்து வைத்திருந்தேன். நேற்றிரவு எடுத்து மூடியைத் திறந்தேன்” என்றான் பீமன். “நறுமணத்தால் காடே மயங்கிவிட்டது. ஆயிரம் மரமானுடர் அந்தப் பாறையருகே நின்றிருக்கிறார்கள். நாகபுச்சனையும் சுகர்ணனையும் காவலுக்கு நிறுத்திவிட்டு வந்தேன். அவர்களை பிறர் அஞ்சுவார்கள்.”

“பழத்தேறலா?” என்றான் அர்ஜுனன் ஐயத்துடன். “ஆம், இங்கே மரமானுடர் உதிர்ந்த பழங்களைச்சேர்த்து பாறைக்குழிகளில் இட்டு நொதிக்கச்செய்து மேலே தெளிந்துவரும் கடுந்தேறலை இலைகளால் அள்ளி அருந்தி மயங்குவதைப் பார்த்தேன். அதன்பின் காடே காதலும் பூசலுமாக ஒலிக்கும். அவர்களிடமிருந்துதான் உரிய கனிகளைத் தெரிவுசெய்ய கற்றுக்கொண்டேன். நீ வந்து பார். ஒரு நாழிகை தொலைவிலேயே அதன் மணத்தை உணர்ந்துகொள்வாய். அறிந்திருப்பாயே, சான்றோரின் புகழ் பரவுவதைப்பற்றி ஒரு பாடலில் சொல்லப்பட்டுள்ளதுபோல...”

அர்ஜுனன் “அது மலர்மணம்” என்றான். “இது அதைவிட கூரிய மணம்” என்றான் பீமன். அர்ஜுனன் “வேண்டாம் மூத்தவரே, நான் மதுவருந்தி நீணாள் ஆகிறது” என்றான். “நீ தவமுனிவர் போலிருக்கிறாய். உலகுக்குத் திரும்பு. எங்களைப் பார், நாங்கள் சொல்வளர்காடுகளினூடாக இங்கே வந்தோம். இது

சொல்லில்லா காடு. இங்குதான் இனிதாக வாழ்கிறோம்.” அர்ஜுனன் “வேண்டாம்” என்றான். “ஏன்?” என்றான் பீமன். அர்ஜுனன் “மூத்தவர் இருக்கிறார்” என்றான். “அவருக்கும் கொடுப்போம்” என்றான் பீமன். “விளையாடாதீர்கள், மூத்தவரே” என்றான் அர்ஜுனன்.

“உண்மை, அவர் இப்போது மூதாதையருள் ஒருவர். ஆகவே முறையாக படைக்கவேண்டும். நான் புதியதேறல் எடுத்ததும் இங்கு கொண்டுவந்து தேவியிடம் கொடுப்பேன். அவள் கொடுத்தால் அவர் அருந்துவார். அதைப்பற்றி எதுவும் தெரியாததுபோல் நாம் இருந்துவிடவேண்டும் என்பது மட்டுமே நெறி” என்று பீமன் சொன்னான். “இளையோரை தவிர்த்துவிடுவோம். அவர்கள் முன் நாம் அருந்தினால் நமக்கு மதிப்பிருக்காது.” அர்ஜுனன் தத்தளிப்புடன் “இது முறையா என தெரியவில்லை” என்றான்.

“மூத்தவரின் ஆணைக்குக் கட்டுப்படுவது முறையா அல்லவா?” என்றான் பீமன். “அது முறைதான்” என்றான் அர்ஜுனன். “அப்படியென்றால் இது என் ஆணை. வருக!” என்றான் பீமன். “இளையவனே, முனிவராக இருந்தது போதும். நாம் வெல்வதனைத்தையும் வென்றுவிட்டோம். இனி மெல்ல எளிதமைந்து கனிவோம்.” அர்ஜுனன் “மெய்யாகவே நாம் மூத்தவருக்கும் கொண்டுவந்து கொடுக்கப்போகிறோமா?” என்றான். “ஆம், ஐயமென்ன? மிகச்சிறந்த பகுதி அவருக்குரியது. அதன்பின் நாம் மகிழ்வோம்.” அர்ஜுனன் புன்னகைத்து “அப்படியென்றால் நன்று” என்றான்.

பீமன் சகதேவனிடம் “இளையோனே, நாங்கள் காட்டுக்குள் சென்று ஒரு சிறு அரசியல்பணி முடித்து மீள்கிறோம்” என்றான். அவன் அருகே வந்து “நானும் வருகிறேன்” என்றான்.

பீமன் “இது பெரியவர்களுக்கானது” என்றான். “நானும் பெரியவனே. மேலும் உங்களுக்கு துணைநிற்பேன்” என்றான். சில கணங்கள் கூர்ந்து நோக்கியபின் பீமன் “எப்படி அறிந்தாய்?” என்றான். சகதேவன் “நான் வாயசைவை நோக்கக் கற்றவன்” என்றான். அர்ஜுனன் சிரித்து “சரிதான்... இவன் பெரும்பாலான நிமித்தக்குறிகளை அவனை அணுகுபவர்கள் தொலைவில் பேசிக்கொண்டு வருவதிலிருந்தே உய்த்தறிந்து சொல்கிறான்” என்றான்.

“நான் மதுவருந்தி நீண்டநாளாகிறது” என்றான் சகதேவன். “சென்ற வாரம்தானே கொண்டுவந்தேன்?” என்றான் பீமன். “அதைத்தான் நானும் சொன்னேன்” என்றான் சகதேவன். பீமன் “சரி, ஓசையிடாதே” என்றான். நகுலனிடம் “நாங்கள் ஒரு சிறு வேட்டைக்கு சென்றுவருகிறோம், இளையோனே. உன் பணி தொடரட்டும்” என்றான். நகுலன் மண்வெட்டியை வைத்துவிட்டு மேலேறி வந்து “எங்கே தேறலிட்டிருக்கிறீர்கள், மூத்தவரே?” என்றான். “உனக்கும் வாயசைவு கேட்டுவிட்டதா?” என்றான் பீமன். நகுலன் “நான் இவன் உடலசைவை நோக்குவேன். புரவிகளின் உடல்மொழிபோலவே தெளிவானது” என்றான்.

“பிறகென்ன? கிளம்புவோம்” என்றான் அர்ஜுனன். நகுலன் “ஓசையின்றி கிளம்புவது நன்று. மூத்தவரும் உடன்வரக்கூடும்” என்றான். “பேசாமல் வா!” என்றான் பீமன் எரிச்சலுடன். “நேற்றிரவு மூத்தவர் படிப்படியாக மலர்ந்தார். அத்தனை நடிப்புகளையும் துறந்து சிரித்தார். பின்னிரவில் நடனம் கூட ஆடினார்” என்றான் அர்ஜுனன். “நடனமா?” என பீமன் நின்றுவிட்டான். “ஆம், துரியோதனன் இந்திரப்பிரஸ்தத்தில் வழுக்கியதை நடித்துக்காட்டினார்” என்றான் சகதேவன். “மூத்தவரா?” என்றான் பீமன் திகைப்புடன்.

“ஆம் மூத்தவரே, அவரும் சற்று இளக வேண்டுமல்லவா? நேற்று அதற்கான தருணம். முதலில் இரவுணவுக்கு சேர்ந்து அமரவே தயங்கினார். தேவி சென்று தனியாகப் பேசியபின் கிளம்பிவந்தார். கைபற்றி உடனமர்த்தவேண்டியிருந்தது. உண்ணும்போது இறுக்கமாகவே இருந்தார். ஊன் துண்டு ஒன்றை பார்த்தருக்கு எடுத்துவைத்தபோது விழி ததும்பினார். அதன்பின் அழுகை. அழுது முடித்ததும் முகம் மலர்ந்துவிட்டது. அவர் அழுததை அவரே கேலி செய்தார். சிரிப்பு தொடங்கியது.”

“மூத்தவர் வாய்விட்டுச் சிரித்து நான் பார்த்ததையே மறந்துவிட்டேன்” என்றான் பீமன். நகுலன் “நம் அன்னை கருவுற்றிருக்கும் செய்தி அறிந்ததும் தந்தை தலையில் தேன்தட்டுகள் நிறைந்த கூடையைச் சுமந்தபடி உடலெங்கும் தேன் வடிய வந்தாராம். அதை சேடியர்கதைகளிலிருந்து அவர் அறிந்திருக்கிறார். நேற்று நீங்கள் வந்ததும் அதைப்போல என்று சொல்லி சிரிக்கலானார். அப்படியே தந்தையை பகடி செய்தார். பின் அன்னையை. பின்னர் அனைவரையும். சிரித்துச் சிரித்து ஒரு தருணத்தில் நான் அப்படியே சுருண்டு படுத்துவிட்டேன்” என்றான்.

“இன்று அவர் கண்முன்னாலேயே செல்லக்கூடாது என்று தேவி சொன்னாள்” என்றான் சகதேவன். “காலை எழுந்ததுமே அவர் நடனமிட்டதுதான் அவருக்கு நினைவுக்கு வரும். சினம்கொண்டு சிடுசிடுவென்றிருப்பார் என்றாள்.” பீமன் நகைத்து “ஆம், ஓரிரு நாட்கள் அது நீடிக்கும். ஆனால் தேறல் அவரை சற்று இளகச்செய்யக்கூடும்” என்றான். அர்ஜுனன் “அவர் குருகுலத்துப் பாண்டுவாக ஆகிக்கொண்டிருக்கிறார் என்று தோன்றியதுண்டு எனக்கு” என்றான். “அவர்

கடந்துசென்று பிரதீபரும் யயாதியுமாககூட ஆகிக்கொண்டிருக்கிறார்” என்றான் சகதேவன்.

அவர்கள் காட்டுக்குள் நடந்துசென்றபோது தலைக்குமேலும் முன்னாலும் பின்னாலும் குரங்குகள் சூழ்ந்து வந்தன. ஆனால் அவை ஓசையேதும் எழுப்பவில்லை. ஆர்வமிகுதியால் அவ்வப்போது சில குரங்குகள் “ஹு?” என்று கேட்க மூத்த குரங்குகள் “ர்ர்” என அதட்டி அமைதியை மீட்டன. “நெடுந்தொலைவு வந்துவிட்டோம் போலும்” என்றான் அர்ஜுனன். “அண்மைதான்...” என்றான் பீமன். “குரங்குகள் இங்கிருந்து இரண்டே நாழிகையில் குடிலுக்கு சென்றுவிடும்.”

“நாம் நான்கு நாழிகைக்கும் மேலாக நடந்துகொண்டிருக்கிறோம்” என்றான் அர்ஜுனன். “அண்மைதான்” என்று பீமன் சொன்னான். இலைத்தழைப்புக்குமேல் கரிய பாறையின் கூன்வளைவு தெரிந்தது. “சற்று குத்தான பாறை. நீர் வழிந்து மென்மையாகிவிட்டிருக்கிறது, வழுக்கவும் கூடும்” என்றான் பீமன். குரங்குகள் மரங்களிலிருந்து குதித்து கைகளை ஊன்றி பாய்ந்தேறி மேலே சென்றன. “கைகளை ஊன்றிக்கொண்டால் விரைந்தேறலாம்” என்றான் பீமன்.

அவர்கள் கைகளை ஊன்றி தொற்றி மேலேறினர். மூன்று அடுக்குகளுக்கு மேலே சென்றதும் அவர்கள் மேல் உருகிய வெள்ளியென உச்சிவெயில் பொழிந்தது. நகுலன் வியர்வை வழிய கையூன்றி அமர்ந்தான். மழைக்காலத்தில் நீர்விழுந்து சுழித்தோடிய இடங்களில் உரல்குழிபோல மென்மையாக பள்ளம் விழுந்து அதில் நீர் தேங்கியிருந்தது. அள்ளிக்குடித்து

உடல்மேலும் வீசிக்கொண்டனர். “வந்துவிட்டோம், அண்மைதான்” என்றான் பீமன்.

மேலேறிச்சென்றதும் பீமன் சுட்டிக்காட்டி “அங்குதான்” என்றான். அங்கே பாறைக்குழிகளிலமைந்த சுனைகளுக்குமேல் பாளைகளையும் ஓலைகளையும் கொண்டு நெய்த பரிசல்போன்ற பெரிய கூடைகள் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்தன. அணுகியதும் இன்தேறல் மணமெழுந்தது. “இங்கா வைத்திருக்கிறீர்கள்?” என்றான் அர்ஜுனன். “நோக்குக!” என பீமன் ஒரு கூடையை எடுத்தான். உள்ளே வட்டமான கற்குழியில் கரிய சேறுபோல பழக்கூழ் அழுகிநொதித்து குமிழிகள் வெடித்துக்கிடந்தது. அதன்மேல் கவிழ்க்கப்பட்ட கூடையின் உட்புறத்தில் அதிலிருந்து ஆவியாகிப் படிந்த தேறல் குளிர்ந்து துளித்து வழிந்து அதன் சரிவில் ஓடி வந்து சற்று கீழே அமைந்திருந்த பிறிதொரு குழியில் சொட்டி நிறைந்தது. அதன்மேல் பெரிய தட்டைக்கல்லை வைத்து மூடியிருந்தான் பீமன்.

“இந்த நொதிக்கூழை பானையிலிட்டு மெல்லிய அனலில் ஆவியெழச் செய்வார்கள். ஆனால் இங்கே பழங்கள் பேரளவில் உள்ளன. கலங்களும் இல்லை. ஆகவே இம்முறையை கண்டுபிடித்தேன். வெயிலின் மென்வெம்மையில் ஆவியெழும் தேறல் மிக உயர்வானது” என்றான். கல்லைப்புரட்டி குழியில் தெளிந்த எண்ணைபோல கிடந்த தேறலை காட்டினான். அதன் அடியில் கரிய காய்கள் சில கிடந்தன. “அவை என்ன?” என்றான் அர்ஜுனன். “கதலிப்பழங்கள். நறுந்தேறலுக்குள் இவற்றை போட்டு வைத்தால் சாற்றை தேறல் உறிஞ்சிஎடுத்து கருகிச்சுருங்கச்செய்து அடியில் தங்கவைக்கும். தேறலில் இன்மணம் இருக்கும்” என்றான்.

“அதோ, அந்தக் குழியில் நெல்லிக்காய் போட்டுவைத்திருக்கிறேன். அது பிறிதொரு சுவை. தேன் சேர்த்து அருந்தும் தேறல் அதோ, அந்தக் குழியில் இருக்கிறது. மலரிட்டு வாற்றப்பட்ட தேறல்களும் உள்ளன. இளையோரே, பதினெட்டுவகை தேறல்சுவைகளை இங்கு இப்போது உருவாக்கியிருக்கிறேன். இன்னும் நூறுவகையில் உருவாக்க முடியும்” என்றான் பீமன். சகதேவன் “முதலில் மூதாதைக்கு படைப்போம். எண்ணி ஏங்கிக்கொண்டிருக்கப்போகிறார்” என்றான்.

“ஆம், அதை முதலில் செய்வோம்” என பீமன் குகைக்குள் சென்று நான்கு சுரைக்குடுவைகளை எடுத்துவந்தான். ஒவ்வொன்றிலும் தேறலை இலைக்கோட்டலால் மெல்ல அள்ளிநிறைத்து மரக்கட்டையால் இறுக அடைத்து தேன்மெழுகையும் அரக்கையும் கலந்து விளிம்பை மூடி கயிற்றில் கட்டினான். அவன் அழைத்ததும் நான்கு குரங்குகள் வந்து நின்றன. அவன் அளித்த குடுவையை வாங்கி முகம் சுளித்து முகர்ந்தபின் ஒரு குரங்கு “ர்ர்” என்றது. பீமன் அதே மொழியில் அவற்றிடம் ஆணையிட்டான். அவை கிளைகளுக்குமேல் ஏறிக்கொண்டன.

“இன்சுவை நான்கு மூத்தவருக்கு அனுப்பப்பட்டுள்ளது. இனி நாம் அருந்துவோம்” என்றான் பீமன். அவர்கள் மேலிருந்த பாறையின் நிழலில் அமர்ந்துகொண்டனர். பீமன் ஏழு சிறிய இலைத்தொன்னைகளில் மதுவை அள்ளி தெற்கு மூலையில் வைத்து மூதாதையருக்குப் படைத்து கைகூப்பி வணங்கினான். அதன்பின் மூங்கில்குடுவைகளில் தேறலை அள்ளிக்கொண்டுவந்து அவர்களுக்கு அளித்துவிட்டு பெரிய சுரைக்குடுவை நிறைய மதுவுடன் தானும் அமர்ந்தான்.

“முதலில் இனிப்புத்தேறல். தேன் கலந்தது. அதுவே முறை” என்றான். “குடுவையை சற்றுநேரம் கையில் வைத்து அதிலெழும் ஆவியை முகர்ந்தபின் சுவைக்கவேண்டும். வாயில்நிறையும் மணத்தை மூக்கினூடாக வெளிவிடவேண்டும்” என்றான். அர்ஜுனன் “நான் அருந்தியவற்றிலேயே சிறந்தது” என்றான். பீமன் “இவற்றைவிடச் சிறந்தது இங்கு உண்டு… இந்தக் காற்றில், ஒளியில், மண்ணில், மலர்களில் தேனாக அவை எழுகின்றன. கனிகளில் ஊறுகின்றன. அவற்றை நான் வாற்றி எடுப்பேன்” என்றான். அவன் ஏப்பம்விட்டு உடலை உலுக்கியபின் மீண்டும் அருந்தினான்.

மெல்ல அவர்கள் உடல்தளர்ந்து கண்கள் சிவந்தனர். வியர்த்த தோல்மேல் குளிராக காட்டுத்தென்றல் தழுவிச்சென்றது. “இந்தக் காட்டை நான் இன்னும் அறியவில்லை. இது எனக்கு அப்பால் உள்ளது இன்னமும். நூறாயிரம்முறை புணர்ந்த பின்னரும் உளம்காட்ட மறுக்கும் கன்னியின் மாயம்…” மீண்டும் அருந்தி “இந்தத் தேறல் எங்கிருக்கிறது? இளையோனே, இது எங்குள்ளது?” என்றான். “சொல்லுங்கள்” என்றான் அர்ஜுனன். “இதோ, இந்த மண்ணில்… மண்ணுக்கு அடியிலுள்ள குளிரூற்றுகளில். அதற்கும் அடியிலுள்ள அனலூற்றுகளில். அங்கிருந்து வேர்களால் உறிஞ்சி எடுக்கப்படுகின்றது. தளிர்களில் ஒளிகொள்கிறது. மலர்களில் இனிக்கிறது. கனியில்…”



அவன் தன் சுட்டுவிரலைத் தூக்கி ஏதோ சொல்ல முயன்று கண்களை மூடித்திறந்தான். வேறு எண்ணம் ஊடுகலந்தபோது சொல்லவந்ததை மறந்து மீண்டும் குடுவையை எடுத்து அருந்தினான். “இனி நாம் புளிப்புக்குச் செல்வோம்” என்றபடி எழுந்துசென்றான். சகதேவன் “அவர் நினைவழிந்து விழுந்தபின்னர்தான் நிறுத்திக்கொள்வார்” என்றான். எஞ்சியதைக் குடித்தபின் “ஆனால் அதற்கு நெடுநேரமாகும்” என்றான் நகுலன். பீமன் மீண்டும் வந்து அவர்களுக்கு தேறல்

பரிமாறிவிட்டு அமர்ந்து தன் குடுவையை கையில் எடுத்துக்கொண்டான். “நான் என்ன சொன்னேன்? இந்த மது எங்கிருக்கிறது? நான் சொல்லவா?”

“சொல்லுங்கள்” என்றான் அர்ஜுனன் புன்னகையுடன். “வானில்... இடிமின்னலின் கொந்தளிப்பில். விழிகூசும் வெயிலொளியின் எரிதலில். விண்மீன்கள் அளிக்கும் கனவில்” என்றான் பீமன். “இளையோனே, அதைத்தான் இந்த மலர்கள் அள்ளிக்குடிக்கின்றன. கனிகளுக்குள் கொண்டுசென்று தேக்குகின்றன. இதோ, பறக்கும் தேனீக்களும் வண்டுகளும் தங்கள் சிறகுகளால் அறிந்த மது. அவை மலர்தோறும் தேடிச்சென்று அவற்றை குடிக்கின்றன. ஆனால்...” அவன் மீண்டும் கைதூக்கி இல்லை என அசைத்து மந்தணப்புன்னகை பூத்து “ஆகவே...” என்றான்.

அவர்களைச் சூழ்ந்து குரங்குகள் வந்து இருகால்களில் அமர்ந்திருந்தன. ஒரு மூத்த குரங்கு அணுகி வந்து எரிச்சலுடன் பீமனிடம் ஏதோ சொல்ல அவன் “ஆ, மறந்துவிட்டேன்” என எழுந்துசென்றான். குரங்கும் சலிப்புடன் அவனுடன் சென்றது. பீமன் கலங்கிய பழநொதிப்பை பாளைத்தொன்னையால் அள்ளி பாறைமேல் வைக்க பெருங்குரங்கு அதை அணுகி குனிந்து முகர்ந்து முகம் சுளித்து தும்மியது. வால்நெளிய எழுந்து தாவி அமர்ந்து மீண்டும் முகர்ந்து குமட்டலுடன் குதித்து உடல் உலுக்கியது. மீண்டும் அருகே சென்று நுனிநாக்கால் நக்கி திடுக்கிட்டதுபோல பின்னால் பாய்ந்தது. நாக்கை நீட்டி வாயை நக்கியபடி குழிந்த கன்னங்கள் உப்பி விரிய சிறுமணிக்கண்கள் சிமிட்ட பீமனை நோக்கியது.

பீமன் நகைத்தபடி “தேறலாடுபவர்களில் இவனே முதல்வன்... இவன் பெயர் சாமரபுச்சன்” என்றான். குரங்கு மீண்டும் காலெடுத்துவைத்து எதிரியை அணுகுவதுபோல மதுவருகே சென்று தயங்கி ‘அய்யோ’ என சலிப்பதுபோல முகம் வலித்து பின் சட்டென்று குனிந்து உறிஞ்சிக் குடித்து குளிர்நீர் பட்டதுபோல உடல் குறுக்கி உறைந்தது. ஃபுக் என ஏப்பமிட்டு கழுத்தை வலிப்புகொள்வதுபோல இழுத்தபின் மீண்டும் குனிந்து குடித்தது. எழுந்து நாக்கைச் சுழற்றி பீமனை நோக்கி இளித்தபின் மீண்டும் குனிந்து ஒரே இழுப்பில் குடித்தது.

“ர்ர்ர்ர்” என அது உறுமியதைக் கேட்டு பீமன் நகைத்தான். மீசையில் துளிகள் நிற்க எழுந்து உடலை உலுக்கிக்கொண்டு கண்களை மூடியது. திடுக்கிட்டு விழித்தெழுந்து மீண்டும் குனிந்து உறிஞ்சி இழுத்தது. விலாவைச் சொறிந்துகொண்டு என்ன நடக்கிறது என எண்ணுவதுபோல கண்களை மூடித்திறந்தபின் அய்யோ என பதறி மீண்டும் குனிந்து குடித்தது. பீமன் அத்தனை குரங்குகளுக்கும் ஊறலை அள்ளி அள்ளி வைத்தான். ஒரு பெரிய குழியில் குடுவையால் அவன் அள்ளி மொண்ட ஊறலை அவை கூடி தலைகள் முட்டிக்கொள்ளும்படி குனிந்து குடித்தன.

ஒரு குட்டி அன்னை இடையிலிருந்து திமிறி அதற்குள் விழுந்து ரீச் என அலறியபடி எழுந்து கரையேற முயன்று வழுக்கி மீண்டும் அதிலேயே விழுந்தது. அதை அன்னை வாலைப்பிடித்து தூக்கி அப்பாலிட்டுவிட்டு குனிந்து குடித்தது. தேறலில் ஊறிய குட்டி எண்ணையில் நனைந்த எலி போலிருந்தது. அதை இரு குட்டிகள் நக்கின. அது வால்சொடுக்கி பாய்ந்தோடி அமர்ந்து தன் உடலை தானே நக்கிக்கொண்டது.

பீமன் தேறலின் அடியில் கிடந்த கருகிய பழங்களை எடுத்து அன்னையருக்கு அளித்தான். அவை அக்கனிகளை பிதுக்கி கூழாக்கி குட்டிகளுக்கு அளித்தன. ஊறல் மாந்திய குரங்குகள் ஸ்ஸ்ஸ் என உறிஞ்சின. ர்ர்ர் என உறுமி உடலை சொறிந்துகொண்டன. ஒரு குரங்கு எழுந்துநின்று உடலை உலுக்கிக்கொண்டு "ஹிஹிஹி' என்றது. ஒன்று தன் நெளியும் வாலைக்கண்டு திடுக்கிட்டு பாய்ந்தது. ஒன்றை ஒன்று பிடித்து தள்ளிக்கொண்டு அவை ஊறல் அருந்தின.

முதலில் ஊறல் அருந்திய பெருங்குரங்கு கொட்டாவிவிட்டு விழிசொக்கியது. மெல்ல ஆடி பக்கவாட்டில் விழுந்தது. எழுந்து திகைத்து நெஞ்சில் படபடவென அறைந்து "ரேரேரே" என ஓசையிட பிற குரங்குகள் ஆவலுடன் திரும்பி நோக்கின. இன்னொரு தாட்டான் குரங்கு தன் நெஞ்சில் அறைந்தபடி அதனுடன் மல்லுக்குச் சென்றது. ஆனால் இருவருக்குமே கால்கள் நிலைக்கவில்லை. கட்டிக்கொண்டபடி அவை தள்ளாடி உருண்டு எழுந்து பற்களை இளித்து உறுமின. அவற்றை பிடிக்கப்போன இரு குரங்குகள் வேறு திசையில் உருண்டன.

நகுலனும் சகதேவனும் சிரித்தபடியே இருந்தனர். பீமன் குடுவையில் இருந்து அருந்தியபடி "நல்ல களிமயக்கு... இந்தக் களி எங்குள்ளது என எண்ணுகிறீர்கள்?" என்றான். "சொல்லுங்கள்" என்றான் அர்ஜுனன். "காற்றில்... மரங்களை வெறிகொள்ள வைக்கிறது காற்று. சருகுகள் பொருளிழந்து பறக்கின்றன. சுனைகள் அலைகொந்தளிக்கின்றன. அனைத்தின்மீதும் தூசு படர்ந்து மூடுகிறது. மலர்கள் அனைத்தும் உதிர்கின்றன. ஆனால்..." அவன் சுட்டுவிரலைத் தூக்கி பின் அதைக்கண்டு நாவால் நக்கியபின் "ஆனால் தென்றலாகி வந்து அது மலர்களை... ஆகவே..." என்றான்.

நாலைந்து பெருங்குரங்குகள் வானிலிருந்து விழுந்தவைபோல மல்லாந்து வாயிளித்தபடி துயின்றன. ஒரு குட்டிக்குரங்கு பாய்ந்து அவ்விசையில் உருண்டு கீழே செல்ல மற்றவை கூச்சலிட்டபடி பின்னால் சென்றன. ஓர் அன்னை பக்கவாட்டில் படுத்து துயில அதன் மேல் அமர்ந்த குட்டி விழிகள் சொக்கி துயிலில் விழுந்தது. குரங்குக்கூட்டமே கீழே செறிந்திருந்த காட்டுக்குள் சென்று மரங்களின் மேல் ஏறிக்கொண்டது. காடு அலையிளகிக் கொந்தளிப்பது தெரிந்தது. பீமன் சகதேவனிடம் திரும்பி "நான் என்ன சொல்கிறேன் என்றால்…" என்றான்.

சகதேவன் சிரித்துக்கொண்டே இல்லை என்பதுபோல தலையசைத்தான். நகுலன் "நாம் அதை பிறகு பேசலாம்" என்றான். பீமன் "இந்த மயக்கு… இது உண்மையில்…" என்றான். சகதேவன் மீண்டும் தலையசைக்க நகுலன் "நாம் பிறகு பேசிக்கொள்ளலாம்" என்றான். அர்ஜுனன் விழிகளை மூடி முகவாய் மார்பில் படிய பாறையில் சாய்ந்து அமர்ந்தான். பீமன் "நாம் இன்னும் ஒரு வகை தேறலை அருந்துவோம். இதில் சற்று சுக்கு உண்டு. மூச்சுக்கு நல்லது" என்றபடி எழுந்து சென்று மொண்டுவந்தான்.

பாறைப்பரப்பு முழுக்க குரங்குகள் களம்பட்ட படைபோல சிதறிக்கிடந்தன. ஒரு சின்னஞ்சிறு குட்டி மட்டும் சிறிய உருளைக்கல்லை உருட்டி விளையாடிக்கொண்டிருந்தது. பீமனைக் கண்டு ஆவலுடன் பின்னால் வந்தபின் நினைவுகூர்ந்து மீண்டும் கல்லுக்கே திரும்பிச்சென்றது. சகதேவன் "எனக்கு சற்று தேறல்" என குழறியபடி சொல்லிவிட்டு பீமனை நோக்கி கைசுட்டிச் சிரித்தான். "நாம் பிறகு பேசலாமே" என்றான் நகுலன். அர்ஜுனன் மீண்டும்

தேறலை வாங்கி அருந்தினான். சகதேவன் ஏதோ சொல்லப்போக “நாம் நாளை பேசுவோம்” என்றான் நகுலன்.

கீழே குரங்குகள் மரங்களிலிருந்து உதிர்ந்தன. விழுந்த குரங்குகளுக்கு மேல் மேலும் குரங்குகள் விழுந்தன. வெயில் வண்ண அலைகளாக மாறியது. செவிகள் நன்றாக அடைத்து காட்டின் ஒலிகள் தலைக்குள் எங்கோ ஒலித்தன. இடவுணர்வும் காலவுணர்வும் அழிந்தன. அர்ஜுனன் தன் மார்பில் எச்சில் சொட்டுவதை உணர்ந்தான். ஆனாலும் தலையை தூக்கமுடியவில்லை. உடற்பொருத்துக்கள் தளர்ந்து தசைகள் ஊறிப்பரவி நீர்ப்படலமாக பாறைமேல் படர்ந்தான். தொலைவில் காட்டின் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. அது கடலோசையாகியது. அதன்மேல் நாவாய்கள் சிறகு விரித்தன. ஒரு நாவாயில் இளைய யாதவர் நின்று “இருண்டிருக்கிறது” என்றார். “என்ன?” என்று அவன் கேட்டான். “நல்ல இருள்” என்றார் இளைய யாதவர்.

அவன் விழித்துக்கொண்டபோது பேச்சுக்குரல் கேட்டது. துயின்றுகொண்டிருந்த பீமனை முண்டன் “பேருடலரே” என கூவி எழுப்பிக்கொண்டிருந்தான். “என்ன?” என்றபடி அர்ஜுனன் எழுந்தமர்ந்து அவ்விசையிலேயே வில்லையும் அம்பையும் எடுத்தான். முண்டன் அவனருகே ஓடிவந்து “அங்கே… அங்கே…” என்றான். “என்ன?” என்றான் அர்ஜுனன். “சொல்… என்ன ஆயிற்று?” என்றான். முண்டன் “அரசியை யாரோ தூக்கிக்கொண்டு சென்றுவிட்டார்கள்!” என்று சொன்னான். அர்ஜுனன் திரும்பி நகுலனை உதைத்து “எழுக… உடனே எழுக!” என்றான்.

நகுலன் பாய்ந்தெழுந்து வாயைத்துடைத்து “என்ன?” என்றான். சகதேவனை உலுக்கியபடி “எழுக… இளையோனே, எழுக!” என

கூவினான். “இளவரசே, அரசர் மதுவருந்தி துயின்றார். அரசி நீராடுவதற்காக கோமதிக்கு சென்றார். நெடுநேரமாகியும் திரும்பவில்லை. நானும் சற்று தேறல் மாந்தி துயின்றுவிட்டேன்... விழித்துக்கொண்டு நெடுநேரமாகிவிட்டதை உணர்ந்து நேராக கோமதிக்கு சென்றேன். அரசியின் ஆடைகள் நாணலில் சிதறிக்கிடந்தன. கரைச்சேற்றில் ஏராளமான புரவிக்குளம்படிகளை கண்டேன்” என்றான்.

“இளையோனே, மூத்தவரை எழுப்பி கூட்டிக்கொண்டு வருக!” என்றபடி அர்ஜுனன் குரங்குகளை மிதிக்காமல் தாவிக்கடந்து ஓடினான். முண்டன் உடன் ஓடியபடி “ஐம்பது புரவிகள்கூட இருக்கும்... ஆகவே அரசர்கள் எவரோதான். ஐயமே இல்லை” என்றான். நகுலன் பீமன் காதில் குனிந்து “மூத்தவரே! எழுக, மூத்தவரே!” என்று கூவினான். பீமன் ஆழ்கனவுக்குள் “தொலைதூரம்...” என்றான். சப்புக்கொட்டியபடி “நறுமணம்” என்று சொல்லி உடனே விழித்துக்கொண்டு எழுந்து வாயைத்துடைத்தபடி “என்ன? யார்?” என்று கேட்டான்.

# மாமலர் - 7

## 7. பெண்கோள் பெற்றி

அர்ஜுனன் காட்டினூடாக வீழ்ந்த மரங்களை தாவிக்கடந்தும் முட்புதர்களை வகுந்தும் தங்கள் குடிலை சென்றடைவதற்குள்ளாகவே அங்கே பீமன் சென்றுவிட்டிருந்தான். அவனைத் தொடர்ந்து அதேபோல மரக்கிளைகள் வழியாகவே முண்டனும் அங்கு சென்றிறங்கியிருந்தான். அர்ஜுனன் தோட்டத்திற்குள் நுழைந்தபோது பீமன் அவனை எதிர்கொண்டு உரத்த குரலில்

“பார்த்தா, மூத்தவர் கலங்கிப்போயிருக்கிறார். தேவி தனியாக கோமதிக்கு சென்றதைக்கூட அவர் அறிந்திருக்கவில்லை. முண்டன் சொன்னபிறகே அறிந்திருக்கிறார்” என்றான். “நாம் பேசிக்கொண்டிருக்க நேரமில்லை” என்றபடி அர்ஜுனன் வெளியே ஓடினான்.

அவர்கள் கோமதிக்கரையை அடைந்தபோது முன்னரே குரங்குகள் அங்கு சென்றுவிட்டிருந்தன. “இத்தனை தொலைவுக்கு ஏன் வந்தாள் அரசி?” என்றான் அர்ஜுனன். “இங்குள்ள பிற முனிவர்துணைவிகளுடன் சேர்ந்து நீராட அவள் வருவதுண்டு” என்று பீமன் சொன்னான். “அவளுக்கு பெண்மொழி பேசுவதற்கு இங்கு மட்டுமே இடமுள்ளது.” நாணல்பெருக்குக்கு அப்பால் கோமதி அலையிளகி ஒளியுடன் ஒழுகிக்கொண்டிருந்தது. இருமருங்கிலும் ஒளியலை ததும்பிய இலைத்தழைப்புகொண்ட மரங்கள் தழைந்து நீரில் விழுந்த நிழலை வருடிக்கொண்டிருந்தன.

சதுப்புக்கரையில் குரங்குகள் தரையை முகர்ந்தும் எம்பிக்குதித்தும் கூச்சலிட்டன. பீமன் அவற்றை அணுகி அவற்றின் மொழியிலேயே பேசிவிட்டு அர்ஜுனனிடம் “தம்பி, இவை தேவியின் காலடிகள். இன்னொரு காலடியும் இங்கு உள்ளது...” என்றான். அவர்களைத் தொடர்ந்து ஓடிவந்த நகுலன் அக்காலடிகளை குனிந்து நோக்கி “அவை அப்பாலுள்ள முனிவர்காட்டில் வாழும் சுதர்மரின் துணைவி தாத்ரேயியின் காலடிகள் என நினைக்கிறேன். பாதத்தடங்களின் நடுவே குழி ஆழ்ந்துள்ளது. இரு காலடிகளும் சற்று விலகி விழுந்துள்ளன. அவள் கால்கள் முதுமையால் வளைந்தவை என்பதைக் காட்டுகிறது இது” என்றான்.

அப்பால் விழுந்துகிடந்த அரசியின் ஆடைகளின் அருகே குரங்குகள் எம்பி எம்பிக் குதித்து ஓசையிட்டன. பீமன் “அரசியின் ஆடைகள்தான்... அங்கே புரவிக்குளம்புகள் தெரிகின்றன” என்றான். அவர்கள் சதுப்பைக் கடப்பதற்காகப் போடப்பட்டிருந்த கற்பாளங்களில் மிதித்துத் தாவி ஓடினார்கள். “இன்னொரு காலடி! இது முதியவனுக்குரியது!” என்றான் நகுலன். “இங்கே தேவியும் வந்து நின்றிருக்கிறாள். உடன் தாத்ரேயியும் இருந்திருக்கிறாள்.” மேலும் ஏறிச்சென்றபோது ஆற்றங்கரையில் மரங்களின் நடுவே சென்ற செம்மண் பாதையில் மிதித்துச் சுழன்று வட்டம் அமைத்த புரவிக்குளம்படித் தடங்களை கண்டனர்.

“இவற்றைத்தான் நான் பார்த்தேன்...” என்றான் மூச்சிரைக்க வந்த முண்டன். நகுலன் குனிந்து நோக்கியபடி “பழுதற்ற நிகருடல்கொண்ட அரசப்புரவிகள் ஏழு. எஞ்சியவை எடைமிக்க படைப்புரவிகள். மொத்தம் நாற்பத்தேழு குளம்புச்சுவடுகள்” என்றபடி முன்னால் ஓடினான். “அப்பாலெங்கோ தேர் நின்றிருக்கவேண்டும். பெரும்பாலும் அங்கே வணிகச்சாலையில் அதை நிறுத்திவிட்டு புரவிகளை மட்டும் கொண்டுவந்திருக்கிறார்கள்.” கைசுட்டி “ஏழு அரசப்புரவிகளில் ஒன்றின் மேல் மட்டுமே அமர்வு இருந்திருக்கிறது... அவன் ஓர் அரசன்!”

“தடம் நோக்கி குரங்குகள் செல்லட்டும். உடன்செல்க, மூத்தவரே!” என அர்ஜுனன் ஆணையிட்டான். “செல்பவர்களைத் தாக்கி புரவிகளை மட்டும் கைப்பற்றி கொண்டுவருக! நமக்கு இக்கணம் தேவையானவை புரவிகள்.” குரங்குகளும் பீமனும் முண்டனும் கிளைகளில் தொற்றி ஏறி ஊசலாடி பறந்து பசுமைக்குள் புதைந்து மறைந்தனர். அவர்களுக்குப் பின்னால்

தருமனும் சகதேவனும் வந்தனர். சகதேவன் “அம்புகள் கொண்டுவந்துள்ளேன், மூத்தவரே” என்றான். அவற்றைப் பெற்றுக்கொண்டு அர்ஜுனன் முன்னால் ஓடினான்.

தொலைவில் சீழ்க்கை ஒலி கேட்டது. பின்னர் குதிரைகளின் குளம்போசை. நகுலன் “ஒழிந்த குதிரைகள் எட்டு... மூத்தவர்தான் கொண்டுவருகிறார்!” என்றான். பீமன் ஒரு குதிரையில் அமர்ந்து பிற குதிரைகளை கடிவாளங்களைப் பிணைத்துக்கட்டி இழுத்துக்கொண்டு விரைந்து வந்தான். “இறுதியாகச் சென்ற குழுவை வீழ்த்திவிட்டேன், பார்த்தா. அவர்கள் அதை அறிவதற்கு இன்னும் சற்றுநேரம்தான். வழியிலேயே முண்டனும் குரங்குகளும் அரண்நிற்கின்றனர்” என்றான்.

அர்ஜுனன் ஒரு சொல் உரைக்காமல் சிட்டுக்குருவிபோலப் பறந்து எழுந்து புரவிமேல் ஏறி கடிவாளத்தை பற்களால் கடித்துக்கொண்டு காலால் புரவிப்பள்ளையை தூண்டினான். அது கனைத்தபடி முன்குளம்பு தூக்கி எழுந்து பிடரிமயிர் அலைய பாய்ந்து ஓடியது. குளம்புகள் நிலமறைந்து முழங்க வால்சுழற்றிப் பாய்ந்து செல்லும் அப்புரவியைத் தொடர்ந்து பீமனும் நகுலனும் சகதேவனும் தருமனும் புரவிகளில் விரைந்தனர். காடுகள் குளம்போசையை எதிரொலித்தன. பறவைகள் அஞ்சி எழுந்து வான் கலைத்தன.

தொலைவில் புரவிகளின் குளம்படியோசை கேட்கத்தொடங்கியதும் அர்ஜுனன் அம்புமுனை சூழ்கை அமைக்கும்படி மூன்றுவிரல் செய்கை காட்டிவிட்டு முன்னால் சென்றான். முன்னால் சென்றவர்களால் சாலையில் எழுந்த புழுதி அப்போதும் அடங்கியிருக்கவில்லை. பீமனால் தாக்கப்பட்ட படைவீரர்கள் நால்வர் சாலையிலேயே

தலையுடைந்து கைகால்கள் வலித்துக்கொள்ள அடிபட்ட நாகமென அசைந்தபடி கிடந்தனர். இருவர் இடையுடைந்தவர்கள்போல செயலற்ற கால்களை இழுத்து தவழ்ந்து ஓரமாக சென்றுகொண்டிருந்தனர். இருவர் முன்னரே குருதி கக்கி இறந்துவிட்டிருந்தனர்.

சாலையில் கிடந்தவர்கள் மேல் குதிரைகள் மிதித்துச்செல்ல அவர்கள் அலறித் துடித்தபடி எழுந்து அமைந்தனர். குதிரைகள் மேலும் மேலும் மிதித்துச் செல்ல அவர்களின் உடல்கள் சிதைந்து அசைவழிந்தன. செல்லும் விசையிலேயே நகுலன் அம்புகளைச் செலுத்தி எழுந்து விலகியவர்களை கொன்றான்.

தேர்ச்சகடங்களின் ஓசை கேட்டது. "தேரிலேறிவிட்டனர்!" என சகதேவன் கூவினான். பீமன் "ஆம், ஏழுபுரவிகளின் தேர் என்றால் விரைவு மிகுந்திருக்கும்" என்றான். அவர்கள் காட்டின் நடுவே செந்நிற நீர் ஓடிய ஆறெனக் கிடந்த சாலையை வந்தடைந்தனர். புழுதிப்படிவில் குளம்புத்தடங்கள் சீராக நிரைகொண்டு பறக்கும் சிறு குருவித்தொகை தென்திசைநோக்கிச் செல்லும் நீட்சியென பதிந்திருந்தன. நடுவே தேர்ச்சகடத் தடம் இரட்டைக்கோடுகளென தெரிந்தது. நகுலன் நோக்கியதுமே "அது யவனத்தேர், விரைவுமிக்கது. அதிர்வுவிற்கள் மிகுந்ததென்பதனால் வேர்களிலும் கற்களிலும் ஏறிச்செல்ல உகந்தது" என்றான்.

"விரைக! அதைப் பிடித்தாகவேண்டும்" என்றான் பீமன். நகுலன் "இப்புரவிகள் எளிதில் களைப்பவை. எடைமிக்க படைப்புரவிகள் இவை" என்றான். "அவர்களை விட்டுவிடமுடியாது. இன்சுனையை நாய் நக்குமென்றால் நாம் இருந்து பயனில்லை" என்றான் பீமன். அர்ஜுனன் திரும்பிநோக்காமல் சாலையிலேயே விரைந்தான். சாலையோரம் விழுந்துகிடந்த

ஓர் உடலைச்சுற்றி குரங்குகள் கூச்சலிடுவதை தொலைவிலேயே அர்ஜுனன் கண்டான். அருகணைந்ததும்தான் அது ஆடைகலைந்து புழுதியில் புரண்டுகிடந்த முதியவள் என்பதை உணர்ந்தான்.

“தாத்ரேயி” என நகுலன் கூவினான். அர்ஜுனன் பாய்ந்திறங்கி அவளை அள்ளித்தூக்கி தலையை உலுக்கி “அன்னையே, சொல்க! என்ன நிகழ்ந்தது? யார் அவர்கள்?” என்றான். அவள் தலையில் குருதி வழிந்தாலும் அடிபட்டிருக்கவில்லை. “என்னை புரவியிலிருந்து தூக்கி வீசினர்” என்றாள். “யார்?” என்றான் அர்ஜுனன். “அவர் சிந்துநாட்டரசர் ஜயத்ரதர்!” என்றாள் தாத்ரேயி. “சொல்க... என்ன நடந்தது?” என்றான் பீமன்.

“நாங்கள் நீராடிக்கொண்டிருந்தோம். சாலையில் புரவிகளில் ஒரு அரசப்படை செல்வதைக் கண்டோம். அதன் முதற்புரவியில் இருந்த அரசன் தேவியை நோக்கியபடியே சென்றான். அவன் நோக்கு கண்டு அரசி உளம் கலங்கி ‘சென்றுவிடுவோம், அன்னையே’ என்று சொல்லி துணிகளை சுருட்டிக்கொண்டு கிளம்பினார். நாங்கள் சதுப்பைக் கடக்கும்போது ஒரு முதியவன் எங்களை நோக்கி வந்தான். தன்னை சிந்துநாட்டரசர் ஜயத்ரதரின் அமைச்சனாகிய கோடிகாஸ்யன் என்று அறிமுகம் செய்துகொண்டான். சிந்துநாட்டரசர் சால்வநாட்டு இளவரசியை மணம்புரிவதற்காக சென்றுகொண்டிருப்பதாகவும் தேவியைக் கண்டு காமம்கொண்டிருப்பதாகவும் சொன்னான்.”

தருமன் தலையசைத்து “அப்படியென்றால் அவன் பெரிய படையுடன்தான் வந்திருப்பான்... மிக அருகே நாட்டு எல்லையில் அவன் படை இருக்கிறது... இன்னும் சற்றுநேரத்தில் அங்கே சென்றடைந்துவிடுவான்” என்றார். “ஆம்,

படைகளை மையச்சாலையில் வரச்சொல்லிவிட்டு காட்டுவழியில் குறுக்காக சென்றபோதுதான் எங்களை பார்த்திருக்கிறார் சிந்துவின் அரசர். கோடிகாஸ்யன் ஜயத்ரதரின் புகழைச்சொல்லி அவருடன் கிளம்புவதே நல்லது என்றான். அரசிக்கு அரண்மனையும் பெருஞ்செல்வமும் முடிசூடும் குடிநிலையும் மைந்தருக்கு தந்தைபெயரும் அளிப்பதாகச் சொன்னான்.”

“அரசி சினந்து அவனிடம் ‘இழிமகனே, என்னை எவரென்று எண்ணினாய்? நான் மணமானவள். இங்கு ஊழ்கத்திலமர்ந்திருக்கும் முனிவர்களின் துணைவி’ என்றார். அவன் மேலும் சொல்ல முயன்றபோது ‘சீ! விலகு… இக்கணமே உன்னை கொல்வேன்’ என்று கடுஞ்சொல் சொல்லி விலக்கிவிட்டு ஓடினார்” என்றாள் முதுமகள். சகதேவன் அருகே இருந்த சுனையிலிருந்து கொண்டுவந்த நீரை அருந்தியபோது அவளுக்கு குரலெழுந்தது.

“அதற்குள் ஜயத்ரதரும் இரு வீரர்களும் புரவிகளில் வந்து அவரை அணுகினர். ஜயத்ரதர் ‘அழகி, உன்னை எங்கோ பார்த்திருக்கிறேன். நீ எளிய முனிமகள் அல்ல, அரசிபோலிருக்கிறாய்’ என்றார். அரசி ‘ஆம், நான் பாண்டவர்களின் துணைவி. துருபதன் மகள். ஐந்து மைந்தருக்கு அன்னை. விலகிச்செல்! நிகரற்ற வீரர்களின் பகையை ஈட்டாதே’ என்றார். ஜயத்ரதர் நகைத்தபடி ‘நன்று, நான் முனிமகளைக் கவர்ந்தேன் என்னும் பழி என்னைச் சேராது. தீச்சொல்லை அஞ்சவேண்டியதுமில்லை. பெண்கோள் பெற்றி அரசனுக்கு அணியே’ என்றபடி அவரை பற்றவந்தார்.”

“அரசியிடம் படைக்கலம் இருக்கவில்லையா?” என்றான் அர்ஜுனன். “இல்லை, இங்கே அவர் படைக்கலமேதும்

வைத்திருக்கும் வழக்கமில்லை” என்றாள் முதுமகள். “கையை பற்றியதும் அரசி உரக்கக் கூவியபடி திமிறினார். ‘உன் சங்கை அறுப்பேன். என் குலத்தின் இறுதிக்குருதி இருக்கும்வரை உன் குலம் வாழ விடமாட்டேன்’ என்று கூவினார். அரசர் நகைத்துக்கொண்டே ‘ஐவருக்கும் துணைவியானவள் கற்பின் பெயரால் சொல்லெடுக்கலாகுமா, தேவி?’ என்றார்.”

“இன்னொருவன் என்னைப்பற்றி தூக்கி அவன் குதிரைமேல் அமரச்செய்து ‘ஓசையின்றி குதிரையில் ஏறி அமர்க! ஒரு கணம் பிந்தினாலும் இக்கிழவியின் தலை தனித்துக்கிடக்கும்’ என்றான். தேவி என்னை நோக்கி திகைத்தபின் தணிந்து ‘நன்று, அவரை ஒன்றும் செய்யவேண்டாம்’ என்றார். அவர் புரவியில் ஏறப்போனபோது ‘அரசி, வேண்டாம். ஓசையிடுங்கள். எவரேனும் கேட்கக்கூடும்... என்னை எண்ணாதீர்கள்’ என நான் கூவினேன். ‘இல்லை, என் கொழுநர் தேடிவருவார்கள்...’ என்றபடி அவரே ஏறி புரவிமேல் அமர்ந்தார்.”

“எங்களை இங்கே கொண்டுவந்ததும் அவரை பன்னிருவர் பாய்ந்து பற்றிக்கொண்டு கயிறுகளால் சேர்த்துக்கட்டி தூக்கி தேரில் ஏற்றினர். நான் ஓலமிட என்னை குதிரையிலிருந்து தூக்கி வீசினர்” என்றாள். பீமன் “நாம் இங்கு கதைகேட்டு நின்றிருக்கப்போகிறோமா?” என்று கூவினான். “மூத்தவரே, இங்குள்ள மிக உயர்ந்த பாறையுச்சிக்கு என்னை இட்டுச்செல்க!” என்றான் அர்ஜுனன். “பாறையுச்சிக்கா?” என்ற பீமன் “நன்று... என்னுடன் வருக!” என்றான். “நகுலனும் சகதேவனும் சாலையிலேயே தொடர்ந்து ஜயத்ரதனின் படைவரை வந்துசேரட்டும். மூத்தவர் இம்முதியவளைக் கொண்டுசென்று அவள் குடில்சேர்த்து மருத்துவர்களிடம் ஒப்படைக்கட்டும்” என்றான் அர்ஜுனன். “குரங்குகள்

முடிந்தவரை விரைந்துசென்று அவர்களின் செல்கையை தடைசெய்யட்டும்…” திகைத்து ஏதோ சொல்லப்போன தருமனை திரும்பிப்பார்க்காமல் அர்ஜுனன் பீமனுடன் புரவியில் விரைந்தான்.

அவர்கள் பக்கவாட்டில் பாய்ந்து புதர்காட்டுக்குள் ஊடுருவிச்சென்றனர். புதர்கள் அவர்களை முழுமையாக மூடிக்கொண்டன. பீமன் சவுக்கால் புரவியை அடித்து அடித்து முன்செலுத்த அர்ஜுனன் புரவி அவன் எண்ணத்தை தான் அடைந்து உடன்பாய்ந்தது. அவர்களைத் தொடர்ந்து நான்கு குரங்குகள் தலைக்குமேல் பாய்ந்துவந்தன. “இங்குள்ளது பெரும்பாறை ஒன்று. அதன் உச்சியிலுள்ள தேவதாரு மிகப்பெரிது. முழுக்காட்டையும் பார்க்கமுடியும்” என்று பீமன் திரும்பி கைசுட்டி சொன்னான்.

பாறையருகே குதிரையை நிறுத்திவிட்டு அர்ஜுனன் இறங்கி பாறைச்சரிவில் ஓடி ஏறினான். பீமனும் குரங்குகளும் நான்குகால்களில் அவனை முந்திச்சென்றார்கள். செங்குத்தாக உருண்டேறிய பாறைப்பரப்பில் தாவிச்சென்ற குரங்குகள் பீமனை கைபற்றி மேலே தூக்க அவன் ஏறியதுமே அர்ஜுனனை ஒற்றைக்கையில் தூக்கி மேலே எடுத்தான். மேலும் மேலுமென பாறைச்சுவர்கள் எழுந்து வந்தன. குரங்குகளுக்கு அவற்றின் விரிசலும் பொருக்குமே பற்றிக்கொள்ள போதுமானதாக இருந்தது. உச்சியில் ஒரு பசுங்கோபுரமென எழுந்து நின்றிருந்தது தேவதாரு.

குரங்குகள் அதில் பற்றி ஏறி அர்ஜுனனை மேலே கொண்டுசென்றன. உச்சிக்கிளையில் அவன் காலிட்டு அமர்ந்தான். “தெரிகிறதா, இளையோனே?” என்றான் பீமன். “ஆம்” என்றபடி அர்ஜுனன் வில்லை எடுத்தான். “நெடுந்தொலைவு

சென்றிருப்பார்கள். அம்புகள் அத்தனை தொலைவுக்கு செல்லமுடியுமா என்ன?” என்றான் பீமன். அர்ஜுனன் நீண்ட அம்பு ஒன்றை எடுத்தான். கண்களை மூடிக்கொண்டு உளம்கூர்ந்து அம்பை பொருத்தினான். வில் இழுபட்டு நீண்டு பாம்புச்சுருள்போலவே ஆகியது. வீணைநரம்பின் விம்மலோசை கேட்டது. அம்பு சென்றுவிட்டிருப்பதை பீமன் உணர்ந்தான்.

“என்ன ஆயிற்று?” என்றான் பீமன். “ஒரு புரவி சரிந்துவிட்டது” என்றான் அர்ஜுனன். மீண்டுமொரு அம்பு சென்றது. “இன்னொரு புரவி” என்றான். மூன்றாவது அம்பில் “அச்சு” என்றபின் கீழே இறங்கத்தொடங்கிய அவனிடம் “அவனை கொன்றிருக்கலாமே” என்றான் பீமன். “ஒளிந்திருந்து கொல்ல நான் ராகவராமன் அல்ல” என்றபடி மரத்திலிருந்தே புரவிமேல் பாய்ந்தான். “அவர்கள் புரவிகளை மாற்றி அச்சு பொருத்தி மீண்டும் கிளம்புவதற்குள் நாம் அவர்களை பிடித்துவிடலாம்” என்றபடி புதர்கள்மேல் தாவிச்சென்றான். “ஆம், அவனை என் கைகளால் அறையவேண்டும்” என்றபடி பீமன் உடன் பாய்ந்தான்.

தொலைவிலேயே அவர்களின் குளம்படிகள் அணுகுவதை ஜயத்ரதன் கேட்டுவிட்டான் என்பதை அங்கே எழுந்த பரபரப்பு காட்டியது. அப்போதுதான் அவர்கள் புரவிகளை கட்டிமுடித்திருந்தனர். ஜயத்ரதன் தேரில் பாய்ந்தேறியபடி கைகளை நீட்டி ஆணையிட அவன் படைவீரர்கள் விற்களில் நாணேற்றியபடி புரவிகளில் திரும்பி அவர்களை நோக்கி வந்தனர். அர்ஜுனனின் நாண் மிகமெல்ல விம்மிக்கொண்டிருப்பதைத்தான் பீமன் கேட்டான். மெல்லிய திடுக்கிடல்களுடன் ஒவ்வொருவராக புரவியிலிருந்து விழுந்தார்கள். அவர்கள் அனைவருக்குமே கழுத்தின் நரம்பில்

அம்பு பாய்ந்திருந்தது. அனைவருமே இடம்சரிந்து விழுந்து புழுதியில் துடித்து ஓய்ந்தனர்.

ஜயத்ரதனின் தேர் முழுவிசையை அடைந்துவிட்டிருந்தது. அதன் சகடங்களுக்குப் பின்னால் தெறிக்கும் கூழாங்கற்களை காணமுடிந்தது. தேர்த்தட்டில் இருக்கைக்குக் கீழே கைகள் கட்டப்பட்டு திரௌபதி படுத்திருப்பது மரவுரியின் இளஞ்சிவப்பு வண்ணம் மட்டுமாகத் தெரிந்தது. அர்ஜுனனின் அம்புகள்பட்டு ஒவ்வொரு வீரனாக உதிர திகைத்துப்போன குதிரைகள் கனைத்தபடி சுற்றிவந்தன. அருகணைந்த அர்ஜுனன் தன் களைத்த குதிரையிலிருந்து இன்னொன்றுக்குத் தாவ பீமனும் அவ்வாறே செய்தான். தன்னைச் சூழ்ந்துவந்த அத்தனைபேரும் அம்புபட்டு வீழ்ந்ததை ஜயத்ரதன் கண்டான்.

தனித்துவிடப்பட்டதை உணர்ந்ததும் ஜயத்ரதன் புரவிகளை சவுக்கால் வெறியுடன் அறைந்து ஓடவிட்டான். ஆனால் அது ஒருவர் செல்லவேண்டிய விரைவுத்தேர். இருவரின் எடையால் புரவிகள் மூச்சுத்திணறத்தொடங்கின. ஜயத்ரதன் திரௌபதியை காலால் உருட்டி கீழே போட்டான். “தேவி!” என பீமன் கூவினான். “புரவிகள் மிதித்துவிடலாகாது, இளையோனே” என்று கூச்சலிட்டபடி அணுகி அதே விரைவில் இடைவளைத்து குனிந்து திரௌபதியை தூக்கி மேலேற்றிக்கொண்டான். அவள் கைகளைக் கட்டியிருந்த கட்டுகளை அம்புமுனையால் அறுத்தான். அவள் இரு கைகளாலும் அவன் தோளை வளைத்து கட்டிக்கொண்டாள்.

“ஒன்றுமில்லை... ஒன்றுமில்லை, தேவி” என்றான் பீமன். அர்ஜுனன் புரவியைத் திருப்பி அவர்களருகே வந்தான். “இளையோனே, அவனை விடவேண்டாம். அவனை நாம் கொன்றாகவேண்டும்” என்று பீமன் கூவினான். “இருவர் சேர்ந்து

ஒருவனைக் கொல்வதா? அவன் தன் படையை சென்றடையட்டும். படைநடுவே அவனைக் கொல்கிறேன்” என்றான் அர்ஜுனன் மீசையை நீவியபடி. அவன் விழிகளில் மட்டும் ஒருகணம் மின்னிச்சென்ற குறுநகையை கண்ட பீமன் “ஆம், நாம் தொடர்ந்துசெல்வோம்” என்றான்.

திரௌபதி பீமனைப் பற்றியபடி “வேண்டாம்... போதும். அங்கே அவன் படைகள் நின்றிருக்கின்றன” என்றாள். “ஒன்றுமில்லை, தேவி... பொறுத்தருள்க! இது எங்கள் பிழை. பொறுத்தருள்க!” என்று பீமன் அவள் தோளை அணைத்தான். பின்பக்கம் நகுலனும் சகதேவனும் புரவிகளில் வந்தனர். “தேவியை குடில்சேருங்கள். மூத்தவருக்கு துணைநின்றிருங்கள்” என்றான் அர்ஜுனன். “நாங்கள் இரையுடன் வருகிறோம் என்று அரசருக்கு அறிவியுங்கள்.” பீமன் “அவ்விழிமக்களின் குருதியிலாடி வருவோம்!” என்றான். திரௌபதியை அவன் இறக்கிவிட அவள் நிற்கமுடியாமல் கால்தளர்ந்தாள். சகதேவன் ஓடிவந்து அவளைப் பிடிக்க அவன் தோளைப்பற்றியபடி அவள் விம்மி அழுதாள். “ஒன்றுமில்லை, அன்னையே. ஒன்றுமில்லை... வருக!” என அவன் அவளை தோளணைத்தான். அவள் தள்ளாடியபடி சென்று புரவியில் ஏறிக்கொண்டாள்.

“செல்க!” என அர்ஜுனன் திரும்பிப்பாராமலேயே சொல்லிவிட்டு புரவியில் முன்னால் சென்றான். “தேவி, பொறுத்தருள்க... எங்கள் அனைவர்மேலும் அருள்கொள்க!” என்றபின் பீமன் திரும்பி உடன்சென்றான். அவர்கள் சாலையில் புழுதிமேல் ஏறியவர்கள்போல விரைந்தனர். நகுலன் “நாம் மெல்லவே செல்லமுடியும், தேவி” என்றான். திரௌபதி ஒன்றும் சொல்லாமல் கண்ணீர் வழிய தலைகுனிந்தவளாக புரவிமேலேயே அமர்ந்திருந்தாள்.

சாலை சுழித்து இறங்கிச்சென்ற இடத்தில் சற்று விரிந்த களமொன்று தெரிந்தது. அங்கே தேர்களும் புரவிகளுமாக சிறிய படை ஒன்று நின்றிருப்பதை அர்ஜுனன் கண்டான். தேரில் சென்ற ஜயத்ரதன் அதை நோக்கி கைவீசினான். அவர்களின் தலைவன் அதைக் கண்டதுமே இருபது புரவிகள் கிளம்பி முழுவிரைவுடன் அலை அணைவதுபோல தேரை நோக்கி வந்தன. புரவிப்படையின் தலைவன் தொடர்ந்து வந்த அர்ஜுனனையும் பீமனையும் கண்டுவிட்டான். அவன் கூவியதும்தான் ஜயத்ரதன் திரும்பிப்பார்த்தான். தாக்கும்படி அவன் ஆணையிட அந்தப் படை ஒரே கணத்தில் அசைவுகொண்டது. அணையுடைத்த நீர் என பெருகி அவர்களை நோக்கி வந்தது.

“நன்று… ஒரு சிறந்த போர்” என்றான் அர்ஜுனன். “நான் கோருவதெல்லாம் ஒழியாத அம்பறாத்தூணி மட்டுமே.” பீமன் “அதை அவர்களே அனுப்புவார்கள். நான் கீழிருந்து சேர்த்து அளிக்கிறேன்” என்றான். ஜயத்ரதன் திரும்புவதற்குள்ளாகவே அவனை அணுகிய அவன் படைவீரர் இருவர் அம்புபட்டு விழுந்தனர். அவர்களின் அம்புகள் அணுகும்தொலைவுக்கு வெளியே இருந்தனர் பாண்டவர் இருவரும். ஆனால் அர்ஜுனனின் அம்புகள் அவர்களை தொட்டுத்தொட்டு சாய்த்துக்கொண்டிருந்தன. ஒருவருக்கு ஓர் அம்புக்குமேல் அவன் விடவில்லை. எந்த அம்பும் கழுத்திலன்றி வேறெங்கும் பதியவுமில்லை. சிந்துநாட்டுப்படையின் முன்னணி வீரர்கள் அம்புபட்டு சரிய அவர்களின் புரவிகளை அடித்து விலக்கியபடி பிறர் முன்னால் வந்தனர். அர்ஜுனன் அதே விரைவில் மேலும் பின்னால் சென்றபடி அவர்களை வீழ்த்திக்கொண்டிருந்தான்.

அவர்களின் அம்புகள் பறந்துவந்து வயலில் இறங்கும் கிளிக்கூட்டங்கள்போல அவர்கள் முன்னால் வளைந்து நிலமிறங்கின. பீமன் குதித்து தரையிலிருந்து அவ்வம்புகளை அள்ளிச்சேர்த்து ஆவநாழி நிறைத்து அர்ஜுனனை நோக்கி வீசினான். அவன் அதைப்பற்றி தோளிலிட்டபடி ஒழிந்த தூளியை திரும்ப வீசினான். போர் எழுந்தபின் படை சித்தமற்று புலன்கள் மட்டுமே கொண்டதாக ஆகிவிடுகிறது.
அவர்கள் பொருளில்லாமல் இறந்துகொண்டிருப்பதை உணர்ந்தாலும் முன்னால் வருவதை தவிர்க்கமுடியவில்லை. முன்னால் வந்தவர்கள் அறியாமல் சற்றுதயங்கியபோது பின்னால் வந்தவர்களின் விசை அவர்களை உந்தியது.

வெறியுடன் "விரைக... கொல்க... கொல்க அவர்களை... இதோ அருகில்தான்" என ஜயத்ரதன் கூவிக்கொண்டு தேரில் பாய்ந்து வந்தான். அவன் தேர்முகடையும் கொடியையும் அர்ஜுனன் உடைத்தான். அவன் வில்லை தெறிக்கச்செய்தான். திகைத்து வெறும்கைகளுடன் நின்ற அவன் காதுகளில் இருந்த குண்டலங்கள் இரு அம்புகளால் தெறித்தன. கழுத்திலணிந்த ஆரம் தெறித்தது. அவன் பாய்ந்திறங்கி பின்னால் வந்த வீரனின் புரவியில் ஏறிக்கொண்டான். அத்தருணம் பீமன் சிம்மக்குரலெழுப்பியபடி சைந்தவர்களின் படைக்குள் புகுந்தான். முதல் அடியில் விழுந்த ஒருவனின் கதையை கையிலெடுத்து சுழற்றியபடி படையைக் கலக்கி உள்ளே சென்றான்.

சில கணங்கள் அர்ஜுனனே திகைத்துவிட்டான். குருதியும் வெண்மூளைநிணமும் சலமுமாக தலைகள் உடைந்து தெறித்து மழையென அவனை மூடின. ஜயத்ரதன் இரு கைகளையும்விட்டு அஞ்சிய குழவிபோல குதிரைமேல் அமர்ந்திருந்தான். பின்னர் அடிபட்ட விலங்கென கம்மிய

ஒலியில் அலறியபடி புரவியைத் திருப்பி படைகளிலிருந்து வெளியே பாய்ந்தான். பீமனைத் தொடர்ந்து மரக்கிளைகளிலிருந்து பாய்ந்து சைந்தவர் மேல் பரவிய குரங்குகள் அவர்களை கடித்து குதறின. அவர்களின் அம்புகளும் வாளும் கதைகளும் பட்டு அவை உடலுடைந்து கீழே விழுந்து துடித்து கைகள் சுருள்பிடித்து அதிர கால்கள் இழுத்து இழுத்து ஓய இளித்த பற்களுடன் அமைந்தன.

அக்குருதிநடனம் கண்டு அர்ஜுனன் உளம் பதைத்தான். கண்ணை மறைத்து வழிந்த குருதியை வழித்தபடி புரவிவிட்டு இறங்கி அடிபட்டுச் சிதைந்து துடித்த உடல்கள்மேல் மிதித்தோடி அர்ஜுனன் “மூத்தவரே, நிறுத்துக! நிறுத்துக இதை... போதும். இவர்கள் மேல் என்ன பகை நமக்கு?” என்று கூவினான். ஒரு கணம் நின்று அவனை நோக்கிய பீமன் மீண்டும் வெறிகொண்டு நெஞ்சை கையால் அறைந்து பெருங்குரங்கென முழக்கமிட்டபடி கதையைச் சுழற்றி அறைந்து உடல்களை உடைத்து தெறிக்கச்செய்தான். முட்டைகளென மூளை சிதற மண்டைகள் சிதைந்தன. தேன்கூடுகள் போல கிழிந்து சிதறிய உடல்களில் புழுக்கள்போல நரம்புகள் நெளிந்தன. “மூத்தவரே, மூத்தவரே” என அர்ஜுனன் கூச்சலிட்டு சென்று அவனைப் பிடித்தான். “விடுங்கள்... எளிய வீரர்கள் இவர்கள்...”

பீமன் “என் குலமகள்... என் குலமகள். நம் கைப்பிடித்தமைக்காக இன்னும் எத்தனை சிறுமைகளை சந்திப்பாள்? ஒட்டுமொத்த ஷத்ரியர்களை அழிக்கிறேன். மூடா, ஒட்டுமொத்த ஆண்குலத்தை அழிக்கிறேன். அழிக பாரதவர்ஷம், அழிக இப்புவி!” என்று வெறியெழுந்த கண்களில் வழிந்த கண்ணீருடன் இளித்த வாய்கொண்ட முகத்துடன் கூவினான். அவன்

உடலெங்கும் குருதி வழிந்தது. நிணம் வழுக்கி உதிர்ந்தது. “இழிமக்கள்... கீழுயிர்கள்... செத்துக்குவியட்டும் இவர்கள். ஆண்குறிகொண்டிருப்பதனாலேயே சாகத்தக்கவர்கள்... மீசைகொண்டிருப்பதனாலேயே கீழுலகில் நெளியவேண்டியவர்கள்” எனக் கூவியபடி விலகிச்சென்றுகொண்டிருந்த சைந்தவர்களை நோக்கி ஓடி அவர்களுக்குள் புகுந்து மீண்டும் தலைகளை அறைந்து சிதறடித்தான்.

வெறியில் அவன் பல உடல்கொண்டவன் போலிருந்தான். மானுடம் மீது பெருவஞ்சம் கொண்ட கீழுலகத் தேவன் ஒருவன் எழுந்துவந்து குருதியாட்டு கொள்வதுபோல தெரிந்தான். அடிபட்டு கீழே விழுந்த ஒருவனை மிதித்து மிதித்து கூழாக்கினான். “மூத்தவரே, நம் இரை அவன். அவன் தப்பிவிடக்கூடாது” என்றபடி அர்ஜுனன் படைகளைக் கடந்து ஓட பீமன் மீண்டும் சிலமுறை கதைசுழற்றி சிலரை அடித்துச் சிதைத்துவிட்டு சென்ற வழியெங்கும் குருதிநிணச்சேறு சிதற ஓடிவந்து புரவியில் ஏறிக்கொண்டு அர்ஜுனனைத் தொடர்ந்தான்.

# மாமலர் - 8

### 8. குருதிக் குமிழிகள்

ஊர்பவன் அடையும் உணர்வெழுச்சிகளை புரவிகளும் அவன் உடல் வழியாகவே அடைந்துவிடுகின்றன. ஜயத்ரதனின் குதிரை அஞ்சி உடலெங்கும் மயிர்க்கோள் எழுந்து, அனல்பட்டதுபோல உரக்கக் கனைத்தபடி புதர்கள் மேல் தாவி காட்டுக்குள் புகுந்து மரங்கள் நடுவே வளைந்து திரும்பி

மலைச்சரிவில் பாய்ந்தோடியது. பீமனும் அர்ஜுனனும் அதைத் தொடர்ந்து காட்டுக்குள் பாய்ந்தபோது சென்றவழியில் இலைகள் அசைவழிய அவன் முழுமையாக மறைந்துவிட்டிருந்தான்.

ஆனால் பீமனின் புரவியும் ஊர்ந்தவன் உணர்வை தான் ஏற்றுகொண்டுவிட்டிருந்தது. முன்னால் ஓடிய புரவியின் மணத்தைப் பெற்றுக்கொண்டு அதுவும் தொடர்ந்து வந்தது. ஜயத்ரதனின் மேலே எழுந்த கிளைகளில் குரங்குகள் கைவீசி தாவித்தாவி வந்தன. இரு பெருங்குரங்குகள் உச்சிக்கிளைகளுக்குச் சென்று ஜயத்ரதன் செல்வதை நோக்கிவிட்டு திசைகூவிச் சொல்ல பீமன் புரவியை அரட்டிச் செலுத்தியபடி அவனைத் தொடர்ந்து வந்தான்.

தன்னைத் தொடர்ந்துவரும் குளம்பொலிகளை ஜயத்ரதன் கேட்டுக்கொண்டே இருந்தான். அவை வலுக்கின்றன என எண்ணியபோது உடல் கடுங்குளிர் கொண்டதுபோல சிலிர்த்தது. மேலும் மேலுமென புரவியை அடித்தும் குதிமுள்ளால் குத்தியும் கூச்சலிட்டும் துரத்தினான். அது தாவித்தாவி பாறைகளையும் முட்குவைகளையும் சிற்றோடைகளையும் சேற்றுக்குழிகளையும் கடந்தது. புரவியை மிகையாகத் தூண்டுவதனாலேயே அதை விரைந்து களைப்படையச் செய்கிறோம் என்பதை அவன் அவ்வச்சத்தில் உணரவில்லை.

அதன் வாயிலூறிய நுரை காற்றில் தெறித்து அவன்மேல் துளிசிதறியது. அதன் வியர்வையால் அவன் தொடைகள் வழுக்கின. அதன் உடலுக்குள் ஓடிய குருதியின் குமிழிகளை அவனால் உணரமுடிந்தது. “மேலும்! மேலும்!” என அவன் அதை உதைத்தான். பின்னால் புரவிக்குளம்படிகள் வந்துகொண்டே இருந்தன. உச்சிக்கிளைமேலிருந்து குரங்குகள்

அவனை காட்டிக்கொடுக்கின்றன என அவன் உணர்ந்தான். இன்னும் சற்றுத்தொலைவுதான். அவனால் திரிகர்த்தர்களின் எல்லைக்குள் சென்றுவிடமுடியும். திரிகர்த்தனிடம் அடைக்கலம் என்று கூவியபடி முதல் படைக்காவலரணைக் கடந்துவிட்டால் போதும். அவர்கள் ஊருக்குள் நுழைய முடியாது. முதல் தெரு... அவனைக் காக்கப்போகும் முதல் ஊர்.

எண்ணியிராமல் எரி அணைவதுபோல புரவி விரைவழிந்தது. "செல்க! செல்க... கெடுமதியே செல்க!" என அவன் அதை சவுக்கால் அறைய அது தயங்கி நின்றுவிட்டது. வாயிலிருந்து நுரையுடன் குருதியும் வழியலாயிற்று. கால்களைப் பரப்பி வைத்து தலையை தரைதொடும்படி தாழ்த்தி அது கக்குவதுபோலவும் இருமுவதுபோலவும் ஒலியெழுப்பியது. உடல் அதிர்ந்துகொண்டே இருந்தது. அவன் அதன் கழுத்தை கைகளால் அறைந்தான். "செல்... செல்!" என்று கூவினான்.

புரவி வேல் பட்டதுபோல விதிர்த்தது. அவன் உய்த்துணர்ந்து கீழே குதிக்கவும் மறுபக்கம் சரிந்து பள்ளை நிலமறைய விழுந்து குளம்புகளை காற்றிலுதறி கால்களை உதைத்துக்கொள்ளத் தொடங்கியது. வால் புழுதியில் கிடந்து குழைந்து அலைந்தது. அதன் கண்கள் வெறித்து உருண்டிருந்தன. வாழைப்பூமடல் போல செந்நீலநிற நாக்கு நீண்டு வெளிவந்து தழைந்து கிடந்தது. அவன் சினத்துடன் அதை ஓங்கி உதைத்தான். பின்னர் ஓடி புதர்களுக்குள் பாய்ந்து மறைந்தான்.

அணுகிவரும் குளம்படிகளை காலடியில் நிலமதிர்வதிலிருந்தே உணர்ந்தான். ஓடுவதைவிட முழுமையாக எங்கேனும் பதுங்கிக்கொள்வதே உகந்தது என எண்ணி விழிகளால் தேடிக்கொண்டே சென்றான். புதர்களுக்குள் ஒளிவதைப்பற்றி

எண்ணியதுமே குரங்குகளும் வரும் என்பது நினைவுக்கு வந்தது. அவை நாய்களைவிட மோப்பம் கொண்டவை. ஒரு கணம் அங்குமிங்கும் நோக்கியபின் அருகே ஓடிய கோமதியை நோக்கி சென்றான். அங்கே ஆற்றுநீர் வளைந்து அரைவட்ட அலைகள் கரைச்சேற்றில் படிய சுனையென்றாகியிருந்தது. அதன் மேல் தாமரைகளும் நீலங்களும் மெல்ல அசைந்துகொண்டிருந்தன.

சதுப்பின் மேல் விழுந்துகிடந்த மட்கிய மரங்களிலும் மத்தகம் காட்டிய பாறைகளிலும் மட்டும் கால்வைத்து ஆற்றை நோக்கி சென்றான். மரம் ஒன்றின் மேல் தொற்றி ஏறி கிளைகள் வழியாகவே மேலும் மரங்களுக்குச் சென்று நீர்மேல் கவிழ்ந்திருந்த மரத்தின்மேல் ஏறி கிளையிலிருந்து நீருக்குள் குதித்தான். நீந்தி ஆழத்திற்குச் சென்று அங்கே எழுந்து மேலே வந்திருந்த தாமரை ஒன்றை அடிவேருடன் பிழுதெடுத்தான். அதன் மலர்க்குவைக்கு நடுவே கடித்து துப்பி தண்டிலிருந்து காற்றுவழியை உருவாக்கினான். அந்த மலரை மேலே நின்றிருந்த இலைகளுடனும் மலர்களுடனும் பின்னி மிதக்கவிட்டபடி கொடியின் மறுமுனையை வாயில் கவ்விக்கொண்டு நீருக்குள் மூழ்கினான்.

நீருக்குள் செறிந்து நின்றிருந்த தாமரைக்கொடிகளில் தன் உடலை பிணைத்துக்கொண்டபோது ஆழம் மேலே உந்தியதை எதிர்கொண்டு உடல்அலைவை நிலைகொள்ளச்செய்ய முடிந்தது. மேலே மலர்கள் நடுவே அந்தத் தாமரை மலர் எழுந்து நின்றிருந்தது. அதன் மையத்துளை வழியாக வந்த காற்றை வாயால் உறிஞ்சி வாய் வழியாகவே வெளிவிட்டுக்கொண்டு நீருக்குள் மூழ்கிக் கிடந்தான். ஆழம் அலையடங்க அவன் மேல் நீர்ப்பாசிகள் வந்து மூடிப்படிந்தன.

நீர்க்குமிழிகள் சில எழுந்து உடலை மீன்குஞ்சுகள் போல வருடி மேலே சென்றன.

மீன்கள் அச்சம் நீங்கி விழித்த கண்களுடன் அவனை நோக்கி வந்து சிறகுலைய அசைவற்று நின்றபின் வால்சுழற்றி திரும்பிச்சென்றன. தலைக்குமேல் ஒளியாக அலைசுழன்று அசைந்துகொண்டிருந்தது. ஓரிரு குமிழிகள் மட்டும் மேலெழுந்துசென்று வெடித்தன. நெஞ்சத்துடிப்பு விலக அவன் உடலுக்குள் குருதி குளிர்ந்து சீரமையலாயிற்று. எண்ணங்கள் கூர்கொண்டபோது அவன் வெளியே நிலம் அதிர புரவிகள் வந்து நிற்பதை கேட்டான். சேற்றை மிதித்தபடி அவை சுழன்றன. மேலே கிளைகளிலிருந்து குரங்குகள் குதித்தன.

சில கணங்களுக்குள் காதுகளே புலன்கள் அனைத்தையும் நிறைக்க அவன் அனைத்தையும் காணலானான். இரு வெண்புரவிகளில் வந்த அர்ஜுனனும் பீமனும் விழிகளை ஓட்டியபடி புரவியைச் சுழற்றினர். அர்ஜுனன் இறங்கி தரையில் பதிந்திருந்த அவன் காலடிகளை கூர்ந்து நோக்கினான். விழிகளைத் தூக்கி அவன் ஆற்றைப் பார்த்தபோது ஜயத்ரதன் நெஞ்சதிர்ந்தான். ஒரு குமிழி மூச்சு வெளியேறி மேலெழுந்தது.

ஆனால் பீமன் தொலைவில் எதையோ சுட்டிக்காட்டினான். குரங்குகள் தரையை முகர்ந்து நோக்கி மூக்கு சுளித்து ஏதோ பேசிக்கொண்டன. குழப்பத்துடன் எழுந்து வயிற்றை சொறிந்து வாயை நீட்டின. பின் ஒரு பெரிய குரங்கு அவன் வந்த வழியிலேயே சரிந்த அடிமரங்கள் வழியாக வந்து அவன் ஏறிய மரத்தில் தொற்றி ஏறிக்கொண்டது. கிளைகள் வழியாக வந்து அவன் நீரில் குதித்த கிளை வரைக்கும் வந்தது. அவன் “தெய்வங்களே! மூதாதையரே!” என்று நெஞ்சுக்குள் கூவினான்.

பெருங்குரங்கு கிளைமுனையில் நின்று எக்களிப்பு போல ஓசையிட்டுக் கூவியதும் மற்ற குரங்குகளும் அங்கே வந்தன. “இவ்வழியேதான் சென்றிருக்கிறான்” என்றபடி அர்ஜுனன் அங்கே வந்தான். “ஆனால் சேற்றில் கால்தடங்கள் இல்லை. படகு ஒன்று நீரில் வந்திருக்கக்கூடும். அதை கரையணையச் செய்யாமல் அங்கேயே நிறுத்திவிட்டு கிளைகள் வழியாகச் சென்று அதில் ஏறியிருக்கிறான்” என்றான் பீமன்.

“இதற்குள் அவன் மறுகரை சென்றிருக்கமுடியாது” என்றான் அர்ஜுனன். “ஆம், நீரொழுக்கு கடினமானது” என்றான் பீமன். “அவன் தப்பிச் சென்றிருக்கிறான் என்றால் ஒரே வழிதான். ஒழுக்கினூடாக சென்றிருக்கக்கூடும். மெல்லிய தக்கைப்படகு. அதை இங்கே ஒளித்துவைத்திருக்கிறான். அல்லது குகன் ஒருவன் கொண்டுவந்திருக்கிறான்” என்றான் அர்ஜுனன். “நெடுந்தொலைவு சென்றிருக்க வாய்ப்பில்லை. ஒழுக்கிலேயே விரைந்து சென்றுகொண்டிருக்கிறான். நாம் காணலாகாதென்று கரைமரங்கள் சரிந்த தழைச்செறிவுக்குள்ளாகவே செல்கிறான்.”

“ஆம், கிளம்புவோம்” என்றபடி பீமன் புரவியை தட்டினான். அர்ஜுனன் எஞ்சிய ஐயத்துடன் திரும்பி நோக்கியபடி அவனைத் தொடர்ந்து சென்றான். ஜயத்ரதன் மெல்ல இயல்படைந்து நீருக்குள் கால்களை நீட்டினான். தாமரைத் தண்டுகளுக்குள் இருந்து இரு மீன்கள் வெளிவந்து அவனை நோக்கின. ஒன்று வாலை அறைந்து திரும்பி மேலெழுந்து அவன் கண்களை நோக்கி வந்தது. அவன் இமைகளை மூடிக்கொண்டான். அது அணுகி அவன் கன்னத்தையும் கழுத்தையும் வழுக்கியபடி சென்றது. அவன் விழிதிறந்து நோக்க பிறிதொன்று அவன் கண்களை நோக்கி வந்தது. அவன் கையால் அதை தட்ட உடல் அசைந்தது.

நீருக்கு மேல் குமிழிகள் எழுந்தன. இரு மீன்கள் துள்ளி விழுந்து அலைகிளப்ப குரங்குகள் அனைத்தும் சேர்ந்து ஓசையிடத் தொடங்கின. கிளைகளில் எம்பிக் குதித்து இலைத்தழைப்பை உலுக்கியபடி அவை குதித்துக் கூச்சலிட்டன. பீமன் திரும்பி அவற்றை நோக்கினான். குரங்குகளை கைசுட்டி ஏதோ சொன்னான். பின்னர் இருவரும் அவனிருந்த சுனைச்சுழி நோக்கி புரவிகளில் வந்தனர்.

பீமன் நீர்ச்சுழிகளை நோக்கினான். மீன்கள் துள்ளித்துள்ளி விழுந்தன. “மீன்கள்” என்றான் அர்ஜுனன். “இல்லை, அங்குதான் இருக்கிறான் என்கின்றன குரங்குகள். அவை அறியும்” என்றபின் பீமன் அருகே சென்று கூர்ந்து நோக்கினான். “இளையோனே, தாமரைத்தண்டை மூச்சுக்குழாயாக வைத்துக்கொண்டு மூழ்கிக்கிடக்கிறான்” என்று கூவியபடி நீரில் இறங்கப்போனான்.

“நில்லுங்கள்!” என்றபடி அர்ஜுனன் வில்லை எடுத்து அம்பு தொடுத்தான். தாமரைகள் அறுபட்டு மிதந்தன. “ஒரு தாமரையில் நடுவே புல்லி இல்லை” என்றபடி அதை வெட்டினான். துண்டாகி அலைகளில் கவிழ்ந்தது. சிறகுகள் சரிந்த பறவைக்குஞ்சுபோல நீரில் பாதிமூழ்கி விலகியது. அவர்கள் இடையில் கைவைத்து நோக்கி நின்றனர். குரங்குகள் கூச்சலிடத் தொடங்கின. ஜயத்ரதன் மேலெழுந்து வந்து கையால் முகத்தில் வழிந்த நீரை வழித்துக்கொண்டு “நான் போர்நிறுத்திப் பணிகிறேன். சிந்துவின் அரசன் நான்... இந்திரப்பிரஸ்தத்திடம் அடைக்கலம் புகுகிறேன்” என்றான்.

“வருக!” என்றான் அர்ஜுனன். ஒரு கணம் தயங்கிவிட்டு அர்ஜுனன் கண்களை நோக்கியபின் கைவீசி ஜயத்ரதன் நீந்தி

அணுகினான். சேற்றுக்கரையை அவன் அணுகி ஆடையை அழுத்தியபடி எழுவதற்குள் “இழிமகனே...” என்று கூவியபடி பீமன் அவன் மேல் பாய்ந்தான். அவனை தன் பெரிய கைகளால் பீமன் அறைந்த ஓசை கேட்டு இரு புரவிகளும் உடல் விதிர்த்தன. குரங்குகள் கிளைகளில் தாவி பின்னால் சென்று ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு நோக்கின. பீமன் அவனைத் தூக்கி தரையில் அறைந்தான். சேற்றிலிட்டு மிதித்தான்.

“மூத்தவரே... மூத்தவரே!” என அர்ஜுனன் பதறினான். “விலகு...” என பீமன் உறுமினான். ஜயத்ரதனின் வாயிலேயே மிதித்து அனைத்துப் பற்களையும் உதிரச்செய்தான். அவனைத் தூக்கி அறைந்து கைகளையும் கால்களையும் ஒடித்தான். எலும்புகள் தசைக்குள் ஒடியும் ஒலி கேட்டு அர்ஜுனன் பதறியபடி “மூத்தவரே, வேண்டாம்... வேண்டாம்” என்று கூவினான். சிவந்த விழிகளுடன் “விலகு... அணுகினால் உன்னையும் கொல்வேன்” என்றான் பீமன்.

ஜயத்ரதன் அடிபடும் நாய்போல ஊளையிட்டான். சேறுடன் சேர்ந்து உடல் குழைய அவன் குரல் கம்மலாகி ஊளையாக அலறிக்கொண்டே இருந்தான். அவன் வாய்க்குள் சேறு நுழைந்தது. குருதியுடன் அதை கக்கினான். பீமன் அவன் கால்களை விரித்து ஆண்குறியை மிதிக்கப்போனான். “மூத்தவரே, வேண்டாம்... வேண்டாம்” என ஜயத்ரதன் கைகளை நீட்டி கெஞ்சி அழுதான். “வேண்டாம், மூத்தவரே...” என்று அர்ஜுனன் கூவினான்.

பீமன் காலை ஓங்க அவன் தன் இடைப்பகுதியை பொத்திக்கொண்டு சுருண்டுகொண்டான். அவன் கால்களைப் பிடித்து இழுத்து சேற்றிலிட்டு ஆண்குறியை

மிதிக்கத்தொடங்கினான். மிதித்து மிதித்து கூழாக்கி அவனை சேற்றில் பாதி புதைத்தான். பீமன் சற்றே மூச்சிடைவெளிவிட அர்ஜுனன் பாய்ந்துசென்று அவனை பிடித்துக்கொண்டான். “வேண்டாம், மூத்தவரே. நாம் கொல்லும் உரிமைகொண்டவர்கள் அல்ல. இவனை தண்டிக்கவேண்டியவர் மூத்தவர்” என்றான் அர்ஜுனன். நெஞ்சு விரிந்தமைய “உம்” என பீமன் மூச்சிளைத்தபடி சொன்னான். தலையை உலுக்கி முடியைத் தள்ளி பின்னாலிட்டபின் பற்களை கடித்துக்கொண்டு திரும்பி நோக்கினான். காறி அவன் முகத்தில் உமிழ்ந்தபின் திரும்பி நடந்தான்.

அர்ஜுனன் ஓடிச்சென்று ஜயத்ரதனை மெல்லத் தூக்கி நீரை அள்ளி முகத்திலறைந்தான். முனகலுடன் ஜயத்ரதன் விழித்துக்கொண்டு அக்கணமே அச்சம் கொண்டு உடல் உலுக்க சிறுவர்களுக்குரிய குரலில் “காப்பாற்றுக… இளவரசே, காப்பாற்றுக!” என்றான். உறுமலுடன் பாய்ந்து திரும்பி வந்த பீமன் அவனைப் பிடித்து இழுத்து நாணல்மேலிட்டு மீண்டும் மிதிக்கத் தொடங்கினான். அர்ஜுனன் எழுந்து பீமனை நரம்புப்பொருத்து ஒன்றில் அறைந்து அப்பால் தள்ளினான். விழுந்து பிளிறியபடி எழுந்த பீமன் விழிகளை நோக்கி “போதும்” என்றான் அர்ஜுனன். பீமன் “இந்த இழிமகன்… இவன்…” என கைநீட்டி கூவ “அவனை என்ன செய்வதென்று மூத்தவர் முடிவெடுக்கட்டும்” என்றான் அர்ஜுனன்.

பீமன் மீண்டும் காறி அவன் முகத்தில் துப்பினான். “காப்பாற்றுக! என்னை காப்பாற்றுக!” என்றான் ஜயத்ரதன். “நான் ஓர் அரசன்… என் தலைவராகிய மூத்த கௌரவரை மகிழ்விக்கவே இதைச் செய்தேன்.” பீமன் அர்ஜுனனின் அம்புத்தூளியிலிருந்து பிறையம்பை எடுத்துக்கொண்டு அருகே

வந்தான். “வேண்டாம், மூத்தவரே!” என்று அர்ஜுனன் கைவிரித்து தடுத்தான். “இளையோனே, விலகு!” என்றான் பீமன். “காப்பாற்றுக...” என்று ஜயத்ரதன் அர்ஜுனன் கால்களைப் பிடித்தான். “கொல்லமாட்டேன்... விலகு!” என்றான் பீமன்.

அர்ஜுனன் தயங்க பீமன் ஜயத்ரதனின் கையைப்பிடித்து இழுத்து தொடையை ஓங்கி உதைத்து குடப்பொருத்தை உடைத்து அவன் அலறியபடி துடிக்க திறந்த வாய்க்குள் கைவிட்டு நாக்கை கைகளால் பற்றிப் பிடித்து இழுத்து இறுக்கிக்கொண்டான். அவன் உடல் அதிர்ந்து அதிர்ந்து விழுந்தது. தலையை ஆங்காங்கே முடி எஞ்சும்படி மழித்தான். ஒற்றை மீசையை மழித்தான். காதுகளின் மடல்களையும் சீவி எறிந்தான். பின் அவனை இழுத்துக்கொண்டுவந்து அவன் ஆடையைக் கழற்றி அதைக்கொண்டே தன் குதிரையின் சேணத்துடன் கட்டிக்கொண்டு ஏறினான். “செல்வோம், இளையோனே” என்றான்.

“மூத்தவரே, இது பெருங்கொடுமை” என்றான் அர்ஜுனன். “ம்ம்” என யானைபோல் பீமன் உறுமினான். “நானும் இதைச் செய்தேன். இன்றும் அவ்வனலை என் உள்ளம் அணைத்துக்கொள்ளவில்லை. என்றேனும் நானும் போரில் பெருமையிழந்து குன்றி அமரும்போது மட்டுமே அது குளிரும்... வேண்டாம்! இவனை அரசனென நடத்துவோம். ஊழ் புறம் மாறி அமைகையில் எவர் எங்கிருக்கிறோம் என எவர் சொல்லமுடியும்?” பீமன் “சீ... கோழை... நாளையை அஞ்சி இந்த நாயை விட்டுவிடச் சொல்கிறாயா?” என அவன் முகம் மீது மீண்டும் காறி உமிழ்ந்தான். அர்ஜுனன் தளர்ந்து “மானுட எல்லைகளென சில உள்ளது, மூத்தவரே” என்றான்.

சிவந்த சிறிய விழிகளில் குருதி பரவியிருக்க திரும்பிய பீமன் சீறலென ஒலித்த குரலில் “மானுட எல்லைக்குள் மகளிர் வருவதில்லையா? அரசரங்கில் ஆடைகளைந்து நிற்கச்செய்கையில் சிறுமைகொள்ளாத மானுடம் ஒன்று உண்டென்றால் அது இங்கு வந்து கூசி நிற்கட்டும். அனைத்தையும் விட்டு ஓடிவந்து சிறுகுடிலில் புல்லரிசி சமைத்து வாழ்கிறாள் என் குலம்புகுந்த அரசி. இங்கும் வந்து அவள் குழல்பற்றி இழுத்துச் செல்கிறான் என்றால், இவனை…” என்றவன் அக்கணமே திரும்பி ஜயத்ரதனைத் தூக்கி நிலத்திட்டு மீண்டும் மிதிக்கத்தொடங்கினான். “மூத்தவரே, மூத்தவரே…” என அர்ஜுனன் கூவினான்.

ஜயத்ரதன் துணிப்பாவைபோல கிடந்தான். “போதும்… போதும்… உயிர் எஞ்சவேண்டும்” என்றான் அர்ஜுனன். “ஆம், என் மூத்தவரின் பெருமைக்காக மட்டும்” என்றபின் பீமன் புரவியைத் தட்டினான். அது விரைந்தோட தரையில் விழுந்து புழுதியிலும் முள்ளிலும் கற்களிலும் இழுபட்டபடியே சென்றான் ஜயத்ரதன். காடு முழுக்க அவனை இழுத்துச்சென்றான். சாலைப்புழுதியை அடைந்ததும் மேலும் விரைவுகொண்டான். அவன் மேல் கிளைவழி வந்த குரங்குகள் முற்றிலும் ஓசையடங்கிவிட்டிருந்தன.

முன்னரே சென்ற குரங்குகளின் பூசலும் குதிரைக்கனைப்புகளும் சேர்ந்து முனிவர்களின் இல்லங்களிலிருந்து அனைவரையும் வெளியே வந்து பார்க்கச்செய்தன. முதலில் அவர்கள் மண்ணில் புரண்டு சடலம்போல வந்த ஜயத்ரதனை பார்க்கவில்லை. உரித்தெடுக்கப்பட்ட மாட்டுத்தோல் என ஒருவர் எண்ணி “தோலா?” என்றார். இன்னொருவர் “ஏதோ உடல்” என்றார்.

பின்னர் ஒருகணத்தில் அனைவருக்கும் அது ஜயத்ரதன் எனத் தெரிந்தது. வியப்பொலிகளும் துயரக்குரல்களும் கேட்டன. பெண்கள் குழந்தைகளை கண்களைப்பொத்தி இழுத்துச் சென்றார்கள். முதிய பெண்கள் கைநீட்டி கதறியழுதனர்.

சுஃப்ர முனிவர் கைகளை நீட்டியபடி வந்து சாலையில் நின்று "என்ன இது? இறந்த உடலை சிறுமைசெய்ய மானுடனுக்கு உரிமையில்லை..." என்று கூவினார். பிரபாகரர் பின்னால் வந்து "அது தென்முதல்வன் கைக்கு சென்றுவிட்ட உயிர். எரியரசனுக்கோ மண்ணரசிக்கோ உரிய உடல்!" என்று கத்தினார். "அவன் இன்னும் சாகவில்லை" என்றான் பீமன். அவர்கள் திடுக்கிட்டு நோக்க அவன் கைகள் துடிப்பதைக் கண்டு "தெய்வங்களே!" என்று கூவினர். "என் குலமகள் மேல் கைவைத்தவன் இவன்... இவனை என்ன செய்யவேண்டுமென என் மூத்தவர் சொல்லட்டும். இனி இவ்வெண்ணம் எவ்விழிமகனுக்கு வருகிறதோ அவன் குழந்தைகளின் சங்குகடித்து குருதியைக் குடிப்பேன். இதோ, சுழலும் காற்றுத்தேவன் மேல் ஆணை!" என்றான்.

"பாண்டவரே..." என்று சொல்லி சுஃப்ரர் ஓர் அடி முன்னால் எடுத்து வைக்க பீமன் சவுக்கை ஓங்கி "எதிர்நிற்கும் எவரும் இவ்விழிமகனுக்கு உடன்நிற்பவர்கள் என்றே கொள்வேன். முனிவரோ தேவரோ தெய்வங்களோ ஆயினும் அவர்களின் குருதியாட தயங்கமாட்டேன்... விலகுக!" என்றான். அவர்கள் நெஞ்சைப்பற்றியபடி விலகிநின்றனர்.

குடிலை நெருங்கியபோது அர்ஜுனன் தளர்ந்திருந்தான். தாழ்ந்த குரலில் "சொல்லவேண்டியதை நீங்களே சொல்லிவிடுங்கள், மூத்தவரே. இவ்வுடலில் உயிர் உள்ளதா என்றே ஐயுறுகிறேன்" என்றான். "ஆம், நான் ஏற்கிறேன். நான் கொள்கிறேன்

இப்பழியை... இளையோனே, குருகுலத்துக்கீழ்மக்கள் நூற்றுவரையும் கொன்று யுகப்பழி கொள்ளவிருக்கும் கைகள் இவை...” என்று பீமன் சொன்னான்.

குடில் முற்றத்திலிருந்து நகுலன் ஓடிவந்தான். “என்ன ஆயிற்று?” என்று கேட்டதுமே ஜயத்ரதனை கண்டுகொண்டான். “உயிர் இருக்கிறதா?” என்றான். “சாகவில்லை” என்றான் பீமன். மேலிருந்து சகதேவன் பாய்ந்திறங்கி வந்தபடி “என்ன செய்துவிட்டீர்கள், மூத்தவரே? அவன் நம் உறவினன். துச்சளை உங்கள் தங்கை” என்றான். தருமன் குடில்விளிம்பில் வந்து நிற்க அவர் அருகே திரௌபதி வந்து நோக்கினாள். அவள்தான் முதலில் ஜயத்ரதனை அடையாளம் கண்டுகொண்டாள். அஞ்சியவள்போல நெஞ்சில் கைவைத்தாள். அவள் கண்கள் கலங்கி நீரொளி கொள்வதை காணமுடிந்தது.

என்ன நிகழ்கிறதென்றறியாமலேயே தருமன் உடல்நடுங்கிக்கொண்டிருந்தார். குரங்குகள் ஒவ்வொன்றாக இறங்கி வந்து ஓசையில்லாமல் வேலிமேல் குந்தி அமர்ந்தன. திடீரென்று அப்பகுதியெங்கும் பூசணப்பாசி படிந்ததுபோல் ஆயிற்று அவற்றின் சாம்பல்நிறத்தால். பதறிய குரலில் “இளையோனே, என்ன?” என்றார் தருமன். “இதோ கிடக்கிறான் நம் குலக்கொடிமேல் கைவைத்த கீழ்மகன்” என்றான் பீமன். கட்டியிருந்த துணியைப்பற்றித் தூக்கி ஜயத்ரதனை நிற்கச்செய்தான். “உங்கள் தீர்ப்புக்காக உயிருடன் கொண்டுவந்துள்ளேன்.”

ஜயத்ரதனால் நிற்க முடியவில்லை. கால்கள் தொடையிலும் மூட்டிலும் கணுக்காலிலும் எலும்புகள் உடைந்து துணிச்சுருளாக தொய்ந்தன. கால்களுக்கு நடுவே பெரிய பொதிபோல குறிக்காய்கள் வீங்கி நிறைந்திருந்தன.

கையெலும்புகள் உடைந்து மணிக்கட்டு முழுமையாக பின்பக்கம் திரும்பியிருந்தது. பற்கள் உதிர்ந்த வாய்க்குள் நாக்கு வீங்கி நிறைந்திருக்க உடலெங்கும் தோல் உரிந்து சதைப்பூச்சு உரிந்து தெறிக்க பல இடங்களில் வெள்ளெலும்பு தெரிந்தது. குருதியூறிவழிய மண்ணும் சருகுத்துகள்களும் கரைந்து வழியலாயின.

“இளையோனே…” என வீரிட்டபடி தருமன் இறங்கி கீழே வந்தார். படியில் கால்தவறி விழப்போக அவரை சகதேவன் பற்றிக்கொண்டான். “என்ன செய்துவிட்டாய்… இளையோனே?” என்று கூவினார். அவர் விழிகளிலிருந்து நீர் வழிந்தது. குரல் அடைத்து கைகள் பதறின. என்ன செய்வதென்று அறியாமல் அங்குமிங்கும் நோக்கி ததும்பி பதறி “இளையோனே… அவனுக்கு நீர் அளியுங்கள்… அவனை படுக்க வையுங்கள்” என்று கூச்சலிட்டார். திரௌபதி படிகளில் இறங்கி ஓடிவந்து “என்ன செய்தீர்கள்? இளையவரே, அவன் ஓர் அன்னையின் மைந்தன் அல்லவா?” என்றாள்.

சகதேவன் சென்று ஜயத்ரதனைப்பற்றி படுக்கவைத்தான். திரௌபதி அருகே அமர்ந்து அவன் தலையை மெல்ல தூக்கி குருதியில் ஒட்டிக்கிடந்த குழலை அள்ளி காதோரம் ஒதுக்கினாள். அவள் கண்ணீர்த்துளிகள் ஜயத்ரதன் முகத்தில் விழுந்தன. விம்மலில் கழுத்து குழிந்தெழுந்து அதிர்ந்தது. நகுலன் ஓடிச்சென்று நீர்க்குடுவையை கொண்டுவந்தான். திரௌபதி அதை வாங்கி அவனுக்கு கொடுத்தாள். வாய் வீங்கி நிறைந்திருந்தமையால் ஜயத்ரதனால் நீரை குடிக்க முடியவில்லை. திரௌபதி சிறுகுழவியை என அவனை தன் மார்பில் மெல்ல அணைத்துக்கொண்டு சுட்டுவிரல் விட்டு நாக்கை அகற்றி இடுக்கில் நீரை விட்டாள்.

நீர் பட்டதும் அவன் உள்வாய் தவித்து உடல் எழுந்து குடுவை நோக்கி வந்தது. அன்றுபிறந்த மகவென அவன் இழுத்து இழுத்து குடித்தான். இருமி குருதித்துண்டங்கள் அவள் முகத்திலும் கழுத்திலும் முலைகள்மேலும் தெறிக்க நெஞ்சக்கூடு உதறிக்கொள்ள உயிர்பிரிவதுபோல நெளிந்தான். கைகள் எலும்புடைந்து நாகங்கள்போல தரையில் கிடந்து புரண்டன. கண்ணீருடன் “என்ன செய்துவிட்டாய், மந்தா…? அவன் அரசன். நம் குலத்தில் பெண்ணெடுத்தவன்” என்றார் தருமன். “என் குலமகள்மேல் கைவைத்தவன்… அதையன்றி வேறெதையும் எண்ணப்போவதில்லை நான்” என்றான் பீமன் உரக்க.

“அவனை விட்டுவிடுக… இளையோனே. அவன் வீரர்களிடம் அவனை ஒப்படையுங்கள். அவர்கள் அவனை கொண்டுசெல்லட்டும். அவன் இறக்கலாகாது…” என்றார் தருமன். அருகே வந்து குனிந்து கைகூப்பி “சைந்தவரே… பெரும்பிழை நிகழ்ந்துவிட்டது. பொறுத்தருள்க… உங்கள் மூதாதையரும் குலதெய்வங்களும் என் குடிமேல் வஞ்சம் கொள்ளாதிருக்கட்டும்…” என்றார். ஜயத்ரதன் இமைகள் மட்டும் அசைந்துகொண்டிருந்தன. அவன் அச்சொற்களை கேட்கிறான் என்பது தெரிந்தது. திரௌபதி உதடுகளை அழுத்தி அழுகையை அடக்கிக்கொண்டிருந்தாள்.

“ஆவன செய்க… இளையோரே, ஆவன செய்க… நான் உடனே இவர் தந்தை பிருஹத்காயருக்கும் சிந்துவின் குலமூத்தாருக்கும் பொறுத்தருளக்கோரி ஓலை அனுப்புகிறேன்” என்றார் தருமன். அர்ஜுனன் “ஆணை, மூத்தவரே!” என்றபின் திரும்பி “அவரை முதலில் படுக்கவையுங்கள். புண்கள் மேல் பூச்சிகள் படியக்கூடாது” என்றான். நகுலனும் சகதேவனும்

சேர்ந்து ஜயத்ரதனை தூக்கப்போக திரௌபதி ஓடிச்சென்று இரு வாழையிலைகளை வெட்டிவந்தாள். அவற்றை அங்கிருந்த மூங்கில் முடைந்த பீடத்தில் விரித்து அதன்மேல் குளியலுக்கான மூலிகைஎண்ணையை ஊற்றி அவனை படுக்கவைத்தனர்.

அர்ஜுனன் நகுலனிடம் "இளையோனே, செல்க! சிந்துவின் படைகள் அங்கே ஒருங்கிணைந்துவிட்டிருக்கும். அவர்களிடம் தேர்கொண்டுவந்து அரசனை கொண்டுசெல்லும்படி சொல்க!" என்றான். சகதேவனிடம் "விரைந்து சென்று முனிவர்களில் மருத்துவமறிந்தவர்கள் சிலரை அழைத்துவருக!" என்றான். அவர்கள் புரவிகளில் ஏறிக்கொண்டு வெளியே சென்றனர். தருமன் கால்தளர்ந்தவராக அங்கிருந்த கூடை ஒன்றின்மேல் அமர்ந்து தலையை கைகளால் பற்றிக்கொண்டார். "இது பெரும்பழி... நம் குலத்திற்கும் பழி இது" என்றார். அர்ஜுனன் "நாம் இதை பின்னர் பேசுவோம், மூத்தவரே" என்றான்.

திரௌபதியும் அர்ஜுனனும் எண்ணையை பஞ்சில் முக்கி ஜயத்ரதனின் உடலில் உரிந்திருந்த தோலையும் தசைக்கிழிசல்களையும் ஒற்றி தூய்மைப்படுத்தினார்கள். பீமன் இடையில் கைவைத்து அவளை நோக்கியபடி நின்றான். கைபட்டபோது ஜயத்ரதன் உடலின் ஆழத்திலிருந்து மெல்லிய முனகல் எழுந்தது. அவள் உடலெங்கும் அவன் குருதி படிந்திருந்தது. மலரால் ஒற்றுவதைப்போல மிகமெல்ல அவள் கைகள் அசைவதை அவன் புரியாச்செயல் என நோக்கிக்கொண்டு நின்றான். அர்ஜுனன் நிமிர்ந்து "தாங்கள் செல்லலாம், மூத்தவரே" என்றான்.

பீமன் தரையில் துப்பிவிட்டு "இவனைக் கொல்லாது விட்டமைக்காக வருந்துகிறேன், மூத்தவரே" என்று தருமனிடம்

சொன்னான். அர்ஜுனன் "மூத்தவரே, செல்க!" என சற்று எரிச்சலுடன் சொன்னான். "இளையோனே, நான் காட்டான். உங்கள் மெய்யறிதல்கள் எனக்கில்லை. ஆனால் ஒன்று சொல்கிறேன். இது ஊழின்கணம். ஆகவே இக்கருணை உங்கள் உள்ளத்திலெழுகிறது. இதன்பொருட்டு நீ எஞ்சிய வாழ்நாளெல்லாம் துயர்கொள்வாய்" என்றபின் தன் இடைக்கச்சையை அவிழ்த்து உதறி தோளிலிட்டபடி நடந்து குடிலை அடைந்து கயிறேணியில் தொற்றி மேலேறிச் சென்றான்.

# மாமலர் - 9

### 9. சொற்சுழல்

தன் அறையிலிருந்து நிலைகொள்ளா உடலுடன் வெளிவந்த தருமன் "அவன் இருக்குமிடமாவது தெரிந்தால் சொல்லுங்கள். நானே சென்று பார்க்கிறேன்" என்றார். குடிலின் முகக்கூடத்தில் நூலாய்ந்துகொண்டிருந்த சகதேவன் சுவடிகளை மூடிவிட்டு "இந்தக் காட்டில்தான் எங்கோ இருக்கிறார். எந்தக் குரங்கை தொடர்ந்து சென்றாலும் அவரை அடைந்துவிடமுடியும்" என்றான். "அவன் உளம் புண்பட்டிருக்கிறான். அன்று நாம் அவனை குற்றவாளியாக்கிவிட்டோம். முதன்மையாக நான்" என்றார். "ஒரு கணவனாக அவன் செய்தது சரிதான். நாம் அரசகுலத்தோராகவும் குடிமையறம் சூடியவர்களாகவும் மட்டுமே நம்மை உணர்ந்தோம்."

சகதேவன் "அவர் வராமலிருப்பதொன்றும் புதிதல்ல" என்றான். "ஆம், ஆனால் இம்முறை அது அவ்வாறல்ல என என் உள்ளம் சொல்கிறது. அவன் நம்மைவிட்டு உளம் விலகியிருக்கிறான்."

கூடையொன்றை முடைந்துகொண்டிருந்த நகுலன் நிமிராமலேயே “நம்மிடமிருந்து அவ்வாறெல்லாம் விலகுபவர் அல்ல அவர்” என்றான். “அதையும் நான் அறிவேன். என் செயல் எதையும் அவன் மீறப்போவதில்லை. நான் உளம் வருந்தும் எதையும் இயற்றவும் மாட்டான். ஆனால் அதனாலேயே அவன் உள்ளத்தைக் குறித்து கவலைகொள்கிறேன். அவனையே எண்ணிக்கொண்டிருக்கிறேன்” என்றார் தருமன்.

திரௌபதி உள்ளே வந்து நகுலனுக்கும் சகதேவனுக்கும் இன்னீர் கொண்டுவைத்தாள். கைகளை முந்தானையில் துடைத்தபடி அவள் திரும்பியபோது தருமன் “தேவி, நீ சொல். அவன் உளம்புண்பட்டுத்தானே சென்றிருக்கிறான்?” என்றார். “ஆம்” என அவள் இயல்பான விழிகளுடன் சொன்னாள். “ஆனால் எதையும் அங்கே காட்டில் உலவி அவரால் கரைத்துக்கொள்ள முடியும். உளம் மீளும்போது அவரே வருவார்.” தருமன் “நான் அவனிடம் கடுமையாகப் பேசிவிட்டேன்” என்றார். “ஆம், ஆனால் பேசவேண்டிய இடத்தில் இருப்பவர் நீங்கள் மட்டுமே. மூத்தவரே, அவர் முனிவர்களிடமே கையோங்கிப் பேசியவர்” என்றான் நகுலன்.

பெருமூச்சுடன் திரும்பி தன் அறைக்குச் சென்றார் தருமன். திரௌபதி “நாளுக்குநாள் குற்றத்துயர் கொள்கிறார்” என்றாள். “அவருடைய ஊழ் அது. அன்பின் துயரால் அழிவதும் ஒரு நல்லூழே” என்றபின் சகதேவன் சுவடியை விரித்தான். திரௌபதி “இளையவர்களே, நீங்கள் சென்று அவர் எப்படி இருக்கிறார் என்பதை பார்த்து வரலாம்” என்றாள். “ஏன்?” என்றான் நகுலன். “மூத்தவர் துயர்கொண்டிருக்கிறார் என்பதை அவர் அறியட்டும்” என திரௌபதி சொன்னாள். “அவர்

மூத்தவரின் துயரை உள்ளுணர்வாலேயே அறிவார்” என்றான் சகதேவன்.

அவர்கள் இன்னீர் அருந்தினர். கதவைத்திறந்து தருமன் வந்து “நாம் கிளம்புவோம், இளையோரே. கீழே முண்டன் இருக்கிறான். அவன் அறியாத ஒன்றுமில்லை. என்னை அவனிடம் இட்டுச்செல்ல ஆணையிடுகிறேன்” என்றார். நகுலன் “இன்றே கிளம்பவேண்டாம், மூத்தவரே. சிலநாட்கள் பார்ப்போம். அவர் சென்று ஆறுநாட்கள்கூட ஆகவில்லை” என்றான். “நான் கிளம்பிவிட்டேன். இங்கு என்னால் வெறுமனே இருக்கமுடியாது” என்றார் தருமன். சகதேவன் சுவடியை மூடிவிட்டு “நானும் வருகிறேன், மூத்தவரே” என எழுந்தான்.

“சண்டனும் சகதேவனும் உடன் வந்தால்போதும். நீங்களிருவரும் தேவியுடன் இருங்கள்” என்றார் தருமன். “நானும் வருகிறேன். வேட்டைக்கும் செல்லவேண்டியிருக்கிறது” என நகுலன் எழ “நீ இங்கிரு. பார்த்தனும் இருந்தாகவேண்டும்” என்றார் தருமன். நகுலன் “நீங்கள் ஜயத்ரதனை அஞ்சுகிறீர்கள்” என்றான். “ஆம், அவனை சிறுமைசெய்து அனுப்பியிருக்கிறோம். அரசனின் உள்ளம் வஞ்சத்தால் இயங்குவது. சிந்து பாரதவர்ஷத்தின் பெருநாடுகளில் ஒன்று. அதன் படைகளால் இந்தக் காட்டையே வலையென அள்ளி எடுத்துவிடமுடியும்” என்றார்.

“ஜயத்ரதன் இன்னும் முழுநினைவு கொள்ளவில்லை. அவன் எழுந்தமர எப்படியும் ஆறு மாதமாகும் என அறிந்தேன்” என்றான் சகதேவன். “ஆம், ஆனால் அவன் தந்தை இருக்கிறார். இளையோனே, பிருஹத்காயரின் சினத்தையும் மைந்தன் மீதுகொண்டிருக்கும் பெரும்பற்றையும் அறியாதவர்கள் எவரும் பாரதவர்ஷத்தில் இல்லை. அன்று சௌமித்ர முனிவர் வந்து

சொன்ன கதையைக் கேட்டு என் குருதி உறைந்துவிட்டது. அவன் தந்தை அருந்தவமியற்றிப் பெற்ற சொற்கொடை ஒன்று உள்ளது. அவனைக் கொன்று தலையை தரையில் வீழ்த்துபவனின் தலை அக்கணமே உடைந்து தெறிக்குமாம்."

"ஆம், அறிந்துள்ளேன்" என்றான் சகதேவன். "நல்லவேளை, அன்று அர்ஜுனன் சினம் மிஞ்சி அதை செய்யவில்லை. அர்ஜுனன் தடுக்காவிட்டால் மந்தன் அதை செய்திருப்பான்… என் இளையோர் உயிர்பிழைத்தது என் ஊழின் வல்லமையால்தான்." அவர் மீண்டும் பெருமூச்சுவிட்டு "நான் பிருஹத்காயரைத்தான் அஞ்சிக்கொண்டிருக்கிறேன். அவர் சிந்துவின் படைகளுடன் கிளம்பிவருவதை பலமுறை கனவுகண்டு விழித்துக்கொண்டேன். குளம்படியோசைகள் என காற்றின் ஒலிகேட்டு திடுக்கிட்டேன்" என்றார்.

தனக்குத்தானே என "பிறிதொரு முறை அவன் தேவியை கவர்வான் என்றால் பின்னர் நமக்கென ஒரு பெயரோ முகமோ இங்கு இருக்காது. புழுவென மண்ணுள் புகுந்து மறைவதே ஒரே வழியென்றாகும்" என்றார். சகதேவன் "இல்லை, மூத்தவரே. அவர்கள் அஞ்சுவார்கள். அவர்களல்ல, இனி பாரதவர்ஷத்தில் எந்த அரசனும் தேவியை எண்ணுகையில் உடல் சிலிர்ப்பான்" என்றான். "ஆம், மந்தன் அன்று தென்னகத்தேவன் போலிருந்தான்… அவனை ஏறிட்டு நோக்கவே நான் அஞ்சினேன். பின்னர் எண்ணியபோது அவன் செய்த அத்தீச்செயலைப்போல நமக்கு அரண் பிறிதில்லை என்றும் பட்டது" என்றார் தருமன்.

அவர்கள் படிகளில் இறங்கி கீழே சென்றனர். நகுலன் திரௌபதியிடம் "உன் விழிகளில் ஏதோ தெரிகிறது" என்றான். "இல்லையே" என்றாள் அவள். "இல்லை, உன் உள்ளம்

மாறுபாடு கொண்டுவிட்டது” என அவன் மீண்டும் சொன்னான். “ஒன்றுமில்லை” என சொல்லி அவள் ஒழிந்த குவளைகளை எடுத்துக்கொண்டாள். “சொல்!” என்றான் அவன். அவள் விழிகள் மெல்ல தழைய “இரண்டாமவர் செய்ததை நீங்கள் நால்வரும் உள்ளத்தால் பலநூறுமுறை செய்துவிட்டீர்கள்” என்றாள். நகுலன் ஒருகணம் திகைத்தபின் “ஆம்” என்றான். “அதை தவிர்க்கமுடியவில்லை.”

“அப்படியென்றால் அவரை ஏன் அன்று பழித்தீர்கள்? அன்று உங்களைத் தடுத்தது அறமா, அன்றி விளைவுகளை எண்ணிய அச்சமா?” நகுலன் சில கணங்கள் கைகட்டி அசையாமலிருந்தபின் “எதிரிகளையோ விளைவுகளையோ குறித்த அச்சம் அல்ல, தேவி. அந்த அச்சத்தை நாங்கள் கடந்து நெடுநாட்களாகிறது” என்றான். அவள் கையில் குவளைகளுடன் விழிகள் சுருங்க அவனை பார்த்துக்கொண்டிருந்தாள். “அறம் குறித்த அச்சம்தான். ஒரு முறை அறத்தால் அடிபட்டவன் கொள்ளும் என்றுமுள்ள நடுக்கம்…”

அவள் ஒன்றும் சொல்லாமல் உள்ளே சென்றாள். நகுலன் எழுந்து கீழே செல்ல அங்கே அர்ஜுனன் தருமனுடன் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டு தயங்கினான். அர்ஜுனன் “ஆகவேதான் மூத்தவரே, இப்போது தாங்கள் செல்லவேண்டியதில்லை என்கிறேன். இது அதற்கான தருணமல்ல” என்றான். தருமன் “அவன் என் இளையோன்” என்றார். “ஆம், அதனால்தான் நீங்கள் இளகிவிடுவீர்கள் என்கிறேன். அங்கே சென்றால் நீங்கள் குற்றவுணர்வடைகிறீர்கள் என காட்டியதாக ஆகும். அவரிடம் பணிவதாக பொருள்கொள்ளப்படும்… மூத்தவர் தூய உணர்ச்சிகளால் ஆனவர். அவரை என்றும் அறம்

கட்டுப்படுத்தவேண்டும். நீங்கள் பணிந்தால் அவர் கட்டற்றவராக ஆவார்.”

“எனக்கு ஒன்றும் புரியவில்லை” என்றபடி தருமன் திரும்பி நகுலனை நோக்கினார். “என் இளையோனிடம் நான் இதையெல்லாம் பார்க்கவேண்டுமா? நான் செல்வது எப்படி குற்றவுணர்வினை காட்டுவதாக ஆகும்?” அர்ஜுனன் “ஏனென்றால் நீங்கள் குற்றவுணர்வு கொண்டிருக்கிறீர்கள். உங்கள் உள்ளம் இன்று மூத்தவர் செய்ததே சரி என ஆழத்தில் எண்ணிக்கொண்டிருக்கிறது” என்றான். தருமன் திகைப்புடன் “இல்லை” என்றார். “அத்தருணத்தில் அரசராக இருந்தீர்கள். இன்று நீங்கள் கணவர், வெறும் குடிமூத்தார்” என்றான் அர்ஜுனன்.

அவர் விழிகளை நோக்கியபடி அவன் தொடர்ந்தான். “ஆனால் நான் தெளிவாகவே இருக்கிறேன். மூத்தவர் என்னிடம் சொன்னவற்றை நான் பலமுறை உள்ளூர எண்ணிநோக்கினேன். என் அகம் தெளிவாகவே காட்டுகிறது, இங்கு நான் காட்டிய கருணைக்கு நிகராக அவன் எனக்கு அளிக்கவிருப்பது அவலத்தை மட்டுமே. நம் கருணையே அவனை பெருந்துயர் உறச்செய்கிறது இப்போது. அவன் உள்ளே நஞ்சென வஞ்சமென அது பெருகுகிறது. இப்பிறவியின் முதன்மைப்பெருந்துயரை அவன் எனக்கு அளிப்பான்… ஒருவேளை…”

அர்ஜுனன் மூச்சென இடைவெளிவிட்டு சற்றே இடறிய குரலில் “ஒருவேளை அது மைந்தர்துயர் அல்லது தந்தைத்துயர். ஆயினும் நான் பிழை செய்ததாக உணரவில்லை. எது எனக்குரிய அறமோ அதையே நான் செய்தேன். அவனுக்குரிய மறத்தை அவன் இயற்றட்டும். எது

ஊழின் துலாக்கோலின் திசையோ அது முடிவாகுக!” என்றான். தருமன் ஏதோ சொல்ல வாயெடுக்க “ஆகவே, நாம் பிழையேதும் செய்யவில்லை. அதை எங்கும் நாம் விட்டுக்கொடுக்கவேண்டியதில்லை” என்றான் அர்ஜுனன். “அவன் நம்…” என தருமன் சொல்லப்போக “அவரிடம்தான் முதன்மையாக நாம் அதைக் காக்கவேண்டும்” என்றான் அர்ஜுனன்.

நிலையற்ற கைகளுடன் தருமன் மேலாடையை சீரமைத்தார். திரும்பி சகதேவனையும் நகுலனையும் நோக்கினார். அப்பால் நின்ற முண்டனை நோக்கி “குஸ்மிதா, காலத்தில் முன்னோக்கிச் சென்று சொல்க! எப்போது மந்தன் திரும்பி வருவான்?” என்றான். முண்டன் “என்னால் அப்படியெல்லாம் செல்லமுடியாது. அதுவே நிகழவேண்டும்…” என்றான். “சுழன்று பார்” என்றார் தருமன். முண்டன் ஒருமுறை சுழன்றுகுதிக்க முயன்று நிலைதடுமாறித் தெறித்து அப்பால் சென்று விழுந்தான். எழுந்து “மூட்டில் அடிபட்டுவிட்டது” என்றான். மீண்டும் சுழலமுயன்று விழுந்து எழுந்து “என்னால் முடியவில்லை” என்றான்.

புன்னகையுடன் தருமன் “நன்று” என்றபடி மேலேறிச்சென்றார். முண்டன் அவரைத் தொடர்ந்து சென்றபடி “நான் வேண்டுமென்றால் கழற்சிகளைக்கொண்டு சொல்லாடலாடிக் காட்டுகிறேன். சிறந்தது. சொற்களுக்கு இப்படியெல்லாம் பொருள் உண்டா என வியக்கச்செய்ய முடியும் என்னால்… உண்மையில்…” என்றான். அருகே மூங்கில்களைப்பற்றி மேலேறிச்சென்று அவர் முன்னால் நின்று “அதாவது நான் சொற்களுக்கு அவையே இயங்கும் விடுதலையை

அளிக்கிறேன். கனவுபோல. கவிதைபோல. நன்கு சினம்கொண்டு எழும் கெடுசொல் போல…” என்றான்.

இரவுணவுக்குப்பின் முகக்கூடத்தில் தருமன் வந்து அமர்ந்துகொண்டு “முண்டனை அழையுங்கள்… அவன் ஏதோ கலைநிகழ்ச்சியை செய்வதாகச் சொன்னானே” என்றார். அர்ஜுனன் “ஆம், கழற்சிச்சொல் என்றான்…” என்றான். அன்று பகல் முழுக்க அவர்களிடமிருந்த இறுக்கத்தை அவர்களே அவிழ்க்க விழைந்தனர். சகதேவன் சென்று அடுமனையிலிருந்து முண்டனை அழைத்துவந்தான். அவன் விரல்களை நக்கிக்கொண்டே வந்து “உணவுண்டுகொண்டிருந்தேன்” என்றான். “முடித்துவிட்டு வா!” என்றார் தருமன். “கலைக்குமுன் உணவு என்ன பொருட்டு? வேண்டுமென்றால் இன்னொரு முறை உண்ணலாமே?” என்றான்.

அவனுடன் வந்த திரௌபதி சிரித்துக்கொண்டு “ஆமாம், மீண்டும் உண்ண உனக்கு உணவளிக்கிறார்கள்… தட்டுடன் வா!” என்றாள். முண்டன் “அரசே, கலைக்குப் பரிசாக எனக்கு உணவளிக்கவேண்டும்” என்றான். தருமன் சிரித்துக்கொண்டு “உண்டு, மூட்டைநிறைப்பதுபோல உன் உடல்ததும்ப உணவு செலுத்தப்படும்” என்றார். “அது அரசர்களுக்குரிய பேச்சு” என்ற முண்டன் “நான் இங்கே ஆற்றவேண்டிய கலை என்ன? ஒரு நல்ல பாடல்?” என்றான். “பாடினாய் என்றால் அக்கணமே இளையவர் உன் சங்கை அறுப்பார்… பாடிவிடுவாயா?” என்றான் சகதேவன் உரக்க.

“இல்லை, பாடவில்லை. நற்குரலிருந்தால்தான் பாடவேண்டும் என்று சொன்னால் அது நெறிப்பிழை… உடலில்லாதபோதே பாண்டுமன்னர் மைந்தரைப் பெற்றார் என்று சொல்கிறார்கள்”

என்றான் முண்டன். “அடேய்!” என தருமன் கூவ “தீயோர் அவ்வாறு சொல்கிறார்கள், நான் சொல்லவில்லை” என அவன் பணிவுடன் சொன்னான். “நஞ்சு கக்காமல் இந்த அரவத்தால் ஆடமுடியாது” என்றான் சகதேவன். “அதன்மேல் தேர் ஊர்ந்துசென்றுவிடுமென்று சொல்!” என்றார் தருமன். “நீ முன்பு சொன்னாயே கழற்சிச்சொல், அவ்விளையாட்டை ஆடு” என்றான் அர்ஜுனன்.

முண்டன் “ஆம்” என்றபின் சுறுசுறுப்புடன் ஓடிச்சென்று சமையலறையிலிருந்து காட்டுக்காய்களை, ஒரு சிறிய மூங்கில்கூடையில் உலரவைத்த நெற்றுக்களை எடுத்துவந்தான். “உரிய கழற்சிக்காய்களைக் கொண்டுதான் ஆடவேண்டும். ஆனால் இங்கே அரசரே காட்டிலிருக்கிறார். அவருக்கு இதெல்லாம் போதும் என்று எவரேனும் எண்ணினார்கள் என்றால் அது என் எண்ணம் அல்ல” என்றபடி வந்து அவர்கள் முன் நின்றான். கைகளை உரசிக்கொண்டு கூடையில் கிடந்த காய்களை எடுத்தான். ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிறம் கொண்டிருந்தது.

“அரசே, இந்தக் காய் அறம் எனும் சொல். இந்தக் காய் யுதிஷ்டிரன். ஆம், இது பீமன். இது ஆற்றல். இது கூர்மை என்றால் இதை அதனருகே வைத்து விஜயன் என்பேன். இது நிமித்தம். ஆகவே இது சகதேவன். இது விசை. அருகிருப்பது நகுலன். அப்பாலிருப்பது ஆணவம். அதன் இணையை துரியோதனன் என்பேன். அருகிருப்பது சகுனி. அதன் துணை விழைவு. அப்பாலிருப்பது அறியாமை. அதற்குரியவர் இந்தக் காயென அமைந்த திருதராஷ்டிரர். இது வஞ்சம். இது கர்ணன். இவை பெருமிதமும் பீஷ்மரும். இவை பற்றும் துரோணரும். இது சீற்றம். அதை குந்திதேவி என்பேன். அவையோரே, இதோ

இது ஆக்கம். இதை நான் கிருஷ்ணன் என்பேன். இது அழிவு. அதை திரௌபதி என்றால் சினம்கொள்ளலாகாது. நாம் வேண்டுமென்றால் இவற்றையெல்லாம் மாற்றிக்கொள்ளலாம். யார் நம்மைக் கேட்பது?"

அவன் சொல்லறாது பேசிக்கொண்டே சென்றான். "இதோ எழுகிறது ஆற்றல். துணைசெல்கிறது பீமன். உடனெழுகின்றன கூரும் விஜயனும். துணையெழுகின்றது நிமித்தம். அதன் முகமென சகதேவன். விரைவும் நகுலனும்... நோக்குக! முகம் நான்கு, அவற்றின் அகம் நான்கு. ஆ! சுழல்கின்றன. ஒன்றுடன் ஒன்று ஒட்டி சரடென்றாகின்றன. இதோ, அவை கட்டி எழுப்புவது எதை? ஆ! அறம். அறம் அறம்... உடனெழுந்தாடுகிறது யுதிஷ்டிரன் என்னும் சொல். எழுகிறது சீற்றம். உடனமைவதென்ன, அழிவா? ஆம், அது திரௌபதி என்னும் சொல்." எட்டு காய்களும் இணைந்து அவ்விரண்டையும் உந்தி மேலெழுப்பி நிறுத்தின. கீழே பிறகாய்கள் துள்ள அவை புரவிமேல் பாய்பவைபோல மேலே நின்றிருந்தன.

அவன் சொற்களால் அக்காய்கள் தூக்கிச் சுழற்றப்படுவதுபோலத் தோன்றின. அனைத்துக் காய்களையும் இடக்கைக்கு கொண்டுசென்று வலக்கையால் மேலும் காய்களை எடுத்தான். "இது ஆணவம். இது வஞ்சம். இதோ, அவற்றை தூக்கிச் சுழற்றும் விழைவு. வெற்றுப்பெருமிதம் உடனெழுகிறது. துணையென அமையும் பற்று. எப்போதும் நீங்கா அறியாமை. அனைத்தையும் எடுத்தாடுவது எது? ஆம், அது கிருஷ்ணன். அவனுடன் இணைந்த ஆக்கம்." இடக்கையில் அக்காய்கள் ஒரு பெரிய காற்றாடிபோலச் சுழன்றபடி நின்றன. வலக்கையில் காய்கள் எழுந்து சுழலத் தொடங்கின.

கிருஷ்ணனும் ஆக்கமும் என இருகாய்கள் பிற அனைத்தையும் தட்டித்தூக்கியபடி நின்றன.

இருகைகளிலும் சுழலும் கழற்சிகளுடன் அவன் அறையை சுற்றிவந்தான். கால்தடுக்கியதுபோல அவன் திடுக்கிட்டு தடுமாறி நின்றிருக்க காய்கள் ஒன்றுடன் ஒன்று கலந்தன. துரியோதனனை நிமித்தம் ஏந்தியிருந்தது. அறத்தை கர்ணன் தொடர்ந்தான். திரௌபதியை ஆக்கமும் குந்தியை பற்றும் தொடர்ந்தன. “கலந்துவிட்டது... பொறுத்தருளவேண்டும்... இதோ” என அவன் சீரமைக்க முயல்பவன்போல அவற்றை கலந்து கலந்து பிரித்தான். “விழைவு ஏன் யுதிஷ்டிரனாகிறது? பிழை... அது பிழை... இதோ!” என்றான். கனிவு சூடி திரௌபதி எழுந்தாள் வஞ்சம் கொண்டு குந்தி. துரியோதனன் பற்று கொண்டிருந்தான்.

விசைகொண்டு எழுந்தது அழிவு. ஆக்கம் வஞ்சம் கொண்டது. “இதை நான் நிறுத்தமுடியாது... நிறுத்தினால் அனைத்தும் உதிர்ந்துவிடும்... இதோ” என அவன் மீண்டும் மீண்டும் கலந்துகொண்டே இருந்தான். ஒவ்வொரு சொல்லும் புதுப்பொருள் கொண்டன. ஒவ்வொரு பெயரும் பிறிதொன்றாயின. “வஞ்சம் விழைவுசூடுகிறது. அருகமைந்துள்ளது பற்று. அறியாமை விசைகொள்கிறது. அறம் அறியாமையென்றாகிறது. என்ன நிகழ்கிறது? சொற்கள் இப்படித்தான்... அவை பித்துகொள்கையில் பொருளிழக்கின்றன. அவையோரே, அவை பொருளெனும் ஆடையைக் களைய எப்போதும் துடித்துக்கொண்டிருப்பவை.”

ஒவ்வொரு சொல்லாக அவன் கையிலிருந்து தெறித்து அகன்றது. துரியோதனனும் சகுனியும் பற்றுடனும் நிமித்தத்துடனும் தெறித்தனர். அர்ஜுனன் சீற்றத்துடனும் பீமன்

வஞ்சத்துடனும் தெறித்தனர். குலப்பெருமிதத்துடன் தருமன் தெறிக்க உடன் அறியாமையுடன் பீஷ்மர் சென்றார். அறையெங்கும் கழற்சிகள் தெறித்துக்கிடந்தன. அவன் கையில் திரௌபதியும் கிருஷ்ணனும் பிற இரு காய்களும் மட்டுமே எஞ்சின.

அவன் மிக விரைவாக இரு காய்களையும் போட்டுப்பிடித்தான். இறுதியாக திரௌபதி தெறித்துவிலக அவன் கையில் கிருஷ்ணனும் ஒரு காயுமாக நின்றான். இரு கைகளிலாக அவற்றைப் பிடித்தான். வலக்கையில் கிருஷ்ணனும் இடக்கையில் அறமும் எஞ்சியிருந்தன. மிக விரைவாக அவற்றை வீச அறம் கிருஷ்ணனை அடித்து தெறிக்கச்செய்தது. அதே விரைவில் விழுந்து முண்டனை தெறித்து அறைமூலையில் விழச் செய்தது.

அவன் அலறியபடி எழுந்து முழந்தாளிட்டு அமர்ந்து அறியாதவன்போல அஞ்சியவன்போல நோக்கினான். பம்பரம்போல அந்தக் காய் சுழன்றுகொண்டே இருந்தது. அவன் மெல்ல குனிந்து அதை தொடப்போனான். அவனை மீண்டும் அது தூக்கி இன்னொரு மூலையில் எறிந்தது. அவன் சுழன்றெழுந்து அதை நோக்கிக்கொண்டிருந்தான். சுழன்று மெல்ல அது அசைவழிந்தது.

முண்டன் பெருமூச்சுடன் தருமனை நோக்கி “அது என்ன சொல், அரசே?” என்றான். “அறியேன்... விழிதொடர முடியாத விரைவு” என்றார் தருமன். “அது ஒரு சொல், அவ்வளவே” என்றபின் அவன் குனிந்து அந்தக் காய்களைப் பொறுக்கி தன் கூடையில் வைக்கத்தொடங்கினான். அவர்கள் அமைதியாக அவனை நோக்கிக்கொண்டிருந்தனர். தருமன் பெருமூச்சுடன் மெல்ல அசைந்து அமர்ந்தார். அனைவரும் அறியாது திரும்பி

அவரை நோக்கினர். தருமன் “நிலைகுலையச் செய்துவிட்டான்” என்றார். “நம் அச்சங்களுடனும் ஐயங்களுடனும் விளையாடுகிறான்.”

“அனைத்து ஆடல்களும் அப்படிப்பட்டவைதானே?” என்றான் சகதேவன். திரௌபதி அசைய அவர்கள் திரும்பி அவளை நோக்கினர். அவள் “இரண்டாமவர்” என்றாள். “எங்கே?” என்று தருமன் திரும்பினார். வாயிலில் நிழலசைவாக பீமன் தெரிந்தான். தருமன் முகம் மலர்ந்து எழுந்து “வருக, மந்தா... உன்னைத்தான் காலைமுதலே தேடிக்கொண்டிருந்தேன்” என்றார். “ஆம், நான் அதை உணர்ந்தேன்” என்று அவன் சொன்னான். “எப்போது வந்தீர்கள், மூத்தவரே? முண்டன் ஓர் ஆடலை நிகழ்த்திக்கொண்டிருந்தான் சற்று முன்” என்றான் சகதேவன். “ஆம், நான் அதைப் பார்த்தேன்” என்று பீமன் சொன்னான். முண்டன் “எளிய ஆடல். சொற்களை கழற்சிகளுக்கு இட்டு கழற்சிகளைக்கொண்டு சொற்களை ஆட்டுவிக்கலாம்” என்றான்.

“அது உன் கைத்திறன். உன் எண்ணங்களே கையில் நிகழ்கின்றன” என்றான் பீமன். “இல்லை, பேருடலரே. என் எண்ணமோ விழைவோ மட்டுமல்ல அவை. இறுதியாக அவை இந்த காற்றெல்லைக்குள் கழற்சிகள் ஒன்றை ஒன்று அடித்து இயக்கியாகவேண்டும் என்னும் தேவையால் மட்டும்தான் இயக்கப்படுகின்றன. கழற்சிகளின் எடையும் காற்றும் பிற விசைகளும் இணைந்து உருவாகும் நடனம் இது. எந்த நடனமும் இறுதியில் விசைகளின் ஒத்திசைவு மட்டுமே” என்றபின் முண்டன் தன் கழற்சிகளின் கூடையை எடுத்துக்கொண்டு உள்ளே சென்றான்.

“உணவருந்தினீர்களா?” என்று திரௌபதி கேட்டாள். “ஆம்” என்றபடி பீமன் அமர்ந்தான். தருமன் “உன்னிடம் நான் பேசவேண்டும், இளையோனே. இன்றிரவு பிந்திவிட்டது. நாளை காலை இரு” என்றபடி எழுந்தார். அர்ஜுனன் “குரங்குகளின் ஓசை கேட்கவில்லை” என்றான். “நான் தனியாக வர விழைந்தேன்” என்றான் பீமன். சகதேவனும் நகுலனும் எழுந்துகொண்டு “குளிர் தொடங்கிவிட்டது, நாங்கள் அப்பால் சிற்றறையில் தங்கிக்கொள்கிறோம்” என்றபடி சென்றனர். அர்ஜுனன் பீமனிடம் “உங்கள் உள்ளம் அடங்கிவிட்டதா?” என்றான். பீமன் சிரித்து “என் உள்ளம் அலைவுறவில்லை. உங்கள் உள்ளங்கள் அலையடங்குவதற்காகவே காத்திருந்தேன்” என்றான்.

அர்ஜுனன் சற்று சினத்துடன் “நான் அலைவுகொள்ளவில்லை” என்றான். பீமன் “அவ்வண்ணமென்றால் நன்று” என்றபின் மெல்ல சிரித்து “இளையோனே, எண்ணியதை அக்கணமே அவ்வண்ணமே இயற்றும் காட்டாளனுக்கு மட்டுமே உள்ளம் அலைவுறுவதில்லை” என்றான். அர்ஜுனன் எழுந்துகொண்டு “இல்லை, எண்ணத்தை தொகுத்துநோக்கக் கற்ற யோகிக்கும் அது இயலும்” என்றான். பீமன் வெறுமனே நகைக்க அர்ஜுனன் “நன்று, நாளை பார்ப்போம்” என்று வெளியே சென்றான். திரௌபதி அவன் செல்வதை நோக்கியபின் பீமனிடம் திரும்பி “இதைச் சொல்லி அவர்களை வருந்தச்செய்து நீங்கள் அடையப்போவதுதான் என்ன?” என்றாள். பீமன் தலையைச் சிலுப்பி முடியை பின்னுக்குத் தள்ளினான்.

திரௌபதி எழுந்துகொள்ள அவனும் உடன் எழுந்தபடி “ஜயத்ரதனுக்காக விடுத்த விழிநீர் உலர்ந்துவிட்டதா?” என்றான். “இல்லை” என அவள் திரும்பி அவன் விழிகளை நோக்கி

சொன்னாள். “இப்போதும் அவன் அன்னையாகவே என்னை உணர்கிறேன்.” அவன் உரக்க “பெண்கவர வந்த சிறுமகன்… அவன்…” என சொல்லெடுக்க அவள் கைகாட்டி “பலந்தரையை சிறைகொள்வதற்கு முன் அவள் உள்ளத்தை நீங்கள் அறிந்தீர்களா?” என்றாள். அவன் சொல்சிக்கி தடுமாற “அவ்வாறுதான் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள் ஷத்ரியர் அனைவரும். மண்ணையும் பொன்னையும் பெண்ணையும் வென்று பெருமைகொள்ளவே துடிக்கிறீர்கள். அதில் முட்டி மோதி வென்று தருக்குகிறீர்கள். வீழ்ந்து அழிகிறீர்கள்” என்றாள். உதடுகள் கோட “இரண்டுமே வீண்” என்றாள்.

“ஏன், உனக்கு மண்விழைவு இல்லையா?” என்று அவன் சினத்துடன் கேட்டான். “இன்று இல்லை” என்று அவள் சொன்னாள். அவன் மேலும் பேச எண்ணம் குவியாமல் அவளையே நோக்கினான். “உங்கள் களங்களில் களம்பட்டு குருதிசிந்துபவர்களின் அன்னையாக மட்டுமே இன்று உணர்கிறேன்” என்றாள். பீமன் கைகள் செயலற்றுக் கிடக்க அப்படியே நின்றான். அவள் விழிகனிந்து புன்னகைத்து அவன் கைகளைப்பற்றி “வருக!” என்றாள்.

# மாமலர் - 10

**10. வான்மணம்**

பின்னிரவில் தன்னை எழுப்பியது சேக்கையில் தன் இடக்கை உணர்ந்த வெறுமையே என விழித்து சில கணங்களுக்குப் பின்னரே பீமன் அறிந்தான். ஆழ்துயிலிலும் அவன் வலக்கை இயல்பாக நீண்டுசென்று அவளைத் தொட்டு அறிந்து கனவுக்குள் வந்து சொல்லிக்கொண்டிருந்தது. அங்கே அவள்

காட்டுப்பெண்ணாக இருந்தாள். அவள் அரசி என்று மீண்டும் மீண்டும் நினைவுறுத்தியது கை. அவள் கிடந்த இடத்தின் மரவுரிக்குழியை துழாவி திகைத்து கை கொண்ட அசைவே புற உலகென அவனுள் வந்து உலைந்தது. எழுந்தவன் அரையிருளில் அச்சிற்றறையைச் சுற்றி நோக்கியபோதுகூட வலக்கை அவ்விடத்தை தொட்டுக்கொண்டிருந்தது.

எழுந்து ஆடையை எடுத்து சுற்றிக்கொண்டு வாயிலை பார்த்தான். மூங்கில்படல் சற்றே திறந்திருக்க, வாழைத்தண்டென வெளிறிய வானம் நின்றிருந்தது. பறவைக்குரல் ஒன்று குழறிக்கொண்டிருக்க காற்று குளிர்ந்த பெருக்கென அறைக்குள் வந்து சுழன்றது. அவள் ஆடை அப்பால் சிறுமேடையில் மெல்ல அசைந்துகொண்டிருந்தது. என்ன என்றறியாது எழுந்த பதற்றத்தை அவனே சற்று விலகிநின்று வியந்தபடி கதவை திறந்தான்.

மஞ்சத்தறையின் வெளிவிளிம்பிலோ அடுமனைக்குச் செல்லும் பாலத்திலோ அடுமனை குடில்விளிம்புகளிலோ அவள் இல்லையென்பதை சில கணங்களில் உணர்ந்தான். தன் உடல் முழுக்க பரவிய அச்சத்தை மூச்சை இழுத்துவிட்டு அமைதிகொள்ளச்செய்ய முயன்றான். எடைமிக்க காலடிகளுடன் உட்கூடத்திற்கு வந்தபோது அப்பதற்றம் உடலிலிருந்து விலகி உள்ளிறங்கி உள்ளம் முழுக்க நிறைந்திருந்தது. உதடுகளை இறுக்கி அவற்றை சிறை கட்டினான். எவரையும் எழுப்பலாகாது என்ற எண்ணத்துடன் மெல்ல காலடி வைத்து குடில் முகப்புக்கு வந்து கீழே பார்த்தான்.

முதல் விழியோட்டலிலேயே தோட்டத்தில் மலர்ச்செடிகளுக்கு நடுவில் அவள் இருப்பதை பார்த்துவிட்டான். அனைத்துச்

சுருள்விற்களும் இறுக்கமிழந்து நெகிழ உடல் எளிதாகியது. நீள்மூச்சுகளாக விட்டபடி தூண் சாய்ந்து அவளை நோக்கிநின்றான். கவிழ்த்திட்ட கூடையொன்றில் அமர்ந்து முழங்கால்மேல் கைவைத்து கைகளில் தாடையைத் தாங்கியபடி தொடுவானைப் பார்த்து அமர்ந்திருந்த திரௌபதியின் முகம் வானின் மெல்லிய ஒளியில் எண்ணெய்ப் பூச்சு பெற்ற கருங்கற்சிலையென தெரிந்தது. நீள்குழல் முன்னெடுத்து மடியில் போடப்பட்டிருந்தது. அவளுக்கு சற்று அப்பால் வேலித்தடி மீது நான்கு பெருங்குரங்குகள் அவளைப் பார்த்தபடி காவலென அமர்ந்திருந்தன. மரக்கிளைகளுக்கு மேல் மேலும் பல குரங்குகள் அவளை நோக்கி வால்தொங்க துயில்பவைபோல தொய்ந்தும் அவ்வப்போது சிறுசெவி அசைத்தும் அமர்ந்திருந்தன.

அவை இருப்பதை அறியாதவண்ணம் அவள் தனக்குள் மூழ்கியிருந்தது தெரிந்தது. அருகே செல்வதா மீண்டும் மஞ்சத்திற்கே திரும்பிவிடலாமா என்று எண்ணினான். எம்முடிவும் எடுக்காமல் உடலை அசைத்தபோது அதுவே படிகளை நாடிச்சென்றது. தான் இறங்கும் ஒலி கேட்டு அவள் திரும்பிப்பார்ப்பாள் என்று எதிர்பார்த்தான். ஆனால் முற்றத்தில் இறங்கி பாத்திகளுக்கு நடுவே இடப்பட்ட சிறுபாதை வழியாக நடந்தபோதுகூட அவள் அவனை அறிந்ததாகத் தெரியவில்லை.



அத்தனை குரங்குகளும் முதலிலேயே அவனைப் பார்த்து செவிகோட்டி காட்டிவிட்டிருந்தன. அவன் அணுகுவதை உணர்ந்ததும் முதற்பெருங்குரங்கின் வால் சற்று வளைந்து அசைந்தது. தன் தலையை அசைத்து அதற்கு அவன் செய்கை காட்டினான். மெல்ல முனகியபடி அது மீண்டும் மரக்கிளையில் உடல் குவித்து அமைந்தது. அடிவயிற்றிலிருந்து சிறு உண்ணியைப் பிடுங்கி பிறைநிலவொளியில் கூர்ந்து

நோக்கியது. அதன் மென்முடிப்பரப்பு குளிரில் சிலிர்த்து இரவின் மெல்லிய ஒளியில் ஊறித்தெரிந்தது.

பீமன் மிக அருகே சென்றுநின்ற பிறகுதான் திரௌபதி அவனை உணர்ந்தாள். இலை விழுந்த சிறு சுனையென உடல் முழுக்க மெல்லிய விதிர்ப்பு எழ நிமிர்ந்து அவனைப் பார்த்து புன்னகைத்தாள். “ஏன் இங்கிருக்கிறாய்?” என்றான். “துயில் கலைந்தது” என்று அவள் சொன்னாள். “உன்னைத் தேடினேன்” என்று அவன் சொன்னான். “நீயில்லாத உணர்வை கை அடைந்தபோது விழித்துக்கொண்டேன்” என்றான். அவள் புன்னகைத்தபோது இருளில் பல்நிரைகளின் ஒளி தெரிந்தது. “அஞ்சிவிட்டீர்களா?” என்றாள். “பதற்றம் கொண்டேன்” என்றபடி அவன் அமர்வதற்காக சுற்றும் முற்றும் நோக்கினான். அப்பால் கிடந்த பிறிதொரு மூங்கில்கூடையை எடுத்துவந்து அவளருகே போட்டு அதில் அமர்ந்து முழங்கால்கள் மேல் கைமுட்டுகளை ஊன்றிக்கொண்டான்.

கைநகங்களை நிரத்தி அவற்றை நோக்கியபடி இயல்பான குரலில் “மீண்டும் எவரேனும் தூக்கிச் சென்றிருப்பார்கள் என்று எண்ணினீர்களா?” என்றாள். அப்போதுதான் தான் அடைந்த எண்ணங்களை அவன் திரும்பிப்பார்த்தான். விந்தை உணர்வுடன் தலையசைத்து “இல்லை. அவ்வெண்ணம் ஒருகணம்கூட எழவில்லை” என்றான். “பிறகு...?” என்று அவள் கேட்டாள். அவன் சற்றுநேரம் சொல்தவித்தபின் “கதவைத் திறந்து நீ வெளியேறுவதை ஒரு கணம் என் உள்ளம் உருவெளித் தோற்றமாக கண்டுவிட்டது” என்றான்.

“வெளியேறுவது என்றால்...” என்று அவள் கேட்டாள். “வெளியேறுவதுதான்... இவை அனைத்திலிருந்தும்” என்றான் பீமன். அவள் நிமிர்ந்து அவனை நோக்கியபோது விழிகளின்

நீர்மை வானின் மெல்லொளியில் துலக்கமாகத் தெரிந்தது. மீண்டும் கைகள் மேல் தாடையை வைத்தபோது வளையல்கள் மெல்லிய ஒலியுடன் ஒருங்குகூடின. அவள் ஆடை சரிந்து மண்ணில் நுனி விழுந்தது. "வெளியேறி எங்கு செல்வது?" என்றாள்.

"வெளியேறும்போது அதை நாம் பெரிதாக எண்ணுவதில்லை. எம்முடிவும் எடுக்காமல் வெளியேறுகிறோம். அல்லது அப்போதைக்கென ஓர் இலக்கை கற்பனை செய்துகொள்கிறோம்" என்றான் பீமன். அவள் புன்னகைத்து "வெளியேறுவது எவ்வளவு பெரிய கனவு, இல்லையா? வெளியேறிவிட முடியும் என்ற நம்பிக்கை, வெளியேறுவதைப் பற்றிய பல வகையான கற்பனைகள், அவற்றினூடாகத்தான் அனைத்தையும் கடந்து வருகிறார்கள் மானுடர்கள்" என்றாள். "ஆம்" என்றபின் அவன் நகைத்து "துணிந்து வெளியேறியவர்கள் அவ்விரு இன்பங்களையும் இழந்துவிடுகிறார்கள். மீண்டும் ஒருமுறை வெளியேறுவதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியே இல்லை" என்றான்.

இரு கன்னங்களிலும் நீள்குழிகள் விழ இதழ்கள் நீள "உங்கள் வழக்கமான கசப்பு" என்றபின் அவள் தலை திருப்பி சூழ மலர்ந்திருந்த மலர்களை நோக்கினாள். அவன் வானை பார்த்தான். விடிய நெடுநேரமிருப்பது தெரிந்தது. விண்மீன்களின் பொருளற்ற பெருக்கு. பெருங்கூட்டமென்றாலும் ஒவ்வொன்றும் தன்னந்தனிமையில் மின்னிக்கொண்டிருந்தன. "புலரி மலர்கள் விரிய இன்னும் பொழுதிருக்கிறது" என்றான். அவள் அதைக் கேட்டதாக தெரியவில்லை. "கருக்கிருட்டு எழும் பொழுது. தென்குளிர் காற்றிலேறவிருக்கிறது." அவள் "ம்" என்றாள். "அதனூடாகத்தான்

மலர்களை விரியச்செய்யும் கந்தர்வர்கள் மண்ணிறங்குகிறார்கள் என்று கதைகள் சொல்கின்றன.”

அவள் கீழிருந்து ஒரு இலையை கையிலெடுத்தாள். அதை விரல்களால் நெருடியும் சுழற்றியும் நோக்கியிருந்தபின் தலைதிருப்பி “நான் ஒரு மலரின் நறுமணத்தை துயிலுக்குள் அறிந்தேன்” என்றாள். “என்ன மலர்?” என்று அவன் கேட்டான். “தெரியவில்லை. கனவுக்குள் அது செண்பகம் போலவோ பாரிஜாதம் போலவோ தோன்றியது. அல்லது அறியாத வேறு ஏதோ மலர்போல. கனவுக்குள்ளே பாரிஜாதம் என்று முதலில் எண்ணியதும், செண்பகமா என்று வியந்ததும் நினைவிலிருக்கிறது” என்று அவள் சொன்னாள்.

“கனவிலிருந்து ஒரு நறுமணத்தை மீட்டெடுப்பது எளிதல்ல” என்றான் பீமன். “எண்ணங்களைக்கூட தொகுத்துக்கொள்ளலாம்.” திரௌபதி “ஆனால் விழித்துக்கொண்டு எழுந்தமர்ந்தபோதும் ஆடை தேடி அணிந்துகொண்டபோதும்கூட அந்த நறுமணத்தை முகர்ந்துகொண்டிருந்தேன்” என்றாள். “விழித்த பிறகும் கனவு நீடிப்பதுண்டு” என்றான் பீமன். “அவ்வாறல்ல… அது வெறும் கனவல்ல. நான் துயின்றுகொண்டிருந்தபோது மிக அருகே அந்த மணம் வந்திருக்கிறது… உண்மையிலேயே” என்றாள்.

பீமன் நகைத்து “கல்யாண சௌகந்திகம் என்றொரு மலரைப்பற்றி சூதர்கள் பாடுவதுண்டு. கன்னியரின் துயிலில் மட்டுமே மணம் பரப்பும் தேவமலர். மூன்றாம் விண்ணில் கந்தர்வர்களின் உலகின் கன்னிமூலையில் அம்மலர் பூத்த மரம் நின்றிருக்கிறது. அதன் மலர்களில் ஒன்று பின்னிரவுப்பொழுதில் கந்தர்வர் மண்ணிலிறங்கும்போது அரிதாக தானும் நழுவி மண்ணில் உதிர்கிறது. அதைச் சிலர்

எரிவிண்மீன் என காணக்கூடும். எரிவிண்மீன் சிவந்த நிறம்கொண்டது. கல்யாண சௌகந்திகம் வெண்ணிறமானது” என்றான்.

“இளமையில் என் செவிலி அதை சொல்லியிருக்கிறாள்” என்றாள் திரௌபதி. “அந்த நறுமணம் அது விழும் இடத்தில் இருக்கும் கன்னியரின் கனவுக்குள் எழும். அவர்களை அது காதலில் அகம் ஒளிரச்செய்யும். விழித்தபின் பிச்சிகளாக்கும். சூழ்ந்திருக்கும் அனைத்தையும் வெறுக்க வைக்கும். உடலுருகி விழிகுழிந்து வாய்உலர்ந்து நோய்கொள்வார்கள். அறியாத ஒன்றை மட்டுமே எண்ணி எண்ணி தவமிருப்பார்கள். கல்யாண சௌகந்திகத்தின் மணம்பெற்ற பெண் மானுட ஆண்களை விரும்புவதில்லை. அவள் உடலுருகி அழகிழந்துகொண்டே இருப்பாள். ஆனால் பின்னிரவின் ஒளியில் பேரழகியாவாள். அப்போது அவ்வழி செல்லும் கந்தர்வர்கள் அவளை ஒரு மலரென மணம்பெற்று அருகணைகிறார்கள். அழகனாகிய கந்தர்வன் ஒருவன் வந்து அவள் கைபற்றி அழைத்துச் செல்வான்” என்றான் பீமன்.

“அரிய கதை” என்றாள் திரௌபதி. பீமன் மெல்ல நகைத்து “கல்யாண சௌகந்திகத்தின் மணத்தை முதல் முறையாக அன்னையொருத்தி பெற்றிருக்கிறாள்” என்றான். சில கணங்கள் அவள் ஒன்றும் சொல்லவில்லை. அவனுடைய நகைப்பு அவளுக்கு சென்று சேரவில்லை என்பதுபோல் நீர்த்துளியென அசைவிலாது ததும்பும் முகத்துடன் குனிந்து மலர்களை நோக்கிக்கொண்டிருந்தாள். “என்ன...?” என்றான் பீமன். “தெரியவில்லை. என்னை நான் அன்னையென்று உணர்கிறேனா, இல்லை கன்னியென்றா, சிறுமியென்றா? ஒவ்வொரு தருணத்திலும் ஒவ்வொரு வகை என்றே

சொல்லமுடிகிறது. இன்ன தருணத்தில் இவ்வாறு என்று முன்பொருபோதும் சொல்லிவிடவும் கூடுவதில்லை" என்றாள்.

"நான் சொல்லவா?" என்றான் பீமன். "நேற்றிரவு உன்னை அன்னை என்று என்னிடம் சொன்னாய். மூதன்னை என எண்ணிக்கொண்டு துயின்றாய். உன்னுள் வாழும் கன்னி அதனால் சீண்டப்பட்டாள். கல்யாண சௌகந்திகத்தை கனவில் வரவழைத்தாள்." திரௌபதி சிறு சீற்றத்துடன் தலைதிருப்பி "ஏன்? அன்னை என்பதில் என்ன குறை?" என்றாள். "அது முதுமையும்கூட அல்லவா?" என்றான் பீமன். "அழகியர் அஞ்சுவது முதுமையை மட்டும்தான்." அவள் தரையிலிருந்த ஒரு சுள்ளியை எடுத்து பூழி மண்ணில் எதையோ வரைந்தபடி தன் எண்ணங்களைத் தொடர்ந்தவளாக அமர்ந்திருந்தாள். பீமன் மீண்டும் அவள் தன்முன் இருந்து மறைந்துவிட்டதைப்போல உணர்ந்தான். அவளைத் தக்கவைக்கவே அவன் பேசிக்கொண்டிருந்தான். மீண்டும் ஒரு பேச்சைத் தொடங்க எண்ணி ஆனால் எதைப்பற்றி என தெளிவிலாமல் எண்ணம் அலைய அவளை நோக்கிக்கொண்டிருந்தான்.

புது எண்ணம் எழுந்ததுபோல் முகம் தூக்கி, முகத்தில் நிழலுடன் சரிந்து ஆடிய குழல்கற்றையை விரல்களால் எடுத்து செவிக்குப்பின் செருகியபடி, விரிந்த விழிகளில் ஒளி தெரிய திரௌபதி அவனை ஏறிட்டாள். "உண்மையிலேயே அப்படி ஒரு மலர் எங்கேனும் இருக்கக்கூடுமா என்ன?" என்றாள். அவள் அத்தனை நேரம் அதைத்தான் எண்ணிக்கொண்டிருக்கிறாளா என எண்ணி உள்ளூர புன்னகைத்தபடி பீமன் "இருந்தால் அதை உனக்கு நான் கொண்டுவருவேன்" என்றான். "விளையாட்டல்ல, அப்படி ஒரு மலரில்லாமல் புராணங்களில் அது எவ்வாறு சொல்லப்பட்டிருக்கும்?" என்றாள். "புராணங்கள் அப்படி

பல்லாயிரம் கதைகளை சொல்கின்றன, அரசி” என்று அவன் சொன்னான்.

அவள் இல்லையென்பதுபோல் தலையசைத்தாள். “ஆழியும் சங்கும் கதையும் மலருமேந்தி விண்ணில் ஒருவன் நின்றிருக்கிறான் என்றால் அது தொல்கதை மட்டும்தான். ஆனால் தொல்கதையால் அப்படி உருவமளிக்கப்பட்ட ஒன்று அவர்களால் உணரப்பட்டிருக்கிறது என்பதே அதன் மெய்” என்றாள். அவளில் எழுந்த அகவிசை அவனை குழப்பம் கொள்ளச்செய்தது. “என்ன சொல்ல வருகிறாய்?” என்று கேட்டான். “கல்யாண சௌகந்திகம் என்றுணரப்பட்டது எது?” என்றாள். பீமன் “கனவு” என்றான். முடிந்தவரை குரலை தட்டையாக ஒலிக்கவைத்து “இளமையில் இவையனைத்திற்கும் அப்பால் என்றுதான் உள்ளம் எழுகிறது. அவ்வெழுச்சி வெளியுலகை முட்டித் திரும்பி வருகையில் உள் நிறைகிறது. கனவுக்குள் செல்லத்தான் முடிவற்ற தொலைவு இருக்கிறதே! ஆண்கள் அவர்கள் வெல்லவிருக்கும் உலகை கனவு காண்கிறார்கள். பெரும்புகழை எண்ணி ஏங்குகிறார்கள். பெண்கள் கொள்ளும் கனவும் ஏக்கமும் இப்படி ஒரு மலராக உள்மலர்ந்திருக்கலாம்” என்றான்.

“அதைத்தான் நான் கேட்க விரும்புகிறேன்” என்றாள் அவள். “அது எது?” பீமன் குரலை எளிமையாகவே ஒலிக்கவிட்டபடி “அதை நான் எப்படி சொல்ல முடியும்? நான் பெண்ணல்ல” என்றான். அவள் சில கணங்கள் குனிந்து தரையை கீறிக்கொண்டிருந்தபின் மெல்லிய குரலில் “இரண்டாமவரே, நான் என் அறியா இளமையை இப்போது எண்ணிக்கொண்டேன்” என்றாள். பீமன் “தன் சிற்றிளமையை எண்ணி விடியலில் விழித்துக்கொள்ளாத பெண் எவளும்

புவியில் இல்லை என்று நினைக்கிறேன்” என்றான். “ஆம், பெண் வாழ்க்கை என்பது சிறுமியென்றிருக்கையில் அவள் பூண்ட வண்ணங்களும் சிறகுகளும் ஒவ்வொன்றாக உதிர்வது மட்டும்தான் என்று விறலியர் பாடலொன்று சொல்கிறது” என்றாள்.

அவளுள் எழுந்த எண்ணங்கள் அவள் உடலை மெல்ல அதிர வைப்பதை அரையிருளிலேயே அவன் கண்டான். “நீ அரண்மனை மகளிர்கோட்டத்திற்குள் வாழ்ந்த இளவரசி. சிறகுகள் அந்தக் கட்டடங்களுக்குள்ளேயே எல்லை வகுக்கப்பட்டவை” என்றான். “ஆம். ஆனால் என் தந்தையை நான் மிக அணுக்கமாக உணர்ந்த நாட்கள் அவை. அன்றெல்லாம் விழித்திருக்கும் பொழுதெல்லாம் அவரை தொட்டுக்கொண்டிருக்க விழைவேன். இளங்குழந்தையாக அவர் கால்களைப் பற்றுவதற்காக தவழ்ந்து சென்றதை நினைவுகூர்கிறேன். அரண்மனைக்குள் அவர் அணிந்திருக்கும் பொன்னூல் பின்னிய பாதக்குறடுகளையும் முழங்கால்வரை வந்திருக்கும் அரசப்பட்டாடையின் பொன்வண்ண மடிப்புகளையும் என்னால் மிக அணுக்கமென இப்போது பார்க்க முடிகிறது. கால் பற்றி எழுந்து நிற்கையில் அவர் முழங்கால் அளவுக்கே நான் இருந்தேன் என்பதே இப்போது தெரிகிறது.”

கனவை கண்முன் பார்த்தபடி சொல்வதுபோல அவள் பேசினாள். “என் இடையின் இரு பக்கமும் பதியும் அவரது காய்த்துப்போன பெரிய விரல்களின் தொடுகையை எத்தனையோ முறை கனவுகளில் மீட்டுக்கொண்டிருக்கிறேன். உரக்க நகைத்தபடி என்னைத் தூக்கி காற்றில் வீசிப்பிடித்து கூச்சலிடுவார். ‘உலகின் அரசி! உலகின் அரசி!’ என்பார். என்னை எப்போதும் பேரரசி என்றே அவர் சொல்லியிருக்கிறார். பின்னர்

அனைவருமே அதை சொல்லத்தொடங்கினர். பிறிதொன்றிலாது அவ்வாறு நான் என்னை உணர்ந்தது அதனூடாகவே.”

“சிறுமகவென அவர் கைகளில் கால்களும் கைகளும் வீசி பறந்துகொண்டிருப்பேன். குனிந்து அவரது ஒளிரும் விழிகளையும் கலைந்து காற்றில் அலையும் குழல்களையும் முறுக்கி மேல்நோக்கிய மீசையையும் மின்னும் பற்களையும் பார்த்து எம்பிக் குதிப்பேன். அவரது தோள்களில் அமர்ந்து தலைமயிரைப் பற்றிஉலுக்கி விரைந்து செல் விரைந்து செல் புரவியே என்று கூச்சலிடுவேன். சிற்றாடை அணியும் வயது வரும்வரை அவர் தோள்களில் நான் அமர்ந்திருப்பதுண்டு. புலரியில் செவிலியின் அருகிலிருந்து எழுந்து பீடத்தை இழுத்திட்டு தாழ்திறந்து வெளியேறி இடைநாழிகளில் நடந்து தந்தையின் மஞ்சத்தறையை அடைவேன். காவலன் என்னை தடுப்பதில்லை. கதவைத் திறந்து உள்ளே சென்று அவரது போர்வைக்குள் படுத்துக்கொள்வேன். மார்பிலும் வயிற்றிலும் இருந்த மென்மயிர்களுக்குள் முகம் புதைப்பேன். தோள்களிலிருந்து இறங்கி கைகளுக்கு வரும் பெருநரம்பில் சுட்டுவிரலோட்டுவேன். மணிக்கட்டில் அந்நரம்புகளை அழுத்தி யாழ் மீட்டுவேன். அந்த இளவெம்மைக்குள் துயின்றதுபோல் பிறகெப்போதும் இன்துயிலை நான் அறிந்ததில்லை.”

அவன் அவளுக்குள் அணங்கு ஒன்று புகுந்துகொண்டதா என எண்ணி புன்னகைத்தான். ஆனால் பிறிதொருத்தியாக மாறி பேசத்தொடங்குவது பெண்களின் இயல்பு என்று தோன்றியது. பகடைக்காய்களென புரள விழைகிறார்கள். அதனூடாக ஆர்வத்தை தங்கள் மேல் குவிக்கிறார்கள். “இன்று எண்ணியபோது எந்தையன்றி பிற ஆண் எவரும் என் நெஞ்சைத் தொட்டுள்ளாரா என்றே ஐயுற்றேன்” என்றாள்

திரௌபதி. பீமன் தன் பேருடலை சற்று அசைத்து “நன்று, இதைச் சொல்லாத பெண்கள் அரிதாகவே இருப்பார்கள் என்று எண்ணுகிறேன். இதைச் சொல்ல வாய்ப்பில்லாத வாழ்வமைந்த பெண்கள் பேரளிக்குரியவர்கள். பின் என்ன?” என்றபடி எழுந்து கொண்டான்.

அவள் அமர்ந்தபடியே நிமிர்ந்து நோக்கி “நான் சொல்வதை தாங்கள் முழுமையாக கேட்கவில்லை, இரண்டாமவரே” என்றாள். “சொல்!” என்றபின் பீமன் வேறுபக்கம் திரும்பினான். தன் உடல் முழுக்க எழுந்த பொறுமையின்மையின் அசைவை அவனே விரும்பவில்லை. அதை அடக்கும்பொருட்டு உடலை இறுக்கிக்கொண்டபோது அது சினமென தெரிய மீண்டும் தளர வைத்தான். யானையென அவன் உடலில் அசைவு ததும்பிக்கொண்டிருந்தது. கைகளை மார்பில் கட்டிக்கொண்டான். “இம்மலரின் நறுமணத்தை நான் முதலில் அறிந்தது எந்தையின் அணைப்புக்குள் துயிலும் அந்த வயதிலேயேதானா என்று இன்று எண்ணிக் கொண்டேன்” என்றாள்.

“சிறுமியருக்கு இம்மலரின் மணம் தெரியாது என்று தொல்கதைகள் சொல்கின்றன” என்றான் பீமன். அவள் “அன்றே உள்ளத்தில் நான் கன்னியாக இருந்திருக்கலாம்” என்று சொன்னாள். “நான் சிறுமியென இருந்த நாட்களே குறைவு. சிறுமியர் எவருடனும் என்னால் இணைய முடியவில்லை. தந்தையுடன் இருக்கும்பொருட்டு எப்போதும் அரசவையிலேயே இருந்தேன். அங்கிருப்பதை நிறுவும்பொருட்டு அரசுசூழ்தலை கற்றேன். அறிந்தவளென என்னை வெளிப்படுத்திக்கொண்டேன். நான் பாஞ்சாலத்திற்குரியவளல்ல என்றும் உறையிலிருந்து உருவப்படவிருக்கும் வாள் மட்டுமே என்றும்

எண்ணிக்கொண்டிருந்தேன். மெல்லுணர்வுகள் எவையும் என்னில் எழுந்ததாக நினைவுகொள்ளவில்லை.”

“ஆனால் எப்போதோ அந்த நறுமணத்தை நான் அறிந்திருக்கிறேன். விழித்தெழுந்து எண்ணி ஏங்கி அழுதிருக்கிறேன். என் தலையைக் கோதியபடி எந்தை மீண்டும் மீண்டும் ஏன் அழுகிறாய் என்று வினவியதை நினைவுகூர்கிறேன். அப்போது அவரது தொடுகையை வெறுத்து கையைத் தூக்கி விலக்கிவிட்டு உடல் சுருக்கி விசும்பி அழுதேன். மீண்டும் என்னைத் தொடாமல் என்னிடம் குனிந்து அவர் மன்றாடினார். ‘என் அரசியல்லவா? என் குலதெய்வமல்லவா? எனையாளும் விண்ணரசியல்லவா? சொல் தேவி, உனக்கு என்ன வேண்டும்? உன் காலடியில் என் தலையை வைக்கிறேன். உன் காலடியில் இந்நாடு பணியும். என்ன வேண்டும் சொல்? என் அன்னை அல்லவா?’ என்றார். என்னால் ஏதும் சொல்லக் கூடவில்லை.”

“இன்று சொல்லியிருந்தால் என்ன சொல்லியிருப்பேன்? நீங்கள் சிறிதாகிவிட்டீர்கள் தந்தையே என்றா? நீங்கள் அளித்ததன் பேருருவம் எனக்குத் தேவை என்றா? அதுவும் ஓர் எளிமைப்படுத்தல்தான்” என்றாள் திரௌபதி. “இந்த நறுமணத்தை நான் அறிந்தேன் என்று உறுதியாகச் சொல்ல முடியவில்லை. ஆனால் முன்னரே பலமுறை அறிந்துளேன் என்னும் எண்ணத்தை அகற்றமுடியவில்லை.” அவள் கைகளைக் கோத்து அதன் மேல் முகத்தை வைத்துக்கொண்டாள். “நான் விழைவதென்ன? எங்கு செல்லவிருக்கிறேன்? எதன்பொருட்டு உளம்கரைந்து கண்ணீர்விடுகிறேன். இரண்டாமவரே, என்னை நன்கறிந்த

எவரேனும் சொல்லக்கூடும் என்றால் முதன்மையாக தாங்களே."

மெல்லிய படபடப்பை அடைந்தவனாக பீமன் சொன்னான் "நாம் இதைப்பற்றி மேலும் பேச வேண்டியதில்லை, அரசி." அவள் "ஏன்?" என்று கேட்டாள். "இத்தனை ஆழ்ந்து கணவனும் மனைவியும் உளம் பரிமாறிக்கொள்ளலாகாது." அவள் "ஏன்?" என்று புருவம் சுருக்கி மீண்டும் கேட்டாள். "உறவென்பது ஒரு நுண்ணிய நடிப்பு. முன்னோர் முன், குலத்தின் முன், உலகின் முன்... அதற்கப்பால் நாம் யார்?" அவள் "ஏன் ஆணும் பெண்ணுமென இருக்கமுடியாதா?" என்றாள். "முடியும்" என்றான் பீமன். "நீ அரசியன்றி ஒரு காட்டுப்பெண்ணாக இருந்தால். நான் பாண்டவனாக அல்லாமல் இருந்தால்."

அவள் நீள்மூச்சுடன் "உண்மைதான்" என்றாள். "இப்போது இவற்றையெல்லாம் சொல்லும்போதே ஒவ்வொன்றையும் அறியாது நான் நிறம் மாற்றிக்கொண்டதை உணர்கிறேன். இங்கு சொல்லப்படுபவை அனைத்துமே உங்களுக்காகவே சொல்பூண்கின்றன. ஆகவே இவை மெய்யல்ல. மெய்போலும்மே, மெய்போலும்மே..." பின்னர் சிறிய சொல்லின்மை வழியாக தன்னுள் சொல்சேர்த்துக்கொண்டு "மடை வழியாக வெளிவருகையில் நீர் மடை வடிவம் கொள்கிறது என்று விறலியர் பாடல் உண்டு. ஆனால் இவ்வண்ணமேனும் இதைச் சொல்லவில்லை என்றால் என் நெஞ்சு சற்றேனும் அதை கடக்கமுடியாது, பாண்டவரே" என்றாள்.

பீமன் உளம் நெகிழ்ந்து காற்றில் எழுந்து பறந்த குழலை கைகளால் அள்ளி தோளுக்குமேல் போட்டபடி மீண்டும் மூங்கில் கூடையில் அமர்ந்தான். "இது முறை. நாம் இருவரும்

கொள்ளும் அணிகளையும் ஆடைகளையும் மாற்றுமுகங்களையும் கலைக்காமல் அமர்ந்து அவ்வெல்லைக்குள் பேசிக்கொள்வோம்” என்றான். அவள் முகம் மலர்ந்தது அரையிருளிலும் தெரிந்தது. உடல் முறுக்கவிழ கால்களை எளிதாக நீட்டிக்கொண்டு “ஆம்” என்றாள். “இதை ஓர் இனிய ஆடலென்றே கொள்வோம். நாளை புலரிக்குப்பின் பொருளேதும் கொள்ளாத சொற்கள். இவ்விரவைக் கடப்பதற்குரிய உளநடிப்புகள்.” பீமன் “ஆம்” என்று புன்னகைத்தான்.

# மாமலர் - 11

**11. தொலைமலர்**

“எல்லைக்குள் நிற்றல்... அந்தச் சொற்றொடர் மிக பாதுகாப்பாக உணரச்செய்கிறது” என்றாள் திரௌபதி. “அரசுசூழ்தலை கற்றநாள் முதல் நான் உணர்ந்த ஒன்று. மானுடர் பேசிக் கொள்வதனைத்துமே எல்லைக்குட்பட்டவைதான். சொல்லுக்கு முன்னரே இருவரும் ஆடும் களம் எல்லைகொண்டுவிடுகிறது. அவ்வெல்லைதான் அனைத்துச் சொற்களுக்கும் பொருள்விரிவை அளிக்கிறது. எல்லை குறுகும்தோறும் சொற்கள் எடைமிகுந்து தெய்வச்சிலைகள்போல் அலகிலாத ஆழம்கொண்டு அச்சுறுத்தத் தொடங்கிவிடுகின்றன. சொற்களைக் கொண்டு ஒரு நுண்ணிய களமாடலைத்தான் அரசவைகளில் நிகழ்த்துகிறோம்.” பீமன் “எல்லா இடமும் எங்குமிருக்கும் அரசனின் அவைதான் என்பர் முனிவர்” என்று நகைத்தான். அவளும் உடன் நகைத்தாள்.

அதன்பின் அவள் சொற்கள் மேலும் இயல்பாக ஒலிக்கலாயின. “காம்பில்யத்தில் வாழ்கையில் பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தினியாக அல்லாது வேறெவ்வகையிலும் நான் என்னை உணரவில்லை. அதற்கென்று ஒவ்வொரு நாளும் திட்டமிட்டேன். நான் கற்றதெல்லாம் அதற்காகவே. நிகரற்ற பெருநகரமொன்றை எனக்கென உருவகித்தேன். அதை சூத்ராகிகளுடன் பல ஆண்டுகாலம் சூழ்ந்து வரைபடத்தில் எழுப்பினேன். அக்கனவை கையில் வைத்தபடி என் எண்ணங்களுக்கு ஊர்தியாகும் கணவனைக் குறித்து மட்டுமே எண்ணிக் கொண்டிருந்தேன். அவன் எனக்கு இணையாக பாரதவர்ஷத்தின் அரியணை அமர்பவன். பிறிதொன்றையும் நான் எண்ணவில்லை என்று நானே நம்பியிருந்தேன். அவ்வாறல்ல என்று நானறிந்த ஒரு தருணம் வந்தது.”

பீமன் “ஆம், புரிகிறது.” என்றான். அவள் அதை சொல்லவேண்டாமே என அவன் எண்ணியது உடலில் ஒரு மிகமெல்லிய அசைவென வெளிப்பட்டது. ஆனால் அவள் தடையின்றி சொல்லூறும் உளம்கொண்டிருந்தாள். “பெண்ணென்று மட்டும் நின்றிருக்கும் ஒரு தருணம். அதனுடன் இந்த மணம் இணைந்துகொண்டுள்ளது என இப்போது உணர்கிறேன். இதை அப்போது நினைவுகூர்ந்தேனா என்று தெரியவில்லை. ஆனால் உள்ளத்தில் இணைந்துவிட்டிருப்பது பின்னர் ஒருநாள் தெரிந்தது. உள்ளே ஒரு சிலந்தி ஒவ்வொன்றையும் தாவித்தாவி மெல்லிய நூலால் இணைத்துக்கொண்டே இருக்கிறது” என்றாள். மீண்டும் வெளியே விழிநோக்க “இத்தனை நாட்களுக்குப்பின் மீண்டும் அந்த மணம் இங்கு வந்துள்ளது. இப்போது அந்த மணத்தை என் மூக்கு உண்மையிலேயே உணர்கிறது. இங்கெங்கோ விழுந்து கிடக்கிறது அந்த மலர்” என்றாள்.

“இங்கா?” என்றான் பீமன். “ஆம், அந்த மணத்தை தேடித்தான் இங்கு வந்தேன். இங்கு அமர்ந்தபிறகு மிகத்தெளிவாகவே உணர்கிறேன். இங்குதான் விழுந்துகிடக்கிறது அந்த நறுமணம்.” பீமன் சுற்றிலும் நோக்கியபடி “கல்யாண சௌகந்திகமா?” என குரலில் ஏளனம் எழ கேட்டான். அவள் தலையசைத்தாள். அவன் எழுந்து “சரி, இங்குள்ள அனைத்து உதிர்ந்த மலர்களையும் சேர்த்து தருகிறேன். அந்த மலரை எடுத்து எனக்குக் காட்டு” என்றான். “இச்சோலையில் இப்போது பல்லாயிரம் மலர்கள் விரிந்து உதிர்ந்துள்ளன. அத்தனை உதிர்ந்த மலர்கள் நடுவே அந்த மலரை என்னால் பிரித்தறிய முடியாது” என்றாள் அவள். “ஏன்?” என்றான். “தெரியவில்லை, எந்த மலரை முகர்ந்தாலும் அந்த மலரின் மணமே இப்போது தெரியும்.” அவன் “பிறகெப்படி அதை கண்டடைவது?” என்றான்.

அவள் இதழ்கள் நடுவே பல்வரிசையின் கீழ்நுனி தெரிய புன்னகைத்து “என் மூக்கு அறியும் நறுமணத்தை நீங்களும் உணர்ந்தால் போதும்” என்றாள். அதே புன்னகையுடன் அவன் “அதற்கு உன் கனவுக்குள் நான் வரவேண்டும்” என்றான். “அதை உங்களுக்குள் எழுப்ப முடியுமென்று எண்ணித்தான் இத்தனை சொற்கள். இத்தகைய நேரடி உணர்வுகளைச் சொல்வதில் அணிகளும் உவமைகளும் எத்தனை பொருளற்றவை என தோன்றுகிறது. இதற்கு அப்பால் சொல்வதற்கு ஒன்றுமில்லை. நான் இந்த நறுமணத்தை, அல்லது இதைப்போன்ற எதையோ ஒன்றை, எங்கெல்லாம் அறிந்தேன் என்று மட்டும் சொல்கிறேன்.” பீமன் மீண்டும் அமர்ந்து “சொல்!” என்றான். என்ன விளையாட்டு இது என ஒரு கணம் சலிப்புற்றான். எழுந்து காட்டுக்குள் சென்றுவிடவேண்டுமென அகம் விழைய அதை கடந்தான். அவள் சொல்லப்போவதை தான் விரும்பமுடியாதென்று முன்னரே உள்ளம் அறிந்தது எப்படி?

“நீங்கள் விழையாததை சொல்லாமலிருக்கலாமென எண்ணினேன். ஆனால் அதைச் சொல்லவே என் நெஞ்சு தாவுகிறது” என்றாள். பீமன் “ம்” என்றான். “எந்தப் பெண்ணும் கணவனுக்கு அதன் ஒரு சிறுநுனியை காட்டியிருப்பாள், இல்லையா?” என்றாள் அவள். அறியாது அவள் விழிகளில் விழிதொட்டு “என்ன?” என்றான் பீமன். உடனே புரிந்துகொண்டு அப்பால் நோக்கினான். ஆனால் அவன் உடல் விழியாயிற்று. “அது அவள் அவனைக் கடந்து செல்லும் ஒரு தருணம். தன்னில் ஒன்று எப்போதும் மிஞ்சியிருக்கிறது என்று சொல்லவே பெண் விழைவாள்” என்று அவள் சொன்னாள். அவன் இவள் தன்னிடம் எதிர்பார்ப்பதென்ன என்று எண்ணினான். அதை தான் அளிக்கலாகாது. ஆனால் அனைத்தையும் அறிந்தும் ஆட உளம்குவியாதவன் தான் என மறுகணம் உணர்ந்தான்.

“என் மணத்தன்னேற்புக்கு முந்தைய நாள் ஐங்குழல் அன்னையரின் ஆலயத்தில் தொழச்சென்றபோது ஒருவரை சந்தித்தேன். நாராயணியின் ஆலயத்தில்.” பீமன் அவள் சொல்வதற்காக விழி செலுத்தி அமர்ந்திருந்தான். “கரிய ஒளிகொண்ட நெடிய உடல். மார்பில் கட்டப்பட்ட கைகள். இளநகைப்பின் ஒளிகொண்ட கண்கள். அருகே பேருடலரான தோழர்” என அவள் தொடர்ந்தாள். அவன் புரிந்துகொண்டானா என அவள் ஐயுறுகிறாளா என எண்ணிய பீமன் “ஆம்” என்றான். அவள் அக்குரலை கேட்டதாகவே தெரியவில்லை. “பின்னர் ஒருவனை வாளுருவி வெட்டும் பொருட்டு சென்றேன். அன்றுமின்றும் அவனுக்கிணையாக நான் எவரையும் வெறுத்ததில்லை. ஆனால் எந்நிலையிலும் அவனை என்னால் கொல்ல முடியாதென்று அறிந்து உடைந்து அமர்ந்து அழுதேன்.

இறுதி விம்மலுடன் அவ்வழுகை முடிந்தபோது உள்ளம் மலர்ந்து அந்த மணத்தை உணர்ந்தேன்."

பீமன் தலையசைத்தான். "அவன் என் களித்தோழன், இரண்டாமவரே" என்றாள். "அவன் மைந்தன் அவ்வடிவில் பிறந்து என்னுடன் ஆடத்தொடங்கியதும் அவன் மேலும் இனியவனாக ஆனான்." நிலையற்று ஒன்றோடொன்று பின்னி உரசிக்கொண்டிருந்த அவள் விரல்கள் நடக்கும் தேளின் கால்களும் கொடுக்குகளும் போல அசைவதாக அவன் நினைத்தான். அந்த எண்ணத்தை உணர்ந்ததும் புன்னகை எழுந்தது. கவிஞர்களைப்போல நல்ல ஒப்பணிகள் தனக்கு தோன்றவே போவதில்லை போலும். அவன் முகத்தில் விரியவில்லை என்றாலும் அப்புன்னகையை உணர்ந்து அவள் திரும்பி நோக்கினாள். பின்னர் இயல்பாக அவ்வுணர்ச்சிகளுக்குள் இழுக்கப்பட்டு பேசலானாள்.

"பின்னர் ஒருமுறை மூத்தோரும் கற்றோரும் அரசரும் குலத்தோரும் கூடிய அவைமன்றில் நான் நின்றேன். நான் சூடிய ஆணவங்கள் அனைத்தும் களையப்பட்டு சிறுத்து வெறுமைகொண்டேன். பாண்டவரே, அன்று என் உள்ளம் வேறெதையும் எண்ணவில்லை. என் உடல் என் உடல் என்றே பதறியது. இங்கு பெண் என்பவள் வெறும் உடல் மட்டுமே என்று அன்று உணர்ந்தேன். புடவியில் எந்த ஆணும் அவளுக்கு காப்பல்ல என்று அப்போது அறிந்தேன்." அவள் குரல் அத்தனை இயல்பாக ஒலித்தமையால் அவன் திரும்பி அவளை நோக்கினான். அவள் கன்னவளைவுகளில் கழுத்தின் நெகிழ்கோட்டில் வானொளி விளிம்பு தெரிந்தது. ஒரு சொல்விளையாட்டினூடாக அவள் வெளிப்பட இடமளித்துவிட்டோம் என அவன் அறிந்தான்.

“அவ்வுடைவு எளிதல்ல. எப்பெண்ணுக்கும் அது முழு இறப்பே” என்றாள். “எப்படியோ பிறந்த கணம் முதல் ஆணின் அன்புக்கும் கொஞ்சலுக்கும் உரியவளாக, ஆணின் கைகளால் வேலிகட்டி காக்கப்படுபவளாக, ஆணை கொழுகொம்பென பற்றி ஏறுபவளாகத்தான் பெண் இங்கு வளர்கிறாள். பாண்டவரே, அது ஐவரும் இறந்த நாள். திருஷ்டத்யும்னன் இறந்த நாள். துருபதன் இறந்த நாள். ஐந்து மைந்தர்கள் பொருளிழந்த நாள். நெஞ்சில் நிறைந்த ஆழிவண்ணன் மறைந்த நாள். அதிலிருந்து மீள எனக்கு நெடுநாட்களாயிற்று. ஆனால் அவ்வாறு மீண்டபின்னரே நான் என எஞ்சினேன். நான் என நிறைவுடன் உணரலானேன்.”

“இக்காட்டுக்குள் வருவதுவரை என்னுள் நானே ஒடுங்கி புற உலகை முற்றிலும் தவிர்த்து உள்ளோடும் எண்ணங்களை மட்டுமே ஓயாது அளைந்து கொண்டிருந்தேன். சிடுக்கவிழ்க்க முனைந்து சலித்து விரல்கள் மேலும் மேலுமென முடிச்சுகளைப் போடுவதை உணர்ந்து அதை முற்றிலுமாக கைவிட்டேன். எஞ்சியது சமைப்பதும், தூய்மை செய்வதும் மட்டுமே. ஆடைகளைந்து காட்டுச்சுனைகளிலும் ஆறுகளிலும் நீராடுகையில் மட்டுமே புரியாத விடுதலையொன்றை உணர்ந்தேன். எளிய செயல்களில் மூழ்க முடிந்தமை எனக்கு மூதன்னையர் அளித்த அளி. சமையல் என்பது மீண்டும் மீண்டும் ஒன்றே. தூய்மை செய்வது அதனிலும் எளிது. ஆனால் இச்செயல்களினூடாக என்னை நான் மாற்றிக்கொண்டுவிட்டதை மெல்ல அறிந்தேன்.”

“வெறும் அடுமனைப்பெண், பிறிதொன்றுமல்லாது இருத்தல். அவ்விடுதலையை கொண்டாடத் தொடங்கினேன். விழித்தெழுகையில் அன்று எதை சமைப்பது என்பதைப்

பற்றியன்றி பிறிதொன்றையும் எண்ணவேண்டாம் என்றிருக்கும் நிலை. இதுவே நிறைவு. இது என்னை கனியச்செய்யும் என எண்ணியிருந்தேன்” என்றாள் திரௌபதி. “ஆனால் இக்கனவு என்னை மீண்டும் வந்து தொட்டுள்ளது. ஏன் என்று தெரியவில்லை. அனைத்தும் குலைந்துவிட்டன. மீண்டும் ஒரு தொடக்கம் போல.” அவள் குனிந்து நோக்கி “அந்த மலர்… இங்கெங்கோ அது விழுந்து கிடக்கிறது. விண்ணிலிருந்து விழுந்திருக்கிறது” என்றாள்.

“இதுவும் ஒரு உளமயக்குதான், தேவி” என்றான் பீமன். “எளிய அடுமனைப்பெண் என உன்னை ஆக்கிக்கொண்டு நீ அடையும் விடுதலைக்கு ஓர் எல்லை உள்ளது. அவ்வெல்லையை அடைந்தபின் உன் ஆழத்துறையும் ஆணவத்தில் விரல் படுகிறது, அது விழித்துக்கொள்கிறது. இல்லை, நான் வேறு என்கிறது. எல்லைக்கப்பால் பிறிதொன்று என உள்ளம் தேடுகிறது. எளிய மானுடராக இப்புவியில் பிறப்பவர்கள் மட்டுமே எளியராக வாழமுடியும். பிறிதொன்றெனப் பிறந்த எவரும் தங்களை உதிர்க்க முடியாது.”

“மிகச் சிலரால் முடியலாம், அதைத்தான் தவம் என்று சொல்கிறார்கள் போலும். துறந்திறங்குபவர்களில் ஆயிரம் பேர்களில் ஒருவர் மட்டுமே அமர முடிகிறது. அமர்ந்தவர்களில் ஆயிரம் பேர்களில் ஒருவர் மட்டுமே அங்கு நிலைக்க முடிகிறது” என்று பீமன் தொடர்ந்தான். “பார்த்தாயல்லவா…? மூத்தவரும் இளையவனும் தேடிச்சென்று அடைந்தபின் திரும்பிவந்து அமைந்துள்ளார்கள். வென்றதெல்லாம் இப்புவிக்குரியவை என்றால் சென்றதன் பொருள்தான் என்ன?”

அவள் அவன் சொற்களைக் கேட்காமல் தன் உளஒழுக்கை தொடர்ந்து சென்றாள். “அந்த மணம் நான் உங்களுடன்

இருக்கும்போது மட்டும் ஏன் வந்தது? அதைத்தான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். உங்கள் கைகளின் எடை என் மேல் இருப்பதை எப்போதும் விரும்புவேன். இன்று விழித்துக்கொண்ட பின்னும் உங்கள் துயிலோசையுடன் இணைந்தே அந்த மணம் எனக்குத் தெரிந்தது. உங்கள் கையிலிருந்து நழுவி நான் எழுந்தபோது ஒருகணம் அது உங்கள் மணம் என்றுணர்ந்தேன். படிகளில் இறங்கி வரும்போது அந்த மணத்தை நான் முன்பு அறிந்திருக்கிறேன் என்று தோன்றியது. முன்பு எப்போதோ உங்கள் மணமாக அதை அறிந்திருக்கிறேன்.”

“எப்போது என நான் மீளமீள கேட்டுக்கொண்டேன். முன்பு என்னை நீங்கள் காம்பில்யநகரின் தெருக்களினூடாக தேரில் வைத்து இழுத்துச் சென்றபோது? உங்கள் தோளிலேறி நான் கங்கையில் நீந்திக் களித்தபோது...? தெரியவில்லை. அதையெல்லாம் இணைத்துக்கொள்ள விழைகிறேனா? உள்ளத்தை பின்தொடர்வது புகையைப் பற்ற முயல்வதுபோல...” பீமன் “இங்கிருந்து அவற்றை எண்ணிக்கொண்டாயா?” என்றான். “ஆம், ஒவ்வொரு கணமாக எண்ணி கோத்துக்கொண்டேன். ஆனால் என் அறிவுக்குத் தெரிகிறது என் உள்ளாழத்தின் நுண்நெகிழ்வு ஒருபோதும் உங்களுக்கென இருந்ததில்லை. அனைத்தையும் களைந்திட்டு மீறிவந்து களியாடுகையில் ஒரு துணைமட்டுமே நீங்கள்.”

“இன்று உங்களுக்காகவே நிறைந்திருக்கிறேன், பாண்டவரே. நான் அதை எப்படி உங்களுக்கு சொல்வது? எத்தனை சொன்னபிறகும் சொல்லப்படாமல் அங்கேயே இருக்கிறதே?” என்றாள். சட்டென்று அவள் உதடுகளை அழுத்திக்கொண்டு விம்மலை அடக்கினாள். மெல்லிய ஓசை எழ பீமன் அவள்

கைகளை தொட்டான். “நான் என்ன செய்வது, தேவி? நான் அளிப்பதற்கு என்ன உள்ளது? உயிர் எனில் இக்கணம் பிறிதொரு எண்ணமில்லாமல் அதை அளிப்பேன்” என்றான்.

அவள் தன் இருகைகளாலும் அவன் கைகளைப்பற்றி பொத்தி வைத்துக்கொண்டாள். “ஆம், நான் அதை அறிவேன். அன்று சிந்து மன்னனை இழுத்து வந்தபோது பிறர் விழிகள் எதிலும் இல்லாத ஒன்று உங்கள் விழிகளில் இருந்தது. அது பெரும்சினம். பிறிதொன்றுக்குமன்றி எனக்கென மட்டுமே எழுந்த சினம். பாண்டவரே, அக்கணம் நீங்கள் எனக்குரியவரானீர். இனி எனக்கு பிறிதெவரும் கணவர் அல்ல.”

தன் உள்ளம் ஏன் பொங்கியெழவில்லை என அவன் வியந்தான். அத்தனை நேருச்சங்களிலும் அலையடங்கிவிடுகின்றன எண்ணங்கள். அப்பாலென விலகிநின்று நோக்குகின்றது தன்னிலை. “அன்று அவன் பொருட்டு என் உளம் இரங்கியது. ஆனால் இரவு துயில்கையில் உங்கள் விழிகள் மட்டுமே நெஞ்சில் எஞ்சியிருந்தது. அதிலிருந்த அனலை பேருவகையுடன் மீள மீள என் விழிக்குள் தீட்டிக்கொண்டேன். நாட்கணக்கில் ஒருகணம்கூட விடாமல் அதைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன் என்று சொன்னால் ஒருவேளை நம்ப மாட்டீர்கள்.”

நீள்மூச்சுடன் “நெடுங்காலம் ஆயிற்று பாண்டவரே, அப்படி பிறிதொன்றை எண்ணியும் விலக்க முடியாமல் முற்றிலும் இழந்து எண்ணிக்கொண்டிருக்கும் நிலை வாய்த்து” என அவள் சொன்னாள். “ஒருகணத்தில் அத்துன்பத்தை எண்ணிச் சலித்து சினம் கொண்டேன். என்ன இது? மீண்டும் ஒரு துயரை... பெண்போல என்று கசந்து என்னையே கடிந்துகொண்டேன்.

பின்னர் தோன்றியது, பெண்ணென்றும் பேதையென்றும் இருக்கும் நிலை வாய்த்தது நல்லூழல்லவா என்று. எண்ணி கரையவும் நினைந்து விழிநீர் மல்கவும் ஒன்று எஞ்சியிருப்பது மூதன்னையர் கொடைபோலும்.”

பீமன் ஏதோ சொல்ல நாவெடுத்து சொற்களில்லாமல் தலையை மட்டும் அசைத்து “நாம்…” என்றான். அவள் பெருமூச்சுவிட்ட ஓசையில் அவன் சொல் கரைந்தது. மீண்டும் உதடசைய அவள் “போதும், நாம் இதையெல்லாம் பேசவேண்டாம். பேசும்தோறும் எளியவையாகின்றன. இவ்வுலகைச் சார்ந்தவையாகின்றன. இவை இப்படியே மானுடர்க்கரிய பிறிதொரு வெளியில் கிடக்கட்டும். எந்த அறிவாலும் எடுத்து கோக்கப்படாமல் அப்படியே சிதறி பரந்திருக்கட்டும்” என்றாள். “ஆம்” என்று அவன் சொன்னான். அப்பேச்சை முடித்துவிட விரும்பினான்.

அவள் மீண்டும் சுற்றிப்பார்த்து “இப்போது நன்றாக உணர்கிறேன் அந்த மணத்தை” என்றாள். “எத்திசையிலிருந்து…?” என்று அவன் கேட்டான். “அதை சொல்லத் தெரியவில்லை. என்னைச் சூழ்ந்து காற்று வீசும் ஒவ்வொரு திசையிலிருந்தும் வருகிறது. கூர்கையில் அகன்றும் அகல்கையில் கூர்ந்தும் விளையாடுகிறது. உள்ளத்தை குளிர் என சூழ்கிறது. நறுமணம் எத்தனை இனிய நினைவுகளை எழுப்புகிறது என்று எண்ணி வியந்தேன். எங்கெங்கோ நிகழ்ந்து எவ்வண்ணமோ உருமாறிக் கிடக்கும் அத்தனை இனிமைகளையும் ஒரு சரடென கோத்து தனி மாலையாக ஆக்கமுடியுமென்றால் அது நறுமணம் மட்டுமே.” அவள் புன்னகைத்து “நீங்கள் சொன்ன கதையின்படி, இது என் கன்னிமையின் மணம்” என்றாள்.

“நாம் இதை மீண்டும் பேசவேண்டியதில்லை” என்றான் பீமன். “ஆம், நாம் உள்ளே செல்வோம். குளிர் மிகுந்து வருகிறது” என்றபடி திரௌபதி எழுந்தாள். குழலை பின்னுக்கு தூக்கிவிட்டு குனிந்து ஆடையை சீரமைத்தாள். அவ்வசைவுகளில் மீண்டும் அவள் அறிந்த பெண்ணென்றாவதை அவன் உணர்ந்தான். அவன் நோக்கை உணர்ந்து நிமிர்ந்து புன்னகைத்து “செல்வோம்” என்றாள். எடை விலக காற்றில் மெல்ல மிதந்தெழும் பட்டு ஆடைபோல அவள் தோன்றினாள். நெடுநேரம் பேசிமுடித்த பெண்களுக்குரிய உளவிடுதலை உடலில் எழுகிறது என அவன் எண்ணிக்கொண்டான். ஆடிநோக்கி அணிபுனைவதுபோல. சிறுமியர் முதுமகளென்றும் பாடினி என்றும் பேய்மகள் என்றும் ஆடைகொண்டு மாற்றுரு பூண்டு மகிழ்வதுபோல.

அவள் திரும்பி “என்ன?” என்றபோது எதிர்காற்றில் குழல் எழுந்து பறந்தது. கழுத்தைத் திருப்பி அதை அள்ளிச்சுழற்றினாள். அவ்வசைவில் உளம் அதிர்ந்தபோது அவன் அந்த நறுமணத்தை உணர்ந்தான். “ஆம், ஒரு நறுமணம்” என்றான். அவள் “என்ன?” என்றாள். “நீ சொன்ன மணம். நான் இதுவரை அறியாத ஒரு மணம்” என்றபடி அவன் எழுந்தான். “நீ சொன்னது உண்மை. இங்கு ஏதோ மலர் விழுந்திருக்கிறது. காற்றில் வந்து விழுந்திருக்கலாம். அல்லது இக்குரங்குகள் கொண்டு வந்திருக்கலாம்” என்றான்.

அவள் ஐயம்கொண்டு “பாரிஜாதமாக இருக்குமோ?” என்றாள். “இல்லை, ஒருகணம் பாரிஜாதம் என்றே தோன்றியது. ஆனால் அதற்கு இத்தனை எரிமணம் இல்லை. செண்பகம் என்று எண்ணினால் அதுவே தோன்றுகிறது... ஆனால் இது நான் அறிந்திராத மணம்” என்றான் பீமன். “எங்கிருந்து?” என்று அவள்

ஐயம் விலகாத குரலில் கேட்டாள். “அனைத்து திசைகளிலிருந்தும்தான். ஒரு மலரா? ஒரு மலர் எப்படி அனைத்து திசைகளிலிருந்தும் மணமெழுப்ப முடியும்?” அவன் பரபரப்புடன் சுற்றிலும் குனிந்து தேடினான். “என் விழிகளுக்கேதும் தென்படவில்லை... இப்போது அந்த மணம் மறைந்துவிட்டது.” நிமிர்ந்து மூக்கைத்தூக்கி காற்றை ஏற்றான். “என் உளமயக்கு என எண்ணத்தோன்றுகிறது. ஆனால் நான் மிகத்தெளிவாகவே அந்த மணத்தை அறிந்தேன்” என்றான்.

அவள் அவன் கைகளைப் பற்றி தன் நெஞ்சில் வைத்துக்கொண்டாள். “அந்த மணம்தான்... கல்யாண சௌகந்திகம்” என்றாள். அவள் கழுத்தில் ஒரு நரம்பு எழுந்து சிறிய முடிச்சுடன் அசைந்தது. மூச்சுக்குழி பதைத்தது. அவன் நகைத்து “கல்யாண சௌகந்திகத்தின் மணத்தை ஆண்கள் அறியமுடியாது என்று தொல்கதைகள் சொல்கின்றன” என்றான். “முடியும், மெய்க்காதல் கொண்ட ஆண் அறிய முடியும். ஆகவேதான் தாங்கள் அறிந்திருக்கிறீர்கள்.” என்றாள். உருகியதுபோன்ற குரலில் “என் நெஞ்சின் நறுமணத்தை இப்புவியில் தாங்கள் மட்டுமே அறியமுடியும்” என்றாள்.

அவன் அவள் கண்களைப் பார்த்து “ஆம்” என்றான். “பிறிதெவரும் அறியமுடியாது” என அவள் அவனுக்கு மட்டுமே கேட்கும் குரலில் சொன்னாள். “தாங்கள் அறியவில்லை என்பது அவ்வளவு பெரிய தவிப்பை என்னுள் ஏற்படுத்தியது. அறிந்துவிட்டீர்கள் எனும்போது பிறகெப்படி என்று என் உள்ளம் துள்ளியது. தாங்கள் அறியாத ஏதும் என்னுள் இல்லை” என்றாள். பட்டு நலுங்குவதுபோன்ற குரல். தளிர்க்கொத்து அசைவதுபோன்ற குரல். வீணைக்கம்பிமேல் தலைமயிர் இழுபட்டதுபோன்ற குரல். “ஐவரில் நான் மிகக்குறைவாகப்

பேசியவர் நீங்கள். மிக அணுக்கமாக என்னுள் நுழைந்தவர் நீங்கள் மட்டுமே. மாமல்லரே, எனக்கு அந்த நறுமலரை கொண்டு வாருங்கள்” என்றாள்.

“எந்த நறுமலரை?” என்று பீமன் கேட்டான். அதன்பின்னரே அந்த வினாவிலிருந்த பேதைமையை உணர்ந்தான். அவள் அவன் கையை அழுத்தி புன்னகையுடன் “இப்போது நீங்கள் மணம் அறிந்த அந்த நறுமலரை. கல்யாண சௌகந்திகம்” என்றாள். அவன் “என்ன சொல்கிறாய்?” என்றான். “இது ஒரு உளமயக்காக இருக்கலாம். உன் சொற்களால் நானும் உள்ளே வந்திருக்கலாம்.” அவள் “இல்லை, உளமயக்கு இல்லை. உளமயக்கு இத்தனை விழிப்பு நிலையில் எழ வாய்ப்பில்லை. இங்கு ஒரு மலர் மணக்கிறது. எங்கோ அது நின்றுள்ளது. ஏதேனும் பறவை அதை கொண்டுவந்திருக்கலாம். மாருதர்களில் எவரேனும் கொண்டு வந்திருக்கலாம்... அதில் ஒரு மலரை எனக்கு கொண்டு வாருங்கள்” என்றாள்.

எந்த எண்ணமும் இன்றி பீமன் “சரி” என்றான். அவள் அவன் தோளில் மெல்ல தலைசாய்த்து “கொண்டு வாருங்கள், இரண்டாமவரே. அதை என் விடாய் தீர முகர்கிறேன். அதன் பின் உயிர்வாழ வேண்டுமா என்று அப்போது முடிவெடுக்கிறேன்” என்றாள். அவள் முகத்தைப்பற்றி “என்ன இது?” என்றான் அவன் பதற்றத்துடன். அவன் கையைப்பற்றி தன் உடலில் அழுத்திக்கொண்டு புடைத்த புயங்களில் முகம் அமர்த்தி அவள் மெல்ல விம்மினாள். கண்ணின் நீர் அவனைத் தொட்டது. “எனக்கு அந்த மலர் வேண்டும், பாண்டவரே. அந்த மலர் வேண்டும் எனக்கு” என்று சிறுமியைப்போல் தலையை அசைத்து சொன்னாள்.

“நன்று, அப்படி ஒரு மலர் உண்டென்றால் அதை நான் கொண்டுவருகிறேன்” என்று பீமன் சொன்னான். “உண்டு, அது எங்கோ உள்ளது. எனக்கு ஐயமே இல்லை.” பீமன் “அதைக் கொண்டுவந்து உன் குழலில் சூட்டுகிறேன்” என்றான். அவள் அவன் நெஞ்சில் மெல்ல தலையால் முட்டி “விளையாட்டல்ல, உண்மையாகவே எனக்கு அது வேண்டும்” என்றாள். “விளையாடவில்லை, தேவி. நான் அதை கொண்டுவருகிறேன். இது ஆணை!” என்றான். அவள் விழிப்பீலிகளில் கண்ணீருடன் நிமிர்ந்து அவனைப் பார்த்து புன்னகைத்தாள்.

# மாமலர் - 12

### 12. நீர்ச்சொல்

கரிச்சான் குரலெழுப்பிய முதற்புலரியிலேயே பீமன் எழுந்து கோமதிக்குச் சென்று நீராடி அங்கேயே புதிய மான்தோல் இடையாடையை அணிந்துகொண்டான். கோமதி இருளுக்குள் வானொளிகொண்டு ஓடிக்கொண்டிருந்தது. அதன்மேல் விண்மீன்கள் தாழ்ந்து நின்றிருந்தன. கரைமரங்கள் இளங்காற்றில் உலைய அவற்றின் நிழல்கள் அலைகளில் அசைவதை காணமுடிந்தது. அவனுடன் வந்த குரங்குகள் கரைமரங்களில் அசையாமல் அமர்ந்திருந்தன. படித்துறையாக அமைந்த ஆலமரத்தின் வேர்வளைவில் இரு பெருங்குரங்குகள் அவனை நோக்கிய விழிகள் மின்ன குவிந்தமைந்திருந்தன.

பீமன் ஈரக்குழல்திரிகளை விரல்களால் நீவி தோளில் பரப்பியபடி படியேறி இடைவழியில் நடந்தான். குரங்குகள் அவனுக்கு முன்னும் பின்னும் வால்வளைந்திருக்க கைகால்களை ஊன்றி நடந்து வந்தன. குடிலை அடைந்ததும்

ஒரு குரங்கு பாய்ந்து அடுப்பொளி தெரிந்த அடுமனை நோக்கி சென்று வெளியே அமர்ந்து 'ரீச்' என்று குரலெழுப்பியது. அடுமனைக்குள் இருந்த திரௌபதி வெளியே வந்து நூலேணியில் பீமன் ஏறி வருவதை பார்த்தாள். அவள் முகத்தின் வலப்பக்கத்தில் நெருப்பின் ஒளி செம்மையென பூசப்பட்டிருந்தது.

பீமன் மேலேறி வந்து "கதிரெழுவதற்குள் நான் கிளம்பவேண்டும், தேவி" என்றான். அவள் உதடுகள் விரியாமல் புன்னகைத்தாள். அவன் திரும்பியதும் "நான் வெற்றுப்பேச்சென ஏதோ சொல்லிவிட்டேன் என இப்போது உணர்கிறேன், பாண்டவரே" என மெல்லிய குரலில் சொன்னாள். "ஏன்?" என்றான். "பின்னிரவின் உணர்வுகள் அனைத்துமே பொய்யானவை" என்றாள். அவன் "நான் எப்போதும் ஒரே உள்ளம் கொண்டவன்" என்றான். அவள் அவன் கைகளைப்பற்றி விழிகளில் ஈரம் பரவ "செல்லவேண்டியதில்லை. நான் சொன்னதையெல்லாம் மறந்துவிடுங்கள்" என்றாள். "அவர்களும் சென்றுவந்தனர், தேவி" என்றான் அவன். "அவர்கள் தமக்காகச் சென்றனர்" என்றாள். "நான் எதையும் எனக்காகச் செய்ததில்லை" என்றபின் "எனக்கும் செல்லவேண்டியிருக்கிறது..." என அவள் தோளைத் தட்டினான்.

அவன் தன் அறைக்குள் சென்றபோது முண்டன் மான்தோலை விரித்து அதற்குள் மாற்றாடையையும் பிற பொருட்களையும் எடுத்து வைத்து நான்கு கால்களாக விரிந்திருந்த முனைகளை எடுத்து சேர்த்து கட்டிக்கொண்டிருந்ததை கண்டான். அருகே இடுப்பில் கைவைத்தபடி நின்ற சகதேவன் பீமனிடம் "தங்களுக்குரிய பொருட்களெவையும் இதில் இல்லை, மூத்தவரே" என்றான். "மாற்றாடை உள்ளதல்லவா?" என்றான்

பீமன். “ஆம், ஆனால்...” என்றான் சகதேவன். “அதற்கப்பால் எனக்கு தேவையொன்றுமில்லை” என்று பீமன் சொன்னான். முண்டன் “உண்மையில் எனக்கு மாற்றாடைகூடத் தேவையில்லை. அரச துணையாக செல்கிறேன் என்பதற்காகவே ஆடையையே அணிந்திருக்கிறேன்” என்றான்.

சகதேவன் கண்களில் சினத்துடன் “எப்போது நகையாட்டு சொல்வதென்று ஒரு கணிப்பு உன்னிடம் இருக்க வேண்டும்” என்றான். “உரிய தருணம் நோக்கிதானே சொல்கிறேன்?” என்றான் முண்டன். “அரசர்கள் குழம்பியிருக்கையில் மேலும் குழப்புவதற்காக சொல்லப்படுவதுதானே நகையாட்டு என்பது?” சகதேவன் சினத்துடன் “வெளியே போ!” என்று கையை காட்ட முண்டன் “நன்று, அடுமனைவரை சென்றுவிட்டு வருகிறேன்” என்று வெளியே சென்றான்.

எரிச்சலுடன் “இவனை எதற்கு கூட்டிச்செல்கிறீர்கள்?” என்று சகதேவன் கேட்டான். சிரித்தபடி “வழித்துணை” என்றான் பீமன். “இவனா? மூடன்!” என்றான் சகதேவன். “நான் பேசுபவன் அல்ல. ஆகவே பேசிக் கேட்க ஒருவன் உடன் இருப்பது நன்று” என்றான் பீமன். “இவன் பேசினால் அதைக் கேட்டு பொறுத்துக்கொள்ள முடியாதே...!” என்றான் சகதேவன். “அவன் பேசுவது முன்பு நான் பேசியதுபோலவே இருக்கிறது. நன்கு கனிந்த கசப்பின் சொட்டுகள்” என்றான் பீமன்.

திரௌபதி வாயிலில் வந்து நின்று “உணவு ஒருங்கிவிட்டது” என்றாள். “நான் மூத்தவரிடம் ஒரு சொல் சொல்லிவிட்டு வருகிறேன்” என்றான் பீமன். முள் என நோக்கு கூர்ந்திருக்க “அவர் இன்னும் துயில் விழிக்கவில்லை. தாங்கள் உணவுண்டுவிட்டே அவரை பார்க்கலாம்” என்று திரௌபதி சொன்னாள். பீமன் விழிதவிர்த்து “நன்று!” என்றபின்

தலைகுனிந்து நடந்து அடுமனைக்குச் சென்று நிலத்திலிட்ட பாயில் அமர்ந்தான். தரையில் விரித்த தைத்த இலைப்பரப்பில் திரௌபதி இரு கலங்களை தூக்கிச் சரித்து குவித்த புல்லரிசிச் சோற்றை புளிப்பழம் கலந்து அட்ட பருப்புக்கறியை ஊற்றி கொதிக்கக் கொதிக்க உருட்டி உண்ணலானான்.

அவனருகே வந்து மூங்கில் பீடத்தில் அமர்ந்த சகதேவன் “தாங்கள் செல்வது எதற்காக என்று மூத்தவர் அறிவாரா?” என்றான். தலைநிமிராது “எனக்கே நன்கு தெரியாது” என்று சொன்னபடியே பீமன் உண்டான். “விளையாடாதீர், மூத்தவரே! தாங்கள் படைக்கலம் தேடிச் செல்பவரல்ல என்று நான் அறிவேன்” என்றான். பீமன் தலையைத் தூக்கி “ஏன் இளையவன் திசைவென்று சிவன்படை கொண்டுவந்திருக்கிறான். எனக்கென்றொரு படைக்கலம் தேடலாகாதா?” என்றான்.

“யாருடைய படைக்கலம்? எத்தெய்வத்தின் அருள்?’’ என்றான் சகதேவன். பீமன் “எந்தை…” என்றான். இருவர் விழிகளும் சந்தித்தன. பீமன் “பண்டு அனுமன் வீசிய கதாயுதமொன்று கிஷ்கிந்தையின் புற எல்லையில் கிடப்பதாக சொன்னார்கள். அதைத் தேடி எடுத்துவரலாமென்று எண்ணுகிறேன்” என்றான். சகதேவன் எரிச்சலுடன் “அதை விடுங்கள், மூத்தவரே. இந்தத் தொல்கதைகளையெல்லாம் நம்புபவர் அல்ல தாங்கள் என்று எனக்குத் தெரியும்” என்றான். “உண்மையிலேயே அப்படி ஒரு படைக்கலம் இருக்குமா என்று பார்க்கத்தான் செல்கிறேன்” என்று பீமன் சொன்னான். சகதேவன் மேலும் ஏதோ சொல்ல வாயெடுத்து பின் பேசாமல் இருந்தான்.

நகுலன் வந்து வாயிலில் நின்று பீமன் உண்ணுவதை பார்த்தான். “மூத்தவர் எழுந்துவிட்டார். முகம் கைகால்

கழுவிக்கொண்டிருக்கிறார்” என்றான். “இதோ வருகிறேன்” என்றான் பீமன். “தாங்கள் எங்கு செல்கிறீர், மூத்தவரே?” என்றான் நகுலன். “ராகவராமனின் அணுக்கர் அனுமன் முன்பு விட்டுச்சென்ற கதாயுதம் ஒன்று கிஷ்கிந்தையில் கிடக்கிறது. அதை எடுத்துவரச் செல்கிறார்” என்று ஏளனம் கலந்த குரலில் சகதேவன் சொன்னான். புரியாமல் “கிஷ்கிந்தையா? அது எங்குள்ளது?” என்றான் நகுலன். “அது தெரிந்தால் நேராகச் சென்று எடுத்துவரமாட்டேனா? தொல்கதைகளில் வழி இருந்தால் எங்கோ அது தொடரும். கதைகளிலிருந்து மண்ணில் இறங்குவதற்கு ஒரு பயணம் உள்ளது. அதைத்தான் செய்யப்போகிறேன்” என்று பீமன் சொன்னான்.

“தாங்கள் எதையோ ஒளிக்கிறீர்கள்” என்றான் நகுலன். “உங்களிடமா?” என்றான் பீமன். “ஆம், வெறும் கைகளே மிகையென்றெண்ணும் வீரர் நீங்கள். ஒரு படைக்கலம் தேடி நீங்கள் செல்லப்போவதில்லை.” பீமன் ஒன்றும் சொல்லாமல் உண்டு முடித்து இலையைச் சுருட்டி எடுத்தபடி எழுந்தான். அதை வெளியே கொண்டுசென்று போட்டுவிட்டு கைகழுவி மீண்டு வந்தான். திரௌபதி மரக்குடுவை நிறைய எடுத்துவந்த பாலை வாங்கி அண்ணாந்து குடித்தான். அவர்கள் அவன் அருந்தும் ஓசையைக் கேட்டபடி நோக்கி நின்றனர். “வருக!” என்றபடி பீமன் நடக்க அவர்கள் தொடர்ந்து சென்றனர்.

“சொல்லுங்கள் மூத்தவரே, தாங்கள் எங்கு செல்கிறீர்கள்?” என்றான் நகுலன்.
“இதை எதற்கு தெரிந்துகொள்ள விரும்புகிறாய்?” என்று பீமன் கேட்டான். “தாங்கள் எங்கள் மேல் சினத்துடன் செல்லவில்லை என்று உறுதிபடுத்திக்கொள்வதற்காக மட்டுமே” என்றான். “சினமா, உங்கள் மீதா?” என்ற பீமன் அவன் தோளை அறைந்து

“மூடா, பல்லாண்டுகாலம் வெளியுலகு சென்றுவிட்டு மீண்டு வந்திருக்கிறான் இளையோன். அதன் பொருட்டே” என்றான். இருவரும் அவன் சொல்வதை புரிந்து கொண்டனர். “ஆகவே...” என்று ஏதோ சொல்ல வாயெடுத்த நகுலன் “அவ்வாறெனில் அது உகந்ததே” என்றான். “அதையே மூத்தவருக்கும் சொல்ல நினைக்கிறேன். சொல்ல முடியாதென்பதால் இப்படைக்கலத்தின் கதையை சொல்கிறேன். இக்கதையே இங்கு நிலவட்டும்” என்றபடி பீமன் கூடத்திற்குள் சென்றான்.

கூடத்தில் தருமனின் அறையருகே அர்ஜுனன் நின்றிருந்தான். பீமன் “நான் கருக்கிருட்டில் கிளம்புகிறேன். முண்டனும் என்னுடன் வருகிறான்” என்றான். “சொன்னார்கள்” என்றான் அர்ஜுனன். உள்ளறைக்குள் தருமன் மெல்ல செருமினார். அதைக் கேட்டதும் பீமன் உள்ளே சென்று தருமனின் காலடி தொட்டு சென்னி சூடினான். தருமன் அவன் தலைமேல் கைவைத்து “வெற்றி சூழ்க!” என்றார். பீமன் எழுந்து “சென்று வருகிறேன்” என்று சொல்லி அவர் மேற்கொண்டு ஏதேனும் கேட்பாரா என்று எண்ணியவன்போல் காத்து நின்றான். தருமன் ஒருகணம் நோக்கிவிட்டு சுவடியை கையில் எடுத்து புரட்டத்தொடங்கினார். பீமன் வெளியே வந்து “சென்று வருகிறேன்” என்று மீண்டுமொரு முறை அர்ஜுனனிடம் சொன்னான்.

இயல்பாக திரும்பிப் பார்க்கையில் கூடத்தின் மறுஎல்லையில் கைகளை மார்பில் கட்டியபடி திரௌபதி நிற்பதைக் கண்டு அருகே சென்றான். அவள் கண்களை குனிந்து நோக்கி “சென்று வருகிறேன், தேவி” என்றான். விழிகளில் ஈரம் மின்ன அவள் தலையசைத்தாள். காதருகே குழல்சுருளின் அலைவு. கன்னங்களில் எழுந்திருந்த சிறிய பரு. அவளை அவன்

அப்போது தொட்டுத் தழுவ விரும்பினான். புன்னகையுடன் “மலருடன்” என மிக மெல்ல சொன்னான். அவள் கன்னமும் கழுத்தும் மயிர்ப்புகொள்வது தெரிந்தது. இதழ்கள் மெல்ல விரியும் ஓசை கேட்பதாகத் தோன்றியது. உதடுகளை அழுத்தியபடி இமைசரித்தாள்.

பீமன் கயிற்றுப் படிகளில் இறங்கி முற்றத்தை அடைந்தான். அவனுடன் நகுலனும் சகதேவனும் இறங்கிச்சென்றனர். திரௌபதி ஓடிவந்து குடில் விளிம்பில் நின்று அவர்கள் செல்வதை நோக்கினாள். பெருங்குரங்குகள் அவர்களுடன் கையூன்றி நடந்து சென்றன. பீமன் திரும்பி நோக்கவில்லை. வாயிலை மூடிய துலாவை விடுவித்து மேலே தூக்கி குனிந்து நிலம்தொட்டு சென்னிசூடியபின் வெளியே நடந்தான்.

முண்டன் மூட்டையை ஒரு குச்சியில் கட்டி தோளில் வைத்தபடி அவர்களுடன் ஓடினான். நகுலன் “உன் உடல் நிகழ்காலத்திலேயே இருக்கட்டும். முன்னும் பின்னும் புரள வேண்டியதில்லை” என்றான். முண்டன் “நான் அதை புரட்டுவதில்லை, காற்றை சருகு எப்படி கட்டுப்படுத்த முடியும்?” என்றான். “இந்த அணிப்பேச்சு தேவையில்லை. எப்போதும் மூத்தவருடன் இரு” என்று சகதேவன் சினத்துடன் சொன்னான். “இவர் எப்போதும் என்னிடம் சினத்துடன் பேசுகிறார். எனக்கு மேலும் சினம் வரும்” என்றான் முண்டன். “சரி விடு” என்று அவன் தலையைத் தடவி “சென்று வருக!” என்றான் நகுலன்.

பீமன் வெளியே கருக்கிருட்டில் மெல்லிய தடமாகத் தெரிந்த சாலையை கடந்தான். முண்டன் அவனுடன் நடந்தபடி “இருட்டுக்கு கண் பழகிய பிறகு எல்லாமே தெரிகிறது. என்னால் மேலே மரக்கிளைகளுக்குள் இருக்கும் கூகைகளைக்கூட பார்க்க முடிகிறது” என்றான். பீமன்

அண்ணாந்து நோக்கியபின் “உமது காலடியில் ஒரு நாகம் உம்மை நோக்குகிறது, அது தெரிகிறதா?” என்றான். முண்டன் தாவிக்குதித்து “எங்கே?” என்றான். பீமன் சிரித்தபடி நடக்க “விளையாடாதீர்கள். நான் நாகத்தால் சாகலாமென நிமித்தவுரை உள்ளது” என்றான். “நாகத்தாலா?” என்றான் பீமன். “ஆம், அல்லது இடிமின்னலால். அல்லது வாளால். அல்லது அம்பால். அல்லது கதையால். இவை ஏதுமில்லை என்றால் நோயால். ஆனால் போதிய மூப்புக்கு பின்னர்தான்.”

குரங்குகள் மரக்கிளைகளில் தாவியபடி அவர்களின் தலைக்குமேல் வந்தன. இரு குரங்குகள் மட்டும் தாவித்தாவி முன்னால் சென்று அவர்கள் வந்தடைவதற்காக பொறுமையற்றவைபோல வேறெங்கோ நோக்கியபடி காத்துநின்றன. அவர்கள் கோமதியின் கரையை அடைந்து நாணல் பரப்பைக் கடந்து சாலையில் ஏறியபோது அவை தங்கள் எல்லையை அடைந்து தயங்கி நின்றன. பீமன் திரும்பி அவர்களைப் பார்த்து கைகளை மேலே தூக்கி விடைகொடுத்தான். அனைத்துக் குரங்குகளும் கிளைகளில் எழுந்து நின்று கைகளைத் தூக்கியபடி ஒற்றைக் குரலென ஓசையிட்டன.

பீமன் மும்முறை குரலெழுப்பியபின் திரும்பி நடக்க முண்டன் தொடர்ந்து வந்து “அவர்கள் மொழியில் காவியங்கள் உண்டா?” என்றான். பீமன் ஒன்றும் சொல்லவில்லை. “விடைகொடுத்தலுக்கு அவர்கள் எழுப்பிய ஒலி பாடல்போலவே இருந்தது. பாடல்களை இணைத்தால் காவியம் வரும்” என்றான். பீமன் அதற்கும் மறுமொழி சொல்லவில்லை. “காவியம் இருந்தாக வேண்டும். இல்லையேல் எப்படி கதைத்தலைவர்களை உருவாக்க முடியும்! கதைத்தலைவர்கள்

இருந்தால்தானே மாவீரர்கள் இருக்க முடியும். மாவீரர்கள் இல்லையேல் குலஒழுங்கு இருக்காதல்லவா?”

பீமன் திரும்பி “ஏன்?” என்றான். முண்டன் “மாவீரர்கள்தானே அழகிய பெண்களை புணரவேண்டும்? மற்றவர்கள் அதையெல்லாம் பாடவோ நடிக்கவோ எழுதவோ செய்யலாம்” என்றான். பீமன் அறியாது புன்னகைத்து “நன்று!” என்றபின் திரும்பி நடந்தான். முண்டன் அவனுடன் நடந்தபடி “நான் என் வித்தைகளில் பலவற்றை இன்னும் காட்டவே இல்லை. உண்மையில் என்னால் காலத்தை மட்டுமல்ல, நினைவுகளையும் புரட்ட முடியும். ஒவ்வொருவரையும் பிறிதொருவராக ஆக்க முடியும். இப்போது நீங்கள் சொன்னீர்கள் என்றால் உங்களை உங்கள் தந்தையாக மாற்றிக் காட்டுவேன்” என்றான். “யாராக?” என்று பீமன் குரலை மாற்றி கேட்டான். முண்டன் குரலைத் தாழ்த்தி “உண்மையில் ஒருவரை தந்தையாக மாற்றிய பிறகுதான் அவர் தந்தை யாரென்பதை கண்டுபிடிக்க முடியும்” என்றான்.

பீமன் வாய்விட்டு சிரித்துவிட்டான். “நான் அந்த மலரை மட்டுமே அறிய விழைகிறேன்” என்றான். “ஆம், தந்தையராக ஆவது நன்றல்ல, நம்மை நன்கறிய வாய்ப்பாகும்” என்றான் முண்டன். பீமன் “நன்றாக பேசத்தெரிந்திருக்கிறீர். நிமித்திகர்கள் போல” என்றான். “நான் நிமித்தநூலும் கற்றவன். வயிறுகாய்ந்தால் அந்தத்தொழிலையும் செய்வதுண்டு” என்றான் முண்டன். பீமன் “நான் எண்ணிச்சூழ்வதில்லை, என் உள்ளொலிக்கும் குரலையே நம்புகிறேன். அந்த மலர் எங்கோ உள்ளது. அதை நான் அடைந்தாகவேண்டும்” என்றான். “ஆ! பெருங்காதலின் மாமலர்!” என்றான் முண்டன். அக்குரலில்

இருந்த நகையாட்டை உணர்ந்தாலும் பீமன் மறுமொழிசொல்லவில்லை.

“அதைக்கொண்டு என்ன செய்யப்போகிறீர்கள்? பெண்களுக்கு அதனால் என்ன பயன்? குழல்சூடி பிற பெண்டிரிடம் காட்டி பெருமைகொள்ளலாம். அதுவும் ஒருநாள் பகல்பொழுதுக்கு.” பீமன் “அது வாடாமலர் என்கிறார்கள்” என்றான். “அதையே மறுநாளும் சூடினால் அவர்களுக்கு சலிப்பே எஞ்சும்” என்றான் முண்டன். “நன்று, உம் கசப்பு என்னுடன் இருக்கவேண்டுமென விரும்பினேன். அது எதிர்நிலையாக ஒலித்தால் மட்டுமே நான் அதை கடந்துசெல்லமுடியும்” என்றான் பீமன்.

தன் கையிலிருந்த சிறிய சலங்கையின் ஒருபாதியை ஒற்றைக்காலில் கட்டி இன்னொரு பாதியை கையில் கட்டியபடி முண்டன் சிறு தாவல்களாக பாய்ந்து சென்றான். சலங்கைகளின் தாளம் எழுந்தெழுந்தமைய ஒரு கணம் சிறுவனும் மறுகணம் கன்றுமென அவன் உருமாறிக்கொண்டிருந்தான். “நல்ல தாளம்” என்றான் பீமன். “உங்கள் உளம் கொண்ட வினாக்களுக்கான விடைதேடிச்செல்லும் இப்பயணத்தில் உடன் நான் எதற்கு என்றே எண்ணிக்கொண்டிருக்கிறேன். துயரப்பாடலுக்கு துள்ளல்தாளம் பொருந்துமா என்று பார்க்கிறேன்.”

சிறு எரிச்சலுடன் “நான் தேடிச்செல்வது அந்த மலரை மட்டுமே” என்றான் பீமன். “அவ்வினாக்களைக் கடந்து சென்றாலொழிய அந்த மலரை அணுகமுடியாது. அதை நீங்களே உணர்வீர்கள்” என்றான் முண்டன். பீமன் “எந்த வினாக்கள்?” என்றான். “நான் பிறர் உளம்புகும் கலையறிந்தவன், பாண்டவரே” என்றான் முண்டன். உடனே குரல் மாற்றி “ஆனால் அதை என் உள்ளத்துடன்

குழப்பிக்கொள்வதனால் என்னால் எதையுமே சொல்லமுடியவில்லை” என்றான். “சரி, இத்திசையை எப்படி தேர்ந்தீர்கள்? அதைச் சொல்லுங்கள்!”

“நான் கிளம்புவதற்கு முன் ஒரு கனவு கண்டேன்” என்றான் பீமன். “ஒருநாழிகைப்பொழுது துயின்றிருப்பேன். மலர்தேடிக் கொண்டுவருவதாக தேவியிடம் சொல்லியிருந்தேன். ஆனால் எங்கென்றும் எப்படி என்றும் அறியாதிருந்தேன். குழப்பத்துடன் புரண்டுபடுத்துத் துயின்றபோது அந்த மலர்மணத்தை கனவில் உணர்ந்தேன். அது என் கையில் இருந்தது. என்னைச் சூழ்ந்து ஐந்து தேவியர் நின்றிருந்தனர்.” முண்டன் நின்று, ஆவலுடன் “ஐவரா?” என்றான். “ஆம், ஐவருமே திரௌபதிதான் என என் உள்ளம் அறிந்திருந்தது. ஆனால் முகங்கள் தெளிவுறத் தெரியவில்லை” என்றான் பீமன்.

முண்டன் “நன்று” என்றபடி கண்சிமிட்டினான். அவன் எதையாவது எண்ணும்போது அந்தச் சிமிட்டல் எழுவதை பீமன் கண்டிருந்தான். குட்டிக்குரங்கிலிருந்து கற்றுக்கொண்டது அந்த விழியசைவென்று எண்ணினான். “நான் நின்றிருந்த இடம் ஒரு மலர்ச்சோலை. கொடிகளும் செடிகளும் தழைத்த பச்சை இருளுக்குள் மிக அண்மையில் ஒரு சிறு ஆலயம் இருந்தது. அச்சோலையில் தென்கிழக்கு மூலையில் நின்றிருந்த மரத்தில் பல்லாயிரம் மலர்கள் செறிந்திருந்தன. ஆனால் தரையில் ஒரு மலர்கூட உதிர்ந்திருக்கவில்லை. என் கையிலிருந்த மலர் அப்போதுதான் அலர்ந்ததுபோலிருந்தது.”

“வெண்ணிற மலர்” என்றான் பீமன். “வெண்பட்டு, பால்நுரை, அன்னக்குஞ்சு. விழித்தபின் நான் அதற்கு ஒப்புமை கொண்டவை இச்சொற்கள். அப்போது இயல்பாக என் கையில் இருந்தது அது. அந்த தேவியரிடம் சென்றுவருகிறேன்

என்றேன். அவர்கள் நன்று என்றார்கள். நான் திரும்பி நடக்கையில்தான் திசையறிந்தேன். தென்கிழக்காக வந்திருந்தேன், ஆகவே வடமேற்காக மீண்டு செல்லத் தொடங்கி விழித்துக்கொண்டேன்." முண்டன் "அதனால்தான் தென்கிழக்கு" என்றான். பீமன் "ஆம், நான் கொண்ட ஒரே திறப்பு அதுமட்டுமே" என்றான்.

முண்டன் "மாமல்லரே, நீங்கள் அந்த மலரை அவர்களில் எவருக்கும் அளிக்கவில்லையா?" என்றான். "இல்லை, அவர்கள் அதை கோரவுமில்லை" என்றான் பீமன். "அவர்கள் முன்னரே அதைச் சூடியிருந்தனரா?" என்றான் முண்டன். "இல்லை, அவ்வண்ணம் தெரியவில்லை" என்று பீமன் சொன்னான். "நான் விழித்துக்கொண்டதுமே அடுமனைக்குச் சென்று அங்கு நின்றிருந்த தேவியிடம் உடனே மலர்தேடிக் கிளம்பவிருப்பதாக சொன்னேன். திகைத்து அவள் எங்கே என்றாள். தென்கிழக்கே என்றேன். அவள் புருவம் சுருக்கி நோக்க நான் சிரித்தபடி கன்னிமூலை என்றேன்."

"அவளை சற்று முன் கனவில் பார்த்தபோது இருந்த அதே உடலருகமைவுணர்வை அடைந்தேன். அப்போது அவளை ஐந்தெனக் கண்டதை மறந்துவிட்டிருந்தேன். எனக்கிருப்பது ஒரு திசை மட்டுமே என்றேன். அப்போதுதான் அந்த மலரை நான் கண்டதும் நினைவுக்கு வந்தது. தேவி, அந்த மலர் அல்லிபோன்ற வடிவம் கொண்டது, வெண்ணிற இதழ்கள் நடுவே வெண்புல்லி குவிந்தது என்றேன். அல்லியா என்றாள். இல்லை, அது மரத்தில் மலர்ந்திருந்தது. அதன் இலைகள் மானின் காதுகள்போல பெரியவை என்றேன். என்னை திகைப்புடன் நோக்கி என்ன சொல்கிறீர்கள் என்றாள். ஒரு கனவு கண்டேன். அதுபோதும் என்றேன்."

“தென்கிழக்கு சரியான திசையா என்று அறியேன். ஆனால் என் கனவை அணுகிக்கொண்டிருக்கிறேன் என்று உள்ளம் சொல்கிறது. அடுத்த திறப்பும் எனக்குள் இருந்தே நிகழுமென நம்புகிறேன்” என்றான் பீமன். “ஆம், அந்த மலரையும் நீங்கள் அங்கேயே கண்டடையலாம்” என்று முண்டன் சொன்னான். “இல்லை, அந்த மலர் மண்ணில் மலர்ந்துள்ளது. எங்கோ, அதன் நறுமணத்தை நானறிந்தது மண்ணில் என் புலன்கள் படர்ந்திருக்கையில்தான்” என்றான் பீமன்.

முண்டன் நின்று “பாண்டவரே, அரசிக்கு எதற்காக அந்த மலர்?” என்றான். அவன் “ஏன்?” என்றான். “தலையில் சூடிக்கொள்வாரா என்ன?” என்று முண்டன் மீண்டும் கேட்டான். அவன் சொல்வதை உணராமல் பீமன் “ஏன், மலர்சூடிக்கொண்டால் என்ன?” என்றான். “அவர் குழலை பசித்த வேங்கையின் நாக்குபோல் குருதிவிடாய் கொண்டு காத்திருப்பது என்கின்றனர் கவிஞர்” என்றான் முண்டன். பீமன் திடுக்கிட்டவன்போல நின்றுவிட்டான். சில கணங்கள் கடந்தே அவனால் நிலைமீள முடிந்தது. பின்னர் “அவள் அவ்வஞ்சங்களைக் கடந்து நெடுந்தொலைவு வந்துவிட்டாள்” என்றான்.

“ஆம், துகில்தொட்டுரிந்தவனின் நெஞ்சுபிளக்க வஞ்சமுரைத்தவர் கைபற்றி இழுத்துத் தேரிலேற்றியவனை பொறுத்தருளினார்” என்றான் முண்டன். “ஆனால் அங்கு அஸ்தினபுரியில் விரிகுழல் முடியாது விழிநீர் ஒழியாது அணையாத வஞ்சத்துடன் காத்திருக்கிறாள் அவர் நிழல்.” பீமன் உடல்சிலிர்த்தான். “நிழல்களிலிருந்து எவருக்கும் மீட்பில்லை, பாண்டவரே” என்று முண்டன் சொன்னான். “உங்கள் நிழல் உங்களுக்கு முன்னரே பிறந்துவிட்டிருந்தது. உங்களுக்காகக்

காத்திருந்தது.” பீமன் தோள்தளர்ந்தான். கைகள் தொடைகளை உரசியபடி விழுந்தன.

“அதுவும் அங்குதான் இருக்கிறது, அஸ்தினபுரியில். அவர் நிழல் நீங்கள். நிழலுருவை இரும்பில் சமைத்து கைமுன் நிறுத்தி நாளெல்லாம் போர் பழகிக்கொண்டிருக்கிறது அது” என்றான் முண்டன். “அவர் தோள்கள் திரண்டு புடைத்தெழுகின்றன. அவர் நெஞ்சு விரிகிறது. விழிகள் கசப்புகூர்கின்றன. நிழலைப்போல் ஆவது எளிதல்ல, கணம்தோறும் வளர்ந்தாகவேண்டும் என்று அவர் உணர்கிறார். நிழலை வெல்வதும் எளிதல்ல என்று ஒவ்வொருநாளும் அறிகிறார். நாம் அடைந்தவை அனைத்தையும் நிழலும் அடைகிறது.”

“அங்கு அந்த நிழல் நின்றெரிவதுவரை இங்கு உங்களிலும் அனல்வெம்மையே கூடும்” என்றான் முண்டன். “மென்மலரைக் கொண்டுசென்று எரியழல்மேல் வைக்கலாகுமா, பாண்டவரே?” பீமன் இடையில் கைவைத்தபடி நின்று அவனை நோக்கினான். “சொல்லுங்கள், குருதிபடிந்த கையால் எடுத்து முகரக்கூடுமா அதை?” என்றான் முண்டன். பெருமூச்சுடன் பீமன் தலைதிருப்பி விடியல்சிவப்பெழுந்த வானை நோக்கினான். “நாம் மீள்வதே முறை” என்றான் முண்டன். “அறிக, உங்களுக்குரியதல்ல அந்தத் தண்மலர். அதற்கென்று பிறிதனைத்தையும் உதறுபவர்களுக்கு மட்டுமே உரியது அது.”

மன்றாடுவதுபோல “நான் என்ன செய்யவேண்டும்?” என்றான் பீமன். மேலும் தாழ்ந்த குரலில் “எதைச் செய்யவும் சித்தமாக உள்ளேன்” என்றான். “இந்த மலர் அரசிக்குரியதல்ல, அவர் குழலில் அமைந்த கணமே இது வாடும்” என்றான் முண்டன். “இது எனக்காக” என்று பீமன் சொன்னான். “அந்த மணத்தை அறிந்தபின் நான் அதை கைக்கொள்ளாமலிருக்க இயலாது.”

“உங்களுக்கு அது எதற்கு, மாவலரே? நீங்கள் காட்டில் கரையத் தெரிந்தவர். இங்குள்ளன உங்கள் இன்பங்கள் அனைத்தும்.”

பீமன் தலையை அசைத்தான். “பறக்கக் கற்கும் குஞ்சுகளில் சில விழுந்து இறப்பதுண்டு. அன்னை பறந்தெழுந்து வருக என அழைக்கையில் சிறகை விரித்து கால்களின் பிடியை முற்றிலும் விட்டுவிடுபவையே வானை அறிகின்றன. அஞ்சி உகிர்பற்றை விடாதவை சிறகு குலைந்து நிலம் பதிகின்றன” என்று முண்டன் சொன்னான். “மிக மிக எளிது. முற்றிலும் இயல்பானது. விட்டுவிடுங்கள். அதுவன்றி நீங்கள் செய்வதற்கு உகந்ததாக ஏதுமில்லை.”

பீமன் பெருமூச்சுவிட்டான். “இல்லை, என்னால் அது இயலாது” என்றான். “நீ சொன்னதைப்போல நான் இங்கு முற்றிலும் கரையவில்லை.” திரும்பி காலையொளி புகுந்து உயிர்கொண்ட காட்டை நோக்கினான். “இங்கு வந்தபோது நான் இக்காடென்றாகக் கூடியவன் என்றே உணர்ந்தேன். பெருங்காதலுடன் இதில் திளைத்தேன். ஆனால் நான் இதை அணுகுந்தோறும் என்னுள் ஓர் ஆழம் அகன்று அகன்று செல்வதை உணர்ந்தேன். என்னுள் நான் அறிந்த அந்த விலக்கமே என்னை மேலும் பித்துகொள்ளச் செய்தது. ஒரு கணமும் வெளியே இருக்க ஒண்ணாதவனாக என்னை ஆக்கிக்கொண்டேன். ஆனால்…”

குரல் தழைய சில கணங்கள் மொழியிலாதவன் ஆனான். பின்னர் “எந்த விலங்கும் சிந்துநாட்டரசனிடம் நான் நடந்துகொண்டதை ஆற்றாது” என்றான். முண்டன் நிமிர்ந்து நோக்கினான். துயர்கொண்ட நெஞ்சுடன் பீமன் சொன்னான் “நான் அதைச் செய்ததனால் என்னை விரும்புகிறாள். ஏனென்றால் அது விலங்கியல்பென்று எண்ணுகிறாள். அன்று

அக்குரங்குகள் அஞ்சிப் பின்னடைந்து அமர்ந்திருப்பதை அவள் காணவில்லை. அவை கொலைக்கூத்தாடும். கிழித்து உண்டு களிக்கும். வஞ்சம் சுமப்பதில்லை.” முண்டன் “ஆம்” என்றான்.

“இச்சிலநாட்களில் காட்டுப்பசுமைக்குள் புதைந்துகிடந்து என்னை ஆராய்ந்தேன். விலங்கல்ல நான் என்றால் யார்? மானுடன் என்றால் என் பொருள் என்ன? மெய்மையென எதையோ இவர்கள் தேடிக்கொண்டிருக்கிறார்கள். சொல்சூழ்கிறார்கள். வில் கொள்கிறார்கள். எதையும் நான் அறியேன். நானறிந்த மானுடத்தருணங்கள் எல்லாம் எளிய உணர்வுகளால் ஆனவை. அன்னையின் அருகமைவு. உடன்பிறந்தார் தோள்தழுவல். மைந்தர் மடிகொள்ளல்.”

அவன் சொல்வதற்காக முண்டன் காத்து நின்றிருந்தான். “அவையனைத்துக்கும் நிகரென என்னை ஆழ்ந்து திளைக்கச்செய்வது அவள்மேல் கொண்ட அணுக்கம். அதை காமம் என்றால், காதல் என்றால் அச்சொல் என்னை கூசவைக்கிறது. அவள் அண்மையைவிட கூர்ந்தது அவளை எண்ணிக்கொள்ளல். எண்ணி மகிழ்வதைவிட நுண்ணியது கனவில் அவள் எழல். அனைத்தையும்விட ஆழ்ந்தது அறியாக்கணமொன்றில் அவளென நான் என்னை உணர்வது.”

“பெருந்துயருடன் அன்று குடில்மீண்டேன். அவளுடன் இருக்கையில் பெருநீர் நதியொன்றில் நீந்துபவனாகவே உணர்வேன். அன்று அவள் சென்று விழுந்த அருவிப்பேராழத்தில் நானும் பொழிந்தேன். மீண்டு வந்தபோது எழுந்த வெறுமை. அதை குளிர்ந்த எடையெனச் சுமந்தபடி அவள் அருகே சென்றமர்ந்தேன். இறுதியில் இவ்வளவுதான் என காமம் தன்னைக் காட்டுகிறது. அனைத்தையும் இறுதியில் உடலென ஆக்கியாக வேண்டியிருக்கிறது. வெறும் உடலென.

பிறிதொன்றும் இல்லை என. எஞ்சுவது இதுவொன்றே எனில் எதன்பொருட்டு எல்லாம் என.”

“அப்போதுதான் அந்த மணத்தை உணர்ந்தேன். அதுவே நான் அடைந்த உச்சநிலை. அதை அறிந்தால்தான் நான் எவரென நான் உணரமுடியும். அதை எண்ணியபின் எனக்கு இனி பின்னடிவைப்பில்லை” என்றான் பீமன். முண்டன் தலைகுனிந்து சற்றுநேரம் நடந்தான். பீமன் அவனை நோக்கியபடியே தொடர்ந்தான். பின் அவன் நின்று நிமிர்ந்து பீமனை நோக்கி “பாண்டவரே, முன்னோக்கி வைக்கும் ஒவ்வொரு காலடியிலும் அதுவரை வந்த தொலைவனைத்தையும் பின்னுக்குத் தள்ளுகிறோம் என உணர்ந்திருக்கிறீர் அல்லவா?” என்றான். “ஆம்” என்றான் பீமன். “நான் உளம்புகு கலை அறிந்தவன். காலம் கடக்கக் கற்றவன். நான் உங்களை அங்கே இட்டுச்செல்கிறேன்” என்றான் முண்டன். “அதன்பொருட்டு என்றும் உம்மைப் பணிவேன். இனி நீர் என் அணுக்கனல்ல, ஆசிரியன்” என்றான் பீமன்.

“ஆனால் நேற்றுவரை நீங்கள் கொண்டிருந்த அனைத்தையும் உதறியாகவேண்டும். ஒவ்வொரு அடியிலும் அவற்றிலிருந்து நீங்கள் விலகிக்கொண்டிருக்கவேண்டும். முற்றிலும் விலகியபின் அடைவதே அம்மலர்” என்றான் முண்டன். “ஆம், விலகுகிறேன்” என்று பீமன் சொன்னான். “வருக!” என முண்டன் அவன் கைபற்றி பக்கவாட்டில் நடந்து நாணல்சரிவில் இறங்கி சுழித்தோடிய கோமதியின் கரையை அடைந்தான். சேற்றில் புடைத்திருந்த வேர்களில் கால்வைத்து அவர்கள் ஆற்றுவிளிம்பருகே சென்றனர்.

முண்டன் “வருக!” என்றபடி நீரில் இறங்கி நின்றான். அருகே சென்று நின்ற பீமனிடம் “முடிமலைகளில் உறைபவர்கள்

மூதாதையர். தொல்நதியில் எழுபவர்கள் மூதன்னையர். இங்கு மூதன்னையர் தங்கள் கனிந்த விழிகளுடன் வருக. தங்கள் இனிய புன்னகைகளுடன் சூழ்க!” என்றான். குனிந்து கைப்பிடி நீரை அள்ளி பீமனிடம் அளித்து “என் பகைகள் அனைத்தையும் விடுகிறேன் என்க!” என்றான். பீமன் “என் பகைகள் அனைத்தையும் விடுகிறேன்” என்றான். பிறிதொரு கைப்பிடி நீரை அள்ளி “என் வஞ்சங்கள் அனைத்தும் அகல்க!” என்றான். பீமன் அவ்வண்ணமே சொன்னான். துயர்களை, ஐயங்களை, விழைவுகளை, பற்றுகளை, கடன்களை விட்டுவிடுவதாக அவன் நீருறுதி எடுத்தான்.

“ஏழு உறுதிக்கும் ஏழு முறை என நீரில் மூழ்கி நினைப்பொழிந்து அணிந்த ஆடையை நீரில் விட்டு அன்னையரை எண்ணி கரையேறுக!” என்றான் முண்டன். பீமன் நீரில் ஏழு முறை மூழ்கி இடையணிந்த ஆடையை நீரில் களைந்து வெற்றுடலுடன் கரையேறினான். முண்டன் புதிய ஆடையை பொதியிலிருந்து எடுத்து அளித்து “இன்று மீண்டும் பிறந்தீர்” என்றான். “ஆம் ஆம் ஆம்!” என பீமன் கைகூப்பியபடி சொன்னான்.

# மாமலர் - 13

### 13. எண்கற்களம்

“தோல் என்று ஒன்றைப் படைத்த பிரம்மன் மானுடரின் உள்ளுறுப்புகளை பிறர் பார்க்கலாகாதென்று எண்ணினான் என்பது தெளிவு. பாண்டவரே, மொழியென்று ஒன்றை படைத்த கலைமகள் மானுடரின் உள்ளத்தை பிறர் காணலாகாதென்று எண்ணினாள் என்றே கொள்க!” என்றான் முண்டன்.

உச்சிப்பொழுது எட்டியதும் அவர்கள் கோமதி வளைவுதிரும்பும் முனை ஒன்றை அடைந்து அங்கிருந்த அன்னசாலையில் உணவுண்டபின் அருகிருந்த ஆலமரத்தடியில் படுத்திருந்தனர். மரத்திற்குமேல் பறவைகள் ஓசையிட்டுக்கொண்டிருந்தன. அவ்வப்போது ஓர் எண்ணத்துளி என இலையொன்று சுழன்றிறங்கியது.

“முற்றிலும் அறியப்படாமலிருக்கவும் மானுடரால் இயல்வதில்லை. சொல்லியும் உணர்த்தியும் அறிவிக்கிறார்கள். அவ்வாறு அறியப்பட்ட ஒன்று நிலைக்கவும் நீடிக்கவும் அவர்கள் விரும்புவதில்லை. சொன்னதை வரைந்ததை உடனே கலைத்து நீ அறிந்ததல்ல நான் என்கிறார்கள். தன்னை முன்வைத்து பிறருடன் பகடையாடுவதே மானுடர் தொழில். உடனுறைவோரை அறிய எண்ணுபவன் நீரில் அலையெண்ணுபவன்.” வேர்க்குவை ஒன்றுக்குள் உடலை ஒடுக்கிப் படுத்து கால்மேல் கால் வைத்து ஆட்டியபடி முண்டன் சொன்னான்.

“அதைவிட தற்செயலாக சந்தித்து உடனே பிரியும் வழிப்போக்கனை அறியமுயல்வது எளிது. குறைந்தது, அவன் அமைத்துச் செல்லும் பொய்க்காட்சியை அழித்தெழுத அவனுக்கு நாம் வாய்ப்பளிப்பதில்லை” என்று அவன் தொடர்ந்தான். “ஆகவே அவ்விரவில் அரசி உங்களிடம் சொன்னதென்ன, நீங்கள் அறிந்ததென்ன, இருவரும் சேர்ந்து சமைத்ததென்ன, அவ்விடம் விட்டு நீங்கிய பின்னர் எஞ்சியதென்ன என்பது எவ்வகையிலும் பொருட்படுத்தத் தக்கதல்ல.” பீமன் சலிப்புடன் “அவ்வாறென்றால் எதுதான் பொருட்படுத்தத் தக்கது?” என்றான். “அக்கணம், அதை சரிவர கையாள்கிறோமா இல்லையா என்பது மட்டும்” என்றான்

முண்டன். "ஏனென்றால் மானுடர் வாழ்வது நிகழ்காலத்தில் மட்டுமே."

"எதிர்காலத்தை அறிய முடியாதென்கிறோம். பாண்டவரே, மானுடரால் இறந்தகாலத்தை மட்டும் அறிந்துவிடமுடியுமா என்ன?" என்று முண்டன் சொன்னான். "இறந்தகாலம் என மானுடர் சொல்வதெல்லாம் அவர்கள் நினைவுகூர்வதை மட்டும்தானே? நினைவுகூரச் செய்வது எது? விழைவும் ஏக்கமும் ஆணவமும் தாழ்வுணர்வும் என அவனாகி அவளாகி நின்றிருக்கும் உணர்வுநிலை மட்டும்தானே? இறந்தகாலமென்பது புனையப்படுவதே. பகற்கனவுகளில் ஒவ்வொருவரும் புனைவதை பாடகரும் நூலோரும் சேர்ந்து பின்னி ஒன்றாக்குகிறார்கள். நீங்களிருவரும் சேர்ந்து ஒன்றை முடைந்து மகிழ்ந்தீர்கள். அவ்வாடல் முடிந்தது, அதன் உவகை மட்டுமே அதன் கொள்பொருள்."

"மணத்தை தேடிச்செல்பவர் நீங்கள். ஒன்று உணர்க, காட்சிகளை நினைவுகூரலாம். ஒலிகளை மேலும் குறைவாக நினைவுகூரலாம். தொடுகையை இன்னும் மெலிதாக. சுவையை அதனினும் சிறிதாக. மாமல்லரே, எவரேனும் மணத்தை நினைவுகூர முடியுமா?" என்றான் முண்டன். "மணத்தை அடையாளம் காணமட்டுமே முடியும். விழியும் நாவும் இணைந்து அளிக்கும் அகப்பதிவுக்கேற்ப மணம் உருவாவதை அறிந்திருக்கிறீர்களா? முல்லைமணம் கொண்ட தாமரையை உங்கள் கையில் அளித்தால் என்ன மணத்தை முகர்வீர்கள் என்று தெரியுமா?"

"அறிக, ஐம்புலன்களில் புறத்திற்கு மிகஅருகே அகம் பூசி நின்றிருக்கிறது விழி. அகத்திற்கு மிக அருகே புறம் நோக்கி திகைத்து அமைந்துள்ளது மூக்கு. மணம் என்பது மணமெனும்

தன்னுணர்வு எழுந்து பருப்பொருளைத் தொடுவதன்றி வேறல்ல” என அவன் தொடர்ந்தான். “நீங்கள் தேடிச்செல்லும் மலர்மீது உங்கள் அகம் அந்த மணத்தைப் பூசி அதை தான் அறிந்துகொள்ளவேண்டும். ஆடிக்குள் புகுவதற்கு உகந்த வழி விலகுவதே. அகம்புக உகந்த வழி அணுகுவதே.” பீமன் நீள்மூச்சுடன் “ஆம். ஆனால் நான் தேடிச்சென்றாகவேண்டும். அதை அறிகையில் நான் என்னை உணர்வேன்” என்றான்.

“தான் என்று உணர்வோர் அறிவதெல்லாம் தான் நிகழும் தளங்களை மட்டுமே” என்றான் முண்டன். “ஆட்டக்களமும் சூழ்கையும் அன்றி காய்களுக்குப் பொருளென்ன இருக்கக்கூடும்? இரண்டாமவரே, ஐவரையும் அறியாமல், ஐவருக்கு நடுவே அமைந்தவளை அறியலாகுமா? அவளை அறியாமல் அவள்நோக்கி உளம் மலர்ந்த உங்களை அறியக்கூடுமா?”

முண்டன் எழுந்தமர்ந்து சுற்றிலும் நோக்கி ஒரு சிறுகல்லை எடுத்து வைத்தான். “இது பெண்” என்றபின் அதைச் சூழ்ந்து இரு சிறுகற்களை வைத்தான். “இது தந்தை. அரசுசூழ்பவன், நூலாய்பவன், முதியவன். இது உடன்பிறந்தான், பெருவீரன், களித்தோழன், இணையுள்ளம் கொண்டவன்.” அவன் அந்த இரு கற்களையும் எடுத்து கையிலிட்டு குலுக்கினான். “இரண்டு ஐந்தாகுக! ஆம், அவ்வாறே ஆகுக!” அவன் கைகளை விரித்தபோது அங்கே ஐந்து கற்களிருந்தன. “ஆ, ஐந்து!” என்றான். பீமன் கைகளைக் கட்டியபடி சிறிய கண்கள் கூர்கொள்ள நோக்கி அமர்ந்திருந்தான்.

முண்டன் முதல்கல்லை வைத்து “இது தந்தையெனும் கல்லில் உடைந்த பெருந்துண்டா?” என்றான். பிறிதொன்றை வைத்து “இது உடன்பிறந்தானிலிருந்து எழுந்த பெருந்துண்டுபோலும்.

இரு சிறுசில்லுகள் இவை. முதற்சில்லில் உடைந்தது இறுதிக்கல். இரண்டாவதில் உடைந்தது முந்தைய சிறுகல்” என்றான். ஒரு பெரிய கல்லை எடுத்துக்காட்டி “அவ்வாறென்றால் இது எங்கிருந்து வந்தது? மூடிய கைக்குள் எங்கிருந்து முளைத்தது இது?” என்றான். அவன் கைகளை புரட்டியும் திருப்பியும் காட்டினான். “காற்றில் திரண்டு கைக்குள் எழுந்துள்ளது. சூழ்ந்துள்ள காற்றில் அருவமாக இருப்பது போலும். விழைவு முதிர்கையில் திரண்டு உருக்கொள்கிறது போலும்… எத்தனை பெரிது…! ஆம், பெரிதாக மட்டுமே இருக்கமுடியும். கரந்திருப்பவை அறியாது வளரும் வல்லமை கொண்டவை அல்லவா?”

அவன் முதற்கல்லை சுட்டுவிரலால் முன்னோக்கி நகர்த்தினான். “அறிவுளோனை பெண் விழைகிறாள். அவனுடன் இருத்தலால் தானும் அறிவுடையள் ஆவதை அறிகிறாள். விழித்திருக்கையில், மேலே சூரியன் கதிர்விரிக்கையில், எளிய விழிகளால் சூழப்பட்டிருக்கையில் அதையே அணியென சூடிக்கொள்கிறாள். ஆனால் அவள் கொண்ட படைக்கலங்கள் எவையும் பயன்தராக் களம் அது. கூர்கொண்டவை அனைத்தும் குருதிசூட விழைகின்றன. வலிமை கொண்டவை வெற்றியை வேண்டித் தவிக்கின்றன. தனிமையில் சலிக்கிறாள். எங்கு தொடங்குகிறது சலிப்பு? எங்கு எழுகிறது விருப்பு? சலிப்பென்பதே அடித்தளம். எழுச்சிகளெல்லாம் விழுந்தமைந்தாகவேண்டும் அதில்.”

இயல்பாக அந்தக் கல்லை பின்னுக்கு நகர்த்தியபடி “சலிப்பே தெய்வங்கள் விரும்பும் உணர்வு. பாண்டவரே, நோக்குக! தேவர்களும் தெய்வங்களும் சலிப்பில் உறைந்து அமைந்திருக்கின்றனர். முடிவிலியைப்போல் சலிப்பூட்டுவது

பிறிதேது?” என்றான் முண்டன். “அதை வெல்லவே ஆடல். இதோ!” என அவன் அந்த மூன்றாம் கல்லை முன்னகர்த்தினான். “ஆடல் இனிது. இடர்மிக்க ஆடல் மேலும் இனிது. பேரிடரோ பேரின்பமே ஆகும். கூருடன் ஆடல். நஞ்சுடன் ஆடல். எரியுடன் ஆடல். பெண்வலனை பெண்விழைகிறாள். அவனை முற்றிலும் வெல்ல கனவுகாண்கிறாள். முயன்று முயன்று தோற்கிறாள். வெல்லப்பட்ட பெண்வலன் வெறும் சருகு. வெல்லப்படாதவனோ புற்றுறை நாகம்.”

அக்கல்லை முன்னும் பின்னும் நகர்த்தி விரல்கள் ஆட சொற்கள் அவனையறியாமல் எழுந்து இலைநாவுகளிலிருந்து ஒலித்து அப்பகுதியைச் சூழ்வதுபோலிருந்தன. “வென்றாடல், கொன்றாடல், நின்று தருக்கல், ஐயுற்றுச் சரிதல்... எத்தனை தருணங்கள்! தருணங்களை மானுடர் விரும்புகிறார்கள். வெற்றிருப்பு என அல்லாதிருக்கும் கணங்கள் அல்லவா அவை?” மூன்றாம் கல்லை பின்னிழுத்து நான்காம் கல்லை முன் செலுத்தினான். “மின்னை வெல்லாதபோது வெல்கிறார்கள் ஒரு செம்மணியை. உறைந்த ஒளி, கைக்குள் அடங்கும் எரி. பொன்னில் பதிந்து அணியென்றாகி அழகு கூட்டி அமையும் சிறுகல். ஆனால் அவளறிவாள், அது மின்னல்ல என. மின்னிச் செல்லும் தொலைவு அருமணிக்குள் சுழன்று துளியாகியிருக்கிறதென்றாலும் மின்னறியும் வெளியின் முடிவிலி வேறென்று.”

ஐந்தாம் கல்லை நீக்கி அருகே கொண்டுசென்று அவன் சொன்னான் “நிகரிகள் எளியவை. அவை நாம் விரும்பும்படி நடிப்பவை. நமக்குரியவை என்பதனாலேயே அன்புக்குரியவை. அறிக, வெல்லப்படாத காட்டுவிலங்கை வேட்டையாடுகிறார்கள்.

காலடியில் அமைந்த வீட்டுவிலங்கை வருடி மகிழ்கிறார்கள்.” இரு சிறுகற்களையும் இரு பக்கமும் நிறுத்தியபடி அவன் நிமிர்ந்து புன்னகை செய்தான். “இணையர். அரியணையின் காலென அமைந்த சிம்மங்கள். செம்மணிவிழிகள். வெண்கல் பற்கள். குருதியுகிர்கள். அவையும் சிம்மங்களே!” அவன் விரல்கள் சுழல எல்லையில் இரு பெரிய கற்களும் அண்மையில் இரு சிறிய கற்களும் அமைய மையமென முதல்கல் நின்று ஒரு வட்டமாகி சுழலத் தொடங்கியது.

“ஆனால் உள்ளமறியாதா என்ன, அருமணி எத்தனை எரிந்தாலும் ஒரு பஞ்சையும் பற்றவைக்காதென்று?” என்றான் முண்டன். “வெல்லப்படாதவை இரண்டு. எட்டப்படாதது ஒன்று. எட்டியும் அடங்காத உருக்கொண்ட பிறிதொன்று.” பெரிய கல்லை அவன் முன்னால் நகர்த்தினான். “வெறும்பாறை. மலைப்பாறையை நோக்குந்தோறும் மலைக்கிறது மானுட உள்ளம். அதன் வடிவின்மையும் அமைதியும் நம்முள் உறையும் எதையோ கொந்தளிக்கச் செய்கின்றன. உடைத்தும் செதுக்கியும் அதை வடிவங்களாக்க வெம்புகிறோம். அதை முரசுத்தோல் என அறைந்து பிளிறச்செய்ய முயல்கிறோம். பாறையை அணுகுபவர்கள் அனைவரும் கைகளால் அதை அறைகிறார்கள். உள்ளத்தால் அதன்மேல் மோதுகிறார்கள்.”

“பாறை நம் உலகுக்கு அப்பால் உள்ளது” என்று முண்டன் தொடர்ந்தான். “அதன் மேல் எப்போதும் மோதிக்கொண்டே இருக்கிறாள்” என மையத்தை அதை நோக்கி செலுத்தினான். மையக்கல் பெரிய பாறைக்கல்லை சுற்றிவரத்தொடங்கியது. “உள்நுழையமுடியாத மண்டபமா கரும்பாறை? மழையோ வெயிலோ மணலோ சருகோ அதன்மேல் நிலைப்பதில்லை. எதையும் சூடாது எதுவுமென ஆகாது இங்கு நின்றிருக்கும்

பெரும்பொருளின்மை அது.” அவன் அதை மேலும் சுழற்றிக்கொண்டே இருந்தான். “ஆற்றல் என உணரப்படுபவை பல. அறிவும் திறனும் விரிவும் கூரும். இளமையும் எழிலும் விரைவும் துள்ளலும். அவையனைத்தும் பிறிதொரு அலகால் மதிப்பிடப்படுபவை மட்டுமே. மாமல்லரே, வெறும் ஆற்றல் என்பது உடலே. சொல்மாயங்களால் உளமயக்குகளால் கடக்கப்பட ஒண்ணாதது. ஐம்புலன்களும் அறிவதனால் அறிவாலோ உணர்வாலோ கனவாலோ மாற்றொன்று கருத முடியாதது.”

“ஆற்றலை எதிர்கொள்ளும் பெண் அஞ்சுகிறாள். ஏனென்றால் ஒருபோதும் தன் உடலோ அறிவோ உள்ளமோ உரையாட முடியாத ஊமை அது என எண்ணுகிறாள். ஆகவே தவிர்க்க முயல்கிறாள். தவிர்த்தால் மறைவதல்ல அது என்று உள்ளாழம் அறிகிறது. எனவே எப்போதும் ஓரவிழியால் நோக்கிக்கொண்டும் இருக்கிறாள். அதைவிட்டு விலகியே அத்தனை திசைகளுக்கும் செல்கிறாள். அனைத்திலும் முட்டிமுட்டி அங்குதான் திரும்பிவருகிறாள். பருப்பொருளில் எழும் ஆற்றலே பிறிதில்லாதது என்று இறுதியில் உணர்கிறாள். அதன் முன் அடிபணிவதனூடாக வெல்லமுடியுமா என முயல்கிறாள்” என்றான் முண்டன்.

அந்தப் பாறையை அசையாது நிறுத்திவிட்டு தன் கைகளை எடுத்தான். மையக்கல் சுழலத் தொடங்கியது. “உங்கள் கையை அந்தப் பாறைக்கல் மேல் வையுங்கள், பெருந்தோளரே” என மிகத்தாழ்ந்த குரலில் சொன்னான். பீமன் தயங்க “வையுங்கள்” என்றான். “வையுங்கள்” என்று அவன் காதுக்குள் மட்டும் ஒலித்தான். பீமன் அதை மெல்ல தொட்டான். மையக்கல் சுவரில் முட்டி கீழே விழுந்த வண்டென ரீங்கரித்தபடி

சுழன்றுகொண்டே இருந்தது. “நீங்கள் விழைவதை கேளுங்கள்” என்றான் முண்டன்.

பீமன் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. “கேளுங்கள்” என்றான். “வாயால் அல்ல. உள்ளத்தால், எண்ணத்தால்.” பீமன் கண்களை மூடினான். அவன் கை அதிர்ந்தது. உடல் காய்ச்சலென நடுங்கியது. அவன் பிறிதொருவனாக ஆனதுபோல உடலின் நிமிர்வும் வளைவும் மாறின. அவன் மெல்ல முனகினான். இமைகள் தட்டாரப்பூச்சியின் இறகுகள் போல அதிர்ந்தன.

பின் அவன் விழித்தபோது அவன் முன் கற்கள் இருக்கவில்லை. கைகளை மார்பில் கட்டியபடி முண்டன் நோக்கி அமர்ந்திருந்தான். “என்ன நடந்தது?” என்றான் பீமன். “நாம் செல்லவேண்டிய திசை தெளிவாகியுள்ளது. கிளம்புவோம்” என்றபடி முண்டன் தன் மூட்டையையும் கோலையும் எடுத்துக்கொண்டான்.

மூன்றுநாட்கள் மானுடச்சுவடே இல்லாத அடர்காட்டில் பன்றித்தடம் வழியாக நடந்து அவர்கள் சிறுசுனையைச் சுற்றிய சோலையை வந்தடைந்தனர். தொலைவில் புதர்வெளிக்கு நடுவே அடர்ந்த மரங்களின் பசுங்குவை ஒன்று தெரிவதைக்கண்டு பீமன் நின்று நோக்கினான். “அங்கு ஒரு சிறு சுனையுள்ளது. பிரீதம் என அது அழைக்கப்படுகிறது. அதைச் சூழ்ந்துள்ள இச்சுனைக்கு சம்மோகனம் என்று பெயர்” என்று முண்டன் சொன்னான். “நீங்கள் கனவில் கண்ட சோலை இதுதானா என்று பாருங்கள், பாண்டவரே!”

திகைப்புடன் “இவ்வளவு அருகிலா?” என்றான் பீமன். “அரியவை அருகிலிருக்காது என்பது ஒரு நம்பிக்கை. நாம் வாழ்வது எளிமையில் என்ற எண்ணத்திலிருந்து எழுவது அது” என்றான்

முண்டன். “வருக!” என முன்னால் சென்றான். புதர்கள் நடுவே பாதைபோல விலங்குகள் சென்ற வகிடு இருந்தது. அணுகுந்தோறும் பீமன் பரபரப்படைந்தான். “இதுதான்... இங்குதான்!” என்றான். “நோக்குக!” என்றான் முண்டன். மேலும் அணுகியபோது சோலைக்குள் உயரம் குறைவான ஒரு கற்கோயில் இருப்பது தெரிந்தது. “இதே சிற்றாலயம்தான்... உள்ளே கரிய தேவி சிலை ஒன்று. முகப்பில் எண்ணைக் கசடுபடிந்த கல்விளக்கு” என்று பீமன் சொன்னான்.

பதற்றமான காலடிகளுடன் நடந்து முண்டனுக்கு முன்னதாகவே பீமன் சோலையைச் சென்றடைந்தான். இலைஎடையால் வளைந்த கிளைகள்கொண்ட உயரமற்ற சோலைமரங்கள் கிளைகள் பின்னிச் செறிந்த சோலைக்குள் பரவியிருந்த சருகுமெத்தைமேல் சிற்றுயிர்கள் சலசலத்தோடின. உதிர்ந்த மலர்கள் பலவண்ணக் கம்பளம்போல பரவியிருக்க அவற்றின் மட்கும் மணம் கிளைகளில் குலைகளாகவும் கொத்துகளாகவும் அடர்ந்திருந்த மலர்களின் மணத்துடன் கலந்து மூக்கை நிறைத்தது. நெஞ்சில் நிறைந்த சொற்களிலும் அந்த மணம் பரவிவிட்டதென்று தோன்றியது. “இதே இடம்தான்” என்றான் பீமன்.

மரங்கள் சுற்றி வளைத்திருந்த நீள்வட்டச் சிறுசுனை நீர்நிறைந்து குளிர்ந்த சிற்றலைகள் கரைதொட்டு நெளிய குழந்தையின் விழிபோல தெளிந்து கிடந்தது. அதன் கரையோரச் சேற்றில் மான்களும் செந்நாய்களும் எருதுகளும் புலியும் சென்ற காலடித்தடங்கள் பதிந்திருந்தன. மென்நாணல்காற்றில் சாமரம் சிலிர்த்துச் சூழ்ந்த கரைகளில் வகிடென வழிந்த ஊற்றுநீரோடைகள் மெல்லிய

வழிவோசையுடன் நீரொளி நலுங்காது இணைந்துகொண்டிருந்தன.

எங்கு எதை நோக்குவதென்றறியாமல் அவன் கண்கள் பதைத்து சுற்றிவந்தன. நெடுங்காலம் முன்பு விட்டுச்சென்றவற்றை தொட்டுத்தொட்டு அறிந்து இது இது இதுவே என துள்ளுவதுபோல பரபரப்பு கொண்டது உள்ளம். பின் அவன் விரைந்து அச்சிற்றாலயத்தின் முகப்புக்குச் சென்று குனிந்து நோக்கினான். உள்ளே இடக்கையில் மலரும் வலக்கையில் மின்படையும் கொண்டு அமர்ந்திருந்த தேவியின் கரியமுகத்தில் வாயிலினூடாக வந்த ஒளி மெல்லிய ஒளிர்நீர்மை என வழிந்திருந்தது. அவளுக்கு அணிவிக்கப்பட்ட மலர்மாலை சருகாகி நார்தெரிய முலைமேல் கிடந்தது. காலடியில் பூசனைப்பொருட்கள் வைக்கப்பட்ட தொன்னைகளும் தாலங்களும் உலர்ந்து காற்றில் சிதறியிருந்தன.

“இவளேதான்... நான் அன்று கண்டது இவளையே!” என்று பீமன் திரும்பி காற்று இலையுலைக்கும் ஒலியில் முண்டனிடம் சொன்னான். முண்டன் புன்னகையுடன் கைகளைக் கட்டியபடி அங்கேயே நின்றான். பீமன் திரும்பி மரங்களை நோக்கினான். “அதே மரங்கள்... அதே மலர்க்கொத்துகள். ஐயமே இல்லை. தென்மேற்கு மூலையில் உள்ளது அந்த மலர்மரம்.” அவன் ஆலயத்தை சுற்றிக்கொண்டு அங்கே சென்றான். அவன் காலடியோசை கேட்டு ஒரு நாகம் புதருக்குள் இருந்து தலைதூக்கியது. எழுந்த அதன் தலைக்குப் பின்னால் உடல் வளைந்தது. அவன் அதை பொருட்படுத்தாமல் நடந்தான். தலையைப் பின்னிழுத்து அது வளைந்து ஒழுகியோடி புதருக்குள் இருந்த வளைக்குள் புகுந்தது.

தென்மேற்கு மூலையில் அந்த மரம் நின்றது. பீமன் “இதோ நின்றிருக்கிறது” என்று கூவினான். அல்லிபோல வெண்ணிற இதழ்கள் கொண்ட மலர்கள் கிளைதோறும் விரிந்து கிளைதொய்ந்து நின்றிருந்தது அந்த மரம். “இதுதான்... இதே மணம்தான்” என்றான் பீமன். “நோக்குக, இதன் கீழே ஒரு மலர்கூட உதிர்ந்திருக்கவில்லை!” முண்டன் வந்து அப்பால் நின்று “இதுவென்றால் நன்று” என்றான். பீமன் பாய்ந்து அதில் தாழ்ந்திருந்த ஒரு கிளையைப் பற்றி இழுத்து ஒரு மலரை பறித்தான். அதன் சிவந்த நெட்டுமுனையிலிருந்து நாய்முலைக்காம்பு போல பாலூறியது. பீமன் அதை மெல்ல வருடி “அழுத்தமான இதழ்கள் கொண்டது. ஆகவேதான் வாடாமலிருக்கிறது. புல்லிசெறிந்து பூம்பொடிநிறைந்துள்ளது. நெடுந்தொலைவு செல்லும் மணம் அவ்வாறு வருவதே” என்றான்.

அதை முகர்ந்து விழிசொக்கி முகம் மலர்ந்து மீண்டு “அரிய மணம்... ஒவ்வொரு கணமும் ஒருமலர் என மாயம் காட்டும் ஆடல்” என்றான். “பாரிஜாதம் அல்லது செண்பகம்.” மீண்டும் முகர்ந்தபடி முண்டனிடம் வந்து “இந்த மலர்தான். அன்னை காலடியில் வைத்து வணங்கி எடுத்துச்செல்வோம்” என்றான். அவனுடைய பரபரப்பை முண்டன் பகிர்ந்துகொள்ளவில்லை. “அவ்வாறே செய்க!” என்றான். “எளிதிலமையாது என்றே எண்ணினேன்” என்றான் பீமன். “ஏதோ காவியமலர் என்று உளம் சொன்னது. இப்படி எளிதில் கையகப்படுமென எண்ணவே இல்லை.”

அவன் அதை கொண்டுசென்று ஆலயத்தின் படியில் வைத்தான். கைகூப்பி வணங்கியபடி கண்மூடியவன் திடுக்கிட்டு விழிதிறந்தான். திரும்பி முண்டனை நோக்கியபின்

கோயிலுக்குள் உற்றுநோக்கி நின்றான். “என்ன?” என்றான் முண்டன். “தேவி என்னை நோக்குவதுபோல் ஓர் உணர்வு... உளமயக்கல்ல, அங்கே உண்மையில் எவரோ அமர்ந்திருப்பதுபோல” என்றான் பீமன். “அவள் ஊர்வசி” என்றான் முண்டன். “இது உங்கள் குலமூதாதை புரூரவஸ் அவளுக்காகக் கட்டிய சிற்றாலயம்.” அவன் திகைப்புடன் நோக்கி “இதுவா?” என்றான். “ஊர்வசிக்கு ஆலயமா? நான் கேள்விப்பட்டதே இல்லை.”

“இங்குமட்டுமே உள்ளது. ஹஸ்தியின் காலம்வரைகூட இங்கு ஆண்டுக்கொருமுறை குருகுலத்தோர் வந்து வணங்கிச்செல்லும் முறையிருந்தது. பின்னர் முற்றிலும் மறந்துவிட்டனர். அருகிருக்கும் சிற்றூரிலிருந்து முதல் மகவு பெண்ணாகப் பிறந்தால் தந்தையும் துணையரும் மட்டும் வந்து வழிபட்டுச் செல்வதுண்டு” என்றான் முண்டன். பீமன் குழப்பத்துடன் குனிந்து அந்த மலரை எடுத்தான். சிறு ஐயம் ஏற்பட நெற்றி சுருக்கியபடி அதை முகர்ந்தான். திகைப்புடன் திரும்பி முண்டனை நோக்கிவிட்டு மீண்டும் முகர்ந்தான். “இல்லை, இது அந்த மலர் அல்ல” என்றான். “இந்த மணம் வேறு. இது வெறும் பாரிஜாதம்... அந்த பித்தெழச்செய்யும் கூர்மை இதில் இல்லை.” மீண்டும் முகர்ந்து “ஆனால்...” என்றான்.

“இது அதே மரம்தான்” என்றான் முண்டன். “ஆனால் நீங்கள் முகர்ந்த மலர் இந்த மரத்திலிருந்து எழுந்தது அல்ல.” பீமன் வினாவுடன் நோக்க “இளவரசே, இந்த மரத்தின் ஒவ்வொரு மலரும் தனிமணம் கொண்டது. நீங்கள் தேடிய மலர் இதுபோன்றதே, இது அல்ல” என்றான். பீமன் சோர்வுடன் அந்தப் படிகளில் அமர்ந்தான். “துயருற வேண்டியதில்லை. இது

மலரிலிருந்து முளைக்கும் மரம். மலர்களை பறவைகள் கொண்டுசென்று வீழ்த்தி முளைக்கச் செய்கின்றன. இங்கு அந்த மலர் வந்து விழுந்துள்ளதென்றால் அருகே தாய்மரம் உள்ளது என்றே பொருள்…” என்றான் முண்டன்.

“அதை தேடிக்கண்டடைவோம்” என்றபடி பீமன் எழுந்தான். “அதற்கு முன் இந்த மலரை கூர்ந்தறிக! இந்த தேவியிடம் அதை உசாவுக!” என்று முண்டன் சொன்னான். பீமன் மீண்டும் அமர்ந்தான். “மாமல்லரே, உங்கள் மூதாதை புரூரவஸ் ஊர்வசியை மணந்த கதையை அறிந்திருக்கிறீர்களா?” என்றான். பீமன் “சூதர்பாடல்களை கேட்டுள்ளேன்” என்றான். “தேவருலகின் கன்னியர்களில் ஊர்வசியே பேரழகி என்பது கதைஞர் கூற்று. மேனகை, சகஜன்யை, கர்ணிகை, புஞ்சிகஸ்தலை, ரிதுஸ்தலை, ஹ்ருதாசி, பூர்வசித்தி, உல்லோஜை, பிரம்ளோஜை ஆகியோர் தேவர்குலப் பாடகியர். அனுசானை, அத்ரிகை, சோமகேசி, மிஸ்ரை, அலம்புஷை, மரீசி, சூசிகை, வித்யுல்பர்ணை, திலோத்தமை, அம்பிகை, க்ஷேமை, ரம்பை, சுபாகு, அஸிதை, சுப்ரியை, புண்டரீகை, சுகந்தை, சுரஸை, பிரமாதினி, காம்யை, சாரத்யுதி என்போர் நடன மங்கையர். அவர்களில் கலையாலும் ஊர்வசியே முதன்மையானவள்.”

“அழிவற்றவர்கள். ஒவ்வொரு கணமும் தங்கள் விழிதொடும் எதிர்பாவையிலிருந்து புதிதென பிறந்துவருபவர்கள். எனவே நேற்றிலாதவர்கள். காண்பவன் உளமெழுந்த விழைவிலிருந்தே அழகு திரட்டி எழுபவர்கள். எனவே தனக்கென உருவமொன்றில்லாதவர்கள். காமம் என்னும் தழலுடன் ஆடும் காற்று என அவர்களை சொல்கின்றன தொல்கதைகள்” என்றான் முண்டன். “முன்பொரு காலத்தில் நரர், நாராயணர் என்னும் இரு முனிவர்கள் கடுந்தவம் இயற்றினார்கள்.

வழுக்குப்பாறையில் இருவர் மாறிமாறி கையுதவி மேலேறிச் செல்வதுபோல் அமைந்திருந்தது அவர்களின் தவம். மூன்று உள்ளிருள்களையும் நரருக்கு அளித்துவிட்டு தன் தவவல்லமையால் மேலேறிச் செல்லும் நாராயணர் அங்கு நின்றபடி நரர் கொண்ட இருள்களை தான் பெற்றுக்கொள்வார். அவருடைய தவத்தில் அவை சிறுத்து சிறு மருவென்றாகிவிட்டிருக்கும். மேலும் ஏறிச்சென்ற நரர் நாராயணரை தன்னுடன் அழைத்துக்கொள்வார்.”

“அவர்களின் தவம் முழுமைகொள்வதைத் தடுக்கும்பொருட்டு விழைவின் இறைவனாகிய இந்திரன் தன் தேவர்களை அனுப்பி உலகின்பங்களை அளிப்பதாக மயக்குகாட்டினான். அவர்கள் இளகாமை கண்டு தேவர்குலப் பாடகிகளையும் நடனமங்கையரையும் அனுப்பினான். தங்கள் இசையாலும் அசைவாலும் அவர்கள் அவ்விரு முனிவர்களையும் சூழ்ந்து ஒரு களியுலகை சமைத்தனர்” என்று முண்டன் சொன்னான். “இசை அசைவுக்கு அழகு கூட்டியது. அழகு இசைக்கு பொருள் சேர்த்தது. இவ்வுலகு இன்பப்பெருக்கு. மண்ணின் இனிமை கனியென்றும் தேனென்றும் மரத்தில் ஊறுவதுபோல அவ்வின்பங்களை மட்டும் தொட்டுச்சேர்த்து ஒற்றைநிகழ்வென்றாக்குவது கலை. கூர்கொண்ட உலகின்பமே கலை.”

“அழகின் அழைப்பால் நரர் விழிதிறந்தார். முதற்கணம் தன் முழுவிசையால் சூழ்ந்த இன்பப்பெருக்கை விலக்க முயன்றார். அதை அஞ்சியமையால் விலக்கம் கொண்டார். விலக்கத்தை அருவருப்பென ஆக்கிக்கொண்டார். ஆனால் உயர்கலைக்கு அருவருப்பு அணியென்றே ஆகுமென அவர் அறிந்திருக்கவில்லை. அது மானுடப்புலன்களைச் சீண்டி

சிலிர்க்கவைக்கிறது. எழுந்து கூர்ந்த புலன்நுனிகளில் கலை அமுதென படிகிறது. விழிகசிந்து மெய்சிலிர்த்து தன்னை இழந்த நரர் ‘இதுவே, இதுவொன்றே, இனியேதுமில்லை’ என உளமுருகினார். தன்னை உதறி உதறி அதிலாழ்ந்து சென்றார்.”

“அவர் விட்ட நீள்மூச்சால் நாராயணர் விழிதிறந்தார். தன் தவவல்லமையில் பாதி அழிந்துவிட்டதை உடனே உணர்ந்தார். அக்கணம் மீளவில்லையேல் பிறிதொரு வாய்ப்பில்லை என்று கண்டார். நரர் சென்றவழியின் இடரை அறிந்ததுமே பிறிதொரு நெறி தெளிந்தது அவருள். ஒரு விழிச்சுழற்சியால் அங்குள்ள அத்தனை அழகியரையும் நோக்கினார். அவர்களின் பேரழகின் உச்சகணங்களை மட்டும் தொட்டெடுத்தார். அவர் சூடிய இசையின் நுண்மைகளை மட்டும் கூட்டிச்சேர்த்தார். ‘எழுக என் மகள்’ என்று கூவி தன் தொடைமேல் அறைந்தார்.”

“அங்கிருந்து எழுந்து வந்தவள் பேரழகுக்கன்னியாக இருந்தாள். அவள் உடலில் இசைகூடி அசைவுகள் அனைத்தும் ஆடலென்றே நிகழ்ந்தன. விழிமலர்ந்து தன் மகளின் ஆடலை நோக்கி அமர்ந்திருந்த நாராயணரின் உளம் கலைக்க அங்கு வந்த தேவகன்னியரால் இயலவில்லை. தோற்று சலித்து வணங்கி அவர்கள் அமராவதிக்கு மீண்டனர். காமத்தைக் கடந்த நாராயணர் தன் மறுபாதியை கைபற்றி தன்னருகே எடுத்துக்கொண்டார். அறிவது அறிந்து அமைந்து அவர்கள் விடுதலைகொண்டனர்” என்றான் முண்டன்.

# மாமலர் - 14

**14. இருளாடுதல்**

“ஊரு என்னும் தொடையில் பிறந்தமையால் அவள் ஊர்வசி என்றழைக்கப்பட்டாள். இந்திரனின் அவையில் ஆடற்கணிகையரிலும் பாடற்கணிகையரிலும் அவளே தலைக்கோலி என அமைந்தாள். பாடகியர் அனைவரின் குரலினிமையும் அவளில் அமைந்தது. அவர்கள் அனைவரும் கொண்ட எழிலசைவுகளின் நுண்மைகள் அவள் உடலில் சூழ்ந்தன. தெய்வங்களுக்குரிய அருமலர் என்பதனால் தேவர் தலைவனும் அணுக முடியாத கன்னியாக அவள் இருந்தாள். முனிவர் அவளை பெண்ணுருவில் எழுந்த விண்மலர் என்று வாழ்த்தினர். அத்தகைய கன்னியொருத்தியை மானுடன் ஒருவர் அடைந்தார். அவரே உம் குலமூதாதையாகிய புரூரவஸ்.”

ஊர்வசியின் சிற்றாலயத்தின் படியில் அமர்ந்து கைகளை மார்பில் கட்டியபடி பீமன் கேட்டிருக்க, எதிரே கால்சுவடு வைத்து, கை முத்திரை காட்டி, விழிசலித்து உடல்நெளித்து கதை தன்னில் நிகழவிட்டு நின்றிருந்தான் முண்டன். “பெருந்தோளரே, கேளுங்கள். புரூரவஸ் சந்திரகுலத்தின் முதல் மன்னர். இன்று பாரதவர்ஷமெங்கும் கொடியும் முடியும் கோலும் கொண்டமர்ந்திருக்கும் சந்திரகுலத்து அரசக்குடிநிரைகள் அனைத்துக்கும் முதல்தாதை அவரே.”

பிரஜாபதியாகிய அத்ரிக்கு அனசூயையில் வெண்நுரைக்குழலும் வெள்ளிமின்னும் உடலும் கொண்ட அழகனாகிய சந்திரன் பிறந்தான். அவன் தேவகுருவாகிய பிரஹஸ்பதியிடம் மெய்யறிதல் கற்கும்பொருட்டு சென்றமைந்தான். வியாழன் என விண்ணில் ஒளிரும் பிரஹஸ்பதி நடைமுறைமெய்மை எனும் கொள்கையின் முதலாசிரியன். “எது தன்னலமோ அதையே தன்னுள்ளம்

விழையும். எது நிகழும் விழைவோ அதுவே அகம் ஏற்கும் உண்மை. ஏற்கும் உண்மையே நடைமுறை உண்மை, ஏற்கமுடியாத உண்மை வெறும் கனவு. அதை அறிந்தாலென்ன, அறியாவிட்டாலென்ன?" என்றார் குரு. ஆம் என அடிபணிந்து ஏற்றான் சந்திரன். உலகாண்மை என அவர் அவனுக்களித்த மெய்மை அழைக்கப்பட்டது.

குருவின் துணைவி தாரை. ஆசிரியர் மாணவனுக்களிக்கும் கல்வியை நாளும் கேட்டுக்கொண்டிருந்தாள். முதியவராகிய வியாழனின் விலக்கத்தால் சலித்திருந்த அவள் ஒருநாள் இளைய மாணவனை காமத்துக்கு அழைத்தாள். அவன்மேல் அவள் காமம் கொண்டிருப்பதை அறியாது அவன் முகம் தன்னுள் எழுவதைக்கொண்டு அவள் அறிகையில் அக்காமம் முற்றிலும் வளர்ந்துவிட்டிருந்தது. அவன் உடலை அவள் ஓரவிழியால் பலமுறை நோக்கியதுண்டு. நோக்கியகணமே எழும் உளஅதிர்வால் படபடப்புகொண்டு விழிவிலக்கி பிறிதொன்றில் மூழ்குவாள். முகம் சிவந்து மூச்சு சீறிக்கொண்டிருக்கும். பின்னர் கண்கள் கசிய மீள்கையில் தன் தனிமையை எண்ணி ஏங்குவாள்.

கணவனுடனிருக்கையில் அறியாது அவன் முகம் நினைவுக்கு வருவதனால் அவர் தொடுகைகள் அவளை குளிர்ந்து தன் தோலுக்குள் தசைகளுக்குள் ஒளிந்துகொள்ளச் செய்யும். ஆனால் ஏதோ ஒரு கணத்தில் அவர் தொடுகை அவனுடையதென்றாகும். அவள் காமத்தால் எரிந்தெழுந்து ஆயிரம் கைகள் கொண்டு அவரை அள்ளித் தழுவிக்கொள்வாள். புதுமழைக் காட்டாறெென அவரை சுருட்டிக்கொண்டுசெல்வாள். பின்னர் மீண்டு எழுகையில் அவையனைத்தையும் கடந்து பிறிதொரு நதிக்கரைச் சதுப்பில்

தன்னந்தனிமையில் சித்தம் மயங்கிக் கிடப்பாள். அப்போது அவர்கள் இருவரையும் எண்ணி அவளுக்குள் முற்றிலும் ஒளிந்துகொண்டு ஒரு சிறுமி புன்னகை செய்வாள்.

ஆனால் அவள் உள்ளத்தை அவன் அறிந்திருக்கவில்லை. அவன்மீது கொண்ட காமத்தாலேயே அவள் தன்னை அவனிடமிருந்து முற்றிலுமாக மறைத்துக்கொண்டாள். அவனிடம் கடுமுகம் மட்டுமே காட்டினாள். ஏதென்றில்லாமல் அவனிடம் முனிந்தாள். அவனைப்பற்றி கணவனிடம் பொய்க்குற்றம் சொன்னாள். தன் மாணவர்களில் இளையோனும் அழகனுமாகிய அவன்மேல் மனைவி சொன்ன பழுதுகள் அவருள் நுண்ணிய உவகையை நிறைத்தன. அவர் அவனுக்காக அவளிடம் நல்லுரை சொன்னார். அவனை வேண்டுமென்றே அழைத்துவந்து தன்னுடன் உணவுக்கு அமரச்செய்தார். அவர்கள் இருவரையும் இணைத்து நகையாட்டுரைத்து சிரித்து மகிழ்ந்தார்.

அவள் மேலும் மேலும் சினம் கொண்டு விலக அவர் இன்னும் இன்னும் என அவ்வாடலை முடுக்கினார். அவளையும் அவனையும் முற்பிறவிக் காதலர்கள் போலும் என்று ஒருமுறை சொன்னார். அவள் அரைக்கணம் விழிதிடுக்கிடுவதைக் கண்டு நகைத்து “அன்று கொண்ட நெருக்கத்தால் உருவான பகைமை இது” என்று சிரித்தார். அவள் பற்களைக் கடித்து “இனியொரு சொல் எழுந்தால் இங்கு நாக்குபிழுது இறப்பேன்” என்றபின் எழுந்து அடுமனைக்குள் சென்றாள். முலைவிம்ம விழிகசிய அங்கே நின்றாள். உணவில் கையளைந்தபடி அமர்ந்திருந்த சந்திரன் எழுந்து கைகழுவிவிட்டு ஆசிரியரை வணங்கி மீண்டான்.

அடுமனைக்குள் சென்று அவளை இடைவளைத்து “என்ன இது? வீண்சொல் சொல்லவும் உரிமையில்லையா எனக்கு?” என்றார். “இனி அவ்வண்ணம் ஒரு சொல் எழலாகாது. நான் உயிர்சூடமாட்டேன்” என அவள் விம்மினாள். “மூடப்பெண்ணே, உன்னை நான் அறியமாட்டேனா?” என்று சொல்லி அவளை அணைத்துக்கொண்டார். மணமாகி நெடுநாளானதனால் இருவர் நடுவே இருந்த உளமாடல் ஓய்ந்து உடற்தழுவல் தோலில் மட்டுமே என்றாகிவிட்டிருந்தது. அந்தப் புதிய நுண்விளையாட்டு தன்னை மீண்டும் அவளிடம் அணுக்கம் கொள்ளச்செய்வதை அவர் உணர்ந்தார்.

அந்த ஆடலை இருபுறமும் இருவரும் விழிமூடி நின்று வளர்த்தெடுத்தனர். அவளைச் சீறவைத்து பின் அழச்செய்து அணைத்துக்கொள்கையில் மெய்க்காமம் உடலில் ஊறியவளாக இருப்பதை அவர் உள்ளூர அறிந்திருந்தார். எங்கோ உள்ளுக்குள் ஓர் எச்சரிக்கை ஒலித்தாலும் அது தொலைவின் போர்முரசம்போல தன்னியல்பான கிளர்ச்சியையே அளித்து காமத்தை துடிப்புகொண்டதாக்கியது. அவளோ மேலும் மேலும் சினம்கொண்டு கடுஞ்சொல் சொன்னாள். ஒரு கட்டத்தில் அதைச் சொல்லவேண்டாமென்றே ஆகியது. ஒரு விழிச்சந்திப்பும் சீண்டும் ஒரு சிரிப்பும் மட்டுமே அதற்கு போதுமென்றாகியது. அச்சொற்களால் தன் காமத்தை முழுமையாக ஒளித்துக்கொள்ளமுடிவதைக் கண்டபின் அவள் அதை மீண்டும் விரித்தெடுத்தாள்.

ஒருநாள் அவன் பிரஹஸ்பதியின் பூசனைக்காக மலர்கொய்து கொண்டுவந்தான். ஒரு மலரை தன் குழல்சுருளில் செருகியிருந்தான். தேவருலகின் தென்கிழக்கு மூலையில் நின்ற அந்த நறுமணமலர்மரத்தடிக்குச் சென்றபோது

இயல்பாகவே அவள் நினைவெழுந்தது. அவன் உடல் அவள் உடலை அவன் கண்ட கணங்களை மட்டும் தொட்டெடுத்து தன்னை மீட்டிக்கொண்டது. அந்த மலர்களில் ஒன்றை தன் குழலில் சூடியபோது அவன் அக்கிளர்ச்சியில் அன்று முழுக்க நீடிப்பதைப்பற்றியே எண்ணியிருந்தான்.

ஆனால் அவனை எதிர்கொண்ட அவள் விழிகள் திடுக்கிட்டவைபோல மாறுவதைக் கண்டான். சற்றே பருத்த அவள் உதடுகள் மெல்ல விரிசலிட மேலுதடு வளைந்து வேட்கை காட்டியது. நீர்மை படர்ந்த விழிகளைத் திருப்பி முலையிணை விம்ம "அவர் இல்லை" என்றாள். அச்சொல்லிலேயே அனைத்தையும் அவள் சொல்லிவிட்டதை நெடுங்காலம் கழித்து அதை எண்ணத்தில் மீட்டியபோது உணர்ந்தான். ஆனால் அவனுள் வாழ்ந்த காமம் அதன் முழுப்பொருளையும் உணர்ந்துகொண்டிருந்தது அப்போதே. "அறிவேன்" என்றபின் மலர்களை கொண்டுசென்று வைத்துவிட்டு வந்தான்.

அவள் அவன் வழியில் மூச்சிரைக்க விழிதாழ்த்தி நின்றிருந்தாள். மேலுதட்டில் வியர்வை பூத்திருந்தது. அனல்கொண்ட கலம் என அவள் உடல் சிவந்திருந்தது. இருவரும் அசைவிழந்து நின்றனர். அவள் இமைகள் தாழ்ந்திருந்தமையால் நோக்கை அறியமுடியவில்லை. ஆனால் உடலே விழியென நோக்கு கொண்டிருந்தது. அவள் விழிகள் சரிந்து தன் வலமுலையை நோக்கிக்கொண்டிருப்பதை உணர்ந்து அவன் உடல் சிலிர்த்த கணம் அவள் நீள்மூச்சு ஒன்றை விடுத்தாள். அவன் அக்கணமே அவளை தாவித்தழுவிக்கொண்டான்.

அவளுக்குள் மூழ்குகையில் “இது நெறியல்ல. எவ்வகையிலும் முறையும் அல்ல” என்று கூறிய அவனிடம் “நால்வகை மெய்ப்பொருள்களில் அறம் காலம்பொறுத்தது. பொருள் இடம்பொறுத்தது. வீடு அறியவொண்ணாதது. கண்முன் என இருப்பது இன்பம் ஒன்றே. இன்பமளிப்பதே அறம். அதற்கு உதவுவதே பொருள். அதன் விளைவே வீடு” என குரு சொன்னதையே தானும் உரைத்தாள் தாரை. நோக்கம் கூர்கொண்டவர்களுக்கு சொல்மகள் துணைசெல்கிறாள். சந்திரன் அவளிடம் பணிந்தான். உடலுருகி அனல்கொள்ளும் அரணிக்கட்டைகள்போல அவர்கள் காதலாடினர்.

அதன்பின் அவர்களால் பிரிந்திருக்க இயலவில்லை. ஓர் உறவே அவர்களின் உடல்கள் அதன்பொருட்டென்றே அமைந்தவை என அவர்களுக்குக் காட்டியது. அதுவன்றி பிறிதுநினைப்பே இல்லாமலாக்கியது. சந்திரன் தாரையை அழைத்துக்கொண்டு வந்து தன் வெள்ளிவேய்ந்த அரண்மனையில் குடியேறினான். ஆசிரியர் அறிந்தால் தன்னை தீச்சொல்லிடக்கூடும் என்று அஞ்சினான். தேவருலகே தன் செயலைப் பழிக்குமென அறிந்திருந்தான். எனவே அவளை ஓர் சிறு அல்லிமொக்கென ஆக்கி தன் அரண்மனைச் சுனையில் விட்டான். அந்தியில் அவன் ஒளிகொண்டு எழும்போது அவளும் மலர்ந்தாள். அவர்கள் ஒளியுடன் ஒளி என கூடினர்.



துணைவியைக் காணாத பிரஹஸ்பதி அவளைத் தேடி நாற்புறமும் மாணவர்களை அனுப்பினார். அவர்களால் அவளை கண்டடைய முடியவில்லை. அசுரரோ அரக்கரோ அவளை கவர்ந்து சென்றிருக்கக்கூடுமென்று அவர்கள் எண்ணினர். அனைத்துலகுகளிலும் வண்டுகளாகவும் தும்பிகளாகவும் வல்லூறுகளாகவும் நாகங்களாகவும் சென்று அவளை தேடினர். ஒவ்வொருவரும் சோர்ந்தும் கசந்தும் திரும்பிவந்தனர். அவள் எங்குமில்லை, அவள் அழிந்துவிட்டிருக்கக்கூடும் என்றனர்.

துணைவி இறந்தாள் என அறிந்ததும் வஞ்சமும் சினமும் அகன்று பெருந்துயர் மட்டுமே எஞ்சிய பிரஹஸ்பதி அவள் புழங்கிய அடுமனையிலும் புழக்கடையிலும் அமர்ந்து அவளை நினைத்து ஏங்கினார். அவளை மீண்டும் காணலாகாதா என எண்ணி விழிநீர் விட்டார். அவள் அணிந்த ஆடைகள் பேழைக்குள் இருப்பதைக் கண்டு எடுத்து தோளிலிட்டு அவள் என எண்ணித் தழுவி நெஞ்சுலைந்தார். பின் எவரும் அறியவில்லை என்று எண்ணி அவ்வாடைகளை தான் அணிந்தார். அவள் கழற்றிவைத்துவிட்டுச் சென்ற அணிகளையும் பூண்டபோது அவளென்றே ஆனார். இடையொசிய நடந்து ஆடியில் தன்னை நோக்கியபோது அவர் உள்ளம் அவள்கொண்டிருந்த விழைவைச் சூடியது.

“செல்க, அவள் இங்கு வந்துசென்ற என் மாணவன் சந்திரன் இல்லத்தில் உள்ளாள்” என அவர் கூவினார். மாணவர்கள் சென்று சந்திரனின் அரண்மனையை மொய்த்தனர். “அவள் இங்கில்லை, நான் ஏதுமறியேன்” என சந்திரன் சொன்னான். “தேடுங்கள், அவள் இங்கிருந்தால் அழைத்துச்செல்லுங்கள். இல்லையென்றால் என்மேல் எய்த பழிக்கு மாற்று சொல்லுங்கள்” என்றான். அவர்கள் ஈயென்றும் கொசுவென்றும் வண்டென்றும் மாறி ஆயிரம் பளிங்கறைகள் கொண்ட அவ்வரண்மனையை இடுக்கு எஞ்சாமல் தேடினர்.

அவர்களில் ஒருவன் வண்டென்றாகி சுழன்று நீராழங்களில் அறைகளுள்ளனவா எனத் தேடினான். களைத்தபோது வண்டின் இயல்பால் அருகே இருந்த அல்லிமொட்டுமேல் அமரச்சென்றான். சலிப்போசையுடன் அது அவனை உதறியது. அக்கணமே அவள்தான் அது என உணர்ந்த அவன் “இங்குள்ளார் நம் ஆசிரியர்துணைவி” என்று கூவினான்.

மாணவர்கள் ஓடிவந்து மலரைச் சூழ்ந்தனர். மலர்வடிவம் கொண்டிருந்த தாரை எழுந்து சினத்துடன் "ஆம், நான் இங்கிருக்கிறேன். இவரே என் கொழுநர். இங்கிருப்பதே என் விழைவு" என்றாள்.

"தாங்கள் அவர் துணைவி, இது முறையல்ல" என்றான் சுக்லதாரன் என்னும் முதல்மாணவன். அவள் விழிசீற நாகம்போல் தலைசொடுக்கி எழுந்து "சென்று சொல்லுங்கள் அவரிடம், அவர் சொன்ன உலகாண்மையின் நெறிப்படியே நான் இங்கிருக்கிறேன் என. அவர் தன் சொற்களை மறுப்பார் என்றால் இங்கு வந்து அதை சொல்லட்டும், நான் உடன்செல்கிறேன்" என்றாள். பெண்முகம் அதன் அனைத்து எழில்களையும் அப்படி ஒருகணத்தில் இழக்கமுடியும் என்பதைக் கண்டு சுக்லதாரன் திகைத்தான். அக்காட்சியில் அவளை அருகே நின்ற சந்திரனே வெறுத்தான்.

மாணவர்கள் சென்று அதைச் சொன்னதும் உள்ளம் தளர்ந்த பிரஹஸ்பதி "இல்லை, வாழ்நாளெல்லாம் நான் சொல்லிச்சேர்த்த கொள்கையை கைவிடமுடியாது" என்றார். "எப்படி அவள் இதை செய்தாள்? எவ்வண்ணம் உளம் துணிந்தாள்?" என ஏங்கினார். "நான் என் சொற்களை விழுங்குவேன் என்றால் வீணன் என்றே ஆவேன். என்னால் அது இயலாது" என்றார். தேவர்கள் தாரை சொன்னதையே ஏற்றனர். "ஆம், அவள் செய்தது அவள் கொழுநன் காட்டிய நெறிப்படியே. அவர் அதைத் துறக்காத வரை அதில் பிழையென்று ஏதுமில்லை. தேவர்கள் அவருக்கு துணைநிற்கவேண்டியதில்லை" என்றனர்.

மாணவர்கள் ஒவ்வொருவராக அவரிடமிருந்து விலகினர். தன் கொள்கையை சொல் சொல்லென நெஞ்சுள் உரைத்துக்கொண்டு

தனித்திருந்தார் பிரஹஸ்பதி. சொல்லிமுடித்த கணமே சொல்கடந்த துயர் வந்து நெஞ்சை கவ்விப்பிசைவதன் வலியையும் அறிந்தார். “இது என் கொள்கைக்கு வந்த தேர்வு போலும். வென்று செல்வேன் இதை” என நாளும் வஞ்சினம் உரைத்தார். அவள் இல்லத்தில் எஞ்சவிட்டுச்சென்ற அனைத்தையும் அள்ளி வெளியே வீசினார். அகற்றும்தோறும் அவள் அங்கே மேலும் இருக்கலானாள். ஒரு குங்குமத்தீற்றலில் அவள் எழுந்து வந்தாள். கொல்லையில் நின்றிருந்த பசுவின் விழிகளில் அவள் தோன்றினாள். முற்றிலும் அகற்றப்பட்டபின் அகற்றப்படமுடியாத நுண்வடிவில் அவளே அங்கிருந்தாள்.

என்ன நிகழ்ந்தது என தன்னிடமே விழிப்புள்ளபோதெல்லாம் கணமொழியாது கேட்டுக்கொண்டிருந்தார். இவ்வளவுதானா இது, இத்தனை எளிதானவையா இவையெல்லாம், இதன் மீதா அமைந்துள்ளன அனைத்தும்? எண்ணிக் குமைந்து உருகி அழுது தேறி மீண்டு நீள்மூச்செறிந்து மீண்டும் எண்ணிக்குமையத் தொடங்குகையிலும் அதில் தான் ஆடியதை முழுமையாகவே அவர் உள்ளம் மறந்துவிட்டிருந்தது. அதை மூழ்கடிக்கவே அப்பெருந்தத்தளிப்பை அது சமைத்துப் பெருக்கிக்கொண்டது.

ஒருநாள் காலை அழுதபடி பிரஹஸ்பதி ஓடிச்சென்று சந்திரனின் அரண்மனை வாயிலில் நின்றார். “என் தேவி... இங்கிருக்கிறாள் என் துணைவி!” என கூவினார். வெள்ளிவேலேந்திய காவலரால் தடுக்கப்பட்டு வெளியே தள்ளப்பட்டார். நெஞ்சிலறைந்து அழுதபடி “நீயிலாது நான் வாழ இயலாதென்றறிந்தேன். என் தேவி, என் நெஞ்சின் அரசி, என்னுடன் வருக!” என கதறி அழைத்தார். தாரையின் தோழி வந்து “அரசி உங்கள் நினைவை உள்ளத்திலிருந்தும் உடலில்

இருந்தும் ஒழித்துவிட்டாள். இன்று நீங்கள் அயலான் மட்டுமே. அவளுக்கு உங்கள் குரலே அருவருப்பூட்டுகிறது” என்றாள். “நான் ஒழிக்க வல்லேன் அல்லேன்... ஒருகணமும் அவள் நினைப்பொழியமுடியாதவன் ஆனேன்... அவள் இன்றி செல்லமாட்டேன்” என்று அவர் நெஞ்சிலறைந்து அழுதார்.

சாளரம் வழியாக எட்டிப்பார்த்த சந்திரன் “என் காமம் சலிக்கும்போது அவளை நான் அனுப்புகிறேன். இங்கு எனக்கு இருபத்தேழு மனைவியர் முன்னரே உள்ளனர்” என்றான். சினந்தெழுந்த பிரஹஸ்பதி சாளரத்தை அறைந்தபடி “இழிமகனே, நீ தேய்ந்தழிவாய். என் மனைவியை வெறும் காமக்கிழத்தியென்றாக்கி இழிவுசெய்த உனக்கும் இவ்விழிவே அமையும்” என்று கூவினார். தலையால் சாளரத்தை ஓங்கி ஓங்கி முட்டியபடி “நீ இதன்பொருட்டு துயர்கொள்வாய்...” என்றார். “நான் என் கொள்கையனைத்தையும் உதறுகிறேன். தன்னலம் கொண்டு பிறர்துயர் பெருக்குபவன் அழிந்தாகவேண்டும். நெறி என்று ஒன்று அமையும் என்றால் அது அனைவர்பொருட்டும் ஆகும்” என்றார்.

பிரஹஸ்பதி குருதிவழியும் முகத்துடன் சென்று இந்திரனிடம் நின்றார். “நான் சொன்ன அனைத்துக் கொள்கைகளையும் மறுக்கிறேன். என் துயர் ஒன்றே மெய். பிறிதேதும் எனக்கு ஒரு பொருட்டல்ல. என் மனைவியை என்னிடம் கொண்டுவந்து சேர். இது உன் ஆசிரியனாக என் ஆணை!” என்று கூவினார். “உங்கள் ஆணைப்படி செய்கிறேன், ஆசிரியரே. எழுக தேவர்படை!” என்றான். படைக்கலங்களுடன் போர்க்குரலுடன் தேவர்கள் எழுந்தனர்.

அதை அறிந்த அசுரகுருவாகிய சுக்ரர் சந்திரனிடம் வந்தார். “அறிக, வெண்ணொளித்தேவனே, நான் கொண்டுள்ள

கொள்கையெல்லாம் என் ஆசிரியர் வியாழனிடமிருந்து கற்றவையே. இன்று தனக்கென ஒன்று வந்தபோது கொள்கையை துறந்துள்ளார். நானோ அக்கொள்கையையே வாளென ஏந்தியிருக்கிறேன். இன்பம் ஒன்றே மெய்ப்பொருள். எய்துவதொன்றே வீடுபேறு. உன்னுடன் அசுரப்படைகள் இருக்கும்" என்றார். "தாரையை நீ விட்டுவிடுவாய் என்றால் தேடிவந்த இன்பத்தை துறக்கிறாய். அது அளிக்கும் இழப்பின் துயரை நீ கடக்கமாட்டாய். அவளை அவர்கள் வென்று செல்வார்கள் என்றால் ஆண் என நீ இழிவும் கொள்வாய்" என ஊக்கினார்.

தேவர்களும் அசுரர்களும் படைமுரசு ஒலிக்க விண்ணில் போர்முகம் கொள்வதை நாரதர் சென்று பிரம்மனிடம் சொன்னார். பதறி எழுந்த பிரம்மன் இரு படைகளுக்கு நடுவே ஒரு வெண்பறவையாக வந்திறங்கினார். ஒரு கையில் அமுதகலமும் மறுகையில் மின்படையுமாக பேருருக்கொண்டு எழுந்தார். இடியோசையாக ஒலித்த குரலில் சந்திரனிடம் "பெண்பொருட்டு ஒரு போர் நிகழலாகாது. இது என் ஆணை, நீ பிரஹஸ்பதியின் மனைவியை திருப்பி அனுப்புக!" என்று கூறினார். மின்படை வான் நிறைத்து எரிபடர எழுந்ததைக் கண்டு நடுங்கிய சந்திரன் "இக்கணமே... இதோ!" என்றான்.

தேவர்கள் சென்று தாரையை அழைத்தனர். முன்னரே அவளுக்கு செய்தி சென்றிருந்தது. நாணி ஒடுங்கி ஒரு சிற்றெறும்பென ஆகி அரண்மனையின் ஒரு சிறுபொந்துக்குள் ஒளிந்திருந்தாள். தேவர்களின் அழைப்பை கேட்டாள். அவர்களின் குரலில் இருந்த களியாட்டு ஒரு தருணத்தில் அவளை சீற்றம் கொள்ளச்செய்தது. எழுந்து தன் முழுவடிவழகுடன் முழுமையற்ற ஆடை அணிந்து அவர்கள்

முன் தோன்றினாள். இனிய புன்னகையுடன் “என்ன ஆயிற்று? எதன் பொருட்டு வந்தீர்கள்?” என தேவர்தலைவனாகிய சித்ரகனிடம் கேட்டாள். அப்புன்னகையை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. நாணமற்ற அவள் விழிகள் முன் அவர்கள் கூசினர். விழிதிருப்பிக்கொண்டு தாழ்ந்த குரலில் பிரம்மனின் ஆணையை கூறினர்.

“நன்று, அதற்கென்ன?” என அவள் புன்னகைத்தாள். “நான் என் அரசணிகளைப் பூணலாம் அல்லவா?” என இன்குரலில் கேட்டாள். “ஆம்” என்று சித்ரகன் குரல் தழுதழுத்தான். பேரரசியின் அணுக்கர்கள் என அவர்கள் சூழ்ந்துவர நிமிர்ந்த தலையுடன் குழந்தைகளுக்குரிய தெளிந்த விழிகளால் நோக்கியபடி தாரை அவர்களுடன் சென்றாள். தேவரும் அசுரரும் அவளைக்கண்டு ஓசையழிந்து படைக்கலம் தாழ்த்தி ஓவியப்பெருக்கென நின்றனர். பல்லாயிரம் முகங்கள் அவள் பாவையை மட்டுமே விழிமணியெனக் கொண்டு நிலைத்தன.

தேவரும் அசுரரும் கூடிய மன்றில் வந்து தலைநிமிர்ந்து நின்று சூழ்ந்திருந்தவர்களை நோக்கி சிறுமியருக்குரிய அறியாப் புன்னகையுடன் “என் பொருட்டா இப்பெரும்போர்?” என்றாள். அவள் குரல் அங்கிருந்த அனைவருக்கும் கேட்டது. “எளியவளுக்காகவா இத்தனை படைக்கலங்கள்?” என்று தேவர்க்கரசனின் மின்படைக்கலத்தை நோக்கினாள். அப்போது அங்கிருந்த அனைவருமே அவள்மேல் பெருங்காமம் கொண்டனர். இந்திரன் அவளை நோக்காதொழிந்தான். அவளை இழப்பதைக் குறித்து ஏங்கி உடல்தளர்ந்தான் சந்திரன். அகம் விம்மிய பிரஹஸ்பதி முன்னால் வந்து “ஆம், உனக்காக.... நீ எனக்கு அரியவள், தேவி” என்றார்.

“நான் எந்தையின் ஆணைப்படி நடக்கிறேன்” என்று அவள் பிரம்மனை பார்த்தாள். “உன் கணவருடன் செல்க!” என்றார் பிரம்மன். “ஆணை!” என தலைவணங்கிய அவள் பிரஹஸ்பதியை நோக்கி சிரித்து “செல்வோம்” என்றாள். அவர் அறியாது விம்மிவிட்டார். அவள் அவர் தோள்மேல் கைவைத்து “என்ன இது? சரி, சரி, ஒன்றுமில்லை” என்றாள். அன்னையின் கனிவு நிறைந்திருந்தது அவள் குரலில். “ஆம், இன்று அனைத்தும் முடிந்தது. இனி ஒன்றுமில்லை” என்றார் அவர்.

வென்றவனின் பெருமிதத்துடன் தன் மனைவியை அழைத்துக்கொண்டு பிரஹஸ்பதி மீண்டும் இல்லம் புகுந்தார். நிமிர்ந்து அவருடன் வந்த தாரை தொலைவில் தன் சிற்றில்லைக் கண்டதும் கால்தளர்ந்தாள். அவள் நிற்பதைக் கண்டு திரும்பி “வா, இது நம் இல்!” என்றார் பிரஹஸ்பதி. “ஆம்” என அவள் சொன்னாள். முலைகள் விம்மியமைய சிறு தேம்பல் ஓசை எழுந்தது. “அழுகிறாயா? நீயா? அரசியென வந்தாயே?” என்றார் பிரஹஸ்பதி. அவள் அவர் கையை உதறிவிட்டு பாய்ந்தோடி இல்லத்திற்குள் சென்று தன் அடுமனைக்குள் இருண்ட மூலையில் முழங்கால் மடித்து அமர்ந்து முகம்புதைத்து கண்ணீர்விட்டாள்.

அவள் முன் சென்று நின்று பிரஹஸ்பதி “நிகழ்ந்ததை மறந்துவிடு, தேவி. காமம் எவருக்கும் கடப்பதற்கு அரியது. நீயோ எளிய பெண். நான் அனைத்தையும் பொறுத்து இப்பால் வந்துவிட்டேன்” என்றார். அவள் அருகே அமர்ந்து கனிந்த குரலில் “ஒருவேளை நாம் மீண்டும் அணுகவும் புதியவர்களென அன்புகொள்ளவும் இது வாய்ப்பென ஆயிற்றுபோலும்” என்று அவள் குழலை வருடினார். அவள்

உடைந்தழுதபடி அவரை ஆரத்தழுவிக்கொண்டாள். அவள் கண்ணீர் அவர்மேல் இளவெம்மையுடன் வழிந்தது.

அவள் கண்ணீரே தன் உள்ளத்தை நிறைவிக்கிறதென அவர் உணர்ந்தார். அவள் கொண்ட நிமிர்வு வெல்வதற்கரியவள் என்றும் அறியவொண்ணாதவள் என்றும் காட்டி எழுப்பிய பெருங்காமத்தின் அடியில் சீற்றம் கொண்டு எழுந்து நின்றிருந்தது வஞ்சம். அவள் விழிநீரோ அவர் ஆணவத்தை குளிர்வித்தது. மேலும் ஆணவம் கொள்ளும்பொருட்டு மேலும் கனிவு கொண்டவரானார். “நீ பிழையேதும் செய்யவில்லை. பிழை செய்திருந்தால் அது நானே. நீ என் அன்புக்கு உகந்தவள். என் அறத்துணைவி. இந்நிகழ்வை முற்றிலும் மறப்போம். இது ஆணை!” என அவர் கைநீட்டினார். அந்தக் கைமேல் முகம் அமைத்து அவள் கதறியழுதாள்.

அழுது ஓய்ந்தபின் காமம் விசைகொண்டிருந்தது. மழைக்குப்பின் வீசும் புயல் அது. அழுது அழுது அதை அவள் கடந்துவந்தாள். அவர் அவள் அழுகை ஒவ்வொன்றையும் கடந்து பேருருக்கொண்டார். தன்னைப்பற்றிய முழுமகிழ்வில் அவர் இருந்த நாட்கள் அவை. தன் மாணவர்களிடம் பொறையையும் புரிந்துகொள்ளலையும் பற்றி சொன்னார். “முனிவன் என்பவன் எது சரியான செயல் என்பதை வாழ்ந்து காட்டுபவன்” என்றார். பெருங்கனிவுடன் அவளிடம் பேசினார். ஒவ்வொருநாளும் அவளை ஆற்றுவித்தார். அவள் அதன்முன் கூசி கண்ணீர் மல்குகையில் மேலும் கனிந்தார். ஆனால் ஒருமுறை புழக்கடைத் தொழுவத்தில் அவள் தன் பசுக்கன்றிடம் எதையோ பேசிச்சிரிப்பதை சாளரம் வழியாகக் கண்டபோது சினம்கொண்டு உடல் எரியலானார். ஏன் ஏன் என அதை மீண்டும் தனக்குத்தானே கேட்டுக்கொண்டார்.

அன்று அவளிடம் கடுமுகம் காட்டினார். அதை அவள் உணர்ந்து அழுத ஒலியை வேறு அறையில் இருந்து இறுகிய உடலுடன் கேட்டுக்கொண்டிருந்தார். பின்னர் வீங்கிய முகத்துடன் அவள் அவரை உணவருந்த அழைத்தபோது நிமிர்ந்து நோக்கினார். அவள் விழிதாழ்த்தி நின்றிருந்ததைக் கண்டதும் போர்மன்றில் அவள் தலைதூக்கி நின்றிருந்ததை நினைவுகொண்டு எழுந்து அவளை அறைந்து வீழ்த்தி மிதித்துக்கூழாக்கவேண்டுமென வெறிகொண்டார். அதை தானே அஞ்சி மெல்ல தணிந்தார்.

அதைக் கடக்கும்பொருட்டு அவள் இடையை தொட்டார். அவள் விசும்பி அழ உளமுருகி அவளை அணைத்துக்கொண்டு முத்தமிட்டு "நன்று, ஒன்றுமில்லை. ஓர் உளச்சோர்வு. உன் மீதல்ல, தேவி" என்றார். அனைத்துக் கசப்புகளும் உடல்கொந்தளிக்கும் காமத்தில் முடிந்தன. நாள் செல்லச்செல்ல கொந்தளிப்புகள் குறைந்தது. அன்றாடத்தின் சலிப்பு கூடியது. அதையே அமைதி என்கிறார்கள் என உணர்ந்தார். கொந்தளிப்பின் காலங்களில் அறிந்த காமம் பின் நிகழவில்லை. ஆனால் அதை எண்ணுகையில் அஞ்சியது அவர் உள்ளம்.

அவள் ஆண்கள் எவரையும் ஏறிட்டுநோக்காதவளானாள். அவள் நோக்குகிறாளா என்பதை நோக்காமலிருக்க அவராலும் இயலவில்லை. தேவர்கள் நடுவே விழியொளிரும் நகையாட்டும் மென்குரல் அலர்ப்பேச்சும் அவளைப்பற்றி இருந்தன. பின்னர் அனைவரும் அதை மறந்தனர். அவர் மட்டிலுமே என்றோ ஒருநாள் இரவில் விழித்துக்கொள்கையில் அதை நினைவுகூர்வார். உடல் காஞ்சிரச்சாறு சுவைத்த

நாவென கசந்து தவிக்கும். புரண்டுபுரண்டு அதை புறத்தே தள்ளி துயில்பூணுவார்.

“பெரும்புயம் கொண்டவரே, நாகத்துடன் ஆடுபவன் மண்ணுக்கு அடியில் பெருகியிருக்கும் ஏழு இருளுலகுகளுடன் ஆடுகிறான். பெண்ணுடன் ஆடுபவன் தன்னுள் விரிந்துள்ள மூன்று முடிவிலா இருள்களுடன் ஆடுகிறான்” என்றான் முண்டன். “ஆனால் பெருந்துயர் கொண்டாலும் அவ்வாறு ஆடுவது நன்று. ஆழத்தைக் கலக்கி எழுப்பாமல் தன்னை அறிந்து அமையமுடியாது என்று உணர்க!”

# மாமலர் - 15

## 15. இருகருவிருத்தல்

தாரை கருவுற்றிருக்கும் செய்தி அவர்கள் இருவரையுமே விடுவித்தது. அவர் அனைத்தையும் உதறி இளஞ்சிறுவன் என்றானார். குழவியின் நினைவன்றி பிறிதில்லாதவராக முகம் மலர காடுகளிலும் நகர்தெருக்களிலும் அலைந்தார். பிறக்கவிருக்கும் குழவிக்கு விளையாட்டுப்பொருட்களும் ஆடைகளும் கொண்டுவந்து சேர்த்தார். மனைவிக்கு வேதுவைக்கவும் மூலிகைச்சாறு கொடுக்கவும் தானே முன்னின்றார். பிறர் நகையாடுவதுகூட பெருமையென்றே தோன்றியது. “முதுமையில் பிறக்கும் மைந்தன் முற்றறிஞன் ஆவான் என சொல்லுள்ளது” என்று சொன்ன காமிக முனிவரிடம் அவர் அருகே நின்ற முனிவர்களின் ஏளனப்புன்னகையை உணராமல் “ஆம், அவன் அழியாத தண்ணொளி கொண்டவன். அவன் கருநிமித்தங்களை கருதிநோக்கினேன்” என்றார்.

அவளும் முழுமுகமலர்வை அடைந்தாள். அப்போதுதான் அவள் அவ்வாறு மகிழ்வதையே தன்னுள்ளம் விழைந்திருக்கிறது என்பதை அவர் உணர்ந்தார். ஐயம்கொள்ளற்கு அரிய ஒன்றின்பொருட்டு அது நிகழவேண்டுமென்றே அவர் எண்ணியிருந்திருக்கிறார். துயர்கொள்வதை ஆழுள்ளம் விரும்புவதனால்தான் அதை வளர்த்துக்கொள்கிறது. ஆனால் துயர் இயல்புநிலை அல்ல, அந்த வாள்முனையில் நெடுந்தொலைவு நடக்கமுடியாது என அறிந்தார். அனைத்தையும் வீசிவிட்டுக் களித்தாட விழைந்திருந்தனர் இருவரும். அது கருக்கோளால் அமைந்தது.

பிறக்கவிருக்கும் குழவியைப்பற்றி பேசிப்பேசி பன்னிருகால் புரவியில் நாள் கடந்தனர். அக்குழவியின் அழகும் பெருமையும் அதற்கென வெளியே அவர்கள் செய்யவேண்டியவையும் என தொட்டுப்பேசி அது சலிக்கையில் அதைக் குறித்த அச்சங்களுக்கு சென்றனர். கருவிலேயே நோயுறுமோ என அவள் கேட்டாள். கருநாகங்களை கனவுகாண்பதாக சொன்னாள். அசைவிழந்துள்ளதோ என ஐயுற்றாள். அஞ்சி பாய்ந்துவந்து அவரை கட்டி இறுக்கிக்கொண்டு உடல்நடுங்கினாள். “என்ன இது? உனக்கென்ன பித்தா?” என்றார் அவர். அவளை பேசிப்பேசித் தேற்றி இயல்படையச் செய்தார்.

அவள் அவ்வாறு நடுங்குவதும் தான் தேற்றுவதும் மிகத்தொன்மையான ஒரு நாடகத்தில் ஒவ்வொரு முறையும் புதியதாக இருக்கும் நடிப்பு என அவர் உள்ளம் அறிந்தது. ஆனால் அத்தருணம் தித்தித்தது. மகவைப்பற்றிய இன்மொழிகளைச் சொல்லி மெல்ல அவளை மலரச்செய்தார். அவள் விழிகசிய உடல் மெய்ப்புகொள்ள முலைக்காம்புகள் கூர்கொண்டு அதிர அதைக் கேட்டு நீள்மூச்செறிந்தாள். பின்னர்

பாய்ந்து அவரை கைகவ்வித் தழுவி “செத்துவிடுவேன்... அப்படியே செத்துவிடுவேன்” என புலம்பினாள். “என்ன இது வீண்பேச்சு? நான் இல்லையா என்ன?” என்றார். அச்சொற்களை தன் தந்தையரும் அவ்வாறே சொல்லியிருக்கக் கூடுமென உணர்ந்தபோது அவை மேலும் இனிதாயின.

இனித்து இனித்து கடந்த ஒன்பது மாதங்களில் அவர்கள் நெடுந்தொலைவு வந்துவிட்டிருந்தனர். அவள் பேற்றுநோவு கொண்டபோது அவர் அவள் நீராடுவதற்காக மூலிகைவேர் சேர்க்கும்பொருட்டு காட்டிலிருந்தார். மாணவன் ஒருவன் வந்து மூச்சிரைக்க “தேவிக்கு வலி” என்றான். அவருக்கு ஈற்றுநோவென உளம் கூடவில்லை. “விழுந்துவிட்டாளா? எங்கே?” என பதறி ஓடினார். எதிரே ஓடிவந்த இன்னொருவன் சிரித்தபடி “ஆண்மகவு...” என்றான். “எங்கே?” என்றார். “ஆசிரியரே, தங்களுக்கு மைந்தன் பிறந்துள்ளான்.” அவர் கைதளர அப்படியே அருகிருந்த பாறையில் அமர்ந்து “தெய்வங்களே!” என்றார்.

மாணவர் தோள்பற்றி அவர் இல்லம் மீண்டார். எதிரே வந்த முதுசெவிலியின் முகத்திலிருந்த புன்னகையில் பிறிதொன்றும் இருப்பதை அவர் அகம் உணர்ந்தது. “நற்செய்தி ஆசிரியரே, தண்ணொளி கொண்ட மைந்தன்!” என்றாள். அவர் “ஆம், அறிந்தேன்” என்றார். குடிலில் ஏறி அங்கு நின்றிருந்த பெண்களை நோக்கியபோது அனைவர் முகத்திலும் அந்த முள்பொதிந்த புன்னகை இருப்பதை கண்டார். “எங்கே?” என்றார். “வருக!” என அவரை அழைத்துச்சென்றாள் ஒருத்தி.

ஈற்றறைக்குள் மரவுரிமேல் கிடந்தாள் தாரை. அருகே மென்பஞ்சு துகிலுக்குள் குழவியின் தலைமட்டும் தெரிந்தது. “வெள்ளிக்குழல்...” என்றாள். அவர் கைகள் நடுங்கத்

தொடங்கின. அவள் துணியை விலக்கி மைந்தனை காட்டினாள். “பால்வெண்நிறம்...” என்றாள். அவர் குழவியை குனிந்து நோக்கியபோது கால்கள் தளர்ந்தன. அதன்மேலேயே விழுந்துவிடுவோம் என அஞ்சினார். ஒரு நோக்குணர்வை அடைந்து திரும்பி அவள் விழிகளை சந்தித்தார். முற்றிலும் ஆர்வமற்ற விழிகளுடன் அவரை நோக்கியபின் அவள் கண்களை மூடிக்கொண்டாள்.

திரும்பிவந்து இல்லமுகப்பில் அமர்ந்தபோது தன் உள்ளம் ஏன் அமைதிகொண்டிருக்கிறது என்று அவருக்கே புரியவில்லை. குழவிநலம்சூழ முனிவர்துணைவியரும் பிறபெண்டிரும் வந்துகொண்டிருந்தனர். சற்றுநேரத்தில் சந்திரன் தன் அணுக்கர்களுடன் வரும் ஒலி கேட்டது. தேர் வந்து நின்றதையும் அணுக்கர் புரவிகளிலிருந்து இறங்கியதையும் கண்டபின்னரும் அவர் எழவில்லை. புன்னகையுடன் அணுகி வந்த சந்திரன் “இங்கு பிறந்துள்ளது என் மகன் என்று நான் அறிந்தேன். அவனையும் அவன் அன்னையையும் அழைத்துச்செல்லவே வந்தேன்” என்றான்.

“அதை முடிவுசெய்யவேண்டியவள் அவளே” என்று அவர் அவன் கண்களை நோக்கி சொன்னார். கௌதமரின் துணைவியாகிய முதுமகள் உள்ளிருந்து இறங்கிவந்து “என்ன சொல்கிறாய்? பிறன்மனை தேடும் இழிவு இன்னுமா உன்னிடம் வாழ்கிறது?” என்றாள். “அவள் வந்துசொல்லட்டும்” என்றான் சந்திரன். உள்ளிருந்து தாரை குழவியை துணிச்சுருளில் சுற்றி எடுத்துக்கொண்டு வந்து நின்றாள். “செல்வோம்” என்றாள். அனைவரும் திகைத்து அவரை நோக்க அவர் விழிகளை அசையாமல் நிலைக்கச்செய்து அங்கு நின்ற ஒரு மரத்தை வெறித்துக்கொண்டிருந்தார்.

“வருக!” என அவள் கைகளைப்பற்றி தேர்நோக்கி அழைத்துச்சென்றான் சந்திரன். நிமிர்ந்த தலையுடன் உறுதியான அடிவைத்து அவள் நடந்துசென்று தேரிலேறிக்கொண்டாள். அவர்கள் அமராவதிநகரின் தெருக்கள் வழியாக சென்றபோது இருமருங்கும் தேவரும் துணைவியரும் வந்து நின்று நோக்கினர். அவள் யானைமேல் மணிமுடிசூடி அமர்ந்து நகர்வலம் செல்லும் பேரரசி போலிருந்தாள்.

“சந்திரன் தாரையை மணந்து பெற்ற மைந்தன் புதன். வெள்ளியுடல் கொண்டிருந்த மைந்தனை சந்திரன் உருகிச்சொட்டிய துளி என்று மண்ணிலுள்ளோர் கண்டு வாழ்த்தினர். விண்ணில் ஒரு வெண்தழலெனச் சுழன்று சென்ற புதன் தன்னருகே மங்கா ஒளிர்சிரிப்புடன் சென்ற அழகி ஒருத்தியை கண்டான். “யார் இவள்?” என்று அவன் வினவியபோது வைவஸ்வத மனுவின் மகளான அவள் பெயர் இளை என்றறிந்தான். பின்னர் அவன் அங்கே வந்தபோது அவள் தோற்றம்கொண்ட அழகிய இளைஞன் ஒருவனை கண்டான். “அவன் இளையின் உடன்பிறந்தவனாகிய இளன். அவர்கள் இரட்டையர் போலும்” என்றனர்.

வைவஸ்வத மனுவுக்கு சிரத்தை என்னும் துணைவியில் பிறந்த இளையை மணம்கொள்ள புதன் விழைந்தான். ஒருநாள் அவள் தந்தையிடம் சென்று அவர் கன்னியை கைக்கொள்ள கோரினான். “அவள் இங்கில்லை. அடுத்த மாதம் இளவேனில் எழுகையில் இங்கு வருக!” என்றான் அவள் உடன்பிறந்தானாகிய இளன். அவன் புன்னகையில் அறியாத பொருள் ஒன்று இருப்பதாக உணர்ந்தவனாக புதன் திரும்பி வந்தான். மீண்டும் அடுத்த மாதமே சென்று வைவஸ்வத மனுவின் இல்லக் கதவை தட்டினான். இம்முறை அழகிய

புன்னகையுடன் கதவைத் திறந்த இளை சிரித்தபடி “அன்னையே, நீங்கள் சொன்ன வெள்ளியுடலர்” என்றாள்.

வைவஸ்வத மனுவும் சிரத்தையும் அவனை முகமன் சொல்லி அமர்த்தினர். “உங்கள் மைந்தன் இல்லையா இங்கு?” என்றான் புதன். “அவன் வெளியே சென்றுள்ளான். உங்கள் விழைவை சொல்க!” என்றார் வைவஸ்வத மனு. “உங்கள் மகளை மணம்கொள்ள விழைகிறேன்” என்றான் புதன். வைவஸ்வத மனு “எவரும் விழையும் அழகி இவள் என்று நான் அறிவேன். இவள் கைகோரி நாளும் ஒரு தேவன் வந்து என் வாயிலை முட்டுகிறான். ஆனால் இவளை மணப்பவனுக்கு ஒரு தெரிவுமுறைமையை நான் வகுத்துள்ளேன்” என்றார். “சொல்க!” என்றான் புதன்.

“எவர் பிறிதொருவர் கூறாத பெரும்செல்வம் ஒன்றை அவளுக்கு கன்னிப்பரிசென்று அளிக்கிறார்களோ அவனுக்குரியவள் அவள்” என்றார் வைவஸ்வத மனு. இளையை நோக்கித்திரும்பி “அது எத்தகைய பரிசு?” என்றான் புதன். “இங்கு அமர்ந்திருக்கிறாள் என் தாய், அவள் உரைக்கவேண்டும் அப்பரிசு நிகரற்றதென்று” என்றாள் இளை. புதன் “அத்தகைய பரிசுடன் வருகிறேன்” என எழுந்தான்.

புதன் தன் அன்னையிடம் சென்று “நிகரற்ற பெண் பரிசு எது? அன்னையே, சொல்க!” என்றான். முதுமகளாகிவிட்டிருந்த தாரை சொன்னாள் “எந்தப் பெண்ணும் விழைவது ஒருபோதும் அறம்பிறழா மைந்தனை மட்டுமே.” புதன் அன்னையை கூர்ந்துநோக்கி நின்றான். “ஆம் மைந்தா, அன்னையர் காமுறுவது அதன்பொருட்டு மட்டுமே. நான் விழைந்தவண்ணம் பிறந்தவன் நீ. நான் எண்ணியதும் இயற்றியதும் உன்பொருட்டே.”

புதன் திரும்பிச்சென்று வைவஸ்வத மனுவின் வாயிலை முட்டினான். அதைத் திறந்து "வருக!" என்ற வைவஸ்வத மனு அவன் வெறும் கைகளை நோக்கி குழப்பத்துடன் "அந்நிகரற்ற பரிசை கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்றார். "ஆம். அதை அக்கன்னியிடம் மட்டுமே சொல்வேன்" என்றான். தன் முன் வந்து நின்ற இளையிடம் "தேவி, ஒருபோதும் அறம் வழுவா மைந்தனொருவனை என் குருதியில் நீ பெறுவாய். அறம் காக்கும் குலப்பெருக்கு அவனிலிருந்து இம்மண்ணில் எழும். இதுவே என் பரிசு!" என்றான்.

நெஞ்சு விம்ம கைகோத்து அதில் முகம் சேர்த்து விழிநீர் உகுத்தாள் இளை. அவள் பின் வந்துநின்று அவள் அன்னை "நன்று கூறினாய்! பெண் விரும்பும் பெரும்பரிசை அளித்தாய். இவள் கைகொள்க!" என்றாள். அவன் அவள் கைகளைப்பற்றி "இச்சொற்கள் மெய்யாகுக! சந்திரகுலம் மண்ணில் எழுக! ஆம், அவ்வாறே ஆகுக!" என்றான்.

ஏழு முனிவர் கை பற்றிஅளிக்க எரி சான்றாக்கி சந்திரனின் மைந்தனாகிய புதன் இளையை மணந்தான். மணநாள் இரவில் அவன் அவளிடம் "உன் உடன்பிறந்தான் எங்குள்ளான்?" என்றான். "வேற்றூர் சென்றுள்ளார். எங்குள்ளார் என்று அறியேன்" என்றாள் அவள். அவன் கைகளை பற்றிக்கொண்டு அவள் கேட்டாள் "எனக்கு இரு சொற்கொடைகளை அருளவேண்டும் நீங்கள். என் உடன்பிறந்தான் குறித்து ஒருபோதும் கேட்கலாகாது. ஒரு மாதம் உங்களுடன் இருந்தால் மறுமாதம் நான் என் தந்தை இல்லத்தில் இருப்பேன். அங்கு வந்து என்னை பார்க்கலாகாது." அவன் "அவ்வண்ணமே" என்று அவளுக்கு கைதொட்டு ஆணை அளித்தான்.

ஒரு மாதம் அவர்கள் ஊடியும் கூடியும் காதலில் ஆடினர். இளை அவன் உள்ளத்தின் ஒவ்வொரு எண்ணத்தையும் உணர்ந்துகொள்பவளாக இருந்தாள். "ஆணுள்ளம் பெண்ணுக்கு இத்தனை அணுக்கமானது என்று நான் இதுவரை அறிந்திருக்கவில்லை" என்று அவன் அவளிடம் சொன்னாள். அவள் புன்னகை புரிந்தாள். "ஆண் அறிந்தவை அனைத்தையும் அறிந்திருக்கிறாய்" என ஒருமுறை அவன் அவளை வியந்தான். அவள் சிரித்தபடி கடந்துசென்றாள்.

மாதம் ஒன்று நிறைந்ததும் அவள் அவனிடமிருந்து விடைபெற்று வைவஸ்வத மனுவின் இல்லத்திற்கு சென்றாள். அவள் சென்றபின்னரே அவள் இருந்ததன் நிறைவை புதன் உணர்ந்தான். காணுமிடமெல்லாம் அவளென்று இருக்க எண்ணுவதெல்லாம் பிறிதொன்றில்லை என்றாக அவன் கணமும் வாழமுடியாதவன் ஆனான். சிலநாட்களை தன் அரண்மனையில் முடங்கிக் கழித்தபின் இளமுனிவராக மாற்றுருக்கொண்டு அவளைக் காணும்பொருட்டு வைவஸ்வத மனுவின் இல்லத்திற்கு சென்றான்.

வைவஸ்வத மனுவின் இல்லத்தை அடைந்து கதவைத் தட்டியதும் இளன் வந்து கதவைத் திறந்தான். அவனுக்கு கால்கழுவ நீர் ஊற்றி இன்மொழி சொல்லி வரவேற்று அழைத்து அமரச்செய்தான். "உத்தமரே, யார் நீங்கள்?" என்றான். "நான் கௌதமகுலத்து முனிவனாகிய சம்விரதன். இங்கு திருவுருக்கொண்டு பிறக்கவிருக்கும் மைந்தன் ஒருவனை கருக்கொள்ளும் கன்னி ஒருத்தி இருப்பதாக அறிந்தேன். அவளுக்கு என் நற்சொல் அளித்துச்செல்ல விழைந்தேன்" என்றான். இளன் "அவள் இங்கில்லை. எங்கள் தந்தையுடன்

பிறந்த சுயம்பு மனுவின் இல்லத்தில் விருந்தாடும்பொருட்டு சென்றுள்ளாள்” என்றான்.

ஏமாற்றம் அடைந்த புதன் “நன்று, அவளுக்கு என் நற்சொற்கள் உரித்தாகட்டும்” என எழுந்தபோது இளன் ஈரத்தரையில் மிதித்து அப்பால் சென்றான். அவன் காலடிச்சுவடுகளை கண்டதும் என்ன என்றறியாமலேயே புதன் உடல் பதைக்கத்தொடங்கியது. பின்னர் “இளை! நீ இளை!” என கூவியபடி எழுந்தான். “இல்லை, நான் அவள் உடன்பிறந்தான். என்னைப்போலவே அவள் தோற்றம் இருக்கும்” என்று இளன் பதறியபடி சொன்னான். “நீ அவள்தான்... என் உள்ளம் சொல்கிறது” என்று புதன் கூச்சலிட்டான். “இல்லை இல்லை” என சொன்னபடி அவன் வெளியேற முயல புதன் பாய்ந்து அவன் கைகளை பற்றிக்கொண்டான்.

அவனைத் தொட்டதுமே அவனுக்கு உறுதியாயிற்று. “நீ இளைதான்... நான் எந்த தெய்வத்தின் முன்பும் ஆணையிடுவேன். நீ என் துணைவி இளை!” என்று அவன் கண்ணீருடன் சொன்னான். அழுதபடி இளன் அவன் கைகளை பற்றிக்கொண்டான். “ஆம், நான் இளைதான். ஒருமாத காலம் ஆணாக இருப்பேன். அதன்பொருட்டே இங்கு வந்தேன்.”

என்ன நிகழ்ந்தது என அவள் அன்னை சொன்னாள். வைவஸ்வத மனுவும் சிரத்தையும் ஓர் மைந்தனுக்காக தவமிருந்தனர். மித்ரனையும் வருணனையும் வேள்வியில் எழுப்பி மன்றாடினர். ஒரே நேரத்தில் இரு எரிகுளங்களில் மித்ரனும் வருணனும் எழுந்தனர். மித்ரன் வைவஸ்வத மனுவிடம் “அழகிய மைந்தனைப் பெறுக!” என சொல்லளித்த அதே வேளையில் வருணன் “அறம் வளர்க்கும் மகள் பிறக்கட்டும்” என்றான்.

இரு சொற்களுமே நிகழ்ந்தன. பிறந்த மகவு ஆணும் பெண்ணுமாக இருந்தது. இருபால் குழவியை முழுதுடலும் எவருக்கும் தெரியாமல் வளர்த்தனர் வைவஸ்வத மனுவும் சிரத்தையும். வைவஸ்வத மனு அதை மைந்தன் என்றே அனைவரிடமும் சொல்லி அவ்வாறே காட்டிவந்தார். அன்னையோ அதை மகள் என்று அணிசெய்து அகத்தளத்தில் வைத்து கொஞ்சி வளர்த்தாள். ஆணென்றும் பெண்ணென்றும் மாறிமாறி உருக்கொண்டு வளர்ந்தது குழவி. அன்னை அதை இளை என்றாள். தந்தை இளன் என்றார்.

ஒருநாள் அவர்களின் இல்லத்திற்கு முதுமுனிவர் அகத்தியர் வந்தார். “மைந்தனை கொண்டுவருக… அவன் பெருந்தோளன் ஆவதற்குரிய நற்சொல்லை நான் உரைக்கிறேன்” என்றார். “மைந்தனைக் கொண்டு வா” என வைவஸ்வத மனு ஆணையிட சேடி ஒருத்தி பெண்ணென ஆடையணிந்த மைந்தனை கொண்டுவந்தாள். திகைத்த வைவஸ்வத மனு அகத்தியரைப் பணிந்து நடந்ததை சொன்னார். சிரத்தை அவர் கால்களைப் பணிந்து “எங்கள் மைந்தனை மீட்டருள்க, முனிவரே!” என வேண்டினாள்.

“இக்கணமே இவன் ஆண் என்றாகுக!” என்று உரைத்து தன் கமண்டலத்து நீரை தெளித்தார் அகத்தியர். குழவி ஆணென்றாகியது. “இவனுக்கு சுத்யும்னன் என்று பெயரிடுக!” என அவர் ஆணையிட்டார். மைந்தனை வாழ்த்திவிட்டுச் சென்றார். வைவஸ்வத மனு பேருவகைகொண்டு களியாடினார். அனைவருக்கும் விருந்தளித்தார். குலதெய்வங்களை வணங்கி விழவுகொண்டாடினார். சுத்யும்னனின் அன்னையும் அதில் கலந்துகொண்டு

களியாடினாளென்றாலும் அவளுக்குள் மகளை இழந்த துயர் எஞ்சியிருந்தது.

சுத்யும்னன் போர்க்கலைகளும் ஆட்சிக்கலைகளும் கற்றுத்தேர்ந்தான். குடித்தலைமைகொள்ளும் தகைமையை அடையும்பொருட்டு அவன் ஐவகை நிலமும் கண்டுவர தன் தோழருடன் பயணமானான். வழியில் அவர்கள் குமாரவனம் என்னும் சோலைக்குள் நுழைந்தனர். அது உமை தன் தோழியருடன் வந்து நீராடும் இடம். அதற்குள் ஆண்கள் நுழையலாகாது என நெறியிருந்தது. மீறுபவர்கள் பெண்ணென்றாகுவர் என உமை அளித்த சொல் நின்றிருந்தது.

காட்டின் எல்லையைக் கடந்த சுத்யும்னன்மேல் பறந்த ஏழு கிளிகள் "இது உமையின் காடு. இங்கு ஆண்களுக்கு இடமில்லை" என்று கூவின. அதைக் கேட்டு அஞ்சி அவன் துணைவர்கள் நின்றுவிட்டனர். சுத்யும்னன் "நான் நுழையலாமா, கிளியே?" என வேடிக்கையாகக் கேட்க ஏழு கிளிகளில் ஒன்று "நீங்கள் நுழையலாம், அழகரே" என்றது. சுத்யும்னன் உள்ளே நுழைந்தான். அக்கணமே அவன் பெண்ணென்று ஆனான்.

அழகிய மங்கையாக வைவஸ்வத மனுவின் இல்லம் திரும்பிய சுத்யும்னனைக் கண்டு அன்னை ஓடிவந்து அணைத்துக்கொண்டாள். "என் மகள் மீண்டுவந்துவிட்டாள்" என்று கூவி சிரித்தாடினாள். கண்ணீருடன் முத்தமிட்டு தழுவி மகிழ்ந்தாள். தந்தையோ ஆழ்ந்த துயர்கொண்டு தன் அறைக்குள் முடங்கிக்கொண்டார். தன் காலடிகளை வந்து பணிந்த இளையை நோக்கி திரும்பக்கூட அவரால் இயலவில்லை.

துயர்மிகுந்து தனித்தலைந்த வைவஸ்வத மனு வசிட்டரைச் சென்றுகண்டு தன் குறைசொல்லி விழிநீர் விட்டார். வசிட்டர் வந்து இளையை கண்டார். தந்தைக்கும் தாய்க்கும் இருக்கும் விழைவுகளைச் சொல்லி ஒரு மாதம் பெண்ணாகவும் மறுமாதம் ஆணாகவும் இருக்கும் சொல்பேறை அவளுக்கு அருளினார். இளை மறுமாதம் இளன் என்றானாள்.

“நீங்கள் என்னை பிரிய நினைத்தால் அவ்வாறே ஆகட்டும்” என்று சொல்லி இளன் கைகூப்பினான். திகைத்துநின்ற புதன் ஒரு சொல்லும் கூறாமல் திரும்பி ஓடினான். தன் அரண்மனைக்குள் சென்று தனியறையில் அமர்ந்து நெஞ்சுருகினான். இளையை அவ்வண்ணமே மறந்துவிட முடிவெடுத்தான். அம்முடிவை உறுதிசெய்ய எண்ணங்களைத் திரட்டும்தோறும் அவளுடன் கொண்ட உறவின் தருணங்கள் எழுந்து தெளிவுகொண்டு வந்தன.

அவ்வுறவின் அழகே அவள் ஆணும்கூட என்பதுதான் என அப்போது அறிந்தான். பிறிதொரு பெண்ணிலும் அந்தக் காம முழுமையையும் காதல் நிறைவையும் அடையமுடியாதென்று தெளிந்தான். அதைச் சொன்னபோது அவைக்கவிஞர் காகஜர் ஆணென்று உள்ளமும் பெண்ணென்று உடலும் கொண்ட ஒரு துணைவியையே ஆண்கள் விழைகிறார்கள் என்றார். ஆனால் காமத்தின் ஒரு நுண்கணத்தில் ஆணுடலும் பெண்ணுள்ளமும் கொண்டவளாகவும் அவள் ஆவதை அவன் மகிழ்ந்து அறிந்திருந்தான். எண்ண எண்ண அவன் அவள்மேல் பெரும்பித்து கொள்ளலானான். வைவஸ்வத மனுவின் இல்லத்திற்குச் சென்று இளையை மனைவியெனக் கொள்ளவே விழைவதாகச் சொன்னான்.

இளை கருவுற்றாள். அக்கருவுடன் தன் தாய்வீடு சென்று அங்கே இளன் என்று கருவை சுமந்து வளர்த்தாள். ஆண்வயிற்றில் ஐந்துமாதமும் பெண்வயிற்றில் ஆறுமாதமும் வளர்ந்து அக்குழவி முழுமைகொண்டது. பொன்னொளி கொண்ட உடலுடன் பேரழகனாகப் பிறந்தது. “கோல்சூடி அறம்பேணும் ஆயிரம் மாமன்னர்கள் பிறக்கும் குடிக்கு முதல் மூத்தான் இவன்” என்றனர் நிமித்திகர். “ஆணென்றும் பெண்ணென்றும் அன்னைகொண்டவன். அனைத்துயிர்க்கும் அளி சுரக்கும் உள்ளத்தோன்” என்றனர் முனிவர்.

சந்திரகுலத்து முதல் மன்னன் புரூரவஸ் இவ்வாறு புதனுக்கும் இளைக்கும் மைந்தனாகப் பிறந்தான். அவனை ஏழு பெரும்தீவுகளென அமைந்த புவியனைத்திற்கும் அரசன் என்று ஆக்கினான் புதன். அவன் குருதியில் பிறந்த மன்னர்களால் சூரியனால் அளக்கப்பட்ட புவி நூற்றெட்டு நிலங்களாக பகுத்து ஆளப்பட்டது. அறத்துலா கணமும் அசையாது புவியாண்டான் புரூரவஸ்.

ஒருமுறை அறம் பொருள் இன்பம் எனும் மூன்று மெய்மைகளும் மூன்று முனிவர்களென உருக்கொண்டு அவன் அரண்மனைக்கு வந்தன. முனிவர்களைப் பணிந்து வரவேற்று அவையில் அமர்த்தி முகமனும் முறைமையும் செய்து நற்சொல் கேட்க அமர்ந்தான்.

அம்மூன்று முனிவரில் நீண்ட வெண்தாடியும் புரிசடையும் குழலும் கனிந்த விழிகளும் கொண்டிருந்த முதியவரே இன்பர். நரைமீசையும் கூரிய தாடியும் அச்சமில்லா விழிகளும் கொண்டிருந்த நடுஅகவையர் பொருளர். நாணச்சிரிப்பும் தயங்கும் விழிகளும் மெலிந்த சிற்றுடலும் பெண்களுக்குரிய மென்முகமும் தோளில் சரிந்த சுரிகுழலும் கொண்டிருந்த

பதினகவையர் அறத்தார். அவர் தங்களை இன்பர் என்றும் பொருளர் என்றும் அறத்தார் என்றும் அறிமுகம் செய்துகொண்டபோது அரியணை விட்டெழுந்து வந்த புரூரவஸ் இரு கைகளையும் கூப்பியபடி சென்று இளையவராகிய அறத்தாரை கால்தொட்டு சென்னிசூடி "என் அவைக்கு முதல் நல்வரவு, முனிவரே" என்றான்.

சினம்கொண்ட இன்பர் முழங்கும் குரலில் "மூத்தவருக்கு முதன்மையளிக்காத முறை கொண்டதா உனது அரசு?" என்று கேட்டார். "பொறுத்தருள்க முனிவரே, இவ்வவையில் என்றும் அறமே முதன்மைகொண்டது" என்றான் புரூரவஸ். மேலும் சினம்கொண்ட பொருளர் "இங்கு நீ அமர்ந்திருப்பது பொருள்மேல் என்று அறிந்திராத மூடனா நீ? அறம் மட்டும் ஓச்சி வாழ்வதென்றால் காட்டுக்குள் தவக்குடில் அமைத்து அங்கு சென்று தங்கு. கோலும் முடியும் அரணும் குடியும் வாழ்வது பொருள்மேல் என்பதை எப்படி மறந்தாய்?" என்றார்.

புரூரவஸ் மேலும் பணிந்து "முனிய வேண்டாம் பொருளரே, இங்கு நான் ஈட்டியுள்ள பொருளனைத்தும் அறத்தின் விளைவாக அதர்வினவி எனைத் தேடிவந்தவையே. அறம் துறந்தொரு பொருளை என் உள்ளமும் தொட்டதில்லை" என்றான். "இன்பமே மங்கலம் என்றறிக! இன்பத்தை அறியாத அரசன் மங்கலம் அற்றவன். அவன் மண்ணில் மைந்தரும் ஆக்களும் விளைகளும் பெருகாது. மழைவிழுந்து நிலம் பொலியாது" என்றார் இன்பர். "அனைத்துமாகி நின்றிருக்கும் அறம் என்னையும் குடிகளையும் வாழவைக்கும்" என்றான் புரூரவஸ்.

இன்பரும் பொருளரும் சினந்து "இனி ஒரு கணம் இங்கிருக்கமாட்டோம்" என கூவியபடி அவைவிட்டு எழுந்தனர்.

பொருளர் திரும்பி “மூடா, பொருள் என்பதன் திறன் அறியாமல் பேசினாய். பொருள் அளிக்கும் பெருந்துன்பம் இரண்டு. பொருளருமை அறியாது அள்ளி இறைக்கும் வீணன் எய்தும் வெறுமை முதலாவது. அதைவிடக் கொடியது, பொருளை அஞ்சி அதை பதுக்கி வாழும் கருமி அறியும் குறுகல். நீ ஏழாண்டு காலம் வீணனாய் இருப்பாய்! எஞ்சிய இருபத்தோராண்டு காலம் கருமியாயிருப்பாய்! பொருளெனும் பெருந்துன்பத்தை அறிந்தபின் அதன் அருளைப்பெறுவாய்” என்றபடி வெளியேறினார்.

இன்பர் சினத்துடன் சிறிதே நகைத்து “காமத்தின் பெருந்துன்பம் பிரிவு. பிரிவு பேருருக்கொள்ள வேண்டுமென்றால் அரிதென ஓர் உறவு நிகழவேண்டும். பெருங்காதல் உனக்கு அமையும். அதை இழந்து பிரிவின் துயரை அறிவாய்! அறிந்தபின்னரே அதை கடப்பாய்” என்றுரைத்து உடன் வெளியேறினார். தயங்கியபடி எழுந்த அறத்தார் “நானும் அவர்களுடன் செல்ல கடமைப்பட்டவன், அரசே. இன்பத்தையும் பொருளையும் இரு கைகளென உணர்பவன் தன் தலையென கொள்ளத்தக்கது அறம். அவை இரண்டையும் நீர் அறிந்து நிறைகையில் உம்மில் நான் அமைவேன்” என்று சொல்லி வெளியேறினார்.

“இன்பத்துயரும் பொருள்துயரும் பெற்று அறமறிந்து அமைந்தார் உம் மூதாதை புரூரவஸ். அவர் புகழ் வாழ்க!” என்றான் முண்டன். “அவர் அவ்விரு பெருந்துயர்களையும் அறிந்தது ஊர்வசியுடன் கொண்ட காதலால். அவளை அவர் சந்தித்த இடம் இந்தச் சோலை. அவள் நினைவாக அவர் அமைத்ததே இச்சிற்றாலயம்.”

# மாமலர் - 16

## 16. அறமென்றமைந்தோன்

இளவேனில் எழுந்தபின் தோன்றும் முதற்கதிர் முதல் மலரைத் தொடுவதற்கு முன் தங்கள் முலைதொட வேண்டுமென்று தேவகன்னியர் விழைவதுண்டு. அவர்கள் அழகை பொன்கொள்ளச் செய்யும் அது. தன் தோழியர் எழுவருடன் இமயச்சாரலில் அமைந்த சௌகுமாரியம் என்ற சோலையை அடைந்து அங்கு ஓடிய சிறு காட்டாற்றில் பாய்ந்து நீராடி ஈரக்குழல் உதறி கரையேறி மலர்செறிந்த மரக்கிளைகளில் தொங்கி ஊசலாடி விளையாடிக்கொண்டிருந்தாள் ஊர்வசி. நீந்துகையில் மீன்களென்றும் கிளை தாவுகையில் கிளிகளென்றும் ஓடி ஒளிகையில் வெண்முயல்கள் என்றும் புதர்கள் ஊடே தாவுகையில் மான்களென்றும் அவர்கள் உருமாறினர்.

அப்போது அவ்வழியே கருமுகில்தேர் ஒன்றில் ஏறி கேசி என்னும் அரக்கன் தன் ஏழு படைவீரர்களுடன் சென்றுகொண்டிருந்தான். அவன் நீளக்கருங்குழல் காற்றிலெழுந்து நூறு யோசனை தொலைவுக்கு அலையலையென பறந்து கொண்டிருந்தது. அதன் இருளால்

கருக்கல்வானம் மேலும் இருண்டது. முதலொளிக்கு முன் தன் இருளுலகம் சேர்ந்துவிடவேண்டும் என அவன் விரைந்துகொண்டிருந்தான்.

இளவேனில் எழுந்ததும் முதற்சேவல் மரக்கிளையில் ஏறி நின்று செங்கனல் கொண்டையைச் சிலிர்த்து சிறகடித்து "எங்கோ எழுந்தருளாயே! எங்கோ எழுந்தருளாயே!" என்று கூவியது. கீழ்வான் விளிம்பில் அருணனின் தேர்ப்புரவிகளின் குளம்புத் தடங்கள் சிறு செந்நிறத் தீற்றல்கள் எனத் தோன்றலாயின. "வருக, எம் தேவா!" என்று கூவியபடி நாகணவாய்கள் துயிலெழுந்தன. உள்ளான்களும் காகங்களும் காற்றில் எழுந்து சிறகசைத்து களியாட்டெழுப்பின. தேர்முகம் தெளிந்து கிழக்கே ஒளியரசன் வானிலெழுந்து செங்கதிர்முடி துலங்கி வந்தான்.

முதற்கதிர் வந்து மலர் தொடும்போது அவற்றுக்குமேல் தங்கள் மெய்யுருக் கொண்டு பொன்முலைகளைத் திறந்து காத்து நின்றனர் தேவகன்னியர். அவ்வான் மீது கரிய அலையெனப் பறந்த கேசியின் தலைமுடி சூரியக்கதிரை மறைத்தது. சினம் கொண்ட ஊர்வசி சலிப்போசையிட்டபடி அக்குழலை தன் கையால் பற்றி வீசி விலக்கினாள். 'யார் அது?' என திரும்பி நோக்கிய கேசி கதிர்கொண்டு பொன்பூசி நின்ற ஊர்வசியை கண்டான்.

அக்கணம் அவன் பிறிதெதையும் எண்ணவில்லை. தேரைத் திருப்பி பாய்ந்துவந்து அவளை அள்ளித்தூக்கி தன் தேரிலேற்றி "செல்க, என் அரண்மனைக்கு!" என்று தேர்ப்பாகனுக்கு ஆணையிட்டான். இருளுருக்கொண்ட தேர்ப்புரவிகள் குளம்பறைய தென்னிருள் நோக்கி விரைந்தன. ஊர்வசி கைநீட்டி அலறினாள். கீழே இருந்த அவள் தோழிகள்

வெண்நாரைகளாக சிறகுகொண்டு பறந்து அவனைத் துரத்தினர். கரிய கூகைகளாக எழுந்த கேசியின் வீரர்கள் அவர்களை சிறகுகொய்து மண்ணில் வீழ்த்தினர்.

வான்வழியே அவர்கள் செல்லும்போது கங்கையில் புதுப்புனலாடி ஒளியலைத்த நீர்ப்பரப்பைப் பிளந்து பொன்னொளிரும் வெற்றுடலுடன் எழுந்து கரைவந்து ஈரக்குழலை உதறி தோள்மேல் பரப்பி விரல்களால் நீவியபடி நின்றிருந்த புரூரவஸ் தன்மேல் விழுந்து மறைந்த நிழலைக்கண்டு நிமிர்ந்து நோக்கினான். அவன்மேல் விழுந்த முதற்கதிரின் ஒளி வேள்வி விறகின் மேல் எழுந்த தென்னெரியென சுடர்ந்தது. அவனை நோக்கி கைவீசி "என்னை காத்தருள்க, அரசே!" என்று ஊர்வசி கூவினாள்.

மின்விரைவில் கடந்து சென்ற கருந்தேரைக் கண்டதுமே புரூரவஸ் கையருகே இருந்த தன் உடைவாளை மட்டும் எடுத்துக்கொண்டு பாய்ந்து அருகணைந்த தன் புரவியிலேறி அதை விண்ணில் பாய்ந்தெழச் செய்தான். ஒளிமேல் காலூன்றும் திறன் கொண்டிருந்த அவன் புரவி வானிலேறி மிதந்து கேசியின் விண்தேரைப் பின்தொடர்ந்து சென்றது. தேரின் குடைத்தூணில் கேசியின் கருங்குழலினால் பன்னிருமுறை சுற்றிக் கட்டப்பட்டு நின்றிருந்த ஊர்வசி வெண்நிறக் குஞ்சிமுடி பறக்க பாற்கடல் அலையென பாய்ந்துவந்த புரவிமேல் வெற்றுடலுடன் வாளேந்தி அமர்ந்திருந்த புரூரவஸைக் கண்டு விழிமலர்ந்து நோக்கினாள்.

கேசியைத் துரத்தி மறித்த புரூரவஸ் தன் உடைவாளால் அத்தேரின் விளிம்புகளில் நின்று வில்லும் வேலுமேந்தி போரிட்ட அரக்கர்களின் பறக்கும் கூந்தலை வெட்டினான். அவர்கள் பாறைகள்போல சென்று மண்ணில் விழுந்தனர்.

அங்கு எழுந்து நின்று பறக்கமுடியாமல் கைவீசி கூச்சலிட்டனர். கேசியின் கூந்தலை வெட்டி கீற்றுகளாக பறக்கச்செய்தான். அவை மண்ணில் இறங்கிப்படிய விண்பறவையின் சிறகுகள் அவை என அங்கே கன்று மேய்த்திருந்த ஆயர் கூச்சலிட்டு மேலே நோக்கினர்.

குழலறுபட்டு தேர்த்தட்டில் விழுந்த கேசியைப் பற்றி வாளால் அவன் தலையை முற்றிலும் மழித்தான். தன் ஆற்றலனைத்தும் இழந்து வெறும் உடலென தேர்த்தட்டில் கிடந்த கேசியை அவன் ஆடையைக் கொண்டே கைகள்பிணைத்து தேரில் இட்டான். முடியாலான கட்டுகள் அறுக்கப்பட்டு விடுவிக்கப்பட்ட ஊர்வசி அவனை நோக்கி “நன்று செய்தீர் அரசே, இதை நினைத்திருப்பேன்” என்றாள்.

“நீ யார், அழகியே? கான்தேவதையா? விண்ணுலாவியா? நீர்மகளா? மண்ணில் எப்பெண்ணும் இப்பேரழகு கொண்டு நான் பார்த்ததில்லை” என்றான் புரூரவஸ். ஊர்வசி “நான் அமராவதியின் ஊர்வசி. இது உங்கள் உளம்கொண்ட என் தோற்றமே” என்று புன்னகைத்தபின் “வருகிறேன்” எனச் சொல்லி ஒரு பொற்கிளியாக மாறி சிறகடித்து எழுந்து காற்றில் பறந்து மறைந்தாள்.

அமராவதிக்குத் திரும்பி வந்த ஊர்வசி கிளம்பிச்சென்றவளாக இருக்கவில்லை. அவள் விழிகள் உள்நோக்கி திரும்பிவிட்டிருந்தன. விரல்நுனிகளில் எப்போதும் மென்பதற்றம் இருந்தது. இரு கால்களும் இணையாக நிலத்தூன்றவில்லை. இடை ஒசிந்து தோள் நிலையழிந்து காற்றில் உலையும் மலர்க்கொடி என்றிருந்தாள். எண்ணங்களில் எங்கெங்கோ சென்று நீள்மூச்சுடன் திரும்பிவந்தாள். கைநகம் கடித்து இமை தாழ்த்தி அமர்ந்து

ஏங்கினாள். சிற்றொலியில் திடுக்கிட்டு விழித்துக்கொண்டு எங்குளோம் என உணர்ந்து நீள்மூச்செறிந்தாள். அவளிடம் நிகழ்ந்த மாற்றங்களை தோழியர் அறிந்தனர். அவளுக்கு நிகழ்ந்ததென்ன என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

அந்நாளில் இந்திரன் அவைக்கு விண்ணுலாவியாகிய நாரதர் வந்தபோது அவரை மகிழ்விக்கும்பொருட்டு ஸ்ரீநிருத்யம் என்னும் பெருங்கூத்தை அவையில் நிகழ்த்தும்படி இந்திரன் ஆணையிட்டான். பாடகியர் இரு நிரையாக அமர்ந்து பாற்கடலில் துயில்பவனின் பேரழகை அவன் நெஞ்சில் அணிந்த அருமணியாகிய துணைவியின் பொன்றாப் பொலிவை போற்றிப்பாடினர். திருமகளாக நடனமங்கையர் நடுவே ஊர்வசி கால்விரல் முதல் நெற்றி வகிடு வரை நூற்றெட்டு அணிகளை அணிந்து நின்றாள். இளம்பச்சைப் பட்டாடை சுற்றி குழலில் மலர்சூடி இவளே அவளென்று நாரதர் முதலிய முனிவரும் விழிமயங்கும்படி தோன்றினாள்.

ஆடல் தொடங்கியது. சொல் ஒவ்வொன்றும் விரல் அசைவாக மாறுவதை அவையோர் கண்டனர். இசையென்பது உடலசைவாகி தாளம் காலடிகளாகி பாடல்கொண்ட பொருளனைத்தும் விழிமின்னல்களாகி ஓர் உடலில் ஒரு காவியம் நிகழ்ந்தது. தன்னை திருமகளென்றே ஆக்கி அங்கு நிறைந்திருந்தாள் ஊர்வசி. பொன்னொளிர் பேருடல் என ஓருடல் என்று ஒரு வரி பாடலில் எழுந்தபோது நாணத்தால் கண்சிவக்க முகம்கன்ற உடல் சற்று சிலிர்த்து நிலையமைந்து அவள் காட்டிய முத்திரையைக் கண்டு இசைமுனிவராகிய நாரதர் சினந்தெழுந்தார்.

“நிறுத்து!” என்று கூவினார். “நிறுத்துக! நிறுத்துக! ஆடலை நிறுத்துக!” என்று கைவிரித்து கூச்சலிட்டபடி அவை நடுவே

வந்தார். உடனாடிய மங்கையர் திகைத்து நிலைமண்டிலத்தில் கால்பரப்பிவைத்து நின்றுநோக்க ஊர்வசியை அணுகி "நீ ஆடியதென்ன? உன் கைவிரல் இங்கு மலர்ந்து சொன்னதென்ன?" என்றார். "நான் அறிந்து ஆடவில்லை, முனிவரே. இது அதுவாக ஆகி ஆடிய நடனம்" என்றாள் ஊர்வசி. பெருஞ்சினத்துடன் "நீ காட்டிய கைமுத்திரை விண்ணளாவ விரிந்தவனுக்குரியதல்ல. அது மானுடனை சுட்டுகிறது" என்றார் நாரதர்.

புரியாமல் திகைத்து பிற பெண்களைப் பார்த்தபின் இடையில் கைவைத்து ஒசிந்துநின்று "என்ன பிழையென்று நான் அறியக்கூடவில்லை, முனிவரே" என்றாள் ஊர்வசி. "நீ காட்டியது ஆழிவண்ணன் உடலை அல்ல. மானுட உடலை" என்றார் நாரதர். "நீ அவனுக்கு மானுடன் ஒருவனை இணை வைத்தாய். இழிமகளே, தேவகன்னியர் எண்ணவும் ஒண்ணாத செயல் ஒன்றைச் செய்தாய்."

அப்போதுதான் அனைத்தையும் உணர்ந்தாள். ஆனால் அச்சமோ துயரோ கொள்ளாமல் முகம் மலர்ந்து இதழ்களில் புன்னகை விரிய கண்களில் ஒளியுடன் "ஆம்" என்றாள். தோழியரை விழிநுனியால் நோக்கியபடி நாணித்தலைகுனிந்து "அதை நன்குணர்கிறேன்" என்றாள். "முனிவர் மகளெனப் பிறந்தவள் நீ. தெய்வங்களுக்குரிய மலரென இங்கிருப்பவள். மானுடனை எண்ணி எப்படி காமம் கொண்டாய்?" என்று நாரதர் கூவினார். "ஓடையின் திசையை அது முடிவு செய்யமுடியாதென்பார்கள், முனிவரே" என அவள் மெல்லிய குரலில் சொன்னாள்.

நாரதர் கைநீட்டி "இனி நீ இங்கிருக்கலாகாது. உன்னுள் குடியேறிய இந்நஞ்சு முற்றிலும் நொதித்து அமுதென்றாகி ஒளிகொண்டபின் இங்கு மீண்டுவருவதே முறை. நீ விழைந்த

மானுடனை அடைக! அவன் எல்லையை அறிந்து கடந்து தெய்வகன்னியாக உன்னை உணர்கையில் இங்கு மீள்க!” என்றார்.

“அத்தீச்சொல் ஏற்ற ஊர்வசி கிளையிலிருந்து உதிரும் மலரென மண்ணில் விழுந்தாள்” என்றான் முண்டன். அவன் உடலிலேயே புரூரவஸின் விரைவை, கேசியின் ஆற்றலை, ஊர்வசியின் ஆடலை, நாரதரின் சினத்தை நோக்கிக்கொண்டிருந்த பீமன் எண்ணம் அறுபட்டு மீண்டுவந்தான். நிமிர்ந்து அமர்ந்து “சொல்க!” என்றான்.

அவன் அருகே வந்து முழந்தாளிட்டு அமர்ந்து நிமிர்ந்து அவன் விழிகளை நோக்கி முண்டன் சொன்னான் “ஊர்வசி மண்ணுக்கு வந்தாள். அவளை புரூரவஸ் கண்டடைந்தார். மண்ணிலவள் தோன்றிய இடம் இது. இச்சுனைக்கரையில் இந்தச் சோலையில் தான் புரூரவஸ் ஒரு காட்டு இளம்கன்னியாக அவளை கண்டடைந்தார்.”

பீமன் திரும்பி ஆலயக்கருவறைக்குள் அமர்ந்திருந்த கரிய சிலையின் முகத்தைப் பார்த்தான். மாறாக்குமிண்சிரிப்பும் நிலைநோக்கும் கொண்டிருந்தாள். கல்லில் எழுந்த கண்ணொளி காலத்தை அறியாது என அவன் எண்ணிக்கொண்டான். “அன்னையின் ஆலயமுகப்பில் இருக்கிறோம். அவள் அனைத்தையும் அறிக!” என முண்டன் சொன்னான். “என்னிடம் மாயக்கலை ஒன்றுள்ளது. அதைப் பற்றும் உளஉறுதியும் தொடரும் விரைவும் உங்களுக்கிருக்குமென்றால் இக்காலத்திலிருந்து பெயர்த்தெடுத்து உங்களை அக்காலத்திற்கு கொண்டு செல்வேன்.”

பீமன் அருகே அவன் முகம் வந்தது. விழிகள் முடிவிலி திறக்கும் இரு துளைகளெனத் தெரிந்தன. “புரூரவஸாக உங்களை ஆக்குவேன். காலம் கடந்து அங்கு சென்று உங்கள் மூதாதை என ஆகி இங்கு வந்து அன்று நிகழ்ந்ததை மீண்டும் நடிக்க வைப்பேன். அன்று முதல் இன்று வரை மானுடம் அறிந்த அனைத்து அறிதலும் உங்களுடன் இருப்பதனால் அன்று நிகழ்ந்ததை விழைந்தால் நீங்கள் இன்று மாற்ற முடியும். அனைத்துத் தருணங்களையும் பிறிதொன்றென அமைக்க முடியும்.”

“அறியாக் கன்னியென மண்ணில் வந்த ஊர்வசியிடம் புரூரவஸாக நின்று உங்கள் உளத்தெழுந்த வினாவை கேட்க முடியும்.” பீமன் விழிசுருக்கி “எவ்வினாக்களை?” என்றான். “உங்களை இங்கு இவ்வண்ணம் நிறுத்துவனவற்றை, இங்கிருந்து மேலும் எழாது எடையளிப்பவற்றை.” பீமன் தன் மெல்லிய செந்தாடியைத் தடவியபடி அவனை நோக்கிக்கொண்டிருந்தான். “ஐயுற வேண்டாம், நான் உங்களை அங்கு கொண்டு செல்வேன்” என்றான் முண்டன். “அது ஓர் உளமயக்கா?” என்றான் பீமன். “இப்புவியில் நிகழும் மானுட வாழ்க்கை யாவும் ஓர் உளமயக்கே. உளமயக்குக்குள் எத்தனை உளமயக்கு நிகழ்ந்தாலென்ன?” என்றான் முண்டன்.

மீண்டும் ஏதோ சொல்ல நாவெடுத்தபின் தன்னை கலைத்துக் கூர்த்து “நன்றி முண்டரே, நான் சித்தமே” என்றான் பீமன். “ஒன்று கேளுங்கள்! நீங்கள் அங்கு செல்வது மட்டுமே என் திறனால் அமையும். மீண்டு வருவது உங்கள் விழைவே. மீண்டு வரவேண்டாம் என்று தோன்றியதென்றால் நான் ஒன்றும் செய்ய இயலாது” என்றான் முண்டன். புன்னகையுடன் “ஆகுக!” என்றான் பீமன்.

தன் கைகளை விரித்த முண்டன் வலக்கையிலொரு சிறு வெண்மலரை வைத்திருந்தான். இடக்கையில் ஒரு கூழாங்கல். அதை பீமன் முன் நீட்டினான். “இது விண்ணிலிருந்து உதிர்ந்த மலர். இது அவளை நாடிச்செல்லும் ஒரு மானுடன். இதைத் தொடுக!” என்றான். பீமன் கை நீட்டி அந்தக் கூழாங்கல்லை தொட்டான். “செல்க!” என அவன் சொன்னான். அது ஒரு கனவென்று அவன் எண்ணினான். கனவுக்குள் என அவன் குரல் ஒலித்தது. “செல்க...” பீமன் இனிய துயிலில் என உடல்தளர்ந்தான். ஆம் கனவேதான் என்று சொல்லிக்கொண்டான். “செல்க!” என மீண்டும் எங்கோ முண்டனின் குரல் ஒலித்தது.

வேட்டைக்குச் செல்வதை புரூரவஸ் ஒருபோதும் விரும்பியிருந்ததில்லை. அரசர்கள் மாதம் இருமுறை வேட்டை கொள்ளவேண்டுமென்பது அரண்மனையின் நெறிகளில் ஒன்றென கடைபிடிக்கப்பட்டது. அரண்மனைகள் உருவாவதற்கு முன்பு காட்டுக்குடிலின் மீது குலக்கொடி நாட்டி கொந்தைமுடி சூடி கல்பீடத்தில் அமர்ந்து பசுங்கோல் ஏந்தி ஆண்ட அக்காலத்தில் இருந்தே அரசர்களுக்கு அது முறையென குலமூத்தார் கூறினர். குலநெறி பிழைக்கவேண்டாம் என்பதனால் அவன் வேட்டையை வெறும் கானாடலாக ஆக்கிக்கொண்டான்.

அவன் இளவயது முதலே ஊனுணவை முற்றிலும் தவிர்த்திருந்தான். அறியாச் சிறுவனாக இருக்கையில் ஒருநாள் அரண்மனை முற்றத்தில் அமைந்த அணிக்குளத்தில் ஆம்பலும் குவளையும் மலர்ந்திருக்க ஊடே துள்ளி வெள்ளிஒளி காட்டி அலைவளயங்களின் நடுவே மூழ்கி களியாடிக்கொண்டிருந்த இளமீன் ஒன்றை இலைகள் நடுவே வெண்மலரோ என

விழிமாயம் காட்டி அமைந்திருந்த கொக்கு சவுக்கென கழுத்தைச் சொடுக்கி கவ்விச் செல்வதை அவன் கண்டான்.

பதறியபடி “அன்னையே! அன்னையே!” என்று கூவி அழுது அதைத் தடுக்க பாய்ந்து சென்றான். சிறகுக் காற்று அவன்மேல் பட சிவந்த நீள்கால்களின் மடிந்த உகிர்களில் பற்றிய துள்ளும் மீனுடன் கொக்கு எழுந்து அப்பால் நின்றிருந்த சிறுமஞ்சணத்தி மரத்தின் கிளையில் அமர்ந்தது. நிகழ்ந்ததென்னவென்று அப்போதும் அறியாது நிலைத்துறைந்த மீனின் விழிகளை அவன் பார்த்தான். இறுதிச் சொல் உறைந்திருந்த திறந்த வாயின் பற்கள் புன்னகை எனத் தெரியக்கண்டு பதைத்து நின்றான்.

வால் சுழற்றித் துள்ளும் மீனின் கண்களைக் கொத்தியது கொக்கு. பின் அதை கவ்வித் தூக்கி கழுத்து வளைத்து நேராக்கி அலகுக்குள் செலுத்தி கிளையிறங்கும் நாகமென தலை நெளித்து விழுங்கியது. கொக்கின் கழுத்துக்குள் துடித்தபடி செல்லும் மீனை அவன் கண்டான். கைகால்கள் வலிப்புற மல்லாந்து விழுந்தான். வாயோரம் நுரை வழிய விழிகள் மேலெழுந்து செல்ல தரையில் கிடந்தவனை செவிலியர் ஓடிவந்து தூக்கி மடியிலிட்டு நீர் தெளித்து கன்னம் பற்றி உலுக்கினர்.

மேலே செருகிய விழி மீண்டதும் அள்ளி அன்னையைப்பற்றி அவள் முலைக்குவடுகளுக்குள் முகம் புதைத்து உடல் குலுங்க விசும்பி அழுதான். “என்ன ஆயிற்று? என்ன ஆயிற்று?” என்று செவிலியர் அவனை தேற்றினர். பிறர் அவனைத் தொடும் ஒவ்வொரு தொடுகைக்கும் உடல் அதிர்ந்து கூசி அட்டையென வளைந்தொடுங்கிக்கொண்டான். அள்ளி அவனை கொண்டுசென்று வெண்பட்டுச் சேக்கையில் படுக்க வைத்தனர்.

அவன் சித்தத்தை திருப்பும்பொருட்டு பொன் வளையல்கள் குலுங்க கைகொட்டி கொஞ்சினர். அவன் உடல் தொட்டு கூச்சமூட்டினர். அன்னை அவன் தலையை தன் மடியில் எடுத்துவைத்து புன்தலை மயிரை விரலால் அளைந்தபடி "ஒன்றுமில்லை மைந்தா, ஒன்றுமில்லை" என்றாள்.

அவன் கண்களிலிருந்து நீர் வழிந்துகொண்டே இருந்தது. இரு கைகளும் விரல் ஒன்றுடனொன்று ஏறிப்புரண்டு இறுகியிருந்தன. கழுத்து வலிபட தூக்கில் தொங்குபவன் போன்று அவன் கால்கள் இழுபட்டிருந்தன. ஏழு நாட்கள் ஒளியை அஞ்சி இருளுக்குள்ளேயே கிடந்தான். சிற்றறையின் கதவு சற்றே திறந்து செவிலி உள்ளே வரும் ஒளி விழிபட்டபோதே அலறியபடி எழுந்து இருண்ட மூலைக்கு ஓடி ஒடுங்கிக்கொண்டான். அறியாத எவரைக் கண்டாலும் அஞ்சி கண்களை மூடிக்கொண்டு மெத்தையில் உட்புறமாகக் கவிழ்ந்து புதைய முயன்றான். "அன்னையே அன்னையே அன்னையே" என்ற ஒரு சொல்லன்றி எதுவும் அவன் நாவில் எழவில்லை.

அரண்மனை மருத்துவர்கள் அவனை நோக்கியபின் "எதைக் கண்டோ அஞ்சினார் இளவரசர்" என்றனர். நிமித்திகர் அவன் நாளும் கோளும் நோக்கியபின் "அவர் முன் ஏதோ இருட்தெய்வம் எழுந்து முழுதுரு காட்டியது, அரசி" என்றனர். கவடி நிரத்தி சோழி பரப்பி பன்னிருகளக் கணக்குகள் இட்டு மீண்டும் மீண்டும் கலைத்து நோக்கியும் அத்தெய்வம் ஏதென்று அறியக்கூடவில்லை. இருட்தெய்வங்கள் எழுந்தால் பன்னிருகளத்தின் நான்கு முனையிலும் வைத்த அகல்சுடர்கள் அணையுமென்றும் தொட்டுவைத்த மஞ்சள் பொட்டுகள் குருதிச் சிவப்பு கொள்ளுமென்றும் நூல்கள் கூறின.

ஆனால் மங்கலத்தெய்வம் எழுந்ததுபோல சுடர் புகையற்று அசைவிழந்து நின்றது. மஞ்சள் பொன்னொளி கொண்டது. அஞ்சி நடுங்கி உடல் வலிப்புற்று சேக்கையில் கிடந்த மைந்தனை நான்கு சேடியர் தூக்கிக்கொண்டு வந்து பன்னிருகளம் முன் இடப்பட்ட மான்தோல் மஞ்சத்தில் அமர்த்துகையில் அவர்கள் அறிந்திராத இன்மணமும் எழுந்தது. “களத்தில் எழுந்துள்ளது நற்தெய்வமே” என்றார் நிமித்திகர். ஆனால் பற்கள் கிட்டிக்க, நீல நரம்புகள் சென்னியில் புடைத்து கழுத்தில் இறங்கி தோள்பரவி மணிக்கட்டில் பின்னி கைவெள்ளையில் தெளிய, கண்கள் சுழன்று மேலேற, உடல் துள்ளி விழ அப்பெருந்துயரம் அச்சிற்றுடலில் ஏன் எழுகிறது என அவர்களுக்கு புரியவில்லை.

அந்நாளில் அங்கு வந்த மாமுனிவராகிய துர்வாசரின் காலடியைத் தொட்டு சென்னிசூடி அன்னை கேட்டாள் “அருளுரையுங்கள் முனிவரே, மைந்தனை ஆட்கொண்ட அத்தெய்வம்தான் எது?” அவர் அன்னையின் விழிநீர் கண்டு உளம் இளகினார். “நன்று! நான் நோக்கி உரைக்கிறேன்” என்றபடி மைந்தனை வைத்த இருளறைக்குச் சென்றார். துயர்கொண்ட முகத்துடன் அன்னையும் தந்தையும் உடன் வந்தனர். “மைந்தன் மீண்டெழுவானா, முனிவரே? எங்கள் குல நிமித்திகரும் மருத்துவரும் பூசகரும் அவன் எஞ்சுவது அரிது என்கிறார்கள்” என்றார் அவன் தந்தை ஹிரண்யபாகு.

“இவன் விண்ணாளும் தெய்வமரபில் புதன் மைந்தனாக இளையின் கருவில் பிறந்தவன் என்றார்கள் நிமித்திகர். இவன் பிறந்ததுமே இனி இப்புவியாளும் அரசகுலமெலாம் இவன் குருதியில் பிறக்குமென்று உரைத்தனர் வருங்காலம் உய்த்தறிந்த ஏழு தொல் நிமித்திகர். வாள் வலி கொண்டு புவி

வென்று முடிசூடி அமரும் மாவீரன் என்று இவனை எண்ணினேன். மானுடரைக் கட்டி நிறுத்தும் அச்சமும் ஐயமும் அறத்தயக்கமும் முற்றிலும் இல்லாத உளம்கொண்டவன் என்று கருதினேன். இவனோ கருகி உதிர்ந்த மலர்போல் இருக்கிறான்" என்று அவன் தந்தை சொன்னார்.

அன்னை விம்மியபடி "என் மைந்தன் நாடாளவேண்டியதில்லை. அரசக்கொடிவழிகள் இவனில் பிறந்தெழவும் வேண்டியதில்லை. என் மடி நிறைத்து பிறந்து முலையுண்டு வளர்ந்த என் மைந்தன் நான் வாழும் காலம் வரை கண் நிறைய என் முன் திகழ்ந்தால் மட்டும் போதும். அருள் புரிக, தவத்தோரே" என்றாள்.

மைந்தன் கிடந்த சிற்றறையின் வாயிலில் நின்றிருந்த சேடி தலைவணங்கி "துயில்கிறார்" என்று மென்குரலில் சொன்னாள். நன்று என தலையசைத்தபின் கையசைவால் அன்னையையும் தந்தையையும் வெளியே நிற்கச்செய்து துர்வாசர் உள்ளே நுழைந்தார். காலடி ஓசையின்றி அணுகி இளமைந்தனின் முகம் நோக்கி அமர்ந்து திரும்பி அவர் விழிகாட்ட சேடி கதவை மூடினாள். அறைக்குள் இருள் நிறைந்தது. கதவின் கீழிடுக்கு வழியாக தரையில் விழுந்த வாள் என மின்னிய ஒளியில் மெல்ல அறையிலுள்ள அனைத்தும் துலங்கின. மைந்தனின் நெற்றிப்பொட்டில் கைவைத்து தன் உளம் குவித்தார் துர்வாசர்.

கனவுக்குள் அவன் அவரைக் கண்டான். அவர் கை பற்றி உலுக்கி கண்ணீருடன் "சொல்க, சொல்க முனிவரே, இது ஏன் இவ்வண்ணம் நிகழ்ந்தது? இங்கு ஓருயிருக்கு பிறிதுயிருடன் என்ன பகை? ஒன்று பிறிதை அழிப்பதில் எழும் அப்பேருவகையின் பொருள்தான் என்ன? மீனெனத்

துடிதுடிக்கையில் என் உள்ளத்தின் ஒரு பாதி கொக்கென சுவையறிந்தது ஏன்?” என்றான்.

“கொல்லுதலும் கொலையுறுதலும் இங்கு ஒழியுமொரு கணமில்லை. அவ்விரு செயல்களின் சரடுகளால் ஊடுபாவென நெய்யப்பட்டுள்ளது இப்புடவி” என்றார் துர்வாசர். அக்கொக்கை சேற்றுச்சுனை ஒன்றின் கரையில் முதலை ஒன்று பாய்ந்து கவ்வி சிறகு படபடக்க, நீரில் அலைகொந்தளிக்க, உள்ளிழுத்து மறையும் காட்சியை அவனுக்கு காட்டினார். வீறிட்டலறியபடி அவரை அள்ளிப்பற்றி கைகால்களால் இறுக்கிக்கொண்டு அவர் தொடையில் முகம் புதைத்து கூவியழுதான்.

“அந்த முதலையும் உண்ணப்படும். அச்சேற்றில் அதை உண்ணும் பல்லாயிரம் சிறுபுழுக்களின் மூதாதையர் பிறந்துவிட்டனர். இவையனைத்தும் ஒரு நிலையில் உள்ளமும் அறிவும் ஆழமும் கொண்ட உயிர்க்குலங்கள். பிறிதொரு முறையில் அன்னத்தை உண்டு அன்னமென்றாகும் வெறும் பருப்பொருட்கள். நிகர் நிலையொன்றுண்டு. அதில் நின்றிருக்க மட்டுமே நம்மால் இயலும்” என்றார் துர்வாசர்.

“சொல்க, நான் என்ன செய்யவேண்டும்?” என்றான்.
“நானறிந்ததெல்லாம் நாம் நம்மை ஆள்வதைப்பற்றி மட்டுமே. நம் கைகளால் கொலை செய்யாதிருப்பது. நம் உள்ளத்தால் அறம் மீறாதிருப்பது. இளையோனே, நமது விழைவுகள் முறை மீறாதிருக்கட்டும். நமது கனவுகளும் கரைகண்டு அமைவதாகுக! மானுடர் இப்புவியில் ஆற்றுவதற்கு பிறிதொன்றுமில்லை.” அவன் பெருமூச்சுடன் “ஆம். ஆனால்...” என்றான். “ஆமென்பது உன் உறுதி, அதை கொள்க! ஆனால் என்பது ஒரு வினா. இறுதிநீர் அடிநாவில் குளிரும் வரை அது தொடர்க! அவ்வாறே ஆகுக!”

அவன் சற்றுநேரம் அமைதியாக இருந்தான். பின்னர் “ஆம்” என்றான். “இளையோனே, நீ என்றும் துலாமுள் என அறத்தட்டுகள் நடுவே நிற்கப்போகிறவன். ஆணும் பெண்ணும் கருச்சுமந்து பெற்றனர் உன்னை. நீ அறியாத ஒன்றும் இங்கு இருக்கப்போவதில்லை” என்று உரைத்தபின் எழுந்து கதவைத் திறந்து வெளிவந்த துர்வாசர் சேடியரிடம் “துயிலட்டும். நாளை மீண்டுவிடுவார்” என்றார்.

மறுநாள் முதற்புலரியில் அனைவரும் அயர்ந்து துயில் கொண்டிருக்கையில் எழுந்து அவன் கதவைத் திறந்து வெளியே சென்றான். குளிரிலும் நோய்மெலிவிலும் உடல்நடுங்க மெல்ல கால்வைத்து நடந்தான். ஒவ்வொரு நாளும் விழித்திருக்கும்போதெல்லாம் நினைவிலும் கனவிலும் அவன் கண்டு அஞ்சிய அணிச்சுனை அருகே சென்று நின்றான். அதில் புதிய மீன்கள் வெள்ளித் தெறிப்பென எழுந்து விழுந்தன. புதிய மலர்கள் மொக்கவிழ்ந்து வண்ணம் காட்டின. புதிய வெண்கொக்குகள் இரண்டு வந்து அஞ்சனமரத்தின் கிளைகளில் அமர்ந்தன.



கைகூப்பியபடி கிழக்கே தெரிந்த முதற்கதிரை பார்த்து நின்றான். பொன்னொளி எழுந்து வந்து அவன் உடலை குளிப்பாட்டியபோது கைகளைக்கூப்பி அவன் கால் மடித்து அமர்ந்திருந்தான். மஞ்சத்தறையில் அவனைக்காணாத சேடியர் தேடிப்பதைத்து ஓடி அலைகையில் சேடி ஒருத்தி அவனைக் கண்டு திகைத்து ஓசையின்றி கைகாட்டினாள். அரண்மனை மகளிரும் காவலரும் பின் அரசனும் அரசியும் வந்து அவனைச் சுற்றி நின்று நோக்கினர். யாரோ ஒரு முதுகாவலர்

“எந்தையே!” என்று ஒலியெழுப்பி கைகூப்ப அனைவரும் அவனை வணங்கினர். தந்தையும் தாயும் கைகூப்பினர். பேரறத்தான் என்று அவன் அதன்பின் அழைக்கப்பட்டான்.

பின் எப்போதும் அவன் ஊன் உண்டதில்லை. படைக்கலம் பயின்று தேர்ந்தான். வாள் கொண்டு வெல்லவும் வில் கொண்டு விழி எல்லைவரை தொடவும் தேர்ந்தான். நிகரற்ற வீரன் என்று அவன் குலம் அவனை கொண்டாடியது. ஆனால் ஒரு களத்திலும் ஒருபோதும் பகைவனை அவன் கொல்வதில்லை என்று அனைவரும் அறிந்திருந்தனர். கொல்லாநெறி நின்றதால் அவனை பேரளியின் மைந்தன் என்று வணங்கினர். தென்திசை முதல்வனின் வடிவில் கல்லால மரத்தின் கீழ் கால் மடித்தமர்ந்திருக்கும் தோற்றத்தில் அவனுக்கு சிலையெழுப்பி தங்கள் தென்திசை சிற்றாலயங்களில் அமர்த்தி வழிபட்டனர்.

# மாமலர் - 17

### 17. நறுமணவேட்டை

ருத்ரனின் குரல் கேட்டு அவன் விடிகாலையில் உடல்வெம்மை படர்ந்த மெல்லிய சேக்கையில் எழுந்தமர்ந்தபோதும் கனவுக்குள்தான் இருந்தான். “அரசே, முதற்பொழுது எழுந்துவிட்டது” என்று ருத்ரன் சொன்னான். காற்றில் சாளரக் கதவொன்று ர்ர் ர்ர் என மரக்குடுமியில் சுழன்றுகொண்டிருந்தது. அறைக்குள் சிற்றகல் கரிபடிந்த இறகுவடிவ பித்தளை மூடிக்கு அடியில் அனலிதழ் குறுகி எரிந்துகொண்டிருந்தது. அவன் மெல்ல தன்னை திரட்டிக்கொண்டான். இடமும் காலமும் தன்னிலையும்

துயிலின்போது விலகிநின்று விழிப்பிற்குப்பின் மெல்ல வந்தமைவதை அவன் முன்னரும் கண்டிருக்கிறான். அவை விழிப்பின் மூன்று நிலைகள் மட்டுமே என கற்றிருக்கிறான்.

கானாடலில் அவனுக்கு முதற்படைத்துணை என இடம் நின்று உடன் வருபவன் அணுக்கனாகிய ருத்ரன். குற்றுடலும் இரட்டை மண்டையும் குரங்குக் கண்களும் கொண்ட முண்டன். அவன் சிறுமைந்தனாக இருக்கையிலேயே உடன் வந்த விளையாட்டுத்தோழன். சிறுவனாகவே உடல் எஞ்சிவிட்டதனால் உள்ளத்தையும் அவ்வாறே அமைத்துக்கொண்டவன். அவனுடன் பேசும் அனைவரையும் சிறுவர்களென்றாக்கும் ஊக்கம் கொண்டவன். ஆனால் சொல்கடந்து நுண்புலம் தேரவும் அவனால் இயலுமென புரூரவஸ் அறிந்திருந்தான்.

அவன் எழுந்த அசைவு காதில் விழுந்ததும் ருத்ரன் மஞ்சத்தறையின் கதவைத் திறந்து உள்ளே நுழைந்து அவன் காலருகே நின்று "அரசே, கானகம் சித்தமாகிவிட்டது" என்று அழைத்தான். கனவுக்குள் காட்டிலொரு குரங்கென தாவிக்கொண்டிருந்ததை எண்ணினான். அக்கனவுக்குள் நுழைந்து வந்த ருத்ரன் "நகர்புக பொழுதாகிவிட்டது, அரசே" என்றான். கிளையிலாடியபடி "இன்னொரு நாள்" என்றான் புரூரவஸ். "நகர் காத்திருக்கிறது, அரசே" என்றான் ருத்ரன். "இன்னும் ஒரு நாழிகை" என்றான் கெஞ்சலாக. "இப்போதே நாம் புறப்படவில்லையெனில் கோட்டை மூடுவதற்குள் நகரை அணுக முடியாது."

"இன்னொரு கணம்" என்றபின் திரும்பி பின்காலை ஒளியில் இலையனைத்தும் மலரென மின்னிய காட்டை பார்த்தான். அவன் கைபற்றி "வருக, அரசே!" என்றான் ருத்ரன். "ஆம்" என்று

விழித்துக்கொண்டபோதுதான் அவன் தன் மஞ்சத்தை உணர்ந்தான். எழுந்து ஆடையை சீரமைத்தான். சாளரத்துக்கு அப்பால் விண்மீன் பரவிய வானம் வளைந்திருந்தது. குளிர்காற்றில் இலைப்பசுமை மணத்தது.

ருத்ரனைப் பார்த்து “எங்கு செல்கிறோம்?” என்றான். “காடு ஒருங்கியிருக்கிறது நமக்காக. இது இளவேனில் தொடங்கும் காலம்” என்றான் ருத்ரன். அவன் முகம் மலர்ந்து “இங்கு என் சாளரத்தைக் கடந்து வந்த குளிர் காற்றில் முல்லையின் மணம் இருந்தது” என்றான். அவன் வெளியே நடக்க ருத்ரன் உடன் வந்தான். புரூரவஸ் “கனவில் நான் ஒரு குரங்கென கிளைகள் நடுவே பாய்ந்துகொண்டிருந்தேன், ருத்ரரே” என்றான். “ஆம், நம் குலம் அங்கிருந்து வந்தது” என்றான் ருத்ரன்.

“அறியாத பெருங்காடொன்று. அங்கு மானுட உருக்கொண்ட குரங்கென நானிருந்தேன். என்னைச் சூழ்ந்து மரமானுடர் வால்சுழற்றிப் பாய்ந்தனர். அவர்களுடன் நானும் பாய்ந்தேன். எனினும் அவர்களில் ஒருவனல்ல நான் என்றும் உணர்ந்திருந்தேன்” என்றான் புரூரவஸ். “உங்கள் குரல் அங்கு புகுந்துவந்து அழைத்தது. இங்கு எழுந்து ஆடையை சீர் செய்துகொண்டபின்னரும் நெடுநேரம் அக்கனவில் இருந்தேன்” என்றான். ருத்ரன் “கனவுகள் நன்று. ஒரு பேழைக்குள் பிறிதொரு பேழை என நம்மை அவை பெருகச்செய்கின்றன” என்றான்.

புரூரவஸ் “இக்கனவு தொடர்ந்து என்னுள் இருக்கிறது. கனவு கலைந்து எழுந்து நீரருந்தி படுத்த பிறகும் அக்கனவே தொடர்கிறது. தொடர்பற்ற துண்டு வாழ்க்கைத்தருணங்கள் அவை. பொருள்கொண்டு இணைத்தெடுக்க இயலவில்லை” என்றபின் நினைவு கூர்ந்து நின்று “அதில் நான்

பிறிதொருவனாக இருந்தேன்” என்றான். ருத்ரன் அவனருகே வந்து “அரசனாகவா?” என்றான். புரூரவஸ் குழம்பியபின் “அரசனைப்போல. ஆனால் அரசன் அல்ல. ஐந்து உடன்பிறந்தாரில் இரண்டாமவன் என எவரோ சொன்ன நினைவுள்ளது” என்றான்.

“உங்கள் மூதாதையரில் எவரும் அவ்வண்ணம் சொல்லும்படி இல்லையே?” என்றான் முண்டன். “அக்காட்டில் மிக அருகில் எங்கோ ஒரு குடிலில் எனக்கென தேவி ஒருத்தி காத்திருப்பதாக உணர்ந்தேன். கிளைகளுடாக பாய்ந்து செல்கையில் என் உடன்பிறந்தார் இருவர் தொடர அவள் சிறுமலர்த் தோட்டமொன்றில் நின்றிருப்பதை கண்டேன். கருநிறமும் வெண்ணிறமும் கொண்ட இரட்டையர் அவர்கள்.” அவன் பெருமூச்செறிந்து “ஐவருக்கும் அவள் ஒரு துணைவி” என்றான்.

“அது நம் குலவழக்கமே” என்றான் ருத்ரன். “ஆனால் நம் கதைகளில் அரசர்கள் என எவரும் அவ்வண்ணம் இல்லை.” புரூரவஸ் “நானும் அதை பலவாறாக எண்ணி நோக்கியிருக்கிறேன். அவர்கள் முகங்கள் அத்தனை தெளிவாக என்னுள் உள்ளன. அவள் முகம் ஒருநாளும் ஒழியாது உள்ளே எழுகிறது” என்றான். ருத்ரன் குரங்குபோல் கண்சிமிட்டி புன்னகைத்தான். பெரிய சோழிப்பல் நிரைகள் அரையிருளில் மின்னின. “தேவி அழகியா?” என்றான். “கரியவள், கருமையிலேயே பெண்ணழகு முழுமை கொள்ளமுடியுமென்று தோன்றச் செய்பவள்” என்றான் புரூரவஸ்.

“யார் கண்டார்? இன்று அவளை நாம் பார்க்கவும் கூடும்” என்றான் ருத்ரன். எரிச்சலுடன் திரும்பிநோக்கி “நான் விளையாட்டென இதைச் சொல்லவில்லை ருத்ரரே, அவள்

முகத்தை தெளிவுறக் கண்டேன். நீண்ட விழிகள். சிற்பமுழுமை கொண்ட மூக்கு. அன்னையின் கனிவும் மழலையின் எழிலும் சூடிய உதடுகள். நிமிர்வும் குழைவும் ஒன்றென்றேயான உடல். ஒரு கணமே அவளைக் கண்டேன் என தோன்றுகிறது. அவளை நோக்கி நோக்கி ஒரு முழு வாழ்நாள் இருந்தேன் என்றும் அப்போது தோன்றியது" என்றான்.

"ஐவரா...?" என்றான் ருத்ரன் தனக்குத்தானே என. "நம் குடிப்பிறந்த எவர் முகமேனும் ஒப்பு உள்ளதா?" என்றான். "ஆம். நானும் உள்ளில் அதையே தேடிக்கொண்டிருக்கிறேன். எல்லா முகங்களிலும் அவர்களின் தோற்றம் உள்ளது என ஒரு முறையும் முன்னர் கண்டதே இல்லை என மறுமுறையும் தோன்றுகிறது" என்று புரூரவஸ் சொன்னான். ருத்ரன் "ஆம், முகங்கள் மீளமீளப் பிறக்கின்றன. உள்ளங்கள் தனித்தன்மைகொண்டு முகத்தை மாற்றி வனைகின்றன" என்றான். "அரசே, ஐவர் முகமும் தெரிந்திருக்கிறதா?"

"ஆம். இருவரையே நான் இன்று பார்த்தேன். பிற இருவரையும் மிக அருகிலென நினைவிலிருந்து எடுக்க முடிகிறது. தவத்தோற்றம் கொண்ட மூத்தவர், விழிக்கூர் கொண்ட இரண்டாமவர். அழகர்களான இரட்டையர். இது முற்பிறவியோ என ஐயுறுகிறேன்" என்றான் புரூரவஸ். ருத்ரன் நகைத்து "பிறவிச்சுழலில் முன் என்ன பின் என்ன? இங்கு முடையப்பட்டிருக்கிறது எவ்வகையில் எது என எவருமறியார்" என்றான்.

வெள்ளி எழுந்தபோது கானாடலுக்கான கல்நகைகளும், தோலாடையும், தோள்பட்டையும் அணிந்து களைப்பறியா கரும்புரவியில் படைத்தோழர் புடைசூழ அவன் நகர் நீங்கினான். கல்லடுக்கி மரம் வேய்ந்து கட்டப்பட்ட சிற்றில்கள்

நிரைவகுத்த அவன் நகரின் தெருக்களில் இருபுறமும் எழுந்த குடிகள் அரிமலர் வீசி அவன் குடியையும் கொடியையும் வாழ்த்தி ஒப்பக்குரல் எழுப்பினர். கோட்டை வாயிலை அவன் கடந்தபோது கொடி மாற முரசொலி எழுந்தது.
தேர்ச்சாலையைக் கடந்து சிற்றாறுகள் இரண்டைக் கடந்து மறுகரை சென்று காட்டுக்குள் புகுந்தான்.

காடு மெல்லிய குளிராக, தழை மணமாக, ஈரமண் மணமாக, மகரந்தப்பொடி கலந்த காற்றாக அவனை வந்து சூழ்ந்தது. பின்னர் பச்சை இலைகளின் அலைக்கொந்தளிப்புக்குள் நீரில் மீனென மூழ்கி மறைந்தான். அவனில் அணியப்பட்டவையும் புனையப்பட்டவையுமான அனைத்தும் அவிழ்ந்து அகன்றன. அவனுடலில் எழுந்த ஒருவனிலிருந்து பிறிதொருவன் என தோன்றிக்கொண்டே சென்றான். பன்னிரு தலைமுறைகளை உதிர்த்து அக்காட்டில் கல்மழு ஏந்தி, செங்கழுகின் இறகு சூடி, தன் குலத்தலைமை கொண்டுநின்ற ஊருபலன் என்னும் முதுமூதாதையாக ஆனான்.

அவனுக்கு உளமறியும் வால் முளைத்தது. கைகளில் காற்றை அறியும் காணாச்சிறகுகள் எழுந்தன. புரவியிலிருந்து தாவி மரக்கிளைகளில் தொற்றிக்கொண்டான். கிளைகள் வளைந்து வில்லென்றாகி அம்பென அவனை ஏவ பிறிதொரு கிளையைத் தொற்றி கூச்சலிட்டபடி தாவினான். நீரில் விழுந்து அலைதெறிக்க நீந்தி எழுந்து பல்லொளிர கூச்சலிட்டான். கரை மென்சதுப்பில் புரண்டு களிமண் சிலையென எழுந்தான். இளவெயிலில் அச்சேற்றுடன் படுத்து உலர்ந்தெழுந்து மீண்டும் நீர்க்களியாடினான். அன்றும் மறுநாளும் அக்காட்டிலேயே பிறிதொன்றிலாதிருந்தான்.

மூன்றாம்நாள் சாலமரத்தில் கட்டிய ஏறுமாடத்தில் ஈச்சைஓலை பரப்பிய மூங்கில் படுக்கையில் மரவுரி போர்த்தி துயின்றுகொண்டிருந்தபோது மீண்டும் அக்கனவு வந்தது. அதில் அவன் சாலமரத்தின் உச்சியில் கட்டப்பட்ட பெருங்குடிலொன்றின் அடுமனையில் அமர்ந்து தன் முன் குவிந்திருந்த ஊன்சோற்றை அள்ளி உண்டுகொண்டிருந்தான். அவனைச் சூழ்ந்து அமர்ந்திருந்தனர் உடன்பிறந்த நால்வர். பன்றி ஊனை எடுத்து பற்களால் பற்றி இழுத்து கவ்வி உண்டான். அவனுடலில் ஊறிய ஊற்றுக்கள் அனைத்தும் அச்சுவையை முன்னரே அறிந்திருந்தன. சுவை சுவை என பல்லாயிரம் நாவுகள் துடித்தன. உண்ணும்தோறும் பெருகியது உணவு. தன் உடல் இருமடங்கு பெருத்திருப்பதை அவன் கண்டான்.

தான் யார் என ஒரு எண்ணக்கீற்று எழுந்து ஓடுவதை உணர்ந்து ஒருகணம் உண்பதை நிறுத்தினான். “என்ன, மூத்தவரே?” என்றான் கரிய இளையோன். “நான் ஒரு தொல்மூதாதை, எங்கோ அடர்காட்டில் கல்மணிமாலை அணிந்து கழுகிறகு சூடி நின்றிருக்கிறேன் என்று எண்ணிக்கொண்டேன்” என்றான். புன்னகையுடன் “இப்போதே அப்படித்தான் இருக்கிறீர்கள்” என அவன் சொன்னான்.

“உண்ணுங்கள்” என்றபடி அவன் குலமகள் அருகே வந்து மேலும் அன்னத்தை அவன் முன் வைத்தாள். நிமிர்ந்து அவள் முகத்தை பார்த்தான். இருள்செறிந்த தொல்குகைகளில் அறியா முதுமூதாதையர் கல்கொண்டு செதுக்கிய ஓவியச்சிற்பத்தின் வடிவம். இருளைச் செதுக்கி எடுத்த எழில் என்று தொல்கதைகள் கூறும் தோற்றம். நீண்ட இவ்விழிகள் எவரைப்

பார்க்கின்றன? இங்கிருந்துண்ணும் இப்பேருடலனையா? இங்கிருந்து நோக்கும் மண்மறைந்த மூதாதையையா?

விழித்துக்கொண்டு குளிரிலா அச்சத்திலா என்றறியாத நடுக்கத்தில் அவன் நெடுநேரம் படுத்திருந்தான். தன்னை வந்தடையும் விழிப்பு காலைத் தன்னிலையை மிகப்பிந்தி கொண்டுவந்து சேர்க்கிறதா? அந்த இடைவெளியில் நின்று தவிக்கும் அகம் எவருடையது? எங்கு உறைகிறது அது? நீள்மூச்சுடன் எழுந்து குடில்முகப்பில் வந்துநின்று ஓசைகளாக இருளுக்குள் சூழ்ந்திருந்த காட்டை நோக்கினான். பின்னர் ஏணி எனக் கட்டிய கொடி வழியாக தொற்றி இறங்கி இன்னமும் இருள்பிரியாத காட்டினூடாக சுள்ளிகள் ஒடியும் ஒலியெழுப்பி நடந்தான்.

இருள் திரண்டெழுவதுபோல் எதிர்கொண்டு வந்தது பிடியானை வழிநடத்திய யானைக் கூட்டமொன்று. பிளிறி அவன் வருவதை தன் குலத்திற்கு அறிவித்தாள் முகக்கை மூதன்னை. கிளையொன்றில் மலைத்தேனீக்கூடுபோல் கிடந்த கரடியொன்று நீளுகிர்கள் ஒன்றுடனொன்று முட்டி கூழாங்கற்கள்போல ஒலிக்க இறங்கி கையூன்றி உடல் ததும்பி புதருக்குள் சென்று மறைந்தது. நீர்மை ஒளி வளைய சென்றன நாகங்கள். விழிமின்னத் திரும்பி நோக்கிய செவி சிலிர்த்த மான்கணங்கள் கடந்து சென்றன.

புலரி வரை அவன் நடந்து சென்றுகொண்டிருந்தான். எங்கு செல்கிறோம் என்று அவன் உள்ளம் அறிந்திருக்கவில்லை. ஆனால் செல்லும்போது அருகணைகிறோம் எனும் அறியா உணர்வொன்று கூர்கொண்டு அவனை வழிநடத்தியது. முதலொளி எழுந்து இலைத்தழைப்பினூடாக ஆயிரம் விழுதுகளாக காட்டில் இறங்கிநின்ற பொழுதில் முற்றிலும்

அறியா நிலமொன்றில் அவன் இருந்தான். கைகளை விரித்து வெய்யோனின் வெள்ளிக் காசுகளை ஏந்தி விளையாடியபடி நடந்தான்.

இன்று என் உள்ளம் ஏன் இத்தனை உவகை கொண்டிருக்கிறது என்று எண்ணிக்கொண்டான். உவகைக்கு உவகையே போதுமான ஏதுவாகும் என்று அவன் குலமூத்தார் சொன்னதை எண்ணிக்கொண்டு அதன்பொருட்டும் புன்னகைத்தான். சிறு சுனையொன்றில் மான்கள் நீர் அருந்தும் ஒலி கேட்டது. அவற்றை அப்போதே பார்க்கவேண்டும் என்று எண்ணமெழுந்தது. ஏன் அவ்வாறு தோன்றியதென்று பின்பு பலநூறு முறை அவன் எண்ணியதுண்டு. அவை நீர் அருந்தும் ஒலி விலங்குகள் நீர் அருந்தும் ஒலிபோல விரைவு குறைந்துவரவில்லை. சீரான தாளம்போல் ஒழுகிச்சென்றது என்பதை அவன் உணர்ந்தது பல்லாண்டுகளுக்குப் பின்னர்தான்.

மெல்ல நடந்தபோது அவை மான்களல்ல ஆடுகள் என ஓசை பிரித்தறிந்தான். மான்கள் நீர் அருந்துகையில் அவ்வப்போது தலைதூக்கி இடைவெளி விடுவதுண்டு. ஆடுகளின் மூச்சு மான்கள்போல சீறல்கொண்டதும் அல்ல. அப்பால் மலையூற்று ஊறித்தேங்கிய சிறு சுனையொன்றைச் சூழ்ந்து செறிந்திருந்த மரங்களாலான சோலையை கண்டான். இலைகளுக்கு அப்பால் நீரலை நெளிந்தது. மரங்களின் பசுமையில் நீர் நிறைவு துலங்கியது.

காலையொளியில் சுடர்கொண்டிருந்த இலைத்தழைப்புகளை நோக்கியபடி, மெல்லிய காலடியோசையால் சிறுபசுந்தவளைகளை புல்நுனிகளிலிருந்து தாவித்தெறிக்கச் செய்தபடி, அவன் அச்சோலையை அணுகினான். அவன் வரவை அறிந்த ஆள்காட்டிக்குருவி சிறகடித்து எழுந்து ஓசையிட்டது.

புதரில் முட்டையிட்டிருந்த செம்மூக்கன் சிறகொடிந்ததுபோல புல்வெளியில் விழுந்து எம்பிக்குதித்து எழுந்து பறந்து கூவியபடி மீண்டும் விழுந்தது. அவன் அணுகுவதை ஆடுகள் அறிந்துவிட்டிருக்கின்றன எனத் தெரிந்தது. ஆனால் அவன் வேட்டைக்காரனல்ல என்பதை எப்படியோ புல்வாய் விலங்குகள் அறிந்திருந்தன என்பதனால் அவனை அஞ்சி அவை ஓடுவது அரிது.

சோலையை அணுகும்போதே பாரிஜாத மலரின் மணத்தை அவன் உணர்ந்திருந்தான். அணுகுந்தோறும் அந்த மணம் குறைந்து வருவதன் விந்தையை பின்னர்தான் உணர்ந்தான். சோலையின் முகப்பென அமைந்த இரு சாலமரங்களின் அடியில் வந்து நின்றபோது செண்பக மலர்களின் மணமே அவனைச் சூழ்ந்திருந்தது. தான் அறிந்தது செண்பக மணத்தைத்தான், தொலைவில் அதையே பாரிஜாதம் என்று எண்ணிக் கொண்டேன் என்று அவன் எண்ணினான். அது எவ்வண்ணம் என கூடவே வியந்தான். மீண்டும் முகர்ந்தபோது அது மனோரஞ்சிதமா என ஐயம் எழுந்தது. எண்ணிய மணத்தை தான்காட்டும் மலர் என்றால் அது யக்ஷரோ கந்தர்வரோ சூடிய மலரா?

சருகுகளில் காலடிகள் ஒலிக்க அவன் உள்ளே சென்றபோது சோலை நடுவே காலை ஒளியை உறிஞ்சிக்கிடந்த சுனைநீரின் அலைவை கண்டான். தாழ்ந்திருந்த மரக்கிளைகளின் அடியில் நீரின் ஒளியலைகள் நெளிந்தன. பின்னர் அவன் தன் இரு ஆட்டுக்குட்டிகளை நீரருந்த காட்டி நின்றிருந்த கரிய கான்மகளை பார்த்தான். ஒரு கணம் உள்ளம் பதறி சொல்லழிந்து முடிவிலியில் பறந்து மீண்டும் திடுக்கிட்டு விழித்து உடல்பொருந்தி எண்ணமென்றாயிற்று. அது

உருவெளித்தோற்றம் அல்ல, உளமயக்கும் அல்ல. அணங்கோ என ஐயம் எழுந்து மயிர்சிலிர்த்தான். கால்களை நோக்கி இல்லை எனத் தெளிந்த பின்னரும் நெஞ்சம் துடித்துக்கொண்டிருந்தது.

அவளை அவன் முன்னர் கனவில் கண்டிருந்தான் என்றும் அவன் உடல்கொண்ட மெய்ப்பும் உளம்கொண்ட கொப்பளிப்பும் அதனால்தான் என்றும் பின்னரே சித்தம் உணர்ந்தது. உடன்பிறந்த நால்வருடன் அவன் இருந்த அக்குடிலில் இருந்தவள். அவன் வந்த காலடியோசை கேட்டு முகம் தூக்கி நீண்ட விழிகளால் அவள் நோக்கினாள். முற்றிலும் அச்சமற்ற பார்வை. மடமோ நாணமோ பயிர்ப்போ அறியாது நிமிர்ந்த உடல்.

ஆடுகளும் கீழ்த்தாடையின் தொங்குதாடியில் நீர் சொட்டிவழிய தலைதூக்கி காதுகளை முன்கோட்டி சுண்ணக்கூழாங்கல் என ஒளிவிட்ட கண்களால் அவனை கூர்ந்து நோக்கின. அவற்றின் குறிய வால்கள் துடித்தன. கன்னங்கரிய ஆடு மெல்ல கனைக்க வெண்ணிற ஆடு செருமலோசை எழுப்பியது. பின் அவன் தீங்கற்றவன் என உணர்ந்ததுபோல் மீண்டும் குனிந்து நீரில் தலையை வைத்தது. கரிய ஆடு “ஆம்” என தலையசைத்தபின் தானும் நீரை முகர்ந்தது.

எவர் என்பதுபோல் அவள் புருவங்கள் மெல்ல சுழித்து நெற்றி மடிப்புகொண்டது. வாழைப்பூநிற உதடுகள் மெல்ல விரிந்து உப்புப்பரல் என பல்நிரை தெரிந்தது. அவளை முடிமுதல் அடிவரை கருவறை வீற்றிருக்கும் தேவிமுன் நின்றிருக்கும் அடியவன் என நோக்கினான். ஆயிரம் முறை விழுந்துவணங்கி எழுந்தான் என அத்தருணத்தை பின்னர் அவன் சொற்களாக்கிக்கொண்டான். அரசன் என்றும் ஆண் என்றும்

அல்லாமலாகி விழியென்றும் சித்தமென்றும் அங்கு நின்றிருந்தான்.

ஆடுகளை நோக்கி மெல்லிய சீழ்க்கை ஒலி ஒன்றை எழுப்பியபின் அவள் சேற்றில் ஊன்றிய வளைகோலை கையில் எடுத்துக்கொண்டு உலர்ந்து வெடிப்புகள் பரவி தரையோடு வேய்ந்ததுபோல் ஆகியிருந்த கரையில் அவற்றின் பொருக்குகள் உடைந்து ஒலிக்க மேலேறி வந்தாள். நாணல் வகுந்திருந்த வழியினூடாக அவள் காலடிகள் விழுந்து விழுந்து எழுவதை, அவள் அணிந்த மான்தோல் கீழாடை நெளிவதை அவன் பிற ஏதுமில்லாத வெளியில் கணம் கணமென அசைவு அசைவு என கண்டான்.

அவள் அணிந்திருந்த வெண்கல்மாலை உன்னிஎழுந்த இளமுலைகளின்மேல் நழுவிப்புரண்டது. இடையில் அணிந்திருந்த கல்மேகலை நெற்றுபொலிந்த செடிபோல மெல்ல ஒலித்தது. மான்தோலாடை தொடைவரை சுற்றி அதன் நுனியை எடுத்து முலை மறைத்து வலத்தோளில் செலுத்தி சுழற்றிக் கட்டியிருந்தாள். கைகளில் எருதின் கொம்புகீறி நுண்செதுக்குகளுடன் செய்த வளையல்கள். கால்களில் மென்மரத்தால் ஆன சிலம்பு. காதுகளில் ஆடின செம்மணிக் கல்லணிகள். மூச்சில் வியர்த்த மேலுதடுகளுக்கு மேல் புல்லாக்கின் நிழல் அசைந்தது.

அவன் அருகே வந்து "யார்?" என்று அவள் கேட்டபோது திடுக்கிட்டு விழித்துக்கொண்டு நீள்மூச்சுடன் "என் பெயர்..." என்றான். ஒரு கணம் தன் பெயரே தன் நினைவிலெழாத விந்தையை உணர்ந்து தடுமாறி இடறிய குரலில் "நான் அரசன்" என்றான். மீண்டும் சொல்சேர்த்து "நகரத்தவன்" என்றான். அவள் இதழ்கள் விரிய, கொழுவிய கன்னங்களில் மெல்லிய மடிப்புகள்

எழ, பற்கள் ஒளியுடன் விரிய புன்னகை செய்து “பெயரில்லாத அரசனா?” என்று கேட்டாள். “ஆம்” என்று சொல்லி உடனே “இல்லை” என்று பதறி பெருமூச்சுவிட்டான். அவள் சிறிய ஒலி எழ சிறுமியைப்போல் வாய்பொத்தி தோள்குறுக்கி சிரித்தாள்.

அவன் தத்தளித்து மூச்சுத்திணறி தன் பெயரை கண்டடைந்தான். “என் பெயர் புரூரவஸ்” என்றான். உடனே சொல்பெருக “புதனுக்கு இளையில் பிறந்த மைந்தன். இங்கு காட்டு அரசனான ஹிரண்யபாகுவின் மைந்தனாகப் பிறந்தேன். உத்தரகுரு நாட்டை ஆள்கிறேன்” என்றான். அவள் விழிகளில் நகைப்பு மின்ன “தன் பெயரை இத்தனை எண்ணிச்சூழ்ந்து உரைக்கும் ஒருவரை முதல்முறையாக பார்க்கிறேன்” என்றாள். “நான் என்னை ஒரு கணம் பிறிதொருவனாக உணர்ந்தேன். பிறிதேதோ பெயர் என் நாவில் எழுந்தது” என்றான்.

புருவம் சுருங்க அவள் “யார்?” என்றாள். “என் கனவில் எழுந்த ஒருவன்... இன்னும் வாழ்ந்திராதவன்” என்றான். “விந்தைதான்” என்று அவள் சொன்னாள். “முதற்கணம் உங்களைப் பார்த்தபோது முன்பு எப்போதோ கனவில் கண்ட ஒருவர் என்றுதான் நானும் எண்ணினேன். அம்மயக்கத்தை இந்தச் சுனைச்சரிவில் ஏறி வருகையில் ஒவ்வொரு காலடியாலும் கலைத்து இங்கு வந்தேன்” என்றாள். அவன் அவள் விழிகளை நோக்கி “உன் பெயர் என்ன, கன்னியே?” என்று கேட்டான். “சியாமை” என்று அவள் சொன்னாள். “நான் இங்கு காட்டை ஆளும் அரசனாகிய கருடபக்ஷனின் மகள்.”

“உன்னை முன்னர் இங்கு பார்த்ததே இல்லை. இந்த அடர்காட்டில் என்ன செய்கிறாய்?” என்றான். அவள் “இவை நான் வளர்க்கும் ஆடுகள். இவற்றுடன் இக்காட்டில் உலவுவதே என் விளையாட்டு” என்றாள். “இவற்றை கால்போனபோக்கில்

விட்டு நான் தொடர்ந்து செல்வேன். அவற்றை என் உள்ளம் என்பார்கள் என் தோழிகள்.” இரு ஆடுகளும் சற்று அப்பால் சென்று உதிர்ந்த மலர்களையும் பழுத்த இலைகளையும் பொறுக்கித் தின்னத் தொடங்கிவிட்டிருந்தன.

அவன் திரும்பி இரு ஆடுகளையும் பார்த்தான். “இனியவை” என்றான். “கரியது ஸ்ருதன். வெண்ணிறமானது ஸ்மிருதன். இவை இரண்டும் எப்போதும் என்னுடன் இருக்கும். இரவில் என் படுக்கையின் இரு பக்கமும் இவற்றை கட்டி இருப்பேன். விழித்துக்கொண்டதும் முதலில் இவற்றையே பார்ப்பேன். பகல் முழுக்க இவற்றுடனேயே இருப்பேன்” என்றாள். “இரவில் விழித்துக்கொண்டு இவற்றின் கண்கள் ஒளிவிடுவதைக் காணும்போது நான்கு விண்மீன்கள் எனக்கு காவலிருப்பது போலிருக்கும்.”

இருவரும் தங்கள் சொற்களை கைமாறிக்கொண்டனர். விழிகளால் ஒருவரை ஒருவர் தொட்டுக்கொண்டே இருந்தனர். சியாமை புரூரவஸின் தோற்றத்தை அன்றி பிறிதெதையும் அறியவில்லை. அவளிலிருந்து பேருருவம் கொண்டு எழுந்த ஒருத்தி அப்பொன்னிற உடலை ஒவ்வொரு தசையாக நரம்பாக அசைவாக மெய்ப்பாக நோக்கிக்கொண்டிருந்தாள். அப்பெண்ணின் உள்ளங்கையில் அமர்ந்து பிறிதொருத்தி எளிய சொற்களால் சூதுகளம் ஒன்றமைத்து அவனை ஈர்த்தும் அணுகுகையில் விலக்கியும் விலகியபின் மீண்டும் நெருங்கியும் ஆடினாள்.

புரூரவஸ் அவள் விழிகளையன்றி பிறிதெதையும் அறியவில்லை. முலைச்சுவை மறவா சிறுகுழந்தையொன்று அவனுள் இருந்து எழுந்து அவள் மடியில் படுத்து மலர்மென்மை கொண்ட கால்களை நெளித்து, சிறுகட்டை

விரல் சுழித்து, காற்றை அள்ளிப்பற்றியது போன்று சிறுகை குவித்து விளையாடியது. பாலாடை படிந்து பார்வை மறைந்த பைதல் பருவமென்பதால் அவள் விழிகளும் இதழ்களின் மணமுமன்றி ஏதும் அவனை சென்றடையவில்லை. அவள் சுவையை எண்ணி இதழூறி வழிய சொல்லிலா குதலைமொழிகளுடன் அவன் அவள் அருகே இருந்தான். அப்போது அவன் அந்த மலர்மணத்தை அறிந்தான். அதுவரை அறியாததாக இருந்தது அது. பிறிதொன்றிலாது வந்து சூழ்ந்துகொண்டது.

# மாமலர் - 18

### 18. மலர்ப்பகடை

மலர்மரத்தின் அடிபோல உளம்கலந்திருக்க இடம் பிறிதொன்றில்லை. சூழும் மணம் எண்ணங்களை பறக்கச்செய்கிறது. அங்கிலாதாக்கி ஆட்கொள்கிறது. அவ்வப்போது உதிரும் இலைகளும் மலர்களும் தொட்டு திடுக்கிடச்செய்கையில் எழுந்துவரும் இவ்வுலகு மேலும் இனிதென்றாகிறது. சொற்களால் ஒருவரிடம் ஒருவர் தங்களை ஓவியமென தீட்டிக்கொண்டனர். துளிதொட்டு துளிதொட்டு ஆக்கிய அந்த ஓவியம் ஆயிரம் ஓவியங்கள் அழித்தழித்து எழுந்த திரைமேல் அமைந்தது.

தங்கள் விருப்ப வடிவை தீட்ட எண்ணி தீட்டிமுடித்து நோக்கி அதைக் கண்டு வியந்து அகன்று அதை பிறர் நம்புகிறாரா என எண்ணி ஐயுற்றனர். அதை வெல்லும்பொருட்டு மெல்லிய துயரை அதில் பூசி கூர்படுத்திக்கொண்டனர். இனிய தருணத்தின் துயர் மேலும் இனிதென்று உணர்ந்து அதை

தொட்டுத்தொட்டு பெருக்கினர். ஒருவர் துயரை பிறிதொருவர் ஆற்றினர். சொற்கள் சொற்களென பெருகி பின் பெருமழை துளியென்றாவதுபோல் ஓய்ந்து பொருளற்ற ஒற்றைச் சொற்களும் விழிக்கசிவுமென எஞ்சினர்.

உணர்வுகளை தட்டிஎழுப்பி விசைகொள்ளச் செய்வது எளிது. அவை கொள்ளும் திசைமீறல்களை கட்டுப்படுத்துதல் அரிது. ஆடற்களமொன்றில் வழிகுழைந்து திசைமயங்கி தடுமாறி மீண்டும் மீண்டும் ஒரே இடத்தையே வந்தடைந்தனர். பெண் பெருகியதும் ஆண் குறுகியதும் முழுமை அடைந்தபோது இருவர் பரபரப்பும் அடங்கியது. பின் சொற்கள் எழவில்லை, நீள்மூச்சுகளும் சிறுபுன்னகைகளும் மென்தொடுகைகளுமே எஞ்சின.

இனிமை முழுத்தபோது இருவருமே தனிமையை விரும்பினர், மேலுமொரு சொல் அவ்வினிய குமிழியை உடைத்துவிடும் என அஞ்சியவர்கள்போல. அவ்வெண்ணத்தால் அச்சம்கொண்டு ஒருவரை ஒருவர் உள்ளத்தால் விலக்கினர். ஒருவர் சொல்லும் சொல்லை மற்றவர் செவிகொடுக்காமல் வெற்றுப்புன்னகையும் தலையசைப்பும் அளித்தனர். இனிமை அது இழக்கப்படும் எனும் துயரை தவிர்க்கமுடியாமல் தான் கொண்டுள்ளது. அத்துயரால்தான் அது மேலும் இனிதாகிறது.

புரூரவஸ் நீண்டமூச்சுடன் மீண்டுவந்தான். பிறிதொன்றை பேசுவதற்கு உளம் அமையவில்லை. அனைத்தையும் பொருளிழக்கச்செய்து அதுவொன்றே மெய்மை என்றது அந்த நறுமணம். மரத்தை நிமிர்ந்து நோக்கி “இந்த மலர்கள்தான்” என்றான். அவள் காதுக்குள் என ஒலித்த குரலில் “என்ன?” என்றாள். “இந்த மலர்களின் மணத்தைத்தான் இச்சோலையை அணுகுகையிலேயே நான் அறிந்தேன். அங்கிருக்கையில்

பாரிஜாதம், அணுகுகையில் செண்பகம். இப்போது இதுவரை அறியாத மலரின் மணம்... ஆனால் புதியதல்ல. நான் அறிந்த ஒன்று” என்றான். அவள் “ஆம், இந்த மணம் விண்மலர் ஒன்றுக்குரியது என்கிறார்கள்” என்றாள்.

அவன் எழுந்து அந்த மரக்கிளையொன்றை தாவிப்பற்றி இழுத்து ஒரு வெண்மலரை பறித்தெடுத்தான். அவள் முகம்மலர்ந்து எழுந்து அதை கைநீட்டி வாங்கி காம்பைப்பற்றி இதழ்களைச் சுழற்றி நோக்கி “தூய வெண்மை” என்றாள். “ஆம், மாசில்லாதது” என்று அவன் சொன்னான். வெறும் சொற்களுக்கு அப்பால் ஏதேனும் சொல்ல அவர்கள் அஞ்சினர். பொருள்கொள்ளும் சொற்கள் அத்தருணத்திற்கு ஒவ்வாத எடைகொண்டிருந்தன. ஆனால் அறியாது “வண்ணங்கள் பல கோடியென பெருகிக்கிடக்கும் மலர்களின் வெளியில் வெண்ணிறம் இத்தனை பேரழகு கொள்வதெப்படி?” என்றான். அத்தருணத்திலும் வினாவென அமையும் தன் உள்ளத்தை எண்ணி மறுகணம் சலிப்புற்றான்.

அவள் “அதன் மென்மையினால்...” என்றாள். எத்தனை பெண்மைகொண்ட மறுமொழி என எண்ணியதுமே எத்தனை சரியான சொல்லாட்சி என்றும் அவன் உணர்ந்தான். நிமிர்ந்து விழியிமை சரிய, சிறு உதடுகள் சற்றே கூம்ப, மலரை நோக்கி குனிந்திருந்த அவள் முகத்தை நோக்கியபின் “ஆம், பிற எவ்வண்ணத்தைவிடவும் வெண்மையே மென்மை மென்மை என்கிறது” என்றான். என்ன சொல்கிறோம் என வியந்தபடி “வேறெந்த மலரையும் இதழ் தொட்டு வருடலாம். வெண்மலரைத் தொட விரல் தயங்குகிறது” என்றான். அவள் நிமிர்ந்துநோக்கி புன்னகை செய்தாள்.

வீண்சொல் பேசுகிறோம் என அவன் உள்ளம் தயங்கியது. ஆகவே சொன்னவற்றை மேலும் கூராக்க முனைந்தான். “தூய்மை ஒரு மலரென்றானதுபோல்” என்றான். “நான் ஒரு புன்னகை என்று இதை நினைத்துக்கொண்டேன்” என்று அவள் சொன்னாள். “ஆம்” என்று அவன் வியப்புடன் சொன்னான். அவள் சிறுமியைப்போல் மிக எளிமையாக சொல்லும் ஒரு வரிக்கு முன் கற்று அடைந்த தன் கவிதைவரிகள் ஒளியிழக்கின்றனவா? ஒவ்வொரு ஒப்புமைக்கும் ஏற்ப அம்மலர் தன்னை மாற்றி காட்டிக்கொண்டே இருப்பதுபோல் தோன்றியது. இது உண்மையிலேயே விண்ணுலக மலரா என்ன?

சொற்களினூடாக அனைத்தையும் கடந்து கீழிறங்கி வந்துவிட்டிருப்பதை உணர்ந்தான். ஓர் எண்ணம் பிறிதொன்றுடன் தொடர்புகொள்ளவே விழைகிறது. கோத்துக்கொண்டு சரடென வலையென கூரையென தரையென மாறுகிறது. எண்ணங்கள் எழுந்தாலே அவை வடிவமென்றாகிவிடுகின்றன. சொற்கள் அறுந்த மாலையின் மணிகள். விண்மீன் மின்னுகைகள்.

“திரும்பு! இதை உன் குழலில் சூட்டுகிறேன்” என்று அவன் சொன்னான். அவள் சிரித்தபடி திரும்பி அள்ளிச்சுருட்டி வளைத்துக்கட்டிய தன் கொண்டையை அவிழ்த்து விரல்களால் நீவி குழலை விரித்திட்டாள். பொழிந்து அவள் இடைக்குக்கீழ் எழுந்த இணைப்பாறைகளில் வழிந்த அக்குழலின் பொழிவில் ஒரு கீற்றெடுத்து சுட்டு விரலில் சுற்றிக் கண்ணியாக்கி அதில் அம்மலரை அவன் வைத்து இழுத்து இறுக்கினான்.

வெண்மலர் அவள் கூந்தலிலேயே மலர்ந்ததுபோல் தோன்றியது. அக்கருமை கூர்ந்து ஒளிமுனை சூடியதுபோல.

“வேல்முனை ஒளிபோல” என்றான். அவள் திரும்பி நகைத்து “அவையில் பாணர்களின் பாடல் மிகுதியாக கேட்கிறீர்கள் போலும்” என்றாள். அவன் அவ்விழிகளில் இருந்த ஒன்றால் மிகச்சற்றே சீண்டப்பட்டான். உண்மையில் அதை அப்போது அவன் உணரவுமில்லை. “அது அரசனின் தொழில்” என்றான்.

“ரீங்கரித்து சுழன்று சுழன்று குளவி தன் புழுவையும் குளவியாக்குகிறது என்பார்கள். சூதர்கள் பாடிப்பாடி வேடர்களை அரசர்களாக்குகிறார்கள் என்று என் தந்தை சொன்னார்” என்றாள். அவன் சற்றே சினம்கொண்டு “அனைத்து வேடர்களும் அரசர்கள் ஆகிவிடுவதில்லை” என்றான். “ஆம், ஆனால் அரசர்கள் அனைவரும் வேடர்களாக இருந்தவர்களே” என்றாள் சியாமை.

அவன் முகம் சிவந்து “எந்தை என்னை காட்டில் கண்டெடுத்தார். நான் விண்ணுலாவியான ஒளிக்கோள் புதனுக்கும் வைவஸ்வத மனுவின் மகள் இளைக்கும் பிறந்த மைந்தன் என்று நிமித்திகர் கூறினர். நான் வேடர் குலத்தவனல்ல” என்றான். “காடுவென்று நாடாக்கி முடிசூடும் குடியினர் குலம்சேர்த்து பொது அரசன் என முடிசூடும் மைந்தனை காட்டில் கண்டெடுத்ததாக சொல்லும் வழக்கம் இங்குண்டு. அவன் தேவர்களுக்குப் பிறந்தவன் என்று கதைகள் உருவாகி வரும். ஏனெனில் தங்களில் ஒருவனை தலைவனென்று ஏற்பது வேடர்களுக்கு எளிதல்ல. தெய்வங்கள் அருளிய மானுடன் அவர்களுக்குத் தேவை. நீங்கள் சந்திரகுலத்தோன் என்பது உங்கள் குலவழியை வேடர்களிடமிருந்து விலக்கும்” என்றாள்.

கண்கள் நீர்கொள்ள அவன் உரக்க “மலைமகள் நீ. அரசு அமைதலும் வளர்தலும் உனக்கென்ன தெரியும்?” என்றான்.

“நதிகள் ஊறும் மலைமேல் இருப்பவள் நான். நீர்ச்சுவையை இங்கிருந்தே கூற முடியும்” என்றாள். சொல்லெடுத்து அவளை வெல்ல முடியாதென்று அறிந்தபோது அவன் மேலும் சினம்கொண்டான். “என் பிழைதான், எளிய காட்டாளத்தியிடம் சொல்லாட வந்திருக்கலாகாது” என்றான்.

அவன் சினம் அவளை மேலும் நகைசூட வைத்தது. “ஏன், முதல்நோக்கில் காட்டாளத்தி என உணரவில்லையா அரசர்?” என்று சிரித்தபடி கேட்டாள். “காட்டாளத்தியிடம் அரசர்கள் காதல் கொள்வது புதிதல்ல” என்று அவன் சொன்னான். “காட்டாளத்தியிடம் அரசர்கள் கண்டடைவது தங்கள் உள்ளூறையும் காட்டாளர்களைத்தானே?” என்றாள் அவள்.

சினம் எல்லைமீற “உனக்கென்ன வேண்டும்? இறுதிச்சொல் உரைத்து என்னை வென்று நிற்க வேண்டுமா?” என்று புரூரவஸ் கேட்டான். அவனை முழுதும் வென்றுவிட்டதை அறிந்ததும் ஒரு மாயப்பொழுதில் சிறுமியென்றாகி சிரித்தபடி “ஆமாம், இதோ வென்றுவிட்டேன். இவ்விரு விரல்களில் ஒன்றை தொடுங்கள்” என்று கொஞ்சி அவள் கைநீட்டினாள். அவன் சற்றே சினந்து “எதற்கு?” என்றான். “தொடுங்கள்!” என்றாள். சுட்டுவிரலை அவன் தொட “தோற்றுவிட்டீர்கள்! தோற்றுவிட்டீர்கள்!” என்று அவள் கைகொட்டி நகைத்தாள். “சரி, தோற்றுவிட்டேன்” என்று அவன் சொன்னான். மெல்ல முகத்தசைகள் இறுக்கமிழந்தன. “தோற்றவர் எனக்கு தண்டமிடவேண்டும்” என்றாள். “என்ன?” என்றான். “தண்டம், தண்டம்” என்றாள்.

அச்சிரிப்பினூடாக அவன் சினத்தை கடந்தான். “இதோ” என்று இரு செவிகளையும் பற்றி அவள் முன் மும்முறை தண்டனிட்டான். அவள் அவன் தலைமேல் கைவைத்து

“போதும் அடிமையே... உன்மேல் கனிவுகொண்டோம்” என்றாள். “தேவி, உன் காலடிகளை சென்னிசூடுகிறேன். என்றும் உடனிருக்கவேண்டும்” என்று அவன் சொன்னான். “அருளினோம், அடியவனே” என அவள் நகைத்தாள்.

அந்தச் சினம் தலைமுட்டும் ஆடுகள் பின்விலகுவதுபோல விசைகூட்ட உதவியது. ஏன் அச்சினம் எழுந்தது என்று எண்ணியபோது அவளை எளிய பேதை என்று எண்ணிய ஆணவத்தில் அடிபட்டதனால் என்று உணர்ந்தான். ஆனால் பின்னர் இணைந்தபோது அவள் எளியவள் அல்ல என்பது அவனை எழுச்சிகொள்ளச் செய்தது. ஊடியும் முயங்கியும் வென்றும் அடங்கியும் சொல்லாடியும் சொல்மறந்தும் அவர்கள் காதல் கொண்டாடினர். அந்த மலர்மரத்தினடியில் அவளை அவன் மணம் கொண்டான். பொன்னிற நாணல்சரடொன்றை எடுத்து மும்முறை சுழற்றி விரலாழியாக்கி அவள் கையிலணிவித்தான். “இன்று முதல் நீ என் அரசி” என்றான். விழிகனிந்து “என்றும் உங்கள் இடம் அமைவேன்” என்று அவள் சொன்னாள்.

சருகுமெத்தைமேல் அவர்கள் உடல் ஒன்றாயினர். அவள் வியர்வையில் எழுந்தது அந்த மலர்மணம். இதழ் இணைந்தபோது மூச்சில் மணத்ததும் அதுவே. உடல் உருகியபோது மதமென எரிமணம் கொண்டிருந்ததும் அந்த மலர்நினைவே. எழுந்து விலகி வான்நோக்கிப் படுத்து மெல்ல உருவாகி வந்த புறவுலகை உள்ளிருந்து எடுத்த ஒற்றைச் சொற்களை எறிந்து எறிந்து அடையாளம் கொண்டபடி கிடந்தபோது அவன் “நீயிலாது நான் அரண்மனை மீளப்போவதில்லை” என்றான். அவள் அச்சொற்களை கேட்காமல் எங்கோ இருந்தாள். திரும்பி அவள் உடல்மேல்

கையிட்டு வளைத்து “என் அரசியென நீ உடன்வரவேண்டும்” என்றான்.

திடுக்கிட்டு அவனை எவர் என்பதுபோல நோக்கி “என்ன?” என்றாள். “உன்னை உடனழைத்துச் செல்லவிருக்கிறேன்” என்றான். அவள் அவன் கையை மெல்ல எடுத்து விலக்கிவிட்டு “இல்லை, இக்காடுவிட்டு நான் எங்கும் வருவதாக இல்லை” என்று மறுத்தாள். “ஏன்?” என்று அவன் கேட்டான். “இந்தக் காடு என் உள்ளம். இதை நான் என் ஆடுகளுடன் சூழ்ந்தறிந்துள்ளேன். இதைவிட்டு வந்தால் பொருளற்றவளாக ஆவேன்” என்றாள்.

துயர்சீற்றத்துடன் “உனைப்பிரிந்து ஒருநாளும் இனி வாழமுடியாது. எங்கிருந்தாலும் உன்னுடன்தான்” என்றான் அரசன். “உங்கள் நகரில் நான் வாழ காடு இல்லை” என்று அவள் சொன்னாள். “இக்காட்டிலும் எனது நகரத்தை நான் கொண்டுவந்து விடமுடியும்” என்று அவன் மறுமொழி சொன்னான். அவள் கை பற்றி நெஞ்சோடணைத்து “பிரிவெனும் துயரை எனக்கு அளிக்கவேண்டாம்” என்றான்.

அவன் கண்களில் நீரைக் கண்டு அவள் மனம் குழைந்தாள். அவன் அவளிடம் “நீ என் தேவியென அன்னையென தெய்வமென உடனிருக்கவேண்டும்” என்றான். “உங்களுடன் நான் வருவதென்றால் மூன்று உறுதிகளை நீங்கள் எனக்கு அளிக்கவேண்டும்” என்றாள். “எந்த உறுதியையும் அளிக்கிறேன்” என்று அவன் சொன்னான். “என் இடமும் வலமும் அமைந்து இவ்விரு ஆடுகளும் எப்போதும் அரண்மனைக்குள் இருக்கும். அவற்றை முற்றிலும் காப்பது உங்கள் கடன்” என்றாள். “ஆம், என் உயிரை முன்வைத்து காப்பேன்” என்று அவன் சொல்லளித்தான்.

“நான் வேள்விமிச்சமான நெய்யன்றி பிற உணவை உண்பதில்லை. அதை உண்ணும்படி சொல்லலாகாது” என்றாள். விந்தையுணர்வுடன் அவன் “நன்று, அதுவும் ஆணையே” என்றான். அவள் அணங்கோ என ஓர் எண்ணம் உள்ளில் எழுந்தது. அணங்குகள் வேள்விநெய் அருந்துமா என எண்ணி அதை கடந்தான். ஆனால் அவ்வச்சம் அவளை மேலும் அழகாக்குவதை உடனே உணர்ந்தான்.

அவள் அவன் கைகளை பற்றிக்கொண்டு சில கணங்கள் தன்னைத் தொகுத்து பின் விழிதாழ்த்தி “ஒருபோதும் ஒளியில் என் முன் உங்கள் வெற்றுடலுடன் தோன்றலாகாது” என்றாள். திகைத்து “ஏன்?” என்று அவன் கேட்டான். அவள் “தோன்றலாகாது, அவ்வளவுதான்” என்றாள். “சொல், ஏன்?” என்றான் அவன் சற்றே எரிச்சலுடன்.

“அவ்வாறுதான்... பிறிதொன்றும் சொல்வதற்கில்லை” என்றாள். “நன்று! வெற்றுடலுடன் ஒளியில் உன்முன் தோன்றமாட்டேன்” என்றான் புரூரவஸ். “இம்மலரின் நறுமணத்தை எண்ணி ஆணையிடுங்கள்” என்றாள். “அவ்வாறே ஆணையிடுகிறேன்” என்று அவன் சொன்னான்.

தன் குலத்திடமும் தந்தையிடமும் சொல்லளித்து மீள்வதாக சொல்லிச்சென்று அவள் அன்று மாலையே மீண்டுவந்தாள். இரு ஆடுகள் இரு பக்கமும் வர அவன் கைபற்றி காட்டிலிருந்து வெளியேறி வந்தாள். காட்டின் எல்லையில் அமைந்த முக்குடைமலை ஒன்றை கடக்கையில் குனிந்து கூழாங்கல் ஒன்றை பெண்செல்வமென எடுத்துக்கொண்டாள். அவன் அரண்மனைக்குள் வலக்கால் எடுத்துவைத்து நுழைந்தபோது தன் இரு விழிகளில் ஒற்றி அவனுக்களித்தாள்.

சியாமையுடன் ஏழு ஆண்டுகாலம் பித்தெடுத்த பெருங்காதலில் திளைத்து வாழ்ந்தான் புரூரவஸ். அவ்வேழு ஆண்டுகளும் அவன் ஆண்ட குருநகரமே அவளுடைய அணியறையும் அரசமன்றும் மட்டுமே எனத் திகழ்ந்தது என்றனர் குலப்பாடகர். நகரில் எங்கும் அவளைப்பற்றியே அனைவரும் பேசினர். பாலைநிலமெங்கும் காற்று பதிந்திருப்பதுபோல நகரின் அனைத்துப்பொருட்களிலும் அவளே இருந்தாள் என்றனர் அரசவைக்கவிஞர்.

வேடன் மகளை மைந்தன் மணம்கொண்டு வரும் செய்தியை அறிந்தபோது ஹிரண்யபாகு திகைத்து பின் கடும்சினம் கொண்டார். அவன் செங்கோலை வலுவாக்கும் தென்னகத்து சூரியகுலத்து அரசன் ஒருவனின் மகளை அவர் மணம்பேசிக்கொண்டிருந்த காலம் அது. அவன் முன்னரே மணம்கொண்டிருந்தவர்கள் புகழ்பெற்ற தொல்குடிகளில் பிறந்தவர்கள். “அவனை அங்கேயே நிற்கச் சொல்லுங்கள்! நகர் நுழையவேண்டியதில்லை. அவளை அவன் மணம்புரிந்து நகர் நுழைக்க நான் ஒப்பவில்லை. விழைந்தான் என்றால் அவளை விருப்பக்கிழத்தியென கொள்ளட்டும். அப்பால் ஆற்றுமுகத்தில் மாளிகை அமைத்து அங்கே அவளுடன் வாழட்டும்” என்றார்.

அன்னை “காட்டுப்பெண் மாயமறிந்தவள் என்பார்கள். என் மைந்தன் உள்ளத்தை அவள் எப்படி கவர்ந்தாள் என்றறியேன்” என கலுழ்ந்தாள். “அவள் கானணங்கு. கொலைவிடாய் கொண்ட வாயள். என் மைந்தன் குருதிகுடித்தபின் கான்மீள்வாள்” என்றாள். “வீண்சொல் பேசாதே. கானகமகளிரை அரசர் மணப்பதொன்றும் புதியதல்ல” என்றார் ஹிரண்யபாகு.

தந்தையின் செய்தி அறிந்ததும் புரூரவஸ் உறுதியான குரலில் “நான் பெண்ணெனக் கொள்பவள் இவள் ஒருத்தியே. எனக்கு தந்தையின் முறையென வருவது அரசு. அவர் அளிக்கவில்லை என்றால் என் துணையுடன் மீண்டும் காட்டுக்கே செல்கிறேன். நகரில் இவளின்றி ஒருநாளும் அமையமாட்டேன்” என்றான். அவனுடைய உறுதியைச் சொன்ன அமைச்சர்கள் “மறுசொல் எண்ணாமல் ஆனால் உணர்வெழுச்சியும் இல்லாமல் சொல்லும் சொற்கள் பாறைகள் போன்றவை அரசே, அவற்றுடன் பேசுவதில் பொருளில்லை” என்றனர்.

பன்னிருநாட்கள் அவன் நகர்எல்லைக்கு அப்பால் காத்திருந்தான். பின்னர் “நான் என் துணைவியுடன் கானேகினேன் என எந்தையிடம் சொல்லுங்கள்” என்றபின் திரும்பிச்சென்றான். ருத்ரன் நகருக்குள் சென்று ஹிரண்யபாகுவிடம் “அவரை அச்சுறுத்தியோ விருப்புஎழுப்பியோ உளம்தளர்த்தியோ அவளிடமிருந்து அகற்றமுடியாது, அரசே. தணிவதன்றி வேறுவழியில்லை உங்களுக்கு” என்றான். “அவளிடம் அப்படி எதை கண்டான்?” என்றாள் அன்னை. “அதை அவளைக் கண்டதும் நீங்கள் உணர்வீர்கள்” என்றான் ருத்ரன்.

சினத்துடன் “அவன் அரசன்” என்றார் ஹிரண்யபாகு. “அரசே, அவள் புவிக்கெல்லாம் அரசி போலிருக்கிறாள்” என்றான் ருத்ரன். “அவள் எப்படி இந்நகரில் வாழ்வாள்?” என்றாள் அன்னை. “அவள் விண்நகர் அமராவதியும் கண்டவள்போல தெரிகிறாள், அன்னையே” என்றான் ருத்ரன். இறுதியில் அவனுக்குப் பின்னால் தூதர்களை அனுப்பி அவன் துணைவியை ஏற்பதாக தந்தையும் தாயும் ஒப்புக்கொண்டனர்.

சியாமையுடன் புரூரவஸ் நகர்நுழைந்த நாளில் நகர்மக்கள் முகப்பெருக்காகக் கூடி ஆர்ப்பரித்து காத்திருந்தனர். அவன் ஊர்ந்த தேர் உள்ளே வந்ததும் கடுங்குளிர்கொண்டு மலைச்சுனை உறைவதுபோல அவர்கள் சொல்லும் அசைவும் இழந்தனர். சித்தமழிந்து விழிகள் வெறும் மலர்களென்றாக நின்றிருந்தனர். ஒரு வாழ்த்தொலியும் எழவில்லை. அமைதியில் தேர்ச்சகட ஒலி மட்டுமே கேட்டது. நெடுநேரம் கழித்து ஒருவன் பாய்ந்து சென்று முரசை முழக்கினான். உடன் பொங்கி எழுந்தது மக்களின் பேரொலி.

அவள் புவியரசியென்றே பிறந்தவள் போலிருந்தாள். பேரரசர்களின் மணிமுடிகளுக்குமேல் கால்வைத்து நடப்பவள் போல தேரிறங்கிச் சென்று அரண்மனைப்படிகளில் ஏறினாள். அருள்புரிபவள் போல ஹிரண்யபாகுவையும் மூதரசியையும் கண்டு புன்னகைத்து முறைப்படி வணங்கினாள். அவளுடன் தேரிறங்கி வந்த ஆடுகள் சூழ்ந்திருந்த திரளையும் முரசொலிகளையும் அரண்மனைவிரிவையும் அறியாதவை போலிருந்தன. அவை மட்டுமே அறிந்த காடு ஒன்றில் அவை அசைபோட்டபடி சிலம்பிய குரலெழுப்பியபடி நடந்தன.

“இவள் முடிமன்னர் பணியும் பேரரசி. இவள் அருளால் நம் மைந்தன் பாரதவர்ஷத்தை முழுதாள்வான்” என்றார் ஹிரண்யபாகு. “ஆம், நாம் இவள் நோக்கில் எளியோர். ஆனால் இவள் வயிற்றில் அவனுக்கொரு மைந்தன் பிறந்தால் அவன் மன்றில் எழுந்து நின்றாலே போதும், குடிமுடிகள் தலைவணங்கும். கோல்கள் தாழும்” என்றாள் மூதரசி. அரண்மனையே அவளைப்பற்றி பேசிக்கொண்டிருப்பதை மூதரசி கண்டாள். பேசாது நின்ற வீரர் விழிகளிலும் அவளே ஒளிவிட்டாள் என்பதை உணர்ந்தாள்.

அரண்மனையில் அவளுடன் வாழ்வதற்கு ஓர் அணிமண்டபத்தை புரூரவஸ் அமைத்தான். அதில் அழகிய மங்கையர் மட்டுமே பணிபுரியும்படி வகுத்தான். கவிதையும் இசையும் நடனமும் மதுவும் இன்னுணவும் காதலின் களி சிறகோய்ந்து மண்ணுக்கு வந்த தருணங்களில் வந்து இணைந்துகொண்டு அவனை மீண்டும் எழச்செய்தன. மண்ணில் கால்தொடுவதே உந்தி விண்ணுக்கு எழுவதற்காகத்தான் என அவன் எண்ணினான்.

அவனை பிறர் நோக்குவதும் அரிதாயிற்று. கதிரையும் நிலவையும் காற்றையும் பனியையும் மழைச்சாரலையும் அவன் அக்காதலின் பகுதியென்று மட்டுமே அறிந்தான்.வானும் மண்ணும் அக்காதலின் களங்கள் என்று மட்டுமே பொருள்சூடின. அவள் அனைத்துமாகி அவனைச் சூழ்ந்திருந்தாள். களித்தோழியாகி சிரித்தாடினாள். குழவியென்றாகி அவன் உளம் குழையச்செய்தாள். அன்னையென்று ஆகி மடியிலிட்டாள்.

காதலில் பெண்ணின் அத்தனை தோற்றங்களும் காதலென்றேயாகி வெளிப்படுகின்றன. சழக்குச்சிறுமகள் என, வஞ்சமகளென, சினக்கொற்றவை என எழுந்து அவனை காய்ந்தாள். அவன் சிறுத்துச் சுருங்க அணைத்து மீண்டெழச்செய்தாள். விலகுதல்போல அணுகுவதற்கு உகந்த வழி பிறிதில்லை. விலகியணுகும் ஆடல்போல காமத்துளியை கடலாக்கும் வழியும் ஒன்றில்லை.

எத்தனை அழகிய சிறுமைகள். அறுந்துதிர்ந்த சிறுமணி ஒன்றுக்கென பெரும்பேழைகள் நிறைய அணிகள் கொண்டவள் நாளெல்லாம் ஏங்கினாள். அதை மீட்டுக்கொடுக்காதவன் என அரசனை குற்றம்சாட்டி ஊடினாள். தோழியொருத்தி சூடிய

பொன்னிழையாடை கண்டு முகம் சிவந்தாள். பாணினிக்குக் கொடுத்த சிறுபொருளை மும்முறை எண்ணி கணக்கிட்டாள். மூதன்னை சொன்ன சொல் ஒவ்வொன்றையும் நினைவுகூர்ந்து சொல்லாப்பொருள் கொண்டாள். அவள் நோக்கிலும் நடையிலும் குறைகண்டாள்.

எத்தனை அழகிய மலர்தல்கள்! தெருவில் கண்ட கீழ்மகள் ஒருத்தியின் இடையிலமைந்த கரிய குழந்தையை முகம் மலர்ந்து அள்ளி எடுத்து முலைகள்மேல் சூடிக்கொண்டாள். அதன் மூக்கை தன் பட்டாடையால் துடைத்தாள். அணிந்த அருமணிமாலையைக் கழற்றி அதற்கு அணிவித்தாள். திருடி பிடிபட்டு கழியில் கட்டுப்பட்டிருந்தவனை அக்கணமே சென்று விடுவித்தாள். அவன் சவுக்கடிப்புண்ணுக்கு தானே மருந்திட்டாள். அரியணை அமர்ந்து கொடையளிக்கையில் கைகள் மேலும் மேலும் விரியப்பெற்றாள்.

தாயக்கட்டையென புரண்டுகொண்டே இருந்தாள். காவிய அணிகளுக்கு காட்டுப்பெண்ணென நின்று பொருள்வினவி நகைக்கச் செய்தாள். அதன் மையமென எழுந்த மெய்மையை பிறர் உன்னும் முன்னரே சென்றடைந்தாள். நாளெல்லாம் அணி புனைந்தாள். ஒரு சிறுகுறை நிகழுமெனில் உளம் குலைந்தாள். அணியின்றி மலர்ச்சோலையில் சென்று தனித்திருந்தாள். யாரிவள் என்று ஒவ்வொரு முறையும் எண்ணி குலையச்செய்தாள். எண்ணிய ஒவ்வொன்றையும் தானே அழித்து பிறிதொருத்தி என எழுந்தாள்.

பிறிதொன்றிலாத காமமே காமம் என்று அவன் உணர்ந்தான். காமத்திலாடுதல் பெண்களை பேரழகு கொள்ளச்செய்கிறது. பெண்ணழகு காமத்தை மீண்டும் பெருக்குகிறது. புரூரவஸ் ஏழு பிறவிக்கும் இயன்ற இல்லின்பத்தை அவ்வேழு ஆண்டுகளில்

அடைந்தான் என்றனர் கவிஞர். அவள் அவனுடைய ஏழு மைந்தரை பெற்றெடுத்தாள். ஆயுஸ், ஸ்ருதாயுஸ், சத்யாயுஸ், ரயன், விஜயன், ஜயன் என்னும் மைந்தர் அவன் அரசுக்கு உரியவர்களெனப் பிறந்தனர். மைந்தருக்கென நோற்று அவர்கள் அரண்மனையைத் துறந்து காடேகி வேள்விநிகழ்த்துகையில் ஈன்ற தலைமைந்தனாகிய ஜாதவேதஸ் தந்தையின் மெய்மைக்கு வழித்தோன்றல் என்று ஆனான்.

# மாமலர் - 19

## 19. மண்ணுறு அமுது

ஏழாண்டுகாலம் அமராவதி காத்திருந்தது. ஊர்வசியே அமரகணிகையரில் தலைக்கோலி என்பதனால் அவளை மையமாக்கியே அங்குள்ள ஆடல்கள் அதுவரை ஒருங்கிணைக்கப்பட்டிருந்தன. அவள் முன்னின்று ஆடியதை தொடர்ந்தாடியமையால் ஒவ்வொருவரும் அவளைப்போலவே ஆகிவிட்டிருந்தனர். அனைவரிலும் வெளிப்பட்டமையாலேயே அவள் அங்கில்லாமை மேலும் துலக்குற்றது. அவள் இடத்தில் ரம்பையோ திலோத்தமையோ நின்று நிகழ்த்தப்பட்ட ஆடல்கள் அனைத்திலும் அவள் எழுந்து வந்து மறைந்துகொண்டே இருந்தாள். ஒவ்வொரு நிகழ்வுக்குப்பின்னும் அவளைப்பற்றி பேசிக்கொண்டு கலைந்து சென்றனர் முனிவரும் தேவர்களும். அப்பேச்சை எடுக்கவேண்டாமென இந்திரனின் ஆணை எழுந்தபிறகு அவளைப்பற்றி எண்ணியபடி கலைந்து சென்றனர்.

“அவை நடனங்கள் உயிரிழந்துள்ளன, அரசே. கலை முழுமை கொள்வதில்லை. ஆனால் நிகழ்கையில் இதோ முழுமை என முகம் காட்டியாகவேண்டும். இங்கு ஆடலனைத்தும் அவள்

இன்மையையே காட்டி எழில் சிதைந்துள்ளன" என்றார் அவையில் எழுந்த தும்புரு முனிவர். "சொல்க, ஊர்வசி எப்போது மீள்வாள்?" என்றார் சௌரவ முனிவர். அவையே அவ்வினாவுடன் இந்திரனை நோக்க அவன் தத்தளித்த விழிகளுடன் நாரதரை நோக்கினான். "மானுடக் காதலின் எல்லை என்ன என்றுணர்ந்து தன் எல்லையின்மையை கண்டடையும் வரை அவள் அங்கிருப்பாள்" என்றார் நாரதர். "அதற்கு எத்தனை காலமாகும்?" என்றான் விஸ்வவசு என்னும் தேவன். "அது அவள் ஆழத்தையும் நுண்மையையும் பொறுத்தது" என்று நாரதர் மறுமொழி சொன்னார்.

அன்று அவை நீங்குகையில் இந்திரன் நாரதரிடம் தாழ்ந்த குரலில் கேட்டான் "இசை முனிவரே! மெய்மையை அறிய அவள் விழையவில்லை என்றால் என்ன செய்வது?" நாரதர் திடுக்கிட்டுத் திரும்பி நோக்கி "ஏன்?" என்றார். "அவள் தன் அறிவை ஒத்தி வைத்திருந்தால்...?" என்று மீண்டும் இந்திரன் சொன்னான். "அறிவை விழையாத எவரேனும் உளரா? அதைத் தடுக்க எவருக்காயினும் இயலுமா?" என்றார் நாரதர். இந்திரன் புன்னகைத்து "நீங்கள் காமத்தையும் காதலையும் அறிந்ததில்லை, முனிவரே" என்றபின் அகன்று சென்றான்.

அன்றே விஸ்வவசுவையும் ஏழு கந்தர்வர்களையும் அழைத்து "நீங்கள் குருநாட்டுக்கு செல்லுங்கள். புரூரவஸின் அரண்மனையில் எப்போதும் இருந்துகொண்டிருங்கள். அங்கு என்ன நிகழ்கிறதென்பதை எனக்கு அறிவியுங்கள்" என்றான். ஒரு கருவண்டென யாழிசை மீட்டியபடி விஸ்வவசு எழுந்தான். உடன் சிறுபொன்வண்டுகளென கந்தர்வர்கள் சென்றனர். அவர்கள் சியாமைக்காக புரூரவஸ் அமைத்த சந்தனமரத்தாலான தூண்கள் கொண்ட அணிமண்டபத்தில்

உத்தரங்களைத் துளையிட்டு உள்ளே புகுந்து அமைந்தனர். அங்கு இருந்தபடி நிகழ்வதனைத்தையும் நோக்கினர். சொல்லப்பட்ட ஒவ்வொன்றையும் கேட்டு உணர்ந்தனர்.

சியாமை காதலில் ஏழு மைந்தரின் அன்னையென ஆகி கனிந்துவிட்டிருந்தாள். தன் மைந்தரினூடாக கணவனை ஏழு மடங்கு பெருக்கிக்கொண்டாள். அவன் கொண்ட அறத்தூய்மை ஜாதவேதஸில் வெளிப்பட்டது. அவன் உடலழகை கொண்டிருந்தான் ஆயுஸ். அவன் கூர்மொழியென ஒலித்தான் ஸ்ருதாயுஸ். சத்யாயுஸ் அவன் நடையை தான் கொண்டிருந்தான். ரயனும் விஜயனும் அவன் சிரிப்பின் அழியா இளமையை வெளிப்படுத்தினர். ஜயன் அவளுக்கு மட்டுமே அறிந்த அவன் நோக்கொன்றை எப்போதேனும் தன் இளவிழிகளில் மின்னச் செய்தான். ஒவ்வொன்றிலும் புதியதொரு புரூரவஸை கண்டடைந்தாள். அக்கண்டடைதலினூடாக தன் கணவனை ஒவ்வொரு நாளும் புதியவனாக மீண்டும் மீண்டும் அடைந்து கொண்டிருந்தாள்.

செவிலியின் கை உதறி ஓடிய ஜயனை துரத்திப்பிடித்து இரு குட்டிக்கைகளையும் பற்றி இழுத்துச்சென்று தானே வெந்நீர் தொட்டிக்குள் ஏற்றி அமரச்செய்து சிகைக்காய் பசை இட்டு குழல் அலம்பியபின் நெஞ்சோடு சேர்த்து மரவுரியால் தலைதுவட்டிக்கொண்டிருக்கும் ஊர்வசியை விஸ்வவசு பார்த்தான். அப்பால் முற்றத்தில் ஓசையெழக்கேட்டு அவனைத் தூக்கி இடையில் வைத்தபடி “என்ன அங்கே ஓசை?” என்று கூவிக்கொண்டு அவள் வெளியே சென்றாள். மைந்தனின் எடையால் மெல்ல தள்ளாடினாள். அங்கு பூசலிட்டு ஆடிக்கொண்டிருந்த ரயனையும் விஜயனையும் தாழ்ந்த

மரக்கிளையொன்றை ஒடித்து தளிருடனும் மலருடனும் வீசியபடி துரத்தினாள்.

தேன்கூடொன்றைப் பிய்த்து மாறி மாறி வீசி விளையாடிக் கொண்டிருந்த இருவரும் துள்ளிக் குதித்து அவளுக்கு வாய் வலித்துக்காட்டிச் சிரித்தபடி ஓடி அகன்றனர். பொய்யாக அவர்களை வசைபாடியபடி மூச்சிரைக்க படியேறி வந்தாள். இடையில் இருந்த ஜயன் இரு விரல்களை வாயிலிட்டு அவள் தோளில் தலைசரித்து விழிகள் மேலெழுந்து செருக துயிலத் தொடங்கியிருந்தான். எச்சில்குழாய் அவள் ஆடைமேல் படிந்தது. மெல்ல அவனை கொண்டுசென்று சிற்றறைக்குள் வெண்ணிற விரிப்பிட்ட படுக்கையில் சாய்த்தாள்.

சேடி வந்து ஸ்ருதாயுஸும் சத்யாயுஸும் ஆசிரியர் இல்லத்திலிருந்து வந்துகொண்டிருப்பதை சொன்னாள். "எப்போது? வந்துவிட்டார்களா?" என ஆடை திருத்தாமல் அவள் எழ "தாங்கள் முறைப்படி ஆடை அணியவில்லை, அரசி" என்றாள் சேடி. 'விடு' என கையை அசைத்தபடி அவள் உடல் குலுங்க விரைந்து நடந்துசென்று படிகளிறங்கி பெருங்கூடத்திற்குள் புகுந்தாள். அரண்மனை முற்றத்தில் குளம்படிகள் ஒலிக்க இரு சிறுபுரவிகளில் வந்து இறங்கிய ஸ்ருதாயுஸும் சத்யாயுஸும் அவளை நோக்கி சிரித்தபடி ஓடிவந்து இருகைகளையும் பற்றிக்கொண்டனர்.

"இப்புரவிகளில் அங்கிருந்து நாங்களே வந்தோம்" என்று சொன்னான் ஸ்ருதாயுஸ். "நான் ஒருமுறை கூட நிலைபிறழவில்லை" என்றான் சத்யாயுஸ். இருவர் தலைகளையும் கையால் வருடி "ஆம் நான் அறிவேன்" என்றாள். "எப்படி?" என்றான் ஸ்ருதாயுஸ். "உங்கள் தந்தையும் ஒருபோதும் புரவியில் நிலை தடுமாறியதில்லை என்று

அறிந்திருக்கிறேன்” என்றாள் அவள். “இன்னும் சிலநாட்களில் நான் மலைமேலிருந்து பாய்ந்திறங்குவேன்” என்றான் ஸ்ருதாயுஸ். அவன் பேசவிடாமல் மறித்து கைவீசி “எங்கள் ஆசிரியர் பலதேவர் குதிரையில் அமர்ந்து விரைந்தபடியே தரையில் கிடக்கும் குறுவாளை எடுக்கிறார்...” என்றான் சத்யாயுஸ். “நான் எடுப்பேன்... நான் அடுத்த மாதம் எடுப்பேன்” என்று மற்றவன் இடைமறித்தான்.

அரசவைக் களத்தில் இருந்து புரூரவஸ் முதல் மைந்தன் ஆயுஸுடன் பேசியபடி நடந்துவந்தான். தந்தையின் முகத்திலிருந்த எண்ணச்சுமையையும் கையசைவுகளையும் அவன் சொற்களைக் கேட்டபடி நடந்துவந்த மைந்தனின் விழிக்கூரையும் தொலைவிலிருந்தே நோக்கிநின்றாள். அருகே வந்த புரூரவஸ் “நாளை முதல் இவனுக்கு தென்மொழிகளில் ஏதேனும் ஒன்றை கற்றுக்கொடுக்க வேண்டுமென்று எண்ணியிருக்கிறேன். உகந்த ஆசிரியர் ஒருவர் வந்திருக்கிறார்” என்றான். அவள் ஆயுஸைப் பார்த்து புன்னகைக்க அவன் இளையோர்களை நோக்கி “இவர்கள் எப்போது வந்தார்கள்?” என்றான். “புரவியில் நாங்களே வந்தோம்” என்றான் ஸ்ருதாயுஸ். “நிலைபிறழவே இல்லை... விரைந்து வந்தோம்” என்றான் சத்யாயுஸ்.

ஆயுஸ் அன்னையை நோக்கி புன்னகைத்தான். குழந்தை நகை அல்ல, முதியவனின் குழந்தை நகைப்பென தோன்றியது அவளுக்கு. இரு கை நீட்டி அவனை அள்ளி நெஞ்சோடணைக்க உளம் எழுந்தாலும் அது இனி முறையன்று என்று அறிந்தவளாக “முழுப்பொழுதும் அவையமர வேண்டுமா? இளமைந்தர் சற்று விளையாடுவதும் வேண்டாமா?” என்று அவனிடம் கேட்டாள். “முற்றிலும் கேட்காமல் எதையும் அறிய

முடியாது, அன்னையே” என்றான் ஆயுஸ். “அறிய அறிய அதைவிட்டு அகலமுடியாது. அரசனின் அவை என்பது வாழ்க்கையின் மையம் நடிக்கப்படும் நாடகமேடை.”

மறுபக்கம் உள்ளறை வாயிலில் வந்து நின்ற முதுசெவிலி “மைந்தர் உணவருந்தும் பொழுது” என்று மெல்ல சொன்னாள். “நன்று, நானே விளம்புகிறேன்” என்றபின் “வருக இளவரசே, உணவருந்திவிட்டுச் செல்லலாம்” என முறைப்படி தன் முதல் மைந்தனை அழைத்தாள். இளையவர்கள் “நாங்கள் உணவருந்தவில்லை... இப்போது உணவருந்தவே வந்தோம்” என்று கூவினர். புரூரவஸ் தன் எண்ணங்களிலாழ்ந்தவனாக மெல்ல திரும்ப “எங்கு செல்கிறீர்கள்? மைந்தருடன் அமர்ந்து இன்று உணவருந்துங்கள்” என்றாள். “எனக்காக அங்கே குடித்தலைவர் காத்திருக்கிறார்” என்று புரூரவஸ் சொல்ல, இயல்பாக விழிதிருப்பி அவள் இரு மைந்தரையும் பார்த்தாள். ரயனும் விஜயனும் பாய்ந்து சென்று புரூரவஸின் இரு கைகளையும் பற்றிக்கொண்டனர். “வாருங்கள் தந்தையே, எங்களுடன் உணவருந்துங்கள்” என்று துள்ளினர். “சரி சரி, கூச்சலிடவேண்டாம். வருகிறேன்” என்றான் புரூரவஸ்.

இரு கைகளையும் பற்றி அவனை அவர்கள் அழைத்துச் சென்றனர். புன்னகையுடன் அன்னையைப் பார்த்த ஆயுஸ் “உங்கள் தலைமைந்தன் குறைகிறான் அல்லவா?” என்றான். “ஆம். ஆனால் அவன் வேதம் பயில்கிறான். இல்லறத்தாருடன் அமர்ந்துண்ண வேதக்கல்வியின் நெறி ஒப்புவதில்லை. இங்கு நாமனைவரும் கூடியிருக்கையில் நமக்கு மேலிருந்து நம்மை வாழ்த்தும் பீடத்தில் அவன் அமர்ந்திருக்கிறான். அது எனக்குப் போதும்” என்று அவள் சொன்னாள்.

ஸ்ருதாயுஸும் சத்யாயுஸும் கைகளை பற்றிக்கொண்டு ஒருவரோடொருவர் ஊக்கத்துடனும் சொற்திணறலுடனும் கைவீச்சுகளுடன் ஏதோ பேசியபடி முன்னால் சென்றனர். உணவறைக்கூடத்தில் கால்குறுகிய நீள்பீடத்தில் அவர்களுக்காக இலைத்தாலங்கள் போடப்பட்டிருந்தன. கிழக்கு நோக்கி புரூரவஸ் அமர்ந்ததும் அவனுக்கு இருபுறமும் ரயனும் விஜயனும் அமர்ந்து கொண்டனர். ஒருவரை ஒருவர் இடைமறித்து குரல் எழுப்பியும், மீறிச்சொல்லத் துடித்து மெல்ல தோள்பிடித்து தள்ளியும், கழுத்தில் நீலநரம்புகள் புடைக்க உடல் துடிக்க பேசிக்கொண்டு வந்த ஸ்ருதாயுஸும் சத்யாயுஸும் உணவறை வாயிலிலேயே நின்று சொல்தொடர புரூரவஸ் "போதும் பேச்சு, வந்தமருங்கள்" என்று உரத்த குரலில் சொன்னான்.

அவர்கள் பாய்ந்து வந்தமர சியாமை "என்ன இது? முடி அள்ளித்திருத்துங்கள். முறைமை மறந்துவிட்டீர்களா?" என்றாள். ஆயுஸ் "அங்கு ஆசிரியர் இல்லத்தில் அனைத்துக்கும் முறை உண்டு. அதை மீறி தாங்களென்றிருக்கவே இங்கு வருகிறார்கள், அன்னையே" என்றான். சியாமை புன்னகைத்து "நீ கொடுக்குமிடம் அவர்களை வீணர்களாகிய இளவரசர்களாக ஆக்காமல் இருந்தால் போதும்" என்றாள். "அவர்கள் சந்திரகுலத்து இளவரசர்கள். ஒவ்வொருவருக்கும் தனிநாடும் குடியும் கொடிவழியும் அமையுமென்பது நிமித்திகர் கூற்று" என்றான் புரூரவஸ்.

முடியள்ளி தோல்நாரிட்டுக் கட்டியபடி ஸ்ருதாயுஸும் சத்யாயுஸும் பீடங்களில் அமர்ந்து உடனே விட்ட இடத்திலிருந்து பேச்சைத் தொடங்கினர். ஆயுஸ் கண்களில் சிரிப்புடன் சியாமையைப் பார்த்து "இனி சில நாட்களுக்கு

புரவிகளன்றி வேறேதும் அவர்கள் உள்ளத்தில் இருக்காது, அன்னையே” என்றான். புரூரவஸ் நகைத்து “ஆம், அதன் பின்னர் புரவிகள் முற்றிலுமாக சித்தத்திலிருந்து மறைந்து போகும். கால்களென்றே ஆகும். எண்ணுவதை இயற்றும். அப்போது மட்டுமே ஒருவன் புரவியேற்றம் கற்றுமுடித்தான் என்று பொருள்” என்றான்.

சேடியர் உணவுக்கலங்களுடன் வந்தனர். “இருவர் குறைகிறார்கள்” என்று இரு விரலைக்காட்டி ரயன் சொன்னான். விஜயன் “ஆம், இருவர்” என்றான். சியாமை திரும்பி சேடியிடம் “குழந்தையை எடுத்துக்கொண்டு வா” என்றாள். புரூரவஸ் “அவன் எதற்கு? துயின்றுகொண்டிருக்கும் நேரம்” என்றான். “இல்லை, அரிதாக அமையும் ஒரு நேரம். அது முழுமையடையட்டும்” என்றாள். “உனக்கு சித்தம் குழம்பிவிட்டது போலும்” என்று புரூரவஸ் சொன்னான். சியாமை புன்னகைத்தாள்.

செவிலி துயின்று கடைவாய் வழிந்த ஜயனை தோளில் தூக்கிக்கொண்டு வந்தாள். “நீயும் அமர்ந்துகொள்” என்றான் புரூரவஸ். அவனுக்கு எதிர்ப்பக்கம் முகம் நோக்கியபடி சியாமை அமர்ந்தாள். செவிலி ஜயனை அவள் மடியில் அமர்த்தினாள். உணவுக்கலங்கள் நிரந்ததும் “இன்னும் ஒருவர்” என்றான் ரயன். “அவன் இங்கில்லை. அவனுக்கு இனி பதினெட்டாண்டுகள் அன்னையும் தந்தையும் மூதாதையரும் தெய்வமும் ஆசிரியர் ஒருவரே. அனைத்தையும் அளித்தாலன்றி வேதம் ஒரு சொல்லையும் அளிப்பதில்லை” என்றான் புரூரவஸ்.

“நாங்கள் கற்பதும் வேதம்தான் என்றாரே?” என்றான் சத்யாயுஸ். “வேதங்கள் பல. நீ கற்கும் தனுர்வேதம் அதிலொன்று. அவை

எல்லாம் வேதமெனும் கதிரவனின் ஒளிகொள்ளும் ஆடிகளும் சுனைநீர்ப்பரப்புகளும் மட்டுமே” என்று புரூரவஸ் சொன்னான். “அறுவர் நீங்கள். ஆறு கலைகளுக்கும் தலைவராக அமையப்போகிறவர்கள். புவியாள்வீர்கள், படைகொண்டு வெல்வீர்கள், அறம் நாட்டுவீர்கள். அவற்றினூடாக பெரும்புகழ் கொள்வீர்கள். அவையனைத்தும் பிழையற நிகழ வேண்டுமென்றால் அங்கே அடர்காட்டில் எவர் விழியும் தொடாத ஆற்றங்கரையொன்றில் எளிய குடிலில் அவன் வேதமொன்றே சித்தம் என்று தவம் இயற்றியாக வேண்டும்.”

புரூரவஸின் முகத்தில் எழுந்த உணர்வெழுச்சியைக் கண்டு சிறுவர்கள் முகம் கூர்த்து அவனை நோக்கினர். அத்தனை விழிகளிலும் இளமையின் நகைப்பு சற்றே மறைந்ததைக் கண்டு அவள் “போதும், இது அரசுசூழ்தலுக்கான மேடையல்ல. உணவு அருந்துவதற்கானது” என்றாள். தன்னருகே இடப்பட்ட இலைத்தாலமொன்றில் ஒரு கரண்டி அன்னத்தையும் நெய்யையும் பழங்களையும் தேன்கலந்த இனிப்பையும் அள்ளி வைத்தாள். சிறுகிண்ணத்தில் நுரைத்த மதுவை ஊற்றி அருகே வைத்தாள். ரயன் “அது அவனுக்கா?” என்று கை சுட்டி கேட்டான். அப்படி கேட்கலாகாதென்று புரூரவஸ் விழியசைத்து தடுப்பதற்குள் விஜயன் “அவன் அங்கு அதையெல்லாம் உண்ணலாகாதே?” என்றான். “ஆம், ஆகவேதான் இங்கு அவை பரிமாறப்படுகின்றன” என்றபின் சியாமை “உணவருந்துங்கள்” என்று கூற செவிலியர் இன்மதுவும் உணவும் அவர்களுக்கு பரிமாறினர். பேசிச் சிரித்தபடி நடுவே சிறுபூசலிட்டுக் கூச்சலிட்டபடி அவர்கள் உண்ணலாயினர்.

விஸ்வவசுவும் தோழர்களும் குருநகரிலிருந்து கிளம்பி அமராவதியை அடைந்து இந்திரனின் அரண்மனைக்குள் புகுந்து

அவன் மஞ்சத்தறையில் சென்று சந்தித்தனர். நிகழ்ந்ததைக் கூறி “ஊர்வசி ஒருபோதும் மீளப்போவதில்லை, அரசே” என்றனர். விழிசுருக்கி எழுந்த இந்திரன் “என்ன சொல்கிறீர்கள்?” என்றான். “அன்னையென கனிந்திருக்கிறாள். மூதன்னை என முழுமைகொள்ளும் பாதையிலிருக்கிறாள். அவ்வாழ்க்கையிலிருந்து ஒருபோதும் அவள் மீளமாட்டாள்” என்றான் விஸ்வவசு.

“என்னால் புரிந்துகொள்ளக் கூடவில்லை. இங்கு அவள் முழுமையிலிருந்தாள், மெய்மையிலாடினாள், முடிவின்மையில் திளைத்தாள். அங்கிருப்பதோ துளித்துச் சொட்டும் கணமென சிறுவாழ்வு. தேவர்கள் உண்டு எஞ்சிய மிச்சில். அசுரர்களின் கால்பொடி படிந்த குப்பை. அதிலெப்படி அவள் அமைய முடியும்?” என்றான் இந்திரன். விஸ்வவசு “அதை புரிந்துகொள்ளவே இத்தனை நாள் நானும் அங்கு இருந்தேன். இங்கிலாத பேருவகை ஒன்று அங்குள்ளது, அரசே. வாழும் அக்கணம் மீளாதென்று, பிறிதொருமுறை எதுவும் அமையாதென்று ஒவ்வொரு மானுடரும் உள்ளுணர்ந்திருக்கிறார்கள். எனவே அக்கணங்களில் பொங்கி முற்றிலும் நிறைகிறார்கள்” என்றான்.

புரியாமல் நோக்கி அமர்ந்திருந்த இந்திரனின் விழிகளை நோக்கி “அதைவிட இனிது சென்றவை நினைவில் மீளும் துயரம். மானுடர் ஒவ்வொருவருக்கும் சென்றகாலம் எனும் பெருஞ்செல்வம் கருவூலம் நிறைய உள்ளது. அரசே, அறியாத ஆயிரம் பண்கள் நிறைந்த ஒரு பேரியாழ் அது. இங்கு தேவர்களுக்கு அதில்லை” என்றான் உடன் சென்ற சந்திரஹாசன் என்னும் கந்தர்வன்.

பிரபாஹாசன் என்னும் பிறிதொரு கந்தர்வன் அருகில் வந்து "அதைவிடவும் இனிது எதிர்காலம் முற்றிலும் அறியவொண்ணாதது என்பது. ஒவ்வொரு படியாக கால் வைத்தேறி முடிவிலா விண்ணுக்குச் செல்வதுபோல. கண்ணுக்குத் தெரியாத மறுதரப்புடன் காய் நீக்கி பகடையாடுவதுபோல. மானுடர் கொள்ளும் இன்பங்களில் முதன்மையானது நாளை நாளை என அவர்கள் மீட்டும் பெருங்கனவு. ஒவ்வொரு நாளும் அவர்களின் வீட்டு முற்றங்கள் வரப்போகும் விருந்தினருக்காக பதுங்கிய முயலின் தோலென விதிர்த்து நிற்கின்றன. அவர்கள் இல்லக்கதவு புன்னகைக்கும் வாயென திறந்திருக்கிறது. அவர்களின் அடுமனைகளில் அனல்நீர் காத்து அன்னம் தவமிருக்கிறது" என்றான்.

சூரியஹாசன் என்னும் கந்தர்வன் "நேற்றுக்கும் இன்றுக்கும் நடுவே கணமும் அமையாத துலாமுள்ளென அவர்கள் நின்றாடும் பேரின்பத்தைக் கண்டு நானே சற்று பொறாமை கொண்டேன், அரசே" என்றான். ஜ்வாலாக்ஷன் என்னும் கந்தர்வன் "முதன்மையாக அறிதல் என்னும் பேரின்பம் அவர்களுக்குள்ளது. முற்றறிதலுக்குப் பின் அறிதல் என்னும் செயல் நிகழ்வதில்லை. இங்கு என்றும் இருக்கும் பெருமலைகளைப்போல் மெய்மை நிறைந்துள்ளது. அதில் திகழ்வதனாலேயே இங்கு எவரும் அதை அறிவதில்லை. அங்கோ ஒரு சிறுகூழாங்கல்லென கண்முன் வந்து நிற்கிறது மெய்மையின் துளி. சிற்றெறும்பென அதைக் கண்டு திகைத்து அணுகிக்கடந்து ஏறிக்கொள்ளும் உவகை அவர்களை ஆட்டிப்படைக்கிறது" என்றான்.

“ஆம் அரசே, அறிதலுக்கு நிகரான விடுதலை ஒன்றில்லை. அறியும்பொருட்டு அமர்வதே தவம். அங்கு எவ்வகையிலேனும் ஒரு தவத்தில் அமையாத ஒருவனை நான் கண்டதில்லை. உழுபவனும், வேல்தாங்கி எழுபவனும், துலாபற்றுபவனும், கன்று பெருக்கி காட்டில் வாழ்பவனும், மைந்தரை மார்போடணைத்து உணவூட்டும் அன்னையும், தவத்தில் உளம் கனியும் கணங்களை அறிந்திருக்கிறார்கள். மானுடராகச் சென்ற எவரும் மீள்வதில்லை” என்றான் சுவர்ணஜிஹ்வன் எனும் கந்தர்வன்.

சுஃப்ரஹாசன் என்னும் கந்தர்வன் சொன்னான் “அரசே, அறிந்த அனைத்தையும் சுருக்கி ஓர் அழகுப்படிமமென்று ஆக்க அவர்களால் முடிகிறது. விண்நிறைத்துப் பறந்திருக்கும் பறவைக்குலம் அனைத்தையும் ஒற்றை இறகென ஆக்குகிறார்கள். புவி மூடியிருக்கும் பசுமைக்கடலை ஒரு தளிரில் உணர்கிறார்கள். ஒற்றைச் சொல்லில் வேதமெழுகிறது. ஒரு சொல்லணியில் காவியம் விரிகிறது. கற்பனையை மூன்றாம் விழியெனச் சூடியவன் அழிவற்ற பேரின்பத்தின் அடியில் அமர்ந்த தேவன். மானுட உருக்கொண்டு சென்ற எவனும் மீள வழியே இல்லை.”

“அரசே, படிமங்களென குறுக்கி ஒளிமணி என்றாக்கி தங்கள் கருவூலங்களில் சேர்த்த பெருஞ்செல்வத்தின் மேல் அமர்ந்திருக்கிறார்கள். தங்கள் உளச்சிற்றில்களில் அவர்கள் ஒளிச்சுடரென வைத்திருப்பது அவற்றையே. அவ்வொளியில் அனைத்தையும் கண்டு பெருக்கிக்கொண்டு அவர்கள் அமைத்துள்ள உலகு நாம் அறியாதது” என்றான் ரத்னஹாசன் என்னும் கந்தர்வன். “ஒரு மலரால், தளிரால் அவர்கள் தங்கள் மைந்தருடலை அறிகிறார்கள். தழல்நெளிவால், நீர்வளைவால் மலரையும் தளிரையும் அறிகிறார்கள். சினத்தால், நகைப்பால்

எரியையும் நீரையும் அறிகிறார்கள். அவர்கள் முடிவிலியில் திளைக்கும் முடிவிலி என உள்ளம் கொண்டமைந்தவர்கள்.”

அவர்களின் விழிகொண்ட திளைப்பிலிருந்தும் சொல்கொண்ட விசையிலிருந்துமே அவர்கள் உணர்ந்தது மெய்மையென்று இந்திரன் அறிந்துகொண்டான். “என்ன செய்வதென்று அறியேன், அக்கனி பழுத்து உதிரக் காத்திருப்பது ஒன்றே வழியென்று என்னிடம் சொன்னார் நாரதர்” என்றான். “கனி உதிரலாகும் அரசே, அவளோ அங்கு ஆணிவேர் அல்லவா?” என்றான் விஸ்வவசு. சினந்து திரும்பி “எனில் அந்த மரம் கடைபுழங்கி நிலம்பதிக! வேருடன் பிடுங்கி இங்கு கொண்டு வாருங்கள்” என்றான் இந்திரன். அவர்கள் விழிகளில் துயருடன் நிற்க “என்ன செய்வீர்கள் என்று அறியேன். அக்கனவிலிருந்து உலுக்கி எழுப்புங்கள் அவளை. விழித்து விலகினால், விழிப்புற்றால் அவள் அறிவாள் என்னவென்றும் ஏதென்றும். அவள் இங்கு மீள அது ஒன்றே வழி. செல்க!” என்றான்.

ஒவ்வொருவராக தயங்கி சொல்லெடுக்க முனைந்து பின் அதை விலக்கி விழிகளால் ஒருவருடன் ஒருவர் உரையாடி வெளியே சென்றனர். கந்தர்வர்கள் விஸ்வவசுவைச் சூழ்ந்து “என்ன சொல்கிறார்? எண்ணிச் சொல்கிறாரா? அறிந்து அவள் மீளவேண்டுமென்பதல்லவா இசை முனிவரின் ஆணை? கனியாத காயை பால் சொட்ட முறித்து வீசுவதால் என்ன பயன்? இங்கு வந்து எண்ணி எண்ணி துயருற்றிருப்பாளென்றால் அவள் அங்கு சென்றதே வீணென்றாகுமல்லவா?” என்றார்கள். “நாம் அதை எண்ணும் கடமை கொண்டவர்களல்ல. ஆணைகளை நிறைவேற்றுபவர். அதை செய்வோம்” என்றபின் விஸ்வவசு மீண்டும் புரூரவஸின் அரண்மனைக்கே மீண்டான்.

# மாமலர் - 20

## 20. விண்வாழ் நஞ்சு

குருநகரி மீண்ட விஸ்வவசு தன் பொந்துக்குள் பிற கந்தர்வர் எழுவரையும் கூட்டி அமர்ந்து சொல்சூழ்ந்தான். “நாம் இங்கு செய்வதற்கு ஏதுமில்லை. ஒருவர் முப்பொழுதும் அவளை தொடர்க! ஆறு மைந்தரை அறுவர் தொடர்க! அரசனை நான் தொடர்கிறேன்” என்றான். “நாம் அறிய வேண்டியதென்ன? ஆற்றப்போவதென்ன? அதில் தெளிவின்றி பின் தொடர்வதனால் ஏது பயன்?” என்றான் சந்திரஹாசன். “நான் ஒன்றும் அறியேன். ஆனால் ஏதோ ஒன்றை அணுக்கமாக தொடர்வோம் என்றால் முன்பு அறிந்திராத ஒன்று கண்முன் எழுந்து வருமென்பது ஓர் அரசுசூழ் மெய்மை. இன்று நம் முன்னிருப்பது இச்செயல் ஒன்றே. விழி முழுமையும் திறந்திருக்கட்டும். செவி உச்சக்கூர் கொண்டிருக்கட்டும். மூக்கு மணமனைத்தையும் பெறட்டும். எண்ணம் புலன்களில் மட்டும் குவிந்திருக்கட்டும். எங்கோ ஒன்று நிகழும் என்று காத்திருப்போம்” என்றான் விஸ்வவசு.

விஸ்வவசு இரவும் பகலும் புரூரவஸின் அருகிலேயே இருந்தான். வண்டின் இசை ஒன்று தன்னை எப்போதும் சூழ்ந்திருப்பதை ஓரிரு கணங்களில் புரூரவஸ் உணர்ந்தாலும் அவனைச் சுற்றி ஒலித்த மங்கல இசையும், வாழ்த்துரைகளும், அரசுசூழ் சொல்லாடல்களும், குலத்தலைவர் கூற்றுகளும், மன்றில் எழுந்த வழக்குகளும் அவனை ஆழ்த்தி வைத்திருந்தன. அரசனின் அரியணைக்குப்பின் இருந்த சிறுதுளையில் புகுந்து சொல்கேட்டிருந்தான் விஸ்வவசு. அவன் மஞ்சத்தில் தென்கிழக்கு மூலையில் ஒரு துளையிட்டு அங்கு இரவில் உடனிருந்தான். ஊர்வசியுடன் அவன்

காதலாடுகையில் மச்சிலிருந்து தொங்கிய மலர்க்கொத்து விளக்கில் அமைந்திருந்தான்.

நாட்கள் கடந்தனவெனினும் ஒன்றும் புலப்படாமை கண்டு அவ்வப்போது உளம் சோர்ந்தான். பிறிதொன்றும் செய்வதற்கில்லையென்று அதிலேயே தொடர்ந்தான். பெருங்காதலை அறிந்தவனின் உடலில் இருக்கும் குழந்தைக்குரிய துள்ளல் புரூரவஸிடம் இருந்தது. வெறுமனே இருக்கையில் இன்நினைவு கொண்டவன்போல் முகம் மலர்ந்திருந்தது. இதழ்களில் அவன் இறுதியாகக் கேட்ட பாடலின் இசை எழுந்தது. புதியவர்களிடம் பேசுகையில் அருஞ்செய்தி கொண்டுவருபவர்கள் அவர்கள் என அவன் எண்ணுவதுபோல் தோன்றியது. அவன் கை அலைநீரில் பாவை தெரிவதெனப் பெருகியிருந்தது என்றனர் புலவர். ஒன்று உகந்த இடத்தில் நூறு அளித்தான். போதுமென சொல்தயங்கும் பாவலர் முகம் கண்டு மேலும் கோருகிறார் என்று எண்ணி மீண்டும் அளிப்பதற்கு அள்ளினான்.

அந்நாளில் ஒருமுறை பட்டத்துயானையாகிய துங்ககீர்த்தி நோயுற்றிருக்கும் செய்தியை படைத்துறை அமைச்சர் வந்து அவையில் சொன்னார். அதன் நலம் விசாரித்தபின் மருத்துவர் குழு கூடி ஆவன செய்யட்டும் என்று ஆணையிட்டு பிற தொழிலில் மூழ்கினான் புரூரவஸ். நோயிலும் துயரிலும் அவன் உள்ளம் நிலைக்காதிருந்தது. தேன் மட்டுமே தேரும் வண்டென்று ஆகிவிட்டிருந்தது அது. அன்று அவை முடிந்து அவன் எழுந்தபோது ஆயுஸ் “தந்தையே, நாம் துங்ககீர்த்தியை பார்த்துவிட்டுச் செல்லலாமே?” என்றான். “நன்று” என்று சொல்லி செல்வோம் என்று அமைச்சரிடம் கை காட்டினான் புரூரவஸ்.

அமைச்சர்களும் இரு படைத்தலைவர்களும் ஏவலரும் தொடர அவன் யானைக்கொட்டிலை நோக்கி நடந்தான். அவனை எதிர்கொண்டு வணங்கிய சிற்றமைச்சர் கொட்டிலாளரும் யானைக்காப்பரும் அவனுக்காக காத்திருப்பதை உணர்த்தினார். தலைமை மருத்துவர்கள் மூவர் அவனருகே வந்து யானையின் நோய் குறித்தும் அளித்துள்ள மருந்துகள் குறித்தும் சுருக்கமாக சொன்னபடி உடன்நடந்தார்கள். அவர்கள் சொல்வதை அவன் செவிகூரவில்லை. துள்ளும் கன்றுகளையும் முலைபெருத்து வெண்துளி கசிய மைந்தரை நோக்கிய அன்னைப்பசுக்களையும் மட்டும் நோக்கி மகிழ்ந்தபடி அவன் நடந்தான்.

யானைக்கொட்டில் நோக்கி செல்கையில் அங்கு இரு ஆடுகள் கட்டப்பட்ட சிறு தொழுவம் வந்தது. ஆயுஸ் முகம் மலர்ந்து திரும்பி கைசுட்டி "அன்னையின் வளர்ப்பு ஆடுகள்!" என்றான். ஒருகணம் உடல் விதிர்க்க, விழிகள் மின்னிச்சென்று அவற்றைத் தொட்டு மீள, திரும்பி மருத்துவரிடம் யானையின் மருந்து குறித்தொரு ஐயம் கேட்டபடி புரூரவஸ் கடந்து சென்றான். அத்தருணத்தில் அவனில் நிகழ்ந்து மறைந்த ஒன்றை அருகே பறந்து வந்த விஸ்வவசு அறிந்துகொண்டான். ஆம், இதுவே, இதுவேயாம் என அவன் உள்ளம் துள்ளியது. "குறையொன்று இல்லாது முழுதும் மலர்ந்த உள்ளம் இல்லை மானுடர் எவருக்கும்" என தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.

மீண்டும் தன் துளைக்கு வந்து தோழரை அங்கு வரச்சொன்னான். "அந்த ஆடுகள் எவை? விளக்குக!" என்றான். முதுகந்தர்வனாகிய சூர்யஹாசன் "ஊர்வசி இங்கு வந்தபோது உடன் வந்தவை அவை. அவள் உளம்கொண்ட ஆழமே இரு ஆடுகளாக பின் தொடர்ந்தது. தேவருலகில் அவள் அறிந்தவை

அனைத்தும் ஸ்ருதன் எனும் வெண்ணிற ஆடாயின. அவள் அவற்றுள் ஊடுபுகுந்து தான் எண்ணியவை ஸ்மிருதன் என்னும் கரிய ஆடாயின. ஸ்ருதனும் ஸ்மிருதனும் மீண்டும் அவளை தேவகன்னிகையாக்கி விண்ணுக்கு அழைத்து வரும் பொறுப்பு கொண்டவை” என்றான். முகம் மலர்ந்த விஸ்வவசு “ஆம், இதுவே வழி. நன்று, நாம் ஆற்ற வேண்டியதென்ன என்பது தெளிவுற்றுவிட்டது” என்றான்.

சியாமை குருநாட்டிற்கு வந்த தொடக்க நாட்களில் பட்டத்துயானைக்கும் அரசப்புரவிக்கும் நிகரான மதிப்புடன் அந்த இரு ஆடுகளும் கொட்டிலில் பேணப்பட்டன. அவற்றை பராமரிப்பதற்கென்று ஏழு தேர்ந்த இடையர்கள் மூதிடையர் ஒருவரின் தலைமையில் அமர்த்தப்பட்டனர். தினம் அவற்றை நீராட்டி அரண்மனையின் பசுஞ்சோலைகளில் மேயவிட்டு அந்தியில் புகையிட்டு கொட்டிலில் கட்டி இரவெல்லாம் உடனிருந்து காவல் காத்தனர். ஒவ்வொரு நாளும் முதற்புலரியிலேயே எழுந்து அவற்றிடம் வந்து பிடரி தடவி, காதுகளை வருடி, இன்குரலில் முகம் தாழ்த்தி உரையாடிக்கொண்டிருப்பது அரசியின் வழக்கமாக இருந்தது. அவற்றை அரண்மனைக்குப் பின்னிருக்கும் அணிக்காட்டில் உலவவிட்டு அவளும் உடன் செல்வாள். அங்கு மேய்ந்து நிறைந்து அவை மரநிழல்களில் படுத்து அசை போடுகையில் இரண்டுக்கும் நடுவே சருகுமெத்தையில் படுத்து துயில்வாள். அவை அசைபோடும் மலர்களை தன் கனவில் மலரச்செய்வாள்.

பின்னர் அவள் வருவது குறைந்தது. வாரம் ஒருமுறை என்றாகி பின் மாதம் ஒருமுறை என்றாகியது. சிறப்பு நாட்களில் மட்டுமே என குறைந்து பின்னர் அவள் அதை

முற்றிலும் மறந்தாள். அவள் வராமலானபோது ஆடுகளை பராமரிப்பவர்கள் ஆர்வமிழந்தனர். பாராட்டப்படாத பணி வெற்றுச்சடங்கென்று ஆகிறது. சடங்கென்றாகும் பணி உளம் குவிதலற்று பொருளிழக்கிறது. மறக்கப்பட்ட ஆடுகள் தங்கள் விலங்கியல்புக்கு திரும்பின. உடலெங்கும் புழுதிபடிந்து கட்டற்று வளர்ந்த உடலுடன் அவை காட்டுக்குள் செருக்கடித்து திரிந்தன. அந்தியில் தொழு திரும்பின. தங்கள் தோற்றுவாயை முற்றிலும் மறந்தன. அவற்றைப் பராமரிப்பவர்களும் அவற்றை மறந்தனர். இரு விலங்குகள் அங்கிருப்பவை என்பதற்கு அப்பால் எதுவும் எவருக்கும் தெரியாமலாயிற்று. அவையோ முதிர்வு கொள்ளா தோற்றத்துடன் கொட்டிலில் நின்றன.

மழைமுகில் திரண்டு துளிச்சாரல் நிறைந்த காற்று சுழன்றுகொண்டிருந்த ஓர் அந்திவேளையில் விஸ்வவசு தன் தேவஉரு மீண்டு கொட்டில் நோக்கி சென்றான். உடன் பிற கந்தர்வர்களும் ஓசையின்றி தொடர்ந்தனர். அவர்களை எதிர்கொண்ட காவலர்களுக்கு அவர்களும் காவலர் வடிவு காட்டினர். சேடியருக்கு சேடியர் உருவையும் மருத்துவருக்கு மருத்துவர் உருவையும் காட்டினர். கற்பனை அற்ற விலங்குகளுக்கு மட்டும் அவர்களின் தன்னுருவே தெரிந்தது.

பன்னிரு வாயில்களைக் கடந்து கொட்டில்களுக்குள் சென்றபோது காவல்நாய் குரைக்கத்தொடங்கியது. விழித்திருந்த முதிய பிடியானையாகிய சிருங்கை மெல்ல அமறி பிற யானைகளை எச்சரித்தது. கொட்டில்களுக்குள் உடல் திருப்பி துதி நீட்டி மோப்பம் கொண்டு அவை தேவர்களை அறிந்தன. துங்ககீர்த்தி துதிதூக்கி உரக்கப் பிளிறி அறைகூவியது. அதன் ஏழு பிடி துணைகளும் உடன் சின்னம் விளித்தன. கொட்டிலெங்கும் ஓசை நிறைய அருகிருந்த வாளால் இரு

ஆடுகளின் கட்டுச் சரடுகளையும் வெட்டி நுனி பற்றி இழுத்தபடி வெளியே ஓடினான் விஸ்வவசு. அவனைத் தொடர்ந்து வாட்களைச் சுழற்றியபடி பிற கந்தர்வர்களும் விரைந்தனர்.

ஓசை கேட்டு அனைத்து திசைகளிலிருந்தும் உள்ளே வந்த காவலர்கள் ஆடுகளை இழுத்தபடி செல்லும் தேவர்களைக் கண்டு "திருடர்கள்! விடாதீர்கள்! பிடியுங்கள்!" என்று கூச்சலிட்டபடி வில்லும் வாளுமெடுத்து ஓடிவந்தனர். "அம்பு செலுத்த வேண்டாம். ஆடுகளுக்கு ஒன்றும் ஆகிவிடக்கூடாது" என்று முதலில் ஓடிவந்த காவலர் தலைவன் கூவினான். கொட்டிலுக்கு வெளியே வந்து இருளில் பாய்ந்த விஸ்வவசு தன் இரு கைகளையும் விரித்து சிறகுகளாக்கி காற்றை மிதித்து மேலேறினான்.

இரு ஆடுகளும் அலறியபடி சரடில் கழுத்து இழுபட்டுத் தொங்க கால்கள் நீண்டு காற்றிலுதற அமறியபடியும் துடித்தபடியும் அவனுடன் சென்றன. மண்ணில் அமைந்து ஏழாண்டுகாலம் அவை உண்ட உணவனைத்தும் எடையெனத் தேங்கியமையால் உயிர் வலிகொண்டு அவை அலறின. ஏழு தேவர்களும் வானில் எழுவதைக்கண்ட காவலர் தலைவன் அரண்மனைக்குள் ஓடினான். அந்தப் வேளையிலும் சியாமையுடன் காமம் ஆடிக்கொண்டிருந்த புரூரவஸின் சந்தன மண்டபத்தின் கதவை ஓங்கித் தட்டி "அரசே! அரசே!" என்று கூவினான்.

எழுந்து கதவுக்குப் பின்னால் நின்று "என்ன? சொல்?" என்று எரிச்சலுடன் புரூரவஸ் கேட்டான். "அரசியின் இரு ஆடுகளையும் கள்வர் கவர்ந்து செல்கிறார்கள்" என்றான் காவலர் தலைவன். "பிடியுங்கள் அவர்களை! பிறரை தலை

வெட்டிவிட்டு ஒருவனை மட்டும் இழுத்து வாருங்கள்” என்றான் புரூரவஸ். “அரசே, அவர்கள் மானுடர்கள் அல்ல. காற்றை மிதித்து விண்ணிலேறிச் செல்கிறார்கள். நாங்கள் அவர்களைப் பின்தொடர இயலவில்லை” என்றான் காவலன். “என் ஆடுகள்! அவை மறைந்தால் நான் இங்கு இருக்கமுடியாது” என சியாமை கூவினாள்.

தேவியுடன் உறவுகொள்கையில் வாளை உருவி தொடையருகே வைத்திருப்பது அரசன் வழக்கம். அக்கணம் மூண்டெழுந்த சினத்தில் தன் நிலை மறந்த புரூரவஸ் வாளை எடுத்தபடி ஓடிச்சென்று சாளரம் வழியாக நோக்கினான். தொலைவில் அரைமின்னலில் எட்டு தேவர்களும் ஆடுகளுடன் செல்வதைக் கண்டான். “எனது ஆடுகள்! பிடியுங்கள் அவற்றை!” என்று கூவியபடி அவனுக்குப் பின்னால் சியாமை எழுந்து வந்தாள். பெருஞ்சாளரத்தினூடாக வெளியே பாய்ந்து தன் தவ வல்லமையால் இரு கைகளையும் விரித்து காற்றில் பறந்தெழுந்தான் புரூரவஸ்.

அக்கணம் விண்ணில் எழுந்த தேவர்தலைவன் தன் ஒளிர்படையை அசைக்க மின்னலொன்று வெட்டிச் சுழன்று கொடிவீசி வான் பிளந்து நின்றதிர்ந்து மறைந்தது. அந்த ஒளியில் சியாமை புரூரவஸின் வெற்றுடலைக் கண்டாள். அலறியபடி மயங்கி கால்குழைந்து சாளரத்தைப் பற்றியபடி சரிந்து தரையில் விழுந்தாள்.

விண்ணில் விரைந்த தேவர்களை துரத்திச்சென்ற புரூரவஸ் இருளை உறிஞ்சிப் பரந்திருந்த முகில்களுக்கு மேலே அவர்கள் எழுவதைக் கண்டான். முகில்விளிம்புகளை மிதித்துத் தாவி வாளைச் சுழற்றியபடி அவர்களை அணுகினான். அவனைச் சூழ்ந்து மின்னல்கள் துடித்தன. இடியோசை எழுந்து

திசைகளனைத்தையும் அதிரச்செய்தது. ஒளிரும் வெண்முகில்களுக்கு அப்பால் தேவர்கள் விரைந்து செல்வதை அவன் கண்டான். “நில்லுங்கள்! நில்லுங்கள்!” என்று கூவியபடி அவன் தொடர்ந்து சென்றான். “விண்ணகர் புகுந்தாலும் விடமாட்டேன். விண்ணவர்கோனையும் வெல்வேன்” என வஞ்சினம் கூவினான்.

ஆனால் இன்னொரு மின்னலில் கீழிருந்து ஆடை சிறகெனப் பறக்க குழல் எழுந்து நெளிய பறந்தணைந்த பெண்ணுருவம் ஒன்று அந்த இரு ஆடுகளையும் பாய்ந்து கழுத்தை கைகளால் சுற்றி பற்றிக்கொள்வதைக் கண்டான். அறிந்த முகம், பொன்னொளிர் நிறமென்றாலும் நன்கு பழகிய உடலசைவுகள். திகைத்து நின்று அவன் சொல்லெடுப்பதற்குள் இரு ஆடுகளுக்கும் சிறகுகள் முளைத்தன. இரு கால்களையும் அவற்றின்மேல் ஊன்றி சரடுகளை பற்றிக்கொண்டு அவள் எழுந்து நின்றாள். அவளைக் கண்டது எங்கென அவன் அப்போது உணர்ந்தான். மறுகணமே அவள் எவளென்றும் தெளிந்தான்.

அவன் கைகால்கள் செயலற்றன. சிறகுகள் தொய்வடைய அவன் கீழே சரியலானான். “தெய்வங்களே! மூதாதையரே!” என கூவியபடி அவன் விண்ணில் முகில்கணம் ஒன்றை பற்றிக்கொண்டான். அவன் உடைவாள் ஒளியுடன் கீழிறங்கிச் சென்று மண்ணில் விழுந்தது. அவள் விண்ணில் புதைந்து சிறு புள்ளியென மாறி மறைந்தாள். புலரி ஒளி எழுந்ததும் செந்நிற முகில்கீற்றுகள் சிதறிப்பரந்திருக்க ஓய்ந்த போர்க்களமென ஒழிந்து கிடந்த வான்வெளியை நோக்கி புரூரவஸ் திகைத்தான். திசை என ஏதுமற்ற அந்தப் பெருவட்டத்தை சுழன்று சுழன்று நோக்கி சோர்ந்து சுருங்கினான். அவன் உடல்

எடைகொண்டு வந்தது. முன்னோர் அளித்த முதற்சொல் அவன் சித்தத்திலிருந்து மறைய மெல்ல மண் நோக்கி விழலானான்.

முகில்களைக் கடந்து காற்றைக் கிழித்தபடி குருநகரின் புறக்கோட்டைக் காட்டின் குறுமரங்களின்மேல் வந்து விழுந்து கிளையுடைத்து தரையில் பதிந்தான். உடலில் படிந்த புழுதியும் சருகும் பறக்க பாய்ந்தெழுந்து ஆடையிலா உடலுடன் நகர்த்தெருக்கள் வழியாக ஓடி குருநகரியின் அரண்மனை முற்றத்தை அடைந்தான். அவனைக் கண்டு காவலர் திகைத்து ஓசையிட்டனர். பொன்னுடல் இளவெயிலில் மின்ன பித்தனைப்போல "அரசி எங்கே? எங்கே சியாமை?" என்று கூவியபடி படிகளில் ஏறி அரண்மனைக்குள் புகுந்தான். அவனைக் கண்டு அனைவரும் சிதறிப்பரந்தனர்.

அவனை எதிர்கொண்ட அரண்மனை முதுசெவிலி "நேற்று நீங்கள் கிளம்பியதும் தன்னினைவிழந்து கிடந்த அரசியை தூக்கிக்கொண்டு சென்று மஞ்சத்தில் படுக்க வைத்தோம். நீர் தெளித்து முகம் தெளியச்செய்தோம். ஆடுகள் ஆடுகள் என கூவி அரற்றினார். பின்னர் என் மைந்தர், என் மைந்தரை விட்டுச்செல்லமாட்டேன் என கலுழ்ந்து விழிநீர் வார்த்தார். அவர் அருந்த இன்நீருடன் வந்தபோது மஞ்சம் ஒழிந்திருப்பதைக் கண்டோம்" என்றாள்.

"எங்கு சென்றாள்? எங்கு சென்றாள் அவள்?" என்று கூவியபடி அவன் படிகளிலேறி அரண்மனை இடைநாழிகளினூடாக ஓடி தன் மஞ்சத்தறையை அடைந்தான். அங்கே அவள் இல்லை. திரும்பி அவள் மஞ்சத்தறையை மீண்டும் அடைந்து அவள் பேழைகளை திறந்து தேடினான். அவன் அளித்த அணிகளும் ஆடைகளும் அருமணிகளும் அங்கே இருந்தன. திரும்பியபோது சிறுபீடத்தின்மேல் அவன் அணிவித்த

கல்மாலையும் மங்கலத்தாலியும் மெட்டிகளும் கணையாழியும் இருந்தன.

அவன் கால்தளர்ந்து மஞ்சத்தில் அமர்ந்தான். “அரசே, இவ்வறைக்கு வாயில் ஒன்றே. இவ்விடைநாழி வழியாக வந்து படிகளினூடாகவே வெளியேற முடியும். இங்கு காவலர் இருந்தனர். சேடியர் பலர் நடந்தனர். இவ்வழியாக அரசி சென்றிருக்க வாய்ப்பில்லை. அறையிலிருந்து எவ்வண்ணம் அவர்கள் மறைந்தார்கள் என்றறியேன்” என்றாள் முதுசெவிலி. பிறிதொருத்தி ஏதோ சொன்னாள். என்ன என அவன் விழிதூக்க அவள் “ஒன்றுமில்லை, சாளரம் வழியாக அரசி எழுந்து சிறகுகொண்டு பறந்து செல்வதைக் கண்டதாக இளஞ்சேடி ஒருத்தி சொல்கிறாள். கீழே அவள் கலம் கழுவிக்கொண்டிருக்கையில் அதை கண்டாளாம். அஞ்சி மயங்கி விழுந்து விழித்தெழுந்ததும் அழுதபடி தான் கண்டதை முதுசேடியிடம் சொல்லியிருக்கிறாள்” என்றாள்.

“அவளை அழைத்து வா! மெய்யேதென்று உசாவுவோம்” என்றாள் முதுசெவிலி. “தேவையில்லை” என்றுரைத்து இரு கைகளாலும் தலையை தாங்கிக்கொண்டான். குறடொலிக்க வாயிலில் வந்து நின்ற காவலர் தலைவன் “அரசியை நகரெங்கும் தேட காவலர்களை அனுப்பியிருக்கிறோம், அரசே” என்றான். அருகே வந்து நின்ற ஆயுஸ் “அன்னையை தேடிப்பார்க்க ஒற்றர்களும் சென்றுள்ளனர்” என்றான். புரூரவஸ் “நன்று, முறைப்படி அதை செய்க! ஆனால் அதனால் பயனில்லை” என்றான். திகைப்புடன் “ஏன், தந்தையே?” என்றான் மைந்தன். “அவள் இனி மீளமாட்டாள்” என்றான்.

ஆயுஸ் புருவங்கள் சுருக்கி நோக்கினான். “அவள் சென்றுவிட்டாள். அது ஒன்றே மெய்” என்று அவன்

சொன்னான். அதற்குமேல் ஆயுஸ் ஏதும் கேட்கவில்லை. புரூரவஸ் உடைந்து விழிநீர் சிந்தத்தொடங்கினான். ஆயுஸ் திரும்பி நோக்க வாயிலில் நின்றிருந்த காவலர் விலகிச்சென்றனர். அவன் எழமுயன்றான். உடல் எடை மிகுந்தபடியே வந்தது. எழுந்து மஞ்சம் நோக்கி நடக்க முற்பட்டவன் தூக்கி வீசப்பட்டவன்போல ஓசையுடன் மரத்தரையில் விழுந்தான். பதறி ஓடி வந்து அவனைத் தூக்கி மஞ்சத்தில் படுக்க வைத்து நீர் தெளித்து விழிப்பூட்டி குளிர்நீர் அருந்த வைத்தனர் செவிலியரும் சேடியரும். விழிப்பு மீண்டதுமே "சென்றுவிட்டாள்..." என்று அவன் தன்னுள் என சொன்னான்.

அச்சொல் கூரிய வாளென உடலுக்குள் புகுந்ததுபோல தசைகள் விதிர்க்க கைகால்கள் துடித்தபின் மீண்டும் மயங்கினான். "அரசே" என்று அவனை உலுக்கினாள் செவிலி. ஆயுஸின் ஆணைப்படி அறைக்குள் வந்த மருத்துவர்கள் "இப்போது அவருக்கு விழிப்பு பெரும்துயர் அளிப்பது. துயிலட்டும், அதுவே நன்று" என்றனர். அனைவரையும் விலக்கி துயிலுக்கு புகை அளித்து அவனை மஞ்சத்திலிட்டனர். அவன் துயிலுக்குள்ளும் வலிகொண்டு துடித்தபடியே இருந்தான். முனகியபடியும் தலையை அசைத்தபடியும் இருந்தவன் அவ்வப்போது சவுக்கடி பட்ட புரவி என துடித்து எழமுயன்றான்.

ஆயுஸ் அவன் அருகிலேயே இருந்தான். பிற மைந்தருக்கு அவனே அனைத்தையும் சொல்லி புரியவைத்தான். மூன்றாம்நாள் விழிப்புகொண்ட புரூரவஸ் எழுந்து ஆடையை அள்ளிப்போட்டுக்கொண்டு கீழிறங்கிச்செல்ல அவனைத் தடுக்க முயன்றவர்களை கைகாட்டி விலக்கியபின் ஆயுஸ் உடன் சென்றான். முற்றத்தை அடைந்து புரவி மீதேறி

விரைந்தபோதும் அவன் ஆயுஸ் உடன்வருவதை காணவில்லை. நகர்த்தெருக்களினூடாகச் சென்று கோட்டையைக் கடந்தான். எங்கும் நிற்காமல் காட்டுக்குள் புகுந்தான். அவனை முன்னால் செல்லவிட்டு பின் தொடர்ந்த ஆயுஸ் தன்னைத் தொடர்ந்த காவலர்களை எல்லைக்கு அப்பால் நிற்கச்செய்தான்.

புரூரவஸ் காட்டுக்குள் சென்று சோலைசூழ்ந்த சிறுசுனையை அடைந்தான். புரவியிலிருந்து இறங்கி அவன் உள்ளே சென்றதை அப்பால் நின்று மைந்தன் நோக்கினான். சற்றுநேரம் கழித்து அவன் தொடர்ந்துசென்று சோலைக்குள் புகுந்து ஓசையில்லாது நடந்தான். அதற்கான தேவையே இருக்கவில்லை. ஆயுஸ் மிக அருகே வந்து நின்றபின்னரும்கூட புரூரவஸ் எதையும் அறியவில்லை. விழியிமைக்காது அந்தச் சுனையையே நோக்கியபடி அமர்ந்திருந்தான். அவனை நோக்கியபடி ஒரு மரத்தில் சாய்ந்தவனாக ஆயுஸ் நின்றான்.

காட்டின் ஒலி மாறுபட்டது. இலைநுனியொளிகள் அணைந்தன. ஒளிக்குழல்கள் சாய்ந்து சிவந்து மறைந்தன. மரச்செறிவுக்குள் இருள் தேங்கியது. கொசுக்களின் ஓசை அவர்களைச் சூழ்ந்தது. புரூரவஸ் அதே இடத்தில் அசையாமல் அமர்ந்திருந்தான். சென்று அவனை அழைக்கலாமா என ஆயுஸ் ஐயுற்றான். மேலும் இருட்டி வந்தபோது அவன் மெல்லிய காலடிகளுடன் அணுகிச்சென்று “தந்தையே!” என அழைத்தான். முதல் சிலமுறை புரூரவஸ் அக்குரலை கேட்கவில்லை. கேட்டதும் திடுக்கிட்டுப் பாய்ந்தெழுந்து “யார்?” என்றான். “நான்தான்... ஆயுஸ்” என்றான் ஆயுஸ். “யார்?” என்று அவன் பதறிய

நோக்குடன் கேட்டான். “யார் நீ?” உரத்த குரலில் “சொல்! யார் நீ?” என்றான்.

ஆயுஸ் வெறுமனே நோக்கியபடி நின்றான். “நான் பாண்டவனாகிய பீமன்... இது என் சோலை...” என்றான் புரூரவஸ். ஆயுஸ் திரும்பி நோக்கியபோது மிக அப்பால் படைத்தலைவனின் செந்நிறச் சிறுகொடி தெரிந்தது. அவன் பெருமூச்சுடன் திரும்பிச் சென்றான். புரூரவஸ் மீண்டும் அந்த நீர்நிலையருகே அமர்ந்தான். அவன் விழிமறைந்து நின்று ஆயுஸ் நோக்கிக்கொண்டிருந்தான். விழித்து துயில்கொள்பவன் போலிருந்தான் புரூரவஸ். ஆயுஸ் எண்ணியிராது ஓர் ஐயத்தை அடைந்தான். அங்கிருப்பவன் பிறிதொருவன்தானா? எப்படி அறியக்கூடும்? மானுட உடலை மட்டுமே அறிய வாய்க்கிறது. உள்ளே குடிகொள்வது எது? அது இடம்மாறிவிட்டதென்றால் அது உரைப்பதன்றி வேறு சான்றுதான் எது?

நிலவெழுந்து வந்தது. இலைநிழல்கள் நீரில் விழுந்தன. சுனை உள்ளிருந்து என ஒளிகொண்டபடியே வந்தது. குளிர்ந்த காற்றில் இலைகள் அசைந்தபோது எழுந்த கலைவோசை அது விடியலோ என ஐயுறச்செய்தது. இனிய வெம்மைகொண்ட படுக்கையில் படுத்திருக்கிறோமா என்ன? அல்லது இவையனைத்தும் கனவா? சுனைக்குள் நிலவொளி நேரடியாகவே விழுந்தபோது அதன் சிற்றலைகளின் வளைவுகள் தளிர்வாழையிலைகள்போல பளபளத்தன. ஆயுஸ் ஒரு நறுமணத்தை உணர்ந்தான். பாரிஜாதம் எனத் தோன்றிய மறுகணமே செண்பகம் என்றும் தோன்றியது. மிக அருகே அந்த மணம். இல்லை, மிக அப்பால் அலைபெருகி விரிந்த நறுமணப்பெருக்கின் சிறு துளியா?

புரூரவஸ் எழுந்து இரு கைகளையும் முன்னால் நீட்டினான். நேர் எதிரில் நின்றிருக்கும் எவரிடமோ பேச விழைபவன்போல முகம்நீட்டியபடி முன்னால் சென்றான். நடனமிடுவதுபோல கைகளை விரித்தான். சுழன்றபோது அவன் முகம் ஒருகணம் தெரிந்தது. அதில் ஆலயச்சுவர்களில் வரையப்பட்டிருக்கும் யக்ஷர்களின் முகங்களில் தெரியும் களிப்பித்து தெரிந்தது. விழிகள் புடைத்து தெறிப்பவைபோல வெறித்திருந்தன. வாய் மலர்ந்து பற்கள் ஒளிவிட்டன. மெல்ல அவன் முனகுவது கேட்டது. பாடுகிறானா என அவன் செவிகூர்ந்தான். பாட்டல்ல, வண்டு போல் ஒரு முரல்வு. அவன் உதடுகளிலிருந்து அவ்வொலி எழவில்லை. மூச்சிலிருந்தோ உடல்முழுமையிலும் இருந்தோ அது எழுந்துகொண்டிருந்தது. அவன் கைகளை விரித்துச் சுழன்றான். பின்னர் அச்சுனையின் கரையில் அமர்ந்து கால்நீட்டி படுத்துக்கொண்டான்.

அவன் உடலில் வலிப்பு எழுவதை ஆயுஸ் கண்டான். கைகால்கள் சேற்றில் இழுபட்டன. நாக்கு வாயிலிருந்து பாதி நீண்டு தொங்கி அதிர்ந்தது. அவன் திரும்பி நோக்கியபோது படைத்தலைவனும் காவலரும் மிக அண்மையில் மரங்களில் மறைந்து நின்றிருந்தனர். அவன் கைகாட்ட அவர்கள் ஓடிவந்தனர்.

# மாமலர் - 21

## 21. விழைவெரிந்தழிதல்

ஏழாண்டுகள் சியாமையுடன் வாழ்ந்தபோது ஒவ்வொரு நாளும் புரூரவஸின் உடல் பொலிவுகொண்டு வந்தது. அவன் சிரிப்பில், சொல்லில், நோக்கில், அமர்வில் வென்றவன் எனும் பீடு

தெரிந்தது. அவன் இருக்குமிடத்தில் கண்ணுக்குத் தெரியா கந்தர்வர்கள் நிறைந்திருப்பதுபோல் இசையொன்று நிறைந்திருந்தது. அருமணிபோல் உடல் ஒளி சுரந்தது.

அவன் உணர்ந்து அமைந்த அறம் கனிந்து இனிமையின் வண்ணம் சூடியது. அன்னையின் விழிகளுடன் பிழை செய்தோரை நோக்கினான். தந்தையின் கைகளுடன் தண்டித்தான். தெய்வத்தின் கால்களால் அவர்களை ஆட்கொண்டான். அவனை ஆயிரம் முதுதந்தையர் ஓருருக்கொண்டு எழுந்த அரசன் என்று அவன் குடி போற்றியது. அவன் கோல் கீழ் அமைவதற்கென்று தொலைவிலிருந்தும் குலங்கள் கொடிவழி முறை சொல்லி அணுகின.

உவகைகொண்டு முழுத்தவனை உலகு விரும்புகிறது. அவன் உண்ணும் அமுதின் ஒருதுளியேனும் சிந்தி தன்மேல் படாதா என ஏங்குகிறார்கள் மானுடர். தேன்மலர் தேடி வண்டுகள் என யாழ் மீட்டியபடி அவனைத் தேடி வந்தனர் பாணர். சுமையென பொருள்கொண்டு அவன் கொண்ட பெருங்காதலை பாடியபடி மீண்டு சென்றனர். சென்ற இடங்களில் எல்லாம் விழியொளிர இளைஞரும், முகம் கனிய முதியவரும் அவர்களைச் சூழ்ந்தமர்ந்து அக்கதைகளை கேட்டனர்.

அவன் தொட்டளித்த செடிகள் நூறுமேனி விளைகின்றன என்று உழவர் சொல்லினர். முதற்துளி பாலை அவன் அரண்மனைக்கு அனுப்பி அவன் ஒரு வாய் உண்பான் என்றால் கலம் நிறைந்து தொழு பெருகுகிறது என்றனர் ஆயர். மண்ணில் தெய்வமென வாழ்த்தப்பட்ட முதல் மாமன்னன் அவனே என்றனர் புலவர்.

முற்றக் கனிந்த அமுது எப்படியோ இறுகி நஞ்சென்றாகிறது. சியாமை சென்றபின் அவனில் வாழ்ந்த தெய்வங்கள் அனைத்தும் ஒழியலாயின. ஆலயத்தின் கருங்கற்களின் பூட்டுகள் நடுவே நுழைந்து பருத்து புடைத்தன நச்சுவேர் நரம்புகள். நிலையிளகிச் சரிந்தவற்றின்மேல் படர்ந்து பரவியது வழுக்கும் பசும்பாசி. நாகமென விழிஒளி கொண்டு சொடுக்கிக் கொத்தின நினைவுத்துளிகள். நொடியென்றாகி நீண்டது அவன் காலம். சிறு ஓசைக்கும் சிலிர்த்தெழும் தேள்கொடுக்கென எழுந்தன சென்றவை. அனல்பட்டுப் பழுத்த கலமென காத்திருந்தன அவள் விட்டுச்சென்ற பொருட்களனைத்தும்.

ஓரிரு நாட்களிலேயே தளிர் சருகானதுபோல அவன் ஒளியிழந்தான். கண்கள் குழிந்து, உதடு உலர்ந்து, கன்னமேடுகள் எழுந்து, மூக்கு புடைத்து பிறிதொரு முகம் கொண்டான். ஏழாண்டுகளாக அஞ்சி அகன்றுநின்ற அகவைநிரை பாய்ந்து அவன்மேல் அமர்ந்து பந்தென அவனை எற்றித் தட்டி தெறிக்கச்செய்து கொண்டுசென்றது. கணம்தோறும் மூப்புகொண்ட அவனை நோக்கி கண்ணீர்விட்டனர் அவன் பிற தேவியர்.

வந்து சென்றவள் ஒரு விண்ணணங்கு என்பது ஊரெங்கும் பேச்சாயிற்று. “ஆம், பிறிதொருத்தியாக இருக்க வழியில்லை. அம்முழுமை மானுடருக்கு கூடுவதில்லை” என்றனர் நிமித்திகர். “மானுடப்பெண்ணென அவள் இவ்வாழ்வில் முழுதமைந்ததை நாம் நோக்கினோமே!” என்றனர் செவிலியர். “மானுடரையும் தேவர்களே முற்றிலும் ஆடமுடியும்” என்றார் சூதர். “ஏனெனில் முழுமை என்பது அவர்களுக்கு மட்டுமே கைவரும்.”

இங்கு அவள் இருந்த காலமனைத்தும் இத்தனை எளிதாக கனவாகக் கூடுமா என்று அவன் அன்னை திகைத்தாள்.

"இவ்வளவு நொய்யதா? இத்தனை நிலையற்றதா? இப்படி பொய்யென்றும் பழங்கதையென்றும் ஆவதா? இதன்மேலா அமர்ந்துள்ளோம்? இவ்வண்ணமா ஆடுகிறோம்?" என உளம்கலங்கி அழுதாள். "தெய்வங்களின் ஆடலே இதுதான். ஏற்றிவைத்து தூக்கிவீசி ஆடுதல் அவர்கள் இயல்பு. சிறகுகள் மனிதனுக்குரியவை அல்ல. கால்களே மண்ணை நன்கறிந்தவை" என்றார் அவன் தந்தை.

ஒவ்வொரு நாளும் மருத்துவர் அவன் அரண்மனைநோக்கி வந்தனர். எட்டுத் திசைகளிலிருந்தும் மூலிகைகளும் உப்புகளும் கல்சாறுகளும் மண்நீர்களும் கொண்டுவந்து மருந்துகள் சமைத்துப்பூசியும் ஊட்டியும் முகரச்செய்தும் அவன் உடலை மீட்டெடுக்க முயன்றனர். உள்ளமே உடலை நடிக்கின்றது என்றறிந்த நிமித்திகர் கவடி புரட்டி சோழி நிரத்தி அவன் சூழ்வினை என்னென்று நோக்கினர். பழுதேதும் காணாதபோது ஒருவரோடொருவர் சொல்லுசாவி திகைத்து அமைந்தனர்.

உளம்கொண்ட கடும்துயர் உடலில் எப்படி பெருவலியென வெளிப்பட முடியுமென்று அவன் உடல் நோக்கி கற்றனர் மருத்துவர். நாண் இறுக்கப்பட்ட வில்லென படுக்கையில் அவன் வளைந்து நிற்பதைக்கண்டு விதிர்த்து அலறினாள் ஒரு சேடி. பாய்ந்து உள்ளே வந்த முதுமருத்துவர் சக்ரர் காலிலிருந்து தலைவரை அவனை இழுத்து பூட்டி நின்று அதிர்ந்த கண்அறியாச் சரடொன்றைக் கண்டு உணர்ந்து நெஞ்சோடு கைசேர்த்து "தெய்வங்களே அகல்க! எளியோர் மானுடர்!" என்று கூவினார்.

அவன் கைவிரல் நுனிகள் வலியில் அதிர்ந்துகொண்டிருந்தன. இறுதிமூச்சு எடுப்பவன்போல் கால்கள் நீண்டு கட்டைவிரல் சுழன்று நெளிந்தன. துயிலிலும் விழிப்பிலும் சொல்லென

இதழ்களில் அசைந்துகொண்டிருந்தது ஏதோ ஓர் எண்ணம். ஒரு கணமும் நில்லாமல் அசைந்த கருவிழிகள் மூடிய இமைகளுக்குள் கிழித்து வெளிவரத் துடித்து உந்திச் சுழன்றன. ஒரு சொல்லும் உட்புகாது எட்டுத் திசைகளையும் கல்கொண்டு மூடிய அறையென்று ஆயிற்று அவன் உள்ளம்.

தந்தையும் தாயும் அருகிருந்து மன்றாடினர், கல்லென்றறிந்த பின்னும் தெய்வத்துடன் உரையாடாதிருக்க ஒண்ணா மாளாப்பெருநோயாளர் என. "மைந்தா கேள், நன்று நடந்ததென்று கொள். உனக்கு வாய்த்தனர் ஏழு நன்மக்கள். பெண்ணென்று அவள் இங்கிருந்த போதெல்லாம் பெருமகிழ்வை உனக்களித்தாள். உன் இல்நிறைத்து மங்கலம் சேர்த்தாள். இன்று அவள் அகன்றிருந்தாலும் என்றோ வருவாள் என்று காத்திருப்பதே முறை" என்றார் தந்தை.

"காத்திருப்பதற்கு உன் உடல் தேறவேண்டும். உளம் அமையவேண்டும்" என்றாள் அன்னை. "அவள் நல்லன்னையென இங்கிருந்தவள். ஒருபோதும் அதை மறவாள். மீண்டு வருவாள். நம்பி உளம் தேர்க, குழந்தை!" என்றாள். அவன் யாரிவர்கள் என்பதுபோல் நோக்கினான். கழுவிலேற்றி அமரவைக்கப்பட்டவன்போல நரம்புகள் புடைத்து பற்கள் கிட்டித்து உடல் மெய்ப்பு கொண்டதிர துடித்து அடங்கி மீண்டும் எழுந்தது.

"எந்த தெய்வம் என் மைந்தனை விடுவிக்கும்? எவ்வேள்வி அவனை மீட்டு கொண்டுவரும்?" என்று தந்தை நிமித்திகரிடம் கேட்டார். அவையமர்ந்த முனிவர்களின் காலடியில் விழுந்து "அவன் வாழ இயலாதென்றால் வலியின்றி சாகவாவது வழியமையுங்கள், உத்தமர்களே" என்று அன்னை கதறி அழுதாள்.

ஆனால் அவன் மைந்தர் எழுவரும் அவ்வண்ணம் ஆற்றாப் பெருந்துயரேதும் உறவில்லை. அன்னை சென்று மறைந்த மறுநாள் அவர்களுக்கு புரியாமையின் திகைப்பே இருந்தது. இளையவனாகிய ஜயன் மட்டும் "அன்னை எங்கே?" என்று சிணுங்கிக்கொண்டிருந்தான். "அன்னை வருவாள்" என்று அவனுக்கு சொல்லச்சொல்ல அவன் துயர் பெருகியது. முதுசெவிலி ஒருத்தி "அவனுக்கு சொற்கள் புரியாது, சேடியே. அன்னை என அவன் நினைவுகொண்டு சொன்னதுமே அவனை மடியிலிட்டு முலையூட்டுக!" என்றாள். "முலையுண்ணும் பருவம் கடந்துவிட்டானே?" என்றாள் சேடி திகைப்புடன். "ஆம், அவனை மீளக்கொண்டு செல்வோம்" என்று செவிலி சொன்னாள்.

அன்னை என்றதுமே அவனுக்கு முலைப்பால் அளிக்கப்பட்டது. முதல் இருமுறை திகைத்தபின் அவன் முலையருந்தலானான். பின்னர் அன்னை என்னும் சொல்லே அப்பால் மணமென்றும் சுவையென்றும் அவன் உள்ளத்தில் உருமாறியது. அவன் கனவுகளில் அச்சொல் மணத்து இனித்தது. அதை நெஞ்சிலேந்திய சேடி அதன் மானுட வடிவமானாள். அவன் அவள் உடலுடன் இணைந்திருக்கவும் அவள் முலைகள்மேல் உறங்கவும் விரும்பினான். ஓரிரு வாரங்களில் அவளே அவன் அன்னையென்றானாள். சியாமையின் முகத்தை அவன் முற்றிலும் மறந்தான்.

ரயனுக்கும் விஜயனுக்கும் இடைவெளியில்லாமல் ஏதேனும் ஒன்று அளிக்கப்படவேண்டும் என ஆணையிட்டார் அமைச்சர். அவர்கள் புரவிகளையும் படைக்கலங்களையும் பெருவிருப்புடன் அணுகினர். "ஒருமுறை புரவியிலிருந்து விழட்டும். ஓரிருமுறை வாள்புண் பதியட்டும். இறப்பின்

ஆடைநுனி வந்து அவர்களை தொட்டுச்செல்லட்டும். அவர்கள் அறிந்த உலகமே முற்றிலும் மாறிவிடும். அதை வென்று நிலைகொள்ளும் அறைகூவலுக்கு முன் பிறிதொன்றும் ஒரு பொருட்டென்றிருக்காது" என்றார் அமைச்சர். ஸ்ருதாயுஸுக்கும் சத்யாயுஸுக்கும் இரு சிறுபடை புறப்பாடுகள் அளிக்கப்பட்டன. முதல் வெற்றியின் மயக்கில் அவர்கள் மண்ணை ஒளிமிக்கதென காணத்தலைப்பட்டனர்.

தனித்திருந்தவன் ஆயுஸ். அவனை தலைமூத்தவனாகிய ஜாதவேதஸ் காட்டிலிருந்து வந்து சந்தித்தான். சோலைக்குள் அழைத்துச்சென்று அமரவைத்து மெல்லிய குரலில் சொல்லாடினான். மீண்டு வந்தபோது அவன் முகம் நீர்நிறைந்த பஞ்சென எடைகொண்டிருந்தது. உடன்பிறந்தோர் இருவரும் ஒருவரை ஒருவர் அறியாமல் தங்களுக்குள் மூழ்கி விழிதாழ்த்தியிருந்தனர். ஜாதவேதஸ் "அவ்வாறே" எனச் சொல்லி பிரிந்தபோது ஆயுஸ் "ஆம்" என்றான். தனிமைகொண்டபோது ஜாதவேதஸ் புன்னகைத்தான். ஆயுஸ் ஒரு துளி விழிநீர் விடுத்து ஏங்கினான்.

தந்தை அகன்ற அவையில் இளவரசனாக அமர்ந்த ஆயுஸ் அரசுசூழ்தலினூடாக ஆண் என எழுந்தான். தந்தையின் குரலும் நோக்கும் அவனுக்கு அமைந்தன. தந்தைக்கு இணையாக அறம் நிற்கும் உளம் கொண்டிருந்தான். தந்தை கைசூடிய கோல் அவனிடமும் அசையாது நின்றது. "அரசே, இந்திரனின் அரியணை அதில் அமர்பவரை இந்திரனாக்குவது என்பார்கள். அறிக, அனைத்து அரியணைகளும் அவ்வாறே! அவை அரசர்களை ஆக்குகின்றன" என்றார் அமைச்சர்.

தந்தையின் அறைக்குள் சென்று அவர் எரிபற்றி பொசுங்கும் தசையென நெளிந்து துடிப்பதை இடையில் கைவைத்து சில

கணங்கள் நோக்கி நின்றனர் மூத்தவர் இருவரும். அருகே சென்று அவன் தாள் தொட்டு தலை சூடியபின் ஒன்றும் சொல்லாமல் கிளம்பி ஜாதவேதஸ் மீண்டும் தன் ஆசிரியர்களை சென்றடைந்தான். அவனுக்குப் பின்னால் சென்ற ஆயுஸின் தோளைத் தொட்டு “இது இறப்பே, ஆனால் மீளும் வாய்ப்புள்ளது” என்றான் ஜாதவேதஸ். விழிகளில் வினாவுடன் நின்ற இளையோனுடன் “முழுதறிந்தால் முற்றிறப்பு. இது எஞ்சியதை அறிய மீளவேண்டுவது” என்றபின் அவன் நடந்து மறைந்தான்.

நின்று கொல்லும் பிரிவெனும் நோய் புரூரவஸை வெண்பூசனம் படிந்து காட்டில் பாதிமூழ்கிக் கிடக்கும் வீழ்மரமென மாற்றியது. அவன் தோல்மேல் நோய்த்தேமல் படர்ந்து தயிர்ப்புளிப்பு வாடை எழுந்தது. கைவிரல்களுக்கு நடுவே வெண்ணிறப் புண் நிறைந்தது. விரல் முனைகள் அழுகி வீங்கி நகங்கள் உதிர்ந்தன. நரைத்த தலைமுடி பழுத்து கொத்துகளாக, கீற்றுகளாக அகன்று படுக்கையெங்கும் பரவிக்கிடந்தது. பாசிபடிந்த ஓடைக்கரை பாறையென்றாயிற்று அவன் தலை. வயிறு முதுகெலும்புடன் ஒட்டி தொப்புள் இழுபட்டது. விலாஎலும்பின் வரிகளுக்கு மேல் துலாக்களென இருபுறமும் புடைத்திருந்தன கழுத்தெலும்புகள்.

நாள் செல்லச்செல்ல வலி வலியென அதிர்ந்துகொண்டிருந்த விழிகள் மெல்ல நிலைத்து நோக்கிலாத ஒளிகொண்ட நிலைத்த இரு மணிகளென்றாயின. மாளா நோயாளிகளுக்கே உரிய அந்நோக்கை மருத்துவர்களும் அஞ்சினர். பாலில் கலந்த தேனை சிறு மர அகப்பையிலெடுத்து அவனுக்கு ஊட்டும் தாதி ஒரு கணமும் அந்நோக்கை தான் சந்திக்கலாகாதென்று விழி கருதினாள். ஆயினும் உளம் தவறி சந்தித்தபோது அஞ்சி

கைநடுங்க அமுது அவன் உடலில் கொட்டியது. தளர்ந்து அவள் திரும்பிச்சென்றபோது அவ்விழிகள் மாறாஓவியமென அகக்கண்முன் நின்றன. அழிக்க அழிக்க தெளிவுகொண்டது அது.

கனவுகளில் அவ்விழிகள் பிறிதொரு முகம் சூடி எழுந்து வந்தன. தென்திசையின் குளிர் சூடிய இருண்ட பேருடல். இரு கைகளையும் சிறகுகளென விரித்து வந்து சூழ்ந்து உளச்செவி மட்டுமே அறியும் மென்குரலில் “வருக!” என்றழைத்தது. அவள் “எங்கு?” என்றபோது “நீ நன்கறிந்த இடத்திற்கு. அங்குளார் உன் மூத்தோர்” என்றது. அதன் மூச்சில் சாம்பல்புகை நாற்றம் இருந்தது. அருகணைந்த வாயில் ஊன் உருகிய நெடி எழுந்தது. அதன் கைகள் அவளைத் தொட்டபோது கோடையின் முதல் மழைத்துளி விழுந்ததுபோல் குளிர்கொண்டு அவள் அதிர்ந்தாள்.

அஞ்சியபடி எழுந்தமர்ந்து நெஞ்சைப் பற்றிக்கொண்டு நடுங்கினாள். எழுந்தோடிச் சென்று உடன் உறையும் செவிலியர் மஞ்சங்களை அடைந்து அவர்களின் கால்களைப்பற்றி உலுக்கி எழுப்பி “அஞ்சுகிறேன்! அஞ்சுகிறேன்!” என்றாள். “எவரை?” என்றார்கள் அவர்கள். “அதை! அவர் விழிகளில் குடிகொள்ளும் அதை!” என்றாள். பிறிதொரு சொல்லிலாமலே அவர்கள் அனைவரும் புரிந்துகொண்டனர். சிற்றகல் ஒளியில் ஒருவரோடொருவர் கை கோத்தபடி உடல்குறுக்கி அமர்ந்து விழிகள் தாழ்த்தி நீள்மூச்சுகளுடன் அவ்விரவைக் கடந்தனர்.

காலையில் நீராடச் செல்லும்போது வானில் எழுந்த முதல் வெள்ளியைக் கண்டு நீள்மூச்சுவிட்டு உளம் நெகிழ்ந்தனர். குளிர்நீரில் நீராடி எழுந்தபோது அன்று மீண்டும் புதிதென பிறந்ததுபோல் உணர்ந்தனர். முதுசெவிலி பிறிதொருத்தி

கையைப்பற்றி “இவையல்ல என்றிருக்கையிலும்கூட இன்றொரு நாள் அளிக்கப்பட்டதென்பது மாறாத உண்மை அல்லவா?” என்றாள். “ஆம், நானும் அதையே எண்ணினேன். இருக்கிறோம் என்பதற்கு நிகரான இறைக்கொடை ஒன்றுமில்லை” என்றாள் அவள். அச்சொற்களால் உளம் எளிதாகி இன்சொல்லாடி சிரித்தபடி அவர்கள் திரும்பி வந்தனர்.

நோயுற்ற ஒருவர் பிறருடைய உவகைகளை தடுப்பவர். உவகைவிரும்பும் உலகத்தாரால் அவர் வெறுக்கப்படுகிறார். வெறுப்பை குற்றவுணர்வாலும் கடமையுணர்வாலும் அறவுணர்வாலும் கடந்து செல்கின்றனர் மானுடர். ஆனால் நாள் செல்லச்செல்ல அவ்வுறைகள் அகல்கின்றன. கடந்துசெல்லும் விழைவு மட்டுமே எஞ்சியிருக்கிறது. அவர்களைவிட்டு நெடுந்தொலைவுக்கு அகன்றுசென்றுவிட்ட பிறரின் முதுகில் ஒரு புலன் அவர்களின் இறப்புச்செய்திக்காக காத்திருக்கிறது.

குருநகரி புரூரவஸ் இறப்பதற்கென்று எண்ணம் கொள்ளலாயிற்று. முதலில் துயருடனும் தயக்கத்துடனும் அது குறித்து பேசினர். “இவ்வாறு எண்ணுவது பெரும்பழியென்றும் தோன்றுகிறது. ஆயினும் இவ்வலியிலிருந்து அவருக்கு மீட்பு அது ஒன்றே” என்றார் முதுகாவலர் ஒருவர். கேட்டவர்கள் பதறி “என்ன சொல்கிறீர்? வாயை மூடும்... அரசப்பழி இறைப்பழிக்கு மேல்” என்று அவர் கைகளை பற்றினர். “ஆம், அனைத்து நோய்களுக்கும் இறப்பெனும் இறுதி மருந்து உண்டென்பதே மானுடருக்கு மிகப்பெரிய ஆறுதல்” என்றார் குடிமன்றில் ஒரு மூத்தோர். எதிர்ச்சொல் என நீள்மூச்சுகள் எழுந்தன. எவரோ அசைந்தமரும் ஒலி.

இல்லமன்றுகளில், நகர்த்தெருக்களில், அங்காடிகளில், அப்பேச்சு பரவி நெடுநாள் கழித்தே மூதரசரிடம் வந்தது. உடைவாளை உருவி பாய்ந்தெழுந்து "எவன் அச்சொல் உரைத்தது? அந்நாவை இப்போதே அறுத்தெறிவேன்" என்று கூவினார். நடுங்கும் வாளுடன் முதிய கை அதிர கால்பதறினார். "அரசே, அது தனி நபர் கூற்றல்ல. அவ்வாறு இந்நகர் எண்ணுகிறது" என்றார் அமைச்சர். "எனில் இந்நகரை அழிப்பேன். இக்குடியின் குருதியிலாடுவேன். என் மைந்தனன்றி எவரும் எனக்கொரு பொருட்டல்ல" என்று அரசர் அலறினார்.

"நான் அச்சொல் இங்கு புழங்குகிறது என்பதை மட்டுமே உரைத்தேன். நம் இறுதி அன்னம் நம் மூதாதையர்களுக்குச் செல்லும்வரை நம் சொல் அவர்களை நோக்கி எழுந்தாகவேண்டும். நம் அரசர் மீண்டு வருவார்" என்றார் அமைச்சர்.

ஆனால் அன்றிரவு மூதரசர் தன் அரசியிடம் பேசுகையில் தளர்ந்த குரலில் "இன்று ஒருவன் என்னிடம் இவ்வாறு சொன்னான். எந்த தந்தைக்கும் இறப்பின் தருணம் அது. பற்றி எரிந்து எழுந்து கூவி அடங்கினேன் எனினும் என்னுள் எங்கோ அவ்விழைவை நானும் கொண்டிருக்கிறேனா என்ற ஐயம் வந்துவிட்டது. என் மைந்தன் கொள்ளும் துயரை என்னால் தாளமுடியவில்லை. நீ அறிவாய், நான் துயின்று நெடுநாட்களாயிற்று. சுவையறிந்து உண்ட காலம் மறந்தேன்" என்றார்.

நெஞ்சு எடைகொள்ள நீள்மூச்செறிந்து "என் நரம்புகள் வண்டுபட்ட சிலந்திவலைபோல இத்துயரை சுமக்கின்றன என்றார் மருத்துவர். இதை அறுத்து விடுவித்தாலொழிய எனக்கு மீட்பில்லை" என்றார். மஞ்சத்தில் அமர்ந்து தலையை

கைகளால் பற்றியபடி “மைந்தர் முதிர்வதற்குள் தந்தையர் உயிர்துறக்க வேண்டும். இல்லையேல் மைந்தர் கொள்ளும் உலகத்துயர்கள் அனைத்தையும் மும்மடங்கு விசையுடன் தந்தையர் அடைவர். நீண்ட உயிர்கொண்டவன் வாழ்வில் இன்பம் பெறமாட்டான் என்று அக்காலத்து மூதாதையர் சொன்னது அதனால்தான் போலும்” என்றார்.

மூதரசி அருகே அமர்ந்து அழுதுகொண்டிருந்தாள். அவர் சீற்றத்துடன் அவளை நோக்கி கைநீட்டி “அழுகிறாயா? நீ அழுதாக வேண்டும். பொன்னுடல் கொண்ட மைந்தனென்று எத்தனை முறை தெய்வங்களுக்கு முன் தருக்கி நிமிர்ந்து நின்றிருப்பாய்? வஞ்சம் கொண்டவை அவை. மானுடர் நிமிர்வதை விரும்பாதவை. அடிமைகள் தங்கள் காலடியில் நக்கி தவழ வேண்டுமென்று விரும்பும் கொடியவனாகிய ஆண்டையைப் போன்றவை. வாழ்த்துரைத்தும் பலியளித்தும் தெய்வங்களை நாம் மேலும் தீயவர்களாக்கி வைத்திருக்கிறோம்” என்று கூவினார்.

விழிகளை நிலம்நோக்கித் தாழ்த்தியபடி “தெய்வங்களை ஒன்றும் சொல்ல வேண்டாம்” என்று அவள் மெல்லிய குரலில் சொன்னாள். “பின் எவரைச் சொல்வது? சொல், எவரைச் சொல்வது?” என்று அவர் கையோங்கி அவளை அடிக்க வந்தார். விழிநீர் வழியும் பழுத்த விழிகளை நிமிர்த்தி அவரை கூர்ந்து நோக்கி “உங்கள் மைந்தனை சொல்லுங்கள்” என்றாள். குளிர்நீர் ஊற்றப்பட்டவர்போல் உடல் விதிர்த்து பின் தோள் தளர்ந்து “ஏன்?” என்றார் முதியவர்.

“எவளென்றறியாமல் அவளை எப்படி அவன் மணந்தான்? ஏன் இங்கு அழைத்துவந்து அரசியென்று அமர்த்தினான்? அவள் தந்தையை தாயை குலத்தை குடியை அவன் பார்த்தானா?

அதைப்பற்றி நான் மும்முறை அவனிடம் உசாவியபோது சினந்து என்னை அகன்று போகும்படி சொன்னான். அவளை சிறுமை செய்யும் பொருட்டு அதைக் கேட்கிறேன் என்று புரிந்துகொண்டான். எண்ணித் துணியாத அரசன் அனைத்தையும் அடைந்துதான் ஆகவேண்டும்” என்றாள் அன்னை.

தளர்ந்த குரலில் மூதரசர் “நீ இப்படி சொல்வாயென்று நான் எண்ணியதே இல்லை” என்றார். முதியவள் “இங்குளோர் அனைவரும் எண்ணுவது அதைத்தான். என்னை அஞ்சியே அவர்கள் அதைச் சொல்லாமல் விடுகிறார்கள். எனவே நான் சொல்லியாக வேண்டும். இத்துயர் அவன் விரும்பி எடுத்து சென்னிமேல் சூடிக்கொண்டது. அரசே, பெருந்துயர்கள் எவையும் தெய்வங்களால் அனுப்பப்படுவதில்லை. தெய்வங்களின் கைகளைத் தட்டி அகற்றி, தேவர்கள் அமைக்கும் கோட்டைகளை உடைத்துத் திறந்து, மனிதர்கள்தான் அவற்றைத் தேடிச் சென்று அடைந்து சுமந்துகொண்டு வருகிறார்கள். வென்றேன் வென்றேன் என்று கொக்கரிக்கிறார்கள். தெய்வங்கள் துயருடன் விழிகனிந்து மேலே நோக்கி நின்றிருக்கின்றன” என்றாள்.

நீள்மூச்சுடன் எழுந்து ஆடையை அள்ளி உடல்மேல் சுற்றிக்கொண்டு சுருங்கிய கன்னங்களில் படர்ந்து வழிந்த நீரை ஆடையால் துடைத்தாள். “இன்று சாவே அவனுக்கு முழுமையென்றால் அது விரைந்து வரட்டும். இப்போதல்ல, அவன் விழுந்தநாள் முதல் நான் தெய்வங்களிடம் வேண்டிக்கொண்டிருப்பது அது ஒன்றையே” என்றாள்.

அவளை நோக்கி நின்றிருந்த மூதரசரின் தலை குளிர் கண்டதுபோல் ஆடியது. அறியாது கை நீட்டி அருகிருந்த

பீடத்தைப் பற்றி நிலை மீண்டார். எடை மிகுந்து தரையுடன் உருகி ஒன்றானதுபோல் இருந்த கால்களை இழுத்து நடந்தார். மஞ்சத்தில் அமர்ந்து “தெய்வங்களே, மூதாதையரே” என்று கூவியபடி உடல்தளர்ந்து படுத்துக்கொண்டார். அரசி சிற்றடிவைத்து வெளியே செல்லும்போது “ஓர் அன்னையாக நீ துயர் கொள்ளவில்லையா?” என்றார்.

“அனைத்துத் துயரையும் உங்கள் அனைவருக்கும் முன்னரே முழுதறிந்துவிட்டேன். இனி துயர் ஏதும் எஞ்சியில்லை என்னும்போது இந்த அமைதியை அடைந்தேன்” என்றபின் அவள் வெளியேறினாள். முதியவர் படுக்கையில் படுத்து கைகளையும் கால்களையும் நீட்டிக்கொண்டார். அவர் உடலில் இருந்து அத்தனை மூட்டுகளும் மெல்ல கழன்று உடல் தனித்தனி உறுப்புகளாகியது. உள்ளம் நீர்மைகொண்டு ஒழுகிப்பரந்து சொட்டியது. இறுதியாக எண்ணிய ‘மேலாடை’ என்னும் சொல் அப்படியே காற்றில் நின்றிருக்கும் சுடர் என அசையாது நின்றது. அப்போது அவர் ஒரு விந்தையான உணர்வை அடைந்தார், அப்படுக்கையில் அவ்வண்ணம் படுத்திருப்பது புரூரவஸ்தான் என.

# மாமலர் - 22

### 22. எரிந்துமீள்தல்

ஒவ்வொருநாளும் அரசனின் உடல் சுருங்கி நெற்றாகி, உலர்ந்த புழுபோலாகி, வெண்பட்டுப்படுக்கையில் வழிந்த கறையென்றாகி கிடந்தது. அறையெங்கும் மட்கும் தசையின் கெடுமணமே நிறைந்திருந்தது. அதை மறைக்க குந்திரிக்கப் புகை எழுப்பிக்கொண்டிருந்தனர். தரையை மும்முறை கோரோஜனையும் புனுகும் கொண்டு தூய்மைப்படுத்தினர். தேவர்களை அடிமைகளாக்கி ஆளும் இருளுலகத்து கொடுந்தெய்வம்போல அனைத்து நறுமணங்களையும் தன்னுடன் இணைத்துக்கொண்டு மேலும் பெருகி நின்றிருந்தது அக்கெடுமணம்.

அரண்மனை முழுக்கவும் அந்த மணம் பரவி முற்றத்தில் நின்றால்கூட அதை முகரமுடிந்தது. “நோயுற்ற விலங்கின் உடலில் அழுகும் புண்போல் அம்மஞ்சத்தறை” என்றார் ஒரு முதுகாவலர். “இந்நகரிலுள்ள அனைவருக்கும் வலிக்கும் புண் அது, மூத்தவரே” என்றான் இன்னொரு இளைய காவலன். ஒவ்வொரு காலையிலும் அரசனின் இறப்புச்செய்திக்கென நகர் விழித்திருந்தது. ஒவ்வொருமுறை முரசு முதலுறுமலை எழுப்பியதும் முதலெண்ணத்துளி செய்திதான் என்றே செவிகூர்ந்தது.

பின்னர் அவன் இறக்கப்போவதில்லை என இளிவரலாக அவ்வெதிர்பார்ப்பை மாற்றிக்கொண்டது. ஆயிரம் ஆண்டுகாலம் அங்கு அவ்வுடல் அழுகியபடி கிடக்கும் என்றொரு சூதன் கதை சொன்னான். அதை பெரியதோர் முதுமக்கட்தாழியில் சுருட்டி அமைத்து பரணில் எடுத்து வைப்பார்கள். நெடுங்காலத்துக்குப் பின் அதை எடுத்துப்பார்த்தால் அழுகி நொதித்து ஊறி நுரையெழுந்து மதுவென்றாகியிருக்கும். அதில் ஒரு துளி அருந்தினால் காதற்பெருங்களிப்பை அடையமுடியும்.

ஏழாண்டுகாலம் காதலின் கொண்டாட்டத்தில் திளைத்தபின் எஞ்சிய வாழ்நாளெல்லாம் அதன் பெருவலியுடன் வாழத்துணிந்த எவருக்கும் அது அளிக்கப்படும். பேரின்பத்தின் பொருட்டு பெருந்துன்பத்தை ஏற்கத் துணிபவர் யோகியர். அவர்கள் உண்ணும் அறிவமுது அது. ஒரு கையில் தேன்கலமும் மறு கையில் நச்சுக்கலமும் என நின்றிருக்கும் ஒரு தேவியின் வடிவில் அதை இங்கு ஓர் ஆலயத்தில் வைப்பார்கள். ஒரு கண் நகைக்க மறு கண் சினக்கும் சிலை அவள். ஒரு காலை விண்ணிலும் மறு காலை கீழுலகிலும் விரித்து மண்ணுலகில் உடலமைத்து நின்றிருப்பாள். அவளை

பிரேமை என்றனர் கவிஞர். விண்ணாளும் முதலாற்றலின் பெண் வடிவம்.

ஒருநாள் மஞ்சத்தறைக்குச் சென்று வழக்கம்போல அரசனைப் போர்த்தியிருந்த போர்வையை மெல்ல விலக்கிய சேடி எப்போதும் மெல்ல தசை நெளிந்துகொண்டிருக்கும் அவன் வயிறு சேற்றுப்படிவென அமைந்திருப்பதைக் கண்டாள். மெல்ல அவன் மூக்கில் கை வைத்துப் பார்த்தாள். மூச்சோடுகிறதா இல்லையா என்பது எப்போதும் அறியக்கூடுவதாக இருந்ததில்லை. அவன் இறந்தபின்னர் அவனுடலில் ஏதோ அறியாத் தெய்வமே வாழ்கிறது என்னும் அலர் அரண்மனையில் அதனால்தான் புழங்கியது.

தன் ஆடையிலிருந்து சிறுநூலொன்றை எடுத்து அவன் மூக்கருகே காட்டினாள் அச்சேடி. அது அசையாமல் நிற்பதைக்கண்டு மூச்சிழுத்து நெஞ்சைப்பற்றி ஒருகணம் நின்றபின் வெளியே ஓடி அங்கு நின்றிருந்த மருத்துவர்களிடம் “அரசர் உயிரவிந்துவிட்டது போலும், மருத்துவரே” என்று சொன்னாள். அவர்கள் அதைப்போல பலமுறை கேட்டிருந்தனர். “நன்று, முதுமருத்துவர் வந்து நோக்கட்டும்” என்றனர். “இல்லை, உண்மையாகவே. இதை என் உள்ளாழமும் அறிந்தது...” என அவள் சொன்னாள்.

அவர்கள் ஆர்வமில்லாது உள்ளே சென்று அவன் நாடியைத் தொட்டு நோக்கினர். இருப்பதுபோன்றும் இல்லை என்றும் காட்டியது நாடி. முன்னர் பலமுறை அதைத் தொட்டு நாதமெழாமை உணர்ந்து இறந்துவிட்டானென்று எண்ணி மீண்டும் மீண்டும் நோக்கி உயிர்கொண்டுள்ளான் என உறுதி செய்தமையின் குழப்பம் அவர்களை ஆட்கொண்டது.

அவர்களில் இருவர் ஓடிச்சென்று முதுமருத்துவரை அழைத்துவந்தனர்.

முதுமருத்துவர் அரசனின் நாடியை ஏழுமுறை நோக்கியபின் "அரசர் இறந்துவிட்டார். ஐயமில்லை" என்றார். ஏவலர் அப்போதும் ஐயம்கொண்டிருந்தனர். செய்தி சென்றதும் ஆயுஸ் நேரில் பார்க்க வந்தான். அவனிடம் முதுமருத்துவர் அரசனின் மண்நீங்கலை சொன்னார். அவன் அரசனின் மஞ்சத்தருகே சற்றுநேரம் நின்றான். குனிந்து சுருங்கி சுள்ளி என்றாகிவிட்டிருந்த கால்களைத் தொட்டு தலையில் வைத்து வணங்கியபின் திரும்பி தன்னருகே நின்றிருந்த அமைச்சரிடம் "ஆவன செய்க!" என்றான்.

அரசன் விண்ணேகியதை அறிவிக்க முகக்கோட்டைமேல் எழுந்த பெருமுரசம் முழங்கலாயிற்று. ஆனால் அரசனின் இறப்பை எதிர்பார்க்கும் புலன்கள் முன்னரே மழுங்கிவிட்டிருந்தமையால் முதலில் அதை எவரும் அடையாளம் காணவில்லை. செவிமங்கி பிற ஒலி ஏதும் கேட்காது ஆன முதியவர் ஒருவர்தான் "அரசர் நாடு நீங்கினார் போலும்" என்றார். "என்ன?" என்றான் இளையவன் ஒருவன். அவர் தயங்கி "அந்த முரசொலி!" என்றார்.

அனைவரும் ஒரே தருணத்தில் திகைத்து "ஆம்!" என்றனர். மறுகணமே அம்முரசோசை சொல்லென மாறி பொருள் கொள்ளலாயிற்று. "சந்திரகுலத்து அரசன் புரூரவஸ் மண்மறைந்து விண்ணேகினான். புகழ்கொண்டு உடல் துறந்தான்!" நகரம் ஆர்த்தெழுந்தது. "நீடுவாழ்க அரசர். நெடும்புகழ் நின்று ஓங்குக!" என்று வாழ்த்து கூவினர். தெருக்களில் கூடிநின்று தங்கள் பூசெய்கை அறைகளிலிருந்து தட்டுமணிகளையும் செம்புக்கலங்களையும் கொண்டுவந்து

சீராகத் தட்டி ஒலிக்கத் தொடங்கினர். சற்றுநேரத்தில் குருநகரமே மாபெரும் இசைக்கருவி என அதிர்ந்துகொண்டிருந்தது.

உயிர் நீத்த அரசனுக்கு முறைமை செய்யும்பொருட்டு தாலங்களில் சுடர், நீர், மலர், கனி, பொன் என்னும் ஐந்து மங்கலப்பொருட்களும் மஞ்சளரிசியும் ஏந்தி தலைப்பாகைகளோ அணிகளோ இன்றி மக்கள் அரண்மனை நோக்கி நிரை நிரையாகக் குவிந்தனர். அரண்மனைமுற்றம் தலைகள் செறிந்து கருமைகொண்டது. அரண்மனைக்காவலர் எவரையும் கட்டுப்படுத்தவோ ஆணையிடவோ இல்லை. பேச்சில்லாமலேயே அரண்மனை எறும்புப்புற்றென சீராக இயங்கியது.

அரண்மனைக்குள் தங்கள் அறையில் மூதரசியும் அரசரும் விழிநீர் வார ஒருவர் கையை ஒருவர் பற்றியபடி தங்கள் முழுத்தனிமைக்குள் எட்டுத்திசை வாயில்களை மூடிக்கொண்டு அமர்ந்திருந்தனர். அவர்களிடம் அமைச்சர் சூழ ஆயுஸ் வந்து செய்தியைச் சொன்னபோது மூதரசர் கதறியழுதபடி நெஞ்சில் அறைந்துகொண்டார். அவர் கைகளை எட்டிப் பற்றிக்கொண்டாள் முதுமகள். அமைச்சர் அருகே செல்ல ஆயுஸ் வேண்டாம் என கைகாட்டினான்.

முதியவரை துணைவி மெல்லப்பற்றி படுக்கையில் படுக்கவைத்தாள். அவர் உடலில் மெல்லிய வலிப்பு வந்துசென்றது. அவர் பற்கள் கிட்டித்து கண்கள் செருகியிருந்தன. முதியவள் மெல்ல சாமரத்தால் வீசிக்கொண்டு அருகே அமர்ந்திருந்தாள். அவளுடைய மெல்லிய உதடுகள் ஒன்றுடன் ஒன்று இணைந்திருந்தன. சுருக்கங்கள் செறிந்த கன்னங்களினூடாக கண்ணீர்

வழிந்தது. பெருத்த விம்மலோசையுடன் முதியவர் மீண்டு வந்தார். தன் துணைவியின் கைகளைப்பற்றி நெஞ்சோடணைத்துக்கொண்டு விம்மி அழுதுகொண்டே இருந்தார். ஆயுஸும் அமைச்சர்களும் ஓசையின்றி விழிபரிமாறியபின் திரும்பி நடந்தனர். அதன்பின் அவர்கள் பிறரிடம் ஒரு சொல்லும் பேசவில்லை.

ஆயுஸ் முகமுற்றத்திற்கு வந்து அங்கு கூடியிருந்த மக்களிடம் அரசர் மண்மறைந்ததை முறைப்படி அறிவித்தான். அவர்கள் “பேரறத்தான் புரூரவஸ் வெல்க! சந்திரகுலத்து பெரும்புகழ் வாழ்க!” என்று கண்ணீருடன் கூவினர். இறப்பில் குவியம்கொண்ட புரூரவஸின் நற்பண்புகள் அவர்களை துயர்வெறி கொள்ளச்செய்தன. இறப்பு என்னும் பேருரு தங்களை அச்சுறுத்தி அத்தனை நற்பண்புகளையும் மறக்கவைத்து அவனை புறக்கணிக்கச் செய்ததை எண்ணியபோது எழுந்த குற்றவுணர்ச்சி உடன் இணைந்துகொண்டது.

ஈமச்சடங்குகள் இயற்றும்பொருட்டு வைதிகர் நூற்றொருவர் அரண்மனைக்கு வந்தனர். ஏழு நிமித்திகர் களம்பரப்பி அரசன் மண்மறைந்த பொழுதைக் கணித்து நாற்பத்தொரு நாட்களில் அவன் விண்ணுலகு சேர்வது உறுதி என்றனர். முற்றத்தில் அவன் உடல் கொண்டு வைக்கப்பட்டு குலமூத்தார் சூழ்ந்தமர்ந்து முறை செய்தபோது ஒரு தொல்சடங்கைச் செய்யும் அமைதியும் ஒழுங்குமே அங்கு நிலைத்தது. நிரையாக வந்து அவன் காலடியில் மங்கலப்பொருள் படைத்து மலரிட்டு வணங்கி சுற்றிச்சென்றனர் மக்கள். அவனுடன் குருதியுறவுகொண்ட மூத்தகுடிகளில் அவனுக்கு தந்தை, உடன்பிறந்தார், மைந்தர் முறை கொண்டவவர்கள் அவன்

முகத்தில் வாய்க்கரிசியிட்டு இடம்சுற்றி சென்றமர்ந்து கொண்டிருந்தனர்.

இறுதியில் மூதரசரையும் அரசியையும் நான்கு ஏவலர் கை பற்றி அழைத்து வந்தனர். மூதரசர் மூர்ச்சையில் கொண்டுவரப்படுபவர் போலிருந்தார். மூதரசி உள்மடிந்த மெல்லிய உதடுகளால் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தாள். முற்றத்தை அடைந்ததும் மூதரசர் திரும்பி எங்குள்ளோம் என நோக்கினார். விழி சென்று ஒருகணம் மைந்தனின் உடலைப்பார்த்ததும் அறியாது உடைந்து அடிபட்ட விலங்கென குரலெழுப்பி நடுங்கினார். அவரைத் தாங்கிவந்த முதிய வீரர் “அரசே!” என்று மெல்லச் சொல்லி அணைத்து முன்னால் இட்டுச்சென்றார்.

அரசியோ அங்கிலாதவள் போலிருந்தாள். சரடுகளால் இயக்கப்பட்ட பாவையென அவள் உடல் அசைந்தது. இருவரும் மும்முறை உடல் சுற்றிவந்து குல மூத்தார் அளித்த மலரையும் அரிசியையும் அவன் கால்களிலும் முகத்திலும் வைத்து மீண்டபோது முதற்படியிலேயே மூதரசர் நினைவழிந்து விழுந்தார். கூட்டம் ஓசையிட்டு சளசளக்க தளபதி ஒருவன் “அமைதி!” என ஆணையிட்டு அமையச்செய்தான். அரசரை போர்வையொன்றில் படுக்கவைத்து நான்குமுனைகளையும் பற்றித்தூக்கி உள்ளே கொண்டு சென்றார்கள்.

மூதரசி தடுமாறும் சிறிய அடி வைத்து செதுக்கிய மரப்பாவை போன்ற சுருங்கிய முகத்துடன் கூப்பிய கைகளுடன் அவரைத் தொடர்ந்து சென்றாள். அவர்கள் செல்வதை விழிநிலைத்து நோக்கி நின்றனர் மக்கள். அவர்கள் நோக்கு மறைந்ததும் நீள்மூச்சு ஒன்று அனைவரையும் தழுவியபடி எழுந்தது. சூதன்

ஒருவன் “துயர்கொள்ளுதல் ஒரு தவம்” என மெல்லிய குரலில் சொன்னான். அனைவரும் திரும்பிநோக்க அவன் தன் யாழின் நரம்பில் விரலை ஓட்டிக்கொண்டிருந்தான்.

ஆயுஸ் உடைவாளேந்தி தந்தையின் கால்மாட்டில் நின்றான். ஸ்ருதாயுஸ், சத்யாயுஸ் இருவரும் அவனுக்கு இருபக்கமும் வாளேந்தி நிற்க பின்னால் இரு சேடியரின் ஆடைகளைப் பற்றியபடி விஜயனும் ரயனும் நின்றனர். ஜயனை ஒரு முதுசேடி இடையில் வைத்திருந்தாள். குலச்சடங்குகள் ஒவ்வொன்றாக நிகழ்ந்தன. அரசனின் ஏழு மூத்தவர்களின் சிதைக்குழிகளில் வைக்கப்பட்ட நீர் அவன் மேல் தெளிக்கப்பட்டது. பன்னிரு குலங்களின் சார்பிலும் பட்டுகள் போர்த்தப்பட்டன. பன்னிரு குடிகளைச் சேர்ந்த பன்னிரு மூதன்னையர் அவனை தங்கள் மகன் என கொண்டு பாலூற்றி வணங்கினர். பன்னிரு குடியின் பன்னிரு சிறுவர் அவனை தம் தந்தையென எண்ணி நீரூற்றி கால்கழுவி வணங்கினர்.

பின்னர் வைதிகர்கள் அவன் உடலை கங்கைநீரூற்றி தூய்மை செய்தனர். வேதச்சொல் சூழ அவனை வாழ்த்தி விண்ணேற்றம் கொடுத்தனர். குடிமூத்தார் கிளம்புக என ஆணையிட்டதும் குரவையொலியும் வாழ்த்தொலியும் சூழ அவன் உடலை பசுமூங்கில் பின்னிக்கட்டி மலர் அணிசெய்த பாடை மேல் ஏற்றிவைத்தனர். முரசுகள் முழங்கின. கொம்புகளும் குழல்களும் சங்கும் மணியும் இணைந்துகொண்டன.

அரசனின் உடல் அரசகுடியின் இடுகாடு நோக்கி கொண்டு செல்லப்பட்டது. வேதமோதிய அந்தணர் குழு முன்னால் செல்ல இசைச்சூதர்கள் இசையுடன் தொடர்ந்தனர். வாழ்த்தொலிகளுடன் அவன் குடிநிரைகள் பின்னால் சென்றனர். அவன் மணந்த தேவியர் மங்கலக்குறி களைந்து மரவுரி

அணிந்து விரிந்த தலையுடன் நெஞ்சை அறைந்து அழுதபடி அரண்மனை முற்றத்தின் எல்லைவரை வந்து அங்கு விழுந்து மயங்கினர். அரண்மனைப்பெண்டிர் கண்ணுக்குத்தெரியா வரம்பால் கட்டப்பட்ட கடல் அலைகளைப்போல முற்றத்திற்குள் நெஞ்சறைந்தும் தலையறைந்தும் அலறியும் விழுந்து அழுதுநின்றனர்.

ஆயுஸும் மைந்தர் ஐவரும் இருபுறமும் பாடையை தொடர்ந்தனர். சந்திரகுலத்தின் பதினெட்டு பெருங்குடிகளைச் சேர்ந்தவர்கள் பாடையை தூக்கிச் சென்றனர். போரில் விழுந்த அரசனை முரசொலிக்க கொம்பும் குழலும் துணைக்க வேலும் வாளும் ஏந்திய படைவீரர்கள் களநடனமிட்டு முன்செல்ல தெற்கு நோக்கி கொண்டு செல்வது குருநகரியின் வழக்கம். நோயுற்று முதிர்ந்த அரசனின் இறப்பை குல மூத்தார் பன்னிருவர் முன்னால் சென்று சங்கூதி மூதாதையருக்கு அறிவித்துக்கொண்டு செல்ல ஆண்கள் கழியேந்தி வேட்டைநடனமிட்டுக்கொண்டு செல்வார்கள். இளமையில் நோயுற்று இறந்த புரூரவஸை சிதை நோக்கி கொண்டுசெல்கையில் ஒவ்வொருவரிடமும் துயரும் அமைதியுமே விளைந்தது.

குருநகரியின் குறுங்கோட்டையின் தெற்கு வாயிலினூடாக பாடை சுமந்து சென்ற பெருநிரை அப்பால் கடந்து அங்கு விரிந்திருந்த இடுகாடுகளை அணுகியது. நெருஞ்சியும் ஆவாரையும் கொடுவேலியும் எருக்கும் மண்டியிருந்த அப்பாழ்வெளியில் அன்றுதான் வழிசெதுக்கப்பட்டிருந்தது. அந்தப் புதுமண்ணில் மண்புழு நெளியும் கதுப்பில் காலடிகள் மேலும் மேலுமென பதிந்து சென்றன. இருமருங்கும் செறிந்த

மரங்களிலிருந்து பறவைகள் கலைந்து எழுந்து வானில் சுழன்றொலித்தன.

அரசர்களுக்குரிய இடுகாடு தென்மேற்கே எழுந்த நடுகற்கள் மலிந்த குன்றொன்றின் அடிவாரத்தில் அமைந்திருந்தது. அங்கு ஓடிய சிற்றாறு பூர்வமாலிகா என்றழைக்கப்பட்டது. அதன் கரையில் மண்குழைத்து இடையளவு உயரத்தில் அமைக்கப்பட்ட மேடையில் சந்தனக்கட்டைகளால் ஆன சிதை ஒருக்கப்பட்டிருந்தது. நெய்யும் தேன்மெழுகும் கொம்பரக்கும் ஒருபுறம் கடவங்களில் காத்திருந்தன. குங்கிலியமும் குந்திரிக்கமும் ஜவ்வாதும் புனுகும் கோரோஜனையும் பிற நறுமணப்பொருட்களும் மறுபால் வைக்கப்பட்டிருந்தன. பதினெட்டு மலர்க்கூடைகளில் ஏழுவகை மலர்கள் நீர் தெளித்து வாடாது பேணப்பட்டிருந்தன.

இடுகாட்டுத் தலைவன் தொலைவில் எழுந்த ஓசையைக் கேட்டதும் கைகாட்ட வெட்டியான்கள் எழுவர் எழுந்து தங்கள் வெண்சங்குகளை ஊதினர். அவர்களின் கலப்பறைகள் ஒலிக்கலாயின. மரங்கள் நடுவே வண்ணங்கள் ஒழுகி ஆறென வருவதுபோல அந்த அசைவுநிரை தெரிந்தது. இடுகாடு ஒருக்க அமைக்கப்பட்டிருந்த சிற்றமைச்சர் வேர்வை வழியும் வெற்றுடலுடன் ஆணைகளை இட்டபடி அங்குமிங்கும் பாய்ந்துகொண்டிருந்தார்.

இடுகாட்டை அணுகிய வைதிகர்கள் வெளியிலேயே நின்று பொற்குடங்களிலிருந்த நீரை மாவிலைகளில் அள்ளி அரசன் செல்லும் பாதையில் தெளித்து
வேதம்பாடி தூய்மைப்படுத்தியபின் வேதமோதியபடியே சென்று பூர்வமாலிகாவில் இறங்கி மூழ்கி மறுபுறம் கரையேறி ஈர ஆடையும் குழலுமாக தங்களை தூய்மைப்படுத்தும்

வேதச்சொற்களை உரைத்தபடி அவ்வழியே சென்று மறைந்தனர். குலமூத்தார் முன்னால் சென்று அரசனின் பாடையை இறக்கி வைத்தனர்.

அதுவரை இயல்பாக நடந்து வந்த பலரும் உளம் தளர்ந்துவிட்டிருந்தனர். எங்கோ எவரோ விசும்பும் சிற்றொலி எழுந்தபோது கட்டுகள் அவிழ்ந்து அனைவருமே அழத்தொடங்கினர். சற்று நேரத்தில் அம்மானுடநிரையின் இறுதிவரை தேம்பும் ஒலி எழுந்து அவ்வெளியை சூழ்ந்தது. சிதைச்சடங்குகள் ஒவ்வொன்றாக முடிந்ததும் குலமூத்தார் அரசன் படுக்கவைக்கப்பட்டிருந்த பட்டின் நான்கு முனையையும் பற்றி மெல்ல தூக்கிக்கொண்டு சென்று சிதைமேல் வைத்தனர். அவன் உடம்புக்கு மேல் மெல்லிய சந்தனப்பட்டைகள் அடுக்கப்பட்டன. சுற்றிலும் நெய்யும் அரக்கும் தேன்மெழுகும் ஊற்றப்பட்டது.

அரக்கிலேயே எரிமணம் உறைந்திருந்தது. எரியின் குருதி அது என சூதர்சொல் என்பதை ஆயுஸ் நினைவுகூர்ந்தான். அவன் உள்ளம் விழவு ஓய்ந்த களமென உதிரி வீண்சொற்கள் சிதறிக்கிடக்க வெறித்திருந்தது. வெற்றுவிழிகளுடன் அனைத்தையும் பார்த்தான். பிறிதெங்கோ இருந்துகொண்டும் இருந்தான். அங்கே வாளேந்தி நிற்கவேண்டியவன் ஜாதவேதஸ் அல்லவா என நினைத்தான். ஆனால் வேதத்துறவு கொண்ட அவனுக்கு குருதியும் குலமும் குடியும் இல்லமும் ஏதுமில்லை. அதை எண்ணி அவனுக்காக அவன் பலமுறை வருந்தியதுண்டு. அப்போது அவன் பறவை என்றும் தான் புழு என்றும் தோன்றியது.

“அரசமைந்தர் எழுக...! எரிசெயல் ஆகுக!” என்றார் ஈமச்சடங்குகளை நடத்திய முதுவெட்டியான். ஆயுஸ் சென்று

அரசநாவிதன் முன் அமர்ந்தான். அவன் கந்தகம் கலந்த நீரில் கைமுக்கி அவன் குழல்கற்றையை ஈரமாக்கி கூர்கத்தியால் மழித்து முடித்தான். முடி காகச்சிறகுகள் போல அவன் மடியிலும் தரையிலும் விழுந்தது. எவருக்கோ அவை நிகழ்வதுபோல அவன் எண்ணினான். கிண்ணத்தில் இருந்து மலரால் கந்தகநீர் தொட்டு அவன் தலையில் தெளித்து “அவ்வாறே ஆகுக!” என்றான் நாவிதன். அவனுக்கு ஏழு பொன்நாணயங்களை காணிக்கையாகக் கொடுத்துவிட்டு கைகூப்பியபடி ஆயுஸ் எழுந்தான்.

அவன் உடன்பிறந்தார் இருவரும் இருபுறமும் உடைவாள் கொண்டு தொடர்ந்தனர். சிறுவர்கள் ஒருவர் கையை ஒருவர் பற்றியபடி தங்களை ஏவிய முதுஏவலர்களின் சொல்லுக்கு ஏற்ப நடந்தனர். முதிய ஏவலர் ஒருவரின் இடையில் அமர்ந்து வாயில் சுட்டுவிரல் இட்டபடி வந்த ஜயன் அங்கு நிகழ்வதை நோக்கிக்கொண்டிருந்தான். வரும் வழியில் ஓசையை அஞ்சி அழுது காலுதறித் துடித்து பின்பு சற்று துயின்று எழுந்த அவன் முகத்தில் கண்ணீரின் இரு கோடுகள் உப்பெனப் படிந்திருந்தன. மீண்டும் ததும்பிய கண்ணீர் இமைகளிலும் விழிப்படலங்களிலும் சிதறி இருந்தது.



“நற்பொழுது” என்றார் குலமூத்தார் ஒருவர். பிறிதொருவர் கைதூக்க முழவுகளும் கொம்புகளும் சங்குகளும் மணிகளும் இணைந்து ஆர்த்தன. புரூரவஸின் புகழ் பாடி சூதர்கள் இசைக்குரல் பெருக்கினர். குடிகள் அழுகையோசை கொண்டன. இடறிய குரலில் வாழ்த்தொலிகளும் கலந்தெழுந்தன. “சந்திரகுல மூதாதை வாழ்க! குருநகரி ஆண்ட பேரரசன் வாழ்க! அறச்செல்வன் வாழ்க! வெல்லற்கரிய பெரும்புயத்தான் வாழ்க!” என ஓசையிட்டனர் மக்கள்.

ஆயுஸின் கையில் மூன்று உறவுமைந்தர் கொண்டுவந்த எரிகுட உறியை அளித்தனர். அனல் பெருக்கப்பட்ட அக்கலத்தை ஏந்தியபடி சிதையை மும்முறை சுற்றிவந்து அவன் தந்தையின் கால்களில் மலரிட்டு வணங்கினான். மைந்தர் நால்வரும் மும்முறை சுற்றி வந்து கைமலர்த்தி மலரிட்டு வணங்கினர். ஜயனை ஏந்திய முதுஏவலர் அவனை தந்தையின் காலடியில் மெல்ல இறக்கி மலரள்ளி அவன் கையில் கொடுத்து போடும்படி சொன்னார். நாற்புறமும் சூழநின்றவர்களை விரிவிழிகளால் திகைத்து நோக்கியபடி கையை உதறிவிட்டு திரும்பி ஏவலன் தோளை கட்டிக்கொண்டான் ஜயன்.

அரசருக்கு அணுக்கர்களும் குருதிஉறவு கொண்டவர்களும் குல மூத்தாரும் சுற்றி வந்து மலர் தொட்டு எடுத்து அடிபணிந்து சென்னிசூடி வணங்கி விலகியமைந்தனர். "எரியூட்டுக!" என்றார் முதுகுலத்தலைவர். அதுவரை இறுகிய முகம் பூண்டிருந்த ஆயுஸ் விம்மி அழத்தொடங்கினான். "அரசே, அரசர்கள் அழலாகாது" என்று மெல்ல சொன்ன குலத்தலைவர் "எரியூட்டுக!" என்றார்.

ஆயுஸின் கைகள் அவன் உள்ளத்தை அறியாததுபோல குளிர்ந்திருந்தன. "எரியூட்டுக, அரசே!" என்று மீண்டும் சொன்னார் குலமூத்தவர் ஒருவர். அவன் விம்மி அழுதபடி ஒரு அடி பின்னெடுத்து வைத்தான். "இது தாங்கள் கொண்ட பேறு. அவருக்கு தாங்கள் அளிக்கும் இறுதிக் கொடை. மைந்தனென தங்கள் கடன்" என்றார் குலமூத்தார். "இல்லை! இல்லை!" என்றபின் மீண்டு விலக பிறிதொருவர் அவன் தோளைப்பற்றி "முறை செய்க, அரசே!" என்றார்.

இரு குலமூதாதையர் அவன் இரு கைகளையும் பற்றி அக்கைகளில் இருந்த அனல்குடத்தை சிதையின் காலடியில் இருந்த நெய்நனைவின்மேல் வைத்தனர். திப் என்னும் ஒலியுடன் நீலச்சுடர் பற்றி எரிந்து மேலேறியது. பசு நீர் அருந்தும் ஓசை எழ செந்நிற நீர்போல் நெய்பட்ட இடமெல்லாம் வழிந்து பரவி மலரிதழ்கள்போல் கொழுந்தாடி எழுந்தது எரி.

அக்கணம் சிதையில் இருந்த புரூரவஸின் உடல் மெல்ல எழுந்தமைந்தது. விறகு விரிசலிடுவது என்னும் ஐயமெழுப்பும்படி மெல்லிய முனகலொன்று அவன் நெஞ்சிலெழுந்தது. அதை ஆயுஸ் மட்டுமே கேட்டான். உடல்துடிக்க “நிறுத்துக! எந்தை இறக்கவில்லை! எந்தை இறக்கவில்லை!” என்று கூவியபடி நெருப்பின் மேல் பாய்ந்து சிதைமேல் தவழ்ந்து ஏறி புரூரவஸின் இரு கால்களையும் பற்றி இழுத்து சிதையிலிருந்து புரட்டி தரையிலிட்டான்.

நிலத்தில் கவிழ்ந்து விழுந்த புரூரவஸின் உடல் மீண்டும் ஒரு முறை துடித்தது. அந்த வலியை உணர்ந்து முனகியபடி இடக்கையை சற்றே ஊன்றி தலைதூக்கி வாய்திறந்து அவன் முனகினான். “அரசர் இறக்கவில்லை! அரசர் இறக்கவில்லை!” என்று முன்நிரையோர் கூவினர். என்ன ஏதென்று அறியாமல் பின்னிரையோர் பின்னால் திரும்பி ஓடினர். சிலர் கூச்சலிட்டபடி சிதை நோக்கி வர காவலர்கள் ஈட்டிகளும் வேல்களும் ஏந்தி வேலியாகக் கட்டி அவர்களை மறித்து நிறுத்தினர். கூச்சல்களும் ஓலங்களும் அலறல்களும் அங்கே நிறைந்தன.

“கழுவேற்றுங்கள்! அம்மருத்துவர்களை கழுவேற்றுங்கள்!” என்று யாரோ கூவினார்கள். “கிழித்தெறியுங்கள்! அவர்களின்

குலங்களை எரியூட்டுங்கள்!” என்று வேறொரு குரல் எழுந்தது. “ஆம்! ஆம்... கொல்க... கொல்க!” என கூட்டம் கொந்தளித்தது. விலகியோடியவர்கள் திரும்பவந்து கூடினர். கூட்டம் அலைக்கொந்தளிப்பு கொண்டு ஆரவரித்தது.

தீப்புண் பட்டிருக்கலாம் என்ற எண்ணத்தில் குடத்திலிருந்த குளிர்நீரை கொண்டுவந்து புரூரவஸின் மேல் கொட்டினார் குலமூதாதை ஒருவர். சத்யாயுஸும் ஸ்ருதாயுஸும் தந்தையின் உடலை பற்றிக்கொண்டு “எந்தையே! எந்தையே!” என்றனர். விஜயனும் ரயனும் ஏவலர் உடல்களில் முகம் புதைத்தனர். ஜயன் விழித்து நோக்கி திரும்பி ஒரு காகத்தை முகம் மலர்ந்து சுட்டிக்காட்டினான்.

புரூரவஸின் உதடுகள் வெயில் பட்ட புழுக்களென நெளிந்தன. “நீர் கொண்டுவாருங்கள்! இன்நீர் கொண்டுவாருங்கள்!” என்றனர் சிலர். ஒருவர் கொண்டுவந்த குளிர்நீரை மூன்று முறை உதடு நனைந்து வழிய உறிஞ்சிக்குடித்ததும் புரூரவஸ் கண் விழித்தான். “எங்கிருக்கிறேன்?” என்றான். அவன் உதடசைவால் அதை உணர்ந்தாலும் என்ன சொல்வதென்று அவர்களுக்கு தெரியவில்லை. அவர்கள் மறுமொழி சொல்வதற்குள் அவனே புரிந்துகொண்டு “இடுகாடா?” என்றான்.

ஆயுஸ் அஞ்சி பின்னடைந்தான். குலமூத்தார் ஒருவர் “அரசே, தாங்கள் இறந்து மீண்டிருக்கிறீர்கள்” என்றார். “ஆம், நான் அங்கு சென்று அவளைக் கண்டேன். மீளும்படி அவள் சொன்னாள்” என்றான். பின்னர் தெளிவுற அனைத்தையும் உணர்ந்தவனாக இரு கைகளையும் ஊன்றி உடலை மெல்ல மேலே தூக்கி “நிமித்திகர்களோ மருத்துவர்களோ அவர்களின் குடிகளோ எவ்வகையிலும் தண்டிக்கப்படலாகாது. இது அரசாணை!” என்றான்.

அருகே நின்ற அமைச்சர் “ஆணை, அரசே!” என்றார். திரும்பி துணைஅமைச்சர்களை நோக்கி ஓடிச்சென்று “இது அரசாணை! நிமித்திகர்களோ மருத்துவர்களோ பிறரோ எவ்வகையிலும் தீங்கிழைக்கப்படலாகாது. முரசறைந்து அறிவியுங்கள்!” என்றார். அவர்கள் கைகளை வீசியபடி ஓடினர். எவரோ ஒருவர் “பேரறத்தார் எங்கள் அரசர் வெல்க! நீணாள் வாழ்க சந்திரன் பேர்மைந்தர்!” என்று கூவ கூட்டம் வாழ்த்தொலியால் கொந்தளித்தது.

புரூரவஸ் மீண்டும் விழிகளை மூடியபின் “இனி நான் மீண்டெழுவேன்… ஆம்…” என்றான். “ஆம் தந்தையே, தாங்கள் மீண்டெழுவீர்கள். நூறாண்டுகாலம் வாழ்வீர்கள்” என்று ஆயுஸ் சொன்னான். அப்போதுதான் அவன் கால்களும் கைகளும் எரி நெய்யால் தசையுருகி வழிந்துகொண்டிருப்பதை அமைச்சர்கள் கண்டனர். “இளவரசரை மருத்துவரிடம் கூட்டிச் செல்லுங்கள் உடனே! வழிவிடுங்கள்!” என்றனர். “ஒன்றுமில்லை… நான் மீண்டுவிடுவேன்” என்றான் ஆயுஸ் முகம் மலர்ந்திருக்க, விழிநீர் வழிய.

“இளவரசரை அழைத்துச் செல்லுங்கள்” என்று குலமூத்தார் கூவினர். வெண்பட்டொன்றை விரித்து அதில் படுக்கவைத்து ஆயுஸை தலைக்கு மேல் தூக்கிச்சென்றனர். அவனுக்குப் பின்னால் புரூரவஸையும் ஏவலர் கொண்டுசென்றனர். “அறம் இறப்பதில்லை. தன் சிதையிலிருந்தும் முளைத்தெழும் ஆற்றல் கொண்டது அது” என்று ஒரு புலவர் தன் இரு கைகளையும் விரித்து கூவினார். “அறச்செல்வர் வாழ்க! சந்திரகுலத்து முதல் மன்னன் வாழ்க!” என்று குருநகர் குடிகள் எழுப்பிய வாழ்த்தொலிகளால் இடுகாட்டுவெளியின் அனைத்து

இலைகளும் அதிர்ந்தன. அவ்வோசைகளின் மேல் மிதந்து செல்வதுபோல் இருவரும் ஒழுகி அகன்று சென்றனர்.

# மாமலர் - 23

## 23. இருள்மீட்சி

பன்னிரு நாட்கள் துயிலிலேயே இருந்தான் புரூரவஸ். மென்பட்டுச் சேக்கையில் கருக்குழவியென உடல் சுருட்டி, முட்டுகள் மேல் தலை வைத்து, இரு கைகளையும் மடித்து கழுத்தில் சேர்த்து படுத்திருந்தான். மருத்துவர்கள் அவனை நோக்கியபின் "மூச்சும் நெஞ்சும் சீரடைந்துள்ளது. உமிச்சாம்பலுக்குள் அனல் என உடலுக்குள் எங்கோ உயிர் தெரிகிறது" என்றனர். நெஞ்சுபற்றி ஏங்கிய மூதரசரிடம் "ஆயினும் நம்பிக்கை கொள்வதற்கு ஏதுமில்லை. இது இறுதி விழைவொன்று எஞ்சியிருப்பதனால் மண் மீண்டு வந்த உயிரின் சில நாட்களாகவும் இருக்கலாம்" என்றனர். அவர் "நற்செய்தி சொல்லுங்கள், மருத்துவர்களே!" என கைபற்றி ஏங்கினார். "அவன் மீண்டு வருவான் என அவர்கள் சொல்லவில்லை. இதையும் அவர்களால் சொல்ல இயலாது" என்றாள் அன்னை.

சிதை சென்றவன் மீண்டு வருதல் நாட்டுக்கு நலம் பயக்குமா என்று நகர்மக்கள் ஐயுற்றனர். சென்றவன் மீள்வது நற்குறியல்ல. வாய்க்கரிசி இடப்பட்டவனுக்கு அருகே இருளுலகத்தின் பன்னிரு தெய்வங்கள் வந்து சூழ்ந்துகொள்கின்றன. அழுகைகளையும் அமங்கலப் பொருட்களையும் கண்டு அவை உளமகிழ்கின்றன. காண்பவர் உள்ளங்களுக்குள் துயரின் அறவுணர்வின் இங்கிதத்தின்

சுவர்களை மீறிச்சென்று அமர்ந்து மெல்லிய உவகை ஒன்றை அவை ஊதி எழுப்புகின்றன. பாடையில் படுத்திருப்பவனைச் சூழ்ந்திருக்கும் துயரையே அணுகிநின்றோர் காண்பர். அகன்று நிற்பவர்கள் அங்கே நின்றிருப்பவர்களின் உடலசைவுகளில் வெளிப்படும் நிறைவையும் நிம்மதியையும் காணமுடியும். அவர்களின் நிழல்களை மட்டும் கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தால் அங்கே எழுந்துள்ள இருட்தெய்வங்களின் அசைவை கண்கள் அறியும் என்றனர் குலப்பாடகர்.

இடுகாட்டுக்கு பாடை கொண்டுசெல்கையில் நிழலுருக்களென தொடர்கின்றன அத்தெய்வங்கள். சிதையில் எரி எழுந்து தழலாடுகையில் சூழ்ந்து களியாட்டு கொள்கின்றன. அவ்வுடல் உருகி கருகி நெய்யென்றாகி எரியுண்டு விண்ணில் மறைகையில் உதறி எழும் உயிரை சரடெறிந்து பற்றி இழுத்துக்கொண்டு தங்கள் உலகுக்கு செல்கின்றன. இறக்கும் எவ்வுயிரும் சென்றடைவது மண்ணுக்கு அடியில் வாழும் இருளுலகையே. ஒவ்வொரு கல்தரிப்புக்கும் நடுவே சிறுதுளி இருளென நிறைந்திருப்பது அவ்வுலகே. அங்கே அவை பதினாறு நாட்கள் வாழ்கின்றன. அங்குள்ள துலாமேடை ஒன்றில் அவ்வுயிர்கள் நிறுத்தப்படுகின்றன. யமன் தலைமையில் நூற்றெட்டு இருளுலகதேவர்கள் அவற்றை பிழையும் பழியும் உசாவி அவை மிகுந்திருப்பின் மேலும் அடியில் வாழும் இருளுலகுகளுக்கு தள்ளுகின்றனர். பதினாறாம்நாள் ஊண்கொடை அதன்பொருட்டே.

பழிகடக்கும் நிறைகளால் விடுவிக்கப்படும் நல்லுயிர்கள் எழுந்து விண்ணுக்கு அடியில் மண்ணுக்குமேல் கொதிக்கும் அடுமனைக்கலத்திற்குமேல் நீராவி என அருவுருவாகி

நின்றிருக்கும் மூச்சுலகிற்கு செல்கின்றன. அங்கே நாற்பத்தொரு நாட்கள் அவ்வுயிர்கள் வாழ்கின்றன. அவற்றை அங்கே விண்கனிந்து வந்தமையும் மூதாதையர் கூடியமர்ந்து உசாவுவார்கள். நன்றும் அன்றும் முறையும் வழுவும் சொல்லி கணக்கு தீர்க்கப்படும். நன்று மிகையே எனில் மூதாதையர் அவ்வுயிரை அள்ளி தங்கள் நெஞ்சோடணைத்து கொண்டுசெல்வார்கள். ஏழு விண்ணுலகங்களையும் கடந்து நலம் நிறைந்தோர் சென்றடையும் ஃபுவர் லோகத்தை அவ்வுயிர் அடையும். அங்கு தவம் முழுத்ததென்றால் தேவருலகடையும். நாற்பத்தோராம் நாள் நீர்க்கொடை அதனால்தான்.

இங்கு விட்டுச்சென்ற விழைவுகள் அவற்றை இழுக்குமென்றால் விண்சென்ற நீராவி குளிர்ந்து சொட்டுவதுபோல் மூச்சுலகிலிருந்தே மண்ணுதிர்ந்து மீண்டும் கருபுகுந்து உருவெடுத்து மண் திகழும் அவ்வுயிர்கள். “விழைவுகளின் சரடறுத்து வினைகளின் வலையறுத்து விண்புகுதல் எளிதன்று” என்றனர் குலமூத்தார். “சிதைசென்ற அரசன் மீண்டு வருகையில் ஆழுலகத்து தெய்வங்கள் அவனுடனே நகர் புகுந்துவிட்டிருக்கின்றன போலும்” என்றனர் மூதன்னையர். “இன்று அவை அவர் அரண்மனைச் சேக்கையைச் சூழ்ந்து நின்றிருக்கும். சினந்தும் சீறியும் சுழன்றாடும். பின் இருட்துளிகளென்றாகி அவர் நிழலில் குடியேறும். இவ்வாழ்வை உதறி மீண்டும் அவர் சிதை செல்லும்வரை அவை அவருடன் இருக்கும்” என்றார் பூசகர்.

ஒவ்வொரு நாளுமென புரூரவஸ் தன் உடலிலிருந்து முளைத்து மீண்டு வந்தான். கருவறை விட்டு இறங்கிய கைமகவு என அவன் விழிகளில் நோக்கின்மை பாலாடையென

படிந்திருந்தது. கைகளும் கால்களும் ஒத்திசைவிழந்திருந்தன. மெல்ல அவன் தசைகளில் துடிப்பு எழுந்தது. மட்கிய மரப்பட்டைபோலிருந்த தோல் உரிந்து உயிர்த்தோல் எழுந்து வந்தது. உதிர்ந்த மயிர்கள் ஆலமரக்கிளையில் புதுத்தளிர் பொடித்தெழுவதுபோல முளைத்தன. கண்கள் ஆடைவிலகி முகம் நோக்கத் தொடங்கின. நாவு துழாவி எழுந்த ஒலி சொல்லென திருத்தம் கொண்டது. நீர்சொட்டி அசையும் இலையென திடுக்கிட்டு திடுக்கிட்டு எழுந்தமைந்த நெஞ்சக்கூடு உலைதுருத்தி என சீராக மூச்சு இழுத்து உமிழத் தொடங்கியது.

புரூரவஸ் ஓநாய்க்குட்டியின் பெரும்பசி கொண்டவனானான். நாழிகைக்கொருமுறை படுக்கையை கையால் தட்டி “உணவு! உணவு!” என்று அவன் கூவினான். பாலில் கரைத்த தேனை முதலில் அவனுக்கு ஊட்டினர். பின்னர் உப்பிட்ட அன்னச்சாறு. நெய்சேர்த்த இளங்கஞ்சி சில நாட்களிலேயே. ஒவ்வொருநாளும் நெல்லிக்காய்ச்சாறு கலந்த பழக்கூழ் அளிக்கப்பட்டது. பின்னர் நெல்லிக்காய், தானிக்காய், கடுக்காய் கலந்த முக்காய்வடித்த மூலிகைமது மூன்றுவேளை கொடுக்கப்பட்டது. வேம்பெண்ணை பூசி உலரச்செய்த உடல்மேல் கல்மஞ்சளும் சந்தனமும் பயறுப்பொடியும் உழப்பிய கலவை பூசப்பட்டு வெந்நீரில் முக்கிய மென்பஞ்சால் வேது செய்யப்பட்டு ஒற்றி எடுக்கப்பட்டது.

உடல் பெருக்கி நாற்பத்தொன்றாம்நாள் படுக்கையில் எழுந்தமர்ந்தான். கூட்டுப்புழுவின் உடலென அவன்மேல் உலர்ந்த தோல்சுருள்கள் இருந்தன. விரிந்த தசைகளின் வெண்வரிகள் தோளிலும் புயங்களிலும் மழைநீர்வடிந்த மென்மணற்தடமென படிந்திருந்தன. அவன் எழுந்தமர்ந்து உணவுண்டுகொண்டிருந்தபோது கைகூப்பியபடி உள்ளே வந்த

அமைச்சர் உவகையுடன் "இக்காட்சியைக் காண்பதற்கென்றே என் விழிகள் நோக்குகொண்டன போலும். இந்நாள் இனியென்றும் குருநகரியின் விழவுநாள்" என்றார். வாயில் வடிந்த கஞ்சியைத் துடைத்த சேடியின் கையை விலக்கி அவரை அயலவர் என நோக்கும் கூர்மையுடன் விழிநாட்டி "என் மணிமுடியை இப்போது சூடுவது யார்?" என்று கேட்டான் புரூரவஸ்.

குழப்பத்துடன் "தங்கள் முதல் மைந்தர் ஆயுஸ், அரசே" என்றார் அமைச்சர். "நான் இறக்கவில்லை என்று அவன் வருந்துகிறானோ?" என்றான் அரசன். புரூரவஸின் விழி அல்ல அது என்று அமைச்சர் உள்ளே திடுக்கிட்டார். "என்னை சிதைக்கு கொண்டுசெல்ல காத்திருந்தான்போலும்" என்றான் புரூரவஸ். அமைச்சர் "அரசே, இளவரசர் மணிமுடி சூடுவதில்லை. கோலேந்தி கொலுவீற்றிருப்பதுமில்லை. நெறி வழங்குகையில் மட்டுமே அரியணை அமர்கிறார். குல அவைகளில் மட்டுமே கோல் கைக்கொள்கிறார். அரசுமுறை செய்திகளில் மட்டுமே கணையாழியில் முத்திரை இடுகிறார்" என்றார். "ஆம். தன் எல்லைகளை அவன் உணர்ந்திருப்பது நன்று" என்றான் புரூரவஸ்.

மறுவாரமே எழுந்து நடக்கலானான். "என் அணியாடைகள் வரட்டும்!" என்று ஆணையிட்டான். ஆடையும் அணியும் அவனுக்கு உடல் கொள்ளாதபடி சிறிதாகிவிட்டிருந்தன. அனைத்தையும் புதிதாக சமைக்கும்பொருட்டு அணிக்கலைஞர்களுக்கும் பொற்கொல்லர்களுக்கும் ஆணையிட்டான். புதிய தோற்றத்தில் முடிசூடி கோலேந்தி வெண்குடை எழ அவன் அவை மீண்ட அன்று குடிகளும் குலமூத்தாரும் பெருவணிகரும் படைவீரர்களும் ஒருங்கே

பேருவகை கொண்டனர். எழுந்து நின்று கைகளை உயர்த்தி “சந்திரகுலத்து முதல் மன்னன் வாழ்க! பேரறத்தான் வாழ்க! பெருங்கருணையோன் வாழ்க! இறந்து மீண்ட இறையருளோன் வாழ்க!” என்று அவர்கள் குரலெழுப்பியபோது அது அவர்களின் உயிர்விசை கொண்டிருந்தது.

அவைக்குள் நுழைந்து அவ்வாழ்த்துக்களை தலைவணங்கி ஏற்று அரியணையில் அமர்ந்து உடலை எளிதாக்கிக்கொண்டதும் இயல்பாகவே அவன் நோக்கு திரும்பி அருகிலிருந்த ஆயுஸைப் பார்த்தது. இரு புருவங்களும் சுருங்கி ஒன்றையொன்று தொட்டன. சற்று தலைசரித்து அருகே நின்றிருந்த அமைச்சரிடம் “அவன் ஏன் இங்கிருக்கிறான்?” என்றான். “அதுதான் முறைமை, அரசே” என்றார் அவர். “அவன் அவை வீற்றிருக்க வேண்டியதில்லை” என்றான் புரூரவஸ். “அரசே, அது குடிவழக்கு” என்றார் அமைச்சர். “அதை நான் மாற்றுகிறேன். அரியணைச் சுவை அறிந்த ஒருவன் இவ்வவையில் இருக்கலாகாது. இக்கணமே அவனை நம் எல்லைக்கனுப்புக! அங்குள்ள தொல்குடிகளை ஒருங்கு திரட்டி அங்கே காவலரண் ஒன்றை அவன் அமைக்கட்டும்” என்றான்.

அமைச்சரின் முகம் மாறியது. ஆனால் விழிகள் எதையும் காட்டாது நிலைத்திருந்தன. “அவ்வாறே” என்று தலைவணங்கி திரும்பிச்சென்றார். முதல் அரசாணையாக தன் கணையாழியை அந்த ஓலையிலேயே அவன் பதித்தான். அவ்வோலையை அவையில் அமைச்சர் படித்தபோது முற்றிலும் அறியாத இருட்பேருருவம் ஒன்று முன்னெழுந்ததுபோல் அவையினர் திகைத்து ஒருவரையொருவர் நோக்கி விழிசலிக்க அமர்ந்திருந்தனர். அவை முழுக்க எழுந்த கலைவோசையைக் கேட்டு புரூரவஸ் கைதூக்கினான். “நன்று! நாம் அடுத்த

அவைச் செயல்களுக்கு செல்வோம்” என்று ஆணையிட்டான். ஆயுஸ் எழுந்து தந்தையை வணங்கி வெளியேறினான்.

அன்று உச்சிப்பொழுதுவரை அரசன் தன் அவையில் அமர்ந்திருந்தான். முன்னாட்களில் ஆயுஸ் இட்ட அனைத்து ஆணைகளையும் அவன் நிறுத்திவைத்தான். அனைத்து முடிவுகளையும் மாற்றி அமைத்தான். எழுந்து செல்கையில் அமைச்சரிடம் “அமைச்சரே, இனி நான் அறியாது ஏதும் இங்கு நிகழக்கூடாது. இதுவரை நிகழ்ந்த பிழைகளேதும் இனி எழலாகாது. சிறு பிழைக்கும் என் தண்டம் வலிதென இவர்களுக்கு உரையுங்கள்” என்றபின் நடந்து அவைவிலகிச் சென்றான். அமைச்சர் “ஆணை!” என உரைத்து தலைவணங்கி நின்றார். குழப்பச்சொற்களுடன் அவை கலைந்து சென்றது. ஆயுஸ் அருகே வந்து “நான் இன்றே கிளம்புகிறேன், அமைச்சரே” என்றான். “தந்தைசொல் மீறாதிருங்கள் இளவரசே, நலம் சூழும்” என்றார் அமைச்சர். “ஆம், அவரிடமிருந்து நான் கற்றதும் அதுவே” என்றான் ஆயுஸ்.

எப்போதும் உச்சிப்பொழுதின் உணவிற்கு ஊன் மிக வேண்டுமென்று புரூரவஸ் ஆணையிட்டிருந்தான். உடல் புடைக்க உண்டபின் மதுவும் அருந்தி மஞ்சத்தில் படுப்பது அவன் வழக்கம். நோய்மீண்டபின் தன் துணைவியரை பார்க்க மறுத்து ஒவ்வொரு நாளும் இளம்அழகியொருத்தி தன் மஞ்சத்திற்கு வரவேண்டுமென்று ஆணையிட்டிருந்தான். அவன் துணைவியர் நாளும் அவன் அறைவாயில்வரை வந்து அவன் முகம் காணவேண்டுமென கோரி நுழைவு மறுக்கப்பட்டு விழிநீருடன் மீண்டுசென்றனர். அவன் மைந்தருக்கும் நோக்கு விலக்கப்பட்டது.

ஆனால் மூதரசர் மட்டும் அவனுடனேயே இருந்தார். உடல்தேறி அவன் எழுந்த நாட்களில் மூதரசர் ஒவ்வொரு நாளும் புலரிவிழிப்புகொண்ட உடனேயே ஒரு காவலன் தோள் பற்றி வந்து துயின்றுகொண்டிருக்கும் அவன் காலடியில் அமரும் வழக்கம் கொண்டிருந்தார். அவனுக்கு சேடியர் உணவூட்டுகையில் நோக்கியிருப்பார். அவன் சிறுமைந்தனைப்போல உதடு குவித்து உறிஞ்சி உண்ணும்போது மகிழ்வில் மலர்ந்து சுருக்கங்கள் இழுபட்டு விரிந்த முகத்துடன் பற்கள் அனைத்தும் தெரிய சிரித்தபடி “நல்லுணவு! நல்லுணவு! பிரம்மம் அதுவே. உயிர் அதுவே. எண்ணம் அதுவே. மூதாதையரின் வாழ்த்து என வருவதும் அதுவே” என்பார்.

ஒவ்வொருநாளும் மருத்துவர்களைச் சென்று கண்டு “எத்தனை விரைவில் அவன் நலம்பெறுவான், மருத்துவர்களே?” என்று கேட்பார். “மூதரசே, அவர் நலம்பெறுவதே ஒரு மருத்துவ விந்தை. நுரையெழுவதுபோல அவர் உடல் எழுகிறது. இதற்குமேல் ஒன்றை மானுட உடலில் எதிர்பார்ப்பதே அரிது” என்றனர் அவர்கள். ஆயினும் நட்ட விதையை ஒவ்வொரு நாளும் தோண்டிப்பார்க்கும் இளம்குழந்தை போலிருந்தார்.

அவர் துணைவியே அவரை நகையாடினாள். “நேற்று உண்ட உணவிற்கு இருமடங்கு இன்று உண்கிறான். நீங்களோ கலத்தில் எஞ்சிய உணவைப் பார்த்து சினம் கொள்கிறீர்கள். சேடியர்கள் பின்னறைகளில் உங்களை எண்ணி நகைகூட்டுகிறார்கள்” என்றாள். “அவர்களுக்குத் தெரியாது தந்தையின் அனல்...” அவர் சினந்து சொன்னார். பின்னர் மனைவியின் மெல்லிய கரங்களை விரல்களுக்குள் எடுத்துக்கொண்டு “அவன் உணவுண்ணும்போது

இளங்குழவியாக நம் மடியிலமர்ந்து இட்டும் தொட்டும் கவ்வியும் துழன்றும் அமுதுகொண்ட காட்சி என் நினைவிலெழுகிறது. நீ நினைவு கூர்கிறாயா?” என்றார்.

“இல்லை” என்று அவள் சிரித்தபடி சொன்னாள். “உன் நெஞ்சில் கனிவு வற்றிவிட்டது. முதுமகளாகிவிட்டாய்” என்றார். முதுமகளுக்குரிய மிகைநாணத்துடன் “உங்களுக்கு மட்டும் இளமை திரும்புகிறதோ?” என்றாள் அவள். “ஆம், எனக்கு இப்போதுதான் ஒரு மைந்தன் பிறந்திருக்கிறான். இளந்தந்தை என்றே உணர்கிறேன். முந்நாளில் இவன் என் மடிதவழ்ந்தபோது அத்தனை எண்ணங்களுக்கு அடியிலும் இவன் நினைவு இருந்துகொண்டே இருக்கும். எது ஓயும்போதும் ஒளிர்விழிகளும் நகைமுகமும் பட்டுக்கைகளும் எழுந்து வரும். இப்போதும் அவ்வாறே உணர்கிறேன். எண்ணித் துயில்கிறேன். எண்ணியபடி விழிக்கிறேன்” என்றார்.

நிலைகொள்ளாது தன் அறைக்குள் சுற்றியபடி “என்னால் இங்கிருக்க முடியவில்லை. நான் மீண்டும் என் மைந்தனின் அறைக்கே செல்கிறேன்” என்றார். “உங்களுக்கு பித்தென்று சொல்கிறார்கள். அதை மீள மீள நிறுவவேண்டாம்” என்றாள் அன்னை. “ஆம், பித்துதான். அதை நான் இல்லையென்றே சொல்லவில்லை. ஏழூர் மன்றில் நின்று கூவுவேன், நான் பித்தன் என்று. பிள்ளைப்பித்துபோல் பெரும்பித்து பிறிதில்லை” என்றார் அவர். “பிள்ளை முதியவனாகிவிட்டான், விழி பார்க்கிறதா?” என்றாள். அவர் “பார்த்தேன். அவன் முதுமை குறைந்து வருகிறது. நீ அதைப் பார்த்தாயா?” என்றார். “நோயுறும்போது அவன் தாடியிலும் குழலிலும் ஓரிரு நரைகள் இருந்தன. இன்றுள்ளதா அது?”

திகைத்து “ஆம், இல்லை!” என்றாள் அவள். “முளைத்து வரும் முடி அனைத்தும் கரிய பட்டுபோல் உள்ளன. நேற்று அவன் துயிலும்போது அவன் குழலை மெல்ல தடவிப்பார்த்தேன். கரடிக்குட்டியின் தோல்போல் தோன்றியது. அடி, அவன் இளமை மீள்கிறான். மேலும் குருதியூறி அவன் உடலின் சுருக்கங்கள் அனைத்தும் விலகும்போது இளமைந்தனாக இருப்பான்” என்றார். அவள் முகம் மலர்ந்து “ஆம்” என்றாள். அவர் கண்களில் குறும்புடன் “படை பயில்வான். நூல் தேர்வான். பின் பிறிதொரு பேரழகியை மணம் கொள்வான்” என்றார்.

அவள் நோக்கில் எழுந்த கூர்முள்ளுடன் “ஆம், காட்டுக்குச் சென்று எவளென்றறியாத இருள்தெய்வம் ஒன்றை அழைத்து வருவான்” என்றாள். வலிக்கும் நரம்பு முடிச்சொன்றில் தொட்டதுபோல் அவர் முகம் மாறியது. “நன்றுசூழவே உனக்குத் தெரியவில்லை, மூடம்!” என்றார். “தீது நிகழ்ந்தவளின் அச்சம் இது” என்றாள். “தீதென்ன நிகழ்ந்தது? சொல், இறுதியில் எஞ்சிய தீதுதான் என்ன? பொன்னுடல் கொண்ட ஏழு மைந்தர்களை பெற்றிருக்கிறான். ஆல் என அருகு என இக்குடி பெருகுவதற்கு அவர்களே உகந்தவர்கள். பிறிதேது?” என்றார்.

அவள் “ஆம், ஆனால்…” என்றபின் “நன்று, நானொன்றும் அறியேன்” என்று சொல்லி மூச்செறிந்தாள். “ஐயுறாதே, அழகி. நன்றே நிகழ்கிறது. ஆம், ஒரு பெருந்துயர் வந்தது. கடலிலெழுந்த பேரலை அறைந்து நகர்கோட்டையை உடைத்துச் சென்றதும் முத்துக்கள் எஞ்சியிருப்பதைப்போல இதோ இளமைந்தர்கள் இருக்கிறார்கள்” என்றபின் “இங்கிருக்க முடியவில்லை. இங்கிருக்கையில் என் மைந்தன் எங்கோ நெடுந்தொலைவில் இருக்கிறான் என்றுணர்கிறேன். அங்கு சென்று அவனுடன் இருக்கிறேன்” என்றார்.

“அங்கு அவனை அவர்கள் குளிப்பாட்ட வேண்டும். அவன் சற்று துயிலவேண்டும். ஆகவேதான் பேசி மன்றாடி உங்களை இங்கு அனுப்புகிறார்கள்” என்றாள் மூதன்னை. “நான் ஓசையின்றி அவ்வறையிலேயே இருக்கிறேன். ஓவியம்போல் இருப்பேன்” என்றார். “நீங்கள் அங்கிருந்தால் சேடியர் இயல்பாக இருக்க முடியாது. சற்று இங்கிருங்கள்” என்று அவள் சொல்ல அவர் சோர்ந்து பீடத்தில் அமர்ந்தபின் “ஏதேனும் ஒரு மாயம் வழியாக என் விழிகளை மட்டும் அவன் அறையில் ஒரு பீடத்தில் எடுத்துவைத்துவிட்டு வரமுடியுமென்றால் அதன்பொருட்டு எதையும் கொடுப்பேன்” என்றார்.

புரூரவஸ் உடல் மீண்டு வந்தபோது ஒவ்வொரு நாளும் அவரும் உடல் வளர்ந்தார். கேட்டு வாங்கி உண்ணலானார். படுத்தால் எழாது துயிலலானார். ஒவ்வொரு நாளும் முகம் தெளிந்து வந்தது. விழி ஒளி கொண்டார். குரல் நடுக்கம்கூட இல்லாமல் ஆயிற்று. “எப்படி இருக்கிறீர்கள் தெரியுமா?” என்று கேட்டாள் அவர் துணைவி. மைந்தனின் அணிகள் அனைத்தையும் கொண்டு வரச்சொல்லி அவற்றில் நல்லனவற்றை தேர்ந்து கொண்டிருந்தார் அவர். திரும்பி “எப்படி?” என்றார். “ஓவியம் வரையும்பொருட்டு துணியை சட்டத்தில் இழுத்துக்கட்டியதுபோல” என்றாள் அவள். அவர் நகைத்து “ஆம், இன்னும் சில நாட்களில் ஒரு இளமங்கையை நானும் மணந்துகொள்ள முடியும்” என்றார். பொய்ச்சினத்துடன் “நன்று! தந்தையும் மைந்தனும் சேர்ந்து தேடுங்கள்” என்றாள் முதியவள்.

புரூரவஸ் மீண்டு வரும் செய்தியை நகரில் உள்ளோர் முதலில் நம்பவில்லை. மீண்டும் மீண்டும் அச்செய்தி வந்தபோது அது அவர்களை அச்சுறுத்தியது. சூதர் சொன்னபடி

அரசன் உடலில் அறியாத் தெய்வமொன்று குடியிருக்கக்கூடுமோ? இடுகாட்டில் அலைந்த இயக்கர்களோ கந்தர்வர்களோ உள்நுழைந்து எழுந்திருக்கக்கூடுமோ? “ஆமாம், அதை முன்னரே சொன்னார்கள். பின் எவ்வாறு இவ்வண்ணம் எழுதல் இயலும்?” என்று முதிய பெண்கள் ஐயுற்றனர். “அவர் விழிகள் மாறியிருக்கின்றன என்கிறார்கள். ஓநாயின் இரு கண்கள் அமைந்திருக்கின்றன என்று அரண்மனையில் பணிசெய்யும் அணுக்கன் ஒருவன் சொன்னான்” என்று அங்காடியில் ஒருவன் பேசினான்.

சற்று நேரத்திற்குள்ளேயே நகரெங்கும் அக்கூற்று ஆயிரம் வடிவம் கொண்டது. “ஓநாயென அவர் உண்கிறார்” என்றான் ஒருவன். “ஒவ்வொரு நாளும் ஒரு கிண்ணம் பசுங்குருதியருந்துகிறார்” என்றான் பிறிதொருவன். “நாளுக்கு ஒரு வெள்ளாட்டை கொண்டுவந்து அவர் முன் நிறுத்துகிறார்கள். உறுமியபடி பாய்ந்து வந்து வெறும்வாயால் அதன் கழுத்தைக் கவ்வி குருதியுறிஞ்சி வெறும்தோலென அதை எடுத்து வீசுகிறார்” என்றான் இன்னொருவன். இரவில் அங்கு அரசனென வந்துள கொடுந்தெய்வத்திற்கு களம் வரைந்து மந்தணப் பூசனைகள் நிகழ்கின்றன என்றும் குருதிபலி கொடுத்து நிறைவுசெய்யப்படுகின்றது என்றும் பேசினர்.

நாள்தோறும் பெருகின கதைகள். அரண்மனையிலும் அவையிலும் அவன் ஆற்றிய அறமிலாச் செய்கைகள் ஒவ்வொன்றும் பெருகிப்பெருகி அவர்களை வந்தடைந்தன. அவன் மேன்மேலும் கொடுமைகொண்டவனாக ஆகுந்தோறும் அவர்களுக்குள் கதைதேடும் குழவிகள் அதை விரும்பி அள்ளி எடுத்துக்கொண்டன. அவன் நடந்து செல்கையில் கால் பட்ட

கல் குழிகிறது. கதவுகளை வெறும் கையால் உடைத்து மறுபக்கம் செல்கிறான். நீராட இறங்குகையில் சுனைநீர் பொங்கி வழிந்து வெளியே ஓடிவிடுகிறது. அவனைக் கண்ட புரவிகள் அஞ்சி குரலெழுப்புகின்றன. அவன் மணம் அறிந்ததும் யானைகள் கட்டுக் கந்தில் சுற்றி வருகின்றன. இந்நகர் பேரழிவை நோக்கி செல்கின்றது, பிறிதொன்றுமில்லை என்றனர் நிமித்திகர்.

தங்கள் அச்சத்தை அவர்களே உள்ளமைந்த இருள்நாக்கு ஒன்றால் நக்கிச் சுவைத்து மகிழ்ந்தனர். ஆகவே சொல்லிச் சொல்லி அதை பெருக்கிக்கொண்டனர். அச்சுறுத்தும் கதைகளை சொல்லும் சூதர்களுக்கு வெள்ளி நாணயங்கள் விரிப்பில் விழுந்தன. எனவே அவர்கள் மேலும் மேலும் கற்பனை நுரையை எழுப்பினர். ஆறு மைந்தர்களை அரசனிடமிருந்து முற்றிலும் விலக்கி வைத்திருக்கிறார்கள். அருகணைந்த எவரையும் பற்றி குருதிஉண்ண அவர் துடிக்கிறார். முதற்பகையென அரசமைந்தனே இருக்கிறார்.

"நோக்கியிருங்கள், ஒருநாள் அவரை முதல்மைந்தனே வாள்கொண்டு தலைகொய்து கதைமுடிப்பார்" என்றான் ஒரு சூதன். கேட்டுநின்றவர்கள் விழி ஒளிர மூச்செறிந்தனர். எவரேனும் கேட்கிறார்களா என்ற ஐயத்தை அடைந்து ஒருவரை ஒருவர் ஒளிர்கண்ணால் நோக்கிக்கொண்டனர். ஒன்றும்நிகழா அந்நகரில் கதைகளில் மட்டுமே கொந்தளித்தன அனைத்தும். நகரம் நழுவிச்சென்று கதைப்பரப்புக்குள் விழுந்துவிட்டது போலிருந்தது. கதைகளில் வாழும் நகர் ஒன்றுக்குள் நடப்பதாக உணர்ந்தபோது அவர்களின் கால்கள் விதிர்த்தன. உள்ளம் பொங்கி விழிகள் மங்கலாயின. மீண்டும் மீண்டும் நீள்மூச்செறிந்தபடி அங்கிலாதவர் போல் நடந்தனர்.

# மாமலர் - 24

## 24. என்றுமுள பெருங்கொடை

ஒவ்வொருநாளும் கடையனாக கீழோனாக தன்னை வெளிப்படுத்திக்கொண்டே இருந்தான் புரூரவஸ். அதற்கென்று புதிய வழிகளை அவனுள் நிறைந்து விம்மி கரைமுட்டும் ஒன்று தேடிக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. தன் கையிலிருந்து ஒரு மணி பொன்னும் வெளிப்போவதை அவன் விரும்பவில்லை. உலகெங்கிலுமிருந்தும் பொன் தன்னைத் தேடி வரவேண்டுமென்று எண்ணினான். அவையமர்ந்ததும் வரவுகளை மணிகளென நாணயங்களென உசாவி அறிந்தான். அக்கணக்குகளை தானே அமர்ந்து மும்முறை நோக்கி மீண்டும் கணக்கிட்டு நூறு வினாக்களால் கணக்கர்களை திகைக்க வைத்து சிறு பிழையேனும் கண்டுபிடித்து அவர்களை கீழ்ச் சொற்களால் வசைபாடி ஏடுகளை அவர்கள் முகத்தில் வீசி மீண்டும் எழுதி வர ஆணையிட்டான்.

பின்னறைக்குள் சென்று திரும்பி அவை நோக்கி "எத்தனை முறை எழுதினாலும் கையிலிருக்கும் பணம் மிகுவதில்லை" என்று பல்லைக் கடித்தபடி சொன்னான் துணைக்கணக்கன் ஒருவன். முதுகணக்கர் "இப்போதுதான் இந்த அரசரை நீ பார்க்கிறாய். இங்குள்ள அத்தனை அரசர்களும் இவ்வண்ணமே இருக்கிறார்கள். சொற்களை உதடுகளுக்கு அப்பால் வை!" என்று ஆணையிட்டார். "நம் பணி கணக்கெழுதுவது. நாம் அறியும் செல்வம் பொன்னோ நாணயமோ அல்ல, வெறும் எண்களே." நாளும் பொழுதும் அவர்கள் கணக்குகளை எழுதினார்கள். எழுதிக்களைத்த விரல்களுடன் தனிமையில் படுத்துக்கொண்டு அரசனை எண்ணி அறியாது புன்னகை புரிந்தனர்.

நதிவரம்பு காக்கவும், வண்டிச்சாலைகள் போடவும், வழிமண்டபங்கள் பேணவும், சந்தைநெறிகள் புரக்கவும், ஏரி நிறைக்கவும், கால் திருத்தவும், ஆலயங்கள் நடக்கவும், காவல் சிறக்கவும் செல்வம் கோரி எழுந்த அத்தனை கோரிக்கைகளையும் தீ கண்ட கரடியென சினந்தெழுந்து விலக்கினான். "எங்கிருக்கிறது இத்தனை பணம்? எவருக்காக இச்செல்வம்? இதைக் கொண்டுசெல்பவர் யார்? இப்போதே நான் அறியவேண்டும். வீணர்களே, நீங்கள் மகிழ்ந்திருக்கவா என் கருவூலத்துச் செல்வம்?" என்று அவன் கூவினான்.

பொன் கோரி எதிரே நின்றிருந்த சிற்றமைச்சர் பிழை செய்ததுபோல் தானே குறுகி "இது குடிமுறைமை, அரசே" என்றார். கையிலிருந்த தாலத்தால் அவரை அடிக்க ஓங்கியபடி "என்ன முறைமை? நீங்களெல்லாம் களஞ்சியத்துப் பெருச்சாளிகள். நான் அறிவேன். துளையிட்டு உண்டு இந்நகரை அழித்தவர்கள் நீங்கள். சிறுவனை அமரவைத்து மேலும் உண்டு மகிழ திட்டமிட்டீர்கள். என் உயிராற்றலால் நான் மீண்டு வந்ததனால் ஏமாற்றம் அடைந்திருக்கிறீர்கள். உங்கள் விழிகளில் தெரிகிறது அந்த சினம்... என்ன எண்ணம்? என்னைக் கொன்று இச்செல்வத்தைக் கவரலாம் என்றா? அதற்குமுன் உங்கள் ஒவ்வொருவரையும் நான் கொல்வேன், அறிக!" என்றான்.

எவரும் எச்செலவுக்கும் அவனிடமிருந்து நிதியொப்புதல் பெறமுடியவில்லை. அரசுப்பணிகள் அனைத்துமே முற்றிலும் முடங்கின. நாளும் வணிகர்களும் உழவர்களும் ஆயர்களும் குடிக்குழுக்களாக வந்து நின்று அமைச்சர்களிடம் மன்றாடினர். பின் மன்றாட்டுகள் வசையும் மிரட்டலுமாக உருமாறின. அயல்வணிகர்கள் சிலர் ஊணில்லா விடுதிகளைச் சூறையாடி

கொளுத்திச்சென்றனர். சிற்றமைச்சர்கள் பேரமைச்சர் பத்மரை அவரது அறையில் வந்து கண்டு “இவ்வண்ணமாயின் இங்கு அரசென்று ஒன்று நிகழாது, அமைச்சரே. நீங்கள்தான் எடுத்துச் சொல்லவேண்டும்” என்றனர். உடன் வந்த படைத்தலைவன் “படைகளுக்கு கூலிகொடுத்து மாதங்களாகின்றன. அவர்கள் வேலேந்தி காவல்நின்று பட்டினி கிடக்கவேண்டுமென்பதில்லை. சென்று சொல்க!” என்றான்.

“அரசருக்கு செவி இருப்பதுபோல் தெரியவில்லை” என்றார் பத்மர். சினத்துடன் “இல்லையென்றால் எழுத்தாணியால் குத்தி அதை உருவாக்கவேண்டியது உங்கள் பொறுப்பு. அரசனுக்கு ஓர் அணுவும் குறைந்தவனல்ல அந்தணன். அமைச்சனாக அந்தணனை வைக்கவேண்டுமென்று முடிவெடுத்தவர்கள் மூடர்களுமல்ல” என்றான் படைத்தலைவன். அமைச்சர் விழிதூக்கி நோக்கி “அந்தணரின் சொல் வேத முழுமையை மதிக்கத் தெரிந்தவர்களிடம் மட்டுமே செல்லும். அவரோ மதம் கொண்டெழுந்த யானைபோல் இருக்கிறார். காண்பவை அனைத்தும் எதிரிகளெனத் தெரிகின்றன” என்றார்.

“நாங்கள் தங்களிடம்தான் வந்து சொல்லமுடியும்” என்ற படைத்தலைவன் ஒரு கணத்துக்குப்பின் பற்களைக் கடித்து கைகளை நெரித்து திரும்பி நோக்கி “சொல்லிக்கொண்டே இருப்போம். எங்கோ ஓரிடத்தில் உடைவாளை உருவி அரசனுக்கு முன் நீட்டுவோம். அப்போது எங்களுக்குப்பின் இந்நகரின் அத்தனை மக்களும் இருப்பார்கள். பேரறத்தான் என்ற பெயர் கொண்டவர் அறத்தால் தலை கொய்யப்பட்டார் என்று ஆகவேண்டியதிருக்கும், சென்று சொல்க!” என்றபின் திரும்பிச்சென்றான். சினத்துடன் அவனை தடுத்துப்பேச எழுந்த பத்மரை நோக்காமல் அவர்கள் குறடுகளில் சினம் ஒலிக்க

இறங்கிச்சென்றனர். அவர் தூக்கிய கையை மெல்ல தணித்து “மூதாதையரே...” என நீள்மூச்செறிந்தார்.

படைத்தலைவன் விழிகளை அவன் விலகிய பின்னர் ஒருகணம் நினைவுகூர்ந்தபோது அமைச்சர் உளம் நடுங்கினார். அரசனிடம் அதை சொல்லியே ஆகவேண்டும் என்று எண்ணி துணிந்தபின் அவை புகுந்தார். அங்கு வணிகர்கள் தங்குவதற்கு பாதைகளில் சத்திரம் அமைப்பதற்காக மேலும் பொன் கேட்டு வந்து நின்ற கலிங்கச்சிற்பியிடம் அரசன் இரைந்து கொண்டிருந்தான். அவரை அழைத்துவந்த சிற்றமைச்சர் நடுங்கியபடி பின்னால் சென்றுவிட்டிருந்தார். “எவருக்கு இந்தப் பொன்? நானே கேட்க விழைந்தேன். எதற்காக இப்பொன்?” என்றான் புரூரவஸ்.

சிற்பி பணிந்து “இது இங்கிருந்து அளிக்கப்பட்ட திட்டம், அரசே. பாதி பணி முடிந்தும்விட்டது. இப்போது நிதி இல்லை என்றால் செய்த பணி வீணாகும். கட்டியவை இடிந்து சரியும். குறித்த நிதிக்குள் என் பணியை முடித்திருக்கிறேன்” என்றார். “எதிர்த்துப் பேசுகிறாயா? அடேய், எவனோ எங்கோ வந்து தங்குவதற்கு எதற்கு குருநகரின் நிதியை நான் அளிக்க வேண்டும்?” என்றான் புரூரவஸ்.

குலமூத்தார் ஒருவர் சினந்தெழுந்து அதை குரலில் காட்டாமல் “அரசே, தங்கள் நாவாலேயே சொல்லிவிட்டீர்கள். குருநகரின் நிதி அது. வணிகர்கள் வருவதால்தான் குருநகரி செழிக்கிறது. எங்கள் தொழில் பெருகுகிறது. எங்கள் விளைகளுக்கு விலை கிடைக்கிறது. அவர்கள் வந்து தங்குவதென்பது எங்கள் உபசரிப்பால்தான். அதற்கென்று கட்டப்பட்ட மண்டபங்கள் எங்கள் வரிப்பணத்தில்தான் அமைந்துள்ளன” என்றார்.

“என்னை எதிர்த்துப் பேசுகிறாயா? யார் நீ? எவர் தூண்டுதலில் இதை பேசுகிறாய்? பிற நாட்டு அரசனின் ஒற்றனா நீ?” என்றபடி வாளை உருவி படிகளில் இறங்கி அவரை நோக்கி சென்றான் புரூரவஸ். தன் இடையில் இருந்த வாளில் கைவைத்தபடி அசையா விழிகளுடன் நோக்கி நின்ற குலத்தலைவர் “தாங்கள் என் தலையை வெட்டலாம். ஆனால் அறிக, பன்னிரு மைந்தர்களின் தந்தை நான்” என்றார். அச்சொல் ஒரு கணம் அச்சுறுத்த புரூரவஸ் நின்று கால்தேய்த்து தரையில் காறி உமிழ்ந்து “இழிமகன்! இழிமகன்! உனக்கு அரசவாளின் கூர்மை ஒருநாள் காட்டப்படும்” என்று உறுமியபடி மீண்டும் அரியணை நோக்கி சென்றான்.

அவைக்குள் புகுந்த அமைச்சர் பத்மர் ஓடிவந்து குலத்தலைவரின் தோள்களைப்பற்றி அமரச்செய்து “பொறுத்தருளுங்கள், குடித்தலைவரே. மும்முறை என் தலை தங்கள் தாள்களில் பணிகிறதென்று கொள்ளுங்கள்” என்று கூவினார். “என்பொருட்டு அமர்க... என்பொருட்டு குளிர்க!” என கைகூப்பி அவையிடம் மன்றாடினார். மூன்று படிகளில் தாவிஏறி அரசரின் அரியணை அருகே சென்று “அவர்தான் மட்டுமீறி பேசிவிட்டார், அரசே. பொறுத்தருளுங்கள். நான் அவர்களிடம் பிறகு பேசுகிறேன். உரியமுறையில் பிறகு தண்டிப்போம். இப்போது நாம் அவையை முடிப்போம். இதை நாளை பேசுவோம்” என்றார்.

“நாளை ஏன் பேச வேண்டும்? இப்போதே சொல்கிறேன், என் கருவூலத்திலிருந்து ஒரு மணி பொன்னும் வெளிப்போகாது. நானறியாது எதுவும் நிகழாது இங்கு. இது என் ஆணை!” என்றான் புரூரவஸ். “ஆம், அதுவே உண்மை. அவ்வாறே நிகழட்டும். வருக!” என்று அமைச்சர் அழைத்தார். பல்லைக்

கடித்தபடி “இங்கு இதை முடித்துவிட்டுத்தான் கிளம்பவிருக்கிறேன். என்னை எதிர்த்துப் பேசிய இவனை…” என்றான் புரூரவஸ். “அங்கே தங்களுக்கு என மூன்று அழகியர் காத்துள்ளனர். வடமேற்கு திசையிலிருந்து வந்தவர்கள். சுண்ணம்போல் வெண்ணிற உடல் கொண்டவர்கள்” என்றார் அமைச்சர் தாழ்ந்த குரலில்.

அவன் விழிகள் மாறுபட்டன. “ஆம், நான் சொல்லியிருந்தேன்” என்றபடி எழுந்து திரும்பி அவை நோக்கி “எவராயினும் எனது ஆணைப்படியே இங்கு எதுவும் நடக்கும். அதை மறந்து எவரும் எதையும் பேச வேண்டியதில்லை” என்று உரக்க கூவிவிட்டுச் சென்றான். அவனுடன் செல்ல அணுக்க ஏவலர்களை பணித்தபின் மூச்சுவாங்க கைகூப்பியபடியே மீண்டும் அவைக்கு வந்த அமைச்சரிடம் குலத்தலைவர்கள் அனைவரும் எழுந்து ஒரே குரலில் “இங்கு என்ன நிகழ்கிறது, அமைச்சரே? பொறுமையின் நெல்லிப்பலகையை வந்தடைந்துவிட்டோம். இனி அரசன் அவன் குடிகளை காணப்போவதில்லை, எதிரிகளையே காண்பான்” என்றனர். “பொறுத்தருள்க… பொறுத்தருள்க. என்பொருட்டு, என் நெறியின்பொருட்டு, என் தந்தையின்பொருட்டு, நான்கொண்ட வேதத்தின் பொருட்டு” என்றார் அமைச்சர்.

“நாங்கள் இவனுடைய கோலுக்கு கட்டுப்பட்டவர்கள். ஏனென்றால் இக்கோல் எங்கள் மூதாதையருக்கு ஒரு வாக்களித்திருக்கிறது. எங்கள் குடிபுரக்கவும் நிலம்காக்கவும் அமைந்த காவலரண் இது. எங்கள் தலைக்குமேல் எழுந்த தெய்வம் அல்ல. எங்கள் மூதாதையர் சொல் எங்களை கட்டுமேயொழிய இவ்விழிமகனின் கையிலிருக்கும் இந்த ஆறு

அடி உயர வெற்றுக்கழி அல்ல. அவனிடம் சொல்லி வையுங்கள்” என்றார் ஒருவர்.

சட்டென்று சிவந்து “குடிமூத்தவரே, இது அரசர் அவை. நான் அவர் அமைச்சன். இச்சொல்லை இங்குரைப்பதை ஒப்பமாட்டேன்” என்று அமைச்சர் சொல்லத்தொடங்க “இழிமகன், கீழ்மகன், சிறியன்... என்ன செய்யப்போகிறீர்கள்? தலை கொய்யப்போகிறீர்களா? கொய்யுங்கள் பார்ப்போம்!” என்று அந்த குலத்தலைவர் சினந்தார்.

மூச்சிரைக்க கண்கலங்க ,“ஒன்று செய்வேன், இனி அரசனைப் பழித்து ஒரு சொல் எழுந்தால் உங்கள் இல்லத்திற்கு வந்து என் குருதியைச் சிந்துவேன். அப்பழி தொடர்க உங்கள் கொடிவழியை” என்றார் அமைச்சர். குலத்தலைவர் மெல்ல தளர்ந்து “அமைச்சரே,இது உங்கள் பணியல்ல, அறம் . உங்கள் எட்டு தலைமுறை மூதாதையரை நம்பி வாழ்ந்தோம். இப்போது உங்களை நம்புகிறோம்” என்றார்.

அமைச்சர் “அரசரின்பொருட்டு நான் மும்முறை தலைவணங்குகிறேன். பழியனைத்தும் நான் கொள்கிறேன். பொறுத்தருளுங்கள்! இன்று அவை முடியட்டும்” என்றார். “அவையை நாங்கள் முடித்துக்கொண்டோம். இனி நாங்கள் இங்கு இருக்கப்போவதில்லை” என்றபடி குலத்தலைவர்கள் வெளியே சென்றனர். அவர்களில் இளையவர் ஒருவர் திரும்பி “சென்று சொல்லுங்கள், குலப்பழி கொள்ளும் வாய்ப்பை எங்களுக்கு வழங்கவேண்டாம் என்று” என்றார்.

அமைச்சர் கைகூப்பி விழிகசிய நின்றார். இன்னொருவர் “அமைச்சரே, அரசரே எங்கள் இல்லம்தோறும் வந்து வணங்கி அழைக்காமல் இங்கு அரசவை நிகழாது. இனி ஆணைகள்

அனைத்தையும் குலத்தலைவர்களின் அவையே பிறப்பிக்கும்" என்றார். "இல்லை, வேண்டாம். அது மோதலென்றாகும். குருதியெழும். வேண்டாம், நானே இதற்கு ஆவன செய்கிறேன். சென்று வாருங்கள்" என்று கைகூப்பினார் அமைச்சர்.

மீண்டும் சென்று அரசனை சந்திக்க விழையாது தன் அறையிலேயே அமர்ந்திருந்தார். மெல்ல உளம்தேறி சென்று பார்த்துவிடுவோம் என்று எண்ணி அவர் அரண்மனையின் அகத்தளத்திற்குச் சென்றபோது அங்கு கணிகையர் நடனம் நடந்துகொண்டிருந்தது. மதுவருந்தி வெறிசிவந்த கண்களுடன் அரசன் மஞ்சத்தில் சாய்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். கைகூப்பி நின்று நோக்கிய அமைச்சர் ஒரு சொல்லும் எடுக்காது திரும்பி தன் இல்லத்திற்குச் சென்றார்.

இரவு இறுகி மெல்லிய புழுதிமணத்துடன் காற்று தெருவில் சுழன்று சென்றுகொண்டிருந்தது. தாழ்ந்திருந்த மறு எல்லையில் ஒரு விண்மீன் மட்டும் அதிர்ந்தது. தன் இல்லத்தில் முகப்புத்திண்ணையில் விரிக்கப்பட்ட மெத்தையில் படுத்து கண்களை மூடி பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்த அமைச்சரை திண்ணையின் மறுபக்கம் மெத்தையில் படுத்திருந்த அவரது முதுதந்தை எழுந்தமர்ந்து நோக்கிக்கொண்டிருந்தார்.



தந்தை எழுந்தமர்ந்த அசைவை அவர் மூடிய விழியால் கண்டார். அவர் பேசப்போகிறார் என்பதை எதிர்பார்த்தார். அவர் பேசட்டும் என்று காத்திருந்தார். கனைத்தபின் “என்ன நிகழ்கிறது?” என்று முதியவர் கேட்டார். மைந்தர் பெருமூச்சுவிட்டார். “அரசன் எல்லை மீறிவிட்டான் அல்லவா?” என்றார். அமைச்சர் மீண்டும் பெருமூச்சுவிட்டார். தன் சொல்லால் அதை ஆதரிக்கவேண்டாமென நினைத்துக்கொண்டார்.

“இந்நகரே அதைப்பற்றித்தான் பேசிக்கொள்கிறது. அரசன் என்று வந்தவன் ஓர் இடுகாட்டு இழிதெய்வம் என்கிறார்கள். அவன் மீண்டு வந்ததே இந்நகர் மீது விதிக்கப்பட்ட தீச்சொல் என்று அன்றே சொன்னார்கள்” என்றார் முதியவர். “தாங்கள் எண்ணியது உறுதியடைந்துவிட்டால் மனிதர்களின் உள்ளே ஏதோ ஒன்று உவகையே கொள்கிறது. அதை மேலும் பெருக்கி பரப்பி பேருரு கொள்ளச்செய்கிறார்கள். இந்நகர்மேல் கண் வைத்திருக்கும் அயல் அரசர்கள் அனைவருக்கும் இன்று மக்களிடையே இருக்கும் வெறுப்பு மிகப்பெரிய ஈர்ப்பை அளிக்கும். மக்களால் வெறுக்கப்படும் அரசன் அயலாரால் எளிதில் தோற்கடிக்கப்படுவான்.”

“ஆம், இதையெல்லாம் நானும் அறிவேன்” என்று பத்மர் சொன்னார். “பிறகென்ன? நீ அந்தணன் அல்லவா? ஆற்றவேண்டிய பணி வடிவிலேயே பிரம்மம் உனக்கு தோற்றமளிக்கும். சென்று சொல் உன் அரசனிடம், என்ன நிகழ்கிறது என்று” என்றார் முதிய அந்தணர். “பயனில சொல்வதெப்படி?” என்றார் அமைச்சர். “என் சொற்கள் அவர் காதில் விழுமென்று எனக்குத் தோன்றவில்லை. உண்மையிலேயே உள்ளே பிறிதொருவர் குடியேறிவிட்டாரோ என்று ஐயுறுகிறேன்.”

முதியவர் நகைத்து “ஒவ்வொரு நாளும் மனிதனுக்குள் புதிய மனிதன் குடியேறுகிறான் என்பார்கள். நாம் காணும் ஆறு முந்தைய நாள் கண்டது அல்ல” என்றார். “அத்துடன் இறப்பின் தருணத்தை அடைந்து மீண்டவன் ஒருபோதும் முந்தைய மனிதனாக இருப்பதில்லை. பெருங்கொடுங்கோலர்கள் கருணை மிக்கவர்களாகி இருக்கிறார்கள். அச்சம் நிறைந்தவர்கள் பெருவீரர்களாகியிருக்கிறார்கள். மறுவழியிலும் நிகழும்

போலும். அரசன் அவ்வெல்லையில் கண்டதென்ன, பெற்றதென்ன என்று நாமறியோம். இந்த மேடையில் இந்த நாடகம் இவ்வண்ணம் நடிக்கப்பட வேண்டுமென்பது ஊழாக இருக்கலாம்” என்றார்.

அமைச்சர் “நான் என்ன செய்ய வேண்டும்? பயனிலா சொல்லைச் சொல்லி என் தலையை தெறிக்க விடவேண்டுமா?” என்றார். “இறப்புக்கு அஞ்சுபவன் அந்தணன் அல்ல. அந்தணனுக்கு வேதமும் தொல்மரபும் அவன் கற்ற நூல்களும் அரணென அமைந்துள்ளன. அவ்வரணுக்குள் நின்றுகொண்டே அறத்தின் குரலை அவன் தன் சூழலை நோக்கி எழுப்புகிறான். அதற்குப் பிறகும் அவன் கொல்லப்படுவான் என்றால் அவ்வாளை ஏந்தியிருப்பது அறத்தின் தெய்வம் என்றே பொருள். அப்பலியை அவன் உவந்து அளிக்கவேண்டும். அதன்பொருட்டே அவன் அந்தணன் என்று அழைக்கப்படுகிறான்” என்றார் முதியவர்.

நடுங்கும் கிழக்குரலில் அவர் தொடர்ந்தார் “செல்லுமிடமெங்கும் இனிய படுக்கையும் குடிநீரும் உணவும் உடையும் அருட்கொடையுமாக அவனை எதிர்கொள்ளும் அதே அறம் அளித்தவற்றை திரும்பக் கேட்கிறதென்றே அதற்குப் பொருள். இன்று அதற்குத் தேவை உன் தலை என்றால் சென்று அளி!” பின்னர் அவர் “மூதாதையரே…” என முனகியபடி முதிய எலும்புகள் ஒலிக்க மெல்ல கால்களை நீட்டி படுத்துக்கொண்டார்.

மெல்லிய அதிர்வுடன் அச்சொற்களைக் கேட்டிருந்த மைந்தன் கைகூப்பி “நன்று தந்தையே, இதை நானே அறிவேன் எனினும் இத்தனை கூரிய சொற்களில் எவரேனும் என்னிடம் கூற வேண்டியிருந்தது போலும். சென்று தலை கொடுக்கிறேன்”

என்றார். “நிகழ்க! அதற்கு முன் மூதரசரை சென்று பார். அவரிடம் சொல். அவர் அறிந்திருக்கவேண்டும் அனைத்தையும்” என்றார். “இல்லை தந்தையே, அவர் எதையும் எண்ணக்கூடியவராக இல்லை. அரசர் விழிகளை இருள் மூடியிருக்கிறதென்றால் தந்தை விழிகளை ஒளி மூடியிருக்கிறது. இருவரும் பார்வையற்றவர்களே” என்றார்.

முதியவர் முகம் மலர்ந்து நகைத்து “ஆம், அவரை இளமைமுதல் அறிவேன். அரசர் என்பதைவிட அவர் கோலேந்திய காட்டுக்குலத்தலைவரே” என்றார். மேலும் உளம் கனிந்து “இனியவர். முதுமையில் அவ்வண்ணம் ஒரு நோய்க்கு அவர் ஆளாகியிருக்கக்கூடும். அது கலையாது அவருக்கு உயிர்மீட்சி நிகழ்க!” என்றபின் கைகளைக் குவித்து “ஓம்! அவ்வாறே ஆகுக!” என வாழ்த்தினார்.

“மைந்தர் உயிர் மீண்டதை களித்துக் கொண்டாடி மகிழ்ந்தார் மூதரசர். இன்று இத்தனை வயதான தன் மைந்தனை ஒரு கைக்குழந்தை என்றே எண்ணுகிறார். ஒவ்வொரு நாளும் எழுந்து இன்றும் அவர் உண்ணும்போது வந்து பார்த்திருக்கிறார். எவ்வளவு உணவை அவர் உண்டபின்னும்கூட சேடியிடம் இன்னும் சற்று பரிமாறும்படி அறிவுறுத்துகிறார். அரசர் எழுந்து சென்றபிறகு அத்தாலத்தில் எஞ்சும் உணவைப் பார்த்து இதையும் அவனை உண்ணவைத்திருக்கலாமே என்று சேடிகளை நோக்கி வசை பாடுகிறார். அரசர் பேசுவதெல்லாமே மழலை எனத் தோன்றுகிறது போலும். ஒவ்வொரு சொல்லுக்கும் அகம் மகிழ்கிறார். ஒருமுறை அரசர் புரவியேறி செல்வதைக்கண்டு மகிழ்ந்து அவர் துள்ளிக் குதித்ததை நான் பார்த்தேன்” என்றார் அமைச்சர்.

“விந்தை என்று சொல்லவில்லை, தந்தையே. பித்தோ கள்மயக்கோ என்று சொல்லத்தகுந்த ஒரு நிலையின்மை அவரிடம் இருக்கிறது மைந்தனைக் காண்கையில். ஒருநாள்கூட மைந்தன் துயின்றபிறகு ஓசையற்ற காலடிகளுடன் வந்து அவர் தலையிலிருந்து கால்வரை மெல்ல தொட்டு நோக்கி உறுதிப்படுத்தாமல் இவர் சென்று படுத்ததில்லை. இவரிடம் சென்று மைந்தனைப்பற்றி குறை சொல்வதென்பது…” என்றபின் அமைச்சர் நகைத்து “அதைவிட மைந்தனிடமே சென்று ஒரு வாளைக் கொடுத்து தலையை குனித்துக் காட்டலாம்” என்றார்.

“நன்று, அவ்வண்ணமெனில் தாயிடம் செல்” என்றார். சற்று விழிமாறிய அமைச்சர் “ஆம், அன்னையிடம் சொல்லலாம். அரசர் நோயில் சுருண்டு இறப்பை நெருங்கிக்கொண்டிருந்த போதும் அன்னை தன் நிலை மாறவில்லை. இன்று முளையிலிருந்து திரும்ப எழுந்து ஈரிலைத்தளிரும் தண்டும் கிளையுமென விரிந்தபோதும்கூட அதே நிலை கொண்டிருக்கிறார்” என்றார். பின்னர் கைகூப்பி “நன்று தந்தையே, அரசியிடம் சொல்கிறேன்” என்றார்.

மறுநாள் முதற்புலரியிலேயே அரசன் எழுவதற்கு முன்னர் கிளம்பி அரண்மனைக்குச் சென்றார் அமைச்சர். மூதன்னை எழுந்து நல்லாயுளை வழங்கும் கௌரியின் ஆலயத்திற்குச் சென்றிருப்பதாக சேடி சொன்னாள். ஒவ்வொரு நாளும் கௌரியின் ஆலயத்திற்குச் சென்று அருகே ஓடும் சிற்றாற்றிலிருந்து ஏழு குடம் நீரை தன் கைகளாலேயே சுமந்து கொண்டுவந்து ஊற்றி மலரிட்டு வணங்கி மீண்டு அதன் பின்னரே முதல் வாய் நீரை அருந்தும் வழக்கம் கொண்டிருந்தார் மூதன்னை. அன்னை வழிபட்டுக்கொண்டிருந்த

கௌரியின் சிற்றாலயத்தின் முன் சென்று காவல்சேடியரின் அருகே கைகட்டி காத்து நின்றார் அமைச்சர்.

நீரூற்றி மலரிட்டு வணங்கி கைகளைக் கூப்பியபடியே குனிந்த உடலும், நடுங்கும் தலையும், காகத்தின் காலடிபோல் ஒற்றி எடுத்து வைக்கும் சிற்றடிகளுமாக வந்த அன்னையை நோக்கி வணங்கி "தங்களிடம் ஓரிரு சொற்கள் பேச விழைகிறேன், அன்னையே" என்றார். நோக்கி விழிமாறிய அன்னை "மைந்தனைப் பற்றித்தானே? சொல்லும்!" என்றாள். "தங்களிடம் அன்றி பிறிதொருவரிடம் நான் சொல்வதற்கு ஏதுமில்லை" என்றார் அமைச்சர். "ஆம், என்னிடம் இது வருமென்று எனக்குத் தெரியும்" என்றாள் மூதன்னை.

"அரசியே, அரசர் கொள்ளும் சிறுமை எல்லையின்றி சென்றுகொண்டிருக்கிறது. காமத்தில் திளைக்கிறார். செல்வத்தை மரக்கிளைகள் பாறைகளை பற்றுவதுபோல இறுக்கிக் கொண்டிருக்கிறார். அறமென்ற ஒன்றையே மறந்திருக்கிறார். குடிமக்களின் கப்பமும் வணிகர்களின் செல்வமும் கருவூலத்திற்கு வருவதென்பது ஒன்று நூறென பெருகி அறப்பணிகளாகவும் காவல்பணிகளாகவும் அவர்களுக்கே திரும்பிச் செல்வதற்காகத்தான். இச்சிறு உண்மையைக்கூட அறியாதிருக்கிறார் என்றால் அரசர் தன் அழிவை நோக்கி தானே நடந்து செல்கிறார் என்றுதான் தோன்றுகிறது" என்றார் அமைச்சர்.

அமைச்சர் சொல்வதையெல்லாம் மறுசொல்லின்றி நெஞ்சில் கூப்பிய கைகள் விலகாமல் கேட்டுக்கொண்டே வந்த மூதன்னை அரண்மனை விளிம்பை அடைந்ததும் "என்னிடம் சொல்லிவிட்டீர்களல்லவா? என்னால் இயல்வதை நான்

செய்கிறேன். நானும் என் கணவரும் அரசரிடம் பேசுகிறோம்” என்றபின் ஒருகணம் தயங்கி “ஆனால் ஊழுக்கு எதிராக படைகொண்டு செல்ல எவராலும் இயலாது. இங்கு என்ன நிகழவேண்டுமென்று அது எண்ணியிருக்கிறதோ அதை நோக்கியே நீங்களும் நானும் மட்டுமல்ல, இதோ நம் காலடியில் நிரைவகுக்கும் எறும்புக்கூட்டமும் சென்றுகொண்டிருக்கிறது என்று எண்ணுகிறேன். நீர்வழிப்படும் புணைபோல செல்லும் இப்பெருக்கில் நாம் செய்வதற்கென்று ஏதுமில்லை” என்றாள்.

“அன்னையே, என் உள்ளத்தில் தங்களை வந்து காணவேண்டுமென்று தோன்றியதும் தாங்கள் என் சொற்களை செவிகொண்டதும்கூட ஊழாக இருக்கலாம் அல்லவா?” என்றார் அமைச்சர். மெல்ல நகைத்து “சொல்லாடற்கலையை தாங்கள் முறையாகக் கற்றதை நான் அறிவேன்” என்றபின் அரசி தன் அறைக்குள் சென்றாள்.

# மாமலர் - 25

### 25. எஞ்சும் ஒளி

மூதரசி அப்போதே தன் கணவரின் அறைக்கு சென்றாள். அவர் மைந்தனின் அறையில் இருப்பதாக சேடி சொன்னாள். “அரசர் அணிபுனையும் நேரம் இது, மூதரசி. அருகிருந்து அதைப் பார்ப்பது மூதரசரின் வழக்கம்” என்றாள். முதுமகளின் கண்கள் புன்னகையுடன் விரியக்கண்டு அவள் அதை மகிழ்வுடனே எதிர்கொள்கிறாள் என்று புரிந்துகொண்ட சேடி தன் குரலில் உள்ளடங்கியிருந்த பகடியை இனிய நகையாட்டாக மாற்றிக்கொண்டாள். “அரசர் அணியவேண்டிய ஒவ்வொரு

நகையையும் முந்தைய நாளே அவரே எடுத்துவைக்கிறார். அதை அவர் அணியும்போது அருகில் நின்று நோக்கிக்கொண்டிருப்பார். கோழிப்போர் காண்பவனின் உடலசைவுகள் அவரில் தெரியும் என்பார்கள்" என்றாள்.

முதுமகள் சிரித்துவிட்டாள். "அணி புனைந்துமுடித்து அரசர் கிளம்பும்போது மேலும் ஒரு அணியை எடுத்துக்கொண்டு பின்னால் செல்வார். அதை அவரே அணிவிப்பார். மறுநாள் அந்தப் புதிய அணியையும் சமையர்கள் சேர்த்துக்கொள்வார்கள். மூதரசர் பிறிதொரு அணியை கையில் எடுத்துக்கொள்வார். கருவூலத்தையே அரசர் உடல் சுமக்க வைத்துவிடுவார் என்று சொல்லிக்கொள்கிறார்கள்" என்றாள் சேடி. "ஆம், தேனில் விழுந்த வண்டென இனித்தே சாகும் நல்லூழ் கொண்ட மனிதர் என்கிறார்கள் நிமித்திகர்கள். பிறிதொருமுறை இளம் தந்தையென வாழும் பேறு பெற்றவர்" என்றாள் முதுமகள்.

சேடியர் சென்று மூதரசரை வரச்சொன்னார்கள். விரைந்த காலடிகளுடன் வந்த மூதரசர் "என்ன? என்ன வேண்டும் உனக்கு? நான் அங்கே பணியிலிருக்கிறேன் என்று தெரியுமல்லவா? அரசர் இப்போது கிளம்பப்போகிறார். கிளம்புகையில் என்னை எதிர்பார்ப்பார். என்ன சொல்லப்போகிறாய்?" என்று உரத்த குரலில் துணைவியிடம் கேட்டார். அவள் புன்னகையுடன் "அமருங்கள்" என்றாள். "அமர்வதற்கு பொழுதில்லை. பணிகள் குவிந்துகிடக்கின்றன" என்றபடி அவர் அமர்ந்தார். முதுமகள் திரும்பிப்பார்க்க சேடி புன்னகையுடன் வெளியேறி வாயிலை மூடினாள். "என்ன? ஏதாவது காதல் விளையாட்டுக்கு திட்டமா?" என்று கேட்டு அவர் எருமைபோல ஒலியெழுப்பி சிரித்தார்.

“உங்கள் மைந்தனிடம் அவன் அருநிதி காக்கும் பூதமல்ல, அரசன் என்று நீங்கள் எடுத்துரைக்கவேண்டும்” என்றாள் அன்னை. “அவனுக்குத் தெரியாததையா நான் எடுத்துரைக்கப்போகிறேன்? அவன் பேரறத்தான்” என்றார் முதியவர். “ஆம், அது முன்பு” என்றாள் மூதரசி சினத்துடன். “அன்று அவன் உடல் அறத்தின் ஒளி கொண்டிருந்தது. அவன் நகங்கள் விழிகளென ஒளிவிட்டன.” மூதரசர் எழுந்து “ஏன்? இன்று என் மைந்தனுக்கென்ன குறை?” என்றபடி முகம் வலித்து சீறி உறுத்து விழித்து அவளை நோக்கி வந்தார்.

கைகளை வீசி தலையை ஆட்டி மூச்சு ஊடுகலக்க “இன்று புதுத்தளிரென ஒளிவிடுகிறது அவன் உடல். பால்மாறா பைதலின் விழிகள் போலிருக்கின்றன அவன் கண்கள். அவன் நகைப்பு விளையாட்டுப் பையனைப்போல் தோன்றுகிறது. நோக்கி நோக்கி சலிக்காமல் அவன் அறைவிட்டு நீங்காதிருக்கிறேன். என்னிடமா சொல்கிறாய்?” என்றார் கிழவர். அவள் அவ்வுணர்ச்சியால் சீண்டப்பட்டு சினம்கொண்டாள். அவள் குரல் மேலெழுந்தது. “ஆம், இன்று அவன் ஒளி கொண்டிருக்கிறான். அது மாளாக்காமத்தின் ஒளி. காம விழைவு மனிதனை இளமை கொள்ளச்செய்கிறது. பத்து அடி தொலைவிலேயே ஒருவன் காமத்தில் திளைப்பவன் என்பதை சொல்லிவிட முடியும். அவ்வொளி ஒரு காலத்தில் உங்கள் உடலிலும் இருந்தது. அன்றதை நான் வெறுத்தேன். இன்றும் அவ்வாறே” என்றாள்.

இதழ்கோண நகைத்தபடி கிழவர் “அதை சொல்! நீ முதுமைகொண்டு அழிந்து கொண்டிருக்கிறாய். அவனோ உயிர் பெருகி இளமை நோக்கி செல்கிறான். தாயும் மகனுமாக இருந்தாலும் இரு உயிர்கள் நீங்கள். அந்தப் பொறாமை

உனக்கு” என்றார். “ஏன், அந்தப் பொறாமை உங்களுக்கு இல்லையா?” என்று கேட்டாள் மூதரசி. “இல்லை, ஏனெனில் அவனாக நின்று அதை நடிப்பவன் நான். மீண்டும் அவ்வுடலில் புகுந்து வாழ்கிறேன்” என்றார். முகம் இழுபட்டுக் கோண இடறிநின்ற பற்கள் தெரிய அவள் “நாணில்லையா?” என்று சீறினாள்.

“இல்லை. எந்த நாணமும் பிழையுணர்வும் அறக்குறையும் என்னில் இல்லை. வாழ்வு இனிது. காமமன்றி பிறிதனைத்துமே பொய்யானவை” என்றார் கிழவர். “அறத்தையும் பொருளையும் கொண்டு காமத்தை கட்டுப்படுத்தவே மூதாதையர் முயன்றிருக்கிறார்கள். ஏனெனில் எளியோரின் காமம் கட்டுக்குள் நின்றாகவேண்டும். படையானைநிரை சங்கிலியில் பிணைக்கப்பட்டு துரட்டியால் மிரட்டப்பட்டிருக்க வேண்டும். பட்டத்து யானைக்கு தடைகள் தேவையில்லை.” அவள் நடுங்கும் தலையுடன் கூர்ந்து நோக்கியபடி அமர்ந்திருந்தாள். அவர் எக்களிப்புடன் “என்ன பார்வை?” என்றார். அவள் தலையசைத்தாள்.

“முதுமகளே, உண்மையில் உன் முகம் நோக்கவே நான் விரும்பவில்லை. அச்சுருக்கங்களில் இருக்கும் இறப்பு என்னை கசப்படையச் செய்கிறது. இன்று என் மைந்தனின் முகமன்றி வேறெந்த முகமும் எனக்கு முதன்மையானதல்ல. செல்!” என்றார் கிழவர். அவள் தளர்ந்து குரல் தழைந்து “நான் சொல்வதை சற்று செவிகூர்ந்து கேளுங்கள். எல்லையற்ற ஒன்று புவியிலிருக்க இயலாது. புலியின் பசியைவிட விரைவாக அமைக்கப்பட்டுள்ளன மானின் கால்கள். எங்கோ ஒவ்வொன்றும் பிறிதொன்றால் தளையிடப்பட்டிருக்கின்றது என்று அறிவதே அறத்தின் முதற்படி” என்றாள்.

“நெறிநூல்களை திரும்பச்சொல்லாதே! நானே அவற்றை மறக்க முயன்றுகொண்டிருப்பவன்” என்றார் கிழவர். “காமம் பெருநதிகளைப்போல. அவற்றின் குறுக்கே அணைகள் நில்லா. கடல் ஒன்றே அதன் இலக்கு.” அவள் “ஆம், காமம் கட்டற்றது. கட்டற்ற காமத்தைப்போல் அழிவை அளிப்பது பிறிதொன்றுமில்லை” என்றாள். கிழவர் சலிப்புடன் “பெருந்துயருற்றுவிட்டான் என் மைந்தன். ஒரு பிறவிக்குரிய அனைத்து கப்பங்களையும் தெய்வங்களுக்கு கட்டிவிட்டான். இனி அவன் மகிழ்ந்தாடட்டும். உனது சிற்றறிவின் சொற்களைக் கொண்டு அவனை எரிச்சல் மூட்டாதே!” என்றார்.

பெருமூச்சுடன் தளர்ந்து “நன்று, நானே சென்று அவனிடம் சொல்கிறேன். நீங்கள் அறமுரைக்க வேண்டுமென்று விழைந்தேன். நீங்களிருக்கையில் என் நா எழக்கூடாதென்றே தயங்கினேன். நீங்கள் ஆற்றாதபோது அக்கடனை ஆற்றும் பொறுப்பு எனக்குண்டு. அன்னையென சென்று அவன் முன் நிற்பேன். அறமென நான் எண்ணுவதை அவனிடம் உரைப்பேன்” என்றாள். அவர் ஏளனத்துடன் நகைத்து “செல், இன்று உன் சொற்களைக் கேட்கும் செவி அவனுக்கில்லை. உன் உடலில் ஊர்ந்து அவனை அணுகும் இறப்பைக்கண்டு அவன் முகம் சுளித்து துரத்திவிடுவான். நீ யார், எங்குளாய் என்று அப்போதறிவாய். செல்!” என்றபடி பீடத்தில் அமர்ந்து சுவடிக்கட்டொன்றை எடுத்து புரட்டத்தொடங்கினார்.

சில கணங்கள் அவரை நோக்கி நின்றபின் முதுமகள் கதவைத் திறந்து ஓசையற்ற காலடிகளுடன் வெளியே சென்றாள். மேலாடையை தோளில் சுற்றியபடி அங்கு நின்ற ஏவலனிடம் “என்னை அரசரிடம் அழைத்துச் செல்” என்றாள். தலைவணங்கி அவன் அவளை அழைத்துச் சென்றான்.

ஊர்வசிக்கென புரூரவஸ் கட்டிய காமமண்டபத்திற்கு வெளியே ஆணிலிகள் எழுவர் காவல் நின்றனர். அரசி வருவதைக் கண்டதும் அவர்களின் தலைவி அருகே வந்து வணங்கி “அரசர் இப்போது…” என்றாள். “அறிவேன். நான் வந்துளேன் என்று சொல்!” என்றாள் கிழவி. “இப்போது எவரையும் உள்ளே விடமுடியாது, அரசி” என்று தலைவி சொன்னாள். “நானும் உள்ளே நுழையக்கூடாதென்பது ஆணை.”

“நான் உள்ளே செல்கிறேன். என் தலையை வெட்டி அவனிடம் கொண்டுவை” என்றபடி முதுமகள் முன்னால் நடந்தாள். “அரசி, நான் சொல்வதை கேளுங்கள். இப்போது அரசர்…” என்றபடி அவளுக்குப் பின்னால் ஆணிலிகள் மூவர் சென்றனர். “விலகுங்கள்!” என்று சீறிவிட்டு தன் முழுதுடலாலும் பெருங்கதவைப்பற்றி இழுத்து ஓசையுடன் திறந்து முதுமகள் உள்ளே சென்றாள். அங்கே குந்திரிக்கப்புகை பட்டுச்சல்லாபோல படர்ந்து காட்சிகளை மறைத்தது. வெண்திரைக்கு அப்பாலிருந்த சூதர் மென்மையாக இசையெழுப்பிக்கொண்டிருந்தனர். அக்காட்சி அவளுக்கு முதலில் ஓர் திரைஓவியம் போலிருந்தது.

ஏழு ஆடையிலாப் பெண்கள் நடுவே வெற்றுடலுடன் மெய்திளைத்து காமத்திலாடிக்கொண்டிருந்த புரூரவஸ் ஓசை கேட்டு திரும்பிப்பார்த்தான். ஒருகணமும் அவன் விழிகளில் நாணம் எழவில்லை. உடல் கூச்சம்கொண்டு சுருளவுமில்லை. நச்சுச் சிரிப்பொன்று உதட்டில் எழ “இங்கு வரலாகாதென்று நீ அறிய மாட்டாயா, முதுமகளே? இல்லை அறிந்து மகிழ்ந்துதான் வந்தாயா?” என்றான். நாணமற்ற அப்பெண்களும் வியர்வையும் நகைகளும் மின்னும் முலைகளும் இடைகளுமாக நகையாட்டு

தெரிந்த கண்களுடன் முதுமகளை நோக்கினர். ஒருத்தி ஏதோ முனக பிறர் நகைத்தனர்.

“இங்கு நீ உயிரலையில் திளைப்பதாக உன் தந்தை சொன்னார். நீ திளைப்பதை நோக்கிச் செல்லலாம் என்று வந்தேன்” என்றாள் அன்னை. “இதற்கு முன் இதை பார்த்திருக்கமாட்டாய்” என்றான் புரூரவஸ். “பார்த்துளேன். அழுகிய ஊனில் புழுக்கள் நெளிவதை” என்றாள் அவள். அவன் உரக்க நகைத்து “நன்று, உன் உள்ளம் எரிவது அச்சொற்களில் தெரிகிறது. நோக்கினாய் என்றால் கிளம்பு” என்றான். “நான் உன்னிடம் அறமுரைக்க வந்துளேன். காமத்தில் திளைக்கும் உன்னிடம் அதை எப்படி சொல்வது என்று உன் தந்தை என்னிடம் சொன்னார். காமத்தின் உச்சத்தில்தான் அதை சொல்லவேண்டும் என்று நான் கருதினேன். ஏனெனில் உன் இழிகற்பனை செல்லும் எல்லைக்கெல்லாம் விழைவை ஓட்டி நீ இங்கு அமைத்திருக்கும் இக்களியாட்டங்களின் நடுவே உன்னுள் எழுந்த ஆழத்தில் திகைத்து நின்றிருக்கிறது ஒரு உள்ளம். நான் சொல்வதை அந்த உள்ளம் கேட்கட்டும்” என்றாள் முதுமகள்.

அவன் எழுந்தமைந்து “ஆம், சொல். காமம் கலந்தால் எல்லாமே கலை என்றான் பாணன். அன்னை நல்லுரை கலைவடிவு கொள்வதெப்படி என்று பார்க்கிறேன்” என்றான். அவள் விழிகள் பதறாமல் அவனை நோக்கி “மைந்தா, காமம் மனிதனைப் பெருக்கும் இன்பமல்ல. ஒவ்வொரு கணமும் அவனை குறைக்கும் இன்பம். விளைநிலத்து விதை என அவனைப் பெருக்குவது அறம் ஒன்றே. காமத்தையும் செல்வத்தையும் அறியாது அறம் நோக்கி சென்றதன் தோல்வியை முன்பு நீ அறிந்தாய். நன்று! இப்போது காமத்தைத் தொடர்வதன் எல்லையை அறிந்துவிட்டாய். செல்வத்தையும் அறிந்துளாய்.

கடந்து சென்று அறத்தை அறி. இது தெய்வங்கள் உனக்களித்திருக்கும் நல்வாய்ப்பென்று உணர். இல்லையேல் பேரழிவை நீ சந்திப்பாய்” என்றாள்.

நச்சுத்துளி சூடிய அரவப்பல்லென இளிவரல் முனைகூர்த்து நின்ற விழிகளுடன் அவளை நோக்கிய புரூரவஸ் “நன்று! சற்றுமுன் என் பாங்கனிடம் கேட்டேன், காமத்தில் நான் இழந்திருக்கும் இன்பம் ஏதென்று. அரசே, முள்வேலிகளைப் பிளந்து குருதி கீறிய உடலுடன் சென்றடைகையிலேயே காமம் முழுதமைகிறது. உங்களைத் தடுக்கும் வேலிகள் இங்கில்லை, ஆணையிடும் குரல்கள் பின்னால் ஒலிக்கவில்லை, கால்தடம் முகர்ந்து வேட்டை நாய்கள் தொடர்ந்து வரவுமில்லை. அதையே நீங்கள் இழக்கிறீர்கள் என்றான். நன்று, அவன் அதைச் சொல்லி முடிக்கவில்லை. அதற்குள் சொற்களுமாக நீ வந்துவிட்டாய். முடிந்தவரை உன் சினத்தை உமிழ்ந்துவிட்டு செல்! இவ்வின்பம் பெருகட்டும்” என்றான்.

சில கணங்கள் அவனை நோக்கி நின்றபின் “ஊழுக்குமுன் சொல் வீசி நிற்பது கை வீசி கடலலையைத் தடுப்பதுபோல என்று சூதர் பாடல் உண்டு. அதை நன்கறிந்தும் நான் இங்கு சொல்ல வந்தது, இவற்றை சொல்லாமலானேன் என்ற உணர்வை நான் பின்னால் அடையக்கூடாது என்பதற்காக மட்டுமே. சொல்லிவிட்டேன். கீழ்மகனே, நீ அடைவதை அடை” என்றபின் திரும்பிச்சென்றாள். அவன் பின்னால் நகைத்து அப்பெண்களிடம் ஏதோ சொல்ல அவர்கள் சேர்ந்து சிரிக்கும் ஒலி அவளைத் தொடர்ந்து வந்தது.

அங்கு நின்றிருக்கையில் தன் உள்ளம் எவ்வுணர்வையும் அடையவில்லை என்றே எண்ணியிருந்தாள். ஆழம் அலையற்றிருந்தது. உடல் நடுக்கமோ பதற்றமோ இன்றி

நின்று சொல்கோத்தது. கதவைக் கடந்து வெளியே வந்ததும்தான் தன் கைகள் நடுங்கிக்கொண்டிருப்பதை, கால்கள் உளம்தொட்ட இடத்தில் விழாது பிறழ்வதை அவள் உணர்ந்தாள். விழுந்துவிடலாகாது என்ற ஒரே எண்ணமே அவளை செலுத்தியது. அறியாது கைநீட்டி அவளை பற்றவந்த ஏவலனை “உம்” என்ற ஒற்றைச் சொல்லில் விலக்கினாள்.

மூச்சை சீராக இழுத்து விடும்போது உடல் ஒருநிலைப்படுவதை காலடிகள் நிலைகொள்வதை அவள் உணர்ந்தாள். ஒரு மூச்சு, பிறிதொரு மூச்சு, மேலும் ஒரு மூச்சென்று நடந்தாள். இடைநாழியைக் கடந்து தன் அறைவாயிலை அடைந்ததும் ஏவலனிடம் விலகிச்செல்லும்படி கைகாட்டிவிட்டு கதவைத் திறந்து உள்ளே சென்றாள். முதுகுக்குப்பின் கதவு மூடியதும் பேரலையென துயரம் வந்து அவளை அறைந்தது. ஒரு பெருநகர் ஒரே கணத்தில் பனித்திரைஓவியமென மறைவதுபோல வாழ்வென அவளறிந்தவை அனைத்தும் இல்லாதாயின என்றுணர்ந்தாள். வெறுமை நிறைந்து உடல் பலநூறுமடங்கு எடைகொண்டது.

கதவில் சாய்ந்து நின்று ஆடிக்கொண்டிருந்த முழங்கால்களுடன் மஞ்சத்தில் விழிமூடி படுத்திருந்த தன் கணவனை பார்த்தாள். அவர் மார்பின்மீது சுவடிகள் கலைந்து கிடந்தன. முகம் இனிய கனவொன்றில் மலர்ந்து நிலைத்திருந்தது. எங்கிருந்து என்று அறியாமல் ஒரு அழுகை வந்து அவளை உலுக்கியது. விசும்பி அழத்தொடங்கியவள் அவ்வொலியை செவியால் கேட்டதுமே பெருங்குரலெடுத்து தேம்பலானாள். அவள் உள்ளத்தில் ஒரு பகுதி எவரோ அழுவதுபோல் அதை நோக்கி நின்றது. அத்தனை தொலைவு வந்தவளுக்கு நான்கடி வைத்து படுக்கை வரை

செல்லமுடியவில்லை. தரையில் அமர்ந்து தலையில் கை வைத்து மெலிந்த மூட்டுகளில் முகம் சேர்த்து தோள் குலுங்க அழுதாள்.

அவ்வழுகை அவரை எழுப்பவில்லை என நெடுநேரம் கழித்து உணர்ந்ததும் கையூன்றி மெல்ல நிமிர்ந்து தவழ்ந்து மஞ்சத்தை நோக்கி சென்றாள். அதன் காலைப் பற்றியபடி மெல்ல எழுந்து அவரை நோக்கியபோது மெல்லிய ஐயம் ஒன்று எழுந்தது. இல்லை இல்லை என்று சித்தம் கைவீசி கூச்சலிட்டாலும் கடுங்குளிர் எனச் சூழ்ந்து பெருகிய அவ்வெண்ணம் உருமுழுத்து விழிதுறுத்து பீடத்தில் அமர்ந்தது. "ஆம் ஆம் ஆம்" எனும் சொல்லாக இருந்தது உள்ளம்.

அருகில் சென்று தன் கணவரின் காலடிகளை தொடுவதற்குள்ளாகவே அவளுக்கு தெரிந்துவிட்டிருந்தது. மெலிந்த கால்களை மெல்ல தொட்டு உலுக்கி "அரசே" என்றாள். உடல் அசைந்தபோது அவர் தலை அசைந்தது. ஆம் என அவர் புன்னகையுடன் சொல்வதைப்போல. தோள்களை மெல்ல தொட்டு உலுக்கி "அரசே" என்றபின் மூக்கில் கைவைத்து பார்த்தாள். பின்பு நீண்ட மூச்சுடன் நெற்றியில் கலைந்துகிடந்த அவரது குழலை அள்ளி பின்னால் நீவிச்செருகி வைத்தாள். மீண்டும் மீண்டும் மூச்சுக்கள் எழுந்து உடல் உலுக்க வெளிப்போந்தன.

உடனே சென்று ஏவலரை அழைக்க அவள் விழைந்தாலும் உடல் அசையவில்லை. அந்தக் கணங்கள் பிசின் என அவளை இழுத்துக்கட்டி வைத்திருந்தன. பலநூறுமுறை உள்ளத்தால் எழுந்தபின்னரும் எழாது அங்கிருந்தாள். பின் உள்ளமும் களைத்து அதை கைவிட்டாள். அவர் அருகிலேயே அமர்ந்திருக்க விழைந்தாள். அவ்வெண்ணம் வந்ததுமே

மீண்டும் அவருடன் இருக்கப்போவதில்லை என்னும் உணர்வை அடைந்தாள். அவள் அவரை மணக்கையில் ஏழு வயது. அவருக்கு பதினெட்டு. பெண்ணென்று அவளறிந்த ஒரே ஆண். அன்றைய அவர் முகத்தை நினைவில் மீட்கமுயன்றாள். அது உருக்கொள்ளாமை கண்டு திகைத்தபின் மைந்தன் பிறந்த நாளை நினைவுகூர்ந்தாள். அன்றைய வண்ணங்கள்கூட நினைவில் அசைந்தன. ஓசைகளை நீருக்கு அப்பாலென கேட்கமுடிந்தது. அவர் முகம் நினைவில் எழவில்லை.

“என்ன இது?” என அவள் தன்னுள் வியந்தாள். ஒவ்வொரு காலகட்டமாக அவரை நினைவுகூர முயன்றாள். இறுதியாக அவரைப் பார்த்த காட்சி அன்றி எந்த முகமும் நினைவில் எழவில்லை. “என்ன இது! என்ன இது!” என உள்ளத்தின் ஒரு மூலை வியந்தபடியே இருந்தது. பின்னர் அவள் அம்முயற்சியை கைவிட்டாள். அவளால் புரூரவஸின் அத்தனை காலகட்டங்களையும் பெட்டிக்குள் சுருட்டிவைத்த ஓவியங்களைப்போல எடுத்து விரிக்கமுடிந்தது. அவன் கையறைந்து எச்சில் வழிய தவழ்ந்த முகம். சோறூட்டும்போது இதழ்கோட்டி சுவையறியும் முகம். முதல் படைக்கலத்தை அஞ்சியபடி கையில் எடுத்தபோதிருந்த முகம். முகங்கள் நிரைவகுத்தன. ஒவ்வொன்றும் விழிக்கூர் கொண்டு மிக அருகே என அவளை நோக்கின.

அவன் நோயுற்றதும் மீண்டதும் அக்கணம் என அவளுக்குத் தெரிந்தன. பெண்களுடன் அவன் இருந்த காட்சியை நினைவு விரித்துக்கொண்டபோதும் அதிலும் அவள் சினம்கொள்ளவில்லை என்று தெரிந்ததும் அவள் புன்னகை புரிந்தாள். அப்புன்னகை அவள் உடலையும் எளிதாக்கியது. அவர் அருகே மஞ்சத்தில் இயல்பாக அமர்ந்துகொண்டாள்.

“தீங்கேதுமின்றி நீணாள் வாழவேண்டும்” என அவள் புரூரவஸ் குறித்து நினைத்துக்கொண்டாள். தான் தீச்சொல்லிடுவதுபோல் ஏதேனும் சொல்லிவிட்டோமா என அஞ்சினாள். இல்லை, ஒன்றும் சொல்லவில்லை என்று தேறினாள். ஊழ் அவனை ஆட்டுவிக்கிறது. ஆனால் இறுதியில் மெய்யறிந்து அமைவான் என்றே சொல்கின்றன பிறவிநூல்கள்.

அவள் கால்நீட்டி அவர் அருகே படுத்துக்கொண்டாள். உடல் தளர்ந்தபடியே வந்தது. புரூரவஸையே நினைத்துக்கொண்டிருக்கிறோம் என்பதை உணர்ந்ததும் அவ்வண்ணமென்றால் நான் இவரை விரும்பவில்லையா என கேட்டுக்கொண்டாள். பொருளற்றிருந்தது அவ்வினா. பிறிதொரு ஆணை நினைத்ததில்லை. காமத்தில் களித்ததுண்டு. பொன்னொளிர் மைந்தனை அளித்தவர் என பெருமிதம் கொண்டதுண்டு. ஆனால் விரும்பியதில்லையா என்ன? விருப்பம் என்றால் என்ன? வாழ்வின் அந்தந்த கணங்களில் உள்ளம் அணுகியதுண்டு, விழைவுகொண்டதுண்டு. மாறா விருப்பமே அன்பு எனப்படுகிறது. அன்பென்று உணர்ந்ததுண்டா?

அன்பு வெறும் சொல்லென்றிருந்தது. அன்பு அன்பு அன்பு என சொல்லிக்கொண்டே சென்றது உள்ளம். அன்பென்றால் என்ன? தன்னை விடுத்து அவருக்கென வாழ்வது. அவர் நலனையே சூழ்வது. அவருக்குப் பணிவிடை செய்வது. உடனிருக்க விழைவது. ஆம், அவை அன்புதான் என்றால் அன்புகொண்டிருந்தாள். அக்கணமே உணர்ந்தாள், அவர் அவள் உள்ளை நனைக்கவே இல்லை என. உடனிருந்து வாழ்ந்தொழுகி மறைந்த மனிதர். வாழ்வு பிணைக்கப்பட்ட நுகத்தின் மறுபக்க இணை. பிறிதென்ன? ஆம், பிறிதென்ன?

அன்பென்று எண்ணிக்கொள்ளலாம். அவ்வாறுதான் எண்ணிக்கொள்கிறாள். ஆனால்...

அவள் அப்போது ஆழ்ந்து அறிந்தாள், அவர் தனக்கு ஒரு பொருட்டாகவே இருந்ததில்லை என. அக்கணம் உண்மையில் பேரிழப்பை அவள் உணரவில்லை என. முதுமையில் கணவனை இழந்த பெண்டிர் அனைவரும் உணரும் உண்மைபோலும் இது. இளமையில் இழந்திருந்தால் இழப்புகள் ஒன்றன்மேல் ஒன்றெனப் பெருகி இந்த வெறுமையை மறைத்திருக்கும். இளமையில் கணவனை இழக்கும் பெண்கள் நல்லூழ் கொண்டவர்கள். எஞ்சிய நாளெல்லாம் இழப்பின் துயரை அன்பின் கலுழ்வு என எண்ணிக்கொண்டிருக்கலாம்.

கணவன் பெண்ணை உள்தொடுவதே இல்லை. அவன் கறக்கும் பசு. காதலை, காமத்தை, குடியை, அடையாளத்தை சுரந்தளித்து அகிடுவற்றி வெறுமைகொள்ளும் உயிர். ஏன் இத்தனை கடுமையாக எண்ணிக்கொள்கிறேன்? ஏனென்றால் இது உண்மை. கணவன் ஒரு பொருட்டே அல்ல பெண்களுக்கு. அவன் உயிர் அளித்த தந்தை அல்ல. மெய்யளிக்கும் ஆசிரியன் அல்ல. உயிர் பகிர்ந்த மைந்தனும் அல்ல. ஒரு வெறும் நிமித்தம் மட்டுமே. குடும்பமும் குலமும் குமுகமும் பெண்களுக்கு எப்பொருளும் அளிப்பதில்லை. அவை ஆண்களின் படைப்புக்கள். அவள் அவற்றுக்கு அப்பாலிருந்துகொண்டிருப்பவள். அங்கிருந்து எதுவும் அவளுக்கு வந்துசேரமுடியாது.

தந்தை என்னும் சொல் அவளுக்குள் இனித்தது. எழுபதாண்டுகளுக்கு முன் இளஞ்சிறுமியாக தன் தொல்குடிச் சிற்றூரில் துள்ளி அலைந்ததை எண்ணிக்கொண்டாள். அவள் முகத்தில் நகை எழுந்தது. உடலைக் குறுக்கி இனிய மெய்ப்பை

அடைந்தாள். ஒளிரும் இலைநுனிகளின் காலை. மலர் மணமும் இளஞ்சேற்று மணமும் கலந்த காலை. எங்கு சென்றுகொண்டிருக்கிறேன்? என்னுடன் இருக்கிறார்கள் தோழிகள். கலகலவென்று பேசிக்கொண்டிருக்கிறார்கள். குடிநீர் சேந்த குடங்களுடன் சென்றுகொண்டிருந்தனர்.

மாலிகை குனிந்து மண்ணில் பதிந்த காலடிகளை நோக்கி மான் என்றும் நாய் என்றும் பன்றி என்றும் சொல்லிக்கொண்டிருந்தாள். ஒருநாள் அவள்தான் ஆண்புலியின் தடத்தை கண்டாள். ஆண்புலித் தடத்தைக் கண்டவளுக்கு காமம் வாய்க்கும் என்று மூத்தவளாகிய சந்திரை சொன்னாள். நாணி நகைத்து அடித்து ஓடியவளை மண் அள்ளிவீசி வசைபாடி அழுதாலும் அதன்பின் மாலிகை கால்தடங்களை பார்க்காமலிருக்க முடியாதவளாக ஆனாள்...

உச்சிப்பொழுது கடந்தபோது உணவருந்த அழைக்கவந்த சேடி முதிய அரசரின் அருகே மூதரசி குழவிபோன்று தெளிந்த முகத்துடன் நீண்ட சீர்மூச்சுடன் துயின்றுகொண்டிருப்பதைக் கண்டாள். அவளை எழுப்புவதற்கு முன்னர் அவள் அரசர் முகத்தை நோக்கி அவர் இறந்துவிட்டிருப்பதை உணர்ந்தாள். மூச்சு நின்று வெளிவர பின் அவள் திரும்பி காவலரை அழைத்துவர ஓடினாள்.

# மாமலர் - 26

**26. வாளெழுகை**

மூதரசரின் எரியூட்டல் முடிந்த மறுநாளே மூதரசி அரண்மனையிலிருந்து கிளம்பினாள். எரியூட்டலுக்கு

கால்நிலையா கள்மயக்கில் வந்த புரூரவஸ் சிதையில் எரி எழுந்ததுமே “களைப்பாக உள்ளது. ஏதேனும் தேவை என்றால் சொல்லுங்கள்” என்றபின் கிளம்பிச்சென்றான். எரியூட்டல் சடங்குகள் அனைத்தும் முடிந்து தென்றிசைத்தேவனின் ஆலயத்தில் வழிபட்டு அரண்மனைக்குத் திரும்பிய ஆயுஸ் அவள் அம்முடிவை எடுத்திருப்பதை முதுசேடியிடமிருந்து அறிந்தான். அமைச்சர் பத்மரிடம் அதை சொன்னபோது “ஆம், அவ்வாறே நிகழுமென்று தோன்றிக்கொண்டிருந்தது” என்றார்.

மூதரசி தன் அறைக்குள் பொருட்களை எடுத்து அடுக்கிக்கொண்டிருந்தாள். தன் அன்னையரிடமிருந்து பெற்ற ஓலைகளை தனியாக வைத்தாள். அருநகைகளை இன்னொரு பெட்டிக்குள் எண்ணி வைத்தாள். அருகே அமர்ந்து சேடி ஓலையில் அதை பதிவுசெய்துகொண்டிருந்தாள். இரு சேடியர் உதவிக்கொண்டிருந்தனர். ஆயுஸும் சத்யாயுஸும் ஸ்ருதாயுஸும் அகத்தறைக்கு வந்து துயர்கொண்ட முகத்துடன் நின்றனர். என்ன என்று அறியாத ரயனும் விஜயனும் அவர்களின் கைகளைப் பற்றியபடி மூதன்னையை நோக்கினர். அவள் விழிதூக்கி அவர்களை நோக்கி புன்னகை செய்தாள்.

ஆயுஸ் “தங்கள் முடிவை அறிந்தேன். உறுதியான முடிவு எடுப்பவர் என்று தங்களை இளமையிலேயே அறிந்திருக்கிறேன். மன்றாடவோ விழிநீர் சிந்தவோ நான் வரவில்லை. அவை உங்களை மாற்றாது என்றறிவேன். தங்கள் முடிவில் எங்களுக்கேதேனும் பங்கிருக்குமென்றால் அதன்பொருட்டு தங்கள் காலடிகளில் பிழைப்பொறை கூறவே நாங்கள் வந்தோம்” என்றான்.

அவள் அங்கிருந்து செல்லும் முடிவை எடுத்ததுமே முற்றிலும் பிறிதொருத்தியாகிவிட்டிருந்தாள். எப்போதும் அவளிடமிருந்த துயரும் மெல்லிய உள்ளிறுக்கமும் முற்றிலும் அகன்று தென்மேற்கு மூலையில் அமைந்த அன்னையர் ஆலயத்தில் சிலையென அமைந்திருக்கும் மூதன்னை நிரைகளில் உள்ள முகங்களில் விரிந்திருக்கும் இனிமையும் மென்னகையும் கூடியிருந்தன. எழுந்துவந்து ஆயுஸின் தலையில் கைவைத்து "இல்லை மைந்தா, இனிதாக உதிர்தல் என்பது இயல்பாக வருவதல்ல. தவம் செய்து அடையவேண்டிய ஒரு தருணம் அது. இங்கு என்னை தளைத்திருந்தது உங்கள் தாதையின் இருப்பு மட்டுமே. அவரில்லா இவ்வரண்மனையில், நகரில் நான் இயற்றுவதற்கொன்றுமில்லை" என்றாள்.

"இங்கிருங்கள் மூதன்னையே! எங்களை விட்டுச்செல்லாதீர்கள்" என்றபடி ரயன் அவள் கையை பற்றினான். விஜயன் பிறிதொரு கையைப் பற்றி ஆட்டியபடி "போகவேண்டாம்... போகவேண்டாம்" என்றான். "தந்தையின் இடத்தில் உங்களுக்கு மூத்தோன் இருக்கிறான். நல்லாசிரியன் இடத்தில் பிறிதொருவன் காட்டிலிருக்கிறான். இவ்வாழ்வில் அணைப்பதற்கும் ஆற்றுப்படுத்துவதற்கும் ஒருபோதும் உங்களுக்கு கைகள் இல்லாமல் ஆவதில்லை. சிறுமைந்தர்களே, நல்லூழ் கொண்டவர்கள் நீங்கள்" என்றாள் மூதரசி.

சிறுவர்கள் இருவரும் அழத்தொடங்கினர். அவள் இரு கைகளாலும் அவர்களை இழுத்து தன் தொடைகளுடன் சேர்த்துக்கொண்டு "மகிழ்ந்திருங்கள். என்றென்றும் உங்கள் மூத்தவர்களுக்கு தம்பியராய் இருங்கள். நிழல் மரங்களின் கீழே என்றும் தளிர்களாக வாழும் பேறு பெற்றவர்கள் நீங்கள்"

என்றபின் ஆயுஸிடம் "நான் கிளம்புவதற்கான அனைத்தையும் ஒருக்குக!" என்றாள். சத்யாயுஸ் "தங்கள் ஆணைப்படி அனைத்தும் ஒருங்கியுள்ளன, மூதரசியே" என்றான்.

"நாளை கருக்கலிலேயே கிளம்பிவிடலாம் என்று நான் எண்ணுகிறேன். நான் செல்லும் செய்தி நகரில் அறியப்படவேண்டியதில்லை. வாழ்த்துக்களோ வழியனுப்புதல்களோ நிகழலாகாது. ஓசையற்று இந்நகர்விட்டு நீங்கவேண்டுமென்று எண்ணுகிறேன். முதற்காலையில் காற்று அகல்வதுபோல் உகந்த அனைத்திலிருந்தும் செல்லவேண்டுமென்று பாடல்கள் சொல்கின்றன. திரும்பி ஒருகணம் நோக்க விழைந்தால், ஓங்கி ஒரு மூச்செடுத்தால், ஒரு விழிநீர்த்துளி உதிர்ந்தால் செல்லுதல் எவ்வகையிலும் பயனற்றது. அவை விதைகள். நாளுக்கு நாளென முளைத்து காடாகும் வல்லமை கொண்டவை. பின்பு அப்பெருந்துயர் முளைத்த அடர்காட்டில்தான் குடியிருக்க வேண்டியிருக்கும்" என்றாள் முதியவள்.

"செல்வது மிக எளிது. மீண்டு வராமல் செல்வது அரிதினும் அரிது. செல்பவன் மீண்டும் வருகையில் விட்டுச்சென்ற எதையும் காணமாட்டான். முழுதாக செல்லாதவன் அடைவதுமில்லை. விட்டவற்றை மீளப்பெறுவதுமில்லை" என்றாள் முதுமகள். ஆயுஸ் கைதொழுது "உங்கள் அகம் நிறைவுற மூதாதையரை வணங்குகிறேன், அன்னையே" என்றான். அவள் "உரிய கைகளில் இந்நகர் உள்ளது என்ற எண்ணம் எனக்கு உள்ளது. நேற்று முந்நாள்வரை இந்நகருக்கு என்னாகும் என்ற ஐயமிருந்தது. உன் தந்தையை எண்ணி வருந்தாதே. அவருக்குப் பின்னால் குருதிமணம் பெற்ற ஊழ்

முகர்ந்து அணுகி வருகிறது. எத்தனை விரைந்து ஓடுபவனும் அதிலிருந்து தப்ப முடியாது” என்றாள்.

“உன் கைக்கு மணிமுடி வரும். உன் தந்தை கற்றுத் தந்த பேரறம் துணையிருக்கட்டும். உனது குருதியில் பேரறத்தான்கள் பிறக்கட்டும். மைந்தா, உன் தந்தைக்கு என்ன நிகழ்ந்தாலும் அதைப்பற்றி கவலை கொள்ளாதே. வாழ்ந்து அவர் ஒரு பாடமென உன் முன் அமைந்தார் என்று மட்டுமே கொள். தந்தை நெறிபிழைத்தால் தந்தையென்றாவர் சான்றோர் என்று உணர்க!” என்றாள் முதுமகள். ஆயுஸும் தம்பியரும் அவளைத் தொழுது நீங்கினர். “ஒன்றும் எஞ்சலாகாது, இளையவளே. அனைத்தையும் என் மருகியரிடம் அளித்துவிட்டுச் செல்லவேண்டும் நான்” என்றாள் மூதரசி.

அவள் மருகியர் சேடியரால் அழைத்துவரப்பட்டனர். அவர்கள் விழிநீர் வழிந்த கண்களுடன் மூக்குசிவந்து விசும்பினர். “நன்று வரும் என நம்புங்கள்... மானுடர் அந்நம்பிக்கையிலேயே வாழ்தல் இயலும்” என்றாள் மூதன்னை. அவர்கள் அழுதபடியே அவள் அளித்த பொருட்தொகைகளையும் ஏட்டுக்குவைகளையும் பெற்றுக்கொண்டனர். அவற்றில் அக்குடியின் மூதன்னையர் சேர்த்த பொருட்களும் எண்ணிய சொற்களும் இருந்தன. “இங்கு வரும் பெண்களுக்குரியவை இவை. நாம் இவை கடந்துசெல்லும் பாதைகள் மட்டுமே என்றுணர்க!” என்றாள் முதியவள்.

மறுநாள் கருக்கலில் அவள் செல்லவிருப்பதாக செய்தி அரண்மனை முழுக்க பரவியது. முதலில் அச்செய்தி ஓர் அதிர்ச்சியாக அனைவரிடமும் எழுந்தது. ஆனால் மூதரசி பலகாலம் முன்னரே அரண்மனையிலிருந்து பிரிந்து உலர்ந்து ஒட்டாதுதான் இருந்தாள் என்பதை அதன் பின்னரே அவர்கள்

உளம் கூர்ந்தனர். அவள் செல்வதே உகந்த முடிவென எண்ணத் தலைப்பட்டனர். "அவ்வாறுதான் கிளம்பிச்செல்ல வேண்டும். முற்றிலும் அடைந்து. இனியொன்றும் இல்லையென்று நிறைந்து" என்றார் அவைப்புலவர்.

இரவில் மூதரசி அரண்மனையின் அனைத்துச் சேடியரையும் வரச்சொல்லி ஒவ்வொருவரிடமாக பெயர் சொல்லி விடைகொண்டாள். பெண்கள் குனிந்து விழிநீர் சிந்தினர். இளம்பெண்கள் சிலர் அவள் கால்தொட்டு சென்னிசூடி அழுதனர். காவலரும் ஏவலர்களும் அமைச்சர்களும் அவள் கால்தொட்டு வணங்கி கண்ணீருடன் விலகினர். சூழ்ந்து ஒலித்த விசும்பல்களும் விம்மல்களும் எவ்வகையிலும் அவளைச் சென்று தொடவில்லை. தொழுவோரின் உணர்வலைகளுக்கு அப்பால் கல்லென கண்மலர்ந்திருக்கும் கருவறைச் சிலை போலிருந்தாள்.

வீரனொருவனை துணைக்கு அழைத்துக்கொண்டு மஞ்சத்தறையில் துயின்றுகொண்டிருந்த புரூரவஸை சென்று கண்டாள். அவனருகே எழுந்து அமர்ந்த காமக்கிழத்தி "அரசே, அரசே" என்று மெல்ல உலுக்க மதுமயக்கில் துயின்றுகொண்டிருந்த அவன் வியர்த்த உடம்பும் எச்சில் வழிந்த வாயுமாக கையூன்றி எழுந்து குழறிய நாவுடன் "என்ன?" என்றான். "அரசி கிளம்புகிறார்கள்" என்றாள். "யார்?" என்று அவன் கேட்டான். "மூதரசி" என்றாள் அவள். "எங்கே?" என்றான். பின்னர் மீண்டும் படுத்துக்கொண்டு "பிறகு வரச்சொல்" என்றான்.

மூதரசி "மைந்தா, இனி நாம் பார்க்கப்போவதில்லை. விழைந்தால் எனக்கு நீர்க்கடன் செய்க! இல்லையேல் அதை ஆயுஸ் செய்யட்டும். நன்று சூழ்க! நீ கொண்ட அழல் அணைக!

உன் அலைகள் ஓய்க! முதிர்ந்து நிறைவடைக!” என்று வாழ்த்தி குனிந்து அவன் தலையில் கைவைத்து “நன்று சூழ்க!” என நற்சொல் அளித்தபின் திரும்பிச்சென்றாள். என்ன நிகழ்கிறதென்று அறியாதவன்போல் மதுவால் தடித்த வாயுடன் ஒழுகும் மூக்குடன் கலங்கிய கண்களுடன் அவன் நோக்கி அமர்ந்திருந்தான். அவள் சென்றபின் “இன்னொரு கோப்பை மதுவை ஊற்று” என்று சேடியிடம் ஆணையிட்டான்.

மூதரசி வெளிவந்து ஆலயத்திலிருந்து நடப்பவள்போல கைகூப்பியபடி சென்று தன் அறையை அடைந்து “மஞ்சத்தை ஒருக்கு” என்றாள். அன்று அரண்மனையில் எவரும் துயிலவில்லை. தாழ்ந்த குரலில் ஒருவரிடம் ஒருவர் மூதரசி கிளம்புவதைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தனர். புரூரவஸின் அரசியர் அனைவரும் மூதரசியின் அரண்மனையைச் சுற்றிய இடைநாழிகளிலேயே அவ்விரவை கழித்தனர். ஆனால் மென்பட்டு விரிக்கப்பட்ட சேக்கையில் இறகுத் தலையணையை வைத்து உடல் நீட்டி படுத்த மூதரசி சேடி சுடர் தாழ்த்தி விலகுவதற்குள் மெல்லிய குறட்டை ஒலியுடன் ஆழ்ந்து துயிலலானாள்.

ஏழுமுறை சேடியரும் மருகியரும் உள்ளே வந்து நோக்கி அவள் ஆழ்ந்து துயில்வதை உறுதி செய்தபின் வெளியே சென்று “விந்தை! எப்படி உளக்கொந்தளிப்பின்றி அவர்களால் தூங்க முடிகிறது?” என்றனர். “இது ஒருவேளை இறப்பின் கணமோ?” என்றாள் ஓர் அரசி. “இல்லை, அவர் முகம் அமைதியில் இருக்கிறது, இறப்புக்குரிய இருளமைதி அல்ல அது” என்றாள் பிறிதொருத்தி. “புலரியில் நாம் எழுப்ப வேண்டுமா?” என்று கேட்டாள் ஒரு மருகி. “ஏன்? எழுப்பியாகவேண்டும் அல்லவா?” என்றாள் பிறிதொருத்தி.

“அவரை இருளை நோக்கி எழுப்புவதாக ஆகுமே? அவர் விழைந்தால் எழட்டும். நாம் எழுப்பி அனுப்ப வேண்டியதில்லை” என்றாள் அரசியான முதல் மருகி.

மூதரசி பிரம்மப் பொழுதுக்கு முன்னதாகவே எழுந்தாள். “ஓம்!” என்று அவள் மெல்ல சொல்லும் குரலை அறைக்கு வெளியே துயிலும் விழிப்புமாக இருந்தவர்கள் கேட்டனர். முதிய சேடி கதவைத் திறந்து நோக்கியபோது வலக்கை ஊன்றி எழுந்து கைகூப்பியபின் அவளை புன்னகையுடன் நோக்கி “நான் நீராடவேண்டும்” என்று முதுமகள் சொன்னாள். இரு சேடியர் அவளை அழைத்துச்சென்றனர். குளிர்நீரில் நீராடி மரவுரி சுற்றி அணிகளோ அரசக்குறிகளோ அணியாமல் அவள் வந்தாள். முற்றத்தில் அவளுக்கான ஒற்றைப்புரவித் தேர் காத்து நின்றிருந்தது.

மூதரசி தேரின் அருகே நின்றிருந்த தன் பெயர்மைந்தரை ஒவ்வொருவராக அணுகி புன்னகையுடன் “விடைபெறுகிறேன், மைந்தர்களே” என்றாள். அவர்கள் அவள் கால்தொட்டு சென்னிசூட அவர்கள் குழல்தொட்டு வாழ்த்தினாள். ஏவலன் கையிலிருந்த ஜயனை கையில் வாங்கி முத்தமிட்டு “நீளாயுள்!” என்றபின் திருப்பிக் கொடுத்தாள். பிற அனைவரையும் திரும்பிப் பார்த்தபின் தேர்ப்படியில் கால்வைத்து ஏறி பீடத்தில் அமர்ந்து “செல்க!” என்றாள். தேர்ப்பாகன் ஆயுஸைப் பார்க்க அவன் விழியசைத்தான். புரவி சவுக்கால் தொடப்பட்டதும் குளம்புகளை கற்தரையில் எடுத்துவைத்து தாளம் பெருக்கி விரையலாயிற்று. சகட ஒலிகள் எழ தேர் இருளில் உருண்டு புதைந்து மறைந்தது.

எவரும் உரைக்காமலேயே நகர்மக்கள் மூதரசி கிளம்பிச்செல்வதை அறிந்திருந்தனர். எந்த அறிவிப்பும்

இல்லாமலேயே அச்சகட ஒலி அரசி கிளம்பிச்செல்வது என்று அவர்கள் உணர்ந்தனர். வாயில்களுக்கு வரவோ வாழ்த்துரைக்கவோ கூடாதென்று அரசாணை இருந்ததனால் தங்கள் இல்லங்களுக்குள் இருளில் ஒருவரோடொருவர் தோள்பற்றி நின்றபடி அவர்கள் அரசி செல்வதை பார்த்தனர். முதுபெண்டிர் மூச்சுவிட்டு ஏங்கினர். இளையோர் அத்தேர் கடந்து சென்றதும் வெளிவந்து அதன் இறுதி இருளசைவை விழிதொடும்வரை நோக்கினர்.

நகர் நீங்கிச்சென்ற தேர் காட்டு விளிம்பை அடைந்ததும் அரசி வண்டியை நிறுத்தச் சொன்னாள். கடிவாளம் இழுபட்டு தேர் நின்றதும் படிகளில் சிறுகால் வைத்து அவள் இறங்கினாள். பாகன் “அரசி, தங்களுக்காக அமைக்கப்பட்ட குடில் இங்கில்லை. அங்கு சென்று தங்களை விடும்படி எனக்கு ஆணை” என்றான். “இதுவே என் காடு. என் வழியை நானே தேர்வேன்” என்றாள் மூதரசி. பதறியபடி “இக்காட்டில் தாங்கள் தனியே எப்படி...?” என்றான் தேர்ப்பாகன்.

“இனி எவரும் என்னைத் தேடலாகாது. இவ்விடத்தில் என நீ சொல்வதும் கூடாது. இது என் ஆணை!” என்றபின் அவள் சிற்றடி வைத்து செறிந்த புதர்களை விலக்கி இருள் அலைகளாக குவிந்துகிடந்த காட்டுக்குள் புகுந்தாள். தலைவணங்கி கண்ணீர் உகுத்து கைகூப்பி நின்ற பாகன் நெடுந்தொலைவுவரை மெல்லிய இலையசைவு கேட்பதே அவள் செல்லும் ஓசையென்று எண்ணிக்கொண்டான். பின்னர் தேரிலேறி நகருக்குள் நுழைந்தான்.

அன்னை சென்றதை மறுநாள் உச்சிப்பொழுதுக்கு முன்னர்தான் புரூரவஸ் அறிந்தான். அமைச்சர் பத்மர் உணவருந்திக்கொண்டிருந்த அவனிடம் வந்து வணங்கி “மூதரசி

நகர் நீங்கிவிட்டார்கள்” என்றார். அவன் உணவிலிருந்து விழியசைக்காமல் “ஆம், என்னிடம் சொன்னார். காட்டில் நமது குடிலில் அங்கிருக்கட்டும் அவர்” என்றான். பத்மர் சிறிய எரிச்சலுடன் “இல்லை, வழியிலேயே அவர்கள் இறங்கிவிட்டார்கள்” என்றார்.

கையில் ஊனுணவு நிலைக்க திரும்பி நோக்கிய புரூரவஸ் “எங்கு சென்றார்?” என்றான். “அறியோம். காட்டின் இருளுக்குள் சென்று மறைந்திருக்கிறார்கள்.” அவன் ஆர்வமிழந்து மீண்டும் உணவை அள்ளி உண்டபடி “தேடி நமது ஒற்றர்கள் செல்லட்டும். கொண்டுசென்று குடிலில் சேர்க்கும்படி என் ஆணை!” என்றான். “எங்காவது செத்துக்கிடந்தால் அப்பழியை என்மேல் ஏற்றுவர் வீணர்களாகிய சூதர்.”

பத்மர் பொறுமையிழக்காமல் தன்னை காத்தபடி “மூதரசியின் ஆணை அது. எவரும் தேடி வரலாகாது என்று பாகனிடம் சொல்லியிருக்கிறார். விரும்பி கானேகியவர்களை தேடிச் செல்லக்கூடாது என்பது குடியறம்” என்றார். நாக்கைச் சுழற்றி மெல்லிய ஓசை எழுப்பிய புரூரவஸ் “நான் ஆணையிட்டபின் என்ன குடியறம்? செல்க!” என்றான். “அரசியின் ஆணையை மீறலாகாது” என கூரிய குரலில் அமைச்சர் சொன்னார். அக்குரலின் மாறுபாட்டை உணர்ந்து விழிதூக்கிய அரசன் சினமெரிய ஊனுணவை தாலத்தில் எறிந்துவிட்டு “மூடா! எவரிடம் பேசுகிறாய்? இது என் ஆணை!” என்றான்.

விழியசையாமல் அவன் கண்களைப்பார்த்த அமைச்சர் “அடேய் அறிவிலி, ஷத்ரியனாகிய நீ அந்தணன் முகத்தைப்பார்த்து இச்சொல் சொன்னமைக்காக வருந்தியாகவேண்டும். அது என் மூதாதையருக்கும் நெறிவகுத்த முனிவருக்கும் நான் செய்யும் கடன்” என்றார். “என்ன?” என்று கையை உதறி கூவியபடி

அவன் எழுந்தான். “என்ன பேசுகிறாய்? யாரங்கே?” அவன் குரலின் பதற்றத்திற்கு மாறாக தணிந்த குரலில் “நீ சொன்ன அச்சொற்களுக்காக இக்கணமே உன் தலையை வெட்டி இம்முற்றத்தில் வைக்க என்னால் இயலும். பார்க்கிறாயா?” என்றார் அமைச்சர்.

புரூரவஸ் திகைத்து “யாரங்கே? காவலர்களே... வருக!” என்றான். கதவு வெடித்துவிரிய இரு வீரர்கள் உள்ளே வந்தனர். “சீவி எறியுங்கள் இந்த இழிமகனை” என்றபடி அவன் கையை வீசிக்கொண்டு முன்னால் ஓடினான். இருவரும் உடைவாள் பிடிமேல் படிந்த கைகளுடன், திகைத்த விழிகளுடன் அசைவற்று நின்றனர். அமைச்சர் உறுதியான குரலில் “ஷத்ரியர்களே, அந்தணனாகிய எனது ஆணை இது! இக்கணமே இவ்வரசனின் மணிமுடியை அகற்றுக! இவன் அரசஆடைகளைக் களைந்து கைகள் பிணைத்து தலைமுடியை மழித்து அவைக்கு இழுத்து வாருங்கள்” என்றபின் திரும்பி நடந்தார்.

புரூரவஸ் பாய்ந்து மேடையிலிருந்த தனது வாளை எடுத்துக்கொண்டு அமைச்சரை நோக்கி ஓட அவனுடைய அணுக்க வீரர்களில் ஒருவன் வாளின் பின்பக்கத்தால் அவன் முழங்காலில் ஓங்கி அடித்தான். அலறியபடி குப்புற விழுந்த புரூரவஸின் முதுகை இன்னொருவன் மிதித்து அவன் இருகைகளையும் பிடித்து முறுக்கி அவன் மேலாடையாலேயே பின்னால் சேர்த்து கட்டினான். புரூரவஸ் “ஓடிவாருங்கள், வீரர்களே... ஓடிவாருங்கள், காவலர்தலைவரே...” என்று கத்திக்கொண்டிருக்க உள்ளே ஓடிவந்த காவலர்தலைவன் அதிர்ந்து “என்ன நடக்கிறது?” என்றான். “அந்தணரின் ஆணை”

என்றான் காவலன். “அமைச்சரா? அவரே சொன்னாரா?” என்றான் காவலர்தலைவன். “ஆம்” என்றான் இன்னொருவன்.

காவலர்தலைவன் “அரசே, மனிதர்களால் மானுடம் ஆளப்படுவதில்லை. வேதத்தால் ஆளப்படுகிறது. வேதநெறி நின்ற அந்தணர் சொல்லுக்கு அப்பால் மறுசொல் இல்லை” என்றபின் “அவர் ஆணை நிகழட்டும்” என்றான். புரூரவஸ் திமிறியபடி “என் வீரர்கள் எழுவர்… நான் குருதியால் இவ்விழிவை கழுவுவேன். அத்தனைபேரையும் கழுவேற்றுவேன்… கழுவேற்றுவேன்… கருதுங்கள்… கழுவேற்றியே தீர்வேன்” என்று பித்தன்போல கூச்சலிட்டான். அவர்கள் புரூரவஸின் ஆடைகளையும் அணிகளையும் கிழித்தும் உடைத்தும் அகற்றினர். அவன் “நான் அரசன்… சந்திரகுலத்து முதன்மையரசன்” என்று கூச்சலிட்டு திமிற காவலர்தலைவன் “வாயைமூடு, இழிமகனே!” என ஓங்கி அவன் கன்னத்தில் அறைந்தான். அதிர்ந்து திகைத்து பின் புரூரவஸ் சிறுவனைப்போல விசும்பி அழத்தொடங்கினான்.

இடையில் சிறு தோலாடை மட்டும் அணிந்த அவனை கைபிணைத்த சரடைப்பற்றி இழுத்துச்சென்றனர். செல்லும் வழியிலேயே அவன் முழங்காலை மிதித்து மடித்து அமரவைத்து உடைவாளாலேயே அவன் தலை மயிரை மழித்தனர். புரூரவஸ் மெல்ல தளர்ந்து அரைமயக்கத்திலாழ்ந்து தலைதொங்க பிணம்போல அவர்களுடன் சென்றான். செல்லும் வழியிலெல்லாம் ஏவலரும் காவலரும் திகைத்து நோக்கி நின்றனர். சிலர் அழுதனர். “அமைச்சரின் ஆணை!” என்று சொற்கள் கிசுகிசுப்பாக பரவின. “அந்தணரே முனியும்படி என்னதான் இயற்றினார்?” என்றார் ஒரு முதியவர். “ஊழ்வினை

உறுத்து வருகையில் உரியது உளத்திலெழும்" என்றார் முதியசூதர் ஒருவர்.

அமைச்சரின் ஆணைப்படி அவைமுரசு முழங்கலாயிற்று. அவ்வோசை கேட்டு சில கணங்களுக்குப் பின்னரே அதன்பொருள் புரிய நகர் முழுக்க பரபரப்பு எழுந்தது. "படையெடுப்பா? அரசரின் இறப்பா? படைக்கிளர்ச்சியா?" என வினவியபடி மக்கள் அலைமோதினர். சற்றுநேரத்திலேயே அரசனை சிறையிட்டு குடியவையை அமைச்சர் கூட்டியிருப்பதாக செய்தி பரவியது. அனைத்துக் குலங்களையும் சேர்ந்த தலைவர்கள் அணிந்தும் அணியாததுமான ஆடைகளுடனும் குலமுத்திரைகளுடனும் படைக்கலம் ஏந்திய மைந்தர்கள் சூழ அவை நோக்கி ஓடிவந்தனர். செல்லும் வழியிலேயே "என்ன நிகழ்கிறது? என்ன விளைவு?" என்று வினவிக்கொண்டனர். "அந்தணர் முனிந்தால் அரசில்லை" என்றார் ஒருவர். "அவர் நம் குலங்கள்மேல் சினம்கொள்ள ஏதுமில்லை" என்றார் இன்னொருவர். "அரசர் எல்லைமீறியிருப்பார்... அதை நோக்கியே சென்றுகொண்டிருந்தார்" என்றார் பிறிதொருவர்.

அவையில் தனது பீடத்தின்மேல் இறுகிய முகத்துடன் கைகளைக் கட்டியபடி நிமிர்ந்த தலையும் எங்கும்நோக்கா விழிகளுமாக அமைச்சர் பத்மர் அமர்ந்திருந்தார். அவரைச் சூழ்ந்து சிற்றமைச்சர்கள் கைகட்டி நின்றிருந்தனர். முதன்மைப் படைத்தலைவன் நேரில் வந்து ஆணைபெற்றுச் சென்றான். அத்தனை படைத்தலைவர்களுக்கும் ஓலைகள் சென்றுசேர்ந்தன. படைத்தலைவன் மீண்டுவந்து அமைச்சரிடம் "தங்கள் மறுசொல்லுக்காக காத்திருக்கின்றன குருநகரின் படைகள், அமைச்சரே" என்றான். "நன்று" என்றார் அமைச்சர்.

“தங்கள் ஆணைப்படி ஆயுஸையும் பிற இளவரசர்களையும் சிறையிட்டு அழைத்து வந்துள்ளோம். அவைநிறுத்தவேண்டுமெனில் அவ்வாறே” என்றான் படைத்தலைவன். “செய்க!” என்றார் பத்மர்.

அவர் விழிகள் முற்றிலும் பிறிதொன்றாக மாறியிருந்தன. மானுடரில் தெய்வமெழும் தருணங்களைப்பற்றி சூதர்கள் பாடுவதை படைத்தலைவன் எண்ணிக்கொண்டான். அவை கூடிக்கொண்டிருக்கையிலேயே படைவீரர்களால் கட்டி இழுத்துக்கொண்டு வரப்பட்டு அவைமுன் நிறுத்தப்பட்டான் புரூரவஸ். அவன் நிலம்நோக்கி முகம் குனித்திருந்தமையால் மழித்த தலைமட்டுமே தெரிந்தது. வெற்றுடலில் தசைகள் விதிர்த்து நடுங்கிக்கொண்டிருந்தன. “இளவரசர்கள் அவை புகட்டும்” என்றார் அமைச்சர்.

அமைச்சரின் ஆணையை ஏற்று இரு ஏவலர்கள் சென்று கைகூப்பி விழிநீர் உகுத்தபடி நின்ற ஆயுஸையும் இளையோரையும் அவைமுகப்புக்கு கொண்டுவந்தார்கள். சத்யாயுஸும் ஸ்ருதாயுஸும் தலைகுனிந்து வந்து அவன் அருகே நின்றனர். ஏவலரின் கைகளைப் பற்றியபடி ரயனும் விஜயனும் வந்தனர். முதிய ஏவலர் ஒருவர் ஜயனை கைபற்றி அழைத்துக்கொண்டு வந்தார். அவை நிறைந்ததும் கைகூப்பியபடி எழுந்த அமைச்சர் சற்றுநேரம் கண்மூடியபடி நின்றார். நீள்மூச்சுடன் விழிதிறந்து “அவையோரே, இன்று என் மூதாதையரில் ஒருவர் எட்டு தலைமுறைக்கு முன் செய்த ஒரு கடுஞ்செயலை நானும் செய்யும் நிலை வந்துள்ளது” என்றார்.

“குலத்தலைவர்களே, அறத்தின் பொறுப்பு இப்புவியில் இருவருக்கு பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. அந்தணனாகிய எனது

நாவிலும் ஷத்ரியனாகிய இவர் வாளிலும் அது வாழவேண்டும் என்பதே அரசுநெறி. எங்கள் வழிநின்று வைசியரின் துலாவிலும் உழவரின் மேழியிலும் ஆயரின் வளைதடியிலும் கொல்லரின் கூடத்திலும் அது திகழவேண்டும்" என்றார். அவர் குரல் அடைத்ததுபோல மெல்ல ஒலித்தாலும் அங்கிருந்த அனைவரும் அதை கேட்டனர். "கோல்தாங்கி அரியணை அமர்ந்திருப்பவனே விழியறியும் தெய்வம் என்பது நெறி. அவன் முன் நின்று அரிமலரிட்டு வணங்கும் அமைச்சனாகவே நான் இருந்தாக வேண்டும் என்றார் எந்தை. இருபத்தெட்டாண்டுகாலம் அவ்வண்ணம் மறுசொல்லின்றி இந்நகரை அவருக்காக ஆண்டிருக்கிறேன். அதன்பொருட்டு உங்களால் பலமுறை சினந்துகொள்ளப்பட்டுள்ளேன். பழிச்சொல் கேட்டுள்ளேன். அது என் கடன்."

"நாற்பத்தாறாண்டுகாலம் எனது தந்தை இவர் தந்தையின் காலடிகளில் நின்று சொல்புரந்திருக்கிறார். அவருக்கு முன் பதினெட்டு தலைமுறைக்காலம் என் மூதாதையர் குருநகரியின் கோலுக்கு வேர் என நின்றிருக்கிறார்கள்" என அவர் தொடர்ந்தார். "இன்று காலை இந்நகர்விட்டு நீங்கியது அறத்தின் இறுதித்துளி. அதுவே என் எல்லை. அதன்பின் இங்கு எஞ்சிய மறத்தைத் தாங்கும் பொறுப்பு எனக்கில்லை. எந்தை எனக்களித்த சொல் இங்கு வாழவேண்டும். வேதமே வேர். நெறிகள் அதன் கனிகள். நெறியின்பொருட்டு வாழ்வதும் வீழ்வதுமே என் தன்னறம்."

"இவ்வரசன் மக்கள் அளித்த வரிப்பொருளை பதுக்கி நகரின் வாழ்வை அழித்தான். அது பிழை. காமத்திலாடி இந்நகரப் பெண்களின் கற்புடன் விளையாடினான். அது அதனினும் பெரிய பிழை. தன் அறைக்கு வந்த அன்னை முன் நாணிலாது

அமர்ந்திருந்தான். அது மாபெரும் பிழை. ஆனால் இந்நகர்விட்டு அறம் நீங்கியதையே உரைத்தும் அறிந்திராதவனாக இருந்தான் என்பதுதான் பிழையினும் பிழை. அதன்பொருட்டு என் முப்புரிநூலைப் பற்றி நான் ஆணையிடுகிறேன், இனி இவன் முடிசூடி இவ்வரியணையில் அமரலாகாது. இனி இந்நகரின் எல்லைக்குள் இவன் நுழையலாகாது. இவன் கொண்ட அரசநிலையையும் குலமுத்திரையையும் களைந்து இந்நகரெல்லைக்கு அப்பால் கொண்டுசென்று காட்டில் தனிமையில் விட்டுவருமாறு நான் பணிக்கிறேன். இந்நகர் எல்லைக்குள் இவன் நுழைவான் என்றால், இந்நகர் மக்கள் எவரேனும் இவனுக்கு துணை நிற்பார்கள் என்றால் அரசதண்டம் அவர்கள் மேல் பாயட்டும்."

அவை சொல்லின்றி தரித்து அமர்ந்திருந்தது. "என் சொற்களை உங்கள் முன் வைக்கிறேன். இக்குலத்தலைவர்களின் ஒப்புதலை கோருகிறேன்" என்றார் அமைச்சர். முதுகுலத்தலைவர் ஒருவர் "ஆம், அந்தணர் ஆணை வாழ்க!" என சொல்ல அனைவரும் கைதூக்கி "ஆம், அவ்வாறே ஆகுக! அந்தணர் சொல்லில் அறம் வாழ்க! எது முறையோ அது நிகழ்க!" என்றனர்.அமைச்சர் "இவனுடைய முதல் மைந்தர் ஆயுஸ் சந்திரகுலத்து வழித்தோன்றலென இம்மணிமுடியையும் கோலையும் சூடி அரியணை அமரட்டும். அவர் விழையவில்லை என்றால் அவர் இளையோர் முடிசூடுக! அவர்கள் எவரும் விழையவில்லை என்றால் இங்குள்ள குலங்கள் கூடி அரசனை தெரிவுசெய்க!" என்றார்

புரூரவஸ் தலைதூக்கி "என் மைந்தன் முடிசூடட்டும். அது அவனுக்கு என் ஆணை!" என்றான். ஆயுஸ் கண்ணீருடன் "தந்தையே…" என்று கூவ "தந்தையின் ஆணை இது!" என்றான்

புரூரவஸ். “ஆம், பணிகிறேன்” என்றான் ஆயுஸ். எந்த உணர்ச்சியும் இல்லாமல் “நன்று, அவ்வண்ணமே நலம் திகழட்டும். இன்றிலிருந்து பன்னிரண்டாவது நாள் வைகாசி முழுநிலவு. குலமூத்தாராகிய நீங்கள் அனைவரும் கூடி அம்முடியை அவர் தலையில் அமர்த்துங்கள். சந்திரகுலத்தின் இரண்டாவது அரசர் அறம்நின்று வெற்றிகொண்டு புகழ்பெற்று நிறைவடைக!” என்றார் அமைச்சர். “அவ்வாறே ஆகுக!” என்று உரைத்தனர் குடியவையினர்.

அமைச்சர் திரும்பி கைகூப்பியபடி ஆயுஸிடம் “இளவரசே, ஒன்றுணர்க! எல்லையற்ற ஆற்றலை உணரச்செய்கிறது அரியணை. நீங்கள் சூடியுள்ள மணிமுடியோ ஐங்குலங்களை உங்கள் காலடியில் பணியவைக்கிறது. உங்கள் கையிலிருக்கும் கோலால் எந்தத் தலையையும் வெட்டி எறியும் உரிமை பெறுகிறீர்கள். இவை அனைத்தும் இம்மக்களால் உங்களுக்கு அளிக்கப்படுபவையே. அறம்புரிந்து நலம்நாடி நெறிநிற்கும்பொருட்டே அது அளிக்கப்படுகிறது. அறம்பிழைத்து விழுந்த மன்னன் அடைந்தவை அனைத்திலிருந்தும் விலக்கப்படுவான்” என்றார்.

அழுகையை அடக்க வாயை இறுக்கியிருந்த ஆயுஸ் தலைவணங்கினான். திரும்பி அவை நோக்கி வணங்கிய அமைச்சர் “இவ்வன்செயலை செய்த பின்னர் நான் இனி அவையமைதல் முறையன்று. இன்றே இவ்வவையிலிருந்து கிளம்புகிறேன். இந்நகருக்கு வெளியே முறைப்படி தர்ப்பைமேல் வடக்கு நோக்கி அமர்ந்து உயிர்விடுகிறேன்” என்றார். அவை திகைத்தது. ஒருவர் “அமைச்சரே...” என்று ஏதோ சொல்லியபடி எழ கைநீட்டி அவரைத் தடுத்த அமைச்சர் “அந்தணர்களுக்கு கல் நாட்டும் வழக்கமில்லை. எனக்கென்று தென்திசை புரக்கும்

தேவியின் ஆலயத்தில் ஒரு சொல் நாட்டுக! நான் இயற்றிய இந்த நான்கு வரிகள் ஒவ்வொரு நாளும் அவ்வாலயத்தில் அந்தணரால் பாடப்பட வேண்டும்” என்றார். அவர் ஓர் ஓலையை எடுத்து நீட்ட அதை அவைமுதல்சூதன் வந்து பெற்றுக்கொண்டான்.

“இதன் முதல் வரி அந்தணன் தனக்கே உரைக்கும் அறம். இரண்டாவது அவன் அரசனுக்கு உரைக்கும் அறம். மூன்றாவது வரி குடிகள் அவர்கள் இருவருக்கும் உரைக்கும் அறம். நான்காவது வரி அனைவருக்கும் மூதாதையர் உரைக்கும் அறம். நலம் திகழ்க!” என்றபடி தனது தலைப்பாகையையும் மேலாடையையும் கழற்றி பீடத்தில் வைத்தார். கைகளில் அணிந்திருந்த அணிகளையும் காலில் குறடுகளையும் களைந்தபின் மூன்று முறை அவையை வணங்கிவிட்டு வாயிலினூடாக நடந்தார்.

அவரை பின்னாலிருந்து அழைத்த ஆயுஸ் “அந்தணரே, தங்கள் கால்களைத் தொட்டுப்பணியும் பேறை எனக்கு அருளவேண்டும்” என்றான். பத்மர் விழிகளில் நீருடன் தலையசைத்தார். “தங்கள் மைந்தரை எனக்கு அமைச்சராக பொறுப்பேற்கும்படி தாங்கள் ஆணையிடவேண்டும்” என்றான் ஆயுஸ். “அவன் மிக இளையோன்” என்றார் பத்மர். “நானும் இளையோனே. இங்கு இதுவரை திகழ்ந்த அறம் இனியும் பெருகவேண்டும். உங்கள் குலச்சொல் எனக்கு அரணும் அறிவுறுத்தலுமாக நின்றிருக்கவேண்டும்.” அமைச்சர் “அவ்வாறே ஆகுக!” என்றார். ஆயுஸ் சென்று அவர் கால்களைத் தொட்டு வணங்க “செல்வமும் புகழும் வெற்றியும் நிறைவும் சூழ்க!” என வாழ்த்திவிட்டு வெளியேறினார்.

திரும்பி ஏவலரை நோக்கி “தந்தையை விடுதலை செய்க!” என்று அவன் ஆணையிட்டான். கைகள் விடுதலைசெய்யப்பட்டு நின்ற புரூரவஸை அணுகி கைகூப்பியபடி இடறிய குரலில் “அரசநெறி நின்றேன் என்றே நினைக்கிறேன், தந்தையே. ஆனால் மைந்தன் என சரிந்துவிட்டேன். அப்பழியிலிருந்து நான் மீளப்போவதில்லை” என்றான். அவன் தலையில் கைவைத்து “நீ பிழை என ஏதும் செய்யவில்லை, மைந்தா” என்றான் புரூரவஸ். “நான் அப்பழியிலிருந்து மீள விழையவுமில்லை. தந்தையே, தங்களுக்கு நான் இழைத்த இப்பிழைக்காக எனக்கு பிழைநிகர் உரையுங்கள். பெருந்துயர் ஒன்று என்னைச் சூழாமல் என் உளம் அடங்காது” என்றான்.

புரூரவஸ் “உன் பிறவிநூலைக் கணித்த நிமித்திகர் நீ பிள்ளைத்துயர் உறுவாய் என முன்னுரைத்தனர். அன்று அது விளங்கவில்லை, இன்று துலாவின் மறுதட்டு தெரிகிறது. நன்று திகழ்க, மைந்தா! அனைத்தும் அறிவென்றே ஆகட்டும். நிறைவுறுக!” என்றான். “ஆம், அவ்வாறே” என ஆயுஸ் தந்தையை வணங்கினான்.

# மாமலர் - 27

## 27. வீடுகோள் செலவு

கீற்றுநிலா முகில்களுக்குள் மறைந்தும் விளிம்புகாட்டியும் நகரை ஆக்கி அழித்துக்கொண்டிருந்த பின்னிரவில் முரசோ கொம்போ ஒலிக்காமல் ஓரிரு பந்தங்கள் மட்டுமே எரிந்த சிறைமுற்றத்தில் ஐம்பது வில்வீரர்கள்கொண்ட படை காத்திருந்தது. உள்ளிருந்து எழுவர் புரூரவஸை கை பிணைத்து தள்ளி அழைத்துவந்தனர். அதுவரை இருளில் கிடந்த அவன்

ஒளியை நோக்கி கண்கூசி முழங்கையால் முகம் மறைத்தான். ஒரு வீரன் "ம்" என ஊக்க அவன் நடந்து அங்கே காத்துநின்ற சிறிய மூடுதிரைத் தேரில் ஏறிக்கொண்டான். படைத்தலைவன் கைகாட்ட படை ஒரு புரவி பிறிதொன்றை உந்தியதுபோல அசைவுகொண்டு கிளம்பியது.

நகரத்தெருக்களில் ஏறி கோட்டை முகப்பைக் கடந்து பெருஞ்சாலையில் ஓடி வடதிசை நோக்கி அகன்றது. அதன் ஓசை ஒரு கோபுரம் கற்களாக இடிந்து சரிவதுபோல ஒலித்து அழிந்தது. குடிமக்கள் எவரும் இல்லங்களைவிட்டு வெளியே வரலாகாதென்று ஆணை இருந்தமையால் நகர் முற்றிலும் ஒழிந்து கிடந்தது. பின்னிரவின் தூசுமணக் காற்று மட்டும் தெருக்களில் சுழித்துக்கொண்டிருந்தது. அங்காடி முகப்பில் அவிழ்த்துவிடப்பட்ட அத்திரிகள் ஒலிகேட்டு செவிகூர்ந்து கனைத்தன. நாய்கள் எழுந்து குரைக்கத்தொடங்கின.

காவல் மாடங்களில் கைகளைக் கட்டியபடி எழுந்துநின்று நோக்கிய வீரர்கள் படைசென்று மறைந்த புழுதிமணம் இருளில் எழ பெருமூச்சுவிட்டனர். இல்லங்களின் இருண்ட அறைக்குள்ளெல்லாம் புரவிக்குளம்படிகளின் ஓசை பெருகி சுவர்களை அதிரவைத்து பின்பு ஓய்ந்தது. இருளுக்குள் சிறகடிக்கும் கலைந்த பறவைகளின் ஓசைகள் மட்டும் எஞ்சின. அங்காடிச் சதுக்கத்தில் காவல்பூதத்தின் காலருகே நின்றிருந்த பித்தன் ஒருவன் கைகளை வீசி உரக்க நகைத்தான்.

திண்ணையில் கம்பளி போர்த்தி அமர்ந்திருந்த முதியவர் நீள்மூச்செறிந்து "உறுத்துவந்தூட்டும் ஊழ்வினை. பிறிதொன்றும் சொல்வதற்கில்லை" என்றார். இடைவழிக்கு அப்பால் மறுதிண்ணையிலிருந்த இன்னொரு முதியவர் "பெருவாழ்வு. எனவே வீழ்ச்சியும் பெரிதே" என்றார். "ஆம்.

எண்ணுகையில் எளியோனாக வாழ்ந்து எளியோனாக இறப்பதே உகந்ததென்று தோன்றுகிறது” என்றார் முதல் முதியவர். “யானைக்கு புண் வந்து சீழ் கட்டுவதை பார்த்திருக்கிறீர்களா? படிகக் கோடரியால் வெட்டி முழங்கைவரை உள்ளேவிட்டு மருந்திடுவார்கள். பெருவலி கொண்டு அக்கரிய உடல் துடிப்பதை நெடுந்தொலைவிலேயே நின்று பார்க்கமுடியும்.”

மறுமுதியவர் இருமி ஓய்ந்து இழுத்து சிரித்து “எறும்புக்கும் யானைக்கும் இறப்பு ஒன்றேதான் போலும்” என்றார். மற்றவர் சொல்லெடுக்காமல் பெருமூச்சு மட்டும் விட்டார். அப்பால் எதிர்த்திண்ணையிலிருந்து ஒரு குரல் “ஆம், ஆற்றல்மிக்க விலங்குகள் நொந்து நாட்பட்டு சாகின்றன. எறும்புகள் நொடியில் பல்லாயிரமென மறைகின்றன. ஊழுக்கும் கருணையுண்டு” என்றது. முதல் முதியவர் “எவர் துயரும் அதற்கு ஒரு பொருட்டல்ல. எல்லாமே குமிழிகள்தான் நதிக்கு. அதில் பெரிதென்ன சிறிதென்ன?” என்றார்.

ஒவ்வொருவருக்கும் அவர்கள் வேட்டு எய்தி தருக்கி இழந்து ஏங்கி வாழும் அனைத்துக்கும் அப்பால் சென்று ஒரு வெறுமையின் முழுமையைக் காணும் கணமாக அமைந்தது அது. அதை சொல்லென ஆக்குவது மட்டுமே அதன் பேரெடையை தவிர்க்கும் வழி என்று தோன்றியது. ஆனால் பேசும்போதே அதன் பொருளின்மையை உணர்ந்து பெருமூச்சுடன் அமைதியானார்கள்.

கோட்டைக்கு அப்பால் குளம்படிகள் மறைந்ததும் வலி கொண்ட எருதின் ஒலியுடன் கதவுகள் மூடின. சக்கரத்தைச் சுழற்றிய பின் “இனி அவர் நகர் நுழையமுடியாது அல்லவா?” என்று ஒரு வீரன் கேட்டான். “ஆம், விலக்கு அவர்

முழுவாழ்வுக்கும்தான்” என்றான் இன்னொருவன். “ஒரு சிறு மைந்தனை இழப்பதற்கே அத்தனை துயரென்றால் இத்தனை பெரிய நகரை இழப்பது துயர்களில் மலை” என்றான் அவன். “அவருக்கு இனி வாழ்வில்லை” என்றான் ஓர் இளைஞன். “மானுடர் அவ்வாறல்ல. சென்ற இடத்தில் முற்றிலும் பொருந்தும் இயல்புடையவர்கள். சில நாட்களில் இந்நகரில் இருந்ததையே அவர் மறந்துவிடக்கூடும்” என்றார் மேலே நின்ற இன்னொரு முதியவர்.

“எப்படி மறக்க முடியும்? இந்நகர் ஒரு சிலந்தி வலை. இதைப் பின்னி இயக்கி இதுவென்று விரிந்து இதன் நடுவில் இருந்தார் அவர்” என்றது மேலும் உயரத்தில் ஒரு குரல். பிறிதொருவர் “இங்கு அவருக்கென எதுவும் எஞ்சி இருக்கவில்லை. மைந்தர் இனி அவர் மைந்தரல்ல. குடிகள் அவர் குடிகளும் அல்ல. இங்கிருந்து துயர் கொள்வதைவிட அகன்று செல்வது உகந்தது” என்றார். அனைவரும் அதை உண்மை என உணர்ந்தமையால் மறுமொழி எழவில்லை. “பல தருணங்களில் பிரிவென்பது சிறந்த அறுவை மருத்துவம். அழுகியதை, கருகியதை வெட்டி வீசிவிட்டால் அப்புண் சில நாட்களிலேயே கருகும். தோழரே, தொப்புள்கூட ஒரு புண் கருகிய வடுதான்” என அவரே தொடர்ந்தார்.

புலரிவரை குருநகரியில் புரூரவஸைப் பற்றிதான் பேசிக்கொண்டிருந்தனர். அங்காடி அருகே சிறுகுளத்தில் நீராடும்போது விடிவெள்ளி நோக்கி கைதொழுதபின் “எங்கு செல்கிறார்கள் என்று தெரியுமா?” என்றார் ஒரு வணிகர். “காட்டுக்கு” என்றார் பிறிதொருவர். “காடு ஊர் போலவே விரிந்து பரந்தது. காட்டில் எங்கே?” என்றார் இன்னொருவர். “அதை அவர்தான் தெரிவு செய்யவேண்டும், தன் திறனுக்கும்

தேவைக்கும் ஏற்றபடி." தணிந்த குரலில் "நாம் மீண்டும் அவரை பார்க்கப் போவதில்லையா?" என்று ஓர் இளைஞன் கேட்டான். "பார்க்கக்கூடும், ஆனால் அவர் பிறிதொருவர் என்றாகியிருப்பார். பண்டு காட்டில் இருப்பது அவருக்கு உகந்ததாக இருந்தது. இக்குலம் அங்கிருந்துதான் கிளம்பி வந்தது என்று அவர் சொல்வதுண்டு" என்றார் ஒருவர்.

அரண்மனை அனைத்து நாண்களையும் எதிர்புரி சுற்றித் தளர்த்திவைத்த யாழ்போல முற்றிலும் ஓசை அடங்கி இருந்தது. புரூரவஸின் தேவியர் தங்கள் மஞ்சத்தறைகளுக்குள் அவிழ்ந்த குழலும் அழுது வீங்கிய முகமுமாக அமர்ந்திருந்தனர். படைவீரர்கள் வேல்களையும் வில்களையும் சாத்திவிட்டு அதனருகே சிறு குழுக்களாக அமர்ந்து தங்கள் எண்ணங்களுக்குள் மூழ்கி இருந்தனர். அமைச்சர்களின் அவையிலும் படைத்தலைவர்களின் கூடத்திலும்கூட சொல்லென ஏதும் எழவில்லை. அவ்வப்போது எழுந்த பேச்சுக்குரல்கள்கூட மிகத் தாழ்ந்த ஒலியிலேயே இருந்தன. அமைதி ஒவ்வொருவரையும் அச்சம் கொள்ளச்செய்து மந்தணம் பேசவைத்தது. மந்தணம் பேசும்தோறும் அனைத்துத் துளைகளும் செவிகள் போலாயின. அனைத்துக் குமிழ்களும் முனைகளும் விழியொளி கொண்டன.

தன் மஞ்சத்தறைக்குள் சாளரத்தினூடாக இருள்வெளியைப் பார்த்தபடி ஆயுஸ் கைகட்டி நின்றிருந்தான். குளிர்காற்றில் அவன் ஆடை எழுந்து பறந்தது. தொலைவில் வளைந்த வானில் தெரிந்த விண்மீன்களை நோக்கிக்கொண்டிருந்தான். விண்மீன்களை நோக்குகையில் மண்மீதுள்ள ஒவ்வொன்றும் எளிதென்றும் பொருளற்றதென்றும் தோன்றும் விந்தை என்ன என்று எண்ணிக்கொண்டான். பொருளற்றவையே அனைத்தும்

என்று தோன்றுகையில் எழும் விடுதலை உணர்வை எண்ணியபோது வியப்பு எழுந்தது. இச்சிறு வாழ்க்கை, இச்சிறு வாழ்க்கை என ஓடிக்கொண்டிருந்தது சித்தம்.

சிறு கூடொன்று கட்டி நான் நான் என்று தருக்கி நின்றிருக்கும் சிதல். எங்கோ எவரோ எதற்கோ நடந்துசெல்லும் கால்களால் தட்டி சிதறடிக்கப்படுகிறது. சலிக்காது மீண்டும் மீண்டும் கட்டி எழுப்புகின்றது. சிதல்கள் பிறிதொன்றை அறிந்திலாதவை. அது ஒன்றே தங்களுக்கு ஆணையிடப்பட்டிருப்பதுபோல அவை கணம் சோராது செயலாற்றுகின்றன. அதனூடாக நிறைவடைகின்றன. அல்லது அவற்றுக்கும் நிறைவின்மை உண்டா? எண்ணி அந்தக் கூட்டை அள்ளிக்கொள்ள இயலாது சித்தம் பேதலிப்பதுண்டா?

தன் எண்ணங்களை தாளாதவன்போல நீள்மூச்சு விட்டபடி அவன் அறைக்குள் நடந்தான். பீடத்தில் இருந்த தன் உடைவாளை எடுத்து அதன் உறையில் இருந்த சிற்பச்செதுக்குகளை வருடியபடி பொருளற்ற எண்ணங்களுக்குள் சென்று மீண்டும் பெருமூச்சுவிட்டான். அதை வைத்துவிட்டு வந்து விண்மீன்களை நோக்கி நின்றிருந்தான். எவரென்று நான் இருப்பேன் இக்குலநிரையில்? இது ஒரு அருமணி மாலை. வெறுங்கல்லென்றிருந்தாலும் மணியொளி உண்டு. முண்டிப்புடைத்தெழுந்து ஒளிகொண்டு ஆவதொன்றுமில்லை. இருத்தல், கடந்துசெல்லுதலுக்கு அப்பால் எஞ்சுவதொன்றும் இல்லை.

துயின்றுகொண்டிருந்த ரயனுக்கும் விஜயனுக்கும் அருகே மஞ்சத்தில் ஒருவர் இருப்பை ஒருவர் உணர்ந்தபடி அமர்ந்திருந்தனர் ஸ்ருதாயுஸும் சத்யாயுஸும். நெடுநேரத்திற்குப்பின் ஸ்ருதாயுஸ் உடல் அசைய

ஒலிகொண்டு “காட்டுக்குள் புகுந்திருப்பார்கள் போலும்” என்றான். சத்யாயுஸ் ஆம் என்று தலையசைத்தான். மீண்டும் ஒரு வினாவை அவன் கேட்க விரும்பினான். அதை சொல்லென ஆக்கினால் பிறகு அழித்தெழுத முடியாத கல்வெட்டென்று ஆகிவிடும் என்று எண்ணி ஒதுக்கினான். குளிரென குத்தும் வலியென உயிரை வதைத்த அத்தருணத்தை கடக்கத்துடித்த உள்ளம் அதில் ஆழ்வதை விரும்பத்தொடங்கியது எப்போது என எண்ணிக்கொண்டான்.

அரசவைவிட்டு தன் இரு மாணவர்கள் நிழலென தொடர இல்லம் வந்த அமைச்சர் பத்மர் தன் அறைக்குள் அமர்ந்து மைந்தனுக்குரிய ஆணைகளை பன்னிரு ஓலைகளிலாகப் பொறித்து பட்டுத்துணியில் சுற்றிவைத்தார். பதினாறு வயதான சுதர்மன் நகருக்கு அப்பால் குருவாகினி என்னும் ஓடைக்கரையில் அமைந்திருந்த வேதக்கல்வி நிலையிலிருந்து தேரில் அழைத்து வரப்பட்டிருந்தான். அவர் எழுதிக்கொண்டிருந்தபோதுதான் அவன் வந்து வணங்கினான். நிமிர்ந்து நோக்கி அவனை சற்றுநேரம் வெறித்தபின் நீராடி வரும்படி ஆணையிட்டார். ஈரக்குடுமியில் நீர் சொட்ட கைகளைக் கட்டிக்கொண்டு தன் அருகே நின்ற அவனிடம் அச்சுவடிகளை கொடுத்தார்.

“இவை ஆணைகள், நெறிகாட்டுதல்கள், அருஞ்சொற்றொடர்கள். மைந்தா, அறம் ஒன்றைத்தவிர பிறிதொன்றை இறையென்றும், கொடியென்றும், உறவென்றும் இலக்கென்றும் கொள்ளாதிருத்தல் உன் கடன். நலம் சூழ்க!” என்று வாழ்த்தினார். அவன் அவர் தாள்தொட்டு சென்னிசூட தலையில் கைகளை வைத்து “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றார். அவன் விழிநீரை இமையசைத்து உலரச்செய்தபடி பின்காலடி

வைத்து அவர் முன்னிலை நீங்கினான். அவன் அன்னை அங்கே காத்திருந்தாள். அவன் தோளில் கைவைத்து "அழக்கூடாது" என்றாள். அவன் நிமிர்ந்து நோக்கினான். அவள் முகம் சிலையென்றிருந்தது.

மரவுரியை அணிந்து பிற அணிகளேதுமின்றி வலக்காலெடுத்து படியிறங்கி திண்ணைக்கு வந்து அங்கு எழுந்தமர்ந்திருந்த தன் தந்தையை அணுகி குனிந்து அவர் கால்களைத்தொட்டு சென்னிசூடினார் பத்மர். "முன்னரே செல்கிறாய், மூதாதையர் எண்ணம் அதுவெனில் ஆகுக!" என்றார் கிழவர். "தங்களுக்கு என் மைந்தன் இருக்கிறான், தந்தையே" என்றார். "ஆம், உனக்கு அவன் அளிக்கும் நீரும் எள்ளும் தேவையில்லை. வடக்கிருப்பவன் இங்குள அனைத்தையும் துறந்து செல்கிறான். பதினெட்டு நாட்களில் உடல் விட்டு உயிர் அகலுமென்பார்கள். முதல் ஆறு நாட்கள் விழைவுகள். இரண்டாவது ஆறு நாட்கள் சினங்கள். மூன்றாவது ஆறு நாட்கள் பற்றுகள். அவை உனக்கு நிகழட்டும்" என்றார் முதியவர்.

"தங்கள் நற்சொல் திகழ்க!" என்றார் பத்மர். "நம் குடியில் முன்னர் மூன்று மூதாதையர் வடக்கிருந்ததுண்டு. அவர்கள் சென்றமைந்த அவ்வொளிமிக்க உலகில் நீயும் சென்று அமைக! நலம் சூழ்க!" என்றார் முதியவர். அவர் முகத்தில் துயர் ஏதும் தெரியவில்லை. துயரற்ற புன்னகையுடன் அவரைத் தொழுது பத்மர் புறம்காட்டாது விலகி இருள் பரந்த தெருவில் இறங்கினார். அங்கே நின்றிருந்த அவருடைய மாணவர்கள் தொழுது உடன்வந்தனர்.

நகருக்கு வெளியே தெற்கு எல்லையில் அமைந்த கொற்றவை ஆலயத்தின் அருகே நின்றிருந்த தொன்மையான அரசமரத்தின் அடியில் அவருக்கென தர்ப்பையிருக்கை விரிக்கப்பட்டிருந்தது.

அவருடைய இரு மாணவர்கள் அங்கே காத்து நின்றிருந்தனர். நகரத் தெருவினூடாக கைகளைக் கூப்பியபடி அவர் நடக்க அவரை அழைக்க வந்திருந்த இரு மாணவர்கள் அவருக்குப்பின் ஓசையின்றி நடந்தனர். அவர்களின் காலடியோசைகள் மந்தணச்சொற்கள்போல இருட்டுக்குள் ஒலித்தன.

ஓர் ஆழுள்ளத்து எண்ணம்போல அவர்கள் செல்வதாக அவருடைய மாணவர்களில் ஒருவன் எண்ணிக்கொண்டான். நகரின் முழுவாழ்வையே மாற்றி அமைக்கும் நிகழ்வுகள் நடந்த அந்த இரவில் குடிமக்கள் எவரும் எதையும் அறியலாகாதென்று சொல்லப்பட்டிருந்தது. உடலுக்குள் நெஞ்சும் வயிறும் மூச்சுப்பையும் இயங்குவதுபோல் அவர்கள் அறியாது அவை நிகழ்ந்துகொண்டிருந்தன என அவனுக்குத் தோன்றியது. அத்தருணம் பின்னர் தன்னால் கூர்ந்து நினைவுற்று மீண்டும் மீண்டும் சொல்லப்படப் போவதென்பதை உணர்ந்தமையின் கிளர்ச்சியால் அவன் உடல் அடிக்கடி விதிர்த்துக்கொண்டிருந்தது. கூடவே பென்னம்பெரிய நிகழ்வுகள் அத்தனை எளிதாகவும் இயல்பாகவும்தான் நிகழுமா என அவன் உள்ளம் வியந்துகொண்டது.

இருளுக்குள் நடந்துசென்று தன் வடக்கிருத்தலுக்கான இடத்தை அடைந்த பத்மர் கொற்றவை ஆலயத்தை அணுகி கொலைவிழியும் கோட்டெயிறும் ஈரெண் கைகளில் படைக்கலங்களுமாக நின்ற அன்னையை வணங்கி அவ்வாலயத்தை மும்முறை வலம் வந்தார். அரசமரத்தடியை வந்தடைந்ததும் அவர் ஒரு மாணவனை நோக்க அவன் மெல்ல தலையசைத்து உரிய நற்பொழுது அணுகிவிட்டது என்று உணர்த்தினான். கைகூப்பியபடி அவர் அரசமரத்தடி மேடைமேல் ஏறி தர்ப்பைப்புல் இருக்கை மேல் கால்

மடித்தமர்ந்தார். முழுவிடுகை முத்திரையில் வலக்கையை மலர்த்தி அதன்மேல் இடக்கையை வைத்தார். கண்களை மூடி தன் நெஞ்சத்து ஆழத்தின் அதிர்வில் சித்தம் நாட்டி அமர்ந்தார்.

நான்கு மாணவர்களும் அவரையே நோக்கி நின்றனர். அவரது மூச்சு சீராக எழுவதையும் உடல் இயல்பாக தளர்நிலை கொள்வதையும் கண்டதும் மெல்ல பின்னடைந்து அங்கிருந்த உதிரிப் பாறைகளில் அமர்ந்தனர். அப்போதுதான் நகருக்குள் புரவிக்குளம்போசைகள் எழுந்து அகல்வதை அவர்கள் கேட்டனர். திரும்பி ஒருவரை ஒருவர் நோக்கினர். ஓசை முற்றடங்கியபோது நால்வரும் ஒருங்கே பெருமூச்சு விட்டனர்.

புரூரவஸை அவனது படைவீரர்கள் காட்டின் எல்லையென அமைந்த திரிகூடம் என்னும் மூன்று மலைப்பாறைகளின் அடிவாரம்வரை கொண்டுவந்து இறக்கிவிட்டனர். அவன் கைகளைக் கட்டியிருந்த பட்டுத்துணியை அகற்றியபின் படைத்தலைவன் “செல்க!” என்று முகம் நோக்காது ஆணையிட்டான். இடறிய காலடிகளுடன், களைப்பில் விழிகள் மங்கி காட்சிகள் நீர்ப்பாவை என அலையடிக்க அவன் நடந்தான். இமைகளை அடித்து திறந்து நோக்கினான். மெல்லத்தெளிந்த காட்டுமுகப்பில் விழுந்து பெருகிய பின்காலையின் வெண்ணிற ஒளி அனைத்தையும் வெளிறச்செய்திருந்தது. முந்தையநாள் மழைபெய்திருந்த ஈரமண்ணிலிருந்து நீராவி எழுந்து மூச்சடைக்க வைத்தது. காட்டிலிருந்து எழுந்த பறவைக்குரல்கள் செவியின் நுண்சவ்வை அதிர வைக்குமளவுக்கு உரக்க ஒலித்தன.

அவனுக்கு வாழ்த்தோ வணக்கமோ உரைக்காமல் படைவீரர்கள் தங்கள் புரவிகளில் ஏறிக்கொண்டனர். தேர் திரும்பும் சகட ஒலி கேட்டது. விழப்போன புரூரவஸ் கால்களை ஊன்றி நின்று

சிறிய மரமொன்றை பற்றிக்கொண்டு கண்களை மூடிக்கொண்டான். கால் கீழ் மண்பரப்பு காற்றுத் திரையென நெளிந்து புகையென்றாகி அடியிலியில் அவனை வீழ்த்திக்கொண்டே இருந்தது. மூச்சிரைக்க உடல் வியர்வையில் நனைந்து காட்டிலிருந்து வந்த காற்றில் குளிர்கொள்ள அவன் மெல்ல நிலைமீண்டபோது தனக்குப்பின் அச்சிறு படை நின்றிருப்பதாகவே உள்ளம் உணர்ந்தது. திரும்பி நோக்கியபோது நெடுந்தொலைவில் குளம்புகள் எழுப்பிய புழுதி முகில்கீற்றென கரைவதைக் கண்டான்.

புல் பரப்பில் அப்படை வந்து சென்ற தடம் எஞ்சியிருந்தது. ஒரு மழையில் அது முற்றிலும் அழியும். பின் அவன் அங்கு வந்ததற்கு சான்றிருக்காது. அங்கிருந்து அவன் மீண்டு சென்றால் அவன் புரூரவஸ் என்பதற்கும் சான்றிருக்காது. அக்கணம்வரை அவனில் நிறைந்திருந்த ஏதோ ஒன்று ஒரு கணத்தில் முழு எடையையும் அகற்றி வெறும் நுரையென, புகையென ஆயிற்று. அவன் முதலில் உணர்ந்தது ஒரு வகை உவகையை. அது விடுதலை உணர்வு என்று அறிந்தான். அதன்பின்னரே அது எதிலிருந்து என தெளிந்தான்.

உணவறையிலிருந்து முதலில் இழுத்துச் செல்லப்பட்டபோது எழுந்த முதல் அதிர்ச்சி, அது விலகியபோது எழுந்த துயர், பின்பு ஊறி எழுந்து நிறைந்த கசப்பு, அனைத்தும் அகன்ற பின் எஞ்சியது அது. அதை ஓர் உணர்வென்றே அவன் எண்ணவில்லை. நெஞ்சமெனும் பட்டுத்துணி மேல் வைக்கப்பட்ட பெரும்பாறை. சொல்லென்றாகாத ஒன்று. எஞ்சிய வாழ்நாள் முழுக்க அதை சுமந்தலையப் போகிறோமென்றே எண்ணியிருந்தான். உண்மையில் நகர் நீங்குகையில் இனி இப்பேரெடையும் நானும் மட்டும்தானா

என்றெண்ணியே உளம் பதைத்தான். அது அப்படி விலகுமென்று எண்ணியிருக்கவேயில்லை.

கைகளை விரித்தபடி காடு நோக்கி ஓடவேண்டும் போலிருந்தது. இயல்பான தன்னுணர்வால் அவ்வெண்ணத்தை அடக்கியதுமே ஏன் அடக்கவேண்டும் இனி என்ற எண்ணம் வந்தது. இனி எத்தளையும் இல்லை. எந்தப் பார்வைக்கும் கட்டுப்பட வேண்டியதில்லை. அரசன் சொற்களெனும் சரடுகளால் நாற்புறமும் இழுத்துக் கட்டப்பட்டவன். முந்தையோர் சொன்ன சொற்கள். சூழ்ந்திருப்போர் சொல்லும் சொற்கள். நாளை நாவிலும் நூலிலும் வாழப்போகும் சொற்கள். இது சொல்லின்மை வாழும் காடு. பொருள் ஏற்றப்படாத மரங்களின், புதர்களின், விலங்குகளின் வாழ்வுப்பரப்பு.

முற்றிலும் விடுதலையடைந்திருக்கிறோம் என்று மீளமீளச் சொல்லி தனக்கே அவ்வுணர்வை ஊட்டிக்கொண்டான். அவன் உள் அதை அறிந்ததுமே இரு கைகளையும் விரித்து உரக்கக் கூவியபடி துள்ளிக்குதித்தான். சுழன்று சுழன்று கூச்சலிட்டு தடுமாறி விழுந்தான். இரு கைகளாலும் நிலத்தை ஓங்கி அறைந்து கூச்சலிட்டான். அவ்வோசை செவியில் எழ உள்ளிருந்து மீண்டும் மீண்டும் கூச்சல்கள் கிளம்பி வந்தன. சொல்லற்ற பொருளற்ற வெற்றொலிகள். விலங்குநிகர் கூவல்கள், பிளிறல்கள், அமறல்கள், அலறல்கள்.

இரு கைகளாலும் தோள்களையும் மரங்களையும் அறைந்தான். நெஞ்சும் முகமும் நிலம்பட விழுந்து புல் பரவிய தரையில் முகத்தை உரசிக்கொண்டான். புரண்டு புரண்டு எழுந்தமர்ந்து மீண்டும் கூச்சலிட்டான். பாய்ந்து காட்டுக்குள் ஓடி சுற்றி வந்தான். ஒவ்வொரு மரத்தையாக தழுவினான். துள்ளி கிளைகளைப் பற்றி குதித்து உலுக்கினான். சிரிப்பும்

அழுகையும் ஓய்ந்தபோது தெய்வங்களுக்குரிய முகத்துடன் ஒரு சாலமரத்தின் அடியில் தலைக்கு கைவைத்து மல்லாந்து படுத்திருந்தான். அவன் முகம் கிளைகளினூடாக வந்த ஒளி விழுந்து பொற்தழல் சூடியது.

மெல்லிய நிழலாட்டம் ஒன்றை இமைகளுக்குள் உணர்ந்து அது எதுவென்று செவிகூர்ந்தான். ஊனுண்ணியா, பன்றியா? களிறல்ல, எருதும் அல்ல. பின்பு விழிதிறக்காமலேயே அப்பெருங்குரங்கை அவன் கண்டான். மெல்ல எழுந்து அமர்ந்தபோது சற்றும் அஞ்சாமல் அவன் அருகே முகம் நோக்கி அது அமர்ந்திருந்தது. "ரீச்" என்ற ஒலி எழுப்பி பற்களைக் காட்டியது. அவன் "ஆம்" என்றான். "ரீச்" என்று ஒலி எழுப்பி அது காட்டைக் காட்டியது. "ஆம், காட்டுக்கென்று வந்துவிட்டேன். உங்களுடன் இருக்கப்போகிறேன்" என்றான். இரு விழிகளும் ஒன்றையொன்று தொட்டுக்கொண்டன. அக்குரங்கை பலமுறை பார்த்திருப்பதுபோல் அவன் உணர்ந்தான்.

ஒரு மெல்லிய திடுக்கிடலுடன் ஏதோ ஒரு கனவில் குரங்குகளுடன் கிளை தாவி கூச்சலிட்டதை நினைவுகூர்ந்தான். அப்போது அது உடனிருந்தது. நெடுங்காலத்துக்கு முன்பு. அல்லது நெடுங்காலத்துக்குப் பின்பா? அவனும் ஒரு பேருடல் குரங்காக இருந்தான். அவன் அதன் விழிகளை நோக்கி "பீமன்! என் பெயர் பீமன்!" என்றான். அது மெல்ல அருகே வந்து சுட்டுவிரலால் அவன் மூக்கைத் தொட்டது. பின்பு பற்களைக் காட்டியபடி குனிந்து அவன் முகவாயை தன் உதடுகளால் தொட்டது. அதற்குப் பின்னால் மேலும் குரங்குகள் எழுந்து வந்தன. அவன் எழுந்து அவற்றை நோக்கி சென்றான். ஒரு குரங்கு எழுந்து அவன் கைகளை பற்றிக்கொண்டது.

முதலில் அவனை சந்தித்த குரங்கு "வருக!" என்றது. "ஆம், இனி உங்களுடன்தான்" என்று அவன் சொன்ன முதல் கணமே அது சொன்ன மொழி எப்படி தனக்கு புரிந்ததென்று திடுக்கிட்டான். அது விழிகளை சந்தித்து "இனி நாம் பேசிக் கொள்ளமுடியும்" என்றது. புரூரவஸ் தன் நெஞ்சொலிக்கும் ஓசையை கேட்டான். "இத்தனை எளிதாகவா?" என்றான். "மிக மிக எளிது. ஒரு மெல்லிய கோடு மட்டுமே தாண்டப்பட வேண்டியது" என்றது அக்குரங்கு.

# மாமலர் - 28

**28. மலர்திரிதல்**

"புரூரவஸ் பன்னிரண்டு ஆண்டுகாலம் குரங்குகளுடன் அந்தக்காட்டில் இருந்தான் என்கின்றன கதைகள்" என்று முண்டன் சொன்னான். "காட்டில் அவன் பிறிதொரு குரங்கென்றே ஆனான். அறத்தின்பொருட்டு காமத்தையும் பொருளையும் விட்டவன் பின்னர் அவையிரண்டின்பொருட்டு அறத்தை விட்டான். பின்னர் மூன்றையும் விட்டு விடுதலை ஆகி விலங்கென்று மகிழ்ந்திருந்தான். சூரியன் சமைத்ததை உண்டான். மரங்கள் நெய்ததை உடுத்தான். பாறைகள் கட்டியதற்குள் துயின்றான். இருகாலமும் இல்லாமல் இருந்தான். நினைவுகளோ கனவுகளோ இல்லாமல் திளைத்தான்."

"முதற்கதிரை நெஞ்சில் அறைந்து ஒலி எழுப்பி எதிர்கொண்டான். அந்தி அமைவை தனிக்கிளையில் அமர்ந்து ஊழ்கத்தில் மூழ்கி அனுப்பி வைத்தான். இருசுடர்களுக்கு பொழுதுகளை அவியாக்கி வேள்வி இயற்றினான்.

கற்றதனைத்தையும் அங்கு அவன் மறந்தான். கற்றலில்லாமல் இருந்த உள்ளம் உணர்தலை மேலும் மேலுமென கூர்தீட்டிக்கொண்டது. உணரப்பட்ட காடு அவன் உள்ளென்றாகியது. அதிலெழுந்தன சுனைகள், ஓடைகள், ஆறுகள். உயர்ந்தன மலைகள். குளிர்முகில்சூடி நின்றன. பெருமழையில் குளிர்ந்தது நிலம். தளிரும் மலரும் சூடியது பசுமை" முண்டன் தொடர்ந்தான்.

பீமன் அவன் முன் கைகளை மார்பில் கட்டியபடி ஊர்வசியின் ஆலயத்தின் படியில் அமர்ந்து சிறியவிழிகள் கனவிலென தணிந்திருக்க அப்பேச்சை கேட்டிருந்தான். "அந்நாளில் ஒருமுறை குரங்குகளுடன் அவன் கிளைவழியாகச் செல்கையில் சுனை சூழ்ந்த அச்சோலையைக் கண்டான். அங்கு சென்று சுனைக்கரை சேற்றில் இறங்கி நீரருந்த குனிந்தபோது தன் முகத்தை நோக்கி மின்பட்டது என தான் என்னும் உணர்வை அடைந்து திகைத்து எழுந்து நின்றான். நினைவுகள் அலையென வந்தறைய மூச்சுவாங்கினான். அகன்று மறைந்த எடையனைத்தும் வந்து அவன் தோளில் அமர உடல்குனித்தான்."

"என்ன?" என்றது பெருங்குரங்கு. "இங்குதான் அவளைக் கண்டேன்" என்றான். "இங்கா?" என்றது குரங்கு. "ஆம், இங்கே..." என்று அவன் சொன்னான். "நெடுங்காலம் முன்பு. ஒருவேளை அவள் வந்து சென்ற தடம்கூட இங்கிருக்கலாம்." மூக்கைச் சுளித்தபடி முகர்ந்து அலைந்த குரங்கு ஒரு மூக்குமலரைக் கண்டெடுத்து "இது அவளுடையதா?" என்றது. புரூரவஸ் அதை ஒருகணம் நோக்கியதுமே உடல் அதிர்ந்து விழிமங்கலடைந்தான். கால்கள் நடுங்கி நிலம்

கவ்வாமலாயின. பின்னர் மூச்சைக் குவித்து சொல்லென்றாகி "ஆம், அவள் அணிந்திருந்தவைதான்" என்றான்.

மெல்ல உளம் மின்ன "அவள் வந்தபோது அணிகள் இல்லாத காட்டுப்பெண்ணாக இருந்தாள். இது நான் அவளுக்கு அளித்த அணிகளில் ஒன்று. அவளுடைய சின்னஞ்சிறு மூக்கை இது அழகுபடுத்தியது. அனைத்து அணிகளையும் அவள் கழற்றிவிட்டுச் சென்றாள். ஆனால் எஞ்சிய அந்நகைகளில் இது இருக்கவில்லை என இப்போது உணர்கிறேன். அன்று அந்நகைகளை நோக்கவே என் நெஞ்சுகூடவில்லை." குரங்கு அதை வாங்கி நோக்கி "இதை ஏன் அவள் கொண்டு சென்றாள்? ஏன் இங்கே விட்டாள்?" என்றது.

அவன் மறுமொழியில்லாமல் அதை நோக்கிக்கொண்டிருந்தான். நீள்மூச்சுகள் நெஞ்சுலையச் செய்தன. "அவள் முகம் இம்மண்ணுக்குரியதல்ல என்று என் உள்ளாழம் சொல்லிக்கொண்டே இருந்தது. அவள் ஒரு கானணங்கு என்று ஐயம்கொண்டிருந்தேன். அணுக்கத்தில் அரையிருளில் அவள் முகத்தை நோக்குகையில் கருவறைத்தெய்வம் போலிருந்தாள். அறியா நோக்கு ஒன்று அவள் விழிகளை அச்சுறுத்துவதாக ஆக்கியது. ஆகவே இந்த மூக்குமலரைச் செய்து அம்முகத்தில் அணிவித்தேன். அவளை என் குடிக்குள் நகருக்குள் அரண்மனைக்குள் கொண்டுவந்து சேர்த்தது இது." அதைச் சுழற்றி நோக்கியபின் "அவளை பெண்ணென்று மண்ணில் நிறுத்தியது இந்த அணியே" என்றான்.

"அவள் யார்?" என்றது குரங்கு. "அவள் சென்றபின் கடுந்துயரில் துயில்கெட்டு அரைமயக்கில் சித்தம் சிதறி அலைய எங்குளோம் என்றில்லாது இருந்த நாட்களில் ஒருமுறை அவளை என் கனவில் கண்டேன். பிறிதொரு நிலம்.

பொன்னொளிர் பாறைகள். அந்திச்செவ்வொளி. அவள் பூத்த மலர்மரத்தின் அடியில் நின்றிருந்தாள். நான் நன்கறிந்த அந்த மணம். அதுதான் என்னை அங்கு இட்டுச்சென்றது. அவளை தொலைவிலேயே கண்டு ஓடி அருகணைந்தேன். கைகளை பற்றிக்கொள்ளச் சென்றபோது அவள் பின்னடைந்தாள். விழிகளில் என்னை மறுக்கும் அயன்மை.”

கூரிய குரலில் “மானுடனே, நான் ஊர்வசி. விண்மகள். உன் கையணைந்ததும் வாழ்ந்ததும் கனிந்ததும் இங்கு நான் கண்ட ஒரு கனவு. நீ என்னை தீண்டலாகாது. ஏனென்றால் இது உன் கனவு” என்றாள். நான் மேலும் அறியாது ஓர் அடி எடுத்துவைக்க “என் ஒப்பின்றி தீண்டினால் உன்னை சிதறடிப்பேன்” என்றாள். நான் அஞ்சி பின்னடைந்தேன். அவள் நானறிந்தவள் அல்ல என விழியும் செவியும் சொல்லிக்கொண்டிருந்தன. அவளே என உள்ளம் தவித்தது.

விண்ணவனின் அமராவதிப்பெருநகரின் ஆடற்கணிகை அவள், நாரதரின் தீச்சொல்லால் மண்ணுக்கு வந்தவள் என்று அறிந்தேன். “அறிந்து கடந்தேன் அங்குள்ள வாழ்க்கையை. இனி மீளமாட்டேன், செல்க!” என அவள் சொன்னபோது ஒருகணம் என் அச்சத்தைக் கடந்து பாய்ந்து சென்று அவள் கைகளைப் பற்றினேன். அவை அனலென்றாகி பற்றி எரிந்தன. என் உடல் அழல்கொண்டு எரியலாயிற்று. பின்னர் இரவும் பகலும் எரிந்துகொண்டிருந்தேன்.

நோயில் கிடந்தபோது என் விழிதொடும் எல்லையில் சொல்தொடா தொலைவில் அழியாது நின்ற அவள் தோற்றத்தை மட்டுமே நோக்கிக்கொண்டிருந்தேன். ஒருகணமும் பிறிதிலாத வலி. என் அலறல்களுக்கும் அரற்றல்களுக்கும் விம்மல்களுக்கும் அப்பால் அவள்

தெய்வவிழிகளுடன் புன்னகைத்து நின்றிருந்தாள். நான் ஏங்கி எரியும் வன்பால் என அவளுக்குக் கீழே விரிந்திருந்தேன். துளித்து உதிராமல் முத்தென ஒளிவிட்டபடி இருந்தாள் அவள்.

என்னை என் நகர்மக்கள் மூங்கில் பாடையில் தூக்கிக்கொண்டு போகும்போது தலைக்கு மேல் அவள் புன்னகைத்தபடி வந்து கொண்டிருப்பதையே நான் பார்த்தேன். அவர்கள் சிதை மேல் என்னை வைப்பதையும் சந்தனப்பட்டைகளால் என் உடலை மறைப்பதையும் இசையும் வாழ்த்துக்களும் முழங்க ஈமச்சடங்குகளில் ஈடுபடுவதையும் உடலில் எங்கோ இருந்த அறியா விழிகளால் நோக்கிக்கொண்டிருந்தேன். உண்மையில் அவையெல்லாம் விரைவில் முடிந்து என் உடல் எரிகொள்ள வேண்டுமென விழைந்தேன். முள்ளில் சிக்கிய பட்டாடை என எனது சித்தம் அவ்விழிந்த உடலில் மாட்டி துடித்துக்கொண்டிருக்கிறதென்று தோன்றியது. திமிறுந்தோறும் சிக்கி பறக்கும்தோறும் கிழிபட்டுக்கொண்டிருந்ந்தேன்.

இதுதான் அந்த தருணம். இதோ, இன்னும் சிறு பொழுது. இன்னும் சில கணங்கள். என் மைந்தன் சிதையை வணங்கி சுற்றிவருவதை உணர்ந்தேன். என் கால் தொட்டு தொழுதபின் தயங்கிய அவனை குடிமூத்தார் கைபற்றி ஊக்க அனற்கலயத்தை அவன் வீசினான். அரக்கில் நெருப்பு பற்றிக்கொண்ட திப்பெனும் ஒலியைக் கேட்டு ஒருகணம் விதிர்த்தேன். என் காலை அனல் வந்து தொட்டபோது மீண்டும் ஒரு முறை விதிர்த்தேன். இரு விதிர்ப்புகளுக்கு நடுவே நான் அவளை மீண்டும் கண்டேன். இதே சுனைக்கரையில், இதே சோலையில்.

இங்கே அவள் இலைநிழலசைவுக்கு நடுவே விழிமாயமோ எனத் தெரிந்தாள். அவளைக்கண்டதும் எழுந்த உவகையால்

விழுந்துவிடுபவன்போல நடுங்கினேன். பாய்ந்து அருகே சென்று அவளை "சியாமை!" என அழைத்தேன். திரும்பி நோக்கியபோது அவள் என்னை அறியவில்லை என்று தோன்றியது. "சியாமை, நான் புரூரவஸ்... உன்னை மணந்தவன்!" என்றேன்.

அவள் அருகே வரும்தோறும் சியாமை எனும் உருவம் மென்பட்டு ஆடையென அவள் உடலில் இருந்து நழுவிச் சரிந்து அவள் ஊர்வசி என்றானாள். என் முன் வந்து நிற்கும்போது பெண்மையின் அழகும் தேவர்களின் மிடுக்கும் கலந்து முந்தையோர் குகைகளில் வரைந்த வண்ண ஓவியம் போலிருந்தாள். மானுடரைக்கடந்து அப்பால் நோக்கும் தேவவிழிகள். அவளை முன்பு எப்போது கண்டேன் என உள்ளம் தவித்தது. பின் அது கனவிலென உணர்ந்தேன். இதுவும் கனவா என திகைத்தேன்.

மானுடர் அறியமுடியாத புன்னகை கொண்ட உதடுகள். தழலென முகில்கீற்றென அணுகிவந்தாள். "அரசே, நான் யாரென்று முன்னரே சொன்னேன். எதன் பொருட்டு இவை நிகழ்ந்தன என்றும் சொன்னேன். மீண்டும் ஏன் என்னைப்பார்க்க வந்தாய்?" என்று கேட்டாள். நான் கைகூப்பி கண்ணீருடன் "ஆம், தேவி. ஏன் இந்த ஆடல் என்று உன் ஆடலைச் சொன்னாய். இதில் நான் ஆற்றும் பணி என்ன என்று நான் இன்னும் அறியவில்லை. இவ்வாடலினூடாக நான் எங்கு செல்கிறேன்? எதை வென்று எங்கு அமையப்போகிறேன்? அதை சொல், நான் விடுதலைபெறுவேன்" என்றேன்.

அவள் என் விழிகளை நோக்கி "மானுடர் ஊழும் தேவர்களின் ஊழும் வெவ்வேறு திசை கொண்டவை. மானுடர் சிறுபூச்சிகள், புகைச்சுருள்கள், மகரந்தப்பொடிகள். தேவர்கள் அவர்களைச் சுமந்து சுழன்று செல்லும் பெருங்காற்றுகள். நானறிந்தவற்றால்

உங்களுக்கு பயனேதுமில்லை" என்றாள். "நீ ஆற்றுவதை நீயும் அறியமாட்டாயா என்ன? உன் ஊழை சொல். அதன் துளியே என்னுடையதும்" என்றேன். "எவருக்காயினும் ஊழ் அறியாப்பெருவலையே" என்றாள்.

"நான் உன்னிடம் கேட்க வேண்டிய வினா ஒன்றே. அதற்கு மட்டும் மறுமொழி சொல். அவ்வினா இருக்கும் வரை என் உடல் விட்டு உயிர் எழமுடியாது. அனைத்தும் அமையும் முழுமையின் முடிவிலியில் பிறிதிலாது என்னால் பொருந்தவும் இயலாது" என்றேன். "சொல்க!" என்று அவள் சொன்னாள். "நான் உன் முன் ஆடையின்றி வரலாகாதென்று என்னை ஏன் கோரினாய்? அதன்பொருட்டு என்னை ஏன் பிரிந்தாய்?" என்றேன்.

அவள் புன்னகை மாறுபட்டது. விழிதிருப்பி "முன்பு உன் மூதன்னை தாரையை சந்திரன் ஏன் விழைந்தான்? அவளை வியாழன் ஏன் ஏற்றுக்கொண்டான்? மீண்டும் அவள் ஏன் சந்திரனுடன் சென்றாள்? ஏன் அவள் செருக்கி மகிழ்ந்து யானைமேல் அமர்ந்திருந்தாள்?" என்றாள். நான் திகைத்து "அறியேன்" என்றேன். "ஒவ்வொரு முறையும் அக்கதைகளை நான் எண்ணியதுண்டு. எண்ணம் சென்று எட்டியதே இல்லை" என்று தவிப்புடன் சொன்னான்.

"நீ இதை அறியும் கணம் இன்னமும் கூடவில்லை" என்றாள் ஊர்வசி. "சொல்!" என்று கை நீட்டி அவள் தோளைப்பற்றினேன். அங்கு வெறுமையை என் கை உணர்ந்தது. அத்தருணத்தில் என் காலை என் மைந்தனின் கைள் பற்றின. விறகுக்கட்டைகள் சரிய சிதையிலிருந்து புரண்டு கீழே விழுந்தேன். மண் என்னை இரும்புப்பலகை போல எழுந்து ஓங்கி அறைந்தது. என் நெஞ்சுக்குள் மூச்சு வெடித்தெழுந்தது.

புரூரவஸ் அந்த மூக்குமலரை கைகளால் மெல்லச்சுழற்றியபடி நோக்கிக்கொண்டிருந்தான். பொன்னிலும் மணியிலும் அமைந்த வாடாச்சிறுமலர் அதைச்சூழ்ந்து வெறும்வெளியை விழிகளால் செதுக்கி ஒரு முகத்தை உருவாக்கிவிட முயல்பவன் போலிருந்தான். குரங்கு அவனை நோக்கி விழிசிமிட்டியும் சிறுசெவி மடித்தும் உடல்சுரண்டியும் அமர்ந்திருந்தது.

மெல்ல அவன் அருகே அவளிருக்கும் உணர்வை அடைந்தான். நிமிர்ந்து நோக்கியபோது கரிய உடலில் நிலவொளி மிளிர அப்பால் சுனைக்கரையில் முழங்கால் மடித்து முட்டுகளில் முகம்சேர்த்து நீள்கூந்தல் வழிந்து நிலம்வளைந்திருக்க அமர்ந்திருக்கும் அவளைக் கண்டான். அவன் கையிலிருந்த மூக்குமலர் அவள் மூக்கில் இருந்தது. அதன் ஒளியில் அவள் முகம் மையம்கூர்ந்திருந்தது.

முண்டன் பீமனின் அருகில் வந்தான். "மாமல்லரே, இப்போது ஒரு வாய்ப்பு. புரூரவஸ் என்றாகிச் சென்று அவளிடம் அவர் விழைந்த வினாவைக்கேட்டு அறிந்து மீள்க! அவள் மறுமொழி சொல்வாளெனில் நீங்கள் கொண்ட முடிச்சொன்றும் அவிழலாம்." கைகளைக் கட்டி ஊர்வசியின் ஆலய கற்சுவரில் சாய்ந்து துயிலிலென சரிந்திருந்த பீமன் திடுக்கிட்டவன்போல எழுந்தான். பின்னர் "ஆம்" என்றான். பெரிய பற்களைக்காட்டி புன்னகைசெய்து "செல்க!" என்றான் முண்டன்.

பீமன் சருகுகளில் காலடிகள் ஒலிக்க மெல்ல நடந்து ஊர்வசியின் அருகே சென்று நின்றான். நீரில் அவன் உருவைக்கண்டு சற்று திடுக்கிட்டு தலை தூக்கி பார்த்தாள். பின்னர் விழிகளில் நகை எழ எழுந்து அவன் அருகே வந்து புன்னகைத்தாள். "நீயா?" என்றாள். "குரங்கெனவே

மாறிவிட்டாய்.” பீமன் “ஆம், நான் கொண்டவை ஆனவை கருதியவை அனைத்தும் எங்கோ உதிர்ந்துவிட்டன. பிறிதொருவனாக இங்கிருக்கிறேன். இங்கிருந்தும் உதிர்த்துச் செல்ல ஒன்றே உள்ளது” என்றான். மானுடம்கடந்த நோக்கு வெறித்த விழிகளுடன் “என்ன?” என்று அவள் கேட்டாள்.

“முன்பு நான் கேட்ட அதே வினாதான், விண்மங்கையே. ஆடையின்மையை நீ அஞ்சியது ஏன்?” அவள் அவன் கண்களை நோக்கி துயருடன் புன்னகைத்தாள். “இல்லை, அவ்வினாவுடன் அனைத்தும் முடிந்துவிடக்கூடும். பிறிதொன்று தொடங்கலுமாகும். அதைச்சொல்ல பொழுது கனியவில்லை, பொறுத்தருள்க!” என்றாள். “சொல், நீ என்னை ஏன் பிரிந்தாய்?” என்று அவன் உரக்கக்கூவியபடி முன்னால் சென்றான்.

“எனில் இவ்வினாவுக்கு விடை சொல்க! புதனில் அமைந்த இரு தந்தையரின் குருதியில் இளையை விரும்பியது எது? இளனை விரும்பியது எது?” என்றாள் அவள். “ஆணென்றும் பெண்ணென்றும் உன்னை கருசுமந்தனர். மூன்று முதலறங்களில் அறத்தை உனக்களித்தது யார்? பொருளையும் இன்பத்தையும் உனக்களித்தவர் யார்?” அவள் மேலும் அணுகி வந்து புன்னகை சிரிப்பென ஆக, விழிகளில் சிறு நஞ்சொன்று குடியேற “சந்திரகுலத்தவனே, உன்னிலமைந்த எதை விழைந்து வந்தாள் விண்மகள்?” என்றாள். “அவற்றுக்கு விடையறிந்தால் அவள் சென்றதென்ன என்றும் அறிவாய்.”

அவன் திகைத்து நிற்க அவள் மென்காலடி வைத்து பின்னால் சென்று இலைகளினூடாக வந்த ஒளிக்கதிர்களால் பின்னப்பட்ட காற்றுவெளியினூடாக தன் வண்ணங்களைக் கலந்து கரைந்து விழிவிட்டகன்றாள். அவள் கேட்ட வினாக்கள் உண்மையில் சொல்வண்ணம் கொண்டனவா என அவன் உள்ளம் வியந்தது.

அவள் மறைந்தபோது சொற்களும் இழுக்கப்பட்டு உடன் சென்று மறைய அவன் உள்ளம் வெறுமைகொண்டது. விலகி அந்நிகழ்வைக் காட்டிய காலவெள்ளப்பரப்பு இருவிளிம்புகளும் இணைந்து ஒற்றைப்பெருக்கென்றாகியது.

பீமன் திடுக்கிட்டு விழித்து “சென்றுவிட்டாள்” எனக்குழறினான். உடனே தன்னை உணர்ந்து தன் கைகளால் தரையை அறைந்து “சென்றுவிட்டாள்! சென்றுவிட்டாள்!” என்று கூவினான். “விழிதிறவுங்கள், பாண்டவரே. நீங்கள் இருப்பது நெடுந்தொலைவில், நெடுங்காலத்துக்குப்பின்” என்றான் முண்டன். பீமன் எழுந்து அவன் தோளைப்பற்றி உலுக்கி “நான் அவ்வினாவை கேட்டேன். அவள் மறுமொழி அளிக்கவில்லை” என்றான். “அதை அறியுமிடத்தில் நானில்லை என்று அவள் எண்ணினாள். மறுவினாக்களினூடாக கடந்துசென்றாள்” என்றான்.

முண்டன் புன்னகைத்து “உங்கள் மூதாதை மண்ணில் மூன்று முறை ஊர்வசியைப் பார்த்ததாக கதைகள் சொல்கின்றன. எனவே மீண்டும் அவ்வினாவை சென்று அவளிடம் கேட்க உங்களுக்கு வாய்ப்புள்ளது. அவள் விடையுரைத்தாகவேண்டும்” என்றான். “ஏனென்றால் மூன்றாம் முறை புரூரவஸ் அவள் கேட்ட வினாக்களுக்கு விடையளித்தார். அவள் அளித்த விடையால் நிறைவடைந்து மீண்டார் என்கின்றன நூல்கள்” முண்டன் சொன்னான்.

“அவர் காட்டில் கல்லாலமரம் ஒன்றின் அடியில் அமர்ந்து தன்னுள் வேர் செலுத்தி ஆழ்ந்தார். புதுத்தளிர்கொண்டு எழுந்தார். அவரை முழுமைகொண்ட முனிவர் என அறிந்தனர் குருநகரியின் குடிகள். அவருடைய மைந்தர்களும் பெயர்மைந்தர்களும் குடிகளும் திரண்டு வந்து அவரை

அடிபணிந்து வணங்கினர். நெற்றியில் நிலவெழுந்து அவர் விசும்பு என்றானபோது அவரை பேரறச்செல்வர் என கல்நிறுத்தி தங்கள் குலதெய்வமென வணங்கினர். அவர் ஊர்வசியைக் கண்ட அச்சுனைக்கரையில் அவளுக்கு சிற்றாலயம் ஒன்றை அமைத்து சிலைவடித்தனர்.”

“இங்கிருந்து நீங்கள் அங்கே செல்லமுடியும்” என முண்டன் சொன்னான். “இம்முறை விடைபெற்று மீள்வீர்கள். புரூரவஸ் பெற்ற விடைகள் நூலில் இல்லை, அவற்றை ஊழ்கத்தால் மட்டுமே அறியலாகும் என்கிறார்கள். அவ்வூழ்கம் இன்று உங்களுக்கு அமையட்டும்.” பீமன் பெருமூச்சுடன் “ஆம்” என்றான். அவன் கைகட்டி ஆலயப்படியில் மீண்டும் அமர அவனருகே வந்த முண்டன் “உளம் அமிழுங்கள். மீண்டும் அத்தருணத்தை சென்றடையுங்கள்” என்றான்.

பீமன் தோள்தளர்ந்தவனாக அப்படிகளில் நீர்ப்படலம்போல் படிந்தான். திரும்பி கருவறையில் அமர்ந்த ஊர்வசியின் தெய்வ முகத்தை பார்த்தான். பொழுது சற்று மாறியிருந்தமையால் ஒளிக்கோணம் மாறுபட்டு நோக்கு பிறிதொன்றென ஆகிவிட்டிருந்தது. அதில் இருந்த கனவு அகன்று மானுட அன்னையருக்குரிய கனிவு குடியேறியதாகத் தோன்றியது. “ஆம், அமிழ்க!” என்று முண்டன் சொன்னான். பீமன் கண்களை மூடிக்கொண்டான். முண்டன் கைநீட்டி அவன் இருபுருவங்களுக்கு நடுவே மெல்ல தொட்டபோது மாபெரும் சுட்டுவிரலொன்றால் சுண்டித் தெறிக்கவிட்டு இருள் வெளிக்குள் சென்றுகொண்டே இருக்கும் உணர்வை அடைந்தான்.

மீண்டும் குரங்குடன் அச்சுனைக்கரையை அடைந்தான். முன்பெனவே அவள் அங்கு அமர்ந்திருந்தாள். மேலும்

தனிமையும் துயரும் கொண்டிருந்தாள். அவன் காலடி ஓசையைக்கேட்டு திரும்பிப்பார்த்து துயர் படர்ந்த புன்னகையுடன் “நீயா?” என்றாள். “ஆம் நானேதான்” என்று அவன் சொன்னான். எழுந்து அவன் அருகே வந்து “மீண்டும் ஒருமுறை உன்னை நான் காண்பேன் என்று வகுக்கப்பட்டுள்ளது. இன்று நீ வருவாய் என்றும் அறிவேன்” என்றாள்.

பீமன் “ஆம்” என்றான். “நான் உன்னிடம் ஒரு வினாவை கேட்க வந்துள்ளேன்.” அவள் புன்னகையுடன் “கேள், அதுவே இறுதிவினா அல்லவா?” என்றாள். அவன் “இங்கிருந்து நீ முற்றிலும் உதிரவில்லையா என்ன? ஏன் மீண்டும் இச்சுனைக்கரைக்கே வந்தாய்? விண்ணவளே உன்னில் எஞ்சியிருப்பதென்ன?” என்றான்.

அவள் விழிகள் மாறுபட்டன. இமை தாழ்ந்து, முகம் பழுத்தது. நீள்மூச்சுடன் முலைகள் எழுந்தமைந்தன. ஒரு சொல்லும் உரைக்காமல் திரும்பி நடந்தவளை அவன் பின்னால் சென்று அழைத்து “சொல்!” என்றான். அவள் சொல்லற்ற விழிகளால் நோக்கியபின் அணையும்சுடர் என மறைந்தாள்.

பீமன் விழித்தெழுந்து “இம்முறையும் நான் அதை கேட்கவில்லை. பிறிதொன்றை கேட்டேன்” என்றான். “ஆனால் அவ்வினாவுக்கான விடை எனக்குத் தெரியும்” என்றான். முண்டன் “அதுவே உங்கள் மூதாதையை விடுவித்த சொல்லாக இருக்கக்கூடும்” என்றான் முண்டன். “நூல்கள் என்ன சொல்கின்றன?” என்று பீமன் கேட்டான். முண்டன் பெரிய பற்களுடன் புன்னகைத்து “இளவரசே, மானுடன் உண்மையிலேயே அறியத்தக்க எதுவும் நூல்களில்

எழுதப்பட்டதில்லை. நூல்கள் புதையலுக்கு வழிசுட்டும் வரைபடங்கள் மட்டுமே” என்றான்.

பீமன் நீள் மூச்சுடன் தலையசைத்து “நன்று! இது இவ்வாறுதான் நிகழமுடியும்” என்றான். எழுந்தபோது அவன் முகம் தெளிவடைந்திருந்தது. “நாம் இங்கிருந்தும் கிளம்பியாகவேண்டும் எனத் தோன்றுகிறது. நான் உணர்ந்த இன்மலர் மணம் இதுவல்ல.” முண்டன் புன்னகைத்து “ஆம், நீங்கள் முன்னரே உளம்கிளம்பிவிட்டீர்கள்” என்றான்.

# மாமலர் - 29

### 29. பிறிதொருமலர்

வண்ணக் கம்பளத்தை தைத்துச்செல்லும் ஊசிநூல் என காட்டுக்குள் சென்ற சிறுபாதையில் நடந்துகொண்டிருந்தனர். ஊர்வசி ஆலயம் அமைந்த சோலைவிட்டு கிளம்பும்போது பீமன் மூச்சைக்குவித்து இழுத்து தொலைவில் எழுந்த மெல்லிய நறுமணத்தை முகர்ந்து அத்திசை நோக்கி ஓநாய்போல மூக்கு கூர்ந்தபடி நடந்தான். அந்த மணம் மிக அருகே என ஒருகணம் வீசியது, மிக அப்பாலென மறுகணம் தோன்றியது. அது வெறும் உளமயக்கே என அடிக்கடி மாயம் காட்டியது. அந்த ஊசலில் ஆடிச் சலித்து அதை முழுமையாக விலக்கியபடி நடந்தபோது அதுவே வந்து அவர்களை அழைத்துச்சென்றது.

ஊர்வசியின் ஆலயத்திலேயே அவர்கள் ஓர் இரவை கழித்தனர். இரும்புநீர்மை என குருதி மாறி தசைகள்மேல் பேரெடையைச் சுமத்தியது போன்றதொரு களைப்பு பீமனை ஆட்கொண்டது.

உடலை சற்றும் அசைக்கமுடியாதவனாக அவன் சருகுமெத்தைமேல் படுத்து இருண்டுவிட்ட வானை நோக்கிக்கொண்டிருந்தான். விண்மீன்கள் துளித்து ஒளிகொண்டு ததும்பி அதிர்ந்து நின்ற வானம். மெல்லிய அதிர்வொன்று நிகழ்ந்தால் அவையெல்லாம் பொலபொலவென உதிர்ந்து மண்ணை நிரப்பிவிடுமென்று இளவயதில் கேட்ட கதையை நினைவுகூர்ந்தான்.

அவன் அருகே அமர்ந்திருக்க சதசிருங்கத்தின் ஏரிக்குமேல் எழுந்த விண்மீன்பரப்பை சுட்டிக்காட்டி தருமன் சொன்னான் “அங்கு நின்றிருப்பது இலைக் கருமை தழைத்த ஒரு பெருமரம், மந்தா. அதில் கரிய சிறகுள்ள பறவைகள் என இப்போது பறந்தலைபவர்கள் கந்தர்வர்கள். கண்ணுக்குத் தெரியாத இன்னிசை எழுப்புபவர்கள் தேவர்கள். இந்த இனியமணம் அதன் மலர்கள் எழுப்புவது.”

அவ்வெண்ணம் எழுந்ததுமே திரும்பிவிடலாம் என்று தோன்றியது. மறுகணமே உள்ளம் எழுந்து கிளம்பிவிட்டது. உடலை அசைக்க அதனால் முடியவில்லை. இரும்புத்துண்டில் கட்டப்பட்ட பறவை என அது சிறகடித்துச் சுழன்று வந்தது. அறியா மணமொன்றைத் தேடி அலைவதன் அறிவின்மையை அவன் அருகில் மலை என கண்டான். அது வெறும் உளமயக்கு. அல்லது ஓர் அகநகர்வு. அதை பருவெளியில் தேடுவதைப்போல பொருளிலாச் செயல் பிறிதொன்றில்லை.

ஏன் இதற்கென கிளம்பினேன்? உண்மையிலேயே அவள் விழிகனிந்து கேட்ட அக்கணத்தில் என் உள்ளம் எழுச்சிகொண்டதா? இல்லை, நான் நாப்போக்கில் சொன்னதுபோல அர்ஜுனன் மீண்டுவந்தான் என்பதனால்தான் என்பதே உண்மையா? அல்லது அங்கே இருந்த சலிப்பை

வெல்லவா? ஒருவேளை நானும் ஒரு பயணம் செய்யவேண்டும் என்னும் சிறுவனுக்குரிய வீம்பா? எதுவோ ஒன்று. ஆனால் இனிமேலும் இதை நீட்டித்தால் வீணனென்றே ஆவேன்.

அவன் உள்ளூர புரண்டுபுரண்டு படுத்துக்கொண்டிருந்தான். ஆனால் உடல் கற்சிலை என மண்ணில் அழுந்திக்கிடந்தது. பெருமூச்சுடன் கலைந்து "நாம் எங்கு செல்லவிருக்கிறோம்?" என்றான். "அறியேன்" என்றான் முண்டன். "ஏனென்றால் நானும் இந்தப் பயணத்தை முதல்முறையாக நிகழ்த்துகிறேன். என்னிடம் கதைகள் உள்ளன என்பதற்கப்பால் நானும் உங்களைப்போன்றவனே" என்றான். பீமன் நெடுநேரம் வானை நோக்கிக்கொண்டிருந்தான். மீண்டும் பெருமூச்சுக்கள் விட்டபடி தன்னுணர்வுகொண்டு "இது முடிவடையாத பயணம் எனத் தோன்றுகிறது. மறுமுனையில் ஒளிதெரியா சுரங்கப்பாதை" என்றான்.

"எல்லா அகவழிப் பயணங்களையும்போல" என்றான் முண்டன். பீமன் கையூன்றி தன் உடலைப் புரட்டி ஒருக்களித்து "உம்மிடம் கதைகள் உள்ளன அல்லவா? அவற்றைக்கொண்டு கழங்காடவும் அறிவீர். ஆடுக!" என்றான். "இப்போதா?" என்றான் முண்டன். "இப்போது ஒளியில்லை. கழங்குகள் கண்ணுக்குத்தெரியாது." பீமன் "கைகள் கழங்குகளை அறிந்தால் போதும்" என்றான். முண்டன் "ஆம், அதுவும் மெய்யே" என்றான். எழுந்தமர்ந்து தன் இடைக்கச்சையிலிருந்து கழற்சிக்காய்களை எடுத்துப் பரப்பினான். அவன் கைகள் அதில் ஓடத்தொடங்கின.

"பெயர்கள், பெயர்களின் நிரையன்றி பிறிதில்லை. நிரையெனில் சரடு எது? சரடெனில் வலை எது? பெயர்கள் விண்மீன்கள்போல தனிமைசூழ்ந்தவை. மின்னிநடுங்கும் விழிகள் அவை. இருள்

சூழ்ந்த ஒளித்துளிகள். எவ்வொலிகளின் துளிவடிவுகள் அவை?” அவன் நாவிலிருந்து பொருளின்மை சூடிய சொற்கள் பொழியலாயின. “விஷ்ணு, பிரம்மன், சந்திரன், புதன், புரூரவஸ், ஆயுஸ், நகுஷன். ஆ… இடக்கை அள்ளிய இவை எவை? லட்சுமி, சரஸ்வதி, தாரை, இளை, ஊர்வசி. ஓ… இவள் இந்துமதி. இவள் அசோககுமாரி.”

கழற்சிகள் அவன் கைகளில் அந்திப்பறவைகள் சேக்கேறும் மரக்கிளையில் என பூசலிட்டு சுற்றிவருவதைக் காணமுடிந்தது. “கலையறிந்தவள் இந்துமதி. திருமகள் அசோககுமாரி. தனியள் ஊர்வசி. கோட்டெயிர் கொற்றவை போலும் அவள். ஆ… இவள் தாரை. மூதன்னை. குருதி ஊறிய முதல் கருவறை. நோக்குக, இது இளை! இருமுலையில் ஒன்று நஞ்சு, ஒன்று அமுது. இருவிழிகளில் ஒன்று ஆண், ஒன்று பெண். இவன் சந்திரன். வளர்ந்து மறைந்து மீண்டும் எழுந்து தேய்ந்தெழுகிறான் புரூரவஸ். இவள் ஊர்வசி. இருண்டிருக்கிறாள். கரியள்…”

அவன் சொற்கள் ஒழுகிச்சென்றன. பொருளின்மை கொள்கையில் சொற்கள் மேலும்மேலும் நுண்மையாகின்றன. ஆடைகழற்றிய குழவிகள்போல. இல்லை, எங்கும் தொடாத ஒளிபோல. சொற்களை அவன் அச்சத்துடனும் திகைப்புடனும் நோக்கிக்கொண்டிருந்தான். சொற்கள் ஏன் ஒன்றுடன் ஒன்று இணைவதே இல்லை? அவை பொருளென்னும் பிறிதொன்றால் இணைக்கப்படுகின்றன. அக்கணங்களுக்கு மட்டும். விளிம்புரசிக்கொண்டு விலகிவிடுகின்றன. விண்மீன்கள் ஏன் உரசிக்கொள்வதுமில்லை?

“இவள்!” என்றான் முண்டன். அவன் கையில் ஒரு கழற்சிக்காய் இருந்தது. மற்ற அத்தனை காய்களும் மெல்ல நாகம் பெட்டிக்குள் சுருண்டமைவதுபோல சரடாக மாறி அவன்

கச்சைக்குள் சென்று அமைந்தன. “இவள் அவளே” என்றான். “யார்?” என்றான் பீமன் கனவுக்குரலில். “இவளை உமை உருவாக்கினாள் என்பது கதை” என்றான். “சொல்க!” என்றான் பீமன். “பெண்ணை எதிலிருந்து எழுந்தவள் என வகுக்கும் ஒரு நிமித்திக மரபுண்டு. மண்ணில் மைதிலி. புனலில் சத்யவதி. அனலில் துருபதன் கன்னி. அரசே, காற்றில் பிறப்பவர்களும் உண்டு. தாமரையில், அல்லியில், குவளையில், மந்தாரையில், செண்பகத்தில் பிறப்பவர்களுண்டு. வெண்தூவி அன்னத்தில், தாவும் சிட்டுக்குருவியில், மீன்கொத்தியில் பிறப்பவர்களுமுண்டு. மீனிலும் சங்கிலும் முத்துச்சிப்பியிலும் எழுந்தவர்களுமுண்டு.”

“இவள் மரத்தில் மலர்ந்தவள். ஆகவே இவளை அசோகசுந்தரி என்று சொல்கின்றனர் முனிவர்” என முண்டன் சொன்னான். “பாற்கடலை விண்ணவரும் ஆழுலகோரும் சேர்ந்து கடைந்தபோது எழுந்தது கல்பமரம். அதன் அலைவளைவு தண்டாக, நுரைகள் தளிரென்றாக, துமிகள் மகரந்தமென்று மாற உருக்கொண்டெழுந்தது. நோக்குவோர் இயல்புக்கேற்ப வண்ணமும் மணமும் கொள்வது. தூயநெஞ்சத்து முனிவருக்கு வெள்ளை மந்தாரம். கண்ணில் காமம் விரிந்த கன்னியருக்கு நெஞ்சை மயக்கும் பாரிஜாதம். அழிவின்மை கொண்ட தேவருக்கு அது சந்தனம். இன்பம் நாடும் உலகோருக்கு அசோகம். தெய்வங்களுக்குப் படையலாகும்போது ஹரிசந்தனம்.”

இளைஞனாகவும் கன்னியாகவும் ஆகி காதலாடும்பொருட்டு விண்ணில் உலாவிய சிவனும் உமையும் தொலைவில் எழுந்த நறுமணத்தை அறிந்தனர். “அது பாரிஜாதமணம் அல்லவா?” என்றாள் உமை. “ஹரிசந்தன மணம் வீசும் அது கல்பமரம்.

பாற்கடலில் எழுந்தது” என்றான் சிவன். அவர்கள் அருகணைந்தபோது அன்னை அவன் தோளை அணைத்து தன் முலையொன்றால் அவனை எய்து “எனக்கு மட்டும் ஏன் அது பாரிஜாதம்?” என்றாள். “ஆம், இப்போது நான் மந்தாரத்தை உணர்கிறேன்” என்றான் சிவன். அவர்கள் தழுவிக்கொண்டனர். இரு உடல்களாக இரு வகை அனல்கொண்டனர். முடிவிலா ஆடல் நிகழலாயிற்று. உமை மூச்சொலிக்கிடையே அவன் காதில் “அது சந்தனம்” என்றாள். “ஆம்” என்றான் அவன்.

எழுந்து அமர்ந்து அவன் விழிகளை விலக்கும்பொருட்டு மறுபக்கம் நோக்கிய தேவி அந்த மரத்தைப் பார்த்து “என்ன மரம் இது? எதை நமக்குக் காட்டுகிறது?” என்றாள். “நாம் யாரென்று” என்றான். “நான் இப்போது யார்?” என்றாள். “அதை கேள்” என்றான் சிவன். அவள் கைநீட்டி ஒரு மலரைப்பற்றி “அசோக மணம்” என்றாள். “உலகியலின் நறுமணம். நீ அகம் கனிந்து அன்னையென்றாகியிருக்கிறாய்” என்றான் சிவன். அவள் அந்த மலரைப் பறித்து கையில் எடுத்தாள். அது ஓர் அழகிய கன்னி என அவள் முன் நின்றது.

சிவன் “நீ உளம்கொண்ட மகள்” என்றான். “இவளை அசோகசுந்தரி என்றழை!” உமை அவளை அருகழைத்து நெஞ்சோடணைத்து குழல் முகர்ந்தாள். “இனியவள்” என்றாள். “இவளுக்கு உகந்த துணைவன் எங்குள்ளான்?” என்று திரும்பி தன் கணவனிடம் கேட்டாள். “தேவகன்னி இவள். தேவர்க்கரசனுக்கு அன்றி பிறருக்கு துணையாகலாகாது” என்றான். “தேவர்தலைவனுக்கு அரசி இருக்கிறாள்” என்ற உமை “தேவர்க்கரசனுக்கு நிகரென்றாகி அவன் அரியணையில் அமர்பவனுக்கு துணைவியாகுக!” என்றாள்.

சிவன் நகைத்து “அத்தகைய ஒருவன் பிறக்க இன்னும் நீண்டகாலம் ஆகும். சந்திர குருதிமரபில் ஆயுஸின் மைந்தனாக அவன் பிறப்பான். அவன் பெயர் நகுஷன்” என்றான். உமை “அவனுக்காகக் காத்திரு. அவனை அடைந்து மைந்தனைப் பெறும்வரை உன் இளமை மாற்றமின்றி நீடிக்கும்” என அவளை வாழ்த்தினாள். அவள் அன்னையின் கால்தொட்டு வணங்கி மண்ணில் ஒரு பொற்துளி என உதிர்ந்தாள்.

அறச்செல்வன் என்று பெயர்கொண்டிருந்தான் ஆயுஸ். தந்தையிடமிருந்து கற்ற நெறிகள் அனைத்தையும் தலைகொண்டிருந்தான். ஊனுணவு உண்ணவில்லை. உயிர்க்கொலை செய்யவில்லை. எனவே போருக்கு எழவில்லை. புலவர் அவைகளில் நூலாய்ந்தும் வைதிகர் அவைகளில் மெய்ச்சொல் அறிந்தும் முனிவர் நிலைகளில் யோகத்திலமர்ந்தும் நாடுபுரந்த அவனை அறத்தோன் என்னும் சொல்லாலேயே குடிகளும் பிறஅரசரும் அழைத்தனர்.

ஆயுஸ் அயோத்தியின் அரசர் சுவர்ஃபானுவின் மகள் இந்துமதியை மணந்தான். அவர்கள் நீண்டநாள் காதலில் மகிழ்ந்திருந்தும்கூட மைந்தர் பிறக்கவில்லை. இந்திரனை வெல்லும் மைந்தன் அவர்களுக்கு பிறப்பான் என்று நிமித்திகம் சொன்னது. அதற்காகக் காத்திருந்து சலித்த ஆயுஸ் அருந்தவத்தாராகிய வசிட்டரைச் சென்றுகண்டு தாள்பணிந்து தனக்கு மைந்தன் உருவாக அருளும்படி கோரினான். “நான் அருளி உனக்கு மைந்தன் பிறப்பதாக என் உள்ளம் சொல்லவில்லை, நீ துர்வாசரிடம் செல்!” என்றார் வசிட்டர்.

துர்வாசர் “நீ பெறப்போகும் மைந்தன் நான் உளம் கொள்பவன் அல்ல. நீ செல்லவேண்டிய இடம் அந்தணராகிய தத்தாத்ரேய மாமுனிவரின் குருநிலை” என்றார். நோன்பிருந்து வணங்கிய கைகளுடன் தத்தாத்ரேயரின் தவக்குடிலுக்குச் சென்றான் ஆயுஸ். அங்கே அம்முனிவர் முப்புரிநூல் அணியாமல், இருவேளை நீர்வணக்கமும் மூன்றுவேளை எரியோம்புதலும் ஒழித்து காமத்திலாடிக்கொண்டிருப்பதை கண்டான். அழகிய மங்கையர் அவருடன் இருந்தனர். அவர்கள் கழற்றி வீசிய அணிகளும் ஆடைகளும் மலர்க்கோதைகளும் அங்கே சிதறிக்கிடந்தன. காமச்சிரிப்பும் குழறல்பேச்சும் ஒலித்தன.

ஆயுஸ் உள்ளே செல்ல ஒப்புதல் கோர “வா உள்ளே” என்றார் தத்தாத்ரேயர். “இது உகந்த தருணமா?” என அவன் தயங்க “நான் முப்போதும் இப்படித்தான்... விரும்பினால் வருக!” என்றார். அவன் கைகூப்பியபடி குருநிலைக்குள் சென்றான். மதுமயக்கில் சிவந்த விழிகளுடன் இருந்த தத்தாத்ரேயர் அரசனை நோக்கி சரியும் இமைகளைத் தூக்கி சிவந்த விழிகள் அலைய “நீ யார்?” என்றார். “முனிவரே, நான் துர்வாசரால் உங்களிடம் ஆற்றுப்படுத்தப்பட்டேன். பெருவல்லமைகொண்டு இந்திரனைவெல்லும் மைந்தனை நான் பெறுவேன் என்கின்றன நிமித்திக நூல்கள். அத்தகைய ஒரு மைந்தனுக்காக நாங்கள் காத்திருக்கத் தொடங்கி நெடுநாட்களாகின்றன. கனி உதிர்ந்து எங்கள் மடி நிறைய உங்கள் சொல் உதவவேண்டும்” என்றான்.

“அரசே, நான் இங்கு செய்துகொண்டிருப்பது என்ன என்று நீ பார்த்திருப்பாய். நான் அந்தணன் அல்ல, அறவோனும் அல்ல. என் சொல் முளைத்தால் அது நன்றென்று கொள்ளமுடியாது” என்றார். “நான் துர்வாசரால் இங்கு அனுப்பப்பட்டேன். அவர் அறியாதவரல்ல. தங்கள் அருளால் மட்டுமே என் மைந்தன்

மண்நிகழ்வான்” என்றான் ஆயுஸ். “அரசே, என் வாழ்க்கையை நீ அறியமாட்டாய். நினைவறிந்த நாள்முதல் முழுப்புலனடக்கம் பயின்றவன் நான். நாச்சுவையை முற்றிலும் ஒறுத்தேன். குளிருக்கும் வெயிலுக்கும் பழகி தோலை கல்லாக்கினேன். நாற்றத்திற்கு மூக்கை அளித்து நறுமணத்தை அறியாதவனானேன். விழியின்பம் அளிக்காத வெறும் பாலையில் வாழ்ந்தேன். செவியின்பம் அளிக்கும் சிறுபூச்சிகளைக்கூட தவிர்த்தேன். உறவை நான் அறியவில்லை. காமத்தை திறக்கவே இல்லை.”

“அவ்வண்ணம் முற்றிலும் புலன்வாயில்களை மூடி அமர்ந்து நெடுந்தவம் இயற்றினேன். படிகளில் ஏறி பின் பறந்து பின்னர் கரைந்து பின்னர் முற்றழிந்து அதுவென்றாகும் கணத்தில் என் முன் ஓர் அழகி தோன்றினாள். நான் அவளைக் கண்டதும் அஞ்சி விழிமூடினேன். இமையூடாகத் தெரிந்தாள். அணுகி வந்து என் முன்நின்றாள். அச்சம் காமம் என்றாக நான் அவளை தொட்டேன். என்னை சிறுமகவென ஆக்கி தன் மடியிலிட்டாள். அனைத்தையும் மறந்து அவள் முலையுண்டு மகிழ்ந்து அங்கிருந்தேன்.”

“மீண்டதும் நான் என் உடலெங்கும் புலன்கள் விழித்துக்கொண்டிருப்பதை கண்டேன். நானிருந்த செம்புலத்தில் எத்தனை வண்ணங்கள், எத்தனை புள்ளொலிகள், எத்தனை தளிரோசைகள் என அறிந்தேன். அள்ளி அருகிருந்த ஊற்றுநீரை உண்டபோது நாவினிமையில் திளைத்தேன். வெந்தமண்ணில் விழும் முதல்மழைத்துளி மணல் அலைகளை மலரிதழ் வளைவுகளென மணக்கச்செய்வதை அறிந்தேன். இன்காற்று உடல்தழுவ சிலிர்த்தேன்.

அவையனைத்தையும் நான் முன்னரே அறிந்திருப்பதையும் உணர்ந்தேன்.”

“என் முன் இருந்த மென்மணல்வெளியில் பெண்ணுடல் தெரியலாயிற்று. வளைவின் அழகுகள், குழைவின் மெருகுகள், குன்றெனும் எழுச்சிகள், ஓடையெனும் கரவுகள். காமத்தில் உடல் எழ கைமணலை அள்ளி எழுக என் விழைவு என்றேன். சிலம்பொலி கேட்க திரும்பி நோக்குகையில் இவளைக் கண்டேன். பிறிதொரு கைப்பிடி மண்ணை அள்ளி இவளில் இல்லாதவை எழுக என்றேன். அவள் வந்தாள். இருவரும் அல்லாத ஒருத்தி வருக என்றேன். மூன்றாமவள் அமைந்தாள். அதன் பின் பெண்கள் பெருகிக்கொண்டே இருந்தார்கள்.”

“நுகர்வில் திளைக்கும் புலன்களுக்கு நடுவே நான்குமுனைகளையும் தாவித்தாவி இணைக்கும் எண்காலி என இருந்த ஆறாவது புலன் மனம். தன் முதுகில் சுமந்திருந்த மூட்டைச்சுமையே புத்தி. எட்டு காலை அசைத்தசைத்து ஓயாது பின்னச்செய்யும் ஒன்றென அதன் உள்ளுறைந்த தன்னிலை சித்தம். அவ்வலையே அதுவென்று எண்ணும் அதன் அறியாமையே அகங்காரம். ஒன்பது இருப்புகளையும் கரைத்து ஒளியென புறவுலகில் பரவியமைவதே முழுமை என உணர்ந்தேன்.”

“யோகமுழுமை என்பது உள்ளொடுங்குதல், போகமுழுமை வெளிவிரிந்தமைதல். உள்ளணைத்து புலன்களை வெளிப்பொருள் விரிவின் பகுதியென்றாக்குவது கள். களிமயக்கில் திளைக்கையில் உணவில் பிறந்து உணவை உண்டு உணவில் கழித்து உணவில் திளைத்து உணவில் இறந்து உணவாகும் சிறுபுழுவின் இன்ப முழுமையை அடைந்தேன். அவ்வாறு இங்கிருக்கிறேன்” என்றார்

தத்தாத்ரேயர். “நச்சுக்கலம் என உலகோர் என்னை சொல்லக்கூடும். என்னில் ஒருதுளியையும் பிறருக்கு அளிக்க முடியாது.”

“அதையறிந்தல்லவா துர்வாசர் என்னை இங்கு அனுப்பியிருப்பார்?” என்றான் ஆயுஸ். “அறியாதும் அனுப்பியிருக்கலாம். சென்று அதையும் கேட்டு வருக!” என்றார் தத்தாத்ரேயர். ஆயுஸ் மீண்டும் துர்வாசரிடம் சென்று தத்தாத்ரேயர் இருந்த நிலையைச் சொல்லி செய்யவேண்டுவதென்ன என்று கேட்டான். “சிப்பியில் மாசும் பாம்புள் நஞ்சும் முத்தென்றாகின்றன. அவருள் எது ஒளிகொண்டிருக்கிறதோ அதை மைந்தன் என அளிக்கும்படி கோருக!” என்றார் துர்வாசர்.

திரும்பிவந்த ஆயுஸ் “அந்தணரே, எது உங்களை ஒளிவிடச்செய்கிறதோ அதுவே என் மைந்தனாக எழுக!” என்றான். “என்னுள் எரிவது காமம். அனல்துளி, தடைகள் அனைத்தையும் உணவென்று கொள்வது. தன்னை தானே அன்றி அவிக்கமுடியாதது” என்றார் தத்தாத்ரேயர். “அதுவே என் மைந்தனாகுக!” என்றான் ஆயுஸ். “அனலை வாங்கிக்கொள்கிறாய், அது முதலில் இருந்த கலத்தையே எரிக்கும். நீ துயருற்று அழிவாய்” என்றார் தத்தாத்ரேயர் “ஆம், அதை நான் முன்னரே எந்தையிடமிருந்து அறிந்துள்ளேன். அவ்வாறே ஆகுக!” என்றான் ஆயுஸ்.

தத்தாத்ரேயர் அளித்த மாங்கனியுடன் அரண்மனை மீண்டான் ஆயுஸ். அதை தன் மனைவிக்கு அளித்தான். அதை உண்ட அந்நாளில் இந்துமதி ஒரு கனவுகண்டாள். அவள் காலைப்பற்றி கொடி ஒன்று மேலேறியது. கவ்வி தொடைசுற்றி அவள் கருவறைக்குள் புகுந்தது. தொப்புளினூடாக அதன் தளிர்நுனி

வெளிவந்தது. மூக்கில் வாயில் செவிகளில் எழுந்து கிளைத்தது. அது ஒரு மாநாகம் என அவள் அறிந்தாள். வேர் மண்ணில் விரிந்து பற்ற வால்நுனிகளென தளிர்த்தண்டுகள் விரிய இலைத்தழைப்பென படம் எடுத்து அது மரமென்றும் நின்றிருந்தது.

அவளுக்குள் அந்நாகம் பெருகிக்கொண்டே இருக்க தசைகள் இறுகிப்புடைத்தன. நரம்புகள் பட்டுநூல்களென இழுபட்டுத் தெறித்து அறுந்தன. உச்சித்தலை பிளந்து மேலெழுந்த மரம் இரு கிளை மூன்று கிளை நான்கு கிளை என விரிந்தது. அதில் மலர்கள் எழுந்து கனி செறிந்தது. பறவைகள் அடர்ந்து அது ஓயாது ஒலிகொண்டது. அவள் உடல் பட்டுச்சீலை என கிழிபடும் ஓசையை கேட்டாள். மரப்பட்டை போல உலர்ந்து வெடித்து விழுந்தாள். மரத்தின் வேர்கள் அவளை அள்ளிப்பற்றி நொறுக்கிச் சுவைத்து உண்டன. இறுதித்துளியும் எஞ்சுவதுவரை விழிமலைக்க அவள் அந்த எழுமரத்தை நோக்கிக்கொண்டிருந்தாள்.

நாற்பத்தைந்து நாட்களுக்குப்பின் அவள் கருவுற்றிருப்பதை மருத்துவர் உறுதிசெய்தனர். அவள் அக்கனவை கணவனிடமும் சொல்லவில்லை. அவன் அவளிடம் தத்தாத்ரேய முனிவரின் அருளால் அந்தணனுக்கு இணையான அறச்செல்வன் ஒருவன் தோன்றவிருப்பதாகவே சொல்லியிருந்தான். எனவே அவள் அக்கனவை தானே சொல்லிக்கொள்ளவும் அஞ்சினாள். சொல்லப்படாத கனவு அவளுக்குள் வளர்ந்தது. கருங்கல் உருளைபோல ஆகி எப்பொழுதும் உடனிருந்தது.

பன்னிருமாதம் கடந்தபின்னரே இந்துமதி குழந்தையை பெற்றாள். வயிறு வளர்ந்து எடைகொண்டு கால்தாளாமலானமையால் அவள் எப்போதும்

படுக்கையிலேயே இருந்தாள். அவள் உண்டு ஊறச்செய்த குருதி அந்த மைந்தனுக்கு போதவில்லை. எனவே அவள் மெலிந்து பழுத்திலைபோல மஞ்சள் நிறம்கொண்டு வாய்வறண்டு விழிவெளுத்து தோல் பசலைகொண்டு சொல்லும் எழா சோர்வுடன் கிடந்தாள். வெறித்த விழிகளுக்கு முன் சூழ்ந்தோர் எவருமறியா ஒன்றை அவள் கண்டுகொண்டிருந்தாள் எனத் தோன்றியது. அடிக்கடி ஒலியென்றாகாச் சொற்களை அவள் உதடுகள் அசைவென காட்டிக்கொண்டிருந்தன.

நாள்கடக்குந்தோறும் மருத்துவர் அஞ்சலாயினர். தாதியர் “உள்ளிருப்பது குருதிவிடாய் கொண்ட கொடுந்தெய்வம் போலும். அவரை கருவமைந்தே உண்கிறது” என்றனர். நாள்தோறும் மருத்துவர் வந்து நோக்கி அரசனுக்கு செய்தி சொன்னார்கள். “அவர் இங்கிருந்து அகன்றுவிட்டார், இனி மீளமாட்டார்” என தலைமை மருத்துவர் தன் மாணவர்களிடம் சொன்னார். அவள் விழிகளிலும் ஏதும் தெரியாதாயின. அவள் ஓர் ஓவியத்திரையென்று ஆகியதுபோல உணர்ந்தனர்.

ஒருநாள் மாலை அவள் அலறும் ஒலிகேட்டு அனைவரும் ஓடிச்சென்று நோக்கினர். அவள் எழுந்து அமர்ந்து கைகள் பதற உடைந்த குரலில் கதறிக்கொண்டிருந்தாள். “எருமை! எருமையை விரட்டுக! எருமை!” என்றாள். “அரசி, அரசி” என சேடி அவளை உலுக்கினாள். “எருமையில் குழந்தையை கொண்டுவருகிறான்... எருமைமேல் அமர்ந்திருக்கிறது” என அவள் நீர் வறண்டு அச்சம் மட்டுமே வெறிப்புகொண்டிருந்த விழிகளால் சொன்னாள். “அரசி படுங்கள்... படுங்கள்!” என்றாள் முதியசேடி. “இருண்டவன்... இருளேயானவன்... தென்திசைத்தலைவன்... அதோ!”

துணிகிழிபடும் ஒலி கேட்டது. சூடான குருதியின் வாடை. முதுசேடி தன் கையை வெங்குருதி தொட்டதை உணர்ந்து அரசியை தள்ளிப் படுக்கச்செய்தாள். கதவைத் திறந்து வெளிவருபவன்போல அரசியின் இறந்த கால்களை அகற்றி மைந்தன் வெளிவந்தான். கரியநிறம் கொண்டிருந்தான். வாயில் வெண்பற்கள் நிறைந்திருந்தன. அவன் அழவில்லை, புலிக்குருளைபோல மெல்ல உறுமினான். மருத்துவச்சி கதவைத் திறந்து ஓடிவந்தபோது தொப்புள்கொடியுடன் குழவியை சேடி கையில் எடுத்திருந்தாள். நோக்கும்போதே அவள் அறிந்தாள்... அரசி இறந்துவிட்டிருந்தாள்.

மைந்தனை நோக்க ஓடிவந்த அரசனிடம் அரசியின் இறப்பே முதலில் சொல்லப்பட்டது. அவன் ஒருகணம் விழிமூடி நெற்றிநரம்பொன்று புடைத்து அசைய நின்றபின் "நன்று, அவ்வாறெனில் அது" என்றபின் குழந்தையைக் கொண்டுவர ஆணையிட்டான். அப்போதே உறுத்த உடலும் தெளிமுகமும் கொண்டிருந்தது குழவி. அவன் குனிந்து அதை நோக்கியபோது அதுவும் அவனை நோக்கியது. அவன் "நகுஷன்" என்றான். "நிமித்திகர் கூற்று முன்னரே வகுக்கப்பட்டுவிட்டது. இவன் இந்திரனை வெல்பவன். நகுஷன் என பெயர் கொள்பவன்" என்றான்.

# மாமலர் - 30

### 30. அறியாமுகம்

மேலை நாககுலத்தைச் சேர்ந்த விப்ரசித்தி என்னும் அரசனின் மைந்தனாகிய ஹுண்டன் ஒவ்வொரு குலத்திலும் அதற்கென அமைந்த எல்லைகளை மீறி கிளைவிட்டு எழும் விசைமிக்க

விதைகளில் ஒருவனாக இருந்தான். அவன் பிறந்தபோதே படைமுதன்மை கொள்பவன் என்றனர் குலப்பூசகர். இளமையிலேயே நாகர்குலத்திற்குரிய நான்கு போர்க்கலைகளான நச்சுமிழ்தல், இமையாவிழிகொள்ளுதல், ஓசையின்றி அமைதல், பறந்தெழுதல் ஆகியவற்றை கற்றான்.

பின்னர் தன் அணுக்கத்தோழனாகிய கம்பனனுடன் குடிவிட்டுக் கிளம்பி பிறிதொருவனாக ஆகி அசுரகுலங்களில் அடிமையென்று சென்று இணைந்து அவர்களின் போர்க்கலைகளான காற்றில் மறைதல், விண்ணேறிச் செல்லுதல், உடலை விழியாக்குதல், இரக்கமின்றி இருத்தல் ஆகியவற்றையும் கற்றான். மலைவணிகனாக மானுடருக்குள் ஊடுருவி காவலனாக உருமாற்றம்கொண்டு அவர்களின் போர்க்கலைகளான படைக்கலம் தேர்தல், சூழ்மதி கொள்ளுதல், சேர்ந்தமைந்து ஒருடலாதல், வருவதை முன்னுணர்தல் ஆகியவற்றை அறிந்தான்.

அவன் தோழனுடன் திரும்பி தன் நிலம் வந்துசேர்ந்தபோது நோக்கிலும் நடையிலும் பேரரசன் என்றாகிவிட்டிருந்தான். நாகர்குடிகள் அவனை முதன்மைத்தலைவன் என ஏற்றன. நாகநிலம் முழுதும் வென்று வைப்ரம் என்னும் தன் சிற்றூரைச் சுற்றி நச்சுமுட்கள் சிலிர்த்துநிற்கும் கோட்டை ஒன்றைக் கட்டி கொடிபறக்க கோல்நிறுத்தி ஆளலானான். அவனை நாகாதிபன் என்றும் மகாநாகன் என்றும் வாழ்த்தின நாகர்குலங்கள்.

ஏழுஅடுக்கு அரண்மனையில் விபுலை வித்யுதை என்னும் இரு மங்கையரை மணந்து ஹுண்டன்
வாழ்ந்தான். எட்டாண்டுகளாகியும் தேவியர் கருவுறாமையால் துயருற்றிருந்தான். குலப்பூசகரை அழைத்து அவர்கள் வயிறு

நிறையாமை ஏன் என வினவினான். “அரசே, படைப்பென்று எழுவதெல்லாம் உளம்குவியும் தருணங்களே. சிறுபுழுவும் காமத்தில் முழுதமைகிறது என்பதே இயற்கை. உங்கள் காமத்தில் அவ்வண்ணம் நிகழவில்லை. உடலுடன் உள்ளம் பொருந்தவில்லை. குவியாக் காமம் முளைக்காத விதையாகிறது” என்றார் பூசகர்.

“ஆம்” என்று ஹுண்டன் சொன்னான். “நான் பிறிதெங்கோ எவரையோ எண்ணத்தில் கொண்டிருக்கிறேன். முற்பிறவிக் கனவில் கண்ட முகம் ஒன்று ஊடே புகுகிறது.” பூசகர் “ஊழ் பின்னும் வலையின் மறுமுனைச் சரடு. அது தேடிவரும்வரை காத்திருப்பதன்றி வேறு வழியில்லை” என்றார். “அது நன்றா தீதா?” என்றான் ஹுண்டன். “ஊழை அவ்வண்ணம் வகுக்கவியலாது. அது நன்றுதீதுக்கு அப்பாற்பட்டது” என்றார் பூசகர். “அது எனக்கு அளிப்பது என்ன?” என்றான். “அரசே, மெய்க்காதலை அறியும் நல்லூழ் கொண்டவர் நீங்கள் என்கின்றன தெய்வங்கள். ஆனால் அது இன்பமா துன்பமா என்பதை அவையும் அறியா” என்றார் பூசகர்.

தன் உள்ளத்தை ஒவ்வொருநாளும் துழாவிக்கொண்டிருந்தான் ஹுண்டன். கம்பனனிடம் “நான் எதற்காக காத்திருக்கிறேன்? பிறிதொன்றிலாது ஏன் அதையே எண்ணிக்கொண்டிருக்கிறேன்?” என்றான். அவர்கள் காட்டில் ஒரு மரநிழலில் அமர்ந்திருந்தனர். “நாம் நம்மையறியாமலேயே செலுத்தப்படுகிறோம், அரசே. நம்மில் விழைவென, அச்சமென, ஐயமென எழுபவை எவரோ எங்கிருந்தோ நம்மில் புகுத்தும் எண்ணங்களே” என்றான் கம்பனன். “நாம் எங்கு செல்கிறோம் என ஒருபோதும் நாமறிய முடியாதென்பதையே அனைத்து நூல்களும் சொல்கின்றன.”

“இந்த முகம்… இது முகமென என்னுள் திரளவுமில்லை. கலையும் ஓர் எண்ணமென அன்றி இதை நான் இன்றுவரை அறியேன்” என்றான் அரசன். “அமுதென்றும் நஞ்சென்றும் ஆன ஒன்றே அத்தனை விசையுடன் நம்மை இழுக்கமுடியும்” என்றான் கம்பனன். “அது நம்மை தன் உள்ளங்கையில் வைத்து குனிந்துநோக்கும் ஒன்றின் புன்னகையை வானமென நம்மீது படரச்செய்கிறது.” ஹூண்டன் நீள்மூச்செறிந்து “ஆம், ஆனால் நன்றோ தீதோ பெரிதென ஒன்று நிகழும் வாழ்வமைவது நற்கொடையே” என்றான்.

அணுக்கனிடம் அரசை அளித்துவிட்டு தன்னந்தனியாக அலைந்து திரியலானான் ஹூண்டன். அருகமைந்த நகர்களில் ஏவலனாகவும் வணிகனாகவும் பயணியாகவும் அலைந்தான். காடுகளினூடாக கடந்துசென்றான். ஓவியங்களையும் சிற்பங்களையும் சென்று நோக்கினான். நிமித்திகர்களை அணுகி உரையாடினான். அந்த முகத்தை ஒவ்வொரு கணமும் விழிதேடிக்கொண்டிருந்தான்.

ஒருநாள் காட்டில் மரக்கிளைகளுக்குமேல் பறந்தவனாக உலவுகையில் சுதார்யம் என்னும் சிற்றோடையின் கரையிலமைந்த சிறுதவக்குடில் ஒன்றை கண்டான். அதைச் சூழ்ந்திருந்த மலர்க்காட்டில் மலர்வண்ணங்களால் அங்கு நிறைந்திருந்த ஒளியையும் மணத்தையும் வண்டுகள் எழுப்பிய யாழொலியின் கார்வையையும் அறிந்து மண்ணிலிறங்கி அருகே சென்றான். அக்குடிலில் ஓர் அழகிய இளநங்கை தனித்துறைவதை கண்டான்.

அவன் சென்றபோது அவள் ஒரு முல்லைக்கொடிப் பந்தலுக்குக் கீழே அமர்ந்து வெண்மொட்டுகளால் கழற்சியாடிக் கொண்டிருந்தாள். அவளை நோக்கிய அக்கணமே அவன்

அறிந்தான் தன் ஊழின் மறுநுனி அவளே என. அவன் எண்ணிய அறியாமுகம் அது. பிறிதொன்றை எண்ண இனி தன்னால் இயலாது என்று தெளிந்ததும் அருகணைந்து அவளிடம் “இனியவளே, இக்காட்டில் தனித்துறையும் நீ யார்?” என்றான். அவள் அயலவரை அறியாதவள் என்பதனால் எச்சரிக்கையும் அச்சமும் விலக்கமும் அற்ற விழிகளால் அவனை நோக்கினாள்.

“நான் அசோகசுந்தரி. என்னை கல்பமரத்தில் பிறந்தவள் என என் தந்தை சொன்னார். அவர் தவமுனிவர். அவர் அளித்த நற்சொல்லால் அழியா இளமைகொண்டு என் கணவனுக்காக இங்கே காத்திருக்கிறேன்” என்றாள். வியப்பில் அருகே வந்து அவன் தலையிலணிந்த நாகபடக் கொந்தையை நோக்கி “அது என்ன? மெய்நாகமா?” என்றாள். “நான் நாகர்குலத்து அரசன், என் பெயர் ஹுண்டன். என் குடி ஏழிலும் முதல்வன். எங்கள் நிலத்தின் பெருந்தலைவன்” என்றான் அவன்.

அவள் மகிழ்ந்து “நான் இன்றுவரை அரசர்களை சந்தித்ததில்லை. அவர்கள் படைசூழ கொடிசூடி வாழ்த்தும் இசையும் சூழ எழுந்தருள்வார்கள் என்றே அறிந்துள்ளேன்” என்றாள். “ஆம், அவை எனக்கும் உள்ளன. நச்சுவாளி தொடுத்த நாகவிற்களுடன் என்னைச் சூழ பெரும்படை உண்டு. இன்று நான் காடுகாண தனியே வந்தேன். தனித்தலைந்தாலும் நான் ஒரு படைக்கு நிகரானவனே” என்றான் ஹுண்டன். அவளுடைய அஞ்சாமையை அவன்மீதான விருப்பென அவன் எண்ணிக்கொண்டான். அவள் கண்களின் கள்ளமின்மையைக் கண்டு மேலும் மேலும் பித்துகொண்டான்.

“நீ காத்திருப்பது யாருக்காக?” என்றான். “உன் அழகு அரசர்கள் அணியென சூடத்தக்கது. அரியணையில் அமரவேண்டியவள் நீ.”

அவள் புன்னகைத்து “ஆம், இந்திரனுக்கு நிகரான அரசனின் மணமகள் நான் என்றார் என் தந்தை” என்றாள். “அவன் நானே. இன்று இந்நிலத்தின் ஆற்றல்மிக்க பேரரசன் நான்” என்றான் ஹூண்டன். “நீ காத்திருந்தது எனக்காகத்தான். என்னை ஏற்றுக்கொள்க!” அவள் அவனை கூர்ந்து நோக்கி “நீர் அழகர். உம்மை ஏற்பதில் எனக்கு தயக்கமும் இல்லை. ஆனால் நான் மண்ணுக்கு வந்தபோது ஒரு மலரும் உடன் வந்தது. அந்த வாடியமலர் என்னிடம் உள்ளது. எவர் என் தலையில் அதைச் சூட்டுகையில் அது மீண்டும் புதிதென மலர்கிறதோ அவரே என் கணவர் என்றார் எந்தை. இருங்கள், கொண்டுவருகிறேன்” என குடிலுக்குள் ஓடினாள்.

திரும்பி வந்தபோது அவள் கையில் ஓர் அசோகமலர் இருந்தது. வாடிச்சுருங்கி ஒரு செந்நிறக் கீற்றென ஆகிவிட்டிருந்தது. “அசோகம்” என்று அவள் சொன்னாள். “துயரின்மையின் அழகிய மலர் இது. இதை தாங்கள் கையில் வாங்கும்போது மலர்ந்து முதற்காலை என மென்மையும் ஒளியும் கொள்ளவேண்டும்.” அவன் தயங்கியபடி அதை வாங்கினான். அது அவ்வாறே இருந்தது. அவள் அதே புன்னகையுடன் “பொறுத்தருள்க, அரசே! அவ்வண்ணமென்றால் அது நீங்கள் அல்ல” என்றாள்.

அவன் சீறி எழுந்த சினத்துடன் “என்ன விளையாடுகிறாயா? நான் எவரென்று அறிவாயா? நீ தனித்த சிறுபெண். பருந்து சிறுகுருவியை என உன்னை கவ்விக்கொண்டு வானிலெழ என்னால் இயலும். உன் கள்ளமின்மையை விரும்பியே சொல்லாடினேன்” என்றான். “இனி உன் விருப்பென்ன என்பதை நான் கேட்கப்போவதில்லை. நீ என் துணைவி” என அவள் கையை பற்றச்சென்றான். அவள் பின்னால் விலகி கூர்ந்த

கண்களுடன் “அரசே, அறிக! இது என் இடம். இங்கு எல்லைமீறி என்னை கைக்கொள்ள முயல்வது பிழை... முனிவராகிய என் தந்தை எனக்கருளிய காவல் கொண்டுள்ளன இந்தக் குடிலும் சோலையும்” என்றாள்.

“நாகத்திற்கு வேலிக்காவல் இல்லை, அழகி” என சிரித்தபடி அவன் அவளை பற்றப்போனான். “விலகு, மூடா! இதற்குள் வந்து என் ஆணை மீறும் எவரையும் அக்கணமே கல்லென்றாக்கும் சொல் எனக்கு அருளப்பட்டுள்ளது. இதோ, இச்சிம்மம் அவ்வாறு என்னால் கல்லாக்கப்பட்டது. அந்தப் புலியும் அப்பாலிருக்கும் கழுகும் செதுக்கப்பட்ட சிலைகளல்ல, உயிர்கொண்டிருந்தவை” என்றாள். “இந்தக் குழவிக்கதைகளுக்கு அஞ்சுபவர்களல்ல நாகர்கள்” என்று சிரித்தபடி அவன் மேலும் முன்னகர அவள் கைநீட்டி “உன் வலக்கால் கல்லாகுக!” என்றாள்.

அவன் தன் வலதுபாதம் கல்லாகி எடைகொண்டதை உணர்ந்து அஞ்சி குளிர்ந்து நின்றான். “அணுகவேண்டாம்! உன்னை கல்லென்றாக்கி இங்கு நிறுத்த நான் விழையவில்லை. அகன்று செல்க!” என்று அவள் கூவினாள். அவன் காலை இழுத்துக்கொண்டு பெருஞ்சினத்தால் உறுமியபடி சோலையைவிட்டு வெளியே சென்றான். அங்கு நின்றபடி “விழைந்ததை அடையாதவன் நாகன் அல்ல. நான் உன்னை பெண்கொள்ளாமல் மீளப்போவதில்லை” என்றான்.

அவள் அதுவரை இருந்த பொறையை இழந்து சினந்து “இழிமகனே, விரும்பாப்பெண்ணை அடைவேன் என வஞ்சினம் உரைப்பவன் வீணரில் முதல்வன். நீ என் கணவன் கையால் உயிரிழப்பாய்” என்றாள். தன் கையை ஓங்கி “ஆம்! ஆம்! ஆம்!” என மும்முறை உரைக்க வானில் ஓர் இடி எழுந்தது.

அச்சொல் பிறிதிலாது நிலைபெற்றுவிட்டதை அறிந்த ஹூண்டன் ஒருகணம் நடுங்கினாலும் கோல்கண்டால் மீண்டும் படமெடுக்கும் நாகத்தின் இயல்பு மீண்டு “எஞ்சியதை என் மஞ்சத்தில் சொல், பெண்ணே” என்றபின் மரங்களின்மேல் ஏறிக்கொண்டான்.

தன் அரண்மனைக்கு மீண்ட ஹூண்டன் கம்பனனை அழைத்து எவ்வண்ணமேனும் அசோககுமாரியை அவள் வாழும் சோலையின் எல்லைகடத்தி அழைத்துவரும்படி ஆணையிட்டான். கம்பனனின் திட்டப்படி அரண்மனைச்சேடி ஒருத்தி நிறைவயிறென உருவணிந்து அசோககுமாரி நீராடும் சோலைச்சுனையருகே நின்றிருந்த மரத்தில் காட்டுவள்ளியில் சுருக்கிட்டு தன்னுயிரை மாய்க்க எண்ணுவதுபோல நடித்தாள். அங்கே வந்து அதைக் கண்ட அசோககுமாரி ஓடிவந்து அவளைப் பிடித்து தடுத்து “என்ன செய்கிறாய்? என்ன ஆயிற்று உனக்கு?” என்றாள்.

கதறியழுத சேடி தன்னை அந்தணப் பெண்ணாகிய சுதமை என்றும் தன்னை விரும்பி கவர்ந்து கொண்டுசெல்ல முயன்ற நாகர்குலத்து அரசனாகிய ஹூண்டன் அதைத் தடுத்த தன் கணவனை கொலை செய்துவிட்டான் என்றும் சொன்னாள். இறுதிச் சொல்லை அவனை பழித்துச் சொன்னபடி உயிர்விட்டு அவன்மேல் தெய்வங்களின் பழி நிலவச்செய்யும்பொருட்டே அங்கு வந்ததாகச் சொல்லி கதறினாள்.

அசோககுமாரி உளம்கலங்கி அழுதாள். பின் தான் தேறி அவளுக்கு ஆறுதலுரைத்தாள். “பழியை மறந்துவிடுக! தெய்வங்கள் நின்று கேட்கட்டும். உன் வயிற்றிலுள்ள மைந்தனுக்கு வாழும் உரிமை உள்ளது. அதை

அளிக்கவேண்டியது உன் கடன்” என்றாள். “வாழாது இறந்து உன் மைந்தன் நிகழாதுபோன கனவாக வெறும்வெளியில் பதைக்கலாகாது. நீ உயிர்தரித்தே ஆகவேண்டும்” என்றாள். “இல்லை, என்னால் இயலாது. துயர் என் உள்ளத்தை அனல்கொண்ட பாறைபோல வெம்மையேற்றி வெடிக்கச்செய்கிறது” என்றாள் சுதமை.

அசோககுமாரி தன் தோட்டத்திலிருந்து துயரிலி மலர் ஒன்றைப்பறித்து “இதை உன் நிலத்தில் நட்டு வளர்ப்பாயாக! இது உன் துயர்களை களையும்” என்றாள். “இல்லை, என் துயர்மிக்க கைகளால் இதைத் தொட்டால் இது வாடிவிடும். நீயே வந்து என் சிறுகுடில் முற்றத்தில் இதை நட்டு ஒரு கை நீரூற்றிவிட்டுச் செல்!” என்றாள் சுதமை. அசோககுமாரி “நான் என் குடில்வளாகத்தைவிட்டு நீங்கலாகாதென்பது எந்தையின் ஆணை” என்றாள். சுதமை மீண்டும் மீண்டும் கைபற்றி கண்ணீர்விட்டு மன்றாடவே உடன்செல்ல இசைந்தாள்.

சுதமை அவளை காட்டுவழியே இட்டுச்சென்றாள். நெடுந்தொலைவு ஆவதை அறிந்த அசோககுமாரி “நாம் எங்கு செல்கிறோம்?” என்றாள். “அருகிலேதான்... நீ காட்டுவழி சென்றதில்லை என்பதனால்தான் களைப்படைகிறாய்” என்றாள் சுதமை. பின்னர் அவளுக்கு மெல்ல புரியலாயிற்று. அவள் திரும்பிச்செல்ல முயல நகைத்தபடி சுதமை அவள் கைகளை பற்றிக்கொண்டு “எங்கு செல்கிறாய்? நீ என் அரசரின் அடிமை” என்றாள். கையை உதறிவிட்டு அசோககுமாரி தப்பி ஓட நாகர்கள் மரங்களிலிருந்து பாய்ந்து அவளைச் சூழ்ந்தனர்.

அவள் முன் தோன்றிய கம்பனன் “நீ என் அரசனின் கவர்பொருள். திமிறினால் உடல் சிதையப்பெறுவாய்” என்றான். அவர்கள் அவளை கொடிகளால் கட்டி இழுத்துக்கொண்டு வந்து

ஹூண்டனின் அவையில் நிறுத்தினர். அவையமர்ந்திருந்த அரசன் அவளைக் கண்டதும் வெடிச்சிரிப்புடன் எழுந்து அருகே வந்தான். “உன் எல்லைக்குள் நீ ஆற்றல்கொண்டவள். முதலையைப் பிடிக்க இரையை பொறியிலிட்டு அதை கரை வரச்செய்யும் கலை அறிந்தவர் நாகர்” என்றான். அவள் அவன் சொல்வதென்ன என்று அறியாமல் நோக்கி அமர்ந்திருக்க “நீ என் ஆணையை மீறினாய்! விரும்பியதைக் கொள்ள அரசனுக்கு உரிமை உள்ளது. ஆணைமீறுபவரை தண்டிக்கவும் அவன் கடமைப்பட்டவன். நீ இன்றுமுதல் என் அரசி. அது என் விழைவு. என் அரண்மனைவிட்டு வெளியே செல்ல உனக்கு இனி என்றும் ஒப்புதல் இல்லை, அது உனக்கு அரசன் அளிக்கும் தண்டனை” என்றான் ஹூண்டன்.

அவள் கதறியழுது தன்னை விட்டுவிடும்படியும், தன் தந்தையின் ஆணைப்படி நெடுங்காலமாக தன்னை வேட்டு வரும் தலைவனுக்காகக் காத்திருப்பதாகவும் சொன்னாள். அவைமுன் நீதிகேட்கவும் அவளுக்கு தெரிந்திருக்கவில்லை. சிறுமியைப்போல அழுதபடி அமர்ந்து கைகளை உதறி அடம்பிடிக்கவே அவளால் இயன்றது.

அரசனின் ஆணைப்படி அவளைப் பிடித்து இழுத்துச்சென்றனர் நாகசேடியர். அவளை நீராட்டி நாகபடக் கொந்தையும் நாககங்கணங்களும் நாகக்குழையும் சூட்டி அணிசெய்து ஏழு நாகங்கள் எழுந்து விழிசூடி நின்றிருந்த குலதெய்வத்தின் ஆலயத்திற்கு கொண்டுசென்றனர். அவள் கழுத்தில் நாகபட மாலையை அணிவித்து ஹூண்டன் அவளை வலுமணம் கொண்டான். அவள் அழுது சோர்ந்து ஆற்றலிழந்து நனைந்த தோகைமயில்போல கைகால்கள் தளர்ந்திருந்தாள். அவளை

தன் காமமண்டபத்திற்கு கொண்டுசெல்லும்படி அவன் ஆணையிட்டான்.

அவர்கள் அவளை இரவுக்கான மென்பட்டு ஆடைகளும் உறுத்தாத நகைகளும் அணிவித்து அந்திமலர்கள் சூட்டி அவன் மஞ்சத்திற்கு கொண்டுசென்றனர். அவள் மஞ்சத்தில் அவர்களால் அமரச்செய்யப்பட்டபோது எங்கிருக்கிறோம் என்பதையே அறியாதவள் போலிருந்தாள். ஏதோ ஒற்றைச்சொற்களை எவரிடமோ எனச் சொல்லி மெல்ல அழுதுகொண்டிருந்தாள். “அழுதுகொண்டிருக்கிறார்” என நாகசெவிலி அரசனிடம் சொன்னாள். “நாளை நாணமும் நகையாட்டுமாக வருவாள்” என்று சொன்னபின் அரசன் மஞ்சத்தறைக்குள் புகுந்தான்.

இரவுக்கான வெண்பட்டாடை அணிந்திருந்தான். மார்பில் மெல்லப் புரளும் முல்லை மலர்தார். காதுகளில் ஒளிரும் கல்குழைகள். அவன் குறடோசை கேட்டு அவள் விதிர்த்தாள். அவன் அருகே வந்து அவளிடம் குனிந்து மென்குரலில் “அஞ்சவேண்டாம். நீ அரசனின் துணைவி ஆகிவிட்டாய். நாகர்குலத்துக்கு அரசியென்று அமரவிருக்கிறாய்” என்றான். அவள் அதை கேட்டதாகவே தெரியவில்லை. அவனை நோக்கிய விழிகளில் அவன் தோற்றம் தோன்றவுமில்லை. உதடுகள் ஏதோ சொல்லை உச்சரித்து அசைந்துகொண்டே இருக்க விழிகள் சிறார் விளையாட்டில் பிடித்து சிறுகிண்ணத்து நீரில் இட்ட பரல்கள் இறுதிமூச்சுக்குத் துடிப்பதுபோல அசைந்தன.

அவள் செவிகள் மட்டுமே கேட்கும்படியாக “நீ எனக்கு உன் காதலை மட்டும் கொடு, உனக்கு நான் இவ்வுலகை அளிக்கிறேன்” என்று ஹூண்டன் சொன்னான். அவள் முகம்

மாறாததைக் கண்டு உடனே சினம்கொண்டு “அதை நீ மறுத்தால் நான் நஞ்சு என்றும் அறிய நேரும்” என்றான். அவள் அசையும் உதடுகளும் தத்தளிக்கும் விழிகளுமாக அவனை நோக்கிக்கொண்டிருந்தாள். “என்னடி சொல்கிறாய்?” என்று அவன் கேட்டான். அவள் அதையே சொல்லிக்கொண்டிருக்க அவள் தோள்களைப்பற்றி உலுக்கி “இழிமகளே, சொல்... என்ன சொல்கிறாய்?” என்றான்.

அவள் அணங்குகொண்டவள் போலிருந்தாள். அண்மையில் அவள் உதடுகளை நோக்கிய அவன் அவை மட்டுமே கண்களை நிரப்புவதுபோல் உணர்ந்தான். “என்னடி சொல்கிறாய்? பிச்சியா நீ? சொல்!” என அவளைப் பிடித்து உலுக்கினான். “சொல், கீழ்மகளே! என்ன சொல்கிறாய்?” என அவளை ஓங்கி அறைந்தான். அந்த அறையைக்கூட அவள் உணரவில்லை. அவன் “இது ஒரு சூழ்ச்சியா? இதனால் நீ தப்பிவிடுவாயா?” என்று கூவியபடி அவளை பிடித்துத்தள்ளி மஞ்சத்தில் சரித்து அவள் உடலை ஆளமுயன்றான்.

அவள்மேல் படுத்து அவள் முலைகளைப் பற்றியபோதும் அவள் அதை அறியவில்லை. அவன் எழுந்த அச்சத்துடன் அவள் உதடுகளை நோக்க ஒரு கணத்தில் அச்சொல் அவனுக்குப் புரிந்தது. அவன் உடல் குளிர்ந்து கால்கள் செயலிழந்தன. எடைகொண்டுவிட்ட உடலைப்புரட்டி அவன் படுக்கையில் மல்லாந்தான். அவன் இடைக்குக்கீழே கல்லாகிவிட்டிருந்தது.

அவள் எழுந்து ஓடுவதை அவன் சொல்லில்லாமல் நோக்கிக்கொண்டிருந்தான். அவள் வெளியே சென்று அரண்மனை முற்றத்தை அடைந்து தெருக்களினூடாக அலறியழுதபடி ஓடி நகர்நீங்கினாள். அவளை அரசன் விட்டது

ஏன் என காவலர் குழம்பினர். அழியா தீச்சொல் ஒன்று நகர்மேல் கவிந்ததோ என ஊரார் அஞ்சினர். அவள் ஒருமுறை நின்று நகரை திரும்பி நோக்கியபின் கண்ணீர்த்துளி நிலத்தில் சிதற குழல் உலைய கால்சிலம்பு கறங்க நடந்தாள் என்றனர் கோட்டைக்கு வெளியே நின்றிருந்த நகர்க்காவலர்.

விடியும்போது அவள் மீண்டும் தன் குடில்சோலையை அடைந்தாள். ஓடி அவ்வெல்லையைக் கடந்தபோது கால்தடுக்கியதுபோல நினைவழிந்து விழுந்தாள். பின்னர் இளவெயில் முகத்தில் விழ விழித்தெழுந்தபோது அவள் தான் ஏன் அங்கு கிடக்கிறோம் என வியந்தாள். தன் உடலில் இருந்த அணியும் ஆடையும் எவ்வண்ணம் அமைந்தது எனத் திகைத்து நோக்கியபின் அவற்றை பிடுங்கி வீசினாள். குடிலுக்குள் சென்று மரவுரி அணிந்து முகம்கழுவி ஆடியில் தன் முகத்தை நோக்கியபோது அதில் இளமைப்புன்னகை திரும்பியிருந்தது.

மீண்டும் குடில்முற்றத்திற்கு வந்தபோது அங்கே சிதறிக்கிடந்த அணிகளும் ஆடைகளும் எவருடையவை என்று அறியாது குழம்பி கையிலெடுத்து நோக்கினாள். தன் உடல்மேல் வைத்து அவை பெண்கள் அணிபவை என உய்த்தறிந்து புன்னகைத்தாள். பின்னர் சற்றுநேரம் எண்ணிநோக்கியபின் அவற்றை கொண்டுசென்று அக்குடில்சோலையின் எல்லைக்கு அப்பால் வீசினாள். பின்னர் துள்ளியபடி அங்கே பூத்துநின்ற மலர்மரம் ஒன்றை நோக்கி ஓடினாள். அதன் அடியில் சென்றுநின்று அடிமரம் பிடித்து உலுக்கி மலர்மழையில் கைவிரித்துத் துள்ளி கூச்சலிட்டுச் சிரித்தாள். அவள் அக்குடில்வளைவு விட்டு அகன்றபோது அவள் உடலில் அகவை நிகழத்தொடங்கிவிட்டிருந்தது. அந்த இரண்டுநாட்களின்

மூப்பைக் களைந்து மீண்டும் சென்றகணத்தில் இருந்த காலத்தை அடைந்தது அவள் உடல்.

காவலர் ஓடிவந்து நோக்கியபோது ஹூண்டன் மஞ்சத்தில் நடுங்கியபடி படுத்திருந்தான். “அரசே, அரசி ஓடிச்செல்கிறார்கள்” என்றான் அணுக்கனாகிய அமைச்சன் கம்பனன். அவனால் மறுமொழி சொல்லமுடியவில்லை. “என்ன ஆயிற்று தங்களுக்கு? ஏன் படுத்திருக்கிறீர்கள்?” என்றபடி அருகணைந்த கம்பனன் அப்பார்வையிலேயே அரசனின் கால்கள் கல்லென்றாகிவிட்டிருப்பதை கண்டான். அவன் கைநீட்ட ஹூண்டன் அவன் தோள்களை பற்றிக்கொண்டான். கம்பனன் அவனைப் பற்றி எழுப்பினான். அவன் உடல் எடைமிகுந்து கற்சிலைபோல அவன் மேல் அழுந்தியது.

அரசனை மருத்துவர்கள் வந்து நோக்கி திகைத்தனர். “கால்கள் எப்படி கல்லாயின? அமைச்சரே, இது தெய்வங்களின் தீச்சொல்” என்றனர். எவரும் எச்சொல்லும் எவரிடமும் உரைக்கலாகாது என அமைச்சனின் ஆணையிருந்தபோதும் அரசனின் கால் கல்லானதை மறுநாள் புலரியிலேயே நகர் அறிந்தது. குலங்கள் அறிந்து அஞ்சி தெய்வங்களை நோக்கி படையல்களும் பலிகளுமாக நிரைவகுத்தன. “பெண்பழியும் கவிப்பழியும் அறப்பழியும் அகலாது” என்றனர் மூத்தோர்.

பின்னர் ஹூண்டன் படுக்கையிலிருந்து எழவே இல்லை. அவனை கல்படுக்கை ஒன்றைச்செய்து அதில் கிடத்தினர். அவனுக்குப் பணிவிடை செய்ய சேடியரும் ஏவலரும் எப்போதும் சூழ்ந்திருந்தனர். கைபற்றி எழுந்து அமர்ந்தும் சிறுசகடத்திலேறி வெளியே செல்லவும் அவனால் இயன்றது. அமைச்சனைக்கொண்டு அவன்
நாடாண்டான். உணவுண்ணுதலும் நூல்தோய்தலும்

இசைகேட்டலும் குறைவின்றி நிகழ்ந்தது. என்ன நிகழ்ந்தது என அவன் எவரிடமும் சொல்லவில்லை. அதை உசாவும் துணிவும் எவருக்கும் இருக்கவில்லை. அதைக் குறித்து ஒவ்வொருநாளும் எழுந்த புதிய கதைகளை எவரும் அவன் செவிகளில் சேர்க்கவுமில்லை.

ஆனால் ஒவ்வொரு நாளும் அவன் சோர்ந்துவருவதை அமைச்சன் கம்பனன் கண்டான். அவன் அருகே அமர்ந்து அரசுசூழ்தலின் வெற்றிகளைப்பற்றி சொன்னான். குலங்கள் அவனைப் புகழ்வதையும் குடிகளின் பணிவையும் கூறினான். அவர்கள் கூடி காட்டிலாடிய இளமைநாட்களைப்பற்றி கதையாடினான். எச்சொல்லும் அரசனில் பற்றிக்கொள்ளவில்லை. ஒருமுறை பேச்சின்போக்கில் அமைச்சன் அசோகசுமாரியைப்பற்றி சொன்னான். அரசனின் விழிகளில் அசைவைக் கண்டு அவள் காத்திருக்கும் இந்திரனுக்கு நிகரான அரசனைப்பற்றி பேசினான். அரசனின் முகம் உயிர்ச்செம்மை கொண்டது. அவன் சினத்துடன் முனகினான்.

அதுவே அவனை மீட்கும் வழி என உணர்ந்த கம்பனன் அதன்பின் அவ்வஞ்சத்தைப் பற்றியே அரசனிடம் பேசினான். ஒற்றர்களும் படைத்தலைவர்களும் அதைக் குறித்து அவனிடம் பேசும்படி ஆணையிடப்பட்டனர். வஞ்சம் ஹுண்டனை மீண்டெழச் செய்தது. கல்லான கால்களை நீட்டி கல்படுக்கையில் அமர்ந்தபடி அவன் செய்திகளை எட்டுத் திசைகளிலிருந்தும் சேர்த்துக்கொண்டிருந்தான். குருநகரின் அரசனாகிய ஆயுஸ் தத்தாத்ரேய முனிவரின் அருள்பெற்று மைந்தன் ஒருவனை ஈன்ற கதையை அவனிடம் ஒற்றர்கள் சொன்னார்கள். தாயைப் பிளந்து மண்ணுக்கு வந்த

அம்மைந்தன் இந்திரனை வெல்வான் என நிமித்திகர் எழுவர் களம்பரப்பி குறித்ததை அவன் அறிந்தான்.

அரசனின் ஆணைப்படி அம்மைந்தனின் பிறவிநூலை ஓர் ஒற்றன் திருடிக்கொண்டு வந்தான். அதை தன் குலப்பூசகர் எழுவரிடம் அளித்து நிலைநோக்கச் சொன்னான் ஹுண்டன். அவர்களும் இந்திரனை வெல்லும் ஊழ்கொண்டவன் அவன் என்றனர். "அவன் மணக்கப்போவது எவரை?" என சிறிய கண்களில் நச்சு கூர்ந்துநிற்க ஹுண்டன் கேட்டான். அவர்கள் கருக்களை நோக்கியபின் "அவள் முன்னரே பிறந்துவிட்டாள். அவனுக்காக காத்திருக்கிறாள்" என்றனர். "ஆம், அவனே" என்று பற்களைக் கடித்தபடி ஹுண்டன் சொன்னான். "அவன் பெயர் நகுஷன்" என்றான் கம்பனன்.

# மாமலர் - 31

**31. நற்கலம்**

மைந்தன் பிறந்தபோது ஆயுஸ் அதுவரை அவனிலிருந்த உளநிகரை முற்றிலுமாக இழந்தான். தந்தையிடம் இரந்து பெற்ற தீச்சொல் எப்போதும் நினைவில் இருந்தமையால் ஒருபோதும் அவன் நிலைமறந்து உவகை கொண்டதில்லை. களியாட்டுகளில் கலந்துகொண்டதில்லை. பல்லாயிரம்பேர் சூழ்ந்திருக்கையிலும் தனிமையில் இருந்தான். எண்ணி சொல்லெடுத்தான். எப்பிழையும் நிகழலாகாதென்பதில் உளம் செலுத்தினான். கருணையே தீர்வென்று ஒவ்வொரு முறையும் தெரிவு செய்தான்.

அவனுக்கான மணநிகழ்வு குறித்த பேச்சுகளை அரசியரும் அமைச்சரும் குலமூத்தாரும் எடுத்தபோது அவர்கள் கூடிய அவையில் “என் தலைக்குமேல் எந்தையின் தீச்சொல் சினந்த தெய்வமென நின்றிருக்கிறது. அதை அறிந்து என்னை மணக்க ஒருங்கும் பெண்ணே எனக்குரியவள். மணம்பேசச் செல்லும் முன்னரே இது அவர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கவேண்டும்” என்றான். “அது எங்ஙனம்? அரசர் காந்தருவ முறையிலும் பைசாச முறையிலும்கூட பெண்கொள்ளலாம் என்றல்லவா நெறிகள் சொல்கின்றன?” என்றாள் அரசி. “நான் அவ்வண்ணம் செய்ய விழையவில்லை. எவர் விழிநீரிலும் என் குடி பெருகவேண்டியதில்லை” என்றான் ஆயுஸ்.

குருநகரி அன்று பாரதவர்ஷத்தின் பெருநகரென அறியப்பட்டிருந்தது. அறச்செல்வனென்று அரசன் கருதப்பட்டான். எனினும் மணம் நாடிச்சென்ற இடங்களில் குருநகரியின் தூதர்கள் திருப்பி அனுப்பப்பட்டனர். “தீராப் பெருநோய் கொண்டவன் போன்றவன் உங்கள் அரசன்” என்றார் மாளவத்தின் அரசர். “இப்பிறவியில் ஈட்டிய நோய் ஒருவேளை நீங்கலாகும். முற்பிறவி நோய் அவனுடையது” என்றார் பாஞ்சாலத்தின் அரசர். சிந்துவின் அரசர் “தந்தைப் பழியை அவன் ஏற்றுக்கொண்டது முறை. அதைப் பகிர என் மகளை அவன் கோருவது எவ்வகையிலும் பிழை” என்றார். பிற அரசர்களோ மெய் மறைத்து பிறிதொன்று சொல்லி தயங்கினர்.

அரசகுடியிலன்றி பிறிதொரு இடத்தில் பெண்கொள்வது குருநகரியின் குருதித் தூய்மையை பிற்காலத்தில் இல்லாமலாக்கக்கூடும் என்று குலத்தலைவர்களும் அமைச்சர்களும் அஞ்சினர். நான்காண்டுகாலம் பெண் தேடி சலித்தனர். அரசி நிமித்திகர் ஒருவரிடம் சென்று

வழிகோரினாள். “நகரின் தென்மேற்கு மூலையில் அமைந்த துர்க்கை ஆலயத்தில் பன்னிரு மலர்கொண்டு பூசனைசெய்து மீள்கையில் முதலில் காதில்விழும் பெயருக்குரியவள் அரசனுக்கு துணைவியாவாள்” என்றார் நிமித்திகர். அவ்வண்ணம் வணங்கி மீள்கையில் எவரோ இந்துமதி எனச் சொல்லியது அவள் செவியில் விழுந்தது.

அயோத்தி அரசரின் இளையமகள் இந்துமதி அழகி என்றும் அறிந்தவள் என்றும் ஒற்றர்கள் வழியாக செய்தி வந்தது. அவளை பெண்கேட்க தூதனொருவனை அனுப்ப அவைகூட்டினார் குலத்தலைவர். தூதன் அத்திருமுகத்துடன் செல்லும்பொருட்டு எழுந்தபோது அவையிலமர்ந்திருந்த பத்மரின் மைந்தனும் அமைச்சனுமாகிய சுதர்மன் “பொறுங்கள், மூத்தவரே” என்று சொல்லி எழுந்தான்.

“இது பெண்கோள் நிகழ்வென்பதனாலும் முன்னர் இதை நான் அறிந்ததில்லை என்பதனாலும் இதுவரையிலும் என் சொல்லென எதுவும் எடுக்கவில்லை. இத்தனை முறை இது பிழைத்தமையால் இன்று நான் ஒன்றை செய்யலாம் என்று எண்ணுகிறேன். ஒப்புதல் அளிக்க வேண்டும்” என்றான். “சொல்க!” என்றார் அக்குலமூத்தார். “இத்திருமுகத்துடன் சென்று அயோத்தியின் அரசனைப் பார்ப்பதில் பொருளில்லை. முன்பு பெற்ற மறுமொழிகளன்றி பிறிதொன்று இங்கு வருமென்பதற்கான சான்றுகள் ஏதும் நம்மிடம் இல்லை” என்றான் சுதர்மன்.

“இதுவே முறை. பிறிதென்ன வழி?” என்றார் குலத்தலைவர். “ஒன்று செய்யலாம். இம்முறை தூதன் செய்தியுடன் செல்வதற்கு முன்பு சொல்திறனும் இசைநுணுக்கமும் பயின்றுதேர்ந்த விறலி ஒருத்தியை அனுப்புவோம். அரசரின்

தோள்திறமும் மெய்யழகும் உளக்கனிவும் அவளிடம் பாடல்களாக இருக்கவேண்டும். தேர்ந்த ஓவியர்கள் வரைந்த அரசரின் முகம் அவள் கையில் பட்டுச்சுருளென அமையவேண்டும். அரண்மனைக்குள் சென்று இந்துமதியைக் கண்டு அந்த முகத்தை அவளுக்கு காட்டட்டும். அரசரின் பெருமையை எடுத்துரைக்கட்டும். இந்துமதியின் உள்ளத்தில் அரசர் எழுந்த பின்னர் இங்கிருந்து நாம் தூதனுப்புவோம்" என்றான் சுதர்மன்.

"பெண்விழைவை மறுப்பது ஷத்ரிய குலநெறி அல்ல. உளம்கொண்டவனை மறப்பது ஷத்ரியப் பெண்ணின் இயல்பும் அல்ல. அவ்வாறு அயோத்தியின் அரசர் பெண்கொடை மறுப்பாரென்றால் இங்கிருந்து படைகொண்டு அவ்விளவரசியை கொண்டுவருவதும் முறையென்றாகும்" என்றான். முதுதாதை ஒருவர் "படைவிட்டு பெண்கொள்வதை எப்போதோ செய்திருக்கலாம். ஆனால் அதற்கு அரசர் ஒப்புதல் அளிக்கவில்லை" என்றார்.

"ஆம். விரும்பாத பெண்ணை கவர்ந்து வருவதை அவர் ஒப்பமாட்டார். ஆனால் தன்மேல் பெருவிருப்பு கொண்டிருக்கும் பெண் ஒருத்தியின் ஓலை அவருக்கு வருமென்றால் படைகொண்டு சென்று பெண் கவர்ந்து வர அவரே ஆணையிடுவார்" என்றான் சுதர்மன். "அவ்வாறு அவளைக் கவர்ந்து வருவது அவருடைய அறம். அவள் கன்னியென்று வாழ்ந்தாலோ பிறன்கைபடாதிருக்க உயிர் மாய்த்தாலோ அவர் பழி கொள்ளவேண்டியிருக்கும்." அவன் சொல்வதை உய்த்துணர்ந்தபின் "அவ்வாறே ஆகட்டும்" என்றார் குலமூத்தார்.

வைசாலி என்னும் விறலி தன் தோழியர் இருவருடன் தென்னகத்திலிருந்து பாடிப் பரிசில் பெற்றுவரும் பயணத்தில்

எனக் காட்டி அயோத்திக்கு சென்றாள். கோட்டைமுகப்பில் நின்று பாடியே தன்னை அறிமுகம் செய்த அவளை எதிர்கொண்டு அரண்மனைக்கு அழைத்துச்சென்றனர் அங்குள்ள காவலர். கரிய திண்ணுடலும் துள்ளும் நீள்விழிகளும் வெண்கலமணி போன்ற குரலும் கொண்டிருந்த வைசாலியைப் பார்த்ததுமே அரண்மனைப் பெண்டிர் திரண்டு வந்து அவளுக்குச் சுற்றும் அமர்ந்தனர். கைவளைகள் குலுங்க முலைப்பந்துகள் எழுந்தாட அமர்ந்தபடியே நடனமிட்டு அவள் கதை சொல்லலானாள்.

வைசாலி இந்திரன் விருத்திரனை வென்ற பெருங்கதையை பாடி நடித்தாள். கண்ணெதிரே விண் நிகழ்ந்த காட்சிகள் விரிய சொல்லிழந்து அமர்ந்திருந்தனர் சூழ்ந்த பெண்கள். ஆடல் முடிந்ததும் அயோத்தியின் அரசி மாதவி வைசாலிக்கு அருமணி மாலை ஒன்றையும் பொற்காசுகளையும் பரிசளித்தாள். அரசியை வணங்கி பரிசிலுக்கு மகிழ்வுரைத்து மேலும் சிலநாள் தங்கி கதை சொல்வதாக ஒப்புக்கொண்டாள் வைசாலி.

அன்று அரண்மனையின் பாணர் இல்லத்தில் தங்கியிருந்த அவள் தன் தோழியை அனுப்பி இளவரசி இந்துமதியுடன் தனிச்சொல்லாட விழைவதாக தெரிவித்தாள். ஐயத்துடன் “எதற்கு?” என்று கோரிய முதுசெவிலியிடம் “இளமகள் அறியவேண்டிய காமக்கலைகள் சிலவற்றை கற்றுத்தர விழைகிறேன். இங்கு எவரும் அதை அவளிடம் உரைக்க இயலாது” என்றாள். முதுசெவிலி நகைத்து “ஆம். அதுவும் தேவைதான். துவர்க்கும் காய் போலிருக்கிறாள், அகம் சிவக்கட்டும்” என்றாள்.

செவிலி மலர்த்தோட்டத்தில் தனித்தமர்ந்திருந்த இந்துமதியிடம் வைசாலியை அழைத்துச்சென்றாள். தோழியரும் அகன்றபின் இந்துமதியுடன் தனித்திருந்த வைசாலி இந்திரன் விருத்திரனை வென்ற கதையிலிருந்தே பேச்சை தொடங்கினாள். இந்திரனின் அழகையும் மாண்பையும் ஊசிமுனையால் நகையின் அணிச்செதுக்குகளை தொட்டுக்காட்டும் பொன்வணிகன்போல் சொல்லிக்கொண்டே சென்றாள். விழைவு எரியும் விழிகளும் அணைப்பதற்கென்றே விரிந்த தோள்களும் கொண்ட இந்திரன் ஏதேதோ உருவில் எல்லா பெண்களுக்குள்ளும் உறைவதை அவள் அறிந்திருந்தாள். சொல் ஒன்றே அங்கு சென்று அக்கனவை தொடுமென்றும் கற்றிருந்தாள். ஊசிமுனை மட்டுமே தொடும் அந்நகையின் செதுக்குகள், சிதர்கள் சிலிர்த்துக்கொண்டன.

இந்துமதி இரு கைகளாலும் தலையைத் தாங்கி விழிகள் நீர்மைகொண்டு தாழ்ந்திருக்க சிற்றிலை உதிரும் சுனைநீர்ப்பரப்பென உடல் ஆங்காங்கே மெய்ப்புகொள்ள, மூச்சில் இளமுலைகள் அசைய அதைக் கேட்டு அமர்ந்திருந்தாள். பெருமழைக்குப் பின் செம்மண் நிலமென அவள் கனிந்துவிட்டதை அறிந்ததும் பாடினி மெல்ல சொல்முதிர்ந்து அவ்விந்திரனை வெல்லும் ஒரு மைந்தன் மண்ணில் எழப்போவதைப் பற்றி சொல்லலானாள். அவன் பெருந்தோள்களை, விரிந்த நெஞ்சை, நிலம் அழுந்த ஊன்றும் கால்களை, கூர்ஒளிர் விழிகளை, முரசுக்குள் கார்வை என முழங்கும் குரலை அவள் சொல்லிக்கொண்டே செல்ல கைநீட்டி பாடினியின் கைகளைத் தொட்ட இந்துமதி போதும் என்று தலையசைத்தாள்.

பாடினி “அப்பேருருவன் பிறக்கவிருப்பது குருநகரியின் அரசன் ஆயுஸின் குலத்திலென்று நிமித்திகர் கூறுகின்றனர், இளவரசி” என்றாள். “யாரவர்?” என்று அவள் கேட்க தன் கையிலிருந்த பட்டுச்சுருளை நிமிர்த்தி விரித்து ஆயுஸின் முகத்தைக் காட்டினாள். இந்திரனும் அவன் வடிவென எழவிருக்கும் மைந்தனும் இருபுறமும் சுடர்விட அவ்வொளியில் தெரிந்தது ஆயுஸின் அழகிய முகம். அவள் விழிகள் அம்முகத்தைத் தொட்டதுமே மிகத் தாழ்ந்த குரலில் பாடினி ஆயுஸின் புகழ் பாடத்தொடங்கினாள். அவன் நகர்ப்பெருமை, குலப்பெருமை, கோல்மாண்பு, போர்மறம் என அச்சொற்கள் விரிந்தன.

மிகத் தாழ்ந்த குரலில் சொல்லப்படும் சொற்கள் செவியைத் தொடாமலே நெஞ்சில் நுழைபவை. தன் நெஞ்சுள் இருந்தே முளைத்தனவோ என கேட்பவர் ஐயுறும் தன்மைகொண்டவை. பாடினி சொல்லி முடிப்பதற்குள் இந்துமதி ஆயுஸை தன் கணவனென ஏற்றுக்கொண்டுவிட்டிருந்தாள். பாடினி எழுந்தபோது அந்த ஓவியத்தை தனக்கென அளிக்க முடியுமா எனக் கேட்டு வாங்கினாள். அதை மறைக்கும்பொருட்டு தன் ஆடைக்குள் உள்ளாடையென அணிந்தபடி தன் அறைக்குள் சென்றாள். சேடியர் சென்று மறைந்த பின் மஞ்சத்தில் படுத்து அதை விரித்து அதன் அருகே முகம் வைத்து அவ்விழிகளை நோக்கிக்கொண்டு கனவிலாழ்ந்தாள்.

இரவெல்லாம் அந்த முகத்துடன் அவள் இருந்தாள். நடுங்கும் வியர்த்த விரல்களால் அம்முகத்தை வருடினாள். இதழ் கனல்கொள்ள மூச்சு ஆவியென்று எழ அவன் முகத்தை முத்தமிட்டாள். ஓசைகேட்டு எழுந்து அதை மீண்டும் தன் உள்ளாடையாக்கிக்கொண்டு கதவைத் திறந்தாள். அவள் உடலில் அவன் எப்போதும் அறியா அணைப்பென

கைசுற்றியிருந்தான். பதினைந்து நாட்களுக்குப் பிறகு குருநகரியின் தூதன் அயோத்தியை அடைந்தபோது இந்துமதி ஆயுஸின் மனைவியாக நெடுங்காலம் வாழ்ந்து முடித்திருந்தாள்.

தூதனின் சொல்கேட்டு அயோத்தியின் அரசர் திகைத்து "முன்னரே என் மூத்த மகளைக் கோரி இங்கு வந்தபோது நான் பெண்மறுத்து திருப்பி அனுப்பினேன் என்பது நினைவிருக்கும். இரண்டாமவளைக் கோரி நீங்கள் இங்கு வந்தது என்னை சிறுமை செய்வதற்கல்ல என்று எண்ணுகின்றேன்" என்றார். குருநகரியின் முத்திரை சூடிய தலைப்பாகையுடன் அவை நின்ற தூதன் "அல்ல அரசே, இம்முறை எங்கள் அரசின் தூது வந்தது உங்கள் இளவரசியின் விழைவை ஏற்றுத்தான்..." என்றான். "என்ன சொல்கிறீர்?" என்று அரசர் பாய்ந்து எழ "ஆம், உங்கள் இளவரசியின் காதலை எங்கள் அரசர் ஏற்றதனாலேயே இச்செய்தி" என்றான் தூதன்.

பெருஞ்சினத்துடன் "இளவரசியின் காதல் உமக்கு எப்படித் தெரிந்தது?" என்றார் அயோத்தி அரசர். "இளவரசி அனுப்பிய பாடினி ஒருத்தி எங்கள் அரண்மனைக்கு வந்து அரசரிடம் செய்தியை சொன்னாள்" என்றான் தூதன். "இது அரசியல் சூழ்ச்சி. வீண்சொல். இக்கணமே அவை நீங்குக! கொலைக்களத்தில் இறப்பு காத்திருக்கும் பிணையன் போன்றவன் உமது அரசன். அவனுடன் அவையமர இங்கு என் மகள்கள் எவருமில்லை. செல்க!" என்றார் அரசர்.

தூதன் நிமிர்ந்த தலையும் முழங்கும் குரலுமாக "செல்கிறேன். இளவரசி அவைக்கு வந்து எங்கள் அரசரை அவர் விரும்பவில்லை என்று ஒரு சொல் சொல்லட்டும். அச்சொல்லின்றி நான் மீளப்போவதில்லை. நீங்கள் என்னைக்

கொல்லலாம். அது குருநகரியிடம் அயோத்தி போருக்கு அறைகூவுகிறது என்றே பொருள் கொள்ளப்படும்” என்றான். சினத்தால் சுருங்கிய கண்களுடன் நோக்கியிருந்த அரசர் “இந்த அவையின் சொல் உமக்குப் போதாதா?” என்றார். “இளவரசியின் விழிகளை நோக்கி அச்சொற்களை நான் கேட்கவேண்டும். அதுவே எனக்கிடப்பட்ட ஆணை” என்றான் தூதன்.

நாலும் எண்ணியபின் மெல்ல நிலைமீண்ட அயோத்தியின் அரசர் திரும்பி தன் அருகே அமர்ந்திருந்த அரசியிடம் “அவ்வண்ணம் ஏதேனும் விருப்பு நமது இளவரசிக்கு உண்டா?” என்றார். “குருநகரியின் அரசனை எவ்வண்ணம் அவள் அறிவாள்? ஒவ்வொரு நாளும் அவளுடன் இருந்துகொண்டிருக்கிறேன். அப்படி ஒரு விழைவு அவளிடம் இருப்பதற்கான எந்தச் சான்றும் இதுவரை என் கண்களுக்குப்படவில்லை” என்றாள் அன்னை. அப்பால் நின்றிருந்த சேடி குனிந்து “நானும் அவ்வண்ணம் எத்தடயமும் இதுவரை கண்டதில்லை, அரசே” என்றாள்.

மறுபக்கம் நின்றிருந்த மூதமைச்சர் பணிந்து “அரசே, கன்னியர் உள்ளத்தை அன்னையர் ஒருபோதும் அறிவதில்லை. அவர்களை தங்கள் மடியமர்ந்த மழலையர் என்றே இறுதிவரை எண்ணுவார்கள். இளவரசியின் உள்ளம் இந்த அவையில் அவர் வந்து சொல்லெடுப்பது வரை எவரும் அறிய முடியாது…” என்றார். பெருமூச்சுடன் “ஆனால் எனக்கு பிறிதொரு வழியில்லை” என்று சொன்ன அரசர் திரும்பி முதுசேடியிடம் “சென்று சொல், என் மகளிடம்! இந்த அவைக்கு வந்து குருநகரியின் அரசனை அவள் விரும்பவில்லை என்று சொல்லவேண்டுமென்பது என் ஆணை என்று” என்றார். அவள் தலைவணங்கினாள்.

அவர் மேலும் குரல் தாழ்த்தி “அங்கு அவள் முடிசூடி வாழப்போகும் நாட்கள் சிலவே என்று விளக்கு. மூத்தார் பழிகொண்ட மன்னனின் துணைவியாக அமர்ந்து பெருந்துயருற வேண்டாம் என்று நான் சொன்னேன் என்றுரை. தந்தையென்று என் விழைவையும் அரசனென்று என் ஆணையையும் அறிந்தபின் அவள் அவை வரட்டும்” என்றார். அன்னை “அவளிடம் என் விழைவும் அதுவே என்று சொல்” என்றாள். “அவ்வாறே” என்று சேடி பின்னடி வைத்து விலகினாள்.

தன் அறைக்குள் தனிமையில் மஞ்சத்தில் படுத்து ஆயுஸின் முகத்தை விழிநட்டு நோக்கியிருந்த இந்துமதியை கதவைத் தட்டி அழைத்தாள் சேடி. ஓவியத்தைச் சுருட்டி ஆடைக்கு அடியில் உடுத்திவிட்டு மேலாடை திருத்தி வியர்த்து சிவந்த முகத்துடன் கதவைத் திறந்த இந்துமதியின் முகத்தைக் கண்டதுமே அவளுக்குப் புரிந்துவிட்டது. இத்தனை நாள் இதை எவ்வண்ணம் காணாமலிருந்தேன் என்று அவள் வியந்தாள். உறுதியை மீட்டுக்கொண்டு “வருக, இளவரசி! தங்கள் தந்தை அவை புகுந்து இவ்வண்ணம் உரைக்கும்படி ஆணையிட்டிருக்கிறார்” என்று அரசனின் சொற்களை சொன்னாள்.

விழிதாழ்த்தி முலையிணை எழுந்தமைய பிறிதெவரிடமோ எவரோ பேசுவதை அருகே கேட்டு நிற்பதுபோல் நின்றிருந்த அவளை நோக்கி நன்று நிகழப்போவதில்லை என்று தன்னுள் சொல்லிக்கொண்டாள் சேடி. இளஞ்சேடியர் ஓடிவந்து இளவரசிக்குரிய பட்டாடையையும் அணிகளையும் அவளுக்கு அணிவித்தனர். ஆடை உலையும் ஒலியும், அணிகள் சிலம்பும் இசையும் பொருந்திவர காலெடுத்து வைத்து அவள் நடந்தபோது ஒருத்தி பிறிதொருத்தியிடம் “இது மணவறைக்குச்

செல்லும் நடையல்லவா?” என்றாள். “பேசாமலிரு” என்றாள் மற்றவள்.

அவைக்குள் புகுந்து அரசமேடை மேலேறி நின்று தலைகுனிந்து கால்நகம் நோக்கினாள் இந்துமதி. அரசர் அவளிடம் திரும்பி “மகளே, சொல்க! இவர் குருநகரியின் அரசனின் தூதனாக வந்துள்ளார். நீ அவரை மணம்கொள்ள விழைவதாக அங்கொரு செய்தி சென்றிருக்கிறது. அதன்பொருட்டே உனைக் கோரி இங்கு மணத்தூது அனுப்பப்பட்டுள்ளது. அவ்வண்ணம் விழைவேதும் உன் நெஞ்சில் உள்ளதா?” என்றார். அவள் தலைகுனிந்து நிற்க “என் சொல்லென்ன என்பதை சேடி சொல்லி அறிந்திருப்பாய். அதையும் எண்ணி இங்கு உன் முடிவைச் சொல்” என்றார்.

உடல் முழுக்க மெல்லிய நடுக்கம் ஓட தலைகுனிந்து நின்றிருந்தாள் இந்துமதி. “சொல் மகளே, நீ வெறும் பெண்ணல்ல. இந்நகரின் இளவரசி. அரச மேடையில் நின்று நீ சொல்லும் சொற்கள் என்றும் நினைக்கப்படுபவை” என்றார் அரசர். அவள் தலைநிமிர்ந்து இதழ்களை அசைத்தாள். சொல் திரளாமையை உணர்ந்து மீண்டும் தலைகுனிந்தாள். அரசி எழுந்து அவள் தோளைப்பற்றி “தயங்க வேண்டியதில்லை. உன் முடிவைச் சொல்” என்றாள்.

மூச்சை இழுத்து தன்னுடலை இறுக்கி, கழுத்திலொரு நீல நரம்பு புடைக்க தலைதூக்கி, அவையை விழிகளால் ஒரு சுற்று நோக்கியபின் தூதனை நோக்கி அவள் சொன்னாள் “தூதரே, சென்று சொல்க, குருநகரியின் அரசர் ஆயுஸின் துணைவியாகவே நான் இங்கு வாழ்கிறேன் என்று. பிறிதொருவரை மணம்கொள்ள இப்பிறவியில் எந்நிலையிலும் ஒப்பேன். அறிக இந்த அவையும்!” என்றாள். முந்தைய

கணத்தில் அவள் உடலில் திகழ்ந்த தயக்கத்திற்கும் அச்சத்திற்கும் மாறாக குரல் மணிக்கூர்மையுடன் அவை நிரப்பி ஒலித்தடங்கியது.

அரசர் எழுந்து "என்ன சொல்கிறாய்? இளவரசி, உன் சொற்களை எண்ணித்தான் சொல்கிறாயா?" என்றார். குலமூத்தார் ஒருவர் எழுந்து "அவையில் இச்சொற்களை இளவரசி சொன்னபிறகு மறுத்தொரு சொல் சொல்ல அரசருக்கோ குலத்திற்கோ குலதெய்வங்களுக்கோகூட உரிமையில்லை, அரசே" என்றார். உடல் எடை அரியணையை அழுத்தி ஒலியெழுப்ப கால் தளர்ந்து அமர்ந்த அரசர் "ஆம்" என்றார்.

குருநகரியின் தூதன் "எனது திருமுகத்தை அரசர் முறைப்படி பெற்றுக்கொள்ள வேண்டும். அரசகுல முறைப்படி இளவரசியை எங்கள் அரசருக்கு மணமளிக்கவும் வேண்டும்" என்றான். "இனி நான் சொல்வதற்கொன்றுமில்லை. அவ்வாறே ஆகுக!" என்றார் அரசர். பின்னர் தலையைப் பற்றியபடி "ஊழ் எனும் சொல் காதில் விழாத நாள் ஒன்று இல்லை. ஆயினும் கண்முன் எழுகையில் ஒவ்வொருமுறையும் அது அச்சுறுத்துகிறது" என்றார்.

தன் அறை நோக்கி செல்கையில் இந்துமதியைத் தொடர்ந்து ஓடிவந்த அவள் அன்னை "அறிவிலியே, என்ன சொன்னாய் என்று தெரிகிறதா? நீ எவருக்கு மணமகளாகப் போகிறாய் என்று தெரிகிறதா?" என்றாள். "தெரியும். அனைத்துக் கதைகளையும் அறிந்துள்ளேன்" என்றாள் இந்துமதி. "தந்தைப் பழி ஏற்றவன் வாழமாட்டான். கல் பிணைத்து நீரில் இட்டதுபோல் உன் வாழ்க்கை அமையும்" என்றாள் அன்னை. "விரும்பி ஒருவருடன் வாழ்ந்து அழிவதும் இன்பமே. இனி

பிறிதொன்றை நான் எண்ணுவதற்கில்லை” என்றபின் அவள் நடந்து சென்றாள்.

அவ்வுறுதியை ஒருபோதும் அவளில் கண்டிராத அன்னை தன் தோழியாகிய முதுசேடியிடம் திரும்பி உளம்பதைக்க “என்னடி இது?” என்றாள். “பெண் முதிரும் கணம், அதை நாமனைவரும் அறிவோம்தானே...?” என்றாள் அவள். “இவள் வாழ்க்கை...” என மேலும் அரசி சொல்லப்போக “அதற்கு தான் பொறுப்பேற்றுக்கொண்டதாகத்தானே இப்போது அவர் சொன்ன சொற்களின் பொருள்... இனியொரு சொல்லெடுக்க நமக்கு உரிமையில்லை. நன்று நிகழுமென்று எண்ணுவோம்” என்றாள் முதுசேடி.

மூன்று நாட்கள் அரண்மனை சொல்லெழாத் துயரத்திலிருந்தது. சினத்துடன் தன் அறைக்குள்ளே அடைந்து கிடந்தார் அயோத்தியின் அரசர். அமைச்சர்கள் அவரை ஆறுதல்படுத்தினர். “ஒரு பழங்கதையின் அடிப்படையில் நாம் தயங்கினோம். அதை இனி பெரிதுபடுத்த வேண்டியதில்லை. அரசமுறையிலும் குலமுறையிலும் நமக்கு நிகரானவர் குருநிலத்து அரசர்” என்றார் ஒரு குலமூத்தார். “நாம் பிறவிநூல் நோக்கி, நாளும் கோளும் கணித்து இளவரசியை பிறிதொருவருக்கு மணம்செய்து கொடுத்தால்கூட அவ்வரசன் போரில் மடியமாட்டான், நோயில் படுக்கமாட்டான் என்பதில் என்ன உறுதியிருக்கிறது?” என்றார் அமைச்சர்.

மெல்ல அரசர் உளம்தேறி எழுந்தார். மணநாள் குறிக்கப்பட்ட பின்னரே மகளை நோக்கி அகம் கனிந்தார். “நீங்கள் இளவரசியை பின்னர் அழைத்துப்பேசவில்லை, அரசே. உங்கள் உளம்நிறைந்த வாழ்த்துக்களுடன் அவர் நகர்நீங்கவேண்டும். இல்லையேல் நீங்கள் நிறைவுடன் இங்கு அமையமுடியாது”

என்றார் அமைச்சர். "ஆம்" என்றபின் அரசர் மாமங்கலைகளை அடிவணங்கி அருள்கொள்ளும் நாளில் அவள் அணிபுனைந்துகொண்டிருந்தபோது அவளை அழைத்து வரச்சொன்னார். "அவள் பிறந்த நாளிலிருந்து என் உள்ளத்தில் அவள் நீங்கிய கணமொன்றில்லை, அமைச்சரே" என குரல்கசியச் சொன்னார்.

எவ்வித அச்சமும் இன்றி, தயங்கா காலெடுத்து தன்முன் வந்துநின்ற மகளை நோக்கியதுமே அவள் பிறிதொருத்தி என்று அறிந்துகொண்டார். அந்த நிமிர்வு தன் அன்னையிடம் இருந்தது அல்லவா என்று நினைவுகூர்ந்தார். அவ்வெண்ணத்தால் முகம் மலர்ந்து அவள் அருகே சென்று சிறுதோள்களில் கைவைத்து "நன்று மகளே, உன் முடிவை நீ எடுத்தாய். அதன் இனிப்புக்கும் கசப்புக்கும் பொறுப்பேற்கையில் நீ அரசி என்றானாய். உனது காலடியில் குலங்கள் பணியும். உனது வயிற்றில் புவியாளும் பெருமன்னன் பிறப்பான். நன்று சூழ்க!" என்று அவளை வாழ்த்தினார்.

கைகூப்பி தந்தையின் வாழ்த்தை ஏற்ற இந்துமதி "இம்முடிவை நான் எடுத்தது குருநகரின் அரசரின் அழகிய தோற்றம்மேல் நான் கொண்ட மையலால்தான் என்று சிலநாள் முன்னர்வரை எண்ணினேன், தந்தையே. அவரை நான் மணப்பது உறுதியாகி மணமேடை என் அகவிழியில் தெரியத்தொடங்கியதுமே அவர் பின்னுக்கு நகரத்தொடங்கினார். இன்று என்னுள் நிறைந்திருப்பது என் உடலில் முளைத்து எழப்போகும் மைந்தன் மட்டுமே. தந்தையே, இந்திரனை வென்று அவ்வரியணையில் அமரும் அரசன் அவன் என்று நான் அறிவேன். இக்கணம் அதில் எனக்கு ஐயமேதுமில்லை" என்றாள்.

“அவ்வண்ணமே ஆகுக! இவை அனைத்தும் அவன் மண்நிகழ்வதற்காக எங்கிருந்தோ இயற்றும் செயல்களாக இருக்கலாம். நீத்தவர் தெய்வங்கள் எனில் பிறக்காதவர்களும் தெய்வங்களே” என்றார் அரசர். அச்சொற்களால் உணர்வெழுச்சிகொண்டு அவள் விசும்பி அழத்தொடங்கினாள். அவள் தோள்களைவருடி குழல்நீவி சொல்லின்றி அவளை வாழ்த்திக்கொண்டிருந்தார் தந்தை.

இரு அரசகுலங்களும் மனமுவந்து நிகழ்த்திய விழவென்பதால் பதினைந்து நாட்கள் நீடித்த களியாட்டமாக அமைந்தது அந்தத் திருமணம். நாள்தோறும் விருந்துகளும் கலைநிகழ்வுகளும் களமாடல்களும் நூலாய்வுகளும் நிகழ்ந்தன. வைதிகரும் முனிவரும் வந்து பொருளும் பெருமையும் பெற்றுச்சென்றனர். மணம் நிகழ்ந்த அன்று விண்ணில் இளமுகில்கள் குவிந்து விழுந்த வெள்ளித்தூறலால் தெய்வங்களின் வாழ்த்தே அவர்களுக்கு அமைந்தது என்று புலவர் பாடினர்.

இந்துமதி கணவனுடன் குருநகரிக்கு வந்தாள். முதல் இரவில் அவள் கைகளை பற்றிக்கொண்டு ஆயுஸ் சொன்னான் “என்னை முனியவும் தீச்சொல்லிடவும் உனக்கு முற்றுரிமை உண்டு. உன்னை இம்மஞ்சம்வரை கொண்டுவந்து சேர்த்தது என் அமைச்சரின் சூழ்வல்லமை என நேற்றுதான் அறிந்தேன். சொல்லெனும் மெல்லிய வலையால் கட்டி உனை இங்கு இழுத்து வந்தார் அவர். எனக்கும் பிறிதொரு வழி தெரியவில்லை.” அவள் “இல்லை அரசே, இது என் ஊழ் கொண்டுவந்து சேர்த்த இடம்” என்றாள்.

“இக்குலம் வாழவேண்டுமெனில் உன் கருவில் ஒரு மைந்தன் பிறக்கவேண்டும். அவன் இந்திரனை வெல்வான், நாகர்குலத்தை ஆள்வான் என்று நிமித்திகம் சொல்கிறது. குருதி செல்லும் வழி

அமைய வேண்டுமென்பதற்கப்பால் நான் எதையும் இப்போது விழையவில்லை” என்று ஆயுஸ் துயருடன் சொன்னான். “எந்தையின் தீச்சொல் பழியை நீ அறிவாய். அதை நான் இரந்து வாங்கி மணிமுடியுடன் சேர்த்து என் தலை சூடியிருக்கிறேன். என் இடம் அமர்ந்து இம்மணிமுடிக்குரியவள் என்பதால் நீயும் அதை அடையவிருக்கிறாய். அதன்பொருட்டு உன்னிடம் வாழும் ஒவ்வொரு கணமும் பொறுத்தருள்க பொறுத்தருள்க என்றே சொல்வேன்.”

உளம் கனிந்து அவள் அவனை அணைத்து “ஒட்டாது வாழும் நெடுநாள் வாழ்வல்ல, நான் விழைந்தது. உளம் ஒன்றாகித் திகழும் கணங்களேயானாலும் அவையே முழுவாழ்வு. பிறிதொன்றும் விழையவில்லை” என்றாள். துயர் இறுகிநின்ற அவன் முகத்தை நோக்கி புன்னகைத்து “நான் விழைந்த வாழ்வு இது. என் கருவிலெழும் மைந்தனால் இங்கு அழைத்துவரப்பட்டேன்” என்றாள். அவன் நீள்மூச்சுடன் அவள் அருகே அமர்ந்தான். “நான் எனை மறந்த உவகை என எதையும் இன்றுவரை அடைந்ததில்லை” என்றான். “நம் மைந்தன் பிறக்கையில் அதை அடைவீர்கள்” என்று அவள் சொன்னாள்.

# மாமலர் - 32

## 32. விண்பறந்து வீழ்தல்

இந்துமதி கருவுற்ற நாள் முதலே அவள் இறப்பாள் என்பது ஆயுஸின் உள்ளத்தின் ஆழத்தில் தெரிந்தது. அவள் அஞ்சியும் பதைத்தும் தன்னுள் நிகழ்வதை சொல்ல முயல்வதையெல்லாம் உவகையுடனும் எதிர்பார்ப்புடனும் பேசி

அதை அவன் கடந்து சென்றான். சோர்ந்து வெளுத்து உலர்ந்து உடல்கிழிந்து அவள் இறந்தபோது அவ்வண்ணம் நிகழவே இல்லையென்பதுபோல் பிறிதொரு எல்லையில் தன்னை விலக்கிக்கொண்டான். தெற்குக்காட்டில் எரியுண்டு அவள் மறைந்தபோது அனல் வைத்து வணங்கி மீண்டுவரும் வழியில் ஒவ்வொரு காலடியிலும் அவளை தன் உள்ளத்தின் ஆழத்தில் அழுத்திச் செலுத்தி மறைத்துவிட்டு பிறிதொருவனாக அரண்மனைக்குள் நுழைந்தான்.

மூன்று நாள் ஒருபொழுதும் தனிமையும் நோற்றான். பதினாறாவது நாள் உயிர்மீட்பு விருந்தும் நாற்பத்தோராவது நாள் விண்ணேற்றச் சடங்கும் முடிந்தபிறகு அவன் அவளை எண்ணவேயில்லை. அதற்குள் அக்குழந்தை அவனை முழுமையாக ஆட்கொண்டது. அதன் ஒவ்வொரு கணமும் அவனுள்ளம் நிறைந்தது. குழந்தை வளர்வதன் முறைமைகள் குறித்து மருத்துவர்கள் சொன்ன அனைத்தையும் கடந்து எழுந்துகொண்டிருந்தது அது. நூறு ஓநாய்களின் பசி, நூறு குதிரைக்குட்டிகளின் துடிப்பு, நூறு யானைக்குட்டிகளின் ஆற்றல் என்று அதைப்பற்றி அவைப்புலவன் பாடினான்.

அரசுப் பணிகள் அனைத்தையும் ஆயுஸ் துறந்தான். அமைச்சர்களிடம் அவையை ஒப்படைத்துவிட்டு பொழுதும் இரவும் கனவும் மைந்தனுடனேயே இருந்தான். மடியில் மைந்தனை படுக்கவைத்து பொற்கிண்டியில் பாலை பரிந்து அணைத்து அவன் ஊட்டுகையில் அக்கிண்டி முலையென்றே ஆகும் விந்தையை சேடியர் கண்டு விழி பரிமாறிக்கொண்டனர். இரவில் மைந்தனை தன் அருகிலேயே படுக்கவைத்து துயில்கொண்டான். ஆழ்துயிலிலும் இடக்கை துயிலாது மைந்தனை தொட்டுக்கொண்டிருந்தது. சிற்றொலியிலேயே

எழுந்து மைந்தன் முகம் தொட்டு கனிந்த கனவுக்குரலில் “என்ன, என் செல்வமே?” என்று அவன் கேட்டான். தாயுமானவன் என்று அவனை அவன் குடி வாழ்த்தியது.

பிறந்து நினைவறிந்த நாள்முதல் ஒருபோதும் அறிந்திராத பேருவகையை மைந்தனூடாக ஆயுஸ் அறிந்தான். “பிறிதொன்றிலாது ஒன்றில் ஆழ்ந்திருத்தலின் பெயர்தான் உவகை என்பது. அதை இப்போது அறிகிறேன்” என்று அவன் அமைச்சனிடம் சொன்னான். “விண்ணில் தெய்வங்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தோற்றத்தில் எழுந்தருளுகின்றன, அரசே” என்றான் சுதர்மன். “பொன்னென்றும், பொருள்மிக்க நூலென்றும், உறவென்றும், உயிர்மீட்பென்றும் தெய்வங்கள் இறங்கி வரலாம். பிள்ளையென்று வருகையில் மட்டுமே அவை முழுமை கொள்கின்றன” என்று மலர்ந்த சிரிப்புடன் அரசன் சொன்னான்.

மைந்தனுக்கு விளையாடுவதற்காக மணிமுடியை சகடமென உருட்டிவிட்டான். அரசக் கணையாழியை நூலில் கட்டி ஆட்டிக் காட்டி நகைக்க வைத்தான். குரங்குபோல மார்பில் பற்றியிருக்கும் குழவியுடன் நகருலாவுக்குச் சென்றான். “இத்தகைய பெரும்பற்று பெருந்துயரையே கொண்டுவரும். அரசே, நாம் பற்றுவதெதுவும் நம்மையும் பற்றிக்கொள்வனவே. மீட்சியை விழைந்தால் அதை உடையுங்கள்” என்று அவன் குலமூத்தார் சொன்னார். “அமைச்சரே, அரசரிடம் சொல்சூழும் அணுக்கம் எவரையும்விட தங்களுக்கே உள்ளது” என்றார். “சென்று சொல்க, அவர் கால்கள் புதையத் தொடங்கிவிட்டன!” சுதர்மன் “நான் இதை அறியேன். இப்போதுதான் மணம் கொண்டிருக்கிறேன். மைந்தரைப் பெற்ற மகிழ்வை இதுவரை அறிந்திலேன். நான் சொல்லும்

எச்சொல்லும் அவர் செவிக்கு பொருள்கொள்ளா. சிறுவர் குழறலென்று நோக்கி சிரித்துக் கடந்துசெல்வார்” என்றான்.

“ஆம், எச்சொல்லும் சென்றடையாத இடம் ஒன்றுள்ளது. அங்கு மட்டுமே மனிதர்கள் பெரும் உவகையில் இருக்கிறார்கள். இங்கு சூழ்ந்துள்ள அனைத்தும் உள்ளூறும் அவ்வுவகையை நீர்த்துப்போகவே செய்கின்றன என்று அவர்கள் அறிந்திருக்கிறார்கள்” என்றார் முதிர்ந்து விழிபழுத்த குலமூத்தார் ஒருவர். அனைவரும் திகைப்புடன் திரும்பி அவரை நோக்கினர். “அரசர்மேல் வீற்றிருக்கிறது பிள்ளைத்துயர் என்னும் தீச்சொல். அவர் கேட்டுப்பெற்ற தந்தைக்கொடை அது” என்று ஒருவர் சொல்ல பிற அனைவரும் அவரை திரும்பி நோக்கினர்.

“என்ன நிகழப்போகிறது என்று அறியேன். இப்பிள்ளையை அவர் இழக்கப்போவதில்லை என்பது மட்டுமே ஆறுதலளிக்கிறது. ஏனெனில் இந்திரனை வெல்லும் மைந்தன் இவர் என்று நிமித்திகர்கள் மீண்டும் மீண்டும் உரைக்கிறார்கள். அதுவே நிகழட்டும்” என்றான் சுதர்மன். “அரசரிடம் சொல்வோம், கடிவாளமற்ற புரவி தேரை கவிழ்த்துவிடும்” என ஒருவர் சொல்ல “அது எவ்வகையிலும் கவிழும் தேர் என நாம் அறிவோம். முடிந்தவரை அது ஓடட்டும், செல்லும் இன்பத்தையாவது அவர் அடையட்டுமே!” என்றார் பிறிதொருவர். எவரும் எதுவும் சொல்லவில்லை.

ஏழு மாதம் ஆயுஸ் தன் இருத்தலின் கூர்முனையின் ஒளிமட்டுமென இருந்தான். ஒருநாள் மைந்தனை கூடத்தில் விளையாடவிட்டு அப்பால் அமர்ந்து அவன் ஆடலைப்பார்த்து சிரித்துக்கொண்டிருந்தான். உருண்டு செல்லும் களித்தேரை கையால் தட்டி தவழ்ந்து பின்தொடர்ந்து, செல்லும்

வழியிலேயே சிமிழ் ஒன்றை கையில் எடுத்து, அதை வாயில் வைத்து கடித்துச் சுழற்றி அப்படியே நழுவவிட்டு, பாய்ந்து சென்று மரயானை ஒன்றை எடுத்துச் சுழற்றி அப்பால் எறிந்து, குனிந்து தன் இடை அணிந்த சங்கிலியைப்பற்றி இழுத்து, பிறிதொரு எண்ணம் தோன்ற திரும்பி அவனை நோக்கி சிரித்தான் நகுஷன்.

பித்தன் என மலர்ந்த முகத்துடன் அவனை நோக்கிக்கொண்டிருக்கும் தந்தையின் அக்காட்சியை அன்றி பிறிதொன்றையும் அவன் கண்டதே இல்லை. "ந்தை, ந்தை" என்றபடி கைகளை நிலத்தில் ஓங்கி அறைந்தபடி எச்சில்குழாய் நெஞ்சில் ஒழுக  அவனை நோக்கி வந்தான். மைந்தனை எடுத்து தூக்கிச் சுழற்றி நகைத்து நெஞ்சோடணைத்து இரு கன்னங்களில் முத்தமிட்டான் தந்தை. "உணவூட்ட வேண்டும், அரசே" என்றாள் அப்பால் நின்ற சேடி. "கொண்டு வருக! நான் ஊட்டுகிறேன்" என்றான். பொற்கிண்ணத்தில் பருப்பும் பாலும் நெய்யும் விட்டுப்பிசைந்த அன்னத்தை சேடி கொண்டுவர கைகளால் அள்ளி விரல்களால் மசித்து அதை மைந்தனுக்கு ஊட்டினான். அவ்வுதடுகளில் கைபடுந்தோறும் அவன் விரல்கள் கனிந்து குழைந்து உருகிய நெய்யாலானவை என்றாயின.

இளஞ்சுடர் நெய்யேற்பதுபோல் உண்ணும் மைந்தனை அப்போது பிறர் நோக்கலாகாதென்று நினைத்தான். சுவர் நோக்கி திரும்பி அமர்ந்து உணவை ஊட்டி முடித்த பின்னர் உடலெங்கும் உணவு சொட்டியிருந்த மைந்தனுடன் எழுந்து "என்னவென்றறியேன். இப்போதெல்லாம் அவன் நன்கு உண்பதேயில்லை. நான்கு வாய் உண்டான். எஞ்சியதை நான் உண்டேன்" என்றான் சேடியிடம். அவனை அறிந்திருந்த முதுசேடி "ஆம், அவர் உண்பது குறைந்துவிட்டது.

மருத்துவரிடம் சொல்ல வேண்டும்” என்றபின் “கொடுங்கள் அரசே! கழுவித் துடைத்து வருகிறேன்” என்றாள்.

மைந்தனை அளிக்கையில் அவன் கைகால்களை உதைத்து முகம் சுளித்து வீரிட்டழுதான். அவ்வாறு அவன் அழுவதில்லை என்பதனால் “என்ன என்ன?” என அவன் உடலை நோக்கினான் ஆயுஸ். “நகை குத்தியிருக்கும்... நான் நோக்குகிறேன்” என்றாள் முதுசேடி. அவனுக்கு உகந்த முதுமகள் என்பதனால் எப்போதும் சிரித்தபடி உடன்செல்லும் நகுஷன் கைநீட்டி கண்ணீர் வழிய சிறுஉதடு குவிந்து விதும்ப அழுதபடியே சென்றான். அவன் உடலின் பொன்னகை ஒளியை தொலைவுவரை நோக்கியபின் உரக்க “நான் உடை மாற்றவேண்டும். விரைந்து கொண்டு வருக!” என்றபின் ஆயுஸ் அறைக்குச் சென்றான்.

ஏவலனிடம் பிறிதொரு உடை வாங்கி அணிந்து கைமெய் கழுவி வெளிவந்தபோது மைந்தனை சேடி கொண்டு வரவில்லை என்று கண்டான். “எங்கே மைந்தன்?” என்று அங்கு நின்ற காவலனிடம் கேட்டான். “மெய்கழுவ கொண்டுசென்றார்கள்” என்றான் அவன். “அதை நான் அறிவேன், அறிவிலியே! சென்று நெடுநேரமாயிற்று, என்ன செய்கிறாள் என்று பார்த்து வா!” என்றான் ஆயுஸ் எரிச்சலுடன். சென்று மீண்ட காவலன் “அரசே, மைந்தனை பிறிதொரு சேடியிடம் கொடுத்திருக்கிறார் முதுசெவிலி. உடல் ஈரத்தை துடைத்து எடுத்து வரச்சென்ற அவள் எங்கோ மைந்தனுடன் விளையாடச் சென்றுவிட்டாள்” என்றான்.

“விளையாடச் சென்றாளா? எவருமறியாமலா? இக்கணமே மைந்தனையும் அச்சேடியையும் இங்கு கொண்டு வருக! என் அறிதலின்றி மைந்தனை எங்கும் கொண்டுசெல்லலாகாதென்று

எத்தனை முறை ஆணையிட்டிருக்கிறேன்!” என்று கூச்சலிட்டான். தன் உடல் பதறிக்கொண்டிருப்பதை உணர்ந்ததுமே எப்போதும் அணையாமல் ஆழத்திலிருந்த அச்சத்தை பேருருவாக கண்டான். அத்தனை பெரும் பித்தெழுவதற்கு அதுவே அடிப்படை என்று உணர்ந்தான். “இக்கணமே என் மைந்தன் இங்கு வரவேண்டும்... செல்க!” என்று அவன் கைவீசி கூவினான்.

அவனுடைய சினத்தை காவலர் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. அப்பால் சென்று “விரைந்து குழவியை அரசரிடம் கொண்டுசெல்லுங்கள். உடல் தீப்பற்றியதுபோல அங்கு நின்று கூச்சலிடுகிறார்” என்றான். முதுசேடி “எங்கு சென்றாள் அவள்? என் ஆடையை மிதித்து அவிழச்செய்துவிட்டார். ஆகவேதான் அவளிடம் அளித்தேன். ஆடை திருத்துவதற்குள் கொண்டுசென்றுவிட்டாள்” என்றாள். “கன்னியருக்கு மைந்தரென்றால் பித்து” என்றாள் ஒருத்தி. குழந்தையுடன் சென்றவளை சிரித்தபடியும் எரிச்சல்கொண்டபடியும் தேடியவர்கள் மெல்ல அச்சம்கொண்டனர்.

“எங்கே? என் மைந்தன் எங்கே? இக்கணம் இங்கு வரவில்லை என்றால் தலைகளை வெட்டி உருட்ட ஆணையிடுவேன்” என்று அரசன் கூவினான். ஏதோ ஒருகணத்தில் அனைவரும் அறிந்தனர், பிழை ஒன்று நிகழ்ந்துவிட்டது என்று. முகங்கள் அனைத்தும் மாறின. “மைந்தனை காணவில்லை. அரண்மனையில்தான் எங்கோ இருக்கிறான். தேடிக்கொண்டிருக்கிறோம்” என்றான் காவலர்தலைவன். “அமைச்சரை அழையுங்கள்! அமைச்சரை அழைத்து வாருங்கள்!” என்று கூவியபடி இடைநாழியில் ஓடினான்.

அரசனின் பதற்றம் எதனால் என்று தெரியாத அமைச்சர்கள் ஒருவரோடொருவர் விழிதொட்டுக் கொண்டு இதழ் விரியாது புன்னகைத்தனர். இயல்பாக வெளியே சென்று “எங்கே அந்தச் சேடி? அரசர் கேட்கிறார். அவளை ஒளித்துவிட்டு மைந்தனை மட்டும் கொண்டுவரச் சொல்லுங்கள். வாளை உருவி அவள் தலையை கொய்துவிடுவார் போலிருக்கிறது” என்றார் சிற்றமைச்சர். ஆனால் சேடியர் முகங்களில் இருந்த அச்சம் அவரை பாதியிலேயே சொல் முறியச்செய்தது.

“அரண்மனையின் அகத்தளங்களில் எங்கும் மைந்தனுடன் அச்சேடியை பார்க்கவில்லை. இவ்விடைநாழி வழியாக சென்றால் மூன்று வாயில்கள் உள்ளன. ஒரு வாயில் நெடுங்காலமாக பூட்டியுள்ளது. அதைத் திறக்க தச்சரால் அன்றி முடியாது. பிற இருவாயில்களிலும் சேடியர் நின்றிருந்தனர். எவரும் மைந்தனுடன் சென்ற சேடியை பார்க்கவில்லை” என்றார் பெண்மாளிகையின் காவலரான ஆணிலி. ஐயம் எழ முதுசேடி “இத்திறவா வாசலை திறந்து பாருங்கள்” என்றாள். ஆணிலிகளின் தலைவி வந்து திறந்தபோது அக்கதவு இயல்பாக விரிந்தது. முன்னரே அதை உடைத்து வைத்திருந்தார்கள் என்று தெரிந்தது.

“வஞ்சம்! ஏதோ வஞ்சம் நிகழ்ந்துவிட்டது” என்று முதியசேடி கூவினாள். கதறியபடி நிலத்தில் விழுந்து தலையிலறைந்துகொண்டு அழுதாள். “இல்லை, அன்னையே! பார்ப்போம்... பொறுங்கள்” என்று ஆணிலி சொன்னாள். அவ்வாயிலைத் திறந்து மறுபக்கம் சென்றபோது அங்கு செறிந்திருந்த செடிகளுக்கு நடுவே இளவரசனின் அணிகளும் ஆடைகளும் சிதறிக்கிடப்பதை கண்டனர். செவிலியர்தலைவி ஓடி வந்து காவலர்தலைவனிடம்

“இளவரசரை யாரோ கவர்ந்து சென்றுவிட்டார்கள்” என சொல்லி அழுதாள். அவன் “முரசுகள் முழங்கட்டும். கோட்டைக்காவல் அனைத்தும் கூர் கொள்ளட்டும். இளவரசருடன் செல்லும் அச்சேடியை உடனடியாக பிடித்தாக வேண்டும்” என்றபடி ஓடினான்.

செய்தி அறிந்ததும் சுதர்மன் “ஆம்” என்னும் சொல்லை தன்னுள் உணர்ந்தான். எதிர்நோக்கியிருந்தது அதுவே. சொல் சொல்லாக தன் உள்ளத்தை கோத்துக்கொண்டு அரண்மனைக்குள் சென்றான். இடைநாழிகளிலும் அறைகளிலும் பதறியபடி ஓடி காண்போரிடமெல்லாம் கூச்சலிட்டு “என் மைந்தன்! என் மைந்தன்!” என்று தவித்துக்கொண்டிருந்த ஆயுஸை கண்டான். இதற்குத்தானா எனும் சொல்லென அவன் உள்ளம் மாறியது. அச்சொல் மீள மீள ஒலிக்க அவன் நீள்மூச்செறிந்தான். வெளிவந்து “நகரெங்கும் எவ்வடிவிலும் எக்குழந்தையும் வெளிச்செல்லலாகாது. இந்நகரின் அனைத்துக் குழந்தைகளையும் அரண்மனை முகப்புக்கு கொண்டுவர ஆணையிடுங்கள்” என்றான்.

அருகிலிருந்த ஒற்றனிடம் “அரச மைந்தனாக அவர் வெளிக்கொண்டு செல்லப்பட மாட்டார். உருமாற்றப்பட்டிருப்பார்” என்றான். “எனவே குழவிகளும் குழவிவடிவு கொண்ட எதுவும் குழவியை வைக்கத்தக்க எக்கலமும் நோக்கப்படவேண்டும்” என்றான். “ஆம்” என்று உரைத்த ஒற்றன் விரைந்தான். நகரெங்கும் எச்சரிக்கை முரசுகள் முழங்கலாயின.

திகைத்து முரசுமேடைகளுக்கு முன் கூடிய மக்களிடம் இளவரசனை எவரோ கவர்ந்து சென்ற செய்தி சொல்லப்பட்டது.

கிளர்ந்தெழுந்த மக்கள் எவரிடம் சினம் கொள்வதென்றறியாது கூச்சலிட்டனர். ஒருவரோடொருவர் பூசல் கொண்டனர். செய்தி அறிந்ததுமே அன்னையர் பாய்ந்து சென்று தங்கள் மைந்தரை அள்ளி நெஞ்சோடணைத்து நடுங்கலாயினர். கோட்டை வாயில்கள் அனைத்தும் மூடப்பட்டன. கோட்டைக்கு வெளியே இருந்த குறுங்காடுகளிலும் கால்வழிகள் அனைத்திலும் ஒற்றர்களும் காவலர்களும் புரவிகளில் ஏறி கூர் நோக்கியபடி அலையத் தொடங்கினர்.

மாபெரும் வலையொன்று குருநகரியிலிருந்து கிளம்பி எட்டுத்திசைக்கும் விரிந்து சென்றது. பரல்மீன் அள்ளும் சிறுவலையென காவல் படையொன்று நகரைச் சூழ்ந்து குறுகி அணைத்து ஒவ்வொரு இடமாக நோக்கி, ஒவ்வொரு குழந்தையாக தொட்டு அறிந்து அரண்மனையை அணுகி வந்தது. அத்தொன்மையான கட்டடத்தின் கருவூலங்களையும் கரவறைகளையும் சுரங்கங்களையும் மறைவிடங்களையும் பொந்துகளையும் நீர்நிலைகளையும் ஆராய்ந்தது.

மைந்தன் சென்ற பாதையை வந்து பார்த்த காவலர்தலைவன் அங்கு மண்ணில் பதிந்த காலடியை கூர்ந்து நோக்கினான். “இது அப்பெண்ணின் காலடியா?” என்றான். “ஆம், இங்கு பிறர் வருவதில்லை” என்றாள் ஆணிலியர் தலைவி. நிமித்த கணிகன் வந்து குனிந்து நோக்கி “இது நாகர் குலத்துப்பெண்” என்றான். “எப்படி தெரியும்?” என்றான் காவலர்தலைவன். “மரங்களில் ஏறும்பொருட்டு சிறுவயதிலேயே கால்களை பழக்குபவர் அவர்கள். ஆகவே பாதங்கள் வெளிப்பக்கமாக திரும்பியிருக்கும்” என்றான் நிமித்த கணிகன்.

காவலர்தலைவன் சிலகணங்கள் விழிநிலைத்துவிட்டு மீண்டு “நாகர் குலப்பெண் கவர்ந்து சென்றாள் என்றால் மைந்தனை

மீட்பது எளிதல்ல. தனித்து வந்திருக்கமாட்டாள். வெளிச்செல்லும் வழியொன்றை அமைக்காமல் உள்ளே நுழைந்திருக்க மாட்டாள். நாகம் வளைபுக வல்லது. தலையை வாயிலில் வைத்தபின்னர் உடலை வளைத்து உள்ளிழுப்பது. கட்செவிகொண்டது. இங்கிருந்து தன் நகர்வரை மைந்தனை கொண்டுசெல்லும் தொடரமைப்பொன்று முன்னரே உருவாக்கப்பட்டிருக்கும். நம் கால்களுக்குக் கீழே அல்லது கண்களுக்குத் தெரியாமல் அது அமைந்திருக்கும்" என்றான்.

"எவ்வண்ணம் இதை அரசரிடம் சொல்வது?" என்று குலத்தலைவர் ஒருவர் சொன்னார். "சொல்லியாக வேண்டுமென்பது நமது கடமை. அவர் எதிர்பார்த்திருந்ததும் இப்பெருந்துயரை அல்லவா?" என்றார் பிறிதொருவர். "அதை சொல்லியே ஆகவேண்டும்... நம் வாழ்வில் இப்பெருங்கடனையும் அடைந்தோம் என்றே கொள்க!" என்றார் இன்னொருவர். சொல்லவேண்டியதென்ன என அவர்கள் செய்யுள் யாப்பதுபோல் சொல்சேர்த்து சமைத்துக்கொண்டனர்.

ஆனால் அவர்கள் அணுகியதுமே கண்ணீரும் சிரிப்பும் சிந்த ஓடிவந்த அரசன் "கிடைத்துவிட்டானா? கிடைத்துவிட்டான் அல்லவா? நன்று நன்று. நான் அறிவேன்... கிடைத்துவிடுவான் என நான் முன்னரே அறிந்திருந்தேன். என் மூதாதையரும் தெய்வங்களும் என்னை கைவிடுவதில்லை. நான் அறத்திலமர்ந்தவன் என அவர்கள் அறிவார்கள்" என்று கூவியபடி அவர்களின் கைகளை பற்றிக்கொண்டான். மூத்த குடித்தலைவர் "ஆம் அரசே, கிடைத்துவிட்டதுபோலத்தான். செய்திகளுக்காக காத்திருக்கிறோம்" என்று சொல்லிவிட்டு திரும்பி வந்தார்.

ஏழுமுறை அவர்கள் செய்தியை சொல்லும்பொருட்டு அவனை அணுகினர். அவர்களால் அதை அவனிடம் சொல்லவே முடியவில்லை. அவர்கள் சுதர்மனிடமே சென்று அதை சொன்னார்கள். "அவரே அறிவார். அவர் அறிந்ததில் அவர் மெல்ல சென்று அமரட்டும். நாம் அவரை ஏன் பிடித்து அதன்மேல் தள்ளவேண்டும்?" என்றான் சுதர்மன். அவர்கள் சிலகணங்கள் நோக்கி அமர்ந்தபின் நீள்மூச்சுடன் எழுந்துசென்றார்கள்.

🐾காற்றில் கரைந்தழிவதுபோல இளமைந்தன் குருநகரியிலிருந்து முற்றிலும் மறைந்து போனான். பதினைந்து நாட்கள் எறும்புகள்போல கொசுக்கள்போல குருநகரியின் படைவீரர்களும் ஒற்றர்களும் அந்நிலத்தை அணுவிடை வெளியின்றி தேடிச் சலித்தனர். ஒவ்வொருவரும் மும்முறை உசாவப்பட்டனர். ஒரு பொந்தோ புழையோ எஞ்சாமல் துழாவப்பட்டது. பின்னர் உறுதியாயிற்று மைந்தன் மீளப்போவதில்லை என.

உண்மையில் தேடத் தொடங்குகையிலேயே ஒவ்வொருவரும் உள்ளூர அதை அறிந்திருந்தார்கள். தங்கள் விழைவால் அதை தள்ளி பின்னால் செலுத்தி இதோ எழுந்துவிடுவான், இங்கு இருப்பான்போலும் என்று உள்ளத்தை பயிற்றுவித்தனர். ஆகவே தேடும் இடங்களில் அவனில்லாதபோது எழுந்த ஏமாற்றம் அவர்களுக்கு துயரளிக்கவில்லை. மேலும் மேலும் என நம்பிக்கையை ஊட்டிக்கொள்ளவே அது பயன்பட்டது. தேடத் தேட அச்செயலே அவர்களை பயிற்றுவித்தது. பின்னர் நம்பிக்கையின் பொருட்டோ எதிர்பார்ப்பின் பொருட்டோ அன்றி அச்செயலை முழுதுறச் செய்வதன் பொருட்டே அதை செய்யலாயினர்.

ஆனால் ஏதோ ஒரு கணத்தில் அந்நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் முற்றாக அணைந்தன. அக்கணமே அச்செயல் வீணென்றாயிற்று அவ்வுணர்வு அந்தத் தேர்ச்சியை பொருளில்லாமலாக்கியது. மேலும் சில நாள் நிகழ்ந்தபோது அது வெறும் சடங்கென்று ஆகியது. அலைநீரில் கட்டி நிறுத்தப்பட்ட மீன்வலையென நகரம் பொருளில்லாமல் நெளிந்துகொண்டிருந்தது.

தேடலை நிறுத்தலாம் என்று சுதர்மன் சொன்னபோது “ஏன், அது நிகழ்ந்து கொண்டிருக்கட்டுமே?” என்றார் குலமூத்தார் ஒருவர். “என்றோ ஒருநாள் நம் மைந்தன் கிடைப்பார் என்றே நான் எண்ணுகிறேன். நிமித்த நூல்படி இந்நகரை அவர் ஆள்வார். ஆகவே அவர் கிடைத்துதான் ஆகவேண்டும்” என்றார். “அதை நானும் நம்புகிறேன்” என்றான் சுதர்மன். “ஆனால் நம்பிக்கை இழந்தபின் இத்தேடல் வெறும் சடங்கென்றே ஆகும். அதில் ஒருபோதும் மைந்தன் சிக்கப்போவதில்லை. மாறாக தேடுதலை முழுமையாக நிறுத்திக்கொண்டுவிட்டபின் நம் உள்ளம் அதை மறக்க ஆழம் எடுத்துக்கொள்ளும். நம் புலன்களை அது ஆளும். மிகச்சிறிய தடயத்தைக்கூட அது கண்டு சிலிர்த்தெழும்.”

“நாம் தேடாமலாகும்போது மைந்தனை கொண்டுசென்றவர்கள் இயல்பு மீளக்கூடும். எவ்வண்ணமோ அவன் இங்கு மீள அது வழிவகுக்கும்” என்றான். “எனக்கு இது புரியவில்லை. ஆயினும் தங்கள் ஆணை” என்றார் குலமூத்தார். தேடல் நிறுத்தப்பட்டது. அதற்கான அரசாணை பிறப்பிக்கப்படவில்லை, ஏனென்றால் தேடுவதை நிறுத்துவது அனைவரிலும் குற்றவுணர்ச்சியை உருவாக்கும் என்றும் அதை வெல்ல பிறர்மேல் பழிசார்த்த முயல்வார்கள் என்றும் அவர்களுக்கு அரசே முதல் பழிநிலை

எனத் தோன்றும் என்றும் சுதர்மன் சொன்னான். தேடும் பணியிலிருந்த ஒற்றர்கள் நாளுக்கொருவராக வேறு பணிக்கு அனுப்பப்பட்டனர். மெல்ல எவருமறியாமலேயே தேடல் நின்றது. ஆனால் ஒவ்வொருவரும் எங்கோ தேடல்நிகழ்வதாகவும் தாங்கள் மட்டும் வேறுபணிக்கு சென்றதாகவும் எண்ணிக்கொண்டார்கள்.

அரசன் முதலில் பல நாட்கள் வெறியன்போல எதிர்ப்படும் அனைத்து வீரர்களையும் அறைந்தும் செவிலியர்களை மிதித்தும் அரண்மனையை சுற்றி வந்தான். அரண்மனையிலேயே எங்கோ மைந்தன் இருக்கிறான் என்னும் எண்ணத்தை அவன் தன்னுள் அணையாது வைத்திருந்தான். பல நாட்களுக்குப் பின்னர் ஒருநாள் கனவுகண்டு மைந்தன் நகருக்குள் எங்கோ இருப்பதாகச் சொல்லி இறங்கி ஓடினான். அவனைத் தொடர்ந்து காவலரும் அமைச்சரும் ஓடினர். “இங்கிருக்கிறான்... ஆம், நான் அறிவேன்! மூடர்களே, இங்கே!” என்று அவன் கூவினான். மூடிய கதவுகளைச் சுட்டி “இங்கே... இதை உடையுங்கள்!” என்று ஆணையிட்டான். அவன் ஆணைப்படி நூற்றுக்கணக்கான கதவுகள் உடைக்கப்பட்டன. சுவர்கள் இடிக்கப்பட்டன.

நகர் முழுக்க அவன் கூச்சலிட்டபடி அலைந்தான். கண்ணில்பட்ட குழந்தைகளை எல்லாம் மைந்தன் என எண்ணி கைநீட்டியபடி ஓடினான். அவனைக் கண்டதுமே அன்னையர் குழவியருடன் ஓடி ஒளிய அவன் வாளை உருவி கூவியபடி அவர்களை துரத்திச்சென்றான். பின்னர் நகரிலிருந்து வெளியேறி காட்டுக்குள் தேடலானான். பல நாட்கள் அவனும் படைவீரர்களும் புறக்கோட்டைக் காடுகளுக்குள் அலைந்தனர். மெல்ல அவன் அடங்கலானான். கொந்தளிப்பு அடங்கி சொல்

நின்றது. அதற்கு உண்ணாமல் உறங்காமலிருந்தமையால் அவன் உடல் அடைந்த சோர்வே வழிகோலியது. எலும்புருவாக ஆன அவன் புரவிமீது அமரும் ஆற்றலை இழந்தான். தேரில் அமர்ந்தாலும் சோர்ந்து துயிலலானான்.

பின்னர் அவன் நாளெல்லாம் மஞ்சத்திலேயே கிடந்தான். எண்ணி நெஞ்சுகலுழ்ந்து அழுதான். பின் கனவுகளில் எதையெதையோ கண்டு "தெற்குவாயிலுக்கு அருகே ஒரு சுரங்கப்பாதை உள்ளது… சென்று நோக்குக… அறிவிலிகளே… உடனே செல்க!" என்று ஆணைகளிடத் தொடங்கினான். பின்னர் ஆணைகள் குறைந்து விழிநீர் மட்டும் வழிந்துகொண்டிருக்க வெறித்த முகத்துடன் படுத்திருந்தான். நாட்பட அந்த அழுகையே அவன் முகமென்றாகியது. தன்னை சாளரத்தருகே அமரச்செய்யும்படி கைகாட்டினான். அவனை ஆணிலிச் சேடியர் தூக்கி சாளரத்தட்டில் அமர்த்தினர். அவன் இரவும் பகலும் அங்கேயே அமர்ந்திருந்தான்.

பெருந்துயர் தான் அமர்வதற்கான இடத்தை உருவாக்கும்பொருட்டு பிறிதனைத்தையும் அழித்துவிடுகிறது என்றார் நிமித்திகர். அவன் உள்ளத்தில் பழைய நினைவுகளும் அன்றாட நிகழ்வுகளும் நாளைக் கனவுகளும் விலகின. சூழலை புலன்கள் உள்வாங்கவில்லை. முகங்களை அறியவில்லை. ஒழிந்த அவன் உளவெளியில் அத்துயர் அன்றி பிறிதொன்றும் இருக்கவில்லை. "அது தெய்வத்துயர். அதற்கு மானுடர் செய்வதற்கு ஒன்றுமில்லை. நாம் காத்திருப்போம்" என்றார் மருத்துவர்தலைவர்.

இரவும் பகலும் மாறாநோக்குடன் சாளரங்களின் அருகிலேயே அமர்ந்திருந்த அரசனை பேண ஆணிலிக் காவலரும் சேடியரும் அடங்கிய குழு ஒன்று அமைந்தது. மருத்துவர்

நாள்தோறும் வந்து அவனை நோக்கினர். நிமித்திகர் ஒவ்வொரு நாள்நகர்வையும் கணித்தனர். “வரவிருப்பது ஒன்றே. எதிர்பாராதபோது அது எளியதோர் காற்று. வழிநோக்கி நின்றிருந்தால் பேருருக்கொண்டு எழும் கொடுந்தெய்வம்” என்றார் நிமித்திகர். “உடலை எண்ணியே நான் வியக்கிறேன். அது எவ்வளவுதான் தாங்கிக்கொள்கிறது!” என்றார் மருத்துவர்.

ஆயுஸின் உடல் மெலிந்து எலும்புக்குவை என்று ஆயிற்று. ஒற்றைக்காவலன் அவனை எளிதாக தூக்கிச் சென்று நீராட்டி ஆடை அணிவித்து அரண்மனையின் சாளரங்கள் அருகே அமரச்செய்ய முடிந்தது. உந்திய கன்னஎலும்புகளும், எலும்புவிளிம்புடன் குழிந்த கண்களும், உள்ளடங்கிச் சுருங்கிய வாயும், மெலிந்து குரல்வளை புடைத்த கழுத்தும், எலும்புச் சட்டமென்றான தோள்களுமாக மூன்றாக மடிக்கப்பட்ட தொன்மையான மரச்சட்டம் போல அவன் அசையாமல் நாள் முழுக்க அமர்ந்திருந்தான். “அவ்வுடலுக்குள் உள்ளமென ஒன்று இயங்குகிறதா? இல்லை என்றால் அப்புலன்கள் எங்கிருந்து ஆணைபெறுகின்றன?” என இளமருத்துவர் ஒருவர் வியந்தார். “உள்ளம் என்பது உள்ளிருப்பதன் ஆடை மட்டுமே. அதை களைந்துவிட்டது அது” என்றார் முதிய மருத்துவர்.

அரசன் இமைப்பதே இல்லை என்பதை முதிய மருத்துவர்தான் கண்டடைந்தார். “விந்தைதான். இமையா விழி மிக விரைவிலேயே நோக்கிழந்துவிடும். நீர் படர்ந்து வீங்கும். இவர் விழிகள் நெற்றுகள்போல வறண்டுள்ளன. விழிகள் அசைவதுமில்லை” என்றார். இளமருத்துவர் “அவ்வுடலில் மூச்சு ஓடுவதே தெரியவில்லை. முன்னரே இறந்த உடல் ஒன்று எதன்பொருட்டோ உறுதிபூண்டு தன்னை காற்றில் தொடுத்துக்கொண்டு அமைந்திருப்பதுபோல் தெரிகிறது” என்றார்.

“பெருந்துயர்! பிறிதொன்றும் சொல்வதற்கில்லை... எதன் பொருட்டென்றாலும் பெருந்துயர் என்பது ஒன்றே. எவ்வடிவு கொண்டாலும் தெய்வம் ஒன்றே என்பதுபோல” என்றார் நூறாண்டு கடந்த குலமூத்தார் ஒருவர்.

# மாமலர் - 33

### 33. பெருந்துயர் சாளரங்கள்

எட்டாண்டுகாலம் ஆயுஸ் அவ்வரண்மனையின் சாளரங்களினூடாக வெளியே பார்த்துக்கொண்டிருந்தான். மைந்தன் மீண்டு வரும் பாதையை பார்க்கிறான் என்று முதலில் அரண்மனையில் பேசிக்கொண்டனர். பின்னர் வருங்காலம் அவன் கண்களில் தெரிகிறது போலும் என்றனர். அவ்வாறு அமர்ந்திருக்கும் அரசனைப்பற்றிய செய்திகள் மக்கள் நாவில் பெருகின. சூதர் கதைகளாக மாறின. ஒவ்வொரு நாளும் மூதாதை தெய்வங்கள் வந்து அரசனிடம் பேசிச்செல்வதாக சொன்னார்கள். இருளில் தனித்து விழிகள் மட்டும் மின்னித் தெரிய அமர்ந்திருக்கும் அரசனைச் சூழ்ந்து நிழல் உருவங்கள் அசைவதைக் கண்டதாக ஏவலர் கதை வளர்த்தனர்.

ஓரிரு ஆண்டுகளுக்குள் அக்கதைகளாலேயே அவன் மறைக்கப்பட்டான். பின்னர் அக்கதைகள் வழியாகவே அவர்கள் அவனை அறிந்தனர். அணுக்கச்சேடியர் நால்வரன்றி எவரும் அவனை எண்ணாதாயினர். அரசனை முலைகொடுத்து வளர்த்த முதுசெவிலி அவனை மீண்டும் அவள் கையில் தவழ்ந்த மழலை என அடைந்தாள். அவள் மார்பிலும் கைகளிலும் விழிநோக்கா பைதல் என அவன் வாழ்ந்தான்.

ஆண்டுக்கொருமுறை அரசன் கோல் சூடி அரியணை அமரும் நிகழ்வுகளில் மட்டுமே அவனை குடிகள் நினைவு கூர்ந்தனர். ஒழிந்த அரியணையில் அரசனின் மணிமுடியையும் கோலையும் வைத்து முடிபூசெய்கை, கோல்நிலைச் சடங்கு, அடிகாணிக்கை போன்றவற்றை முடித்து அவை கூட்டி அவ்வாண்டும் அனைத்து முடிவுகளை எடுக்கும் பொறுப்பை அமைச்சர் சுதர்மனுக்கு அளித்தனர்.

நாளடைவில் ஒவ்வொன்றும் அதன் ஒழுக்கை தானே அடைகின்றது. நதிப்பெருக்கில் வீசப்பட்ட பொருட்கள் பெருகுதிசைக்கு முகம் திருப்பி, ஒன்றோடொன்று முட்டிமோதி தங்கள் ஒழுகுவடிவை தாங்களே அமைத்துக்கொள்வதுபோல. அன்றாடம் என்னும் பெருக்கு. அரிதையும் பெரிதையும் எளிதுக்கும் சிறிதுக்கும் வேறுபாடில்லாமலாக்கி தன்னுள் அடக்க அதனால் இயலும். சென்றதையும் வருவதையும் அக்கணம் என்று உருமாற்றகூடிய மாயம் அது. அன்றாடத்தில் அனைத்தும் பயன்பாட்டுப் பொருள் மட்டுமே கொள்கின்றன. செயல்பாட்டு வடிவம் மட்டும் பூண்கின்றன. ஆகவே அனைத்தும் தங்கள் உட்பொருள் அழிகின்றன. நிலைவடிவு கரைகின்றன.

உட்பொருளும் நிலைவடிவும் அழிந்த ஒன்று இல்லை என்றாகிறது. அன்றாடத்தில் அன்றாடம் அன்றி பிறிதொன்றில்லை. அதை அறியும் உள்ளத்தின் தன்னிலை அன்றி பிறர் எவரும் இல்லை. அன்றாடத்திற்கு அப்பால் உண்மையில் ஏதேனும் உள்ளதா? அது அன்றாடத்தின் எளிமைகண்டு அகம்கசிந்த உள்ளம் விழைவது மட்டும்தானா? வெறும் எண்ணம் மட்டுமா? ஈவிரக்கமற்றது, இடைவெளியின்றி நிறைவது, எதிரீடற்றது, இறைவடிவமோ என்று

மயங்கச்செய்வது. அன்றாடத்தின் பெருக்கில் முற்றிலும் மூழ்கி மறைந்து காலத்துளி ஒன்றாக மாறிப்போனான் ஆயுஸ்.

எட்டாண்டுகளுக்குப் பின்பு ஒருநாள் அவனை காலையில் நீராட்டி உணவூட்டுவதற்காக அவன் இரவெலாம் அமர்ந்திருந்த சாளரத்தை நோக்கி சென்ற முதுசெவிலி அவன் உடல் நடுங்கிக்கொண்டிருப்பதை கண்டாள். அணுகிச் சென்று தொட்டபோது அது வெம்மை கொண்டிருந்தது. எப்போதும் இறந்த உடலென அது குளிர்ந்து உலர்ந்திருக்கும். துணுக்குற்று மீண்டும் தொட்டபோது உள்ளிருக்கும் அனலை உணர்ந்தாள். "அரசே! அரசே!" என அழைத்தபோது எப்போதும்போல அவன் குரலறியவில்லை. அவனை கையிலேந்தி நீராட்டறைக்கு கொண்டுசெல்வதற்குள்ளாகவே அவ்வெம்மையால் அவள் கை கொதிக்கலாயிற்று. நீராட்டாமல் வெந்நீரால் உடல் துடைத்து திரும்ப மஞ்சத்தில் கொண்டு படுக்க வைத்தபின் அவள் ஓடிச்சென்று மருத்துவரிடம் சொன்னாள். அரசனின் செவிலியன்னையாகிய அந்த முதுமகள் மட்டுமே பதறி அழுதுகொண்டிருந்தாள். மருத்துவருக்கும் அமைச்சருக்கும் அரண்மனையில் பிற எவருக்கும் பதற்றமோ விரைவோ இருக்கவில்லை.

சேற்றுக்குள் மண்புழு நெளியும் அதிர்வை மேலே தொட்டறிவதுபோன்றது அவன் நாடி நோக்குவது என மருத்துவர் ஒவ்வொருமுறையும் உணர்வதுண்டு. அது கையில் அமைந்து உளம்காட்டும் மாயம்தானா என்றே எண்ணம் குழம்பும். அன்று நாடி அதிர்ந்து புரண்டுகொண்டிருந்தது. ஊர்த்துவம் எழுந்துள்ளது என்றே நாடி மீண்டும் மீண்டும் காட்டியது. கையை மெல்ல மஞ்சத்தில் வைத்துவிட்டு ஏறிட்டு நோக்கிய மருத்துவர் "கடும் சுரம். கவண்சரடென

இழுபட்டுள்ளன நரம்புகள், உயிரை தெறிக்கவிட விழைகின்றன. இக்காய்ச்சலை உடல் தாங்குவது அரிது” என்றார்.

“என்ன சொல்கிறீர், மருத்துவரே? காய்ச்சல் என்பது நற்குறி அல்லவா? உடல்தளர்ந்தவர் காய்ச்சலில் எழுந்ததுண்டு அல்லவா?” என கேட்டபடி அவர்களின் பின்னால் சென்றாள் முதுசேடி. “ஆம், அதையே எதிர்நோக்குகிறேன்” என்றார் மருத்துவர். அவள் திரும்பி ஓடுவதைக் கண்டபின் “அன்னையரின் உள்ளம்போல விந்தை பிறிதேது? எதையும் நற்குறியென்றே அவர்களால் காணமுடியும்” என்றார் முதிய மருத்துவர். “முலையூட்டியவள். அவளால் தன் முலைகளில் இருந்து விடுபடவே முடியாது” என்றான் அவர் மாணவன்.

அரசன் அங்கிருக்கிறான் என்பதை அச்செய்தியினூடாகவே அறிந்தது அரண்மனை. அவன் இறக்கக்கூடுமென்ற எண்ணமே அச்செய்தியை விரைந்து பரவச்செய்தது. அதனூடாகவே தாங்கள் அதுவரை அவனை மறந்துவிட்டதை உணர்ந்து ஒவ்வொருவரும் குற்றவுணர்வு கொண்டனர். ஆகவே மிகைநெகிழ்வுடன் அரசனின் பெருமையை பேசிக்கொண்டார்கள். கண்ணீருடன் அவன் தோற்றத்தை, சிரிப்பை, கனிவை விதந்தனர். “சில பிறவிகள் இவ்வாறுதான், பிழை ஒன்றில்லாமலேயே வாழ்க்கையை தண்டனையாக ஏற்பவை” என்றார் முதியவர் ஒருவர். “அறத்தின்பொருட்டு இப்பெருந்துயரை இழுத்து தன் தலையில் சூடிக்கொண்டவர் மாமன்னர். அறம் அவரை அறியும்” என்றார் பிறிதொருவர்.

“இங்கு குருதிப்பழி அவர்மேல் கற்பாறையென அமைந்து நசுக்குகிறது. விண்ணில் அவர் தலையில் பல்லாயிரம் ஒளிமணிகள் பதிந்த அணிமுடிபோல் அது அமைந்திருக்கும்” என்றார் கவிஞர் ஒருவர். “ஆயினும் இது கொடுமை.

தீங்குக்கும் அழிவுக்கும் முறையென ஒன்று உண்டு என நம்பியே மானுடர் இங்கு வாழ்கிறார்கள். தீங்கற்றோர் துயருறும்போது மானுடத்தை கட்டியிருக்கும் தொல்லறத்தின் சரடு அறுபடுகிறது” என்றான் ஓர் இளைஞன். “அறம் என்றால் ஆட்கொல்லி நோயா? எவரென்று அதற்கு தெரியாதா?” என சினந்தான் இன்னொருவன். ஆனால் அனைவரும் அவன் இறப்புக்காக காத்திருந்தனர், ஒரு துயரக்கதை உகந்த முறையில் உச்சத்துயரில் முடிவுறும் நிறைவுக்காக.

நாளுமென ஆயுஸ் நோய் முதிர்ந்தான். முற்றி உலர்ந்து ஒடுங்கினான். இடைநாழியிலும் அருகமைந்த கூடத்திலுமாக குலமூத்தாரும் அமைச்சர்களும் படைத்தலைவர்களும் காத்திருந்தனர். உள்ளே சென்று மீண்டுவரும் மருத்துவர் ஒவ்வொருமுறையும் மாற்றமென ஏதுமில்லை என்றனர். அருகிருந்து சேடியர் அவன் உடலெங்கும் மென்பஞ்சை ஒட்டவைத்து அதில் குளிர்ந்த நீரூற்றி காய்ச்சலை தணித்துக்கொண்டிருந்தனர். முதியசெவிலி அவன் அருகிருந்து அகலாது உடலை வருடிக்கொண்டே இருந்தாள். “நீரும் உண்ணவில்லை, சொல்லுக்கு விழியசைவும் இல்லை. மூச்சு ஓடுகிறது, நெஞ்சு அடிக்கிறது, பிறிதொன்றும் உயிர் என காட்டவில்லை” என்றார் மருத்துவர். “என் குரலை அவர் கேட்கிறார். குரலுக்கேற்ப விழி அசைகிறது” என்றாள் முதுசெவிலி.

நான்காவது நாள் அந்தியில் அவன் மெல்ல முனகினான். அருகிருந்த முதுசெவிலி உவகைப்பெருக்குடன் கைகள் பதற வெளியே ஓடிவந்து “முனகுகிறார்” என்றாள். முதுகுலத்தலைவர் “அமைச்சரே, நீங்கள் செல்லுங்கள்” என்றார். “நானா? மருத்துவர் வரட்டும்” என்றான் சுதர்மன். “இக்கணம்

தாங்களே அவர் அருகே இருக்கவேண்டும். இனி மருத்துவர் செய்வதற்கொன்றும் இல்லை. சொல் ஒன்று எஞ்சியிருப்பதனாலேயே இவ்விழிப்பு. அவ்வண்ணம் சொல்லென்று ஏதேனும் எழுமென்றால் அது தங்களுக்குரியது மட்டுமே” என்றார் குலத்தலவர். தயங்கியபடி கைகூப்பி சுதர்மன் உள்ளே சென்றான்.

தூசுமணம்போல, இருட்டின் மணம்போல, மட்குதலின் மணம்போல, இறப்பின் மணம் நிறைந்திருந்த அறைக்குள் ஆயுஸ் மென்பட்டுச் சேக்கையில் பிறிதேதோ கலத்திலிருந்து சிந்திய வடிவம் என கிடந்தான். உலர்ந்த இதழ்கள் அசைய இரு கைகளும் பளிங்கில் புழு என தவிக்க மெல்ல அதிர்ந்துகொண்டிருந்தது அவன் உடல். முனகலென ஏதும் கேட்கவில்லை என அவன் எண்ணிய பின்னர்தான் அந்த வீணொலியே அம்முனகல் என உள்ளகம் உணர்ந்தது. அருகே சென்று காலடியில் வணங்கி நின்ற சுதர்மனை நோக்கி முதுசெவிலி அவன் முகத்தருகே செல்லும்படி கைகாட்டினாள்.

மஞ்சத்தருகே மண்டியிட்டு ஆயுஸின் இதழ்களுக்கு மிக அருகே தன் முகத்தை கொண்டுவைத்து “அரசே” என்றான் சுதர்மன். அவ்வொலியை உடல் பொருட்படுத்தவில்லை. மீண்டும் ஒருமுறை அழைத்தபோது நீண்ட குகைவழிக்கு அப்பால் எங்கோ எதிரொலி எழுவதுபோல ஓர் உணர்வு ஏற்பட்டது. அரசன் எங்கிருந்தோ கேட்கிறான் என்ற உணர்வு. மீண்டும் மீண்டும் “அரசே” என்று அழைத்தான். ஒவ்வொரு அழைப்பும் ஒன்றை பிறிதொன்று பின்னின்று உந்த முன்னகர்ந்து நீண்டு சென்று அவனுள் நுழைவதுபோல. ஓர் அழைப்பு சென்று தொட்டதும் இமைகளுக்குள் உருண்ட விழிகள் நிலைத்தன. இருகைகளும் பதைத்து

எழத்துடிப்பவைபோல் அசைந்தன. நாக்கு வெளிவந்து கருகிய இதழ்களை நீவிச்சென்றது.

“அரசே நான்…” என்றான் சுதர்மன். “பத்மரா? பத்மரே!” என்றான் ஆயுஸ். ஒருகணம் திகைத்து உளம்நின்று பின் “ஆம், பத்மர்தான்” என்றான் சுதர்மன். “நன்று செய்தீர். நான் அதற்கு உற்றவனே” என்றான் ஆயுஸ். அவன் என்ன சொல்கிறான் என்று புரியாது சுதர்மன் நோக்கியிருந்தான். “இல்லையேல் நான் விடுதலை கொண்டிருக்கமாட்டேன். அது முடிவிலா வல்லமைகொண்டது.” முகத்தின் உணர்வு துணைக்கவில்லை என்றால் சொற்கள் எத்தனை பொருளற்றவை என்று சுதர்மன் திகைப்புடன் எண்ணிக்கொண்டான்.

“என் மைந்தன் ஆயுஸ்… என்னைப்போல் அவனும் இறப்பை அருகே நின்று காண்பான் போலும். பெருந்துயர் ஒன்றை என்னிடம் கோரிப்பெற்றான்” என்றான் ஆயுஸ். அவன் சொல்வதென்ன என்று உணர்ந்ததும் சுதர்மனுக்கு மெய்விதிர்ப்பு ஏற்பட்டது. தன் கைகளால் ஆயுஸின் கைகளை பற்றிக்கொண்டான். தொடுகையை உணர்ந்ததும் ஆயுஸ் கண்களைத் திறந்து இறுகிய கழுத்தை அசைக்காமல் விழி சரித்து சுதர்மனை நோக்கி “சுதர்மரே” என்றான். “அரசே, தங்கள் அடியவன்” என்றான் சுதர்மன். “என் மைந்தன் மீண்டு வருவான். அதை நான் நன்கு அறிவேன். அவனை மீண்டும் காணும் பேறு எனக்கு மட்டும்தான் இல்லை” என்றான் ஆயுஸ்.

சுதர்மன் விழிநீர் வழிய கேட்டு அமர்ந்திருந்தான். “எந்தை எனக்களித்த உடைவாள் ஒன்று கரவறையில் உள்ளது. என் தந்தைக்கொடையென அதை நகுஷனுக்கு அளிக்கிறேன். விண்ணுலகுக்குச் சென்று இந்திரனை வென்று அவ்வரியணையில் அமருகையில் அவன் கையில் அந்த வாள்

இருக்கவேண்டும், அது புரூரவஸின் வாள் என அவன் அமரர்க்கரசனிடம் சொல்லவேண்டும்." சுதர்மன் "ஆணை" என்றான். மீண்டும் விழிகளை மூடி நா பதைத்தான் ஆயுஸ். சுதர்மன் விழிகாட்ட தேன் கலந்த நீரை சிறுகரண்டியால் அள்ளி அவன் நாவில் விட்டாள் முதுசெவிலி. மும்முறை அதை விழுங்கியபோது மீண்டும் சற்று உயிர்த்தெளிவு கொண்டான்.

பலமுறை நீள்மூச்சிழுத்து இருமுறை இருமியபின் அவன் சிலம்பிய குரலில் "பெண்கள்!" என்றான். "என்ன?" என்று சுதர்மன் கேட்டான். "இச்சாளரங்களிலெல்லாம் பெண்கள் அமர்ந்திருக்கிறார்கள்" என்று அவன் சொன்னான். "யார்?" என்று சுதர்மன் மீண்டும் கேட்டான். "அறியேன்" என்றான் ஆயுஸ். "இளங்கன்னியர். மெலிந்த முதுபெண்டிர்." சுதர்மன் "மூதன்னையரா?" என்றான். "அறியேன். அவர்களுடன்தான் நான் இதுநாள்வரை பொழுதும் இரவும் பேசிக்கொண்டிருந்தேன்…" என்றான். "என்னைப்போலவே துயர்சுமந்தவர்கள். இங்கு சூழ்ந்திருக்கிறார்கள்."

சுதர்மன் "யார்?" என்று மீண்டும் கேட்டான். "அறியேன். ஆனால் அரசிகள்" என்றபின் ஆயுஸ் நீண்ட மூச்சொன்றை விடுத்தான். மீண்டுமொரு மூச்செழும் என்று இயல்பாக எண்ணி சுதர்மன் நோக்கியிருந்தான். அது எழவில்லை என்பது சற்றுநேரம் கழித்தே தெரியவந்தது. ஐயுற்று சற்றே அருகில் சென்று அரசனின் முகத்தை பார்த்தான். வற்றி வெடித்த சேற்றில் எழுந்த பாறை என மூக்கு எழுந்த வறண்ட முகம் சிலைபோலிருந்தது. மூக்கருகே கை வைத்தபோது மூச்சிருக்கிறதா என்று அறியக்கூடவில்லை. சாளரக்காற்றில் வியர்வை குளிர்ந்தது. முதுசெவிலி அரசனின் கழுத்தில்

கைவைத்தபின் “நிறைவடைந்துவிட்டார்” என்று மெல்லிய குரலில் சொன்னாள்.

அரண்மனை முறைப்படி உணர்ச்சிகளை அடக்கி “நற்பொழுது நோக்கவேண்டும், முறைப்படி அறிவிப்புகள் எழவேண்டும்... பணிகள் உள்ளன” என்று சொல்லி எழுந்த முதுசெவிலியின் தன்கட்டுகள் ஒரே கணத்தில் அறுந்தன. வெடித்து அழுதபடி திரும்ப மஞ்சத்தில் சரிந்து அரசனின் தலையை எடுத்து தன் மார்போடணைத்தபடி “என் மைந்தா... என் செல்வமே...” என அவள் கதறினாள். “இப்பிறவியில் இதற்குமேல் துயர் எஞ்சியுள்ளதா? என் தெய்வமே... சென்று வா, என் குழந்தையே!” என்றாள். வெறியுடன் தன் தலையிலறைந்தபடி “எவர் பழிக்கோ துயர்சுமந்தாய். இனி தெய்வங்கள் சுமக்கட்டும் உன் பழியை. உன்னை நின்று வாட்டிய அறம் நாண்கொள்ளட்டும். இனி இந்த வேளையில் இந்நகரின் அகல்சுடர்கள் அனைத்தும் நடுங்கி அதிரட்டும். என் கண்ணே, என் அமுதே... உனக்கு முலைகொடுத்த மார்பில் அறைந்து சொல்கிறேன். உன் பழி இனி இக்குடியில் என்றும் தொடரட்டும்!” என கூவி அழுதாள்.

சுதர்மன் எழுந்து அரசனின் கால்களைத் தொட்டு சென்னி சூடினான். அழுகைக்குரல் கேட்டு கதவு திறக்க உள்ளே வந்த குலமூத்தோர் முதுசெவிலி நெஞ்சிலறைந்தபடி மயங்கி அரசன் உடல் மேலேயே விழுந்துவிட்டதை கண்டனர். நிமித்திகன் வெளியே சென்று அங்கே காத்து நின்றிருந்தவர்களிடம் “முரசுகள் முழங்குக! குருநகரியின் பேரரசர், சந்திரகுலத்துத் தோன்றல், பெரும்புகழ் புரூரவஸின் மைந்தர் விண்புகுந்தார்” என்று அறிவித்தான்.

நகுஷனை அரண்மனையிலிருந்து கவர்ந்து செல்லும்பொருட்டு ஹுண்டனின் அமைச்சன் கம்பனன்

உருவாக்கிய ஒற்றர் அமைப்பு மூன்றடுக்கு கொண்டிருந்தது. சேடியரென உருமாறி அரண்மனைக்குள் நுழைந்து அனைவரும் ஏற்க பரவியிருந்த ஏழு நாகப்பெண்கள் அகத்தளங்கள், கரவறைகள், சுரங்கவழிகள் உட்பட அனைத்துப் பகுதிகளையும் ஆராய்ந்து அவர்களுடன் மந்தணமுறையில் தொடர்புகொண்டிருந்த வெளியொற்றர்களுக்கு செய்தி சொன்னார்கள். அரண்மனைக்கு வெளியே கோட்டை முகப்பு வரை செறிந்திருந்த மரங்களின் இலைப்பரப்பினூடாகவே பரவியிருந்தனர் பச்சைப் பாம்புபோல் பிறர் விழிக்குத் தெரியாமல் இலையடர்வுக்குள் இருக்கத்தெரிந்த பறக்கும் நாகர். அப்பால் அவர்களின் விரைவுப்படை வணிகர்கள் என புரவிகளுடன் காத்திருந்தது.

மைந்தனை தன் கையில் வாங்க பல நாட்கள் முயன்றாள் நாகசேடி. இறுதியில் வழக்கத்துக்கு மாறாக அவன் திமிறித் துள்ளவே ஆடை அவிழ்ந்த நிலையில் அவனை அவள் கையில் கொடுத்தாள் முதுசேடி. அக்கணமே தன் கையிலிருந்த கணையாழியால் அவன் தொடையில் மெல்ல குத்தி வலுகுறைக்கப்பட்ட நாகநஞ்சை உடலுக்குள் செலுத்தி அவனை துயில்கொள்ளச் செய்தாள். அவள் முன்னரே வெட்டி வழியமைக்கப்பட்டிருந்த வாயில் வழியாக வெளிப்போந்ததும் அவளிடமிருந்து அவனைப்பெற்று தோல்கிழியில் சுற்றி உடலில் கட்டிக்கொண்டு மரங்களினூடாகவே தாவி வெளிவந்தனர் பறக்கும் நாகர். கீழே மணம் குழப்பப்பட்ட நாய்கள் திசையறியாது குரைத்துக்கொண்டிருந்தன. அவர்களிடமிருந்து மைந்தனைப்பெற்ற விரைவுப்படையினர் புரவியில் காட்டைக் கடந்து மறுநாள் புலரிக்குள் ஹுண்டனின் நகரை அடைந்தனர்.

முன்னரே ஹூண்டனுக்கு செய்தி அறிவிக்கப்பட்டிருந்தது. உள்ளக்கிளர்ச்சியுடன் எழுந்து படுக்கையில் அமர்ந்திருந்த ஹூண்டனின் முன்பு மயங்கி கைகால் தளர்ந்து விரியக்கிடந்த மைந்தனை தூக்கிக்காட்டினான் கம்பனன். வாய் கோட புன்னகைத்து “நன்று, ஒரு காய்நகர்வில் இக்களத்தில் நான் வென்றேன். இனி நீ ஆடுக!” என எவரிடமோ என நோக்கி சொன்னான். விழிகளில் வினாகொண்ட கம்பனனிடம் “நான் இங்கிருந்து ஒரு நாற்களமாடுகிறேன். மறுதரப்பில் இருந்தாடுவது நூலோரால் ஊழென்று சொல்லப்படும் அறியமுடியாமை. பார்ப்போம்” என்றபின் குனிந்து “இவனா அவளை மணக்கவிருப்பவன்? இவனா எனக்குப் போட்டியாக எழுந்த மணமகன்?” என்றான்.

அறியாது உரக்க நகைத்துக்கொண்டே கம்பனனிடம் “மாபெரும் வேடிக்கை! பால்மணம் மாறாத இந்த மைந்தன் நான் விழையும் பெண்ணை என்னிடமிருந்து கவர்ந்து செல்லும் காதலன். கைக்குழவியுடன் பெண்போர் புரிந்த முதல் நாகன் நான்” என்றான். அவனால் நகைப்பை அடக்கவே முடியவில்லை. புன்னகைத்தபடி கம்பனன் சொன்னான் “அறியுந்தோறும் நாம் அறிவதொன்றே, இப்புவியில் எதுவும் இயல்பானது” என்றான். விழிவாங்காமல் அக்குழவியையே நோக்கினான். “பிறிது எதையும் நோக்கமுடியவில்லை. எதையும் எண்ணவும் இயலவில்லை. இக்குழவி என் மறுபகுதி எனத் தோன்றுகிறது. ஊழ் இதை மறுமுனையாக அமைத்துள்ளதா?” என்றான். குனிந்து நோக்கி கைகளைச் சுருட்டி இறுக்கியபடி “அள்ளி அணைத்து உடலுடன் இறுக்கவேண்டுமென வெறி கிளர்கிறது. கொன்று குருதி பூசிக்கொள்ளவேண்டும் என்று வஞ்சமும் எரிந்தெழுகிறது” என்றான்.

கம்பனன் “அது உண்மையிலேயே உங்கள் மறுபாதியென்றிருக்கலாம்” என்றான். ஹூண்டன் விழிதூக்க “அந்த முனிவர்மகளின் தீச்சொல்லின்படி இவன் உங்களை கொல்லவிருப்பவன்” என்றான். “ஆம்!” என கற்தொடையில் அறைந்து சிரித்த ஹூண்டன் “அதையும் நோக்கிவிடுவோம். என் விழைவையே மெய்யாக்குகிறேன். இவன் என் உடல்புகுந்து நான் என்றே ஆகுக!” என்றான். மீசையை நீவியபடி தனக்கே “நன்று!” என்றபின் திரும்பி தன் துணைவியரை அழைத்து வரச்சொல்லி ஆணையிட்டான்.

அரசியரான வித்யுதையும் விபுலையும் வந்து அவன் அருகே நின்றனர். “தேவியரே கேளுங்கள், பிறிதொருவரை முற்றிலும் என்னால் நம்ப இயலாதென்பதனால் இம்மைந்தனை உங்களிடம் ஒப்படைக்கிறேன். இன்றிரவே இவன் கொல்லப்பட வேண்டும். இவன் ஊனை சமைத்து எனக்கு அந்தியுணவென பரிமாறுக! இது என் ஆணை” என்றான். அவர்கள் மெல்ல நடுங்குவது தெரிந்தது. “என்ன?” என்றான் ஹூண்டன். “ஆணை” என்றபடி வித்யுதை மைந்தனை கையில் வாங்கிக்கொள்ள அவள் ஆடைநுனியை பற்றிக்கொண்டாள் விபுலை. இருவரும் தலைவணங்கி வெளியேறினர்.

“நானே அதை செய்திருப்பேனே? எதற்கு இங்கே கொண்டுவரவேண்டும்? கொல்வதென்றால் அங்கு அரண்மனையிலேயே இவனை கொன்றிருக்கலாம் அல்லவா?” என்றான் கம்பனன். “நான் இவனை காணவேண்டுமென்று விரும்பினேன். இவன் என் உடலென்றாக வேண்டுமென்பது ஊழ்போலும்” என்றான் ஹூண்டன். “இறுதிவரை என்னுடன் இவனும் இருப்பான்” என்றபடி மீண்டும் உரக்க நகைத்தான். உளக்கொந்தளிப்பில் நகைப்பவர்களின் விழிகள் நகைப்புக்கு

மிக அப்பாலிருக்கும் என கம்பனன் கண்டிருந்தான். “அதை ஏன் அரசியர் செய்யவேண்டும்?” என்று அவன் கேட்டான்.

“இருவரும் மைந்தர் பிறக்காத துயரிலிருக்கிறார்கள். தங்கள் கைகளால் ஒரு மைந்தனைக் கொன்றால் அத்துயரிலிருந்து மீள்வார்கள்” என்றான் ஹுண்டன். “திகைக்காதே. நான் உளச்சிதைவடையவில்லை. நான் சொல்வது ஓர் மாறா உண்மை. நான் தொட்டு அறிந்து எடுத்துச் சூடிய ஒன்று” என்றபின் மெல்ல உடல் அசைத்து முன்னெழுந்து “ஒளிநோக்கி எழுந்து துயர்மீளலாம் என்று நூல்கள் சொல்லுகின்றன. அது கடினமான பாதை. இருள் நோக்கி விழுந்து துயர் மீள்வது மிக மிக எளிது. நான் நன்கு அறிந்திருக்கிறேன் அதை. அவ்வண்ணமே நான் மீண்டேன்” என்றபின் மீண்டும் உரக்க நகைத்தான்.

உடல் பாதி கல்லென்றானபின் எஞ்சியதில் நஞ்சு நிறைய அரசன் பித்தனைப்போல் ஆகிக்கொண்டிருப்பதை கம்பனன் உணர்ந்திருந்தான். அவ்வெண்ணத்தை விழிகளில் காட்டாமல் “நன்று” என்றான். “பாதி கல்லென்றானால் மீதி உடலென்றமைய முடியாது, மூடா. அது அனலென்று எரிந்தாகவேண்டும்” என்றான் ஹுண்டன். “ஆம், அதை தாங்களே அறிவீர்கள்” என்ற கம்பனன் “நான் விடைகொள்கிறேன், அரசப்பணிகள் மிகுதியாக உள்ளன” என்றான். “அஞ்சாதே. உன்னை உண்ணும்படி சொல்லப்போவதில்லை. ஏனென்றால் இவ்வூனின் மொத்தமும் எனக்கே. இவனை நான் பகிர்ந்துகொள்ளமுடியாது. நான் என்னையும் இவனுடன் மட்டுமே இதுகாறும் பகிர்ந்துகொண்டுள்ளேன்” என்றான்.

கம்பனன் தலைவணங்க “நீ எண்ணுவதென்ன என்று எனக்குத் தெரியும். பித்தன் என்று, அல்லவா?” என்றான் ஹூண்டன். “ஆம், ஆனால் இளிவரலாகவோ வசையாகவோ அல்ல. பித்தும் வீரனுக்குப் பெருமையே” என்றான் கம்பனன். “அதை சொல்... சூதர்களும் பாடகர்களும் அவ்வாறே பாடுக!” என்று சொல்லி மீண்டும் நகைத்த ஹூண்டன் “ஒவ்வொரு நாளும் இருண்டு, கீழ்மை கொண்டு, கசந்து, கடுமையாகிறேன். அதனூடாக மேலும்மேலுமென கூர்கொள்கிறேன். அது என்னை விடுவிப்பதையே ஒவ்வொருகணமும் காண்கிறேன்” என்றான்.

எண்ணச்சுமையேற மீசையை நீவியபடி “கொன்றிருக்கிறேன், குறை எஞ்சாது வென்றிருக்கிறேன், மிதித்துக் கடந்திருக்கிறேன், தருக்கி நின்றிருக்கிறேன். இதுவரை என் உள்ளாழம் நடுங்கும் பெரும்பழி எதையும் இயற்றியதில்லை. இன்று அதற்கு ஆணையிட்டிருக்கிறேன். இவ்வாணையை இடும்போது என் உளம் தயங்குகிறதா, குரல் நடுங்குகிறதா என்று நானே நோக்கினேன். இல்லை, என் உள்ளே துலாமுள் அசைவுறவில்லை. அமைச்சரே, அவ்வண்ணமெனில் நான் முற்றிலும் விடுபட்டுவிட்டேன் என்றல்லவா பொருள்?” என்றான் ஹூண்டன். கம்பனன் “ஆம், அரசே” என்றான்.

“முதுநாகம் தன் நஞ்சை முத்தென்றாக்கிக் கொள்கிறது. அதன் ஒளியில் பிறர் காணா உலகொன்றை அது அடைகிறது” என்றான் ஹூண்டன். “நச்சுமணி சூடிய நாகத்தால் விண்ணில் பறக்க முடியும். நோக்குக, இத்தீமையின் விசையாலேயே என் கல்லுடலைத் தூக்கி எழுவேன். காற்றில் பறப்பேன். இந்நகரும் என் குடியினரும் அதைக் காணத்தான் போகிறார்கள்” என்று ஹூண்டன் சொன்னபோது முகம் சிவந்து கழுத்துநரம்புகள் புடைத்து அசைந்தன. “அதன்பின் அவளிடம் செல்வேன். அவள்

மட்டுமே அறிந்த ஒரு வினாவை கேட்பேன். பிற எவரிடமும் நான் பகிராத ஒன்று அது." கம்பனன் "நன்று அரசே, அவ்வண்ணம் நிகழட்டும்" என்றபடி வெளியேறினான்.

# மாமலர் - 34

**34. கைகள் அறிவது**

கைகளில் மைந்தனை ஏந்தியபடி அகத்தளத்திற்குச் சென்ற விபுலையும் வித்யுதையும் உடல் நடுங்கிக்கொண்டிருந்தனர். உயிரற்றவைபோல ஆகிவிட்டிருந்த தன் கைகளில் இருந்து மைந்தன் நழுவி விழுந்துவிடுவான் என்று வித்யுதை அஞ்சினாள். தங்கள் அறைக்குச் சென்று வாயிலை மூடியதுமே கையிலிருந்த குழவியை மெத்தைமேல் வீசினாள் வித்யுதை. அருவருத்ததுபோல் கைகளை உதறியபடி சுவரோடு சாய்ந்து நின்று மூச்சிரைத்தாள். திகைப்புடன் அதை நோக்கியபடி ஏதோ சொல்ல நாவெடுத்து அவளே எண்ணியிராத சொற்களை சொன்னாள் "இது ஏன் இத்தனை எடை கொண்டிருக்கிறது?"

"இந்திரனை வெல்லும் மைந்தன் இவன் என்கிறார்கள். ஆகவே அகவைக்கு மேல் வளர்ச்சி கொண்டிருக்கிறான்" என்றாள் விபுலை. சொற்கள் அவர்களின் உறைந்த உள்ளத்தை அசைவுகொள்ளச் செய்தன. "இவனை நம் கைகளால் கொல்ல வேண்டுமென்று அரசரின் ஆணை" என்றாள் வித்யுதை. விபுலை வெறித்த விழிகளுடன் நோக்க "கொன்று கறிசமைத்து அவர் உண்ணக்கொடுக்கவேண்டும் என்பது…" என்றாள். விபுலை மெல்ல முனகினாள். "பிள்ளைக்கறி…" என்றாள் வித்யுதை. "நம்

குலங்களில் முன்பு அவ்வழக்கம் இருந்துள்ளது” என விபுலை முனகினாள். “என்ன?” என்றாள் வித்யுதை புருவம் சுளிக்க.

“முதன்மை எதிரியை கொன்றுவிட்டால் அவன் ஊனை உண்பது.” வித்யுதை “உண்மையாகவா?” என்றாள். “நான் கதைகளில் கேட்டதுதான். எதிரி நம்மையே எண்ணிக்கொண்டிருந்தவன். ஆகவே நம்முடைய ஒரு பகுதியென்றே ஆனவன். அவனைக் கொல்கையில் நம்மில் ஒரு பகுதியும் இறக்கிறது. அந்த இழப்பிலிருந்து நாம் மீள்வது அரிது. ஆகவேதான் முதன்மை எதிரி இல்லாமலானதுமே எதிர்த்து வாழ்ந்தவர்கள் தனிமைகொண்டு நோயுற்று அழிகிறார்கள். ஆகவே எதிரியை உண்டு தன் உடலென்று ஆக்கிக்கொள்கிறார்கள்.” வித்யுதை பெருமூச்சுவிட்டாள். பின்னர் “அப்படியென்றால் இவன் இனிமேல் அவருடன் இருப்பான்” என்றாள். “இவன் இந்திரனை வெல்வது அவர் உடலில் ஏறித்தான் போலும்” என்றாள் விபுலை. அந்தத் தருணம்பொருந்தா நகையாடலுக்கு வித்யுதையும் சிரித்துவிட்டாள்.

அவர்கள் இயல்பாகி பீடங்களில் அமர்ந்து பேசத்தொடங்கினர். “இவனைக் கொல்ல என்னால் இயலுமென்று எனக்குத் தோன்றவில்லை” என்றாள் வித்யுதை. “அரசர் ஆணையை நாம் மீறலாகாது. கொன்றே ஆகவேண்டும்” என்றாள் விபுலை. “ஆம்” என பெருமூச்சின் ஒலியில் வித்யுதை சொன்னாள். இருவரும் மீண்டும் திரளாத சொற்கள் உள்ளே குமிழிகளென அலைவுற கைகளை நெரித்தபடியும் உதடுகளை கடித்தபடியும் அமர்ந்திருந்தனர். வித்யுதையின் முகம் பெருவலி கொண்டதுபோல் இருப்பதை விபுலை கண்டாள். தன் முகமும் அவ்வாறுதான் இருக்கிறதுபோலும் என எண்ணிக்கொண்டாள்.

“இல்லை” என்று உரத்த குரலில் வித்யுதை கூவினாள். “என்னால் முடியாது. நான் இதைச் செய்யப்போவதில்லை. மாறாக குறுவாளால் என் கழுத்தை அறுத்துக்கொள்ளப் போகிறேன்.” விபுலை “அதை நீ செய்தாலும் அரசரின் ஆணையை மீறியவளாவாய். அது நீ நம் குலத்து மூதன்னையர் முன் நாகச்சுருளைத் தொட்டு அளித்த சொல்லுறுதியை மீறுவதுதான்” என்றாள். வித்யுதை மூச்செறிந்து முகம் வியர்க்க “கண்ணை மூடிக்கொண்டு அக்கத்தியை இதன் நெஞ்சில் ஆழ்த்தினால் என்ன?” என்றாள். “ஆம், அதுவே நாம் செய்யவேண்டியது” என்றாள் விபுலை. வித்யுதை தன் இடையில் இருந்த குறுவாளை எடுத்து தரையில் வீசி “இதோ கிடக்கிறது. உன்னால் முடியுமென்றால் சென்று குத்தி அதை கொல்!” என்றாள்.

இருவருக்கும் நடுவே உலோக ஒலியுடன் வந்து விழுந்து ஒளிர்ந்தது கத்தி. அதன் உறையிலிருந்து சற்றே வெளிவந்து நா காட்டியது. அறியாத எவரோ அதை பாதி உருவிவிட்டதுபோல. விபுலை அதை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்து கண்ணுக்குத் தெரியாத காலொன்றால் உதைக்கப்பட்டவள்போல் பதறி பின்னகர்ந்தாள். “எளிதல்ல” என்றாள். “நம் இருவராலும் எண்ணவும் இயலாது” என்று வித்யுதை சொன்னாள். “ஆம்” என்றாள் விபுலை. குழந்தையை நோக்கிக்கொண்டிருந்த வித்யுதை “ஏன் அதை அரசர் நம்மிடம் சொன்னார்? நாம் அதைச் செய்வோம் என ஏன் அவர் எண்ணினார்?” என்றாள். “அவர் செல்லும் பாதைக்கு நம்மை இழுத்துச் செல்கிறார். நீயும் நானும் அவருடன் சென்றுகொண்டிருக்கவில்லை என்று அவர் அறிவார்” என்றாள் விபுலை.

வித்யுதை “நாம் இருவரும் அன்னையர். நம் வயிறுதிறந்து மைந்தரை பெறாதிருக்கலாம். பெறாத மைந்தர் பல்லாயிரவரை முலையூட்டி மடி நிறைத்து தோள்சூடி வளர்த்திருக்கிறோம். நம்மைச் சூழ்ந்திருக்கும் தனிமையில் அம்மைந்தரின் சிரிப்புகளும் விழியொளியும் நிறைந்திருக்கின்றன. நம்மையன்றி பிறர் அதை அறிய முடியாது” என்றாள். “என் தலை வெடிக்கிறது. நினைவறிந்த நாள் முதல் கொழுநனுக்கு எதிராக ஒரு சொல் எண்ணலாகாது என்று பயிற்றுவிக்கப்பட்டவள் நான். இதைச் செய்யவில்லையென்றால் நான் செய்வதற்கு ஒன்றே உள்ளது. மீண்டும் சென்று அவர் காலில் விழுந்து என்னைக் கொல்லும்படி கோரவேண்டும்” என்றாள் விபுலை.

“அவர் உன்னை கொல்வார்” என்றாள் வித்யுதை. “பின் அப்பழிக்காக மேலும் உளம் இருண்டு நகைப்பார். நீ இருள்வெளியில் உழல்வாய்.” விபுலை விழிதூக்கி “வேண்டாம். அப்பழியையும் அவர் ஏற்றுக்கொள்ள வேண்டாம். மைந்தனை அளித்து அவர் குலம்வாழச் செய்யாத இழிமகளாகிய நான் அவருக்களிப்பது இப்பழியொன்றே என்றாக வேண்டாம்” என்றாள். அச்சொல்லைக் கேட்டதும் வித்யுதையும் உளம்விதும்பிவிட்டாள். மீண்டும் நெடுநேரம் அவர்கள் தங்களுக்குள் ஆழ்ந்திருந்தனர். மூச்சொலிக்க விழித்த வித்யுதை “என்ன செய்வது?” என்றபின் “இதுவரை அனைத்திலும் நாம் செய்வது ஒன்றே. முதுசேடி மேகலையிடம் கேட்போம்” என்றாள்.

“ஆம்” என்று சொல்லி கதவைத் திறந்து வெளியே சென்று அங்கே முன்னரே வந்து பணிந்து நின்றிருந்த முதுசேடியை உள்ளே வரச்சொன்னாள். அவர்களின் சொற்களை எல்லாம்

அவள் கேட்டிருந்தாள் என மேகலையின் விழிகள் காட்டின. அவள் வந்து கட்டிலில் கிடந்த மைந்தனைப் பார்த்து “கவர்ந்து வரப்பட்ட குருநகரியின் இளவரசன் இவன் அல்லவா?” என்றாள். “ஆம், இவனைக் கொல்லும்படி எங்களுக்கு அரசரின் ஆணை. அதை நாங்கள் மீற முடியாது என நீ அறிவாய். கொல்லும் துணிவும் எங்களுக்கு வரவில்லை” என்றாள் வித்யுதை. “ஆம். உங்களால் முடியாது, அரசி” என்றாள் மேகலை. “நாங்கள் என்ன செய்வது?” என்றாள் விபுலை. “அரசர்கள் கொலை செய்ய வேண்டுமென்பதில்லை. அவர்கள் ஆணையிட்டாலே போதும், அது அவர்கள் செய்ததாகவே பொருள்படும். இக்குழவியைக் கொல்லும்படி எவருக்கேனும் ஆணையிடுங்கள். உங்கள் கணவரின் ஆணையை நிறைவேற்றியவர்களாவீர்கள்” என்றாள் மேகலை.

இருவரும் தங்களைக் கட்டியிருந்த சரடுகள் அனைத்திலிருந்தும் விடுபட்டவர்கள்போல் முகம் மலர்ந்தனர். “ஆம், அது நெறியென்றால் அதை செய்வோம்” என்றாள் வித்யுதை. “எவரிடம் ஆணையிடுவது?” என்றாள் விபுலை. “தங்கள் சேடி நான். எனக்கு ஆணையிடுங்கள். தங்களின் பொருட்டு இக்குழவியை நான் கொல்கிறேன்” என்றாள். “நன்று, அதை செய்” என்றாள் வித்யுதை. “ஆம்” என்றாள் விபுலை. “உன்னால் முடியுமா?” மேகலை “நான் பழிகொள்ளப்போவதில்லை, ஆகவே தயங்கமாட்டேன். அரசப்பணியில் அறப்பொறுப்பு ஏவலர்க்கில்லை” என்றாள். “நன்று, அது நிகழ்க!” என்று வித்யுதை சொன்னாள்.

மேகலை குழந்தையை எடுத்துக்கொண்டு வெளியே சென்றாள். அவளுக்குப்பின் மெல்ல நடந்து சென்று அவள் விழிமறைவதைப் பார்த்தபின் நீள்மூச்சுவிட்டு உடல்

தளர்ந்தாள் விபுலை. வித்யுதை கதவை மீண்டும் தாழிட்டாள். கால்கள் குளிர்ந்து வலுவிழக்க கைகளால் பீடத்தைப்பற்றியபடி சென்று மஞ்சத்தில் அமர்ந்த விபுலை “உண்மையிலேயே அவளால் கொல்ல முடியுமா?” என்றாள். வித்யுதை “அது அவள் பணி. கொல்லவில்லை என்றால் அவள் பணிமுறை பிறழ்ந்தவள். நாம் ஆணையிட்டுவிட்டோம். ஆகவே நம் கடன் முடிந்தது. அதற்குப்பின் நாம் எண்ண வேண்டியதில்லை” என்றாள். “அந்தப் பழி நம்மைச் சூழும்” என்றாள் விபுலை. “ஆம், அதை நாம் சுமக்கவேண்டும். அதுவே அரசரின் ஆணை” என்றாள் வித்யுதை.

“அரசர் கேட்டால் என்ன சொல்வது?” என்றாள் விபுலை. “மைந்தனை கொன்றுவிட்டோம் என்று சொல்வோம். அவ்வாணையை இடும்போதே நாம் அதை செய்துவிட்டோம் என்றுதான் பொருள்” என்றாள் வித்யுதை. இருவரும் ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டனர். “நான் சற்று படுக்க விரும்புகிறேன்” என்றபடி அதே மஞ்சத்திலேயே வித்யுதை படுத்துக்கொண்டாள். விபுலை கால்களை நீட்டிக்கொண்டு “நீ உணவருந்தி வரலாம்” என்றாள். “என்னால் இயலாது” என்றாள் வித்யுதை. விபுலை “ஆம், இன்றிரவு என்னால் துயிலவும் முடியுமென்று தோன்றவில்லை” என்றாள். இருவரும் நீள்மூச்சுகள் விட்டுக்கொண்டனர்.

நெடுநேரத்திற்குப் பின் விபுலை “நீ உன் சொற்களால் அம்மைந்தனை கொல்லும்படி ஆணையிடவில்லையே?” என்றாள். “ஆம், அதை செய் என்றே சொன்னேன். கொலை என்று நான் சொல்லவில்லை. அச்சொல் என் நாவுக்கு பேரெடை” என்றாள் வித்யுதை. “நானும் வெறுமனே ஆமென்றே

சொன்னேன்” என்றாள் விபுலை. வித்யுதை “நம்மால் சொல்லமுடியாது” என்றாள். விபுலை “அரைப்பழியே உனக்கு வரும், அதில் கால்பழியே எனக்கு, அல்லவா?” என்றாள். “நாம் ஏன் இதை பேசவேண்டும்?” என்று
வித்யுதை சொன்னாள். “இதை சொல்லிச் சொல்லி நாம் பெருக்கிக்கொள்ள வேண்டியதில்லை. இக்கணம் இதை மறந்துவிடுவோம் என்று முடிவெடுப்போம்.”

“ஆம்” என்றாள் விபுலை. இருவரும் விழிகளை மூடி படுத்திருந்தனர். மீண்டும் நெடுநேரத்திற்குப் பின்
விபுலை “அழகிய மைந்தன்! அவனில் பிற மைந்தரிடமில்லாத ஒன்று இருந்தது” என்றாள். “ஆம், அவன் எளிதில் இறக்கக்கூடியவன் அல்ல” என்றாள் வித்யுதை. விபுலை ஒருக்களித்து கைகளை நீட்டி அவளைத் தொட்டு “உண்மையாகவா? அவன் இறக்கப்போவதில்லையா?” என்றாள். “நீயே எண்ணிப்பார். இந்திரனை வெல்வான் என்று நிமித்திகர் குறியுரைத்த மைந்தன் அவன். இவ்வாறு ஒரு எளிய சேடியின் கையால் உயிர் துறக்கும் ஊழ் கொண்டவன் அல்ல.” விபுலை பரபரப்புடன் “அப்படியென்றால் அவன் உயிர் பிழைத்திருப்பானா?” என்றாள்.

“நாம் அதை ஒருபோதும் அறிய முயலக்கூடாது. நாம் ஆணையிட்டுவிட்டோம். நம் கடன் முடிந்தது” என்றாள் வித்யுதை. “ஆம்” என்றாள் விபுலை. மீண்டும் இருவரும் அமைதியாயினர். பின்னர் விபுலை மெல்ல விசும்பும் ஒலி கேட்டது. வித்யுதை விழிதிருப்பி நோக்க “பெண்ணென்று படைத்து கருவறை அமைக்காத வீண்தெய்வங்கள்…” என்றாள். வித்யுதை கலங்கிய விழிகளுடன் நோக்கியிருந்தாள். “நம் வயிறு திறந்திருந்தால் இந்த ஆணையை முகம் நோக்கி

சொல்லியிருப்பாரா அரசர்? பிள்ளையில்லாதவள் என்றால் எப்பழிக்கும் அஞ்சாள் என எண்ணுகிறார்கள் அல்லவா?” என்றாள் விபுலை. “நம்மைச் சூழ்ந்த ஒவ்வொருவராலும் நாம் நாள்தோறும் தீச்சொல்லிடப்படுகிறோம், தோழி” என்றாள் வித்யுதை.

அன்று பகல் முழுக்க அவர்கள் அவ்வறையில் ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளாமலேயே அமர்ந்திருந்தனர். உச்சிப்பொழுது அணைந்ததும் அறைக்கு வந்த மேகலை “தங்கள் ஆணை நிறைவேற்றப்பட்டுவிட்டது, அரசியரே. மைந்தனைக் கொன்று ஊன் சமைக்கப்பட்டு சித்தமாக உள்ளது” என்றாள். “அரசரிடம் சொல்!” என்றாள் வித்யுதை. மேகலை தலைவணங்கி வெளியே சென்றாள். இருவரும் மீண்டும் அமைதிக்கு திரும்பினர். “அது குழவியின் ஊன் அல்ல” என்றாள் வித்யுதை. “ஒருவேளை அவ்வாறு இருந்தால்?” என்று விபுலை கேட்டாள். “இருக்காது…” என்றாள் வித்யுதை. “ஆயிரத்தில் பல்லாயிரத்தில் ஒரு பங்கு வாய்ப்பு இருக்கத்தான் செய்கிறது அல்லவா?” என்று விபுலை கேட்டாள். “ஊழுக்கு அவ்வாய்ப்பை அளிப்போம்” என்று வித்யுதை சொன்னாள்.

சற்றுநேரத்தில் அவர்களுக்கு அரசனிடமிருந்து அழைப்பு வந்தது. இருவரும் சென்று அவன் மஞ்சத்தின் அருகே நின்றனர். “என் ஆணை நிறைவேற்றப்பட்டுவிட்டதா?” என்று ஹுண்டன் கேட்டான். “ஆம் அரசே, நிறைவேற்றப்பட்டுவிட்டது. ஊனுணவு சித்தமாக உள்ளது” என்றாள் வித்யுதை. “என் உடல் தொட்டு ஆணையிடுங்கள்” என்றான் ஹுண்டன். இருவரும் அவன் உடலைத் தொட்டபடி “தங்கள் ஆணை எங்களால்

நிறைவேற்றப்பட்டது” என்றார்கள். முகம் மலர்ந்த அவன் “கொண்டுவருக!” என்றான்.

அவர்கள் வெளியே சென்றபோது வெள்ளிக்கலங்களில் ஊனுணவு வெம்மை பறக்க ஒருங்கியிருக்க மேகலையும் ஏழு சேடியரும் காத்து நின்றனர். “இந்த ஊன் அந்த மைந்தனுடையதா?” என்றாள் வித்யுதை. “இல்லை, இருக்க வாய்ப்பில்லை” என்று விபுலை சொன்னாள். “ஒரு வாய்ப்பு உள்ளது. கடலில் கைப்பிடி என” என்றாள் வித்யுதை. அவ்வெண்ணமே அவர்களின் முகங்களை கோணலாக்கி கண்களில் ஈரம் படரச்செய்தது. நடுங்கும் கைகளுடன் அவர்கள் பரிமாறிய ஊனுணவை ஹுண்டன் அள்ளி உண்டான். ஒரு கை எடுத்ததும் நிமிர்ந்து அவர்களின் கண்களை நோக்கினான். வெடித்து நகைத்துக்கொண்டு “ஆம், இது அவன் ஊனே” என்றபடி உண்டான்.

“நன்று, என்னால் தயக்கமில்லாது உண்ணமுடிகிறது. முற்றிருளை அடைந்துவிட்டேன். இனி ஒளியின் அழைப்பு அளிக்கும் இடர்கள் இல்லை” என்றபின் கற்தொடையில் அறைந்து வெறிசிவந்த கண்களுடன் நகைத்தான். “இனி இருள் நிறைந்த ஏழுலகங்களில் உங்கள் இருவரின் தோள்களையும் பற்றியபடி என்னால் நடக்க முடியும்” என்றான். நகைத்து நகைத்து அவன் விழிகளில் இருந்து நீர் வழியத்தொடங்கியது.

மேகலை இளமைந்தனை தனக்கு அணுக்கமான ஓர் ஒற்றனிடம் அளித்து காட்டில் எங்கேனும் கொண்டு விட்டுவிடச் சொன்னாள். “காட்டிலா? விலங்குகளுக்கு உணவாகவா?” என்றான் அவன். “அவன் அவ்வாறு இறக்கமாட்டான். அவனுக்குப் பின்னால் ஊழின் பணியாட்கள் தொடர்கிறார்கள்” என்றாள் மேகலை. ஒற்றன் அக்குழவியை

கொண்டுசென்று காட்டுக்குள் ஒரு முதுபலவின் பொந்தில் வைத்துவிட்டு மீண்டான். நாகநஞ்சின் வீச்சு குறைந்ததும் விழித்துக்கொண்ட நகுஷன் பசிகொண்டு வீரிட்டு அலறத்தொடங்கினான்.

அவ்வழுகையைக் கேட்டது காட்டில் வாழ்ந்த குரங்குக்குலம் ஒன்று. அதன் மூதன்னை எச்சரிக்கையுடன் அருகே வந்து மைந்தனை நோக்கியது. பின்னர் அருகே வந்து அவனை எடுத்து முலைகளுடன் அணைத்துக்கொண்டது. மைந்தன் அவனே முலைதேடி உறிஞ்சி உண்ணத்தொடங்கினான். இன்னொரு அன்னைக்குரங்கு அருகே வந்து "எனக்கும்..." என்றது. ஏழு அன்னையரின் பாலையும் ஆண்குரங்குகள் கொண்டுவந்து அளித்த கனிகளையும் தேனடையையும் உறிஞ்சிக் குடித்தபின் அவன் பசியடங்கி அவர்களை நோக்கி சிரித்தான். "நீ எங்களுடன் இரு" என்றாள் மூதன்னை.

குரங்குகளுடன் குரங்கு என அவன் காட்டில் வாழ்ந்தான். மரங்களுக்குமேல் தாவவும் கனிதேர்ந்து உண்ணவும் கிளைகளிலேயே உறங்கவும் கற்றுக்கொண்டான். அவனை காட்டில் சந்தித்த குரங்குக்குலத்தில் ஒரு குரங்கு "முன்பு எங்கள் குலத்துடன் ஒருவன் இதைப்போல வாழ்ந்தான்" என்றது. "அவன் பின்னர் காட்டில் ஒரு மரத்தடியில் அமர்ந்து மட்கி மண்ணில் மறைந்தான்." குரங்குகளுடன் செல்கையில் அவன் காட்டுக்குள் அமைந்த சோலைசூழ் சிறுகுடில் ஒன்றை கண்டான். "அங்கு ஓர் அழகிய இளம்பெண் வாழ்கிறாள். எங்கள் தந்தையர் காலம் முதலே அங்கிருக்கிறாள். அந்த மலைப்பாறைபோலவே அவளும். மாறுவதே இல்லை" என்றது முதுகுரங்கு.

அவன் அச்சோலையை அணுகி மரக்கிளையில் ஒளிந்து அமர்ந்து அவளை நோக்கினான். அவள் ஒரு மலர்மரத்தடியில் தனியாக அமர்ந்து தனக்குள் சிரித்துக்கொண்டு மலர்மொக்குகளைக் கொண்டு நாற்களமாடிக்கொண்டிருந்தாள். அவள் பற்களின் ஒளியை அவன் விடாய் அகலா உள்ளத்துடன் நோக்கிக்கொண்டிருந்தான். உள்ளே சென்று அவளிடம் பேசவேண்டுமென விழைந்தான். “அவர்கள் மானுடர். நம் மொழி அவர்களுக்கு புரிவதில்லை. அவர்கள் போடும் ஓசை நமக்கும் பயனற்றது” என்றாள் குரங்கன்னை. “அவள் அழகி” என்றான் நகுஷன். “ஆம், உன் விழிகளுக்கு அவள்தான் அழகியெனத் தெரிவாள். நம் குலத்தில் நீ மணம் கொள்ளமாட்டாய்” என்றாள் குரங்கன்னை.

அன்னையின் ஆணைப்படி மறுநாள் மூன்று குரங்குகள் காட்டுக்குள் ஊடுருவிச்சென்றன. அங்கே ஒரு தவக்குடிலில் முனிவர் ஒருவர் மாணவர்களுக்கு சொல்புகட்டுவதைக் கண்டபின் திரும்பிவந்து அன்னையிடம் இடமுரைத்தன. அன்னை நகுஷனிடம் வந்து “உன்னை இங்குள்ள முனிவர்குடிலுக்கு அனுப்ப முடிவுசெய்துள்ளோம், செல்க!” என்றாள். “நானா? நான் எதற்காக அங்கே செல்லவேண்டும்?” என்றான் நகுஷன் திகைத்து. “நீ விழைபவள் மானுடப்பெண். அவள் உன்னை விழையவேண்டும் என்றால் நீ அவள் சொல் பழகவேண்டும். அவளைப்போல் ஆடையணிந்து அணிபுனைந்து அவள் உலகில் நுழையவேண்டும்” என்றாள் அன்னை. “இல்லை, நான் விழையவில்லை” என அவன் அன்னையை தழுவிக்கொண்டான். “நீ சென்றாகவேண்டும்... இது என் ஆணை!” என்ற அன்னை அவன் தழுவலை விடுவித்து விலகிச்சென்றாள்.

குரங்குகள் நகுஷனைக் கொண்டுவந்து அந்த குருநிலையின் வாயிலில் இறக்கிவிட்டுச் சென்றன. உள்ளே அப்போது மாணவர்கள் உணவருந்திக் கொண்டிருந்தனர். உணவைக் கண்டதும் நகுஷன் பாய்ந்து சென்று பிற மாணவர்களை உந்தியும் பற்களைக்காட்டிச் சீறியும் நகங்களால் கீறியும் விரட்டிவிட்டு அள்ளி வெறியுடன் உண்ணலானான். மாணவர்களின் குரல்கேட்டு குடிலில் இருந்து வெளியே வந்த வசிட்டர் அவனைக் கண்டதும் முதலில் திகைத்தார். அப்பால் நோக்கிநின்றிருந்த குரங்குகளைக் கண்டதும் புரிந்துகொண்டு அவனருகே வந்தார். அவனிடம் குரங்கு மொழியில் "நீ யார்?" என்றார். "நான் மனிதமொழியை கற்கவேண்டும் என என் அன்னை சொன்னாள்... அதோ அவள்" என்று அவன் சொன்னான்.

வசிட்டர் அவனை தன் கல்விநிலையில் சேர்த்துக்கொண்டார். அவனுக்கு மானுடச் சொல் பயிற்றுவித்தார். முதலில் குரங்கன் என அவனை வெறுத்த பிற மாணவர்கள் அவன் கற்றுக்கொண்ட விரைவைக்கண்டு திகைப்படைந்தனர். பன்னிரு நாட்களில் அவன் மானுடமொழி பேசலானான். ஒரு மாதத்தில் நூல் நவிலத் தொடங்கினான். அவன் கைத்திறனும் விழிக்கூர்மையும் கண்டு இயல்பால் அவன் ஒரு ஷத்ரியன் என வசிட்டர் முடிவெடுத்தார். அவனுக்கு வேலும் வாளும் வில்லும் கற்பிக்க தன் மாணவர்களில் ஷத்ரியர்களாகிய இருவரை ஏற்படுத்தினார். "அவன் கற்றுக்கொள்ளவில்லை, வெறுமனே நினைவுகூர்கிறான். நாங்கள் அறிந்தவைக்கு ஒருபடி மேல் என்றே எப்போதும் சென்று நிற்கிறான்" என்றனர் அவர்கள்.

வசிட்ட கல்விநிலையின் அத்தனை மாணவர்களும் அவனுக்கு அணுக்கர்களாயினர். அவர்களை ஒன்றெனத் திரட்டவும் மேல்கீழ் வகுக்கவும் அவனால் எளிதில் இயன்றது. ஆணையிடும் குரலை அவன் குருதியிலேயே கொண்டிருந்தான். வானில் குரங்குகளும் மண்ணில் மாணவர்களுமாக அவன் ஒரு சிறுபடையை வைத்திருக்கிறான் என்றனர் குருநிலையின் ஆசிரியர்கள். “அவன் படைநடத்தி நிலம்வென்று முடிசூடுவான், ஐயமே இல்லை. ஈரிலையே சொல்லிவிடும், விதை ஏதென்று” என்றார் வசிட்டர்.

பாஞ்சாலத்து அரசன் தன் அமைச்சருடன் வந்து வசிட்டருக்கு குருவடி பணிவுச் சடங்கு முடித்து திரும்பிச்சென்ற மறுநாள் ஊர்ச்சந்தைக்கு பொருள்வாங்கச் சென்ற குருநிலையின் மாணவர்களைத் தொடர்ந்து வழிநோக்கி வந்த ஒரு கொள்ளையர் கூட்டம் கொலைப்படைக்கருவிகளுடன் காட்டுக்குள் ஊடுருவி வசிட்டகுருநிலை மேல் தாக்குதல் நடத்தியது. குரங்குகளும் குருநிலை மாணவர்களுமாக அவர்களைத் தோற்கடித்து சிறைப்பிடித்து கைபிணைத்துக்கட்டி இழுத்துச்சென்று சந்தை வணிகர்களுக்கு அடிமைகளாக விற்று அச்செல்வத்தை சாலைபேணும் அறநிலைகளுக்கு அளித்துவிட்டு திரும்பிவந்தனர்.

ஆயினும் நகுஷன் தனித்தவனாகவும் இருந்தான். நண்பர்களுடனும் குரங்குகளுடனும் ஆடிமகிழ்ந்து களைத்து அமர்கையில் அள்ளி விலக்கப்பட்ட தனிமை அவன்மேல் வந்து படியும். அதை அவர்களும் உணர்ந்திருந்தனர் என்பதனால் அப்போது ஓசையின்றி விலகிச்செல்ல வேண்டுமென்றும் அறிந்திருந்தார்கள். அத்தனிமையை அவனே கலைத்து மீண்டு

எழும்போது புன்னகையுடன் அருகிருக்கும் குரங்கிடமோ மானுடனிடமோ “நன்று, நான் இங்கிருக்கிறேன்” என்பான்.

அதையும் கடந்த ஆழ்ந்த தனிமை அவனில் அமைகையில் கிளம்பிச்சென்று காட்டில் அமைந்த அந்த சோலைக்குடிலின் எல்லைக்கு அப்பால் நின்றிருக்கும் மாபெரும் சாலமரத்தின் இலைத்தழைப்புக்குள் அமர்ந்து அங்கே விளையாடிக்கொண்டிருக்கும் கன்னியை நோக்கிக்கொண்டிருப்பான். இளமைந்தனாக அவன் காணத்தொடங்கியபோது இருந்ததுபோலவே அவள் இருந்தாள். ஒவ்வொரு நாள் காலையிலும் புதிதாகப் பிறந்தெழுவதுபோல. “ஒவ்வொருநாளும் மலர்கள் மலர்ந்து மாலையில் உதிர்வதைக் கண்டபின்னரும் எப்படி அவள் மாறாமலிருக்கிறாள்?” என்று அவன் வசிட்டரிடம் கேட்டான். “ஒவ்வொரு மலரும் வாடாமலிருக்கும் அருள்கொண்டே வருகின்றன. ஏதோ வடிவில் இவ்வுலகு அதைத் தொடுகிறது. அக்கணமே அவை காலத்தால் பற்றப்படுகின்றன” என்றார் வசிட்டர்.

ஒவ்வொருமுறையும் அங்கு சென்று முழுநாளும் நோக்கியிருந்தபின்பும் அவன் ஆசிரியரிடம் திரும்பாமல் காட்டின் எல்லையில் இருந்த ஒரு பெரிய மரப்பொந்துக்கு சென்றான். பெரும்பன்றிபோல பலநூறு சிறுமுலைகள் தொங்க குறுங்கிளை விரித்து நின்ற அப்பலாமரத்தின் பொந்துக்குள் சிறுவன் ஒருவன் படுக்குமளவே இடமிருந்தது. அங்கே இலைகளைத் திரட்டி அடுக்கி மெத்தை செய்து வைத்திருந்தான். மலைப்பாம்புபோல அவன் அதற்குள் சுருண்டு இறுகிப்படுத்து கண்களை மூடிக்கொள்வான். ஓரிருநாட்கள்கூட உணவும் நீருமின்றி உறக்கமும் விழிப்புமின்றி அவன் அங்கே கிடப்பதுண்டு. அவன் அங்கே கிடப்பதை அவன் நண்பர்களும்

குரங்குகளும் அறிவர் என்பதனால் எவரும் அவனை தேடுவதில்லை. பின்னர் எழுந்து காய்ச்சல் படர்ந்த விழிகளுடன் திரும்பிச்செல்வான். செல்லும்வழியில் உள்ள சுனையில் இறங்கி மூழ்கி நீராடி எழும்போது மீண்டுவந்திருப்பான்.

அங்கே படுத்துக்கொண்டால் மட்டும் அவனுக்கு விந்தையான கனவுகள் எழுந்தன. பேருவகையில் வாய்விரிந்து பற்கள் மின்ன கண்கள் துறுக்கும் ஒரு முகம் அண்மையில் எனத் தெரிந்தது. சிரிப்பு கலந்த குரல். வலுவான பெரிய கைகள் அவனைத் தூக்கி சுழற்றுகின்றன. மென்சேக்கையில் படர்ந்த உடல்வெம்மையும் வியர்வை மணமும். மயிர்படர்ந்த மார்புக்குரியது அந்த மணம். பிறிதொன்று முதுமை மணம்கொண்ட முலைமென்தசை. காதில் மட்டுமே ஒலிக்கும் அவள் குரல். சாளரங்களின் ஒளி வெள்ளிப்பட்டைகளாக விழுந்துகிடக்கும் அரண்மனை இடைநாழி. சிலம்பொலிக்கும் கால்கள். உலைந்து நெளியும் ஆடைநுனிகள். பெண்குரல்கள், சிரிப்புகள்.

பிறகொரு படுக்கை. அதில் உடலுறைந்துகிடக்கும் பேருருவனின் கரிய முகம். அவன் மீசையின் நாகவால் நெளிவு. இரு பெண்கள். இருவரும் அவனை நோக்கி பேசிக்கொண்டிருந்தனர். அழுது தேறி மீண்டும் பேசினர். ஒருத்தி குறுவாளை எடுத்தபோது அவன் நெஞ்சு அதிர்ந்தது. அவள் அதை வீசிய ஒலியை அவன் மணியோசை என கேட்டான். அவனை ஒருத்தி கொண்டுசெல்கிறாள். அவன் காதில் “இந்திரனை வெல்வாயா? இந்திரனையேவா?” என அவள் கேட்டாள். அடுமனையின் எரிதழல். அவன் ஒரு வெள்ளாட்டை பார்த்தான். இளமையானது. அதன் சுண்ணக்கல் போன்ற

கண்கள். அது அவனை குனிந்து முகர்ந்தது. பெருமூச்சு அவன்மேல் பட்டது. “சென்றுவருக!” என்றது. அவன் அதை நோக்கிக்கொண்டிருந்தான். “இப்படித்தான் எப்போதும். அந்தத் துலா இரக்கமற்றது.”

அவன் கைகால்களை உதைத்து மெல்ல நெளிந்தான். “நஞ்சு நெகிழ்கிறது, விரைவில்.” எவர் குரல் அது? அவனை கைகள் தூக்கியபோது அந்த வெள்ளாட்டின் ஓசையை கேட்டான். அதை எவரோ பிடிக்கிறார்கள். பின்னர் துருத்திமூச்சு என ஓர் ஒலி. குமிழிவெடிக்கும் ஒலி. குருதிமணம். அல்லது முலைப்பால் மணம். அவனுக்கு குளிரத்தொடங்கியது. அவன்மேல் எறும்புகள் ஊர்ந்தன. அவன் அழத்தொடங்கினான். அந்த வெள்ளாடு இறங்கி வந்தது. குனிந்து அவனை நோக்கியது. “நானேதான்” என்றது. அவன் அதை நோக்கி கைநீட்டினான். அது அவனை அள்ளி முலைகளில் சேர்த்துக்கொண்டது. ஆட்டின் மொழியில் “அழாதே” என்றது. அக்குருதியின் மணம். அவன் அதை ஆவலுடன் அள்ளிக்கவ்வி சுவைக்கலானான்.

அவன் ஓசைகேட்டு விழித்தபோது மூங்கில்பாடையில் ஓர் உடலுடன் எண்மர் அந்த மரத்தடி நோக்கி வந்தனர். முன்னால் ஒருவன் சங்கு ஊதியபடி நடந்தான். இருவர் பறையொலிக்க தொடர்ந்தனர். பிறர் தலைகுனிந்து நடந்தனர். பாடை சுமந்தவர்கள் அதை அந்த மரத்தடியில் வைத்தனர். பாடையில் இருந்த உடலில் கண்கள் அசைவதை அவன் கண்டான். “உயிர் எஞ்சியிருக்கிறது” என்று ஒருவன் சொன்னான். முதியவர் ஒருவர் “அவர் இறுதிநினைவில் இட்ட ஆணை. மைந்தனாக உன்னை அது ஆள்கிறது. பிறிதேதும் நீ செய்வதற்கில்லை” என்றார். இன்னொருவன் “நாம் என்ன செய்வது?” என்றான். “இறந்துவிட்டாரென்றே கொண்டு அனைத்துச் சடங்குகளையும்

செய்து ஊர்மீள்வோம். இது இருக்கப்பிண்டம் என்னும் தொல்சடங்கு. முன்னரும் பலமுறை நம் குடியில் இது நிகழ்ந்துள்ளது” என்றார் முதியவர்.

அவர்கள் அந்த உடலில் வாய்க்கரிசி இட்டு, காலடியில் மலர்சொரிந்து சுற்றிவந்து வணங்கினர். மைந்தர்கள் இருவரும் தோள்குலுங்க அழ பிறர் அவர்களை அணைத்து ஆறுதல்சொல்லி நடத்திச்சென்றனர். தெற்குநோக்கி மும்முறை சங்கை முழக்கியபின் அவர்கள் திரும்பிச்சென்றனர். மைந்தன் ஒருவன் திரும்பி நோக்கி கைநீட்டி அழுதான். முதியவர் “திரும்பிநோக்கலாகாது” என அவனை கைபற்றி தோள்தள்ளி கொண்டுசென்றார். செல்லும் வழியில் ஒருவன் கால்தளர்ந்து விழப்போனான். இருவர் அவனை பற்றிக்கொண்டனர். அவர்கள் காட்டைவிட்டு அகன்றதும் மீண்டும் மும்முறை சங்கு முழங்கியது.

நகுஷன் இறங்கி கீழே வந்து எச்சரிக்கையுடன் அருகே சென்று குனிந்து அந்த உடலை நோக்கினான். அதன் மூச்சு அவ்வப்போதுமட்டும் எழுந்தது. விழிகள் இமைக்குள் உருண்டுகொண்டே இருந்தன. அவன் அவ்வுடலை தொட்டு உலுக்கினான். மெல்லிய முனகலுடன் வாய் திறந்து உள்நாக்கு தவளைவாய் என தவித்தது. அவன் ஓடிச்சென்று இலைகோட்டி சுனைநீர் அள்ளி வந்து அசைந்த வாயில் விட்டான். விடாயணையும் தண்மையை உணர்ந்த தலை சற்று மேலெழுந்தது. நீரை துழாவித்துழாவி உண்டது வாய். விழிகள் தொடப்பட்ட புழு என அசைந்து அசைந்து பின்பு விரிசலிட்டன. அவன் உருவை நிழலென அறிந்து திடுக்கிட்டு திறந்தன.

“யார்?” என்றார் அவர். “என் பெயர் கானிகன்... இங்கே வசிட்டர்குருநிலையின் மாணவன்” என்றான் நகுஷன்.

அவருடைய பழுத்துச்சிவந்த விழிகள் அவனை நோக்கி தவித்தன. பின் நோக்கு நிலைக்க நிலம் வளைந்து அவரை மேலே உந்தியதுபோல உடல் எழுந்தது. கைகள் மேலெழுந்து அவன் கைகளை தொட்டன. “இளவரசே!” என்று காற்றென அவர் கூவினார். மூச்சும் சொல்லும் ஒன்றாக பீரிட்டுத் தெறித்தன. “நீங்கள் குருநகரியின் அரசர் ஆயுஸின் மைந்தர். உங்கள் பெயர் நகுஷன்.” எஞ்சிய ஆற்றலும் அழிய மெல்ல மண்ணில் படிந்து கைகள் தளர்ந்தன. இமைகள் எடைகொண்டு அழுந்தின. வாய் நிலைத்தது. மூச்சு எழவில்லை என்பதை சற்றுநேரம் கழித்து அவன் உணர்ந்தான்.

# மாமலர் - 35

## 35. சிம்மத்தின் பாதை

நகுஷன் காட்டிலிருந்து குருநகரிக்கு கிளம்பியபோது வசிட்டர் அவனுடன் ஒரு அந்தணனை வழித்துணையாக அனுப்பினார். தன்னைப் புரந்த குரங்குகளிடமும் நண்பர்களிடமும் விடைபெற்று காட்டைக் கடந்து அருகிலிருந்த சந்தைக்குள் நுழைந்தான். அந்தண இளைஞன் அங்கே தங்கிவிட்டு மறுநாள் குருநகரிக்குச் செல்லலாம் என்றான். அந்தணர் தங்குவதற்குரிய விடுதியில் அவனை நன்மொழி சொல்லி வரவேற்றனர். வாயிற்காவலன் “காட்டாளர்கள் இத்திசைக்கு வரக்கூடாது. அங்கே உன் குலத்தோர் எவரேனும் இருப்பார்கள் என்றால் சென்று பார்!” என்றான்.

நகுஷன் ஒன்றும் சொல்லாமல் திரும்பி நடந்து அங்கிருந்த காவல்கோட்டத்தை அடைந்து “ஷத்ரியர்களுக்குரிய தங்குமிடம் எது?” என்றான். “அதை நீ ஏன் கேட்கிறாய்? விலகிச்செல்! உன்

கேள்வியை எவரேனும் கேட்டால் தலை தங்காது” என்றார் தலைமைக்காவலர். “நான் ஷத்ரியன். அங்கே தங்கவிழைகிறேன்” என்றான் நகுஷன். அவர் சற்று திகைத்தபின் வெடித்து நகைத்து “பித்தனா நீ? செல்க!” என்றார். “நான் ஷத்ரியன். அல்ல என நினைப்பீர்கள் என்றால் அதை நிறுவ நான் செய்யவேண்டியதென்ன என்று சொல்லுங்கள்!” என்றான்.

சினம்கொண்டு “விலகு, இழிமகனே!” என்றபடி காவலர்தலைவர் தன் ஈட்டியால் அவனை அடிக்கவந்தார். ஈட்டியைப் பற்றிச் சுழற்றி அவரை சுவர்மேல் அறைந்து விழச்செய்த நகுஷன் “இந்த ஊரில் என்னை எதிர்த்து வெல்லும் ஷத்ரியர் எவரேனும் உள்ளனர் என்றால் வரச்சொல்க… ஷத்ரியர் தங்குமிடம் நோக்கி நான் செல்கிறேன். தடைசெய்ய முடியுமெனில் முயல்க!” என்று சொல்லிவிட்டு ஒருவனிடம் “அடேய், ஷத்ரியர் விடுதி எங்கே?” என்றான். அவன் அறியாமல் “அதோ, அந்த முகடுள்ள கட்டடம்” என்றான். நகுஷன் அதை நோக்கி நடந்தான்.

சற்றுநேரத்திலேயே எட்டு படைவீரர்கள் அவனை புரவியில் வந்து மறித்தனர். ஒருவனின் கடிவாளத்தை மிதித்துத் தொற்றி பறப்பதுபோலப் பாய்ந்து அவனை வீழ்த்தி புரவிமேல் ஏறினான். அவனுடைய ஈட்டியாலேயே பிறரை அறைந்து விழச்செய்தான். அவன் கைகளின் விரைவு அவர்களின் கண்களை முந்தியது. விழுந்தவர்கள் எழுந்து திகைத்து நோக்கிநின்றனர். “எவருக்கேனும் ஐயமுள்ளதா?” என்றான் நகுஷன். ஒருவன் “இல்லை” என்றான்.

அந்த ஈட்டியுடன் சென்று ஷத்ரியர் விடுதிக்கு முன்னால் நின்று “அரசனுக்குரிய தங்குமிடம் ஒருங்குக! ஏவல்பணிக்கு இருவர் அருகிருக்கவேண்டும்” என்றான். அவன் குரல் மாற்று

எழா ஆற்றல்கொண்டிருந்தது. அதற்குள் அவன் வசிட்டரின் குருநிலையில் இருந்து அந்தணர் துணையுடன் வந்தவன் என்னும் செய்தி அங்கே வந்தது. "ஆம், பார்த்ததுமே எண்ணினேன், அவர் ஷத்ரியர்தான்" என்றார் காவலர்தலைவர். அதுவே விடுதிக்காவலனுக்கு போதுமானதாக இருந்தது.

மறுநாள் காலையில் அவன் கிளம்புவதற்குள் வணிகர் குழு ஒன்று அவனை வந்து சந்தித்து வழித்துணையாக வரும்படி கோரியது. அவர்கள் அந்தக் காட்டில் மலைப்பொருட்களுடன் காட்டாளர் சேர்த்துக்கொடுக்கும் அருமணிகளும் வாங்கிச்செல்வதுண்டு. அவற்றை கொள்ளையடிக்கும் குழுக்கள் வழிநீள இருந்தன. சில சிற்றூர்களிலேயே ஊர்க்காவலர் அவர்களைத் தடுத்து நிறுத்தி கப்பம் பெற்றபின் அனுப்பினர்.

"நான்குக்கு ஒன்று எஞ்சுமென்றாலும் நிறைவே எனும் வகையில் வணிகம் செய்கிறோம். வழிக்காவல் நிற்பீர்கள் என்றால் விரும்பும் செல்வத்தை அளிக்கிறோம்" என்றனர். "எங்களுடன் ஐம்பது வீரர் உள்ளனர். அவர்களை தலைமைகொண்டு நடத்த வீரர் இல்லை." அவன் அவர்களுடன் இணைந்துகொண்டான். செல்லும் வழியிலேயே அவர்களுக்கு படைக்கலையின் அடிப்படைகளை கற்பித்தான். ஓரிரு சொற்களுக்குள்ளாகவே அவனுக்காக அனைத்தையும் அளித்துப் பணிந்தனர் அப்படைவீரர்.

அவர்களை எதிர்கொண்ட முதல் கொள்ளைப்படையினரே அவன் எவன் என அறிந்துகொண்டனர். கொள்ளைத்தலைவனும் இருபத்தைந்து வீரர்களும் வழிமறித்து வேல்காட்டி அவர்களை மிரட்டத்தொடங்கி முதலிரு சொற்களை உரைப்பதற்குள்ளாகவே அவன் கொள்ளையர் தலைவனையும் மூன்று துணைவரையும் வெட்டி வீழ்த்தினான்.

அவர்கள் திகைப்பு மீள்வதற்குள்ளாகவே அவன் வீரர்கள் மூவரை கொன்றனர்.

தப்பி ஓடியவர்களை கால்தடம் தேடி துரத்திச்சென்று அருகிருந்த ஊருக்குள் புகுந்து அங்குள்ள சாவடியில் ஒளிந்திருந்தவர்களை சூழ்ந்துகொண்டான். அவர்கள் கைதூக்கி அடிபணிய பற்றி இழுத்துவந்து அத்தனைபேரின் தலைகளையும் வெட்டி அங்கிருந்த மரக்கிளைகளில் கூந்தலில் முடிச்சிட்டு தொங்கவிட்டான். மூன்று தலைகளை வேலில் குத்தி கையிலெடுத்துக்கொண்டு அவன் வீரர்கள் மூவர் முன்னால் நடந்தனர்.

“இப்போது நாம் வென்றது அவர்கள் நாம் வல்லமைகொண்டவர்கள் என அறியாதிருந்தமையால். இவ்வறிவிப்புடன் சென்றால் அவர்கள் படைதிரட்டி வரக்கூடும் அல்லவா?” என்று ஓர் இளம்வணிகன் கேட்டான். “நாம் செய்தவை நாம் செல்வதற்குள் அங்கே கதைகளென சென்றிருக்கும். கதைகள் பெருகக்கூடியவை. அச்சமூட்டும் கதைகளைப்போல சிறந்த முன்னோடிப்படை வேறில்லை” என்றான் நகுஷன்.

“ஆனால் அவர்கள் படைகொண்டு வந்து என்னை எதிர்கொள்கையில் அவ்வச்சம் விலகக்கூடாது, ஒருபடி மேலே செல்லவேண்டும். அஞ்சிவிட்ட படை படையல்ல, திரள்மட்டுமே. திரளை வெல்ல சிறுபடையின் விரைவே போதும்.” அந்த இளம்வணிகன் “நானும் உங்கள் படையில் சேர்ந்துகொள்கிறேன்” என்றான். “நீர் படைக்குரியவர் அல்ல. என் படைவீரர் எவரும் இவ்வினாவை கேட்கவில்லை. நீர் கேட்டபோது நான் மறுமொழி சொன்னது நீர் எனக்கு பொன் அளிப்பதனால். ஆகவே வணிகம் செய்து பொன் சேர்த்து

எனக்கு அளியும். வீரர் எனில் இப்பொழுதில் என் வேலால் அறைபட்டு குருதி பெருக்கியிருப்பீர்” என்றான். அவனைச் சூழ்ந்து நடந்த வீரர்கள் புன்னகை செய்தனர்.

மலையடிவாரத்தில் அவர்களைத் தாக்கிய கொள்ளையர்படை பல்வேறு அரசர்களின் படைகளிலிருந்து உதிர்ந்து ஒன்றுசேர்ந்த படைவீரர்களால் ஆனது. அவர்கள் மலைநில வளைவுகளுக்குள் படுத்து ஒளிந்தபடி காத்திருந்தனர். ஆனால் அவனுக்கு அவர்கள் படுத்திருப்பதை புட்கள் வந்து சொல்லிவிட்டன. மலைக்குரங்குகள் சென்று நோக்கி வந்து எத்தனை பேர் எவ்வளவு படைக்கலங்கள் என்பதை விளக்கின.

அவன் தன் சிறுபடையை மூன்றாக பிரித்தான். ஒரு படை சுற்றிக்கொண்டு காத்திருந்தவர்களுக்குப் பின்னால் சென்றுவிட்டது. பிறிதொரு படை வலப்பக்கமாக அணுகியது. அவன் மூன்று தலைகள் வெறித்துநோக்கிய வேல்களை ஏந்திய வீரர்கள் முன்னால் செல்ல அவர்களை நேர்நின்று சந்தித்தான். போர் எழுந்த கணமே முரசொலியுடன் பின்பக்கமும் விலாப்பக்கமும் படைவீரர்கள் அவர்களை தாக்கினர்.

என்ன நிகழ்கிறதென புரிந்துகொள்வதற்குள்ளாகவே போர் முடிந்துவிட்டது. முதல் சிலகணங்களுக்குள்ளாகவே தலைமைதாங்கியவனைக் கொல்வது நகுஷனின் வழி. அவன் அம்பின் இலக்கு ஒருபோதும் பிழைபடாததாக இருந்தது. படைதோற்று பணிந்தவர்கள் அனைவரையும் இழுத்துவந்து மக்கள் சூழ்ந்த சந்தைமுற்றத்தில் வைத்து தலைகளை வெட்டி ஊர்மன்றிலும் சாலைமருங்கிலும் காட்சிக்கு வைத்துவிட்டு முன்னால் சென்றான்.

அவனை அதன்பின் கொள்ளையர் எவரும் எதிர்கொள்ளவில்லை. மாறாக செல்லும்வழியில் வணிகர்களிடம் கப்பம் பெற்ற அத்தனை ஊர்களுக்குள்ளும் நுழைந்து அவன் கப்பம் பெற்றான். அவன் படை மலையிறங்கும் பெரும்பாறையுடன் மேலும் மேலும் பாறைகள் சேர்வதுபோல நாள்தோறும் பெருகியது. ஒவ்வொரு சிறுபூசலிலும் பயிற்சிகொண்டது. அவனை அணுகியறிந்து மையம் கொண்டது. மெல்ல அது ஒன்று நூறு ஆயிரமெனப் பெருகிய உடலென்றே ஆகியது.

வணிகர்கள் எல்லை கடந்ததும் அவன் அங்கிருந்த சிற்றரசன் ஒருவனின் ஊரைத் தாக்கி வென்று திறைகொண்டான். போருக்குப் பின் அடிபணிந்த அவ்வரசனையே மீண்டும் அரியணை அமர்த்தி அவன் தோள்தழுவினான். அவன் குலதெய்வத்திற்கு தான் படையலிட்டு வழிபாடு நிகழ்த்தினான். அக்குடியினர் கூடிய பொதுவிழவில் இருவரும் கை கிழித்து குருதி பரிமாறி உடன்பிறந்தார் என அறிவித்தனர்.

அச்சிற்றரசனின் படையில் ஒரு பகுதியையும் இணைத்தபடி சென்று அவன் அடுத்த சிற்றரசனை வென்றான். பின்னர் சிற்றரசர்கள் அவன் வருவதற்காக காத்திருந்தனர். அவனுக்கு குருதியுறவினன் ஆவது அவர்களுக்கும் பெருவல்லமையை அளித்தது. சில நாட்களிலேயே நூறு சிற்றரசர்கள் அவனுடன் இணைந்துகொண்ட பின்னர்தான் அந்நிலம் அமைந்த திரிகர்த்த நாட்டின் அரசன் தன் பெரும்படையை அவனை வென்று சிறைப்பற்றும்படி ஆணையிட்டு அனுப்பினான்.

போர்பயின்று அந்நிலத்தையும் நன்கு தேர்ந்திருந்த திரிகர்த்தர்களின் படை முதற்படைத்தலைவன் உக்ரசேனனால் நடத்தப்பட்டது. மலைத்தீ எரிந்து பெருகி ஏறி வருவதுபோல

வந்த அப்படையை நகுஷன் வெல்லமுடியுமா என்னும் ஐயம் சில சிற்றரசர்களுக்கு இருந்தது. ஆனால் படைவீரர்கள் நகுஷன் வெல்லப்படவே முடியாதவன் என்று நம்பினர். அவன் சொற்களைக் கேட்டு குரங்குகள் ஒற்றர்பணிபுரிவதை அவர்கள் கண்டனர். புள்ளொலியும் காட்டின் காற்றொலியும் அவனுக்கு மொழியென்றே ஆவதை அறிந்தனர். “பாரதவர்ஷத்தை வெல்லும்பொருட்டு வசிட்டர் விண்ணிலிருந்து விழுந்த மின்னலை ஒரு காட்டுப்பெண்ணின் கருவுக்குள் செலுத்தினார். அது விளைந்து எழுந்த வீரன் அவன்” என்றனர் படைகளில் இருந்த பாணர்கள்.

“பெரும்படை பெரும்படையாக இருப்பதன் ஆற்றல் கொண்டது. சிறுபடை சிறுபடையாக இருப்பதன் ஆற்றல்கொண்டது” என்று நகுஷன் சொன்னான். “குரங்குகளை யானை வெல்லமுடியாது. ஏனென்றால் யானைகளால் கிளைதாவ இயலாது. அளவில் சிறியவையே எப்போதும் போர்முறை எதுவென்று முடிவெடுக்கின்றன.”

உக்ரசேனனின் படையை மலைப்பிளவுகளினூடாகச் சென்று விரைவில் தாக்கி நிலைகுலையச் செய்து அவ்வாறே பிறிதொரு மலைப்பிளவினூடாக வெளியேறின நகுஷனின் படைகள். மீளமீள நிகழ்ந்த சிறுதாக்குதல்களை எதிர்கொள்ள உக்ரசேனனின் படைகள் பல சிறுபிரிவுகளாகப் பிரிந்தன. அப்போது ஒன்றாகத் திரண்டு தாக்கி அவன் படைப்பிரிவுகளைச் சூழ்ந்துகொண்டு முற்றாக அழித்தான் நகுஷன்.

உக்ரசேனனை நகுஷன் வென்ற செய்தி திரிகர்த்தநாட்டை பதற்றமடையச் செய்தது. எல்லைநகர்களின் ஆட்சியாளர்களை வென்று உடன்சேர்த்துக்கொண்டு திரிகர்த்தர்களின் தலைநகர்

நோக்கி படைகொண்டு சென்ற நகுஷன் அடிபணியாவிட்டால் பத்து நாட்களில் திரிகர்த்தம் கைப்பற்றப்படும் என தூதனுப்பினான். திரிகர்த்தம் தன் தலைநகரைச் சூழ்ந்துள்ள எட்டு சிறுநகர்களில் காவலரண்களை அமைத்து படைகளை நிறுத்தியது. முற்றுகைப்போரை எதிர்கொள்ள ஒருக்கங்களை செய்தது.

ஆனால் ஒரே இரவில் திரும்பி மலைவெள்ளம்போல வந்து குருநகரியை சூழ்ந்துகொண்டான் நகுஷன். குருநகரியின் ஆட்சி சுதர்மரின் தலைமையிலிருந்தது. திரிகர்த்தன் விரும்பினால் படையுதவி செய்வதாகச் சொல்லி மறுசெய்திக்காகக் காத்திருந்தார் சுதர்மர். படைத்தலைவர் வீரசிம்மனுக்கும் அவருக்கும் சொல்முரண் இருந்தது. குடித்தலைவர்கள் தங்களுக்குள் ஒரு கூட்டமைப்பை உருவாக்கிக்கொண்டு அதன் ஆணைகளைக்கொண்டு தங்கள் குலங்களின் படைகளை கட்டுப்படுத்தினர். குருநகரி ஒற்றைகோட்டைக்குள் பலவாக சிதறிக் கிடந்தது.

குருநகரியை அடைந்த நகுஷன் ஒரே நாளில் கோட்டைக்கதவை உடைத்து உள்ளே நுழைந்து நகரில் பரவி அரண்மனையைச் சூழ்ந்து அதை கைப்பற்றினான். சுதர்மரும் படைத்தலைவன் வீரசிம்மனும் குலத்தலைவர்கள் அனைவரும் சிறைப்படுத்தப்பட்டனர். நால்வகைக் குடியினரும் கூடிய பொதுமன்றில் குருநகரியின் அரியணையில் நகுஷன் அமர்ந்தான். குடித்தலைவர்கள் சேர்ந்து மணிமுடியை எடுத்து அவன் தலையில் சூட்டினர். அந்தணர் கங்கைநீர் தெளித்து அரிமலரிட்டு வாழ்த்த அவன் குருநகரியின் கோலை ஏந்தினான்.

பின்னர் அவையில் எழுந்து தான் ஆயுஸின் மைந்தன் நகுஷன் என அறிவித்தான். தான் காட்டில் வாழ்ந்த செய்தியைச் சொல்லி வசிட்டரின் அறிவிப்பை தன்னுடன் வந்த அந்தணரைக்கொண்டு வெளியிட்டான். அவையினருக்கு அவன் முகம் முன்னரே மெல்லிய ஐயத்தை அளித்துக்கொண்டுதான் இருந்தது. அவன் ஆயுஸின் இளமைத்தோற்றத்தைக் கொண்டிருப்பதை முதியவர் சிலர் தங்களுக்குள் சொல் பரிமாறிக்கொண்டும் இருந்தனர். அரசனின் அறிவிப்பால் அவை திகைத்திருக்க முதியவர்கள் எழுந்து “சந்திரகுலத்து அரசர் நகுஷர் வாழ்க! புரூரவஸின் பெயரர் வாழ்க! ஆயுஸின் மைந்தர் வாழ்க!” என வாழ்த்துக் கூவினர். அவை அதை ஏற்றுக்கூவியது.

அவைக்குக் கொண்டுவரப்பட்ட முதுசெவிலி நகுஷனைக் கண்டதுமே எவரும் ஏதும் கூறாமல் கைகளை விரித்து “மைந்தா! நீதானா? வந்துவிட்டாயா?” என்று கூவியபடி ஓடிவந்து அவன் தோள்களை தழுவிக்கொண்டபோது இளைஞர்களுக்கிருந்த ஐயமும் அகன்றது. இளமைந்தன் காணாமலான பிறகு பிச்சியென்றாகி இருபதாண்டுகளாக அரண்மனை அகத்தளத்திலேயே தனக்குள் பேசி அழுதும் சிரித்தும் அலைந்துகொண்டிருந்தவள் அவள். அவள் அவனை முத்தமிட்டுச் சோர்ந்து காலடியிலேயே மயங்கி விழுந்தாள்.

“நான் என் அடையாளங்களுடனும் வசிட்டரின் சொல்லுடனும் வந்து இந்நகரை குருதிமுறைக் கொடையாக பெற்றிருக்கமுடியும். ஆனால் அப்போதும் குடிகளுக்குள்ளும் படைகளுக்குள்ளும் சில ஐயங்களும் எதிர்ப்புகளும் எஞ்சியிருக்கும். காலம் செல்லச்செல்ல அவை பெருகவும்கூடும். இன்று இந்நகர் நான் வென்று

கைக்கொண்டது. தொல்முறைப்படி எனக்கே முற்றுரிமைகொண்டது. இதுவே வீரனின் வழி” என்றான் நகுஷன். “இப்புவியில் நான் கொள்வதனைத்தும் நானே வெல்வதாகவே இருக்கும் என்று அறிக!”

அவனை வாழ்த்தி அவை கூவிக்கொந்தளித்தது. ஆயுஸின் மைந்தனாக அமைந்து அனைத்து குலமுறைகளையும் அவன் செய்யவேண்டும் என குலமூத்தார் கோரினர். ஆயுஸ் மறைந்தபோது மைந்தன் இல்லாமையால் குருதிவழி மைந்தன் ஒருவனே அனலிட நேர்ந்தது. குருதிவழியிலேயே நீர்க்கடனும் ஆற்றப்பட்டது. “இனி உங்கள் கைகள் அளிக்கும் அன்னமும் நீரும் அவருக்கு செல்லவேண்டும். அவர் விண்ணுலகில் மகிழ்ந்தமையவேண்டும்” என்றார் முதுகுலத்தலைவர்.

அவர்களின் கோரிக்கைப்படி நகுஷன் தந்தைக்கான அனைத்துச் சடங்குகளையும் செய்து அவரை விண்ணிறுத்தினான். குலதெய்வ ஆலயங்களில் பூசனைகள் மேற்கொண்டான். அந்தணக்குலத்தவர் வந்து வேதமோதி வாழ்த்தி அவனுக்கு தங்கள் சொல்லை அளித்தனர். ஷத்ரியகுலங்கள் வாள்தாழ்த்தி பணிவை அறிவித்தனர். வணிகரும் ஆயரும் உழவரும் உரிய கொடைகளுடன் வந்து முடிவணங்கி மீண்டனர்.

போரில் தோற்ற படைத்தலைவன் வீரசிம்மனை நகுஷன் பொறுப்புநீக்கம் செய்தான். அவன் படைமுறைகளைப் பயிற்றுவிக்கும் முதலாசிரியராக ஒரு குருநிலை நிறுவி அமையவேண்டுமென ஆணையிட்டு அதற்கான கொடைகளை அறிவித்தான். அமைச்சர் சுதர்மர் அவரே கானேகுவதாக சொன்னார். “நான் இந்நகரை ஒருதலைமுறைக் காலம் ஆண்டுவிட்டேன், அரசே. இங்கு அரசமுறையென இருப்பது நான் வகுத்தவை. அவற்றை நீங்கள் முற்றாக

மாற்றியமைப்பீர்கள் என நான் அறிவேன். அரசாள்தல் என்பது நம் உடலை உள்ளம் ஆள்வதற்கு நிகர். தன்னியல்பாக உருவான அசைவுகளால் ஆனது அது” என்று அவர் சொன்னார்.

“நான் இங்கிருந்தால் எவ்வண்ணமோ என் ஆட்சியின் நினைவு என்னில் எழும். அது சொல்முரணாக என் நாவில் வந்துகொண்டே இருக்கும். ஆணவமாக பெருகவும்கூடும். அது ஆட்சிக்கு நன்றல்ல” என்றார் சுதர்மர். அதை நகுஷன் ஒப்புக்கொண்டான். “ஆம், தங்கள் மைந்தரை எனக்கு அமைச்சராக்குக! உங்கள் குலம் இங்கு பணியாற்றி ஈட்டிய அரசறிதல்கள் எனக்குத் துணைவரவேண்டும்.” சுதர்மர் “அவன் சிறுவன், உங்களைவிட இரண்டு ஆண்டுகள் இளையவன்” என்றார். “நீங்கள் அமைச்சரானபோது அதைவிட இளையவர்” என்றான் நகுஷன். சுதர்மர் தலைவணங்கினார்.

முடிகோள் சடங்குகளும் பூசனைகளும் முடிந்ததுமே குலமூத்தார் கூடி அரசனிடம் வந்தனர். “அரசியென ஒருத்தி இடம் அமையாது அரியணை கொள்ளலாகாதென்பது நெறி. அரசே, முடிசூடி இணையமைந்த அரசி தொட்டளிக்காமல் பூசனைகளும் கொடைகளும் முழுமையுறாது என அறிந்திருப்பீர்கள். தாங்கள் விழைந்தபடி எங்கள் குடிகளொன்றில் இருந்து பெண் கொள்ளலாம். அனைத்துக் குடிகளிலிருந்தும் ஒரு பெண்வீதம் கொள்வது அரசமுறை. தங்கள் தந்தை அவ்வாறு பெண் கொள்ளவில்லை. அவர்மேல் தந்தைப்பழி இருந்தமையால் குலக்கொடி குறையுடையதாகிவிடக்கூடாது என்பதனால் அயோத்தியின் அரசகுடியைச் சேர்ந்த அரசமகளை மணந்தார். நீங்களோ திறல்வீரர் என அறியப்பட்டிருக்கிறீர்கள். உங்களுக்கு குறையேதுமில்லை” என்றனர்.

“நான் அனைத்துக் குடிகளிலிருந்தும் பெண் கொள்ளவிருக்கிறேன். அரசர்கள் சிலரின் பெண்களையும் அடைவேன். ஆனால் அதற்கு முன் நான் ஒரு பெண்ணை அடைந்தாகவேண்டும். அவளை இளமையிலேயே நான் உளம்கொண்டிருக்கிறேன்” என்றான் நகுஷன். அவர்கள் சற்று திகைத்தபின் “அவள் அரசமகளா? தொல்குடியினளா?” என்றனர். “அவள் கான்மகள். காட்டுக்குள் ஒரு தனிக்குடிலில் வாழ்கிறாள்” என்றான் நகுஷன். “அரசே, அது வீண்முயற்சி என முடியக்கூடும். தங்கள் தாதை ஓர் அணங்கை மணந்துகொண்டுவந்து அடைந்த துயரே தாங்கள்வரை தொடர்கிறது. இக்குலத்தை மட்டுமல்ல இந்நாட்டையும் துயர்கொள்ளச் செய்கிறது” என்றார் ஒரு முதுகுலத்தார்.

“துணைவி என்பவள் தன் இன்னொரு பகுதி என்றே ஆகவேண்டியவள். எவளை அணுகும்போது இவளை முன்னரே முற்றிலும் அறிந்திருக்கிறோம் என்று நமக்குத் தோன்றுகிறதோ அவளே நமக்கு உகந்த இல்லறத்தாள். அவள் நம்மை ஆட்கொள்வதில்லை. நம்மை தன்னில் இழுத்துக்கொள்வதுமில்லை. ஆம், நன்கறிந்தவள் என்பதனாலேயே சற்று சலிப்பூட்டுவாள். விரைவில் அவளை மறந்து நாம் நாமென்றே அமையச்செய்வாள். வெளித்தெரியா வேர் மரத்தை ஊட்டி தாங்கி உயிரென்றாவதுபோல் நம்முடன் இருப்பாள்.”

“ஆனால் எத்தனை அறிந்தாலும் அறியமுடியாதவளாக அகன்றுகொண்டே இருப்பவளே நம் ஆவலை எரிய வைக்கிறாள். அவளையே அணங்கு என்கின்றனர் கவிஞர்” என அவர் தொடர்ந்தார். “அணங்கென அமைபவள் நம் ஆணவத்துக்கு அறைகூவலாகிறாள். அவளை

தேடிச்செல்கையிலேயே நாம் முற்றாக ஆட்படுகிறோம். முழுதும் மறந்து திளைக்கிறோம். அவளே சிறந்த காதலி. நாம் அளிப்பவை அனைத்தையும் உண்டு எழுந்தாடும் தழல் அது. அரசே, அவ்வுறவில் நாம் இழந்துகொண்டே இருப்போம். வெறுமைகொண்டு எஞ்சுவோம்.”

முதுகுலத்தார் தொடர்ந்தார் “அணங்கே சிறந்த காதலி. ஆனால் சிறந்த காதலி சிறந்த மனைவியல்ல என்று அறிக! நூல்கள் பாடும் பெருங்காதலை அடைந்தவர்கள் நல்ல இல்லறத்தை பெற்றதில்லை. ஏனென்றால் அக்காதல் இழப்பினூடாக மட்டுமே முழுமைபெறுவது. அணங்கு ஒருபோதும் வெறும் மனைவி என்றாக முடியாது. அது அவள் நிலைசரிந்து வீழ்வதேயாகும். மனைவியென்றான அணங்கைப்போல் ஏமாற்றமளிப்பவள் பிறிதில்லை. அணங்கைக் காதலிப்பது பாவலர் பாடுதற்கு ஏற்றது. குலம்பெருகி குடிவாழ்வதற்கு உகந்தது அல்ல.”

“ஆம், அதை நானும் உணர்ந்திருக்கிறேன்” என்றான் நகுஷன். “ஆனால் அச்சமூட்டும் ஒன்றைத் தவிர்த்து காப்புள்ள வழியே செல்லத் தொடங்கினால் நான் சென்றடையும் பாதை இனிய இல்லறத்தானுக்குரியது. அச்சமளிக்கும் அறைகூவலாகும் எதையும் எதிர்முகம் கொண்டு மோதி உடைத்து உப்பக்கம் காண்பது ஒரு உளநிலை. அதை ஓரிடத்தில் அடக்கி பிறிதோரிடத்தில் எழுப்ப இயலாது. நான் வென்றுசெல்லவோ இயலாத இடங்களில் வீழவோ மட்டுமே விரும்புகிறேன்.”

“அரசே, காண்பதை எல்லாம் வெல்ல விழைபவன் வீழ்ந்தேயாகவேண்டும்” என்றான் இளம்அமைச்சனாகிய பத்மன். கூரிய வாள்வீச்சென அவன் அப்படி சொன்னது அனைவரையும் திடுக்கிடச் செய்தது. ஆனால் எண்ணம் எடைகொள்ளச் செய்த

விழிகளுடன் திரும்பி நோக்கிய நகுஷன் “ஆம், அதையும் நான் எண்ணாமலில்லை. இறுதி வீழ்ச்சி ஒன்று காத்திருக்கிறது. எங்கோ, எவ்வழியிலோ. ஆனால் அதை எண்ணி அஞ்சினால் இப்பாதை முழுக்க கோழையென்றே செல்லவேண்டியவன் ஆவேன்” என்றான்.

“அமைச்சரே, அறிக! என் வழி ஷத்ரியனுக்குரியது. தூய ரஜோகுணத்தை மட்டுமே என் குருதியில் உணர்கிறேன்” என அவன் தொடர்ந்தான். “என் குலமூத்தாரின் கதைகளையே கேட்டுக்கொண்டிருக்கிறேன். தூய சத்வகுணத்தாலானவர் என் தந்தை. தமோகுணம் அவரைத் தொடர்ந்த நிழல். சத்வகுணம் ஓங்க பிற இரு குணங்களும் ஊடாடப்பெற்றவர் என் மூதாதை புரூரவஸ். நான் இவ்வண்ணம் ஆனது என் ஊழோ சந்திரகுலத்தின் வழியோ ஆகலாம். நான் ஒன்றும் இயற்ற இயலாது.”

பத்மன் “அரசே, உங்கள் ரஜோகுணத்தைப் பின்தொடர்வது தமோகுணமெனும் இருள். அது உங்களைக் கடந்து முன்னால் நீள்கையில் வீழ்வீர்கள்” என்றான். அவன் சொற்கள் அவையினரை மெல்ல துடிக்கச் செய்தன. “அதையும் நான் ஒன்றும் செய்யமுடியாது, அந்தணரே” என்றான் நகுஷன். பத்மன் அவ்வாறு சொல்லியிருக்கலாகாதென்றே அவையோர் உணர்ந்தனர். அவன் அத்துமீறிவிட்டான், அந்தணன் என்னும் இடத்தை உரிமையென்று கொள்கிறான் என எண்ணினர். ஆனால் நகுஷன் “நன்று, என் வழியையே நான் தொடர்கிறேன்” என்றான்.

அன்றே தன் அணுக்கப்படையுடனும் பத்மனுடனும் கிளம்பி காட்டுக்குச் சென்றான் நகுஷன். தன் சோலைக்குடிலில் அவன் முதலில் கண்ட அதே வடிவில்

மலர்விளையாடிக்கொண்டிருந்தாள் அசோகசுந்தரி. அப்பால் நின்று அவளைக் கண்டதுமே பத்மன் “முற்றிலும் துயரற்ற முகம். முனிவருக்கும் இயலாதது. இவள் மானுடப்பெண்ணே அல்ல” என்றான். “ஆம், இளமையழியாதவளாக இங்கிருக்கிறாள்” என்றான் நகுஷன். “இவளைக் கண்டபின் கொள்ளாவிடில் அது பெருங்குறையாக ஆகி உங்களை இருளுக்குள் ஆழ்த்தும்” என்றான் பத்மன். “ஆகவே இவளை கைக்கொண்டு வருவதை எதிர்கொள்வதே அரசனுக்குரிய செயல்.”

நகுஷன் குடிலுக்குள் சென்று “இளையவளே, உன்னை மணக்க விழைகிறேன். நீ என் அரசியென்றமையவேண்டும்” என்றான். அவர்கள் வருவதைக் கண்டதுமே அவள் எழுந்து சிரித்தபடி துள்ளி ஓடி அருகே வந்தாள். அவனை மகிழ்வு நிறைந்த சிறுமியின் விழிகளுடன் நோக்கி “நன்று, நானும் இத்தருணத்தையே காத்திருந்தேன். சற்று பொறுங்கள்” என உள்ளே ஓடிச்சென்று அவள் கருதி வைத்திருந்த அசோகமலர்ச் சருகை கொண்டுவந்து அவனிடம் நீட்டினாள். “இதை என் குழலில் சூட்டுக!” என்றாள்.

அவன் அதை கையில் வாங்கியதுமே ஒளியும் மணமும் மென்மையும் கொண்டு மலரென்றாயிற்று. அவள் குழலில் அக்கணம் விரிந்ததுபோல அமைந்தது. “உங்களுக்காகவே நான் இதுநாள்வரை இங்கே காத்திருந்தேன்” என்று அவள் சொன்னாள். “எனக்கிருக்கும் சொற்கொடையின்படி இந்தக் குடில்வளைவை விட்டு நான் வெளியேறியதுமே இயல்பான முதுமைகொள்ளத் தொடங்குவேன். பிற மகளிரைப்போல மைந்தரைப்பெற்று பழுத்துக் கனிந்து அமைவேன்” என்றாள். “ஆம், அதுவே நன்று” என்றான் பத்மன்.

“வருக தேவி, உனக்காக அரசமணித்தேர் வந்துள்ளது” என்றான் நகுஷன். தேரைக் கண்டதுமே அவள் கைகொட்டி நகைத்தபடி ஓடிச்சென்று அதில் ஏறிக்கொண்டாள். நகுஷனை நோக்கி கைகாட்டி நகைத்து “ஓடிவா... ஓடிவா... குதிரை கிளம்புக... குதிரை கிளம்புக!” என்று கூவினாள். நகுஷன் ஏறிக்கொண்டதும் “அப்படியென்றால் இங்குள்ள பட்டாம்பூச்சிகளை யார் வளர்ப்பார்கள்?” என தன் குடில்நோக்கி திரும்பி ஏங்கினாள். ”அதற்கு நான் ஏவலரை நிறுத்துகிறேன்” என்றான் நகுஷன்.

குருநகரியின் மக்கள் அரசன் அவளை மணம்கொள்ளச் செல்வதை அறிந்து அச்சமும் ஐயமும் கொண்டிருந்தனர். “பிறிதொரு அணங்கு.... மானுட உறவுகள் சிலந்திவலை போன்றவை. பொன்னொளிகொண்டிருந்தாலும் வண்டு அதில் தங்குவதில்லை” என்றார் ஒரு முதியவர். “உறவு எனில் இன்பமும் துன்பமும் அதிலுண்டு. தெய்வங்களும் தேவர்களும் கொள்ளும் உறவில் அவை அவர்களைப்போலவே பேருருக்கொள்கின்றன. அரசன் தன் ஊழை தானே தேர்கிறான்” என்றாள் மூதன்னை ஒருத்தி.

அவன் அவளை அழைத்துவந்த தேர் அணுகுவதை அறிந்ததும் கலைந்த குரல்முழக்கம் எழ உப்பரிகைகளிலும் இல்லமுகப்புகளிலும் அரிமலருடன் கூடி நின்றனர். அவள் அரசனுடன் இணைநின்ற தேர் கோட்டைவாயிலை அடைந்ததும் முரசுகள் முழங்கின. மக்கள் அரையுள்ளத்துடன் தயங்கும் நாவுடன் வாழ்த்தொலி எழுப்பத்தொடங்கினர்.

ஆனால் அவள் முகம் பின்காலையின் வெள்ளி ஒளியில் தங்கள்முன் எழுந்ததும் அவர்கள் அறியாது களிவெறி கொண்டனர். “இவள் பலிகொள்ள வந்த அணங்கல்ல, அருள் எழுந்த தெய்வம். குருநகரியில் எழுந்த நிலவு” என ஒரு

பாணன் கூவினான். “பேரழகு முகம். கள்ளமோ துயரமோ அறியாத விழிகள். இரு தெய்வங்கள் எழுந்தருளிய பொற்பீடம் அவள் முகம்” என்றார் ஒரு பாவலர். மக்கள் வாழ்த்துக்கூவி அரிமலர் வீசி ஆர்ப்பரித்தனர். முதுபெண்டிர் உள எழுச்சி தாளாமல் அழுதனர்.

“அவள் முகமே சொல்கிறது, அவள் முதற்குலத்தாள் என்று. இனி பிறிதொரு வினாவும் வேண்டியதில்லை” என்றனர் நகர்க்குலத்தார். பொன்னரிமலர் மழையில் அவள் பனியிலெழுந்த நிலவென செவ்வொளி கொண்டு நகர் நுழைந்தாள் என்றனர் சூதர்.

# மாமலர் - 36

**36. மலர்வைரம்**

காட்டில் மாறாக்கன்னியென இருந்தபோது அசோகசுந்தரியின் துள்ளலும் பொருளிலாச் சிரிப்பும் மழலையும் எதிலும் நிலைக்காமல் தாவும் விழிகளும் உலகறியாமையும் நகுஷனின் கண்ணில் பேரழகு கொண்டிருந்தன. கன்னியுடலில் வாழ்ந்த சிறுமியின் கைபற்றி தேரிலேற்றிக் கொண்டபோது பனித்துளிகளமைந்த வெண்மலரொன்றைக் கிள்ளி கையிலெடுத்து முகர்ந்து நோக்கவும் தயங்கி நெஞ்சோடு வைத்துக்கொண்டு செல்வதாகவே அவன் உணர்ந்தான்.

செல்லும் வழியெல்லாம் அவள் சிட்டுக்குருவியென சிலம்பிக்கொண்டே வந்தாள். முதற்கணம் அவள் ஒரு சிட்டு என்று தோன்றிய அவ்வெண்ணம் வேறு எப்படி ஒப்புமை கொண்டாலும் மீண்டும் அங்கேயே வந்து சேர்ந்தது. தேன்சிட்டு.

சிட்டு என உடலில் எப்போதும் ஓர் விரைவசைவு இருந்துகொண்டிருந்தது. அடிக்கடி எழுந்தமைந்து, சிறகு விரித்து சேர்த்து அடுக்கி, வால் சொடுக்கி துள்ளி அமைந்து, சிறுகால்கள் எடுத்து வைத்து பறந்தெழுந்தமர்ந்து திரும்பிநோக்கி விழியுருட்டி, கிளைமேலேறி அமர்ந்து, உடனே மீண்டும் மண்ணுக்கு வந்து, இருமுறை கொத்தி மீண்டும் பறந்தெழுந்து சிட்டு கொள்ளும் சலிக்காத துடிப்பு அவளிடம் இருந்தது.

சோலைக்கு வெளியே வந்ததுமே அவள் அகவை குறைந்துவருவது போலிருந்தது. சாலைக்கு வந்தபோது அவள் மழலைச்சிறுமகளாக ஆகிவிட்டிருந்தாள். காணும் ஒவ்வொன்றையும் சுட்டி “அது என்ன?” என்றாள். அதற்கு அவன் மறுமொழி கூறுவதற்குள் பிறிதொன்றைச் சுட்டி “அதோ அது! அது என்ன?” என்றாள். அவள் உள்ளம் உதடுகளில் நிகழ்ந்தது. “அந்த மரம் நகைக்கிறது” என்றாள். “குழந்தைப்பறை அது” என சுட்டினாள். கூகையொன்று மரப்பொந்திலிருந்து எழுந்து வெளிவருவதைப் பார்த்து அஞ்சி கூச்சலிட்டு பாய்ந்து அவனை கட்டிக்கொண்டாள். அவன் தோளில் முகம் புதைத்து “பார்க்கிறது, பார்க்கிறது, அது என்னைப் பார்க்கிறது” என்று கூவினாள்.

மென்பட்டாடை ஒன்று தோள் தழுவியதுபோல் உணர்ந்து அவள் இடைசுற்றி அணைத்தபடி “அஞ்சாதே” என்று அவன் சொன்னான். அஞ்சும் ஒரு மெல்லியலாளை தோள் சேர்த்தணைக்கும்போது மட்டுமே ஆணுக்கெழும் நிறைவை அப்போது அடைந்தான். மறுகணமே அவள் சிரித்தபடி துள்ளி ஒரு குரங்கைப் பார்த்து “அதன் வால்… அதோ, அதன் வால்!”

என்று துள்ளத் தொடங்கினாள். “அந்தக் குரங்கு நல்ல குரங்கா?” “ஆம்” என்று அவன் சொன்னான். “குரங்குகள் நல்லவை.”

“அந்தக் குரங்கு... ஆனால்... இதோ, இது என்ன?” என்றாள். அவன் மறுமொழியை எதிர்பாராமல் தேரைச் சூழ்ந்து வரும் வீரர்களைப் பார்த்து கைவீசி “விரைக! விரைக!” என்று ஊக்கினாள். காவல்வீரனொருவன் தேரைக் கடந்து முன்னால் சென்றபோது “பிடியுங்கள்... அவனை பிடியுங்கள்” என்று நகுஷனின் தோளைத்தட்டி துள்ளிக் குதித்து கூவினாள். “அவன் முந்துகிறான்... அவனை கடந்து செல்லுங்கள்... அய்யோ... விரைவு!”

“தேவி, நீ இவ்வண்ணம் கூச்சலிடக்கூடாது” என்றான். “ஏன்?” என்று புருவம் சுருக்கினாள். “ஏனெனில் நீ அரசி” என்று அவன் சொன்னான். “ஏன்?” என்று அவள் மீண்டும் கேட்டாள். “நீ அரசி. அரசியர் இவ்வாறு கூச்சலிடுவதில்லை” என்றான். அவள் வியப்புடன் “ஏன்?” என்றாள். “அது முறையல்ல” என்றான். விழிகள் எண்ணம்கொண்டு சற்றே சுருங்க “முறை மீறினால் என்ன செய்வார்கள்?” என்று அவள் கேட்டாள். “முறை என்பது மீறாமலிருப்பதன் பொருட்டே...” என்று அவன் சொன்னான். அவள் குழப்பத்துடன் திரும்பி “இவர்கள் அனைவருமே முறை மீற மாட்டார்களா?” என்று வீரர்களை நோக்கி கேட்டாள். “ஆம். மீற மாட்டார்கள்” என்று அவன் சொன்னான். “இவர்கள் ஓடிப்பிடித்து விளையாடும்போதுகூட முறை மீற மாட்டார்களா?”

முதல்முறையாக நகுஷன் பொறுமையிழந்தான். “நான் சொல்வதை செய்” என்றான். அக்குரலின் கடுமையால் அவள் முகம் கூம்பி கண்கள் நீர்சிலிர்க்க தேரின் தூணைப் பற்றியபடி விலகி திரும்பி நின்றாள். அவள் உடலில் எழுந்த சோர்வு

அவனை உளமிரங்கச் செய்தது. அவள் கைகளைப்பற்றி "உன்னை கண்டிக்கவில்லை. அன்புடன்தான் சொன்னேன்" என்றான். அவள் அவன் கையை உதறிவிட்டு சீற்றத்துடன் "நான் பேசமாட்டேன்" என்றாள். "விளையாட்டுக்குத்தான் சொன்னேன்" என்றான். திரும்பிக்கொண்டு "என்னிடம் பேசவேண்டாம்" என்றாள்.

"இதோ பார்..." என்று நகுஷன் தொடங்க அவள் சினத்துடன் தேர்த்தட்டில் காலை உதைத்து "என்னை திரும்ப காட்டில் கொண்டுவிடுங்கள். நான் அங்கேயே இருந்துகொள்கிறேன். இங்கே எல்லோரும் என்னை வசைபாடுகிறீர்கள்" என்றாள். "சரி, இனி ஒன்றும் சொல்லமாட்டேன்" என்றான். அவள் "அதோ அந்த வீரன், அவ்வளவு பெரிய மீசை வைத்திருப்பவன் என்னை பார்க்கிறான். அவனை இந்த வேலால் அடியுங்கள்" என்றாள்.

நகுஷன் தன்னை மீண்டும் கட்டுப்படுத்திக்கொண்டு "சரி, இப்போது இதைப்பற்றி பேசவேண்டாம். அரண்மனைக்குச் சென்றபிறகு நான் முதுசெவிலியரை அனுப்புவேன். அவர்கள் சொன்னபடி நீ கேட்டால் போதும்" என்றான். "ஏன்?" என்று அவள் மீண்டும் கேட்டாள். "ஏனெனில் நீ அரசி" என்றான் நகுஷன். "அரசியென்றால் விளையாடமுடியுமா?" என்று அவள் கேட்டாள். "விளையாடலாம். அதற்குரிய தோழிகள், மலர்த்தோட்டம் அனைத்தும் உண்டு. ஆனால் எல்லா இடத்திலும் விளையாடக்கூடாது. எங்கு எப்படி இருக்கவேண்டுமென்று ஒரு முறை உள்ளது. அப்படி இருக்க வேண்டும்."

அவள் நீர்படர்ந்த விழிகளால் தலை சரித்து நோக்கி "இதையெல்லாம் நீங்கள் என்னிடம் முன்னரே

சொல்லவில்லை” என்றாள். நகுஷன் “குருநகரியின் அரசியென உன்னை அழைத்துப்போகவே வந்தேன்” என்றான். “அரசியென்றால் அங்குள்ள முதுமகள்களின் சொற்படி நடக்கவேண்டும் என்று நீங்கள் ஏன் சொல்லவில்லை?” என்றாள். நகுஷன் “சரி, நாம் பிறகு பேசுவோம்” என்று சாலையை பார்க்கத் தொடங்கினான். அவள் “என்னை முதுமகள்கள் வசையுரைத்தால் நான் அவர்களை அடிப்பேன்” என்றாள். அவன் திரும்பியே பார்க்கவில்லை. “அடிக்க மாட்டேன்... ஆனால்...”

அதை அவ்வாறே விட்டு பிறிதொருத்தியென மாறி விந்தையான ஒரு பறவைபோல் ஒலியெழுப்பி கைகளைக் கொட்டியபடி அவள் துள்ளிக் குதித்து “குரங்கு! குரங்கு!” என்றாள். “அதோ, குட்டியுடன் குரங்கு!” அவனால் திரும்பிப்பார்க்காமல் இருக்க முடியவில்லை. அந்த அன்னைக் குரங்கு அவனை நோக்கி புன்னகைப்பதுபோல் இருந்தது. “அதோ, இன்னொரு குரங்கு...” என்று அவள் அவன் தோளை அறைந்தாள். “அந்தக் குரங்கு சிரிக்கிறது...”

தேரைச் சூழ்ந்து சென்ற காவலர்கள் அனைவரும் அவளுடைய விந்தையான நடத்தையை அதற்கு முன்பே புரிந்து கொண்டுவிட்டிருந்தனர். அவர்கள் முகங்கள் எந்த உணர்வையும் காட்டவில்லையெனினும் விழிகள் அனைத்திலும் திகைப்பும் நகைப்பும் கூர்கொண்டிருந்தன. எவர் முகத்தையும் நோக்குவதைத் தவிர்த்து, முன்னால் வளைந்து எழுந்து வந்து தேருக்கு அடியில் ஒழுகிச் சென்றுகொண்டிருந்த செம்மண் சாலையை மட்டுமே நோக்கியவனாக அவன் தேர்த்தட்டில் நின்று குருநகரியை நோக்கி சென்றான்.

குருநகரியின் மக்கள் அவன் அவளை அழைத்துவரச் செல்வதை முன்னரே அறிந்திருந்தனர். நகருக்கு பழி எஞ்சவைக்கும் பிறிதொரு அணங்கென்றே அவர்கள் எண்ணுகிறார்கள் என்பதை அவனும் ஒற்றர்கள் வழியாக அறிந்திருந்தான். அவளை அவர்கள் எப்படி எதிர்கொள்வார்கள் என்னும் பதற்றம் காட்டுக்குச் செல்லும்போதே அவனிடம் இருந்தது. அவளைக் கண்ட முதற்கணம் அது மறைந்தது. இவளை விரும்பாதோர் இருக்கமுடியாது என்று எண்ணினான். ஆனால் தேரில் வரும்போது அவள் ஒரு கேலிப்பொருளாகிவிடக்கூடுமென்று எண்ணத் தொடங்கினான். கோட்டை வாயில் கடந்து நகருக்குள் அவள் நுழைந்தபோதெழுந்த பெரும்வரவேற்பொலி அவனை உளம் மலரச் செய்தது.

அந்தணர்களும் குலத்தலைவர்களும் அமைச்சர்களும் நிமித்திகர்களும் சூதர்களும் ஏவலரும் கூடிய அரண்மனைப் பெருமுற்றத்தில் சென்று நின்ற தேரிலிருந்து இறங்கியபோது அத்தனை முகங்களும் மலர்ந்து சூழ்ந்திருப்பதை அவன் கண்டான். முதுகுலப்பெண்டு ஒருத்தி கையில் கண்ணேறு நீக்கும் நீர், மலர், சுடர் என்னும் மூன்று மங்கலப்பொருட்களும் உப்பு, மிளகு, மண் என்னும் மூன்று கொடைப்பொருட்களும் கொண்ட தாலத்துடன் அணுகி வந்து தலையுழிந்தாள். அவள் தலைசுழற்றி அதை நோக்கிவிட்டு அதை தன்னிடம் கொடுக்கும்படி கைநீட்டி சிணுங்கினாள்.

மூதாட்டி முகச்சுருக்கங்கள் விரிய சிரித்தாள். இயல்பாகவே குழந்தையிடம் பேசும் மொழி அவளுக்கு அமைந்தது. “ஒன்றுமில்லை அரசி, இது ஒரு சிறிய விளையாட்டு” என்றபடி செங்குழம்பு தொட்டு அவள் நெற்றியில் வைத்து “விழிக்கோள்

அகல்க! மங்கலம் பொலிக! எங்கள் அரண்மனைக்கு அகல் சுடரென வருக!” என்று வரவேற்றாள் மூதாட்டி. அவள் அதிலிருந்த செங்குழம்பை ஒரு கை அள்ளி அம்மூதாட்டியின் தலையில் விட்டு “குருதி! குருதி போல!” என்று சொல்லி குதித்து சிரித்தாள். திரும்பி நகுஷனிடம் “குருதி போலவே இருக்கிறது, பாருங்கள்” என்றாள்.

சூழ்ந்திருந்தவர்களின் கண்களில் தெரிந்த திகைப்பு முதுமகளின் கனிந்த சிரிப்பை பெற்றுக்கொண்டதும் முகங்கள் மலர்ந்து நகைப்புகளின் ஒளி அவர்களை சூழ்ந்தது. முதுமகள் “வருக, அரசி!” என்று அவள் கைகளை பற்றினாள். “இவர்களெல்லாம் யார்?” என்று அவளைத் தொடர்ந்து வந்த பெண்களை நோக்கி அவள் கேட்டாள். “இவ்வரண்மனையின் சேடியர், உங்களுக்கு அன்னையும் உறவும் தோழிகளுமாக இருக்கப்போகிறவர்கள்” என்றாள் தலைவந்த செவிலி.

“எனக்குத்தான் அன்னை, தோழி, உறவு என எவருமே இல்லையே?” என்றாள் அசோகசுந்தரி. “இனி இவர்கள்தான் அவ்வாறு இருக்கப்போகிறார்கள்” என்றாள் முதுசெவிலி. “அப்படியென்றால் நானும் இவர்களுக்கு உறவாக இருக்கவேண்டுமா?” என்றாள். “ஆம், இருக்கவேண்டும்” என்றாள் முதுபெண்டு. “நான் எப்படி இருக்கவேண்டுமென்று யார் சொல்வார்கள்?” என்றாள் அசோகசுந்தரி. “நான் சொல்கிறேன், வருக!” என்று அவளை அழைத்துச் சென்றாள் முதுசெவிலி. அவள் “நான் பாட்டெல்லாம்கூட பாடுவேன்” என்றபடி அவள் கைகளை பற்றிக்கொண்டு தலையை அவள் தோளில் சாய்த்து கொஞ்சியபடி சென்றாள்.

நகுஷன் பதற்றத்துடன் குலமூத்தார் விழிகளை நோக்க அவையனைத்திலும் இனிய புன்னகையே நிறைந்திருப்பதைக்

கண்டான். அவன் உள்ளத்தில் எழுந்த பதற்றம் அடங்கி முகம் புன்னகைகொண்டது. முதுசெவிலி “இந்த நீர்க்குடத்தை இடுப்பில் ஏற்றுக்கொள்ளுங்கள். இந்தச் சிற்றகலை வலக்கையில்” என்றாள். “நீரை என்ன செய்யவேண்டும்?” என்று அவள் கேட்டாள். “உள்ளே சென்றதும் நானே வாங்கிக்கொள்கிறேன்.” அவள் உள்ளே எட்டிப்பார்த்து “உள்ளே இருட்டாக இருக்குமா?” என்றாள். “இருக்காது. இந்த விளக்கு அழகுக்காக” என்றாள் மூதன்னை. “ஆம், அழகாக இருக்கிறது. இதை நானே வைத்துக்கொள்ளவா?” என்றாள். “இங்குள்ள அனைத்தும் உங்களுக்குத்தான்.” அவள் வியந்து “எனக்கேவா?” என்றாள். “ஆம் அரசி, வருக!” என அவளை தோள்தழுவி அழைத்துச்சென்றாள் மூதன்னை.

நகுஷன் தன் அறைக்குச் சென்று ஆடைகளைந்து ஓய்வெடுத்துக்கொண்டிருந்தபோது மெல்லிய காலடிகளுடன் உள்ளே வந்த முதுசெவிலி புன்னகையுடன் “கவலை கொள்ளவேண்டாம் மைந்தா, கானகக் குடிலில் தனித்து வாழ்ந்திருக்கிறார். தந்தையை அணுகவில்லை. அன்னையை அறிந்ததே இல்லை. விளையாட்டு ஒன்றைத் தவிர இத்தனை நாட்களில் அவர் செய்தது எதுவுமே இல்லை. அதையன்றி பிறிதெதையும் அறியாமலும் இருக்கிறார். அனைத்தையும் பழக்க முடியும். சில நாட்களாகும்” என்றாள். அறிவிப்பின்றி அவன் அறைக்குள் செல்லவும், அவன் உடலை தயங்காது தொடவும் அன்னை என அவள் உரிமைகொண்டிருந்தாள்.

“மணநிகழ்விற்கு இன்னும் சில நாட்களே உள்ளன. அதற்குள் குடியினர் கண்முன்னர் மட்டுமாவது அவையடக்கத்துடன் இருக்கும்படி அவளிடம் சொல்ல முடியுமா?” என்றான் நகுஷன். “சொன்னால் புரிந்து கொள்ளக்கூடியவராக இருக்கிறார்.

அன்புடன் சொல்வனவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற இயல்பும் உள்ளது. எதன்மேலும் சினமோ ஐயமோ வருத்தமோ இல்லை என்பது ஒரு பெரும்பேறு” என்றாள் முதுசெவிலி. “துயரற்றவர்களை எளிய மானுடரால் தாளமுடிவதில்லை என்பது எவ்வளவு பெரிய விந்தை என எண்ணிக்கொண்டிருக்கிறேன். இவ்வுலகின் அனைத்து ஒழுங்குகளும் முறைமைகளும் துயர்கொண்டவர்களுக்காக அமைக்கப்பட்டவை போலும். பிறர் துயரை சீண்டிவிட்டுவிடலாகாதென்னும் எச்சரிக்கையாலேயே நம் இடக்கரடக்கல்கள் அனைத்தும் வகுக்கப்பட்டுள்ளன.”

“அவள் துயரற்றிருக்கும்பொருட்டே பிறந்தவள்” என்றான் நகுஷன். முதுசெவிலி “ஒருவகையில் வாழ்ந்து கனிந்து நாம் சென்றடைய வேண்டிய இடத்தில் முன்னரே இருந்துகொண்டிருக்கிறார் நம் அரசி. அவரது வாழ்க்கைச்செலவு என்பது நாம் செல்லும் திசைக்கு எதிரானது. நமக்கு எதிரே அங்கிருந்து இறங்கி வந்துகொண்டிருக்கிறார்” என்றாள். நகுஷன் “அவளுக்கு இன்னும் வயதாகவில்லை. அவள் கொண்ட சொல்பேற்றின்படி அக்குடில்விட்டு எழுந்த பின்னர்தான் அவள் அகவை தொடங்குகிறது. கனிந்து நிறைவுற இன்னும் காலமிருக்கிறது” என்றான்.

முதுசெவிலி “ஆம், அவர் கனியக்கூடும்” என்றாள். “ஆனால் அக்கனிவு ஒரு வீழ்ச்சியோ என ஐயம் கொள்கிறேன். சிறுமியென்றிருந்த நினைவுகள் பெண்களை முதுமைவரை வளர்ந்தபடி தொடர்கின்றன. முதுமையில் அவை முற்றொளி கொள்கின்றன. அதை என்னைப்போன்ற முதுமகள்கள் சொல்லக்கூடும். உங்களைப்போன்ற ஆண்மகன்கள் அறிந்திருக்க வாய்ப்பில்லை.” நகுஷன் சிறுசீற்றத்துடன்

“கொஞ்சிக்கொஞ்சி அவளை அவ்வாறே வைத்திருக்கவேண்டாம். அறிந்திருப்பீர்கள், குட்டிக்குதிரை அழகியது. ஆனால் அதை கொஞ்சக்கூடாது. கொஞ்சப்படும் குதிரைக்குட்டி கடிவாளத்தையும் சேணத்தையும் ஏற்றுக்கொள்ளாது” என்றான். “சிறுமி கன்னியென்றாகட்டும். கன்னி அரசியென்றாகி அன்னையென்றாகி மூதன்னையாகி முதிரட்டும். அதுவே கனிதல். அன்றேல் அது வெம்புதல்.”

“நான் சொல்லாட வரவில்லை, மைந்தா. பெண்ணின் முதிர்வு உடலின் போக்கில் நிகழ்வது அல்ல” என்றாள் முதுசெவிலி. “நீ ஐயமோ துயரோ கொள்ளவேண்டியதில்லை. அவரை சீர்ப்படுத்த ஏழு செவிலியர் செலுத்தப்பட்டுள்ளனர். அன்னையென்று இருவர், தமக்கையென இருவர், தோழியென இருவர், இளையவளாக ஒருத்தி. அனைத்தும் அவர்களுக்கு ஆணையிடப்பட்டுள்ளது.” “ஆம், முதிய குதிரைகளுடன் குட்டிக்குதிரையை சேர்த்து அனுப்புவதே பழக்கும் வழி” என்றான் நகுஷன். “ஆனால் வைரத்துடன் வைக்கப்படும் பளிங்குகள் தாங்கள்தான் ஒளியை பெற்றுக்கொள்கின்றன” என்றபின் முதுசெவிலி திரும்பிச் சென்றாள்.

நகுஷன் அவளை அரண்மனை மாற்றிவிடுமென எண்ணினான். ஏனென்றால் அவனை அரண்மனை முற்றிலும் மாற்றிவிட்டிருந்தது. அவன் அரண்மனைக்கு வந்த சிலநாட்களில் வெளியே காவலர்கள் குரங்குக் கூட்டம் ஒன்றை முரசெழுப்பித் துரத்தும் ஒலி கேட்டு “என்ன அங்கே? இங்கு அரசுசூழ்தல் நிகழ்கிறதென்று அறியமாட்டீர்களா?” என சினந்தான். “ஒரு குரங்குக் கூட்டம், அரசே” என்றான் காவலர்தலைவன். “அவற்றைத் துரத்த உங்களுக்கு தேரும் புரவியும் தேவையா?” என அவன் கூவினான். தலைவணங்கி

காவலர்தலைவன் வெளியே சென்றான். குரங்குக் கூட்டம் படைவீரர்களால் சிற்றம்புகள் எய்யப்பட்டு துரத்தியடிக்கப்பட்டது.

அன்று மாலை அவன் அறைக்கு வந்த முதுசெவிலி “நான் புறங்காட்டுக்கு சென்றிருந்தேன்” என்றாள். அவள் முகம் சிவந்து சினம்கொண்டிருப்பதை உணர்ந்த நகுஷன் “என்ன?” என்றான். “வந்த குரங்குகளில் ஓர் அன்னை இருந்தாள். முதுமகள், விரைவிலேயே இறந்துவிடுவாள். அவள் முகத்தைக் கண்டதுமே நான் அறிந்துகொண்டேன், இப்பிறவியில் நான் பெருங்கடன் கொண்டிருப்பது அவள் ஒருத்தியிடம் மட்டுமே” என்றாள். திகைத்து எழுந்த நகுஷன் “அன்னையா? எங்கே அவள்?” என்றான். “புறங்காட்டில் ஒரு மரத்தில் இருக்கிறாள். நோயுற்றிருக்கிறாள். நான் சென்று அவள் அடிபணிந்து உணவளித்து மீண்டேன். அவளும் என்னை அறிந்துகொண்டாள்.”

கண்ணீருடன் அவன் புறங்காட்டுக்கு ஓடினான். அவனுடன் முதுசெவிலியும் வந்தாள். “அவள் உன்னை காணவிழைகிறாள். ஆனால் அதை கேட்காமலிருக்கும் தன்மதிப்பு கொண்ட பெருங்குடிமகள் அவள்” என்றாள். அவர்கள் சென்றபோது அன்னை கீழே விழுந்திருந்தாள். குரங்குகள் அவளைச் சூழ்ந்து அமர்ந்திருந்தன. அவன் அணுகுவதைக் கண்ட ஒரு குரங்கு முழவோசை எழுப்பியது. அவன் அன்னையை அணுகியதும் அவள் மைந்தர்களில் ஒருவன் அவள் கைகளைப்பற்றி ஆட்டி அவன் வந்திருப்பதை அறிவித்தான். அவள் விழித்தசைகள் அதிர்ந்து இமைகள் கீழிறங்கி நோக்கு பனித்துளியென எழுந்தது. அவனை நோக்கி தன் கையை நீட்டினாள். அவன் அதை பற்றிக்கொண்டான். நகங்கள் எழுந்த முதிய கை

நெடுநேரம் நடுங்கிக்கொண்டிருந்தது. பின் அவள் விழிமூடி மூச்சுசீரடைந்து மெல்ல தேய உயிர் அணைந்தாள்.

அவளை அவள் குலத்தவர் தூக்கி காட்டுக்குள் கொண்டுசென்றார்கள். விழிநீருடன் நின்ற நகுஷனிடம் ஒவ்வொரு குரங்காக வந்து கைநீட்டி அவன் கைகளைத் தொட்டு உதட்டைநீட்டி தலைகுனிந்து விடைபெற்றன. பல குரங்குகளின் உடலில் சில்லம்புகள் பட்ட புண்கள் இருந்தன. அவர்கள் சென்று மறைந்ததும் அவன் நிலத்தில் அமர்ந்து அழுதான். மூதன்னை "எப்போதும் எதையும் மறக்காமலிருப்பதே அரசபண்பு. இன்று நீ வந்து அன்னையைக் கண்டது உன் நற்செயல்விளைவாக அல்ல, அவள் கொண்ட நற்பேறினால்தான்" என்றாள்.

ஆனால் மீண்டும் அவன் அரசச்செயல்களில் ஈடுபட்டபோது குரங்கன்னை நினைவாழத்திற்கு சென்றாள். அவன் நாடு திரிகர்த்தர்களிடமும் உசிநாரர்களிடமும் பூசலில் இருந்தது. எல்லைப்பகுதிகளில் அசுரகுடிகளும் நாகர்குடிகளும் ஆற்றல் பெற்றுக்கொண்டிருந்தனர். "நாகர்நாடு நம்மை எக்கணமும் வென்றுவிடுமென நாம் அஞ்சிய காலமொன்றிருந்தது, அரசே. ஆனால் இன்று நாகர்களின் பேரரசன் ஹூண்டன் கால்தளர்ந்து படுக்கையில் கிடக்கிறான். அவன் முன்னின்று படைநடத்தாதவரை நாம் அஞ்சவேண்டியதில்லை" என்றான் பத்மன். ஒவ்வொருநாளும் அவன் அரசப்பணிகளில் மூழ்கவேண்டியிருந்தது. அரசப்பணி ஆற்றும்தோறும் அரசனாக ஆனான். மொழியும் நோக்கும் அரசத்தன்மை கொண்டன. முடியும் கோலும் அவன் உடலென்றே ஆகின. அவ்வாறே அவளும் ஆகவேண்டுமென எண்ணினான்.

பத்மன் அவனுள் எழுந்த அந்தச் சிறுநம்பிக்கையையும் அழித்தான். “தாங்கள் அவர் இப்போது இருக்கும் இவ்வண்ணத்திலேயே ஏற்றுக்கொள்ள பழகத்தான் வேண்டும்” என்றான் அவன். “தாங்கள் கண்டு காமுற்றது அக்கன்னிமையின் அழகையல்லவா? எவ்வளவு எண்ணியும் நான் புரிந்து கொள்ளாதிருப்பது இது ஒன்றே. கன்னிமையின் எழிலையும் துடிப்பையும் கண்டு ஆண்கள் காதல் கொள்கிறார்கள். கைபிடித்த மறுகணமே அக்கன்னிமை எழில் கரைந்து அவள் ஓர் அன்னை என்று ஆகவேண்டும் என விழைகிறார்கள்.”

நகுஷன் சினத்துடன் “பிஞ்சுக்கு ஓர் அழகு உண்டு. தனி மணமும் உண்டு. ஆனால் பிஞ்சென்றே தொடர்வது கனியாகப் போவதில்லை” என்றான். “கனியப் போகும் காய் பிஞ்சிலேயே அதன் இயல்புகளை கொண்டிருக்கும்” என்று பத்மன் சொன்னான். “அரசே, சில மலர்கள் பிஞ்சோ காயோ கனியோ ஆவதில்லை. அவை மானுடர் அறியமுடியாத நோக்கங்களுக்காக படைக்கப்பட்டவை. தொன்மையான சூதர்பாடலான குஸுமாவளியில் காயாமலர்கள் என்று ஒரு பகுதி உண்டு. காயாகி கனியாகும்பொருட்டு பல்லாயிரம் மலர்களைப் படைத்த பிரம்மன் தன் கலைத்திறன் கண்டு மகிழ்ந்து தான்நோக்கி மகிழ்வதற்கென்றே படைத்தவை அவை என்று அது சொல்கிறது.”

நகுஷன் அதை காதூன்றிக் கேட்பதற்கே கசந்தான். பத்மன் சொல்லிமுடிக்கும் உளவிசை கொண்டிருந்தான். முதிர்ந்த அமைச்சர்களுக்குரிய உளக்கட்டுப்பாட்டை அவன் இன்னமும் அடைந்திருக்கவில்லை. “நேற்று அரசி தன் அறைக்குள்

விளையாடுவதை சென்று பார்த்தேன். ஒரு குழந்தை விளையாடுவதைக் கொண்டே அது பின்னாளில் எவர் என சொல்லமுடியும் என்பது நிமித்திகநூல் கணிப்பு" என தொடங்கினான். நகுஷன் அவன் விரும்ப ஒண்ணா எதையோ சொல்லப்போகிறான் என்று உணர்ந்தவனாக விழிகளில் விலக்கத்துடன் நோக்கினான். அதிலிருந்த மன்றாட்டே சிறுவனாகிய பத்மனை மேலும் எழுச்சிக்கொள்ள செய்தது.

"அரசே, எழுந்து அமர்ந்து, இதழ் நீரொழுக, திருந்தாமொழி பேசி விளையாடும் சிறு பெண்குழந்தைகளை கண்டிருக்கிறேன். அப்போதேகூட அவர்கள் அன்னையர்தான். சிறு பொருட்களை அவர்கள் கையிலெடுப்பதும் மடியமர்த்துவதும் மார்புசேர்ப்பதும் கண்டால் அவர்களின் கைத்தளிர் பட்டு குழைந்து அப்பொருட்கள் குழந்தைகளாக ஆவதை காணமுடியும். அன்னையென்று ஆவது மட்டுமே பெண்மழலையருக்கு ஆடல்" என்றான் பத்மன்.

"ஆனால் நம் அரசியில் ஒருகணமும் அன்னை எழவில்லை. அவரது உள்ளம் அதை அறியவில்லை. ஏனென்றால் அவர் அன்னையை கண்டதில்லை. உடலும் அறிந்திருக்கவில்லை என்பதே விந்தை. வண்டென்றும் சிட்டென்றும் மானென்றும் குரங்கென்றும் மட்டுமே விளையாடுகிறார். அன்னையென்று ஆடும்படி அவரது களித்தோழிகளிடம் சொல்லியனுப்பினேன். அவர்கள் மரப்பாவைக்குழவியை கொண்டுசென்று காட்டினர். அது என்னவென்றுகூட அவரால் உணரமுடியவில்லை. அவரால் அவ்விளையாட்டில் கலந்துகொள்ளவும் முடியவில்லை. கைக்குழந்தைகளையே அவர் விளையாடும்பொருட்டு அளித்தேன். அவற்றை அவர் தன்னைப்போன்றே எண்ணுவது தெரிந்தது."

நகுஷன் “அப்படியென்றால்...?” என்றான். “இவரை நாம் சில செயல்களுக்கு பழக்கமுடியும். ஒருவேளை அரசாடை புனையவும், அரியணையில் சற்று நேரம் அமரவும், விழாக்களில் அணிசூடி நின்று குடிவாழ்த்து வழங்கவும் பயிற்றுவிக்கமுடியும். ஒருபோதும் இவ்வரண்மனைக்கோ இக்குடிக்கோ இந்நகருக்கோ உரியவர்களாக ஆக்க முடியாது” என்றான் பத்மன். “பழக்க முடியுமென்று செவிலி சொன்னார்” என்றான் நகுஷன். “அரசே, கிளியையும் மைனாவையும் பழக்க முடியும். குயிலை பழக்க முடியாது” என்று பத்மன் சொன்னான்.

பெருமூச்சுடன் தளர்ந்து “நான் இதை எண்ணவே இல்லை. அவள் மேல் மையல்கொண்டபோது நான் அரசனாக இல்லை” என்றான். “இல்லை அரசே, குரங்கன்னையின் மைந்தனாக இருந்தபோதே நீங்கள் அரசன். ஆகவேதான் உங்களால் அன்று எண்ணிப்பார்க்கவும் இயலாத அழகுடன் இம்மங்கையை பார்த்தபோதுகூட இவளை கைப்பற்ற வேண்டும், உரிமை கொள்ள வேண்டும் என்ற விழைவு உங்களிடம் எழுந்தது. நீங்கள் அஞ்சி விலகவில்லை. ஐயம் கொண்டு ஒடுங்கவும் இல்லை” என்று பத்மன் சொன்னான்.

நகுஷன் நீள்மூச்சுடன் “பிறிதொன்றில் என் உள்ளம் அமையவில்லை, பத்மரே. பிற பெண்கள் பொருட்டெனத் தெரியவும் இல்லை. அரச முறைப்படி நான் பல பெண்டிரை மணப்பேன் என்பதில் எனக்கு ஐயமில்லை. ஆனால் ஒவ்வொரு ஆணுக்கும் அவன் உளம் அமைந்த பெண்ணொருத்தி உண்டு. எனக்கு அவள் இவளே” என்றான்.

ஓரிரு நாட்களிலேயே முதுசெவிலியும் வந்து சொன்னாள் “அரசியை மாற்ற முடியுமென்று தோன்றவில்லை, அரசே.

மலர்போன்ற மென்மை என எண்ணினோம். அணுகுகையில் வைரத்தில் செதுக்கப்பட்டது அம்மலர் என்று தோன்றுகிறது. எதுவும் அவரில் படிவதே இல்லை. இங்கிருந்து எதையும் அவர் உள்வாங்குவதில்லை. அனைத்தும் சிரிப்பாக விளையாட்டாக பட்டு எதிரொளித்து வெளிவந்துவிடுகின்றன."

நகுஷன் "என்ன செய்வது? மணநாட்களிலாவது அவள் அரசியெனத் தோன்றினால் போதும்" என்றான். "அதைத்தான் மீள மீள சொல்லிக்கொண்டிருக்கிறேன். இதுவரைக்கும் எந்த நம்பிக்கையும் அவர் அளிக்கவில்லை" என்றாள் முதுசெவிலி.

# மாமலர் - 37

### 37. பாவையாடல்

அசோகசுந்தரி வந்த வேளை குருநகரியை விண்ணகங்கள் வாழ்த்த வழியமைத்தது என்று நிமித்திகர் கூறினர். அவள் நகர்நுழைந்த அன்று மாலை இளவெயிலில் ஒளிப்பெருக்காக மழை ஒன்று பெய்தது. கீழ்த்திசையில் வானவில் ஒன்று நகர்மேல் வளைந்து நின்றது. அன்றும் தொடர்ந்துமென ஏழு நாட்கள் மழை பெய்து நகர் குளிர்ந்தது. மலைகளுக்குமேல் மின்னல்கள் பின்னப்பட்ட முகில்முடி அமைந்தது. மண்மணத்துடன் பெருகி வந்தன சிற்றாறுகள்.

ஏழாம்நாள் நகருக்கு வடக்கே வீடமைக்க மண்தோண்டியவர்கள் ஒரு புதையலை கண்டடைந்தனர். அறியாத தொல்லரசன் ஒருவனின் மண்முடியும் ஏழு கலம் பொன்னும் அதிலிருந்தது. அச்செல்வம் கருவூலத்தை அடைந்த மறுநாள் ஆயர்குடிகள் நகருக்குள் வந்து ஆடு ஒன்று ஏழு

குட்டியிட்ட செய்தியை சொன்னார்கள். ஒவ்வொரு நாளும் இனிய செய்திகள் அணைந்தன. “திருமகள் எழுந்தாள். சுடர் எழுந்தபின் அகல் வெறும் மண்குவளை அல்ல” என்றார் நகர்க்கவிஞர் ஒருவர்.

அரண்மனையை சில நாட்களிலேயே முழுமையாக நிறைத்துவிட்டாள் அசோகசுந்தரி. இடைநாழிகளில் மான்களையும் மயில்களையும் துரத்திக்கொண்டு ஓடினாள். தூண்களில் தொங்கவிடப்பட்ட மலர்த்தோரணங்களைப் பற்றி தொங்கி மேலேறி உத்தரங்களின் மேல் கைவிரித்து நடந்து கூச்சலிட்டு நகைத்தாள். ஒருநாள் அரண்மனையின் கூரைக்கூம்புமேல் ஏறி உச்சிக்கம்பத்தைப் பற்றியபடி நின்று கூச்சலிட்டு நகைத்தாள். அரண்மனைக்காவலர் கூடி அவளை கெஞ்சி மன்றாடி இறங்கிவரச் செய்தனர்.

மலர்த்தோட்டங்களில் பகல் முழுக்க அலைந்து திரிந்தாள். எதையெதையோ பொறுக்கிக் கொண்டுவந்து சேர்த்தாள். மயிலிறகுகள் முதல் முயல்புழுக்கைகள் வரை அவள் சேமிப்பில் இருந்தன. அருமணி பதிக்கப்பட்ட கணையாழிகளையும் கூழாங்கற்களையும் ஒன்றாக சேர்த்து வைத்திருந்தாள். “அழகுள்ளவை என அவர் எவற்றை எண்ணுகிறார் என்றே புரியவில்லை. பாம்புச்சட்டை ஒன்றை எடுத்து தோளிலிட்டுக்கொண்டு வந்தார் நேற்று” என்றாள் அவைச்சேடி. “அது அழகுதான், பாம்பை நாம் அஞ்சாமலிருந்தால். வெள்ளிச்சால்வை” என்றாள் முதுசெவிலி.

அரண்மனையின் விலங்குகளும் பறவைகளும் அவளுக்கு அணுக்கமாயின. பின்னர் சேடியரின் குழந்தைகள் அவளுக்கு சுற்றமாக மாறின. ஓரிரு நாட்களுக்குள்ளே அரண்மனையின் சேடியரும் ஏவலரும் அவளை தங்கள் குழந்தை என

எண்ணத்தலைப்பட்டனர். மானுடருக்குள்ள வேறுபாடு அவள் எண்ணத்தில் படியவில்லை. விழிகளிலோ மொழிகளிலோ எவ்வகையிலும் அது வெளிப்படாதபோது மானுடப் படிநிலைகளாலான உலகில் பிறந்து வளர்ந்து வாழ்ந்த அரண்மனை மக்களுக்கு அவளுடன் இருப்பதென்பது விடுதலைக்கனவு போலிருந்தது. தொலைவில் அவளைக் கண்டாலோ, எங்கேனும் அவள் குரலைக் கேட்டாலோ, அவள் பெயரை எவரேனும் சொல்லக்கேட்டாலோ அவர்கள் முகம் மலர்ந்தனர். அவளுடன் இருக்கையில் பொறுப்பையும் கடமையையும் தன்னிலையையும் முற்றிலும் மறந்து அவர்களும் களிகொண்ட மைந்தர்களும் சிறுமியரும் என ஆயினர்.

முதுசெவிலியர் கூவி நகைத்தபடி அவளை துரத்திக்கொண்டோடினர். காவலர்கள் தங்கள் படைக்கலங்களை அவளுக்கு விளையாடக்கொடுத்து தாங்களும் சுற்றி விளையாடினர். அவளிருக்கும் இடத்தில் ஆடலிருக்குமென்பதனால் அத்தனை குழவியரும் அவளுடனிருந்தனர். அரண்மனை அகத்தளம் எப்போதும் சிரிப்பும் கூச்சலும் நிரம்பியதாக மாறியது. அங்கிருந்து கிளம்பி அவள் அமைச்சுநிலைகளுக்கும் படைத்தலைவர் அறைகளுக்கும் செல்லத்தொடங்கியபோது அவளைத் தடுக்கும்பொருட்டு வாயில்களனைத்தையும் முற்றாக மூடி வைக்கும்படி பத்மன் ஆணையிட்டான். “நல்லவேளை, அவரால் பறக்கமுடியாது. நாகம்போல் ஒழுகவும் இயலாது” என்றான் சிற்றமைச்சன்.

நகுஷனிடம் “இதில் நன்றென ஒன்று உள்ளதென்றால் எல்லைகளை மீறிச்செல்லும் வழக்கம் அவருக்கில்லை

என்பதே. நெடுங்காலம் எல்லைக்குள் வாழ்ந்து பழகியவர் என்பதால் தான் அடைந்த இடத்திற்குள் மேலும் மேலும் வெளிபெருக்கி முடிவின்மையை உருவாக்க அவரால் முடிகிறது. ஒரு சிறு இடைநாழியையே நகரம்போல் எண்ணிக்கொள்ள அவர்களால் முடியும். ஒரு மரத்தை காடாக்கவும் ஒரு நிழலில் முழுநாளையும் வாழ்ந்து நிறைக்கவும் இயலும்" என்றான் பத்மன். "ஒவ்வொன்றும் அவருக்காக பேருருக் கொள்கின்றதோ என ஐயம்கொள்கிறேன், அரசே" என அவன் தொடர்ந்தான். "நேற்று ஒரு கருவண்டு யானையாகியது. மத்தகம் உலைய அடிமரக்கால் எடுத்துவைத்து அது நடந்ததை நானே கண்டேன். அது பிளிறியதை இரவில் கனவில் கேட்டேன்."

"அவர் கொண்டிருக்கும் உலகியல் ஆர்வம் எனக்கு முதலில் வியப்பையே ஊட்டியது" என்றாள் முதுசெவிலி. "அணிகளையும் ஆடைகளையும் அள்ளி சூடிக்கொள்கிறார். ஓர் ஆடையைக் கண்டதும் அணிந்திருந்த ஆடையை அக்கணமே கழற்றி வீசி அதை அணிகிறார். நகையொன்றை அணிந்து பிறிதொரு நகையை கையில் எடுத்தபடி விலகி ஓடி துள்ளிக்குதித்துச் சுழன்றதுமே முதல் நகையைக் கழற்றி அங்கேயே வீசிவிட்டு அடுத்ததை அணிகிறார்."

"ஆனால் பின்பு அறிந்தேன், உலகியல்பொருட்களில் உறையும் தெய்வப்பேரழகை. அவர் அணிகளிலும் ஆடைகளிலும் அந்த அழகை மட்டுமே காண்கிறார். அவை செல்வமென்று அவர் அறிந்திருக்கவில்லை. பொன் நாணயங்களையும் அரச முத்திரைகளையும் கூழாங்கல்லெனவே அவர் விழிகள் நோக்குகின்றன" என முதுசெவிலி தொடர்ந்தாள்.

“கைக்குழந்தைகளையும் மலர்களைப்போலவே எண்ணிக்கொள்கிறார். இடையிலும் தோளிலும் எப்போதும் குழந்தைகளை வைத்திருக்கிறார். ஆனால் குழந்தைகளுக்கு அவர் அன்னையென்றில்லையென்பதை அன்னையர் உடனே புரிந்துகொள்கின்றனர். குழந்தைகளைப் பேணவோ காக்கவோ அவரால் இயலவில்லை. ஆர்வமிழந்த இடத்திலேயே குழந்தையை விட்டுவிட்டு அடுத்த விளையாட்டுக்கு செல்கிறார். குழந்தையின் அழுகை அவரை கரைக்கவில்லை. முகம் சிணுங்கி அது அழத்தொடங்கியதுமே அங்கேயே விட்டுவிட்டு பிறிதொன்றை நோக்கி திரும்பிக்கொள்கிறார். பிறிதொரு குழந்தை அவர், அதில் அன்னை எழமுடியாது” என்றாள் முதுசெவிலி.

ஆனால் குழந்தைகள் அவளையே விரும்பின. எதிர்ப்படும் விழிகளிலெல்லாம் அன்னையரைக் கண்டு சலித்திருந்த அவர்களுக்கு பெரியவர்களின் ஆற்றல்கொண்ட அவ்வழகிய குழந்தை புதியதொரு களியாட்டமாக அமைந்தது. கையை நிலத்திலறைந்து கடைவாய் ஒழுக தவழும் குழந்தைகூட அவள் குரல் கேட்ட திசை நோக்கி திரும்பியது. அன்னையரின் கைகளிலிருந்து திமிறி சறுக்கி இறங்கி கால் கை உதைத்து கிண்கிணி இழுபட அவளை நோக்கியே சென்றது.

மணவிழா மேடையிலேயே அவள் எவளென்று குடிகள் அனைவரும் அறிந்துகொண்டனர். மங்கல ஆடையணிந்து சேடியர் இருபுறமும் அகம்படி வர மங்கலக் கணிகையர் முன்னால் வாழ்த்துரைத்துச் செல்ல இசைச்சூதர் பின்னால் முழங்கித் தொடர மணமேடைக்கு அவள் வந்தபோது மக்கள் குரவையிட்டு அரிமலர் தூவி அவளை வாழ்த்தினர். குரவையொலி கேட்டு அவள் துள்ளிக் குதித்துச் சுழன்று

அனைவரையும் பார்த்து தானும் நகைக்கூச்சலிட்டாள். வாயில் கைவைத்து நாக்கு சுழற்றி குரவையொலி இட்ட பெண்களைப் பார்த்து தானும் அதுபோலவே கைவைத்து ஒலியெழுப்ப முயன்றாள். அவளைக் கட்டுப்படுத்த பின்னால் வந்த முதுசெவிலி இரு கைகளையும் பற்றி மென்குரலில் அடக்க அவள் மெல்ல தணிந்து பின் செவிலி அகன்றதும் மீண்டும் வாயில் கைவைத்து குரவையிட்டாள்.

தலைமேல் விழுந்த அரிமலர்கள் கண்ணில் படாமல் தடுக்க ஆடைமுனையை எடுத்து தலைக்கு மேல் விரித்து பிடித்துக்கொண்டாள். கைகளை விரித்து அசைத்து மழைவிளையாடுவதுபோல அரிமலர் பொழிவை அளைந்தாள். அப்பால் ஒருங்கியமைந்திருந்த மணமேடை அறையில் நகுஷனைப் பார்த்ததும் நிரையொழுங்கை உடைத்து அவனை நோக்கி ஓடிவந்து "இங்கே இருக்கிறீர்களா?" என்று கூச்சலிட்டாள். அந்தணர்களை கால்தூக்கி வைத்து கடந்து அவனருகே வந்து அமர்ந்துகொண்டாள். குரவையிட்ட பெண்கள் ஓசையடக்கி வியந்து அவளைப் பார்த்தனர். அந்தணர்கள் தங்கள் சொல்முதல்வரை விழிகளால் உசாவ அவர் பணி தொடரட்டுமென்று இமையசைத்தார்.

நகுஷன் செவிலியை உறுவிழிகளால் பார்த்து அவளை கட்டுப்படுத்தும்படி அறிவுறுத்தினான். நான் என்ன செய்வது என்று அவள் பதற்றத்துடன் கைகாட்டினாள். தான் வந்த வழி முழுக்க கண்டவற்றை உரத்த குரலில் அவள் அவனிடம் சொல்லத்தொடங்கினாள். "அங்கே ஒரு மான் நின்றது. அதை இங்கே கூட்டிவர முயன்றேன். அது இவர்கள் எழுப்பும் ஓசையைக் கேட்டு ஓடிப்போய்விட்டது. நல்ல மான்... அதற்கு நான் மிருகி என்று பெயரிட்டிருக்கிறேன். இதோ, இவர்கள் ஏன்

இப்படி ஓசையிடுகிறார்கள்? இந்த ஓசையை நான் இதற்குமுன் கேட்டதில்லை. ஆனால் சில பொழுது குரங்குகள் இவ்வாறு மரக்கிளைகளில் ஒலியெழுப்பியதை கேட்டிருக்கிறேன். இவர்கள் அங்கிருந்து கேட்டிருப்பார்களோ? அன்னைக் குரங்கு குழந்தையை பெற்றால் இப்படி அவை ஓசையிடும் என்று நான் பார்த்திருக்கிறேன். இதோ, இவ்வாறு...” என்று சொல்லி அவள் வாயில் கைவைத்து உரக்க குரலெழுப்பினாள்.

அந்தணர்கள் தயங்கி “அரசே...” என்றனர். குனிந்து முதல்வரிடம் “சடங்குகளை குறைத்துக் கொள்வோம். விரைவில் மணநிகழ்வு முடியட்டும்” என்று பத்மன் சொன்னான். அவர்கள் “அவ்வாறே” என்றனர். ஒவ்வொரு சடங்கையும் அவள் விளையாட்டாக மாற்றினாள். அவள்மேல் நீர்தெளித்த அந்தணரின் கையிலிருந்த கலத்தை வாங்கி திருப்பி அவர்கள்மேல் தெளித்தாள். ஒருவரின் குடுமியை கைகளால் பற்றி மெல்ல ஆட்டினாள். நடுவே மணமேடையிலிருந்து பாய்ந்திறங்கி ஓடிச்சென்று அங்கே நின்றுகொண்டிருந்த தொல்குலத்துக் கன்னியொருத்தியின் தலையிலிருந்த மலரைப்பார்த்து “இதை எனக்குக் கொடு!” என்று கேட்டாள். சேடியர் அவளை திருப்பி அழைத்துக்கொண்டு வந்து அமரவைத்தனர்.

மெல்ல சூழ்ந்திருந்தவர்கள் நகைக்கலாயினர். பத்மன் திரும்பிப்பார்க்க நகைப்புகள் விழிகளில் மட்டுமே ஒளியென்றாயின. சூழ்ந்திருந்த குருநகரியின் குடிகள் அனைவருமே அவளைக் கண்டு ஏளனம் கொள்வதுபோல நகுஷன் எண்ணினான். சினத்தில் அவன் உடல் துடித்துக்கொண்டிருந்தது. பத்மன் “அரசே, பொறுங்கள்” என்றான். எட்டு மங்கலங்கள் அமைந்த பொற்தாலத்தில் மணநாண் வந்தது. கைகள்மேல் மிதந்து சென்ற தாலத்தில் அது சுற்றி வர

குலத்தலைவர்கள் தொட்டு வாழ்த்தினர். "நானும் அதை தொடுவேன்! நானும் அதை தொடுவேன்!" என்று அவள் எழுந்தாள்.

"அமர்க, அரசி! அதை தங்கள் கழுத்தில்தான் கட்டப்போகிறார்" என்றாள் முதுசெவிலி. "என் கழுத்திலா? ஏன்?" என்றாள். "தாங்கள் அரசியாகப் போகிறீர்கள்" என்றாள். "யாருக்கு?" என அவள் வியந்தாள். "அரசருக்கு." அவள் நகுஷனை நோக்கிவிட்டு "அரசருக்கு யார் கட்டுவார்கள்?" என்றாள். "சற்று அமைதியாக இருங்கள். சடங்குகள் முடிந்தபிறகு அனைத்தையும் நானே சொல்கிறேன்" என்று செவிலி சொன்னாள்.

"நான்! நானே கட்டுவேன்!" என்று அவள் அதை எடுக்கப்போனாள். "பேசாதே!" என்று நகுஷன் தாழ்ந்த கடுங்குரலில் சொல்ல அவள் திகைத்து உடனே அழத்தொடங்கினாள். "நான் கட்டமாட்டேன். நான் எழுந்து உள்ளே போவேன்" என்றாள். "அமருங்கள், அரசி! தாங்கள் அமர்ந்தால் உள்ளே சென்றதும் விளையாடுவதற்கு புதிய ஒரு பொருளைத் தருவேன்" என்றாள் செவிலி. "நாம் இப்போதே போய் விளையாடுவோம்" என்றாள். "இதைக் கட்டிய பிறகு போவோம், சற்று பொறுங்கள்" என்று அவள் சொன்னாள்.

மங்கலநாண் அருகணைந்தது. அதில் குலத்தலைவர்கள் சந்திரகுலத்து குலமுத்திரை பொறிக்கப்பட்டு சுருட்டப்பட்டு மஞ்சள்நூல் கட்டி இறுக்கப்பட்ட பனையோலைச்சுருளை கோத்தனர். அனல் புனல் இரண்டுக்கும் அதைக் காட்டி ஒப்புதல் பெற்ற பின் பெருந்தாலத்தில் இரு மலர்மாலைகளுடன் மணைக்கு கொண்டுசென்றனர். அவற்றை மாற்றிக் கொள்ளும்படி வைதிகர் சொன்னார்கள். நகுஷன்

அவள் கழுத்தில் அந்த மாலையை அணிவிக்க அசோகசுந்தரி மகிழ்ந்து எம்பிக் குதித்து தன் கழுத்தில் இருந்த மாலையை அவனுக்கு அணிவித்தாள். அவன் அணிவித்த மாலையை திரும்பக் கழற்றி செவிலி தலையினூடாக அணிவிக்க முயன்றாள்.

“அங்கே பாருங்கள்... அரசி, சற்று அசையாமலிருங்கள்” என்றாள் செவிலி. நகுஷன் மங்கலநாணை அவள் கழுத்தில் கட்ட அவள் அதில் தன் முன் தொங்கிய பனையோலைச் சுருளை எடுத்து சுற்றியிறுக்கிக் கட்டியிருந்த நூலை அவிழ்க்க முயன்றாள். அதை செய்யக்கூடாதென்று மெல்லிய குரலில் சொன்னபடி செவிலி அவள் கையைப்பிடித்து கீழே விட்டாள். அவள் அதை உடனே மறந்து குத்துவிளக்கின் சுடரை நோக்கி ஒரு மலரை எடுத்து வீசினாள்.

மும்முடிச்சு இட்டு அவளை மணம் கொண்டபின் அதுவரை இருந்த பதற்றம் விலகி உடல் எளிதாக நகுஷனின் முகத்தில் புன்னகை வந்தது. ஒவ்வொரு சடங்கிலும் அவள் மகிழ்ந்து சிரிப்பதை அவன் சிரித்தபடி நோக்கலானான். ஏழு அடி வைத்தபோதும் அம்மி மிதித்தபோதும் அவள் சிரித்து துள்ளினாள். அருந்ததி பார்க்கச் சொன்னவுடன் “எங்கே? எங்கே அவள்?” என்று கேட்டு அவள் விழிகளால் துழாவியபோது சூழ்ந்திருந்த பெண்கள் அனைவருமே வாய் பொத்தி நகைத்தனர்.

ஆனால் அந்நகைப்பு ஏளனத்தில் இருந்து அன்பாக மாறியிருப்பதை நகுஷன் கண்டான். தங்கள் வீட்டுக் குழந்தையொருத்தியை விளையாடவிட்டு சூழ்ந்திருந்து நோக்கும் அன்னையர் போலிருந்தனர் அங்குள்ள பெண்கள் அனைவரும். நிலையையும் வயதையும் மறந்து மகளுடனோ

பெயர்த்தியுடனோ ஆடும் நோக்கு கொண்டிருந்தனர் குலமூத்தோர்.

நகுஷன் அசோகசுந்தரியை முடிசூட்டி அரியணையில் இடமமர்த்தி குருநகரியின் பட்டத்தரசியாக நிறுத்தினான். மணநாள் அன்று மாலையில் நிமித்திகர் கூடி களம் பரப்பி அவன் அவளை கூடவேண்டிய பொழுதைக் கணித்து ஏழு நாட்கள் கழித்து பொழுது குறித்தனர். அவர்களின் இணைவிரவுக்கென அரண்மனை வடகோட்டத்தில் மகிழஞ்சோலைக்கு நடுவே காவல் சூழ்ந்த சிறு குடிலொன்று அமைக்கப்பட்டது. மலர்களாலும் வண்ணப்பட்டுகளாலும் அணி செய்யப்பட்ட அக்குடிலில் சேடியர் இன்னுணவும் விழிநிறை பொருட்களும் கொண்டுவந்து சேர்த்தனர். மலரணியும் தூப நறுமணமும் நிறைத்தனர்.

அரசனின் மணநிறைவுநாள் என்பது அக்குடிகளுக்கும் விழவென்றே கொள்ளப்பட்டது. நன்மைந்தர் பேறுகொண்டு குருநகரி வளம்கொள்ள வேண்டுமென மூத்தோர் தெய்வங்களை வேண்டினர். உடலினானும் அழகுளாளும் இணைவது அவ்விரவை நல்லுறவுக்கான தருணமென்றாக்கியதனால் இளையோரும் துணைவியரும் அதை தாங்களும் கொண்டாடினர். வளர்பிறை வானில் எழுந்த பின்னால் பாங்கனுடன் நகுஷன் அங்கு வந்து சேர்ந்தான். அவன் உள்ளம் பதைப்பு கொண்டிருந்தது. அவளை மணந்த பிறகு உணர்ந்த நிறைவு மணஇரவை எண்ணியபோது ஐயமென்றும் அச்சமென்றும் மாறிவிட்டிருந்தது.

முந்தையநாள் மாலை அவையமர்ந்து பேசுகையில் பத்மனிடம் "இன்றுவரை அவளிடம் நான் உரையாடியதில்லை என்றே உணர்கிறேன்" என்றான். பத்மன் "அவரிடம் எவரும் உரையாட

முடியவில்லை, அரசே” என்றான். “அவள் என்னை தன் களித்தோழனாக புனைந்துகொள்கிறாள். அவள் அத்தோழனுடன்தான் சொல்லாடுகிறாள். அவளுடன் சென்று விளையாடுவது அப்புனைவே. நான் இப்பால் திகைப்புடன் நின்று நோக்குகிறேன்” என்று நகுஷன் சொன்னான். “இன்று என் வேட்கையுடன் ஆணென நான் நிற்கையில் அவள் அறிந்த ஒருவனை எதிர்பார்த்து வந்து அதிர்ச்சியுறக்கூடும். என்ன செய்வதென்று தெரியவில்லை” என்றான்.

பத்மன் “உறவுகளில் அவ்வண்ணம் முன்னரே வகுத்து ஒத்திகைநோக்கி சொல்கோத்து எவரும் ஈடுபடுவதில்லை, அரசே. அவ்வாறு செய்ய வேண்டுமென்று விழைவார்கள். அந்தந்த கணங்களில் அவர்களின் உள்ளுறைந்த உயிரியல்பே வெளிப்படுகிறது” என்றான். நகுஷன் பெருமூச்சுவிட்டு “அஞ்சி பின்கால் எடுக்கலாகாதென்று இதற்கு துணிந்தேன். இதுவோ அறியா எதிரி. வெண்புகைப் புரவிகளுடன் போரிட்ட தொல்வீரன் ஒருவனைப்பற்றிய சூதர்பாடல்களை நினைவுறுகிறேன்” என்றான்.

நகுஷன் அன்று காலை விளங்காக் கனவொன்று கண்டான். நீர்ப்பாவை ஒன்றை மூழ்கிக் கிடக்கும் சிலையென்றெண்ணி அவன் எடுக்க முயன்றுகொண்டே இருப்பதுபோல். விழித்தெழுந்து எண்ணம் தலையை எடை கொள்ள வைக்க சாளரத்தினூடாக வெளியே அசையும் இலையின் ஒளியை நோக்கிக்கொண்டிருந்தபோது முதுசெவிலி அவனருகே வந்தாள். “அரசே, இன்று தங்கள் மணநாள் இரவு” என்றாள். ஆமென அவன் தலையசைத்தான். “பிறபெண்டிரை நீ இதுவரை அறிந்ததில்லை என்று அறிவேன்” என்றாள். அவன் ஒன்றும் சொல்லவில்லை. “காமத்தையே உண்மையுருவில்

இப்போதுதான் காணப்போகிறாய். உள்ளக்காமம் சொல்லில் படர்ந்து கனவில் ஊடுருவி வளர்ந்து எழுவது. அரசே, ஆனால் அதைவிடவும் பேருருக்கொண்டது உடற்காமம்” என்றாள்.

அவன் செவியளித்து தொலைவுநோக்கி நின்றான். “மலரினும் மெல்லிது, அதன் செவ்வி சிலரே தலைப்படுவார்” என்றாள். அவன் திரும்பி “மென்மையாக... அதைத்தானே சொல்ல வருகிறீர்கள்?” என்றான். “அதைத்தான் அனைவரும் சொல்லியிருப்பார்கள். அவ்வண்ணம் அல்ல நான் சொல்ல வருவது” என்றாள். அவன் விழிதிகைத்து நோக்க “காமம் முதல்புணர்வுநாளில் ஆணால் கன்னிக்கு பயிற்றுவிக்கப்படுகிறது. அது மூன்று வகைகளில் என்று நூல்கள் சொல்கின்றன” என்றாள்.

“அன்னைப்பறவை குஞ்சுக்கு பறத்தலை கற்பித்தல் முதல் வழி. அதை பக்ஷிபாலக நியாயம் என்கின்றன நூல்கள். முதலில் தயக்கமே இல்லாமல் கூண்டிலிருந்து தள்ளிவிடு. கருவிலேயே காற்றை அறிந்த சிறகு அதற்கு இருக்கிறது. பறக்கும் விழைவு உள்ளை நிறைத்திருக்கிறது. அது பறக்கும். பறக்காவிடில் பறக்க இயலாதது அது என்றே பொருள்” என்றாள் முதுசெவிலி. “இவ்வுலகில் எங்குமுள்ளதும் எவராலும் இயல்வதும் இவ்வழியே.”

“எழுத்து பழகும் குழந்தையின் வழி இரண்டாவது” என்று அவள் தொடர்ந்து சொன்னாள். “கையோ உள்ளமோ முன்பறியாதவை எண்ணும் எழுத்தும். ஆகவே விலக்கி தயங்கி, வலிந்திழுக்கையில் வழியறியாது வந்து மெல்லத் தொட்டு, நுனியறிந்து சுவைகொண்டு மேலுமென இறங்கி, படிப்படியாக அறிதல் அதன் நெறி. முற்றிலும் தானற்ற பிறிதொன்றில் தான் வெளிப்படும் உவகையே எழுத்தறிதல். கற்றல் என்பது

உருமாறுதல் என்றும் பெருகுதல் என்றும் எய்துதல் என்றும் அவர் அறியட்டும். நெடுந்தூரம் போந்து திரும்பி நோக்குகையில் விட்டு வந்ததனைத்தும் மிகச்சிறிதெனத் தோன்றும் பெருமிதத்தை அவர் கொள்ளட்டும்.”

“வந்தமையும் அயல் ஒவ்வொன்றும் முன்னரே அவரில் இருந்தவற்றை முற்றிலும் உருமாற்றும். துயருற்றும் ஏங்கியும் வலி கொண்டும் அவர் காணட்டும், அவையனைத்தும் ஒற்றைக்கணத்தில் உருமாறி பேருவகையாக ஆகக்கூடும் என. கைபற்றி விரலால் மணலில் எழுத வை. திருத்தித்திருத்தி வடிவெழச் செய். பொருளின்மை திரண்டு பொருளென்று ஆகும்வரை, ஓசையும் கோடுகளும் மொழியென்றும் எழுத்தென்றும் ஆகும்வரை.”

“மூன்றாம் முறை தெய்வத்தை எழுப்புவது போன்றது” என்றாள் முதுசெவிலி. “படையலிடுதல், பாடலளித்தல், பலிக்கொடை. எழாவிடில் தன்னை வளைத்து தலையளித்தல். எழும் தெய்வம் நம்மை வென்று நம்மில் நம் தலையை பீடமாக்கி அமரும். தெய்வம் அமர்ந்த தலை இறங்கா மத்து திமிர்த்த களிற்றுமத்தகம். அத்தெய்வம் சலித்து ஒருநாள் இறங்குகையில் நாம் முழுவெறுமையை மட்டுமே கொள்வோம். அரசே, உன் மூதாதை புரூரவஸ் விண்மங்கை ஊர்வசியை மூன்றாவது வழியில் அணுகினார். அவரில் எழுந்த தெய்வம் ஆடி முடித்து அடங்கி மீண்டது. கைவிடப்பட்ட வெறும் கோயில் என அவர் எஞ்சினார். அதுவே இறுதி வழியென்றுணர்க! முதலிரு வழிகளும் தோற்குமென்றால் மூன்றாவது வழியை தேர்க!”

காமமண்டபம் நோக்கி நடக்கையில் எல்லைவரை உடன் வந்த பத்மனிடம் நகுஷன் சொன்னான் “மூன்று வழிகளை அன்னை

உரைத்தார். எவ்வழியைத் தேர்வதென்று எனக்குத் தெரியவில்லை. மூன்று வழிகளுக்கும் அப்பால் ஏதோ ஒன்று உள்ளது என உணர்கிறேன்.” பத்மன் புன்னகைத்து “வழி எதுவென்று முடிவெடுப்பது அரசியின் இயல்பைக் கொண்டு அல்ல அரசே, தங்களின் இயல்பைக் கொண்டுதான்” என்றான். நகுஷன் திரும்பி நோக்க “மூன்று வழிகளையும் அறிந்திருங்கள். மூன்றையும் உள்ளத்திற்கு சொல்லி அப்படியே மறந்துவிடுங்கள். உங்களில் ஆழ்ந்திருக்கும் தன்னியல்பு மூன்றிலொன்றை தானே தெரிவு செய்யட்டும்” என்றான் பத்மன்.

நகுஷன் “அது தீங்கென்றால்? அதனால் பழி சேருமென்றால்?” என்றான். பத்மன் “ஊழென்பது உடலிலேயே பொறிக்கப்பட்டுள்ளது என்றொரு முதுசொல் உள்ளது. நீங்கள் எவரென்பது உங்கள் தசைகளில், விழிகளில், நாவில், எண்ணங்களில் பிறப்பதற்கு முன்னரே எழுந்துவிட்டது. பிறிதொன்றை நீங்கள் ஆற்ற முடியாது. சிட்டுக்குருவியின் சிறகுகள் துள்ளுவதும் வண்ணத்துப்பூச்சியின் சிறகுகள் சாமரமாவதும் பயிற்சியால் அல்ல” என்றான். நகுஷன் எண்ணி எண்ணி எல்லை காணாது சலித்து திரும்பி பெருமூச்சுடன் “நன்று! எது கனிந்துள்ளதோ அது நிகழட்டும்!” என்று வடக்குச் சோலைக்குள் சென்றான்.

# மாமலர் - 38

### 38. நீர்க்குமிழிமாலை

மஞ்சத்தில் காத்திருக்கையில் அவ்வறைக்குள் நுழையும் அசோகசுந்தரியை நகுஷன் பல நூறு உருவங்களில் கற்பனை

செய்துகொண்டான். நாணத்தின் எடை உடலெங்கும் அழுத்துவது சிலம்பொலியில் தெரிய நடந்து வந்து, தயங்கிய உடலை அணியோசைகளே அறிவிக்க கதவோரம் நின்று மிரண்ட விழிகளால் நோக்குபவள். அரசிக்குரிய நிமிர்வுடன் அஞ்சா விழிகளும் திரண்ட தோள்களுமாக வந்து ஆலயக்கருவறையில் எழுந்த தேவியென வாயில்சட்டம் நிறைய நின்று அளவோடு புன்னகைத்து அரைச்சொல்லில் பேசுபவள். ஆர்வமும் அச்சமும் கொண்ட காட்டுப்பெண். குடி பயிற்றுவித்த மிகைநாணத்தைச் சூடிவந்து குளிர்நீர் பொழிந்த உடலென குறுகி நின்றிருக்கும் சிற்றூர் மகள். பொய் நாணம் பயிலும் பரத்தை. உடல் தேர்ந்த நடனமாக அத்தருணத்தை நடிக்கும் விறலி. சொல் தேர்ந்த பாணினி. நச்சுநீலம் விழிகளில் சுடரும் நாகினி...

ஒவ்வொரு பெண்ணையும் அவனுள் இருந்து எழுந்து எதிர்கொண்டவன் ஒரு நகுஷன். ஒன்று நூறென பெருகி தன்னுள் நிறைவது இதுவரை பிறந்திறந்த தன் வடிவுகளா, இனி பிறக்கவிருக்கும் விழைவுத்தோற்றங்களா? ஒவ்வொரு விதையும் எழவிருக்கும் நூறாயிரம் மரங்களை சூல்கொண்டிருக்கின்றது என்பது சூதர்பாடல். ஒவ்வொரு தருணமும் வரவிருக்கும் நிகழ்வுகளின் முடிவிலியை உருவாக்குகின்றது என்று அறிந்தால் எவரேனும் ஏதேனும் இயற்ற முடியுமா என்ன? அறியமுடியாமையில் அறிவின்மையில் ஆழ்த்தி அறிவு கடந்த வெளியில் அமைந்திருப்பவை தெய்வங்கள். இங்கு சூழநின்று நோக்குகின்றனவா அறிந்தமைந்த அவர்களின் விழிகள்?

அவன் சிலம்பு சொல்லும் சொற்களை கேட்டான். இரு சேடியரால் அழைத்துவரப்பட்டு வாயிலில் விடப்பட்ட

அசோகசுந்தரி திரும்பி “நான் சென்று என் பாவையை எடுத்து வருகிறேன்” என்றாள். ஒருகணத்தில் பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டு அவன் உள்ளம் சலிப்படைந்தது. அவள் மாறாத அதே வடிவில்தான் வருவாள் என்பதனால்தான் அத்தனை நூறு வடிவங்களை எண்ணிக்கொண்டோமா? ஆம், பிறகெப்படி இது அமைய முடியும்? பிறிது எவ்வாறுமல்ல என்று எத்தனை உறுதியாக அறிந்திருக்கிறது உள்ளம். செவிலி “சற்றுநேரம் இங்கிருங்கள், அரசி. நான் சென்று பாவையை எடுத்து வருகிறேன்” என்றாள். “ஆம், அதன் அருகே மூன்று மலர்களை வைத்திருந்தேன். அதையும் எடுத்து வாருங்கள். நான் அரசரிடம் பேசிவிட்டு இதோ வந்துவிடுகிறேன்” என்றாள் அசோகசுந்தரி.

“ஆம், சற்று நேரம் விளையாடிக்கொண்டிருங்கள், அரசி” என்று சொல்லி குடிலுக்குள் விட்டு அவளுக்குப் பின்னால் கதவைச் சாத்தி ஓசையின்றி மெல்ல தாழிட்டாள் செவிலி. துள்ளலுடன் உள்ளே வந்து அவனருகே மஞ்சத்தில் அமர்ந்து தன் கொண்டையை மூடியிருந்த பட்டாடையை எடுத்து அப்பாலிட்டு “எனக்கு இப்போதெல்லாம் அணிகள் மிகவும் உறுத்துகின்றன. இந்தப் பட்டாடையின் பொன்னூல்களும் உடலில் உரசிக்கொண்டே இருக்கின்றன. இனிமேல் நான் இவற்றை அணியமாட்டேன்” என்றாள். “நன்று, அணிய வேண்டியதில்லை” என்று அவன் சொன்னான்.

அவள் அவன் கைகளை எடுத்து தன் கைகளில் பொத்தி வைத்தபடி “இங்கு நான் வரும்போது என்னை அரசியாக்குவதாக சொன்னீர்கள்” என்றாள். “நீ இப்போது அரசிதானே?” என்றான். “இதுவா அரசி? அரசியென்றால்...” விழிகளை மேலே செருகவைத்து எண்ணிநோக்கி

“அரசியென்றால் வானத்தில் பறக்கமுடியும் என்றார்களே?” என்றாள். “யார் சொன்னது?” என்றான். “சௌமை” என்றாள். “யாரவள்?” “சௌமை. சௌமையை தெரியாதா? சமையலறைச்சேடி சந்திரிகையின் மகள். இதோ, இவ்வளவுதான் இருப்பாள். ஆனால் அவளுக்கு எல்லாமே தெரியும்.” நகுஷன் மேலும் மேலும் சலிப்புற்று பெருமூச்சுவிட்டான். தன் உடலில் இருந்து விழைவு விலகிச் செல்வதை உணர்ந்தான்.

ஆனாலும் அவன் அவளிடம் பேசவே விழைந்தான். “நான் உனக்கு புரவியில் ஊர கற்பிக்கிறேன்” என்றான். “புரவியை எனக்கு பிடிக்கவில்லை. அலையலையாகச் செல்கிறது. நான் யானைமேல்தான் ஊர்வேன்.” அவன் புன்னகையுடன் “நன்று, யானை ஊர கற்பிக்கிறேன்” என்றான். “யானைமேல் ஏறி மாமரத்திலிருந்து மாங்காய் பறித்து உண்பேன்” என்றாள். “நன்று” என்று அவன் சொன்னான். ஒவ்வொருமுறையும் எப்படி மிகச் சரியாக குழந்தைபோலவே பேசுகிறாள் என எண்ணிக்கொண்டதுமே குழந்தை வேறெப்படி பேசும் என்றும் தோன்றியது.

எழுந்து நின்று கை விரித்து “யானைமேல் நிற்க முடியுமா?” என்றாள். “முடியும், சற்று பயில வேண்டும்” என்றான். “நீங்கள் நிற்பீர்களா?” அவன் “நான் நின்றதுண்டு” என்றான். “நான் போருக்கு செல்வேன். வாளை எடுத்து யானைமேல் நின்று சுழற்றுவேன்” என்றாள். கைகளை வீசியபடி சுற்றிவந்து அவனருகே நின்று “நான் வில்வித்தை கற்பேன்” என்றாள். “சரி, நான் கற்பிக்கிறேன்” என்றபடி அவன் அவள் இடையை வளைத்து தன் உடலுடன் சேர்த்துக்கொண்டான். அவள் அவன் தோளில் தலைவைத்து “முதுசெவிலி என்னிடம் சொன்னாள்

நீங்கள் என்னை தழுவுவீர்கள் என்று. அப்போது நான் திமிறக்கூடாது என்று சொல்லி எனக்கு கனிச்சாறு தந்தாள். ஆகவே நான் திமிறமாட்டேன்" என்றாள்.

"நன்று, நீ நல்ல பெண் என அறிவேன்" என்று அவன் அவள் கன்னங்களில் முத்தமிட்டான். அவள் சிரித்து கன்னத்தைத் துடைத்தபடி "சுஷமை அவள் கன்னத்தில் முத்தமிட்டால் உடனடியாக துடைத்துவிடுவாள்" என்றாள். "யார் சுஷமை?" என்றான். "சுஷமையையும் தெரியாதா? அவள் சமையலறைச்சேடி ஊர்த்துவையின் மகள், சின்னக் குழந்தை" என்றாள். "ஆனால் அவள் இளையோன் ஸ்ரீதரனுக்கு முத்தமிட்டால் சற்றும் பிடிக்காது. முத்தமிடப்போனால் முகத்திலேயே அறைந்துவிடுவான். இதோ, இப்படி" என தன் கன்னத்திலேயே அறைந்துகாட்டினாள்.

எழுந்து கதவைத் திறந்து வெளியே சென்றுவிடவேண்டும் என்று நகுஷன் ஒருகணம் எண்ணினான். பின்னர் தன்னுள் சொல்லிக்கொண்டான். ஆம், இவளுக்குரியது இரண்டாவது வழிமுறை. இவளுக்குள் பறக்கும் விழைவில்லை, உடலில் சிறகுகளும் இல்லை. ஆனால் ஒவ்வொன்றையும் கூர்ந்து நோக்குகிறாள். புதியனவற்றில் கிளர்ச்சி கொள்கிறாள். புதிய ஒன்றை அவளுக்கு அறிமுகம் செய்ய வேண்டும். அதுவே உகந்த வழி. எண்ணங்களைச் சொற்களாக்குவது எத்தனை நல்லது! அது புகையை நீராக்குவது. நீரை உறையவைக்க வேண்டுமென்றால் எழுதவேண்டும்.

நகுஷன் அவள் உடலை தன் காமம் நிறைந்த கண்களாலும் விரல்களாலும் உதடுகளாலும் தொட்டுத் தழுவலானான். அவள் இயல்பாக நெளிந்தும் வளைந்தும் அவன் தொடுகையை தவிர்த்தாள். தொட்டபோது கூசிச் சிரித்தாள். ஆனால் அவள்

உடல் அவன் காமத்தை அறியவே இல்லை. அவளுக்குள்ளிருந்து அதன் மறுஅனல் எழுந்து வந்து இணைந்து கொள்ளவில்லை. இடையையும் கழுத்தையும் தொட்டபோது கூசிச் சிரித்து உடல் நெளித்து புரண்டாள். முலைகளைத் தொட்டபோது "அய்யோ" என கைகளைப்பற்றி தூர வீசி எழுந்து ஓடினாள். துரத்தி அவளைப்பற்றி இதழ்களைக் கவ்வி முத்தமிட்டபோது திமிறி அவன் நெஞ்சை கைகளால் உந்தி விலக்கி அப்பால் நின்று சிறு அருவருப்புடன் துப்பியபடி "இப்படியெல்லாம் செய்யக்கூடாது, நான் செவிலிஅன்னையிடம் இதை சொல்வேன்" என்றாள்.

அவன் உடலில் காமம் அணைவது ஏன் என அவன் எண்ணினான். அவள் உடல் மணத்திலும் காமம் இல்லை என்பதுதான். நோக்குகையில் எழும் காமம் அருகணைந்து முகர்கையில் தணிகிறது. சிக்கிமுக்கியை உரசி அனலெழுப்பி மீண்டும் அவளை அருகணைத்து கைகளைப் பற்றியபடி தணிந்த குரலில் அவளுக்குள் காமத்தை சொற்களினூடாக எழுப்ப முயன்றான். கண்களையும் கன்னங்களையும் இதழ்களையும் புகழ்ந்தான். முலைகளையும் இடையையும் நலம் பாராட்டினான். குழல் தழுவியபடி விழிகளை நோக்கி ஆழ்ந்த குரலில் அவள் உள்ளத்திற்குள் செல்லும் சொற்களை சொன்னான்.

மந்த்ரணம், தாடனம், முத்ரணம், ஆலிங்கனம், சும்பனம்... கற்ற காம நூல் கூறிய சொற்களனைத்தும் நினைவிலெழுந்து பொருளற்றவையெனக்காட்டி மூழ்கின. அவன் சொன்ன சொற்களில் மெய்ப்பொருளென மறைந்திருந்த காமத்தை மட்டும் அவளால் உணரமுடியவில்லை. ஒவ்வொரு முறை அவன் தழுவும்போதும் முகம் சுளித்து

“வியர்வை” என்றாள். “அய்யோ, இடை வலிக்கிறது” என கூவினாள். மூச்சுவாங்க “எவ்வளவு எடை” என்றும் “எனக்கு மூச்சுத் திணறுகிறது” என்றும் சொல்லி திமிறினாள். “ஆ” என அவள் அலற அவன் பின்னால் நகர்ந்தான். “உங்கள் நகம்... அய்யோ! குருதி வருகிறதே” என சிறு கீறலை காட்டினாள்.

ஒரு கணம், அவன் அஞ்சி ஒத்திப்போட்டுக்கொண்டிருந்த தருணம் வந்தது. அவன் முற்றிலும் அணைந்தான். உளவிழைவு நாண் அறுபட உடல் தளர்ந்தது. பெருமூச்சுடன் தன் சால்வையை எடுத்தபடி “நன்று, நாம் திரும்பிச் செல்வோம்” என்றான். “இதுவா விளையாட்டு?” என்றாள். அவன் “ஆம், செல்வோம்” என்றான். “இருட்டிவிட்டது. நாம் இந்தச் சோலைக்குள் சென்று பறவைகள் சேக்கையேறியிருப்பதை பார்க்கலாமா?” என்றாள். அவன் “ஆடை அணிந்து கொள்” என்று அவள் ஆடைகளை எடுத்து அருகே வீசினான். கச்சு தளர்ந்து அவள் இளமுலைகள் வெளித்தெரிந்தன. முயலின் மூக்கு போல் சிவந்த கண்கள் கொண்ட பளிங்குக் குமிழ்கள். பனிவெண்மை கொண்ட தோள்கள். அல்லிஇதழென மென்மை காட்டிய கழுத்து. தோள்களிலும் முலைச்சரிவிலும் அவன் கைநகம் பட்ட சிவந்த வடுக்கள் இருந்தன. அவன் கைகள் அழுந்திய பகுதி சிவந்து குங்குமத் தீற்றல்போல தெரிந்தது.

அவனளித்த மேலாடையை வாயால் கவ்வி முலைமேல் தொங்கவிட்டபடி கைகளை மடித்து பின்னால் கொண்டுசென்று அவிழ்ந்த கச்சையின் பின்முடிச்சை போட்டாள். பட்டுக்குள் அசைந்த அவள் முலைகளைக் கண்டதும் அவன் நெஞ்சு அச்சம் கொண்டதுபோல படபடத்தது. அவள் திரும்பி “நாம் சேர்ந்து காட்டுக்குச் செல்லலாமா?” என்றாள். அவ்வசைவில் ஒருகணத்தில் அவன் அடைந்தவை கொண்டவை

அனைத்தையும் இழந்து வெறும் காமம் கொண்ட உடலென்றானான். பாய்ந்து அவளை அணுகி இடைவளைத்து தூக்கி மஞ்சத்திலிட்டான். அஞ்சி அவள் அலற அவள் கைகளைப் பற்றியபடி கச்சு முடிச்சை அவிழ்த்து முலைகளைத் திறந்து அவள் மேல் உடலமைத்து பொருத்திக்கொண்டான்.

அவள் கூச்சலிட்டுக் கதறியபடி கால்களை உதைத்து துடித்தாள். கைகளால் அவன் தோளைப்பற்றி உந்தி தலையை அசைத்துப்புரட்டி அவன் இதழ்களுக்கு தன் இதழ்கள் சிக்காமல் செய்தாள். அவன் தன் உடலெடையாலும் தோள்வலிமையாலும் அவற்றை முற்றிலும் தன் ஊர்தியும் படைக்கலமும் எனக்கொண்டு எழுந்த விழைவின் வெறியாலும் அவளை முழுமையாக அடக்கிக்கொண்டான். அவளை தன் உடலால் கடந்தான். அச்சத்தாலும் பதற்றத்தாலும் துள்ளித் திமிறி அதனாலேயே மூச்சு இறுகி உடல் வெம்மைகொண்டு வியர்த்து மிக விரைவிலேயே தளர்ந்து மெல்லிய ஊன்கூழென்றாகி அவன் உடலுக்கடியில் அவள் கிடந்தாள்.

வெறி விசையென்றாகி விரைவுத்தாளம் கொள்ள அவள் உடலை முற்றிலும் வென்று அடக்கியபோது நான் ஆணெனும் உணர்வு எழுந்தது. ஆம், நான் ஆண், நான் ஆண் என உள்ளிருந்து தருக்கிய ஒன்று அவனை ஐயமற்றவனாக்கியது. தடுக்கமுடியாதவனாக்கியது. வெறிக்குள் இருந்த பதற்றம் முற்றிலும் அடங்க ஊன் சுவைத்துண்ணும் சிம்மத்தின் பொறுமையுடன் அவன் அவளை புணர்ந்தான். உடல் அறிந்திருப்பவை என்னென்ன என உளம் அறிந்துகொள்ளும் வேளை. உள்ளம் வளர்த்துக்கொண்டவற்றை உடல் மீளப் பெற்றுக்கொள்ளும் ஆடல்.

தன் காமத்திற்கு சிக்கியிருப்பது அவளுடைய உடல் மட்டுமே என்றும், வலுதுவண்டு சொல்லிழந்து தன்னுள்தன்னுள் எனச்சுருங்கி அவள் உள்ளம் வேறெங்கோ இருந்துகொண்டிருக்கிறது என்றும் அவன் அறிந்தான். ஆனால் அது அப்போது ஒரு பொருட்டெனத் தெரியவில்லை. உடலை வெல்வதனூடாக அவன் அவள் உள்ளத்தையும் அழுத்திப் பற்றிவிட்டதாகவே எண்ணிக்கொண்டான். உள்ளம் என ஒன்றிருக்கும் என்றால் அதைப் பற்றவும் வெல்லவும் உடலொன்றே வழி. இவ்வுடலிலிருந்து அவள் ஒருபோதும் உளம் விலகப்போவதில்லை. மரத்திலிருந்து இப்போது அஞ்சி சிறகடித்த பறவை வானில் பதைத்துச் சுழன்று சிறகு தளர்கையில் மீண்டும் இங்குதான் வந்தமரும். அப்போது இந்த மரம் பிறருக்குரியது என்று அறியும். அதன் கிளைகளும் மலர்களும் மட்டுமல்ல தானும் தன் சிறகுகளால் துழாவிய வானும் பிறர் உரிமை என்று அறியும்.

உடைமை கொள்ளுதலின் பேரின்பத்தை, வென்று கடத்தலின் நிறைவை அவன் அறிந்தான். திளைப்பதென்பது உளமிழந்து உடல்மட்டுமே என்றாதல். காமம் என்பது திளைப்பு. பிறிதொரு திளைப்பு வலி. திளைப்பதை தடை செய்கிறது நீங்கா தன்னுணர்வு. அதைச் சூடிய சித்தம். எனவே மானுடரைவிட விலங்குகள் திளைக்கின்றன. விலங்குகளைவிட பறவைகள் திளைக்கின்றன. பறவைகளைவிட மீன்கள். ஆயினும் புழுக்களைப்போல் திளைக்க எவ்வுடலாலும் ஆவதில்லை. திளைக்கையில் புழுவென்றாகிறோம். புழுவென்றாதலே உடலின் முழுமை. உடலென்றான ஒன்று தன்னை அப்போது முற்றிலும் விலக்கி உடல்சூடுவதற்கு முன்பிருந்த வெளியில் பரவியிருக்கிறது. உடல்கொண்டு

அமைந்ததன் நிறைவை பின்னர் வந்தமைந்து தானும் அடைகிறது.

காமக்குடிலின் மஞ்சத்திற்கு அவன் மீண்டபோது எண்ணியதென்ன என்பதை உள்ளம் அறிந்திருக்கவில்லை. இறுக முறுக்கப்பட்டு தூக்கி வீசப்பட்ட பட்டுத்துணியைப்போல உடல் சுருட்டி, தொடைகளை மடித்து, நெஞ்சோடு சேர்த்து, கால்முட்டில் முகம் புதைத்து, கைகளால் தலைபற்றி, குளிர்கொண்டவள்போல் நடுங்கியபடி, விழிமூடி கண்ணீர் கசிந்து வழிய படுத்திருந்த அசோகசுந்தரியை எழுந்து நின்று நோக்கியபோது தன் உடலில் நிறைந்தது என்ன உணர்வென்று பின்னர் பல முறை நகுஷன் எண்ணியதுண்டு. நோய்கொண்ட விலங்கென அவள் முனகியதைக் கேட்டபோது உள்ளிருந்து மகிழ்ந்தது எது?

அப்போது அது ஆண்மையின் நிறைவென்று தோன்றியது. பின்னர் வெறும் விலங்கென நிற்பதன் விடுதலை என்று தோன்றியது. நாட்கள் சென்றபின் சித்தத்தின் பிடியிலிருந்து முற்றிலும் விடுபட்ட தசையின் வெற்று அதிர்வு மட்டுமே அது என்று உணர்ந்தான். ஆடை அணிந்து அருகிலிருந்த பொற்கிண்ணத்திலிருந்து கிராம்பையும் இஞ்சியையும் எடுத்து வாயிலிட்டு மென்றபடி வெளியே சென்று குளிர்காற்று பெருகிச் சென்றுகொண்டிருந்த சோலைமரங்களைப் பார்த்தபடி நின்று கைதூக்கி சோம்பல் முறித்தான். அப்போது உலகனைத்தையும் வெல்ல முதல் அடியெடுத்து வைத்தவன்போல, கடக்க முடியாத எல்லையொன்றைக் கடந்து திரும்பி நோக்குபவன்போல தன்னை உணர்ந்தான்.

அவனைக் கண்டதும் அப்பாலிருந்து அணுகிவந்த முதிய சேடி அவன் ஆணையைக் கோரி அங்கே நின்றாள். உள்ளே

செல்லும்படி அவளிடம் கைகாட்டிவிட்டு இருளில் இறங்கி நடந்தான். எதிரே வந்த அன்னைச்செவிலியின் முகத்தை நோக்கும் துணிவு அவனுக்கிருக்கவில்லை. அவளும் ஒன்றும் கேட்கவில்லை.

தன் அறையை அடைந்து மஞ்சத்தில் படுத்ததும் அதுவரை இல்லாதிருந்த கசப்பு ஒன்றை தன்னில் உணர்ந்தான். எவர் மீது என்று கேட்டுக்கொண்டான். தன் மீதா, தன் செயல் மீதா? அல்ல என்று உறுதியாகத் தோன்றியது. அவள் மேலா? அவள்மேல் இரக்கமும் மெல்லிய இளிவரலுமே அப்போது எழுந்தது. பின் எவர் மீது? இந்த மானுடத்தனிமையின் கணத்திலும் உடனிருப்பது எது?

விழுந்துகொண்டே இருப்பதுபோல் தோன்றியது. எழுந்து அறையிலேயே நிலையழிந்தவனாக சுற்றி வந்தான். ஒவ்வொரு சாளரத்தினூடாகச் சென்று மெல்ல இருளுக்குள் அசைந்த மரங்களைப் பார்த்தான். திரைச்சீலைகளை அசைக்கும் காற்று அறைக்குள் எவர் எவரோ வந்து செல்லும் உணர்வை அளித்து உட்புலன் ஒன்றை திடுக்கிடச் செய்தது. நான் இங்கிருக்கிறேன், இப்போது நான் செய்தது அறப்பிழை எனில் அதன் கடன் ஒரு தொடர். அதை நிகர்த்துவது யார்? அவர்கள் இன்னும் கருக்கொள்ளவில்லை.

மீண்டும் மஞ்சத்தில் படுத்தபோது துணையின்றி அங்கிருக்க முடியாதென்று தோன்றியது. பத்மனை வரச்சொல்லலாம் என்று எண்ணியபோதே அது எத்தனை பொருளற்றதென்று தோன்றியது. அறநெறிகளால் ஆவதில்லை. சொற்களால் மழுப்பவும் கூடுவதல்ல. கூரிய வாள்முனையை

கூரியதொன்றே சந்திக்கமுடியும். அல்லது அதன் இரையென்றாகும் ஒன்று. எழுந்து கதவைத் திறந்து பணிந்துநின்ற காவலனிடம் “மது கொண்டுவரச்சொல்... கூடவே அணியறைகளிலிருந்து ஆடற்கணிகையரை அழைத்து வருக!” என்றான். சற்று நேரத்திலேயே இரு இளம்கணிகையரை காவலன் அழைத்து வந்தான். அவர்கள் பயின்றமருட்சியும் சீரமைந்த அசைவுகளும் கொண்டிருந்தனர். அவன் விழிகளை சந்தித்ததும் ஒருத்தி நாணி மெல்ல கைதூக்கி குழல் திருத்தினாள். ஆடை நழுவ பெருமுலைகள் மெல்ல அசைந்தன. பிறிதொருத்தி அஞ்சியவள்போல் அவள் பின் ஒளிந்தாள்.

அவனுள் கடும்கசப்பு எழுந்தது. வாளை உருவி அவர்களின் தலைகளைக் கொய்து நிலத்திட்டு காலால் உதைத்து உருளச்செய்யவேண்டுமென்னும் வெறி. உடலெங்கும் அதன் அதிர்வு பரவ அவன் பின்னகர்ந்தான். அவர்கள் உள்ளே வந்த ஓசை கேட்டதும் பிறிதொரு விலங்கு குகை விட்டு எழுந்தது. காலால் கதவை ஓங்கி உதைத்து மூடிவிட்டு இருவரின் கூந்தலையும் பற்றி இழுத்து மஞ்சத்தை நோக்கி கொண்டுசென்றான். அவர்களை சேக்கையில் தள்ளி தானும் பாய்ந்து நிணக்குவியலில் புரண்டு களிக்கும் சிம்மமென அவர்களுடன் உறவுகொண்டான். புலரிவரை வெறும் விலங்கென்றிருந்தான். முற்றிலும் உடல் களைத்தபோது விழுந்து துயின்று மறுநாள் உச்சியில் விழித்தெழுந்தான்.

நிகழ்ந்த அனைத்தையும் வெவ்வேறு துளிக்கனவுகளாக தொட்டுத் திரட்டி எடுத்தபோது ‘ஆம், இது ஒன்றே வழி’ என்னும் எண்ணமாக அது சுருங்கியது. வரியென்றாகி நுண்மொழியென்றாகி சித்தத்தின் தாளமாக மாறியது. நீராடச்

செல்கையில் அணி புனைகையில் அரியணை வந்து அமர்கையில் உடனிருந்தது. ‘ஆம், இது ஒன்றே வழி’ என்றே அவன் உள்ளம் அமைந்திருந்தது. அரசவையை முன்னதாக முடித்துவிட்டு உடனே மஞ்சத்தறைக்குச் சென்று மீண்டும் இரு கணிகையரை வரச்சொன்னான்.

மாலையில் முதுசெவிலி வந்து வாயிலில் நின்றாள். அவன் கணிகையருடன் இருப்பதை ஏவலன் சொல்ல அவள் காத்து நின்றாள். எழுந்து நீராடி உடைமாற்றி தன் மந்தண அறைக்குச் சென்று அங்கே அவளை வரச்சொன்னான். அவள் உள்ளே வந்த ஓசைக்கு அவன் உடல் விதிர்ப்பு கொண்டது. அவள் உதடுகள் அசையும் ஒலியை கேட்டான். “அன்னையே, தீச்சொல் இடுவதென்றால் இடுக! உங்கள் முகம் நோக்கும் திறனற்றவன்” என்றான். “நான் எப்போதும் தீச்சொல்லிடப்போவதில்லை. அன்னையர் தீச்சொல்லிட்டால் இங்கே ஆண்கள் எஞ்சுவார்களா என்ன?” என்றாள் முதுசெவிலி. அவன் உதடுகளைக் கவ்வி மூச்சை மெல்லவிட்டு தன்னை தளர்த்திக்கொண்டான்.

“அரசி நோயுற்றிருக்கிறார், மருத்துவர் நோக்கிக்கொண்டிருக்கிறார்கள்” என்றாள் முதுசெவிலி. “சொல்க!” என்றான். “அவர் கொண்ட நோய் என்னவென்று சொல்லக்கூடவில்லை. நான் நோக்குகையில் உயரமொன்றிலிருந்து விழுந்து எலும்புகள் அனைத்தும் உடைந்துவிட்டவர் போலிருக்கிறார்” என்றாள். அவன் “நான் காட்டுமைந்தன். நெறியறியாதவன். அரசனென நான் அமையலாமா, அன்னையே?” என அவளை நோக்காமலேயே கேட்டான். “காட்டிலிருந்து எழுந்தவர்களே அனைத்து அரசர்களும்” என்று முதுசெவிலி சொன்னாள். “நீயே ஆளத்தக்கவன். உலகை வென்று இந்திரனின் அரியணையை

வெல்பவன். உன் கொடிவழிகளில் மீண்டும் மீண்டும் நிகழ்பவன்.”

“விழைவே அரச இயல்பென்று வகுத்துள்ளனர் முன்னோர்” என்று அவள் சொன்னாள். “நீ கொண்ட விழைவு இந்நகரில் செல்வமென்றும் வளமென்றும் பெருகும்.” அவள் மேலுமேதோ சொல்லப்போகிறாள் என அவன் அறிந்திருந்தான். “அனைத்துக்கும் அடியில் பெண்களின் குருதியும் கண்ணீரும் இருக்கும். அரசே, ஆண்கள் அனைவருக்குள்ளும் அரசன் ஒருவன் வாழ்கிறான்.” நகுஷன் திரும்பி அவளை நோக்கவில்லை. அவன் உடல் மட்டும் நடுங்கிக்கொண்டிருந்தது.

அவள் செல்லத் திரும்புகிறாள் என காலடியோசை காட்ட அவன் திரும்பி “அன்னையே சொல்க, இப்பிழையை எவர் நிகர் செய்வார்கள்?” என்றான். “பிழைகள் அனைத்தும் பெருகுபவை” என்றாள் செவிலி. “நிகர்நிலைகொண்டிருந்தது முதலியற்கை என்பார்கள் சாங்கியர். மூவியல்பும் நிகரிழந்த முதற்கணம் முதல் தொடங்கியது இப்புடவிநிகழ்வுப் பெருக்கு. இது தன் நிகர்நிலை நாடும் தேடலாகவே பெருகிச்சூழ்ந்து சென்றுகொண்டிருக்கிறது.” அவன் தவிப்புடன் “அதுபோலவா?” என்றான். “ஆம், அது இயற்கையின் மாறாநெறி” என்றாள்.

“என் கொடிவழிகளுக்காக இன்று நின்று இரங்கி ஏங்குகிறேன், அன்னையே” என்றான். அவன் கண்கள் கசிந்து வழியலாயின. விம்மலை அடக்க அவன் உதடுகளை மடித்துக்கொண்டான். “அன்னையே சொல்க, என்னை முற்றிலும் பொறுத்து கருவிலிருக்கும் குழவிக்கு நிகராகக் கொள்ள உங்களால் இயலுமா?” அவள் அருகே வந்து அவன் கைகளை பற்றிக்கொண்டு “ஓர் அன்னையின் முழுவாழ்த்தேனும் என்

குருதிவழிக்கு உள்ளதென்று நான் இன்று கருதிவைக்கலாமா?" என்றான். அவள் அவன் தலையை வருடி "இவையனைத்தும் அறியாப்பெருக்கொன்றின் அலைகள்மேல் எழுந்த குமிழிகள் என்று அறிந்த பின்னர் எவர் மேல் சினம்? நீ என் மைந்தன். என் கருவிலிருந்து நீ வெளியேறவே இல்லை" என்றாள்.

அவன் குனிந்து அவள் கால்களைத் தொட்டு சென்னிசூட விழிநீர்த்துளிகள் உதிர்ந்தன. அவள் அவன் தலைமேல் கைவைத்து "வெற்றியும் புகழும் சூழ்க!" என வாழ்த்தினாள். அவன் தோள்தொட்டு எழுப்பி நெஞ்சோடு சேர்த்து அணைத்துக்கொண்டாள்.

# மாமலர் - 39

**39. அலைவாங்கல்**

இரவில் நகுஷன் தன்னை மறந்து ஆழ்ந்து துயின்றான். காலையில் சித்தம் எழுந்து உலகைச் சமைத்து தான் அதிலொன்றாகி அதை நோக்கியது. அனைத்தும் தெளிந்து ஒளிகொண்டிருந்தன. துயிலில் அவன் எங்கோ இருந்தான். பிறிதொருவனாக உடல்சூடி, தானாக உளம் கரந்து கையில் வில்லுடன் அறியா நகரொன்றில் அலைந்தான். இலக்குகள் அனைத்தையும் சென்றெய்தும் விழைவே அவன் உள்ளமென்றிருந்தது. முலைபெருத்த தடித்த பெண்ணொருத்தியுடன் முயங்கும் அவனை அவனே அவ்வறையின் இருள்மூலையில் நின்று நோக்கிக்கொண்டிருந்தான். பின்னர் பேரொலி எழும் அவை நடுவே துள்ளும் வில் ஒன்றை வென்றான். கன்னங்கரிய ஒரு

பெண்முகம். அணுகும் முகம். ஆலய இருளில் அமர்ந்த மூதன்னை.

அவளை அவன் நன்கறிந்திருந்தான். அவளும் அவனை அறிந்திருந்தாள். அவளை முயங்கி அவன் மல்லாந்து உடல்விரிக்க அவள் அவனை நோக்கிக்கொண்டிருந்தாள். வஞ்சம் நீர்மையென கனிந்த விழிகள். வாளை ஓங்கி அவனை வெட்ட வந்தாள். அவன் விழியசைக்காமல் அவளை நோக்கிக் கிடந்தான். அவள் தன்னைக் கொல்வதே முறையென எண்ணினான். அவள் வாள் மெல்ல தளர்ந்தது. சுருங்கி ஒரு நாகமென்றாகி அவள் மண்ணுக்குள் புகுந்தாள். அவன் எழுந்து அவள் ஆடையைப்பற்ற அது ஒரு நிழலென்றாகி உருக்கொண்டு பெண்ணாகி அவனை நோக்கி நாணி புன்னகை செய்தது.

அவன் வளைக்குள் அவளைத் தொடர்ந்து தவழ்ந்து சென்றான். அவன் உடல் நாகமென்றாகியது. நீருக்குள் எழுந்தபோது வேர்திளைக்கும் ஆழமொன்றை கண்டான். குமிழிகள் ஒளிவிட்டுச் சுழல அவள் உடலும் ஒரு செங்குமிழியென எழுந்தது. சரிவிறங்கும் மலைப்பாதையில் தேரில் அவனருகே அவள் இருந்தாள். “நான் பெண்ணென்றானேன்” என்றாள். “ஏன்?” என்றான். “அணுகுவதற்காக” என்றாள். “இல்லையேல் உன்னை நான் உண்டிருப்பேன். கருத்தரித்தால் நீ எஞ்சுவாய்.”

விழித்துக்கொண்டு கிடந்தபோது முகத்தில் புன்னகை இருப்பதை அவன் உணர்ந்து உளம் மலர்ந்தான். எழுந்து சென்று சாளரத்தினூடாக சோலையை பார்த்தான். அத்தனை இலைகளும் ஒளி சூடியிருந்தன. புதிய பறவை ஒன்று “இங்கே வாழ்” என்றது. எத்தனை ஒலிகளால் ஆனது காலை! காலை ஒரு பெரும் வான்பொழிவு. குழவிமேல் மெல்ல

வருடிச்செல்லும் அன்னையின் கை என தென்றல். காலையில் தனித்திருப்பவர் குறைவு. காலைத்தனிமை ஓர் இனியதவம்.

ஏவலன் வந்து பணிந்து அவனைத் தேடி முதுசெவிலி வந்திருப்பதாக சொன்னான். முகம் கழுவி ஆடைதிருத்தி அமர்ந்துகொண்டு “வரச்சொல்” என்றான். வரவிருப்பது நற்செய்தியல்ல என்று முன்னரே தெரிந்துவிட்டிருந்தது. தன்னை தொகுத்துக்கொள்ளவேண்டும் என்றும் நிலைபிறழலாகாது என்றும் சொல்லிக்கொண்டான். முந்தையநாளின் சொற்கள் எங்கோ நெடுந்தொலைவிலென கிடந்தன.

முதுசெவிலி வந்து வணங்கி நின்றாள். அவள் தயங்க “சொல்க!” என்றான். அவள் தணிந்த குரலில் “அரசி முதுமையடைந்துகொண்டிருக்கிறார்” என்றாள். அவன் விழிதிருப்பி “ஆம், அவள் நோயுறுவது இயல்பே” என்றான். “அதுவல்ல நான் சொல்வது, அவர் உடல் மிக விரைந்து முதுமை நோக்கி செல்கிறது.” அவன் திகைத்து நோக்க “நான் அன்று குடிலுக்குள் சென்று பார்க்கையிலேயே அரசி பிறிதொருத்தியாக இருந்தார்” என்றாள்.

“பிறிதொருத்தியாக என்றால்...?” என்று அவன் கேட்டான். அவன் நெஞ்சு படபடத்ததில் எச்சொல்லும் சிந்தைநிற்கவில்லை. “பதினெட்டு வயது கன்னியாக இங்கு வந்தார். உள்ளம் ஐந்து வயதுக்குரியதாக இருந்தது. அன்று நான் அறைக்குள் சென்றபோது பத்து வயது மூப்படைந்தவர்போல் இருந்தார்.” ஏதோ நம்பிக்கையை நாடுபவன்போல “துயர் கொண்டிருந்ததனால் விளைந்த தோற்றமா?” என்று அவன் கேட்டான். “அரசே, நான் கூறுவது முகத்தோற்றத்தையோ

சோர்வையோ அல்ல. அவர் உடல், ஊன் மூப்படையத் தொடங்கிவிட்டது.”

அவன் “என்ன சொல்கிறீர்கள்?” என்றான். “நீயே நேரில் பார்க்கலாம். வேறெவ்வகையிலும் நான் சொல்வதை உன்னால் ஏற்க இயலாது” என்றாள் முதுசெவிலி. “வருக!” என்று அவள் சொல்ல அவன் அசையாமல் அமர்ந்திருந்தான். “வந்து பார்” என்று அவள் மீண்டும் அழைத்தாள். அவன் எழுந்து அவளை தொடர்ந்தான். குழம்பிய சித்தத்துடன் இடைநாழியில் காலிடறியும் தயங்கியும் நடந்தான். அகத்தளத்தில் அத்தனை சேடியரும் திகைப்பும் குழப்பமும் கொண்டிருப்பதை காண முடிந்தது. எதிர்கொண்டு வணங்கிய இளஞ்சேடியரும் அவனை விழிதொட்டு நோக்கவோ நேர்க்குரலில் மறுமொழி உரைக்கவோ அஞ்சினர்.

“எங்கிருக்கிறாள்?” என்றான். “உள்ளறையில்” என்றாள் அணுக்கச்சேடி. உள்ளறைக்குள் நான்கு மருத்துவச்சிகள் நின்றிருந்தனர். அரசர் வந்திருக்கிறார் என்று அறிவிக்கப்பட்டவுடன் அவர்கள் வெளியே வர அரசன் இறுதியாக வந்த மூத்த மருத்துவச்சியிடம் “என்ன செய்கிறது அவளுக்கு?” என்றான். “இது மருத்துவ நூல்களில் சொல்லப்பட்டதல்ல, பிறிதொன்று. அதை தெய்வங்களே விளக்க முடியும்... நிமித்திகர் வரையும் களங்களில் அவர்கள் எழவும் வேண்டும்” என்றாள் அவள். ஒவ்வொரு முகத்திலிருந்தும் அவன் அச்சத்தை பெற்றுக்கொண்டான். அது நோயை, இறப்பைக் கண்ட அச்சமல்ல, மானுடம் கடந்து பேருருக்கொண்டு நின்றிருக்கும் பிறிதொன்று அளிக்கும் அச்சம்.

கதவைத் திறந்து உள்ளே சென்றபோது கடுங்குளிரில் என அவன் உடல் நடுங்கியது. பிடரியில் மூச்சுவிட்டபடி பேய்வடிவம் ஒன்று தொடர்ந்து வருவதுபோல, தோள்களில் காற்று எடைகொண்டு அழுத்தி இடைகளையும் தொடைகளையும் கெண்டைக்கால் தசைகளையும் இறுக்கித்தெறிக்க வைப்பதுபோல. மூச்சை நெஞ்சில் நிறுத்தி மெல்ல விட்டபடி அவன் உள்ளே சென்றான். மஞ்சத்தில் அசோகசுந்தரி படுத்திருந்தாள். அறையிருளில் அவள் அணிந்திருந்த ஆடைகளைக் கொண்டே அவளென்று அவன் உணர்ந்தான். மேலும் ஒரு அடி வைத்து அவளை நன்கு நோக்கியதும் திடுக்கிட்டு பின்னடைந்தான். அங்கு நடுவயதான பெண்மணி ஒருத்தி படுத்திருந்தாள்.

மூக்கு சற்று புடைத்து எழுந்து, கண்களுக்குக் கீழ் கருகியதசைகள் இழுபட்டுத் தளர்ந்து இரு அரைவட்ட அடுக்குகளாக வளைந்து, வாயைச்சுற்றி அழுத்தமான மோவாய்கோடுகளுடன் வண்ணமிழந்து வறண்டுலர்ந்த தோலுடன் இருந்தது அவள் முகம். மூச்சின் ஒலியில் "இவள்?" என்று முதுசேடியிடம் கேட்டான். "அரசியேதான். நான் உன்னை சந்திக்க ஓடி வரும்போது இருந்ததைவிட மேலும் முதுமை கொண்டுவிட்டார். கூர்ந்தால் நீர் உலர்ந்து மறைவதுபோல அவரது இளமை அகல்வதை வெறும்விழிகளாலேயே காணமுடியும்." மேலும் ஒருமுறை திரும்பி அவளைப் பார்த்ததும் அவன் உடல் நடுங்கியது. ஓடி கதவைத் திறந்து வெளியேறி இடைநாழியில் விரைந்து தன்னறைக்குள் சென்று கதவை மூடிக்கொண்டான்.

அவனைத் தொடர்ந்து வந்த பத்மனிடம் "நான் இன்று எவரையும் சந்திக்கவில்லை. இனி சில நாட்கள் அவை

கூடுவதும் அரசமுடிவுகளும் உம்மால் நிகழட்டும். என்னை இத்தனிமையில் விட்டு விலகிச்செல்க!” என்றான். ஏவலனை அழைத்து மதுவும் உணவும் கொண்டுவரச் சொன்னான். விலா எலும்புகள் உடைந்து தெறிக்குமளவுக்கு உண்டான். ஒவ்வொரு மூச்சிலும் மூக்கு வழியாக சிந்துமளவுக்கு குடித்தான். பின்னர் ஆடற்கணிகையரை அறைக்குள் அழைத்துவர ஆணையிட்டு அவர்களுடன் வெறிகொண்டு காமத்திலாடினான். களைத்து உடலோய்ந்து துயின்று உதைபட்டவன்போல விழித்து உடனே மீண்டும் உணவிலும் மதுவிலும் காமத்திலும் மூழ்கினான்.

வெறும்புழு என தன்னை உணர்ந்தான். அச்சொல் அவனை எரியும் தசைமேல் குளிர்த் தைலமென ஆறுதல்படுத்தியது. எதிலிருக்கிறோமோ அதில் ஒரு பகுதி என்றாதலே புழுநிலை. அழுகும் ஒரு பொருள் கொள்ளும் உயிர்வடிவம் புழு. தளிர்த்தல் மலர்தல் காய்த்தல் கனிதல் அழுகுதல் என புழுத்தலும் ஒரு வளர்நிலை. கனியும், உணவும், மலரும், மலமும் புழுவென அசைவு கொள்கின்றன. புழுமுழுத்து சிறகு சூடுகின்றது. ஒளியும் சிறகும் யாழிசையும் கொண்டு பறக்கையிலும் தன் உடலில் புழுத்திரளை நுண்வடிவில் சுமந்தலைகிறது பூச்சி. மீண்டும் புழுவென்றாகி பெருகி எழுகிறது.

புழுவாவதன் பெருநிலை. விழிமூடினால் கண்களுக்குள் புழு நெளிவு. உடலெங்கும் பல்லாயிரம் புழுக்களென நெளிந்தன நரம்புகள். பெரிய புழுக்களென தசைகள். தன்னை தான் கவ்விச் சுருண்டிருக்கும் ஒற்றைப்புழு என உள்ளம். செத்து அசைவழிந்த குரங்கின் உடலில் மீண்டும் நூறாயிரம் அசைவென எழுந்த புழுத்திரள். உயிர்கொண்டதென அசைந்தது புழுத்த குரங்கு. இதோ எழுந்துவிடுமென குனிந்து நோக்கி

நின்றிருந்தான். முட்டி பால்குடிக்கும் குட்டிகளுக்கேற்ப என குரங்கின் உடல் அசைந்தது. கூட்டம்கூட்டமாக வந்திறங்கி அப்புழுக்களை உண்டன பறவைகள். குரங்கு சிறகுகளாகி கூவிக்கலைந்து வானில் சுழன்றது. எஞ்சிய சிறுதலையில் புன்னகை மட்டும் தங்கியிருந்தது.

பதினான்கு நாட்கள் அசோகசுந்தரி உயிருடன் இருந்தாள். ஒவ்வொரு நாளுமென முதுமைகொண்டு நூற்றியிருபது வயதான முதுமகளென ஆனாள். ஒவ்வொரு விழிப்பிலும் அவள் எதையோ சொன்னாள். ஒலியிலா அசைவென எழுந்த அச்சொற்களை விழிகளால் அறிந்தனர். "என் பாவை" என்றாள். முகம் மலர்ந்து "பறவைகள்" என்றாள். "அழகியவை" என எதையோ சொன்னாள். அழியா உவகை ஒன்றே அவள் முகத்தில் இருந்தது. முகம் முதிர்ந்து வற்றிக்கொண்டிருந்தாலும் புன்னகையில் துயரின்மையின் ஒளி எப்போதுமிருந்தது. இறுதியாக விழிதிறந்து கைமகவுபோல புன்னகை செய்து "இனிய தென்றல்" என்றாள். விழிமூடி அப்படியே உறைந்தாள்.

அவள் நாள்தோறுமென முதுமைகொள்ளும் விந்தையை அவ்வரண்மனையின் விழிகளும் சுவர்களும் தூண்களுமென்றாகி நகரம் நோக்கிக்கொண்டிருந்தது. "அவள் மறைந்துகொண்டிருக்கிறாள். ஒளிச்சுடராக வந்தபோதே நாம் அறிந்திருக்கவேண்டும், அது அணையும் என்று" என்றார் ஒரு முதியவர். "இறுதிச்சொல் என அவள் நம்மை பழித்துவிட்டுச் சென்றால் இந்நகரும் குடியும் அழியும், ஐயமில்லை" என்றாள் மூதன்னை ஒருத்தி. "அவள் இயல்பால் துயரற்றவள். ஒருபோதும் தீச்சொல்லிடக்கூடியவள் அல்ல" என்றான் இளஞ்சூதன் ஒருவன்.

நகரம் அதை மட்டுமே வேண்டிக்கொண்டிருந்தது. அவன் அதை அறியாமல் தன்னை மேலும் மேலும் கீழ்மையில் புதைத்துக்கொண்டிருந்தான். எண்ணி எண்ணி அதை தன் இருட்டுக்குள் இருந்து எடுத்து தன்னைச்சுற்றி பரப்பினான். அவள் இறந்த செய்தியை பத்மன் வந்து சொன்னபோது நான்கு சேடியருடன் காமத்திலிருந்தான் நகுஷன். ஏவலன் அமைச்சர் வந்திருப்பதை அறிவித்ததும் எழுந்து வெளிவந்து கள் நிறைந்து உடல் நீர்களின் நிலையின்மை கொண்டு தளும்பி தள்ளாட நின்றான். விழிகளும் மூக்கும் ஊற்றென வழிந்தன. கதவுநிலையைப் பற்றியபடி உடலை நிறுத்தி சரிந்த இமைகளை உந்தி மேலெழுப்பி சிவந்த கண்களால் அவனை நோக்கி “சொல்க!” என்றான்.

உதடுகளும் நாவும் கள்ளூறி குழைந்து தடித்திருந்தன. மெல்லிய ஏப்பம் விட்டபோது உருகிய தசைமணத்தை மூக்கு அறிந்தது. “அரசி சற்று முன் விண்புகுந்தார்” என்றான் பத்மன். “யார்?” என்று அவன் கேட்டான். “பட்டத்தரசி” என்றான் பத்மன். “ம்” என்றான். “தாங்கள் மணம்கொண்டு நகர்நிறுத்திய கான்மகள்” என்றான் பத்மன். அவன் விழிதூக்கி நோக்க பத்மன் கண்களில் கடும் வஞ்சம் தெரிந்தது. “நன்று” என்றபின் அவன் திரும்பி தன் அறைக்குள் சென்றான்.

கதவிலிருந்து மஞ்சத்தை நோக்கி நடந்து சென்ற பன்னிரு அடிகளில் நெடுந்தூரம் உள்நகர்ந்தான். யாரோ எங்கோ எதையோ சொன்னார்கள் என்பதறகப்பால் அவன் எதையும் உணரவில்லை. மஞ்சத்தில் குப்புற விழுந்து எழுந்து ஆடைதிருத்தி நின்றிருந்த கணிகையரிடம் “அருகிலிருங்கள்! அருகிலிருங்கள்! யார் எழுந்து சென்றாலும் அவர்கள் தலை

கொய்யப்படும்” என்றபடி இருமுறை குமட்டினான். மஞ்சத்திலேயே சற்று வாயுமிழ்ந்தபின் துயிலில் ஆழ்ந்தான்.

விழித்தெழுந்தபோது ஒவ்வொரு மதுக்கேளிக்கைக்குப்பின் உணரும் அதே வெறுமை. தலை நூறு இரும்புக்கம்பிகளால் இழுத்து நொறுங்கக் கட்டப்பட்டதுபோல இருந்தது. கண்களுக்குமேல் ஊசி குத்துவதுபோல வலி. ஒளியை நோக்கி இமையை தூக்க இயலவில்லை. இரு கைகளாலும் தலையைப் பற்றியபடி மஞ்சத்திலேயே குனிந்தமர்ந்தான். அருகே கணிகையர் எவரும் இருக்கவில்லை. பத்மன் வந்து “தங்களுக்காகக் காத்திருக்கிறது அரசியின் உடல், அரசே. குலமுறைச் சடங்குகள் அனைத்தும் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன” என்றான். “நன்று, நான் இன்னும் சற்று நேரத்தில் ஒருங்கிவிடுவேன்” என்றான் நகுஷன்.

நகுஷன் ஏவலர் இருவர் துணை சேர்க்க எழுந்து நடந்து அணியறைக்குச் சென்று வெந்நீரில் நீராடி தேன்கலந்த புளிப்புநீரை உண்டு சற்றே தலைமீளப் பெற்றான். ஆடையை பற்ற முடியாதபடி கைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. ஈரம் எஞ்சிய குழலுடன் சிற்றடி வைத்து நடந்து வந்து பத்மனிடம் “செல்வோம்” என்றான். இடைநாழிகளினூடாக நடந்து அகத்தளம் வரை செல்கையில் இருவரும் ஒரு சொல்லும் பேசிக்கொள்ளவில்லை. குறடோசைகள் மட்டும் மரத்தரையில் ஒரு வினாவும் அதன் விடையும் என ஒலித்தன. தன் நிழல் நீண்டு படிகளில் விழக்கண்டு அவன் திகைத்து நின்றான். “செல்க, அரசே!” என பத்மன் அவனை மெல்ல தோளில் தொட்டான்.

மகளிர்மாளிகையின் படிகளில் ஏறுகையில் நகுஷன் திரும்பி “முதுமகள் ஆகிவிட்டாள்” என்றான். சிரிப்பதுபோல உதடுகள்

வளைந்தன. “முதுமகள்...” என மீண்டும் சொன்னான். பேசுவது நன்று என பத்மன் எண்ணினான். “ஆம், அவ்வாறே நானும் அறிந்தேன். அவர் அணைகட்டி அப்பால் நிறுத்தியிருந்த அகவைகள் அனைத்தும் வந்து சூழ்ந்து பற்றிவிட்டன” என்றான். நகுஷன் “அவளை அவ்வகையில் பார்க்க நான் விழையவில்லை” என்றான். “ஆம், அது கடினமானதே. ஆனால் அவ்வுருவை நீங்கள் பார்த்துத்தான் ஆகவேண்டும். இல்லையேல் உங்களிடம் இருந்த அவர் விலகப்போவதே இல்லை. வருக” என்று சொல்லி பத்மன் முன்னால் நடந்தான்.

அகத்தளத்தின் பெரிய கூடத்தில் பட்டு விரிக்கப்பட்ட காலில்லாப் படுக்கையில் அசோகசுந்தரியின் உடல் வைக்கப்பட்டிருந்தது. காலடியிலும் தலையருகிலும் இரு நெய்யகல்கள் ஒளியிலாச் சுடர்களுடன் நெளிந்தன. வெண்பட்டு போர்த்தப்பட்டிருந்த அந்த உடலை அணுகியதும் நகுஷன் வேறெங்கோ எதன் பொருட்டோ வந்திருப்பதாக உளம் கொண்ட மயக்கை எண்ணி வேறு எங்கிருந்தோ வியந்தான். அங்கே ஒரு மெல்லிய நறுமணம் இருந்தது. அவள் காலடியில் ஐவகை மலர்கள் இருந்தன. வெண்தாமரை, அல்லி, மந்தாரம், முல்லை. அனைத்தும் வெண்ணிறம். அசோகம் மட்டுமே சிவப்பு. ஆனால் மலர்மணம் அல்ல.

சேடி “நோக்குகிறீர்களா, அரசே?” என்றாள். தரை பன்னீரால் கழுவப்பட்டிருந்தது. குங்கிலியமும் கொம்பரக்கும் புகைந்தன. அவற்றின் மணமும் அல்ல. “அரசே?” அவன் தலையசைக்க காலடியிலிருந்து பட்டை மெல்ல அகற்றி முகம் வரை சுருட்டி மேலெடுத்தாள். சவ்வாது, புனுகு, கோரோசனை, கஸ்தூரி அனைத்தும் அங்கே மணத்தன. ஆனால் பிறிதொன்றும் கலந்திருந்தது. அந்த மணங்கள்... மலர்கள்... அறியாத மணம்

நாரென அவற்றை தொடுத்திருந்தது. “அரசே, நோக்குக!” என்றான் பத்மன்.

அவன் அங்கு கிடந்த உடலை நோக்கி ஒருசில கணங்களுக்கு சித்தமென ஒன்றில்லாதிருந்தான். பின்னர் ஒரு சொல்லென அது ஊறிவந்தது. அலறிஅணுகும் கோடைப்பெருமழையென பல்லாயிரம் கோடி சொற்களாலான பெருக்காக மாறி அறைந்து மூழ்கடித்துச் சூழ்ந்தது. அங்கு படுத்திருந்த முதுமகள் தலைநரைத்து, தோல்சுருங்கி, விழிகள் குழிந்து உட்புகுந்து, பற்கள் அனைத்தும் உதிர்ந்து, உள்மடங்கி மறைந்த உதடுகளுடன் சிறுமியளவுக்கு வற்றிய சிற்றுடலுடன் தெரிந்தாள். வெறும் எலும்பென ஆன சின்னஞ்சிறு கைகள். நிலம் பதிந்ததுண்டா என்றே வளைந்த சிறுகால்கள். நரம்புகள் அனைத்தும் தெரிய எலும்புக்குவை என்றே ஆன வெற்றுக்கூடு. பெருமழை அவனை குளிர்ந்து நடுங்கச்செய்தது. அவனுடைய ஒரு காலும் ஒரு கையும் நடுங்கத்தொடங்கின.

நிலைதவறி விழுவதற்குமுன் இரு வீரர்கள் அவனை பற்றிக்கொண்டனர். “மூடுங்கள்!” என்றான் பத்மன். சேடி பட்டை முகத்திலிருந்து இழுத்து கால்வரை மூடி அவள் உடலை மறைத்தாள். அந்தப் பட்டுக்கு அடியில் ஓர் மானுட உடலிருப்பதாகவே புடைப்புகள் காட்டவில்லை. மீண்டும் அதை நீக்கி நோக்கினால் அங்கே சில சுள்ளிகள் இருக்கக்கூடும். சில படைக்கலங்கள் இருக்கக்கூடும். அல்லது திகைத்து மேலே நோக்கும் ஒரு சிறு குழந்தை.

ஏவலர்களின் தோள்களைப் பற்றியபடி தன் அறை நோக்கி மீள்கையில் “என்ன இது! என்ன இது!” என்று அவன் கேட்டுக்கொண்டான். ஒரு சொல்லின் பேய்மழை. அனைத்து இலைகளையும் அறைந்து துடிக்கச்செய்து உரக்கக் கூவும்

நாக்குகளாக்குகிறது. ஒற்றைச்சொல்லின் ஊழிநடனம். அறைக்குள் கொண்டுசென்று அவனை படுக்க வைத்தனர். அவன் மென்னிறகு மஞ்சத்தில் புதைந்துகொண்டே சென்றான். “மது ஊட்டிவிடுங்கள்” என்றான் பத்மன். தட் என எங்கோ அறைந்து நின்றது அவன் மஞ்சம். கணிகையர் வந்து அளித்த மதுவை பாலையில் கைவிடப்பட்டவன் நீரையென வாங்கி வாங்கி அவன் குடித்தான். கணிகையர் கைகள் நாகங்கள். படமெடுத்த உள்ளங்கை. நாகநஞ்சு.

மொத்த உடலையே மதுவால் நிரப்பிவிட விழைபவன்போல அவன் குடித்தான். உடல் நிரப்பி விரல் நுனிகளை குளிர்ந்து எடைகொள்ள வைத்த மது அவன் சித்தத்தை முற்றும் நனைத்து குழைத்து உள்ளலைகளின்மேல் முற்றிலும் படிந்து வழியவைக்க தலையை அசைத்தபடி “என்ன இது! என்ன இது!” என்றே கேட்டுக்கொண்டிருந்தான். சற்றே துயிலிலாழ்ந்து நீள்மூச்செடுத்து உடல் தளர்ந்து நெருப்பால் தொடப்பட்டதுபோல் துடித்து விழித்து எழுந்து “என்ன இது! என்ன இது!” என்று மீண்டும் உளம் பெருகலானான்.

அசோகசுந்தரியின் இறப்பை முரசுகள் அறிவித்தபோது நகரெங்கும் வாழ்த்தோசை எழுந்து அடங்காமல் அலையடித்துக்கொண்டிருந்தது. அவள் இறுதியாக சொன்ன சொல் “இனிய தென்றல்” என்று செய்தி பரவியபோது மக்கள் விழிநீர் உகுத்தனர். மூதன்னை ஒருத்தி வெறியாட்டெழுந்தவளாக கைவிரித்து ஓடிவந்து முற்றத்தில் நின்று “அவள் என்றுமிருப்பாள்! அழிவற்ற காற்றில் வாழ்வாள். துயர்நீக்கும் காற்று அவள். தேவீ, அன்னையே, காவல்தெய்வமே, எங்களை காத்தருள்க!” என்று கூவினாள். “அவள் தென்றல் வடிவானாள். எங்கள் குழந்தைகளுக்கு அவள் களித்தோழி

ஆகுக! எங்கள் மகளிருக்கு இனிய துணைவியாகுக!” என்றார் புலவர் ஒருவர்.

அரண்மனை முற்றத்தில் அமைந்த பந்தலில் அவள் உடலை கொண்டுவந்து வைத்தபோது குருநகரியின் மக்கள் ஒருவர் எஞ்சாமல் திரண்டு வந்து மலரிட்டு வணங்கினர். அவள் காலடியில் தங்கள் குலக்கோல்களை வைத்து வணங்கிய குடிமூத்தார் எழுவர் “அவள் மூதன்னையானாள். நம் குடிவாழ என்றும் காவல் இருப்பாள்” என்றார். “இளமை ஒன்றையே எஞ்சவைத்து பிறிதனைத்தும் முன்பெங்கோ வாழ்ந்து முடித்தவள். வாழமறந்த அந்நாட்களை மட்டும் இங்கு வாழ்ந்து மறைந்தாள்” என்றனர் நிமித்திகர். இரவும் பகலும் ஒழுகிய கூட்டம் அவளை வந்து வணங்கிச் சென்றுகொண்டிருந்தது.

அவள் உடலை தெற்கே கொண்டுசென்றபோது குருநகர் முழுமையும் ஊர்வலமாகப் பெருகி தொடர்ந்தது. தென்றிசைக்காடு முழுக்க தலைகளால் மூடப்பட்டது. விழிதிகைத்து குரலெழுப்பி அழும் முகங்களால் நிரப்பப்பட்டிருந்தன மரந்திகழ் சோலைகள். “குருகுலத்து கோமகள் வாழ்க! துயரற்றவள் வாழ்க!” என்று பெருகிச் சூழ்ந்தன வாழ்த்துரைகள். அவளுக்கு அமைக்கப்பட்ட சிதைமேல் உடலை ஏவலர் தூக்கி வைத்தபோது அத்தனை சிறிய உடலா என அனைவருக்குள்ளும் எண்ணமெழுந்தது. சந்தனப்பலகைகளை அவள் மேல் அடுக்கியபோது முதுகுலத்தார் ஒருவர் நெகிழ்ந்த குரலில் “மெதுவாக...” என்றார். அடக்க அடக்க எழுந்த அழுகையுடன் “தூய வெண்மலர்” என்றபோது வெடித்து கேவியபடி அப்படியே அமர்ந்துவிட்டார்.

இரு ஏவலர் தோள்பற்றி எங்கிருக்கிறோம் என்றே தெரியாது, கால்கள் மண் தொட்டு இழுபட, துவண்டு தொங்கிய கைகளுடன் வந்த நகுஷன் எவரோ கையிலளித்த அனற்குடுவையை வாங்கி அவள் காலடியில் வைத்தான். பின் தன் கைகளைப் பார்த்து ஏதோ சொன்னான். தழலெழுந்து நாபறக்கத் தொடங்கியதும் குருநகரின் குடிகள் நெஞ்சிலறைந்து கதறி அழுதனர். வாழ்த்துக்களும் முழவும் முரசும் கொம்பும் சங்கும் இணைந்த பேரிசையும் சூழ்ந்தன. அவ்வொலியின் விழிவடிவமென எழுந்து நின்றாடியது சிதைத்தீ.

நகுஷனிடம் “செல்வோம், அரசே” என்றான் பத்மன். “அவ்வளவுதானா?” என்று அவன் கேட்டான். “ஆம், அவ்வளவுதான்” என்றான் பத்மன். “நான் செல்லலாமா?” என்றான் நகுஷன். “ஆம், செல்வோம்” என்று பத்மன் அவனைத் தழுவி கொண்டுசென்றான். “முதுசெவிலி அங்கிருப்பார் அல்லவா?” பத்மன் புரியாமல் “ஆம்” என்றான். “அவரிடம் சொல்க, முடிந்துவிட்டது என்று” என்றான். “ஆம், சொல்கிறேன்” என்றான் பத்மன். “கொன்றபழி தின்றால்...” என அவன் பதறும் விழிகளுடன் அவனை நோக்கி சொன்னான். “நான் தின்னவில்லை... தின்றது எரி.” “நாம் அரண்மனைக்குச் சென்று பேசுவோம், அரசே” என்றான் பத்மன்.

அரண்மனையை அடைந்தபோது அவன் திரும்பி பத்மனிடம் “அதே அரண்மனை” என்றான். “ஆம்” என்றான் பத்மன். அவன் தோளைப்பற்றி “அங்கே குரங்குகுலம் இருக்குமா எனக்காக?” என்றான். “இருக்கும், வருக அரசே!” என தேர்விட்டு இறங்கச்செய்தான் பத்மன். முற்றத்தில் நின்று அரண்மனையை நோக்கியதும் அவன் தன் ஆழத்தில் ஓடிக்கொண்டே இருந்த சொல்லை சென்றடைந்தான். “என்ன இது! என்ன இது!” என்று

தனக்கே என, தன்னருகே நின்றிருக்கும் அறியாத ஒன்றிடம் என கேட்டான்.

“வருக, அரசே!” என்று பத்மன் அவனை அழைத்துச்செல்ல அவ்வொரு சொல்லை மட்டுமே மீள மீள உச்சரித்தபடி ஏவலர்களின் உடலில் தன் எடையைச் சாய்த்து அவன் நடந்து சென்றான். தன் அறைக்குச் சென்று மஞ்சத்தில் எடையுடன் விழுந்து “மது... நிறைய மது” என்றான். கண்களை மூடியபடி ஓசையின்றி அதே சொல்லை சொல்லிக்கொண்டிருந்தான். வெறும் ஒலியென்றாகியது அச்சொல். பின்னர் ஓர் எண்ணமென ஓர் அக அசைவென ஆகியது.

# மாமலர் - 40

## 40. இடிபாடுகள்

அசோகசுந்தரியின் குடிலை கண்காணிக்க கம்பனன் ஒற்றர்களை சூழமைத்திருந்தான். ஆனால் நாள் செல்லச்செல்ல அவன் அதை மறந்தான். அவன் நோக்காமலானபோது கீழே இருந்தவர்கள் அதை வெறும் அலுவலாக ஆக்கிக்கொண்டனர். முறைமையென்றாகும்போது காவல்பணியும் கணக்குப்பணியும் சிறக்கின்றன, ஒற்றுப்பணியும் நீதியளித்தலும் அழிகின்றன என்பது ஆட்சிநூலின் நெறி. நாளடைவில் அசோகசுந்தரியின் குடிலை எவருமே கண்காணிக்கவில்லை. அப்பெயரே எங்கும் பேசப்படவுமில்லை.

அரண்மனையின் ஒவ்வொன்றும் பிழையென சென்றுகொண்டிருந்தது. ஹூண்டன் வஞ்சமும் சினமும் கொண்டவனாக ஆனான். அவன் கண்களில் எழுந்த ஒளியைக்

கண்டு அஞ்சிய ஏவலர் ஏறிட்டு அவனை நோக்குவதை தவிர்த்தனர். கம்பனனே அவனுக்கு பக்கவாட்டில் நின்று விழிநோக்காது சொல்லாடினான். எவ்விழிகளுமே சந்திக்காத ஹூண்டனின் விழிகள் முதுநாகத்தின் மணி என ஒளிகொண்டன. அவற்றை ஏறிட்டு நோக்கியவர்கள் அவனால் தண்டிக்கப்பட்டவர்கள் மட்டுமே. அவன் ஆணையை சொல்லி முடித்ததுமே அவர்கள் திடுக்கிட்டு விழிதூக்கி அவ்விழிகளை நோக்கி அக்கணமே நாகத்தின் முன் எலி என சித்தம் உறைந்து உடல் ஒடுங்கினர். அவர்களின் உள்ளம் அவன்முன் முழுமையாகப் பணிந்தது. தங்கள் உடலை அவர்கள் அதற்கென்றே பிறந்தவர்கள்போல மாற்று எண்ணமே இன்றி ஒப்படைத்தனர்.

அவன் நாளும் ஒருவனை கழுவிலேற்றினான். சிறு பிழைகளுக்கும் தலைவெட்டவும், யானைக்காலில் இடறவும், புரவிகளால் இழுத்துக்கிழிக்கவும், பேரெடை கட்டி தலைகீழாகத் தொங்கவிடவும் ஆணையிட்டான். எனவே அவனிடம் நீதி வழங்க வழக்குகள் வருவதை கம்பனன் தவிர்த்தான். கொலை செய்யப்படவேண்டியவர்களை மட்டுமே அவனிடம் அனுப்பினான். ஹூண்டன் தன் சாளரத்துக்கு வெளியிலேயே கழுமரம் அமைத்து அதில் அந்தக் கழுவேறி உடல்கோத்து குருதி வார கைகால்கள் துடிதுடிக்க முனகி மெல்ல மடிவதை நோக்கிக்கொண்டு மஞ்சத்தில் படுத்திருந்தான். வதைபட்ட உயிரின் இறுதித் துடிப்பின்போது தன் பாறைக்கால்களில் உயிரசைவு தோன்றுவதாக சொன்னான்.

“உயிர் தன்னில் இருப்பதை உடலால் உணர முடியாது, அமைச்சரே. ஏனென்றால் உயிரை உடல் தான் என்றே எண்ணுகிறது. ஆனால் உடலின் உச்சகட்ட வலியில் உயிர்

அதை உதறி கைவிட்டுவிடுகிறது. உயிர் உதறி மேலெழுகையில் ஒருகணம் உடலால் வெறும் உயிர் உணரப்படுகிறது. ஒரு நடுக்கமாக அல்லது துடிப்பாக அல்லது வேறு ஏதோ ஒன்றாக அது வெளிப்படுகிறது. அந்த உடலசைவு ஒரு சொல்... மிகமிக அரிதான சொல்" என அவன் முகம் உவகையில் விரிய சொன்னான். "ஆனால் ஓரிரு கணங்கள் மட்டுமே அது நிகழ்கிறது. கண் அதை தொட்டு சித்தம் அறிவதற்குள் முடிவடைந்துவிடுகிறது. இன்னொருமுறை அதை பார்த்தால் தெரிந்துவிடும் என உள்ளம் பதைக்கிறது. ஆகவேதான் மீண்டும் மீண்டும் உயிர்க்கொலை செய்கிறேன்."

அத்தனை மனிதர்களும் வெறும் உடலுயிர்களாக அவனுக்கு தெரியலாயினர். ஏவலரும் காவலரும் கழுவேறினர். ஒருமுறை அவன் இளம்வீரன் ஒருவனை கழுவிலேற்றினான். அதுவே தாளலின் எல்லையென அமைந்த இறுதிச் சுமை. அவன் குலம் கொதித்து எழுந்தது. நாகநாடு முழுக்க குலங்கள் ஒன்று திரண்டன. நாகத்தரைகளில் குடிக்கூட்டங்கள் நாளும் நடந்தன. பல குலங்கள் நாகநாட்டிலிருந்து விலகிச்செல்வதாக அறிவித்தன. கம்பனன் முதலில் படைகளை அனுப்பி அந்தக் கிளர்ச்சியை அடக்க முயன்றான். அது அரக்குக்காட்டில் எரி என படர அவர்களை பேசி அமைக்க முயன்றான். ஒரு குலம் தணிந்ததும் பிறிதொன்று எழுந்தது. எண்ணியிராத இடங்களில் எல்லாம் சாம்பல்குவைக்குள் இருந்து எரி பொங்கி எழுந்தது. ஹூண்டனின் குருதி இல்லாது அமையோம் என்றே பல குலங்கள் கொதித்தன.

இறுதியில் அது அங்குதான் முடியுமென கம்பனன் அறிந்திருந்தான். குடிகள் தங்கள் ஆற்றலை உணராதிருக்கும்வரைதான் அச்சம் அவர்களை ஆளும். அஞ்சிய

பசு துள்ளி எல்லைகடப்பதுபோல சினம்கொண்டு நிலைமறந்து எழுந்து அதனூடாக தங்கள் எல்லையை கடந்துவிட்டார்கள் என்றால் அரசனின் குருதியில்லாது குடிகள் அமையமாட்டார்கள். அது அவ்வரசனின் குருதி மட்டும் அல்ல. அரசு என்பது குடிகளை ஒடுக்கியே நிலைகொள்வது. புரவி நினைத்திருக்க பல்லாயிரம் சாட்டைத் தழும்புகள் இருக்கும். அத்தனை குடிக்கிளர்ச்சிகளிலும் அரசு என்னும் அமைப்பு உடைந்து சிதறுகிறது. கோட்டையும் காவலும் சிதறுகின்றன. கொடிகள் மண்ணில் புரண்டு மிதிபடுகின்றன. அரசின்மையின் பெருங்களியாட்டம் எழுந்து எவராலும் கட்டுப்படுத்த முடியாதபடி அனைத்தையும் உடைத்து அழிக்கிறது.

பெரிய அணை உடைந்தால் அத்தனை சிறிய அணைகளும் உடைவதுபோல குடியறமும் குலஅறமும் கற்பும் மூத்தோர்மதிப்பும் மறக்கப்படுகின்றன. அதை கட்டுக்குள் வைக்க அதைத் தொடங்கியவர்களாலேயே இயலாது. அக்களியாட்டம் பெருகிப்பெருகி பேரழிவாக ஆகத் தொடங்கும்போது அவர்கள் கைகாட்டி குறுக்கே நிற்பார்கள். ஆணையிட்டும் மன்றாடியும் நிறுத்த முயல்வார்கள். அவர்கள் உடைத்து வீசப்படுவார்கள். அழிவு முழுமைகொண்டபின்புதான் மெல்ல போதம் மீளத் தொடங்கும். மேலும் முன்செல்லமுடியாதென்று உணரும் நிலையில் மெல்ல திரும்பத் தொடங்குவார்கள் முன்னே சென்றவர்கள்.

முதலில் உருவாவது அரசு. மிகக் கொடிய அரசு. குருதிவெறிகொண்டது. கட்டின்மையின் வெறியை கொலைவெறியால் அது நிகர்செய்கிறது. அச்சம் இளம்அரசை மேலும் மேலும் ஆற்றல்கொண்டதாக ஆக்குகிறது. அரசின் ஆற்றல் குலம் குடி கற்பு என அனைத்தையும் மீண்டும்

நிறுவத் தொடங்குகிறது. அந்த உடைப்பை அஞ்சாத ஆட்சியாளர்கள் இல்லை. அணையைக் கண்டதுமே கசிவை எண்ணாத சிற்பி இல்லை என்பதுபோல. அவ்வச்சம் ஒவ்வொரு சிறு மீறலையும் உச்சகட்ட வன்முறையுடன் எதிர்கொள்ள அரசுகளை தூண்டுகிறது. அச்சமே அரசு. ஆனால் அச்சுறுத்துவதில் ஓர் எல்லை உண்டு. அச்சத்தின் உச்சியில் இனி செல்ல இடமில்லை என குடிகள் திரும்பிவிட்டார்கள் என்றால் அரசின் கோன்மை எங்கோ நுண்ணிய தளம் ஒன்றில் முடிவுக்கு வந்துவிடுகிறது.

ஹூண்டன் அந்த எல்லையை சென்று முட்டிவிட்டான் என கம்பனன் உணர்ந்திருந்தான். ஒவ்வொருநாளும் அதை சீரமைக்க அவன் முழுமூச்சாக முயன்றான். நாளுக்கு நூறு ஓலைகள் எழுதினான். மீண்டும் மீண்டும் குலமூத்தவர்களை சென்று சந்தித்து பேசிக்கொண்டிருந்தான். படைவீரர்களுக்கு கருவூலத்தை திறந்துவிட்டான். எதிரிகளைப்பற்றிய அச்சத்தைப் பெருக்கும் செய்திகளையும் எதிரிகள் மீதான வஞ்சத்தையும் ஒற்றர்கள் வழியாக குடிகளிடம் பரப்பினான். ஒருநாள், இன்னும் ஒருநாள், இதோ அணைந்துவிடும் என காத்திருந்தான். அதில் அவன் பிறிதனைத்தையும் முழுமையாக மறந்தான்.

ஹூண்டனின் அரசியர் இருவரும் முன்னரே மெல்லமெல்ல உளப்பிறழ்வு கொள்ளலாயினர். முதலில் விபுலையில்தான் வேறுபாடு தெரியத்தொடங்கியது. அவள் பசி கூடிக்கூடி வந்தது. சுற்றிச்சுற்றி உணவறையிலேயே வந்து அமர்ந்தாள். உணவைப்பற்றியே பேசினாள். வேறு எதிலும் அவள் உளம்நிலைக்கவில்லை. அதை அவளே சொல்லி அஞ்சி அழுதாள். மருத்துவரை அழைத்து வந்து தன் தவிப்பைச் சொல்லி மருந்துகளை உண்டாள். மேலும் மேலுமென பசி ஏற

அவள் அதனுடன் கொள்ளும் போராட்டமும் விசைகொண்டது. பின் அதனுடன் எதிர்நிற்க இயலாதென்று கண்டு முற்றிலும் பணிந்தாள்.

வெறிகொண்டவள்போல உணவுண்ணலானாள். எப்போதும் கண்முன் உணவு இருந்துகொண்டே இருக்கவேண்டும் என பதைத்தாள். ஒரு தாலத்தில் உணவுண்ணும்போதே பிறிதொன்றில் உணவைக் கொண்டுவந்து கண்முன் வைத்திருக்கவேண்டுமென்று கூச்சலிட்டாள். துயில்கையிலும் அவளருகே உணவு இருந்தது. விழித்தெழும்போது உணவு கண்முன் இல்லையென்றால் அது வருவதற்குள் அவள் எழுந்து நெஞ்சிலறைந்து கூச்சலிட்டாள். சேடியை அறைந்தும் உதைத்தும் சில தருணங்களில் பாய்ந்து கடித்தும் வெறிக்கூத்தாடினாள்.

அவள் உடல் பெருத்தபடியே வந்தது. தோள்களும் புயங்களும் பெருத்து தோல்வரிகள் எழுந்து தசைவிரிவுகொண்டது. இடையும் வயிறும் உப்பி அடிமரத்தூர் என ஆனாள். அவ்வெடையை அவள் சிறுகால்கள் தாளாதானபோது பெரும்பாலும் அமர்ந்தபடியே இருந்தாள். சுவர் பற்றி மெல்ல நடந்து மூச்சிரைத்து நின்றாள். உடலில் இருந்து வியர்வை ஆவி எழ முகம் குருதியென சிவப்பு கொள்ள நின்று தள்ளாடினாள்.

பின்னர் அவளால் தானாக எழுந்து நடக்க முடியாமலாகியது. தோல்நீர்ப்பைபோல பருத்து தளர்ந்து தனியாகத் தொங்கும் தன் வயிற்றை தானே பிடித்து தூக்கிக்கொண்டு புயம்பற்றி எழுப்பும் சேடியர் உதவியுடன் மஞ்சத்திலிருந்து இறங்கி எழுந்து நின்றாள். சேடியரை பற்றிக்கொண்டு ஒவ்வொரு அடியாக வைத்து கழிப்பகக் கோட்டத்திற்குச் சென்றுமீண்டாள்.

ஒருமுறை சேடியர் கையிலிருந்து வழுவி நிலத்தில் விழுந்து இடையெலும்பு முறித்தது. கீழே கிடந்து அலறிய அவளை சேடியர் பன்னிருவர் சேலையை முறுக்கி வடமென்றாக்கி இடைசுற்றிக் கட்டி பற்றி மேலே தூக்கினர். வாரிக்குழிக்குள் விழுந்த காட்டுயானையை தாப்பானைகள் தூக்குவதுபோல என்று இளம்சேடி ஒருத்தி சொன்ன இளிவரல் அகத்தளங்களில் நெடுநாட்கள் புழங்கியது.

சேடியர் அதற்கும் மரத்தாலங்களை அறைக்கே கொண்டுவரத் தொடங்கிய பின்னர் அவள் அரண்மனையின் சிற்றறை ஒன்றுக்குள் முழுமையாகவே அடைபட்டவளானாள். நோக்குபவர் திடுக்கிடுமளவுக்கு அவள் உடல் உப்பி வீங்கி பெருத்து தசைப்பொதிகள் நான்கு பக்கமும் பிதுங்கி வழிந்திருக்க படுக்கையை நிறைத்துக்கிடந்தாள். கைகளும் கால்களும் தனித்தனி மனிதஉடல்கள் போல அவளருகே செயலற்றுக்கிடந்தன. கன்னங்கள் பிதுங்கியமையால் மோவாய் ஒரு குமிழ், மேலே மூக்கு பிறிதொரு சிறு குமிழ் என்றான வட்ட முகத்தில் விழிகள் சிறுத்து தசைக்குள் புதைந்து கேடயத்தில் இறுக்கிய ஆணிகளின் முனைகளெனத் தெரிந்தன. வாய் சிறிய துளை என அழுந்தியிருக்க அதைச் சுற்றி ஏழு தசையடுக்குகளாக முகவாயும் கழுத்தும் அமைந்திருந்தன. முலைகள் இரண்டும் விலாவை நோக்கி வழிந்துகிடந்தன.

அவள் தன் வயிற்றின் மேலேயே தாலத்தை வைத்து விழித்திருக்கும் வேளையெல்லாம் உண்டுகொண்டிருந்தாள். அவ்வுணவு சிந்தி சேற்றுக்குழியென ஆழம் மிகுந்த தொப்புளிலும் புண்ணாகி தசையழுகும் நற்றம் கொண்டிருந்த தசைமடிப்புகளுக்குள்ளேயும் படிந்திருக்க அதை நாளில் பலமுறை சேடியர் துடைத்து தூய்மை செய்தனர். போதிய

உணவு இல்லை என்னும் அச்சம் அவளை கனவிலும் உலுக்கியது. எழுந்து கைகளை அசைத்து ஊளையிட்டு சேடியரை அழைத்து “உணவு! உணவு எங்கே?” என்று கூவினாள். உணவைக் கண்டதும் சிரிப்பில் விழிகள் தசைக்கதுப்பில் புதைந்து மறைந்தன. மூக்குப்பாதையை கொழுப்பு அடைக்க மெல்லிய குழலோசை என அவள் மூச்சு ஒலித்தது.

ஆனால் அவளுக்கு முன்னரே வித்யுதைதான் இறந்தாள். விபுலை பருத்து வந்ததற்கு மாறாக அவள் மெலிந்து உருகிக்கொண்டிருந்தாள். முதலில் இருவரும் இணைந்தே உணவுண்டனர். விபுலை தாய்ப்பன்றிபோல வாயோரம் நுரைக்க சேற்றில் நடப்பதுபோன்ற ஒலியெழ உண்பதைக்கண்டு அவள் குமட்டி வாய்பொத்தி எழுந்தோடினாள். அதன்பின் அவளால் உணவுண்ணவே இயலவில்லை. ஓரிருவாய் உணவுண்டதுமே குமட்டி உடல் உலுக்கிக்கொண்டது. மருத்துவர் அளித்த மருந்துகளால் பெரும்பசி கொண்டவளானாள். ஆனால் கையில் உணவை அள்ளியதுமே வயிறு பொங்கி மேலெழுந்தது.

“தமக்கையை எண்ணவேண்டாம், அரசி” என்றார் மருத்துவர். “அவளை எண்ணாமல் நான் இதுநாள்வரை இருந்ததே இல்லை” என்றாள் வித்யுதை. அவளை மறக்கும்படி சொல்லச்சொல்ல அவள் அவளையே எண்ணிக்கொண்டிருக்கலானாள். ஒவ்வொருநாளும் அவள் மூத்தவளை எண்ணியபடி விழித்தெழுந்தாள். அவளை நோக்கலாகாது என்று உறுதிகொண்டு பின்காலைவரை பொறுத்தவள் எழுந்து சென்று நோக்கினாள். அவள் உடலின் மடிப்புகளை தூய்மை செய்யும் சேடியரைக் கண்டால்

அங்கேயே குமட்டி வாயுமிழ்ந்தாள். எழுந்தோடிச் சென்று இருண்ட அறைக்குள் ஒளிந்துகொண்டாள்.

எலும்புருவாக ஆன வித்யுதை பலமுறை விபுலையை கொல்ல முயன்றாள். கையில் அகப்பட்டவற்றை எடுத்துக்கொண்டு ஓடிவருபவளை சேடியர் மிக எளிதில் பிடித்து அடக்கினர். நெஞ்சில் அறைந்து கதறியழுதபடி அவள் அங்கேயே அமர்ந்துகொண்டாள். “என்ன ஓசை?” என்று விபுலை கேட்டாள். “ஒன்றுமில்லை, தங்கள் தங்கை” என்றனர் சேடியர். “அவளிடம் உணவுண்ணும்படி சொல்” என்றாள் விபுலை மென்றபடி. அவள் தங்கையை எண்ணுவதேயில்லை. “மலக்குழிக்குள் விழுந்து பெருத்துப்போன புழு” என அவளைப்பற்றி சொன்னார்கள் சேடியர்.

ஒவ்வொருநாளும் பசியால் தவித்தும் உண்ணமுடியாமல் துடித்தும் கணங்களைக் கடந்த வித்யுதை ஒருநாள் தன் அறைக்குள் தன் ஆடையாலேயே தூக்கிட்டு இறந்தாள். அவள் அறைக்கதவு திறந்திருக்கக் கண்டு உள்ளே சென்ற சேடி சுவரோரமாக திரும்பி நின்றிருக்கும் அவளை கண்டாள். விந்தையை அவள் உள்ளம் உணர்ந்தாலும் சித்தம் அறியவில்லை. அருகணைந்தபோதுதான் அவள் உயரம் மிகுதியாக இருப்பதை உணர்ந்து மேலே நோக்கினாள். கழுத்தை இறுக்கிய மேலாடை சரிந்த உத்தரத்தில் கட்டப்பட்டு சறுக்கி சுவர்மூலைவரை வந்திருந்தது. அவள் கால்களின் கட்டைவிரல்கள் நிலத்திலிருந்து விரலிடை உயரத்தில் காற்றில் ஊன்றியிருந்தன.

தங்கையின் இறப்பை விபுலை உணர்ந்ததாகவே தெரியவில்லை. உண்டுகொண்டிருந்தவளிடம் அச்செய்தி சொல்லப்பட்டபோது “அவள் ஏன் அப்படி செய்தாள்?” என்றாள்.

உடனே “இறப்பென்றால் உணவுநீத்தல் சடங்கு உண்டு அல்லவா? எவருக்கும் தெரியாமல் இங்கு உணவை கொண்டுவந்து வைத்துவிடு” என்று சொல்லி மீண்டும் உண்ணத்தொடங்கினாள். அதுவரை ஏதோ மெல்லிய இரக்கத்தால் அவளை விரும்பிவந்த அகத்தளப்பெண்டிர் அவளை வெறுக்கலாயினர். அவளுடைய சாவை எதிர்நோக்கி ஒவ்வொரு காலையிலும் வந்து நோக்கினர். அவள் உண்டுகொண்டிருப்பதைக் கண்டு “இவளுக்கு அழிவே இல்லை” என்றனர்.

தன் அமைச்சறையில் சுவடி நோக்கிக்கொண்டிருந்த கம்பனன் தன்முன் வந்து பணிந்து நின்றிருந்த முதிய ஒற்றன் பெரிய செய்தியை கொண்டிருப்பதை உணர்ந்தான். “சொல்க!” என மெல்லிய குரலில் சொன்னபடி சுவடியை கட்டினான். “சொல்க!” என தயங்கிநின்ற ஒற்றனை மீண்டும் ஊக்கினான். “அமைச்சரே… இதன்பொருட்டு நான் கழுவேறவேண்டியிருக்கலாம். என் மைந்தர்களுக்கு ஒன்றும் ஆகக்கூடாது” என்றான் ஒற்றன். “சொல்க!” என்றான் கம்பனன். “சோலைக்குடிலில் இருந்த இளவரசியை காணவில்லை” என்றான் ஒற்றன்.

முதலில் கம்பனன் அதை முழுமையாக புரிந்துகொள்ளவில்லை. இறந்திருப்பாள் என்னும் எண்ணமே இயல்பாக வந்தது. “விலங்குகளா?” என்றான். “ஒரு தேரும் புரவிகளும் வந்துசென்றுள்ளன. இரண்டு நாட்களுக்கு முன் அவர்கள் இளவரசியை கூட்டிச்சென்றிருக்கிறார்கள்.” கம்பனன் பாய்ந்து எழுந்து “யார்?” என்றான். “என்னால் அதை அறியக்கூடவில்லை… ஆனால் ஏதோ அரசன்.” கம்பனன் “அங்கே நம் காவலர்கள் இருந்தார்களா?” என்றான். “அவர்கள்

வாரம் ஒருமுறை மட்டுமே சென்று நோக்குவது வழக்கம். அவர்களுக்கு வேறு பணிகள் மேலிடத்திலிருந்து அளிக்கப்பட்டன. முழுநேரம் அங்கு எவருமில்லை” என்றான் ஒற்றன். “சென்று நோக்கியவர்கள் அறிந்திருக்கிறார்கள்.”

ஒரு கணம் உளம் சொடுக்கிக்கொள்ள கம்பனன் தனக்கு வந்திருந்த அத்தனை ஓலைகளையும் அள்ளிப் பரப்பி அதில் மஞ்சள் பூசப்பட்டிருந்த நான்கு ஓலைகளை எடுத்தான். அயோத்தியின் அரசன் விதர்ப்பத்தின் இளவரசியையும் காமரூபத்தின் அரசன் வங்கத்து அரசியையும் மச்சர்குலத்து அரசன் காகபுரத்து அரசியையும் மணக்கும் செய்திகளைத் தவிர்த்து எடுத்த ஓலையில் குருநகரியின் அரசன் கானீனையை மணப்பதாக இருந்தது. “ஆம், இது எனக்கு தோன்றிக்கொண்டே இருந்தது!” என்று அவன் உள்ளம் கூவியது.

“அழைத்து வருக, தலைமை ஒற்றனை!” என அவன் சொன்னான். தலைமை ஒற்றன் வரும்வரை பரபரப்புடன் ஓலைகளைத் துழாவி படிக்கலானான். அவன் வருவதற்குள் குருநகரியில் நகுஷன் திரும்பிவந்த செய்திகள் அடங்கிய இருபத்தெட்டு ஓலைகளை கம்பனன் எடுத்துவிட்டான். அவ்வோலைகள் பதினெட்டு நாட்களாக தொடர்ந்து வந்துகொண்டே இருந்திருக்கின்றன. எதையுமே அவன் பிரித்து நோக்கியிருக்கவில்லை.

தலைமை ஒற்றன் வந்து பணிந்தபோது அவன் விழிகளை ஏறிட்டு நோக்க கம்பனன் உளம் துணியவில்லை. “அவன் நகுஷன்தானா?” என்றான். “ஆம், அமைச்சரே. அனைத்துச் செய்திகளையும் நான் உடனுக்குடன் தெரிவித்துக்கொண்டிருந்தேன்” என தலைமை ஒற்றன்

சொன்னான். தங்கள் செய்திகள் மதிக்கப்படாதபோது ஒற்றர்கள் கொள்ளும் சினத்துடன் ஆனால் குரலில் எதுவும் வெளிப்படாமல் “ஓலைகளில் எழுதி இங்கே நாட்படி அடுக்கும்படி சொன்னீர்கள். அதை செய்தேன்” என்றான். ஒருகணம் சினம் எழுந்தாலும் அசோகசுந்தரிக்கும் நகுஷனுக்கும் அரசனுக்குமான மும்முனைப்போர் குறித்து எதுவும் தெரியாத ஒற்றர்களுக்கு குருநகரியின் மாற்றங்கள் வெறும் செய்திகளே என உணர்ந்து அவன் அமைதிகொண்டான்.

“திரிகர்த்தர்களுக்கும் உசிநாரர்களுக்கும் பிறிதொரு போர் மூளக்கூடும். அதைக் குறித்த செய்திகளும் உள்ளன. எதுவுமே பார்க்கப்படவில்லை” என்றான் தலைமை ஒற்றன். “ஆம்” என்றான் கம்பனன். “நாகர்களை உடனடியாக வாட்டக்கூடிய இடர் அது. எல்லையில் எண்பது நாகர்குடிகள் வாழ்கின்றன” என்று தலைமை ஒற்றன் சொன்னான். கம்பனன் “நான் பார்க்கிறேன்” என்றான். “பொழுதெல்லாம் அரசருடன் இருந்தீர்கள். அங்கே மனிதர்கள் அலறிச்சாகும் ஒலியில் பிற ஒலிகள் உங்கள் செவிகளை அடையவில்லை” என்றான் தலைமை ஒற்றன்.

கம்பனன் பெருமூச்சுவிட்டான். “நகுஷன் எங்கிருந்து வந்தான்?” என்றான் கம்பனன். “அவர் தன் படைகளுடன் திரிகர்த்தர்களை அச்சுறுத்தினார். எதிர்பாராதபடி குருநகரிமேல் படைகொண்டுசென்று வென்றார். முடிசூட்டிக்கொள்வதற்கு முன்னரே சென்று கானீனை ஒருத்தியை கவர்ந்துவந்து மணம்புரிந்துகொண்டார்.” கம்பனன் “ஆம், அதை வாசித்தறிந்தேன். அவன் வந்தது எங்கிருந்து?” என்றான்.

தலைமை ஒற்றன் “அதை இருவாறாக சொல்கின்றனர். அவர் மாமன்னர் ஆயுஸின் மைந்தர். குருநகரியின் அரசர் நோயுற்றிருந்தமையால் தான் இறந்தால் தன் மைந்தனும் கொல்லப்படுவான் என அஞ்சினார். அவ்வெதிரிகளுக்கு அஞ்சி தந்தையால் வசிட்டரின் குருநிலைக்கு இளவயதிலேயே அனுப்பப்பட்டார். அங்கே கல்வி கற்றதும் தந்தையின் ஆணைப்படி வெளியே வந்து தான் கற்ற படைக்கலை கொண்டு படைதிரட்டி திரிகர்த்தர்களின் சிற்றரசர்களை வென்றார். குருநகரியை கைப்பற்றி தந்தை சூடியிருந்த முடியை தானே ஏற்றுக்கொண்டார்” என்றான்.

பின்னர் மெல்ல சிரித்தபடி “இன்னொரு கதையில் அவரை ஓர் ஒற்றன் தூக்கிக்கொண்டு காட்டில் ஒரு மரப்பொந்தில் வைத்துவிட்டதாகவும் அங்கிருந்து குரங்குகள் அவரை எடுத்து வளர்த்து இளைஞனாக்கி வசிட்ட குருநிலையில் கொண்டுசென்று சேர்த்ததாகவும் சொல்லப்படுகிறது. இந்தக் கதையே மக்களால் விரும்பப்படுகிறது. ஏனென்றால் இதுவே நம்பமுடியாததாக இருக்கிறது” என்றான். “நம் ஒற்றன் ஒருவனை இறக்கும் தருணத்தில் விந்தையான முறையில் காட்டில் கொண்டுசென்று வைத்துவிட்டு வந்ததாக சொன்னார்கள் அல்லவா?” என்றான் கம்பனன்.

“ஆம்” என்றதுமே தலைமை ஒற்றன் புரிந்துகொண்டான். “நாம் செய்ததா?” என்றான். “ஆம்” என்றான் கம்பனன். “அங்குதான் குழந்தையை கொண்டுசென்று வைத்திருக்கிறான். அவன்தான் வசிட்டரிடம் சொல்லியிருக்கிறான்” என்ற தலைமை ஒற்றன் “அவன் அரசியரின் சேடியான மேகலையின் தனிப் பணியாளாக இருந்தான். மேகலை தன் மகளுடன் வாழ்வதற்காக தெற்கே சென்றபின் பணியிலிருந்து விடுபட்டு

நாடோடியாக அலைந்தான். நெடுநாட்களுக்குப் பின்னர் திரும்பிவந்தான். இறுதிநாட்களில் பித்தனாகவே இருந்தான் என்கிறார்கள்” என்றான்.

“அரசியிடம் சென்று குருநகரியின் நகுஷன் சாகவில்லை, மீண்டு வந்து அரசனாக முடிசூடிவிட்டான் என்று சொல்க!” என்றான் கம்பனன். “நான் சென்று அரசரை பார்த்து வருகிறேன்.” தலைமை ஒற்றன் “அரசியிடம் சொல்வதில் பயனில்லை, அமைச்சரே. சொல்கேட்கும் நிலையில் அவர்கள் இல்லை” என்றான். “இச்சொல் அவர்களுக்கு கேட்கும். இதைக் கேட்பதே அவர்களை விடுதலை செய்யும். செல்க!” என்றான். தலைமை ஒற்றன் தலைவணங்கி அகன்றான்.

அவன் பெருமூச்சுவிட்டு பீடத்தில் தலை சாய்த்து கண்மூடி அமர்ந்தான். உள்ளம் எண்ணமற்று இருந்தது. பெருமலைகளுக்கு முன் நிற்கையில் உருவாகும் சொல்லின்மை. என்ன நிகழப்போகிறது? எது நிகழ்ந்தாலும் அதை எவ்வகையிலும் அவன் நடத்த முடியாது. அதன் உருவையும் பாதையையும் அறியவே முடியாது. அவ்வெண்ணம் அவனுக்கு ஆறுதலை அளித்தது. முகத்தசைகள் மெல்ல தளர்ந்தன. புன்னகைக்கமுடியுமா என எண்ணி உதடுகளை இளித்து புன்னகைத்துப் பார்த்தான். உள்ளமும் அப்புன்னகையை அடைந்தது.

எழுந்துசென்று ஹுண்டனிடம் அதைப் பற்றி சொல்லவேண்டும் என எண்ணிக்கொண்டான். ஆனால் உடலை எழுப்பமுடியவில்லை. அங்கே கொலையில் களித்திருக்கும் அரசன் தன் களித்தோழனல்ல என்று தோன்றியது. அரசுசூழ்தலும் வஞ்சமும் ஒன்றென்றுதான் அவனும் கற்றிருந்தான். ஆனால் நுட்பங்களற்ற, நோக்கங்களற்ற அந்தத்

திளைப்பு அவனுக்கு குமட்டலையே உருவாக்கியது. ஆனால் சொல்லியாகவேண்டும். எழுந்தாகவேண்டும்... எழவேண்டும்.

குறடோசை எழ ஒற்றர்தலைவன் விரைந்து வந்து வணங்கினான். அவன் கேட்பதற்குள் "அரசி விண்புகுந்துவிட்டார், அமைச்சரே" என்றான். அவன் கால்கள் நடுங்கத் தொடங்கின. "நான் சென்று அரசியிடம் பேசவேண்டுமென்று சொன்னேன். அவர் துயில்வதாக சொன்னாள் சேடி. எழுப்பும்படி சொன்னேன். அவள் உணவை தாலத்தில் குவித்து அரசியின் கண்ணெதிரே வைத்துவிட்டு அவர்களை தொட்டு எழுப்ப முயன்றாள். தொட்டதுமே தெரிந்துவிட்டது" என்றான் ஒற்றர்தலைவன். கம்பனன் பெருமூச்சுவிட்டு முழுமையாக உடல் தளர்ந்தான். "நன்று" என்று மட்டுமே அவனால் சொல்லமுடிந்தது. கண்களை மூடிக்கொண்டான்.

"நான் இரக்கமே அற்றவன்" என்றான் ஒற்றர்தலைவன். திடுக்கிட்டு உடல்நடுங்க விழித்து "என்ன சொன்னாய்?" என்றான் கம்பனன். "நான் ஒன்றும் சொல்லவில்லை, அமைச்சரே" என்றான் அவன். "இல்லை, நீ சொன்னாய்." அவன் "இல்லை, அமைச்சரே. நான் சொல்காத்து நின்றிருக்கிறேன்" என்றான். கம்பனன் தன் உடல் நன்றாக வியர்த்துவிட்டிருந்ததை உணர்ந்தான். "அரசிக்குரிய அனைத்தும் நிகழட்டும். என் ஆணை. நீயே முன்னின்று செய்க!" என அவன் எழுந்தான். "நான் அரசரிடம் செல்கிறேன்" என மேலாடையை எடுத்தான்.

# மாமலர் - 41

## 41. எழுபடை

கம்பனன் ஹூண்டனின் அறையை அடைவதற்கு முன்னர் இடைநாழியிலேயே அவன் உவகைக் குரலை கேட்டான். கதவைத் திறந்ததும் அக்குரல் பெருகி வந்து முகத்தில் அறைந்தது. "அடேய் கம்பனா, எங்கு சென்றிருந்தாய்? மூடா, மூடா" என ஹூண்டன் நகைத்தான். கையை சேக்கையில் அறைந்தபடி "என்ன நிகழ்ந்தது தெரியுமா? நேற்று இரவு நான் ஒரு கனவு கண்டேன். என் கால்களைக் கட்டிவைத்திருந்த கொடிகள் நாகங்களாக மாறி வழுக்கிச்செல்வதை உணர்ந்து நோக்கினேன். வலக்காலை அசைக்க முடிந்தது. அப்போது அருகே இருளுக்குள் ஓர் அழுகையோசை கேட்டது. பெண்குரல் அழுகை. விழித்துக்கொண்டேன். விழித்ததுமே என் வலக்காலை மெல்ல அசைத்துப்பார்த்தேன். மூடா, என் கால் அசைந்தது... இதோ பார்!" அவன் தன் காலை மெல்ல அசைத்தான். "கல் நெகிழ்கிறது, கல் நெக்குவிடுகிறது" என்று கூவினான்.

கம்பனன் நெடுமூச்சுடன் "நன்று அரசே, நான் சில செய்திகளுடன் வந்துள்ளேன்" என்றான். "சொல்!" என்றான் ஹூண்டன். ஆனால் அவன் தன் காலை அசைத்து நோக்குவதிலேயே ஈடுபட்டிருந்தான். "தங்கள் பட்டத்து அரசியார் இன்று மண்நீங்கினார். சற்றுமுன்னர். செய்தியை இன்னமும் நகருக்கு அறிவிக்கவில்லை." ஹூண்டன் "ஆம், அவள் சில நாட்களில் இறக்கக்கூடுமென சொன்னார்கள். நகர்அறிவிப்பு செய்க! குலங்கள் கூடுக! முறைப்படி ஈடேற்றம் நிகழ்க! ஆவன செய்!" என்றபின் "உயிர்கொண்டதுமே கால் தன் இருப்பை எனக்கு அறிவித்தது. குளிரோ வெம்மையோ அல்ல.

வலியல்ல. தொடு உணர்வுகூட அல்ல. அது இருக்கிறது என என்னிடம் அந்த இருப்புணர்வாலேயே அறிவித்தது” என்றான்.

“இன்னொரு செய்தி” என்று கம்பனன் தொடர்ந்தான். “குருநகரியின் அரசன் நகுஷன் உயிருடனிருக்கிறான். மகவாக இருக்கையில் நாம் அவனை கொல்லும்படி ஆணையிட்டு கொடுத்தனுப்பினோம். அரசியர் அவனை கொல்லவில்லை.” ஹுண்டன் விழிதூக்கி நோக்கி “எங்கிருக்கிறான்?” என்றான். “அவர்கள் குழவியை ஓர் ஒற்றனிடம் கொடுத்தனுப்பினர். அவன் அதை காட்டில் விட்டுவிட்டான். அக்குழவி வசிட்ட குருநிலையில் வளர்ந்து ஆற்றல்மிக்க இளைஞனாகியதாக சொல்கிறார்கள். படைகொண்டுசென்று அவன் குருநகரியைக் கைப்பற்றி முடிசூடினான். ஆயுஸின் மைந்தன் அவன் என அறிவித்தான். இப்போது அங்கே அரசனென அமர்ந்திருக்கிறான்.”

ஹுண்டன் சற்றுநேரம் கூர்ந்து நோக்கியபின் “ஆம், அது இயல்பே. அவர்கள் அவனை எதிர்பார்த்திருந்திருப்பார்கள்” என்றபின் “என் இடதுகாலிலும் அசைவு எழும் என ஓர் உள்ளுணர்வு சொல்கிறது” என்றான். “ஆம், இது தொடக்கமே” என்றான் கம்பனன். “குருநகரியில் அவன் என்ன செய்கிறான்?” என்றான் ஹுண்டன் காலை அசைத்து நோக்கியபடி. அவனிடம் அதிர்ச்சியோ வியப்போ வெளிப்படவில்லை என கம்பனன் கண்டான். அது அவனுக்கும் வியப்பை அளிக்கவில்லை. அனைவரும் அறிந்த ஒன்று எப்படி மந்தணமாக நீடிக்கமுடியும் என அவன் எண்ணிக்கொண்டான். அனைவரும் வெறுக்கும் ஒன்றென அது இருக்குமென்றால் இயல்வதே என பின்னர் தோன்றியது.

“அரசே, அவன் அசோகசுந்தரியை மணம் செய்துகொண்டிருக்கிறான்” என்றான் கம்பனன். “யார்?” என்று ஹூண்டன் தலைதூக்கி கேட்டான். “நகுஷன்... குருநகரியின் அரசன்.” ஹூண்டன் காலை மெல்ல அசைத்து “நினைக்க நினைக்க மேலும் உயிர் ஊறுகிறது” என்றபின் “யாரை?” என்றான். கம்பனன் சற்று சினத்துடன் “குருநகரியின் அரசன் உங்களால் விரும்பப்பட்ட அசோகசுந்தரியை மணம்புரிந்துள்ளான்” என்றான். ஹூண்டனின் வாய் திறந்தபடி நின்றது. “எப்போது?” என்றான். “சில நாட்களுக்கு முன்... செய்திகள் வந்திருக்கின்றன. இங்கே குலத்தலைவர்களின் பூசல் தலைக்குமேல் இருந்தமையால் நான் எந்தச் செய்தியையும் நோக்கவில்லை. சற்றுமுன்னர்தான் அனைத்தையும் அறிந்தேன்.”

ஹூண்டன் பெருமூச்சுவிட்டான். அவன் விழிகள் மாறிவிட்டதை உணர்ந்த கம்பனன் அக்கணம் தோன்றிய எண்ணத்தை அப்படியே சொல்லாக்கினான். “நேற்றிரவுதான் அவர்களின் மணக்கூடல். அவளை அவன் புணர்ந்தபோதுதான் உங்கள் உடலில் உயிர் வந்துள்ளது.” ஹூண்டன் “என்ன சொன்னாய்?” என்ற கூச்சலுடன் கைகளை ஊன்றி எழப்போனான். கை தளர்ந்து மஞ்சத்திலேயே சரிந்தான். “என்ன சொல்கிறாய்?” என்று தளர்ந்த குரலில் கேட்டான். “அவள் கன்னிமையை இழந்ததுமே அவளிட்ட தீச்சொல் விலகத் தொடங்கிவிட்டது” என்றான் கம்பனன்.

“ஆம், உண்மை” என்றான் ஹூண்டன். “ஆனால் அவள் ஏன் அழுதாள்?” கம்பனன் புரியாமல் “யார்?” என்றான். “அவள்தான். நான் கனவில் கேட்டது அவள் அழுகையைத்தான்.” கம்பனன் “அது உங்கள் விழைவு. அவள் மகிழ்ந்துகொண்டாடியிருக்கவே

வாய்ப்பு” என்றான். “அல்ல, அவள் அழுதாள். வலியோ துயரோ இல்லாத அழுகை... ஏக்கம்கொண்டு அழுவதுபோல.” கம்பனன் அவனை நோக்கிக்கொண்டு நின்றான். “அவள் அழுதாள், உண்மையிலேயே நான் அதை கேட்டேன்” என்றான் ஹூண்டன். “ஓரிரு சொற்களும் என் காதில் விழுந்தன.” கம்பனன் “என்ன சொற்கள்?” என்றான். “நான் போகிறேன்... நான் போய்விடுகிறேன் என்று அவள் சொன்னாள்” என்றான் ஹூண்டன்.

கம்பனன் பெருமூச்சுடன் “நாம் ஏதறிவோம்? எவ்வண்ணமாயினும் நமக்கு நன்றே நிகழ்கிறது. நீங்கள் எழப்போகிறீர்கள்” என்றபின் திரும்பி நடந்தான். “அமைச்சரே” என பின்னால் அழைத்த ஹூண்டன் “இன்று தண்டனைக்குரிய அனைவரையும் விடுதலை செய்துவிடுங்கள்...” என்றான். அவன் விழிகளை நோக்காமல் “அவ்வண்ணமே” என்றான் கம்பனன். அவன் மேலும் சொல்லுக்காக காத்து நிற்க “என் கல்தன்மை எப்போது முற்றிலும் விலகும்?” என்றான். “நாம் எதிர்பார்ப்போம்... இது தொடக்கம்தான் என என் உள்ளம் சொல்கிறது” என்றான் கம்பனன்.

திரும்பி அமைச்சுநிலைக்கு நடக்கையில் அவன் உள்ளம் குழம்பி அலைபாய்ந்தது. தானாகவே அத்தருணத்தில் நாவிலெழுந்த சொற்றொடர் என்றாலும் அது உண்மையாக இருக்கக்கூடும் என உள்ளம் உறுதிகொள்ளத் தொடங்கியது. அதைமட்டும் உறுதிசெய்யவேண்டும், அவர்களின் மணஇரவு நேற்றா? ஆமெனில் ஏதோ தொடங்கவிருக்கிறது. அமைச்சுநிலைக்குச் சென்று அமர்ந்து குருநகரி குறித்த அனைத்து ஓலைகளையும் வரவழைத்து படித்துப்பார்த்தான். ஓர் ஓலையில் நகுஷனும் தேவியும் தங்க காமக்குடில்

அமைக்கும் செய்தியிருந்தது. அவன் மணஇரவு நாளை தேடினான். பிறிதொரு ஓலையில் அதுவும் இருந்தது. முந்தையநாள்தான் அந்நிகழ்வு நாள்குறிக்கப்பட்டிருந்தது.

விபுலையின் இறப்புச்சடங்கு நாகநகரியில் எந்தப் பரபரப்பும் இல்லாமல் நடந்து முடிந்தது. அவள் உடலை கொண்டுவந்து அரண்மனை முற்றத்தில் நகரின்
வணக்கத்திற்காக படுக்கவைத்திருக்கையில் கம்பனன் அதன் பெருக்கம் கண்டு உளம் அதிர்ந்தான். மானுட உடலின் அனைத்து அமைப்புக்களையும் அது இழந்து தசைத்திரளாக வழிந்து சரிந்து பிதுங்கி உப்பிக் கிடந்தது. அதை நோக்கி நின்றபோது உள்ளிருந்து ஒன்று தன் உருவை தானே சிதைக்க முற்பட்டது போலிருப்பதாக நினைத்துக்கொண்டான். அல்லது உள்ளிருக்கும் அது எட்டுத்திசையிலும் திமிறி முட்டி வெளிக்கிளம்ப முயன்றதா?

அந்த உடலை ஒன்றென எண்ண முடியவில்லை. அந்தத் தோல்பைக்குள் அவள் பலவாக இருந்திருக்கிறாள். ஒவ்வொன்றும் பிரிந்துசெல்லத் துடித்து உள்ளே பூசலிட்டு தளர்ந்து அமைந்திருக்கின்றது. ஓரிரு தோல்கட்டுகளை மெல்ல வெட்டிவிட்டால் அவள் அப்படியே பன்றிக்கூட்டம் போல பரவி அகன்றுவிடுவாள் என்று தோன்றியது. அவளை நோக்கிய அத்தனைபேரிலும் அந்தத் திகைப்பே
முதன்மைகொண்டிருந்தது. “உள்ளங்கால்கள் எத்தனை சிறியவை, நாய்நாக்கு போல!” அவள் பாதங்கள் செந்நிறமாக நடைதெரியா குழந்தைகளுக்குரியவை போலிருந்தன. மணிக்கட்டின் தசைமடிப்புகளுக்குப்பின் உள்ளங்கைகளும் மிகச்சிறியவையாக இருந்தன.

அவளமைந்த பாடையை எட்டுபேர் கொண்ட குழு மாறிமாறி சுமந்து சிதைக்கு கொண்டுசென்றது. ஹூண்டன் தொட்டு அனுப்பிய அனல் அவளை எரியூட்டியது. “எரிந்து முடிய நாளையாகும்போல” என எவரோ சொன்னபோது வந்திருந்த சிறிய கும்பலுக்குள் சிரிப்பொலி எழுவதை கம்பனன் கேட்டான். மனிதர்கள் இறப்பின்போது சிரிப்பார்கள் என அவன் அறிந்திருந்தான். அவர்களுக்கு இழப்பென்று தோன்றவில்லை என்றால், சூழலில் பெருந்துயரென பரவிநிற்கவில்லை என்றால், இறப்பு என்பதும் ஒரு கொண்டாட்டம் மட்டுமே.

ஹூண்டன் அவளை ஒரு கணமும் நினைக்கவில்லை. எரியேற்றிய பின் திரும்பிவந்து சந்தித்த கம்பனனிடம் “என் இடதுகாலிலும் அசைவு தெரிகிறது. ஆம், இன்னும் அதன் தசைகளை நான் அசைக்கமுடியவில்லை. ஆனால் அசைக்கமுடியும் என அது என்னிடம் சொல்கிறது. அது இருப்பதை இப்போதுதான் நான் உள்ளிருந்து உணர்கிறேன். அது குழவிபோல என்னை தூக்கு தூக்கு என அடம்பிடிக்கிறது” என்றான். கம்பனன் “நான் ஒற்றர்களிடம் கேட்டேன், அரசே. அவர்களின் மணஇரவு நேற்று. இரவுக்குப்பின் நோயுற்றிருக்கும் அவளை திருப்பி அகத்தளத்திற்கு கொண்டுவந்திருக்கிறார்கள். மருத்துவச்சிகள் அவளை நோக்கிக்கொண்டிருக்கிறார்கள்” என்றான்.

“அவளுக்கு என்ன ஆயிற்று?” என்றான் ஹூண்டன். “அறியேன், அவள் இளம்கன்னி போன்றவள். அச்சம் கொண்டிருக்கலாம்” என்றான் கம்பனன். “அவன் எப்படி இருக்கிறான்?” என்றான் ஹூண்டன். “அதைப்பற்றி செய்தி இல்லை. பிழையாக ஏதுமில்லை என எண்ணுகிறேன்” என்றான் கம்பனன். “அவன் கல்லாகிவிட்டானா?” என்று ஹூண்டன் கேட்டான்.

திகைத்துநோக்கிய கம்பனன் “ஏன் அவ்வாறு கேட்கிறீர்கள்?” என்றான். ஹூண்டன் “ஒன்றுமில்லை, அவன் கல்லாகவில்லை என்றால் அவன் என் எதிரி, அவனை நான் கொன்றாகவேண்டும்” என்றான். “நான் செய்திகளை அறிந்து சொல்கிறேன்” என்றான் கம்பனன்.

ஒற்றர்களிடம் செய்திகளை உடனடியாக பறவைத்தூதாக அனுப்ப ஆணையிட்டான் கம்பனன். நகுஷன் நலமாக இருப்பதாக செய்தி வந்தது. ஆனால் அசோகசுந்தரி நாளுக்குநாள் நோய்கொண்டிருப்பதாக, நலிந்துகொண்டே செல்வதாக செய்திகள் வந்தன. பின்னர் தெளிவாக அனைத்தும் வந்துசேர்ந்தன. கம்பனன் அகத்தளத்திற்குச் சென்று ஹூண்டனை கண்டான். அவன் இருகால்களும் அசைவுகொண்டிருந்தன. படுக்கையில் புரளவும் கால்களை மடித்து எழுந்தமரவும் அவனால் முடிந்தது. அந்த உவகையில் அவன் கூச்சலிட்டுக்கொண்டே இருந்தான்.

கம்பனனைக் கண்டதும் “இன்று இரு கால்களையும் மடித்தேன். இச்சிதையிலிருந்து உயிர்கொண்டு எழுந்துவிட்டேன்” என்று அவன் கூச்சலிட்டான். கரியமுகத்தில் வெண்பற்கள் மின்ன “என் கால்கள் மீண்டு வந்துவிட்டன. இன்னும் சில நாட்கள்தான்... கம்பனா, மூடா, நான் மீண்டுவிட்டேன். தேர்ச்சகடம் ஏறிச்சென்ற நாகம் தன் எஞ்சிய உடலை விழுங்கி உணவும் மருந்துமென்றாக்கி அதிலிருந்த உயிரை தான் பெற்று மீண்டெழும் என்பார்கள்... இதோ நான்” என்றான்.

“ஆம் அரசே, இன்னும் சில நாட்களில் நீங்கள் மீண்டெழுவீர்கள்” என்றான் கம்பனன். “எப்படி சொல்கிறாய்?” என்றான் ஹூண்டன். “அங்கே அசோகசுந்தரி இறந்துகொண்டிருக்கிறாள். அவள் நலியுந்தோறும் நீங்கள்

ஆற்றல்கொள்கிறீர்கள்” என்றான் கம்பனன். ஹூண்டன் விழிகூர்ந்து நோக்கி “அவள் எப்படி இருக்கிறாள்?” என்றான். “அவள் முதுமைகொண்டபடியே செல்கிறாள். ஒவ்வொருநாளும் பல ஆண்டு அகவை கடந்துசெல்கிறது. நடுவயதாகி முதுமகளாகிவிட்டாள். உடல்வற்றி உயிர் அணைந்துகொண்டிருக்கிறது. இன்னும் சிலகாலமே...” ஹூண்டன் கண்களை மூடி படுத்திருந்தான். அவன் உடலில் தசைகள் இறுகி நெளிந்தன. தாடை அசைந்தது.

விழிகளைத் திறந்து “அவள் உயிர்?” என்றான். “ஆம், அரசே” என்றான் கம்பனன். “அவ்வாறெனில் அவள் என் அன்னை” என்றான் ஹூண்டன். கம்பனன் என்ன சொல்வதென்று அறியாமல் நோக்கினான். “அவள் என்னை ஈன்றிருக்கிறாள். அவள் மைந்தன் நான்” என ஹூண்டன் உரக்கக் கூவினான். “என்ன நடந்தது? அவள் ஏன் இறந்தாள்? அவள் அழுதது எனக்கு மட்டும் ஏன் கேட்டது?” அவன் இரு கைகளாலும் தன் மார்பை அறைந்தான். “அவள் என்னிடம் முறையிட்டாளா? எனக்கு ஆணையிட்டாளா என்ன?” கம்பனன் “தங்கள் எண்ணம் மிகையானது, அரசே” என்றான்.

“அவளுக்கு நிகழ்ந்தது என்ன? அதை சொல்க!” என்றான் ஹூண்டன். “அவள் வல்லுறவுகொள்ளப்பட்டாள். அந்த அதிர்ச்சியால்தான் இறந்தாள்” என்றான் கம்பனன். சில கணங்கள் ஹூண்டன் அப்படியே உறைந்தான். பின் நாகச்சீறலுடன் மூச்சிரைத்து மீண்டான். “ஆம், அவ்வாறே எண்ணினேன்... அமைச்சரே, நாம் குருநகரியை வெல்லவேண்டும். அவனை கொல்லவேண்டும். அவளுக்கு நாம் செய்யும் கடன் அது.” கம்பனன் “அரசே, அது எளிதல்ல. நம் குலங்கள் சிதறுண்டிருக்கின்றன. நாம் ஆற்றலின்றி

இருக்கும் காலம் இது. அவனோ பெருவலிமை கொண்டிருக்கிறான்” என்றான்.

“எண்ணிக் கணக்கிட்டு மைந்தர் அன்னைக்காக எழுவதில்லை” என்றான் ஹூண்டன். “நான் ஏன் கல்லானேன் என்பதற்கான விடை இன்று கிடைத்தது. இப்படுக்கையில் கிடந்து நான் இதுவரை உழன்றது அதை எண்ணியே... ஒரு படைவீரனும் உடன்வரவில்லை என்றாலும் நான் செல்வேன். களம்படுவேன்.” கம்பனன் “தங்களுக்கு உரைக்கவேண்டியது என் கடமை. ஆணையென்றால் தலைகொடுப்பது அடுத்த கடமை” என்றான். “எழுக, நம் படைகள்!” என்றான் ஹூண்டன்.

நினைத்திருந்ததற்கு முற்றிலும் மாறாக நாகர்குடிகள் அனைத்து வஞ்சங்களையும் மறந்து ஹூண்டனின் கொடிக்கீழ் அணிநிரந்தன. அது ஏன் என எத்தனை எண்ணியும் கம்பனனால் உணரமுடியவில்லை. அன்றிரவு தன் இல்லத்தில் உடல்தளர்ந்து படுத்திருந்த தந்தையிடம் மஞ்சத்தின் அருகமர்ந்து அவன் “குடிகள் எண்ணம் என்ன எந்தையே? இதில் சூது ஏதேனும் உண்டோ என்றுகூட உள்ளம் ஐயுறுகிறது” என்றான். மூச்சிரைப்பால் மூக்கு சற்றே மேல்நோக்கி இருக்க படுத்திருந்த அவர் தளர்ந்த குரலில் “அவர்கள் அரசனையும் குடித்தொகையையும் விட்டுப்பிரிய விரும்பவில்லை. இது அதற்கு உகந்ததாகத் தெரிகிறது போலும்” என்றார்.

“அவர்கள் வஞ்சம் கொண்டிருந்தனர்” என்றான் கம்பனன். “ஆம், ஊடாக அன்பும் கொண்டிருந்தனர். அரசன் மீண்டுவிட்டான் என அவர்கள் அறிந்ததுமே அவ்வஞ்சம் மறைந்துவிட்டது. அவர்கள் அவன்மேல் வஞ்சம் கொண்டமைக்கு வருந்துகிறார்கள். அறம்முகிழ்த்த ஒன்றை ஆற்றி அதிலிருந்து மீள விழைகிறார்கள்” என்றார் முதியவர். “மைந்தா,

தொல்குடிமக்களின் வீழ்ச்சி அவர்கள் அறத்தால் அன்றி பிறிதொன்றுக்காக எழுவதில்லை என்பதனால் அமைகிறது. அவர்கள் அருகுபோல் வேரோடி வாழ்வது அவர்களுடன் என்றும் அறம் வாழ்கிறதென்பதனால் நிகழ்கிறது.”

ஹூண்டனின் தலைமையில் நாகர்குலத்தின் பதினெட்டு பிரிவுகளும் ஒன்றிணைந்து குருநகரிமேல் படைகொண்டுவரும் செய்தியை அறிந்ததும் நகுஷன் திகைத்தான். “எப்போதுமே மலைக்குடிகள் நேரடியாக அரசுகளின்மேல் படைகொண்டு வந்ததில்லை... அவர்களுக்கு எப்படி அத்துணிவு வந்தது?” என்று பத்மனிடம் கேட்டான். “அரசே, மலைக்குடிகள் நிலம்வெல்ல ஒருபோதும் ஒருங்கிணைவதில்லை. அவர்களின் எல்லைகள் தாக்கப்பட்டாலொழிய அவர்கள் போருக்கிறங்க மாட்டார்கள்” என்றான் பத்மன். நகுஷன் “நாம் எங்காவது எல்லைமீறிவிட்டோமா?” என்று கேட்டான். “இல்லை, நாம் நம் எதிரியரசர்களைக்கூட இந்நாட்களில் எண்ணியதில்லை” என்றான் பத்மன்.

இரண்டு நாட்களில் அதற்கான விடை தேடிவந்தது. ஹூண்டன் அனுப்பிய போர் அறைகூவல் மலைக்கழுகு ஒன்றின் காலில் கட்டப்பட்ட ஓலையென குருநகரியை வந்தடைந்தது. அதை நகுஷனிடம் கொண்டுவந்து தந்த பத்மன் “அவன் அசோகசுந்தரிக்காக படைகொண்டுவருகிறான்” என்றான். “அரசிக்காகவா? அவன் ஏன் எழவேண்டும்?” என்றான் நகுஷன் திகைப்புடன். “ஓலையை வாசித்து நோக்குக!” என்றான் பத்மன். வாசித்தபின் அதை மீண்டும் சுருட்டியபடி “என்ன சொல்கிறான்? அவன் எப்படி அவளுக்கு மைந்தனாவான்?” என்றான் நகுஷன்.

“அவர் இழந்த உயிரை அவன் அடைந்திருக்கிறான் என நம்புகிறான்” என்றான் பத்மன்.

“விந்தைதான். பழங்குடிகளின் உள்ளங்கள் எப்படி செல்கின்றன என்பதை எண்ணவே கூடவில்லை” என்றான் நகுஷன் சிரித்தபடி. “அவருக்கு நீங்கள் இழைத்த பிழைக்கு நிகர்செய்யவேண்டுமென போருக்கு எழுந்துள்ளான். உங்களை வென்று உங்கள் குருதிதோய்ந்த வாளை அரசியின் எரியிடம் மீது வைத்து வணங்கி அவர் எரியிடத்து மண்ணில் ஒருபிடி எடுத்துச்சென்று அவன் ஆளும் நாகநகரியில் ஒரு ஆலயம் அமைக்கப்போவதாக சொல்லியிருக்கிறான்” என்றான் பத்மன். “ஆம்” என்று நகுஷன் மீசையை நீவியபடி சொன்னான். “அது பொய்யோ மெய்யோ, அச்சொற்கள் குடிகளின் உள்ளங்களை வெல்லும். நாகர்குடிகள் அவனுடன் ஒருங்கிணைந்து போருக்கெழுந்தது அதன்பொருட்டே” என்றான் பத்மன்.

“ஆம், அதற்காகவே இந்த சூழ்ச்சியைச் செய்கிறான் என ஐயுறுகிறேன்” என்றான் நகுஷன். “அச்சூழ்ச்சிவலையில் சிக்கவிருப்பது நம் குடிகளும்கூடத்தான்” என்று பத்மன் சொன்னான். “இச்செய்தியை எப்படி நம் குடிகள் அறிவார்கள்?” என்றான் நகுஷன் பொறுமையிழந்தவனாக. “அரசே, அரண்மனைச்செய்திகள்போல மக்கள் உடனே அறிவது பிறிதில்லை” என்றான் பத்மன். நகுஷன் எழுந்து கைகளால் தொடையைத் தட்டியபடி “நன்று, ஒரு போர் நிகழ்ந்தும் நீணாளாயிற்று. நம் படைக்கலங்கள் துருப்பிடிக்கத் தொடங்கிவிட்டிருக்கின்றன” என்றான்.

எண்ணியதுபோலவே ஒரு நாளைக்குள் குருநகரியெங்கும் அசோகசுந்தரிக்காகவே ஹுண்டன் படையுடன் கிளம்பி வருகிறான் என்னும் சொல் பரவியது. “அவன் அவள்

மைந்தன்... அவள் முற்பிறப்பில் ஈன்றவன்” என்றான் ஒரு சூதன். “அவனை ஈன்றபின் அவள் எரிபுகுந்து மீண்டும் பிறந்துவந்தாள். அவள் இங்கே இறந்ததும் அங்கே அவன் வணங்கிய அகல்சுடரில் தோன்றி தனக்கிழைக்கப்பட்ட தீங்கு குறித்து சொன்னாள். வஞ்சினம் உரைத்து மாநாகன் கிளம்பியிருக்கிறான்.” வெவ்வேறு கதைகள் கிளம்பி ஒன்றுடன் ஒன்று முயங்கி நாளுக்கொன்று என வந்துசேர்ந்துகொண்டிருந்தன.

“நம் படைகள் ஐயுற்றிருக்கின்றன” என்று படைத்தலைவன் வஜ்ரசேனன் சொன்னான். “எதன்பொருட்டு இப்போர் என்று என்னிடமே ஒரு முதிய வீரன் கேட்டான். அறத்தின்பொருட்டு அல்ல என்று அறிவேன். நிலத்தின்பொருட்டும் அல்ல. எனில் அரசனின் ஆணவத்தின்பொருட்டா, அல்லது அவன் இழைத்த அறமின்மையின்பொருட்டா என்றான். வாளை ஓங்கி அவன் கழுத்தை சீவ எண்ணினேன். ஆனால் அவன் விழிகளைப்போலவே ஆயிரம் விழிகள் என்னை சூழ்ந்திருந்தன. எனவே எது கடமையோ அதை செய்க. படைமுரசு ஒலித்தபின் ஐயுறுபவன் கோழையோ காட்டிக்கொடுப்பவனோ ஆவான் என்றே கொள்ளப்படும் என்று சொல்லி மீண்டேன்.”

பத்மன் விழிகளைச் சரித்து அமர்ந்திருந்தான். “என்ன செய்வது சொல்லுங்கள், அமைச்சரே! அரசர் நாளை படைப்புறப்பாடுக்கு அறைகூவல் விடுத்திருக்கிறார். புலரியில் அவர் கோட்டைமுகப்பின் உப்பரிகையில் நின்று படைகளிடம் பேசப்போகிறார். அவருடைய முகத்துக்கு நேராக எதிர்க்குரல் எழுந்து வருமென்றால் பின்னர் போரை வெல்வதைப்பற்றி

எண்ணிப்பார்க்கவும் வேண்டியதில்லை.” பத்மன் “நான் அரசரிடம் பேசுகிறேன்” என்றான்.

அன்று மாலையே பத்மன் சென்று படைக்கல நிலையத்தில் பயிற்சி செய்துகொண்டிருந்த நகுஷனிடம் தன் எண்ணத்தை சொன்னான். “அரசே, குடிகள் மறைந்த அரசியையே எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இப்போர் அரசிக்காக நிகழ்வதென்று ஆகிவிட்டது. படைகளின் எண்ணிக்கை வல்லமையால் போர்கள் வெல்லப்படுவதில்லை, படைகள் கொண்ட உளவிசையின் ஆற்றலே வெல்கிறது. நம் முன் வழி ஒன்றே உள்ளது.” வியர்வையைத் துடைத்தபடி அமர்ந்து “சொல்க!” என்றான் நகுஷன். “நாளை உப்பரிகையில் தோன்றியதுமே நம் ஏழு முதன்மைக் குடிகளிலிருந்து நீங்கள் அரசியரை மணம் கொள்வதாக முதலில் அறிவியுங்கள். ஏழு குலத்தலைவர்களும் உங்களுடன் உப்பரிகையில் நிற்கட்டும். படைகளின் உள்ளம் அக்கணமே மாறிவிடும்” என்றான் பத்மன். “ஏனென்றால் மங்கல அறிவிப்பின்போது வாழ்த்தாமலிருக்க முடியாது. வாழ்த்தொலிகள் சூழ்ந்து பெருகி எழுகையில் அவ்வுணர்வால் ஒவ்வொருவரும் தூக்கிச் செல்லப்படுவார்கள்.”

“அது ஓர் எளிய சூழ்ச்சி அல்லவா? அரசன் என நான் அதை செய்தாகவேண்டுமா?” என்றான் நகுஷன். “அரசே, படைகொண்டு வருபவர்கள் நாகர்கள். நாகர்கள் இல்லாத நிலமே பாரதவர்ஷத்தில் இல்லை. ஒரு களத்தில் நாகர்கள் வென்றால் நாம் நாவலந்தீவெங்கும் நாகர்களை எழுப்புகிறோம் என்று பொருள்” என்றான் பத்மன். “அவர்கள் ஷத்ரியர்கள் அல்ல. அவர்களை நாம் போராடி வென்றாலும் இழிவே. புயல்காற்று

சருகுகளை என நாம் அவர்களை வென்றாகவேண்டும்.”
நகுஷன் ஆம் என தலையசைத்தான்.

அன்றே பத்மன் குருநகரியின் தொல்குடிகளை அழைத்து அரசனின் எண்ணத்தை சொன்னான். அவர்களும் அதற்காக காத்திருந்தனர். “ஆம், அதுவே முறை. இன்றைய நிலையில் அரசரின் கைகளென நிற்கவேண்டியவர்கள் அவர் குடிகளே. இன்று வென்றால் நாம் இனியும் வெல்வோம்” என்றார் குலத்தலைவர் ஒருவர். பேச்சுக்கள் முடிந்து உறுதிகளை பெற்றுக்கொண்டு பத்மன் நிறைவுள்ளத்துடன் புலரிக்கு முன்னர் சென்று நகுஷனை பார்த்தான். அனைத்தையும் விளக்கி நகுஷன் உப்பரிகையில் நின்று வீரர்களை நோக்கி சொல்லவேண்டியதென்ன என்று வகுத்துரைத்தான்.

“அரசே, நீங்கள் எழுந்ததும் வீரர்களின் வாழ்த்துரைகள் விசைகொண்டிருக்காதென்றே எண்ணுகிறேன். அதைக் கண்டு உங்கள் முகம் சுருங்கினால் அந்த எதிர்ப்பு மேலும் வீச்சுபெறும். வீரர்களை நோக்கி முகமலர்ச்சியுடன் வணங்கினீர்கள் என்றால் அவர்கள் குழப்பத்துடன் நோக்குவார்கள். உடனே ஏழு குடிகளிலிருந்து ஏழு அரசியரை மணக்கவிருப்பதை அறிவித்து குடித்தலைவர்களை அழையுங்கள். அவர்கள் உப்பரிகைக்கு வந்து உங்களருகே நிற்கட்டும்” என்று பத்மன் சொன்னான். “அவர்கள் தங்கள் கோலைத் தூக்கி ஆட்டி தங்கள் குலங்களை அறைகூவட்டும். வாழ்த்தொலிகள் எழுந்து சூழும்போது எதிர்ப்பு எண்ணம் அழிந்திருக்கும்.”

“அரசே, நம் மக்கள் நாமே பாரதவர்ஷத்தின் தொல்குடிகள் என்னும் பெருமைகொண்டவர்கள். அதிலிருந்து தொடங்குங்கள். எளிய பழங்குடிநாகர் நம் மீது படைகொண்டு வருவது நம்

குடிமூத்தாருக்கும் தெய்வங்களுக்கும் இழுக்கு என்று கூறுங்கள். குருநகரியின் பெருமையை விளக்குங்கள். அதன் பெருமை காக்க எழுக என அறைகூவுங்கள். உங்களுடன் குருநகரியின் படைகள் எழும்."

நகுஷன் "ஆம், அவ்வண்ணம்தான் செய்யவேண்டும்" என்றான். "அனைத்தும் சித்தமாக உள்ளன. நீங்கள் கவசம் பூணுக!" என்றான் பத்மன். கவசமும் அணிகளும் பூண்டு வந்த நகுஷனை அவனே கோட்டைமுகப்பு நோக்கி அழைத்துச் சென்றான். அரண்மனையிலிருந்து கோட்டைச்சுவர்மேல் அமைந்த மந்தணப்பாதை ஒன்றினூடாகவே அந்த உப்பரிகைக்கு செல்லமுடிந்தது. நிமிர்ந்த தலையுடன் எண்ணத்திலாழ்ந்து நடந்த நகுஷனின் அருகே நடந்தபடி அவன் சொல்லவேண்டிய சொற்களை பத்மன் மீண்டும் சொன்னான். "ஐயம் கொள்ளாதீர்கள். தயங்காதீர்கள். அரசன் என எழுந்து நில்லுங்கள். குடித்தலைவனாக குரல்கொடுங்கள்" என்றான்.

கோட்டைமுகப்பிலிருந்த பிறைவடிவ வெளியில் குருநகரியின் படைகள் அணிவகுத்து நிறைந்து நின்றிருந்தன. கரவுப்பாதைக்குள் அமைந்த சிறிய சாளரத்துளைகள் வழியாக வெளியே நோக்கியபடியே வந்தான் பத்மன். இருளில் பந்த ஒளியில் மின்னும் படைக்கலங்களின் முனைகள் இடைவெளியின்றி நிரந்த அம்முற்றம் ஓர் அலையிளகும் ஏரி எனத் தோன்றியது. அங்கிருந்து மானுடக்குரல்கள் இணைந்து உருவான முழக்கம் எழுந்தது. ஒரு பெருமுரசுக்குள் எறும்பென அகப்பட்டுக்கொண்டதுபோல என பத்மன் நினைத்தான்.

"பொறுங்கள் அரசே, குலத்தலைவர்களும் பிறரும் சித்தமாகிவிட்டர்களா என்று பார்க்கிறேன். அனைத்தும் சித்தமென்றால் நான் தங்கள் மெய்க்காவலனுக்கு

கைகாட்டுகிறேன்…” என்றபின் அவன் ஓசையின்றி குனிந்து கரவுப்பாதையின் பெருங்கதவிலமைந்த திட்டிவாயிலைத் திறந்து வெளியே சென்றான். அங்கிருந்து நோக்குகையில் அப்பெரும்படை ஒற்றை உடலென தோன்றியது. பல்லாயிரம் தலைகள். பல்லாயிரம் விழிகள். பல்லாயிரம் கைகள். படையை விராடமானுடன் என ஏன் சொல்கிறார்கள் என அப்போது அறிந்தான்.

அரசன் தோன்றவிருந்த உப்பரிகைமேடைக்கு இரு பக்கமும் குலத்தலைவர்களை தங்கள் கோலுடன் நிற்கச்செய்தான். தீட்டப்பட்ட இரும்புக்கலங்களால் ஆன குழியாடிகள் நான்கு எதிரே கோட்டைவிளிம்புகளில் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றுக்கு முன்னால் நெய்யூற்றப்பட்ட பந்தங்கள் சித்தமாக இருந்தன. அவன் படைத்தலைவனை நோக்க அவன் அருகே வந்து பணிந்தான். “படைகளில் மேலும் கசப்பு எழுந்துள்ளது, அமைச்சரே. வாழ்த்தொலிகள் எழாமலிருக்கக்கூட வாய்ப்புள்ளது. நான் நூற்றுவர்களிலேயே பலரை சிறையிட்டு இந்த அணிநிரையை அமைத்துள்ளேன்” என்றான்.

“பார்ப்போம்” என்றான் பத்மன். “அனைத்தையும் சித்தமாக அமையுங்கள்” என்றபின் உப்பரிகைமேடையை நோக்கினான். மூச்சை இழுத்துவிட்டு அந்த முதற்புலரியிலும் தன் உடல் வியர்த்திருப்பதை உணர்ந்தான். அணுக்கக் காவலனின் விழிகளை சந்தித்தபின் கையசைத்தான். பின்னர் திரும்பி ஆடிக்காவலர்களை நோக்கி கையசைத்தான். அரக்கும் நெய்யும் விடப்பட்ட பந்தங்கள் பற்றி எரிந்து தழல்கொண்டன. ஆடிகள் அவ்வொளியை அள்ளிக்குவித்து உப்பரிகைமேல் பெய்தன. முரசங்களும் கொம்புகளும் குழல்களும் பேரோசையுடன் முழக்கமிடத் தொடங்கின.

எரிகுளம் என சுடர்விட்ட உப்பரிகை மேடையின் கதவுகள் உள்ளிருந்து விரியத் திறந்தன. கைகளைக் கூப்பியபடி நகுஷன் வந்து ஒளியில் நின்றான். அவன் கவசங்களில் பட்ட செவ்வொளியின் தழலாட்டத்தில் அவன் இளஞ்சூரியன் எனத் தோன்றினான். அவனை நோக்கி விழிகள் மட்டுமே உயிர்கொண்டிருக்க ஓசையின்றி அசைவின்றி அமைந்திருந்தது படைத்திரள். தெய்வங்களுக்குரிய வெறித்த விழிகளுடன் அவன் தன் கையை தூக்கினான். “வீரர்களே, குருநகரியினரே!” என அவன் அழைத்தது கோட்டைமுகப்பின் குழிவுமுகடுகளால் அள்ளித் தொகுக்கப்பட்டு காற்றில் வீசப்பட்டு படையினர் அனைவருக்கும் கேட்டது. “நான் குருநகரியின் அரசன். இந்த பாரதவர்ஷத்தை வெல்வேன். இந்திரனின் அரியணையில் அமர்வேன்” என்றான்.

அப்பெரும்படை ஒற்றை உடலெனச் சிலிர்ப்பதை பத்மன் கண்டான். “என் படைவீரர் நீங்கள். என் உடல். பிறிதொன்றுமல்ல. என் ஆணைக்கு அப்பால் எண்ணமில்லை உங்களுக்கு என்று அறிக! வெற்றிக்கென படைக்கலம் கொண்டு எழுக! இது என் ஆணை!” என்றான் நகுஷன். மேலும் சில கணங்கள் படை ஓசையற்றிருந்தது. காற்றிலாடும் பாவட்டாக்களின் சிறகோசை. பின்னர் ஒற்றைப்பெருங்குரலில் “மாமன்னர் நகுஷன் வாழ்க! குருநகரியின் வேந்தன் வாழ்க! சந்திரகுலத்தோன்றல் வாழ்க!” என வாழ்த்தொலிகள் எழுந்து கோட்டைப்பரப்பை அதிர்வுகொள்ளச்செய்தன.

# மாமலர் - 42

### 42. இன்குருதி

ஹூண்டனின் படைகளை நகுஷனின் படைகள் குருநகரிக்கு வெளியே அஸ்வமுக்தம் என்னும் குன்றின் அடிவாரத்தில் சந்தித்தன. குருநகரிக்கு பத்மனின் தலைமையில் காவலை வலுவாக்கிவிட்டு நகுஷன் தன் படைத்தலைவன் வஜ்ரசேனன் துணையுடன் படைகளை நடத்தியபடி வடமேற்காக சென்றான். “அவன் படைநீக்கம் செய்து நம் நகரைச் சூழவைப்பதே உகந்தது. நாகர்களுக்கு விரிநிலத்தில் படைநடத்துவதிலோ நகர்களை முற்றுகையிடுவதிலோ முன்பயிற்சியே இல்லை. அவர்களை மிக எளிதில் வெல்லமுடியும்” என்றான் படைத்தலைவன்.

நகுஷன் மறுமொழி சொல்வதற்குள்ளாகவே பத்மன் “ஆம், அது மிக எளிது. ஆனால் குருநகரியின் ஷத்ரிய அரசன் நாகர்களின் படைகளுக்கு அஞ்சி படைசூழ்கை வகுத்தான் என்பதே இழிவு. அவர்களுக்காக படைகளுடன் காத்திருந்தான் என்று சூதர் பாடலாகாது. புழுவை அடிக்கக்கூடாது, சுண்டவேண்டும்” என்றான். நகுஷன் “ஆம், இந்நகரில் அவர்கள் வருவதற்காகக் காத்திருப்பது என்னால் இயலாதது. நான் ஒரு தருணத்திலும் எண்ணிக் காத்திருந்து போரிடப்போவதில்லை. எப்போதும் எழுந்துசென்று தாக்குவதே என் வழி” என்றான். “ஆம், புலியும் சிம்மமும் பதுங்கும். யானை ஒளிய காட்டில் மறைவில்லை” என்றான் பத்மன்.

பாறைப்பிளவிலிருந்து எழும் அரசநாகம் மெல்ல தலைநீட்டி நாபறக்க வெளிவந்து ஓசையின்றி ஒழுகிச் செல்வதைப்போல நகுஷனின் படை வடகிழக்கு வணிகச்சாலையை நிறைத்து ஒழுகியது. உச்சிவெயிலில் நீரலை ஒளிகள் என வேல்நுனிகளும், வாளுறைகளும், கவசங்களும், தேர்முகடுகளும், யானைகளின் பொய்மருப்புகளும் மின்னிமின்னி ததும்பின.

குறடுகளும் குளம்புகளும் சகடங்களும் மண்ணில் பதிந்த ஒலி கலந்து எழுந்த முழக்கம் சூழ்ந்திருந்த காடுகளை கார்வை கொள்ளச்செய்தது.

அன்று மாலை அவர்களின் படையெழுந்த செய்தி ஹூண்டனைச் சென்றடைந்தது. தன் படைகளுடன் கிளம்பி ஜம்புமுகம் என்னும் சிறிய மலையின் அடிவாரத்தை அடைந்து அங்கே பாடியமைத்திருந்த ஹூண்டன் ஒற்றர்கள் கொண்டுவந்த செய்தியைக் கேட்டதும் தொடையிலறைந்து உரக்க நகைத்தான். “நன்று, முற்றுகையிட்டு பொறுமையிழக்கவேண்டுமே என கவலைகொண்டிருந்தேன். நமக்கு உகந்த மலைச்சரிவுக்கே வந்து சேர்கிறார்கள். வெட்டவெளிக்கு வந்துவிடும் எலி நாகத்திற்கு நல்லுணவு” என்றான். அவனருகே நின்றிருந்த படைத்தலைவர்கள் சிரித்தனர்.

கம்பனன் தலையை அசைக்க “என்ன சொல்கிறாய்?” என்றான் ஹூண்டன். “அவர்கள் விரிநிலத்திற்கு வருகிறார்கள் என்றால் என்ன பொருள் அதற்கு? அது காப்பற்றது என அவர்கள் அறியமாட்டார்களா என்ன?” என்றான். ஹூண்டன் “சொல் உன் தரப்பை” என்றான். “நம்மை இடக்காலால் தட்டி எறியவேண்டுமென விழைகிறார்கள்” என்றான் கம்பனன். “முடிந்தால் செய்யட்டுமே” என்று ஹூண்டன் சீற்றத்துடன் சொல்ல “அவ்வாறு பொருட்டிலை என்று காட்டிக்கொண்டாலும் அவர்கள் உள்ளே கருதியிருப்பார்கள். விரிநிலத்தில் நம்மை எதிர்கொள்ளும் வல்லமையை மும்மடங்கு வைத்திருப்பார்கள்” என்றான்.

ஹூண்டன் “என்ன சொல்கிறாய்?” என்றான் புரியாமல். “அரசே, நம்மை விளையாட்டெடன எதிர்கொள்கிறார்கள் என்று பிறர்

எண்ணவேண்டுமென விழைகிறார்கள். ஆகவே தங்கள் முழு வல்லமையையும் முற்றிலும் வெளித்தெரியாது மறைத்தபடிதான் வருவார்கள்” என்றான் கம்பனன். ஹுண்டன் சில கணங்கள் விழித்து நோக்கிவிட்டு மீசையை நீவியபடி “அதை எண்ணி என் உள்ளத்தை சிடுக்காக்கிக்கொள்ள நான் விழையவில்லை. களம்காண வந்துவிட்டேன், இனி எது வரினும் என்ன? போரில் வெற்றியும் தோல்வியும் ஊழே. ஊழை எண்ணிக் கணக்கிடுவதென்பது அலையெண்ணியபின் நீராடுவோம் என்று கருதுவதே” என்றான்.

இருபடைகளும் ஒன்றையொன்று நெருங்கி எட்டு நாட்களுக்குப்பின் அஸ்வமுக்தத்தை வந்தடைந்தன. இரு சாராரும் சூழ்ச்சி எதையும் எண்ணவில்லை. இரு நதிகள் வெள்ளப்பெருக்கெடுத்து இரு திசைகளிலிருந்து வருவதைப்போல அவை அணுகின. “பெருங்காதல் கொண்ட இரு நாகங்கள் போல” என்றான் நகுஷனுடன் வந்த படையமைச்சனாகிய காலகன். “வெறும் விசையாலேயே நிகழவிருக்கிறது இப்போர். எந்த அரசுசூழ்தலும் இரு தரப்பிலும் இல்லை. ஹுண்டன் கல்கதையைச் சுழற்றியபடி தோள்தட்டிவரும் காட்டாளன்போல வருகிறான்” என்றான் வஜ்ரசேனன். நகுஷன் “ஆம், அவ்வாறே நாமும் செல்வோம். வெறும்போர்” என்றான்.

அஸ்வமுக்தம் மூன்றுபுறமும் செங்குத்தான பாறைக்குன்று. உச்சியில் முளைத்திருந்த ஆலமரத்தின் அருகே உருண்ட பாறை ஒன்று ஏதோ எண்ணித்தயங்கியதென அமர்ந்திருந்தது. ஹுண்டனின் ஒற்றர்கள் மூவர் மேலேறிச்சென்று தொலைவிலேயே நகுஷனின் படைகள் அணுகுவதை நோக்கிவிட்டனர். அவர்கள் கொடியடையாளம் காட்ட

முந்தையநாள் அந்தியிலேயே வந்து பிறைவடிவில் அமைவு கொண்டிருந்த ஹூண்டனின் படைகளில் முரசொலி எழுந்தது. துயில் கலைந்து யானை எழுவதுபோல படை விழிப்புகொண்டது.

மேலிருந்து நோக்கிய ஒற்றர்கள் ஒழுகும் ஆற்றின் நீர்நுரை உருமாறுவதுபோல நாகர்படை குவிந்து இழுபட்டு சுடர்வடிவம் கொள்வதை, பின்னர் அதற்கு இரு கைகள் முளைத்து நண்டு என மாறுவதை கண்டனர். அதன் முகப்பில் கேடயமேந்திய வீரர்கள் வந்து நிரைகொண்டு ஒரு கோட்டையென மாறினர். அதற்கு அப்பால் வில்லவர்கள் நச்சுமுனைகொண்ட அம்புகளுடன் நிரந்தனர். ஐந்து நிரைகளாக கவசமணிந்த புரவிகளின் தொடர் ஒருங்கியது. அதற்குப் பின்னால் நீண்ட வேல்களுடன் காலாள்படையினர் நண்டின் கால்களென நான்கு பிரிவுகளாக நின்றனர்.

ஒவ்வொரு படைப்பிரிவின் நடுவிலிருந்தும் கழையேறிகள் ஊன்றப்பட்ட நீள்கழைகளில் தொற்றி மேலேறி வண்ணக்கொடிகளை ஆட்டி செய்தியறிவித்தனர். காளைகள் இழுத்துவந்த பெரிய சகடமேடைகளில் போர்முரசுகள் இருந்தன. முழைதடியேந்திய வீரர்களும் கொடியசைக்கும் செய்தியாளர்களும் கொம்பூதிகளும் அதன்மேல் அமர்ந்திருந்தனர். தொலைவிலேயே ஹூண்டனின் பாடிவீடு தெரிந்தது. அதன்மேல் சுருளவிழ்ந்து எழுந்த நாகம் பொறிக்கப்பட்ட மிகப்பெரிய கொடி காற்றில் எழுந்து பின் மெல்லத் துவண்டது.

தொலைவில் செந்நிறத் தீற்றலென நகுஷனின் படை முதலில் தெரிந்தது. பின்னர் அதன் கொடிகள் காற்றில் பறக்கும் வண்ணப்பறவைகள் என துலங்கின. வேறு எங்கிருந்தோ என

படைநகரும் ஓசை எழுந்துவந்து காற்றில் செவிதொட்டுத் தேய்ந்து மறைந்துகொண்டிருந்தது. பின்னர் திரும்பும் உலோகங்களின் ஒளிகள் கண்களை கீறிக்கீறி சென்றன. கண்கூசும்படி ஒளியலை எழத்தொடங்கியபோது உடலே படையோசையை கேட்கத்தொடங்கியது. “எளிய படைதான்” என ஒருவன் சொன்னான். “ஆனால் நம்மிடம் புரவிகள் மிகக்குறைவு. தேர்களே இல்லை. நம் வீரர்கள் புரவிக்கலை தேர்ந்தவர்களும் அல்ல” என்றான் அவன் தோழன்.

“ஆம், நாம் மரக்கிளைகளில் பறக்கும் கலையறிந்தவர்கள்... இந்த விரிவெளியில் நமது திறன்களுக்கு பொருளில்லை” என்றான் இன்னொருவன். “நாம் எதையும் முடிவு செய்யமுடியாது. போர்கள் நமது ஆற்றலால் வெல்லப்படுபவை, பிறனுடைய ஆற்றலை நாம் போர்நிகழும்வரை அறியவே முடியாது” என முதியநாகன் ஒருவன் சொன்னான். அவர்கள் கொடிகளால் செய்திகளை சொல்லிக்கொண்டே இருந்தனர். அணுகிவரும் படையின் தொலைவு, அளவு, அமைப்பு, படைசூழ்கை என விளக்கிக்கொண்டே இருந்தனர்.

“அவர்கள் நம் படைகளை அறிகிறார்களா? எங்கிருந்து?” என்றான் ஒருவன். “எவ்வகையிலும் அறியமுடியாது. அங்கிருந்து அவர்கள் பார்ப்பதற்கான எந்த வழியும் இல்லை” என்றான் இன்னொருவன். “பார்க்காமலேயே போருக்கு எழுகிறார்கள் என்றால் அவர்களின் துணிவு என்ன?” என்று ஒருவன் கேட்டான். “நாம் நாகர்கள் என்பது மட்டுமே...” என்றான் ஒரு முதியவன். “கான்குடிகள் போர் வெல்வது அரிதினும் அரிது. நாம் தனித்தனிக் குலங்கள். எதன்பொருட்டும் நாம் ஒன்றாவதில்லை. இதோ, நாகர்களின் இப்பெரும்படை ஒரு சிறு அச்சம் எழுந்தால் முந்நூறு குடிகளாக சிதறிவிடும்.”

“அவர்கள் அவ்வாறல்ல. ஆயிரம் குடிகளை இணைத்து நான்கு வர்ணங்களாக ஆக்கியிருக்கிறார்கள். இதோ, படையெனத் திரண்டுவந்து நின்றிருப்பவர்கள் பல்லாயிரம் குடிகள், பலநூறு குலங்கள். ஆனால் ஷத்ரியர் என்னும் ஒரே வர்ணம். அவ்வர்ணத்திற்குரிய அறங்களை இளமையிலேயே அவர்களின் உள்ளத்தில் செதுக்கிவிட்டிருக்கிறார்கள்” என்றான் அம்முதியவன். “ஒரு வர்ணம் என்பது தன் தனியடையாளத்தையும் தான் என்னும் ஆணவத்தையும் கொண்டு தன்னைத் தொகுத்துக்கொண்ட ஒரு திரள். தன் அடையாளத்திற்காகவும் ஆணவத்திற்காகவும் அது தன்னை முற்றழிக்கவும் சித்தமாகும்.”

“நம்மிடம் இல்லாது அவர்களிடம் இருக்கும் படைக்கலம் அதுவே, ஆணவம்” என அவன் தொடர்ந்தான். “இந்தக் களத்திலிருந்து ஓடினால் நாகர்களால் ஐந்தே நாட்களில் அனைத்தையும் மறந்து தங்கள் குடிகளில் இணையமுடியும். இனிதே வாழவும் முடியும். இங்கிருந்து தோற்றோடும் ஷத்ரியன் இழிவுபட்டு எஞ்சிய வாழ்க்கையை அழிக்கவேண்டும். புண்ணின்றித் திரும்புபவன் கருநரகிற்கு இணையான பேரிழிவை சூடவேண்டியிருக்கும்.” அவர்கள் பெருமூச்சுவிட்டனர்.

இளம்வீரன் ஒருவன் “அவர்கள் நெடுந்தொலைவு வந்துள்ளனர், நாம் இங்கே பாடியமைத்திருக்கிறோம். போரை நாளைவரை ஒத்திவைக்கும்படி கோர அவர்களுக்கு உரிமையுண்டு” என்றான். “ஆம், ஆனால் அவர்கள் கோரமாட்டார்கள். ஏனென்றால் நாம் ஷத்ரியர்கள் அல்ல. இதை அவர்கள் ஒரு போரென்றே சொல்லமாட்டார்கள். இது அவர்களுக்கு வேட்டை மட்டுமே” என்றான் முதியவன். அப்பால் கொம்போசை எழுந்தது.

நிலைக்கழை ஒன்றில் குருநகரியின் அமுதகலசக் கொடி மேலேறியது. மிக மெல்லிய அதிர்வாக முரசோசை எழுந்தது.

“படைசூழ்கை… அப்படியென்றால் போர்” என்றான் இளையவன். “ஆம், உச்சிப்பொழுதிலேயே போரைத் தொடங்குகிறார்கள் என்றால் அந்திக்குள் இப்போரை முடிக்க எண்ணுகிறார்கள்” என்றான் முதியவன். “அந்திக்குள் நாம் தோற்பதா?” என்றான் இளைஞன். கீழே நகுஷனின் படை கழுகுவடிவம் கொண்டது. அதன் முகப்பில் அலகு என விற்படை ஒன்று கூர்கொண்டது. உகிர்கள் என வேல்படை அமைய சிறகுகள் என வாட்படை நிலைகொண்டது.

செய்திகளை மேலிருந்து அவர்கள் அனுப்பிக்கொண்டே இருந்தனர். ஆனால் ஹூண்டனின் படையில் எந்த மாற்றமும் தெரியவில்லை. அவர்கள் நகரப்போவதாகவும் தெரியவில்லை. “கழுகை நண்டு எதிர்க்குமா?” என்றான் இளைஞன். “நாம் அதை அறியவே முடியாது. நமக்கு எதற்கு அக்கவலை?” என்றான் இன்னொருவன். நாகர்படையில் முரசொலிகளும் கொம்புகளும் முழங்கின. கொடிகள் எழுந்தசைய அதன் வலக்கை விரிந்து நீள இடக்கை அசைவற்றிருந்தது. “என்ன செய்கிறார்கள்?” என்றான் முதியவன். பலர் புரவிகளில் ஓடுவது தெரிந்தது.

முரசுகள் மாறி ஒலி எழுப்ப விலகிச்சென்ற படை வந்து இணைந்துகொண்டது. “அவ்வளவுதான், போர் முடிந்துவிட்டது” என்றான் முதியவன். “எப்படி சொல்கிறீர்கள்?” என்று இளைஞன் சீறியபடி எழுந்தான். “ஆணை பிழையாக வந்துவிட்டது. இனி படைகள் தலைமையின் ஆணையை ஐயமின்றி ஏற்காது” என்றான் முதியவன். “பிழையாக வந்துவிட்டதனாலேயே எச்சரிக்கை கொள்ளலாமே?” என்றான் ஒருவன். “அது எண்ணித்துணிவது… படை எழுந்தபின் எண்ணமில்லை. எது

உடலறிந்ததோ அதுவே அங்கு நிகழும். காமத்தைப்போல” என்றான் முதியவன். அவர்கள் அமைதியடைந்து மெல்லிய சோர்வுடன் நோக்கியிருந்தனர்.

நகுஷனின் படைகள் காற்றில் பறந்துவரும் சருகுக்குவைபோல எளிதாக விரைவாக ஹூண்டனின் படைகளை அணுகின. புரவிகளின் சுழலும் கால்களும் அவற்றின் நீட்டிய தலைகளுக்குப் பின்னால் வில்லேந்தியமர்ந்த கவசவீரர்களும் தெரியலாயினர். மிக விரைவிலேயே குதிரைப்படைகள் மட்டும் பிரிந்து முன்னால் வந்து அவர்கள் இருந்த குன்றை அணுகி கடந்துசென்றன. முதலில் வில்லவர் அமர்ந்த அலகு செல்ல வாளோர் அமர்ந்த இறகும் வேலோர் அமர்ந்த உகிரும் தொடர்ந்து சென்றன.

அப்பால் நாகர்களின் படை அப்போதும் ததும்பிக்கொண்டிருந்தது. “சந்தையில் ஒன்றோடொன்று கால்கட்டிப் போடப்பட்ட பறவைகளைப்போல” என்றான் முதுநாகன். “மூத்தவரே, இனி தாங்கள் ஏதும் சொல்லவேண்டியதில்லை” என்றான் இளைஞன். “நான் எண்ணுவதையே சொல்லென செவி அறிகையில் சுடுகிறது.” முதுமகன் “நாம் பார்த்துக்கொண்டிருப்பது ஒரு போரை அல்ல மைந்தா, இந்தத் தொல்நிலத்தில் பல்லாயிரமாண்டுகளாக நிகழ்ந்துவரும் ஒன்றை. அது எப்போதும் இவ்வண்ணமே மாற்றமில்லாது தொடர்கிறது” என்றான்.

நாகர்படைகளின் முரசுகளும் கொம்புகளும் இணைந்து பிளிறலாயின. அவர்களின் வில்லவர்கள் தரையிலமர்ந்து விற்களை இழுத்து அம்புகளை எய்ய அவை வானிலெழுந்து வயலில் அமரும் கிளிக்கூட்டம்போல பாய்ந்துவரும் குருநகரிப்படைகள்மேல் அமைந்தன. அம்புபட்ட வீரர் சிலர்

விரையும் புரவியிலிருந்து தெறித்து விழ நன்கு பயிற்றுவிக்கப்பட்ட அப்புரவிகள் அசையாமல் நின்று திரும்பி படைநோக்கி ஓடின. அவர்களில் பெரும்பாலானவர்கள் எடையில்லாத ஆமையோட்டுக் கவசம் அணிந்திருந்தனர். நாகர்களின் புல்லம்புகளின் புறாவலகுக் கூர் அவற்றை கடக்கவில்லை. புரவிகளும் கவசமணிந்திருந்தன. விரைவிலேயே நகுஷனின் படை நாகர்படைகளை அணுகி அவற்றின் முகப்பை மோதி பல பகுதிகளாகப் பிளந்தது.

நாகர்களின் வில்லவர்படை பொருளிழந்தது. பின்னால் அவர்கள் நிறுத்தியிருந்த வேல்படையை முன்னால் செலுத்த வில்லவர் அணிபிளந்து வழியமைக்கவேண்டியிருந்தது. ஆனால் முன்னால் வந்த நகுஷனின் வில்லவர் முதலிலேயே அத்தனை முரசுமேடைகளையும் தாக்கி அங்கிருந்த அனைவரையும் கொன்றனர். செய்தியில்லாமல் தடுமாறிய வில்லவர்களால் வேலேந்திகள் தடுக்கப்பட்டனர். அக்குழப்பத்தில் வாளுடன் நுழைந்த இரண்டாவது புரவியணி வெறியுடன் நாகர்களை வெட்டிவீழ்த்தலாயிற்று. பயனற்ற விற்களுடன் வாளோர் முன் அகப்பட்ட நாகர்கள் இறந்து விழுந்தனர்.

“போரல்ல, படுகொலை” என்றான் முதியவன் கசப்புடன். “நீங்கள் சற்று வாயைமூடுங்கள்” என்றான் இளைஞன். கழுகின் உடல் வந்து நாகர்படைகளை அடைந்தது. வேலேந்திய காலாள்படையினர் புரவிப்படை உருவாக்கிய விரிசல்கள் வழியாகப்புகுந்து வெட்டியும் குத்தியும் கொன்றுகுவிக்கலாயினர். “முதலில் வேல்படை நின்றிருந்ததென்றால்...” என்றான் இளைஞன். “நாம் ஒவ்வொருமுறையும் இவ்வாறுதான் எண்ணி எண்ணி

ஏங்குகிறோம்” என்றான் முதுநாகன். “பார், நம் படைகள் வெறும் கும்பல். இட்டுதலைகுவிக்கிறார்கள் ஷத்ரியர்.”

நாகர்படைகளின் பின்னிரை புகைக்குவை காற்றில் கரைவதுபோல சிதையத் தொடங்கியது. “அவ்வளவுதான்...” என்றான் முதியவன். “வாயை மூடுங்கள்!” என்றான் இளைஞன். “இன்னும்கூட வாய்ப்புள்ளது... நாம் மீண்டும் ஒருங்கிணைய முடியும்... நம்மில் மூன்றிலொரு எண்ணிக்கையே அவர்களிடம்... அதை நம் படைகள் உணர்ந்தாலே போதும்.” முதுநாகன் “அவர்கள் திரும்பிவிட்டார்கள்” என்றான். “இல்லை, அவர்கள் இன்னும் அதை அறியவில்லை... பின்னாலிருப்பவர்களை அவர்கள் அறிய வழியே இல்லை” என்றான் இளைஞன். “செய்தி அழிந்திருப்பதேகூட நல்லதுதான்.”

“படை என்பது ஒற்றை உடல். உடல் தன்னைத் தானே அறியும் ஒற்றைப்பெரும்புலன்” என்றான் முதுநாகன். நாகர்களின் மொத்தப் படையும் பஞ்சுப்பரப்பு துகள்களாக ஆவதுபோல சிறு குழுக்களாக ஆகி சிதறிப்பரவத் தொடங்கியது. “கொன்று குவிக்கப்போகிறார்கள். சிறுகுழுக்களாக ஓடுவதுபோல தற்கொலை வேறில்லை” என்றான் இளைஞன். “கொல்லமாட்டார்கள்” என்றான் முதுநாகன். “ஏன்?” என அவன் திரும்பிநோக்கினான். “ஒருமுறை போரில் திரும்பி ஓடுபவர்களை கொன்றார்கள் என்றால் அடுத்த போரில் திரும்பி ஓட அஞ்சுவர். இறுதிவரை நின்று பொருதுவர். திரும்பி ஓடுபவர்களை உயிரளித்து விட்டுவிட்டால் எந்தப் போர் தொடங்கும்போதும் முடிந்தவரை பார்ப்போம், முடியாதபோது ஓடிவிடுவோம் என்றே எண்ணுவர். அது அவர்களின் போர்நுணுக்கம்” என்றான் முதுநாகன்.

இளைஞன் “ஆம், போரை நிறுத்திவிட்டார்கள்” என்றான். கீழே குருநகரியின் வெற்றிமுரசு ஒலிக்கத் தொடங்கியது. “அவர்கள் நம்மை அவர்களது நாடகங்களின் நடிகர்களாக்கிவிட்டிருக்கிறார்கள்” என்றான் இளைஞன். “அவர்கள் நம்மை நோக்கி நகைக்கிறார்கள். அதைவிட நம்மை அவர்கள் கொன்றிருக்கலாம்.” முதுநாகன் “ஒருமுறையேனும் எதிர்த்து நின்று அனைவரும் உயிர்துறந்திருந்தால் நாம் நம்மை தளைத்திருக்கும் அனைத்திலிருந்தும் விடுதலைபெற்றுவிடுவோம். நாமும் இவர்களுக்கு நிகரானவர்களே என நம் தன்னாழம் நம்பத் தொடங்கிவிடும். அதன்பின் நாம் இவர்களை வெல்லக்கூடும்” என்றான்.

“ஆனால் அவர்கள் அதற்கு நமக்கு வாய்ப்பளிப்பதே இல்லை. அவர்கள் நம்மை கூர்ந்து நோக்கி புரிந்துவைத்திருக்கிறார்கள். இதோ, பெருகிப் படைகொண்டுசென்று களமாடும் ஷத்ரியர்கள் அல்ல இப்போரை வடிவமைத்தவர்கள். அங்கே அரண்மனையில் அமர்ந்து கையில் ஏடு கொண்டு சொல்தேரும் அந்தணர்கள்தான் இதை நடத்துகிறார்கள். நாம் தோற்றுக்கொண்டிருப்பது அவர்களிடமே” என்றான் முதுநாகன். “நாம் ஏன் தோற்கிறோம், ஏன் அவர்கள் வெல்கிறார்கள் என்றால் ஒரே மறுமொழிதான். நாம் அவர்களை புரிந்துகொள்ளவில்லை, அவர்கள் நம்மை புரிந்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே இதோ நிகழும் இந்தக் களம் படைக்கலங்களால் நிகழவில்லை, எண்ணங்களால் நிகழ்கிறது.”

“ஒற்றுக்கலை பயில இவர்களின் குருநிலைகளில் நான் பன்னிரண்டு ஆண்டுகள் மாணவனாக இருந்தேன். இவர்களைப்போல உருமாறி நாற்பதாண்டுகள் இவர்களுடன்

வாழ்ந்தேன். நான் அறிவேன் இவர்களை” என அவன் சொன்னான். கீழே நோக்கியபடி “உயிர்தப்பி ஓடும் ஒவ்வொரு நாகனும் நூறு கோழைகளை தன் குடிகளில் உருவாக்குகிறான். அவர்கள் நம்மைக் கொன்றால் நாம் பழிவெறி கொள்ளக்கூடும். நம் தலைமுறைகள் வஞ்சம் பெருக்கக்கூடும். அவர்கள் நம்மை ஓடவிடுந்தோறும் நாம் வெற்று காட்டுமானுடராகிறோம்” என்றான். கசப்புடன் சிரித்து “அதை அவர்கள் அறமென்றும் இரக்கமென்றும் சொல்கிறார்கள். அதன்பொருட்டும் ஆணவம்கொள்கிறார்கள்” என்றான்.

“போர் முடிந்துவிட்டது” என்றான் ஒருவன். முதியவன் தன் மேலாடையால் முகம் துடைத்து “நாமும் திரும்பவேண்டியதுதான். அவர்கள் நம்மை அறிவார்கள். நம்மை எளிதில் அவர்களால் பிடிக்கவும் முடியும். ஆனால் நாம் சென்று இக்காட்சியை நம் குலத்தவரிடம் சொல்ல அவர்கள் விழைவார்கள். ஆகவே நம்மை விட்டுவிடுவார்கள்” என்றான். இளைஞன் “அரசர்…” என்றான். “என்ன?” என்றான் முதியவன். “நம் அரசர் ஓடவில்லை. தன் மெய்க்காவலருடன் களத்திலேயே இருக்கிறார். அதோ அவர் கொடி!” முதியவன் கையை கண்மேல் வைத்து நோக்கி “ஆம்” என்றான். “என்ன செய்கிறார்?” கூர்ந்து நோக்கி “அடிபணிகிறாரா? அவர் இயல்பல்ல அது” என்றான். இளைஞன் “தனிப்போர்… ஆம், அரசர் நகுஷனை தனிப்போருக்கு அறைகூவியிருக்கிறார். அதுதான்…” என்றான்.

நகுஷனின் தேரைநோக்கிப் புரவியில் பாய்ந்துவந்த படைத்தலைவன் “அரசே, நாகர்குலத்து அரசன் களம்நிற்கிறான்” என்றான். நகுஷன் “யார்?” என்றதுமே புரிந்துகொண்டு “ஹூண்டனா? களத்திலா? அடிபணிகிறானா?” என்றான்.

“தனிப்போர் கோருகிறான். அவன் அமைச்சன் கம்பனன் தேர்த்தட்டில் எழுந்து நின்று அதை அறிவித்தான்.” நகுஷன் விழிகளை நோக்கியபின் “ஆனால் இழிகுலத்தோரிடம் ஷத்ரியர் தனிப்போரிடும் வழக்கமில்லை. அது அவர்களுக்கு நாம் அளிக்கும் நிகர்மதிப்பென்று கொள்ளப்படும்… ஒருவேளை…” என்றான். அச்சொல் நாவிலெழுந்ததுமே அதன் பெரும்பிழையை உணர்ந்தவனாக “நான் சொல்லவருவது…” என்றான்.

“நானும் கான்மகனே” என்றான் நகுஷன். “அவனை நேரெதிர்கொள்ள என்னால் இயலும். அவன் விரும்பும் படைக்கலம்கொண்டே.” படைத்தலைவன் “அறைகூவுபவன் அவன். படைக்கலம்…” என்று மேலும் சொல்லெடுக்க “நான் அவனுடன் தனிப்போருக்கு சித்தமாக இருப்பதாக சென்று சொல்லுங்கள்” என்றான். படைத்தலைவன் வரும்போதே அதை குருநகரிப் படைகள் உய்த்தறிந்திருந்தன. செல்லும்போது அதன் மறுமொழியையும் உணர்ந்துவிட்டன. அவன் செல்லும் வழியில் படைகளில் எழுந்த ஒலியே அதை காட்டியது. நீரில் கனல்விழுந்து மூழ்குவதுபோல படைத்தலைவன் திரளில் மறைந்தான்.

அப்பால் ஹூண்டனின் கொடி மேலேறியது. அவன் படைவீரர்கள் கொம்புகளை ஊதினர். குருநகரிப் படைகளில் பேரோசை எழுந்து அதைச் சூழ்ந்தது. தன் தேரை அங்கே செலுத்தும்படி சொன்ன நகுஷன் தேர்த்தட்டில் புன்னகையுடன் கைகட்டியபடி நின்றான். தொலைவிலேயே அவன் ஹூண்டனைக் கண்டான். தன் தேர்த்தட்டில் கரிய பெருந்தோள்களுடன் இடையில் புலித்தோலாடை மட்டும் அணிந்து யானைத்தோல் காலணிகளுடன் அணிகள் ஏதுமின்றி

அவன் நின்றிருந்தான். தாடியை தோல்நாடாவால் கட்டி மார்பிலிட்டிருந்தான். குழலை பெரிய கொண்டையாகக் கட்டி இடத்தே சரித்திருந்தான். அம்புவிடுவதற்குரிய தோலுறைகள் கைகளில் இருந்தன.

நகுஷனின் தேர் சென்று அவன் தேருக்கு முன்னால் நின்றது. இருவருக்கும் நடுவே இருந்தவர்கள் ஊதப்பட்ட மாவு என விலகி முற்றமொன்றை அமைத்தனர். மெல்ல படைகள் இணைந்து சூழ்ந்து ஒரு பெரும் வளையமொன்று அமைந்தது. முகங்களாலான சுவர் என அது எழுந்தது. குருதி தோய்ந்த முகங்கள். போர்க்களியில் சிவந்த கண்கள். பலர் கவசங்களைக் கழற்றி கைகளில் வைத்திருந்தனர். வாள்களையும் வேல்களையும் ஊன்றி அவற்றின்மேல் உடலெடையை தாங்கி நின்றனர்.

கம்பனன் முன்னால் வந்து நின்று “எங்கள் அரசர் இக்களம்விட்டு ஓடவோ அடிபணியவோ விழையவில்லை. ஆகவே இறப்புவரை தனிப்போரை விழைகிறார். வெறும்கைப்போர் அவர் விழைவது. அரசர் விழைந்தால் அவர் விழையும் படைக்கலத்தை கொள்ளலாம். நாகர்குல நெறிகளின்படி தனிப்போரில் வென்றால் அவர் குருநகரியை வென்றதாகவே பொருள். குருநகரியின் அரியணையை அவர் விரும்பவில்லை. ஆனால் தன் அன்னையின் எரியிடத்திலிருந்து ஒரு பிடி எரிமண் கொண்டுசெல்ல அவருக்கு குருநகரியின் குடித்தொகை ஒப்புதலளிக்கவேண்டும்” என்றான்.

படைத்தலைவன் ஏதோ சொல்வதற்குள் நகுஷன் கைநீட்டி தடுத்து “அவ்வண்ணமே” என்றான். தன் கைகளிலிருந்த அம்புறைகளைக் கழற்றி பாகனிடம் அளித்தபடி “இறப்புவரை

போர். வெறும்கைகளால்” என்றான். படைத்தலைவன் “அரசே, அவர்களின் நகங்களில் நாகப்பல் நச்சு உண்டு” என்றான். “அவன் கான்மகன்” என்று நகுஷன் சொன்னான். “இங்கே கான்நெறி திகழ்க!” என்றபடி தேரிலிருந்து குதித்தான். தன் கையுறைகளை கழற்றிவிட்டு ஹுண்டன் மண்ணில் குதித்தான்.

கம்பனன் ஹுண்டனின் காலணிகளை கழற்றி வாங்கிக்கொண்டான். நகுஷனின் அணுக்கக்காவலர்கள் அவன் அணிந்திருந்த மணிமாலையையும் கணையாழிகளையும் இடைக்கச்சையையும் உடைவாளையும் கழற்றி எடுத்துக்கொண்டனர். மான்தோலாடையை இடையில் அணிந்து அதன்மேல் தோல்கச்சையை இறுக்கியபின் குனிந்து மண்ணைத்தொட்டு சென்னிசூடினான். உள்ளங்கைகளை மண்ணில் பதித்து உரசிக்கொண்டு முன்னால் சென்று நிலைமண்டிலத்தில் நின்றான். ஹுண்டன் அவன் அசைவுகளை கூர்ந்து நோக்கியபடி வந்துநின்று மண்ணைத் தொட்டு வணங்கி ஒரு துளி நாவிலும் இட்டுக்கொண்டான்.

கம்பனன் “நெறிகள் இல்லை, காட்டுமுறை” என்றான். “ஆம்” என்றான் நகுஷன். இருவரும் ஒருவரை ஒருவர் நோக்கியபடி சுற்றிவந்தனர். ஹுண்டனின் தோள்தசை துடித்தபடியே இருப்பதை நகுஷன் கண்டான். அதை நோக்கி விழிநட்டான். அவனும் அதை உணர்ந்ததும் அவன் விழிகள் நிலைபிறழத்தொடங்கின. நகுஷன் “உம்” என ஓர் ஒலியை எழுப்பினான். அவன் பாயப்போகிறான் என எண்ணி ஹுண்டன் பாய்ந்ததும் அவன் பாயாமல் பின்னகர்ந்தான். ஹுண்டன் நிலைபிறழ்ந்து தடுமாற அவன் புறங்கழுத்தில் ஓங்கி அறைந்தான். மண்ணில் விழுந்து கையூன்றி எழுந்த

ஹூண்டன் ஓர் அடி தடுமாறி நின்றான். அவன் நிகர்நிலை சற்று பிறழ்ந்துவிட்டது என உணர்ந்ததும் குருநகரியின் வீரர்கள் வாழ்த்தொலி எழுப்பினர்.

அந்த ஒலி ஹூண்டனை சினம் கொள்ளச்செய்தது. பன்றிபோல உறுமியபடி அவன் பாய நகுஷன் அவனைத் தடுத்து பற்றிக்கொண்டான். இருவரும் தழுவிக்கொண்டு நிலமறைந்து விழுந்து உருண்டனர். கால்கள் மண்ணில் துழாவி திளைத்துப்பின்னி விடுவித்துக்கொண்டு மீண்டும் இறுகின. ஹூண்டன் நகுஷனைத் தூக்கி அறைந்தான். புரண்டு எழுந்து ஹூண்டனைப் பற்றி பக்கவாட்டில் வீழ்த்தி அவன் விலாவெலும்புகளில் ஓங்கியறைந்தான் நகுஷன். ஹூண்டன் வலியில் மெல்ல முனகினான். ஹூண்டன் எழுவதற்குள் நகுஷன் அவனை மேலும் மேலுமென அறைந்தான்.

ஹூண்டன் பாய்ந்தெழுந்து நகுஷனை தன் கைகால்களால் கவ்விக்கொண்டு மண்ணில் வீழ்த்தினான். அவனைப் புரட்டி மேலேறிவிட ஹூண்டன் முயல நகுஷன் அதற்கு இடம்கொடாமல் புரண்டுகொண்டே இருந்தான். இருவரும் மண்ணில் புழுக்களைப்போல உருண்டனர். மென்மையான குருதியில் ஓருடலென இருவரும் திளைப்பதைப்போல என்று நகுஷன் உணர்ந்தான். விழிகளில் நழுவிக்குழைந்து அகன்று அணுகிய காட்சிகள் எது தன் கை எது பிறன் கால் என்று அறியமுடியவில்லை. நான்கு கால்களும் நான்கு கைகளும்கொண்ட விந்தை உயிர் என தன்னை எண்ணினான். அத்தனை எண்ணங்களும் அப்போருக்குள் எங்கே நிகழ்கின்றன? எப்படி அவை அடிபடாமல் நசுங்காமல் ஊடுருவுகின்றன?

ஒருகணம் மிகமிக விரிந்து ஒருபகலென தெரிந்தது. அதில் ஹூண்டனின் கழுத்து நரம்பு புடைத்த வளைவு மிக அருகே

வந்து அதிர்ந்து காத்து நின்றது. அவன் எம்பி தன் வாயால் அந்நரம்பைக் கவ்வி இறுக்கினான். ஹூண்டனின் உடல் துடித்து அதிர்வதை அவன் உடலெங்கும் உணரமுடிந்தது. குருதியை நாவில் வெம்மையென, உப்புச்சுவையென உணர்ந்தான். ஹூண்டன் தன் கைகளை விடுவிக்கும்பொருட்டு முழு உயிர்விசையாலும் திமிற ஆற்றலையெல்லாம் திரட்டி அவனை அடக்கியபடி கடித்த பற்களை விலக்காமல் தலையை அசைத்து அத்தசையை வாயில் நெளியும் நரம்புடன் கவ்வி இறுக்கிக்கொண்டான்.

ஹூண்டன் உச்சகட்ட திமிறலுடன் ஒருமுறை அதிர்ந்தபின் மெல்ல தளர்ந்தான். அவன் மூச்சு நகுஷனின் கன்னத்தில் ஆவிவெம்மையுடன் குருதித்துளிகளுடன் தெறித்தது. அவன் கைகள் நகுஷனின் தோளில் எடையுடன் அமைந்து வியர்வையில் வழுக்கி சரிந்தன. கால்கள் கவ்வலை விடுத்து பக்கவாட்டில் அகன்றன. நகுஷன் அவனை புரட்டிப்போட்டு மேலேறி அமர்ந்து நோக்கினான். கடிவாய் சிதைந்து திறந்திருக்க அதில் மூச்சுக்குமிழிகள் குருதியுடன் வெடித்தன. மூக்கிலும் வாயிலும் குருதித்துளிகள் தெறித்தன. அவன் உதடுகள் எதையோ சொல்லிக்கொண்டிருந்தன.

தன் வாயிலிருந்த குருதியை அவன் துப்பப்போனபோது அச்சொற்கள் சித்தத்தில் உறைத்தன. “உண்க… என்னை உண்க!” அவன் திகைத்து அமர்ந்திருந்தான். “உண்க… உண்க…” என்றான் ஹூண்டன். “என்னை உன்னுடன் சேர்த்துக்கொள்க!” நகுஷன் கைகள் தளர்ந்தன. மயங்கி ஹூண்டன் மேலேயே விழுந்துவிடுபவன்போல் உணர்ந்தான். பின் அந்தக் குருதியையும் நிணத்தையும் உறிஞ்சி உண்டான். நாவால் வாயை நக்கியபடி கைகளால் ஹூண்டனின் கழுத்தைப் பற்றி

அவன் மோவாயை மேலே தூக்கி வலப்பக்கமாகத் திருப்பி ஒரே மடிப்பில் கழுத்தெலும்பை மேல்நோக்கி உடைத்தான். உடல் இருமுறை துள்ளி அதிர்ந்தது. கைகள் மண்ணை அள்ளி இழுபட்டன.

நகுஷன் எழுந்து தள்ளாடி நின்றான். காட்சிகள் மயங்கி அலையடிக்க விழுந்துவிடுவோமென எண்ணி மீண்டும்மீண்டும் இமைகளை மூடித்திறந்து நிலைமீண்டான். திரும்பி அருகே நின்ற கம்பனனிடம் “இவன் உடலை குருநகரியின் கொடி தொடர கொண்டுசெல்க!” என்றான். ஓடிவந்த படைத்தலைவன் தோளைப்பற்றியபடி நின்று “நம் கோல்தாழ்த்தி இவன் உடல் மண்ணுக்கு அளிக்கப்படவேண்டும். நம் குடிகள் நாற்பத்தொருநாள் சிதைநோன்பு கொள்ளவேண்டும்” என்று ஆணையிட்டான்.

# மாமலர் - 43

## 43. விண்ணூர் நாகம்

படைக்களத்திலிருந்து திரும்பும்போதே நகுஷன் பிறிதொருவனாக மாறிவிட்டிருந்தான். அவன் உடலுக்குள் மற்றொருவர் நுழைந்துவிட்டதைப்போல நோக்கும் சொல்லும் மட்டுமல்ல நடையும் உடலசைவுகளும்கூட நுட்பமாக மாற்றமடைந்திருந்தன. அரண்மனைமுற்றத்தில் தேரிறங்கிய அவனைக் கண்டதுமே பத்மனின் விழிகளில் திகைப்பு தோன்றி மறைந்தது. குருதி கருகிப்படிந்திருந்த உடலுடன் அரண்மனைக்குள் நுழைந்த நகுஷன் “என் உடன்பிறந்தானுக்குரிய அரசமுறைமைகள் அனைத்தும்

ஹூண்டனுக்கு செய்யப்படவேண்டும், அமைச்சரே” என்று ஆணையிட்டான். பத்மன் தலையசைத்தான்.

ஹூண்டனின் உடலை வெள்ளித்தேரிலேற்றி வாழ்த்தொலிகளும் மங்கலமுழக்கங்களுமாக குருநகரியின் அணிப்படை நாகநாட்டுக்கு கொண்டுசென்றது. படைத்தலைவன் வஜ்ரசேனன் தலைமைதாங்கி அப்படையை நடத்திச்சென்றான். படை வரக்கண்டு ஊர்களை ஒழித்து அஞ்சி ஓடிய நாகர்குடியினர் மெல்ல உண்மையை உணர்ந்து சிறு குழுக்களாக திரும்பிவந்து வழிதோறும் கூடிநின்று திகைப்புடன் அக்காட்சியை கண்டார்கள். குருநகரியின் படைகள் எழுப்பிய வாழ்த்தொலியை அவர்கள் ஏற்று கூவவில்லை. போரில் தோற்றுத் திரும்பி ஓடிவந்த நாகர்படையினர் உடற்புண்களுடன் படைக்கலங்களுடன் மரங்கள்மேலும் பாறைகள்மேலும் நின்று அந்த அணிநிரையை நோக்கினர்.

அவர்களுக்கு என்ன நிகழ்கிறதென்றே புரியவில்லை. விழிகள் ஒவ்வொன்றையாக நோக்கி அவற்றிலிருந்த ஏதோ ஒன்றை அடையாளம் கண்டுகொண்டு உளம் நடுங்கினர். “அந்த உடலுக்குள் இருப்பது நம் அரசர் அல்ல. அது வெண்தோலர்களின் இழிதெய்வம் ஒன்று” என்று ஒரு முதியவன் சொன்னான். “அதை அவர்கள் நமக்கு அனுப்பியிருக்கிறார்கள். அது நம் குடிகளில் பரவி நோயையும் பஞ்சத்தையும் கொண்டுவரும். நம் குழந்தைகளையும் கால்நடைகளையும் அழிக்கும். நம் மகளிரின் கருப்பாதையை ஊற்றை பாறையென அமைந்து தடுக்கும்.”

அச்சொல் விரைவிலேயே பரவியது. அணியூர்வலம் நாகநகரிக்குச் சென்றபோது அங்கே நாகர்கள் எவரும் வந்து எதிரேற்கவில்லை. கோட்டைவாயிலை திறந்துபோட்டுவிட்டு

நாகர்படைகள் பின்வாங்கி காடுகளுக்குள் பரவி ஒளிந்துகொண்டன. பெண்களும் குழந்தைகளும் இல்லங்களுக்குள் கதவுகளை மூடி ஒளிந்துகிடந்தனர். அரசமாளிகை முகப்பில் ஹூண்டனின் உடல் வைக்கப்பட்டபோது நாகர்குடிகளில் இருந்து எவரும் மலர்வணக்கம் செலுத்தவோ அரிநிறைவு அளிக்கவோ வரவில்லை. படைத்தலைவன் “என்ன நிகழ்கிறது, அமைச்சரே? உங்கள் குடி ஏன் அரசனை புறக்கணிக்கிறது?” என்றான். கம்பனன் தலைகுனிந்து தணிந்தகுரலில் “நானறியேன். குடித்தலைவர்களிடம் பேசிப்பார்க்கிறேன்” என்றான்.

கம்பனன் தன்னந்தனியாக மலையேறிச்சென்று குலத்தலைவர்களை சந்தித்துப் பேசினான். அவர்கள் அவன் அணுகிவரவே ஒப்பவில்லை. மலையடிவாரத்திலேயே அவன் நின்றிருக்கவேண்டுமென்றும் மேலேறி வந்தால் நச்சம்பு வரும் என்றும் எச்சரித்தனர். கைகூப்பி அவன் மன்றாடியபோதும் இரங்கவில்லை. அவன் அங்கே ஒரு பாறையில் கையில் நச்சம்பு ஒன்றை ஏந்தியபடி அமர்ந்தான். வடக்குநோக்கி அவ்வாறு அமர்ந்தால் அந்திக்குள் கோரியது நிகழாவிட்டால் கழுத்தை அறுத்துக்கொள்ளவேண்டும் என்பது நாகநெறி. மேலிருந்து நோக்கிக்கொண்டிருந்த நாகர்குலத்தலைவர்கள் ஐவர் நாகபடக்கோலுடன் இறங்கி வந்தனர். நாகத்தோல் சுற்றப்பட்ட அந்தக் கோல்களை அவனுக்கும் தங்களுக்கும் நடுவே போட்டுவிட்டு பேசத்தொடங்கினர்.

அவன் சொன்ன எதையும் அவர்கள் கேட்கவில்லை. “அவ்வுடல் எங்கள் அரசனுடையதல்ல. அதை எரித்து அழிக்கவேண்டும். நம் குலமுறைப்படி அதை மண்ணில் புதைக்கக் கூடாது. நம் மண் உயிருள்ளது. மூதாதையர் கரைந்து உறைவது.

பல்லாயிரம் விதைகளில் உயிராக அவர்கள் எழுவது. அவ்வுடலில் வாழும் இழிதெய்வம் அதில் கலக்கலாகாது" என்றார்கள். திரும்பத் திரும்ப அதையே சொல்லிக்கொண்டிருந்தார்கள். "நீ இழிதெய்வத்தால் ஆட்கொள்ளப்பட்டவன்..." என அவர்களில் ஒருவர் கூவியதும் அவன் "என்ன சொல்கிறீர்கள்?" என்று உளம் பதைத்தான். "நம் குலத்திற்கென வாழ்ந்தவர், நம் குலநெறிப்படி உயிரிழந்தவர் என் தலைவர்."

"இல்லை, அவன் வெண்தோலரின் மாயத்தால் கட்டுண்டவன்..." என்றார் ஒருவர். "அங்கே அடக்கம் செய்யப்பட்டால் அதை தோண்டி எடுத்து எரிப்போம்" என பிறிதொருவர் கூறியதும் கம்பனன் சீறி எழுந்து அந்த முதிய குலத்தலைவரை நோக்கி நச்சம்பை நீட்டியபடி முன்னால் சென்று "யாரடா அவன், என் தலைவனை இழிவுசெய்வேன் என்று சொன்னது? இதோ, நான் இருக்கிறேன், என் குருதித்துளி எஞ்சும்வரை அவரை எவனும் சொல்லெடுத்துப் பேச ஒப்பமாட்டேன்" என்றான். "அவ்விழிமகனின் உடல் எங்களுக்குத் தேவையில்லை..." என அவர் சொல்லிமுடிப்பதற்குள் தன் வாளை எடுத்து அவர் தலையை வெட்டி நிலத்திலிட்டு காலால் உதைத்து சரிவில் உருட்டிவிட்டான்.

திகைத்து விலகிய குலத்தலைவர்களிடம் "ஆம், நான் இருக்கும்வரை என் தலைவனைப் பழித்து ஒரு சொல் எழ முடியாது. விழைந்தால் என்னைக் கொல்லுங்கள். அன்னையரிடம் ஆணைபெற்று உங்கள் குலத்திலேயே மீண்டும் பிறந்து பழி தீர்ப்பேன்..." என மூச்சிரைக்க அவன் கூவினான். அவர்கள் நடுங்கும் உடலுடன் பின்னகர்ந்தனர். மரங்களெங்கும் ஆயிரம் நச்சு அம்புகள் அவனை நோக்கி

கூர்திருப்பி வில்விம்மி நின்றன. “நான் இன்று என் தலைவன் உடலருகே எரிபுகுவேன்... அனல்வடிவமாகி என் உடல் அழியும். மண்புகாத உடல் இந்நகரியிலேயே வாழும். என் தலைவன் அமைந்த மண்ணுக்கு இனி நானே காவல். எல்லைமீறும் எவன் குலத்தையும் ஏழு தலைமுறைக்காலம் கருபுகுந்து அழிப்பேன். ஆணை! ஆணை! ஆணை!” என்று அவன் கூவினான்.

அன்று குருநகரியின் படைகள் சூழ மங்கலப்பேரிசையும் வாழ்த்தொலிகளும் முழங்க நாகநகரியின் தெற்கெல்லையில் அமைந்த இடுகாட்டில் ஹுண்டன் மண்கோள் செய்யப்பட்டான். தொலைவில் மரங்களில் ஒளிந்தபடி நாகர்கள் அதை நோக்கிக்கொண்டிருந்தனர். இல்லங்களின் இருளுக்குள் அவர்களின் பெண்கள் கண்களை மூடி மூதன்னையரை வழுத்தி உதடுகளை அசைத்துக்கொண்டிருந்தனர். நாகர்களின் குலமுறைப்படி பதினெட்டு அடி ஆழக் குழி வெட்டப்பட்டு அதன் தெற்கு திசையில் பக்கவாட்டில் எட்டுஅடி ஆழமுள்ள பொந்து துரக்கப்பட்டது. அதற்குள் செம்பட்டில் பொதியப்பட்ட ஹுண்டனின் உடலைச் செலுத்தி உப்பும் நீறும் கலந்த கலவையைப் போட்டு நிறைத்தார்கள்.

இடுகுழிக்குள் களிமண்ணாலான கலங்களும் மரத்தாலான இல்லப்பொருட்களும் வைக்கப்பட்டன. ஊர்வன, பறப்பன, நடப்பன என அனைத்துவகை உயிர்களிலும் ஏழுவகை மண்ணில் வனையப்பட்டு வைக்கப்பட்டன. ஏழுவகை படைக்கருவிகளும் ஒன்பதுவகை அருமணிகளும் ஒன்பதுவகை ஊண்மணிகளும் பன்னிருவகை மலர்களும் அடுக்கப்பட்டபின் மண்ணிட்டு மூடினர். அரசனின் உடலிருந்த மண்ணுக்குமேல் மானுடக்கால் படக்கூடாதென்பதனால் அப்போதே செங்கல்

அடுக்கி கூம்புவடிவ பள்ளிப்படைநிலை கட்டப்பட்டு அதன் மேல் நாகர்குலக்கொடி நாட்டப்பட்டது.

முன்னரே தன் முடிவை கம்பனன் வஜ்ரசேனனுக்கு சொல்லியிருந்தான். குருநகரியின் படைகள் ஏனென்றறியா பதற்றத்துடன் காத்து நின்றிருக்க உடலெங்கும் அரக்கும் குங்கிலியமும் தேன்மெழுகும் பூசப்பட்ட துணியை இறுக்கிச் சுற்றிக் கட்டிக்கொண்டு கம்பனன் கைகூப்பியபடி நடந்துவந்தான். கழுத்தில் ஈரமலர்மாலையும் இடையில் மரவுரியாடையும் மட்டும் அணிந்திருந்தான். அவனுக்காக ஏழு அடி தொலைவில் தெற்கு தலைவைத்த வடிவில் நீள்குழிச்சிதை ஒருக்கப்பட்டு அதில் எரிந்தேறும் அரக்குள்ள விறகுகள் அடுக்கப்பட்டிருந்தன. அதில் மெழுகையும் அரக்கையும் அடுக்கி ஊன்நெய்யூற்றி எரிமூட்டினர்.

தழலெழுந்து கொழுந்தாடி வெறிகொண்டு வெடித்து சிதறி மேலெழத் தொடங்கியதும் கம்பனன் கைகூப்பியபடி சிதையை மும்முறை சுற்றிவந்தான். பின்னர் “எந்தையே, முதலோனே, நாகதேவர்களே!” எனக் கூவியபடி எம்பி தழல்மலரிதழ்களுக்கு நடுவே பாய்ந்தான். அனலின் எட்டு கைகள் எழுந்து அவன் உடலை அள்ளி அணைத்துக்கொண்டன. அவன் செந்நெருப்பாலான ஆடையணிந்து நடனமிடுவதாக படைவீரர்கள் கண்டனர். “எரிபுகுந்தோன் வாழ்க! நிலைபேறுகொண்டோன் வாழ்க!” என அவர்கள் குரலெழுப்பினர். பின்னர் எரி நிலைகொண்டு நீலச்சுடர்பீடம் மீது நின்றாடலாயிற்று.

நாற்பத்தொன்றாம்நாள் குருநகரியிலிருந்து நகுஷன் தன் படைகளுடனும் அமைச்சர்களுடனும் நாகநகரிக்கு வந்தபோது அங்கே நாகர்கள் எவரும் இருக்கவில்லை. அந்நகரை

அப்படியே கைவிட்டுவிட்டு அவர்கள் மேலும் வடகிழக்காக நகர்ந்துசென்று காடுகளுக்குள் ஊர்களை அமைத்துக்கொண்டிருந்தனர். நகுஷன் ஹூண்டனுக்கு உடன்பிறந்தார் செய்யவேண்டிய விண்ணேற்றக் கடன்கள் அனைத்தையும் செய்தான். அங்கே ஹூண்டனுக்கு ஒரு பள்ளிப்படைக் கோயிலையும் அமைத்தான். குருநகரியின் அரசகுடியினர் ஆண்டுதோறும் அங்கே வந்து பலிகொடையும் பூசெய்கையும் நிகழ்த்தி மீள்வார்கள். நாகர்கள் அங்கே வருவதே இல்லை. அவர்கள் சொல்லில் இருந்தும் ஹூண்டன் முழுமையாக மறைந்துபோனான்.

“அதோ, அந்தச் சோலைதான் முன்பு நாகநகரியாக இருந்தது” என்று முண்டன் கைகாட்டினான். பீமன் “பெருங்காடாக மாறிவிட்டதே!” என்றான். “ஆம், கைவிடப்பட்ட ஊர்களை காடு வந்து அள்ளி தன்னுள் எடுத்துக்கொள்ளும் விரைவு அச்சுறுத்துவது. அங்கு பெய்யும் கதிரொளியும் அங்கு மண்ணில் வேரடர்வு இல்லாமலிருப்பதும்தான் அதற்கு ஏது என்பார்கள். ஆனால் அங்கு வாழ்ந்த மானுடரின் எச்சங்களை அள்ளி அருந்தவே வேர்கள் வருகின்றன. அங்கு நின்றிருந்த வானை உண்டு நிறையவே இலைகள் தழைக்க கிளைகள் நீள்கின்றன” என்றான் முண்டன். “ஒவ்வொரு ஊரைச் சூழ்ந்தும் பசியுடன் காடு காத்திருக்கிறது.”

அவர்கள் அணுகியதும் அக்காடு விழிகளிலிருந்து மறைந்து இடிந்தும் சரிந்தும் கிடந்த வெட்டுக்கற்களை கவ்வித்தழுவி மேலெழுந்திருந்த வேர்ப்புடைப்புகள் மட்டும் தெரிந்தன. கழுகு உகிர் என கவ்வி எழுந்தவை. உருகிய மெழுகென பாறைமேல் வழிந்தவை. தசைக்கட்டின்மேல் நரம்புகள் என படர்ந்தவை. வேர்களின் வடிவங்களுக்குள் சென்றுகொண்டிருந்தபோது ஒரு

தருணத்தில் விழிபழக வேர்வடிவாகவே அந்நகரம் தெரியத் தொடங்கியது. இடிந்த கட்டடங்கள், சாலைகள், ஊடுபாதைகள், நடுவே அரண்மனை. அதன் தென்னெல்லையில் ஓங்கிய நான்கு மரங்களால் சூழப்பட்ட ஹூண்டனின் சிற்றாலயம் அமைந்திருந்தது.

மறுமொழி அளித்ததும் அவை ஓசையடங்கி அவனை நோக்கின. ஒரு குரங்கு கிளைகளாலான படிக்கட்டில் தாவியிறங்கி கீழ்ச்சில்லை நுனியில் காய்த்ததுபோல தொங்கி அவனை விழியிமைத்தபடி நோக்கியது. பீமன் அதை நோக்கி கைகாட்ட மண்ணில் குதித்து கைகால்களால் நடந்து வால் வளைந்து எழ அவனை அணுகி அப்பால் நின்றது. அவன் ஏதோ சொன்னதும் அது மறுமொழி அளித்து திரும்பி குரல்கொடுக்க காய்கள் உதிர்வதுபோல குரங்குகள் நிலத்தில் குதித்து வந்து சூழ்ந்துகொண்டன.

இலைகள் சொட்டி ஈரம் வழிந்து பசும்பாசி படர்ந்து குளிர்ந்திருந்த அவ்வாலயத்தை அணுகிச் சென்றார்கள். பீமன் அதனருகே சென்று நின்று சுற்றிலும் நோக்கினான். “குரங்குகளால் பேணப்படுகிறது இவ்வாலயம்” என்றான். முண்டன் திரும்பி நோக்க “இங்கே பெருமரங்களின் விதை முளைத்ததுமே அவை கிள்ளி வீசிவிடுகின்றன” என்றான். ஆலயத்திற்குள் ஹூண்டனின் சிறிய கற்சிலை நாகச்சுருளுக்குள் பாதியுடல் புதைந்திருக்க இடுப்புக்குமேல் எழுந்து வலக்கையில் அம்பும் இடக்கையில் வில்லுமாக நின்றிருந்தது. நாகம் அவன் தலைக்குமேல் ஐந்துதலைப் பத்தியை விரித்திருந்தது.

வலப்பக்கம் ஹூண்டனை நோக்கி வணங்கிய தோற்றத்துடன் கம்பனனின் சிலை இருந்தது. இரு சிறகுகள் விரிந்திருக்க

கால்கள் மடிந்து மண்டியிட்டிருந்தன. “இங்கு நாகர்கள் வருவதே இல்லையா?” என்றான் பீமன். “இல்லை, காட்டில் ஓர் ஆலயம் அமைக்கப்படுவதே அது மறக்கப்பட வேண்டுமென்பதற்காகத்தான்” என்றான் முண்டன். “மறக்கப்படும் ஆலயங்கள் நுண்வடிவில் வாழ்கின்றன. இந்த நகரமே மண்ணில் புதைந்து மறைந்தது. நோக்கினீர் அல்லவா? இதை வேர்கள் உண்கின்றன. தளிர்களாக மலர்வது இந்நகரின் உப்பே. மலர்களாக மகரந்தமாக ஆகிறது. வண்டுகளில் ஏறி பறந்துசெல்கிறது. அங்கே தொலைவில் நாகர்களின் புதிய ஊர்கள் உள்ளன. மாநாகபுரி எனும் தலைநகர் எழுந்துள்ளது. நாகர்குலத்து அரசனாகிய மகாதட்சன் அதை ஆள்கிறான். அவன் நகரின் அத்தனை மலர்களும் இம்மகரந்தங்களால்தான் சூல்கொள்கின்றன.”

பீமன் நீள்மூச்சுடன் அந்த சிறு ஆலயத்தை சுற்றிச்சுற்றி வந்தான். “அழிவின்மை என்பதற்கு என்ன பொருள் என்றே ஐயம் கொள்கிறேன். அழிந்து மறைவதும்கூட அழிவின்மைக்கான பாதையாக அமையக்கூடுமோ?” என்றான். முண்டன் “நகுஷனின் வாழ்க்கை சூதர்நாவில் வாழ்கிறது. அவர் எதிரியென ஹுண்டன் வாழ்க்கையும் இருந்துகொண்டிருக்கும். ஹுண்டன் இருக்கும்வரை கம்பனன் பெயரும் இருக்கும். மொழிப்பெருக்கின் அறியமுடியா மறுஎல்லையில் இப்பெயர்கள் சென்று சேர்வதை இங்கிருந்தே காண்கிறேன்” என்றான். பீமன் மீண்டும் பெருமூச்சுவிட்டான். பின்னர் “என் மூதாதையரின் கதைகள் எனக்கு கற்பிக்கப்பட்டுள்ளன. நகுஷனின் வரலாறும் தெரியும். ஆனால் அவை நீர் சொல்லும் கதைகளைப்போல அல்ல” என்றான்.

“குலக்கதைகளின்படி நகுஷன் பதினெட்டு மனைவியரைப் பெற்றார். அவர்களில் அவருக்கு யதி, யயாதி, சம்யாதி, ஆயாதி, அயதி, துருவன் என்னும் மைந்தர்கள் பிறந்தனர். ஆயிரத்து எட்டு பெருவேள்விகளை நிகழ்த்தி லட்சம் பசுக்களை அந்தணருக்கு அளித்தார். ஆயிரம் அன்னசாலைகளையும் ஆயிரம் பள்ளிச்சாலைகளையும் அமைத்தார். இறுதியாக நூறு அஸ்வமேத வேள்விகளையும் நூறு ராஜசூயவேள்விகளையும் நிகழ்த்தி மண்ணில் இந்திரனின் மாற்றுரு என அறியப்படலானார். அவரை புலவர்கள் தேவராஜன், தேவராட், ஜகத்பதி என்று வாழ்த்தினர். மாநாகன், நாகேந்திரன் என்றும் அவர் பாடல்கொண்டார்” என்றான் முண்டன்.

பீமன் ஐயத்துடன் “இங்கு அருகில் எங்கோ ஒரு மலர்ச்சோலை உள்ளது” என்றான். “நறுமணம் எழுகிறது. அதே மணம்.” முண்டன் புன்னகையுடன் “அசோகமா?” என்றான். “இல்லை, பாரிஜாதம். ஆனால் நீர் கேட்டதுமே அசோகமென மாறிவிட்டது” என்றான். முண்டன் “அருகே உள்ளது அசோகவனம். அங்கே நகுஷன் தன் அரசி அசோகசுந்தரிக்கு எடுத்த ஆலயமொன்றுள்ளது. அங்கு நின்றிருக்கும் மலர்மரம் ஒன்றும் கவிஞர்களால் கல்யாணசௌகந்திகம் என்று அழைக்கப்படுகிறது” என்றான். பீமன் அகவிரைவுடன் முண்டனின் கையைப் பற்றியபடி “அதுதான்... ஆம், நன்கு தோன்றுகிறது. அந்த மரமேதான்... இப்போது நறுமணம் மேலும் தெளிவடைந்துள்ளது” என்றான்.

“செல்வோம்” என்று முண்டன் முன்னால் நடந்தான். “மிக அருகிலேயே உள்ளது அந்தச் சோலை. நாம் முன்புகண்ட அச்சோலையைப்போலவே சுனைசூழ்ந்த மரங்களால் ஆனது. அங்குதான் மீண்டும் செல்கிறோமா என்னும் ஐயம் எழும்.”

பீமன் விரைந்து முன்னால் செல்ல முண்டன் பேசியபடியே தொடர்ந்து வந்தான். “அசோகசுந்தரியின் எரிநிலையிலிருந்து சாம்பல் கொண்டுவந்து நகுஷன் கட்டிய ஆலயம் இது. ஆனால் அவர் நகுஷனாக நின்று இதைச் செய்யவில்லை.” பீமன் நின்று திரும்பி நோக்கினான். “குருநகரியின் தலைவனை, சந்திரகுலத்துப் பேரரசனை ஏன் மாநாகன் என்றும் நாகேந்திரன் என்றும் நூல்கள் சொல்கின்றன என்று எண்ணியிருக்கிறீர்களா?”

பீமன் செவிகூர்ந்து நின்றான். “நகுஷன் தன்னை நாகன் என மறுபிறப்புச் சடங்குவழியாக மாற்றிக்கொண்டார். நாகர்குலத்து அன்னையரின் மாதவிலக்குக் குருதியில் ஏழு சொட்டு எடுத்துக் கலந்த மஞ்சள்சுண்ணக் குருதி நிறைந்த மரத்தொட்டியில் மூழ்கி எழுந்து நாகர்குலத்துப் பூசகர் பன்னிருவர் வாழ்த்த மறுபுறம் வந்தார். நாககர்ப்பம் என்னும் அச்சடங்குக்குப் பின் நாகர்குலத்து மூதன்னையர் எழுவரின் கால்களில் தன் தலையை வைத்து அரிமலர் வாழ்த்து பெற்றார். நாகபடம் பொறித்த கோல் ஏந்தி நாகபடக் கொந்தை சூடி நாகர்குலங்களுக்குரிய கல்பீடத்தில் அமர்ந்து நாகர்குலப் பூசகர் மண்ணிட்டு வாழ்த்த அக்குடிக்கும் அரசராக ஆனார். மாநாகன் என்னும் பெயர் அப்போது வந்ததே.”

“முதலில் நாகர்குலங்கள் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் நாகர்குலத்து மூதன்னையர் பூசகர்களின் உடலில் ஏறிவந்து அவரை தங்கள் மைந்தர் என்றனர். அவர் மறைந்தபின்னர் நாகர்குலங்கள் தங்கள் மூதாதையரில் ஒருவராக அவரையும் வணங்கத் தலைப்பட்டனர்” என்றான் முண்டன். “நகுஷன் தன் உடலின் கீழ்ப்பகுதி ஹூண்டனுடையது என எண்ணினார். குருநகரியின் அரசனாக சந்திரகுலத்து மணிமுடிசூடி அமரும்போதுகூட இடையில்

நாகர்முறைப்படி கச்சையணிந்திருப்பார். அரையாடையும் குறடுகளும் நாகர்களுக்குரியவை.”

முண்டன் தொடர்ந்தான் “நாகர்களுக்குரிய தணியா விழைவை தானும் கொண்டிருந்தார். அவ்விழைவே அவரை பாரதவர்ஷத்தின் அத்தனை நாடுகளையும் வெல்லச் செய்தது. வேள்விகளை ஆற்ற வைத்தது. பலநூறு மகளிரில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட மைந்தரை பிறக்கச்செய்து பெருந்தந்தையாக அமர்த்தியது. மறுசொல் கேட்கவிழையா பெருஞ்சினம் கொண்டிருந்தார். பிறர் எவரும் இல்லாத தனிமையின் உலகில் வாழ்ந்தார். தன்னை காலமெனச் சூழ்ந்திருந்த அனைத்துக்கும் மேல் தலைதூக்கி மலைமுடியென அனைத்தையும் நோக்கி அமைதிகொண்டிருந்தார். ஆகவேதான் அவரை இந்திரனென்றாக்கினர் விண்ணவர்.”

விருத்திரனை வென்ற இந்திரன் அக்கொலையின் பழிக்கு அஞ்சி பிரம்மனிடம் சென்று பழிநிகர் செய்வதெப்படி என வினவினான். “பழிகள் உடலில் படிவதில்லை, உள்ளத்திலேயே நிறைகின்றன. உன் உள்ளத்தை உதிர்த்து பிறிதொன்றென ஆக்கிக்கொள்” என்றார் பிரம்மன். “அதெப்படி?” என்றான் இந்திரன். “இமயத்தின் உச்சியில் உள்ளது மானசசரோவரம். அங்கு செல்க! அந்நீருக்குள் மூழ்கி ஆயிரமாண்டுகாலம் தவம் செய்க! நீ தொட்டதுமே அந்த நீர்ப்பெருக்கு அலைகொந்தளிக்கும். அங்கு அமர்ந்து ஒவ்வொரு அலையாக அடங்க வை. நீ இருப்பதையே அறியாமல் நீர்ப்பரப்பு ஆகும்போது முற்றிலும் உளமழிந்திருப்பாய். பின்னர் உன் உள்ளத்தை மீட்டெடு” என்றார் பிரம்மன்.

இந்திரபுரியிலிருந்து எவருமறியாது மறைந்த இந்திரன் உளப்பெருங்குளத்தில் தன் ஆயிரமாண்டு தவத்தை தொடங்கினான். அவனைத் தேடியலைந்து சலித்த தேவர்கள் என்ன செய்வதென்று அறியாமல் சோர்ந்தனர். விண்ணரசன் இல்லாமையால் அமராவதியின் நெறிகள் அழியலாயின. அரியணை அமர்ந்து கோல் கைக்கொள்ள அரசன் தேவை என்று உணர்ந்த தேவர்கள் அகத்தியரிடம் சென்று ஆவதென்ன என்று வினவினர். “கனி உதிர்ந்ததென்றால் காய் கனியவேண்டும். இந்திரனென்பவன் மண்ணில் விளைந்து விண்ணில் எழுபவன். மண்ணை நோக்குக” என்றார் அகத்தியர்.

தேவர்கள் மண்ணில் அலைந்தபோது குருநகரியின் நகுஷன் நூறு அஸ்வமேதங்களையும் நூறு ராஜசூயங்களையும் முடித்து சாம்ராட் என பட்டம்சூடி அரியணையமர்ந்த செய்தியை அறிந்தனர். அங்கே அவன் நூறு பெருங்கொடைகளை நிகழ்த்திக்கொண்டிருந்தான். அதை அவன் நிகழ்த்திமுடித்தானென்றால் அவன் இந்திரநிலைக்கு உரியவனாவான் என்று உணர்ந்தனர். விண்ணுலகுக்கு மீண்டு அகத்தியரிடம் “மாமுனிவரே, குருநகரியின் அரசன் மட்டுமே இந்திரநிலைக்கு அணுக்கமானவன். ஆனால் அவன் பாதியுடல் நாகன். அதனால்தான் இரு திசைகளில் விசைகொண்டு வந்து ஒன்றாகிய பெருநதி அவன்” என்றனர்.

“தேவர்களே, மண்ணில் எந்த நாகனும் பேரரசன் ஆகமுடியவில்லை. ஷத்ரியன் என்பதனால் அந்தத் தடை கடந்த மாநாகன் நகுஷன். எந்த ஷத்ரியனும் தேவனாக முடியவில்லை. நாகனென்று உளம் விரிந்து அவன் நம்மை நோக்கி எழுகிறான். ஒன்றை பிறிதொன்றால் நிரப்பி அவன் விண்பாதையில் அணுகிக்கொண்டிருக்கிறான். அதுவே இங்கு

வரும் வழி போலும். அவனையே அரசனென்றாக்குக!” என்றார் அகத்தியர். அவரை வணங்கி மீண்டனர் தேவர்.

கொடைமுழுமை அடைந்து நகுஷன் தன் அரியணையில் அமர்ந்தபோது விண்ணிலிருந்து மலர்மழை பெய்யத் தொடங்கியது. பொன்னிற விண்வில் ஒன்று இறங்கி நகுஷனின் அரண்மனையை தொட்டது. அவன் உடல் ஒளிபட்ட மணி என சுடர்விட்டது. காலெடுத்து வைத்தபோது அவனால் ஒளியை படியாக்கி ஏறமுடிந்தது. தன் தந்தை ஆயுஸ் அளித்த உடைவாளை அவன் இடையிலணிந்திருந்தான். புரூரவஸின் மணிமுடியை தலையில் சூடியிருந்தான். குடிகள் வாழ்த்திக் கூவ, மங்கல இசை முழங்க அவன் காற்றிலேறி ஒளிகொண்டிருந்த முகில்களுக்குள் மறைந்தான்.

விண்நகர் புகுந்த நகுஷன் அமராவதியை அடைந்தபோது தேவர்களும் கந்தர்வர்களும் கிம்புருடர்களும் கின்னரர்களும் திரளாக நின்று வாழ்த்தொலி எழுப்பி வரவேற்று அழைத்துச்சென்றனர். அமராவதியின் நடுவே எழுந்த இந்திரனின் மாளிகையாகிய வைஜயந்தத்தில் அமைந்த சுதர்மை என்னும் அவையின் மையமெனச்
சுடர்ந்த அரியணையில் அவனை அமரச்செய்தனர். இந்திரன் சூடியிருந்த செந்தழல் முடியை அவன் தலையில் அணிவித்தனர். மின்னற்கொடியாலான செங்கோலை கையில் அளித்தனர். கல்பகமரமும் காமதேனுவும் ஐராவதமும் வியோமயானமும் உச்சைசிரவமும் அவனுக்கு உரியனவாயின. அமுதத்தை உணவெனக்கொண்டு ரம்பை, ஊர்வசி, திலோத்தமை போன்ற தேவமகளிரின் கலைகளில் களித்து அவன் அங்கே வாழ்ந்தான். அஸ்வினிதேவரும் தன்வந்திரியும் அவனுக்கு பணிவிடை செய்தனர். அகத்தியர்

உள்ளிட்ட முனிவர் வாழ்த்தளித்தனர். கிழக்குத்திசை அவன் கோலால் ஆளப்பட்டது.

விண்மகளிர் அனைவருடனும் காமத்திலாடினான் நகுஷன். அவன் நெஞ்சு சலிப்புற்றாலும் இடை மேலும்மேலுமென எழுந்தது. “நீங்கள் ஒரு நாகம்...” என்று அவனுடன் இருந்த மகளிர் சினந்தும் சலித்தும் சிரித்தும் சொன்னார்கள். “ஆம், நான் என்னைத் தொடர்பவர்களை, நான் ஊரும் மண்ணை, பறக்கும் விண்ணை வீசிச்சொடுக்கும் சவுக்கு. அவ்விசையால் முன்னகர்கிறேன்” என்றான். “நிகரின்மை என்பதல்லாமல் எதனாலும் அமையமாட்டேன் என்று அறிக... இனி எஞ்சுவதென்ன என்று மட்டுமே என்னிடம் சொல்க!” என்றான். அவன் தன்முனைப்பும் தன்னைக்கடந்த வேட்கையும் தேவர்களை முதலில் அச்சுறுத்தின. பின்னர் அவர்கள் கசப்புகொண்டனர். தாளமுடியாமலானபோது தங்களைத் தாங்களே நொந்துகொண்டு துயர்சூடினர்.

ஒருநாள் நகுஷேந்திரனின் அவைக்கு வந்த நாரதரிடம் அவன் “சொல்க, எஞ்சியுள்ளது என்ன எனக்கு?” என்றான். “மண்ணில் ஏதுமில்லை” என்றார் நாரதர். “விண்ணில்?” என்றான் நகுஷன். “விண்ணிலும் பெரும்பாலும் ஏதுமில்லை” என்றார். “அவ்வண்ணமென்றால் ஒன்று எஞ்சியிருக்கிறது அல்லவா? சொல்க, அது என்ன?” என்றான். நாரதர் “இந்திரன் இந்திராணியுடன் அல்லவா அவையமரவேண்டும்?” என்றார். நகுஷன் அதைக் கேட்டதுமே திகைத்து எழுந்து “ஆம், அவ்வாறுதான் தொல்கதைகள் சொல்கின்றன. எங்கே என் அரசி?” என்றான். “அழைத்து வருக அவளை என் அவைக்கு!” என ஆணையிட்டான்.

அவையில் இருந்த தேவர்கள் பதற்றத்துடன் “அரசே, அது முறையல்ல. இந்திராணி வடபுலத்தில் தன் தவக்குடிலில் தனித்து நோன்பிருக்கிறாள். கணவன் திரும்பிவருவதற்காக தெய்வங்களை வழிபடுகிறாள்” என்றார்கள். “அவள் என் தேவியாகவேண்டும். அதுவே முறை... அவளை அழைத்து வருக!” என்றான் நகுஷன். “அரசே, இந்திரன் இன்னும் அழியவில்லை. எங்கோ அவர் இருக்கையில் துணைவி அவருக்காக ஆற்றியிருந்தாகவேண்டும்” என்றார் சனத்குமாரர். “இந்திரனின் அரியணையில் அமர்ந்தவனே இந்திரன். இந்திரனுக்கு துணைவியாக அமர்பவளே இந்திராணி. அவளுக்கு முந்தைய கணம் என ஒன்று இருக்கலாகாது” என்று நகுஷன் சொன்னான்.

“ஆம், ஆனால் அவள் உள்ளத்தில் அவள் கணவன் இன்னும் அழியவில்லை. அது இந்திரன் எங்கோ இந்திரனாகவே உள்ளான் என்பதையே காட்டுகிறது. அவன் அவளுக்குள் இருக்கும்வரை அவள் உங்கள் துணைவியாக ஆக முடியாது” என்றார் சனகர். “அவ்வண்ணமென்றால் அவள் அவனை மீட்டுக்கொண்டுவர விழைகிறாள். என் இந்திரநிலையை அழிக்கவே தவமிருக்கிறாள். அதை நான் எப்படி ஒப்பமுடியும்?” என்று நகுஷன் சொன்னான். “அழைத்து வருக அவளை... அவள் மறுத்தால் இழுத்து வருக!” என தன் ஏவல்பணி செய்த கந்தர்வர்களிடம் ஆணையிட்டான்.

தன்வந்திரி பெருஞ்சினத்துடன் “விரும்பாத பெண்ணை இழுத்துவரச் சொல்லி ஆணையிடுவது அரசனின் முறைமையா?” என்று கூவ நாரதர் “பெருவிழைவே இந்திரன் என்னும் நிலை. இதை அறியமாட்டீரா?” என்றார். அவரை சிலகணங்கள் உற்றுநோக்கியபின் முனிவர் மெல்ல தணிந்து

“ஆம், அதன் வழியை அதுவே தேர்க!” என தலைகுனிந்து தனக்குள் என சொல்லிக்கொண்டார்.

# மாமலர் - 44

### 44. வில்லுறு விசை

நகுஷேந்திரனின் ஆணைப்படி கந்தர்வனாகிய வஜ்ராக்ஷன் தன் துணைவர் எழுவருடன் சென்று இந்திராணி தவம் செய்துகொண்டிருந்த மகிழமரச் சோலையை அடைந்தான். தன் சொல்லால் அதற்கு அனல்வேலியிட்டிருந்தாள் இந்திராணி. அவர்களின் காலடியோசையிலேயே சாய்கதிர் பட்ட முகிலென சிவந்து எரியலாயிற்று அது. எல்லைக்கு வெளியே நின்று பெருங்குரலெடுத்து அவளை அழைத்தான். இந்திரனின் நலம்திகழும்பொருட்டு ஒவ்வொரு நாளும் ஐந்து வேளை பிரம்மனுக்கு பூசெய்கை ஆற்றிவந்த இந்திராணி சோலைக்குள் மலர் கொய்துகொண்டிருந்தாள். பலமுறை எழுந்த அக்குரலைக் கேட்டு அவள் அங்கிருந்து எழுந்து வந்தாள். பிற ஆடவரை ஏறிட்டும் நோக்கக்கூடாதென்று நெறி இருந்தமையால் புறம் திரும்பி நின்று அவர்களிடம் “எதன்பொருட்டு வந்தீர்கள்? இங்கு பிற ஆடவர் குரலெழுவதும் பிழையே” என்றாள்.

வஜ்ராக்ஷன் “பெண்ணே, கேள். மண்ணில் விளைந்து விண்ணில் இந்திரனாக அமர்ந்திருக்கும் நகுஷேந்திரனின் ஆணை இது. இந்திரன் என முடிசூடியமர்ந்த அவருக்கு இந்திராணி உரிமைப்பட்டவள். உன்னை அழைத்து வரும்படி பணிக்கப்பட்டிருக்கிறோம்” என்றான். அவள் எழுந்த சினத்தை அடக்கி “அவ்வரியணையில் அவர் இன்னும் முழுமையாக அமரவில்லை. இங்கு நீங்களே சொன்னீர்கள் அவர்

நகுஷேந்திரன் என்று. மண்ணில் அவர் கொண்ட அடையாளங்களையும் நினைவுகளையும் முற்றிலும் துறக்காதவரை அவர் எப்படி இந்திரனாக முடியும்?” என்றாள். “நான் இந்திராணியென்றாகவில்லை என்பதே அவர் இந்திரனாகவில்லை என்பதைத்தான் காட்டுகிறது.”

வஜ்ராக்ஷன் “நான் இதை அறியவேண்டியதில்லை. உன்னை இழுத்துச்செல்லும்படி ஆணை. நான் வெறுமனே மீண்டால் மேலும் பெரிய படை எழும். மேலும் பெரிய சிறுமை நிகழும்” என்றான். “அவனிடம் சென்று சொல்லுங்கள், இங்கு இந்திரன் என அமர்ந்திருப்பது அங்கு குருநகரியில் அரசனென வீற்றிருந்து நிலம்புரக்கும் அவன் அகத்தில் நிகழும் கனவுமட்டுமே என்று” என்றாள் இந்திராணி. “நான் இங்கு அவனை கணவனெனக் கொண்டால் அங்கே வாழும் மானுடனுக்கும் கனவுத்துணைவியென்றாவேன். கனவுகள் அனைத்தும் கலைபவையே என அவனுக்கு புரியவையுங்கள்” என்று சொல்லி உள்ளே சென்றாள்.

வஜ்ராக்ஷன் திரும்பி வந்து நகுஷேந்திரனிடம் இந்திராணியின் சொற்களை சொன்னான். சினம்கொண்டு தன் அரியணையிலிருந்து எழுந்த நகுஷன் “என்ன? என்னிடம் சொல்விளையாடுகிறாளா அவள்? ராஜசூயங்களும் அஸ்வமேதங்களும் இயற்றி கொடை முழுத்து ஒளிகொண்டு விண்ணேறி நான் வந்த இடம் இது. இங்கு காலமில்லை. எனவே முடிவிலிவரை நானே இந்திரன். இது கனவென்று சொல்ல என்ன அடிப்படை அவளுக்கு? இது கனவென்றால் இக்கனவைக் கலைத்து என்னை மீண்டும் குருநகரிக்கே செல்லவைக்கட்டும் அவள்” என்றான். திரும்பி அமைச்சர்களை

நோக்கி “மேலும் படைகள் எழுக... அவள் இன்றே என் அவைக்கு வந்தாகவேண்டும்” என்று கூச்சலிட்டான்.

“அரசே, தன் சோலையை அனலால் வேலிகட்டியிருக்கிறாள். அதை கடந்து செல்ல தேவர்களால் ஆகாது” என்றான் வஜ்ராக்ஷன். “எனில் நானே வருகிறேன். நான் கடக்கமுடியாத இடமொன்று இந்திர உலகில் இருக்கிறதா என்று பார்க்கிறேன்” என்று மின்படையை எடுத்துக்கொண்டு நகுஷேந்திரன் கிளம்பினான். கைநீட்டி அவனைத் தடுத்த அஸ்வினிதேவர்கள் “அரசே, இந்திர உலகில் இவ்வண்ணம் நெறிமுறை மீறும் வழக்கமில்லை” என்றனர். “அரச நெறிமுறைகளை அரசனே வகுக்கிறான். இவ்வுச்சிவரை நான் ஏறிவந்தது ஒருபோதும் கூர்மடங்கா என் விழைவினால் என்றுணர்க! அது மேலும் விசைகொள்ளுமே ஒழிய ஒருபோதும் தங்கி அமையப்போவதில்லை” என்று சொன்னபின் அவர்களை விலக்கி அவன் நடந்தான்.

இந்திராணியின் சோலையை அவன் அடைந்ததும் பின்னால் ஓடிவந்த வஜ்ராக்ஷன் “அதோ, அதுவே அனல் வேலி” என்றான். “எங்கு வேலி? நான் எந்த வேலியையும் காணவில்லை” என்றபடி நகுஷன் மதம்கொண்ட யானையென நடந்தான். கந்தர்வர்கள் வேலிக்கு மறுபுறமே திகைத்து நின்றுவிட அவன் தடை எதையும் அறியாது நடந்துசென்று சோலைக்குள் புகுந்தான். அவன் வருவதைக் கண்டு மலர் தொடுத்துக்கொண்டிருந்த இந்திராணி திகைத்தாள். அலறியபடி எழுந்தோடி தன் குடிலுக்குள் சென்று ஒளிந்துகொண்டாள்.

குடில் வாயிலில் வந்து நின்று நகுஷன் உரக்க குரலெழுப்பினான். “பெண்ணே, உன் தடைகளேதும் என்னை விலக்காதென்று இன்று அறிந்திருப்பாய்... நான் இந்திரன் என்று

அமர்ந்திருப்பதனால் நீ எனக்கு சொந்தமானவள். நெறிகளின்படி இந்திரன் மாறினாலும் இந்திராணி மாறுவதில்லை. சென்ற இந்திரனை நினைத்துக்கொண்டிருப்பது நீ எனக்குச் செய்யும் வஞ்சம். அதனாலேயே நீ கற்பிழந்தவளானாய்" என்றான். நடுங்கியபடி குடிலுக்குள் பதுங்கியிருந்த இந்திராணி அங்கிருந்தே கைகூப்பி அழும் குரலில் "அரசே, விண்ணுலகில் தாங்கள் செல்லமுடியாத இடமொன்றில்லை. உங்களை மீறி ஒரு நெறியும் இங்கு புலர்வதில்லை. அது இங்கு அறம் வாழ வைப்பதன்பொருட்டு உங்களுக்கு தெய்வங்கள் அளித்துள்ள நற்கொடை. அதை அறம்மீறிச் செல்ல பயன்படுத்த வேண்டாம்" என்றாள்.

"இந்திரனுக்கு அறிவுரை சொல்ல வேண்டுமென்றால் நீ வந்து அரண்மனையில் இந்திராணியாக அமர வேண்டும்" என்று நகைத்தபடி சொன்னான் நகுஷன். "வெளியே வா, நான் உன்னை கூந்தல்பற்றி இழுத்துச்செல்வதை இந்நகர் காணவேண்டியதில்லை." அவள் குளிர்ந்து சொல்லிழந்தவளானாள். "வா, இப்போதே!" என அவன் உரக்க கூவினான். அவள் குரல்பெற்றபோது எண்ணத்தால் நெடுந்தொலைவு சென்றிருந்தாள். "அரசே, இச்சோலையில் மலர்களை பார்த்தீர்களல்லவா?" என்றாள். "இது தேவருலகு. இங்கே மலர்கள் வாடுவதில்லை. ஆனால் இங்கு நாளும் மலர்கள் மலர்கின்றன, அந்தியில் வாடி உதிர்கின்றன. அவை என் எதிர்பார்ப்புகள்."

"இது ஒன்றே சான்று, நான் நீங்கள் ஆளும் தேவருலகில் இல்லை என்பதற்கு" என அவள் தொடர்ந்தாள். "கூந்தல்பற்றி நீங்கள் இழுத்துச்செல்லலாம், அவள் இந்திராணியல்ல. வெறும்பெண். அரசே, எண்ணிநோக்குக! நான் என் கொழுநனின்

நினைவுடன் உங்களருகே வந்து அமர்வேன் என்றால் அது உங்கள் மணிமுடிக்கு சிறப்பாகுமா?” நகுஷன் அச்சொற்களால் உளப்பெருக்கு அடங்கி திரும்பி அச்சோலையில் கிளைதாளாமல் எடைகொண்டு மலர்ந்திருந்த வெண்ணிற மகிழமலர்க் கொத்துகளை கண்டான். கீழே அவை உதிர்ந்து வெண்ணிறக் கம்பளம் போன்றிருந்தது நிலம்.

அவன் உளம்கொண்ட இடைவெளியில் புகுந்து “நான் ஏன் இக்காதலுடன் இருக்கிறேன் என எண்ணுக! ஏன் என் உள்ளத்தில் அவர் நினைவு அழியவில்லை?” என அவள் கேட்டாள். “ஏனென்றால் இன்னமும் எங்கோ இந்திரன் என்னை நினைத்துக்கொண்டிருக்கிறார். அவர் முற்றழியவில்லை. அவர் எங்கோ அவ்விழைவுடன் எஞ்சுவதுவரை இங்கு நானும் இப்படியே இருப்பேன். அவரை கண்டுபிடியுங்கள். அவர் உள்ளத்தில் இருந்து என்னை அழித்து மீளுங்கள். நான் நேற்று அழிந்து இன்று என்று இங்கிருப்பேன். என்னை நீங்கள் மலர்கொய்வதுபோல கொய்யலாம். மார்பில் அணியலாம்” என்றாள். “ஆம், அவன் எங்கோ எஞ்சுகிறான் என்றால் என் முடியும் கோலும் நிலைகொள்ளவில்லை என்றே பொருள். அவனை மிச்சமின்றி வெல்கிறேன். அவன் நெஞ்சழித்து மீள்கிறேன்” என நகுஷன் வஞ்சினம் உரைத்து மீண்டான்.

அரண்மனைக்கு திரும்பும்போதே மேலும் கீழுமென அமைந்த பதினான்கு உலகங்களிலும் இந்திரனைத் தேடி கண்டடைந்து வரும்படி நகுஷன் கந்தர்வர்களையும் கின்னரர்களையும் கிம்புருடர்களையும் தேவர்களையும் யக்ஷர்களையும் பணித்தான். அவர்கள் சிறகு சூடிய சிறுபூச்சிகளாகவும் இளங்காற்றுகளாகவும் வண்ண ஒளிக்கீற்றுகளாகவும் நறுமண அலைகளாகவும் இசைத்துளிகளாகவும் உருக்கொண்டு

நூறுமுறை அவ்வுலகங்களை சுற்றி வந்தனர். எங்கும் இந்திரனை கண்டடைய முடியவில்லை. அவர்கள் ஒவ்வொருவராக மீண்டும் அமராவதியில் வந்து சோர்ந்து அமர்ந்தனர். செய்தியை கொணர்ந்த வஜ்ராக்ஷனை நோக்கி பெருஞ்சினத்துடன் கூவியபடி வாளுடன் பாய்ந்தான் நகுஷன். “இல்லை, தேவர்களாலும் கண்டறியமுடியாத இடமென ஒன்றில்லை” என்று கூவினான்.

“நீங்கள் என்னை ஏளனம் செய்கிறீர்கள். மானுடனென ஒருவன் முதிர்ந்து இந்திரனாவதை உங்களால் தாள இயலவில்லை” என்று கூச்சலிட்டான். அவையில் அமர்ந்திருந்த தன்வந்திரி முனிவர் புன்னகைத்து “இதற்கு முன் இங்கு வந்த எந்த இந்திரனும் மானுடராக இருந்த நினைவை கொண்டுவரவில்லை. ஒவ்வொரு சொல்லிலும் அது எழுவதொன்றே நீங்கள் யாரென காட்டுகிறது” என்றார். கைகளை முறுக்கி பற்களைக் கடித்து “முனிவரே ஆயினும் இருளுக்குள் உங்களைச் செலுத்தும் ஆற்றல் எனக்குண்டு. நினைவுகொள்க, அமராவதியின் அரசன் நான்” என்றான் நகுஷன். “அதையும் நாளுக்கு நான்காயிரம் முறை நீங்கள் உங்களுக்கே சொல்லிக்கொள்ள வேண்டியிருக்கிறது” என்றார் தன்வந்திரி.

நகுஷன் தன் மின்படையை கையில் எடுக்க அவனை சனகரும் சனத்குமாரரும் சேர்ந்து பற்றி தடுத்தனர். “அரசே, சினம் அடக்குக! அவர் சொல்வதென்ன என்று செவிகொள்க!” என்றார் சனகர். வெறுப்பு நிறைந்த விழிகளுடன் தன்வந்திரி “எந்தக் கனவுக்குள்ளும் அது கனவே எனும் தன்னுணர்வு ஒரு துளி இருக்கும். கனவுகள் விந்தையெனத் தோன்றுவது அத்தன்னுணர்வால்தான்” என்றார். “யார் சொன்னது

கனவென்று? சொல்லும், எப்படி சொல்கிறீர்கள் இது கனவென்று?” என்று சீறியபடி அவரை அணுகினான் நகுஷன். “சென்று பார்! அங்கே குருநகரியில் உன் முந்தைய வடிவம் அரசு வீற்றிருக்கிறது. அது அங்கில்லையென்றால் நீ இங்கு இருக்கிறாய் என்று கொள்!” என்றார் தன்வந்திரி.

சற்றுநேரம் அவரை நோக்கி நின்றபின் மெல்ல தளர்ந்து அவன் திரும்பினான். ஏளனத்துடன் “சென்று பார்க்க வேண்டியதுதானே…?” என்றார் தன்வந்திரி. “இதுவல்ல, அதுவே என் கனவு” என்றான் நகுஷன். “அதை விட்டு இங்கு வந்தபோது என் மைந்தரை நான் முற்றுதறவில்லை. ஆகவே அது என்னுள் கனவென தங்கிவிட்டது.” மீண்டும் அரியணையில் அமர்ந்து “நான் சென்று அதை பார்க்கலாம். இங்கிருக்கும் நான் உருவாக்கும் மாயையாகவே அது இருக்கும். அது மெய்யல்ல” என்றபின் வெறியுடன் நகைத்து “இது நீங்கள் எனக்கு ஒருக்கும் பொறி. இதில் விழமாட்டேன்” என்றான். தன்வந்திரி உரக்க நகைத்தபின் எழுந்து அவை நீங்கினார்.

கொந்தளிப்புடன் தன் அரண்மனையின் உப்பரிகைகளில் உலாவிக்கொண்டும் சித்தமழிய மது அருந்திக்கொண்டும் சீற்றம் தணியும்படி மகளிருடன் காமமாடிக்கொண்டும் இருந்த நகுஷேந்திரனை அணுகிய வஜ்ராக்ஷன் உலகுலாவியாகிய நாரதர் வந்திருப்பதை அறிவித்தான். உடை திருத்தி முகம் செம்மையாக்கி அவன் அவைக்குச் சென்று அங்கே முனிவர்களுடன் தன் பயணக்கதைகளை சொல்லி நகையாடிக்கொண்டிருந்த இசைமுனிவரை கண்டு பணிந்து வணங்கினான். அவன் முகத்திலிருந்த துயரை நோக்கி மாறாப் புன்னகையுடன் அவர் “எதன்பொருட்டு இந்த

நிலைகொள்ளாமை?” என்றார். “இந்திரன் என்றாலே நிலைகொண்டவன் என்றல்லவா பொருள்?”

தன் விழைவையும் இந்திராணியின் சொல்லையும் உரைத்து இந்திரனை கண்டுபிடிக்க முடியவில்லை என்பதை நகுஷன் சொன்னான். நாரதர் நகைத்து “ஈரேழு உலகங்களிலும் இருக்கும் அத்தனை வடிவையும் தானெடுக்கும் வல்லமை கொண்டவன் இந்திரன். தன் உள்ளம் உருவாக்கும் அனைத்து வடிவையும் புறத்தே அமைத்துக்கொள்ளும் ஆற்றல் அவனுக்குண்டு. உன் ஒற்றர்கள் எவ்வடிவில் அவனை தேடினார்கள்?” என்றார். அப்போதுதான் தன் பிழையை உணர்ந்த நகுஷன் சோர்ந்து தன் பீடத்தில் அமர்ந்து “ஆம். ஒரு மணற்பருவாக, ஒரு கடல்துமியாகக்கூட அவனால் ஒளிந்துகொள்ள முடியும்” என்றான். “மட்டுமல்ல, மேல்கீழ் உலகுகளில் இதுவரை எழுந்த எவ்விழியும் அறியாத புதுத்தோற்றம் கொள்ளவும் முடியும்” என்றார் நாரதர்.

“உங்களையே பணிகிறேன், உலகறிந்தவரே. நான் செய்யவேண்டியதென்ன?” என்றான் நகுஷன். “அரசே, தேடும் விழிகளிலிருந்து நாம் ஒளிந்து கொள்ளலாம். அஞ்சும் விழிகளிலிருந்து தப்புவது மிகக்கடினம். அன்பு கொண்ட விழிகளிலிருந்து தப்புவது எவராலும் இயலாது” என்றார் நாரதர். “என்ன சொல்கிறீர்கள்?” என்று குழப்பத்துடன் நகுஷன் கேட்டான். அவர் சொல்லவருவது என்னவென்பதை அவன் உள்ளம் மெல்ல புரிந்துகொள்ளத் தொடங்கிவிட்டிருந்தது. “தன் சோலையில் மலர்ந்துள்ள அத்தனை மலர்களையும் விழிகளென ஆக்கி கணவனுக்காக காத்திருக்கிறாள் இந்திராணி. அங்கு வாடி உதிரும் மலர்களை அள்ளிவரச் செய். உன் ஏவலர் கையில் ஒரு வாடிய மலருடன் தேடி

அலையட்டும். எங்கு அம்மலர் மீண்டும் புதிதென மலர்ந்து ஒளிகொள்கிறதோ அங்கிருக்கிறான் இந்திரன் என்று பொருள்” என்றார் நாரதர்.

உளவிசை தாளாது தொடையில் தட்டி கூச்சலிட்டபடி எழுந்த நகுஷன் “ஆம், இது ஒன்றே வழி! நன்று, முனிவரே! என் தலை தங்கள் முன் பணிகிறது. நன்று சொன்னீர்கள் எனக்கு!” என்றான். “அமைச்சர்களே, தேவர்களே” என்று கூவியபடி வெளியே ஓடி அனைவரையும் அழைத்தான். “இந்திராணியின் சோலையில் விழுந்து கிடக்கும் அத்தனை வாடிய மலர்களையும் கொண்டு வரும்படி மாருதர்களுக்கு நான் ஆணையிடுகிறேன். அம்மலர்களில் ஒன்றை எடுத்தபடி பதினான்குலகங்களிலும் செல்லுங்கள். இந்திரனை அந்த மலர்கள் அறியும்” என்று குரல் வீசினான். உளத்துள்ளல் தாளாமல் சுற்றிவந்தபடி “மலர்களிலிருந்து யார் தப்ப முடியும்? ஆம், மலர்களை எவர் ஒழிய முடியும்?” என்றான். நாரதர் “ஆம் அரசே, இருந்த இடத்திலிருந்தே பயணம் செய்பவை மலர்கள்” என்றார்.

நூற்றியெட்டு மாருதர்கள் நகுஷனின் ஆணைப்படி இந்திராணியின் மகிழமரச் சோலைக்குள் புகுந்தனர். அங்கு உதிர்ந்து ஒளியழிந்து சருகென்றாகியும் பாதி மட்கியும் கிடந்த மலர்கள் அனைத்தையும் திரட்டி கொண்டுவந்து அளித்தனர். தேவரும் யக்ஷரும் கந்தர்வரும் கின்னரரும் கிம்புருடரும் கையில் ஒரு மலருடன் பத்து திசைகளையும் நோக்கி கிளம்பினர். அவர்களில் சூசிமுகன் என்னும் கந்தர்வன் மானசசரோவரை அடைந்ததுமே அவன் கையில் வண்ணமும் வடிவமும் இழந்து உலர்ந்து நத்தை எனச் சுருங்கியிருந்த மகிழமலர் பனிவிழும் புதுக்காலையிலென இதழ் விரித்து

வண்ணமும் ஒளியும் கொண்டது. அதன் நறுமணத்தை உணர்ந்து நாற்புறமும் நோக்கிய பின்னரே தன் கையில் அது மலர்ந்திருப்பதை அவன் அறிந்தான். இளமைந்தனின் முதற்பல்லென அவன் கையில் அது வெண்ணிற ஒளிகொண்டிருந்தது. மானசசரோவரில் அவன் மேலும் தங்கவில்லை. எம்பி ஒளிவடிவு கொண்டு வானிலெழுந்து மின்னென வெட்டி அகன்றான். அவன் அமராவதிக்குத் திரும்புகையில் அணுகும்போதே அந்த மணத்தை உணர்ந்து "என்ன மணம் அது? இதுவரை அறிந்திராத மணம்" என்றபடி நகுஷன் வெளியே வந்தான்.

தூசிமுகன் அவனை வணங்கி அந்த மலரைக் காட்டி "அரசே, மானசசரோவரை அணுகும்போது இது மலர்ந்தது" என்றான். "ஒளிகொண்டு முகம் திருப்பி நீர்ப்பரப்பைக் காட்டியது." நகுஷன் பாய்ந்து "கொடு அந்த மலரை!" என்று வாங்கி திரும்பி ஓடி தன் வியோமயானத்திலேறி மின்படைக்கலத்தை ஏந்தியபடி மானசசரோவரை நோக்கி சென்றான். அந்த மலரே அவனை வழிகாட்டி இட்டுச்சென்றது. மாருதர்கள் தேரென்றாகி அந்த மணத்தை தங்கள் மேல் ஏற்றிச்சென்றனர். "மகிழம் துயரிலாக் காத்திருப்பின் மலர், அரசே. இந்திராணி துயரிலியென அங்கிருந்தாள்" என்றான் ஒரு மாருதன். "மருதம் புணர்வின் மணம். குறிஞ்சி கண்டடைதலுக்கு. முல்லை கிளர்வுக்கு. நெய்தல் துயருக்கு. பாலை பெருவேட்கைக்கு. மணங்களால் ஆனது மானுட உள்ளம். மணங்கள் ஆள்கின்றன உறவுகளை."

உளப்பெருங்குளத்தில் பிழைநிகர் தவம் புரிந்துகொண்டிருந்த இந்திரன் ஆயிரமாண்டு முற்றடக்கம் பயின்று உளம் கரைந்து இன்மையென்றானான். அலையடங்கி இறுகத்துக்கட்டிய நீலப்

பட்டுப்பரப்பென ஒளி கொண்டிருந்தது அந்நீர்நிலை. அதில் மாலை வானில் முதல் விண்மீன் எழுந்ததுபோல வெண்ணிறத் தாமரை மொட்டொன்று முகிழ்த்து வந்தது. அதன் முதல் இதழ் ஓம் எனும் ஒலியுடன் விரிந்தது. நான் எனும் ஒலியுடன் இரண்டாமிதழ் மலர்ந்தது. அது என மூன்றாமிதழ். இவை என நான்காவது இதழ். எல்லாம் என ஐந்தாவது இதழ். பொருள் என ஆறாவது இதழ். சொல் என ஏழாவது இதழ். நடனம் என எட்டாவது இதழ். நிலை என ஒன்பதாவது இதழ். ஒளியென்றும் இருளென்றும், இன்மையென்றும் இருப்பென்றும், எனதென்றும் பிறிதென்றும் கணந்தோறும் தன்னைப்பெருக்கி பல்லாயிரம் இதழ்கொண்ட வெண்தாமரையாக விரிந்தது இந்திரனின் அகம்.

அதன் நடுவே பொன்னிறப் புல்லிவட்டத்தில் ஒரு கருவண்டென எழுந்து அமர்ந்து அவன் தன்னை உணர்ந்தான். முடிவிலா மலர்தலின் மயக்கில் காலமிலியில் அமைந்திருந்தான். அப்போது விண்ணில் இருந்து ஓர் ஒளிக்கீற்றென சரிந்து வந்த வியோமயானம் அவனருகே அணுகி யாழொலியுடன் சுற்றிப்பறந்தது. அதில் மின்படைக்கலக் கருவியை கையிலேந்தி விரிந்த மகிழ மலரொன்றை மறுகையிலேந்தி அமர்ந்திருந்தான் நகுஷேந்திரன். “நான் உன்னை வெல்ல வந்தேன். இம்மின்படைக்கு எதிர் நில். அன்றேல் என் சொல்லுக்குப் பணி” என்று அவன் அறைகூவினான். புன்னகையுடன் கண்மலர்ந்து “யார் நீ? நான் உனக்கு எவ்வண்ணம் எதிரியானேன்? எதன்பொருட்டு உனை நான் பணிய வேண்டும்?” என்று இந்திரன் கேட்டான்.

நகுஷன் “நீ அமராவதியின் அரசனாக முன்பிருந்த இந்திரன். அதை வென்று அரியணை அமர்ந்த நகுஷேந்திரன் நான். அங்கு

என் வெற்றி முழுமையுறவில்லை. அதை நிறைவுறச் செய்யவே இங்கு வந்தேன்” என்றான். இந்திரன் முகம் மலர்ந்து “ஆம், நீ சொன்னபின் உணர்கிறேன். விண்ணுலகை ஆண்ட இந்திரன் நான். பிழைநிகர் செய்யும்பொருட்டு என் உள்ளம் துறந்து பிறிதொன்றை சூடிக்கொண்டிருக்கிறேன். நீ என்னை எதன்பொருட்டு வெல்ல விரும்புகிறாய்?” என்றான். “உன் உள்ளத்தில் இந்திராணி வாழ்கிறாள். அமராவதியை அடைந்தவன் என்பதனால் அவள் எனக்குரியவள்” என்றான் நகுஷன்.

மேலும் அகம்விரிந்து புன்னகைத்த இந்திரன் “ஆம், இம்மாபெரும் மலருக்குள் நிறைந்திருக்கும் நறுமணம் எதைக் குறிக்கிறதென்று வியந்துகொண்டிருந்தேன். அது இந்திராணிமேல் நான் கொண்ட காதல். நறுமணத்தை மலர் இழக்க ஒப்புமா என்ன?” என்றான். அச்சொல்லால் சினம்கொண்டு “எழு என்னிடம் போருக்கு!” என்று நகுஷேந்திரன் அறைகூவினான். இந்திரன் சிரித்து “போர் நிகழட்டும். ஆனால் வெற்றி என்று எதை கொள்வாய்? பொருளென்று என் கையிலிருக்கும் எதையோ ஒன்றை அடைவதே உன் வெற்றி என்றால் அது நன்று. மூடா, நீ வந்திருப்பது மலரிலிருந்து நறுமணத்தை மட்டும் அள்ளிச் செல்வதற்காக” என்றான்.

சொல்முட்டிய நகுஷன் மேலும் சினம்கொண்டு “நான் உன்னை போருக்கு அறைகூவுகிறேன். என் காலடியில் பணிக!” என்றான். “பணியலாம். துளியென்றும் தூசியென்றும் நான் ஆகலாம். அவள்மேல் நான் கொண்ட காதல் அழியுமா என்ன?” என்றான் இந்திரன். நகுஷன் தளர்ந்து “எவ்வண்ணம் நான் அதை வெல்வேன்? நீயே கூறு!” என்றான். “சந்திரகுலத்து அரசனே,

என்பொருட்டு அவள் தன் சோலையில் விரிய வைத்த அப்பல்லாயிரம் மலர்களின் நறுமணமே இங்கு இந்த மலரில் நிறைந்துள்ளது. நீ வெல்ல வேண்டியது என்னை அல்ல, அவளை. என்மேல் அவள் கொண்ட காதல் அழியுமென்றால், அச்சோலையின் மலர்களனைத்தும் மணமிழந்து உதிருமென்றால் பின் என்னிடமிருந்து நீ வென்றடைவதற்கு ஒன்றுமில்லை" என்றான். "ஆம், வென்று வருகிறேன். ஒருபோதும் அமையமாட்டேன்" என்றபின் நகுஷன் திரும்பி அமராவதிக்கு சென்றான்.

தவித்தும் குழம்பியும் தளர்ந்து அமராவதியை அடைந்த நகுஷேந்திரன் தன் அரண்மனைக்குள் நுழைந்ததும் பற்றி எரியலானான். சினமும் தவிப்பும் வெறுப்பும் விழைவும் ஒன்றையொன்று உந்த அலைகொந்தளிக்கும் உள்ளத்துடன் தன் அரண்மனையின் ஆயிரம் உப்பரிகைகளில் சுற்றி வந்தான். தன் அமைச்சர்களை அழைத்து "சொல்லுங்கள், இந்திராணியின் உள்ளத்தை நான் வெல்லும் வழியென்ன?" என்றான். "அரசே, பெண்கள் பெரும்பரிசுகளை விரும்புவார்கள். அதைவிட பாராட்டை விரும்புவார்கள். அதற்கும் மேலாக பெருமதிப்பை விழைவார்கள். இவை அனைத்தையுமே இந்திரனென இங்கு அமர்ந்திருக்கும் உங்களால் அளிக்கமுடியும். இதற்கும் அப்பால் அவர் விழைவதென்ன என்று அறியேன்" என்றார் முதன்மை அமைச்சர்.

"அதை இந்திராணியிடமே கோரலாம்" என்றார் ஒருவர். "அவராலும் அதை சொல்லமுடியாது. தன் விழைவை தெளிந்துசொல்லும் பெண் என எவருமில்லை" என்றார் பிறிதொருவர். "அரசே, அதற்கும் நீங்கள் நாரதரையே நாடலாம்" என்றார் இன்னொரு அமைச்சர். "ஆம், அவரே எனக்கு

வழிகாட்டுவார்” என்று கூறிய நகுஷன் ஐராவதம் மீதேறி ஏழாம் வானில் ஒரு முகில்மேல் அமர்ந்து விண்மீன்கள் உதிர்வதை நோக்கி மகிழ்ந்திருந்த நாரதரை சென்று கண்டான். “சொல்லுங்கள் இசைமுனிவரே, நான் இந்திராணியின் உள்ளத்தை எப்படி வெல்வேன்?” என்றான். “அவள் சோலையின் மலர்கள் என் காலடிகேட்டு மலரவேண்டும். அதற்கு வழி என்ன?”

“அவள் இந்திராணி. இந்திரனோ பெருவிழைவும் அதை ஊர்தியெனக்கொண்ட ஆணவமும் கொண்டவன். இந்திரன் இதுவரை இயற்றாத ஆணவச் செயலொன்றை செய்க! அவள் அதை காணட்டும். நீயே இந்திரன் என அவள் காதல்கொள்வாள்” என்றார் நாரதர். நகுஷன் எண்ணி நின்றபின் “அவள் அறியாத ஆணவம் எது?” என்றான். “அதை உன் அமைச்சரிடம் வினவியறிக!” என்றார் நாரதர். நகுஷன் அவைதிரும்பி அமைச்சர்களை அழைத்து “சொல்க, இந்திரன் செல்ல அஞ்சுமிடம் எது? செய்யத் தயங்கும் செயல் எது?” என்றான். “அரசே, முதல்தெய்வங்கள் மூவரை எதிர்ப்பதில்லை அவர். முனிவர் சொல்மீறுவதில்லை” என்றார் அமைச்சர்முதல்வர்.

தொடைதட்டி எழுந்த நகுஷன் “அழையுங்கள் எட்டு முனிவர்களை! என் பல்லக்கை அவர்கள் சுமக்கட்டும். நான் இந்திராணியை பார்க்கச் செல்கிறேன்” என்றான். திகைத்த அமைச்சர்கள் “என்ன சொல்கிறீர்கள்? அவர்களின் சொல் உங்களை பொசுக்கிவிடும்” என்றார்கள். “அதை பார்ப்போம். எங்கும் துணிந்தேறித்தான் இங்கு வந்துசேர்ந்தேன். இங்கிருந்தும் அவ்வாறே முன்செல்வேன்” என்றான் நகுஷன். “அழையுங்கள் முனிவர்களை… என் பல்லக்கை அவர்கள்

சுமக்கவேண்டுமென நான் ஆணையிட்டேன் என அறிவியுங்கள்!”

சனகரும், சனாதனரும், சனத்குமாரரும், தன்வந்திரியும், சியவனரும், கௌதமரும், வசிட்டரும், உத்தாலகரும் மறுசொல்லின்றி வந்து அவன் பல்லக்கை சுமந்தனர். அதில் ஏறியமர்ந்து “செல்க மகிழமரச் சோலைக்கு!” என அவன் ஆணையிட்டான். தன் வலக்கையில் மின்படையை சவுக்காக ஆக்கி ஏந்தியிருந்தான். இடக்கையில் கல்பமரத்தின் மலரும் ஏந்தியிருந்தான். அவர்கள் நடக்கும் விரைவு போதாதென்று அவன் உள்ளம் தாவியது. “விரைக! விரைக!” என கூவினான். “நாகமென விரைக…!” என்று அவர்களை சவுக்கால் அடித்தான். எதிரே குறுமுனிவர் தன் ஏழு மாணவர்களுடன் வரக்கண்டதும் அவன் களிவெறி மிகுந்தது. “அவரிடம் சொல்லுங்கள், என் பாதைக்கு முன் வரவறிவித்து செல்லும்படி” என சூசிமுகனிடமும் வஜ்ராக்ஷனிடமும் ஆணையிட்டான்.

நிலமொழியில் “ஸர்ப்ப! ஸர்ப்ப!” என அவர்களை விரைவூட்டிக்கொண்டு அவன் செல்வதைக்கண்டு அகத்தியர் திகைத்து நின்றார். அவன் அருகே வந்து “என்ன நோக்கி நிற்கிறீர்? என் ஆணையை கேட்கவில்லையா நீர்?” என்றான். சீற்றத்துடன் கைதூக்கிய அகத்தியர் “உன் நாவிலிருந்து ஒலித்தவன் நாகன். அறிவிலியே, நீ மாநாகமென ஆகுக! மண்ணில் இழைக! ஆயிரம் ஆண்டுகளுக்குப்பின் உன் குடிப்பிறந்தவனால் உன் ஆணவம் அழியும். அன்று மீண்டெழுந்து விண்ணவனாக வருக!” என தீச்சொல்லிட்டார். அக்கணமே பல்லக்கிலிருந்து புரண்டு வானையும் காற்றையும் கிழித்தபடி இறங்கி பேரோசையுடன் மண்ணில் வந்து விழுந்தான் நகுஷன். வரும்போதே அவன் உடல் நீண்டு

வளைந்து ஏழு சுருள்கள் கொண்ட நாகமாக மாறியது. மண்ணில் விழுந்து தலை எழுந்து நா சீற அவன் நெளிந்தபோது தன் கீழுடல் கல்லென்றாகியிருப்பதை கண்டான். உடல் நெளித்து அந்த எடையை இழுத்தபடி சென்று அருகே இருந்த சிறிய குகைக்குள் புகுந்து இருளுக்குள் ஒளிந்து சுருண்டுகொண்டான்.

# மாமலர் - 45

**45. குளிர்ச்சுழி**

மலைச்சரிவில் முண்டன் முயல்போல, பச்சைப் பந்துபோல பரவியிருந்த புதர்களினூடாக வளைந்து நெளிந்து பின்னால் தொடர்ந்து வர, பெரிய கால்களை தூக்கிவைத்து புதர்களை மிதித்து சழைத்து பாறைகளை நிலைபெயர்ந்து உருண்டு அகலச்செய்து பறப்பதுபோல் கைகளை வீசி முன்னால் சென்ற பீமன் நின்று இடையில் கைவைத்து இளங்காற்றில் எழுந்து வந்த மலர் மணத்தை முகர்ந்து ஒரு கணம் எண்ணங்களை இழந்தான். பின்னர் திரும்பி இரு கைகளையும் தலைக்கு மேல் கூப்பி விரித்து “அதே மணம்! ஐயமே இல்லை, அதே மணம்தான். இங்குள்ளது அந்த மலர். இதோ, மிக அருகே!” என்று கூவினான்.

புன்னகையுடன் அவனருகே வந்து மூச்சிரைக்க நின்ற முண்டன் “மரக்கிளைகளினூடாக தாவிச்செல்வது எளிது. அங்கு கைகளால் நடக்கலாம்” என்றான். “மண்ணில் நடப்பதைவிட வானில் நடப்பது எளிது... மண்ணில் நடக்கையிலும் கைகளால் வானிலும் துழாவிக்கொள்கிறோம்.” பீமன் அவன் தலையைத் தொட்டு உலுக்கி “மிக அருகே! அந்த

மணம், ஐயமே இல்லை, அதே மணம்தான்” என்றான். “அதோ தெரிகிறது சோலை!” என்று முண்டன் சுட்டிக்காட்டியதுமே பீமன் பாய்ந்து ஓடத்தொடங்கினான்.

மலைச்சரிவின் விளிம்பிலேறி வந்து நின்ற முண்டன் சற்று சரிந்து இறங்கிப்போன நிலத்தில் இரு கைகளையும் விரித்தபடி ஓடி அகன்ற பீமனை தொலைவிலிருந்து நோக்கினான். அச்சோலைக்குள் இருந்த சுனை இளவெயிலில் ஒளி கொண்டிருந்தது. பச்சைப் பட்டால் மூடிவைத்த சுடரகல்போல. பீமன் அம்மரங்களினூடே மறையக் கண்டபின் முண்டன் சிறிய தாவல்களாக தானும் ஓடி அதை அணுகினான். சோலைக்குள் மரங்களினூடே பீமன் புதுமழை மணம் பெற்ற கரடிபோல இரு கைகளையும் விரித்து துள்ளிச் சுழன்று ஓடுவது தெரிந்தது. நறுமணம் மானுடரை பித்தாக்கிவிடுகிறது. காட்சிகளோ ஒலிகளோ சுவைகளோகூட அதை செய்வதில்லை. மணங்கள் புலன்களை எண்ணங்களிலிருந்து விடுவித்து கட்டிலாது கிளரச் செய்துவிடுகின்றன.

ஒரு மரத்தருகே சென்று நின்று திரும்பி நோக்கி “இதுவா...?” என்றான் பீமன். “நானறியேன், கண்டுபிடிக்கவேண்டியவர் நீங்கள்” என்றான் முண்டன். “இதே இடம்! இங்கு முன்பு நான் வந்திருக்கிறேன்” என்றான். பிறகு மூச்சிரைக்க “கனவில் கண்ட இடம். முன்பு கண்ட அதே சோலை” என்றான். மரங்களின் வேர்ப்புடைப்புகளில் ஏறி தாவியிறங்கி “ஆம், எவ்வண்ணமோ இதுவும் முந்தைய சோலை போலவே அமைந்துள்ளது. அங்கிருந்து பறவைகள் விதைகளுடன் இங்கு வந்திருக்கலாம்” என்றான் முண்டன்.

பீமன் திரும்பி ஓடி பிறிதொரு மரத்தடியில் சென்று நின்றான். “இதே மணம்தான்” என்றான். “பிறகென்ன? அதிலிருந்து

மலரொன்றை பறித்துக்கொள்ளுங்கள். அதுதான் கல்யாண சௌகந்திகம்" என்றான் முண்டன். பீமன் குதித்து அம்மரத்தின் சிறிய கிளையொன்றை பற்றினான். அது எடை தாங்காது சற்று சாய்ந்து மலர்களை கொட்டியது. பீமன் ஒரு மலரை எடுத்து முகர்ந்தபோது அவன்மேல் ஒரு வெண்ணிறக் கடலலை பெருகிவந்து சூழ்ந்து அறைந்து முழுக்காட்டியதை காணமுடிந்தது. பட்டு இழுபடுவதுபோல அந்த அலை விலகி மறைய கரிய ஈரத்துடன் பாறை எழுவதுபோல் அவன் குளிர்ந்து நின்றான். பின்னர் "இதுவல்ல..." என்றான். முண்டன் புன்னகைக்க "ஆனால் பெரும்பாலும் இது" என்றான். முண்டன் "நான் எண்ணினேன்" என்றான்.

அருகணைந்த பீமன் சோர்வுடன் "இதே மணம்தான். அகலே நின்றிருக்கையில் எந்த வேறுபாட்டையும் நான் காணவில்லை. கையிலெடுத்து முகரும்போது உள்ளிருந்து பிறிதொரு புலன் சொல்கிறது இதுவல்ல என்று" என்றான். பின்பு அந்த மலரை உதிர்த்துவிட்டு அருகே வந்து "இது நாமறிந்துகொள்ள முடியாத ஏதோ உள விளையாட்டு. என் சித்தம் பிறழ்ந்திருக்கக்கூடும்" என்றான். "திரும்பிவிடலாமென எண்ணுகிறேன், முண்டரே. பொருளற்ற ஒரு ஆழ்துழாவல் மட்டும்தான் இது. இதைத் தொடர்ந்துசென்று நான் அடையக்கூடுவதென ஏதுமில்லை".

முண்டன் "பாண்டவரே, ஒரு செடியில் எழும் முள்ளில் முதலில் உருவாவது எது?" என்றான். "என்ன?" என்று பீமன் புரியாமல் திரும்பி கேட்டான். பின்னர் அவ்வினாவின் உட்பொருளை உணர்ந்தவனாக "அதன் மிகக்கூரிய முனை. முள்முனையின் இறுதிப்புள்ளி" என்றான். "அப்புள்ளியின் கூர்மையை வலுப்பெறச் செய்வதற்காகவே மேலும் மேலுமென தன் உடலை அது திரட்டிக் கூம்பி நீண்டெழுகிறது."

சிரித்தபடி “நன்று” என்றான் முண்டன். “ஐவரில் தத்துவம் அறியாதவர் நீங்கள் ஒருவரே என்கிறார்கள் சூதர்கள், நன்று.” பீமன் சிரித்து “தத்துவம் அறியேன். ஆனால் முட்களை அறிவேன்” என்றான்.

“தாங்கள் சொன்னதில் மேலுமொரு நீட்சி உள்ளது, பாண்டவரே. அம்முள்முனையின் முடிவிற்கு அப்பாலிருக்கும் வெறுமையைத்தான் அந்த முள் முதலில் அறிந்தது. அதை நிரப்பும் பொருட்டே முனையின் முதல் அணுவை உருவாக்கிக் கொண்டது” என்றான் முண்டன். “அவ்வெறுமைக்கும் அம்முதலணுவுக்குமான உரையாடல் ஒன்று ஒவ்வொரு முள்ளிலும் நிகழ்ந்து கொண்டிருந்தது.
முள்முனைகள் குத்துவதும் கிழிப்பதும் வருடுவதும் அதைத்தான்.” அவன் சொல்வதன் பொருளென்ன என்று விளங்காவிட்டாலும் எவ்விதமோ அதன் உட்பொருளை நோக்கி சென்றுவிட்ட பீமன் புன்னகையுடன் அருகே வந்தான்.

முண்டன் “அந்தச் சிற்றாலயத்தை தாங்கள் இன்னும் பார்க்கவில்லை” என்றான். பீமன் அப்போதுதான் தாழ்ந்த மரக்கிளைகள் இலைக்கொத்துகளால் பொத்தி வைத்திருந்த கரிய சிற்றாலயத்தை பார்த்தான். “அதே வடிவில், அதே அளவில்” என்றபடி அதை நோக்கி சென்றான். ஆலயத்தின் சிறிய வாயில் கதவில்லாது திறந்திருந்தது. அதன் முன் சென்று இடையில் கைவைத்தபடி நின்று உள்ளே பார்த்தான். பின்னர் திரும்பி அணுகி வந்த முண்டனிடம் “அதே சிலையா?” என்றான். “ஏறத்தாழ...” என்றபடி முண்டன் அருகே வந்தான். “இவள் அசோகசுந்தரி” என்றான். “கையில் அசோகம் ஏந்தியிருக்கிறாள். மின்கதிருக்கு மாறாக அமுதகலம்.” குனிந்து நோக்கியபடி “ஆம்” என்றான் பீமன். “ஆனால் அதே முகம்”

என்றபின் “ஒளியின் மாறுபாட்டினாலா என தெரியவில்லை. இது ஊர்வசியின் முகத்தில் இல்லாத பிறிதொரு புன்னகை கொண்டுள்ளது” என்றவன் கைகளைக் கட்டி கூர்ந்து நோக்கியபடியே நின்றான். திரும்பி புன்னகைத்து “ஒருவேளை நீர் சொன்ன கதையால் உருவான உளமயக்காக இருக்கலாம். இது இளம்கன்னியின் அறியா புன்னகை. ஊர்வசியின் முகத்தில் இருந்தது துலாவின் மறுதட்டையும் அறிந்தபின் எழும் நகைப்பு” என்றான்.

“ஆம். நமது உள்ளம் கொள்ளும் சித்திரம்தான் அது” என்றபடி முண்டன் அப்படியில் அமர்ந்தான். அவன் முன் அடிமரம்போல் பருத்த உடலுடன் எழுந்து நின்ற பீமன் “இங்கும் நானறிவதற்கு ஏதேனும் உள்ளதா?” என்றான். “வினாக்கள்தான். உறவுகளைப்பற்றி விடைகளை எவர் கூறக்கூடும்?” என்றான் முண்டன். “காலத்தில் பின்னகர்ந்து செல்ல வேண்டுமா என்ன? செல்கிறேன்” என்றான் பீமன்.

“இம்முறை காலத்தில் முன்னகர்ந்து செல்லலாம்” என்று முண்டன் சொன்னான். “இமயமலை அடிவாரத்தில் யமுனை நதிக்கரையில் குகையொன்றில் உங்கள் மூதாதை நகுஷன் ஒரு பெரும்பாம்பென இருளில் உறைகிறார். அக்குகைக்குள் வழிதவறி தங்க வரும் உயிர்களை மட்டுமே பற்றி இறுக்கி உணவாகக் கொள்கிறார். ஆகவே தீராப் பசி கொண்டிருக்கிறார். தன் பசியை முழுதடக்கும் பேருடல் விலங்கொன்றை உண்ணும்போது அவருக்கு மீட்பு என்று சொல்லிடப்பட்டுள்ளது” என்றபின் நகைத்து “தீயூழ் என்னவென்றால் யானைகள் அச்சரிவில் ஏறமுடியாது. குகைகளுக்குள் நுழையும் வழக்கமும் யானைகளுக்கில்லை” என்றான்.

பீமன் முண்டனின் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தான். “அமர்க!” என்று அவன் சொன்னதும் அசோகசுந்தரியை நிலம்பணிந்து வணங்கிவிட்டு சிறுவனைப்போல் உடலொடுக்கி படிகளில் அமர்ந்தான். முண்டன் தன் கையை அவன் முகத்தருகே காட்டினான். “காலம் நாமணியும் ஆடையைப் போன்றது. ஆடை நம்மீது படிகிறது. ஆடைக்கு நாம் வடிவளிக்கிறோம். நம்முள் எங்கோ ஆடையே நம் வடிவென்றாகிறது. நோக்குக, ஆடைகள் அனைத்தும் மானுட வடிவொன்றை கரந்துள்ளன. அணியப்படாத ஆடைகளில்கூட அணியவிருக்கும் மானுடர் உறைகிறார்கள். ஆடைகளை மாற்றிக்கொள்கையில் நம் உடல் பிறிதொன்றாகிறது. உடல் பிறிதொன்றாகையில் உளம் பிறிதொன்றாகிறது. ஏனெனில் உளமணியும் ஆடையே உடல். பாண்டவரே, உளம் எது அணிந்த ஆடை?”

அவன் குரல் தேனீபோல ரீங்கரித்து அவன் தலையைச்சுற்றி பறந்தது. “இது பிறிதொரு காலம். அடர்காடு. யமுனை கரியநீர் பெருகிச்செல்லும் சரிவு. நீர் நோக்கி புடைத்தெழுந்த வேர்த்திரள்களாலான எழுகரை. நீர் உண்டு உரம்பெற்ற பேருடல் மரங்கள் கிளைதிமிறி இலைகொப்பளிக்க அணிவகுத்திருக்கும் கான்தடம்” என்றான். முதலில் சொற்களாக பின்னர் காட்சிகளாக பின்னர் வானும் மண்ணுமாக காலமாக அவன் சொற்கள் உருமாறிக்கொண்டே சென்றன.

தொலைவிலேயே ஆறு இருப்பதை பீமன் உணர்ந்துவிட்டான். அவன் உள்ளமும் சித்தமும் அதை அறிவதற்குமுன் உடல் உணர்ந்துவிட்டது. அவனுக்குப் பின்னால் நால்வரும் திரௌபதியும் நடைதளர்ந்து நாவறண்டு ஒருவர் கையை ஒருவர் பற்றியபடி விரைவழிந்து நடந்துவந்து

இறுதி ஆற்றலும் அகல மூச்சிரைத்தபடி நின்று பாறைச்சரிவின் நிழலில் பூழிமண்ணின் எடையுடன் விழுந்து அமர்ந்தனர். திரௌபதி சரிந்து கண்மூடி படுத்துவிட்டாள். பீமன் பாறைமேல் நின்றபடி "நீர்" என்றான். தருமன் தலைதிருப்பி "மொண்டு வருக, இளையோனே! எங்களால் நடக்கமுடியாது" என்றார்.

அந்த மலைச்சரிவெங்கும் நீருற்றுகளே இருக்கவில்லை. கௌதமரின் தவச்சாலையிலிருந்து களிந்தமலைச் சாரலில் உள்ள கண்வரின் தவக்குடிலுக்குச் செல்வதென தருமன் முடிவெடுத்தபோது அவரது மாணவர்களில் ஒருவர் "இவ்வழி செல்வது மிக அரிது. எவரும் அணுகலாகாதென்பதனாலேயே அங்கு சென்று குடிலமைத்திருக்கிறார் கண்வர். வடகிழக்கு நோக்கிச்சென்று மலைமேல் ஏறி மீண்டும் கீழிறங்கி அங்கு செல்வதே இயல்வது. பன்னிரு நாட்கள் நடைபயணம் தேவையாகும்" என்றான். ஒரு கணம் எண்ணியபின் தருமன் "இல்லை, அவ்வளவு நாட்கள் இங்கிருக்க இயலாது. துவைதக் காட்டுக்கே நாங்கள் திரும்பிச்செல்ல வேண்டியிருக்கிறது. வரும் முழுநிலவு நாளில் அங்கு நிகழும் வேதச் சொல்லாய்வு அமர்வில் நானும் பங்குகொள்ளவிருக்கிறேன்" என்றார்.

அர்ஜுனன் "நாம் இவ்வழியே செல்லலாம். இதுவரை நாம் அறியாத கடுமைகொண்ட பாதையாக இருக்க வாய்ப்பில்லை" என்றான். அனைவரும் திரும்பி பீமனைப் பார்க்க "செல்வோம்" என்று அவன் சுருக்கமாக சொன்னான். அன்று காலை அவர்கள் கிளம்பும்போதே "கையில் நீரெடுத்துக்கொள்ளுங்கள்" என்றார் கௌதமர். "நீள்வழி, ஆனால் எங்கும் ஓடைகள் இல்லை. அனைத்து ஊற்றுகளும் வழிதல்களும் ஆற்றுக்கு மேற்கேதான் உள்ளன. ஆறோ அறுபதடி ஆழத்தில் உருளைப்பாறைக் குவியல்களுக்கு அடியில் பெருகிச் சென்றுகொண்டிருக்கிறது."

தருமன் “இங்கு இப்படியொரு வறண்ட நிலம் எப்படி உருவானது?” என்றார். கௌதமர் சிரித்து “மண்ணியல்பை அப்படி வகுக்கமுடியுமா என்ன?” என்றார். அர்ஜுனன் “மண்ணுக்கு அடியில் விரிசலே அற்ற ஒற்றைப்பெரும்பாறைப்பரப்பு இருக்கக்கூடும்” என்றான். நகுலன் மூட்டையை இறுக்கிக் கட்டியபடி “இரக்கமே அற்ற மண்” என்றான். தருமன் அதன் பொருள் அறியாமுள் என தொட்டுச்செல்ல திரும்பி நோக்கிவிட்டு “ஆம், அது அன்னை என்பதனாலேயே அவ்வாறும் இருந்தாகவேண்டியிருக்கிறது” என்றார்.

இரு பெரும்தோற்பைகளில் நீர் நிரப்பி பீமன் தன் இரு தோள்களிலும் மாட்டிக்கொண்டான். உண்பதற்கு உலர்அப்பமும் காய்ந்தபழங்களும் நிரப்பிய தோல்பையை முதுகிலிட்டான். கச்சையை இறுக்கியபடி அவன் எழுந்து நடக்க அவர்கள் வணக்கங்களுக்குப்பின் தொடர்ந்தனர். உருளைக்கரும்பாறைகள் விண்ணிலிருந்து மழையாகப் பொழிந்தவைபோல சிதறிப் பரந்திருந்த நிலவெளியினூடாக நடக்கத் தொடங்கினர். விரைவிலேயே வானில் முழு வெம்மையுடன் கதிரவன் எழுந்தான். “பெருங்கோடைக்காலம் இது” என்றார் தருமன். “நிமித்திக நூலின்படி பன்னிரண்டாண்டுச் சுழற்சி இக்கோடையை கொண்டுவந்துள்ளது. மழையிலாது இலைகளை உதிர்த்து மரங்கள் தவமிருக்கின்றன.”

“பறவைகள் அனைத்தும் நீர் தேடிச் சென்றுவிட்டன போலும்” என்றான் நகுலன். தருமன் குனிந்து செடிகளைப் பார்த்து “அத்தனை செடிகளும் தங்கள் உயிரை விதைகளில் பொறித்து மண்ணில் விட்டுவிட்டு மடிந்துவிட்டன. பல்லாயிரம் விதைகள். அவற்றில் ஒன்று எஞ்சினால்கூட அவற்றின் குலம்

வாழும்” என்றபின் திரும்பி “வேதத்தில் ஒரு சொல் எஞ்சினால் போதும், முழு வேதத்தையும் மீட்டுவிடலாம் என்றொரு நூற்குறிப்புள்ளது, இளையோனே” என்றார். சகதேவன் புன்னகைத்து “முடிவின்மையை ஒவ்வொரு துளியிலும் பொறிக்கும் விந்தையையே இயற்கையில் பிரம்மம் விளையாடிக் கொண்டிருக்கிறது” என்றான்.

ஏன் அவர்கள் அனைத்தையும் சொல்லென ஆக்கிக் கொள்கிறார்கள் என பீமன் எண்ணினான். சொல்லென்றல்ல, அறிந்தவையென ஆக்கிக் கொள்கிறார்கள். உண்மையில் எங்கும் அதையல்லவா செய்கிறோம். அறியாத மானுடன் ஒருவனைக் கண்டால் குலமும் குடியும் ஊரும் பெயரும் கேட்டு உரையாடி அவனை அறிந்தவனென்றாக்கிக் கொள்கிறோம். இந்த நிலத்திற்கு ஒரு பெயரிடவேண்டும். இத்தனை பாறைகளுக்கும் எண்ணிடவேண்டும். இவற்றின் நேற்றும் முன்னாளும் தெரிந்திருக்கவேண்டும். அதன்பின் இந்நிலம் நிலமல்ல, வெறும் அறிவு.

உடலுக்குள்ளிருந்து நீர் வெம்மைகொண்டு குமிழிகளாகிக் கொதித்து தளதளத்து ஆவியாகி தோலை வேகவைத்தது. அனைத்து வியர்வைத் துளைகளினூடாகவும் கசிந்து வழிந்து ஆவியாகியது. உலர்ந்த வாய்க்குள் வெந்நீரில் விழுந்த புழுவென நாக்கு தவித்தது. புருவங்களிலும் காதோர மயிர்களிலும் உப்பு படிய திரௌபதி “சற்று நீர் கொடுங்கள், முகங்கழுவிக்கொள்ள” என்றாள். தருமன் ஏதோ சொல்ல எண்ணி திரும்பி நோக்கியபின் சொல்லாமல் அமைந்தார். கிளம்பியபோது முதலில் வயிறு நிறையும்படி நீரருந்தி முகம் கழுவி எஞ்சியதை தலையிலும் விட்டுக்கொண்டார்கள். ஏழு இடங்களில் அமர்ந்து உச்சிப்பொழுதைக் கடந்தபோது

தோற்பைகளில் நீர் மிகக் குறைவாகவே இருந்தது. அப்போது பிறிதொருவர் நீர் அருந்துவதைக் கண்டால் உடல் பதறியது.

“அச்சமூட்டுவது இது. நம்மிடம் இருக்கும் நீரின் அளவு தெரியும், செல்ல வேண்டிய தொலைவு தெரியாது” என்றார் தருமன். அர்ஜுனன் வில்லுடன் தலை குனிந்து நடந்து அப்பால் சென்று பாறையொன்றின்மேல் அணிலெனத் தாவி ஏறி நாற்புறமும் நோக்கி “நெடுந்தொலைவெங்கிலும் நீர் இருப்பதாகத் தெரியவில்லை. அனைத்து மரங்களும் பசுமை வாடியே தென்படுகின்றன. சிறுசுனையோ ஊற்றோ இருந்தால்கூட தழைத்த மரங்கள் சில தென்படும்” என்றான். பீமன் “பார்ப்போம்” என்றபடி முன்னால் நடந்தான்.

நிழல் நீண்டு கிழக்கே சரியத் தொடங்கியது. தோல்பையில் நீர் முழுமையாகவே ஒழிந்தது. இறுதியாக எஞ்சிய அரைக்குவளை நீரை மூங்கில் குழாயில் நிரப்பி திரௌபதியிடம் கொடுத்த பீமன் “இது உனக்கு, தேவி” என்றான். அவள் அதை வாங்கி தருமனிடம் அளித்து “தாங்கள் வைத்திருங்கள்” என்றாள். “நீர் உனக்கு என்பதுதான் நெறி” என்றார் தருமன். “அதை தாங்கள் அளிக்க வேண்டும்” என்று அவள் சொன்னாள். இறுதியாக எஞ்சிய நீரையும் மரத்தடியில் அமர்ந்து ஓய்வெடுக்கையில் அருந்தி முடித்தபோது ஐவரும் அச்சம் கொண்டிருந்தனர். “இவ்வழியை நாம் தேர்ந்திருக்கலாகாது” என்று தருமன் சொன்னார்.

“ஒவ்வொருமுறையும் நாம் அறிந்தவற்றை வைத்து இவ்வுலகை மதிப்பிடுகிறோம். ஒவ்வொருமுறையும் எதிர்காலம் என்பது முற்றிலும் அறியாததாகவே இருக்கிறது. கல்வியைக் கொண்டு வாழ்வை எதிர்கொள்ள முடியாதென்று இளவயதில் முதுசூதன் ஒருவன் என்னிடம் சொன்னான்.

ஏனெனில் இதுவரை வாழ்ந்த வாழ்வே நூலென மொழியென அமைந்துள்ளது. எழும் வாழ்வின் நெறிகளோ இயல்புகளோ ஏதும் அவற்றிலிருக்க வாய்ப்பில்லை.” அவர் பேசுவது அச்சூழலில் எவ்வகையிலும் பொருந்தவில்லை. ஆனால் பேசாமலிருக்கும்போது எழுந்து சூழ்ந்த அமைதியில் அக்குரல் ஒரு வழிகாட்டி அழைப்புபோல ஆறுதல் அளித்தது.

சகதேவன் “ஒவ்வொரு புல்லும் தன் தலைமுறைகள் வாழ்ந்த அறிதலை சிறுவிதைமணியாக்கி தன் தலையில் சூடியிருக்கிறது. தான் மடியும்போது எஞ்சவிட்டுச் செல்கிறது” என்றான். அவனை திரும்பி நோக்கிய தருமன் சில கணங்களுக்குப்பின் “ஆம், நம்மில் நாளை எஞ்சுமெனில் அது அறிவென்றோ உணர்வென்றோ இருக்காது. உடலில் பழக்கமென, உள்ளத்தில் கனவென, உயிரில் நுண்மையென மறைந்திருக்கும். அதை அறிய இயலாது, நம்பலாம்” என்றார். சகதேவன் சிரித்து “எப்போதும் அறிய இயலாதவற்றை அல்லவா நம்புகிறோம்?” என்றான்.

பீமன் முன்னால் நடந்து அங்கிருந்த பெரும்பாறையொன்றின்மேல் உடும்புபோல தொற்றி ஏறி அதன் உச்சியில் பாறைப்பிளவில் வேர் செலுத்தி எழுந்து கிளை விரித்திருந்த அரசமரமொன்றின் அடிமரத்தைப்பற்றி மேலேறி உச்சிக் கிளையில் நின்று சூழ நோக்கினான். பின்பு இறங்கி வந்து பாறைமேல் நின்று நகுலனிடம் “இளையோனே, அங்கு நீருள்ளது. நான் சென்று மொண்டு வருகிறேன்” என்றான்.

பீமன் பாறையிலிருந்து பாறைக்குத் தாவி மலைச்சரிவில் விரைந்தான். இலை உதிர்த்து வேரில் உயிர் மட்டும் எஞ்ச நின்ற மரங்களுக்கு அப்பால் வானிலெழுந்து சுழன்றமைந்த பறவைகள் அங்கிருக்கும் பசுஞ்சோலையொன்றில் வாழ்பவை

என்று தெரிந்தது. அணுகுந்தோறும் பறவை ஒலிகள் தெளிவு கொண்டன. அவை பேசும் மொழி அனைத்தும் தனக்கு நீர் நீர் என்றே பொருள் கொள்வதை அவன் விந்தை என உணர்ந்தான். மொழி என்பது கொள்ளப்படும் பொருள் மட்டுமே என்று எங்கோ கேட்ட சூதர்சொல் நினைவுக்கு வந்தது. மேலும் அணுகியபோது பசும்கோட்டையென எழுந்த சோலை மரங்களை கண்டான். அதற்கப்பால் ஒரு ஆறு ஓடுவதை உணர்ந்தான்.

மரங்களின் பேருருவம் தெளிவடைந்து வந்தது. மலைப்பாறைகளை கவ்விப் பிரித்து உடைத்து பற்றியிருந்தன வேர்கள். சுண்ணப்பாறை கரைந்துருகி வழிந்ததுபோல அடிமரங்கள் கிளை விரித்தன. எழுந்து கிளைவிரித்து பசுந்தழைக் கூரையைத் தாங்கிய அவற்றுக்குமேல் பல்லாயிரம் பறவைகளின் பேரோசை இடையறா முழக்கமென எழுந்து கொண்டிருந்தது. பின்பு அவன் ஆற்றிலிருந்து எழுந்த நீராவியை மெல்லிய வெப்பமாற்றம் என முகத்தில் உணர்ந்தான். பின் வியர்வைக்குளிரென. மேலும் அணுகியபோது நீர்த்தண்மையென. மூச்சை நிறைக்கும் அழுத்தமென, மெல்லிய நடுக்கமென.

அச்சோலைக்குள் நுழைந்து அதன் குளிர்ந்த இருளுக்குள் அமிழ்ந்தான். சீவிடுகளின் ரீங்காரம் பகலிலும் இரவென எழுந்து அனைத்து ஒலிகளையும் ஒன்றென இணைத்திருந்தது. காற்று கடந்து செல்ல கிளைகள் முனகியபடி உரசிக்கொண்டன. காற்றலைகளால் அள்ளப்பட்ட இலைகள் சுழன்றபடி இறங்கின. சிலந்திவலையின் காணாச்சரடில் சிக்கி வெட்டவெளியில் நின்று நீந்தின. அதுவரை வெயில்கொண்டு அனல் உமிழ்ந்த பாறைகளை மிதித்து வந்த அவன் கால்கள்

வெம்மையையே அறியாத குளிர்ப்பாறைகளை நீர் உறைந்த குவைகள் என்றே உணர்ந்தன. உள்ளங்கைகளையும் பாதங்களையும் அப்பாறைகளில் ஊன்றி அத்தண்மையை உடலெங்கும் வாங்கிக்கொண்டான்.

பாறைகளைப் பற்றியபடி தொங்கி தாவி இறங்கியபோது மிக ஆழத்தில் உருளைப்பாறைகளிடையே மோதி நுரைத்து வெண்ணிறமாக ஓடிய யமுனையை கண்டான். பகலெங்கும் அவன் தன் குடுவையிலிருந்து ஒரு துளி நீரையும் அருந்தியிருக்கவில்லை. கால் நகத்திலிருந்து தலைமயிரிழை நுனிவரை எரிந்த பெருவிடாய் அவனிலிருந்து பிரிந்தெழுந்து பேருருக்கொண்டு கீழே ஓடிய குளிர்நீர்ப் பெருக்கை நோக்கி மலைத்து நின்றது. பின்னர் அலையலையாக படிகளெனச் சென்ற வேர்மடிப்புகள் வழியாக தாவி இறங்கினான். பாறைகளின் மேலிருந்து மரக்கிளைகளைப்பற்றி ஊசலாடி மேலும் இறங்கிச் சென்றான்.

இறங்குந்தோறும் யமுனை அகன்று பெருகியது. மேலே நிற்கையில் சிற்றோடையின் வெள்ளி வழிவெனத் தெரிந்த யமுனை அகன்று பெருகலாயிற்று. நூற்றுக்கணக்கான பாறைத்தடைகளில் அறைந்து வெள்ளி நுரை சிதற வளைந்து நீர்க்குவைகளென்றாகி நீர்த்திரைகளென விழுந்தாடி இறங்கிச் சென்றுகொண்டிருந்த நதியின் களித்துள்ளலை விட்டு கண்களை அவனால் எடுக்க முடியவில்லை. இரு பெரும்பாறைகள் தழுவியவை என நின்ற இடுக்கினூடாக புகுந்து மென்மணலும் சருகும் பரவிச்சரிந்த பாறை வழியாக வழுக்கிச் சென்று பெரிய பாறைத்தடம் ஒன்றில் நின்றான். இடையில் கைவைத்து மூச்சிரைக்க ஆற்றை நோக்கிநின்று

தன் தோளில் தொங்கிய இரு நீர்க்குடுவைகளையும் சீரமைத்துக் கொண்டான்.

அப்போது குகைக்குள் மெல்லிய இருளசைவொன்றை ஓரவிழி உணர திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தான். திறந்த குகைக்குள் யுகங்களின் இருள் மையென செறிந்திருந்தது. பேருருக்கொண்ட கன்னியொருத்தி சுட்டுவிரல் நீட்டி தொட்டு கண்ணெழுதும் சிறு சிமிழ். விழி அறிந்த அவ்வசைவு உண்மையா என்றெண்ணி அவன் மேலும் கூர்ந்து நோக்கினான். ஓசையின்மை அசைவின்மையாக தன்னை மாற்றிக்கொண்டது. நோக்குந்தோறும் இருள் மேலும் செறிந்தது. அங்கு எது இருந்தாலும் திரும்பிப்பாராது கீழிறங்கி நீரை நோக்கிச் செல்வதே தனக்கு உகந்ததென்று அவனுக்குத் தோன்றியது.

ஆனால் விந்தைகளை எப்போதும் எதிர்நோக்கும் அவனுள் உறைந்த சிறுவன் செல்லும்பொருட்டு அடி எடுத்து வைத்த அவனை பின்னிலிருந்து இழுத்தான். ஐயத்துடன் மீண்டும் கூர்ந்து நோக்கியபின் அவன் அக்குகை நோக்கி சென்றான். நின்ற பாறையிலிருந்து சற்றே சரிந்திறங்கிச் சென்று அக்குகைக்குள் நுழைய வேண்டியிருந்தது. குகைவாயிலை முற்றிலும் மூடி நின்றிருந்த மரங்களின் இலைத்தழைப்பால் உள்ளே ஒளிசெல்லும் வழிகள் முற்றிலும் மூடப்பட்டிருந்தன. அதன் வாயிலில் நின்று உள்ளே கூர்ந்து நோக்கி “யார்?” என்று அவன் கூவினான். மிக ஆழத்திலெங்கோ குகை ‘யார்?’ என எண்ணிக்கொண்டது. “உள்ளே யார்?” என்று அவன் மீண்டும் கேட்டான். அச்சொல் சில கணங்களுக்குப்பின் ஒரு விம்மல்போல திரும்பி வந்தது.

உடலெங்கும் பரவிய எச்சரிக்கையுடன் காலெடுத்து வைத்து அவன் குகைக்குள் நுழைந்தான். முற்றிலும் விழியிருள அக்கணமே அகம் எண்ணங்களை ஒளியென்றாக்கிக் கொண்டது. இருளில் உடல் கரைய உள்ளம் மட்டும் இருண்ட தைலமென வழிந்து முன்சென்றது. மேலும் சில அடிகள் வைத்தபோது குகை தூய வட்டவடிவில் இருப்பது விந்தையெனப் பட்டது. அதன் இருள் ஈரமென மெல்லிய ஒளி கொண்டிருந்ததா? இருண்மை நீர்மையென்றாகி மேலிருந்து கீழென வழிகிறதா? உருகும் பாறையா? மறுகணம் அவன் அனைத்தையும் உணர்ந்தான். அது மாபெரும் பாம்பு ஒன்றின் உடற்சுருள். குகையின் பாறை வளைவை ஒட்டியே தன் உடலை வளைத்துப் பதித்து அவனை சூழ்ந்துகொண்டிருந்தது அது.

குகையிலிருந்து அவன் வெளியே பாய்வதற்குள் பெயர்ந்து விழும் மாபெரும் வாழைத்தண்டு என அதன் தசைப்பெருக்கு சுருள்களாக அவன் மேல் விழுந்தது. நிலைதடுமாறி அவன் விழுவதற்குள் அவனுடலைச் சுற்றிக் கவ்வி இறுக்கி அது தன் உடற்குழிக்குள் இழுத்துக்கொண்டது. குகைக்குள் அதன் உடல் கீழ்ப்பகுதி இருளில் புதைந்திருக்க மேல்பகுதி காலிலிருந்து தலைவரை அவனை முற்றிலும் சுற்றிக்கொண்டு இறுக்கிச் சுழன்றது. குளிர்நீர் பெருகிச் செல்லும் காட்டாறு ஒன்றின் சுழியில் சிக்கிக்கொண்டது போல. இரு கைகளாலும் இறுகும் அத்தசைவெள்ளத்தை தள்ளி விலக்க முயன்றான். கைகள் வழுக்கி விலக அதன் பிடி மேலும் இறுகியது.

தலைக்குமேல் எழுந்த அதன் நாக விழிகளை பார்த்தான். திறந்த வாய்க்குள்ளிருந்து நாக்கு எழுந்து பறந்தது. அதன் அண்ணாக்கின் தசை அசைவு தெரிந்தது. குனிந்து அவன்

தலையை அதன் வாய் விழுங்க வந்தபோது கைகளால் அதன் இரு தாடைகளையும் விலக்கி பற்றிக்கொண்டான்.

# மாமலர் - 46

## 46. ஒற்றைச்சொல்

முழுவிசையுடன் தன் கைகளால் மாநாகத்தின் வாயை மூடவிடாமல் பற்றிக்கொண்டான் பீமன். இருவரின் ஆற்றல்களும் முட்டி இறுகி அசைவின்மையை அடைந்தபோது அதன் விழிகள் அவன் விழிகளுடன் முட்டின. அக்கணமே அவர்களின் உள்ளங்கள் தொட்டுக்கொண்டன. இருவரும் ஒருவர் கனவில் பிறர் புகுந்துகொண்டனர். பீமன் அவன் முன்பு முண்டனுடன் கல்யாண சௌகந்திகமலர் தேடிச்சென்ற அசோகசோலையில் நின்றிருந்தான். அவன் முன் இந்திரனுக்குரிய மணிமுடியுடன் நின்றிருந்தான் நகுஷன்.

“நான் ஆயுஸின் மைந்தனும், புரூரவஸின் பெயர்மைந்தனுமாகிய நகுஷன், உன் குலத்து மூதாதை” என்று நகுஷன் சொன்னான். “குருநகரியில் என் மஞ்சத்தில் படுத்திருக்கிறேன். அரண்மனைச் சாளரம் வழியாக வரும் காற்று என் இடப்பக்கத்தை தழுவிக்கொண்டிருக்கிறது. சாளரத் திரைச்சீலைகள் அசையும் ஓசையை கேட்கிறேன். இது கனவு என நான் நன்கறிவேன். ஆனால் கனவு மேலும் அழுத்தமான மெய்யென்றும் தோன்றுகிறது. நீ இன்னும் மண்நிகழவில்லை, ஆயினும் உன்னை என்னால் காணமுடிகிறது.”

“உங்கள் முகத்தை நான் நன்கறிந்திருக்கிறேன், எந்தையே” என்றான் பீமன். “என் இளையோனின் விழிகள் இவை.” நகுஷன்

“ஆம், உன்னையும் நான் நன்கறிந்திருக்கிறேன். என் மூதாதை புரூரவஸின் முகம் கொண்டிருக்கிறாய்” என்றான். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கியபடி நின்றிருந்தனர். ஒருவரை ஒருவர் நன்கறிந்திருப்பதாக உணர்ந்தனர். ஒரு சொல்கூட உரையாடிக்கொள்ள வேண்டியதில்லை என்று தோன்றியது. “ஒரு துலாவின் இரு தட்டுகளில் முழுநிறைநிகர் கொண்டு நாம் நின்றிருக்கிறோம். நீ என்னை ஏற்கவேண்டும், நான் உன்னை உண்டு உடல்கொண்டால் என் அறையில் மீண்டெழுவேன். இன்னொரு நீள்வாழ்வு எனக்கு வாய்க்கும்” என்றான் நகுஷன்.

“நீங்கள் மண்மறைந்தவர். உங்களில் எஞ்சுவதை நான் பெற்றாகவேண்டுமென்பதே நெறி” என்றான் பீமன். “விழைவகலாமல் நான் விண்புக முடியாது… நான் பசித்திருக்கிறேன்” என்றான் நகுஷன். “எந்தையே, உங்கள் ஆறாப்பசி என்பது என்ன?” என்றான் பீமன். “ஏனென்றால் நாங்கள் ஐவருமே ஐவகை பசிகொண்டவர்கள். என் பசி ஊனில். என் இளையோனின் பசி உணர்வில். மூத்தவர் அறிவில் பசிகொண்டவர்.” நகுஷன் அவனை காலத்திற்கு அப்பால் வெறித்திருந்த விழிகளால் நோக்கினான். “என் பசி எங்கு தொடங்கியதென்று எண்ணிப்பார்க்கிறேன்” என்றான். “அவிழா வினாக்களில் இருந்து அது தொடங்கியது என தோன்றுகிறது.”

தனக்குள் என நகுஷன் சொன்னான் “வாழ்க்கை என்பது சில வினாக்களை திரட்டிக்கொள்வது மட்டுமே என்று தோன்றுகிறது. அனைத்து வினாக்களையும் திரட்டி ஒற்றைவினாவென ஆக்கிக்கொள்பவன் விடுதலை அடைகிறான்.” நாகத்தின் விழிகள் இரு நிலைத்த

நீர்க்குமிழிகளாக தலைக்குமேல் தெரிந்தன. அதன் உடலில் இருந்து பரவிய குளிரில் அவன் உடல் விரைத்துக்கொண்டது. செயலற்ற உடலில் இருந்து எண்ணச்சொல் என ஏதும் எழவில்லை. “ஒன்றிலிருந்து ஒன்றென அறியா முடிச்சுகள்…” என்றான் நகுஷன். அவன் விழிகள் மாறின. “என் உடல் ஏன் கல்லாகியது? ஏன் மீண்டது அது?”

பீமன் “யார்?” என்றான். நகுஷன் அக்குரலை கேட்காதவன்போல சொல்லிக்கொண்டே சென்றான். “ஏன் அவளை அங்கேயும் கண்டேன்? அவள் ஏன் எனக்கென அங்கும் காத்திருந்தாள்?” பீமன் “எந்தையே, நீங்கள் யார்?” என்றான். மிக அருகே அர்ஜுனனின் குரல் கேட்டது. “யாரது?” என்று நகுஷன் திடுக்கிட்டு திரும்பினான். “இந்திரனா? யார்?” பீமன் “எந்தையே, நீங்கள் அறிய விழைவது எதை?” என்றான். “இங்கே இக்குகைக்குள் இருக்கிறான், என் உள்ளுணர்வு சொல்கிறது” என தருமனின் குரல் கேட்டது. அர்ஜுனனின் அம்பு ஒன்று வந்து குகைமேல் பாறைவளைவை உரசிச்செல்ல அந்த ஒளியில் குகை மின்னி மறைந்தது.

பீமன் விழித்துக்கொண்டு ஒரு கணம் உடல்நடுங்கினான். “விட்டுவிட்டது” என்றான். பின்னர் எழுந்து “எங்கே?” என்றான். முண்டன் “இங்கிருக்கிறீர்கள், பாண்டவரே” என்றான். பீமன் மெல்ல இயல்புமீண்டு “அந்த வினா என்ன?” என்றான். முண்டன் புன்னகை செய்தான். “அதில் திரள்வதுதான் என்ன?” என்றான் பீமன். முண்டன் “நாம் கிளம்புவோம்… இது அல்ல என்றால் இங்கிருப்பதில் பொருளில்லை” என்றான். “என்ன நிகழ்ந்தது?” என்றான். “நீங்கள் அறிந்ததே நானும் அறிவேன்” என்றான் முண்டன். “உங்களுடன் நானும் அங்கிருந்தேன்.” பீமன் முண்டன் அருகே முழந்தாளிட்டு அமர்ந்து “என்ன

நிகழ்ந்தது? என் மூதாதை இன்னும் அக்குகைக்குள்தான் இருக்கிறாரா?” என்றான்.

முண்டன் “வருக!” என எழுந்து நடந்தான். அவனைத் தொடர்ந்தபடி பீமன் “சொல்லுங்கள் முண்டரே, அவர் எங்கிருக்கிறார்? நான் அவரை உண்மையில் எப்போது சந்திக்கப்போகிறேன்? அவர் மீள்வது எப்படி?” என்றான். முண்டன் அங்கிருந்த சிறிய சுனை ஒன்றை அணுகி அதன் கரையென அமைந்த பாறையில் நின்றான். பாறையிடுக்கில் ஊறிய நீர் அந்தப் பாறைக்குழிவில் தேங்கி மறுபக்கம் வழிந்து யானை விலாவிலிட்ட பட்டு என மெல்லிய ஒளியுடன் வழிந்து சென்றது. கீழே அது தொட்டுச்சென்ற இடங்களில் பசுமை செறிந்திருந்தது. உள்ளிருந்து எழுந்த ஊற்றால் சுனை அலை ததும்பிக்கொண்டிருந்தது.

முண்டன் அமர்ந்து தன் சுட்டுவிரலை அச்சுனைமேல் வைத்தான். அவன் உளம்குவிகையில் அத்தனை தசைகளும் வில்நாண் என இழுபட்டன. விரிந்தகன்ற அலைகள் திரும்பிவந்து அவ்வூற்றுக்குள் சுழித்து அமிழ்வதை பீமன் கண்டான். மெல்ல சுனை அமைதிகொண்டது. அதன் நீலப்பரப்பில் அவன் நகுஷனை கண்டான். அவனருகே தருமன் அமர்ந்திருந்தான். தருமனின் சொற்களைக் கேட்டு கைகளால் வாய்பொத்தி உடல்வளைத்து நின்றிருந்தான் நகுஷன். பின்னர் குனிந்து அவன் கால்களைத் தொட்டு தலையணிந்தான். அவன் உடலை ஒட்டி விழுந்திருந்த கரிய நிழல் எழுந்து அவனருகே நின்றது. “ஹுண்டன்” என்றான் பீமன். “அவர் ஏன் மூத்தவரை வணங்குகிறார்?”

“அவர் விண்ணேறும் சொல்லை பெறுகிறார்” என்றான் முண்டன். “மூத்தவரிடமிருந்தா?” என்றான் பீமன். முண்டன்

“அல்ல, அவர் தந்தை ஆயுஸிடமிருந்து” என்றான். பீமன் விழித்துநோக்கியபடி நின்றான். ஹூண்டனும் நகுஷனும் கைகோத்துக்கொண்டனர். காற்றில் புகை கலைவதுபோல வெளியில் கரைந்து மறைந்தனர். “அவர்கள் விண்புகுந்துவிட்டனர்” என்றான் பீமன். “ஆம்” என்று முண்டன் சொன்னான். “அவர் சொன்னதென்ன?” என்றான் பீமன். “அது ஒற்றைச் சொல்... உதடசைவு ஒரு சொல்லையே காட்டியது.” பீமன் “ஒற்றைச் சொல்லா, அனைத்து வினாக்களுக்கும் விடையாகவா?” என்றான். “ஆம், அது அவர்களுக்குரிய விடை” என்றான் முண்டன்.

முண்டனும் பீமனும் நாகவனத்திலிருந்து வெளியேறி நீரோடை வறண்டு உருவான காட்டுப்பாதையில் நடந்தனர். அதனூடாகவே மான்களும் பன்றிகளும் நடந்துசென்றிருந்தன என்பது காலடித்தடங்களில் தெரிந்தது. “நாம் திரும்பிவிடுவோம்” என்றான் பீமன். “இது மாயமான்வேட்டை என எனக்குத் தெரிகிறது. நுண்மையைத் தேடுபவன் வாழ்வை இழப்பான் என்று எனக்கு எப்போதுமே தோன்றியிருக்கிறது. இப்புவிவாழ்க்கையில் பருண்மைகளே நமக்கு சிக்குபவை. நுண்மைகள் மறுஎல்லையில் தெய்வங்களாலும் ஊழாலும் பற்றப்பட்டிருக்கின்றன. நுண்மைகளில் அளைபவன் தெய்வங்களை நாற்களமாட அறைகூவுபவன்.”

“உண்மை” என்றான் முண்டன். “ஆனால் நுண்மையென ஒன்றை தன் வாழ்க்கையில் அறியப்பெற்றவன் அதை உதறி மீள்வதே இல்லை. நுண்மை தன் அறியமுடியாமையாலேயே அறைகூவலாகிறது. அறியத்தந்த துளியை நோக்கி அறிபவனின் உள்ளத்தை குவிக்கிறது. பாண்டவரே, அறியமுடியாமையை கற்பனையால் நிறைத்துக்கொள்வது மானுட இயல்பு. கற்பனை

பெருவெளியென்றே ஆகும் வல்லமைகொண்டது. பருண்மைகள் கற்பனை கலவாதவை. நுண்மையோ கற்பனையால் கணமும் வளர்க்கப்படுவது. அறிக, இப்புவியில் பருண்மைகளில் மட்டுமென வாழும் ஒரு மானுடனும் இல்லை. அறியா நுண்மைகளை நோக்கி தவமிருந்து அழியும்பொருட்டே மண்ணில் வாழ்வது மானுடம்."

பீமன் பெருமூச்சுவிட்டான். "ஒரு துளி நுண்மை பருண்மையின் பெருமலைகளை ஊதிப்பறக்கவைத்து தான் அமர்ந்துகொள்கிறது. நுண்மையின் ஒளிகொண்ட பருண்மை ஒருபோதுமில்லாத பேரழகு கொள்கிறது. வேதமென்பது என்ன? நுண்மைகளை நோக்கி சொற்களை கொண்டுசெல்லும் தவம்தானே? வேதச்சொல் என்பது நுண்மையின் வெம்மையால் உருகி உருவழிந்த ஒலியன்றி வேறென்ன? பாண்டவரே, கவிதை என்பது பருண்மைகளை ஒன்றுடன் ஒன்று நிகர்வைத்து நடுவே துலாமுள்ளென நுண்மையை உருவகித்தறியும் முயற்சி அல்லவா?"

"அத்தனை கலைகளாலும் மானுடன் அறியமுயல்வதுதான் என்ன? தோன்றல் சுவைத்தல் திளைத்தல் அடைதல் வெல்லல் நோயுறுதல் துயருறுதல் மறைதல் என கைதொட்டு கண்நோக்கி அறியும் பருண்மைகளுக்கு அப்பால் ஏதுள்ளது எஞ்சி? அவை ஏன் போதாமலாகின்றன? ஒளியெழும் காலைக்கு ஒரு இசைக்கீற்று அளிப்பது என்ன? கார்குழலுக்கு ஒரு மலர் மேலுமென சேர்ப்பது எதை?" முண்டன் சொன்னான் "இந்த முள் உங்கள் வெறுமையை தொட்டுவிட்டது, பாண்டவரே, இதையறியாமல் இனி இதிலிருந்து மீட்பில்லை உங்களுக்கு."

பீமன் புன்னகைத்து "கட்டுவிரியன் கடித்துவிட்டு மெல்ல பின் தொடரும். கடிபட்ட உயிர் ஓடிக்களைத்து சரியுமிடத்திற்கு

வந்துசேரும்” என்றான். முண்டன் உரக்க நகைத்தான். “நாம் செய்யவேண்டியதென்ன?” என்றான் பீமன். “காத்திருப்போம்... நம்மை நோக்கி வருவதென்ன என்று பார்ப்போம்.” பீமன் “வருமென்று என்ன உறுதி உள்ளது? நிகழ்வுப்பெருக்கென ஓடும் இப்பெருவெளிக்கு நம் மீது என்ன அக்கறை?” என்றான். முண்டன் “அது நம்மை கைவிடமுடியாது. கைவிட்டால் அதற்கு ஒழுங்கோ இலக்கோ இல்லையென்று பொருள். பாண்டவரே, மெல்லிய நீர்த்துளிகூட தன்னை சிதறடிக்க ஒப்புவதில்லை” என்றான்.

அன்று உச்சிப்பொழுதில் அவர்கள் நாகர்களின் சிற்றூர் ஒன்றை சென்றடைந்தனர். தொலைவிலேயே நாய்கள் குரைக்கும் ஒலி கேட்டது. உயர்ந்த மரம் ஒன்றின் உச்சியில் கட்டப்பட்டிருந்த பரணிலிருந்து முழவோசையும் எழுந்தது. நாய்கள் தொடர நச்சு அம்புகள் இறுகிநின்றிருந்த விற்களுடன் ஆறு நாகவீரர்கள் அவர்களை நோக்கி வந்தனர். பிறர் நின்றுவிட ஒருவன் மட்டும் நச்சு வேலுடன் அவர்களை அணுகிவந்து “எவரென்று தெரிந்துகொள்ள விழைகிறோம்” என்றான். “நாங்கள் வழிப்போக்கர்கள். நாகவனத்தை பார்க்கச் சென்றோம்” என்று முண்டன் சொன்னான். சட்டென்று எம்பி தலைகீழாக சுழன்று அதேபோல நின்று “ஆடலும் பாடலும் அறிந்தவன். என் கலைகளைக் கண்டு நீங்கள் நகைக்கலாம். இவர் எதையும் அறியாதவர். ஆகவே இவரை வெறுமனே நோக்கி சிரிக்கலாம்” என்றான்.

அவன் முகம் மலர்ந்தது. “நகைக்கூத்தரா? வருக!” என்றான். முண்டன் பாய்ந்து அவன் தோள்மேல் ஏறி நின்று “எழுக புரவியே!” என்றான். அவன் திகைப்பதற்குள் குதித்து நிலத்தில் நின்று “ஆணையிடுகையில் புரவிமேல் அமர்வது எங்கள்

வழக்கம்” என்றான். அவன் உரக்க நகைத்து “எங்களூர்களுக்கு நகைக்கூத்தரோ சூதரோ வருவதில்லை. நாங்கள் அவர்கள் தேடும் பொருள் அளிக்கும் வளம்கொண்டவர்களல்ல” என்றான். “நான் பொருள் தேடி வரவில்லை” என்றான் முண்டன். “பிறிது ஏது தேடி வந்தீர்கள்?” என்றான் நாகன். “உணவு, உடை” என்றான் முண்டன். “நல்ல பரிசுப்பொருட்கள், அணிகள், தங்கம், அருமணிகள்.” நாகன் “அதைத்தான் நாங்கள் பொருள் என்கிறோம்” என நகைக்க “ஆ, நீங்களும் என் மொழியையே பேசுகிறீர்கள்” என்றான் முண்டன்.

மூங்கில்புதர்களால் வேலியிடப்பட்ட சிற்றூரில் இழுத்துக்கட்டப்பட்ட யானைத்தோல் கூரைகள்கொண்ட சிறுகுடில்கள் வட்டமாக சூழ நடுவே குடித்தலைவனின் மூன்றடுக்குக் கூரைகொண்ட குடில் இருந்தது. அதன் முன் அமைந்த முற்றத்தில் அவர்கள் கொண்டுசென்று நிறுத்தப்பட்டனர். நாகர்குடிகள் கூச்சலிட்டபடி ஓடிவந்து அவர்களை சூழ்ந்துகொண்டன. இடையில் குழந்தைகளை ஏந்திய பெண்கள். அன்னையரின் ஆடைகளைப்பற்றிய குழந்தைகள். புழுதிமூடிய சிற்றுடல்கள், மரவுரிகள், கல்மாலைகள், மரக்குடைவு வளையல்கள். மலர்சூடிய நீள்கூந்தல்கொண்ட கன்னியர். வேட்டைக்கருவிகளும் படைக்கலங்களுமாக தோள்தசை இறுகி, வயிற்றுநரம்புகள் வரிந்து, வில்லெனும் கால்கள் கொண்ட இளையோர்.

பெருங்குடிலுக்குள் இருந்து முதிய நாகர்குடித்தலைவன் தன் நாகபடக் கோலுடன் இடைவரை கூன்விழுந்த உடலுடன், ஆடும்தலையில் நாகக்கொந்தையுடன், பழைய எலும்புகள் சொடுக்கொலி எழுப்ப, மூச்சொலியும் முனகலுமாக உள்ளிருந்து மெல்ல வெளிவந்து அவர்களை பழுத்த விழிகளால்

நோக்கினார். “இவன் யார்?” என்று பீமனை நோக்கி விரல்சுட்டி காட்டினார். கணுக்கள் முறிந்து இணைந்தவைபோல உருவழிந்திருந்தது அவ்விரல். “நகைக்கூத்தர். இவன் அக்குள்ளரின் மாணவன். வித்தைகள் காட்டுவார்கள் என்றார்கள்” என்றான் அவர்களை அழைத்துவந்தவன். நாகர்களின் உடல்கள் சிறியவை, முதுமையால் மேலும் சிறுத்து அவர் ஒரு சிறுவனை போலிருந்தார்.

ஆடும் தலையில் நிலைகொண்ட விழிகளுடன் அவனை நோக்கிக்கொண்டிருந்தார். “நான் உன்னை முன்னரே கண்டிருக்கிறேன். உன்னை அல்ல. உன் மூதாதையரில் ஒருவரை. அல்லது...” என்றபின் “பெருந்தோளனே, உன் குடி என்ன? பெயரென்ன?” என்றார். “அஸ்தினபுரியின் குருகுலத்தில் பிறந்தவன். பாண்டுவின் மைந்தான். என் பெயர் பீமன்” என்றான் பீமன். “ஆம், நினைத்தேன்” என்றார் அவர். “என் பெயர் தண்டகன். உன் குடிமூதாதை ஒருவரை நான் முன்பு கண்டதுண்டு.” பீமன் “எப்போது?” என்றான். “நெடுங்காலத்திற்கு முன்பு... நான் நீணாட்களாக வாழ்கிறேன்” என அவர் புன்னகைத்தார். “என் கண்ணெதிரே நாடுகள் உருவாகி அழிந்துள்ளன. தலைமுறைகள் பிறந்து இறந்துகொண்டுள்ளன” என்றார்.

“நீங்கள் கண்ட என் மூதாதையின் பெயரென்ன?” என்றான் பீமன். “அவர் பெயரை நான் மறந்துவிட்டேன். உயரமானவர். மிகமிக உயரம்... மெலிந்த வெண்ணிற உருவம்... நான் அவரை சிபிநாட்டுப் பாலையில் கண்டேன்.” பீமன் “பீஷ்மர், என் பிதாமகர்” என்றான். “ஆம், அவர் பெயர் பீஷ்மர். காமநீக்க நோன்புகொண்டவர் என்றார்கள்.” அவர் அவனை நோக்கி “ஷத்ரியர்களை நாங்கள் எங்கள் குடிகளுக்குள்

ஒப்புவதில்லை…” என்றார். “நான் ஷத்ரியனாக இல்லை இப்போது. காடேகி குரங்குகளுடன் வாழ்கிறேன்.” அவர் புன்னகைத்து “ஆம், உன்னிடம் குரங்குமணம் எழுகிறது. ஆகவேதான் உன்னை என் உள்ளம் ஏற்கிறது” என்றார். “இங்கு ஏன் வந்தீர்கள்?”

“நான் ஒரு மலரை தேடிவந்தேன்” என்றான் பீமன். “அதன் பெயர் கல்யாண சௌகந்திகம் என்றார்கள். அதன் நறுமணத்தை நான் உணர்ந்தேன். அதை என் தேவிக்கென கொய்துசெல்ல வந்தேன்.” அவர் அவனை நோக்கி புன்னகைத்து “அதையெல்லாம் பொருட்டென எண்ணும் நிலையில் நீ இன்னமும் இருப்பது மகிழ்வளிக்கிறது” என்றார். பின்னர் உடல்குலுங்க வாய்விட்டு நகைத்து “நன்று, பொருட்டென எண்ணாமல் அதை அறியமுடியாது, அறியாமல் கடக்கவியலாது” என்றார். பீமன் சற்றே சினம்கொண்டாலும் அதைக் கடந்து “நான் ஏன் அதைத் தேடிவந்தேன் என நானே வியந்துகொண்டிருக்கிறேன், மூத்தவரே” என்றான். “அதை அறிவதும் அம்மலரை அறிவதும் நிகர்” என்றார் அவர்.

“நீங்கள் பீஷ்மபிதாமகரை எப்போது பார்த்தீர்கள்?” என்றான் பீமன். “நெடுங்காலம் முன்பு நிகழ்ந்தது அது. அன்று நான் என் குடியை விட்டு நீங்கி உலகை முழுமையாகக் காணும்பொருட்டு அலைந்து கொண்டிருந்தேன். பாஞ்சாலத்திற்கும் சிந்துவுக்கும் கூர்ஜரத்திற்கும் சென்றேன். அங்கிருந்து சிபிநாட்டுப் பாலையில் சென்று அங்குள்ள மக்களுடன் வாழ்ந்தேன். என் குலத்தின் வருவதுரைக்கும் முறைகளும் உளமறியும் நெறிகளும் எங்கும் எனக்கு தேவையான பொருளை ஈட்டியளித்தன. என்

வழிச்செலவுக்கென மட்டுமே அவற்றை பயன்படுத்திக்கொண்டிருந்தேன்” என்றார் தண்டகர்.

“என்னிடம் அனந்தம் என்னும் யானம் இருந்தது. அதில் நாகரசத்தை நிரப்பி அதை பார்ப்பவரின் உளமென்றாக்க என்னால் இயலும். விழிப்பு, கனவு, ஆழ்வு, முழுமை என்னும் நான்கு நிலைகளிலும் ஒருவன் அதில் தன்னை நோக்கமுடியும். அதை நோக்கும்பொருட்டு பீஷ்மர் வந்தார். அன்று அவர் இளைஞர்.” முண்டன் “அன்று தங்கள் வயதென்ன?” என்றான். அவர் மீண்டும் உடல்குலுங்க நகைத்து “அன்றும் நான் முதியவனே…” என்றார். பீமன் “அவர் அதில் தன்னை நோக்கினாரா?” என்றான். “ஆம், நோக்கி அதிர்ந்தார். அவர் கண்டது அவர் எண்ணியதை அல்ல.”

முண்டன் “ஆம், எப்போதுமே எண்ணியது எழுவதில்லை” என்றான். பீமன் “அவர் கண்டது எதை, மூத்தவரே?” என்றான். “அவர் எண்ணியது புருவை, கண்டது யயாதியை” என்றார் தண்டகர். “நான் அவருக்கு அவர் குலமூதாதையரின் கதையை அவருக்குள்ளிருந்தே கண்டெடுத்து சொன்னேன். அஞ்சி அமர்ந்திருந்தார். பின்னர் தெளிந்து விலகிச்சென்றார்.” பீமன் நீள்மூச்சுடன் “ஆம், புரிகிறது” என்றான். முண்டன் “மாறாமலிருக்கும்படி செலுத்தப்பட்ட ஊழ் கொண்டவர்களைப்போல அளிக்குரியோர் எவருமில்லை” என்றான்.

இளந்தலைவன் “மூத்தவரே, இவர்களை நாம் வரவேற்கலாமா?” என்றான். “ஆம், இவர்களுக்கு ஆவன செய். இவர்கள் காட்டும் கலைகளை கண்டு நாமும் மகிழ்வோம்” என்றார் தண்டகர். அவர் கைகளை முட்டில் ஊன்றி முனகியபடி எழப்போனபோது பீமன் “மூத்தவரே, நான் உங்கள் கால்களை தலைசூடலாமா?”

என்றான். அவர் புன்னகைத்து “அது வழக்கமில்லை. நீ ஷத்ரியன்” என்றபின் “இங்குள நாகர் அதிர்ச்சியுறக்கூடும்” என்றார். “என் மூதாதை நீங்கள், உங்கள் குருதி நகுஷனிலூடாக என் குலத்திலும் உள்ளது” என்றான் பீமன். அவர் “ஆம்” என்று சொல்ல பீமன் சென்று அவர் காலடிகளை தொடப்போனான். அவனை அழைத்துவந்த நாகவீரன் “அது முறையல்ல... உங்களுக்கு அவர் வாழ்த்துரைத்தால் நீங்கள் எங்கள் குடியென்று ஆகிறீர்கள்” என்றான்.

பீமன் “ஆம், நாகனாகவும் நான் இருக்கிறேன்” என்றான். “எங்கள் குருதி தூயது, அதுவே எங்கள் தகுதி” என்றான் அவன். பீமன் “வீரரே, குருதிக்கலப்பில்லாத குடி என பாரதவர்ஷத்தில் ஏதுமில்லை. என் இளையோன் நாகர்குடிப் பெண்ணை மணந்தவன். நான் அரக்கர்குடிப் பெண்ணை மணந்தேன். எங்கள் குடியிலும் அரக்கரும் நாகரும் குருதி செலுத்தியுள்ளனர்” என்றான். “அப்படியென்றால் குடி என்பது பொய்யா? நீங்கள் தலைக்கொள்ளும் நால்வர்ணமும் பிழையானதா?” என்றான் நாகன்.

“எவன் பிறப்பறுக்கும் பெருஞ்செயலை மட்டுமே செய்கிறானோ அவன் அந்தணன். எது தனித்துவமேதுமின்றி, தான்மட்டுமேயென்றாகி, இயல்புகளனைத்தும் சூடி, ஏதுமில்லையென்றாகி இருக்கிறதோ அதில் தன் இறுதிப்பற்றை கொண்டிருப்பவன் அவன். அதைவிட்டு உலகியலில் உழல்பவன் அந்தணருக்குரிய கருவில் பிறந்தாலும் அந்தணன் அல்ல” என்றான் பீமன். “பிறர்நலம் காக்கும்பொருட்டு வாழ்பவன் ஷத்ரியன். கொடையினூடாக முழுமைகொள்பவன் வைசியன். உருவாக்கி உணவூட்டி வாழ்ந்து நிறைவடைபவன்

சூத்திரன். செயல்களால் மட்டுமே வர்ணங்கள் உருவாகின்றன. பிறப்பினால் அல்ல.”

பீமன் தொடர்ந்தான் “நினைப்பறியா தொல்காலத்திலேயே இங்கு குடிகளும் குலங்களும் கலக்கத் தொடங்கிவிட்டன. எனவே குடித்தூய்மை குலத்தூய்மை என்பவை பொய்நம்பிக்கைகளன்றி வேறல்ல. அனைத்து மானுடருக்கும் உடல்சேர்க்கையும் பிறப்பும் இறப்பும் நிகரே. நாங்கள் அந்தணராயினும் அல்லவென்றாயினும் வேள்விசெய்கிறோம் என்னும் வேதச்சொல்லே குலமும்குடியும்வர்ணமும் பிறப்பினாலன்று என்பதற்கான முதற்சொல் ஆகும். பிறப்பில் மானுடர் விலங்குகளே. நெறிகளை ஏற்றுக்கொள்ளும் உபநயனத்தாலேயே குலமும் குடியும் அமைகின்றன.”

நாகவீரன் குழப்பத்துடன் தண்டகரை நோக்கிவிட்டு தலைவணங்கினான். இன்னொரு நாகவீரன் வந்து வணங்கி “குடிலுக்கு வந்து இளைப்பாறுக, விருந்தினரே!” என்றான். அவர்கள் அவனைத் தொடர்ந்து சென்றபோது இருமருங்கும் கூடிநின்ற நாகர்கள் அவர்களை நோக்கி சிரித்தனர். கைநீட்டி பேசிக்கொண்டனர். முண்டன் “நீர் சொன்னவற்றை எங்கு கற்றீர்?” என்றான். “அறியேன், நான் ஏன் அவற்றை சொன்னேன் என்றும் தெரியவில்லை” என்றான் பீமன். பின்னர் நின்று “நான் அஞ்சுகிறேன், முண்டரே… நான் எப்படி அச்சொற்களை சொன்னேன்? அவை நன்கு யாக்கப்பட்டவை. நான் எங்கே கற்றேன் அவற்றை?” என்றான். முண்டன் “காலப்பக்கத்தை புரட்டிப்பார்க்கலாம். ஆனால் அதற்கு நிறையவே உணவு தேவைப்படும்” என்றான். “விளையாட வேண்டாம்… என் சித்தம் பிறழ்ந்துவிட்டதா என்றே ஐயம்கொள்கிறேன்” என்று பீமன் சொன்னான்.

அவர்களை நாகர்கள் ஒரு தோல்குடிலுக்குள் கொண்டுசென்றனர். அவர்கள் அருகே ஓடிய ஓடையில் நீராடி வந்ததும் புதிய மரவுரியாடைகள் அளிக்கப்பட்டன. அடுமனைக்கு அருகிலேயே சிறிய குடிலொன்றுக்குள் அமர்ந்து பீமன் உணவுண்ணலானான். அவன் உண்பதைக் காண நாகர்குடியே சூழ்ந்து நின்றது. சிறுவர்கள் அறியாது மெல்ல அவனை அணுகி அவனருகே சூழ்ந்து அமர்ந்துகொண்டனர். பெண்கள் உளக்கிளர்ச்சியால் ஒருவரை ஒருவர் தழுவிநின்றனர். இளையோர் ஒருவரோடொருவர் விழிதொட்டுக்கொண்டனர்.

முண்டன் உணவுண்டு எழுந்து நின்று "என் உள் அனல் நிறைந்துவிட்டது... இனி காடு பற்றி எரியும்" என்றான். பீமன் அவனை திரும்பிப்பார்க்காமல் உண்டுகொண்டிருந்தான். "நான் காலத்தை புரட்டி நோக்குபவன்..." என அவன் அப்பெண்களை நோக்கி சொல்ல அவர்கள் வாய் பொத்தி சிரித்தபடி பின்னகர்ந்தனர். அவன் துள்ளி பல சுருள்களாக சுழன்று சென்று நின்று "ஆ" என்றான். பீமன் "என்ன?" என்றான். "இது எந்த இடம்? நாகநாட்டில் பீதபுரம் என்னும் நகரம். முன்பு இது ஒரு சிற்றூராக இருந்தது... இதோ, ஒரு சிற்றாலயம். இங்கு பாண்டவனாகிய பீமன் வந்திருக்கிறான். அவன் உணவருந்திய இடத்தில் நாட்டப்பட்ட சிறுகல் தெய்வமாகியிருக்கிறது."

பீமன் ஆர்வத்துடன் எழுந்து அருகே வந்தான். முண்டன் மீண்டும் பலமுறை சுருள்பாய்ச்சல் கொண்டு அருகே வந்து நின்று "பாண்டவரே, நீங்களா?" என்றான். "ஆம், நெடுந்தொலைவு சென்றீர்களோ?" என்றான். "நாம் எங்கிருக்கிறோம்?" என்றான் முண்டன். பீமன் ஒன்றும் சொல்லவில்லை. அவன் சூழ நோக்கிவிட்டு "இங்குதானா?" என்றான். பீமன் "சொல்லும், நான்

சொன்னது எப்படி எனக்குத் தெரிந்தது?” என்றான். “என்ன சொன்னீர்?” என்றான் முண்டன். “நாகர்களிடம் நான் சொன்னது…”

“அவை சர்ப்பநீதி என்னும் நூலில் உள்ள சொற்கள்” என்றான் முண்டன். “நான் அந்நூலை படித்ததில்லை” என்றான் பீமன். “வாய்ப்பில்லை, அந்நூல் இன்னும் எழுதப்படவில்லை.” பீமன் “என்ன சொல்கிறீர்?” என்றான். “நாகத்திடம் நீங்கள் பிடிபட இன்னும் நாளிருக்கிறது. அந்நிகழ்வை சூதர் பாடியலைய மேலும் நாட்கள் தேவை. அதிலிருந்து அஸ்தினபுரியின் கவிஞரான அக்னிபாலர் தன் சிறிய நெறிநூலை யாக்க மேலும் நாள் கடக்கும். அது உங்கள் குருதிவழிவந்த மன்னராகிய ஜனமேஜயனின் காலத்தில்… அன்று இந்நூல் மிகவிரும்பி கற்கப்பட்டது… ஏனென்றால் நாகர்குலத்து முனிவரான ஆஸ்திகன் வந்து நாகவேதத்தை மீண்டும் நிறுவிவிட்டுச் சென்றிருக்கிறார்.”

பீமன் சில கணங்கள் அவனையே கூர்ந்து நோக்கிக்கொண்டு நின்றபின் தலையை அசைத்தான். “நாகவடிவு கொண்டிருந்த நகுஷனுக்கு மூத்த பாண்டவராகிய யுதிஷ்டிரர் உரைத்ததாக இச்சொற்கள் வருகின்றன” என்றான் முண்டன். பீமன் சில கணங்கள் நிலைவிழிகளுடன் நோக்கியபின் வெடித்துச் சிரித்தான்.

# மாமலர் - 47

**47. நாகநடம்**

இரவுணவுக்குப் பின்னர் நாகர்கள் வந்து முற்றத்தில் எரிந்த களநெருப்பைச் சுற்றி அமர்ந்துகொள்ள தண்டகரை இரண்டு நாகர்கள் கைபற்றி கொண்டுவந்து பீடத்தில் அமர்த்தினர். சிறுவர்கள் கைகளில் எஞ்சிய ஊனுணவுடன் வந்து அமர்ந்து கடித்து மென்றுகொண்டிருந்தனர். குழந்தைகளை மடியிலிட்டு மெல்ல தட்டி துயில்கொள்ளச் செய்தனர் பெண்டிர். பீமன் தன் குடிலில் இருந்து கைகளைத் தூக்கி சோம்பல்முறித்தபடி வந்தபோது அத்தனை விழிகளும் அவனை நோக்கி திரும்பின. பெண்கள் மெல்லிய குரலில் ஏதோ சொல்ல ஆண்கள் சினம்ஒலித்த சொற்களால் அவர்களை கடிந்தனர்.

பீமன் வந்து அமர்ந்ததும் அங்கிருந்த குழந்தைகள் அஞ்சி எழுந்து விலகின. அவன் அருகே நின்ற குழந்தையை நோக்கி புன்னகை செய்தான். அது மூக்கில் விரல்விட்டபடி இடைவளைத்து நின்றது. அவன் ஒன்றும் பேசாமல் திரும்பி இன்னொரு குழந்தையை நோக்கி சிரித்தான். முதற்குழந்தை சற்றே காலடி எடுத்துவைத்து அணுகியது. அவன் அதை நோக்கியதாகவே காட்டவில்லை. மீண்டுமொரு குழந்தையை நோக்கி சிரித்தான். இரண்டாம் குழந்தை அவனை அணுகியது. அவ்வசைவைக் கண்டதும் முதல் குழந்தை மேலும் அணுகி அவன் தோளை தொட்டுக்கொண்டு நின்றது.

அவன் அதை நோக்கி திரும்பாமல் இன்னொரு குழந்தையை நோக்கினான். இரண்டாவது குழந்தையும் அவன்மேல் சாய்ந்துகொண்டது. இன்னொரு குழந்தை வந்து அவன் தோள்மேல் ஒட்டியது. அவன் முதற்குழந்தையை தூக்கி தன் மடியிலமர்த்த அது நாணத்துடன் கண்களை கைகளால் மூடிக்கொண்டது. சற்றுநேரத்தில் அவன் உடலெங்கும் குழந்தைகள் மொய்த்துக்கொண்டன. அங்கிருந்த அத்தனை

குழந்தைகளும் அவனுடன் ஒட்டியிருக்க விரும்பின. அவற்றின் பேச்சும் சிரிப்பும் அங்கே மைய ஒலியாக எழ மற்றவர்கள் புன்னகையுடன் அதை நோக்கியிருந்தனர். இளம்நாகர்களின் முகச்சுளிப்பும் மெல்ல விலகலாயிற்று.

தண்டகர் அவர்களை நோக்கி சிரித்து உடல் குலுங்கினார். "ஓசையடங்குக!" என ஒருவர் குரலெழுப்பினார். அப்பாலிருந்து முண்டன் அவன் உடலுக்குப் பொருத்தமில்லாத மிகப்பெரிய மரவுரியாடையை தோளும் இடையும் சுற்றி அணிந்து அது கால்களை அடிக்கடி தடுக்க இடக்கையால் தூக்கிப்பிடித்தபடி வலக்கையில் ஒரு கோலுடன் துள்ளி நடனமிட்டபடி வந்தான். குழந்தைகள் எழுந்து நின்று கூச்சலிட்டு சிரித்தன. நாகர்களும் சிரிக்கத்தொடங்கினர். அவன் கூட்டத்தையும் ஓசையையும் கண்டதும் அஞ்சி திரும்ப ஓடி தன் பின்னால் வந்த நாகனைக் கண்டு அஞ்சி மீண்டும் முன்னால் வந்தான். பதுங்கி மிரண்ட நோக்குடன் வந்து அனைவரையும் பணிந்தான். தண்டகர் "வருக, முண்டரே!" என்றதும் அக்குரல் பட்டு தெறிப்பதுபோல பலமுறை சுழன்று அப்பால் சென்று நின்றான். அங்கிருந்தவர் ஏதோ சொல்ல திரும்பத் தெறித்து வந்து அதே விரைவில் தண்டகரைக் கடந்து அப்பால் சென்றான். சிரிப்பொலிகள் எழுந்து சூழ்ந்தன.

தண்டகர் "நில்லும், குள்ளரே... நீங்கள் இன்று ஆடப்போவது என்ன?" என்றார். "நாகர்களின் தொல்கதையை ஆடும்படி என்னிடம் சொன்னார்கள்" என்று அவன் அஞ்சியபடி சொன்னான். "ஆனால் எனக்கு அந்தக் கதை தெரியாது." தண்டகர் சிரித்து "பிறகு ஏன் ஒப்புக்கொண்டீர்?" என்றார். "வழக்கமாக நான் தெரியாத கதைகளைத்தான் சொல்வது..." என்றான் முண்டன். "ஏன்?" என்றார் தண்டகர். "தெரிந்த

கதையை ஏன் சொல்லவேண்டும்? அதுதான் தெரியுமே?” என்றான் முண்டன். தண்டகர் சிரித்து “உம்மிடம் சொல்லாட இயலாது என்னால்…” என்றார். “ஆணை” என்று வணங்கி சென்று அனல்வெளிச்சத்தில் நின்ற முண்டன் கோலைச் சுழற்றி அனைவரையும் உடல் மடித்து வணங்கினான்.

“அவையினருக்கு வணக்கம்… என்னவென்றால் நான் நாகர்களின் கதையை சொல்லவேண்டியிருக்கிறது. நாகர்களிடம் அதை சொல்வதிலுள்ள சிறப்பு என்னவென்றால் என்னைப்போலவே அவர்களுக்கும் அது தெரியாது.” நாகர்கள் சிரித்தனர். “ஆகவே நான் அதை என் மாயக்கோலிடம் கேட்கலாம் என நினைத்தேன். இது எளிய கோல் அல்ல, இது செங்கோல். ஆமாம், பாரதவர்ஷத்தை ஆளும் தொல்குடிமன்னர்களின் செங்கோல்களில் ஒன்று இது.” அவன் திரும்பி “ஐயம் வேண்டாம்… தொல்லரசான மகதத்தின் அரசர் ஏந்திய செங்கோல் இது. முடியும் கொடியும் நகரும் கோட்டையும் கொண்டு அரியணை அமர்ந்து ஆட்சி நடத்தியது” என்றான்.

“இதை எப்படி அடைந்தேன் என்கிறீர்களா? மகதர் நடத்திய ராஜசூயவேள்விக்கு சென்றிருந்தேன். அனல்வணக்கத்தின்போது அரசர்கள் அனைவரும் கோல்தாழ்த்தி வணங்கினர். நான் என் கையில் ஒரு பொய்ச்செங்கோலை செய்து வைத்திருந்தேன். அதை வைத்துவிட்டு அதேபோலத் தோன்றும் அரசச்செங்கோல் ஒன்றை எடுத்துவருவதென்று எண்ணியிருந்தேன். நிழலுடன் நிழலென பதுங்கியிருந்தேன். ஒருகணம் அத்தனை பேரையும் விழிமாயத்தால் விலக்கி என் கோலை அங்கே வைத்து இதை எடுத்துக்கொண்டேன். அவையினரே, இது பாரதவர்ஷத்தை முழுதாளும் மகத சக்கரவர்த்தியின் கோல்…”

அதைச் சுழற்றி தரையில் ஊன்றி அதன்மேல் உடல் அமைத்து அமர்ந்து “உறுதியானது. ஆம், நெகிழ்வற்றது. துலாவின் நடுக்கோல் வளையலாகாது. அவையோரே, இல்லத்தின் உத்தரக்கோலும் வளையலாகாது. ஆம், கொடிக்கம்பம் வளைய இயலாது. நுகமரம் வளையாது. கொலைக்களத்து தூக்குமரமும் வளையமுடியாது” என்றான். அந்தக் கோல் வளைந்து அவன் நிலத்தில் விழுந்தான். பாய்ந்து அதை பிடிக்க அது வளைந்து நெளிந்தது. “வளைகிறதே...! உருகிவிட்டதா? ஆ!” அது ஒரு கரிய நாகமென்றாகி அவன் கையில் சுற்றிக்கொண்டது. “ஆ, நாகம்... நாகமேதான். அய்யய்யோ” என அலறியபடி அவன் துள்ளிக்குதித்து சுற்றி வந்தான். தீ சுடுவதுபோல கையை உதறினான். நாகம் அவன் கையை இறுக சுற்றிக்கொண்டு படமெடுத்து அவனை கொத்தச் சீறியது. அதன் மணிக்கண்கள் ஒளிவிட்டன.

பாம்பைப் பற்றிய குரங்கின் அச்சத்தையும் பதற்றத்தையும் நடித்தான். உடல் மெய்ப்பு கொள்ள கைகால்கள் நடுங்க அச்சத்தால் இளித்தபடி அந்தப் பாம்பைப் பற்றிய கைப்பிடியை விடாமலேயே தரையில் தலைகுத்தி விழுந்து உருண்டு எழுந்து சுழன்றான். அதை நோக்கவில்லை என நடித்து இயல்பாக இருக்க முயன்றான். பின்னர் விம்மி அழுதான். அழுகையும் சிரிப்புமாக தவித்தபோது நாகம் மீண்டும் கோலாகியது. என்ன நிகழ்கிறதென்று வியந்து கூட்டத்தை நோக்கினான். ஐயத்துடன் மீண்டும் கோலை நோக்கியபின் அதை சுழற்றினான். வீசிப் பிடித்தான். முதுகைச் சொறிந்தான். அது கோலாகவே இருந்தது.

சிரித்துக் கொந்தளித்த கூட்டத்தைச் சுற்றிவந்தபின் அந்தக் கோலை ஓர் இடத்தில் நாட்டினான். அதனருகே கைகூப்பி

நின்று “செங்கோலே, அறம்விளையும் மரமே, சொல்க! உன் வேர் என்ன? நீ விளைந்த நிலமென்ன?” என்றான். அதை தன் மேலாடையை சாமரமாக்கி வீசி இளைப்பாற்றினான். “சொல்க, நீ வந்த வழிதான் என்ன?” கோல் தளர்ந்து கீழே விழுந்து நாகமாகி சீறி படமெடுத்தது. “ஆ! மீண்டுமா?” என்றான். “சொல்க, நீ யார்?” நாகம் “நான் தொல்நாகம்... நான் இட்ட முட்டை இவ்வுலகம். மலைகள் எழுந்து முகில்கள் சூடிஅமர மரம்செறிந்து நதிகள் விரைய கடல்கள் அலையடிக்கும் விரிந்த இந்நிலம் முழுக்கவும் எனக்குரியது” என்றது. சீறி தரையைக் கொத்தி எழுந்து “அறிக மூடரே, பிற குலங்களெல்லாம் செடிகள், மரங்கள், கொடிகள். நான் வேர்” என்றது.

“வேர் மண்ணுக்குள் இருப்பதை நானும் அறிவேன்” என்றான் முண்டன். “நானே பற்றுகோல். நானே உயிர்த்தளம்” என்றது நாகம். “என்ன ஆயிற்று பின்னர்?” என்றான் முண்டன். “நான் கோலென்றாக முடியவில்லை. நான் நெருப்பு. நான் நீர். நானே வேர். நெருப்பும் நீரும் நெளிந்தாகவேண்டும். நீர்நோக்கி வளைந்தாகவேண்டும் வேர். அடிமரம் வளையாது எழுந்து நிற்கும். கிளைகள் நெகிழாது விரிந்துபரவும்...” நாகத்தின் குரலிலும் அவனே பேசுகிறான் என்பதை முண்டனின் தாடை இறுகியசைவதைக்கொண்டு பீமன் கண்டடைந்தான். அவ்வாறென்றால் அந்த நாகம் அவன் அணிந்துவந்த பெரிய ஆடைக்குள் இருந்திருக்கிறது. அப்படியென்றால் கோல் எங்கே?

முண்டன் அந்த நாகத்தை சுற்றி நடனமிட்டான். தன் மேலாடையை எடுத்துச் சுழற்றி தோளிலிட்டபடி சென்று அந்த நாகத்தை எடுத்து தலையில் வைத்தான். அது நெளிந்து அவன் முகத்தில் வழிந்து படம் தூக்க அது துதிக்கையென்றாகியது. ஆடைக்குள் இருந்து உடைந்த தந்தத்தை எடுத்து ஒருகையில்

பிடித்து மறுகையால் அருள்காட்டி அவன் கணபதியென கால்மடித்தமர்ந்தான். பாம்பு ஊர்ந்து அவன் தோளைச்சுற்ற சுழன்றாடி இடக்கால் தூக்கி நின்று நடனசிவன் ஆனான். அது இடைவளைக்க தேவியென அமர்ந்தான். அது வழிந்து காலடியில் சுருள தன் கையில் தோன்றிய கோலை ஊன்றி நின்று முருகனானான். பாம்பு நீண்டு ஓட அதன் வாலை மிதித்து அதன்மேல் படுப்பதுபோல் நடித்து விஷ்ணுவானான்.

நாகர்கள் கைகளைத் தூக்கி கூச்சலிட்டு அவனை ஊக்கினர். நாகம் சீறி நிலத்தைக் கொத்தி படம் திருப்பியது. முண்டன் அந்நாகத்தை நோக்கி கோலுடன் ஓட அது அவனைக் கொத்தியது. வலிப்பு வந்து அவன் விழுந்து மண்ணில் சுழன்றான். மெல்ல உடல்நெளிவுகொண்டு எழுந்து நாகமென நெளிந்தான். தன் மேல் இருந்த அணிகளை அவை அனலென சுடுவதுபோல நடித்து கழற்றி வீசினான். சீறி நெளிந்தும் சொடுக்கி எழுந்தும் நாகமென்று சுழன்று இரு கைகளையும் தலைக்குமேல் விரித்து படம் காட்டி குனிந்து மூன்றுமுறை தரையைக் கொத்தியபின் மெல்ல படிந்து புன்னகையுடன் கண்மூடினான்.

தண்டகர் சிரித்தபடி கைதூக்க நாகர்கள் தங்கள் கோல்களைத் தூக்கி அவனை வாழ்த்தினர். அவன் பணிந்தபடி சென்று தண்டகரை வணங்கினான். அவர் கையை அசைக்க அடிக்கப்போகிறார் என அஞ்சி திடுக்கிட்டு இரண்டு முறை சுழன்று பின்னால் சென்றான். அவர் சிரித்துக்கொண்டே அருகழைக்க மீண்டும் அணுகினான். அவர் பரிசு கொடுக்க திரும்புகையில் மீண்டும் துள்ளி பின்னால் சென்றான். பீமனைச் சூழ்ந்திருந்த குழந்தைகள் சிரித்துத் துள்ளி குழைந்து விழுந்தனர். பீமனே சிரித்துக்கொண்டிருந்தான்.

தண்டகர் அளித்த பரிசை முகர்ந்து பார்த்தான். பின்னர் அதைக்கொண்டு இடையை சொறிந்தான். முழுமையாகவே குரங்காக மாறி பாய்ந்து ஒருவன் தோளிலேறி தாழ்ந்த கிளையொன்றில் அமர்ந்து உர்ர் என பல்லைக் காட்டியபின் அப்படியே கிளைகளினூடாகச் சென்று மறைந்தான்.

குழந்தைகளும் முதியவர்களும் ஒரேபோல சிரித்து அமைய தண்டகர் எழுந்து வணங்கினார். தன் கோல்தூக்கி அனைவரையும் வாழ்த்திவிட்டு இருவர் தோள்பற்ற நடந்து சென்றார். பீமன் ஒவ்வொரு குழந்தையையாக மேலே தூக்கிப்போட்டு பிடித்து அவர்களின் அன்னையரை நோக்கி வீசினான். "நான் நான்" என குழந்தைகள் வந்து நின்றன. அதில் ஒருவன் உளமும் உடலும் வளராத இளைஞன். பீமன் அவனையும் தூக்கி முத்தமிட்டு இருமுறை தூக்கி வீசினான். அவர்கள் "இன்னும் இன்னும்" என்று துள்ளினர். மூதன்னை ஒருத்தி "போதும், செல்லுங்கள்" என பொய்ச்சீறல் விடுக்க பீமன் "நாளை... இனிமேல் நாளை" என்றான். அவர்கள் ஒவ்வொருவராக கலைந்துசென்றனர்.

மீண்டும் தன் குடிலை அவன் அடைந்தபோது முண்டன் ஆடைகளை கழற்றிக்கொண்டிருந்தான். இரண்டு மரவுரியாடைகளை அவன் அணிந்திருந்தான். ஒன்று எளிதில் பலவகையாக கழற்றும் தன்மைகொண்டிருந்தது. கீழே அவனுடைய கோல் வளைந்து கிடந்தது. பீமன் குனிந்து அதை எடுத்தான். அதை சற்றே திருப்பியபோது உறுதியான கோலென்றாயிற்று. மறுபக்கம் திருப்பியபோது கொடியென்று தோன்றியது. அதை அழுத்திச் சுருக்கி ஒருகணுவுக்குள் இன்னொன்றைச் செலுத்தி உள்ளங்கையளவுள்ள குழாயாக ஆக்கமுடிந்தது. "இதை கொண்டுவந்திருந்தீரா?" என்றான் பீமன்.

“இல்லை, இப்போது செய்தேன். ஒன்றுவிட்டு ஒன்றென மூங்கில் கணுக்களைவெட்டி செருகிச் செய்வது. மிக எளிது” என்றான் முண்டன்.

“இனியவர்கள்” என்றபடி பீமன் பாயை எடுத்து தரையில் விரித்தபின் தலையணைக்காக தேடினான். மென்மரத்தாலான தலையணை நன்கு தேய்க்கப்பட்டு தலைக்கான குழிவுடன் அப்பால் கிடந்தது. அதை எடுத்துக்கொண்டுவந்து போட்டான். “இனிய குளிர்... நாம் நன்கு துயின்றே நாளாயிற்று எனத் தோன்றுகிறது.” முண்டன் “இல்லை, நாம் காலையில் எழுந்தாகவேண்டும்” என்றான். “ஏன்?” என்றபடி பீமன் படுத்தான். “இங்கே காலையில் நாகதேவர்களுக்கு பூசெய்கை செய்கிறார்கள்” என்றபடி வெறுந்தரையில் முண்டன் படுத்தான். “அங்கே அவர்களின் தெய்வநிரையை கண்டேன். படையலுணவையும் மலர்களையும் காலையில் படைத்திருப்பார்கள் என எண்ணினேன்.” பீமன் அவன் மேலும் சொல்லட்டுமென காத்திருந்தான். “அத்தெய்வநிரையில் குருநகரியின் அரசர் நகுஷனையும் கண்டேன்” என்றான் முண்டன்.

காலையில் சிறுமுழவின் ஒலி கேட்டதுமே முண்டன் எழுந்து பீமனை உலுக்கி எழுப்பினான். “பூசெய்கை தொடங்கிவிட்டதென எண்ணுகிறேன். எழுக!” என்றான். “நான் அதற்கு ஏன் வரவேண்டும்? நீரே சென்று வந்து என்ன நடந்தது என்று சொல்லும்” என்றபடி பீமன் புரண்டு படுத்தான். “சரி, நானும் துயில்கொள்கிறேன்” என முண்டன் திரும்ப படுத்துக்கொள்ள சில கணங்களுக்குப்பின் பீமன் மெல்ல திரும்பி “நான் எழுவதற்கு சித்தமாகவே இருக்கிறேன். ஆனால் ஏன் செல்லவேண்டும்? அவர்களின் பூசனை அவர்களுக்குரியது

அல்லவா?” என்றான். முண்டன் ஒன்றும் சொல்லவில்லை. “மேலும் நான் எந்தப் பூசனைகளிலும் அரசுமுறைச் சடங்குகளிலும் பொதுவாக கலந்துகொள்வதுமில்லை.”

முண்டன் குறட்டையொலி எழுப்பினான். பீமன் எழுந்து அவனை உலுக்கி “சரி, செல்வோம்” என்றான். முண்டன் கண்களைத் திறந்து “எங்கே?” என்றான். “பூசனைக்கு.” முண்டன் “எந்தப் பூசனைக்கு?” என்றான். “விளையாடாதீர். நாகர்களின் குலதெய்வ வழிபாட்டுக்கு.” முண்டன் “நல்ல துயில் வந்து அமைகிறது… நாளைக்கு செல்வோமே” என்றான். “கிளம்பும்” என பீமன் அவனைப் பிடித்து உலுக்கினான். “நாம் இன்றே இங்கிருந்து கிளம்பியாகவேண்டும்” என்றான். முண்டன் வாயைத் துடைத்தபடி “இனிய துயில். எடைமிக்க வெம்மையான மரவுரிப் போர்வைபோல என்னை மூடியது. அதில் நான் குரங்காக இருந்தேன்” என்றான்.

அவர்கள் கைகால்முகம் கழுவி பூசெய்கை நிகழ்ந்த இடத்திற்கு சென்றனர். தொலைவிலேயே அங்கே பந்தங்கள் எரிவது தெரிந்தது. நிழல்கள் எழுந்து அகன்று மரக்கிளைகளின் இலைப்பொதிகளின்மேல் விழுந்து ஆட மனித உடல்களும் தழலென செந்நிறம் கொண்டிருந்தன. ஓசைக்கு அஞ்சிய பறவைகள் எழுந்து வானில் சிறகடித்தன. வானில் விடிவெள்ளி இல்லை என்பதை பீமன் கண்டான். “இன்னும் முதற்புலரியே எழவில்லை” என்றான். “நாம் விழித்துக்கொள்வதே புலரி” என்றான் முண்டன். பீமன் சினத்துடன் திரும்பி நோக்க “காலையில் நாம் பேசுவதே தத்துவம். சினம் கொள்ளவேண்டாம்” என்றான் முண்டன். பீமன் “மேலும் வேடிக்கைகள் வேண்டாம்… நான் சீர்நிலையில் இல்லை” என்றான். முழவொலி குரைப்பதுபோல

கேட்டுக்கொண்டிருந்தது. அங்கே நாலைந்துபேர் மட்டுமே நின்றிருந்தனர்.

அவர்கள் அணுகியதும் அனைவரும் திரும்பி நோக்கினர். ஒருவர் ஏதோ சொல்லவர பிறிதொருவர் மெல்லிய ஒலியால் அடக்கினார். அவர்கள் சென்று நின்றுகொண்டதும் ஒருவர் குங்குமத் தாலத்தை எடுத்துவந்து அள்ளி அவர்களின் முகத்தில் பூசினார். ஓலையாலான நாகபடமுடியை அவர்களுக்கும் சூட்டினார். அங்கே நிரையாக அமைந்திருந்த தெய்வங்களில் நகுஷனை பீமன் கண்டடைந்தான். இடைக்குக்கீழே நாக உடலும் மேலே மானுட உடலும் முகமும் கொண்டிருந்தான். வலக்கையில் அமுதகலமும் இடக்கையில் செங்கோலும் இருந்தது. அப்பால் ஒரு சிறிய உலையில் மண்பானையில் அன்னம் வெந்துகொண்டிருந்தது. அருகில் ஒரு முயல் கால்கள் கட்டப்பட்டு காத்திருந்தது.

முழவோசை நடைமாறுபாடு கொண்டது. தண்டகர் வருகிறார் என எண்ணி திரும்பி நோக்கிய பீமன் அங்கே இருவர் கைகளில் தாலங்களுடன் காத்து நிற்பதைக் கண்டான். ஒருவரின் தாலத்தில் மலர்களும் இன்னொருவரிடம் செந்தூரமும் இருந்தன. பந்தத்துடன் ஒருவர் அருகே நின்றிருந்தார். முழவு விசைகொண்டு துள்ளிச்செல்லத் தொடங்கியது. மலையிறங்கும் புரவி. அனைத்தையும் வாளால் கிழித்து எழுவதுபோல அலறலோசை கேட்டது. உடலை விதிர்க்கச் செய்யும் மானுடம் கடந்த ஓசை. குடிலில் இருந்து பாய்ந்து வந்தவரை தண்டகர் என ஒருகணம் கழித்தே பீமன் அறிந்தான். சிறுத்தையின் பாய்ச்சலுடன் வந்து அந்தப் பந்தத்தை பிடுங்கிக்கொண்டார். அதைச் சுழற்றியபடி வெறிகொண்டாடியபோது அனலால் ஆன சுழலுக்குள் அவர்

நீந்துவதுபோலிருந்தது. அனல்வளையங்களைச் சூடி அதனுள் வருவதாகத் தோன்றியது.

இருமருங்கும் நின்றவர்கள் மலரும் செந்தூரமும் அள்ளி வீச அவர் சிவந்து பந்த ஒளியில் காற்று விளையாடும் தழலென்று நின்றாடினார். புலியின் உறுமல். யானைப் பிளிறல். ஓநாய்க் கூவல். ஒன்றோடொன்று கலந்து அவை உருவாக்கும் பிறிதொரு பெருங்குரல். அவர் வந்து தெய்வங்களின் முன்னால் சென்று நின்றார். பந்தச்சுடரால் தெய்வங்களை உழிந்தார். அந்த முயலை எடுத்து அவர் முன்னால் இட்டனர். நாகமென உடல்வளைத்து அதை கவ்வி எடுத்தார். பற்களாலேயே அதன் வயிற்றைக் கவ்வி உடைத்து குருதி வழிய தலையை உதறினார். குருதி அவர் உடலில் பரவியிறங்கியது. துடித்த முயலை எடுத்து நாகமூதாதையருக்கு முன்னால் படைத்தார்கள். ஆடி நின்று உடல்நடுங்கி மெய்ப்புகொண்டார். பின்னர் அப்படியே இருட்டிலிருந்து அறுபட்டு பின்னால் சரிந்து விழுந்தார்.

அவரை இருவர் முகத்தில் நீர் தெளித்து விழிக்கச் செய்தனர். இருவர் அந்த முயலைப் பகுந்து குருதியை அச்சோற்றுடன் பிசைந்து சிறிய கவளங்களாக்கி மலருடன் இலைகளில் வைத்து தெய்வங்களுக்கு படைத்தனர். பந்தங்களின் ஒளியில் கற்சிலைகள் உயிர்கொள்வது தெரிந்தது. இளைய பூசகர் ஒவ்வொரு தெய்வத்திற்கும் மலரிட்டு அடிவணங்கி மலர் எடுத்து சென்னிசூடி சுடராட்டு காட்டினார். மெல்ல கையூன்றி புரண்ட தண்டகர் இருவர் பற்றி தூக்க உடல் சொடுக்கி நடுங்க எழுந்து நின்று தெய்வங்களை கைகூப்பி வணங்கினார். முதல்சுடர் அவருக்கு காட்டப்பட்டதும் தொட்டு வணங்கினார்.

அவர் செல்லும்பொருட்டு திரும்பியதும் முண்டன் “முதுநாகரே, நீங்கள் எங்களுக்காக அனந்தம் நோக்கி நெறியுரைக்கவேண்டும்” என்றான். அவர் திரும்பி “நான் அதை நோக்கி நெடுங்காலமாகிறது” என்றார். “நாங்கள் இங்கிருந்து எங்கு செல்வதென்று அறியாமலிருக்கிறோம். அதில் ஏதேனும் வழி தெரியுமென எண்ணுகிறோம்” என்றான். “அது வழிகாட்டக்கூடியதல்ல இளையவனே, வழி கலக்கும் சுழி” என்றார் தண்டகர். “கலங்கித் தெளிகையில் எழும் என எண்ணுகிறேன்” என்று பீமன் சொன்னான். அவர் இருவரையும் நோக்கியபின் தன்னை மீண்டும் அமரவைக்கும்படி தூக்கியவர்களிடம் சொல்லிவிட்டு மெல்ல அமர்ந்தார். காட்டில் சுள்ளிகள் ஒடிவதுபோல அவர் எலும்புகள் ஒலித்தன. அமர்ந்ததும் அவர்களையும் அமர்க என கைகாட்டினார்.

நாகநச்சு கலக்கப்பட்ட ஏனத்தை இரு நாகர்கள் கொண்டுவந்து அவர் முன் வைத்தனர். அவர் கைகளைக் கோத்து மடியில் வைத்து விழிமூடி உளம் குவித்து நெடுநேரம் இருந்தார். பின்னர் விழிதிறந்தபோது நாகமென மூச்சு சீறினார். விழிகளும் நாகங்களின் இமையாநோக்கு கொண்டிருந்தன. “நோக்குக!” என அவர் பீமனிடம் சொன்னார். “கூர்ந்து நோக்குக! இந்நீர்ச்சுழி ஒரு ஆடி. ஆடியல்ல சாளரம். சாளரமல்ல இளையவனே, இது ஒரு வானம். வானமல்ல, முடிவின்மை என்றறிக! நோக்குக!” பீமன் அதை குனிந்து நோக்கினான். நீலநீர்ப்பரப்பில் அவன் நிழல் தெரிந்தது. ஒரு குமிழி அதன் மேல் அலைந்தது. இன்னொரு சிறுகுமிழி வந்து ஒட்டிக்கொண்டது.

“தெரிவது என்ன?” என்றார் தண்டகர். அவன் தன் முகத்தை நோக்கிக்கொண்டிருந்தான். அவன் விழிகள் பதைப்புடன் அவனை நோக்கின. விழிவிலக்க எண்ணினாலும்

அவ்விழிகளால் அவன் ஆட்கொள்ளப்பட்டான். “சொல்க, நீ பார்ப்பதென்ன?” என அவனிடம் எவரோ கேட்டனர். அவனை நோக்கிய விழிகள் திகைப்பு கொண்டன. பின்னர் அடையாளம் கண்டுகொண்டன. அந்த முகம் தெளிவுகொண்டபடியே வந்தது. அது தன் முகம் அல்ல என அவன் உணர்ந்தான். மென்புகையென மீசை அரும்பிய இளைய முகம். பெருந்தோள்கள், மஞ்சள்நிறம். “அவன் பெயர் புரு” என்றார் தண்டகர். “அவன் தன் முதுதாதை புரூரவஸின் அதே முகம் கொண்டு பிறந்தான். ஆகவே புரு என அவனுக்கு பெயரிட்டனர்.”

பீமன் அந்த விரிந்தகன்ற தோள்களை நோக்கினான். “அவன் அரக்கர்குலத்துக் குருதிகொண்டவன். ஆகவே அப்பெருந்தோள்கள் அமைந்தன அவனுக்கு…” என்றார் தண்டகர். அவனால் அத்தோள்களை விட்டு விழியகற்ற முடியவில்லை. அறியாது எழுந்த நீள்மூச்சால் அவன் தோள்கள் அசைந்தபோதும் அத்தோள்கள் அலைகொள்ளவில்லை. ஆனால் மெல்ல நீர்ப்படலம் நெளிந்தது. பிறிதொரு பெருந்தோள் தெரிந்தது. “அவன் பிரவீரன், ஏழுபுரவித் தேரை கைகளால் பற்றி நிறுத்தியவன். அவனை சந்திரகுலத்து அரக்கன் என்றனர் கவிஞர்” என்றார் தண்டகர்.

மீண்டுமொருமுறை உருவம் மாறியது. “சிங்கத்துடன் விளையாடிய அவனை பரதன் என்றனர்” என்றது அவர் குரல். மீண்டுமெழுந்த முகத்தை அவன் நோக்கியதுமே “யானைகளை வென்றவன், ஹஸ்தி. பெருநகரை அமைத்து கோல்சூடியவன்” என்றது குரல். “அதோ, அவன் குரு. பின்னர் எழுந்தவன் பீமன்.” பீமன் தோள்விரிந்த திருதராஷ்டிரனின் முகத்தை நோக்கினான்.

அவர் உதடுகளால் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தார். “உன் முகம்” என்றார் தண்டகர். பீமன் பெருமூச்சுவிட்டான். அவன் உடல் மெல்ல அசைய மீண்டும் அலையிளகியது நீர்ப்பரப்பு.

“நகுஷனின் தனிமை யதி என்னும் மைந்தனாகப் பிறந்தது. அவன் துயரம் சம்யாதியாகியது. அவன் சினம் ஆயாதியாகியது. வஞ்சம் அயதியாகியது. விழைவு துருவனாக ஆகியது. பாண்டவனே, அவன் கொண்ட காமம் யயாதியெனும் மைந்தனாகியது. கணுக்களில் கூர்கொள்வதே முளையென மரத்திலெழுகிறது. அறிக, தந்தையரில் கூர்கொள்வதே மைந்தரென்று வருகிறது” தண்டகர் சொன்னார். “ஒருமடங்கு விழைவும் இருமடங்கு வஞ்சமும் மும்மடங்கு சினமும் நான்மடங்கு துயரும் ஐந்து மடங்கு தனிமையும் கொண்டிருந்தான் நகுஷன். அவன் நூறுமடங்கு கொண்டிருந்த காமமே யயாதி.”

“யயாதி பிற ஐவரையும் வென்று குருநாட்டின் முடிசூடினான்” என்றார் தண்டகர். “தன் பொன்றாப் பெருவிழைவாலேயே சக்ரவர்த்தியென்றானான். ஐவகை நிலங்களையும் வென்றான். முடிமன்னர் கொண்டுவந்து காலடியில் சேர்த்த பெருஞ்செல்வத்தால் கருவூலத்தை நிறைத்தான். அள்ளிக்கொடுத்து அதை ஒழித்து புகழ்நிறைத்தான். வேள்விகள் செய்து விண்ணமர்ந்த இந்திரனுக்கு நிகரென்றானான்.” பீமன் நீலச்சுழியில் தெரிந்த புருவின் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தான். அது துயர்கொண்டிருந்தது. ஒருபோதும் சொல்லென உருக்கொள்ளாத துயரம் தன்னை விழியொளியென முகத்தோற்றமென உடலசைவென ஆக்கிக்கொள்கிறது. அத்துயரம் பெய்யாத் துளி. இறுகி

முத்தென்றாகும் ஒளி. அவன் பெருமூச்சுவிட்டான். புரு புன்னகை செய்தான்.

# மாமலர் - 48

**48. நில்லாத்துலா**

துலாவின் நடுமுள்ளென நடுங்கி நின்றிருக்கும்படியே அறத்தை தெய்வங்கள் அமைத்தன. எனவே தோன்றிய நாள்முதல் தேவரும் அசுரரும் போரிடுவது நின்றதில்லை. எவரும் முற்றிலும் வென்றதுமில்லை, முற்றழிந்ததுமில்லை. அழிந்தாலும் மீண்டு எழும் வல்லமை கொண்டிருந்தது தேவர்கள் கொண்டிருந்த அறம். ஒரு துளி ஆயிரமென கோடியென பெருகும் ஆற்றல் கொண்டிருந்தது அசுரர்களின் மறம். அமுதம் தேவர்களின் உணவு. நஞ்சே அசுரர்களுக்குரியது. அமுதோ நஞ்சின் இளையோள். தேவர்களின் ஆசிரியர் பிரஹஸ்பதி. அவருடைய முதல் மாணவராகிய சுக்ரரோ அசுரர்களுக்கு வழிகாட்டியென்றானார். அறிந்து கடந்தமையின் அமைதி பிரஹஸ்பதியில் நிறைந்திருந்தது. அறிந்து நிறையாத விசையே சுக்ரரை ஆண்டது. அப்போர் ஒருபோதும் முடிவுறுவதில்லை.

கசியப பிரஜாபதிக்கு திதியில் பிறந்த அசுரகுடியான தைத்யர்களில் பெரும்புகழ்பெற்ற ஹிரண்யகசிபுவும் ஹிரண்யாக்ஷனும் பிறந்தனர். ஹிரண்யகசிபுவுக்கு அனுஹ்லாதன், ஹ்லாதன், பிரஹ்லாதன், சம்ஹ்லாதன் என்னும் மைந்தர்கள் பிறந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் அசுரகுலம் பெருகிப்பரந்தது. சம்ஹ்லாதனில் ஆயுஸ்மான், சிபி, பாஸ்கலன் என்னும் மைந்தர்கள் பிறந்தனர்.

பிரஹ்லாதனிலிருந்து விரோசனன் பிறந்தான். விரோசனனின் மைந்தன் மகாபலி. அவன் மைந்தன் பாணன். ஹிரண்யாக்ஷனின் மைந்தர் சம்பரன், சகுனி, த்விமூர்த்தன், சங்கு, அஸ்வன் என்னும் அசுரகுலத் தலைவர்கள்.

பேராற்றல் கொண்ட தைத்யர்களில் ஒருவன் சூரபத்மன். அவனிடமிருந்து பானுகோபன், அக்னிமுகன், வஜ்ரபாகு, ஹிரண்யன் என்னும் மைந்தர்கள் பிறந்தனர். சிம்மவக்த்ரன் தாரகாசுரன் என்னும் பேராற்றல்மிக்க அசுரர்களும் அக்குலத்தில் எழுந்தவர்களே. சிம்மவக்த்ரனின் மைந்தன் மகாசூரன். தைத்யர்கள் நூறுமேனி முளைக்கும் விதைகள். விருத்திரன், நரகன், மகிஷன், ரக்தபீஜன் என அவர்களின் குலமூதாதையர் ஆயிரத்தொருவர். அவர்களின் குலங்களோ பன்னீராயிரம். அவர்களின் குடிகள் பதினெட்டு லட்சம். அவர்களின் எண்ணிக்கை கணம்கோடியென பெருகுவது. பெருகுவதால் அழிவின்மையை அடைந்தவர்கள் திதியின் மைந்தர்.

கசியபருக்கு திதியில் பிறந்த மைந்தனாகிய விருஷபர்வன் இறங்கி கங்கைக்கரையில் மகாதைத்யகம் எனும் நகரை அமைத்தான். அங்கு முடிசூடி அசுரர் குலம் செழிக்க ஆண்டான். அவன் கொடிவழி வந்த நூற்றெட்டாவது விருஷபர்வனின் ஆட்சியில் பாரதப் பெருநிலம் அசுரர்களின் கோலால் முழுதாளப்பட்டது. அவர்களின் சொல் செல்லாத மலையேதும் இமயத்தில் இருக்கவில்லை. கீழைக்கடல்களை அவர்களின் ஆணை ஆண்டது. நாவலந்தீவின் தென்முனையில் அவர்களின் கொடி பறந்தது. மேலை வெம்பாலையில் அனைத்து சாலைகளிலும் அவர்களின் காவல் அமைந்திருந்தது. அவர்களின் வேதமே நெறியென்று அமைந்தது.

மண்ணை வெற்றி கொண்டபின் விண்ணிலும் கொடி நிறுத்த விருஷபர்வன் விழைந்தான். ஒவ்வொருநாளும் அதற்கென வழியெண்ணி தன் அரண்மனையில் நிலையழிந்து உலவினான். அந்நாட்களில் தன் அவைக்கு வந்த நாரதரின் கால்களைப் பணிந்து "விண்ணுலாவியாகிய முனிவரே சொல்லுங்கள், அரசனின் பாதை எது?" என்றான். நாரதர் "அரசன் விதையெனில் முளையாகவேண்டும். செடியெனில் மரமாகவேண்டும். மரமெனில் காடாகவேண்டும். எந்நிலையிலும் வளர்ந்துகொண்டிருப்பதே அவனுக்குரிய நெறி" என்றார்.

"முனிவரே, நான் மண்ணை முழுதாள்கிறேன். இனி நான் செல்ல விண் ஒன்றே உள்ளது" என்றான் விருஷபர்வன். "நான் மண்ணில் அடங்குவேன் என்றால் என்ன ஆகும்?" நாரதர் "போதுமென்று எண்ணும் அரசனின் அரச இயல்பு ஒளிமங்கும். தேங்குவது நதியல்ல, பசியற்றது நெருப்பும் அல்ல" என்றார். "ஆம், நான் விண்ணை வெல்ல விழைகிறேன். இந்திரனின் அரியணையே இனி என் இலக்கு" என்றான் விருஷபர்வன். "சொல்லுங்கள், நான் விண்ணை வெல்லும் வழி எது?"

நாரதர் "உன் விழைவு பிழையல்ல. அதில் நீ வீழ்வதும் அறமே" என்றார். "இன்று தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் உள்ள வேறுபாடு ஒன்றே. அங்கு அவர்களை சொல்லளித்து வழிநடத்த மாமுனிவராகிய பிரஹஸ்பதி இருக்கிறார். நிகரான ஒருவர் உங்களுக்கும் அமையும்வரை தேவர்களுடன் நீங்கள் நிகர்நின்று போரிட இயலாது" என்றார். "முனிவரே சொல்லுங்கள், பிரஹஸ்பதிக்கு நிகரான முனிவர் யார்?" என்று விருஷபர்வன் கேட்டான்.

“ஒரு பேரறிஞருக்கு நிகரான பிறிதொரு அறிஞர் அவரது மாணவராகவே இருக்க இயலும்” என்று நாரதர் சொன்னார். “அதை அறியாத அறிஞரில்லை. எனவே தன் அறிதலில் ஒரு பகுதியை ஒருபோதும் அவர் மாணவனுக்கு அளிப்பதில்லை. தனக்கு இறுதித்துளி அறிவு அளிக்கப்படவில்லை என்று அறியாத மாணவனும் இல்லை. தான் அறிந்தவற்றிலிருந்து அவ்வறியாத பகுதியை கற்கும்பொருட்டு கற்பனையையும் அறிவையும் ஆழத்தையும் கூர்தீட்டிச் செலுத்தி தன் ஆசிரியன் அறியாத பிறிதொன்றை அவன் சென்றடைகிறான். ஆசிரியனை மாணவன் கடந்து சென்றாகவேண்டும் என்பது இப்புவி வாழவேண்டுமென்று எண்ணும் பிரம்மத்தின் ஆணை” என்ற நாரதர் “பிரஹஸ்பதியின் மாணவர் சுக்ரர். பிரஹஸ்பதியின் ஆழத்து அமைதியிலிருந்து முளைத்தெழுந்த அனல் அவர்” என்றார்.

விருஷபர்வன் கங்கைக்கரையில் குடிலமைத்து தவம்செய்திருந்த சுக்ரரை சென்று தாள்வணங்கி அசுரர்களின் ஆசிரியராக வந்து அமையும்படி வேண்டினான். “நான் உனக்கு அனைத்து அறிதல்களையும் அளிக்க முடியும், அசுரர் தலைவனே. ஆனால் தேவருக்கு நிகராக உன்னை அமைத்தல் என்னால் இயலாது” என்று சுக்ரர் சொன்னார். “அமுது உண்ட தேவர்கள் அழியாப் பேறு கொண்டவர்கள். அசுரரோ அழிந்து மீளுருவாக்கம் கொள்பவர். சிறு ஒளித்துளி பேரிருளை விலக்குவதுபோல தேவர்களால் அசுரர்கள் அழிக்கப்படுகிறார்கள் என்பதே புடவியின் நெறி” என்றார்.

விருஷபர்வன் “ஆம், அந்த அறியமுடியாத எல்லையால் கட்டுப்படுத்தப்பட்ட பெருங்கடல் நாங்கள். அதை கடக்கும்பொருட்டே தங்கள் காலடிபணிய வந்தோம். தங்களால்

அது இயலுமென்று மாமுனிவராகிய நாரதர் சொன்னார்” என்றான். அச்சொல்லால் ஆழத்தில் ஒரு நச்சுத்துளி மகிழ்வுகொள்ள அதை கண்களிலிருந்த ஒளி வெளிக்காட்ட சுக்ரர் “ஆம், எதுவும் என்னால் இயல்வதே. ஆனால் அதை நான் இயற்ற விழையவில்லை. இங்கு எதன்மேல் அனைத்தும் அமைந்துள்ளதோ அதை நான் அழிக்கலாகாது, செல்க!” என்றார். அவரது உறுதியைக் கண்டு ஏமாற்றம்கொண்டு வணங்கி விருஷபர்வன் திரும்பிச்சென்றான்.

மறுநாள் விண்ணில் தேவரும் கந்தர்வரும் யக்ஷரும் கின்னரரும் கிம்புருடரும் கூடிய வேள்வி ஒன்றில் தன் ஆசிரியரைக்கண்டு பணிந்த சுக்ரர் விருஷபர்வன் தன்னிடம் வந்து வணங்கி உதவிகோரியதை சொன்னார். “அழிவின்மை அசுரர்களுக்குரியதல்ல என்பது புடவியின் பெருநெறிகளில் ஒன்று. அதை அவனுக்குணர்த்தி திருப்பி அனுப்பினேன்” என்றார். அப்போது மெல்லிய புன்னகை ஒன்று பிரஹஸ்பதியின் முகத்தில் வந்து மறைந்ததை அவர் கண்டார். ஆழ்புலன் ஒன்று கூர்மைகொள்ள “தாங்கள் எதை எண்ணி உவகை கொண்டீர்கள், ஆசிரியரே?” என்றார்.

தன்னை திரட்டிக்கொண்டு “தேவர்களின் அழிவின்மை அமுதத்தால் அமைகிறது. அசுரர்கள் அதை உண்ணவில்லை” என்றார் பிரஹஸ்பதி. “ஆம், அதை அனைவரும் அறிவோம். தாங்கள் எண்ணி புன்னகைத்தது அதனால் அல்ல” என்று சுக்ரர் சொன்னார். “அதை நான் அறிந்தாகவேண்டும், ஏனென்றால் அப்புன்னகை என்னை நோக்கி தொடுக்கப்பட்டது.” “சஞ்சீவினி என்னும் ஊழ்கநுண்சொல் ஒன்றுள்ளது. தேவர்களின் அழிவின்மையை பிறருக்கும் அளிப்பது அது. அதை எண்ணிக்கொண்டேன்” என்றார் பிரஹஸ்பதி. “தேவர்களின்

அழிவின்மை என்பது ஒரு சொல்லின் அழிவின்மை மட்டும்தான்.”

“அதை தாங்கள் அறிவீர்களா?” என்று சுக்ரர் கேட்டார். “இல்லை. அதை முதல் தெய்வங்கள் மூன்றே அறியும். தேவரோ முனிவரோ அதை எய்த இயலாது” என்று பிரஹஸ்பதி சொன்னார். “அப்படியென்றால் அதை நீங்கள் எவ்வண்ணம் அறிந்தீர்கள்?” என்றார் சுக்ரர். “என் ஆசிரியரான அகத்தியர் அதைப்பற்றி சொன்னார். அறியத்தேவையில்லாத அறிவு அது. அதை அறிந்தவன் அறியாமையின் ஆணவத்தை அடையக்கூடும் என்றார்.” சுக்ரர் ஆசிரியர் சொன்னதை எண்ணிக்கொண்டிருந்தார். பிரஹஸ்பதியின் அப்புன்னகையை அவரால் கடந்துசெல்ல முடியவில்லை.

மீண்டு தன் தவச்சாலை நோக்கி நடக்கையில் அவ்வெண்ணம் பெருகி குவிந்து மேலெழுந்தது. தன்னிடமிருந்து தன் ஆசிரியர் மறைத்துள்ள அறிதலின் உச்சம் அதுவே என்று எண்ணலானார். மாணவன் மிஞ்சிச் செல்லலாகாது என்று எண்ணும் ஆசிரியனின் சிறுமை. ஓர் அறிவின் முடிவு என ஒன்று உண்டு என்றால் அதுவே அவ்வறிவின் மையமும் உயிரும். அதையறியவில்லை என்றால் எதையுமே அறியவில்லை என்றே பொருள்.

மறுநாள் பிரஹஸ்பதியின் குருநிலைக்குச் சென்று அவரது தனியறைக்குள் நுழைந்து நெற்றி மண்பட வணங்கி காலடியில் அமர்ந்து சுக்ரர் கேட்டார் “ஆசிரியரே, தாங்கள் அறிந்தவற்றில் நானறியாது எஞ்சுவதென்ன?” அவர் விழிகளை நோக்கி “நான் அறிந்தவை அனைத்தையும் உனக்களித்துவிட்டேன். நான் அடைந்தவை சில உன்னால் அடையமுடியாதவை” என்றார். சினத்தை அடக்கியபடி “நான் அடைவதற்கரியது எது?” என்றார்

சுக்ரர். “அடக்கம், இவ்வினாவை என்னிடம் கேட்கலாகாதென்று நீ அறிவாய். கேட்காமலிருக்க முடியவில்லை உன்னால்.”

தன் சினத்தையே ஆற்றலெனக்கொண்டு அக்கணத்தின் தடையை கடந்துசென்று சுக்ரர் கேட்டார் “சொல்லுங்கள், சஞ்சீவினி எனும் நுண்சொல்லை நீங்கள் அறிவீர்களல்லவா?” பிரஹஸ்பதி புன்னகையுடன் “ஏன் இந்த ஐயம் உனக்கு? அவை நடுவே உரைத்தேனல்லவா? முதல் மூவர் மட்டிலுமே அறிந்த சொல் அது. பிறர் அதை அறிந்தால் இப்புடவியின் நெசவே மாறிப்போகும். ஆக்கத்தாலும் அழிவாலும் ஊடுபாவாக ஓடி அமைந்தது இவ்வெளி. ஒரு முடிச்சு அவிழ்ந்தால் இவையனைத்தும் அழியும்” என்றார். சினத்தை தன்னுள் நிறுத்தி எழுந்து வணங்கி சுக்ரர் வெளியேறினார். செல்லும் வழியில் ஓடிய சிற்றோடை அருகே நின்று ஒரு பிடி நீரள்ளி கிழக்கு நோக்கி நீட்டி தனக்கென ஆணையுறுதி ஒன்றை விடுத்தார். “ஆம், எனக்கு மறுக்கப்பட்ட சஞ்சீவினியை நான் அடைவேன். ஒருபோதும் அதை அடையாமல் அமையமாட்டேன்!”

தன் தவக்குடிலில் சென்றமர்ந்ததுமே பிற அனைத்தையும் ஒதுக்கி தன்னுள் ஒடுங்கி அதை தேடிச்செல்லலானார். உண்மையென ஒன்றுண்டேல் அது இப்புடவியில் எங்கேனும் இருக்கவேண்டும். புடவியில் எங்கேனும் ஒன்றுண்டேல் அது அதன் ஒவ்வொரு துளியிலும் அமைந்தாக வேண்டும். வெளியே ஒன்றுண்டேல் அது உள்ளிலும் அமைந்தாகவேண்டும். உள்ளே அமைந்ததை அறிய உள்நுழைவதொன்றே வழி. தன் உடலென்றும் உள்ளமென்றும் சித்தமென்றும் கனவென்றும் ஆழ்தலென்றும் பெருக்கென்றும்

ஆன ஒவ்வொன்றையும் தொட்டுத் தொட்டு இதுவல்ல இதுவல்ல என்று கடந்து சென்றார்.

ஒவ்வொன்றும் தன்னை ஒன்று நூறு ஆயிரம் என முடிவிலாது பெருக்கிக்கொண்டிருப்பதை கண்டார். உடலென்பது அவ்வளர்தலே. உள்ளமென்பது அப்பெருக்கே. சித்தமென்பது அத்தொடர்தலே. கனவென்பது அப்பரவுதல். ஆழமென்பது அச்சுழிப்பு. முழுமை என்பது மேலுமொன்றின் முழுமை நோக்கி எழுதல். ஒவ்வொன்றும் தான் பிறிதொன்றாயின. தன்னை நுண்மையாக உருமாற்றின. உருமாறும்பொருட்டு அழிந்தன. அழிந்தமையிலிருந்து எழுந்தன. அழியாத ஒன்றை எங்கும் அவரால் காண முடியவில்லை.

ஆயிரம் அகஆண்டுகளுக்குப்பின் அவர் அறிந்தார், அனைத்தும் மாறும் என்றால் அனைத்தும் இல்லையென்றே பொருள். இவையனைத்தும் இங்கிருப்பதே மாறுதல்களுக்கு அப்பால் மாறாத ஒன்று உள்ளதென்பதற்கு சான்று. பிறந்திருக்கும் மானுடரில் மாறாது கடந்து செல்கின்றன முகங்கள். முளைத்து அழிந்து முகிழ்ப்பவை அனைத்திலும் நிலைத்திருக்கின்றன வடிவங்கள். அழிந்து உருவாகும் அனைத்திலும் அழியாதிருப்பதே அதுவென்று தன்னை காட்டுகிறது. பின்னர் ஒரு கணத்தில் அவர் அதை கண்டுகொண்டார். விழிதிறந்து நிலம் தொட்டு “ஆம்! ஆம்! ஆம்!” என்று மும்முறை சொன்னார். சஞ்சீவினியென்னும் நுண்சொல்லை அவர் அடைந்தார்.

எழுந்தபோது இடைவரை சடை வளர்ந்து மடிமீது தாடி விழுந்து உடல் மெலிந்து விழி குழிந்து பற்கள் உதிர்ந்து பேயுருக்கொண்டிருந்தார். மெல்ல நடந்து வெளிவந்து அவ்வழி சென்ற இடையப் பெண்ணொருத்தியிடம் இளம்பால் இரந்து

அவள் குடம் சரித்துக் கொட்டிய அமுதை ஏழுமுறை உண்டு மீண்டார். உயிர்மீண்டதும் மீண்டும் நடந்து தன் ஆசிரியரின் தவக்குடிலை அடைந்தார். வெளியே நின்று “பிரஹஸ்பதி முனிவரை வெளியே வரச்சொல்க! மெய்யுணர்ந்த சுக்ரன் வந்துள்ளேன்” என்றார்.

அவ்விலக்கமும் ஆணையும் பிரஹஸ்பதியின் மாணவர்களை அச்சுறுத்தியது. ஒருவர் சென்று சொல்ல பிரஹஸ்பதி புன்னகையுடன் வெளிவந்தார். “வருக, சுக்ரரே!” என்றார். “உம்மிடம் சொல்பெற நான் வந்த காலம் முடிந்துவிட்டது. நீர் அறிந்த சஞ்சீவினி இன்று எனக்கும் தெரியும். மெய்யறிதலில் நாமிருவரும் அணுவிடை குறையாத நிகர்நிலை கொண்டிருக்கிறோம். ஒருவேளை நீர் அறியாததும் நான் அறிந்திருக்கக்கூடும்” என்றார் சுக்ரர். பிரஹஸ்பதி சிரித்து “சஞ்சீவினியை நான் அறியவில்லை. தேவரோ மானுடரோ அதை அறியவும் இயலாது” என்றார்.

“நானறிவேன்” என்று ஓங்கி தன் தொடையில் அறைந்தார் சுக்ரர். “இதோ...” என்று குனிந்து கீழே விழுந்து கிடந்த சருகொன்றைத் தொட்டு அச்சொல்லை சொன்னார். உயிரும் ஒளியும் மென்மையும் மீண்டு சருகு இளந்தளிராயிற்று. “சுட்டுங்கள், இறந்த எதையும்! இக்கணமே அதை உயிர் கொண்டெழச் செய்து காட்டுகிறேன்” என்றார் சுக்ரர். திரும்பி அப்பால் முன்பெங்கோ இறந்து எலும்பெனக் கிடந்த பறவை ஒன்றை நோக்கி அந்நுண்சொல்லை சொன்னார். உயிர்கொண்டு சிறகடித்துப் பறந்து அகன்றது ஒரு காகம்.

திகைத்து சொல்லற்று நின்ற பிரஹஸ்பதியை நோக்கி அத்திகைப்பாலேயே அவர் அந்த ஊழ்கச்சொல்லை அறியார் என உணர்ந்து “சஞ்சீவினியை நானறிவேன். நீர் அறிந்த

சஞ்சீவினியால் ஓருயிரையேனும் எழுப்பிக் காட்டும்! இல்லையேல் என் அடிபணிந்து என் மாணவரென்று அமையும்” என்றார் சுக்ரர். பிரஹஸ்பதி “சஞ்சீவினியை நானறியேன் என்று உம்மிடம் சொன்னது உண்மை. ஆம், அறியேன்” என்றார். “எனில் இக்கணமே என் அடிபணிக! இனி நீர் தேவர்களுக்கு ஆசிரியர் அல்ல. அப்பொறுப்பை நானே ஏற்கிறேன்” என்றார். பிரஹஸ்பதி “அடிபணிவதில் எப்போதும் தயங்கியவனல்ல. ஆனால் தேவர்குலத்து நல்லாசிரியரென்பது நான் அமர்ந்திருக்கும் இடமல்ல. தேவர்களால் எனக்கு அளிக்கப்பட்டுள்ளது அது. அதை தேவரே மறுக்கவேண்டும். தேவர் தலைவரிடம் சென்று பேசுக!” என்றார் பிரஹஸ்பதி.

“ஆம், அதை செய்கிறேன்” என்று சொல்லி சுக்ரர் திரும்பி நடந்தார். இந்திரனின் அவைக்குள் எவரும் தடுக்காது உள்ளே நுழைந்து, அங்கிருந்த முனிவரும் தேவரும் திகைத்தெழுந்து நிற்க, முகமனோ வாழ்த்தோ உரைக்காது உரத்த குரலில் “இந்திரனே, இது என் ஆணை! உன் முதலாசிரியர் பிரஹஸ்பதியைவிட மேலும் அறிந்தவன் நான். இனி அவரல்ல, நானே உன் குலத்துக்கு ஆசிரியரென்று அமரவிருக்கிறேன்” என்றார். சினத்துடன் ஏதோ சொல்லெடுத்து பின் அதை தனக்குள் அடக்கி தருவித்த புன்னகையுடன் கைகூப்பி இந்திரன் “முனிவரே, அறிந்தவற்றால் அவர் எங்களுக்கு ஆசிரியர் அல்ல. ஆனவற்றால் அங்கு அமர்ந்திருக்கிறார். நீங்கள் அறிந்தவை எவ்வகையில் எங்களுக்கு உதவக்கூடும் என்று சொல்லுங்கள்” என்றான்.

சுக்ரர் “நான் சஞ்சீவினி எனும் நுண்சொல்லை அறிவேன். இறந்தவரை உயிர்ப்பிப்பேன்” என்றார். இந்திரன் மெல்ல நகைத்து “அதனால் எங்களுக்கென்ன பயன்? நாங்கள்

இறப்பதில்லையே?” என்றான். சினம் கொண்டு உடல் நடுங்க “நானறிந்த இறுதி மெய்மை இது” என்றார் சுக்ரர். “ஆம், ஆனால் அது எங்கள் அன்றாட இயல்பு. சுக்ரரே, எழுவது அரசனின் இயல்பு. அவனருகே நின்று அவ்வெழுச்சியை நிகர்செய்வதே ஆசிரியனின் பொறுப்பு. பொன்றா பொலியா நிகர்நிலையே ஆசிரியனின் மெய்யென கொள்ளப்படும். நீர் அடைந்த எதுவும் அதை உமக்கு அளிக்கவில்லை. இங்கல்ல எவ்வரசிலும் அமைச்சனென ஆசிரியனென அமையும் தகுதி உமக்கில்லை. சென்று வருக!” என்றான் இந்திரன்.

எழுந்த சினத்தால் கைகால்கள் பதற நிலைகொள்ள முடியாமல் தழலென நின்று ஆடியவராக சுக்ரர் கூவினார் “ஆம், செல்கிறேன். என்னை வருந்தியேற்று அமரவைக்க தைத்யர்களின் ஆசிரியபீடம் காத்துள்ளது. இங்கு சொன்ன இச்சொற்களின் மெய்ப்பொருள் என்னவென்று இன்னும் சில நாட்களில் அறிவாய்.” இந்திரன் “நீர் ஆணவம்கொண்டிருக்கிறீர். அழிவீர்!” என்றான். “பார்ப்போம்” என்று சொன்ன சுக்ரர் திரும்பி நடந்து மண்ணிறங்கி மகாதைத்யகத்தின் வாயிலில் வந்து நின்றார். அவரை வழிமறித்த அசுரனை நோக்கி “உனது அரசனிடம் சென்று சொல்! கோட்டைக்கு வெளியேவந்து என் தாள் பணிந்தால் என் வலக்காலை அவன் தலைமேல் வைக்க சித்தமாக இருக்கிறேன் என்று” என்றார்.

திகைத்து ஒருவரை ஒருவர் நோக்கி வீரர்கள் மறுசொல்லெடுப்பதற்குள் முதிய அசுரனொருவன் “இதோ சொல்கிறேன்” என்று சொல்லி புரவியிலேறி அரண்மனை நோக்கி சென்றான். சற்று நேரத்திலேயே தேரில் விரைந்து வந்த விருஷபர்வன் புழுதி படிந்த உடலைத் தட்டியபடி பாய்ந்திறங்கி ஓடிவந்து அவ்விரைவிலேயே முகம்

மண்ணில்பட எண் உறுப்புகளும் பொருந்த சுக்ரரின் கால்களில் தன் தலையை வைத்தான். வலக்காலை தூக்கி அவன் தலைமேல் வைத்து "உன் குலத்திற்கு இறப்பின்மையை அளிக்கிறேன், அசுரகுலத்தரசே" என்றார் சுக்ரர்.

சுக்ரர் விருஷபர்வனின் அமைச்சராக ஆன செய்தியை அறிந்தபோதும்கூட அதன் நிகழ்பொருள் என்னவென்று இந்திரன் உணரவில்லை. "ஆயிரம் தைத்யர்குலங்களை கண்டிருக்கிறோம். பல்லாயிரம் முறை அவர்களுடன் போரிட்டிருக்கிறோம். நிலமென ஒன்று எஞ்சவேண்டுமென்று எண்ணும் பிரம்மம் எங்கோ கோல் கைக்கொண்டு அரியணை அமர்ந்திருக்கும்வரை கடல் கரைகடக்க முடியாதென்றறிக! அவர்கள் விரும்புவதை இயற்றட்டும்" என்று தன் அவையில் அமர்ந்து ஏளனமாக சொன்னான்.

சுக்ரர் விருஷபர்வனின் அசுரகுருவாக வந்த செய்தியை மண்ணெங்கும் பரவிக்கிடந்த தைத்யர்கள் அறிந்தனர். குடிகளாகவும் குலங்களாகவும் திரண்டு பாடியும் ஆடியும் மகிழ்வு கொண்டாடி அவர்கள் மகாதைத்யகத்தை வந்தடைந்தனர். கார்காலத் தொடக்கத்தில் முகில்கணங்கள் விண் நிறைப்பதுபோல அசுரப்படை பெருகியது. அவர்களின் போர்முரசின் ஓசை இடியென அமராவதியில் ஒலித்தது. "மீண்டும் போருக்கெழுகிறார்கள். காடு தன்னைத் தானே எரியூட்டிக்கொண்டு அழிந்தாலொழிய புதுமுளைகள் முளைக்க இயலாதென்று அறிந்திருக்கிறேன். அவர்கள் திரளட்டும், நாம் படையுடன் கிளம்பலாம்" என்றான் இந்திரன். தேவர்கள் நகைத்தனர்.

அமராவதியின் போர்முரசு ஒலித்தபோது அமுதுண்டு காமம் கொண்டாடிக் கொண்டிருந்த தேவர்கள் தங்கள்

படைக்கலங்களுடன் திரண்டனர். அவர்களுக்கு முன்னால் வியோமயானத்தில் மின்படை ஏந்தி அமர்ந்திருந்த இந்திரன் “செல்க!” என ஆணையிட்டதும் பாற்கடல் அலைஎழுந்ததுபோல் தேவர் படை போருக்குக் கிளம்பியது. விண்சரிவில் இரு பெருக்குகளும் விரைந்து வந்து ஒன்றையொன்று சந்தித்தன. இரவும்பகலும் பொருதி அந்திச்செம்மையென குருதி பெருகலாயிற்று.

போரென்பது பெருமுயக்கம். ஒன்று பிறிதை அறியும் பித்து. ஒன்று பிறிதை ஊடுருவும் உவகை. ஒன்றென்றிருத்தல். இரண்டென்று ஆழம் தவித்தல். ஒன்றென்றாக்கும் ஒல்லாப்பெருஞ்சிறை உடைபடும் திளைப்பு. இரண்டென்றாகி ஒன்று பிறிதை நோக்கும் திகைப்பு. பெருகுவதும் அழிவதுமென திகழும் மெய்மை. கொள்வதும் கொடுப்பதுமென இனிய வெறுமை. மெய்மையென மறுபெயர் சூடிய இன்மை. தேவர் படை அசுரர்களை கொன்று வீழ்த்தி கடந்தது. விண்ணேறி வந்த அசுரர்கள் காட்டெரி அணைந்தபின் கரித்துகள் மழையென உதிர்வதுபோல இறந்து மண்ணை நோக்கி பொழிந்தனர்.

மகாதைத்யகத்தில் சஞ்சீவினியெனும் ஊழ்க நுண்சொல்லை உரைத்து தன் கமண்டலத்து நீரை அமுதென ஆக்கிய சுக்ரர் அதை அங்கிருந்த அக்ஷயம் என்னும் மாபெரும் தடாகத்தில் ஊற்றினார். “இது அமுது. இறந்த ஒவ்வொருவர் மீதும் இதை வீசுக! இது அவர்களை எழுப்பும்” என்றார். அசுரர்படைகள் அத்தடாகத்து நீரை தோல்குடுவைகளிலும் பெருங்கலங்களிலுமாக அள்ளிக்கொண்டு சென்று இறந்து உதிர்ந்தவர்களின்மேல் தெளித்தனர். அந்நீர் தொட்டதுமே துயிலில் விழித்தவர்கள்போல உடல் சிலிர்த்து கண் விழித்து

எழுந்த அசுரர்கள் எங்கிருக்கிறோமென உணர்ந்து மறுகணமே பெருஞ்சினம் கொண்டு போர்க்குரல் எழுப்பியபடி பாய்ந்து படைக்கலங்களை எடுத்தனர்.

பெருகிச் சூழ்ந்த கருமுகில்கள் பெய்து நிறைந்த பின்னும் ஒழியாமல் கற்பாறையேோ என இருப்பதைப்போல் அசுரப்படை குன்றாமலிருப்பதை இந்திரன் உணர்ந்தான். மேலும் மேலுமென விரைவுகொண்டு அவர்களை வென்று கொன்று அகற்ற கீழ்த்திசையிலிருந்து பெருகி வந்து நிறைந்துகொண்டிருந்தனர். முடிவுறாதது அப்போர் என்றுணர்ந்ததும் "இப்படியே இவ்வண்ணமே இப்போர் தொடரட்டும். நான் செல்வழி சூழ்ந்து வருகிறேன்" என ஆணையிட்டுவிட்டு அமராவதிக்கு திரும்பினான்.

பிரஹஸ்பதியை சென்று கண்டு பணிந்து "என்ன நிகழ்கிறது, ஆசிரியரே? போர் மாபெரும் வீண்செயலென்று ஆகிவிட்டிருக்கிறது. நீரால் அணையா நெருப்பு புடவியை அழிக்கும் என்று தெய்வங்களுக்கு தெரியாதா?" என்றான். "ஆம், தெய்வங்கள் மட்டுமே அறிந்த சஞ்சீவினி எனும் நுண்சொல் அவர் கையில் உள்ளது. இறந்தவர்கள் எழுந்து வருகிறார்கள். எனவே கொல்வதில் பொருளொன்றுமே இல்லை" என்றார் பிரஹஸ்பதி. "நாம் என்ன செய்வது? போரிட்டாகவேண்டும், அது நம் கடன்" என்று இந்திரன் சொன்னான்.

"நம் விசையும் அவர்கள் அளிக்கும் எதிர்விசையும் நிகர்நிலை கொள்ளும் ஓர் எல்லையில் இப்போர் நிலைக்காது நடந்துகொண்டிருக்கட்டும். காலமில்லை என்பது நமது ஆற்றல். பெருகுவது அவர்களின் வழி. இப்படியே இது செல்லட்டும். அதற்குள் ஒரு மாற்று கண்டுபிடிப்போம்" என்றார் பிரஹஸ்பதி. இந்திரன் "ஆனால் நம்மிடமுள்ளது காக்கும் எண்ணம். அவர்கள்

கொண்டுள்ளது வெல்லும் விசை. அணுவிடை பெரியது அது. ஆகவே இறுதியில் அதுவே வெல்லும்" என்றான். "தெய்வங்கள் அருள்வர்" என்றார் ஆசிரியர்.

நாளும் பொழுதுமற்ற தேவவெளியில் அப்போர் நிகழ்ந்துகொண்டிருந்தது. இந்திரனிடம் மீண்டு வந்த பிரஹஸ்பதி "சஞ்சீவினி நுண்சொல்லை சுக்ரரிடமிருந்து கற்காமல் இப்போர் முடியாது. நம்மில் ஒருவர் சென்று அதைக் கற்று மீளவேண்டும். அச்சொல்லைக்கொண்டு அசுரர்களால் கொல்லப்பட்டு மூச்சுலகில் வாழும் அத்தனை மானுடரையும் எழுப்புவோம். கணந்தோறும் பெருகும் அவர்களைக் கொண்டு அசுரர்களுக்கு அழியா எல்லையொன்றை வகுப்போம். அது ஒன்றே வழி" என்றார். "எப்படி அந்நுண்சொல்லை அவரிடமிருந்து கற்பது? அவருக்கு அணுக்கமான மாணவர்கள் என்று எவருமில்லை. அப்படியே ஆனாலும் இறுதி மெய்மையென அதை அவர் அளிப்பார் என்று சொல்ல முடியாது" என்றான் இந்திரன்.

"என் மைந்தன் கசனை அனுப்புகிறேன். அவன் இளையோன், அழகன். இன்சொல் கொண்டவன், இசையறிந்தவன். அவனால் சுக்ரரை உளம் கவரமுடியும்" என்றார். நம்பிக்கையின்றி நோக்கிய இந்திரனிடம் "அவன் அவருக்கு மைந்தனைப்போல. என் மாணாக்கனாக இங்கு இருக்கையில் அவனை தன் தோளில் தூக்கி வளர்த்தவர் சுக்ரர். அவருள் வாழும் தந்தை அவனை நோக்கி கனியாமல் இருக்க வாய்ப்பில்லை. அவன் வென்று வருவான்" என்றார் பிரஹஸ்பதி. "ஆம், அதை நோக்குவோம். நமக்குப் பிறிதொரு வழியில்லை" என்று இந்திரன் சொன்னான்.

# மாமலர் - 49

## 49. விதையின் வழி

தன் மனைவி தாரை சந்திரனின் மைந்தனாக புதனைப் பெற்று அவன் அன்னையென்றே தன்னை உணர்ந்து உடன் சென்றபின் தேவகுருவான பிரஹஸ்பதி நெடுநாள் தனியனாக இருந்தார். தன் உள்ளத்தை இறுக்கி இறுக்கி கல்லென்றாக்கிக் கொண்டார். மைந்தர் எவரையும் விழியெடுத்தும் நோக்காதவராக ஆனார். தன் மாணவர்களிலேயே இளமையும் எழிலும் கொண்டவர்களிடம் மேலும் மேலும் சினமும் கடுமையும் காட்டினார். அவர்களுக்கு உடல்வற்றி ஒடுங்கும் கடுநோன்புகளை ஆணையிட்டார். முன்னரே உடல் ஒடுங்கி அழகிலாத் தோற்றம்கொண்டிருந்த சுக்ரரையே தன் முதல்மாணாக்கராக அருகிருத்தினார். அவரிடம் மட்டுமே உரையாடினார்.

பிரஹஸ்பதி மலர்களையும் அருமணிகளையும் அழகிய ஆடைகளையும் நோக்குவதையும் தவிர்த்தார். ஆனால் அவருள் வாழ்ந்த ஏக்கம் அந்த இறுக்கத்தால் மேலும் இறுகி ஒளிகொண்டது. ஒருநாள் தன் மாணவர்களுடன் ஒரு வேள்விக்குப்பின் காட்டுக்குள் நடந்து தவச்சாலை நோக்கி வருகையில் இயல்பாக கண்களைத் தூக்கிய அவர் வானிலொளிர்ந்த சிறிய கோள் ஒன்றைக் கண்டு “அது யார்?” என்றார். “சந்திரனின் மைந்தனாகிய புதன்” என்றார் உடன்வந்த சுக்ரர். பிரஹஸ்பதி குளிர்ந்த நீரால் ஓங்கி அறையப்பட்டவர்போல உணர்ந்தார். பின்னர் அவர் விழிதூக்கவில்லை.

ஆனால் அதன்பின் அவரால் அந்த ஒளித்துளியை விட்டு சித்தத்தை விலக்க இயலவில்லை. தானறிந்த அனைத்தாலும் அதை தன்னுள் இருந்து அகற்ற முயன்றார். விழைவை அகற்ற முயல்வதைப்போல அதை வளர்க்கும் வழி பிறிதொன்றில்லை. அவர் அதையன்றி பிறிதொன்றை நினைக்காமல் இருந்ததை அவரே உணர்ந்தபோது நெடுங்காலம் சென்றிருந்தது. “ஆம்” என அவர் தனக்குத்தானே சொன்னார். “தன்னை பிறிதொருவனாக கற்பனை செய்துகொள்ளாத மானுடர் இல்லை. அறிவு மிகுந்தோறும் அக்கற்பனை மேலும் பெரிதாகிறது. நுண்மைகொள்ளும்தோறும் கூரியதாகிறது. நான் அதிலிருந்து வெளிவந்தாகவேண்டும். நான் எவரோ அதுவே நானென்றாகிறேன்.”

“ஆம் ஆம் ஆம்” என அவர் தனக்குத்தானே சொல்லிக்கொண்டார். “நான் விழைவது ஒரு மைந்தனை. என் மைந்தன் என நான் வழிபட்டவன் இருந்த இடத்தை நிரப்பும் ஒருவனை. தந்தையென்றல்லாமல் வேறெவ்வகையிலும் நான் நிறைவுகொள்ள முடியாது.” அதை முழுச்சொற்றொடர்களில் தனக்குத்தானே சொல்லிக்கொண்டதுமே அவர் விடுதலை பெற்றவரானார். அதுவரை அவர் முகத்தசைகளை இறுகவைத்து, புன்னகையையும் கோணலாக ஆக்கிய உள்ளமுடிச்சு அவிழ அவர் முகம் கனிந்து இனிதாகியது.

தன் அகவை முதிர்ந்துவிட்டதை அவர் உணர்ந்தார். ஆகவே தனக்கு உகந்த சிறுவன் ஒருவனை மைந்தற்பேறு கொள்ள எண்ணினார். எச்சிறுவனைக் கண்டாலும் “இதோ” என உள்ளம் துள்ளினார். அணுகிச் செல்லச்செல்ல “இவனல்ல” என விலக்கம் கொண்டார். “விண்ணுலாவியான மைந்தனுக்கு நிகரான ஒருவனை மண்ணில் தேடுகிறேனா? என்னையே

அறிவிலியென்றாக்கிக் கொள்கிறேனா?” என்று அவர் தன்னை கடிந்துகொண்டார். ஆனால் அவ்வொப்பீட்டிலிருந்து அவரால் தப்பமுடியவில்லை.

அந்நாளில் ஒருமுறை அவர் கங்கைக்கரையில் உலவியபோது நீரில் பொன்னிறமீன் ஒன்று துள்ளுவதைக் கண்டு அவ்வழகில் மெய்மறந்து நின்றார். அதன் விந்தையால் கவரப்பட்டு அருகணைந்தபோது அது ஒரு சிறுவன் என்பதை உணர்ந்தார். மானுட உடல் ஒன்றில் அத்தகைய அழகை அவர் அதற்கு முன் கண்டதில்லை. “ஆம், இவனே” என கூவியது உள்ளம்.

கரையில் அவனை நோக்கி மெய்மறந்து நின்றார். பின்னர் “மைந்தா, மேலே வா” என அவர் அழைத்தார். நீர்சொட்ட வெற்றுடலுடன் மேலெழுந்து வந்த மைந்தன் இளஞ்சுடர் என ஒளிவிட்டான். “உன் தந்தை யார்? அன்னை எவர்?” என்று கேட்டார். அன்னை காட்டுப்பெண் என்றும் தந்தை அங்கே தவம்செய்ய வந்த அந்தணர் ஒருவர் என்றும் அவன் சொன்னான். “மூவெரிகொடை முடித்து முற்றொளியுடன் அவர் அமர்ந்திருப்பதைக் கண்டு என் அன்னை மையல்கொண்டாள். அவரிடமிருந்து என்னை பெற்றெடுத்தாள்” என்றான்.

அவன் அன்னை அவனுக்கு இட்ட பெயர் கசன். கசனுடன் அவன் வாழ்ந்த காட்டுக்குள் சென்று அவன் அன்னையை வணங்கி அவனை தனக்கு மைந்தர்கொடை அளிக்கும்படி கோரினார் பிரஹஸ்பதி. அவனை மாபெரும் வேத அறிஞனாக ஆக்குவதாக வாக்குறுதி அளித்தார். “ஆம், நானே அவனை உரிய ஆசிரியரிடம் கொண்டுசென்று சேர்ப்பது குறித்து கவலைகொண்டிருந்தேன். அவன் இங்கிருப்பது எங்கள் குடிக்கே இடர். அரசனின் அருமணியை மின்மினி என்று எடுத்துக்கொண்டுவந்த காகம் என என்னை என் குடியினர்

நகையாடுகிறார்கள்” என்றாள் அவன் அன்னை. “தங்கள் மைந்தனென்றும் மாணவனென்றும் இவன் அமைக!” என்று சொல்லி நீரூற்றி அவனை கையளித்தாள்.

பிரஹஸ்பதி அவனை தன் தவக்குடிலுக்கு கொண்டுசென்றார். விண்ணில் தேவகுருவாக அவருடைய ஒளியுடல் விளங்க ஊனுடல் இமயமலைச்சாரலில் சிந்துவின் கரையில் தர்மத்வீபம் என்னும் சிறிய ஆற்றிடைக்குறையில் அமைந்த தவக்குடிலில் மாணவர்களுடன் வாழ்ந்தது. அங்கே அவருடைய மைந்தனாக அவன் சென்று சேர்ந்தான். காட்டில் கன்றுமேய்த்தும் குழலூதியும் தந்தையிடம் வேதமும் வேதமெய்மையும் கற்றும் அவன் வாழ்ந்தான்.

கசனின் மெய்யழகை அக்குருநிலையில் அனைவரும் வியந்தனர். அவனுடன் இருக்கையில் அத்தனை விழிகளும் அவனை நோக்கியே திரும்பியிருந்தன. வேறுபக்கம் திரும்பியிருந்தால் அங்கே ஆடியோ நீர்ப்பரப்போ இருந்தது. அவன் சிறுசுனைகளில் இறங்கினால் சுனைநீர் ஒளிகொண்டு அலைவிளிம்புகள் புன்னகைக்கின்றன என்று கவிபுனையும் மாணவர்கள் பாடினர். மைந்தனை நோக்கி நோக்கி விழிசலிக்காதவரானார் பிரஹஸ்பதி. “மெய்யழகு என்பது மானுடன் தானாகவே எய்த இயலாதது. அதனாலேயே அது தெய்வங்களின் கொடை” என அவர் சொன்னார். “கோடிகோடி கற்களில் சிலவே அருமணிகள். அவை மணிமுடிகளில் அமையவேண்டியவை. செங்கோல்களில் ஒளிரவேண்டியவை. தெய்வங்களுக்கு அணியாகவேண்டியவை.”

“பேரழகர்களின் வாழ்க்கை ஒருபோதும் எளிதென கடந்துசெல்வதில்லை. அவர்களை நோக்கி விழிகள் திரும்புவதனாலேயே அவர்களின் விழிகளும் அவர்களையே

நோக்கிக்கொண்டிருக்கும். தன்னைத்தான் நோக்குபவன், எதன்பொருட்டு நோக்கினும், எதையோ அறிகிறான். தனிவழி செல்கிறான்” என்றார் பிரஹஸ்பதி. “பேரழகர்கள் பிறர் ஆற்றவியலாத எதையோ ஆற்றுகிறார்கள். பிறர் எய்த அரிதான எதையோ எய்துகிறார்கள்.” சுக்ரர் மெல்லிய குரலில் “ஆனால்…” என்றார். “சொல்க!” என்றார் பிரஹஸ்பதி.

“பேரழகு கொண்டவர்களில் இனிது வாழ்ந்தவர்கள் அரிதினும் அரிது. அவர்களையே தெய்வங்கள் தங்கள் ஆடலுக்கு தெரிவுசெய்கின்றன. தேவர்கள் போட்டியென கருதுகிறார்கள். பிற மானுடர் தங்களுள் ஒருவரென எண்ணுவதே இல்லை.” பிரஹஸ்பதி அவரை நோக்கியபடி விழிமலைத்து அமர்ந்திருந்தார். “செம்பு நாணயம் வாங்கும் பொருளுக்கு ஐம்மடங்கு வெள்ளி நாணயம் வாங்கும். பொன் அதைவிட ஐந்து மடங்கு வாங்கும்” என சுக்ரர் தொடர்ந்தார். “அன்போ வெறுப்போ துயரோ மகிழ்வோ அறிவோ இருளோ எதை வாங்குகிறார்களோ அதை.”

பிரஹஸ்பதி நீண்ட மூச்சுக்குப்பின் “ஆம், உண்மை” என்றார். அதன்பின் அவர் அதைப்பற்றி ஒரு சொல்லும் உரைக்கவில்லை. ஆனால் கசனை அதற்குப்பின் அவர் நாவெடுத்துப் புகழவில்லை. தன் தவக்காட்டின் எல்லைக்கு அப்பால் செல்ல அவனை விடவில்லை. அவனைப்பற்றிய புகழ்மொழிகளை அவர் தடைசெய்தார். புதர்களுக்குள் மலர்ந்த அருமலர் என அக்காட்டுக்குள் கசன் வாழ்ந்தான். “அவன் அரியவன்… ஆகவே அவனை எவரும் அறியவேண்டியதில்லை. தன்னை அறிந்து கடக்கும் ஆற்றலை அவன் அடையட்டும். வேதச்சொல் அவன் கையில் படைக்கலமென்றாகட்டும்.

அதன்பின்னர் அவன் வெளிப்போந்தால் துயர்கள் விலகியிருக்கும்” என்றார் பிரஹஸ்பதி.

மைந்தனுடன் தனித்துலாவுகையில் “ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படவேண்டும், மைந்தா” என்றார். “மானுடர் எவரும் ஒழுக்கத்தின்பொருட்டு கணந்தோறும் உள்ளத்துடன் போரிட்டாகவேண்டும். சூழ்ந்திருக்கும் ஒவ்வொன்றும் நம் ஒழுக்கத்துடன் ஆட விடாய்கொண்டுள்ளன. இனியமலர்கள், நறுமணங்கள், தென்றல், வண்ணங்கள், ஒளிகள் அனைத்தும் பிறழ்க பிறழ்க என்றே நம் உள்ளத்திடம் ஆழமாக சொல்லிக்கொண்டிருக்கின்றன. ஆண்கள் தங்கள் விழைவால் வழிதவறுகிறார்கள். கன்னியர் தங்கள் ஆணவத்தால், அன்னையர் தங்கள் அன்பால் வழிபிழைக்கிறார்கள். அழகர்கள் பிறர் விழைவால் பிறழ்வுகொள்கிறார்கள். மைந்தா, ஒழுக்கம் என்பது அறத்திற்குக் கொண்டுசெல்லும் பாதை. ஒழுக்கத்தில் மாறாதிரு. உன் மதிப்பால் உவகையே கொள்முதல் செய்யப்படும்.”

மைந்தனை எந்த இடருக்கும் அனுப்பலாகாது என்றே பிரஹஸ்பதி எண்ணியிருந்தார். தேவர்கள் எவரும் அவன் இருப்பதையே அறியாமலிருந்தனர். “அடர்காடுகளில் எவ்விழியும் அறியாமல் பல்லாயிரம் பொன்வண்டுகள் வாழ்கின்றன. பட்டாம்பூச்சிகள் சிறகடிக்கின்றன. மலர்கள் இதழ்விரித்து நிற்கின்றன. அழகு என்பது காணப்படுவதற்கானது என்பது மானுட ஆணவம் கொள்ளும் மயக்கு. நோக்கால் முழுமைசெய்யப்படும் என்றால் அது அழகெனும் பொய் என்றே கொள்க. அன்னையின் விழிமுன் குழவி கொள்ளும் அழகும் காதலன் முன் கன்னி சூடும் அழகும் காலப்பரப்பில் தோன்றி அழியும் கண்மாயங்களன்றி

பிறிதல்ல. அழகென்பது ஒரு பொருளில் தன்னை நிகழ்த்தும் அது தான் அறியும்பொருட்டு அடையும் வடிவமுழுமை. அவன் இங்கிருக்கட்டும். வேதச்சொல் வேள்விகளின் வழியாக அனலாகி நுண்மையாகி வெளியென்றாகி முழுமைகொள்வதுபோல கனியட்டும்” என்றார் பிரஹஸ்பதி.

ஆனால் சுக்ரர் தன் அறிவுக்கு அறைகூவல்விட்டு வெளிச்சென்று அறியவொண்ணாததை அறிந்து அசுரரை இணைத்து அழிவின்மையை அளித்து எதிர்வந்து நின்றபோது அவருள் சீற்றம் பெருகியது. “என் கண்முன் நான் பேணிய தேவர்கள் தோற்கிறார்கள். அவர்களுக்கென எதையும் செய்ய நான் கடமைப்பட்டவன்” என்று அவர் மாணவர்களிடம் சொன்னார். என்ன செய்வதென்றறியாமல் நிலைகுலைந்து தன் சோலையில் உலவிக்கொண்டிருந்தார். கற்ற நூல்களெல்லாம் வெறும் சொற்களென்றாகும் ஒரு கணத்தை வாழ்க்கையில் கண்டடையாத அறிஞன் எவன் என எண்ணிக்கொண்டார். புல்லில் எழுந்த விதைகள் இவை. கோடானுகோடி. ஆனால் ஒன்று முளைக்கும். அதில் விழவேண்டும் நீர்த்துளி.

ஆற்றின்கரையில் உலவிக்கொண்டிருந்தபோது நீராடி வெற்றுடலுடன் எழுந்து வந்த கசனைக் கண்டார். “வாள் செல்லமுடியாத வழிகளில் அனல் செல்லும்” என்ற வரி அவர் சித்தத்தில் எழுந்தது. அக்கணமே அவர் முன் அனைத்தும் தெளிந்தன. உடன் பிறிதொன்றும் தெரிந்தது, சுக்ரர் அறைகூவியது அவர் அறிவை அல்ல ஆணவத்தை. அதை தன்னுள் அழுத்தி மறைத்துவிட்டு தேவர்க்கரசனை பார்க்கும்பொருட்டு கிளம்பினார். விண்ணகம் செல்லும்போதே உடன்வந்த மாணவனிடம் “சுக்ரருக்கு மகள் இருக்கிறாள்

அல்லவா?” என்றார். “ஆம், ஆசிரியரே” என்றான் மாணவன். “அவள் பெயர் என்ன?” என்றார்.

அவர் உள்ளம் செல்லும் திசையை உணர்ந்த மாணவன் “அவள் பெயர் தேவயானி. பதினெட்டு ஆண்டு அகவைகொண்டவள், அழகி” என்றான். அவர் “நன்று” என்றபின் நடக்க மாணவன் மெல்ல “அவள் இந்திரனின் துணைவி சச்சிக்கு பிறந்த ஜெயந்தியின் மகள்” என்றான். பிரஹஸ்பதி விழிகளில் திகைப்புடன் நின்று திரும்பி நோக்கினார். “ஆம், அன்னையின் இயல்புகள் அவளுக்கும் கூடியிருக்கின்றன” என்றான் மாணவன். சிலகணங்கள் தலைகுனிந்து நின்று தாடியை வருடியபடி எண்ணத்தில் அலைந்து மீண்டு புன்னகையுடன் “நன்று, ஊசல் திரும்பிவருகிறது” என்றார் பிரஹஸ்பதி.

இந்திரன் தன் அறைக்கு திரும்பும்போது நடை தளர்ந்திருந்தான். அவனுடன் நடந்த அமைச்சர் “தாங்கள் எண்ணங்களில் ஆழ்ந்திருக்கிறீர்கள்” என்றார். “நீர் ஆசிரியரின் மைந்தரை பார்த்திருக்கிறீரா?” என்றான். “ஆம், ஒருமுறை. பேரழகன்.” இந்திரன் தலைகுனிந்து நடந்தான். பின்னர் “அந்தப் பெண்ணை?” என்றான். அமைச்சர் “இல்லை, ஆனால் அவளும் அழகி என்றார்கள்” என்றார். “சுக்ரர் அவளை சுட்டுவிரலில் தொட்டு எடுத்த பனித்துளிபோல பேணுவதாக ஒரு பாடல்.” இந்திரன் “அவள் என் பெயர்மகள்” என்றான். அமைச்சருக்கு அனைத்தும் புரிந்தது. “எப்போது?” என்றார். “இவள் சச்சியாக இருந்தபோது” என்றான்.

அமைச்சர் அவனுடன் நடந்தபின் “அது நன்று” என்றார். “ஏன்?” என்றான் இந்திரன். “புலோமர்களின் அடங்கா வஞ்சமும் பொறாமையும் அவளிடமிருந்தால் நமக்கு நன்று” என்றார் அமைச்சர். “உச்சிப்பாறைமேல் கயிறுகட்டி வீசப்படும் உடும்பு

பிடித்தபிடியை விடாததாகத்தான் இருக்கவேண்டும்." இந்திரன் சிலகணங்களுக்குப் பின் "அவள் என் பெயர்மகள். நாம் வென்றால் அவள் தோற்றாகவேண்டும்" என்றான். அமைச்சர் அதற்கு மறுமொழி சொல்லவில்லை.

தன் மஞ்சத்தறைக்கு சென்ற இந்திரன் எண்ணங்கள் அழுத்த பீடத்தில் அமர்ந்து வெளியே நோக்கிக்கொண்டிருந்தான். அறைக்குள் வந்த இந்திராணியின் அணிகளின் ஓசையை அவன் கேட்டான். அவள் அவனருகே வந்து அமர்ந்து "என்ன இடர்? சுக்ரரை வெல்லும் வழியொன்றைச் சொல்ல இன்று ஆசிரியர் வருவதாக சொன்னீர்கள்" என்றாள். "அவர் சொன்ன வழி முற்றிலும் உகந்ததே" என்றான் இந்திரன். பின்னர் அவள் விழிகளை நோக்கி "ஆனால்..." என்றபின் "என் மகளை சுக்ரர் மணந்துள்ளார் என அறிவாயா?" என்றான். அவள் விழிசுருக்கி "உங்கள் மகளையா?" என்றாள்.

"ஆம், அவள் உன் மகளும்கூட" என்றான் இந்திரன். அவள் விழிகள் விரிந்தன. "இங்குள்ளது நம் ஒளியுடல், தேவி. நம் கனவுடல் புவியில் ஊனுடல்கொண்டு எழுந்து வாழ்ந்து மடிகிறது. அக்கனவால் இந்நனவை நிறைவுசெய்கிறோம். அங்கு ஊனுடல்கொண்டு வாழும் யோகியர் தங்கள் ஒளியுடலால் இங்கு வாழ்ந்து அங்குள்ள நனவை நிறைவுசெய்வதுபோல" என்றான். "நீ மண்ணில் புலோமன் என்னும் அரக்கனின் மகளாகப் பிறந்தாய். அன்று உன் பெயர் சச்சி." அவள் விழிகளில் அறிதலும் மயக்கும் மாறிமாறி அலையடித்தன.

இந்திரன் தன் அவைப்பாடகர்களாகிய பிரியம்வதன், சுவாக் என்னும் இரு கந்தர்வர்களை அழைத்துவரும்படி ஆணையிட்டான். அவர்களிடம் "கந்தர்வர்களே, இந்திராணி

சச்சியாகப் பிறந்து விண்ணுக்கு எழுந்த கதையை பாடுக!” என்றான். யாழை சுதிமீட்டி ஆழ்ந்த இன்குரலில் கந்தர்வர்கள் அந்தக் கதையை பாடலானார்கள். சித்தத்தின் ஆழத்தில் துளியென்று சுருங்கி அணுவென்று செறிந்து விதையென்று துயின்றிருந்த நினைவுகள் மெல்ல விழித்தெழ கண்களின் கனவு விரிய முலைக்குவைகள் எழுந்தமைய பெருமூச்சுவிட்டபடி இந்திராணி அக்கதைகளை கேட்டிருந்தாள்.

“இது தொல்கதை. தொல்கதைகள் ஒன்று பிறிதொன்றைத் தொட்டு எழுப்பும் ஆற்றல்கொண்டவை, அரசே. அதனால் தொல்கதைகள் முடிவுறுவதே இல்லை என்றறிக!” என்றான் பிரியம்வதன். “கதையில் இருந்து கதைக்குச் செல்கையில் முந்தைய கதையை உளம் சுமந்து கொய்துகொள்க! மலராடிச் செல்லும் வண்டு மகரந்தங்களை கொண்டு செல்கிறது. முந்தைய மலரால் அடுத்த மலரை கருவுறச் செய்கிறது” என்றான் சுவாக். “தைத்ய குடியினராகிய அசுரர் முன்பு தேவர்களால் சிதறடிக்கப்பட்டார்கள். மண்ணில் சிதறி மானுட உருக்கொண்டு காட்டுக்குடியினராக அவர்கள் வாழ்ந்தனர். வேட்டையாடி உண்டும் மலைக்குடில்களில் ஒடுங்கியும் வாழ்ந்த அவர்கள் ஆயிரமாண்டுகளில் தாங்கள் எவரென்றே அறியாமலாயினர்” என்றான் பிரியம்வதன்.

“ஆனால் அவர்களின் தெய்வங்கள் அறிந்திருந்தன. அவர்களின் குடில்முற்றங்களில் உருளைமலைக்கற்களாக கோயில்கொண்டமர்ந்து நாளும் அன்னமும் மலரும் பலிகொண்ட அத்தெய்வங்களின் விழிகள் அனலணையாதவையாகவே எஞ்சின. கமுகப்பூச்சரம் உதறி துள்ளி ஆடிய பூசகர்களின் கண்களைத் தொட்டு அகம்புகுந்து எரிந்தெழுந்தன. அசுரகுடியின் மாண்பை அவை அறைகூவின.

அழியாதவர்கள் நாம், ஆளவேண்டியவர்கள் நாம், அடங்காதவர்கள் நாம் என வெறிகொண்டாடின. மீண்டும் மீண்டும் தெய்வங்களிலிருந்து தைத்யர்கள் பற்றிக்கொண்டு எழுந்தனர்” என்றான் சுவாக்.

பெயரற்ற சிறிய மலைக்குடி ஒன்றில் பிறந்தவர்கள் புலோமை, காலகை என்னும் உடன்பிறந்தார். சிறுமியராக இருவரும் வணங்கி நின்றிருக்கையில் வெறியாட்டெழுந்த வேலன் வேல்சுழற்றி அலறிப்பாய்ந்து அவர்களை அணுகி “விதை வயிறு திறக்கட்டும்... குகைச்சிம்மங்கள் எழட்டும்... ஆம் ஆம் ஆம்!” என்று கூவி ஆர்ப்பரித்து மல்லாந்து விழுந்து நுரைகக்கி உடல்வலித்து உயிர்விட்டான். “உங்கள் வயிற்றில் எழுவர் தைத்யர்களை விண்ணேற்றும் மாவீரர்” என்றனர் குலமூத்தவர்கள். “தவம் செய்க... தவத்தால் அடைவதே அரிதென்றாகும்.”

புலோமையும் காலகையும் தங்கள் குடியிலிருந்து கிளம்பி அடர்காட்டுக்குச் சென்று அங்குள்ள மலைக்குகை ஒன்றுக்குள் ஒடுங்கி தவம் செய்யலானார்கள். காலகை குகைக்குள் தவம் செய்ய புலோமை வெளியே காட்டுக்குள் கனியும் ஊனும் தேடிக் கொண்டுவந்து அவளுக்கு ஊட்டினாள். பின்னர் தன் தவவல்லமை அனைத்தையும் புலோமைக்கு அளித்து அவளை தவத்திலமர்த்தி காலகை ஊனும் கனியும் கொண்டுவந்தாள். அவர்கள் மாறிமாறி தவம் செய்து முழுமையை அணுகினர். தவம் முதிர்ந்த கணத்தில் குகைக்குள் ஒளிப்பெருக்காக பிரம்மன் எழுந்தார். அங்கிருந்த புலோமையிடம் “நீ விழைவதென்ன?” என்றார்.

“நான் அடைவன அனைத்தும் என் தங்கைக்கும் உரியவையாகவேண்டும்” என்றாள் புலோமை. பிரம்மன்

மகிழ்ந்து "ஆம், அதுவே நிகழ்க!" என்றார். "என் குடிக்கு இறப்பின்மை வேண்டும்" என்றாள் புலோமை. "இறப்பின்மையை எவருக்கும் அளிக்கவியலாது, பெண்ணே" என்றார் பிரம்மன். "அவ்வாறென்றால் இதை அருள்க! என் குடிப்பிறந்த பெண்ணால் அன்றி என் குலம் வெல்லப்படலாகாது" என்றாள் புலோமை. "அவ்வாறே ஆகுக!" என்று சொல்லி பிரம்மன் மறைந்தார். ஊன் திரட்டி வந்த காலகையிடம் தான் சொற்கொடை பெற்றதை புலோமை சொன்னாள். "நாமிருவரும் மைந்தரைப் பெறுவோம்... நம் குடி எழுக!" என்றாள் காலகை.

குலம் திரும்பிய புலோமையும் காலகையும் தோள்திறம்மிக்க ஐந்து இளையோரை தம் கணவர்களாக ஏற்றார்கள். அவர்களிடமிருந்து இருவருக்கும் ஐம்பது மைந்தர்கள் பிறந்தனர். புலோமையின் மைந்தர் புலோமர் என்றும் காலகையின் மைந்தர் காலகேயர் என்றும் அழைக்கப்பட்டனர். இரு குலத்திலும் வீரர்கள் ஆடிப்பாவைகள் என பெருகி நிறைந்தனர். அவர்களின் ஆற்றலால் தைத்யர்கள் பெருகி மண்ணில் பரவினர். அவர்கள் அமைத்த நகர் ஹிரண்யபுரி என அழைக்கப்பட்டது.

அவர்கள் அரசர்களை வென்று கருவூலத்தை நிரப்பினர். அச்செல்வத்தை அளித்து வேள்விகளை இயற்றி விண்ணில் எழும் ஆற்றல்கொண்டனர். ஒவ்வொருநாளும் ஹிரண்யபுரி மண்ணிலிருந்து மேலெழுந்துகொண்டே இருந்தது. புலோமர்களின் கொடிவழியில் நூற்றெட்டாவது அரசனாகிய மகாபுலோமனின் ஆட்சியில் அது மலைமடிப்புகள்மேல் நிழல்விழுந்து மடிந்து நெளிந்துசெல்ல வானில் முகில்போல ஒளிகொண்டு நின்றது.

மகாபுலோமன் மண்ணிலுள்ள மன்னர்களை எல்லாம் வென்றான். விண்ணேறிச் சென்று இந்திர உலகை வெல்ல கனவு கண்டான். அக்கனவில் அவன் பொன்றாப் பெருவேட்கையுடன் அமராவதியில் உலவினான். அமராவதி நகரில் உலவிய தேவர் நிழலுரு ஒன்று தங்கள் நடுவே அலைவதைக் கண்டு அஞ்சி இந்திரனிடம் சென்று முறையிட்டனர். நிமித்திகரை அழைத்து உசாவிய இந்திரன் அவன் புலோமன் என்று அறிந்தான். மீண்டும் வந்தபோது புலோமனின் நிழலுரு மேலும் தெளிவுகொண்டிருந்தது. ஒவ்வொரு முறையும் அது உருத் திரிந்து வந்தது.

“அங்கே பெருவேள்விகள் வழியாக அவன் வேதத்திறன் கொள்கிறான். இன்னும் சிலகாலத்தில் அவன் இங்கே ஒளியுருவுடன் வந்துவிடவும்கூடும்…” என்று நிமித்திகர் எச்சரித்தனர். “அவனை வென்றாகவேண்டும்” என்று இந்திரன் தன் படைக்கலத்துடன் எழுந்தபோது அமைச்சர் தயங்கி “அக்குலத்திற்கு பிரம்மனின் சொற்கொடை உள்ளது, அரசே. அவர்களை அவர்களின் குலத்துப்பெண் மட்டுமே வெல்லமுடியும்” என்றார். இந்திரன் சோர்ந்து அரியணையில் அமர்ந்துவிட்டான். “பெண்களின் பெருவஞ்சத்தால் உருவான நகர் அது. அப்பெண்கொடிவழியில் ஒருத்தியால் அது அழிக்கப்படுவது இயல்வதே அல்ல” என்றார் அமைச்சர். “அழிக்கப்பட்டாகவேண்டும். வேறுவழியே இல்லை” என்றான் இந்திரன். “ஆனால் என்னுள் ஏதும் எழவில்லை” என தவிப்புடன் அரண்மனையில் சுற்றிவந்தான்.

இந்திரனின் அவைக்கு நாரதர் வந்தபோது அவன் அவரைப் பணிந்து “வழியொன்று உரையுங்கள், வானுலாவியே. நான் தங்கள் அடிபணியும் எளியோன்” என்றான். நாரதர் “அரசே,

கேட்க அரிதெனத் தோன்றும். ஆனால் அக்குலத்தில் பிறக்கும் பெண்ணால் அக்குலம் அழியும் என்பதைப்போல இயல்பான நிகழ்வு பிறிதென்ன?" என்றார். வியப்புடன் நோக்கிய இந்திரனிடம் "இதுவரை அழிந்த அனைத்துக் குலங்களும் அக்குலம் ஈன்ற கன்னியரால் அல்லவா அவ்வாறாயின?" என்றார் நாரதர். இந்திரன் அது உண்மை என அக்கணமே உணர்ந்தான்.

"கன்னியில் எழுவது கடந்துசெல்லவேண்டும் என்னும் விழைவு. பஞ்சில் தொற்றியும் காற்றில் ஏறியும் பறவைக்குள் புகுந்துகொண்டும் எல்லைகடக்க வேண்டுமென கனவு காண்கின்றன விதைகள். அரசே, எல்லைகளை பெண்களின் கருவறைகள் கடப்பதன்மூலமே இங்கு உயிர்குலம் விரிந்துபரவுகின்றது" என்றார் நாரதர். "பெருவிழைவு கொண்ட பெண் ஒருத்தி அக்குடியில் எழட்டும். பெண் முளை என்றால் குலமே விதை. உறை கிழிக்காமல் அவள் எழமுடியாது."

நாரதரின் சொல்லின்படி இந்திரன் தன்னருகே மஞ்சத்தில் துயின்ற இந்திராணியின் அருகே படுத்து அவள் காதுக்குள் "கன்னி, நீ புலோமர்குலத்து இளவரசி..." என்று மெல்ல சொல்லிக்கொண்டே இருந்தான். "உன் பெயர் சச்சி... நீ புலோமனின் மகள்" என்றான். மெல்ல அவள் முகத்தில் ஒரு புன்னகை விரிந்தது. தன் கனவுக்குள் அவள் புலோமர்குலத்து அரசி தர்மையின் மகளென ஆனாள். விண்ணில் பறந்து நின்றிருந்த ஹிரண்யபுரியில் தன் கணவனருகே படுத்து விழிமயங்கிய தர்மை துயிலில் சிரித்தாள்.

அவள் சிரிக்கும் ஒலிகேட்டு விழித்துக்கொண்ட புலோமன் "என்ன? ஏன் சிரித்தாய்?" என்றான். "பேரழகுக் கன்னி ஒருத்தி சினம் கொண்டு சீறி அணுகிய சிம்மம் ஒன்றின்மேல் ஏறி

முகில்களுக்குமேல் வந்தாள். அவளை நான் அண்ணாந்து நோக்கி நின்றேன். அவள் ஒளிகொண்டு நீர்மைகொண்டு ஒரு மழைத்துளியென்றாகி உதிர்ந்தாள். என் வாயில் விழுந்தாள். தேன் என இனித்தாள். என் வயிற்றுக்குள் அவள் நுழைவதை உணர்ந்து கூசிச்சிரித்தேன்" என்றாள். நெடுநாள் குழந்தைப்பேறில்லாதிருந்த புலோமன் அதைக் கேட்டு பேருவகையுடன் எழுந்து வெளியே ஓடி நிமித்திகரை அழைத்துவரச்செய்து குறி தேர்ந்தான். "விண்மகள் போல் ஒருத்திக்கு அரசி அன்னையாவாள்" என்றனர் நிமித்திகர்.

"சிம்மம் மீது அவள் அமர்ந்திருந்தது அவள் பெருஞ்சினம் கொண்டவள் என்பதை காட்டுகிறது, அரசே" என்று நிமித்திகர் சொன்னார்கள். "குருதிவிடாய் கொண்டவள் அவள். எரிநிகர் கன்னி. அகலில் எரிந்தால் ஒளி. அடுப்பிலெரிந்தால் அன்னம். கைமீறி கூரையேறினால் நம்மை உண்டு அழிக்கும் பெரும்பசி." புலோமன் "என் மகள் இப்புவியின் அரசி. விண்ணாள்பவள்... அவள் பெருவஞ்சம் கொண்டிருப்பதே இயல்பு. சிம்மம் அவள் அமரும் அரியணையை குறிக்கிறது" என்றான்.

தைத்யர்குலத்தின் பொறாமையனைத்தும் கூர்கொண்டு விதையென்றாகி முளைத்தெழுந்தாள் சச்சி. குழந்தையை தூக்கிக்கொண்டுவந்து காட்டிய வயற்றாட்டி "அனலென சுடுகிறது மகவு. அரசே, கைகளில் ஏந்த முடியவில்லை" என்றாள். கைகளில் வாங்கிய புலோமன் "ஆம், நம் குலம் கொண்ட வஞ்சம் அனைத்தும் திரண்டு எழுந்துள்ளது. வாழ்க இவ்வனல்!" என்றான். நீரால் அணைக்கமுடியாத நெருப்பு என அக்குழவியை பாடினர் அசுரகுலத்துக் கவிஞர்.

அவள் பிறவிநூலை கணித்த நிமித்திகன் அவள் அசுரகுடிப் பிறந்த இந்திராணி என்று சொன்னான். புலோமன் ஏழு

தொல்பூசகரை அழைத்து வருகுறி தேர்ந்தான். இந்திரனின் அரியணையில் அமர்வாள், ஐயமே இல்லை என்றனர் எழுவரும். "ஆம், இது ஓர் அறிவிப்பு. இனிமேலும் நான் மண்ணில் தங்கியிருக்கலாகாது. விண்நுழைகிறேன், அமராவதியை வென்று என் மகளை அங்கே அரியணையில் அமர்த்துகிறேன்" என்று புலோமன் வஞ்சினம் உரைத்தான்.

# மாமலர் - 50

**50. அனலறியும் அனல்**

சச்சியை இந்திராணி என அமராவதியில் அமர்த்தும்பொருட்டு புலோமன் அசுரர்களின் பெரும்படையை திரட்டினான். தைத்யர்களும் தானவர்களும் அடங்கிய படைவிரிவு கடலுடன் கடலிணைந்து கடலென்றாவதுபோல திரண்டபடியே இருந்தது. அதன் வலப்பகுதியை காலகேயர்களும் இடப்பகுதியை புலோமர்களும் வழிநடத்தினர். தலைமுறை தலைமுறையாக வெற்றியென்பதற்கு அப்பால் ஏதுமறியாத மாவீரர்கள் அவர்கள். வெற்றி மேலும் தன்னம்பிக்கையை அளிக்கிறது. தன்னம்பிக்கை ஐயமில்லாது செயல்படச் செய்கிறது. ஐயமின்மை முடிவெடுப்பதில் விரைவை அளிக்கிறது. விரைந்து முடிவெடுப்பவர்கள் வெல்கிறார்கள்.

புலோமர்களுக்கும் காலகேயர்களுக்கும் பிறர் அறியாத குறிச்செயல்களும் மறைச்சொற்களும் இருந்தன. அவற்றினூடாக அவர்கள் தங்களுக்குள் உளமாடிக்கொண்டனர். அவ்வுளவலையால் அசுரர்களின் பெரும்படையை தங்கள் கட்டுக்குள் வைத்திருந்தனர். அசுரப்படை திரண்டு மண்ணிலுள்ள அத்தனை அரசர்களையும் வென்றது.

அவர்களின் கருவூலங்களால் வேள்விகளை இயற்றி விண்ணுக்குரிய பாதைகளை வகுத்தது.

அசுரர்கள் வலுப்பெறுந்தோறும் அமராவதியில் அவர்களின் ஒலிகள் கேட்கலாயின. போர்முரசுகளின் ஓசை தொலைவில் இடிமுழக்கமென எழுந்து தேவர்களின் நிறைநிலையை கலைத்தது. அமுதுண்டு காதலாடி களித்திருந்தவர்களின் உள்ளத்தின் அடியில் எப்போதும் அவ்வோசை இருந்துகொண்டே இருந்தது. பின்னர் பேச்சுக்குரல்கள் அமராவதியில் ஒலிக்கலாயின. தேவர்களின் குரல் இசையாலானது. அதில் வன்தாளமென ஊடுருவி அடுக்கழித்தது அசுரர்களின் குரல்.

தேவதேவன் காத்திருந்தான். புலோமனின் மகள் சச்சி பதினாறாண்டு அகவை முதிர்ந்து முலைமுகிழ்த்து இடைபருத்து விழிகளில் நாணமும் குரலில் இசையும் நடையில் நடனமும் சிரிப்பில் தன்னுணர்வும் கொண்டு கன்னியென்றானபோது அவன் ஹிரண்யபுரிக்கு சென்றான். வளையல் விற்கும் வணிகனாக அணிவணிகர் குழுவுடன் இணைந்துகொண்டான். அணிவணிகராக அகத்தளம் புக இளவயதினருக்கு ஒப்புதல் இல்லை என்பதனால் அவன் தன்னை முகச்சுருக்கங்களும் விழிமங்கலும் தளர்குரலும் கொண்ட முதியவனாக அமைத்துக்கொண்டான். பாண்டியநாட்டு முத்துக்கள் பதித்த சங்குவளையலும் சேரநாட்டு தந்தவளையலும், சோழநாட்டுப் பவளம் பதித்த சந்தனவளையலும் திருவிடநாட்டு செவ்வரக்கு வளையலும் தண்டகாரண்யத்தின் வெண்பளிங்குச் செதுக்குவளையலும் அடுக்கப்பட்ட பேழையுடன் ஹிரண்யபுரியின் அரண்மனைக்குள் நுழைந்து மகளிர்மன்றுக்கு சென்றான்.

அணிவணிகர் வந்துள்ளனர் என்றறிந்ததுமே அசுரகுடி மகளிர் சிரித்தபடி வந்து சூழ்ந்துகொண்டனர். கலிங்கப்பட்டும் பீதர்பட்டும் கொண்டுவந்தவர்கள் பனியென அலையென நுரையென தளிரென வண்ணம் காட்டினர். மென்பாசிக் குழைவுகள், வெண்காளான் மென்மைகள், இளந்தூறல் ஒளிகள். மலர்களையும் கொடிகளையும் தளிர்களையும் நடித்து பொன் அணியென்றாகியிருந்தது. விழிகளையும் அனல்களையும் நடித்தன அருமணிகள். அழகுடையோர் என்பதனாலேயே அழகுக்கு அடிமையாகின்றனர் மகளிர். தங்கள் உடல்சூடிய இளமையையும் கன்னிமையையும் கனிவையும் கரவையும் குழைவையும் நெகிழ்வையும் பொருளென பரப்பியவைபோலும் அணிகள் என மயங்குகிறது அவர்களின் உள்ளம்.

அணிவணிகர்களில் வளையல் விற்பவர்களை பெண்கள் மேலும் விரும்புகின்றனர். காதணிகளும் மூக்கணிகளும் பெண்களின் நிகர்விழிகள். மார்பில் அணிபவையும் இடையணிபவையும் உடல்கொண்ட எழில்கள். கைவளைகளே அணியென்றான சிரிப்புகள். ஒலிகொண்ட ஒளிகள். வளையணிவிப்பவன் அவர்களை கைபற்றி அணிகளின் உலகுக்குள் அழைத்துச் செல்கிறான். உடல்குவித்து சிறுஅணித்தோரண வாயிலினூடாக அப்பால் நுழைகிறது கை. அள்ளிக்கொள்கிறது. நிறைவுடன் விரிகிறது. அசைத்து ஒலியெழுப்பி நகைக்கிறது. வளையலிடுபவன்போல பெண்ணின் நகைமுகம் நோக்கி விழிகளுக்குள் விழிசெலுத்தி சொல்லாட வாய்ப்புள்ளவன் எவன்? அவள் அழகையும் இளமையையும் புகழ தருணம் அமைந்தவன். அவள் வண்ணத்தையும் மென்மையையும் வாழ்த்தினாலும் பிழை செய்தவனாக உணரப்படாதவன்.

வளையலுக்கு நீளும் கையின் அச்சமும் ஆவலும். அதன் மென்வியர்வை. அலகுசேர்த்த ஐந்து கிளிகள். ஐந்து நீள்மலர்கள். கைமணிகளில் முட்டித் தயங்குகிறது வளை. முன்செல்லலே ஆகாதென்று நின்றிருக்கிறது. ஏதோ ஒரு கணத்தில் மத்தகம் தாழ்த்தும் யானைகள் என கைமணிகள் அமிழ்கின்றன. வளையலை தன்மேல் ஏறிக்கடந்துசெல்ல ஒப்புகின்றன. சென்ற வளையல் அங்கே என்றுமிருப்பதுபோல் உணர்கிறது. சச்சியின் கைவிரல் மணிமுட்டுகள் மிகப்பெரியவை. அவற்றைக் கடந்துசெல்லும் பெரிய வளையல்கள் அவள் மெலிந்த மணிக்கட்டில் வளையங்களென தொங்கின. எனவே எடுத்துப்பொருத்தும் பொன்வளைகளை மட்டுமே அவள் எப்போதும் அணிந்தாள். சங்குவளையல்களையும் தந்தவளையல்களையும் சந்தனவளையல்களையும் பளிங்குவளையல்களையும் அவள் விரும்பினாள். அணிந்தால் அவை அழகிழப்பது கண்டு வெறுத்தாள். தன் தோழியர் எவரும் சங்கும் பளிங்கும் தந்தமும் சந்தனமும் அணியலாகாதென்று தடுத்தாள். தன் முன் பொருத்தமான சங்குவளை அணிந்துவரும் சேடிமேல் சினம்கொண்டு பிறிதொன்று சொல்லி ஒறுத்தாள். அனலும் பொறாமையும் அணையாப் பெருஞ்சினமும் கொண்ட அவளை அருளும் மருளும் ஒன்றென முயங்கிய காட்டுத்தெய்வம் ஒன்றை வழிபடுவதுபோல அணுகினர்.

மகளிர்மன்றுக்குள் வார்ப்பு வளையல்களன்றி செதுக்கு வளையல்கள் கொண்டுவரக் கூடாதென்று மொழியா ஆணை இருந்தது. ஆகவே இந்திரன் தன் பேழையை எடுத்துவைத்து மூடியைத் திறந்து முத்துச்சங்கு, அருமணிப்பளிங்கு, செதுக்குதந்த வளையல்கள் அடங்கிய தட்டுகளை எடுத்து பரப்பியபோது மகளிர் முகங்கள் அச்சத்தால் சிலைத்தன.

எவரும் அணுகிவந்து அவற்றை நோக்கவில்லை. மென்முருக்குப் பலகையாலான தட்டுகளில் பட்டுக்குழாய்களில் அமைந்த வளையல்களை நிரத்திவிட்டு இந்திரன் புன்னகையுடன் "வருக, அழகியரே! உங்கள் புன்னகையை வளையலொளி வெல்லுமா என்று பார்ப்போம். உங்கள் சிரிப்புக்கு தோழியாகட்டும் வளையலோசை" என்று பகட்டுமொழி சொன்னபோதும் எவரும் அணுகவில்லை. ஆனால் விழிவிலக்கி அப்பால் செல்லவும் எவராலும் இயலவில்லை. அவர்கள் அத்தகைய அணிவளைகளை அதற்குமுன் கண்டதே இல்லை.

அணுகும்போதே இந்திரனின் வளையல்களை நோக்கிவிட்டிருந்த சச்சி "அணிச்செதுக்கு வளையல்களா?" என்றபடி அருகே வந்து இடையில் கைவைத்து நின்றாள். "ஆம் இளவரசி, அரியணையமர்ந்து முடிசூடும் அரசியர் அணியவேண்டியவை. நீரலைகள்போல் அருமணிகள் ஒளிவிடுபவை. பாருங்கள்" என்றான். சச்சி முகத்தில் வஞ்சக்கனல் வந்துசென்றதைக் கண்ட தோழியர் அஞ்சி அறியாது மேலும் பின்னடைந்தனர். ஒருத்தி இளவரசி அறியாமல் சென்றுவிடு என்று இந்திரனுக்கு விழிகாட்டி உச்சரிப்புகூட்டி சொன்னாள். அவன் அவர்களின் அச்சத்தை புரிந்துகொள்ளாமல் "அமர்க இளவரசி, தங்கள் கைகளுக்கென்றே அமைந்த அணிவளைகளின் தவத்தை முழுமைசெய்யுங்கள்" என்றான்.

"என் கைக்கு பொருந்துவன எவை?" என்றபடி அவள் அமர்ந்தாள். அவள் புன்னகைக்குள் இருந்த சீற்றத்தை அறிந்த தோழியர் ஒருவரை ஒருவர் விழிமுனையால் நோக்கியபடி மெல்ல அமர்ந்தனர். அவர்களின் முகங்கள் வெளுத்து

மேலுதட்டில் வியர்வை பனித்திருந்தது. கைவிரல்களை பின்னிக்கொள்கையில் வளையல்கள் ஒலித்தன. “இவை தங்கள் கைகளுக்கு பொருந்துபவை, இளவரசி” என இந்திரன் வளையல்களை எடுத்து முன்வைத்தான். “இவை மதவேழத்தின் மருப்பில் எழுந்த பிறைநிலவுகளை கீறிச் செய்தவை. அணிச்செதுக்குகளை நோக்குக! எட்டு திருமகள்களும் குடிகொள்கிறார்கள். எழு வகை மலர்கள் கொடிபின்னி பூத்துள்ளன” என்று சொல்முறியாது பேசிக்கொண்டே அவன் வளையல்களை எடுத்தான்.

“இவை வெண்பளிங்குக் கல்வளைகள். அரக்கிட்ட குழிகளில் அமைந்துள்ளன அருமணிகள். இளங்காலை ஒளியில் விண்மீன்கள் என மின்னுகின்றன அவை.” அவள் “என் மணிக்கட்டுக்கு பொருந்தியமையவேண்டும்… நீரே அணிவித்துவிடுக!” என கையை நீட்டினாள். அவன் எடுத்த வளையல்கள் அவள் கைமணிகளை கடக்கா என்பதை உணர்ந்த தோழியர் மூச்சிழுத்தனர். “வளையலிட அறிந்துள்ளீர், அல்லவா? தன் தொழில் நன்கறியாத வணிகனை இங்கே தலைமழித்து சாட்டையால் அடித்து கோட்டைக்காட்டுக்கு அப்பால் வீசிவிடுவது வழக்கம்” என்றபோது சச்சி மெல்ல புன்னகைத்தாள். வஞ்சம்கரந்த அவள் புன்னகை கிள்ளி எடுத்த சிறுசெம்பட்டு என ஓரம் கோணலாகியிருக்கும் என தோழியர் அறிந்திருந்தனர். அவர்கள் இரக்கத்துடன் அவ்வணிவணிகனை நோக்கினர்.

“தங்கள் விரல்மணிகள் பெரியவை, இளவரசி. இவ்வளையல்கள் அவற்றை கடக்கா” என்றான் இந்திரன். “ஆனால் பெருவெள்ளமென பொழிந்து நதிகளை நிறைக்கும் மழையை இளங்காற்றுகள் சுமந்துவருகின்றன. மிகமிக மென்மையான

ஒன்று அவ்வரிய பணியை செய்யும்…” என்றபின் தோழியரிடம் “நீங்கள் சற்று விலகுக! நான் இளவரசியிடம் மட்டுமே அதை காட்டமுடியும்” என்றான். அவர்கள் அப்பால் விலகினர். அவன் தன் பெட்டிக்குள் இருந்து வாழைத்தளிர் என மிகமிக மென்மையாக இருந்த பட்டுத்துணி ஒன்றை எடுத்தான். அதை அவள் கையில் ஒரு களிம்புப்பூச்சுபோல மெல்ல பரப்பி அதன்மேல் அவ்வளையல்களை வைத்தான். மெல்ல பட்டைப்பற்றி இழுத்தபோது அவள் கையை இனிதாக வருடியபடி வளையல் எழுந்து கடந்து மணிக்கட்டில் சென்றமைந்தது.

இரு கைகளிலும் சங்கும் பளிங்கும் தந்தமும் செதுக்கி அருமணி பதித்த வளையல்களை அணிவித்தபின் அத்துணியை அவள் முன் இட்டான். மென்புகை என அது தரையில் படிந்தது. அவள் விழிதூக்கி அவனை நோக்கிய கணத்தில் இளைஞனாக தன் அழகுத்தோற்றத்தை அவன் காட்டினான். அவள் விழிகளுக்குள் கூர்ந்து நோக்கி “இந்த மென்மை என் உள்ளத்திலமைந்தது, இளவரசி” என்றான். முதல்முறையாக அவள் நாணம்கொண்டு முகம் சிவந்தாள். விழிகள் நீர்மைகொள்ள இமைசரித்து நோக்கை விலக்கிக்கொண்டாள். அவள் கழுத்தில் ஒரு நீலநரம்பு துடித்தது. முலைக்குவைகள் எழுந்தமைந்தன. அவள் எழுந்து எவரையும் நோக்காமல் தன் அறைநோக்கி ஓடுவதை தோழியர் திகைப்புடன் நோக்கினர்.

அவளுடன் சிரித்தபடி உடன்வந்தன வளையல்கள். அவள் அசையும்போதெல்லாம் ஒலித்தன. தன்னுடன் பிறிதொருவர் பிரிக்கமுடியாதபடி இணைந்துகொண்டதை அவள் உணர்ந்தாள். கைகளை நெஞ்சோடணைத்தபடி மஞ்சத்தில் படுத்து கண்களை மூடி புன்னகை செய்தாள். அவள் மட்டுமே கண்ட அவன்

முகம் அவள் விழிமூடினாலும் திறந்தாலும் அழியாத ஓவியமென அவளுக்குள் பதிந்திருந்தது. அந்த முகத்தை அவள் மிக நன்றாக அறிந்திருந்தாள்.

சச்சி இந்திரன்மேல் பெருங்காதல் கொண்டாள். காதல் பெண்களை பிச்சிகளாக்குகிறது. காதல் கொள்ளும்வரை அவர்கள் ஒவ்வொன்றையும் எண்ணி எண்ணி இயற்றுகிறார்கள். உலகியலில் திளைக்கிறார்கள். அறியாதவற்றை அஞ்சுகிறார்கள். தன்னில் திகழ்கிறார்கள். தன்னை நிகழ்த்துகிறார்கள். காதலின் ஒளிகொண்டதும் ஆடைகளைந்து ஆற்றில்குதிப்பதுபோல் அதுவரை கொண்டிருந்த அனைத்தையும் உதறி பாய்ந்து பெருக்கில் திளைத்து ஒழுகிச் செல்கிறார்கள். திசை தேர்வதில்லை. ஒப்புக்கொடுத்தலின் முழு விடுதலையில் களிக்கிறார்கள். எண்ணுவதில்லை, எதையும் விழைவதில்லை, அஞ்சுவதில்லை, எவரையும் அறிவதுமில்லை.

அவள் காதல்கொண்டுவிட்டாள் என தோழியர் அறிந்தனர். அக்காதலன் எவரென்றும் உணர்ந்தனர். ஆனால் அவன் எங்கிருந்து வந்தான் என்று அறியாது குழம்பினர். அவன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வடிவில் அவளிடம் வந்துகொண்டிருந்ததை அவர்கள் அறியவில்லை. இளங்காலையில் சிட்டுக்குருவியென மகரந்த மணத்துடன் அவள் அறைக்குள் நுழைந்தான். அவள் தோட்டத்தில் தனித்திருக்கையில் ஆண்குயிலென வந்து குழலிசைத்தான். தனித்திருக்கும் அறைக்குள் பொன்வண்டென யாழ்மீட்டி வந்தான். அவளுடன் சொல்லாடினான். அச்சொற்களனைத்தையும் அவள் கனவுக்குள் பலநூறுமுறை முன்னரே கேட்டிருந்தாள்.

தன்னை மாயக்கலை தெரிந்த வஜ்ராயுதன் என்னும் கந்தர்வன் என அவளிடம் அவன் அறிமுகம் செய்துகொண்டான். மலர்ச்சோலையில் கொடிக்குடிலில் அவளுடன் இருக்கையில் அவன் கேட்டான் "உன்னை நான் மணம் கொள்ளக் கோரினால் உன் தந்தை என்ன செய்வார்?" அவள் முகம் கூம்பி தலைகுனிந்து "நீங்கள் தைத்யரோ தானவரோ அல்ல என்றால் ஒருபோதும் ஒப்பார். என்னை இந்திரனின் அரியணையில் அமரச்செய்ய பெரும்போர் ஒன்றை தொடுக்கவிருக்கிறார்" என்றாள். "அவ்வண்ணமென்றால் என்னுடன் நீ வந்துவிடு... நாம் கந்தர்வ உலகுக்குள் சென்று மறைந்து வாழ்வோம்" என்றான்.

"நான் இந்த நகரின் ஏழு காவல்சூழ்கைகளை கடக்கமுடியாது" என்றாள் சச்சி. "இதை காலகேயரும் புலோமரும் ஆள்கிறார்கள். அவர்கள் மட்டுமே அறிந்த நுண்சொல் வலை இதை பதினான்குமுறை சூழ்ந்துள்ளது." இந்திரன் "அச்சொற்களை நீ எனக்குரை. நான் அவர்களை ஏமாற்றி உன்னை இங்கிருந்து அழைத்துச்செல்கிறேன்" என்றான். அவள் விழிநீருடன் "எந்தை அவற்றை எனக்கு கற்றுத்தருகையில் ஒருபோதும் பிறரிடம் பகிரலாகாதென்று குலம்மீதும் எங்கள் கொடிமீதும் அவர் முடிமீதும் ஆணைபெற்றுக்கொண்டார்" என்றாள். "ஆம், ஆனால் தந்தையைக் கடக்காமல் மகள் தன் மைந்தனை பெறமுடியாது என்பதே உலகநெறி" என்றான் இந்திரன். "வீழ்ந்த மரத்தில் எழும் தளிர்களை பார். அவை அந்த மரத்தையே உணவென்று கொள்கின்றன. ஆனால் மரம் வாழ்வது தளிர்களின் வழியாகவே."

அவளை மெல்ல சொல்லாடி கரைத்தான். அவள் காலகேயரும் புலோமரும் கொண்டிருந்த மந்தணச்சொல் நிரையை, குறிகளின் தொகையை அவனுக்கு உரைத்தாள். ஒருநாள் இரவில் தன்

வெண்புரவியாகிய உச்சைசிரவஸின் மேல் ஏறிவந்த இந்திரன் அதை பிறைநிலவின் ஒளிக்கீற்றுகளுடன் உருமறைத்து நிற்கச்செய்துவிட்டு அரண்மனைக்குள் புகுந்து அவளை அழைத்துக்கொண்டான். அவன் புரவியில் ஏறிக்கொண்டதும் அசுரர்கள் அவனைக் கண்டு எச்சரிக்கை முரசை முழக்கினர். காலகேயரும் புலோமரும் படைக்கலங்களுடன் அவனை சூழ்ந்தனர்.

ஆனால் அப்போது அவனுடன் தேவர்படைகள் முகில்குவைகளுக்குள் ஒளிந்து வந்து ஹிரண்யபுரியை சூழ்ந்துவிட்டிருந்தன. அவர்கள் புலோமர்களுக்கும் காலகேயர்களுக்கும் மட்டும் உரிய மறைமொழியில் பொய்யாணைகளை எழுப்பி பரப்பினர். ஆணைகளால் குழம்பிய புலோமரும் காலகேயரும் ஒருவரோடொருவர் போரிட்டனர். தைத்யரும் தானவரும் சிதறினர். வெறுந்திரள் என்றான அப்படையைத் தாக்கி அழித்தனர் தேவர். புரவியிலேற்றி சச்சியை விண்ணுக்குக் கொண்டுசென்று அமராவதியில் அமர்த்திவிட்டுத் திரும்பிய இந்திரன் புலோமனை களத்தில் எதிர்கொண்டான்.

தன் அசுரப்பெரும்படை காற்றில் முகில்திரளென சிதறியழிவதை நோக்கி சீறி எழுந்து போரிட்ட புலோமனை தன் மின்படைக்கலத்தால் நெடுகப்போழ்ந்து கொன்று வீழ்த்தினான் இந்திரன். புலோமன் அலறியபடி மண்ணில் விழுந்து நிலத்தில் புதைந்தான். அவன் வேள்வியாற்றலால் விண்ணில் நின்றிருந்த ஹிரண்யபுரி சிதறி பாறைமழை என மண்ணில் விழுந்து புதைந்தது. வெற்றியுடன் இந்திரன் திரும்பிவந்தபோது மீண்டும் இந்திராணியாக ஆகிவிட்டிருந்த

சச்சி அவனை புன்னகையுடன் வரவேற்று மங்கலக்குறியிட்டு வாழ்த்தி அரண்மனைக்குள் அழைத்துச்சென்றாள்.

சச்சியில் இந்திரன் ஜெயந்தனையும் ஜெயந்தியையும் பெற்றான். அன்னையின் இயல்புகள் அனைத்தையும் கொண்டிருந்தாள் ஜெயந்தி. மீண்டுமொருமுறை சொல்லப்படும்போது சொற்கள் கூர்மை கொள்கின்றன. விண்ணுலகில் எப்போதும் சினம்கொண்டு எரிந்துகொண்டிருந்த அவளை மண்ணுலகில் மலைமேல் நிற்கையில் ஒரு செங்கனல்துளி என மானுடரும் நோக்க இயன்றது. அனைவரும் அவளிடமிருந்து அகன்றே இலங்கினர். அவளை எதிர்கொள்கையில் நாகத்தின் முன் எலி என ஒரு பதுங்கல் அனைவர் உடலிலும் எழுந்தது.

எதன்பொருட்டு அவள் சினம் கொள்வாள் என தேவரும் முனிவரும் அறிய முடியவில்லை. உடன்பிறந்தவனும் அன்னையும் தந்தையும்கூட அதை உணர இயலவில்லை. அவளும் தான் சினம் கொள்ளவேண்டியது எதன்பொருட்டு என எப்போதும் எண்ணியிருக்கவில்லை. சினம் அவள் உடலை பதறச்செய்து உள்ளத்தை மயக்கத்திலாழ்த்தியது. சினமடங்கியதும் அவள் இனிய களைப்பொன்றிலாழ்ந்து ஆழ்ந்த நிறைவை அடைந்தாள். அவ்வின்பத்தின் பொருட்டே அவள் சினம் கொண்டாள். சினம் கொள்ளக்கொள்ள சினத்திற்கான புலன்கள் மேலும் கூர்மைகொண்டன. அவை சினம்கொள்ளும் தருணங்களை கண்டடைந்தன. அவள் முகம் சினமென்பதன் வடிவமாக ஆகியது. அவள் சொற்களும் நோக்கும் சினமென்றே மாறின.

புரங்களை எரிக்கும் அனலை தன் சொல்லில் அடையும்பொருட்டு சுக்ரர் கயிலைமலை அடிவாரத்தில்

சிவனை நோக்கி தவமிருக்கும் செய்தியை அவர் தவம் முதிரும் கணத்திலேயே தேவர் அறிந்தனர். இந்திரனின் அவையில் வெம்மை கூடிக்கொண்டே சென்றதை மெல்லியலாளரான அவைக்கணிகையரே முதலில் அறிந்தனர். அவர்கள் ஆடல்முடித்ததும் உடல் வியர்வைவழிய மூச்சில் அனல்பறக்க விழிகள்எரிய சோர்ந்து அமர்ந்தனர். "என்னடி சோர்வு?" எனக் கேட்ட மூத்தவர்களிடம் "அவையில் அனல் நிறைந்துள்ளது" என்றனர். "அது நோக்கும் முனிவரின் கண்கள் கொண்டுள்ள காமத்தின் அனல்" என முதுகணிகையர் நகையாடினர். ஆனால் பின்னர் அவ்வனலை அவர்களும் உணரலாயினர். அனல் மிகுந்து சற்றுநேரம் அங்கு அமர்ந்ததுமே உடல்கொதிக்கத் தொடங்கியது. பீடங்கள் சுடுகின்றன என்றனர் முனிவர். படைக்கலங்கள் உலையிலிட்டவைபோல் கொதிப்பதாக சொன்னார்கள் காவலர்.

பின்னர் இந்திரனே தன் அரியணையில் அமரமுடியாதவனானான். அவைக்கு எவரும் செல்லாமலானார்கள். உள்ளே அரசமேடையிலிருந்த இந்திரனின் அரியணை எரிவண்ணம் கொண்டு கொதித்தது. அதன் சாய்வும் கைப்பிடியும் உருகி வடிவிழந்தன. "ஏன் இது நிகழ்கிறது? வரும் இடர் என்ன?" என்று இந்திரன் தன் அவைநிமித்திகரை அழைத்து கேட்டான். அவர்கள் நிகழ்குறிகள் அனைத்தும் தேர்ந்து "எவரோ ஒரு முனிவர் தவம்செய்கிறார். அத்தவம் தேவர்களுக்கு எதிரானது. என்றோ ஒருநாள் இந்நகரை அழிக்கும் வாய்ப்புள்ளது" என்றனர். "எவர் என்று சொல்க!" என அச்சத்துடன் இந்திரன் கேட்டான். அவர்கள் "அதை எங்கள் முதலாசிரியரே சொல்லக்கூடும்" என்றனர்.

நிமித்தநூலின் முதலாசிரியரான சூரியரை அவருடைய குருநிலைக்குச் சென்று வணங்கி வருநெறி கேட்டான் இந்திரன். அவர் மேலும் நுண்குறிகள் சூழ்ந்து "கயிலை மலையடிவாரத்தில் சுக்ரர் தவம் செய்கிறார். தன் சொல்லை வடவையெரி ஆக்கும் வல்லமையை கோரவிருக்கிறார்" என்றார். "சுக்ரரா? அவர் நம் ஆசிரியரின் முதன்மை மாணவர் அல்லவா?" என்றான் இந்திரன். "ஆம், ஆனால் ஆசிரியனுக்கும் மாணவனுக்குமான ஆணவப்பகைமை ஆலகாலத்திற்கு நிகரான நஞ்சு கொண்டது. பிரஹஸ்பதியை வெல்லும்பொருட்டு அவர் தேவர்குடியை எதிர்ப்பார். அமராவதியை அனலூட்டவும் தயங்கமாட்டார்" என்றார் சூரியர்.

இந்திரன் "அவர் ஆற்றும் தவத்தை வென்றாகவேண்டும். எதிரியை கருவிலேயே வெல்வதைப்போல் எளிது இல்லை" என்றான். எண்ணிச் சூழ்ந்து பின் தன் அவைக்கணிகையரை அழைத்து "அவர் தவம் கலைத்து வருக! அவருள் ஓடும் ஊழ்க நுண்சொல்லின் நிரையில் ஒன்று ஒரு மாத்திரையளவு பிழைபட்டாலே போதும்" என்றான். சுக்ரரை உளம்மயக்கி வெல்லும்பொருட்டு நூற்றெட்டு தேவகன்னியர் அணிகொண்டு சென்றனர். சுக்ரர் தன் பெருஞ்சினத்தை எரிவடிவ பூதங்களாக்கி பத்து திசைகளிலும் காவல்நிறுத்திவிட்டு தவமியற்றத் தொடங்கியிருந்தார். தழலென நாபறக்க இடியோசைபோல உறுமியபடி எழுந்து வந்த எரிபூதங்கள் அவர்களை உருகி அழியச்செய்தன.

உளம்சோர்ந்த இந்திரன் செய்வதென்ன என்றறியாமல் தன் அரண்மனைக்குள் மஞ்சத்தில் உடல்சுருட்டி படுத்துவிட்டான். அவனை தேற்றிய அமைச்சர்கள் "தென்குமரி முனையில் தவமியற்றுகிறார் நாரதர். அவரிடம் சென்று வழி உசாவுவோம்.

மலர் சூல்கொள்கையிலேயே கனிகொய்ய அம்பெய்பவர் அவர்” என்றனர். இந்திரன் முக்கடல் முனைக்கு வந்து அங்கே பாறைமேல் அமைந்த தவக்குடில் ஒன்றில் அமர்ந்து அலையிசை கேட்டிருந்த நாரதரை அணுகி வணங்கினான். “இசைமுனிவரே, நான் சுக்ரரின் அனல்வளையத்தை கடக்கும் வழி என்ன? அவர் கொள்ளும் தவத்தை வெல்வது எப்படி?” என்று வினவினான்.

“அனலை புனல் வெல்லும்” என்றார் நாரதர். “ஆனால் பேரனல்முன் புனலும் அனலென்றேயாகும்.” நிகழ்வதை எண்ணி புன்னகைத்து “அரசே, பேரனலை வெல்வது நிகரான பேரனல் ஒன்றே. வேடர்கள் அறிந்த மெய்மை இது” என்றார். “நான் செய்யவேண்டியது என்ன?” என்றான் இந்திரன். “சுக்ரருக்கு நிகரான சினமும் சுக்ரரை வெல்லும் வஞ்சமும் கொண்ட ஒருவரை அனுப்புக!” என்றார் நாரதர். அக்கணமே இந்திரன் செல்லவேண்டியது யார் என முடிவெடுத்துவிட்டான். “அவள் அவ்வண்ணம் பிறந்ததே இதற்காகத்தான்போலும்” என உடன்வந்த அமைச்சர்களிடம் சொன்னான். “கடுங்கசப்புக் கனிகளும் உள்ளன காட்டில். அவற்றை உண்ணும் விலங்குகளுக்கு அவை அமுதம்” என்றார் அமைச்சர்.

இந்திராணி தன் மகளை சுக்ரருக்கு மணமுடித்து அனுப்ப முதலில் ஒப்பவில்லை. “அழகிலாதவர், கேடுள்ளம் கொண்டவர், கீழ்மையில் திளைப்பவர். என் மகளுக்கு அவரா துணைவர்?” என்று சினந்து எழுந்து கூவினாள். “என் மகளுக்கு அவள் தந்தையை வெல்லும் மாவீரன் ஒருவன் வருவான். வரவில்லை என்றால் அவள் அரண்மனையில் வாழட்டும். நான் ஒருபோதும் அவளை அவருக்கு அளிக்க ஒப்பமாட்டேன்” என்று சொல்லி சினத்துடன் அறைநீங்கினாள். “அரசியின்

ஒப்புதலின்றி இளவரசியை அவருக்கு அளிக்கவியலாது, அரசே” என்றார் அமைச்சர். “உங்கள் மயக்குறு சொற்திரள் எழட்டும். அரசியை எவ்வண்ணமேனும் உளம்பெயரச் செய்யுங்கள்.”

ஆனால் இந்திராணியை தேடிச்சென்ற இந்திரன் முன் அவள் வாயிலை ஓங்கி அறைந்தாள். “அவர் முகத்தை நான் நோக்க விழையவில்லை. அவரில் எழும் ஒரு சொல்லும் எனக்குத் தேவையில்லை” என்று அவள் கூவினாள். சோர்ந்தும் கசந்தும் தன் மஞ்சத்தறைக்கு வந்து இரவெல்லாம் இயல்வதென்ன என்று எண்ணிச் சலித்து உலவிக்கொண்டிருந்தான் இந்திரன். ஒன்று தொட்டு எடுக்கையில் நூறு கைவிட்டு நழுவுவதே அரசாடல் என்றும் நூறுக்கும் அப்பால் ஒன்று எழுந்து கைப்படவும் கூடும் என்றும் அறிந்திருந்தான் என்பதனால் அதைத் தேடி தன் உள்ளத்தை மீண்டும் மீண்டும் துழாவிக்கொண்டிருந்தான்.

ஆனால் அன்றிரவு துயில்நீத்து தன் அறையில் மஞ்சத்தில் படுத்து உருண்டுகொண்டிருந்த இந்திராணி புலரிமயக்கில் உளம் கரைந்தபோது அவள் கனவில் புலோமன் எழுந்தான். அவன் வலப்பக்கம் காலகையும் இடப்பக்கம் புலோமையும் நின்றனர். அவர்களுக்குப் பின்னால் பேருருக்கொண்ட மகாநாகமாக திதி ஏழுதலைப் படம் விரித்து அனல்விழிகளுடன் நோக்கிநின்றாள். “மகளே, நம் குலத்துக்காக” என்றான் புலோமன். “தந்தையே…” என அவள் விம்மினாள். “அவள் நம் குலத்தாள்” என்று அவன் மீண்டும் சொன்னான். விழித்துக்கொண்ட இந்திராணி அக்கனவை சற்றும் நினைவுறவில்லை. ஆனால் அவள் உள்ளம் மாறிவிட்டிருந்தது. புன்னகைக்கும் முகத்துடன் காலையில் வந்து இந்திரனின்

அறைக்கதவை தட்டினாள். எரிச்சலுடன் வந்து திறந்த அவனிடம் "நம் மகள் செல்லட்டும்" என்று சொன்னாள்.

அன்னையும் தந்தையும் ஆற்றுப்படுத்த ஜெயந்தி இரு கந்தர்வப் பெண்களால் வழிநடத்தப்பட்டு சுக்ரரை சந்திக்கும்பொருட்டு சென்றாள். சீறி எதிர்வந்த எரிபூதங்களை நோக்கி அவள் சினம்கொண்டு சீறியபோது அவை அனலவிந்து தணிந்து பின்வாங்கின. அவள் விழிமூடி அமர்ந்திருந்த சுக்ரரின் அருகே சென்று நின்றாள். அவருடைய இடத்தொடையில் தன் கைகளால் தொட அவர் தவத்துக்குள் பேரழகுடன் எழுந்தாள். அவளுடன் அங்கு ஆயிரம் முறை பிறந்து காமம்கொண்டாடி மைந்தரை ஈன்று முதிர்ந்து மறைந்து பிறந்து பின் விழித்த சுக்ரர் எதிரில் நின்ற பெண்ணை நோக்கி சினத்துடன் தீச்சொல்லிட நாவெடுத்தார். அவள் சினத்துடன் "ஏன் சினம்? நான் உங்கள் துணைவி" என்றாள். சினம் அடங்கி "ஆம்" என்றார் அவர்.

சுக்ரரின் துணைவியாக ஜெயந்தி அவருடன் காட்டில் வாழ்ந்தாள். சினம்கொண்டு வஞ்சம்பயின்று தேர்ந்த அவள் உள்ளம் அவர் சினத்தையும் வஞ்சத்தையும் சித்திரப்பட்டுச் சீலையை இழைபிரித்து நூலாக்கி அடுக்குவதுபோல முற்றறிந்தது. சினமும் வஞ்சமும் காதல்கொண்ட பெண்ணில் வெளிப்படுகையில் அவை அழகென்றும் மென்மையென்றும் பொருள்கொள்வதை சுக்ரர் உணர்ந்தார். தன்னை அன்றி பிறிதொன்றை விரும்பியிராத அவர் தன்னை அவளில் கண்டு பெருங்காதல் கொண்டார். பிறிதொன்றில்லாமல் அவளென எழுந்த தன் ஆணவத்தில் மூழ்கித் திளைத்தார். பெண்ணென்று உருக்கொண்டு தன்னுடன் தான் காமம் கொள்ளுதலே பெருங்காதலென்று அறிக!

“தேவமகள் ஜெயந்தி ஈன்ற பெண்குழந்தை இரும்பில் தீட்டிய இரும்பில் எழும் அனலென்றிருந்தது. அதற்கு தேவயானி என்று பெயரிட்டனர்” என்றான் பிரியம்வதன். இந்திராணி பெருமூச்சுடன் மெல்ல அசைந்து அமர்ந்தாள். “எரி பிறப்பதை மெல்லிய சருகுகள் முதலில் அறிகின்றன. பின்னரே அறிகிறது பெருங்காடு” என்று சுவாக் சொன்னான்.

# மாமலர் - 51

## 51. குருதியமுது

பேற்றுக்குடிலில் ஜெயந்தி நோவுற்று இரு கைகளாலும் மஞ்சத்தைப் பற்றியபடி முனகி தலையை அசைத்துக்கொண்டிருக்கையில் அவள் விரித்த கால்களுக்கு இருபுறமும் நின்று முழங்கால்களையும் பாதங்களையும் மெல்ல வருடியபடி தாழ்ந்த குரலில் “இன்னும் சில கணங்கள்தான், தேவி. எளிது, மிக எளிது. இன்னொருமுறை மூதன்னையரை எண்ணி உடலை உந்துக! மீண்டுமொருமுறை மட்டும்…” என்று சொல்லிக்கொண்டிருந்த வயற்றாட்டிகளில் ஒருத்தி திரும்பி மூக்கை சுளித்து “எரிமணம்” என்றாள். அவள் சொன்னதுமே பிறரும் அதை உணர்ந்தனர். கங்கைக்கரையில் அமைந்த சுக்ரரின் தவச்சாலையில் ஈற்றறை என அமைந்த ஈச்சையோலைக் குடிலுக்கு வெளியே விரிந்துகிடந்த காட்டின்மேல் அப்போது இளமழை பெய்துகொண்டிருந்தது. இலைத்தழைப்புகளும் கூரைகளும் ஓசையிட்டுக்கொண்டிருந்தன.

“மரத்தில் மின்னல் விழுந்திருக்கக்கூடும்” என்றாள் ஒருத்தி. “இடியோசை எழவில்லையே?” என்று பிறிதொருத்தி

சொன்னாள். “ஆம், மின்னலும் ஒளிரவில்லை” என்ற இளைய வயற்றாட்டி “குடிலேதும் பற்றியிருக்குமோ…?” என்றாள். “ஆம், அனலெரியும் மணம், மிக அருகே” என பிறிதொரு வயற்றாட்டி சொல்லும்போதே “அது இக்குருதியின் மணம்” என ஒருத்தி சொன்னாள். கைகளை கூப்பி
நெஞ்சோடணைத்துக்கொண்டு குனிந்து நோக்கி “ஆம். பாறை பிளந்து வரும் கன்மதம் போலவே மணக்கிறது இக்குருதி” என்றாள். திகிலுடன் அனைவரும் ஜெயந்தியின் உடல் பிளந்து ஊறிவந்த செங்குழம்பை நோக்கினர். “கன்மதம் போலவே…” என்றாள் ஒருத்தி.

“ஆம்” என மூச்சிழுத்தபின் “சுடுமோ…?” என்று இளையவள் கேட்டாள். “உளறாதே…” என்றபின் சற்று தயங்கிய கையை நீட்டி வைத்து அக்குருதியை தொட்டாள் முதுமகள். பின்னர் “கருக்குருதிதான். நீர்நிறம் கலந்துள்ளது” என்றாள். “வாயில் திறக்கும் நேரம்” என்றபடி ஜெயந்தியின் கால்களை மேலும் சற்று விலக்கினாள் முதுவயற்றாட்டி. விதையுறைக்குள் விதை என ஊன் பை மூடிய குழவியின் தலை பிதுங்கி வெளிவந்தது. நீர்க்குமிழி உந்தி அசைந்த பனிக்குடத்திற்குள் அது தன் சிறு கைகளை அசைத்து அதை கிழிக்க முயன்றது. “எடு!” என்றாள் முதியவள். ஆனால் வயற்றாட்டிகள் சில கணங்கள் தயங்கினர். “எடடி, அறிவிலியே!” என முதியவள் சீற இருவர் பாய்ந்து குழவியை பற்றிக்கொண்டனர்.

கந்தகம் எரியும் மணத்துடன் குருதி பெருகி வழிந்தது. முதியவள் குழவியை உறைகிழித்து வெளியே எடுத்து அதன் எழா சிறுமூக்கை சுட்டுவிரலால் அழுத்திப் பிழிந்து பால்சளி நீக்கி உரிந்த தோலுடன் சிவந்திருந்த குருத்துக்கால்களைப் பற்றி தலைகீழாகத் தூக்கி இருமுறை உலுக்கினாள். குழவி

ஒருமுறை மூச்சுக்கு அதிர்ந்து மெல்ல தும்மி பூனைக்குட்டிபோல் மென்சிணுங்கலொன்றை எழுப்பியது. பின்னர் இரு கைகளையும் உலுக்கியபடி வீறிட்டு அலறத் தொடங்கியது. வயற்றாட்டியரின் முகங்கள் மலர்ந்தன. "பெண்" என்றாள் ஒருத்தி. அருகே வந்து நோக்கி "செந்தாமரை நிறம்" என்றாள் பிறிதொருத்தி. "மென்மயிர் செறிந்த சிறுதலை. பிறக்கும் குழவியில் எப்போதும் இத்தனை மயிர் கண்டதில்லை" என்றாள் இன்னொருத்தி.

குழவியை எடுத்துச்சென்று அருகிருந்த மரத்தொட்டிக்குள் மஞ்சளும் வேம்பும் கலந்து நிறைத்திருந்த இளவெந்நீரில் தலைமட்டும் வெளியே தெரியும்படி வைத்து நீராட்டினாள் முதியவள். குழவியில் ஈடுபட்டு அவர்கள் அன்னையை நோக்க மறந்திருந்தனர். மெல்லிய முனகலோசை ஒன்று எங்கோ என கேட்டது. எவரோ படியேறுவதென்றே ஒருத்தி அதை எண்ணினாள். இன்னொருத்தி திரும்பிப்பார்த்து அச்சத்தில் மூச்சொலி எழுப்பினாள். பிறர் திடுக்கிட்டு திரும்பிப்பார்க்க ஜெயந்தி இரு கைகளாலும் மஞ்சத்தின் விளிம்பைப் பற்றியபடி உடலை இறுக்கி பொழியும் அருவிக்குக்கீழ் நிற்பதுபோல தோள்குறுக்கி நடுங்கிக்கொண்டிருந்ததை கண்டனர்.

"வலிப்பு" என்று ஒருத்தி சொல்ல முதுவயற்றாட்டி "என்னாயிற்று? ஏன்?" என்று குழந்தையை பிறர் கைகளில் கொடுத்துவிட்டு வந்து ஜெயந்தியின் கைகளைப்பற்றி அவள் நாடியை பார்த்தாள். பின்னர் "தெய்வங்களே!" என்றாள். "என்னாயிற்று?" என்றாள் இன்னொரு முதியவள். ஒன்றும் சொல்லாமல் தன் கையில் துவண்ட ஜெயந்தியின் கையை சேக்கைமேல் வைத்தாள். இல்லையென்பதுபோல் விரல்விரிய

அது மெல்ல மல்லாந்தது. அனைவருக்கும் புரிந்துவிட்டிருந்தது. அவர்கள் மெல்ல குளிர்ந்துகொண்டிருந்த ஜெயந்தியின் உடலைச் சூழ்ந்தபடி சொல்லின்றி நோக்கி நின்றனர். அப்போதும் அவள் முகத்தில் பெருஞ்சினமும் எவர் மேலென்று அறியாத வஞ்சமுமே நிரம்பி இருந்தது. அத்தசைகள் அவ்வண்ணமே வடிக்கப்பட்டவைபோல்.

“செய்தி சொல்லவேண்டும்” என்று ஒருத்தி மெல்ல சொன்னாள். அச்சொல்லில் கலைந்த மற்றவர்கள் என்ன செய்வதென்றறியாமல் அங்குமிங்கும் செல்ல முயல்வதன் முதற்கணத்தில் உடல் ததும்பினர். முதியவள் மெல்லிய நம்பிக்கை ஒன்றை மீண்டும் வரவழைத்தவளாக ஜெயந்தியின் கையைப்பற்றி மீண்டும் நாடி பார்த்தாள். அவள் கழுத்திலும் நெற்றியிலும் கைவைத்தாள். அதைக் கண்டு பிறிதொரு வயற்றாட்டியும் மறுகையையும் எடுத்து நாடி பார்த்தாள். வியப்புடன் விழிதூக்கி “எப்படி இத்தனை எளிதாக...?” என்றாள் அவள். “இதை ஒருபோதும் நாம் வகுத்துவிட முடியாது. ஒவ்வொன்றும் ஒவ்வொருமுறையில். ஒன்று பிறிதொன்றெனெ நிகழ்ந்தால் இது என்னவென்று ஏற்கெனவே கண்டடைந்துவிட்டிருப்பார்கள்” என்றாள் முதுமகள்.

“எவர் சென்று சொல்வது?” என்று கையில் குழந்தையுடன் நின்ற வயற்றாட்டி கேட்டாள். “குழவியை கொடு! நான் சென்று சொல்கிறேன்” என்று சொன்ன முதியவள் தன் கைகளைக் கழுவியபின் பதமாக குழவியை வாங்கிக்கொண்டாள். உடல் உலுக்கி அழுதுகொண்டிருந்த குழந்தையின் வாயில் தன் விரலை வைத்தாள். விழியிலாப் புழுபோல குழவி எம்பி அதை கவ்வ முயன்றது. “அனல்நிறை வயிறு” என்றாள் முதுமகள். “அதன் உடலும் அனலென கொதிக்கிறது. காய்ச்சல்

கொண்டிருக்கிறது” என்றாள் பிறிதொருத்தி. “ஆம்” என அப்போதுதான் அதை உணர்ந்தாள் முதுமகள். குழவியின் வயிற்றைத் தொட்டு நோக்கி “ஆம்! ஏனிப்படி கொதிக்கிறது? இதுவரை கண்டதில்லை” என்றாள்.

இன்னொருத்தி “அன்னையின் அனலையும் எடுத்துக்கொண்டது போலும்” என்றாள். “இன்னும் சற்று நேரத்தில் இதற்கும் வலிப்பு வந்துவிடக்கூடும்” என்று சொன்னபின் “தேவி இறந்த செய்தியை சொல்வதற்கு முன் இக்குழவியை காட்டவேண்டும். அதுவரை இது உயிருடன் இருக்குமென்றால் நன்று” என்றபடி அதை மெல்லிய துணியில் நன்கு சுற்றி கையில் எடுத்துக்கொண்டு சிற்றடி வைத்து வெளியே சென்றாள். வெளியே சென்று புதுக்காற்றை ஏற்றதும் அச்செயலாலேயே அவள் முந்தைய நிகழ்வுகளிலிருந்து விடுபட்டாள். ஒவ்வாதனவற்றை உதற விழையும் உள்ளம் புதிய தருணத்தை பற்றிக்கொண்டது. அவள் முகம் மலர்ந்து விரைவுநடை கொண்டாள்.

பேற்றுக் குடிலின் வெளியே மகிழமரத்தடியில் தன் நான்கு மாணவர்களுடன் நின்றிருந்த சுக்ரரை அணுகி குழவியை நீட்டி “பெண் குழந்தை, முனிவரே” என்றாள் வயற்றாட்டி. முகம் மலர்ந்த சுக்ரர் இரு கைகளையும் நெஞ்சில் சேர்த்து கூப்பி “நலம் திகழ்க! நீணாள் வாழ்க! வெற்றியும் புகழும் நீளும்குலமும் அமைக!” என்று தனக்குத் தானே என சொன்னார். “நோக்குங்கள்” என்று குழவியை மேலும் அருகே கொண்டு சென்றாள் முதுமகள். அஞ்சியவர்போல “வேண்டாம்” என்று அவர் பின்னடைந்தார். “தயங்கவேண்டாம், முனிவரே. உங்கள் மகள் இவள். கைகளில் வாங்கலாம்.

நெஞ்சோடணைக்கலாம், முத்தமுமிடலாம், ஒன்றும் ஆகாது” என்று வயற்றாட்டி சிரித்தபடி சொன்னாள்.

“வேண்டாம்” என்று சுக்ரர் தலையசைத்தபோது நாணத்தாலும் பதற்றத்தாலும் அவர் முகம் சிவந்திருந்தது. “வாங்குங்கள்!” என்று முதுமகள் சற்று அதட்ட அவர் தானறியாது கைநீட்டினார். அக்கைகளில் அவள் குழந்தையை வைத்தாள். “மெல்ல... மெல்ல...” என்றபடி அவர் அதை எடைதாளா கிளைகள் என தாழ்ந்த கைகளில் பெற்றுக்கொண்டார். கைகளும் உடலும் நடுங்க அதை கீழே போட்டுவிடுவோம் என்று அஞ்சி நெஞ்சோடு சேர்த்துக்கொண்டார். அத்தருணத்தின் எழுச்சியை நிகர்செய்யும்பொருட்டு “பெண்குழந்தை அல்லவா?” என்று அவளை நோக்கி பொருளிலா வினாவை கேட்டார். “ஆம், பேரழகி. இத்தனை செறிகுழல் கொண்ட குழவியை இதற்கு முன் நான் கண்டதில்லை” என்றாள்.

“அன்னையை போல், அன்னையை விடவும்...” என்றபடி சுக்ரர் குனிந்து குழந்தையை பார்த்தார். பிறகு “முத்தமிடலாமா...?” என்றார். “ஆம், ஆனால் உள்ளங்கால்களில் முத்துவது வழக்கம்” என்றாள் வயற்றாட்டி. “ஆம், உள்ளங்கால்களில்தான்! தேவியின் கால்கள். உலகளந்த கால்கள்” என்றபடி குனிந்து காற்றில் உதைத்து விரல் சுழித்துக்கொண்டிருந்த இரு கால்களில் ஒன்றை மெல்ல தூக்கி தன் நெற்றிமேல் வைத்தார். உதடுகளால் முத்தமிட்டார். “கால்களால் ஆள்க! கால்களால் வெல்க!” என்று நடுங்கும் குரலில் சொன்னார். பனித்துளி உதிருமொரு கணத்தில் நெஞ்சு நெகிழ்ந்து விம்மி அழத்தொடங்கினார். விழிநீர்த்துளிகள் தாடிப்பிசிர்களில் வழிந்து தயங்கின.

வயற்றாட்டி குழவியை அவர் கைகளில் இருந்து வாங்கினாள். இரு மாணவர்களும் அவரை சற்று அணுகினர். ஒருவன் அவர் தோளைத்தொட்டு “ஆசிரியரே...” என்று மெல்ல அழைத்தான். கைகளால் நெஞ்சைப்பற்றியபடி தலைகுனிந்து தோள்கள் குலுங்க சுக்ரர் அழுதார். “குழவிக்கு பசிக்கிறது. நான் உள்ளே கொண்டுசெல்கிறேன்” என்று வயற்றாட்டி திரும்புகையில்தான் அவர் தன் துணைவியை உணர்ந்து “அன்னை எப்படி இருக்கிறாள்...?” என்றார். வயற்றாட்டியின் முகம் மாறுபட்டது. அக்கணமே அவ்வுணர்வை பெற்றுக்கொண்ட சுக்ரர் உரத்த குரலில் “சொல்! எப்படி இருக்கிறாள்?” என்றார். “அவர்கள் இல்லை” என்றாள் வயற்றாட்டி. “இல்லையென்றால்...?” என்றபடி பாய்ந்து வயற்றாட்டியின் தோளைப் பற்றினார் சுக்ரர்.

“அறியேன்... ஆயிரம் பேறெடுத்தவள், இது எவ்வண்ணம் நிகழ்கிறதென்று இக்கணம்வரை புரிந்ததில்லை” என்றாள் வயற்றாட்டி. “அதில் நான் செய்வதற்கேதுமில்லை.” சுக்ரர் அவள் தோளைப் பற்றி உலுக்கி “சொல், என்ன ஆயிற்று? என்ன ஆயிற்று, இழிமகளே...? நீ என்ன செய்தாய் அங்கு?” என்றார். அத்தருணத்தில் வயற்றாட்டிகள் இயல்பாக தேரும் ஓர் ஒழிதல் சூழ்ச்சியை பின்னால் வந்து நின்ற இன்னொரு வயற்றாட்டி செய்தாள். “குழவி அன்னையை கொன்றுவிட்டு வெளிவந்தது” என்றாள். சுக்ரர் கால்கள் நடுங்க ஈரடி பின்னால் வைத்து தன் மாணவனின் தோளை பற்றிக்கொண்டார். “எங்கே அவள்?” என்றார். “உள்ளே” என்றாள் இளம்வயற்றாட்டி. விழிகளால் செல்வோம் என முதுமகளிடம் சொன்னாள்.

“அவள் எங்கே?” என கூவிய சுக்ரர் “எங்கே? எங்கே அவள்?” என்று அலறியபடி பாய்ந்து குடிலுக்குள் நுழைந்தார். உள்ளே நிலம்பரவி வழிந்த கருக்குருதியைத் துடைத்து

உலரத்தொடங்கிய கால்களைக் கழுவி ஜெயந்தியின் சடலத்தை ஒருக்கிக்கொண்டிருந்த வயற்றாட்டிகள் சிதறி விலகினர். பெருத்த வயிறு நடுவே எழுந்திருக்க வெண்ணிறத்துணி மூடிய உடலை அவள் என எண்ண அவரால் இயலவில்லை. “எங்கே அவள்? அவள் எங்கே? எனக்கு தெரியும்! நானறிவேன்! நானறிவேன்…” என்று கூவியபடி அருகணைந்த சுக்ரர் அவள் என உணர்ந்ததும் “ஆ!” என அலறி பின்னடைந்தார். நடுங்கியபடி நின்று நோக்கியபின் மிக மெல்ல முன்னால் சென்று மார்பின்மேல் மடித்து கோத்து வைக்கப்பட்டிருந்த அவள் கைகளை பற்றினார்.

அது தேளெனக் கொட்டியதுபோல் உதறிவிட்டு பின்னால் வந்தார். அவர் கையிலிருந்து விழுந்த அவள் கை மஞ்சத்தின் விளிம்பில்பட்டு சரிந்து தொங்கி ஆடியது. அவள் முகம் பிறிதெங்கோ கேட்கும் சொல்லொன்றுக்கு செவி கூர்ந்ததுபோல் இருந்தது. “இது அல்ல” என்று அவர் சொன்னார். பித்தனின் விழிகளுடன் “எங்கே அவள்?” என்று வயற்றாட்டியரிடம் கேட்டார். அவர்கள் மறுமொழி சொல்லவில்லை. “இது அல்ல” என்றபின் அச்சம் கொண்டவர்போல திரும்பி வாயிலை நோக்கி ஓடி வெளியே பாய்ந்தார். படிகளில் காலிடற விழப்போனவரை அவரது இரு மாணவர்கள் பற்றிக்கொண்டனர். மண்ணில் கால் மடித்து அமர்ந்து கைகளால் தலையில் அறைந்தபடி அவர் கதறி அழத்தொடங்கினார். “என் தேவி! என் தேவி!” என்று கூச்சலிட்டார். “அவள் சினங்கொண்டவள்… பெருஞ்சினமே உருவானவள்… இதை பொறுக்கமாட்டாள்” என்றார்.

இறப்பின் தருணத்தில் பொருளுள்ள ஒரு சொல்லையேனும் எவரும் சொல்லிக்கேட்டிராத முதிய வயற்றாட்டி உறைந்த

நோக்குடன் நின்றாள். “அவளது சினம் இதற்காகத்தானா? இதற்காகத்தானா? இதற்காகவா சினந்தாள்? அவளது சினம்... அவளது ஆறாப்பெருஞ்சினம்...” என்று சுக்ரர் கூவிக்கொண்டே இருந்தார். முதிய சீடர் ஒருவர் பிறரிடம் உதடசைவால் ‘அவரை அழைத்துக்கொண்டு செல்லலாம்’ என்றார். இருவர் அவர் கைகளைப்பற்றி மெல்ல தூக்கி அகற்றி கொண்டுசென்றனர். தன் ஆணவமும் நிமிர்வும் அகல குழவியைப்போல் நோயாளன்போல் அவர்களின் கைகளில் தொங்கிய அவர் சிற்றடி வைத்து சென்றார். பிறர் அமைதிகொண்டிருந்தமையால் அவருடைய புலம்பும் குரலே மரக்கூட்டங்களுக்கு அப்பால் ஒலித்தது.

வயற்றாட்டி குனிந்து குழவியை பார்த்தாள். அழுது களைத்து குளிர்கொண்டதுபோல் நடுங்கிக்கொண்டிருந்தது. உதடுகளைச் சுற்றி நரம்புகள் நீலம் கொண்டு புடைத்திருந்தன. கழுத்திலும் மார்பிலும் நீல நரம்புகள் எழத்தொடங்கின. “முலையூட்ட வேண்டுமடி” என்றாள் முதுமகள். “இது காடு, இங்கு ஊற்றுமுலை கொண்ட எவள் இருக்கிறாள்?” என்றாள் இன்னொரு வயற்றாட்டி. “முடியாது என்று சொல்ல நீங்கள் எதற்கு? அருகே அமைந்த முனிவரில்லங்களில் சென்று பாருங்கள், முலையூட்டும் பெண் எவளேனும் இருக்கிறாளா என்று!” என முதுமகள் கூவினாள். “இல்லை, அன்னையே. முலையூட்டும் பெண் எவளும் இங்கில்லை” என்றாள் இன்னொருத்தி. “என்ன செய்வது?” என்றாள் ஒருத்தி. “இங்கிருக்கும் பாலை கொடுத்துப்பார்ப்போம். இக்குழவி வாழவேண்டும் என்று ஊழிருந்தால் பால் அதற்கு ஒத்துப்போகும்” என்றாள் முதுமகள்.

பசியில் வெறிகொண்டு கைகள் அதிர்ந்து நடுங்க கால்கள் குழைய வீறிட்டலறிய குழவிக்கு அவர்கள் முதலில் நீர் கலந்த தேனை நாவில் விட்டனர். சிறுநா சுழற்றி உதடு பிதுக்கி அதை துப்பியது. “பால் கொண்டுவாருங்கள்” என்று வயற்றாட்டி கூவ பசும்பாலில் நீர் விட்டு தேன் கலந்து அதன் நாவில் விட்டனர். அதையும் துப்பிவிட்டு தலையைச் சுழற்றி ஆங்காரத்துடன் அலறி அழுதது. “அத்தனை பசுக்களின் பாலையும் கொண்டுவாருங்கள், ஏதோ ஒன்றின் சுவை உவப்பக்கூடும்” என்றாள் வயற்றாட்டி. தரையில் அமர்ந்து தன் மடியில் மகவை படுக்கவைத்து “என் அரசியல்லவா? என் தேவியல்லவா? என் குலதெய்வமல்லவா? இந்தப் பாலை ஏற்றுக்கொள்ளுங்கள். உங்கள் காலடிகளை சென்னி சூடி வேண்டுகிறோம், அன்னையே! இந்த உலகை ஏற்றுக்கொள்ளுங்கள்” என்று மன்றாடினாள்.

அக்குருநிலையில் வளரும் பன்னிரு பசுக்களின் பாலையும் அதன் நாவில் விட்டனர். எதையும் குழந்தை ஏற்றுக்கொள்ளவில்லை. மேலும் மேலும் அழுது உடல் கறுத்து விழிகள் இமைகளுக்கு அப்பால் செருகிக்கொள்ள குரலெழுப்பியது. பின்னர் அதன் குரல் தாழத் தொடங்கியது. முறுகப்பற்றிய விரல்கள் மெல்ல விடுபட, பெருவிரல் விலகி தளர, உடல் நனைந்த சிறுதுணியென்று மாற அதன் உயிர் அணைந்தபடியே வந்தது. “இங்கிருப்பதில்லை என்று முடிவு செய்துவிட்டது போலும்” என்றாள் ஒருத்தி. “வாயை மூடு! இழிமகளே, .நம்மால் முடிந்தது இங்குள அனைத்தையும் கொண்டு இவ்வனலை எழுப்புவது மட்டுமே. எந்நிலையிலும் இதுவே எல்லையென்று முடிவெடுக்காமல் இருப்பதே மருத்துவனின் கடமை” என்றாள் வயற்றாட்டி.

🐾மருத்துவநூல் கற்ற முனிவராகிய சத்வர் வந்து குழவியை பார்த்தார். அதன் வாயை நோக்கி விரல் கொண்டுசென்றபோதே அதன் உடலில் சிறு அசைவு எழுவதை கண்டார். “என்ன முடிவெடுத்திருக்கிறாள், மருத்துவரே?” என்றாள் வயற்றாட்டி. “முடிவெடுக்க வேண்டியவர்கள் நாம். இச்சிற்றுடலுக்குள் அனல் எரிந்துகொண்டிருக்கிறது, அது இங்கே பற்றிப்படர்ந்தேறவே விழைகிறது” என்று சொன்னபடி குழவியின் கால்களையும் கைகளையும் தொட்டு நோக்கி “பிறந்து இத்தனை நேரமாகிறது, ஒருதுளி உணவும் ஏற்காதபோதும் இவ்வளவு வெம்மை இச்சிற்றுடலில் எழுவது வியப்பளிக்கிறது. பிறிதொன்று இதைப்போல் நான் கண்டதில்லை” என்றார். “எங்கிருந்து எழும் அனல் இது?” என்று வயற்றாட்டி கேட்டாள். “இம்மடியில் இக்குழவியை வைத்திருக்கவே இயலவில்லை. ஆடைக்கும் நான் அணிந்த மரவுரிக்கும் அடியில் என் தொடைகள் வெந்துகொண்டிருக்கின்றன.”

“இவள் எதுவும் அருந்தாதது இவ்வெம்மையினால்தான்” என்றார் சத்வர். “பசும்பால் குளிர்ந்தது. அது இவளுக்கு உகக்கவில்லை. எரி நீரையல்ல, நெய்யையே விரும்பும்.” முதுமகள் புரியாமல் “என்ன செய்வது?” என்று கேட்டாள். “அறியேன். ஆனால் எங்கிருந்தேனும் ஒரு சொல் எழுமென்று எண்ணுகின்றேன். மருத்துவம் கற்பவர் தன் அறிவை சூழ்ந்துள்ள பொருட்களனைத்திலும் படியவைத்து தான் வெறுமைகொண்டு காத்திருக்க வேண்டுமென்பார் என் ஆசிரியர். உரிய தருணத்தில் உரிய பொருள் விழியும் நாவும் கொண்டு நம் முன் வந்து நின்றிருக்கும். பார்ப்போம்” என்றபின் மாணவர்களுடன் சத்வர் திரும்பிச்சென்றார்.

காலடிகள் ஒலிக்க காட்டுவழியே நடக்கையில் நெடுநேரம் கழித்து அவருடன் வந்த மாணவர்களில் ஒருவன் “அக்குழவியின் மணமே வேறுவகையில் உள்ளது” என்றான். “ஆம், எரிமணம். அதன் அன்னையின் உடலிலிருந்து வழிந்த குருதியும் கன்மதம்போல் கந்தகம் மணத்தது என்கிறார்கள்” என்றார் சத்வர். மாணவர்களில் இளையவனாகிய ஒருவன் “அங்கு குகையில் இந்த அனல்மணத்தை அறிந்தேன்” என்றான். நின்று திரும்பிநோக்கிய சத்வர் “எக்குகையில்?” என்றார். “சதமமலைக் குகையில். மலைத்தேனெடுக்க நாங்கள் செல்லும்போது காற்றில் இந்த மணம் எழுந்தது. அங்கு புலியொன்று குருளைகளை ஈன்றிருப்பதாக சொன்னார்கள்.”

அக்கணத்தில் தன் உளம் மின்ன “ஒருவேளை...” என்றார் சத்வர். தலையை ஆட்டி எண்ணத்தை ஓட்டியபடி நடந்து சுக்ரரின் குடிலை அடைந்தார். அங்கு மரவுரியில் மல்லாந்து படுத்து கண்ணீர் வழிய அணைமணையில் தலையை உருட்டியபடி முனகிக்கொண்டிருந்த சுக்ரரின் காலடியில் அவரது மாணவர்கள் அமர்ந்திருந்தனர். முதல் மாணவராகிய சபரர் எழுந்து வெளியே வந்தார். விழிகளால் என்ன என வினவிய அவரிடம் “குழவி எந்தப் பாலையும் உண்ண மறுக்கிறது. ஒருவேளை அது விரும்பும் பால் தாய்ப்புலியின் பாலாக இருக்கலாம்” என்றார் சத்வர். “தாய்ப்புலியா?” என்று சபரர் தயங்க அவருக்குப் பின்னால் வந்து நின்ற இளைய மாணவனாகிய கிருதன் “இங்கு மலைக்குகையொன்றில் தாய்ப்புலி குட்டி போட்டிருக்கிறது. அப்புலியையும் குழவிகளையும் இங்கு கொண்டுவருகிறேன். புலிப்பாலை கொடுத்துப்பார்ப்போம்” என்றான்.

“புலிப்பாலா? எங்ஙனம்?” என்று சபரர் திரும்ப “நாம் சுக்ரரின் மாணவர். எதுவும் இங்கு இயல்வதே” என்றபடி “இதோ, ஒரு நாழிகைக்குள் புலியுடன் திரும்பி வருகிறேன்” என்று சொல்லிக்கொண்டே அவன் குடில்களை நோக்கி ஓடினான். அவனும் ஏழு மாணவர்களும் உடனே கிளம்பி காட்டிற்குள் சென்றனர். சதமமலைக் குகைக்குள் அவர்கள் ஏறியபோது அவர்கள் அணுகுவதை மணம் வழியாக அறிந்த புலி முழங்கத் தொடங்கியது. அரையிருளில் தூசியும் வௌவால்எச்சமும் மட்கிய விலங்குமயிரும் கலந்து மணத்த குகைக்குள் அவர்கள் வெறுங்கைகளுடன் நுழைந்தனர். பொன்னீக்களின் ரீங்காரம் ஒலித்தது. அவர்களின் முகத்தை மணிவண்டு ஒன்று முட்டிச்சென்றது. குகைக்குள் மென்புழுதியில் தன் நான்கு குட்டிகளில் ஒன்றைக் கொன்று கிழித்து உண்டு இளைப்பாறி பிற மூன்று குட்டிகளுக்கும் முலையூட்டிக் கொண்டிருந்த தாய்ப்புலியை கண்டனர்.

குழவியின் எஞ்சிய எலும்பை நாவால் நக்கி சுவைத்துக்கொண்டிருந்த புலி முன்னங்கால்களை ஊன்றி எழுந்து குகை எதிரொலிக்கும்படி முழங்கியது. “அஞ்சவேண்டாம், அது எளிய விலங்கு. அஞ்சாத விழிகளை அது அறியாது” என்றபடி கிருதன் அதை நேர்விழிகளால் நோக்கியபடி சீராக நடந்து அணுகினான். முன்னங்காலால் ஓங்கி நிலத்தை அறைந்து உரக்க குரலெழுப்பியது புலி. அவன் அதனருகே சென்று அதன் நெற்றியில் கைவைத்தான். இருமுறை முனகியபின் புலி தலை தாழ்த்தியது. காதுகளை மெல்ல சொடுக்கி நுண்ணிய ஈக்களை விரட்டியபடி எடைமிக்க தலையை தரையில் வைத்தது.

“குட்டிகளை எடுத்துக்கொள்ளுங்கள்” என்று கிருதன் பிற மாணவர்களை நோக்கித்திரும்பி சொன்னான். அவர்கள் ஓடிவந்து புலிக்குருளைகளை எடுத்துக்கொள்ள புலி முன்னங்கால்களில் எழுந்து திகைப்புடன் அவர்களை பார்த்தது. “வருக!” என்று அதற்கு கைகாட்டிவிட்டு அவன் குகையைவிட்டு வெளியே சென்றான். அவர்கள் புலிக்குருளைகளுடன் மலையிறங்கி காடுகடந்து சுக்ரரின் குடில் வளாகத்தை அடைந்தனர். புலிக்குருளைகள் உடல்சூட்டை உணர்ந்து விழிசொக்கி செந்தளிர் நாநீட்டி சப்புக்கொட்டியபின் சருகில் நீர்ச்சரடு விழும் ஒலியுடன் மெல்ல துயில்கொள்ளலாயின. புலி கால்களை நீட்டிவைத்து முகத்தை நீட்டி அவர்களுக்குப் பின்னால் ஓசையில்லாமல் வந்தது. ஓர் இடத்தில் அது நின்று உறுமியபோது அவன் திரும்பி “வருக!” என்று அதனிடம் சொன்னான். நாவால் முகத்தை நக்கியபின் அது தொடர்ந்து வந்தது.

கையில் அனல்வண்ணத் துணிச்சுருள்போல புலிக்குருளைகளுடன் வந்த அவர்களைக் காண மாணவர்கள் ஓடிவந்து கூடினர். மருத்துவச்சிகள் திகைப்புடன் நெஞ்சைப்பற்றி நோக்கிநின்றனர். அவர்களுக்குப் பின்னால் ஐயத்துடன் காலெடுத்து வைத்து மீசை விடைத்த முகத்தை நீட்டி மெல்ல புதர்களை ஊடுருவியபடி வந்தது அன்னைப்புலி. அவர்கள் குழவிகளை முற்றத்தில் விட்டதும் முட்புதர் ஒன்றை பாய்ந்து தாவிக்கடந்து குழவிகளை அணுகி வாயால் கவ்வி புரட்டி அடிவயிற்றை நாவால் நக்கியது. ஒரு குருளை அதன் கால்களை நோக்கி செல்ல அருகே படுத்து கால்களை அகற்றி முலைக்கணுக்களை அவற்றுக்களித்தது. கண் திறக்காத குட்டிகள் மூக்கால் தேடி முலை அறிந்து பூநகம் எழுந்த இரு சிறுகைகளையும் தூக்கி அன்னையின் வயிற்றில் ஊன்றி

முலை உண்ணத்தொடங்கின. “குழவியை கொண்டு வாருங்கள்!” என்று மருத்துவர் சொன்னார். வயற்றாட்டி நடுங்கியபடி குழவியுடன் வந்தாள். “மருத்துவரே... இது...” என்று அவள் சொல்லத் தொடங்க “அஞ்ச வேண்டியதில்லை” என்றபடி அக்குழவியை வாங்கி மெல்ல கொண்டுசென்று புலிக்குருளைகளின் அருகே வைத்தார். புலி திடுக்கிட்டு முன்னங்கால்களில் எழுந்து திரும்பியது. முகவாய்மயிர் விடைக்க மூக்கை சுளித்து கோரைவெண்பல் காட்டி மெல்ல சீறியது. கிருதன் குனிந்து அக்குழவியை எடுத்து குருளைகளுடன் சேர்த்து அதன்முன் நீட்டினான். புலி குனிந்து குழவிகளைப் பார்த்து முழவுத்தோலில் கோல்உரசும் ஒலியுடன் உறுமியது. அதன் தணிந்த வயிறு இருமுறை அதிர்ந்து அழுந்தியது. புழுதியில் இடப்பட்டிருந்த வால் சுழன்றெழுந்து தணிந்தது. மூக்கை நீட்டி குருளைகளையும் குழவியையும் மோப்பம் கொண்டபின் திரும்பி நா நீட்டி மூக்கை நக்கிக்கொண்டது.

சத்வர் குழவியின் வாயை புலியின் முலைக்கண்ணின் அருகே கொண்டுசென்றார். புலியின் காம்புகளில் இருந்து மெல்லிய வெண்நூலாக பால் சீறிக்கொண்டிருந்தது. அதன் மணத்தை அறிந்ததும் அது தலைதூக்கி தாவிப்பற்றி உறிஞ்சி குடிக்கலாயிற்று. முலையுறிஞ்சிக் கொண்டிருந்த புலிக்குருளைகளில் ஒன்று கால் தள்ளாடி அதன் மேல் விழுந்தது. எழுந்து திரும்பி குழவியை முகர்ந்துபார்த்தபின் மெல்லிய சிணுங்கல் ஒலியுடன் மீண்டும் அன்னையின் முலையை கவ்விக்கொண்டது. “அவள் வாழ்வாள்” என்றார் மருத்துவர். “நாம் அறியாத ஊழ் கொண்டவள். யுகங்களுக்கொருமுறை தெய்வங்கள் தேர்ந்தெடுத்து மண்ணுக்கு அனுப்புபவர்களில் ஒருத்தி. அவள் வாழ்க!”

அன்னைப்புலி மெல்ல சோர்ந்து தணிந்து தலையை தரையில் தாழ்த்தியது. “குருதி கொடுங்கள் அதற்கு” என்றான் கிருதன். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்க ஒருவன் காட்டுக்குள் புகுந்து மானொன்றை அம்பெய்து வீழ்த்தி கொடிகளால் இரு கால்களையும் கட்டித் தூக்கி தோளிலேற்றிக்கொண்டு வந்தான். புலியின் வாயருகே கொண்டுவந்து மானை வைத்து அதன் காதுகளைப்பற்றி தலையைத் திருப்பி புடைத்து வளைந்த கழுத்தின் குருதிக் குழாயை சிறு கத்தியால் அறுத்தான். நான்கு கால்களும் காற்றில் உதைக்க மான் துள்ளித் துள்ளி அடங்கியது. சீறித் தெறித்த குருதியை புலியின் வாயருகே காட்ட மெல்ல உடல் நீட்டி நாவெடுத்து நக்கி அருந்தியது அன்னை.

கனிந்த பழமொன்றின் செஞ்சாறை அருந்துவதுபோல் அந்த மானின் குருதியை உண்டு இளைப்பாறியது புலி. அதன் விழிகள் மெல்ல மேலே ஏற காதுகள் சொடுக்கிச் சொடுக்கி சிறு பூச்சிகளை விரட்ட ஓரிருமுறை நா நீட்டி முகமயிரையும் தாடையையும் நக்கி சப்புக்கொட்டியபடி சிப்பி விழிகள்மேல் இமைப்பாலாடைகள் படிய மெல்ல அது துயிலலாயிற்று. நான்கு குழவிகளும் அதன் அடிவயிற்றில் ஒட்டி இறுகி அக்குருதியை அமுதென உண்டுகொண்டிருந்தன.

# மாமலர் - 52

## 52. வெண்மலர்தேவன்

மூன்று மாதம் அன்னைப்புலியின் பாலை உண்டு புலிக்குருளைகளில் ஒன்றெென தானும் புரண்டு வளர்ந்தது குழந்தை. மார்கழிமாதம் மகம்நாளில் பிறந்தவள் புவியாள்வாள்

என்றனர் மகளிர். நிமித்திகர் கூடி அவள் நாளும் பொழுதும் கோளமை நெறியும் தேர்ந்து அவள் மண்ணில் எழுந்த தேவமகள் எனத் துணிந்தனர். ஆகவே அவளுக்கு தேவயானி என்று பெயரிடப்பட்டது.

மானுடஅன்னையரால் பேணப்பட்டாலும் அவள் புலியன்னையின் மடியிலேயே பெரும்பாலும் வாழ்ந்தாள். குழவிகள் வளர்ந்ததும் அன்னைப்புலி அவற்றை அங்கேயே விட்டுவிட்டு காட்டுக்குள் சென்று மறைந்தது. பின்னர் எப்போதேனும் புதர்களை விலக்கி மெல்ல தலைநீட்டி அவளை நோக்கி நின்றது. புலிகள் அன்னையை அறியவில்லை. ஆனால் அவள் மட்டும் அதை நோக்கி அசையாமல் நின்றாள். சிறுசெவி மடித்து தலைகுலுக்கி அது எழுப்பும் ஓசையே ஓர் சொல்லாடலென ஒலித்தது. பின் மீன் நீருள் என அது பின்வாங்கி மறைந்தது.

மூன்று புலிகளும் அவளுக்கு பிறவித் தோழர்களென எப்போதும் உடனிருந்தனர். காட்டுக்குள் சென்று வேட்டையாடி ஊனும் குருதியும் உண்டு நா சுழற்றி வாய் தூய்மை செய்தபின் அவளை நாடி அவை திரும்பி அத்தவக்குடிலுக்கே வந்தன. அவளைவிட பெரிதாக அவை வளர்ந்தபின்னும் தங்களில் ஒருவர் என்றே அவளை எண்ணின. நடக்கப்பழகும் முன்னரே புலிகளின் காலைப்பற்றி எழுந்து அவற்றின் மேல் தவழ்ந்தேறி பிடரிமயிர் பற்றி குப்புறப் படுத்து கைகளை அவற்றின் கால்களுக்கு நிகராக அசைத்தபடி ஊர்வது அவள் வழக்கமென்றிருந்தது. அவளைத் தோளிலேற்றியபடி அவை முள் படர்ந்த புதர்க்காடுகளுக்குள் சென்று உலாவி, பாறைகளின்மேல் ஓய்வெடுத்து மீண்டு வந்தன. இரவிலும்

அவள் குடிலுக்குள் நுழைந்து மஞ்சத்தின் இருபக்கமும் படுத்திருந்தன.

குருநிலையின் பிற குழவிகள் அவளை அணுகவில்லை. அனல்முடி சூடி விண்வாழும் தெய்வங்களில் ஒன்று அவள் வடிவில் மண்ணுக்கு வந்ததென்று முனிவரும் எண்ணினர். அவள் குழலில் மலர்கள் சூட்டப்பட்ட உடனே வாடின. மார்பில் அணிந்த அருமணிகளும் கருகின. அவள் நீராடும்போது நீரிலிருந்து ஆவியெழுந்தது. அவள் துயின்றெழுந்து சென்ற இடத்தை தொட்டுப்பார்த்த சேடிகள் அங்கு அனல் நிறைந்த கலம் இருந்தது போல் உணர்ந்தனர். "ஏனிந்த வெம்மை? எதை எரித்தழிக்கப்போகிறாள் இவள்?" என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டனர். "தெய்வங்கள் மானுடருக்குள் நுழையலாகாது. எறும்புப்புற்றின்மேல் யானை நடந்துசெல்வதைப் போன்றது அது" என்றனர் மூதன்னையர்.

ஜெயந்தி இறந்த பின் சிலகாலம் தனிமையிலும் துயரிலும் மூழ்கி இருந்த சுக்ரர் மகளை ஒருகணமும் எண்ணவில்லை. அவளைப்பற்றி எப்போதேனும் எவரேனும் வந்து சொன்னால் அரைக்கணம் விழிதிருப்பி அதைக் கேட்டபின் "உம்" என்ற வெற்று முனகலுடன் முகம் திருப்பிக்கொண்டார். அன்னையைக் கொன்றெழுந்தவள் என்னும் வயற்றாட்டியின் சொல்வழியாக அன்றி அவளைப்பற்றி எண்ணவே அவரால் இயலவில்லை. அவ்வெண்ணம் அளித்த உளநடுக்கை வெல்ல அவர் அவளைக் காண்பதையே தவிர்த்தார். எப்போதேனும் சூதரோ பாணரோ அவளைப்பற்றி சொன்ன விந்தைச் செய்திகள் எதுவும் அவரை மேலும் எண்ணவைக்கவில்லை.

தான் கற்ற நூல்கள் அனைத்தையும் மீண்டும் ஒருமுறை எண்ணத்திலிருந்து எடுத்து ஏடுகளாக பதிப்பதில் வெறியுடன்

மூழ்கி தன் துணையைப்பிரிந்த துயரை சுக்ரர் கடந்து சென்றார். நிகழ்காலத் துயரை வெல்ல சென்றகாலத்திற்குச் செல்வதே உகந்தவழி என கண்டுகொண்டார். உருவழிந்து பரவும் எண்ணங்களே துயரின் ஊர்திகள் என்று அறிந்தார். வகுத்து உரைத்து பொறித்த சொற்கள் அவற்றை நுகத்தில் கட்டின. பாதையில் நிறுத்தின. நோக்கியறிந்து தொட்டுணரும் இலக்கு நோக்கி கொண்டுசென்றன. பல்லாயிரம் சொற்களால் ஜெயந்தி அவர் உள்ளத்தின் ஆழத்திற்கு செலுத்தப்பட்டு முற்றிலும் மறைந்தாள். அச்சொற்களனைத்திலும் அவள் ஒளியும் மணமும் நிறைந்திருந்தன.

தேவயானி வளர்ந்து சிறுமியென்றாகி சிற்றாடை உடுத்து நடை பழகத் தொடங்கியபோதுகூட அவர் அவளை அறியவே இல்லை. அவள் புலிகளிடம் இருந்து தன் நடையையும் நோக்கையும் கற்றுக்கொண்டாள். சருகசையாது அணுகும் இளங்காற்றுபோல் ஓசையின்றி வந்தாள். எளிய உயிர்களையென பிறரை ஏறிட்டு நோக்கினாள். நோக்குகையிலும் நோக்குதெரியாத விழிமங்கலால் மானுடருக்கு அப்பாலிருப்பவள் என எண்ணச்செய்தாள். தனிமையிலிருக்கையிலும் விழியறியா அரியணை ஒன்றில் அமர்ந்திருக்கும் பேரரசி என தோன்றினாள். அவள் விழி முன் சென்று நிற்கையில் பிறர் இயல்பாக உடல் குறுக்கி கைகட்டி பணிந்தனர். வேல் முனை என மின்னும் நோக்குடன் விழிதிருப்பிய அவள் ஒற்றைச் சொல்லில் வினவியபோது மேலும் பணிந்து விடையிறுத்தனர்.

முனிவர்களும் அவர்களின் துணைவியரும் அவளுடைய அடிமைகள் என்றே அங்கிருந்தனர். மறுத்து ஒரு சொல் பொறுக்காதவளாக இருந்தாள். ஆணைகள் மீறப்படுமென

எண்ணவும் கூடவில்லை அவளால். விழைந்ததை நோக்கி அக்கணமே எழுந்தாள். அடைந்த மறுகணமே கடந்துசென்றாள். சிறுமியென்றிருக்கையிலேயே அக்குருநிலையின் அனைவரையும் மணியில் சரடென ஊடுருவிச்சென்றாள். அக்குருநிலையே அவளால் இணைக்கப்பட்டது. அவளன்றி பிறிதொரு பேசுபொருள் அரிதாகவே அமைந்தது. பேசுந்தோறும் எழும் சலிப்பால் அவளை அவர்கள் பேசிப்பெருக்கிக் கொண்டனர். பெருக்குபவர்கள் விரும்பப்பட்டமையால் மேலும் பெருகியது அவளைப்பற்றிய பேச்சு. அருமணியை ஒளிவளையம் என அவளை ஏழுமுறை சூழ்ந்திருந்தன அவளைப்பற்றிய கதைகள்.

மானுடர் வியக்கும் நீள்கருஞ்சுரிகுழலை கொண்டிருந்தாள் தேவயானி. அவள் தோளில் வழிந்து முதுகிலிறங்கி இடைகடந்து கால்களைத் தொட்டு அலையடித்த அக்கரிய ஒளியை ஏழுநாட்களுக்கு ஒருமுறை நுனிவெட்டி சீர்படுத்தினர் செவிலியர். “நெய்யும் குழம்பும் தேவையில்லை, அவை உள்ளிருக்கும் அனலால் உருகி சுடர்கொள்கின்றன” என்றனர் செவிலியர். அள்ளிப்பற்றினால் இருகைக்குள் அடங்காத அப்பெருக்கை ஐந்து புரிகளெனப் பகுத்துப் பின்னி முடைந்திட்டனர். நீராடி வருகையில் தன் குழல் பின்னணியில் விரிய செஞ்சுடர் மேனி பொலிய அவள் தோன்றினாள். “கடுவெளி இருளில் எழுந்த கனல்வடிவக் கொற்றவை போல” என்றான் ஒரு சூதன். அவளை அவ்வுருவிலேயே நிலைக்கச்செய்தது அச்சொல்லாட்சி.

குருநிலையில் வாழ்ந்த கவிஞர்கள் அவளைப்பற்றி பாடல்களை புனைந்தனர். அக்கதைகள் பாணர்களினூடாக வெளியே சென்றன. அங்காடி மலர்களை காட்டிலிருந்து வரும்

வண்டுகள் சூலுறச்செய்வதுபோல அவள் பெயர் மக்களின் நாவுகளில் திகழ்ந்தது. அவளை எவரும் காணவில்லை என்பதனால் அக்கதைகள் மேலும் பலமடங்கு பெருகின. இரவுக்காற்றில் தொலைவிலிருந்து வந்து கனவைத் தொட்டு கடந்துசெல்லும் காட்டுமலரின் நறுமணம் போன்றிருந்தாள் தேவயானி. அச்சமூட்டுவது, தெய்வங்களுக்குரியது. எவரோ தவமிருந்து மண்ணிலிறக்கும் வரை விண்ணில் திரண்டு முழுத்துக் காத்திருக்கும் கங்கை.

நூல்களினூடாக விண்ணேறிச்சென்றார் சுக்ரர். அங்கே தன் ஆசிரியருடன் சொல்கோத்தார். சூளுரைத்துச் சென்று காட்டிலமர்ந்து சஞ்சீவினியை வென்றார். பேயுருக்கொண்டு ரிஷபர்வனின் நகருக்குச் சென்று அங்கே அவனுக்கு அழிவின்மையின் நுண்சொல்லை அளித்து அரசகுருவென அமர்ந்த பின்னரே மீண்டும் தன் தவச்சாலைக்கு திரும்பிவந்தார். அப்போது தேவயானி இளநங்கையென்றாகிவிட்டிருந்தாள். அவளை அவர் விழிகள் அடையாளம் காணவில்லை. தன் மாணவர்களையே அவர் அறிந்துகொள்ளவில்லை.

மீண்டும் தவக்குடிலில் அமைந்து மெல்லமெல்ல அக்கனவிலிருந்து மீண்டு எழுந்துவந்தார். “ஆம், இது போர். நான் வென்றாகவேண்டும்” என்று சுதமரிடம் சொன்னார். “நான் அசுரர்களின் ஆசிரியன். அவர்கள் வென்றாகவேண்டும் என்பதற்காகவே எனக்கு அந்நுண்மை அருளப்பட்டுள்ளது” என்றார். விண்ணிலும் மண்ணிலுமென அசுரரும் தேவரும் படைபொருத அவர் மெல்ல குளிர்ந்து தன்னிலை மீண்டார். வென்றுவிட்டோம் என்னும் உணர்வே அவரை மீண்டும் இனியவராக ஆக்கியது. மலர்களின் பெயர்கள் நினைவுக்கு

வந்தன. முற்றத்து மான்கள் அவரைக் கண்டு மிரளாதாயின. சிட்டுக்குருவிகள் அவரை அணுகி வந்து குரலெழுப்பத்தொடங்கின.

ஆண்டுக்கொருமுறை நிகழும் சடங்குக்கு என காட்டுக்குள் அமைந்த ஏழன்னையரின் ஆலயத்தில் பலியும் கொடையும் அளிப்பதற்கென்று சுக்ரரும் அவர் மாணவரும் சென்றனர். அத்தவச்சாலையின் முனிவரும் துணைவியரும் இளமைந்தரும் தனி நிரையென அங்கே சென்றனர். காட்டில் உலவிக்கொண்டிருக்கையில் அவர்கள் செல்வதைக்கண்டு ஆர்வம்கொண்ட தேவயானி மூன்று வேங்கைகள் விழிகளில் கூர்மையும் நடையில் அலுப்பும் தெரிய தொடர்ந்துவர தானும் அவர்களுடன் சென்றாள்.

காலகம் என்னும் கரிய சுனையின் கரையில் அமைந்த பேராலமரத்தின் விழுதுகளுக்குள் நிறுவப்பட்டிருந்தது ஏழன்னையர் ஆலயம். நீளமான பீடத்தில் திசைகளை முகமாகக் கொண்ட பிராமி, ஏறுமயிலமர்ந்த கௌமாரி, உழவார முகம்கொண்ட வராகி, பிறைசூடிய மகேஸ்வரி, தாமரைமேல் அமர்ந்த வைஷ்ணவி, தலைமாலை அணிந்த சாமுண்டி, மின்படை கொண்ட சச்சி என அமர்ந்திருந்த அன்னையர் எழுவருக்கும் செம்பட்டு அணிவித்து செம்மலர் மாலை சூட்டி செங்குருதி குழைத்த அன்னத்தைப் படைத்து வணங்கினர் முனிவர்.

அன்னையருக்கு பூசைகளை அளித்த முதுபூசகர் தன் சிறுமுழவில் விரலோட்டி அவர்களின் தொல்புகழ் பாடியபடி சலங்கை கட்டிய கால்களை முன்னும் பின்னும் எடுத்து வைத்து சுழன்றாடினார். உருண்ட தலைமேல் எழுந்த சிறுசெவிகள் மடிந்தசைய வேங்கைகள் இருபுறமும்

அமர்ந்திருக்க நடுவே கைகளைக் கட்டியபடி தோளில் சரிந்த நீள்குழலுடன் நிமிர்ந்த தலையுடன் தேவயானி அப்பூசனையை நோக்கி நின்றாள். பூசகர் சொல்பற்றிக்கொள்ள வெறியாட்டு கொண்டு வேல்சுழற்றி காற்றில் பாய்ந்து சுழன்று அமைந்தெழுந்து பெருங்குரலெடுத்து மலைமுழங்க ஓலமிட்ட வேலன் தன் நீள்கோலை அவளை நோக்கி நீட்டியபடி உடல்கீறி எழுந்ததுபோன்ற கொடுங்குரலில் கூவினான்.

"ஏழன்னையரின் மகள். இந்திராணி! இதோ அன்னை எழுந்திருக்கிறாள். எழுக அன்னை! பெருவஞ்சம் கொண்டவள். பெருஞ்சினத் திருவுரு. எழுக அன்னை! குருதிகொள் கொற்றவை எழுக! எரிதழல் முடிசூடியவள். எளியோர் தலைகளுக்குமேல் நடந்தகலும் கொடுங்கழலாள். அவள் நெற்றிக்கென எழுக, பாரதவர்ஷத்தின் உச்சியில் ஒரு மணிமுடி! பாரதவர்ஷத்தின் நெஞ்சின் மேல் ஓர் அரியணை அமைக, அவளுக்கு! ஆம், அவ்வாறே ஆகுக!" துள்ளிச் சுழன்று சொல் சிதற விழுந்து கைகால் உதைத்து மெல்ல உடல் அவிந்தான் வேலன். அவன் மேல் குளிர்நீரைத் தெளித்து மலரால் அடித்து எழுப்பி அமரவைத்து தேனும் பாலும் கலந்த இன்நீரை ஊட்டினர். சிவந்த கண்கள் கலங்கி மேலே சென்று செருகி, மறைய கைகால்கள் தளர, வாயோரம் நுரைக்கொப்புளங்கள் உடைய "ஆம்! ஆம்!" என்று அவன் முனகினான்.

அப்போதுதான் சுக்ரர் தன் மகளை முழுதுறக் கண்டார். அவள்மேல் பந்தங்களின் செவ்வொளி அலையடித்துக்கொண்டிருந்தது. குழல் காற்றில் தழலென எழுந்து பறந்தது. இருபுறமும் தழலால் ஆனவைபோலிருந்தன

வேங்கைகள். அவர் மெய்ப்பு கொண்ட உடலுடன் “இவள் மண்நிகழ்ந்த தேவி. வென்றெழும் தெய்வம் இவள்” என சொல்லிக்கொண்டார். மெய்ப்புகொள்ளும் உடலுடன் “இவள் என் மகள்” என்ற சொல்லை சென்றடைந்தார்.

அதன் பின் அவள் அவருள்ளத்தில் தெய்வத்திற்கு நிகரான இடத்தை அடைந்தாள். “பெருமழைக்கு முந்தைய இளங்குளிர்காற்றுதான் ஜெயந்தி. அதை நான் உணரப் பிந்திவிட்டேன்” என்று சத்வரிடம் அவர் சொன்னார். “இவள் எவர் என நான் அறியேன். ஆனால் இவளுக்கு தந்தையென்றிருப்பதனாலேயே என் பிறப்பு முழுமைகொள்கிறது.” இருண்ட நீரடியில் கிடக்கும் வைரத்தின் ஒளித்துளி என சத்வரின் உள்ளாழத்தில் ஒரு புன்னகை எழுந்தது. நான் தந்தையரை பார்க்கத் தொடங்கி நெடுநாளாகிறது சுக்ரரே என அவர் சொல்லில்லாமல் எண்ணிக்கொண்டார்.

துணைவியை இழந்தவர்கள் மகளை தலைமேல் வைப்பதுண்டு. அது மனைவியின் இடம் மட்டும் அல்ல. மனைவியை மறக்கும் வழி. இழந்ததை ஒன்றுக்குமூன்றென மீட்கும் சூழ்ச்சி. மனைவியை மறந்ததன் குற்றவுணர்ச்சியைக் கொண்டு அதை வளர்க்கிறார்கள். உதிரிலைகள் உரமாகி தளிரிலை தழைப்பதுபோல இயற்கையின் நெறி அது. “ஆம், தெய்வங்களுக்கு முன்னரே ஊர்திகள் பிறந்துவிடுகின்றன” என்றார் சத்வர். “நன்று சொன்னீர். நன்று சொன்னீர், சத்வரே” என அவர் தோளை தழுவிக்கொண்டார் சுக்ரர்.

சுக்ரரின் குருநிலைக்கு அருகில் ஓடிய பிரவாகினி எனும் சிற்றோடையில் இறங்கி நீராடி மூன்று வெண்ணிற அல்லிமலர்களை கொடியுடன் கொய்து கையில் எடுத்தபடி ஈரம் சொட்டும் ஆடையும் நீர்த்துளிகள் ஒளிர்ந்து தயங்கிய பொன்னிறத் தோள்களுமாக கசன் நடந்து வந்து குடில்தொகையின் முகப்பை அடைந்தான். அங்கு மல்லாந்தும் ஒருக்களித்தும் விழிசுருக்கி மூடி முகவாய்மயிர் அவ்வப்போது சிலிர்க்க தோளும் பிடரியும் விதிர்த்து சிற்றுயிர்களை விரட்ட சிற்றிலைச்செவிகள் குவிந்தும் விலகியும் ஒலிகூர இளவெயிலாடிப் படுத்திருந்த மூன்று வேங்கைகளில் ஒன்று தொலைவிலேயே அவன் மணத்தை அறிந்தது. செவிகோட்டி ஒலிகூர்ந்து மெல்ல உறுமியபடி எழுந்து மூக்கை நீட்டிக்கொண்டு மென்காலெடுத்து வைத்து பதுங்கி முன்னால் சென்றது.

தலையை அசைத்து சொடுக்கொலி எழுப்பியபடி பிற இரு வேங்கைகளும் திரும்பி அதை நோக்கின. ஒன்று முன்கால் தூக்கி வைத்து எழுந்து அமர்ந்து செந்நிற வாய்க்குள் வெண்பற்கள் தெரிய, நாக்கு உள்வளைந்து அசைய, கோட்டுவாயிட்டு உடல் நெடுக்கி சோம்பல் முறித்தது. முன்னால் சென்ற வேங்கை உறுமலில் கார்வை ஏற கால்களை நீட்டி உடலை நிலத்துடன் பதிய வைத்து பாய்வதற்கான நிலை கொண்டது. படுத்திருந்த வேங்கைகளில் ஒன்று வாலைச் சொடுக்கி நீட்டியபடி எழுந்து மெல்லடி வைத்து அதன் பின்னால் வந்து நின்றது. மூன்றாம் வேங்கை ஆர்வமற்றதுபோல மல்லாந்து நான்குகால்களையும் காற்றில் உதைத்து முதுகைநீட்டி வாலைச் சுழற்றியபின் மறுபக்கமாக புரண்டது.

காட்டைப் பகுத்து வந்த இடைவழிகளினூடாக சீரான நடையுடன் வந்த கசன் இரு வேங்கைகளையும் தொலைவிலேயே கண்டான். ஆயினும் புன்னகைமாறா முகத்துடன் அவன் அவற்றை நோக்கி வந்தான். அணுகலாகாதெனும் எச்சரிக்கையை உறுமியது முதல் வேங்கை. இரண்டாவது வேங்கை அதை தோளுரசிக் கடந்து வழிமேல் சென்று நின்று மேலும் உரத்த குரலில் எச்சரித்தது. நடையின் விரைவு மாறாமல் அதை நோக்கியே கசன் வந்தான். வேங்கை அஞ்சுவதுபோல் பின்காலெடுத்துவைத்து வால் தரைப்புழுதியில் புரள உடல்பதுங்க அமர்ந்தது. பின்னர் முன்கால்களை மடித்து மண்ணுடன் நன்றாக ஒட்டிக் கொண்டு காதுகளை அசைத்தபடி மூக்கைச் சுளித்து வாய்திறந்து கோரைப்பற்களைக் காட்டி ஓசையின்றி உறுமியது.

இரு வேங்கைகளும் சேர்ந்து எழுப்பிய ஆழ்ந்த ஒலியில் குடிலுக்குள்ளிருந்து இளமுனிவர் ஒருவர் எட்டிப்பார்த்து “என்ன அங்கே ஓசை?” என்று கேட்டார். கசன் அணுகுவதை அவர் பார்க்கவில்லை. வழக்கமாக தவக்குடிலுக்கு வரும் இரவலரும் பாணரும் சூதரும் அயல்முனிவரும் வேங்கைகளைக் கண்டதுமே அப்பால் நின்று அங்கு தொங்கும் கயிறொன்றைப் பற்றி இழுப்பது வழக்கம். குடில் முற்றத்தில் வளர்ந்த காட்டிலந்தை மரத்தின் கிளையில் தொங்கியிருந்த வெண்கல மணிகள் ஒலிக்கத் தொடங்கும். முனிவர் எவரேனும் இறங்கி வந்து ஆணையிட்டால் வேங்கைகள் குரல் தாழ்த்தி காற்றுபட்ட நாணல்பரப்பென உடலில் மென்மயிர்தோல் அலைபாய எழுந்து உறுமியபடி திரும்பிச் சென்று தங்களிடத்தில் படுத்துக்கொள்ளும். அயலவன் உள்ளே நுழைந்து தங்கள் முன்னிருந்து அகல்வது வரை அவற்றின்

விழிகள் பளிங்குருளைகளின் ஒளியுடன் அவர்களை நோக்கி நிலைத்திருக்கும்.

கசன் அந்த மணியை பார்த்தான் எனினும் அவன் நடை விரைவழியவில்லை. அதைக் கடந்து குடில் முற்றத்தை அவன் அணுகியபோது முற்றத்தில் படுத்திருந்த மூன்றாவது வேங்கை துள்ளி எழுந்து கால்கள் மண்ணைப் பற்றி உந்த அங்கிருந்தே ஓடி பிற இரு வேங்கைகளையும் கடந்து தாவி அவன் மேல் பாய்ந்தது. காற்றில் திரும்பும் இலைத்தளிர் போல எளிதாக அதை ஒழிந்து அவ்விரைவிலேயே அதன் முன்கால்களைப் பற்றி தன் தலைக்குமேல் சுழற்றி தரையிலிட்டு அதன் கழுத்தில் தன் வலது முழங்காலால் ஊன்றி அழுத்தி இருமுன்னங்கால்களுக்கு நடுவே இருந்த நரம்பு முடிச்சொன்றை இடக்கையின் பெருவிரலாலும் சுட்டுவிரலாலும் அழுத்தினான் கசன்.

கால்கள் செயலிழந்து உடல் நடுங்கிய வேங்கை மெல்லிய கேவல் ஒலியுடன் அங்கே கிடந்து நெளிந்தது. மேலே தூக்கிய அதன் நான்கு கால்களும் வலிப்பு கொண்டவைபோல் இழுபட்டன. நீண்ட வால் மண்ணில் புரண்டது. அஞ்சிய பிற இரு வேங்கைகளும் கால்களை இழுத்து பின்வாங்கி முற்றத்திற்குச் சென்று நின்று பெருங்குரலெடுத்து தேவயானியை அழைத்தன.

அவற்றின் ஓசை கேட்டு தன் குடிலுக்குள் ஆடை அணிந்துகொண்டிருந்த தேவயானி மடித்த பட்டுச்சேலையின் பட்டைக்கொசுவத்தை வயிற்றை எக்கி இடைக்குள் செருகிவிட்டு மறுமுனையை இடைசுற்றி எடுத்து முலைக்கச்சின் மேல் இட்டு தோளில் அழுத்தியபடி வாயிலினூடாக எட்டிப்பார்த்தாள். அதே கணம் இரண்டாவது

வேங்கை வலது முன்காலால் தரையை அறைந்து உறுமியபடி எழுந்து கசனை நோக்கி பாய்ந்தது. அவன் முதல்வேங்கையை விட்டு எழுந்து காற்றில் மல்லாந்து வந்த அதன் நெஞ்சை இடக்கையால் அறைந்து தரையில் வீழ்த்தி அதன் அடிவயிற்றில் தன் இடது முழங்காலை ஊன்றி இரு முன்னங்கால்களுக்கு நடுவே அமைந்த நரம்பு முடிச்சை இடக்கை விரல்களால் அள்ளி பிடியைப்பற்றி அழுத்தி மண்ணுடன் சேர்த்துக் கொண்டான். அக்காட்சியைக் கண்டு கையில் சேலை நுனியுடன் அவள் திகைத்து செயலற்று நின்றாள்.

இரு முன்னங்கால்களும் காற்றில் தாவி ஓடுவதுபோல் அசைய வாய் திறந்து நாக்கு மடிந்து வெளியே சரிந்து தொங்கிக் கிடக்க ஏங்கியழுதது வேங்கை. முற்றத்தில் நின்ற அதன் உடன் பிறந்தான் பாய்ந்து தேவயானியின் குடிலுக்குள் நுழைந்து அவளுக்குப்பின்னால் சென்று அரையிருட்டில் ஒளிந்தது. அறைக்குள் தத்தளித்தபின் குடில் மூலையில் தன் பின்னுடலை நன்கு ஒடுக்கிக்கொண்டு முன்வலக்காலை மெல்ல தூக்கி வைத்தபடி கேவி அழத்தொடங்கியது. மேலாடை நுனியைச் சுழற்றி இடுப்பில் செருகியபடி வெளியே ஓடிவந்த தேவயானி ஒற்றைக் கையால் இரு வேங்கைகளையும் வீழ்த்தியபின் வலக்கையில் ஏந்திய மூன்று வெண் அல்லி மலர்களுடன் முற்றத்திற்கு வந்து நின்ற பேரழகனைக் கண்டு நடைதளர்ந்தாள்.

இருகைகளும் ஒன்றுடன் ஒன்று விரல் கோத்து நெஞ்சக் குவடுகளின் நடுவே அமைய “யார்?” என்று அவள் கேட்டாள் அவ்வொலி நாவிலெழாமையை உணர்ந்து மீண்டும் “யார்?” என்றாள். அவ்வொலியையும் அவள் கேட்கவில்லை. மூன்றாம்

முறை வயிற்றில் இருந்து காற்றைத் திரட்டி அவள் “யார்?” என்று கேட்டது மிகையாக எழுந்தது. அவன் புன்னகையுடன் “பிரஹஸ்பதியின் மைந்தனாகிய நான் கசன். என் தந்தையின் முதல் மாணவராகிய சுக்ரரை பார்க்க வந்தேன். அவருடைய மாணவராக அமைய விழைகிறேன்” என்றான்.

முதற்கணம் எழுந்த முற்றிலும் நிலையழிதலை அவனுடைய சொற்களினூடாகக் கடந்த தேவயானி சீற்றம் கொண்டு குடிலின் கல்படிகளில் இறங்கி அவனை நோக்கி வந்து “இது அசுரர்களின் முதலாசிரியரின் குருநிலை. எந்தத் துணிவில் இதற்குள் அத்துமீறினீர்? இவை நான் வளர்க்கும் வேங்கைகள். என் உடன் பிறந்தவை. இவற்றின்மேல் எப்படி உமது கை படலாம்? இதன் பொருட்டு உம்மை தண்டிப்பேன்” என்றாள். கசன் புன்னகைத்து திரும்பி வேங்கைகளை நோக்கி “இன்னும் சற்று நேரத்தில் அவை எழுந்துவிடும். அவற்றின் கைகால்களை செயலிழக்கச் செய்யும் சிறிய நரம்பு அழுத்தத்தையே அளித்தேன். அவற்றுக்கு தீங்கு ஏதும் விளைவிக்கவில்லை” என்றான்.

அவள் மேலும் சினத்துடன் “தீங்கு விளைவித்தீரா இல்லையா என்று முடிவு செய்ய வேண்டியவள் நான். என் முன் இப்படி தருக்கி நின்று பேச எவரையும் விட்டதில்லை” என்றாள். அவன் அதே மாறாப்புன்னகையுடன் “பொறுத்தருள்க முனிவர்மகளே, எவரிடமும் ஒப்புதல் வாங்கி பேசும் வழக்கம் எனக்கில்லை” என்று சொன்னான். தன்னையறியாமல் குரல் மாற “நான் முனிவர் மகளென்று யார் சொன்னது?” என்று அவள் கேட்டாள். “சுக்ரரின் குருநிலைக்குள் இப்படி குரலெடுத்துப் பேச பிறிதெவரும் துணிய மாட்டார்கள். சுக்ரரின் மகள் பேரழகியென்றும் பேரரசியருக்குரிய ஓங்குகுரல்

கொண்டவள் என்றும் அங்காடிகளிலேயே பாணர்கள் பாடிக்கொண்டிருக்கிறார்கள்" என்று அவன் சொன்னான்.

தன் அழகைப்பற்றி அவன் சொன்னதும் மீண்டும் ஓர் அகஅதிர்வுக்குள்ளாகி அவள் சொல்லிழந்தாள். அதற்குள் அப்பாலிருந்த மாணவர் குடில்களில் இருந்து வந்த கிருதரும் சுஃப்ரரும் "யார் நீர்? எங்கு வந்தீர்?" என்று கசனிடம் கேட்டனர். அவன் தன் கொடிவழியும் குருமுறையும் கொண்ட செய்யுளை உரைத்து தலைவணங்கினான். அவர்களும் தங்கள் நெறி கொண்ட செய்யுளை உரைத்து தலைவணங்கி அவனை வரவேற்று அழைத்துச் சென்றனர். அவன் நோக்கு விலக்கி அவர்களுடன் சொல்லாடத் தொடங்கியதுமே எடையொன்றை மெல்ல இறக்கியவள்போல தேவயானி உடல் தளர்ந்தாள். அவன் அகன்றதும்தான் முற்றிலும் விடுதலைகொண்டாள்.

தன் நிலையழிவை தானே கண்டதால் எழுந்த சீற்றமே அது என்றும் அம்மிகைச்சீற்றம் தன்னை மேலும் நிலையழிந்தவளாகவே காட்டியதென்றும் உணர்ந்தாள். அவன் நோக்கும்போது ஏன் சினம் தன்னுள் எழுந்ததென்றும் அவன் விழி திரும்பியதும் அது முற்றும் தணிந்து ஏக்கமென்று எப்படி மாறியதென்றும் வியந்துகொண்டாள். பின்னர் குனிந்து தன் ஆடையையும் இடையணியையும் சரிபார்த்தாள். தோளில் மடித்திட்ட மேலாடையின் நெளிகள் சரியாக அமைந்திருக்கின்றனவா என்று நோக்கி அவை குலைந்திருக்கக் கண்டு விரலால் நீவி சீரமைத்தாள். அதன் பின்னரே அவன் நெடுந்தொலைவுக்கு சென்றுவிட்டதை எண்ணி தனக்குள் புன்னகைத்தாள்.

இரு வேங்கைகளும் எழுந்து உடலை உலுப்பியபடி அவளை நோக்கி வந்தன. முதல்வேங்கை தன் காதுகளுக்குள் ஏதோ புகுந்துவிட்டதுபோல தலையை குலைத்தபின் காலால் காதை தட்டிக்கொண்டது. இரண்டாவதாக வந்த வேங்கை கால்களை நீட்டி வைத்து முதுகை வளைத்து நிலத்தில் வயிறு பட முதுகை சொடுக்கெடுத்து சிறு உடுக்கொலியுடன் உடலை உதறிக்கொண்டு அணைந்தது. முதலில் வந்த வேங்கை செல்லமாக உறுமியபடி அவளை அணுகி வாலை விடைத்து தூக்கிக்கொண்டு அவள் கால்களில் தன் விலாவைத் தேய்த்தபடி நீவிச்சென்றது. திரும்பி மீண்டும் விலாவைத் தேய்த்தபடி சுழன்றது. இரு கால்களையும் அவள் இடைமேல் வைத்து எழுந்து அவள் முகத்தைப்பார்த்து உறுமியது. அவள் அதன் காதுகளுக்கு நடுவே தன் கையை வைத்து வருடியபடி அவன் சென்று மறைந்த பாதையை பார்த்துக்கொண்டிருந்தாள்.

இரண்டாவது சிறுத்தை நெருங்கி வந்து அவள் உடலை உரசிச் செல்ல அதன் தலையைத் தட்டி “ஆடையை கலைக்கிறாயா, மூடா?” என்றாள். இரு வேங்கைகளையும் தலையைத் தட்டி முற்றத்திலேயே விளையாடும்படி சொல்லிவிட்டு தன் குடிலுக்குள் சென்றாள். அவளைக் கண்டதும் அங்கிருந்த வேங்கை காலை தூக்கிக்கொண்டு முனகி அழுது முகத்தை சுவர்நோக்கி திருப்பிக்கொண்டது. அவள் அருகே சென்று அதன் காதைப்பற்றி இழுத்து “வெளியே செல், கோழையே!” என்றாள். மாட்டேன் என்று அது உடல் குறுக்கி தன்னை இழுத்துக்கொண்டு உள்ளேயே அமர முயன்றது.

அவள் அதன் காதுகளைப்பிடித்து இழுத்தபோது தயங்கியபடி எழுந்து மெதுவாக நடந்து வெளியே எட்டிப்பார்த்து தன் உடன்பிறந்தார் அங்கே இயல்பாக நிற்பதைக் கண்டதும்

உறுமியபடி வெளியே பாய்ந்து முற்றத்தை அடைந்து அவை இரண்டையும் அணுகி உடலை உரசிக்கொண்டு வாலைத் தூக்கியபடி உறுமிச் சுழன்றது. மண்ணில் படுத்து நான்கு கால்களையும் அகற்றி தன் அடிவயிற்றை காட்டியது. மூத்த வேங்கை அதன் அடிவயிற்றில் தன் முகத்தை வைத்து உரசி அதை தேற்றியது. ஒன்றை ஒன்று உடலை உரசியும் முகத்தால் வருடியும் பொய்க்கடி கடித்தும் தேற்றிக் கொண்டன. மெல்ல அதுவே விளையாட்டென்று ஆகி பாய்ந்து விலகியும் பின்னால் சென்று கவ்வியும் கைகளால் பொய்யாக அறைந்தும், தழுவியபடி மண்ணில் விழுந்து புரண்டெழுந்தும் அவை விளையாடத்தொடங்கின. தன் குடிலின் வாயிலில் அமர்ந்தபடி அவை விளையாடுவதை அவள் நோக்கிக்கொண்டிருந்தாள்.

# மாமலர் - 53

### 53. விழியொளிர் வேங்கைகள்

சுக்ரர் கசனை தன் மாணவனாக ஏற்றுக்கொள்வாரென்று கிருதர் உட்பட அவரது மாணவர்கள் எவரும் எதிர்பார்க்கவில்லை. பிரஹஸ்பதியின் மைந்தன் என அவன் தன்னை அறிமுகம் செய்துகொண்டதுமே அவன் வருகையின் நோக்கம் அனைவருக்கும் புரிந்துவிட்டது. ஒழியாது நிகழ்ந்துகொண்டிருந்த போரில் ஒவ்வொரு நாளுமென தேவர் படைகள் பின்வாங்கிக்கொண்டிருந்தன. சஞ்சீவினி நுண்சொல் இன்றி அவர்கள் அணுவிடையும் முன்னகர முடியாதென்பதை அறியாத எவரும் அக்குருநிலையில் இருக்கவில்லை. ஆயினும் முறைமைப்படி அவனுக்கு வாழ்த்துச் சொல்லி சுக்ரரிடம் அழைத்துச்சென்றனர்.

கசன் வாயிலில் கூப்புகையில் மலர்களுடன் நின்றிருக்க சுக்ரரின் தனியறைக்குள் நுழைந்த கிருதர் தலைவணங்கி அங்கே ஈச்சைஓலைப் பாயில் கால்மடித்து அமர்ந்து விழிசுருக்கி நூலாய்ந்துகொண்டிருந்த அவரிடம் பிரஹஸ்பதியின் மைந்தன் கசன் வந்திருப்பதை அறிவித்தார். அப்போது சுக்ரர் கயிலை மலையில் அம்மையும் அப்பனும் ஆடிய இனிய ஆடலொன்றை விவரிக்கும் சிருஷ்டிநிருத்யம் என்னும் குறுங்காவியத்தை படித்துக்கொண்டிருந்தார். அதே முகமலர்வுடன் நிமிர்ந்து நோக்கி "யார், கசனா...? என் இளமையில் அவனை தோளிலேற்றி விளையாடியிருக்கிறேன். எங்கே அவன்?" என்றபடி கையூன்றி எழுந்தார்.

அம்முகமலர்வை எதிர்பார்த்திராத கிருதர் வந்திருப்பவனின் நோக்கம் பற்றி ஆசிரியரிடம் சொல்லலாமா என்று ஐயுற்றார். அப்படி சொல்வது ஒருவேளை ஆசிரியரின் நுண்ணுணர்வை குறைத்து மதிப்பிடுவதாக பொருள்படுமோ என்ற ஐயம் அவரை தடுத்தது. அந்த இரு முனையில் அவர் உடலும் மெல்ல ததும்பியது. அவரைக் கடந்து சிற்றடிகளுடன் விரைந்துசென்ற சுக்ரர் படியில் மூன்று வெண்மலர்களுடன் வந்துநின்ற பேரழகனைக் கண்டு கைகளை விரித்து உரக்கக்கூவி அருகணைந்து தோள்களை தழுவிக்கொண்டார். உரத்த குரலில் "வளர்ந்துவிட்டாய்! தோள்திண்மை கொண்ட இளைஞனாகிவிட்டாய்!" என்றார். அவன் குனிந்து அவர் கால்களில் வெண்மலர்களை வைத்துவிட்டு தொட்டு சென்னிசூடினான்.

தன் கைகளால் அவன் புயங்களையும் கழுத்தையும் வருடி முகத்தில் தொட்டு "மெல்லிய மீசை, மென்பட்டு போன்ற தாடி... நன்று! இளமையிலேயே நீ பேரழகு கொண்டிருந்தாய்.

இளைஞனாக இந்திரனுக்கு நிகராகத் தோன்றுகிறாய்... இளமையில் கண்களில் தெரியும் நகைப்பு... ஆம், இளமையில் மட்டுமே தெரிவது... வருக!" என்றபின் இரு கைகளையும் பற்றி "வருக!" என்று உள்ளே அழைத்துச்சென்றார். "கிருதரே, இவன் என் மைந்தனுக்கு நிகரானவன். பார்த்தீரா, இவனுக்கு நிகரான அழகனை கண்டதுண்டா நீர்?" என்றார்.

அப்போதே கிருதர் என்ன நிகழுமென்பதை உள்ளுணர்ந்துவிட்டார். முடிவுகள் எண்ணங்களால் அல்ல, எப்போதும் உணர்வுகளால்தான் எடுக்கப்படுகின்றன என்று அவர் அறிந்திருந்தார். சுக்ரர் உரத்த குரலில் "அமர்க... யாரது, இன்னீர் கொண்டுவருக! அமர்க, மைந்தா!" என்றபடி அமர்ந்தார். "நான் ஒரு குறுங்காவியத்தை வாசித்துக்கொண்டிருந்தேன். கோடைக் குடிநீர்போல இனியது. வானம்தெரியும் சுனைபோல் ஆழம்கொண்டது. அம்மையிடம் அப்பன் சொல்கிறான், இனியவற்றை விரும்புபவன் இனியவற்றை விதைத்து வளர்க்கட்டும். காதலை விரும்புபவன் அதை காதலிக்கு அளிக்கட்டும் என... அஸ்வாலாயனரின் ஒப்புமைகள் மிக எளியவை. அணிச்செறிவற்றவை. ஆனால் நெஞ்சில் நிற்பவை... நீ காவியம் பயில்கிறாய் அல்லவா?"

"ஆம், உண்மையில் வேதமெய்மைக்கும் தத்துவங்களுக்கும் மேலாகவே நான் கவிதையில் ஈடுபட்டிருக்கிறேன்" என்றான் கசன். "ஆம், அப்படித்தான். உன் அகவை அதையே நாடச்செய்யும்... கிருதரே, பார்த்தீரல்லவா?" கிருதர் சுக்ரரை அப்படி ஒரு உவகைநிலையில் கண்டதே இல்லை. பொருள்துலங்கா விழிகளுடன் "ஆம்" என்றார். "என்ன இளமை! இளமையில் எதையும் வெல்லவேண்டும் என எண்ணாது வாழ்பவன் நல்லூழ் கொண்டவன். அவன் அழகையும்

இனிமையையும் முழுதாக அறிந்து திளைப்பான்....” என்றார். கிருதர் தலையசைத்தார்.

தன்முன் வந்துநின்ற அழகனைக் கண்ட சுக்ரரின் விழிகள் தேவயானிக்குரியவை என்னும் எண்ணம் கிருதருக்குள் எழுந்தது. கசனிடம் பேசிக்கொண்டிருந்த தேவயானியை தொலைவிலேயே நோக்கியபடி அவர் அணுகியபோது அவள் முகத்திலும், நோக்கிலும், துவண்டு ஒசிந்த இடையிலும் தெரிந்த பெண்மையை முன்பெப்போதும் அவளிடம் அவர் பார்த்ததில்லை. அவனை அழைத்துக்கொண்டு திரும்பி நடக்கையில் அவள் விழிகள் அவருள் மேலும் தெளிந்து எழுந்தன. அதிலிருந்தது காதல் என்பதை ஐயமிலாது உணர்ந்தார். சீற்றமென்றும் ஆர்வமின்மை என்றும் அகல்தல் என்றும் அது தன்னை நடிக்கிறது. ஆர்வமின்மை தன் காதலை பிறரிடமிருந்து மறைக்க, சீற்றம் அதை தன் உள்ளத்திடமிருந்தே விலக்க. அகல்தல் தன் உடலில் இருந்து மறைக்க. காதல் அதை மறைத்துக்கொள்வதற்கான முயற்சிகள் வழியாகவே வெளிப்படுகிறது. அதைக் கடக்கும் முயற்சிகள் வழியாகவே வலுப்பெறுகிறது. மறுப்பதற்குரிய சொற்கள் வழியாகவே மொழியாகிறது.

அக்காதல் எவ்விளைவை உருவாக்குமென்று அவர் எண்ணமுனை வருநிகழ்வுகளை துழாவிக்கொண்டிருந்தபோதுகூட எழும் காதலொன்றைக் காணும்போது உருவாகும் இனிமை அவருள்ளத்தில் நிறைந்திருந்தது. கசனை நோக்கி ஓடிச்சென்று தழுவிக்கொண்ட சுக்ரரிலும் அதே விழிகளை கண்டார். அச்சமும் ஐயமும் கொண்டு அவர் உள்ளம் தத்தளிக்கையில்கூட ஆழத்தில் நுண் நா ஒன்று அந்த

இனிமையைத் துழாவி திளைத்துக்கொண்டிருந்தது. காதலை விரும்பாத உள்ளம் இல்லை. அது உயிர்கள் கொள்ளும் களியாட்டு. ஆனால் அதை மானுடரால் ஆடியிலேயே நோக்கமுடியும். நேர்நின்று நோக்கினால் அதன் பித்து அச்சுறுத்துகிறது. அதன் மீறல் பதைப்பை அளிக்கிறது.

“இங்கே நான் வந்தபின் உன்னை நினைத்ததே இல்லை. வஞ்சத்தால் கூர்கொண்டு முன்செல்பவன் நான். ஆனால் உன்னை மறந்ததே இல்லை என இப்போது உணர்கிறேன்” என்ற சுக்ரர் கிருதரிடம் திரும்பி சிறுவர்களுக்குரிய கொப்பளிப்புடன் “எவ்வளவு வளர்ந்துவிட்டான்! இவனை மடியிலிருத்தி முதல் பறவையை சுட்டிக் காட்டியவன் நான். இவனுக்கு வேதமுதற்சொல்லை ஓதியவனும் நானே. நெய்யை நெருப்பென வேதங்களை இவன் கற்கும் திறன் கண்டு வியந்திருக்கிறேன். ஆசிரியரின் மைந்தன் இவன். எனக்கு இவன் மைந்தனுக்கு நிகர் அல்லது ஒரு படி மேல்” என்றார்.

கசன் கைகூப்பி “என்னை உங்கள் மாணவனாக ஏற்றுக்கொள்ள வேண்டும், ஆசிரியரே. அதன்பொருட்டே இங்கு வந்தேன்” என்றான். இதுவே தகுந்த தருணம் என எண்ணி கிருதர் நாவெடுக்க சுக்ரர் பெருமகிழ்வுடன் அவன் கைகளைப்பற்றி “ஆம், இங்கு நூல் நவில்கையிலெல்லாம் நான் மேலுமொரு மாணவன் என்று நினைப்பதுண்டு. வேட்டைநாய்போல ஆசிரியன் சுட்டிய திசைக்கு பாய்பவனே நல்ல மாணவன். இப்போது உணர்கிறேன், நீயே என் மாணவனாக அமைய வேண்டியவன். எனக்கு நானே என சொல்லும் சொற்களை உன் செவிகளே கேட்க முடியும்” என்றார். “ஆம், அதை நானும் உணர்ந்தேன். தாங்கள் சென்றபின் எந்தையிடம் இத்தனை நாள்

கல்வி கற்றேன். அவர் சொற்கள் என் அறிவை சென்றடைகின்றன. அங்கு அவை ஒரு களஞ்சியத்தில் நிறைகின்றன. ஆசிரியரே, அவை அங்கு முளைக்கவில்லை” என்றான்.

கைதூக்கி “நான் விதைக்கிறேன். நூறுமேனி விளையும்” என்று சுக்ரர் கூவினார். “உன்னை முழுமையறிவு கொண்டவனாக்குகிறேன். சென்று அவர் முன் நில்! அவரிடம் சொல், நான் சுக்ரரின் மாணவனென்று! இதுவும் அவர் மீது நான் கொள்ளும் வெற்றியென்றாகுக!” என்றார். கசன் கைநீட்டி மீண்டும் அவர் கால்களைத் தொட்டு சென்னி சூடி “இக்கணம் முதல் நான் தங்கள் அடியவன்” என்றான். அனைத்தும் கைகடந்து சென்றதை உணர்ந்து மெல்ல தளர்ந்து கைகளைக் கோத்தபடி அக்காட்சியை நோக்கி அமர்ந்திருந்தார் கிருதர். சுக்ரர் திரும்பி “தேவயானியிடம் சொல்க! இவனைப்பற்றி முன்பொருமுறை அவளிடம் நான் சொல்லியிருக்கிறேன். என் ஆசிரியரின் மைந்தன் கசன் என்க! அவரை அவள் நன்கறிவாள், இவனையும் நினைவுகூர்வாள்” என்றார். “அவர்கள் முன்னமே பார்த்துக்கொண்டுவிட்டனர், ஆசிரியரே” என்றார் கிருதர். உரக்க நகைத்து “உண்மையாகவா? பார்த்துக்கொண்டார்களா? நன்ற, நன்று!” என்றார் சுக்ரர்.

அவர் எப்பொருளில் சொல்கிறார் என்று புரியாமல் ஒருகணம் நோக்கியபின் “தாங்கள் சொல்லாடிக் கொண்டிருங்கள். நான் பிறரிடம் தாங்கள் இவரை மாணவராக ஏற்ற செய்தியை சொல்கிறேன்” என்றார் கிருதர். அவர் சொல்வதற்கு செவிகொடுக்காமல் கசனிடம் “என் மகள் தேவயானி, பேரரசிக்குரிய தோற்றமும் உள்ளமும் கொண்டவள். ஊழும் அவ்வண்ணமே என்கிறார்கள் நிமித்திகர்” என்றார் சுக்ரர்.

திரும்பி கிருதரிடம் “இவனுக்கு நான் அடிப்படைகள் எதையும் கற்றுக்கொடுக்க வேண்டியதில்லை. விதைகள் அனைத்தும் இவனிடம் உள்ளன. அவற்றை உயிர்கொள்ளச் செய்யும் நீர் மட்டுமே என்னிடம் இவன் கற்க வேண்டியது” என்றார்.

தலைவணங்கியபடி வெளியே வந்த கிருதரை மாணவர்கள் சூழ்ந்துகொண்டனர். “என்ன சொல்கிறார்? இன்றே அவன் கிளம்பிச் செல்வான் அல்லவா?” என்றார் ஒருவர். இளையவன் ஒருவன் “இங்கு அவன் எதற்கு வந்திருக்கிறான் என்று எவரும் அறிவர். ஒருபோதும் நாம் இதை ஒப்ப முடியாது” எனக் கூவ பிறிதொருவன் “என்ன துணிவிருந்தால் அசுரர்களின் ஆசிரியரிடமே தேவகுருவின் மைந்தன் வந்து சேருவான்? இது சூழ்ச்சி” என்றான். “சூழ்ச்சி செய்யவும் அவர்களுக்கு தெரியவில்லை” என்றார் சுஷமர். ஒன்றோடொன்று இணைந்து எழுந்த குரல்கள் அவரைச் சூழ்ந்தன.

ஒவ்வொரு விழியையாக மாறி மாறி நோக்கிய கிருதர் ஒன்றை உணர்ந்தார். சுக்ரர் கசனை உறுதியாக ஏற்றுக்கொள்ளமாட்டார் என்று அவர்கள் எவரும் எண்ணவில்லை. ஒருவேளை ஏற்கவும் கூடும் என்னும் ஐயம் அவர்களுக்கு இருந்தது என்பதனால்தான் அவர்கள் காத்திருந்தனர். அவர் சொல்லப்போவதை அவர்கள் முன்னரே கணித்து அச்சினத்தை திரட்டிக்கொண்டிருந்தனர். அச்சொற்களை அகத்தே சொல்லிக்கொண்டும் இருந்திருக்கலாம். எண்ண அடுக்குகளுக்கு அப்பால் ஆழத்தில் அவர் அறிந்த ஒன்றையே அவர்களும் அறிந்திருந்தனர். கனிந்த பழத்தில் மரம் தன் இனிமையையும் மணத்தையும்

நிறைப்பதுபோல தந்தை தன் மகளின் உள்ளமென எழுந்திருக்கிறார்.

கிருதர் “பிரஹஸ்பதியின் மைந்தரை தன் முதல் மாணவராக நமது ஆசிரியர் சுக்ரர் ஏற்றுக்கொண்டிருக்கிறார். இனி மறுசொல் வரும்வரை கசன் இங்குதான் தங்குவான்” என்றார். அதை மேலும் அழுத்தி “நம்முடன் அமர்ந்து கல்வி கற்பான். அவனுக்குரிய குடிலையும் பிறவற்றையும் ஒருங்கு செய்ய ஆசிரியர் ஆணையிட்டிருக்கிறார்” என்றார். அனைவரும் திகைத்த விழிகளுடன் அமைதி அடைந்தனர். இளைஞனொருவன் “அவன் எதற்கு வந்தான் என்று ஆசிரியர் அறிவாரா?” என்றான். கிருதர் “ஆசிரியருக்கு கற்பிக்கும் இடத்தில் நாம் இல்லையென்று நான் எண்ணுகின்றேன்” என்றார். “இருந்தாலும் நமது ஐயத்தை சொல்லவேண்டும். அவர் முதிர்ந்தவர். அக்கனிவால் சிறுமைகளை காணாது செல்லவும் கூடும்” என்றார் சுஷமர்.

சற்று முதிர்ந்த மாணவராகிய சாந்தர் “மிக அழகிய ஒன்று மிகக் கூரியதாகவே இருக்கும் என்கின்றன நூல்கள்” என்றார். கிருதர் “ஆம், ஆயினும் இத்தருணத்தில் நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை” என்று சொன்னார். கிருதர் குடில்களை நோக்கி நடக்க உடன்வந்த சுஷமர் “எப்படி அவர் ஏற்றுக்கொண்டார்? இத்தனை வெளிப்படையாகத் தெரியும் ஒன்றை எப்படி அவரால் புரிந்துகொள்ளாமல் இருக்க முடிகிறது? என்ன நிகழ்கிறது அங்கே?” என்றார். கிருதர் “புரிந்துகொள்வது மிக எளிது, உத்தமரே. நமது ஆசிரியர் தனது ஆசிரியரை வழிபடுவதை ஒருகணமும் நிறுத்தியவரல்ல. இம்மைந்தன் அவ்வாசிரியரின் மறுவடிவம்” என்றார். சுஷமர்

அந்த உண்மையை உடலுருவெனக் கண்டவர்போல நின்றுவிட்டார்.

“மண்ணில் பலவகையான காதல்கள் மானுடருக்கு நிகழ்கின்றன. கன்னிமேல் இளைஞர் கொள்ளும் காதல், மைந்தர்மேல் பெற்றோர் கொள்ளும் காதல், தோழர்கள் கொள்ளும் காதல்... ஆனால் ஆசிரியனின்மேல் மாணவன் கொள்ளும் காதல் இவையனைத்திலும் முதன்மையானது. பிற காதல்கள் சுடர்கள் என்றால் ஆசிரியனுக்கும் மாணவனுக்கும் இடையே உள்ள காதலை சூரியன் என்கின்றன நூல்கள்” என்றார் கிருதர். “அத்தனை காதல்களிலும் உள்ளாழத்தில் ஆசிரியனுக்கும் மாணவனுக்குமான காதலே அடங்கியிருக்கிறது. கன்னிக்கு ஆசிரியனும் ஆனவனே பெருங்காதலன். மைந்தனுக்கு ஆசிரியனாகிறான் தந்தை. தோழனுக்கு நல்லாசிரியன் தோழனே. கற்றலும் கற்பித்தலும் இன்றி பொன்றாப் பெருங்காதல் நிகழ்வதில்லை.”

“ஏனென்றால் விழைவின்பொருட்டும் வெல்வதன்பொருட்டும் கொள்ளும் காதல்கள் விரைவிலேயே சலித்து பொருளிழக்கும். எல்லையின்றி வெல்லவும் விழையவும் எவரால் இயலும்? கற்றலோ எல்லையற்றது. கற்கப்படுவது எதுவாயினும் எந்நோக்கம் கொண்டதாயினும் கல்வி என எழுந்து வந்து முன்னிற்பது முடிவிலியாகிய பிரம்மமே” என்று கிருதர் தொடர்ந்தார். “கூறுங்கள், எந்நிலையிலேனும் நமது ஆசிரியருடனான நமது காதல் அணுவிடை குறைபடுமா?” சுஷமரும் அவருக்குப்பின் வந்த இரு மாணவர்களும் நெகிழ்ந்த முகங்களும் ஒளிவிடும் கண்களுமாக நோக்கி நின்றனர்.

“அது உருமாறக்கூடும். ஆயிரம் திரைகளை அள்ளி போர்த்திக்கொள்ளக் கூடும். பிறிதொன்றென தன்னை நடிக்கக்கூடும். ஆனால் அனல்போல ஒளிக்கும்தோறும் எரிந்தெழும். விதைபோல புதைக்கும்தோறும் முளைக்கும்” என்றார் கிருதர். “இங்கு மூன்று மலர்களுடன் படியேறி வந்தவன் கசனல்ல. பேரழகு மீண்டும் உடல்கொண்ட பிரஹஸ்பதியேதான். கால்நகக் கணுமுதல் கூந்தல் இழைவரை அணுவணுவாக நம் ஆசிரியர் நோக்கி மகிழ்ந்து வணங்கி தன் அகத்தில் சூடிய ஆசிரியரின் உருவையே இளந்தோற்றமென இங்கு கண்டு பேருவகை கொள்கிறார்.”

“நம் ஆசிரியர் தன் ஆணவத்தால் தன் ஆசிரியரை எதிர்க்கலாம். இம்மைந்தனை தோள் தழுவுவதால் அச்சிறுமையை கடந்து மீண்டும் ஆசிரியரை சென்றடைகிறார்” என்றார் கிருதர். பின்னர் புன்னகையுடன் “உறவுகளில் விலகிச்செல்வதும் அணுகுவதற்கான பாதையே. ஏனெனில் அது ஒரு மாபெரும் வட்டம்” என்றார். அவர் அருகே மீண்டும் வந்து “அவன் சஞ்சீவினிக்காகவே வந்துளான்” என்றான் இளமாணவன். “ஆம், அவன் அதை கற்றுச்செல்வான். அவர் கொண்டுள்ள பேரன்பை அவன் அவ்வகையில் களவுக்கு கருவியென்றாக்குவான்” என்றான் இன்னொருவன்.

“ஆசிரியரிடமிருந்து அதை அவன் கற்கவியலாது. ஏனெனில் பிறிதெவருக்கும் அதை கற்பிக்க மாட்டேன் என்று விருஷபர்வனுக்கும் தைத்யர் குலத்துக்கும் அவர் வாக்களித்திருக்கிறார். அந்த நுண்சொல் நம் ஆசிரியருக்குரியதல்ல, அசுரர்களின் செல்வமது. அனைத்தையும்விட நம் ஆசிரியரை அவர் அளித்த அச்சொல்லே கட்டுப்படுத்தும்” என்றார் கிருதர். “அவ்வாறு

எண்ணுவோம்” என்றார் சுஷமர். “ஆம், அவ்வாறே நடக்கவேண்டும்” என்றார் பிறிதொருவர். தயங்கியவர்களாக தங்களுக்குள் முழுத்துச் சொட்டும் சொற்களின் தாளத்தைக் கேட்டவர்களாக அவர்கள் கலைந்து சென்றனர்.

விரைவிலேயே கசன் சுக்ரரின் குருநிலையில் அனைவராலும் விரும்பப்படுபவனாக ஆனான். முதலில் அவன்மேல் ஐயமும் அதன் விளைவான சினமும் விலக்கமும் அனைவரிடமும் இருந்தன. அவனை சுக்ரரின் முன்னிலையில் இருந்து அவனுக்கென ஒருக்கப்பட்ட குடிலுக்கு அழைத்துச் செல்கையில் எண்ணி எடுத்த சொற்களால் மறுமொழியிறுத்தார் கிருதர். மாற்றாடை ஒன்று வேண்டுமென்று அவன் கேட்டபோது “மரவுரி அணிவீர்களா அல்லது மலராடையா?” என்று மெல்லிய ஏளனத்துடன் கேட்டார். அதை அவன் உணர்ந்தாலும் “மாணவர்களுக்குரியது மரவுரி அல்லவா?” என்று இயல்பாக மறுமொழி சொன்னான்.

“இங்கு அந்தணர்களுடன் அசுரர்களும் மாணவர்களாக உள்ளனரா?” என்று அவன் கேட்டபோது “இங்குள்ள அந்தணரும் அசுரரே” என மறுமொழி சொல்லிவிட்டு அவர் கிளம்பிச் சென்றார். அவன் “நானும் அசுரனென்றாக விழைகிறேன், கிருதரே” என பின்னாலிருந்து கூவிச் சொன்னான். அறியாமல் அவர் திரும்பிவிட அவன் புன்னகைத்து “என்மேல் சினம்கொள்ளவேண்டாம், கிருதரே. நான் நேற்றென ஏதுமிலாது வாழ்பவன்” என்றான். அச்சிரிப்பின் இளமையில் அவர் முகம் மலர்ந்தார். உடனே தன்னை இறுக்கிக்கொண்டு திரும்பிச் சென்றார். ஆனல் மீண்டும் அம்முகம் நினைவுக்கு வந்தபோது புன்னகை செய்தார்.

அன்றிரவு கசன் தன் குடில்விட்டு வெளியே இறங்கி முற்றத்தில் நின்றபோது அப்பால் மைய முற்றத்தில் நின்ற வேங்கைகளில் ஒன்று அவனை நோக்கி மெல்ல உறுமியது. செவி கோட்டி மூக்கை நீட்டி அவனை கூர்ந்தபின் பின்னங்காலெடுத்து வைத்து உடலைக் குவித்து பதுங்கி முனகியது. அவன் புன்னகையுடன் கைகள் நீட்டி அதை அழைத்தான். அங்கு நின்று செவிகளை அசைத்தபடி அவனை மதிப்பிட்டது. திரும்பி விலாவிலமர்ந்த பூச்சியை விரட்டிவிட்டு கையால் முகத்தை வருடிக்கொண்டது. ஆனால் அதன் உளக்கூர் அவனையே நோக்கியிருந்தது.

அதன் உடன்பிறந்தவை இரண்டும் எழுந்து வந்து அதற்கு பின்னால் நின்றபடி அவனை நோக்கின. பிறைநிலா பெருக்கிய ஒளியில் அவற்றின் மென்மயிர்ப் பிசிறுகள் வெண்ணிறப் புல்விதைச் செண்டுகள்போல் ஒளிவிட்டன. ஒன்று மெல்ல திரும்பியபோது இருவிழிகளும் அனலென சுடர்கொண்டு அணைந்தன. அவன் மீண்டும் ஒருமுறை அவற்றை அழைத்தான். ஒரு வேங்கை ஒருமுறை உறுமியபின் திரும்பிச்செல்வதுபோல அசைந்து தலைமட்டும் திருப்பி நோக்கியது. அதை இன்னொன்று மெல்ல அடித்தது.

கசன் அவற்றை நோக்குவதைத் தவிர்த்து நிலவை நோக்கி இடையில் இரு கைகளையும் வைத்தபடி முற்றத்து செண்பக மரத்தடியில் நின்றான். மெல்லிய காலடிகள் கேட்டும் திரும்பி நோக்கவில்லை. அவனருகே வந்து சற்று அப்பால் நின்ற வேங்கை தாழ்ந்த ஒலியில் உறுமி அவனை அழைத்தது. அவன் திரும்பி நோக்காமல் வானையே நோக்கிக்கொண்டிருந்தான். அது மீண்டும் அருகே வந்து அழைத்தது. அவன் திரும்பி நோக்கி புன்னகைத்து

அழைக்கும்பொருட்டு விரல் சொடுக்கினான். பூனைக்குட்டிபோல் முதுகை வளைத்து தூக்கி வாலை செங்குத்தாகத் தூக்கி கால் தூக்கிவைத்து அவனை நோக்கி வந்தது. மெல்ல முனகிக்கொண்டு அவன் கால்களில் தன் விலாவை தேய்த்துச் சென்றது.

அப்போது அதன் உடலிலிருந்து எழுந்த மணத்தை உணர்ந்த பிற வேங்கைகள் அங்கிருந்து செல்லத் துள்ளலுடன் பாய்ந்து ஓடிவந்து அதை பொய்க்கடி கவ்வி விலக்கியபின் தாங்கள் அவன் மேல் உரசின. அங்கிருந்த சிறு கல்லொன்றில் அமர்ந்து அவன் அவ்வேங்கைகளை கொஞ்சத் தொடங்கினான். அவற்றின் காதுகளுக்குப் பின்னாலும் அடிக்கழுத்திலும் வருடினான். அவற்றிலொன்று உடனே அவன் முன் மல்லாந்து படுத்து கால்களால் அவனை மெல்லத் தட்டி வால் குழைத்து விளையாடத்தொடங்கியது. இன்னொன்று அதன் அடிவயிற்றை முகர்ந்தது. பிறிதொன்று அவன் பின்னால் சென்று தன் முதுகை உரசியபடி சுழன்றது. எழுந்து தன் இரு கால்களையும் அவன் தோள்களில் வைத்து தலையை தன் தலையால் தட்டி விளையாடியது.

அவற்றின் ஓசை கேட்டு தன் குடிலில் இருந்து ஓடிவந்த தேவயானி விழிதுழாவி அப்பால் கசனின் குடில் முன் அவை அவனுடன் விளையாடிக்கொண்டிருப்பதை பார்த்தாள். தன் குடில் வாயிலிலேயே மூங்கில் தூணைத் தழுவியபடி கன்னத்தை அதில் பதித்து, குழல்கட்டு அவிழ்ந்து சரிய தலை சாய்த்து நின்று அவ்விளையாட்டை நோக்கிக்கொண்டிருந்தாள். அவள் நோக்கிக்கொண்டிருப்பதை ஆழ்புலன் ஒன்றால் உணர்ந்த கசன் திரும்பி அவளை பார்த்தான்.

அரையிருளிலும் மின்னும் அவள் கண்களுடன் நோக்கு கோக்க அவனால் முடியவில்லை. அவள் தன் ஆடையை திருத்துகையில் எழுந்த அணியோசை தொலைவிலிருந்து அவனை வந்தடைந்தது. அவள் நோக்குவதை அவன் நோக்கினூடாக அறிந்த வேங்கைகளில் ஒன்று எழுந்து நின்று அவளைப் பார்த்து உறுமி பின்னர் துள்ளி ஓடி படிகளில் தாவி ஏறி அவளருகே சென்று வாலைத் தூக்கியபடி அவள் உடலை தன் உடலால் உரசித் தழுவி சுழன்றது.

மீண்டுமொரு உறுமலுடன் அங்கிருந்து அவனை நோக்கி ஓடிவந்தது. அவனருகே படுத்திருந்த வேங்கை எழுந்து வால் தூக்கி அவளை நோக்கி உறுமியபடி இரு கால்களையும் விரித்து இதோ ஓடிவிடுவேன் என்று சைகை காட்டியது. அவள் புன்னகைத்து அதை சுட்டுவிரலால் அருகழைத்தாள். அவ்விரலின் ஓரசைவுக்கு அதன் உடலில் ஓர் அசைவு நிகழ்ந்தது. பின்னர் உவகையொலியுடன் அது பாய்ந்து அவளை நோக்கி சென்றது. கசன் அவளை நோக்கி புன்னகைத்தான். அவள் புன்னகையுடன் தன் அறைக்குள் செல்ல அங்கு நின்றிருந்த வேங்கை திரும்பி அவனை நோக்கி உடல்குழைத்தபடி ஓடிவந்தது.

# மாமலர் - 54

### 54 குழவியாடல்

மறுநாள் காலை நீராடச் செல்கையில் கசனைக் கண்டதுமே முனிவர்களின் மைந்தர்களும் மாணவர்களும் முகம் திருப்பி விலகிச்சென்றனர். அவர்களை நோக்கி சிரித்தபடி தனக்குள் ஏதோ பாடலை முனகியபடி சென்று ஓடையிலிறங்கி அவன்

நீராடினான். அப்படித்துறையிலேயே எவரும் இறங்கவில்லை. நீந்திச் சென்று ஓர் அல்லி மலரை பறித்துக்கொண்டு கரையேறினான். ஈரம் வழிந்த உடலுடன் சென்று சுக்ரரின் அறை வாயிலை அடைந்து படிமேல் அதை வைத்து நெற்றியால் அதைத் வணங்கிவிட்டு தன் குடிலுக்கு மீண்டான்.

அவன் நீராடிச் சென்று மறைவதுவரை ஒரு சொல்லும் உரைக்காமல் அவர்கள் அனைவரும் அவனையே நோக்கியிருந்தனர். அப்போது அவன் அழகையன்றி எவரும் எதையும் எண்ணவில்லை. நின்றிருக்கையில் அழகர்கள் அசைகையில் அழகர்களல்ல, அசைவில் அழகர்கள் பேசுகையில் அழகிழப்பர். எப்போதும் எந்நிலையிலும் அழகனென்று ஒருவன் அமையக்கூடுமென அப்போதே அறிந்தனர். ஆனால் அதைக் குறித்து தங்களுக்குள் பேசிக்கொள்ள எவரும் விரும்பவில்லை. சொல்லின்றி நீரிலிறங்கி மூழ்கி எழுந்தார்கள். வழக்கமாக சிரிப்பும் பேச்சும் சிறுபூசல்களும் ஒலிக்கும் படித்துறைகளில் அலைகளின் ஓசை மட்டுமே எழுந்தது.

அச்சொல்லின்மை உறுத்தவே அவர்களிலொருவன் மிக எளிய அன்றாடச்செயல் குறித்து ஏதோ சொன்னான். அதை பிறிதொருவன் மறுக்க இருவர் அதில் கருத்து சொல்ல தங்களை தங்களிடமிருந்தே மறைத்துக்கொள்ளும்பொருட்டு அச்சொல்லாடலை நாவால் தட்டித் தட்டி முன்னெடுத்துச் சென்று காற்றில் நிலைநிறுத்தினர். “அழகியவன் நம்மை கவர்கிறான். அதனாலேயே அவன் அஞ்சத்தக்கவன்” என அந்தத் திரையைக் கிழித்து ஒருவன் சொன்னான். “நம் சித்தத்தை நம்மையறியாமல் எடுத்துக்கொள்ளும் எதுவும் நம்மிடமிருந்து

எதையோ கைப்பற்றுகிறது.” மீண்டும் சொல்லவிந்து அவர்கள் விழிமின்கள் மட்டுமென்றாயினர்.

சுக்ரரின் வகுப்புகளில் அவன் அமர்ந்தபோது அவனருகே எவரும் அமரவில்லை. அவனைக் கண்டதுமே முகம் மலர்ந்த சுக்ரர் எப்போதும் முதற்சொல்லை அவனை நோக்கியே தொடங்கினார். பின்னர் அச்சொற்களின் அனல் தன் விழிகளில் பற்றிக்கொள்ள அங்கிருக்கும் அனைவரையும் மறந்து அதில் நின்றாடி விண் தாவி எழுந்து வெளியென்றானார். அவர்கள் அவனை மறந்து அவருடன் சென்றனர். மீண்டு இடமுணர்ந்து எழுந்து விலகுகையில் அவனை தவிர்த்தனர். அவரளித்த சொற்களின் வெம்மை விழிகளில் நிறைந்திருக்க பல மடங்கு எடை கொண்டவனாக அவன் தனித்து நடந்து சென்றான். அவனை விழிநோக்காது உடல் நோக்கியவர்களாக சிறு குழுக்களாக அவனைத் தொடர்ந்து சென்றனர்.

ஆனால் அவனழகு அனைவரையும் வென்றுகொண்டிருப்பதை ஒவ்வொருவரும் உணர்ந்தனர். அவனை கண்காணிக்க வேண்டுமென்றும் அவன் செய்யும் முதற்பிறழ்வை கண்டடைய வேண்டுமென்றும் அதைக் கொண்டே அவனை அங்கிருந்து விலக்க வேண்டுமென்றும் ஒவ்வொருவரும் உறுதிகொண்டிருந்தனர். அது அவனழகை கூர்ந்து நோக்குவதற்காக அவர்கள் அணிந்துகொண்ட நடிப்பென்பதை அவர்களே அறிந்தும் இருந்தனர். எப்போதோ ஒருவர் பொருந்தாமையால் உந்திநிற்கும் ஒரு கூற்றை உரைக்கையில் அதன் உள்ளடக்கம் அவனே என அறிந்து தாங்கள் சொல்லும் ஒவ்வொன்றிலும் அவனைப் பற்றிய உட்குறிப்பு இருப்பதை உணர்ந்தனர்.

அழகுக்கும் விழிகளுக்கும் விலக்கவொண்ணா ஒப்பந்தம் ஒன்று உள்ளது என்றார் சுஷமர். “அவனை நோக்காமலிருக்க இங்கு எவராலும் இயலாது. அதை எண்ணி நாணியே நாம் நம்மை திருப்பிக்கொள்கிறோம்.” பெண்கள் ஓரவிழியால் அவனை நோக்கி தனிமையில் உளவிழியால் மீட்டெடுத்து நோக்கி மகிழ்ந்தனர். கற்பனையால் வண்ணம் தொட்டுத்தொட்டு முழுமை செய்தனர். ஆண்கள் அவனை எண்ணாமலிருக்க முயன்று எண்ணத்தில் அவனே எழுவதைக் கண்டு எரிச்சலுடன் நோக்கி எண்ணியிராமல் தன்னை மறந்தனர்.

மலர்களுக்கு மட்டுமே உரிய முழுமை கொண்டிருந்தது அவன் உடல். “அழகு அனைத்துப் பொருட்களிலும் எழுந்துள்ளது. அழகிற்கென்று மட்டுமே அமைந்தது மலர் மட்டுமே” என்றார் சத்வர். “படைத்துப் படைத்து சலித்த பல்லாயிரம் கோடி மானுட உடல்களில் ஒன்றில் மட்டும் பிரம்மன் தன் மகிழ்ச்சியை பொறித்தனுப்புகிறான். செல்லுமிடங்களெங்கும் அவர்கள் உவகையை நிறைக்கிறார்கள்.” கிருதர் “நமது மாணவர்கள் அவன்மேல் பொறாமை கொள்ளக்கூடும்” என்றார். சத்வர் நகைத்து “இல்லை. தங்களைப்போல் இருந்தும் தங்களைவிட ஒரு படி மேலாகச் சென்றவர்கள் மீதுதான் மானுடர் பொறாமை கொள்கிறார்கள். அவன் அழகு தெய்வங்களுக்குரிய முழுமை கொண்டது. எப்போதும் அதை தாங்கள் அடையப்போவதில்லையென்று அனைவரும் அறிவர். இளையவரே, மானுடர் எதைக் கண்டு பொறாமைப்படுகிறார்கள்? சற்று விழைந்திருந்தால் சற்று முயன்றிருந்தால் சற்று நல்லூழ் இருந்தால் தாங்களும் அடைந்திருக்கக்கூடும் என எண்ணுவனவற்றின் மீதே” என்றார்.

கிருதர் "ஆனால் ஒவ்வொருவரும் உள்ளூற அவனை விரும்புகிறார்கள் என்று தோன்றுகிறது" என்றார். சத்வர் "ஆம், அழகை விரும்பாத எவர் இருக்கிறார்கள்? மலர்களை நின்று நோக்குபவர்கள் குறைவு, ஆனால் அழகெனும்போது மலரே நினைவு வருகிறது. மலரொன்று எதிரில் வந்தால் அறியாது முகம் மலர்கிறது. மண்ணிலுள்ள விழிகள் அனைத்தும் அழகை அறியும். விழிகள் மலர்களை நோக்கி நோக்கி மலர்களைப்போல் ஆனவை என தொல்கவிதை சொல்வதுண்டு" என்றார். அவர்கள் ஏடு நறுக்கிக்கொண்டிருந்தனர். சூழ எவருமில்லாமையால் நிலைவிட்டு உரைகொண்டனர். "அத்தனை பேர் அவன்மேல் காதல் கொள்கிறார்களா என்ன?" என்று கிருதர் கேட்டார்.

"பெண்கள் தங்கள் ஆழ்கனவுகளில் நிகரற்ற பேரழகிகளாகி அவனை அடைகிறார்கள். ஆண்கள் பேரழகர்களாக மாறி அவன் என நடிக்கிறார்கள். ஆணுக்குள் அமைந்த பெண் அவனிடம் காதல் கொள்கிறாள். பெண்ணுக்குள் அமைந்த ஆண் அவனுக்கு தோழனாகிறான். இளையவரே, மானுடன் ஊனுடல் கொண்டு இங்கு வாழ்வது ஒரு சிறு வாழ்வே. உள்ளம் பெருகி அவர்கள் வாழும் முடிவிலாக் கோடி உலகங்கள் இங்குள்ளன. நாம் கொண்ட நல்லூழால் அவை எடையிலாதுள்ளன. எடை கொண்டிருந்தன என்றால் இப்புவி தாங்கும் ஆமைகள் என்றோ நசுங்கி கூழாகிவிட்டிருக்கும்" என்று சத்வர் நகைத்தார்.

எந்தக் கணத்தில் அவர்கள் அவனை ஏற்றுக்கொண்டார்கள் என்பது எவருமே அறிந்திராத ஒன்றாக இருந்தது. ஆனால் ஒவ்வொருவரும் மேலும் மேலும் கூர்கொண்டு அந்த முனை நோக்கியே வந்து கொண்டிருந்தனர். தேவயானியும் அவனும் கொண்ட காதலை அறியாத எவரும் அங்கிருக்கவில்லை.

அக்காதலை அவர்கள் ஒவ்வொருவரும் கொண்ட ஆழ்கனவுகளில் தங்களுள் நடித்தனர். அதனூடாக அவர்கள் அறிந்த அளவுக்கே அனைவரும் அக்காதலை அறிந்திருந்தனர். கசன் முன் அத்தனை பெண்களும் தேவயானியென்றாயினர். அத்தனை ஆண்களும் அவனென்றாயினர்.

மெல்ல மெல்லிய புன்னகைகள் அவனுக்கு அளிக்கப்பட்டன. கல்வியவையில் அவன் எழுத்தாணிக்காக துழாவினான் என்றால் எவரோ ஒருவர் அதை எடுத்து அவனுக்களித்தார். பசியுடன் அடுமனைக்கு அவன் சென்றால் எவரோ எழுந்து கலத்தை நன்கு கழுவி அவன் கையிலளித்தனர். ஒற்றைச் சொற்கள் எழுந்தன. பின் அவை தங்கள் உடன்பிறந்தாரை பெருக்கிக்கொண்டன. எளிய குறிப்புகள் வழியாக உரையாடல் தொடங்கியது. முதல் நகையாட்டு எழுந்ததுமே அனைத்து அணைகளும் உடைந்தன. சிரிப்பும் பகடியும் இன்றி அவனிடம் எவரும் பேசாமலாயினர்.

பெண்கள் மறைமுகமாக தேவயானியைச் சொல்லி அவனை களியாடினர். ஒவ்வொன்றையும் அவன் முழுமையுடன் செய்தான். வேள்விபோல், நடனம்போல் அவன் அசைவுகள் இருந்தன. அதனாலேயே அவை பெண்மைச்சாயல் கொண்டிருந்தன. அதைச் சொல்லியே அவனை சீண்டினர் பெண்கள். இளைஞர் அவனிடம் சொல்லாடுவதற்கென்று பேசுபொருட்களை கண்டடைந்தனர். அன்று கற்றவற்றை, அவற்றை கடந்துசெல்லும் உய்த்துணரல்களை, சூழ்ந்துள்ள காட்டை, வெயிலை, பனியை. ஆனால் அசுரரும் தேவரும் கொண்ட நில்லாப் போரைப்பற்றி ஒரு சொல்லும் அவர்கள் நாவில் எழவில்லை.

ஒவ்வொரு உரையாடலுக்குப் பின்னும் மேலும் அவனை நெருங்க முனைந்தனர். ஒவ்வொருவரும் அவனை தொட விழைந்தனர். செல்வோம் என அவன் கையை தொட்டனர் தோழர். இங்கு நோக்குக என அவன் தோளை தட்டினர். என்ன செய்கிறாய் என்று அவன் தோள்களில் கையூன்றினர். முதியவர் நீடூழி வாழ்க என அவன் தலையை தொட்டனர். மூதன்னையர் மட்டும் எந்தத் தயக்கமுமின்றி அவனை அணுகி இரு கன்னங்களைத் தொட்டு வருடி "காமதேவன் போலிருக்கிறாய், மைந்தா" என்றனர். அவன் கைகளை எடுத்து தங்கள் கன்னங்களிலும் கைகளிலும் வைத்து "நீடூழி வாழ்க!" என்று வாழ்த்தினர்.

அப்போது விழிதிகழ அகன்று நின்ற இளைய பெண்டிர் அம்மூதன்னையருக்குள் புகுந்துகொண்டு தாங்களும் அவனை வாழ்த்தினர். அவர்களின் கனவுகளில் அவன் மேலும் பெருகி நிறைந்தான். தனிமையிலிருக்கையில் அவன்மேல் உதிர்ந்த மலர்கள் அப்பெண்டிரே என அவன் அறிந்திருக்கவில்லை. ஓடையில் நீராடுகையில் அவன் உடலை உரசிச் சென்ற ஒளிமிக்க மீன்கள் எவரென்று அவன் உள்ளம் உணர்ந்திருக்கவில்லை. காற்றென வந்து அவன் குழல் கலைத்தனர். ஈரமண்ணென அவன் கால் கீழ் குழைந்தனர். சிட்டுக்குருவியென நாணம் தடுக்க தத்தித் தத்தி அவனை அணுகி மிரண்டெழுந்து மீண்டும் விலகினர். வண்ணச் சிறகுள்ள பறவையென அவன் முன் தங்களை விரித்து வைத்தனர். அவன் முன் இலைதெரியாது பூத்த கொன்றையென்றாயினர்.

அப்பெண்களனைவரிலும் தேவயானி நூறு விழிகளாக எழுந்து அவனை சூழ்ந்திருந்தாள். அவள் கொண்ட ஆணவம்

அக்காதலை முற்றிலும் மறைத்து இறுகிய முகம் சூட வைத்தது. குறுகிய ஒற்றைச் சொற்களை மட்டுமே அவனுக்கு அளிக்க அவளால் இயன்றது. அவன் முன் வருகையில் தலை நிமிர்த்து நீள்குழல்புரிகள் அலைக்க அவள் நடந்தாள். சொல் சொல் என சிலம்பின கால்நகைகள். இனி இனி என ஒலித்தன வளையல்கள். அவன் முன் அமர்ந்திருக்கையில் உடல் அவனை நோக்கித் திரும்பி முகம் பிறிதொரு திசை நோக்க அமைந்தாள். அவன் கேட்க பிறருடன் உரையாடுகையில் அவள் குரல் இனிமையுடன் வலுத்தெழுந்தது. அவனுடன் உரையாடுகையில் தாழ்ந்து தனக்குள்ளென முழங்கியது.

அவனோ ஆசிரியரின் மகளென்னும் நிலையிலேயே அவளை அணுகினான். எப்பெண்டிரையும் நோக்கும் அதே விழிகளையே அவளுக்கும் அளித்தான். நலம் உசாவினான். நன்று சொல்லி வாழ்த்தினான். அன்றாட நிகழ்வுகளை உரைத்தான். எல்லை கடக்காது நகையாடினான். ஒருபோதும் கடக்கவில்லை. அதுவே அவள் தன் சொல்லாலும் விழியாலும் வேண்டியதென்றாலும் அம்முறைமைச் சொல்லாடலுக்குப்பின் ஒவ்வொருமுறையும் சீண்டப்பட்டாள். சினம்கொண்டு பற்களைக் கடித்தபடி மட்டுமே அவன் முன்னிருந்து அகன்றாள்.

தனிமையில் இருக்கையில் அவள் உள்ளெழுந்த இளங்கன்னி ஐயமும் ஏக்கமும் கொண்டு தவித்தாள். தன் அழகும் நெகிழ்வும் அவனுள் சென்று பதியவில்லைபோலும் என ஐயுற்றாள். இல்லையேல் அவன் விழிகளிலும் சொற்களிலும் அத்தனை விலக்கம் எப்படி வந்தது? பெண்ணுக்கு முன் அப்படி முற்றிலும் நடிக்க இயலுமா? இல்லையில்லை என்று அவள் உள்ளம் சொல்லிக்கொண்டிருந்தது. அவனுள் வாழ்கிறேன் நான், ஐயமே இல்லை. ஆனால் மறுகணமே அது தன் விழைவு

காட்டும் மாயம்தானா என்று எழுந்த ஐயத்திலிருந்து அவளால் விடுபடவும் முடியவில்லை. இக்கணம் இது மறுகணம் அது எனும் ஓயா ஊசலாட்டத்தில் திருகுகுடுமி உரசி அனல்கொண்டு உருகி தவித்தது.

இரவில் விழித்துக்கொள்கையில் அவ்வெண்ணம் எழுந்து அனல்கொண்டு நின்று தவித்தது. முறுகி முறுகி உட்டணம் கொண்டு மறுபுரி சுழன்று தளர்ந்து சோர்ந்து கண்ணீர் நிறைந்து இரு கன்னங்களிலும் வழிந்து காதுகளை அடைய விசும்பலை அடக்கி இருட்டுக்குள் படுத்திருந்தாள். வெறி கொண்டெழுந்தோடி வாயிலைத் திறந்து முற்றத்தைக் கடந்து அவன் குடில் வாயிலைத் திறந்து உள்ளே சென்று அவனருகே அமர்ந்து தலைமயிரை பற்றித் தூக்கி உலுக்கியபடி “சொல், நான் உனக்கு எவள்?” என்று கூவவேண்டுமென்று விழைந்தாள். ஒருபோதும் நிகழாத அதை ஓராயிரம் முறை நடித்து சலித்தாள். ஒவ்வொரு முறையும் அவ்வெண்ணம் எழுகையில் உடல் பதறும் மறைமுக உவகைக்கு ஆளானாள்.

தன் விழிகளால் அவன் இறைஞ்சவேண்டும், தன் இரங்கும் சொற்களை அவள் காலடியில் வைத்து கோரவேண்டும், முற்றிலும் காதலென்றாகி உருகி தன் முன் நின்றிருக்கவேண்டும். தன்னிடம் அவன் காதல் சொல்லும் காட்சிகளை மீண்டும் மீண்டும் கற்பனையில் நிகழ்த்திக் கொண்டிருப்பதே அவள் நாட்களை அமைத்தது. தனித்திருக்கும் அவளை அணுகி தயங்கி நின்று, விழிதூக்கி என்ன என்று அவள் கேட்க “என்னை கொல்லாதே! உன் சொல்லின்றி ஒரு கணமும் உயிர் வாழேன்” என்றான். நீராடி சுனைவிட்டெழுந்து வருகையில் அவளை சோலையில் மறித்து “உன் அழகு என்னை பித்தனாக்குகிறது. இப்புவியில் பிறிதொன்றும்

வேண்டேன்” என்றான். இரவில் துயிலின்போது அவள் குடிலின் சிறு சாளரத்தருகே வந்து இரவெல்லாம் நின்று அவள் மென்துயில்விழிப்பில் கேட்கும்படி நீள்மூச்செறிந்தான். எழுந்து நோக்கிய அவளிடம் “குலம் வேண்டேன், குடி நாடேன், உற்றார் சேரேன், உன் அருகொன்றே போதும். எங்கும் செல்வேன், எவ்விழிவிற்கும் சித்தமாவேன், உன் சொல்லொன்றே வேண்டும்” என்றான். “மன்று நிற்பேன். மடலூர்வேன். பிறிதொன்றும் தேரேன். உயிர் விடுவேன். கடுநரகில் உழலவும் ஒருங்குவேன்” என்றான். ஒவ்வொரு கற்பனைக்குப் பின்னரும் ‘என்ன இது? எத்தனையோ முறை கூத்திலும் காவியத்திலும் கண்டது’ என்று அவளே ஏளனத்துடன் எண்ணிக்கொண்டாள். மீண்டும் மீண்டும் அதற்குள் வந்துகொண்டுமிருந்தாள்.

எப்போதோ ஒருமுறை “என்ன அலைக்கழிவு இது! இரும்புச்சிலையென்று இங்கிருந்தவள்தானா நான்? நீர்ப்பாவை நெளிவென எப்போது மாறினேன்? இத்தனை எளிதாக ஓர் ஆண் முன் தோற்கக்கூடியவளா? இதுதான் என்றும் நிகழ்கிறதா?” என்று தன்னை கேட்டுக்கொண்டாள். “தோற்பது இவனிடமல்ல, காமத்திடம். அது பிறிதெங்கும் இல்லை. என்னுள் எழுந்துள்ளது. சிலையில் எழுந்த தெய்வத்திடம் சிலை தோற்கலாகாதா என்ன?” அவன் முன் செல்லும்போது தருக்கி நிமிரவேண்டும் என ஒவ்வொரு முறையும் அவள் எண்ணுவாள். ஆனால் செயற்கையான மிடுக்காக அது மாறும். அந்த நடையும் தோற்றமும் பழக்கமற்றவை என்பதனால் ஏதோ ஒன்று பிழையென்று ஆகும். கால் தடுக்கும், கைகளில் இருந்து ஏதோ ஒன்று நழுவும், எங்காவது தோள் இடித்துக்கொள்ளும். அது அவனை திரும்பிப் பார்க்கச்செய்யும். பின்னர் எண்ணிக்கொண்டாள், அது அவனை திரும்பச்

செய்யவேண்டும் என்றே தன்னுள் வாழும் பிறிதொன்று ஆற்றும் சூழ்ச்சியா என. தெய்வங்களே, மூதன்னையரே, எத்தனை பேரின் கலவை நான்? என்னென்ன சேர்ந்து சமைத்தது என் உள்ளம்? ஒரே தருணத்தில் எத்தனை களங்களில் ஆடிக்கொண்டிருக்கின்றேன்!

வேங்கைகள் அவனிடம் பூனைக்குட்டிகளென்றாவதை அவள் பார்த்துக்கொண்டிருந்தாள். காட்டுக்குள் சென்ற அவனுக்காகக் காத்து அவை குருநிலையின் எல்லையில் அமர்ந்திருந்தன. அவன் வந்ததுமே செல்ல முனகலுடன் தாவி அவனை நோக்கி ஓடி எழுந்து கைவிரித்து அவனை அணைத்துக்கொண்டன. சுழன்று சுழன்று அவன் உடலை உரசி முத்தமிட்டன. என்ன செய்வதென்றறியாமல் பாய்ந்து ஓடி விலகி செவி பின்னுக்குச் சரித்து உடல்முடி காற்றில் அலைபாய கால்கள் ஒலிக்க அவனை நோக்கி பாய்ந்துவந்தன. அவனுக்கும் அவற்றுக்குமான உறவு குருநிலையிலேயே பேச்சென்றாகியது. அவனைக் கண்டதுமே வால் தூக்கி கால் பரப்பி உடல் குழைத்து கொஞ்சி அணுகும் வேங்கைகளைக் கண்டு பெண்கள் வாய்பொத்தி விழியொளிர நகைத்தனர். அவற்றின் கழுத்தையும் தலையையும் அவன் வருடிக் கொடுக்கையில் அவன் உடலில் தங்கள் உடல் சேர்த்து அவை நழுவிச்சுழல்கையில் ஆண்கள் முகங்களை இறுக்கி புன்னகையை கண்களில் மட்டுமே மின்னவிட்டனர்.

அவனுடன் விளையாடிக்கொண்டிருக்கையில் எங்கோ அவள் குரல் கேட்டு செவி திருப்பி மணம் கூர்ந்து தாவி அவளிடம் ஓடி பாய்ந்து அவள் உடலில் பற்றி ஏறி அவள் முகத்தில் முத்தமிட்டு தோளில் தலை வைத்து இடை பற்றி அணைத்து அவளை நிலை தடுமாற வைத்து அவை குலவின. மெல்ல

அவற்றின் நடத்தையில் ஒரு மாறுதல் நிகழ்வதை அவள் கண்டாள். அவளிடம் சிறு குருளைகள்போலவே நடந்துகொண்டிருந்த அவை ஆண்மைமிடுக்கு கொள்ளலாயின. விழிகள் நிலைத்து கூர்ந்து நோக்க எண்ணி எடுத்து மெல்ல வைக்கும் கால்களுடன் நீட்டப்பட்ட வால்களுடன் அவளை நோக்கி வந்தன. அவளருகே அவளை நோக்காமல் தலைநிமிர்ந்து படுத்துக்கொண்டன. அவளருகே அயலவர் எவர் வந்தாலும் தோல்வாரைச் சுண்டுவதுபோன்ற மெல்லிய ஒலியெழுப்பி உறுமின. அவ்வொலியிலிருந்த எச்சரிக்கையை அத்தனை பேரும் அக்கணமே உணர்ந்து அஞ்சி விலகினர்.

இரவில் அவள் குடிலுக்கு வெளியே அவை ஒளிரும் விழிகளுடன் படுத்திருந்தன. விழிப்பு கொண்டு அவள் மஞ்சத்திலிருந்து மிகமெல்ல காலடி எடுத்துவைத்தாலும்கூட அந்த ஒலிகேட்டு மெல்லிய உறுமலுடன் அவற்றில் ஒன்று எழுந்து சாளரத்தினூடாக அவளை நோக்கியது. அவள் சோலையில் தனித்திருக்கையில் அவளை அணுகாமல் நோக்காமல் ஆனால் அவளுடன் என அவை சூழ்ந்து படுத்து பிறிதெதையோ செய்துகொண்டிருந்தன. பூச்சிகளை விரட்டியும் கைநகங்களையும் விலாவையும் நக்கி தூய்மைசெய்தும் சிறுகற்களை கைகளால் உருட்டிவிளையாடியும் அவளை அறியாதவையாக இருந்தன. அவள் அழைத்தால் ஒருகணம் கழித்தே அவை எழுந்து அருகே வந்தன. வாலை நீட்டியபடி ‘சொல்’ என நோக்கி நின்றன. அவற்றின் தலையிலும் கழுத்திலும் அவள் வருடியபோது அவற்றிலிருந்து அதுவரை அறிந்திராத மணம் ஒன்று எழுந்தது. அது பிற வேங்கைகளையும் அருகே வரச் செய்தது. அவை தன்னிடமிருந்து முற்றிலும் விலகிவிட்டன என்று அவளுக்குத்

தோன்றியது. எப்போதும் உடனிருக்கையிலும் அவை அப்பாலிருந்தன.

அவற்றை அருகணையச் செய்ய அவள் செய்த முயற்சிகள் வீணாயின. அவற்றின் விழிகளை நேர்நோக்குகையில் அவள் நோக்கு சரிந்தது. அவற்றின் நோக்கு அவள்மேல் படிகையில் உள்ளுணர்வே அதை அறிந்தது. அவையறியாது அவற்றை நோக்கிக்கொண்டிருக்கையில்தான் வேங்கை எத்தனை நிமிர்வுகொண்ட விலங்கு என அவள் அறிந்தாள். யானையில் எடையாக புரவியில் விரைவாக காளையில் அமைதியாக வெளிப்படும் ஆற்றலே வேங்கையில் மென்மையென ஆகியது. ஓசையற்ற காலடிகள், வட்டக் குழவிமுகம், செவ்வுதடுகள், பால்படிந்த பைதல்விழிகள், மென்மயிர் தோல்நெளிவுகள். ஆனால் எழுந்து நடந்து அணுகுகையில் ஒவ்வொரு அணுவிலும் ஆண். சினந்து மூக்குநீட்டி செல்கையில் நூறுமுறை தீட்டிய வாள். கால்கள் படிய படுத்து கண்மூடித் துயில்கையிலும் நாணேற்றி அம்புபூட்டிய வில்.

சாளரம் வழியாக அவள் நோக்கி நின்றிருக்கையில் முற்றத்து சாலமரத்தில் சாய்த்து வைக்கப்பட்டிருந்த பெரிய செம்பு அண்டா ஒன்றை ஐயத்துடன் அணுகி முகர்ந்து நோக்கியது ஒரு வேங்கை. அதன்பின் கையால் அதை அடித்துப் பார்த்தது. உளநிறைவுடன் சுற்றிவந்து கால்தூக்கி ஒரு சொட்டு சிறுநீர் கழித்தது. மீண்டும் சுற்றிவந்து அதன் விளிம்பில் காலை வைத்தது. அண்டா உருண்டு சரிந்து அதன் கால்மேல் விழ வீரிட்டு அலறியபடி அண்டாவின் விளிம்புக்கு அடியில் சிக்கிக்கொண்ட காலை இழுத்து எடுத்துக்கொண்டு மூன்று காலில் நொண்டியபடி ஓடி அவள் குடிலை நோக்கி வந்தது. அரற்றி அழுதபடி அவள் காலடியில் வந்து படுத்துக்கொண்டு

அடிபட்ட காலை தூக்கிக் காட்டியது. அவள் சிரித்துக்கொண்டு அதன் காலைப்பற்றி நோக்கினாள். மெல்லிய வீக்கம் உருவாகத் தொடங்கியிருந்தது. அவள் அதை மெல்ல அழுத்தியபோது அது ஊளையிட்டபடி அந்தக் காலை நக்க வந்தது.

அவள் அடிபட்ட இடத்தை மெல்ல தடவிக்கொடுத்ததும் நா நீட்டி மூக்கை நக்கி காதுகளை சிலிர்த்தபடி அது ஒருக்களித்து படுத்தது. அவள் அதன் விலாவை தடவியபோது நான்கு கால்களையும் தூக்கி அடிவயிற்றைக் காட்டியது. அவள் வயிற்றைத் தடவியதும் பனையோலை கிழிபடும் ஓசையுடன் விழிசொக்கி சப்புகொட்டியது. அதன் இரு உடன்பிறந்தவையும் கால்தூக்கி வைத்து உள்ளே வந்தன. ஒரு வேங்கை அவள் அருகே வந்து படுத்து தானும் நான்கு கால்களையும் தூக்கி அடிவயிற்றைக் காட்டியது. அவள் அதையும் தடவிக்கொடுத்தபோது விழிசொக்கியது. அடிபட்ட வேங்கை ஒரு கண்ணை மட்டும் திறந்து உடன்பிறந்தவனை நோக்கியபின் மறுபக்கம் திரும்பிப் படுத்தது. மூன்றாம் வேங்கை 'சரியான முட்டாள்கள்' என முகம் காட்டி கண்களைச் சுருக்கியபடி வெளியே நோக்கி குடிலுக்குள் அமர்ந்தது. அவள் புன்னகையுடன் மல்லாந்த வேங்கையின் வயிற்றை வருடியபடி "என் செல்லம் அல்லவா? என் கண் அல்லவா? அமைதியாக உறங்கு..." என்று கனிந்த குரலில் சொன்னாள். அது கண்களை மூடிக்கொண்டு வாலைமட்டும் மெல்ல ஆட்டிக்கொண்டிருந்தது.

# மாமலர் - 55

**55. என்றுமுள குருதி**

சுக்ரரின் குருநிலையிலிருந்து கசன் அங்கே வந்திருக்கும் செய்தி ஒற்றர்கள் வழியாக விருஷபர்வனை சென்றடைந்தது. தன் தனியறையில் தலைமை ஒற்றர் சுகர்ணரிடமிருந்து அச்செய்தியை கேட்ட விருஷபர்வன் ஒருகணம் குழம்பி அவரிடமே “இத்தனை வெளிப்படையாக தன் மைந்தனையே அனுப்புவாரா பிரஹஸ்பதி? அதை உய்த்துணரும் அளவிற்கு நுண்மையற்றவர் தன் மாணவர் என்று அவர் எண்ணினாரா?” என்றான். சுகர்ணர் பணிவுடன் புன்னகைத்து “ஒருவேளை இப்படி ஓர் எண்ணம் முதலில் நமக்கு எழுவதென்பதே மாபெரும் திரையென இச்செயலை சூழ்ந்திருக்குமோ? தன் மைந்தனையே அவர் அனுப்பியிருப்பதனாலேயே அது சூழ்ச்சியல்ல என்று சுக்ரர் எண்ணலாமல்லவா?” என்றார்.

விருஷபர்வன் தலையை அசைத்தபடி “என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை” என்றான். “பிறிதொன்றுக்காகவும் அவன் இங்கு வருவதற்கு வாய்ப்பில்லை” என்றார் சுகர்ணர். விருஷபர்வன் தன் சிறிய விழிகளைத் தூக்கி ஒற்றரை நோக்கி “மைந்தனுக்கும் தந்தைக்கும் பூசல் எழுவது எங்குமுளதுதானே? உண்மையிலேயே பிரஹஸ்பதியைத் துறந்து அவரை வெல்லும்பொருட்டு மைந்தன் இங்கு வந்திருக்கலாமல்லவா?” என்றான். “நானும் அவ்வண்ணமே எண்ணினேன். ஆனால் அவன் விழிகளைப் பார்த்த எவரும் அவன் வஞ்சம் கொண்டவனல்ல என்று உணர்வார்கள். இவ்வுலகின் தீமைகளை இன்னமும் உணராத சிறுவனின் நோக்கும் சிரிப்பும் கொண்டவன். அழகன். அவனை பேரழகனாக்குவது அந்த இளமை” என்றார் சுகர்ணர்.

விருஷபர்வன் திரும்பி அமைச்சர் சுகர்த்தரிடம் “நான் செய்ய வேண்டியதென்ன? சுக்ரரிடம் அவனைக் குறித்து எச்சரிக்க வேண்டுமா?” என்றான். “அதில் பொருளில்லை” என்றார் சுகர்த்தர். “அவரறியாத ஒன்றை அவரிடம் சென்று சொல்ல இயலுமா என்ன?” என்றார் சுகர்ணர். “பிறகென்ன செய்வது?” என்று சினத்துடன் கேட்டபடி எழுந்தான். சாளரத்தருகே சென்று கைகளைக் கட்டியபடி வெளியே நோக்கி நின்றான். சுகர்த்தர் “அவனைச் சூழ்ந்து நம் ஒற்றர்களை அங்கு நிறுத்துவோம். ஒவ்வொரு கணமும் அவனை அவர்கள் கண்காணிக்கட்டும். அவன் நோக்கு சஞ்சீவினிதான் என்றால் அவன் அதை அடைவதற்குள்ளேயே அவனை அழித்துவிடலாம்” என்றார்.

விருஷபர்வன் திரும்பி “உண்மையில் இதை நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன், அமைச்சரே. அணு அணுவாக அசுரர் படை தேவருலகை வென்று வருகிறது. இந்திரனின் அரியணையை தொட்டுவிடும் தொலைவிலென ஒவ்வொரு நாளும் நான் கனவில் காண்கிறேன். ஒவ்வொரு முறையும் ஐயமும் அச்சமும் என் உள்ளத்தில் எழுகின்றன. இத்தனை எளிதாக இது நிகழாது, எதுவோ ஒன்று எழுந்துவரும் என. அதுவே இப்புடவி நெசவின் மாறா நெறி. ஆனால் இத்தனை எளிதாக, எளிமையினாலேயே புரிந்துகொள்ள முடியாததாக ஒன்று நிகழும் என்று நான் எதிர்பார்க்கவில்லை” என்றான்.

“அதில் கவலையுறுவதற்கு ஏதுமில்லை. சுக்ரர் அவனை ஏற்றது எதனாலென்று அவரை அறிந்தவர்கள் உணரமுடியும். தன் ஆசிரியர் மீதான வஞ்சத்தை தீர்த்துக்கொள்கிறார். அவர் மைந்தனை அவருக்கு எதிரியாக்கி களத்தில் கொண்டுசென்று நிறுத்துவாரென்றால் அவரது வெற்றி முழுமையாகிவிடும்” என்றார் சுகர்ணர். சுகர்த்தர் “ஆசிரியரிடமிருந்து முற்றிலும்

கற்றுவந்தவர் சுக்ரர். அத்தனை கற்க வேண்டுமென்றால் அத்தனை அணுகியிருக்கவேண்டும். அத்தனை அணுகியவர் ஒருபோதும் ஆசிரியரை முற்றிலும் வெறுக்கமாட்டார். தன் ஆணவத்திற்கு அவரிடம் ஓர் ஒப்புதல் மட்டுமே அவர் கோருவது என்று எனக்குத் தோன்றுகிறது. ஆசிரியரை வெல்ல விரும்புவார், உடைப்பதை அவர் உள்ளம் ஏற்காது" என்றார். விருஷபர்வன் "ஆம், வெறும் ஆணவத்திற்காக அவர் அத்தனை உவகை கொண்டிருக்கமாட்டார்" என்றான்.

"இதில் இவ்வண்ணம் நாம் சொல்லாடி சலிப்பதில் பொருளேதுமில்லை" என்றார் சுகர்த்தர். "நாம் செய்யக்கூடுவதொன்றே, காத்திருப்பது. அவன் ஒவ்வொரு அடியும் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு நோக்கும் நம் ஒற்றர்களால் கணக்கிடப்படட்டும்." அவரை திரும்பி நோக்கிய விருஷபர்வன் "நன்று, அதுவே என் ஆணையாகுக!" என்றான். சுகர்ணர் தலைவணங்கி வெளியேறினார். சுகர்த்தர் அவனருகே வந்து "எண்ணிநோக்கினால் தீதென்று ஏதும் தெரியவில்லை, அரசே. ஆனால் உள்ளுணர்வு தீதென்றே சொல்கிறது. நன்றுசூழ்ந்து உவகைகொண்டு இயற்றுவதும் பேரழிவை விளைக்கலாகும் என நூலில் கற்றுள்ளேன்" என்றார். விருஷபர்வன் பெருமூச்சுவிட்டான்.

சில நாட்களுக்குள்ளேயே ஒற்றர்களின் செய்தி வந்தது. அச்செய்திகளைத் தொகுத்து அவனிடம் சொல்ல வந்த அமைச்சர் சுகர்த்தர் "இதை நான் முன்னரே எண்ணியிருந்தேன்" என்றார். "எவரும் விழையும் பேரழகன். அத்தூண்டில் சுக்ரருக்காக அல்ல, அவர் மகளுக்காகவே" என்றார். விருஷபர்வன் "ஆம், எவரும் எண்ணும் எளிய வழிதான் அது. ஆனால் அவள் வேலின் விசை முனையில் திரள்வதுபோல

சுக்ரரின் ஆணவம் கூர்கொண்டு எழுந்தவள் என்று எண்ணியிருந்தேன்” என்றான். “ஆம் அரசே, அதுதான் இவனை அவள் காமுறுவதற்கு அடிப்படை. அவளைப்போன்ற ஒரு பெண் நிகரற்ற ஒன்றை தான் மட்டுமே அடையவேண்டுமென எண்ணுவாள். பேரழகனொருவனைக் கண்டதும் அவனை தனக்குரியவன் என்று எண்ணாமலிருக்க அவளால் இயலாது” என்றார்.

“அவர்கள் கொண்ட உளப்பரிமாற்றம் அக்குருநிலையில் அனைவருக்கும் தெரிந்துள்ளது. அவள் சுக்ரரின் கரவறைகளுக்குள் நுழைவதற்கான புதைவுப்பாதை” என்று அவருடன் வந்து சற்று பின்னால் நின்ற சுகர்ணர் சொன்னார். “சுக்ரர் இதை ஒப்புகிறாரா?” என்று விருஷபர்வன் கேட்டான். “ஆம், அவர்கள் தங்களுக்குள் சொல்லென அதை பரிமாறிக்கொள்ளவில்லை. ஆனால் எண்ணங்களால் அது உறுதிப்பட்டுவிட்டதென்பதை மூவரின் விழிகளும் நகைகளும் காட்டுகின்றன” என்றார் சுகர்ணர். “சுக்ரர் ஏன் அவனை ஏற்கிறார்?” என்றான் விருஷபர்வன். “அவர் தோளில் வளர்ந்த மைந்தன். தன் மகளுக்கு பிறிது எவரை கணவனாக ஏற்க முடியும்?” என்றார் அமைச்சர் சுகர்த்தர். “அவனை தன்னுடன் எப்போதைக்குமாக நிறுத்திக்கொள்வதற்கு, அவன் தந்தை மீதான வெற்றியை முழுமை செய்துகொள்வதற்கு சுக்ரர் இதையே சிறந்த வழியென்று எண்ணுவார்.”

தொடர்ந்து “தேவயானியும் பிறிதொன்று எண்ண வழியில்லை. தந்தையை வென்று கடந்து செல்லும் ஒருவனையே அவளால் ஏற்கமுடியும். பிரஹஸ்பதியின் இளவடிவான கசனன்றி எவரும் சுக்ரரை வெல்ல இயலாது. இப்புவியில் அவள் முழுதேற்கும் ஆண் இன்று அவன் ஒருவனே” என்றார்.

விருஷபர்வன் எண்ணம் தழைந்து தன் பீடத்தில் சென்று அமர்ந்தபடி தலைகுனிந்து தரையையே நோக்கிக்கொண்டிருந்தான். மடியில் கோத்து வைக்கப்பட்ட கைகள் மெல்ல அசைந்துகொண்டிருந்தன. அதில் அவன் உள்ளம் இயங்கும் முறை அவர்களின் கண்ணுக்கு தெரிந்தது. கட்டைவிரல் அசைவு நின்றதும் அவன் விழிதூக்கி "அப்படியென்றால் இதுவே தருணம் அல்லவா?" என்றான்.

சுகர்ணர் "ஆம்" என்றார். அமைச்சர் "அதை ஒற்றர்கள் தாங்களே செய்ய இயலாது. அரசாணை தேவை. அதன்பொருட்டே இங்கு வந்தோம்" என்றார். விருஷபர்வன் "அவ்வாறே ஆகுக!" என்று சுகர்ணரை நோக்கி சொன்னான். சுகர்ணர் தலைவணங்கி வெளியே சென்றார். அவர் அகன்றதும் அவர் சென்ற பாதையை ஒருமுறை நோக்கிவிட்டு அமைச்சர் குரல் தாழ்த்தி சொன்னார் "கசன் கொல்லப்பட்டதும் அச்செயலுக்கு உடன் நின்ற அத்தனை ஒற்றர்களையும் நாம் கொன்றுவிடவேண்டும், அரசே." விருஷபர்வன் திரும்பி நோக்க "சுக்ரர் அவன் இறப்பை தாளமாட்டார். அவர் மகள் முப்புரமெரித்த மூவிழி அன்னையென சினங்கொள்ளக்கூடும். இன்று நாம் எவர் சினத்திற்கேனும் அஞ்சவேண்டுமென்றால் அவர்களுடையதைதான்" என்றார்.

விருஷபர்வன் எரிச்சலுடன் தன் கைகளை ஒன்றுடன் ஒன்று இறுக்கிக்கொண்டான். "ஒவ்வொரு முறையும் அரசுசூழ்தலின்பொருட்டு ஓர் எளியவன் கொல்லப்படுகையில் எதன்பொருட்டோ நான் எரிச்சல் கொள்கிறேன். மானுடர் மீதல்ல. தெய்வங்கள் மீதுமல்ல. ஊழென்று சொல்லி என்னை மூடனாக்கவும் உளம் கொள்ளவில்லை. பிறிதொன்றின் மீது அச்சினம். மாற்று வழியிலாது இங்கு அமைந்த இந்நெறியின்

மீது” என்றான். “அவன் எளியவன் அல்ல” என்று அமைச்சர் சொன்னார். “நூல்கற்றுத் தேர்ந்தவன். வலக்கையில் இருந்த மலர் இதழ் குலையாது இருக்க இடக்கையால் இரு வேங்கைகளை சரித்துவிட்டு அவன் நுழைந்ததை நம் ஒற்றர்கள் கண்டிருக்கிறார்கள். இங்கு அவன் வந்ததும் அரசுசூழ்தலுக்காகவே. படைக்கலம் எடுத்தவன் படைக்கலத்தால் தான் கொல்லப்படலாம் என அறிவிப்பு விடுத்தவனே.”

“இச்சொற்கள் என்னை எவ்வகையிலும் தேற்றவில்லை, அமைச்சரே. அவன் அந்தணன். அசுரர் அந்தணரைக் கொல்வது பிழையல்ல. ஆனால் பாடுந்திறன்கொண்டவன், கலைபயின்றவன், சொற்சுவை அறிந்தவன், ஊழ்கம் அமைந்தவன் படைக்கலம் எடுத்து களந்தோறும் உயிர்விடும் மானுடக்கோடிகளில் ஒருவன் அல்ல. தன் கலையினூடாக, சொல்லினூடாக, சொல்கடத்தல் வழியாக மெய்மையை ஒருகணமேனும் அவன் தொட்டிருக்கக்கூடும். அவன்மேல் பிரம்மம் தன் நோக்கை ஒருகணமேனும் பதித்திருக்கக்கூடும். ஓர் கலைஞனை, புலவனை, முனிவனை கொல்வதென்பது விதைநெல்லை எரிப்பது. கருக்கொண்ட பெண்டிரை கொல்வது. எதன்பொருட்டு என்றாலும் அந்நாட்டிற்கும் அரசகுடிக்கும் அது பழி சேர்க்கிறது. செங்கோலேந்தி முடிசூடி அரியணையில் அமர்ந்திருப்பவனுக்குத் தெரியும் அது. மிக ஆழத்தில் அவன் ஒரு அமைதியின்மையை உணர்வான்.”

சுகர்ணரின் பதினெட்டு ஒற்றர்கள் இளமாணவர்களாக காவலர்களாக சுக்ரரின் குருநிலையில் இருந்தனர். பிரபவன், சாம்பவன், சக்ரன், சுபலன், சுதார்யன், சூக்தன், முக்தன் எனும் ஏழு மாணவர்கள் கசனுக்கு விளையாட்டுத் தோழர்களாக

மாறிவிட்டிருந்தனர். அவனுடன் கனி தேரவும் கன்று மேய்க்கவும் காட்டுக்குள் சென்றனர். புதர்களிலும் மரக்கூட்டங்களிலும் அலைந்து கனிகளும் கிழங்குகளும் திரட்டினர். கொடிகளை முறுக்கி கயிறாக்கி கவர்க்கிளை வெட்டி கொக்கி செய்து பாறையெழுச்சிகளில் தொற்றி ஏறி மலைத்தேன் எடுத்தனர். சுக்ரரின் குருநிலையில் அசுர மாணவர்கள் ஊனுணவு அருந்தும் வழக்கம் இருந்தது. ஒவ்வொரு நாளும் மான்களையும் காட்டுப்பன்றிகளையும் முயல்களையும் கொன்று உரித்து ஊன்துண்டுகளாக்கி ஈச்சையோலை முடைந்து செய்த கடவங்களில் அவற்றைப் பொதிந்து தலைச்சுமையாக்கி அவர்கள் மீண்டு வந்தனர்.

அவர்கள் ஒற்றர்களென்று சுக்ரரோ கிருதரோ சுஷமரோ அறிந்திருக்கவில்லை. நூல்கல்வியிலும் அரசுசூழ்தல்களிலும் மெய்யான ஆர்வம்கொண்ட மாணவர்களையே ஒற்றர்களென உளம்பயிற்றி அங்கே இணைத்துவிட்டிருந்தார் சுகர்ணர். நூல் ஆயும் அவைகளில் அமர்ந்து அவர்களும் சுக்ரரின் உலகியல் அரசுண்மைகளையும் பொருள்நிலை மெய்மைகளையும் கற்றவர்கள். தானறிபவற்றைத் தொகுத்து அதில் தன்நோக்கை பதித்து அறிந்தபின் தன்னைத்தான் துணிக்கும் சொல்லாடலை தேர்ந்தவர்கள். நெடுநாள் அங்கிருந்ததனால் அவ்விடத்திற்குரியவர்களாகவே நோக்கும் சொல்லும் செயலும் உருமாற ஒற்றர்களென்று பிறிதெவரும் அறியாமல் நீரில் கரைந்த நஞ்சென கரந்திருந்தனர்.

சுகர்ணரின் ஆணை வந்ததும் அவர்கள் அடுமனைக்கு அருகே விறகுப்புரையில் ஒருங்கு கூடினர். மேலிருந்து எடை மிகுந்த விறகுத் துண்டுகளை எடுத்து கீழே நின்றவர்களின் தலையில் கொடுத்த சக்ரன் சுகர்ணரின் ஆணையை சொன்னான்.

கோடரியுடன் நின்ற பிரபவன் “ஆம், இதை நான் எதிர்பார்த்தேன்” என்றான். விறகு பொறுக்கி அடுக்கிய சாம்பவன் “இது மிக எளியது. அதனாலேயே ஐயமாக இருக்கிறது, இதுவே தீர்வா என” என்றான். அவன் சொன்னதையே அனைவரும் எண்ணிக்கொண்டிருந்ததனால் திகைப்புடன் திரும்பிப்பார்த்தனர். அவன் அந்நோக்குகளால் நிலையழிந்து “ஆம், பல தருணங்களில் மிக எளிய செயல்களே தீர்வுகள்” என்றான். சக்ரன் “எளியவை பலமுறை நிகழ்த்தப்பட்டமையால் நிறுவப்பட்ட வழிகள். நாம் அவற்றை மீளமீள கேள்விப்பட்டிருக்கிறோம் என்பதனால் ஐயம்கொள்கிறோம். ஏனென்றால் நாம் மேலும் திறன்கொண்டவர்கள் என்றும், ஆகவே புதிய எதையாவது செய்யவேண்டுமென்றும் எண்ணிக்கொள்கிறோம். ஆணவமே அவ்வாறு எண்ணச்செய்கிறது” என்றான். “ஆம், அவனை கொன்றாகவேண்டும்.”

விறகுச்சுமையை தலையில் வாங்கிக்கொண்டு சென்ற சுபலனும் சுதார்யனும் அச்சொற்களை மெல்லிய விழிமாற்றத்துடன் பெற்றுக்கொண்டனர். “அவன் துளியும் எஞ்சலாகாது என்பதே ஆணை” என்று சக்ரன் சொன்னான். “இறந்தவனை நுண்சொல்லால் எழுப்ப ஆசிரியரால் இயலும். அவனை அவர் எழுப்புவாரென்றால் அவன் கொல்லப்பட்டான் என்பதும் தெரியவரும். நாம் பிடிபடுவோம்” என்றான். அவர்கள் விழிதாழ்த்தி நிற்க “நமது அரசரும் பிடிபட்டதாகவே பொருள். இறந்தவரை சுக்ரரால் உடலில் இருந்து எழுப்ப முடியும். உடலில் இருந்து அகன்று அலைபாயா மூச்சுவெளியில் நின்றிருக்கும் ஆத்மாவை மீண்டும் உடல்புகுத்துவார். நீர்ப்பாசிப் படலத்தை தூண்டிலிட்டு இழுத்து குவித்துக்கொண்டு

வருவதுபோல் அவனிடமிருந்து எழுந்து வெளியில் பரவிய மூச்சை அவரால் சேர்த்தெடுக்க இயலும்” என்றான்.

“ஆசிரியர் இன்று எழுப்ப விழையும் முதல் உயிர் அவர் துணைவியாகவே இருக்கக்கூடும். ஆனால் அது இயலாது. ஏனெனில் அவர் இறந்த பிறகு ஏழாண்டுகள் கழித்து சஞ்சீவினியை அவர் அடைந்தார். அவர் உயிர் மண்ணுலகிலிருந்து மூச்சுலகிற்கும் அங்கிருந்து வினையுலகுக்கும் மூதாதையர் உலகுக்கும் சென்றிருக்கும். அவர் இங்கே வாழ்வை தவமென இயற்றியவர் என்பதனால் தவத்தோருலகுக்கும் மெய்யுலகுக்கும் ஒளியுலகுக்கும்கூட சென்றிருக்கக்கூடும். மூச்சுலகிலிருந்து அகன்ற உயிரை மீட்கவியலாது” என்றான் சக்ரன். “அவன் அகன்றதை அவள் அறிந்தால் அவரிடம் சொல்லி உயிர்மீட்டு எடுப்பாள், ஐயமே வேண்டாம். ஆனால் அவன் திரும்பிவர உடலிருக்கக் கூடாது. அவன் கொண்டிருக்கும் அந்த அழகிய தோற்றம் மீண்டெழக்கூடாது... அவன் உருவம் அழிந்தால் அவளால் அவனை ஏற்கமுடியாது.”

அவர்கள் ஒவ்வொருவரும் ஒரே கணத்தில் ஒரே இடத்தை வந்தடைந்தனர். அதையே சுபலன் சொன்னான். “அவனை புதைத்தால் எழுவான். எரித்தழிப்பது நன்று. சாம்பலில் இருந்து அவன் உடல்பெற இயலாது.” சக்ரன் “மூடா, சிதை எரியும் கெடுமணம் நெடுந்தொலைவுக்கு எழுவது. அனல் தசையைத் தொட்டதுமே காட்டுக்குள் ஆடுமேய்க்கும் எவரும் அதை உணர்ந்து வந்துவிடக்கூடும். எரிக்க வேண்டும், ஆனால் காற்றில் கலக்காது எரியும் அனலில்” என்றான். “அது என்ன?” என்று பிரபவன் கேட்டான். “அனல்கள் ஏழு. அதில் முதல் அனல் மண்ணில் உறைகிறது. புதைக்கப்படும் உடலை ஏழு

நாட்களில் எலும்பென்றாக்குகிறது. விறகிலும் நெய்யிலும் வாழ்கிறது ஒளிகொண்ட எரி. அதன் சீற்றம் நமக்கு ஒவ்வாதது. விண்ணில் வாழும் எரிகளை விலக்குவோம். எஞ்சுவது வயிற்றில் எரியும் அனல்” என்றான் சக்ரன். “ஜடராக்னிக்கு அவனை இரையாக்குவோம்.”

“நமக்கு அத்தனை பொழுதில்லை. அவனை காணவில்லை என்று உணர்ந்த மறுகணமே அவர் சஞ்சீவினியை சொல்லக்கூடும்” என்றான் சுதார்யன். அவர்களில் இளையோனாகிய முக்தன் “வேள்வித் தீயின் அளவிற்கே விரைவுள்ளது ஓநாயின் வயிற்றில் எரியும் அனல்” என்றான். அனைவரும் அவனை நோக்கி திரும்ப அவன் “நான் இதை காவியமொன்றில் கற்றேன்” என்றான். சக்ரன் “ஆம், சரியான சொல். நாம் அதை செய்வோம்” என்றான். “ஓநாய்களுக்கா?” என்றான் சுதார்யன். “ஆம், வெறும் நான்குநாழிகை போதும் அவன் எரிந்தழிந்திருப்பான்” என்றான் சக்ரன். அவர்கள் தலையசைத்தனர்.

மறுநாள் குருநிலையின் மாணவர்கள் முதற்புலரியிலேயே எழுந்து தங்கள் மூங்கில் கூடைகளும் கவண்களும் அகழ்விகளும் துரட்டிகளுமாக காட்டுக்குள் காய்கனிகள் தேர கிளம்பிச் சென்றனர். ஒருவரோடொருவர் நகையாடியும் பிடித்துத் தள்ளியும் அடித்துவிட்டு ஓடி துரத்திப்பிடித்தும் விளையாடியும் துயிலெழத் தொடங்கியிருந்த பறவைக்குரல்கள் பரவிய இலைத்தழைப்புக்கு அடியில் பனித்துளி சொட்டி அசைந்துகொண்டிருந்த புதர்களினூடாக காட்டுக்குள் நுழைந்தனர். முன்னரே வகுத்து வைத்திருந்ததன்படி ஒற்றர்கள் எழுவரும் கசனுடன் நடந்தனர். அவர்கள் உள்ளங்கள் அறைபட முகம் பதற்றம்கொண்டிருந்தது.

முக்தன் அடிக்கடி சிறுநீர் கழித்தான். “என்ன இது?” என பிரபவன் வினவ “ஒன்றுமில்லை” என அவன் சிரித்தான்.

அவர்கள் அனைத்தையும் நூல்களிலேயே கற்றிருந்தனர். அனைத்துப் பயிற்சிகளையும் களரிகளிலேயே அடைந்திருந்தனர். ஆகவே நேருக்குநேர் வந்த அத்தருணம் அவர்களை அச்சுறுத்தியது. அது முற்றிலும் புதிதெனத் தோன்றியது. சக்ரன் அதை நன்குணர்ந்திருந்தான். மிகப்பெரிய பிழை எதையோ இயற்றப்போகிறோம் என அவன் உள்ளம் கூறியது. ஆகவே அனைத்து வாய்ப்புகளையும் எண்ணி எண்ணி தவிர்த்துக்கொண்டிருந்தான். அதற்குமப்பால் சென்று அவன் ஆழம் பதறிக்கொண்டிருந்தது. “எங்கே?” என்று அவன் பிரபவனிடம் கேட்டான். அவன் “மலைமுனம்புக்கு அப்பால் பள்ளத்தில் ஓநாய்க்குலம் ஒன்று வாழ்கிறது... எப்படியும் இருபது மூத்த ஓநாய்கள் அதிலுண்டு” என்றான். “உம்” என்றான் சக்ரன்.

சக்ரன் கசனிடம் மந்தணக்குரலில் “நேற்று அங்கு மலைச்சரிவில் வேர்ப்பலா ஒன்று கனிந்திருப்பதைக் கண்டேன்” என்றான். “பலாவின் மணம் எழவில்லையே” என்று கசன் கேட்டான். “ஆம், எழலாகாதென்பதற்காக அங்கே கரடியின் மலத்தை கொண்டுசென்று உடைத்து பரப்பிவிட்டு வந்தேன். குரங்குகளோ பிற கரடிகளோகூட அம்மரத்தை அணுகாது” என்றான் சக்ரன். சூக்தன் “எவருமறியாது அங்கு செல்வோம். எவரும் கொண்டு வராத கனிச் சுமையுடன் குடில் மீள்வோம்” என்றான். சிரித்தபடி “ஆம், கிருதர் திகைத்துவிடவேண்டும்” என்றான் கசன். அவர்கள் பிறரிடமிருந்து ஒதுங்கி புதரில் மறைந்து விலகிச்சென்றனர். பிறர் தங்கள் தோழர்களிடமிருந்து பிரிந்து தனித்தனியாக

புதர்களுக்குள் நுழைந்து ஒரு பெரிய காணாவளையமென அவர்களை சூழ்ந்து சென்றனர்.

கசனை மிக விலக்கி கொண்டுசென்ற சக்ரன் பாறை முனம்பொன்றை சென்றடைந்தான். “இங்கிருந்து இறங்க வேண்டும்” என்று அவன் சொல்ல அம்முனையை அடைந்து குனிந்து நோக்கிய கசன் “இத்தனை செங்குத்தாகவா? ஒரு கொடியின்றி இங்கிருந்து இறங்கமுடியாது” என்றான். “கொடி செய்வோம்” என்று சக்ரன் சொன்னான். அருகிருந்த வள்ளிகளை கையால் பற்றி இழுத்து முறுக்கி இணைத்து வடம் செய்து பாறையில் நின்ற முட்புதர் ஒன்றின் அடித்தூரில் கட்டினான். “இறங்குங்கள்” என அவன் சொல்ல கசன் அதைப் பற்றியபடி மெல்ல இறங்கினான். மூன்றடி ஆழத்திற்கு அவன் இறங்கியதும் சக்ரன் தன் கையிலிருந்த வாளால் கசனின் கழுத்தை ஓங்கி வெட்டினான். வெட்டு ஆழப்பதிந்து குருதி கொப்பளிக்க அவன் உடல் திடுக்கிட்டு துள்ளித்துள்ளி கயிற்றின் பிடிவிடாமலேயே சுழன்றது. மீண்டும் ஒருமுறை வெட்டியபோது தலை தனியாக பிரிந்து தசைநார்களில் தொங்கி ஆடி உருவிக்கொண்டு கீழே சென்று விழுந்தது. தட் என அது விழுந்த ஓசை சக்ரனை விதிர்க்கச் செய்தது. உடல் நீர்த்தோல்கலம் விழும் ஓசையுடன் மண்ணை அறைந்தது. அதன் கைகால்கள் இழுத்துக்கொண்டு துடித்தன.

அசுரர்கள் ஓடிவந்து மேலே நின்று நோக்கினர். சூக்தன் “இத்தனை எளிதாகவா?” என்றான். சக்ரன் அவனை சீற்றத்துடன் திரும்பி நோக்கினான். குருதி மணம் எழுந்ததுமே அப்பால் ஓநாய்க்குரல் கேட்கத் தொடங்கியது. பிரபவன் “அங்கே மலைப்பிளவொன்றில் அவை வாழ்கின்றன” என்றான். அவர்கள் அச்சரடினூடாக பற்றி கீழிறங்கிச் சென்று தங்கள் கையிலிருந்த

வாள்களால் கசனின் உடம்பை சிறு துண்டுகளாக வெட்டினர். அவன் உள்ளங்கையை எடுத்துக்கொண்ட பிரபவன் அதன் குருதி துளித்துளியாக சொட்ட மெல்ல நடந்து அருகிலிருந்த ஓநாய்க்குகையை அடைந்தான். முன்னரே மணம் அறிந்து அவை நிலையழிந்து ஊளையிட்டுக்கொண்டிருந்தன. ஒன்று அவனைக் கண்டதும் தலைநீட்டி வாய்சுளிக்க பற்களைக்காட்டி உறுமியபடி அருகணைந்தது. அவன் தன் முன் அக்கையை வீசிவிட்டு திரும்பி ஓடிவந்தான்.

குகைக்குள் பதினெட்டு ஓநாய்கள் இருந்தன. அப்போது அவற்றில் நான்கு ஓநாய்கள் குருளைகளை ஈன்றிருந்தன. முதல் ஓநாய் அந்தக் கையை முகர்ந்துகொண்டிருக்கையிலேயே பசித்து சீற்றம்கொண்டிருந்த அன்னைஓநாய்கள் குகையின் இருளிலிருந்து குரைத்தபடி நிரை நிரையெனப் பாய்ந்து வெளிவந்து அக்கையை கவ்விக் கொண்டன. பிரபவன் ஓடிச்சென்று மரத்தைப்பற்றி மேலேறி கிளைகளில் அமர்ந்து கொண்டான். கீழே சொட்டிய குருதியை முகர்ந்தபடி முதல் ஓநாய் முன்னால் செல்ல அதன் செவியசைவையும் வால்சுழற்றலையும் கண்டு செய்திபெற்று பிற ஓநாய்கள் தொடர்ந்து சென்றன. சற்று நேரத்தில் முதல் ஓநாய் கசனின் உடல் துண்டுகள் சிதறிக்கிடந்த இடத்தை சென்றடைந்தது. சென்ற விரைவிலேயே ஒரு துண்டைக் கவ்வி ஒருமுறை தலைசுழற்றி உதறியபின் கவ்விக் கவ்வி மென்று ஊனை விழுங்கியது. பின்னங்கால் மடித்து அமர்ந்து தலையைத் தூக்கி வானை நோக்கி ஊளையிடத்தொடங்கியது.

அவ்வழைப்பை ஏற்று சற்று நேரத்திலேயே அனைத்து ஓநாய்களும் அங்கே வந்து சேர்ந்தன. தங்கள் குட்டிகளை வழிநடத்தியபடி மெலிந்து உடல் ஒட்டி நா வறண்ட

அன்னையரும் அங்கு வந்தனர். மரங்களிலும் பாறை விளிம்புகளிலும் அமர்ந்திருந்த அசுரர்கள் கசனின் உடல் முழுமையாகவே உண்ணப்படுவதை உறுதி செய்துகொண்டனர். செங்குருதியும் தசைத்துணுக்குகளும் படிந்த பெரிய எலும்புகளும் கரியகுழல் ஒட்டியிருந்த தலையும் மட்டுமே அங்கு எஞ்சின. செல்வோம் என்று சக்ரன் பிறரிடம் கைகாட்டினான். அவர்கள் மீண்டும் ஒருங்கு திரண்டனர். காட்டுப்புதர்கள் வழியாக நடக்கத் தொடங்கினர்.

ஒருவரோடொருவர் ஒரு சொல்லும் பேசிக்கொள்ளவில்லை. ஒவ்வொருவர் அகவிழிக்கு முன்னாலும் வழிமுட்டி நிற்கச்செய்யும் பெருஞ்சுவர் என கசனின் புன்னகைக்கும் முகம் தெரிந்தது. அதை பல்லாயிரம் திரைகளை என மீண்டும் மீண்டும் விலக்கி அவர்கள் முன்னால் சென்றுகொண்டிருந்தனர். வழியில் ஒரு சுனையைக் கண்டதும் சக்ரன் அதிலிறங்கி குளிக்கத் தொடங்கினான். பிறரும் நீரில் பாய்ந்து உடல் கழுவினர். கரைவிளிம்பில் படிந்திருந்த மென்மணலை அள்ளி கைகளையும் உடலையும் தேய்த்தனர். மூழ்கி எழுந்து மீண்டும் வந்து அந்த மணலை எடுத்து உடலைக் கழுவினர். உள்ளம் நிலையழிந்ததுபோல அந்த மணலால் தங்கள் உடலை மீண்டும் மீண்டும் கழுவிக்கொண்டிருந்தனர்.

பின்னர் ஒவ்வொருவரும் தனித்து சோர்ந்து மரநிழல்களில் படுத்து உடல் நீட்டினர். கைகளும் கால்களும் தனித்தனியாக கழன்றுவிட்டது போன்ற களைப்பை அடைந்தனர். கொந்தளித்துக்கொண்டே இருந்த உள்ளம் படுத்ததுமே முறுக்கவிழ அனைவருமே மிக எளிதில் துயிலில் ஆழ்ந்தனர். பின்னர் எப்போதோ அந்தியின் ஒலிகள் கேட்கத் தொடங்கிய

பிறகு எங்கிருக்கிறோம் என்று உணரத் தொடங்கினர். ஏதோ விந்தையிலென கசன் திரும்பி வருவான் என்று அவர்கள் அனைவருமே எதிர்பார்த்தனர். நிகழ்ந்தது ஒரு கனவென்றும் நிகருலகுக்கு விழித்தெழுந்திருப்பதாகவும் உளம் விழைந்தனர். பின்னர் பெருமூச்சுடன் எழுந்து நிகழ்ந்தது கனவென்றே தங்கள் நெஞ்சுக்கு சொல்லி அதை எங்கோ ஆழத்திற்கு தள்ளினர்.

ஒவ்வாத ஒன்றை கடந்து செல்வதற்கு ஒவ்வாத பிறவற்றை எண்ணுவதே உகந்தவழி என்று தங்கள் முன்அறிதல்களால் அவர்கள் உணர்ந்திருந்தனர். இளமையிலேயே சொல்மீதுகொண்ட காதலும், கற்றுத்தேர்ந்து அறிஞனென்றாகி அவை சென்றமர விழைந்து கல்விச்சாலைகள்தோறும் சென்றதும், அங்கு அசுரர் என்பதனாலேயே சிறுமைக்கு ஆளாக்கப்பட்டு துரத்தப்பட்டதும் கசந்து கசந்து நினைவிலெழுந்தன. நல்லாசிரியர், அந்தணர், கவிஞர் என ஒவ்வொருவரும் குலம் கேட்டு முகம்சுளித்து சுட்டுவிரல் காட்டி விலகும்படி ஆணையிட்டனர். அக்கணங்களில் அவர்களில் எழுந்த அந்த கொடியதெய்வத்தை கனவில் மீண்டும் மீண்டும் அவர்கள் கண்டனர். அச்சத்தை வஞ்சமென ஆக்கிக் கொண்டனர். வஞ்சம் அவர்களை மீட்டது.

“ஆம், நான் கொன்றேன். நம் குலம் இப்புவிமேல் வாழவேண்டுமென்றால் இன்னும் ஆயிரம் அந்தணரை நாம் கொல்ல வேண்டியிருக்கும். இந்த ஓர் அந்தணன் நம் குடியின் மந்தணச்சொல்லை திருடிச்செல்வான் என்றால் நம் குலத்தின் பல்லாயிரம் பேர் இறந்து மண்ணில் உதிர நேரும். இப்புவி வெல்பவரால் வகுக்கப்பட்டது. வெல்லும்பொருட்டு இயற்றுவதே அறம்.” எவர் அதை தங்களிடம் சொல்லிக்கொண்டிருக்கிறார் என்று அவர்கள் வியந்தனர்.

ஆழ்ந்த சினம்மிக்க அக்குரல் எவருடையது? அத்தனை பொருத்தமான சொல்தேர்வுடன் அத்தனை உளப்பூர்வமான உணர்வெழுச்சியுடன் அது சொல்லப்பட்ட பின்னரும்கூட உள்ளிருந்து அல்ல அல்ல என்று அதை விலக்குவது யார்? அவனுக்கு ஏன் அத்தனை இளமை? ஏன் அத்தனை அறியாமை?

# மாமலர் - 56

**56. உயிர்மீள்தல்**

கசன் திரும்பிவருவதற்காக காட்டின் எல்லையென அமைந்த உயரமற்ற பாறைமேல் ஏறி அமர்ந்து காத்திருந்தன மூன்று வேங்கைகளும். கனிகளும் தேனும் சேர்க்கச் சென்றவர்கள் காலை வெயில் மூப்படைவதற்கு முன்னரே கூடைகளுடன் திரும்பிவந்தனர். வழக்கமாக அவர்களுடன் வரும் கசனுக்காக முதல் காலடியோசை கேட்டதுமே மூன்று வேங்கைகளும் எழுந்து செவி முன்கோட்டி விழிகூர்ந்து நின்றன. கசன் அவர்களுடன் இல்லையென்பதை தொலைவிலெழுந்த மணத்தாலேயே உணர்ந்து அவை முனகியபடி மீண்டும் படுத்துக்கொண்டன.

ஒரு வேங்கை அலுப்பு தெரியும் அசைவுகளுடன் மல்லாந்து படுத்து தன்னைச் சூழ்ந்து பறந்த ஈக்களை கைகளால் தட்டி விளையாடிக்கொண்டிருந்தது. பிறிதொன்று வாலை தாழ்த்தியபடி பொறுமை இழந்து தான் நின்றிருந்த சிறிய பாறைப்பரப்புக்குள்ளேயே சுற்றி வந்தது. மீண்டும் ஒரு குழுவின் மணம் தொலைவில் எழுந்தபோது படுத்திருந்த வேங்கை தலை திருப்பி பார்த்து அதில் கசன் இல்லையென்று

முனகியது. நடந்த வேங்கை நின்று வாலை நீட்டி உடலை பின்னுக்கிழுத்து முதுகை நிமிர்த்தி கோட்டுவாயிட்டது.

ஒவ்வொரு குழு கடந்துசெல்லும்போதும் அவனுக்காக அவை மூக்காலும் விழிகளாலும் நோக்கிக்கொண்டிருந்தன. அதன்பின் ஒரு வேங்கை மட்டும் கீழே குதித்து இடைவழியினூடாக நடந்து காட்டின் விளிம்புவரை சென்று நின்று மரச்செறிவுக்குள் நோக்கிக்கொண்டிருந்தது. பின்னர் சலிப்புடன் மெல்ல காலெடுத்து வைத்து தாவி மேலேறி தன் உடன்பிறந்தவர்களுடன் வந்து அமர்ந்துகொண்டது. உச்சிப்பொழுதில் ஊன்எடுக்கச் சென்றவர்கள் திரும்பிவந்தனர். அவர்களுடன் கசனைக் கொன்ற அசுரர்களும் கடந்து சென்றபோது ஒரு வேங்கை உதைபட்டதுபோல திடுக்கிட்டு எழுந்து நின்றது. அதன் உடல் நடுங்கத்தொடங்கியது. சக்ரனை நோக்கி முகம் சுளித்து பற்களைக் காட்டி சீறியது. உடலை பின்னுக்கிழுத்து பாய்வதுபோல பதுங்கியது.

வேங்கையின் சீற்றத்தை அதுவரை கண்டிருக்காத அவன் அச்சத்துடன் தன் கையிலிருந்த மானின் குருதிதோய்ந்த வேலை முன்னோக்கி நீட்டி அசையாமல் நின்றான். பிற இரு வேங்கைகளும் எழுந்து தங்கள் உடன்பிறந்தானை நோக்கி சீறியபடி "என்ன?" என்றன. இரண்டாவது வேங்கையின் உடலும் மெய்ப்புகொண்டு மயிர்ப்பிசிறுப் பரப்பு இளங்காற்றில் அலைபாயத் தொடங்கியது. மூக்கை நீட்டியபடி அது மெல்ல காலடி வைத்து முதல் வேங்கையின் வலப்பக்கம் வந்து நின்றது. "செல்க! செல்க!" என்று அவர்களில் ஒருவன் மெல்ல சொன்னான். வேலை நீட்டியபடி மெல்ல பின்வாங்கி அவர்கள் நடந்து சுக்ரரின் தவக்குடில் வளைப்புக்குள் சென்றுவிட்டனர்.

அவர்களைத் தொடர்ந்து சென்று தயங்கி நின்று அவர்களின் காலடிகளை முகர்ந்து, ஐயம்கொண்டு திரும்பி காட்டை நோக்கி, மீண்டும் மீண்டும் காலடிகளை முகர்ந்து, நிலைகொள்ளாது உறுமியபடியும் வாலைச் சுழற்றியபடியும் அங்கே சுற்றிவந்தன இரு வேங்கைகளும். பிறிதொன்று பாறை மேலேயே முன்கால் நீட்டி படுத்தபடி அவற்றை மாறி மாறி நோக்கி உறுமிக்கொண்டிருந்தது. அந்தியில் கன்றுகளை ஓட்டியபடி காட்டுக்குள்ளிருந்து திரும்பிவந்த மாணவர்கள் மூன்று வேங்கைகளும் நிலைகொள்ளாமலிருப்பதை கண்டனர். இடைவழியில் வாலை நீட்டியபடி நின்றிருந்த வேங்கை வந்தவர்களை நோக்கி சீறியபடி பாய்வதற்கென உடல் தாழ்த்தியது.

முன்னால் வந்த பசு அஞ்சி மெய்ப்புகொள்ள காதுகளைக் கோட்டி மூக்கை தாழ்த்தி கொம்புகளை முன் நீட்டியபடி அசையாமல் நின்றது. அதன் பிடரியும் விலாவும் விடைத்து நடுங்கின. அதை ஓட்டிவந்த மாணவன் தன் கோலை நீட்டியபடி முன்னால் வந்து “என்ன? என்ன?” என்று வேங்கையிடம் கேட்டான். கோலால் தரையைத் தட்டி “என்ன வேண்டும்? என்ன வேண்டும்? சொல்!” என்றான். பாய்வதற்கென உடல் தணித்த வேங்கை மெல்ல நிலை மீண்டு எழுந்து தன் உடலை ஓசையெழ அசைத்தபடி மெல்ல நடந்து வந்து துணியைச் சுழற்றி வீசுவதுபோன்ற அசைவுடன் பாறைமேல் தாவி ஏறிக்கொண்டது. பிறிதொன்று பாறைக்குக் கீழே வந்து நின்று தன்னைக் கடந்து செல்லும் பசுக்களையும் மாணவர்களையும் நோக்கி உறுமிக்கொண்டே இருந்தது.

“என்ன ஆயிற்று இவற்றுக்கு?” என்று ஒருவன் கேட்டான். “எங்கோ பசுங்குருதி மணம் கிடைத்திருக்கும். என்னதான்

இருந்தாலும் அவை குருதியை விரும்பும் கான் விலங்குகள் அல்லவா?” என்றான் இன்னொருவன். “ஒவ்வொரு நாளும் காட்டுக்குள் சென்று வேட்டையாடி வருபவைதானே? இங்கு குருநிலையின் கன்றுக்குட்டிகளைக்கூட அவை தொட்டதில்லை” என்று ஒருவன் சொன்னான். அவற்றை நோக்கியபடி தங்களுக்குள் பேசிக்கொண்டே அவர்கள் கடந்து சென்றனர். “விலங்குகளை நம்மால் புரிந்துகொள்ளவே முடியாது. அவை நம்மை முழுதாக உட்புகவிடுவதே இல்லை” என்றான் ஒருவன்.

இருட்டத் தொடங்கியதும் ஒரு வேங்கை தரையை முகர்ந்தபடி நடந்து காட்டுக்குள் சென்றது. பின்னர் திரும்பிவந்து உரத்த குரலில் உறுமி தன் உடன்பிறந்தாரை அழைத்தது. மூன்று வேங்கைகளும் காட்டுக்குள் மணம் கொண்டபடி நின்று செவிசிலிர்த்து ஓசைகூர்ந்தன. பின் மெல்ல காலடி எடுத்துவைத்து இருட்டுக்குள் ஆறு விழிப்புள்ளிகளாக நடந்தன. முதலில் சென்ற வேங்கையின் இருபுறமும் அதன் உடன்பிறந்தார் இருபக்கமும் பார்த்தபடி நடந்தன. மிகத் தொலைவிலேயே ஓநாய்களின் ஊளையை அவை கேட்டன. முன்னால் சென்ற வேங்கை நின்று தன் செவிகளை மடித்து வாலைத்தூக்கி மெல்ல அசைத்தது. இரு வேங்கைகளும் தங்களுக்குள் மட்டுமே கேட்கும்படி மெல்லிய உறுமலுடன் பேசிக்கொண்டன. பின்னர் முதலில் சென்ற வேங்கை புதர்களில் தாவிக் கடந்து ஓடத்தொடங்கியது. பிற வேங்கைகளும் அதைத் தொடர்ந்தன.

பாறை உச்சிவரை சென்று எச்சரிக்கையுடன் அதன் விளிம்பை அடைந்து உடல் சுருக்கி நின்றபடி கீழே நோக்கியது முதல் வேங்கை. அங்கு கசனின் எஞ்சிய எலும்புகளை நக்கியபடியும்,

அங்கிருந்த மண்ணை காலால் கிண்டி புரட்டியபடியும், தங்களைத் தாங்களே சுற்றிவந்து உறுமியும், ஒன்றன்மேல் ஒன்று பாய்ந்து தழுவி விழுந்து புரண்டெழுந்து விளையாடியும் ஓநாய்கள் பரவியிருந்தன. அவற்றில் ஒன்று புலியின் மணம் அறிந்து திரும்பிப் பார்த்தது. அதன் மெல்லிய உறுமலில் அனைத்தும் அசைவழிந்து விரைப்புகொண்டு நோக்க அவற்றின் கண்கள் மின்மினிக்கூட்டம்போல் தெரிந்தன. ஓரிரு கணங்களுக்குள்ளாகவே அவை ஒன்றன்பின் ஒன்றென வால்நீட்டியபடி மெல்ல நிரைகொண்டு ஒரு சிறு படையென்றாயின.

மூத்த ஓநாய் வாலைச் சிலிர்த்து குலைத்து மெல்ல அசைத்தபடி மூக்கை நீட்டி காதுகளை முன்கோட்டி முன்னால் வந்து நின்றது. அதன் இருபுறமும் ஓநாய்கள் அம்புமுனை வடிவில் தெரிந்தன. தங்களுக்குள் வண்டு முரலும் ஒலியுடன் அவை தொடர்பாடிக்கொண்டன. முன்னால் நின்ற வேங்கை பாயும்பொருட்டு மெல்ல உடல் தாழ்த்தியதும் ஓநாய்களின் தலைவன் இரு காதுகளையும் பின்னால் மடித்தது. அதன் இருபக்கமும் நின்ற இள ஓநாய்கள் விரிந்து கழுகுச் சிறகுகளென்றாயின. தலைமை ஓநாய் பின்காலெடுத்து வைத்து மெல்ல பதுங்க இரு சிறகுகளும் நீண்டு புதர்களுக்குள் மறைந்து ஓநாய்க்கூட்டமே அரைவட்டமென்றாயிற்று.

அன்னை ஓநாய்கள் தங்கள் மைந்தர்களை திரட்டிக்கொண்டு பின்னால் சென்று புதர்களுக்குள் மறைந்து தங்கள் குகைகளை நோக்கி சென்றன. மூன்று வேங்கைகளும் கீழே பார்த்தபோது ஓநாய்க்கூட்டம் அரைவட்ட வடிவில் அவை நின்ற பாறையை சூழ்ந்திருப்பதைக் கண்டன. தலையைச் சிலுப்பி முகத்தில் வந்து மொய்த்த கொசுக்களை விரட்டியபடி முதல் வேங்கை

மெல்லிய கெடுமணம் ஒன்றை எழுப்பியது. பிற இரு வேங்கைகளும் அதை அறிந்ததும் வால்தழைந்து உடல் இளகின. அவை ஓசையின்றி பின்காலெடுத்து வைத்து புதர்களுக்குள் புகுந்து பின் திரும்பி பாய்ந்தோடத் தொடங்கின.

ஒன்றன்பின் ஒன்றென சிறு தாவல்களில் புதர்க்குவைகளைக் கடந்து ஓடி காட்டிலிருந்து வெளியேறி ஒற்றையடிப் பாதையினூடாக அவை சுக்ரரின் தவக்குடில் பகுதிக்குள் நுழைந்தன. முதல் வேங்கை தேவயானியின் குடிலை அடைந்து சாத்தப்பட்டிருந்த கதவுப்படல்மேல் தன் இரு கால்களை தூக்கிவைத்து உலுக்கியது. இன்னொன்று அதன் பின்னால் நின்று வாலைத் தூக்கி முதுகைக் குவித்து வளைத்தபடி உறுமியது. மூன்றாவது வேங்கை குடில் முற்றத்திலேயே கால் மடித்து வால் தழைத்து அமர்ந்து பெருங்குரலில் முனகியது.

கதவைத் திறந்த தேவயானி மூன்று வேங்கைகளும் நிலையழிந்திருப்பதை கண்டாள். முதல் வேங்கையின் தலையில் கை வைத்து “என்ன ஆயிற்று?” என்று கேட்டாள். அதன் பிறகே அவள் மூன்றாவது வேங்கையை கண்டாள். அது அமர்ந்திருந்த முறையிலும், வான்நோக்கி தலையைத் தூக்கியதிலிருந்தும் என்ன நிகழ்ந்ததென்பதை உய்த்துணர்ந்துகொண்டு இரு வேங்கைகளையும் தள்ளி ஒதுக்கி அவற்றின் நடுவே நடந்து முற்றத்தை அடைந்தாள். திரும்பி இருள்செறிந்த காட்டை நோக்கியதும் அவள் உடல் ஒருமுறை துடித்தது. மூச்சுவாங்க கால்கள் தூக்கி வைத்து தாவி தந்தையின் குடில் நோக்கி செல்லும்போதே அவள் ஆடை நெகிழத் தொடங்கியது. அள்ளிச் சுழற்றிக் கட்டியிருந்த கூந்தல் அவிழ்ந்து முதுகில் புரண்டது.

நடை தடுமாற, மூச்சு ஒலிக்க, வியர்வை மணம் எழ, சுக்ரரின் குடிலை அடைந்து “தந்தையே! தந்தையே!” என்று கூவினாள். கிருதருடன் பேசிக்கொண்டிருந்த சுக்ரர் அவ்வோசையைக் கேட்டு “அது யார்? தேவயானியா?” என்றார். அதற்குள் குடிலுக்குள் நுழைந்த அவள் “தந்தையே, பிரஹஸ்பதியின் மைந்தர் காட்டிலிருந்து திரும்பி வரவில்லை” என்றாள். சுக்ரர் “அவனுக்கென்ன? ஒற்றைக் கையால் வேங்கைகளை தடுத்து நிறுத்துபவனை வெல்ல காட்டில் யார் இருக்க முடியும்? கந்தர்வர்களோ தேவர்களோ அவனை வெல்ல முடியாது. அசுரர்கள் அவனை அணுகவும் முடியாது” என்று புன்னகைத்து “பதறாதே! அமர்க! இப்போது என்ன ஆகிவிட்டது?” என்றார்.

“இல்லை, நானறிவேன். எனது வேங்கைகள் நடந்துகொண்ட முறையே சொல்கிறது. அவை அறியும், அவர் இப்போதில்லை. கொல்லப்பட்டுவிட்டார்” என்றாள். “என்ன சொல்கிறாய்? வழக்கத்திற்கு மாறாக சற்று பிந்தியுள்ளான். அதை வைத்து அவன் கொல்லப்பட்டுவிட்டான் என்று எப்படி சொல்ல முடியும்? அசுர நாட்டில் சுக்ரரின் முதல் மாணவனைக் கொல்லும் துணிவு எவருக்குள்ளது?” என்றார் சுக்ரர். “இல்லை, நானறிவேன். அவர் கொல்லப்பட்டுவிட்டார்” என்றபோது அவள் கண்கள் நிறைந்து கன்னங்களில் நீரொழுகத் தொடங்கியது.

தரையில் முழந்தாளிட்டு அமர்ந்து தந்தையின் கால்களை பற்றிக்கொண்டு “அவரை திரும்ப அழைத்துவாருங்கள்! திரும்ப அழைத்துவாருங்கள், தந்தையே! அவர் கொல்லப்பட்டுவிட்டார்” என்றாள். சுக்ரர் “திரும்ப அழைத்துவிடலாம், மகளே. அது மிக எளிய செயல்” என்றார். “இப்போதே திரும்ப அழையுங்கள். இப்போதே நான் அவரை பார்க்கவேண்டும்” என்று அடம்பிடிக்கும் சிறுமிபோல தலையை அசைத்தபடி

சொன்னாள். “இப்போதே. இப்போதே வேண்டும்” என்றாள். “நன்று, அமர்க!” என்றபின் கிருதரைப் பார்த்து “இவளை இப்படி நான் பார்த்ததேயில்லை. இவள் வடிவில் பிறிதொரு இளமகள் வந்துள்ளாள் என்றே தோன்றுகிறது” என்றார்.

கிருதர் தேவயானியை பார்த்தபின் “இப்போது கசனின் மனைவியாக இங்கு வந்துள்ளார். மனைவியர் அனைவரும் ஒரே வகையான அச்சமும் ஐயமும் அமைதியும் கொண்டுவிடுகிறார்கள்” என்றார். வாய்விட்டு நகைத்து “ஆம், அதைத்தான் நானும் எண்ணினேன்” என்றார் சுக்ரர். “அஞ்சாதே. அவன் உயிரோடு இருக்கிறானா என்று பார்க்கிறேன்” என்றபின் அருகிருந்த அகல் சுடரை தன் அருகே தள்ளிவைக்கும்படி கிருதரிடம் கைகாட்டினார். கிருதர் சுடரை நீக்கி அவரருகே வைத்ததும் கசன் பெயரை சொன்னபடி கையை அச்சுடர் நோக்கி நீட்ட ஊதி அணைக்கப்பட்டதுபோல் சுடர் அணைந்தது. சுக்ரர் முகம் மாறி “ஆம், உனது வேங்கைகள் பிழை செய்யவில்லை. அவன் இப்போது இல்லை” என்றார்.

அவள் அறியாது அலறிவிட்டாள். “இரு, அவன் உயிர் மூச்சுவெளியில்தான் உள்ளது. எளிதில் அதை மீட்க முடியும். நீ அஞ்சவேண்டியதில்லை” என்றார். கிருதர் “அவன் உடல் அழிக்கப்பட்டிருக்கக்கூடும்” என்றார். “அவ்வுடலில் ஒரு சிறு துளி எஞ்சியிருந்தாலே போதும், மீட்டுக் கொண்டுவந்துவிட முடியும்” என்றபடி தன் இரு கைகளையும் மீன் வடிவில் கோத்து தலை குனிந்து சஞ்சீவினியை மும்முறை சொல்லி “பிரஹஸ்பதியின் மைந்தனே, உயிர் மீள்க! எஞ்சிய உடல் திரட்டி எழுக! மீண்டும் உன் விருப்பத்துக்குரிய உடலை வந்தணைக!” என்றார். அவர் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது.

பின்னர் தோள்கள் துவள விழிதிறந்து "அது நிகழ்ந்துவிட்டது. அவன் இப்போது திரும்பி வருவான்" என்றார்.

"என்ன ஆயிற்று? காட்டுவிலங்குகளா?" என்று கன்னங்களின் ஈரத்தில் விளக்கொளி செந்தீற்றலென படர்ந்திருக்க தேவயானி கேட்டாள். "சொல்லுங்கள் தந்தையே, அவரை எவரேனும் தாக்கினார்களா?" சுக்ரர் "அறியேன். ஆனால் நிழலுருக்களென நான் கண்டது ஓநாய்களை. அவனை ஓநாய்கள் உண்டுவிட்டிருக்கின்றன" என்றார். "ஐயோ!" என்று தன் வாயை பொத்தினாள் தேவயானி. "அஞ்சாதே! ஓநாய்களின் வயிற்றைக் கிழித்து அவன் வெளி வந்திருக்கிறான். இன்னமும் செரிக்காத ஊன் போதும் அவன் தன் உடல் மீட்க" என்றார் சுக்ரர்.

அவள் மெல்ல தளர்ந்து தரையில் அமர்ந்து குனிந்து முகத்தை கைகளால் பொத்திக்கொண்டாள். "வந்துவிடுவான், தேவி" என்றார் கிருதர். "முன்போலவே அவர் வந்துவிடவேண்டும். தெய்வங்களே, மூதன்னையரே, வந்துவிடவேண்டும்" என்றாள் அவள். அவளை நோக்கியிருந்தபோது சுக்ரர் முன்பறியாத பெரும்கனிவொன்றை அடைந்தார். பேரரசியின் நிமிர்வுடன் அவள் தோன்றும்போது அவள் அடிநோக்கி மண்டியிட்டு வழிபட்ட உள்ளம் அப்போது இளமகளென அவளை அள்ளி மடியிலிட்டு தலை கோதியது. இப்படி இவள் என் முன் வந்தமர்தலும் நன்றே. தந்தையென பிறிதொரு வடிவம் கொள்கிறேன் என்று அவர் எண்ணிக்கொண்டார்.

வெளியே வேங்கைகளின் உறுமலோசை கேட்டதும் அவள் பதறி எழுந்து "வந்துவிட்டார்" என்று கூவினாள். "திரும்பி வந்துவிட்டார்! தந்தையே, வந்துவிட்டார்! அவை அவரை நோக்கி ஓடுகின்றன" என்றபடி கதவை நோக்கி ஓடி வெளியே எட்டிப்பார்த்தாள். அங்கே காட்டு எல்லையில் வேங்கைகள்

பாய்ந்துசெல்லும் அசைவு தெரிய “அவர் வந்துவிட்டார். வேங்கைகள் அவரை அணுகிவிட்டன” என்றபடி திரும்பி அவரை நோக்கி ஓடிவந்து அவர் காலைத் தொட்டு சென்னி சூடியபின் இரு கைகளாலும் குழலை அள்ளி சுருட்டிக் கட்டியபடி தோளிலிருந்து நெகிழ்ந்த ஆடையை இழுத்து இடையில் செருகி முற்றத்தில் பாய்ந்து இருளில் ஓடி மறைந்தாள்.

கிருதர் “இந்த மாற்றம் ஒவ்வொரு பெண்ணிலும் நிகழ்வதனால் இதிலிருக்கும் மாபெரும் விந்தையை நாமறிவதே இல்லை. கன்னியென விடுதலையை கட்டின்மையை ஆணவத்தை பெருவிழைவை அணிசூடியிருக்கிறார்கள். அவை அனைத்தையும் கழற்றி வீசி வெறும் மனைவி என்றாகிறார்கள்” என்றார். சுக்ரர் சிரித்தபடி “வெறும் அன்னையென்று ஆவதற்கான ஒரு பயிற்சி அது” என்றார். கிருதர் புன்னகைத்து “ஆம்” என்றார்.

வெளியே ஓசைகள் கேட்டபோது சுக்ரரும் கிருதரும் எழுந்து சென்று நோக்கினார்கள். பிறைநிலவின் வெளிச்சத்தில் மூன்று வேங்கைகளும் துள்ளிக் குதித்து தரையில் விழுந்து புரண்டு எழுந்து வால் சுழற்றி முனகி நடனமாடி சூழ்ந்துவர தேவயானியும் கசனும் நடந்து வந்தனர். அவள் அவன் வலக்கையை எடுத்து தோளிலிட்டு சுழற்றி இடையில் வைத்து கைகளால் பற்றியிருந்தாள். தலையை அவன் மார்பில் சாய்த்து கால்கள் பின்ன நடந்து வந்தாள். அழுதுகொண்டிருக்கிறாள் என்று தோன்றியது. அவன் குனிந்து அவள் காதில் மெல்ல ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான்.

ஓரிடத்தில் கால் தடுமாறி அவள் விழப்போக இடையை நன்கு பற்றித் தூக்கி நெஞ்சோடணைத்து நின்றான். அவிழ்ந்து

தோளில் விழுந்துகிடந்த குழலை இரு கைகளாலும் ஒதுக்கி காதுகளுக்குப்பின் வைத்து சீரமைத்தான். அக்கற்றைகளை வலக்கையால் பற்றி மெல்ல இழுத்து அவள் முகத்தை நோக்கி குனிந்து கண்களுக்குள் பார்த்து ஏதோ சொன்னான்.

இரண்டு வேங்கைகளும் காலை அவன் மேல் வைத்து அவர்களின் முகத்தருகே தங்கள் முகத்தை கொண்டுவந்து முனகி வால் சுழற்றின. பிறிதொன்று முன்னால் ஓடிவந்து அதே விரைவில் அவர்களை நோக்கி கடந்து சென்று மீண்டும் வந்தது. கிருதர் “உடனே அவர்களுக்கு மணம்முடித்து வைப்பது நன்று” என்றார். “ஆம், இப்போது இருவருமே நடிப்புகளை விட்டுவிட்டார்கள்” என்று சிரித்தார்.

கசன் இறந்ததும் சுக்ரரின் ஊழ்க நுண்சொல்லால் மீண்டதும் மறுநாள் குருநிலை முழுக்க பரவியது. முனிவர்களும் பெண்களும் இளையோரும் அவனைத் தேடிவந்து அவன் கைகளைப்பற்றி நெஞ்சில் வைத்தும் தோள்களை கைகளால் தழுவியும் தலையில் கைவைத்து வாழ்த்தியும் தங்கள் உவகையையும் உளநிறைவையும் தெரிவித்தனர். இளம்பெண்கள்கூட தாங்கள் உருவாக்கி வைத்திருந்த எல்லைகளைக் கடந்து அவனை அணுகி அவன் கைகளைப்பற்றி கண்ணீர்விட்டனர். என்ன நிகழ்ந்தது என்று கேட்டவர்களுக்கு சொல்ல அவனிடம் எந்த நினைவும் இருக்கவில்லை.

அவனைத் தாக்கிய சக்ரனும் பிறரும் காலையில் அவன் மீண்டு வந்திருப்பதை அறிந்ததுமே இயல்பாக செல்பவர்கள்போல காட்டுக்குள் சென்று மறைந்துவிட்டனர். அங்கிருந்து அப்படியே ஹிரண்யபுரிக்கு சென்றுவிடுவதற்கு காட்டிற்குள் அமர்ந்து திட்டமிட்டனர். ஆனால்

உச்சிப்பொழுதுக்குள் குடில்களில் இருந்து தேன் சேர்க்க வந்தவர்கள் பேசியதிலிருந்து என்ன நிகழ்ந்ததென்பது எவருக்கும் தெரியவில்லை என்பதை புரிந்துகொண்டனர். அவன் எவ்வாறு இறந்தான் எப்படி ஓநாய்களிடம் சிக்கிக்கொண்டான் என்பதை கசனால் நினைவிலிருந்து எடுக்க முடியவில்லை என்பதை அறிந்ததும் அவர்கள் ஆறுதலடைந்தனர்.

தேனும் கிழங்குகளும் சேர்த்துக்கொண்டு பின்னுச்சிப்பொழுதில் இயல்பான முகங்களுடன் சுக்ரரின் குருநிலைக்கே வந்தனர். அங்கு தேவயானியின் குடிலில் கசன் அமர்ந்திருக்க அவனைச் சூழ்ந்து முனிவர்களும் இளைஞர்களும் அமர்ந்து சிரித்து சொல்லாடிக் கொண்டிருப்பதை கண்டனர். அனைத்து உளத்தடைகளையும் உதறி தேவயானி எப்போதும் கசன் அருகிலேயே இருந்தாள். அவன் தோளில் தலைசாய்த்து தன் உடலை அவன் விலாவில் படியவைத்து, அவன் கையை எடுத்து தன் தோளினூடாக இட்டு மார்பில் அமைத்து பற்றிக்கொண்டு, தன் விரல்களால் அவன் விரல்களைப்பற்றி விளையாடியபடி மெல்லிய முனகலுடனும் சிறுமியருக்குரிய அடத்துடனும் அவனுடன் சொல்லாடிக்கொண்டிருந்தாள்.

அவனிடம் அவள் தந்தையிடம் பேசும் குழவிபோல் குழைந்து மறுகணமே இளமைந்தனிடம் அதட்டும் அன்னையென ஆனாள். அவள் கொண்ட நிமிர்வும் சினமும் ஆணையிடும் குரலும் அளவெடுக்கும் நோக்கும் முழுமையாகவே மறைந்துவிட்டிருந்தன. அங்கிருந்தவர்கள் அதை இயல்பாகவே ஏற்றுக்கொண்டிருந்தனர். அவர்கள் அனைவரும் நன்கறிந்த தேவயானி அவ்வுடலுக்குள் தன்னை உள்ளிழுத்துக்கொண்டு பிறிதொன்றாக வெளிவந்து தெரிவதை எந்தத் திகைப்புமின்றி

அவர்கள் அனைவருமே எதிர்கொண்டனர். அந்த மாற்றம் நிகழ்ந்ததைக்கூட அவர்கள் அறியவில்லை என்பதுபோல.

சக்ரன் வாயிலில் சென்று நின்று "என்ன ஆயிற்று? உங்கள் உடல்நிலை நன்றாக உள்ளதா?" என்றான். கசன் "வருக, சக்ரரே! என்ன நிகழ்ந்ததென்று நினைவில்லை. நேற்று உங்களுடன் காட்டுக்குள் வந்தேன். பின்னர் என்னை உணர்ந்தபோது காட்டுக்குள் சேற்றிலிருந்து உடல் திரட்டி எழுந்ததுபோல் உணர்ந்தேன். நல்ல இருட்டு. நிலவொளியின் நிழல்கள். எங்கிருக்கிறேன் என்றே தெரியவில்லை. எப்படி ஓநாய்களால் தாக்கப்பட்டேன், என்னைச் சூழ்ந்து இறந்து கிடந்த ஓநாய்களைக் கொன்றது யார், எதுவுமே தெரியவில்லை" என்றான்.

"என்னுடன்தான் நேற்று வந்தீர்கள். தனித்தனியாகப் பிரிந்து கிழங்கு தேடச் சென்றோம். பின்னர் தங்களை தேடிப்பார்த்தோம். குரல் கொடுத்தோம். தடம் தேர்ந்து நோக்கினோம். அறியக் கூடவில்லை. இவன்தான் தாங்கள் திரும்பியிருக்கக்கூடும் என்றான். ஆகவே நாங்கள் திரும்பிவிட்டோம்" என்றான் சக்ரன். "நன்று, இனி இவர் காட்டுக்கு செல்ல வேண்டியதில்லை. கனிதேர்ந்தும் தேன்தேடியும் இவரால் ஊட்டப்பட்டு எவரும் இங்கு வாழ வேண்டியதில்லை" என்று சீற்றத்துடன் தேவயானி சொன்னாள். "என்ன இது? நான் இங்கு மாணவன். மாணவன் ஆற்றவேண்டிய பணிகளை ஆற்றித்தான் ஆகவேண்டும்" என்று கசன் சொன்னான்.

"மாணவன் கற்கத்தான் வந்திருக்கிறான். காடு தேர்வதற்கல்ல" என்றாள் தேவயானி. அவள் ஏதுமறியாத சிறுமியென உண்மையிலேயே மாறிவிட்டிருந்தாள். "தன் உணவையும்

உறைவிடத்தையும் தானே உருவாக்கக் கற்பதுதான் கல்வியின் முதல் படி. அது அளிக்கும் முழு விடுதலையிலிருந்தே பிற அனைத்தையும் கற்க முடியும்" என்று கசன் சொன்னான். "உடலுழைப்பிலாத கல்வி உள்ளத்தை எவ்வகையிலும் பயிற்றுவதில்லை. இங்கு ஒரு காவியம் பயில்கிறோம். அங்கு ஒரு கிழங்கைத் தோண்டி எடுக்கையில் சொற்கள் அச்செயலில் எப்படி வந்து பொருந்தி புதிய ஒரு பொருளை அளிக்கின்றன என்பது இங்கு குடிலில் அமர்ந்திருந்தால் தெரியாது. காவியத்தில் காட்டையும் காட்டில் காவியத்தையும் காணத்தெரிந்தவனே இரண்டையும் அறிகிறான்" என்றான் கசன்.

வெளியே வந்த சக்ரன் வேங்கைகள் எழுந்து வாய் நீட்டி சினம்கொண்ட பார்வையுடன் தன்னை நோக்கி நிற்பதை கண்டான். மெல்லிய குரலில் "எப்படியோ அவற்றுக்கு தெரிந்திருக்கிறது" என்று பிரபவனிடம் சொன்னான். "எப்படி தெரியும்? நாம் பல முறை நீராடினோம். நம் உடலில் அவன் குருதி ஒரு துளிகூட எஞ்சவில்லை. இருந்தாலும் மேலும் மறைக்க மான் குருதியை பூசிக்கொண்டு வந்தோம்" என்றான் சூக்தன்.

"மணத்தால் அல்ல, உள்ளுணர்வால்" என்றான் சக்ரன். "புலன்களுக்கு அப்பால் உள்ளம் ஒரு நுண்புலன். சித்தம் பிறிதொரு நுண்புலன். ஆனால் சித்தமும் உள்ளமும் பருவடிவமான ஐம்புலன்களின் வழியாகவே செயல்படமுடியும். உள்ளம் உணர்ந்தது ஓர் ஓசையென நறுமணமென தொடுஉணர்வென உருமாறித் தெரிந்தாகவேண்டும். சித்தம் உணர்ந்தது ஒரு நினைவென கூற்றென ஆகவேண்டும். அவற்றின் உள்ளே வாழும் ஆத்மா நம் செயலை உணர்ந்து அதை ஒரு மணமென ஆக்கிக்கொண்டிருக்கிறது."

“அவற்றின் நோக்கு என்னை அச்சுறுத்துகிறது” என்றான் முக்தன். “அவை விலங்குகள். அத்தனைக்கும் அடியில் அவை வெறும் விலங்குகள். விலங்கென நடிப்பதன்பொருட்டே அவற்றின் ஆத்மா அவ்வடிவை எடுத்திருக்கிறது. வயல் புகுந்த நீர் வயலின் வடிவம் கொள்வதுபோல அவற்றின் ஆத்மாவுக்கும் கோரைப்பற்களும் கூருகிர்களும் குருதிவிடாயும் உண்டு” என்றான் சக்ரன்.

“எப்படி சுக்ரர் ஓநாய்களின் உடலில் இருந்து அவனை மீட்டெடுத்தார்?” என்றான் சூக்தன். “ஓநாய்களின் உடல் கிழித்து அவன் வெளிவந்திருக்கிறான். நான் சென்று பார்த்தேன். அங்கு அவற்றின் உடல்கள் வயிறு கிழிந்து சிதறிக்கிடக்கின்றன. அவன் உடலில் ஒரு துண்டு ஊனைத் தின்றவைகூட இறந்துவிட்டன. பெரும்பசி கொண்ட குட்டிகள் மட்டும் எஞ்சியுள்ளன. அவை உண்டவற்றை எரித்துவிட்டன. கிழிந்து சிதறிக்கிடக்கும் தன் குலத்தாரின் உடல்களைச் சூழ்ந்து அவை துயர்கொண்டு ஊளையிடுகின்றன” என்றான் முக்தன். “பிறிதொருமுறை இப்பிழையை நாம் செய்யலாகாது. ஓநாய்க்குட்டிகளின் பெரும்பசி கொண்ட பிறிதொரு உயிருக்கே அவன் உடல் அளிக்கப்படவேண்டும். அவனை மீட்டெடுக்க உடலென ஒரு துளியும் எஞ்சலாகாது” என்றான் சக்ரன்.

# மாமலர் - 57

## 57. குருதித்தழல்

ஓநாய் வயிற்றிலிருந்து மீண்டு வந்த கசன் ஆளுமையில் மிக நுட்பமான மாறுதல் இருப்பதை தேவயானி உணர்ந்தாள். அது என்னவென்று அவளால் உய்த்துணரக்கூடவில்லை. அவன்

முகத்தின் மாறாச்சிரிப்பும், அசைவுகள் அனைத்திலும் இளமையும், குரலின் துள்ளலும் அவ்வாறேதான் இருந்தன. ஆனால் ஒவ்வொன்றிலும் பிறிதொன்று வந்து சேர்ந்துவிட்டிருந்தது. அது ஓர் ஓநாய்த்தன்மை என்று எப்போதோ ஒருமுறை மிக இயல்பாக அவள் உள்ளம் சொல்லாக்கிக்கொண்டது. உடனே என்ன இது என்று அவளே திகைத்தாள். தன் உள்ளம் கொள்ளும் பொய்த்தோற்றம் அது என்று சொல்லிக்கொண்டாள். ஆனால் அச்சொல்லையே அவள் மீண்டும் மீண்டும் சென்றடைந்துகொண்டிருந்தாள்.

ஓநாயின் நோக்கல்ல, உடலசைவல்ல, ஓநாயென எண்ணுகையில் எழும் எதுவுமே அல்ல, ஆனால் ஓநாயென்று உளமுணரும் ஒன்று அவனிடம் குடியேறிவிட்டிருந்தது. அவன் உண்ணுகையில் அப்பால் நின்று அவள் நோக்கினாள், ஓநாயின் பசி அவனில் உள்ளதா என்று. நிலவில் அவன் அமர்ந்திருக்கையில் தன் குடிலில் நின்று தூணில் மறைந்து நின்று நோக்கினாள், அது ஒநாயின் தனிமையா என. என்ன செய்கிறோம், பித்தியாகிவிட்டோமா என்று தனக்குத் தானே கேட்டுக்கொண்டாள். இல்லை இல்லை என நூறுமுறை மறுத்துக்கொண்டாள். ஆனால் அவன் திரும்பும் ஓர் அசைவில் ஓரவிழியின் மின்னில் ஓநாய் எழுந்து மறைந்தது.

இறந்தவன் மீள்வதென்பது இயல்பானதல்ல. மானுடம் அறியாத வேறெங்கோ சென்று மீண்டிருக்கிறான். அவ்வுலகத்தின் இருளோ கெடுமணமோ ஒன்று அவனில் படிந்திருக்கிறது. சென்றவர்கள் மீளலாகாதென்றே பிரம்மத்தின் பெருநெறியைக் கடந்து வந்திருக்கிறான். ஆனால் அதுவும் பிரம்மம் அளித்த நுண்சொல்லால்தானே என எண்ணம் பகடைபுரண்டது. வழக்கத்திற்கு மாறான ஒன்று நிகழ்ந்ததனால்

உருவாகும் ஐயமா இது? சற்றே வண்ணம் மாறிய உணவைக்கண்டு உருவாகும் ஒவ்வாமை போலவா? எனக்குள் நானே இதை தொட்டுத் தொட்டு வளர்த்துக்கொள்கிறேனா?

அந்த ஐயம் உருவானதால் மேலும் வெறியுடன் அவள் அவன் மீது ஒட்டிக்கொண்டாள். மேலும் மேலும் தன் அன்பை அவன் மேல் குவித்தாள். அவன் நினைவன்றி மறு உள்ளமின்றி இரவும்பகலும் இருந்தாள். ஓரிரு நாட்களில் தன் உள்ளத்தை அது வெறும் எண்ணமயக்கமே என்று நம்பவைக்க அவளால் முடிந்தது. ஆனால் ஒருமுறை வகுப்பு முடிந்து அவன் எழுந்துபோனதும் சுக்ரர் கிருதரிடம் "ஓநாய்க்குட்டியென மாறிவிட்டிருக்கிறான். ஒருதுளிக் குருதியைக்கூட நூறுமுறை நக்கும் அதன் பசியும் சுவையும் அவனுக்கு சொல்லில் அமைந்துள்ளது" என்றார். அவள் உள்ளம் நடுங்கிவிட்டது. கிருதர் "ஆம், இப்போது ஒவ்வொரு சொல்லிலும் புதிய வாயிலொன்றை திறக்க முடிகிறது அவனால்" என்றார்.

அவள் தலைகுனிந்து தன் கைநகங்களை பார்த்துக்கொண்டிருந்தாள். "இத்தனை விரைவில் கற்றால் இவன் கற்பதற்கு இனி இப்புவியில் ஏதும் எஞ்சாது" என்று சுக்ரர் சொன்னார். "எது மையமோ அங்கே சென்று நிற்பான்" என்றார் கிருதர். அவள் ஒன்றும் சொல்லாமல் சுக்ரரின் காலைத்தொட்டு தலையில் சூடியபடி எழுந்து வெளியே சென்றாள். அவர் அவளை நோக்கிவிட்டு புருவம்தூக்கி கிருதரை நோக்கினார். கிருதர் "அவளிடம் மெல்லிய அமைதியின்மை ஒன்று குடியேறியுள்ளது, ஆசிரியரே" என்றார். "அவளிடமா? அவன் மேல் பித்தாக அல்லவா அலைகிறாள்?" என்றார். "ஆம் கட்டற்ற பெரும் காதல்மயக்கில் இருக்கிறாள். அவளுள் அவனன்றி வேறு எதுவுமே இல்லை என்பதை

விழிகள் காட்டுகின்றன. ஆனால் அடியாழத்தில் ஓர் அமைதியின்மை இருக்கிறது.”

சுக்ரரால் அவர் சொல்வதை புரிந்துகொள்ள முடியவில்லை. “அவள் ஐயம் கொண்டிருக்கலாம்” என்றார் கிருதர். “என்ன ஐயம்?” என்று சுக்ரர் கேட்க கிருதர் “பெருங்காதல் அதன் பெருவிசையாலேயே இயல்பற்ற ஒன்றாக ஆகிவிடுகிறது. இயல்பற்ற ஒன்று எவ்வளவு காலம் நீடிக்கும் என்ற ஐயம் அதற்கே எழுகிறது. விரைந்தெழுவது நுரை. மலைப்பாறைகளின் உறுதி அதற்கில்லை என்பதை அதுவே அறியும்” என்றார்.

“ஏன் ஒரு நுரையென இருக்கவேண்டும் அது? உலகியல் உணர்வுகள் அனைத்தும் குறுகியவை, எனவே நிலையற்றவை என்று நாம் கற்றிருக்கிறோம். ஆனால் எப்போதும் அது அவ்வண்ணமே ஆகவேண்டும் என்பதில்லை. நுரையென எழுந்து பாறையென்றாகி முடிவிலிவரை நீடிக்கும் ஒரு பெருங்காதல் இம்மண்ணில் நிகழக்கூடாதா என்ன?” என்றபின் சுக்ரர் நகைத்து “பிரம்மனுக்கும் ஒரு வாய்ப்பு கொடுத்து பார்ப்போம்” என்றார். கிருதர் மெல்ல புன்னகைத்தார்.

கசனிலிருந்த மாற்றத்தை சக்ரனும் உணர்ந்தான். காட்டில் அவனுடன் உரையாடியபடி தேன் சேகரிக்கச் செல்லும்போது அவன் மணத்தை அறிந்ததுமே மிகத்தொலைவில் ஓநாய்கள் ஊளையிடத்தொடங்குவதை அவன் கேட்டான். ஓரே ஒருமுறை தன்னியல்பாக அவன் முன் தோன்றிய ஓநாய் ஒன்று வேங்கைமுன் வந்துவிட்டதுபோல அச்சத்தில் உறைந்து பிடரிமயிர் சிலிர்க்க முன்னங்கால் தூக்கி நடுங்கி நின்றது. பின்னர் உயிர்கொண்டு தீ பட்டதுபோல துடித்து துள்ளித் தாவி புதர்களில் விழுந்து புரண்டெழுந்து ஓடி மறைந்தது.

நெடுந்தொலைவிற்கு அதன் துயர்மிகுந்த ஊளை கேட்டுக்கொண்டிருந்தது. அதைக் கேட்டு மலைமடிப்புகளிலும் மரப்பொந்துகளிலுமிருந்து நூற்றுக்கணக்கான ஓநாய்கள் ஓலமிடத்தொடங்கின.

அன்று மாலை சக்ரன் தன் தோழரிடம் சொன்னான் "அவன் ஓநாய்களை கிழித்தெழுந்ததை அவை அறியும். நினைவாக அல்ல, மணமாக இருக்கலாம், அல்லது பிறிதொரு புலனுணர்வாக இருக்கலாம். ஆனால் ஓநாய்கள் அஞ்சும் ஒன்று அவனில் குடியேறியுள்ளது. ஓநாய்கள் அனைத்திலும் வாழும் ஒன்று. பேருருவம் என்று அல்லது செறிவு என அதை சொல்லாக்குவேன். அது என்னையும் அச்சுறுத்துகிறது." "நமக்கு இன்னும் நெடுநாள் வாய்ப்பில்லை" என்றான் சூக்தன். "மீண்டும் அரசரின் ஆணையை சுகர்ணர் அளித்திருக்கிறார். இன்னும் அவன் கொல்லப்படவில்லை என்ற செய்தியை சொன்னபோது மீண்டும் ஒருமுறை இச்செய்தியைக் கேட்க அரசர் விரும்பமாட்டார் என்றார். அவ்விழிகள் என்னை சிறுமையுறச் செய்தன."

"ஒருமுறை பிழைத்த முயற்சி என்பது மீண்டும் அதை பழுதறச்செய்வதற்கான வாய்ப்பென்று கொள்வோம். இம்முறை ஒவ்வொன்றையும் எண்ணி இயற்றுவோம். நான் முன்னரே சொன்னதுதான், எரியூட்ட இயலாது. புதைப்பது பயனற்றது. ஓநாய்கள் அவன் உடலை தொடுமென்று தோன்றவில்லை" என்றான் பிரபவன். "மேலும் வெம்மை கொண்ட எரி. அது என்ன?" விறகுப்புரையில் நின்று அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது மிகத் தொலைவில் வேங்கைகளின் ஒலியை சக்ரன் கேட்டான். பின்னர் தனக்குள் என "அவை வெறும் விலங்குகள்" என்றான்.

“எவை?” என்றான் பிரபவன். “அந்த வேங்கைகள். சென்ற முறை அவன் மறைந்துவிட்டதை முன் உணர்ந்து சொன்னவை அவை. ஓர் இரவுப்பொழுது கடந்திருந்தால் அவன் உடல் ஓநாய்களின் வயிறுகளில் எரிந்தழிந்திருக்கும். மீண்டு வந்திருக்கமுடியாது. இம்முறை அவற்றுக்கு அவ்வாய்ப்பை நாம் அளிக்க வேண்டியதில்லை” என்றான். “எப்படி?” என்றான் சூக்தன். “அவனை அவை விரும்புகின்றன. விரும்பியவற்றை அவை உண்ணவும் கூடும்” என்றான் சக்ரன். “குருதி! அவற்றிலிருந்து அவை தப்ப முடியாது. இக்குடிலுக்குள் வந்து இவ்வாறு வளர்ந்து இவை அடைந்த அறிவனைத்தும் இப்பிறவிக்குரியவை. அவற்றின் குருதி யுகங்களின் தொன்மைகொண்டது. அக்குருதி தேடுவது குருதியையே.”

மறுநாள் இரவு கசன் தன் குடிலுக்குள் துயின்றுகொண்டிருக்கையில் ஓசையற்ற காலடிகளுடன் அவர்கள் குடிலை அடைந்தனர். ஒருவன் அகிஃபீனா பொடியிட்ட புகை கொண்ட தூபக்கலத்தை சாளரத்தினூடாக மெல்ல கசனின் துயிலறைக்குள் வைத்தான். மெல்லிய புகை எழுந்து அறையைச் சூழ ஆழ்ந்து அதை உள்ளிழுத்து மூச்சில் கலந்து கொண்டான் கசன். இருமுறை அவன் தும்மியபோது அவர்கள் திடுக்கிட்டு அசையாமல் நின்றனர். அவனுக்கு விழிப்பு வந்துகொண்டே இருந்தாலும் நனைந்த மரவுரி கோழிக்குஞ்சை என துயில் அவனை மூடி அழுத்திக்கொண்டது. மெல்ல உடல் தளர்ந்து ஆழ்துயில் கொள்ளலானான்.

அதன் பிறகு எழுவரும் கதவுப்படலைத் திறந்து உள்ளே சென்று மஞ்சத்தை சூழ்ந்துகொண்டனர். சூக்தன் வெளியே என்ன நடக்கிறது என்று நோக்கி நிற்க சக்ரன் தன் வாளை

உருவி கசனின் தலையை வெட்டினான். ஓசையுடன் உருண்டு தலை மரத்தரையில் விழுந்தது. துள்ளி உதைத்துக்கொண்டிருந்த கால்களை பிறிதொருவன் வெட்டினான். விரல் சுருட்டி அதிர்ந்த கைகளை பிறிதொருவன் வெட்டினான். எழுவர் ஏழு வாட்களால் மிக விரைவில் அவனை சிறு சிறு துண்டுகளாக வெட்டினர்.

சக்ரன் வெளியே சென்று திண்ணையில் நின்று நோக்கினான். தேவயானியின் குடில்முன் நாவல்மரத்தடியில் குருதிமணம் அறிந்து முன்னரே எழுந்து நின்றிருந்த வேங்கைகளில் ஒன்று மெல்ல உறுமியபடி ஓர் அடி எடுத்து வைத்தது. அவன் தாழ்ந்த குரல்கொடுத்து அழைத்தான். அவற்றின் செவிகள் அவ்வோசைக்கேற்ப அசைந்தன. கண்களின் ஒளி மின்னித் தெரிந்தது. “அவை குருதியை அறிந்துவிட்டன” என்றான் சக்ரன். “ஆம், அவை வரட்டும்” என்று சாம்பவன் சொன்னான்.

முதல் வேங்கை மூக்கை நீட்டியபடி இருவிழிச்சுடர்களாக மெல்ல காலெடுத்து வைத்து அணுகி வந்தது. அதைத் தொடர்ந்து பிற இரு வேங்கைகளும் இரு வெண்ணிறநிழல்கள் போல வந்தன. “அவற்றை இவ்வறைக்குள் கொண்டு வா!” என்றான் சக்ரன். ஒருவன் முற்றத்தில் இறங்கி சிறு கல் ஒன்றை எடுத்து முதலில் வந்த வேங்கையின் மேல் எறிந்தான். கல் அப்பால் விழுந்தாலும் விதிர்த்து உடலொடுக்கிப் பதுங்கிய மூன்று வேங்கைகளும் உறுமலுடன் பாய்ந்து அவனை நோக்கி வந்தன. அவன் ஓடி கசன் படுத்திருந்த அறைக்குள் நுழைந்தான். வேங்கைகள் வந்து திண்ணையிலேறி குருதி மணத்தில் கசனை உணர்ந்து திகைத்து நின்றன.

“சாளரத்தினூடாக வெளியேறுங்கள்!” என்று மெல்லிய குரலில் ஆணையிட்டான் சக்ரன். அவர்களனைவரும் வெளியேற அவன் மட்டும் அங்கே நின்றான். முதல் வேங்கை தலைதாழ்த்தி மெல்ல உறுமியது. இன்னொன்று முகம் சுளிக்க வாய்திறந்து உள்வளைந்து நுனி எழுந்த நீள்நாக்கு பதைக்க அப்படியே வயிறு பதித்து படுத்தது. இருவேங்கைகளுக்கு இடையே தன்னை நுழைத்து மூன்றாவது வேங்கை எட்டிப்பார்த்தது. சக்ரன் அவற்றின் கண்களைப்பார்த்து அசையாமல் நிண்றான். பின்னர் குனிந்து தன் அருகே கிடந்த கசனின் உடல் துண்டுகளில் ஒன்றை எடுத்து அவற்றை நோக்கி வீசினான்.

தங்கள் முன் வந்து விழுந்த ஊன் துண்டை மூன்றுவேங்கைகளுமே விலாவும் தோளும் தோல்விதிர்க்க உற்றுப் பார்த்தன. அவற்றின் தோள்களுக்குள் கால் எலும்புகள் துழாவி அசைந்தன. வால்கள் மேலே தூக்கப்பட்டு மெல்ல சுழன்றன. முதல்வேங்கை மேலுமொரு அடிவைத்து நாக்கை நீட்டி கீழே சொட்டிக்கிடந்த குருதித்துளி ஒன்றை நக்கியது. மூன்று வேங்கைகளும் ஒரே குரலில் உறுமத்தொடங்கின. அரங்களை உரசிக்கொள்வதுபோல. பனையோலை இழுபடுவதுபோல. அவை பிறந்த கணம் முதல் வாழ்ந்த மானுடச்சூழலை முற்றிலும் உதறி கான்விலங்குகளாக மாறுவதை காணமுடிந்தது. அவை சேற்றில் தவளை விழுவதுபோன்ற ஒலியுடன் சப்பு கொட்டின.

முதல் வேங்கை பதுங்கி மேலுமொரு காலடி எடுத்து வைத்து அந்த ஊன் துண்டை முகர்ந்தது. அதன் மேல் படிந்த குருதியை தழல்போன்ற நாவால் நக்கியது. பின்னர் காதுகளை விரித்து அதை நோக்கி உடல் சிலிர்த்துக்கொண்டே இருக்க அசையாமல் நின்றது. பின்னர் மெல்ல கால்களை நீட்டி

வயிற்றை நிலம்பதித்து படுத்தது. முன்னங்காலால் அவ்வூன் துண்டை தட்டி தன்னை நோக்கி கொண்டுவந்தது. நாக்கை நீட்டி அவ்வூன் துண்டை சுழற்றி எடுத்து கடித்து ஒருமுறை தயங்கியபின் முகத்தை ஒருக்களித்து கடைவாயால் மென்று விழுங்கியது. உறுமியபடி எழுந்து உள்ளே துண்டுகளாகக் கிடந்த கசனின் உடல் நோக்கி வந்தது.

அறைமுழுக்க சிந்திக்கிடந்த குருதியை அது நக்கி உண்ணத்தொடங்கியதும் பிற இரு வேங்கைகளும் எழுந்து உறுமியபடி அறைக்குள் நுழைந்து அவன் உடலைக் கவ்வி உண்ணலாயின. அவை உள்ளே நுழைந்ததுமே பாய்ந்து சாளரத்தினூடாக வெளியேறிய சக்ரன் “கதவுகளை மூடுங்கள். அவை உண்டு முடித்தபின் வந்து திறந்து விடலாம்” என்றபின் மெல்ல வெளியேறி அகன்றான். “ஒருவர் மட்டும் இங்கு நின்று என்ன நிகழ்கிறதென்று சொல்லுங்கள். பிறர் விறகுப்புரையருகே காத்திருப்போம்” என்று ஆணையிட்டான்.

அவர்கள் இருளுக்குள் ஒடுங்கி காத்துநின்றனர். குடிலுக்குள் வேங்கைகளின் உறுமல் கேட்டுக்கொண்டே இருந்தது. அவை கசனின் உடலை உண்கின்றன என்று நோக்கி நின்றவன் கைகளால் குறிப்புணர்த்தினான். இருளில் விலகி நின்றபோது குருதிமணம் மேலும் வீச்சத்துடன் எழுந்தது. அவர்களின் நாவில் எச்சில் ஊறிக்கொண்டே இருந்தது. மாறி மாறி உமிழ்ந்தனர். உண்டு முடித்துவிட்டன என்று அவன் கைகாட்டியதும் சக்ரனும் பிறரும் அணுகி சாளரத்தினூடாக நோக்கினர். அங்கு கசனின் உடலில் வெள்ளெலும்புகளும் முடிநீண்ட தலையும் மட்டுமே எஞ்சியிருந்தன. அவன் காலை கடித்துமென்றுகொண்டிருந்த வேங்கை கைகளால்

அதைப்பற்றியபடி தலைதூக்கி அவர்களை நோக்கி பன்றிபோல மெல்ல உறுமியது.

செய்கையால் கதவை திறவுங்கள் என்றான் சக்ரன். சூக்தன் கதவைத் திறந்ததும் அவ்வசைவை நோக்கிய முதல் வேங்கை எழுந்து நீண்ட நாக்கால் தன் பக்கவாயை நக்கியபடி நிறைந்த வயிறு மெல்ல தொங்கிக் குலுங்க குருதி ஒட்டிய கால்களை தூக்கி வைத்து வெளியேறியது. திண்ணையில் அமர்ந்து தன் கால்களை புரட்டி நோக்கி நக்கியது. பிற இரு வேங்கைகளும் வெளியே வந்து அதனருகே படுத்து தங்கள் கால்களை நக்கின. புரண்டு எழுந்து அப்பால் எழுந்த ஓசை ஒன்றை கூர்ந்து உறுமிவிட்டு மீண்டும் படுத்து கால்களை நக்கியது ஒன்று.

அறைக்குள் இருந்த வெள்ளெலும்புகளை சிறிய கூடையொன்றில் பொறுக்கிச் சேர்க்கும்படி சக்ரன் தாழ்ந்த குரலில் சொன்னான். சாளரம்வழியாக உள்ளே நுழைந்து கசனின் எலும்புகளை கூடையில் சேர்த்துக்கொண்டு வெளியே சென்ற சூக்தனை ஒரு வேங்கை திரும்பிப் பார்த்தது. வாலைச் சொடுக்கியபடி எழுந்து நின்று அவனை நோக்கி உறுமியது. திண்ணையிலிருந்து தாவி முற்றத்தில் ஒருகணம் தயங்கியபின் அவனை நோக்கி ஓடிவந்தது. “ஓடு” என்று சக்ரன் சொன்னான் சூக்தன் கூடையுடன் விரைந்தோடத்தொடங்கினான்.

முன்னால் வந்த வேங்கை திண்ணையிலிருந்த பிறவேங்கைகளை நோக்கி உறும அவை பாய்ந்து வாலை தூக்கிச் சுழற்றியபடி அவனை துரத்திக்கொண்டு ஓடின. அவன் இடைவழியினூடாக பாய்ந்தோடி காட்டுக்குள் நுழைந்தான். வேங்கைகள் தாவித்துரத்தி மிக விரைவில் அவனை அணுகின. அதற்குள் அவ்வெலும்புகளை காட்டுக்குள் வீசிவிட்டு பாய்ந்து

மரமொன்றில் ஏறிக்கொண்டான். புதர்களைத் தாவி இருள்செறிந்த காட்டிற்குள் சென்ற வேங்கைகள் இலையசைவுகளுக்குள் மூழ்கி மறைந்தன. சருகுகளுக்குள் அவ்வெலும்புகளை தேடி கண்டடைந்து கவ்விக்கொண்டு வந்து தரையிலிட்டு இருகால்களாலும் பற்றியபடி நக்கி உடைத்து கடைவாயால் மென்று உண்ணத்தொடங்கின.

“அக்குடிலை கொளுத்திவிடுங்கள்” என்று சக்ரன் ஆணையிட்டான். உள்ளே புகைந்து கொண்டிருந்த தூபத்திலிருந்து குடிலின் ஓலைக்கூரை வரை பற்றி ஏறும்படியாக ஒரு பட்டுச்சால்வையை நீட்டி வைத்துவிட்டு அவர்கள் விலகிச்சென்றனர். விறகுப்புரை அருகே நின்று பார்த்தபோது சால்வை மெல்ல பற்றிக்கொண்டு தழல் மேலேறுவது தெரிந்தது. செந்நிறமான வண்ணத்துப்பூச்சிபோல் சிறகு அசைய மேலெழுந்து கூரையில் தொற்றிக்கொண்டது. கூரையில் ஈச்சையோலைச்சருகுகள் சரசரவென்னும் ஒலியுடன் நெருப்பை வாங்கிக்கொண்டன.

நெருப்பு நன்றாக கூரைமேல் எழுந்ததும் சக்ரன் “நெருப்பு! நெருப்பெழுகிறது! ஓடிவாருங்கள்!” என்று கூச்சலிட்டபடி அதை நோக்கி ஓடினான். “ஓடிவருக! தீ! தீ!” என்று கூவியபடி பிறரும் அவனுடன் இணைந்துகொண்டார்கள். அதற்குள் வெவ்வேறு குடிசைகளிலிருந்து இளைஞர்களும் முனிவர்களும் வெளியே வந்து கசனின் குடில் தீ பற்றி எரிவதை பார்த்தனர். அருகே ஓடிவந்து என்ன செய்வதென்று தெரியாமல் அலைமோதி நாற்புறமும் மணலை அள்ளி அதன் மேல் வீசினர். சக்ரனும் பிறரும் மரக்குடுவைகளுடன் சிற்றோடைக்குச் சென்று நீரை அள்ளிக்கொண்டு வந்து அக்குடில் மேல் வீசினர்.

ஆனால் விரைவிலேயே கூரை எரிந்து மூங்கில் உத்தரங்கள் கரியாகி முனகி உடைந்து முறிவோசையுடன் சரிந்து குடிலுக்குள் விழுந்தது. சுவர்களும் மூங்கில்தூண்களும் பற்றிக்கொள்ள மொத்தக் கூரையும் பற்றிக்கொண்டது. “பிற குடில்களின் கூரைகளில் நீர் விடுங்கள். தீ பரவாமலிருக்கட்டும்... இனி இக்குடிலை மீட்கமுடியாது” என்று சக்ரன் ஆணையிட்டான். கசனின் குடிலைச் சுற்றியிருந்த குடில்கள் அனைத்தின் கூரைகளையும் நனைத்தனர். அனல் பற்றி எரிந்த கூரைகளின் முளைகள் வெடிக்க சிம்புகள் தழல் துண்டுகளாகப்பறந்து வந்து அக்கூரைகளில் விழுந்து ஈரத்தில் வண்டுகள் போல் ஒலியெழுப்பி நனைந்து அணைந்தன.

“அருகில் நெருங்க வேண்டாம்... மூங்கில் தெறிக்கிறது” என்று சத்வர் கூவினார். அனல் மூங்கிலை நொறுக்கி உண்ணும் ஒலி கேட்டது. சுக்ரரும் கிருதரும் அவர்கள் குடில்களிலிருந்து எழுந்து வந்தனர். சக்ரன் அவர்களை நோக்கி சென்று “உள்ளே இளமுனிவர் இல்லை, ஆசிரியரே. எங்கு சென்றார் என்று தெரியவில்லை. வெறும் குடில்தான் எரிந்தது” என்றான். “ஆம், அவன் உள்ளே இருக்க வாய்ப்பில்லை” என்று தாடியைத் தடவியபடி சுக்ரர் சொன்னார். தேவயானி எழுந்துவந்து எரியும் குடிலை நோக்கிக்கொண்டிருந்தாள். சக்ரன் அவளிடம் “அனற்புகையின் மணம் பெற்று எழுந்தேன். ஆனால் அதற்குள் கூரை எரியத்தொடங்கிவிட்டது, தேவி” என்றான். “அஞ்சவேண்டாம், கதவு திறந்து கிடந்தது. உள்ளே எவருமில்லை.”

அவள் “தெரிந்தது” என்றாள். “தூபமோ அகல்விளக்கோ விழுந்து எரிந்திருக்கலாம்” என்றான் பிரபவன். “அவர் எங்கு போனார்?” என்று ஒரு பெண் கேட்டாள். “அறியேன். ஆனால் இரவுகளில்

அவர் காட்டுக்குள் கிளம்பிச்செல்வதை பலமுறை பார்த்திருக்கிறேன். நாமறியாத சில வழிகள் அவருக்கு இருக்கும் என எண்ணுகிறேன். ஊழ்கமோ விண்ணவர் தொடர்போ” என்றான் சக்ரன். தேவயானி “வேங்கைகள் எங்கே?” என்றாள். அவன் “அவை வழக்கம்போல காட்டுக்குள் வேட்டையாடச் சென்றிருக்கும்” என்றான். “அவை பின்காலையிலேயே வேட்டையாடச்செல்வது வழக்கம்” என்றாள். “அவை விலங்குகள், பசித்திருக்கலாம்” என்றான் பிரபவன். “ஆம்” என்றான் சக்ரன்.

அவள் காட்டை நோக்கியபடி நடந்தாள். அவள் உள்ளம் திடுக்கிட்டுக்கொண்டே இருந்தது. அது ஏன் என்று மீண்டும்மீண்டும் எண்ணிக்கொண்டாள். அவன் காட்டுக்குள் செல்வதாக அவள் அறிந்ததே இல்லை. ஆனால் போகலாகாதென்றில்லை. அவன் தனியன், தவத்தோன். அவனுக்கான நுண்வழிகள் பல இருக்கக்கூடும். அவள் ஓர் எண்ணம் எழுந்த விசையால் உடல் உறைய நின்றாள். வேங்கைகளைப் பற்றி கேட்டபோது சக்ரனின் விழிகள் கொண்ட மாறுதலை அவள் உள்ளம் அடையாளம் கண்டுகொண்டிருந்தது. மிக ஆழத்தில் மிகக்கூரிய ஒரு ஊசிமுனை சென்று அந்த ஊசிமுனைப்புள்ளியை தொட்டறிந்திருந்தது.

அவள் தன் தொடை ஒன்று நடுநடுங்கிக்கொண்டிருப்பதை உணர்ந்தாள். அவ்வுணர்வுக்கு ஒரு சொல் அமைந்தால் அதை கடந்துவிடலாமென்று தோன்றியது. மூச்சுக்களை ஊதி ஊதி விட்டுக்கொண்டு நெஞ்சைத் துழாவி “வந்துவிடுவார்” என்றாள். அச்சொல் பொருந்தாமலிருப்பதைக் கண்டு “காட்டுக்குள் இருக்கிறார்” என்றாள். பின்னர் நெற்றிப்பொட்டை அழுத்தியபடி

நரம்புகள் மெல்ல அதிர்வதை உணர்ந்தபடி குனிந்தபோது "வேங்கைகள் உடனிருக்கின்றன" என்றது உள்ளம்.

அச்சொல் அவள் உள்ளத்தின் எடையை குறைத்தது. வேங்கைகளுடன் உலவச்சென்றிருக்கலாம். வேட்டைக்குக்கூட சென்றிருக்கலாம். அவை அவனுடன் இருப்பது வரை எவரும் அவனை நெருங்கமுடியாது. அவற்றின் இருள்கடக்கும் விழியும் தொலைவைக்கடக்கும் மோப்பமும் புலன்கள் மட்டுமேயான உள்ளமும் அவனுடன் எப்போதுமிருக்கும். அவனைவிட்டு அவற்றின் சித்தம் ஒருகணமும் விலகியதே இல்லை. அவையே அவனுக்கு காவல்.

அவள் முகத்தசைகள் எளிதாக நீள்மூச்செறிந்தபடி திண்ணையில் அமர்ந்தாள். தொலைவில் காட்டில் காற்று நிகழ்த்திய இருளசைவு. அதைக் கடந்து மூன்று விழியெரிகள் தெரியக்கூடும். அவனுடைய நிழலுருவம் தெளியக்கூடும். அவள் தாடையை கையால் தாங்கியபடி நோக்கிக்கொண்டிருந்தாள். காடு அவளுக்கு இதோ அவன் என ஒவ்வொருகணமும் காட்டி விளையாடிக்கொண்டிருந்தது.

# மாமலர் - 58

### 58. முள்நுனிக் காற்று

அன்று பகல் முழுக்க தேவயானி ஆழ்ந்த அமைதியின்மை ஒன்றை தன்னுள் உணர்ந்துகொண்டிருந்தாள். தந்தையின் பயிற்றறைக்குச் சென்று அவர் கூறியவற்றை ஏட்டில் பொறிப்பது அவள் காலைப்பணிகளில் முதன்மையானதாக இருந்தது. அவர் குரலும் உணர்வுகளும் நன்கு

பழகிவிட்டிருந்தமையால் பல தருணங்களில் உளம் அமையாமலேயே செவிகளும் கைகளும் இணைந்து ஒலியை எழுத்தாக்கின. அவள் எழுந்து விடைகொண்டபோது சுக்ரர் “இன்று நீ உளம் குவியவில்லை” என்றார். அவள் மறுமொழி சொல்லவில்லை.

தன் குடிலுக்கு வந்தபோது ஏனென்றறியாத தனிமையையும் ஏக்கத்தையும் உணர்ந்தாள். அது ஏனென்று தன்னுள் சென்று தேடத் தேட ஆழம் அதை உந்தி வெளித்தள்ளி விலக்குவதை உணர்ந்தாள். சலித்து எதையேனும் செய்து விலகலாம் என்றெண்ணி முன்பு படித்து எச்சம் வைத்திருந்த காவியம் ஒன்றை எடுத்து சுவடிகளை புரட்டினாள். எழுத்துக்களை மொழியென்றாக்க இயலாமல் மீண்டும் பட்டு நூலில் கட்டி பேழைக்குள் வைத்து மூடிவிட்டு எழுந்து வெளிவந்தாள்.

வேங்கைகள் அப்பால் மரத்தடியில் நிழலில் படுத்திருந்தன. அவளை நோக்கி செவி சொடுக்கிய வேங்கை ஒன்று கண்ணைச் சுற்றிப் பறந்த சிற்றுயிர்களை தவிர்க்கும் பொருட்டு இமைகளை மூடித்திறந்தது. அது எதையோ சொல்ல வருவதுபோல் தோன்றியது. அவற்றை நோக்கியபடி அவள் அங்கு நின்றாள். முன்பெலாம் எழுந்து உடல் குழைத்தபடி அவளை நோக்கி ஓடிவரும் வழக்கம் கொண்டிருந்த அவை அங்கிருந்து அவளை நோக்கியபின் வாய்திறந்து தலை திருப்பிக்கொண்டன.

அடுமனைக்குச் சென்று அங்கு ஏதேனும் வேலை செய்யலாம் என்று தோன்றியது. ஆனால் அங்குள அடுமனையாளர்களும் பெண்களும் கடினமான வேலை எதையும் அவள் செய்ய ஒப்புவதில்லை. அவளைக் கண்டதுமே அரசிக்குரிய உடல் வணக்கத்தை அவளுக்களித்து பணிந்த குரலில் ஒற்றைச்

சொற்களில் பேசி உரிய இடைவெளிவிட்டு அகன்று நிற்பார்கள். ஆயினும் அடுமனை அவளுக்கு உகந்ததாகவே இருந்தது. அங்கே ஏதோ ஒன்று நிகழ்ந்துகொண்டிருந்தது எப்போதும்.

அடுமனைக்குள் அவள் நுழைந்ததும் அவர்கள் பேசிக்கொண்டிருந்ததென்ன என்னும் சிறிய துணுக்குறலை அடைந்தாள். ஒவ்வொரு விழியிலும் அறுபட்ட சொல்லொன்று ஒளியென நின்றது. தன்னைப்பற்றித்தான் அவர்கள் பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்று உணர்ந்தபின் “ஏதேனும் பணி இயற்றலாமென்று வந்தேன்” என்றாள். பணிவுடன் “இங்கு அனைத்தும் முடிந்துவிட்டன” என்றார் அடுமனையாளர். அவள் “நான் கீரைகளை நறுக்குகிறேன்” என்றாள். “ஆம், அது ஒன்றுதான் இப்போது எஞ்சியுள்ளது” என்றபின் கழுவிய கீரைக்கட்டையும் கத்தியையும் கொண்டுவந்து வைத்தார் அடுமனையாளர்.

ஒவ்வொரு கீரையாக நோக்கி புழுஅரித்த இலைகளைக் களைந்து சீராக நறுக்கி அப்பால் குவித்தாள். அடுமனைக்கு அவள் வருவது அரிதென்றாலும் மெல்ல மெல்ல எந்தப் பணியிலும் எப்போதும் அவளிடம் இருக்கும் முழுமை அதிலும் கூடியது. அவள் கைகள் தேர்ந்த சூதனின் விரல்கள் யாழிலென கீரையிலும் கட்டையிலும் கத்தியிலும் தொழிற்படுவதை அவர்கள் விழிதிருப்பாது நோக்கினர். பெரிதோ சிறிதோ அல்லாமல் சீரான அளவிலேயே கீரையை வெட்டிக் குவித்த பின்பு சிவந்த கைகளை நோக்கி “செங்குழம்பிட்டதுபோல்...” என்று அவள் புன்னகையுடன் சொன்னாள்.

அப்புன்னகை அவர்கள் அனைவரையும் எளிதாக்கியது. “காய்கள் எவையேனும் உள்ளனவா?” என்றாள். “கிழங்குகள் உள்ளன” என்றார் ஒருவர். அவர் கொண்டுவந்த கிழங்குகளை

விரல் தடிமனுக்கு வெட்டி கலவைக்கூட்டுக்காக தனித்தனியாக வைத்தாள். அச்செயல்களினூடாக உள்ளமைந்திருந்த நிலைகுலைவை வென்றுசெல்ல அவளால் இயன்றது. கைகள் உள்ளத்தை இயக்கும் விந்தையைப்பற்றி எண்ணிக்கொண்டாள். உள்ளத்தை எங்குதான் கொண்டு செல்ல முடியவில்லை? கால்களில், கைகளில், கண்களில், சொற்களில். ஆனால் எத்தனை இறைத்தாலும் குறையா ஊற்றென அது உள்ளில் அமைந்திருக்கிறது. நன்று, மனிதருக்கு செயலாற்றும் அருள் அளிக்கப்பட்டுள்ளது. இவ்விலங்குகள்போல இங்கிருப்பவற்றை அப்படியே உண்டு அமைந்த இடத்திலேயே உறங்கி வாழவேண்டியதில்லை.

உச்சிப்பொழுது கடந்த பின்னர் கசன் காட்டிலிருந்து திரும்பி வந்தான். தொலைவில் காட்டின் விளிம்பில் அவனைக் கண்ட முதற்கணம் அவள் உணர்ந்தாள், அதுவரை அவளுக்குள் இருந்த பதற்றம் அவனைக் குறித்தே என்று. அது ஏனென்றும் அப்போது தெரிந்தது. அவனைக் கொல்ல முயன்றது எவர் என்று கண்டடைய முடியவில்லை. பாறை உச்சியிலிருந்து அவன் தவறி விழுந்திருக்கலாம் என்றுதான் சுக்ரரும் பிறரும் எண்ணினர். அவ்வாறு தவறி விழக்கூடியவன் அல்ல அவன் என அவள் அறிந்திருந்தாள். வேங்கைகளின் பிழையாத கால்நுண்மை கொண்டவன். அவனை எவரோ கொல்ல முயல்கிறார்கள் என்று தனித்திருக்கையில் மிக ஆழத்தில் ஒரு எண்ணம் உறுதியாக சொன்னது. மரத்தரையில் செவிவைத்து படுத்திருக்கையில் அப்பாலெங்கோ பேசும் குரல் சொல்புரியாது தலைக்குள் கசிந்து செல்வதுபோல.

எதன் பொருட்டு? எதன் பொருட்டு அவன் வந்திருக்கிறான்? சஞ்சீவினிக்காக என்று சுக்ரரின் மாணவர்கள் அனைவரும்

எண்ணுவது அவளுக்கு தெரிந்திருந்தது. அவ்வாறு எண்ணுவதற்கே அனைத்து வழிகளும் இருந்தன. ஆனால் அவள் அவ்வாறு எண்ண விழையவில்லை. அதனாலேயே அவ்வாறல்ல என்பதற்கான நூறு செல்வழிகளை உருவாக்கிக் கொண்டிருந்தாள். ஒன்றை மறுத்தாலும் பிறிதொன்றுக்கே கடக்க முடிந்தது. அத்தனை சொற்களையும் கொண்டு தன்னுள்ளத்தை அவ்வாறே பயிற்றுவித்தாள். ஆயினும் அந்த ஐயமும் எங்கோ எஞ்சியிருந்தது. புல்விதையையும் ஐயத்தையும் முற்றிலும் அகற்ற எவராலும் இயலாது என்று இளவயதில் கேட்ட முதுமொழியை எண்ணிக்கொண்டாள்.

வேங்கைகள் கசனைக் கண்டதும் பெண்மைநிறைந்த அசைவுகளுடன் அணுகி அவன் உடலில் உரசியபடி சுழன்று, தாவி கால்தூக்கி எழுந்து, தோள் தழுவி மடியில் படுத்துப் புரண்டு மகிழ்வொலி எழுப்பி, வால் சுழற்றி, பொய்க்கடி கடித்து, போலிச் சீறல் எழுப்பி மகிழ்வு கொண்டாடின. அவன் அவளருகே வந்து “இன்று முன்னதாகவே மீண்டுவிட்டேன்” என்று சொன்னபோது ஏன் அந்த சீற்றம் தன்னுள் எழுந்ததென்று அவளுக்கு புரியவில்லை. கடுத்த முகத்துடன் “நன்று” என்றபின் திரும்பி தன் குடிலுக்குள் சென்றுவிட்டாள். அவள் உணர்வு மாற்றத்தை புரிந்துகொள்ளாமல் சில கணங்கள் நின்றுவிட்டு அவன் தன் குடிலுக்கு சென்றான்.

பிற்பகல் முழுக்க அவள் தன் அறைக்குள் முழங்காலை கட்டிக்கொண்டு சுவர் மூலையில் அமர்ந்திருந்தாள். பின்னர் அங்கேயே படுத்து காலிடுக்கில் கைகளை புதைத்துக்கொண்டு விழிமயங்கினாள். அவனிடம் ஏன் அச்சீறிய முகத்தைக் காட்டினேன்? ஏனெனில் இவன் நிலைகுலையச் செய்கிறான். உளம்தவித்து நான் விழையும் முற்றுறுதி ஒன்றை அளிக்க

மறுக்கிறான். எழுந்துசென்று அவனை பற்றித்தூக்கி “சொல், என்னுள் நுழையாது உன்னுள் எஞ்சியிருப்பதென்ன…?” என்று கேட்கவேண்டும். ஆனால் ஒருபோதும் அதை கேட்டுவிட முடியாது. இப்புவியில் அனைத்து மகளிரும் ஆண்களிடம் கேட்பது அதைத்தான். அத்தனை உளச்சொல்லையும் பெண்களுக்கு அளித்துவிடும் ஆணென ஒருவன் இருக்கக்கூடுமோ? இருந்தால் அந்தப் பெண் அவனிடம் மேலும் எதை கேட்பாள்?

அந்தியிருள் பரவி சீவிடுகளின் ஒலியெழத் தொடங்கியதும் அவள் எழுந்து பின்பக்கம் சென்று முகத்தைக் கழுவி கூந்தலைச் சீவி முடிந்துகொண்டாள். நீராடலாம் என்று தோன்றியது என்றாலும் சோம்பலால் அதை ஒழிந்தாள். சேடி வந்து “உணவருந்துகிறீர்களா?” என்று கேட்டபோது வேண்டாமென்று கையை அசைத்தாள். குடிலின் பின்பக்கம் சிறு திண்ணையில் அமர்ந்து குடில் வளைப்புகளின் எல்லைக்கு அப்பால் குறுங்காட்டில் பறவைக்குரல்கள் எழுந்துகொண்டிருப்பதை கேட்டுக்கொண்டிருந்தாள்.

மின்மினிகள் எழுந்து இருளுக்குள் சுழன்று பறந்தன. காட்டு எருதொன்று காட்டின் எல்லையிலிருந்து வெளிவந்து அவளை நோக்கியது. அத்தனை தொலைவிலேயே அதன் விழிகள் மின்னித் திரும்புவதை அவள் கண்டாள். தலை குலுக்கி, செவிகளை உடுக்கென ஒலிக்கவிட்டு, எடைமிக்க காலடிகளை தூக்கி வைத்தது எருது. அதன் கால்பட்டு புரண்ட மட்கிய மரமொன்றிலிருந்து தழல்போல மின்மினிகள் எழுந்து காற்றில் சுழன்று சிதறி மறைந்தன. தோழி மீண்டும் வந்து “உணவருந்தவில்லையா, தேவி?” என்றாள். “வேண்டியதில்லை” என்று சொல்லி எழுந்து குடிலுக்குள் சென்றாள்.

மெல்லிய உறுமலோசை கேட்க சாளரம் வழியாக நோக்கியபோது கசன் தன் குடிலுக்கு முன்னால் வேங்கைகளுடன் விளையாடிக் கொண்டிருப்பதை கண்டாள். அவன் கால்களை அசைக்க அவற்றை இரையென நடித்து வேங்கைகள் பாய்ந்துசென்று உகிர் உள்ளிழுக்கப்பட்ட பூங்கால்களால் பற்றி பல் படாமல் கடித்து உறுமியபடி இழுத்து உதறி விளையாடின. மஞ்சத்தை விரிக்காமலேயே அவள் படுத்துக்கொண்டாள். மென்சேக்கை மீது முகத்தை அழுத்தி கைகளை தலைமேல் வைத்து இருளுக்குள் தன்னை புதைக்க முயன்றாள். துயில் வரவில்லை என்றாலும் விரைந்தோடிய எண்ணங்கள் ஒவ்வொன்றாக தயங்கி நின்றன. பொருளிலாச் சொற்களென சித்தம் சொட்டிக்கொண்டிருந்தது.

பிறகெப்போதோ விழித்துக்கொண்டபோதுதான் அனலோசையை கேட்டாள். விழிப்பதற்கு முன்பே கனவில் கசனுடன் அவள் நடந்து சென்று கொண்டிருந்தபோது காடு பற்றிக்கொண்டு தழல்மணம் எழுந்ததையும் செஞ்சுடர் பட்டுக்கொடி பறப்பதுபோல் ஓசையிட்டதும் நினைவுக்கு வந்தது. உண்மையிலேயே தீயா என அரைத்துயில் கொண்ட உள்ளம் திகைத்தது. அதற்குள் சக்ரனும் பிறரும் எழுப்பிய குரலை அவள் கேட்டாள். பதறியபடி கதவைத் திறந்து வெளிவந்தபோது கசனின் குடில் எரிந்து கூரை தரை நோக்கி அமிழ்ந்துவிட்டிருந்தது. சுவர்கள் எரிந்து அதன்மேல் விழுந்தன. குடில்களிலிருந்து அலறியபடி ஓடிவந்த அனைவரும் மரக்குடங்களும் குடுவைகளும் கொண்டு நீரள்ளி சூழ்ந்திருந்த பிற குடில்களின் கூரைகளில் வீசினர். அவன் அக்குடிலுக்குள் இல்லை என அவள் அப்போதே உணர்ந்துகொண்டாள்.

மெல்லிய ஒலியொன்றைக் கேட்டு அவள் திடுக்கிட்டாள். எழுந்து நின்று காட்டையே உற்று நோக்கினாள். அது வேங்கைகளின் உறுமல் என தெரிந்தது. ஆனால் மிக மெல்ல ஒரு சிறு வண்டு காதோரம் சென்றதைப்போலவே அது ஒலித்தது. மீண்டும் செவிகூர்ந்தபோது அவ்வொலி கேட்கவில்லை. ஆனால் அது செவிமயக்கு அல்ல என உறுதியாகவே தெரிந்தது. காட்டுக்குச் செல்லும் பாதையை நோக்கி சென்றாள். "எங்கு செல்கிறீர்கள், தேவி?" என்றான் ஒருவன். ஒன்றுமில்லை என்றபடி அவள் இடைவழியினூடாக நடந்து காட்டின் விளிம்பை சென்றடைந்தாள்.

அணுகியபோது வேங்கைகளின் உறுமலை அவள் கேட்டாள். அச்சிறு ஒலியிலேயே அவள் உள்ளம் அச்சம் கொண்டது. அவளறியாத வேறு வேங்கைகள் அங்கே காட்டிற்குள் இருப்பதாகத்தான் தோன்றியது. இருளுக்கு விழிபழகுந்தோறும் மரங்களின் கிளைகள் தெளிந்தன. பின்பு இலைகளின் வான்விளிம்பு துலங்கியது. பாதை செந்நிறத் தடமாக வளைந்து சென்றது. காட்டின் எல்லையை அவள் அடைந்தபோது உள்ளே புதர்களுக்குள் மூன்று வேங்கைகளும் படுத்திருப்பதை கண்டாள். அவள் காலடியோசை கேட்டு ஒன்று எழுந்து அவளை நோக்கி செவிகோட்டியது. வலது முன்காலை நீட்டி வாய்திறந்து வெண்பற்கள் தெரிய உரக்க உறுமியது. அக்கணத்திலேயே அவள் அறிந்தாள், அவை கசனைக் கொன்று உண்டுவிட்டன என்று.

திரும்பி பாதையினூடாக ஓடி குடில்தொகையை அடைந்தபோது கசனின் குடில் எரிந்து முடிந்திருந்தது. அதன்மேல் மணலையும் நீரையும் வீசி தழல்களை அணைத்துவிட்டிருந்தனர். நீராவியும் கரிப்புகையும் கலந்த

மணம் சூழ்ந்திருந்தது. அவள் அங்கு கூடிநின்றவர்களை உந்திக் கடந்து சுக்ரரின் குடிலை அடைந்து படிகளில் பாய்ந்தேறி அங்கு திண்ணையில் கிருதரின் அருகே நின்று எரியணைப்பதை நோக்கிக்கொண்டிருந்த சுக்ரரின் கைகளைப்பற்றி "தந்தையே, அவரை உயிர்பிழைக்க வையுங்கள், உடனே" என்றாள். திகைப்புடன் "என்ன சொல்கிறாய்?" என்று சுக்ரர் கேட்டார்.

அவர் கைகளை உலுக்கியபடி மூச்சிரைக்க உடைந்த குரலில் "அவர் கொல்லப்பட்டுவிட்டார். அவரை அவை உண்டுவிட்டன" என்றாள். "எவை?" என்றார் சுக்ரர். "வேங்கைகள். அவை அவரை உண்டுவிட்டன. எந்தையே, அவரை மீட்டளியுங்கள். அவரை மீட்டளியுங்கள். இக்கணம் இங்கு அவர் எழவில்லையென்றால் நாளை புலரியில் நானிருக்க மாட்டேன். தெய்வங்கள்மேல் மூதன்னையர்மேல் ஆணை!" என்றாள்.

அவள் முகத்தை மெல்லிய ஒளியில் பார்த்தபோது சுக்ரர் அவள் உணர்வுகளை முழுக்க உணர்ந்துகொண்டார். அவள் கண்ணீரிலிருந்தே கசன் உயிருடனில்லையென்பது அவருக்கு உறுதியாகத் தெரிந்தது. "அஞ்சாதே, வா! அவனை நான் மீட்கிறேன்" என்றார். தன் பீடத்தில் சென்று அமர்ந்த பின்னரே தேவயானி சொன்னது என்னவென்பதை உளம் வாங்கிக்கொண்டார் சுக்ரர். திகைப்புடன் "என்ன சொல்கிறாய்? உன்னுடைய வேங்கைகளா?" என்றார். "ஆம். அவைதான். நான் நன்கறிவேன்" என்றாள். "நீ பார்த்தாயா?" என்றார். "பார்த்தேன்" என்றாள். "அவனை அவை உண்டனவா?" என்றார். "அவற்றின் கண்களை பார்த்தேன்" என்றாள்.

அவர் விழிசுருக்கி கூர்ந்துநோக்கி "கண்களையா?" என்றார். "கண்களை ஏந்திவரும் உடலையும்தான். அவைதான். அவை உண்ணும். நான் அறிவேன்" என்றாள். வாய் சற்று திறந்திருக்க

அசைவிழந்து அவளையே நோக்கிக்கொண்டிருந்தார் சுக்ரர். பின்னர் கலைந்து “ஆம். உண்ணக்கூடும்” என்றபின் அருகிருந்த அகல்சுடரை தன்னருகே இழுத்துவைக்கச் சொன்னார். அவளால் அதை எடுக்க முடியவில்லை. கையிலிருந்து சுடருடன் நடுங்கி எண்ணெய் சிந்தியது. அதை தரையில் வைத்து தள்ளி அவர் அருகே கொண்டுவந்தாள். சுடரையே நோக்கிக்கொண்டிருந்த பின் அவர் திரும்பி “சஞ்சீவினியை சொன்னால் அவை மூன்றும் வயிறுகிழிந்து உயிர் துறக்கும்” என்றார். “சாகட்டும். அவை செத்தொழிந்தால் மட்டுமே எனக்கு விடுதலை. அவை அழியட்டும்” என்று பற்களைக் கடித்தபடி இரு கைகளையும் விரல்சுருட்டி இறுக்கிக்கொண்டு அவள் சொன்னாள்.

அரைக்கணம் விழிநிமிர்த்தி அவளை நோக்கியபின் “நன்று” என்ற சுக்ரர் பெருமூச்சுவிட்டார். கண்களை மூடி சுடர் நோக்கி கைநீட்டி சஞ்சீவினியை சொன்னார். மெல்லிய வலி முனகலொன்று அவளிடம் எழுந்ததைக் கேட்டு கண்களைத் திறந்து அவளை பார்த்தார். அவள் கழுத்து நரம்புகள் இழுபட்டிருந்தன. வலிப்பு வந்து பக்கவாட்டில் சரிந்து விழுபவள்போல் தெரிந்தது. “என்ன செய்கிறது?” என்று அவர் கைநீட்டி அவள் தொடையை தொட்டார். அவள் விழி திறந்து “ஒன்றுமில்லை” என்றபின் பெருமூச்சுவிட்டபோது உடல் முழுக்க மெல்லிய வியர்வை பூத்திருப்பதை நோக்கினார். “என்ன ஆயிற்று?” என்றார்.

“அவை இறந்துவிட்டன” என்றாள். “எப்படி தெரியும்?” என்று கேட்ட சுக்ரர் அக்கேள்வியை கலைக்க விரும்புபவர்போல தலையசைத்து “நன்று, அவன் உடனே வந்துவிடுவான். அவன் உடல் அழியவில்லை” என்றார். அவள் எழுந்து வெளியில்

சென்று பார்ப்பாள் என்று அவர் எண்ணினார். அவள் கால்களைக் குவித்து அதன்மேல் கைகளைக் கட்டி முட்டுகளில் முகம் அமர்த்தி அமர்ந்திருந்தாள். எழுந்து அவள் குழல் கற்றைகளைத் தொட்டு வருடி என்ன செய்கிறது உனக்கு என்று கேட்க வேண்டுமென்று சுக்ரர் எண்ணினார். ஆனால் அவராலும் தன் இருக்கையிலிருந்து எழ முடியவில்லை.

சத்வர் உள்ளே வந்து "காட்டுக்குச் சென்றிருந்த கசன் திரும்பி வந்துவிட்டான். அவன் குடில் எரிந்ததை பார்த்துக்கொண்டிருக்கிறான்" என்றார். "அவனை இங்கு வரச்சொல்க!" என்றார் சுக்ரர். "சரி" என்று சத்வர் திரும்ப வெளியே செல்வதற்குள் கூரிய வேலால் குத்தப்பட்டதுபோல உடல் துடிக்க எழுந்து தேவயானி ஆடையோசையும் அணிகளின் ஓசையும் எழ பாய்ந்து குடிலைவிட்டு வெளியே சென்று இருளில் இறங்கி ஓடினாள். கைகளை ஊன்றி எழுந்த சுக்ரர் குடில் வாயிலில் நின்று நோக்கியபோது எரிந்த குடில் அருகே நின்றுகொண்டிருந்த கசனை நோக்கி பாய்ந்தோடி அவன் தோள்களை தாவிப் பற்றிக்கொண்ட தேவயானியை கண்டார்.

கசனின் கைகளைப்பற்றி தன் தோளிலிட்டு இடைவரை வளைத்து அவன் தோளில் தலைசேர்த்து அன்னைக்குரங்குடன் ஒட்டிக்கொள்ளும் குட்டிக்குரங்கென ஆகி நின்றிருந்தாள் தேவயானி. அவன் அவள் தலைமயிரைக் கோதியபடி "என்ன இது? ஏன் அழுகிறாய்?" என்றான். ஓசையின்றி விம்மியபடி "ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை" என்று சொன்னாள். "சொல்! என்ன ஆயிற்று உனக்கு? ஏன் அழுகிறாய்?" என்று அவன் கேட்டான். "எங்கு சென்றிருந்தீர்கள்?" என்றாள்.

“அறியேன். காட்டில் விழித்துக்கொண்டேன். என்னைச் சுற்றி நம் வேங்கைகள் மூன்றும் இறந்துவிட்டவைபோல் கிடந்தன. தொலைவில் இந்தத் தீ எரிந்து அணைவதைக் கண்டேன். எழுந்து இடைவழியினூடாக நடந்து இங்கு வந்தேன்” என்றான். “காட்டிற்கு எப்படி சென்றீர்கள்?” என்றாள். “அது எனக்கு நினைவில்லை” என்றபின் “நேற்று குடிலில் படுத்தேன். ஆழ்ந்த துயிலில் புகை மணத்தை அறிந்தேன். மெல்லிய வெண்பட்டாடை ஒன்று பறந்து என்மேல் விழுந்தது. என் மூக்கு வழியாகவும் காது வழியாகவும் அது எனக்குள் புகுந்தது. என் தலை கல்லால் ஆனதுபோல் ஆயிற்று. கைகால்கள் எடைகொண்டு என்னால் அசைக்க முடியாமல் ஆயின. அப்போது என் அறைக்குள் மூன்று புலிகள் நுழைந்தன” என்றான்.

“புலிகளா?” என்றாள். “ஆம். எரிதுளிபோல மின்னும் அவற்றின் விழிகளை கண்டேன்” என்றபின் தலையை வலக்கையால் மெல்ல தட்டி “ஆனால் அவை மனிதர்கள்போல் எழுந்து நடந்தன. என்னை கூர்ந்து நோக்கின. என் உள்ளங்காலை ஒன்று முகர்ந்தது. பிறிதொன்று என் முகத்தை முகர்ந்தபோது அதன் மூச்சுக்காற்று ஊன்மணத்துடன் நீராவியுடன் என்மேல் படிந்தது. பின்னர் அவை அறைக்குள் நின்று மெல்லிய குரலில் பேசிக்கொண்டன” என்றான். தேவயானி “என்ன பேசிக்கொண்டன?” என்றாள். “தங்களுக்குள் பேசிக்கொண்டன, பெண் குரலில்” என்றான்.

“பெண் குரலிலா?” என்று அவள் கேட்டாள். “ஆம், அதில் ஒரு புலி என்னிடம் ஏதோ சொன்னது. பிற இரு புலிகளும் அப்புலியை கடிந்தன. பிறகு அவை மூன்றும் மாறி மாறி என்னிடம் பேசத்தொடங்கின.” அவன் சொல்வதை அவள்

விழிகள் கூம்ப கேட்டுக்கொண்டிருந்தாள். “மூன்று புலிகள். ஒன்று சிறுமிபோல பேசியது. பிறிதொன்று மூதன்னையைப்போல. பிறிதொன்றின் குரல் இளங்கன்னியின் குரல். பின்னர் அவை மூன்றும் சேர்ந்து என்னைக் கவ்வி எடுத்துக்கொண்டன” என்றான். “கொல்ல விழைந்தனவா?” என்றாள். “கவ்வின என்றால்... உண்பதற்காக அல்ல. குழந்தையை பல்படாமல் கவ்வுமே அதைப்போல. என்னை அவை காட்டுக்குள் கொண்டு சென்றன.”

அவள் “நீங்கள் பிறிதொன்றையும் நினைவுகூரவில்லையா?” என்றாள். “இல்லை” என்றான் அவன். “வருக!” என்று அவனை தன் குடிலுக்கு அழைத்துச் சென்றாள். “இன்று இங்கு தங்குங்கள்.” அவன் மஞ்சத்தில் அமர்ந்து கைகளை கட்டிக்கொண்டான். “நான் எங்கு வாழ்கிறேன் என்பதே அடிக்கடி குழம்பிப்போகிறது. நான் இங்கிருப்பது ஒரு கனவு என்றும் பிறிதெங்கோ வாழ்ந்துகொண்டிருக்கிறேன் என்றும் தோன்றுகிறது. ஒவ்வொரு முறையும் கனவில் அந்த மெய்வாழ்வே இருக்கிறது. அதில் இவ்வாழ்வை கனவு காண்பேன். ஆனால் இந்தப் புலிகள் அங்கும் இருக்கின்றன. மூன்று வேங்கைகள், ஒளிரும் விழிகள் கொண்டவை” என்றான்.

“களைத்திருக்கிறீர்கள். இங்கேயே படுத்துக்கொள்ளுங்கள்” என்றாள். “வேண்டாம். நான் வேறேதாவது குடிலுக்கு செல்கிறேன்” என்றான். “படுத்துக்கொள்ளுங்கள்!” என்று அவள் அன்னையின் குரலில் அதட்ட “சரி” என்று அவன் மஞ்சத்தில் உடல் நீட்டி படுத்து கண்களை மூடிக்கொண்டான். “ஏதேனும் அருந்துகிறீர்களா?” என்று அவள் கேட்டாள். “ஆம். நன்கு விடாய் கொண்டிருக்கிறேன். இதுவரை என் உடலில் இருந்த

பதற்றம் அந்த விடாய்தான். நீ கேட்கும்வரை அதை அப்படி புரிந்துகொள்ள முடியவில்லை” என்றான்.

“இருங்கள்” என்று அவள் வெளியே சென்று அடுமனைச்சேடி ஒருத்தியை அழைத்து நறும்பால் கொண்டு வரச்சொன்னாள். மஞ்சள்தூளும் மிளகுமிட்டு வெல்லத்துடன் கொதிக்க வைக்கப்பட்ட பாலை மண்கலம் ததும்ப கொண்டுவந்து கொடுத்தாள் சேடி. அதை உள்ளே கொண்டுவந்து அவனிடம் அளித்து “அருந்துங்கள்” என்றாள். “ஆம், இதை அருந்துவது போலவே கனவு கண்டேன்” என்றபடி அவன் அதை வாங்கினான். “எப்போது?” என்று அவள் கேட்டாள். “இப்போது. நான் அதை அருந்திக்கொண்டிருக்கும் போதுதான் உன் காலடிகள் கேட்டன. விழித்துப் பார்த்தால் கலத்துடன் நீ வருகிறாய்.” பின்பு மெல்லிய ஓசையெழ கலத்தின் பெரும்பகுதி பாலைக் குடித்து அப்பால் வைத்தான். வாயை துடைத்தபின் “உடல் முழுக்க எரிந்த அனல் அணைவதுபோல் இருந்தது. மிகுந்த பசியும் இருந்திருக்க வேண்டும்” என்றான்.

அவள் “உங்களுக்கு அகி◌ீனா புகை போடப்பட்டிருக்கிறது” என்றாள். “எனக்கா?” என்றான். “ஆம், ஆகவேதான் இனிப்புவிடாய். நீங்கள் விரும்பி அதை இழுத்திருக்க மாட்டீர்கள். உங்கள் குடிலுக்குள் எவரேனும் புகைக்கலமாக அதை கொண்டு வைத்திருக்கலாம்.” அவன் “எவர்...?” என்றான். “அவ்வறைக்குள் வந்தவர்களைத்தான் நீங்கள் புலிகளாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்.” “ஆனால் ஏன் அவர்கள் புலிகளாக வரவேண்டும்?” என்றான். “நீங்கள் புலிகளுடன் விளையாடிவிட்டுச் சென்றதனால் இருக்கலாம். புலிகளையே எண்ணிக்கொண்டு படுத்திருப்பீர்கள்” என்றாள். “அவர்கள் உங்களைக் கொன்றிருக்கிறார்கள்.”

“என்னையா?” என்று அவன் உரக்க கேட்டான். “ஆம். உங்களை மயங்கவைத்து கொன்றிருக்கிறார்கள். குருதியின் மணம் ஏற்றதால் வேங்கைகள் உள்ளே வந்திருக்கின்றன. உங்களை வேங்கைகளுக்கு உணவாக்கியிருக்கிறார்கள்.” அவன் “நான் எப்படி மீண்டு வந்தேன்?” என்றான். “வேங்கையின் வயிற்றைக் கிழித்து வந்திருக்கிறீர்கள்.” அவன் “ஆம், புரிகிறது. அவை அங்கு இறந்துதான் கிடந்தன என்று தெரிகிறது” என்றான்.

மீண்டும் படுத்துக்கொண்டு “நான் உயிர்மீள வேண்டுமென்பதற்காக அவை இறக்க வேண்டியிருந்தது. இனிய விலங்குகள், தங்கள் முழுதுள்ளத்தை எனக்களித்தன” என்றான். “ஆனால் அவை உங்களை உண்டன” என்றாள் தேவயானி. “குருதி விடாயென்பது அவற்றின் உடலில் உறைகிறது. அவற்றின் ஆன்மா எதையும் அறியாது” என்றான் கசன். “கலத்தின் அழுக்கு பாலிலும் உண்டு என்பார்கள். புலியின் உடலில் ஆன்மா புலி வடிவில் வாழ்கிறது” என்றாள். அவன் அதை கேட்காததுபோல் நீள்மூச்சுவிட்டு “அவற்றின் முகத்தில் மாறாக் குழந்தைத்தன்மை ஒன்றிருந்தது. அவற்றில் ஒன்றை என் மகள் என எண்ணிக்கொள்வேன்” என்றான்.

அவள் கைகளைக் கட்டியபடி அவனை நோக்கிக்கொண்டிருந்தாள். “துயிலுங்கள்” என்றாள். “இன்றிரவு அவற்றை எண்ணாமல் என்னால் துயில முடியவில்லை” என்று கசன் சொன்னான். “அவற்றின் விழிகள் மிக அருகிலென்று தெரிகின்றன. ஆறு அருமணிகள். கைநீட்டினால் அவற்றை தொடமுடியும். ஆனால் மின்மினிகள்போல பறந்து சென்றுவிடுமோ என்று தோன்றுகிறது.” “வீண்பேச்சு. கண்ணைமூடி படுத்திருங்கள். துயிலுங்கள்” என்றாள். “துயிலவேண்டும். இந்த சித்தப்பெருக்கிலிருந்து துயிலொன்றே

என்னை மீட்கும்” என்றபின் “தேவயானி” என அழைத்தான். “என்ன?” என்றாள்.

“அவை என்னை எத்தனை விரும்பி உண்டிருக்கும்! ஓர் உடலை உண்பதென்பது அதை முத்தமிட்டுக் கொஞ்சுவது போலத்தானே?” என்றான். அவள் “உளறவேண்டாம்” என்றபின் எழுந்து அவிழ்ந்து சரிந்த தன் கூந்தலை முடிந்துகொண்டாள். “அல்ல, ஓர் உடலை உண்பதென்பது முலையருந்துவதுபோல. அதை தன் உடலுடன் இணைத்துக்கொள்வதுபோல. அதுவாக ஆவதைப்போல. அவை என் உடலில் சுவைத்து திளைத்திருக்கின்றன. இதுநாள்வரை அவற்றிடம் நான் கொஞ்சியபோது ஒருபோதும் அந்த இரண்டின்மையை அடைந்ததில்லை.”

“இந்தப் பேச்சு எனக்கு சலிப்பூட்டுகிறது. துயிலுங்கள். துயிலவேண்டுமென்று எண்ணுங்கள். துயில் வந்து சேரும்” என்று அவள் சொன்னாள். “ஆம், துயின்றாக வேண்டும்” என்று தனக்குத்தானே என அவன் சொல்லிக்கொண்டான். பின் கண்களை மூடி கால்களை நீட்டிக்கொண்டு “இனிய வேங்கைகள். அவ்விழிகளிலிருந்து எனக்கு விடுதலை இல்லை” என்றான். அவன் முகம் மலர்ந்தது, பின் ஆழ்ந்த துயர்கொண்டது. “அவை மிக அருகே நின்றிருக்கின்றன. என்னை முத்தமிடுகின்றன. ஊன்மணம் கலந்த வெப்பக்காற்று” என்றான். “இனியவை... என் பிறவா மைந்தர்கள்” என்றபின் பெருமூச்சுவிட்டு “இல்லை, மகள்கள்” என்றான்.

# மாமலர் - 59

**59. மலர்மருள் வேங்கை**

தன் மஞ்சத்தில் கசனை துயிலவிட்டு அறைமூலையில் கால்களை நீட்டி அமர்ந்தபடி அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள் தேவயானி. அவன் பெருமூச்சுகள் விட்டபடி உடல் இறுகியும் அறியாது மெல்ல தளர்ந்தும் மீண்டும் இறுகியும் புரண்டுபடுத்தும் கைகால்களை நிலைமாற்றியும் துயிலிடம் மன்றாடிக்கொண்டிருந்தான். இமைக்குள் விழிகள் ஓடிக்கொண்டிருந்தன. பின்னர் மூச்சு சீரடையத்தொடங்கியது. அவன் துயில்கொள்வது வரை அசையாது அமர்ந்திருந்தாலும் அவளுக்குள் உள்ளம் நிலையழிந்துகொண்டிருந்தது. அவனுடைய சீர்மூச்சு வரத்தொடங்கியதும் அவள் முகமும் மெல்ல எளிதாகியது. பின்பு அவளும் துயின்றாள்.

பின்னிரவில் விழித்துக்கொண்டபோது அவன் உடல் நடுங்கிக்கொண்டிருப்பதைக் கண்டாள். சாளரங்கள் திறந்து கிடந்தமையால் அறைக்குள் குளிர்காற்று சுழன்றுகொண்டிருந்தது. மரவுரி இருக்கிறதா என்று அருகிலிருந்த மூங்கில் பெட்டியை திறந்து பார்த்தாள். வழக்கமாக அவள் போர்த்திக் கொள்வதில்லை. எந்தக் குளிரும் அவளை நடுங்க வைப்பதில்லை. அவள் குளிரை உணர்ந்தது முழுக்க கனவுகளில்தான். மரவுரிப்போர்வை எதுவும் அறைக்குள் இருக்கவில்லை. எழுந்து வெளியே சென்று திண்ணையில் நின்று எவரையேனும் அழைக்கலாமா என்று பார்த்தாள். எவரும் கண்ணில்படவில்லை.

அப்பால் அவன் குடில் அவன் சாம்பலாக மூங்கில் சட்டங்களுடன் எரிந்தணைந்த சிதைபோல் கிடந்தது. தீயணைந்த நிறைவில் களைப்புடன் அனைவரும் துயில்கொள்ளச் சென்றிருந்தனர். குளிர்ந்த இரவுக்காற்றில்

கரிப்பிசிறுகள் பறந்து இறங்கிக்கொண்டிருந்தன. முற்றத்தில் மெல்லிய ஓசை கேட்டு வேங்கைகள் என எண்ணி மறுகணம் திடுக்கிட்டு திரும்பிப்பார்த்தாள். மரக்கிளையிலிருந்து சிற்றுயிர் ஒன்று இறங்கி அப்பால் சென்றது. திரும்புவதற்கு முன் அந்த ஒரு கணத்திலும் மூன்று வேங்கைகளும் முழுமையாகவே அங்கு இருப்பு கொண்டிருந்தன என்று உணர்ந்தாள்.

தலையைத் திருப்பி பின்பக்கம் அவை அவளை நோக்கியபடி படுத்திருக்கின்றன என்று கற்பனை செய்தாள். ஆனால் அவ்வொலி கேட்டபோது அவை உண்மையென இருந்தன. இப்போது கற்பனையென்று அவளுக்கு தெரிந்திருந்தது. அவற்றின் மெல்லிய மயிர்மணத்தை, வாயிலெழும் ஊன் வீச்சத்தை, பளிங்குருளைக் கண்களை, பஞ்சுக்கால்களை, உடல்கோடுகளை ஒவ்வொன்றாக நினைவிலிருந்தே மீட்டு அங்கிருந்த வெற்றிடத்தில் பொருத்தி அவற்றை வரைந்து மீட்டெடுக்க முயன்றாள். அவை முழுமையாக நினைவில் மீளவில்லை. அவ்வோவியத்தின் உறுமல் புகை போன்று காற்றில் கரைந்து கொண்டிருந்தது. இறங்கிச் சென்று காட்டில் கிடக்கும் அவற்றின் சடலத்தை பார்க்கவேண்டும் என்று தோன்றியது.

ஒருகணத்தில் பெரும் துயரொன்று வந்து நெஞ்சை மோத குளிர்ந்த எடையென அடைத்து நிறைத்தது. கால்கள் அவ்வெடை தாளாததுபோல மூங்கிலை பற்றிக்கொண்டு நின்றாள். எக்கணமும் வெடித்துக் கிளம்பி சிறுவழியினூடாக ஓடி காலைப்பனி ஈரமென படர்ந்த மென்மயிர் உடலுடன் இறந்து உறைந்து கிடக்கும் அவற்றை அணுகி அவற்றின் அசைவிழந்த சிறுகாதுகளின் நடுவே கழுத்தை, வெண்ணிறப் பனிமயிர் படர்ந்த அடிவயிற்றை தடவிக்கொடுக்கக்கூடும்

அவள். அவை தங்கள் ஐம்பொதிக்கால்களை மெல்ல அழுத்தி கொஞ்சக்கூடும். அங்கு சென்று அவற்றைப்பார்த்தால் கதறி அழுதபடி அவற்றின் மேல் விழுந்துவிடுவோம் என்று தோன்றியது. மெல்ல தூணைப்பற்றியபடி திண்ணையில் அமர்ந்தாள்.

இருட்டுக்குள் சுள்ளிகள் ஒடிவது போன்ற ஒலி கேட்டது. ஏதோ சிற்றுயிர் என எண்ணி அவள் தலை திருப்பாமலிருந்தாள். பின்னர் மூச்சொலி கேட்டது. தலையை உலுக்கி காதுகளை ஒலிக்கச் செய்தது வேங்கை ஒன்று. அவள் விழிதூக்கி பார்த்தபோது குருநிலையின் நுழைவாயிலில் நின்றிருந்த சாலமரத்தின் அடியில் பெரும்புலி ஒன்றை கண்டாள். அவளது உடன்பிறந்த மூன்று வேங்கைகளில் ஒன்றல்ல அது என்று முதல் கணத்திலேயே தெரிந்தது. நெஞ்சைப்பற்றியபடி மூச்சிறுக எழுந்து அது விழிமயக்கா என இருளை கூர்ந்து பார்த்தாள்.

மிக அருகிலென அதை கண்டாள். அக்கணமே அது ஏதென அறிந்தாள். மூன்று குட்டிகளை அங்கு விட்டுச்சென்ற அன்னைப்புலி. அங்கிருந்து சென்ற அதே முகத்துடன் மீண்டு வந்திருந்தது. அதன் முகவாயின் நீள்மயிரைக் கூட காணமுடிந்தது. அவளை தன் மணிக்கண்களால் கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தது. அவள் முற்றத்திற்குச் சென்றதும் தலையைத் தாழ்த்தி இரு காதுகளை சேர்த்தது. முற்றத்தின் நடுவில் நின்றபடி அவள் அதை நோக்கிக்கொண்டிருந்தாள்.

கதறி அழுதபடி ஓடி அதன் காலடியில் சென்று விழவேண்டுமென்று தோன்றியது. அதன் பொருட்டு அவள் உள்ளம் அசைந்தபோதுகூட உடல் அங்கேயே நின்றது. பின்னர் அஞ்சிய சிறுமியைப்போல வீறிட்டபடி திரும்பி குடிலுக்குள்

ஓடி அவனருகே மஞ்சத்தில் சென்று படுத்துக்கொண்டாள். திடுக்கிட்டெழுந்து “யார்?” என்றபின் “நீயா? என்ன?” என்று கேட்டான் கசன். “வெளியே... அந்த வேங்கை” என்றாள். “என்ன?” என்று அவன் புரியாமல் மீண்டும் கேட்டான்.

“அன்னைப்புலி. முன்பு எனக்கு அமுதளித்தது” என அவள் அஞ்சிய சிறுமியின் குரலில் சொன்னாள். அவன் கையூன்றி எழுந்து “எங்கே?” என்றான். அவள் “வெளியே வந்து நின்றிருக்கிறது” என அவனை இறுக பற்றிக்கொண்டாள். அவன் அவள் இடையை வளைத்து தன் உடலுடன் சேர்த்துக்கொண்டு “அது உன் உளமயக்கு” என்றான். “இல்லை, இல்லை” என்று அவள் சொன்னாள். அவள் கன்னங்களிலும் கழுத்திலும் தோள்களிலும் மென்மையாக முத்தமிட்டபடி “உன் உளமயக்கு. ஐயமே இல்லை. புலிகள் அத்தனை அகவை உயிர் வாழ்வதில்லை” என்றான். அவள் அவன் தோளில் தன் முகத்தை அழுத்தியபடி விம்மி அழத்தொடங்கினாள்.

அவன் அவளை தன் உடலுடன் இறுகச் சேர்த்தபடி உள எழுச்சியுடன் முத்தமிட்டான். “என்னை விட்டு சென்றுவிடாதீர்கள். என்னுடன் இருங்கள். என்னை விட்டு சென்று விடாதீர்கள்” என்று அவள் தாழ்ந்த குரலில் தலையை அசைத்தபடி சொல்லிக்கொண்டிருந்தாள். அது அவள் குரலாகவே அவளுக்கு தோன்றவில்லை. இருளில் எவரோ கைவிட்டுச் சென்ற குழந்தையொன்றின் மன்றாட்டு போலவே ஒலித்தது. அங்கு அவனுடன் மஞ்சத்திலிருப்பது தன் உடலா என்று அவள் வியந்தாள். ஆடையை விலக்கி அவன் அள்ளி தன் உடலுடன் பொருத்திக்கொண்டதும் அவளல்ல. அவ்வறைக்குள் இருளில் எழுந்து வேங்கையென ஒளிரும் விழிகளுடன் அக்கூடலை அவளே நோக்கிக் கொண்டிருந்தாள்.

காலை ஒளி இமைமேல் பட்டு குருதி நிறத்தில் உள்ளே விடிவதற்கு முன்பு வரை அவள் ஒரு வேங்கையுடன் மெய்தழுவி சேக்கையில் படுத்திருந்தாள். அதன் உயிர் நீர் அவள் உடலெங்கும் பிசுக்கென படர்ந்து உலர்ந்து ஆடையென ஒட்டி தோலை இறுக்கத் தொடங்கியிருந்தது. அவள் மூச்சு முழுக்க அதன் உப்புக் குருதி மணமே நிறைந்திருந்தது. கைகள் அதன் மென்மயிர் தோளையும் விலாவையும் கழுத்தையும் வருடிக்கொண்டிருந்தன. விழித்தெழ வேண்டுமென்ற எண்ணம் எழுந்ததும் பிறகு என்று அதைத் தவிர்த்து புரண்டு வேங்கையை மீண்டும் உடல் சேர்த்து அணைத்துக்கொண்டது. அதன் வாயிலிருந்து பச்சைக்குருதி மணம் எழுந்தது. அவள் முகத்தை தன் நுண்மையான நாக்கால் மெல்ல நக்கியபடி அது உறுமியது. வெம்மை கொண்ட காற்று அவள் கன்னத்திலும் தோளிலும் படிந்தது.

“எவ்வளவு வெம்மை கொண்டிருக்கிறாய்!” என்று அது கூறியது. மானுடக்குரலாக அல்ல, வேங்கையின் இரும்புக்குரல் அது. “அனல் கொண்டவள் போலிருக்கிறாய். உன்னை தொடும்போதெல்லாம் ஏனிப்படி கொதிக்கிறாய் என்னும் எண்ணமே எழுகிறது. எப்போதேனும் நீ குளிரக்கூடுமா என்ன?” அவள் “ஏன் இந்த வெம்மை உங்களுக்கு ஒவ்வாததா?” என்றாள். “ஒவ்வாது என்றல்ல, விந்தையாக இருக்கிறது.” அவள் “என் உடல்கூறு அப்படி. நான் பிறந்த போதே இந்த வெம்மையுடன்தான் இருந்தேன்” என்றாள்.

“பொசுக்கிவிடுவாய் போலும்” என நகைத்தபின் விழிமாறி “ஒரு சிதையில் எரிவதாகவே தோன்றியது” என்றான். அவள் அவனை உடலால் கவ்வி இறுக்கொண்டாள். “என்னுடன் இருங்கள்” என்றாள். “உன்னுடன்தான் இருக்கிறேன்” என்றான்

கசன். அவள் மெல்ல துயிலில் மீண்டும் ஆழ்ந்து பின் மீண்டபோது கண்களுக்குள் செவ்வொளி பரவியது. விழித்து அறைக்குள் நிறைந்த புலரியொளியைக் கண்டு சிலகணங்கள் கழித்து இடமுணர்ந்து நினைவு கொண்டு நெஞ்சு அதிர கைநீட்டி ஒழிந்த மஞ்சத்தை உணர்ந்தாள். அவன் எழுந்துசென்ற மெல்லிய குழி நார்ச்சேக்கையில் இருந்தது. கைகளால் அதை வருடிக்கொண்டிருந்தாள். உவகையா துயரா என்றறியாது வெறுமைகொண்டிருந்தது உள்ளம். விழிநீர் பெருகி கன்னங்களில் வழிந்து சொட்டிக்கொண்டிருந்தது.

கசன் வேங்கையாக மாறிவிட்டிருந்தான் என்பதை அவளால் வெறும்விழிகளாலேயே பார்க்கமுடிந்தது. காற்றில் வெண்பனிக்குவை செல்வதுபோல அவன் ஒழுகிநடந்தான். தலைநிமிர்ந்து தொலைவை நோக்கிபடி அசைவிலாது அமர்ந்திருந்தான். இருளில் அவன் விழிகள் ஒளிவிடுவதைக்கூட அந்தியில் அவள் கண்டாள். முதல்நாள் இரவில் அவளுடன் இருந்தபின்னர் அவன் அவளைப்பார்ப்பதே மாறிவிட்டது. மறுநாள் காலையில் எழுந்ததும் அவள் தன் உடல் குறித்த தன்னுணர்வையே முதலில் அடைந்தாள். நெய்யில் எரி ஏறும் ஒலியுடன் நெஞ்சு பதைப்புகொண்டது. கைகளால் மார்பை அழுத்திக்கொண்டு சிலகணங்கள் கண்மூடி படுத்திருந்தாள். பின்னர் எழுந்து ஆடைதிருத்தி வெளியே நடக்கும்போது தன் உடலைத்தவிர எதையுமே எண்ணமுடியவில்லை அவளால்.

உடல் மிதமிஞ்சி மென்மைகொண்டுவிட்டதுபோல் தோன்றியது. ஆடைகளும் அணிகளும் அயல்தொடுகையென விதிர்க்கச்செய்தன. இடத்தோள் மெல்ல துடித்துக்கொண்டது. கால்களில் சிறுகற்களும் உறுத்தின. தோள்களைக் குறுக்கி

உடலை ஒடுக்கியபடி சிற்றடி எடுத்துவைத்து நீரோடை நோக்கி சென்றாள். வழியில் எதிர்ப்பட்ட விழிகளனைத்தையும் தவிர்த்தாலும் அனைத்து நோக்குகளையும் அவள் உடல் உணர்ந்துகொண்டுதான் இருந்தது. ஓடைக்கரையின் தனிமையில் மீண்டும் தன்னிலை பெற்று பெருமூச்சுடன் சுற்றும் நோக்கினாள். ஒளிபரவிய இலைத்தகடுகளும் நீரின் நிழலாட்டமும் அலைச்சுடர்வும் நீலவானின் வெண்முகில் சிதறல்களும் அனைத்தும் புத்தம்புதியவையாக தோன்றின. தன் உடல் தோலுரித்து பிறந்தெழுந்த கூட்டுப்புழு என புதியது என.

நீரிலிறங்கி கழுத்துவரை மூழ்கியபோது உடலில் இருந்து வெம்மை ஒழியத்தொடங்கியது. அவள் நீராடுகையில் எப்போதுமே நீர் வெம்மைகொண்டு குமிழியெழுவது வழக்கம். அதை தன் உடலுக்கும் நீருக்குமான உரையாடலாகவே அவள் உணர்வாள். குமிழிகள் அடங்கியபின்னர்தான் அவளுக்குள் குளிர் பரவத்தொடங்கும். குளிர் சென்று எலும்புகளைத் தொட்டபின்னர் மெல்லிய நடுக்கமொன்று எழும். அதற்கு ஒருநாழிகைக்குமேல் ஆகும். அன்று நீரின் முதற்தொடுகையே அவளை சிலிர்க்கச்செய்தது. நீரில் மூழ்கியதுமே உடல் நடுங்கத் தொடங்கியது. கண்களை மூடி தன் உடலையே உணர்ந்தபடி குழல் நீண்டு ஒழுக்கில் அலைபாய உடல்மூழ்கிக் கிடந்தாள்.

அதே உடல்தான். அவ்வுடலையே அவள் அகம் தானென உணரவும் செய்தது, ஆயினும் அது பிறிதொன்றென ஆகிவிட்டிருந்தது. எப்போதுமே அவள் தன் உடலில் முலைகளையும் இடையையும் இயல்பாக உணர்ந்ததில்லை. தானென்று உணரும்போதும் அவை பிறிதொன்றை கரந்துள்ளன என்ற உள்ளுணர்வு இருந்தது. அவற்றின் அசைவு

அவள் அசைவுகளுக்கு அப்பால் வேறொன்றென நிகழ்ந்தது. அவற்றைத் தொடுகையில் அயலுணர்வு இருந்தது. அன்று அவை முற்றிலும் அகன்றுவிட்டன என்று தோன்றியது. அவளுடன் அவை ஓசையில்லாத ஒற்றர்கள்போல் உடனிருந்தன. அவற்றைத் தொடவே அவள் கை எழவில்லை.

நீராடி எழுந்து ஈர ஆடையுடன் குடில்நோக்கிச் செல்லும்போது எதிரே வந்த பெண்கள் ஓரிரு சொற்களில் முகமனும் வாழ்த்தும் உரைத்தனர். அவள் எவரையும் எதிர்விழி நோக்காமல் கடந்துசென்றாள். வழக்கமான குரல்கள், ஆனால் அவர்களுக்குத் தெரியும் என நன்றாக புலப்பட்டது. அது வெறும் உளமயக்கு அல்ல என்று அவள் அகம் முடிவுறச்சொன்னது. அது அறிவால் உளத்தால் அறிந்துகொள்வது அல்ல, உடலே உணர்வது. உடல் என்பது தனித்தனியாக உள்ளத்தால் பகுக்கப்படுவது. தசையாலான ஒற்றைப்பெருக்கு. கூட்டுநடனங்களில் போர்விளையாட்டுகளில் அதை அவள் கண்டிருக்கிறாள். அவளுக்கு எங்காவது இருட்டுக்குள் சென்று ஒளிந்துகொள்ளவேண்டும் போலிருந்தது.

ஆடைமாற்றிக்கொண்டு அவள் திண்ணைக்கு வந்தபோது வேங்கைகளின் காதுத்துடி ஓசை கேட்டு மெய்விதிர்ப்பு கொண்டு திரும்பிப்பார்த்தாள். அவை குருநிலையின் மாணவர்களால் இழுத்துச்செல்லப்பட்டு காட்டுக்குள் புதைக்கப்பட்டன என அவள் அறிந்தாள். சென்று அவற்றின் உடலை பார்த்திருக்கலாம். அவை அவள் உள்ளத்திலிருந்து முற்றாக விலகிவிட்டிருக்கும். குழலை முதுகில் பரப்பி காற்றில் காயவிட்டபடி திண்ணையில் அமர்ந்துகொண்டாள். காய்ச்சல்கண்டதுபோல உடலெங்கும் சோர்வும் கண்களில் வெம்மையும் வாயில் மெல்லிய கசப்பும் இருந்தது. அந்தக்

களைப்பு இனிதாகவும் இருந்தது. சுருண்டு படுத்துவிடவேண்டும், உலகை முழுமையாக அப்பால் தள்ளிவிடவேண்டும்.

கிருதர் அவளை கடந்துசென்றபோது “அமைவுக்கு வரவில்லையா?” என்றார். “காய்ச்சல்போலத் தெரிகிறது” என அவள் தலைகுனிந்து சொன்னாள். “ஓய்வுகொள்ளுங்கள்” என்றபடி அவர் தாண்டிச்சென்றார். அப்படி ஒதுங்கியிருந்து பேசுபொருளாவதைவிட சொல்லமைவுக்குச் சென்று அனைவருடனும் அமரலாம். தத்துவத்தில் ஈடுபடுவது மிக எளிது. அதன் முதல் சொற்கண்ணியை ஒரு கேள்வியாக ஆக்கிக்கொண்டால் போதும். இன்று தந்தை பருப்பொருளுக்கு தன்னை மாற்றிக்கொள்ளும் விழைவு உண்டா என்று உசாவப்போகிறார். இல்லை இங்கே எதற்கும் தன்னை மாற்றிக்கொள்ளும் விழைவு இல்லை.

ஓரவிழியில் கசனின் அசைவு தெரிந்ததுமே அவள் உள்ளமும் உடலும் துடிப்புகொண்டன. எழப்போகும் அசைவெழ அதை அடக்கிக்கொண்டாள். கசன் அவள் முற்றத்தருகே வந்து “நான் ஊன்வேட்டைக்குச் செல்லவிருக்கிறேன். நல்ல மான் கொண்டுவரும்படி ஆசிரியர் சொன்னார்” என்றான். அக்குரல் மேலும் ஆழமும் கார்வையும் கொண்டிருக்கிறதென்று தோன்றியது. வழக்கம்போல விழிதூக்கி அவன் விழிதொட்டு நேர்ச்சொல் பேச அவளால் இயலவில்லை. உடல்தளர்ந்து தொண்டை அடைத்துக்கொண்டது. கைகளால் மூங்கில்தூணை சுரண்டியபடி “ம்” என்றாள். “ஆசிரியரின் இரவு வகுப்பிற்கு வந்துவிடுவேன்...” என்று அவன் சொன்னான். “ம்” என்றாள். பேசினால் குரல் தழுதழுக்கும் என தோன்றியது.

அவன் திரும்பப்போகிறான் என கீழே விழுந்த நிழலசைவைக்கொண்டு அறிந்து அவள் அறியாமல் விழிதூக்கி அவன் விழிகளை சந்தித்தாள். பதறி விழிதாழ்த்திக்கொள்ள அவன் "உன் தந்தையிடம் நானே பேசுகிறேன்" என்றபின் திரும்பிச் சென்றான். அவன் செல்வதை நோக்கி அவள் எண்ணங்களற்று நின்றாள். பின்புதான் அவன் நடை மாறிவிட்டிருப்பதை உணர்ந்தாள். வேங்கை என்னும் சொல் நெஞ்சிலெழுந்ததும் படபடப்பு தொடங்கியது. அவனையே நெடுந்தொலைவுக்கு விழிசெலுத்தி நோக்கிக்கொண்டிருந்தாள். அவன் மறைந்ததும் நீள்மூச்சுடன் மீண்டாள்.

ஏன் நான் தளர்வுகொள்கிறேன்? அவன் ஏன் நிமிர்வுகொள்கிறான்? அவனை தான் என எழவும் என்னை நான் என குழையவும் செய்த ஒற்றை நிகழ்வின் உட்பொருள்தான் என்ன? மீண்டும் ஒரு திடுக்கிடலுடன் அவள் காலையில் கண்ட கனவை நினைவுகூர்ந்தாள். வேங்கையென்று ஆகிவிட்டிருக்கிறானா? வேங்கையின் உள்ளே புகுந்து மீண்டவன் எதை கொண்டுவந்தான்? அதற்கு முன் ஓநாய்களிடமிருந்து பெற்றதை இழந்துவிட்டானா? என்னென்ன எண்ணங்கள் என அவள் தன்னை விடுவித்துக்கொண்டாள். எழுந்தபோது கையூன்றியதை எண்ணி அந்த அசைவை பல மனைவிகளிடம் இருப்பதைக் கண்டதை நினைவுகூர்ந்து புன்னகைசெய்தாள்.

அன்று காலையுணவுக்குப்பின் அவள் தன்குடிலுக்குள் படுத்து துயில்கொண்டாள். உச்சிப்பொழுதுக்குப்பின்னர்தான் விழித்தெழுந்தாள். அப்போது அவளருகே வேங்கை ஒன்று அமர்ந்திருந்தது. ஓசையின்றி அமர்ந்திருக்க வேங்கைபோல் திறம்கொண்ட பிற உயிர் இல்லை. அசைவில்லாது

முழுநாளும் அமர்ந்திருக்க அதனால் இயலும். அது காத்திருக்கிறது என எளிதாக சொல்லலாம், அது காலமுடிவிலியின் முன் ஒரு நாற்களக்காயை நீக்கி வைத்துவிட்டு எதிர்நகர்வைக் காத்து அமர்ந்திருக்கிறது. முடிவிலிக்காலத்தின் மறுமுனையை தன்னுள்ளும் கொண்டிருக்கிறது.

பெரிய வேங்கை. அதன் கன்னமயிர் நன்றாக நீண்டு முகம் கிடைநீள்வட்டமாக மாறிவிட்டிருந்தது. அனல்நெளிவென கோடுகள் கொண்டது. கழுத்தின் வெண்மென்மயிர்ப்பரப்பு காற்று சுழன்ற மணல்அலைகள் போல. அவள் அதன் தலையை தொட்டாள். மெல்ல தலைதாழ்த்தி அவள் மடியில் தலைவைத்தது. வேங்கைத்தலைக்கு இத்தனை எடையா? அதன் கண்களை கூர்ந்து நோக்கினாள். நீள்வடிவ உள்விழி. புலியின் விழியென அல்குல் என்னும் காவியவரி நினைவுக்கு வந்தது. புன்னகையுடன் அதன் காதைப்பற்றி இழுத்தாள். வேட்கையை விழிகளாகக் கொண்டது. இந்திரனுக்கு உடலெங்கும், உனக்கு விழிக்குள். இந்திரன் விழியாக்கினான், நீ மீண்டும் அல்குலாக்கிக் கொள்கிறாய். அதன் கண்கள் சொக்கி சரிந்தன. முலையுண்டு நிறைந்த மதலையென. அவள் அதை வருடிக்கொண்டே இருக்க அதன் குறட்டையொலி எழத்தொடங்கியது.

விழித்தெழுந்தபோது அவள் உள்ளம் உவகையால் நிறைந்திருந்தது. காலையில் இழந்தவளாக வாயில்கள் திறக்கப்பட்டவளாக உணர்ந்தவள் வென்றவளாக முடிவிலாத ஆழம் கொண்டவளாக உணர்ந்தாள். மெல்லிய பாடலொன்றை வாய்க்குள் முனகியபடி அடுமனைக்கு சென்றாள். அடுமனைப்பெண் “உணவருந்துகிறீர்களா, தேவி?” என்றாள்.

“ஆம், பசிக்கிறது” என்றாள். “ஊன்சோறு ஆறிப்போய்விட்டது. சற்று பொறுங்கள், சூடுசெய்து தருகிறேன்” என்றாள். “இல்லை, கொடு” என வாங்கி உண்டாள். வாழ்வில் எப்போதுமே அத்தனை சுவைமிக்க உணவை உண்டதில்லை என்று தோன்றியது. மேலும் கேட்டுவாங்கி உண்டாள்.

கொல்லைப்பக்கம் சென்று அங்கிருந்த மரத்தொட்டி நீரை சுரைக்குடுவையால் அள்ளி வாழைமரத்தடியில் கைகழுவியபோது வாழைத்தூண்களுக்கு அப்பால் தெரிந்த காட்டை பார்த்தாள். பச்சைக்கடல் அலை ஒன்று எழுந்துவந்து எல்லைகொண்டதுபோல. துள்ளிக்குதித்து பாடியபடி காட்டை நோக்கி ஓடவேண்டும் என தோன்றியது. அதன்பின்னரே அவள் அங்கே பாறைமேல் கசன் அமந்திருப்பதை பார்த்தாள். அவன் ஒரு பாறை என்றே தோன்றினான். அவன்தானா என்று பார்த்துக்கொண்டிருந்தாள். அருகே வந்த அடுமனைப்பெண் “அவர்தான். இந்தக் காட்டு ஆடு அவர் கொண்டுவந்த ஊன். அதன்பின் அந்தப்பாறையில் சென்று அமர்ந்திருக்கிறார்” என்றாள். “எப்போது?” என்றாள் தேவயானி. “உச்சிப்பொழுதிலிருந்தே” என்றாள்.

அங்கே சென்று அவனை பார்த்தாலென்ன என்று எண்ணினாள். ஆனால் அவன் அமர்ந்திருக்கும் அத்தனிமையை கலைக்கமுடியாதென்று தோன்றியது. அடுமனைப்பெண் “அவருக்காக வேங்கைகள் அங்கேதான் வழக்கமாக காத்திருக்கும்” என்றாள். அவள் நெஞ்சு அதிர திரும்பிப்பார்த்தாள். “உச்சிப்போதிலேயே அங்கே சென்றுவிடும். அவர் வரும்வரை அங்கே காத்திருக்கும்” என்றாள் அடுமனைப்பெண். அவள் சற்றுநேரம் நின்று அவனை நோக்கிக்கொண்டிருந்தாள்.

தனிமை நிறைந்த நெஞ்சோடு தன் குடிலறைக்கு திரும்பினாள். எழுந்த எண்ணங்களை விலக்கியபின் சுவடியை எடுத்துக்கொண்டு தந்தையை பார்க்கச் சென்றாள். அவர் காவியங்களைக் கற்கும் உளநிலையில் இருந்தார். ஆகவே அவள் கொண்டுசென்ற கவிதைநூல் அவரை உவகைகொள்ளச்செய்தது. “சின்னஞ்சிறு வண்ணத்துப்பூச்சி. அதன் செம்மஞ்சள்வரிகளால் அது ஒரு பறக்கும் வேங்கை. இனியதேன் உண்பது. எடையற்ற அசைவுகளுடன் காற்றலைகளில் ஓசையின்றி பரவுவது. அது எந்த வேங்கையின் கனவு? அல்லது அவ்வேங்கைதான் அதன் கனவா?” அவள் அவரையே நோக்கிக்கொண்டிருந்தாள். “சின்னஞ்சிறு கருவண்டு. தேனுண்ணும் துதிக்கை. கரிய பளபளப்புகொண்ட உடல். அது பாடுவது கருமதவேழம் தன்னுள் இசைக்கும் யாழைத்தானா? மென்மலரசைய அமர்ந்தெழுவதுதான் பேருருக்கொண்டு காட்டுமரங்களை வேருடன் சாய்க்கிறதா?”

அஸ்வாலாயனரின் பிரமோதமஞ்சரி. அவர் உசாவிய அத்தனை தத்துவங்களையும் சமன்செய்துகொள்ள துலாவின் மறுதட்டில் அவர் வைத்த கனவு. அக்கனவின் தட்டு கீழிறங்கி தரைதட்டியது. மறுதட்டை நிகர்செய்யத் தவித்து இந்தத்தட்டின் கனவிலேயே ஒரு துண்டு வெட்டி அதில் வைத்தார். அவள் எண்ணிக்கொண்டிருந்ததையே சுக்ரர் சொன்னார். அல்லது அவர் சொல்வதையே அவள் உடன் எண்ணங்களாக ஆக்கி தொடர்ந்துகொண்டிருந்தாள். அந்திப்பூசனைக்காக சத்வரும் கிருதரும் வந்தபோது அவள் வணங்கி விடைபெற்றுக்கொண்டாள்.

திரும்பி தன் குடில்நோக்கி நடக்கையில் அவன் அங்கே பாறைமேல்தான் அப்போதும் அமர்ந்திருக்கிறானா என்று சென்று பார்க்கவேண்டுமென எண்ணினாள். தயங்கி முற்றத்தில் நின்றபடி எண்ணியபின் அந்தியிருளுக்குள் நடந்து குடில்களை கடந்துசென்றாள். குடில்களுக்குள் ஏற்றப்பட்ட நெய்விளக்குகளின் ஒளி செந்நிற நடைபாவாடைகள்போல விழுந்துகிடந்தது. ஒவ்வொன்றையும் கடக்கையில் அவள் எரிந்து எரிந்து அணைந்துகொண்டிருந்தாள். இருளுக்குள் சென்று நின்று தொலைவில் தெரிந்த அவன் நிழல்வடிவை நோக்கினாள். அவனை அழைக்கவேண்டுமென்னும் உந்துதல் எழுந்தது. அழைக்க எண்ணி கையை தூக்கியபோது அதை தானே உணர்ந்ததுபோல் அவன் மெல்லிய அசைவுகொண்டு திரும்ப அவன் விழிகள் எரித்துளிகளென மின்னி அணைவதை அவள் கண்டாள்.

மறுநாள் அவள் இருட்காலையிலேயே எழுந்து நீராடிவிட்டு வரும்வழியில் எதிரே அவன் வந்தான். அப்பால் எரிந்த விளக்கொன்றின் மெல்லிய ஒளியில் அவள் நிழல் இடப்பக்கமாக விழுந்து இலைகள்மேல் எழுந்து துணையொன்று வருவதுபோல் தோன்றச்செய்தது. அந்நிழலுடன் அவள் மெல்லியகுரலில் உரையாடிக்கொண்டிருந்தாள். “ஆம், அவ்வாறுதான்” என்றாள். “எப்போதும் அவ்வாறுதான் போலும். அதற்கு மாற்றில்லை, பிறிதொருவழியில்லை. எனில் அவ்வாறே ஆவதில் என்ன பிழை? பெருநெறியைப்போல் பழுதற்றது ஏதுண்டு? என்றும் காலடிகள் விழுந்துகொண்டே இருப்பதல்லவா அது?”

அவனை பிறிதொரு நிழலென கண்டாள். நீண்டு வந்து அவள் நிழலருகே நின்ற அதை நோக்கியபின் திரும்பி அவனை

பார்த்தாள். சொல்லொன்றும் எடுக்காமல் புன்னகைசெய்தாள். “இன்று புலரியிலேயே காட்டுக்குள் செல்கிறேன். நேற்று ஆடு கொண்டுவந்தேன். இன்று இளம் காட்டுமாடு கொண்டுவரச்சொன்னார் ஆசிரியர்.” அவள் அதற்கும் புன்னகைபுரிந்தாள். “விலங்குகளைப்பிடிப்பது இத்தனை எளிதென்று இதற்கு முன் அறிந்ததில்லை” என்றான் கசன். “அவை நம்மை காட்டின் பிற அசைவுகளிலிருந்து வேறுபடும் தனியசைவுகளைக்கொண்டே அறிகின்றன. காட்டின் அசைவுகளுடனும் அசைவின்மையுடனும் நம் உடலசைவுகளும் அமைதியும் முற்றிலும் இசையுமென்றால் விலங்குகளால் நம்மை கண்டடையமுடியாது.”

அவள் தலைகுனிந்து “அது வேங்கைகளின் வழி” என்றாள். அவன் நகைத்து “ஆம்” என்று சொல்லி அவள் கன்னத்தை தொட்டு “மாலை பார்ப்போம்” என்று கடந்துசென்றான். அவள் அவன் தொடுகையை ஒரு மெல்லிய இறகுபோல ஏந்தி நடந்தாள். கன்னத்தை தொடவிரும்பி அது அத்தூவலை கலைத்துவிடும் என அஞ்சி முகத்தை அசைத்தாலும் அது பறந்துவிடும் என்பதுபோல நடந்தாள். எதிரே வந்த முதியதாதி வாய்திறந்து சிரித்து கடந்துசென்றாள். பிறிதொருத்தியும் அவ்வாறே சிரித்தபோதுதான் அது தன் முகம் மலர்ந்திருப்பதால்தான் என்று உணர்ந்தாள்.

அவ்வெண்ணம் மேலும் மலரச்செய்தது அவளை. சிரித்தபடி செல்லும் வழியிலேயே பூத்துக்குலைந்து தாழ்ந்து ஆடி நின்றிருந்த வேங்கையின் கிளையை துள்ளி எம்பி கையால் தட்டினாள். உதிர்ந்த மலர்களை கையால் பற்ற முயன்று சிதறடித்துச் சிரித்தபடி குடிலைநோக்கி சென்றாள். ஏதோ எண்ணம் தோன்றி திரும்பி நோக்கியபோது மஞ்சள்மலர்கள்

உதிர்ந்த மரத்தின் அடி வேங்கை என உடல் குவித்து எழுந்து சிலிர்த்தது.

# மாமலர் - 60

### 60. கனவுக்களப் பகடை

அன்றும் தேவயானி பின்காலையில் படுத்து உச்சிப்பொழுதுக்குப் பிறகுதான் துயின்றெழுந்தாள். முந்தைய நாள் துயின்ற பொழுதை உடல் நினைவில் பதித்திருக்க வேண்டும். அந்த நேரம் வந்ததுமே இனியதோர் சோர்வு உடலில் படர்ந்தது. முந்தையநாள் துயின்றபோதிருந்த இனிமை நினைவில் எழுந்தது. வெளியே ஒளியென, காட்சிகளென, அசைவுகளென வண்ணங்களெனப் பரந்திருந்த புற உலகை முற்றிலும் வெளித்தள்ளி அனைத்து வாயில்களையும் அடைத்துக்கொண்டு தன் உள்ளே இருக்கும் மிக நுண்மையான ஒன்றை வருடியபடி தனித்திருக்க வேண்டுமென்று தோன்றியது.

அது ஒரு கூரிய முள். அதன் முனையில் தன்னுணர்வின் மிக மென்மையான பகுதியொன்றை வைத்து உரசிச்செல்லும்போது ஏற்படும் சிலிர்ப்பூட்டும் நெகிழ்வு. முற்றிலும் இருள் நிறைந்த விரிந்த வெளியொன்றில் தனித்து வைக்கப்பட்டிருக்கும் அருமணியின் ஒளித்துளி. பிறிதொன்றும் வேண்டியதில்லை என்று தோன்றியது. எழுந்து சென்று மஞ்சத்தில் படுத்து கண்களுக்கு மேல் துணியொன்றைக் கட்டி இமைகசிந்து வரும் வெளிச்சத்தை மறைத்துக்கொண்டு உடல் சுருட்டி படுத்துக்கொண்டாள். வைரமுனையுடன் எழுந்து வந்தது அந்த முள்நுனி. அதன் நீல நிற நச்சு. மயக்குவது.

கூர்மையைச் சூழ்ந்து படபடத்துப் பறந்தது வண்ணத்துப்பூச்சி. தன் ஒற்றைக்காலை அதன் முனையில் ஊன்றி நின்று சிறகடித்தது. பறப்பதும் நிலைப்பதும் ஒன்றேயான அசைவு. அந்த இனிமை அவள் உடலுக்கும் பரவியது. நாவில் மட்டுமே அதற்கு முன் இனிமையை உணர்ந்திருந்தாள். நெஞ்சில் உணர்ந்தது இனிமையென்று கற்பனை செய்துகொண்டிருந்தாள். அப்போது இடது உள்ளங்கால் தித்தித்தது. தொடைகள் வழியாக அத்தித்திப்பு படர்ந்தேறியது. அது வெளிக்கசிந்து வீணாகிவிடக்கூடாதென்பதைப்போல உடலை இறுக்கிக்கொண்டாள். உள்ளத்தைக் கொண்டு உடலை கவ்வ முயல்வதுபோல. மெல்லிய புல்லரிப்புடன் உடல் எழுந்தெழுந்து அமைந்துகொண்டிருந்தது. புரண்டு படுத்து முகத்தை மென்சேக்கையில் அழுத்திக்கொண்டாள்.

பின் இனிமை ஓர் அலையென அவளை கடந்து சென்றது. காற்றலையில் சுடரென அவள் உடல் துடித்து அலைபாய்ந்து நீண்டெழுந்து ஒருகணம் வெட்டவெளியில் நின்று பின்பு வந்து இணைந்துகொண்டது. மெல்ல தளர்ந்து தன் வியர்வையின் மணத்தை தானே உணர்ந்தபின் கண்களுக்குள் அலையும் குருதிக் குமிழிகளை நோக்கியபடி படுத்திருந்தாள். ஒவ்வொரு சொல்லாக உதிர்ந்து மறைய வெளியே காற்று அடிப்பதை சித்தம் உணர்ந்தது. காற்று எனும் ஒற்றைச்சொல்லாக தன் இருப்பை உள்ளுணர்ந்தாள். பின்பு அதுவும் மறைந்தது.

காற்றின் ஒலிகேட்டே விழித்துக்கொண்டாள். அறைக்குள் அனைத்து துணிகளும் பறந்து கொண்டிருந்தன. சாளரம் வழியாக வந்த இலைகளும் சருகுகளும் உள்ளே சுழன்று சுவர் மூலைகளில் சுழிவளையங்களாயின. தன் முகத்திலும் உடம்பிலும் படிந்திருந்த மெல்லிய தூசியையும்

சருகுப்பொடிகளையும் உதறியபடி எழுந்து அமர்ந்தாள். காற்று அடங்கி துணிகள் தங்கள் இயல்வடிவில் வந்தமைந்தன. இறுதியாக அவளுடைய மெல்லிய பட்டுமேலாடை புகையென தவழ்ந்திறங்கி நுனிமட்டும் சற்றே அலையடித்து அமைந்தது. அதை எடுத்து இடை செருகிச் சுழற்றி தோளிலிட்டபடி வெளியே வந்தாள்.

நன்றாக பசித்தது. கூரைவிளிம்பு நிழல் விழுந்திருந்ததைக் கொண்டு பொழுதென்னவென்று கணித்தாள். உச்சிப்பொழுது தாண்டி மூன்று நாழிகை ஆகியிருந்தது. அடுமனைக்குச் சென்று உணவுண்ணலாம் என்று எண்ணி செல்லும் வழியிலேயே மரத்தொட்டியிலிருந்து நீரள்ளி முகம் கழுவி ஈரக்கையால் குழலைத் தடவி அள்ளி கொண்டையாக முடிந்துகொண்டு நடந்தாள். தன் காலடி வைப்பிலும் இடையசைவிலும் இருந்த இனிய தளர்வையும் குழைவையும் அவளே உணர்ந்தாள். பிற பெண்களிடம் பல முறை அவளே கண்டதுதான் அது. அப்போதெல்லாம் ஏனிப்படி காற்றில் புகைச்சுருள்போல் நடக்கிறார்கள் என்ற ஏளனம் நெஞ்சிலெழுந்ததுண்டு. அப்போது அவ்வாறு ஒரு நடை அமைந்ததற்காக உள்ளம் நுண்ணிய உவகையையே கொண்டது.

அடுமனையின் படிகளில் ஏறி ஓசையுடன் கதவைத் திறந்து தலைநிமிர்ந்து உள்ளே நுழையும் வழக்கம்கொண்டிருந்த அவள் அன்று வாயிலுக்கு முன்னால் ஒரு கணம் தயங்கி மெல்ல கதவைத் தொட்டு சற்றே திறந்து உள்ளே பார்த்தபின் நுழைந்தாள். அவளைக் கண்டதும் அங்கு அமர்ந்து சிரித்து நகையாடிக்கொண்டிருந்த அடுமனைப்பணியாளர்கள் அனைவரும் எழுந்தனர். “வருக, தேவி! குடிலுக்குள் வந்து

பார்த்தேன். தாங்கள் துயின்றுகொண்டிருந்தீர்கள். துயிலெழுந்து வரட்டும் என்று காத்திருந்தோம். இன்று உணவு சூடாகவே உள்ளது. அருந்துகிறீர்களா?" என்றாள் அடுமனைப்பெண். "ஆம், பசிக்கிறது. அதற்காகத்தான் வந்தேன்" என்றபடி அவள் அடுமனைக்குள் சென்றாள்.

ஊன் சோறின் மணம் எழுந்தது. "ஊன் சோறா?" என்று அவள் கேட்டாள். "ஆம், காட்டுஆடு" என்றபின் "சக்ரனும் அவர் தோழர்களும் ஆட்டுக்குட்டியொன்றைக் கொன்று அதன் ஊனை கொண்டுவந்தனர். அது ஆசிரியருக்கு மட்டுமே என்றனர்" என்றாள். "ஏன்?" என்றபடி அவள் மணையிலமர்ந்தாள். "நேற்று அவர் இளம்கன்றின் இறைச்சியை கேட்டிருக்கிறார்." தேவயானி "ஆம், அதை பிறரும் உண்ணலாமே?" என்று கேட்டாள். "அவருக்கென்று அதை வேட்டையாடியிருக்கிறார்கள். அவருக்கான காணிக்கை அது. பிறர் உண்ணலாகாது என்றார்கள்."

அவள் நிமிர்ந்து பார்த்தாள். மிகத் தொலைவில் காற்று எழுந்து சுழன்று மரக்கிளைகளை உலுக்கியபடி அணுகும் ஓசைபோல ஒன்று கேட்டது. "யார் கொண்டு வந்தார்கள்?" என்று கேட்டாள். "சக்ரன்" என்றாள் அடுமனைப்பெண். "அந்தக் கன்றையே கொண்டு வந்தார்களா?" அவள் "இல்லை, நன்றாகக் கழுவித் துண்டுபோட்ட ஊனைத்தான் கொண்டு வந்தார்கள்" என்றாள். தேவயானி மணை புரண்டு பின்னால்விழ பாய்ந்து எழுந்து கைகளை உதறியபடி "அந்த ஊனுணவு எங்கே?" என்றாள். "அதை சமைத்து ஆசிரியருக்கு அளித்துவிட்டோம். அவர் உண்டு ஒரு நாழிகை கடந்துவிட்டது" என்றாள்.

அவள் பாய்ந்து கதவைத்திறந்து முற்றத்தில் இறங்கி சுக்ரரின் குடில் நோக்கி ஓடினாள். அவளுக்குப்பின்னால் ஓடிவந்த

அடுமனைப்பெண் திகைத்து நோக்கி நின்றாள். சுக்ரரின் குடிலுக்கு முன் சத்வரும் கிருதரும் அமர்ந்து மெல்லிய குரலில் ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். அவர் ஓடிவருவதைப்பார்த்து கிருதர் எழுந்தார். "என்ன ஆயிற்று, தேவி?" என்றார். "தந்தை! தந்தையை எழுப்புங்கள்!" என்றாள். "அவர் உணவுண்டபின் ஓய்வெடுக்கிறார்" என்றார் கிருதர். "இல்லை, இப்போதே நான அவரை பார்த்தாகவேண்டும்" என்றபின் படிகளில் ஏறி கதவுப்படலைத் தள்ளி குடிலுக்குள் நுழைந்தாள்.

இறகுச்சேக்கையில் சுருண்டு தூங்கிக்கொண்டிருந்த சுக்ரரின் கால்களைப்பற்றி உலுக்கி "தந்தையே! தந்தையே!" என்று கூவினாள். அவர் கையூன்றி மெல்ல எழுந்து "என்ன?" என்றார். "அவரை மீண்டும் கொன்றுவிட்டார்கள். இம்முறை அவர் திரும்ப வரமுடியாது!" என்றாள். "என்ன சொல்கிறாய்?" என்றார் சுக்ரர். "தந்தையே, அவரைக்கொன்று அந்த ஊனை உங்களுக்கு உணவாக்கிவிட்டார்கள்" என அவள் கூவினாள். தொண்டை அடைத்து அழுகை எழ விம்மினாள். சுக்ரர் அறியாது தன் வயிற்றில் கையை வைத்தார். "உங்களுக்கு மட்டும் என ஊன் அளிக்கப்பட்டுள்ளது. அது அவர்தான், ஐயமே இல்லை! நானறிவேன், அவர்தான்" என்று சொன்னாள்.

"ஆம், எனக்கு மட்டும்தான் என்று சொன்னார்கள். இரு, நான் நூல்கணித்து பார்க்கிறேன்" என்றபடி சற்றே நிலைபெயர்ந்த காலடிகளுடன் நடந்து மணையை இழுத்துப்போட்டு அமர்ந்து கண்களை மூடினார் சுக்ரர். அவள் எழுந்து வாயில் வழியே வெளியே ஓடி கிருதரிடம் "சென்று சக்ரனும் அவனுடைய தோழர்களும் இங்கிருக்கிறார்களா என்று பாருங்கள். இருந்தால் தடுத்து வையுங்கள்" என்றாள். "ஏன்?" என்றார் கிருதர். "இன்று

அவர்கள் தந்தைக்கு ஊன் காணிக்கை அளித்திருக்கிறார்கள்" என்றாள். கிருதர் உடனே புரிந்து கொண்டு "பாவிகள்!" என்றார்.

சத்வர் "அவர்கள் மீண்டும் காட்டுக்கு சென்றுவிட்டார்கள்" என்றார். "மீண்டுமா?" என்றாள். "ஆம், மீண்டும் காட்டுக்குச் சென்று ஊன்தேடி வருவதாக சொன்னார்கள்." கிருதர் "இப்பொழுது காட்டின் எல்லையைக் கடந்து ஊருக்குள் நுழைந்துவிட்டிருப்பார்கள். அவர்கள் ஒற்றர்கள், ஐயமே இல்லை. இருமுறையும் கசனைக் கொன்றவர்கள் அவர்கள்தான்" என்றார். "என்ன செய்வது? அவரை மீட்டாக வேண்டும்" என்றாள் தேவயானி. "இம்முறை மீட்கஇயலாது, தேவி. ஆசிரியரின் வயிற்றைப்பிளந்து அவர் வெளிவந்தாக வேண்டும்" என்றார் கிருதர்.

அப்போதுதான் முழு விரிவையும் உணர்ந்து மெல்ல பின்னடைந்து சுவரில் சாய்ந்தாள். கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழியத்தொடங்கியது. உடலை அழுத்தியபடி நடுங்கும் கைகளால் மரச்சுவரைப்பற்றியபடி நின்றாள். "இருமுறை தோற்றபின் தெளிவாக திட்டமிட்டிருக்கிறார்கள். ஆசிரியர் அவனை மீட்டெடுக்க முடியாமல் செய்துவிட்டார்கள்" என்றார் கிருதர். "இல்லை, மீட்டெடுத்தாகவேண்டும். அவர் எனக்கு வேண்டும்" என்றபடி அவள் உள்ளே ஓடி சுக்ரரின் அருகே விழுந்து முழங்கால்களில் அமர்ந்து அவர் கால்களை பற்றிக்கொண்டு "தந்தையே, அவர் வேண்டும். அவர் திரும்பி வந்தாக வேண்டும். இல்லையேல் எனக்கு வாழ்க்கையில்லை" என்றாள்.

அவர் கண்களைத் திறந்து "அவன் உடல் என் வயிற்றுக்குள்தான் இருக்கிறது" என்றார். "அவன் ஊனின் எஞ்சிய பகுதியை அவர்கள் காகங்களுக்கு

இரையாக்கிவிட்டார்கள். அவனை மீட்டெடுப்பதென்றால் நான் இறந்தாக வேண்டும்.” அறியாது நெஞ்சில் கூப்பி பதிந்த கைகளோடு தேவயானி விம்மினாள். “நீ விழைந்தால் நான் இறந்து அவனை மீட்டெடுக்கிறேன்” என்று சுக்ரர் அவர் விழிகளைப் பார்த்து சொன்னார். அவள் இல்லை இல்லையென்று தலையசைத்தாள். “அத்தனை பெண்களுக்கும் வாழ்வில் ஒருமுறை வந்தணையும் தருணம் இது. மகளே, இருவரில் ஒருவரை தெரிவு செய்தாகவேண்டும்” என்றார் சுக்ரர்.

அவள் நிமிர்ந்து அவர் விழிகளைப்பார்த்து “ஆசிரியரென தாங்கள் எனக்கு எதை பரிந்துரைப்பீர், தந்தையே?” என்றாள். “தந்தை உனது இறந்த காலம். கணவனே எதிர்காலம். நீ இளையோள். இளையோர்கள் எதிர்காலத்தையே தெரிவு செய்யவேண்டும்” என்றார். “நான் உங்களை, உங்கள் இறப்பிற்குப்பின்...” என்றாள். சொல்ல சொற்கள் நெஞ்சுக்குள் திமிற “என்னால் எப்பக்கமும் திரும்ப முடியவில்லை, தந்தையே” என்றாள். “இன்று வரை இவ்வுலகில் இத்தெரிவை செய்த அத்தனை பெண்களும் கணவனையே முன் வைத்திருக்கிறார்கள். நீ பிறிதொன்றாக ஆகவேண்டியதில்லை” என்றார் சுக்ரர்.

அவள் விரல்களால் கண்களை அழுத்தியபடி தலை குனிந்து தோள்களைக் குறுக்கி உடலை இறுக்கியபடி சில கணங்கள் அமர்ந்திருந்தாள். கண்ணுக்குள் ஒளிமின்னிச் சென்றதுபோல அவன் சிரித்தமுகம் வந்து சென்றது. சீண்டும் நகைப்பு கொண்ட விழிகள். அவள் கண்களைத் திறந்து “அவர் வேண்டும் எனக்கு. அவர் மட்டும் போதும், இவ்வுலகே அழிந்தாலும் சரி. மூன்று தெய்வங்களும் அழிந்தாலும் சரி.

அவர் மட்டும் வேண்டும். நான் இறந்தாலும் அவர் வாழ வேண்டும்” என்றாள். “நன்று, நீ அவ்வாறே சொல்வாய்’ என்றபின் சுக்ரர் “அவ்விளக்கை அருகே கொண்டு வா!” என்றார். அவள் சரிந்தமர்ந்து கை நீட்டி அகலை தரை வழியாக நகர்த்தி அவர் அருகே கொண்டு வந்தாள்.

குடிலுக்குள் வந்து நின்ற கிருதர் “தாங்கள் இறக்காமலேயே அவனை மீட்க முடியும், ஆசிரியரே” என்றார். “என்ன சொல்கிறீர்?” என்று சுக்ரர் கேட்டார். “தங்கள் வயிற்றில் வாழும் கசனை மைந்தனென ஏற்றுக்கொள்ளுங்கள். அங்கே அவன் கருவடிவு அடையட்டும். கருவுக்கு முதன்மை நுண்சொற்களை பயிற்றுவிக்கமுடியுமென்று நூல்கள் சொல்கின்றன. அக்கருவிலேயே சஞ்சீவினியை கற்றுக் கொண்டபின் அவனை உயிருடன் எழுப்புங்கள். உங்கள் வயிறு திறந்து அவன் வெளியே வந்தபின் நான் அவனிடம் நிகழ்ந்ததை சொல்கிறேன். அவன் உங்களை உயிர்ப்பிக்க முடியும். தேவிக்கு கணவனும் தந்தையும் திரும்ப கிடைப்பார்கள்.”

தேவயானி திகைப்படைந்து எழுந்து கிருதரின் கைகளை பற்றிக்கொண்டு “ஆம், அதை செய்யலாம். அது ஒன்றே வழி. தந்தையே, அது ஒன்றே வழி” என்றாள். சுக்ரர் புன்னகைத்து “இப்போது இந்த மாபெரும் நாற்களத்தின் வரைவும் இலக்கும் தெரிகிறது. இத்தனை நாட்கள் இதற்காகத்தானா என் சிறு சித்தத்தைக் கொண்டு துழாவிக்கொண்டிருந்தேன்? நன்று!” என்றபின் கிருதரிடம் “அவ்வாறே செய்கிறேன்” என்றார். தன் வயிற்றின் மீது கைவைத்து ஒலியாக ஆகாத உதடசைவுகளால் பீஜமந்திரத்தை சொன்னார். உயிர்த்துளி என அவர் வயிற்றுக்குள் உருக்கொண்ட கசனை ஆத்மாவின் வடிவாக எழுப்பி அவனை நோக்கி கர்ப்ப மந்திரத்தை உரைத்தார். பின்பு

தாரண மந்திரத்தை சொன்னபோது அவர் வயிற்றுக்குள் அவன் சிறிய கருவாக உருவானான்.

அவர் வயிறு பெருத்து வருவதை தேவயானி கண்டாள். அச்சமும் உளவிலக்கமும் ஏற்பட்டு அங்கிருந்து எழுந்து வெளியேறி மீண்டும் தன் குடிலுக்குள் சென்று சேக்கையில் படுத்துவிட வேண்டும் என்று தோன்றியது. அதிலிருந்து எழும்போது அனைத்தும் வெறும் கனவென்றாகி இருக்கும் என்பது போல. கிருதர் கைகளைக்கூப்பியபடி மலைத்த நோக்குடன் நின்றார். சுக்ரரின் வயிறு பெருத்து வந்தது. கருமுழுத்த பெண்ணின் வயிறுபோல பளபளப்பையும் வலம் சாய்ந்த குழைவையும் கொண்டது. கிருதர் அவளிடம் "நீ வெளியே செல்லலாம்" என்றார். "ஏன்?" என்று அவள் கேட்டாள். "இது எப்போதும் தனிமையிலேயே நிகழ்கிறது. அவர் சஞ்சீவினியை அதற்கு உரைக்கட்டும். அவன் பிறந்தெழுந்த பிறகு நீ உள்ளே வரலாம்" என்றார்.

அவள் கையூன்றி எழுந்து தூணைப்பற்றியபடி தயங்கி நின்றாள். "நாம் இருவருமே வெளியே செல்வோம், தேவி" என்றார் கிருதர். இருவரும் வெளியே வந்ததும் அவர் படல் கதவை மெல்ல மூடினார். "சஞ்சீவினியை உரைத்து அவன் பிறந்தெழ சற்று பொழுதாகும். அதுவரை காத்திருப்போம்" என்றார். அவர்கள் வெளியே காத்து நின்றிருந்தனர்.

சற்று நேரத்திற்குப் பிறகு உள்ளே காலடியோசை கேட்டது. "யாரங்கே?" என்று கசனின் ஓசை கேட்டது. "அவர்தான்! அவர்தான்!" என்று அவள் படலை அகற்ற பாய்ந்து சென்றாள். "இரு, நான் திறக்கிறேன்" என்று கிருதர் கதவை திறந்தார். உள்ளே நின்றிருந்த கசன் "நீங்களா? என்ன நிகழ்ந்தது இங்கே?" என்றான். "ஆசிரியர் அங்கே வயிறு திறந்து இறந்து

கிடக்கிறார்.” கிருதர் தேவயானியிடம் “இங்கிரு” என்று தாழ்ந்த குரலில் சொல்லி குடிலுக்குள் சென்று கதவை மூடினார். அவள் கால் தளர்ந்தவளாக கையூன்றி மெல்ல திண்ணையிலேயே அமர்ந்தாள். முழங்காலை மடித்து முட்டுகளில் முகத்தை அமிழ்த்தியபடி பேரெடையுடன் தன்னை அழுத்திய காலத்தை கணம் கணமாக உணர்ந்து அமர்ந்திருந்தாள்.

மீண்டும் படல் ஓசையுடன் திறந்தது. அவள் திடுக்கிட்டு எழுந்தபோது தலை சுற்றி பக்கவாட்டில் விழப்போனாள். சுவரைப்பற்றியபடி “கிருதரே...” என்றாள். கிருதர் “எழுந்து உள்ளே வாருங்கள், தேவி. அனைத்தும் நன்றாகவே முடிந்துவிட்டன” என்றார். “என்ன? என்ன?” என்று அவள் கேட்டாள். “உங்கள் தந்தையும் கணவரும் முழு உடலுடன் முழுச்சித்தத்துடன் முன்பெனவே இருக்கிறார்கள். வருக!” என்றார். உவகையென எதுவும் அவளுக்குள் தோன்றவில்லை. இன்னதென்றறியாத அச்சம் மட்டுமே நெஞ்சை அழுத்தி கைகால்களை தளரவைத்தது.

கைகளைக் கூப்பியபடி கண்களில் நீர் வழிய மெல்ல குடிலுக்குள் நுழைந்து மேலும் முன்னகராமல் அப்படியே நின்றாள். மணை மேல் சுக்ரர் அமர்ந்திருக்க அருகே கசன் கால் மடித்து மாணவனுக்குரிய முறையில் அமர்ந்திருந்தான். சுக்ரர் அவளை நோக்கி “நீ விரும்பியதுபோல அதே பேரழகுடன் மீண்டு வந்திருக்கிறான், பார்!” என்றார். கிருதர் “அத்துடன் உன் தந்தைக்கிணையான மெய்யறிவையும் பெற்றிருக்கிறான்” என்றார். அவள் கண்ணீர் வழிய புன்னகைத்தாள்.

தேவயானி மீண்டும் தன் குடில் நோக்கி செல்கையில் அடுமனைப்பெண்ணும் பணியாளர்களும் அவள் குடில்

வாயிலில் அவளுக்காக காத்திருந்தனர். புன்னகையுடனும் தளர்நடையுடனும் அவள் அருகே சென்று “ஒன்றுமில்லை” என்றாள். அவர்கள் கண்களில் குழப்பம் மாறவில்லை. “ஒன்றுமில்லை. பிரஹஸ்பதியின் மைந்தர் எங்கோ தொலைந்துவிட்டார் என்று எண்ணினேன். அவர் அங்கே தந்தையின் குடிலுக்குள்தான் இருக்கிறார்” என்றாள். அவர்கள் ஐயம் முற்றும் விலகவில்லை என்றாலும் ஒருவரை ஒருவர் நோக்கியபின் “நன்று தேவி. தாங்கள் ஓடியதைக் கண்டு அஞ்சிவிட்டோம்” என்றனர்.

“ஆம், இங்கு ஏதோ விரும்பத்தகாத ஒன்று நிகழ்கிறது என்று தோன்றிக்கொண்டே இருக்கிறது” என்றாள். “அந்த ஐயம் எங்களுக்கும் இருக்கிறது, தேவி. அதை எங்கு சொல்வது என்று தெரியவில்லை. இங்கே விறகுப்புரை அருகே அசுரமாணவர்கள் சக்ரனின் தலைமையில் கூடிநின்று பேசுவதை நாங்கள் பலமுறை கண்டிருக்கிறோம். வஞ்சமோ சூழ்ச்சியோ செய்கிறார்கள் என்று தோன்றியது. எங்களில் ஒருவன்தான் அவர்கள் பிரஹஸ்பதியின் மைந்தருக்கு எதிராகவே அதை செய்கிறார்கள் என்றான். அது அவன் கேட்ட ஓரிரு சொற்களில் இருந்து உய்த்தறிந்தது. அதை எங்கு சொல்வதென்று தெரியாமல் இருந்தோம்” என்றாள் அடுமனைப்பெண்.

தேவயானி “நன்று! தந்தையிடம் நானே பேசுகிறேன். அவர்களைப் பிடித்து விசாரிப்போம்” என்றாள். தலையசைத்தபடி அவர்கள் கலைந்து சென்றனர். தன் குடில் வாயிலில் அமர்ந்தபடி அவள் கசன் வருவதற்காக காத்திருந்தாள் முதலில் உடலெங்கும் இருந்த களைப்பு மெல்ல விலக உள்ளம் இனிய காற்று பட்டதுபோல புத்துணர்ச்சி கொண்டது. தன் உதடுகள் மெல்லிய பாடல் ஒன்றை மீட்டிக்கொண்டிருப்பதை தானே

கேட்டு புன்னகையுடன் மூங்கில் தூணில் தலை சாய்த்தாள். கன்னங்களில் கை வைத்தபோது கண்ணீரின் பிசுக்கு இருப்பதை உணர்ந்து எழுந்து சென்று முகம் கழுவி ஆடி நோக்கி குழல் திருத்தி ஆடையை உதறி நன்றாக அணிந்து மீண்டும் திண்ணைக்கு வந்தாள்.

கிருதரும் கசனும் சுக்ரரின் குடில்விட்டு பேசியபடி வெளியே வந்தனர். கிருதர் ஏதோ சொல்ல கசன் சிறுவனைப்போல் சிரித்துக்கொண்டிருந்தான். படியிறங்குகையில் அவனுடைய அசைவு அவளை திடுக்கிடச் செய்தது. ஏனென்று தன்னையே உசாவியபடி மீண்டும் அவன் உடலசைவுகளையே கூர்ந்து நோக்கினாள். நடந்து அவளருகே வந்ததும் கிருதர் அவன் தோளைத் தட்டியபின் “பார்ப்போம்” என்று கடந்து சென்றார். அவன் அருகே வந்து “வணங்குகிறேன், தேவி” என்றான். அவள் உள்ளம் மீண்டும் திடுக்கிட்டது. “உங்களுக்கு என்ன ஆயிற்று?” என்றாள். “தெரியவில்லை. இன்று நான் எங்கு சென்றேன் என்று நினைவில்லை. இறுதியாக நண்பர்களுடன் காட்டுக்கு ஊன் தேடச் சென்றேன். அங்கு மயங்கிவிட்டிருப்பேன் போலும். விழிப்பு வந்தபோது இங்கே ஆசிரியரின் அறைக்குள் இருந்தேன். என்னை இங்கு கொண்டுவந்துவிட்டிருக்கிறார்கள்” என்றான்.

“ஆம், மயங்கிவிட்டீர்கள். பிற மாணவர்கள் தங்களை இங்கு கொண்டுவந்தார்கள். தன் ஊழ்க நுண்சொல் வழியாக தங்களை தந்தை எழச்செய்தார்” என்றாள். “ஆம், அந்த மயக்கு ஒரு பெரிய கனவு போல. அக்கனவில் நான் தேவருலகில் இருந்தேன். இதோ இங்கு இவை நிகழ்வதுபோலவே இத்தனை தெளிவான நிகழ்வாக இருந்தது அது. மாளிகைகளை தொட முடிந்தது.

குரல்களை கேட்க முடிந்தது. ஒவ்வொரு விழியையும் விழிதொட்டு புன்னகைக்க முடிந்தது.”

நான் பிரஹஸ்பதியை கண்டேன். அவர் காலடிகளைப் பணிந்து “தந்தையே, மீண்டு வந்துவிட்டேன்” என்று சொன்னேன். முகம் சுளித்து “சென்ற செயல் முழுமையடையாமல் நீ மீள முடியாது. செல்க!” என்றார். “எங்கு செல்வது?” என்று கேட்டேன். “மீண்டும் மண்ணுக்கே செல்!” என்றார். “தந்தையே, நான் மண்ணிலிருந்து வரவில்லை. நான் எப்போதும் இங்குதான் இருக்கிறேன்” என்றேன். “நீ அங்குதான் இருந்தாய், இது உன் கனவு” என்று அவர் சொன்னார். அவர் குரலிலும் முகத்திலும் இருந்த சினத்தைக் கண்டு புரியாமல் திரும்பி அவர் அருகே இருந்த பிற முனிவர்களை பார்த்தேன்.

சௌம்யர் என்னிடம் “ஆம் இளையவனே, அது உன் கனவு. அக்கனவுக்குள் கனவாக இங்கு வந்திருக்கிறாய்” என்றார். “இல்லை, அது கலைந்து இங்கு எழுந்திருக்கிறேன்” என்றேன். சிருஞ்சயர் “இல்லை, இன்னமும் அக்கனவுக்குள்தான் இருக்கிறீர்கள். இக்கனவைக் கலைத்தால் மீண்டு அக்கனவுக்குள்தான் செல்வீர்கள்” என்றார். “அது எப்படி, கனவுக்குள் ஒரு கனவு நிகழமுடியும்?” என்றேன். “கனவுகள் ஒன்றுக்குள் ஒன்றென அமைந்த நூறாயிரம் உலகங்களின் முடிவிலாச் சரடு போன்றவை. இக்கனவை உதறுங்கள், அதில் எழுவீர்கள்” என்றார் சப்தமர்.

அப்போது எவரோ என் பெயர் சொல்லி அழைப்பதை கேட்டேன். “எவரோ என்னை பெயர்சொல்லி அழைக்கிறார்கள்” என்றேன். “உங்களை சுக்ரர் அழைக்கிறார்” என்றார் சுதர்மர். எனக்கு சுக்ரர் யாரென்று தெரியவில்லை. “எவர்? எவர் அழைக்கிறார்கள்?” என்றேன். “உங்கள் ஆசிரியர் சுக்ரர்

அழைக்கிறார். உங்கள் தந்தை பிரஹஸ்பதியின் முதல் மாணவர்" என்றார் சப்தமர். "ஆம், நினைவிருக்கிறது. அவரை சென்று பார்க்கும்படி என்னிடம் சொன்னீர்கள். ஆனால் அவரை நான் என் கனவில் மட்டுமே கண்டிருக்கிறேன்" என்றேன்.

"ஆம், அக்கனவுக்குள் இருந்துதான் அவர் அழைக்கிறார்" என்றார் பிரஹஸ்பதி. "கனவுக்குள்ளிருந்தா?" என்று சொல்லும் போதே சுக்ரரின் குரல் மேலும் மேலும் வலுத்து வந்தது. மிக அருகிலென அவ்வழைப்பை கேட்டேன். பின்னர் அவர் கை வந்து என் தோளைப்பற்றியது. நான் திமிறுவதற்குள் என்னை இழுத்து ஒரு வெண்திரை கிழித்து அப்பால் கொண்டு சென்றது. அந்த விசையில் தடுமாறி உருண்டு விழுந்தேன். எழுந்து அமர்ந்தபோது ஆசிரியரின் அறையில் இருந்தேன். மிக அருகே அவரது உடல் கிடந்தது.

அவருடைய வயிறு யானையின் வாய் எனத் திறந்து உள்ளே சூடான தசை அதிர்ந்து கொண்டிருப்பதை கண்டேன். அவ்வுடலில் உயிர் இருந்தது. கால்களும் கைகளும் மெல்ல இழுத்துக் கொண்டிருந்தன. என் தலை சுழன்றது. இக்கனவுக்குள்ளிருந்து பிறிதொரு அறியா கொடுங்கனவுக்குள் நழுவி விழுந்துவிடுவேனென்று அச்சம் வந்தது. உடனே தூணைப்பற்றியபடி ஓடிவந்து உங்களை அழைத்தேன். கிருதர் வந்து என்னிடம் நான் கற்ற சஞ்சீவினி நுண் சொல்லைச் சொல்லி ஆசிரியரை எழுப்பும்படி சொன்னார்.

திகைப்புடன் "நான் எதையும் கற்கவில்லையே?" என்றேன். "நீங்கள் கற்றிருக்கிறீர்கள். கருவில்... உங்களுக்கு தெரியும்" என்றார். "இல்லை, எதுவுமே நான் கற்கவில்லை" என்று பதறியபடி சொன்னேன். "கற்றீர்கள். ஐயமே இல்லை. உங்கள் கருநினைவுக்குள் அது இருக்கிறது. அமர்ந்து கண்களை

மூடுங்கள். ஊழ்கத்திலிருந்து அதை மீட்டெடுங்கள்" என்று கிருதர் சொன்னார். கால்களை மடித்தமர்ந்து நெற்றிப்பொட்டில் நெஞ்சமர்த்தினேன். பின்கழுத்தில் ஓர் அறை விழுந்ததுபோல முன்னால் உந்தப்பட்டு பிறிதொரு கனவுக்குள் சென்று விழுந்தேன். அங்கு மிகச்சிறிய அறையொன்றுக்குள் நான் உடல் ஒடுக்கி படுத்திருந்தேன். அது அதிர்ந்து கொண்டிருந்தது. என்னைச் சுற்றி இளம்குருதி நுரைக்குமிழிகளுடன் அசைந்தது. நான் கைக்குழந்தையாக, இல்லை கருக்குழந்தையாக, இருந்தேன். குழந்தையென்று சொல்லமுடியாது. ஊன் துண்டு.

வெளியே எங்கோ ஒரு குரல் கேட்டது. அக்குரல் குருதிக் குமிழ்களாக விழிக்கு தெரிந்தது. தசையதிர்வாக உடலுக்கு தெரிந்தது. உப்புச் சுவையாக நாவுக்கும் குருதி மணமாக மூக்குக்கும் தெரிந்தது. திரும்பத் திரும்ப ஒரே சொல். வெவ்வேறு ஒலி அமைதிகளுடன் வெவ்வேறு ஒலி இணைவுகளுடன் ஒற்றைச் சொல். என் வலப்பக்கம் நானிருந்த அச்சிறிய அறையின் தோல்பரப்பு கிழிந்தது. என்னைச் சூழ்ந்த குருதியனைத்தும் கிழிசலினூடாக வெளியே சென்றது. நான் அதை நோக்கி கையை நீட்டியபோது மொத்த அறையும் சுருங்கி அப்பிளவினூடாக என்னை வெளியே துப்பியது.

விழித்து ஆசிரியரின் அறைக்குள் எழுந்து "ஒரு சொல்! எனக்குத் தெரியும்!" என்றேன். "அதை சொல்லுங்கள்" என்றார் கிருதர். "அச்சுடரை நோக்கி கை நீட்டி அதை சொல்லுங்கள்" என்றார். அகல் விளக்கை என் அருகே கொண்டு வந்தார். நான் அதை நோக்கி கைநீட்டி அச்சொல்லை சொன்னேன். துயிலில் இருந்து விழித்தெழுந்ததுபோல் ஆசிரியர் தன்னுணர்வு கொண்டார். அவரது வயிறு முன்பெனவே ஆயிற்று. கையூன்றி எழுந்தமர்ந்து "என்ன நிகழ்ந்தது?" என்றார். "நீங்கள்

எழுந்துவிட்டீர்கள். சஞ்சீவினி உங்களை மீட்டுவிட்டது” என்றார் கிருதர்.

“இவையனைத்துமே கனவா என உள்ளம் மயங்குகிறது” என்றான் கசன். “பித்துநிலை என்பது எத்தனைபெரிய துயர் என இப்போது உணர்கிறேன். முடிவின்மையிலிருந்து செதுக்கி எடுக்கப்பட்ட சிறிய இடம்தான் தன்னிலை. அவ்வெல்லைக்குள் மட்டுமே நாம் வாழமுடியும். உணர்வு அறிவு இருப்பு அனைத்துக்கும் அங்குமட்டுமே பொருள்… அவ்வெல்லை அழியுமென்றால் காற்றில் கற்பூரநிலைதான்.” அவள் அவன் கைகளைப்பற்றி “சென்று படுத்து இளைப்பாறுங்கள். இன்னீர் கொண்டுவரச்சொல்கிறேன், அருந்துங்கள். நாளை பார்ப்போம்” என்றாள். “ஆம், படுத்தாகவேண்டும். கனவுகளின்றி துயின்றாகவேண்டும்” என்று சொன்னபின் கசன் தலைகுனிந்து நடந்து சென்றான். அந்த நடை மீண்டும் அவள் அகத்தை சுண்டியது. அவள் நன்கறிந்த சுக்ரரின் நடை அது.

# மாமலர் - 61

### 61. தென்முனைக்கன்னி

அன்று இரவு முழுக்க அவள் இனித்துக்கொண்டே இருந்தாள். உடலே தேனில் நாவென திளைத்தது. மாலையில் சிவந்து உருகி முறுகி இருண்ட ஒளி, மயங்கி எரிந்து அணைந்த மரங்கள், அந்தியின் இளநீராவிக்காற்று, எழுந்து வலுத்து அடங்கிய புள்ளோசை, அதன்பின் எழுந்த இரவுக்குளிர், சீவிடுகளின் இசை என அனைத்தும் இனித்தன. முற்றிலும் இனித்து இப்படி ஒருத்தி இருக்கமுடியுமா? இத்தனை இன்பத்தை மானுடருக்கு அளிக்குமா தெய்வங்கள்?

பொறுக்கா என்றால் வஞ்சம் கொண்டு கருக்கட்டும் அவை. எழுந்து தங்கள் படைக்கலங்கள் வீசி எதிர்வரட்டும். அழிக்கட்டும் என்னை. மீளாநரகில் தள்ளட்டும். ஆயினும் இத்தருணத்தில் இனித்து இனித்து சாவென்றும் வாழ்வென்றும் இல்லா இருப்பொன்றில் நிறைவேன். இக்கணங்கள் ஒவ்வொன்றும் ஒளிரும் மணிகள். இடைவெளியே இல்லாமல் விண்மீன்கள் செறிந்து உருவான வானம். இது போதும். இருந்து முழுத்து உதிர்வதற்கும்மேல் இப்பெருநிலை.

அவள் திண்ணையிலேயே விண்மீன்களை பார்த்துக்கொண்டு படுத்திருந்தாள். பின்னர் அவற்றை விழிக்குள் நிறைத்தபடி இமைமூடினாள். சித்தப்பரப்பில் ஒட்டியிருந்து மின்மினித்தன அவை. எழுந்து பறந்து ஒளிக்கோடுகள் நீட்டின. பின்னி நெய்து வலையென்றாயின. அவற்றில் அவையே சிக்கியிருந்து தவித்தன. உதிர்ந்தன. விழுந்த இடத்தில் பற்றிக்கொண்டு மூண்டெழுந்தன. விழித்தபோது அவள் வெறுங்கூடென்றிருந்தாள். வாழ்வதற்கு மீதி ஏதுமில்லை என உணர்ந்தவளாக ஓய்ந்த கைகளுடன் அங்கே கிடந்தாள்.

எழுந்து குழல்முடிந்து ஆடைதிருத்தி நீராடக் கிளம்பியபோது உடலை உந்தவே முடியவில்லை. நனைந்த ஆடையென முள்ளும் கல்லும் தரையுமாக அப்படியே உடல்படிந்துவிடவேண்டும் போலிருந்தது. தனிமையில் நீராடினாள். மூழ்கி மீன்களை நோக்கி புன்னகை புரிந்தாள். எழுந்தபோது நீர் அவளை மீட்டிருந்தது. திரும்ப வரும்போது உதடுகளில் மெட்டு மீண்டு வந்திருந்தது. நடையில் துள்ளலும் கைகளில் மெல்லிய அலைவும் இருந்தது. வேங்கைக்கிளையை எட்டிப் பற்றி உலுக்கி மலருதிர்த்தாள்.

ஆடைமாற்றியபின் உணவருந்துவதற்கு முன்னர் அவனை பார்க்கவேண்டுமென தோன்றியது. அவன் குடிலுக்குள் அசைவு தெரிந்தது. ஒவ்வொருமுறையும் அவன் அசைவை காண்கையில் எழும் திடுக்கிடல் விலகி மெல்லிய உவகை மட்டுமே என ஆகிவிட்டிருந்த மாற்றத்தை அவளே உணர்ந்தாள். படியேறி குடில்வாயிலில் நின்று உள்ளே நோக்கினாள். அவன் மான்தோலை விரித்து தன் உடைமைகளை அதில் வைத்துக்கொண்டிருந்தான். “உன்னை தேடிவர எண்ணினேன், தேவி. நான் இன்று கிளம்புகிறேன்” என்றான்.

அவள் திகைப்புடன் “எங்கே?” என்றாள். “நான் வந்த இடத்திற்குத்தான். நேற்று ஆசிரியர் என்னிடம் நீ வந்த பணி முடிந்துவிட்டது என்றார்.” அவள் “என்ன சொல்கிறீர்கள்?” என்று பதறும் குரலில் கேட்டபடி உள்ளே சென்றாள். “ஆசிரியர் நேற்று அவ்வாறு சொன்னபோது எனக்கும் புரியவில்லை. ஆனால் இரவின் கனவில் அனைத்தும் தெளிந்தன” என்றான் கசன். “பிறிதொருவர் என்றால் இக்கணமே உன்னை கொல்ல நான் ஆணையிட்டிருப்பேன் என்றார் ஆசிரியர். அது நிகழலாகாதென்றுதான் உன் தந்தை உன்னை அனுப்பியிருக்கிறார். நன்று, உன்னை வாழ்த்தி வெல்க என்று சொல்லளித்து மட்டுமே என்னால் அனுப்ப முடியும். சென்று வருக என்று சொன்னார்.”

“இல்லை ஆசிரியரே என்று நான் சொல்லத் தொடங்க, இனி என் முன் வந்தமர வேண்டாம். உனக்களிக்க என்னிடம் இனி எந்தச் சொல்லும் இல்லை, செல்க என்றார். நான் அவரை வணங்கி வெளியே வந்தேன். அவர் என்னை புறக்கணிக்கிறார் என்னும் துயர் முதலில் எனக்கிருந்தது. அவர் அறைவிட்டு வெளியே

வந்ததுமே அனைத்துக் கட்டுகளும் அறுபட்டு விலகியதுபோல் உணர்ந்தேன். இப்போது நான் வந்தது எதற்கென்றும் மீள்வது எங்கென்றும் தெளிவாக தெரிகிறது. என் பணி முடிந்துவிட்டது. நான் கிளம்ப வேண்டும்" என்று கசன் சொன்னான்.

உள்ளே சென்று அவனருகே நின்று சிறுமியைப்போல் தலையசைத்து "நானும் வருகிறேன்" என்று தேவயானி சொன்னாள். "எனக்கும் இச்சிறிய தவக்குடிலும் இங்கு மீள மீள நிகழும் உணர்வலைகளும் சலித்துவிட்டன. நாம் செல்வோம்" என்றாள். அவன் "நீயா? நீ எப்படி என்னுடன் வரமுடியும்?" என்றான். "என்ன சொல்கிறீர்கள்" என்று அவள் திகைப்புடன் கேட்டாள். "தேவி, நீ இங்கு என் கனவிலிருக்கிறாய். நான் இங்கிருந்து அகன்றதும் இக்கனவு கலைந்து என் முந்தைய உலகிற்கு சென்று சேர்வேன். இந்த மானுட உடலுடன் மானுட சித்தத்துடன் நீ அங்கு வரமுடியாது. ஒவ்வொருவரின் கனவும் முற்றிலும் தனித்த பாதை. பிறர் அதில் காலெடுத்து வைக்கவே இயலாது" என்றான் கசன்.

தேவயானி அவன் கைகளைப் பிடித்து உலுக்கியபடி "என்னைப் பிரிந்து எப்படி செல்ல முடியும் நீங்கள்?" என்றாள். "ஏன்?" என்று அவன் கேட்டான். அவன் விழிகளை நோக்கியபோது அங்கு தெரிந்த தெளிவு அவளை துணுக்குறச் செய்தது. "நானின்றி நீங்கள் எப்படி செல்லமுடியும்?" என்று அவள் மேலும் உரத்த குரலில் மீண்டும் கேட்டாள். "ஏன், நான் இங்கு தனியாகத்தானே வந்தேன்? இங்கு உங்களுடன் இருந்தேன். என் பணி முடிந்தது என்று ஆசிரியரே உரைத்து விட்டார். நான் இங்கிருந்து சென்றாகவேண்டும். இங்கிருக்கும் அனைத்தையும் விட்டுவிட்டுத்தான் செல்ல முடியும்."

அவளுக்குள் சினம் எழுந்தது. கைவிரல்கள் பதறத்தொடங்கின. “விளையாடுகிறீர்களா?” என்றாள். “நீ என்ன கேட்கிறாய் என்று எனக்கு புரியவில்லை” என்று அவன் சொன்னான். “நான் உங்கள் துணைவி. என்னை நீங்கள் மணம் கொண்டாக வேண்டும். தந்தையிடம் அதைப் பற்றி பேசுவதாக சொன்னீர்கள்” என்றாள். அவன் அவள் கையை உதறி பின்னால் ஓரடி எடுத்து வைத்து “என்ன சொல்கிறாய்? நீ எப்படி எனக்கு துணைவியாக முடியும்? உன் தந்தையின் வயிற்றிலிருந்து பிறந்தவன் நான். உனக்கு உடன்பிறந்தான்” என்றான்.

பல கணங்களுக்கு அவள் சித்தத்தில் சொற்கள் ஒன்றுடன் ஒன்று முட்டி இறுகி செயலற்றிருந்தன. பின்னர் நோய்கொண்டு வலிப்பெழுந்தவள்போல முகம் சுளிக்க உடல் உதற “அறிவிலிபோல பேசலாகாது. நாம் உடல் ஒன்றானவர்கள், உளம் இணைந்தவர்கள். என் கணவனன்றி பிறிதொரு நிலையை நான் உங்களுக்கு அளித்ததேயில்லை” என்று சொன்னாள். அச்சம் கொண்டு விரைத்தவன்போல “நானா? நாமிருவருமா?” என்று அவன் கேட்டான். “ஆம், நாம் இருவரும். நாம் ஒன்றானோம். நினைவில்லையா உங்களுக்கு?”

“மெய்யாகவே எனக்கு நினைவில்லை. நான் உணர்வதெல்லாம் இக்கனவில் எழுந்தபிறகு நிகழ்ந்ததை மட்டும்தான். இங்கு சுக்ரரின் மைந்தனாக நான் பிறந்திருக்கிறேன். உன்னை என் உடன்பிறந்தாளென்றன்றி வேறெவ்வகையிலும் கொள்ள முடியாது. அது பெரும் பாவம். குலப்பழி சேரும். மூதன்னையர் சீற்றம்கொள்வார்கள். தெய்வங்கள் முனியும்” என்றான். அவள் “போதும் நிறுத்துங்கள்!” என்று கூவியபடி பாய்ந்துசென்று அவன் இடைக்கச்சையை பற்றிக்கொண்டாள். “துய்த்து தூக்கி

எறிந்து செல்லும் இழிமகளென்று என்னை எண்ணினீர்களா? பிறிதொரு எண்ணமிலாது உங்கள் காலடியில் பணிந்தமையால் எளியவளென்று நினைக்கிறீர்களா?" என்றாள்.

"தேவி, உன் சினம் எனக்கு புரிகிறது. ஆனால் அது எதனால் என்று மட்டும் தெரியவில்லை. ஒவ்வொன்றும் தனித்தனிக் கனவெனவே நான் இங்கு இருந்து வந்திருக்கிறேன். இக்கனவில் நான் உன் தமையன். உன் உடன்குருதியன். ஒருபோதும் உன்னை என் துணைவியாக ஏற்க இயலாது. அதைவிட நான் உயிர் துறப்பேன்" என்றான். அவன் உரைப்பதனைத்தும் முற்றிலும் உண்மையென ஒருகணத்தில் உளமுணர உடல் தளர்ந்து அவள் பிடியை விட்டாள். அறியாது இரு கைகளையும் நெஞ்சில் கூப்பி "அருள் காட்டுங்கள்! என்னை கைவிட்டுவிட்டு செல்லாதீர்கள். பிறிதொரு வாழ்வு எனக்கில்லை" என்றாள்.

"உங்கள் காலடிகளில் அடிமையென இருக்கவும் சித்தமாகிறேன். பெண்ணென்றும் முனிவர் மகளென்றும் நான் கொண்ட ஆணவம் அனைத்தையும் அழித்து இங்கு நின்று இறைஞ்சுகிறேன். என்னை கைவிட்டு விடாதீர்கள்" என்றாள். அச்சொற்களை சொன்னமைக்காக அவளுக்குள் ஆழ்தன்னிலை ஒன்று கூசியது. எத்தனைமுறை எத்தனை ஆண்களிடம் பெண்கள் சொல்லியிருக்கக்கூடியவை அவை! அந்த தன்னிரக்கத்தால் அவள் மெல்லிய கேவல்களுடன் அழத்தொடங்கினாள்.

அவன் முகம் இரக்கத்தால் கனிந்தது. அவள் கண்களில் நிறைந்து கன்னங்களில் வழிந்து நெஞ்சில் சொட்டிய நீரைக் கண்டு அவன் விழிகளும் நிறைந்தன. "தேவி, நீ என்னை வணங்குவதைவிட மும்முறை நான் உன்னை வணங்குகிறேன்.

உன் அடிகளில் என் தலைவைத்து மன்றாடுகிறேன். இவ்வெண்ணத்தை ஒழி. இது நீ கொண்ட பொருந்தா உளமயக்கு. உன் தந்தையின் கருவிலமைந்தவன் நான், நாளை அவருக்கு நீர்க்கடன் செய்ய கடமைகொண்டவன். அவர் குருதிகொண்ட மைந்தன். என் பிறவிமுன் வாழ்க்கையின் நினைவுகள் அனைத்தும் நம் தந்தையிடமிருந்து வந்தவை, நாம் இணையக்கூடாது. அவ்வெண்ணமே என் உள்ளத்தைக் கூசி அருவருக்கச் செய்கிறது” என்றான்.

அவள் கூப்பிய கைகள்மேல் தன் நெற்றியை வைத்து தோள்கள் குலுங்க அழுதாள். அவன் அதை நோக்கியபடி அசைவற்று நின்றான். பின்னர் “இக்கணத்தில் நாம் எத்தனை பேசினாலும் பொருளில்லை. நான் விலகிச்செல்வதொன்றே வழியாகும். நீயே எண்ணிப்பார்! இத்தருணத்தின் உணர்வழுத்தங்கள் விலகுகையில் நான் சொல்வது எத்தனை சரியானதென்று உன் உள்ளமே உணரும்” என்றபின் தன் மூட்டையை கையில் எடுத்துக்கொண்டு வெளியேறப் போனான்.

அவன் உடல் திரும்பியதும் அவள் உடல் அதிர்ந்தது. அவனுடைய ஒவ்வொரு காலடி பதியும்போதும் அது தன்மேல் விழுந்ததுபோல் விதிர்த்தாள். அவன் கடந்து சென்று முற்றத்தில் இறங்கியதும் வானிலிருந்து சரடறுந்து விழுபவளைப்போல அவனுக்குப் பின்னால் விரைந்தாள். “நில்லுங்கள்!” என்றாள். “நில்லுங்கள்...” என்று குரலெழுப்பி கூவினாள். அவன் திரும்பி சினத்துடன் “ஏன் கூச்சலிடுகிறாய்? இங்கு நம்மைச் சுற்றி விழிகளும் செவிகளும் நிறைந்துள்ளன. அவர்களால் நம் உணர்வுகள் கதையென ஆகி சிறுமைப்பட இடமளிக்கலாகாது” என்றான்.

“அறியட்டும், இவர்கள் அத்தனை பேரும் அறியட்டும்” என்றாள் தேவயானி. “விண்ணும் மண்ணும் அறியட்டும், நான் உங்கள் துணைவி. நாம் உடல்கூடியவர்கள். நீங்கள் எனக்கு அளித்த சொல் என் கையிலும் நெஞ்சிலும் உள்ளது. அதை மீறி நீங்கள் செல்ல முடியாது!” கசன் நிலைக்குரலில் “நான் எச்சொல்லையும் அளிக்கவில்லை. அவ்வண்ணம் சொல்லளித்திருந்தால்கூட அது ஒரு பொருட்டல்ல. தெய்வங்களின் நெறிக்கெதிராக எவரும் வாய்மையை துணைக்கழைக்க முடியாது. நெறிநூல்கள் அதை ஒப்புவதில்லை. ஐயமிருந்தால் உன் தந்தையிடம் சென்று கேள்!” என்றான்.

“எவரிடமும் நான் கேட்க வேண்டியதில்லை. எந்த தெய்வமும் எனக்கு சான்று சொல்ல வேண்டியதில்லை. எனக்குத் தெரியும், நான் உங்கள் துணைவியென்று” என்றாள். “நன்று, ஒன்று சொல்கிறேன். உன் தந்தையிடம் அல்லது இங்கிருக்கும் முனிவர்களிடம் சென்று கேள்! அவர்கள் ஒருவரேனும் நெறிநூல்களின்படி நான் உன் கணவனாகலாம் என்று சொன்னால் தலைவணங்குகிறேன்” என்றான் கசன். “ஆனால் உனக்குக் கணவனாக வாழ என் உடலும் உள்ளமும் ஒப்பாது. அக்கணமே வாளெடுத்து என் கழுத்தை அறுத்துகொண்டு உன்முன் இறந்து விழுவேன்” என்றான்.

அவள் வஞ்சத்துடன் பற்களைக் கடித்து “அவ்வாறெனில் அதுவே ஆகுக! என் கணவன் என்று ஒரு சொல் உரைத்துவிட்டு இங்கு குருதி சிந்தி வீழுங்கள். உங்கள் உடல் தொட்டு நான் உங்கள் துணைவி என்று சொல்லி துவராடை அணிந்து கைம்மை நோன்பேற்கிறேன். இப்பிறவி முழுக்க புலனொடுக்கி வாழ்ந்து மடிகிறேன். துணைவியென்று

வாழ்ந்தேன், கைம்பெண்ணென்று இறப்பது அதன் நீள்முறையே. என்னை நீங்கள் துறந்துவிட்டுச் செல்ல ஒருபோதும் ஒப்பமாட்டேன்” என்றாள்.

கண்களில் கடும்சினத்துடன் கசன் அவளை நோக்கி “அவ்வண்ணமெனில் உனக்கொரு வாய்ப்பளிக்கிறேன். எது என் வழியோ அதில் காலுறுதி கொண்டு கடந்து செல்வதே என் தெரிவு. உன்னை துறந்து செல்கிறேன் என்று அறிவித்து என்னை நீ கொல்லலாம். இறந்தவன் உன் கணவன் என்று உலகுக்கு அறிவிக்கலாம். அதன் பின் என்னுடன் நீயும் சிதையேறலாம். நம் இருவர் உயிர்களும் மூச்சுலகுக்கு செல்லட்டும். அங்கு மூதாதையர் முடிவு செய்யட்டும், நீ என் துணைவியாக முடியுமா இல்லையா என்று” என்றான்.

பின்னர் இதழ்கள் ஏளனத்துடன் கோட “ஆணவமும் பெருவஞ்சமும் கொண்டவள் நீ என்று கிருதர் சொன்னார். வஞ்சத்தின் உருவாகவே உன் அன்னை இங்கு வாழ்ந்தாள் என்றார். உனது பேரன்னை வஞ்சப்பெருமகளாக ஏழன்னையரில் ஒருத்தி என அமர்ந்து பூசையும் பலியும் கொள்கிறாள். நீயும் அவ்வுரு எடுக்கலாம்” என்றான். அவள் விழிகளை அச்சமற்ற கண்களுடன் நோக்கி “அதோ, சுவரில் மாட்டப்பட்டுள்ளது என் உடைவாள். ஒரே வெட்டில் என் கழுத்தை துணித்து தலையுருள வைக்கும் அளவுக்கு கூரியது. அதற்கு நிகரான கூர்மை உள்ளத்தில் உள்ள எவராலும் அதை கையாளமுடியும்” என்றான்.

பல்லைக் கடித்து இரு கைகளையும் முறுகச் சுருட்டி, குருதி கொப்பளித்து செந்தழல் சிவப்பு கொண்ட முகத்துடன், கசிந்து நீர்ப்படலமாகி நோக்கு மறைந்த கண்களுடன் அவள் அங்கு நின்றாள். சீரான காலடிகளுடன் அவன் கோலொன்றை எடுத்து

அதில் பொதியை மாட்டில் தோளில் வைத்தபடி அவளை நோக்கினான். “ஐயுற வேண்டாம்! நம்மிடையே எழுந்த இச்சொல்லாடலை முடிக்கும் எளிய வழி அதுவே” என்றான். அவள் உடல் பதறிக்கொண்டிருந்தது. “நீ முடிவெடுக்க வேண்டும், தேவி. அதுவரை இங்கு காத்திருக்கிறேன்” என்றான்.

அவள் நூறுமுறை அந்த வாளை நோக்கி சென்றாலும் உடல் அசைவு கொள்ளவில்லை. பின்னர் வளைகள் ஒலிக்க அவள் இரு கைகளும் தளர்ந்து விழுந்தன. “என்னால் இயலாது. ஏனெனில் நான் உடனிருந்தபோது அத்தனை நெகிழ்ந்துவிட்டேன். இரவும் பகலும் இனித்து இனித்து பிறிதொருத்தியாக மாறிவிட்டேன். இன்று என் கைகளில் படைக்கலம் நிற்காது” என்றாள் தளர்ந்த குரலில். “உங்களையல்ல, எவரையும் கொல்ல என்னால் இயலாது. ஆனால் நீங்கள் இங்கு வந்தது ஏனென்று இப்போது தெரிகிறது. என்னை நாற்களக் காயாக நகர்த்தி எந்தையை வென்று சஞ்சீவினியை கொண்டு செல்கிறீர்கள். எதன் பொருட்டு இங்கு வந்தீர்களோ அது நிறைவேறலாகாது என்று நான் தீச்சொல்லிடுகிறேன்.”

அவள் குரல் வஞ்சத்துடன் எழுந்தது. “அச்சஞ்சீவினி நுண்சொல்லை ஒருமுறைகூட உங்கள் நா இனி சொல்லலாகாது” என்றாள். அவன் திகைத்து ஏதோ சொல்ல முயல கைநீட்டி “நீர் கற்ற வேதச்சொல் அனைத்தும் கோடைவானில் முகிலென கரைந்து மறைக!” என்றாள். இடறி அழுகையென்றான குரலில் “நெஞ்சம் எரியும்போதும் இதற்கப்பால் ஒரு கடுஞ்சொல் எடுக்க என்னால் இயலவில்லை. அன்னையென்றிருப்பதைப்போல் ஆற்றலின்மை பிறிதொன்றில்லை. இப்புவியிலுள்ள

அனைத்துயிர்களும் மிதிக்கக் கிடக்கும் நிலப்புழு என ஆகும்நிலை அது” என்றபின் திரும்பி இறங்கி படிகளில் கால் வைத்து விழுந்துவிடப்போகிறவள்போல் தள்ளாடினாள். தலைகுனிந்து கைகளைக் கோத்து நின்று தன்னை நிலை திரட்டிக்கொண்டு தன் குடில் நோக்கி ஓடினாள்.

படிகளில் இறங்கி அவள் பின்னால் வந்த அவன் உரத்த குரலில் “நான் தீச்சொல்லிடுகிறேன்! நான் சொன்னவை மெய்யென்றால் உன் ஆணவம் முற்றழிந்து வெறும் பெண்ணென உணர்ந்து நிலம் ஒட்டிக் கிடந்து இறப்பாய். அன்று நீ உதிர்க்கும் கண்ணீர் காண நான் வந்து நிற்பேன்” என்றான். அவனை திரும்பிப் பார்த்தபின் பற்கள் உரசிக்கொள்ள நெஞ்சிலிருந்து எழுந்த சொற்களை நா முற்றிலும் மறுக்க நின்று துடித்தபின் திரும்பி நடந்து தன் குடிலுக்கு சென்றாள் தேவயானி.

🐾தேவயானியின் சிற்றாலயத்தின் படியிலமர்ந்து முண்டன் சொன்ன கதைகளை தான் கேட்டுக்கொண்டிருப்பதை உணர்ந்து நிலைமீண்டான் பீமன். திரும்பி கருவறைக்குள் பீடத்தில் அமர்ந்த சிலையை பார்த்தான். அவ்விழிகள் சற்று முன்புவரை நோக்கு கொண்டிருந்தன என்றும், தான் விழி திருப்பியபோது கன்மைக்கு மீண்டன என்றும் தோன்றியது. திறந்த வாயிலின் வழியாக வந்த வெளிச்சம் சிலையில் படிந்து பெரிய குழல் முடிச்சிலிருந்து கன்னம் தோள் இடையென வழிந்திருந்தது. கரிய சுடர். இளங்காற்றடித்தால் அது அசைவு கொள்ளக்கூடும்.

முண்டன் “ஆணுக்கு போர் தோல்வி, பெண்ணுக்கு கைவிடப்படுதல் இரண்டும் இறப்புக்கு நிகரான தருணங்கள். முற்றிறப்பு எளிது, அது முடிந்து போவது. மீண்டெழும் வாய்ப்புள்ள இறப்பென்பது மாளாத் துயர்ப்பெருக்கு. அந்த

மீண்டெழும் நுனிவரை ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு அணுவும் இறப்பை நீட்டிக்க வைக்கும். அது கோடி இறப்பின் நிரை” என்றான்.

“கசன் கிளம்பிச் சென்றான் அல்லவா?” என்று பீமன் கேட்டான். “ஆம், அவன் மீண்டபின்னரே அவன் எதையும் கொண்டுவரவில்லை என பிரஹஸ்பதி உணர்ந்தார். அவன் எங்கு சென்று எவ்வண்ணம் மீண்டான் என்றே அவனுக்கு நினைவிருக்கவில்லை. தேவர்கள் சஞ்சீவினியை அறியவேயில்லை. ஆனால் சுக்ரர் அந்நுண்சொல்லை கையாள்வதை ஒழிந்தார். ஆகவே போர் இரு பக்கமும் நிகர்நிலையில் முடிந்தது. மண்ணில் ஓர் இந்திரன் என்று விருஷபர்வனை தேவர் ஏற்றுக்கொண்டனர்” என்றான் முண்டன்.

“சுக்ரரின் குருநிலைவிட்டு சென்ற கசன் திரும்பிப் பார்க்கவே இல்லை. அம்பு நீரில் என காட்டுக்குள் சென்று மறைந்தான். அவன் வந்ததே இல்லையோ என ஐயம் எழுமளவுக்கு முற்றிலும் மறைந்தான். அங்கே எழும் ஒரு சிறு அசைவுகூட அதே புள்ளியில் அவன் மீண்டும் தோன்றி வரக்கூடும் என்று தோன்றச் செய்தது. அந்தப் புள்ளியை நோக்கி விழி நிறுத்தி தன் குடில் வாயிலில் அவள் நின்றிருந்தாள். சித்தம் அசைவற்றிருந்ததனால் அவள் விழிகளும் அசைவிழந்திருந்தன.

அவன் செல்வதை குடிலில் இருந்த பிறர் உணர்ந்தனர். அவனுக்கு வாழ்த்துரைக்கவும் முறைமைச் சொற்கள் சொல்லி விடையளிக்கவும் பலர் விழைந்தனர். அவர்கள் அவளை எண்ணி தயங்கி தங்கள் முற்றங்களிலும் அடுமனைத் திண்ணைகளிலும் ஓசையின்றி நின்றிருந்தனர். அவன்

மறைந்த பின்பு மெல்ல நிலைமீண்டு மூச்சு ஒலிக்க ஆடையும் குழலும் திருத்தி தங்கள் இடங்களுக்கு செல்லத் திரும்பியபோது அவள் அப்புள்ளியிலேயே உறைந்துவிட்டதைக் கண்டு ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டனர். மேலும் சற்று நேரம் நின்று அவளை நோக்கினர். முற்றிலும் அசைவற்ற சுடர் அளிக்கும் அச்சம் என்னவென்றறிந்தனர்.

தங்கள் அறைகளுக்கு மீண்ட பின்னர்தான் உள்ளம் படபடத்துக்கொண்டே இருப்பதை உணர்ந்தனர். சாளரம் வழியாக பார்த்து தங்களுக்குள் தாழ்குரலில் பேசிக்கொண்டனர். “அங்கேயே நின்றுகொண்டிருக்கிறார்” என்றாள் அடுமனைத்தலைவி. “இயல்புதானே?” என்றாள் ஒரு முதுமகள். “நெடுநேரமாக நிற்கின்றார்” என்றாள் அடுமனைப்பெண்டு. “காலம் மறந்திருக்கும். உள்ளம் சில பொழுதுகளில் காலம் நிகழாத களம் ஆகிவிடும். ஆனால் உடல் ஒருபோதும் காலத்தை மறக்க முடியாது. அது எழுந்து உள்ளத்தை அசைக்கும். அப்போது மீண்டு வருவாள்” என்றாள் சத்வரின் முதுதுணைவி.

சுக்ரரின் குடில் திண்ணையில் நின்றிருந்த சத்வர் கிருதரிடம் “அவளுள் இப்போது என்ன நிகழ்கிறதென்று எந்தக் காவியமாவது சொல்லியிருக்கிறதா?” என்றார். “அத்தனை காவியங்களும் அதை சொல்லவே முயல்கின்றன. எப்போதும் சொல்லப்படாத ஒன்று எஞ்சுகிறது. ஆகவேதான் ஒன்றிலிருந்து ஒன்றென காவியங்கள் எழுந்துகொண்டிருக்கின்றன” என்றார் கிருதர். அவளை நோக்கியபின் தலையை அசைத்து “என்னவென்றறியாமல் நெஞ்சும் வயிறும் பதைத்துக்கொண்டே இருக்கின்றன, சத்வரே” என்றார் கிருதர். “சிறுமியாக இவளை

பார்த்திருக்கிறேன். ஒருபோதும் இப்பெருந்துயர் வடிவில் அவளை காண்பேன் என எண்ணியதில்லை.”

அவளை நோக்கியபடி கால் தளர்ந்து மெல்ல திண்ணையில் அமர்ந்தார். கைகளை முழங்காலில் நாட்டி அதில் தலையை வைத்து அவளை நோக்கியபடி அமர்ந்திருந்தார். “நான் சென்று அவளை அழைக்கலாமா என்று எண்ணுகின்றேன்” என்றார் சத்வர். கிருதர் வெறுமனே தலையை மட்டும் அசைத்தார். இரு படிகளில் இறங்கியபின் சத்வர் தயங்கி கிருதரிடம் “ஆனால் அத்தனிமைக்குள் நுழைய பிற மானுடருக்கு உரிமை உண்டா என்ன? அங்கு இப்போது தேவர்களும் தெய்வங்களும்கூட விலகி நின்றிருப்பார்கள் அல்லவா?” என்றார்.

கிருதர் அச்சொற்களை கேட்டதாக தெரியவில்லை. சத்வர் சென்று திண்ணையின் பிறிதொரு மூலையில் அமர்ந்து தேவயானியை பார்த்துக்கொண்டிருந்தார். அப்பால் குடில்களிலிருந்து ஒவ்வொருவராக வந்து தேவயானியை நோக்கிக்கொண்டிருந்தனர். காற்றில் ஆடையும் குழலும் அசைந்தாட அவள் நின்றிருந்தாள். அவ்வசைவுகள் அனைத்துமே அசைவின்மை என்று தோன்றும் அளவுக்கு அவள் விழிகள் நிலைகொண்டிருந்தன.

“அவர் சென்ற பாதையைத்தான் பார்க்கிறார்” என்றாள் அடுமனைப்பெண். “அங்கு அவர் நிற்பதுபோலவே தோன்றுகிறது. தேவி அருகே சென்று நின்றால் அவரை பார்த்துவிடலாம் என்பதுபோல.” விறலி ஒருத்தி “பிரிவைப்போல பெருந்துன்பம் பிறிதில்லை. இறப்பு அதனினும் சிறிது. இறப்புக்கு பொறுப்பேற்றுக்கொள்ள தென்திசைத் தேவன் இருக்கிறான். பிரிவுக்கு மானுடரே பொறுப்பேற்றுக் கொள்ளவேண்டும்” என்றாள்.

“இந்த தருணத்தைக் கடந்தார் என்றால் அவர் மீள்வார்” என்றாள் முதுபெண்டு. “இங்கு நின்று இப்படியே உயிர்துறப்பவர்போல் தோன்றுகிறார்” என்றாள் பிறிதொருத்தி. கூர்மர் என்னும் முனிவர் “தென்திசைக் கடல்முனையில் ஒரு தேவி இவ்வாறு நிற்பதாக கதைகள் சொல்கின்றன. அவள் நிற்கத்தொடங்கிய பின்னரே பாரதவர்ஷத்தின் பெருநிலம் அவளுக்குப் பின்னால் பெருகி உருவாகியது என்கின்றது திரிசமுத்திர பிரபாவம் என்னும் நூல். பாரதவர்ஷத்தில் பிறந்து வாழ்ந்து மடிந்த அத்தனை கன்னியர் உள்ளங்களிலும் புகுந்து தன் வாழ்வை அவர்கள் வாழச்செய்வாள் அவ்வன்னை. காத்திருக்கும் கன்னியென தன்னை உணராத ஒரு பெண்ணும் இங்கு முழுமைகொள்ள முடிந்ததில்லை” என்றார்.

சொல்லிச் சொல்லி அத்தருணத்தை வெவ்வேறு வகையில் விரித்தெடுக்க அவர்கள் முயன்றனர். பின்னர் தெரிந்தது அத்தருணத்தை குறுக்கி அறிந்தவற்றுக்குள், அன்றாடம் வாழ்பவற்றுக்குள் கொண்டுசென்று நிறுத்தவே தாங்கள் முயன்று கொண்டிருப்பதாக. அது அச்சொற்களுக்கு அப்பால் முற்றிலும் தொடப்படாமல் நின்றுகொண்டிருந்தது. “ஏன் இத்தனை சொற்களை அள்ளி வைக்கிறோம்?” என்றார் முனிவர் ஒருவர். “ஏனெனில் சொல்லிலாது இதை நோக்கி நிற்பது நமக்கு அச்சமூட்டுகிறது” என்றார் பிறிதொருவர். “சொல்லிச் சொல்லி அச்சத்தை களைகிறோம். இறப்பை நோயை பிரிவை வலியை குறித்தே மனிதன் பெரிதும் பேசியிருக்கிறான்.”

அந்தியாயிற்று. காடு இருண்டது, வானும் இருண்டது. இறுதியாக நிலம் இருண்டது. எஞ்சிய ஏதோ ஒளியை தான் பெற்று மெல்லிய கோட்டுவடிவென வெளியில் அவள் தெரிந்தாள். மூங்கில்தூண் அருகே மெல்ல தோள் சாய்ந்து

அவன் சென்ற அக்கணத்தையே காலமென்றாக்கி நின்றுகொண்டிருந்தாள். இருளில் அவள் மூக்குத்தியின் அருமணியின் துளிவெளிச்சம் மட்டும் கூர்கொண்டிருந்தது.

# மாமலர் - 62

### 62. புதுப்பொற்கதிர்

இருளும் குளிரும் சுற்றியிருந்த காட்டிலிருந்து கிளம்பி குடில்களை சூழ்ந்துகொண்டபோது அடுமனைப்பெண் தேவயானியை நோக்கி “இன்னமும் அப்படியே நின்றிருக்கிறார். அவர் அங்கே நிற்கும்போது இங்கு என்னால் துயில முடியாது. நான் சென்று அழைக்கப் போகிறேன்” என்றாள். அவள் தோழி “அது நன்று. சென்று அழை” என்றாள். அடுமனைப்பெண் முன்செல்லப்போகும் அசைவு காட்டி மெல்ல அமைந்து “எப்படி நான் சென்று அழைப்பது? தெய்வம் போலிருக்கிறார்” என்றாள்.

“அதையேதான் நாங்கள் அனைவரும் எண்ணிக்கொண்டிருக்கிறோம். அவரைத் தொட்டு அழைக்கும் இடத்தில் இங்கே எவருமில்லை” என்றாள் ஒரு முதுமகள். “ஏன்? அவர் தந்தை இருக்கிறாரே. அவர் வந்து சொல்லலாம் அல்லவா?” என்றாள் ஓர் இளம்சேடி. “ஆம் அவரே சொல்லாதபோது நாம் என்ன சொல்வது?” என்றார் அவர்களுக்குப் பின்னால் நின்ற அடுமனைக்காவலர்.

சுக்ரரின் குடில்வாயிலில் நின்றிருந்த கிருதர் சுஷமரிடம் “இரவு முழுக்க நிற்கப்போகிறாளா?” என்றார். “நாமென்ன செய்வது?” என்றார் சுஷமர். சத்வர் “மானுடர் மிகச் சில தருணங்களிலேயே உடலழிந்து வெறும் உள்ளமென

இருக்கிறார்கள்” என்றார். “ஆசிரியரிடம் போய் சொல்வோம். அவர் சென்று பேசட்டும்” என்றார் கிருதர். “ஆசிரியரிடம் நீங்களே சென்று சொல்லுங்கள், உங்கள் அளவுக்கு அணுக்கமல்ல பிறர்” என்றார் சத்வர். “ஆம், நீங்களே சொல்ல முடியும், கிருதரே” என்றார் சுஷமர்.

கிருதர் சில கணங்கள் தலைகுனிந்து எண்ணி நோக்கிவிட்டு எழுந்து குடிலுக்குள் சென்று சிறிய அகல்விளக்கின் ஒளியில் ஏடுகளை நோக்கிக்கொண்டிருந்த சுக்ரரின் அருகே சென்று அமர்ந்து “வணங்குகிறேன், ஆசிரியரே” என்றார். சுக்ரர் நிமிர்ந்து நோக்கினார். “தாங்கள் அறிவீர்கள், தேவி...” என்றார். “ஆம்” என்றார் சுக்ரர். “தாங்கள் சென்று அவளை அறைக்குள் சென்று துயில்கொள்ளும்படி சொன்னால்...” என்றார் கிருதர். “அங்கு நானும் நுழைய முடியாது” என்றார் சுக்ரர். “நுழைந்தாலும் அயலவனாக வெற்றுச் சொற்களைதான் சொல்ல முடியும். அதைவிட இங்கிருந்து எதுவும் நிகழவில்லை என்று எண்ணி நூல்களுக்குள் புகுந்துகொள்வதே சரியான வழியாக இருக்கும்.”

கிருதர் “அவள் நிலை அச்சமூட்டுகிறது” என்றார். சுக்ரர் சுவடியைப் பார்த்தபடி “எப்படியும் எதிர்கொண்டாகவேண்டிய தருணம். அனைத்து உணர்வுகளும் இப்படி ஓர் இரவிலேயே வெடித்து பீறிட்டு வெளியேறிவிடுமென்றால் விடுபடுவது எளிது” என்றார். “அதை அவள் உள்ளமும் உடலும் தாங்க வேண்டும்” என்றார் கிருதர். “ஆம், இறந்து மீள்வது அது. மீள வேண்டுமென்று உள்ளிருப்பது விழைந்தால் மீளலாம். பற்று விலகுமென்றால் பறந்தகலலாம். நாம் ஒன்றும் செய்வதற்கில்லை” என்றபின் பிறிதொரு சுவடியை எடுத்து எழுத்தாணியால் எழுதத்தொடங்கினார்.

எழுத்தாணி ஓலையை கீறிச்செல்லும் ஓசையைக் கேட்டபடி கிருதர் அமர்ந்திருந்தார். சில கணங்களுக்குப்பின் அது தன் தலைக்குள் மெல்லிய தோல்சவ்வொன்றை உரசிச்செல்வதுபோல் உணர்ந்தார். உடல் குறுக்கி, பற்கள் கிட்டித்து உரச, கண்கள் நிறைய இருமுறை உலுக்கிக்கொண்டார். கையூன்றி எழுந்து சுக்ரரை வணங்காது வெளியே சென்றார். வெளியே அந்தி இருட்டிவிட்டிருந்தது. குடில்களுக்குள் எழுந்த அகல்விளக்குகளின் ஒளி வாயில்கள் சாளரங்களினூடாக ஆங்காங்கே நீள்சதுரமாக விழுந்து கிடந்தது. தொலைவில் இருந்த குடில்களின் வாயில்கள் வானில் பறந்து நிற்பவைபோல் தோன்றின.

தேவயானி அதே இடத்தில் அவ்வாறே நின்றிருந்தாள். கிருதர் "ஆம், இங்கிருந்து நோக்கிக்கொண்டிருக்க வேண்டியதுதான். அடுத்த காய்நகர்வை அவளோ காலமோ நிகழ்த்தட்டும்" என்றபின் மெல்ல அமர்ந்தார். அச்சொற்கள் அவரை எளிதாக்கின. "இன்றிரவு முழுக்க... நாளை ஒளி வரும்வரை இவள் இங்கிருந்து விலக மாட்டாள்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டார். "இங்கேயே இருக்கப்போகிறீரா?" என்றார் சத்வர். சுஷமர் "தங்களுக்கு வேண்டுமென்றால் மரவுரிப்போர்வை கொண்டு வருகிறேன்" என்றார். "வேண்டாம்" என்றார் கிருதர். "அவள் என் மகள். அங்கு அவள் இதை போர்த்தியிருக்கவில்லை." சுஷமர் "அவள் உடல் எரியால் ஆனது. குளிரை அவள் அறிவதில்லை" என்றார். கிருதர் மறுமொழி சொல்லவில்லை.

மறுபக்கம் அடுமனைத் திண்ணையில் அடுமனைப்பெண் சுவர் சாய்ந்து தேவயானியைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாள். முதுமகள் வந்து "இங்கு அமர்ந்திருப்பதைவிட அருகே சென்று

அவர் அருகே அமர்ந்திருக்கலாமே?" என்றாள். வேண்டாம் என்பதுபோல அவள் தலையசைத்தாள். "குளிர் ஏறி வருகிறது. வெளியே அமர்ந்திருப்பது எளிதல்ல" என்றாள் முதுமகள். பின்னர் அவளும் அடுமனைப்பெண் அருகே அமர்ந்தாள். நேரம் செல்லச்செல்ல அவள் உடல் நடுங்கத்தொடங்கியது. "தெய்வங்களே..." என்று முனகியபடி உள்ளே சென்று மரவுரிப்போர்வை ஒன்றை தலைவழியாக போர்த்திக்கொண்டு அமர்ந்தாள்.

வானில் விண்மீன்கள் ஒவ்வொன்றாக கனிந்தெழுந்தன. இரவின் ஒலிகள் மாறுபடத் தொடங்கின. நீர்வெம்மை கொண்ட காற்று காட்டுக்குள்ளிருந்து பச்சிலை மணத்துடன் வந்து குடில்களைச் சூழ்ந்து கடந்து சென்றது. மீண்டுமொரு காற்றில் எங்கோ குருளையீன்ற அன்னைவேங்கை உறுமும் ஒலி கேட்டது. மீண்டுமொரு காற்றில் ஓநாய்களின் ஊளை எழுந்து வந்தது. மேலிருந்து குளிர் தொட்டுஉணரும் நீர்மை என எடை கொண்டு இறங்கி நிலத்தை மூடியது. கற்கள் குளிர்ந்து பனித்தன. இலைப்பரப்புகள் பனிப்படலம் சூடின. பின்னர் அவை எடை கொண்டு நுனி துளித்து உதிர்த்து விடுபட்டு எழுந்தசைந்தன. துளி சொட்டும் ஒலியாக மரங்கள் இருளுக்குள் பரவியிருந்தன. குளிர் கிருதரை நடுங்க வைத்தது. குளிர் ஒருவகையான அணைப்பு என உணர்ந்திருந்தார். அது ஓர் அச்சம் என அப்போதுதான் அறிந்தார். இருட்டை ஒரு போர்வை என இளமைமுதலே விரும்பியிருந்தார். அது ஓர் அழுத்தமென உணர்ந்தார்.

பின்காலையின் குளிரில் தன்னை அறியாமல் அவர் துயின்றுவிட்டிருந்தார். துயிலக்கூடாதென்று தன் உள்ளத்துக்கும் உடலுக்கும் இரவெல்லாம்

ஆணையிட்டுக்கொண்டிருந்தார். உள்ளம் பலமுறை உடலை கூர்முனையால் குத்தி திடுக்கிட்டு எழச் செய்துகொண்டே இருந்தது. பின்னர் அதை மீறி உடல் துயிலுக்குள் நழுவியது. துயின்ற உடல் மெல்ல அமர்ந்து உள்ளம் நான் துயிலவில்லை விழித்திருக்கிறேன் என்று சொல்லிக்கொண்டே இருந்தது. பின்னர் ஊர்தி இல்லாமல் ஊர்பவன் வெட்டவெளியில் நின்று தவித்து கரைந்தான். விழித்துக்கொண்டபோது தான் துயிலவில்லை விழித்துக்கொண்டிருக்கிறேன் என்று எண்ணிக்கொண்டிருந்ததைத்தான் முதலில் அவர் உணர்ந்தார். ஆகவே துயிலவே இல்லை என்ற எண்ணம் ஏற்பட்டது.

மறுகணம் தேவயானியின் நினைவெழ அவிழ்ந்திருந்த ஆடையை அள்ளி இடுப்பில் சுற்றியபடி திரும்பிப் பார்த்தார். அவர் உடல் குளிரில் நடுங்கி துள்ளிக்கொண்டிருந்தது. கண்கள் நோக்குக்கு பழகாமையால் வெறும் இருள் மட்டுமே தெரிந்தது. பின்னர் இருளுக்குள் இருள் வடிவங்களாக காட்சிகள் எழுந்தன. அங்குமிங்கும் எரிந்த ஓரிரு அகல்விளக்குகளின் சுடர்களைத் தொட்டு இணைத்து ஒளிப் பின்னணி ஒன்றை உருவாக்கி அதில் நிழலுருவங்கள் உயிர்பெறச் செய்தன விழிகள். தேவயானி தன் குடிலின் முன் திண்ணையில் சரிந்து விழுந்திருப்பதை அவர் கண்டார். முதல்கணம் எழுந்த திடுக்கிடலுக்குப்பின் அவள் துயில்கிறாள் என்று உள்ளம் உணர்ந்துகொண்டது.

ஆயினும் அச்சத்தில் கால்கூசி மெய் நடுங்கிக்கொண்டிருந்தது. மெல்ல நடந்து அருகே சென்று குனிந்து அவள் துயின்று கொண்டிருக்கிறாளா என்று பார்த்தார். முலைக்குவைகள் எழுந்தமைய சீரான மூச்சு வந்துகொண்டிருந்தது. ‘ஆம்’ என்று தனக்குள் சொல்லிக்கொண்டார். அதன் பின்னரே அங்கு

வரும்வரை தன்னிடமிருந்த ஐயம் என்பது ஒரு வகை விழைவோ என எண்ணி வியந்தார். அக்கதை அவ்வாறு முடிந்திருந்தால் காவியத்தன்மை கொண்டிருக்கும், சூதர் நாவில் பற்றிப் படர்ந்தேறும், தலைமுறைகள் அதை பாடும். அரியவை, உச்சம் நோக்கி செல்பவை வாழ்வில் நிகழ்ந்தாக வேண்டுமென்று உள்ளில் இருக்கும் ஒரு சிறுவன் ஏங்கிக்கொண்டே இருக்கிறான். எளியவன், பெரும்பாலும் அவன் ஏமாற்றமே அடைகிறான். அவனை உள்ளூறையும் அனைத்துமறிந்த முதியவன் ஒருவன் தலை தடவி ஆறுதல் சொல்கிறான்.

'ஆம், இவ்வாறுதான். எப்போதும் எங்கும் இவ்வாறுதான் இவை நிகழ்கின்றன. உச்சங்கள் நிலைகுலைவை உருவாக்குகின்றன. அரியவை பேரெடை கொண்டு அழுத்துகின்றன. அன்றாடம் என்பது ஒவ்வொரு கணமும் இயல்பாக நழுவி பிறிதொரு கணமாக ஆகும் ஒழுக்கன்றி வேறல்ல. உடல் தொடர்ச்சியாக முன்நோக்கி விழுவதே நடை. ஒரு கால் உந்த நிலைபெயர்ந்து முன்விழும் உடலை அடுத்த கால்வைப்பு தாங்கி அதற்கடுத்த விழுதலாக ஆக்குகிறது. விழுதலின் தொடராகவே மானுடர் அன்றாடம் நடந்து கொண்டிருக்கிறார்கள்.

அந்த எண்ணம் அவரை புன்னகைக்க வைத்தது. தன் குடிலுக்குள் சென்று சூடாக எதையாவது அருந்தவேண்டுமென்று எண்ணினார். அந்த உணர்வு எழுந்ததுமே பக்கவாட்டில் எவரோ நிற்பதைப்போல் உணர்ந்து திரும்பிப் பார்த்தார். அடுமனைப்பெண் விழித்தெழுந்து தூணருகே வந்து நின்றிருந்தாள். அவர் அவளை நோக்கி "துயில்கிறாள்" என்றார். "ஆம்" என்று அவள் சொன்னாள்.

“எனக்கு அருந்துவதற்கு ஏதாவது கொடு” என்றார். “வருக!” என்று அவள் அவரை அழைத்துச் சென்றாள்.

இன்நீர் அருந்திய பிறகு இருவரும் திரும்பி வந்து அடுமனைக் குடிலின் திண்ணையிலேயே அமர்ந்துகொண்டனர். ஒரு சொல்லும் உரையாடிக் கொள்ளவில்லை. விடியல் எத்தனை மெதுவாக நடக்கிறதென்பதை அன்றுதான் கிருதர் உணர்ந்தார். ஒளி எழுந்துவிட்டது என்று விழி அறிந்த பின்னரும் நெடுநேரம் வெயிலெழவில்லை. இருளின் இரும்புப்பரப்பில் கூரிய கல்லால் கீறியதுபோல முதல் பறவைக்குரல் எழுந்தபோது தலை திருப்பி தொலைவில் தெரிந்த விடிவெள்ளியை பார்த்தார். விடிந்துவிட்டது என்று தனக்கே சொல்லிக்கொண்டார். ஆனால் தொடர்ந்து பறவைக்குரல் எழவில்லை. ஊழிமுதல் அங்கேயே அப்படியே பதிந்திருப்பதுபோல் விடிவெள்ளி மின்னிக்கொண்டிருந்தது.

பிறிதொரு பறவைக்குரலுக்காக காத்து பொறுமை இழந்து, இன்று ஏதேனும் மாறுபட்டு நிகழ்கிறதா என்று ஐயம்கொண்டு, எழுந்து நின்று தொலைவில் தெரிந்த காட்டின் நிழல்கோட்டையை பார்த்தார். அப்போதுதான் அடுத்த பறவைக்குரல் எழுந்தது. அது இருளில் எய்யப்பட்ட ஓர் அம்புபோல் ஒலித்தது. அதைத் தொடர்ந்து பறவைக்குரல்கள் ஒன்றொன்றாக பெருகி மெல்ல இரைச்சலாயின. நனைந்த பட்டுத்துணிபோல வானம் தெரிய அதன் பின்னணியில் பறவைகளின் கரிய சிறகடிப்புகள் தெளிவுகொள்ளத் தொடங்கின. கூட்டம் கூட்டமாக அவை வானைக் கடந்து மறுபக்கம் சென்றன. வான்பளிங்கில் வழுக்கும் புள்ளிகள் என.

மீண்டும் ஒன்றும் நிகழாமல் அனைத்தும் அவ்வாறே அமைந்திருந்தன. நெடுநேரத்திற்குப் பின்புதான் அனைத்தும்

சற்றே ஒளிகொண்டிருப்பதை அவர் கண்டார். வானம் நீர்ப்பரப்பில் மூழ்கி அண்ணாந்து நோக்குவதுபோல சாம்பல்நீல ஒளி கொண்டிருந்தது. இலைகள் மெல்லிய பளபளப்புடன் தெரிந்தன. மரப்பட்டைகள் வெண்ணிற முப்புடைப்பு கொண்டன. துயின்றுகொண்டிருந்த தேவயானியை திரும்பிப் பார்த்தார். எப்போது அவள் விழிப்புற்று எழுவாள்? எழுந்து சென்று அவளை எழுப்ப வேண்டுமா? ஆனால் அவளைத் தொட்டு எழுப்ப தன்னால் இயலாது என்று உணர்ந்ததும் மீண்டும் வானை பார்த்தார். இலைகளின் மீதிருந்த கரிப்புகைப் பரப்பு கரைந்து வழிந்து சொட்டுவதுபோல் இருந்தது.

கருமை தெளிந்து பச்சை நிறமாயிற்று. மண் ஒளி கொண்டது. வானில் செல்லும் பறவைகளின் வண்ணங்களை பார்க்க முடிந்தது. காகங்கள் காட்டிலிருந்து சிறிய புகை அலைபோல கிளம்பி வந்து அடுமனைக்குப் பின்புறம் குவித்திட்ட கலங்களைச் சூழ்ந்து ஒலியெழுப்பத் தொடங்கின. முதல் ஒளி எப்போது வரும்? கதிரவனின் கை முதலில் நீண்டு வந்து ஒரு தாமரையைத்தான் தொடுமென்று அவர் காவியங்களில் கற்றிருந்தார். முதல்கதிர்த் தொடுகையிலேயே நீர்நிலைகள் உள்ளிருந்து ஒளிவிடுவதை கண்டிருந்தார். முற்றம் துலங்கியபடியே வந்தது. அதன் அனைத்து கூழாங்கற்களையும் பார்க்க முடிந்தது. கூரைப்பரப்புகள் பளபளக்கத் தொடங்கின.

மரங்களுக்குமேல் எழுந்த பறவைக்குரல்களின் ஒற்றை ஓசை முற்றிலும் மாறுபட்டிருந்தது. சிட்டுக்குருவிகள் சில துடித்துத் துடித்து காற்றில் பறந்து வந்து கூரை விளிம்பில் அமர்ந்தன. பின் மிதந்து தரையில் இறங்கி வாலை ஆட்டியபடி குனிந்து குனிந்து மணிகளை பொறுக்கின. திடுக்கிட்டவைபோல சிறகடித்து காற்றில் எழுந்து அப்பால் அமர்ந்தன. இலைகளுக்கு

அப்பால் மெல்லிய செந்நிறத்தை அவர் கண்டார். அங்கு காடு தீப்பற்றிக் கொண்டதைப்போல தெரிந்தது. நீண்டு விழுந்த மெல்லிய நிழல்கள் செந்நிறமும் கலந்திருப்பதுபோல. அவை தழலாட்டத்தால் அதிர்ந்து கொண்டிருப்பது போல.

எழுந்து நின்றால் மரக்கூட்டங்களினூடாக கிழக்கு தொடுவானை பார்க்க முடியும். கதிரவனின் விளிம்பு எழுவதை சுக்ரரின் குடில்முற்றத்தில் நின்று அவர் பலமுறை பார்த்ததுண்டு. ஆயினும் எழாமல் அவர் பார்த்து நின்றார். இரு மரங்களுக்கிடையினூடாக மெல்லிய ஒளி ஒன்று வந்து சருகுகளின்மேல் நீண்டு விழுந்தது. சாளரம் வழியாக வரும் அகல்விளக்கின் ஒளி என்று தோன்றியது. செந்நிறப் பொடியை சருகின்மேல் நீட்டித் தூவியது போல. அந்த ஒளி நீண்டு தேவயானியை நோக்கி சென்றுகொண்டிருந்தது. மேலும் மேலும் நீள்கதிர்கள் மரங்களுக்கிடையிலிருந்து எழுந்து முற்றத்தை நோக்கி வந்தன. அவர் நோக்கி நின்றிருக்கவே ஒரு கதிர் அவள் முகத்தின்மேல் விழுந்தது.

நடை திறக்கையில் ஆலயத்தின் சுவரில் வரையப்பட்ட தொன்மையான அன்னை ஓவியத்தின் முகம் துலங்கி விழி திறப்பதுபோல் என்று எண்ணிக்கொண்டார். அவளுடைய நெற்றியைச் சூழ்ந்திருந்த குறுமயிர்கள் பொன்னிறமாக ஒளிவிட்டன. கன்னத்தின் பூமயிர்ப்பரப்பு, மூக்கிலணிந்திருந்த சிறுமணிநகை, உலர்ந்து ஒட்டிய சிறியஇதழ்கள், ஆடைகளின் பூப்பின்னல் விளிம்புகள் என ஒவ்வொன்றும் ஒளிகொண்டன. சுருங்கி மூடியிருந்த கண்கள் அதிர்வதை கண்டார். பின்னர் அவள் விழிதிறந்து ஒளியை நோக்கினாள். அவள் முகம் மானுடத்திற்கு அப்பால் இருந்தது.

அவள் மெல்ல கையூன்றி எழுந்து ஒளியை நோக்கியபடி அமர்ந்தாள். முழங்காலுக்கு நடுவே இரு கைகளையும் செலுத்தி ஓய்ந்த உடலுடன் பெய்யொளியில் ஆடி. அடுமனைப்பெண் “மீண்டுவிட்டார்” என்றாள். அவர் திரும்பிப்பார்த்த பின் தலையசைத்தார்.

அன்றுமுதல் தேவயானி முற்றிலும் மீண்டு வந்தாள். இரு வேங்கைகளை இடக்கையால் சரித்து கையில் மூன்று வெண்மலர்களுடன் கசன் குடில்தொகையின் படியேறி வந்த கணத்திற்கு முந்தைய கணத்திலிருந்து துவங்கியவள் போல. ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்து சிற்றோடையில் நீராடி மீண்டு வந்தாள். சுக்ரர் முன் வந்தமர்ந்து காவியங்களையும் தத்துவங்களையும் முற்றிலும் உளம்கூர்ந்து கற்றாள். அடுமனையில் சென்றமர்ந்து பணியாளர்களுடன் சேர்ந்து வியர்வை வழிய உழைத்தாள். மாலையில் குறுங்காட்டின் எல்லைவரை சென்று தனித்துலாவி மீண்டாள். இரவில் காட்டின் குளிர் எழுவதுவரை சிற்றகலின் ஒளியில் விழிசுடர நூல்களை படித்துக்கொண்டிருந்தாள்.

சிரிப்பில் நடையில் சொற்களில் எங்கும் சிறு மாறுபாடுகூட தென்படவில்லை. கிருதர் சுக்ரரிடம் “முற்றிலும் மீண்டுவிட்டாள், ஆசிரியரே. தாங்கள் சொன்னது சரிதான். அவ்விரவில் அவ்வுச்சத்தை அடைந்ததனால்தான் மீள முடிந்தது. இல்லையேல் ஒவ்வொரு நாளும் உடனிருந்து உழற்றிக் கொண்டிருக்கும் அந்தக் கசப்பு” என்றார். “கசப்பு அங்குதானிருக்கும்” என்று சுக்ரர் சொன்னார். “உள்ளத்திலிருந்து விலக்கும் கசப்பு குருதியில் கலந்து தசைகளும் உயிரும் ஆகிவிடுகிறது.”

கிருதர் ஏமாற்றத்துடன் "என்ன சொல்கிறீர்?" என்றார். "இனி இங்கே அவள் இருப்பது உகந்ததல்ல. பிறிதெங்காவது அவளை அனுப்பி வைக்கலாமென்று எண்ணுகிறேன்" என்றார் சுக்ரர். "அனுப்புவதென்றால்..." என்று கிருதர் தயங்கினார். "ஆம், நீர் சொல்வதும் உகந்ததே. நானில்லாமல் அவள் மட்டும் எங்கும் சென்று தங்குவது சரியல்ல. நிமிர்ந்தே வாழ்ந்து பழகியவள். என்னுடன் இருப்பதே அந்நிமிர்வை அவளுக்கு அளிக்கிறது" என்றபின் சுக்ரர் "ஹிரண்யபுரியின் அருகிலேயே தவச்சாலை ஒன்று அமைத்துத் தருவதாக விருஷபர்வன் சொல்லியிருக்கிறான். அங்கே செல்லலாமென்று எண்ணுகிறேன்" என்றார்.

கிருதர் "ஆம், அது உகந்ததென்றே நானும் எண்ணுகிறேன். இந்தக் காட்டுக்குள் தேவி இப்படி நெடுங்காலம் இருக்க இயலாது. நகரருகே இருந்தால் அரசர்கள் எவரேனும் அவளை விரும்பக்கூடும். பிறிதொரு நல்வாழ்க்கை அவளுக்கு தொடங்கவும்கூடும்" என்றார். "நன்று" என்று மட்டும் சொல்லி சுக்ரர் தனக்கே ஆம் என தலையசைத்தார். கிருதர் தயங்கி "அவள் முழுமையாக மீண்டுவிடுவாளா, ஆசிரியரே?" என்றார். "எவரும் முந்தைய நிலைக்கு மீள்வதில்லை. உதிரும் ஒவ்வொரு இலையின் தடமும் மரத்தில் இருக்கும்" என்றார் சுக்ரர்.

ஓரிரு நாட்களிலேயே காட்டில் இருந்த குடில்தொகைகள் அனைத்தும் ஒழிந்தன. சுக்ரரும் மாணவர்களும் உடனுறைபவர்களும் பன்னிரண்டு வண்டிகளிலாக ஹிரண்யபுரி நோக்கி சென்றனர். அக்குடில்களிலிருந்து ஹிரண்யபுரிக்குச் செல்லவிருப்பதை கிருதர் தேவயானிக்கு சொன்னபோது அவள் அதற்கு மெல்லிய விழிச்சுருக்கத்திற்கு

அப்பால் நெஞ்சு அளிக்கவில்லை. அவளுக்காகவே அவர்கள் கிளம்புவதை அனைவரும் அறிந்திருந்தனர். ஆனால் எவரும் அதை அவளிடம் சொல்லவில்லை.

முதலில் அனைவருக்கும் அங்கிருந்து கிளம்புவது ஒரு கிளர்ச்சியூட்டும் புதிய செய்தியாக இருந்தது. பின்னர் பொதிகளைக் கட்டுவது, வண்டிகளை பழுதுநோக்குவது என பரபரப்பான செயல்களாக ஆகியது. குடில்களை ஒழித்தபோது அங்கே குடியேறிய வெறுமை அவர்களை துயர்கொள்ளச் செய்தது. அந்தத் துயர் தாளாமல் அங்கேயே இருந்துவிடலாம் என்று எண்ணி அதை வெவ்வேறு வடிவில் சொல்லிக்கொண்டனர். அங்கே காடாக, ஓடையாக அணுக்கம் கொண்டிருந்த அனைத்தும் அப்பொருட்கள் அல்ல, அப்பொருட்கள் என உள்ளம் கொண்ட உணர்வுகளே என எவ்வாறோ அனைவரும் உணர்ந்தனர். அப்பொருளுலகை விட்டுச்செல்லும்போது உணர்வுலகு உடன்வரும் என்றும்.

விரைவிலேயே அந்த ஒழிந்த குடில்கள் அளித்த வெறுமையை வெல்ல எளிய வழி அங்கிருந்து கிளம்புவதே என உணர்ந்தனர். கிளம்பியதும் ஒருநாள் முழுக்க சோர்வு நிறைந்த அமைதி நிலவியது. பின்பு மெல்ல பெண்கள் களிப்படைந்தனர். அது அனைவருக்கும் பரவியது. சிரிப்பும் கொண்டாட்டமுமாக அவர்கள் ஹிரண்யபுரியை சென்றடைந்தனர். ஹிரண்யபுரியை அவர்களில் பலர் இளமையில் கண்டிருந்தனர். பின்னர் மொழியினூடாக தீட்டிக்கொண்டிருந்தனர். அந்நகரை காணும் கிளர்ச்சியில் பலர் முந்தைய பல நாட்களாகவே உடல்பதறிக்கொண்டிருந்தார்கள். நகருக்கு அப்பால் இரவில் தங்கியிருந்த சோலையில் ஒருவரும் துயில்கொள்ளவில்லை.

“அசுரப்பெருநகர். செம்பொன்நகர். மண்ணில் எழுந்த அமராவதி” என பாணன் யாழ்மீட்டிப் பாடினான். அதைக் கேட்டு விழிகள் துலங்க அமர்ந்திருந்த பெண்களுக்குப் பின்னால் ஓர் அடிமரத்தில் சாய்ந்து தேவயானி அமர்ந்திருந்தாள். அடுமனைப்பெண் அவளிடம் “தாங்கள் இதுவரை நகர் என எதையும் கண்டதில்லை அல்லவா?” என்றாள். “ஆம், நான் நம் குடில்நிலைவிட்டு வெளிப்போந்ததில்லை” என்று அவள் சொன்னாள். “அனைத்தையும் காவியங்களில் அறிந்திருப்பீர்கள்” என்றாள் அடுமனைப்பெண். தேவயானி புன்னகைத்தாள். அப்பால் அமர்ந்திருந்த சத்வர் “சொல்லில் இருப்பது விதை. விதையிலிருந்து காட்டை எழுப்புவது மிக எளிது” என்றார்.

மறுநாள் காலையில் கிளம்பியபோது தேவயானி அடுமனைப்பெண்ணிடம் “என் பேழைக்குள் முன்பு தந்தைக்கு கொடையென வந்த பீதர்நாட்டுச் செம்பட்டு ஒன்றுள்ளது. அதை எடு” என்றாள். “ஆடையென அணிய இயலாத அளவுக்கு அது சிறியது, தேவி” என்றாள் அவள். “அதை மேலாடையாக அணிகிறேன்” என்றாள் தேவயானி. அதை எடுத்தபோது முன்பு அவளே காட்டில் பொறுக்கிய வண்ணக்கற்களை உரசி மணியாக உருட்டி கோத்து செய்த மாலை ஒன்று இருப்பதைக் கண்டாள். அதையும் அணிந்துகொண்டபோது அவள் தோற்றம் மாறிவிட்டிருப்பதை அடுமனைப்பெண் கண்டாள். அவளே ஓடி காட்டுமலர்களை கொய்துகொண்டுவந்து தேவயானியின் குழலில் சூட்டினாள்.

வண்டிகள் செம்மண்பொடி பறந்த சாலையில் மெல்ல ஒழுகிச்செல்ல அருகே விரைவுத்தேர்களும் புரவிகளும் புழுதிமுகிலை சிறகுகளாக ஆக்கியவைபோல கடந்துசென்றன. மாபெரும் கருமணிமாலைபோல பொதிவண்டிகளின் நிரை

சென்றுகொண்டிருந்தது. பின்னர் அவள் தொலைவில் மழைக்கார் எழுந்ததுபோல கரிய கோட்டையை கண்டாள். “கரிய நிறமா?” என்று அவள் வண்டிக்கு அருகே நடந்து வந்த சத்வரிடம் கேட்டாள். “தேவி, பொன் செல்வத்தின் நிறம். கருமை ஆற்றலின் நிறம்” என்றார் சத்வர்.

அவள் அணுகிவந்து பெருகிச்சூழ்ந்த கோட்டையின் நூற்றுக்கணக்கான உப்பரிகைகளையும் அவற்றில் ஒளிர்வேல்களுடன் நின்றிருந்த காவலர்களையும் காற்றில் படபடத்த கொடிகளையும் பார்த்தபடி விழிமலைத்து அமர்ந்திருந்தாள். மெல்ல நெஞ்சு நிறைந்து விழி வழியத்தொடங்கியது. எங்கிருக்கிறோம் என்றே அறியாதவளாக கனவொன்றுக்குள் நுழைபவள்போல அவள் ஹிரண்யபுரிக்குள் நுழைந்தாள்.

# மாமலர் - 63

## 63. இணைமலர்

சர்மிஷ்டையை ஹிரண்யபுரியின் அரண்மனைமுற்றத்தில் வந்திறங்கி அரச வரவேற்பை பெற்றுக்கொண்டிருந்தபோதுதான் தேவயானி முதலில் கண்டாள். ஆனால் கிளம்பும்போதே அவளைப்பற்றி சேடிகள் பேசிக்கொண்டிருப்பது காதில் விழுந்தது. “அழகி என்று சூதர்கள் பாடினால் போதுமா? சொல்லிச் சொல்லி அழகாக்க முடியுமா?” என்றாள் ஒரு முதுமகள். “அசுரகுலத்திற்குரிய அழகு அவளுக்கு உண்டு. அசுரர்களின் கண்களுக்கு அவ்வழகு தெரியும்” என்றாள் இளம்சேடி. “அவளை அசுரனா மணம்புரியப்போகிறான்? பாரதவர்ஷத்தை முழுதாளும் விருஷபர்வனின் மகள்.

பிறிதொரு சக்ரவர்த்தியை அல்லவா தேடுவார்கள்?” என்றாள் முதுமகள்.

“மணிமுடி சூடி அரியணையில் அமர்ந்து வெண்சாமரத்தால் வீசப்பட்டால் அழகு இயல்பாகவே கூடிவரும்... எந்தச் சேடியைப் பற்றியாவது சூதர்கள் பாடியிருக்கிறார்களா? சேடியரில் அழகு இல்லையா என்ன?” என்றாள் அடுமனைப்பெண். “நம் தேவி அங்கே நுழையட்டும், அழகென்றால் என்னவென்று அவர்களுக்குத் தெரியும்” என்றாள் ஓர் இளம்பெண். “அழகு எங்கும் மதிக்கப்படுவதில்லை, மதிக்கப்படுவதே அழகென்றாகிறது” என்றாள் முதுமகள். அவள் மேலும் சொல்வதற்குள் தேவயானி அருகணைவதைக்கண்டு அவர்கள் பேச்சை நிறுத்தினர்.

தேவயானி அவ்வுரையாடலை ஓரளவு கேட்டிருந்தாள் என்பதை அவர்களும் அறிந்துள்ளார்கள் என அவர்களின் முகங்கள் காட்டின. “இளம்காலை ஒளியில் நகர்நுழைகிறோம், தேவி” என்றாள் முதுமகள். “ஆம், பேரரசர்களுக்குரிய வரவேற்பு ஒருங்குசெய்யப்பட்டிருப்பதாக வண்டியோட்டி சொன்னான்” என்றாள் அடுமனைப்பெண். தேவயானி ஒன்றும் சொல்லாமல் அவர்கள் தொடுத்துக்கொண்டிருந்த மலர்களை எடுத்து தானும் தொடுக்கலானாள். அவள் செய்துகொண்டிருந்த அணி அவர்களின் நோக்கைக் கவர்ந்து விழிபரிமாறிக்கொள்ளச் செய்தது.

“அங்கே நகர்முறை என்னவென்று நாம் அறியோம். நம்மால் மலரால் மட்டுமே அணிசெய்துகொள்ள இயலும்” என்று ஒரு பெண் சொன்னாள். “மலர்களைப்போல பிறிதொரு அணி ஏது? பொன்னணிகள் அனைத்தும் மலரை நடிப்பவை அல்லவா?” என்றாள் முதுமகள். அப்போதுதான் தேவயானிக்கு தன்

அணிசூடுகை அங்கே நகரில் எப்படி பார்க்கப்படும் என்னும் உணர்வு எழுந்தது. சீதையின் அணிகளை கிஷ்கிந்தையின் குரங்குகள் அணிந்துகொண்டதைப் பற்றிய சூதர்பாடலின் வரிகள் நினைவிலெழ அவள் கைகள் தயங்கத் தொடங்கின. தயக்கமில்லா விரல்களால் மட்டுமே மலர்மாலை தொடுக்க முடியும். மலர்கள் விரல் தடுமாறி உதிர மாலையை வாழையிலையிலேயே விட்டுவிட்டு “நாம் கிளம்பவேண்டும் அல்லவா?” என்றாள்.

விருஷபர்வனின் அமைச்சர் சம்விரதர் கோட்டை முகப்புக்கே வந்து சுக்ரரை எதிர்கொண்டார். ஹிரண்யபுரியின் அமுதகலக் கொடியுடன் அவரும் ஏழு சிற்றமைச்சர்களும் படைத்தலைவர் மூவரும் குலமூத்தார் எழுவரும் காத்து நின்றிருந்தனர். அவர்கள் அணுகுவதைக் கண்டு கோட்டைக்குமேல் சுக்ரரின் காகக்கொடி மெல்ல ஏற முரசுகள் முழங்கின. அவர்கள் அணுகியபோது கொடிவீரன் ஒருவன் புரவியில் பாய்ந்துவந்து அதை சுக்ரரின் வண்டிக்கு முன் தாழ்த்தி “அரசகுருவுக்கு நல்வரவு. நகரும் நகர்வேந்தன் முடியும் தங்கள் முன் பணிகின்றன” என்றான். அவனை கைதூக்கி வாழ்த்தினார் சுக்ரர்.

வண்டிகள் கோட்டைக்குள் நுழைந்து ஹிரண்யபுரியின் மண்ணில் சுக்ரர் தன் வலக்காலெடுத்து வைத்தபோது மாமுனிவர்களுக்கும் பேரரசர்களுக்கும் மட்டுமே வழங்கப்படும் நூற்றெட்டு பெருமுரசுகளின் முழக்கம் எழுந்தது. ஆயிரத்து எட்டு கொம்புகள் வான்நோக்கி வளைந்து பிளிறின. கோட்டைமேல் இருந்த வீரர்கள் மலர்க்கடவங்களைக் கவிழ்த்து வண்ணமழை பெய்வித்தனர். சம்விரதர் அவரை வணங்கி எட்டுமங்கலங்களை அளித்து வரவேற்றார். அவர்கள் கொண்டுவந்த திறந்த தேரின் தட்டில் நின்று இரு கைகளையும்

விரித்து ஹிரண்யபுரியை வாழ்த்தியபடி சுக்ரர் நகர்த்தெருக்களினூடாக சென்றார்.

அவருக்குப் பின்னால் சென்ற கூண்டு வண்டிக்குள் அமர்ந்து சிறு சாளரத்தினூடாக அந்த பெரும் வரவேற்பை தேவயானி பார்த்தாள். இருபுறமும் மாளிகைகளின் உப்பரிகைகளில் நின்றிருந்த மக்கள் அரிமலர் அள்ளி வீசி வாழ்த்தொலி எழுப்பினர். இளைஞர்கள் இரு கைகளையும் தூக்கி தொண்டை நரம்புகள் புடைக்க களிவெறியுடன் அவரைப் போற்றி கூவினர். அந்த வாழ்த்துகளிலும் கூச்சல்களிலும் இருந்த உண்மையான களிப்பு அவள் முகத்தை மலரச் செய்தது. ஹிரண்யபுரியின் வெற்றிக்கும் சிறப்புக்கும் சுக்ரரே அடிப்படை என அவளும் அறிந்திருந்தாலும் அம்மாபெரும் மக்கள் திரள் அவரை தங்கள் குலமூதாதைக்கு நிகராக, குடித்தெய்வமென்றே எண்ணுகிறது என்பதை அப்போதுதான் அவள் கண்ணெதிர் உண்மையாக தெரிந்து கொண்டாள்.

சுக்ரரின் தேர் மலர்த்திரையை அகற்றி அகற்றிச் சென்று அரண்மனையின் உட்கோட்டைக்குள் நுழைந்தது. அங்கும் மங்கல முரசுகளும் கொம்புகளும் ஒலித்தன. கைகூப்பியபடி சுக்ரர் தேர்த்தட்டில் நிற்க அரண்மனை முகமுற்றத்தில் தன் மூன்று தேவியருடன் அரசணிக்கோலத்தில் காத்து நின்றிருந்த விருஷபர்வன் கைகூப்பியபடி தேரை நோக்கி வந்தான். இரு அமைச்சர்கள் ஓடிவந்து சுக்ரரின் தேரை அணுகி முகமனுரைத்து அவரிடம் இறங்கும்படி சொல்ல தேரின்படிகளில் கால்வைத்து அவர் இறங்கினார். அரண்மனை முற்றத்தில் அவர் கால் படுமிடத்தில் ஒரு பொற்தாலத்தை வைத்தனர். வாழ்த்துக் கூவியபடி விருஷபர்வன் முன்னால் வந்து அவரை கைப்பற்றி அதில் நிற்க வைத்தான். அவனும்

அரசியரும் மஞ்சள் நீரால் அவர் கால்களை கழுவினர். மலரிட்டு அதை வணங்கினர்.

விருஷபர்வன் தன் மணிமுடியைக் கழற்றி அவர் காலடியில் வைத்தான். சுக்ரர் வாழ்த்துரைத்தபடி குனிந்து அதை எடுத்து மீண்டும் அவன் தலையில் சூட்டினார். செம்பட்டுப் பாவட்டாவில் அவர் கால் வைத்ததும் அவர் கால் கழுவிய நீரை எடுத்து மூன்று பூசகர்கள் அங்கு கூடி நின்ற அமைச்சர்கள், படைத்தலைவர்கள், ஐங்குலத்து மூத்தவர்கள் அனைவரிடமும் கொண்டு சென்றனர். அவர்கள் அதைத் தொட்டு தங்கள் தலைமேல் தெளித்துக் கொண்டனர். பின்னர் அந்நீரைத் தொட்டு அரண்மனைமேல் தெளித்தனர் பூசகர். விருஷபர்வனும் அமைச்சர்களும் படைத்தலைவர்களும் இரு பக்கமும் நின்று தலைவணங்கி முகமன் கூறி சுக்ரரை அரண்மனை நோக்கி அழைத்துச் சென்றனர்.

தேவயானியின் கூண்டு வண்டியை நோக்கி வந்த முதுசேடி ஒருத்தி திரையைத் திறந்து “வெளியே வாருங்கள், தேவி” என்றாள். அவள் கைகூப்பியபடி படிக்கட்டில் கால்வைத்து தரையில் இறங்கினாள். விருஷபர்வனின் மூன்று அரசியரும் அவளை அணுகி கைகூப்பினர். பட்டத்தரசி காஞ்சனை “ஹிரண்யபுரிக்கு நல்வரவு, தேவி. தவம்தோய்ந்த உங்கள் கால்பட்டு இம்மண் பொலிவு பெறட்டும். நீங்கள் வாழ்ந்தது இந்நகரென்று புகழ் பெறட்டும்” என்றாள். இரண்டாவது அரசி சுபகை “சுக்ரரின் மகள் பேரழகியென்று அறிந்திருந்தேன். காவியங்கள் அழகை சொல்லி முடித்துவிட முடியாது என்று இப்போது தெரிகிறது” என்றாள். மூன்றாவது அரசி மாதவி சிரித்தபடி “பேரரசிக்குரிய நிமிர்வுடையவள் என்று

சொன்னார்கள். நாங்கள் பேரரசியொருத்தியை இப்போதுதான் பார்க்கிறோம் என்றே தோன்றுகிறது” என்றாள்.

தேவயானி முகமன்களுக்கு பழக்கப்பட்டிருக்கவில்லை என்பதால் என்ன சொல்வதென்றறியாமல் சிவந்து விழிநீர்மை கொண்டு புன்னகைத்து “ஆம், என்னை என் தந்தை அவ்வாறு சொல்வதுண்டு” என்றாள். காஞ்சனையின் விழிகளில் மெல்லிய திகைப்பும் உடனே ஏளனப் புன்னகையும் வந்தன. அதை மறைத்தபடி திரும்பி தன் பின்னால் நின்றிருந்த இளம்பெண் நிரையிலிருந்து சற்றே முன்வளைந்த சிறிய தோள்களும், மெலிந்த கைகளும், பெரிய விழிகளும் கொண்ட மாநிறமான பெண்ணைத் தொட்டு அழைத்து முன்னால் நிறுத்தி “இவள் என் மகள் சர்மிஷ்டை” என்றாள். தேவயானி “ஆம், அறிந்திருக்கிறேன். ஹிரண்யபுரியின் இளவரசி” என்றாள்.

சர்மிஷ்டை மெல்லிய நாணத்துடன் ஒரு கணம் தலை நிமிர்த்தி அவள் கண்களை நோக்கி “உங்களை சந்தித்ததில் பெருமைகொள்கிறேன், தேவி” என்று சொன்னாள். அதற்குள் அச்சொற்களின் வெம்மை தாளாது மெழுகுடல் உருகி நெளிவதுபோல் அசைந்து விழிதிருப்பிக்கொண்டாள். “வரும்போதுகூட என் சேடியர் உங்களைப்பற்றி சொன்னார்கள், அரசி” என்றாள் தேவயானி. “சூதர்கள் சொல்லை நான் கேட்பதே இல்லை” என்று சர்மிஷ்டை சொல்லி முடித்ததுமே உதடுகளை உள்மடித்து துடைத்தபடி சற்றே பின் நகர்ந்து அன்னையின் விரல்களை பற்றிக்கொண்டாள். அவள் முகம் சிவந்து கழுத்திலும் தோளிலும் நரம்புகளின் படபடப்பு தெரிந்தது.

முதுசேடி “உள்ளே செல்லலாம், தேவி” என்றாள். “நன்று” என்றபடி தேவயானி தலை நிமிர்ந்து பதினான்கு அடுக்கு மாளிகையை பார்த்தாள். “தேன்கூடு போலிருக்கிறது” என்றாள்.

உடனே அவ்வாறு வியப்பை வெளிக்காட்டலாகாது என உணர்ந்தவளாக “காவியங்கள் சொல்லும் மகோதயபுரம் குறித்த அணிச்சொல் அது” என்றாள். அவள் சொன்னதெல்லாமே பொருத்தமில்லாமல் இருந்தன என்பது அப்பெண்கள் என்ன எதிர்வினை காட்டுவதென்றறியாமல் திகைத்ததிலிருந்து தெரிந்தது. “பல அடுக்குகள் கொண்டதென்றாலும் மலரிதழ்களைப்போல எடையற்றிருந்தது அது என்கிறார் பார்க்கவர் தன் காவியத்தில்” என்றாள்.

அவர்கள் நிலையான முகமலர்வுடன் பொதுவாக தலையாட்டியதிலிருந்து அவர்களுக்கு காவிய அறிமுகமே இல்லை என்று அவள் உய்த்துணர்ந்தாள். அவளுக்குள் இருந்த பதற்றம் விலகி புன்னகை எழுந்தது. அப்புன்னகை முகத்திலும் விரிய “எடையின்மை என்பது எப்போதுமே உள்ளத்தை மலைக்கச் செய்கிறது. எடையின்மை கொள்பவை தாங்கள் இழந்த எடையை முழுக்க நோக்குவோன் உள்ளத்தில் ஏற்றிவைக்கின்றன என்று பார்க்கவரின் நூலுக்கு உரைசொன்ன சாம்பவர் கூறுகிறார்” என்றாள். அவர்கள் என்ன உணர்கிறார்கள் என எண்ணியபோது அவளுக்குள் சிரிப்பு நிறைந்தது.

அவர்கள் அனைவரைவிடவும் அவள் உயரமாக இருந்தாள். அத்தனை பெண்களுடைய தலைவகிடுகளும் அவளுக்கு தெரிந்தன. அவள் கைகள் அவர்களுடையதைவிட எடையும் நீளமும் கொண்டவையாக இருந்தன. இயல்பாகவே பிறருடைய தலையிலோ தோளிலோ கைவைத்துதான் அவளால் பேச முடிந்தது. அரண்மனை இடைநாழியினூடாக அவள் செல்லும்போது சேடியரும் ஏவல் பெண்டுகளும் தங்கள் அறைகளிலிருந்து வாசல்களினூடாகவும்

சாளரங்களினூடாகவும் முட்டி நெரித்து தலைநீட்டி அவளை பார்த்தனர். அத்தனை விழிகளும் மலைப்பும் தவிப்பும் சூடின.

அவளை இருபுறமும் அகம்படி சமைத்து அறைக்கு கொண்டுசென்ற முதன்மைச்சேடி “அரண்மனையிலேயே தாங்கள் தங்கியிருக்கலாம் என்று ஆசிரியரிடம் சொன்னோம். அவரோ தாங்கள் அவருடன்தான் தங்கவேண்டுமென்று சொல்லிவிட்டார்” என்றாள். இன்னொரு சேடி “ஆனால் அங்குள்ள தவக்குடிலும் அரண்மனைக்கு நிகராகவே அமைக்கப்பட்டுள்ளது, தேவி” என்றாள். இடைநாழி நீண்டு இருபுறமும் சந்தனச்செதுக்குத் தூண்கள் நிரைவகுக்க அவற்றின் நிழல்கள் விழுந்து படிக்கட்டுகள்போல் தெரிந்தன.

அவர்கள் அவளை அமரவைத்த சிற்றவைக்கூடத்திற்குள் பதினான்கு பீடங்கள் இருந்தன. நடுவே மூன்று பீடங்கள் சாய்வுமகுடங்களுடன், பொற்கவசப் கைப்பிடிகளுடன், செம்பட்டு மெத்தையுடன், சிம்மக்காலடிகளுடன் அரசியருக்குரியவையாக அமைந்திருந்தன. பேசியபடியே இயல்பாக சென்ற தேவயானி மையத்திலிருந்த பட்டத்தரசியின் பீடத்தில் சென்றமர்ந்து நன்கு சாய்ந்து இரு கைகளையும் கைப்பிடிமேல் வைத்துக்கொண்டாள். குழல்கற்றை தோளில் சரிய தலைதிருப்பி அவளுக்குப் பின்னால் சேடியர் உடன்வர உள்ளே வந்த பட்டத்தரசி காஞ்சனையிடம் “மூன்று அரசியருமே இங்குதான் தங்குகிறீர்களா?” என்றாள்.

சேடியர் பதற்றத்துடன் பேரரசியை நோக்க விழிகளை அசைத்து அவர்களை சொல்விலக்கிய பட்டத்தரசி அவள் அருகே வந்து வலப்பக்கம் இருந்த பீடத்தில் அமர்ந்தபடி “ஆம், இதுதான் மகளிர் மாளிகை. இங்கு ஒவ்வொரு அடுக்கும் ஒவ்வொரு அரசியருக்கு” என்றாள். இடப்பக்கம் இருந்த பீடத்தில் அமர்ந்த

இரண்டாவது அரசி சுபகை “கீழ்த்தளங்கள் ஏவலருக்கும் சேடியருக்கும் உரியவை. இரண்டாவது தளத்தில் நீராட்டு அறைகள் உள்ளன. மூன்றாவது தளத்தில் சமைய அணியறைகள். அதற்குமேல் ஒவ்வொருவருக்கும் ஒரு தளம் ஒதுக்கப்பட்டுள்ளது” என்றாள். அவர்கள் அத்தருணத்தை இயல்பாக்கும்பொருட்டு பேசவிரும்பினர்.

சர்மிஷ்டை தன் மூன்றாவது அன்னை மாதவியின் தோள்பற்றி பாதி உடல் மறைத்து முகம் தோளுக்குமேல் நீட்டி பெரிய விழிகளால் நோக்கி நின்றிருந்தாள். அவள் நோக்கு பட்டதும் உடலில் மெல்லிய அசைவெழ அவள் விழிதாழ்த்தினாள். “இவள் ஏன் இவ்வளவு அஞ்சுகிறாள்?” என்றாள் தேவயானி. காஞ்சனை சிரித்து “எங்கள் மூவருக்கும் சேர்த்து அவள் ஒருத்தியே மகள். ஆகவே இளவயதில் கொஞ்சுதல் சற்று மிஞ்சிப்போய்விட்டது. குழந்தை நிலையிலிருந்து அவள் வளரவே இல்லை” என்றாள். தேவயானி நகைத்து “நன்று! எவ்வளவு காலம் குழந்தையாக இருக்கிறார்களோ அவ்வளவுக்கு மகளிர் மகிழ்ந்திருக்கிறார்கள்” என்றாள்.

பட்டத்தரசி கைகாட்ட சேடியர்கள் உள்ளே சென்று தேவயானிக்கு பரிசுகள் கொண்டு வந்தனர். ஐந்துமங்கலப் பொருட்கள் வைத்த பொற்தாலம் முதலில் வந்தது. பீதர்நாட்டுப் பட்டாடைகளும், கலிங்கத்து மென்பருத்தி ஆடைகளும், அருமணிகள் பதித்த நகைகளும், சிமிழ்களும், விளையாட்டுப்பொருட்களும் என பதினெட்டு தாலங்களில் பரிசுப்பொருட்கள் அவள் முன் வந்தமைந்தன.

கண்களில் துணுக்குறலுடன் அவள் அவற்றை நோக்கி “இவையெல்லாம் எனக்கா?” என்றாள். “ஆம், முதல்முறையாக இவ்வரண்மனைக்கு வந்திருக்கிறீர்கள். தங்கள் தகுதிக்கு

பரிசளிக்க எங்களால் இயலாது. இது எங்கள் தகுதியைக் காட்டும் பரிசு” என்றாள் பட்டத்தரசி காஞ்சனை. தேவயானி வாய்விட்டு நகைத்து “இவையனைத்தையும் நான் எங்கு கொண்டு வைப்பது?” என்றாள். “தாங்கள் இன்னும் குடில்கூட்டத்தை பார்க்கவில்லை. தங்கள் குடில் மூன்றடுக்குக் கூரையுடன் அரண்மனை போலவே கட்டப்பட்டுள்ளது. அங்கு தாங்கள் பேரரசிக்குரிய வாழ்க்கையை வாழ முடியும். விரும்பிய பணிசெய்ய சேடியர் உடனிருப்பர்” என்றாள் மாதவி. “இங்கிருந்து உரிய ஆடவனை தாங்கள் மணமுடித்துச் செல்லும்போது பேரரசியருக்குரிய பெண்செல்வத்துடன்தான் செல்ல வேண்டும்” என்றாள் சுபகை.

சிரித்தபடி தேவயானி சர்மிஷ்டையின் விழிகளை சந்திக்க அவள் பதறி தன் நோக்கை விலக்கிக்கொண்டாள். அதிலிருந்த மிரட்சி தேவயானிக்கு வேடிக்கையாக இருந்தது. அவள் தன்னையே நோக்கிக்கொண்டிருக்கிறாள் என்று உணர்ந்ததுமே தேவயானியின் உடல்மொழி மாறியது. மேலும் தருக்கி தலைநிமிர்ந்து தோள்களை விரித்தபடி ஒவ்வொரு பரிசுப்பொருளாக அருகே கொண்டுவரச்சொல்லி பார்த்தாள். ஒவ்வொன்றின் மேலும் சுட்டுவிரலால் தொட்டு அவற்றை ஏற்றுக்கொண்டாள். ஆனால் ஆடைகளையோ அணிகளையோ தன் கையிலெடுத்தோ உடல் மீது சேர்த்தோ நோக்கவில்லை.

அவை தனக்கொரு பொருட்டில்லை என்றே அவள் முகமும் உடலும் காட்டின. ஆனால் உள்ளத்திற்குள் அவள் பெரும் கிளர்ச்சி அடைந்திருந்தாள். இளமையிலேயே சுக்ரர் அணிகளும் ஆடைகளும் தனக்கென்றொரு எண்ணமோ கனவோ இல்லாதவர்கள் சூடவேண்டியது என்று அவளுக்கு கற்பித்திருந்தார். “வைரத்திற்கு எவரும் வண்ணம்

பூசுவதில்லை, குழந்தை. அதன் உள்ளொளியை அவ்வண்ணங்கள் மறைத்துவிடும். மெய்யொளி கொண்டவர்களுக்கு ஆடையும் அணிகளும் திரையேயாகும்” என்று சுக்ரர் சொன்ன சொற்கள் அவளுக்குள் ஆழப்பதிந்திருந்தன.

காவியங்களை கற்கையில் அதன் தலைவியர் அணிந்திருக்கும் அணிகளைப்பற்றிய செய்திகளை வெறும் சொல்லணிகள் என்றே அவள் கடந்துசெல்வதுண்டு. ஊர்வசி பரிணயம் காவியத்தின் ஆசிரியரான மகாபத்மர் ஊர்வசி அணிந்திருந்த நூற்றியெட்டு நகைகளின் விரிவான செய்தியை அளித்திருந்தார். ஒவ்வொன்றையும் மலருடனும் தளிருடனும் கொடிச்சுருளுடனும் ஒப்பிட்டு காட்சிப்படுத்தியிருந்தார். அவள் அதை ஒருமுறை வாசித்து கடந்துசென்றாள். மறுநாள் அவையமைவில் சுக்ரர் அவ்வணிகளைப் பற்றி கேட்கையில் “நான் அவற்றை கடந்து சென்றுவிட்டேன். அவை எளியோருக்கான ஆழ்பொருளற்ற காட்சிப்படுத்தல்கள் அல்லவா?” என்று அவள் சொன்னபோது அவர் பதறி கைநீட்டி “அல்ல, அல்ல... பொருளற்ற காட்சிச்செய்திகளை சொல்பவர் காவிய ஆசிரியர் அல்ல. காவியத்தில் தலைவி அணிந்திருக்கும் அனைத்தும் பொருள்கொண்ட அணிகளே. சொல் ஓசையையும் இசைவையும் கொண்டு அழகு பெறுவதுபோன்றது அணிகளால் மானுட உடல் எழில்கொள்வது. ஆகவேதான் இரண்டையும் அணிகள் என்கிறார்கள்” என்றார்.

“அணிகள் என்பவை பிறிதொன்றின் அழகை ஒன்றின்மேல் ஏற்றிக் காட்டுபவை. அவ்வாறு இரண்டை இணைக்கையில் இரண்டுமே பொருள்விரிவு கொண்டு முடிவிலியை

தொடுகின்றன. அருவியை அழகியின் சிரிப்புபோல என்னும்போது அருவியும் சிரிப்பும் முடிவிலாது அழகுசூடுகின்றன" என சுக்ரர் தொடர்ந்தார். "ஊர்வசியின் மூக்கில் ஒளிரும் மூக்குத்தி பொருளற்ற அணி அல்ல. அவள் முகமும் அகமும் கொண்ட இனிமை அனைத்தும் அவ்வணியென மையம் கொண்டுள்ளது. இளங்கன்னியாகிய தலைவி தலையை அசைத்து அசைத்து பேசுகையில் காதைத் தொட்டு நடனமிடும் குழை வெறும் அணி மட்டும் அல்ல. அவள் கொண்ட உளக் கொண்டாட்டத்திற்கு அடையாளமும் கூட" என்றபின் "நீரிலெழும் மலர் தன் நிழல்மலரை பீடமென கொண்டுள்ளது. இல்லை, நிழல்மலர் தன் தலையிலணிந்த அணிமலரா மேலெழுந்து மலர்ந்தது?" என அவர் அடுத்த வரிக்குள் சென்றார்.

விழிகள் கூர்ந்து அவர் முகத்தையே நோக்கியபின் குனிந்து அந்த வரிகளில் நெஞ்சோட்டினாள். வகுப்பு முடிந்து திரும்பி தன் அறைக்குச் செல்லும்போதே வழியில் நின்று அவ்வணிகளை கூர்ந்து படித்தாள். அறையில் மீண்டும் மீண்டும் படித்துக்கொண்டிருந்தாள். சுவடியை மூடிவிட்டு அடுமனைக்குச் சென்றபோது அவ்வணிகளின் நினைவாகவே இருந்தாள். அங்கிருந்த காய்களும் கனிகளும் எல்லாம் நகைகளாகிவிட்டன. மீண்டும் தன் அறைக்கு வந்தபோது வரும் வழியில் பூத்து நின்றிருந்த சரக்கொன்றை அணி சூடி நிற்பதாகத் தோன்றியது. அறைக்கு வந்து சுவடியை எடுத்து அப்பாடல்களை மீண்டும் படித்தாள். பித்தெழுந்தவள்போல அவற்றையே திரும்பத் திரும்ப படித்துக்கொண்டிருந்தாள்.

அந்த அடிமைகொள்ளல் அவள் உள்ளுறை ஆணவத்தைச் சீண்டவே சலித்து சுவடியை மூடி கிருதரிடமே

கொடுத்துவிட்டாள். ஆனால் எண்ணத்தில் பதிந்த அவ்வரிகள் எப்போது இயல்பாக பிறநினைவு ஓய்கிறதோ அப்போதெல்லாம் எழுந்து வந்துகொண்டிருந்தன. பின்னர் கனவில் அந்நகைகள் அனைத்தையும் அணிந்து அரியணையொன்றில் அமர்ந்திருக்கும் அவளை அவள் கண்டாள். ஒரு மலைமுடியின் உருளைப்பாறை மேல் அவ்வரியணை இருந்தது. அவளைச் சுற்றி எவருமிருக்கவில்லை. காற்று ஆடைகளையும் குழலையும் பறக்க வைத்தபடி கடந்துசென்றது. மிக ஆழத்தில் முகிற்படலம் படிந்த பெருநகரொன்று தெரிந்தது. அதன் கோட்டைச்சூழ்கையும் மாளிகைமுகடுகளும் மலர்ச்செடிவண்ணங்கள் கொண்ட உப்பரிகைகளும் முகிலுக்குள் தெளிந்தும் மறைந்தும் விரவிக்கிடந்தன. சிறிய தழல்கள்போல கொடிகள். கோட்டையைச் சுற்றி வளைத்த நீலஆறு மெல்ல திருப்பப்படும் வாள் என ஒளிசுடர்ந்தது.

படையொன்றின் முழக்கம் மெலிதாக கேட்டுக்கொண்டிருந்தது. வலப்பக்கம் ஆழத்திலெங்கோ மாபெரும் கண்டாமணியொன்று ஏழு முறை அடித்து ஓய்ந்தது. விழித்த பின் அக்கனவின் மலர்வால் முகம் நகை சூட மயங்கியவள்போல நெடுநேரம் படுத்திருந்தாள். கண்மூடி அக்காட்சியை மீண்டும் எழுப்ப முயன்றாள். அப்போதுதான் மலைமுடியிலிருந்து நகரைப் பார்க்கும் ஒருத்தியாகவும் அவ்வாறு அமர்ந்திருக்கும் ஒருத்தியை பார்க்கும் பிறிதொருத்தியாகவும் அக்கனவுக்குள் தான் இருப்பதை உணர்ந்தாள்.

தன் முன் வந்த அணிகளை மிக விரைவிலேயே உள்ளம் கணக்கிட்டுவிட்டதை, நூற்றெட்டு அணிகளுக்கும் மேலாகவே அத்தாலங்களில் இருந்ததை தான் அறிந்துவிட்டதை அவள் உணர்ந்தாள். மீண்டும் சர்மிஷ்டையை பார்த்தபோது அவள்

உடம்பிலும் நூற்றெட்டு அணிகளுக்கு மேலிருப்பதை கண்டாள். கால் விரல்களில் அணியாழிகள், கணுக்கால்களில் சிலம்புகள், தொடையில் செறிமாலைகள் என நெற்றிச்சுட்டிவரை. அவ்வணிகள் அவள்மேல் கவ்வியும் தொங்கியும் சுற்றியும் பொருந்திக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது. கொன்றை மரத்தின் கிளை மலர்ச்சுமை தாளாது வளைந்து தாழ்ந்து நிற்பது போல.

அவள் மிக மெலிந்திருந்தாள். மாநிறம் சற்றே கருமைக்கு அருகே சென்றிருந்தமையால் நகைகளின் ஒளி அவளை மேலும் கரியவளாக காட்டியது. அச்சத்தாலும் நாணத்தாலும் உடலை ஒடுக்கி ஒடுக்கி முன்வளைவு கொண்டிருந்த தோள்களும், தசையற்ற புயங்களும், மெலிந்த கைகளுமாக அவள் எளிய வேளாண்குடிப்பெண் போலிருந்தாள். உள்ளூர் விழவொன்றில் முருக்கமரத்தில் செய்து வண்ணமிட்ட பொய்யணிகளை அணிந்து அரசியென உருக்கொண்டு வந்தவள்போல.

ஆனாலும் அவளை எண்ணமும் விழியும் மீண்டும் மீண்டும் நாடிச் சென்றுகொண்டிருந்தன. அவள் விழிகள். அவை இளங்குழந்தைகளுக்குரிய வியப்புடனும் உட்கரந்த நகைப்புடனும் முற்றிலும் புதியவையாக இருந்தன. அவள் உடலில் மின்னிய அத்தனை அருமணிகளைவிடவும் அத்தனை மதிப்பு மிக்க மணிகள். திறந்திட்ட பொற்குவைமேல் வந்தமர்ந்து சிறகடிக்கும் இரு அழகிய வண்ணத்துப்பூச்சிகள் அவற்றை ஒளியிழக்கச் செய்பவைபோல.

தேவயானி விழிகளை திருப்பிக்கொண்டாள். ஏன் இவளைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்கிறேன் என வியந்தாள். தன் உடலின் நிமிர்வும் அழகும் அற்றவள். தன் அறிவும்

ஆற்றலும் இல்லாதவள். உலகை வெல்லும் திறனுடைய தந்தையின் மகளும் அல்ல. அவர் அடிதொட்டு சென்னி சூடும் அரசன் ஒருவனின் மகள். அங்கு நின்று அவள் தன்னை கருவறை அமைந்த தேவியை நோக்கும் இளஞ்சிறுமிபோல் நோக்கி நிற்கிறாள் என்பதை உணர்ந்தாள். அவள் கொண்டுள்ள வியப்பிலுள்ள குழந்தைத்தன்மைதான் அவளை அழகியாக்குகிறதா?

புவி அனைத்தையும் ஆள்பவனின் மகள். அசுரேந்திரனின் குலக்கொடி. நாளை பட்டத்தரசியாக யாரோ ஒரு சக்ரவர்த்தியின் இடம் அமரப்போகிறவள். அவள் தன்முன் வியந்து நிற்கும்போது தருக்கி எழாமல் எது ஒன்று தன்னுள்ளிருந்து மீண்டும் மீண்டும் நிலையழிவு கொள்கிறது?

# மாமலர் - 64

### 64. நிழல்வேங்கை

முறைமைச் சடங்குகள் முடிந்ததும் தேவயானியை தனியறைக்குச் சென்று ஆடைமாற்றி ஓய்வெடுக்கும்படி முதுசேடி சொன்னாள். அரசியரும் சர்மிஷ்டையும் குடிமூத்தபெண்டிரும் விடைபெற்று கிளம்பினர். தேவயானி எழுந்ததுமே ஓர் இளம்சேடி குனிந்து அவள் ஆடைகளை மடித்து சீரமைத்தாள். அவள் எதிர்பாராதபடி குனிந்தது தேவயானியை திடுக்கிட்டு பின்னடையச் செய்தது. “ஆடை..., தேவி” என்றாள் இளம்சேடி. தேவயானி புன்னகையுடன் “சொல்லிவிட்டு செய்!” என்றாள். “அரசியர் பல மடிப்புகள் கொண்ட ஆடையணிந்திருப்பார்கள். அவற்றை சேடியர் சீரமைப்பது ஒரு வழக்கம்” என்றாள் இளம்சேடி.

அவள் தன்னளவே உயரம்கொண்டவள் என்பதை தேவயானி அப்போதுதான் உணர்ந்தாள். “இங்கே உன்னளவு உயரம்கொண்ட எவருமில்லை” என்றாள். “ஆம், நான் இக்குடியில் அரிதாகப் பிறந்தவள். அதனாலேயே இவர்களுடன் இணைய முடியாதவள்” என்றாள் இளம்சேடி. “உன் தோள்களும் நடையும்கூட என்னைப்போல் உள்ளன” என்று தேவயானி சொன்னாள். அவள் சிரித்து “ஆம், அதை சற்றுமுன் முதுசேடி ஒருத்தி சொன்னாள்” என்றாள்.

அவர்கள் இடைநாழியில் நடக்கத் தொடங்கியதும் இளம்சேடி “பேரரசியர் உருவாவதில்லை, பிறக்கிறார்கள் என்பதை இப்போதுதான் கண்டேன்” என்றாள். தேவயானி திரும்பிநோக்க வணங்கி “சூரியன் எழுந்ததும் பிற சுடர்கள் ஒளியிழப்பதுபோல இன்றைய அவை” என்றாள். முகம் மலர்ந்தாளென்றாலும் பொய்ச்சீற்றத்துடன் “முகமன் கூறுகிறாயா?” என்று தேவயானி கேட்டாள். “இல்லை தேவி, இங்கே முகமன் உரைகளே சொல்லாடலில் பெரும்பகுதி. ஆனால் என் உள்ளத்திலிருந்து உரைக்கும் சொற்கள் இவை” என்றாள் இளம்சேடி. “நீங்கள் அரசகுலத்தில் பிறந்து அரசமுறையில் ஊறிவாழ்ந்தவரல்ல என்பதனால்தான் இதை நேரடியாகக் கூறவும் துணிகிறேன்.”

“இளமை முதலே இவ்வரண்மனையில் பணியாற்றுகிறேன். நூல் கற்றிருக்கிறேன். நெறிகள் அறிவேன். நானும் அழகியே. பேரரசிக்கோ இளவரசிக்கோ பிழையேதும் இன்றி பணியாற்றி வருகிறேன். ஆனால் என் உள்ளே ஒரு கூர்முனை ஒருபோதும் வளைந்ததில்லை. ஒரு சிறு முரண் நான் சொல்லும் அனைத்துச் சொற்களுக்கு அடியிலும் உண்டு. அதை அவர்களும் அறிவார்கள். அவர்கள் அறிவதனால் எவ்வகையிலோ என்னை மெல்ல புண்படுத்திக்கொண்டும்

இருப்பார்கள்” என்றாள் இளம்சேடி. “என் அகம் அனைத்தும் முற்றிலும் பணியும் ஓர் ஆளுமை என உங்களை கண்டேன். உங்களுக்கு ஒரு பரிசுத்தாலத்தை கொண்டுவரும்பொழுது என் உளமெழுந்து பெருகிய உவகையை உணர்ந்தபோதுதான் நான் தேடிக்கொண்டிருந்தது உங்களைப்போன்ற ஒருவரை என்று உணர்ந்தேன்.”

தேவயானி கைநீட்டி அவள் தோளை மெல்ல தொட்டாள். அதில் மேலும் நெகிழ்ந்து அவளை அணுகி “என்னை உங்களுடன் அழைத்துச் செல்லுங்கள், தேவி. உங்களுடன் இருப்பின் நான் இப்பிறப்பில் நிறைவுடையவளாவேன்” என்றாள். “உன் பெயரென்ன?” என்று தேவயானி கேட்டாள். “காமவர்த்தினி” என்று அவள் சொன்னாள். “வர்த்தினி என என்னை அழைப்பார்கள். வியாஹ்ரை என்றும் சாயை என்றும் நகையாட்டுப் பெயர்கள் உண்டு.” தேவயானி “அது ஏன்?” என்றாள். “நான் ஓசையற்ற காலடிகொண்டவள். ஆகவே புலி என்றும் நிழல் என்றும் சொல்கிறார்கள்” என்றாள் காமவர்த்தினி.

“நன்று! நான் பேரரசியிடம் சொல்கிறேன்” என்றாள் தேவயானி. இளம்சேடி சாயை “இன்று பரிசுத்தாலத்தை எடுப்பதற்காக நான் உள்ளறைக்குச் சென்றபோது அத்தனை சேடியரும் பேசிக்கொண்டிருந்தது ஒன்றே. தாங்கள் வந்திறங்கியதுமே ஹிரண்யபுரியின் இளவரசிக்கு எது குறைகிறது என்பது அனைவருக்கும் தெரிந்துவிட்டது” என்றாள். தேவயானி புன்னகையுடன் “எது?” என்றாள். “அவள் இளவரசி அல்ல என்பது” என்றாள் வர்த்தினி. தேவயானி வாய்விட்டு நகைத்தாள். பின்னர் “எண்ணிச் சொல்லெடு. இங்கே அது அரசமறுப்பு என எடுத்துக்கொள்ளப்படும்” என்றாள். “அதனால்

எனக்கென்ன? நான் எவருக்கும் குடியல்ல, உங்கள் ஒருத்திக்கே ஆள்” என்றாள் சாயை.

அரண்மனையில் தனக்கு அளிக்கப்பட்ட அறைக்குள் சென்று அங்கிருந்த ஒவ்வொன்றையும் விழியோட்டி நோக்கினாள் தேவயானி. தூயவெண்மஞ்சம், நாய்க்குட்டியின் தோல் என மென்பரப்பு கொண்ட மரவுரிகள், காற்றில் அலையிளகிய மென்பட்டு விரிப்பு. முகில்கீற்றென இறகுத்தலையணை. அணிகளைக் கழற்றி வைப்பதற்கான சந்தனப்பேழைகள் நான்கு பீடத்தின்மேல் இருந்தன. நீள்வட்ட வடிவிலான உலோகஆடியில் அவள் உருவம் பிறிதொரு அறையின் வாயிலுக்கு அப்பால் என தெரிந்தது. திறந்த சாளரத்தில் மெல்ல நெளிந்த கலிங்கத்து செம்பட்டுத் திரைச்சீலை. அவள் திரும்பத்திரும்ப நோக்கியபின் “இப்படியே எப்போதுமிருக்குமா?” என்றாள். “தேவி, காற்று கடந்துசென்ற நீர்போலிருக்கவேண்டும் அரசியர் அறை என்பது சேடியருக்கான நெறிக்கூற்று” என்றாள் சாயை.

தேவயானி “பகட்டு என்று சொல்லலாம், ஆனால் அழகென்பதே ஒரு பகட்டு அல்லவா?” என்று சொன்னபடி கைகளை விரித்து மெல்ல சுழன்றாள். “அழகின் உள்ளடக்கம் ஆனந்தம். இரு, நிறை, திகழ் என அது சொல்லிக்கொண்டிருக்கிறது.” சாயை சிரித்து “சார்த்தூல நிருத்யம்” என்றாள். தேவயானி வியப்புடன் “சாரங்கதரரின் காவியம், நீ கற்றிருக்கிறாயா அதை?” என்றாள். சாயை “ஆம், உளப்பாடம்” என்றாள். “எவரிடமிருந்து?” என்றாள் தேவயானி. “இங்கே நூல்மடம் ஒன்றுள்ளது. அங்குள்ள சுவடிக்காப்பாளர் என் தாய்மாமன்.” தேவயானி “ஆனால் கற்பிக்கப்படாமல் எப்படி காவியத்தை கற்கலாகும்?” என்றாள். சாயை “காவியப்பொருளை முன்னரே அறிந்தவர்களே

காவியத்தை கற்கமுடியும், தேவி. காவியப்பொருளே இயற்கை என அழைக்கப்படுகிறது” என்றாள். தேவயானி அவள் தோளில் கைவைத்து “நான் எனக்கு நிகர்ச்சொல் கொண்ட பெண்ணை முதன்முதலாக சந்திக்கிறேன்” என்றாள்.

சாயை புன்னகைத்து “அணிகளைக் கழற்றி சித்தமாக இருங்கள், தேவி. நீராட்டுச் சேடியரை நான் அழைத்துவருகிறேன்” என்றாள். “நீராடி ஆடை மாற்றி அணி புனைந்து எழுங்கள். அரசர் தன் முதல் ஆசிரியருக்கு இன்று அவைச்சிறப்பு அளிக்கிறார். அவையில் அரசியர் நிரையில் தாங்களும் இருக்கவேண்டுமென்று அரசரும் விழைகிறார்” என்றாள். “எங்களுக்கான தவக்குடில் எங்குள்ளது?” என்றாள் தேவயானி. “நாளை காலையில்தான் ஆசிரியர் தன் தவக்குடிலுக்கு செல்வார் என்றார்கள். இன்று தாங்கள் இந்த மாளிகையில் தங்கவேண்டும்.”

மீண்டும் அறையை சூழ நோக்கியபடி “நன்று” என்றாள் தேவயானி. சாயை தலைவணங்கி மெல்ல பின்வாங்கிச் சென்று கதவை மூடினாள். கதவின் விளிம்பு சென்று பொருந்தியதுமே தன் உளம் சற்றே திசைமாறி அதுவரை இருந்த உவகையை இழந்து முள்நெருடலொன்றை அடைவதை தேவயானி உணர்ந்தாள். எழுந்து சாளரத்தருகே சென்று திரைவிலக்கி வெளியே பார்த்தபோது அது ஏன் என்று தெரிந்தது. சர்மிஷ்டையின் கண்கள். குழந்தைத்தன்மையைத் தவிர்த்து எவராலும் அவளை எண்ண இயலாது. அவள் அக்கண்களையே எண்ணிக்கொண்டிருந்தாள். திரும்ப தலையை அசைத்து தன்னைக் கலைத்து வெளியே இளங்காற்றில் ஆடிக்கொண்டிருந்த மரக்கிளைகளை நோக்கினாள்.

ஹிரண்யபுரிக்கு தென்கிழக்கே இருந்த சூக்தவனம் என்னும் குறுங்காட்டில் அதை வளைத்தோடிய பிரதமை என்னும் ஆற்றின் கரையில் சுக்ரருக்கான பெரிய தவக்குடில் அமைக்கப்பட்டிருந்தது. அரக்கும் மெழுகும் பூசிய மரப்பட்டைகளை வண்ணம் சேர்க்கப்பட்ட மூங்கில்களாலான கழுக்கோல்கள் மேல் கூரையாக வேய்ந்து கைசுற்றி பிடிக்கமுடியாதபடி பெரிய சித்திரத்தூண்கள் மேல் நிறுத்தி எழுப்பப்பட்டிருந்த பெரிய மூன்றடுக்குக் குடில் சுக்ரருக்கு. அதைச் சூழ்ந்து பிறைவடிவில் நூற்றெட்டு சிறுகுடில்கள். சுக்ரர் முகம் மலர்ந்து “அரண்மனை வளாகம் போலிருக்கிறது” என்றார்.

உடன் வந்த விருஷபர்வனின் அமைச்சர் சம்விரதர் “அரண்மனையேதான். ஆசிரியர்கள் அரண்மனையில் தங்கமாட்டீர்கள் என்பதனால்தான் குடில்வடிவம்” என்றார். “மையக்குடிலை ஒட்டி வலப்பக்கம் அமைந்த வேள்விச்சாலையில் ஆயிரம்பேர் அமரமுடியும். இடப்பக்கம் இருக்கும் கல்விச்சாலையில் முன்னூறு மாணவர்கள் அமர்ந்து பாடம் கேட்க முடியும். தாங்கள் பேசும் ஒவ்வொரு சொல்லும் அனைவருக்கும் நன்கு கேட்கும்படி ஒலியும் எதிரொலியும் தேர்ந்த கலிங்கச்சிற்பிகளால் அமைக்கப்பட்டது அக்கூடம்” என்றார்.

அவர்கள் உள்ளே நுழைந்தனர். குடில்களைக் கட்டிய கலிங்கச்சிற்பிகள் வந்து வணங்கி நின்றனர். தலைமைச்சிற்பி சிரத்தர் அவருடன் நடந்தபடி “இது தாங்கள் ஓய்வெடுப்பதற்கான இடம். தங்கள் மாணவர்கள் மட்டும் தங்களிடம் உரையாடுவதென்றால் இந்தச் சிறிய கூடம்” என ஒவ்வொன்றையும் அறிமுகம் செய்தார். “இங்கே இனிய

தென்றல் எழும் என்பதை நோக்கி இடம் தேர்ந்தோம். இருப்பினும் இந்த தூக்கிவிசிறி மேலே அமைக்கப்பட்டுள்ளது. இதனுடன் இணைந்த கயிறு அங்கே ஆற்றின் சரிவில் ஓடிக்கொண்டிருக்கும் நீர்ச்சகடையுடன் இணைந்துள்ளதனால் மானுடக்கை இல்லாமலேயே ஆடி காற்றை அசைத்துக்கொண்டிருக்கும்.”

தேவயானியின் குடில் வலப்பக்கம் காட்டின் ஓரமாக அமைந்திருந்தது. சேடியருக்கான இரு சிறுகுடில்கள் அதன் இருபுறமும் இருந்தன. அவற்றிலிருந்து அவள் குடிலுக்குள் நுழைய கூரையிடப்பட்ட பாதை இருந்தது. அவளுடைய துயிலறைச் சாளரத்துக்கு வெளியே நாணல்கள் செறிந்த கரைகளுக்கு நடுவே நீலச்சிற்றலைகளுடன் பிரதமை சென்றது. மெழுகுபூசப்பட்ட மரத்தால் தளமிடப்பட்டிருந்த தரையில் சாளரப்பாவைகள் நீர்மையென ஒளிகொண்டு சரிந்துகிடந்தன. பின்பக்கம் ஆடைமாற்றும் அறையும் பொருள்வைப்பு அறையும் இணைக்கப்பட்டிருந்தன. திண்ணையில் அமர்ந்து ஆற்றையும் மறுபக்கம் சோலையையும் நோக்கிக்கொண்டிருப்பதற்காக பிரம்பு முடைந்த பீடங்கள் இடப்பட்டிருந்தன.

புதிய குடில் சுக்ரரைப்போலவே தேவயானியையும் உவகையில் ஆழ்த்தியது. சிறுமியைப்போல ஒவ்வொரு அறையாகச் சென்று நின்று கைகளை விரித்து அதன் அகலத்தை அறிந்து மகிழ்ந்தாள். சுவர்களை தட்டிப்பார்த்து அவற்றின் தடிமனை உணர்ந்தாள். அவற்றில் வரையப்பட்டிருந்த வண்ணமெழுகு ஓவியங்கள் அனைத்தையும் நின்று நோக்கினாள். பறக்கும் கந்தர்வர்கள், சிப்பி பதிக்கப்பட்ட விழிகள் ஒளிரும் யட்சர்கள், அவர்களைச் சுற்றி வளைத்து பின்னிப் படர்ந்திருந்த மலர்க்கொடிகள்,

அவற்றினூடாக சிறகசைத்தன வண்ணப்பறவைகள். பல கோணங்களில் மிரண்டு நோக்கி நின்றன மான்கள். உடல் ஒன்றுடன் ஒன்று பிணைத்துச் சென்றன களிற்றுயானை நிரைகள்.

ஓரிரு நாட்களிலேயே தேவயானி அவ்விடத்தை முழுமையாக நிறைத்தாள். என்றும் அங்கேயே இருந்தவள்போல உணர்ந்தாள். முதுசெவிலி “பெண்கள் நீர்போல, தேவி. அவர்கள் இருக்குமிடமளவுக்கு விரிவடைவார்கள்” என்றாள். குடில்தொகையிலும் சூழ்ந்த பூங்காட்டிலும் ஒவ்வொன்றையும் தனக்குகந்த முறையில் அவள் அமைத்துக்கொண்டாள். மலர்ச்செடிகள், ஊடாக சிறுபாதைகள், அமர்வதற்கான மரப்பீடங்கள், கொடிமண்டபங்கள், நிழல்மரங்களுக்குக் கீழே ஓய்வெடுப்பதற்கான இலைமஞ்சங்கள். ஒவ்வொன்றையும் அவள் முன்னரே அறிந்திருந்தாள். ஒவ்வொரு காவியத்திலும் ஒருபிறவிகொண்டு வாழ்ந்து மீண்டிருந்தாள்.

ஆணையிடுவதனூடாக அவள் தன்னை மேலும் மேலும் பெருக்கிக்கொண்டாள். அவள் குரலாலேயே அவ்வாணைகளை செங்கோலின் குரலென ஏற்றுப்பணிந்தனர் விருஷபர்வனின் ஊழியர்களும் காவலர்களும். அவள் குரலை காமவர்த்தினியும் அடைந்தாள். பின் அவள் குரலே அனைவருக்கும் ஆணையிடலாமென்றாயிற்று. தேவயானியின் நிழல் என்னும் பொருளில் அவளை அனைவரும் சாயை என்றே அழைக்கலாயினர். மெல்லிய பாதங்களுடன் அவள் வருவதைக் கண்டால் வாயசைக்காமல் ஒருவருக்கொருவர் “வியாஹ்றை” என்றனர். அடுமனைமுதுமகள் தேவயானியிடம் நகையாட்டாக “உங்களை வியாஹ்றாரூடையாகிய துர்க்கை என்கிறார்கள், தேவி” என்றாள்.

அனைத்தும் எண்ணியவாறு அமைந்தபின் தன் குடில்முகப்பில் பீடத்தில் அமர்ந்து ஒளிவிடும் ஆற்றை நோக்கியிருந்தவள் திரும்பி சாயையிடம் “மீண்டும் புதிதாகப் பிறந்ததுபோல் உணர்கிறேன்” என்றாள். அவள் புன்னகைத்து “மெய்யாகவே மீண்டும் பிறந்திருக்கிறீர்கள், தேவி” என்றாள். “இங்கு ஓர் அரசியென உணர்கிறேன். எளிய குடில் வாழ்க்கையில் இருக்கையில் அதுவே நிறைவென்று தோன்றியது. மாளிகைக்கு வரும்போதுதான் நாம் இழந்ததென்னவென்று புரிகிறது. எளிமையென்பது அழகுக்கு எதிரானது” என்றபின் விழிவிலக்கி சாளரத்தை நோக்கியபடி “எளிமை என்பது ஒளி. விழியற்றோர் அதை அறியமுடியாது. செல்வம் மலைகளைப்போல. விழிமூடி எவரும் அதை புறக்கணிக்கமுடியாது” என்றாள்.

“அரசர்களுக்கன்றி எவருக்கும் மெய்யான செல்வம் இல்லை, தேவி” என்றாள் சாயை. “வணிகர்கள் செல்வம் ஈட்டலாம், செலவழிக்க இயலாது. அவர்கள் அதை வெளிப்படுத்தும்தோறும் இழக்க நேரும்.” தேவயானி “ஆம், நான் ஓர் அரசியாக வேண்டும். பேரரசியாக. எனக்குமேல் பிறிதொருவரை ஏற்க என்னால் இயலாது” என்றாள். “அங்கே அரண்மனையிலேயே அவ்வெண்ணம் வந்தது. இக்குடிலுக்குள் நுழைந்ததுமே அதை முடிவுசெய்தேன். என் பிறவி நூலில் பாரதவர்ஷத்தின் பேரரசியாக ஆவேனென்று எழுதப்பட்டுள்ளது. இளமையிலேயே அதைக் கேட்டுத்தான் வளர்ந்தேன். பின்னர் அது வெறும் விழைவென்று எண்ணி ஒதுக்கினேன். இப்போது அறிகிறேன், நான் செல்ல வேண்டிய இலக்கு அதுவே.”

“நான் தங்களை பிறிதொருத்தியாக பார்க்கவில்லை, தேவி” என்றாள் சாயை. “ஆகவே இன்றுமுதல் உங்களை நான் அரசி

என்றே அழைக்கப்போகிறேன். கேட்பவர்களிடம் நீங்கள் எனக்கு பேரரசி என விளக்கம் அளிக்கிறேன்.” தேவயானி ஒளிகொண்ட பிரதமையை நோக்கிக்கொண்டிருந்தாள். “ஐயமே இல்லை. நான் பாரதவர்ஷத்தின் பேரரசியாக அரியணை அமர்வேன். என் நகருக்கு நிகராக அமராவதியும் என் மாளிகைக்கு நிகராக இந்திரன் மாளிகையாகிய வைஜயந்தமும் அமையலாகாது” என்றாள்.

“ஆம்” என்றாள் சாயை. “ஆனால் இன்று பாரதவர்ஷத்தின் அரசர்கள் அனைவருமே தங்கள் மணிமுடிகளைக் கொண்டுவந்து விருஷபர்வரின் காலடியில் வைத்து பணிந்து மீள்பவர்களே.” தேவயானி திரும்பி நோக்கி “அனைவருமா?” என்றாள். “அனைவருமல்ல. பணியாத சிலர் உள்ளனர். தேவர்களுடனான போர் நிகழ்வதனால் அவர்களை வெல்ல இயலவில்லை என்கிறார்கள் அசுரர்களின் பாணர்கள். ஆனால் அவர்கள் ஷத்ரியர்கள் என்பதும் தலைமுறைகள்தோறும் வேள்வியளித்து தேவர்களை தங்கள் காவலர்களாக நிறுத்தியிருக்கிறார்கள் என்பதும்தான் உண்மை. தேவர்களை வெல்லாமல் அவர்களை ஹிரண்யபுரி வெல்லமுடியாது” என்றாள் சாயை.

“யார் அவர்கள்?” என ஆர்வமற்றவள்போல விழிகளை ஆற்றின் ஒளியில் நட்டு இயல்பான அசைவால் நெற்றியில் சரிந்த குழல்கற்றையை ஒதுக்கியபடி தேவயானி கேட்டாள். “சந்திரகுலத்து ஷத்ரியர்கள். குருநகரி அவர்களின் நாடு. அசுரர்களுக்கும் அவர்களுக்குமாக பாரதவர்ஷம் பகுக்கப்பட்டுள்ளது. நடுவே கங்கை எல்லையென நீர்பெருகியோடுகிறது” என்றாள் சாயை. “சந்திரகுலத்தின் கதைகளைப் பாடும் சந்திரவம்சம் என்னும் பெருங்காவியம்

சக்ரதரரால் இயற்றப்பட்டது. நான் அதை முழுமையாகவே கற்றிருக்கிறேன்.” தேவயானி அவளை நோக்கி “பாடு” என்றாள்.

“சந்திரனின் மைந்தன் புதன். புதன் மைந்தன் புரூரவஸ். புரூரவஸ் ஆயுஸைப் பெற்றான். ஆயுஸின் மைந்தன் நகுஷன் இந்திரனை வென்று அரியணை அமர்ந்து நகுஷேந்திரன் என்று புகழ்பெற்றான்” என்று சாயை பாடத்தொடங்கினாள். “நகுஷனின் மைந்தர் அறுவர். நகுஷனின் தனிமை யதி என்னும் மைந்தனாகப் பிறந்தது. அவன் துயரம் சம்யாதியாகியது. அவன் சினம் ஆயாதியாகியது. வஞ்சம் அயதியாகியது. விழைவு துருவனாக ஆகியது. அவன் கொண்ட காமம் யயாதியெனும் மைந்தனாகியது. கணுக்களில் கூர்கொள்வதே முளையென மரத்திலெழுகிறது. அறிக, தந்தையரில் கூர்கொள்வதே மைந்தரென்று வருகிறது.”

மெல்லிய காலடிகளுடன் தன் படுக்கையறைக்குள் நுழைந்தவளை தேவயானி முன்பு அறிந்திருக்கவில்லை. எழுந்து அமர்ந்து “யார்?” என்றாள். அவள் கண்கள் சற்று கலங்கியிருந்தன. ஆனால் அழுகையல்ல, கடுஞ்சினம் எனத் தெரிந்தது. “யார்?” என்று அவள் மீண்டும் கேட்டாள். அவள் நீள்மூச்சுவிட்டபோது நெஞ்சு எழுந்தமைந்தது. “எப்படி நீ உள்ளே வந்தாய்?” என்றாள் தேவயானி. “நான் வேறு எங்கோ இருக்கிறேன்” என்றாள். அந்த மறுமொழி முற்றிலும் பொருத்தமற்று இருந்தது. பிச்சியோ என ஐயுற்றாள். பகலா இரவா என்று தெரியவில்லை. மிக அப்பால் சாயையின் பேச்சொலி கேட்டுக்கொண்டிருந்தது.

“வருக!” என்று அவள் சொன்னாள். அவள் உதடுகள் அசைய ஒலி வேறெங்கோ இருந்து கேட்டது. “எங்கே?” என அவள் அச்சத்துடன் கேட்டாள். “வருக!” என்றாள் அவள் மீண்டும்.

அவள் அணிந்திருந்த ஆடைகள் அவளை அரசி என காட்டின. “எங்கே?” என்று கேட்டபடி தேவயானி எழுந்தாள். “இங்கிருந்து நாம் செல்லமுடியாது, நம்மை பிறர் பார்த்துவிடுவார்கள்” என்று அவள் சொன்னதை கேளாதவளாக அப்பெண் நடந்தாள். அவள் கால்களின் சிலம்போசையை அவள் மிக அண்மையில் என காதுக்குள் கேட்டுக்கொண்டிருந்தாள். “நீ யார்?” என்று அவளைத் தொடர்ந்தபடியே தேவயானி கேட்டாள். அவள் திரும்பிநோக்கவில்லை.

முற்றத்தில் நின்றிருந்த அனைவருமே அவளை முன்னரே அறிந்திருந்தனர். அவர்கள் கடந்துசெல்வதை அவர்கள் இயல்பாகவே நோக்கினர். அதற்குள் தேவயானி அது கனவு என உணர்ந்துகொண்டிருந்தாள். அவள் உள்ளே மஞ்சத்தில் படுத்துக்கொண்டிருப்பதையும் உணர்ந்தாள். அது கனவுதான் என்பது அவளுக்கு ஆறுதல் அளித்தது. எப்போது வேண்டுமென்றாலும் விழித்தெழ முடியும். கையை அசைத்தால் போதும். அவ்வெண்ணம் எழுந்ததுமே கையை அசைக்க முயன்றாள். கை மிகத் தொலைவில் எங்கோ கிடந்தது. உடலை பலமுறை சித்தத்தால் உந்தினாள். அவளால் அதை தொடவே முடியவில்லை.

அவள் பிரதமையின் கரையை அடைந்து திரும்பி நோக்கி அவள் தொடர்ந்து வருகிறாளா என்று நோக்கினாள். அவள் நடைவிரைவைக் கூட்டியதும் மேலும் நடந்தாள். இரு வளைவுகளுக்குப் பின் அவள் கண்ட ஆறு பலமடங்கு பெரிதாக கரைமரங்கள் செறிந்து வளைந்து நீரளாவும் கிளைகள் கொண்டிருக்க அலையிளகிச் சென்றுகொண்டிருந்தது. அதில் வந்து சேர்ந்த ஒரு சிற்றோடையருகே திரும்பி முன்னால் சென்றவள் நடந்தாள். அவளைத் தொடர்ந்து சென்ற தேவயானி

ஒரு நோக்கில் திகைத்து நின்றாள். முன்னால் சென்றவளின் முகம் தன்முகம் போலவே இருப்பது அப்போதுதான் அவளுக்குத் தெரிந்தது.

ஓடை மேலும் மேலும் சிறியதாகியபடியே சென்றது. அவளை அழைத்துச்சென்றவள் அங்கே எவருக்காகவோ நின்றாள். ஓடையின் நீர் முற்றிலும் நிலைத்ததை தேவயானி அறிந்தாள். பாறை இடுக்குகள் வழியாக நுரையுடன் பீறிட்டு வந்த நீர் மெலிந்து வழிந்து நீர்த்தடம் வெண்ணிறமாகத் தெரிய ஓசை ஓய்ந்தொழிய தெரிந்தது. மரங்களுக்கு அப்பால் அவள் ஒருவனை கண்டாள். முதிரா இளைஞனாயினும் அவள் அதுவரை கண்டதிலேயே உயரமானவனாக இருந்தான். தலையில் கரியகுழல்களை மலைக்கொடியால் கட்டி முடிச்சிட்டிருந்தான். அவன் கையிலிருந்து அதிர்ந்த வில்லில் இருந்து எழுந்த அம்புகள் சீராகச்சென்று சேற்றிலும் பாறையிடுக்குகளிலும் ஊன்றி நின்று முடைந்த தடையில் சீப்பில் சிக்குவதுபோல ஓடையின் சருகுகளும் கொடிகளும் வந்து படிந்து உருவான இயற்கையான அணைத்தடுப்பு நீரை முழுமையாக நிறுத்தியிருந்தது.

அவள் ஓடையை நோக்கிய சரிவில் மெல்ல இறங்கி முன்னால் சென்றவளிடம் "யார் அவன்?" என்றாள். "குருநகரியின் அரசன், அவன் பெயர் யயாதி" என்று அவள் சொன்னாள். அவன் தோள்களும் புயங்களும் திரண்டு தசைஇறுகித் தெரிந்தன. அவன் வில்லை வைத்துவிட்டு நெற்றிவியர்வையை அம்பால் வழித்து சொட்டிவிட்டுத் திரும்பினான். அவர்களை அவன் காணவில்லை. இலைத்தழைப்பு மறைத்த அவன் முகத்தை அவள் கண்டாள். திடுக்கிட்டு அலறியபடி பின்னடைந்தாள். அது கசன்.

அவள் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. அது கனவு என்று உணர்வு சொன்னது, இக்கணமே நான் எண்ணினால் என் படுக்கையில் எழுந்துவிடமுடியும். ஆனால் மரங்களும் மண்ணும் ஆறும் அனைத்தும் மெய்யென்றிருந்தன. “அவனை அறிவாயா?” என்று அவள் கேட்டாள். “ஆம், அறிவேன்” என்றாள் தேவயானி. “அவ்வண்ணமென்றால் அவனை கொல்…!” அவள் பின்காலடி வைத்து “இல்லை” என்றாள். “கொல் அவனை, இல்லையேல் அவன் மீண்டும் வெற்றுநெறி பேசி மீண்டுமொருமுறை பெண்பழி கொள்வான்.” அவள் “இல்லை இல்லை” என்றபடி பின்னடைந்தாள். “ஒரு சொல் உரை… இந்த ஓடை அனல்பெருக்காக ஆகும். இக்காடு பற்றி எரியும்.” அவள் மேலும் மேலும் பின்னால் நடந்தபடி “இல்லை, என்னால் இயலாது…” என்றாள். உடல் உலுக்கிக்கொள்ள அழுதபடி “என்னால் இயலாது… என்னால் இயலாது” என கையை அசைத்தாள். ஆனால் அப்போதும் அவள் தன் அறையின் படுக்கையில்தான் கிடந்தாள்.

“ஒரு சொல்… ஒரு சொல் போதும். நீ மீண்டும் மீண்டும் துறக்கப்படாமலிருப்பாய்” என்றபடி இரு கைகளையும் விரித்தபடி அவள் தேவயானியை நோக்கி வந்தாள். “இல்லையேல் இது முடிவிலாச் சுழற்சி. இங்கு அதை நிறுத்து!” தேவயானி “நீ யார்?” என்றாள். அவள் பன்றியின் ஒலியுடன் உறுமியபோது இரு கைகளின் விரல்களிலும் அனல்கொழுந்துகள் எழுந்தன. அவள் உடல் கருமைகொண்டது. முகம் நீண்டு பன்றிமூக்கும் வெண்தேற்றைகளும் விரிந்த செவிகளும் எழுந்தன. அவள் கைகளிருந்து காட்டுமரங்கள் பற்றிக்கொண்டன. நெய்மழை பெய்து நனைந்திருந்தவைபோல காட்டுமரங்கள் அனைத்தும் பேரொலியுடன் எரிந்தெழுந்தன.

தேவயானியின் ஆடைகள் பற்றிக்கொண்டன. அவள் காட்டெரியினூடாக உடலில் தீக்கொழுந்துகள் எழுந்து படபடத்துப் பறக்க ஓடினாள். மண்ணில் விழுந்து எழுந்து அலறியபடி ஓடினாள். “இல்லை இல்லை” என்று கூவிக்கொண்டிருந்தாள். தொலைவில் அவள் தன் குடிலை கண்டாள். அதை நோக்கி ஓடி படிகளில் ஏறி உள்ளே சென்றாள். அங்கே செடிகளுக்கு நீர் இறைத்தபடியும் மலர்கொய்தபடியும் இருந்த சேடியரும் செவிலியரும் அவளை காணவில்லை. எரியும் தழல் படபடக்கும் ஒலி அவள் செவிகளில் இருந்தது. அவள் ஓடியபோது சிறகுபோல நீண்டது.

குடிலுக்குள் நுழைந்து தன் அறையை அடைந்து உள்ளே நோக்கினாள். உள்ளே காமவர்த்தினி தன் மஞ்சத்தில் படுத்து கைகளை சேக்கையில் அறைந்தபடி உடல்நெளிய தலையை அசைத்து “தழல்… தழல்… இல்லை… மாட்டேன்” என்று கூவிக்கொண்டிருப்பதை கண்டாள்.

# மாமலர் - 65

## 65. பறந்தெழுதல்

தேவயானியின் வருகையால் சர்மிஷ்டை அகம்குலைந்தது அவள் முகத்தில் சொற்களில் நடையில் அனைத்திலும் வெளிப்பட்டது. “சுழல்காற்று கலைத்த தாமரைபோல” என்று விறலி ஒருத்தி அகத்தளத்தில் அமர்ந்து அவளை நகையாடினாள். அப்போது அவள் அங்கே வர அவள் அதே சொல்லொழுக்கில் பேச்சை மாற்றி “நீரலைகள் காற்று சென்றதுமே மீள்கின்றன. தாமரையோ மீள்வதே இல்லை” என்றாள்.

சர்மிஷ்டை வந்து அமர்ந்து “என்ன?” என்றாள். “ஒரு பாடல்” என்றாள் விறலி. “பிரிவுக்குப்பின் அனைத்தும் மீண்டுவிடுகின்றன. தலைவன் வளர்த்த காளையும், அவன் பேணிய வேங்கைமரமும், அவன் அமரும் பீடமும். காதல்கொண்ட அவள் உள்ளம் மட்டும் மீளவே இல்லை என்று கவிஞர் சொல்கிறார்.” அவள் வெற்றுவிழிகளுடன் “அப்படியா?” என்றாள். அவர்கள் விழிநோக்கி மென்னகை பரிமாறிக்கொண்டனர்.

எதையும் பயிலாத சிறுவீட்டுப் பெண் போலிருந்தாள் சர்மிஷ்டை. இளமையிலேயே அவளுக்கு மொழியும் கலைகளும் கற்பிப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தான் விருஷபர்வன். தென்குமரி முதல் பாரதவர்ஷத்தின் அனைத்துப் பகுதிகளையும் சேர்ந்த மிகச்சிறந்த ஆசிரியர்களைக் கொணர்ந்து அரண்மனை வளாகத்திலேயே தங்க வைத்திருந்தான். ஒவ்வொரு நாளும் அவர்கள் முறைவைத்து அரண்மனைக்கு வந்து சர்மிஷ்டைக்கு கலைகளும் காவியமும் நெறிநூல்களும் ஆட்சிமுறைமையும் கற்பித்தனர். ஆனால் அவள் எதையுமே கற்றுக்கொண்டிருக்கவில்லை. ஒவ்வொரு அறிவும் அவளுக்கு வெறும் செய்திகளாகவே சென்று சேர்ந்தது. ஒரு செய்தி பிறிதொரு செய்தியை அழித்தது.

“இளவரசி, இவை செய்திகள் அல்ல. மொழியில் பதிந்த நிலமும் வாழ்க்கையும் என்று உணர்க! மொழியிலிருந்து நிலமாகவும் வாழ்வாகவும் உயிர்ப்பித்தெடுத்து அதில் வாழுங்கள். கற்றவை அழியும், வாழ்ந்து அறிந்தவையே மெய்ம்மையென தங்கும்” என்றார் காவிய ஆசிரியரான சுருதசாகரம் அஷ்டகர். “ஒவ்வொரு நெறியும் கண்ணீரால் குருதியால் கண்டடையப்பட்டது. பெருங்கருணையால்

வகுக்கப்பட்டு வாளேந்திய சினத்தால் நிலைநிறுத்தப்படுவது. அவ்வுணர்வுகளாக நெறிகளை அறியாதவர்களுக்கு நெறிகள் வெறும் மொழியலைகள் மட்டுமே. நெறியை மொழியாக அணுகுபவர் நெறியின்மையையே சென்றடைவர்” என்றார் காமரூபத்து ஆசிரியரான மகாபத்மர்.

அவள் சிறுமியைப்போல மலர்ந்த விழிகளுடன் மாறாப் புன்னகையுடன் அமர்ந்திருப்பாள். “அப்புன்னகையால் அத்தனை அறிதல்களையும் அணைகட்டி இப்பால் நிறுத்திவிடுகிறீர்கள், இளவரசி” என்றார் இலக்கண ஆசிரியரான தண்டகர். “கல்வியால் சற்றேனும் வளர்பவரே கற்க முடியும் என்று இன்று அறிந்தேன். அடுத்த அடி வைத்த பின்னரே முந்தைய அடியை நாம் உண்மையில் புரிந்துகொள்கிறோம். திரும்பிநோக்கி அறிகையிலேயே அறிந்தவை செறிந்து அறிவென்றாகின்றன” என்றார் முறைமைகள் கற்பித்த சாந்தர்.

இயல்பிலேயே பாடுந்திறன் மட்டும் அவளுக்கு அமைந்திருந்தது. எனவே திருவிடத்தைச் சேர்ந்த பூர்ணர் கற்பித்த பண்களையும் பாடல்களையும் மட்டும் எளிதாக கற்றாள். அவற்றிலும் தேர்ச்சி என ஏதும் பெறவில்லை. உள்ளத்து உணர்வுகளை குரல் வழியாக வெளிப்படுத்தும் அடிப்படைப் பயிற்சிக்குப் பின்னர் அவ்வெளிப்பாடுகளின் ஒவ்வொரு அலகையும் ஒரு வண்ணமெனக் கொண்டு கலந்தும் மயங்கியும் அவற்றை வண்ண அடுக்குகளின் வெளியென்று ஆக்கும் திறன் நோக்கி செல்ல அவளால் இயலவில்லை. “குயில் பாடுகிறது, அது குயில்பாட்டு என அன்றும் இன்றும் அப்படியே இருக்கிறது. மானுடனின் இசை ஒவ்வொரு கணமும் மாறுபடுகிறது, விழியசைவுகளைப்போல.

ஒவ்வொருவரின் உருவையும் செலவையும் பதித்திருக்கிறது, கால்சுவடுகளைப்போல” என்றார் பூர்ணர்.

“இளவரசி, உணர்வுகளை நேரடியாக இசைப்பதே நாட்டுப்புற இசை. அதுவே இசையின் அடித்தளம். இசையின் ஒரு பகுதி குருதிபோல மூச்சுபோல நம்முள் இருந்து ஊறுவது. ஆனால் பிறிதொரு பகுதி இக்காற்றுபோல அப்பாறைகள்போல புறத்தே இலங்குவது. உள்ளிருப்பது புறமென்றாகி நின்றிருக்கும் விந்தையே இசை. புறம்திகழ்வது உள்ளமென ஆகும் மறுவிந்தையும்கூட” என்றார் பூர்ணர். அவள் விழிவிரித்து நோக்கி அமர்ந்திருந்தாள். “உங்கள் துயரங்களை எண்களாக்க முடியுமென்றால், கனவுகளை கோலப்புள்ளிகளாக இட முடியுமென்றால், பொங்கி எழும் உவகைகளை கற்களாக தொட்டு எடுத்து அடுக்கிவைக்க முடியுமென்றால் நீங்கள் இசையை நிகழ்த்துகிறீர்கள்” என்றார் பூர்ணர்.

“ஒவ்வொருவரும் தங்கள் துயரங்களையும் கனவுகளையும் உவகைகளையும் அதிலிட்டு நிறைத்து அருந்திக்கொள்கிறார்கள். ஒவ்வொன்றையும் உருக்கொள்ளச் செய்யும் அச்சு அது” என்றார் பூர்ணர். மெல்லிய குரலில் சர்மிஷ்டை “என் உணர்வுகளுக்கு என் இசையில் இடமில்லையா?” என்று கேட்டாள். “உண்டு, அதை தாங்கள் மட்டுமே அறிவீர்கள். இசை எவருடைய தனியுணர்வும் அல்ல, அது மானுடத்துக்குரியது” என்றார் பூர்ணர். அன்று அவள் சுட்டுவிரலால் தரையில் சிறு கோலங்களை எழுதியபடி தலை குனிந்து நெடுநேரம் அமர்ந்திருந்தாள். அவள் அடுத்த சொல் எடுப்பதற்காக ஆசிரியர் காத்திருந்தார்.

பின்னர் அவள் விழிதூக்கி “என்னால் இசையையும் கற்றுக்கொள்ள முடியுமென்று தோன்றவில்லை, ஆசிரியரே.

இவ்வரண்மனையில் எனைச் சூழ்ந்திருக்கும் அனைத்துமே நீங்கள் சொல்வதைப்போல எண்களும் புள்ளிகளும் கற்களும்தான். அலறல்களும் அழுகைகளும் நீள்மூச்சுகளும்கூட வெளிவந்ததுமே இங்கு அவ்வாறு ஆகிவிடுகின்றன. எனக்கென எஞ்சியிருப்பது இந்த இசை மட்டுமே. அறைக்குள் கதவுகளனைத்தையும் மூடிக்கொண்டு எனக்கு நானே விசும்பி அழுவதைப்போன்றது அது. அதையும் நான் இழந்துவிட வேண்டுமா?" என்றாள்.

மொழியில் கற்பிக்கப்பட்ட எதையும் மொழி கடந்து நோக்க அவளால் இயலவில்லை. நூறுமுறை அணியியல் கற்பிக்கப்பட்ட பின்னர்கூட மலர் மலரென்றும் தேனீ தேனீ என்றும் அதன் மீட்டல் வெறும் ஓசையென்றுமே அவளுக்குத் தெரிந்தது. ஒவ்வொன்றுக்கும் அடியில் உறைந்துள்ள ஒன்றை தொட்டுத் திறக்க தன்னால் இயலவில்லை என்று விரைவிலேயே உணர்ந்துகொண்டாள். "ஒரு தேனீயை ஏன் யாழென்றும் பறக்கும் சுடர் என்றும் எண்ணிக்கொள்ள வேண்டும்? அது தேனீ என்றே இருந்தால் என்ன குறைந்துவிடப்போகிறது?" என்று அவள் கேட்டாள்.

ஆறாண்டுகளாக அவளுக்கு காவியம் கற்பித்துக்கொண்டிருந்த அஷ்டகர் ஒருகணம் அவளை நோக்கியபின் சுவடிகளை மூடி கட்டிவைத்துவிட்டு "நன்று, முதல் கவிதை எழுதப்பட்ட நாள்முதல் கவிஞரிடம் கேட்கப்படும் கேள்வி இது. எக்கவிஞனும் இதற்கு நிலையான மறுமொழியை சொன்னதில்லை. ஏனென்றால் அவனும் அதே வினாவை தனக்குள் கேட்டுக்கொள்கிறான். இருந்தும் ஏன் அவன் கவிதை எழுதுகிறானென்றால் அவன் கவிஞன் என்பதனால், அவனால் எழுதாமலிருக்க இயலாதென்பதனால்" என்றார்.

அவளுக்கு ஆடலும் அணிநடையும் கற்பிக்க வந்த கலிங்கத்து ஆட்டரான சீர்ஷர் “உடலை உள்ளத்தால் அத்தனை இடுக்கிக்கொள்ள வேண்டியதில்லை, இளவரசி. அஞ்சும் அன்னைக்குரங்கு தன் சவலைக்குட்டியை என உங்களை நீங்களே அத்தனை அள்ளி பற்றியிருக்கிறீர்கள். ஒருகணம்கூட உங்கள் தோள்களில் தன்னுணர்வில்லாமல் இருந்ததில்லை. உடலை மறந்திருங்கள். இளஞ்சிறுமியென எப்படி மலர்த்தோட்டத்தில் பாய்ந்தோடினீர்களோ அப்படி இருங்கள்” என்றார். “நான் எப்போதும் அப்படி ஓடியதில்லை, ஆசிரியரே” என்றாள் சர்மிஷ்டை. “என்றும் என்னுடன் சேடியரும் செவிலியரும் இருந்தனர். நானறிந்த முதற்பேச்சே நீ இளவரசி என்பதுதான். எனைச் சூழ்ந்த விழிகளை உணராமல் துயின்றதே இல்லை.”

“விழிகளைச் சூழ உணர்வதேகூட உடலை விடுதலை செய்தலாகும்” என்றார் சீர்ஷர். “விறலியரும் பாணினியரும் விழிநடுவே பிறந்து விழிசூழ் மேடைகளில் வாழ்கிறார்கள். விழிகளே உலகம், விழிகளே காலம், விழியென மலர்ந்ததே பிரம்மம். விழிகள் முன் நம் உச்சத்தை நிகழ்த்தவேண்டும் எனும் எண்ணமே நம்மை சிறகுகொள்ளச் செய்யும்.” அவள் “என்னால் இயலாது” என்றாள். “ஆடல் என்பது உடலின் விடுதலை. விடுதலை கொள்கையிலேயே உடல் முற்றிலும் ஒத்திசைவை அடைகிறது” என்றார் சீர்ஷர்.

சர்மிஷ்டை “விழிமுன் திகழ்வதற்கு அழகிய உடல் வேண்டும். என் உடலை எவ்விழிக்கு முன்னும் தயக்கமின்றி முன்வைக்க என்னால் இயலவில்லை” என்று விழிதாழ்த்தி சொன்னாள். “என்னை நோக்கும் ஒவ்வொருவரும் பிறிதொருவரை நோக்குவதாக தோன்றுகிறது. என்னை

அழைக்கும் ஒவ்வொரு குரலும் எனைக்கடந்து பிறிதொருவரை நோக்கி செல்வதாகத் தோன்றுவதுதான் எனது துயர்.”

“நீ எதை அஞ்சுகிறாய்? மண்ணில் எவரிடமும் பணியவேண்டியதில்லை நீ, எனினும் உன் உடல் எப்போதும் பணிந்திருப்பது ஏன்?” என்று எரிச்சலுடன் கேட்ட தன் அன்னையிடம் அவள் சொன்னாள் “பொருந்தாத ஆடைகளை அணிந்திருப்பவர்களின் தயக்கம் தாங்கள் அறிந்தது, அன்னையே. பொருந்தாத உடலை அணிந்திருக்கிறேனோ என்று நான் உணர்கிறேன்.” அன்னை சினந்து “இது நீ பயிலும் பயனற்ற காவியங்களின் விளைவு. அவையனைத்தும் சூதர்களின் வீண் கற்பனைகள். அவற்றிலுள்ள பெண்களின் அழகையும் ஆற்றலையும் உன்னுடன் ஒப்பிட்டுக் கொள்கிறாய். அவர்கள் மண்ணில் எப்போதும் வாழ்ந்ததில்லை” என்றாள்.

அவள் சினத்துடன் “வாழாதவர்களைப் பற்றியா இத்தனை காவியங்கள் எழுதப்பட்டுள்ளன? வெறும் கற்பனையையா இத்தனை மக்கள் சொல்பெருக்கி சித்தம் நிறைத்துக்கொள்கிறார்கள்?” என்றாள். “உனக்கென்ன தெரியும்? தான் இருக்கும் உடலில் தான் வாழும் இல்லத்தில் தன் குடியில் நிறைந்து வாழ்பவர் எவருளர்? விரிந்து கடந்து செல்லவேண்டுமென்ற கனவு அல்லவா மனிதர்களை ஆட்டி வைக்கிறது? ஆகவேதான் மாவீரர்கள், பேரழகிகள், விண்ணுலாவும் தேவர்கள் சொல்லில் எழுகிறார்கள். அவர்களைப்போல் ஆகவேண்டுமென்று இளமையில் எண்ணிக்கொள்வதில் பிழையில்லை. இளமை முடிந்தபின்னும் அவ்வாறு ஆகவில்லையே என்று எண்ணி ஏங்குவது அறிவின்மை” என்று அரசி சொன்னாள்.

“காட்டுக்கனிகளில் சிறந்ததை உண்டு விதைபரப்பும் பறவைகள் போன்றவர்கள் சூதர்” என்று சர்மிஷ்டை சொல்ல “இல்லை, அனைத்தையும் பொன்னாக்கிவிடமுடியும் என்னும் கனவை மண்ணில் நிலைநிறுத்தும் பொய்யர்கள்” என்றாள் அன்னை. சிறுமிபோல தலையை அசைத்து சர்மிஷ்டை “ஷத்ரியர்கள் காவியங்கள் சொல்லும் அந்த அழகிய தோற்றமுடையவர்கள் என்று விறலி சொன்னாள்” என்றாள்.

“அவள் எங்கு கண்டாள்? அவ்வண்ணம் அவர்கள் அழகு கொண்டிருந்தாலும்கூட இன்று உன் தந்தையின் அரியணை முன் வந்து அவர் காலடியில் மணிமுடியை வைத்து வணங்கி வாழ்த்து பெற்றுச் செல்லும் இடத்தில் இருக்கிறார்கள். அவர்கள் வீட்டில் வளரும் எந்த அழகியையும் சுட்டுவிரல் சுட்டிக் காட்டி தன் மகளிரறைக்கு கொண்டுவர அவர் ஆணையிட முடியும். நோக்கு, பாரத வர்ஷத்தை ஆளும் எந்த ஷத்ரியச் சக்ரவர்த்தி உனக்கு கணவனாக வேண்டுமென்று எண்ணுகிறாய்? அவனை இங்கு வரவழைக்கிறேன்” என்றாள். “தந்தையின் ஆணைக்குக் கட்டுப்பட்டு அவர் என் கைபற்றலாம். என் அழகையோ நல்லியல்பையோ விரும்பி வரமாட்டாரல்லவா?” என்றாள் சர்மிஷ்டை.

சினங்கொண்ட அன்னை “இப்பேச்சுகளுக்கு மறுமொழி அளிக்க எனக்கு பொழுதில்லை. நீ பாரதவர்ஷத்தை ஆளும் விருஷபர்வனின் மகள். ஹிரண்யபுரியின் இளவரசி. அதை உன்னுள் கூசிச் சுருங்கும் அச்சிறுமியிடம் ஒவ்வொரு நாளும் நூறுமுறை சொல். ஏதோ ஒரு சொல் அவள் சித்தத்தை அடையும்போது உன் தோள்களில் நிமிர்வு வரும். உன் தலை மேலெழும். அதுவரை இவ்வாறு சுவர்மடிப்பில் ஒண்டி ஓடும்

எலிபோலத்தான் இங்கு வாழ்வாய்” என்றபின் எழுந்து சென்றாள்.

உப்பரிகையில் நின்றபடி தொலைவில் வண்டியில் வந்துகொண்டிருந்த தேவயானியை முதலில் கண்டபோதே சர்மிஷ்டை தன்னுள் ஒரு திடுக்கிடலை உணர்ந்தாள். பின்னர் எங்கும் எச்சொல்லும் நிலைகொள்ளாத பதற்றத்தை அடைந்தாள். விரல்நுனிகள் அனைத்தும் குளிர்ந்து தளிர்முனைகளென நடுங்கும் உவகையையும் அறிந்தாள். அருகே நின்ற தோழியிடம் “காவியங்களில் வாழும் பெண்கள் பொய்யென்று அன்னை சொன்னார். இதோ, இவளைக் கண்டபின் என்னவென்பார்?” என்றாள். “ஆம், நானும் அதையே எண்ணினேன். பெருங்காவியத்திலிருந்து எழுந்து வந்ததுபோல் இருக்கிறார்கள்” என்றாள் அவள்.

அவைமுற்றத்தில் தேவயானியின் உடலிலிருந்து தன் நோக்கை விலக்க அவளால் இயலவில்லை. கால் விரல்கள் முதல் தலைமயிர்ச் சுருள்கற்றை வரை ஒவ்வொன்றிலும் முழுமை கூடிய ஓர் உருவம் அமையக்கூடுமா என்ன? முற்றிலும் நிகர்நிலை. முற்றிலும் ஒத்திசைவு. அழகென்பது பிறிதொன்றிலாமை. இதுவொன்றே இங்கெங்கும் என்று சித்தமுணரும் உச்சம். அந்த முனையிலிருந்து அவளை நோக்கும் உள்ளம் ஒருகணமும் இறங்காதென்று தோன்றியது. துலாக்கோலென முற்றிலும் நிகர் நின்ற தோளகல்வு. நடுவே அசைவிலாத தலைநிமிர்வு. பிற பெண்களைப்போல் அவள் இடை குழையவில்லை, நடை ஊசலாடவில்லை. சீராக ஓடும் கண்ணுக்குத் தெரியாத ஆறொன்றில் மிதந்து செல்பவளைப்போல நடந்தாள். அமர்கையில் ஒவ்வொரு

பீடமும் அவளுக்கென்றே முன்னரே வடிவமைக்கப்பட்டது போலிருந்தாள்.

எளிய இடையாடையும் பட்டு மேலாடையும் அணிந்திருந்தாள். அரண்மனையில் அணிசமைக்கும் பெண்கள் அவள் இடையாடைக்கும் மேலாடைக்கும் இடையே இருந்த அப்பொருத்தமின்மையை சுட்டிக்காட்டி நகைக்கக்கூடும். சீனப்பட்டாடைக்கு சற்றும் ஒவ்வாமல் காட்டுமலர்களை அணிந்திருந்தாள். ஆனால் ஒவ்வொன்றும் இயல்பாக அவளுடன் இணைந்து பிறிதொரு தோற்றத்தை அவள் கொள்ளமுடியாதென்று எண்ண வைத்தன. அரண்மனை முகப்பில் அவள் இறங்குகையில் கூடத்தில் அரியணையில் நிமிர்ந்து அமர்ந்திருக்கையில் சூழ்ந்திருந்த அரசியரும் அரச குடிப்பெண்களும் அவளுக்கு பணிபுரிய வந்த எளிய சேடிகள்போல் தோன்றினர்.

வேறெங்கும் அமர்ந்ததில்லை என்பதுபோல் மையப்பீடத்தில் அமர்ந்து சுட்டுவிரல் தொட்டு அருமணிகள் பதித்த நகைகளையும் நிகரற்ற விலைகொண்ட பட்டாடைகளையும் அவள் ஏற்றுக்கொண்டபோது முடிமன்னர் காலடியில் நிரத்தும் கப்பங்களை பெறுபவள் போலிருந்தாள். இயல்பாக அவற்றை கணக்கிட்டு அப்பால் திரும்புகையில் விழிதிறந்த நாள் முதல் பெருஞ்செல்வத்தில் விளையாடியவளாகத் தெரிந்தாள். ஒவ்வொரு சொல்லும் காவியங்களிலிருந்து அப்போது எழுந்து வந்ததுபோல் அவள் நாவில் பிறந்தது. ஒவ்வொரு தருணத்துக்கும் உகந்த வரி எழவேண்டுமென்றால் எத்தனை கற்றிருப்பாள்!

தேவயானி அரண்மனைவிட்டு நீங்கியபின் தன் அறைமஞ்சத்தில் கால்மடித்தமர்ந்து அவளையே

எண்ணிக்கொண்டிருந்த சர்மிஷ்டை அறியாது நெஞ்சுவிம்மி ஒரு துளி கண்ணீர் விட்டாள். “என்னடி?” என்று அறைக்குள் அமர்ந்து சேடியருக்கான ஆணைகளை ஓலைகளில் பொறித்துக்கொண்டிருந்த அவள் அன்னை கேட்டாள். “ஒன்றுமில்லை” என்றாள் சர்மிஷ்டை. எழுந்து அவள் அருகே வந்து “சொல், என்ன?” என்றாள் அரசி. “ஒன்றுமில்லை” என்று அவள் எழப்போனாள். அவள் தோளில் கைவைத்து அழுத்தி “நானறிவேன். நீ அதை உன் வாயால் சொல்!” என்றாள். அவள் மேலும் இரு துளி கண்ணீர் வழிய தலை கவிழ்ந்தாள்.

அவள் தலையை மெல்ல வருடி “ஆம், அவள் பேரரசிக்குரிய நிமிர்வு கொண்டிருக்கிறாள். அவள் முன் நீ எளிய பெண் போலிருக்கிறாய். ஆனால் ஒன்று எண்ணிக்கொள், எவ்வண்ணமிருப்பினும் அவள் அந்தணப்பெண். அந்தணர் ஒருவரையே அவள் மணங்கொள்ள வேண்டும். எப்படி உயர்ந்தாலும் பெருவைதிகன் ஒருவனின் இடம் அமர்ந்து வேள்விப்பந்தலில் தலைமை கொள்வதை மட்டுமே அவள் எட்ட முடியும். நீ பாரதவர்ஷத்தின் இளவரசி. பேரரசர்கள் உன் காலடிகளில் பணிவார்கள். உன் சொற்களுக்கென அசுரப் படைநிரைகள் காத்திருக்கின்றன” என்றாள்.

அவள் ஏதோ சொல்ல வாயெடுக்க மறித்து “ஆம், நீ சொல்ல வருவது எனக்கு புரிகிறது” என்றாள் அன்னை. “அவள் அருகே நிற்கையில் நீ பொருந்தாத உரு கொண்டவளாகத் தோன்றுகிறாய் அல்லவா? அறிக இளையவளே, இப்புவியில் எவரும் எந்தச் செயலுக்குமென பிறந்து வரவில்லை. பூண்ட உருவை நடித்து முழுமை செய்பவர்களே இங்குள்ளவர் அனைவரும். அரசியென்று அமர்க! அரசியென்றாகுக!

அரசியென்றே அறியப்படுவாய்” என்றாள். பின்னர் அவள் தோளை மெல்ல வருடி “பிறிதொரு வழியில் எண்ணிப்பார். உன் தந்தைக்கு சுக்ரர் அமைந்ததுபோல் உனக்கு இவள் அமைந்திருக்கிறாள். இவளுடன் சென்று சேர். இவளிடம் இருந்தே நூலையும் நெறியையும் கலையையும் நீ ஏன் கற்றுக் கொள்ளக்கூடாது?” என்றாள்.

“நானா? எனக்கு எதுவுமே உள்நுழையவில்லை, அன்னையே” என்றாள் சர்மிஷ்டை. “ஆம், ஏனென்றால் இதுவரை உனக்கு கற்பிக்கப்பட்ட அனைத்தும் வெறும் சொல்வடிவில் சொல்லுறைந்த நுண்வடிவில் இருந்தன. இன்று அவை ஒரு பெண் வடிவில் உன் முன் நின்றிருக்கின்றன. நீ ஆகவேண்டிய உருவம் அவளுடையது. அவளை நோக்கி செல்! அவளாக முயல்க! அவ்வழியில் நீ எவ்வளவு முன்னகர்ந்தாலும் அவ்வளவுக்கு நன்மையே” என்றாள் அன்னை. சற்றுநேரம் எண்ணியபின் மெல்ல கலைந்து சர்மிஷ்டை புன்னகைத்தாள்.

சர்மிஷ்டை நான்கு நாட்கள் தேவயானியை சென்று பார்ப்பதைப்பற்றி எண்ணி அவ்வெண்ணத்தை ஒத்திப்போட்டு தன்னுடன் போராடியபின் அப்போராட்டத்தால் சலிப்புற்று அதை கடக்கும் வழி சென்று பார்த்துவிடுவதே என முடிவெடுத்தாள். அங்கே ஏதேனும் ஒன்று நிகழ்ந்து அவளை மேலும் சந்திக்காமலிருக்கும்படி தன்னை ஆக்குமென்றால், தன் வாழ்விலிருந்து அவள் உதிர்ந்துபோக வழி அமையுமென்றால் நன்று என்று அவள் எண்ணினாள். எவரிடமும் சொல்லாமல் அணுக்கச்சேடியை மட்டும் அழைத்துக்கொண்டு தேவயானியின் குடில்தொகையை நோக்கி சென்றாள்.

மையக்குடிலின் கோபுரம் போன்ற கூரை தொலைவில் தெரிந்ததுமே அவள் கால் தளர்ந்தாள். தேரிலிருந்து

இறங்காமலேயே திரும்பிவிடலாமா என எண்ணி அதை சொல்லென ஆக்காமல் தேர்த்தூணைப் பற்றியபடி நின்றாள். தேர்முற்றத்தில் இறங்கி குடில்முகப்பு நோக்கி நடக்கும்போது எதிரே குளிர்காற்று ஒன்று எழுந்து தன்னை பின்னுக்குத் தள்ளுவதாக உணர்ந்தாள். குடில்முற்றத்தில் மலர்ச்செடிகளின் பழுத்த இலைகளைக் களைந்தபடி நின்றிருந்த சாயையைக் கண்டதும் முதலில் தேவயானி என எண்ணி உளம் அதிர்ந்தாள். அவளல்ல என மறுகணம் உணர்ந்தாலும் அந்தப் பதற்றம் உடலில் நீடித்தது.

மெல்ல அருகணைந்து படிகளில் ஏறியதும் சாயை தலைதூக்கி நோக்கி புன்னகைத்து "வருக இளவரசி. தாங்கள் வருவீர்கள் என அரசி எதிர்பார்த்திருந்தார்கள்" என்றாள். அவள் முற்றிலும் மாறிவிட்டிருப்பதை சர்மிஷ்டை உணர்ந்தாள். பேச்சும் நோக்கும் அசைவும் தேவயானியைப் போலவே இருந்தன. அவள் அத்தனை உயரமானவள் என்பதையும் அவள் தோள்களும் தேவயானியைப் போலவே திரண்டு அகன்றவை என்பதையும் அப்போதுதான் அத்தனை கூர்ந்து அவள் நோக்கினாள். உரு வந்துசேர்வது வரை நிழல் இங்கு காத்திருந்திருக்கிறது என எண்ணிக்கொண்டாள்.

தேவயானி எப்படி தன்னை எதிர்கொள்ளக்கூடும் என்று சர்மிஷ்டை கற்பனை செய்துகொண்டே வந்தாள். எளிய சிறுமியென்று இயல்பாக நடத்தக்கூடும். அறிவின்மையை நகையாடக்கூடும். அவள் தந்தையின் அரசுநிலையை எண்ணி சொல்கருதி உரையாடக்கூடும். அவளுக்குள் தேவயானி கதைகளின் அரக்கிகளைப்போல புதுப்புது முகங்களுடன் எழுந்து வந்துகொண்டே இருந்தாள். படிகளைக் கடந்தபோது தன் எண்ணங்களின் எடைதாளாமல் அவள் நின்றுவிட்டாள்.

பின்னர் உள்ளே நுழைந்தபோது கையில் ஏடுகளுடன் எதிரே வந்த தேவயானி அவளை நோக்கி புன்னகை செய்து “வருக!” என்றாள். அவள் முறைமைச்சொல் ஏதேனும் சொல்லவேண்டும் என எண்ணி அது எழாமல் வெறுமனே புன்னகைத்தபடி நின்றாள். தேவயானி அருகே வந்து அவள் கைகளை பற்றிக்கொண்டு “வருக, இளவரசி!” என அழைத்துச்சென்றாள்.

அவளுடன் அமர்ந்திருக்கையில் அவளை வெறுமனே நோக்கிக்கொண்டிருப்பதை மட்டுமே அவளால் செய்யமுடிந்தது. அவ்வாறு கைகள் எழவேண்டுமென்றால் தோள்கள் அத்தனை திரண்டிருக்கவேண்டும். தோள் அத்தனை திரண்டும் பெண்மை தோன்றவேண்டுமென்றால் இடை அவ்வளவு சிறுத்து இறுகியிருக்கவேண்டும். குரல் ஓங்கும்போதும் இனிமை குறையாதிருக்கவேண்டுமென்றால் அதற்கு பேரியாழின் ஆழ்ந்த கார்வை இருக்கவேண்டும். நேர்நோக்கு திகழ்கையிலும் விழியழகு வேண்டுமென்றால் இமைகள் இதழ்களாக விரிய மாமலர்கள் போலிருக்கவேண்டும் கண்கள்.

“என்ன நோக்குகிறாய்?” என அவள் இயல்பாக கேட்டபோது சர்மிஷ்டை உளம்பொங்க தலைகவிழ்ந்தாள். ஒன்றுமில்லை என தலையசைத்தாள். “ஏன் அஞ்சுகிறாய்?” என்று மீண்டும் தேவயானி கேட்டாள். “இந்த ஆடையில் அழகாக இருக்கிறீர்கள்” என்றாள் சர்மிஷ்டை. தேவயானி சிரித்து “இது சாயையின் தெரிவு” என்றாள். “எல்லா ஆடையும் உங்களுக்கு அழகே” என்றாள் சர்மிஷ்டை. தேவயானி அதற்கும் உரக்க நகைத்தாள். “நீ என்ன கற்கிறாய் இப்போது?” என சுவடிகளை கட்டிவைத்தபடி தேவயானி கேட்டாள். “நாளும் கல்விதான். எதுவும் என்னுள் நுழைவதில்லை” என்றாள் சர்மிஷ்டை.

“கற்றவற்றைப்பற்றி உன் கருத்தை உருவாக்கிக்கொள், உன்னுள் முளைத்தவையே உன்னில் வளரமுடியும்” என்றாள் தேவயானி. சர்மிஷ்டை வெறுமனே தலைகவிழ்ந்து புன்னகை புரிந்தாள். அவள் தொடையை எட்டி மெல்ல அடித்து “என்ன நகைப்பு?” என்றாள் தேவயானி.

ஒவ்வொருநாளும் காலையிலேயே சர்மிஷ்டை தேவயானியின் குடிலுக்கு வந்தாள். அவளுடன் சேர்ந்து சுக்ரரின் வகுப்புகளில் அமர்ந்து விழிகள் விரிய கேட்டுக்கொண்டிருந்தாள். திரும்பி வரும்போது எளிய ஐயங்களைக் கேட்டு தேவயானியை நகைக்கச் செய்தாள். அன்னைத்தன்மை கொண்ட இளிவரலுடன் மட்டுமே அவளை தேவயானி அணுகினாள். அவள் பேசுவதை கண்களில் சிரிப்புடன் கேட்டு மெல்லிய பகடியுடன் மறுமொழி சொன்னாள்.

அதைக் கடந்து ஒருசொல்லும் அவளிடம் சொல்லிவிடமுடியாதென்று உணர்ந்தபோது சர்மிஷ்டை தன்னை அவ்வாறே ஆக்கிக்கொண்டாள். மழலை பேசவும் சிணுங்கவும் ஊடவும் சிரித்து விளையாடவும் தொடங்கினாள். வேண்டுமென்றே பிழையான வினாக்களை கேட்டாள். புரிந்துகொண்டவற்றையும்கூட புரியவில்லை என நடித்தாள். பேதையாகும்தோறும் தேவயானியை மேலும் அணுகமுடியும் என்று கண்டு மேலும்மேலுமென தன்னை அவ்வாறு ஆக்கிக்கொண்டே இருந்தாள்.

அவளைப் போலவே சாயையும் சர்மிஷ்டையை குழவியென நடத்தலானாள். நீராடச் செல்கையில் அவள் இருவரின் ஆடைகளையும் தூக்கிக்கொண்டு சென்றாள். மரக்கிளைகளில் ஏறி குழலில் பூசுவதற்கான மலர்களை சாயை உலுக்கியிடும்போது கீழே ஓடி ஓடி பொறுக்கி சேர்த்தாள்.

மேனியில் மலர் விழ கூசிச் சிரித்து கைவிரித்து மழையாடினாள். “என்ன செய்கிறாய்? மலர் சேர்க்கச்சொன்னால்...” என சாயை அவளை அதட்டினாள். நீரில் பாய்ந்து மறுகரை நோக்கி சென்று மண்ணில் காலூன்றாமல் திரும்பிவந்து இங்கும் காலூன்றாமல் மீண்டும் திரும்பி ஏழுமுறை ஒழுக்குமுறித்துக் கடந்து தேவயானி திரும்பி வந்தபோது கைதட்டிக் கூச்சலிட்டுச் சிரித்தபடி குதித்தாள்.

“இறங்கு” என்றாள் தேவயானி. “அய்யோ, எனக்கு நீச்சலே தெரியாது” என்றாள் சர்மிஷ்டை. “இறங்கு, நான் சொல்லித்தருகிறேன்” என்றாள் தேவயானி. “இல்லை... இல்லை...” என சர்மிஷ்டை விலகி ஓட “அவளைப் பிடி” என்று தேவயானி கைநீட்டி கூவினாள். அவள் ஓடி புல்தடுக்கி விழ சாயை அவளைப்பற்றி அப்படியே தூக்கிக் கொண்டுவந்து நீரில் வீசினாள். மூச்சு பதற கைகால்கள் வீசி உதறிக்கொள்ள நீரில் மூழ்கி மூழ்கி அவள் எழுந்தபோது தேவயானி பாய்ந்து அவளருகே வந்து வயிற்றில் கை வைத்து மெல்ல உந்தினாள். நீர் அவள் கைகால்களை ஏந்திக்கொண்டது. அவள் கைகால்கள் வீசியும் அறைந்தும் நீரில் துடித்தன. பாசிமணத்துடன் நீர் வாய்க்குள்ளும் மூக்கினுள்ளும் சென்றது.

பின்னர் கைகள் ஓர் ஒத்திசைவை உணர்ந்தன. கால்களுடன் அந்த ஒத்திசைவு இணைந்துகொண்டபோது அவளுக்குள் இருந்த ஒன்று அந்த ஒத்திசைவை தன்னுடன் அடையாளம் கண்டது. அவள் நீந்திக்கொண்டிருப்பதை அப்போதுதான் உணர்ந்தாள். தேவயானி தன் கையை எடுத்திருப்பதை உணர்ந்ததும் அஞ்சி மூழ்கினாள். உடனே கால்களால் நீரை உதைத்து எம்பி கைவீசி நீந்தலானாள். தேன்சிட்டுபோல பறந்துகொண்டிருப்பதாக உணர்ந்தாள். வாழ்க்கையில்

பிறிதெப்போதும் அத்தகைய விடுதலையை அவள் உணர்ந்ததில்லை.

கரையில் ஏறிநின்ற தேவயானி “மேலே வா, பொழுதாகிறது” என்றாள். அவள் நீரை ஒளியாக உமிழ்ந்து “இதோ” என்றாள். “வாடி” என தேவயானி கூவினாள். “இதோ” என்றபின் மூழ்கி அப்பால் எழுந்தாள் சர்மிஷ்டை. தேவயானி கரையில் சுற்றும் நோக்கி காய்ந்த நெற்றுகளை பொறுக்கி அவள்மேல் எறிந்தாள். அவள் சிரித்தபடி மூழ்கி மூழ்கி விலகினாள். மீன்போல எம்பித் தாவினாள்.

சாயை நீரில் பாய்ந்து அவளை நோக்கி வர சிரித்தபடி அவள் விலகிச் சென்றாள். சாயை பெரிய கைகளை வீசி அவளை துரத்திப்பிடித்து அவள் குழல்பற்றி இழுத்து கரைநோக்கி நீந்தினாள். “நானே வருகிறேன்” என்று சர்மிஷ்டை கூவினாள். இருவரும் கரைநோக்கி நீந்தியபோது சாயையின் கைசுழற்சியும் காலலைவும் போலவே அவளுடையனவும் இருந்தன. சீராக நீரை முறித்து வந்து தாழ்ந்த புன்னைமரக் கிளைகளைப் பற்றி தொற்றி மேலேறினார்கள்.

உடலோடு ஒட்டிய ஆடைகளை கையால் நீவி நீர் களைந்தபடி சர்மிஷ்டை “நான் நீந்துவேன் என நினைத்ததே இல்லை” என்றாள். “என் உடல் நீந்துவதற்குரியதல்ல என்றார்கள்.” தேவயானி “மானுடருக்கு நீந்தத்தெரியும். மொழியால்தான் நாம் மூழ்குகிறோம் என்று எந்தை சொல்வதுண்டு. நம்மை மூன்று காலங்களிலும் இரண்டு வெளிகளிலுமாக சிதறடித்துக்கொண்டே இருக்கும் மொழியை விட்டுவிட்டால் நம் உடல் ஒத்திசைவுகொள்கிறது, நீந்திவிடலாம்” என்றாள்.

சர்மிஷ்டை நீந்தும்போது தன்னுள் சொற்கள் இருந்தனவா என எண்ணிநோக்கினாள். சொல்லின்மையில் திளைத்ததுபோல் தோன்றியது. சொற்களின் அலைகளில் ஆடியதுபோலவும் இருந்தது. உவகையுடன் மூச்செறிந்து கைகளால் நெஞ்சை அழுத்தி வானம்பெருகி ஓடிக்கொண்டிருந்த ஆற்றை நோக்கியபடி "நான் இதைப்போல விடுதலையை உணர்ந்ததே இல்லை" என்றாள் சர்மிஷ்டை.

# மாமலர் - 66

### 66. கிளையமர்தல்

சர்மிஷ்டையை தான் எந்த வகையிலும் பொருட்படுத்தவில்லை என்று தேவயானி எண்ணினாள். அதையே ஒவ்வொரு அசைவிலும் வெளிக்காட்டிக் கொண்டாள். பரிவையும் ஏளனத்தையும் கலந்து மிகக் கீழிறங்கிவரும் தன்மையில் அவளிடம் உரையாடினாள். ஆனால் தனிமையில் எழும் தன்னுணர்வில் பிற எவரையுமே உள்ளூர தான் பொருட்படுத்தவில்லை என்றுணர்ந்து எரிச்சல் கொண்டாள். அதை வெல்ல மேலும் ஏளனத்தையும் பரிவையும் கலந்து அவளிடம் காட்டினாள். அதை சாயையும் அறிந்திருந்தாள். அவளும் அதையே சர்மிஷ்டையிடம் காட்டினாள்.

ஒவ்வொரு நாளும் சர்மிஷ்டையைப் பற்றி சாயை ஏதேனும் ஒரு பகடியை தேவயானியிடம் சொன்னாள். சிறு வேடிக்கைக்கும் தேவயானி வாய்விட்டு உரக்க நகைத்தாள். ஒன்றாகவே பறக்கும் இரு கருவண்டுகள், இரு செந்தாமரை மொட்டுகளில் எதில் அமர்வதென்று இணைந்தே

தடுமாறுகின்றன என்ற பாடல்வரியைக் கேட்டு தேவயானி தலையசைத்துப் பாராட்ட அவை எழுந்ததும் சாயையிடம் “ஏன் அந்த கருவண்டுகள் இணையாக பறக்கின்றன, அவை உடன்பிறந்தவையா?” என்று சர்மிஷ்டை கேட்டாள். “ஆம், அந்த மொட்டுகள்தான் இரட்டைப்பிறவிகள்” என்று சாயை சொன்னாள். சர்மிஷ்டை “மெய்யாகவா?” என வியந்தாள். அதை சாயை தேவயானியிடம் சொன்னபோது அவள் சிரித்ததில் புரைக்கேறியது.

சாயையும் தேவயானியும் சோழியாடிக்கொண்டிருக்கையில் உள்ளே வந்த அவள் “எங்கள் அரண்மனையில் சேடியர்தான் இதை ஆடுவார்கள்” என்றாள். “அரசியர் நாற்களமே ஆடவேண்டும் என்றார் அன்னை.” சாயை சிரிப்பை ஒதுக்கியபடி “உங்களுக்கு நாற்களமாடத் தெரியுமா, இளவரசி?” என்றாள். “தெரியாதே…” என்றபடி சர்மிஷ்டை அமர்ந்தாள். “சோழியாவது ஆடுவீர்களா?” சர்மிஷ்டை “இல்லை, நான் அமர்ந்து பார்த்திருக்கிறேன். ஒரே தருணத்தில் அவ்வளவு செயல்களைச் செய்ய என்னால் இயல்வதில்லை” என்றாள். “அரசியர் சோழியாடுவதில்லை இளவரசி, சோழியாடுவது கந்தர்வர்களின் விளையாட்டு” என்றாள் சாயை. “மெய்யாகவா?” என சர்மிஷ்டை வியந்து முகவாயில் கைவைத்தாள். “போதுமடி” என்றாள் தேவயானி.

“ஆடுகிறீர்களா, இளவரசி?” என்று சாயை எழுந்துகொண்டாள். “இல்லை… அய்யோ!” என சர்மிஷ்டை பின்னடைந்தாள். “பிடித்து அமர வை” என்றாள் தேவயானி சிரித்தபடி. சாயை பின்னால் நகர்ந்து சுவரில் முட்டிக்கொண்ட சர்மிஷ்டையைப் பிடித்து தோள்களை அழுத்தி அமரச் செய்தாள். “எனக்கு உண்மையிலேயே ஆடத்தெரியாது” என்றாள் சர்மிஷ்டை குரல்

தளர. “அதை நான் கற்றுத்தருகிறேன்” என்றபடி தேவயானி சோழிகளை பரப்பி அதில் ஒன்றை எடுத்து மேலே வீசி அது கீழே வருவதற்குள் கீழிருந்து சோழிகளை அள்ளி அள்ளியவற்றை இரண்டாகப் பகுத்து மீண்டும் பரப்பினாள். “என்னால் மேலெழும் சோழியைப் பார்த்தால் கீழே அள்ள முடியவில்லை” என்றாள் சர்மிஷ்டை. “மிக எளிது... இரண்டையுமே பார்க்கவேண்டியதில்லை. கைகளின் ஒத்திசைவை மட்டும் கண்கள் கண்காணித்தால் போதும்” என்றாள் தேவயானி.

சோழியாடுதல் ஒவ்வொரு நாளும் பலநூறு இடங்களில் அரண்மனை அகத்தளத்தில் நடந்துகொண்டிருந்த போதிலும்கூட சர்மிஷ்டை அவ்வாட்டத்தை கூர்ந்ததே இல்லை. சேடிகளும் செவிலியரும் ஆடும்போது அவளும் அருகே அமர்ந்து நோக்கியதுண்டு. சோழி ஆடல் கைத்திறனும் கண்திறனும் கணக்குத்திறனும் இணைந்து ஊழுடன் முயங்கி ஆடும் ஒரு நடனம் என்று அவளுக்குத் தோன்றியது. கைகள் மேலும் கீழும் பறக்க ஊடே விழிகள் அலைய அவர்கள் ஆடுவது ஓர் இசைக்கருவியை வாசிப்பது போலிருக்கும். கைகள் மட்டுமே எனக் கண்டால் ஒரு நடனம். அல்லது வானில் சுழன்றுகொண்டிருக்கும் இரு பறவைகள்.

சோழிகளை மட்டும் நோக்கினால் மேலெழுந்து கீழே வரும் சோழியும் கீழிருந்து கைகளுக்குள் புகும் சோழிகளும் தங்களுக்குள் பிறிதொரு ஆடலை எவருமறியாமல் நிகழ்த்திக்கொண்டிருப்பதாகத் தோன்றும். சிரிப்புகள், பகடிகள். ஊழென்று கொண்டால் ஒவ்வொரு முறையும் மிகச் சிலரே அதில் வெல்வதெப்படி? திறன் என்று கொண்டால் பெருந்திறன் கொண்டவர்களை எளியவர்கள் வெல்வதெப்படி? “அமர்க,

இளவரசி” என்று சேடியர் சொல்கையில் “இல்லை, அரசியர் இதை ஆடலாகாது” என பின் நகர்ந்துகொள்வாள்.

“மிக எளிய விளையாட்டு. ஆடத்தொடங்கினால் பித்தாக்கி விடும்” என்றாள் அவள் அணுக்கத்தோழி சியாமளை. “இதோ, மேலே துள்ளி எழுவது இவ்வரண்மனைக்கு வெளியே உள்ள உலகு. கைகளால் நாம் அள்ளிப்பற்றி எடுப்பது அகத்தளத்தில் உள்ளது. எழுவது ஆண், பரவுவது பெண். ஆண் தெய்வம், பெண் இயற்கை” என்றாள் இளம்விறலி. வெற்றிலை மென்ற பற்கள் தெரிய சிரித்தபடி முதுவிறலி “எங்கு கற்றாய் இதை?” என்று கேட்டாள். “இவ்வளவு சொற்களைச் சேர்த்து அள்ளுவதால்தான் இவள் ஒருபோதும் ஆட்டத்தில் வெல்வதில்லை போலும்” என்றாள் பிறிதொருத்தி.

சாயையும் தேவயானியும் ஆடும் ஆட்டம் முற்றிலும் நிகர்நிலை கொண்டது. தேவயானி தன் ஆடிப்பாவையுடன் ஆடுவதாகவே தோன்றும். விழிகள் கூர்கொள்ள சாயை மிக மெல்ல தன் கையை நீட்டும்போது புலிபோலிருப்பாள். நிகர் எடை கொண்ட இரு துலாக்கள் நடுவே முள் என ஊழ் நின்று ஆடுவதையே அவள் கண்டாள். ஒவ்வொரு கணமும் வெற்றி இதோ என்றும் இல்லை மறுபக்கம் என்றும் ஆடியது. காலை முதல் தொடங்கிய ஆடல் உச்சி உணவு வரை நீடித்தது. எப்போதும் அடுத்த ஆடலுக்கான வஞ்சினத்துளியை எஞ்சவிட்டு முடிந்தது.

சர்மிஷ்டை தேவயானியின் கைகளை நோக்கியபடி விளையாடத் தொடங்கினாள். அவளால் சோழிகளை அள்ள முடியவில்லை. எழுந்ததை நோக்கிய விழி தாழுமுன் கீழிருந்த கை அனைத்து சோழிகளையும் தவறவிட்டது. மீண்டும் மீண்டும் கை நழுவ கண்ணீர் மல்கி “என்னை

விட்டுவிடுங்கள்… என்னால் இயலாது” என்றாள். “நீ ஆடியே ஆகவேண்டும். ஒவ்வொருநாளும் ஒருமுறையேனும்” என்றாள் தேவயானி. “வேண்டாம்” என்று அவள் கண்ணீரை ஒற்றியபடி தலையசைத்தாள். “ஆடியே ஆகவேண்டும்” என்று உரத்த குரலில் தேவயானி சொல்ல அவள் தலை நிமிராமலேயே கண்திறந்து பார்த்து சரியென்று தலையசைத்தாள். “அத்தனை ஆடல்களும் திறனுக்கும் ஊழுக்குமான போர்கள். ஆடலறியாமல் எவரும் ஆளமுடியாது” என்றாள் தேவயானி.

ஒவ்வொரு நாளும் கேலிக்குரிய வகையில் சர்மிஷ்டை தோற்றுக்கொண்டிருந்தாள். தன் ஆட்டம் சுவை கொள்வதற்காகவே அவளுக்கு சற்று விட்டுக்கொடுக்க வேண்டிய நிலைக்கு ஆளானாள் தேவயானி. மேலெழும் சோழிக்கும் கீழிருக்கும் சோழிகளுக்கும் நடுவே விழி அலையவும், இரு கைகளும் தங்களை அறியாமலேயே இலக்குகளை நோக்கி செல்லவும் பயிற்றுவித்தாள். “எண்ணாதே! எண்ணிக் கணக்கிட்டால் இச்சிறு காலத்துளிக்குள் இரு கைகளும் அவற்றை நிகழ்த்த முடியாது. எண்ணத்தைவிட விரைவுகொண்டது சித்தம். அதற்கு விழிகளையும் கைகளையும் ஒப்படை” என்றாள் தேவயானி.

“சோழியாடலின் நுட்பமென்பது எண்ணத்தை முற்றழியச் செய்வதே. எண்ணமென்பது நிலையழிவு. உடலுறுப்புகளும் உள்ளமும் முழுமையான ஒத்திசைவு கொள்கையில் எண்ணம் அழிகிறது. எண்ணமே காலம். காலம் அழிகையில் காலமில்லாப் பெருவெளியில் வாழும் ஆழ்சித்தம் எழுந்து நின்று விளையாடத் தொடங்குகிறது. அதற்கு கண்கள் ஆயிரம், கைகள் பல்லாயிரம்” என்றாள் தேவயானி. அவள் சொன்னவை அப்போது புரியவில்லை, ஆனால் அவள் குரலென்பதனால்

சித்தத்தில் செதுக்கப்பட்டன. சொல்சொல்லென உடன்வந்தன. நினைவொழிந்து கனவெழுகையில் முளைத்துக்கொண்டன. ஆயிரம் கைகளில் ஒளிரும் விண்மீன் சோழிகளுடன் அவள் இருளும் ஒளியுமிலா வெளியொன்றில் அமர்ந்திருந்தாள்.

மெல்ல மெல்ல அவள் கற்றுக்கொள்ளத் தொடங்கினாள். ஒருமுறை அக்காலத் தெறிப்புக்குள் கை நிகழ்ந்து முடிந்தபோது அவளே வியந்து கூச்சலிட்டாள். மறுமுறை கையே அதை அறிந்திருப்பதை உணர்ந்தாள். மிகச் சரியாக சோழிகளைப் பறித்துப் பரப்பியபோது தேவயானி உரக்க நகைத்து கை நீட்டி அவள் தொடையில் தட்டி "நன்று! நன்று!" என்று பாராட்டினாள். ஒவ்வொரு பாராட்டும் அவளுக்கு உவகையை பெருக்கியது. "உடல் எவ்வளவு தெரிந்திருக்கிறது!" என அவள் வியந்தாள். "அப்படியென்றால் உளம் எவ்வளவு அறிந்திருக்கும்" என்று தொடர்ந்தாள். "வெல்வதை உள்ளமும் உடலும் விரும்புகின்றன" என்றாள் தேவயானி. "வெற்றியின்போது அவை கொள்ளும் மதர்ப்பு வியப்பூட்டுகிறது. தங்களை கட்டிவைத்திருக்கும் காலத்தையும் வெளியையும் அவை கடந்து செல்கின்றன அப்போது."

அந்த ஆடலில் அவள் ஒருமுறை தேவயானியை வென்றாள். நான்குமுறை வென்று தேவயானி வெறுங்களம் கண்டபோது "ஒருநாள் உங்களை மெய்யாகவே வெல்லப்போகிறேன்" என்று அவள் சொன்னாள். "வெல்! வென்று காட்டு! அன்று உனக்கு ஒரு பரிசு தருகிறேன்" என்றாள் தேவயானி. "நான் விரும்பும் பரிசாக அது இருக்க வேண்டும்" என்று அவள் சொன்னாள். "நீயே சொல்" என்றாள் தேவயானி. "சுமக்க முடியாத பரிசு, அழியவே அழியாதது... சரியா?" என்றாள் சர்மிஷ்டை.

தன் இல்லத்துக்கு மீண்டதும் இரவில் தோழியரை அழைத்து அமரச்செய்து வெறியுடன் பயின்றாள். தன்னந்தனிமையில் இருக்கையில் கண்ணுக்குத் தெரியாத சோழிகளை ஆடிக்கொண்டிருந்தன அவள் கைகள். ஆழ்கனவில் மீண்டும் மீண்டும் அவள் தேவயானியுடன் விளையாடினாள். தேவயானிக்கு நிகராக சாயையென அவள் அமர்ந்து ஆடினாள். பின்னர் தேவயானியென அமர்ந்து சாயையுடன் ஆடினாள். சாயையும் தேவயானியுமாக ஆடும் அவளை அவளே நோக்கிக்கொண்டிருந்தாள்.

அவள் திறன் பெருகிவருவதை தேவயானி உணர்ந்தாள். சாயையிடம் "மிக அருகே வந்துவிட்டாள். இத்தனை விரைவில் இவள் இதை கற்றுக்கொள்வாள் என்று எண்ணவே இல்லை" என்றாள். "அவர்களின் கைகள் மெலிந்தவை, அரசி. மிக விரைவாக அவை சுழலமுடியும்" என்றாள் சாயை. "ஆம், அதைவிட பிறிதொன்றுண்டு. வெல்வதன் இன்பம் நம்மைவிட அவளுக்கு மிகுதி. அது அவளை வெறிகொண்டு எழச்செய்கிறது. உடல்வலுக் குறைந்தவர் வில்லவரும் வேலவரும் ஆவதன் நுட்பம் அது என்பார்கள்" என்றாள் தேவயானி.

அவள் தூணில் சாய்ந்து நோக்கி நிற்கையில் தேவயானியும் சாயையும் விளையாடிக்கொண்டிருந்தனர். தேவயானி சோழியை அள்ளிப்பரப்பி களம்வென்று "இனி உனக்கு" என்றாள். சோழியை கைகளால் அள்ளிப் பரப்பி மூன்று சோழிகளை மேலெழுப்பி அவை வருவதற்குள் மும்முறை அள்ளிப்பரப்பி மீண்டும் பரப்பி கணக்கிட்டு விழிதூக்கினாள் சர்மிஷ்டை. ஒருகணம் தேவயானியின் விழிகளில் திகைப்பு வந்து மறைந்தது. சாயை உரக்க நகைத்து "வெற்றி! எளிய

வெற்றியல்ல, மத்தகத்தால் மோதி உடைத்து உட்புகும் வெற்றி” என்றாள். தேவயானியும் நகைத்து “ஆம், வென்று விட்டாள்... தன்னை கடந்துவிட்டாள்” என்றாள்.

சர்மிஷ்டை “உங்கள் அடி தொடர்ந்தேன்” என்றாள். “நீந்துகையில் பறந்தேன். இப்போது கிளைநுனியில் இறகசையாது அமர்ந்திருக்கிறேன்.” தேவயானி அவள் கைகளைத் தொட்டு “சொல், நான் நீ கோரும் பரிசை அளிக்கிறேன்” என்றாள். “என்னையும் என் கொடிவழியையும் வாழ்த்தி ஒரு பாடல் புனைந்து எனக்களியுங்கள், அந்தணர் செம்மொழியில்” என்றாள் சர்மிஷ்டை. “இவ்வளவுதானா?” என்று சாயை சிரித்தாள். தேவயானி “சரி, ஆனால் ஒருமுறைதான் சொல்வேன். அதற்குள் அது உன் உளம் நின்றால் அப்பாடலுக்கு நீ தகுதியுடையவள் என்று பொருள்” என்றாள். “ஆம்” என்றாள் சர்மிஷ்டை.

தேவயானி “சிம்மத்துடன் விளையாடுபவன் அழகன், துலாமுள் என நெறிநிற்பவன் பேரழகன். அவனை ஈன்றவளோ தன் கனிவால் அழகுகொண்டாள். மலர்நாடும் வண்டே, கேள். மலர்களில் அழகென்பதே கனிகளில் சுவையென்றாகிறது” என்றாள். புரியாமல் விழித்து நோக்கிய சர்மிஷ்டை சட்டென்று கைகூப்பி “என் கொடிவழியில் எழுபவர்களா அவர்கள்?” என்றாள். தேவயானி “சொல் பார்க்கலாம்” என்றாள். ஒவ்வொரு சொல்லும் ஒரு தனி உயிரென வந்து தன் முன் அணிவகுத்து நிற்பதை சர்மிஷ்டை கண்டாள். ஒவ்வொன்றையும் தொட்டு அவற்றின் பேர் சொல்ல அவளுக்கு எந்த இடரும் இருக்கவில்லை.

தேவயானி “நன்று, உன் நாச்சுழிப்பும் கூர்மை கொண்டுள்ளது” என்றாள். “உங்களுடன் உரையாடுகிறேன் அல்லவா?” என்றாள்

சர்மிஷ்டை. “அந்தணச் செம்மொழியில் அசுரருக்கு இயற்றப்பட்ட முதல் பாடல் இது” என்று சாயை சொன்னாள். தேவயானி “உண்மையாகவா? எவரும் பாடியதில்லையா?” என்றாள். “அது வேதமொழி அல்லவா?” என்றாள் சாயை. “மலர்கள் மண்ணில்தான் வேர்கொண்டுள்ளன” என்றாள் தேவயானி. சர்மிஷ்டை “இப்பாடலை எனது கொடிவழிகள் பாடும். எங்கள் அரண்மனையில் இது பொறிக்கப்பட்டிருக்கும்” என்றாள்.

சாயை குடிலுக்குப் பின்பக்கம் சென்று பிற சேடிகளை அழைத்து “இளவரசிமேல் அரசி ஒரு பாடல் புனைந்திருக்கிறார்கள். கேளுங்கள்” என்றாள். “பாடலா...?” என்று உள்ளே வந்த சேடியரிடம் சாயையே அப்பாடலை உரக்க சொன்னாள். “நன்று!” என்று அவர்கள் மெல்லிய திகைப்புடன் சொல்லி ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டனர். சர்மிஷ்டை “அழியாத சொல். ஒரு மூச்சென இயல்பாக வெளிப்படும் கவிதை என்றுமழியாது என்று முன்பு என் ஆசிரியர் சொல்லியிருக்கிறார்” என்றாள். அவர்கள் ஒருவரோடொருவர் விழிநோக்கி இதழ்களுக்குள் புன்னகை செய்தார்கள்.

அன்று முழுக்க அக்கவிதையையே சொல் மாற்றிச் சொல்லி பொருள் மாற்றிக் கொண்டு விளையாடினார்கள். “என்னடி இது, ஒரு பாடலை பந்தென போட்டு விளையாடுகிறீர்களே?” என்று தேவயானி சினந்துகொண்டாள். “ஆம், இக்கவிதையை இனி பிறரெவரும் சொல்லக்கூடாதென்று தடை சொல்லப்போகிறேன்” என்றாள் சர்மிஷ்டை. “இது என் மூத்தவளிடம் இருந்து எனக்குக் கிடைத்த நற்பரிசு. பிறர் அதை தொடவேண்டியதில்லை” என்றாள். சேடி ஒருத்தி “ஆம், இனி எவருமே இதை பாடக்கூடாது என ஆணையிடவேண்டும்”

என்றாள். சர்மிஷ்டை அந்தப் பகடியை புரிந்துகொள்ளாமல் "ஆம்" என்றாள். அவர்கள் சிரிப்புடன் திரும்பிச்சென்றனர்.

அந்தியில் சுக்ரரின் வகுப்பில் சாயை எழுந்து "இன்று தேவி பாடிய பாடல் இது, ஆசிரியரே" என்றாள். "சொல்க!" என்று சொல்லி சுக்ரர் முகமலர்வுடன் நோக்க சர்மிஷ்டை அப்பாடலை சொன்னாள். "அரிய பாடல்" என்றார் சுக்ரர். "ஒரு பெண்ணின் அழகு அவள் மைந்தரில்தான் முழுமையாக வெளிப்படுகிறது. எங்கோ இன்னும் எழாத காலக்களத்தில் இளவரசியின் முகம் எழுவதை உள்விழியால் நோக்கமுடிகிறது."

கிருதர் "பரிசு என்று இப்பாடலை ஏன் கேட்டீர்கள், இளவரசி?" என்றார். இயல்பாக "பெற்றுக்கொள்ளும் அளவுக்கு இங்கு பிற பொருள் எது? அனைத்தும் எந்தையின் கருவூலத்திலிருந்து வந்தவை" என்றாள் சர்மிஷ்டை. கிருதரின் விழிகள் ஒருகணம் மாற அவர் தேவயானியை நோக்கி திரும்பினார். தேவயானியின் முகம் மாறிவிட்டதை அங்கிருந்த அனைவரும் உணர்ந்தனர். சர்மிஷ்டை மட்டும் அதை காணவில்லை. "பொன்னும் பொருளும் எங்களிடம் உள்ளன. இல்லாதது கல்வி அல்லவா? அதைத்தான் நான் தேவியிடம் கேட்டேன்" என்றாள். "நன்று" என்று சுக்ரர் தலையசைத்தார்.

சர்மிஷ்டை கிளம்பிச்சென்ற பின்னரும் அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். "அரசகுடியினரின் சொல் என்பது ஆயிரம்முறை மடக்கப்பட்ட கூரிய கத்தி என்பார்கள். சொல்லெண்ணிப் பேசும்பொருட்டே அவர்களுக்கு அனைத்துக் கல்வியும் அளிக்கப்படுகிறது" என்றார் சத்வர். "அவள் சொன்னதில் பிழையேதுமில்லை, தேவியிடம் அவள்

பிறிதெதை கேட்கமுடியும்?” என்றார் சுக்ரர். “அவர் கொடிவழியில் பேரரசர் எழவிருப்பதை சொல்லிவிட்டீர்கள், தேவி. நெறிநின்றாளும் அரசனும், சிம்மத்துடன் விளையாடும் வீரனும்” என்றார் கிருதர்.

“அவர்களுக்கும் நம் தேவிக்கும் அகவை ஒன்றே. ஆனால் பல ஆண்டுகள் இளையவள் போலிருக்கிறார். உடலும் உள்ளமும் முதிராதவள்போல்” என்றார் சுஷமர். “ஆம், அரண்மனையில் இளவரசியென அவர் மட்டுமே இருக்கிறார். அவரை மணம்கொள்பவர் அசுர நாடனைத்தையும் தானும் கொண்டவராவார். அதனாலேயே செம்பட்டில் பொதிந்து சந்தனப்பேழையில் வைத்திருக்கும் அருமணிபோல் இத்தனை நாள் அவரை பேணிவிட்டார்கள். அவரும் புறவுலகு காணாதவராகவே இருந்துவிட்டார்” என்றார் கிருதர்.

“பாரதவர்ஷத்தை ஆளும் விருஷபர்வனின் அரண்மனைக்கு புறவுலகு கை சொடுக்கினால் வந்து சேருமே?” என்றார் சத்வர். “வந்து சேரும், அங்கு காற்று எப்படி வருகிறதோ அதைப்போல. அனைத்துச் சாளரங்களிலும் வெட்டிவேர்த் தட்டிகள் தொங்குகின்றன. மலர்கள் நிறைந்த மரங்கள் அனைத்துச் சாளரங்களுக்கு அப்பாலும் நிறைந்துள்ளன. நறுமணக் காற்று மட்டுமே சென்ற பல தலைமுறைகளாக அவ்வரண்மனையை அடைந்திருக்கிறது. நல்லிசையை மட்டுமே அது சுமந்து வந்திருக்கிறது” என்றார் கிருதர்.

“அதற்காக பேரரசனின் மகளை இழிமணமும் கொடு ஓசையும் கொண்டு பழக்க முடியுமா?” என்றார் சுஷமர். “ஊற்றில் கொப்பளிப்பது ஒருபோதும் ஆறல்ல. மாசுகள் அடைந்தாலும் கரை பிறழாது கடல் நோக்கி ஒழுகுவதே ஆறு. இளவரசி இன்னும் எதையும் அளிக்கக் கற்கவில்லை. அனைத்தையும்

பெற்றுக்கொண்டு குழந்தையென வளர்ந்திருக்கிறார்” என்றார் கிருதர். “அன்னையென்றாகி முதிரும்போது அளிக்கும் பயிற்சி பெற்றுவிடுவாள்” என்று சுக்ரர் நகைத்தார்.

கிருதர் “அவருக்கு இவ்வாண்டே மணம்முடிக்கும் எண்ணம் விருஷபர்வனுக்கு உள்ளதென்று எண்ணுகின்றேன்” என்றார். “மணத்தன்னேற்பு வைக்கப்போகிறானா?” என்றார் சுக்ரர். “அவ்வெண்ணம் அவருக்கு இருந்தது. ஆனால் முதன்மை அமைச்சர் அதை உடனடியாக மறுத்துவிட்டார். பாரதவர்ஷத்தின் மணிமுடிக்கான மணத்தன்னேற்பல்லவா அது? அது இந்நிலத்தில் அரசர்களுக்கிடையே போட்டிகளையும் கசப்புகளையும் உருவாக்கி மணம்நிகழ்ந்த பின்னரும் நீடிக்கும். பெரும்போராகவே மாறக்கூடும்” என்றார் கிருதர். “மேலும் உகந்த மணமகனை தெரிவுசெய்யும் திறன் இளவரசிக்கு உண்டு என்றும் அரசர் எண்ணவில்லை.”

“பிறகு என்ன செய்யவிருக்கிறார்?” என்றார் சத்வர். “சந்திரகுலத்து அரசன் யயாதிக்கு அவரை மணமுடித்துக் கொடுக்கலாம் என்று எண்ணுகிறார் விருஷபர்வன்” என்றார் கிருதர். தேவயானி நிமிர்ந்து நோக்காமல் சுவடிகளை அடுக்கி நூல்கண்டால் கட்டினாள். “நகுஷனின் மைந்தனுக்கா?” என்று சத்வர் வியப்புடன் கேட்டார். “ஆம்” என்றார் கிருதர். “அவன் முன்னரே மூன்றுமுறை மணமுடித்து விட்டானே? இளவரசியைவிட பன்னிரண்டாண்டு அகவை முதிர்ந்தவன்” என்றார் சத்வர்.

“அரசனுக்கேது அகவை? பாரதவர்ஷத்தில் இரண்டு மணிமுடிகளே இன்று நிகரானவை. ஹிரண்யபுரியின் மணிமுடியும் குருநகரியின் சந்திரகுலத்து மணிமுடியும். ஒருநாள் இரு படைகளும் களம்நின்று மோதப்போகின்றன

என்று பல ஆண்டுகளாக எதிர்பார்த்திருக்கிறார்கள் அரசுசூழ்வோர். அசுரரும் ஷத்ரியரும் போரிடுவார்களென்றால் இரு இணைமதயானைகள் மத்தகம் முட்டுவதற்கு நிகர் அது. இரண்டுமே இறந்து வீழும். அது கழுதைப்புலிகளுக்கும் ஓநாய்களுக்கும் கொண்டாட்டமாக ஆகிவிடும். அமைச்சர் அதை எண்ணியே இம்முடிவை எடுத்திருப்பார்" என்றார் கிருதர்.

"யயாதி சர்மிஷ்டையை மணந்தால் பாரதவர்ஷத்தில் பல தலைமுறைகளுக்கு போர் முழுமையாக நிறுத்தம் செய்யப்படும். அவர்கள் குருதியில் பிறக்கும் மைந்தனோ இங்கு பகைவர்களென எவருமே அற்றவனாக இருப்பான்" என கிருதர் தொடர்ந்தார். சத்வர் மெல்ல தனக்குள் என "யயாதி அழகன் அல்ல. வீரனும் அல்ல. நெறிநூல்கற்றவன், மொழி தேர்ச்சி கொண்டவன் என்கிறார்கள்" என்றார். கிருதர் "இளவரசி அழகியல்ல, எனவே அவனுக்கும் அழகு தேவையில்லை. இரு நாடுகள் இணையுமென்றால் எதிரிகளில்லை, ஆகவே வீரமும் தேவையில்லை. ஆனால் இப்பெருநிலத்தை ஒரு குடைக்கீழ் ஆள்பவன் துலாக்கோல் முள்ளசையாது காக்கும் நெறியறிந்தவனாக இருக்கவேண்டும். அத்தகுதி அவனுக்கு உண்டு என்கிறார்கள். பிறகென்ன?" என்றார்.

"தூது அனுப்பப்பட்டுள்ளதா?" என்றார் சுக்ரர். கிருதர் "ஆம், விருஷபர்வன் தன் தலைமை அமைச்சரையே நேரில் சென்றுவர ஆணையிட்டிருக்கிறார். சம்விரதர் சிறிய அணிப்படையுடன் கிளம்பிச்சென்று மூன்று நாட்கள் ஆகின்றன என்று இன்றுதான் அறிந்தேன். இளவரசியின் சிறப்புகளை எடுத்து இயம்ப ஏழு விறலியரும் இசைப்பாணர் நால்வரும் உடன் சென்றிருக்கிறார்கள். யயாதிக்கு ஒப்புதல் என்றால் அச்செய்தியுடன் அவர்கள் திரும்பி வருவார்கள். அதன்

பின்னரே தங்களிடம் வந்து முறைப்படி அறிவிக்கவேண்டுமென்று விருஷபர்வன் எண்ணியிருக்கிறார்” என்றார். “அவன் ஒப்பிவிட்டான் என்றே தோன்றுகிறது. ஆகவேதான் செய்திகள் வெளிவருகின்றன.”

சுக்ரர் “நன்று! என்னிடம் முன்னால் கேட்டிருந்தால்கூட முதலில் யயாதியின் ஒப்புதலைப் பெற்று வருக என்றே சொல்லியிருப்பேன்” என்றார். தயங்கிய குரலில் “எவ்வண்ணம் இருப்பினும் அவர்கள் ஷத்ரியர்” என்று கிருதர் சொன்னார். “அசுரரைவிட தாங்கள் ஒரு படி மேலென்று எண்ணுபவர்கள் அவர்கள். விண்ணில் திகழும் சந்திரனின் கொடிவழியினர் என்று பாடப்பட்டவர்கள் அக்குடியினர். அவைகூடி கருத்தறிய முற்பட்டான் என்றால் விருஷபர்வனின் மணத்தூது வீணாகவும் வாய்ப்புள்ளது” என்றார். சுஷமர் “அதற்கு வழி இல்லை” என்றார். கிருதர் “தாங்கள் என்ன எண்ணுகிறீர்கள், ஆசிரியரே?” என்றார்.

சுக்ரர் “அவன் வீரனல்ல என்றீர்கள். விருஷபர்வன் வீரனென்று அவன் அறிவான். இத்தூதை ஒரு நல்வாய்ப்பென்றே அவன் கருதுவான்” என்றபின் மெல்ல நகைத்து “நெறியறிந்தவன் வீரனல்ல என்றால் கோழையாகவே இருப்பான். நெறிகளனைத்தும் வீரத்தால் மட்டுமே நிலைநிறுத்தப்படுபவை என்று அவன் அறிந்திருப்பான். எனவே நெறியை எண்ணி ஒவ்வொரு கணமும் அஞ்சிக்கொண்டிருப்பான்” என்றார்.

அன்று திரும்பி வருகையில் தேவயானி சாயையிடம் “யயாதியைப்பற்றி நீ என்ன எண்ணுகிறாய்?” என்றாள். “கோழை” என்று சாயை சொன்னாள். மெல்லிய சீற்றத்துடன் “முழுமையாக சொல்லடி” என்றாள். “முன்னரே நான் அறிந்திருக்கிறேன். நான் அங்கு அகத்தளத்தில்

இருக்கையிலேயே அவரைப்பற்றிய செய்திகளை அரசியர் சேர்த்துக்கொண்டிருந்தார்கள். அறிவுள்ள கோழை நெறிநூல்களை துணைபற்றுகிறான். கோழைகளுக்குக் காவலாக நெறிநூல் நின்றிருக்குமென்று அவன் அறிகிறான். இளமையிலேயே நெறிகளை தன்னைச் சுற்றி அமைத்து கோட்டை கட்டிக்கொள்ளும் ஒருவன் அறியாது அதற்குள் சிறைப்படுகிறான். சிறைப்பட்டவனின் காமம் அணைக்குள் செறிந்த நீரின் பேரெடை கொண்டது.”

“ஒழுகாத நீர் ஒவ்வொரு அணுவையும் அழுத்திக்கொண்டிருக்கிறதென்பார்கள். யயாதியை பெருங்காமம் கொண்டவனென்று சூதர்கள் பாடுகிறார்கள். தன் அரசின் மூன்று பெருங்குடிகளிலிருந்தும் மணம் புரிந்திருக்கிறான். அதற்கப்பால் என்று அவ்வுள்ளம் தாவிக்கொண்டிருக்கும்” என சாயை தொடர்ந்தாள். “சர்மிஷ்டையை பெண்ணென்று அல்ல பெருங்கொடை என்று எண்ணுவான்.” தேவயானி ஒன்றும் சொல்லாமல் உடன்வந்தாள். “ஏன் வினவினீர்கள், அரசி?” என்றாள் சாயை. “அவள் அவனை மணந்தால் புவியில் பிற அரசர்கள் தனிமுடி சூட இயலாது அல்லவா?” என்றாள் தேவயானி. அவள் உள்ளம்செல்லும் திசையை அறிந்த சாயை “ஆம்” என்றாள்.

“அவனை நான் கண்டேன்” என்றாள் தேவயானி. “எங்கு?” என்றாள் சாயை திகைப்புடன். “கனவில். தோள் ஓய அம்புசெலுத்தி பெருகிச்செல்லும் நீரை அணைகட்ட முயன்றுகொண்டிருந்தான்.” சாயை சிரித்து “பெருக்கு அவிந்ததா?” என்றாள். தேவயானி “முற்றிலும் எப்படி நிலைக்கும்? அவன் ஆவநாழி ஒருபோதும் ஓயமுடியாது” என்றாள். சாயை சிரித்து “மூடன்” என்றாள். “நான்

பிறிதொருத்தியையும் அக்கனவில் கண்டேன். வராகி, அனல்வடிவோள்” என்றாள் தேவயானி. சாயை புரியாமல் நோக்கிக்கொண்டு உடன்வந்தாள். “எரியும் காட்டில் அவள் குரல் முழங்குவதை கேட்டேன்” என்றாள் தேவயானி.

# மாமலர் - 67

### 67. வேள்விக்குதிரையின் கால்கள்

குருநகரியின் சந்திரகுலத்து அரசன் யயாதி சர்மிஷ்டையை மணங்கொள்ளவிருக்கும் செய்தி ஹிரண்யபுரியை பெருங்களியாட்டு நோக்கி கொண்டுசென்றது. சம்விரதரும் உடன்சென்ற அணிப்படையினரும் மீண்டு வருவதை முறைப்படி அறிவிக்கவில்லையென்றாலும். அரண்மனையிலிருந்து அப்பேச்சு வெளியே செல்வதற்கு சொல்லிலா ஒப்புதல் அளிக்கப்பட்டது. விளைவாக அரண்மனை ஊழியர்கள் அனைவரும் அரசுசூழ்தலில் கரைகண்டவர்களாக தோற்றம் தரத்தொடங்கினர். ஒவ்வொருவருக்கும் இவ்வளவே என அளந்து அவர்கள் செய்திகளை அளித்தனர்.

“இன்னமும் முழுச்செய்தி வரவில்லை. வந்தவற்றிலும் பெரும்பகுதியை வெளிச்சொல்லலாகாதென்று அரசுநெறிகள் தடுக்கின்றன. இளவரசியை குருநகரியின் சந்திரகுலத்து அரசர் மணம்கொள்வது உறுதி. அரசமுறையில் பிற பேச்சுக்கள் கோடை முடிந்ததும் தொடங்கும். சம்விரதர் வந்துகொண்டிருக்கிறார். எஞ்சியதை அவர்தான் சொல்ல வேண்டும். எதுவானாலும் நம் ஐங்குலப்பேரவை கூடி சொல்லாய்ந்தே முடிவெடுக்கும்” என்றார் அடுமனைப்பணியாளராகிய சம்புகர்.

“குருநகரியின் ஷத்ரிய அரசர்கள் இதுவரை அசுரகுலத்து அரசியை இடம் அமர்த்தியதில்லை. வேதவேள்விகள் இயற்றவேண்டுமெனில் குலத்தூய்மை முதன்மையானது. நமது அரசரின் படைபலத்தை அஞ்சியிருக்கலாம். இளவரசியின் எழில்நலத்தை எண்ணியிருக்கலாம். நம் செல்வத்தின்மீதும் ஒரு கண் அவர்களுக்கு உண்டு என்பது என் கருத்து. சம்விரதர் சொன்ன பின்னரே அவர்கள் எதிர்பார்ப்பு என்னவென்று தெரியும்” என்றார் தேர்ப்பாகனாகிய சூடகர்.

அவர்களைச் சூழ்ந்து நின்று அச்செய்தியை கேட்ட ஒவ்வொருவரும் அரண்மனைப் பணியாளராக மாறி தங்களுக்குள் நடித்துக்கொண்டனர். அங்கிருந்து சென்று பிறரிடம் சொல்கையில் தங்களுக்கு மிக அணுக்கமான ஒருவர் அரண்மனையில் இருப்பதாகவும் அவர் தன்னிடம் மட்டுமே சொன்ன செய்திகளில் ஒரு பகுதியை மட்டுமே பகிரப்போவதாகவும் முன்னுரைத்தனர். “ஆயிரம் யானைகள் தூக்கிச் செல்லும் பொன்னை யயாதி கேட்டிருக்கிறார். கருவூலத்தில் அத்தனை பொன் இருக்கிறதென்பது உண்மை. அதை அளித்தால் அதைக் கொண்டே ஷத்ரியர் படைதிரட்டி நம்மை எதிர்ப்பார்களோ என்றுதான் அரண்மனை ஐயப்படுகிறது” என்றார் நெய்வண்டி ஓட்டுபவராகிய கூர்மர்.

அவரைச் சூழ்ந்திருந்த பிற நெய்வண்டி ஓட்டுபவர்களில் ஒருவர் “ஆம், அதையும்தான் பார்க்கவேண்டும். நம்மிடம் பெற்ற செல்வத்தைக் கொண்டே நமக்கெதிராக படைதிரட்டினால் என்ன செய்வது? அசுரர்கள் ஏமாந்துபோன பல தருணங்கள் வரலாற்றில் உள்ளன” என்றார். “இம்முறை வேள்விநெருப்பில் தொட்டு அவர்கள் ஆணையிட வேண்டுமென அரசர் எண்ணுகிறார். என் தாய்மாமனின்

மைந்தன் அரண்மனையில் அடைப்பக்காரனாக இருக்கிறான். அவன் இதை சொன்னான்” என்றார் கழுதையுடன் நின்றிருந்த ஒருவர். “முன்பு நாம் ஏமாந்தபோது நம்மிடம் வேதமறிந்த அந்தணர் எவருமில்லை. இன்று சுக்ரர் இருக்கிறார். ஏழு உலகிலும் அவரது எண்ணத்தைக் கடந்து தங்கள் உளம் ஓட்டும் திறனுடையவர் எவருமில்லை” என்றார் தலையில் நறுஞ்சுண்ணக் கடவத்துடன் நின்றிருந்த திண்ணர்.

தோழிகளுடன் தென்கிழக்கு மூலையில் அமைந்த கன்னியன்னையின் ஆலயத்திற்குச் சென்று வழிபட்டு மீள்கையில் ஒவ்வொரு விழியும் தன்னை முற்றிலும் புதியவளென நோக்குவதை சர்மிஷ்டை உணர்ந்தாள். யயாதியின் செய்தி வந்துவிட்டதை அவளும் அறிந்திருந்தாள். பட்டுத் திரைச்சீலையில் வண்ணநூல்களால் பின்னப்பட்ட ஓவியம் ஒன்றை அவளிடம் காட்டினர். அதில் தெரிந்த யயாதி தன் தந்தையைப்போல் இருப்பதாக அவளுக்குள் முதல் எண்ணம் எழுந்தது. அது அவளை குன்ற வைத்தது. பிற எவரிடமும் அவ்வெண்ணத்தை பகிரமுடியாதென்று உணர்ந்தபோது அதை தவிர்க்க முயன்றாள். ஆனால் பிறிதொருமுறை விழிதூக்கி அவள் ஓவியத்தை நோக்கவில்லை.

அவளுடைய உளம்குன்றலை எவ்வண்ணமோ உணர்ந்து “பாரதவர்ஷத்தின் ஷத்ரிய அரசர்களில் இன்று இவரே தலையாயவர். தங்களை இவர் மணம்கொண்டாரென்றால் இங்குள்ள அசுரரும் ஷத்ரியரும் ஒருங்கே வந்து அடிபணியும் அரசி என்று அமர்ந்திருப்பீர்கள்” என்றாள் அணுக்கச்சேடி. அச்சொற்களின் பொருள் என்னவென்றே அவள் உளம் விரித்துக்கொள்ளவில்லை. ஆனால் தன்னால் சுமக்க முடியாத

எடையொன்று அணுகிக்கொண்டிருக்கிறதென்று தோன்றியது. எப்போதும் ஓர் அச்சம் அவளுக்குள் இருந்துகொண்டே இருந்தது.

“என்னடி, முகமலர்வே இல்லாமல் இருக்கிறாய்? இந்த அரண்மனையே உன்னைத்தான் நோக்கிக்கொண்டிருக்கிறது என்பதை அறியமாட்டாயா?” என்று அன்னை அவளிடம் கடிந்துகொண்டாள். “நான் என்ன செய்ய வேண்டும்?” என்று அவள் கேட்டாள். “மணமகள்போல் இருக்க வேண்டும்” என்றாள் அரசி. “நான் முன்னர் மணமகள்போல் இருந்ததில்லையே?” என்றாள் சர்மிஷ்டை. வேடிக்கையாக சொல்ல முயன்று அது சிரிப்பாக ஆகாமல் அவள் உதடுகள் வளைந்தன.

“சிரிக்கிறாயா? உன்னை எண்ணி நீ நகைத்தால் பிறரும் உன்னை நோக்கி நகைப்பதற்கு நீ இடம்கொடுக்கிறாய் என்றே பொருள். நீ பாரதவர்ஷத்தின் பேரரசி. ஒவ்வொரு காலடியையும் அதை எண்ணி எடுத்து வை. ஒவ்வொரு சொல்லையும் அதை உணர்ந்து உரை. அவ்வண்ணமே ஆவாய்” என்றாள் அன்னை. “அமர்ந்திருக்கும் பீடத்தில் அமர்வதற்குரியவர்கள் அல்ல தாங்கள் என எண்ணுவது அசுரர்களின் இயல்பு. ஆகவே அவர்கள் தாழ்ந்து வளைகிறார்கள். அதை கடக்க தருக்கி நிமிர்கிறார்கள். இரண்டும் அழிவையே அளிக்கும். அடையப்படாத பீடங்கள்கூட தங்களுடையவையே என எண்ணுவதே ஷத்ரியர் இயல்பு. பீடங்கள் அவர்களை முழுமையாக தாங்குகின்றன.”

“ஊழ் உன்னை அங்கு கொண்டு அமர்த்துகிறது. இப்பாரதவர்ஷமே உன்னை அச்சாக்கி திசைசுழல்கிறது. இங்கு வாழ்வெழுந்த காலம்முதல் அசுரரும் ஷத்ரியரும் ஒருங்கிணைந்ததில்லை. உன்னில் அவ்விணைவு

நிகழவிருக்கிறது” என்றபின் அவள் இரு கைகளையும் பற்றி “தெய்வங்களின் விருப்பம் போலும் அது. உன் குருதியில் பேரரசர்கள் எழவிருக்கிறார்கள்” என்றாள் அன்னை.

அச்சொல் அவளை சிலிர்க்கச் செய்தது. தேவயானி எழுதிய அப்பாடல்... சிம்மத்துடன் விளையாடும் ஒரு வீரன் எப்படி இருப்பான்? அச்சமென்பதே அறியாதவனாக. தன் ஆற்றலை நன்குணர்ந்தவனாக. ஆற்றல் மிக்கவன் கனிவுடையவனாகவும் இருந்தால் அவன் விழிகள் கருவறை அமர்ந்த தெய்வங்களுக்குரியவையாக ஒளிரும். துலாமுள்ளென நெறிகொண்ட பிறிதொருவன். அம்முகங்களை அவளால் உளத்திரையில் வரைந்துகொள்ள முடியவில்லை. மானுடமுகங்கள் எவையும் அங்கு பொருந்தவில்லை. பிறிதொரு முகம். விண்ணில் அது பரந்திருக்கிறது. பனித்துத் திரண்டு சொட்டும் ஓர் ஒளித்துளி. அவ்வெண்ணமே அவளை மலரச் செய்தது.

எண்ணியிராத இனிய நினைவொன்று எழுந்ததுபோல் உடல் மெய்ப்புகொள்ள உள்ளம் இனித்தது. முகம் அடிக்கடி சிவந்து துடிக்க, எளிய சொல்லாடலிலேயே குரல் உடைந்து தழுதழுக்க, கண்கள் நீர்மை கொள்ள அவள் அகம் ததும்பிக்கொண்டிருந்தாள். “அணி சூடு! பேரரசி என மக்கள் முன் தோன்று! உன்னை அவர்கள் இனி தெய்வவடிவென்றே காணவேண்டும்” என்றாள் இளைய அன்னை. ஊர்கோலம் கொண்ட அன்னைதெய்வம்போல உடலெங்கும் அணிகள் மின்ன நகருக்குள் சென்றபோது எதிர்ப்படும் அத்தனை விழிகளிலும் தெரிந்த பேருவகையைக் கண்டு மேலும் மேலுமென அகம் பெருகினாள். எங்கும் மக்கள் முகங்கள்

நகைசூடியிருந்தன. “இக்களியாட்டுகள் எனக்கல்ல, என் இச்சிறு வயிற்றுக்கு” என்று எண்ணிக்கொண்டாள்.

நடந்தபடி கையை இயல்பாக தன் வயிற்றின்மேல் வைத்தபோது உடல் சிலிர்த்து நின்றுவிட்டாள். அணுக்கச்சேடி திரும்பி “அரசி…” என்றாள். இளங்காற்று வீச உடல் முழுக்க பூத்திருந்த வியர்வை குளிராகியது. “தேர் அருகில்தான் நின்றிருக்கிறது, அரசி” என்றாள் அணுக்கச்சேடி. “நன்று” என்றபின் மெல்ல நடந்தாள். பிறிதொருமுறை தன் வயிற்றை தொட்டுப் பார்த்தாள். அங்கு உறைகின்றனரா மணியாரமென நிரைவகுக்கும் மாவீரர்கள்? பிறிதெங்கோ ஒரு காலத்தில் எண்மங்கலங்கள் நிறைந்த தாலத்துடன் பெருங்குலங்கள் நிரைவகுத்து வந்து தென்மேற்கு மூலையில் பேரன்னை என அமர்ந்திருக்கும் அவள் முன் படையலும் பலியுமிட்டு வணங்கி வாழ்த்துரைக்க கூடினார்கள். கல்விழிகளால் அவர்களை கனிந்து நோக்கி கல்லுள் கரந்த சொல்லால் அவள் தன் குடியை தானே வாழ்த்தினாள்.

வயிற்றை மீண்டும் தொட்டு நோக்க விழைந்தாள். கையை அங்கு கொண்டுசெல்வதே கடினமென்று தோன்றியது. அதை எவரேனும் பார்த்துவிடுவார்களோ என்று விழியோட்டிவிட்டு மெல்ல நகர்த்திக்கொண்டுசென்று அஞ்சி அஞ்சி தொட்டாள். முற்றிலும் அறியா கையொன்று தொட்டதுபோல் அவள் உடல் விதிர்ப்பு கொண்டது. உள்ளங்கால் வியர்த்து நடை வழுக்கியது. அவள் தேரிலேறி அமர்ந்தபோது திரும்பி “அரண்மனைக்கா, இளவரசி?” என்று கேட்ட பாகனிடம் “இல்லை, குடில்தொகைக்கு” என்றாள்.

“இன்று அரண்மனையில் குடிப்பூசனைகள் நிகழ உள்ளன, இளவரசி. தங்களை அழைத்து வரவேண்டுமென்று ஆணை.

சம்விரதரும் அணிப்படையினரும் இன்று மாலை அரண்மனைக்கு வந்து சேர்வார்கள். அவர்கள் அவை நிற்கையில் தாங்களும் அங்கிருந்தாக வேண்டும். குருநகரியின் அரசர் தங்களுக்கு அளிக்கும்பொருட்டு அருமணி மாலையொன்றையும் கணையாழியையும் அளித்துள்ளார். அப்பரிசை முறைப்படி உங்களுக்கு அளிக்கையில்தான் இரு நாட்டு உறவுகளும் உறுதிப்படும்" என்றாள் அணுக்கச்சேடி.

"நாம் உச்சிப்பொழுதுக்குள் திரும்பிவிடுவோம்" என்றாள் சர்மிஷ்டை. "என்னால் தனித்திருக்க முடியவில்லை. அங்கு சென்று மூத்தவருடன் இருந்தால் இந்த தத்தளிப்பை சற்று கடந்து செல்வேன்" என்றாள். அணுக்கச்சேடி எதையோ சொல்ல விழைந்து பின் நாவடக்கி தேரிலேறிக்கொண்டு பாகனிடம் "குடில்தொகைக்கு..." என்றாள். தேர்ச்சகடங்கள் அசைந்து உருளத்தொடங்கி எதிர்காற்றில் ஆடையும் குழலும் பறக்கையில் வியர்வை குளிர்ந்து மெல்ல சர்மிஷ்டை அமைதி கொண்டாள். "ஏன்? அங்கு சென்றால் என்ன?" என்று திரும்பி அணுக்கச்சேடியிடம் கேட்டாள்.

"அங்குதானே செல்கிறோம்!" என்றாள் அவள். "இல்லை. அங்கு செல்வதைப்பற்றி நான் சொன்னதும் உன் கண்களில் ஒரு தயக்கம் வந்தது" என்றாள் சர்மிஷ்டை. "பொழுதில்லையே என்றுதான்..." என்று அணுக்கச்சேடி சொல்ல "அல்ல... பிறிதொன்று..." என்றாள் சர்மிஷ்டை. "ஒன்றுமில்லை" என்றாள் அவள். "சொல்!" என்றாள் சர்மிஷ்டை. அவள் மெல்ல "அவரும் பெண்..." என்றாள். "ஆம், அதற்கென்ன?" என்றாள் சர்மிஷ்டை. "இளவரசி, பாரதவர்ஷத்தில் பிறந்த ஒரு பெண் சென்று அமையக்கூடிய உச்சம் நாளை இங்கு நிகழப்போகிறது."

விழிசுருக்கி நோக்கி “ஆம், அது ஊழின் ஒரு முடிச்சு. அவ்வளவுதான்” என்றாள் சர்மிஷ்டை.

எப்படி சொல்வதென்று அறியாது பல சொற்களை எடுத்துவைத்து தயங்கி “இளவரசி, நாம் அதை பிறிதொரு பெண்ணிடம் சொல்லப்போகிறோம்” என்றாள் சேடி. “அவர்கள் அதை முன்னரே அறிந்திருப்பார்கள். இந்நகரமே பேசிக்கொண்டிருக்கிறது. மேலும் இன்று காலையே சிற்றமைச்சர் சரகர் சென்று முதலாசிரியரின் அவையில் முறைப்படி அறிவிப்பை அளித்திருக்கிறார்” என்றாள் சர்மிஷ்டை. ஆனால் அவள் உள்ளம் படபடக்கத் தொடங்கிவிட்டிருந்தது. அணுக்கச்சேடி நேரடியாக அவள் முகத்தை நோக்கி “தனக்கு மேல் பிறிதொருவர் இருப்பதை ஒருபோதும் ஒப்பாத உளநிலை கொண்டவர் சுக்ரரின் மகள். எந்நிலையிலும் அவர் எட்ட முடியாத இடத்திற்கு நீங்கள் செல்வதை அவரிடம் சொல்லப்போகிறீர்கள்” என்றாள்.

“அதெல்லாமே அவருக்குத் தெரியும்” என்றாள் சர்மிஷ்டை. “ஆனால் இப்போது நீங்கள் கொண்டுள்ள இத்தோற்றம் பிறிதொன்றை சொல்கிறது. சொல்லென அவர்கள் அறிந்தது அவர்கள் உள்ளத்திற்கு சென்றிருக்கும். கண்முன் காட்சியென்று நீங்கள் வந்து நின்றிருப்பது சித்தத்திற்கு கசிந்திறங்கும். இளவரசி, கல்வியென நெறியென முன்னோர் சொல்லென தன்னியல்பென நிற்பவை அனைத்தும் உள்ளத்தை மட்டுமே களம் கொண்டவை. சித்தம் நாமறியாத தெய்வங்களால் ஆளப்படுகிறது” என்றாள் தோழி. “என்ன சொல்கிறாய்?” என்றாள் சர்மிஷ்டை. “இப்போது இந்தக் கோலத்துடன் தாங்கள் அங்கு செல்லவேண்டாம்” என்றாள் அவள்.

“இப்போது தாங்கள் எப்படி இருக்கிறீர்கள் என்று தாங்கள் அறியமாட்டீர்கள். கால்நகம் முதல் தலைவகிடு வரை பொலிந்துள்ளீர்கள். இப்போது நாம் அரண்மனைக்கு செல்வோம். சம்விரதரின் தூது வரட்டும். குருநகரின் கணையாழி தங்கள் கைகளில் அமையட்டும். அதன் பின்னர் நாம் முறைப்படி பரிசுகளுடன் சென்று முதலாசிரியரின் மகளை பார்ப்போம். இளையோள் என மகள்நிலை என நீங்கள் அவர்களின் கால்தொட்டு சென்னிசூடி வாழ்த்து கோருங்கள். அவர்களுக்குள் சித்தத்தையும் கடந்து வாழ்பவள் என்றுமுள பேரன்னையொருத்தி. அவள் எழுந்து ஒருசொல் வாழ்த்தி உங்கள் தலை தொடட்டும். பிறகு எதையும் நாம் அஞ்சவேண்டியதில்லை” என்று தோழி சொன்னாள்.

“நீ என்ன சொல்கிறாய் என்று எனக்கு விளங்கவில்லை” என்றாள் சர்மிஷ்டை. “அவர்கள் தன்னுணர்விலாது தங்களை வாழ்த்திப்பாடிய சொற்கள் உளம் கடந்து சித்தம் கடந்து என்றுமுள பெருவெளியில் இருந்த மூதன்னை ஒருத்தியால் சொல்லப்பட்டவை. அச்சொல்லே உங்களிடம் அவரளித்த கொடையென இருக்கவேண்டும். நாம் திரும்பிச் செல்வோம். அதுவே நன்று” என்றாள் அணுக்கச்சேடி. சர்மிஷ்டை இரு கரங்களையும் தன் நெஞ்சில் அமர்த்தி சில கணங்கள் அமர்ந்திருந்து பின்பு “என் மூத்தவளை அஞ்சி நான் திரும்பிச்செல்ல வேண்டுமா என்ன?” என்றாள். “அவருக்குள் நிறைந்துள்ள கருணையை அறிந்திருக்கிறேன். அழியாத வாழ்த்துச்சொல்லை பெற்றிருக்கிறேன். அதற்கும் அப்பால் இருளொன்று இருக்கக்கூடும் என்று ஐயுற்று இவ்வுள எழுச்சியை அவரிடம் பகிர்ந்துகொள்ளாமல் மீண்டேன் என்றால் அது என் உள இருளை அல்லவா காட்டுகிறது?”

“இளவரசி...” என்றாள் அணுக்கச்சேடி. “இல்லை, என் இன்றைய பொழுது மூத்தவளுடன் கழியட்டும்” என்றாள் சர்மிஷ்டை. சேடி பெருமூச்சுடன் திரைவிலக்கி வழியை நோக்கலானாள்.

சர்மிஷ்டையின் தேர் சென்று சுக்ரரின் குடில்தொகையின் முன் நின்றபோது சகட ஒலி கேட்டு குடில்களின் அனைத்துச் சாளரங்களிலும் மாணவர்களும் பெண்டிரும் தோன்றி அவளை நோக்கினர். தேர்த்தட்டில் எழுந்து திரைவிலக்கி அவள் தோன்றியதும் “ஹிரண்யபுரியின் இளவரசி வாழ்க! விருஷபர்வனின் குலக்கொடி வாழ்க! பாரதவர்ஷம் முழுதாளப்போகும் பேரரசி வாழ்க!” என்று வாழ்த்தொலிகள் எழுந்தன. அவள் அக்குரல்களால் நாணமுற்று உதடுகளை மடித்தபடி விழிதாழ்த்தி தன் மேலாடையை வலக்கை விரல்களில் சுற்றிக்கொண்டு தளர்ந்த நடையுடன் படிகளை அடைந்து மேலேறினாள்.

உள்ளிருந்து முதுமகள் ஒருத்தி ஐந்து மங்கலங்கள் கொண்ட தாலத்தை ஏந்தி வந்து அவள் முன் மும்முறை இடமும் வலமும் சுற்றி “பேரரசியென எங்கள் குடில்களுக்கு வந்துள்ளீர்கள். முடிசூடி அமர்ந்தவன் விஷ்ணுவின் வடிவம். அவன் இடம் அமர்ந்தவள் லட்சுமியின் உருவம். உங்கள் கால்பட்டு எங்கள் குடில்கள் பொலிக!” என்றாள். நாணச் சிரிப்புடன் இடை தளர்ந்து நின்ற சர்மிஷ்டையை நோக்கி பிறிதொரு முதுமகள் “ஆம், அவ்வாறே ஆகுக என்று சொல்லி மஞ்சள் அரிசியை எடுத்து எங்கள் குடில்களுக்குமேல் வீசிவிட்டு உள்ளே வாருங்கள், இளவரசி” என்றாள். சிரித்தபடி அவ்வாறே செய்து அவர்களை வாழ்த்தியபின் இரு கைகளையும் கூப்பியபடி அவள் காலெடுத்து வைத்து உள்ளே வந்தாள்.

கிருதர் வந்து “ஆசிரியர் வகுப்பிலிருக்கிறார். வருக! வந்து வாழ்த்து பெற்று செல்க!” என்றார். சர்மிஷ்டை “ஆம், முதல் வாழ்த்தை முதலாசிரியரிடம் இருந்து பெறுவது முறையென்று தோன்றியது” என்றாள். “ஆம், ஆசிரியரும் மகிழ்ந்துள்ளார். வருக!” என்று கிருதர் மையக்குடில் நோக்கி அவளை அழைத்துச்சென்றார். சுக்ரரின் மாணவர்கள் அனைவரும் குடில்முற்றத்தில் நின்றிருந்தனர். அவர்கள் அருகணைந்ததும் அனைவரும் வணங்கி தலைதாழ்த்தி முகம் நிறைந்தனர். மேல் திண்ணையில் நின்றிருந்த சத்வர் “வருக, பேரரசி!” என்றார். “என்ன இது?” என்று அவள் நாணிச்சிரிக்க “அரசியர் நாணுவதில்லை” என்றார் சத்வர். வாய்விட்டு சிரித்தபடி “நான் அரசியில்லை” என்று அவள் சொன்னாள். “எவர் சொன்னது? இன்னும் ஓரிரு நாட்களில் பாரதவர்ஷமே தங்கள் பெயரை சொல்லப்போகிறது. வருக!” என்று சத்வர் உள்ளே அழைத்துச் சென்றார்.

சுக்ரரின் மேடை முன் தேவயானியும் சற்று பின்னால் சாயையும் அமர்ந்திருந்தனர். சாயை சொல்ல தேவயானி எழுதிக்கொண்டிருந்தாள். சுக்ரரின் மரவுரி அப்பால் மேடைமேல் கிடந்தது. அவள் அசைவைக் கண்டு எழுத்தை நிறுத்தி சுவடியையும் எழுத்தாணியையும் பலகைமேல் வைத்துவிட்டு தேவயானி எழுந்து வந்து அவள் இரு கைகளையும் பற்றியபடி “வருக, நல்வரவு!” என்றாள். சிரித்தபடி “என்ன, நீங்களும் முறைமைச் சொல் சொல்கிறீர்கள்?” என்றாள் சர்மிஷ்டை. “முறைமைச் சொல்லுக்கு சில இடங்கள் உண்டல்லவா?” என்றாள் தேவயானி. பின்னால் வந்து நின்ற சாயை சர்மிஷ்டையைப் பார்த்து “அணிகளால் பூத்திருக்கிறீர்கள், இளவரசி” என்றாள்.

சர்மிஷ்டை தன் ஆடைகளை குனிந்து பார்த்தாள். அரண்மனையில் இருக்கையில் எப்போதும் முழுதணிக்கோலத்தில் இருப்பதுதான் அவள் வழக்கம். ஆனால் சில நாட்களாக அன்னை ஏழு சமையப்பெண்டிரை அமர்த்தி அவள் உடலெங்கும் அருமணிகளையும் அணிகளையும் சுடர வைத்திருந்தாள். அரசணிக்கோலத்தில் தான் ஒருபோதும் சுக்ரரின் குடில்தொகைக்கு வந்ததில்லை என்பதை சர்மிஷ்டை நினைவுகூர்ந்தாள். “இதை அரசணிக்கோலம் என்பார்கள். இதை அணிந்திருப்பதைப்போல் இடரொன்றில்லை. இயல்பாக நடக்கமுடியாது. உடலெங்கும் ஆயிரம் முட்கள் குத்திக்கொண்டிருக்கும். சேடியர் உதவி செய்யாமல் எங்கும் அமரவும் எழவும் இயலாது” என்றாள் சர்மிஷ்டை.

சாயை அவள் மேலாடையை நோக்கி “இது பீதர்நாட்டு கைத்திறன் என்று எண்ணுகிறேன். நாகசிம்மங்களும் மலர்களும் இடைவெளியின்றி கலந்துள்ளன. ஆடையொன்றில் அருமணிகளைச் சேர்த்து தைப்பதை இப்போதுதான் பார்க்கிறேன்” என்றாள். சர்மிஷ்டை தன் மேலாடை நுனியை எடுத்துப்பார்த்து “ஆம், உண்மைதான். நானே இப்போதுதான் பார்க்கிறேன்” என்றாள். “இந்த ஒரு மேலாடையே இங்குள்ள பல மன்னர்களின் மணிமுடியைவிட மதிப்புமிக்கதாக இருக்கும் போலிருக்கிறது” என்று சாயை அதை மெல்ல சுழற்றி நோக்கியபடி சொன்னாள். தேவயானி சர்மிஷ்டையின் கையை பற்றி “ஆடையைப்பற்றி பிறகு பேசலாம். வா, தந்தையிடம் அருள் பெற்றுக்கொள்!” என்றாள்.

உள்ளிருந்து சுக்ரர் கைகூப்பியபடி வெளியே வர சர்மிஷ்டை அணிகளும் ஆடையும் ஓசையிட அருகே சென்று அவர் கால்களைத் தொட்டு தலையில் வைத்து “என்னை

வாழ்த்துங்கள், முதலாசிரியரே!” என்றாள். “செய்தி அறிந்தேன். மண்ணில் நிகரற்ற மாவீரர்களின் நிரை உன்னில் பிறந்தெழுக! இவ்விரிநிலம் உள்ளவரை உன் பெயர் வாழும். மூதன்னை என உன்னை கொடிவழிகள் வணங்கும். ஓம்! அவ்வாறே ஆகுக!” என்று வாழ்த்தினார். சர்மிஷ்டையின் இரு கைகளையும் பற்றிக்கொண்டு பிறிதொரு கையால் அவள் தோளை அணைத்து “வருக!” என்று அழைத்துச்சென்று தன்னருகே அமரவைத்தார்.

“இவ்வண்ணம் ஒரு நிகழ்வு உருவாகும் என்று நான் எண்ணியதில்லை. முன்பெப்போதும் அசுரருக்கும் ஷத்ரியருக்கும் இடையே குருதியுறவு இத்தனை எளிதாக நடந்ததும் இல்லை. அசுரகுலப் பெண்டிரின் மைந்தர்கள் அரசமர்ந்ததுண்டு. தந்தைவழியில் குருதிகணிக்கும் முறைமையால் அவர்கள் ஷத்ரியர் என்றே கருதப்படுவார்கள். அசுரகுல அரசி ஷத்ரியரின் இடம் அமர்ந்ததில்லை. வேதியரும் ஆரியரின் நாற்குலத்தோரும் இதை எப்படி எதிர்கொள்வார்கள் என்பது இன்னமும் உய்த்துணர முடியாததாகவே உள்ளது” என்றார் சுக்ரர். “நன்று நிகழலாம். அவ்வண்ணம் நிகழுமென்றில் அது மானுடத்திற்கு நல்லது.”

அவர் அவள் கைகளை பற்றி கண்களுக்குள் நோக்கி “இத்துலாவில் இரு தட்டும் நிகரென்று இருக்கவேண்டும். அரசியென்று நீ குருநகரிக்கு செல்கையில் அசுர குலத்தின் கொடியையே கொண்டு செல்கிறாய். ஒரு சொல்லிலும் ஒரு நோக்கிலும் ஷத்ரியகுலத்து அரசனுக்கு நீ குறைந்தவளென்று ஆகக்கூடாது. பிற எந்த அரசியும் உனக்கிணையாக அமரவும் உனக்கு எதிர்ச்சொல்லாற்றவும் கூடாது” என்றார். அவள் திகைப்புடன் அவரை நோக்கி “அதை நான் எப்படி கட்டுப்படுத்த

முடியும்?” என்று கேட்டாள். சுக்ரர் ஒரு கணம் சினம்கொண்டு சுருங்கி உரத்த குரலில் “நீ அரசியென செல்கிறாய்” என்றார்.

சர்மிஷ்டை நடுங்கியபடியே திரும்பி தேவயானியைப் பார்த்து “ஆம்” என்றாள். தேவயானி “மணமுடித்தபின் மனைவியாவதே பெண்களின் வழக்கம். இப்போது எத்தனை சொன்னாலும் அவை வெறும் சொற்களே. தன் கடமையை அவள் ஆற்றுவாள், தந்தையே” என்றாள். “ஆற்றியாகவேண்டும். உன்னை வெறுமொரு கருவறை என ஷத்ரியர் எண்ணிவிடலாகாது. ஷத்ரியருக்கும் அசுரருக்குமிடையே நீரிலும் நிலத்திலும் ஆயிரம் இடங்களில் எல்லைப்பூசல்கள் உள்ளன. எண்ணற்ற அறச்சிக்கல்கள் நாளுமென எழுந்துகொண்டிருக்கின்றன. ஒவ்வொன்றிலும் உன் சொல் அவன் ஏந்தும் கோலுக்கு நிகரென நின்றாக வேண்டும். உன்னை அளிப்பது ஷத்ரியருக்குள் புகுந்து நாம் வெல்வதற்கே” என்றார் சுக்ரர்.

சினம் எரிந்த ஒற்றை விழியுடன் “அசுரரிடமிருந்து ஒரு பணயக்கைதியை கொண்டு சென்றோம் என்று ஷத்ரியர் எண்ணிவிடலாகாது. அசுரரின் கருவூலச் செல்வம் தங்கள் கைக்கு வந்ததென்று மகிழவும் கூடாது” என்றார் சுக்ரர். சர்மிஷ்டை “ஆம்” என்றபின் தேவயானியை பார்த்தாள். “இப்போதே இதையெல்லாம் சொல்லி அவளை அச்சுறுத்த வேண்டியதில்லை, தந்தையே. இங்கிருந்து அவளுக்கு வழிகாட்ட உரிய அமைச்சர்களும் உடன் செல்வார்கள் அல்லவா?” என்றாள் தேவயானி.

சர்மிஷ்டை கைநீட்டி தேவயானியின் கைகளை பற்றிக்கொண்டு “தாங்கள் உடன் வாருங்கள், மூத்தவளே” என்றாள். சாயை சினத்துடன் “என்ன சொல்கிறீர்கள்?” என்றாள். அவளைத்

தொட்டு விலக்கிவிட்டு தேவயானி “நன்று. அதை பிறகு பேசுவோம்” என்றாள். “நீங்களும் உடன் வாருங்கள். நான் மிகவும் அஞ்சுகிறேன். ஒவ்வொரு சொல்லாலும் என் மேல் எடையேற்றுகிறார்கள்” என்றாள் சர்மிஷ்டை. “வா! இவை அனைத்தையும் விட்டு இன்றொரு நாள் எங்களுடன் களித்திரு. குருநாட்டரசனின் கணையாழியை பெற்றுக்கொண்டாயென்றால் உன்னால் சோலையாடவும் நீர்விளையாடவும் முடியாமல் போகலாம்” என்றாள் தேவயானி. சர்மிஷ்டை கண்களில் நீர் கசிந்திருக்க மீண்டும் சுக்ரரை வணங்கிவிட்டு எழுந்தாள்.

# மாமலர் - 68

### 68. நச்சுப்பல்

தன் குடிலுக்குச் சென்றதும் தேவயானி சர்மிஷ்டையிடம் “ஏன் முகத்தை வாழைக்கூம்புபோல வைத்துக்கொண்டிருக்கிறாய்? இப்போது என்ன ஆயிற்று?” என்றாள். “ஒன்றுமில்லை, எனக்கு அச்சமாக இருக்கிறது” என்றாள் சர்மிஷ்டை. “என்ன அச்சம்? இன்றுவரை நீ இளவரசி, இதே இடம்தான் அரசிக்கும். எவரோ சொல்வதைக் கேட்டு ஏன் அஞ்சுகிறாய்?” என்றாள் தேவயானி. சர்மிஷ்டை “இல்லை…” என சொல்லவந்து அப்படியே விழிகரைந்து விசும்பலானாள். “என்னடி இது…? அறிவிலிபோல…” என்றாள் தேவயானி.

சாயை “நாம் நீராடச் செல்வோம்…” என்றாள். “நீந்தினால் இளவரசி மீண்டுவிடுவார்கள்.” சர்மிஷ்டை “இல்லை, நான் அந்த உளநிலையில் இல்லை” என்றாள். “முதலில் வந்து நீந்துங்கள். உளநிலை அதுவே அமையும்” என சாயை அவள் கையை பிடித்தாள். “இந்த ஆடைகளுடனா?” என்றாள் சர்மிஷ்டை. “உன்

சேடியும் வரட்டும். அவள் ஆடைக்கு காவலிருப்பாள். விருஷபர்வனின் அரசில் அரசுப்பொருளை எவர் திருடமுடியும்?” என்றாள் தேவயானி.

தயங்கியபடி சர்மிஷ்டை கிளம்பினாள். “இங்கே நீராடினால் அத்தனைபேரும் பார்ப்பார்கள். நான் சில நாட்களாகவே வெறிக்கும் விழிகள் முன்னால் வாழ்கிறேன்” என்றாள். “அஞ்சாதே. நாம் புதிய ஓரிடத்திற்கு செல்லலாம். பிரதமை ஒரு சிற்றருவியாக கொட்டுகிறது, பார்த்திருக்கிறாயா?” என்றாள் தேவயானி. “இந்த ஆறா? கேள்விப்பட்டதே இல்லையே!” என்றாள் சர்மிஷ்டை. “இங்கிருந்து சற்று அப்பால். நாம் புரவிகளில்கூட செல்லலாம். அங்கே முன்னொரு காலத்தில் வித்யாதர முனிவரின் தவக்குடில் இருந்திருக்கிறது. இன்று காடாகிவிட்டது. ஆனால் அவர்கள் நட்ட மலர்மரங்கள் பெருகி மலர்க்காடாக மாறி நின்றிருக்கின்றன. காடு அலையிளகி வண்ண நுரை எழுந்ததுபோலிருக்கும்” என்றாள் தேவயானி.

அவள் நீராடக் கிளம்பியதைக் கேட்டதும் அணுக்கச்சேடி “வேண்டாம் இளவரசி, இது நன்றல்ல என என் உணர்வு சொல்கிறது” என்றாள். “விரைவில் மீண்டுவந்துவிடுவோமடி. புரவிகளிலேயே செல்லலாம் என்கிறார்கள். எனக்கும் இவ்வுள மாறுதல் தேவையாக உள்ளது” என்றாள் சர்மிஷ்டை. சேடி “நான் சொல்லவேண்டியதை சொல்லிவிட்டேன், இளவரசி” என்றாள். “நீ உடன் வந்தால் போதும். ஆடையணிகளை நோக்கிக்கொள்” என்றாள் சர்மிஷ்டை. சாயை சென்று நான்கு புரவிகளை ஓட்டிவந்தாள். “இங்கே அரசகாவலருக்குரிய இரு புரவிகளே இருந்தன. இருபுரவிகள் உங்கள் தேரில் கட்டப்பட்டிருந்தவை. மானுடர் ஏறினால் தாங்கும் முதுகுகள் உள்ளவை என நினைக்கிறேன்” என்றாள்.

“நாம் நெடுந்தொலைவு செல்லப்போவதில்லை அல்லவா?” என்றாள் சர்மிஷ்டை. “அருகேதான்... நான்கு நாழிகை தொலைவு” என்ற தேவயானி “ஏற்றம்கூட இல்லை. காட்டுவழியானாலும் நிகரமைந்த மண்” என்றாள். அவர்கள் புரவிகளில் ஏறிக்கொண்டனர். சர்மிஷ்டை “காட்டுக்குள் புரவியில் செல்வது ஒரு அரிய விளையாட்டு. வரும் கிளைகளை எல்லாம் முன்னரே உய்த்துணர்ந்து தலைகுனியவேண்டும். சிறுமியாக இருக்கையில் நான் எந்தையுடன் சென்று ஆடியதுண்டு...” என்றாள். தேவயானி “கிளைகளுக்கு தலைகுனியாமலேயே செல்லலாம். அது மேலும் நுண்ணிய விளையாட்டு... பார்!” என்றபடி புரவியை தட்டினாள்.

எதிர்வந்த கிளைகளுக்கெல்லாம் தலைதிருப்பியும் புரவியை ஒதுக்கியும் சாரைப்பாம்பென நெளிந்து விரைந்து சென்றாள் தேவயானி. கிளைகளுக்கு குனிந்தும் சில தருணங்களில் புரவிக்கழுத்துடன் முகத்தை பதியச்செய்தும் அவளைத் தொடர்ந்து சர்மிஷ்டை சென்றாள். மிக விரைவிலேயே அவள் உளநிலை மாறியது. கூச்சலிட்டு நகைத்தபடி “வளைவது ஆணவக்குறைவாக இருக்கலாம், ஆனால் பயணத்தை எளிதாக்குகிறது, மூத்தவளே. நீங்கள் புரவிமேல் அமர்ந்து நடனமிடுகிறீர்கள்” என்றாள். சாயை பின்னால் வந்தபடி “அது நடனமல்ல, போர். போரில் வளைவதென்பது தோற்பதே” என்றாள்.

தொலைவிலேயே அருவியின் ஓசை கேட்கத்தொடங்கியது. “பெரிய அருவியா?” என்று அவள் கேட்டாள். “நின்று நீராடலாம்... அதற்குமேல் அது எத்தனை பெரிதாக இருந்தாலும் என்ன?” என்றாள் சாயை. மலர்க்காட்டின் வண்ணங்கள்

மரங்களுக்கு அப்பால் தெரிந்தன. அங்கே மாபெரும் ஓவியப்பட்டுத்திரை ஒன்று தொங்குவதுபோல என அவள் எண்ணினாள். கொன்றையின் பொன், வேங்கையின் அனல், செண்பகத்தின் நீலம். கலவையான மணம் வந்து மூக்கை சீண்டியது. அவள் முகம் சுளித்து தும்மலிட ஐயம்கொண்டு புரவி நின்றது. அவள் அதை தட்டி முன் செலுத்தினாள்.

வித்யாதர முனிவரின் குடிலிருந்த பகுதி முழுமையாகவே மலர்க்காடாக மாறிவிட்டிருந்தது. "இங்கே அவர்கள் பெய்த ஞானமே மலர்களாக செறிந்துள்ளது என்கிறார்கள். அவருடைய சிறிய ஆலயம் ஒன்று நடுவே அரசமரத்தின் அடியில் அமைந்துள்ளது. சித்திரை முழுநிலவன்று அவருடைய மாணவநெறியினர் இங்கே வந்து வணங்கி அருள்கொண்டு செல்வதுண்டு" என்றாள் சாயை. தேவயானி "மரங்களை ஒழித்து அவர்கள் அமைத்த வெட்டவெளியை எளிதில் வளரும் மலர்மரங்கள் எடுத்துக்கொண்டிருக்கின்றன. வண்டொலியை அசுரவேதத்தின் முதலோசை என்பது மரபு. ஆகவே இதை வேதவனம் என்றும் அழைக்கிறார்கள்" என்றாள்.

மலர்க்கிளைகள் காற்றில் உலைய வண்ணம் அலையடித்தது. காற்றில் வண்டுகளும் தேன்சிட்டுகளும் எழுந்து அமைந்து பிறிதொரு அலையாயின. "வா, அருவிக்குச் செல்ல பாறைகளால் ஆன பாதையொன்றை முனிவரின் மாணவர்கள் முன்பு அமைத்திருக்கிறார்கள்" என்றாள் தேவயானி. "இந்த இடத்தை எப்படி அறிந்தீர்கள்?" என்றாள் சர்மிஷ்டை. "நம் குருநிலையில் வித்யாதர மரபின் மாணவன் ஒருவன் வந்துசேர்ந்திருக்கிறான். அவனிடமிருந்து அறிந்தேன்..." என்றாள் தேவயானி. "நானும் இவளும் மட்டும் இங்கே வந்து

நீராடினோம். மலராடை அணிந்து விளையாடினோம். அப்போதே உன்னையும் இங்கே அழைத்துவர எண்ணினோம்.”

மலர்களை நோக்க நோக்க சர்மிஷ்டையின் உள்ளம் விம்மியது. உவகை என்பது ஒரு கொந்தளிப்பாக ததும்பலாக நிலையழிவாக மட்டுமே ஏன் இருக்கிறது? அது அமைதியாக நிலைகொள்ளலாக ஏன் ஆகக்கூடாது? இன்பமென்பது அலை, துன்பமென்பதும் அலையே என சுக்ரர் சொன்ன வரி நினைவிலெழுந்தது. எந்த வகுப்பில்? நானும் அரிய நூலுரைகளை நினைவில்கொள்ளத் தொடங்கிவிட்டேன்! நானும் அரசியாகிவிட்டேன். “புன்னகைக்கிறார்... இங்கு வந்தது வீணாகவில்லை” என்றாள் சாயை. “நீராடுவோம்” என்றாள் தேவயானி.

சர்மிஷ்டை ஆடை களையத்தொடங்கியபோது தேவயானி “இங்கே முற்றிலும் ஆடை களையவேண்டும் என்பது நெறி” என்றாள். “எவர் நெறி?” என்று சர்மிஷ்டை அச்சத்துடன் கேட்க “இந்த மலர்க்காட்டை ஆளும் கந்தர்வர்களின் ஆணை” என்றாள் சாயை. “அய்யோ!” என்றாள் சர்மிஷ்டை. “விளையாடாதே! ஏற்கெனவே அஞ்சிக்கொண்டிருக்கிறாள்” என்ற தேவயானி “இங்கே எவரும் வருவதில்லை. இக்காட்டுக்கு அப்பால் அடர்காடு எழுந்து கடக்கமுடியா மலையென்றாகிறது. ஆகவே முழு விடுதலையை நம் உடலுக்கு அளிக்க இதைவிட உகந்த இடம் வேறில்லை” என்றாள். “ஏன்?” என்று அவள் மிரண்ட விழிகளுடன் கேட்க “இரு சிறுகுழவிகள் அவை, இளவரசி. அவற்றை நாம் எப்போதும் கட்டி சிறையிட்டிருக்கிறோம்” என்றாள் சாயை. “யார் சிறையிட்டது?” என சர்மிஷ்டை புரியாமல் கேட்க “வாடி!” என அவள் கையை பற்றினாள் தேவயானி.

தேவயானி தயக்கமே இல்லாமல் விரைவாக தன் ஆடையை களைந்தாள். உடன் சாயையும் ஆடையைக் களைந்து வெற்றுடலுடன் இளங்குதிரைகள் போல இறுகிய தொடைச்சதைகள் அசைய குருத்தொளி கொண்ட முலைகள் துள்ள அருவியை நோக்கி ஓடினாள். அணுக்கச்சேடி தயங்கி நிற்க தேவயானி “வாடி” என அதட்டினாள். சர்மிஷ்டை அந்த நீர்ப்படலத்திற்குள் சென்று நிற்பது ஓர் ஆடையை சூடுவதுபோல என உணர்ந்தாள். சேடியின் விழிகளை தவிர்த்தபடி ஆடையைக் களைந்து வெற்றுடலை தன் கைகளால் மூடிக்கொண்டு தோள்குறுக்கி நடந்து அருவியை நோக்கி சென்றாள்.

சாயை நீரை அள்ளி அவள் மேல் தெறிக்க சிலிர்த்துச் சிரித்தபடி பாய்ந்தோடி நீருக்குள் புகுந்துகொண்டாள். குளிர்ந்த நீர் அவளை அக்கணமே முழுமையாக ஆட்கொண்டது. நீரோசை எண்ணங்களையும் மூடியது. குறுக்கிய உடலை மெல்ல விடுவித்து கைகளை விரித்தபடி சுழன்றாள். கூச்சலிட்டபடி துள்ளிக்குதித்தாள். மூச்சுக்காக வெளிவந்தபோது முன்காலையின் ஒளியில் நீர்வழியும் முலைகளுடன் சாயையும் தேவயானியும் நிற்பதை கண்டாள். “விடுதலை ஆகிவிட்டாள்” என்று தேவயானி சொன்னபோது பற்கள் வெண்ணிறமாக மின்னின.

“நீருக்கு கன்னியைத் தழுவும் உரிமை உண்டு என்கின்றன நூல்கள்” என்றாள் சாயை. எதிர்பாராதபடி தேவயானி சர்மிஷ்டையை நீருக்குள் தள்ளிவிட்டாள். மூச்சுத் திணறி அவள் கூச்சலிட்டு திமிறி விலகி தேவயானியின் கையைப்பற்றி உள்ளே இழுத்தாள். ஓடிவந்து சேர்ந்த சாயை அவர்கள் இருவரையும் பிடித்து மேலும் விசையுடன்

நீர்பொழிந்த இடம் நோக்கி தள்ளினாள். மூவரும் கைகள் பிணைத்தபடி ஒருவரை ஒருவர் உந்தினர். கூவிச்சிரித்து துள்ளிக்குதித்தனர்.

அருவியில் அதற்கு முன்னரும் சர்மிஷ்டை ஆடியதுண்டு. சேடியரும் செவிலியரும் துணைவர, ஆடைகளும் அணிகளுமாக. அருவிக்குக் கீழே ஆடையின்றி நிற்பதில் மட்டுமே முழுமையுள்ளது என அப்போது தோன்றியது. நீர்தழுவ உடல்நெகிழ்ந்து நின்றிருக்கும் பாறைகளுடன் ஒரு பாறையாக ஆகிவிடுவதுபோல. முழுமையாக ஒப்படைத்துவிடுவதன் விடுதலை அது என எண்ணிக்கொண்டாள். கைகளை விரித்து நீரின் அடிகளை பெற்றுக்கொண்டாள். குனிந்து அதன் எடையை தாங்கினாள். நீர் பெருகிவருவதுபோல் தோன்றியது. அலையலையாக எதையோ சொல்வதுபோல செவிமயக்கு ஏற்பட்டது.

வெளியே சென்று நின்ற சாயை "செல்வோம்!" என்றாள். "இன்னும் சற்றுநேரம்" என்றாள் சர்மிஷ்டை. "நீதான் செல்லவேண்டும் என்றாய்" என்றாள் சாயை. "இதோ" என மீண்டும் நீருக்குள் புகுந்தாள் சர்மிஷ்டை. சாயை கரைக்குச் சென்று மலர்க்காட்டுக்குள் நுழைந்தாள். நீருக்குள் இருந்து வெளிச்சென்று தலைமயிரை வழித்து பின்னால் கொண்டுசென்று சுருட்டி உதறினாள் தேவயானி. "கரையேறுகிறீர்களா?" என்றாள் சர்மிஷ்டை. "இல்லை, வர்த்தினி அங்கே மலராடை செய்கிறாள். அதை அணிந்துகொண்டு மலர்கள் நடுவே திளைப்பேன். உடலெங்கும் மலர்ப்பொடி பரவி மணம் தோலுக்குள் சென்றபின் மீண்டும் வந்து ஒருமுறை உடல்கழுவி மீண்டுசென்று ஆடையணிவேன். அதுதான் வழக்கம்" என்றாள்.

“கொன்றைமலர் மணமா?” என்றாள் சர்மிஷ்டை. “அங்கே பன்னிரண்டு வகையான மலர்கள் உள்ளன. அவையனைத்தும் கலந்தால் எழுவது மலர்மணம்... வானிலுள்ள மலரொன்றின் மணம் அது.” சர்மிஷ்டை கரைக்குச் சென்று அவளருகே நின்று உடலுக்குக் குறுக்கே கைகளைக் கோத்து நடுங்கியபடி “என்ன மணம்?” என்றாள். “கல்யாண சௌகந்திகம் என அதை சொல்கிறார்கள். அந்த மலரின் மணத்தை நான் காவியங்களில்தான் பயின்றேன். எண்ணும் மலரின் மணத்தை தான் எனக் காட்டுவது அது. இங்கு வந்து இந்த மலர்க்குவையில் ஆடிச்செல்லும்போது அதை நானும் உணர்ந்தேன்...”

சாயை அப்பால் வந்து நின்று கைகாட்டி அழைத்தாள். “மலராடையா?” என்றாள் சர்மிஷ்டை. “அது நம்மை மறைக்குமா?” தேவயானி சிரித்து “மறைக்காது, காட்டும்... வாடி” என்றபடி கைகளைப் பற்றி அழைத்துச்சென்றாள். அவள் நடையை நோக்கியபடி உடன்சென்ற சர்மிஷ்டை அறியாமல் நின்றுவிட்டாள். “என்னடி?” என்றாள் திரும்பிநோக்கிய தேவயானி. “யானையின் நடை.... கஜராஜவிராஜிதமந்தகதி” என்றாள் சர்மிஷ்டை. தேவயானி புன்னகைத்து “நீயும் கவிதைக்குள் வந்துவிட்டாய், வா!” என நடந்தாள். “சாயை நடப்பது புலி போலிருக்கிறது” என்றாள் சர்மிஷ்டை. “அதன் பெயரென்ன?” என்றாள் தேவயானி. சர்மிஷ்டை மெல்லிய குரலில் “சார்த்தூல விக்ரீடிதம்” என்றாள். “நன்று!” என்றபடி தேவயானி முன்னால் சென்றாள்.

பின்னால் சென்றபடி சர்மிஷ்டை “என்னால் மட்டும் ஏன் அப்படி நிமிர்ந்து நடக்கமுடியவில்லை? என் உடலை பற்றியிருப்பது எது?” என்றாள். தேவயானி “உடல் என்பது

உள்ளிருப்பதன் வெளிப்பாடு. உன்னுள் உறைவது அவ்வாறு தன்னை காட்சியாக்கவே விழைகிறது” என்றாள். “நீ நடப்பதும் அழகுதான். அதை மயில்நடனம் என்கிறார்கள்” என்றாள் தேவயானி. சர்மிஷ்டை பாறைமேல் மெல்ல காலெடுத்துவைத்து மலர்க்காட்டை அடைந்தாள்.

தேவயானி ஓடிச்சென்று சாயையிடமிருந்து மலராடை ஒன்றை வாங்கி இடையில் கட்டிக்கொண்டாள். சாயை “இதோ” என ஒரு மலராடையை சர்மிஷ்டையிடம் அளித்தாள். அதை வாங்கி அணியும்போது சர்மிஷ்டைக்கு சிரிப்பு வந்தது. “என்ன சிரிப்பு?” என்றாள் சாயை. “இதை ஆடை என்று எப்படி சொல்வது?” என்றாள். “இந்த ஆடையைக் கண்டு காற்று ஏமாந்துபோகும். இதை அதனால் மேலும் விலக்கமுடியாது” என்றாள் தேவயானி. “நாம் மலர்களுக்குள் புகுவதற்கு இதுவே வழி. அருவிக்குமுன் முழுமையாக நம்மை அளிப்பதுபோலத்தான் இதுவும்” என்றாள் சாயை.

மலராடைகளுடன் அவர்கள் மலர்க்காட்டுக்குள் நுழைந்தனர். தாழ்ந்த கிளைகள் மலர்செறிந்து ஆட தரையெங்கும் உதிர்ந்த மலர்கள் கம்பளமென பரவியிருக்க காற்றலைகளில் மலர்மழை பொழிந்துகொண்டெ இருக்க அது மலர்களால் ஆன அருவியென்றே தோன்றியது. அவள் கிளைகளை கைகளால் பற்றி ஒதுக்கி ஒதுக்கி நடந்தாள். எதிர்பாராதபடி அவளை தேவயானி பிடித்து தள்ள தடுமாறி பூஞ்சருகு மெத்தையில் விழுந்தாள். அவள்மேல் தேவயானியை சாயை பிடித்து தள்ளினாள். இருவரும் புரண்டு எழுந்தபோது உடலெங்கும் மகரந்தமும் தேனும் பரவியிருந்தன.

அதன்மேல் ஒட்டிய மலரிதழ்களை தட்டிவிட்டுக் கொண்டிருக்கையிலேயே மீண்டும் அவளை கால்தட்டி

புரளவிட்டாள் சாயை. தேவயானியும் சர்மிஷ்டையும் சேர்ந்து அவளைப் பிடித்து இழுத்துவந்து பூஞ்சருகுமேல் உருட்டினர். கால்களைப்பற்றி இழுத்தனர். சாயை கூச்சலிட்டு நகைத்து சருகுகளை அள்ளி அவர்கள்மேல் வீசினாள். கால்பின்னி மல்லாந்து விழுந்த சர்மிஷ்டைமேல் உதிர்ந்த மலர்களை அள்ளி அள்ளிக் குவித்து எழாதபடி மேலும் மேலும் போட்டாள். சிரித்து மூச்சுத்திணறி எழுந்து அமர்ந்தபோதுதான் சர்மிஷ்டை ஆண்குரல் ஒன்றை கேட்டாள். "யார்?" என அவள் திகைப்புடன் கேட்க தேவயானியும் அதை கேட்டுவிட்டாள்.

தேவயானியும் சாயையும் "உடைகள் எங்கே? உடைகள்?" என்று கூவியபடி ஓடினர். அவர்களை நோக்கி சேடி ஓடிவர தேவயானி அவள் கையிலிருந்த ஆடையைப் பறித்து விரைந்து அணிந்து மேலாடையால் தன் உடலை மூடிக்கொண்டாள். எழுந்து செயலற்றவள்போல நின்ற சர்மிஷ்டை நிலையுணர்ந்து உடல்பதற ஓடிச்சென்றபோது சாயை தன் ஆடையை அணிந்தபின் எஞ்சியிருந்த தேவயானியின் ஆடையை எடுத்து அவளை நோக்கி வீசினாள். குனிந்து அந்த ஆடையை கையில் எடுத்தபின் திரும்பி தேவயானியை நோக்கிய சர்மிஷ்டை தன்னுள் முற்றிலும் அறியாத ஒன்று பொங்கி எழுவதை உணர்ந்தாள்.

தேவயானியின் ஆடையைச் சுருட்டி அப்பால் வீசிவிட்டு வெறியுடன் பாய்ந்துசென்று தேவயானி அணிந்திருந்த தன் ஆடையைப் பற்றி "கழற்றுடி என் ஆடையை..." என்று கூச்சலிட்டாள். அவள் முகம் சுருங்கி பற்கள் சீறித்தெரிந்தன. "என்னடி இது...? இரு" என்று தேவயானி பதற "என் ஆடையைக் கழற்று... என் ஆடையைக் கழற்று...." என்று சர்மிஷ்டை பூனைபோன்ற குரலில் கூவினாள். "உன் ஆடைதான்... இரு.

அதை இப்போதைக்கு அணிந்துகொள். அக்குரல் எவர் என பார்ப்போம்” என்றாள் தேவயானி சினத்தை அடக்கியபடி. “உனக்கு பேரரசியின் ஆடைதான் வேண்டும் அல்லவா? இதை அணியத்தான் இந்த நாடகமா?” என்றாள் சர்மிஷ்டை.

“சொல் எண்ணிப்பேசு... நீ இளவரசியாக இருப்பது எந்தையின் அருளால்” என்றாள் தேவயானி. சர்மிஷ்டை ஆடையைப்பிடித்து இழுத்தபடி “வாயை மூடடி... நீ யார்? என் அரசில் அண்டிவாழும் அந்தணனின் மகள். என் தந்தையின் கையிலிருந்து கொடைபெற்று உண்ணுபவள். என் கருணையால் உன்னை நான் நிகரெனக் கருதினால் நீ பேரரசியாக நினைக்கிறாயா? அரசியின் ஆடையை அணிந்துகொண்டால் மிச்சில் பெற்று உண்ணும் குலத்தவள் அரசியாக ஆகிவிடுவாயா? நெய்க்கரண்டி ஏந்தும் கைக்கு செங்கோல் வேண்டுமா என்ன? கழற்று இப்போதே, அந்த ஆடையை... இல்லையேல் இதன்பொருட்டே உன்னை முச்சந்தியில் நிறுத்தி சவுக்காலடிக்க ஆணையிடுவேன்” என்றாள் சர்மிஷ்டை.

அவள் அணுக்கச்சேடி அஞ்சியவள்போல பின்னடைந்துவிட்டிருந்தாள். தேவயானி சில கணங்கள் சுருங்கிய கண்களுடன் நோக்கிவிட்டு ஆடையை கழற்றினாள். அதை எடுத்து சர்மிஷ்டை அணிந்தாள். எடைமிக்க இரும்புக்கம்பியை வளைத்து அணிவதைப்போல பற்களைக் கடித்து கழுத்துநரம்புகள் புடைக்க ஆடையை சுழற்றிக் கட்டினாள். அவள் பற்கள் அரைபடும் ஒலி அவள் காதிலேயே கேட்டது. தேவயானி சீரான நடையுடன் தன் ஆடையை நோக்கி செல்வதைக்கண்டு மீண்டும் எரிந்தெழுந்து “உன் திட்டம் என்ன என்று அறிந்துதான் வந்தேன்... என்னைக் கொன்றுவிடவே நீ அழைத்து வந்தாய்... சென்றதுமே

தந்தையிடம் சொல்கிறேன். உன்னையும் உன் கிழத்தந்தையையும் நாடுகடத்த ஆணையிடச் செய்கிறேன்” என்றாள்.

“இளவரசி...” என சாயை அழைத்து ஏதோ சொல்லவந்தாள். அவள் குரல் அடைத்திருந்தது. “வாயைமூடு, கீழ்மகளே! நீ யார்? என் அரண்மனை மிச்சிலுண்ணும் அடிமை. நீ என்னை ஒருமையில் அழைக்கிறாயா? எனக்கு நீ ஆணையிடுகிறாயா? உன்னை குதிரைச்சவுக்கால் அடிக்க ஆணையிடுகிறேன்...” என்று கையை ஓங்கி அடிக்கப்போனபடி கத்தினாள் சர்மிஷ்டை. “உன் ஆடை கிடைத்ததல்லவா? கிளம்பு” என்றாள் தேவயானி. “ஆடை கிடைத்தது. ஆனால் இந்நாட்களில் என் அணிகள் எத்தனை காணாமலாகியிருக்கின்றன என்று நான் அறிவேன்... அரசப்படைகளை அழைத்து உங்கள் குடில்களை நோக்கச்சொல்கிறேன்” என்றாள் சர்மிஷ்டை.

தன் ஆடையை எடுக்கக் குனிந்த தேவயானி ஆத்திரத்துடன் திரும்பி “சீ, கீழ்பிறப்பென்று காட்டிவிட்டாய் நீ” என்றாள். பின்னர் என்ன நிகழ்ந்ததென்று சர்மிஷ்டை உணரவில்லை. அடிபட்ட விலங்கென உறுமியபடி பாய்ந்து தலையால் முட்டி தேவயானியை தள்ளினாள். அவள் தடுமாறி பின்னால் நகர்ந்து விழுந்து எழுவதற்குள் எவராலோ பற்றி இழுக்கப்பட்டவள்போல தடுமாறி மல்லாந்து விழுந்தாள். “அரசி” எனக்கூவியபடி சாயையும் அவளருகே ஓட இருவரும் என்னவென்றறியாமல் கைகால்கள் பதற விழுந்து எழமுயன்று மீண்டும் விழுந்தனர்.

அவர்கள் காலடியில் வண்ணவிரிப்பு போன்ற மலர்ச்சருகுப் பரப்பு இழுபட்டுக் குவிந்து புதைந்து அவர்கள் அதில் அமிழ்ந்துகொண்டே இருப்பதை சர்மிஷ்டை திகைப்புடன்

நோக்கி நின்றாள். “பள்ளம், அங்கு ஒரு பள்ளம் இருக்கிறது, இளவரசி” என்றாள் சேடி. சர்மிஷ்டை “வாடி” என தன் புரவியை நோக்கி ஓடினாள். சேடி “அவர்கள் உள்ளே விழுந்துவிட்டார்கள், இளவரசி” என்று மூச்சுக்குரலில் கூவினாள். “வாடி....!” என்று சர்மிஷ்டை புரவியை அணுகி அதன்மேல் ஏறினாள். “அவர்களால் ஏறிவர முடியாது... மலர்க்குவை உள்ளே சரிந்துகொண்டே இருக்கும்” என்றாள் சேடி. “வீரர்களை அனுப்புவோம்...” என்றபடி சர்மிஷ்டை புரவியை தட்டினாள். அது பாய்ந்து குளம்படிகள் எதிரொலிக்க கிளைகளுக்குள் புகுந்தது.

சேடி திரும்பிப்பார்த்தாள். சாயையின் குரல் மிக ஆழத்திலென கேட்டது. “வாடி!” என சர்மிஷ்டை அழைக்கும் ஓசை. அவளும் புரவியில் ஏறிக்கொண்டு சர்மிஷ்டையைத் தொடர்ந்து சென்றாள்.

காட்டுப்பாதையில் நாய்களின் துணையில்லாது செல்வதென்பது வழிபிறழச்செய்யும் என்பதை யயாதி முன்பும் பலமுறை அறிந்திருந்தான். ஆயினும் ஹிரண்யபுரியை அணுகும் பாதையில் ஓர் இடத்தில் சிறிய ஊடுவழி ஒன்று காட்டுக்குள் செல்வதைக் கண்டதும் உடன்வந்த படைத்தலைவன் பார்க்கவனிடம் “இவ்வழி செல்லலாம்” என்றான். பார்க்கவன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். “ஆம், சுற்றுப்பாதையாகவே இருக்கமுடியும். ஆனால் மையச்சாலை வழியாக நகருக்குள் நுழைவது எளிதல்ல. நம்மை அறிந்த வணிகர் எவரேனும் இருக்கக்கூடும். இது வேட்டைப்பாதை என்று நினைக்கிறேன்... இதன் கிளைகளில் ஒன்று கோட்டைக்குள் சிறுவாயில் ஒன்றினூடாக நுழையும்” என்றபடி

புரவியைத் திருப்பி தழைகிளைகளின் இலைச்செறிவுக்குள் நுழைந்து மூழ்கினான்.

காட்டுக்குள் நுழைந்ததுமே யயாதி விடுதலையை உணர்ந்தான். “இதுவரை கண்களையே உணர்ந்துகொண்டிருந்தேன். எவரும் என்னை அடையாளம் காணவில்லை. ஆனால் என் ஏதோ ஒரு துளியை அனைவரும் அறிந்துகொண்டிருந்தனர்” என்றான். “அத்துளியில் இருந்து என்னை முழுதறிய அவர்களுக்கு சற்றுநேரத் தனிமையே போதுமானது. இங்கே விழிகள் இல்லை என்பதே என்னை வெட்டவெளிமுன் நிறுத்துகிறது.” முதுவேனிலில் பெய்த மழையால் காடு பசுமை சூடியிருந்தது. “கொன்றைப்பெருக்கு…” என்றான் யயாதி. “கொன்றைக்கு தானிருக்கும் இடத்தை முழுதும் நிறைக்கவேண்டுமென்ற வீம்பு உண்டு.”

மலர்களையும் பறவைகளையும் நோக்கியபடி சென்றபோது வழிதவறிவிட்டதை உணர மிகவும் பிந்திவிட்டது. ஒரு யானை முதுகு முழுக்க கொன்றைமலர்களை அணிப்போர்வையெனக் கொண்டு புதர்களுக்குள் இருந்து அவர்கள் முன் எழுந்தது. துதிநுனி நீட்டி மணம் பெற்றது. யயாதி புரவியைப் பற்றி அசைவிழக்கச்செய்து காத்து நின்றான். யானை மெல்ல வயிற்றுக்குள் பிளிறியபின் பின்காலெடுத்து வைத்து பச்சை இருளுக்குள் அமிழ்ந்தது. “இது வேட்டைப்பாதை அல்ல, யானைவழி” என்றான் பார்க்கவன். “ஆம்” என்றான் யயாதி.

“மீண்டும் பழைய வழியிலேயே செல்லவேண்டியதுதான்” என்றான் பார்க்கவன். “அது காட்டிடம் தோற்பது… பார்ப்போம், அவள் நம்மிடம் விளையாடுகிறாள்” என்ற யயாதி புரவியைத் திருப்பி பிறிதொரு தடம் தேர்ந்தான். அவர்கள் கிளம்பி வந்ததே பார்க்கவனுக்கு பிடிக்கவில்லை. அவனிடம் காட்டுக்குள்

புகுவதுவரை ஹிரண்யபுரிக்குள் செல்வதாக சொல்லியிருக்கவில்லை. சொன்னதும் திகைத்து புரவிக்கடிவாளத்தை இழுத்து நின்றுவிட்டான். “அசுரர்களுக்கு நம் நெறிகள் ஏதும் இல்லை. அவர்கள் உங்களை சிறைப்படுத்திவிட்டால் அனைத்தும் முடிந்துவிட்டதென்றே பொருள்” என்றான். “நாம் அவர்களின் குடியில் பெண்கொள்ளப்போகிறோம். அவர்களின் குருதியை நம்புவோம் என்றால் நெறிகளை ஏன் நம்பக்கூடாது?” என்றான் யயாதி.

பார்க்கவன் அந்த மணவுறவையே உள்ளூர ஏற்றுக்கொண்டிருக்கவில்லை. அவன் சொல்லெடுக்காமல் வந்தான். “அவளை ஒருமுறை பார்க்கவேண்டும். அழகியல்ல என்று அறிவேன். ஆனால் அவள் என் உளம்நிறைபவள் என்று எவ்வண்ணமோ என் ஆழம் சொல்கிறது” என்றான் யயாதி. “அதைவிட ஒன்றுண்டு. அவள் என் அரசியான பின்னர் அவளை நான் தேடிவந்ததை சொல்லும்போது அவள் முகம் மலர்வதை எண்ணிக்கொள்கிறேன். சிறிய வீரச்செயல்கள் இன்றி ஆணும் பெண்ணும் அணுகக்கூடாது.” பார்க்கவன் “நம்மை எவராவது அறிந்துவிடக்கூடும்” என்றான். “இவ்வண்ணம் குருநாட்டரசன் எதிரி மண்ணுக்குள் தனியாக நுழைவான் என அவர்கள் எதிர்பார்க்கமாட்டார்கள். அதனாலேயே அவர்களால் நம்மை அறியமுடியாது. தேடாத எதையும் மானுடர் அறிவதில்லை” என்றான் யயாதி.

விந்தையான மணம் ஒன்று வந்தது. “கொன்றை” என்றான் யயாதி. “வேங்கை அல்லவா?” என்றான் பார்க்கவன். “ஆம், அப்படியும் தோன்றுகிறது. செண்பகம் என்றும் தெரிகிறது” என்ற யயாதி “தேவமலரா என்ன? எண்ணும் மணத்தை காட்டுகிறதே” என்றான். “அங்கே ஒரு மலர்க்காடு உள்ளது. அங்கிருந்து

எழுகிறது அந்த மணம்” என்றான் பார்க்கவன். “அங்கே அத்தனை மலர்களும் உள்ளன. காற்றுவீசும் திசைக்கேற்ப மணம் மாறுபடுகிறது.” யயாதி புன்னகையுடன் “நான் அதை கல்யாண சௌகந்திகம் என்று சொல்லவே விழைவேன். சூதர்கள் நாளை பாடுவதற்கு சில அரிய நிகழ்வுகள் அமையட்டுமே!” என்றான்.

“செறிந்த காடு... அதைக் கடந்து அப்பால் செல்லமுடியாது” என்றான் பார்க்கவன் “அப்பால் எங்கோ ஓர் அருவி உள்ளது” என்று யயாதி சொன்னான். “அது காற்றின் ஓசை” என்று சொன்ன பார்க்கவன் “இல்லை, அருவிதான். நீராவி மணம் எழுகிறது” என்றான். உக்கில்பறவை ஒன்று அவர்களுக்குக் குறுக்காக புதர்கள் நடுவே ஓடியது. “இதற்கு மணமறியும் உணர்விருந்தால் பித்து பிடித்திருக்கும்” என்றான் யயாதி. “முதுவேனிலில் விலங்குகள் மதம்கொள்கின்றன... கரடியும் யானையும் காட்டெருதும் கட்டுகளை இழக்கின்றன” என்றான் பார்க்கவன். “கந்தர்வர்கள் அவற்றின்மேல் ஏறிக்கொள்கிறார்கள் என்பார்கள் சூதர்கள்.”

“விந்தையான நிலம். இங்கே ஒரு ஊர் இருந்திருக்கக்கூடும். விரைவில் வளரும் மரங்கள் மட்டுமே உள்ளன” என்றான் பார்க்கவன். “இரவில் நிலவில் இங்கு வந்தால் நாமும் நிலையழிந்துவிடக்கூடும்” என்று சொன்னபடி புரவியில் வளைந்து மரக்கிளை ஒன்றை கடந்துசென்ற யயாதி சிரிப்பொலியை கேட்டான். “பெண்கள்” என்றான். பார்க்கவன் “காட்டணங்குகளா?” என்றான் அச்சத்துடன். “மூடா, இது பெண்களின் நகைப்பொலி...” என்ற யயாதி உரக்க “யாரங்கே?” என்றான். சிரிப்பொலி நின்றது. “யாரங்கே?” என்று அவன் மீண்டும் கேட்டான். ஓசையெழவில்லை.

“காட்டணங்குகளேதான்” என்று பார்க்கவன் புரவியை இழுத்து நின்றுவிட்டான். “அவர்கள் நம் குரல்கேட்டு அஞ்சிவிட்டனர். போய் பார்ப்போம்” என்றபடி யயாதி முன்னால் சென்றான். “மகளிர் நீராடும் இடம்போலும்” என்றபடி பார்க்கவன் தொடர்ந்தான். “ஆம், இத்தனை விலகிய இடத்தில் இப்படி ஒரு மலர்க்காட்டில் நீராட வருவதென்றால் அவர்கள் அரசகுடியினரே. அதில் அவளும் இருக்கக்கூடும்” என்றான் யயாதி. “சர்மிஷ்டை… அழகிய பெயர். அவளிடம் அதைத்தான் முதலில் சொல்லப்போகிறேன்.”

அப்பால் மீண்டும் பெண்களின் குரல்கள் கேட்டன. பூசல்போல உரத்த பேச்சுக்கள். “எவரோ அவர்களுக்கு இடர் அளிக்கிறார்கள்” என்று யயாதி சொன்னான். “வா, சென்று பார்ப்போம்!” அவர்கள் மலர்மரங்களினூடாக குனிந்தும் நெளிந்தும் சென்றனர். புரவிகள் விலகிச்செல்லும் ஓசை கேட்டது. பின்னர் அமைதி. “அங்கே என்ன நிகழ்கிறது? சென்றுவிட்டார்களா?” என்றான் பார்க்கவன். யயாதி பேசாமல் மரங்களினூடாக சென்றுகொண்டே இருந்தான்.

# மாமலர் - 69

## 69. எண்ணுவதன் எல்லை

யயாதி மலர்க்காட்டுக்குள் சென்று நின்று திகைத்து சுற்றிலும் பார்த்தான். உள்ளத்தில் மானுடப்புழக்கமிருப்பதாக பதிந்திருந்த இடத்தில் அது இல்லாதது அளித்த வெறுமையை வெல்ல “சென்றுவிட்டார்கள்” என்றான். பார்க்கவன் கூர்ந்து தரையைப் பார்த்து “அனைவரும் செல்லவில்லை… இங்கே ஏதோ நடந்திருக்கிறது. ஓடியிருக்கிறார்கள், கைகலப்புகூட

நடந்திருக்கலாம்…” என்றான். பின்னர் ஒரு புரவியை பார்த்துவிட்டான். அருகே சென்றதும் இன்னொரு புரவியும் தெரிந்தது. அவன் அவற்றின் சேணங்களைப் பார்த்துவிட்டு “இரு புரவிகளுமே பெண்களுக்குரியவை… அப்படியென்றால் அவர்கள் இங்கே எங்கோ இருக்கிறார்கள்” என்றான்.

யயாதி உரக்க “யாரங்கே?” என்றான். “யார் இருக்கிறீர்கள் இங்கே?” மெல்லிய எதிர்க்குரல் ஒன்று எழுந்தது. அல்லது அது உளமயக்கா என்றும் தோன்றியது. பார்க்கவன் குனிந்து நோக்கி ஓர் ஆடைப்பகுதியை எடுத்து “பெண்களின் ஆடை… கிழிந்து விழுந்திருக்கிறது. எவரோ அவர்களை கடத்திச்செல்ல முயன்றிருக்கிறார்கள். அப்படியென்றால் அவர்கள் எங்கேனும் ஒளிந்திருக்கலாம்” என்றான். யயாதி மேலும் உரக்க “நாங்கள் ஷத்ரியர்… காவல்நெறி கொண்டவர்கள்… எவரேனும் இருந்தால் வெளிப்படுங்கள்” என்றான். மெல்லிய பெண்குரல் கேட்டது.

பார்க்கவன் உடனே அதை உய்த்தறிந்துவிட்டான். “இங்கே எங்கோ கிணறு இருக்கிறது… ஆழமான கிணறு. அதற்குள் இருக்கிறார்கள்” என்றான். மீண்டும் அக்குரல் கேட்டது. “மிக அருகே…” என்றபின் அவன் கைசுட்டி “அங்கே மலர்ச்சருகுப் பரப்பு கலைந்திருக்கிறது” என்றான். மெல்ல காலெடுத்துவைத்து அருகே சென்றபின் “ஆம், அங்கே ஒரு கிணறு இருக்கிறது. அதற்குள்தான்” என்றான். சுற்றிலும் நோக்கியபின் ஓடிச்சென்று கொடிகளை வெட்டி எடுத்துவந்தான். அவற்றை சேர்த்துக்கட்டி முறுக்கி வடமாக்கி அதை அங்கிருந்த மரத்தின் அடியில் கட்டினான்.

வடத்தைப் பற்றியபடி பதியும் கால்வைத்து சரிவிலிறங்கி அக்கிணற்றின் விளிம்பை அடைந்து உள்ளே எட்டிப்பார்த்தான். “இருவர்” என்று யயாதியிடம் சொன்னான். “உள்ளே

விழுந்திருக்கிறார்கள், அரசே.” அவன் வாய்தவறிவிட்டதை உணர்ந்து யயாதி சினம்கொண்டு நோக்க அவன் குரல் தாழ்த்தி “இரு பெண்கள்” என்றான். “மேலே கொண்டுவா…” என்றான் யயாதி. “மகளிரே, நாங்கள் அயலூர் ஷத்ரியர். உங்களுக்கு உதவ சித்தமாக உள்ளோம்” என்றான் பார்க்கவன்.

அவன் கைநீட்ட அதைப்பற்றியபடி மெல்ல சாயை மேலெழுந்து வந்தாள். அவள் ஆடை நெகிழ்ந்திருக்க உடலெங்கும் சேறும் மலர்ச்சருகும் ஒட்டியிருந்தது. கரையில் கால்வைத்து ஏறி தன் ஆடையைச் சீரமைத்து சருகுகளைத் தட்டியபடி “நீங்கள் யார்?” என்று அவள் கேட்டாள். “நாங்கள் ஷத்ரியகுலத்தார். அயல்நாட்டார். இவ்வழி சென்றோம்” என்றான் யயாதி. “நன்று, உள்ளிருப்பவர் என் அரசி. நாங்கள் உள்ளே விழும்படியாயிற்று” என்றாள் சாயை. “அவரை மேலெடுங்கள்.”

யயாதி வடத்தைப்பற்றியபடி இறங்கிச்சென்று கைநீட்ட தேவயானி அதைப்பற்றிக்கொண்டு மேலெழுந்து வந்தாள். உள்ளேயே அவள் ஆடையை சீரமைத்து சருகுகளையும் தட்டிவிட்டிருந்தாள். மண்பிளந்து தெய்வம் தோன்றுவதுபோல என்று யயாதி எண்ணிக்கொண்டான். அவள் கரைக்கு வந்து உடலை தட்டிக்கொள்ள சாயை அருகே நின்றிருந்த மரக்கிளை ஒன்றைப் பறித்து அதன் இலைக்குச்சத்தால் அவள் உடலில் இருந்த சருகுப்பொடியை அகற்றி தூய்மை செய்தாள். “போதும்” என தேவயானி கையசைத்து அவளை தவிர்த்தாள்.

“நாங்கள் இங்கே மலர்விளையாடிக் கொண்டிருந்தோம்… கால்தவறி இந்தக் குழிக்குள் விழும்படி ஆகியது” என்றாள் தேவயானி. “எவரோ பூசலிடுவதுபோல கேட்டதே?” என்றான் யயாதி. தேவயானி “அது களிப்பூசல். எங்கள் தோழியர் இருவர் எங்களை முந்தும்பொருட்டு முன்னால் சென்றுவிட்டனர்.

அவர்களுக்கு நான் இங்கே உள்ளே விழுந்தது தெரியாது… நன்று வந்தீர்கள். இல்லையேல் இங்கே ஆழத்தில் நாங்கள் அடைபட்டுக்கிடக்க நேரிட்டிருக்கும்” என்றாள். யயாதி “நாங்கள் எழுப்பிய குரலால்தான் நீங்கள் அஞ்ச நேர்ந்தது. அதன்பொருட்டு பொறுத்தருளும்படி கோருகிறோம்” என்றான். “முறைமைச்சொல் வேண்டாமே” என தேவயானி புன்னகைத்தாள்.

அவளைக் கண்ட கணம் முதல் பிற சொல்லில்லாது சித்தம் அவளில் படிந்துகிடப்பதை அப்போதுதான் யயாதி உணர்ந்தான். அவள் புன்னகையைக் கண்டு ஆழம் நலுங்கியபோதே மேலுள்ளம் அவ்வாறு கிடப்பது தெரியவந்தது. இழிமகன்போல விழிநாட்டி நின்றுவிட்டேனா என உள்வியந்து விழிதிருப்பிக்கொண்டான். முணுமுணுப்பாக “நன்று, நீங்கள் கிளம்பிச்செல்லலாம். புரவிகள் சித்தமாகவே உள்ளன. உங்களுக்கு நாங்கள் துணைவர வேண்டுமென்றால் செய்கிறோம். பிறிது ஏதேனும் நாங்கள் ஆற்றவேண்டுமென்றால் அறிவிக்கக் கோருகிறோம்” என்றான்.

சாயை “ஏதுமில்லை, நாங்கள் கிளம்புகிறோம். உங்கள் உதவியை நினைவுகூர்வோம்” என்றாள். பார்க்கவனும் யயாதியும் தலைவணங்கினர். யயாதி “நாங்கள் விடைகொள்கிறோம், தேவி” என்றான். அவர்கள் தங்கள் புரவி நோக்கி திரும்ப தேவயானி மெல்லிய குரலில் “நில்லுங்கள்” என்றாள். யயாதி “சொல்லுங்கள், தேவி” என்றான். “இப்போதுதான் இந்த நாளையும் தருணத்தையும் கணித்துப்பார்த்தேன். என் மீன் மகம் எழும் நாள் இது.” யயாதி புரியாமல் தலையசைத்தான். “நீங்கள் என் கையைப் பற்றிய தருணத்தில் கோள்கள் உச்சத்திலிருந்தன” என்றாள் தேவயானி.

யயாதி அப்போதும் புரியாமல் நோக்க பார்க்கவன் ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

“நீங்கள் என்னை மணம்செய்துகொண்டதாகவே அச்செயலுக்குப் பொருள்” என்று தேவயானி சொன்னாள். “உரிய நற்தருணத்தில் கை பற்றியவன் கணவனாகவே இருக்கமுடியும் என்கின்றன நூல்கள்... இது ஊழ். அன்றேல் இவ்வண்ணம் நிகழாது.” சாயையும் திகைத்துப்போய் அவள் முழங்கையை மெல்லப்பற்றி ஏதோ சொல்ல முயல உடலசைவாலேயே அவளை விலக்கி தேவயானி “நீங்கள் எவரென்று நான் அறியேன். எக்குடி எக்குலம் என்றெல்லாம்கூட ஆராயத் தலைப்படேன். ஆனால் நீங்கள் என் கணவர், பிறிதொருவரை இனி நான் ஏற்கமாட்டேன்” என்றாள்.

பார்க்கவன் யயாதியின் தோளை மெல்லப் பற்றி ஏதோ சொல்ல முயல அவன் கைமேல் கைவைத்து சொல்விலக்கிவிட்டு “தேவி, நற்தருணத்தில் நிகழ்ந்துள்ளது என்பதனால் நானும் அதற்கு கட்டுப்படவேண்டியவனே” என்றான். “நீங்கள் மண்பிளந்து தெய்வம் எழுவதுபோல் என் முன் தோன்றியதும் என் குடியின் நல்லூழே. உங்கள் பேரழகுக்கு நான் தகுதிகொண்டவனா என்பதே என்னை தயங்கச் செய்தது. தாங்கள் முடிவெடுத்துவிட்டமையால் அதற்கு நான் முற்றிலும் கட்டுப்பட்டவன் ஆனேன். நீங்கள் எவரென்று நானும் உசாவவில்லை. இது தெய்வங்கள் அமைத்த கடிமணம் என்றே ஆகுக!” என்றான்.

தன் கச்சையிலிருந்து கணையாழியை எடுத்து அவளிடம் நீட்டி “இது என் சான்றாழியாக உங்களிடமிருக்கட்டும். உரிய தருணத்தில் குடிமுறைமையுடன் வந்து உங்களை அணிமணம்கொள்கிறேன். இத்தருணத்தை நிகழ்த்திய

தெய்வங்களே அதையும் அமைக்கட்டும்” என்று யயாதி சொன்னான். அவள் அதை வாங்கி கண்களில் ஒற்றிக்கொண்டாள். “நன்று, தேவி. மீண்டும் உடனே சந்திப்போம்” என்றான் யயாதி. “நான் காத்திருப்பேன்” என்றாள் தேவயானி. அவர்கள் முறைப்படி தலைவணங்கி விடைகொண்டனர்.

புரவிகளை நோக்கி செல்கையில் பார்க்கவன் “அரசே, என்ன இது? அவர் எவரென்றுகூடத் தெரியாமல்...?” என்றான். “அவள் விருஷபர்வனின் மகள் சர்மிஷ்டை” என்றான் யயாதி. “அவளை அவள் சேடி வாய்தவறி அரசி என அழைத்ததுமே நான் விழித்துக்கொண்டேன். அவள் அணிந்திருந்த ஆடையும் அணிகளும் எல்லாம் எளியவை. ஆனால் இடையிலணிந்திருந்த சிற்றாடை மட்டும் இளவரசியருக்குரியது. அதில் விருஷபர்வனின் குடியடையாளம் பின்னப்பட்டிருந்தது. அரசகுடியினர் மட்டுமே அணியும் தனியாடை அது” என்றான்.

பார்க்கவன் திரும்பி நோக்கியபின் “ஆம், அவர் எளிய பெண் அல்ல என நானும் உணர்ந்தேன். பேரரசியருக்குரிய அழகும் நிமிர்வும் கொண்டவர்கள்” என்றான். “குருநாட்டின் பேரரசியாக அமரவிருப்பவள் அவள். பாரதவர்ஷத்தின் முதன்மை சக்ரவர்த்தினி... இது தெய்வங்கள் அமைத்த தருணம். இதை இனி நூறாயிரம் தலைமுறைக்காலம் சூதர்கள் பாடுவர்” என்று யயாதி சொன்னான். “ஆனால் அவர்களை உங்களுக்கு மணம்பேசி முடித்திருக்கிறார்கள். உங்கள் ஒப்புதலோலை சென்றுவிட்டது. அதன்பின்னர் இப்படி அறியாத ஒருவரான உங்களை எப்படி ஏற்றுக்கொண்டார்கள்?”

யயாதி புன்னகைத்து “ஆம், அதுவே அரசியருக்குரிய அரும்பண்பு. அவர்களுக்கு நெறிதான் முதன்மையானது. குடியோ குலமோ முடியோ அரியணையோ அல்ல. அத்தருணத்தின் தெய்வவிளையாட்டை உணர்ந்து பிற அனைத்தையும் உதறி எழும் அவளுடைய உளஆற்றல்தான் அவளை சக்ரவர்த்தினியாக்குகிறது. பெருநிலைகள் அவற்றை தேடிச்செல்பவர்களுக்கு அமைவதில்லை. அவற்றுக்குத் தகுதியானவர்களாகி அவற்றை பொருட்படுத்தாமல் கடந்துசெல்பவர்களைத் தேடி அவை தொடர்ந்து செல்லும்” என்றான்.

கணையாழியை கையில் வைத்து நோக்கிக்கொண்டிருந்த தேவயானியிடம் “அரசி, என்ன செய்துவிட்டீர்கள்? அவர்…” என்று சாயை சொல்லெடுக்க “அவர் யயாதி, குருநகரியின் அரசர்” என்றாள். “எப்படி தெரியும்?” என சாயை வியந்து நின்றுவிட்டாள். “அவர் பெயரைக் கேட்டதுமே அவரைப் பற்றிய காவியமான சந்திரபுத்ரவிலாசத்தை கற்றேன். அதில் அவரது உடலடையாளங்கள் விரிவாகவே சொல்லப்பட்டுள்ளன. அரசர்கள் எளிதில் மறைந்துகொள்ளமுடியாது” என்றாள் தேவயானி. சாயை சொல்லில்லாமல் கைகளை கோத்தபடி நின்று பின் மீண்டு ஓடிவந்து அவள் தோளைப்பற்றியபடி “ஆனால் அவருக்கும் இளவரசிக்கும் மணம் உறுதிசெய்யப்பட்டுவிட்டது…” என்றாள்.

“இன்னும் சொல்லுறுதி நிகழவில்லை” என்றாள் தேவயானி. “நீ உடனே கிளம்பு. தந்தையிடம் சென்று நடந்ததை சொல். தந்தையிடம் என் கோரிக்கைகள் இரண்டு உள்ளன, அவற்றைச் சொல்லி இன்றே விருஷபர்வனிடம் ஒப்புதல்பெற்று மீளும்படி உரை” என்றாள். சாயை “நீங்கள்?” என்றாள். “நான் இங்குதான்

இருப்பேன்... என் கோரிக்கைகள் முற்றிலும் நிறைவேற எந்தைக்கு நான் ஏழு நாட்கள் அளிக்கிறேன். கோரிக்கைகள் நிறைவேறுமென்றால் இங்கிருந்து வெளிவருவேன். இல்லையென்றால் ஏழாவது நாள் இங்கேயே சிதைமூட்டி எரியேறுவேன்...”

“அரசி, என்ன இது...? நீங்கள்...” என சொல்லெடுத்த சாயை தேவயானியிடம் எதையும் சொல்லமுடியாதென்று உணர்ந்தவளாக முகம் தவிக்க நின்றாள். அவளை நேர்விழிகளால் நோக்கி “என் கோரிக்கைகள் இவை. நான் குருநகரியின் அரசன் யயாதியின் பட்டத்தரசியாக அமர்ந்து பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தினியாகவேண்டும். விருஷபர்வனின் மகளாகிய சர்மிஷ்டை என் பணிப்பெண்ணாக என்னுடன் குருநகரிக்கே வரவேண்டும்” என்றாள்.

சாயை என்ன சொல்வதென்றறியாமல் பலமுறை வாயசைத்தாள். கைகளில் சொற்கள் தோன்றி அழிந்தன. பின்னர் “இரண்டாவது கோரிக்கை எதற்காக, அரசி? அது...” என்று தொடங்கினாள். “விருஷபர்வன் பாரதவர்ஷத்தில் குருநகரிக்கு நிகரான பேரரசன். சர்மிஷ்டையை அவர் வேறு அரசனுக்கு மணமுடித்துக் கொடுத்தால் அவன் குருநகரியைவிட ஆற்றலுள்ள அரசன் என எழுந்து வருவான். அவள் எனக்கு நிகரென முடிசூடி அமர்வாள்...” என்றாள் தேவயானி. “பாரதவர்ஷத்தில் நான் ஆள்வதன்றி பிறிதொரு பேரரசே அமையக்கூடாது.”

சாயை மெல்ல உடல்தளர்ந்து நீள்மூச்சுவிட்டாள். “அவள் வயிற்றில் பேரரசர்கள் பிறப்பார்கள் என்பது என் சொல். அவளுக்கு மைந்தர்களே பிறக்கலாகாது என இன்று எண்ணுகிறேன். ஆண்களின் கண்களே படாமல் அவளை என்

கண்முன் வைத்திருக்கிறேன்” என்றாள் தேவயானி. சாயை மெல்ல சொல்பெற்று “அரசி, நான் இத்தருணத்தில் பிறிதொன்றை சொல்லியாகவேண்டும். இப்புவியின் விந்தையான நெறிகளில் ஒன்று உண்டு. ஆற்றல்மிக்கவர்களுக்கே பெருந்தோல்விகள் அமைகின்றன, பேராற்றல்கொண்டவர்களே முழுத்தோல்வியை சென்றடைகிறார்கள். எளியோர் எவரும் முற்றிலும் தோற்பதில்லை” என்றாள்.

சினத்துடன் தேவயானி திரும்பி நோக்கினாள். “ஆற்றலுள்ளவர்கள் தங்களுக்கு நிகரான ஆற்றல்கொண்டவர்களை எதிரிகளென தேடுகிறார்கள். பேராற்றல்கொண்டவர்களோ ஊழை அறைகூவுகிறார்கள்.” தேவயானி “நான் ஊழை துணைக்கழைக்கிறேன். நான் பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தினியாவேன் என்பது என் பிறப்பின்போதே சொல்லப்பட்டுவிட்டது” என்றாள். சாயை “நன்று, அவ்வண்ணமெனில் அதுவே நிகழட்டும். நான் எளியவள், ஊழுடன் பொருத முற்படமாட்டேன்” என்றாள். “ஆம், உனக்கு ஆணையிடப்பட்டதை செய். கிளம்பு” என்றாள் தேவயானி.

“இங்கு நீங்கள் தனித்திருப்பீர்களா?” என்று சாயை கேட்டாள். “இது என் சோலை. இங்குள்ள குகை ஒன்றில் இருப்பேன். இங்கிருந்து அகலமாட்டேன் என்று தந்தையிடம் சொல்.” சாயை சற்று தயங்கி “தங்கள் தந்தையின் சொல்லுக்கு விருஷபர்வன் ஏன் கட்டுப்படவேண்டும்? அதிலும் அவர் மகளை பணிப்பெண்ணாக்குவதென்றால்?” என்றாள். “அவர் ஒப்பவில்லை என்றால் தந்தை கிளம்பிச்சென்று பாரதவர்ஷத்தின் ஏதேனுமொரு அரசகுலத்தை அடையட்டும்.

அவர்களை இறப்பற்றவர்களாக ஆக்கட்டும். அசுரகுலத்தை முழுமையாகவே கொன்றழிக்க மானுடர் எழட்டும்” என்ற தேவயானி “அதை சொல்லவேண்டியதில்லை, விருஷபர்வனே அறிவார். இன்று அசுரரும் தேவரும் நிகர்நிலையில் உள்ளனர். ஒரு துரும்பின் எடைபோதும் துலா இப்பக்கம் சாய்ந்துவிடும். அசுரகுலமே எஞ்சாது” என்றாள்.

சாயை பெருமூச்சுவிட்டு “ஆணையை மேற்கொண்டு கிளம்புகிறேன், அரசி” என்றபின் தன் புரவியை அணுகி அதன்மேல் கால்சுழற்றி ஏறிக்கொண்டு திரும்பி நோக்காமல் கிளைகளை ஊடுருவிச் சென்றாள். தான் செல்வதை தானே நோக்கிக்கொண்டு நின்றிருப்பதாக ஓர் உளமயக்கு ஏற்பட அவள் திரும்பிப் பார்த்தாள். திரும்பி நடந்துசெல்லும் தேவயானியின் நீள்கூந்தலின் அலைகளையே கண்டாள்.

சாயை குடில்தொகையை சென்றடைந்தபோது அங்கே சுக்ரர் அவளுக்காகக் காத்து நின்றிருந்தார். கிருதர் முன்னால் வந்து “நெடுநேரமாயிற்றே என ஆசிரியர் தேடினார். நாங்களே அங்கே வருவதாக இருந்தோம்” என்றபின் “இளவரசி எங்கே?” என்றார். “நான் ஆசிரியரிடமும் தங்களிடமும் மட்டும் தனியாக பேசவேண்டும்” என்றாள் சாயை. சுக்ரர் அவள் விழிகளைக் கண்டதும் உளம் கூர்மைகொள்ள “வா” என திரும்பிநடந்தார். கிருதர் உள்ளே வந்து கதவை மூடியதும் சுக்ரர் இருக்கையில் அமர்ந்துகொண்டார்.

முன்னால் நின்ற சாயை தணிந்த குரலில் நிகழ்ந்தவற்றை சொன்னாள். சுக்ரர் “அவன் யயாதி என உறுதியாகத் தெரியுமா?” என்றார். கிருதர் “அதில் ஐயம்கொள்ள வேண்டியதில்லை, ஆசிரியரே. இளையவள் எப்போதுமே ஒரு படி முன்செல்லும் மதி கொண்டவர்” என்றார். சுக்ரர்

பெருமூச்சுவிட்டபடி தன் சுவடிகளை நோக்கிக்கொண்டிருந்தார். அவர் சினம்கொள்வார் என்றும் உடனே தேவயானியைக் காணக் கிளம்புவார் என்றும் சாயை எண்ணியிருந்தாள். அவருடைய ஆழ்ந்த அமைதி அவளை ஏமாற்றம்கொள்ளச் செய்தது.

“வேறு வழியில்லை, இவை இவ்வண்ணமே நிகழும். அவள் எண்ணியவை ஈடேறும், எண்ணியிராதவையும் நிகழும்” என்றார் சுக்ரர். திரும்பி கிருதரிடம் “இவளையும் உடனழைத்துக்கொண்டு விருஷபர்வனிடம் செல்க! நான் ஓர் ஓலை அளிக்கிறேன்” என்றார். “நாம் அசுரரை இதன்பொருட்டு கைவிடுவோம் என்றால் நம் மீது பழிசேரும்” என்றார் கிருதர். “ஆம், ஆனால் என் குடியில் எழுந்தவள் மகாகுரோதையான இந்திராணி. பெருஞ்சினவடிவான ஜெயந்தி. அவள் சொல் அனலுக்கு நிகர். நான் அதை மீறமுடியாது” என்றார் சுக்ரர். “அங்கே மலர்க்காட்டில் அமர்ந்து ஆணையிடுவது என் மகள் அல்ல, அவள் அன்னை” என தனக்குள் என சொல்லிக்கொண்டார்.

“தங்கள் ஆணை அதுவென்றால் நான் இயற்றுகிறேன். ஆனால் அதனால் நன்றென ஏதும் நிகழாதென்று உறுதியாக சொல்வேன்” என்றார் கிருதர். சுக்ரர் தலைகுனிந்து அமர்ந்திருந்தார். செல்வோம் என கைகாட்டிவிட்டு கிருதர் வெளியே நடந்தார். சாயை அவருடன் சென்று முற்றத்தில் நின்றாள். கிருதர் “இப்போது எவரிடமும் இதை நாம் சொல்லவேண்டியதில்லை. அரசனின் ஆணை வந்தபின் அவர்களே அறிந்துகொள்ளட்டும்” என்றார். “அரசர் ஒப்புவார் என நினைக்கிறீர்களா?” என்றாள் சாயை. “ஆம், அவருக்கு வேறு வழியில்லை. ஆனால் நாம் இதை செய்யலாகாது.

இத்தருணத்தில் தந்தையெனும் நிலையிலிருந்து எழுந்து அரசகுருவெனும் இடத்தை அடைந்தாகவேண்டும் நம் ஆசிரியர்” என்றார்.

பின்னர் அவரே “ஆனால் அவர் ஒருபோதும் எளிய மானுடஉணர்வுகளை கடந்துசென்றதில்லை. இவையனைத்துமே அவர் தன் ஆசிரியர்மீது கொண்ட மிகச் சிறிய காழ்ப்பின் விளைவுகள்… நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை” என்றார். “அவர் அரசியிடம் வந்து பேசுவார் என நான் எண்ணினேன்” என்றாள் சாயை. “அவர் என்றுமே பிறிதொருவகையில் நடந்துகொண்டதில்லை” என்றார் கிருதர்.

சிறிய விரைவுத்தேரில் அரண்மனையை நோக்கி செல்லும்போது சாயை நகரெங்குமிருந்த கொண்டாட்டத்தையே நோக்கிக்கொண்டிருந்தாள். களிவெறிகொண்டு கட்டுகளை மீறுவதற்காக அத்தனை நகரங்களும் காத்திருக்கின்றன. ஆடைகளைக் களையும்போது சிரிப்பில் மலராத மானுட முகம் இல்லை. பெண்கள் சிலர் சிரித்தபடி சாலைக்குக் குறுக்காக ஓட அவர்களைத் துரத்திவந்த இளையோர் அப்பால் தயங்கி நின்று தேர் செல்ல வழிவிட்டனர். குடிகாரர்கள் சாலையோரமாகவே அமர்ந்திருந்தனர். கூச்சலிட்டு எம்பி எம்பிக் குதித்தபடி புரவியில் அமர்ந்த வீரன் ஒருவன் கடந்துசென்றான்.

அத்தனை மாளிகைகளும் தோரணங்களாலும் கொடிகளாலும் அணிசெய்யப்பட்டிருந்தன. சாலையில் ஒன்றின் நிழல் இன்னொன்றின்மேல் விழும்படியாக அணித்தோரணவாயில்கள் நின்றிருந்தன. ஏழு யானைகள் மணிகளும் சங்கிலிகளும் ஒலிக்க அலைநாவாய்கள் என உடலை ஊசலாட்டியபடி எதிரே வந்தன. அவற்றின் மேலிருந்த பாகர் கள்ளருந்தியிருந்தனர். கைகளை வீசி உரக்க கூவிக்கொண்டே வந்து சுக்ரரின்

கொடிபறந்த தேரைக் கண்டதும் அமைதியானார்கள். ஆனால் சூழ நின்றிருந்த குடிகாரர்கள் அதை உணராமல் கூச்சலிட்டு தங்கள் மேலாடைகளையும் தலைப்பாகைகளையும் எடுத்து அவர்கள்மேல் வீசி துள்ளிக்குதித்தனர்.

அரண்மனைக்கோட்டைக்குள் அவர்கள் நுழைந்ததுமே அறிவிப்பு முரசு ஒலித்தது. அரண்மனைப் பெருமுற்றத்தில் அவர்களை சம்விரதரின் துணையமைச்சரான பிரகாசர் வரவேற்றார். “நான் உடனே அரசரை பார்க்கவேண்டும்” என்றார் கிருதர். “அரசர் இப்போது தேவியருடன் இருக்கிறார். கலிங்கத்திலிருந்தும் திருவிடத்திலிருந்தும் அணிவணிகர்கள் வந்துள்ளனர். மணச்சடங்குக்காக அணிகள் தேர்கையில் அரசரும் உடனிருந்தாகவேண்டும் என்று அரசியர் விழைந்தனர். அதன்பின் மூதன்னையரை வழிபடும் அகத்தளப் பூசெய்கை உள்ளது. அரசமுறைத் தூதர்களை சந்திக்கும் நிகழ்ச்சி இருந்தது. அதை நாளை காலைக்கு ஒத்திவைத்துவிட்டு அகத்தளத்திற்குச் சென்றிருக்கிறார்.”

“நான் ஆசிரியரிடமிருந்து செய்தியுடன் வந்துள்ளேன்” என்றார் கிருதர். பிரகாசர் திரும்பி அரைக்கணம் சாயையை நோக்கிவிட்டு “நன்று! நான் ஆவன செய்கிறேன், தாங்கள் இன்னீர் அருந்தி சற்று இளைப்பாறுகையில்...” என்றார். “தேவையில்லை, நாங்கள் கூடத்தில் காத்திருக்கிறோம்” என்றார் கிருதர். “நன்று” என தலைவணங்கி பிரகாசர் திரும்ப “சம்விரதர் வந்துவிட்டாரா?” என்றார் கிருதர். “ஆம், வந்து சற்றுநேரமே ஆகிறது. இன்று மாலை அவை கூடுகிறது.” கிருதர் தலையசைத்தார். பிரகாசர் பதற்றம்கொள்வது நன்றாகவே தெரிந்தது. ஓசையின்றி தலைவணங்கி அவர் உள்ளே சென்றார்.

கிருதர் அமராமல் அரசக்கூடத்தில் கைகட்டி நின்றுகொண்டே இருந்தார். சுவரில் சாய்ந்து நின்று சாளரம் வழியாக வெளியே நோக்கிக்கொண்டிருந்தாள் சாயை. மலர்க்கிளைகள் மெல்ல ஆடிக்கொண்டிருந்தன. மானுடரின் துயரும் அல்லலும் சற்றும் தனக்கு பொருட்டல்ல என இயற்கை காட்டிக்கொண்டே இருப்பதில் உள்ள இரக்கமின்மையை அவள் எண்ணிக்கொண்டாள். முன்பு அவள் அன்னை இறந்த அன்று அப்படித்தான் அவை காற்றில் களியாடுவதை வெறித்த விழிகளுடன் நோக்கிக்கொண்டிருந்தாள்.

பிரகாசர் வந்து அரசர் அவர்களை அகத்தளத்தின் அறையிலேயே சந்திக்கவிருப்பதாக சொன்னார். அவருடன் நடக்கையில் அவர் அனைத்தையும் உணர்ந்துகொண்டுவிட்டதாக தோன்றியது. செய்தியை அல்ல, செய்தியால் விளையப்போவதை அவருடைய ஆழம் உணர்ந்துகொண்டுவிட்டிருக்கக் கூடும். அவர்களின் பாவைகள் மெழுகிட்ட தூண்களின் வளைவில் மரத்தரையில் தோன்றி உருகி நெளிந்து நீண்டு மறைந்து மீண்டும் ஓர் இடத்தில் எழுந்தன. கட்டிப்போடப்பட்ட பறவைகள்போல காற்றில் திரைச்சீலைகள் படபடத்தன.

அகத்தறைக் கதவைத் திறந்து உள்ளே செல்லும்படி கைகாட்டிவிட்டு பிரகாசர் தலைவணங்கினார். அவர்கள் உள்ளே நுழைந்ததும் கதவு மெல்ல மூடிக்கொண்டது. விருஷபர்வன் முகத்தில் கவலை தெரிவதை சாயை உணர்ந்தாள். அவன் முறைப்படி முகமன் சொல்லி கிருதரை வரவேற்றான். சாயை அவனை வணங்கி ஓரமாக நின்றாள். கிருதர் அவன் அளித்த பீடத்தில் அமர்ந்து அவன் அமர்வதற்கு காத்திருந்தார். அவன் அமர்ந்து ஆடையை சீரமைத்ததைக் கண்டபின் உரத்த குரலில்

“அரசே, மூவுலகிலும் நிகரற்ற தவவல்லமை கொண்டவரும் மும்மூர்த்திகளுக்கு நிகரானவருமான என் ஆசிரியர் சுக்ரரின் ஆணையுடன் வந்துள்ளேன். அவ்வாணைகள் இதோ, இந்த ஓலையில் பொறிக்கப்பட்டுள்ளன” என்றார்.

ஓலையை பெறும்போது விருஷபர்வனின் கைகள் நடுங்குகின்றனவா என சாயை நோக்கினாள். அவை உறுதியாகவே இருந்தன. ஓலையை வாசிக்கையில் அவன் முகம் கல்லென இறுகியிருந்தது. கண்களில் மட்டும் மெல்லிய சுருக்கம் ஒன்று வந்து உடனே மறைந்தது. மீண்டும் ஒருமுறை அதை வாசித்துவிட்டு மூங்கில் குழலில் இட்டு அருகிருந்த பீடத்தில் போட்டான். “நிகழ்ந்ததை இவள் சொல்வாள்” என்றார் கிருதர். சாயை கைகளைக் கூப்பியபடி நிகழ்ந்தவற்றை சொன்னாள். சொல்லும்போதே தான் தேவயானியின் தரப்பை சொல்லிக்கொண்டிருப்பதை உணர்ந்தாள். பிறிதொன்றைச் சொல்ல தன்னால் இயலாதென்று அறிந்தாள்.

விருஷபர்வன் முகவாயைத் தடவியபடி விழிதாழ்த்தி அமர்ந்திருந்தான். “உமக்கு பிறிதொரு வழி இல்லை, அசுரப்பேரரசே. ஒன்று அசுரகுலம் முற்றழியவேண்டும், இல்லையேல் ஆசிரியரின் ஆணையை நிறைவேற்றவேண்டும். ஆசிரியரும் சரி அவர் மகளும் சரி கொண்ட நிலைபாட்டை எவ்வகையிலும் மாற்றுபவர்கள் அல்ல என அறிந்திருப்பீர்” என்றார் கிருதர். “நான் என்ன செய்யவேண்டும் என நீங்கள் சொல்வீர்கள், முனிவரே?” என்றான் விருஷபர்வன். “நீங்கள்தான் தெரிவுசெய்யவேண்டும். வாழ்க்கையில் அத்தகைய அரியதெரிவுகளை ஒருமுறையேனும் நாம் சந்தித்தாகவேண்டும்” என்றார் கிருதர்.

“நான் ஒப்புகிறேன், ஆசிரியரின் ஆணையை நிறைவேற்றுகிறேன்” என்றான் விருஷபர்வன். கிருதர் அவனை வெறுமனே நோக்கினார். அவன் விழிகளில் தெரிந்த துயருக்கு நிகரான ஒன்றை அதற்குமுன் கண்டதே இல்லை என்று சாயை எண்ணிக்கொண்டாள். “இப்படி ஏதேனும் நிகழுமென்றே எதிர்பார்த்திருந்தேன். பெற்றுக்கொண்டே இருந்திருக்கிறேன், திரும்ப அளிக்கவேண்டியிருக்கும். திரும்ப அளிக்கவேண்டாத எதையும் நாம் பெறுவதில்லை.” ஆனால் அவன் முகத்தில் துயர் இருக்கவில்லை, ஆழ்ந்த அமைதிதான் தெரிந்தது. அவள் மீண்டும் அவன் விழிகளை நோக்கினாள். அங்கே தெரிந்த துயர் அவளை நடுக்குறச் செய்தது.

“இவ்வகையில் இது முடியாது என்று என் உள்ளம் சொல்லிக்கொண்டிருந்தது. நான் எளியவன், என்னைவிட பேராற்றலும் தவவல்லமையும் கொண்ட அசுரமூதாதையர் இருந்திருக்கிறார்கள். அவர்கள் அடையாத முழுவெற்றி எப்படி எனக்கு கைகூடும்? ஏதோ ஒன்று எழுந்து வரவிருக்கிறது என்று எண்ணிக் காத்திருந்தேன். ஆசிரியரிடமிருந்து வருமென எதிர்பார்க்கவில்லை.” அவன் சற்று புன்னகைத்து “ஆனால் அசுரகுலம் என்றும் ஏமாற்றப்படுவது. தன் அன்புக்காக, நெறிநிலைக்காக, பெருந்தன்மைக்காக, கொடைக்காக, அருந்தவத்திற்காக அது தோல்வியை விலையாக பெற்றிருக்கிறது. நம்பியதன்பொருட்டு முற்றழிந்திருக்கிறது. இம்முறை குருவைப் பணிந்தமைக்காக நான் தோற்கடிக்கப்படுகிறேன். இவ்வாறே இது நிகழ்ந்தாகவேண்டும், வேறொரு வகையில் நிகழமுடியாது. அதற்கு வரலாறே இல்லை” என்றான். எழுந்துகொண்டு “நான் ஆசிரியரின் கால்களை என் நெற்றிதொடும்படி பணிந்தேன் என்று மட்டும் அவரிடம் சொல்லுங்கள்” என்றான்.

கிருதர் எழுந்து “உமது சொற்களின் அனைத்து உட்பொருட்களையும் உணர்ந்தேன். ஆனால் ஆசிரியர் இன்று ஒரு சொல் சொன்னார், எண்ணியிராதன நிகழும் என்று. அவர் உம்மேல் கொண்ட அன்பு அச்சொற்களுக்கு அடியில் உறைகிறது என இப்போது உணர்கிறேன். தாங்கள் எண்ணியே இராத நன்னயம் உங்கள் கொடிவழிகளுக்கு நிகழும். தெய்வத்தை நம்பியவர்கள்கூட அழியக்கூடும், ஆசிரியரை நம்பியவர்கள் கைவிடப்பட்டதில்லை” என்றார். விருஷபர்வன் தலைவணங்கி கைகூப்பி “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான்.

# மாமலர் - 70

**70. மணற்சிறுதரி**

விருஷபர்வன் மகளிர்மாளிகையின் கூடத்தில் இருக்கையில் கால் தளர்ந்தவன்போல் விழுந்து இரு கைகளையும் நெஞ்சின் மேல் கோத்தபடி தலைகுனிந்து அமர்ந்திருந்தான். வாயில் மெல்லத் திறந்து உள்ளே வந்து தலைவணங்கிய சிற்றமைச்சர் பிரகாசர் “அவர்கள் சென்றுவிட்டார்கள், அரசே” என்றார். அவன் விழிதூக்கி எங்கிருக்கிறோமென்றே தெரியாதது போன்ற நோக்கை அவர்மேல் ஊன்றி “என்ன?” என்றான். மீண்டும் “அவர்கள் கிளம்பிச் சென்றுவிட்டார்கள்” என்றார் சிற்றமைச்சர். “ஆம்” என்றபடி அவன் எழுந்து “நான் அரசு மாளிகைக்கு செல்கிறேன். சம்விரதரை அங்கு வரச்சொல்க!” என்றான்.

“ஆணை” என்று சொல்லி தலைவணங்கி சிற்றமைச்சர் திரும்பியதும் பின்னிருந்து “அமைச்சரே...” என்று அழைத்தான். அவர் நின்றதும் “இளவரசியின் திருமண ஏற்பாடுகள் அனைத்தையும் உடனடியாக நிறுத்தி வைக்கும்படி எனது

ஆணை. இதை தனியோலைகளாக அமைச்சர்கள் படைத்தலைவர்கள் நகர்க்காவலர்கள் அனைவருக்கும் அறிவியுங்கள். இன்று மாலை நிகழவிருந்த குடிப்பேரவையும் ஒத்திவைக்கப்பட்டுள்ளது. நாளை அதற்குரிய தருணம் அறிவிக்கப்படும்” என்றான். அமைச்சர் விழிகளில் எதையும் காட்டாமலிருக்கப் பயின்றவர். எனினும் அவரது உள்ளம் பதறுவது எவ்வண்ணமோ தெரிந்தது. கண்களைத் தாழ்த்தி “ஆணை” என்றபின் வெளியே சென்றார்.

விருஷபர்வன் அகத்தளத்திற்குச் சென்றபோது அங்கு மகளிர் குரல்கள் ஒன்றாகிக் கலைந்த பறவைக்கூட்டம்போல் ஒலித்துக்கொண்டிருந்தன. அவனை நோக்கி எழுந்து சிலம்புகள் ஒலிக்க ஓடி வந்த சர்மிஷ்டை “எங்கு சென்றீர்கள், தந்தையே? அன்னை ஐம்பது கலிங்கப்பட்டாடைகள் எடுத்து வைத்திருக்கிறார். ஐம்பதுமே பொன்னூலில் முத்துக்கள் கோத்து அணிசெய்யப்பட்டவை. யானையின்மேல் போடும் பாவட்டாபோல் மின்னுகின்றன. அவற்றை நான் அணியமாட்டேன் என்று சொன்னால் என்னை கடிகிறார்” என்றாள். அவன் அவள் தோளில் கை வைத்து புன்னகையுடன் “நன்று குட்டிமுயலே, நீ விரும்பியதை தேர்ந்தெடு” என்றான்.

ஆனால் அவன் சொற்களைக் கடந்து அவனை உணர்ந்து “என்ன ஆயிற்று? ஏதேனும் தீய செய்தியா?” என்று அவள் கேட்டாள். அவன் ஒருகணம் தயங்கி பின் துணிந்து அவள் கண்களை கூர்ந்து நோக்கி “ஆம்” என்றான். அவள் படபடப்பு கொள்வது தெரிந்தது. நிற்கமுடியாதவள்போல சற்று பின்னால் நகர்ந்து கைகளைத் துழாவி தூணைத் தொட்டு அத்தொடுகையிலேயே நிலைகொண்டாள். “நான் அறியலாமா?” என்றாள். “உன்னிலிருந்துதான் அது தொடங்குகிறது. நீ சுக்ரரின்

மகளை...” என்றதுமே அவள் “இல்லை” என்று உரக்க கூவினாள். “ஓசையிடாதே! இளவரசிகள் ஓசையிடும் வழக்கமில்லை” என்றான் விருஷபர்வன். அவள் நன்றாகத் தூணில் சாய்ந்து முகத்தை அதில் பதியவைத்தபடி தோள்கள் குலுங்க அழத்தொடங்கினாள்.

“உன் சினம் புரிந்துகொள்ளக்கூடியது. அது நம் குலத்தின் இயல்பு. அதிலிருந்து எளிதாக வெளிவர இயலாதுதான்” என்றான் விருஷபர்வன். “இல்லை தந்தையே, அது என் கீழ்மை. பிறர் என்னிடம் அவளைப்பற்றி சொல்லும்போதெல்லாம் இல்லையில்லை என்று மறுத்தேன். எனக்குள்ளிருந்து ஏதோ ஒரு தீய தெய்வம் அச்சொற்களை ஏற்று மகிழ்ந்தது. என்ன நிகழ்ந்தது என்று எனக்குத் தெரியவில்லை. திரும்பும் வழி முழுக்க நான் பதறி அழுதுகொண்டிருந்தேன். இங்கு அரண்மனைக்கு மீண்ட பின்பு எதுவுமே நிகழவில்லை என்று வலிந்து எண்ணிக்கொண்டு மிகையான உவகையுடன் நடித்துக்கொண்டிருந்தேன்” என்றாள் சர்மிஷ்டை. குரல் மேலும் தழைய “கீழெல்லை வரை சென்றுவிட்டேன். அனைத்தும் என்னிடமிருந்து தொடங்குகிறது என்றீர்கள். அது உண்மை. என்ன நிகழும் என்று என்னால் எண்ணிக்கூட பார்க்க முடியவில்லை” என்றாள்.

விருஷபர்வன் “அனைத்தும் உன்னிடமிருந்து தொடங்குகின்றன என்று நான் சொன்னேன். நீ பொறுப்பு என்று சொல்லவில்லை. என் செல்ல முயல்குட்டி அல்லவா நீ?” என அவள் தோளை தொட்டான். “இளவரசி, தேவர்களுக்கும் அசுரர்களுக்குமான போரும் சரி, அசுரர்களுக்கும் மானுடர்களுக்குமான போரும் சரி, நீயோ நானோ நடத்துபவையோ திருப்புபவையோ அல்ல. மலையிறங்கி கடல்சேரும் பெருநதிபோல பல ஆயிரம்

ஆண்டுகளாக சென்றுகொண்டிருக்கிறது இவ்வூழ்ப்பெருக்கு. நாம் வெறும் குமிழிகள் மட்டுமே. எது வருகிறதோ அதை எதிர்கொள்வோம். வெற்றியோ இழப்போ எதுவாயினும் அதை அப்பெருக்கின் நெறியென்றே கொள்வோம்.”

அவள் கண்களைத் துடைத்துவிட்டு தலைநிமிர்த்தாமல் தந்தை மேலே சொல்வதை கேட்டு நின்றாள். “குருநாட்டு யயாதி உன்னை பிறர் அறியாமல் பார்த்துச் செல்லும்பொருட்டு இங்கு வந்திருக்கிறான். இன்று காலை நம் காவல்காட்டின் எல்லைக்குள் நுழைந்திருக்கிறான்” என்றான் விருஷபர்வன். “காட்டிற்குள் நுழைந்து வழிதவறி நீங்கள் விளையாடிக்கொண்டிருந்த மலர்வனத்தருகே வந்திருக்கிறான். அவன் குரலைக் கேட்டுதான் நீங்கள் அஞ்சினீர்கள்.” அவள் கண்ணீர் துளிகள் நின்ற இமைகளுடன் மெல்லிய உதடுகள் ஓசையின்றி பிளந்து திறக்க நெஞ்சின் துடிப்பு கழுத்திலும் தோள் நரம்புகளிலும் அதிர்வெனத் தெரிய அச்சொற்களைக் கேட்டு நின்றாள்.

“அங்கு கிணற்றிலிருந்து சுக்ரரின் மகளை யயாதி மீட்டிருக்கிறான். தன்னை மணந்து பட்டத்தரசியாக்கும்படி அவள் அவனிடம் சொல்லுறுதி பெற்றிருக்கிறாள். பின்னர் அங்கேயே தங்கி தன் தந்தைக்கு செய்தி அனுப்பியிருக்கிறாள். அச்செய்தியுடன் இப்போது கிருதரும் தேவயானியின் தோழியும் வந்து சென்றனர்.” அவள் தலையசைத்தாள். “நீ தேவயானிக்கு வாழ்நாளெல்லாம் பணிப்பெண்ணாக செல்லவேண்டும் என்பது அவள் கோரிக்கை. அவளை யயாதி மணக்க வேண்டுமென்றும் அசுரர்களும் ஷத்ரியர்களும் இணைந்து உருவாக்கும் பேரரசின் சக்ரவர்த்தினியாக அவளே அமரவேண்டுமென்றும் விரும்புகிறாள்.”

அவள் அழத்தொடங்குவாளென்று தான் எதிர்பார்த்திருப்பதை விருஷபர்வன் உணர்ந்தான். ஆனால் அவள் அத்தூணை நன்றாக அணைத்து முகத்தை அதில் பொருத்தியபடி அசைவற்று நின்றாள். அவள் ஏதேனும் சொல்லக்கூடும் என்று அவன் எதிர்பார்த்தான். பின்னர் "நான் ஒப்புதல் அளித்துவிட்டேன். அசுரகுலத்திற்கு வேறு வழியில்லை. சுக்ரரின் பகை அமையுமென்றால் நமது குலம் முற்றழியும். தன் மகளின்பொருட்டு அனைத்து நெறிகளையும் மீறிச்செல்ல ஆசிரியர் சித்தமாகிறார். என் மகளின்பொருட்டு என் குலத்தை அழிக்க என்னால் இயலாது" என்றான்.

"ஆம் தந்தையே, தங்கள் முடிவு உகந்ததுதான்" என்று அவள் தலைதூக்காமல் சொன்னாள். விருஷபர்வன் அச்சொற்களால் அதுவரை கொண்டிருந்த அனைத்து உறுதிகளையும் இழந்து உளம் கரைந்து மெல்லிய விம்மல் ஓசை ஒன்றை எழுப்பினான். அது எங்கிருந்து வருகிறதென அவன் செவி வியந்துகொண்டது. "நீ அழுதிருந்தால், எனை நோக்கி கடுஞ்சொல் ஏவியிருந்தால் சிறிதேனும் எனக்கு ஆறுதல் அமைந்திருக்கும்" என்றான். "இல்லை தந்தையே, இன்று நான் இழைத்துவிட்டு வந்த பிழைக்கு என்ன மாறு செய்வதென்றறியாமல் உள்ளூர எரிந்துகொண்டிருந்தேன். எட்டாவது உப்பரிகைக்குச் சென்று கீழே குதித்துவிட்டால் என்ன என்று கூட எண்ணினேன். தாங்கள் பொறுத்தருள வேண்டும். ஏழு நிலை வரை ஏறிச்செல்லவும் செய்தேன். என்னால் இயலவில்லை. இப்போது உளம் நிறைவடைகிறேன். என் பிழைக்கு ஈடுசெய்யப்பட்டுவிட்டது. இக்குலத்திற்குப் பழி கொணர்ந்த பெண்ணாக என்னை இனி எவரும் சொல்ல மாட்டார்கள். இக்குலம் வாழ தன்னை இழந்தவளாகவே சொல்வார்கள்."

விருஷபர்வன் அவளை நோக்காமல் சாளரத்தை நோக்கி சிலகணங்கள் நின்றபின் “செய்தியை நீயே உன் அன்னையரிடம் சொல். உங்களிடமிருந்து இது அகத்தளத்திற்கு பரவட்டும். இந்நகரம் களிவெறி கொண்டுள்ளது. இக்களிவெறியின் உச்சியிலிருந்து கழிவிரக்கத்தின் ஆழத்திற்கு அது விழுந்தாக வேண்டும். நன்று, மானுட உணர்வுக்கு இத்தனை எல்லைகள் உள்ளன என்பதை அவர்கள் அறியட்டும்” என்றான். மேலும் ஏதோ சொல்ல கை எழ நா செயலிழக்க அவன் வெளியே சென்றான்.

அன்னையிடம் அச்செய்தியை எப்படி சொல்வது என்பதுதான் தன் உள்ளத்தில் முதன்மையாக உள்ளது என்பதை சற்று விந்தையுடன் சர்மிஷ்டை உணர்ந்தாள். அத்தருணத்தைக் கடப்பது எப்படி என்பதைப்பற்றித்தான் எட்டுத்திசையிலும் சித்தம் முட்டி மோதி நின்றது. மூன்றாவது அன்னையிடம் சொன்னாலென்ன என்றுதான் முதலில் எண்ணினாள். மூவரில் ஒப்புநோக்க சற்றே சொல்லெண்ணிப் பேசத்தெரிந்தவர், உணர்வுகளை ஆளத்தெரிந்தவர் அவர். இரண்டாவது அன்னை எதிலும் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளாமல் தன் தனியுலகில் வாழ்பவர். மூன்று சேடியரன்றி பிறர் அவரை அணுகவே முடியாது. அவள் அன்னையோ அவளுக்கென எண்ணமோ சொல்லோ இருக்கக்கூடுமென்பதையே உணர்ந்தவரல்ல. எண்ணியும் கற்றும் அடைந்தவை அனைத்தையும் சொல்லி அவளில் நிறைத்துவிடவேண்டும் என்பதற்கப்பால் அவர்களுக்குள் உரையாடலே நிகழ்ந்ததில்லை.

அகத்தளம் நோக்கி நடக்கையில் ஒவ்வொரு அடிக்கும் அவள் விரைவு குன்றினாள். அவளைக் கண்டதும் அணுக்கச்சேடி எழுந்து ஓடி அருகே வந்து “உங்களைத்தான்

தேடிக்கொண்டிருக்கிறார்கள், இளவரசி. பீதர்நாட்டு அருமணிவணிகர் இருவர் வந்திருக்கிறார்கள்” என்றாள். அப்பால் இருந்து அன்னையின் உரத்த குரல் “வந்துவிட்டாளா? இங்கு வந்து அவளுக்கு வேண்டியதை எடுக்கச் சொல். நான் எதையாவது எடுத்தபின்னர் ஒவ்வொன்றிலும் அவள் குறை சொல்லிக்கொண்டிருந்தால் நன்றாக இருக்காது” என்று ஒலித்தது. மூன்றாவது அன்னை வெளியே வந்து “என்னடி இங்கு நின்றுகொண்டிருக்கிறாய்? ஏன் முகம் மாறுபட்டிருக்கிறது? தந்தை என்ன சொன்னார்?” என்றாள். “ஒன்றுமில்லை” என்றபின் அணுக்கச்சேடியின் கைபற்றி “வா! உன்னிடம் பேச வேண்டும்” என்றாள். திகைப்புடன் “என்ன...?” என்று அவள் கேட்டாள். “வாடி” என்று அவள் கைபற்றி தன் அறை நோக்கி அவளை அழைத்துச்சென்றாள்.

அறைக்குள் சென்று கதவை மூடியதும்தான் அச்செய்தியின் மொத்த எடையும் அவள்மேல் அழுந்தியது. மெல்ல சென்று மஞ்சத்தில் அமர்ந்தபின் “அன்னையிடம் சென்று சொல், தந்தை திருமணத்தை நிறுத்திவிட்டார்” என்றாள். “என்ன சொல்கிறீர்கள், இளவரசி?” என்றாள் சேடி. தான் சொன்ன சொற்களை சர்மிஷ்டை சித்தத்தால் மீட்டு எடுத்தாள். மொத்தப் பழியும் தந்தைமேல் போடுவதுபோல் அவை அமைந்திருந்ததைக் கண்டு அவளே துணுக்குற்றாள். இச்சொற்சேர்க்கைகளை உள்ளிருந்து உருவாக்குவது யார்? இத்தருணத்தில் இதை இப்படி திருப்ப வேண்டுமென்று எப்படி அது முடிவெடுத்தது?

“தந்தை சுக்ரருக்கு சொல்லளித்துவிட்டார்” என்று சர்மிஷ்டை சொன்னாள். சேடி “அவர் மகள் மீண்டுவந்துவிட்டார்களா?” என்றாள். விரிவாக சொல்ல தன்னால் இயலாது என்று சர்மிஷ்டைக்கு தோன்றியது. “என்ன நடந்தது என்று அறியேன்.

சுக்ரர் தந்தையிடம் இரு ஆணைகளை பிறப்பித்திருக்கிறார். அவள் குருநாட்டரசனின் பட்டத்தரசியாக வேண்டும், நான் அவளுக்கு அணுக்கச்சேடியென்று உடன் செல்ல வேண்டும். இரண்டையும் தந்தை ஏற்றுக் கொண்டுவிட்டார்."

"என்ன இது...? தங்களை எப்படி...?" என்று அவள் தடுமாறி ஒரு கணத்தில் உளம் பற்றிக்கொள்ள உரத்த குரலில் "வீணன்போல் முடிவெடுப்பதா? அரசர் என்றால் என்ன, அறமென்று ஒன்றில்லையா? நான் சென்று கேட்கிறேன். என் சொல் நிற்க அவர் முன் சங்கறுத்து செத்து விழுகிறேன்" என்று கூவியபடி திரும்பினாள். சர்மிஷ்டை பாய்ந்தெழுந்து அவள் கையைப்பற்றி "நில்! அருள்கூர்ந்து நில்! உன் உணர்வுகளை கட்டுப்படுத்திக் கொள்!" என்றாள். "என்ன இது, இளவரசி? அவர்கள் எவரை வேண்டுமானாலும் மணக்கட்டும். எங்கு வேண்டுமானாலும் அமரட்டும். அசுரர்குல இளவரசியான தாங்கள் அடிமைப்பெண்ணாக செல்வதா...?" என்றாள் சேடி. "இது நடக்கக் கண்டு நாங்கள் உயிர்வாழ்வதா?"

"நான் சொல்வதை கேள். தந்தையின் ஆணை" என்றாள் சர்மிஷ்டை. சேடி அவள் கையை உதறி "தந்தையின் ஆணை உங்களை கட்டுப்படுத்தும். அவர் முன் சென்று சங்கறுத்து விழுவதிலிருந்து என்னை எவரும் கட்டுப்படுத்த முடியாது" என்றாள். சர்மிஷ்டை ஆழ்ந்த குரலில் "நான் கட்டுப்படுத்த முடியும்" என்றாள். "ஏனென்றால் நீ என் பகுதி. உன் உணர்வுகள் என் உணர்வுகளாகவே பிறரால் காணப்படும். நீ என் உணர்வுகளை மட்டுமே வெளிப்படுத்த முடியும். புரிந்துகொள்!" என்றாள். அவள் மெல்ல தளர்ந்து "ஆம், நான் பிறிதல்ல. எனக்கென்றொரு எண்ணம்கூட இந்நாட்களில் உருவானதில்லை" என்றாள்.

“இத்தருணத்தில் நான் உன்னையே சார்ந்திருக்கிறேன். என்னால் நிமிர்ந்து நிற்கவோ நிலைபெயராது இந்நிகழ்வுகளை எதிர்கொள்ளவோ முடியாது போகலாம். என் பின்னால் என்றும் தளராத கால்களுடன் நீ நிற்க வேண்டும்” என்றாள் சர்மிஷ்டை. சேடி “இளவரசி…” என்று உடைந்த குரலில் அழைத்தபடி சர்மிஷ்டையின் கைகளை பற்றினாள். “சேடியாவதென்றால் என்ன என்று அறிவீர்களா?” என்றாள். சர்மிஷ்டை “அறியேன். இப்போதுதான் அச்சொல்லின் பொருளையே என் உள்ளம் எதிர்கொள்கிறது. இவ்வரண்மனையில் ஆயிரத்துக்குமேல் சேடிகள் இருக்கிறார்கள். நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் அவர்கள் நடுவிலேதான். ஆனால் அவர்களின் வாழ்க்கை என்ன, உணர்வுகள் என்ன, எதுவும் எனக்குத் தெரியாது என இப்போதுதான் அறிகிறேன்” என்றாள்.

“ஓரிருவரின் பெயர்கள் மட்டுமே தெரியும். பிற அனைவரும் ஒரே முகமாகவும் ஒரே சொல்லாகவும் ஒரே தோற்றம் கொண்டவர்கள்” என்றாள் சர்மிஷ்டை. சேடி விழிகள் ஈரத்துடன் விரிய “ஆம் இளவரசி, சேடி என்பவள் தன் உள்ளிருப்பவை அனைத்தையும் எடுத்து வெளியே வீசிவிட்டு நன்கு கழுவிய வெற்றுக்கலம்போல் தன்னை ஒழித்துக்கொள்பவள். பிறரால் முற்றிலும் நிறைக்கப்படுபவள். துயரங்களில் பெருந்துயரென்பது தன்னுள் தானென ஏதும் இல்லாமலிருப்பது, பிறிதொருவரின் நிழலென வாழ்வது” என்றாள். மூச்சிரைக்க தன்னை கட்டுப்படுத்திக்கொண்டு “பெண்ணுக்கு இறுதியாக எஞ்சுவது தன்னகம் மட்டுமே. சேடிக்கு அதுவும் இல்லை” என்றாள்.

சர்மிஷ்டை அவள் கண்களையே நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர் தன் கண்ணீரைத் துடைத்தபடி எழுந்து “அன்னையிடம்

சென்று சொல். தந்தை அளித்த சொல்லுறுதிக்கு நான் கட்டுப்பட்டவள்" என்றாள். நீள்மூச்சுடன் சேடி கண்ணீரைத் துடைத்தபடி "ஆம், இத்தருணத்தில் எனது பணி என்பது உங்களின்பொருட்டு இவர்கள் அனைவரிடமும் பேசுவதுதான். நான் பார்த்துக்கொள்கிறேன்" என்றாள். பின்னர் அவள் விழிகளுடன் தொடுக்காமல் திரும்பி "சேடியென்று போக தாங்கள் முடிவெடுத்துவிட்டீர்களா, இளவரசி...?" என்றாள். "ஆம், பிறிதொரு வழியில்லை" என்றாள் சர்மிஷ்டை. "அவர் முன்...?" என்றாள் சேடி. "அது ஒரு கணநேர இறப்பு. அதை கடந்துவிட்டேன் என்றால் பின்னர் அனைத்தும் மிக எளிது" என்ற சர்மிஷ்டை மெல்ல புன்னகைத்து "மறுபிறப்பு" என்றாள்.

🐾செய்தியைக் கேட்டதும் நெஞ்சில் அறைந்து உரக்க அழுதபடி அவள் அறைக்கு ஓடி வந்த அன்னை சேக்கையில் புதைந்து கவிழ்ந்து கிடந்த அவளை அறைவதுபோல பற்றி இழுத்து வெறியுடன் தன் நெஞ்சோடணைத்தபடி "என் மகளே! என் செல்வமே! உன் ஊழ் இப்படி ஆகியதே! இனி ஏன் உயிர்வாழவேண்டும்? இக்குலம் இருந்தாலென்ன, அழிந்தாலென்ன?" என்று கூவி அழுதாள். தன் நெஞ்சில் ஓங்கி அறைந்து "வாடி, சென்று நெஞ்சு பிளந்து இவ்வரண்மனை முற்றத்தில் வீழ்வோம். மூதன்னையருக்கு நெறியென்று ஒன்று இருந்ததென்றால் நம் குருதியினால் இவர்களின் விழி திறக்கட்டும்" என்று அலறினாள்.

அவளைத் தொடர்ந்து ஓடிவந்த மூன்றாவது அன்னை அவள் முன் அமர்ந்து அவள் கால்களை தன் நெஞ்சோடு அணைத்தபடி அவள் முட்டுகளில் முகம் சேர்த்து குனிந்து அழுதாள். இரண்டாவது அன்னை வந்து தூண்சாய்ந்து நின்று பெருமூச்சுவிட்டாள். அணுக்கச்சேடி வெளியே இருந்து

அறைக்கதவை மூடினாள். அவளை பற்றித் தூக்க முயன்றபடி “நாம் கிளம்பிச் சென்றுவிடுவோம். எங்காவது சென்று மறைந்துவிடுவோம்” என்றாள் அன்னை. “எங்கு சென்றாலும் நீங்கள் அசுரகுலத்து அரசரின் மனைவி. நான் அவர் மகள். அவர் சொல்லுக்கு நாம் கட்டுப்பட்டவர்களே” என்றாள் சர்மிஷ்டை.

“அறுத்தெறிந்துவிட்டு வருகிறேன் இந்த மங்கல நாணை. இதுதானே என்னை கட்டுப்படுத்துகிறது?” என்று அன்னை கூவினாள். “இல்லை அன்னையே, இருபதாண்டுகாலம் அரியணையில் அவருக்கு நிகராக இடம் அமர்ந்தீர்கள் அல்லவா? அரசிகளுக்குரிய ஆடம்பரத்தில் திளைத்து வாழ்ந்தீர்கள் அல்லவா? அதுவும் உங்களை கட்டுப்படுத்துகிறது” என்றாள் சர்மிஷ்டை. அச்சொற்களின் கூர்மை நெஞ்சை செயலிழக்கச் செய்ய வளையல்கள் ஒலிக்க அன்னையின் கை சேக்கைமேல் விழுந்தது. நீர் நிறைந்த கண்கள் விரிந்திருக்க அவளை நோக்கி, பின் இரண்டாவது அரசியை நோக்கினாள். அவள் விழிகளை தன் நீர் வழிந்த கண்களால் நோக்கி “என்னடி சொல்கிறாய்?” என்றாள்.

அதன் பொருள் நீயா பேசுகிறாய் என்பதே எனத் தெரிந்தபோது சர்மிஷ்டை புன்னகை புரிந்தாள். தன் உள்ளம் ஏன் இத்தனை எளிதாக இருக்கிறதென்று வியந்துகொண்டாள். உடைந்து செயலிழந்து உதிரிச்சொற்களுடன் தான் அரற்றிக் கொண்டிருக்கவேண்டுமென்று இவ்வன்னையர் எதிர்பார்க்கிறார்கள். அவளுக்கு அப்போது ஒன்று தெரிந்தது. அவ்வரண்மனையில் இளவரசியென அவளிருந்த அந்நாட்களில் எப்போதும் தன்னை இயல்பாக உணர்ந்ததில்லை. ஒவ்வாத உரு ஒன்றில் புகுந்து நடித்துக்கொண்டிருப்பதாகவே

தோன்றிக்கொண்டிருந்தது. ஒருவேளை இயல்பிலேயே நான் ஒரு சேடிப்பெண்தானோ? எனக்குரிய வாழ்க்கையை நோக்கித்தான் செல்கிறேனோ? அவ்வெண்ணம் அவளை மேலும் புன்னகைக்க வைத்தது.

பற்களைக் கடித்தபடி "என்னடி சிரிக்கிறாய்? உனக்கென்ன உளம் நிலையழிந்துவிட்டதா?" என்றாள் அன்னை. "இல்லை, அன்னையே... அனைத்தும் நன்மைக்கே என எத்தனையோமுறை நூல்களில் பயின்றிருக்கிறேன். இக்கட்டுகளில் அச்சொல் உண்மையிலேயே பொருள் அளிக்குமென்றால் அதைவிட இனியது ஒன்றுமில்லை" என்றாள் சர்மிஷ்டை. "பித்திபோல பேசுகிறாய். சேடி என்றால் என்ன என்று தெரியுமா உனக்கு? அதிலும் நீ எங்கு எவருக்குச் சேடியாக செல்கிறாய், அறிவாயா? உனக்கென்று மணம் பேசப்பட்ட அரசனின் நாட்டுக்கு. நேற்றுவரை உன் காலடியில் அமர்ந்திருந்த அந்தணப்பெண்ணுக்கு தாலம் தூக்கப்போகிறாய்."

இரண்டாவது அன்னை அழுத்தமான குரலில் "அதைவிட நீ நோக்க வேண்டியது நீ ஷத்ரிய நாட்டிற்கு அடிமையென செல்லும் அசுரகுலப்பெண் என்பதுதான். அங்கு நீ அரசியெனச் சென்றாலே உனது மதிப்பு எப்படி இருக்கும் என்பதைப்பற்றி ஐயம் கொண்டிருந்தோம். தாலம் எடுத்து பின்னால் நடக்கும் அடிமையெனச் சென்றால் உன் நிலை என்னவாக இருக்கும்?" என்றாள். சர்மிஷ்டை "எதுவாக இருந்தாலும் அறியாத ஒன்றை இங்கு நின்று எண்ணி எண்ணி விரித்தெடுத்து அச்சத்தை பெருக்கிக்கொள்வதில் எந்தப் பொருளும் இல்லை. வருவது வரட்டும். உயிரைப் போக்கிக்கொள்ளும் உரிமை நம்மிடம் இருக்கும் வரை நாமே ஏற்றுக்கொள்ளாத எத்துன்பமும் நமக்கு வருவதில்லை" என்றாள் சர்மிஷ்டை.

அவளுடைய இயல்பு நிலையும் சிரிப்பும் முதலில் அவர்களை குழப்பியது, பின்னர் எரிச்சல் கொள்ளச் செய்தது. அன்னை அவள் கையை அறைந்து “இத்தருணத்தில் இப்படியெல்லாம் நடந்துகொண்டால் உன்னை அனைவரும் போற்றுவார்கள் என்று எண்ணுகிறாயா? வென்றவர்களுக்காக மட்டும்தான் சொற்கள். தோற்று அழிந்த கோடிப்பேர் ஒரு நினைவால்கூட சென்று தொடப்படுவதில்லை. அவர்களுக்கு எஞ்சுவது முடிவிலா இருள் மட்டும்தான்” என்றாள். அதைவிட நேரடியாக அந்நிலையை சொல்லிவிட முடியாதென்று ஒருபுறம் தோன்றினாலும்கூட சர்மிஷ்டைக்கு அச்சொற்களும் எந்த அதிர்ச்சியையும் அளிக்கவில்லை. மாறாக அன்னையின் கைகளை பற்றிக்கொண்டு “இல்லை அன்னையே, நான் நடிக்கவில்லை. இயல்பிலேயே என் உள்ளம் துயர்கொள்ளவில்லை. நான் ஏன் இப்படி இருக்கிறேன் என்று எனக்குத் தெரியவில்லை” என்றாள்.

இரண்டாவது அன்னை “எப்போதுமே அவள் இங்கு ஒட்டாமல்தான் இருந்தாள். எதையும் பற்றிக்கொள்ளாதவர்கள் அனைத்தையும் விடுவதும் எளிதுதான்” என்றாள். அன்னை சீற்றத்துடன் அவளை நோக்கி திரும்பி “இத்தருணத்தில் உன்னைப்பற்றி நீ சொல்ல விரும்புகிறாயா?” என்றாள். மூன்றாவது அன்னை “இது என்ன நமக்குள் பூசலிடும் தருணமா? நாம் செய்வதற்கொன்றே உள்ளது. மூவரும் சென்று அரசரை பார்ப்போம். அந்த அந்தணப்பெண் குருநாட்டு அரசரை மணக்கட்டும். ஒருபோதும் அசுரர் அவளுடைய அரசுக்கு எதிராக எழமாட்டார்கள் என்று அரசர் அவளுக்கு சொல்லளிக்கட்டும். நம் அசுரகுடியிலிருந்து ஒருவரை மட்டுமே இளவரசி மணப்பாளென்றும்கூட நாம் உறுதிகூறலாம். இளவரசியை சேடி என்று அனுப்புவதிலிருந்து மட்டும் நமக்கு

விலக்களிக்கட்டும். இது நாம் அழுத்திக் கோரினால் பெறக்கூடிய ஒன்றே" என்றாள்.

"ஆம், இதை நான் கேட்கிறேன். அவள் அன்னையாக இதையாவது அவர் எனக்கு அளித்தாகவேண்டும்" என்றபடி அன்னை எழுந்தாள். சர்மிஷ்டை அவள் கையைப்பற்றி "இல்லை அன்னையே, என்னிடம் தந்தை சொன்னதுமே நானும் தந்தைக்கு சொல்லளித்துவிட்டேன். அதிலிருந்து நான் பின்னடி வைக்கப்போவதில்லை" என்றாள். அன்னை "நீ பின்னடி வைக்கவேண்டாம். நீ ஒரு சொல்லும் கேட்கவும் வேண்டியதில்லை. நாங்கள் எங்கள் கணவரிடம் கேட்கப்போகிறோம்" என்றாள். சர்மிஷ்டை "என் பொருட்டு கேட்க வேண்டியதில்லை. நீங்கள் எச்சொல்லைக் கேட்டாலும் அது என் பொருட்டு கேட்பதாகவே பொருள். நீங்கள் கேட்டு அச்சொல்லை பெற்றுக்கொண்டாலும்கூட நான் எந்தைக்கு அளித்த சொல்லுக்கு ஏற்ப சேடியாக செல்லத்தான் போகிறேன்" என்றாள்.

"என்னடி இது?" என்று துயருடன் இளையவளைப் பார்த்து கேட்டாள் அன்னை. "இதோ பார்! நீ எடுக்கும் முடிவின் மறுதொலைவென்ன என்று உனக்குத் தெரியவில்லை. பேரரசரை கருவுறப்போகும் வயிறு உனதென்று சூதர்கள் இங்கு பாடிவிட்டார்கள். இன்று அங்கு சென்று அடுமனைப்பெண்ணாகவும் சமையல்பெண்ணாகவும் பணியாற்றப்போகிறாயா? சேடியின் வயிற்றில் பிறக்கும் மைந்தருக்கு தந்தை என எவரும் பொறுப்பேற்கவேண்டியதில்லை என்று அறிவாயா? அவர்கள் அடுமனைச் சூதர்கள் என்றே அறியப்படுவார்கள். அசுரரென்றோ ஷத்ரியர் என்றோ அல்ல" என்றாள் மூன்றாம் அன்னை.

“ஆம், அறிவேன்” என்றபின் சர்மிஷ்டை எழுந்தாள். “நானும் அவளும் ஊழை நேர்கொள்கிறோம். அவள் ஊழுக்கு எதிராக நிற்கிறாள். நான் ஊழை நம்பி அதன்மேல் ஊர்கிறேன். ஊழின் பெருவலியை நம்புகிறேன்.” அன்னை கசப்புடன் “இச்சொற்களனைத்துமே வீண். வாழ்க்கையின் பெருந்தருணமொன்றில் இப்படி கற்றவற்றையும் எண்ணியவற்றையும் சொற்களாக அள்ளிக்கொண்டு நிற்பதைப்போல் மடமை ஏதுமில்லை. எது உகந்ததோ அதை செய்யவேண்டும். இத்தருணத்தில் நீ செய்ய வேண்டியதொன்றே. சேடியாவதைத் தவிர்ப்பது. அதற்கு ஒரே வழி சுக்ரரிடம் கேட்டுப்பார்ப்பது மட்டும்தான்” என்றாள்.

சர்மிஷ்டை “உங்கள் அனைவரையும்விட தேவயானியை நான் நன்கறிவேன். ஒருபோதும் ஒரு சொல்லும் அவள் விட்டுக்கொடுக்க மாட்டாள். அவள் விட்டுக்கொடுக்காதவரை சுக்ரரும் இறங்கிவரமாட்டார். சுக்ரர் இறங்கி வரவில்லையென்றால் நம் பொருட்டு நமது அரசர் சென்று அங்கு இரந்து நின்று இழிவுகொண்டு திரும்பி வருவதொன்றே விளையும். இது தேவயானியின் முடிவென்றால் ஒரு சொல் குறையாமல் இது நிகழ்ந்தே தீரும்” என்றாள். அன்னையர் அவள் முகத்தை நோக்கி அதில் இருந்த மறுக்கமுடியாமையைக் கண்டு உளம் தளர்ந்தனர்.

அன்னை விம்மி அழுதபடி மஞ்சத்தில் மெல்ல சாய்ந்து “நான் என்ன செய்வேன்…? நான் எப்படி இங்கு வாழ்வேன்…? எங்கோ அறியா நாட்டில் இவள் சேடியாக இருக்கையில் இவ்வரண்மனையின் அரச இன்பங்களும் மணிமுடியும் எனக்கென்ன பொருளளிக்கும்…?” என்றாள். “அனைத்தும் சில நாட்களுக்கே, அன்னையே” என்றாள் சர்மிஷ்டை. “நான் அங்கு

பழகுவதும் நீங்கள் இங்கு பழகுவதும்.” அன்னை சினத்துடன் தலைதூக்கி “என்னடி சொல்கிறாய்?” என்றாள். “நாம் எளியவர்கள். நம்மைச் சூழ்ந்திருப்பவற்றுடன் பின்னி கரந்து அவற்றில் ஒன்றாகவே நம்மால் வாழமுடியும். மிகச் சிறந்த சேடியாக நான் விரைவிலேயே மாறிவிடுவேன்” என்றாள் சர்மிஷ்டை.

புன்னகையுடன் “இன்றுவரை தனித்தும் தருக்கியும் நிற்கமுடியாத என் இழிவை எண்ணி வருந்தியிருந்தேன். இப்போது தெரிகிறது. திரளில் ஒருவராக இருப்பதென்பது எவ்வளவு பெரிய நல்லூழ் என்று. அனைவருக்கும் உரியதே நமக்கும். நமக்கென்று தெய்வங்கள் பெரிய துயரையோ ஆற்றாச்சிறுமையையோ சமைப்பதில்லை” என்றாள் சர்மிஷ்டை.

# மாமலர் - 71

### 71. காலமணிகள்

அனைத்தும் எத்தனை விரைவில் திரும்பி மறுதிசைச்சுழற்சி கொள்ளத்தொடங்கின என்பதை சர்மிஷ்டை பெருவியப்புடன் எண்ணிக்கொண்டாள். ஒருநாள் இரவு இருண்டு மறுநாள் புலர்ந்ததும் சூழ்ந்திருந்த அனைத்துமே பிறிதொன்றென்றாயின. அத்தனை மானுடருமே பிறிதொரு முகம் கொண்டனர். சுவர்களும் தூண்களும்கூட உருமாறியிருப்பதாகத் தோன்றியது. எத்தனையோமுறை நூல்களில் ஒவ்வொரு காலையும் புவியில் புதிதாகத்தான் பிறந்தெழுகிறது என்பதை அவள் படித்திருந்தால்கூட அன்றுதான் அதை கண்முன் உண்மையென அறிந்தாள்.

அன்றிரவு தன்னால் துயிலமுடியுமென்று அவள் எண்ணியிருக்கவில்லை. ஆனால் விழிமூடி கண்களுக்குள் ஓடிய குமிழிகளை நோக்கிக்கொண்டிருந்த சற்று நேரத்திலேயே உருவழிந்த எண்ணங்கள் அவளை இழுத்து துயில் நோக்கி கொண்டுசென்றன. விழித்துக்கொண்டபோது அரண்மனையின் ஒலிகளில் இருந்தே புலரி எழுந்துவிட்டதை உணர்ந்தாள். எழுந்து நின்று குழலை சுருட்டிக் கட்டி ஆடைபிரித்துக் கட்டிக்கொண்டபோது அறைக்குள் அணுக்கச்சேடி தரையில் அமர்ந்தபடியே துயின்றுகொண்டிருப்பதை பார்த்தாள். அவள் தோளைத் தட்டி "எழுக!" என்றாள்.

வாயைத் துடைத்தபடி அவள் துடித்து விழித்து "ஆ! இளவரசி..." என்றாள். உடனே எழுந்து நின்று ஆடைதிருத்தி "கனவு" என்றாள். சர்மிஷ்டை "விடிந்துவிட்டது. நான் நீராடச் செல்கிறேன்" என்றாள். "நானும் வருகிறேன்" என்று அணுக்கச்சேடி சொன்னாள். "படுத்திருக்கலாமே?" என்று சர்மிஷ்டை சொன்னாள். "அன்னையின் ஆணை, உங்களுடன் நான் இருக்கவேண்டும் என்று. நான் நெடுநேரம் விழித்திருந்தேன்" என்றாள் அணுக்கச்சேடி. "நான் உயிர்துறக்கக்கூடும் என அன்னையர் அஞ்சுகிறார்கள் என எனக்கும் தெரியும்" என்று அவள் புன்னகைத்தாள். "இல்லை, இளவரசி" என அவள் சொல்லத் தொடங்க "நீராட்டுக்குளத்தில் நான் மூழ்கிவிடக்கூடாது என்று ஒரு கணம் உன் உள் எண்ணம் ஓடியது" என்றாள் சர்மிஷ்டை. அணுக்கச்சேடி "இல்லையே, நான் அப்படி எண்ணவில்லையே?" என்றாள். "வாடி" என்று சிரித்தபடி அவள் தோளில் தட்டி சர்மிஷ்டை நடந்தாள்.

அரண்மனையின் அகத்தளம் முழுக்க ஆடிசூடிய நெய்விளக்குகள் எரிந்தன. அப்பால் அடுமனை உயிர்கொண்டுவிட்டிருந்ததை ஒலிகள் காட்டின. அவளை அணுகிய சேடி ஒருத்தி "நீராட்டறை ஒருங்கியிருக்கிறது. வருக, இளவரசி" என்றாள். சர்மிஷ்டை "நன்று" என்றபின் "எனக்கு எளிய ஆடையை ஒருக்கி வையுங்கள்" என்றாள். "ஆம்" என்றாள் சேடி. சர்மிஷ்டை "அப்படி முன்னரே உனக்கு ஆணையிடப்பட்டிருந்ததா?" என்றாள். "இல்லையே..." என்று அவள் கண்களை அசைத்தபோதே தெரிந்தது. "அரசி அவ்வாறு சொன்னார் அல்லவா?" என்றாள். அவள் தலைகவிழ்ந்து "ஆம்" என்றாள். "என்ன சொன்னார்?" என்றாள். "இல்லை..." என்று அவள் தயங்க "சொல்!" என்றாள். "தங்களுக்குரிய ஆடையை சமையப்பெண்டு எடுத்துவைப்பார் என்றார்."

அணுக்கச்சேடி சினத்துடன் "அது எளிய உடை என நீ எப்படி அறிந்தாய்?" என்றாள். சேடி தலைகுனிந்து நிற்க "நீ பார்த்தாயா?" என்றாள் அணுக்கச்சேடி. அவள் அதற்கும் மறுமொழி சொல்லவில்லை. "அவ்வாறு அரசி ஆணையிட்டார்களா?" என்றாள் அணுக்கச்சேடி உரக்க. சர்மிஷ்டை அவள் கைகளைத் தொட்டு "அதுதானே முறை? அது அரசியின் கடமை" என்றாள். "ஆனால்..." என்று அணுக்கச்சேடி சொல்லத் தொடங்க "வாடி" என்று சர்மிஷ்டை சிரித்தபடி முன்னால் சென்றாள்.

எதிர்ப்படும் அனைத்து சேடியர் முகங்களும் மாறிவிட்டிருப்பதைக் கண்டு திரும்பி அணுக்கச்சேடியிடம் "அனைவரும் அறிந்துவிட்டனர் அல்லவா?" என்றாள். "ஆம், நேற்று நீங்கள் துயில்கையில்

நீர்கொண்டுவருவதற்காக நான் இருமுறை அடுமனைக்குச் சென்றேன். அங்கு இதைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தார்கள்.” சர்மிஷ்டை “எப்படி?” என்றாள். “நேற்று சினத்துடனும் அழுகையுடனும் பேசிக்கொண்டிருந்தார்கள். இன்று அனைவர் முகங்களும் மாறிவிட்டிருக்கின்றன” என்றாள் அணுக்கச்சேடி. “அனைவரும் துயின்று மீண்டிருப்பார்கள்” என்றாள் சர்மிஷ்டை. “துயிலும்போது உணர்வுகள் அழிந்துவிடுகின்றன. எஞ்சியவை இங்குள்ள புறவாழ்க்கைக்கு உதவுபவை மட்டுமே. இன்று காலை எழுந்ததும் நான் அதைத்தான் உணர்ந்தேன்” என்றாள்.

“தங்கள் பேச்சே மாறிவிட்டிருக்கிறது, இளவரசி” என்றாள் அணுக்கச்சேடி. “ஆம், அனைத்தையும் மேலும் கூரிய சொற்களில் சொல்வதற்கு சுக்ரரின் மகளிடமிருந்து கற்றுக்கொண்டிருக்கிறேன். இத்திறன் ஒரு சேடியாக பணியாற்றுவதற்கு உதவுமா என்று தெரியவில்லை. உதவினால் நன்று” என்றாள் சர்மிஷ்டை. “அச்சொல்லே நெஞ்சை அதிர வைக்கிறது” என்றாள் அணுக்கச்சேடி. “எச்சொல்?” என்றாள் சர்மிஷ்டை . “சேடி எனும் சொல். அதை சொல்லவேண்டாம், இளவரசி” என்றாள் அவள். சர்மிஷ்டை “நீ உன்னை சேடியென்றுதானே உணர்கிறாய்?” என்றாள். அவள் ஒன்றும் சொல்லவில்லை. “சொல்!” அணுக்கச்சேடி தலைகவிழ்ந்து “இல்லை” என்றாள். சர்மிஷ்டை திரும்பிப்பார்த்தாள்.

“சேடியின் மகளாகப் பிறந்தேன். எனக்கு தந்தையின் அடையாளம் இல்லை. எனவே இயல்பாக ஒரு கணவன் அமையப்போவதும் இல்லை. குலமகளுக்குரிய மங்கலமும் மதிப்பும் எனக்கு இப்பிறவியில் இல்லை” என்று அவள்

சொன்னாள். “ஆனால் ஒருபோதும் என்னுள்ளில் நான் வெறும் சேடியென்று ஆகக்கூடாதென்று எனக்கே சொல்லிக்கொண்டேன். சேடியென்றே இங்கிருக்கிறேன், சேடியென்றுதான் தோன்றுகிறேன், நான் பேசுவதும் சேடியென்றுதான். ஆனால் என் உள்ளே சேடியென்று ஒரு சொல்லும் எழுந்ததில்லை. இளமையில் நான் சேடியல்ல என்று எனக்கு சொல்லிக்கொண்டேன். இன்று என் உள்ளம் அதை நம்பி அவ்வாறே ஆகிவிட்டிருக்கிறது.”

உடனே முகம் மலரச் சிரித்தபடி “இத்தனை நூறு சேடியரில் என்னை நீங்கள் அணுக்கத் தோழியென தேர்ந்தெடுத்தது அதனால்தான். என் அகத்தில் நான் கொண்ட விலக்கத்தால் நான் பிறரிலிருந்து ஒரு படி எழுந்து நிற்கிறேன். அத்தகுதியினாலேயே உங்களை நான் அடைந்தேன்” என்றாள். “ஆம், உன்னை முதல்நாள் சந்தித்தபோதே உன் முகமும் பெயரும் என்னுள் பதிந்தன” என்றாள் சர்மிஷ்டை. “அவ்வாறு சற்று விலகி நிற்பதனாலேயே இவ்வரண்மனையின் சேடியர் குழாத்தில் நான் அடைந்த இடர்களும் சிறுமைகளும் ஏராளம். இழிதொழில்கள் பல எனக்கு ஏவப்பட்டுள்ளன. மூன்று அரசியருமே என்னை சிறுமை செய்திருக்கிறார்கள். என் விழிகளை பார்த்தாலே அவர்களுக்கு புரிந்துவிடும் என் உளம் முற்றிலும் பணியவில்லை என்று. ஒவ்வொரு ஆணைக்குப் பின்னும் மூத்த அரசி என் விழிகளைப் பார்த்து என்னடி புரிகிறதா என்பார். ஆணை பேரரசி என்று நான் தலைகுனிவேன். மீண்டும் அந்த ஆணையைச் சொன்னபடி என் விழிகளுள் நோக்குவார். முற்றிலும் பணியும் ஒரு விழியிலேயே ஆணை முழுமையாக சென்று சேர்ந்திருக்கிறது என்று அவர்களுக்கு தோன்றும் போலும்.”

“உங்களுடன் இருக்கும் தருணங்களில் மட்டுமே நான் மகிழ்ச்சியுடன் இருந்திருக்கிறேன். ஏனெனில் நீங்கள் என்னை வெறும் சேடி என்று எண்ணவில்லை. தோழியென்று நடத்தினீர்கள்” என்றாள் அணுக்கச்சேடி. சர்மிஷ்டை “ஆம்” என்றபின் சிரித்து “அது என் உளவிரிவால் அல்ல. அறிவிலும் அழகிலும் நான் உனக்கு நிகரானவளோ அல்லது ஒரு படி கீழானவளோ என்று உன்னுடன் விளையாடும்போது எப்போதுமே உணர்கிறேன், அதனால்தான். உன்னுடன் இருக்கையில் மட்டுமே நான் நடிக்க வேண்டியதில்லை என்னும் விடுதலை எனக்கு இருந்தது” என்றாள். திடுக்கிட்டவள்போல அணுக்கச்சேடி நிமிர்ந்து நோக்கினாள். சர்மிஷ்டை தலைகுனிந்து நடந்தாள்.

அவர்கள் நீராடும்போது எதுவும் பேசிக்கொள்ளவில்லை. சேடி சொன்னதைப்பற்றியே சர்மிஷ்டை எண்ணிக்கொண்டிருந்தாள். ஓரிருமுறை திரும்பிப்பார்த்தபோது அவள் தன்னுள் மூழ்கி தனித்திருப்பதைக் கண்டு தான் சொன்ன சொற்களைப்பற்றி அவளும் நினைத்துக்கொண்டிருக்கிறாள் என்று எண்ணிக்கொண்டாள். நீராடி முடித்து ஈரக்குழலுடன் திரும்பி நடக்கும்போது சர்மிஷ்டை “நகரத்தின் ஓசை முழுக்கவே மாறிவிட்டிருக்கிறதல்லவா?” என்றாள். அணுக்கச்சேடி தலையசைத்தாள். சர்மிஷ்டை புன்னகைத்து “இன்று நகருக்குள் சென்று முகங்களைப் பார்த்தால் முற்றிலும் வேறு முகங்களையும் நோக்குகளையும் சந்திப்போம். அவர்கள் துயர்கொண்டிருப்பார்கள் என்று தந்தை சொன்னார். அது துயரல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. எளிய மக்கள் துயர்கொள்வது எதுவும் நிகழாத சலிப்பு நிலையில்தான். இத்தகைய பேரிழப்புகளும் அவர்களுக்கு மறைமுகமான கொண்டாட்டமே. சிலநாட்கள் சென்றபிறகு இந்த

ஒருநாளைப்பற்றி பல நூறு கதைகள் இங்கு புனையப்பட்டிருக்கும். பல கோணங்களில் சூதர் பாடல்கள் எழுந்துவிட்டிருக்கும்” என்றாள்.

“இப்படியெல்லாம் ஒவ்வொன்றையும் நாம் பேசிப் பேசி எளிமைப்படுத்திக் கொள்ளத்தான் வேண்டுமா?” என்றாள் அணுக்கச்சேடி. “வேறு என்ன செய்வது? ஒவ்வொரு தருணத்தையும் முழுமையாக வாழவேண்டும் என்றால் வாழ்ந்து எஞ்சிய இடத்தை முழுக்க சொற்களால் நிரப்புவது மட்டும்தானே ஒரே வழி?” என்றாள் சர்மிஷ்டை. “உங்கள் பேச்சு முற்றிலும் மாறிவிட்டிருக்கிறது” என்றாள் அணுக்கச்சேடி. “எப்படி?” என்றாள் சர்மிஷ்டை “அவரில் ஒரு பகுதி உங்களுள் வந்து குடியேறிவிட்டதுபோல” என்றாள் அணுக்கச்சேடி.

சமையப்பெண்டு அவளுக்காக காத்து நின்றிருந்தாள். “தாங்கள் அணிகொள்ள வேண்டுமென்று அரசரின் ஆணை, இளவரசி. இன்று காலையிலேயே குடிப்பேரவையை அரசர் கூட்டியிருக்கிறார். தாங்கள் அதில் பங்குகொள்ளவேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது” என்றாள். சர்மிஷ்டை ஐயத்துடன் நோக்க “சம்விரதர் தன் தூதை இன்று அளிக்கப்போகிறார் என்றார்கள்” என்று சமையப்பெண்டு சொன்னாள். சர்மிஷ்டை குழப்பத்துடன் “பேரவை ஒத்திவைக்கப்பட்டது என்றுதானே நேற்று சொன்னார்கள்?” என்றாள். “ஆம், இன்று அது கூடுகிறது என்று காலையிலேயே ஓலைகள் சென்றுவிட்டன.”

சர்மிஷ்டை புன்னகையுடன் “இளவரசியருக்குரிய ஆடையா?” என்றாள். சமையப்பெண்டு தலைதாழ்த்தி “இல்லை, எளிய ஆடை போதுமென்று ஆணை” என்றாள். சர்மிஷ்டை “மரவுரியா?” என்றாள். “அல்ல, பருத்தி ஆடைதான். ஆனால்

அரசியருக்குரிய ஆடை அல்ல” என்றபின் தயங்கி “அசுரகுடிகளுக்குரிய ஆடையும் அணிகளும் போதும் என்று சம்விரதரின் ஆணை” என்றாள் சமையப்பெண்டு. சர்மிஷ்டை “நன்று, நான் எண்ணியது போலவே” என்றாள். “வருக, இளவரசி” என்றாள் சமையப்பெண்டு. “நான் உடைமாற்றி வருகிறேன்” என்று அணுக்கச்சேடி நடந்து விலகினாள்.

அசுரகுலத்துப் பெண்கள் அணியும் கருநீல ஆடையை தோள்சுற்றி இடையில் வரிந்து உடுத்து கல்மணிகள் கோத்துச் செய்த ஆரத்தை மார்பிலணிந்து, கல்கோத்த நெகிழ்வளையல்களை கைகளில் இட்டு, மரக்குடைவுத் தண்டைகளை கால்களில் பொருத்தி, தலையில் கழுகிறகு சூடி ஆடியில் தன்னை நோக்கியபோது சர்மிஷ்டை தான் ஓர் அழகி என்ற எண்ணத்தை அடைந்தாள். முன்பு எப்போதுமே ஆடி அவளை அழகியென காட்டியதில்லை. உடலைத் திருப்பி மீண்டும் மீண்டும் தன்னையே நோக்கிக்கொண்டிருந்தாள். மிக அறிமுகமான தோற்றம். முன்பு எங்கே கண்டேன்? என் கனவுகளிலா?

அணுக்கச்சேடி அறைக்குள் வந்து அவள் தோற்றத்தைப் பார்த்து தயங்கி நின்றாள். சமையப்பெண்டு தயங்கி “இது அமைச்சர் சம்விரதரால் கொடுத்தனுப்பப்பட்ட ஆடையணிகள். இந்தத் தோற்றத்துடன் அவைக்குச் செல்ல வேண்டுமென்று…” என்றாள். “நன்று” என்று அணுக்கச்சேடி சொல்லி அவள் செல்லலாம் என்று கைகாட்டினாள். “ஆடி இதுவரை என்னை இதுபோல் அழகியாகக் காட்டியதில்லை” என்றாள் சர்மிஷ்டை. “நானும் அவ்வண்ணமே எண்ணினேன். அதைச் சொன்னால் பிழையாகிவிடுமோ என்று பட்டது” என்றாள் அணுக்கச்சேடி. “என்ன பிழை? அரக்கர் குலத்திற்கும் அசுரர்

குலத்திற்கும் கருநீல ஆடையும் கல்மணி மாலையும் மரக்குடைவு அணிகளும்தான் பொருந்துகின்றன. பொன்னும் மணிகளும் பிறிதெவரையோ நோக்கி புனைபவை என்று தோன்றுகின்றன" என்றாள் சர்மிஷ்டை.

"இந்தத் தோற்றத்துடன் தாங்கள் ஏன் அவை புகவேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. பேரவையில் இன்று என்ன நடக்கப்போகிறது?" என்றாள் அணுக்கச்சேடி. "பேரவையில் உறுதியாக குருநாட்டரசரின் அரசியாக என்னை அறிவிக்கப்போவதில்லை. அவரது கணையாழியை எனக்கு அளிக்கப்போவதும் இல்லை" என்று சர்மிஷ்டை சொன்னாள். "அவ்வாறென்றால் என்னை அசுரகுலத்துப் பெண்ணாக மட்டுமே அவைநிறுத்த விழைகிறார்கள்..." என்றபின் கைதூக்கி ஆடியில் தன் கல்வளையல்களை ஆட்டிப்பார்த்தாள்.

அணுக்கச்சேடியிடம் திரும்பி "எப்போதுமே இம்முரண்பாடை நான் உணர்ந்ததுண்டு. அசுரர் குலத்தவராகிய நாம் மூதன்னையருக்குப் படைக்கும் ஐந்து மங்கலங்களில் பொன்னும் மணியும் இருப்பதில்லை. மலைப்பாறையும் நீரும் மலரும் அனலும் கனியும் மட்டுமே உள்ளன. பொன்னையோ மணியையோ ஒருபொருட்டென கருதாத காலத்தில் நம் மூதன்னையர் வாழ்ந்திருக்கிறார்கள். பிறகெப்போது இவற்றை நாமும் அணியத்தொடங்கினோம்? இவற்றினூடாக ஷத்ரியர்களுக்கு நிகரான தோற்றத்தையும் ஆற்றலையும் பெறுவோம் என்று எண்ணினோம் போலும்" என்றாள். அணுக்கச்சேடி "பொன் என்பது தன்னளவில் பயனற்றதும் பொருளற்றதும் என்பார்கள். அது எதை வாங்குகிறதோ அதுவே

அதன் மதிப்பு. பாரதவர்ஷம் முழுக்க பொன் எதையும் வாங்கும் என்கிறார்கள்” என்றாள்.

“நம்மிடம் இல்லாதவற்றை வாங்கும்பொருட்டு நாம் பொன்னை சேர்த்துக்கொள்வதுண்டு. நமது விலையாக பொன்னை நாமே அமைத்துக்கொண்டது பெரும்பிழை” என்று சர்மிஷ்டை சொன்னாள். வெளியே அணிகளின் ஓசை
கேட்டது. மூன்றாவது அன்னை தன் இரு சேடியருடன் வந்து அறைவாயிலில் நின்று “சித்தமாகிவிட்டாயா?” என்றாள். அவள் கண்கள் வந்து சர்மிஷ்டையை காலிலிருந்து தலைவரை நோக்கி மீண்டன. அவள் உடலில் ஒரு மெல்லிய திருகல் நிகழ்ந்துவிட்டிருப்பதைக் கண்டு சர்மிஷ்டை புன்னகை புரிந்தாள். சேடியர் அவளைப் பார்த்துவிட்டு விழிதிருப்பிக்கொண்டனர்.

சர்மிஷ்டை அவள் அருகே சென்று நின்று “இந்தத் தோற்றம் எப்படி இருக்கிறது, அன்னையே?” என்றாள். செயற்கையான கடுமையுடன் “இது ஒரு சடங்குக்காகத்தானே? வா…” என்றாள் அவள். “அன்னை எங்கே?” என்றாள் சர்மிஷ்டை.
சேடியொருத்தி “பட்டத்தரசி தன் அணிச்சேடியருடன் அவைக்கு சென்றுவிட்டார்கள். தங்களை அழைத்துவரும்படி சம்விரதரின் ஆணை” என்றாள். சர்மிஷ்டை “அன்னையிடம் இந்த அணியும் ஆடையும் எனக்கு மிகப்பொருத்தம் அல்லவா என்று கேட்கலாமென்று எண்ணினேன்” என்றாள். மூன்றாவது அன்னை “நாங்கள் அரசத்தோற்றம் கொண்டிருப்பதை பகடி செய்கிறாயா? நாங்கள் அணிந்தாகவேண்டிய தோற்றம் இது… இதை விரும்பி அணியவில்லை” என்றாள். “நான் இந்த ஆடையை விரும்பி அணிகிறேன். அதைமட்டுமே சொன்னேன், அன்னையே” என்றாள் சர்மிஷ்டை.

அன்னையைத் தொடர்ந்து வெளியே நடந்தபோது ஒவ்வொரு அசைவும் முற்றிலும் புதியதாக இருந்தது அவளுக்கு. பொன்னணிகள் ஓசையற்றவை. புழுக்கள்போல சிறு பூச்சிகள்போல உடலெங்கும் ஒட்டியும் கவ்வியும் இருப்பவை. அட்டைகள்போல மாலைகள். பெருஞ்சிலந்திபோல் இடையில் மேகலை. இளம்பாம்புபோல் காலில் சிலம்பு. அருமணிகள் ஈரச்சேற்றில் பதிந்த மின்மினிகள் போல. கல்லணிகளோ மெல்ல சிரித்தன. அவை தொட்ட இடங்களில் தண்மை இருந்தது. இளவாழை நீர்த்துளிகளை சூடிக்கொண்டிருப்பதுபோல என தன்னை சர்மிஷ்டை எண்ணிக்கொண்டாள். அடர்காட்டில் பாசி படிந்து ஆழ்ந்த அமைதியில் காலமின்றி உறைந்திருக்கும் கரும்பாறை போன்று அவள் இருப்பதாகத் தோன்றியது.

அந்த எண்ணம் அளித்த கிளர்ச்சியில் திரும்பி அணுக்கச்சேடியின் கைகளைப்பற்றி "மிகுந்த மகிழ்ச்சியுடன் இருக்கிறேனடி... அதை எவரும் அறியப்போவதில்லை" என்றாள். அவள் புருவத்தைத் தூக்கி "ஏன்?" என்றாள். சர்மிஷ்டை "தெரியவில்லை. ஏனோ இத்தருணம் எனக்கு மிகப்பெரிய நிறைவை அளிக்கிறது" என்றாள். அணுக்கச்சேடி தலையசைத்தாள். அவர்கள் குடிப்பேரவை கூடும் மையச்சாலையை ஒட்டி அமைந்திருந்த சிற்றறைக்குச் சென்றார்கள். அணுகும்போதே அவை நிறைந்திருப்பதை உணரமுடிந்தது. வட்டமான பெருங்கூடத்தின் குவைமுகட்டின் மேல் அனைவரின் பேச்சுக்குரலும் இணைந்து ஒலித்த கார்வை கேட்டது. முன்பொருமுறை கானாடச் சென்றபோது தொலைவிலிருந்து அருவியின் ஒலி குகைக்குள் அத்தகைய முழக்கத்தை எழுப்பியதை அவள் நினைவு கூர்ந்தாள்.

ஒவ்வொரு நினைவும் தனித்தனியாக கூர்மையாக அவளுள் நிகழ்ந்தது. ஒவ்வொரு நினைவுக்கும் உரிய சொற்கள் வந்தமைந்தன. முன்பெப்போதும் இத்தனை தெளிவாக எண்ணியதும் நினைவுகூர்ந்ததும் இல்லை என்று அவள் அறிந்தாள். அவர்கள் உள்ளே நுழைந்ததும் அங்கிருந்த இரண்டாவது அன்னை அவளை அணுகி “நீ இங்கு காத்திருக்கும்படி ஆணை. அவையிலிருந்து அழைப்பு வந்ததும் நீ நுழையலாம்” என்றாள். “நன்று” என்றாள் சர்மிஷ்டை. “முரசெழுந்ததும் நாங்கள் அவைபுகவேண்டும்... உன் அன்னை மறுபக்கச் சிற்றறையில் இருக்கிறார்கள்.” அவள் முகத்தில் அனைத்தும் இயல்பானவை என்னும் தன்மையே தெரிந்தது. அனைத்தும் வழக்கமாக நடந்துகொண்டிருப்பவை என்பதுபோல. இப்போது ஏதோ ஒன்று நிகழ்ந்து அனைத்தும் மீண்டும் திசை திரும்பி குருநகரியின் யயாதியின் மணமகளாக அவள் செல்வாளென்றால் என்ன ஆகும்? ஒன்றும் ஆகாது, ஒரு சிறு நிலைகுலைவுக்குப்பின் ஒவ்வொருவரும் தங்கள் சிறகுகளை சற்றே திருப்பி அத்திசையில் செல்லத்தொடங்குவார்கள். நடுவில் இவை நிகழ்ந்த தடயமே எவர் சொல்லிலும் விழிகளிலும் இருக்காது. நினைவுகளிலும்கூட எஞ்சாது என்பதுதான் விந்தையிலும் விந்தை.

சர்மிஷ்டை பீடத்தில் அமர்ந்து கைகளை மடிமேல் கட்டிக்கொண்டாள். வெளியே பேரவை மண்டபத்தில் அவைமுரசும் கொம்பும் குழலும் முழங்கின. தன் கையிலணிந்திருந்த கல்வளையல்களில் நன்குதேய்த்து வெண்ணிற விதைபோல் ஆக்கப்பட்ட கற்களை கைகளால் தொட்டு ஒவ்வொன்றாக அகற்றிக்கொண்டிருந்தாள். இரு புன்னகைகள் போலிருந்தன. மெல்லச் சுழன்றபோது காலமென்றாயின. மணியாரங்களை விரலில் ஓட்டி

மூதன்னையர் ஊழ்கத்தில் காலத்தை ஓட்டுவதை கண்டிருக்கிறாள். இரண்டு காலங்கள். இடக்கையின் காலம் ஹிரண்யபுரிக்கு, வலக்கையின் காலம் குருநகரிக்கு. பின்னர் தலையசைத்து இல்லை இடக்கையின் காலம் எனக்கு மட்டும் உரியது. வலக்கையின் காலம் வெளியே திகழும் அனைத்துக்கும் என்று எண்ணிக்கொண்டாள்.

கழுத்தில் அணிந்திருந்த கல் மாலையைத் தொட்டு அது எந்தக் காலம் என்று எண்ணினாள். இளநீலக் கற்களால் ஆன காலம் இது. எவரும் அறியாத காலம். நானும்கூட அறியாத காலம். என்ன வீண் எண்ணங்கள் என்று உடலை அசைத்து அனைத்து கல்நகைகளும் குலுங்கும்படி செய்தாள். இனி நான் சிரிக்கவேண்டியதில்லை, இந்தக் கற்களே எனக்காக சிரிக்கும். மூதன்னையரின் சிரிப்பு இது.

பேரவையில் அவை நிகழ்ச்சிகள் முரசொலியின் தாளங்கள் வழியாக அறிவிக்கப்பட்டன. அரசன் அவை புகும் ஓசையை அறிவித்து ஏழு பெருமுரசுகள் முழங்கின. கொம்புகள் பிளிற சங்கும் மணியும் தொடர்ந்து ஒலிக்க விருஷபர்வன் அவைபுகுவதை அவள் செவிகளால் அறிந்தாள். அவை எழுந்து வாழ்த்து ஒலித்து அவனை வரவேற்றது. அச்சிற்றறையின் அனைத்துச் சாளரங்கள் வழியாகவும் அவ்வாழ்த்தொலி உள்ளே வந்து அறையை நிரப்பி அடங்கிய பின்னரும் மெல்லிய ரீங்காரமாக எஞ்சியது. அரசன் அரியணையில் அமர்வதை, மூன்று அரசியர்களும் உடன் அமர்வதை, அமைச்சரும் பிறரும் அவை சூழ்ந்து நிற்பதை அவள் ஒலியால் கண்டாள்.

அவை நிமித்திகன் மேடை மேல் ஏறி தன் சிறு கொம்பை முழக்கி விருஷபர்வனின் கொடிவழியை வாழ்த்தி அவையமர்ந்திருக்கும் ஐங்குலங்களையும் புகழ்பாராட்டி அவை

நிறைவை அறிவித்தான். அக்குரல் மெல்லிய ஒலியலையாக காற்றில் மிதந்து வந்து ஒலித்துக் கரைந்தது. அவள் அவையை கண்மூடி நோக்கிக்கொண்டிருந்தாள். வழக்கமான அவையறிவிப்புகள். அன்றாடச் செய்திகள். அவை அனைத்தையும் முன்னரே அறிந்திருப்பது நன்றாகவே தெரிந்தது. அவை காத்திருந்தது. இருமல்கள், அணியோசைகள், பீடங்களின் முனகல்கள் வழியாக பொறுமையிழந்தது. பின்னர் நிமித்திகனின் அறிவிப்பு ஒலித்தது. சொற்கள் விளங்கவில்லை. ஆனால் அவை ஆழ்ந்த அமைதிகொள்வதை அவள் அறிந்தாள். அதுவரை இருந்த அமைதி சற்றே விலக அவள் உள்ளம் படபடத்தது. கண்களை மூடி மூச்சை இழுத்து விட்டு தன்னை அமைதிப்படுத்திக்கொண்டாள். உடலில் வியர்வை பூத்திருந்தது. காற்று பட்டு மெல்ல குளிர்ந்து மெய்ப்புகொண்டாள்.

# மாமலர் - 72

### 72. விதைத்துயில்

வெளியே காலடியோசை எழுந்தது. கதவை மெல்லத் திறந்து சம்விரதர் உள்ளே வந்தபோது சர்மிஷ்டை எழுந்து “வணங்குகிறேன், உத்தமரே” என்று முகமன் உரைத்து வணங்கினாள். சம்விரதரின் கால்கள் சிறியவை. முதுமையால் உடலும் குறுகி கூன்விழுந்திருந்தது. அவரும் நிழலும் இரட்டையர்போல ஓசையற்றவர்கள். அவர் அவளை நோக்கியபடி வாழ்த்த மறந்து திகைத்து நின்றார். கண்களில் மிக மெல்லிய துயரமொன்று வந்து மறைந்தது. பின்னர் முறைமைகளைக் கடந்து அருகணைந்து அவள் கைகளை பற்றிக்கொண்டார். அவர் கைகளும் மிகச் சிறியவை. அவை ஆட்டின் காதுகள்போல மென்மையும் வெம்மையும் கொண்டு

துடிப்பவை என்னும் எண்ணம் அவளுக்கு எழுந்தது. உள்ளடங்கி இரு சிவந்த கோடுகளெனத் தெரிந்த வாய்க்கு சுற்றும் மெல்லிய சுருக்கங்கள் அசைந்தன.

“இளவரசி, உங்கள் அன்னையின் வயிற்றிலிருந்து எடுத்த உங்களை வயற்றாட்டி வெளியே கொண்டுவந்து நீட்டியபோது உங்கள் தந்தையின் அருகே நின்று காத்திருந்தேன். உங்கள் தந்தை உங்களை வாங்கி கால்களை சென்னி சூடி முத்தமிட்டு என்னிடம் தந்தார். அன்றுமுதல் உங்களை பார்த்து வருகிறேன்… உங்கள் எளிமையே உங்கள் ஆற்றல். எதையும் எரிப்பது அனல். பேராற்றல் மிக்கது அது. அதை பிரம்மத்தின் மண்ணுருவம் என்று முனிவர்கள் வணங்குகிறார்கள். ஆனால் அனலால் எதையும் ஆக்க முடியாது. நீரோ கருணை மிக்கது. செல்லுமிடத்திலெல்லாம் அவ்விடத்தின் வடிவங்களை தான் ஏற்று அவ்வாறே உருக்கொள்வது. அவ்விடத்தின் வண்ணங்களையும் மணங்களையும் சுவைகளையும் தன்னுடையதாக்குவது” என்றார் சம்விரதர்.

“நீருக்கென்று வண்ணமும் வடிவும் மணமும் இல்லை. ஆனால் இங்கிருக்கும் அத்தனை வண்ணங்களும் வடிவங்களும் மணங்களும் நீராலானவை. பேரன்னையரை நீர் வடிவானவர்கள் என்பது அசுர மரபு. இங்கிருக்கும் அத்தனை உயிர்களும் நீரை நோக்கியே வேரும் நாவும் நீட்டுகின்றன. அவ்வனைத்தும் நீருக்கென விடாய் கொண்டிருப்பதுவரை நீர் அழிவதே இல்லை. எரிபடுவது அழிந்ததும் எரி விண்புகுகிறது. நீர் அனைத்தையும் தாங்கி ஊற்றென்றும் மழையென்றுமாகி என்றும் இங்கிருக்கும்” என்றார். இரு கைகளைக் கூப்பி அவள் தலை வணங்கினாள்.

“தங்களுக்கான மணத்தூதுடனும் கணையாழியுடனும் இந்நகர் புகுந்தேன். நேற்று நிகழ்ந்ததை அரசர் என்னை அழைத்து சொன்னார். நானே சென்று குருநகரியின் அரசர் யயாதியிடம் பேசினேன். அவர் கிணற்றிலிருந்து கைதொட்டு தூக்கி எடுத்த அப்பெண் நீங்கள் என்று எண்ணியிருந்தார். அது என் பிழையே. அவரிடம் உங்கள் ஓவியத்திரைச்சீலையை
நான் காட்டவில்லை. உங்கள் உருவைக் கண்டால் அவர் விரும்பமாட்டார் என எண்ணிவிட்டேன். உங்கள் அழகு மாசற்ற அவ்விழிகளில் உள்ளது, அதை ஓவியம் காட்டாது. நேர்நின்று அவற்றை நோக்குபவர் உங்களை அன்னைவடிவான கன்னி என்று எண்ணாமலிருக்கமாட்டார்…” என்றார் சம்விரதர்.

“உங்கள் ஆடையை சுக்ரரின் மகள் அணிந்து திருப்பி அளித்தபோது சிற்றாடை ஒன்று மட்டும் அவர்களிடமே தங்கிவிட்டது. அதைப் பார்த்து அவரை ஹிரண்யபுரியின் இளவரசி என்று எண்ணிவிட்டார். அவர் கைபற்றி சொல்லளித்தது சுக்ரரின் மகளுக்கு என்று நான் சொன்ன பின்னரே மெய்யுணர்ந்து யயாதி திடுக்கிட்டார். நிகழ்ந்ததைச் சொன்னபோது துயர்கொண்டு தளர்ந்து அமர்ந்துவிட்டார்.” சர்மிஷ்டை புன்னகைத்தாள். சம்விரதர் “அது தற்செயல் என்று நான் எண்ணவில்லை. அது தேவயானியின் விழைவு. அல்லது ஊழ். அல்லது நாமறியா ஒன்று. எப்போதும் ஒரு துளி எஞ்சிவிடுகிறது. விதை என்பது ஒரு துளி மரம்தான்” என்றார். சர்மிஷ்டை அச்சொற்களை புரிந்துகொள்ளாமல் அவரை விழிமலர்ந்து நோக்கினாள்.

“ஊழ் மிகுந்த நகையுணர்வு கொண்டது. சுக்ரரின் மகள் வாயிலாக தன் நெறியை தான் சொல்ல வைத்துவிட்டது. உங்கள் வயிற்றில் பேரரசர்கள் எழுவார்கள். விருஷபர்வனின்

கொடிவழியே இன்னும் பல தலைமுறைக்காலம் பாரதவர்ஷத்தை ஆளும். இங்கிருந்து நீங்கள் செல்கையில் ஓர் அமுதகலசத்தை மட்டும் கொண்டு செல்லுங்கள். தங்கள் மூதன்னையர் முலைகளாக ஏந்தியிருந்தது அது. உங்கள் குல அடையாளம். பிறிதெதுவும் எஞ்சவேண்டியதில்லை. நாளை ஒரு காலம் வரும், அன்று நம் அமுதகலம் இக்குலத்தின் விதைத்துளி என உங்கள் குலவழிகளின் கொடிகளில் பறக்கட்டும். உங்கள் தந்தையின் பொருட்டு உங்களிடம் நான் சொல்வது இது ஒன்றே" என்றார் சம்விரதர்.

சர்மிஷ்டை பெருமூச்சுவிட்டாள். சம்விரதர் அவள் தலைமேல் தன் நடுங்கும் கைகளை வைத்தபின் திரும்ப சர்மிஷ்டை மெல்லிய குரலில் "அமைச்சரே..." என்றாள். "சொல்லுங்கள், இளவரசி" என்றார். "அவர் என்ன சொன்னார்?" என்று அவள் கேட்டாள். அவர் கண்கள் சற்று மலர "ஆம், அதை நான் முழுக்க சொல்லவில்லை" என்றார். "அவர் திகைத்தார். பதறிப்போய் 'என்ன இது?' என்றார். 'தாங்கள் சுக்ரரின் மகளுக்கு சொல்லளித்துவிட்டீர்கள், அது உங்கள் பிழை' என்று நான் சொன்னேன். 'இல்லை, நான் அதை அறிந்து செய்யவில்லை' என்றார். 'எப்படிச் செய்திருந்தாலும் அவர்கள் யார் என்று நீங்கள் கேட்டிருக்கவேண்டும். கேட்காதது உங்கள் பிழையே' என்றேன். தளர்ந்து பீடத்தில் அமர்ந்து 'ஆம்' என்றார். என் பிழையை நான் உணர்ந்திருந்தமையால் அவர் பிழையை அறியாது மிகைப்படுத்தி சொன்னேன் போலும்."

"மேலும் இரக்கமின்மையுடன் அவரிடம் நான் அடுத்த சொற்களை சொன்னேன். 'சுக்ரர் மகளின் கோரிக்கை பிறிதொன்றுமுண்டு, அதை அரசரும் ஏற்றுக்கொண்டுவிட்டார். நீங்கள் அவளை மணம்கொண்டு

பட்டத்தரசியாக இடம் அமர்த்தும்போது அசுரகுலப்பேரரசரின் மகள் சர்மிஷ்டையே அவளுக்கு அணுக்கச்சேடியாக அங்கு வரவேண்டும்' என்றேன். திகைப்புடன் உரக்க 'அணுக்கச்சேடியாகவா? விருஷபர்வரின் மகளா?' என்று கேட்டபடி எழுந்து என்னருகே வந்தார். 'இதை யார் கூறியது? சுக்ரரா?' என்றார். என் உள்ளத்தில் தேவயானிமேல் இருந்த அனைத்து வஞ்சத்தையும் நிகழ்த்தும் தருணம் அது என அப்போது உணர்ந்தேன். 'இல்லை, அவர்கூட அவ்வண்ணம் எண்ணமாட்டார். அவர் மகள் ஒருத்தியால் மட்டுமே அது இயலும்' என்றேன். தான் மணக்கவிருக்கும் பெண்ணைப்பற்றி முதல்முதலாகக் கேட்கும் மதிப்பீட்டில் இருந்து ஆணுள்ளம் ஒருபோதும் அகல இயலாது. அது ஒரு நச்சு விதை."

"நடுக்கம் தெரிந்த குரலுடன் 'அவளே இதை கோரினாளா?' என்றார். 'ஆம்' என்றேன். இரு கைகளையும் விரித்து 'ஒரு சிறு களிப்பகையின் பொருட்டா இவையனைத்தையும் செய்கிறாள்?' என்றார். 'அவர் இலக்கு பாரதவர்ஷத்தின் முதன்மைப்பேரரசி என்று மணிமுடி சூடி அமர்வது மட்டுமே. பிற எவையும் அவருக்கு ஒரு பொருட்டல்ல' என்று நான் சொன்னேன். 'ஆம், அவள் அதை அடைந்துவிட்டாள். இரண்டே கோரிக்கைகள். மாற்றாருக்கான அனைத்து வழிகளையும் முழுமையாக மூடிவிட்டாள்' என்றபடி மீண்டும் சென்று பீடத்தில் அமர்ந்து தன் தலையை கைகளில் ஏந்திக்கொண்டார். அந்நஞ்சை மேலும் வளர்க்க எண்ணி நான் அருகணைந்து 'தாங்கள் எதையும் இழக்கவில்லை, குருநாட்டரசே' என்று சொன்னேன். 'தாங்கள் விழைந்தபடியே அசுரப்பேரரசின் முற்றுரிமையை அடைகிறீர்கள். தேவயானியை அசுரப்பேரரசின் இளவரசியென்றே முறைமை செய்து தங்களுக்கு கையளிக்க விருஷபர்வன் எண்ணியிருக்கிறார். எங்கள் படையும்

கருவூலமும் அசுரஐங்குலத்தின் கோல்களும் உங்கள் உரிமை' என்றேன்."

"ஆண்மையும் நேர்மையும் கொண்ட ஒருவர் அச்சொற்களால் அறச்சீற்றமே அடைவார் என நன்கறிந்திருந்தேன். மேலும் கூர்கொண்டு 'அத்துடன் அசுர இளவரசி சர்மிஷ்டை அழகியல்ல. பிற அசுர குலப்பெண்களைப்போல எளிய தோற்றம் கொண்டவர். தாங்கள் மணக்கவிருப்பவரோ பேரழகி. கொல்வேல் கொற்றவைபோன்ற தோற்றம் கொண்டவர் அவர் என்று சூதர்கள் பாடுகிறார்கள். சக்ரவர்த்தினி என உங்கள் இடம் அமர்ந்தால் அவர் காலடியில் பாரதவர்ஷத்தின் முடிமன்னர்கள் பணிவர். அதுவே கவிஞர்களுக்கும் சூதர்களுக்கும் சொல்கோக்க உகந்ததாக அமையும்' என்றேன். விழிதூக்கி என்னை நோக்கியபோது அவர் கண்களில் வலியை கண்டேன். என்னுள் இருந்த நச்சுமுள்ளின் கூர் தினவு அடங்கியது."

"பின்னர் சொல்லை மடைமாற்றி 'நான் தங்களின் பொருட்டே இதை சொன்னேன், அரசே' என்றேன். அவர் பெருமூச்சுவிட்டு 'நான் வாக்களிக்கையில் விருஷபர்வரின் மகளுக்கே என்னை அளித்தேன். என்னை மீறி இவை அனைத்தும் நடந்தால்கூட அவளுக்கு அளித்த சொல்லிலிருந்து தவறினால் அப்பழியிலிருந்து நான் மீள இயலாது' என்றார். தலைவணங்கி பிறிதொரு சொல் சொல்லாமல் மீண்டு வந்தேன். இளவரசி, உழவன் விதைகளையும் அந்தணன் சொற்களையும் விதைக்கிறார்கள். பருவமறிந்து நான் விதைத்தவை முளைக்கும்" என்றார் சம்விரதர். "இன்று அவையில் யயாதி அளித்த கணையாழியை ஐங்குலக் குடிமூத்தார் சான்றாக சுக்ரரின் மகளுக்கு அளிக்கவிருக்கிறேன். அதற்கு முன் சுக்ரரின்

மகளை தன் மகளாக விருஷபர்வன் ஏற்று அரியணை அமர்த்துவார். அவருக்கு அசுரகுலத்து முடியும் கொடியும் அளிக்கப்படும். யயாதியின் கணையாழி அவருக்கு அளிக்கப்பட்டபின் அசுர குலத்தின் ஒப்புதலுடன் அவர் கணையாழி யயாதிக்கு அளிக்கப்படும்.”

சர்மிஷ்டை தலையசைத்தாள். “தாங்கள் தேவயானியின் அணுக்கச்சேடியாக தாலம் ஏந்தி இடம் நிற்கவேண்டும். அதைச் சொல்லிச்செல்லவே வந்தேன். பணிக, எழுவதற்கான காலம் வரும்” என்றார் சம்விரதர். “ஆம், அது என் கடமைதானே?” என்றாள் சர்மிஷ்டை. “குடிப்பேரவையிலேயே இச்செய்தியும் அறிவிக்கப்படவேண்டும். அது வெறும் சொல்லாக அன்றி காட்சியாகவே இவர்கள் அனைவரின் உள்ளத்திலும் பதியவேண்டுமென்று சுக்ரரின் மகள் விரும்புகிறார். அதன் பொருட்டே இவ்வாணையை அவர் விடுத்திருக்கிறார்” என்ற சம்விரதர் “இளவரசி, நான் ஐம்பதாண்டுகாலம் அமைச்சுப்பணி புரிந்தவன். சுக்ரரின் மகளைப்போன்ற அரசுத்திறனை எவரிடமும் கண்டதில்லை. பேரரசை மறுசொல்லின்றி ஆளும் ஆற்றல் கொண்டவர் அவர். அவர் காலடியில் குருநாட்டின் யயாதியே பணிந்தமரப் போகிறார். உங்கள் நெறியை நீங்களே கற்றுக்கொள்ளவேண்டும்” என்றார்.

சர்மிஷ்டை புன்னகைத்து “தாங்கள் சொன்னீர்களே நீர் என்று, அமைச்சரே, நீரின் பாதை அனைத்தையும் தழுவிக்கொள்வது, வளைந்து தன் வழிதேர்வது, அணுகுவதனைத்தையும் ஈரமாக்கி நெகிழச்செய்வது, நிறைந்த இடமெங்கும் விதைகளனைத்தையும் முளைக்கச்செய்வது” என்றாள். சம்விரதர் புன்னகைத்து “உண்மை. அவ்வாறே நிகழட்டும், இளவரசி” என்றார். மீண்டும் அவள் தலைமேல் கைவைத்து

“கூரிய நற்சொல் உங்கள் நாவிலெழுகிறது. மூதன்னையர் உடனிருக்கிறார்கள்” என்றார்.

வெளியே மங்கல ஓசை கேட்டது. உள்ளே சம்விரதர் “தேவயானி வருகிறார்” என்றார். “நான் சென்று அவர்களை எதிர்கொண்டு இங்கு அழைத்து வருகிறேன். நீங்களும் அவரும் சந்திக்கும் தருணம் இப்படி தனியறையில் நிகழட்டும் என்றே இதை ஒருங்கு செய்தேன். இவ்வொரு தருணத்தை நீங்கள் கடந்துவிட்டீரக்ள் என்றால் பிறகெதுவும் கடினமல்ல.” சர்மிஷ்டை “ஆம்” என புன்னகைத்தாள். “இத்தகைய உச்சதருணங்களில் நாம் யார் என்றும் எங்கு எவ்வண்ணம் இருக்கப்போகிறோம் என்றும் நம் அகத்திலிருக்கும் ஒன்று முடிவெடுத்து வெளிவந்து தன்னை நிகழ்த்திக்கொள்கிறது. அதுவே எஞ்சிய நாளெல்லாம் நம்மை வழிநடத்தும். அது சூழ்ந்திருக்கும் விழிகளால் திசைதிருப்பப்படாமல் இருக்கட்டும் என்றே இவ்வறையை அமைத்தேன்” என்றபின் தலைவணங்கி வெளியே சென்றார்.

சர்மிஷ்டை திரும்பி அப்பால் அறைச்சாளரத்தருகே அச்சொல்லாடலைக் கேட்காதவள் என நின்றிருந்த அணுக்கச்சேடியிடம் “நீயும் இவ்வறையில் இருக்க வேண்டியதில்லை” என்றாள். “இளவரசி…” என அவள் சொல் எடுக்க “அது முழுத்தனிமையில் நிகழட்டும்” என்றாள். “நான் உடனிருக்கவேண்டும் என்றீர்கள், இளவரசி…” என்றாள் சேடி. “ஆம், இன்றுவரை என்னில் ஒரு பகுதியை உன் வழியாக நிகழ்த்திக்கொண்டிருந்தேன். இளவரசியருக்கு அந்தத் தேவை உண்டு. இனி நான் இளவரசி அல்ல. அடுத்த கணம் முதல் சேடியாகப்போகிறேன். சேடிக்கு சேடியர்கள் இருக்க இயலாது” என்றாள் சர்மிஷ்டை. சேடி கண்ணீரோடு “இன்று நான் சொன்ன

சொற்களுக்காக துயரடைகிறேன், இளவரசி. உங்கள் தோழியாக இருப்பதில் நான் அடைந்த நிறைவை பிறிதேதோ சொற்களால் மறைத்துவிட்டேனோ என்று நினைக்கிறேன்" என்றாள்.

"நீ சரியாகவே சொன்னாய், என்னுள் ஏந்துவதற்கு நான் நாணுவனவற்றையும் வெளிப்படுவதற்கு அஞ்சுவனவற்றையும் உனக்கு அளித்தேன். அத்தனை மேலோரும் தங்கள் பணியாளர்களிடம் செய்வது அது. நாளடைவில் மேலோரின் கீழ்மைகள் மட்டுமே ஊழியர்களின் உருவங்களாகின்றன. அடிமையாவதென்பது அவ்வண்ணம் அகம் அழிவதே" என்றாள் சர்மிஷ்டை. "ஆம்" என்றாள் சேடி. "அச்சொற்களைச் சொல்வதற்கு பிறிதொரு தருணம் எனக்கு வாய்க்கப்போவதில்லை என்று ஓர் உள்ளுணர்வு சொன்னது." சர்மிஷ்டை "எந்தையிடம் இறுதியாக நான் கோரப்போவது ஒன்றே. எந்தை உன்னை தன் மகளாக முறைப்படி ஏற்கவேண்டும். என் எச்சமென உன்னை இங்கு விட்டுச்செல்கிறேன். நான் அளித்த அச்சங்களிலிருந்தும் ஐயங்களிலிருந்தும் நீ விடுதலைகொண்டாய் என்றால் எந்தை அவர் மகிழும் ஒரு மகளை பெறுவார்" என்றாள்.

சொல்திகைத்து, மெய்ப்புகொண்டு "இளவரசி" என்று அழைத்தபடி சேடி வந்து சர்மிஷ்டையின் கைகளை பற்றிக்கொண்டாள். அழுகையை அடக்க முயன்று அது கரைகடக்க தன் நெற்றியை அவள் தோளில் சாய்த்து குரல்குமுறி அழுதாள். "இத்தருணத்தை நான் கடக்க வேண்டுமென்றால் இவ்வுணர்வு நிலைகள் என்னை சூழக்கூடாது. இனி நீ என் தங்கை, இங்கிருந்து நான் செல்வது வரை. அதன் பிறகு விருஷபர்வரின் மகள், ஹிரண்யபுரியின் இளவரசி. மங்கலம் கொண்டு நிறைந்து வாழ்க! நன்மக்களை ஈன்று நிறைக!"

என்றாள் சர்மிஷ்டை. “இல்லை இளவரசி, நான்...” என்று அவள் அழுதபடி சர்மிஷ்டையின் கைகளைப் பிடித்து உலுக்கினாள். அவளால் அத்தருணத்தை கடக்கமுடியவில்லை. பலநூறு சரடுகளால் கட்டப்பட்டு திமிறுபவள்போல துடித்தன அவள் உடலும் உள்ளமும்.

“வெளியே செல்! இது என் ஆணை!” என்றாள் சர்மிஷ்டை. அவள் முகத்தைப் பொத்தியபடி மெல்லிய காலடி வைத்து வெளியே சென்று கதவை சார்த்திக்கொண்டாள். சர்மிஷ்டை தன் ஆடையை சீர்படுத்தி குழலை சீரமைத்து நின்றாள். அப்போது தன் உடலில் இருந்து எழுந்த கல்லணிகளின் ஓசை மிக அணுக்கமாக இருப்பதை உணர்ந்தாள். கண்ணுக்குத் தெரியாத மூதன்னையரால் சூழப்பட்டிருப்பதுபோல. மானுடச் சொல்லென பொருள் கொள்ளாத பிறிதொரு மொழிச்சொற்கள் ஒலிப்பதைப்போல. தன்னை அக்கல்லணிகளை அணியச்செய்தவள் தன்னை அறியாமலேயே பேருதவி ஒன்றை ஆற்றியிருக்கிறாள். தன்னை முழுமையாக வரையறுத்துக்கொள்ள உதவியிருக்கிறாள். இடர் என்பது தான் யார் என்று வரையறுக்க முடியாதிருப்பதே. தன் ஓவியத்தை தானே தீட்டி முடித்த பின்னர் துயரேதும் இல்லை. முதன்மைத் துயரென்பது தத்தளிப்புதான். விடுதலை என்பது நிலைபேறு. எச்சங்களேதும் இல்லாமல் தன்னை முடிவுசெய்து கொள்ளல். நிறைநிலைகொண்டவர்களின் பயணமே மெய்ச்செலவு. ஆம், எத்தனை தெளிவாக எண்ணுகிறேன்! கற்பன அறிவென்றாவதற்கு அதற்குரிய தருணங்கள் வாழ்வென வந்தமையவேண்டும் போலும்!

வெளியே மங்கல ஓசை முழங்கியது. கதவு திறந்து நிமித்தக்கூவி கையில் வெள்ளிக்கோலுடன் வந்து உரத்த

குரலில் “பிரஹஸ்பதியின் குருமரபின் முதன்மையறிஞர் சுக்ரரின் மகள் தேவயானி வருகை” என்று அறிவித்தான். தொடர்ந்து இரு அணிச்சேடியர் வலமும் இடமும் ஆடை பற்றி உதவ இளவரசியருக்குரிய முழுதணிக்கோலத்தில் தேவயானி அறைக்குள் வந்தாள். உடலெங்கும் எரிசெம்மையும் மலர்ச்செம்மையும் கூடிய அருமணிகள் பதித்த நகைகளை அணிந்திருந்தாள். இளந்தழல் வண்ணம்கொண்ட செம்பட்டாடை மெல்ல நெளிய நெய்பற்றிநின்று எரியும் தழல் ஒன்று அறைக்குள் புகுந்ததுபோல் தெரிந்தாள்.

பெருகுந்தோறும் பொருளிழப்பவை நகைகள் என அவள் எண்ணியிருந்தாள். அவை ஒவ்வொன்றும் பொருளாழம் கொண்டிருப்பதை அவள் உடலில் கண்டாள். நகைகளுக்குப் பொருள் அளிப்பவை உடல்கள், காவியத்தில் அணிகளுக்கு உணர்வுகள் பொருள் அளிப்பதைப்போல என எங்கோ கற்ற இலக்கண வரி நினைவில் எழ அவளுக்குள் மெல்லிய புன்னகை கூடியது. அது முகத்திலும் எழுந்தது. அதைக் கண்டு ஒருகணம் குழம்பி ஒளிமங்கி மீண்ட தேவயானியின் கண்களைக் கண்டதும் அவள் மேலும் உள்ளுவகை கொண்டவளாக ஆனாள்.

தேவயானியின் அருகே சென்று இடைவரை உடல் வளைத்து தலைவணங்கி “நான் தங்கள் அடியவள் சர்மிஷ்டை, உங்கள் ஏவல்பணிக்கு சித்தமாக இருக்கிறேன்” என்றாள். அவள் விழிகளை கூர்ந்து நோக்கிய தேவயானி தன் கால்களைக் காட்டி “என் ஆடை மடிப்புகளை சீர் செய்” என்றாள். “ஆணை” என்று முழந்தாளிட்டு அருமணிகள் பொன்னூல்களால் கோத்துப்பின்னிச் சேர்க்கப்பட்ட அவள் ஆடையின் மடிப்புகளை ஒன்றன்மேல் ஒன்றாக பற்றி அமைத்து சீராக்கி மும்முறை

நீவிவிட்டு எழுந்து தலைவணங்கினாள். "நன்று!" என்றபின் மீண்டும் தேவயானியின் விழிகள் சர்மிஷ்டையின் விழிகளை சந்தித்தன. சர்மிஷ்டை பணிவுடன் நோக்கி நிற்க மெல்லிய பதற்றத்துடன் தேவயானியின் விழிகள் விலகிக்கொண்டன. சர்மிஷ்டையின் முகம் எதையும் காட்டவில்லை. ஆனால் அவளுக்குள் ஒரு புன்னகை ஒளிகொண்டது.

"தேவயானியை விருஷபர்வன் அவையறிவித்தபோது அசுரர்கள் எதிர்க்கவில்லை" என்றான் முண்டன். "ஏனென்றால் அவர்கள் அனைவருமே சர்மிஷ்டையைவிட தேவயானியை ஒரு படி மேல் என்று எண்ணியிருந்தனர். முறைமை மீறப்படுவதை அவர்களில் மூத்தோர் சிலர் சற்றே எதிர்த்தனர். பூசகர் சிலர் கசந்தனர். அவர்களுக்கு உரிய சொல்லளிக்கப்பட்டதும் அனைவரும் ஏற்றுக்கொண்டனர்." பீமன் "ஆம், அருந்திறல் கொண்டவர்களை வழிபட்டு ஏற்றுக்கொள்வது குடிகளின் உளப்போக்கு. அங்கே நெறியும் பற்றும் நிலைகொள்வதில்லை" என்றான்.

"தேவயானியின் அருந்திறலை அம்மக்கள் எவரும் அறிந்திருக்கவில்லை. அதை அறியுமளவுக்கு அவர்களுக்கு அறிவும் இல்லை" என்றான் முண்டன். "விழி மட்டுமே கொண்டவர்கள் அனைவரும் அறியும்படி ஒன்று உண்டு. இளவரசே, அத்தனை அரசாடல்களிலும் மறுக்கமுடியாத விசையாகத் திகழ்வது அது, உடலழகு. தேவயானியின் முன் சர்மிஷ்டை வெறும் பெண். இருவரும் வந்து அவைநின்ற அக்கணத்திலேயே உள்ளத்தை அறியாமல் விழிகள் அனைத்தையும் முடிவெடுத்துவிட்டன" என்றான்.

"அத்துடன் சர்மிஷ்டை அசுரமூதன்னையரின் ஆடையும் அணியும் பூண்டிருந்தாள். அவளைக் கண்ட ஒவ்வொரு

அசுரகுடியினரும் தங்கள் இல்லத்துப்பெண் என்றே உணர்ந்தனர். அவளை அணுக்கமாக நெஞ்சிருத்தினர். அவளுக்காக இரங்கினர். பலர் விழிநீர் கசிந்தனர். ஆனால் அரசர்களை மக்கள் தங்களில் ஒருவர் என எண்ணுவதில்லை, தங்களுக்கு அப்பாற்பட்ட ஆற்றலும் தகுதியும் கொண்டவர்கள் என்றே எண்ணுகிறார்கள். ஆற்றலையும் தகுதியையும் அழகிலிருந்து பிரித்து நோக்க அவர்களால் இயல்வதுமில்லை. இளவரசே, தங்களால் இரங்கி நோக்கப்படுபவர்களை அல்ல தாங்கள் அஞ்சி அகல்பவர்களையே அவர்கள் தலைவர்களென ஏற்கிறார்கள். வெறுக்கப்படுபவர்கள்கூட அரசாளலாம், கனிவுக்குள்ளாகிறவர்கள் கோல் கைக்கொள்ள இயலாது.”

“சர்மிஷ்டைக்காக குடிப்பெண்கள் விழிநீர் சிந்தினர். அவளைப்பற்றி நாவழிப் பாடல்கள் எழுந்து இல்லங்களின் கொல்லைப்புறங்களில் புழங்கின. அவளை கைவிட்ட குற்றவுணர்வை வெல்ல அவளை தெய்வமாக்கினர். பலிவிலங்கை தெய்வமாக்கும் வழக்கம் இல்லாத இடம் ஏது? சர்மிஷ்டை அனைத்து நற்குணங்களும் கொண்டவளாக ஆனாள். அணைக்கும் நதி, தாங்கும் நிலம், கவிந்த வானம். பின்னர் பாடல்களில் அசுரகுலம் வாழும்பொருட்டு குருநகரிக்கு அரசியாக தேவயானியை தெரிவுசெய்ததே அவள்தான் என்று கதை எழுந்தது. அழுது மறுத்த தேவயானியிடம் அசுரகுலத்தின்பொருட்டு அத்திருமணத்தை ஏற்கும்படி அவள் மன்றாடும் பதினெட்டு தனிப்பாடல்கள் கொண்ட குறுங்காவியமான காவ்யாசுரம் பெரும்புகழ்பெற்ற நூல்” என்று முண்டன் சொன்னான்.

பீமன் புன்னகைத்து “ஆம், ஒவ்வாதனவற்றை நம் புழக்கத்திலிருந்து அகற்றிவிடவேண்டும், மேலே தூக்கியோ

கீழே அழுத்தியோ. என்றும் இதுவே நிகழ்கிறது” என்றான். முண்டன் உரக்க நகைத்து “அவ்வாறு அகற்றப்பட்டவற்றால் ஆனது புராணம். அன்றாடப் புழக்கத்திலிருந்து எஞ்சுவது வரலாறு. அவை ஒன்றை ஒன்று நிரப்புபவை, ஒன்றை ஒன்று தழுவிச் சுழல்பவை” என்றான். “தேவயானி வரலாற்றுக்குள்ளும் சர்மிஷ்டை புராணங்களுக்குள்ளும் சென்ற முறை இது.”

# மாமலர் - 73

### 73. சொற்றுலா

தேவயானியை யயாதி மணந்த நிகழ்வு பாரதவர்ஷம் முழுக்க கதைகளாக பரவிச்சென்றது. ஒவ்வொரு நாளும் மலையடுக்கிலிருந்து எதிரொலி மீள்வதுபோல அக்கதைகளிலொன்று அவனிடமே திரும்பி வந்துகொண்டிருந்தது. “நூறாயிரம் முறை பிறந்து நூறாயிரம் தேவயானிகளை நான் மணந்திருக்கிறேன் போலும்” என்று வேடிக்கையாக அவன் பார்க்கவனிடம் சொன்னான். “இது முன்பு இலாத ஒரு பெருநிகழ்வு. முதல் முறையாக அசுரகுலமும் ஷத்ரியரும் ஒன்றிணைந்திருக்கிறார்கள். அவர்களுடன் அந்தணர் ஆற்றலும் கலந்திருக்கிறது. தேவர்கள் அஞ்சும் தருணம்” என்றான் பார்க்கவன்.

“மண்ணில் அறம் வளர்வதே தேவர்களின் இயல்பென்கிறார்கள். இங்கு அறம் திகழுமென்றால் தேவர்கள் எதன்பொருட்டு அஞ்சவேண்டும்?” என்று யயாதி கேட்டான். “இங்கு தங்கள் கோல்கீழ் அறம் வாழுமென்பதில் எந்த ஐயமும் இல்லை. ஆனால் அது மானுட அறம். அசுரர்களின் அறத்தால் பேணப்படுவதும்கூட. அந்தண அறத்தால் வழிநடத்தப்படுவது

என்பதனால் வெல்லற்கரியது” என்று பார்க்கவன் சொன்னான். அவன் என்ன சொல்கிறான் என்று புரியாமல் யயாதி நோக்கிக்கொண்டிருந்தான். “இத்தருணத்தில் இச்சொற்களோடு நிறுத்திக்கொள்ள விரும்புகிறேன், அரசே” என்று அவன் சிரித்துவிட்டு “நன்று சூழ்க!” என்று தலைவணங்கி விடைபெற்றான்.

தன்முன் யாழும் முழவும் சிலம்புக்கோலும் குடமுமாக அமர்ந்திருந்த வேசர நாட்டு பாடகர்குழுவை நோக்கி யயாதி வணங்க அவர்களும் எழுந்து பணிந்து வணங்கி நின்றனர். இடப்பக்கமிருந்து தாலங்களில் அவர்களுக்கான பரிசில்களுடன் அணுகிய ஏவலர்கள் நிரைவகுத்தனர். பழகிய அசைவுகள் நடனத்தின் இயல்பான அழகுடன் நிகழ கைநீட்டி அவற்றைப் பெற்று ஒவ்வொருவருக்கும் வழங்கி ஓரிரு இன்சொற்கள் சொல்லி அவர்களை வாழ்த்தினான். அவர்கள் உடல் வளைத்து அவற்றைப் பெற்று புறம்காட்டாது பின் நகர்ந்து சென்றனர்.

அவை கலைந்ததும் ஏவலர் சூழ எழுந்து தன் தனியறைக்கு நடக்கையில் யயாதி மெல்லிய சோர்வொன்றை உணர்ந்தான். ஒவ்வொருமுறையும் தேவயானியை தனிமையில் சந்திப்பதற்கு முன் அந்தச் சோர்வு தன்மீது வந்து கவிவதை அவன் உணர்ந்திருந்தான். ஏறமுடியாத உயரமொன்றின் அருகே சென்று நின்றிருக்கும் மலைப்பை அவளை மணந்த முதல் நாட்களில் அறிந்திருந்தான். பின்னர் அதுவே சலிப்பென்று முகம் மாற்றிக்கொண்டது. நம்மைவிட பெரியவர்களில் நம் ஆசிரியர்கள் தவிர பிற அனைவருமே நமக்கு உள்ளூர சோர்வளிப்பவர்களே என எண்ணிக்கொண்டான். உடனே அது தான் அரசனுக்குரிய ஆணவம் கொண்டிருப்பதனாலா

என தோன்றியது. எளிய மக்களும் அவ்வாறுதான் உணர்கிறார்களா? அதை தான் அறியவே முடியாது.

தனிமையில் இருக்கையில் அவளை கைபற்றிய அந்தத் தருணத்தை தன் எண்ணத்தில் வரைந்தெடுக்க அவன் முயல்வதுண்டு. எண்ணியிராதபோது ஒவ்வொரு நூலிழையும் தெரியும் ஓவியத்திரைச்சீலையென தன் முன் விரியும் அக்காட்சிகள் முயன்று எண்ணுகையில் மட்டும் அலைநீர்ப் பாவைபோல் கலைந்தும் இணைந்தும் துளிகாட்டி பின் மறைந்து விளையாடுவது ஏனென்று அவன் வியந்து கொள்வான். குருநகரியிலும் ஹிரண்யபுரியிலும் தலைமுறைகள் எண்ணி நினைவில் வைத்திருக்கும் தொடர்நிகழ்வாக இருந்தது அவர்களின் மணவிழவு. சொல்லிச்சொல்லிப் பெருகி பின்னர் நினைவுக்கும் அடியில் சென்று கனவுகளென்றே ஆகியது.

மணவுறுதி நிகழ்ந்தபின்னர் அவன் தன் அகம்படியினரும் அணிப்படைகளும் குடித்தலைவர்களுமாக சென்று ஹிரண்யபுரி நகருக்கு வெளியே அவர்களுக்கென அமைக்கப்பட்ட குருபுரி என்னும் இணைவுநகரியில் தங்கினான். குருநகரியின் கொடிபறந்த பெருங்கம்பத்தைச் சூழ்ந்து நாநூறு பாடிவீடுகள் அமைந்திருந்தன. நடுவே அவனுக்கான மூன்றடுக்கு அரண்மனை. அதன் உப்பரிகையிலிருந்து நோக்குகையில் அசுரகுலத்தின் அத்தனை பெருங்குடிகளும் தங்கள் கொடிகளுடன் ஹிரண்யபுரியில் வந்து குழுமிக்கொண்டே இருப்பதை காணமுடிந்தது. மழைப்பெருக்கில் ஓடைகள் தோன்றுவதுபோல நகரைச் சூழ்ந்திருந்த அத்தனை மலையிடுக்குகளில் இருந்தும் அவர்கள் ஊறி வழிந்திறங்கினர்.

சில நாட்களிலேயே ஹிரண்யபுரி பலமடங்கு பெருகி அதன் வெளி எல்லைகள் மலைச்சரிவின் எழுவிளிம்பு வரை சென்று முட்டின. அரண்மனையிலிருந்து கிளம்பி எத்திசையிலும் நகரெல்லைக்குச் சென்று சேர ஓர் இரவும் பகலும் தேவையென்றாயிற்று. ஈச்சை ஓலைகளாலும் மரப்பட்டைகளாலும் கட்டப்பட்ட பல்லாயிரக்கணக்கான குடில்கள் நிரைவகுத்து அவற்றின் கூம்பு முனைகளில் எழுந்த கொடிகள் காற்றில் படபடக்க தரையிறங்கிப் பரவிய வண்ணப்பறவைகளின் சிறகுப்பரப்புபோல விழி சென்று தொடும் எல்லைவரை தெரிந்தது. யானைத் தோல்களையும் எருதுத் தோல்களையும் இழுத்துக் கட்டிய கூடாரங்கள் காற்றில் உடலுப்பி அதிர மலைச்சரிவுகளில் பாறைக்கூட்டங்களென பரவியிருந்தன. இரவும் பகலும் அங்கு எழுந்த மக்களின் ஓசை செவி நிறைத்து சித்தப்பெருக்கை தான் சுமந்து சென்றது.

“பெருமுரசு ஒன்றுக்குள் குடியிருப்பதுபோல் உள்ளது” என்று விழி எல்லை வரை தெரிந்த குடிப்பெருக்கை நோக்கிக்கொண்டு பார்க்கவனிடம் சொன்னான். “அசுரகுலத்தில் இப்போது இங்கில்லாதவர்கள் தங்கள் தெய்வங்களை விட்டுப்பிரியாத நோன்புகொண்ட பூசகர்களும் நடக்கவியலாத முதியோரும் மட்டுமே என்கிறார்கள்” என்றான் பார்க்கவன். யயாதி சிரித்து “அவ்வண்ணமெனில் விண்நிறைந்துள்ள தேவர்கள் அனைவரும் இந்நகருக்கு மேலேயே விழியறியாது கூடியிருக்கிறார்கள். தங்கள் எதிரிகளையன்றி பிறரை எண்ணுவோர் எவர்?” என்றான்.

பார்க்கவன் நகைத்து பின் முகம் மாறி “ஹிரண்யபுரி எத்தனை எளிதாக இவ்விழவை ஏற்றுக்கொண்டது என்பதுதான்

விந்தையாக இருக்கிறது. பதினாறு நாட்களுக்குமுன் அசுரர்களின் நூற்றெட்டு மூதன்னையர்கள் சிலையுருக்கொண்டு சூழ்ந்த ஆலயத்தின் முன் வைத்து விருஷபர்வன் சுக்ரரின் மகளை தன் நாட்டுக்கு இளவரசியாக மகளேற்பு செய்தார். அந்நிகழ்வு நடந்தேறும்வரை அப்படி ஒன்று நிகழக்கூடுமா என்பதே இங்கு ஐயமாக இருந்தது. சர்மிஷ்டைக்கு மாற்றாக தேவயானியை தாங்கள் மணம் கொள்ளும் செய்தி அசுரகுடியினர் அனைவரையும் கொந்தளிக்கச் செய்தது. காடுகளிலிருந்து அவர்கள் பெருகி இறங்கி இந்நகரை சூறையாடக்கூடுமென சாலைகளில் அந்தணர்களும் வணிகர்களும் பேசிக்கொண்டிருந்தார்கள். உண்மையில் நானும் அவ்வாறே அஞ்சினேன்" என்றான்.

"ஆனால் ஒவ்வொரு நாளும் கண்கூடாகவே இந்நகர் மாறிக்கொண்டிருந்தது. கதைகளின் பேராற்றலென்ன என்பதை அப்போது அறிந்தேன். அசுரர்குலம் மாண்பும் பெரும் வெற்றியும் பெறவேண்டுமென்றால் தேவயானியே குருநாட்டின் அரசியாகவேண்டும் என்று சுக்ரர் எண்ணுவதாக சூதர்கள் முதலில் பாடத்தலைப்பட்டனர். அசுரகுலத்து அரசியின் மைந்தர் பிறந்தால் வருங்காலத்தில் அவர்கள் குருநகரின் அரசராக முடியாது என்று அங்குள்ள மூத்தோரும் நிமித்திகரும் மறுத்துவிட்டமையால் விருஷபர்வன் இந்த நுண்ணிய அரசியல் சூழ்ச்சியை செய்திருப்பதாகவும் இதன்படி ஷத்ரியர் மறுக்கமுடியாத அசுரகுல இளவரசி குருநாட்டின் அரியணையில் அமரவிருப்பதாகவும் இனி ஷத்ரியர் குடிகளிலெல்லாம் அசுரக்குருதியே ஓடுமென்றும் பிறிதொரு கதை எழுந்தது."

“இறுதியாக சர்மிஷ்டையின் நாளும் கோளும் அவளுக்கு பேரரசர்கள் பிறப்பதற்கு வாய்ப்பில்லை என்று உரைப்பதாகவும் அவளால் அசுரகுடிக்கு தீங்கு வருமென்றும் அதை தவிர்ப்பதற்காகவே அசுரர்களின் ஐங்குலங்கள் கூடி இம்முடிவை எடுத்ததாகவும் பின்னர் ஒரு கதை” என்றான் பார்க்கவன். “சொல்பெருகும் விரைவைப்போல் அச்சுறுத்துவது ஏதுமில்லை. இன்று இப்பெருக்குடன் சென்று சிலகாலத்திற்கு முன்புவரை அவர்களின் இளவரசியாக இருந்தவள் சர்மிஷ்டை என்று சொன்னால் அப்பெயரை நினைவுகூர்பவர்களே மிகச்சிலர்தான் இருப்பார்கள் என்று தோன்றுகிறது.”

யயாதி “நான் அவளை இன்னும் பார்க்கவில்லை. ஆனால் அவள் நினைவைவிட்டு உளம் ஒழியவும் இல்லை. நானறியாத அப்பெண்ணுக்கு ஏதோ பெரும்பிழை இழைத்துவிட்டேன் என்று தோன்றுகிறது” என்றான். “தாங்கள் இழைத்த பிழை என ஏதுமில்லை...” என பார்க்கவன் சொல்லத் தொடங்க “ஆம், அதை நான் நன்கு அறிவேன். ஆயிரம் முறை அதை உள்ளத்திற்கு உரைத்தாலும் உள்ளம் ஏற்றுக்கொள்வதாக இல்லை” என்றான்.

மணநாளில் ஹிரண்யபுரியின் நூற்றியெட்டு மாமுற்றங்களில் மணமேடை அமைக்கப்பட்டது. அசுரகுடிகள் அவை அனைத்தையும் முற்றிலும் நிரப்பி அலையும் பெருக்கும் கரையும் தங்கள் உடல்களே என்று ஆகி சூழ்ந்திருந்தன. முதல் மேடை அரண்மனையின் பெருமுற்றத்தில் அமைந்திருந்தது. ஹிரண்யபுரியிலிருந்து வந்த நூற்றெட்டு பெருங்குல மூத்தோரும் அவர்களின் அகம்படியினரும் நூற்றெட்டு முதுவைதிகரும் அங்கே குருநாட்டின் கொடிகளுடன் முகப்பில் அமர்ந்திருந்தனர்.

அணியறையிலிருந்து மணமேடை நோக்கி செல்வதற்கு நீண்ட நடைபாலம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. விருஷபர்வனின் பேரமைச்சர் சம்விரதர் அணியறைக்குள் வந்து தலைவணங்க முழுதணிக்கோலத்தில் அமர்ந்திருந்த யயாதி எழுந்து கைகளைக் கூப்பியபடி நின்றான். குருநாட்டின் மணிமுடியை எடுத்து இரு அணிச்சேவகர் அவன் தலையில் சூட்டினர். வலம்புரிச்சங்கை ஊதியபடி மூன்று அணிச்சேவகர் முன்னால் சென்றனர். குருநாட்டின் கொடியை ஏந்தியபடி வெள்ளிக்கவச உடையணிந்த வீரனொருவன் தொடர்ந்தான். அவனைத் தொடர்ந்து மங்கல இசை முழக்கியபடி பதினெட்டு சூதர்கள் அவனுக்குப் பின்னால் நிரைவகுத்தனர்.

யயாதி அதே விரைவில் நீள்காலெடுத்து வைத்து நடந்து அப்பாலத்தின் மீதேறி சென்றான். அவன் தலைக்கு மேல் எழுந்த வெண்கொற்றக்குடையைப் பற்றியபடி அவனுக்குப் பின்னால் இரு ஏவலர்கள் வந்தனர். குருநாட்டின் படைத்தலைவன் வஜ்ரபாகு கவசஉடையணிந்து நீண்ட உடைவாளுடன் அவன் வலம் நடக்க அணிக்கோலத்தில் பார்க்கவன் இடம் நடந்தான். பட்டுத் தோரணங்கள் காற்றில் இறகென, புகையென, ஒளியென படபடத்த நடைபாதையில் அவன் தோன்றியதும் அங்கிருந்த அத்தனை அசுரகுலத்தோரும் தங்கள் கைகளைத் தூக்கி வாழ்த்தொலி எழுப்பினர்.

குரல்கள் முயங்கி கலந்து மொழியிலாத பேரோசையாக அது அவனைச் சூழ்ந்து அலையடித்தது. பிறந்த நாள் முதலே வாழ்த்துகள் நடுவே அவன் வளர்ந்திருந்தாலும்கூட புயலில் சிறு சருகென அவனை ஆக்கும் அத்தகைய வாழ்த்தொலிப் பெருக்கை அவன் அறிந்ததில்லை. முதல் சில கணங்கள் இரு கால்களும் பதறிக்கொண்டிருந்தன. நெஞ்சு அவ்வோசையை

அள்ளி தன்னுள் நிறைத்து சொல்லற்று சிலைத்திருந்தது. பின்னர் தன் சித்தத்தை முற்றிலும் அதற்கு அளித்தான். அவ்வொலியே அவனை அள்ளிச் சுழற்றிக் கொண்டுசென்று மணமேடையில் நிறுத்தியது.

வைதிகர் கங்கைநீர் தூவி அவனை வாழ்த்தி தூய்மை செய்தபின் குருநாட்டிலிருந்து வந்திருந்த குடிமூத்தோர் மேடைக்கு வந்து அவனுக்கு தங்கள் கோலை அளித்து அரிமலரிட்டு வாழ்த்தினர். கை கூப்பியபடி அவன் மணமேடையில் நின்றிருக்க மறுபக்கம் பிறைவடிவில் அமைந்திருந்த நடைபாதையினூடாக பொன்உருகி வழிந்து வருவதுபோல ஓர் அணி நிரை அணுகியது. பொன்னொளிர் நகைபொலிந்த அணிச்சேடியர் ஹிரண்யநகரியின் கொடியேந்தி முன்னால் வந்தனர். மங்கல இசை முழங்க வந்த சேடியருக்குப்பின் அணித்தாலங்கள் ஏந்திய சேடியர்நிரை தொடர்ந்தது. அதற்குப் பின்னால் ஏழு அழகிய சேடியரால் வழி நடத்தப்பட்டு தேவயானி நடந்து வந்தாள். அவளைப் போலவே உடையணிந்திருந்த அவள் தோழி வண்ண நிழலென அவள் மேலாடை நுனியைப்பற்றி மெல்லிய குரலில் நகைச்சொல் உரைத்து உடன் வந்தாள். வாழ்த்தொலிகள் ஒவ்வொரு பெருந்தூணையும் வீணைக்கம்பிகளென அதிரவைத்தன.

அவன் நேர்விழி நிலைக்க அவளை நோக்கலாகாது என்ற உணர்வை அடைந்து முகம் திருப்பிய பின்னரே அவள் முகத்தை நன்கு நோக்கவில்லை என்று உணர்ந்தான். மலர்களால் கிளை மறைவதுபோல அவள் அணிகள் அவளை மறைத்திருந்தன. மீண்டும் திரும்பி நோக்குதல் முறையல்ல என்றுணர்ந்து கழுத்தை இறுக்கி தன் முன் அலையடித்த முகங்களின் கொந்தளிப்பை இலக்கின்றி நோக்கி நின்றான்.

முதலில் அசுரகுலமூத்தார் எழுவரால் விருஷபர்வன் மேடைக்கு அழைத்துவரப்பட்டான். முடிசூடி செங்கோலுடன் வந்து யயாதியின் வலப்பக்கம் நின்றான். தன் முதன்மை மாணவர் சுஷமரும் கிருதரும் துணைவர முனிவர்களுக்குரிய துவராடை அணிந்து சடைக்கற்றைகளை மகுடமென சுற்றிக் கட்டி சுக்ரர் கைகூப்பியபடி மேடைக்கு வந்து நின்றார்.

சம்விரதர் அறிவிப்பு மேடையை நோக்கி கைகாட்ட நிமித்திகன் எழுந்து திருமணச் சடங்குகள் தொடங்குவதை அறிவித்தான். அசுரகுலத்தின் சடங்குகள் ஷத்ரியர்களின் குலச்சடங்குகள் போலவே இருந்தன. ஆனால் நோக்க நோக்க நுண்ணிய வேறுபாடுகளை கொண்டிருந்தன. ஒவ்வொன்றிலும் அவன் சித்தத்தில் ஒருபகுதி சென்று படிந்து மீண்டது. அனைத்தையும் நோக்கி நடித்தாலும் அவன் எதையும் முழுதறியவுமில்லை. சடங்குகள் தனியாளுமையைக் கரைத்து பெருந்திரளில் ஒன்றாக ஆக்கும் வல்லமை கொண்டவை. அச்சடங்குகளை முன்னரும் எத்தனையோ தலைமுறையினர் அவ்வண்ணமே செய்திருப்பார்கள். வரும்தலைமுறையினர் செய்யவிருக்கிறார்கள். மாறுபவை முகங்கள். அல்லது அவையும் மாறுவதில்லையோ?

சடங்குகளை வெறுப்பவர்கள் தனியர். மேலெழுந்தவர் அல்லது கீழடைந்தவர். மக்கள் சடங்குகளில் உவகைகொண்டு திளைக்கிறார்கள். மாற்றுருக்கொண்டு சிற்றூர்களின் வழியாக அலைகையில் மணச்சடங்குகளில், மைந்தர்விழவுகளில் நிறைந்து பொங்கும் முகங்களை அவன் கண்டிருக்கிறான். பெண்கள் சடங்குகளில் பிறிதொரு துளியும் எஞ்சுவதில்லை. ஆனால் இளமைந்தர் எப்போதும் சடங்குகளுக்கு வெளியேதான் இருக்கிறார்கள்.

கைப்பிடிகளிலிருந்து திமிறி விலகுகிறார்கள். ஒவ்வாத ஒலியெழுப்புகிறார்கள். வினாவெழுப்புகிறார்கள். சிணுங்குகிறார்கள். சடங்குகளில் சிறுவர் வளைந்தும் திரும்பியும்தான் நிற்கிறார்கள். தானென ஓங்கியும் சடங்குகளில் முழுதமைபவர்கள் உண்டா?

எத்தனை பழமையான சடங்குகள்! இதோ இப்போது நான் வேடன், கொன்ற விலங்கைக் கொண்டுவந்து பெண்ணை ஈன்றவனுக்கு அளிக்கிறேன். அது இன்று பொன்னில் வடித்த மானின் சிலை. இச்சடங்கில் நான் மீனவன். வெள்ளிமீன்களை கூடை நிறைத்து அவள் குலமூத்தாருக்கு அளிக்கிறேன். கன்றோட்டுகிறேன். அவள் பொற்கலம் நிறைய பாலுடன் வந்து எனக்கு அளிக்கிறாள். இவர்களின் குடி அடையாளங்களை நான் சூடி என் குடி அடையாளங்களை திரும்ப அளிக்கிறேன். என் மூதாதையருக்கு இப்புதிய பெண்ணை காட்டுகிறேன். அவர்களின் சொல்லை விண்ணிலிருந்து பெற்று எனக்களிக்கும் பூசகரைப் பணிந்து காணிக்கை வைக்கிறேன்.. இச்சடங்குகளினூடாக இன்று இவ்வடிவுகொண்டு இம்மேடையில் நிற்கும் என் குருதி இதற்கு முன் எடுத்த அத்தனை வாழ்க்கைகளையும் மீண்டும் இதோ நடிக்கிறேன்.

ஒரு பெண்ணை மணம்முடிப்பது அத்தனை எளிய நிகழ்வு அல்ல. விலங்கென மிக மிக எளிது. அதை முனைந்து முயன்று பெரிதாக்கிக் கொள்கிறது மானுடம். இப்பெண்ணை இங்கு நான் கைபற்றுவதென்பது என் மூதாதையர்தொடர் இத்தருணத்தில் அடையும் ஒரு பெருந்திருப்பம். என் குருதியில் முளைக்கும் என் வழித்தோன்றல்களில் முதற்கணம். இந்தப் பெண் என்பதால் இது தெரிகிறது. எந்தப் பெண்ணும் அப்படி அல்லவா? சடங்குகளென்பதே ஒவ்வொரு

எளிய அன்றாடச் செயலையும் வாழ்வெனும் பெருக்கில் பொருத்தி மேலும் மேலும் பொருட்செறிவு அடையவைப்பதற்காகத்தான்.

மங்கல இசை தாளம் மாறி அதிர்ந்து பெருக மணநிகழ்வை நடத்திய முதுபூசகர் கைகாட்ட பார்க்கவன் குனிந்து அவன் காதில் "வலக்கை நீட்டி பற்றுங்கள், அரசே" என்றான். விருஷபர்வனும் சுக்ரரும் இரு கைகளாலும் தேவயானியின் கைகளைப் பிடித்து மெல்ல தூக்கி அவன் கையில் அளித்தார்கள். கைநீட்டி அவள் கையைப்பற்றி நோக்கியபோது மலரணிகளாலும் அருமணிச்சரங்களாலும் மூடப்பட்ட அவள் முகம் மெலிதாக தெரிந்து மறைந்தது. பெருவிழவுகளில் அணிகொண்டு பல்லாயிரம் தலைகளுக்கு மேலெழும் பல்லக்கில் அமர்ந்திருக்கும் அன்னை தெய்வத்தின் முகம் போல. மானுட உணர்வுகளுக்கு அப்பால் பிறிதொரு பேருணர்வு கொண்டு வெறித்த விழிகள்.

திடுக்கிட்டவன் போல் உடல்அதிர விழிவிலக்கி கையசைத்த பூசகரை பார்த்தான். பன்னிரு காலடி என்று அவர் சொன்னார். அந்தணருக்கும் ஷத்ரியர்களுக்கும் ஏழு காலடிகள். குடி, குலம், செல்வம், மைந்தர், அறம், வீடு, தெய்வம் என. இங்குள்ள மேலும் ஐந்து காலடிகள் என்ன? அவன்மேல் அரிமலர் மழை பொழிந்து முற்றிலுமாக மூடியது. பெருகிச் சரியும் அருவிக்குக் கீழ் நின்றிருக்கும் முழுத்தனிமை. அப்போது மிகத் தெளிவாக அக்கணம் நிகழ்ந்துகொண்டிருப்பதுபோல் மலர்ப்புதைவென ஆழ்குழியிலிருந்து நீண்டு மேலெழுந்த அவள் கையை அவன் கண்டான். அதைப்பற்றி மேலே தூக்கியபோது மலர்க்கொடியும் சருகுகளும் உதிர மண் பிளந்தெழுந்ததுபோல் வந்த அவள் முகத்தை பார்த்தான்.

எங்கிருக்கிறோம் என்னும் உணர்வு அகல நிலை தடுமாறி விழப்போனவனை பார்க்கவன் கை இறுகப்பற்றி நிறுத்தியது. “அரசே...” என்று அவன் காதில் சொன்னான். “இன்நீர்... விடாய் கொண்டிருக்கிறேன்” என்று யயாதி சொன்னான். “சற்றுநேரம் பொறுத்துக்கொள்ளுங்கள், அரசே” என்றான் பார்க்கவன். எட்டாவது அடி அவர்களுக்கு மண்ணில் ஒரு மரமாக முளைத்து எழுதல். மலர்கொள்ளல். காய்த்துத் தாழ்தல். கனிந்து உதிர்தல். இன்னுணவாதல். விதையெனப் புதைந்து மூதாதையர் சொல் கேட்டு தன்னை உணர்ந்து மீண்டும் எழுதல். அசுரர்களின் தொல் மொழி முழவோசை போலிருந்தது. அதன் நுண்சொற்கள் ஒவ்வொன்றும் முரசுத்தோலை என நெஞ்சை அறைந்தன.

“அமரலாம், அரசே” என்று பார்க்கவன் சொல்லி அவன் கையை பற்றினான். அரியணையில் அவன் அமர சேடியரால் ஆடை மடிப்புகள் சீர் செய்யப்பட்டு தேவயானி மெல்ல அருகமர்ந்தாள். அணிகளின் நுண்ணிய ஓசை. வியர்வையும் கசங்கும் மலரும் புதுப்பட்டும் இணைந்த பெண் மணம். அவன் உடல் காய்ச்சல் கண்டவனைப்போல் பதறிக்கொண்டிருந்தது. மீண்டும் அவன் மண்பிளந்தெழுந்த அந்த முகத்தை அருகிலென கண்டான். அவ்விழிகளை. அவை அவனை நோக்கவில்லை. நெஞ்சுருகி கைகூப்பி நின்றிருக்கையில் நோக்கிலாத ஒளிகொண்டிருக்கும் கருவறைத் தெய்வம்.

அங்கிருந்து சடங்குகள் அனைத்தையும் முடித்துக் கிளம்பி அடுத்த மணவறைக்குச் சென்றான். பதினெட்டு நாட்கள் தொடர்ந்து நூற்றெட்டு பெருமுற்றங்களிலும் அச்சடங்குகள் மீள மீள நிகழ்ந்தன. இடைவேளைகளில் துயின்று ஒவ்வொரு முறையும் நீராடி அணிகொண்டு நூற்றெட்டு மணமேடைகள்.

மணநிகழ்வுகள் முடிந்தபோது அவன் உடல் அனல் கொண்டிருந்தது. உதடுகள் வறண்டு கண்களில் நோக்கு அலையடிக்க எங்கிருக்கிறோம் என்றறியாமல் அவன் தள்ளாடினான். அவனை கைபற்றி கொண்டுவந்து மஞ்சத்தில் படுக்க வைத்தார்கள். அவன் தலையை மென்சேக்கையில் புரட்டியபடி “முளைத்தெழுதல்… முளைத்தெழுதல்… முளைத்தெழுகிறது கை” என்று முனகிக்கொண்டிருந்தான்.

மஞ்சத்தறைக்கு யயாதி சென்றபோது தேவயானி அங்கிருக்கவில்லை. அவள் சேடிதான் அங்கே நின்றிருந்தாள். “அரசி யவனத்தூதர்களுடன் அவையிலிருக்கிறார்கள், சற்று காலம் பிந்தலாமென தெரிவித்தார்கள்” என்றாள். அவன் முன்னரே அவள் அங்கிருக்கமாட்டாள் என எதிர்பார்த்திருந்தான். அவள் அங்கில்லாதது விடுதலையுணர்வையும் அளித்தது. தலையசைத்தபின் உள்ளே சென்று மஞ்சத்தில் அமர்ந்தான். “அரசிக்கு செய்தியென ஏதும் உண்டா?” என்று அவள் கேட்டாள். “இல்லை. நான் இங்கு காத்திருப்பதை மட்டும் சென்று சொல்” என்றான். அவள் “ஆணை” என தலைவணங்கி அகன்றாள்.

ஐந்தடித் தொலைவுக்கு அப்பாலிருக்கையில் அவள் தேவயானி போலவே தெரிவதை அவன் பலமுறை நோக்கி உளம் அதிர்ந்ததுண்டு. அணுகும்போது அவளிலிருந்து மெல்லிய மேலாடை நழுவுவதுபோல தேவயானி நழுவி பின்னால் விலகுவதுபோலிருக்கும். அகன்றுசெல்கையில் எந்தப் புள்ளியில் தேவயானி வந்து அவளில் கூடுகிறாள் என அவன் நோக்கிக்கொண்டிருப்பான். இடையசைவில் நடைநிமிர்வில் குழல்நெளிவில் கைவீச்சில்… தனித்தனியாக ஏதும் தெரிவதில்லை. நோக்கிக்கொண்டிருக்கும் விழிகளை சற்றே

விலக்கி மீண்டும் நோக்கினால் தேவயானி எனக் கண்டு உள்ளம் அதிர்வுகொள்ளும்.

பீடத்தின் மேலிருந்த நூல்களை கையால் அளைந்துகொண்டிருந்தான். பின்னர் கைப்போக்கில் ஒன்றை எடுத்துப் பிரித்தான். அவன் எண்ணியதுபோல அது ஆட்சிநூல். மந்தாகினிதேவி இயற்றிய சரபஸ்மிருதி. அதை அடுக்கி நூலைச்சுழற்றி அப்பால் வைத்தான். அங்கு அரசியென வருவதற்கு முன் அவளுடைய முதன்மை ஆர்வம் காவியத்தில்தான் இருந்தது என அவளே சொல்லியிருந்தாள். அவளை அரண்மனையின் சுவடிநிலையத்திற்கு கூட்டிச்சென்றிருந்தபோது விழிவிரிய சுவடிகளை எடுத்து பிரித்துப்பிரித்து நோக்கியபடி "என்ன, அத்தனை நூல்களும் அரசுசூழ்தல் குறித்தா?" என்றாள். "இங்கு அனைத்து நூல்களும் உள்ளன. ஆனால் நான் ஈடுபடுவது இவற்றிலேயே" என்றான்.

"அரசுசூழ்தலை நானும் கற்றுள்ளேன். அவை நெறிகளும் நெறிவிலக்குகளும் ஊடுபாவென கலந்த ஒரு பெரும்பரப்பு. எந்தப் புள்ளியிலும் நெறியும் அதன் விலக்கும் இணைந்துதான் இருக்கும். கொள்வது நெறியையா விலக்கையா என்பது அதை கையாளும் அரசனின் விருப்பம் என்று தோன்றியது. அவ்வாறென்றால் நெறிநூல்கள் என்பவை அரசன் முடிவெடுப்பதற்கு உதவுபவை அல்ல, அவன் எடுத்த முடிவை அக்குடிகள் ஏற்பதற்கு மட்டுமே உதவுபவை என்று தோன்றியது. அதன்பின் அதில் ஆர்வமெழவில்லை" என்றாள்.

"நெறிகள் நூல்களில் வெறும் சொற்கள். கண்முன் வாழ்க்கையென அவை எழுந்து வந்து நின்றிருக்கையில் நுண்சொல் தொட்டு எழுந்து வரும் தெய்வங்கள் என அவை உயிர்கொள்வதை காணலாம்" என்று யயாதி சொன்னான். "நீ

என்னுடன் நெறியவையில் அமர். என் வரைக்கும் வருபவை அறச்சிக்கல் கொண்ட வழக்குகளாகவே இருக்கும். துலாமுள் நிலைகொள்ள நெடுந்தொலைவை ஆடிஆடி கடக்கவேண்டியிருக்கும்" என்றான். "ஆம், நான் விழைவதும் அதையே" என்றாள் தேவயானி. அவனுடன் மறுநாளே வந்து நெறியவையில் அமர்ந்தாள். அவன் தான் சொன்னதை மறந்து "குடியவையில் அமர்ந்து களைத்திருப்பாய்" என்றபோது "இது என் அவை" என்று கூரிய சொற்களால் சொன்னாள்.

அன்று வந்திருந்த வழக்கு ஆயர்குடியினருக்கும் வேளாண்குடியினருக்குமான நிலவுரிமை குறித்தது. ஆயர்களின் மேய்ச்சல்நிலங்களை வேளாண்குடிகள் கைப்பற்றிவிட்டதால் இருசாராருக்கிடையே நிகழ்ந்த போரில் இருகுடிகளிலுமாக நால்வர் கொல்லப்பட்டிருந்தனர். இருசாராரும் தங்கள் தரப்பை சொல்லிமுடித்ததும் யயாதி புன்னகையுடன் தேவயானியை நோக்கி திரும்பி "உன் கருத்து என்ன, அரசி?" என்றான். அவள் எழுந்து "நிலம் நீர் நெருப்பு காற்று வானம் எனும் ஐந்து பருப்பொருட்களும் தெய்வங்களுக்கு மட்டுமே உரியவை. தெய்வங்களுக்கு முறைசெய்து குடிகளுக்கு நலம்செய்யக் கோலேந்தும் அரசனுக்கு அவற்றை தெய்வங்களுக்கும் மானுடருக்கும் நலம்செய்யும்பொருட்டு மட்டும் ஆளும் உரிமை உண்டு" என்றாள்.

அவள் குரலும் நோக்கும் குடிகளை அறியாமல் கைகூப்ப வைத்தன. "ஆகவே நிலம் இருகுடியில் எவருக்கு உரிமை என்ற பேச்சுக்கே இடமில்லை. அந்நிலம் எந்நிலையில் நன்கு பயனளிக்கும் என்பது மட்டுமே வினா" என்று அவள் தொடர்ந்தாள். "இதுநாள்வரை மேய்ச்சலுக்கு

இருந்தமையாலேயே அது விளைச்சலுக்குரிய வளம்நிறைந்த நிலம். கன்றுகள் சென்றவழி இன்று பாதையென்றாகிவிட்டிருக்கும். அணுகக்கூடிய வளநிலங்கள் அனைத்தும் வயல்களாவதே திருநிறைப்பது. முடிந்தவரை நிலம்திருத்துவது வேளாண்குடியின் நெறி. புதுநிலம் கண்டடைவது ஆயர்குடியின் கடன். வேளாண்குடி புதுநிலம் கொண்டமையால் மேலும் வரிகொடுக்கவேண்டும். புதுநிலம் காண்பதற்கு ஆயர்களுக்கு அரசு நற்கொடை அளிக்கும்.”

அவர்கள் தலையசைத்தனர். “ஆகவே அந்நிலம் விளைநிலமாகவேண்டுமென குருநகரியின் பேரரசியென நான் ஆணையிடுகிறேன்” என்று அவள் ஓங்கிய குரலில் சொன்னாள். “இருகுடியினரும் தங்களால் கொல்லப்பட்ட மறுகுடியின் மைந்தரை தங்கள் தெய்வங்களாக மன்றில் நிறுத்தி வழிபடவேண்டும். ஆண்டுதோறும் அவர்களின் நாளில் பலிக்கொடை நடத்தி வணங்கவேண்டும்” என்று ஆணையிட்டபின் திரும்பி நெறிநிலை அமைச்சர் கர்கரிடம் “எக்குலத்தில் பிறந்திருந்தாலும் அனைத்து குடிகளும் அரசுக்கு உரிமையானவர்களே. எனவே இருகுடியும் தாங்கள் கொன்ற இளைஞருக்கு ஈடாக அரசுக்கு பிழைச்செல்வம் அளிக்கவேண்டும். இளையோரை இழந்த குடிகளுக்கு அரசு அளிக்கொடை அளிக்கும்” என்றாள். “ஆணை, பேரரசி” என்றார் அவர்.

அவர்கள் நிறைவுற்றவர்களாக அவை நீங்கியபோது அவள் திரும்பி யயாதியிடம் “உங்கள் உளம்கொண்ட ஐயத்திற்கு கார்க்யாயனரின் ராஜ்யசூத்திரத்தில் விளக்கம் உள்ளது, அரசே. எக்குடியும் பிறகுடிக்கு கடன்பட்டதாக அமையலாகாது. அது அவர்களிடையே மேலும் பகையையே வளர்க்கும்.

பெறுவதும் கொடுப்பதும் அரசாகவே இருக்கவேண்டும். ஏனென்றால் அரசிடமே படைவல்லமை உள்ளது. எந்நெறியால் ஆணையிடப்பட்டாலும் படைக்கலம் உடன்செல்லாது எவரிடமிருந்தும் செல்வத்தை பெற முடியாது" என்றாள்.

யயாதி நகைத்து "ஆம், உண்மை" என்றான். "அரசன் பொருள்கொள்கையில் குடிகளிடம் எழும் சினத்தை அவன் அளிக்கும் காவல் நிகர்த்தும் என்கிறார் கார்க்யாயனர்" என்றாள் தேவயானி. "நினைவுறுகிறேன்" என்று யயாதி சொன்னான். "அந்நூலை எப்போது பயின்றாய்?" "நெடுநாள் முன்பு. இத்தருணத்தில் சொல் சொல்லென நினைவில் மீண்டது அது." அவன் சிரித்து "இனி இந்த அவையில் நான் நெறிசொன்னால் எவரும் ஏற்கமாட்டார்கள் போலும்" என்றான். அவள் சிரித்து "நெறி முறையானதென்றால் எவர் சொன்னால் என்ன?" என்றாள்.

ஆனால் அதுவே உண்மையென்றாயிற்று. அவள் குரலில் நெறியுரைக்கப்பட்டால் மட்டுமே அனைத்துக்குடிகளும் ஏற்பார்கள் என அமைச்சர்களே அவனிடம் சொன்னார்கள். "பேரரசியிடம் ஐயமே இல்லை, அரசே. நீங்கள் எண்ணி தேர்ந்து சொல்லும் நெறி அவர்கள் நாவில் தெய்வமெழுவதுபோல வெளிவருகிறது" என்றான் பார்க்கவன். பின்னர் பேரவையிலும் குடியவையிலும் அவளே முதன்மைகொள்ளத் தொடங்கினாள். ஒவ்வொருநாளுமென அவன் அவற்றிலிருந்து விலகி தன் தனியுலகில் உலவலானான். அவைகள்தோறும் நின்று ஒலிக்கும் அழியா நெறிநூல் ஒன்றை இயற்றவேண்டுமென அவனுக்கு கனவு இருந்தது. அதை இயற்றத் தொடங்கி சுவடியறையிலும் புலவர்மன்றிலும் நாள்கழித்தான்.

மெல்ல அவன் உள்ளம் காவியங்கள் நோக்கி சென்றது. நெறிநூல்களில் கூழாங்கல் என உறைந்திருக்கும் சொற்கள் காவியங்களில் விதைகளென உயிர்கொள்வதை கண்டான். இயற்றிய நெறிநூலை பாதியிலேயே விட்டுவிட்டு அவன் காவியங்களுக்குள் மூழ்கினான். நான்கு திசைகளிலிருந்தும் கவிஞரும் சூதரும் அவன் அவைக்கு வரலாயினர். “ஒரு சொல்லை பின் தொடர்ந்து செல்வதுபோல் மூதாதையர் உள்ளத்திற்குள் செல்ல பிறிதொரு வழி இல்லை. ஒரு சொல்லை விட்டுச்செல்வதுபோல் கொடிவழிகளிடம் சென்று நிற்கவும் வேறொரு வழியில்லை” என்றார் வங்கநாட்டுக் கவிஞரான முக்தர்.

“கவிதைக்கென பயன்படாத சொற்களெல்லாம் வீணே” என்று அவன் ஒருமுறை சொன்னான். தமிழ்நிலத்துக் கவிஞரான பெருஞ்சாத்தன் சிரித்து “எங்கிருந்தாலும் சொல் கவிதையே. கிளையிலமர்ந்திருக்கையில் பறவையல்ல என்று சொல்லலாகுமா?” என்றார். ஒரு குளிர்ந்த உலுக்கலுடன் அவன் அதன் பொருளை உணர்ந்தான். அவன் சொல்லுணர்வை முழுமையாக மாற்றியது அது. ஒவ்வொரு கூற்றிலும் சொற்கள் சொல்லப்படாத பொருள்விரிவு கொண்டு அமர்ந்திருப்பதை கண்டான். நெறிநூல்களில் அரசாணைகளில் அவைப்பேச்சுக்களில் வெற்று முகமன்களில்கூட சொல் முடிவிலி சூடியிருந்தது.

“கவிதையன்றி ஏதும் எங்கும் சொல்லப்படவில்லை” என்று அவன் தேவயானியிடம் சொன்னான். அவள் நகைத்து “நான் உதிர்த்ததை நீங்கள் எடுத்துக்கொண்டுவிட்டீர்களா என்ன?” என்றாள். “சொல்கொள்ளும் அழகை உணராதவர்களுக்கே அரசியலும் நெறியியலும் பிறவும்” என்றான் யயாதி. அவள்

அவனருகே வந்து “சொல்லுக்கு பொருளைச் சூடிக்கொள்ளும் விடுதலையை அளிக்கலாகாதென்பதே நான் அரசுசூழ்தலில் கற்றறிந்தது. ஆகவே சொல் ஒவ்வொன்றில் இருந்தும் கவிதையை விலக்குவதே இன்று என் பணி” என்றாள். “ஏனென்றால் நாம் அளிக்கும் பொருளைக் கொண்ட சொல்லே இலக்கு நோக்கும் அம்பு. பொருள்விரிவு கொண்ட சொல் கட்டற்ற பறவை.”

“கொல் என கூர்ந்ததே படைக்கலமாக ஆகும். படைக்கலங்களால் ஆளப்படுகின்றது இப்புவி. படைக்கலமாகாத சொல்லுக்கு அரசுசூழ்தலில் இடமில்லை” என அவள் சொன்னபோது அத்தனை நெறிநூல்களையும் வகுத்து நடுவே தெய்வப்பெருவஞ்சமென அமர்ந்திருக்கும் ஒன்று பெண்ணுருக்கொண்டு வந்ததுபோலிருந்தாள். அவன் விழிகளை விலக்கிக்கொண்டான். “சினம் கொண்டுவிட்டீர்களா?” என்று அவள் வளைகள் ஓசையிட கேட்டாள். “இல்லை” என்று அவன் சொன்னான். “நீ ஆள்கையில் மண்பொலிகிறது. வளம்திகழ்ந்து தெய்வங்களும் மக்களும் மகிழ்ந்தால் போதும். எவர் சொல் விளங்கினால் என்ன?”

யயாதி மஞ்சத்தில் படுத்து கைகால்களை நீட்டிக்கொண்டான். உத்தரங்களையே நோக்கிக்கொண்டு உளம் மயங்கி ஆழ்ந்து சென்றான். அவன் அரசொழிந்துவிட்டான் என்று குருநகரியின் மக்கள் சொல்வதை அவனிடமும் பலர் சொன்னார்கள். “போர் என்று வந்தால்கூட முப்புரம் எரித்த மூவிழியள் என கலைமேல் ஏறிச் செல்வாள் போலும் பேரரசி” என்று முதுகுலத்தார் ஒருவர் அவையிலேயே சொன்னதை நினைவுகூர்ந்தான். பலமுறை பலகோணங்களில் தன்னை நோக்கியபோதும்கூட எவ்வகையிலும் அவனுக்கு அவள்

கொண்ட மேலெழுச்சி உளம் குன்றச்செய்யவில்லை என்றே தோன்றியது.

உடலைத் தளர்த்தி பரப்பிக்கொண்டு கோட்டுவாயிட்டான். “ஆம், இக்களிப்பாவைகளைக் கொண்டு அவளே ஆடிமகிழட்டும். நான் இவற்றை கடந்துவிட்டேன்” என்று சொல்லிக்கொண்டான். “ஆம், நான் வாழ்வது பிறிதொரு இன்னுலகில்” என எண்ணிக்கொண்டான். உளம் ஆழ்ந்து துயிலில் மூழ்கியபோது அச்சொற்களே எஞ்சியிருந்தன. கூடவே பிறிதொன்றுமிருந்தது, சொல் தொடாதது. ஆனால் அத்தனை சொற்களும் ஓசையிலாது சுற்றிவரும் மையம்.

# மாமலர் - 74

### 74. ஆழமுது

குருநகரி தேவயானியை பெரும் கொண்டாட்டத்துடன்தான் வரவேற்கும் என்று யயாதி முன்னரே அறிந்திருந்தான். சர்மிஷ்டையை அவன் மணங்கொள்ள முடிவெடுத்தது முன்னரே நகரில் ஆழ்ந்த சோர்வை உருவாக்கியிருந்தது. அம்முடிவை அவன் அவையில் அறிவித்தபோது அந்தணர் பகுதியிலிருந்து எந்த எதிர்ப்பொலியும் எழவில்லை. விழி திருப்பாமலேயே அங்கு நிலவிய இறுக்கத்தை அவன் உணர்ந்துகொண்டான். எனவே அவர்களை நோக்கி சொல்லெடுத்து எதிர்ச்சொல் அவையில் எழவேண்டாமென்று எண்ணி தன் அறிவிப்பை ஏற்று எதிர்வினையாற்றிய குலமூத்தாரை மட்டும் நோக்கி பேசி அரங்கை முடித்தான்.

அவன் தனியறை நோக்கி நடக்கையில் அருகே நடந்தபடி பார்க்கவன் “என்ன நிகழுமென்று சொல்ல முடியவில்லை, அரசே” என்றான். “ஏன்? ஐங்குடி அவையினரும் அனைத்தையும் ஏற்கத்தானே செய்தனர்?” என்று யயாதி வேண்டுமென்றே கேட்டான். “அவை முற்றிலும் ஏற்றுக்கொண்டது. குலத்தலைவர்கள் அனைவருமே இது ஒரு நன்முடிவு என்றுதான் எண்ணினார்கள். ஏனெனில் அவர்கள் போருக்குச் சென்றவர்கள். போரென்பது படைக்கலம் ஏந்தும் கைகளின் எண்ணிக்கையால் மட்டுமே என்பதை அவர்கள் அறிந்திருப்பார்கள். அசுரரும் ஷத்ரியர்களும் இணைவார்கள் என்றால் பாரதவர்ஷத்தில் நமக்கு எதிர்நிற்கும் கொடியென ஒன்று இருக்கப்போவதில்லை என்பதை உணர்ந்த பின்னரே அவர்கள் வந்து இந்த அவையமர்ந்தனர். ஆனால்...” என்றான்.

அவன் சொல்வதற்காக யயாதி சற்று நடை தளர்த்தினான். “ஆனால் அந்தணர்கள் ஏற்கவில்லை” என்றான் பார்க்கவன். “அவர்கள் எதுவும் சொல்லவில்லையே?” என்றான் யயாதி. “ஆம், சொல்லவில்லை. ஆனால் அவர்களின் உடலசைவுகளும் விழியொளிகளும் அனைத்தையும் காட்டின. அவர்கள் குலக்கலப்பை ஏற்கவில்லை” என்றான் பார்க்கவன். யயாதி “அந்தணர் எனும் குலமே குருதிகலந்து உருவாகி வந்தது என்பதுதானே குடிமுறை கூறும் அத்தனை சூதர்களும் சொல்வது?” என்றான் “ஆம். எந்தக் குலம் கலந்துருவாகி வந்ததோ அக்குலமே மேலும் கலப்பதற்கான தயக்கத்தை கொண்டிருக்கும். குலக்கலப்பிற்கு எதிரான நெறிகளையும் வகுத்துவிட்டிருக்கும். தூய குலங்கள் எப்போதும் பிற குலங்களுடன் கலப்பதற்கான உளநிலையே கொண்டிருக்கும்” என்றான் பார்க்கவன்.

“விந்தையாக இருக்கிறது இந்த நோக்கு” என்றபடி இடையில் கைவைத்து திரும்பி நின்று புன்னகைத்தான் யயாதி. “ஆம். அரக்கர் குலங்களிலும் நிஷாத குலங்களிலுமே குருதித் தூய்மை இன்னும் நீடிக்கிறது. அவர்கள் மகரந்தம் தேடி மலர்ந்திருக்கிறார்கள். அந்தணர் குலமோ இங்கு இருந்த பல்லாயிரம் தொல்குடிகளின் பூசகர்களின் தொகுப்பு. நால்வேதமரபை ஏற்றுக்கொண்டு வேள்விகளுக்குள் வந்தவர்கள் தங்கள் ஆசிரியர் மரபின் பெயராலேயே குலங்களாக ஆனார்கள். மனை ஏற்பு, மைந்து ஏற்பு, உடன்குருதி ஏற்பு, அனல்சான்று ஏற்பு, வேதச்சொல் ஏற்பு என்னும் ஐந்து முறைகளில் அவர்கள் இன்றும் பிற குருதிக்கலப்பை ஏற்றுக்கொள்கிறார்கள். ஆனால் ஒவ்வொருநாளும் அவர்கள் குருதிக்கலப்புக்கு எதிராக இறுக்கமான நெறிகளையும் உருவாக்கிக்கொண்டே செல்கிறார்கள். அவர்கள் சந்திக்கும் இக்கட்டு இருமுனைப்பட்டது. குருதிக்கலப்பு இல்லையேல் அவர்களால் பாரதவர்ஷமெங்கும் பரவ முடியாது. ஆனால் குருதிச்சுவடு இல்லாமலானால் மெல்ல மெல்ல அந்தணர் என்னும் குலமே இல்லாமலாகவும் கூடும்” என்றான் பார்க்கவன்.

“ஆம்” என்று யயாதி தலையசைத்தான். “குலக்கலப்பு தரவேறுபாடுகளை உருவாக்குவதை நடைமுறையில் பார்த்துக்கொண்டும் இருக்கிறார்கள். குலக்கலப்பினால் உருவான தென்னக அந்தணர் வடபுலத்தோரால் ஒரு படி குறைவாகவே எண்ணப்படுவதை எவரும் அறிவர். எனவே தங்கள் குருதித்தூய்மையை ஓங்கி அறைந்து நிறுவ வேண்டிய நிலையிலிருக்கிறார்கள் இவர்கள். அதன்பொருட்டு ஒவ்வொரு நாளும் குலத்தூய்மையையும் மேன்மையையும் அறைகூவும் நூல்களை எழுதிக் குவித்துக்கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் விரிந்தெழுந்தது ஒரு காலம். இன்று அவர்கள் சுருங்கி இறுகவேண்டிய அடுத்த காலகட்டம் வந்தணைந்துள்ளது” என்றான் பார்க்கவன்.

“ஆனால் நாம் வீசப்படும் மீன்வலையென விரிந்து பாரதவர்ஷத்தை அள்ளித் தொகுக்கும் நிலையில் இருக்கிறோம்” என்றான் யயாதி. பார்க்கவன் “ஆம், ஷத்ரியருக்கும் அந்தணருக்கும் இடையே இப்பெரும் முரண்பாடு இங்குள்ளது” என்றபின் நகைத்து “முற்றிலும் குலக்கலப்பற்றவர்கள் கீழ்நிலையிலுள்ள குடிகள். ஆனால் அவர்கள்தான் குலக்கலப்பை எதிர்க்கும் அந்தணர்களின் குரலை காலப்போக்கில் ஏற்றுக்கொள்ளப்போகிறார்கள்” என்றான். “எவ்வாறு?” என்று யயாதி கேட்டான். பார்க்கவன் “இங்குள்ள அனைத்துக் குடிகளுக்கும் அந்தணர்களே வழிகாட்டிப்பறவைகள். அவர்களின் திசைகள் மாறியிருப்பது இன்னும் சில தலைமுறைகளுக்குள் அனைத்துக் குலங்களும் தங்கள் திசைகளை மாற்றிக்கொள்ளவிருப்பதற்கான அறிகுறி” என்றான். ஆனால் யயாதி அச்சொற்களை முழுக்க உள்வாங்கிக் கொள்ளவில்லை. “எதிர்ப்பின்றி நம் ஐங்குல அவையில் இவை முடிவெடுக்கப்பட்டது நன்றே” என்றான். “ஆம். ஆனால் அந்தணர்களிடமிருந்து இந்த ஐயமும் தயக்கமும் குலங்களிடம் பரவக்கூடாது” என்றான் பார்க்கவன்.

அவர்கள் எண்ணியது போலவே சிலநாட்களுக்குள் நகர் முழுக்க அனைத்துக் குலங்களும் ஐயம் கொண்டன. “ஆம், அசுரரின் குருதி நம் அரசகுலத்தில் நுழைகிறது. அசுரர்கள் நமது குடிகளாக இணைந்து நாம் வெல்லப்போகிறோம்” என்றார் ஒரு முதியவர். அவர் குரலில் இருந்த பகடியை உணராமல் சினம் கொண்டு

“வெல்லவிருப்பது எவர்? அவர்களா நாமா? எவர் மீது எவர் ஏறிக்கொள்கிறார்கள் என்று எப்போது எவர் முடிவெடுக்க முடியும்?” என்று முச்சந்தியில் வணிகன் ஒருவன் உரக்கக் கேட்டான். அவனைச் சூழ்ந்து கூடிநின்றவர்களின் முகங்களில் ஐயமும் விலக்கமும் தெரிந்தது. ஒருவன் “இதையெல்லாம் இங்கு நின்று பேசுவதில் என்ன பொருள்?” என்றான். “முச்சந்தியில் பேசுவது அனைத்தும் அரசனுக்குச் சென்றடையும். உங்கள் கருத்து என்னவென்றாலும் அதை தெருவிலறங்கி சொல்லுங்கள். அது அரசனிடம் சொல்வதற்கு நிகர்தான். இங்கு ஒற்றர்களில்லை என்று எவர் சொன்னது?” என்றான் ஓர் இளம்வணிகன். “சென்றடைந்து என்ன பொருள்? அவர்தான் முடிவெடுத்துவிட்டாரே?” என்றான் இன்னொருவன். “முடிவெடுத்தது உண்மை. அசுரகுல அரசி இங்கு வரட்டும். ஆனால் அவள் வயிற்றில் பிறக்கும் குழந்தை இங்கு அரசாளலாகாது. அதற்கு நம் ஒப்புதல் இல்லை என்பதை அரசர் அறியவேண்டும்” என்றான் வணிகன்.

காவல்மேடையில் அமர்ந்திருந்த முதிய காவலன் ஒருவன் “ஷத்ரியர்கள் அசுரர்களைப்போல அல்ல. அசுரர்கள் மழைக்காலப் பெருவெள்ளம்போல படைகொண்டு செல்பவர்கள். அவர்களின் விரைவும் விசையும் மிகுதி” என்றான். “ஆனால் ஒற்றைப் பேரலையென அறைந்து பின் வடிவதே அவர்களின் போர் முறை. புராணங்களைக் கற்றால் தெரியும், எங்காவது அவர்கள் முடிவாக வென்றிருக்கிறார்களா? நாம் அப்படி அல்ல. நாம் மெல்ல மலையிறங்கும் கன்மதம் போன்றவர்கள். நெருப்பென்றாகி எழுந்து செல்லும்வழியை எதிர்த்து கணம்தோறும் உறைந்து கல்லென்றாகி நாம் முன்னேறுகிறோம். முற்றிலும் தோற்ற ஷத்ரியர்களே கிடையாதென்பதை எண்ணிக்கொள்ளுங்கள். நம்மில் கலக்கும்

அசுரக்குருதி நமக்கு எதை அளிக்கப்போகிறது? இத்தலைமுறையில் வென்றாலும்கூட என்றும் வென்று இங்கிருப்போம் என்பதற்கு ஏதேனும் உறுதி உள்ளதா?”

வேளாளர்களின் அவை அவர்களின் குடித்தெய்வமான மேழிராமனின் சிற்றாலயத்தில் நடந்தது. முதியவரான சக்ரர் தன் நடுங்கும் குரலில் சொன்னார் “குருதிக்கு தனக்கென்று இயல்புள்ளது. குருதியை ஏற்றுக்கொள்கையில் அவ்வியல்பை நாம் ஏற்றுக்கொள்கிறோம் என்றே பொருள்.” “தன்னில் வந்து கலக்கும் எதையாவது விலக்கும் ஆற்றல் பேராற்றுக்கு உண்டா என்ன?” என்றான் ஒருவன். “பேராறென்றால் அனைத்தையும் தனதாக்க இயலும். சிற்றாறுகள் கழிவு கலந்தால் நாறி அழியும்” என்றார் முதியவர். “நம்மில் கலக்கும் குருதியின் உட்பொருள் என்னவென்று நாம் அறிந்திருக்க வேண்டும். அசுரர்களின் வேதம் பழையது. அவர்களின் விழைவுகளும் பெரிது. அவர்களின் குலமுறைமைகளும் நம்மிடமிருந்து முற்றிலும் மாறுபட்டவை.”

ஒவ்வொரு சொல்லும் யயாதியை பகல் முழுக்க வந்து சேர்ந்துகொண்டிருந்தது. பார்க்கவன் “இவையனைத்தும் அந்தணர் சாலைகளிலிருந்து எழுபவை. ஆனால் அவர்கள் என்ன எண்ணுகிறார்கள் என்பது எந்த ஒற்றனாலும் இங்கு சொல்லப்படவில்லை. அவர்கள் அவைகூடி பேசுவதில்லை. ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளும்போதுகூட சொல்லெண்ணியே உளம்எடுக்கிறார்கள். எனினும் அவர்களின் எண்ணம் எப்படி இந்நகர் முழுக்க சென்று சேர்கிறது என்பது புதிரானது. பனிக்கட்டியிலிருந்து குளிர் பரவுவதுபோல அவர்களின் எண்ணம் அனைவரையும் சென்றடைகின்றது” என்றான்.

“அந்தணர்களை அழைத்து நேரடியாகவே நம் எண்ணத்தை அவர்களிடம் சொன்னாலென்ன?” என்று யயாதி கேட்டான். “தாங்கள் எந்த எதிர்ப்பும் கொண்டிருக்கவில்லை என்றே அவர்கள் சொல்வார்கள். நீங்கள் எங்களிடம் சொல்லவே வேண்டியதில்லை அரசே, உங்கள் கொள்கையை அன்றே அவையில் ஏற்றுக்கொண்டோமே என்பார்கள். அவர்களிடம் எவ்வகையிலும் பேசி பொருளில்லை” என்று பார்க்கவன் சொன்னான். யயாதி “உண்மை, ஒன்றும் செய்வதற்கில்லை. நாம் வென்று காட்டும்போது விளைவுகளால் உளம் மாறுவார்கள் என எதிர்பார்ப்போம்” என்றான். பார்க்கவன் சிரித்து “ஆம், அப்போது இந்தக் குலக்கலப்புக்கு உரிய அரிய கதைகளை அவர்கள் உருவாக்கி அளிப்பார்கள்” என்றான்.

சர்மிஷ்டைக்கு மாற்றாக தேவயானியை தான் மணங்கொள்ளும் செய்தியை உடன்வந்த ஐங்குலத் தலைவர்களிடம் சொன்னபோது அவர்கள் அனைவரின் முகங்களும் மலர்வதை யயாதி கண்டான். அவர்கள் அனைவருள்ளும் இருந்து உறுத்திக்கொண்டிருந்த ஒன்று எழுந்து விலக, அந்த உவகையை மறைத்தபடி முதியவர் ஒருவர் “நாம் அசுரகுலத்தில் பெண்கொள்ள வந்துள்ளோம். அவர்கள் தங்கள் பெண்ணென அளிக்கும் எவரும் ஏற்கத்தக்கவரே” என்றார். இன்னொருவர் “சுக்ரரின் முழுச்சொல்லுறுதி நமக்கு கிடைக்குமென்றால் அது நன்றே” என்றார். ஆனால் சர்மிஷ்டையும் தேவயானிக்கு சேடிப்பெண்ணாக ஹிரண்யபுரியிலிருந்து குருநகரிக்கு வருவதைப்பற்றி அவர்கள் எதுவும் சொல்லிக்கொள்ளவில்லை. அப்படி ஒரு நிகழ்வு நிகழ்ந்ததாகவே அவர்கள் எவர் பேச்சிலும் தென்படவில்லை.

அச்செய்தி பறவைகள் மூலம் குருருநகரிக்கு சென்றது. குருநகரியின் நிமித்திகர்கள் அதை நகர் முச்சந்திகளில் முரசறைவித்தனர். மக்களின் எதிர்வினையை அங்கிருந்த ஒற்றர்கள் மூலம் யயாதி அறிந்தான். "நகர் களிவெறி கொண்டிருக்கிறது. தெய்வங்களின் நற்சொல் எழுந்துள்ளது என்றே ஒவ்வொருவரும் கருதுகிறார்கள். அந்தணர் தங்கள் சாலைகளில் செய்த வேள்விக்கு தேவர்களின் அருளென்றே இதை எண்ணுகிறார்கள்" என்றான் ஒற்றனாகிய சரபன். "அந்தண குலத்துப் பெண் அரசியாவதென்பது வேதத்தின் ஆணை என்று முதுவைதிகராகிய பிரசாந்தர் உரைத்தார். வேள்விச்சாலையில் தன் மாணவரிடம் அவர் சொன்ன அச்சொல் ஒருநாளுக்குள் அந்நகரின் அத்தனை குடிகளுக்கும் சென்று சேர்ந்திருக்கிறது. அனைவரும் அவ்வாறே எண்ணுகிறார்கள். பேரரசி இந்நகருக்குள் கால்வைப்பதென்பது கொற்றவை திருமகளின் உருக்கொண்டு நுழைவதுபோல என அவைக்கவிஞர் வராகர் பாடியிருக்கிறார். அவ்வரியின் பலநூறு வடிவங்களாக சூதர்களின் பாடல் நகர் முழுக்க ஒலித்துக்கொண்டிருக்கிறது."

யயாதி தன்னுள் மெல்லிய நிறைவை உணர்ந்தபோதுதான் தானும் அசுரகுலக்குருதி குறித்த உள்ளுலைவை கொண்டிருந்ததை உணர்ந்தான். "ஆம், ஒவ்வொன்றும் அதனதன் வழியில் சென்று நிறைவுற்றுவிட்டன. இடர்கள் அனைத்தும் களையப்பட்டுவிட்டன" என்று அவன் சொன்னான். பார்க்கவன் புன்னகைத்து "அனைத்தும் முற்றிலும் சீரடைந்துவிட்டது போலத்தான் தோன்றுகிறது. ஆனால் எதுவும் எப்போதும் முற்றிலும் சீரமைவதில்லை. முற்றமைதிக்குள்ளிருந்து ஒன்று முரண்கொண்டு எழுகிறது. ஏனெனில் வாழ்க்கை முன்னகர

விழைகிறது. அந்த முரண் என்பது ஒரு முளைக்கணு” என்றான். “இத்தருணத்திலும் நாம் ஐயத்தை சுமந்துகொண்டிருக்க வேண்டுமா?” என்று யயாதி எரிச்சலுடன் கேட்டான். “அல்ல, ஒவ்வொரு நிகழ்தருணத்திலும் வரும்தருணத்தின் விதை ஒளிந்துகொண்டிருப்பதை உணர்ந்துகொண்டால் போதும்” என்றான் பார்க்கவன்.

தேவயானி நகர்நுழைந்த அன்று குருநகரி அதன் தலைமுறை நினைவுகள் எதிலுமில்லாத அளவுக்கு அணிகொண்டிருந்தது. நகருக்கு நெடுந்தொலைவிலேயே முதல் தோரணவாயில் ஈச்ச ஓலைத் தட்டிகளாலும் மூங்கில்களாலும் அமைக்கப்பட்டு முற்றிலும் மலர்களால் அணிசெய்யப்பட்டிருந்தது. அங்கிருந்து பூத்த மலர்க்காடுபோல இருபுறமும் தோரணங்களும் மலர்மாலைகளும் செறிந்த வளைவுகள் கோட்டை முகப்பு வரை அமைந்திருந்தன. பட்டுப் பாவட்டாக்களும் அணித்தூண்களும் வண்ணம் பொலிந்தன.

முதல் தோரணவாயிலை அணிநிரை வந்தடைந்ததுமே அங்கு மூங்கில் கட்டி எழுப்பப்பட்டிருந்த முதன்மைக் காவல்மாடத்திலிருந்த பெருமுரசு எழுந்தது. அதைக் கேட்டு தொடர்ந்தமைந்திருந்த காவல்மாடங்களின் முரசுகள் முழங்க அப்பால் குருநகரியின் பெருங்கோட்டைக்குமேல் இரு உப்பரிகைகளில் அமைக்கப்பட்டிருந்த முரசுகள் ஓசையிட்டன. அதைக் கேட்டு நகரெங்கும் உள்ள காவல்மாடங்களில் முரசுகள் முழங்கத் தொடங்கின. குருநகரியின் மக்கள் கலைந்து எழுந்து உவகைக்குரல் எழுப்பிய ஓசை கலந்த முழக்கம் நெடுந்தொலைவிலேயே கேட்டது. முதல் தோரணவாயிலில் காத்து நின்றிருந்த அமைச்சர்களும் குடிமூத்தார்களும் தங்கள் படைக்கலங்களையும்

மங்கலத்தாலங்களையும் குடிமுத்திரைகளையும் கொடிகளையும் எடுத்துக்கொண்டு நிரைவகுத்தனர்.

தொலைவில் புரவிகளின் குளம்படி ஓசை கேட்கலாயிற்று. முதல் கொடிவீரன் கவச உடையுடன் நீண்ட மண்சாலையின் மறுஎல்லையில் தோன்றியதும் வாழ்த்தொலிகள் எழுந்து சூழ்ந்திருந்த காட்டை நிறைத்தன. கொடிவீரன் வந்து அவர்கள் முன் புரவியை இழுத்து நிறுத்தி இறங்கி கொடிதாழ்த்தி வணங்கி "குருநகரியின் பேரரசர், சந்திரகுலத் தோன்றல், நகுஷனின் மைந்தர் யயாதி எழுந்தருள்கிறார். உடன் ஹிரண்யபுரியின் அரசர் விருஷபர்வனின் அறப்புதல்வியும் சுக்ரரின் குருதிப்புதல்வியுமாகிய தேவயானி மணிமுடி சூடி எழுந்தருள்கிறார். இந்நகர் பொலிவு கொள்க!" என்று கூவினான். "வாழ்க! வாழ்க!" என்று அங்கு கூடிநின்றவர்கள் வாழ்த்தொலி எழுப்பினர்.

தொலைவில் கொடிகளின் வண்ணங்கள் அசையலாயின. பின்னர் தேர்களைச் சூழ்ந்துவந்த புரவிப்படையின் படைக்கலங்கள் இளங்காலை ஒளியில் திரும்பித் திரும்பி மின்னலடித்து விழிகளை வெட்டிச்சென்றன. புரவிக்காலடிகளும் சகடஒலிகளும் பெருகிப் பெருகி வந்தன. அவ்வொலிகளுக்கு பொருந்தாதவைபோல மெல்லிய அசைவுகளுடன் தேர்கள் வந்தன. முதலில் மங்கலச்சூதர் ஏறிய தட்டுத்தேர் வந்தது. அதைத் தொடர்ந்து அணிச்சேடியர் நின்றிருந்த மலர்ப்பீடத்தேர். அவை அணுகி வந்து இரு கூறாக விலகி வழிவிட யயாதியின் மத்தகத்தேர் வந்து நின்றது. அதிலிருந்து கூப்பிய கைகளுடன் இறங்கிய யயாதி குனிந்து தன் மண்ணை இரு விரல்களால் கிள்ளி எடுத்து சென்னிசூடி வணங்கினான். அவன் புகழ் கூவி வாழ்த்தின அவன் அவையும் குடியும்.

யயாதியை அணுகிய அமைச்சர்களிடம் "அனைத்தும் சித்தமாக உள்ளன அல்லவா?" என்று அவன் கேட்டான். "ஆம் அரசே, அனைத்தும் ஒருங்கியுள்ளன. அரசி ஊர்ந்து நகர் புகுவதற்கான அணித்தேர் அதோ காத்து நிற்கிறது" என்றார் விழவமைச்சரான கார்த்திகேயர். "அணித்தேரா? அது எவருடைய ஆணை?" என்று யயாதி குழப்பத்துடன் கேட்டான். அருகே நின்றிருந்த பார்க்கவன் தாழ்ந்த குரலில் "நான் தங்களிடம் முன்பே சொன்னேன் அரசே, மறந்துவிட்டிருப்பீர்கள். தன் புதல்வி மூன்றடுக்கு முகடும் தாமரைப்பீடமும் கொண்ட அணித்தேரில்தான் நகர்புக வேண்டுமென்று சுக்ரர் விரும்பினார். அத்தேரை விருஷபர்வனே கலிங்கச் சிற்பிகளைக் கொண்டு அமைத்து முன்னரே இங்கு கொண்டு சேர்ப்பித்திருக்கிறார்" என்றான்.

யயாதி திரும்பிப் பார்த்தபோது குறுங்காட்டில் மரங்களை அகற்றி உருவாக்கப்பட்ட சிறிய முற்றத்தில் அந்த அணித்தேர் மரவுரிப்போர்வையால் மூடப்பட்டு நின்றிருந்ததை கண்டான். "இத்தனை பெரிய தேரா?" என்றான். அவன் கைகாட்ட படைவீரர்கள் சென்று உறையை நான்கு பக்கமும் இழுத்து அகற்ற மூன்று மகுடமுகடுகளுடன், பன்னிரு ஓவியத்தூண்கள் நூற்றெட்டு இதழ்கொண்ட வட்டவடிவமான தாமரைப்பீடத்தில் ஊன்றி நிற்க, காகக்கொடி பறக்க அத்தேர் தெரிந்தது. அதன் சகடங்கள் தவிர எஞ்சிய பகுதி முழுக்க பொன் மின்னியது. விண்ணிலிருந்து பேருருவ மங்கை ஒருத்தியின் ஒற்றைத்தோடு உதிர்ந்து கிடப்பதுபோல.

நுண்ணிய அணிச்செதுக்குகள் மின்ன நின்றிருந்த அந்தத் தேர் அவனுக்கு அச்சத்தையே அளித்தது. தீச்சொல் வாழும் தொல்நகை அது என உளம் சிலிர்த்துக்கொண்டது.

பெருஞ்செல்வத்தின்மேல் அமர்வது தெய்வங்களுக்கு அறைகூவல் விடுப்பது என அவன் இளமையில் கற்ற நெறிகள் சொல்லின. அது அசுரர்களின் இயல்பு. வெற்றிகளால் எழுந்து அறைகூவல்களால் வீழ்பவர்கள் அவர்கள். விழிகளை விலக்கியபடி “இதுவரை இந்நகருக்குள் பொற்தேரில் எவரும் நுழைந்ததில்லை” என்றான். “பாரதவர்ஷத்தில் இன்று வரை அரசியர் எவரும் பொற்தேரில் ஊர்ந்ததில்லை, அரசே” என்றான் பார்க்கவன்.

யயாதி நீள்மூச்சுடன் “அவ்வாறே ஆகுக!” என்றான். தொலைவில் தேவயானியின் தேர் சித்திரச்செதுக்குகள் மின்ன, சுக்ரரின் காகக்கொடி பறக்க அணுகியது. “விருஷபர்வனின் அமுதகலக்கொடி அல்லவா அதில் பறந்தது?” என்று யயாதி பார்க்கவனிடம் கேட்டான். “நகர்விட்டு வந்ததுமே அதை விலக்கி தன் தந்தையின் கொடியே போதுமென்று அரசி ஆணையிட்டார்” என்றான் பார்க்கவன். தேவயானியின் தேர் வந்து நின்றதும் பார்க்கவனும் தலைமை அமைச்சர் சுகிர்தரும் குடித்தலைவர்களும் வாழ்த்தொலி எழுப்பியபடி அணுகி தலைவணங்கி நின்றனர். தேரை மூடியிருந்த பட்டுத் திரைச்சீலையை விலக்கி வலக்கால் எடுத்து வைத்து தேவயானி வெளியில் வந்தாள். அவள் குருநகரியின் மண்ணில் வலக்காலை எடுத்து வைத்தபோது பெண்டிர் குரவை முழங்கினர். வேதியர் வேதச்சொல்லுடன் கங்கைநீர் தெளித்து அவளை வாழ்த்தினர். மங்கலச்சூதர்களின் வாழ்த்து உடனெழுந்து சூழ்ந்தது.

கையில் நூற்றெட்டு இதழ்கள் கொண்ட பொற்தாமரை ஒன்றை அவள் வைத்திருந்தாள். புன்னகையுடன் சீரடி எடுத்து வைத்து வந்து நிற்க ஏழு வெண்புரவிகள் பூட்டிய பொற்தேர் மெல்ல

ஒளி நலுங்கியபடி வந்து அவள் முன் நின்றது. பார்க்கவன் “தங்களுக்காக, அரசி” என்றான். “ஆம், என்னிடமும் இத்தேரைப்பற்றி சொன்னார்கள்” என்று சொல்லி மலர்ந்த முகத்துடன் நிமிர்ந்த தலையுடன் சென்று அத்தேரில் ஏறி அதன் சிம்மக்கைப்பிடி கொண்ட பீடத்தில் அமர்ந்தாள். அவளைப்போலவே அணியாடை சுற்றி நகை ஒளிர்ந்த சாயை தேரிலிருந்து இறங்கி அவள் நிழல் என தொடர்ந்துசென்று பொற்தேரில் ஏறி அவளுக்கு வலப்பக்கம் நின்றாள்.

பொன்மலரை தன் வலக்கையில் வைத்து நெஞ்சோடு சேர்த்து இடக்கையைத் தூக்கி செல்க என்று தேவயானி ஆணையிட்டாள். தேர் கிளம்பி ஒழுகிச் சென்றது. அதைச் சூழ்ந்தெழுந்த வாழ்த்தொலிகளும் மங்கல இசையும் சகட ஒலியை முற்றிலும் மறைத்துவிட்டிருந்தன. ஒவ்வொரு தோரணவாயிலிலும் மலர் மழையால் அத்தேர் மூடப்பட்டது. மலர்த்திரை ஒன்றை முடிவிலாது பிளந்துகொண்டே செல்வதுபோல கோட்டை வாயிலை அணுகியது. கோட்டை மீதிருந்து பல்லாயிரம் வீரர்கள் தங்கள் ஒளிரும் வாட்களை தலைக்கு மேல் தூக்கி “குருநகரியின் பேரரசி வாழ்க! சுக்ரரின் மெய்மகள் வாழ்க! அசுர குலத்தோன்றல் வாழ்க!” என வாழ்த்தினர்.

நகருக்குள் காலைக்கதிரவன்போல் அவள் நுழைந்தாள். தெருக்களையும் உப்பரிகைகளையும் முற்றிலும் நிறைத்திருந்த மக்கள்திரள் மீது மிதந்து அசைந்து சென்றது தேர். முழுதணிக்கோலத்தில் முடிசூடி நின்றிருந்த அவளை உடலெங்கும் மின்னும் அருமணிகள் ஆயிரம் விழிகள் கொண்டவளென தோன்றச் செய்தன. விண்ணுருகிச் சொட்டிய துளி என்றிருந்த தேவயானியைத் தவிர பிறிதெவரையும்

அன்று மக்கள் நினைக்கவில்லை. அவர்கள் கற்றறிந்த கதைகளிலிருந்து, கண்ட கனவுகளிலிருந்து எழுந்து வந்தவள் போலிருந்தாள்.

கோட்டை வாயிலுக்கு வெளியிலேயே தன் தேரை நிறுத்தி யயாதி பார்த்து நின்றிருந்தான். பார்க்கவனிடம் "அவள் அணிநிரை அரண்மனை புகட்டும். நான் சற்று பிந்தி நுழைகிறேன்" என்றான். "அரசே..." என்று அவன் தயங்கினான். "மணமக்கள் இணைந்து நகர்புக வேண்டுமென்பது நெறி. ஆனால் இக்கொந்தளிப்பில் ஒருவர்கூட என் பெயரை உரைக்கவில்லை அவளருகே நான் நின்றிருந்தால் எளிய மானுடன் என அவர்களின் உள்ளத்தாழத்தில் பதிவேன். நாளை அரண்மனையில் நிகழும் மூத்தார் பூசனைகளிலும் பலிக்கொடைகளிலும் இணைந்து நிற்பேன். இந்நாள் அவளுக்குரியதாகுக!" என்றான். "ஆம், ஒருவகையில் அதுவும் நன்றே" என்று பார்க்கவன் சொன்னான்.

யயாதி திரும்பி நோக்கியபோது நீண்ட நிரையின் முதலில் சிறிய வண்டியொன்று வந்து நின்றது. "விருஷபர்வனின் அரண்மனைச் சேடியர் நூற்றெண்மர்" என்றான் பார்க்கவன். "அவர்களுடன் இளவரசியும் வந்துள்ளாரா?" என்று யயாதி கேட்டான். பார்க்கவன் யயாதியின் உள்ளத்தில் எழுந்த எண்ணத்தைத் தொட்டு "விருஷபர்வனின் மகளும் அவர்களுடன் வந்துளார்" என்றான். உள்ளுணர்வொன்று உறுத்திச் செல்ல யயாதி திரும்பி அந்த வண்டியை நோக்கினான். அதன் எளிய மரவுரித்திரை விலக உள்ளிருந்து சர்மிஷ்டை இறங்கி குருநகரியின் மண்ணில் வலக்கால் வைத்தாள். குனிந்து மண்ணைத்தொட்டு சென்னிசூடி கைகூப்பி வணங்கினாள்.

“அவள் கையில் வைத்திருப்பதென்ன?” என்று யயாதி கேட்டான். பார்க்கவன் “ஒரு சிறு பொற்கிண்ணம்” என்றான். பின்னர் விழிகூர்ந்து “அது அவர்களின் குலமுத்திரை, அமுதகலம்” என்றான்.

யயாதி விழித்தெழுந்தபோது அவன் மஞ்சத்தின் நடுவே கைகால்கள் விரித்து வானிலிருந்து விழுந்தவன்போல துயின்றுகொண்டிருந்தான். நெடுநேரம் எங்கிருக்கிறோம் என்ற உணர்வையே அவன் அடையவில்லை. பின்னர் எழுந்து உடையை சீரமைத்துக்கொண்டு மிதியடிகளை போட்டுக்கொண்டான். அவ்வோசை கேட்டு கதவை மெல்லத் திறந்த இருபாலின ஏவலன் தலைவணங்கி நின்றான்.

“அரசி எங்கே?” என்றான் யயாதி. “அவர்கள் நேற்று ஒற்றர்களிடம் சொல்லுசாவி முடிப்பதற்குள் முதற்கோழி கூவிவிட்டது. ஆகவே மஞ்சத்தறைக்கே வரவில்லை. நேரடியாக நீராட்டறைக்குச் சென்று அணியும் உடையும் மாற்றிக்கொண்டு வெளியே சென்றுவிட்டார்கள். கோட்டைக்காவலை சீர்நோக்கும் முறைநாள் இன்று” என்றான். யயாதி ஒருகணம் கழித்தே அச்சொற்களை முழுமையாக உள்வாங்கிக்கொண்டான். பின்னர் தன் சால்வையை எடுத்து அணிந்தபின் “நான் வந்திருந்தேன் என்று மட்டும் அவளிடம் சொல்!” என்றான்.

இடைநாழியில் நடந்தபோது பார்க்கவனை சந்திக்கவேண்டும் என்ற எண்ணமே அவன் உள்ளத்தில் எழுந்திருந்தது. சிறுகூடத்தில் பார்க்கவன் தன்னைக் காத்து நின்றிருக்கக் கண்டதும் இரு ஆண்களுக்கிடையே ஏற்படும் உள நெருக்கம்

வேறெங்கும் உருவாக முடியுமா என எண்ணிக்கொன்டான். பார்க்கவன் ஒன்றும் சொல்லாமல் தலைவணங்கினான்.

“நான் இன்று தெற்குச் சோலைக்கு செல்லலாம் என எண்ணுகிறேன். அரண்மனைக்குள்ளேயே வாழ்ந்து சலித்துவிட்டது” என்றான் யயாதி. “திருவிடத்துச் சூதர் சிலர் வந்துள்ளனர். அவர்களிடம் அரிய சில கதைகள் உள்ளன. அவர்களையும் அழைத்துச் செல்வோம்” என்றான் பார்க்கவன். “அவர்கள் கதைகளில் சிவன் வாழ்ந்தது தென்குமரி முனையருகே மகேந்திரமலையில். அங்கே அவர் மலைவடிவமாக தோன்றியதே சிவக்குறி. தென்னாடுடைய சிவன் என்கிறார்கள்.”

யயாதி “முன்பு ஒரு தென்னகப் பாணன் விண்ணவனும் தென்னவனே என்று பாடியதையும் கேட்டுள்ளேன். மலைநின்ற மால் என்றான்” என்றான். அவர்கள் நடந்தனர். “நாம் துயில்கையில் எங்கிருக்கிறோம்?” என்றான் யயாதி. அவன் முன்பின் இல்லாது அதை கேட்டமையால் பார்க்கவன் அவனே சொல்லட்டும் என காத்திருந்தான். “நான் நேற்றிரவு ஒரு கனவு கண்டேன். அதில் எங்கோ ஒரு காட்டில் இருந்தேன். எனக்கு நான்கு இளையவர்கள். நால்வர் முகத்தையும் நன்கு கண்டேன். இதுவரை நான் எங்கும் காணாத முகங்கள். இரண்டாமவனின் பெருந்தோள்களை தொட்டு அறிந்தது போலவே உணர்கிறேன்.”

பார்க்கவன் “கனவுகளும் மனிதர்களும், பறவைகளும் மரங்களும் போல” என்றான். அந்த ஒப்புமையின் கூர்மை யயாதியை நிற்கச் செய்தது. பின்னர் “மெய், பறவை வடிவில் வானம் வந்து மரங்கள்மேல் அமர்கிறது என்று கவிக்கூற்று உண்டு” என்றான். “கைநீட்டி இலைபரப்பி வானம் வானம் என்று தவமிருந்த மரங்களுக்கு சிறகுகளை மடித்து வந்தமர்ந்து

ஊழ்கத்திலாழும் பறவைகள் கிடைக்கின்றன” என்றான் பார்க்கவன். “ருத்ரபைரவரின் தசபதமாலிகா” என்று யயாதி சொன்னான். அவ்வரி இருவரையுமே மலரச்செய்தது. விளக்கேற்றி வைக்கப்பட்ட நீர்த்தாலம்போல அப்புன்னகையின் ஒளியுடன் இருவரும் நடந்தனர்.

யயாதி தன் அறையை அடைந்ததும் “நான் நேற்று அவள் நகர்புகுந்ததை மீண்டும் கனவில் கண்டேன்” என்றான். “அவள் நீள்குழல் மட்டுமே தெரிந்தது. ஐந்து ஒழுக்குகளாக பகுக்கப்பட்டு அது அலையிளகியது.” பார்க்கவன் ஒன்றும் சொல்லவில்லை. அந்நிகழ்விலிருந்து யயாதி விடுபடவே இல்லை என அவன் அறிந்திருந்தான்.

“விருஷபர்வனின் மகள் எங்கிருக்கிறாள்?” என்றான் யயாதி. “சேடியர் மாளிகையில்தான். பேரரசியின் பெண்டிருடன். ஆனால் அவரை பேரரசி முழுமையாகவே மறந்துவிட்டார்கள் என தோன்றுகிறது.” யயாதி “அவள் கொண்டுவந்த அமுதகலத்தை நேற்று கனவில் கண்டேன். நான் என் நான்கு தம்பியருடன் ஒரு நகருக்குள் நுழைகிறேன். அதன் முகப்பில் அந்த அமுதகல முத்திரை இருந்தது” என்றான். “ஒரே இரவில் எத்தனை கனவுகள்...”

பார்க்கவன் “நீங்கள் எதையோ அடக்கிக்கொண்டு துயின்றீர்கள். அது அனைத்தையும் சீண்டி கனவுகளாக எழுந்திருக்கிறது” என்றான். “அறியேன். நாம் அந்த இளவரசியை அவ்வாறு கைவிடுவது தகாது. அவள் சேடிநிலையிலேயே இருக்கட்டும். ஆனால் அரசிக்குரிய வாழ்க்கையை அவளுக்கு அளிப்போம்” என்றான். “ஆம், அதையே நானும் எண்ணினேன். இன்று நம் படைகளில் அசுரரே மிகுதி. அவர்கள் அவ்விளவரசியை முற்றாகவே மறந்துவிட்டிருக்கிறார்கள். ஆனால் எவரேனும்

நினைவூட்டினால் நம் மீது பெரும் மனக்குறையாக அது வெடிக்கக்கூடும்” என்றான் பார்க்கவன்.

“தேவயானி அவளை மறந்துவிட்டாள் என்பது நல்லதுதான். அவளை அருகிலுள்ள நகர்கள் எதற்காவது அனுப்பு. அங்கே அவள் தனி மாளிகையில் வாழட்டும். அரசிக்குரிய அனைத்தும் அவளுக்கு அளிக்கப்படட்டும்” என்றான் யயாதி. பார்க்கவன் தலை வணங்கி “ஆம்” என்றான். “நான் நீராடி வருகிறேன்... நம் கிளைகள் முழுக்க பறவைகளை நிறைப்போம்” என்று யயாதி சொன்னான்.

# மாமலர் - 75

**75. துயரிலாமலர்**

அஷ்டசிருங்கம் என்னும் மலையின் அடியில் சுரபஞ்சகம் என்னும் மலைச்சிற்றூரில் இளவேனிற்காலத்தில் நடந்த பெருங்களியாட்டு விழவில் பன்னிரு பழங்குடிகளின் குலப்பாடகர்கள் பாடுவதை கேட்க பார்க்கவனுடன் சென்றிருந்த யயாதி திரும்பும்போது சோர்ந்து தலைகவிழ்ந்திருந்தான். பார்க்கவன் அவன் தனிமையை உணர்ந்து சொல்லெடுக்காமல் உடன்வந்தான். மலைச்சரிவில் இறங்கிய அருவி ஒன்றின் ஓசை உடன்வந்துகொண்டே இருந்தது. நிகர்நிலத்தை அடைந்ததும் பெருமூச்சுடன் நிலைமீண்ட யயாதி திரும்பி பார்க்கவனை நோக்கி “நாம் எங்கு செல்கிறோம்?” என்றான்.

அதை புரிந்துகொள்ளாமல் வெறுமனே நோக்கினான் பார்க்கவன். “குருநகரிக்கேவா?” என்றான் யயாதி. பார்க்கவன் தலையசைத்தபின் “வேறெங்கேனும் செல்லும் எண்ணம்

உள்ளதா?” என்றான். “இல்லை... ஆனால் அங்கு மீள்வது என்னை சோர்வுறுத்துகிறது” என்றான் யயாதி. பார்க்கவன் அவன் சொல்லப்போவதை எதிர்பார்த்து உளம்காத்தான். “பெருநகர் என்பது மானுடத்தில் இடப்பட்ட ஒரு முடிச்சு என எனக்குப் படுகிறது. உப்பரிகையில் நின்று நோக்குகையில் சாலைகள் அனைத்தும் அணுகிவந்து முடிச்சிட்டுக்கொள்வதை காண்கிறேன். அவற்றில் பெருகிவரும் மானுடரும் அங்கே சுழன்று இறுகுகிறார்கள். நெறியும் எண்ணங்களும் ஊழும் அனைத்தும் அங்கே முடிச்சிட்டுக்கொள்கின்றன.”

சற்றுநேரம் அவ்வெண்ணத்தை மீட்டியபின் அவனே தொடர்ந்தான். “அங்கே இருக்க இயலவில்லை. கலையும் இலக்கியமும் முடிச்சுகளை அவிழ்த்து நீட்டுபவை. அணைகளை உடைத்து ஒழுகவிடுபவை. என் உள்ளம் பெருக்கெடுத்தோடுகையில் உடல் அந்நகர்முடிச்சில் அமைந்திருப்பதன் முரண் தாளமுடிவதாக இல்லை.” அவன் மெல்ல நகைத்து “இன்று இவ்வெண்ணத்தை சொல்லாக்கி அறிந்தேன். இக்குலக்களியாட்டில் ஒரு பாணினி நீள்குழல் அவிழ்த்திட்டு ஆடியதைக் கண்டபோது” என்றான்.

பார்க்கவன் புன்னகைத்தான். “அலைகுழல்... நெளிகருமை. அதன் மேல் எனக்கிருக்கும் பித்தை எண்ணிக்கொண்டேன். தேவயானியின் நீள்குழலை முதல்முறையாகக் கண்டபோது என் உள்ளம் பதறிக்கொண்டிருந்தது. உள்ளாழம் அக்குழல் பொழிவை மட்டுமே எண்ணிக்கொண்டிருந்தது என அன்று கனவுகண்டபின் அறிந்தேன். இருளுக்குள் குளிரிருள் என வழிந்த அந்தக் கூந்தலின் அலைகளுக்குள் அன்று முழுக்க திளைத்துக்கொண்டிருந்தேன். பின்னிரவில் எழுந்தமர்ந்தபோதுதான் அவள் என் அரசியாகப்போகும்

செய்தியை என் ஆழம் வாங்கிக்கொண்டது. மெய்நடுக்கு கொண்டு மூச்சிழுக்க இயலாதவனாக மஞ்சத்தில் விடியும்வரை அமர்ந்திருந்தேன். நெடுநேரம் கழித்து அவ்வெண்ணத்தை சொல்லாக்கிக்கொண்டேன். அந்தக் கூந்தல் எனக்கு என்று. அதையன்றி வேறெதையும் விடியும்வரை எண்ணவில்லை" என்றான் யயாதி.

"அவள் நீள்குழலை முதல் சில நாட்களில் மட்டுமே நான் கண்டிருக்கிறேன்" என்று அவன் தொடர்ந்தான். "அம்பு கூர்கொள்வதுபோல மானுடர் உச்சம்கொள்ளும் நாட்கள் சில உண்டு. மிகச்சரியாக சொல்லப்போனால் பதினெட்டு நாட்கள். இன்னும் எண்ணிச் சொல்லப்போனால் பத்தொன்பது இரவுகள், பதினெட்டு பகல்கள். அன்று நிகழ்ந்ததென்ன என்று இன்று வகுத்துக்கொள்கிறேன். நான் சிறகோயப் பறந்தெழுந்து அவளை சென்றடைந்தேன். அவள் கிளைதாழ்த்தி வளைந்து என்னை ஏற்றுக்கொண்டாள். பின்னர் இருவரும் நிலைமீண்டோம்."

மீண்டும் நெடுநேரம் புரவிகளின் குளம்போசையே கேட்டுக்கொண்டிருந்தது. யயாதி "அவள் குழலை சுருட்டி கொண்டையாக்கிக் கொண்டிருக்கிறாள். அவள் தோளில் ஒரு பெரிய முடிச்சு என அது அமைந்திருக்கிறது" என்றான். "அரசியர் குழல்நீட்டி அவையமரக்கூடாதென்பது மரபு" என்றான் பார்க்கவன். "ஆம், அவள் நீராட்டறையிலும் அரசியே" என்றான் யயாதி. அருவி ஒரு கயமாகச் சுழித்து எழுந்து வழிய அதைச் சூழ்ந்து நெல்லிமரங்கள் தெரிந்தன. "நாம் சற்று இளைப்பாறுவோம்" என்றான் பார்க்கவன். "ஆம்" என யயாதி புரவியை அங்கே செலுத்தினான். விலாவணைத்து புரவியை நிறுத்தி இறங்கி வேர்க்குவை ஒன்றில் அமர்ந்தான். பார்க்கவன் அருகே சென்று அமர்ந்தான்.

“அழகு என்பது என்ன என்று எண்ணிக்கொண்டிருந்தேன்” என்றான் யயாதி. மரங்களுக்கிடையே அவ்வப்போது தெரியும் ஆற்றுப்பெருக்குபோல அவன் உள்ளம் சொல்லில் தோன்றுவதை பார்க்கவன் உணர்ந்தான். “அழகென்பது ஒத்திசைவு என்பது சிற்பவியல். ஐம்புலன்களுக்கும் இன்பமளிப்பவற்றின் விழித்தோற்றம் என்பது தர்க்கவியல். இறையியல்புகள் பொருளில் உள்ளுறைந்து குறிப்பென வெளிப்படுதல் என்பது கலையியல். அனைத்தும் உண்மையே. அனைத்துக்கும் அடிப்படையாக நம் உள்ளம் அன்றாடமறியும் உண்மை ஒன்றுண்டு, நமக்குப் பிடித்தமானதன் பொருட்தோற்றமே அழகெனப்படும்.”

மீண்டும் ஒரு நீண்ட உளப்பாய்ச்சலுக்குப் பின் அவன் தொடர்ந்தான். “அவள் அழகு பன்மடங்கு பெருகியிருக்கிறது என்கிறார்கள் கவிஞர். மெய்யென்றே நானும் உணர்கிறேன். உருப்பிழை அற்ற முழுச் சிலை. அவள் நடையின் ஒழுக்கு, அமர்வின் நிமிர்வு, நோக்கின் கூர், அசைவின் இசைவு ஒவ்வொன்றும் இனியில்லை என நிறைநிலை கொண்டுவிட்டன. மண்ணில் இனி ஒரு பெண்ணை பிரம்மன் படைக்கவேண்டியதில்லை என விறலியர் பாடுகையில் ஆம் ஆம் என்றே என் உள்ளம் எண்ணிக்கொள்கிறது.”

மெல்ல படுத்து தலைக்குமேல் கைகளை வைத்தபடி “ஆனால் காமத்தை நினைவுறுத்தாதபோது பெண்ணழகு பொருளற்றதாகுமா என்ன?” என்றான். பார்க்கவன் திடுக்கிட்டான். அப்பேச்சை விலக்க விரும்பி “நாம் எங்கு செல்லலாம் என எண்ணுகிறீர்கள், அரசே?” என்றான். “எங்காவது…” என்றான் யயாதி. “நான் இழந்துகொண்டிருப்பதென்ன என்று இந்தப் பெருங்களியாட்டு

விழவில் உணர்ந்தேன்” என்றான். “தொல்குடிகள் எதையும் மூடிவைப்பதில்லை. விழவென்றால் காமக்களியாட்டுதான் அவர்களுக்கு. காமம் என்பது பொலிதல். மரங்களில் பூ போல. சொல்லில் கவிதை போல.”

பார்க்கவன் “ஆம், கவிதையை புஷ்கலம் என்கிறார்கள் கவிஞர்” என்றான். “காமம் இல்லாமல் கவிதையும் கலைகளும் பொய்யே” என்றான் யயாதி. “காமத்தை காதலெனக் கனியவைப்பவை அவை. நான் கவிதையை அடையும்தோறும் காமத்தை நன்குணர்கிறேன். உணர்கையிலேயே நான் அதை இழந்துவிட்டிருப்பதை அறிகிறேன்.” பார்க்கவன் அப்பேச்சை விலக்க விழைந்தான். ஆனால் யயாதி அவனை நோக்கவேயில்லை. “அரசனுக்குரிய மகளிர்மாளிகை எனக்கும் உள்ளது. ஐந்து அரசியர். அதிலொருத்தி பாரதவர்ஷத்தின் பேரரசி. விழையும் பெண்ணை மஞ்சத்திற்குக் கொண்டுவர இயலும் என்னால்…”

அவனால் தன் உணர்வுகளை சொல்லாக்க முடியவில்லை. கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தான். பார்க்கவன் அவன் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தான். அதில் உணர்வுகள் அசைவுகளாகத் தெரிந்தன. அவ்வசைவுகளைக் கொண்டு அந்த உணர்வுகளை பின்தொடர முடியுமா என அவன் வீணே எண்ணிக்கொண்டான். “கவிதையில் அனைத்துமே மலர்களாக ஆக்கப்பட்டுவிடுகின்றன. தத்துவமும் நெறிகளும் வரலாறும் ஒளியும் மணமும் தேனும் கொள்கின்றன” என்றான். “கவிதையில் திளைக்கையில் நான் அறிவது ஒன்றே. நான் விழைவது வசந்தகாலத்தை. நான் அதை அடையவே இல்லை. என் உடல் முதுமைநோக்கி செல்லத் தொடங்கிவிட்டிருக்கிறது.”

அவன் புரண்டு படுத்து பார்க்கவனை நோக்கி “வசந்தத்தை அறியாமலேயே ஒருவன் முதுமையை அடைந்து இறக்கக்கூடுமா? அவ்வண்ணம் நிகழுமென்றால் அது எத்தனை பெரிய கொடுமை! எந்த விலங்கும் பறவையும் பூச்சியும் அவ்வாறு வாழ்ந்தழிவதில்லை. அத்தனை மரங்களுக்கும் செடிகளுக்கும் மலர்ப்பருவம் அளிக்கப்பட்டுள்ளது” என்றான். “இளமையிலன்றி எவரும் இளமையை அறியமுடியாது, அரசே” என்றான் பார்க்கவன். அவனை திரும்பி பொருளேறா விழிகளால் நோக்கியபின் யயாதி “உண்மை, இது வீண் ஏக்கம். அவ்வெண்ணமே மேலும் சோர்வளிக்கிறது” என்றான்.

“நாம் இங்கிருந்து இன்னொரு வசந்தவிழவுக்கு செல்லலாம். நம் மேற்கு எல்லைக்கு அப்பால் அசோகவனி அருகே திரிசிரஸ் என்னும் மலையடிவாரத்தில் நிகழ்கிறது. அவ்வூரின் பெயரை மறந்துவிட்டேன். அசோகவனியிலேயே அதை கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்” என்றான் பார்க்கவன். “ஆம், குருநகரிக்கு மீள்வதைவிட எங்கு செல்வதும் நன்றே” என்றபடி யயாதி எழுந்தான். பார்க்கவன் “தொன்மையான அசுரப் பேரரசனாகிய அக்னிவர்ணன் விறலியரும் பாணரும்போல. விழாவிலிருந்து விழாவுக்குச் சென்று வாழ்ந்தான் என்று முக்தவாக்யம் என்னும் கவிநூல் சொல்கிறது” என்றான்.

யயாதி புன்னகைத்து “ஆம், அப்படி செய்வோம். திரும்பவே வேண்டியதில்லை” என்றான். “இளவேனில் முடிந்ததும் முதுவேனில்விழவுகள். பின்னர் ஆயர்களின் மழைவிழாக்கள். அதன்பின் மருதநிலத்து குளிர்காலக் கொண்டாட்டங்கள். மீண்டும் மலைமக்களின் இளவேனில் தொடங்கிவிடும்.” அவர்கள் புரவிகளில் ஏறிக்கொண்டனர். புரவிச்சரடைப் பற்றியபடி பார்க்கவன் “இப்புவியின் அனைத்து இயல்புகளிலும்

இனிதாவது ஒன்றுண்டு என்றால் இதில் சென்றுகொண்டே இருக்குமளவுக்கு இடமுள்ளது என்பதே” என்றான்.

அசோகவனியின் வாயிலை அவர்கள் சென்றடைந்தபோது மாலையாகிவிட்டிருந்தது. உடலெங்கும் பயணப்புழுதி படிந்திருக்க புரவிமேல் ஆடிய உடலின் தசைகள் வலிகொண்டிருக்க கண்கள் வெம்மையில் எரிந்தாலும் அச்சிற்றூரை அணுகியபோது யயாதி ஒரு சிறு மகிழ்வை அடைந்தான். “இது ஒரு நகரி என எண்ணியிருந்தேன். இத்தனை சிறிய ஊரா?” என்றான். பார்க்கவன் “எல்லையில் இருப்பதனால் இதற்கு ஒரு கோட்டை தேவையாகியது. மற்றபடி இது நூற்றைம்பது சிறுவீடுகளும் அரசமாளிகைகள் இரண்டும் மட்டுமே கொண்ட சிற்றூர்தான்” என்றான்.

களிமண்ணை வெட்டிக் குவித்து உருவாக்கப்பட்ட சுவரின்மேல் முள்மரங்களை நெருக்கமாக நட்டு முட்கொடிகளால் சேர்த்துக் கட்டப்பட்ட உயிர்வேலியே கோட்டையாக அமைந்திருந்தது. பசுங்கோட்டையின் நடுவே இரு வேங்கை மரங்களே வாயில்சட்டங்களாக நின்றன. அவற்றின் கவைக்கிளைகளுக்குமேல் மூங்கிலால் ஆன காவல்பரண்கள் குருவிக்கூடுபோல தெரிந்தன. அவ்வேளையில் அதில் ஒன்றில்மட்டும் இரு காவலர் இருந்தனர். ஒரு அறைமுரசு அதன் தோல்பட்டையில் செருகப்பட்ட முழைத்தடியுடன் ஓய்ந்து காத்திருந்தது.

வாயிலில் நான்கு காவலர்கள் வேல்களுடன் நின்றிருக்க எழுவர் அப்பால் சிறிய மரக்குடிலின் திண்ணையில் அமர்ந்து அரவுச்சுழல் ஆடிக்கொண்டிருந்தனர். பகல்முழுக்க காய்ந்த வெயிலில் வெந்த புழுதிமணம் அங்கெல்லாம் பரவியிருந்தது. காவலர் உடைகளிலிருந்து வியர்வை மணம் எழுந்தது.

பார்க்கவன் புரவியை இழுத்து நிறுத்தி “உக்ரதந்தன் இருக்கிறானா?” என்றான். காவலன் “மூடா, அவர் காவலர்தலைவன் என்று அறியமாட்டாயா?” என்றான். பார்க்கவன் சினத்துடன் சொல்லெடுக்கப்போக யயாதி அவன் தோளைத் தொட்டு அடக்கியபின் “நாங்கள் அயலூர் ஷத்ரியர். இங்கே இரவைக் கழிக்கும்பொருட்டு வந்தோம்” என்றான்.

“உங்கள் குலத்திற்குரிய இலச்சினைகளை காட்டுங்கள். அயலூரார் அரண்மனை அருகே செல்ல ஒப்பு இல்லை. அவர்கள் தங்குவதற்குரிய இல்லங்கள் கோட்டையின் மேற்கு எல்லையில் உள்ளன” என்றான் காவலன். பார்க்கவன் அவன் கச்சையிலிருந்து எளிய வீரர்களுக்குரிய இலச்சினைகளை எடுத்துக்காட்டினான். “என் பெயர் வஜ்ரஹஸ்தன். இவர் என் தோழர் தீர்க்கபாகு. நாங்கள் அயோத்தியில் இருந்து திரிகர்த்தர்களின் நாட்டுக்கு செல்கிறோம்” என்றான். காவலன் சிரித்து “பேரரசியின் ஆட்சியில் அனைத்து நாடுகளும் ஒரே நாட்டின் பகுதிகள் மட்டுமே. எனவே இப்போதெல்லாம் எவரையும் அயலவர் என கொள்வதில்லை” என்றான்.

அவர்கள் உள்ளே சென்றபோது அச்சிற்றூரே தெருக்களில்தான் இருப்பதாகத் தோன்றியது. வணிகர் தெரு என்பது சாலையோரம் யானைத்தோலை இழுத்துக்கட்டி அமைக்கப்பட்டிருந்த ஏழு கடைகள் மட்டுமே. எல்லா கடைகளுக்கு முன்னாலும் வண்ணஆடைகள் அணிந்த பெண்கள் குனிந்து பொருட்களை நோக்கிக்கொண்டும் பேரம் பேசிக்கொண்டும் தங்களுக்குள் உரையாடி நகைத்தபடியும் நின்றனர். வண்ணத் தலைப்பாகைகளுடன் ஆண்கள் சாலையில் மிதப்பதுபோல சென்றனர். அப்பால் ஒரு மதுக்கடையில் கள்பானைகளை சாலையிலேயே தூக்கி

வைத்தபின் பெரிய பற்களும் உறுத்த கண்களும் கொண்ட குள்ளன் ஒருவன் மரப்பெட்டிமேல் ஏறிநின்று “கள், புளித்த கள்... அந்திக்கள்” என்று கூச்சலிட்டுக்கொண்டிருந்தான்.

“இங்கு கோடையின் வெப்பம் சற்று மிகுதிபோலும்” என்றான் பார்க்கவன். “மக்களின் அசைவுகளில் இருக்கும் சலிப்பும் ஓய்வும் பகலில் அனலிறங்கியிருப்பதை காட்டுகின்றன.” யயாதி “இங்குள்ள இல்லங்களின் கூரைகள் எல்லாமே மிகத் தாழ்ந்தவை. சாளரங்களும் இருப்பதாகத் தெரியவில்லை” என்றான். பார்க்கவன் “குளிர்காலத்தில் இங்கு தண்மை மிகுதி. ஆண்டில் பெரும்பாலான நாட்கள் குளிர்காலம். இல்லங்களை அதன்பொருட்டே இவ்வாறு கட்டியிருக்கிறார்கள்” என்றான். “புற்றுகள் போலிருக்கின்றன இல்லங்கள்” என்றான் யயாதி. இல்லங்களுக்குள் இருந்து சிறுவர்கள் கூச்சலிட்டபடி வெளியே வந்து தெருக்களில் குறுக்கே பாய்ந்து விளையாடினர். துரத்தியபடி இல்லங்களுக்குள் புகுந்தனர்.

“எளிய வாழ்க்கை” என்று யயாதி சொன்னான். “முடிச்சுகள் இல்லாத ஒழுக்கு...” பார்க்கவன் “மீண்டும் உங்கள் சொல்லுக்கு சென்றுவிட்டீர்கள்” என்றான். யயாதி சிரித்தபடி “நான் விழைவதென்ன என்று எனக்கே தெரியவில்லை. காணும் ஒவ்வொரு வாழ்க்கையையும் நடித்துப் பார்க்கிறேன். முதற்கணம் பெரும் உவகை எழுகிறது. ஆம், இதுதான், இங்குதான் என உள்ளம் துள்ளுகிறது. மெல்ல மெல்ல சலிப்பு ஏற்படுகிறது. மானுடர் மிகமிக கற்பனையற்றவர்கள் என்னும் எண்ணம் எழுகிறது. ஒரேவகையான வாழ்க்கையையே எங்கும் மீண்டும் மீண்டும் உருவாக்கி வைத்திருக்கிறார்கள்” என்றான். பார்க்கவன் “நீங்கள் தேடுவது கவிதையை. அது எங்குமிலாதது, ஆகவேதான் அது விரும்பப்படுகிறது” என்றான்.

எதிரே வந்த இரு பெண்களில் ஒருத்தி நின்று "நெய்க்கிண்ணத்தை மறந்துவிட்டேன் மகதி, எடுத்துவருவாயா?" என்றாள். யயாதி இயல்பாக அவளை திரும்பி நோக்கியபின் "இங்கே பெரிய ஆலயம் ஏதேனும் உள்ளதா என்ன?" என்றான். "பெரிய ஆலயம் அல்ல, ஆனால் குறிப்பிடத்தக்க ஆலயம் ஒன்று உள்ளது, அரசே" என்றான் பார்க்கவன். "தங்கள் குடியன்னை அசோகசுந்தரிக்கு இங்கே ஓர் ஆலயம் உள்ளது. தங்கள் தந்தை நகுஷன் அப்பால் காட்டில் தொல்குடிவிழவு ஒன்றுக்கு செல்லும்வழியில் வேட்டைக்கு இங்கு வந்து ஒருமுறை தங்கியதாகவும் அப்போது கனவில் தன் துணைவியை கண்டார் என்றும் சொல்கிறார்கள். கனவில் அசோகசுந்தரி அவரை கைசுட்டி அழைத்துக்கொண்டு அரண்மனையில் இருந்து இறங்கிச் சென்றதைக் கண்டு அவரும் இறங்கி நடந்தார். விழித்துக்கொண்டபோது அவர் அரண்மனையின் கன்னிமூலையில் இருந்த அசோகமரம் ஒன்றின் அடியில் நின்றிருந்தார்."

"அன்று இச்சிற்றூருக்கு பீதவனம் என்றுதான் பெயர். நகுஷன் இங்கே அசோகமரங்களை நட்டு ஒரு சோலையை உருவாக்கி இதற்கு அசோகவனி என்று பெயரிட்டார். அந்த முதல் அசோகமரத்தின் அடியில் தன் துணைவிக்கு சிறிய ஆலயம் ஒன்றையும் உருவாக்கினார். அவர் அடிக்கடி இங்கு வந்துகொண்டிருந்தார். அவருக்குப்பின் இங்கு அரசகுடியினர் எவரும் வருவதில்லை." யயாதி "நாம் அந்த ஆலயத்திற்கு சென்றுவிட்டு அரண்மனைக்கு செல்லலாம்" என்றான். பார்க்கவன் "நாம் களைத்திருக்கிறோம், நீராடவுமில்லை" என்றான். யயாதி "அங்கு செல்லவேண்டுமென்று தோன்றுகிறது. எண்ணியதை அவ்வாறே செய்யும் ஒரு வாழ்க்கைக்காகவே அரண்மனைவிட்டு வந்துள்ளோம்" என்றான்.

“இந்தப் பெண்கள் அங்குதான் செல்கிறார்கள் என நினைக்கிறேன். இவர்களைத் தொடர்ந்துசென்றாலே போதும்.”

மகதி எண்ணைக்கிண்ணத்துடன் வந்து சேர்ந்துகொள்ள அந்தப் பெண் முன்னால் நடந்தாள். “இவளைப் பார்த்தால் இவ்வூரைச் சேர்ந்தவள்போல் இல்லை” என்று யயாதி சொன்னான். “இவ்வூர் மகளிர் அனைவரும் செம்மண்நிறம் கொண்டவர்கள். இவள் நிறம் சற்று கருமை. நீளமில்லாத சுருள்குழலும் கொண்டிருக்கிறாள்.” பார்க்கவன் “இங்குள்ளவர்களின் தெய்வங்கள் இவர்கள் தொன்றுதொட்டு வழிபடும் அன்னையரும் மூதாதையரும் மலைத்தேவதைகளும்தான். அசோகசுந்தரியை இவர்கள் வழிபடுவதாகத் தெரியவில்லை. அங்கு நாளும் வழிபாடு நிகழ தங்கள் தந்தை அளித்த கொடை உள்ளது. ஆகவே பூசகர் இருப்பார்” என்றான்.

இரண்டு தெருக்களுக்கு அப்பால் அசோகவனம் வந்துவிட்டது. “கோட்டைக்குள் இப்படி ஒரு சோலை! நன்று” என்றான் யயாதி. “ஆனால் கோட்டையைவிட உயரமான மரங்கள். அது எவ்வகையிலும் பாதுகாப்பானது அல்ல” என்று பார்க்கவன் சொன்னான். “இப்போது பாதுகாப்பு என்பதைப் பற்றிய பேச்சே குருநகரியில் இல்லை. பேரரசியின் சொல்லுக்கு அப்பால் படை என்ன கோட்டை என்ன என்று ஒரு வீரன் சொல்வதை கேட்டேன்” என்றான் யயாதி. “ஆம், சற்றுமுன் இக்கோட்டைக்காவலனும் அதைப்போலத்தான் சொன்னான்” என்று பார்க்கவன் சொன்னான்.

அசோகவனத்திற்குள் அப்பெண்கள் நுழைந்து மறைந்தனர். யயாதியும் பார்க்கவனும் புரவிகளை நிறுத்திவிட்டு உடைகளில் இருந்த புழுதியைத் தட்டி நீவினர். “கைகால்களையாவது கழுவிக்கொண்டு உள்ளே நுழையலாமென்று தோன்றுகிறது”

என்றான் யயாதி. “என்ன இருந்தாலும் என் குலமுறை அன்னை. நான் அவர் மைந்தன் என்றே நிமித்தநூல்கள் சொல்கின்றன.” பார்க்கவன் “அது குருநகரியின் தொல்குடிமரபு. முதல்பட்டத்தரசியின் மைந்தர்களாகவே முறைப்படி மணந்த பிறமனைவியரின் மைந்தர்கள் கருதப்படுவார்கள். தங்கள் கையின் முதலுருளை அன்னமும் முதல்குவை நீரும் நகுஷனுக்கும் அசோகசுந்தரிக்கும் உரியவை” என்றான். “இங்கு வந்து அன்னைக்கு ஒரு மலர் எடுத்துவைக்க வாய்த்ததும் நன்றே” என்றான் யயாதி.

அவர்கள் உள்ளே நுழைந்தபோதே சோலையை வகுந்து வந்து சரிவில் பொழிந்த சிறிய ஓடை ஒன்றை கண்டனர். அதிலிறங்கி முகத்தையும் கைகால்களையும் கழுவிக்கொண்டனர். “அன்னைக்கு ஒரு பலிகொடையும் பூசெய்கையும் நிகழ்த்திவிட்டுத்தான் இங்கிருந்து செல்லவேண்டும்” என்றபடி யயாதி நடந்தான். சோலைக்குள் படர்ந்து நின்றிருந்த அசோகமரத்தின் அடியில் இடையளவு உயரத்தில் அகன்ற கல்பீடம் அமைந்திருந்தது. அதன் நடுவே முழ உயரமுள்ள அசோகசுந்தரியின் கற்சிலை நின்றது. அதைச் சூழ்ந்து ஆறு சிறிய கற்களாக அவள் மைந்தர்களான யதி, யயாதி, சம்யாதி, ஆயாதி, அயதி, துருவன் ஆகியோர் நிறுவப்பட்டிருந்தனர்.

அசோகமலர்மாலை சூடி நின்றிருந்த சிலையருகே நின்றிருந்த பூசகன் கண்களுக்குமேல் கைகளை வைத்து நோக்கி “யார்?” என்றான். “அயலூர் வீரர். இந்த ஆலயத்தில் வழிபட்டுச் செல்ல வந்தோம்” என்றான் பார்க்கவன். “இது அரசித்தெய்வத்தின் கோயில். அரசகுலத்தவர் அன்றி பிறர் வழிபடுவது இல்லை… வருக!” என்று அவன் சொன்னான். யயாதி அருகே சென்று

கைகூப்பியபடி நின்றான். இரு பெண்களும் அசோகவனத்தை சுற்றிக்கொண்டு அவர்களை அணுகினர். மகதி என்பவள் சற்று முதிர்ந்தவளாகத் தெரிந்தாள். அவள் தாழ்ந்த குரலில் ஏதோ சொல்ல இளையவள் விழிதூக்கி நோக்கினாள்.

யயாதி தன் நெஞ்சு படபடக்கத் தொடங்கிய பின்னரே அது அவள் விழிகளை நோக்கியமையால் என உணர்ந்தான். நோக்கை விலக்கிக்கொண்டு அசோகசுந்தரியின் சிலையை பார்த்தான். கல்லில் எழுந்த அவள் விழிகளும் மிகப்பெரியவை, குழந்தைநோக்கு கொண்டவை. பூசகன் கல்விளக்கை ஏற்றியபோது அவ்வொளியில் அவை மெல்லிய நகைப்பை ஏற்றிக்கொண்டன. பார்க்கவன் அவனருகே நெருங்கி "அரசே, அசுர இளவரசி சர்மிஷ்டை" என்றான். யயாதி திரும்பி நோக்கினான். "அரசியின் நோக்குக்கு அப்பால் ஏதேனும் எல்லைப்புற ஊரில் இவர்களை குடிவைக்கும்படி ஆணையிட்டேன். இங்கேதான் அவர்கள் அனுப்பப்பட்டார்கள் என்பது இப்போதுதான் நினைவுக்கு வருகிறது. சேடியர்குடியில் இருந்தமையால் இவர்களை நான் பார்க்கவே இல்லை. கோட்டைமுகப்பில் ஒருகணம் கண்ட முகம்... ஆனால் அது முற்றிலும் மாறியிருக்கிறது."

பூசகன் ஒரு சரடை இழுக்க அதனுடன் இணைந்த ஏழு சிறுமணிகள் சேர்ந்து சிலம்பத் தொடங்கின. மறுகையால் அவன் மலர்களை அள்ளி அசோகசுந்தரியின் கால்களில் இட்டு வாழ்த்து பாடினான். சுடரேற்றப்பட்ட சிற்றகலை எடுத்து அசோகசுந்தரிக்கு சுடராட்டு காட்டியபோது அவள் முகம் உயிரெழப்போவதுபோல அலைவுகொண்டது. பார்க்கவன் திரும்பி சர்மிஷ்டையை நோக்கினான். அவள் கண்களை மூடி கைகூப்பி நின்றிருந்தாள். அப்போது அது கோட்டைமுகப்பில்

கண்ட முகமாக மாறிவிட்டிருந்தது. பெரிய விழிகளை மூடிய இமைகள் தாமரையின் புல்லிகள்போல தெரிந்தன. சிறிய உதடுகள் மெல்ல அசைந்தன. குவிந்த மேலுதடு. மெலிந்த தோள்கள்.

பூசகன் அவர்களுக்கு சுடர்கொண்டு காட்டினான். அவர்கள் தொட்டு விழியொற்றி வணங்கி மலர்பெற்றுக்கொண்டனர். சுடர்வணங்கி பூசகன் அளித்த மலரைப் பெற்றுக்கொண்டு யயாதி திரும்பி நோக்கியபோது சர்மிஷ்டை அந்த மலரை தன் குழல்சுருளில் சூடிக்கொண்டு நடந்தாள். அவள் கழுத்தைத் திருப்பி கைகளைச் சுழற்றி மலரைச் சூடிய அசைவு யயாதியை மீண்டும் உளம்பதறச் செய்தது. அவர்கள் சென்றுமறைவது வரை நோக்கிநின்றான்.

பார்க்கவன் அருகே வந்து "அவர்களுக்கும் நாம் எவர் என தெரிந்துவிட்டது" என்றான். "எப்படி தெரியும்?" என்றான் யயாதி. "அவரது தோழி நம்மைப்பற்றிதான் சொன்னார். அவர்களின் நோக்குகள் மாறிவிட்டன" என்றான் பார்க்கவன். "அத்துடன் இப்போது அவர்கள் மலர்சூடியதிலிருந்த அழகு இத்தருணத்திற்காக தெய்வங்கள் சமைத்தது." யயாதி எரிச்சலுடன் "என்ன சொல்கிறாய்?" என்றான். "ஆம் அரசே, அனைத்தும் சீராக வந்து இணைந்துகொள்கின்றன" என்றான் பார்க்கவன்.

அவர்கள் புரவிகளில் ஏறிக்கொண்டு ஊர்மையம் நோக்கி சென்றார்கள். யயாதி தலைநிமிர்ந்து சுற்றும் நோக்கிக்கொண்டு வந்தான். ஆனால் அவன் விழிகள் உள்நோக்கு கொண்டிருப்பதை பார்க்கவன் உணர்ந்தான். பறவை அமர்ந்திருப்பதைப்போல அவன் புரவிமேல் இருந்தான். விழிதிருப்பிய யயாதி பார்க்கவன் புன்னகைப்பதைக் கண்டு

“என்ன?” என்றான். “உடலென்பது என்ன என எண்ணிக்கொண்டேன்” என்றான் பார்க்கவன். “என்ன சொல்கிறாய்?” என்று யயாதி புருவம்சுருக்கி கேட்டான். “ஒரேகணத்தில் முதிரா இளைஞனாக ஆகிவிட்டீர்கள். நோக்கு அசைவு அனைத்திலும்.”

யயாதி சலிப்புற்றவன்போல் முகம்காட்டி திரும்பிக்கொண்டான். அவர்கள் மையச்சாலைக்கு வந்தனர். மாலைவெயில் செம்மைகொள்ளத் தொடங்கிவிட்டிருந்தது. காவல்மாடத்தில் பணிமுறை மாறுதலுக்காக முரசு முழங்கியது. யயாதி திரும்பி நோக்கி “சேடிப்பெண்போலத்தான் இருக்கிறாள். அரசகுடியினர் எவருக்கும் இருக்கும் அழகுகூட இல்லை. மெலிந்த தோள்கள், கூம்பிய முகம், இளங்கருமை” என்றான். பார்க்கவன் “ஆம்” என்றான். “சேடியென்றே ஆகிவிட்டிருக்கிறாள்” என்று யயாதி மீண்டும் சொன்னான். பார்க்கவன் புன்னகை செய்தான்.

எதிரே நான்கு வீரர்கள் புரவியில் வந்து அவர்கள் அருகே விரைவழிந்து இறங்கி தலைவணங்கினர். “பொறுத்தருளவேண்டும் அரசே, எங்களால் அறியக்கூடவில்லை. நாங்கள் தங்களை பார்த்ததே இல்லை” என்றான் முதல் காவலன். “எவர் எங்களைப்பற்றி சொன்னார்கள்?” என்றான் பார்க்கவன். “அரசி” என்று காவலன் சொன்னான். அச்சொல் மீண்டும் தன்னை உளம்குலையச் செய்வதை யயாதி உணர்ந்தான். அவன் விழிகளை பார்க்கவன் விழிகள் தொட்டுச்சென்றன. அவன் நோக்கை விலக்கிக்கொண்டாலும் பார்க்கவன் புன்னகைப்பதை உணர்ந்தான்.

# மாமலர் - 76

## 76. ஐம்பெருக்கு

“ஐந்து துணையாறுகள் இணைந்து பெருகி ஓடும் இந்த நதி கடலை அணுகுகையில் ஐந்து கிளையாறுகளென்றாகிறது. எந்தத் துணையாறு எந்தக் கிளையாறாகிறதென்று எவர் சொல்ல முடியும்? நதியறிந்திருக்குமோ? நீர் அறிந்திருக்குமோ? ஊற்றுமுகங்கள் அறிந்தனவோ? ஒற்றைமேலாடை என புவிமகள் இடையும் தோளும் சுற்றிய ஆழிநீலம் அறிந்திருக்குமோ? அதிலெழும் அலைகள் அறிந்திருக்குமோ? அதிலாடும் காற்றும் அதில் ஒளிரும் வானும் அறிந்திருக்குமோ? முந்நீரும் முழுப்புவியும் ஒருதுளியென தன் கால்விரல் முனையில் சூடிய பிரம்மம்தான் அதை சொல்லலாகுமோ?”

மாளவத்துக் கவிஞர் சாம்பவர் தன் குறுங்காவியத்தின் இறுதிச் செய்யுளை படித்து முடித்து ஓலை தாழ்த்தியதும் எதிரில் பீடத்தில் அமர்ந்திருந்த யயாதி தலையசைத்து “நன்று, மிக நன்று. இக்காவியம் முழுக்க எழுந்த கதையின் அனைத்துச் சரடுகளும் இந்தச் செய்யுளில் இணைகின்றன. விடையில்லா வினாவாக விண்ணை நோக்கி செலுத்தப்பட்டுள்ளது காவியம். நுண்ணியது என்பதனால் அரிது. நெஞ்சை நிறைப்பதென்பதனால் நன்கறிந்ததும்கூட” என்றான்.

சாம்பவர் முகம் மலர்ந்து தலைவணங்கி “சொல்லோடு சொல்கோத்து எழுதப்பட்ட எதுவும் குருநகரியின் பேரரசரின் அவையில் ஒலித்த பின்னரே கவிதையென்றாகிறது என்று இன்று பாரதவர்ஷம் முழுக்க கவிஞர் பாடத்தொடங்கிவிட்டனர். இவ்வொரு சொல்லுக்காகவே இத்தனை தொலைவு கடந்து வந்திருக்கிறோம். எங்கள் சொற்கள் காலத்திரை கடந்து செல்லுமென்று இப்போது உறுதி

கொண்டோம்” என்றார். கைகூப்பியபடி அவர் எழுந்து நிற்க அவருக்குப்பின் அமர்ந்திருந்த இளைய மாணவனும் இரு கற்றுச்சொல்லிகளும் ஏடுகளை அடுக்கிக் கட்டி பிரம்புக்கூடையில் அடுக்கினர்.

யயாதி எழுந்ததும் அருகே நின்றிருந்த அரசப்பணியாளன் பரிசில்தாலத்தை நீட்டினான். சாம்பவரை அணுகி அந்தத் தாலத்தைப் பெற்று அவரிடம் அளித்து “கவிதைக்குப் பரிசில் என்பது தெய்வத்திற்கு காணிக்கைபோல. அது தெய்வத்தை அளவிடுவதில்லை, கொடுப்பவனை அளவிடுகிறது” என்றான். அவர் அதை பெற்றுக்கொண்டு “அரசே, தாங்கள் மகிழ்ந்தளித்த சொற்கள் முதற்பரிசில். அது கருவூலத்திலிருக்கும் பொற்குவை. இப்பரிசில் அதை பணமென்றாக்கும் முத்திரைஓலை” என்றார். “குருநகரியின் யயாதியின் சொல்லால் இக்காவியம் ஒப்புபெற்றது என்பதை பாரதவர்ஷம் முழுக்க சென்று சொல்லி என் தலைமுறைகள் பொருள்பெற்றுக்கொண்டே இருக்கும்” என்றார்.

அவரது அருகிருந்த பன்னிரு வயதான சிறுவனை நோக்கி யயாதி “உரிய இடங்களில் சொல்லெடுத்து நீர் ஒழுக்கை நிறுத்தியதை கண்டேன். இக்கவிதையை நன்கறிந்திருக்கிறீர், சொல்லையும் பொருளையும்” என்றான். “என் மாணவன் சேந்தன்எழினி. தமிழ்நிலத்தைச் சேர்ந்தவன். தென்பாண்டிநாட்டின் தொன்மையான தமிழ்ப்புலவர்குடியைச் சேர்ந்தவன்” என்றார் சாம்பவர். அவன் தலைவணங்கி “முக்கடல்முனம்பின் பாணர்குலமாகிய முல்லையரில் வந்த எழினியாதனின் மைந்தன் சேந்தன்எழினி” என்றான். யயாதி முகம்மலர்ந்து “நெடுந்தொலைவு. வலசைப்பறவைபோல சொல்

எல்லைகளில்லாத பிறிதொரு நிலத்தை காலடியில் காண்கிறது” என்றான்.

எழினி கரிய நிறமும் மின்னும் கன்றுவிழிகளும் கொண்டிருந்தான். அவனுடைய மயிர்மழிக்கப்பட்ட தலைமேல் கைவைத்து “சொல்லை எவரும் பெற்றுக்கொள்ளமுடியும், இளங்கவிஞரே. அறியா ஆழங்களில் சொல் சென்று தைக்கும் இலக்குகள் சில உள்ளன. அவை எவையென கண்டறிபவன் கவிஞனாகிறான். உமக்கும் அது நிகழட்டும்” என்றான். அவன் தலைவணங்கி “தன் விழைவால் விதை பறவையின் வயிற்றிலும் விலங்கின் தோலிலும் காற்றின் அலைகளிலும் தொற்றிக்கொண்டு முளைக்கவிருக்கும் இடத்தை தெரிவு செய்கிறது. விதைக்கு இலக்கென்றாவது மிக எளிது, நாம் ஈரம் கொண்டிருந்தால் மட்டும் போதும்” என்றான்.

உவகையுடன் அவன் செவிகளைப் பற்றி உலுக்கி “நன்று, நன்று! நான் சொல்கிறேன் சாம்பவரே, ஒரு நாள் இவருடைய ஆசிரியர் என்று அறியப்படுவீர்கள்” என்று யயாதி சொன்னான். அவன் திரும்பியதும் பணியாள் குறிப்பறிந்து பிறிதொரு தாலத்தை நீட்ட அதைப் பெற்று எழினியிடம் அளித்து “புகழ்சூடுக! வெற்புகள் பொடியாகும் காலத்திற்குப் பின்னரும் உமது சொல் வாழ்க! ஆழியலை என காலம் அமையா நாவுகொண்டு உம் சொல்லை உரைக்கட்டும்” என்றான். அவன் கைநீட்டிப் பெற்ற பரிசிலை கற்றுச்சொல்லியிடம் அளித்து குனிந்து யயாதியின் கால்களைத் தொட்டு சென்னிசூடினான்.

யயாதி திகைத்து பின் அவன் தலைதொட்டு வாழ்த்தி “புலவர்கள் அரசரின் தாள் சூடுவதில்லை, இளங்கவிஞரே” என்றான். “நான் பாரதவர்ஷத்தின் முதன்மை சொல்சுவைஞரின் கால்களை தொட்டேன்” என்றான் எழினி. “கவிஞனுக்கு

முதலாசிரியன் அவன்முன் அறியா இருப்பென விளங்கி சொல் தழைக்கவைக்கும் நுண்சுவைஞனே என்பார்கள். இன்றுவரை முகமிலா பேருருவனாக விளங்கியவன் தங்கள் வடிவில் மானுடத் தோற்றம் கொண்டு எழுந்திருக்கிறான். நான் வணங்கியது அவனையே.”

யயாதி “நன்று, வாழ்க!” என்று உளநெகிழ்வுடன் மீண்டும் அவன் தலையை தொட்டான். “இந்த அவையில் தாங்கள் எழுதப்போகும் பெருங்காவியத்திற்காக நான் காத்திருப்பேன், தென்னவரே. ஒருவேளை என் உடல் நீங்கினால் இங்கு என் செவிகளில் ஒன்று நுண்வடிவில் இருக்கும் என்று கொள்க! என் கைகள் என் மைந்தர் தோள்களில் அமைந்திருக்கும். ஒளிசூடிவரும் உங்கள் சொற்களுக்கு அவை பரிசளிக்கும். ஆம், அது நிகழும். அத்தருணத்தை இப்போது நன்குணர்கிறேன்” என்றான். சாம்பவர் கண்களில் நீர் வழிய உதடுகளை அழுத்தியபடி சற்று திரும்பிக்கொண்டார். எழினி “குருவருள் நிறைக!” என மீண்டும் வணங்கினான். அவர்கள் புறம் காட்டாது அகன்றனர்.

யயாதி இசைக்கூடத்தின் மூலையில் கைகட்டி நின்றிருந்த பார்க்கவனை அப்போதுதான் கண்டான். அவனை நோக்கி தலையசைத்தான். பார்க்கவன் அருகே வந்து வணங்கி “நான் இரண்டாவது களத்திலேயே வந்துவிட்டேன். காவியத்தில் மூழ்கியிருந்தீர்கள்” என்றான். “ஆம், அரிய காவியம். போர்க்களமொன்றின் உச்ச தருணம். மாயத் தெய்வமொன்று அத்தனை படைக்கலங்களையும் வீரர்களின் கைகளிலிருந்து விலக்கிவிட்டால் அங்கு அரியதோர் நடனம்தான் நிகழும். அக்காட்சியை பார்த்துக்கொண்டு இருப்பதாக எண்ணிக்கொண்டேன். ஊழ் உருவடிவுகொண்டு எழுந்து

அலையடிப்பதுபோல. பிரம்மத்தின் சொல் ஒன்று உருகி உருகி சிற்பமாகிக்கொண்டிருப்பதுபோல. பல தருணங்களில் விதிர்ப்பு கொண்டு உளமிலாதவனானேன்" என்றான்.

"நான் இருமுறை எழுந்துசென்றேன், சொல்கொள்ள செவியிலாதிருந்தேன்" என்றான் பார்க்கவன். "ஒரு விந்தையான தொல்கதையிலிருந்து எழுந்தது இக்காவியம். இது பாரதத்தின் பல்வேறு பகுதிகளில் வெவ்வேறு வகையில் விளங்குகிறது. இங்கு நிகழ்ந்த பெரும்போர் ஒன்றைப் பற்றியது. அதை நிகழவிருக்கும் போர் என உருவகித்திருக்கிறார் சாம்பவர்" என்றான் யயாதி. "ஐந்து உடன்பிறந்தார். அக்குலத்திலேயே அவர்களுக்கு எதிர்நிற்கப்போகும் நூறு உடன்பிறந்தார். சீதம் என்னும் நிலத்திற்காக பூசலிட்டு போருக்கு எழுகிறார்கள். பதினெட்டுநாள் நடந்த பெரும்போருக்குப்பின் நூற்றுவரைக் கொன்று ஐவர் வெல்கிறார்கள். வென்று அவர்கள் அடைந்த நாட்டை அவர்களால் ஆளமுடியவில்லை. நூற்றுவர் மூச்சுலகில் எஞ்சி பேயுருக்கொண்டு எழுகிறார்கள். கொடுங்காற்றுகளாக மரங்களை வெறிகொள்ளச் செய்கிறார்கள். அனல்மழையாகப் பெய்து ஏரிகளை சேறுலரச் செய்கிறார்கள். கருக்குழவிகளின் கனவுகளில் கண்ணொளிரத் தோன்றி அறியாச் சொல்லுரைத்து அச்சுறுத்துகிறார்கள்."

"பன்னிரு குடிப்பூசகர் கூடி வெறியாட்டுகொண்டு வான்சொல் இறக்கி ஆவதுரைக்கின்றனர். அதன்படி ஐந்திறத்தார் அந்நிலத்தை நூறாகப் பகுத்து இறந்தவர் நூற்றுவரின் தெய்வங்களுக்கு படையலிட்டு தங்கள் மைந்தரை அத்தெய்வங்களிடம் ஒப்படைத்துவிட்டு காட்டுக்குச் சென்றுவிடுகிறார்கள். நூறு தெய்வங்களும் தென்றலும்

குளிரொளியும் ஆகி அந்த மைந்தரை தழுவிக்கொள்கின்றன. அவர்களும் அவர்களின் கொடிவழியினரும் அந்நிலத்தை ஆள்கின்றனர்" என்று யயாதி சொன்னான்.

"மிகத் தொன்மையான ஒரு கதை இது" என்று பார்க்கவன் சொன்னான். "இக்கதையை தென்னகத் தொல்குடியினர் அனைவரும் வெவ்வேறுமுறையில் பாடுகிறார்கள். தொல்காலத்தில் ஆயிரம் மைந்தரைப்பெற்ற பெருந்தந்தை ஒருவர் இறந்து மண்மறைவுக்காக வைக்கப்பட்டிருக்கையில் உடல் பெருகத் தொடங்கியது. கைகால்கள் நீரோடைகள் போல இருபுறமும் வழிந்தோடி நீண்டன. வயிறு உப்பி தலை உயர்ந்தெழுந்து சிறிய மலையளவுக்கு ஆகியது அவர் உடல். குடியினர் அவர் முன் வணங்கி 'தந்தையே, நாங்கள் செய்ய வேண்டியதென்ன?' என்றார்கள். பூசகரில் சன்னதம் கொண்டு 'பெருகும் விழைவுடன் இறந்தவன் நான். பெருகுதல் நிலைக்காது நான் விண்ணேக முடியாது. என்னை இரண்டாக வெட்டுங்கள்' என்று அவர் சொன்னார்."

அவர்கள் பெரிய கோடரியால் அவரை இரண்டாக வெட்டினார்கள். அவ்விரு துண்டுகளும் தனித்தனியாக பெருகி வளர்ந்தன. 'தந்தையே, நாங்கள் செய்ய வேண்டியது என்ன?' என்று மீண்டும் குடியினர் மன்றாடினர். 'என் உடலை துண்டுகளாக வெட்டுங்கள். அவற்றை இக்காடு முழுக்க பரப்புங்கள்' என்றார் மூதாதை. அவர்களில் மூத்தவர்கள் தந்தையின் தலையும் நெஞ்சும் தோளும் அடங்கிய பகுதியை ஐந்து துண்டுகளாக வெட்டினார்கள். காட்டின் ஐந்து நீர்நிலைகளில் அவற்றை வீசிவிட்டு அவர்கள் திரும்ப வருவதற்குள் வயிறும் தொடையும் கால்களும் அடங்கிய பகுதியை அக்குடியின் இளைஞர்கள் நூறு துண்டுகளாக

வெட்டியிருந்தனர். அவற்றை அக்காட்டின் சேற்றுநிலங்களில் விசிறியடித்த பின் அவருக்கு படையலிட்டு விண்ணேற்றம் செய்தனர்.

காட்டில் சிதறிய அவர் உடல் தனித்தனி குலங்களாக முளைத்தெழுந்தது. ஐந்து துண்டுகளிலிருந்து ஐந்து பெருங்குலங்கள் உருவாயின. அவர்கள் மழைக்காளான்களைப்போல வெளிறியநிறம் கொண்டிருந்தமையால் பாண்டவர்கள் என்று அழைக்கப்பட்டனர். நூற்றுவர் கரிய நிறம் கொண்டிருந்தமையால் கராளர் என்று அழைக்கப்பட்டனர். அவ்விரு குலங்களும் ஒருவரையொருவர் அஞ்சினர். எனவே ஆழ்ந்து வெறுத்தனர். வெண்ணிறத்தோர் கரியவரை சேற்றில் முளைத்தவர்கள், அழுக்குடல் கொண்டவர்கள் என எண்ணினர். கராளர் பாண்டவர்களை பாறைகளில் இருந்து எழுந்த சீழில் உருக்கொண்டவர்கள் என்றனர். பாண்டவர் பசுக்களையும், கராளர் எருமைகளையும் மேய்த்தனர். பாண்டவர்கள் நெல்லையும் கராளர் கேழ்வரகையும் பயிரிட்டனர்.

ஒவ்வொரு நாளும் இரு சாராரும் தங்களுக்குள் வெறுப்பை வளர்த்துக்கொண்டனர். அவர்கள் ஆற்றிய ஒவ்வொரு செயலும் வெறுப்பை வளர்த்தன. ஒவ்வொரு சொல்லும் நூறுமேனி பெருகி பிறரைச் சென்றடைந்தது. நூற்றெட்டு மூதாதையர் கூடி இருசாராரையும் ஒற்றுமைப்படுத்த நூற்றெட்டு முறை முயன்றனர். ஒவ்வொரு முயற்சிக்குப் பின்னரும் அவர்கள் மேலும் காழ்ப்பு கொண்டனர். நூற்றெட்டாவது முறை ஒற்றுமை முயற்சி எடுத்தவர்கள் அர்ஜுனராமன், கிருஷ்ணத் துவதீயன் என்னும் இரு உடன்பிறந்தார். அர்ஜுனராமன் வெண்சுண்ணநிறம் கொண்டிருந்தார். இளையவர்

யானைக்கன்றுபோல் இனிய கரியநிறமுடையவர். மூத்தவர் மேழியோட்டினார், இளையவர் கன்று புரந்தார்.

காட்டின் மையமாக அமைந்த ஐங்குளத்துக்கரையில் அவர்கள் ஒருங்குசெய்த சந்திப்பு சொல்லேற்றத்திலும் படைமுட்டலிலும் முடிய மூதாதையர் இருவரும் தங்கள் பெரும் படைக்கலங்களை எடுத்து ஓங்கி விண்ணதிரும் ஒலியெழுப்பி அவர்களை அச்சுறுத்தி நிறுத்தினர். அக்கூடல் கலைந்தபின் இருவரும் ஐங்குளத்தருகே அமர்ந்து சொல்கொண்டனர். 'ஏன் இப்பூசல் ஒழியாமலிருக்கிறது? தெய்வங்களை அழைத்து கேட்போம்' என்றனர். சேற்றில் களம் வரைந்து அதில் வெண்சிப்பிகளும் கரிய கூழாங்கற்களும் பரப்பி தெய்வங்களை வந்தமையச் செய்தனர். சிப்பிகளை மூத்தவரும் கூழாங்கற்களை இளையவரும் ஆடினர். ஆட்டத்தின் ஒரு தருணத்தில் அவர்களின் கைகளை தெய்வங்கள் எடுத்துக்கொண்டன. அனைத்தும் அவர்களுக்கு தெளிவாயின.

'இது விண்முகட்டுத் தெய்வங்களும் மண்ணாழத்துத் தெய்வங்களும் களம்காண மானுடரை கருவாக்கும் போர். மானுடரால் ஒருபோதும் நிறுத்தப்பட இயலாதது. எனவே இது உகந்த வழியில் நிகழ்வதே முறை. இதன் நெறி பேணுதல் ஒன்றே நாம் செய்யக்கூடுவது' என்றார் மூத்தவர். 'ஆம், காட்டெரி தளிர் வளர்ப்பது' என்றார் இளையவர். 'கரியவர்களை வெண்ணிறத்தோனாகிய நான் துணைப்பேன். வெண்ணிறத்தவரை கரியோனாகிய நீ துணை செய். அதுவே முறை' என்றார் மூத்தவர். 'அவ்வாறே' என்று தலைவணங்கினார் இளையவர். இருவரும் சென்று அக்குலங்களுடன் சேர்ந்து கொண்டனர்.

ஐங்குளத்தின் கரையருகே முறைப்படி காடுதிருத்தி வெளிநிலம் அமைக்கப்பட்டது. கோள்கள் உகந்த நிலைகொண்ட நன்னாளில் இருசாராரும் தங்கள் முழு வீரர்களுடன் அனைத்துப் படைக்கலங்களுடன் திரண்டனர். மூத்தவர் மேழியைத் தூக்கி போர்க்குரலெழுப்பினார். இளையவர் வளைதடியை ஏந்தி போர்முகம் கொண்டார். முதற்கதிர் எழும் புலரியில் போர்முரசு ஒலித்ததும் அணைகள் உடைந்து நீர் பெருக்கெடுத்து எழுந்து அறைந்து இணைந்து நுரை கொப்பளிக்க ஒன்றென ஆகி சுழிப்பதுபோல இரு படைகளும் மோதிக்கொண்டன.

அப்பெரும்போர் பதினெட்டு நாட்கள் நடந்தது. பதினெட்டாவது நாள் இருசாராரும் முழுமையாகவே இறந்து விழுந்தனர். இருகுடியிலுமாக ஓர் ஆணும் ஒரு பெண்ணும் மட்டுமே எஞ்சினர். குருதி வழிந்த அந்தக் களத்தில் வைத்து கராளகுலத்துக் கருநிற மங்கையாகிய கிருஷ்ணையை பாண்டவகுலத்து வெண்ணிற இளையோனாகிய அர்ஜுனனுக்கு மூதாதையர் இருவரும் கைசேர்த்து வேதச்சொல் ஒலிக்க மணம் செய்து வைத்தனர். அவர்களிடம் அங்கிருந்து அகன்று தங்கள் நிலத்தைக் கண்டுபிடித்து அங்கு குருதி பெருக்கும்படி பணித்தனர். அந்தக் களக்குருதியைத் தொட்டு அவள் குழலில் பூசி அதை ஐந்துபுரியாகப் பிரித்து கட்டியபின் அவர்கள் தெற்கே சென்று குடியமைத்து மைந்தரை ஈன்று குடியென குலமெனப் பெருகினர்.

ஆயிரம் ஆண்டுகள் கழித்து அக்குலத்தினர் திரண்டு அந்தப் போர் நிகழ்ந்த இடத்தை நாடிவந்தனர். அங்கு பல்லாயிரம் எலும்புகள் மண்ணில் புதைந்துகிடக்க அவற்றின்மேல் வேர் சுற்றி எழுந்த மரங்கள் செறிந்த காடு செங்குருதிநிற மலர்களால் நிறைந்திருக்கக் கண்டனர். அக்காட்டில்

நூற்றைவருக்கு கற்சிலைகளை நாட்டி படையலிட்டு வணங்கி வழிபட்டு மீண்டனர். குருதிப்பூவின் விதைகளைக் கொண்டுசென்று தங்கள் மண்ணில் நட்டு வளர்த்தனர். அவர்களின் குலத்தின் குறியாக அந்த மலர் அமைந்தது. இளவேனில் தொடக்கத்தில் அவர்களின் குலக்கன்னியர் ஐந்துபுரியென குழல்வகுத்து அதில் செங்காந்தள் மலர்சூடி இளையோருடன் காதலாடினர். அது இனிய புதல்வியரையும் வலிய மைந்தரையும் அளிக்குமென நம்பினர்.

"திருவிடத்திற்குத் தெற்கே தொல்தமிழ் நிலத்தின் தென்முனம்பில் முக்கடல்சந்திப்பின் அருகே மகேந்திர மலையில் வாழும் தொல்குடிகளின் கதை இது. தங்கள் மூதாதையர் வடக்கே இமயப் பனிமலைகளின் அடியில் வாழ்ந்த முதற்குடியினர் என்று அவர்கள் சொல்கிறார்கள். அவர்களிடமிருந்து இக்கதை பிற குடிகளுக்குப் பரவி வடிவ மாறுதல் அடைந்தபடியே உள்ளது" என்று பார்க்கவன் சொன்னான். யயாதி "விந்தையான கதை. ஆனால் பாரதவர்ஷத்தின் வளர்ச்சிப்போக்கை எவ்வண்ணமோ அது சுட்டுவது போலும் உள்ளது. கருமையும் வெண்மையும் முடிவிலாது கலந்து கொண்டிருக்கும் ஒரு மாயச் சிறுசிமிழ் என்று இந்நிலத்தை சொல்லமுடியும்" என்றான்.

அவர்கள் அரசத்தனியறை நோக்கி நடக்கையில் பார்க்கவன் "நான் இந்த அவைநிகழ்வு தொடங்குவதற்குள் தங்களை வந்து சந்திக்கவேண்டுமென்றிருந்தேன். அதன்பொருட்டே விரைந்தோடி வந்தேன்" என்றான். யயாதி "ஆம். நான் உச்சிக்குப் பின்னர்தான் இவர்களை சந்திப்பதாக இருந்தது. ஆனால் திடீரென்று எண்ணியிராதபடி பிறிதொரு திட்டம் எழுந்தது. மாலை அசோகவனிக்கு செல்வதாக

இருந்தேன். முன்னரே கிளம்பி இன்றிரவே சென்றுவிடலாம் என்று தோன்றியது. ஆகவே இவர்களை உடனே கிளம்பி அவைக்கு வரும்படி அழைத்தேன்” என்றான்.

“நான் சொல்ல வந்த செய்தி இரு வகைகளிலும் தொடர்புடையதே” என்று பார்க்கவன் சொன்னான். அவன் குரலில் இருந்த மாற்றத்தை உணராமல் சாளரங்களை மாறி மாறி பார்த்தபடி நடந்த யயாதி “சொல்!” என்றான். “இந்தப் பாணர்குழு இன்று காலை பேரரசியின் அவை முன் தோன்றியிருக்கிறது. அங்கே எட்டு புலவர்க்குழுவினர் முன்னரே வந்திருந்தனர். ஆகவே எவரையும் முழுநூலையும் பாடுவதற்கு அரசியின் அமைச்சர்கள் ஒப்புதல் அளிக்கவில்லை. அரசி அவர்கள் ஒன்பதுபேருக்குமாக அரைநாழிகைப் பொழுதையே ஒதுக்கியிருந்தார்கள்.” யயாதி “அவள் முழுக் கோபுரத்தின் எடையையும் தாங்கியிருக்கும் ஆணிக்கல்” என்றான்.

முதல் வாழ்த்துச் செய்யுளை மட்டுமே பாடினால் போதும் என்று அரசியின் முதன்மையமைச்சர் கிருபர் ஆணையிட்டிருக்கிறார். அதை ஏற்று அத்தனை புலவர்களும் தங்கள் நூல்களின் முதன்மைச் செய்யுள்களை மட்டுமே பாடியிருக்கிறார்கள். சாம்பவரும் அவ்வாறே பாடி பரிசிலை பெற்றுக்கொண்டார். பரிசில் பெற்றவர்கள் அரசியை அணுகி வணங்கி வாழ்த்தொலி கூறி புறங்காட்டாது பின்னகர்ந்தபோது தென்னகத்தின் இவ்விளைய புலவர் மட்டும் வாழ்த்தொலி கூறாது தலைவணங்கி திரும்பிச்செல்ல அரசி அவரிடம் “இவர் என்ன சொல்லற்றவரா?” என்று கேட்டார். சாம்பவர் திகைத்து சொல்வதறியாது இளையோனிடம் கையசைத்தார். இவர் அப்போதும் வாழ்த்துரைக்காமல் வெறுமே நின்றார்.

“வாழ்த்துரை கூற உமக்கென்ன தயக்கம்?” என்று அரசி அவரிடம் கேட்டார்.

இவர் “பேரரசி, நீங்கள் அளித்த பரிசிலை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆகவே முறைப்படி வாழ்த்தொலி சொல்லும் கடன் எனக்கில்லை” என்றிருக்கிறார். “ஏன் பரிசிலை ஏற்றுக்கொள்ளவில்லை?” என்று அரசி சினத்துடன் கேட்க இவ்விளைஞர் “அது வரிசை அறியாது அளிக்கப்பட்டது. எங்கள் காவியத்தைக் கேட்டு மகிழ்ந்தளிக்கும் பரிசு மட்டுமே எங்களுக்குரியதாகும். நிரைநின்று தலைவணங்கிப் பெறுவது பரிசில் அல்ல, வறுமைக்கொடை. அதைப் பெறுவதற்கு நாங்கள் இரவலரல்ல” என்றார்.

சினத்துடன் எழுந்த பேரரசி அமைச்சரிடம் “யாரிவன்? பேரரசியின் முன் எப்படி சொல்லெடுக்க வேண்டுமென்று இவனுக்கு சொல்லப்படவில்லையா?” என்றிருக்கிறார். சாம்பவர் அவனை இடதுகையால் தன்னுடன் அணைத்துக்கொண்டு “பொறுத்தருளுங்கள், அரசி! தங்கள் கால்களில் சென்னி வைத்து மன்றாடுகிறேன். என் முதன்மை மாணவன். சொல்மகள் அமர்ந்த நா கொண்டவன். இவன்பொருட்டு நான் எத்தண்டத்தையும் ஏற்கிறேன்” என்றார். அரசி சினத்துடன் “இச்சிறுவனைப் பொறுத்தருளவில்லையென்றால் இவனுக்கு நான் நிகர்நின்றதாக ஆகும். ஆகவே உங்களை விட்டனுப்புகிறேன். ஆனால் நீங்கள் இப்போதே இந்த அவை நீங்கவேண்டும். இன்றே இந்நகர்விட்டு அகலவேண்டும்” என்றபின் உள்ளே சென்றார்.

காவலர்தலைவன் தீர்க்கபாதனும் காவலர்களும் சினத்துடன் புலவரை நெருங்க முதிய அந்தணரான சுஸ்மிதர் “அவர்கள் சொல்லேந்தியவர்கள், வீரரே. எவ்வகையிலும் அவர்களுக்குத் தீங்கு நேர இந்நகரின் நெறியும் குடியும் ஒப்பாது. அரசி ஆணையிட்டபடி அவர்கள் நகர் நீங்கட்டும். இந்நாட்டின் எல்லைக்குள் இவர்களுக்கு ஒரு தீங்கும் நிகழாது பார்த்துக்கொள்ள வேண்டியது நமது கடமை” என்றார். அமைச்சர் கிருபர் சினத்துடன் “அவ்வாறே செய்யுங்கள்” என ஆணையிட்டுவிட்டு உள்ளே சென்றர். இரு காவலர் அவர்களை அழைத்து வெளியே கொண்டுசென்று விட்டனர். “இச்செய்தி எங்கும் பரவக்கூடாது. அது பேரரசிக்கு இழிவு” என்று சுஸ்மிதர் சொன்னார்.

“அரசி அளித்த பரிசில்களை இவர்கள் அருகிருந்த கொற்றவை ஆலயத்தின் வாயிலிலேயே வைத்துவிட்டார்கள். அங்கிருந்து தங்களை சந்திப்பதற்கு இங்கு வந்திருக்கிறார்கள். உங்களைச் சந்தித்து ஒரு சொல் பெற்றுவிட்டே மீளவேண்டும், அதன்பொருட்டே அத்தனை தொலைவு கடந்து வந்திருக்கிறோம் என அவ்விளைஞர் தன் ஆசிரியரிடம் வற்புறுத்தியிருக்கிறார்” என்றான் பார்க்கவன். “அவர்கள் இங்கு வந்ததை நான் அறிந்தேன். அரசியால் விலக்கப்பட்டவர்களுக்கு நீங்கள் பெரும்பரிசு எதையும் அளித்துவிடக்கூடாதே என்று எச்சரிக்கும்பொருட்டே இங்கு ஓடிவந்தேன்” என்றான்.

யயாதி புன்னகைத்து “அவர்களுக்கு நான் பெரும்பரிசு அளிப்பேன் என்று எப்படி தெரிந்தது?” என்றான். “பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தினியின் எதிரே நிமிர்ந்து நின்று நீங்கள் என் சொல்லுக்குக் கீழ் என்று ஒருவன் சொல்வான் என்றால் அவனிடம் இருக்கும் சொல் உலகளந்தோன் நெஞ்சில்

சூடும் அருமணிக்கு நிகரானது. காலங்களைக் கடந்து செல்லும் பேராற்றல் கொண்டது. தன்னுள் எழுந்த சொல்லின் தன்மை அறிந்தவன் மட்டுமே அப்படி உரைக்கமுடியும். பெருஞ்சொல் ஒருவனில் எழுந்ததென்றால் பிறர் அறிவதற்கு முன் அவன் அதை அறிவான்” என்றான் பார்க்கவன்.

யயாதி “ஆம், இதுவரை இந்த அவையில் அளிக்கப்பட்டதிலேயே மிகப்பெரிய பரிசிலை இவர்களுக்குத்தான் அளித்திருக்கிறேன். பன்னீராயிரம் கழஞ்சுப் பொன். பன்னிரண்டு அருமணிகள்” என்றான். பார்க்கவன் நின்று “உண்மையாகவா?” என்றான். “ஆம்” என்று யயாதி சொன்னான். பார்க்கவன் கவலையுடன் தன் நெற்றியைத் தடவியபடி “நான் எண்ணினேன், ஆனால் இத்துணை எதிர்பார்க்கவில்லை” என்றான். யயாதி “அவர்களை யாரும் எதுவும் செய்யப்போவதில்லை. வேண்டுமென்றால் அவர்கள் உரிய பாதுகாப்புடன் நமது எல்லை கடக்கவேண்டுமென்ற ஆணையை நான் பிறப்பிக்கிறேன்” என்றான்.

“அது தேவையில்லை. பேரரசியின் சொல்லுக்கு அப்பால் இங்கு எவரும் எதுவும் எண்ணப்போவதுமில்லை. அவர்களின் விழியும் செவியுமில்லாத ஒரு கைப்பிடிமண் கூட நமது நாட்டுக்குள் இல்லை என்று எவரும் அறிவார்கள். சொல்தேர்பவனை பழிகொள்ளும் அளவுக்கு நெறியறியாதவரல்ல அரசி” என்று பார்க்கவன் சொன்னான். “பிறகென்ன?” என்றான் யயாதி. “அரசே, நீங்கள் விரிசலின் ஒலியை கேட்கவில்லையா?” என்றான்.

“ஆம். அது முன்பெப்போதோ தொடங்கிவிட்டது. நான் அவளை பார்த்தே நீணாள் ஆகிறது. இரண்டாவது மைந்தனின் படைக்கலமளிப்பு விழாவன்று அவள் அருகே அமர்ந்தேன்.

அன்று மாலை அவளுடனும் மைந்தனுடனும் சொல்லாடிக்கொண்டிருந்தேன். அதன்பிறகு ஓரிரு முறை அவைகளில் சேர்ந்தமர்ந்திருக்கிறோம். விழவுகளில் அருகே நின்றிருக்கிறோம். ஓரிரு முறைமைச் சொற்களை உரைத்திருக்கிறோம். உளமாடிக்கொண்டதே இல்லை" என்றான் யயாதி. "என் ஆணைகள் எவையும் இந்நகரில் இன்று செயல்வடிவு கொள்வதில்லை. எனவே ஆணையென எதையும் நான் இடுவதுமில்லை. திரிகர்த்தர்களையும் சௌவீரர்களையும் வெல்ல படைகிளம்பிய செய்திகூட அவர்கள் களம்வென்ற பின்னரே என் செவிக்கு வந்தது."

"அரசே, தாங்களும் அரசியும் பிரிந்து நெடுநாளாகிறது. இப்போது எதிர்நிற்கத் தொடங்கிவிட்டிருக்கிறீர்கள்" என்றான் பார்க்கவன். "நான் அஞ்சுவது நிகழவிருக்கிறது என்று என் ஆழுள்ளம் சொல்கிறது. வரும் முழுநிலவுநாளில் பேரரசி அசோகவனிக்கு செல்லவிருக்கிறார்கள்." யயாதி திகைத்து நின்று சிலகணங்கள் கழித்து "தேவயானியா? ஏதேனும் தெரிந்துவிட்டதா?" என்றான். "இல்லை" என்றான் பார்க்கவன். யயாதி நீள்மூச்சுவிட்டு "நன்று" என்றான். "ஆனால் தெரிவதற்கான எல்லா வாய்ப்புகளும் உள்ளன" என்றான் பார்க்கவன். "அதைத் தவிர்ப்பதைப்பற்றி பேசுவதற்கே நான் வந்தேன்."

யயாதி நோக்கி நின்றிருக்க பார்க்கவன் "உங்கள் குலமுறையன்னை அசோகசுந்தரியின் பலிகொடைநாள் வருகிறது. அதைக் கொண்டாடும்பொருட்டு அங்கே ஒரு பெருவிழவை ஒருங்கமைக்கிறார்கள். அரசி அதற்காக அங்கு செல்கிறார் என்பது அரசின் அறிவிப்பு. ஆனால் நம் எல்லையில் வாழும் தொல்லரக்கர்குடிகளில் ஏழு நம்முடன் அரசுமுறைத் தொடர்பு கொள்ள ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்"

என்றான். யயாதி “அதாவது கப்பம் அளிக்கப்போகிறார்கள்” என்றான். “ஆம், அதை முறைப்படி செய்வதென்றால் அவர்கள் அரசியிடம் வந்து பணியவேண்டும். அரசியின் அவையில் அமரவேண்டும். அரசி அவர்களுக்கு தலைப்பாகையும் கொடியடையாளமும் அளிப்பார்கள். அரசியின் குடித்தலைவர்களாக அவர்கள் அமைவார்கள். அந்த அடையாளம் அவர்களுக்கு பாதுகாப்பு, பிற குடிகளை வெல்வதற்கான படைக்கலம். அதற்கீடாக அவர்கள் திறை செலுத்துவார்கள்” என்றான் பார்க்கவன்.

“அதை ஏன் அங்கே நிகழ்த்துகிறாள்?” என்றான் யயாதி. “மேலும் பதினெட்டு தொல்குடிகள் அக்காடுகளில் உள்ளன. ஏழு குடிகள் நம்மவர்களாவதை அவர்கள் அறியவேண்டும். எதிர்ப்பதற்கு அஞ்சவேண்டும், பணிந்தால் நலனுண்டு என விழைவுகொள்ளவேண்டும்” என்றான் பார்க்கவன். “அவர்கள் எவரும் இதுவரை கண்டிராதபடி மிகப் பெரிய குடிவிழவாக அதை அமைக்க எண்ணுகிறார்கள். தொல்குடிகளின் போர்க்களியாட்டுகள், நடனங்கள், விருந்துகள் என ஏழு நாட்கள் நீளும் கொண்டாட்டம்.” யயாதி “அப்படியென்றால் அவள் பதினைந்து நாட்களுக்குமேல் அங்கிருப்பாள்” என்றான். “சர்மிஷ்டையை உடனே அங்கிருந்து அகற்றவேண்டும்.”

“இளைய அரசியை அங்கிருந்து விலகச் செய்வது பெரும்பிழை. பேரரசிக்கு பல்லாயிரம் செவிகள்” என்று பார்க்கவன் சொன்னான். “இளைய அரசி அங்கிருந்து அகற்றப்பட்டார் என்றால் ஐயம் எழும். அரசி அங்கிருக்கட்டும். அரசி தங்கியிருக்கும் மாளிகையையும் மாற்றவேண்டியதில்லை. அங்கே காவலர்தலைவன் தன் குடும்பத்துடன்

தங்கியிருக்கட்டும்.” யயாதி “அவனுக்குச் சேடியாக சர்மிஷ்டை இருக்கிறாள் என்றாகவேண்டும் அல்லவா?” என்றான். “ஆம்” என்றான் பார்க்கவன். “இளவரசர் மூவரையும் வெளியே அனுப்பிவிடுவோம். அவர்கள் அங்கிருந்தால்தான் இடர். அவர்கள் காட்டுக்குள் சென்று தங்கட்டும். விழவு முடிந்து மீள்வது நன்று.”

நெடுநேரம் யயாதி ஒன்றும் சொல்லவில்லை. பின்னர் “ஒன்றும் நிகழலாகாது என்று தெய்வங்களை வேண்டிக்கொள்கிறேன்” என்றான். பார்க்கவன் “பேரரசியின் உயரத்தில் இருந்து இத்தனை சிறியவற்றை அவர்களால் இன்று நோக்கவியலாது. அவர்களின் இலக்கு மலைக்குடிகளை வென்றடக்கியபின் எல்லைகளை வலுப்படுத்திவிட்டு தென்னகம் நோக்கி படைகொண்டு செல்வது. அதன் நடுவே பிறவற்றை அவர்கள் அறிய வாய்ப்பில்லை. யானை நடக்கும் பாதையில் எறும்புகள் நாமெல்லாம்” என்றான். யயாதி “ஆம், நன்று நிகழவேண்டும்” என்றான்.

# மாமலர் - 77

### 77. துயரழிமரச்சாயல்

அசோகவனிக்கு பார்க்கவனுடன் கிளம்பியபோது யயாதி அமைதியிழந்திருந்தான். பார்க்கவன் “அனைத்தையும் விளக்கி அரசிக்கு விரிவான ஓலையை அனுப்பியிருக்கிறேன்” என்றான். யயாதி எரிச்சலுடன் “அவள் அரசுசூழ்தல் கற்றவள் அல்ல” என்றான். “ஆம், ஆனால் இத்தகைய நிலைகளில் பெண்டிர் அனைவரும் ஆண்களைவிட பன்மடங்கு நுண்ணுணர்வை காட்டுவர்” என்றான் பார்க்கவன். யயாதி பெருமூச்சுடன் “ஆம்,

அதைவிட நுண்ணுணர்வை தேவயானியும் காட்டுவாள். வேட்டைவிலங்கு இரைவிலங்கைவிட நுண்மையும் விரைவும்கொண்டது என்பதனால்தான் காடு வாழ்கிறது” என்றான்.

“ஆம், ஆனால் என் நம்பிக்கை என்னவென்றால் பதினாறாண்டுகளுக்கு முன்பு அரசி சர்மிஷ்டைக்கு முதல் மைந்தன் பிறந்த செய்தியை ஒற்றர் சென்று சொன்னபோது நிகழ்ந்ததுதான்” என்றான் பார்க்கவன். அவர்கள் மாற்றுருவில் புரவிகளில் மலைப்பாதையினூடாக சென்றுகொண்டிருந்தனர். அந்தியெழுந்துகொண்டிருந்த வேளையில் அவர்களது புரவிகளின் குளம்போசை சொற்களுக்குத் தாளமென ஒலித்தது. முதுவேனிலின் வெம்மை தணியும்போது எழும் புழுதிமணம் இனிய தின்பொருள் எதையோ நினைவூட்டியது. தழையுடன் சேர்த்து அவிக்கப்படும் பொருள். காற்றிலா மரங்களில் தழைக்குவைகள் சோர்ந்து தொய்ந்திருந்தன. சிறகோய்ந்த பறவைகள் வழுக்கியவைபோல செல்லும் மங்கிய வானம்.

“அதை முழுமையாக நான் உங்களிடம் இதுவரை சொல்லவில்லை. அனைத்தும் இயல்பாக சீரடைந்தன என்றே குறிப்பிட்டேன். அன்று செய்தி கேட்டு சினந்து கொந்தளித்த பேரரசி தன் தோழி சாயையை அழைத்து அதை உசாவியறிந்து வரும்படி ஆணையிட்டார். அதற்கு மறுநாள் தீர்க்கதமஸின் குருதியில் எழுந்த ஐந்து தொல்குடி அரசர்களுக்கான தனி அவை ஒன்று அரண்மனையில் கூடவிருந்தது. அதையொட்டி விழவும் விருந்தும் ஒருங்கமைக்கப்பட்டிருந்தன. பேரரசியால் அதிலிருந்து உள்ளத்தை விலக்க இயலவில்லை.”

“ஓசையற்ற நுண்மையால் சாயை என்றும் எண்ணியிரா விரைவால் வியாஹ்ரை என்றும் அழைக்கப்பட்டவளாகிய

அணுக்கத்தோழி காமவர்த்தினி பேரரசியின் தோற்றம்கொண்டு அசோகவனிக்கு வந்தாள். இங்கே காவலனின் அரண்மனையில் தங்கி அரசி சர்மிஷ்டையை அழைத்துவரச்சொல்லி அவர் பெற்ற மைந்தனின் தந்தை எவர் என்று உசாவினாள். அதை சொல்ல இயலாதென்று அரசி சொன்னபோது அவரை கைநீட்டி அறைந்தாள். கீழே விழுந்த அரசியை காலால் உதைத்தாள். கூந்தலைப் பிடித்துச் சுழற்றி சுவரோடு சேர்த்து நிறுத்தி உலுக்கி சொல்லாவிட்டால் அவரும் அவர் குழந்தையும் குருநகரியின் செண்டுவெளியில் கழுவிலமர நேரிடுமென அச்சுறுத்தினாள்."

"அரசே, அருள்வடிவாக பேரரசி தோற்றமளிக்கையில் அவர்களின் கொடியமுகம் அணுக்கத்தோழி சாயையின் வடிவில் வெளிப்படுகிறதென்பதை அறிந்திருப்பீர்கள். பாரதவர்ஷமே இன்று அத்தோழியைத்தான் அஞ்சிக்கொண்டிருக்கிறது. நிகரற்ற கொடுமை நிறைந்த நெஞ்சம் கொண்டவள், அளியிலாதவள், எதையும் அஞ்சாதவள் அவள் என்கிறார்கள். சாயை என்று ஒரு தோழியே இல்லை என்றும் அது பேரரசியே அவ்வாறு உருமாறி வெளிப்படுவதுதான் என்றும் குடிகளில் பெரும்பாலானவர்கள் நம்புகிறார்கள். அரசி வாய்திறக்க மறுத்தபோது தன் ஏவலரை அழைத்து அவரையும் குழந்தையையும் தேரிலேற்ற ஆணையிட்டாள் சாயை."

"அரசி அதன்பின்னரே நெக்குவிட்டார். கதறியபடி அவள் கால்களில் விழுந்து அங்கே வந்து தங்கிச்சென்ற முனிவர் ஒருவருக்கு இரவுப்பணிவிடை செய்ய நேர்ந்தது என்றும் அதன் விளைவாகப் பிறந்த மைந்தன் அவன் என்றும் சொன்னார். அருகே இருந்த அகல்சுடரை எடுத்துக் காட்டி அனல்தொட்டு

ஆணையிட சாயை கூறினாள். அவ்வாறே அச்சுடர் தொட்டு அரசி ஆணையிட்டார். அம்முனிவரின் பெயரென்ன என்று கேட்கவில்லை என்றும் கேட்கலாகாதென்று ஆணையிடப்பட்டதென்றும் அரசி சொன்னார். சாயை காவலர்தலைவனிடம் அந்த முனிவர் எவர் என்று கேட்டாள். அதை நான் மட்டுமே அறிவேன் என்று அவன் சொல்ல குருநகரிக்குத் திரும்பிவந்து என்னிடம் கேட்டாள்.”

“திருவிடத்தைச் சேர்ந்த அகத்தியரின் முதல் மாணவராகிய திருணதூமர் என்று நான் சொன்னேன். பிறர் அறியாமல் அசோகவனிக்கு வந்து தங்கி இமயமலைக்குச் சென்றார்கள் என விளக்கினேன். சாயை அதை நம்பவில்லை என்றே எண்ணினேன். புலியென விழிஒளிர உறுமிவிட்டு அவள் திரும்பிச்சென்றாள். அரசியை அங்கிருந்து உடனடியாக எங்காவது அறியாக் காட்டுக்கு கொண்டுசென்றுவிட ஆணையிடவேண்டுமென எண்ணினேன். ஆனால் ஓலையை பருந்திலேற்றுவதற்கு முன் என்ன நிகழ்கிறதென்று நோக்கலாமென்று தயங்கினேன்.”

“ஏனென்றால் பேரரசியின் ஒற்றர்வலையின் விரிவை நான் அறிவேன். அவர் விழிகள் செல்லாக் காடுகள் என ஏதுமில்லை. அஞ்சி முந்திச்சென்று அரசியை அனுப்பினால் அவ்வாறு அனுப்பியதே அனைத்துக்கும் சான்றென்று ஆகக்கூடுமெனத் தோன்றியது. பேரரசியிடம் சாயை என்ன சொல்லப்போகிறாள் என்று அறிய எவ்வழியும் இல்லை. குருநகரியின் பேரரசியின் தனியறைக்குள் செவிசெலுத்தும் ஒற்றர் எவருமில்லை. காத்திருப்பதன்றி வேறு வழியேதுமில்லை. அரசே, அந்த அரைநாள் பொழுதில் நான் நூறுமுறை இறந்தெழுந்தேன்.”

“பேரரசியிடம் சாயை பேசி முடித்தபின் இருவரும் கிளம்பி கொற்றவை ஆலயத்தில் அரசியரின் பூசனைவிழவுக்குச் சென்றனர். மறுநாள் காலையில் குடிப்பேரவை, அன்று மாலை செண்டுவெளி விழா. அசோகநகரிக்கு ஆணைகள் ஏதும் செல்கின்றனவா என்று பார்த்துக்கொண்டிருந்தேன். கொலைவாளுக்குக் கீழே தலைவைத்து கண்களை மூடி காலத்தை எண்ணியபடி காத்திருப்பதுதான் அது. மூன்று நாட்களுக்குப் பின்னரே ஒன்றும் நிகழவில்லை என்பதை என் உள்ளம் உணரத்தொடங்கியது. ஆயினும் ஒவ்வொன்றையும் நுணுகி நோக்கியபடி காத்திருந்தேன். எங்கோ அறியாவிழி ஒன்று நோக்கி காத்திருக்கிறது என்னும் உணர்வு. நீங்கள் மீண்டும் அசோகவனிக்குச் செல்வதைப்பற்றி பலமுறை பேசிக்கொண்டிருந்தீர்கள். மைந்தனை காணவேண்டும் என்று துடித்தீர்கள். உங்களை காமரூபத்தில் நிகழ்ந்த பெருங்களியாட்டுக்கு இரண்டு மாதங்களில் திரும்பலாம் என பொய்சொல்லி அழைத்துச்சென்றது அதனால்தான்.”

“நாம் திரும்ப ஓராண்டாகியது. அதனால் சினம்கொண்டு நீங்கள் என் மேல் வசைபொழிந்தீர்கள். என் ஒற்றர்கள் செய்தியனுப்பிக்கொண்டே இருந்தனர். ஒன்றும் நிகழவில்லை என ஓராண்டுக்குப் பின்னரே உறுதிகொண்டேன். உங்கள் இரண்டாவது மைந்தனின் அன்னமூட்டு விழவுக்கான செய்தி வந்தபோதுதான் நாம் திரும்பிவந்தோம். ஒவ்வொன்றாக ஆராய்ந்தபின் உறுதிகொண்டேன், அரசி சொன்னதை சாயை நம்பிவிட்டாள் என. அவள் சொன்னதை பேரரசியும் ஏற்றுக்கொண்டார் என்று.”

“அந்த ஓராண்டு எனக்கு கற்பித்தது ஒன்றுண்டு. பெரும்பாலும் அஞ்சியும் பதறியும்தான் நாம் நம்மை

வெளிக்காட்டிக்கொள்கிறோம். விழைவனவற்றால் மெய்மை மறைக்கப்படுவதிலிருந்து எந்நுண்மதியாளருக்கும் விலக்கில்லை. பேரரசி தன்னை பேரழகி என்றும் பாரதவர்ஷத்தில் நிகரற்ற பெண் என்றும் எண்ணுகிறார்கள். அழகும் அறிவும் நிலையும் குறைந்த அரசி சர்மிஷ்டையை நீங்கள் விழையக்கூடுமென்ற எண்ணமே அவர்களின் நெஞ்சிலெழாதது அதனால்தான். அவர்களின் அந்த தன்னம்பிக்கையே நமக்கு காப்பு. பட்டுநூலென மிக மெல்லியது. ஆனால் உறுதியானது. நாம் அதன்மேல் நம்பி நடந்துசெல்லலாம்" என்றான் பார்க்கவன்.

"பதினாறாண்டுகளாக இது நிகழ்ந்துகொண்டிருக்கிறதென்பதே இது சீராக அமைந்துவிட்டது என்பதற்கான சான்று. பதினாறாண்டு என்பது நெடுங்காலம். நீர் ஓடித் தடம் கண்டு ஓடைகளாகி நிலவடிவென்றே ஆகிவிடுவதுபோல ஒவ்வொன்றும் அதன்போக்கில் முற்றமைந்துவிட்டிருக்கின்றது" என்றான்.

யயாதி சில கணங்களுக்குப்பின் "தேவயானியின் அந்நம்பிக்கையே இப்போது எனக்கு அச்சமூட்டுகிறது. அது குலைந்தால் அவள் கொள்ளும் சினம் எப்படிப்பட்டதாக இருக்கும்?" என்றான். பின்னர் தலையை அசைத்து "சுக்ரரின் மகள்... இருளில் நாகத்தை கால்தொட்டது போன்றது அவ்வெண்ணம் அளிக்கும் அச்சச்சிலிர்ப்பு..." என்றான். பார்க்கவன் ஒன்றும் சொல்லவில்லை. இருவரின் புரவிக்குளம்போசைகள் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தன. அப்போது அவை அவர்களின் சொல்லின்மையின் தாளமாக ஆகிவிட்டிருந்தன.

ஓடையொன்றின் கரைக்குச் செல்வது வரை யயாதி ஒன்றும் சொல்லவில்லை. எண்ணங்கள் நிறைந்து ததும்பியவை மட்டுமே சொல்லாவது அவன் இயல்பென்பதை அறிந்த பார்க்கவனும் ஒன்றும் உரையாடாமல் காட்டை நோக்கியபடி வந்தான். ஓடையின் ஓசை தொலைவில் கேட்கத் தொடங்கியதுமே யயாதியின் புரவி விடாயை அறிவிக்க மெல்ல கனைத்தது. ஆம், நிறுத்துகிறேன் என்று சொல்ல அவன் அதன் நீள்கழுத்தை கையால் தட்டினான். நீரோடை சிறிய அருவியாகப் பொழிந்து மலையிறங்கியது. வேர்ப்புடைப்புகளில் அது வளைந்து வழிவதன் ஒளியலை இலைகளில் நெளிந்துகொண்டிருந்தது. யயாதி புரவியை நிறுத்துவதற்குள் அதுவே நின்றுவிட்டது.

அவன் இறங்கி ஓடையை அணுகினான். புரவி அணுகி பெருமூச்சுவிட்டபடி குனிந்து நீர் அருந்தி கழுத்தும் விலாவும் சிலிர்க்க வால் சுழற்றியது. பார்க்கவனின் புரவி அதனருகே வந்து தோள்சேர்ந்து நின்று நீர் அருந்தியது. ஓடைநீரை அள்ளி முகம் கழுவி தலையிலும் விட்டுக்கொண்டு வேர்மீது யயாதி அமர்ந்தான். பார்க்கவன் முழங்காலளவு நீரில் நின்று கால்களால் அளைந்துகொண்டிருந்தான். “எனக்கு ஏன் சர்மிஷ்டைமேல் காதலெழுந்தது என்பதைப்பற்றி நீ வியந்துகொண்டதில்லையா?” என்று யயாதி கேட்டான்.

அவ்வாறு எண்ணியிராத கணத்தில் கேட்பது அவன் வழக்கம் என்று அறிந்திருந்தாலும் பார்க்கவன் திடுக்கிட்டான். “அது எங்குமுள்ளதுதானே?” என்றான். “கிடைக்கும் பெண்களை எல்லாம் விரும்புபவன் ஆண் என்ற பொருளிலா?” என்று யயாதி கசப்புச் சிரிப்புடன் கேட்டான். “இல்லை என நீங்களே அறிவீர்கள், அரசே” என்றான் பார்க்கவன். “அஸ்வாலாயனரின்

காவியங்களில் பெருநதிகளின் மிடுக்கைவிட சிற்றோடைகளின் எளிமையே அழகென்று சொல்லப்பட்டுள்ளது.” அதை கேட்காதவன்போல யயாதி “பெண்களை நாம் விரும்புவது ஆடைகளை விரும்புவது போலத்தான்” என்றான். “அணிமிக்கதாயினும் பெருமதிப்புகொண்டதாயினும் நமக்குப் பொருத்தமான ஆடையே நம்மை கவர்கிறது.”

“நல்ல ஆடை என்பது நம்மில் ஒரு பகுதியென்றாவது. நம்மை நாம் விழையும்படி காட்டுவது. நம் குறைகளை மறைத்தும் நிறைகளை மிகையாக்கியும் சமைப்பது” என்றான் யயாதி. மீண்டும் எண்ணநீட்டம் அறுபட்டு கைவிரல்களை காற்றில் சுழற்றி எதையோ வரைந்தான். “பெண்ணழகென்று நான் விழைந்த எதையுமே இவளிடம் நான் காணவில்லை. மீண்டும் மீண்டும் நான் எண்ணி வியந்த ஒன்றுண்டு. அவளை நான் நெடுநாள் உளம்கொண்ட பின்னரே நேரில் கண்டேன். ஆனால் மீண்டும் கண்டபோது அவளை நான் அடையாளம் காணவே இல்லை. பிறிதொருமுறை எவரும் கண்டுகொள்ளாத தோற்றம். அவளை தேவயானி முழுமையாகவே மறந்துவிட்டமைகூட அந்தத் தோற்றத்தால்தான்” என்று தொடர்ந்தான்.

முதல்முறை அவளை ஆலயத்தில் சுடரொளியில் பார்த்துவிட்டு மீண்ட அந்நாளை நினைவுறுகிறேன். மண்ணகல் சுடரால் அழகுகொள்வதுபோல அவள் தன் விழிகளால் எழிலுற்றிருந்தாள். அவ்விழிகளையே அன்று முழுக்க எண்ணிக்கொண்டிருந்தேன். அரண்மனையில் அவ்விரவில் அந்த விழிகளை எண்ணி எண்ணி பிறிதொன்றையும் எண்ணவியலாதவனாக ஆகி தவித்தேன். உளக்காடி விழிமுன் அப்படி அழியா அணையா ஓவியமென நின்றிருக்கமுடியுமா

என்று திகைத்தேன். எங்கும் நிற்கவோ அமரவோ படுக்கவோ முடியாத பெருந்தவிப்பு. அவ்வண்ணம் ஒன்றை அதற்குமுன் அறிந்திருக்கவே இல்லை.

நான் ஏங்கிய முதல் வசந்தம் அதுவா என வியந்தேன். அதுவெனில் நான் நல்லூழ் கொண்டவன் என மகிழ்ந்தேன். ஆனால் இரவு செல்லச் செல்ல அந்தத் தவிப்பு தாளமுடியாதவனாகி அதிலிருந்து வெளியேற முயன்றேன். எட்டு பக்கமும் கரிய கோட்டைச்சுவரால் முற்றிலும் மூடப்பட்டிருப்பவன்போல உளம் திணறினேன். இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னரும்கூட அவ்விரவின் கொந்தளிப்பை என்னால் துளி குறையாமல் மீட்டெடுக்க முடிகிறது. காலம் செறிந்து பேரழுத்தம்கொள்ளும் அத்தகைய பொழுதுகள் வாழ்க்கையில் மிக அரிதாகவே எவருக்கும் நிகழும்.

கணங்களாக காலத்தில் இருப்பது. ஒவ்வொரு எண்ணத்தையும் தனித்தனியாக அறிவது. அப்போது அறிந்தேன் நாம் எண்ணங்களில் ஒழுகுவதில்லை என. நீர்த்துளிகள் உதிரும் ஒலிபோன்றவை எண்ணங்கள். ஒவ்வொரு ஒலியும் ஒன்றுபோல் பிறிதொன்று என முதலில் தோன்றும். மிகச்சிறிய மாறுபாடு கொண்டிருப்பது பின்னர் தெரியும். மாறுபாடுகள் பொருளற்றவை என்றும் ஒன்றே ஒழியாது நிகழ்கிறது என்றும் அதன்பின்னர் அறிவோம். உள்ளம் என்பது வெறும் மாளாச் சுழல்தான் என்றும் நம் இருப்பு என்பது பொருளற்ற மீள்நிகழ்வே என்றும் அறிகையில் நாம் தனிமையிலும் இருளிலும் இருக்கலாகாது. அத்தனிமை முழுத் தனிமையாகும். இருள் கடுவெளிப் பேரிருளென்றாகும்.

அந்த விடியலைப்போல் பிறிதொன்று எனக்கு அதன் பிறகு வாய்த்ததில்லை. முதல் பறவைக் குரலெழுந்தபோது

இருளுக்குள் ஓர் ஒளிக்கீற்று கீறிச்சென்றதுபோல அதை கண்களால் கண்டேன். துயில்நீப்பும் நரம்புகளின் இறுக்கமுமாக நான் நோயா மயக்கா கனவா என்றறியா நிலையில் இருந்தேன். பின்னர் விடிவெள்ளியை கண்டேன். அது நுனிநாவால் கூரம்பின் முனையை தொடுவதுபோல சுவைத்தது, மெய்கூசச் செய்தது. பின்னர் உடல்குளிரப் பொழியும் குளிரென ஓர் இசை. அது புலரியின் செவ்வொளி.

பொற்கதிர்கள் இலைகள் நடுவே தோன்றி நீண்டு பரவியபோது நான் உருகிக்கொண்டிருந்தேன். காலை தூக்கி வைத்தபோது நெடுந்தொலைவு வரை வழிந்துகிடந்த என்னை இழுத்துக்கொண்டு செல்லவேண்டியிருந்தது. சோலைக்குள் இறங்கிச்சென்றேன். மரங்களினூடாக உலர்ந்த கசந்த வாயும் அனல்கண்ட விழிகளும் குடைச்சலெடுக்கும் மூட்டுகளுமாக தளர்ந்த நடையில் சென்றேன். என்மேல் இளங்கதிரின் ஒளி முழுமையாக பொழிந்தது. பற்றி எரிந்து சுடராகி தழைந்து குதித்தெழுந்து அலையாடி நின்றேன். பின்னர் நெடுநேரம் கழித்து என்னை உணர்ந்து மெல்ல அமர்ந்து கண்கசிந்து வழிய நெஞ்சு விம்மி விம்மி அதிர அழுதேன். அழுந்தோறும் என் முடிச்சுகளனைத்தும் அவிழ, நெடுநேரம் அங்கு நின்று அழுதுகொண்டிருந்தேன்.

அதன்பின் பிறிதொருவனானேன். கண்கள் மேலிருந்து ஒரு மெல்லிய ஆடையை உரித்தெடுத்ததுபோல காட்சிகள் அனைத்தும் துலக்கம் கொண்டன. காற்றிலாடிய இலைகளின் வலைநரம்புகளை காணமுடிந்தது. இலைத்தண்டிலூர்ந்த பச்சைப்புழுவின் ஒவ்வொரு மயிரும் கண்ணுக்குத் தெரிந்தது. புலன்களனைத்தும் பன்மடங்கு கூர்மைகொண்டன. சருகின்மேல் சிற்றுயிர் ஒன்று ஊர்ந்து ஏறுவதை கேட்கும்

செவிகள் வாய்த்தன. காற்றில் வந்த இளம்புழுதிமணமும் நீராவிமணமும் பச்சிலைமணமும் தனித்தனியாக நாசியை வந்தடைந்தன. என்னுள் வேட்டைவிலங்கொன்றும் இரைவிலங்கொன்றும் இருமுனைகளில் மயிர்சிலிர்த்து புலன்கூர்ந்து அமர்ந்து ஒன்றை ஒன்று கண்காணித்தன.

நான் அரசன். உடனே அவளை அழைத்துவரும்படி ஆணையிட்டிருக்க முடியும். நீ என்னிடம் அவ்வெண்ணம் என் உள்ளத்தில் எழுந்ததுமே அவளைப்பற்றி பேசத்தொடங்கிவிட்டிருந்தாய். ஆனால் என்னால் அவளை அணுகுவதைப்பற்றி எண்ணவே முடியவில்லை. எனவே நீ என்னிடம் அவளைப்பற்றி சொன்ன ஒவ்வொரு சொல்லும் கசந்தது. உன்னை கடிந்து விலக்கினேன். என் வாழ்வில் நீயில்லாது தனித்திருக்கவேண்டுமென நான் விழைந்த தருணம் அது ஒன்றே. ஆனால் தனித்திருக்கையில் என்னுள் எழுந்த அனலால் தவித்து மீண்டும் உன்னிடம் வந்தேன். அவளைப்பற்றி நீ பேச நான் விழையவில்லை. பிறிதெதையாவது நீ பேசினால் என் உள்ளம் அதில் ஒன்றவில்லை.

ஏன் அவளிடம் என்னை கொண்டுசென்று வைப்பதை அத்தனை அஞ்சினேன்? அவள் என்னுள் எழுந்த பேருருவை நேரில் கொண்டிருக்கமாட்டாள் என்பதனாலா? வெறுமொரு பெண்ணென அவளைக் காண்பது நான் தவமிருந்து பெற்ற அமுதை நீரென்றாக்கிவிடும் என்பதனாலா? அவளிடம் நான் என் விழைவை எவ்வண்ணம் சொல்லமுடியும்? தோழனோ பாங்கனோ சொல்வது என் தனிமைக்குள் ஊடுருவுவது. அவ்வெண்ணமே உளம்கூசச் செய்தது. அவள் தோழி சொல்லலாம். அது முறைமை சார்ந்தது. அது மேலும் கூச

வைத்தது. கவிஞர் சொல்லலாம், அது வெறும் அணிச்சொல் என அப்போது பட்டது.

எப்படி சொன்னாலும் அது நானிருக்கும் நிலைக்கு வந்தடையாத வெற்றுச்சொல்லே. சொல் ஒன்றை எடுத்து அதற்கு நிகராக வைப்பதன் இழிவு என்னை குறுகச் செய்தது. அவளிடம் என்னை சொல்லும் தருணத்தை நான் என்னுள் நிகழ்த்திக்கொள்ளவே இல்லை. அவ்வெண்ணம் எழுந்ததுமே பதறி விலகி பிறிதொன்றுக்கு செல்வேன். பெய்தொழியாது இடிமுழக்கி மின்னிக் கிழிபட்டுக்கொண்டே இருந்தது கருவுற்றுக் கருமைகொண்ட வானம். பின்னர் அவளிடம் அதை சொல்லவே போவதில்லை என எண்ணி அத்தன்னிரக்கத்தில் கரைந்து விழிநீர் வடிய அமர்ந்திருந்தேன். தன்னை உணர்ந்து எழுந்து 'எத்தனை இனிமை' என வியந்தேன்.

உளமொரு நாவென தித்திப்பில் அளைந்தபடியே இருந்த நாட்கள். நான் விழைந்தது அதுவே என்றறிந்தேன். அக்கணங்கள் அரியவை, சிறிய அசைவில் மலர்க்கிளை ஏந்திய பனித்துளிபோல பொலபொலவென உதிர்ந்துவிடுபவை என உணர்ந்தேன். எனவே என் உள்ளத்தை பொத்திப்பொத்தி அசைக்காமல் கொண்டுசென்றேன். அக்கணம் பொழிந்தழியக்கூடும், அவ்வாறன்றி அமையாது. ஆனால் அதுவரை என் வசந்தம் நீடிக்கட்டும். எக்கணம் எக்கணம் என சிலநாட்கள். அங்கிருந்தால் ஏதேனும் ஆகிவிடும் என்று அஞ்சியே மீண்டும் அவளைப் பார்க்காமல் குருநகரிக்கு வந்தேன். பித்தன் என இங்கிருந்தேன். கேட்பதெல்லாம் இசையாகவும் கவிதையாகவும் ஆயின. நா உண்பதற்கு எப்போதும் இனிப்பை விழைந்தது. புலரியும் மாலையும்

உச்சிப்பொழுதின் உருகும்வெயிலும்கூட பேரழகுடன் என்னைச் சூழ்ந்தன. இரவுகளில் விண்மீன்கள் வெளித்த வானம் என்னை மின்னிமின்னி நோக்கியது.

பின்னர் அக்கணம் உதிரவே போவதில்லை என எண்ணலானேன். அந்த நீர்த்துளி என் தளிர்முனையில் நின்று ஒளிநடுங்கி ததும்பிக்கொண்டே காலத்தை கடக்கும். இறுகி ஒரு முத்தாகும். தாமரையில் மூங்கிலில் மட்டுமல்ல, மானுடரிலும் முத்து விளைவதுண்டு. முத்து விளையக்கூடுமென்பதனால் அத்தனை சிப்பிகளும் முத்துச்சிப்பிகளாகின்றன. முத்து நிகழ்ந்தது பிறவற்றிலிருந்து பிரிந்து நிற்பதில்லை. அதன் அமைதி வலியிலும் தவத்திலும் எழுந்தது. அகல்விளக்குக்குள் புகுந்து சுடர் ஒளிந்திருப்பதே முத்துச்சிப்பி. ஒளியை அது மட்டுமே அறியும்.

ஆனால் எண்ணியிராதபடி அது நிகழ்ந்தது. நான் மீண்டும் மீண்டும் அசோகவனிக்கு சென்றுகொண்டிருந்தேன். குருநகரியில் சிலநாட்கள் நீளும்போது அவளை பார்க்கவேண்டுமென்று தோன்றும். என் உளம்கொண்ட அவள் ஓவியம் சற்றே மங்கலாகிவிட்டிருப்பதைப்போல. அல்லது இடையே உள்ள தொலைவு மிக அகன்றுவிட்டதைப்போல. கிளம்பவேண்டும் என்னும் எண்ணம் வந்ததுமே அதனுடன் போராடத் தொடங்குவேன். உளநடுக்குடன் அதை தவிர்ப்பேன் முதற்சிலநாட்கள். பின்னர் உருவளர்ந்து அருகணைந்திருக்கும் அதை உந்தி உந்தி அப்பால் நிறுத்துவேன்.

அதற்கு அடிபணியும் ஒருகணம் உண்டு. அப்போது அத்தனை சித்தக்கட்டுகளும் தெறிக்கும். காற்றில் அலைபாயும் சருகு எப்போது விண்ணிலெழ முடிவெடுக்கிறதோ அதை நிகர்த்த ஒருகணம். மறுகணமே உடலெங்கும் ஒரு துடிப்பு படர்ந்தேறும்.

வெளியே பாய்ந்து புரவியில் ஏறி பிறிதொரு எண்ணமில்லாமல் பாய்வேன். காற்றில் விழுந்துகொண்டே இருப்பேன். அசோகவனியில் சென்று மோதிவிழுவேன். அவளைப் பார்க்கும் கணம் வரை பெருகும் பதற்றம். அவளை நோக்க அரண்மனையின் உப்பரிகை ஒன்று உகந்தது. அங்கு சென்று நின்றிருப்பேன். நூறுமுறை உள்ளே வந்தும் வெளியே சென்றும் தவித்து எரிந்து. பின் அவள் தெரிவாள்.

எப்போதுமே அது ஓர் வண்ண அசைவுதான். உடைவண்ணம், உடல்வண்ணம். முதற்கணம் அவள் எளிய பெண். பின் நுரைபெருகியெழும் உள்ளம் அவளை அள்ளி அள்ளி நிரப்பிக்கொள்ளும். அது விழைந்த ஒருத்தியை வரைந்து அவள்மேல் பதிக்கும். அங்கு பேரழகி ஒருத்தி நின்றிருப்பாள். நெஞ்சைப்பற்றியபடி தூண்மறைவில் நோக்கி நின்றிருப்பேன். சில தருணங்களில் விம்மி அழுதிருக்கிறேன். பின்னர் மெல்ல தளர்ந்து திரும்புவேன். அங்கு வந்து சேர்வதுவரை என் உடல் உதறி காற்றில் பறக்கவிட்ட எடை முழுக்க மீண்டுவந்து என் தோளில் இடையில் தொடையில் கணுக்கால்களில் அழுத்தும்.

உள்ளறைக்குச் சென்று மஞ்சத்தில் படுத்துக்கொள்வேன். எங்கோ விழுந்துகொண்டிருப்பேன். எங்கோ மிதந்துகொண்டுமிருப்பேன். இருப்பு என்பது இவ்வண்ணம் அலைசுடராக கலையும் புகையாக ஆகுமென்றால் உடலென்பதற்கு ஏது பொருள்? காதலை இளமையிலேயே அடையவேண்டும், இந்த முதிய உடல் அவ்வெம்மையையும் விசையையும் தாளமுடியாது. கிளைதாழக் காய்ப்பவை இளமரங்கள், முதுமரக்கனிகள் இனிமையும் கசப்பும் செறிந்து சிறுத்தவை.

ஈராண்டுக்குள் எட்டுமுறை அசோகவனிக்கு சென்றேன். முதலில் மாதம் ஒருமுறை. பின்னர் அவ்வுணர்வெழுச்சி அணைகிறதா என்னும் ஐயம் எழுந்தது. அது அணைந்தால் அவ்வினிமையை இழப்பேன் என்று தோன்றவே அடிக்கடி செல்லலானேன். செல்லும் வழியின் ஒவ்வொரு மரமும் நன்கறிந்தவையாக ஆயின. அவற்றுடன் நான் பகிர்வதற்குரிய மந்தணம் ஒன்றிருந்தது. மந்தணம் பகிர்பவர்களின் நட்பு இறுகியது. அத்தொலைவு மிகக்குறுகி வந்து நான்கு பாய்ச்சலில் அங்கு சென்று சேர்வேன் என்றாகியது.

அந்நாளில் ஒருமுறை அரண்மனையின் பின்பக்கச் சோலையில் அசோகமரத்தின் அடியில் நின்றிருந்தேன். அங்கிருந்து அன்னையின் ஆலயம் செல்வதைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன். புதர் கலையும் ஒலி கேட்டு திரும்பி நோக்கியவன் மிக அருகே நேர்முன்னால் அவளை கண்டேன். கையில் பூக்கூடையுடன் நின்றிருந்தாள். முள்ளில் சிக்கிய ஆடையை இழுத்த கையும் அதன்பொருட்டு திரும்பிய தோள்களும் அசைவிழந்து சிலைக்க விழிகள் விரிந்து திகைப்பு நிறைந்திருக்க.

என் உடல் பதறிக்கொண்டிருந்தது. எண்ணங்கள் என ஏதுமில்லை, விழிகளே உள்ளமும் ஆகிவிட்டிருந்தன. அவள் தோளில் மெல்லிய தோல்வரிகள் மணல்மின் கொண்டிருந்தன. வளைந்தெழுந்த சிறிய மேலுதடின் மீது வியர்வை பனித்திருந்தது. அவள் விம்மினாள், அல்லது அவ்வொலி என் உள்ளத்தால் உணரப்பட்டதா? நான் விழிவிலக்கியதும் என் உடலும் அறியாது திரும்ப மீண்டுமொரு விம்மலை கேட்டேன். தீச்சுட்டதுபோல திரும்பியபோது அவள் விழி தாழ்த்தியிருந்தாள். கண்ணீர் வழிந்து கன்னங்களில்

இறங்கிக்கொண்டிருந்தது. உதடுகளைக் கடித்து விம்மலை அடக்க கழுத்து குழிந்து குழிந்து எழுந்தது.

நான் என்ன செய்தேன் என பின்னரே உணர்ந்தேன். ஏன் செய்தேன் என இன்றும் அறியேன். பாய்ந்து அவளைப் பற்றி இடக்கையால் இடைவளைத்து என் உடலுடன் இணைத்துக்கொண்டேன். அவள் முகத்தை வலக்கையால் தூக்கி உதடுகளில் முத்தமிட்டேன். உரத்த முனகலுடன் அவள் கைகளால் என்னை இறுகப்பற்றிக்கொண்டு நடுங்கினாள். நாங்கள் ஒரு சொல்லும் பேசிக்கொள்ளவில்லை. உடல்தழுவி இறுகியும் மேலும் இறுகும்பொருட்டு நெகிழ்ந்தும் முத்தமிட்டும் மூச்சுக்கு ஓய்ந்தும் மீண்டும் முத்தமிட்டும் அங்கே நின்றிருந்தோம். பின்னர் அவள் விழிகளை நோக்கினேன். நாணத்துடன் அவை சரிந்தன. “நான் உன்னை ஈராண்டாக பார்க்கிறேன்” என்றேன். “ஆம், நான் அறிவேன். ஈராண்டுகளாக நான் கணந்தோறும் எரிந்துகொண்டிருந்தேன்” என்று அவள் சொன்னாள்.

பார்க்கவன் யயாதி கூறிக்கொண்டிருந்ததை தலைகுனிந்தவனாக கேட்டுக்கொண்டிருந்தான். “செல்வோம்” என யயாதி எழுந்ததும் “ஆம், இருட்டிவிட்டது” என்று அவனும் கிளம்பினான். அவர்கள் புரவிகளில் ஏறிக்கொண்டார்கள். “இவையனைத்தையும் உதிரிநிகழ்வுகளாக பலமுறை முன்னரே சொல்லியிருக்கிறீர்கள், அரசே” என்றான் பார்க்கவன். “இம்முறை தொகுத்துச் சொல்கிறீர்கள். இது தொகுத்துக்கொள்ளும் தருணமென எண்ணுகிறீர்கள்.” யயாதி “இல்லை, நீ தொகுத்துச் சொன்னதனால்தான்” என்றான்.

“ஒன்றுமட்டும் தெரிந்துகொள்ள விழைகிறேன் அரசே, தாங்கள் உளம்திரிய மாட்டீர்கள் என எண்ணி” என்றான் பார்க்கவன்.

“சொல்!” என்றான் யயாதி. “அன்று அங்கே அரசி வந்தது தற்செயலாகவா? அதைப்பற்றி சொன்னார்களா?” யயாதி சிரித்து “முதல் மைந்தன் பிறந்து ஓராண்டுக்குப்பின் அவள் ஒருமுறை சிரித்தபடிச் சொன்னாள், அவள் நான் அங்கு நின்றிருப்பதைக் கண்டுதான் வந்தாள். காத்து, பொறுமையிழந்து, சினம்கொண்டிருந்தாள். எண்ணியிராக் கணத்தில் கிளம்பி என்னை நோக்கி வந்துவிட்டாள். ஆனால் எப்படி என்னை அழைப்பதெனத் தெரியவில்லை. அவள் எண்ணம் அறிந்ததுபோல் முட்செடி ஆடைபற்றி இழுத்தது” என்றான்.

“நன்று!” என்றான் பார்க்கவன். “வருந்தருணத்தை எதிர்கொள்ளும் சூழ்திறன் அவர்களுக்குண்டா என்று அறியவே அதை கேட்டேன்.” யயாதி மேலும் சிரித்து “அது நிரம்பவே உண்டு. நான் அவளை அடைந்த முதல்நாள் இரவிலேயே அதை அறிந்தேன். அதன் களியாட்டு கொந்தளித்தெழுந்து மெல்ல குமிழிகள் உடைந்து நுரையடங்கும் தருணம். அலையமைகையில் ஆழத்துப் பாறை எழுவதுபோல தேவயானி என் உள்ளத்தில் தோன்றினாள். மிகச்சரியாக அத்தருணத்தில் அவள் கசனைப்பற்றி என்னிடம் சொன்னாள்” என்றான்.

“நேரடியாகவா?” என்றான் பார்க்கவன் புரவியைப் பற்றி இழுத்து நிறுத்தி. “இல்லை” என்றான் யயாதி. “நான் சுக்ரரை அஞ்சுகிறேனா என்று கேட்டாள். இல்லை என்று நான் சொன்னேன். பின்னர் மெல்ல அஞ்சாமலும் இருக்கமுடியாதல்லவா என்றேன். அஞ்சவேண்டியதில்லை, தன் மகளைக் கூடி கைவிட்டுச்சென்ற கசனையே அவர் ஒன்றும் செய்யவில்லை என்றாள்.” பார்க்கவன் “நீங்கள் அதை முன்னர் அறிந்திருக்கவில்லை அல்லவா?” என்றான். “ஆம், எவரும்

என்னிடம் சொல்லவில்லை. நான் உசாவியறிய முயலவுமில்லை. தேவயானியைப்பற்றி அவ்வண்ணமொரு எண்ணமே என்னுள் எழவில்லை. மானுடத் தொடுகைக்கே அப்பாற்பட்ட அனல்மணி எனவே அவள் எனக்குத் தோன்றினாள்.”

பார்க்கவன் புன்னகைத்தான். “உண்மையில் அச்செய்தி என்னை நிலைகுலையச் செய்தது. பாய்ந்தெழுந்து சர்மிஷ்டையின் குழலைப்பற்றி உலுக்கி ‘என்ன சொல்கிறாய்? பழிச்சொல் கூறுகிறாயா, இழிமகளே?’ என்று கூவினேன். அவள் அழுதபடி என் கைகளைப் பற்றிக்கொண்டு ‘அறியாது சொல்லிவிட்டேன். பேரரசரான தாங்கள் இதை அறிந்திருக்கமாட்டீர்கள் என நான் எண்ணவில்லை’ என்றாள். அவளைப் பிடித்து சேக்கையில் தள்ளிவிட்டு ‘பழிச்சொல்... வீண்சொல் இது. ஆம், நான் அறிவேன்’ என்று கூவினேன். ஆனால் அவள் விழிகள் விரிந்து ஈரம் மின்னித்தெரிய அப்படியே நோக்கி படுத்திருந்தாள்.”

பின்னர் மெல்ல மூச்சடங்கி மெத்தைவிளிம்பில் அவளுக்கு புறம்காட்டி அமர்ந்து “சொல்!” என்றேன். “என்ன சொல்ல, நீங்கள் விரும்புவனவற்றையா?” என்றாள். அவளால் அப்படி சொல்லமுடியுமென்றே நான் எண்ணியிருக்கவில்லை. “உண்மையை” என்றேன். “நான் அதை சொல்லக்கூடாது” என்றாள். “சொல்!” என்றேன். “என்னை கொல்லுங்கள், சொல்லமாட்டேன்” என்றாள். திரும்பி அவளை நோக்கினேன். அவ்விழிகளை நோக்கியதும் தெரிந்துவிட்டது, அவள் சொல்லமாட்டாள் என. பின்னர் ஒற்றர்களை அழைத்து உசாவி அறிந்துகொண்டேன்.

“அது என்னை உண்மையில் எளிதாக்கியது. தேவயானி என்னிடம் மறைத்த ஒன்றுண்டு என்பது நான் அவளிடமிருந்து

மறைப்பதை பிழையில்லாததாக ஆக்கியது. நான் அதை சொல்லிச்சொல்லி பெருக்கிக்கொண்டேன். அதனூடாக தேவயானியிடமிருந்து விலகினேன். அவ்விலக்கம் சர்மிஷ்டையிடம் அணுக்கத்தை வளர்த்தது. அவ்வாறு என் கட்டுகளிலிருந்து என்னை விடுவித்தமை சர்மிஷ்டை மேல் மேலும் விருப்புகொள்ளச் செய்தது. என் உள்ளத்தை அவள் நன்கறிந்திருந்தாள். நான் ஓடிச்சென்றடையும் இடங்களில் எல்லாம் முன்னரே சென்று காத்து நின்றிருந்தாள். இன்று அந்த வசந்தகாலம் வெறும் கனவென பின்னகர்ந்துவிட்டது. அந்த முதல்நாள் உறவுக்குப்பின் அனைத்தும் பிறிதொன்றென ஆகிவிட்டன. அலைகள் அடங்கின, ஆனால் எதுவும் குறையவில்லை” என்றான் யயாதி.

# மாமலர் - 78

### 78. புதைவிலெழுதல்

யயாதியும் பார்க்கவனும் முதற்புலரியிலேயே அசோகவனியை சென்றடைந்தனர். வழக்கமாக கதிர் நிலம் தொடுவதற்கு முன்னரே கோட்டைவாயிலைக் கடந்து அரண்மனைக்குள் நுழைந்துவிடுவது அவர்களின் முறை. அவர்கள் வந்து செல்வது காவலர் தலைவனுக்கும் மிகச்சில காவலருக்கும் மட்டுமே தெரிந்திருந்தது. அசோகவனி அவர்களின் அரசனை கண்டதே இல்லை. அரசமுறையாக வரும் ஒற்றர்கள் என்றே அவர்களை காவலர்தலைவனன்றி பிறர் அறிந்திருந்தனர்.

தலைவனின் மாளிகையின் மேலடுக்கு முழுமையாகவே யயாதிக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. அங்கு அவன் வந்து தங்கும்போது சர்மிஷ்டை தன் மைந்தருடனும் தோழியுடனும்

புறவாயிலினூடாக உள்ளே வந்து அவனுடன் இருப்பாள். பார்க்கவன் அங்கிருந்த காவலர்களையும் ஏவலர்களையும் சேடியரையும் ஒவ்வொருவராக தேர்ந்து அமைத்திருந்தான். அங்கிருந்து ஒரு சொல்லும் வெளிக்கசியலாகாதென்று எப்போதும் கூர்கொண்டிருந்தான். அச்சேடியரும் பிறரும்கூட யயாதியை மூத்த ஒற்றர்களில் ஒருவரென்றே அறிந்திருந்தனர்.

தேவயானியின் தோழி சாயை மூன்றுமுறை அங்கு வந்து காவலர் மாளிகையில் தங்கி ஊர்க்காவலையும் எல்லைச் செய்திகளையும் ஆராய்ந்து திரும்பினாள். அந்த வரவுகள் ஒவ்வொன்றையும் தன் மந்தணக்காப்புமுறை சீராக உள்ளதா என்பதை அறிவதற்கான தருணங்களாக பார்க்கவன் எண்ணிக்கொண்டான். ஒவ்வொரு முறை அவள் வந்துசென்ற பின்னரும் பதினைந்து நாட்கள் முள்முனைத்தவம் செய்தான். தலைகீழாகக் கட்டித் தொங்கவிடப்பட்டதுபோல் குருதியனைத்தும் தலைக்குள் தேங்க எங்கிருக்கிறோம் என்ன பேசுகிறோம் என்று தெரியாமல் கடந்து சென்றன அந்நாட்கள்.

பின்னர் மணற்கடிகை தலைகீழ் என திரும்பும். குருதி வடிந்து உடல் ஓய்ந்து தலை ஒழியும். அதன்பின் சில நாட்கள் தன்னுள் எழும் விடுதலையை, தன்னம்பிக்கையை, அதன் விளைவாக அனைத்துச் சொற்களிலும் உடலசைவுகளிலும் குடியேறும் உவகையை தன் வாழ்வின் அரிய இனிமைகளில் ஒன்றாக அவன் எண்ணினான். ஆனால் அந்த நிறைவு தன் செயல்களில் பொருட்டின்மையை உருவாக்கிவிடலாகாதென்றும் தனக்கு ஆணையிட்டுக்கொண்டான். பதினாறாண்டுகள் ஒரு மந்தணத்தை கண்பெருகி செவிபெருகி கைவிரித்து புவியாளும் பாரதவர்ஷத்தின் முதல் சக்ரவர்த்தினியிடமிருந்து

மறைத்துவிட்டதை எண்ணும்போது சில தருணங்களில் அவன் உள்ளம் அறியாத அச்சமொன்றால் அசைவிழக்கும்.

தொலைவிலேயே முதல் அணிவளைவை அவர்கள் கண்டனர். முதலில் அது என்னவென்றே தெரியவில்லை, மரங்களுக்குமேல் ஒரு வண்ண மலைமுகடு என தெரிந்தது. முகிலில் சில மானுடர் அசைவதுபோல. அது அணிவளைவென உணர்ந்ததும் யயாதி திரும்பி நோக்க பார்க்கவன் "அரசியை வரவேற்க அசோகவனிக்குச் செல்லும் சாலையில் ஏழு அணிவளைவுகள் அமைக்கவிருப்பதாக அறிந்தேன்" என்றான். "அவள் இங்கிருந்து செல்லப்போவது மிஞ்சிப்போனால் ஏழு நாட்கள். அதற்கு மூங்கிலால் ஆன அணிவளைவுகள் போதுமே? இவர்கள் பெருமரத்தடிகளை நட்டு மரப்பட்டைகளை அறைந்து கட்டடங்களைப்போல அல்லவா அவற்றை எழுப்புகிறார்கள்?"

பார்க்கவன் "அவற்றை அமைக்கையில் சிற்பியரும் தச்சரும் எண்ணுவதொன்றே, எந்நிலையிலும் அவை சரிந்துவிழக்கூடாது. சரிந்து விழுமென்றால் அனைவரும் நிரைநிரையாக கழுமரம் நோக்கி செல்ல வேண்டியிருக்கும். இவர்கள் ஒவ்வொருவரையும் இரவில் எழுப்பி அவர்கள் கனவில் கண்டதென்ன என்றால் கொல்விழி கொண்ட சாயை என்பார்கள்" என்றான். யயாதி "எப்படி அத்தனை அஞ்சும் ஒருவரை அவர்கள் விரும்புகிறார்கள்?" என்றான். "அவர்கள் அஞ்சுவது சாயையை. பேரெளியின் திருவுருவான அரசியை அல்ல" என்றான் பார்க்கவன்.

முதல் அணிவளைவின் மீது அந்த முதலொளிப்பொழுதிலேயே தச்சர்களும் பணியாட்களும் தொற்றி அமர்ந்திருந்தனர். மர ஆப்புகளை அறைந்தபடியும் கயிறுகளை முறுக்கிக்

கட்டியபடியும் இருந்தவர்கள் புரவிக்குளம்படி கேட்டு திரும்பி நோக்கி ஓசையழிந்தனர். “அவர்கள் ஒவ்வொருவரையும் ஆளும் அச்சத்தை அவ்வமைதியிலேயே காண முடிகிறது” என்று பார்க்கவன் சொன்னான். யயாதி “இவர்கள் கொண்டுள்ள அச்சத்திற்கு சற்றும் குறைந்ததல்ல எனது அச்சம்” என்றான்.

ஏழு அணிவளைவுகளிலும் பறவைகள் போலவும் ஓணான்களைப் போலவும் பணியாட்கள் செறிந்திருந்தனர். குளம்படியோசை அவர்கள் அனைவரது அசைவையும் ஓசையையும் நிலைக்க வைத்தது. மேலிருந்து பொழிந்த விழிநோக்குகளின் கீழே அவர்கள் இயல்பாகத் தோன்றும்பொருட்டு விழியலைத்து அனைத்தையும் நோக்கியபடி சென்றனர். கோட்டை முகப்பு முழுமையாகவே எடுத்துக் கட்டப்பட்டிருந்தது. இருபுறமும் வெட்டியெடுக்கப்பட்ட சேற்றுக்கல் அடுக்கிய அடித்தளம்மேல் செங்கல் அடுக்கி சுண்ணக்காரையிடையிட்டுக் கட்டப்பட்ட கோட்டை மூன்று ஆள் உயரத்தில் விரிந்து சென்று திசை மூலையில் வளைந்தது. செங்கல்லடுக்கிற்குமேல் மரத்தாலான ஆளுயரக் கட்டுமானத்தின் மீது இருபுறங்களிலுமாக எட்டு காவல் உப்பரிகைகள் அமைந்திருந்தன. கோட்டைவாயிலின் நிலைத்தண்டுகளுக்குமேல் நான்கு புறமும் திறந்த மூன்று உப்பரிகை அடுக்குகள். மைய உப்பரிகையின் உச்சியில் பெருமுரசு அமைந்த மேடை.

“முந்நூறு வில்லவர்களை இவ்வுப்பரிகையில் இருக்க வைக்க முடியும்” என்று பார்க்கவன் சொன்னான். “முகப்பில் மட்டுமே இப்போது கோட்டையை கட்டியிருக்கிறார்கள். முற்றிலும் வளைத்துக் கட்ட ஓராண்டாகலாம். அதற்குப்பின் குருநகரியின் வடமேற்கு எல்லையில் முதன்மையான காவலரணாக

இச்சிற்றூர் இருக்கும். இங்கு வருவதற்கான தேர்ப்பாதை ஒன்று திட்டமிடப்பட்டுள்ளது. ஓராண்டில் அதுவும் பணி முடியுமென்றால் நமது காலத்திலேயே அசோகவனி ஒரு சிறு நகராக எழுந்துவரக்கூடும்." கோட்டைக்கட்டுக்கு வலப்பக்கம் இருபது செக்குகள் எருதுகள் இழுக்க சுண்ணத்துடன் மணல் அரையும் ஒலி எழ சுற்றிக்கொண்டிருந்தன. மணற்குவியல்களுக்கு அப்பால் ஊழியர்கள் மணலை இரும்புவலைமேல் வீசி அரித்துக்கொண்டிருந்தனர். நீற்றப்பட்ட சுண்ணக் குவைகள் பனியில் குளிர்ந்து பளிங்குப்பாறைபோல ஆகி வெட்டப்பட்ட விளிம்புகளில் வெண்ணைவழிவுடன் தெரிந்தன.

"இங்குள்ள அனைத்தும் மாறிவிடும். இல்லங்கள் வளர்ந்து அடுக்குகளாகும். இச்சாலைகளில் மனிதர்கள் தோள்முட்டி நெரிபடுவார்கள். இங்குள்ள மக்களின் உள்ளங்களில் மாறாதிருக்கும் சோம்பல் முற்றும் அகலும். இன்று நடக்கையிலும் அமர்ந்திருப்பவர்களின் சாயல்கொண்டிருக்கும் இவர்களின் முகங்கள் துயில்கையிலும் ஓடுபவர்கள்போல மாறிவிடும்" என்றான் பார்க்கவன். "சிற்றூர்கள் வான்நோக்கி வைத்த யானங்கள் போல, விண்ணளிப்பதை பெறவும் விண்ணுக்கு படைக்கவும். நகரங்களோ அறியாத் திசை ஒன்றை நோக்கி சகடம் ஒலிக்க அதிர்ந்து பாய்ந்து கொண்டிருக்கும் தேர்கள். இச்சிற்றூர் இதோ அசைவுகொள்ளத் தொடங்கியிருக்கிறது."

அவர்களை அடையாளம் கண்டுகொண்ட கோட்டைக்காவலன் வந்து சற்றே தலைவணங்கி உள்ளே செல்லும்படி பிறரறியாது செய்கை காட்டினான். கோட்டைக்கு அப்பால் முகமுற்றத்தில் இரண்டு கோட்டைக்கதவுகளை நிலத்தின்மேல் இட்டு

அவற்றின் மேலமர்ந்த தச்சர்கள் உளியும் கூடமுமாக பணியாற்றிக்கொண்டிருந்தனர். அவற்றின் சட்டகங்களில் இரும்புக் குமிழிகள் பொருத்தப்பட்டுக்கொண்டிருந்தன. பார்க்கவன் திரும்பிப் பார்த்தபின் "அவற்றுக்கு தச்சர்களின் மொழியில் பன்றிமுலைகள் என்று பெயர்" என்றான். யயாதி திரும்பி நோக்கி "ஆம், உண்மைதான். இனி அச்சொல்லால் அன்றி நம்மாலும் அதை நினைவுகூர முடியாது" என்றான்.

மரச்சட்டகங்களை கட்டடக்கூரைகளுக்கு மேலேற்றுவதற்கான வடம்சுற்றப்பட்ட உருளைகளின் அருகே யானைகள் கந்துகளில் கால்சங்கிலி தளைக்கப்பட்டு நின்று துதிக்கைகளால் தழை சுருட்டி எடுத்து கால்வளைத்து தட்டி மண் உதிர்த்து கடைவாயில் செருகி தொங்கும் தாடைகளால் மென்றுகொண்டிருந்தன. உண்ணுதலின் உவகையில் அவற்றின் கரிய உடல்கள் முன்னும் பின்னும் அசைந்தாடின. வால் சுவை திளைக்கும் நாவென நெளிந்தது. அவற்றின் மத்தகங்களிலும் பிடரிகளிலும் அமர்ந்த சிறு புட்கள் குத்தி சிறகடித்தெழுந்து கல்லுரசும் ஒலியெழுப்பி மீண்டும் அமர்ந்து விளையாடின. அவற்றின் கரிய பேருடலுக்குள் இருந்து ஆத்மா விடுதலைபெற்று காற்றில் எழுந்து எடையின்மையில் திளைப்பதாக யயாதி எண்ணிக்கொண்டான். அப்பால் சாலமரத்தின் நிழலில் அவற்றின் பாகன்கள் அமர்ந்து சோழியும் கல்லும் ஆடிக்கொண்டிருந்தனர். அவர்களின் பூசல் ஓசை எழுந்து அடங்கியது.

அசோகவனியின் தெருக்கள் பலமடங்கு பெருகிவிட்டன என்று தோன்றியது. சாலையின் இருபுறமும் வணிகர்நிரைகள் தோள்முட்டி அமர்ந்து பொருட்களை கடைபரப்பி கொடிகளை அசைத்து கூவி விற்றுக்கொண்டிருந்தனர். வெண்களிமண்

பாண்டங்கள், பளிங்குச்செதுக்குக் கலங்கள், இரும்புவார்ப்பு அடுமனைக் கலங்கள், செம்புக் கிண்ணங்கள், பித்தளைக் குவளைகள், வெண்கல விளக்குகள், உப்புக்கட்டிகள், வெவ்வேறு வடிவுகொண்ட படைக்கலங்கள், மாந்தளிர் என மின்னும் தோல்பொருட்கள், மரவுரிகள், கலிங்கப் பருத்தியாடைகள், சிறுபொன்னணிகள், மரச்செதுக்குப் பாவைகள். அசோகவனி அவற்றில் பெரும்பாலானவற்றை அதற்கு முன்னர் பார்த்தே இராது எனத் தெரிந்தது.

தங்கள் இல்லங்களிலிருந்து எழுந்து வந்து தெருக்களெங்கும் நிறைந்து பெருகிய மக்கள் உரத்துக் கூவி விலைபேசியும், சிரித்தும், பூசலிட்டும் ஒலியென ததும்பினர். அவர்களினூடாக எடைமிக்க சகடங்கள் மண்ணில் அழுந்தி ஒலிக்க மரச்சட்டங்களையும் பலகைகளையும் ஏற்றிய வண்டிகளை கோவேறு கழுதைகளும் எருதுகளும் இழுத்துச்சென்றுகொண்டிருந்தன. அவைகளை ஓட்டியவர்களும் உடன் நடந்தவர்களும் எழுப்பிய ஆள்விலக்குக் கூச்சல்களும் விலங்கு ஓட்டும் ஓசைகளும் ஊடு கலந்தன. அவர்களின் புரவிகள் மீது மக்கள் வந்து முட்டிக்கொண்டே இருந்தனர். அவர்களின் உடல்களுக்கு கூட்டமும் நெரிசலும் பழகவில்லை.

வணிகர்கள் வந்து தங்கிய யானைத்தோல் கூடாரங்கள் வீடுகளுக்கு அப்பால் தெரிந்த புறமுற்றங்களில் கற்பாறைகள் என, காட்டெருமைகள் என கரிய தொகைகளாக பரந்திருந்தன. அவற்றில் பறந்த கொடிகள் காற்றில் புறாச் சிறகென படபடத்தன. நகரின் அத்தனை கட்டடங்களிலும் பணி நடந்துகொண்டிருந்தது. அரக்கும் மெழுகும் பூசப்பட்ட கூரைகளில் காலையொளி நீர்மையென வழிந்தது. செந்நிறமும் பொன்னிறமும் மயில்நீலமும் கலந்து பூசப்பட்ட இல்லங்கள்

புத்தாடை அணிந்து நாணி நிற்பவை போலிருந்தன. யயாதி “ஒரு வருகை சிற்றூரை நகரமாக்கிவிடுவது விந்தை!” என்றான். “படைகள் தங்குமிடங்கள் ஊர்களாவதை கண்டிருக்கிறோம். பேரரசியின் கால்பட்ட இடங்களில் எல்லாம் நகரங்கள் முளைக்கின்றன என்கிறார்கள் சூதர்” என்றான் பார்க்கவன்.

“அவளே அதை உருவாக்குகிறாள்” என்றான் யயாதி. “செல்லுமிடம் அனைத்தையும் திரு பெய்து பொலிவுறச் செய்வது பேரரசியின் வழக்கம்தான்” என்று பார்க்கவன் தொடர்ந்தான். “நகரமென்றாவதே அரசின் வளர்ச்சி என்பதில் அவர்களுக்கு ஐயமில்லை.” யயாதி “ஆம், அது அரசுசூழ்தலின் ஒரு கொள்கை. ஒரு சிற்றூர் எதையும் வெளியிலிருந்து பெற்றுக்கொள்வதில்லை. வெளியே எதையும் கொடுப்பதும் இல்லை. நகரங்களில் செல்வம் உட்புகுந்து சுழன்று நுரைத்துப்பெருகி விளிம்புகடந்து வெளியே வழிந்துகொண்டே இருக்கிறது. அருவி வீழும் கயம் போன்றது நகர் என்று அர்த்தசூத்ரம் சொல்கிறது. நகரங்கள் பெருகுவது நாடு பொலிவதன் அடையாளம்” என்றான். பார்க்கவன் “அரசி வரும்போது இவ்வூரின் பெயரும் மாறுகிறது. இதை அசோகநகரி என அழைக்கவேண்டுமென அரசி ஆணையிடப்போகிறார்கள்” என்றான்.

யயாதி திரும்பி நோக்கியபோது அவ்வூரை ஒட்டுமொத்தமாக பார்க்கமுடிந்தது. அசோகநகரி. ஒரே இரவில் மண்ணுக்குள் இருந்து பல்லாயிரம் நாய்க்குடைகள் எழுவதை அவன் வங்கத்தின் காடுகளில் கண்டிருக்கிறான். மண்ணுக்குள் அவை முன்னரே முழுதாக வளர்ந்து காத்திருந்தன என்று தோன்றும். அந்நகர் எங்கோ இருந்திருக்கிறது. முழுமையாக ஒருங்கி, தருணம் காத்து.

🐾அவர்கள் அரண்மனையை அடைந்தபோது இளவெயில் வெளித்துவிட்டிருந்தது. அரண்மனை முழுமையாகவே மறுஅமைப்பு செய்யப்பட்டுக்கொண்டிருந்தது. அதன் இருபுறமும் இணைப்புக் கட்டடங்கள் இரண்டு கைகள்போல நீண்டிருந்தன. கூரைப் பணிகள் அப்போதும் முடிவடையவில்லை. பலகைகளும் சட்டங்களும் தொங்கும் சரடுகளும் மூங்கில் சாரங்களுமாக நின்றிருந்த மாளிகையின் பின்னணியில் நூற்றுக்கணக்கான வீரர்கள் வெவ்வேறு உயரங்களில் தொற்றி அமர்ந்தும் முற்றமெங்கும் பரவியும் கூச்சலிட்டு பணியாற்றிக்கொண்டிருந்தனர். பெருமுற்றம் முழுக்க மரச்சட்டங்களும் மரப்பலகைகளும் அட்டிகளாக பரவியிருந்தன. அவற்றை எடுத்து மேலே செல்லும் வடங்கள் சுற்றப்பட்ட சகடங்களை யானைகள் துதிக்கையால் பற்றிச் சுழற்றின. சாரங்களின் மேல் மெல்ல மெல்ல பெரும்சட்டம் ஒன்று அசைந்து தயங்கி மீண்டும் உயிர்கொண்டு ஏறிச்சென்றது.

கற்பாளங்களையும் ஓடுகளையும் கொண்டுவந்து இறக்கியபின் எருதுகள் ஆங்காங்கே தறிகளில் கட்டப்பட்டு வால் சுழற்றி கொம்பு குலுக்கி சலங்கை ஓசையுடன் வைக்கோல் மென்றுகொண்டிருந்தன. வண்டிகள் வந்து வந்து உருவான குழிவழிப் பாதையில் இரு எடை வண்டிகளை எருதுகள் தசை புடைக்க தலை தாழ்த்தி இழுத்துவந்தன. கோவேறு கழுதைகளால் இழுக்கப்பட்ட வண்டிகள் மறுபக்கம் சற்று சிறிய சாலை வழியாக வந்து நின்று அரக்குப்பொதிகளை இறக்கின. அவற்றை இறக்கி அடுக்கிய வீரர்கள் மூங்கில் வைத்து அவற்றை நெம்பி சீரமைத்தனர். கயிறுகட்டி காவடியில் பொதிகளை தூக்கிக்கொண்டு சென்றவர்கள் எழுப்பிய ஓசைகள்

போர்க்களம்போல ஒலித்தன. அரக்கு உருகும் மணம் தொலைவிலிருந்து எங்கோ எழுந்துகொண்டிருந்தது.

அவர்கள் வந்ததை உள்ளிருந்து பார்த்த காவலர் தலைவன் உக்ரசேனன் ஓடிவந்து யயாதியின் புரவியின் கடிவாளத்தை பற்றிக்கொண்டு முகமன் கூறி தலைவணங்கினான். “பொறுத்தருளவேண்டும் அரசே, பணி தொடங்கி நெடுநாட்களாகின்றது. வெறிகொண்டு வேலை செய்துகொண்டிருக்கிறோம். இன்னும் பணி முடிவடையவில்லை. அரசி வருவதற்கு இன்னும் சின்னாட்கள் இருக்கிறதென்று எண்ணும்போதே நெஞ்சிலும் வயிற்றிலும் அனல் அச்சுறுத்துகிறது” என்றான். கவலையுடன் திரும்பி அரண்மனையை நோக்கிவிட்டு “துயில் மறந்து பணியாற்றுகின்றோம். எப்போது இந்த வேலை முடியுமென்றே தெரியவில்லை. இன்னும் பல கட்டடங்களுக்கு கூரைப்பொருத்தே முடியவில்லை” என்றான்.

பார்க்கவன் “முடிந்துவிடும். எப்போதும் அது அப்படித்தான். இறுதி சில நாட்களில் நாம் செய்யும் பணி பலமாதப் பணிகளுக்கு நிகரானது. எப்படி முடிந்ததென்று நாமே அறியாதிருப்போம். நம்முடன் வாழும் தெய்வங்கள் நம் கைகளையும் சித்தத்தையும் எடுத்துக்கொள்ளும் தருணம் அது. பணி முடிந்தபின்னர் நம் வாழ்நாள் முழுக்க இம்மூன்று நாட்களில் வாழ்ந்ததைப்பற்றியே பேசிக்கொண்டிருப்போம். மானுடன் வாழ்வது அவன் எய்தும் உச்சங்களில் மட்டுமே” என்றான். “ஆம், அதையே நம்பிக்கொண்டிருக்கிறேன். தெய்வங்களின் விருப்பை” என்றான் உக்ரசேனன்.

“வருக!” என்று அவர்களை உள்ளே அழைத்துச் சென்றான். புரவிகளை லாயத்திற்கு அனுப்பிவிட்டு இருவரும் படியேறி

கூடத்திற்கு சென்றனர். அப்பெருங்கூடமெங்கும் தரையில் அரக்கை உருக்கி ஊற்றி பலகைகளை இணைத்து தோலால் உரசி மெருகேற்றிக்கொண்டிருந்தனர் ஏவலர். உக்ரசேனன் “நெய்விளக்கின் ஒளியில் இரவிலும் பணி நடக்கின்றது. இந்தப் பணிச்சாலைக்குள்ளேயே நானும் உயிர் வாழ்கிறேன்” என்றான். “எனது அறைகள் எங்கே?” என்று யயாதி கேட்டான். உக்ரசேனன் “அவற்றைப் பொளித்து கூரையை உயர்த்தி பணியாற்றிக்கொண்டிருக்கிறார்கள். தங்கள் பொருட்களனைத்தையும் முதற்தளத்திலுள்ள அறையில் கொண்டு வைத்திருக்கிறேன். தாங்கள் அங்கு தங்கலாம்” என்றான்.

பார்க்கவன் “நான் சென்று ஒற்றர்களையும் ஏவலர்களையும் சந்தித்து உசாவுகிறேன். அனைத்தும் நன்று நிகழ்ந்துவிட்டன என்றால் இன்றிரவு நன்கு துயிலமுடியும் என்னால்” என்று சொல்லிவிட்டு வெளியே சென்றான். உக்ரசேனன் “நல்ல அறைகள் அல்ல. ஆனால் முடிந்தவரை தூய்மை செய்திருக்கிறேன்” என்றபடி யயாதியை அழைத்துக்கொண்டு சென்று தாழ்ந்த கூரை கொண்ட அறையை அடைந்தான். யயாதி வழக்கமாக பயன்படுத்தும் தோலுறையிட்ட பீடங்களும், இறகுச் சேக்கையிட்ட மஞ்சமும், சுவடிப் பேழைகளும் ஆடைப் பெட்டிகளும் அங்கு கொண்டு வைக்கப்பட்டிருந்தன. தூய்மை செய்யப்பட்டிருந்தாலும் அங்கே புழுதியின் மணம் எஞ்சியிருந்தது. அங்கிருந்த அடைக்கலக்குருவி ஒன்றின் கூடு பிரிக்கப்பட்டிருக்கக்கூடும். அது அவர்கள் உள் நுழைந்ததும் சிட் என ஒலியெழுப்பி காற்றில் தாவி திறந்த சாளரம் நோக்கி சென்றமர்ந்தது.

யயாதி “நான் இங்கிருந்து கிளம்பியதுமே இவை அனைத்தும் மறைக்கப்பட்டுவிடவேண்டும். இதைப் பார்த்தாலே நான் இங்கு வந்து தங்குவது எவருக்கும் புலனாகிவிடும்” என்றான். உக்ரசேனன் “ஆம் அரசே, அதை நானும் எண்ணியிருக்கிறேன். பேரரசி செல்வது வரை கருவூல அறையிலேயே இருக்கும்” என்றான். பெருமூச்சுடன் கைகளை விரித்து உடலை வளைத்து எலும்பொலிகள் எழுப்பி “நான் நீராட வேண்டும்” என்று யயாதி சொன்னதும் “ஆவன செய்கிறேன். அரசியிடம் தாங்கள் வந்த செய்தியை தெரிவிக்கிறேன்” என்றபின் உக்ரசேனன் வெளியே சென்றான். யயாதி பீடத்தில் அமர்ந்ததும் இரு ஏவலர்கள் வந்து நாடாக்களை அவிழ்த்து அவன் தோல்காலணிகளை கழற்றினர். கால்விரல்களுக்கிடையே விரல் கொடுத்து இழுத்து நீவி குருதி ஓட்டத்தை சீர்படுத்தினர் அந்தத் தொடுகையால் மெல்ல இளைப்பாறுதல் கொண்டு கால்களை நீட்டியபடி உடல் தளர்த்தி கண் மூடி தலை சாய்த்தான்.

வெறுமனே அஞ்சிக்கொண்டிருக்கிறேன், இவை அனைத்தும் சீரடைந்துவிடும் என்று அப்போது தோன்றியது. உடல் ஓய்வுகொள்ளும்போது உள்ளமும் ஓய்வை நாடும் விந்தையைப்பற்றி எண்ணிக்கொண்டான். எழுந்து சென்று நிலையாடியில் தன் உருவை பார்த்தான். தாடியில் ஓடிய சில வெண்மயிர்களை தொட்டபின் விரல்களால் கண்களுக்குக் கீழே மடிந்திருந்த மென்தசையைத் தொட்டு இழுத்துப்பார்த்தான். பார்க்கவனிடம் உணர்ச்சிப்பெருக்குடன் சொன்ன காதல் நிகழ்வுகளில் அவன் மறைத்த ஒன்றுண்டு. சர்மிஷ்டையிடம் தன் அன்பைச் சொல்வதற்கு ஒத்திப்போட அவன் கொண்டிருந்த தடைகளின் பட்டியலில் கூறவிட்டுப்போனதே முதன்மையானது. தன் அகவையைக் குறித்து அவன் கொண்டிருந்த அச்சம்.

அந்த அகவசந்தகாலத்தில் ஒவ்வொரு நாளும் ஆடியில் தன் முகத்தை பார்ப்பதனூடாகவே அவன் பொழுதுகள் கழிந்துகொண்டிருந்தன. ஒவ்வொரு முறை நோக்குகையிலும் அகவை மிகுந்து வருவதுபோலத் தோன்றியது. உள்ளம் உவகை கொண்டு கண்கள் பொலிவுறும் தோறும் முகத்தின் முதிர்ச்சி மிகுந்து வந்தது. புன்னகை மாறாத அவன் முகத்தில் அமைந்து ஐயத்துடன் விழிகள் அவன் முகத்தை வேவுபார்த்தன. அவளுடன் இருந்த இரவில் அவன் கேட்ட முதல் வினாவே தன் அகவையைக் குறித்துதான். அவள் சிணுங்கி அவன் கையை மெல்ல அடித்து "என்ன சொல்கிறீர்கள் என்று தெரிகிறதா? என்னை உசாவி நோக்குகிறீர்களா?" என்றாள்.

"சொல், காதல்கொள்வதற்குரிய அகவை இல்லை அல்லவா எனக்கு?" என்றான். "உங்களுக்குத் தெரியும், அப்படி அல்ல என்று. உங்கள் இளமையை எவரும் சொல்லி உங்களுக்கு அறிவிக்க வேண்டியதில்லை" என்று அவள் சொன்னாள். "இல்லை. நான் ஆடி நோக்குவதுண்டு" என்றான் அவன். "ஆடியில் உள்ளிருந்து நோக்குவது உங்கள் உள்ளே விழைந்திருக்கும் அந்த இளஞ்சிறுவன். அவனுக்கு அகவை மிகையாகத் தெரியலாம். உங்கள் ஆற்றலையும் துள்ளலையும் நோக்கும் எவருக்கும் அகவை என எதுவும் தெரியாது" என்று அவள் சொன்னாள். அவன் விரும்பியது அது. பொய்யென்றே ஆகலாம் எனினும் அவள் அப்படி சொல்லவேண்டுமென்று அவள் அறிந்திருப்பதை அத்தருணத்தில் மிகவும் விரும்பினான்.

பின்னர் ஓரிரு நாட்களிலேயே அகவை பற்றிய கவலைகள் மறைந்தன. அக்கவலையே இல்லாமல் ஆக்கியது அவளுடைய அழகின்மை. அதை எண்ணிக்கொண்டதும் பிறர் அறியாமல்

உடலுக்குள் புன்னகைத்துக் கொண்டான். அவள் பேரழகியென்றிருந்தால் அகவையைக் குறித்த தன் கவலைகளிலிருந்து ஒருபோதும் விடுபட்டிருக்க மாட்டான். அவளை அடைந்து அணுகி அணுக்கம் கொண்ட முதல் பொழுதிலேயே அவனை வந்தடைந்தது அவளின் அழகின்மைதான். மெலிந்த இளங்கருமைநிறத் தோள்கள். அஞ்சியவைபோல சற்று உள்வளைந்தவை. அவள் புயங்களும் மெலிந்தவை. புறங்கையின் நரம்புப் புடைப்புகள். கழுத்தின் எலும்புத்துருத்தல்.

ஒவ்வொன்றிலும் பெண்மை இருந்தது. இளமையும் மெருகும் இருந்தது. ஆனால் அழகென்று உளம் சொல்லும் ஒன்று விடுபட்டிருந்தது. வண்ணமல்ல வடிவமுமல்ல, அதற்கப்பால் பிறிதொன்று. ஒன்று பிறிதொன்றுடன் கொள்ளும் இசைவை இழந்துவிட்டிருந்தன. இவ்வளைந்த தோள்களுக்கு இம்மெலிந்த கைகள் பொருந்தவில்லையா? இடை இந்த நெஞ்சுக்குரியதில்லையா? ஆனால் அவள் அழகற்றவள் என்னும் எண்ணமே அவளுடனான உறவை முதன்மையாக முடிவு செய்தது.

அவளை ஒவ்வொரு முறை பார்க்கையிலும் எழும் முதல் எண்ணம் அவள் அழகற்றவள் என்பதே. இவள் அரசியல்ல, வரலாற்றில் வாழ்பவளல்ல, சூதர் சொல்லில் நிலைகொள்பவளல்ல. அவ்வெண்ணம் அளிக்கும் விடுதலை உணர்வு அவள் மேலான அன்பென உருமாற்றம் அடையும். அன்பு மெல்ல அழகியென உருமாற்றி தீட்டத் தொடங்கும். அவள் கண்களை மட்டுமே நோக்கி அவை வெளிப்படுத்தும் உணர்வுகளிலிருந்து பிறிதொரு உடலை உள்ளம் வரைந்தெடுக்கும். மின்னிமின்னி மாறிக்கொண்டிருக்கும்

உவகையும் ஐயமும், பொய்ச்சினமும், சிணுங்கலும். கனவிலாழும் அமைதி, களிமயக்கில் சிவந்து கனல்தல், தனிமையில் மயங்கி இமைசரிதலென அவனுக்கென முழுநாளையும் நடிக்க அவற்றால் இயலும்.

நீராட்டறை சேவகன் வந்து பணிந்து நிற்க உளப்பெருக்கு கலைந்து அவனுடன் சென்றான். இளவெந்நீர் நிறைந்த தொட்டியருகே அவன் அமர நீராட்டுச்சேவகர் இருவர் அவன் மேல் நீரூற்றி ஈஞ்சைப்பட்டையால் தேய்க்கத் தொடங்கினர். தொன்மையான ஆலயமொன்றில் மண்ணில் புதைந்து கண்டெடுக்கப்பட்ட கற்சிலை. அவர்கள் அதை உரசிக்கழுவி மீட்டெடுக்கிறார்கள் என எண்ணியதும் அவன் புன்னகை செய்தான்.

# மாமலர் - 79

## 79. விதைகளும் காற்றும்

யயாதி எளிய வெண்ணிற ஆடையை அணிந்து மீண்டும் தன் அறைக்கு வந்தபோது அவனுக்காக சர்மிஷ்டை காத்து நின்றிருந்தாள். அவன் காலடியோசையையே கேட்டிருந்தாள். எழுந்து வாயில்நோக்கி வரும் அசைவிலிருந்தவள் அவனைக் கண்டதும் நின்று முகம் மலர்ந்து பின் சூழலை உணர்ந்து சேடியரின் முறைப்படி தலைவணங்கினாள். அவனுடன் எவருமில்லை என அறிந்தபின் அருகணைந்து "களைத்திருக்கிறீர்கள்" என்றாள். "ஆம், வங்க நாட்டுக்குச் சென்றிருந்தேன்" என்றபடி அவன் பீடத்தில் அமர்ந்தான்.

அவனருகே வந்து காலடியில் தரையில் அமர்ந்தவளாக “இங்கு பேரரசியுடன்தான் தாங்கள் வருவீர்கள் என்று எண்ணியிருந்தேன்” என்றாள் சர்மிஷ்டை. “அறிவின்மை… நான் எப்படி இங்கே அரசன் என என்னை காட்டிக்கொள்ள முடியும்?” என்றான் யயாதி. “ஆம், உண்மை. நான் அதை எண்ணவில்லை” என்றாள் சர்மிஷ்டை. அவன் தணிந்து “அரசுமுறையாக பேரரசி செல்லும் இடங்களுக்கெல்லாம் நான் செல்வதில்லை. ஆகவே அதில் பிழையாக ஏதுமில்லை” என்றான். “ஆம்” என்று அவள் சொன்னாள்.

“உன்னிடம் பார்க்கவனின் ஓலை வந்து சேர்ந்ததல்லவா?” என்று அவன் கேட்டான். “ஆம்” என்று அவள் சொன்னாள். “மைந்தர் மூவரையும் அருகிருக்கும் அஸ்வபாதக் காட்டில் சுப்ரபாலரின் பயிற்சிக்களத்திற்கு அனுப்பிவிடும்படியும் நான் மட்டும் இங்கு சேடியாக தங்கும்படியும் சொல்லியிருந்தார்” என்றாள். பின்னர் மேலும் குரல் தாழ்த்தி “அரசி வந்தால் அழைக்கப்படாதவரை முகம்காட்டவேண்டாம் என்றும் அரசி மைந்தர் எங்கே என்று கேட்டால் மட்டும் அவர்களை புரவியோட்டப் பயிற்சி கொள்வதற்காக அனுப்பியிருப்பதாக சொல்லும்படியும் சொல்லியிருந்தார்” என்றாள்.

“அது நன்று. அவள் இங்கு ஏழு நாட்கள் தங்கியிருப்பாள் என்று எண்ணுகிறேன். அது மிகச்சிறிய காலமே” என்றான் யயாதி. “ஆம்” என்றாள் சர்மிஷ்டை. யயாதி “இயல்பென புழங்கினால் எதுவும் வெளிவராமல் அதை கடந்துவிட முடியும். அவள் இச்சிறுமைகள் அனைத்திற்கும் மேலாக பறந்து செல்ல விழைபவள். ஆகவே அவள் விழிகளிலிருந்து எளிதில் தப்பிவிடலாம். நமது அறியாமையால் பொறுமையின்மையால் மிகைநம்பிக்கையால் பிழை ஏதும் இயற்றாமல் இருந்தால்

மட்டும் போதும். அதை சொல்லிவிட்டுச் செல்லலாம் என்றே வந்தேன்” என்றான்.

அவள் மெல்லிய எரிச்சல் தெரிய “அதை பார்க்கவரின் ஓலையினூடாகவே நான் புரிந்து கொண்டேன். அதைச் சொல்ல தாங்கள் வந்திருக்க வேண்டியதில்லை” என்றாள். அவன் சினத்துடன் “நான் வந்திருக்கலாகாது என்கிறாயா?” என்று கேட்டான். அவள் கண்கள் சுருங்க “என்ன பேச்சு இது? நீங்கள் எதன்பொருட்டு வந்தாலும் அது எனக்கு உவகையளிப்பதே. உங்கள் வாழ்க்கையில் மிகக்குறுகிய பகுதியே எனக்காக வெட்டி அளிக்கப்படுகிறது. இந்தப் பதினாறு ஆண்டுகளில் நான் உங்களுடன் இருந்த காலங்களை மட்டும் எடுத்து தொகுத்து பார்த்தால் ஓராண்டுகூட இல்லை. அதற்குள் நிறைந்து வாழ விழைபவள் நான். பொழுதனைத்தும் எனக்குக் கொடையே” என்றாள்.

“இந்த ஆண்டுகளில் நான் உன்னிடம் கண்டது நன்கு சொல்லெடுக்க கற்றுக்கொண்டிருக்கிறாய் என்பதுதான்” என்று அவன் சொன்னான். அவள் புன்னகை செய்தாள். அவளுடன் அணுக்கம் கொள்ளும்தோறும் பூசல் மிகுந்துவருவதை அவன் உணர்ந்திருந்தான். எப்போதும் சந்தித்த முதற்சில கணங்களுக்குப்பின் பூசல்தான் எழும், பின்னர் நெகிழ்வும் தழுவலும். மீண்டும் பூசல். அவன் காலடியில் அவள் அமர்ந்திருக்கையில் அப்பூசல் நிகழ்வதனாலேயே அவை ஓர் எல்லைக்குள் நின்றன, ஆகவே இனிமையான ஆடலாக அமைந்தன.

அவன் பூசலிடும் ஒரே பெண் அவள்தான் என எண்ணியதும் புன்னகைகொண்டு அருகே சென்று அவள் தோளைப்பற்றி “நான் வந்தது இவையனைத்தும் நானே உன்னிடம் உரைக்க

வேண்டும் என்பதற்காக. பார்க்கவன் உனக்கு ஆணையிடலாகாது. நீ மறந்தாலும் நீ விருஷபர்வனின் மகளென்பதை நான் மறக்க இயலாது” என்றான். சர்மிஷ்டை “நான் மறக்கவில்லை. எப்போதும் அது எனக்கு நினைவிலிருக்கிறது. ஆனால் எங்கோ நெடுந்தொலைவில் திகழ்கிறது. அங்கிருந்த என்னை இங்கிருந்து பார்க்கையில் எவரோ என்றே நினைவுகொள்ள முடிகிறது” என்றாள்.

“உன்னை இங்கு மறைத்து வைத்திருப்பது குறித்து பெரும் குற்றஉணர்வு எனக்கு இருக்கிறது. விதையை புதைத்து வைப்பது போலத்தான் உன்னை மறைத்து வைத்திருக்கிறேன் என்று ஒருமுறை தோன்றியபோது அதிர்ந்துவிட்டேன். எதையும் முழுமையாக மறைக்கமுடியாதென்பது மனித வாழ்க்கையின் மாறா நெறிகளில் ஒன்று” என்றான் யயாதி. அவளைத் தழுவி தன் உடலுடன் இணைத்துக்கொண்டு முகத்தைப்பற்றி விழிகளை நோக்கி “உன்னை நான் மறைப்பதில்கூட பொருளுள்ளது. ஏனெனில் இவ்வுறவு நாமிருவரும் எண்ணி உருவாக்கிக்கொண்டது. இது ஒருபோதும் பிறரறிய நிகழமுடியாதென்று நாம் அறிந்திருந்தோம். ஆனால் நம் மைந்தருக்கு அத்தகைய பொறுப்போ கடனோ ஏதுமில்லை. கல்லுக்கடியில் முளைத்த செடிகளைப்போல அவர்கள் இங்கு மறைந்து வெளிறி வாழவேண்டியதில்லை. சூதர் மைந்தர்களாக இழிவுகொள்ள வேண்டியதுமில்லை” என்றான்.

சர்மிஷ்டை “அவர்கள் தாங்கள் அரச மைந்தர்கள் என்று இதுவரை அறிந்திருக்கவில்லை. நான் விருஷபர்வனின் மகள் என்று அவர்களிடம் சொன்னதுமில்லை. சூதர்கள் என்றே அவர்கள் தங்களை எண்ணுகிறார்கள். ஆகவே சூதரில்

முதன்மை என்னும் தன்மதிப்பு கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எத்துயரையும் இதுவரை அடைந்ததில்லை” என்றாள்.

“நாம் மறைக்க முடியாத ஒன்று உண்டு, அவர்களின் முகம்” என்று யயாதி சொன்னான். “அது தெய்வங்கள் அளிப்பது. வளரும்தோறும் தெளிந்து எவர் குருதி எவ்வுடம்பில் ஓடுகிறதென்பதை அது வெளிப்படுத்தும். அப்போது அவர்கள் பெரும் துயரை அடையத் தொடங்குவார்கள். அத்துயரை அவர்களுக்கு அளிக்கும் உரிமை நமக்கில்லை. நான் விண்ணேகினால் அதன்பொருட்டு என் மூதாதையர் முன் சென்று தலைகுனிந்து நிற்க வேண்டியிருக்கும்.”

சர்மிஷ்டை இயல்பான உதட்டுச் சுழிப்புடன் “அதற்கு என்ன செய்ய இயலும்?” என்றாள். அது அவளியல்பு, அவள் உள்ளம் சென்றடையாத ஒன்றை எளிதாக உதறிக் கடந்துவிடுவாள். “அதைப் பேசவே நான் வந்தேன். தேவயானி இங்கு வந்து செல்லட்டும். அதன் பிறகு அவர்களை தனிப்படை திரட்டி உடன்சேர்த்து தென்னாட்டுக்கு அனுப்புகிறேன். அங்கு அவர்கள் மூவரும் மூன்று நிலங்களை வென்று அந்நிலங்களின் அரசர்களாக அமையட்டும்.”

“தேவயானி உளம்கனியும் முதுமையில் அவர்கள் யார் என்று அவளிடம் சொல்வோம். அவள் மைந்தன் யது குருநகரியின் மணிமுடியை சூடியபின் அவனை அழைத்து அவர்கள் அவனுக்கு இளையோர் என்றும் நிகர்உரிமை கொண்டவர் என்றும் சொல்கிறேன். அவர்கள் அவன் நிலத்திற்கும் குருதிக்கும் உரிமைகோராதவர்கள் என்றால் அவனுக்கு பகையிருக்க வாய்ப்பில்லை. அவர்கள் வென்ற நிலங்கள் அவனுக்கு உடன்குருதியர் நாடுகளாகும் என்றால் அது அவனுக்கு வலிமையே சேர்க்கும்” என யயாதி சொன்னான்.

“இவற்றையெல்லாம் ஏன் இப்போது பேசவேண்டும்?” என்றாள் சர்மிஷ்டை. “திருஹ்யூவிற்கு பதினாறாண்டு அகவை நிறைகிறது. அவன் சிறுவனல்ல” என்றான் யயாதி. “எது உங்களுக்கு உகந்ததோ அதை செய்யுங்கள்” என்றாள் சர்மிஷ்டை. அவள் முற்றிலும் உளம் விலகிவிட்டாள் என்று கண்டதும் அவ்வுரையாடல் முடிந்துவிட்டதை யயாதி உணர்ந்தான்.
யயாதி “மைந்தரை இங்கு வரச்சொல், நான் அவர்களை பார்க்கவேண்டும்” என்றான். “ஒவ்வொருமுறை வரும்போதும் நீங்கள் அவர்களை பார்த்துச் செல்கிறீர்கள். நீங்கள் யார் என்னும் வினா அவர்கள் உள்ளத்தில் எழக்கூடும். அவர்கள் இச்சிற்றூரிலிருந்து இன்றுவரை வெளியே சென்றதில்லை. ஆகவே அனைத்தும் எளிதாகவே இதுவரை சென்றுகொண்டிருக்கிறது. அதை எல்லைவரை இழுக்கவேண்டியதில்லை என்றே நினைக்கிறேன்” என்றாள் சர்மிஷ்டை.

“நான் உன்னைப் பார்க்கவென்று இங்கு வந்தது முதல் ஓராண்டு மட்டுமே” என்றான் யயாதி. “பின்னர் எப்போதும் மைந்தரை நோக்குவதே என் முதல் விருப்பமாக இருந்துள்ளது.” சர்மிஷ்டை “அந்த விருப்பு உங்கள் விழிகளிலும் கைகளிலும் வெளிப்படுகிறது. ஒருமுறைகூட நீங்கள் மைந்தரை தொட்டுத் தடவாமலிருந்ததில்லை. உங்கள் சொற்களனைத்தும் கனிந்திருக்கும் அப்போது. சென்றமுறை இங்கிருந்து சென்றதுமே மூத்தவன் கேட்டான், நீங்கள் யார் என்று” என்றாள். யயாதி “நீ என்ன சொன்னாய்?” என்று கேட்டான்.

“முன்னரே பார்க்கவர் சொன்னபடி நீங்கள் அரசகுடிப்பிறந்தவர், அரசியின் அலுவலர் என்று அவனிடம் சொல்லியிருந்தேன். நீங்கள் ஒற்றர் என்றும் எனவே வந்து இங்கு தங்கிச்செல்வது எவருமறியாத மந்தணமாக இருக்கவேண்டுமென்றும் ஆணையிட்டிருந்தேன். அவன் ‘நான் அதை கேட்கவில்லை. அவருக்கும் நமக்கும் என்ன உறவு?’ என்று கேட்டான். என் உளம் நடுங்கிவிட்டது. அத்தருணம் வந்தணையுமென்று எதிர்நோக்கியிருந்தேன். அதை கடப்பதெப்படி என்று எண்ணுகையில் உள்ளம் மலைக்க சரி அது நிகழும்போது பார்ப்போம் என ஒத்திப்போடுவேன்.”

“என்ன செய்தாய்?” என்றான் யயாதி. “அப்போது என் பெண்ணியல்பே கைகொடுத்தது. விழிநீர் துளிக்க ‘இவ்வினாவுக்கு சேடிப்பெண் விடைசொல்லமுடியாது, மைந்தா’ என்றேன் அவன் திகைத்துவிட்டான். அவன் சொல்லெடுப்பதற்கு முன்பு இளையவனாகிய புரு ‘மூத்தவரே, இனி இதைப்பற்றி நாம் ஒருசொல்லும் எடுக்கவேண்டியதில்லை’ என்றான். நம் மைந்தரில் அவனைப்போல் நுண்ணுள்ளம் கொண்டவரில்லை. மூத்தவர்களும் அவன் சொல்லை கடப்பதில்லை. அவர்கள் சொல்மாற்றி பிறிதுபேசி விலகிச்சென்றனர். அதன்பின் இன்றுவரை பேச்சு எழுந்ததில்லை.”

“ஆக நானே அவர்களின் தந்தை என சொல்லிவிட்டாய்” என்றான். “இல்லை, சேடிக்கு அப்படி எவரையும் சொல்லமுடியாதென்பதே அதன்பொருள். நீங்கள் அவர்களின் தந்தையாக இருக்க வாய்ப்புண்டு, அல்லது தந்தையென அமைந்த பலரில் ஒருவர்.” யயாதி “கீழ்மை… தன் மைந்தரிடம் ஒருவன் இவ்வாறு தோற்றமளிப்பது” என்றான். “இதை

எண்ணியிருந்தால் அன்று எளிய உணர்வெழுச்சிகளுக்கு ஆட்பட்டிருக்கவே மாட்டேன்.” அவள் சினந்து “எளிய உணர்வெழுச்சிகளா? இப்போது அவ்வாறு சொல்லலாயிற்றா?” என்றாள்.

“இப்புவியிலுள்ள உறவுகளும் உணர்வுகளும் பொருளின்மையின் எளிமை கொண்டவையே. அதை உணரும் தருணங்கள் எனக்கும் அமைந்துகொண்டிருக்கின்றன” என்றான் யயாதி. சர்மிஷ்டை சிலகணங்கள் நோக்கிவிட்டு பெருமூச்சுடன் எழுந்து “நான் மைந்தரை வரச்சொல்கிறேன்” என வெளியே சென்றாள். யயாதி அவள் நடையிலேயே ஒரு எரிச்சல் தெரிந்ததை நோக்கி நின்றான்.

உடலின் அசைவாலேயே எரிச்சலை, வெறுப்பை, சினத்தை, புறக்கணிப்பை வெளிக்காட்ட பெண்களால் இயல்கிறது. ஒருவரிடம் அவ்வாறு தன் ஒவ்வொரு அணுவாலும் உணர்வை வெளிக்காட்டுமிடத்திற்கு பெண் செல்லும்போதுதான் அந்த ஆணை தன்னுள் அவள் முழுமையாக ஏற்றுக்கொண்டுவிட்டாள் என்று பொருள். அவன் குழந்தையை பெற்றபின்னரே அது பெண்களுக்கு அமைகிறது.

மைந்தர்களுக்காக காத்திருந்த நேரத்தில் அவர்களின் கடந்தகாலத் தோற்றங்களை அவன் உள்விழிகள் அளைந்துகொண்டே இருந்தன. அத்தனை உடல்தோற்றங்களும் ஒன்றுடன் ஒன்றென இணைந்து அலையடித்தன. சித்தத்தை இறுக்கி ஒரு பொருளென்றாக்கி அதைக்கொண்டு எண்ணங்களை நீவிப் பிரித்து தனித்தனியாக நோக்கவேண்டியிருந்தது. மூத்தவன் திருஹ்யூ பிறந்தபோது அவன் அன்னையைப்போல கரிய சிற்றுடலும் கூரிய சிறுமூக்கும் பெரிய விழிகளும் கொண்டிருந்தான். குழந்தை

பிறந்த செய்தி கேட்டபோது அவன் குருநகரியில் இருந்தான். வந்துசேரும்போது பதின்மூன்றாம்நாள். குழவியை முதலில் நோக்கியபோது உடனே எழுந்தது பெரிய ஏமாற்றம். அதை ஒருகணம் முகம் காட்டிவிட்டது.

பார்க்கவன் “நன்று, ஐயமெழாது” என்றான். அவன் திரும்பிநோக்க “பேரரரசி எவர் என்று கேட்காமலிருக்கமாட்டார்” என்றான். அவ்வெண்ணம் அளித்த ஆறுதலால் முகம் மலர குழந்தையை கையில் வாங்கி முகம் சேர்த்தான். அதன் மென்கால்களில் முத்தமிட்டபோது இளங்குருதிமணம் கொண்டு சித்தம் மயங்க அவனுள் வாழ்ந்த தொல்விலங்கு தன்னை தந்தையென்றுணர்ந்தது. களிப்புடன் “இனியவன்” என்றான். பார்க்கவன் “அனைத்துக் குழவிகளையும்போல” என்றான். “இவன் அரசனாக வேண்டும். எங்கோ... நான் உறுதியாக எண்ணுகிறேன், இவனுடன் தெய்வங்கள் இருக்கும்” என்றான் யயாதி. “வயற்றாட்டி காதில் விழவேண்டியதில்லை” என்றான் பார்க்கவன்.

பேற்றுவிலக்கு கொண்டு ஈற்றறையில் படுத்திருந்தாள் சர்மிஷ்டை. கணவனும் மைந்தருமன்றி பிறர் பேற்றுவிலக்குகொண்ட பெண்ணை சென்று நோக்கலாகாதென்பது நெறி. “இங்கு எவரறியப்போகிறார்கள்?” என்றான் யயாதி. “வேண்டியதில்லை, அரசே. அதையே ஓர் அறிவிப்பென கொள்ளக்கூடும் சிலர்” என்றான் பார்க்கவன். ஈற்றறைச் செவிலியிடம் மைந்தனை திரும்ப அளித்துவிட்டு “சின்னஞ்சிறு உடல்... அதில் தளிர்மொட்டென முகம். ஆனால் அதிலேயே குலம் தெரிகிறது. குடிமுறை தெரிகிறது. தன்னியல்பும் வெளிப்படுகிறது... விந்தை!” என்றான். “அன்னையைப்போல” என்றான் பார்க்கவன்.

“ஆம், ஆனால் அவளை நோக்காதவர்கள்கூட இச்சிறுமுகத்தைக்கொண்டு இவனை ஐயுறுபவன், அஞ்சுபவன், எங்கும் எப்போதும் வெல்லாதவன் என்று சொல்லிவிடமுடியும்” என்றான். “அதுவே தடையென எண்ணி மீறிஎழுபவர் இல்லையா?” என்றான் பார்க்கவன். “உண்டு, அவ்வாறு கீறிமுளைத்தெழுவதன் முளைமொட்டும் அம்முகத்தில் தெரியும்” என்றான் யயாதி. “நம்மைவிட நிமித்திகர் அதை கூர்மையாக சொல்லக்கூடும்.”

அவர்கள் திரும்பும்போது பார்க்கவன் “பேரரசி இளவரசர் யதுவை ஈன்றபோது உங்களுக்குத் தோன்றியதென்ன?” என்றான். யயாதி முகம் மலர்ந்து “அவள் மைந்தனை ஈன்றிருக்கிறாள் என்னும் செய்தியை கொண்டுவந்த முதுசேடி நிலையழிந்து சிரித்துக்கொண்டிருந்தாள். முறைமைச்சொற்களை சொல்லக்கூட அவளால் இயலவில்லை. அவளுடன் மங்கல இசைக்கருவிகளுடன் மூன்று விறலியரும் ஐம்மங்கலங்களுடன் ஏழு அணிச்சேடியரும் வந்தனர். முதலில் கொடிதாங்கியும் சங்கூதியும் நடந்தனர். என் அரண்மனை வாயிலை அவர்கள் அடைந்ததுமே தெரிந்துவிட்டது. நான் எழுந்து நின்றதும் அணுக்கன் ஓடிவந்து நான் அரசாடை புனையவேண்டும் என்றான். ‘அவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள்’ என்றேன். ‘அதற்குள் அரசே... பிறந்திருப்பவன் குருநகரியின் பட்டத்து இளவரசன். பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தியின் முதல் மைந்தன்...’ என்றான். ‘ஆம்’ என்றபோது என் குரலில் சலிப்பே வெளிவந்தது.”

அச்செய்திக்காக இருபத்தெட்டு நாட்களாக காத்திருந்தேன். குறித்த நாள் கடந்து பதினெட்டு நாட்களாகிவிட்டிருந்தன.

சுவடியை மூடிவிட்டு உடையணிந்தேன். முடிசூடி காத்து நின்றிருந்தேன். மங்கல இசை ஒலித்தது. வாழ்த்தொலிகளுக்கு நடுவே சங்கும் வரவறிவிப்பும் ஒலித்தன. நான் எண்ணியிருந்ததற்கு மாறாக முதுசேடி கதவைத் திறந்து உள்ளே ஓடிவந்து என் காதுகளை பற்றிக்கொண்டு 'மைந்தனை ஈன்றுவிட்டீர்கள், அரசே. பாரதவர்ஷத்திற்கு சக்ரவர்த்தி பிறந்திருக்கிறார்' என்றாள். சிரித்துக்கொண்டு என்னைப் பற்றி உலுக்கி 'மானுடன் தெய்வங்களுக்கு நிகர்நின்றிருக்கும் தருணம். தெய்வங்கள் மானுடனை அனைத்துக்கு அப்பாலும் பொறுத்தருளும் வேளை' என்றாள்.

அவள் என்னை தூக்கி வளர்த்தவள். அத்தருணத்தை அவள் அப்படி கலைக்காமலிருந்திருந்தால் நான் உறைந்தே இருந்திருப்பேன். சிரித்தபடி 'முதுமகளே, இச்சொற்றொடரை பயின்றுகொண்டு வந்தாயா?' என்றேன். சிரித்தபடி கண்ணீர் விட்டாள். எனக்கு ஐம்மங்கலத் தாலத்தில் இருந்து இனிப்பை எடுத்து ஊட்டினாள். அவளுக்கு நான் அருமணி பதித்த கழுத்தணியை பரிசளித்தேன். அன்று முழுக்க பரிசளிப்புகள் நிகழ்ந்தன. பாரதவர்ஷத்தில் பிறிதெந்த மைந்தன் பிறப்புக்கும் அவ்வண்ணம் பெரும்பரிசுகள் அளிக்கப்பட்டதில்லை. ஏனென்றால் அதற்கு முன்னர் அவ்வாறு அளிக்கப்பட்ட பரிசுகளை கணக்கிட்டு அவற்றுக்கு இருமடங்காக பரிசுகள் அமையும்படி முன்னரே கிருதர் வகுத்திருந்தார்.

மறுநாள் காலை முதற்புலரியில் தேவயானியையும் மைந்தனையும் நான் காண நற்பொழுது வகுக்கப்பட்டிருந்தது. அரசணிக்கோலத்தில் அகம்படியினருடன் சென்றேன். வரவறிவிக்கும் நிமித்திகனுக்குப் பின்னால் என் செங்கோல் சென்றது. பதினெட்டு இசைச்சூதர் பதினெட்டு அணிச்சேடியர்

தொடர்ந்தனர். வெண்குடையுடன் ஏவலர் என் பின்னால் வந்தனர். அது ஓர் அரசப்பெருநிகழ்வு. என்னருகே அமைச்சர்கள் வந்தனர். ஈற்றறைக்கு வெளியே ஒரு பொற்தொட்டிலில் வெண்சேக்கையில் மைந்தன் படுக்கவைக்கப்பட்டிருந்தான். பேறெடுத்த மருத்துவச்சி அவனை எடுத்து என்னிடம் காட்டினாள். அன்னையைப்போன்ற தோற்றம். நேர்மூக்கால் பகுக்கப்பட்ட வட்டமுகம். ஒவ்வொரு உறுப்பும் பழுதற்றிருந்தது.

நான் எண்ணியதையே என்னுடன் வந்த நிமித்திகர் சொன்னார் 'பழுதற்ற உடல், அரசே. தெய்வச்சிலைகளுக்குரிய அளவுகள். மண்ணில் பேரரசனாகவே பிறந்திருக்கிறார். பாரதவர்ஷம் பணியும் கால்கள் இவை. நம் கொடிவழியினர் பல்லாயிரமாண்டு ஆலயத்தில் நிறுத்தி வழிபடும் முகம்.' அச்சொற்கள் ஏனோ எனக்கு பெரிய உள எழுச்சி எதையும் உருவாக்கவில்லை. நான் அவனைப் பெற்ற அச்செய்தி வந்தபோது படித்துக்கொண்டிருந்த நூலில் இருந்த ஒரு வரி எந்தப் பொருத்தமும் இல்லாமல் நெஞ்சில் ஓடிக்கொண்டிருந்தது. 'காமதேனு அகிடுகளின் நான்கு காம்புகளிலிருந்து நான்கு குலங்கள் பிறந்தன.'

உள்ளறைக்குச் சென்று பேரரசியை பார்த்தேன். அவளருகே சாயை நின்றிருந்தாள். என்னருகே வந்து 'களைத்திருக்கிறார்கள். ஓரிரு சொற்களுடன் முடித்துக்கொள்ளுங்கள்' என்றாள். நான் 'ஆம், நான் உடனே சென்றுவிடுவேன்' என்றபின் அவள் அருகே சென்று நின்றேன். விழிகளைத் திறந்து என்னை நோக்கினாள். நான் முற்றிலும் அறியாத பெண். நான் உள்ளூர அஞ்சும் அரசி. 'என் குலம் வாழ மைந்தனை அளித்திருக்கிறாய்' என்றேன். அவள் மறுமொழி

சொல்வதற்குள் சாயை 'பாரதவர்ஷம் ஆள வந்த சக்ரவர்த்தி. சுக்ரரின் கொடிவழியின் அருமணி' என்றாள். நான் 'ஆம்' என்றேன்.

"அவள் 'மைந்தன் பிறந்தமை நாட்டில் பதினெட்டுநாள் கொண்டாட்டமாக அமையட்டும். இருபத்தெட்டாம்நாள் அரையணி சூடும் விழவுக்கு பதினெட்டு ஷத்ரியநாடுகளின் அரசர்களும் வந்தாகவேண்டும்' என்றாள். 'ஆம், உரிய ஆணைகளை பிறப்பிக்கிறேன்' என்றேன். 'ஆணைகளை பிறப்பித்துவிட்டேன். சாயை என்பொருட்டு அனைத்தையும் நோக்குவாள்' என்றாள். 'நன்று' என்றேன். திரும்பும் வழியெங்கும் நகரில் கொண்டாட்டங்கள் உச்சம் கொண்டிருப்பதை கண்டேன். என் அரண்மனை உப்பரிகையில் நின்று நோக்கியபோது எங்கும் களிவெறியே கண்ணுக்குப்பட்டது. நான் எந்தப் பொருளுமில்லாமல் காமதேனுவைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன்."

பார்க்கவன் புன்னகையுடன் "மைந்தரைப்பற்றி தந்தை கொள்ளும் எண்ணங்களுக்கெல்லாம் எப்பொருளும் இல்லை. அவை அச்சத்தாலோ மிகைவிழைவாலோ ஆனவையாகவே இருக்கும்" என்றான். "மைந்தனுக்கு பெயரிடவேண்டும்... ஒரு நிமித்திகரை அழைத்துவருக!" என்றான் யயாதி. பார்க்கவன் ஒருகணம் எண்ணியபின் "நானறிந்த ஒருவர் இருக்கிறார்" என்றான். உச்சிப்பொழுதில்தான் அவரை அழைத்துவந்தான். கைகளும் தலையும் நடுங்கும் வயோதிகர். யயாதி எழுந்து அவரை வணங்கியதும் அவர் கைதூக்கி வாழ்த்தளித்து "எவருக்கோ மைந்தர் பிறந்திருப்பதாக சொன்னார்கள்" என்றார். "எனக்குத்தான்" என்று அவன் சொன்னான். "நன்று" என அவர் அமர்ந்து "நாளும் பொழுதும் குறிக்கப்பட்டுள்ளதா?" என்றார்.

“இதோ” என்று யயாதி ஓலையை அவரிடம் நீட்ட “எனக்கு விழிமங்கல். படியுங்கள்” என்றார் கிழவர். “உரக்க படியுங்கள்… செவிகளும் சற்று பழுது.”

யயாதி நிமிர்ந்து நோக்க பார்க்கவன் “இவர் தங்களை நினைவுகொள்ளப்போவதில்லை, எவரென உசாவவும் வாய்ப்பில்லை” என மெல்லிய குரலில் சொன்னான். யயாதி சலிப்புடன் தலையசைத்தான். அவர் அவன் படித்ததை மும்முறை கேட்டுவிட்டு பெருமூச்சுடன் தாடியைத் தடவியபடி சற்றுநேரம் அமர்ந்திருதார். பின்னர் “உயர்குடிப்பிறப்பு. ஆனால் எப்பயனுமில்லாத முன்னூழ். முன்னோர்முறையென வருநிலம் தவறும். அடைவதோ கெடுநிலமே ஆகும். கொடிவழியின் ஏழாவது மைந்தனே அரசன் என முடிசூடி அரியணையமரும் ஊழ்கொண்டவன். சுமையெனத் தோளிலேறும் துயரத்துடன் அலைவதே வாழ்க்கை” என்றார்.

பார்க்கவன் போதும் என கைகாட்ட அதை காணாமல் அவர் சொல்லிக்கொண்டே சென்றார். “எங்கும் தனியன். எப்போதும் தயங்குபவன். தன் சிறுமையை உணர்ந்து அஞ்சுபவன். அவ்வச்சத்தால் எதிரிகளைப் பற்றி கற்பனை செய்துகொள்வான். எதிரிகளை கற்பனை செய்துகொள்பவன் நாளடைவில் அவர்களை எதிரிகளென அடைவான். அவர்களிடமிருந்து தப்பி ஓடிக்கொண்டிருப்பான். நிழலை அஞ்சும் சிற்றுயிர், நிலைகொள்வது என்பது அதற்கில்லை.”

யயாதியே போதுமென கைகாட்டினான். “ஆனால் பொறாமை அழியா நெஞ்சம் கொண்டிருப்பான். உடன்குருதியனை எண்ணி எண்ணி ஒருநாளேனும் நல்லுறக்கம் கொள்ளும் பேறு இலாதவனாக இருப்பான்” என நிமித்திகர் தொடர்ந்தார். “ஆனால் நன்மைந்தர் பேறு உண்டு. விதைபெருகும்

பாலைமரம். எவ்வனலும் எரிக்காத வேர் கொண்டவன். இவன் கொடிவழி குலமென்றாகி எக்காலமும் மண்ணில் வாழும்.”

யயாதி முகம் மலர்ந்து “அவ்வாறே ஆகுக!” என்றபின் “இவனுக்கான பெயரென்ன என்று உரைக்கலாகுமா?” என்றான். அவர் வெண்புள்ளி அலைந்த விழிகளை மேல்நோக்கி உயர்த்தி சிலகணங்கள் நிலைத்தபின் “மண்ணுக்குரியவன், மண்ணை விழைபவன் என்னும் பொருளில் ஒரு பெயரிடுக! திருஹ்யூ என்பது என் உள்ளத்தில் தோன்றுகிறது” என்றார். யயாதி “அதுவே ஆகட்டும். அவனுக்கு மண் கனியட்டும்” என்றான்.

நிமித்திகர் பெருமூச்சுடன் தன் மெலிந்த கைகளை நீட்டி கால்களை எளிதாக்கினார். யயாதி உரக்க “நிமித்திகரே, பிறிதொரு பிறவிப்பொழுதை சொல்கிறேன். கணித்தளிக்கவேண்டும்” என்றான். தாழ்ந்தகுரலில் “அரசே, வேண்டாமே” என்றான் பார்க்கவன். “இல்லை, அவர் உரைக்கட்டும். விழியின்மையால் அவர் பிறவிழிகளை காணாமலாகிவிட்டிருக்கிறார். அது அவரை மானுடத்திலிருந்து முற்றிலும் விலக்கியிருக்கிறது. காலத்தை மட்டுமே காண்பவராக அமர்ந்திருக்கிறார்” என்றான் யயாதி. “இரண்டாம் முறை நிமித்தம் நோக்குவதும் பெயர் நோக்குவதும் பிழை” என்றான் பார்க்கவன். “என்னால் இதை தவிர்க்கமுடியாது” என்றான் யயாதி.

மெல்ல முனகி உடல் அலுப்பை அகற்றியபின் “சொல்லும்” என்றார் நிமித்திகர். யயாதி யதுவின் பிறவிப்பொழுதை சொன்னான். “அரசகுருதி. அவைமுதன்மைகொண்ட இளமை. ஆனால் கொடிவழிவந்த நிலம் அகன்றுபோகும். புதுநிலம் தேடி அலையும் வாழ்க்கை. காட்டெரி என அழித்துப் பரவுவது. அணையா பெருவிருப்பும் காழ்ப்பும் கொண்டு கணம்தோறும்

உயிர்மிகும் உள்ளம். மைந்தர்ச்செல்வம் மிகும். கொடிவழிகள் பெருகும்.” யயாதி படபடப்பை அடக்கியபடி “நான் ஒன்றை மட்டும் கேட்க விழைகிறேன், கணியரே. இப்பிறப்பாளனின் வருகைநோக்கம் என்ன?” என்றான். “பெருங்குலம் ஒன்றின் முதல் விதைமுத்து இவன். என்றுமழியா பெருக்கு இவன் குருதியில் துளிக்கும்” என்றார் அவர்.

அவன் கேட்பதற்குள் “அவன் ஊழை சுட்டும் ஒரு பெயர் நன்று. அவ்வாறே ஆகுக என்னும் பொருளில் யது” என்றார். யயாதி வியப்புடன் “அதுவே அவன் பெயர் நிமித்திகரே. ஆனால் காற்று என அதற்கு எங்கள் முதுநிமித்திகர் பொருள் சொன்னார்” என்றான். நிமித்திகர் புன்னகைத்து “அதுவும் நான் சொன்ன பொருளில்தானே?” என்றார். யயாதி “நன்று!” என எழுந்து அவரை வணங்கினான். பார்க்கவன் அளித்த பொற்காசுகளை எடுத்து வணங்கி அவருக்கு அளித்தான். அவர் மெல்ல எழுந்து தன்னை அழைத்துச்செல்லும்படி கோரி கைநீட்டினார்.

அதன்பின் மற்ற மைந்தருக்கு அவன் நிமித்தம் நோக்கவில்லை. துர்வசு என தேவயானியின் இரண்டாம் மைந்தனுக்கு அவள் அமைத்த நிமித்திகர்களே பெயரிட்டனர். அனுதிருஹ்யூ என இரண்டாமவனுக்கு சர்மிஷ்டையே பெயரிட்டதாக செய்தி வந்தது. சர்மிஷ்டையின் மூன்றாவது மைந்தன் பிறந்தபோது யயாதி மிக அருகில்தான் இருந்தான். அந்தக் குடிவிழவிலிருந்து நேராகவே அசோகவனிக்கு வந்தான். மைந்தனை கையில் வாங்கிய முதற்கணம் எழுந்த எண்ணம் அந்த முகம் நன்கறிந்த ஒன்று என்பது. தன்முகம் அல்ல. சர்மிஷ்டையின் முகமும் அல்ல. எவர் முகம்? சற்று முன்மடிந்த காது. புடைத்த நெற்றிமுழைகள். வெறும்

உளத்தோற்றமா? அருகே நின்றிருந்த பார்க்கவன் அவன் உள்ளத்தை உணர்ந்தவனாக "முகங்கள் நேர் அச்சென நம்மிலிருந்து செல்வதில்லை. நம் குருதியில் குமிழிகளாக நம் மூதாதையர் அனைவரின் முகங்களும் இருக்கின்றன என்பார்கள்" என்றான்.

அவன் தத்தளிப்புடன் குழந்தையை முத்தமிட்டபடி திருப்பித்திருப்பி நோக்கிக்கொண்டிருந்தான். மெல்லுதடுகள் கூம்பியிருக்க விழிமூடி துயில்கொண்டிருந்தது. "சைத்ர பஞ்சமி. விடிகாலை முதல்நாழிகை மூன்றாவது பாதம் முப்பத்தெட்டாவது கணம்" என்றாள் செவிலி. அவன் அந்த மணல்நாழிகையிலிருந்து உதிர்ந்த மணல்கணங்கள் மெல்ல நிறைந்து மூன்றாவது பாதமென வரையப்பட்ட கோட்டை கடந்து மேலெழுந்து ஒவ்வொன்றாக உதிர்வதை உள்ளுணர முடிந்தது. முப்பத்தெட்டாவது மணல்கணம் உதிர்ந்தபோது அவன் உள்ளம் மின்னியது. "அது எந்தை புரூரவஸின் பிறவிப்பொழுதல்லவா?" என்றான். "அவர் முகம். நம் அரண்மனையின் சுவரில் வரையப்பட்டுள்ள அவர்முகம்தான் இது" என்று கூவினான்.

பார்க்கவன் வியப்புடன் "ஆம், அவருடையது நாற்பத்தேழாவது கணம்" என்றான். யயாதி பேருவகையுடன் மைந்தனை நெஞ்சோடணைத்து "இவனுக்கு நான் புரூரவஸ் என பெயரிடுகிறேன். இவன் எந்தை எழுந்துவந்த வடிவம்" என்றான். பார்க்கவன் "அரசே, அது அரசகுலப் பெயர். இவருக்கு அதை இடுவது ஐயத்திற்கிடமாக்கும்" என்றான். "இல்லை, வேறுபெயர் இட நான் ஒப்ப மாட்டேன்" என்றான் யயாதி. "அப்பெயர் வேண்டாம்… புரு என்றே வைக்கலாம்… அது பொதுப்பெயர்தான்" என்றான் பார்க்கவன். யயாதி மெல்ல தளர்ந்து "ஆம்,

வேறுவழியில்லை. ஆனால் நானறிவேன் அது என் மூதாதையின் பெயர். ஒருநாள் அவையில் அதை கூவிச்சொல்வேன்” என்றான்.

சர்மிஷ்டை உள்ளே வந்து வெளியே நோக்கி தலையசைக்க மைந்தர் மூவரும் உள்ளே வந்தனர். திருஹ்யூவின் மெலிந்த உள்வளைந்த தோள்களும் நீளமுகமும் எப்போதும் முதல்நோக்கில் ஒரு விலக்கத்தையும் சில கணங்களுக்குப்பின் நெகிழ்வையும் அன்பையும் அவனிடம் எழுப்புபவை. மென்மீசை உதட்டுக்குமேல் பாசிப்படர்வுபோல தெரிந்தமை யயாதியை உவகைகொள்ளச் செய்தது. அனுத்ருஹ்யூ மூத்தவனைப்போலவே தோற்றம்கொண்டவன், அவனை மூத்தவன் என்று எண்ணி மயங்குவது யயாதியின் வழக்கம். பின்னால் வந்து நின்ற புருவின் புன்னகை மாறாத விழிகளையும் சிவந்த உதடுகளையும் நோக்கியபின் யயாதி விழிதிருப்பிக் கொண்டான்.

புருவை யயாதி நேரடியாக நோக்குவதோ விழிநோக்கிச் சொல்லாடுவதோ இல்லை. ஒருகணம் நோக்கியபின் திரும்பி மூத்தவர்களிடமே பேசிக்கொண்டிருப்பான். ஆனால் உள்ளத்துள் அவன் முகமே திகழும். பேசியது அவனுடன்தான் என பின்னர் நினைவு மயங்கும். அது ஏன் என அவன் எண்ணி எண்ணி நோக்கியதுண்டு. அவன் தோற்றம்போல் இனியது பிறிதில்லை. பொன்னிறம். புவியாண்ட மூதாதையரின் முகம். ஆனால் அவ்விழிகள் கூரியவை, அவற்றின் முன் ஒளிந்துகொள்ளவே யயாதியின் உள்ளம் விழைந்தது. அவர்கள் விடைபெறுகையில் அனைவரையும் பேச்சுப்போக்கில் இயல்பாகத் தொட்டு நற்சொல் உரைப்பான். இறுதியாக புருவை மீண்டுமொருமுறை தொடுவான்.

“வருக...” என்று அழைத்தபடி யயாதி முன்னால் சென்றான். அவர்கள் உள்ளே வந்து தலைவணங்கி முகமன் உரைத்தனர். யயாதி “முறையான பயிற்சிகள் பெறவேண்டிய பொழுது. அன்னை சொல்லியிருப்பார்கள் அல்லவா?” என்றான். திருஹ்யூ “ஆம்” என்றான்.

# மாமலர் - 80

**80. நகரெழுதல்**

அசோகவனியின் எல்லைக்குள் நுழைந்தபோதே தேவயானி உளச்சுளிப்புக்கு ஆளானாள். தொலைவில் தோரணவாயில் தென்பட்டதும் அவளுடைய பேருடல் என சாலையை நிறைத்து இரு எல்லைகளும் மறைய பெருகிச் சென்றுகொண்டிருந்த அணியூர்வலத்தின் முகப்பில் ஏழு தட்டுத்தேர்மீது எழுந்த மூன்று நிமித்திகர்கள் தங்கள் பெருஞ்சங்கங்களை முழக்கினர். பதினெட்டு அகல்தேர்களில் தேனீ என மொய்த்திருந்த இசைச்சூதர்கள் தங்கள் முரசுகளுடனும் கொம்புகளுடனும் குழல்களுடனும் எழுந்து மங்கலஇசை பெருக்கினர்.

நூற்றெட்டு தாமரைத்தட்டுத் தேர்களில் பொன்வண்டுகளென, பட்டுப்பூச்சிகளென செறிந்திருந்த அணிச்சேடியர் குரவை ஒலி எழுப்பியபடி மங்கலத் தாலங்களை கைகளில் ஏந்தி எழுந்து நின்றனர். இரும்புக் கவச உடைகள் நீரலைவொளி எழுப்ப சீர்நடையில் சென்ற வேல்நிரையினரும் பெருநடையின் தாளத்தில் சென்ற புரவிப்படையினரும் நாண்தொடுத்த விற்களுடன் வில்லவர் அணியும் வழிச்சென்றனர். ஆணைகளும் அறைதல்களும் ஊடாக ஒலித்தன.

தோரணவளைவை அணுகியதும் தேவயானியின் தேருக்கு முன்னால் சென்றுகொண்டிருந்த விரைவுத் தேரிலிருந்த துணையமைச்சர் சங்கிரமர் படிகளில் இறங்கி ஓடி அவளை அணுகி தலைவணங்கி "திரையை மேலேற்றவா, பேரரசி...?" என்று கேட்டார். சாயை மெல்ல கையசைக்க அமைச்சர் ஓடி தேருக்குப் பின்னால் தொற்றி நின்றிருந்த காவலரிடம் கைகளை வீசி வீசி ஆணையிட்டார். அவர்கள் பட்டுச்சரடை இழுக்க செந்தாமரை மலரிதழ் நிறத்தில் தேரைச் சூழ்ந்து காற்றில் நெளிந்துகொண்டிருந்த பொன்னூல் அணிப்பின்னல் கொண்ட பட்டுத்திரைகள் ஏதோ எண்ணம் கொண்டவைபோல அசைவற்றன. பின் அனல்பட்ட தளிர்போல் சுருங்கத் தொடங்கின. பின்வாங்கும் அலையென சுருண்டு மேலெழுந்து தேர்க்கூரைக்கு அடியில் மறைந்தன.

பன்னிரு அடுக்குகொண்ட பொன்மகுடமும் அதன் மேல் படபடக்கும் காகக்கொடியும் கொண்ட அப்பொற்தேர் தேவயானி ஆறாண்டுகளுக்கு முன்னர் அஸ்வமேதமும் ராஜசூயமும் முடித்து சத்ராஜிதை என தன்னை பாரதவர்ஷத்தின்மீது நிறுத்தியபோது அவ்விழாவின் இறுதிநாள் நூற்றெட்டு அரசர்கள் அகம்படி வர அவள் நகருலா சென்ற அணியூர்வலத்திற்காக கலிங்கச்சிற்பி சுதீரரால் வார்க்கப்பட்டது. பாரதவர்ஷத்தில் அதற்கு முன் பிறிதொன்று அவ்வாறு சமைக்கப்பட்டதில்லை என்று சூதர்கள் பாடினர். அதற்கிணையான தேர் விண்ணில் அமராவதியின் அரசன் ஊர்வது மட்டுமே என்றனர்.

அத்தேரைப்பற்றி அவைக்கவிஞர் சூர்யஹாசர் இயற்றிய காஞ்சனயானகீர்த்தி என்னும் குறுங்காவியத்தில் அதை நோக்கும்பொருட்டு நுண்விழிகளுடன் தேவர்கள்

சூழ்ந்திருப்பதனால் சூரியனோ விளக்குகளோ அளிக்காத ஒளியொன்று அதை எப்போதும் சூழ்ந்திருக்கும் என்றார். கந்தர்வர்களும் கின்னரரும் வித்யாதரரும் உடனிருப்பதனால் அத்தேர் செல்லும் வழியெங்கும் இசை முழங்கும், மரக்கிளைகளில் பொன்னிறப் பறவைகளையும் சிறகொளிரும் தேனீக்களையும் மணிவண்டுகளையும் பார்க்க முடியும் என்றார்.

பிழையற்ற நேருடல்கள் கொண்ட பன்னிரு வெண்புரவிகள் நிமிர்ந்த தலையுடன் நீண்ட கழுத்தில் பால்நுரையென குஞ்சியலைய வெள்ளிக்கோல்கள் முரசுத்தோலில் விழுவதுபோல குளம்புக்கால்கள் சீராகச் சுழல அத்தேரை இழுத்தன. ஏழடுக்காக அமைந்த இரும்புச் சுருள்விற்களின் மேல் அமைந்த அத்தேர் நீரலைகளின் மீது அன்னம் என சென்றது. அதன் நடுவே அரியணையின் மீது முகம்நிமிர்ந்து நேர்விழிகளால் எதையும் நோக்காது தேவயானி அமர்ந்திருந்தாள். அவள் அருகே நின்ற சாயை மணிச்சரங்களும் முத்தாரங்களும் சுற்றிய பெரிய கொண்டையிலிருந்து மீறிய குழல்கற்றைகளை குனிந்து சீரமைத்தாள். தோளில் படிந்திருந்த இளஞ்செம்பட்டாடையை மடிப்பு எடுத்து அமைத்தாள்.

பொதுமக்களின் விழிகளுக்கு முன் தோன்றுவதற்கு முந்தைய கணத்தில் எரிதழல் செம்மணியென உறைவதுபோல அவளில் ஒரு அமைதி எழுவதை சாயை எப்போதும் கண்டிருந்தாள். பின்னர் எத்தனை பொழுதாயினும் அவ்வண்ணமே வார்த்து வைத்த அருஞ்சிலையென அவள் அமர்ந்திருப்பாள். நோக்கில் விழியும், காலத்தில் இமையும், மூச்சில் கழுத்தும் அன்றி உயிர்ப்பென எதையுமே அவளில் காண இயலாது.

பேரவைகளில் கொள்ளும் அந்த அசைவின்மையை மெல்ல காலப்போக்கில் தனித்திருக்கையிலும் அவள் கொள்ளத்தொடாங்கினாள். அத்தனை பீடங்களும் அரியணைகள் ஆயின என.

அவள் வருகையை அறிவிக்க முரசுமேடைகளில் பெருமுரசுகள் பிளிறி பெருகின. கொம்புகள் கனைத்தன. முழுக் கவச உடையுடன் முகப்பில் காத்து நின்றிருந்த காவலர்தலைவன் உக்ரசேனனும் குருநகரியிலிருந்து முன்னரே வந்து அச்சிற்றூரை நிறைத்திருந்த காவலர்களும், புத்தாடையும் மலர்மாலைகளும் அணிந்திருந்த அசோகவனியின் ஐங்குடித் தலைவர்களும் அவர்களின் சுற்றமும் கைகளையும் குலக்கோல்களையும் மேலே தூக்கியும் படைக்கலங்களை நிலம்நோக்கி தாழ்த்தியும் அவளை வாழ்த்தி குரலெழுப்பினர்.

அவளை எவ்வண்ணம் வாழ்த்தவேண்டுமென்பதுகூட முன்னரே கவிஞர்களால் எழுதப்பட்டு ஒலி வகுக்கப்பட்டு அவள் செல்லுமிடத்துக்கு அவளுக்கு முன்னரே சென்றுவிட்டிருக்கும். எனவே எங்கும் ஒரே வாழ்த்தொலிகளே எழுவது வழக்கம். எந்தப் புதுநிலத்திற்கு சென்றாலும் அந்நிலம் முன்னரே அவளால் வெல்லப்பட்டுவிட்டது என்ற உணர்வை எழுப்பியது அது. மீண்டும் மீண்டும் ஒரே நிலத்தில் ஒரே முகங்கள் நடுவே ஒரே பொற்தேரில் சென்று கொண்டிருப்பதாக சாயை எண்ணிக்கொள்வதுண்டு.

வாழ்த்தொலிகள் தேவயானியில் எந்த நலுக்கத்தையும் ஏற்படுத்துவதில்லை. நீரென எண்ணி மலர்கள் பளிங்குப்பரப்பில் உதிர்வதுபோல என அதை அவைக்கவிஞர் சுதாகரர் ஒரு பாடலில் சொல்லியிருந்தார். பல்லாயிரம் பேர் கண்ணீரும் கதறலுமாக நெஞ்சறைந்து கொந்தளிக்கையில்

நடுவே கல்முகத்துடன் ஒழுகிச்செல்லும் கொற்றவை சிலை என்றார் பெருஞ்சூதராகிய மாகத சாலியர். முன்னரே நிகழ்ந்து முடிந்து காவியமென்றாகிவிட்ட தலைவியா அவள் என அத்தோற்றத்தை வியந்திருந்தார் தென்னகத்துக் கவிஞரான ஆதன் பெருங்கொற்றன்.

தேர் தோரணவாயிலை அணுகியபோது சரளைக்கற்களுடன் மண்கலந்து விரித்து நீர்தெளித்து கல்லுருட்டி இறுக்கிய புதிய தேர்ப்பாதையில் கண் அறியாதபடி ஆழத்தில் ஓடிச்சென்ற முயல்வளை ஒன்றுக்குள் அவள் தேரின் சகடம் ஒன்று இறங்க நிலைதடுமாறி அசைந்து தோளால் சாயையின் விலாவை முட்டிக்கொண்டாள். ஒரு கணம் அனைத்துக் குரல்களும் திடுக்கிட்டு ஓசையழிந்தன. அந்த அமைதி வாளால் வெளியையும் காலத்தையும் ஓங்கி வெட்டி அகற்றியதுபோல் எழ தன் தேரில் எழுந்த கிருபர் கைகளை விரைவாக வீசி வாழ்த்தொலிகள் தொடரட்டும் என்று ஆணையிட்டார். அச்சமும் கலந்துகொள்ள வாழ்த்தொலியும் மங்கல இசையும் இருமடங்கு ஓசையுடன் உயிர்த்தெழுந்தன.

சாயை அவ்வண்ணம் ஒன்று நிகழ்ந்ததை அறியாதவள் போலிருந்தாள். நீர்போல நிகழ்ந்ததை விழுங்கி முந்தைய கணத்தில் முற்றிலும் இணைந்துகொண்டாள் தேவயானி. ஆனால் சாயை பேரரசி சினம்கொண்டிருப்பதை அவள் உடல் வழியாகவே அறிந்திருந்தாள். தோரணவாயில்களைக் கடந்து பேரலையெனச் சென்று கோட்டையை அறைந்து அதன் பெருவாயிலினூடாக உள்ளே பெருகி கிளை பிரிந்து அச்சிற்றூரின் அனைத்து தெருக்களையும் நிரப்பியது தேவயானியின் அணி ஊர்வலம்.

கோட்டையின் உப்பரிகை மேலிருந்து நோக்கிய வீரர்கள் வண்ண மலர்கள் மட்டுமே நிறைந்த நதி ஒன்று அலை கொந்தளித்து வந்து அந்நகரைப் பெருக்கி கரைவிளிம்பு தொட்டு நுரைகொள்வதைக் கண்டனர். அவர்களிடமிருந்த அனைத்து முரசுகளின் தோல்களும் ஒலியால் அதிர்ந்துகொண்டிருந்தன. தூக்கிய வாள்பரப்புகள்கூட ஒலியால் அதிர்வதை கைகள் உணர்ந்தன. பெருந்திரளில் ஒழுகிய தேரில் ஒரு பொற்துளி என அவள் அமர்ந்திருந்தாள். உறைந்து நகையென்றான பொன்னல்ல, உருகி அனலென ததும்பிக் கொண்டிருப்பது.

கோட்டை வாயிலில் நூற்றெட்டு முதுமகளிர் கூடி நின்று தேவயானியை வரவேற்றனர். அசோகவனியின் பெருங்குடிகளிலிருந்து காவலர்தலைவன் உக்ரசேனன் நேரில் நோக்கி நோக்கி தேர்ந்தெடுத்த பெண்டிர் அவர்கள். அவர்கள் அணியவேண்டிய அணிகளும் ஆடைகளும் அரசிலிருந்தே அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தன. அவர்கள் நிற்கவேண்டிய முறை, சொல்ல வேண்டிய உரை, நோக்கு, நகைப்பு அனைத்துமே முன்னரே வகுக்கப்பட்டு பலமுறை பயிற்றுவிக்கப்பட்டிருந்தன.

அரசி நகர்புகுவதை முதலில் அவர்கள் விந்தையான ஒரு செய்தியாகவே எடுத்துக்கொண்டனர். அது எவ்வண்ணம் நிகழுமென அவர்கள் அறிந்திருக்கவில்லை. பின் ஒவ்வொரு நாளுமென சிற்பிகளும் தச்சர்களும் காவலர்களும் பணியாட்களும் வணிகர்களும் வண்டிகளும் நகருக்குள் நுழையத்தொடங்கியதும் வியப்பும் திகைப்பும் அடைந்தனர். கண்ணெதிரே அவர்களின் ஊர் மாறிக்கொண்டிருந்தது. ஒரு தருணத்தில் மொத்த ஊரே உடைந்து சிதறி மரப்பாளங்களாகவும் கற்தூண்களாகவும் சூழ்ந்து கிடந்தது.

‘இவ்விடிபாடுகளுக்குள்ளா அரசி நுழையப்போகிறாள்?’ என்று திகைப்புடனும் ஏளனத்துடனும் பேசிக்கொண்டனர். ‘நம் ஊருக்கு அவள் வரவில்லை. இங்கு தான் நுழையவிழையும் ஊரை அவள் உருவாக்குகிறாள். அதற்குள் நுழைந்து அவையமர்வாள்’ என்றார் முதியவர் ஒருவர். அரசியின் வருகைநாள் நெருங்க நெருங்க புதிய மாளிகைகள் எழுந்தன. கோட்டை வளர்ந்து பெருகி பிறிதொன்றாகி தோரணவாயில்கள் மழைக்காளான்கள்போல் முளைத்தெழுந்தன. இறுதி ஏழு நாட்களில் மொத்த நகரும் பணிக்குறை தீர்ந்து வண்ணம் பூசப்பட்டு புத்தரக்கு மணத்துடன் பிறந்து வந்ததுபோல் ஒளிகொண்டு நின்றது.

“பழம்பெரும் கதைகளில் ஓரிரவில் பூதங்கள் நகரை கட்டி எழுப்புவதைப்பற்றி கேட்டிருக்கிறேன், இப்போதுதான் பார்த்தேன்” என்று முதுமகள்களில் ஒருத்தி சொன்னாள். “பணியாற்றும் கைகளுடன் காணாக் கைகள் பல்லாயிரம் சேர்ந்துகொண்டதுபோல.” விண்திரையை விலக்கி எடுக்கப்பட்டதுபோல அந்நகரம் காற்றில் தோன்றியது. அரசி சென்றபின் நுரையடங்குவதுபோல் அது மீண்டு பழைய சிற்றூராக ஆகிவிடுமென்றுகூட சிலர் எண்ணினர். சிறுகுழந்தைகள் “அரசி சென்றபின் இது நமக்கே உரியதாகிவிடுமா?” என்று கேட்டனர். அப்பால் அமர்ந்திருந்த முதியவர் “இந்நகரம் இனி எப்போதும் நம்முடையதல்ல. இது இனி ஆயிரம் வருடங்களுக்கு அரசிக்கு உரியது” என்றார். “அப்படியென்றால் நாம்...?” என்றான் சிறுவனொருவன். “நாம் அரசியின் குடிகள்.”

அனைத்தையும் விளையாட்டென மாற்றிக்கொள்ளும் முதிராச் சிறுவரன்றி பிறர் நகரில் எழுந்த மாற்றங்களை

விழையவில்லை. அவர்கள் வாழ்ந்த ஊரின் கட்டடங்களும் தெருக்களும் மரங்களும் காற்றும் வானும் ஒளியும் நிலமும் ஒவ்வொரு கணமும் மறைந்துகொண்டிருந்தன. கண்காணா பெருக்கொன்றில் அவ்வூர் மெல்ல மெல்ல மூழ்கி மறைவதைப்போல. அவர்களின் கனவுகளில் மீண்டும் மீண்டும் பெருவெள்ளம் ஒன்று வந்தது. நிறைத்து மூழ்கடித்து மேலேறிக்கொண்டே வந்து போர்த்தி தான் மட்டுமே என்றாகியது. வீடுகள் அடித்தளம் கரைந்து விரிசலிட குத்துபட்ட யானைபோல சிலிர்த்து திடுக்கிட்டன. தூண்கள் முறிந்து முனகலோசையுடன் சரிந்து சிற்றலைகளை எழுப்பியபடி மூழ்கின. குமிழிகளை வெளியிட்டு அலைகளாகி எஞ்சி அவையும் அமைய இருந்தனவோ என்று விழிதிகைக்க மறைந்தன.

பின்னர் அசைவற்று விரிந்த குளிர்நீர்ப் பரப்பில் புதிய பெருநகரொன்றின் நீர்ப்பாவை வண்ணக் குழம்பலாக நெளிந்தாடியது. ஒவ்வொரு கட்டடமும் புத்துயிர் கொண்டபோது அவர்கள் அரியதொன்றை இழந்ததாகவே உணர்ந்தனர். பொருளென அமைந்த ஒவ்வொன்றும் எண்ணங்களையும் கனவுகளையும் தன்னுள் பூசிக்கொண்டவை என்றுணர்ந்தனர். மண்மேல் அவை மறைந்த பின்னரும் தங்கள் உள்ளத்தில் எஞ்சுவது கண்டனர். எனினும் கண்ணுக்கு முன் அவை இல்லையென்றானால் ஒவ்வொரு நாளுமென கருத்துக்குள்ளும் கரைந்து மறைவதையும் தெரிந்துகொண்டனர்.

ஆனால் வணிகர்நிரை வழியாக ஊருக்குள் பெருகி வந்த புதுப்பொருட்கள் அளித்த களிப்பு பெண்களை மெல்ல மாற்றி அனைத்து அழிவுகளையும் மறக்கச் செய்தது. ஒரு மாளிகை

அழிந்த இடத்தில் ஒரு மரச்செப்பை வைத்து களியாட அவர்களால் இயன்றது. ஒரு சோலையை அழித்தபின் எஞ்சும் வெறுமையை புதிய ஆடையொன்றால் நிகரீடு செய்ய முடிந்தது. வாழ்வென்பது இறந்தகாலம் மட்டுமே என்றான முதியவர்கள் எதைக் கொண்டும் ஈடு செய்ய முடியாத தங்கள் சென்ற வாழ்க்கையை இழந்து சாவின் மணம்கொண்ட ஆழ்துயர் எய்தினர்.

களைத்து வெறித்த கண்களுடன் இல்லத் திண்ணைகளில் அமர்ந்து அறியா வண்ணக் கொப்பளிப்பாக தங்கள் முன் நிகழ்ந்துகொண்டிருந்த புதிய வாழ்க்கையை பார்த்தபோது உருவாகி வரும் அப்புதுநகரியில் தங்கள் நினைவுகளும் எஞ்சாதென்று அவர்கள் உணர்ந்தனர். எஞ்சுவது ஏதுமின்றி மறைவதே இப்புவியில் எழுந்த அனைத்திற்கும் தெய்வங்கள் வகுத்த நெறியென்று அறிந்திருந்தும்கூட இருக்கவேண்டும் என உயிர்கொண்டிருந்த வேட்கை எஞ்சவேண்டுமென்று உருமாற்றம் கொண்டு துடிக்க துயருற்ற நெஞ்சுடன் தனிமையில் அமிழ்ந்தனர். ஒருவரோடொருவர் துயர் பரிமாறி சொன்ன சொற்கள் அனைத்தும் பொருளிழந்துபோக பின்னர் பிறர் விழிகளை நோக்குவதையே தவிர்த்து அமர்ந்தனர்.

முதுபெண்டிரை திரட்டுவதற்கு வந்த அரண்மனை ஊழியர்களிடம் “நாங்கள் எதற்கு வரவேண்டும்? அரசியை நாங்கள் அழைக்கவில்லையே?” என்றாள் முதுமகள் ஒருத்தி. “உங்கள் நகருக்கு எழுந்தருள்பவர் திருமகளின் வடிவமான பேரரசி. உங்கள் குறைகளை வந்து சொல்லுங்கள் அவரிடம்” என்றான் உக்ரசேனன். “நாங்கள் இங்கு உழைத்து உண்கிறோம். மண்ணுக்கு விண் கொடுத்தால் எங்களுக்கு அவள் கொடுப்பாள்” என்றாள் ஒரு கிழவி.

“பேரரசியின் எழிலுருவை நேரில் காண்பதுவரை இப்படி எதையெல்லாமோ எண்ணுவீர்கள். நேர் கண்ட அனைவரும் சொல்வதொன்றே, தெய்வங்கள் மானுட உடல்கொண்டு மண்ணில் தோன்றமுடியும். உங்கள் குலம் தழைக்க, கன்றுகள் பெருக, நிலம் குளிர, களஞ்சியம் நிறைய திருமகள் நோக்கு உங்கள் மேல் படியட்டும்” என்றார் அமைச்சர் கிருபர். ஒரு களியாட்டென அவர்கள் அதற்கு ஒப்பினர். அழைக்கப்பட்ட முதுமகளிர் ஆடையும் அணியும் சூடி ஒருங்கியபோது பிறரும் ஆர்வம் கொண்டனர். அவர்களும் அணிகொண்டு கிளம்பினர்.

தேவயானி கோட்டைவாயிலைக் கடந்ததும் உப்பரிகைகள் அனைத்திலுமிருந்து மலர்க் கடவங்களை எடுத்து கவிழ்த்தனர். மலர்மழையினூடாக அவளது தேர் கோட்டைக்குள் நுழைந்து நின்றது. முரசுகளும் கொம்புகளும் மணிகளும் வாழ்த்தொலிகளும் எழுந்து சூழ அவள் கைகூப்பியபடி எழுந்தாள். நகர்க்குடிகளின் உவகை கட்டின்றி பெருகியது. வேலோடு வேல் தொடுத்து அமைத்த காவலர்களின் வேலி அவர்களை தடுத்தது. அதற்கப்பால் அவர்கள் ததும்பிக் கொந்தளித்தனர்.

தேவயானி தேர் தட்டிலிருந்து காவலர் கொண்டு வைத்த பொன்னாலான படி மேடையில் கால்வைத்து இறங்கி அசோகவனியின் மண்ணில் நின்றதும் வாழ்த்தொலிகள் எழுந்து உச்சத்தை அடைந்தன. கோட்டை மேல் எழுந்த பெருமுரசு துடிதாளத்தில் முழங்கி அமைந்து கார்வையை எஞ்சவிட்டு ஓய்ந்தது. பேரொலி மட்டுமே எழுப்பும் அமைதி எங்கும் நிலவியது. அமைச்சர் கிருபர் “மாமங்கலையர் வருக! நம் மண்ணை கால் தொட்டு வாழ்த்திய பேரரசிக்கு மங்கலம்

காட்டி உங்கள் குடித்தெய்வமென்று அழைத்துச் செல்க!" என்று ஆணையிட்டார்.

நிரைவகுத்து நின்றிருந்த மங்கலத்தாலங்கள் ஏந்திய முதுபெண்டிர் கிளம்பியதுமே கலைந்து ஒருவரோடொருவர் முட்டிக்கொண்டனர். இரு தாலங்களில் இருந்து வெள்ளிச்செம்புகள் கீழே விழுந்தன. மூவர் அவற்றை குனிந்து எடுக்க முயல அதிலொருத்தி பிறரால் முட்டித்தள்ளப்பட்டு கீழே விழுந்தாள். அவளை காவலர் இழுத்து பின்னால் கொண்டுசென்றனர். கிருபர் அவர்களிடம் "நிரை... நிரை... ஒருவர் பின் ஒருவராக" என சொல்லிக்கொண்டே இருந்தார்.

முதன்மை மாமங்கலையினர் மூவர் பேரரசியின் எதிரே சென்று நின்று ஐம்மங்கலங்கள் நிரம்பிய தாலத்தை நீட்டி உரத்த குரலில் முன்னரே பயிற்றுவிக்கப்பட்ட சொற்களை சொன்னார்கள். "திருமகளே, மண்ணாளும் கொற்றவை வடிவே, கலைதேர்ந்த சொல்மகளே, எங்கள் சிற்றூர் அசோகவனிக்கு வருக! எங்கள் குலம் விளங்க, இந்நகர் மலர் உதிரா மரம் என்று பொலிய தங்கள் வரவு நிகழட்டும்" என்று மூத்தபெண்டு முறைமை சொல்ல தேவயானி முகம் மலர்ந்து "ஆம். இந்நகர் பொலியும். அது தெய்வங்களின் ஆணை" என்றாள்.

அடுத்த முதுமகள் தான் பலமுறை சொல்லி உளம் நிறுத்தியிருந்த சொற்களை மறந்து நினைவிலெடுக்க முயன்று தத்தளித்து வாய் ஓய்ந்து நின்றாள். தேவயானி அவளிடம் "உங்கள் மங்கலமுகத்தோற்றம் என்னை நிறைவுகொள்ளச் செய்கிறது, அன்னையரே" என்றாள். அம்முதுமகள் சொற்களை நினைவுகூர்ந்து "வெற்று அகலென இங்கிருந்தது எங்கள் சிற்றூர். இதில் நெய்யென்றாகிறது எங்கள் உள்ளம். ஒளிரும் சுடரென தாங்கள் தோன்றியிருக்கிறீர்கள். விண் நிறைந்த

மூதாதையருக்கு முன் இது வைக்கப்பட்டிருக்கிறது. இங்கு அனைத்து தெய்வங்களின் அருளும் பொழியவேண்டும்” என்றாள்.

“ஆம், தெய்வங்கள் அனைத்தையும் கொடையும் பலியும் கொண்டு மகிழ வைப்போம். நம் மூதாதையர் அனைவரும் இந்நாட்களில் இந்நகரில் எழட்டும்” என்று தேவயானி சொன்னாள். பின்னர் முன்னால் நின்ற மூதன்னையின் தோளில் கைவைத்து “என் அன்னையே நேரில் வந்து அணிமங்கலத்துடன் என்னை வரவேற்றதுபோல் உணர்கிறேன். அன்னையை நான் கண்டதில்லை. தங்களைப்போல் முகம் மலர்ந்த எளிய மூதாட்டியாக பழுத்திருப்பாளென்று தோன்றுகிறது” என்றாள்.

அந்தத் தொடுகையையும் நேர்ச்சொல்லையும் எதிர்பாராத முதுமகள் தத்தளித்து “அரசி தாங்கள்… நான்… நான்… இங்கே… எளியவள்” என்று உடைந்த சொற்களுடன் விம்மும் தொண்டையுடன் நிலையழிந்தாள். தேவயானி அவள் கைகளைப்பற்றி “வருக அன்னையே, நம் அரண்மனைக்குச் செல்வோம். நம் மைந்தர் இங்கு நிறைந்து வாழ ஆவன செய்வோம்” என்றாள். அவள் சொற்களிலிருந்த மெய்யுணர்ச்சியின் அணுக்கத்தால் அனைத்து எச்சரிக்கைகளையும் கடந்துவந்த இரண்டாவது முதுமகள் கைநீட்டி தேவயானியின் கைகளை பற்றிக்கொண்டு “மகளே, நான் முதியவள். உன்னிடம் இதை சொல்லியாக வேண்டும். நீ பேரரசியே ஆனாலும் பொன் மேல் கால் வைத்திறங்கலாமா? பொன்னென மண்ணுக்கு வந்தது விண் வாழும் திருமகள் அல்லவா? அது புலரியையும் அந்தியையும் காலால் மிதிப்பதல்லவா?” என்றாள்.

தேவயானி ஒருகணம் சற்றே கலைந்து ஆனால் முகம் மாறாமல் அச்சொற்களை கேட்காதவள்போல காலடி வைத்து முன்னால் சென்று பிறிதொரு மூதன்னையிடம் முகமலர்வுடன் “அரண்மனைக்கு வருக, அன்னையே!” என்றபின் கிருபரிடம் “செல்வோம்” என்றாள். சாயை விழிகள் மாற திரும்பி உக்ரசேனனை பார்த்தாள். அவன் கைகளைக் கூப்பியவனாக உள்ளம் அழிந்து தோள்களில் முட்டிய திரளால் ஆடியபடி நின்றான்.

சாயையின் விழிகளால் ஆணை பெற்ற காவலர் முதுமகளின் தோளில் கைவைத்து தள்ளியபடி “வருக மங்கலையே” என்றார்கள். “இல்லை, நான் அரசியிடம் தவறாக ஒன்றும் சொல்லவில்லை. பொன்னை மிதிக்கும் பழக்கம் எங்கள் குலத்தில் இல்லை” என்றாள் முதுமகள். “ஆம், வருக அன்னையே” என்று காவலர் அவளை இழுத்தார்கள். அவளுக்குப் பின்னால் நின்ற இன்னொரு முதுமகள் “இங்கு நாங்கள் நெல்லையும் மலரையும்கூட கால்களால் தொடுவதில்லை. மலரென்றும் நெல்லென்றும் பொலிவது பொன்னல்லவா?” என்றாள். அவளையும் வீரர்கள் இழுத்து கூட்டத்திற்குள் புதைத்து அமிழ்த்தினர்.

அணித்தேர் வந்து நின்றது. தேவயானி அதை நோக்கி நடக்கையில் அவளுக்குப் பின்னால் பெண்களும் படைவீரர்களும் அடங்கிய குழு சுவரென்று எழுந்து முதிய மாமங்கலைகளை அவளிடமிருந்து முற்றாக விலக்கி அகற்றி கொண்டுசென்றது. தேவயானி சாயையிடம் “அம்முதுபெண்டிரை ஒன்றும் செய்யவேண்டியதில்லை. எளியவர்கள்” என்றாள். “ஆம்” என்றாள் சாயை. தேவயானி

மட்டும் தேரில் ஏறிக்கொண்டாள். சாயை கிருபரை நோக்கி பிறிதொரு நோக்கு சூடிய விழிகளுடன் திரும்பினாள்.

நகரின் தெருக்களினூடாக அவளுடைய தேர் சென்றபோது இருபுறமும் கூடி நின்ற மக்கள் அரிமலர் தூவி வாழ்த்துரைத்தனர். தெருக்களில் மலர்தரைமேல் மலர்காற்றினூடாக சென்ற அவள் தேர் அரண்மனை வாயிலை சென்றடைந்தபோது முன்னரே புரவிகளில் அங்கு சென்றிருந்த கிருபரும் பிற அமைச்சர்களும் அவளுக்காக காத்து நின்றிருந்தனர். துணைக் கோட்டைத் தலைவனாகிய சித்ரவர்மன் கவசஉடையும் அரசமுத்திரையுமாக வந்து தலைவணங்கி உடைவாளை தேவயானியின் காலடியில் தாழ்த்தி வணங்கி வாழ்த்து கூவினான். தேவயானி அவன் வாழ்த்தை ஏற்று அமைச்சர்களால் வழிநடத்தப்பட்டு அரண்மனைக்குள் நுழைந்தாள்.

சாயை திரும்பி கிருபரிடம் "முந்தைய காவல் தலைவனை நான் உற்றுசாவவேண்டும். அவனுக்கு பிற நோக்கங்கள் இருந்தனவா என்று அறிந்த பின்னர் வேண்டியதை செய்யலாம்" என்றாள். "ஆணை" என்றார் கிருபர்.

# மாமலர் - 81

### 81. பூவுறைச்சிறுமுள்

அசோகவனிக்கு வந்த மூன்றாம் நாள்தான் தேவயானி சர்மிஷ்டையை சந்தித்தாள். முதல் இரண்டு நாட்களும் அசோகவனியிலிருந்தும் அதைச் சூழ்ந்திருந்த நூற்றுக்கும் மேற்பட்ட பழங்குடிச் சிற்றூர்களிலிருந்தும் வந்து அங்கே

தங்கியிருந்த தொல்குடித்தலைவர்களும் குலமூத்தாரும் முறைவைத்து காலைமுதல் அந்திவரை அவளைச் சந்தித்து கோல்தாழ்த்தி முடியேற்பு செய்துகொண்டிருந்தார்கள்.

தேவயானி அவர்களுக்கு குடிப்பட்டங்களை அளித்து அவர்களின் குடிமுத்திரைகளை அவர்களுக்கு மட்டும் உரியவை என ஏற்று செம்புப்பட்டயங்களை அளித்தாள். அவர்களின் நிலங்கள் அவர்களுக்கு மட்டுமே உரியவை என்றும் அவற்றின் மீதான எத்தாக்குதலும் குருநகரிக்கு எதிரானவை என்றும் அறிவித்தாள். அதற்கு மாற்றீடாக அவர்கள் ஆண்டுதோறும் அரசுக்கு கப்பம் கட்டவும் அரசுநிகழ்வுகளில் பொருள்பங்கு கொள்ளவும் அரண்மனையின் பெருநிகழ்வுகளில் குடிகளெனத் திரண்டுவந்து அமையவும் தங்கள் கோல்தாழ்த்தி குலதெய்வங்கள் பெயராலும் மூதாதையர் நினைவாலும் சூள் உரைத்தனர்.

எண்ணியிராத வடிவுகளில் மலைப்பொருட்களும் அருங்கற்களும் அவளுக்கு அரியணைக் காணிக்கையாக வந்துகொண்டிருந்தன. அச்சிற்றூரைச் சூழ்ந்து அத்தனை செல்வமிருக்கிறதா என்ற வியப்பை அவையிலிருந்த ஒவ்வொருவரும் அடைந்தனர். அரியவை என்பவையே முடிவிலாத வேறுபாடுகள் கொண்டவை என்று அறிந்தனர். நெல்லிக்காய் அளவு இருந்த பெரிய நீலமணிக்கல்லை கையிலெடுத்து அமைச்சர் ஒருவர் “பாரதவர்ஷத்தின் முதன்மையான அருமணிகளில் ஒன்றாக இது இருக்கக்கூடும், பேரரசி” என்றார். “பழுதற்ற நீரோட்டம். முழுமையான வடிவம்.” தேவயானி விழிகளை மட்டும் திருப்பி நோக்கி சற்றே தலையசைத்து “நன்று” என்று மட்டும் சொன்னாள்.

மாகேதர் குலத்தலைவரால் கொடையளிக்கப்பட்ட புலிக்குருளைகள் ஏழு அவைக்கு கொண்டுவரப்பட்டன. ஒரே அன்னையின் மைந்தர்கள் ஒன்று பிறிதொன்றென முற்றிலும் ஒத்துப்போயிருந்தன. பிறந்து எட்டு நாட்களானவை. கூண்டுக்குள் ஒன்றுடன் ஒன்று ஒட்டிக்கொண்டு சிவந்த நுரைபோல தெரிந்தன. அதிலொன்றை பிடரித்தோலைப் பிடித்து தூக்கி தேவயானியின் கையில் கொடுத்த சுருத மாகேதர் “ஒற்றை அன்னை ஏழு குட்டிகளை ஈனுவது மிக அரிது. இவை உளம் ஒன்றாகி ஒற்றை உடலென இணைந்து வேட்டையாடும். சற்று பழக்கினால் மிகச்சிறந்த காவல்குழுவென்றாகும்” என்றார். தேவயானி அக்குருளையை கையில் வாங்கி அதை திருப்பி அதன் முகத்தை கூர்ந்து நோக்கினாள். சிறிய கூர்பற்களைக் காட்டி வாய் திறந்து அது உறுமியது. அதன் வெண்ணிற அடிவயிற்றில் தோல் பாலாடைபோலிருந்தது. சிறுகால்களின் விரல்களுக்கு நடுவே அவள் தன் விரலால் அழுத்திய போது விரல்களுக்குள்ளிருந்து மீன்முள் என நகங்கள் வெளிவந்தன. கால்களை வீசி அவள் முகத்தை அது அறைய முற்பட அவள் சிரித்து “சினம்கொள்கிறான்” என்றபடி திருப்பிக் கொடுத்தாள். அவர்கள் அதை வாங்கியபோது அதன் கீழ்இடக்கால் நகத்தில் அவள் ஆடை சிக்கிக்கொண்டது. சாயை குனிந்து அந்நகங்களிலிருந்து விடுவித்து ஆடையை சீர் செய்தாள்.

நீலப்பளிங்கில் செதுக்கப்பட்ட தாலம், சந்தனமரத்தில் செதுக்கப்பட்ட காளிசிலை, குடம்நீர் கொள்ளும் சுரைக்காய்க் குடுவை என வெவ்வேறு வகையான செல்வங்களை ஏழு கணக்கர் அமர்ந்து பட்டியலிட்டனர். அவற்றை முத்திரையிட்டு எண்பதிந்து பேழைகளில் அடைத்து கருவூலத்திற்கு கொண்டு சென்றனர் ஏவலர். ஒவ்வொரு நாளும் அவை முடிந்து அவள்

எழுவதற்கு அந்தியாகிவிட்டிருந்தது. அதன் பின் அறைக்குச் சென்று நீராடி உடைமாற்றி உணவருந்தி மீண்டும் கலையவைக்கு வந்தாள். அங்கு குருநகரியிலிருந்து அவளுடனேயே வந்திருந்த சூதர்களும் மலைகளிலிருந்து வந்த தொல்குடிப் பாடகர்களும் ஆடியும் பாடியும் கலைநிகழ்த்தினர்.

தொல்குடி நடனங்கள் அனைத்தும் காட்டுவிலங்குகளின் அசைவுகளை மீள நிகழ்த்துவதாக இருந்தன. உறுமிப் பாய்ந்து உடல் பிடரிசிலிர்த்து வாய்திறந்து சீறிய சுதீர தொல்குடியின் கரிய இளைஞன் ஒருவன் மாற்றுரு ஏதும் கொள்ளாமல் மானுட உடலிலேயே சிம்மமென்றான விந்தையைக் கண்டு மெல்ல இதழ் வளைய புன்னகைத்து இருக்கையில் சற்று அசைந்தாள். அதை குறிப்புணர்ந்த அமைச்சர் பெரிய தாலத்தில் பொன்னும் ஆடையும் வைத்து அவளிடம் அளிக்க எழுந்து அவர்களிடம் அளித்து "சிம்மம் எழுந்ததேதான், நன்று" என்றாள். அவள் வாயிலிருந்து ஒரு சொல்பாராட்டைப்பெற்ற கலைஞன் அவன் ஒருவனே என்பதனால் அவன் கால்கள் நடுங்க நிலையழிந்து சற்றே சாய்ந்தான். அவனுடன் வந்த கலைஞர் இருவர் அவனை பற்றிக்கொண்டனர்.

அவள் "சிம்மமென எழுவது உம்முள் கல்லில் கனலென உறைகிறது. அது என்றும் அங்கிருக்கட்டும்" என்றாள். விம்மலோசையுடன் அவன் நிலத்தில் கால்மடித்து அமர்ந்து தன் தலையை அவள் காலில் வைத்து அமர்ந்து "தங்கள் கால்களை என் சென்னியில் வைக்க வேண்டும், பேரரசி. கொற்றவை முன் பணிந்த சிம்மம் நான்" என்றான். அவள் குனிந்து அவன் தலையைத் தொட்டு "என்றும் இங்கிருப்பேன்..." என்றாள். அவன் கண்ணீருடன் எழுந்து மும்முறை தொழுது விலகிச்சென்றான்.

மூன்றாம் நாள் பின்னிரவில் அவள் பன்னிரு கூத்துக்கலைஞர்கள் நிகழ்த்திய கள நாடகத்தை கண்டாள். விண்ணிலிருந்து மின்னலாக காட்டுக்குள் இறங்கிய புலி ஒன்று உடலெங்கும் தழல்நாக்குகள் எரிய விலங்குகளை வேட்டையாடி கொல்லத்தொடங்கியது. விலங்குகளும் மானுடரும் அப்புலியை வெல்லும்பொருட்டு அதையே அரசனாக்கினர். அரசனுக்கு நாளொன்றுக்கு ஒரு விலங்கென தலைகொடுத்து அதன் எரிதழலை கட்டுக்குள் வைத்திருந்தனர். இல்லங்களில் விளக்கேற்றவும் அடுப்புகளில் அனல்மூட்டவும் அதன் உடலை சுள்ளிகொண்டு தொட்டு பற்றவைத்தனர். காடு சிலிர்க்கும் கடுங்குளிரில் அதன் உடலிலிருந்த தழலில் வந்து வெம்மைபெற்றனர். எதிரிகளின் ஓசைகேட்டதும் தழலுடன் உறுமியபடி சென்ற புலி காட்டை எரித்து அவர்களைச் சூழ்ந்து அழித்தது.

அவள் அந்தப்புலியை நோக்கிக்கொண்டிருந்தாள். அந்தத் தொல்குடிக்கலைஞனின் கண்கள் புலிகளுக்குரிய நரைத்த நீள்கருவிழிகள் கொண்டுவிட்டிருந்தன. தழல்நெளிவுடன் எழுந்தாடிய புலி உறுமிச் சுழன்று விலங்குகளை அச்சுறுத்தியது. அவர்களில் ஒருவரை கிழித்து உண்டு குருதிக் கால்களை நக்கியபின் மல்லாந்து படுத்து மெல்ல கார்வையுடன் துயின்றது. அதன் இமைதாழ்ந்தபோது அவர்கள் அச்சம் அழிந்து மெல்ல அணுகி அதன் கால்களை தூய்மைப்படுத்தினர். அதன் உடலைத் துடைத்து பணிவிடை செய்தனர். தங்கள் குழவிகளைக் கொண்டுவந்து அதன் முன் வைத்து வாழ்த்துகளை பெற்றுக்கொண்டனர்.

வண்ணங்கள் கரைத்து தங்கள் உடல்களில் புலியுடலின் அனல் நெளிவுகளை வரைந்தனர். புலிக்கோடுகள் அணிந்த மைந்தர்

புலியைப்போலவே காலடி வைத்து நடனமிட்டனர். புலி உறுமலைப்போலவே ஓசையிட்டு ஒருவரை ஒருவர் தாக்குவது போல நடித்து தாவியும் கட்டிச்சுழன்றும் விலகிச் சீறியும் பாய்ந்து மீண்டும் தழுவியும் விளையாடினர். புலி முதுமைகொண்டு உயிர்துறந்ததும் அதைச்சூழ்ந்து நின்று கண்ணீருடன் கதறியழுதனர். சிதை கூட்டி அதை ஏற்றி வைத்ததும் புலியின் உடலிலிருந்த தழல்கள் எழுந்து விறகு பற்றிக்கொள்ள அதன் உடல் எரிந்து விண்ணில் தாவி மறைந்தது.

அவர்கள் அத்தழலிலிருந்து ஒரு சிற்றகலை கொளுத்திக்கொண்டு வந்து தங்கள் இல்லங்கள் நடுவே ஓர் ஆலயம் அமைத்தனர். அத்தழலை சூழ்ந்தமர்ந்து புலியைப் புகழ்ந்து பாடினர். தழலுக்கு நெய்யூற்றி வளர்த்தனர். எழுந்த பெருந்தழலில் ஒருகணம் தோன்றிய புலி உறுமி அமைந்தபோது கைகளை மேலே தூக்கி "எழுபுலியே! எரிவடிவே! எங்கள் கோவே!" என்று கூவி வாழ்த்தினர். மெல்லிய புலிக்காலடிகளுடன் சுழன்று நடனமிட்டு அமைந்தனர். முழவுகள் ஓய்ந்தன. ஒற்றைமுழவுமேல் கோல் இழுபட புலியுறுமல் ஒலித்து அணைந்தது.

தேவயானி எழுந்து அவர்கள் ஒவ்வொருவராக அழைத்து பரிசுகளைக் கொடுத்தபின் தன் அறை நோக்கி நடந்தாள். அவளுடன் நடந்த சாயை "இன்றிரவு மிகவும் பிந்திவிட்டது பேரரசி. நாளை முதற்புலரியிலேயே நகரின் தெற்கு எல்லையிலுள்ள தொன்மையான இடுகாட்டில் அமைந்திருக்கும் சாமுண்டியின் ஆலயத்திற்கு குடித்தொகையின் பூசனைக்காக செல்கிறோம். இங்கு தேவிக்கு முழு எருமைகளை பலிகொடுக்கும் வழக்கம் உள்ளது. தங்கள்

வருகையின் பொருட்டு பன்னிரு எருமைகளை பலிகொடுப்பதாக குடிமூத்தார் வேண்டிக்கொண்டிருக்கிறார்கள்” என்றாள்.

“நன்று” என்று சொன்னபடி தேவயானி மெல்ல நடந்தாள். தன் அறைக்குள் சென்று பீடத்தில் அவள் அமர்ந்ததும் அணிச்சேடியர் சூழ்ந்துகொண்டு அவள் உடலிலிருந்து முடிச்சுகளை அவிழ்த்து பட்டாடையையும் அணிகளையும் அகற்றத் தொடங்கினர். காதணியை கழற்றியவள் சற்று அழுத்த தேவயானி மெல்லிய சீறலொன்றை எழுப்பினாள். சினம் சுடர்ந்த முகத்துடன் நோக்கிய சாயை விழியசைவாலேயே அச்சேடியை அகலும்படி ஆணையிட்டாள். அவள் நடுங்கி மும்முறை வணங்கி தளர்ந்த கால்களுடன் வெளியேற பிறிதொரு முதுசேடி மெல்ல திருகி காதணியை கழற்றத் தொடங்கினாள்.

“இங்கு கலைபயின்ற சேடியர் எவருமில்லை” என்று சாயை சொன்னாள். “இங்கிருப்பவர்களில் உயர்ந்தவன் நூற்றுவர்தலைவன் மட்டுமே. பிறர் எளிய காவலர். அவர்களின் பெண்டிரும் சிற்றூர்களிலிருந்து வந்த சிறுகுடி ஷத்ரியர். உயர் வாழ்க்கை இல்லையென்பதால் அணியும் ஆடையும் சமையமும் பயின்றவர்கள் இல்லை.” தேவயானியின் கச்சைமுடிச்சை அவிழ்த்தபடி “இங்குள்ள சேடியர்களே பதினெண்மர் மட்டும்தான்” என்று குருநகரியிலிருந்து அவளுடன் வந்த முதுசேடி சுகன்யை சொன்னாள். “அவர்களை அழைத்து நேற்று உசாவினேன். எண்மடிப்புப் புடவை அணியக்கூட எவருக்கும் தெரிந்திருக்கவில்லை. அணிகளை முன்னரே நோக்கியவள் என்றுகூட ஒருத்தியை மட்டுமே சொல்ல முடிகிறது.”

“அவள் மட்டும் எங்கு பார்த்தாள்?” என்று தேவயானி கேட்டாள். சுகன்யை “அவளை குருநகரியிலிருந்து இங்கு கொண்டு குடியேற்றியிருக்கிறார்கள். இவ்வரண்மனையின் இணைப்புச் சிற்றில்லில் அவள் தங்கியிருக்கிறாள். மூன்று மைந்தர்கள் அவளுக்கு. அவள் பெயர் சேடியருக்குரியதல்ல” என்றாள். அவள் தேவயானியின் முலைகளுக்கு அடியில் நறுமணச்சுண்ணத்தைப் பூசியபடி “அவள் பெயர் சர்மிஷ்டை” என்றாள்.

தேவயானியின் கண்கள் திரும்பி சாயையை பார்க்க சாயை தலைவணங்கி விழிகளை அசைத்தாள். அணிப்பெண்டிர் அவள் இடையாடைகளையும் களைந்து வெற்றுடலாக்கினர். அவள் ததும்பும் பெருமுலைகளும் இறுகியசையும் இடைவிரிவும் சிற்றலை எழுந்த தொடைகளுமாக சென்று அவர்கள் ஒருக்கியிருந்த சிறு மரத்தொட்டிக்குள் அமர்ந்தாள். இளவெந்நீரை அள்ளி அவள் மேல் விட்டு அவள் உடலை அவர்கள் கழுவத்தொடங்கினர். அவர்களின் மெல்லிய விரல்கள் தன் உடல் முழுக்க பரந்தலைவதை உணர்ந்தபடி அவள் விழிமூடி அமர்ந்திருந்தாள்.

அவள் கொண்டையிலிருந்த நூற்றுக்கணக்கான பொன்னூசிகளை ஒவ்வொன்றாக உருவி குழலை புரியவிழ்த்து விரல்களை உள்ளே விட்டு நீவி நீர்த்தொட்டிக்கு வெளியே அலையென பரப்பினாள் ஒருத்தி. அவள் கால்விரல்களை சிறிய கடற்பஞ்சால் ஒருத்தி தேய்த்தாள். நறுமண வெந்நீரை அவள் உடல்மேல் மெல்ல ஊற்றினர். ஆவியெழுந்து சூழ்ந்திருந்த ஆடிகள் பனிபடர்ந்து பட்டுபோலாயின. உடலெங்கும் நீர் சொட்ட நடந்து சென்று அவள் வெண்கல சிறுபீடம் ஒன்றில் அமர அவர்கள் மெல்லிய வெண்நுரை

போன்ற பருத்தி ஆடையால் அவள் உடலை ஒற்றித் துடைத்தனர். கால்களையும் கைகளையும் பிறிதொரு மரவுரியால் துடைத்து உரசி தூய்மைப்படுத்தினர். ஈரம் படாத அவள் குழலை அகிற்புகையிட்டு ஐந்து புரிகளாக வகுந்து பின்புறம் நீட்டி நிலம் தொடுமாறு விட்டனர்.

சேடி கொண்டுவந்த வெண்ணிற ஆடையை தேவயானி இடையில் சுற்றி தோள்வளைத்து அணிந்துகொண்டாள். தளர்ந்த மேலாடைக்குள் அவள் பருத்த மார்புகளின் வளைவுவிளிம்புகள் சுடரொளிமின்ன தெரிந்தன. அணிப்பெண்டிர் வணங்கி வெளியே சென்றதும் அவள் விழிகள் மாறாமல் சாயையிடம் "இங்குதான் இருக்கிறாளா?" என்றாள். சாயை "ஆம், பேரரசி. பதினாறாண்டுகளாக இங்குதான் இருக்கிறாள். அவள் முதல் மைந்தனுக்கு இப்போது பதினைந்து முடிகிறது" என்றாள். தேவயானி விழிவிலக்கி "சேடியின் வாழ்க்கை அல்லவா?" என்று கேட்டாள். "மைந்தர் இருப்பது அதற்குத்தானே சான்று" என்று சாயை சொல்லி மெல்ல புன்னகைத்தாள்.

"அவளை நான் பார்க்க வேண்டும். இங்கு அழைத்துவரச்சொல்" என்றாள் தேவயானி. சாயை சற்று தயங்கி "இன்றிருக்கும் நிலையில் அது தேவையில்லை என்று எண்ணுகின்றேன்" என்றாள். "ஏன்?" என்றாள் தேவயானி சினத்துடன் விழிதூக்கி. "அதனால் அவள் மேலும் இழிவெதையும் அடையப்போவதில்லை. பதினாறாண்டுகள் சேடிவாழ்க்கை வாழ்ந்தவளுக்கு சிறுமைகளோ சீண்டல்களோ எவ்வகையிலும் பொருட்டாக இருக்கப்போவதில்லை. அவள் துயருறவில்லையென்றால் தாங்கள் சினம் கொள்வீர்கள்."

தேவயானி அவள் விழிகளை சிலகணம் நோக்கிவிட்டு "அதையும் பார்ப்போம். அழைத்து வருக!" என்றாள்.

அறைக்கதவு மெல்ல திறந்து உள்ளே வந்த சாயை தலைவணங்கி அவ்வசைவாலேயே வெளியே சர்மிஷ்டை வந்து நிற்பதை உணர்த்தினாள். தேவயானி மிகச்சிறிய விழியசைவால் அவளை வரச்சொல் என ஆணையிட்டு திரும்பிக்கொண்டாள். இரு அன்னங்கள் எழுந்து பறந்த முனைகள் கொண்டிருந்தது அவள் சாய்ந்திருந்த பெரிய பித்தளைப்பீடம். திறந்த பெருஞ்சாளரத்தை நோக்கி அதை திருப்பி போட்டிருந்தாள். சாளரத் திரைச்சீலைகள் இழுத்துக்கட்டப்பட்டு நுனி துடித்துக்கொண்டிருந்தன. வெளியிலிருந்து வந்த காற்றில் அவள் நீள்குழல் தரை தொட்டு அலையிளகிக்கொண்டிருந்தது.

அறையில் முத்துச்சிப்பிகளை அடுக்கி உருவாக்கப்பட்ட வட்டத்தாலம்போன்ற ஒளிதிருப்பிகளுடன் மூன்று செண்டுவிளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன. அவற்றின் பதினெட்டுசுடர்கள் கொண்ட ஒளிக்கொத்துகள் ஒளிதிருப்பியின் முத்துச்சிப்பிக்குவைகளில் பட்டு நூற்றுக்கணக்காக மாறின. ஒவ்வொரு செண்டுவிளக்குக்கு இருபக்கமும் ஒன்றையொன்று நோக்க அமைக்கப்பட்டிருந்த நிலையாடிகள் அச்சுடர்களை எதிரொளிக்க அவ்வறை அனல் பற்றி எரிவதுபோல் தோற்றமளித்தது.

சர்மிஷ்டை மெல்ல உள்ளே வந்து பதிந்த காலடிகளுடன் அவளை அணுகி சேடியருக்குரிய முறையில் இடைவரைக்கும் தலைவணங்கி "குருநகரியின் பேரரசியின் கால்களில் என் சென்னி படுகிறது. பேரரசியின் அருளுக்காக எளியவள் உள்ளம் மன்றாடுகிறது" என்று முகமன் உரைத்தாள். தலையசையாமல்

அவளை உணர்ந்தபடி அமர்ந்திருந்த தேவயானி கூரிய குரலில் “உனக்கெத்தனை மைந்தர்?” என்றாள். அதை எதிர்பாராத சர்மிஷ்டை திகைத்து சாயையை திரும்பி நோக்கியபின் மூச்சொலியில் “மூவர்” என்று அவள் சொன்னாள். “இங்கு அழைத்து வரச்சொல்!” என்று தேவயானி சாயையிடம் சொன்னாள். சாயை “அவர்களைப்பற்றி கேட்டேன். சூதர்களாகையால் புரவிக்கலை பயில்வதற்காக காட்டுக்கு அனுப்பியிருப்பதாக சொல்கிறாள்” என்றாள்.

தேவயானியின் இதழ்கள் சற்றே வளைய “அது நன்று! எத்தொழிலிலும் முறையான பயிற்சி தேவையானதே” என்றாள். சர்மிஷ்டை மீண்டும் தலைவணங்கி “பேரரசியின் அருளால் இங்கு பிறிதொரு குறையின்றி இருக்கிறோம். மைந்தர்கள் மகிழ்ந்து வாழ்கிறார்கள். தேர்ந்த புரவியாளர்களாக அவர்கள் வரும்போது மேலும் சிறப்புறுவார்கள் என்று எண்ணுகிறேன்” என்றாள். தேவயானி திரும்பி சர்மிஷ்டையை ஒருகணம் பார்த்தாள். அவள் விழிகளை சந்தித்ததும் தன்னுள் மெல்லிய குழப்பம் ஒன்று ஏற்பட இமைகளைச் சுருக்கி பின் முகம் திருப்பிக்கொண்டு “மைந்தர் பயின்று வந்ததும் குருநகரிக்கு வரட்டும். நல்ல தேர்ப்பாகர்களுக்கு அங்கு தேவை நிறைய உள்ளது” என்றாள். “தங்கள் ஆணை பேரரசி!” என்றாள் சர்மிஷ்டை. தேவயானி அவள் செல்லலாம் என இடக்கையை அசைத்தாள். மீண்டும் இடைவரை தலைவணங்கி சர்மிஷ்டை திரும்பி நடந்தாள்.

தேவயானி திரும்பி அவள் நடையை பார்த்தாள். புதர்விலங்குகளுக்குரிய பதுங்கல் அவள் அடிவைப்பில் தோள் குறுகலில் கை அசைவில் அனைத்திலும் இருந்தது. அவள் விழிகளை சாயையின் விழிகள் சந்தித்தன. சர்மிஷ்டை

கதவைத் திறந்து மீண்டும் ஒருமுறை அவளைநோக்கி தலைவணங்கி வெளியே சென்ற கணம் தேவயானியின் உளம் அதிர்ந்தது. அவளை அறியாமலேயே எழப்போவதுபோல் ஓர் அசைவு உடலில் பரவியது. தடித்த மரக்கதவு ஓசையின்றி சென்று பொருந்திக்கொண்டது. அவள் மெல்ல தோள்தொய்ந்தாள்.

சாயை அவள் அருகே வந்து “நிலைகுலைந்தது தாங்கள் என்று தோன்றுகிறது” என்றாள். “இல்லை” என்றாள் தேவயானி தலையை திருப்பியபடி. “தாங்கள் கடுஞ்சொல் உதிர்க்க மாட்டீர்கள் என்று நானறிவேன். ஆனால் புண்படுத்தும்படி எதையோ ஒன்றை சொல்வீர்கள் என்று எண்ணினேன். நச்சு தோய்ந்த மென்மையான மிகக்கூரிய ஒரு முள். அதற்காக காத்திருந்தேன்” என்றாள் சாயை. தேவயானி சினத்துடன் நிமிர்ந்து அவள் விழிகளை நோக்கி “இனி அவளை நான் வெல்வதற்கு ஏதுமில்லை” என்றாள்.

“ஏதோ ஒன்று எஞ்சியிருந்ததனால்தான் தாங்கள் நிலை குலைந்தீர்கள், பேரரசி” என்றாள் சாயை. “யார் சொன்னது நான் நிலைகுலைந்தேன் என்று?” சாயை “தங்கள் உள்ளம் எனக்குத் தெரியும். தங்கள் உடல் அசைவுகள் அவ்வண்ணமே என்னிலும் நிகழ்வதுண்டு. ஏனெனில் நான் தங்கள் நிழல்” என்றாள் சாயை. சில கணங்கள் அசைவற்று இறுகி சாளரத்தினூடாக இருளை நோக்கி அமர்ந்து மெல்ல தளர்ந்து நீள்மூச்சுவிட்டு இருகைகளாலும் பீடத்தின் பிடியைத் தட்டியபடி தேவயானி எழுந்தாள். மேலாடையை சீர்படுத்தியபின் “அவளிடம் ஏதோ ஒன்று மறைந்திருக்கிறது. என்னவென்றறியேன். அது என்னை அமைதியிழக்கச் செய்கிறது” என்றாள்.

“மறைந்திருப்பது ஒன்றுதான். அவள் விருஷபர்வனின் மகள் என்பது. அந்த உண்மை இந்த அனைத்து நாடகங்களுக்கு அடியில் இருந்து கொண்டுதான் இருக்கிறது. அவள் விழைந்தால் இங்கிருந்து ஹிரண்யபுரிக்கு செல்லமுடியும். அசுரப்பெரும்படைகளை நமக்கெதிராக திருப்பவும் முடியும். ஆகவே இங்கு அவள் சிறைப்பட்டிருக்கவில்லை. தந்தையின் சொல்லுக்கு கட்டுப்பட்டிருக்கிறாள். அது நமது ஆணையல்ல. அவளது கொடை. சொல்லாமல் அவள் இங்கு உங்களுக்கு உணர்த்திச்சென்றது அதுதான்” என்றாள் சாயை.

“இல்லை, அதுவல்ல. அதுமட்டுமல்ல” என்று தேவயானி சொன்னாள். “அந்தக் கதவைத் திறந்து வெளிச்சென்ற கணம் அழுத்தப்பட்ட வில் நிமிர்வதுபோல் ஒரு சிறு அசைவு அவளில் கூடியது.” அறியாது திரும்பி அந்தக்கதவை நோக்கிவிட்டு சாயை “எப்போது?” என்றாள். “ஒருகணம். அல்லது ஒருகணத்திலும் துளி. அந்நிமிர்வு ஓர் அறைகூவல். அவள் எண்ணாத, அவள் உள்ளமும் ஆழமும் அறியாத ஒரு சொல் அவள் உடலால் எனக்கு உரைக்கப்பட்டது” என்றாள் தேவயானி. “என்ன அது? அதை அறியாமல் எனக்கு அமைவுநிலையில்லை.”

“தங்கள் உளமயக்கு அது. இன்றிரவு இதைக்கொண்டு இருள்விளையாட எண்ணுகிறீர்கள் போலும்” என்றாள் சாயை. “இல்லை, இது ஊசிமுனையளவு சிறியது. ஊசிமுனையால் தொட்டு எடுக்கப்படவேண்டியது. ஆனால் ஊசிமுனைக்கு அது பெரிதே.” சாயை “பேரரசி, தங்கள் உள்ளமும் உடலும் பேராற்றல் மிக்கவை. ஆகவே சிம்மத்துடனோ வேழத்திடமோ அரசநாகத்துடனோ விளையாட விரும்புவீர்கள். எவரும் ஒன்றும் செய்வதற்கில்லை” என்றாள்.

அவள் திரும்பிச்செல்லப் போனபோது தழைந்த குரலில் அழைத்த தேவயானி “நில்! இது உளமயக்கு அல்ல. அனைத்து உளமயக்குகளுக்கும் உள்ள தனித்தன்மையென்பது அவை உளமயக்கென்பது எங்கோ நமக்கு தெரிந்திருக்கும் என்பதுதான். ஆகவே பதறியும் அஞ்சியும் துயர்கொண்டும் நம்மில் ஒரு பகுதி நடிக்கும்போது பிறிதொரு பகுதி சற்று விலகி அதை நோக்கிக்கொண்டிருக்கும். அத்தனை கனவுகளுக்கும் அடியில் அது கனவென்றறியும் விழிப்பொன்றிருப்பது போல. இது அப்படியல்ல. இது ஒரு வலி போல. எத்தனை எண்ணம் மாற்றினாலும் எத்தனை விலகி கற்பனை செய்தாலும் வலியை ஒன்றும் செய்யமுடியாது.”

சாயை புன்னகையுடன் தலையசைத்து “ஒன்றுதான் நாம் செய்ய இருக்கிறது. அவளை இழுத்து வருகிறேன். குழல் சுற்றிப்பிடித்து சுழற்றி தங்கள் காலடியில் விழவைக்கிறேன். கணுக்கால்களை இருகால்களாலும் மிதித்து அழுத்தும் ஒரு கலை உள்ளது. உடலின் ஒவ்வொரு பூட்டும் தாளமுடியாத வலியால் அதிர்ந்து இழுபட்டு துடிக்கும். ஓரிரு கணங்களுக்குள் அனைத்தையும் அவள் சொல்லிவிடுவாள்” என்றாள். தேவயானி புன்னகைத்து “சொல்ல மாட்டாள். ஏனெனில் அவள் விருஷபர்வனின் மகள். சொல்லிவிட்டால் நான் வென்றேன். ஆனால் அத்தனைக்கும் பிறகு அவள் சொல்லவில்லையென்றால் அவள் காலடியில் புழுவென்று நான் கிடப்பேன். அதன் பிறகு நான் உயிர்வாழ முடியாது.”

“வேறு என்ன செய்வது?” என்றாள் சாயை. “இந்த நச்சுக்கோப்பையுடன் இன்றிரவு நீங்கள் தனித்திருக்கப்போகிறீர்களா?” தேவயானி “உச்சிக்கு செல்வதில் ஒருவழிப்பாதையே உள்ளது. முனைகூர்ந்து நுனிகொண்டு

எழுவது. அதன் இடர் நாம் குறுகிக்கொண்டிருக்கிறோம் என்பதுதான். நம் உலகும் அறிவும் நின்று திரும்புவதற்கு இடமிலாதாகும். அக்கூம்புதல் சென்று முடியும் உச்சிப்புள்ளி ஒன்றுண்டு என செல்லும்தோறும் உணர்வோம். அப்புள்ளிக்கு அப்பால் வெறுமை. கடுவெளி. அப்புள்ளியில் நின்றிருக்க எவராலும் இயலாது" என்றாள். "இயலும். அதுவரை அள்ளிவந்த அனைத்தையும் உதிர்த்தால்" என்றாள் சாயை.

தேவயானி "வரலாறு அப்படி ஒருபோதும் நிகழ்ந்ததில்லையென்று காட்டுகிறது" என்றாள். "இப்போது உச்சிப்புள்ளியை உணர்கிறீர்களா?" என்றாள் சாயை. "நான் நின்றுதிகழ இடமில்லையென்று அறிகிறேன். ஒவ்வொரு இரவும் தனித்திருக்கையில் நாற்புறமும் நெருக்கி அடைத்த சுவர்களுக்கிடையே இருப்பதுபோல் உணர்கிறேன். செய்வதற்கொன்றே உள்ளது, அச்சுவர்களைப்பற்றி மேலே தெரியும் திறப்பினூடாக வெளியேறுவது. அது மேலும் சிறிய பிறிதொரு இடத்திற்கு செல்கிறது." அவள் பெருமூச்சுவிட்டு "வென்றவர்கள் கடந்தவர்கள் எய்தியவர்கள் இக்குறுகலையும் இதற்கப்பால் எஞ்சும் வெறுமையையும் சென்றடைந்தே ஆகவேண்டும் போல" என்றாள்.

புன்னகையுடன் "மீண்டும் காவியங்களை நோக்கி திரும்பத் தொடங்கிவிட்டீர்கள் என எண்ணுகிறேன்" என்றாள் சாயை. தேவயானி சலிப்புடன் இல்லை என கையசைத்தாள். சாயை "முன்பொருமுறை சுவரில் பல்லிகளின் பூசலொன்றை பார்த்துக்கொண்டிருந்தேன். பெரும்பல்லி ஒன்றால் சிறுபல்லி ஒன்று துரத்தப்பட்டது. ஓடிக்களைத்து சுவர் மூலை ஒன்றை அடைந்து திரும்ப இடமின்றி அங்கு திகைத்து நின்று பெரும்பல்லிக்கு உணவாயிற்று. அது செய்திருக்கக்கூடிய

ஒன்றுண்டு, சுவரிலிருந்த பிடிப்பை விட்டு உதிர்ந்திருக்கலாம். அது செல்வதற்கு முடிவற்ற வெளி எட்டுத்திசையிலும் திறந்து காத்திருந்தது. தன்னால் சுவரை விடமுடியுமென்று அது எண்ணவில்லை. அல்லது அதன் கைகள் அச்சுவரை விடும் இயல்புகொண்டவை அல்ல" என்றாள்.

"நான் துறந்து செல்ல வேண்டும் என்று எண்ணுகிறாயா?" என்றாள் தேவயானி. சாயை புன்னகைத்து "ஒருதருணம் உண்டு. அனைத்தும் முற்றாக உதிர்ந்தழிந்து வெறுமை எஞ்சும் கணம். அதற்கு முந்தைய கணத்தில் பின் திரும்பியிருந்தால் அனைத்தும் நன்றாக இருக்கும். ஆனால் மானுடரால் இயல்வதில்லை. அக்கணத்தைக் கடந்த பின்னரே அம்முந்தைய கணம் அளித்த பெருவாய்ப்பைப் பற்றி அவர்கள் உணர்வார்கள். வாழ்நாள் முழுக்க அதற்கென எண்ணி ஏங்கி விழிநீர் சிந்துவார்கள்" என்றபின் "நான் வருகிறேன்" என்று தலைவணங்கி திரும்பினாள்.

"சாயை" என்று தேவயானி மீண்டும் அழைத்தாள். அக்குரல் மிகத்தாழ்ந்து எளிய பெண்ணின் குரலென ஒலிக்க வியப்புடன் சாயை திரும்பிப் பார்த்தாள். "அவள் என்னை எங்கோ வென்றிருக்கிறாள்" என்றாள் தேவயானி. சாயை விழிகள் மின்ன நோக்கினாள். "என்னை மிக மிக ஆழத்தில் எங்கோ அவள் முழுமையாக வென்றிருக்கிறாள். அது அவளுக்கு மட்டும்தான் தெரியும். ஆனால் அதன்வழியாக நான் அவளுக்கு எவ்வகையிலும் ஒரு பொருட்டே அல்ல என்றாகியிருக்கிறேன்" என்றாள் தேவயானி.

சாயை ஒன்றும் சொல்லாமல் நின்றிருக்க தேவயானி விழிதிருப்பிக்கொண்டு "இங்கு எத்தனை பெருஞ்செல்வம்மீது நான் அமர்ந்திருந்தாலும் அவள் துயருறப்போவதில்லை.

எத்தனை நஞ்சை அவள் மேல் கொட்டினாலும் அவளுக்கு வலிக்கப்போவதுமில்லை” என்றாள். சாயை மீண்டும் ஒருமுறை தலைவணங்கி வெளியே சென்றாள்.

# மாமலர் - 82

**82. மலைநிலம்**

அசோகவனியிலிருந்து ஹிரண்யபுரிக்குச் சென்று சுக்ரரைப் பார்த்து வருவதாகத்தான் தேவயானியின் முதல் திட்டம் அமைந்திருந்தது. அது மாற்றப்பட்டுவிட்டதை சாயை கிளம்புவதற்கு முந்தையநாள் கிருபரின் நாவிலிருந்துதான் அறிந்தாள். பயணத்துக்கான தேர்கள் ஒருங்கிவிட்டனவா என்று பார்ப்பதற்காக கொட்டிலுக்குச் சென்றிருந்த அவள் மலைப்பாதைகளில் ஊர்வதற்குரிய அகன்ற பட்டைகொண்ட ஆறு பெரிய சகடங்களில் அமைந்த தேர் அரசிக்கென ஒருக்கப்பட்டிருப்பதை கண்டாள். இரண்டு புரவிகளுடன் விரைவிலாது செல்லும் அது நெடும்பயணத்திற்கு உகந்ததல்ல. சினத்துடன் திரும்பி தன்னருகே நின்றிருந்த கிருபரிடம் “இத்தேரை ஒருக்கும்படி ஆணையிட்டது யார்?” என்றாள்.

“மலைப்பாதைப் பயணம் அல்லவா? தேவி, பல இடங்களில் வெறும் பாறைப்பரப்பிலும் சரளைக்கல் சரிவிலும் இறங்கிச் செல்கிறது. இரட்டைச்சகடங்கள் கொண்ட விரைவுத்தேரில் பயணம் செய்வது இயலாது” என்றார் கிருபர். “இங்கிருந்து ஹிரண்யபுரி வரை சீரான நெடுஞ்சாலை அமைக்கப்பட்டுள்ளது. அதை நான் உமக்கு சொல்ல வேண்டியதில்லை” என்றாள் சாயை. குழப்பத்துடன் கிருபர் வணங்கி “ஆனால் என்னிடம் அரசி ஹிரண்யபுரிக்குச் செல்வதாக சொல்லவில்லையே?”

என்றார். அப்போதும் தானறியாத ஒரு ஆணை பிறப்பிக்கப்பட்டிருக்கக்கூடும் என்று சாயை ஐயம் கொள்ளவில்லை. மேலும் சினத்துடன் “அத்தகைய ஆணைகளை பிறப்பிக்க வேண்டியவள் நான். இங்கிருந்து பேரரசியும் அணுக்கப்படையினரும் மட்டும் ஹிரண்யபுரிக்குச் செல்கிறார்கள். பிறர் குருநகரிக்குச் செல்கிறார்கள்” என்றாள்.

கிருபர் மேலும் குழப்பத்துடன் தலைவணங்கி “ஆனால் இரண்டு நாட்களுக்கு முன் பேரரசி அவரே என்னை அழைத்து சரபஞ்சரம் என்னும் மலையூருக்கு செல்லவிருப்பதாகச் சொல்லி அதற்காக தேர் ஒருக்கும்படி ஆணையிட்டார்களே...?” என்றார். ஒரு கணம் விழி நிலைக்க உதடு மெல்ல பிரிய உளம் செயலிழந்து மீண்டு வந்த சாயை “பேரரசியேவா...?” என்றாள். “அவரே தன் வாயால் உரைத்தாரா?” கிருபர் “ஆம். என்னை அவர்களின் தனியறைக்கு அழைத்தார்கள். இவ்வாணையை பிறப்பித்தார்கள். வழக்கம்போல இது அரசு சம்பந்தமாக இருக்கவேண்டுமென்பதனால் பிறரிடம் நான் பகிர்ந்துகொள்ளவில்லை. சரபஞ்சரம் செல்வதற்கான பாதையை புரவி வீரன் ஒருவனை அனுப்பி மதிப்பிட்டு வரச்சொன்னேன். அதன்படி இத்தேரை அமைத்தேன். இது சேற்றில் சிக்காது. மலைச்சரிவுகளில் சகடப் பிடி விடாது. மூங்கில்சுருள்களின் மேல் அமைந்திருப்பதனால் பீடத்தில் அதிர்வுகளும் இருக்காது” என்றார்.

சாயை தன்னை தொகுத்துக்கொண்டு “ஆம். சரபஞ்சரத்து பழங்குடித் தலைவருடன் ஒரு சந்திப்பு இருந்தது. அங்கிருந்துதான் ஹிரண்யபுரிக்குச் செல்வதற்கான எண்ணம். நெடுந்தொலைவுக்கான விரைவுத்தேர்கள் அங்கு சென்று வந்தபின் இங்கு ஒருங்கியிருந்தால் போதும்” என்றாள்.

அவளுக்கு செய்தி தெரிவிக்கப்படவில்லை என்பதை அதற்குள் உணர்ந்துகொண்ட கிருபர் கண்களுக்குள் மின்னிய துளிப் புன்னகையை மறைக்க விழிகளை தாழ்த்திக்கொண்டு "ஆணை, தேவி. ஆனால் சரபஞ்சரத்திலிருந்து திரும்ப இங்கு வருவதாக எண்ணமிருப்பதுபோல அரசி கூறவில்லை. அங்கிருந்து அவர்களும் குருநகரிக்கே செல்வதாகத்தான் சொன்னார்கள்" என்றார்.

மறுசொல் உரைக்காமல் ஆடை சரசரக்க அணிகள் குலுங்க திரும்பி நடந்து சாயை அரண்மனைக்குள் புகுந்தாள். படிகளில் ஏறியபோது அவள் காலடி ஓசையில் தெரிந்த சினம் காவலர்களையும் ஏவலர்களையும் நடுங்கி அசைவிழந்து நிற்கச்செய்தது. இடைநாழியில் நடந்து தேவயானியின் அறைக்கதவை ஓசையுடன் திறந்து உள்ளே சென்றாள். அங்கு கற்றுச்சொல்லிக்கு அரசாணையொன்றை கூறிக்கொண்டிருந்த தேவயானி மூடியிருந்த விழிகளைத் திறந்து அவளை நோக்கி முகக்குறிப்பால் என்ன என்று வினவினாள். "நாம் ஹிரண்யபுரிக்கு செல்வதாக இல்லையா?" என்றாள் சாயை.

தேவயானி "இல்லை, இரு நாட்களுக்கு முன் சரபஞ்சரம் சென்று அங்கு உள்ள பழங்குடி கலைவிழவொன்றை வாழ்த்திவிட்டுச் செல்லலாம் என்னும் எண்ணம் வந்தது. இங்குள்ள தொல்குடிகள் நம்மிடம் அணுக்கமாகிவிட்டார்கள். அணுகாத தொல்குடிகளில் பலர் அவ்விழவில் கலந்துகொள்கிறார்கள். அங்கு சென்று அவர்களுக்கு பரிசுகளும் அரசுப்பட்டங்களும் அளித்தால் மேலும் பலரை நமது அரசு அமைப்பின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முடியும்" என்றாள். சாயை கூர்ந்து நோக்கியபடி "நாம் அவர்களை தேடிச்செல்வது

திட்டமாக இருந்தால் இங்கு வந்து தங்கி அவர்களை வரச்சொல்லியிருக்க வேண்டாமே...?" என்றாள்.

"ஆம், நம்மைத் தேடி வந்தவர்கள்தான் நமக்கு முதன்மையானவர்கள். நாம் தேடிச் செல்பவர்கள் எப்போதும் நம்மால் கண்காணிக்கப்பட வேண்டியவர்கள். நம்மைத் தேடி வந்தவர்களைக் கொண்டு நாம் தேடிச்செல்பவர்களை ஆட்சி செய்யவேண்டும்" என்றாள் தேவயானி. சாயை "இந்த வேறுபாடு அவர்களுக்குத் தெரிந்தால் நம்மை அணுகுவார்களா என்ன? தங்கள் குடியின் ஒரு சாராருக்குக் கீழே ஒடுங்குவது அவர்களுக்கு உகந்ததாக இருக்குமா?" என்றாள்.

"அவ்வேறுபாட்டை ஐந்தாறு வருடங்களுக்கு எவ்வகையிலும் காட்டுவதாக இல்லை. அக்குடிகள் நமக்கு ஒத்துழைத்தார்கள் என்றால் அவர்கள் வாழும் சிற்றூர்கள் அனைத்தையும் இணைத்து மூன்று வணிகச்சாலைகள் அமைக்க எண்ணியுள்ளேன். சாலைகள் ஒவ்வொரு சிற்றூருக்கும் புறவுலகை கொண்டுவந்து சேர்க்கின்றன. புறவுலகு என்பது எல்லையற்ற ஈர்ப்புகளால் ஆனது. அதன் சுவையறிந்தவர்கள் பின்னர் தங்கள் சிறுவட்டங்களுக்குள் வாழமுடியாது. இச்சிற்றூர்கள் அனைத்தும் வணிகத்தால் இணைக்கப்பட்ட பிறகே அங்கிருந்து நமக்கு வரியும் திறையும் வரத்தொடங்கும். அதன்பின் அவற்றைத் தொகுத்து நமக்களிக்கும் பணியை நம்மை நாடி வந்த பழங்குடிகளுக்கு அளிப்போம். அவற்றை அளிக்கவில்லையென்றால் பிற குடிகளை ஒடுக்கி ஆள படைக்கலம் கொடுப்போம்" என்றாள்.

மறுசொல்லில்லாமல் சாயை அங்கிருந்த பீடத்தில் அமர்ந்தாள். தேவயானி விழி திருப்பி கற்றுச்சொல்லியிடம் அவள் விட்ட சொல்லிலிருந்து மறு சொல்லெடுத்து உரைக்கத்

தொடங்கினாள். எழுத்தாணி ஓலையை கீறிச்செல்லும் மெல்லிய ஓசை மட்டும் அறைக்குள் கேட்டது. தனக்குள் ஆழ்ந்தவளாக இமைகளுக்குள் தோன்றிய எதிர்ப்பக்க முகத்தை நோக்கி மெல்லிய குரலில் தேவயானி சொல்லடுக்கிச் சென்றாள். மணிகளைக் கோத்து நகை செய்பவள்போல. பன்னிரு திருமுகங்கள் எழுதப்பட்டு முடித்ததும் கற்றுச்சொல்லி ஓலைகளை எண்ணி அடுக்கி பட்டுத்துணியால் சுற்றி மூங்கில் கூடையிலிட்டு தோளில் மாட்டிக்கொண்டு எழுந்தான். தலைவணங்கி புறம் காட்டாது வெளியே சென்று கதவை மூடினான்.

கதவு முற்றிலும் பொருந்தியபின் விழிதிருப்பிய சாயை உரக்க "நாம் எதற்காக சரபஞ்சரம் செல்கிறோம்?" என்றாள். "அங்கு பழங்குடி கலைக்குழுக்கள் அனைத்தும் வருகின்றன. கலைநிகழ்வென்றால் வருவதற்கு அவர்களின் தன்முனைப்பு தடையாக இல்லை" என்றாள் தேவயானி. சாயை ஒருகணத்தில் நெடுந்தொலைவை தாவிக் கடந்தாள். "சர்மிஷ்டையின் மைந்தர்கள் பயிலும் குருநிலையும்கூட அல்லவா?" என்றாள். தேவயானி அவள் கண்களை நேர்நோக்கி "ஆம், அவர்கள் வரவேண்டுமென்று ஆணையிட்டிருக்கிறேன்" என்றாள்.

"அம்மைந்தரை இங்கு வரச்சொல்லி பார்க்கலாமே?" என்றாள் சாயை. "அவள் நம் சேடி" என்றாள் தேவயானி. "நாம் அவ்வாறு தகுதி இறங்குவது என்னால் ஏற்றுக்கொள்ளப்படகூடியதல்ல." சாயை "அங்கு சென்று நோக்கினாலும் தகுதியிறக்கமே. தன்னிடமிருந்து எவர் எதை மறைக்க முடியும்?" என்றாள். தேவயானி "என்னிடமிருந்து எதையும் மறைக்க வேண்டியதில்லை. ஆனால் அரசி என ஓர் ஆணையை என் தனிப்பட்ட உளக்குழப்பங்களுக்கு விடைகாணும்பொருட்டு நான்

விடுக்கமுடியாது” என்றபின் எழுந்து “மிகச்சிறிய முள், தாமரை மயிர்போல. ஆனால் கண்ணுக்குள் குத்தியதென்றால் அதுவும் வலி மிகும், துயில் களையும். அதை உடனடியாகக் களைந்துவிடுவது நன்றென்று தோன்றியது” என்றாள்.

“அதை என்னிடமிருந்து ஏன் மறைக்கவேண்டும்?” என்றாள் சாயை. “உன்னிடம் இருந்து மறைக்கவேண்டுமென்று தோன்றியது. ஏனெனில் என்னிடமிருந்தே மறைக்க விரும்பியது அது” என்ற தேவயானி பீடத்தில் இருந்த சால்வையை எடுத்து தோளில் இட்டுச் சுற்றியபடி “நான் ஆடை மாற்றிக்கொள்ள வேண்டும். இன்று ஏழு தொல்குடிகளின் அன்னைத் தெய்வங்களுக்கு பூசையும் கொடைவிழவும் நிகழ்கிறது” என்றாள். மறுசொல்லின்றி சாயை எழுந்து நின்றாள்.

சரபஞ்சரம் அசோகவனியிலிருந்து வடகிழக்காக இமயச்சரிவில் இரு சிறிய மலைகளின் குவிமடிப்புக்குள் அமைந்திருந்தது. அங்கு செல்வதற்கு இடைச்சரடென மலையின் வளைவை சுற்றிசெல்லும் கழுதைப்பாதை மட்டுமே இருந்தது. பேரரசி அங்கு செல்லும் எண்ணத்தை வெளியிட்ட உடனே குருநகரியின் சாலைப்பணிப் படையினர் கிளம்பிச்சென்று இரவும் பகலும் உழைத்து தேர்ப்பாதை ஒன்றை உருவாக்கினர். எட்டு சிற்றாறுகளுக்குமேல் மூங்கில்கள் ஊன்றி மரப்பட்டைகள் அறைந்து பாலங்கள் உருவாக்கப்பட்டன. நீர் பெருக்கெடுத்த சுரவாகினி என்னும் நதியொன்றுக்குமேல் படகுகளை விலா சேர்த்து நிறுத்தி மேலே பலகை பரப்பி மிதக்கும் பாலம் அமைக்கப்பட்டது. அறுபத்தியெட்டு மலைவளைவுகளில் மண்ணை வெட்டிச் சரித்து விளிம்புகளில் மூங்கில்களை அறைந்து எழுப்பி

பலகைவேய்ந்து மண்சாலையுடன் இணைத்து தேர்ச்சாலை உருவாக்கப்பட்டது.

எடைமிக்க தேர்கள் ஏதும் அப்பாதையில் செல்ல வேண்டாம் என்று கிருபர் ஆணையிட்டிருந்தமையால் அரசியின் பொருட்கள் அனைத்தும் பிறிதொரு குளம்புப்பாதை வழியாக கோவேறு கழுதைகள்மேல் பொதியென சுமத்தப்பட்டு முந்தையநாளே அங்கு கொண்டு செல்லப்பட்டன. செல்லும் வழியில் நூறு பாறைகள்மேல் காவல்மேடைகள் அமைக்கப்பட்டு வில்லவர்கள் முன்னரே சென்று தங்கி காவல் புரிந்தனர்.

முதல் புலரியிலேயே அசோகவனியிலிருந்து தேவயானி கிளம்பினாள். அரண்மனை முகப்பில் காவலர்தலைவனும் குடித்தலைவரும் அசோகவனியின் மூதன்னையரும் கூடிநின்று அவளை அரிமலர் சொரிந்து வணங்கி முகமன் உரைத்து வழியனுப்பினர். “எங்கள் நகர் இதழ்விரித்து அருமலராயிற்று. அதில் மகரந்தம் சுமந்த பட்டுப்பூச்சியென பேரரசி வந்தமர தெய்வங்கள் அருள் புரிந்தன. இது காயாகி கனியாகட்டும். விதை பொலியட்டும். நிலம்நிறைந்து மலர்க்காடென பெருகட்டும்!” என்று அசோகவனியின் சூதரான சுப்ரதர் பாடினார். குடித்தலைவர்கள் நிரையாக முன்வந்து தம் கோலை அவள் கால் நோக்கி தாழ்த்தி “எங்கள் குடியும் கொடிவழியும் என்றும் பேரரசியின் தேரின் சகடங்களென நிலை கொள்வதாக!” என்றார்கள். சூழ்ந்திருந்த குடியினர் “ஆம், அவ்வாறே ஆகுக!” என்று துணைக்குரல் கொடுத்தனர்.

மூதன்னையர் நறுமணச்செங்குருதி நீரை அவள் தேருக்கு முன் சுற்றி இடப்பக்கமும் வலப்பக்கமும் வீசினர். மலர் தூவி அவள் புரவியையும் தேரையும் வாழ்த்தியபின் குரவையிட்டபடி இரு

பக்கமும் விலகி வணங்கினர். தன் தேர்த்தட்டில் எழுந்து பின் திரும்பி அவர்களுக்கு முகம் காட்டி கைகூப்பி நின்ற தேவயானி அரண்மனைக்கும் நகருக்கும் புறம் காட்டாமல் விலகிச்சென்றாள். அவள் முகம் அகன்று சென்றபோது கூடி நின்றவர்கள் அனைவரும் கணம் கணமெனப் பெருகிய உணர்வெழுச்சியுடன் வாழ்த்து கூவினர். “பேரரசி என்றும் இங்கிருப்பார். இந்நகரின் சுடர் ஒருபோதும் ஒளி குறையாது” என்றார் அமைச்சர் கிருபர்.

“அரசி இங்கு வந்து சென்றதை கொண்டாடும் முகமாக அசோகவனியின் தென்கிழக்கு மூலையில் அசோகசுந்தரி அன்னையின் ஆலயத்துக்கு அருகிலேயே பேரரசிக்கும் ஓர் ஆலயம் அமைப்போம். நம் குலதெய்வமென அருள்புரிந்தும் ஆணையிட்டும் என்றும் அவர்கள் இங்கு இருப்பார்கள்” என்றான் காவலர்தலைவன். “ஆம், அவ்வாறே ஆகுக!” என்று குடிகள் ஒருங்கே குரல் எடுத்தனர். கூடி நின்றிருந்த முதுமகள்கள் உளம் பொறாது கண்ணீர் சிந்தினர்.

குடிகளின் வாழ்த்தொலியும் முரசொலியும் கொம்பொலியும் சூழ நகர்த்தெருக்களினூடாக தேவயானியின் தேர் சென்றது. அவளுக்கு முன் கண்ணுக்குத் தெரியாத திரைகள் ஒவ்வொன்றாக வந்து இணைந்து அவளை மறைத்து அப்பால் கொண்டு சென்றன. “பறவைகள் புலம்ப விலங்குகள் விழிமயங்கி நிற்க பொன்னுருகி அனலாகி சூரியன் அணைவதுபோல” என்றாள் மூதன்னை ஒருத்தி. “காலத்தில் வெளியில் எண்ணத்தில் மூழ்கி மறுநாள் கனவில் ஒளியுடன் எழுவாள் அன்னை” என்றார் சூதர் ஒருவர்.

அசோகவனியின் இறுதித் தோரணவாயிலை கடந்த பின்னர் தேவயானி தன் பீடத்தில் அமர்ந்தாள். சலிப்புடன் கால்களை

நீட்டிக்கொண்டு உடல் தளர்த்தி கண்களை மூடினாள். சாயை அவளிடம் குனிந்து “அங்கு சென்று சேர முப்பத்தாறு நாழிகை ஆகும். இடையில் ஓர் இடத்தில் மட்டுமே ஓய்வெடுக்க ஒருங்கு செய்யப்பட்டுள்ளது” என்றாள். விழிகளை மூடியபடி தேவயானி தலையசைத்தாள். சாயை அவள் முகத்தையே நோக்கி நின்றாள். அவள் விழிகள் இமைகளுக்குள் ஓடிக்கொண்டே இருந்தன. உதடுகள் எதையோ சொல்வதற்கு முந்தைய அசைவு காட்டி இணைந்தும் மெல்ல பிரிந்தும் நெளிந்து கொண்டிருந்தன.

சாயை விழிகளைத் திருப்பி இருபுறமும் ஒழுகிச் சென்றுகொண்டிருந்த அடர்காட்டை பார்த்துக்கொண்டிருந்தாள். சரிவுகளில் தேர்ப்பாதையில் சகடங்கள் ஏறியதும் மரப்பலகைகளின் நெறிவோசையும் அதிர்வோசையும் எழுந்தன. துடிமுரசோசை எழுப்பியபடி புரவிக்குளம்புகள் கடந்துசென்றன. இறுகக் கட்டிய தோலில் இருந்து ஈரத்தோலுக்கு என மண்பரப்புக்கு புரவிக்குளம்புகள் சென்றன. மரப்பாலத்திற்கு அடியில் கரிய உருளைப்பாறைகளில் மோதி நுரைத்து, வெள்ளி காற்சரம்போல் ஓடைகள் சென்றன.

வலப்பக்கம் நுரைத்திறங்கிய காட்டருவி ஒன்று மரப்பாலத்திற்கு அடியில் ஆயிரம் காலட்டை என ஊன்றி நின்ற மூங்கில்களால் நரைகுழலை சீப்பென சீவப்பட்டு அங்கு நின்ற ஐந்து பாறைகளால் ஐம்புரிகளென பகுக்கப்பட்டு மறுபக்கம் ஒன்றிணைந்து உருளைப்பாறைகளில் முட்டி நிறைத்து நீர்நுரை எழுப்பி முழங்கி கீழிறங்கி மிக ஆழத்தில் மீண்டும் வெள்ளி வளைவென மாறி நாணல் பசுமைக்குள் புதைந்து மறைந்தது. பொலியும் நீர்த் திவலைகள் ஒவ்வொன்றும் பரல்மீன்கள் போலிருப்பதாக அவள்

நினைத்தாள். பச்சைப் பட்டாடைக்குள் ஒளிக்கப்பட்ட கூர்வாள் என ஓடைகள் கடந்து சென்றன. நரைத்த ஐம்பால். அவள் திரும்பி தேவயானியை பார்த்தாள். இவள் குழல் ஒருநாள் நரைக்கும். அவள் புன்னகை செய்தாள்.

வழியில் அவர்கள் தங்குவதற்கென்று யானைத்தோல் இழுத்துக் கட்டப்பட்ட நான்கு கூடாரங்கள் உருவாக்கப்பட்டிருந்தன. புரவிகள் அவிழ்க்கப்பட்டு ஓடைகளில் நீர் அருந்துவதற்காக கட்டப்பட்டன. கூடாரத்திற்குள் மூங்கில் பட்டைகள் அடுக்கி செய்யப்பட்ட இரு மஞ்சங்களில் புதிய மரவுரிச் சேக்கையும் இறகுத் தலையணையும் போடப்பட்டிருந்தன. தேவயானி தன் மேலாடையை களைந்தபின் மஞ்சத்தில் படுத்து கண்களை மூடிக்கொண்டாள்.

அப்பயணம் முழுக்க அவள் ஒரு சொல்லும் உரைக்கவில்லை என்பதை சாயை எண்ணிக்கொண்டாள். விழி திறக்காமல் தலை சாய்ந்தே இருப்பதைக் கொண்டு முந்தைய இரவெல்லாம் அவள் துயிலவில்லை என்று உய்த்துணர்ந்தாள். அப்போதுகூட அவள் உடலை துயில் வந்து அழுத்தி வளையல்கள் சரிய கைகள் தளர்ந்து மலர்ந்தாலும் உடனே உள்ளம் துரட்டியெனக் குத்தி துயில் விலக்கி அவளைத் திமிறி எழச்செய்துகொண்டே இருந்தது. கண்களை மூடிக்கொண்டு உடனே சாயை துயிலில் ஆழ்ந்தாள். புலிபோலவே துயிலிலும் அவள் இமைகள் அசைந்துகொண்டே இருப்பது வழக்கம்.

அன்று அந்தியில் அவர்கள் சரபஞ்சரத்தின் முதல் குலக்குறி பொறிக்கப்பட்ட பெருந்தூணை சென்றடைந்தனர். ஓங்கிய தேவதாரு மரத்தில் செதுக்கப்பட்ட கழுகுகளும் பாம்புகளும் ஆந்தைகளும் பல்லிகளும் சிம்மங்களும் ஆமைகளும் யானைகளும் இடைவெளி நிரப்பிக்கலந்து உருண்டு

தூணென்றாகி தலைமேல் எழுந்து நின்றன. உச்சியில் சிறகு விரித்தெழுந்த செம்பருந்தொன்றின் பாவை அமைக்கப்பட்டிருந்தது.

அங்கு விழவு நிகழ்வதன் அடையாளமாக அத்தூணில் மலர்மாலைகள் சுற்றப்பட்டிருந்தன. அதன் அருகே முழவுகளும் கொம்புகளுமாக நின்றிருந்த தொல்குடியினர் தொலைவில் பேரரசியின் படைநிரை தெரிவதைக் கண்டதும் முழவுகளை ஒலிக்கத் தொடங்கினர். காட்டுக்குரங்கின் ஒலியென முதல் முரசு எழுந்தது. களிறின் பிளிறலென காட்டுக்குள் பெருமுரசுகள் முழங்கத்தொடங்கின. குதிரைகள் என கொம்புகள் கனைத்தன. கொடியேந்திய முதல் கவசவீரன் கரிய புரவியில் அணுகியதும் காத்து நின்றிருந்த காவலர்தலைவன் இறகுவிரித்த கழுகு பொறிக்கப்பட்ட தன் பெருங்கோலைத் தாழ்த்தி அவனை வணங்கி வலக்கையைத் தூக்கி வரவேற்புக்குறி காட்டினான். தொடர்ந்து முழுக்கவச உடையணிந்த புரவி வீரர்கள் இரண்டிரண்டு பேராக நெருங்கி வந்தனர். புரவிகளின் ஓசையை சூழ்ந்திருந்த மலைகள் அனைத்தும் தனித்தனியாக எதிரொலிக்க அனைத்து மலைகளும் முரசுகளென விம்மின.

அமைச்சர் கிருபரின் தேர் முதலில் வந்தது. அதைத் தொடர்ந்து தேவயானியின் ஆறு சகடத்தேர் கரிய புரவிகளால் இழுக்கப்பட்டு மெல்லிய அதிர்வுகளுடனும் குலுக்கல்களுடனும் அணுகியது. பழங்குடித் தலைவன் தன் கைகளைத் தூக்கி அசைக்க காடுகளுக்குள் பரந்திருந்த அனைத்துப் பெருமுரசுகளும் பேரோசையுடன் ஒலிக்கத் தொடங்கின. மரக்கூட்டங்களிலிருந்து ஆவியெழுவதுபோல்

பல்லாயிரக்கணக்கான பறவைகள் அந்தியடங்கல் கலைந்து அஞ்சி வானில் எழுந்தன.

🐾ஏறத்தாழ முன்னூறு குடில்கள் மட்டுமே கொண்ட மலைச்சிற்றூர் சரபஞ்சரம். தொல்குடிகளுக்குரிய வகையில் முற்றிலும் வட்டவடிவமாக அச்சிற்றூர் கட்டப்பட்டிருந்தது. அதைச் சுற்றிய இரண்டு ஆள் ஆழமுள்ள அகழிக்கு அப்பால் முள்மரங்களை நெருக்கமாக நட்டு இணைத்துக்கட்டிய வேலிக்குள் ஒன்றுக்குள் ஒன்றென ஒன்பது சுற்றுகளாக குடில்கள் அமைந்திருந்தன. ஒன்றுடன் ஒன்று முகம் நோக்கிய குடில்நிரைகளுக்கு நடுவே இருவர் கைகோத்துச் செல்லும் அளவுக்கே தெருக்கள் அகலம் கொண்டிருந்தன. கோட்டை வாயில் முள்மூங்கில் படலால் செய்யப்பட்டு இரு பெருமரங்களில் கட்டப்பட்டிருந்தது. அம்மரங்களின் மீது அமைந்த பந்தமேடைகளில் கொடிகள் என தழல் பறந்தலைந்தது.

அகழிக்கு மேல் அமைந்த மரப்பாலத்தினூடாக ஓசையிட்டபடி தேவயானியின் தேர் உள்ளே நுழைந்தது. வாயிலில் காத்திருந்த குடித்தலைவர்களும் மூதன்னையரும் இளையோரும் பெண்களும் வாழ்த்தொலி எழுப்பியும் குரவையிட்டும் அவளை வரவேற்றனர். தேரிலிருந்து இறங்கி அவள் மண்ணில் கால்வைத்தபோது மங்கலத் தாலங்கள் ஏந்திய மங்கையர் முதலில் வந்து மலர்தூவி வணங்கி அவளை ஊருக்குள் கொண்டுசென்றனர். குலமூத்தார் தங்கள் குடிக்கோல்களைத் தாழ்த்தி அவளை அவ்வூரில் அமையும்படி கோரினர். ஊர் நடுவே இருந்த பெரிய முற்றம் அவர்கள் தங்கள் கால்நடைகளை கட்டுவதற்குரியது. கால்நடைகள் காட்டுக்குள் கொண்டுசெல்லப்பட்டு கட்டுத்தறிகள் அகற்றப்பட்டு

அது விழவுக்களமென ஒருக்கப்பட்டிருந்தது. வெயிலில் காய்ந்த சாணிமணம் நிறைந்திருந்த அவ்வட்டத்தின் கிழக்கு மூலையில் மூங்கிலால் அமைக்கப்பட்ட மேடையை அமைக்கும் பணி அப்போதும் நடந்து கொண்டிருந்தது.

மேற்கு மூலையில் தேவயானி தங்குவதற்காக மூன்று அடுக்கு மகுடக்கூரையுடன் புதிய பெருங்குடிலொன்று கட்டப்பட்டிருந்தது. அவளை அக்குடில் நோக்கி அழைத்துச்சென்ற குடிமூத்தார் "இச்சிற்றூரின் பொருட்களைக் கொண்டு முடிந்தவரை சிறப்புற இக்குடிலை அமைத்திருக்கிறோம், அரசி. தாங்கள் இளைப்பாற வேண்டும்" என்றார். ஈச்சஓலைக் கூரையிட்ட வட்டவடிவமான குடில் தரையிலிருந்து ஒரு ஆள் உயரத்தில் மூங்கில் கால் மேல் நின்றுகொண்டிருந்தது. பலகைப்படிகள் இருபுறமும் பக்கவாட்டில் ஏறி வாயிலினூடாக உள்ளே சென்றன. குடில்களில் பல அறைகள் அமைக்கும் வழக்கம் அக்குடிகளுக்கு இருக்கவில்லை என்பதனால் வட்டப் பெருங்கூடை ஒன்றை கவிழ்த்தியதுபோல ஒற்றை அறை மட்டும் கொண்டிருந்தது அது. மூன்று சாளரங்களினூடாக காற்று உள்ளே வந்து சுழன்று சென்றது.

கூரை குடையின் உட்பகுதிபோல் வளைந்து சென்று இணைந்த தொண்ணூற்றெட்டு மூங்கில்களால் ஆனது. அதன் மையமுடிச்சிலிருந்து தொங்கிய பிரம்புபின்னி அரவுடல் என அமைக்கப்பட்டிருந்த சரடின் முனையில் மரத்தாலான கொத்துவிளக்கு தொங்கியது. அதன் கைக்குழிகள் அனைத்திலும் மண்ணகல்களை வைத்து விலங்குநெய்யிட்டு ஒளி பொருத்தியிருந்தனர். சாளரக்காற்றில் அலைந்த சுடர்களால் அக்குடில் நீரில் மிதக்கும் பரிசல் என விழிமயக்கு

காட்டியது. குடிலின் ஓரத்தில் அமர்வதற்கான மூங்கில் பீடங்களும் மறு எல்லையில் துயில்வதற்கான தூளிகளும் இருந்தன. தூண்களிலிருந்து தூண்களுக்கு இழுத்துக் கட்டப்பட்ட எருதுத்தோல் தூளிகள் மடித்து வைக்கப்பட்ட மரவுரிப் போர்வையும் இறகுத் தலையணையும் கொண்டிருந்தன.

தேவயானி குடித்தலைவரிடம் "அழகிய தங்குமிடம். இதுநாள் வரை இப்படி ஒன்றில் தங்க நேர்ந்ததில்லை. உச்சி மரத்தில் அழகிய கூடொன்றைக் கட்டிய பறவைபோல் உணர்கிறேன்" என்றாள். அவர் முகமன்களுக்குப் பழகாதவர் என்பதனால் மலர்ந்து தலைவணங்கி "இத்தனை பெரிய குடிலை நாங்களும் இதற்கு முன் கட்டியதில்லை. எங்கள் இளைஞர் இம்மூங்கிலை தேடிக் கொண்டுவரும் பொருட்டு இரு இரவுகள் காட்டுக்குள் அலைந்து திரிந்திருக்கிறார்கள்" என்றார். "நாளை அவர்கள் அனைவரையுமே சந்தித்து பரிசளித்து மகிழ விரும்புகிறேன்" என்றாள் தேவயானி. "ஆம், அனைவரும் வந்துவிட்டார்கள். எங்கள் குடில்கள் அனைத்திலுமே வெளியிலிருந்து வந்த உடன்குருதியினர் நெருங்கி தங்கியிருக்கிறார்கள். தோளொடு தோள் தொட்டே உள்ளே துயில்கிறோம்" என்றார் குடித்தலைவர்.

இன்னொரு குடிமூத்தார் "பேரரசி, நாளை முதற்புலரியிலேயே இங்கு விழவுகள் தொடங்கும். தங்கள் முன்னிலையில் போர்த்திறனையும் நடனத்திறனையும் காட்ட இளையோரும் பெண்டிரும் காத்திருக்கிறார்கள்" என்றார். தேவயானி "நன்று, அவர்களைவிட நான் காத்திருக்கிறேன்" என அணிச்சொல்லுரைத்து வணங்கி அவர்களுக்கு விடைகொடுத்தாள். அவர்கள் அவளுடைய சொற்கள்

ஒவ்வொன்றாலும் மகிழ்ந்து முகம்மலர்ந்து ஒருவரை ஒருவர் நோக்கியபடி வெளியே சென்றனர்.

அவளுடைய பேழைகள் ஒவ்வொன்றாக ஏவலரால் உள்ளே கொண்டு வைக்கப்பட்டன. தேவயானி களைப்புடன் கைநீட்டி உடலை வளைத்தாள். "நீராட்டுக்கென ஓர் அறை அமைக்கப்பட்டுள்ளது... மரத்தட்டிகளால் ஆனது. வானம் தெரிவது" என்றாள் சாயை. தேவயானி ஒன்றும் சொல்லாமல் கிளம்ப நீராடுவதற்கான பொருட்களை எடுத்துக்கொண்டு சாயை உடன்சென்றாள். இருளில் அவர்கள் நீராடுகையிலும் தேவயானி ஒன்றும் பேசவில்லை. நீர் மலைப்பகுதிகளுக்குரிய தண்மையுடன் இருந்தது. அகிலும் மஞ்சள்பொடியும் புதிய மணம் கொண்டிருந்தன. இருண்ட வானில் விண்மீன்கள் எழுவதை தேவயானி அண்ணாந்து நோக்கிக்கொண்டே நீர் அள்ளி ஊற்றிக்கொண்டாள்.

திரும்பி வந்தபோது சாயை பேழைகளைத் திறந்து அரசிக்குரிய மாற்று ஆடைகளை எடுத்து அளித்தாள். தேவயானி தன் ஆடைகளை கையில் எடுத்தபின் அவளிடம் "இங்கு ஆடை மாற்ற மறைவிடம் இல்லையென எண்ணுகிறேன்" என்றாள். "சாளரத் திரைச்சீலைகளை மூடுகிறேன்" என்றாள் சாயை. "ஆம், நீ வாயிலில் சென்று நில்" என்றாள் தேவயானி. சற்று புருவத்தைச் சுருக்கி நோக்கியபின் சாயை வெளியே சென்றாள். தேவயானி ஆடை மாற்றியபின் மெல்ல கனைத்தபோது திரும்பி உள்ளே வந்தாள். அவள் முகத்தில் அச்சுருக்கம் அப்படியே இருந்தது.

"களைத்திருக்கிறேன். நெடிய பயணம்..." என்றபின் தேவயானி பீடத்தில் அமர்ந்தாள். "உணவு அருந்திவிட்டு படுக்கலாம்" என்றாள் சாயை. "ஆம்" என்றாள் தேவயானி. அவர்களுக்குள்

பேசப்படாத ஒன்று எஞ்சியிருந்தது. அமைதியாக சாளரம் வழியாகத் தெரிந்த இருண்ட வானை நோக்கியபடி காத்திருந்தனர். சற்று நேரத்தில் பெரிய தாலங்களில் உணவுடன் மலைக்குடிப் பெண்கள் உள்ளே வந்தனர். தேவயானியும் சாயையும் நிலத்தில் அமர நடுவே மூங்கிலால் ஆன சிறு பீடத்தை இட்டு அவற்றில் புதிய ஊன்மணம் எழுந்த கொதிக்கும் குழம்பையும் புல்லரிசிச் சோற்றையும் பரிமாறினார்கள். ஊன்நெய்யில் பொரிக்கப்பட்ட கிழங்குகள். வேகவைக்கப்பட்ட காய்கறிகள்.

“தாங்கள் இங்கு வந்ததன் பொருட்டு இன்னுணவு சமைத்திருக்கிறோம், பேரரசி” என்றபடி மரக்குடுவையில் அப்போதும் குமிழ்கள் வெடித்துக் கொண்டிருந்த இன்பால் கஞ்சியை அவளுக்கு பரிமாறினாள் ஒரு மூதன்னை. “நல்லுணவு, அன்னையே. அனைத்துப் பொருட்களும் பயிர்களிலிருந்து நேரடியாக களத்திற்கு வந்ததுபோல புத்தம் புதிய சுவை” என்றாள் தேவயானி. முகம் மலர்ந்து மும்முறை தலைவணங்கி “எங்களிடம் இருக்கும் மிகச் சிறந்த உணவையே அரசிக்கென எடுத்து வைத்தோம்” என்றாள் மூதன்னை.

# மாமலர் - 83

### 83. எரிமலர்க்கிளை

உணவருந்தி முடித்ததும் முதுமகள் ஒருத்தி காட்டிய கொப்பரையில் இருந்த புல்தைலம் கலந்த வெந்நீரில் கைகளை கழுவிக்கொண்டு தேவயானி எழுந்தாள். வெளியே முன்முழுமைச் செந்நிலவு எழுந்திருந்தது. மரங்கள்

நிழல்களென மாறிவிட்டிருந்தன. குடில்களனைத்திலும் ஊன்நெய் விளக்குகள் எரியத்தொடங்க அணுகிவரும் காட்டெரிபோல் குடில்நிரையின் வடிவம் தெரிந்தது. வானிலிருந்து நோக்கினால் தீப்பந்தம் ஒன்றை விரைவாகச் சுழற்றியதுபோல் அச்சிற்றூர் தெரியுமென்று அவள் எண்ணிக்கொண்டாள்.

“தாங்கள் இளைப்பாறலாமே, பேரரசி?” என்றாள் சாயை. “ஆம். உடல் களைத்திருக்கிறது. துயில் நாடுகிறேன். ஆனால் இந்த இளங்காற்றை விட உளமெழவில்லை. எழுந்து வரும் விண்மீன்களையும் முழுநிலவையும் சற்று துய்த்துவிட்டுச் செல்லலாம் என்று தோன்றுகிறது. பிறிதொருமுறை இப்படி ஒரு மலைச்சிற்றூரில் இயல்பாக தங்கும் வாய்ப்பு அமையப்போவதில்லை” என்றாள். “தாங்கள் விரும்பினால் முற்றத்தில் சென்று அமர்ந்து நிலவை நோக்கலாம். பீடங்களை அங்கு கொண்டு இடச் சொல்கிறேன்” என்றாள் சாயை.

“வேண்டியதில்லை. இந்த முற்றத்தை ஒருமுறை சுற்றி நடந்து வரலாமென்று எண்ணுகிறேன். பகல் முழுக்க தேரில் அமர்ந்திருந்ததின் அசைவு உடலில் எஞ்சியிருப்பதுபோல் உள்ளது” என்றபடி தேவயானி கைநீட்ட சாயை மேலாடையை எடுத்து அவளுக்களித்தாள். அதை தன் தோளிலிட்டபடி வெளியே சென்று வட்டப்பெருமுற்றத்தில் இறங்கி காற்றில் மேலாடையும் குழலும் எழுந்து பறக்க சற்றே முகவாய் தூக்கி விண்ணை நோக்கியபடி ஓய்ந்த உடலுடன் நடந்தாள்.

சாயை அவளையும் அந்தப் பெருமுற்றத்தையும் நோக்கிக்கொண்டு உடன் நடந்தாள். பறவைக்குரல்கள் அடங்கியமையால் குடில்களில் இருந்து மகளிரும் சிறுவரும் எழுப்பும் ஓசைகள் வலுத்து ஒலித்தன. சிறு குழந்தைகள்

குடில்களின் படிகளில் பாய்ந்திறங்கி அப்பால் இருந்த மரங்களில் தொற்றி ஏறி குதித்தும், ஒருவரை ஒருவர் துரத்தியும், பிடித்துத் தள்ளியும், கட்டி மண்ணில் விழுந்து புரண்டும் விளையாடிக்கொண்டிருந்தனர். மலைக்குடி மகவுகள் பொழுதுமுழுக்க விளையாடிக்கொண்டே இருப்பதனால் விளையாட்டில் தங்களை மறக்கும் இயல்பு கொண்டிருந்தன. நகரங்களில் எக்குழந்தையும் தன் இல்லத்தையும் ஆற்றவிருக்கும் கடமைகளையும் மறந்து விளையாடுவதில்லை என்று அப்போது தோன்றியது.

விலங்குகள் விளையாடுவதுபோல என்று ஒரு சொற்றொடர் எழுந்தது உள்ளத்தில். வளர்ந்த பின்னரும்கூட அவர்கள் விளையாடுகிறார்கள். உடல் ஓய்ந்த முதியவர்களுக்குக் கூட விளையாட்டுகள் உள்ளன. விளையாடாத உயிர் எதை இழக்கிறது? ஏன் விளையாடுகிறார்கள்? அத்தனை விளையாட்டுகளும் வாழ்க்கையின் போலிக்குறுநடிப்புகள். வேட்டைகள், புணர்தல்கள், சமையல்கள், பூசல்கள். வாழ்க்கையை தனக்குரிய நெறிகளுடன் தன் சொல்திகழும் எல்லைக்குள் அமைத்துக்கொள்வதே விளையாட்டு. தெய்வங்களும் ஊழும் அமைக்கும் இடர்களும் துயர்களும் இல்லாத பிறிதொரு வாழ்க்கை. விளையாட்டை இழந்தமையால்தான் அரசாடுகிறேனா?

இளையவரும் கன்னியரும்கூட நாணமோ ஒதுக்கமோ இன்றி ஒருவரை ஒருவர் கைபற்றி தோள்தழுவி விளையாடினர். அவள் நகர்நுழைந்தபோது வரவேற்புக்கு வந்து நின்ற மக்களைவிட பத்துமடங்கினர் அங்கிருப்பதாக தோன்றியது. குடில்களில் இருந்து இளையோரும் சிறுவர்களும் மகளிரும் மையமுற்றத்திற்கு வந்தபடியே இருந்தனர். அங்கே சிறு

குழுக்களாக அமர்ந்து தங்கள் இல்லங்களிலிருந்து கலங்களிலும் தாலங்களிலும் உணவை கொண்டுவந்து வைத்து ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்டு உண்டனர். சிரித்தும் கூச்சலிட்டும் உவகை கொண்டாடினர். சிறு குழந்தைகள் சிறு குருவிகள் என ஒவ்வொரு அன்னையிடமிருந்தும் ஒவ்வொரு வாயென வாங்கி உண்டு அக்கூட்டத்தினூடாக எழுந்தும் அமர்ந்தும் விளையாடிக்கொண்டிருந்தனர்.

இருட்டுக்கு மேலும் அழுத்தம் வந்தது. விண்மீன்கள் கம்பளம்போல ஒளியுடன் விரிந்தன. நிலவு எண்ணியதைவிட மேலெழுந்துவிட்டதை தேவயானி கண்டாள். முற்றத்தில் எவரும் விளக்குகளை வைத்திருக்கவில்லை என்பதனால் நிலவொளி ஈரத்தண்மையுடன் படிந்து குழல்களையும் ஆடைகளையும் ஒளிரச்செய்தது. கண்களும் பற்களும் மின்னின. தேவயானி "நாமும் இங்கு நம் உணவை கொண்டுவந்து அமர்ந்துகொண்டிருக்கலாம்" என்றாள். "அரசியர் உடன் உணவருந்துவதென்பது குருநகரியில் ஒரு பெரிய சடங்கென்றே கொள்ளப்படுகிறது. அதற்குரியவர்கள் ஓராண்டுக்கு முன்னரே தெரிவு செய்யப்பட்டு அதற்கென பயிற்சி அளிக்கப்பட்டு வந்து சேர்வார்கள். அவ்வாறு உணவருந்தியவர்கள் அதை ஒரு தகுதியெனக் கொள்ளவும் செய்வார்கள்" என்றாள் சாயை.

அவள் குரலில் இருந்த நகையாட்டை உணர்ந்து மெல்லிய எரிச்சலுடன் "ஆம், அது ஒரு அரசுசூழ்தல் முறை. இங்கு நாம் மலைக்குடிகளென ஓரிரவை கழித்திருக்கலாம். சில தருணங்களிலேனும் கவசங்களை கழற்ற வேண்டியுள்ளது" என்றாள் தேவயானி. பேசியபடி விழிதிருப்பியவள் ஒரு கணம் திகைத்து "யார் அது?" என்றாள். "எவர்?" என்றாள் சாயை.

“அவ்விளைஞர்கள்... அங்கே செல்லும் அம்மூன்று இளையோர். மூவரில் இருவரின் நடை ஒன்று போலிருக்கிறது. அது நான் மிக நன்கறிந்த அசைவு” என்றாள். சாயை “அவர்கள் இக்குடியின் இளைஞர்கள். நாளை அவர் எவரென்று உசாவுவோம்” என்றாள்.

“அல்ல, அவர் இக்குடியினர் அல்ல” என்று கூர்ந்து நோக்கியபடி தேவயானி சொன்னாள். “மலைக்குடியினர் அனைவருக்கும் தனித்த நடையும் அசைவும் உள்ளன. இம்மலைச்சரிவில் பாறைகளினூடாக நடப்பதனாலாக இருக்கலாம். மரங்களில் தொற்றி அலைவதனால் உருவான தோளசைவுகள் அவை. அவர்கள் இங்கு வேட்டை விலங்குகள்போல் சூழலைக் கூர்ந்து எண்ணி காலெடுத்து நடக்கிறார்கள். இவர்கள் நிகர்நிலத்து ஊர்களில் வளர்ந்தவர்கள்” என்றாள். மீண்டும் விழிகூர்ந்து “நான் நன்கறிந்த அசைவு. நன்கறிந்த நடை” என்றபின் “அது அரசரின் நடை” என்றாள்.

“என்ன சொல்கிறீர்கள், அரசி?” என்று சாயை கேட்டாள். “ஆம், ஒளியில் அவர்களைப் பார்த்திருந்தால் இவ்வசைவு அத்தனை துலக்கமாக தெரிந்திருக்காது. நிழல் என அசைவு மட்டுமேயாகி செல்கிறார்கள். அது நன்றாக காட்டிக் கொடுக்கிறது. அவர்களில் மூத்த இருவரின் நடையும் அசைவும் நமது அரசர் யயாதிக்குரியவை” என்றாள் தேவயானி. “அவர்களை அழைத்து வா” என்றாள். சாயை அப்பால் நின்றிருந்த மலைக்குடி இளைஞன் ஒருவனை அருகழைத்து தொலைவில் ஒருவரோடொருவர் பேசிச் சிரித்தபடி சென்றுகொண்டிருந்த அந்த மூவரையும் சுட்டிக்காட்டி அவர்களை அழைத்து வரும்படி சொன்னாள்.

“ஐயமே இல்லை” என்றாள் தேவயானி. “ஐயம் வில்லிலிருந்து விடுபட்ட அம்பு, வழியில் தடுத்து நிறுத்தஇயலாது” என்றாள் சாயை. “என்ன சொல்கிறாய்?” என்று அவள் சீற்றத்துடன் கேட்டாள். “இந்த ஐயம் அசோகவனிக்கு வருவதற்கு முன்னரே இருந்தது உங்களுக்கு.” தேவயானி “என்ன சொல்கிறாய்?” என்று மீண்டும் உரத்த குரலில் கேட்டாள். “ஏனெனில் நீங்கள் உங்களை அறிவீர்கள். இங்கிருந்து நீள்தொலைவுக்கு விலகிச் சென்றுவிட்டதை அறிந்திருப்பீர்கள். அவரையும் அறிவீர்கள்” என்றாள். “கலை காமத்தை எழச்செய்கிறது.”

தேவயானி உடல் நடுங்க இரு கைகளையும் மார்பில் கட்டிக்கொண்டு விழிநிலைத்து அணுகிவரும் அவ்விளைஞர்களை நோக்கினாள். மூவரும் அவள் அருகே வந்து முறைமைப்படி இடைவளைய வணங்கி நின்றனர். மூத்தவனிடம் “நீங்கள் யார் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?” என்றாள். மூத்தவன் “என் பெயர் திருஹ்யூ. இவர்கள் என் இளையோர். இவன் அனுதிருஹ்யூ, மூன்றாமவன் புரு. நாங்கள் அசோகவனியின் சேடியாகிய சர்மிஷ்டையின் மைந்தர்” என்றான். “உங்கள் தந்தை எவரென்று அறிவீர்களா?” என்று தேவயானி கேட்டாள்.

மூத்தவன் நாவெடுப்பதற்குள் முந்திக்கொண்டு “ஆம், அறிவோம்” என்று புரு மறுமொழி சொன்னான். “அவர் குருநகரியின் அரசர் யயாதி.” தேவயானியிடம் சிறு மாறுதலும் உருவானதாக உடல் காட்டவில்லை. சாயை அவள் மேலும் சொல்லெடுப்பதற்காக காத்து நின்றாள். தேவயானி மிக இயல்பான குரலில் “அதை உங்கள் அன்னை சொன்னார்களா?” என்றாள். “ஆம், ஆனால் அதைவிட நாங்களே தெளிவாக உணர்ந்திருந்தோம். எங்கள் அன்னையைப் பார்ப்பதற்காக அரசர்

வந்து அசோகவனியின் காவலர் மாளிகையில் தங்குவதுண்டு. நாங்கள் அங்கிருந்து கிளம்புவதற்கு ஒருநாள் முன்னர்கூட வந்திருந்தார். உடன் அவரது அணுக்கத்தோழர் பார்க்கவனும் இருந்தார்.”

தேவயானி தலையசைத்தபோது அவள் இரு குழைகளும் ஆடி கன்னங்களை தொட்டன. சாயை அவர்கள் செல்லலாம் என்று கையசைத்தாள். அவர்கள் திரும்பியதும் தேவயானி “பொறுங்கள்” என்றாள். புரு திரும்பிப் பார்த்தான். தேவயானி இரு கைகளையும் விரித்து தலையசைத்து அவனை அருகே அழைத்தாள். அவன் ஐயுற்று நிற்க அவள் புன்னகை செய்து “நான் உங்கள் தந்தையின் முதல் மனைவி. உனது அன்னை... வருக!” என்றாள். தயங்கியபடி அருகே வந்த அவனுடைய மெலிந்த தோளில் கைவைத்து தன் உடலுடன் சேர்த்துக்கொண்டு வலக்கையால் அவன் குழலை வருடி “உன் பெயர் புரு அல்லவா?” என்றாள்.

“ஆம், அரசி” என்றான் புரு. “அன்னையே என்று சொல்க!” என்றாள். “ஆம், அன்னையே” என்றான் புரு. “அது உங்கள் மூதாதை புரூரவஸின் பெயர் என்று அறிவாயா?” என்றாள். “ஆம், அறிவேன்” என்றான் புரு. “அன்னை என என் பாதங்களைப் பணிக!” என்றாள் தேவயானி. அவன் குனிந்து அவள் கால்தொட்டு சென்னிசூட “நலம் திகழ்க! வெற்றியும் புகழும் விளங்குக! காலத்தில் படரும் கொடிவழி அமைக!” என்று தேவயானி அவன் தலையில் கைவைத்து வாழ்த்தினாள். பிற இருவரும் வந்து அவள் கால்களைத் தொட்டு வணங்கினர். அவள் அவர்கள் தலையில் கைவைத்து வாழ்த்தினாள்.

சாயையிடம் “இவர்களுக்கு பரிசுகள் அளிக்கவேண்டியிருக்கிறது” என்றாள். சாயை ஆணையேற்று குடிலுக்குள் சென்றாள். தேவயானி இரு கைகளையும் விரித்து மூன்று மைந்தரையும் தன் உடலுடன் அணைத்துக்கொண்டாள். திருஹ்யூவின் தோள்களைத் தொட்டு “உங்கள் அன்னையின் தோள்கள் போலிருக்கின்றன. மைந்தா, அரசகுடிப்பிறந்தவர்கள் ஒருபோதும் வலுவற்ற உடல் கொண்டிருக்கலாகாது. உள்ளம் உடலை தான் என பதித்து வைத்துக்கொள்ளும். உடலின் வலுவின்மையை அது தானும் நடிக்கும். நன்கு உடல் தேறுக!” என்றாள். “ஆம், அன்னையே” என்று அவன் தலைவணங்கினான். அனுதிருஹ்யூவிடம் “மூத்தவனுடன் எப்போதும் இரு, மைந்தா. ராகவராமனின் உடன் அமைந்த இளையவனைப்போல” என்று அவள் சொன்னாள். அவன் வணங்கினான்.

புரு “தாங்கள் எங்களை ஒடுக்கக்கூடுமென்று அஞ்சினோம், அன்னையே” என்றான். அவள் அவன் விழிகளை நோக்கி “உண்மையிலேயே அவ்வச்சம் இருந்ததா?” என்றாள். அவன் “தாங்கள் அணித்தேரிறங்கி வருகையில் நேரில் கண்ட கணமே அது முற்றிலும் விலகியது. தாங்கள் பேரன்னை. அவ்வாறன்றி பிறிதெவ்வகையிலும் அமைய முடியாதவர். ஆகவேதான் நான் உணர்ந்த உண்மையை உங்களிடம் சொன்னேன்” என்றான். “அது நன்று. அன்னையிடம் பொய் சொல்லலாகாது என்று நீ எண்ணியதை உணர்கிறேன்” என்றாள் தேவயானி. “நீ வெல்பவன். உன் கொடிவழியினர் என்றும் உன்னை வழிபடுவர். பாரதவர்ஷத்தில் உன் குருதி பெருநதியென கிளைவிரிந்து பரவும்” என்றாள்.

சாயை உள்ளிருந்து மூன்று மணிமாலைகளையும் அரசக் கணையாழிகளையும் எடுத்து வந்தாள். அவற்றை தேவயானி

அவர்களிடம் கொடுத்தாள். திருஹ்யூ “இவற்றை நாங்கள் அணிகையில்...” என்று தயங்கியபடி சொல்லத் தொடங்க “ஆம், நீங்கள் எவரென்ற வினா எழும். யயாதியின் மைந்தர், குருகுலத்து இளவரசர் என்றே சொல்லுங்கள்” என்றபின் சாயையிடம் “கிருபரிடம் கூறுக! இவர்கள் குருநகரியின் இளவரசர்கள். சூதர்களுக்குரிய கல்வியும் அடையாளங்களும் இனி இவர்களுக்கு இருக்கலாகாது” என்றாள். அவள் தலைவணங்கி “அவ்வாறே, பேரரசி” என்றாள். தேவயானி அவர்களிடம் “செல்க, நாம் மீண்டும் சந்திப்போம்” என்றாள். அவர்கள் மீண்டும் அவள் கால்தொட்டு வணங்கி விடைகொண்டனர்.

குடிலுக்குள் சென்றதுமே தேவயானி உடலசைவுகள் மாற பிறிதொருத்தி என்றானாள். அரவென சீறித்திரும்பி தன்னைத் தொடர்ந்து உள்ளே வந்த சாயையிடம் “உனக்குத் தெரிந்திருக்கிறது” என்றாள். “ஆம், முன்னரே தெரியும்” என்று சாயை சொன்னாள். “அவளுக்கு முதற்குழந்தை பிறந்ததுமே கண்காணிக்கத் தொடங்கினேன். அரசர் இங்கு வந்து தங்கிச் செல்லும் ஒவ்வொரு தருணத்தையும் நன்கு அறிந்திருந்தேன்.” தேவயானி உரத்த குரலில் “நீ இதை ஏன் என்னிடம் சொல்லவில்லை? என் நலனுக்காக என்று பொய் சொல்லமாட்டாய் என்று எண்ணுகிறேன்” என்றாள்.

“சொல்ல வேண்டாம் என்று தோன்றியது. உங்கள் நலனுக்காக அல்ல” என்றாள் சாயை. “ஏன்?” என்றாள் தேவயானி. “என் வஞ்சத்துக்காக” என்று சாயை சொன்னாள். தேவயானி திகைத்து பின் மீண்டு உடைந்த குரலில் “நான் உன்னை நம்பினேன். உன்னை என் ஒரு பகுதியென எண்ணினேன்” என்றாள். “உங்கள் ஒரு பகுதியாக இருப்பதனால்தான்

சொல்லவில்லை. ஏனென்றால் உங்கள்மேல் நச்சுமிழ விரும்பினேன்” என்றாள். “முற்றிலும் உங்களுக்கு படைக்கப்பட்ட உள்ளம் கொண்டவள் நான். ஆனால் என்னுள் இவ்வஞ்சத்தின் நச்சுப்பல் இருந்துகொண்டே இருந்தது.”

“துயில்கையில் பலமுறை உடைவாளை உருவி உங்கள் கழுத்தில் பாய்ச்ச வேண்டுமென்று எண்ணியிருக்கிறேன். பின்னர் அறிந்தேன், இது இன்னும் கூரிய உடைவாள். இன்னும் குளிர்ந்தது, குருதி சிந்தாதது, அமைதியானது. எனவே இதை தேர்வு செய்தேன்” என்றாள் சாயை. அவள் விழிகளில் தெரிந்த வெறுப்பைக் கண்டு அஞ்சி தேவயானி பின்னடைந்தாள். “ஏன் இதை செய்தாய்?” என எழாக் குரலில் கேட்டாள்.

அவளை அசையா விழிகளுடன் நோக்கி சாயை அணுகிவந்தாள். “என்னை அறியமாட்டீர்களா, அரசி? என்னையன்றி நீங்கள் நன்கறிந்த எவருளர்?” அவள் மூச்சுக்காற்று தேவயானிமேல் நீராவியுடன் பட்டது. “நான் வேங்கை. கசனின் குருதிச் சுவையை அறிந்தவள். உனது குருதிச் சுவையையும் அறிய வேண்டாமா?” சன்னதமெழுந்த வாயிலிருந்து கிளம்பும் தெய்வக்குரல் போலிருந்தது அவள் உரை.

தேவயானி மேலும் பின்னடைந்து பீடத்தில் முட்டி, சுவரை நோக்கிச் சென்று சாய்ந்து நின்றாள். “நிழல் கருமையாக இருப்பதே தெய்வ ஆணை” என்றாள் சாயை. “நிழல் எழுந்து உருவை விழுங்கும் தருணம் ஒன்றுண்டென்று உணர்க! நீ சென்று நின்ற உச்சம். அசோகவனிக்குள் நுழைவதற்கு முன் அதை நீ உணர்ந்திருந்தாய். ஆனால் உன்னுள் ஒன்று வீழ்ச்சியடைய விழைந்தது. விந்தை அது, அழிவதற்கு மானுடர் கொள்ளும் விழைவு. தங்கள் நெஞ்சிலேயே ஈட்டியை

பாய்ச்சிக்கொள்கையில் அவர்கள் கொள்ளும் உவகை.” அது உளமயக்கா கனவா என தேவயானி வியந்தாள். தன் கால்கள் நடுங்கிக்கொண்டிருப்பதை உணர்ந்ததும் உடலை இறுக்கி விழாமலிருக்க முயன்றாள்.

“என் கடன் அவ்வுச்சத்திலிருந்து இழுத்து உன்னை இருள் நிறைந்த ஆழங்களுக்குத் தள்ளுவது. இது அத்தருணம்” என்றாள் சாயை பிறிதெங்கோ இருந்து என ஒலித்த குரலில். தேவயானி இரு கைகளும் நடுங்க எதையாவது பற்றிக்கொள்ளத் துழாவி மீண்டுவந்த கைகளை ஒன்றோடொன்று சேர்த்து நெஞ்சோடு அழுத்திக்கொண்டு திறந்த வாயுடனும் ஈரம் நிறைந்த விழிகளுடனும் சாயையை நோக்கி நின்றாள்.

“இப்போது உன்னுள் கொதிக்கும் நஞ்சனைத்தையும் உமிழ்ந்து ஒழிக! அதன் பின்னரே உனக்கு மீட்பு” என்ற சாயை தன் கைகளை கழுத்துக்குப் பின் கொண்டுசென்று அணிந்திருந்த மணியாரத்தின் பட்டு நூல் முடிச்சை இழுத்து அறுத்து வீசினாள். கூரையிலிருந்து நாகக்குழவி விழுந்ததுபோல அது தரையில் நெளிந்து கிடந்தது. சரப்பொளி ஆரத்தையும் கண்டமாலையையும் மேகலையையும் அறுத்து மணிகளும் காசுகளும் சிதற நிலத்தில் எறிந்தாள். கடகங்களையும் வளையல்களையும் சிலம்புகளையும் கழற்றியிட்டாள். இடையணிந்த பொன்னூல்பின்னிய பட்டு நூலாடையையும் களைந்தபின் அங்கிருந்த பேழையொன்றின் மீது கிடந்த மரவுரி மேலாடையை எடுத்து இடைசுற்றி அணிந்தபின் “நான் செல்கிறேன். மீண்டும் நாம் காண ஊழிருந்தால் அது நிகழ்க!” என்றாள்.

அவள் திரும்பியதும் தேவயானி கைகள் காற்று உலைக்கும் மரக்கிளைகள் என பதறிச் சுழல உடைந்த குரலில் "உன்னை கொல்வேன். உன் தலைகொய்து உருட்டுவேன். இழிமகளே… உன்னை கழுவேற்றுவேன்" என்றாள். சாயை திரும்பி புன்னகையுடன் "என்னை உன்னால் எதுவும் செய்ய முடியாது. நான் உன் மறுபாதி" என்றபின் வெளியே இறங்கி இருளில் அமிழ்ந்து மறைந்தாள். அவளைத் தொடர்ந்து ஓடிச்சென்று வாயில்சட்டத்தில் கைபற்றி நின்று வெளியே நோக்கிய தேவயானி அவள் முற்றத்தில் காற்றில் சருகுகளென சுழன்று உலைந்து அலைகொண்டிருந்த தலைகளுக்கு நடுவே புகுந்து அறிய முடியாதபடி கடந்து மறைவதைக் கண்டாள்.

சில கணங்களுக்குப்பின் மீண்டு உடல் எடை மிகுந்தவள்போல தள்ளாடி மெல்ல நடந்து மஞ்சத்தை சென்றடைந்தாள். அதன் இழுபட்ட கயிறுகள் முனகும்படி விழுந்து இறகுத் தலையணையில் முகம் புதைத்துக்கொண்டாள். அவள் உடல் துள்ளி விழுந்தது. உள்ளங்கால்கள் இரண்டும் அனலில் நின்றவை போலிருந்தன. பின் உள்ளங்கைகளும் எரியத் தொடங்கின. நாவும் மூச்சும் கண்களும் அனலென கொதித்தன. தழலெழுந்து வயிற்றை நெஞ்சை உருக்கி பற்றி எழுந்தாடத் தொடங்கியபோது முற்றிலும் காலம் இல்லாதாயிற்று.

அவள் தன்னை உணரத் தொடங்கியபோது களைத்து கைகளும் கால்களும் தனித்தனியாக உதிர்ந்து கிடக்க சித்தம் கம்பத்தில் கொடியென தனித்து படபடத்தது. கொடி கிழிந்துவிடுவதுபோல் துடித்தது. நெய்யில் சுடரென தனித்தெழுந்து வெறும்வெளியில் நின்று தவித்தது. தலையை இரு பக்கமும் அசைத்தபோது கண்கள் பெருகி வழிந்து காதுகளை அடைந்திருப்பதை

உணர்ந்தாள். ஓங்கி அறைந்து நெஞ்சை உடைக்கவேண்டும் என்று வெறிகொண்டாள். ஆனால் இமைகளை அசைப்பதற்குக்கூட எண்ணத்தின் விசை எதுவும் எஞ்சியிருக்கவில்லை.

அந்த இரவு தன்னை என்ன செய்கிறதென்று அவளால் உணர முடியவில்லை. பளிங்குக் கலம் விழுந்து உடைந்து பல நூறு துண்டுகளானதுபோல் உள்ளம் வெறும் சொற்களின் தொகையாக இருந்தது. ஒன்றோடொன்று இணையாதபோது சொற்கள் முற்றிலும் பொருளற்றிருந்தன. பொருள் தேடி அவை ஒன்றையொன்று முட்டி மோதி குழம்பின. அந்த ஒழுங்கின்மையின் வலி தாளாமல் அவள் எழுந்தமர்ந்தாள். குடிலுக்குள் உலவினாள். சாளரத்தினூடாக குருதிநிறைந்த தாலமென எழுந்துவந்த நிலவை பார்த்தாள். முற்றமெங்கும் எழுந்தமர்ந்து விளையாடியும் உண்டும் குடித்தும் களித்துக்கொண்டிருந்த மக்களை நோக்கினாள். காட்சிகளில் உளம் பொருளேற்றாவிட்டால் அவற்றுக்கு ஒன்றுடனொன்று தொடர்பும் இசைவுமில்லை என்று அறிந்தாள்.

மீண்டும் வந்து சேக்கையில் படுத்து முகத்தை புதைத்துக்கொண்டாள். உடல்நோய் எளிது, நோயுறா உடல்பகுதியால் நோயை வெல்ல முயலலாம். உள்ளம் நோயுறுகையில் நோயே உள்ளமென்றாகிவிடுகிறது. இச்சொற்கள் அனைத்தையும் ஒன்றோடொன்று பொருள் கொள்ளும்படி இணைத்துவிட்டால் மட்டும் போதும். உள்ளமென்ற ஒன்று மீண்டு வந்தால் போதும். ஆனால் ஒரு சொல்லை பற்ற முயல்கையில் ஒரு நூறு சொற்கள் கிளைகளிலிருந்து எழுந்து கலைந்து கூச்சலிட்டு சுழன்று

பறந்தன. பற்றிய சொல் வெறித்த விழிகளுடன் செத்துக் குளிர்ந்திருந்தது.

இவ்விரவை தான் கடக்கவே போவதில்லை என்று தோன்றியது. ஆடைகள் அணிகள் அனைத்தையும் கழற்றிவிட்டு வெறுமொரு விலங்கென இவ்விருளில் பாய்ந்து திசை எல்லைவரை ஓடினால் இவையனைத்திலிருந்தும் விடுதலை பெறக்கூடும். அந்த முடிவின்மையின் பொருளிலாமை அளித்த அச்சம் பெருகி திரும்பி வந்து ஊருக்குள் இல்லத்திற்குள் உடைகளுக்குள் புகுந்துகொள்ளச் செய்தது. நானென்பது ஓர் இன்மை என உணர்வதே துயரத்தின் உச்சம். அவ்வின்மையின்மேல் சூடிக்கொண்டவையே பெயர், குலம், தன்னிலை, ஆணவம், உடல், அணிகள், உறவுகள் அனைத்தும்.

ஏன் இத்தனை துயருறுகிறேன்? இழந்தது எதை? எண்ணியிரா வஞ்சத்தை முன்னரும் சந்தித்திருக்கிறேன். புழுதியென சருகென உதிர்க்கப்பட்டிருக்கிறேன். ஆணவமென ஒரு துளியும் எஞ்சாது கவிழ்ந்து தரையில் சிந்திய அழுக்குக் கீற்றென கிடந்திருக்கிறேன். அவ்வின்மையிலிருந்துதானே முளைத்தெழுந்தேன்? பின்னர் வென்றடைந்து அள்ளிச் சுற்றிக்கொண்ட அனைத்தும் அவ்வெறுமையின்மீது அமைந்தவையே என்று உள்ளூர அறிந்திருந்தேன் அல்லவா? இவையனைத்தும் உதிர்ந்து மீண்டும் அந்த வெறுமைக்குச் செல்லும்போது நான் இழப்பதென்ன?

இழப்பல்ல, தோற்கடிக்கப்படுதல். முற்றாக வீழ்த்தப்படுதல். முழுத் தோல்வியில் இருந்து மீண்டு எழுவது எளிதல்ல. ஆணவத்தை ஆயிரம் மடங்கு பெருக்கி எழுந்து மண்ணில் ஆழ வேரூன்றி விண்ணைப்பற்றி முகில்தொட்டு உலாவும்படி

தலைதூக்கி நிற்கவேண்டியிருக்கிறது. அங்கிருந்து மீண்டும் சரிவதென்பது பெருவீழ்ச்சி. எதை இழந்தேன்? இத்தருணத்தில் அரசனென அமர்ந்திருக்கும் அவனை சிறைபிடித்து கழுவிலேற்ற என்னால் ஆணையிடமுடியும். அவை நடுவே நிற்கச் செய்யலாம். காடேகும்படி சொல்லலாம். இல்லை, அவை இயல்வதல்ல என்று அவள் உள்ளம் அறிந்திருந்தது. தன் மைந்தருக்குத் தந்தை என்பதனால், குருநகரியின் சந்திரகுலத்துக் கொடிவழியின் குருதி என்பதனால்.

நான் அடைந்ததனைத்தும் அவன் உவந்து அளித்ததே என்று அறிந்துகொண்டதே இத்தருணத்தின் தோல்வியா? அவன் அளிக்காத ஒன்றும் என்னில் எஞ்சவில்லை என்று எண்ணும் தன்னிரக்கமா? உயிரை மாய்த்துக் கொள்ளலாம். அது இத்தருணத்தின் தோல்வியை மீண்டும் வலியுறுத்துவது. இப்புள்ளியிலிருந்து சீறி மேலெழுவது எப்படி? இக்கணத்திலிருந்து விண்ணளாவ எழுவது எப்படி? இனி ஒளி உண்டு வளர இயலாது. இருள் குடித்து மண்ணுக்குள், பாதாளங்களில் விரிவதே வழியென்றாகும். பெருவஞ்சமே சுக்ரரின் மகளுக்கு தெய்வங்கள் வகுத்ததென்பதாகும்.

தெய்வங்களே, மூதன்னையரே, எத்தனை வெறுக்கிறேன்? கடுங்கசப்பன்றி ஒரு சொல் இல்லை. இத்தனை தொலைவுக்கு ஓர் உயிரை பிறிதொன்று வெறுக்கலாகுமா? தெய்வங்கள் சினக்குமோ? ஆனால் செய்வதொன்றுமில்லை. என்றும் அவனை வெறுத்துக்கொண்டுதான் இருந்தேன். என் உடலை கைப்பற்றியவன். என் உடலை அவன் ஆள்கையில் உள்ளிருந்த கசப்பு நொதித்து நுரைத்து பெருகியது. அவனுக்கு நான் என்னை அளித்தேன்? அன்று என் அகம் களித்திருந்தது. இவனை ஒரு கணமும் விரும்பியதில்லை. அதனால்தானா?

ஆம், அதனால்தான். தன் உடல்வெம்மை சேக்கையை கொதிக்கச்செய்வதை உணர்ந்து எழுந்தமர்ந்தாள். எழுக இருள்! எழுக நஞ்சு! எழுக ஆழுலகங்கள்! இரு கைகளின் நகங்களும் கைவெள்ளையை குத்திக்கிழிக்க பற்கள் உதடுகளில் குருதியுடன் இறங்கின.

புற்றுவாய் திறந்தெழும் ஈசல்களென என்னிலிருந்து கிளம்பி இவ்வறை நிறைத்து சுழன்று பறந்து சிறகுதிர்ந்து ஊர்ந்துகொண்டிருக்கும் இவ்வெண்ணங்கள் எவை? ஒவ்வொரு தருணத்திலும் மானுட உள்ளத்தில் எண்ணங்களைப் பெய்யும் தெய்வங்கள் விழி அறியாதபடி சுற்றிலும் காத்து நிற்கின்றன. முன்பு இத்தருணத்தை எதிர்கொண்ட மானுடர் நுரைத்து பெருக்கி இங்கு விட்டுச்சென்ற சொற்களா இவை? என்றும் இங்குள்ளனவா? மானுடர் பிறந்து வந்து இவற்றில் பொருந்தி பின் விலகி மறைகின்றார்களா? நதியென காற்றென கடலென மலைகள் என இச்சொற்கள் முடிவிலி வரை இருந்துகொண்டிருக்குமா என்ன?

அவள் தன்னினைவு அழிய விரும்பினாள். மது அருந்தலாம். அகிஃபீனாவுக்கு ஆணையிடலாம். கிருபரை அழைத்துச் சொன்னால் விரைவிலேயே அவை இங்கு வரும். ஆனால் அவள் இருக்கும் நிலை அவர்களுக்கு தெரிந்துவிடும். மூவரையும் இளவரசர்கள் என அவள் அறிவித்துவிட்டதை இப்பொழுது குருநகரியின் அகம்படியினரும் காவலரும் அறிந்திருப்பார்கள். இவ்விரவு முழுக்க அவர்கள் அதைப்பற்றித்தான் பேசி சலிக்கப்போகிறார்கள். அனைத்தையும் களைந்து வெறும் பெண்ணென அவர்கள் முன் சென்று நிற்பது என்பது சுட்டுப்பழுத்த வாள் ஒன்றை நெஞ்சில் தைத்துக்கொள்வதற்கு நிகர். பிறிதொன்றில்லை.

இவ்விரவுதான்... இதைக் கடப்பதொன்றுதான் வழி. அந்தக் கீழெல்லையில் ஒரு கீற்றுஒளி எழுவது வரைதான்.

ஒழுக்கு எத்தனை எடைகொண்டதாக ஆயினும், கணங்கள் சுட்டுப்பழுத்து வெம்மை கொண்டிருப்பினும், சென்றவையும் வருபவையும் குருதி சுவைக்கும் முட்பெருக்கென்று சூழினும் காலத்தால் நின்றுவிட முடியாதெனும் அருளைக் கொண்டுள்ளது மானுடம். கணம் பிறிதொரு கணம் மீண்டும் ஒரு கணம் என அது உருண்டு முன்சென்றே ஆகவேண்டும். அள்ளி தானளிக்கும் அனைத்தையும் இறந்தகாலம் என்று ஆக்கியே ஆகவேண்டும். தேர் கடந்து சென்றபின் நிலைத்திருக்கும் திறன் புழுதிக்கு இல்லை.

வெளியே முற்றத்திலிருந்து ஒவ்வொருவராக எழுந்து கடந்து சென்றனர். சூழ்ந்திருந்த குடில்களில் விளக்குகள் அனைத்தும் அணைந்தன. மறுஎல்லையில் மேடைப்பணியின் குறை தீர்க்கும் தச்சர்களின் ஓசை மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. பேச்சுக்குரல்கள், மரை திருகும் ஒலிகள். அங்கிருந்து நெய்விளக்குகளின் ஒளி செந்நிறக் கசிவாக பரந்து முற்றத்து மண்ணில் நீண்டிருந்தது. ஒளியை அங்கு சென்று தொட்டு காலால் கலைக்க முடியுமென்பதுபோல. இப்பெருவலியை நானே எனக்கு அளித்துக்கொள்கிறேன். ஆணவம் மிக்கவர்கள் தங்களை துன்புறுத்துவதில் பெருந்திறன் கொண்டவர்கள்.

எத்தனை இனிது குருதிச் சுவை? தன் குருதிச் சுவை. தன் சிதைச் சாம்பலைத் தொட்டு நெற்றியிலிடும் வாய்ப்பு ஒருவனுக்கு அளிக்கப்படுமென்றால் அவனடையும் பெருநிறைவுதான் என்ன? பேரரசி இங்கு இறந்தாள். வெளியே சென்று அப்பெருமுரசின் முழைதடி எடுத்து மும்முறை முழக்கி உலகுக்கு அறிவிக்க வேண்டும் அதை. இம்மேடையில்

இதுவரை நடந்த நாடகம் முடிவுக்கு வருகிறது. பெருநதி மீண்டும் ஊற்றுக்குத் திரும்புவதுபோல சுக்ரரின் சிறு குடிலுக்குச் சென்று அமையவேண்டும். அங்கு அவள் விட்டு வந்த இளமை காத்திருக்கக்கூடும். கற்று நிறுத்திய காவியத்தின் இறுதிச்சொல்லும் நுனி துடித்து காத்திருக்கக்கூடும்.

கிளம்புவதொன்றே வழி. உளம் உளத்தின்மேல் செலுத்திய பெருவிசையாலேயே அவள் களைப்புற்றாள். மஞ்சத்தில் சென்று படுத்தபோது ஒன்றோடொன்று முட்டிக்கொண்ட நூறு சொற்றொடர்கள் இறுகி அசைவிழந்து நின்றன. பின் அவள் உளநெருக்கடி மட்டுமே அளிக்கும் ஆழ்துயிலில் அமிழ்ந்தாள்.

# மாமலர் - 84

### 84. பிறிதொரு சோலை

தேவயானி தன்னை உணர்ந்தபோது ஒரு கணம் சோலையில் இருந்தாள். ஹிரண்யபுரியா என வியந்து இடமுணர்ந்து எழுந்தமர்ந்தாள். பறவையொலிகள் மாறுபட்டிருந்ததை கேட்டாள். உடல் மிக களைத்திருந்தது. வாய் உலர்ந்து கண்கள் எரிந்தன. சாளரத்தினூடாகத் தெரிந்த வானம் கரியதகடு போலிருந்தது. சாளரத்திரையை விலக்கி தொலைவை நோக்கியபோது விடிவெள்ளியை கண்டாள். எண்ணியிராத இனிய சொல் போன்று அது அவளை உளம்மலரச் செய்தது. விழியசைக்காது அதையே நோக்கிக்கொண்டிருந்தாள். ஒரு முத்து. ஓர் ஊசித் துளை. ஒரு விழி. ஒரு யாழ் நரம்புத்துடிப்பு. ஒற்றைச்சிறுமணியோசை.

மொத்தப் புவியையும் ஒரு பெருங்கலமென உந்திக்கவிழ்த்து அதில் நிறைந்திருக்கும் இருளனைத்தையும் உருகி ஓடசெய்கிறது. இருள் கரைவதை அவள் நோக்கிக்கொண்டிருந்தாள். முதற்பறவை ஒலியை தொடர்ந்தெழும் ஒலிக்கலவை. முதல் செந்தீற்றல். பெருஞ்சோர்வுக்குப் பின் விடிபவை புத்தம்புதிய காலைகள். ஒரு சிறு சாம்பல்நிறக் குருவி சிறகடித்து வந்து சாளரத்தினூடாக பாய்ந்து உள்ளே நிறைந்த விடிகுளிர்காற்றில் தாவித் தாவி சுழன்று மீண்டும் சாளரத்தை அடைந்தது. சட்டத்தில் அமர்ந்து இருமுறை சிறகடுக்கியபின் மணிக்கண்களை உருட்டி சிறு அலகைத் திறந்து ரிப் ரிப் என்றது. துடித்தெழுந்து காற்றில் ஏறி அரையிருளைக் கிழித்து அப்பால் சென்று மறைந்தது.

காலடி ஓசை கேட்டு கிருபர் வருவதை அவள் உணர்ந்தாள். வாயிலுக்கு அப்பால் நின்று அவர் வாழ்த்துரைக்க உள்ளே வரும்படி கையசைவால் ஆணையிட்டாள். கிருபர் உள்ளே வந்து தலைவணங்கி “அனைத்தும் சித்தமாகிவிட்டன, பேரரசி. முதல்ஒளி எழுகையில் குடித்தெய்வங்களுக்கு பூசனைகள் தொடங்குகின்றன. அதன் பின்னர் படையலும் கூட்டுணவும். தொடந்து இளையோரின் போர்விளையாடல்கள். உச்சிப்பொழுதில் உணவுக்கும் ஓய்வுக்கும் பின்னர் அந்தியில் பெண்களும் இளையோரும் ஆடல்நிகழ்ச்சிகளை நிகழ்த்துகிறார்கள்” என்றார். “நான் சித்தமாக வேண்டும். சேடியரை அனுப்பச் சொல்லுங்கள்” என்றாள். கிருபர் எந்த மாற்றமும் தெரியா விழிகளுடன் “நேற்று அந்தியிலேயே சாயாதேவி தனிப்புரவியில் கிளம்பிச் சென்றார். தங்கள் ஆணை என்று தெரிவிக்கப்பட்டது” என்றார். அவள் ஆம் என்று

தலையசைத்தாள். மீண்டும் ஒருமுறை தலைவணங்கி அவர் வெளியே சென்றார்.

எழ எண்ணம் இருந்தும் உடல் அசையாமலிருந்தது. வெளியே வானம் ஒளிக்கசிவு கொண்டு வருவதை எண்ணமில்லாது ஒழிந்த உள்ளத்துடன் நோக்கிக்கொண்டிருந்தாள். கல்வளையல்களின் ஒலி கேட்டது. தொல்குடியைச் சேர்ந்த இரு பெண்கள் உள்ளே வந்து கதவருகே நின்றனர். ஒருத்தி கதவை அசைத்து ஒலியெழுப்பினாள். புன்னகையுடன் தேவயானி எழுந்தபோது ஒருத்தி “நீங்கள் எங்களைவிட மிக உயரமாக இருக்கிறீர்கள், பேரரசி” என்றாள். அவர்களுக்கு முறைமைச்சொல் உரைக்கவும் வணங்கவும் தெரிந்திருக்கவில்லை.

தேவயானி புன்னகையுடன் ஒருத்தியின் அருகே சென்று தோளைத்தொட்டு “ஆம், ஆனால் என்னளவு உயரமிருந்தால் உங்களால் காடுகளுக்குள் எளிதில் புகுந்து செல்ல முடியாதல்லவா?” என்றாள். “ஆம்” என்றாள் அவள். “ஆகவே உங்கள் உடல் உங்களுக்குப் பொருத்தமானதே. இருவருமே இளமான்களைப்போல் அழகிகள்” என்றாள். இருவரும் நாணி உடல் வளைத்து பின் கைகளால் வாய்பொத்தி ஓசையிட்டு சிரித்தனர். “நான் நீராடவேண்டும். எனது ஆடைகளை எடுத்துக்கொண்டு வருக!” என்றாள். முதல்பெண் “இதோ, எடுத்துக்கொண்டு வருகிறேன்” என்றபின் குழம்பி “எந்த ஆடை என்று எங்களுக்குத் தெரியவில்லை, பேரரசி. தாங்களே எடுத்துத் தந்தால் நாங்கள் கொண்டுவருகிறோம்” என்றாள்.

சிரித்தபடி தேவயானி சென்று பேழையைத் திறந்து தன்னுடைய அணியாடைகளையும் உள்ளாடைகளையும் எடுத்து வைத்தாள். அவர்கள் அதை மூங்கில் கூடைகளில்

அடுக்கி எடுத்தபடி அவளுடன் வந்தனர். முற்றத்தைக் கடந்து சுனைக்குச் செல்லும்போது இருவரும் அவளுடன் இடைவெளி அழிந்து அணுகிவிட்டிருந்தனர். “பேரரசி என்று சொன்னபோது நாங்கள் தெய்வங்களைப்போல என்று கற்பனை செய்துகொண்டிருந்தோம். ஏனென்றால் கதைகளில்தானே தெய்வங்களும் பேரரசிகளும் வாழ்கிறார்கள். ஆனால் நேரில் பார்த்தபோதுதான் நீங்கள் மானுடர் என்று தெரிந்து கொண்டோம்” என்றாள் ஒருத்தி. “ஆனால் தேரில் வருகையில் உண்மையில் தெய்வம் போன்றே தெரிந்தது. நீங்கள் பேசி சிரித்தபோதுதான் மானுடப்பெண் என்று தெளிந்தது” என்றாள் இன்னொருத்தி.

“இங்கெல்லாம் பெண்கள் இவ்வாறு நிமிர்ந்து அமர்வதற்கு ஆண்கள் ஒப்புவதில்லை. நாங்கள் மீறினால் எங்கள் ஆண்கள் அடிப்பார்கள்” என்றாள் முதல் மலைப்பெண். “ஆண்கள் ஒருபோதும் நம்மை அடிக்க ஒப்புக்கொள்ளக்கூடாது” என்றாள் தேவயானி. “ஏன்?” என்று அவள் கேட்டாள். “உடல்மேல் அவர்கள் செல்வாக்கு செலுத்தினார்கள் என்றால் உள்ளத்திலும் எண்ணத்திலும் அவ்வாறே ஆகிவிடும். பிறகு அவர்களின் அடிகளை நாமே கேட்டு பெற்றுக்கொள்வோம்” என்றாள் தேவயானி. “ஆம், உண்மைதான். ஆனால் அவர்கள் அடிக்கும்போது என்ன செய்வது?” என்றாள் இரண்டாமவள். “கண்ணில் மண்ணை வாரி வீசிவிட்டு அப்படியே ஓடிவிடவேண்டியதுதான்” என்றாள் முதலாமவள்.

இருவரும் அந்தச் சிறு நகைச்சுவைக்கு உடல்குலுங்க சிரித்தனர். சிரிப்பை நிறுத்தி கண்களைத் துடைத்தபின் மீண்டும் வெடித்துச் சிரித்தனர். முகம் சிவந்து உடலே அதிர சிரித்து பின் மூச்சிரைக்க ஓய்ந்தனர். தேவயானி தன் முகம்

மலர்ந்திருப்பதை உணர்ந்தாள். ஒரு சிரிப்பில் மிக எளிதாக ஒதுக்கித் தள்ளக்கூடியவைதானா இவையனைத்தும்? முகில்களைத்தான் மலையென எண்ணிக்கொண்டிருந்தோமா? அவ்வெண்ணம் வந்ததும் அவள் மீண்டும் சோர்வடைந்தாள்.

நீர் விளிம்பருகே அரசமரத்தின் வேர்களில் ஆடைக்கூடையை வைத்தனர். முதலாமவள் “தாங்கள் நீராடும்போது ஆண்கள் அனைவரும் வெளியே சென்றுவிட வேண்டுமென்று சொல்கிறார்கள்” என்றாள். “யார்?” என்று தேவயானி கேட்டாள். “உங்கள் அமைச்சர்” என்று அவள் சொன்னாள். “எவருமே பார்க்கவில்லையென்றால் பெண்களுக்கு வருத்தமாக இருக்காதா என்று நான் அவரிடம் கேட்டேன். நான் கேட்டதே அவருக்குப் புரியவில்லை” என்றாள். இரண்டாமவள் சிரிப்பை அடக்கி பின் கையைத் தட்டியபடி உரக்க நகைத்தாள்.

குளிர்ந்த சுனை மரக்கூட்டங்களுக்கு நடுவே வானில் கசிந்த மெல்லிய ஒளியை தான் வாங்கி மான்விழிபோல் உள்ளொளிகொண்டு சருகுகள் உதிர மெல்ல சிலிர்த்தபடி கிடந்தது. ஆடைகளைக் களைந்து இடையில் மட்டும் சிற்றாடை அணிந்து நீரில் இறங்கினாள் தேவயானி. குளிர் கால்களைத் தழுவியபோதுதான் உடல் எத்தனை வெம்மை கொண்டிருக்கிறதென்று தெரிந்தது. கைநீட்டி பாய்ந்து நீரில் நெடுந்தொலைவு சென்று மூழ்கி முகத்தில் விழுந்த கூந்தலை தலைக்குப் பின்னால் சுழற்றி முடிந்தபடி எழுந்தபோது உடலிலிருந்து வெப்பம் ஒழுகிச் செல்வதை உணரமுடிந்தது. உள்ளே இருந்து ஒரு வெம்மை எழுந்து காதுமடல்களை சிவக்கச் செய்தது.

சேடியர்போல் தரையில் நின்று பொருட்களுக்கு காவல் இருக்காமல் இரு மலைப்பெண்டிரும் ஆடை களைந்து நீரில்

பாய்ந்து நீந்தி அருகே வந்தனர். முதலாமவள் “மறுஎல்லை வரை சென்று வருவோமா?” என்றாள். “ஆம்” என்றபடி தேவயானி நீந்தினாள். நீண்ட கைகளைத் தூக்கி வைத்து அவள் நீந்தியபோதிலும்கூட ஒரு மலைப்பெண் கால்களால் நீரை உந்தி மீன்போல துள்ளித் துள்ளி விழுந்து அவளை முந்திச் சென்றுவிட்டாள். மறுகரையில் சரமலர் சிலிர்த்த நாணல்கள் நடுவே நின்ற பாறை ஒன்றில் ஏறி நின்று கைகளை அசைத்து வெண்பற்களைக் காட்டி உரக்க நகைத்தாள். தொடர்ந்து நீந்திச்சென்ற தேவயானி அப்பாறையில் ஏறிக்கொண்டாள்.

“உங்கள் முலைகள் பெரியவை, அரசி. யானை மத்தகம் போலிருக்கின்றன அவை” என்றாள் அவள். தேவயானி நகைத்து “ஆம், எங்களுக்கு அப்படித்தான்” என்றாள். “உங்கள் குழந்தைகளும் பெரிதாக இருக்குமோ?” என்றாள் தொடர்ந்து நீந்தி அவளருகே வந்து நின்ற இன்னொரு பெண். “ஆம், அவர்கள் அரசர்கள் அல்லவா?” என்று கரையில் நின்ற முதலாமவள் சொன்னாள். தேவயானி “வருக!” என்று சொல்லி மீண்டும் நீரில் பாய்ந்து நீந்தி முதற்கரைக்கு செல்லலானாள். கூவிச் சிரித்தபடி அவர்கள் தொடர்ந்து வந்தனர். ஒருத்தி தேவயானியின் முடியைப்பற்றி இழுத்து மூழ்கடித்த பின் தாவி விலகிச்சென்றாள். தேவயானி சிரித்தபடி அவளை அணுகி பிடித்து நீரில் மூழ்கடித்து தலைக்குமேல் தாவி அப்பால் சென்றாள்.

நீராடும்போது முழுக்க அவர்கள் இடைமுறியாது பேசிக்கொண்டே இருந்தனர். சிட்டுக்குருவிகளைப்போல களிப்பு இயல்பாக சொற்களாகி சிந்திக்கொண்டே இருந்தது. அச்சிற்றூருக்கு வெளியே மனிதர்களையோ நிலங்களையோ அவர்கள் பார்த்ததில்லை. ஆனால் மொழி வழியாக

அவர்களுக்கு பாரதவர்ஷம் முழுமையும் தெரிந்திருந்தது. அணிகளைப்பற்றி ஆடைகளைப்பற்றி அவர்கள் அவளிடம் உசாவிக்கொண்டிருந்தனர். ஒவ்வொரு செய்திக்கும் மகிழ்ந்து சிரித்து குலுங்கி மீண்டும் வினாக்களை எழுப்பினர். அணிகளைப்பற்றிய பேச்சில் சலித்து உறவுகளைப்பற்றிய பேச்சுக்கு சென்றனர். அதில் குன்றா ஆர்வம் அவர்களுக்கு எழுந்தது. ஆண்களைப் பற்றித்தான் அவர்கள் கேட்டனர். வீரர்களை, பயணிகளை.

“அங்கே தெற்கு முனையில் கடல் இருக்கிறது” என்றாள் முதலாமவள். “கடலென்றால் இந்தச் சுனைபோல ஆயிரம் மடங்கு பெரிது.” கைகளை விரித்து “அவ்வளவு பெரிது. அதன் முனையில் ஒரு சிறுமியை தெய்வமாக நிறுத்தியிருக்கிறார்கள். மெய்யான சிறுமி அல்ல. முன்பு மெய்யான சிறுமியாக இருந்தாள். அதன் பிறகு அவளை சிலையாக ஆக்கிவிட்டார்கள். அவளை கன்னித்தெய்வம் என்று தொழுகிறார்கள். அந்தத் தெய்வம் எப்படி இருக்குமென்று நான் கேட்டபோது பெரிய கண்களுடன் அஞ்சிய சிறுமி போலிருக்கும் என்று எங்கள் பூசகர் சொன்னார். அவள்தான் வெல்லப்படாத அரசி. ஏனென்றால் அவள் கன்னி” என்றாள்.

அவர்கள் உதவ தேவயானி அரசிக்குரிய ஆடை அணிந்து மணிமுடி சூடி ஒருங்கி வந்தாள். அவர்கள் “சென்றுவிடாதீர்கள் அரசி, இதோ நாங்களும் ஆடை மாற்றி வருகிறோம்” என்றபடி விரைந்து ஓடி தங்கள் குடி முறைப்படி இடைசுற்றி தோளிலிட்ட மான்தோல் ஆடை அணிந்து கல்மாலைகளும் கல்வளைகளும் குலுங்க ஓடி வந்தனர். “நீங்கள் இருவரும் என் அருகே நில்லுங்கள்” என்று தேவயானி சொன்னாள். “ஆம், நாங்கள் உங்கள் அருகே இருக்க வேண்டுமென்று அமைச்சர்

சொன்னார். எங்கள் கல்மாலைகளைப் பார்த்துவிட்டு பொன்னணிகள் வேண்டுமா என்றும் கேட்டார். வேண்டாம் என்றோம்” என்றாள்.

“ஏன்?” என்று தேவயானி கேட்டாள். “அவற்றை நாங்கள் அணியலாமா என்று எங்கள் குடிமூத்தார் முடிவெடுக்க வேண்டும். அவர்கள் அதைப்பற்றி இன்னும் பேசி முடிக்கவே இல்லை. எந்த ஒரு செய்தியையும் அவர்கள் பேசி முடிப்பதற்கு பல மாதங்களாகும். நீங்கள் அந்த அணிகளை இங்கு கொடுத்துவிட்டுச் செல்லுங்கள். அவர்கள் முடிவெடுத்த பிறகு நாங்கள் அணிகிறோம்” என்றாள். “வேண்டாம் என முடிவெடுத்தால்?” என்று தேவயானி சிரித்தபடி கேட்டாள். “அப்படி முடிவெடுத்தால் நான் முதுதந்தையின் முடியைப்பிடித்து உலுக்குவேன். வேண்டாம் என்று சொல்லிவிடுவாரா என்ன?”

வெளியே சூதர்கள் தங்கள் இசைக்கலங்களுடனும் அணித்தாலங்களுடனும் காத்து நின்றிருந்தனர். காலையொளி சுழித்தும் வளைந்தும் மின்னும் கவச உடையணிந்த காவலர்கள் படைக்கலங்களுடன் நிரைவகுத்தனர். அவள் கைகூப்பியபடி வெளியே வந்ததும் வாழ்த்தொலிகளும் மங்கலஇசையும் ஒருங்கே எழுந்தன. குருநகரியின் செங்கோலுடன் கவசவீரன் முன்னால் செல்ல கொடிஏந்திய வீரன் தொடர படைக்கலமேந்திய வீரர்கள் நிரைவகுத்து முன்னேகினர். அவர்களுக்குப் பின்னால் தேவயானி இருபுறமும் மலைக்குடிச்சேடியர் தொடர அரசியருக்குரிய நீள்காலடிகொண்ட சீர்நடையில் சென்று மேடையை அடைந்தாள்.

பணிக்குறை தீர்க்கப்பட்டு மலர்களும் மாலைகளும் கொண்டு அணி செய்யப்பட்ட மேடையின் நடுவே தோதகத்தி மரத்தால் புதியதாக செய்யப்பட்ட அரியணை இருந்தது. அவள் அதில் அமர்ந்ததும் முற்றம் முழுக்க கூடிநின்ற குடியினர் கைகளைத் தூக்கி வாழ்த்தி குரலெழுப்பினர். பெண்கள் குரவையிட்டனர். அவர்களை முற்றிலும் புதியவர்களைப்போல அவள் நோக்கிக்கொண்டிருந்தாள் அவ்வாழ்த்தொலிகள் வேறெவருக்கோ அளிக்கப்படுவதுபோல் தோன்றியது. அத்தனை விரைவாக அனைத்திலிருந்தும் தன் உள்ளம் விலகிவிடுமென்று எண்ணியபோது அவளுக்கே விந்தையாக இருந்தது. விலகிநின்று நோக்குகையில் அவை எத்தனை வேடிக்கையாக பொய்யாகத் தெரிகின்றன என்று வியந்துகொண்டாள். அத்தனை அவைகளிலும் முற்றிலும் விலகிய சிலர் இருந்திருப்பார்கள். அவர்கள் முன் இளிவரல்நடிகையாக அமர்ந்திருந்திருக்கிறேன்.

அணிச்சொல் கோத்து அமைத்த வாழ்த்துக்கள் நகைகள் போலிருந்தன. நகைகள் எத்தனை பொய்யானவை! மானுடனின் ஆணவமே நகைகள். எனக்கு மலர் போதவில்லை தளிர் திகையவில்லை என அவன் தெய்வங்களிடம் சொல்கிறான். முகமனுரைகள். உணர்வெழுச்சியால் சொல்லப்படுவனவற்றைச் சேர்த்து உணர்வை நீக்கி அணிமொழிகளென்று ஆக்கிக்கொண்டிருக்கிறார்கள். பொய்மலர்கள்போல. எவரை புகழ் பாடுகிறார்கள்? மண்ணாளும் அனைவருக்கும் ஒரே புகழ்மொழி என்றால் புகழப்படுவது மண்ணாள்வதென்னும் செயல்பாட்டை அல்லவா? வணக்கமுறைமைகள். நடனங்களிலிருந்து எடுக்கப்பட்ட அசைவுகளை நடனமறியாதோர் நிகழ்த்தும் பகடிக்கூத்து. காணிக்கைகள். இவற்றிற்கு இருமடங்கு தாங்கள்

கொள்ளப்போவதில்லை என்றால் இவற்றை எவர் கொண்டுவருவார்கள்? இது விலை. சொல்லில்லா வணிகம். அடிபணிதல்கள். பணிபவன் அதைக்கொண்டு ஆற்றலை ஈட்டி பிறிதொரு இடத்தில் ஆணையிடமுடியும்...

ஒவ்வொரு சடங்காக கடந்து செல்லும்தோறும் அவள் முற்றிலும் விலகி வேறெங்கோ இருந்துகொண்டிருந்தாள். போர்விளையாட்டு பயின்ற இளைஞர்கள் புலிகளையும் சிம்மங்களையும் குரங்குகளையும் கரடிகளையும் நடித்தனர். கலைவிளையாடிய பெண்கள் மான்களையும் மயில்களையும் மரக்கிளைகளையும் உடலில் காட்டினர். மொழி முதிராத தொல்குடியினர் என்பதனால் தலைமுறைகளாக அனைத்தையும் உடலசைவுகளாகவே அவர்கள் காட்ட வேண்டியிருந்தது. நகரங்களில் அவைகளில் நிகழும் பயின்று தேர்ந்த கூத்தரின் நடன அசைவுகளுக்கு இல்லாத இயல்புத்தன்மையும் ஒத்திசைவும் அவர்களின் ஆடலுக்கு இருந்தது. அது விழியசைவுபோல, நா நெளிவுபோல சொல்லெழுப்பும் உடலின் நடனம்.

அவை தொடர்புறுத்தும் சொற்களனைத்தையும் பிரித்தபின் நகரங்களில் நடனத்தையும் போர்க்கலையாடல்களையும் உருவாக்கி இருக்கிறார்கள். ஒவ்வொன்றையும் பொருளிழக்க வைத்த பின்னர் அவற்றை கலையென்று பயின்று நுண்மையாக்கிக்கொள்கிறார்கள் போலும். பின் மேலும் மேலும் நுண்மை. மேலும் மேலும் பொருளிழப்பு. அது ஒரு பூசல். தெய்வங்களிடம் அறைகூவுகிறான் மானுடன். நீ அளித்த மூவகை ஊழின் ஆயிரம்கோடி உணர்வுகளை விலக்கி எங்கள் அசைவுகளை தூய்மை செய்துகொண்டிருக்கிறோம். ஒன்பது மெய்ப்பாடுகள். மலையில் ஒரு கல்லை எடுத்து வைத்து

தெய்வமெனக் கும்பிடுவதுபோல. இதோ, ஒவ்வொன்றும் பொருளிழக்கிறது. ஒவ்வொன்றும். ஆம், ஒவ்வொன்றும் பொருளிழக்கின்றது.

அச்சொல்லாகவே அவள் நாள் முழுக்க எண்ணச்சுழல் கொண்டிருந்தாள். உச்சிப்பொழுது குடிலுக்கு வந்து உணவுண்டு சற்று இளைப்பாறி தோழியருடன் சொல்பரிமாறி மீண்டும் அரங்குக்குச் செல்லும்போது ஆழம் அச்சொல்லாக இருந்தது. இரவில் நிகழ்வுகள் முடிந்து குடிலுக்கு வந்து ஆடைகளை மாற்றி அமர்ந்தபோது கிருபர் வந்து தன் நிழல் உள்ளே விழும்படி வெளியே நின்றார். மெல்லிய கனைப்போசையால் அவரை உள்ளே அழைத்து "நாளை புலரியிலேயே நான் கிளம்பவேண்டும், அமைச்சரே" என்றாள்.

"இங்கு நாம் மூன்று நாட்கள் இருப்பதாக சொல்லியிருந்தோம், அரசி" என்றார் கிருபர். "ஆம், ஆனால் நான் சென்றாகவேண்டும். இன்று காலையே நான் கிளம்பவேண்டியிருந்தது. இவர்களின் கலைநிகழ்வுகள் இத்தனை ஒருங்கிணைக்கப்பட்டபின் ஏமாற்றத்தை அளிக்கவேண்டாம் என்றுதான் இங்கு தங்கினேன். நாளை இங்கு வேட்டையும் விருந்தும் மட்டும்தான் அல்லவா?" என்றாள். "ஆம் அரசி, நாளை மறுநாள் முற்றோய்வு. அதன் பிறகு கிளம்புவதாக இருந்தது." தேவயானி "நன்று! நீங்கள் இங்கிருந்து விருந்தையும் பிறவற்றையும் சிறப்பியுங்கள். நான் கிளம்புகிறேன். எனக்கு இரு புரவிகள் வேண்டும்" என்றாள்.

கிருபரின் விழிகள் எதையும் காட்டவில்லை. "ஆணை!" என்றார். "நான் ஹிரண்யபுரிக்கு செல்வதாக இருக்கிறேன். மாற்றுப் புரவிகளுடன் நான்கு புரவிவீரர்கள் மட்டும் துணை வந்தால் போதும்" என்றாள். "ஆணை!" என்று தலைவணங்கி கிருபர் வெளியே சென்றார்.

சரபஞ்சரத்திலிருந்து கிளம்பியபோது இருந்த விரைவில் குதிமுள்ளால் புரவியை உதைத்து உதைத்து அதன் உச்ச விரைவுக்கு கொண்டு சென்றாள். சிறு செவிகளை பின்னுக்குச் சரித்து, விழிகளை உருட்டி, தலைதூக்கி மூக்கை விடைத்து, மூச்சு சீறி நுரைத்துளிகள் அவள்மேல் முன்மழைச்சாரலோ என தெறிக்க மலைச்சரிவில் கூழாங்கற்கள் உருண்டு சிதற பாய்ந்திறங்கியது புரவி. சிற்றோடைகளை தாவிக்கடந்தது. சேறுபதிந்த சாலைவளைவுகளில் குளம்புகள் உதைத்து பறக்கவிட்ட சேற்றுத்துளிகள் அவள் முதுகில் விழுந்தன. உரக்க கூச்சலிட்டு அதை மேலும் மேலும் தூண்டி மூச்சிரைக்க உடலெங்கும் அனல் பறக்க விரைந்துகொண்டே இருந்தாள்.

உச்சிப்பொழுதில் ஆலமரத்தடியில் சற்றுநேரம் இளைப்பாறியபோது அனைத்து எலும்புகளும் உடைந்து உடலுக்குள் ஒரு குவியலாகக் கிடந்து குலுங்குவதுபோல் உணர்ந்தாள். தொடைத்தசை இழுத்துக்கொண்டிருக்க வலியுடன் பல்லைக் கடித்தபடி நடந்தாள். மரத்தடியில் துணைவீரன் இலைபறித்துப் பரப்பி செய்த மெத்தையில் படுத்தபோது மேலே பசுந்தழைவெளி தலைக்குமேல் குவியம்கொண்டு சுழன்றது. துயின்ற அரைநாழிகைக்குள் உள்ளம் துடித்தெழுந்து அப்பாலென நின்று பொறுமையிழந்து அவளை உலுக்கியது. மீண்டும் பாய்ந்து புரவிமேல் ஏறிக்கொண்டாள். அவளுடன் வந்த காவல் வீரர்கள் மூச்சோசையுடன் மார்பில் தலைகவிந்து துயின்று கொண்டிருந்தனர். அவள் எழுந்து சென்ற ஓசைகேட்ட பிறகே அவர்கள் விழித்தெழுந்து பாய்ந்து புரவிகளில் ஏறிக்கொண்டு அவற்றைத் தூண்டி கூச்சலிட்டபடி உடன் வந்தனர்.

அன்று மாலை வழிவிடுதி ஒன்றில் தங்குகையில் அவள் தோளிலும் கையிலும் தொடையிலும் இழுதசைகள் அனைத்தும் அடிபட்டு வீங்கியவைபோலிருந்தன. எலும்புகள் ஒன்றுடன் ஒன்று உரசி அனல் கொண்டு தேய்ந்தவை போலிருந்தன. புரவியிலிருந்து இறங்கிய பின்னரும் புரவியில் இருப்பதுபோலவே கால்கள் அகன்று உடல் அசைவு நீடிக்க அவளால் விடுதியின் படுக்கை அறை வரைகூட நடக்க முடியவில்லை. மரக்கிளைகளை பற்றிக்கொண்டு ஆங்காங்கே நின்று அவள் அச்சிறு மரக்கட்டடத்தை அணுகினாள். அதன் பொறுப்பாளன் தன் மனைவியுடன் அவளுக்காக காத்து நின்றிருந்தான். அவன் வணங்குவதை அறியாதவளாக உள்ளே சென்றாள்.

நீராடாமல் உணவருந்தாமல் மஞ்சத்தில் படுத்துக்கொண்டாள். விடுதிக்காவலன் அவள் ஆணைக்காக வாயிலில் காத்து நின்றிருக்க அவள் அப்படியே துயிலில் ஆழ்ந்தாள். சிறுமியாக எங்கோ சிறு காடு ஒன்றில் விளையாடிக்கொண்டிருந்தாள். மூன்று புலிகள் உடனிருந்தன. அவள் சிரித்தபடி ஓடி மல்லாந்து விழ அவள்மேல் கால்வைத்து எழுந்த வேங்கை ஆழ்ந்த கார்வைக் குரலில் "என்னால் உன்னை உண்ணமுடியும்" என்றது. அவள் சிரித்தபடி அதைப் பிடித்து தள்ளினாள். "நான் உண்ணவில்லை என்பதனால் நீ என் உணவல்லாமலாவதில்லை" என்றது அப்பால் நின்ற புலி. பிறிதொன்று "மூவரில் ஒருவர் எப்போதும் மீறவே விழைகிறோம்" என்றது.

அவள் காட்டுக்குள் ஊனுணவின் மணத்தை உணர்ந்தாள். "ஊனுணவு!" என்றாள். "எங்கள் குருளைகளில் ஒன்றைக் கொன்று சமைத்திருக்கிறார்கள்" என்றது இன்னொரு புலி.

அவள் விழித்துக்கொண்டபோது ஏவலன் உள்ளே வந்து ஊனுணவை அவள் அறைக்குள் வைத்துவிட்டு அவள் எழுவதற்காக காத்து நின்றிருப்பதை கண்டாள். உணவை பார்த்த பின்புதான் எத்தனை பசி என்று புரிந்தது. ஆயினும் எழுந்து உணவருகே சென்று அமருமளவுக்கு உடலை உந்த முடியவில்லை. அவள் நோக்கியதைக் கண்டு “உணவை படுக்கைக்கு கொண்டு வரவா, அரசி?” என்று ஏவலன் கேட்டான். “வேண்டாம்” என்றபடி கையை ஊன்றி உடலை நெம்பித்தூக்கி துணியால் ஆனவைபோல் துவண்டிருந்த கால்களை மரத்தரையில் ஊன்றி நின்றாள்.

அறை படகென தள்ளாடியது. கண்களை மூடி நிலைகொண்டபின் சென்று பீடத்தருகே அமர்ந்து அவ்வுணவை உண்டாள். முதல் வாய்க்குப் பின் உணவை உள்ளம் மறுக்கத் தொடங்கியது. செலுத்திச் செலுத்தி மீண்டும் சற்று உண்டுவிட்டு எழுந்தாள். கைகழுவிவிட்டு மீண்டும் படுக்கைக்கு வரும்போது மரவுரி விரிக்கப்பட்ட அம்மெத்தை எத்தனை இனியதென்று உளம் மகிழ்ந்தது. இதில் விடியும்வரை படுத்திருக்கப்போகிறோம் என்னும் எண்ணமே இனித்தது. கையால் அதன் மென்மையை அழுத்தி உணர்ந்தாள். சிதையும் புதைகுழியும் சேக்கையென வந்து எப்போதும் உடனிருக்கின்றன. விழுந்து புதைந்துகொள்பவள்போல் தன்னை உள்ளே அழுத்திக்கொண்டாள். ஏவலன் கதவை சாத்தியபடி வெளியே சென்றான்.

அவள் துயிலில் ஆழத்தொடங்கியிருந்தாள். பாய்ந்து செல்லும் புரவியொன்றின்மேல் அப்படுக்கை அமைந்திருந்தது. மலைச்சரிவொன்றில் உச்சவிரைவில் அவள் இறங்கிக்கொண்டிருந்தாள். முதல் புள் ஒலிப்பதற்கு முன்னரே

அவள் விழித்துக்கொண்டாள். ஆழ்ந்த துயில் உள்ளத்தை தெளிவடையச் செய்திருந்தது. எழுந்தபோதே முகத்தில் ஒரு புன்னகை இருப்பது தெரிந்தது. கைகளைத் தூக்கி சோம்பல் முறித்தபின் வெளியே சென்று இருண்ட வானில் தெரிந்த விடிவெள்ளியை நோக்கினாள். அது ஒரு துண்டு இனிமையெனத் தெரிந்தது. நாவால் அதை வருடி அறியமுடியும். முதற்புட்குரல் அதை நோக்கி எழுந்தமைய அது மெல்ல அதிர்ந்தது. புட்குரல்கள் பெருகி எழத்தொடங்கின.

ஏவலன் அவளை அணுகி "ஒளிஎழும்போது கிளம்பிவிடுவோம், பேரரசி" என்றான். "ஆம்" என்று திரும்பி உள்ளே வந்து தன் மாற்று ஆடையை எடுத்துக்கொண்டு நீராடச் சென்றாள். குளிர்ந்த நீர் சிற்றலைகளுடன் கரை தொட்டுக்கிடந்த சுனையில் மென்மணலில் கால் புதைய இறங்கி இடைவரை நீண்டு சுருட்டிக் கட்டியிருந்த குழலை அவிழ்த்து நீட்டிவிட்டு பாய்ந்து மூழ்கி எழுந்தாள். குளிர்நீர் எண்ணங்கள் அனைத்தையும் நனைத்து படியச் செய்தது. மழைக்குப்பின் மணல் அலைகளென சித்தம் மென்மையாக பரவிக்கிடந்தது. ஒரு பறவைச் சுவடுமில்லா மென்கதுப்பு. சுனையின் விளிம்புகளில் இரவெல்லாம் நெளிந்த சுனையின் அலைவடிவுகள்.

சுற்றிலும் மரக்கிளைகளின் விளிம்புகள் தீட்டப்பட்ட வேல்முனைகள், வாள்கருக்குகள், அம்புநுனிகள் என ஒளிகொள்ளத் தொடங்கின. காடு குரங்குகளின் ஒலியால் எக்களித்துக்கொண்டிருந்தது. மீண்டும் மீண்டும் புலரி அளிக்கும் நம்பிக்கைதான் மானுடனை வாழ வைக்கிறது. இருத்தல் என்பது இனிமை. அனைத்து துயர்களுக்கும் மாற்று அதுதான். உண்ணுதல், உறங்குதல், நீராடுதல். மரங்கள் நடுவே,

ஓடைகளின் அருகே, விண்ணுக்குக் கீழே இனிய காற்றில், நறுமணத்தில், மெல்லோசைகளில் கரைதல். துயரென்பது இருத்தலை மறுத்தல். இருத்தல் பொருளிழந்துபோதல். இருத்தல் இனிமை என உறுத்து வந்து உரைக்கும் இயற்கை ஒன்றே அதற்கு மாற்று.

அப்போது அங்கிருந்தே கிளம்பி எங்கோ அவளுக்கென காத்திருக்கும் அந்த இனிய தவச்சோலை ஒன்றுக்கு சென்றுவிட வேண்டுமென்று தோன்றியது. இப்புவியில் எவரும் அவளுக்கு பகைவர்களில்லையென்பதுபோல, எவரிடமும் கடன்கள் இல்லையென்பதுபோல. எப்போதும் இருந்தது அச்சோலை அவளுக்குள். அவளுக்கு மட்டுமே உரியது. அங்கு ஆண்டு முழுக்க மலரும் கல்யாண சௌகந்திகம் ஒன்று நின்றிருக்கிறது. நினைத்த மணத்தை காட்டும் வானத்து மலர்ச்செடி. அதன் அருகே சிறு குடில் வளைத்தோடும் சிறு இன்சுனை. அங்கு சென்றுவிட வேண்டும்.

அவ்வெண்ணம் எழுந்ததுமே தன் வஞ்சத்தை சிக்கிமுக்கிக் கற்களென உரசி அனலெழுப்பிக் கொண்டாள். இல்லை, இவ்வெறுப்பை ஒருபோதும் அணையவிடலாகாது. என் ஆணவம் எஞ்சவேண்டும். எனக்கிழைக்கப்பட்ட தீங்கிற்கு நிகர்செய்யும் வரையாயினும். மீண்டும் மீண்டும் ஆண்களால் தோற்கடிக்கப்படும் பெண் நான். அவர்களைவிட உயர்ந்தவள் என்பதனாலேயே அஞ்சப்படுகிறேன். நுகர்ந்து துறக்கப்படுகிறேன். நல்லுணர்வால் ஏமாற்றப்படுகிறேன். பெண்ணின் பெருஞ்சினமென்ன என்று இவர்கள் அறியவேண்டும். அது சூதர் சொல்லில் என்றும் வாழவேண்டும். நிகர்செய்யப்படா பழி பெருகும். எரியை எரியே அணைக்கமுடியும் என்பது நெறி.

# மாமலர் - 85

**85. இறுதி நஞ்சு**

ஹிரண்யபுரியை அடைய ஒரு நாள் இருக்கையில்தான் யயாதி குருநகரியிலிருந்து கிளம்பி தன்னைத் தொடர்ந்து வந்துகொண்டிருப்பதை தேவயானி அறிந்தாள். அவன் பெயர் நீண்ட இடைவேளைக்குப்பின் காதில் விழுந்ததும் ஒரு திடுக்கிடலை உணர்ந்தாள். உடலே நாவென கசப்பை உணர்ந்தவள்போல. உடலே முகமென சுளிப்பு கொண்டவள்போல. ஏழு நாட்களாக சுடரொன்றை அணையாது காப்பதுபோல் அவள் தன் வஞ்சத்தை உள்ளத்தில் பொத்திக்கொண்டு சென்றாள். புரவிமேல் உடலை எளிதாக அமைத்துக்கொண்டு சீரான விரைவுடன் சென்றாள். புரவியின் தாளத்தை உடல் அடைந்த பின்னர் உடல்வலி குறைந்தது. ஆனால் இரவில் படுத்ததுமே துயில்வந்து மூடியது.

நன்கு துயின்றமையால் காலையில் விழிகள் துலங்க உடல் புத்துயிர்கொள்ள எழுந்தாள். சுனைநீராட்டும் குறைந்த உணவும் அவளை விடுவித்துக்கொண்டே இருந்தன. பசு ஒன்று மானாகி பின் கொக்கென்று எழுந்ததுபோல. உடலின் எடை குறையும்தோறும் உள்ளம் விடுதலைகொள்வதன் விந்தை என்ன? உடலசைவுகளை உள்ளம் எங்கோ நடிக்கிறது போலும். உடலே எடைகொள்கிறது. அவள் பின் மேலும் பின் என சென்று துழாவும் எண்ணங்கள் இயல்பாக விலகி தூயவிழிகளுடன் சூழ்ந்திருக்கும் காட்டையும் ஒளிர்ந்து ஊடுசென்ற ஓடைகளையும் சாலைமுன் எழுந்து மருண்ட விழிகளுடன் நோக்கிய மான்கணங்களையும் இருளலையென மலைச்சரிவொன்றில் எழுந்து குறுக்காகக் கடந்துசென்ற

காட்டுயானைக் கூட்டத்தையும் நோக்கியபடி சென்றாள். பின்னர் எண்ணிக்கொண்டு தன்னுள் இருந்து வஞ்சத்தை மீட்டெடுத்தாள். துயிலும் குழந்தையை உலுக்கி உலுக்கி விழிக்கச்செய்வதுபோல அதை திகழச்செய்தாள்.

ஹிரண்யபுரி ஒரு நாள் பயணத்தில் இருக்கிறதென்று உணர்ந்தபோது அவள் தன் வஞ்சத்தை மேலும் பெருக்கும் பொருட்டு நடந்த அனைத்தையும் சொல் தொட்டு தீட்டிக்கொண்டாள். நிகழ்வின் காட்சிகளும் உளப்பதிவின் ஓவியங்களும் தன்னுள் சொற்களாகவே அங்கிருப்பதை உணர்ந்தாள். ஒவ்வொரு நிகழ்வையும் நோக்கையும் அசைவையும் சொல்லென மாற்றிக்கொள்ள முடியும், பொருட்களை பணமென ஆக்கிக்கொள்வதுபோல. அந்தப் பணத்தை மீண்டும் பொருளென்றாக்கினால் அது பிறிதொன்று.

அச்சொல்லை நானே தெரிவு செய்ய முடியும் என்பது எத்தனை பெரிய வாய்ப்பு! இழந்ததை பறிகொடுத்தது என்றும் பழிசூடியதை சிறுமைசெய்யப்பட்டது என்றும் சொல்மாற்றம் செய்துகொண்டால் அது அவ்வண்ணமே ஆகிவிடுகிறது. மானுடனுக்கு உளமென்ற ஒன்றை அளித்த தெய்வங்கள் பயந்தது நற்கொடையா தீச்சொல்லா? தனிமையை கைவிடப்படுதல் என்றும் இயலாமையை வெறுமை என்றும் சினத்தை அறச்சீற்றம் என்றும் வஞ்சத்தை நெறியுணர்வு என்றும் மாற்றி அங்கே சேர்த்து வைத்திருக்கிறேன். நான் என நானுணரும் அனைத்தும் சொல் சொல்லென தேர்ந்து நான் அடுக்கிப் பின்னி படைத்தெடுத்தவை.

பதினேழாண்டுகால வாழ்விலிருந்து தன் வஞ்சத்திற்குரிய நிகழ்வுகளை மட்டுமே திரட்டி ஒற்றைப்பெரும்பரப்பென ஆக்கி அதில் தன் பிறிதொரு உருவை கொண்டுசென்று நிறுத்தினாள்.

அங்கு மீண்டும் வஞ்சம் ஊடென சினம் பாவென பின்னிய வாழ்க்கையொன்றை வாழ்ந்தாள். மீண்டும் மீண்டும் ஏமாற்றப்பட்டவளாக புறக்கணிக்கப்பட்டவளாக சிறுமை செய்யப்பட்டவளாக. நச்சு மட்டுமே நெய்யெனக் கரைந்த சிறுகடல். அதைக் கடைந்தெடுத்த ஆலகாலம்.

இறுதிச் சாவடியில் இருந்து அவள் கிளம்பும்போதுதான் குருநகரியிலிருந்து வந்த ஒற்றன் குதிரை வியர்வை மணமெழுப்ப சாலையில் இருந்து புழுதிமூடிய மீசையும் தாடியுமாக முற்றத்திற்குள் நுழைந்தான். அவனை முன்னரே அறிந்திருந்த தேவயானி கூர்ந்து நோக்கியபடி நின்றாள். அவளைக் கண்டதும் புரவியிலிருந்து இறங்கி அருகணைந்து முறைப்படி தலைவணங்கி முகமன் சொன்னபின் “செய்தியுடன் வந்துள்ளேன், பேரரசி” என்றான். அவள் திரும்பிப்பார்க்க குரல் கேட்கா தொலைவுக்கு காவலர்கள் விலகி நின்றனர்.

“குருநகரியிலிருந்து அரசரும் அமைச்சர் பார்க்கவரும் சிறு காவல்படையுடன் வந்து கொண்டிருக்கிறார்கள்” என்றான். அவள் சொல் என விழியொளி காட்ட “சரபஞ்சரத்தில் நிகழ்ந்தது அனைத்தையும் கிருபர் பறவையோலை வழியாக அரசருக்கு அறிவித்துவிட்டார். செய்தியறிந்ததுமே கிளம்பிவிட்டார்கள். அவர்கள் வரும் செய்தியை வழியிலிருந்த ஒற்றர்கள் எனக்கு பறவையோலை வழியாக அறிவித்தனர்” என்றான். தேவயானி “சிறைப்படுத்திச் செல்ல விழைகிறாரா என்ன?” என்றாள். அவ்வினாவின் பொருளின்மையை உணர்ந்தாலும் உள்நிறைந்த வஞ்சம் அதைக் கேட்டு நிறைவுகொண்டது.

“இல்லை அரசி, சிறிய காவல்படையுடன்தான் வருகிறார். தங்களைச் சந்தித்து மன்றாடும்பொருட்டு, பிழை பொறுத்தல்

கோரும்பொருட்டுதான்" என்றான் ஒற்றன். "தாங்கள் இளைய அரசியைக் குறித்த செய்தியை அறிந்ததை பார்க்கவர்தான் அரசரிடம் சென்று சொன்னார். அப்போது தன் தனியறையில் நூலாய்ந்துகொண்டிருந்த அரசர் அஞ்சி உளம் உடைந்து குரல் எழுப்பினார். கைகால்கள் நடுங்க எழுந்து நின்றபின் சுவடியை வீசிவிட்டு ஓடிச்சென்று தன் மஞ்சத்தறைக்குள் புகுந்து கதவை மூடிக்கொண்டார். பார்க்கவர் அக்கதவைத் தட்டி நெடுநேரம் அவரை அழைத்துக்கொண்டிருந்தார். பின்னர் அரசர் கதவைத் திறந்தபோது மூக்கு வழிவார மது அருந்தி நிலையழிந்திருந்தார். நாம் காட்டுக்குச் செல்வோம், காட்டில் வாழ்வோம் என திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டிருந்தார்."

"பார்க்கவர் உள்ளே நுழைந்து அவர் கையை பற்றிக்கொண்டு சொன்ன சொற்களை அவர் கேட்கவில்லை. பீடத்தில் அமர்ந்து தன் தலையை தானே அறைந்தபடி அழுதுகொண்டிருந்தார். பார்க்கவர் அவரது இரு கைகளையும் பிடித்து தடுத்து கடுஞ்சொல் சொல்லி சொல்நிலைக்கச்செய்து பின்னர் இனிய தாழ்ந்த குரலில் தேற்றினார். அதன் பிறகு இருவரும் அங்கிருந்தே பாய்ந்து வெளிவந்து புரவிகளில் ஏறிக்கொண்டு தங்களைத் தொடர்ந்து வரத்தொடங்கினர்" என்றான் ஒற்றன். "மூன்று குறுக்கு வழிகளினூடாக விரைவில் அவர்கள் அணுகமுடிந்தது. வழியில் இரு ஆறுகளில் படகுகளில் ஏறிக்கொண்டு விரைவுகொண்டனர். இன்னும் ஏழெட்டு நாழிகையில் அவர்கள் இங்கு வந்துவிடக்கூடும்."

தேவயானி நீள்மூச்சுடன் படியிறங்க "தாங்கள் இங்கு காத்திருப்பது நன்று. அரசரின் சொற்களைக் கேட்டுவிட்டு தாங்கள் முடிவெடுக்கலாம் என்பது அமைச்சரின் சொல்" என்றான் ஒற்றன். அவன் செல்லலாம் என்று இடக்கை

காட்டிவிட்டு திரும்பி காவலரிடம் “செல்வோம்” என்றாள் தேவயானி. அவர்கள் புரவியிலேறிக்கொண்டு விரைந்து சாலைகளில் குளம்புகள் தொட்டுப்பறக்க தாவிச்சென்றனர். அந்த இடத்தை விட்டு நீங்கியபோதிருந்தே தன் பின்னால் யயாதி வந்துகொண்டிருப்பதாக ஓர் உணர்வு இருந்துகொண்டிருந்தது அவளுக்கு. விலக விலக அது வலுத்தபடி வந்தது.

இரு தேவதாருமரத்தில் செதுக்கப்பட்ட இரு குலக்குறித்தூண்கள் நின்றிருந்த ஹிரண்யபுரியின் எல்லை வாயிலை அடைந்தபோது அவள் வந்துகொண்டிருக்கும் செய்தியை அறிந்து எல்லைக்காவலர்தலைவனும் பன்னிரு காவலரும் காத்து நின்றிருந்தனர். காவலர் தலைவன் தன் கையிலிருந்த அமுதகலசக் கொடியைச் சுழற்றி மும்முறை தாழ்த்தி வணங்கினான். அவன் அருகே புரவி வந்து நிற்க மூச்சிரைத்தபடி தேவயானி “தந்தை எங்கிருக்கிறார்?” என்றாள். அந்த நேர்வினாவால் அவன் திகைத்து பின் மீண்டு “அவர் ஹிரண்யபுரிக்குத் தெற்கே அமைந்துள்ள காகவனம் எனும் சோலையிலிருக்கிறார். மாணவர்கள் மட்டுமே உடனிருக்கிறார்கள். சென்ற ஏழாண்டுகளாக சொல்லவி நோன்பு கொண்டிருக்கிறார்” என்றான்.

புரவி கடிவாளத்தின் இழுப்புக்கு தலைதிருப்பி கால்தூக்க அவன் “பேரரசி, தாங்கள் அவரை பார்க்க வேண்டுமெனில் முன்னரே செய்தி அனுப்புவது நன்று. அறிவிப்பின்றி எவரையும் அசுரப்பேராசிரியர் பார்ப்பதில்லை” என்றான். தேவயானி அவனை திரும்பி நோக்கியபின் மறுமொழி சொல்லாமலேயே புரவியை தட்டினாள். மாந்தளிர் உடலில் வியர்வை வழிந்து உப்புமணத்துடன் புழுதிசுருட்டி மணிகளாகி

உருள, மூச்சில் குருதியின் அனல் வெம்மை எழ, குஞ்சி உலைய தலை குலுக்கி வாயில் தொங்கிய நுரையை உதறித்தெறிக்கவிட்டு புரவி முன்னங்காலால் தரையை மும்முறை தட்டியது. நீரிலிருந்து எழுந்ததுபோல மூச்சுசீறி, காதுகளை முன் கோட்டி, விழிகளை உருட்டி ஒருமுறை கனைத்தபின் தாவி ஹிரண்யபுரியின் எல்லையென அமைந்த பாலத்தை துடிதாளத்துடன் கடந்து அப்பால் சென்றது.

வழிகளனைத்தும் மாறிவிட்டிருந்தபோதிலும்கூட தன் உள்ளத்தில் அவை மிகத் தெளிவான அடையாளத்துடன் எழுவதை அவள் உணர்ந்தாள். அனைத்தும் மாறுகையிலும் மாறாமல் இருக்கும் ஒன்றை ஆழம் அறிந்திருக்கிறது. சுக்ரரின் குருநிலை அணுகுந்தோறும் அவள் புரவி விரைவுகொண்டது. அதன் தாளம் சூழ்ந்திருந்த காட்டுக்குள் பசுமையின் துடிப்பென ஒலித்தது. சிற்றோடை ஒன்றின் கரையில் கடிவாளத்தை இழுத்துப் பிடித்து அதை நிறுத்தினாள். வந்தடைந்துவிட்ட உணர்வு அவள் உள்ளத்தில் எழுந்ததும் அதுவரை செலுத்தி வந்த விசை முற்றிலும் தீர்ந்துவிட்டிருந்தது.

புரவியிலிருந்து இறங்கி எருமைத்தோல் காலணிகளை கழற்றி வீசிவிட்டு வெற்றுக்கால்களுடன் நடந்து சிற்றோடைக்குள் இறங்கி நீர் தழுவிச்சென்ற கரிய பாறையொன்றில் அமர்ந்தாள். கால்களை ஓடும் நீருக்குள் விட்டுக்கொண்டு அமர்ந்திருந்தபோது உடலெங்கும் எரிந்தெழுந்த வியர்வை குளிர்ந்து தோல் சிலிர்க்கத் தொடங்கியது. குளிர்ந்த தெளிநீரை அள்ளி முகத்திலும் உடலிலும் விட்டுக்கொண்டாள். உடல் குளிரக் குளிர உள்ளே கிழிந்து பறந்து துடித்துக்கொண்டிருந்த எண்ணங்களும் மெல்ல நனைந்து படியத்தொடங்கின. கண்களை மூடிக்கொண்டு தன்னைச் சூழ்ந்திருந்த நீரோசையை

மட்டும் கேட்டுக்கொண்டு அமர்ந்திருந்தாள். காட்டின் காற்றோசை அதனுடன் இணைந்துகொண்டது.

எழுந்து சென்று சுக்ரரை பார்க்கவேண்டுமென்று ஒரு சிறு உளப்பகுதி அவளை அழைத்தது. முரண்டு பிடிக்கும் யானையை செவி பற்றி இழுப்பதுபோல். அவள் தன்னிலை அங்கேயே நின்றிருக்க விழைந்தது. வந்தது அதற்காகத்தான் என்பதுபோல. சென்று செய்ய வேண்டியது என்னவென்று அறியாதது போல. தந்தையிடம் சொல்ல தன்னில் சொற்கோவை ஏதும் இல்லையென்பதால்தான் அந்தத் தயக்கம் என்று உணர்ந்தாள். ஐந்து சொற்றொடர்களை உருவாக்கிக் கொள்ள முடிந்தால் அங்கிருந்து கிளம்ப முடியும். நிகழ்ந்த அனைத்தையும் அவ்வைந்து சொற்றொடர்களில் சொல்ல வேண்டும். அதற்குள் உணர்வுகள் கிளர்ந்து அனைத்தும் கட்டற்று எழுந்துவிடும்.

எண்ணி எண்ணி நோக்கினும் சொல்லென ஆகாமல் விரிந்து கிடந்தது அந்தப் பதினேழாண்டுப் பெருவெளி. வழிநெடுக சொல்லெடுத்துக் கோத்து அவள் தீட்டிக்கொண்டிருந்த அனைத்தும் பிறிதொரு வெளியாக அப்பால் பரந்து கிடந்தன. ஒன்றையொன்று அறியாதவை. இரண்டும் அவளுடன் தொடர்பற்றவை என்று தோன்றியது. பலமுறை அவள் அங்கிருந்து உள்ளத்தால் எழுந்தாள். உடல் அங்கேயே அமர்ந்திருந்தது. நெடுநேரமாயிற்றென்று தோன்றியது. நீரருந்தி பிடரி சிலிர்க்க காற்றில் நின்று உடல் ஆற்றிக்கொண்ட அவள் புரவி அவள் எழாது அமர்ந்திருப்பதைக் கண்டபின் இருமுறை மெல்ல கனைத்து தலையை உலுக்கி காதுகளை அடித்துக்கொண்டபின் சென்று அப்பால் புல் மேயத்தொடங்கியது. தங்கள் புரவிகளை நீரூட்டி

மேயவிட்டபின் வெவ்வேறு மரநிழல்களிலாக அவளது காவல்வீரர்களும் படுத்துக்கிடந்தனர். புரவிகளின் தும்மலோசையும் செருமலோசையும் கேட்டுக்கொண்டிருந்தன. சிறு குருவிகள் வந்து அவற்றின்மேல் அமர்ந்து விளையாடத்தொடங்கின.

தொலைவில் வண்ண அசைவுகளாக அவள் யயாதியும் பார்க்கவனும் பிறரும் வருவதைக் கண்டாள். அவள் தலைக்குப் பின்னால் புரவிக்குளம்படி ஓசை ஒலித்துக்கொண்டிருக்க சரடில் சிலந்தி பறந்து அணுகுவதுபோல் அவர்கள் ஓசையின்றி வந்தனர். வண்ணங்கள் வடிவக்கூர் கொண்டன. முகமென்றாயின. விழிகள் என்று தெளிந்தன. யயாதி தன்னைப் பார்த்துவிட்டதை அவள் உணர்ந்தாள். அவன் புரவி விரைவழிந்தது. புரவியின் காதுகளின் மயிர்கூடத் தெரியுமளவுக்கு அணுகி வந்தனர். பிற காவலர்கள் நின்றுவிட பார்க்கவனும் அவனும் மட்டும் புரவிகளின் மேலிருந்து இறங்கி நடந்தனர்.

நீரைப் பார்த்ததும் யயாதியின் புரவி தலையைச் சிலுப்பி நீள்மூச்சு விட்டது. அவன் கடிவாளத்தை விட்டதும் ஆணை பெறாமலேயே புரவி நீரைநோக்கிச் சென்று குனிந்து குடிக்கத் தொடங்கியது. நீர் உள்ளே சென்றதும் உடல் சிலிர்த்து வால்சுழற்றி பசுஞ்சிறுநீர் கழித்தது. அச்சிறுநீரின் மணத்தை உணர்ந்து மேய்ந்து கொண்டிருந்த புரவிகள் தலைதூக்கி செவிகோட்டி மூக்கை நீட்டிச் சுழித்து விரித்து கனைத்தன. யயாதி தன் தோல்காலணிகளுடன் சில அடிகள் எடுத்து வைத்தபின் குனிந்து அவற்றைக் கழற்றிவிட்டு அவளருகே வந்தான். ஓடைக்கப்பால் மணற்சரிவில் நின்று அவளை நோக்கினான்.

அவள் அவன் விழிகளையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் கைகூப்பி “நான் பிறிதொன்றும் சொல்வதற்கு இல்லாதவன். என்னை வெறுமொரு உடல் மட்டுமே என்று இப்போது உணர்கிறேன். குருதி விந்து சீழ் மலம் இவையே நான். அரசி, நான் விழிநீரும்கூட. உடலின் விசைகளால் இயக்கப்பட்டவன். நிகழ்ந்தவை அனைத்திற்கும் என் விழைவன்றி பிறிதெதையும் விளக்கமென சொல்லமாட்டேன்” என்றான். அவள் கண்களைத் தாழ்த்தி நீரோடையை பார்த்துக்கொண்டிருந்தாள். “அறியா இளமைந்தனாக பிழைசெய்து மீண்டு அன்னையின் முன் வந்ததுபோல் இங்கு நின்றிருக்கிறேன்” என்று யயாதி சொன்னான்.

அவள் தன்னுள் எங்கெங்கோ தத்தளித்துக்கொண்டிருந்தாள். ஓடையில் மிதந்து வந்த சருகொன்று காலைத் தொட்டதும் திடுக்கிட்டு எங்கிருக்கிறோம் என வியப்பவள்போல திகைத்து பின்னர் நிமிர்ந்து அவனை நோக்கியபோது அவளுக்குள் சொல் முளைத்திருந்தது. “இது உன் மீதான வஞ்சம் மட்டும் அல்ல” என்றாள். பற்களைக் கடித்தபடி “ஆணென்பதாலேயே நீ பழி சுமந்தாகவேண்டும்” என்றபின் எழுந்து திரும்பி நடந்தாள்.

கிருதர்தான் தேவயானியை முதலில் பார்த்தார். அவரால் அவளை அடையாளம் காண முடியவில்லை. பதினேழாண்டுகளில் ஒன்பது முறை அவர் குருநகரியின் அரண்மனைக்கு வந்து சக்ரவர்த்தினியாக அவைவீற்றிருந்த தேவயானியை பார்த்திருந்தார். அத்தோற்றம் அவர் உள்ளத்தில் பதிந்து இளமை முதல் அவர் அணிந்த மற்ற தோற்றங்கள் அனைத்தையும் முற்றாக அழித்துவிட்டிருந்தது. குடிலுக்கு முன் சிறு கோடரியால் வேள்விக்கென சமதையை வெட்டிக்கொண்டிருந்தவர் விழி சுருக்கி மண்சாலையில் நடந்து

வரும் பெண்ணை பார்த்தார். எளிய வெண்ணிற ஆடை அணிந்து நீண்ட குழல் காற்றில் அலையடிக்க வெற்றுக்கால்களுடன் வந்தவள் நிமிர்ந்த நடையும் சீராகச் சுழலும் கைகளும் கொண்டிருந்தாள். அவர் அறிந்த வேறெவரையோ அவள் நினைவுறுத்தினாள். பின் உள்ளம் பற்றிக்கொண்டு வியப்புக்குரலுடன் அவர் எழுந்தார்.

தேவயானி குடில் வாயிலை அடைந்ததும் அவர் படிகளில் இறங்கி அவளை நோக்கி கைவிரித்தபடி ஓடி "வருக! வருக தேவி! என்ன இது? ஏன் எளிய தோற்றம்?" என்றார். "தந்தையைப் பார்ப்பதற்காக" என்று அவள் சுருக்கமாக சொன்னாள். "ஆம். தாங்கள் அரச உடையில் வராமல் இருந்தது நன்றே" என்றார் கிருதர். அவளுடன் நடந்தபடி "ஏன் என்று தெரியவில்லை. ஒருகணம் தொலைவில் உங்கள் அன்னை ஜெயந்தி என்று எண்ணிவிட்டேன். அதே நடை, அதே நோக்கு. நடுவயதில் பெண்டிர் தங்கள் அன்னையைப்போல் ஆவது எண்ணியிராத வியப்பளிப்பது" என்றபின் படலை விலக்கி உள்ளே சென்று நின்று புன்னகையுடன் "வருக!" என்றார்.

தொலைவில் சுஷமரும் சத்வரும் அவளைப் பார்த்து சிரித்து உவகைக் குரல் எழுப்பியபடி விரைந்து வந்தனர். சத்வர் அவளருகே வந்து "அரச அணிகளால் உங்கள் அழகும் நிமிர்வும் உருவாகவில்லை என்பது இப்போது தெரிந்தது. கலையமர் செல்வி வெண்கலை உடுத்து வந்ததுபோல் இருக்கிறீர்கள், தேவி" என்றார். தேவயானி புன்னகைத்து "நான் தந்தையை பார்க்கவேண்டும்" என்றாள். "அவர் சொல்லெழா நோன்பு கொண்டிருக்கிறார். நெடுநாட்களாகிவிட்டமையால் இப்போது விழிகளிலும் சொற்களின்றி ஆகிவிட்டிருக்கிறது.

உங்களை அவர் சந்திக்க விழைகிறாரா என்று தெரியவில்லை” என்றார் சுஷமர்.

கிருதர் “நான் உள்ளே சென்று நீங்கள் வந்திருப்பதை சொல்கிறேன்” என திரும்ப தேவயானி அவர் தோளைத் தொட்டு “வேண்டியதில்லை. நானே சென்று அவரை பார்க்கிறேன். தீச்சொல்லிட்டு என்னை அழிப்பார் என்றால் அவ்வாறே ஆகட்டும்” என்றபின் அவர்களைக் கடந்து பின் மையக்குடில் நோக்கி சென்றாள். நெடுநாட்களுக்குப்பின் தங்கள் தவக்குடிலுக்கு வந்திருந்தபோதிலும்கூட நலம் உசாவவோ முகமன்கள் உரைக்கவோ அவள் முற்படவில்லை என்பதைக் கொண்டே அவள் நிலையழிந்திருக்கிறாள் என்பதை கிருதர் உய்த்துணர்ந்து கொண்டார்.

அவள் உள்ளே சென்றதும் “என்ன ஆயிற்று?” என்றார் சத்வர். “அவள் பாரதவர்ஷத்தின் பேரரசி. ஒவ்வொரு புயலும் விசை பெருகி மையம்கொண்டு தேடி வரும் மலைமுடி போலிருக்கிறாள்” என்றார் கிருதர். “போர்க்களத்தில் யானைமேல் அமர்ந்திருப்பது போன்றது அரசனின் இடம் என்றொரு கவிச்சொல் உண்டு” என்றார் சுஷமர். “இது அரசுமுறைப் பயணமல்ல. தனிப்பட்ட முறையில் இடரோ துயரோ கொண்டிருக்கிறார்கள்” என்றார் சத்வர். “பார்ப்போம்” என்று கிருதர் குனிந்து தன் கைக்கோடரியை எடுத்துக்கொண்டார்.

மையக்குடிலில் வாயிலில் நின்றிருந்த இளம்மாணவன் தேவயானியைக் கண்டதுமே அடையாளம் கண்டுகொண்டு தலைவணங்கி விலகினான். அவள் குடிலின் கதவென அமைக்கப்பட்டிருந்த மூங்கில் படலைத் திறந்து உள்ளே சென்றாள். தரையில் விரிக்கப்பட்ட புலித்தோல் மீது

மலரமர்வில் கால் மடித்து கைகளை மார்பில் கட்டியபடி விழிமூடி அசைவிலாது அமர்ந்திருந்த சுக்ரரைக் கண்டு ஒருகணம் நின்றாள். அவர் இறந்து சிலையாக்கப்பட்டு அங்கிருக்கிறார் என்னும் எண்ணமே முதலில் எழுந்தது. “தந்தையே…” என்றாள். அவர் விழிகள் அதிர்ந்து இமைகள் மேலெழுந்தன. கண்கள் குருதிச் செம்மை கொண்டிருப்பதை அவள் கண்டாள். ஒருகணம் உளம் நடுங்கி பின்னடைந்தாள்.

திரும்பி வந்த உள்ளம் உந்தி முன்செலுத்த காலடி எடுத்து வைத்து அவர் அருகே சென்று முழந்தாளிட்டு அவரை நெற்றிநிலம்பட வணங்கி “தங்களைப் பார்ப்பதற்கென்று வந்திருக்கிறேன், தந்தையே” என்றாள். சுக்ரர் செவ்விழிகளால் அவளை நோக்கியபடி அசைவிலாது அமர்ந்திருந்தார். கொடுஞ்சின மூதாதைத் தெய்வமொன்றின் முன் நின்றிருப்பதாக அவள் உணர்ந்தாள். “நான் உங்களிடம் துயர் ஒன்றை முறையிடும்பொருட்டு வந்துள்ளேன், தந்தையே” என்றாள் தேவயானி.

அவள் மேலும் சொல்ல வாயெடுப்பதற்குள் அவர் கைகாட்டி “போதும்” என்றார். நெடுங்காலத்திற்குப் பிறகு நாவிலெழுந்தமையால் அவரது சொல் வெறும் மூச்சொலியாக இருந்தது. “நான் என்ன நிகழ்ந்ததென்று சொல்லவேண்டியுள்ளது. எவரிடமேனும் சொல்லும் பொருட்டே இத்தனை தொலைவு வந்தேன்” என்றாள். “அவன் சர்மிஷ்டையிடம் மைந்தரை ஈன்றுளான், அதுதான் இல்லையா?” என்றார் சுக்ரர். “ஆம், தங்களுக்கு எப்படி தெரியும்?” என்றாள் தேவயானி. சுக்ரர் “விருஷபர்வனின் ஒற்றர் அதை அறியாமல் இருப்பரா? அவனறிந்தால் என்னிடம் உரைக்காமலிருப்பானா? அம்மைந்தர் அரசகுடி பிறந்தோர்.

மானுடரின் வஞ்சங்களும் துயர்களும் குடிப்பிறப்பையும் ஊழையும் மாற்ற முடியாது” என்றார்.

நீள்மூச்சுடன் மெல்ல கால்மடித்து அமர்ந்துகொண்டு “ஆம் தந்தையே, அவர்களை முறையான அரசகுடியினராக அறிவித்துவிட்டுத்தான் வந்திருக்கிறேன்” என்று தேவயானி சொன்னாள். “ஆனால் என் வஞ்சம் அரசன் மீது பெருகிக்கொண்டே இருக்கிறது. என் நெஞ்சு ஒழியாது நான் அமைதி கொள்ள இயலாது. இச்செயலின் பொருட்டு அவன் துயர்கொள்ள வேண்டும். இதை எண்ணி நொந்து அழிய வேண்டும்.” இத்தனை எளிதாகவா சொல்வது என்று ஓர் உள்ளம் வியந்தது. பிறிதொரு சொல் இல்லை தன்னுள் என உணர்ந்துகொண்டது.

சுக்ரர் “அவ்வஞ்சம் வெளிப்பட்டபின் உன் உளம் ஒழியுமென்று உறுதியாக எண்ணுகிறாயா?” என்றார். “ஆம், ஒழியும். ஒருவேளை ஒழியவில்லையென்றால்கூட நான் அதை வெல்லும்பொருட்டு தவம் மேற்கொள்ள முடியும். ஆனால் இவ்வஞ்சத்தை என்னுள் கரந்தபடி என்னால் வாழமுடியாது” என்றாள். சுக்ரர் “அவனை நீ ஏன் பொறுத்தருளலாகாது? எப்படி மணிமுடியைத் துறந்து மீண்டாயோ அதைப்போல அவனையும் துறந்து காடேகினால் நீ விடுதலை கொள்வாயல்லவா?” என்றார்.

“இனி குருநகரிக்குச் சென்று மணிமுடி சூடி அமர்ந்திருக்கும் எண்ணமெனக்கில்லை. எண்ணினாலும் அது இயல்வதல்ல. ஆனால் ஒருமுறை தீண்டாமல் நான் படம் சுருக்க இயலாது” என்றாள் தேவயானி. “அன்று என்னைத் துறந்து சென்ற கசன்மேல் தீச்சொல் இடுகையில் என்னுள் உறைந்த அன்னையொருத்தி எழுந்து வந்து சொற்களை

பற்றிக்கொண்டாள். அன்றே நான் அவனை அழித்திருக்க வேண்டும். அதைச் செய்திருந்தால் இன்று இத்தனை நஞ்சு கொண்டிருக்கமாட்டேன்."

சுக்ரர் புன்னகைத்து "இதற்கு விளக்கமென எதையும் எவரும் சொல்லிவிடமுடியாது. இருந்தால்களும் ஆனால்களும் கொண்டதல்ல வாழ்க்கை. அது அவ்வண்ணமே அமைய வேண்டுமென்று ஊழால் வகுக்கப்பட்டது. ஊழுக்கு மானுடன் ஆற்றும் எளிய எதிர்வினைகளே இருந்தால்களும் ஆனால்களும். அவை வெற்றுச் சொற்கள். பொருளற்ற பொருமல்கள், ஏக்கங்கள்..." என்றார்.

தேவயானி பொறுமையிழந்து "நான் சொல்லாட விரும்பவில்லை. இதோ, அவன் வந்துகொண்டிருக்கிறான். இத்தருணத்தில் நம் குடில் வாயிலை அவன் அடைந்திருப்பான் என்று எண்ணுகின்றேன். உங்கள் தவச்சீற்றத்தால் அவனை பொசுக்குங்கள், தந்தையே! ஆயிரமாண்டு அவன் இருள் நரகில் திளைக்கட்டும்" என்றாள்.

சுக்ரரின் உதடுகள் ஏளனத்துடன் வளைந்தன. "நீ காவியங்களையும் தொல்கதைகளையும் முற்றும் மறந்துவிட்டாய் போலும். தீச்சொற்களின் வரலாறை அறிவாயா? முற்றழிக்கும் தீச்சொல்லிட தெய்வங்களுக்கும் உரிமையில்லை. புதுப்பிறவி கொண்டெழும் வாய்ப்பையே தீச்சொல்லெனும் பேரில் அளிக்கவேண்டும்" என்றார். "அதிலும் அன்னையரும் ஆசிரியர்களும் அந்தணரும் முனிவர்களும் தேவர்களும் தெய்வங்களும் அளிக்கும் தீச்சொற்கள் காலம் கனிகையில் நற்கொடைகளாகவும் அமைந்தாகவேண்டும்."

தேவயானி பெருஞ்சினம் எழ தன் கையை ஓங்கி தரையில் அறைந்தபடி “அவ்வண்ணமெனில் நான் தீச்சொல்லிடுகிறேன். அவனை இக்கணமே மீளா இருளுக்கு அனுப்புகிறேன்” என்றாள். சுக்ரர் “தீச்சொல் என்பது என்ன? அம்பை தொடுப்பவன் நிகர் விசையுடன் கையை தன்னை நோக்கி இழுக்கிறான். துலாவின் ஒரு தட்டில் தீச்சொல்லை வைக்க மறுதட்டில் நீ வைப்பதென்ன என்பதுதான் முதன்மையான வினா. அன்னை தன் கடனை, ஆசிரியன் தன் கொடையை, அந்தணன் தன் நோன்பை, முனிவர் தன் தவத்தை, தேவர்கள் தங்கள் மேன்மையை, தெய்வங்கள் ஊழை அங்கே வைக்கலாம். நீ உன் வஞ்சத்தையே வைக்க முடியும். மகளே, நிகராக உன் துலா தட்டும் தாழும். அவனுக்கு நீ அளிப்பதை நீயும் அடைந்தாலொழிய உன்னால் தீச்சொல்லிட இயலாது” என்றார்.

தேவயானி தொண்டையில் குருதிக்குழாய்கள் புடைக்க நரம்புகள் நீலமென முடிச்சுவிழ விழிகளில் நீர்மையொளிர “நான் அழிகிறேன். நானும் இருளில் உழல்கிறேன். இனி இந்த இரு கால் மாக்களின் இழிவை என்னால் தாங்கிக்கொள்ள முடியாது. தந்தையே, இக்கணம் நான் எழுந்து கசந்து நோக்குவது என் கையைப்பற்றிய இக்கீழ்மகனை அல்ல. ஆணெனத் தருக்கியபடி வெற்றுக்காமம் மட்டுமே உளமென்றாகி அலையும் மானுடரில் பாதியை. அனைவருக்குமான ஒரு தீச்சொல்லை இட்டு அமையாமல் இந்த அகஇருளில் இருந்து எழ என்னால் இயலாது” என்றாள்.

“நீ கசனுக்கு அளித்த தீச்சொல்லின் மறுவிசையாலேயே இப்பெருந்துயரை இன்று அடைந்தாய். இத்தருணத்திலாவது அதை நீ உணர்ந்தாக வேண்டும். இன்றளிக்கும் தீச்சொல்லின் விசையை எங்கு சென்று முடிப்பாய்? ஒரு முடிச்சு பிறிதொரு

முடிச்சாவதை உணரவில்லை என்றால் வாழ்க்கையில் நீ எதை கற்றாய்? அறுத்து விடுபடுவதன்றி அவிழ்த்து மீள்வது வாழ்வில் எவருக்கும் இயல்வதல்ல" என்றார் சுக்ரர். "நன்று, என்னை நீங்களும் கைவிடுகிறீர்கள். இச்சொல்லுக்கு அது ஒன்றே பொருள். இறுதிப் புகலிடமென நான் வந்த தந்தையின் நாவிலிருந்து உன் துயர் உன்னுடையது மட்டுமே என்று கேட்கையில் என் ஊழுறவு வலையின் இறுதிக் கண்ணியும் அறுபடுகிறது போலும்" என்றபடி தேவயானி திரும்பினாள்.

வாயிலில் தோன்றிய கிருதர் தலைவணங்கி "யயாதி" என்றார். "அவனை வரச்சொல்" என்றார் சுக்ரர். "இங்கு அவன் வரவேண்டியதில்லை. தங்கள் முன் வந்து விழிநீர் சிந்தி இரந்து கருணை பெற்று திரும்பவிருக்கிறான். ஆணிலி, கோழை, சிறுமதியாளன்" என்று தேவயானி கூவினாள். "பிழை இயற்றாத மானுடர் எவர்? மாமுனிவரும் காமத்தால் நடை தவறியவர்களே" என்றார் சுக்ரர்.

தேவயானி "கரந்து ஒன்று செய்பவன் தான் செய்யும் அனைத்தையும் கரந்தே செய்யும் சிற்றுயிராகிறான். தெய்வங்கள் பறவைகளை விண்ணிலும் விலங்குகளை மண்ணிலும் உலவும்படி செய்தன. அரவுகளையும் முயல்களையும் எலிகளையுமே ஆழங்களுக்குள் வாழச்செய்தன. பறக்க எண்ணி விண்நோக்குவதே விலங்கின் மீட்பு. மண்ணுக்குள் புக விழைவது கீழ்நெறி. அவன் கீழ்மகனாக தன்னை ஆக்கிக்கொண்டவன். தந்தையே, மறுஎண்ணமின்றி அவனை தீச்சொல்லிட்டு எரித்தழித்தால் மட்டுமே நீங்கள் என் தந்தை. இல்லையேல் நீங்கள் எனக்களித்த ஒவ்வொரு சொல்லையும் மறப்பேன். என்

உள்ளத்திலிருந்து இறுதி ஆண்மகனென எஞ்சியிருக்கும் உங்களையும் கழற்றி வீசுவேன்” என்றாள்.

“அணிந்தவை அனைத்தையும் கழற்றி வீசினால் மட்டுமே துறவு நிகழும். துறவு இன்றி கல்வி இல்லை. எத்தனை துறக்கிறோமோ அத்தனை கற்கிறோம். முழு துறவு முழுமை அறிவிற்கான வழி” என்றார் சுக்ரர்.

# மாமலர் - 86

## 86. சூழ்மண்

காலடியோசை கேட்க தேவயானி சீற்றத்துடன் திரும்பி வாயிலில் வந்து தலைவணங்கிய யயாதியை பார்த்தாள். அவன் தலைக்குமேல் கூப்பிய கைகளுடன் உள்ளே வந்து எட்டு உறுப்புகளும் நிலம்படிய விழுந்து சுக்ரரை வணங்கி முகம் நிலத்தில் பதித்து அவ்வாறே கிடந்தான். அவன் எழுவதற்காக சற்றுநேரம் காத்தபின் நிலைமாறாக்குரலில் “இவையனைத்தையும் நான் நன்றாக அறிந்திருந்தேன். பெருஞ்சினத்துடன் இவள் இங்கு வருவதற்காக பதினாறாண்டுகளாக காத்திருந்தேன்” என்றார் சுக்ரர். தலைதூக்காமலேயே யயாதி “நான் எதையும் விளக்க வரவில்லை. இரக்கவோ மன்றாடவோ முயலவில்லை. என் பிழை எனக்குத் தெரியும். ஆசிரியர் என்பதனால் எளியமனிதர்களை உங்களால் அறியவும் முடியும்” என்றான்.

“உன் பிழை புலன்களைத் தொடர்ந்தது” என்றார் சுக்ரர். “அறியேன் என நடிப்பவனுக்குப் பின்னால் காமம் நிழலெனப் பெருகிப் பேருரு கொள்கின்றது.” யயாதி “ஆம் ஆசிரியரே,

எனக்கு உகந்த தண்டனையை அளியுங்கள். எதுவாக இருப்பினும் அது தங்கள் அருளே என தலைமேல் தாங்கி இங்கிருந்து மீள்கிறேன்" என்றான். சுக்ரர் விழிதூக்கி இரு கைகளையும் முறுக்கி நீட்டி தோள்களை இறுக்கி முலைகள் விம்ம நின்றிருந்த தேவயானியிடம் "இவனை என்ன செய்வதென்று நீ சொல், மகளே!" என்றார்.

அவள் உதடுகள் கோணலாயின. பற்களைக் கடித்து முறுக்கிய கைகளை தொடைமேல் அடித்த பின் அங்கிருந்து செல்வதற்கு திரும்பினாள். அவ்வசைவு அவள் உடலில் கூடிய அக்கணமே காற்றிலிருந்து பிறிதொரு தெய்வம் அவள்மேல் ஏறியதுபோல கழுத்துத்தசைகள் இழுத்துக்கொள்ள வலிப்பெழுந்த அசைவுகள் உடலில் கூட திரும்பினாள். தன் இடக்காலால் யயாதியின் தலையில் ஓங்கி மிதித்தாள். இறந்த உடலென அவன் தலை அந்த உதையை ஏற்று அசைந்தது. முகத்தை தரையிலிருந்து அகற்றாமல் அவன் அவ்வாறே கிடந்தான். முதல் உதையால் வெறிகொண்டு நிலையழிந்த அவள் அவன் தலையை எட்டி எட்டி உதைத்தாள். "இழிமகனே! இழிமகனே!" என்று மூச்சென்றே ஒலித்தபடி உதைத்து பின்பு நிலைத்தாள்.

கைகளை இடையில் ஊன்றி இடைதளர்ந்து உலைவாய் என மூச்சு சீற நின்றாள். சீறும் ஓநாய் என வெண்பற்கள் தெரிய "இழிமகனே..." என கூவினாள். அவன் தலைமேல் எச்சிலை காறி உமிழ்ந்து "உன்மேல் தீச்சொல்லிட்டு என் மீட்பை அழிக்க நான் விரும்பவில்லை. இனி உன் எண்ணத்தில் என் முகமோ பெயரோ எழாதொழியட்டும். என் குருதியில் பிறந்த கொடிவழிகள் தந்தையென உன் பெயரை ஒருபோதும் சொல்லாது அமையட்டும். இப்பிறப்பிலேயே என் ஊழ்ச்சுழலை அழிப்பேன். எனவே இனி ஒரு பிறவியிலும் உன் துணையென

அமரமாட்டேன். நீ என்னை தொட்டாய் எனும் நினைவை தவத்தால் வெட்டி அறுப்பேன். இனி மறுகணம் முதல் நீ இருந்ததும் மறைவதும் எனக்கொரு பொருட்டில்லை” என்றபின் திரும்பி குழலை இடக்கையால் சுற்றிச் சுழற்றி பற்றினாள். விழிகள் அலைய குடிலோரத்தில் சுவரில் மாட்டப்பட்டிருந்த உடைவாளை நோக்கி சென்று அதை எடுத்து தன் நீள் குழலை அறுத்தாள். அந்தக் கரகரப்பு ஓசை யயாதியின் உடலை உலுக்கவைத்தது. குழல்தொகையை ஓங்கி நிலத்திட்டு மூச்சு வாங்கி ஒருகணம் நின்றபின் கதவை இழுத்துத் திறந்து காலடிகள் மிதியோசை கொள்ள வெளியே சென்றாள்.

எவ்வுணர்ச்சியும் இல்லாமல் அவளுடைய கொந்தளிப்புகளை நோக்கிய சுக்ரர் “எழுக!” என்றார். யயாதி எழுந்து கண்ணில் நீர்வழிய கைகளைக் கூப்பியபடி அமர்ந்தான். “நீ செய்தது வஞ்சம்” என்றார் சுக்ரர். யயாதி “அல்ல, அதை நான் எந்த தெய்வத்தின் முன்னும் சொல்வேன். வஞ்சனை செய்பவன் அதை தன் திறனென எண்ணிக்கொள்வான். அதன்பொருட்டு அவன் ஆழத்தில் ஒரு துளி மகிழ்ந்துகொண்டிருக்கும். நான் இதை பிழையென அறிந்திருந்தேன். ஒவ்வொரு கணமும் அதன்பொருட்டு இவளிடம் பொறுத்தருளக் கோரிக்கொண்டிருந்தேன். இன்று இவள் கால்களால் என் தலை மிதிபட்டபோது என் பிழையனைத்தும் விலகிச் சென்றுவிட்டது. இன்று உங்கள் முன் அமர்ந்திருப்பவன் தூயன். இவனுக்கு என்ன தண்டனையோ அதை அளியுங்கள்” என்றான்.

“ஆம், உணர்ந்து நீ மீளவேண்டும். இக்கணம்வரை உனை ஆட்டிவைத்தது உன் காமம். தசைகளிலெரியும் அனல் அது. அதை காதல் என்றும் கவிதை என்றும் கலை என்றும் பெருக்கிக் கொண்டாய்” என்றார் சுக்ரர். “ஏனென்றால் நீ

அணுகிவரும் முதுமையை அஞ்சினாய். காமத்தினூடாக உயிர்பெருக்கி இளமையை மீட்க முயன்றாய். தவத்தார் தவறுவது தாங்கள் விட்டு விலகுவதை முற்றறிந்துள்ளோமா என்னும் ஐயத்தால். உலகத்தோர் தவறுவது அடைந்ததை முற்றும் அடைந்தோமா என்னும் கலக்கத்தால்.”

“முதுமை எய்தி குருதி வற்றி தசை சுருங்கி எலும்புகள் தளர்ந்தபின்னரே நீ உன்னை கடப்பாய். எண்ணமென்றால் இறந்தவையே என்று மாற, இருப்பென்றால் எஞ்சுதலென்றாக, ஒவ்வொன்றும் அசையும் அமையும் காலமென்றே தெரியும் ஒரு நிலையிலேயே காமம் என்றால் என்னவென்று நீ அறியலாகும். இது என் தீச்சொல். நீ முதுமை அடைக!” என்றார் சுக்ரர். யயாதி தன் தலை அவர் காலடியில் பட வணங்கி கூப்பிய கைகளுடன் எழுந்து செல்வதற்காக திரும்பினான். “நீ இத்தீச்சொல்லுக்கு மாற்று கேட்கவில்லை” என்றார் அவர். “ஆம், மாணவனாகிய எனக்கு எது தேவை என்று நீங்கள் அறிவீர்கள்” என்றான் யயாதி. “நீ விழைந்தால் இம்முதுமையை பிறருக்கு அளிக்கலாம். ஆனால் உன் பொருட்டு அதை அவர் விரும்பி பெற்றுக்கொள்ள வேண்டும்” என்றார் சுக்ரர். யயாதி மீண்டும் தலைவணங்கி வெளியேறினான்.

யயாதி வெளியே வந்துகொண்டிருந்தபோதே முதுமை எய்தத் தொடங்கியிருந்தான். ஒவ்வொரு அடிக்கும் அவன் உடல் வலுவிழந்து கால்கள் நடுங்கின. நோக்கு இரண்டாக பிளவுபட்டு அண்மையும் சேய்மையும் பிழைகொண்டதாயின. கைகளில் நடுக்கமிருப்பதை உணர்ந்தபின் தூண்களை பற்றிக்கொண்டு படிகளில் இறங்கினான். இறுதிப்படியை அடைந்தபோது அவன் உடல் கூன் விழுந்து முகம் நிலம் நோக்கியிருந்தது.

கழுத்தைத் தூக்கி முற்றத்தை பார்த்தபோது கிருதரும் சத்வரும் சுஷமரும் திகைப்புடன் அவனை நோக்கி வருவதைக் கண்டான். கிருதர் “அரசே...” என்றழைக்க கைநீட்டி “இது என் ஆசிரியரின் கொடை” என்றான். “எதுவாயினும் நான் அதை ஈட்டியிருக்கிறேன் என்றே பொருள்.” கிருதர் அவன் கைகளை பிடித்துக்கொண்டார். சத்வர் “அரசி இப்போதுதான் அறுந்த கூந்தலுடன் இறங்கிச் சென்றார். இங்கு தங்கும்படி கேட்டபோது மூச்சொலியால் எங்களை உதறி நடந்து சென்றார். எங்கு சென்றார் என்று தெரியவில்லை” என்றார். “இனி அவள் பாதை அவளுக்கு” என்றான் யயாதி. “என்னால் புரவியில் இனி திரும்பமுடியாது. இன்றொருநாள் இங்கிருக்கிறேன். தேர் கொண்டுவரும்படி விருஷபர்வனிடம் கூறுக!”

கிருதர் “தீச்சொல்லுக்கு மாற்றுச்சொல்லுண்டு. ஆசிரியர் என்ன சொன்னார்?” என்றார். “இம்முதுமையை நான் விழைந்தால் பிறிதொருவருக்கு அளிக்கலாம் என்றார். பெறுபவரும் கொடுப்பவரும் உவந்தால் அது நிகழும் என்றார்” என்றான் யயாதி. கிருதர் “இளமையும் முதுமையும் எனக்கு ஒன்றுதான். முற்றிலும் மனமுவந்து இதை இக்கணமே நான் பெற்றுக்கொள்கிறேன். ஆனால் கொடை என்பது கொள்பவருக்கும் கொடுப்பவருக்கும் நலன் விளைப்பது. இம்முதுமை உங்களுக்கு எதை கற்றுத் தரவேண்டுமோ அது நிகழவேண்டும்” என்றார்.

“உங்கள் காமம் உடலில் விளைந்தது என்று ஆசிரியரிடம் சொன்னீர்களா? என்றார் சத்வர். “ஆம், நான் வெறும் உடல் மட்டுமே என்றேன்” என்றான் யயாதி. “ஆகவேதான் இதை உங்களுக்கு அளித்திருக்கிறார். உங்கள் காமம் முற்றிலும் உடல் சார்ந்ததே எனில் இப்போது முற்றிலும் வற்றி

அடங்கியிருக்க வேண்டும். உள்ளத்திலோ கனவிலோ ஆழத்திலோ ஒரு துளியேனும் காமம் எஞ்சினால் அது உங்கள் உடலின் விழைவல்ல என்றே பொருள்” என்றார் சத்வர். “நீங்கள் அறிவதனைத்தையும் தடுத்துக்கொண்டிருந்தது உடலென்று நடித்துக்கொண்டிருந்த அகம். உடலெனும் திரை விலகினால் இன்று அது தான் எவர் என்று அறியும்.”

யயாதி “களைப்புற்றிருக்கிறேன்” என்றான். அச்சொல்லாடல் அவன் உள்ளத்தை தளரச் செய்தது. கிருதர் “அரசே, உங்களுக்குள் ஒரு துளியேனும் காமம் எஞ்சுவதை நீங்கள் எங்ஙனமேனும் கண்டால் இவ்வுடலை எவருக்கேனும் அளித்து இளமையைப் பெற்று அக்காமத்தை நிறைவு செய்யுங்கள். அதன் பின்பு உங்கள் உடலை மீட்டுக்கொள்ளுங்கள். துளியென எஞ்சும் காமம் கல்லுக்குள் புகுந்த தேரையின் முட்டை.” என்றார். யயாதி “என்னுள் நோக்கவும் என்னால் இயலவில்லை. உள்ளம் திகைத்துள்ளது” என்றான்.

“இம்முதுமையை உங்களிடமிருந்து எவர் பெறுகிறாரோ அவர் நல்லூழ் கொண்டவர்” என்றார் கிருதர். “இடருற்று துயருற்று வாழ்ந்து முதிர்ந்து அறிவதனைத்தையும் இமைக்கணத்தில் அவர் அறிகிறார். இளமையிலேயே முதுமை கொண்டவனே மெய்மையின் பாதையில் முந்திச் செல்கிறான். நாமறிந்த மெய்ஞானியர் அனைவரும் நூறுமடங்கு விசைகொண்ட ஆனால் நூறுமடங்கு குறைவான இளமைக்காலம் கொண்டவர்கள். விரைவிலேயே முதுமைக்கு வந்தவர்கள். பின்னர் என்றும் முதுமையில் அமைபவர்கள்.”

யயாதி “என்னை நானே கூர்ந்து நோக்குவதற்கான தருணம் இது என உணர்கிறேன்” என்றான். சுஷமர் “வருக! எனது குடிலில் தாங்கள் இளைப்பாறலாம்” என்றார். சுஷமரின்

கைபற்றி செல்லுகையில் யயாதி தனது கால்களும் தளர்ந்துவிட்டிருப்பதை உணர்ந்தான். ஆகவே தொலைவுகள் பெருகிவிட்டிருந்தன. ஒவ்வொன்றும் ஒளிகுன்றி பிறிதென்றாகி சூழ்ந்திருந்தன. கண்கள் வண்ணங்களையும் கூர்மைகளையும் இழந்துவிட்டிருக்க அதை ஒரு கரையென்றாக்கி அலையடித்து நிறைந்திருந்தது அவன் அகம். நினைவுகளும் உருமாறிவிட்டிருந்தன. வஞ்சங்களும் விழைவுகளும் மங்கி ஒவ்வொன்றும் ஒரு நூலில் இருந்து படித்தறிந்தவைபோல் ஐயமின்மையின் தெளிவு பெற்றிருந்தன. சுவடிகளைப்போல தொட்டுத் தொட்டு வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியையும் எடுத்து நோக்க முடியும் என்பதுபோல.

புன்னகைத்து "என் வாழ்வை ஒரு சுவடிச்சாலையாக மாற்றிக்கொண்டிருக்கிறேன். எப்பகுதியையும் கைநீட்டி எடுத்துவிட முடியும். எல்லாமே என்னிடமிருந்து பிரிந்து பிறிதொன்றாகிவிட்டிருக்கின்றன" என்றான். சுஷமர் "மொழியில் அமைவதெல்லாமே நம்மிடம் இருந்து விலகிவிடுகின்றன. முதுமையென்பது நம் அறிதல்களையும் உறுதல்களையும் சொல்லாக்கி, மீண்டும் மீண்டும் சொல்லி பிறிதொன்றாக்கி, நம்மிடமிருந்து விலக்கிக் கொள்வதே. இளமையில் உறுதல்களின் முன் மாணவனாக இருக்கிறோம். முதிர்கையில் அறிதல்களின் மாணாக்கனாகிறோம்" என்றார்.

அவரது குடிலின் படிகளை ஏறி மஞ்சத்தை அடைந்தபோது யயாதி மூச்சுத் திணறத் தொடங்கியிருந்தான். "அமருங்கள். நான் நீர் கொண்டு வருகிறேன்" என்றார் சுஷமர். "ஆம், உடன் பல்லுக்கு மென்மையான உணவு எதுவும் இருந்தால் கொண்டு வருக!" என்றான் யயாதி. பின்னர் மெல்ல மஞ்சத்தில் அமர்ந்து தன் மூட்டுகளையும் கால்களையும் அழுத்திப் பற்றியபடி

“விந்தைதான். இத்தனை காலம் எனது மூட்டுகளைப்பற்றி நான் எண்ணியதே இல்லை. இன்று ஒவ்வொரு எண்ணமும் மூட்டுகளைப்பற்றிய தன்னுணர்வுடன் உள்ளது” என்றான். “ஓய்ந்து சலித்த இரு புரவிகள் போலிருக்கின்றன. இக்கணம் படுத்து இனி எழ முடியாது என அறிவிக்கும் தன்மை கொண்டிருக்கின்றன.”

“நான் தங்களுக்கு இன்நீரும் உணவும் கொண்டுவருகிறேன், அரசே” என்றபின் சுஷமர் வெளியே சென்றார். யயாதி தன் குழலைத் தொட்டு விரலால் நீவி தலைக்குப்பின் தோல்வாரால் கட்டியபடி திரும்பிப் பார்த்தபோது அவ்வறையின் ஒரு மூலையில் பட்டுச் சால்வையொன்று கிடப்பதை கண்டான். எவரோ அளித்த கொடை. அதனை சுஷமர் தூக்கிவீசியிருந்தார். அதைக் கண்டதுமே சித்தம் உணராது உளம் எழுச்சிகொண்டது.

மஞ்சள்பட்டில் வெள்ளிநூல்களால் நுண்ணிதின் பின்னப்பட்ட அணிமலர்கள். அதை நோக்கிக்கொண்டிருக்கையில் அலையலையென நினைவுகள் வந்து உடலை அதிர வைத்தன. ஒரு தனியறையில் அறையிருளில் படுத்திருக்கையில் சுவரில் சாளரம் வழியாக வந்த இரவின் ஒளியில் கொக்கியில் நெளிந்துகொண்டிருந்த கலிங்கத்துச் சால்வை. அருகிருந்தவள் அவன் முதல் பெண். முதல் காமத்தின் களைப்பு. அருவருப்பும், இனிமையும், இழப்புணர்வும், தனிமையும் கலந்த தத்தளிப்பு.

பொன்னூல் பின்னிய பட்டின் வேலைப்பாட்டை அவன் தனியாக அதுவரைக்கும் நோக்கியதில்லை. எத்தனை வளைவுகள், கரவுகள், குழைவுகள். இத்தனை குழைவென்றால் அவன் நெஞ்சம் எத்தனை நெகிழ்ந்திருக்கவேண்டும்! ஓவியக்கோடுகள் நெளிகின்றன. இசை வளைகிறது. நடனத்தில் உடல் குழைகிறது. நீரும் நெருப்பும் வளைந்தாடுகின்றன.

காற்று தொடும் அனைத்தும் அலைவுகொள்கின்றன. நெஞ்சின் நெகிழ்வை தாளாமல் அவன் விம்மினான். இருளில் அவ்வோசை அங்கு உடனிருந்த அறியாத் தெய்வமொன்றின் குரலென ஒலித்தது.

ஏன் அதை படைத்தான்? மலர் அவனுக்கு போதவில்லை. கடல்நுரையும் காற்றலை படிந்த மணல்மென்மையும் நிறைவளிக்கவில்லை. அவை கொண்ட பொருண்மையிலிருந்து அவற்றின் அழகைமட்டும் பிரித்தெடுக்க விழைகிறான். பட்டிலும் பொன்னிலும் சாந்திலும் கல்லிலும் எழும்போது அது அக்குழைவின் எழில் மட்டுமே. மலர் தொட்டு தளிர் தொட்டு நகை செய்யும் கைகளுக்கு தெய்வங்களின் அருளிருக்கிறது. தந்தையின் காலடியை தான் நடிக்கும் மைந்தர் அவர். அணி சூடுவோரை நோக்கித் திருமகளும் அணி செய்பவரை நோக்கி பிரம்மனும் குனிந்து புன்னகை செய்கிறார்கள். காமம் கொண்டவரை நோக்கி புன்னகைக்கின்றது பிரம்மம். ஒன்றிலிருந்து ஒன்றென தான் பெருகுவதை அது உணரும் தருணம் அது.

முதல் பெண்... அவள் யார்? நினைவில் படிந்த மென்மணலை அள்ளி ஒதுக்க ஒதுக்க ஆழம்தான் தெரிந்தது. ஆனால் மிக அருகே இருந்தது அவள் மணம். அதைத் தொட்டு தொடர்ந்து சென்றபோது அவள் முலைகளின் மென்மை. அதற்கப்பால் இருளென மங்கிய வெளியில் அவளது கூச்சம் கலந்த புன்னகை. செவியினூடாக நினைவுக்கு நேரடியாகச் சென்ற மென்சிரிப்புக் குரல். இருளில் பேசும் பெண்கள் பிறிதொருவர். காமம் கிளர்ந்தபின் பேசுவது முற்றிலும் புதிய ஒருவர். உச்சத்தில் விலங்காகுபவர். அக்கணம் அவளில் வந்து கூடி

பின் விலகி மீண்டும் மலைகளென முகில்களென காற்றென பெருநதியென ஆகிறது என்றுமுள தெய்வம் ஒன்று.

சுஷமர் உள்ளே வந்ததும் யயாதி “எனக்கு ஓர் ஆடி கிடைக்குமா?” என்றான். சுஷமர் “கொண்டுவருகிறேன்” என்றபின் இன்நீர் கலத்தையும் உணவுத் தாலத்தையும் அருகே தாழ்பீடத்தில் வைத்தார். “ஆடி நோக்குக! ஆனால் நாளையே கிளம்பிச்சென்று உங்கள் முதுமையை பிறிதொருவருக்கு அளியுங்கள்” என்றார். யயாதி குழப்பத்துடன் “ஏன்?” என்றான். “ஆடி நோக்க விழைந்த கணம் உங்கள் காமத்தை கண்டுவிட்டிருக்கிறீர்கள். அது ஒழிந்து உளம் அமையாது நீங்கள் எழவியலாது.”

யயாதி “நான் காமம் கொள்ளவில்லை. வெறுமே எண்ணிப்பார்த்தேன்” என்று சொன்னான். “உங்கள் உடல் காமம் கொள்ளாது. உடலிலிருந்து மறைந்தபின் உள்ளம் கொள்ளும் காமம் மேலும் தெளிவும் கூர்மையும் கொண்டிருக்கும்” என்றார் சுஷமர். விழிதாழ்த்தி “ஆம்” என்று யயாதி சொன்னான். “இளமையான பிறிதொருவன் அங்கிருந்து அனைத்தையும் நடிப்பான். அவனை இங்கிருந்து நீங்கள் பார்த்துக்கொண்டிருப்பீர்கள். அது வெற்று ஏக்கம், எஞ்சுவது வெறுமை.” யயாதி “உண்மைதான்” என்றான்.

“முதியவர் உள்ளங்கள் அனைத்திலும் அவர்களின் இளமைத் தோற்றமே திகழ்கிறது. உள்ளுறைபவனுக்கு முதுமை வந்தமையவேண்டும்” என்றார் சுஷமர். யயாதி தனக்கே என மெல்லிய குரலில் “ஆனால் இத்தனை இனிதான ஒன்றை முன்னர் நான் அறிந்ததில்லையென்று தோன்றுகிறது. அழகியது, நிறைவூட்டுவது, ஏனென்றால் புறமென ஒன்றில்லாமையால் மிகத் தூயது. பகிர்தலுக்கிடமில்லாதது

என்பதனால் மிகமிகத் தனியானது” என்றான். சுஷமர் சிரித்து “நான் நூல்களில் அறிந்ததே. முதிரா இளமையில் புலனின்பங்களைப்பற்றிய கற்பனையாலும் இளமையில் புலனின்பங்களாலும் முதுமையில் புலனின்பங்களின் நினைவுகளாலும் சூழப்பட்டு மனிதன் மெய்மையின் பாதையிலிருந்து விலக்கப்படுகிறான். தேனே தேனீயின் சிறை” என்றார்.

யயாதி நீள்மூச்சுடன் இன்நீரை கையில் எடுத்தபின் “ஆம், இதை நான் துறந்தாக வேண்டும். எஞ்சியிருக்கும் துளி மிக ஆற்றல் கொண்டது. ஒன்று நூறுமேனியென விளைந்து பெருகுவது” என்றான். சுஷமர் “நீங்கள் ஆடியை நோக்க வேண்டாம் என்றே சொல்வேன்” என்றார். யயாதி “ஏன்?” என்றான். “இன்றொரு நாள் உங்கள் முகம் உங்கள் நினைவில் இல்லாமலிருக்கட்டும். இன்றிரவு உடலிலாது வாழ்ந்திருக்கலாம். நாளை காலை நீங்கள் ஆடி நோக்கலாம். அம்முகத்தை சுமந்தபடி செல்லும்போது உங்களுக்கு பிறிதொரு உலகம் தென்படக்கூடும்” என்றார்.

“உடல் எண்ணங்களை இப்படி அழுத்தும் என்று எண்ணியிருக்கவேயில்லை” என்றான் யயாதி. “இதுவரை நீரையும் அனலையும் இழுக்கும் விண் என்னை இழுத்துக்கொண்டிருந்ததுபோல் உணர்ந்தேன். மண்ணில் கால் பதித்து நிற்கவே உளம் இருத்தி முயல வேண்டியிருந்தது. இன்று விண்ணுடன் பிணைத்த அனைத்துச் சரடுகளும் அறுந்துவிட்டன. மண் என்னை இழுக்கிறது. இங்கு எங்காவது படுத்தால் நீரிலென புதைந்து மண்ணுக்குள் சென்றுவிடுவேன். அங்கு பின்னி நிறைந்திருக்கும் பலகோடி வேர்களால் கவ்வி உண்ணப்பட்டுவிடுவேன்.” சுஷமர் “அதுவும் நன்றே.

உப்பென்றாகி இந்த மரங்களனைத்திலும் தளிரென எழுந்து மீண்டும் வானில் திளைக்கலாம்” என்றபின் வெளியே சென்றார்.

அன்றிரவு தன்னால் துயில்கொள்ள முடியாதென்றே யயாதி எண்ணியிருந்தான். படுக்கையில் படுத்து உடலை நீட்டிக்கொண்டு இருட்டையே நோக்கிக்கொண்டிருக்கையில் உள்ளே ஓடும் குருதியலைகள் இருட்டுக்குள் நெளிவதுபோலத் தெரிந்தது. ஊருலாவின்போது ஓர் உழவர் ஒவ்வொரு விதையையும் எத்தனை ஆழத்தில் புதைக்கவேண்டும் என்று சொன்னதை நினைவுகூர்ந்தான். “முட்டையை உடைத்துக்கொண்டு குஞ்சு வெளிவருகிறது. கருப்பையை கிழித்து குழவி எழுகிறது. விதை மண்ணைப் பிளந்து எழவேண்டும். ஒவ்வொரு விதைக்கும் ஒவ்வொரு ஆற்றல். அந்த முதல்முளை எத்தனை மண்ணின் எடையை தாங்கமுடியும் என்பதை பார்க்கவேண்டும்” என்றவர் “எங்கே விழுந்தாலும் முளைப்பது ஆலமரம் மட்டுமே” என்றார்.

மண்ணுக்கும் உயிருக்குமான போர். எழுவதுமுதல் நின்றிருக்கும் ஒவ்வொரு கணமும். மண்ணை நினைத்துக்கொண்டிருந்தது விழித்த பின்னர்தான் தெரிந்தது. எழுந்து வெளியே வந்தபோது அனைத்தும் தெளிவாகியிருந்தது உள்ளத்தில். வெறும் நல்லுறக்கத்தால் தீர்வன என்றால் உளச்சிடுக்குகளுக்கு உண்மையிலேயே என்னதான் பொருள்? அவன் வெளியே வந்தபோது முற்றத்திலிருந்து சுஷமர் மேலேறி வந்தார். “இளவெயில் எழுந்துவிட்டது. நீராடி வருக! ஆவன அனைத்துக்கும் சொல்லியிருக்கிறேன்” என்றார். “தாங்கள் குருநகரி செல்வதற்கு விருஷபர்வன் அனுப்பும் தேர்கள் உச்சிப்பொழுதில் வந்துசேரும்.”

யயாதி நீராடி மாற்றுடை அணிந்து வந்து இளவெயிலில் அமர்ந்துகொண்டான். சுனைநீர் அத்தனை தண்மைகொண்டிருப்பதை முன்னர் உணர்ந்ததில்லை. தண்மையால் அது உலோகம்போல் எடைகொண்டிருந்தது. துவட்டி ஆடை அணிந்தபின்னரும் உடல் குளிரில் நடுங்கிக்கொண்டிருந்தது. குளிர் உடலுக்குள் இருந்து எழுந்து வந்துகொண்டிருந்ததுபோல் தோன்றியது. எலும்புகள் உலோகத்தாலானவைபோல தண்மையுடன் இருந்தன. இளவெயில் பட்டபோது தோல் மெல்ல சூடாகி சுருக்கங்கள் விரியத் தொடங்கின. குருதியில் வெம்மை படர்ந்தது. பின் தசைகள் உருகுவதுபோல் நெகிழ்ந்தன. அன்னைப்பறவை குஞ்சை என வெயிலின் சிறகுகள் அவனை சூழ்ந்துகொண்டன. கண்கள் மெல்ல மூட இமைகளுக்குள் குருதிச்செம்மை ஓடியது. உள்ளம் மெல்ல சொக்கி செயலிழந்து சிறுதுயில் ஒன்றில் இளமையில் விளையாடிய காலையொளி பரவிய சோலை ஒன்று மின்னும் இலைகளும் நீரலை வளைவுகளுமாக வந்தது.

விழித்துக்கொண்டபோது கிருதர் அவனை நோக்கி வந்தார். விழி தெளியாமையால் யயாதி அவரை அடையாளம் காண சற்று பிந்தியது. பொதுவான புன்னகையுடன் “வருக!” என்றான். அவர் அருகணைந்து “வணங்குகிறேன், அரசே” என்றபோதுதான் அது கிருதர் என தெரிந்தது. “கிருதரா… என்ன செய்தி?” என்றான். “இரு செய்திகள். பேரரசி அரசு துறந்து இங்கே அருகிலிருக்கும் ஜலசாயை என்னும் சோலையில் தங்க முடிவெடுத்திருக்கிறார். அங்கு அவருக்காக ஒரு குடில் கட்டப்பட்டுள்ளது. தனிமையில் தவமியற்றவிருக்கிறார்.” எவரைப்பற்றியோ என அதை யயாதி கேட்டான். அச்செய்தியுடன் நினைவுகளையும்

எண்ணங்களையும் கொண்டுசென்று இணைக்கமுடியவில்லை. அவை வேறெங்கோ அலைந்துகொண்டிருந்தன.

"அரசியின் அணுக்கத்தோழி சாயையை எட்டு நாட்களுக்கு முன்னர் காட்டில் புலிகள் தின்றுவிட்டிருக்கின்றன. அவரைத் தேடியலைந்த ஹிரண்யபுரியின் ஒற்றர்கள் அவர் அணிந்திருந்த நகை ஒன்றை கண்டடைந்தனர். தேடிச்சென்றபோது எலும்புகளும் குழலும் மட்டும் எஞ்சியிருப்பதை அறிந்தனர்." சில கணங்களுக்குப் பின்னரே அதுவும் அவனுள் பதிந்தது. ஆனால் அதற்குள் மீண்டும் அடைக்கோழிபோல அவன் இமைகள் சரிந்துவந்தன. தாடை தளர்ந்து வாய் திறந்தது. மெல்லிய குறட்டை ஒலி எழக்கேட்டு கிருதர் புன்னகையுடன் திரும்பி காலடி எடுத்துவைத்தார்.

காலடியோசை கேட்டு விழித்துக்கொண்ட யயாதி முன்னர் நிகழ்ந்தவற்றுடன் இணைந்துகொள்ளமுடியாமல் திகைத்து "யார், கிருதரா?" என்றான். அவன் ஆழ்மண்ணில் புதைந்திருக்க எவரோ தலையை மாறி மாறி உதைத்து "முளைத்தெழுக... முளைத்தெழுக" என்று சொல்லிக்கொண்டிருந்த கனவை நினைத்து கசிந்த வாயைத் துடைத்தபடி "என் முதுமையை கொடுத்துவிட முடிவெடுத்துள்ளேன்" என்றான். "தங்கள் மைந்தருக்கு அளிப்பதே முறை. தந்தையின் மூன்றுவகை ஊழுக்கும் மைந்தரே உரிமையும் கடமையும் கொண்டவர்கள்" என்றார் கிருதர்.

# மாமலர் - 87

**87. நீர்க்கொடை**

யயாதி தன் அகம்படியினருடன் குருநகரிக்கு சென்றுசேர பதினெட்டுநாட்களாகியது. அவன் உடல்கொண்ட களைப்பால் வழியில் ஒருநாளுக்கு நான்கு இடங்களில் தங்கி ஓய்வெடுக்க நேர்ந்தது. தேரிலும் பெரும்பாலான நேரம் துயின்றுகொண்டும் அரைவிழிப்பு நிலையில் எண்ணங்களின் பெருக்காகவுமே அவன் இருந்தான். அவன் கண்ட ஒவ்வொரு இடமும் உருமாறியிருந்தன. அண்மையில் உள்ளவை உருவழிந்து கலங்கித் தெரிந்தன. சேய்மையிலிருந்தவை ஒளிப்பெருக்கெனத் தெரிந்த தொடுவான் வட்டத்தில் கரைந்தவைபோல மிதந்தன. கலவிளிம்பில் ததும்பிச் சொட்டுவதுபோல அங்கிருந்து ஒவ்வொரு பொருளும் எழுந்து உருக்கொண்டு அணுகி அவன் முன் வந்து காற்றில் அலையும் நீர்ப்பாவைபோல் நின்றன.

ஓசைகளின் மீது அழுத்தமான எதையோ கொண்டு மூடியதுபோலிருந்தது. ஆனால் குரல்கள் சில மிக அண்மையில் எழுந்து உடலை துணுக்குறச் செய்தன. பெரும்பாலான நுண்ணிய மணங்கள் நினைவிலிருந்தே அகன்றுவிட்டிருக்க கூரிய நாற்றங்களால் ஆனதாக இருந்தது நிலம். மங்காதிருந்த புலன் மெய்தான். மரத்தடிகளில் படுத்ததும் வந்து தழுவும் குளிர்காற்று மணமும் ஒலியும் அசைவொளியும் அற்று தான்மட்டுமாக இருந்தது. குழல் கலைத்து ஆடை உலைத்து சூழ்ந்துகொண்டது. காற்று பட்டதுமே மெல்ல அவன் துயிலத் தொடங்கினான். விழித்தபோது முந்தையவை அனைத்தும் கரைந்து பரவி மறைய முற்றிலும் புதியவனாக விழித்தெழுந்தான். அவனுக்கு அணுக்கனாக வந்த காவலனை ஒவ்வொரு முறையும் “யார்?” என திகைத்து கேட்டான்.

பார்க்கவனின் குரலும் முகமும் தெளிவாக இருந்தமையால் எப்போதும் அவன் உடனிருக்க வேண்டுமென விழைந்தான். விழித்தெழுந்து அவனைக் காணவில்லை என்றால் பதைத்து “அவன் எங்கே? பார்க்கவன் எங்கே?” என்றான். அவன் தசைகள் நொய்ந்து நீர்மிகுந்த சேற்றுக்கதுப்பென ஆகிவிட்டிருந்தன. செதிலாகச் சுருங்கிய தோலுடன் அவை கன்னங்களிலும் தாடைக்குக்கீழும் புயங்களிலும் தொங்கின. உதடு முற்றாக மடிந்து உள்ளே சென்றிருக்க மூக்கு வளைந்து உதட்டைத் தொடுவதுபோல புடைத்திருந்தது. நினைத்தெடுத்துச் சொல்லாக்கி உரைக்க இயலாமையால் அவன் உதிரிச்சொற்றொடர்களால் பேசினான். ஒரு சொற்றொடர் துலங்கியதும் அதன் வெளிச்சத்தில் தடுமாறி முன்னகர்ந்து அடுத்த சொற்றொடர்களை உருவாக்கினான். தொடர்ந்து பேசினால் மூச்சுபோதாமல் திணறி அத்திணறலே குரலை தழுதழுக்கச்செய்ய கண்கள் கலங்கி விம்மினான். அந்த விம்மல் வழியாகவே துயர் எழ அவன் பேசியதெல்லாமே கண்ணீரில் சென்று முடிந்தது. சற்றே தாழ்ந்திருந்த இடக்கண்ணிலிருந்து மட்டும் நீர் வழிய முகம் இடப்பக்கமாக கோணலாகி இழுபட விசும்பி விசும்பி அழுதான். முகச்சுருக்கங்களின் மேல் கண்ணீர் தயங்கித்தயங்கி வழிந்தது.

சுற்றிலும் இருந்தவர்களின் விழிகளை நோக்கமுடியாதானமையால் விரைவிலேயே அவன் அவர்களை எண்ணவும் முடியாதவனானான். ஆகவே தன் உணர்வுகளை மறைக்க அவனால் இயலவில்லை. இனிய எளிய உணவுகள் அவனுக்கு பிடித்திருந்தன. அக்காரம் சேர்த்த கஞ்சியை ஏவலன் நீட்டும்போது இருகைகளாலும் வாங்கி முகம் மலர தலையசைத்து மகிழ்ந்து ஆவலுடன் அள்ளிக்குடித்தான். இனிய உணவை கையில் கொடுத்தால்

சிறுகுழந்தையைப்போல மகிழ்ந்து சிரித்துக்கொண்டே இருந்தான். எண்ணியிராதபடி ஏதேனும் இன்னுணவு நினைவில் எழுந்தால் அதை உடனே அருகிருந்தவர்களிடம் சொல்லி கொண்டுவரும்படி ஆணையிட்டான். "எனக்கு அக்காரச்சாற்றிலிட்டு வேகவைத்த கிழங்கு வேண்டும்" என்று அவன் கேட்டபோது ஏவலன் "அரசே, நாம் பயணத்திலிருக்கிறோம்" என்றான். "எனக்கு வேண்டும்... வேண்டும்" என்று அவன் கேட்டான். "அரசே" என்று ஏவலன் சொல்ல "வேண்டும்..." என்று அவன் அழுவதுபோன்ற முகநெளிவுடன் சொன்னான். பார்க்கவன் அவனை விலகும்படி தலையசைத்து "கொண்டுவருகிறோம் அரசே... இதோ" என்றான். "எப்போது?" என்றான் யயாதி. "இதோ" என்றான் பார்க்கவன். பின்னர் ஒரு பெரிய மலரைக் கொண்டுவந்து காட்டி "பார்த்தீர்களா? மலர்" என்றான். அதை வாங்கிப் பார்த்து முகம் மலர்ந்து "மலர்" என்றான். நிமிர்ந்து பார்க்கவனிடம் "பெரிய மலர்" என்றான். அவன் கேட்டதை பின்னர் நினைவுறவே இல்லை.

அவர்கள் இரவில் எவருமறியாமல் மூடப்பட்ட தேரில் குருநகரிக்கு வந்து சேர்ந்தார்கள். யயாதியின் உருமாற்றத்தைப்பற்றி குருநகரியின் தலைமை அமைச்சருக்கும் இளவரசர்களுக்கும் மட்டுமே செய்தியனுப்பப்பட்டிருந்தது. கோட்டை வாயிலிலேயே தலைமையமைச்சர் சுகிர்தர் காத்திருந்தார். கூண்டுத்தேர் வந்து நின்றதும் பார்க்கவன் இறங்கிச்சென்று தலைவணங்கி அரசனின் வருகையை சொன்னான். சுகிர்தர் வந்து தேர் அருகே பணிந்தார். பார்க்கவன் "அரசே... அரசே..." என்று அழைக்க திரையை விலக்கி எட்டிப்பார்த்த யயாதி "யார்? யார்?" என்று பதறினான். "அரசே, நான் பார்க்கவன்... இவர் தலைமையமைச்சர்

சுகிர்தர்" என்றான் பார்க்கவன். "ஆம், தெரிகிறது" என்றபின் யயாதி "என் இடை வலிக்கிறது. நாம் எப்போது செல்வோம்?" என்றான். "வந்துவிட்டோம், அரசே." யயாதி "என் இடையில் வலி" என்றான்.

சுகிர்தர் திகைத்துப்போய் "என்ன இது?" என்றார். பார்க்கவன் திரைச்சீலையை மூடி "செல்லலாம்" என பாகனுக்கு ஆணையிட்டுவிட்டு "சுக்ரரின் தீச்சொல். ஆனால் சொல்முறிவு உள்ளது. அரசர் தன் முதுமையை சிலகாலத்திற்கு மைந்தர் எவருக்கேனும் அளிக்க விழைகிறார்." சுகிர்தர் "மைந்தரா? இளமையை எவர் அளிப்பார்?" என்றார். "திரும்பப் பெற்றுக்கொள்ளலாமே?" என்றான் பார்க்கவன். "ஆம், ஆனால் இப்புவியில் மானுடர் விழையாதவை அது. நோயும் மூப்பும் இறப்பும்தான். ஜரைதேவியும் வியாதிதேவியும் மிருத்யூதேவியின் புதல்விகள்." பார்க்கவன் "ஆனால் அவர் அரசர்..." என்றான். அவன் என்னபொருளில் அதை சொன்னான் என சுகிர்தரால் உணரமுடியவில்லை.

அவர்கள் அரண்மனைக்குச் சென்றபோது அங்கே இரு இளவரசர்களும் காத்து நின்றிருந்தனர். யது ஐயத்துடனும் தயக்கத்துடனும் பின்னால் நின்றிருக்க துர்வசு எதுவும் புரியாமல் புருவங்களைச் சுருக்கியபடி முன்னால் நின்றான். தேர் நின்றதும் சுகிர்தர் இறங்கி அவர்களிடம் சென்று மெல்லிய குரலில் பேச இருவரும் தயங்கியபின் மெதுவாக அருகணைந்தனர். பார்க்கவன் திரையை விலக்கி "அரசே, அரண்மனை" என்றான். "எங்கே?" என்றான் யயாதி. "அரண்மனை, குருநகரி."

யயாதி "ஆம்" என்றபின் பார்க்கவனின் தோளைப் பற்றியபடி இறங்கினான். நிலையான தரையில் விசை எஞ்சியிருந்த

உடல் தள்ளாடியது. பார்க்கவன் அவனை பற்றிக்கொண்டு "வருக" என்றான். யதுவும் துர்வசுவும் அருகே வந்து அவனைப் பணிந்து "நல்வரவு, தந்தையே. அரண்மனை தங்களுக்காகக் காத்திருக்கிறது" என்றனர். யயாதி "ஆம், நான் உங்களைப் பார்க்கத்தான் வந்தேன்... நான் உங்களிடம் ஒன்று கோரவேண்டும்" என்றான். பார்க்கவன் "அரசே, இது இரவு... நாம் ஓய்வெடுக்கவேண்டும். நாளை காலை முறைப்படி சான்றோர் முன் அதை கோருவோம்" என்றான். "ஆம், அதுவே முறை" என்றான் யயாதி.

அவன் பார்க்கவனை பற்றிக்கொண்டு ஒவ்வொரு படியாக ஏறி குருநகரியின் அரண்மனையின் முகப்பை அடைந்து பெருங்கூடத்திற்குள் நுழைந்தான். மூச்சுவாங்கியபடி நின்று "நான் முதுமை கொண்டுவிட்டேன்..." என்றான். "அரசே, அனைத்தையும் நாம் நாளை பேசுவோம்" என்றான் பார்க்கவன். "ஆம், முறைமைப்படி நான் கோரவேண்டும்" என்றான் யயாதி. அவர்கள் பெருங்கூடத்தில் இருந்த பீடங்களை அடைந்ததும் யயாதி "நான் சற்று அமர்கிறேன்... மூச்சுவாங்குகிறது" என்றான். பார்க்கவன் "ஆம், வருக!" என அழைத்துச்சென்றான். பீடத்தில் அமர்ந்ததும் யயாதி நிமிர்ந்து புதியவர்கள் என மைந்தர்களை நோக்கி "இவர்களிடம் நான் ஒன்று கோரவேண்டும்... என்னிடம் சுக்ரர் சொன்னது. இல்லை... அவர் இல்லை. அவருடைய மாணவர். அவர் பெயரை மறந்துவிட்டேன்" என்றான்.

பார்க்கவன் "அரசே... நாளை..." என தொடங்க யயாதி சினந்து "வாயை மூடு, மூடா! நீ என்ன என்னை பேசவே விடமாட்டாயா?" என்றபின் அதே சினச்சிவப்பு முகத்தில் எஞ்சியிருக்க "எனக்கு முதுமையை தீச்சொல்லிட்டார் சுக்ரர்... அதுதான் நீங்கள் காண்பது" என்றான் யயாதி. "ஆனால்

சொல்முறிவும் அளித்துள்ளார். என் முதுமையை உவந்துபெறும் ஒருவருக்கு நான் அளிக்கமுடியும்…” யது திரும்பி சுகிர்தரை பார்க்க அவர் “ஆம், அதை நாம் நாளையே பேசிமுடிப்போம். நான் இளவரசரிடம் அதைப்பற்றி விளக்கி…” என்று சொல்லத் தொடங்கினார். யயாதி கைதூக்கி அவரைத் தடுத்து “நான் கேட்பது என் மைந்தனிடம். என் அரசுக்கும் குருதிவழிக்கும் நீட்சியாக அமையவிருப்பவன் அவன். நீ என் முதுமையை பெற்றுக்கொள்ளவேண்டும். நான் விரும்பும்வரை அதை கொண்டிருக்கவேண்டும்.”

யது அதை எதிர்பார்க்காமையால் மலைத்துப்போய் நின்றான். “என்ன சொல்கிறாய்?” என்றான் யயாதி. “நீ முதுமைகொள்வது உனக்கும் நன்று…” என்றபின் “நீர்க்கலம் வருக! சொல்லோதி பொழிவுக்கொடை அளிக்கிறேன்” என்றான். யது புரிந்துகொண்டு சினம் மேலிட நிலையழிந்து உரத்தகுரலில் “நீங்கள் அடைந்தது உங்கள் இழிசெயலின் விளைவை. அதை பிறர் ஏன் சுமக்கவேண்டும்?” என்றான். “மூடா…” என்றபடி யயாதி எழப்போக பார்க்கவன் அவனைப் பிடித்து “அரசே…” என்றான். “விடு என்னை… நீ என் அரசை கொள்ளப்போகிறாய். என் மூன்று வினைகளுக்கும் நீயே தொடர்ச்சி…” என்றான். “ஆம், ஆனால் ஊழெனில் அதை தெய்வங்கள் அளிக்கவேண்டும். மானுடர் அளிக்கக்கூடாது. அவ்வாறு அளிக்கக்கூடும் என்றால் அத்தனை தந்தையரும் தங்கள் பிணிகளை மைந்தர்மேல் ஏற்றிவைப்பார்கள்… நான் உடன்படமுடியாது” என்றான்.

யயாதி “தந்தையரின் பிணிகளும் மைந்தருக்கு வருகின்றன” என்றான். “நான் அளிப்பதையே நீ கொள்ளமுடியும்…” யது “நீங்கள் எங்களுக்கு அளித்தவை எவையும் நீங்கள் ஈட்டியவை அல்ல. சந்திரகுலத்து மூதாதையரின் செல்வங்கள் இவை.

எங்களை இக்குலத்தில் பிறக்கச்செய்த தெய்வங்களால் இவை அளிக்கப்பட்டுவிட்டன. உங்களிடம் இரவலராக நாங்கள் வந்து நிற்கவில்லை" என்றான். யயாதியின் தலை நடுங்கியது. கைகள் நடுக்கத்தில் அங்குமிங்கும் அலைபாய்ந்தன. பீடத்தில் மீண்டும் அமர்ந்து கைகளை தொடைக்குக்கீழே வைத்து நடுக்கத்தை அடக்கியபடி "இளையவனே..." என்றான். துர்வசு "நீங்கள் எவர்பொருட்டு இத்தீச்சொல்லை பெற்றீர்கள் என அறிவோம். அவர்களுக்காக எம் அன்னையை ஏமாற்றினீர்கள். அவர்களே இந்த மூப்புப்பிணியையும் ஏற்கக் கடமைப்பட்டவர்கள். செல்க!" என்றான்.

பார்க்கவன் "இளவரசே, இதையெல்லாம் இந்நள்ளிரவில் பேசவேண்டியதில்லை. நாம் நாளை அமர்ந்து பேசுவோம்" என்றான். "நீர் எத்தனை பேசினாலும் எங்கள் முடிவு இதுதான். இவரை நம்பி மூப்பை ஏற்பதன் மடமையை நான் அறிவேன். இவர் எதன்பொருட்டு இளமையைக் கோருகிறார்? அடைந்த பெண்கள் போதவில்லை அல்லவா? மேலும் காமத்தில் திளைக்க உடல் தேவை அல்லவா? இவருக்கு காமம் எப்போது திகட்டும்? அமைச்சரே, காமம் திகட்டிய எவரேனும் உள்ளனரா? இவர் திரும்பிவந்து முதுமையை பெற்றுக்கொள்வார் என நீங்கள் எண்ணுகிறீர்களா? சொல்லுங்கள்..." என்றான் யது.

பார்க்கவன் "அதை நாம் பேசுவோம்" என்று சொல்ல யது "விலகுங்கள்! இது எங்களுக்குள் பேசி முடிக்கவேண்டிய சிக்கல். தந்தையே, உங்கள் காமத்தை நான் நம்பவில்லை. உங்கள் நேர்மையையும் நான் நம்பவில்லை. என் தாயை ஏமாற்றியவர் நீங்கள். உங்கள் இழிவைக்கண்டு உளம்வெறுத்துச்சென்று அவர்கள் முடிமழித்து துவராடை அணிந்து தனிச்சோலையில் தவமிருக்கிறார்கள். நீங்கள்

அதன்பின்னரும் காமம் நிறையாமல் வந்து இளமைக்காக இரக்கிறீர்கள். இப்படி இரந்து நிற்பதனூடாகவே மேலும் இழிவுகொள்கிறீர்கள். உங்களை நம்பி இளமையை அளிக்க நான் மூடன் அல்ல" என்றான். துர்வசு "அவர்களிடம் சென்று கேட்டுப்பாருங்கள்! அவர்கள் உங்களுக்கு அளித்தது இந்த முதுமை. அவர்களே பெற்றுக்கொள்ளட்டும்" என்றான்.

யயாதி வாயை இறுக மூடியபோது அது சுருங்கி ஒரு துணிமுடிச்சென ஆயிற்று. அவன் விழிகளில் வெறுப்பு தெரிந்தது. அவன் உடல் நடுங்கிக்கொண்டே இருந்தது. "அரசே, நாம் இப்போது இதைப் பேசியது பிழை. எவர் உள்ளமும் நிலைகொண்டிருக்கவில்லை. வெறும் உணர்வாடல் இது. நாளை ஆவதை எண்ணி சொல்லெடுத்துப் பேசுவோம்" என்றான். யயாதி "இனி எனக்குப் பேச ஏதுமில்லை. இவர்கள் என் கொடிக்கும் குருதிக்கும் வழித்தோன்றல்கள் அல்ல" என்றான்

சுகிர்தர் "அரசே..." என கைநீட்ட "விலகு... இது என் சொல். மூதாதையர் அறிக! என் குலதெய்வங்கள் அறிக! நான் கொண்ட படைக்கலங்கள் கொன்றவர்களின் உயிர்கள் அறிக! இன்றுவரை நான் அவையமர்ந்து அளித்த தீர்ப்புகளால் இறந்தவர்கள் அறிக! இது என் சொல்! இவர்கள் என் மைந்தர்கள் அல்ல. இவர்களின் பிறவிநூல்களை நோக்கிய அன்றே இவர்களின் ஊழை உணர்ந்தேன். அது ஏன் என இன்று புரிந்துகொள்கிறேன்."

அவன் குரல் நடுக்கமிழந்து உரக்க ஒலித்தது. "மூத்தவனே, நீ ஒருபோதும் நிலைகொள்ளமாட்டாய். குடியுடனும் கன்றுகளுடனும் நிலத்திலிருந்து நிலம் நோக்கி சென்றுகொண்டே இருப்பாய். உன் செல்வம் ஒருபோதும்

மண்ணில் நிலைக்காது, அது கால்கொண்டு அலைவதாகவே அமையும். உன் குடிகளுக்கும் அதுவே ஊழென்றமையும். நீங்கள் அந்தணராலும் ஷத்ரியர்களாலும் வேட்டையாடப்படுவீர்கள். எரித்து அழிக்கப்படுவீர்கள். கொன்றுகுவிக்கப்படுவீர்கள். நீங்கள் வெல்பவை அனைத்தும் கணம்கணமென கைநழுவும். நீங்கள் கட்டி எழுப்பிய அனைத்தும் உங்கள் கண்ணெதிரே நுரையெனப் பொலியும். ஆம், அவ்வாறே ஆகுக!"

யது நடுங்கி பின்னடைந்து அறியாது கைகூப்பிவிட்டான். யயாதி துர்வசுவை நோக்கி திரும்பி "நீ ஒருபோதும் பசுநிலத்தை காணமாட்டாய். பாறைகள் வெடித்த பாலைகளில் அனல்காற்றுகளால் அலைக்கழிக்கப்படும் சருகென்றமையும் உன் வாழ்வு. உன் கொடிவழிகளுக்கும் அவ்வாறே. ஆம், அவ்வாறே ஆகுக!" என்றபின் தன்னை தூக்கும்படி கை நீட்டினான். யது பாய்ந்து வந்து ஓசையுடன் நிலத்தில் விழுந்து யயாதியின் கால்களை பற்றிக்கொண்டு "பொறுத்தருள்க தந்தையே… என் அச்சமும் ஐயமும் என்னை ஆட்கொண்டுவிட்டன. நான் சொன்னவற்றின் பொருளை நான் உணர்கிறேன். அவையனைத்தும் என்னுள் உறையும் உங்கள் மேல் கொண்ட வெறுப்பிலிருந்து எழுந்தவை. தந்தையே நான் நீங்களேதான்" என்றான்.

யயாதி "ஆம், நான் உன்மேல்கொண்ட வெறுப்பும் என்மேல் நான் கொண்டதே" என்றான். யது கண்ணீருடன் தலைதூக்கி "அளிகூர்ந்து சொல்முறிவளியுங்கள்… நான் மீளும் வழி உரையுங்கள், தந்தையே" என்றான். யயாதி நீள்மூச்செறிந்து "ஆம், நான் அதையும் அளித்தாகவேண்டும். உன் குருதி நூறுமேனி விளையும். மைந்தா, நிலம் பெருகுவதல்ல,

கால்நடைகளோ ஆண்டுதோறும் இருமடங்காகும். எனவே உன்குலம் ஆபுரந்து வாழட்டும். பாரதவர்ஷமெங்கும் பரவி கிளையிலிருந்து கிளைபிரிந்து என்றும் அழியாது நிலைகொள்ளட்டும்”என்றான்

மேலும் உளம் எழ அவன் குரல் ஆணை என ஒலித்தது “உன்குடியில் மாவீரர் எழுவர். பேரன்னையர் பிறப்பர். சிப்பிகளனைத்தும் முத்து நிகழும் வாய்ப்புகளே என்பதுபோல குலங்களெல்லாம் தெய்வம் வந்து பிறப்பதற்கானவை. உன் குடியில் விண்நிறைந்த பரம்பொருள் கனிந்து துளித்துச் சொட்டி நிறைக! அவன் பெயரின் பொருட்டே உன்குருதியை மானுடக்குலம் போற்றும். ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான்.

கண்ணீர் வழிய அருகே வந்து மண்டியிட்ட துர்வசுவின் தலையைத் தொட்டு “தந்தை என உன் குலத்தை நான் வாழ்த்துகிறேன். கல்கரையும் வறுதியிலும் பசுந்தளிர்விடும் பாலைமுட்கள் போலாகட்டும் உன் குடி. என்றும் அழியாது. உன் கொடிவழியில் பிறந்தவர்கள் மலைநாடுகளை ஆள்வார்கள். அவர்களில் எழுந்த அரசி ஒருத்தியின் குருதியில் பேரரசர்கள் பிறந்து கங்கைக்கரைகளில் கொடிதிகழ்வார்கள். ஆம், அவ்வாறே ஆகுக!” நெஞ்சு விம்மி விம்மித் தணிய யயாதி பார்க்கவனிடம் “நாம் உடனே அசோகவனிக்கு செல்லவேண்டும்” என்றான். “அரசே, தாங்கள் களைத்திருக்கிறீர்கள். ஓய்வெடுங்கள்” என்றான் பார்க்கவன். “இல்லை. இனி ஒருகணம்கூட என்னால் பிந்த இயலாது… எழுக தேர்!” என்றான் யயாதி.

மறுநாள் புலரிச்சுடர் எழுந்தபோது அவர்கள் அசோகவனியை சென்றடைந்தனர். அவர்கள் வருவது சொல்லப்படாததனால் கூண்டுத்தேரைக் கண்டு கோட்டைக்காவலர் தலைவன்

திகைத்து அருகே ஓடிவந்தான். பார்க்கவன் சுருக்கமாக செய்தியைச் சொல்ல அவனும் இருகாவலரும் புரவிகளில் முன்னே சென்றார்கள். காலையில் அசோகவனியின் தெருக்களில் வணிகம் தொடங்கிவிட்டிருந்தது. சாலைநெரிசலுக்கு அப்போதும் பழகாத மக்கள் வந்து குறுக்கே விழுந்துகொண்டே இருந்தனர். அரண்மனை முகப்பை அடைந்ததும் தேர் விரைவழிய யயாதி விழித்துக்கொண்டு "எங்கு வந்துள்ளோம்?" என்றான். "வந்துவிட்டோம், அரசே" என்றான் பார்க்கவன்.

அரண்மனை முற்றத்திலேயே காவலர்தலைவனுடன் மூன்று மைந்தரும் காத்து நின்றிருந்தார்கள். திருஹ்யூயும் அனுதிருஹ்யூயும் முன்னால் நின்றிருந்தனர். அவர்களின் முகங்கள் குழப்பம்கொண்டவர்களைப்போல தெரிந்தன. புரு அவர்களுக்குப்பின்னால் அவர்களால் பாதிமறைக்கப்பட்டு நின்றான். பார்க்கவன் "இறங்கலாம், அரசே" என்றான். யயாதி கைநீட்ட அதைப் பற்றி மெல்ல அவனை இறக்கினான். படிகளில் கால் வைத்து நடுங்கியபடி இறங்கி கூனிட்டு நின்ற யயாதி நெற்றிமேல் கை வைத்து அவர்களை நோக்கினான்.

மைந்தர் மூவரும் அருகே வந்து கால்தொட்டு வணங்கினர். "நலம் சூழ்க!" என வாழ்த்திய யயாதி "நான் உங்களிடம் ஒரு கோரிக்கைக்காகவே வந்தேன்" என்றான். "உள்ளே சென்று பேசுவோம்" என்றான் பார்க்கவன். "இல்லை, நான் இனிமேல் முறைமைகளுக்கு நேரத்தை வீணடிப்பதாக இல்லை. நிகழ்ந்தவை இவர்களுக்குத் தெரியும் என எண்ணுகிறேன்." பார்க்கவன் "ஆம், அனைத்தும் ஒற்றர்களின் வழியாக முன்னரே தெரிந்திருக்கின்றன. நீங்கள் வருவதை நான் பறவையோலையினூடாகத் தெரிவித்தேன்" என்றான்.

“அப்படியென்றால் நான் சொல்விளையாட விழையவில்லை. என் மைந்தரில் ஒருவர் இம்முதுமையை பெற்றுக்கொண்டு தன் இளமையை எனக்கு அளிக்கவேண்டும். நான் விழைவதுவரை அதை கொண்டிருக்கவேண்டும்” என்றான் யயாதி.

அனுதிருஹ்யூ புருவங்களைச் சுருக்கியபடி அசையாமல் நின்றான். “முதல்மைந்தர் இருவரும் மறுத்துவிட்டனர். ஆகவே இங்கே உங்களிடம் வந்துள்ளேன்” என்றான் யயாதி. “பொறுத்தருள்க, தந்தையே. நேற்றே என்னிடம் இச்செய்தி தெரிவிக்கப்பட்டுவிட்டது. இரவெல்லாம் அதைப்பற்றியே எண்ணிக்கொண்டிருந்தேன். உவந்து உங்கள் முதுமையை பெற்றுக்கொள்ளவேண்டும் என்றுதான் எண்ணினேன். ஆனால் என் உள்ளம் அதை ஏற்கவில்லை. நான் என்னை கட்டாயப்படுத்தி மட்டுமே அதை பெற்றுக்கொள்ளமுடியும்” என்றான் திருஹ்யூ.

யயாதி “ஆம், இதை நான் எதிர்பார்த்தேன்” என்றான். அனுதிருஹ்யூ “நானும் அதையே சொல்ல விழைகிறேன், தந்தையே” என்றான். “நீங்கள் என் தந்தையென்றாகி இன்னமும் ஒருமாதம்கூட ஆகவில்லை. நான் ஏற்றுக்கொண்டாலும் உள்ளம் அவ்வண்ணம் எண்ணவில்லை. எவரோ ஒருவருக்கு என் இளமையை ஏன் அளிக்கவேண்டும் என்னும் குரலை என்னால் அடக்கவே முடியவில்லை” என்றான்.

யயாதி புருவை நோக்கி திரும்பாமல் “மூன்றாமவனும் சொல்லட்டும்” என்றான். புரு “நான் பெற்றுக்கொள்கிறேன், தந்தையே” என்றான். யயாதி திகைத்துத் திரும்பி நோக்கி “எண்ணித்தான் சொல்கிறாயா?” என்றான். “ஆம், நான் முன்னரே உடன்பிறந்தார் எவரேனும் ஏற்றுக்கொண்டு எனக்கு வாய்ப்பு

வராதமையுமோ என ஐயம் கொண்டிருந்தேன்... இது என் நல்லூழ் என்றே எண்ணுகிறேன்.” யயாதி அவனையே நோக்கிக்கொண்டு சிலகணங்கள் நின்றான். தலை நடுங்க உதடுகள் எதையோ சொல்வனபோல் அசைந்தன. “ஏன்?” என்று பின்னர் கேட்டான். “நான் உங்களை எப்போதும் என் தந்தையென்றே எண்ணிவந்திருக்கிறேன்” என்றான் புரு.

“உன் அன்னை எப்போது அதை சொன்னாள்?” என்றான் யயாதி. “தந்தையே. இப்போதுவரைக்கும்கூட அன்னை அதை சொல்லவில்லை. ஏனென்றால் நீங்கள் சொல்லும்படி அவருக்கு ஆணையிடவில்லை. பேரரசியின் ஆணையால் நாங்கள் இளவரசர்கள் என அறிவிக்கப்பட்டோம். இவ்வரண்மனைக்கு அரசமுறையாக குடிவந்தோம். அரசகுடியினருக்குரிய அணிகளும் ஆடைகளும் முத்திரைகளும் கொடிகளும் முறைமைகளும் எங்களுக்கு அளிக்கப்பட்டன. அன்னை இன்னமும் சேடியருக்குரிய இல்லத்தில் சேடியாகவே இருக்கிறார். அவரை அரசியாக ஆக்கவேண்டியவர் நீங்கள் என்றார்” என்றான் புரு.

“ஆனால் நான் என் மொழிதிருந்தா நாளிலேயே உங்களை என் தந்தை என உணர்ந்திருந்தேன். என் நினைவறிந்த உங்கள் முதல் தொடுகையே அதை சொல்லிவிட்டது. என் தோள்களை வருடி புயங்களைப் பற்றி அழுத்திப் பார்த்தீர்கள். என்னை மடியிலமர்த்தி என் குழலை ஆழ மூச்சிழுத்து முகர்ந்தீர்கள். அன்று அறிந்த உங்கள் மணம் என் நினைவில் இன்றுமுள்ளது. என் கனவில் தந்தையாக எப்போதும் அத்தொடுகையுடனும் மணத்துடனும் வந்துகொண்டிருக்கிறீர்கள்” என புரு தொடர்ந்தான். “பேரரசி என்னிடம் உன் தந்தை யார் என்று கேட்டபோது நெஞ்சறிந்த ஒன்றை மறைக்க என்னால்

இயலவில்லை. அன்று நான் சொன்ன சொல்லால்தான் நீங்கள் இம்முதுமையை கொண்டீர்கள். நான் இதை ஏற்றுக்கொள்வதே அறம்.”

யயாதி தொழுவதுபோல நெஞ்சில் கைகுவிய “வேண்டியதில்லை, மைந்தா. நீ எனக்களித்தது என்ன என்று அறியமாட்டாய். மைந்தன் என இப்புவியில் உறவேதுமில்லை என்று என் உள்ளம் எண்ணத்தொடங்கியிருந்தது. குருதியின் நேர்நீட்சியான மைந்தரும் பொய்யுறவே என்றால் இப்புவியில் உறவு என்பதே இல்லை. நீ நான் நம்பிவாழ்ந்த ஓர் உலகம் இடிந்து நொறுங்கி மண்ணில் விழாமல் காத்திருக்கிறாய்” என்றான். “புத் என்னும் நரகம் ஏதென்று வரும் வழியில் எண்ணிக்கொண்டேன். உறவென ஏதுமில்லாமல் வாழ்தலும், இறந்தபின் நினைக்கப்படாமல் மறைதலுமே புத். அதிலிருந்து மீட்பவனே புத்ரன். எனக்கு நீ ஒருவனே மைந்தன். என் முடியும் கொடியும் குடிமரபும் உனக்குரியவை.”

“தந்தையே, நான் அவற்றை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றால் உங்கள் முதுமையையும் ஏற்றாகவேண்டும்” என்றான் புரு. “அதனூடாகவே நீங்கள் உங்கள் மைந்தன் என என்னை உலகோர் முன் நிறுவுகிறீர்கள். உங்கள் துயரையும் நோயையும் ஏற்றுக்கொண்டால் மட்டுமே உங்கள் கொடையையும் பெற்றுக்கொள்ளும் தகுதியை அடைகிறேன்” என்றான் புரு. அருகே வந்து மண்டியிட்டு யயாதியின் கால்களைத் தொட்டு “எனக்கு உங்கள் முதுமையை அளியுங்கள், தந்தையே” என முறைமைப்படி செம்மொழிச் சொல்லால் கேட்டான்.

யயாதி பெருமூச்சுடன் திரும்பி நோக்க சுகிர்தர் “நீர்...” என்றார். ஏவலன் ஒருவன் பித்தளை வால்குடுவையில் நீருடன் ஓடிவந்தான். சுகிர்தர் அதை வாங்கி “கங்கையே, செல்லுமிடம்

கனிந்து அடையுமிடத்தை முற்றிலும் நிரப்பும் நீயே கொடைகளுக்குச் சான்று. உன் ஒழுகுதலென இக்கொடை வளர்ந்து செல்க!” என்று உரைத்து நீட்டினார். யயாதி அதை வாங்கிக்கொண்டபோது கைநடுக்கத்தால் நீர் ததும்பிச் சிந்தியது.

புரு இரு கைகளையும் ஏந்த அதில் நீரூற்றி “என் முதுமையை உனக்களிக்கிறேன். ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான் யயாதி. வால்குடுவையை பார்க்கவன் பெற்றுக்கொண்டான். புரு எழுந்துகொள்ள சுகிர்தர் “நீங்கள் இளமையை அளிக்கவேண்டும், இளவரசே” என்றார். புரு வால்குடுவையை வாங்கிக்கொண்டான். யயாதி கையேந்த புரு நீரூற்றி “என் இளமையை கொள்க! ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான்.

அனைவரும் மெல்ல உடல்தளர்ந்தனர். எவரிடமிருந்தென்றில்லாமல் ஓரிரு பெருமூச்சொலிகள் எழுந்தன. யயாதி திருஹ்யூவையும் அனுதிருஹ்யூவையும் நோக்கி “உங்கள்மேல் எனக்கு இப்போது சினமில்லை, மைந்தர்களே. ஆனால் நிகர்முறை செய்வதற்காக நான் உங்களுக்கும் தீச்சொல்லிட்டாகவேண்டும்” என்றான். அவர்கள் கைகூப்பி நின்றனர். திருஹ்யூயை நோக்கி “நீயும் உன் இரு உடன்பிறப்புகளைப்போல நிலையற்று அலையும் ஊழ்கொள்க! நீரில் அமைக உன் வாழ்வும் உன் குருதிவழியினரின் வாழ்வுத்தொடரும். தோணியோட்டுக, மீன்கொள்க! ஒருபோதும் நீரிலிருந்து எழாதமைக!” என்றான்.

திருஹ்யூ தலைவணங்கினான். “ஆனால் உன் கொடிவழியினர் அரசுகள் அமைப்பார்கள். மீன் உங்கள் கொடியாகும். மச்சர்கள் என குலப்பெயர் கொள்வீர்கள். உங்கள் குடிப்பிறந்த பெண் ஒருநாள் பாரதவர்ஷத்தில் அழியாப் புகழ்கொண்ட பேரரசியென்றமைவாள். அவள் குருதியில் எழும் அரசர்களால்

இப்பெருநிலம் ஆளப்படும். ஆம், அவ்வாறே ஆகுக!” என்றான் யயாதி.

அனுதிருஹ்யூவிடம் “தென்னகக் காடுகளில் நீ அலைவாய். அரக்கருக்கும் அசுரருக்கும் உரிய வாழ்க்கையே உனக்கும் உன் குடிமுறைகளுக்கும் அமையும்” என்றான். அனுதிருஹ்யூ தலைவணங்கினான். “ஆனால் அனல்குடிபிறந்த அந்தணன் ஒருவனால் உன் குடி அரசகுலமாக ஆக்கப்படும். தென்னகத்து நிலங்களை நீங்கள் ஆள்வீர்கள். முற்றிலும் புதுப் பெயரும் புது முத்திரையும் கொள்வீர்கள். உன் குருதி வாழும். உன் பெயர் முற்றிலும் மறைந்துபோகும். ஆம், அவ்வாறே ஆகுக!”

யயாதி பார்க்கவனிடம் கையை நீட்டி “செல்வோம், இனி என்னால் இங்கு நின்றிருக்கமுடியாது” என்றான். அவன் கைகளை பற்றிக்கொள்ள மெல்ல நடந்து படிகளில் ஏறினான். ஒவ்வொரு அடிக்கும் உடல் ஆற்றல்கொண்டுவருவதை உணரமுடிந்தது. இறுதிப்படியில் கால்வைத்தபோது பார்க்கவனே பிடியை விட்டுவிட்டான். விழிகள் தெளிய ஓசைகள் துலங்க நிமிர்ந்த உடலுடன் சுற்றும்நோக்கிய கணத்தில் புருவின் நினைவு எழுந்தது. பின்பக்கம் வியப்பொலிகளும் மெல்லிய பேச்சுக்கசங்கலும் கேட்டன. திரும்பிப் பார்க்கலாகாது என தனக்கே ஆணையிட்டுக்கொண்டு அவன் முன்னால் சென்றான்.

# மாமலர் - 88

**88. விழிநீர்மகள்**

படுக்கையறை வாயிலில் பார்க்கவன் “ஓய்வெடுங்கள், அரசே!” என்றான். அவன் விழிகள் மாறிவிட்டிருப்பதை யயாதி கண்டான். வெறும் நோக்கிலேயே நோக்கப்படுபவன் இளைஞனா முதியவனா என்று தெரியுமா? “தேவையில்லை என்று எண்ணுகிறேன். களைப்பாக இல்லை” என்று யயாதி சொன்னான். “பொழுது வீணடிப்பதற்குரியதல்ல என்று தோன்றுகிறது. நாழிகைக் கலத்திலிருந்து இறங்கும் ஒவ்வொரு மணல்பருவும் இழப்பதற்கு அரிய காலத்துளி என நினைக்கிறேன்” என்றவன் புன்னகைத்து “இளமை எனும் இன்மது” என்றான்.

பார்க்கவனும் உடன் புன்னகைத்து “ஆம், மானுட உடலின் இளமை மிக அரிதானது. நோக்கியிருக்கையிலேயே ஒழிந்து மறைவது. ஆனால் இளைஞர்கள்தான் காலத்தை வீணடிப்பவர்கள். அளவற்றது இளமை என மயங்குபவர்கள். முதுமையிலிருந்து இளமைக்கு மீண்டிருப்பதனால் அதன் அருமையை அறிந்திருக்கிறீர்கள்” என்றான். “எனக்கு இன்மது கொண்டுவரச்சொல். என் காவியநூல்கள் உள்ளே இருக்கின்றன அல்லவா?” பார்க்கவன் “பாணர்களையும் விறலியரையும் வரச்சொல்கிறேன். பரத்தையர் வேண்டுமென்றாலும் ஆணையிடுகிறேன்” என்றான்.

“வரச்சொல்” என்றபின் யயாதி பீடத்தில் அமர்ந்தான். பார்க்கவன் தலைவணங்கி வெளியேறினான். அவன் சுவடிகளை படிக்கத் தொடங்கினான். உத்பவரின் ரிதுபரிணயம் என்னும் அகச்சுவைக் காவியம். கையில் எடுத்ததுமே சுவடிகளை புரட்டிப்புரட்டி அதிலிருந்த காமவிவரிப்புகளை தேடிச்சென்றான். அந்த நூல் அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆனால் அத்தகைய நூல்களின்

அமைப்பும் சிக்கலும் ஊடுவழிகளும் உள்ளறிந்தவையாக இருந்தன. குருதித்தடம் முகர்ந்துசெல்லும் ஊனுண்ணி விலங்குபோல. சௌம்யன் என்னும் கந்தர்வன் சரிதை சுசரிதை என்னும் இரு காட்டுதேவதைகளைப் புணரும் இடத்தை சென்றடைந்தான். முதல் வரியே படபடப்பை ஊட்டியது. எவரோ தன்னை நோக்கும் உணர்வை அடைந்தான். நிமிர்ந்து அறையின் தனிமையை உறுதிசெய்தபின் மீண்டும் படித்தான்.

உடல்கள் இணைவதன் சொற்காட்சி. வெறும் உடல். உயிர்விசையால் நிலையழிந்து விலங்காகி புழுவாகி நெளியும் நுண்மொழிதல். பதினெட்டு பாடல்களைக் கடந்ததும் அவன் புரவி கால்தளரலாயிற்று. சலிப்புடன் மேலும் எத்தனை பாடல்கள் என்று நோக்கினான். அறுபது பாடல்கள் கொண்ட ஒரு பாதம் அது. சுவடியை மூடி கட்டிவைத்துவிட்டு சலிப்புடன் எழுந்து சாளரம் வழியாக நோக்கினான். இலைகள் சுடர உச்சிவெயில் இறங்கிய சோலைக்குள் பறவைகளின் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. ஒளிச்சிதறல் வட்டங்களாகி நிழல்கள் கண்ணிகள் எனத் தெரிந்தன.

அந்த அமைதியும் அசைவின்மையும் உள்ளத்தை அமையச்செய்ய அவன் சலிப்புற்றான். உள்ளிருந்து ஒரு விசை எழுக, விரைக, பறந்தலைக என்றது. அச்சுவரை உடைத்து வெளியேறவேண்டும் என. தசைகளெங்கும் தினவென அந்த வேட்கை எழுந்ததும் ஒருகணம்கூட அறைக்குள் அமர்ந்திருக்க இயலாதென்று தோன்றியது. மது கொண்டுவர இத்தனை நேரமா? என்ன செய்கிறார்கள்? அத்தனைபேரும் நீருக்குள் உடல்கள் என மெல்ல அசைகிறார்கள். கிளைகள் தாலாட்டுகின்றன. உதிரும் இலைகள் மிதந்திறங்குகின்றன. எங்கும் விரைவென்பதே இல்லை. புரவி ஒன்றில் ஏறி

மலைச்சரிவில் பீரிட்டிறங்கவேண்டும். கற்கள் தெறித்து உடன் உருண்டு வர. காற்று கிழிபட்டு இரு காதுகளிலும் ஊளையிட்டுப் பறந்தலைய.

மீண்டும் சுவடியை எடுத்து புரட்டினான். சாரங்கரின் 'கிரௌஞ்ச சந்தேசம்'. சுவடிகளை புரட்டிச்சென்றபோது ஒரு வரியால் நிறுத்தப்பட்டான். புன்னகையில் நீண்டும் பேசுகையில் குவிந்தும் செவ்வுதடுகள் அழகிய மீன்கள் என நீந்திக்கொண்டிருக்கின்றன. புன்னகையுடன் விழிசரித்து அவன் அக்காட்சியை நிகழ்கனவில் கண்டான். சுருங்கியும் நீண்டும் செல்லும் செக்கச்சிவந்த மென்மையான மீன். அவன் உடல் தித்திப்படைந்தது. சூழ்ந்திருந்த காற்று தேன்விழுதென மாறியதுபோல. மீண்டும் ஒரு வரியை படித்தான். 'உன் எண்ணங்களின் இனியமதுவில் கால்சிக்கிக்கொண்டன இரு கருவண்டுகள். சிறகடித்து சிறகடித்து தவிக்கின்றன'. ஆனால் அந்த ஒப்புமைக்குள் செல்லமுடியவில்லை. மீண்டும் அந்த முதல் ஒப்புமைக்கே சென்றான். அதை அன்றி பிறிதை அன்று எண்ணமுடியாதென்று தோன்றியது.

இன்மதுவுடன் சேடியர் வந்தனர். பெண்களின் காலடியோசையை தன் செவிகள் தெளிவாக தனித்தறிவதை உணர்ந்தான். நெஞ்சு படபடத்தது. அவர்களின் உருவை ஒருகணம் முன்னரே உள்ளம் வரைந்துகொண்டது. அவர்களில் ஒருத்தி சற்று பருத்த மூத்த வயதினள் என்றும் இருவர் இளையவர்கள் என்றும் அவன் அகம் நோக்கிக்கொண்டிருந்தபோதே அவர்கள் கதவைத் திறந்து மதுக்கோப்பைகளும் நுரைசூடிய குடுவையில் மதுவுமாக உள்ளே வந்தனர். அவர்களை ஒருகணம் நோக்கியதுமே நெஞ்சு படபடக்க அவன் விழிகளை தாழ்த்திக்கொண்டான்.

கண்முன் அவர்களின் சிலம்பணிந்த கால்கள் நடமாடின. கோப்பைகள் உரசும் ஒலி, மது தளும்பும் சிரிப்பு. மூச்சொலி, அணிகளின் குலுங்கல். உடை கசங்கலின் நுண்ணொலி. வியர்வையும் மலரும் சாந்தும் குங்குமமும் நறுஞ்சுண்ணமும் கலந்த மணம். ஏன் என்னால் விழிதூக்கி அவர்களை நோக்கமுடியவில்லை? ஏன் உடல் பதறிக்கொண்டிருக்கிறது? நெஞ்சின் ஓசையே காதுகளில் நிறைந்திருந்தது. "அரசே, இன்மது பரிமாறலாமா?" அவன் நிமிராமல் "ஆம்" என்றான். அவ்வொலி மேலெழவில்லை. வியர்வை பூத்த உடல்மேல் சாளரக்காற்று மென்பட்டுபோல வருடிச்சென்றது. அவர்கள் சென்றுவிட்டால் போதும் என விழைந்தான்.

மது ஊற்றப்படும் ஓசை. ஒருத்தி மெல்லிய குரலில் ஏதோ சொன்னாள். பிறிதொருத்தி சிரித்தாள். மூத்தவள் அதை அடக்கினாள். முதலிருவரும் குயிலும் குருவியும். இவள் மயில். கோப்பையை வாங்கியபோது அவன் அப்பெண்ணின் விரல்களை நோக்கினான். நிமிர்ந்து அவர்களின் கண்களைக் கண்டதுமே திடுக்கிட்டு நோக்கு தாழ்த்திக்கொண்டான். அவள் சிரிப்பு படர்ந்த குரலில் "ஏதேனும் தேவையா?" என்றாள். "இல்லை" என்றான். அவர்கள் அவனுக்காக காத்திருக்க அவன் ஒரு மிடறு அருந்திவிட்டு கோப்பையை பீடத்தின் மேல் வைத்தான். "இவள் இங்கே நின்று தங்களுக்கு பரிமாறுவாள்" என்றாள் மூத்தவள். "வேண்டாம்" என்று அவன் பதறிய குரலில் சொன்னான். "ஏன்?" என்று அவள் கேட்டாள். "இல்லை... வேண்டாம்" என்றான்.

பக்கவாட்டில் எவரோ நின்றிருக்கும் உணர்வு எழ திடுக்கிட்டு நோக்கியபோது அங்கே ஆடியில் அம்மூவரும் தெரிந்தனர். ஒருத்தி மாநிறமான மெல்லிய உடலும் நெளியும் கூந்தல்

கரைவகுத்த நீள்முகமும் கனவுதேங்கியவை போன்ற பெரிய விழிகளும் சிறிய மூக்கும் குமிழுதடுகளும் நரம்போடிய மெல்லிய கைகளும் கொண்டவள். இன்னொருத்தி நுரைபோன்ற கூந்தலும் உருண்ட முகமும் சிரிப்புஒளிரும் சிறிய விழிகளும் பெரிய சிவந்த உதடுகளும் தடித்த கழுத்தும் கொண்டவள். நீலநரம்புகள் படர்ந்த வெண்ணிறத் தோல். உயரமற்ற உடல்.

மூத்தவள் அவர்களைவிட உயரமானவள். பெரிய கொண்டையும் வலுவான கழுத்தும் திரண்ட தோள்களும் இறுகிய இடைக்குமேல் பெரிய குவைகளென முலைகளும் உருண்ட பெரிய கைகளும் கொண்டவள். உறுதியான நோக்குள்ள கண்கள். செதுக்கப்பட்டவை போன்ற உதடுகள். அக்குழலை அவிழ்த்திட்டால் தொடைவரை அலையிறங்கக்கூடும். இளஞ்செந்நிறமான அவள் கைகளில் நரம்புகளே இல்லை. வளையல்கள் சற்று இறுக்கமாக இருந்தன. வளையல் படிந்த தடம் உருண்ட மணிக்கட்டில் தெரிந்தது. விரல்களில் செம்பாலான நாகமோதிரம் ஒன்றை அணிந்திருந்தாள்.

அவன் நோக்கை விலக்கிக்கொண்டான். “இல்லை... நீங்கள் செல்லலாம்... எனக்கு ஒரு குவளை போதும்” என்றான். “ஒரு குவளையா?” என்று அவள் சொன்னாள். “ஆம்” என்றபின் அவன் நிமிர்ந்து அவளை நோக்கி “நான் மயங்கி காலத்தை வீணாக்க விழையவில்லை” என்றான். அவள் மெல்ல சிரித்து உதடுகளை மடித்து “ஆம், அது நன்று. மதுவருந்துவது அதன் நெகிழ்வை அறிந்து மகிழ்வுகொள்வதற்காக. துயில்வதென்றால் மது எதற்கு?” என்றாள். பின்னர் திரும்பி குவளைகளை எடுத்துச்செல்லும்படி விழிகளால் ஆணையிட்டாள். அவர்கள்

அவற்றை எடுத்துக்கொண்டு செல்கையில் முகங்கள் சற்று கூம்பியிருப்பதை பக்கவாட்டுத் தோற்றத்திலேயே கண்டான்.

அவர்கள் கதவை மூடியதும் அவள் அவனருகே வந்து “நீங்கள் விரும்பியது என்னை. ஆகவே நானே இங்கிருந்தேன்” என்றாள். அவன் பதறி “யார் சொன்னது?” என்றான். “ஆடியில் உங்கள் நோக்கை கண்டேன். நிலைத்ததும் தேடியதும் என்னுடலையே.” அவன் “இல்லை” என்றான். “ஆம்” என்று சொல்லி அவள் அவன் தோளை தொட்டாள். அவன் உடல் துடிக்கத் தொடங்கியது. “இன்று நான் உங்களுடன் இருக்கிறேன்.” அவன் பேசாமலிருந்தான். ஆனால் உடல் அனல்கொண்டது. காதுகளும் கண்களும் எரியத்தொடங்கின. அவள் அவன் தலைமேல் கையை வைத்து “நான் இருக்கட்டுமா?” என்று தாழ்ந்த குரலில் கொஞ்சலாக கேட்டாள்.

அக்குரல்மாற்றம் அவனை பின்னாலிருந்து உதைக்கப்பட்டதுபோல திடுக்கிடச் செய்தது. எழுந்து நின்று “வேண்டாம். செல்க!” என்றான். அவள் “ஏன்?” என்றாள். எழுந்ததுமே அவன் உடலின் அதிர்வுகளும் அடங்கிவிட்டிருந்தன “செல்க... செல்க!” என்று கைநீட்டி சொன்னான். குரல் உடைந்து பிற எவருடையதோ என ஒலித்தது. “செல்... செல்!” என்று அவன் உரக்க சொன்னான். அக்குரல்மாற்றத்தால் அவள் திகைத்து “ஆணை” என தலைவணங்கி வெளியே சென்றாள்.

கதவு மூடும் ஒலியில் அவன் இழுத்த கையால் விடப்பட்டவன் போல தளர்ந்தான். திரும்பவும் அமர்ந்துகொண்டு மூச்சிரைத்தபடி கண்களை மூடினான். உடலெங்கும் குருதி நுரையழிவதை உணர்ந்தான். மீண்டும் கதவு திறக்கும் ஒலி எழுந்தபோது அவன் உடல் குளிர்ந்திருந்தது. “யார்?” என்றான்.

“அரசே, நான்தான்” என்றான் பார்க்கவன். அவனருகே வந்து வணங்கி “மாலினியை திருப்பி அனுப்பினீர்கள் என்றாள்” என்றான். “யார்?” என்றான். “இப்போது வந்தவள்... சேடி.” யயாதி “ஆம், அவள் என்னிடம்...” என்றபின் “என்னால் இது இயலாது” என்றான். “ஆம், நான் அதை எண்ணினேன். மற்ற இருவரும் என்னிடம் சொன்னபோதே நீங்கள் இருக்கும் நிலை புரிந்தது.”

யயாதி சீற்றத்துடன் “என்ன நிலை?” என்றான். “முதிரா இளைஞனின் உளநிலை...” என்று பார்க்கவன் புன்னகைத்தான். “காமம் எண்ணங்களிலேயே நிகழமுடியும். உடல் அச்சமும் அருவருப்பும் ஊட்டும்” என்றான். யயாதி “இல்லை...” என்றபின் தயங்கி “ஆம், உண்மை” என்றான். “முதிரா இளமையின் இடரே எதையும் எதிர்கொள்ளமுடியாதென்பதுதான். உடலை எதிர்கொள்ள அஞ்சியே காமத்தை தூய்மைப்படுத்திக்கொள்கிறீர்கள். புகையோவியமென அது நிலம்தொடாது ஒளிகொண்டு நிற்கிறது. அதை மண்ணுக்கிழுப்பது உடல் என நினைக்கிறீர்கள்” என்றான். வாய்விட்டுச் சிரித்தபடி “நாளெல்லாம் எண்ணுவது பெண்ணை. ஆனால் பெண்ணுடல்மேல் வெறுப்பு. அந்த இரு நிலையைக் கடப்பதன் பெயரே அகவை எய்துதல்” என்றான்.

யயாதி நாணத்துடன் சிரித்து “ஆம்” என்றான். அச்சிரிப்பினூடாக அவர்கள் அத்தருணத்தின் இறுக்கத்தை கடந்தனர். “உங்களிடம் குற்றவுணர்ச்சி ஏதேனும் உள்ளதா?” என்றான் பார்க்கவன். “அதை நானே கேட்டுக்கொண்டேன். இல்லை, உடை களைந்து நீரில் குதித்தவனின் விடுதலையையே உணர்கிறேன்” என்றான் யயாதி. பார்க்கவன் “ஒருவேளை இனி அது எழக்கூடும். அவ்வாறு எழவேண்டியதில்லை” என்றான். “அரசே, மைந்தனுக்கு தந்தை அளிக்கும் கொடைகளில்

முதன்மையானது முதுமை அல்லவா? அத்தனை தந்தையரும் கைக்குழவியாக மைந்தர் இருக்கும்நாள் முதல் துளியாக மிடறாக அளிப்பது தானடைந்த முதுமையைத்தானே?" என்றான்.

யயாதி மெல்லிய உளக்கிளர்ச்சியுடன் "ஆம்" என்றான். "அதேபோல மைந்தர் தந்தைக்கு அளிக்கவேண்டியதும் இளமையை அல்லவா? தங்கள் இளமையின் மகிழ்வையும் விடுதலையையும்தானே இளஞ்சிறுவர்களாக அவர்கள் தந்தையருக்கு பரிசளிக்கிறார்கள்? தந்தையரின் முதுமையை அதனூடாக அவர்கள் தொடர்ந்து விலக்கிக் கொண்டிருக்கிறார்கள். தந்தையர் முதிர்ந்து உடலோய்ந்தமைகையில் மைந்தரின் தோளிலும் காலிலும் சொல்லிலும் விழியிலும் உள்ள இளமையைத்தானே துணைகொள்கிறார்கள்?"

"ஆம்" என்று யயாதி சொன்னான். மீண்டும் மீண்டும் ஒரே சொல்லையே சொல்கிறோம் என உணர்ந்து "உண்மை" என்றான். உள எழுச்சி தாளாமல் எழுந்துகொண்டு "மெய். நான் இதை எண்ணியதே இல்லை" என்றான். "அரசே, அத்தந்தையர் இறந்து மூச்சுலகெய்திய பின்னர் மைந்தர் அளிக்கும் உணவும் நீரும் நுண்சொல்லுமே அவர்களை என்றுமழியா இளமையுடன் விண்ணில் நிறுத்துகிறது" என்றான் பார்க்கவன். "ஆம்" என்றபடி யயாதி அமர்ந்தான். "ஆகவே எங்கும் நிகழ்வது இங்கு அதன் முழுமையுடன் அமைந்தது என்றே கொள்க!" என்றபின் பார்க்கவன் எழுந்தான். "நீங்கள் விழைந்தால் வேட்டைக்கு செல்லலாம். மாலையில் கூத்தர் நிகழ்த்தும் அவைநிகழ்வுகளுக்கு ஒருங்கு செய்துள்ளேன்" என்றபின் தலைவணங்கி வெளியே சென்றான்.

கதவுக்கு அப்பால் ஓசை கேட்டபோது யயாதி சுவடியை மூடிவிட்டு நிமிர்ந்தான். கதவு மெல்ல திறந்தது. அதனூடாக ஆடைவண்ணம் தெரிந்தது. அதிலேயே அவன் சர்மிஷ்டையை அடையாளம் கண்டான். உள்ளம் கிளர எழுந்து நின்றான். அவள் உள்ளே வந்து விழிதிகைத்து நின்று அறியாமல் திரும்பிச்செல்பவள் போல கதவை பற்றினாள். "சர்மிஷ்டை" என அவன் அழைத்தான். "இளமை மீண்டுவிட்டேன். நான் என்றும் விழைந்தது இது." அவள் உதடுகளை மடித்துக் கவ்வி கண்களில் பதைப்புடன் அவனை நோக்கினாள். "என்ன நோக்குகிறாய்? இது என் இளமையுருவம்... நீ அதை பலமுறை கனவில் கண்டிருப்பதாக சொல்லியிருக்கிறாய்" என்றான். "இல்லை, இது புருவின் உருவம்" என்று பட்டு கசங்கும் ஒலியில் சர்மிஷ்டை சொன்னாள்.

அவனுக்கு அது கேட்கவில்லை. மேலும் உளம் பெருக "பார்! முதிரா இளமையையே அடைந்திருக்கிறேன். என் இளமையைச் சூடியபோதே உன்னைத்தான் எண்ணினேன். உன்னுடனிருக்கையில் நான் இளையவனாக இருக்கலாகாதா என ஏங்கியிருக்கிறேன். அவ்வெண்ணத்தால் அத்தனை தருணங்களிலும் குறையுணர்ந்திருக்கிறேன்" என்றான். களிப்புடன் நகைத்து "உன்னை அத்தனை அகவைநிலைகளிலும் அடைவேன். எச்சமில்லாது காமத்தை அடைந்து ஒழிந்து எழவேண்டும் நான்" என்றபடி அவளை நோக்கி கைவிரித்தபடி சென்றான்.

அவள் "விலகு... அணுகாதே!" என கூவினாள். முகம் சுளித்து கைகள் உதறிக்கொண்டன. "அணுகாதே என்னை..." என்று உடைந்த உரத்த குரலில் கூச்சலிட்டு கதவுடன் முதுகு ஒட்டிநின்று நடுங்கினாள். முன்வளைந்த தோள்கள் இறுக

கழுத்துத் தசைகள் இழுபட்டு அதிர "போ... அணுகாதே..." என்றாள். "ஏன்?" என்று அவன் நின்றான். "நீ என் மைந்தனின் இளமையை சூடியிருக்கிறாய்... நீ கொண்டிருப்பது என் மகனை." அப்போதுதான் அவள் எண்ணுவதை அவன் அறிந்துகொண்டான். தலையை கல் தாக்கியதுபோல அவ்வுணர்வு அவனை சென்றடைந்தது. இருமுறை உதடுகளை திறந்துமூடினான். பின்னர் சென்று தன் பீடத்தில் அமர்ந்துகொண்டான்.

அவள் "மூடா, அதைக்கொண்டு நீ எதை அடையப்போகிறாய்? எந்தப் பெண்ணை?" என்றாள். வெறுப்பில் அவள் கண்கள் சுருங்கி உறுமும் ஓநாய் என பற்கள் தெரிந்தன. "அப்பெண்ணை எந்த விழிகளால் நோக்குவாய்? எந்த உடலால் அடைவாய்? நீ நோக்கியமையால் இந்த உடலை நான் உதறவேண்டும். நோன்பிருந்து இதை உலரச்செய்யாமல் இனி ஆடிநோக்க என்னால் இயலுமா?" அவன் கைவீசி "போ!" என்று கூவினான். அவள் மேலும் ஏதோ சொல்ல வாயெடுத்தபின் கதவைத் திறந்து வெளியே சென்றாள். கதவு மூடிய ஒலி அவனை அறைந்தது. வியர்வையுடன் நெற்றியைத் தட்டியபடி அவன் அமர்ந்திருந்தான். அனைத்து திகிரிகளும் மணலில் சிக்கி இறுகி அசைவிழக்க எண்ணங்கள் வெம்மைகொண்டன.

பின்னர் விடுபட்டு எழுந்தான். அனைத்தையும் அள்ளி ஒரு மூலையில் குவித்து தன் அகத்தை தூய்மை செய்தான். அப்போது அத்தனை முடிச்சுகளையும் தனித்தனியாகக் காணமுடிந்தது. ஒவ்வொன்றாகத் தொட்டு அவிழ்க்கமுடிந்தது. ஒவ்வொரு விரிதலும் அவனை எளிதாக்கின. எழுந்து இடைநாழியில் நடந்தபோது அவன் முகம் தெளிவுகொண்டிருந்தது. அவனை நோக்கி வந்த பார்க்கவனிடம்

“நான் நாளைப்புலரியில் இங்கிருந்து கிளம்புகிறேன். காட்டுக்குச் செல்கிறேன்” என்றான். “எங்கே?” என்று பார்க்கவன் கேட்க “என்னை காட்டு எல்லைக்குக் கொண்டுசென்று இறக்கிவிடுங்கள், போதும்!” என்று அவன் சொன்னான்.

இளவேனிலில் மலர்பெருகி வண்ணம்பொலிந்திருந்த காட்டினூடாக யயாதி நடந்தான். பின்னர் அறிந்தான் அந்தக் காட்டிற்கு அவன் முன்னரும் வந்திருப்பதை. எப்போது என உள்ளம் வியந்தது. நினைவில் அக்காடு எவ்வகையிலும் எஞ்சியிருக்கவில்லை. மேலும் மேலுமெனச் சென்று முதிரா இளமையைக் கடந்து மீண்டுவந்தான். கனவிலா? ஆனால் அந்நிலத்தை எப்போதேனும் நோக்கியிருக்கவேண்டுமே! அவனால் அதை உணரவே முடியவில்லை. சலித்தபின் அதை அப்படியே உதறிவிட்டு அக்காட்டின் காட்சிகளில் உளம் திளைக்க மெல்ல நடந்தான்.

அன்று காலையில்தான் புரு கருக்கிருட்டிலேயே காட்டுக்குச் சென்றுவிட்டிருப்பதை அரண்மனை ஏவலர் உணர்ந்தனர். அவன் சென்ற தடமே எஞ்சியிருக்கவில்லை. “நீரில் மீன் என சென்று மறைவதே துறவு” என்று அமைச்சர் சொன்னார். “அவ்வாறு சென்றவர் மீள்வதில்லை. நாம் அவரை தொடரவேண்டியதில்லை.” அவன் பார்க்கவனிடம் “ஏன் அவன் சென்றான்?” என்றான். “முதுமை கொண்டவர்கள் கானேகவேண்டும் அல்லவா?” என்றான் பார்க்கவன். “அவள் அவனை நேற்று சந்தித்தாளா?” என விழிவிலக்கி யயாதி கேட்டான். “ஆம், அங்கிருந்துதான் உங்கள் அறைக்கு வந்தார்கள்” என்றான் பார்க்கவன். யயாதி திகைப்பு கொண்டவன்போல ஏறிட்டு நோக்கிவிட்டு “நான் உடனே கிளம்பவேண்டும்” என்றான். “நீங்கள் நம் எல்லைக்குட்பட்ட

சுமவனத்திற்கே செல்லலாம், அரசே. உங்கள் உளநிலைக்கு உகந்தது அம்மலர்க்காடு” என்றான் பார்க்கவன்.

அவனை காட்டின் எல்லையில் இறக்கிவிட்டபின் பார்க்கவன் விழிகள் நீர்மை மின்ன விடைகொண்டான். நகரம் அகன்றதுமே அவன் விடுதலைகொள்ளத் தொடங்கியிருந்தான். காட்டில் நடந்ததுமே உடல் விசைகொண்டது. காண்பவை எல்லாம் துலக்கமடைந்தன. அங்கு வரும்வரை ஒவ்வொன்றும் எத்தனை சிடுக்கானவை என்றே உள்ளம் திகைப்பு கொண்டிருந்தது. முந்தைய நாள் இரவில் அவன் துயிலவில்லை. ஒவ்வொன்றையாக அணுகி நோக்கி வியந்து விலகிக்கொண்டிருந்தான். ஆனால் காட்டில் இலைப் பசுமைக்குள் நிழலொளி நடனத்திற்குள் அறுபடா சீவிடின் சுதியின்மேல் எழுந்த காற்றோசையின் அலைகளுக்குள் மூழ்கியபோது அவையெல்லாம் மிகமிக எளியவை என்று தோன்றின.

அங்கிருப்பது சலிப்பு மட்டுமே. அச்சலிப்பை வெல்லும்பொருட்டு உள்ளத்தை கலக்கி அலையெழுப்பிக்கொண்டே இருக்கிறார்கள். அதனூடாக அடையும் உணர்வுகளை அக்கணங்களில் உண்மை என நம்பி அதில் திளைக்கிறார்கள். விழிநீரும் குருதியும். புனலும் அனலும். அவை மட்டுமே அவர்களின் நாட்களை பொருள்கொண்டவையாக ஆக்குகின்றன. அவ்வெடையின்மையை அடைந்தபோது அவ்வாறு அக்காட்டில் சென்றது நினைவில் எழுந்தது. அவன் தந்தையின் வலிமையான கைகளில் சிறு குழவியாக இருந்தான் அப்போது. மிதந்து ஒழுகியபடி அக்காட்டை நோக்கிக்கொண்டு சென்றான்.

நகுஷனின் தொடுகையை தாடியின் வருடலை வியர்வை மணத்தை அவனால் உணரமுடிந்தது. அச்சிறுவயதுக்குப்பின் அங்கே வந்ததே இல்லை. ஆனால் கனவில் அந்த இடம் அச்செனப் பதிந்திருக்கிறது. அங்கிருக்கும் அத்தனை கரவுகளையும் சரிவுகளையும் காணமுடியுமெனத் தோன்றியது. நீர்தெளிந்து வான் விரிந்த சுனை ஒன்றை நினைவுகூர்ந்தான். உடனே அதற்குத் திரும்பும் வழியும் உள்ளத்தில் எழுந்தது. செல்லச் செல்ல மேலும் துலங்கியபடி வந்த திசையில் இலைகள் நீரலையொளி சூடி நின்றிருப்பதைக் கண்டான். நீலச்சுனை காலை வெளிச்சத்தில் மின்னிக்கொண்டிருந்தது.

அதன் சேற்றுக்கதுப்பில் பறவைகளின் காலடிகள் மட்டுமே இருந்தன. நாணல்கள் காற்றில் குழைந்தாடின. மெல்லிய அலைகளால் சேறு கலைவுறவில்லை. சேற்றில் நீர்வரிகளைக் கண்டபோது இனிய உணர்வொன்றால் அகம் சிலிர்ப்புகொண்டபின் அது ஏன் என சென்று துழாவிய சித்தம் எதையோ தொட்டுவிட அவன் நின்றுவிட்டான். மென்மையான முலைமேல் எழுந்த தோல்வரிகள். எவர் முலைகள் அவை? மூச்சுத் திணறியது. தலையை அசைத்து அவ்வெண்ணத்தை விரட்டியபின் சுனையை அணுகினான். பேற்றுவரிகள் படிந்த அடிவயிறு. யார் அது?

அங்கே நின்று தன் முகத்தை நீரில் நோக்கியதை நினைவுகூர்ந்தான். தந்தையின் குரல் கரையில் கேட்டுக்கொண்டிருந்தது. கையிலிருந்த மலர்க்கிளையால் நீர்ப்பரப்பை அடிக்க ஓங்கியவன் தன் விழிகளை தான் சந்தித்து திடுக்கிட்டான். உடல் சிலிர்க்க பின்னால் செல்வதுபோல ஓர் அசைவெழுந்தது. குளிர்கொண்டதுபோல உடல் உலுக்கிக்கொண்டது. விழிவிலக்காமல் அவன்

நோக்கிக்கொண்டே இருந்தான். பின்னர் அதை நோக்கி கைசுட்டினான். அது அவனை நோக்கி கை சுட்டியது. அவன் புன்னகை செய்தபோது அதுவும் நாணிச்சிரித்தது.

அவன் குனிந்து நீரை நோக்கினான். இது எவர் முகம்? இளமையின் தயக்கமும் நாணமும் இனிய நகையும் கொண்டது. என் முகம். என்னில் நிகழ்ந்துகொண்டே இருப்பது. என்னில் வந்தமர்ந்த பறவை, அஞ்சி எழுந்து சிறகடித்துச் செல்வது. அவன் நீரை அள்ளி முகம் கழுவி சிறிது அருந்தினான். திரும்பியபோது பின்னால் அசைவெழுந்தது. திடுக்கிட்டு நோக்க நீருக்குள் இருந்து அவன் பாவை எழுவதுபோல ஒரு பெண் எழுந்தாள். "யார்?" என்றான் யயாதி. அவள் முகவாயிலிருந்து நீர் உருண்டு சொட்டியது. இளமுலைக் குவைகளில் வாழைத்தண்டில் என வழிந்தது. தோள்களில் முத்துசூடி நின்றது.

"யார்?" என அவன் மீண்டும் உரக்க கேட்டான். அவள் கைதூக்கி தன் குழலை நீவி நீரை வழித்தபின் இடை நீர் விளிம்பிலிருந்து மேலெழ ஒளிகொண்ட மெல்லுடலுடன் எழுந்து அணுகினாள். "யார் நீ?" என்றான் யயாதி. "என் பெயர் அஸ்ருபிந்துமதி" என்று அவள் சொன்னாள்.

# மாமலர் - 89

## 89. வேர்விளையாடல்

முண்டன் கதையை முடித்தபின்னரும் பீமன் காட்சிகளிலிருந்து விடுபடவில்லை. முண்டன் எழுந்துசென்று அருகே நின்றிருந்த அத்திமரத்தில் தொற்றி ஏறி கனிந்தவற்றை மட்டும் பறித்து

கைகளால் உடைத்து மலரச்செய்து உள்ளே செறிந்திருந்த செம்மணித்தசையை பற்களாலேயே சுரண்டி உண்ணத்தொடங்கினான். அவன் கிளைதாவிய அசைவில் விழிப்புகொண்ட பீமன் முதற்கணம் அவனை குரங்கென்றே உணர்ந்தான். எழுந்து கொண்டு “கனிந்துள்ளனவா?” என்றான். “ஆம், பசிக்கிறது” என்றபின் அவன் தாவி நிலத்தில் விழுந்து அணுகி கையிலிருந்த கனிகளை அளித்தான்.

பீமன் அவற்றை வாங்கி உண்டபின் “அஸ்ருபிந்துமதியின் கதையை நான் கேட்டுள்ளேன்” என்றான். “விழிநீர்மகள். ஒவ்வொருவருக்கும் அவ்வண்ணம் ஒருத்தி உண்டு என்பார்கள் கவிஞர். அவளையே பிற பெண்களிடம் மானுடர் தேடிக்கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு முறையும் ஏமாற்றம் அடைகிறார்கள். பின்னர் சொல்லிச் சொல்லி தங்களை தேற்றிக்கொண்டு இவளே என்றும் இவ்வளவே என்றும் நிறைவுகொள்கிறார்கள். அது நிறைவல்ல என பின்னர் அறிகிறார்கள். அப்போது வாழ்க்கை சென்றுவிட்டிருக்கும். முன்னோக்கிச் செல்லும் உள்ளமும் இல்லாமலாகிவிட்டிருக்கும். பின்னால் நோக்கவும் அடைந்தவற்றையும் இழந்தவற்றையும் எண்ணி எண்ணி ஏங்கவுமே பொழுதிருக்கும்” என்றான் முண்டன்.

“யயாதி என்னவானார்?” என்றான் பீமன். “கதைகளின்படி அவர் ஆயிரமாண்டுகாலம் காட்டில் அஸ்ருபிந்துமதியுடன் காமத்திலாடினார். காமநிறைவடைந்தபின்னர் குருநகரிக்கு மீண்டு தன் இளைய மைந்தன் புருவை அழைத்து அவன் இளமையை திருப்பியளித்து அவனை அரசனாக ஆக்கினார். முதுமைசூடியபின் மீண்டும் காடேகினார். பிருகுதுங்கம் என்னும் மலையை அடைந்து அங்கே ஏழு குகைகளில்

வாழ்ந்த சப்தசிருங்கர்கள் என்னும் முனிவர்களுடன் வாழ்ந்து மெய்யுணர்ந்து உடல் உதிர்த்து விண்புகுந்தார்."

"பிருகுதுங்கத்தில் தன்னைத் தேடிவந்த முனிவர்களுக்கு மாமன்னர் யயாதி உரைத்த நெறிகளும் மெய்யறிவுகளும் யயாதிசூக்தங்கள் என்னும் பேரில் மூன்று தொகுதிகளாக முனிவர்களால் தொகுக்கப்பட்டுள்ளன. இன்றும் அவை அரசுசூழ்தலுக்கான நூல்களாக பயிலப்படுகின்றன" என்றான் முண்டன். பீமன் நிறைவில்லாதவனாக கைகளை நக்கியபின் "நான் விழைவது பிறிதொன்று" என்றான். "அவர் அறிந்த மெய்யறிதல்களால் என்ன பயன்? அதைப்போன்ற பலநூறு மெய்யறிதல்கள் சேர்ந்து பெரும் சொற்குவையாக நம் தலைக்குமேல் உள்ளன. மூத்தவர் அவற்றை நாள்தோறும் பயின்று தன்னை எடைமிக்கவராக ஆக்கிக்கொள்கிறார்."

"நீங்கள் அறியவிழைவதுதான் என்ன?" என்றான் முண்டன். "அவர் மீண்டும் தன் தேவியரை சந்தித்தாரா?" என்றான் பீமன். "அவர்களுடனான உறவை அவர் எப்படி அறுத்துக்கொண்டார்?" முண்டன் "அதை நான் சொல்லமுடியாது. தொடக்கம் முதலே இக்கதைப்பெருக்கில் வினாக்களே திரண்டெழுகின்றன" என்றான். "ஆம், அன்னையர் அவரை எப்படி ஒரே கணத்தில் அறுத்துக்கொண்டார்கள்? அவர்களில் அவர் எவ்வண்ணமேனும் எஞ்சினாரா?" என்றான் பீமன். "அவ்வாறு முற்றிலும் தன்னிலிருந்து தன் ஆண்மகனை அகற்றிவிட பெண்களால் இயலுமா?"

முண்டன் புன்னகை புரிந்து பேசாமலிருந்தான். பீமன் ஆற்றாமையுடன் கைகளை விரித்து "தனக்கு மட்டுமே என்றும் தனக்கில்லையென்றால் முற்றழியவேண்டும் என்றும் எண்ணுவது எப்படி மெய்யன்பாக இருக்கவியலும்? தம்

மைந்தன் என்றால் இவ்வண்ணம் நடந்துகொண்டிருப்பார்களா?” என்றான். முண்டன் “இத்தகைய பலநூறு வினாக்களின் தொகையை சுமையெனக்கொண்டே ஒவ்வொருவரும் வாழ்க்கையை முடிக்கிறார்கள்” என்றான். பீமன் தன்னுள் மூழ்கி நெடுநேரம் அமர்ந்தபின் “தாயின் உறவன்றி உறவென்று வேறேதும் உண்டா இப்புவியில்?” என்றான். முண்டன் சிரித்து “அது ஒன்று எஞ்சியுள்ளது உங்களுக்கு, நன்று” என்றான்.

“என் வினாக்களுடன் நான் இங்கிருந்து எழமுடியாது” என்றான் பீமன். திரும்பி கருவறைக்குள் அமர்ந்திருந்த தேவயானியை நோக்கியபின் “அவரிடம் நான் அனைத்தையும் உசாவியாகவேண்டும்” என்றான். “நீங்கள் சென்றகாலத்திற்குள் செல்லவேண்டுமா?” என்று முண்டன் கேட்டான். “ஆம், அங்கே நான் யார் என்று அறிந்தாகவேண்டும்.” முண்டன் தன் முகத்தருகே பறந்த ஒரு இறகுப்பிசிறை நோக்கியபின் “இதை நோக்குக, இளவரசே” என்றான். “இதன் நிலையழிதலை. இதை அலைக்கழிக்கும் காற்றுகளை விழிகளால் காணமுயல்க!”

பீமன் அதை நோக்கி விழிநாட்டினான். அதன் ஒவ்வொரு பீலியையும் அணுக்கமாக பார்க்கமுடிந்தது. அது மிகச்சிறிய சிட்டுக்குருவி ஒன்றின் கழுத்தில் இருந்த இறகு. பருப்பொருள் வடிவை உதறி ஒளியாக மாறும் முதல்படியிலிருந்தது. அவை ஒவ்வொன்றையும் தனித்தனியாகத் தொட்டு அசைத்தது காற்று. அல்லது ஒவ்வொரு பீலிக்கும் தனிக்காற்றா? காற்றென்பது ஒரு பெரும் படையெழுச்சியா? அவ்வசைவுகளினூடாக உயிர்கொண்டதுபோல சிறகுப்பிசிறு எண்ணியது, குழம்பியது, முடிவெடுத்து திரும்பியது, வேண்டாம் என்றது, ஆம் என்று மீண்டும் நிலைத்தது, அடடா என எழுந்தது,

ஆ எனத் திகைத்துத் திரும்பியது, போதும் என விழுந்தது, இதை மட்டும் என மீண்டும் எழுந்தது.

முண்டன் தன் கைகளை அதைச்சுற்றி மெல்ல அசைக்கலானான். அந்தக் காற்றால் இறகு அலைவுற்றது. அவன் கையை விலக்கியபோது முகர விரும்பும் நாய்க்குட்டி என தேடிச்சென்றது. கைகளை நீட்டியபோது அஞ்சிய பறவை என விலகியது. காற்றலைகளை அவன் காணத் தொடங்கினான். மிக மென்மையான நீல ஒளியாக அவை இருந்தன. குளிர்ந்திருந்தன. அவற்றில் கோடிக்கணக்கான மென்துகள்கள். ஒவ்வொன்றும் ஒளிகொண்டிருந்தது. ஊடே பறந்தன நுண்ணுயிர்கள். மிகச்சிறிய சிறகுத்துளியை அணிந்தவை. அவற்றை அளைந்துகொண்டே இருந்தது சிறகுப்பிசிர்.

"எங்கிருக்கிறீர்கள், இளவரசே?" என மிகத் தொலைவில் எங்கோ இருந்து முண்டன் கேட்டான். "ஓர் அரண்மனையில்... மஞ்சத்தில்" என்றான் பீமன். "என்ன செய்கிறீர்கள்?" என்று மீண்டும் முண்டன் கேட்டான். "படுத்திருக்கிறேன், துயில்கிறேன்... நீங்கள் என் கனவில் வந்து இக்கேள்வியை எழுப்புகிறீர்கள்." முண்டன் மெல்ல நகைத்து "ஆம்" என்றான். "எங்கிருக்கிறீர்கள்?" என்றான் பீமன். "நெடுந்தொலைவில்... எதிர்காலமெனும் பெருக்கின் மறுகரையில்" என்றான் முண்டன். பீமன் "ஆம், என்னால் உணரமுடிகிறது" என்றான். "நீங்கள் கனவுகாண்பது எதை?" என்றான் முண்டன். "என் கனவில் எப்போதும் நான் ஒரு பேருருவன். திரண்ட தோள்களும் திமிர்க்கும் தசைகளும் கொண்டவன். காட்டுக்குள் சென்றுகொண்டிருக்கிறேன்."

“எங்கே?” என்றான் முண்டன். “ஓர் இனிய சோலைக்காடு. அறியா மணம் ஒன்றால் அழைக்கப்படுகிறேன். எண்ணிய மலர் என தன்னை உருமாற்றிக் காட்டும் மாயமணம் அது. உடன் ஒரு குரங்கு வருகிறது.” முண்டன் சிரித்து “குரங்கா?” என்றான். “ஆம், தாவியும் சுழன்றும் எழுந்தும் அது கையூன்றி முன் செல்கிறது. நிழல் என. வழிகாட்டும் நிழல். அந்நிழலை நான் தொடர்கிறேன். அதன் அசைவுகளை நிகழ்த்துகிறேன். அப்படியென்றால் நான்தான் நிழலா? நிழலுக்கு வண்ணமும் வடிவமும் எண்ணமும் இருப்பும் உண்டா?”

“அங்கு ஒரு சிற்றாலயத்தை காண்கிறேன். அதற்குள் ஓர் அன்னைத்தெய்வம் ஐம்புரிக்குழலை அவிழ்த்திட்டு வெறிமின்னும் கண்களும் அருள்நிறை இளநகை சூடிய இதழ்களுமாக நின்றிருக்கிறது. அதன் முன் நின்றிருக்கிறேன்” என்றான் பீமன். “அவள் யார்?” என்றான் முண்டன். “அறியேன். அவள் என் அன்னையை நினைவுறுத்துகிறாள்.” முண்டன் “உங்கள் பெயர் என்ன?” என்றான். “என் பெயர் புரு. சந்திரகுலத்தின் பேரரசர் நகுஷரின் மைந்தர் யயாதியின் கடைமைந்தன். அவர் கொடியையும் குடியையும் கொடையெனப் பெற்று அரசாள்கிறேன்.”

விழித்தபோது அக்கனவை சேற்றில்படிந்து மட்கிய இலையின் வடிவப்பதிவுபோல நினைவுகளில்தான் புரு அறிந்தான். அப்பதிவிலிருந்து கனவை மீட்டெடுக்க விழைவதுபோல இருண்ட அறையின் கூரைச்சரிவில் நெய்விளக்கின் தாழ்திரியின் சிற்றொளியில் அலையடித்த நிழல்களை நோக்கியபடி படுத்திருந்தான். பின்னர் எழுந்து தன் கைகளை நோக்கியபடி “சிவம்யாம்!” என முழுமைச்சொல்

உரைத்தான். எழுந்து மிதியடியை அணிந்துகொண்டபோது கதவைத் திறந்த ஏவலன் வணங்கினான்.

நீராட்டறைக்கு அவனுடன் செல்கையில் இடைநாழியில் காத்து நின்றிருந்த அமைச்சன் சுபகன் வணங்கி உடன் சேர்ந்துகொண்டான். தந்தை பார்க்கவனின் நீத்தார்கடனுக்காக அவன் கங்கைக்கரைக்குச் சென்று பதினைந்துநாட்களுக்குப் பின்னரே மீண்டிருந்தான். இருவரும் சொல்லில்லாமல் நடந்தனர். அவர்களின் காலடிகள் உரையாடல்போல் ஒலித்தன. இடைநாழியின் வளைவுகளில் நிழல்கள் இணைந்து ஒன்றாயின.

நீராட்டறைக்குள் நுழைந்ததும் ஏவலர் வந்து புருவை வணங்கி அவன் மேலாடையை கழற்றினர். இனிய தைலமணத்துடன் ஆவியெழ கலத்தில் நிறைந்திருந்த நீரின் அருகே வெண்கலச் சிற்றிருக்கையில் அவன் அமர அவர்கள் அவன் இடையாடையைக் கழற்றிவிட்டு எண்ணை பூசத்தொடங்கினர். நறுமணம்கலந்து காய்ச்சப்பட்ட எள்ளெண்ணையின் மணத்தை நீராவி அள்ளி அறைமுழுக்க கொண்டுசென்று சுவர்களில் துளியாக்கி வழியச்செய்தது.

“மீண்டும் அதே கனவு” என்று புரு சொன்னான். அவன் குரலை எதிர்பாராத சுபகன் சுவரில் வழிந்த நீர்த்துளியிலிருந்து விழிவிலக்கி “எண்ணினேன்” என்றான். “யார் அவன்? எதற்காக அவ்வுருவை கனவுகாண்கிறேன்?” என்றான். “நீங்கள் திண்தோள்கொண்டவர் அல்ல. உங்கள் விழைவுதான் அவ்வாறு கனவிலெழுகிறது” என்றான் சுபகன். “நாம் அறியாத மூதாதையரைப்போலவே நாம் அறியவும் இயலாத வழித்தோன்றல்களும் நம் கனவிலுறைகிறார்கள் என்று நிமித்திகர் சொன்னார். அது மெய்யென்றே எனக்கும்

தோன்றுகிறது” என்றான் புரு. “ஒவ்வொரு மரத்திலும் விதைகள் உறைகின்றன. விதைகளுக்குள் விதைகள் வாழ்கின்றன என்று ஒரு சொல்லாட்சி உண்டு.”

சுபகன் “அவ்வண்ணம் எண்ணிக்கொள்வதனால் நிறைவு கொள்கிறீர்கள் என்றால் அதுவே ஆகுக!” என்றான். “எவ்வாறு எண்ணினாலும் எந்த வேறுபாடும் உருவாகப்போவதில்லை. அவன் கொடிவழியினன் என்றால் அவனை காணப்போகிறீர்களா என்ன?” புரு “அவன் உருவை ஓவியர்களைக்கொண்டு வரைந்து வைக்கவேண்டுமென எண்ணினேன். எங்காவது அது இருக்கவேண்டும். வண்ணங்களில் அல்ல, கல்லில். ஆயிரமாண்டுகளானாலும் அங்கே அது காத்திருக்கவேண்டும். என்றோ ஒருநாள் அவன் வந்து அதன்முன் நிற்பான்” என்றான்.

சுபகன் நகைத்து “அதை நீங்கள் என அவன் பிழையாக எண்ணிக்கொள்ளக்கூடும். அவன் கனவில் வந்த உருவம்” என்றான். “இந்த நுண்ணிய வலைப்பின்னலை நெய்துகொண்டிருக்கும் கைகளிடம் எங்களுக்கும் இதை ஆடத்தெரியும் என்று காட்டவேண்டாமா?” என்றான் புரு. “அவனை நான் அத்தனை நீர்ப்பரப்பிலும் முகமெனக் காண்பேன். மஞ்சள் நிறமும் பெரிய தாடையும் கொண்ட முகம். விழிகள் சிறியவை, ஆனால் அழியா நகைப்பு சூடியவை. அவன் பேருடலுக்குள் இருக்கும் அறியாச் சிறுவன் ஒருவன் ஒவ்வொரு அசைவிலும் வெளிப்படுவான்.”

சுபகன் “அரசே, நீங்கள் இளமையை முற்றிழந்தவர். அக்கனவு அதனால்தான் என நினைக்கிறேன்” என்றான். “நீயே சொன்னாய், இப்படி எண்ணிக்கொள்வதில் பயன் ஏதுமில்லை என. அப்படியென்றால் ஏன் குறைத்து அறியவேண்டும்,

பெருக்கியறிவது உவகையையாவது அளிக்கிறதே?” என்றான் புரு. “அவ்வாறெனினும் ஆகுக!” என்று சுபகன் சிரித்தான். “சூதர்களைக்கொண்டு அதை பாடச்செய்வோம். நுரையெனப் பெருக்குவார்கள். பின் கவிஞர்களைக்கொண்டு எழுதச்செய்வோம். நுரையை பளிங்குப்பாறையாக்கும் சொற்றிறன் அவர்களிடமுண்டு” என்று புரு நகைத்தான்.

நீராட்டுக்குப்பின் அவர்கள் இயல்படைந்து பேசியபடி நடந்தனர். “சற்றுநேரத்தில் கிளம்பிவிடலாம், அரசே. இளவரசர்களும் அரசியும் முன்னரே ஒருங்கிவிட்டனர். தேர்களும் வண்டிகளும் காவலர்படைகளும் காத்திருக்கின்றன” என்றான் சுபகன். புரு “ஆம், கிளம்பவேண்டியதுதான். ஒவ்வொருநாளாக இந்நாளை நோக்கி எண்ணி எதிர்பார்த்து அணுகினேன். கிளம்பும் தருணத்தில் ஒரு தயக்கம் இக்கணங்களை நீட்டித்து அதை ஒத்திப்போடச் சொல்கிறது. இப்போது நானே நம்பும் ஒரு செயல்மாற்று அளிக்கப்படுமென்றால் தவிர்த்துவிடுவேன்” என்றான்.

சுபகன் புன்னகைத்து ஒன்றும் சொல்லாமல் தலைவணங்கி வெளியேறினான். அவனிடம் சொன்னவற்றைப்பற்றி எண்ணிக்கொண்டு அணிச்சேவகரிடம் தன் உடலை அளித்தான். அவர்கள் நறுஞ்சுண்ணம் பூசி, அரச உடையும் அணிகளும் பூட்டி அதை ஒருக்குவதை ஆடியில் நோக்கிக்கொண்டிருந்தான். அவன் உடல் பிறிதொன்றாகி எழுந்துகொண்டிருந்தது, சிறகுபூண்டு கூடுதிறந்தெழும் பட்டாம்பூச்சி என. ஏவலர் இருவர் அரசமுத்திரை கொண்ட பட்டுத்தலைப்பாகையை அவனுக்கு சூட்டியபோது அவன் மெல்லிய திடுக்கிடலை உணர்ந்தான். ஒவ்வொரு முறை முடிசூடும்போதும் எழும்

எண்ணம்தான். அன்று அடிபட்டுக் கன்றிய தோல்மேல் என அத்தொடுகை மேலும் அழுத்தம் கொண்டிருந்தது.

அவன் முடிசூட்டிக்கொண்டபோது குருநகரியில் அவன் உடன்பிறந்தார் எவரும் இருக்கவில்லை. யயாதி அவனை கொடிவழியினன் என அறிவித்து முதுமையை அளித்துவிட்டு கானேகிய மூன்றுநாட்களில் அவன் உடன்பிறந்தார் நால்வரும் நகர் நீங்கினர். யது நகர்நீங்கப்போவதாக தன் அணுக்கரைக்கொண்டு நகரில் முரசறைவித்தான். தெருமுனைகளில் அவ்வறிவிப்பு முழங்கியபோது மக்கள் திகைத்து நின்றுகேட்டனர். உணர்வெழுச்சியுடன் சினத்துடன் வஞ்சத்துடன் சொல்லாடிக்கொண்டனர். “குருதிவழி என்பது தெய்வங்களால் அருளப்படுவது. அதை மாற்ற மானுடருக்கு ஆணையில்லை” என்றார் முதிய அந்தணர்.

“இம்முடிவை தெய்வங்கள் விரும்பியிருந்தால் முதல் நால்வரை பலிகொள்ள தெய்வங்களால் இயலாதா என்ன?” என்றார் பூசகர் ஒருவர். “மூதாதையர் மூச்சுவெளியில் நின்று பதைக்கிறார்கள். அரசன் தன்னலம் கருதி எடுத்த முடிவு இது” என்றார் அங்காடிமுனையில் கூடியிருந்த கூட்டத்தில் நின்றிருந்த பெருவணிகர். “இதோ, அசுரக்குருதி நம் மேல் கோல் ஏந்தி அமரவிருக்கிறது… தோழரே, இவையனைத்தும் இதன்பொருட்டே நிகழ்த்தப்பட்டன. இது சுக்ரரின் சூழ்ச்சி. விருஷபர்வனின் அரசாடல்” என்றார் சூதர் ஒருவர். ஒவ்வொருநாளுமென ஒற்றர்கள் ஓலையனுப்பிக்கொண்டிருந்தனர். மீண்டுவந்து ஒருமுறை அவன் அத்தனை ஓலைகளையும் படித்தான். தான் அமர்ந்திருப்பது எதன்மேல் என அறிந்துகொண்டான்.

குலமூத்தார் பன்னிருவர் திரண்டு அரண்மனைக்கு வந்து அமைச்சர்களுடன் சொல்லாடினர். பேரமைச்சர் சுகிர்தர் “நான் இதில் சொல்வதற்கேதுமில்லை. அமைச்சன் என என் கடமையை செய்யவேண்டும்” என்றார். “நீர் அமைச்சர் மட்டுமல்ல, அந்தணர். அறமுரைக்கக் கடமைகொண்டவர்” என்றார் குலத்தலைவரான குர்மிதர். “அந்தணர் உரைக்கும் அறம் முன்னோரால் சொல்லப்பட்டதாகவே இருக்கவேண்டும். தன் விழைவை அறமாக்க அந்தணருக்கு உரிமை இல்லை” என்றார் சுகிர்தர். “நூல்நெறிகளின்படி தன் குருதிவழி எது என முடிவெடுக்கவேண்டியவர் அரசர் மட்டுமே. பிற எவரும் அல்ல.”

“அவ்வண்ணமென்றால் மூத்தவர் நாடாளவேண்டுமென்னும் நெறி எதற்கு? நூல்கள் ஏன் அமைத்தன இதை?” என்றார் குலமூத்தாரான பிரகிருதர். “மூத்தாரே, தந்தையே தன் மைந்தன் எவன் என முடிவெடுக்க முடியும்...” என்றார் சுகிர்தர். “நூல்கள் முடிவெடுக்கும் உரிமையை அரசனுக்கு அளித்தது இதனால்தான். தன் மைந்தரை அரசர் துறந்துவிட்டார். அதன்பின் அவர்கள் எப்படி மைந்தர் என சொல்லி முடிகோர முடியும்?” குலத்தலைவர்கள் சினந்து “இது பெரும்பழி... பாரதவர்ஷத்தின் பேரரசியை அவர் துறந்திருக்கிறார்... நாங்கள் ஏற்கமுடியாது. அசுரக்குருதியை ஒருபோதும் எங்கள் குடிகள் தலைமையெனக் கொள்ளாது” என்றனர்.

அவர்கள் திரண்டுசென்று அரண்மனைக்கு வெளியே சோலையில் ஒரு ஸாமி மரத்தடியில் தங்கியிருந்த யதுவை கண்டனர். “அரசே, பேரரசியின் குருதியே எங்கள் நாட்டை ஆளவேண்டும். அசுரக்குருதியிலிருந்து நீங்களே எங்களுக்குக் காப்பு” என்றனர். “உங்களை எங்கள் இளவரசர் எனச்சொல்லி

பதினாறுமுறை மூதாத்துள்ளோம். இனி அவர்களிடம் சொல்மாற்ற எங்களால் இயலாது” என்றார் குலமூத்தாரான சம்பவர்.

யது கைகூப்பி “என் சொல்லை பொறுத்தருள்க, குலத்தலைவர்களே. தந்தையை நாங்கள் கைவிட்டோம், அவர் எங்களை கைவிட்டார். இரண்டும் அத்தருணத்தில் அவ்வாறு நிகழவேண்டுமென்றிருந்தது. ஒருநாள் கழித்து ஒருமுறை அமைச்சர்களுடன் சொல்லாடிவிட்டு அவர் முன் நின்றிருந்தால் நான் அவர் முதுமையை ஏற்றுக்கொண்டிருப்பேன். அவருடைய முதுமைநலிவை நேரில்கண்டு என் உள்ளம் அஞ்சித்திகைத்திருந்த தருணத்தில் அதை நான் கொள்வதைப்பற்றி எண்ணிப்பார்க்கவே இயலவில்லை. அத்தருணத்தை அமைத்த தெய்வங்களின் வழிப்பட்டு நான் கிளம்பவிருக்கிறேன். அவர் அளித்த சொற்கொடை இருக்கிறது. அதுவே நிகழ்க!” என்றான்.

உரத்த குரலில் அழுகையும் விம்மலுமாக “நாங்களும் வருகிறோம்... எங்கள் குடிகளனைத்தும் உங்களைத் தொடரும்... இங்கே வெற்றுநிலமும் கட்டடங்களும் எஞ்சட்டும். அதை கோல்கொண்டு ஆளட்டும் அசுரகுடியினன்” என்றார் பிரகிருதர். “என்னுடன் வருபவர்கள் வரலாம். ஆனால் எந்தையின் சொல்லென்ன என்று அவர்கள் அறிந்திருக்கவேண்டும். காட்டெரியென பரவும் வாழ்க்கை. நீர்நிழலென நிலைகொள்ளா இருப்பு. ஆபுரக்கும் எளியதொழில்” என்றான் யது. “ஆம், ஆனால் உங்கள் குடி பெருகிக் கிளைகொண்டு பாரதத்தை மூடுமென்றும் சொல் உள்ளது. அதுபோதும். வருகிறோம். இது எங்கள் சொல்” என்றார் குர்மிதர்.

ஆனால் மறுநாள் ஐந்து குலங்கள் மட்டுமே அவர்களுடன் கிளம்பின. அக்குடிகளிலும் ஒரு பகுதியினர் பின்எஞ்சினர். சினக்கொதிப்புடன் நாடுநீங்குவதாக வஞ்சினமுரைத்து ஆடவர் இல்லம் திரும்பி மகளிரிடம் சொன்னபோது அவர்கள் விழிகள் மாற முதலில் அதற்கு உடன்பட்டனர். பின்னர் நிலத்தையும் குடியையும் விட்டுச்செல்வதன் இடர்களைப்பற்றி உரைக்கலாயினர். நிலம்நீங்குபவன் குடியை இழக்கிறான். அந்நிலத்தில் நடுகற்களென நின்றிருக்கும் மூதாதையரையும் துறக்கிறான். சென்றடையும் நிலத்தில் அவன் ஈட்டுவதே குலமென்றாகும். "குலமும் நிலமும் நம் மூதாதையர் நம் மைந்தருக்களிப்பவை. அவற்றை மறுக்க நமக்கு உரிமையுண்டா?" என்றாள் மூதன்னை ஒருத்தி.

மறுநாள் முதற்புலரியில் யது நகர்நீங்கினான். முந்தையநாள் இரவு சிற்றமைச்சரான லோமரூஹர் வந்து சுகிர்தர் முன் பணிந்து மறுநாள் தான் யதுவுடன் செல்லவிருப்பதாகச் சொல்லி ஆணைகோரினார். "நானும் என் குலத்து இளைய அந்தணர் நூற்றெண்மரும் இளவரசருடன் செல்ல முடிவெடுத்துள்ளோம், உத்தமரே. உங்கள் நற்சொல்லை நாடுகிறோம்" என்றார் லோமரூஹர். "ஆம், எந்நிலையிலும் அரசனை அந்தணன் கைவிடலாகாது என்பது நூல்நெறி. அந்தணர் உடனிருந்து வேதச்சொல்கொண்டு மூவெரி ஓம்பும்வரைதான் இளவரசர் அரசர் எனப்படுவார். நம் கடன் இது. நன்று சூழ்க!" என்றார் சுகிர்தர். லோமரூஹர் அவரை வணங்க "செல்லுமிடம் ஏதென்று அறியோம். அங்கு சூழ்வதென்ன என்பதும் ஊழின் கைகளில். ஆனால் அந்தணரால் அரசர் கைவிடப்பட்டார் என்னும் சொல் எழலாகாது" என்றார் சுகிர்தர்.

யது அரண்மனையிலிருந்து கிளம்பும்போது சுகிர்தரை தாள்பணிந்து வணங்கினான். “இளவரசே, அந்தணர் சொல் துணைகொள்க! படைவீரர்களை உடன்பிறந்தார் என எண்ணுக! துணியவேண்டிய இடத்தில் துணிக! பொறைகொள்ள வேண்டிய இடங்களில் பொறுப்பதே அத்துணிவை எய்துவதற்கான வழி. எந்த வெற்றியும் எத்தோல்வியும் அத்தருணத்தால் அச்சூழலால் முடிவாவதல்ல என்று உணர்க! நீண்டகால வெற்றியே வெற்றி. மீண்டெழ முடியாது போவதொன்றே தோல்வி” என்று சுகிர்தர் வாழ்த்தினார். “நலம் சூழ்க! தெய்வங்களும் மூதாதையரும் உடன்எழுக! ஆம், அவ்வாறே ஆகுக!” என வாழ்த்தி வேதச்சொல் உரைத்து நீர் தெளித்தார்.

யது திரும்பிப்பார்க்காமல் நடந்துசென்றான். எத்தனைபேர் தொடர்கிறார்கள், அவர்கள் கொண்டுவருவன என்ன என்று அவன் நோக்கவில்லை. நூறு வண்டிகளிலும் இருநூறு அத்திரிகளிலும் பொருட்களையும் குழந்தைகளையும் பெண்டிரையும் ஏற்றிக்கொண்டு படைக்கலங்களை ஏந்தியபடி ஐந்துகுலத்தவர் உடன் சென்றனர். குருநகரியின் ஆயிரம் படைவீரர்கள் படைத்தலைவன் சத்ரசேனனால் வழிநடத்தப்பட்டு உடன் சென்றனர்.

குருநகரியின் கோட்டையைக் கடந்ததும் அவனுடன் சென்ற குடிமக்கள் உளம் ஆற்றாது திரும்பிநோக்கி விம்மினர். சிலர் மண்ணில் அமர்ந்து தாங்கள் செல்லப்போவதில்லை என கைகளால் அறைந்தபடி அழுதனர். குலமூத்தார் சினந்து ஆணையிட அவர்களை பிறர் தேற்றி தூக்கிச்சென்றனர். சிலர் தங்கள் மைந்தருடனும் பெண்டிருடனும் மீண்டும் நகர்நோக்கி ஓடிவந்தனர். கோட்டைக்குள் பெருமுற்றத்தில் கூடிநின்று செல்பவர்களை நோக்கி விழிநீர் வடித்தவர்கள்

ஓடிமீண்டவர்களை நோக்கி கைவிரித்துப் பாய்ந்து சென்று அணைத்துக்கொண்டனர். சூழ்ந்துநின்று கதறியழுதனர்.

செல்பவர்கள் விழிமறைந்தனர். புழுதியடங்கியது. ஒன்றும் நிகழாதததுபோல் ஆயிற்று ஒளியெழுந்துகொண்டிருந்த தொடுவானம். “தொடுவானை எதுவும் கலைக்கமுடியாது, இளையோரே. அது காலமெனும் கூர்வாள். எத்தனை கொன்றாலும் குருதிபடியா ஒளிகொண்டது” என்றார் சூதர் ஒருவர். அவர்கள் துயருடன் இல்லம் மீண்டும் சென்றவர்களுடன் சென்ற கற்பனையில் அலைந்தபடியும் ஆங்காங்கே அமர்ந்தனர்.

ஆனால் அவர்கள் சென்றது நீர்ச்சிறைவிளிம்பு கிழிந்தது என அடுத்த அணி துர்வசுவுடன் கிளம்பிச்செல்ல வழியமைத்தது. யது கிளம்பிய மறுநாள் கரும்புலரியில் துர்வசு சுகிர்தரை கால்தொட்டு வணங்கி சொல்பெற்று தன்னந்தனியே கிளம்பினான். அவன் கோட்டையைக் கடந்து நின்று மூன்று திசைகளையும் நோக்கியபின் மேற்கு நோக்கி திரும்பியபோது அவன் சாலைத்தோழனாகிய ரணசிம்மன் தன்னைத் தொடர்ந்த சிறு படைப்பிரிவுடன் பின்னால் சென்று அடிபணிந்தான். அவன் செல்வதைக் கண்டதும் மூன்றுகுலங்கள் கிளம்பி துர்வசுவுடன் சேர்ந்துகொண்டன.

அவர்கள் கிளம்பிச் சென்றபோது முந்தையநாளின் எழுச்சியும் துயரும் இருக்கவில்லை. வெறுமைகொண்ட விழிகளுடன் மக்கள் நோக்கிநின்றனர். ஒருவேளை செல்லுமிடத்தில் மேலும் சிறந்த வாழ்க்கை அமையக்கூடுமோ என்னும் ஐயம் அவர்கள் உள்ளத்தில் எழுந்தது. ஒருநாள் கழித்து அதை எவரோ சொன்னார்கள். சொல்லானதுமே அது பெருகலாயிற்று. நகர்நீங்கியவர்கள் செல்வம் செழித்த புதுநிலங்களில் சென்று

குடியேறும் கதைகள் தோன்றலாயின. பின்னர் ஒவ்வொருவரும் அந்நகரைவிட்டு வெளியேறும் ஆழ்கனவு ஒன்றை தங்களுக்குள் பேணிவளர்க்கத் தொடங்கினர்.

திருஹ்யூவும் அனுதிருஹ்யூவும் திரும்பி ஹிரண்யபுரிக்கே செல்லக்கூடுமென அமைச்சர்கள் எதிர்பார்த்தனர். விருஷபர்வனின் அழைப்புடன் பறவைத்தூதும் வந்தது. ஆனால் அவர்கள் கிளம்பி தெற்கும் கிழக்குமாகச் சென்றனர். அவர்களுடன் அசுரப்படைகளிலிருந்த வீரர்களின் சிறுகுழுக்களும் ஓரிருகுடியினரும் உடன்சென்றனர். நகரை ஆளும்பொறுப்பு பேரமைச்சர் சுகிர்தரின் கைக்கு வந்தது. அவர் அமைச்சர்களின் சிறுகுழு ஒன்றை அமைத்தார். அரியணைமேல் யயாதியின் கோலும் முடியும் வைக்கப்பட்டு அவர் பெயரில் முத்திரையிடப்பட்ட ஓலைகளால் ஆட்சி நடந்தது.

முடிசூடிய பின்னர் அமைச்சர்களை அழைத்து அவர்கள் சென்ற இடத்தைப்பற்றி அறிந்துவர ஒற்றர்களை அனுப்பும்படி புரு சொன்னான். உறுதியான குரலில் “அது கூடாது, அரசே. இனி அவர்களை நாம் தொடரக்கூடாது” என்றார் அவர். “அவர்கள் எவ்வண்ணம் எங்கிருக்கிறார்கள் என்று அறிந்துகொள்ளலாம் அல்லவா?” என்றான் புரு. “அறிந்து என்ன செய்யப்போகிறீர்கள்? அவர்கள் பெருமரங்கள் என கிளைவிரித்து விழுதுபரப்புவார்கள் என்பது உங்கள் தந்தையின் சொல். இது வேர் தாழ்த்தும் பருவம். இப்போது அவர்களை தோண்டி எடுப்பது வீண்வேலை” என்றார் சுகிர்தர்.

“இன்று அவர்கள் செல்லுமிடமெங்கும் கடும் எதிர்ப்புகளுக்கு ஆளாவார்கள். தங்கள் ஆற்றலையெல்லாம் திரட்டி போரிடவேண்டும். அவர்களின் உள்ளமும் எண்ணிக்கையும்

ஒற்றுமையும் வலுப்பெறவேண்டும். எதிர்கொள்ளும் மாற்றுவிசைகளே அவர்களை வளர்க்கவேண்டும். அப்போதுமட்டுமே அவர்கள் வென்று வாழமுடியும்" என்றார். புரு தலைகுனிந்து அமர்ந்திருக்க மூத்த ஒற்றனான சந்திரபாலன் "தாங்கள் நிலைகொள்ளும் வழிகளை அவர்கள் கண்டடையவேண்டும், அரசே" என்றான்.

"இப்போது அவர்கள் இருக்குமிடத்தை நாம் அறிந்துகொண்டோம் என்றால் என்ன செய்வோம்? ஒவ்வொரு நாளுமென அவர்களை பின் தொடர்வோம். அவர்களுக்கு எதிரிகள் எழுகையில் நாமும் அவர்களை எதிரிகளெனக் கொள்வோம். போர் நிகழுமென்றால் உதவிக்கு படை கொண்டுசெல்ல விழைவோம். அரசே, அவர்கள் நால்வரும் நான்கு திசைகளுக்கு சென்றிருக்கிறார்கள். நான்கு திசைகளுக்கும் படையனுப்பிக் காக்கும் ஆற்றல் நமக்கு இல்லை. நம்மால் இயலாதவற்றை எண்ணி ஏங்கிச் சலிப்பதே அதன் விளைவென்று ஆகும்" என்றார் அமைச்சர்.

"மேலும் அவ்வாறு அவர்களுக்கு உதவுதல் உங்கள் தந்தையின் ஆணையை மீறுவதே. அவர்கள் நம் குருதியினர் அல்ல. நம் சமந்தரோ நமக்கு கப்பம் அளிப்பவரோ அல்ல. குருநகரியின் மக்களின் செல்வத்தையும் வீரர்களின் உயிரையும் எந்நெறியின்பொருட்டு அவர்களுக்காக செலவிடுவீர்கள்?" என்றார் சுகிர்தர். "அத்துடன் மறுநாள் படைவீரர்கள் எவரையும் உடன் அழைக்காமல் கருவூலத்தில் ஒரு பொன்னைக்கூட கேட்காமல் நாடுநீங்கிய உங்கள் உடன்பிறந்தார் நம் உதவியை ஏற்றுக்கொள்வார்கள் என எண்ணுகிறீர்களா?"

அவர்களில் யது தனக்குரிய நிலம்தேடி தன் படைகளுடன் தென்றிசை நோக்கி சென்றான். கங்கையையும்

யமுனையையும் கடந்து, மாளவத்தையும், கிகடர்களின் தேவபுரியையும் தாண்டி தென்மேற்காக தன்குடிகளை அழைத்துச்சென்றான். நிஷாதர்களின் நாட்டில் தோலூறிய கழிவுநீர் ஓடிய சர்மாவதி நதியைக் கடந்து யதுவும் அவன் படையினரும் மேலும் சென்று மனிதர்கள் வாழாது வெயில் பரவி வீண்நிலமாகக் கிடந்த பர்ணஸா என்னும் ஆற்றின் படுகையை அடைந்து அங்கே தங்கள் குடியை நிறுத்தினர். யதுவின் அமைச்சரான லோமரூஹர் அங்கே சிற்றூர் ஒன்றை அமைத்தார். அவர்களின் முதல் ஊர் அங்கே அமைந்தது.

துர்வசு தன் தோழன் ரணசிம்மனுடன் நகர்நீங்கிச் செல்கையில் காட்டு எல்லையில் சந்திரகுலத்தின் அனைத்து அடையாளங்களையும் துறந்தான். குருநகரியின் கடைசிப் புழுதியையும் தன் காலடியிலிருந்து அகற்றும்பொருட்டு ஓடையில் கால்கழுவிவிட்டு மேற்காக சென்றான். சப்தசிந்துவையும் கூர்ஜரத்தையும் கடந்து சென்றபோது நாடுகளே இல்லாத பெரும்பாலைநிலம் அவர்களை எதிர்கொண்டது. அணையாத அனல்காற்றுகள் வீசும் கந்தவதி என்னும் நிலம் அவர்களுக்கென அமைந்தது.

தன் உடன்பிறந்தவனாகிய திருஹ்யூ யமுனைக்கு அப்பால் சென்று மச்சர்களுடன் இணைந்துகொண்டதையும் அனுதிருஹ்யூ மேலும் கடந்து சென்று தண்டகாரண்யத்தின் தொல்குடிகளுடன் இணைந்து தனிக்குடி கண்டதையும் சூதர்களும் தென்னகப் பாணர்களும் வந்துபாடிய பாடல்களினூடகவே புரு அறிந்துகொண்டான். அந்தச் செய்திகள் குருநகரியில் பரவுவதற்கு அவன் ஆணையிட்டான். சூதர்சொல் பெருகுவதென்பதை அவன் அறிந்திருந்தான். யயாதியின் மைந்தர் நான்கு நகர்களை அமைத்து அரசமுடி

சூடிவிட்டனர் என்னும் செய்தி குருநகரியின் குடிகளை உளம் அமையச் செய்தது. அதன்பின்னரே அவர்கள் புருவை தங்கள் அரசன் என ஏற்றுக்கொண்டனர்.

புரு சுகிர்தரை தூதனுப்பி குருநகரியின் செல்வத்தில் பெரும்பகுதியை கன்னிச்செல்வமெனக் கொடுத்து குருநகரிக்கு கப்பம்கட்டும் சிற்றரசெனத் திகழ்ந்த கோசல நாட்டின் அரசன் புஷ்டியின் மகள் பௌஷ்டையை மணந்து பட்டத்தரசியாக்கினான். அந்த மணவிழா பன்னிருநாட்கள் குருநகரியில் கொண்டாடப்பட்டது. பாரதவர்ஷத்தின் அரசர்கள் திரண்டுவந்து அந்த மணவிழாவை அணிசெய்தனர். ஷத்ரியப் பேரரசி அமைந்ததுமே குருநகரியின் மக்களின் உள்ளம் மாறத்தொடங்கியது. முதல் இளவரசன் பிரவீரனின் இடையணிவிழா நடந்தபோது குடிகள் நடந்தவை அனைத்தையும் மறந்து பெருமிதமும் களிவெறியும் கொண்டு கொண்டாடினர்.

சுகிர்தரின் சொல்படி நகரின் கோட்டையை மேலும் ஒரு சுற்று விரிவாக்கி அதற்கு சந்திரபுரி என்று பெயரிட்டான். சந்திரகுலத்துக் குருதிவழியால் ஆளப்படுவது அந்நகர் என அப்பெயர் ஒவ்வொரு முறை உச்சரிக்கப்படுகையிலும் உறுதியாயிற்று. விருஷபர்வனின் கொடிவழி வந்தவன் அவன் என்பதை விரைவிலேயே அனைவரும் மறந்தனர். ஆனால் நகரின் முத்திரையாக ஹிரண்யபுரியின் அமுதகலசம் அமைந்தது. அதைக் குறித்து அந்தணரும் ஷத்ரியர் சிலரும் உளக்குறை கொண்டிருந்தாலும் அவ்வடையாளத்தை பெண்டிர் விரும்பியமையால் விரைவிலேயே அது ஏற்றுக்கொள்ளப்பட்டது.

முடிசூடி எழுந்து தன்னை புரு ஆடியில் பார்த்துக்கொண்டான். முதிய அணிச்சேவகர் "தங்கள் தந்தை பேரரசர் யயாதியை நான் பார்த்திருக்கிறேன், அரசே. அவரைப்போலவே தோன்றுகிறீர்கள்" என்றார். புரு புன்னகையுடன் "ஆம், ஒரே முகங்கள்தான்" என்றான்.

# மாமலர் - 90

**90. துலாநடனம்**

புரு அரசகோலத்தில் வெளியே வந்தபோது சுபகன் வணங்கியபடி அணுகி "அனைவரும் சித்தமாக இருக்கிறார்கள், அரசே" என்றான். அவன் கைகூப்பியபடி வெளியே சென்றான். சுகிர்தரின் மைந்தரும் பேரமைச்சருமான பிரபாகரரும் பட்டத்தரசியும் மைந்தர்களும் அங்கே காத்து நின்றிருந்தனர். அவன் வருகையை நிமித்திகன் வெள்ளிக்கோல் தூக்கி அறிவித்ததும் பெருமுரசுகள் முழங்கத் தொடங்கின. அவனைக் கண்டதும் மங்கல இசையும் வாழ்த்தொலிகளும் எழுந்தன. அவன் சென்று பிரபாகரரின் கால்களை பணிந்தான். "வெற்றியும் புகழும் பெருஞ்செல்வமும் குடிநிறைவும் அமைக!" என அவர் வாழ்த்தினார். அவருக்குப் பின்னால் நின்றிருந்த அந்தணர் கங்கைநீர் தெளித்து வேதச்சொல் உரைத்து அவன்மேல் வாழ்த்து பொழிந்தனர்.

அவன் மைந்தரை நோக்கி கைநீட்ட போர்க்கூச்சலிட்டபடி ரௌத்ராஸ்வன் பாய்ந்து வந்து அவன் கைகளில் விழுந்தான். அவனை வாளால் வெட்டுவதுபோல நடித்தபடி துள்ளினான். புரு சிரித்தபடி மைந்தனை தூக்கிச் சுழற்றி அருகே நிறுத்திக்கொண்டான். ஈஸ்வரன் நாணச்சிரிப்புடன் அருகே வர

அவனைப் பிடித்து மறுபக்கம் நிறுத்திக்கொண்டு அரசியை நோக்கி புன்னகைத்தான். அவள் “போதும், அரசணிகள் கலைகின்றன” என்றாள். சூழ்ந்து நின்றிருந்த காவலர்களும் பணியாளர்களும் பற்கள் மின்ன சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

ரௌத்ராஸ்வன் “நாம் கானாடவா செல்கிறோம், தந்தையே?” என்றான். “ஆம், கானாடுதலும் உண்டு” என்றான் புரு. பிரவீரன் இளையவர்களிடம் “உங்கள் தேர்கள் அப்பால் நின்றுள்ளன. வருக!” என்றான். ரௌத்ராஸ்வன் “இல்லை, நான் தந்தையிடம்தான் இருப்பேன்” என்றான். மூத்தவன் ஏதோ சினந்து சொல்ல வாயெடுக்க “இருக்கட்டும்... நாம் ஒரே தேரில் செல்வோம்...” என்றான் புரு. “நகர்விட்டு நீங்கியதும் தனித்தனி தேர்களில் ஏறிக்கொள்வோம்.” சுபகன் நகைத்து “இன்று சோமாஸ்கந்தரை நோக்கும் நல்லூழ் அமைந்துள்ளது நம் குடிகளுக்கு” என்றான்.

அவர்கள் தேரில் ஏறிக்கொண்டனர். ரௌத்ராஸ்வன் அன்னையின் மடியில் அமர புருவின் மடியில் ஈஸ்வரன் அமர்ந்தான். பிரவீரன் அவர்களுக்குப் பின்னால் நின்றான். தேர் அரண்மனை முற்றத்திலிருந்து எழுந்து அரசப்பெருஞ்சாலையை அடைந்ததும் அதை காத்து நின்றிருந்த குடிகளின் வாழ்த்தொலிகளும் மலர்ப்பொழிவும் அவர்களை சூழ்ந்துகொண்டன. மைந்தர்களுடன் அவன் தோன்றியது கண்டு பெண்கள் உவகையுடன் கூச்சலிட்டனர். ரௌத்ராஸ்வன் நாணி கைகளால் முகத்தை மறைத்துக்கொள்ள புரு அவன் கைகளைப் பற்றி விலக்கினான். அவன் திரும்பி அன்னையின் மார்புக்குள் முகம் புதைத்தான்.

கோட்டைவாயிலைக் கடந்ததும் ஈஸ்வரன் “நாம் எங்கு செல்கிறோம், தந்தையே?” என்றான். “அன்னையின் சோலைக்கு.

இது அன்னைக்கு நாம் மலர்க்கொடை அளிக்கும் நாள்" என்றாள் பௌஷ்டை. "நாம் இதுவரை அங்கு சென்றதில்லையா?" என்றான் ஈஸ்வரன். "நீங்கள் இருவரும் சென்றதில்லை. நான் சென்றிருக்கிறேன்" என்றான் பிரவீரன். ஈஸ்வரன் "அங்குதான் நம் பேரன்னை உறைகிறாரா?" என்றான். புரு "ஆம்" என்றான்.

குருநகரியைவிட்டு விலகிச்சென்ற புரு சுகிர்தவனம் என்னும் காட்டில் மாணவர்களுடன் வாழ்ந்த யதாவாசர் என்னும் முனிவருடன் தங்கினான். அவனுக்கென அமைந்த சிறுகுடிலில் நெறிநூல்களையும் மெய்நூல்களையும் கற்றும் காட்டில் காய்கனி தேடி அலைந்தும் வாழ்ந்தான். அங்கிருந்த ஏழாண்டுகளும் அவன் சொல்லொறுப்பு நோன்பு கொண்டிருந்தான். அங்கே அவன் எவரென பிற மாணவர்கள் அறிந்திருக்கவில்லை. உடல்தளர்ந்த ஷத்ரிய முதியவர் ஒருவர் இறுதிக் கான்கடனுக்காக வந்திருப்பதாகவே எண்ணினர். பேசாதவனை பிறர் காணாமலுமாகிறார்கள். ஓரிரு ஆண்டுகளுக்குள் அங்கே ஒருவர் வாழ்வதையே அங்குள்ள மாணவர்கள் மறந்தனர்.

ஏழாண்டுகளுக்குப்பின் அவனைத் தேடி சுகிர்தரின் ஒற்றன் வந்தான். "இளவரசே, அரசர் அரண்மனைக்கு வரப்போகிறார். உங்களுக்கு இளமையை மீட்டளிக்கவிருக்கிறார். உங்களை அழைத்துவரும்படி அமைச்சரின் ஆணை" என்றான். அரசஒற்றனையும் அவன் சொல்லையும் முதலில் அவனால் அறியமுடியவில்லை. அவன் இறந்தகாலம் அவனால் புனையப்பட்ட ஒளிமிக்க கனவுகளாக உள்ளே இருந்தது. அதில் அளிநிறைந்த விழிகளுடன் அவன் அன்னையும், பருவங்களை மாறிமாறி அணிந்துபொலியும் அசோகவனியின் மரங்களும்,

இளவெயிலும் நிலவொளியும் முழுக்காட்டிய அதன் சிறுதெருக்களும், முள்மரக்கோட்டையும், புழுதிச்சாலையும், அசோகச்சோலையின் குளிரும் மட்டுமே இருந்தன. அங்கே இன்பங்களனைத்தும் துளிபெருகி ஆறாகியிருந்தன. துன்பங்கள் அவ்வின்பங்களுக்கு எதிர்ச்சுவை அமைக்கும் தலைகீழ் இன்பங்களென உருமாறிவிட்டிருந்தன.

முதுமைக்கு உகந்தவகையில் மாற்றமில்லாத எளிய அன்றாடச் செயல்களை அவன் அமைத்துக்கொண்டிருந்தான். காலைநீராட்டு முதல் இரவின் நூல்நோக்குதலும் துயிலுதலும் வரை ஒவ்வொன்றும் இயல்பாகவே நிகழ்ந்தன. அந்த அன்றாடத்தின் மாறா ஒழுக்கு அவன் எண்ணங்களையும் பிறழா வழிவென்றாக்கியது. புதியன எதுவும் நிகழாதபோது பழையன புதியவையாகி வந்து நடித்தன. ஆகவே ஒவ்வொரு நினைவுக்கும் பலநூறு வடிவங்கள் எழுந்து மெய்யென்ன மயக்கென்ன என்னும் எல்லைகள் முற்றழிந்தன. அங்கே அவனை யயாதி தன் வலிய கைகளால் தழுவினார். கானாடவும் நீர்விளையாடவும் கொண்டுசென்றார். புரவியும் களிறும் பயிற்றுவித்தார். படைக்கலம் ஏந்தி அவன் அவருடன் களிப்போராடி சிரித்தான். உடன்பிறந்தாருடன் கூடி விளையாடினான். நிலவொளியில் சோலைமுற்றத்தில் அமர்ந்து உணவுண்டான். சொல்லாடி மகிழ்ந்தபின் குளிரில் அன்னையின் உடலுடன் ஒட்டிக்கொண்டு விழிமயங்கினான்.

அவ்வுலகில் ஒற்றனின் வருகை அலைகளை கிளப்பி நிலைகுலையச் செய்தது. புறச்சொற்களுக்கு அவன் உலகில் பொருளேதும் இருக்கவில்லை. புரிந்துகொள்ளாமலேயே ஆம் ஆம் என்று தலையசைத்தான். அவன் நெஞ்சிலிருந்து எண்ணம் சொல்லாக மாற மிகவும் பிந்தியது. மூச்சை வந்து தயங்கியபடி

தொட்ட எண்ணம் 'இதுவா? இதைக்கொண்டா?' என திகைத்தது. பின் மெல்ல மூச்சை அளைத்து பிடி அள்ளி அதை வனைந்து சொல்லாக்கி நாவில் அமைத்தது . "யார் நீங்கள்?" என்றான் புரு. அச்சொல்லைக் கேட்டு அவன் செவி திடுக்கிட்டது. முதியகுரல், அவன் கேட்டறியாதது. "நான் குருநகரியின் ஒற்றன் மந்தன். சுகிர்தரின் செய்தியுடன் வந்தவன்" என்றான் ஒற்றன். "ஆம்" என்றான் புரு.

மீண்டும் புரியாமல் "என்ன?" என்றான். மிக மெல்லத்தான் அவனால் உளம்குவிந்து அச்செய்தியை அடையமுடிந்தது. ஒற்றன் ஒலிமங்கிய அவன் செவியில் மீண்டும் மீண்டும் அச்செய்தியை கூவினான். "என்ன?" என்று அவன் கேட்டுக்கொண்டே இருந்தான். செய்தியை புரிந்துகொண்டதும் அவன் தலை ஆடத்தொடங்கியது. கைகளை நெஞ்சோடு சேர்த்து நரைத்த தாடிமேல் விழிநீர் வழிய விம்மி அழத்தொடங்கினான். யதாவாசரின் மாணவர்கள் அவன் தோளைப்பற்றி தேற்றினர். அனைத்துக்கும் இறுதியில் எஞ்சுவது அழுகையாகவே இருந்தது. துயரற்ற அழுகை. அல்லது அறியாப் பெருந்துயர் ஒன்றின் அழுகை.

ஏழாண்டுகளில் இளமையை அவன் மறந்துவிட்டிருந்தான். உடல் உணர்ந்த முதுமை உள்ளத்தையும் அவ்வாறே ஆக்கிவிட்டிருந்தது. நடையில் அமர்வில் துயிலில் விழிப்பில் உடல் கொண்ட முதுமை எண்ணங்களாக உணர்வுகளாக தன்னிலையாக மாறியிருந்தது. "உள்ளமென்பது உடலின் நுண்வடிவு" என்று யதாவாசர் அவனிடம் சொன்னார். "உன் உள்ளம் முதுமைகொள்கையில் புதிய ஓர் உலகை அறியத் தொடங்குவாய். அங்கு நீ அறிவதை மீண்டு சென்று இளமையில் செயலாக்க முடியுமென்பதே உன் பேறு." அவன்

தலையசைத்தான். “அவ்வாறு முதுமையின் உலகொன்றை நீ உருவாக்கிக் கொள்ளவில்லை என்றால் உன் தளர்ந்த உடல் அதில் வாழவும் இயலாது” என்றார் யதாவாசர்.

குருநகரியை அவன் அதற்கு முன் பார்த்திருக்கவில்லை. எனவே புழுதியலை படிந்த பெருஞ்சாலைக்கு அப்பாலெழுந்த கரிய கோட்டைவாயிலும் பெருமுற்றமும் பிரிந்து சென்ற சாலைகளில் ஒழுகிய வண்டிகளும் விலங்குகளும் மக்களும் மாடநிரையும் காவல்கோட்டங்களும் அவனுக்கு பெருந்திகைப்பை அளித்தன. அவ்வுணர்வெழுச்சியை அவன் உள்ளத்தால் தாளமுடியாமலானபோது முதுமைக்குரிய வகையில் அனைத்தையும் ஒதுக்கிவிட்டு உளமொதுக்கி உடல்சுருக்கி தேர்த்தட்டில் துயிலத் தொடங்கினான்.

அரண்மனை முற்றத்தில் தேர் நின்றபோது விழித்துக்கொண்டான். அமைச்சர் சுகிர்தர் தேர் அருகே வந்து “வருக இளவரசே, அரண்மனை தங்களுக்காகக் காத்திருக்கிறது” என்றார். “யார்?” என்று அவன் பதறியபடி கேட்டான். இளமையின் கனவில் அலைவது அறுபட்டமையால் இடம் துலங்காமல் “யார்? என்ன?” என்றான். சுகிர்தர் “நான் அமைச்சர் சுகிர்தர். தங்களை வரவேற்க இங்கு நின்றுள்ளோம்... வருக!” என்றார்.

அமைச்சரின் கைபற்றி நடந்து படியேறுகையில் அவன் கால்கள் நடுங்கின. ஒவ்வொரு படியிலும் இரு கால்களையும் ஊன்றி நின்று மேலேறிச்சென்று பெருங்கூடத்தில் நின்று அண்ணாந்து அதன் குடைவுக்கூரையை நோக்கினான். நீர்மருதமரங்கள்போல திரண்டு காலூன்றி நின்ற தூண்களின் வலிமையை மெல்ல கைகளால் தொட்டுத்தொட்டு உணர்ந்தான். ஊன்றி நிலைத்தவற்றை உறுதியுடன்

அசைவனவற்றை இளமைநிறைந்தவற்றைத் தொட அவன் எப்போதும் விழைந்தான். “தந்தை வந்திருக்கிறார், அரசே” என்றார் சுகிர்தர். “தங்களுக்காக காத்திருக்கிறார்.” அவன் பழுத்த விழிகளால் நோக்கி “யார்?” என்றான். அவர் மீண்டும் சொன்னபோதுதான் புரிந்துகொண்டான்.

“என்னால் படி ஏறமுடியாது” என்றபடி அவன் பீடத்தை நோக்கிச் செல்ல கைகாட்டினான். பீடத்தில் சென்று அமர்ந்துகொண்டதும் உடலுக்குள் எலும்புகள் இறுக்கமழிந்து மெல்லிய உளைச்சல்கொண்டன. நிமிர்ந்த கூன்முதுகை மீண்டும் தளர்த்தி நிலம்நோக்க முகம் குனித்து “நான் சற்று படுக்கவேண்டும்” என்றான். அமைச்சர் சொன்னவை மறந்துவிட்டிருக்க அவர் முகத்தை நோக்கி அங்கிருந்த உணர்ச்சிகளைக் கண்டு அவர் என்ன சொல்லியிருக்கக் கூடும் என உய்த்துணர முயன்று தோற்று பொதுவாக புன்னகை செய்தான்.

ஏவலர் இன்னீர் கொண்டுவந்தனர். அதை கண்டதும்தான் விடாய் எழுந்திருப்பது நினைவுக்கு வந்தது. உடலெங்கும் எரிந்த வெம்மை அதனால்தானா என வியந்தபடி எடுத்து ஆவலுடன் அருந்தினான். கைநடுங்க வாய் கோணலாக மூச்சு தடுக்க அதை குடித்தபோது ததும்பி தாடியிலும் ஆடையிலும் சிந்தியது. கோப்பையை ஏவலன் வாங்கிக்கொண்டபோது அவனை நோக்கி புன்னகை செய்தபின் “அஷ்டகர் சமித்துக்கு சென்றுவிட்டாரா?” என்றான். அவன் வியப்புடன் நோக்க “நானும் செல்லவேண்டும். வெயிலெழுந்துவிட்டது” என்றான்.

சுகிர்தர் திகைத்து நின்ற ஏவலனிடம் விலகிச் செல்லும்படி விழிகாட்டினார். அவன் அகன்றபின் “சற்றுநேரம்... இதோ சேக்கறைக்குச் செல்லலாம்” என்றார். காலடியோசை ஒலிக்க பார்க்கவன் படிகளில் இறங்கி வந்தார். அமைச்சர் “தங்கள்

தந்தையின் அணுக்கர் பார்க்கவர். அரசர் கானேகியபோது அவர் மீண்டுவருவதற்காகக் காத்து காட்டின் விளிம்பிலேயே ஏழு ஆண்டுகள் தானும் தங்கியிருந்தார். தந்தை வந்தபோது உடன் வந்தார்" என்றார். அவன் திரும்பி நோக்கியபோது நினைவின் ஆழத்திலிருந்து மங்கலாக பார்க்கவனின் முகம் எழுந்துவந்தது. "ஆம்" என்றான்.

அது அவன் எதையும் உணராதபோது பொதுவாகச் சொல்வது. அவன் உள்ளம் மீண்டும் பின்னால் செல்லத் தொடங்கியிருந்தது. நிகழ்காலம் சிடுக்காக இசைவற்றதாகத் தோன்றியது. அதில் உழலும் துயரை விலக்கி மீண்டும் தன் இனிய இறந்தகாலக் கனவுகளுக்குள் புகுந்துவிட உள்ளம் ஏங்கியது. "நான் சற்று ஓய்வெடுக்கவேண்டும்" என்றான். சுகிர்தர் பார்க்கவனிடம் "மேலே ஏறமுடியாது என நினைக்கிறேன். தளர்ந்திருக்கிறார். அரசர் கீழே வந்து இவரை சந்திப்பதே நன்று" என்றார். பார்க்கவன் அவனை நோக்கியபின் விழிதிருப்பிக்கொண்டு "நான் சென்று சொல்கிறேன்" என்றார்.

அவன் பார்க்கவனிடம் "உச்சிவெயில்போல் வெம்மைகொண்டிருக்கிறது இந்த பின்காலை" என்றான். அவரால் அவனை விழிநாட்டி நோக்க இயலவில்லை. அவர் சென்றதும் அவன் ஏப்பம் விட்டு கால்களை நீட்டி கைகளை கைப்பிடிகள்மேல் தளரவைத்து அமர்ந்தான். வெளியே காற்று ஓடும் ஓசை கேட்டது. அது இனிமை ஒன்றை நினைவிலெழுப்பியது. இனிமையே நினைவை கொண்டுவந்தது. அவன் அன்னையுடன் சோலைக்குள் சென்றுகொண்டிருந்தான். தொலைவில் ஓர் அசைவு. மான் ஒன்று சிலிர்த்து செவிகோட்டியது. எங்கோ ஒரு குயிலின் ஓசை. மீண்டும்

மீண்டும் ஒன்றையே சொல்லிக்கொண்டிருந்தது. ஆனால் சொல்லச்சொல்ல அதன் மன்றாட்டின் அழுத்தம் ஏறிவந்தது.

தலை நெஞ்சில் படிய அவன் துயின்றுவிட்டிருந்தான். படிகளில் குறடணிந்த இருவர் இறங்கிவரும் ஓசை கேட்டது. “இளவரசே!” என்று சுகிர்தர் அழைத்தார். அவன் திடுக்கிட்டு விழித்து ஓரம்வழிந்த வாயைத் துடைத்தபின் நிமிர்ந்து நோக்கி “யார்?” என்றான். “தங்கள் தந்தை” என்றார் சுகிர்தர். “யார்? என்ன?” என்றான். “தந்தை... அரசர்... எழுந்து நில்லுங்கள்!” அவனால் எழமுடியவில்லை. கால்கள் செயலற்று உறைந்திருந்தன. வெளியே குயில் மன்றாடிக்கொண்டிருந்தது. அவன் “ஆம், ஆம்” என எழ முயன்றாலும் உடல் விசைகொள்ளவில்லை.

யயாதி அப்போதுதான் அவனை பார்த்தார். விழிகளில் திகைப்பு தோன்ற இரு கைகளும் பொருத்தமில்லாமல் எழுந்து எதையோ விலக்குவனபோல முன்னால் வந்தன. பின் உடையில் உரசி ஒலியுடன் தளர்ந்து இரு பக்கமும் விழுந்தன. சுகிர்தர் “களைத்திருக்கிறார்” என்றபின் “எழுக, இளவரசே!” என்றார். “வேண்டாம், அவர் இப்போது முதியவர்” என்ற யயாதி அருகே வந்து நிலம்படிய விழுந்து வணங்கி “வாழ்த்துங்கள், மூதாதையே!” என்றார். அவன் திகைத்தபின் “யார்? என்ன?” என்று சுகிர்தரிடம் கேட்டான். “வாழ்த்துங்கள்... வாழ்த்துங்கள்” என்றார் சுகிர்தர். “யார்?” என்றான் புரு. “வாழ்த்துங்கள்... வாழ்த்து வாழ்த்து” என சுகிர்தர் கூவினார்.

அந்தக் குரலின் விசையால் உளமழிந்து புரு தலை ஆட தாடை தொங்கி வாய் திறந்திருக்க உறைந்தான். சுகிர்தர் குனிந்து கைகளை கீழே கிடந்த யயாதியின் தலைமேல் வைத்து “வாழ்த்துக!” என்றார். புரு “நெடுவாழ்வும் வாழ்புகழும் அமைக!” என வாழ்த்தினான். யயாதி எழுந்து கைகூப்பி “என்

பிழைகளனைத்தையும் பொறுத்தருள்க... பிறிதெவரிடமும் நான் இதை கேட்கவியலாது” என்றார். அவர் முகத்தை நோக்கியபின் ஏவரென்று புரிந்துகொள்ளாமல் புரு அந்தப் பொதுவான புன்னகையை அளித்தான். யயாதி விழிநீர் மல்கி பின் கட்டுப்படுத்திக்கொண்டு திரும்பி பார்க்கவனிடம் “பைதல்களுக்குரிய சிரிப்பு” என்றார். பார்க்கவனும் விழியீரத்துடன் புன்னகைத்தார்.

மீண்டும் புருவை நோக்கியபின் “நான் கொள்ளவிருக்கும் உடல்... இவ்வுடலுக்குள் நிறைக்கவேண்டிய நிறைவை நான் எய்தியிருக்கிறேன். துறவையும் மெய்மையையும் பணிவையும் இதில் அமர்ந்து அடைவேன்” என்றார். “ஏதேனும் முறைமையோ சடங்கோ செய்யவேண்டும் என்றால்...” என பார்க்கவன் சொல்ல “ஏதுமில்லை. இதோ, இங்கிருந்தே என் முதுமையை பெற்றபின் படியிறங்கவேண்டியதுதான்” என்றார் யயாதி. அமைச்சரிடம் அவர் “நீர்” என்று சொல்ல அமைச்சர் திரும்பி ஏவலனிடம் கைகாட்டினார். அவன் வால்குடுவையில் நீருடன் வந்தான்.

யயாதி அதை வாங்கிக்கொண்டு புருவிடம் “எழுந்து தங்கள் கைகளை காட்டுக, தந்தையே!” என்றார். அதற்குள் அங்கிருந்து உளம்விலகிவிட்டிருந்த புரு “என் உடல் வலிக்கிறது. நெடுநேரம் அமர்ந்திருக்க என்னால் இயலாது” என்றான். “கைகளை நீட்டுங்கள்” என்றார் யயாதி. “என்ன?” என்று புரு சுகிர்தரிடம் கேட்டான். அமைச்சர் குனிந்து அவன் கைகளைப்பற்றி ஏந்துவதுபோல காட்டினார். யயாதி நுண்சொல்லை உதடசைவால் சொன்னபடி நீரூற்றினார். மீண்டும் குனிந்து புருவின் கால்களை வணங்கினார். நிலத்திலிருந்து எழும்போதே அவர் உடல் தளரத்

தொடங்கியிருந்தது. பார்க்கவன் அவரை பிடித்து மெல்ல தூக்கியபோது முனகியபடி “மெல்ல…” என்றார். எலும்புகள் இணைப்பு தளர்ந்து உடல் நடுக்கம் கொண்டிருந்தது. கழுத்தில் தசைகள் நீர்நனைந்த சேற்றுச் சிற்பமென ஊறி நெகிழ்ந்து தொய்ந்து வளையத் தொடங்கின.

பார்க்கவன் அவரை பீடத்தில் அமரச்செய்தார். காலநாழியிலிருந்து மணல் ஒழிவதுபோல புருவின் உடலில் இருந்து முதுமை வழிந்து யயாதியை நிறைத்துக்கொண்டிருந்தது. யயாதி மெல்ல தளர்ந்து கைகளைக் கோத்தபடி சிறுதுயிலில் ஆழ்ந்தார். நரைதாடியும் முடியும் நீண்டன. தசைகள் வற்றிச் சுருங்கி நரம்புகள் புழுக்களைப்போல எழுந்து உடல் முதுமைகொண்டபடியே இருந்தது. அனலில் விழுந்த இலையெனச் சுருங்கி கருகி அவர் உருமாறுவதையே அனைவரும் நோக்கிக்கொண்டிருந்தனர்.

பீடத்தில் இருந்து எழுந்த புரு “தந்தையல்லவா அவர்?” என்று கூவியபோது அனைவரும் திரும்பி நோக்கினர். அவன் இளைஞனாக மாறிவிட்டிருந்தான். “ஆம், தங்களிடமிருந்து முதுமையை பெற்றுக்கொண்டுவிட்டிருக்கிறார்” என்றார் சுகிர்தர். “நான் அதை அவருக்கு அளிக்கலாகாதென்று எண்ணியிருந்தேன்… அது நான் எந்தைக்கு அளிக்கும் கொடை” என்றான் புரு. “இளவரசே, உங்களுக்காக நாடும் குடியும் காத்திருக்கின்றன. தந்தை உங்கள் பொறுப்பையும் நெறியையும் ஆணையிட்டிருக்கிறார்” என்றார் பார்க்கவன்.

புரு யயாதியை நோக்கிக்கொண்டிருந்தபின் திரும்பி சுகிர்தரிடம் “நான் இப்படித்தான் இருந்தேனா?” என்றான். “ஆம், சற்றுமுன்புவரை” என்றார் சுகிர்தர். “காலம் அவரை இத்தோற்றம் நோக்கி தள்ளிக்கொண்டு செல்கிறது, இளவரசே.”

அவன் கைகூப்பி “என் மூதாதையரின் வடிவம்” என்றான். நிலம்படிய விழுந்து அவரை வணங்க அவர் விழித்து “யார்?” என்றார். “தங்கள் மைந்தர், வாழ்த்துக அரசே!” என்றார் சுகிர்தர். யயாதி “யார்? என்ன?” என்றார். “வாழ்த்துக... வாழ்த்துக!” என்று கூவினார் சுகிர்தர். பார்க்கவன் அவர் கையை எடுத்து புருவின் தலையில் வைக்க அவர் “நெடுவாழ்வும் அழியாப் புகழும் குன்றாச் செல்வமும் பெருகும் குடியும் எஞ்சும் உவகையும் அமைக!” என்றார்.

புரு எழுந்து கைகூப்பியபடி நின்றான். “அரசே, நாம் கிளம்பவேண்டும்” என்றார் பார்க்கவன். “ஆம், இங்கிருந்தே கிளம்பவேண்டும் என்று சொன்னேன் அல்லவா?” என்றார் யயாதி. புரு “தேர் சித்தமாகியிருக்கிறதா?” என்று சுகிர்தரிடம் கேட்டான். “முற்றத்தில் நின்றுள்ளது. அவர்கள் வந்த தேர்தான் அது” என்றார் சுகிர்தர். “திரும்பி நோக்காமல், ஒரு சொல்லும் எஞ்சாமல்” என்ற யயாதி புன்னகைத்து “நன்று, என்னால் அவ்வண்ணம் இறங்கிச்செல்ல இயலும் என்பது அளிக்கும் உவகை பெரிது” என்றார்.

பார்க்கவன் அவர் கைகளை பற்றிக்கொள்ள முனகியபடி மெல்ல எழுந்து நடந்தார். அமைச்சரும் பிறரும் தொழுதபடி உடன் செல்ல முற்றத்திற்குச் சென்று பார்க்கவனின் தோளைப்பற்றியபடி படிகளில் மெல்ல ஏறி மூச்சிரைத்து ஒருகணம் நின்று நெஞ்சத்துடிப்பை ஆற்றிய பின்னர் மெல்ல ஏறி பீடத்தில் அமர்ந்தார். திரைமூடியதும் அவர் முகம் மறைந்தது. பாகன் சவுக்கால் தொட புரவிகள் விழித்தெழுந்து கால்தூக்கின.

புருவின் முடிசூட்டுவிழவை உடனே நிகழ்த்திவிடவேண்டும் என்று சுகிர்தர் சொன்னார். “ஏழாண்டுகாலம் இங்கிருந்து

முடியையும் கோலையும் புரந்திருக்கிறேன், இளவரசே. என் நாவால் எவருக்கும் எத்தண்டனையும் அளிக்கவில்லை. ஆயினும் இக்கோலின்பொருட்டு நிகழ்ந்தவை அனைத்துக்கும் சொல்முடிவே அடிப்படை என்பதனால் இதன் பழியிலிருந்து என்னால் தப்பமுடியாது. அந்தணர் ஆட்சியும் போரும் வணிகமும் வேளாண்மையும் செய்யலாகாது. ஏனென்றால் கொலையும் கரவும் பிறர்விழிநீரும் இன்றி அவற்றை ஆற்ற இயலாது. நான் எனக்கும் என் மூதாதையருக்கும் பழியை ஈட்டியிருக்கிறேன். எஞ்சிய நாட்கள் காட்டில் தவமியற்றி அதை நிகர்செய்தபின்னரே நான் விண்ணேகவேண்டும்."

"நான் என் அன்னையை பார்க்கவேண்டும்" என்றான் புரு. "அவர்கள் எனக்கிடும் ஆணை என்ன என்று அறிந்தபின்னர் மட்டுமே நான் முடிசூட முடியும்." சுகிர்தர் "அவர்கள் நீங்கள் அகன்ற அன்றே அசோகநகரியிலிருந்து வெளியேறி கோட்டைக்கு வெளியே காட்டுக்குள் குடில் ஒன்றைக் கட்டி அங்கே தனித்து குடியிருக்கிறார்கள். எவரும் சென்று நோக்க ஒப்புதலில்லை என்றார்கள்" என்றார். "நான் சென்று பார்க்கிறேன்" என்று புரு கிளம்பிச் சென்றான்.

அசோகவனியின் கோட்டைமுகப்புக்குச் செல்லும் சாலையில் இருந்து பிரிந்து வளைந்து காட்டுக்குள் நுழைந்த தொடர்கால் பாதையின் எல்லையில் இருந்தது அச்சிறியகுடில். புரு தன்னுடன் வந்தவர்களை காட்டுக்கு வெளியே நிறுத்திவிட்டு கை கூப்பியபடி தனியாக சென்றான். குடிலை அணுகி அதன் வாயிலில் கைகள் கூப்பியபடியே இருக்க நின்றிருந்தான். குரலெழுப்பவில்லை. இரண்டுநாழிகைக்குப் பின்னர் வெளியே வந்த கோழி ஒன்று அவனைக் கண்டு குரலெழுப்ப உள்ளிருந்து எட்டிப்பார்த்த முதியவளை முதலில் அவனால் அடையாளம்

காணமுடியவில்லை. அறிந்ததும் உளம் அதிர "அன்னையே..." என்றான்.

சர்மிஷ்டையின் முடி முற்றாக நரைத்திருந்தது. கடும் நோன்பால் உடல் வற்றி உலர்ந்து மட்கும் மரம்போலிருந்தது. இருகுழிகளுக்குள் விழிகள். கன்னங்களின் ஆழ்ந்த குழிகள் பற்களுடன் வாயை முன்னுந்தச் செய்திருந்தன. அவள் உடனே அவனை அடையாளம் கண்டுகொண்டதை விழிகள் காட்டின. அவனை நிலைத்த விழிகளால் நோக்கி சிலகணங்கள் நின்றபின் "உள்ளே வா" என்றாள். அவன் கைகள் கூப்பியிருக்க குடிலுக்குள் சென்றான்.

ஒருவர் மட்டும் படுக்குமளவுக்கு இடம்கொண்ட அக்குடில் ஒரு கூடை போலிருந்தது. ஈச்சையோலைக் கூரையினூடாக வந்த ஒளிச்சரடுகள் சருகுமெத்தையிடப்பட்ட மண்தரையில் ஊன்றி வெள்ளிவட்டங்களாக சுடர்ந்தன. அவள் அமர்ந்ததும் அவன் அவள் கால்களில் விழுந்து வணங்கினான். "புகழ் சூடுக! வெற்றியும் குடிப்பெருக்கும் அமைக!" என அவள் வாழ்த்தினாள். "நான் உங்கள் சொல்பெற்றுச் செல்ல வந்துள்ளேன், அன்னையே" என்றான். "நான் எவருக்கும் அன்னை அல்ல" என்றாள் சர்மிஷ்டை. 'நெடுந்தொலைவு வந்துவிட்டேன். எஞ்சியிருப்பது ஒன்றே. அதை உன்னிடம் கோருகிறேன், குருநகரியின் அரசனாக."

"ஆணையிடுங்கள்" என்றான் புரு. "என்னை சுக்ரரின் மகள் வாழும் தவச்சாலைக்கு அழைத்துச்செல்க!" என்றாள். அவன் உள்ளம் நடுங்கியது. அவன் ஒன்றும் சொல்லாததை உணர்ந்து அவள் "ம்?" என்றாள். "ஆணை! நாளையே அனைத்தையும் ஒருக்குகிறேன்" என்றான். "நீயன்றி எவரும் உடன்வரவேண்டியதில்லை. எந்த முறைமையும் நிகழலாகாது"

என்றாள் சர்மிஷ்டை. “ஆம்” என்றான் புரு. மூத்த அன்னையிடம் ஒப்புதல் கோரவேண்டாமா என்று கேட்க நாவெடுத்து அடக்கினான். ஒப்புதல்கோரி செல்வது ஒருவேளை நிகழாமலேயே நின்றுவிடும் என்று தோன்றியது.

# மாமலர் - 91

**91. இருமுகத்தாள்**

தேவயானி தங்கியிருந்த ஜலசாயை என்னும் சோலையை நெருங்கியபோது புரு பதற்றத்தில் இருகைகளையும் சேர்த்துக் கூப்பி அதில் முகம் பதித்து கண்களை மூடி உடலுக்குள் குருதியோடும் ஒலியை கேட்டுக்கொண்டு குழிக்குள் பதுங்கிய வேட்டையாடப்படும் முயல் என அமர்ந்திருந்தான். தேரின் சகடங்கள் கல்லிலும் குழியிலும் விழும் ஓசை ஒவ்வொன்றும் அவன் தலைமேல் உருளைக்கற்கள்போல விழுந்தன. பற்கள் கிட்டித்திருப்பதை செவிகளில் எழுந்த உரசல் ஓசை வழியாக அறிந்ததும் தலையை அசைத்து தன்னை விடுவித்துக்கொண்டான். மூச்சை இழுத்து இழுத்து விட்டு உள்ளத்தை குளிர்வித்தான்.

தேர் நின்றதும் முன்சென்ற தேரில் இருந்து இறங்கி அருகே வந்த சுபகன் “இன்னும் சற்றுதொலைவில் காட்டின் தொடக்கம் வந்துவிடும். அங்கிருந்து ஒற்றையடிப்பாதைதான். அன்னையும் நீங்களும் மட்டும் செல்வதே முறை” என்றான். “அன்னை எப்படி இருக்கிறார்?” என்றான் புரு “தேரிலேறிய கணம் முதல் உறைந்து சிலையென்றிருக்கிறார். இந்த ஒன்பதுநாட்களிலும் அவர்கள் துயிலவே இல்லை.” புரு திகைப்புடன் “முற்றிலுமா?” என்றான். “ஆம் அரசே. அவர்கள் பல ஆண்டுகளாகவே

துயிலின்மை நோய் கொண்டிருக்கிறார்கள் என நினைக்கிறேன். அந்த மெலிவும் உலர்வும் அதனால்தான். தேரில் அமர்ந்திருக்கிறார்கள். இரவில் குடில்களில் வெறுமனே விழிமூடி படுத்திருக்கிறார்கள் என உடன் வரும் சேடி சொல்கிறாள்."

புரு தலையசைத்தான். சுபகன் சென்று தன் தேரில் ஏறிக்கொண்டான். காட்டின் எல்லையில் தேர்கள் நின்றதும் புரு தயங்கி உள்ளேயே அமர்ந்துகொண்டான். அன்னையை மட்டும் அனுப்பினால் என்ன என ஓர் எண்ணம் ஓடியதும் அதை கடிந்து விரட்டினான். சுபகன் வந்து "அரசே..." என அழைத்ததும் திரையை விலக்கி இறங்கியபோது உடல் களைப்பில் தளர்ந்திருந்ததை உணர்ந்தான். விரைவில் அனைத்தும் முடிந்தால் போதும், நன்றோ தீதோ அழிவோ எதுவாயினும் எனத் தோன்றியது.

சர்மிஷ்டை தேரிலிருந்து இறங்கி நின்றிருந்தாள். அவள் அணிந்திருந்த மரவுரியாடையின் நிறத்தால் அங்கே ஒரு பட்டமரம் நின்றிருப்பதாகவே முதலில் தோன்றியது. அருகே சென்றபோது 'அல்லது சிதல்புற்று' என நினைத்துக்கொண்டான். அது என்ன வீண் சொல் என பிறிதொரு உள்ளம் வியந்தது. 'ஆடை என்பது ஒருவர் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உடல்.' இத்தருணத்தை இப்படி பொருத்தமில்லா சொற்களைக்கொண்டு திசைதிருப்பி எளிதாக்கிக் கொள்கிறேனா? இடர்நிறைந்த தருணங்களில் எளிய செயல்களில் ஈடுபடுவது நல்லது என்று சுகிர்தர் சொல்லி கேட்டிருக்கிறான்.

அவளருகே சென்று "செல்வோம், அன்னையே" என்றான். அவள் தலையசைத்து உடன்நடந்தாள். அவன் சுபகனிடம் தலையசைவால் விடைபெற்று புதர்கள் மண்டிய காட்டுக்குள்

சென்ற கால்தொடர் பாதையில் நடந்தான். அவள் பின்னால் வருவது ஒலியாக எழவில்லை. அவள் உடல் தக்கைபோல எடையற்றிருக்கிறது போலும். நிழல்போல் ஆகிவிட்டிருக்கிறாள். அவன் வாழ்ந்த காடு நினைவில் எழுந்தது. அங்கே ஒவ்வொரு புதரையும் கூர்ந்துநோக்கி கையிலிருக்கும் குச்சியால் விலக்கி விலக்கித்தான் அவனால் நடக்கமுடியும். ஒரு சிறு கல் காலடியில் புரண்டால்கூட நிலையழிந்து உடலுக்குள் நீர்க்குமிழி பதறும். இப்போது புதர்களை கால்களாலேயே சாய்த்து செல்லமுடிகிறது. உடல் வலுக்கொண்டிருக்கிறது. இதோ இருந்துகொண்டிருக்கிறேன், வலுவான கால்களால் விரைவான கைகளால் ஒளிரும் விழிகளால். இங்கே. இக்கணம். இதுவன்றி எதுவும் பெரிதல்ல.

அந்த எண்ணம் அவனை மலரச்செய்தது. இருக்கிறேன் என்னும் சொல்லாக அவன் சித்தம் உருமாறியது. உடல்வலு உள்ளத்திற்கு அளிக்கும் செய்தியே அதுதான், இருத்தல். மண்ணை விசையுடன் அழுத்தி எடைகொண்டு அழுத்தும் காற்றை தோள்களில் தாங்கி. இந்த மரங்கள் போல. வெயிலொளி மஞ்சளாகவும் நிழல் பசுமையாகவும் ஆகி அமைந்திருந்த ஓவியப் பரப்பை விழிகளால் தொட்டுத் தொட்டு நோக்கியபடி அவன் நடந்தான்.

எத்தனை நோக்கினாலும் தீராதது. எத்தனை அள்ளிச்சேர்த்தாலும் தொடப்படாமல் எஞ்சுவது. இக்கணம் அன்றி எதுவும் பெரிதல்ல. இது நழுவிக்கொண்டிருக்கிறது. சென்றுகொண்டே இருக்கிறது. இவற்றில் ஓரிரு துளிகள் மட்டுமே மிஞ்சவிருக்கின்றன. பிறிதெல்லாம் வெறும் உளமயக்குகள், உணர்வுநாடகங்கள். கடந்து திரும்பி நோக்கினால் எளிய இளிவரல்கள். அந்தத் தருணத்தை ஐம்பது

ஆண்டுகள் கடந்து சென்று திரும்பி நோக்கினான். சுகிர்தவனத்தில் தன் குடிலின் சொல்லவிந்த தனிமையில் அமைந்து. இதழ்கோடும் ஒரு புன்னகைக்கு அப்பால் பொருள்கொள்பவை எவையுமில்லை.

தேவயானியின் குடில்வாயிலை அடைந்தபோது அவன் திரும்பி சர்மிஷ்டையிடம் "இதுதான்" என்றான். அவள் தலையசைத்து முன்னால் சென்றாள். அவன் அவளுக்குப் பின்னால் கூப்பிய கைகளுடன் தொடர்ந்தான். வழியென அமைந்தது மழைக்காலத்தில் நீரோடும் ஓடை. அதிலிருந்து குடிலமைந்த மேட்டுக்கு ஏற கல்லடுக்கி படிகள் சமைக்கப்பட்டிருந்தன. முதல்படியில் கால்வைத்ததும் அவன் மிக அருகே வேங்கை ஒன்றின் உறுமலை கேட்டான். இடையில் படைக்கலமேதுமில்லாமல் வந்ததை அப்போதுதான் உணர்ந்தான். அன்னையை திரும்பும்படி அழைக்கலாமா என அவன் எண்ணுவதற்குள் அவள் மேல்படிக்கு சென்றுவிட்டிருந்தாள்.

மேலே முற்றத்தில் மிகப்பெரிய அன்னைவேங்கை ஒன்றின் சீறும் முகம் தெரிந்தது. விடைத்து நீண்ட கன்னமயிர்களும், பளிங்குருளை விழிகளும், திறந்த செந்நிறவாய்க்குள் வளைந்தெழுந்த பற்களுமாக அது மூக்கை நீட்டியபடி மெல்ல காலெடுத்து வைத்து அணுகியது. சிறுகாதுகளில் ஒன்று சொடுக்கிக்கொண்டது. அதற்கு அப்பால் அதன் ஆடிப்பாவை என பிறிதொரு வேங்கை. சர்மிஷ்டை தயங்காமல் மேலேறிச்செல்ல வேங்கைகள் கால் மடித்து பின்வாங்கி உரக்க உறுமின.

பிறிதொன்று எண்ணாமல் புரு அன்னையைத் தொடர்ந்து சென்றான். மேலே பல உறுமல்கள் ஒலித்தன. அங்கே மேலும்

பல வேங்கைகள் இருப்பதை புரு கண்டான். அவை சீறியபடி உடல்தாழ்த்தி அவர்களை சூழ்ந்துகொண்டன. அவன் உடல் மெய்ப்புகொண்டிருந்தது. தசைகள் இழுபட்டு இடத்தொடை அதிர்ந்தது. சர்மிஷ்டை நேராகச் சென்று முற்றத்தின் நடுவே நின்றாள். அவள் அவற்றை கண்டதாகவே தோன்றவில்லை.

நான்கு வேங்கைகள் குடிலின் திண்ணையில் படுத்திருந்தன. ஒன்று நான்கு கால்களையும் மேலே தூக்கி மல்லாந்து கிடந்தது. குடிலுக்குப் பின்னாலிருந்து இரு வேங்கைகள் மெல்ல காலடி எடுத்துவைத்து வந்து அங்கேயே நின்று உறுமின. அப்பகுதியே அவற்றின் வண்ணக்கோடுகளால் அனல்பற்றி எரிவதுபோலிருந்தது. சர்மிஷ்டை மெல்ல அசைய முற்றத்தில் நின்ற இரு வேங்கைகள் தாவி திண்ணைமேல் ஏறிக்கொண்டன. ஒரு வேங்கை உரக்க உறுமியபோது அனைத்தும் இணைந்து பெருமுரசுகள்போல கார்வையுடன் ஒலியெழுப்பின.

குடிலுக்குள் இருந்து நிழல் நீண்டு வெளியே விழுந்தது. தேவயானியின் மரமிதியடி அணிந்த கால்களும் பின்பு மரவுரியணிந்த இடைவரை உடலும் தெரிந்தன. அவள் கூரைமூங்கிலைப் பற்றியபடி குனிந்து “யார்?” என்றாள். சர்மிஷ்டையை அடையாளம் கண்டுகொண்டதும் விழிநிலைக்க அமைதியடைந்தாள். இருவரும் ஒருவரை ஒருவர் நோக்கியபடி அசைவிலாது நின்றனர். வேங்கைகள் உறுமியபடியும் முனகியபடியும் கோட்டுவாயிட்டபடியும் விலகிச்சென்று படுத்துக்கொண்டன. ஒரு வேங்கை மட்டும் மூக்குநீட்டி அணுகி சர்மிஷ்டையை முகர்ந்தபின் முகம் சுளித்து தும்மியபடி திரும்பிச்சென்றது. இரு வேங்கைகள் காதுகள் ஒலிக்க தலையை சிலுப்பிக்கொண்டன.

தேவயானி குருநகரியிலிருந்து கிளம்பியபோது இருந்ததைவிட பொலிவுகொண்டிருந்தாள். விழிகள் ஒளிர, இதழ்கள் மென்செம்மை கொண்டிருக்க, இளமைநிறைகொண்ட கன்னியெனத் தோன்றினாள். புரு தேவயானியை அடைந்து "அன்னையே, தங்களை பார்க்கவிழைந்தார்கள், ஆகவே கூட்டிவந்தேன். தங்கள் கால்தொட்டு சென்னி சூட எனக்கு ஒப்புதல் அளியுங்கள்" என்றான்.

அச்சொற்களைக் கேட்டு இருவரும் கலைந்தார்கள். தேவயானி "வருக!" என அவனை அழைத்தாள். பின்னர் சர்மிஷ்டையிடம் "உள்ளே வா" என்றாள். அவள் திரும்பிச்சென்றபோது நீண்ட குழல் ஐந்துபுரிகளாக முடைந்து கால்மடிப்பு வரை நீட்டப்பட்டிருப்பதை புரு கண்டான். ஐந்து இருளருவிகள் என அவை மின்னின.

பீமன் "நான் அங்கு ஒருநாள் இருந்தேன். அன்னையை அங்கேயே விட்டுவிட்டு நான் மட்டும் மீண்டேன். அங்கேயே இருப்பதாக அவர்கள் சொன்னபோது நான் வியப்புறவில்லை. அதுவே நிகழுமென்று அறிந்திருந்தேன்" என்றான். "நகருக்குள் நுழைந்ததும் ஆறுதல்தான் அடைந்தேன். எனக்கு கோசல நாட்டில் மணம் கோரியிருப்பதாக சுகிர்தர் சொன்னார். அவர் மைந்தனை என் அமைச்சனாக்கிவிட்டு கானேகவிருப்பதை அறிவித்தார். அரசுச்செயல்களில் என்னை முற்றாக ஆழ்த்திக்கொண்டேன்."

"மூன்று மாதங்களுக்குப்பின் கானுறைவாழ்விலிருந்த தந்தை யயாதி விண்புகுந்ததை அறிந்தேன். அவரை அங்கேயே உடன்வாழ்ந்த முனிவர்கள் சிதையேற்றிவிட்டிருந்தனர். துறவுபூண்டவர் என்பதனால் குடிநெறிகளின்படி எனக்கும்

அவருக்கும் உறவேதுமில்லை. நான் நீரும் அன்னமும் அளிக்கவோ நோன்பிருந்து தூய்மைகொள்ளவோ வேண்டியதில்லை. அவருக்காக ஒரு விண்ணேற்றுவிளக்கை குடிமூத்தாரின் பள்ளிப்படைக்கோயில் முன் ஏற்றிவைத்தேன். அச்செய்தியை அறிவிக்கச் சொல்லி தூதனை காட்டுக்கு அனுப்பிவைத்தேன்."

"என் கடன்கள் முடிந்ததும் மீண்டும் காட்டுக்குச் சென்று அன்னையரை கண்டேன். நான் சென்றபோது வேங்கைகள் முன்பு அறியாதவைபோலவே உறுமியபடி சூழ்ந்துகொண்டன. அவற்றை என் சித்தத்தைவிட என்னுள் ஓடிய குருதி நன்கறிந்திருந்தது. ஒரே குடிலை இரண்டாகப் பகுத்து முன்பகுதியில் மூத்த அன்னையும் பின்பகுதியில் அன்னையும் குடியிருந்தார்கள். என் குரல்கேட்டு மூத்த அன்னை வெளியே வந்தாள். மறுபக்கம் வழியாக அன்னை வந்து நோக்கினாள். அவர்கள் என்னை அறிந்ததாகவே தெரியவில்லை. அவர்களின் விழிகள் முன்னரே விண்சென்றுவிட்டிருந்தன."

"அன்னை மேலும் மெலிந்து உருகியிருந்தாள். மூத்த அன்னை எரிதழல் என சுடர்ந்தாள். நான் அவர்களிடம் கேட்கவந்த எதையும் சொல்லாக்கவில்லை. அங்கு வரும்போது அக்கேள்வியின் விசையால் நான் அதிர்ந்துகொண்டிருந்தேன். அக்கணத்தில் அக்கேள்வி என்னுள் திரளவே இல்லை. பின்னர் சோர்ந்து திரும்பிவந்தபோது எனக்குள் அவ்வினா இயல்பாக எழுந்தது. யயாதி என்பவரை அவர்கள் அறிவார்களா? அவ்வினாவை ஒட்டி அடுத்த வினா எழுந்தது. அவர்கள் ஒருவரை ஒருவர் அன்றி பிறரை அறிந்திருந்தார்களா?"

இறகு மெல்ல இறங்கி தரையை அடைந்து படிய பீமன் விழித்தெழுந்தான். இடமும் காலமும் துலங்கா விழிகளுடன்

முண்டனை நோக்கினான். “வருக, நாம் வழிபடாத அன்னை ஒருத்தி இங்குள்ளாள்” என்றான் முண்டன். அவன் கையை ஊன்றி எழுந்து நின்றான். கால்கள் சற்று தள்ளாடுவதுபோல் உணர தலையை உலுக்கி நெற்றிமேல் ஓசையுடன் அடித்தான். “தலையில் அறைந்துகொண்டால் விழிதெளியும் என்பது ஒரு நல்ல கண்டுபிடிப்பு” என்றான் முண்டன். “என் சித்தத்தை சொற்கள் நிறைத்துவிட்டன. அவை எனக்கு முற்றிலும் பொருளாகவுமில்லை” என்றான் பீமன்.

“சொற்களால்தான் மானுடர் ஒருகணத்தையும் பிறிதொன்றையும் இணைத்துக்கொள்கிறார்கள்” என்றான் முண்டன். “நான் எப்போதுமே என்னைச் சூழ்ந்திருக்கும் நிலத்தால்தான் அதை செய்கிறேன். என் சொற்கள் ஒருபோதும் அறுபடா நதியென பெருகியதில்லை” என்றான் பீமன். “நீர் சொன்ன அத்தனை கதைகளையும் உதிரி வரிகளென்றே இப்போது நினைவுகூர்கிறேன். அவற்றிலிலிருந்து நான் எதையும் கற்றுக்கொள்ளவில்லை. என்னால் அவ்வாறு கற்கவும் இயலாது.”

“நாம் பேசுவதை யானைகளும் புரவிகளும் புரிந்துகொள்வதில்லை. ஆனால் அவற்றின் அகத்தை எவ்வண்ணமோ நம் மொழி சென்று நிறைப்பதை உணரமுடியும்” என்றான் முண்டன். “நான் பேசிக்கொண்டிருந்தது உங்கள் கனவுடன்.” பீமன் தலையை அசைத்தான். “வருக!” என முண்டன் புதர்களை விலக்கி முன்னால் சென்றான்.

அந்தச் சிற்றாலயம் முன்பக்கம் இருந்த அதேவடிவில் பின்பக்கத்திலும் வாயிலுடன் இருப்பதை அப்போதுதான் பீமன் கண்டான். “இரட்டை ஆலயங்களா?” என்றான். “ஆம், இத்தகைய

ஆலயங்களை நாம் தென்னகத்தில் காணலாம்... வருக!" என முண்டன் புதர்களை தாவிக்கடந்தான். அங்கே செண்பகமரம் கிளைகள் முழுக்க மலர்களை மட்டுமே சூடி நின்றிருந்தது. வெண்ணிறமலர்கள் நீளக்கிளிஞ்சல்கள்போல தரையில் சருகுகள் மேல் பரவியிருந்தன. செண்பகமணம் எழவில்லை என எண்ணியதுமே சுழன்றுவந்த காற்று மூக்குச்சவ்வை எரிக்கும் அந்த மணத்தை மென்பட்டு போல அவனைச்சுற்றி போர்த்தியது.

வாயில் முன் சென்று நின்ற முண்டன் "இவள் சர்மிஷ்டை. இவர்கள் இரட்டையன்னையர் என்று குருநகரியின் அரசகுடிகளால் வழிபடப்பட்டனர். குருநகரி சிறுநாடுகளாக உடைந்தழிந்தபோது அதன் கொடிவழியினரான தீர்க்கர்களும் அஷ்டபலரும் காம்யகரும் இங்கு வந்துகொண்டிருந்தனர். காலப்போக்கில் அவர்களாலும் இது கைவிடப்பட்டது. இன்று அசுரத்தொல்குடியின் கொடிவழியினர் மட்டுமே இங்கு வருகிறார்கள்" என்றான். பீமன் அவனருகே சென்று நின்று உள்ளே பார்த்தான்.

உள்ளிருந்த சிலை மறுபக்கமிருந்த சிலையைப்போலவே இருந்தது. ஒருகணம் மறுபக்கத்திற்கே சுற்றிவந்துவிட்டோமா என பீமன் எண்ணினான். "இரு தேவியரும் ஒரே உருவில்தான் செதுக்கப்பட்டுள்ளனர்" என்றான் முண்டன். "சிறிய வேறுபாடு சர்மிஷ்டை வலக்கையில் அமுதகலம் வைத்திருக்கிறாள்." "ஆம்" என்றான் பீமன். "புருவின் குலச்சரடிலெழுந்தது அஸ்தினபுரி. உங்கள் நகர்மேல் அமைந்திருக்கிறது அன்னையின் கையிலிருக்கும் இந்த அமுதகலம்."

பீமன் நோக்கிக்கொண்டு நின்றான். பின்னர் "ஆம், இவளும் ஐந்தில் ஒரு முகம்தான்" என்றான். "வணங்குக!" என்றான்

முண்டன். பீமன் உடல் நிலம்படிய விழுந்து வணங்கினான். எழுந்து அன்னையின் விழிகளை நோக்கியபோது அவன் நன்கறிந்தவை அவை என்று தோன்றியது. அப்போது வீசிய மலர்மணமும் நன்கறிந்ததென்றே இருந்தது. ஆனால் அந்த மணம் கல்யாணசௌகந்திகம் அல்ல என்று தெளிவாகத் தெரிந்தது.

புருவும் அரசியும் மைந்தரும் சாயாவனத்தின் அருகே இருந்த உத்தரதுர்க்கம் என்னும் சிற்றூருக்கு சென்று சேர்ந்தபோது அந்தியாகிவிட்டிருந்தது. அங்கே இருந்த காவலர்மாளிகை அவர்களுக்காக ஒருக்கப்பட்டிருந்தது. அதன் அசுரகுடிக் காவலர்தலைவனான சந்தன் அவர்களை ஊர் எல்லையிலேயே வரவேற்றான். உடன் மங்கலத்தாலத்துடன் மூன்றுசேடியரும் முழவும் சங்கும் கொம்பும் மணியுமாக ஐந்து இசைச்சூதரும் இருந்தனர். குரவையொலிகளுடன் அவர்களை வரவேற்று முகமன் உரைத்து வணங்கி அழைத்துச்சென்றான்.

ஊருக்கு நடுவே அமைந்திருந்த காவலர்தலைவனின் மாளிகை பழையதாக இருந்தாலும் தூய்மையாக இருந்தது. அவர்களுக்காக புதியமரவுரிகளும் இறகுத்தலையணைகளும் ஒருக்கப்பட்டிருந்தன. ரௌத்ராஸ்வன் முன்னரே துயின்றுவிட்டிருந்தான். ஈஸ்வரன் நின்றுகொண்டே துயிலில் ஆடினான். ரௌத்ராஸ்வன் தேரோசை ஓய்ந்ததை அறிந்ததும் விழித்தெழுந்து “தந்தையே…” என்று கைநீட்டினான். “துயில்க” என்றான் புரு. ரௌத்ராஸ்வன் “நான் துயிலமாட்டேன்…” என்றான். ஈஸ்வரன் வந்து புருவின் மேலாடையை பற்றிக்கொண்டான். புரு கைகாட்ட ஏவலர் அவர்களை தூக்கிக்கொண்டு சென்றனர்.

நீராடி உணவுண்டதும் மைந்தர் புத்துணர்வு கொண்டனர். அவர்களின் குரல்கள் உள்ளே ஒலித்தன. புரு நறுவெற்றிலை மென்றபடி திண்ணையில் கட்டப்பட்டிருந்த பெரிய ஆட்டுகட்டிலில் அமர்ந்திருந்தபோது ரௌத்ராஸ்வன் ஓடிவந்து அவன் கால்களை கட்டிக்கொண்டு “நான் துயிலமாட்டேன்… நான் கதை கேட்பேன்” என்றான். புருவின் முன் பீடத்தில் அமர்ந்திருந்த சுபகன் “யார் சொல்லப்போகிறார்கள் கதை?” என்றான். “சூதர் வருகிறார்… குடத்தையும் முழவையும் நந்துனியையும் நானே பார்த்தேன்.” ஈஸ்வரன் “அன்னையும் விறலியும் பேசிக்கொண்டிருந்தார்கள். இங்கே கதைசொல்லப் போகிறார்கள். நானே கேட்டேன்” என்றான்.

“மல்லநாட்டுச் சூதனும் விறலியும் வந்துள்ளனர், அரசே” என்றான் அருகே நின்ற முதுஏவலன். உள்ளிருந்து கல்லணிகளும் புலித்தோலாடையும் அணிந்த கரியநிற விறலியும் பௌஷ்டையும் பேசிச்சிரித்தபடி நடந்துவந்தார்கள். விறலி பெரியவிழிகளைத் திருப்பி புருவை நோக்கி பின் ரௌத்ராஸ்வனைப் பார்த்து புன்னகைத்தாள். அவன் தந்தையின் ஆடையை அள்ளிப்பற்றிக்கொண்டு முகம்புதைத்தான்.

முன்வாயிலினூடாக காவலர்தலைவனுடன் முதுசூதரும் அவர் மைந்தன் எனத்தோன்றிய இளையவனும் வந்தனர். அவர்களை சுபகன் எதிர்கொண்டு அழைத்துச்சென்று அமரவைத்தான். விறலி தன் கணவனுக்குப்பின்னால் அமர்ந்தாள். முதியவர் நந்துனியை மெல்ல மீட்டியபோது அந்த அறையே இசைகேட்பதற்காக செவிகள் கொண்டது. முதிய சூதர் “அரசருக்கும் அரசிக்கும் அமைச்சருக்கும் வணக்கம். அவர்களின் அழியாக்குலவழியில் எழுந்த மாமன்னர்களுக்கும்

எழவிருக்கும் மாமன்னர்களுக்கும் வணக்கம். பேரன்னையருக்கு தாள்பணிந்த வணக்கம்” என்றார்.

அரசி புருவின் அருகே அமர்ந்தாள். ரௌத்ராஸ்வன் அவன் மடியில் தொற்றி ஏறி அமர ஈஸ்வரன் உடலை அவன் மேல் ஒட்டிவைத்தபடி அருகே அமர்ந்தான். பிரவீரன் அமைச்சரின் அருகே சிறுபீடத்தில் அமர்ந்தான். ஏவலர் கைகட்டி சுவர் சாய்ந்து நின்றனர். “எங்களிடம் மாமன்னர் யயாதி மெய்யுலகு எய்திய கதையைப் பாடும்படி சொன்னார்கள்” என்றார் முதியசூதர். “நாங்கள் அக்கதையை நுறுமுறை பாடியுள்ளோம். அவர்களின் கொடிவழியினர் செவிக்கென பாடுகையில் எங்கள் சொற்கள் தேனுடன் கூடுதிரும்பும் தேனீக்களாகின்றன” என்றார்.

அவர் திரும்பி பிரவீரனைப் பார்த்து “இவரே முடிசூடவிருப்பவர். வெற்றிமேல் வெற்றிகொள்பவர் என்பதனால் இவரை ஜனமேஜயர் என வாழ்த்துகின்றன நூல்கள்” என்றார். சற்று திகைத்து “எந்த நூல்கள்?” என்றான் புரு. “அரசே, நடந்தவற்றை எழுதும் நூல்களுண்டு. நடக்கவிருப்பனவற்றை எழுதும் நூல்களும் உண்டு” என்றார் சூதர். புரு ஒருகணம் கழித்து புன்னகைத்து கைகூப்பினான். இளம்சூதன் எங்கோ என வெறித்த விழிகளுடன் “கதைகள் அழியாத பெரும்வலை. மானுடர் அவற்றின்மேல் சென்றமரும் சிற்றுயிர்கள். நடுவே அமைந்த சிலந்திக்கு வணக்கம்” என்றான்.

“பாடுக!” என்றான் புரு. நந்துனி அதுவே எண்ணிக்கொண்டதுபோல இசை துள்ள ஒலிக்கத் தொடங்கியது. ஓர் உச்சியில் முழவு வந்து இணைந்துகொண்டது. “இது மாமன்னர் யயாதி விண்ணேகியதைப்பற்றி சாலபஞ்சிகர் எழுதிய சலஃபஸல்லாபம் என்னும் காவியம். ஏழு பாதங்கள்

கொண்டது. குளிர்ச்சுனை திரைகிழித்து விழிநீர்மகள் எழுந்து யயாதியை ஆட்கொள்ளும் இடத்தில் இது தொடங்குகிறது. அவர்களின் ஆடலை எழுபது பாடல்களால் விளக்குகிறது. அவர்கள் ஒருவரை ஒருவர் வனைந்தனர். கலைத்து மீண்டும் வடித்தனர். முற்றாகக் கலைத்து முகிலென மறைந்தனர்” என்றார் சூதர். விறலியின் குரல் எழுந்து அவர்களை தழுவியதுபோல ஒலிக்கத் தொடங்கியது.

புலரியில் எழுந்து கிளம்பிபபோது ரௌத்ராஸ்வனும் ஈஸ்வரனும் துயிலில் இருந்தனர். அரைத்துயிலிலேயே அவர்களை நீராட்டி நோன்புக்கான அணிகளை பூட்டியிருந்தனர் சேடியர். பிரவீரன் புருவுடன் தேரில் ஏறிக்கொண்டான். பௌஷ்டையும் சேடியும் பின்னால் வந்த தேரில் ஏறினர். சுபகன் முன்னால் சென்ற தேரில் ஏறியதும் புரவிகள் காலெடுத்து வைத்தன. தேர் ஓடத்தொடங்கியதும் காலைக்குளிர்காற்றில் அன்று பிறந்ததுபோன்ற ஓர் உணர்வை புரு அடைந்தான்.

பிரவீரன் அவனிடம் “நான் ஜனமேஜயன் என்றார் சூதர்” என்றார். “ஆம், அந்தப்பெயரில் நீ முடிசூடக்கூடும். அல்லது உன் களவெற்றிக்குப்பென் அப்பெயர் தேடிவரக்கூடும்” என்றான் புரு. பிரவீரன் “தந்தையே, அது பிறிதொருவனின் பெயர் என நினைக்கிறேன். எனக்குள் அவன் நிகழ்வதே நான் என்று தோன்றுகிறது.” புரு புன்னகையுடன் “யார்?” என்றான்.

“நான் என் கனவில் இருகைகளாலும் அம்பெய்யும் சவ்யசாசியான வில்லவனாக தோன்றுகிறேன்” என்றான். “ஆம், அது இயல்பான எண்ணம்தானே?” என்றான் புரு. “அல்ல, அது நான் அல்ல. பிறிதொருவன். கரியநிறமும் ஒளிவிடும் விழிகளும் கொண்டவன். கிளிகளைப்போல தாவி

காற்றிலெழும் சிற்றுடல் கொண்டவன்” என்றான் பிரவீரன். “அவனாக நான் இருக்கையில் முன்பு எப்போதோ இருந்தவன் என இப்பிரவீரனை எண்ணிக்கொள்கிறேன்.” புரு சிரித்தபடி மைந்தனின் குழலை வெறுமனே வருடினான்.

தேர்கள் காட்டின் விளிம்பை சென்றடைந்தன. வீரர்கள் படைக்கலங்களுடன் இறங்கி நின்றனர். புரு இறங்கியதும் பிரவீரனும் உடனிறங்கினான். அரசியும் சேடியும் இறங்கி ஆடை திருத்திக்கொண்டார்கள். ரௌத்ராஸ்வனை ஓர் ஏவலன் தூக்கி இறக்கியபோது அவன் விழித்துக்கொண்டு “நான் நடப்பேன்… நான் நடப்பேன்” என்றான். ஏவலன் அவனை கீழே இறக்க அவன் ஓடிவந்து புருவின் ஆடையை பற்றிக்கொண்டு “நான் நடப்பேன்” என்றான். “வருக” என்றான் புரு. ஈஸ்வரன் ஏவலன் ஒருவனின் கைபற்றி அரைத்துயிலில் என நடந்தான்.

அவர்கள் கால்நிரைப் பாதை வழியாக நடந்தனர். இருபுறமும் காடு அப்போதும் எஞ்சியிருந்த இருளுடன் இரவின் ஒலியுடன் சூழ்ந்திருந்தது. ஒரு கீரி குறுக்காக புல்கதிர்வாலை விடைத்து கடந்துசென்றது. அவர்களின் வரவை ஆட்காட்டிக்குருவி ஒன்று கூவியறிவித்தபடி தலைக்குமேல் தாவித்தாவி சுழன்றது. பின்னர் உச்சிக்கிளைக் குரங்கு ஒன்று குமுறத்தொடங்கியது. தொலைவில் குரங்குக்கூட்டம் காற்று கிளைகளை உலைத்துச் செல்வதுபோல பாய்ந்து அகன்றது.

அவர்கள் ஆலயத்தைச் சென்றடைந்தபோது அரசியும் சேடியும் மூச்சுவாங்கிக்கொண்டிருந்தனர். இலைநுனிஅரங்களும் முட்களும் கிழித்த கையை அரசி தூக்கி மெல்ல ஊதினாள். சேடி ஒரு மலரைப்பறித்துக் கசக்கி சாறை அக்கீறல்கள் மேல் பூசினாள். “செல்வோம்” என்றான் புரு. “அதுதான் ஆலயம்.” அது ஒரு பசும்பாசி படர்ந்த சிறிய பாறைபோலத்தான் தோன்றியது.

அதன்மேல் வெற்றிலைபோல இலைகள் விரித்த கொடிகள் அடர்ந்திருந்தன. நூற்றுக்கணக்கான தலையாட்டல்கள்போல இலைகள் காற்றில் ஆடின.

முன்னரே வந்திருந்த ஏவலர் ஆலயத்தின் முற்றத்தை புல்செதுக்கி தூய்மை செய்திருந்தார்கள். விரிக்கப்பட்ட பாளைகளிலும் வாழையிலைகளிலும் பூசெய்கைப் பொருட்கள் பரப்பப்பட்டிருந்தன. முழவும் கொம்பும் குழலுமாக இசைச்சூதர்கள் வலப்பக்கம் காத்து நின்றிருந்தனர். ஈச்சையோலையாலும் மலர்களாலும் தோரணங்கள் கட்டப்பட்டு முகப்பு அணிசெய்யப்பட்டிருந்தது.

அவர்களைக் கண்டதும் முழவுகளும் கொம்புகளும் ஒலிக்கத் தொடங்கின. பறவைகள் கிளைகளுக்குமேலே பறந்து எழுந்து கலைந்தன. "கீரி... ஒரு கீரி ஓடுகிறது" என்றான் ரௌத்ராஸ்வன். "பேசாதே" என ஈஸ்வரன் அவனை அதட்டினான். பிரவீரன் "இது பூசெய்கை. ஒலி எழக்கூடாது" என இளையோரிடம் மெல்லியகுரலில் சொன்னான். கைசுட்டியபடி அதே குரலில் "கீரி" என்றான் ரௌத்ராஸ்வன்.

கோயில் முற்றத்தில் அவர்கள் சென்று நின்றதும் பூசகர் உள்ளிருந்து வந்து மரத்தாலத்தில் இருந்து நீறு அள்ளி அவர்கள் மேல் வீசி "அன்னையருள் பொழிக... நலம்சூழ்க!" என வாழ்த்தினார். முழவோசை அதிர்ந்துகொண்டே இருக்க சூழ்ந்திருந்த இலைகளெல்லாம் அதற்கேற்ப அசைவதாகத் தோன்றியது. குனிந்து அமர்ந்து நுழையவேண்டிய சிறிய கருவறை. அதற்குள் இரண்டுமுழ உயரத்தில் கரிய கற்சிலை நின்றுகொண்டிருந்தது. ஒவ்வொருமுறையில் என முதல்நோக்கில் அது நான்கு கைகள் கொண்ட அன்னை என்று

தோன்றியது. பின்னர்தான் இரண்டு உடல்கள் இருபாதிகளென இணைந்த தோற்றம் அது என தெரிந்தது.

சுபகன் “அஸ்ருபிந்துமதி... இரட்டையன்னை என்றும் சொல்லப்படுவதுண்டு” என்றான். பூசகர் “வலக்கையில் அமுதகலம். இடக்கையில் கதிர்ப்படைக்கலம். விழிநீர்மணிமாலை சூடியிருக்கிறாள்” என்றார்.

புரு கைகூப்பி தொழுதான். பூசகர் உள்ளே சென்று தாலத்தில் ஏழு அகல்விளக்குகளை சுடருடன் எடுத்து வைத்து மணியோசையுடன் சுடராட்டு காட்டினார். அவன் செவ்வொளியில் எழுந்த இரட்டைமுகத்தையே நோக்கிக்கொண்டிருந்தான். சுடர்த்தாலம் சுழன்றுவருவதற்கு ஏற்ப இரு முகங்களும் மாறிமாறி ஒளிகொண்டு அணைந்தன.

# மாமலர் - 92

## 92. கெடுமணச்சோலை

“எத்துணை அரிதானதென்றாலும் எவ்வளவு அணுக்கமானதென்றாலும் நம்மால் எளிதில் கைவிட்டு விலகமுடிகிறதே, ஏன்?” என்றபடி முண்டன் பின்னால் வந்தான். “எங்கிருந்தானாலும் விலகிச்செல்கையில் நாம் அடையும் உள்ளுறை உவகையின் பொருள்தான் என்ன?” பீமன் அவனை நோக்கி “நான் உவகை அடையவில்லை. சோர்வு கொண்டிருக்கிறேன்” என்றான். “ஆம், அது உள்ளத்தில். ஆனால் உங்கள் நடையிலெழும் விரைவு பிறிதொன்றின் உவகையை காட்டுகிறது” என்றான் முண்டன்.

பீமன் ஒன்றும் சொல்லாமல் முன்னால் நடக்க முண்டன் “அமர்ந்திருக்கும் பறவை முந்தைய கணத்திலோ அடுத்த கணத்திலோ பறந்துகொண்டுமிருக்கிறது” என்றான். எரிச்சலுடன் திரும்பிய பீமன் “அனைத்தையும் அக்கணமே சொல்லென்றாக்கிவிட வேண்டுமா என்ன?” என்றான். “உங்கள் சொல்லின்மையை எண்ணி அஞ்சித்தானே என்னுடன் வருகிறீர்கள், பெருந்தோளரே?” என்றான் முண்டன். “சொல்லப்பட்ட ஒவ்வொன்றும் குழந்தையால் விளையாடிக் கடக்கப்பட்ட களிப்பாவைகள்.” பீமன் நடந்துகொண்டே இருக்க அவன் துள்ளி தலைகீழாக காற்றில் சுழன்று அவனருகே வந்து நின்று “சொல்லுக, அதுவே அடுத்ததைப் பற்றும் வழி” என்றான்.

பீமன் “வெறுஞ்சொற்களில் எனக்கு ஆர்வமில்லை” என்று சொல்லி முன்னால் நடந்தான். முண்டன் பின்னால் வந்தபடி “ஒரு பெண் ஒரு சொல்லுக்கு அப்பால் வேறென்ன?” என்றான். “வீண்பேச்சு” என்றான் பீமன் எரிச்சலுடன். “புரூரவஸும் யயாதியும் அறிந்த மெய்மை அதுவே” என்றான் முண்டன். “ஒரு சொல் மட்டுமே. ஆனால் இங்குள்ள அனைத்தும் சொற்களே. இவையனைத்துமான ஒன்று உண்டென்றால் அதுவும் ஒரு சொல்லே.”

பீமன் “இத்தகைய சொல்விளையாட்டுக்களை என் மூத்தவரிடம் கேட்டு சலித்துவிட்டேன்” என்றான். முண்டன் “ஆம், அவர் சொல்லில் இருந்து சொல்லை மட்டுமே கற்றுக்கொள்பவர். எளியவர், ஆகவே அருளாளர்” என்றான். “சொல்லில் அனைத்தையும் பெய்கிறோம். விழைவை, ஆணவத்தை, இழிவுணர்வை, இனிமையை, தனிமையை. மாவலரே, பெண்ணும் நாம் பெய்து நிறைத்து எடுக்கும் வெறுங்கலம் அல்லவா?”

பீமன் அப்பேச்சை விலக்கி “நாம் இனி எங்கே செல்கிறோம்?” என்றான். முண்டன் “நீங்கள் கனவில் கண்ட ஐந்து பெண்களில் நால்வரை கண்டுவிட்டீர்கள். ஐந்தாம் முகம் எது என எண்ணிநோக்குங்கள்” என்றான். “ஐந்தும் திரௌபதிதான்...” என்றான் பீமன். “ஆனால் இங்கே ஆலயச்சிலைகளாகக் காண்கையில் இவர்கள்தானா என்றும் ஐயம் கொள்கிறேன்.” முண்டன் “ஐந்தும் அவரே” என்றான். “அவ்வண்ணமென்றால் ஐந்தாம் முகம் எங்கோ உள்ளது” என்றான் பீமன். “அங்கிருக்கிறது கல்யாணசௌகந்திகம். முண்டரே, இந்நான்கு ஆலயங்களையும் நீங்கள் முன்னரே அறிந்திருக்கிறீர். ஆகவே அதையும் அறிந்திருப்பீர்” என்றான்.

“நான் அறிந்திருக்கவில்லை... மெய்யாகவே” என்றான் முண்டன். “நான் உமது காலத்தை திரைதிரையென கிழித்தகற்றினேன். கண்டது நீர்.” பீமன் “அவை என் உளமயக்குகள் அல்ல. கண்டு தொட்டு அறியும்படி அன்னையரின் ஆலயங்களை சென்றடைந்தேன்” என்றான். “அவற்றுக்கு நான் சென்றதைப்போல அடுத்த ஆலயத்திற்கும் என்னை அழைத்துச்செல்க!” முண்டன் நகைத்து “அவற்றை நீரே கண்டடைந்தீர்... உமது மூக்குணர்வால்” என்றான்.

“அந்த மணத்தை நான் முற்றிலும் மறந்துவிட்டதாகவே தோன்றுகிறது. ஒவ்வொரு முறை ஓர் இடத்திலிருந்து கிளம்பும்போதும் அதுவரை அறியாத ஒரு நறுமணத்துக்காக என் மூக்கு தேடத் தொடங்கிவிடும். கடந்தவை பின் தங்கி அகன்று மறையும். இம்முறை மீண்டும் மீண்டும் சென்ற நறுமணங்களையே முகர்புலன் தேடுகிறது” என்றான் பீமன். “ஒருவேளை அந்த மலர் நாம் விட்டுவந்த இடங்களில் எங்கேனும் இருந்ததோ என ஐயம் எழுகிறது. பிறிதொன்று

மற்றொன்று என தேடிய சித்தத்தால் அவற்றை தவறவிட்டுவிட்டேனா?”

முண்டன் சிரித்துக்கொண்டு “உண்மையில் அவ்வாறும் ஆகலாம்” என்றான். பீமன் திரும்பி “என்ன சொல்கிறீர்?” என்றான். “விட்டுவந்த ஒவ்வொரு மலரும் கல்யாணசௌகந்திகம் ஆகலாம், மாமல்லரே… அந்த மணம் உங்கள் உள்ளத்தின் எண்ணநுண்கூர் அல்லவா?” பெருமூச்சுடன் பீமன் “ஆம்” என்றான். “எண்ணிநோக்குக! நினைவில் அந்த மணங்களை மீட்டெடுக்கையில் என்ன தோன்றுகிறது?” பீமன் “முயல்கையில் மீள்வன அந்த வினாக்கள் மட்டுமே” என்றான். “அந்தக் கதைகள் அனைத்தையும் மறந்துவிட்டேன். சில தருணங்களாக அவை சுருங்கி விட்டன என்னுள்.”

முண்டன் “அவ்வினாக்களால் அவை கல்யாணசௌகந்திகம் அல்லாதாயின” என்றான். பீமன் திடுக்கிட்டு நின்று “ஆம்” என்றான். ஏளனச் சிரிப்புடன் “வினாவற்றதே மெய்க்காதல் என்பார்கள்” என்றான் முண்டன். “அது வெறுங்காமம் அளவுக்கே தூயது.” பீமன் அவனை நோக்கியபடி நின்றான். “அத்தனை வினாக்களுக்கும் விடைதேடி அடைந்துவிட்டால் மலர்களனைத்தும் நறுமணம் கொள்ளும்.” பீமன் இடையில் கைவைத்து சினம் எழுந்த முகத்துடன் நோக்கி நின்றான். “ஞானிகளும் அறிஞர்களும் கவிஞர்களும் காதலர்களும் கண்டடையாத விடைகள் அவை.” பீமன் பற்களைக் கடித்தபோது கழுத்துநரம்புகள் இறுகி இழுபட்டன. “காமத்தை அறிந்தவர் பிற அனைத்தையும் தெளிந்தவர்” என்றான் முண்டன்.

பீமன் வெறியுடன் கூச்சலிட்டபடி பாய்ந்து முண்டனை ஓங்கி அறைந்தான். ஆனால் அவன் பூனைபோல இயல்பாகத் திரும்பி

அவனை ஒழிந்து துள்ளி அப்பால் சென்று கைகொட்டிச் சிரித்தான். நிலைதடுமாறி விழப்போய் காலூன்றி நின்று திரும்பி மீண்டும் பாய்ந்தான் பீமன். அறை விழுந்த மரம் உலுக்கல்கொண்டு இலைகளை உதிர்த்தது. மீண்டுமொரு அறையில் சிறிய மரம் ஒன்று ஒடிந்தது. கூச்சலிட்டபடி அவன் மாறிமாறி முண்டனை தாக்கினான். அவன் சிரிப்பை நிறுத்தாமலேயே துள்ளித்துள்ளி விலகினான். சூழ்ந்திருந்த காற்றெல்லாம் பஞ்சு பறப்பதுபோல அவன் பல்வெண்மை தெரிவதாக பீமன் விழிமயங்கினான்.

பின் மூச்சிரைக்க இரு கைகளையும் தேள்கொடுக்கென நீட்டி நின்றான். முண்டன் வா வா என கைகாட்டி சிரித்தான். நின்ற இடத்திலேயே துள்ளிச்சுழன்று நின்று "ஹிஹிஹி" என சிரித்தான். "உன்னை கொல்வேன்... எங்கு சென்றாலும் தேடிவந்து கொல்வேன்" என்று பீமன் கூவினான். "இதோ, கொல்லும்" என முண்டன் மிக அருகே வந்தான். இரு கைகளுக்கு நடுவே நுழைந்தான். பீமன் 'ஆ!' என வெறிக்கூச்சலிட்டபடி அவனை இறுக்க முயல புகைபோல மறைந்தான். அவன் தரையில் பரவிச்செல்வதைக் கண்ட பீமன் கால்களால் மாறி மாறி உதைத்தான். ஒவ்வொரு உதையிலும் உருளைப்பாறைகள் கிளம்பி மலைச்சரிவில் உருண்டு சென்றன.

அவன் மூச்சிரைக்க நின்றபோது அப்பால் மரக்கிளையில் தொங்கியபடி ஆடி வந்த முண்டன் அவனை தொட்டுவிட்டு சிரித்துக்கொண்டே பாய்ந்து விலகினான். பீமன் அனைத்துக் கட்டுப்பாடுகளையும் இழந்து கீழே கிடந்த கற்களை எடுத்து அவனை நோக்கி வீசினான். கற்கள் அவனை ஒளியை என கடந்துசெல்வதுபோலத் தெரிந்தது. சோர்ந்து சலித்து குனிந்து

முழங்கால்களில் கைகளை ஊன்றி அவன் நின்றபோது முண்டன் இறங்கி வந்து தரையில் அவன் முன் குந்தி அமர்ந்தான். அவன் கண்கள் குரங்குகளைப்போல மின்னி இமைத்தன. அவர்கள் இருவரும் நோக்கு தொட்டு அசையாமல் நின்றனர்.

“நீர் யார்?” என்றான் பீமன். “முண்டன்” என்றான் முண்டன். “அது நாங்களிட்ட பெயர். நீர் உண்மையில் யார்?” முண்டன் சிரித்துக்கொண்டு “முதலில் நீ யார் என்று சொல்” என்றான். “நான் பாண்டவன், கௌந்தேயன், சந்திரகுலத்தவன், குருவின் கொடிவழியினன், பீமன்.” அவன் திரும்பி நோக்கி “நான் இந்தக் காற்றுபோல... எங்கிருக்கிறேனோ அங்குள்ளவன்” என்றான். எதிர்பாராத கணத்தில் பீமன் பாய்ந்து அவனை பிடிக்க முயல அவன் விலகி கிளையொன்றில் ஏறிக்கொண்டான். மண்ணில் முகம் அறைய விழுந்த பீமன் புரண்டு எழுந்தான். அவன் பல் பட்டு உதடுகிழிந்து குருதி வழிந்தது.

“மண் சுவையுடையது” என்றான் முண்டன். கெக்கலியிட்டுச் சிரித்தபடி “குருதி மேலும் சுவைகொண்டது. தன் குருதியோ அமுது” என்றான். பீமன் பாய்ந்து சென்று கற்களைப் பொறுக்கி அவன் மேல் எறிந்தான். கற்களிலிருந்து தப்பும்பொருட்டு கிளைதோறும் பாய்ந்து சென்று அமர்ந்த முண்டன் “மண்ணும் குருதியும் நீரும் நெருப்பும் போல” என்றான். பீமன் “நீ யார் என அறிவேன். என்னை மயக்கி இறப்புக்குக் கொண்டுசெல்லும் தீயதெய்வம்...” என்று கூவினான். “ஆனால் அஞ்சாதவனை அழிக்க இருட்தெய்வங்களால் இயலாது... நான் எதன்பொருட்டும் அஞ்சுபவன் அல்ல.”

‘நான் இப்போது உன் வேட்டைப்பொருள், அவ்வளவுதான்” என்றான் முண்டன். “நீ தோற்ற வேட்டைக்காரன், வேறெதுவும் அல்ல.” பீமன் மீண்டும் கற்களை எடுத்து எறிந்தான். முண்டன் காட்டுக்குள் சென்றுவிட அவன் கற்களையும் தடிகளையும் எடுத்து எறிந்தபடி பின்னால் ஓடினான். அவனை முண்டன் மரக்கிளைகளுக்கு நடுவே தோன்றியும் மறைந்தும் அலைக்கழித்தான். அவன் ஓய்ந்து நின்றிருக்கையில் தலைக்குமேல் தோன்றி கிளையை உலுக்கினான். சினந்து கிளைகளில் ஏறி அவனுக்கு இணையாக பாய்ந்து துரத்தினான் பீமன். கிளையுடைந்து கீழே விழுந்தான். அவனுக்குமேல் தோன்றி அவன் தலைமேல் ஒருதுளி சிறுநீர் பாய்ச்சினான் முண்டன்.

பீமன் நெஞ்சில் ஓங்கி அறைந்து கண்ணீருடன் “உன்னை கொல்வேன்… உன்னை கொல்லாமல் அமையமாட்டேன்” என்று வீரிட்டான். கிளைகளில் முட்டி விழுந்தும் எழுந்தும் முண்டனை துரத்தினான். தலைக்குமேல் முண்டனின் சிரிப்பொலி கேட்டுக்கொண்டே இருந்தது. மிக அருகே, மிக அப்பால், பின்னால், முன்னால், கையருகே, காலுக்குக் கீழே. அவன் அனைத்து சித்தப்பெருக்கும் நின்றுவிட பிறிதொன்றிலாது உளம்குவிய அவ்வொலியை பற்றிவிட வெறிகொண்டு சென்றுகொண்டே இருந்தான்.

முட்கள் அவன் உடலை கீறின. கிளைகள் தலையை தட்டி விழச்செய்தன. பாம்புகள் அவன் கால்களில் மிதிபட்டு சீறி நெளிந்து துடித்தன. எதிர்ப்பட்ட காட்டுயானை ஒன்று அஞ்சி பிளிறியபடி பின்னால் சென்றது. மான்கூட்டங்கள் எறிபடையிலிருந்து அம்புகளென நாற்புறமும் தெறித்தன.

விழியும் செவியும் மூக்கும் அழிய திசைகள் மறைய இருப்பும் மயங்க அவன் காட்டுக்குள் சென்றுகொண்டே இருந்தான்.

பின்னர் சூழ்ந்திருந்த காட்டில் எதையோ உணர்ந்து அவன் திகைத்து நின்றான். மூச்சிரைக்க இடையில் கைவைத்து நின்று சுற்றுமுற்றும் நோக்கினான். அக்காடு இருண்டிருந்தது. இலைக்கூரைக்குக் கீழே ஒரு ஒளித்துளிகூட இறங்கவில்லை. பின்னர் உணர்ந்தான், அக்காட்டின் விந்தையை. அங்கே ஒலியே இல்லை. ஒரு பறவையோசைகூட. காட்டின் அமைதியின் ஒலியாகிய சீவிடின் மீட்டல்கூட. ஆனால் காற்று? அப்போதுதான் அக்காட்டின் ஓர் இலைநுனிகூட அசையவில்லை என்று உணர்ந்தான். காற்றுவந்து காடு உயிர்கொள்வதற்காக அவன் காத்து நின்றான்.

காலம் ஓடிக்கொண்டிருந்ததை அவன் உள்ளம் மட்டுமே உணர்ந்தது. நெடுந்தொலைவு சென்ற உள்ளம் சூழ்ந்திருந்த எவையும் காலத்தில் உடன்வராமை கண்டு திரும்பி வந்தது. ஒவ்வொரு இலையாக கொடியாக மரமாக தொட்டுத்தொட்டுத் தவித்து அங்கேயே தேங்கி நின்றது. தவிப்பு மட்டுமேயாக அனைத்து எண்ணங்களும் உருமாறின. அசைவிழந்திருந்த காட்டின் ஒவ்வொன்றிலும் எழுமத்தகங்கள் கொண்டு முட்டி மீண்டது சித்தம். தலையை அறைந்து திறந்துவிடவேண்டுமென பொங்கியது அகம்.

அவன் அருகே நின்ற மரத்தை ஓங்கி மிதித்தான். நடுங்கி மீண்டும் அமைந்த கிளை ஒன்றைப் பிடித்து உலுக்கினான். அது தாழ்ந்து மீண்டது. அதை அசைக்கலாம், உலுக்கலாம். ஆனால் தன் முடிவிலா அசைவின்மைக்கு அது மறுகணமே மீளும் என உணர்ந்தான். அசைவின்மையின் கடல். அதில் வெறும் குமிழிகள் அவ்வசைவுகள். சோர்ந்து தலையை

பற்றிக்கொண்டான். திரும்பிவிடலாமென்று எண்ணியகணமே திசை தொலைந்துவிட்டிருப்பதை உணர்ந்தான்.

திசைகள் அசைவுகளாலும் ஒளியாலும் ஆனவை என்று தெரிந்தது. அவை உயிர்களால் அறியப்படுபவை மட்டுமே. விழிகளால் சமைக்கப்படுபவை. அங்கே ஒரு பறவைகூட இல்லை. ஒரு பூச்சிகூட இல்லை. தேனீக்களோ வண்டுகளோ பறக்கவில்லை. இலைகளில் புழுக்கள் இல்லை. மரங்களைக் கடந்து செடிகளை விலக்கி சென்றுகொண்டே இருந்தான். சலித்து நின்று மறுதிசை நோக்கி சென்றான். மீண்டும் இருமுறை திசைசுழன்றபோது முந்தைய இடத்திற்கே வந்துவிட்டிருப்பதை உணர்ந்தான். "முண்டா" என்று உரக்க கூவினான். "முண்டா!"

அக்குரலுக்கு எதிரொலி எழவில்லை என்பதை அச்சத்துடன் உணர்ந்தான். நெஞ்சுடையும்படி கூவினான். எதிரொலி எழாத குரல் எத்தனை அச்சமூட்டுவதென்று அறிந்தான். திரும்பிவரும் ஒலி நாற்புறமும் ஏதோ ஒன்று சூழ்ந்திருப்பதை உணர்த்துகிறது. சூழ்ந்திருப்பது ஏதுமின்மை என்னும் உணர்வு உள்ளுறைந்த துளி ஒன்றை நடுநடுங்க வைத்தது. மீண்டும் ஓசையிடத் துணியாமல் அவன் நடந்தான். அது கனவா என்னும் எண்ணம் வந்தது. ஆனால் மரங்களை தொடமுடிந்தது. அத்தனை கனவுகளிலும் அந்த ஐயமும் பருத்தொடுகையும் நிகழ்ந்திருக்கிறது.

ஒன்றே செய்யக்கூடுவது. இந்த விந்தைக்காடு நெடுந்தொலைவுக்கு இருக்கவியலாது. ஏதேனும் ஒரு திசை நோக்கி சென்றுகொண்டே இருக்கவேண்டியதுதான். முடிவிலாது செல்லமுடியாது. எங்கோ ஓர் இடத்தில் ஒரு சாயொளி, ஒரு பறவைக்குரல், ஒரு நுண்ணுயிர், ஒரு

பாறைப்பாசி கண்ணில் படும். திசையை அறிய அறிந்தவற்றின் ஏதேனும் ஒரு துளி போதும். திசை என்பது அறிந்த பொருட்களை உள்ளம் அடுக்கி வைக்கும் ஒழுங்கு.

அவன் அதற்குள் நுழைந்ததுமுதல் காதைப்போலவே மூக்கும் இல்லாமலிருந்தது என்பதை ஒரு கெடுமணத்தை உணர்ந்ததும் அறிந்தான். முதலில் அது ஓர் உளமழிவு என்றே தோன்றியது. பின்னர் அது மெய்யாகவே எழுவதை உணர்ந்தான். அந்தக் கெடுமணம் அவனை முற்றாக சூழ்ந்துகொண்டது. கண்மூடி நின்றபோது வலக்கைப்பக்கம் அதன் விசை தெரிந்தது. உறுதிசெய்துகொண்டபின் அதை நோக்கி சென்றான். அந்த இருட்பசுமை வெளியில் முதல்முறையாக திசை என ஒன்று உருவாகியிருப்பதை உணர்ந்ததும் ஆறுதல் கொண்டான்.

அணுக அணுக கெடுமணம் அழுத்தம் கொண்டு வந்தது. அழுகும்இலைபோலத் தெரிந்தது. பின் நொதித்த சேறு. புதிய மலம். விந்தையானதோர் பாசியா? பிணம் மட்குகிறதா? கெடுமணம் ஒரு பருவிசையாக ஆகி உடலை பின்னுக்கு தள்ளமுடியுமா? அதை கையால் தொட்டு கிழித்து முன்செல்ல வேண்டியிருக்குமா? உடல் முழுக்க நிறைந்து வாயில் கசப்பாகவும் கண்களில் மங்கலாகவும் கைகால்களில் எடையாகவும் ஆகியது அந்தக் கெடுமணம். அழுகும் தசைமணம் என அதை பின்னர் உணர்ந்தான். உயிருள்ள தசை. நாட்பட்ட புண்.

அப்படி எண்ணியதுமே அது பிறிதொன்றென ஆகியது. எண்ணிய கெடுமணம் எல்லாம் அதுவென்று அறிந்தது அகம். அறியாத ஒரு கணத்தில் உடல் அதிர குமட்டி வாயுமிழ்ந்தான். கண்களில் நீர்வழிய தலையைப் பற்றியபடி குனிந்து நின்று முழு வயிற்றையும் ஒழித்தான். பின்னரும் வயிற்றுத்தசைகள்

அதிர்ந்துகொண்டே இருந்தன. வாயிலூறிய கோழையை நாக்கால் வழித்து வழித்து துப்பினான். பின்னர் முன்னால் செல்வதா வேண்டாமா என ஐயம் கொண்டு நின்றான். அப்போதுதான் அந்தச் சிற்றாலயத்தை பார்த்தான்.

இடைவரை உயரம்கொண்ட கல் ஆலயம். புதர்சூழ்ந்து நீர்வழிந்து பாசிபடர்ந்திருந்தது. அவன் அருகே செல்ல காலடி வைத்ததும் அடுத்த ஆலயத்தை கண்டான். மேலும் நெருங்கியதும் நான்கு ஆலயங்கள் அரைவட்டமாக அமைந்திருப்பது தெளிவாகியது. ஒரே அளவும் அமைப்பும் கொண்டவை. அவன் அவற்றை அணுகி கூம்பிலைப் புதர் நிறைந்த சிறிய முற்றத்தை அடைந்தான். அங்கே நொதித்த சேறு கணுக்கால் வரை அழுந்தியது. அச்சேற்றின் கெடுமணம்தான் அது. கிளறப்பட்டபோது மலம் என சீழ் என கெடுமணம் எழுந்து அவன் உடலை காற்றுபோல அறைந்தது.

அத்தனை ஆலயங்களிலும் ஒரே அளவான சிலைகள் இருந்தன. முழங்கை உயரமானவை. கரிய கல்லில் செதுக்கப்பட்டு சிறிய பீடங்களில் நிறுத்தப்பட்டவை. இருளில் மையிருளால் ஆனவை போல நின்றிருந்த அவற்றை அவன் குனிந்து கூர்ந்து நோக்கினான். அனைத்துச் சிலைகளும் ஒருகையால் அறிவுறுத்தல் குறியும் மறுகையால் ஆற்றுப்படுத்தல் குறியும் காட்டின. பிற அடையாளங்கள் எவையுமில்லை. அங்கே எவரும் வந்து பூசெய்கை செய்தமைக்கான எந்தத் தடயமும் தெரியவில்லை. சூழ்ந்திருந்த காட்டின் காதுகளை உடைக்கும் அமைதியின் மையமென அவை குளிரிருள் குவிந்து நின்றன.

அவன் நோக்கிக்கொண்டிருக்கையில் அவனுக்குப் பின்னால் ஓசையில்லாமல் முண்டன் வந்திறங்கினான். அவன்

இறகுபோல விழுவதை ஓரவிழியால் கண்டாலும் பீமன் திரும்பவில்லை. “அழகிய மகளிர்” என்று முண்டன் சொன்னான். பீமன் விழிவிலக்காமல் நின்றிருந்தான். முண்டன் மெல்லியகுரலில் அவன் காதுக்குள் மட்டும் ஒலிக்கும்படியாக “பெண்களை இருவகையில் அறிகிறோம். உறைந்தும் உருகியும்” என்றான். அவன் சொற்களை ஒரு வருடலென பீமன் உணர்ந்தான். “உருகும்போது ஒவ்வொரு பெண்ணுக்கும் அவளுக்கென்று ஒரு கெடுமணம் உண்டு. அதைத் தேடும் ஆண்புலன் ஒன்று அதை கண்டடைகிறது. மதமெழுந்து வெறிகொண்டாடுகிறது.”

பீமன் சிலிர்த்துக்கொண்டே இருந்தான். “மானுடருக்கு அணுக்கமானவை நறுமணங்கள் என்கின்றனர். அத்தனை மானுடருக்குள்ளும் அவர்களை பித்தாக்கும் கெடுமணங்கள் சில உண்டு. அவர்களை ஆட்டுவிப்பவை அவையே” என்றான் முண்டன். “நறுமணங்களினூடாக பெண்ணை நினைவுறுத்திக்கொள்பவன் எவன் இப்புவியில்?” பீமன் சீற்றத்துடன் திரும்பி “விலகிச்செல்... விலகு... நீ கீழ்மையை என்னுள் நிறைக்கிறாய்” என்றான். “நீ மெய்மையை அல்லவா தேடிவந்தாய்? மேன்மையை என ஏன் எண்ணிக்கொள்கிறாய்?” என்றான் முண்டன்.

பீமன் தலையை அசைத்தான். தன்னுள் ஒன்றுடன் ஒன்றென முட்டிச் செயலிழந்து நின்றிருந்த சொற்களை அசைத்து சிதறடிக்க விழைபவன்போல. என்னால் மட்டும் ஏன் எண்ணிக்கோத்து எதையும் அமைக்க முடியவில்லை? நான் மட்டும் ஏன் என் அகத்தை எய்து இலக்கடையச்செய்ய இயலாதவனாக இருக்கிறேன்? “அவர்களை எழச்செய்ய என்னால் முடியும்” என்றான் முண்டன். “வேண்டாம்” என்றான்

பீமன் தாழ்ந்த குரலில். “நீ அவர்களிடம் கேட்கலாம் உன் வினாக்களை. அவர்கள் அறிவார்கள்.” பீமன் தழுதழுக்க “வேண்டாம்” என்றான்.

“அது அவர்களின் சிலம்பொலி” என்றான் முண்டன். பீமன் எதையும் கேட்கவில்லை. “அணுகிவருவது. சிலம்புகளால் கால்களை சிரிக்கவைக்கிறார்கள் பெண்கள். அவர்கள் சிரிக்காதபோது அவை சிரிக்கின்றன.” பீமன் அறியாது செவிகூர்ந்தான். “ஏனென்றால் எண்ணியபோது சிரிக்க அவர்களை விடுவதில்லை இவ்வுலகு” என்றான் முண்டன். “சிலம்பை கேட்கத் தெரிந்தவன் பெண்ணின் அகச்சிரிப்பை கேட்கிறான்.” பீமனின் உடல் குளிர்கொள்வதுபோல விதிர்த்தது அவன் அச்சிலம்போசையை கேட்டான். அவன் நன்கறிந்திருந்த ஒலி அது.

அவன் கண்களை மூடிக்கொண்டான். அவன் முன் ஒருத்தி வந்து நிற்பதை உணரமுடிந்தது. சினத்துடன் முண்டன் “மூடா, திற உன் விழியை… உனக்கென்ன சித்தச்சிதைவா?” என்றான். உடல் மெய்ப்புகொண்டு கூசிநிற்க முழுப்புலன்தொகையும் முன்னால் கூர்த்துநிற்க பீமன் விழிமூடியே நின்றிருந்தான். “நோக்கு, நேர்விழி தொடு. கேள், உன் வினாக்களை…” என்றான் முண்டன். “அணுகுகையில் உருமாறுவதேன் என்று கேள். ஆட்கொண்டு உதிர்த்துச் செல்வதேன் என்று கேள்!” அவன் கைகள் நடுங்கிக்கொண்டே இருந்தன.

மீண்டுமொரு சிலம்பின் ஒலி. அதே அழுத்தமும் கார்வையும் கொண்டதென்றாலும் முற்றிலும் வேறுபட்ட நடை கொண்டது. “இருவரும் உன் முன் நின்றிருக்கிறார்கள்… நீ அறிவதற்குரியவை உன்னில் எழுக!” மீண்டும் ஒரு சிலம்படி. பின்னர் மீண்டும் ஒரு சிலம்பொலிச் சரடு. “கேள், இனி நீ அறிய

பிறிதொன்றுமில்லை!” பீமன் பெருமூச்சுவிட்டான். கண்கள் அசைந்து அசைந்து துடித்தன. அறியாது அவை திறந்துவிடக்கூடும் என்னும் எண்ணம் எழுந்ததும் முகத்தைச் சுருக்கி இமைகளை இறுக்கிக்கொண்டான்.

“கேள்” என்றான் முண்டன். “வெறும் நிலம்தானா என்று. விளையாட்டை அறிவார்களா என்று. கேள், எஞ்சுவது தாமே என்றறிந்தவர்களா? எங்குமிருப்பதனால் இல்லாமலாகக் கற்றிருக்கிறார்களா?” பீமன் அவனே உணராத ஒரு கணத்தில் எழுந்து திரும்பி பாய்ந்தோடினான். அவனுக்குப் பின்னால் நான்கு பெண்களின் சிரிப்பொலி கேட்டது. அவன் மூச்சிரைக்க உடல்பதைக்க ஓடும்தோறும் அச்சிரிப்பொலி அகலாது அவனுடன் வந்தது. அவன் மேலும் மேலும் உயிர்திரட்டி ஓடிக்கொண்டிருந்தான்.

அச்சிரிப்பொலி தேய்ந்தமைந்தபோது அவன் மண்ணில் விழுந்துவிட்டிருந்தான். சேற்றில் முகம் அமைத்து அசையாமல் கிடந்தான். அவன்மேல் கால்வைத்து கடந்துசெல்வதுபோல சிரிப்பொலிகள் செல்வதை உணர்ந்தான். சிலம்பின் சிரிப்பொலி. மூச்சு ஓய்ந்து உடல் குளிரத் தொடங்கியது. அலையோசைபோல தொலைவில் காற்று ஓடுவதை அவன் கேட்டான். தன் உடலுக்குள் அவ்வோசை எழுவதாகத் தோன்றியபின் அது செவிப்பெறுகைதான் எனத் தெளிந்தான். கையூன்றி எழுந்து அமர்ந்தான். மரங்கள் காற்றில் ஆடிக்கொண்டிருப்பதை கண்டான்.

எழுந்து ஒரு சிறிய மரத்தைப் பிடித்தபடி நின்று நிகர்நிலை மீண்டபின் நடக்கத் தொடங்கினான். அது மேற்குத்திசை என ஒளிச்சரிவு காட்டியது. அங்கே மலை வளைந்து ஏற சரிவெங்கும் தேவதாருக்கள் ஓங்கி எழுந்திருந்தன.

பறவைகளின் ஓசையை, சிறுபூச்சிகளின் ஒலிப்பெருக்கை கேட்கத் தொடங்கினான்.

# மாமலர் - 93

### 93. முதல்மணம்

திசை தெளிவானதுமே பீமன் இயல்பாக நடக்கத் தொடங்கினான். எச்சரிக்கையில் கூரடைந்த புலன்கள் தளர்வுற்றதும் பசி தெரியலாயிற்று. பசி உணவுக்கான புலன்களை எழுப்பியது. மூக்கும் விழிகளும் தேடல்கொள்ள சற்று தொலைவிலேயே அவன் கனிமரங்களை கண்டான். மரங்களுக்கு நடுவே வாழைமரத்தொகைகள் யானைக்கூட்டங்களின் கால்கள்போல நின்றிருக்க உள்ளே குட்டிகள் என சிறு கன்றுகள் செவியாட்டின. பெரிய காய்களுடன் வாழைக்குலைகள் மத்தகத்திலிருந்து துதிக்கை என வளைந்து நின்றன. அவன் வாழைகளை உதைத்துச் சரித்து கனிகளை உரித்துத் தின்றான். உண்ணும்தோறும் பசிபெருக மேலும் மேலும் வாழைகளை சரித்தான்.

பின்னர் எழுந்து நீர் எங்கு கிடைக்கும் என சுற்றும் நோக்கினான். நீரோசை கேட்டு நடந்துசென்று வாழைக்கூட்டங்களுக்கு அப்பால் ஓடிய சிறிய ஓடையை கண்டடைந்தான். அதை நோக்கி நடக்கையில் ஏன் தனக்கு மதுநினைவு எழுகிறது என எண்ணியபின்னரே தன் வயிற்றிலிருந்து எழுந்த பழங்களின் மணத்தால் என உணர்ந்தான். உண்ட பழங்கள் தன்னுள் மதுவாகின்றன என எண்ணியதும் புன்னகை எழுந்தது. அவற்றை உள்ளுறைந்த

வெப்பம் நொதிக்கச்செய்கிறது. மதுவை சமைத்து அதை உண்டு களிகொள்கிறது உடல்.

குனிந்து நீரை அள்ளி அருந்தியபோது உண்மையாகவே அவன் புதியமதுவின் நறுமணத்தை உணர்ந்தான். அவன் நா சுரந்து கடைவாய் வழியாக வழிந்தும் விட்டது. எழுந்து நின்று மூக்கைத்தூக்கி நான்குபக்கமும் காற்றை ஏற்று கூர்ந்தபோது அந்த மணம் வரும் திசையை அடையாளம் கண்டான். அங்கே எவரேனும் இருக்கக்கூடும் என்ற எண்ணம் எழுந்தது. ஆகவே கால்களை மிகமெல்ல எடுத்துவைத்து பாறைகள் மேல் மட்டும் மிதித்து கிளைகள் அசையாமல் நடந்து சென்றான். ஆனால் ஓசைகள் ஏதும் எழவில்லை. மணம் மட்டும் மிகுந்தபடியே வந்தது.

அங்கே யானைக்கூட்டம் ஒன்று உடலொட்டிப் படுத்திருப்பதுபோல பாறைத்தொகை ஒன்றிருந்தது. மதுவின் மணம் அதன்மேல்தான் எழுகிறது என உணர்ந்தபின் அவன் மேலே தொற்றி ஏறினான். பாறைமேல் ஏறியபோது அங்கே உருட்டி கொண்டுசென்று வைத்ததுபோல முட்டைவடிவமான பெரிய பாறை ஒன்று மற்றபாறைகள் மேல் அமைந்திருக்கக் கண்டான். அதன் மேலிருந்தே மதுவின் மணம் எழுகிறது என அறிந்தான். அதை சுற்றிவந்து நோக்கியபோது எவராலும் ஏறமுடியாதபடி அது மிகச்செங்குத்தாக இருப்பது தெரிந்தது. அதன் வளைந்த பரப்பு நீர்வழிந்த தடங்களுடன் மென்மையாக இருந்தது.

அவன் அதை சுற்றி வந்தான். மேலே பாறையின் விளிம்பில் ஒரு சிறிய வெடிப்பு இருப்பதைக் கண்டதும் ஓர் எண்ணம் தோன்றி கீழே சென்று காட்டுக்கொடிகளைப் பறித்து இணைத்துக்கட்டி வடம் ஒன்றை செய்தான். நீண்ட கல்

ஒன்றை அதன் முனையில் கட்டி எடுத்துக்கொண்டு மேலே வந்து அதை அந்த வெடிப்பை நோக்கி வீசினான். அது நான்கு ஆள் உயரத்திலிருந்தமையால் பன்னிரண்டுமுறை வீசியபின்னரே அந்த வெடிப்பில் அமர்ந்தது. இழுத்து நோக்கியபோது கல் வெடிப்பினுள் நன்றாக இறுகிக்கொண்டதை உணரமுடிந்தது. வடத்தின் வழியாகத் தொற்றி மேலேறத் தொடங்கினான்.

பாறைவிளிம்பில் தொற்றி மேலேறி அமர்ந்து நோக்கினான். இயற்கையாக உருவான நீள்வட்டக்குழி ஒன்று அங்கே இருந்தது. அதற்குள் கலங்கலாக அழுகிய வாழைப்பழங்கள் நொதித்துக்கொண்டிருந்தன. அவற்றின் கெடுமணம் குமட்டி உடலை உலுக்கியது. அவன் அப்பாறையை அணுகிக்கொண்டிருக்கையிலேயே மதுவின் இன்மணம் வலுத்து செறிந்து கெடுமணமாக ஆகிக்கொண்டிருந்தது. அருகே குனிந்தபோது அழுகிய சடலமென அதன் கெடுமணம் குடல்களைப் புரட்டியது. கண்களை மூடி அந்தக் கெடுமணத்தை தன் உடலெங்கும் நிறைத்தான். அறிந்த கெடுமணங்கள் அனைத்தும் அதனுடன் தொடர்புகொண்டிருந்தன. நறுமணங்கள் மென்மையாகவும் கெடுமணங்கள் வன்மையாகவும் இருப்பது ஏன்? வன்மையாகும் அனைத்தும் கெடுமணங்களாக ஆகிவிடுமா என்ன? கெடுமணங்களெல்லாம் வாயூறவைப்பது என்ன விந்தை?

ஒரு கணத்தில் தன்னை கிழித்துப் பிரித்து முன்னால் உடலை உந்திக்குனிந்து அதன் மேல்பரப்பில் கனிந்து நின்றிருந்த கொழுங்கதுப்பை கைகளால் அள்ளிக் குடித்தான். வாய் குமட்ட உடல் உலுக்கியது. ஒருகணம் உதடுகளை இறுக மூடி அந்தத் தைலம் உடலுக்குள் நிலைக்க விட்டான். அதை உள்ளே

எழுந்த வாய்கள் வாங்கிக்கொண்டன. அடுத்த கை அள்ளி குடித்தபோது எளிதாக இருந்தது. பின்னர் நிறுத்தமுடியவில்லை. மீண்டும் மீண்டும் குடித்துக்கொண்டிருந்தான். அது உள்ளே உருகி அனலாகி குருதிப்பாதைகளில் ஊறிப்படர்ந்து கைவிரல் நுனிகளையும் காதுவிளிம்புகளையும் மூக்குமுனையையும் சென்றடைந்தது. கண்களில் வெம்மையாகப் பரவியது.

தசைகள் களிமண்பாவை நீரில் ஊறுவதுபோல தளரத் தொடங்கின. நாக்கு இரையுண்ட பாம்பென தடித்துத் தளர்ந்தது. தன் விரல்கள் ஒவ்வொன்றும் விடுபட்டு விலகுவதை உணர்ந்தான். அங்கிருந்து இறங்கமுயல்வது வீண்முயற்சி எனத் தோன்றியது. அக்குழியில் இருந்து கைகளை ஊன்றி உடலைப் பெயர்த்தெடுத்து விலக்கி மல்லாந்து படுத்துக்கொண்டான். கைகளையும் கால்களையும் விரித்து வானை நோக்கினான். வானை நோக்கி நெடுங்காலமாயிற்று என்று தோன்றியது. கண்கள் கலங்கி வழிந்துகொண்டே இருந்தன.

அவன் துயின்றுவிட்டிருந்தான் என கனவுகள் கிளம்பியபோதுதான் அறிந்தான். அவனைச்சூழ்ந்து நால்வர் அமர்ந்திருந்தார்கள். அந்திச்சாயொளியில் நால்வரின் நிழல்களும் பின்பக்கம் நீண்டு விழுந்திருந்தன. அல்லது புலரியா? பறவையொலிகள் எழவில்லை. நெடுந்தொலைவுக்கு அப்பால் ஏதோ அருவி ஒன்று பொழிந்துகொண்டிருந்தது. மலையுச்சியில் இருந்து நேராக அடியிலி நோக்கி. அதன் ஓசை சூழ்ந்திருந்த இலைகளில் இருந்து மட்டும் எழுந்தது. அவர்கள் ஒன்றும் பேசாமல் விழிகள் சூழ அமர்ந்திருந்தனர். அவன் இறந்துவிட்டிருந்தான் என எண்ணினார்களா? நான்கு

நிழல்களும் மெல்ல எழுந்தாடிக்கொண்டிருந்தன. அவர்களின் உருவங்களிலிருந்து பிரிந்து வானில் பறக்க விழைபவை போல. அல்லது அவர்களையும் கவ்விக்கொண்டு எழமுனைபவை போல.

அவன் எழுந்தமர்ந்தான். எதிரே அமர்ந்திருந்தவளின் விழிகளை நோக்கி “நீ யார் என அறிவேன்” என்றான். “ஆம், நானும் உன்னை பார்த்திருக்கிறேன். நீங்கள் ஒருவர் பிறரென நடிப்பவர்கள். எனவே ஒருவர் விழியில் பிறர் தோன்றுவதுண்டு” என்றாள் அவள். “கலைமகள் என நின்று சொல்லாடுவாய். மழலையென விலகி அதையே களியாடுவாய். அறிந்தவள் என்றும் பேதையென்றும் இருமுகம் காட்டி நிழலாடுவாய்” என்றான் பீமன். அவள் சிரித்து “ஆம், காமத்தில் ஆடலெல்லாம் எதிராடலே” என்றாள். “சொல்விழையும்போது பேதமையையும் பேதமையை நாடுகையில் சொல்கூரையும் காட்டி நீ அலைக்கழிப்பதன் வலியையும் நான் அறிவேன்” என்றான் பீமன். அவள் சிரிக்க அவளுக்குமேல் எழுந்த நிழல் “அது என் களம்” என்றது.

அருகிருந்தவள் அவனிடம் “நான் உன்னுடனும் களமாடியுள்ளேன்” என்றாள். “நீ விழைந்தது கூர். வஞ்சமொன்றே கூரின் கூர் என்பதனால் நான் நஞ்சுகொண்டேன்.” பீமன் “ஆம், நஞ்சனைத்தும் மதுவே” என்றான். “கூர்முனைகளில் அனல் வாழ்கிறது. மின்னல் வானின் கூர்” என்றாள் அவள். “உன்னை ஒழியாது பற்றிக்கொள்ள உன்னில் அழியா வெறுப்பொன்றை நட்டுவைப்பதே மேல் என அறிந்தேன்.” பீமன் “ஆம், நான் கட்டுவிரியன் தீண்ட தப்பியோடும் சிற்றெலி” என்றான்.

அவள் விழிகள் ஒளிர புன்னகை சூடி "உன் ஆணவத்துடன் ஆடினேன். உனக்கு அப்பால் ஒருவன் இருக்கிறான் என ஒவ்வொரு சொல்லிடையாலும் விழியசைவாலும் காட்டிக்கொண்டே இருந்தேன்" என்றாள். பீமன் தவிப்புடன் "போதும்" என்றான். அவள் நிழல் "நான் அவனுடன் ஆடுபவள். உன் மஞ்சத்திற்குமேல் எழுந்து நின்று வெறியாடுவேன்" என்றது. பீமன் தன்னை உலுக்கிக்கொண்டு அக்கனவிலிருந்து எழ முயன்றான். "உன்னுள் புகுந்தும் அவன் ஆடினான் என்பதை அறிவாயா?" பீமன் உறுமியபடி எழுந்தான்.

அவன் மார்பில் கையை வைத்து அழுத்தி படுக்கவைத்த மூன்றாமவள் இளமைநகைப்புடன் "நான் வெறும் சிறுமி. முதுவேனிலின் முதல்தளிர் என மழலை சூடியவள்" என்றாள். "ஆம், நீ என் களித்தோழி. நான் கழற்றவிழைந்த அனைத்தையும் சூடாதவள்" என்றான் பீமன். "மென்மை என்பதனால் ஒளிகொண்டது. நிலையற்றதென்பதனால் கை படாதது. எளியவைபோல் அலைக்கழிப்பவை பிறிதெவை?" அவள் நகைத்து சற்றே நாண அவளுக்குமேல் எழுந்த நிழல் வற்றி ஒடுங்கிய முதுமகள் போலிருந்தது. முறியும் கிளையின் ஒலி என வலியும் துயருமாக மெல்ல முனகியது.

நான்காவது பெண் அவனை நோக்கி புன்னகைத்து "நான் அன்னை" என்றாள். "அமுதுமணத்துடன் அணைத்துக்கொள்பவள்." பீமன் "ஆம், உன் கைகளில் நான் உறங்கியிருக்கிறேன்" என்றான். "என்றுமிருந்தன என் விழிகள் உன்னோடு. நான் உன்னை ஒருபோதும் விலக்கியதில்லை" என்றாள். அவள்மேல் எழுந்த நிழல் எட்டுபெருங்கைகள் விரிய வாயில் கடித்த சிறுமகவுடன் கொலைக்காளி என நின்றாடி பின் அடங்கி கிளைவிரித்த தாய்மரம் போலாகியது.

அவன் திடுக்கிட்டு விழித்துக்கொண்டான். தொலைவில் நின்றிருந்த மரம் ஒன்றின் கிளைநிழல் அவனைச்சூழ்ந்து ஆடிக்கொண்டிருந்தது. நோக்குணர்வு பெற்று எழுந்தபோது தன்னைப் பார்த்தபடி அமர்ந்திருந்த பெரிய பெண்குரங்கை கண்டான். கையூன்றி எழுந்தான். "அஞ்சாதே" என்று அது சொன்னது. "நான் என் மைந்தருக்காக அமைத்த மதுக்களம் இது." பீமன் வாயைத் துடைத்தபடி "ஆம், எனக்கு மிக உகந்த மது இதுவே என உணர்ந்தேன்" என்றான். "நீயும் மரமானுடரில் ஒருவனே" என்றது அன்னைக்குரங்கு. "உன் வியர்வையில் உன் அன்னையின் முலைப்பாலின் மணம் உள்ளது."

"ஆம், நான் என்றும் என்னை அவ்வாறே உணர்ந்திருக்கிறேன்" என்றான் பீமன். "அன்னை என நான் உணர்வது அந்த முலைப்பாலையே என அறிவது கனவுகளில்தான்." அன்னைக்குரங்கு அவனருகே வந்து எழுந்து அவன் தலைமுடியைப் பற்றி குனித்து குழல்கற்றைகளைப் பிரித்து கைகளால் அளாவியது. காதுகளைப்பற்றி மேலே தூக்கி அவன் கண்களை நோக்கி "நீ மிகப்பெரியவன்" என்றது. "ஆம் அன்னையே, ஆகவேதான் என்னால் என் குருதியினரைப்போல மரம்தாவ இயலவில்லை" என்றான் பீமன்.

அன்னை அவன் உடலை வருடிக்கொண்டே இருந்தாள். அவள் எழுந்துநின்றபோது மென்மயிர் படர்ந்த நெஞ்சில் முலைக்கண்கள் தெரிந்தன. "நான் முற்றிலும் உதறி வந்துவிடுகிறேன். எதுவும் எஞ்சாமல் இங்கே இருந்துகொள்கிறேன்" என்றான். "உன்னால் வேறு மொழி பேசமுடிகிறது. வேறு கனவுகளை நீ காண்கிறாய்" என்றாள் அன்னை. "ஆம்" என அவன் சொன்னான். "அவற்றை உதறமுடியாது. அவை உதிரவேண்டும்." பீமன் "அது நிகழுமா?"

என்றான். “நிகழக்கூடும்” என்றாள். பீமன் “வாழ்த்துக, அன்னையே!” என்றான்.

“உனக்கும் அமைக!” என்றாள் அன்னை. “உன் மூத்தவனுக்கு நிகழ்ந்துள்ளது. அவன் ராகவ ராமனுக்காக கடல்தாவினான். அவன் அரியணை தாங்கி அமர்ந்தான். தன் கடன் முடிந்ததும் திரும்பி தன் உலகுக்கு வந்தான். நேற்றின்றி இருந்தான். காற்றென காடுலாவ அவனால் இயன்றது.” பீமன் பெருமூச்சுவிட்டான். காட்டுக்குள் குரங்கு ஒன்றின் ஓசை கேட்டது. இருகுட்டிகள் கிளைகளில் ஆடி ஒற்றைக்கையில் தொங்கி வால் முறுகி வளைய அன்னையை நோக்கி அழைத்தன.

அன்னை தாவி எழுந்து செங்குத்தான பாறையை வெறுங்கைகளால் பற்றி நீர்த்துளியென இறங்கிச்சென்று தாவி அவர்களுடன் சேர்ந்துகொண்டது. அவை கிளைகளுக்குள் மறைந்தன. பீமன் அப்போது அந்த மணத்தை உணர்ந்தான். கல்யாணசௌகந்திகத்தின் மணம். அவள் முலைப்பாலின் மணமா அது? பாய்ந்து எழுந்து “அன்னையே!” என்று கூவி அழைத்தான். ஓடிச்சென்று தன் வடத்தை பற்றிக்கொண்டு கீழிறங்கி பாறையிலிருந்து காட்டுக்குள் தாவி கிளைகளையும் புதர்களையும் ஊடுருவி ஓடினான். “அன்னையே... அன்னையே...” என்று கூவினான். கிளைகளில் அக்குரங்குகள் சென்ற பாதை அசைவென தெரிந்தது. செல்லும்தோறும் குரங்குகள் பெருகின எனத் தோன்றியது.

காட்டை வகுந்துசென்ற யானைத்தடம் வழியாக மூக்குணர்வாலேயே வழிகாட்டப்பட்டு அவன் சென்றான். மேலும் நுண்மையும் கூர்மையும் கொண்டு அணுக்கத்திலிருந்தது அந்த மணம். இதோ, அருகே என அதுவே

அவனை அழைத்துச்சென்றது. செல்லும்தோறும் விரைவுகொண்டான். மேலும் மேலும் என்று உள்ளம் தூண்டியது. கால்களில் பட்டு கூழாங்கற்கள் தெறித்தன. தொலைவிலேயே வழியில் ஒரு பட்டமரக்கிளை குறுக்கே விழுந்துகிடப்பதை கண்டான். அருகணைந்தபோதுதான் அது ஒரு குரங்கு எனத்தெரிந்தது.

மரத்திலிருந்து விழுந்திருக்கவேண்டும். முதுமை எய்தி உடம்பெங்கும் முடி உதிர்ந்து பொருக்கும் குருதியும் சீழுமாக புண்கள் செறிந்து அரைக்கண் மூடி ஒருக்களித்துக் கிடந்தது. அதனருகே சென்றபோதுதான் அது மானுடன் அளவுக்கே பெரியதென்று தெரிந்தது. நீட்டிய கைகளில் ஒன்று பாதையின் ஒருமுனையைத் தொட வால்முனை இன்னொரு முனையை எட்டியிருந்தது. கால்தூக்கி கடந்து சென்றுவிடலாமென்று எண்ணியதுமே எரிச்சல் எழ காலால் தரையை மிதித்து அதிர்வெழுப்பினான். அதன் தாழ்ந்த இமைகள் விரிசலிட்டன. மயக்கம் நிறைந்த விழிகளுடன் கரிய சிறுபல்நிரை காட்டி மெல்ல உறுமியது. “எழுந்து விலகும், முதியவரே” என்றான் பீமன். “இது யானைப்பாதை. மிதிபட்டு கூழாகிவிடுவீர்.”

“எழமுடிந்தால் நான் இங்கு கிடப்பேனா என்ன?” என்றது குரங்கு. “கிளையிலிருந்து பிடிதவறி நான்குநாட்களாகின்றன. உணவும்நீருமின்றி உயிர்பிரியக் காத்திருக்கிறேன். எனக்கென்றே நீ வந்திருக்கக் கூடும். என்னை இழுத்து அப்பாலிடு.” பீமன் அதன் உடலில் இருந்த புண்களைப்பார்த்தபின் சுற்றுமுற்றும் நோக்கி அப்பால் கிடந்த மரத்தடி ஒன்றை எடுத்துவந்தான். குரங்கு பற்கள் விரிய உறுமி பிடரி சிலிர்த்தது. அவன் முதலில் இடக்கையில் இருந்த தடியால் அதை மெல்ல அசைத்தான். அதில் சிறிய

அசைவுகூட ஏற்படவில்லை என்று கண்டதும் அழுத்தி உந்தினான். பாறை என்று தோள்கள் உணர்ந்தன.

அவ்விந்தையை முழுதுணராமல் அச்செயலின் ஒழுக்கால் இழுக்கப்பட்டவனாக இருகைகளாலும் முழுவிசையையும் செலுத்தி அதை தள்ளினான். தடி முறிந்து நிலைதடுமாறி விழப்போய் காலூன்றி நின்றான். அதன்பின்னர்தான் அதன் விந்தை அவனை முழுமையாக வந்தடைந்தது. “யார் நீ?” என்றான். “குரங்கு...” என்றது அது. “என்னை மாருதன் என்பார்கள். என் உடலின் எடையே எனக்கும் பெருந்துயராக உள்ளது. சரி என் வாலையாவது விலக்கு. யானைகள் அவ்வழியாக செல்லட்டும்.” பீமன் தயங்கி நின்றான். “எடுத்து அகற்றுக, இளையோனே! நீ மாமல்லன் அல்லவா?”

அதிலிருந்த இளிவரலால் சீண்டப்பட்டு அவன் அருகே சென்று குனிந்து அந்த வாலை இருகைகளாலும் பற்றி பெருமரத்தடி என எண்ணி விசைசெலுத்தி தூக்க முயன்றான். மெல்ல அசைந்து மேலெழுந்தபின் திரும்ப அழுந்தி அவன் கையை நிலத்துடன் பிடித்துக்கொண்டது. அவன் நிலத்தில் காலை ஊன்றி முழு ஆற்றலுடன் இழுத்தான். தசைகள் இழுபட்டுத் தெறிக்க பற்கள் உரசி அனலெழ இழுத்து விடுபட்டு ஓசையுடன் மண்ணில் மல்லாந்து விழுந்தான். கையூன்றி புரண்டு எழுந்து “யார் நீ? சொல்! யார் நீ? கந்தர்வனா? பாதாள மாநாகமா?” என்று கூவினான்.

“ஏன், இளையபாண்டவனை மானுடர் வெல்லமுடியாதோ? எளிய விலங்கால் இயலாதோ?” என்றது குரங்கு. “என்னை நீ அறிந்திருக்கிறாய்” என்றான் பீமன். “நான் காற்றுபோல அலைந்தவன்... உன்னை இளவயதிலேயே கண்டிருக்கிறேன். நீ கூடு உடைத்து வெளிவந்த புழு போன்ற சிற்றுடலுடன்

பாலுக்கழுதபடி நிலத்தில் கிடந்து நெளிந்தபோதே...” பீமன் “நீ யார்?” என்றான். “சரி, என் முடியில் ஒன்றை மட்டும் பிழுதெடு... நீ வென்றாய் என ஒப்புகிறேன்.” பீமன் வெறிக்கூச்சலுடன் பாய்ந்து சென்று அக்குரங்கை உதைக்கத் தொடங்கினான். பாறையிலென விழுந்து அவன் கால் தெறித்தது. வலியுடன் ஊன்றி மூச்சிரைத்து நின்றான்.

குரங்கின் கண்களில் மெல்லிய சிரிப்பு மின்னியது. அது துள்ளி எழுந்து நின்று நெஞ்சில் இருகைகளாலும் மாறிமாறி நெஞ்சில் அறைந்துகொண்டு நீண்ட ஒலியொன்றை எழுப்பியது. பற்களனைத்தும் தெரிய இளித்தபடி இரு கைகளையும் விரித்தது. அதன் முகம் சிவந்திருக்க கன்னமயிர்க்கற்றைகள் சிலிர்த்து நீண்டிருந்தன. “நீ அஞ்சி திரும்பி ஓடுவாய் என்றால் உன்னை துரத்திவரும் இன்பத்தை அடைவேன்” என்றது. “நான் இதுவரை அஞ்சியதில்லை” என்றான் பீமன். “இறப்புக்கு அஞ்சாமலிருக்கலாம். இழிவுக்கு?” என்றபின் இருகைகளாலும் விலாவைச் சொறிந்தபடி இளித்துக்கொண்டு எம்பி எம்பி குதித்தது குரங்கு.

பிளிறலோசையுடன் பீமன் பாய்ந்து சென்று அதை ஓங்கி அறைந்தான். அடி அதன்மேல் பட்டபோது அவன் கை தெறித்தது. மரப்பட்டை போலிருந்தது அதன் உடல். ஊளையிட்டபடி அது குதித்து அவனை அறைந்தது. அவன் யானையால் முட்டப்பட்டதுபோல தெறித்துவிழுந்தான். பாய்ந்து வந்து அவன்மேல் கவிந்து அவன் உருண்டு தப்ப முயல்வதற்குள் தூக்கி வீசியது. விழுந்த இடத்திலிருந்து அவன் எழுவதற்குள் மீண்டும் தூக்கி வீசியது. சிறுபூனைக்குட்டியை என அவனைத் தூக்கி வீசியும் காலால் தட்டிச் சுழற்றியும் விளையாடியது. அவன்

கைகளைப்பற்றியபடி மரங்கள் மேல் தாவி ஏறி பாய்ந்து சென்றது. அவனை தூக்கி வீசிவிட்டு அவன் அசைவதற்காக குந்தி காத்திருந்தது. அவன் மெல்ல எழமுயன்றதும் ஓடிவந்து மீண்டும் எடுத்துக்கொண்டது.

உடலெங்கும் சிராய்ப்புகளுடன் பீமன் கைகளை விரித்து மல்லாந்து படுத்தான். கண்களை மூடிக்கொண்டு தன் உள்ளத்தை அடக்கி உள்ளுக்குள் உள்ளுக்குள் என மடித்து சுருட்டிக்கொண்டான். குரங்கு அவனை அணுகி வருவதை அவன் கேட்டான். அதன் நிழல் அவன்மேல் கவிவதை இமைகள் அறிவித்தன. "கொல்... கொன்றுவிடுக என்னை!" என்றான். "மாமல்லரே..." என முண்டனின் குரல் கேட்டது. அவன் திடுக்கிட்டு விழிதிறந்தான். "என்ன சொல்கிறீர்?" அவன் எழுந்து அமர்ந்தான். "நீரா? நீர் எப்போது வந்தீர்?"

முண்டன் பெரிய பற்களைக்காட்டிச் சிரித்து இருகைகளாலும் விலாவை சொறிந்தான். ரீக் என்னும் ஒலியுடன் நின்ற இடத்திலேயே எழுந்து சுழன்று நின்றான். "நீர்தானா?" என்றான் பீமன். "நான் அப்போதே ஐயம்கொண்டிருந்தேன்." முண்டன் அவன் அருகே குந்தி அமர்ந்து "ஆம் நானேதான்" என்றான். "உமது உளமயக்கா அவையனைத்தும்? நான் தோற்றது பருவுலகில் அல்லவா?" என்றான் பீமன். முண்டன் சிரித்து "நீ தோற்கவில்லை, இளையோனே" என்றான். பீமன் அந்த மாறிய குரலைக் கேட்டு திகைத்து அவன் விழிகளை நோக்கினான். ஒருகணத்தில் அவன் அனைத்தையும் கண்டுவிட்டான்.

மலைப்பாறை ஒன்றின் மேல் இருவரும் அமர்ந்திருந்தார்கள். எரிந்தணைந்துகொண்டிருந்தது மாலைச்சூரியன். முண்டனின் முகம் அனல்கொண்டிருந்தது. அவனருகே அமர்ந்து திரும்பி நோக்கிய பீமன் உடல்கொள்ளா உளஎழுச்சிக்கு ஆளானான்.

“வாழ்வில் நான் இனியெதையும் அடையவேண்டியதில்லை, மூத்தவரே” என்றான். அவன் குரல் உடைந்து தழுதழுத்தது. “எத்தனை கதைகளில் கேட்டிருக்கிறேன்! எத்தனை கனவுகளில் விளையாடியிருக்கிறேன்!” கட்டுகள் கடந்து அவன் விம்மிவிட்டான். தன்னை இறுக்கி தலைகுனிந்து அதை அடக்கினான். விழிநீர் அவன் மடியில் சிந்தியது.

“என்னுடன் இருந்திருக்கிறீர்கள். வழிகாட்டியாக, ஆசிரியனாக, களித்தோழனாக. நான் உளம்நிறைந்து கால்தொட்டு வணங்கவில்லை இன்னும். அப்பேறை மட்டும் எனக்களியுங்கள்.” முண்டன் “நீ என்றும் எனக்கு இனியன்... எண்ணும்போதெல்லாம் உன்னருகே வந்து நோக்கியிருந்திருக்கிறேன். சிற்றுடல்கொண்டு உன்னுடன் விளையாடியிருக்கிறேன்” என்றான். “இது நீ உன்னை கண்டுகொள்ளும் பயணம். இங்கு நீ உன்னை தேர்ந்தெடுக்கிறாய். எஞ்சுவதென்ன என்று அறிகிறாய். எனவே உடனிருக்கவேண்டுமென்று முடிவெடுத்தேன்.”

பீமன் மெல்ல தலைதாழ்த்தினான். “உன் உடல் ஆண்மைகொண்டது. உள்ளம் எளிய காமத்தால் ஆனது, இளையோனே” என்றான் முண்டன். “நீ இதுவரை வென்றவை அனைத்தும் நீ கடக்கவேண்டியவையால் வெல்லப்பட்டவை. ஆகவேதான் உன்னை முற்றாகத் தோற்கடிக்க விழைந்தேன். உன்னைவிட நான் ஆற்றல்கொண்டவன் ஆவது நான் துறந்தவற்றால்தான். நீ உன்னைக் கடந்து அடையவேண்டிய ஆற்றல்களை சந்திக்கும் தருணத்தில் இருக்கிறாய்.”

தொலைவில் மலைச்சரிவில் ஏறிச்சென்ற யானைப்பாதையைக் காட்டி முண்டன் சொன்னான் “அது மேலிருக்கும் கதலிவனம் என்னும் காட்டை சென்றடைகிறது. தேன்வாழைகள் மண்டிய

அக்குளிர்காட்டின் மையத்திலுள்ளது சிற்றாலயம் ஒன்று. அதன் வலப்பக்கத்தில் நின்றிருக்கிறது உனது கல்யாணசௌகந்திகம்." பீமன் உளக்கிளர்ச்சியுடன் எழப்போவதுபோன்ற மெல்லிய அசைவொன்றை காட்டினான். "உன்முன் மூன்று வழிகள் உள்ளன. அதைச் சென்றடைந்து அங்கிருந்து திரும்பாமல் அந்தமலருடன் மேலும் செல்லலாம். நீ சென்றடைவதற்கு நீ எழுந்துவந்த வேர்நிலம் காத்திருக்கிறது" என்றான் முண்டன்.

"ஆனால் அது எளிதல்ல. மெய்மையும் பேரின்பமும் பலநூறு மயக்குகளால் சூழப்பட்டவை. நீ அறியா விசைகளால் அலைக்கழிக்கப்படலாம். அங்கே நீ திசையழிந்து சரியக்கூடும். இளையோன் என்பதனால் நீ அதை முற்றிலும் மறந்து இங்கிருந்தே திரும்பிவிடவேண்டும் என்றே சொல்வேன்" என்றான் முண்டன். பீமன் தலையசைத்தான். "மூன்றாவது வழியையே நீ எண்ணிவந்தாய். அந்த மலருடன் நீ திரும்பி இறங்கி வந்தால் இங்கு வந்தவழியை முழுக்க திரும்பக் கடப்பாய். ஒவ்வொரு காலடியிலும் அந்த மலர் தன் மெய்மணத்தை இழந்துகொண்டிருக்கும். நீ அங்கே கொண்டுசென்று அவளிடம் கொடுப்பது பிறிதொரு மணமாகவே இருக்கும்."

"இளையோனே, இது வானத்து மாமலர். இது மண்ணில் விரியாது, இதன் மணம் ஊன்புலனால் உணரவும்படாது. உன் உள்ளத்தில் என்றும் இந்தமலர் தன் இறைமணத்துடன் மலர்ந்திருக்கும். பருவுலகால் ஆன சொற்களால் அதை எவருக்கும் சொல்ல முடியாது. உடலென வெளிப்பட்டாகவேண்டிய மானுடக்காமத்தால் அதை உணர்த்திவிடவும் இயலாது" என்றான் முண்டன். "நீ உளம்சூடிய

மலர் எவராலும் அறியப்படாது வாடுவதன் பெருந்துயரையே நீ அங்கு அடைவாய். ஆகவே நீ எண்ணி வந்ததை ஒழிக!”

பீமன் கைகளைக் கூப்பியபடி தலைகுனிந்து அதைக் கேட்டு அமர்ந்திருந்தான். முண்டன் சொல்லி நிறுத்தியபின்னர் காற்றோசை ஒலிக்கும் அமைதி நிலவியது. “நீ கண்டவை அனைத்தையும் கருதுக! அது பெரும்பகடை” என்று முண்டன் அவன் செவிகள் மட்டுமே கேட்கும் குரலில் சொன்னான். “விழைவும் பித்துமே சந்திரன் என்றாகியது. அக்குலத்தவன் நீ. உன் முன்னோர் அக்களத்தில் அறியாத கைகளால் புரட்டப்பட்டார்கள். காமத்தின் நூறுமுகங்கள். அத்தனை முகங்களும் ஒன்றின் புரள்வே. இளையோனே, சந்திரன் முதல் உன் தந்தை பாண்டுவரை எவரும் எதையும் அடையவில்லை என்று அறிக!”

முண்டன் தன் வலக்கையை பீமனின் வலத்தோளின்மேல் வைத்தான். அதன் எடையால் பீமன் தோள் சரிய வலக்கையை ஊன்றிக்கொண்டான். “நீ என் மைந்தன் அல்லவா? விலகுக! இங்கிருந்தே திரும்பிச்செல்க! உன் தமையனுக்கு நீ அளித்த சொல் உன்னை கட்டியிருக்கிறது. உன் செயல்வெளி அங்கு காத்திருக்கிறது. ஆற்றுக, அறுத்து விடுபடுக! நீ எழுந்துவரும் இடத்தில் விரிந்த கைகளுடன் நான் உனக்காகக் காத்திருப்பேன்.” பீமனை பெருங்கரம் அள்ளி தன் தோளுடன் சாய்த்துக்கொண்டது. “இத்தருணத்தில் உன் மெய்தொடல் என தித்திப்பது அவன் பெயர் ஒன்றுதான், குழந்தை” என்றது அவன் குரல்.

# மாமலர் - 94

## 94. இறுதிமலர்

பீமன் தன் எண்ணங்களை ஒருங்கமைக்க முயன்றான். எண்ணங்களை நினைவுகள் ஊடறுத்தன. கலையக் கலைய தன்னை திரட்டிக்கொண்டு முன்சென்ற எண்ணங்கள் மேல் நினைவுகள் தொற்றிக்கொண்டன. அச்செயலை அறிந்தபோது அவற்றை அறியும் ஒரு சித்தம் பிரிந்து நின்றது. வெறும்நினைவுகள் என எவையேனும் உண்டா? வெறும் எண்ண ஓட்டமென்பது எவருக்கேனும் நிகழ்வதுண்டா? முகங்களின் குரல்களின் பெருக்கென சென்றுகொண்டே இருந்தது சித்தம். இதைக் கொண்டா கருத்துக்களை உருவாக்கிக் கொள்கிறார்கள்? இதனூடாகவா உறுதியான முடிவுகளை சென்றடைகிறார்கள்?

அறுத்து வெளிவந்தபோது அவன் உடல் சற்று அசைந்தது. நான் எண்ணித்தேரவோ சூழ்ந்து முடிவுகாணவோ உகந்த உள்ளம் கொண்டவன் அல்ல. அக்கணத்திலெழும் உணர்வுகளே என்னை நடத்தட்டும். அதன்பொருட்டு அழிவதென்றால் அவ்வண்ணமே ஆகட்டும். என்னை அவ்வண்ணம் படைத்த தெய்வங்கள் அதன் பொறுப்பை ஏற்கட்டும். அவன் அசைவால் முண்டன் கலைந்து திரும்பி நோக்கினான்.

“மூத்தவரே, காமவிலக்கு நோன்பு கொண்ட தாங்கள் எப்படி இந்த மாமலர்ப் பயணத்தில் வழிகாட்டியானீர்கள் என்றுதான் எண்ணிக்கொள்கிறேன்” என்றான் பீமன். இயல்பான தொடக்கமாக சொல்லவிழைவதற்கு முந்தைய வரி அமைந்துவிட்டதை எண்ணி அவன் உளம் மலர்ந்தபோது அனைத்தும் தெளிவுகொண்டன. “வழிகாட்டவில்லை, குறுக்கே விழுந்து வழிமறிக்கிறேன்” என்றான் முண்டன். “உன்னை திருப்பி அனுப்புவதே என் நோக்கம். இந்த அறியா மணம்

அலைக்கழித்து அழித்த உன் முன்னோர்களின் வாழ்க்கையினூடாக இங்கு கொண்டுவந்தேன். அந்த மணம் உண்மையில் என்ன என்று உன்னை உணரச்செய்தேன். இளையவனே, அது துன்பமன்றி வேறல்ல."

பீமன் "ஆம், அதை நானும் முற்றுணர்ந்திருக்கிறேன் இப்போது" என்றான். "ஆனால் என் உள்ளம் அங்கே சென்று அந்த மலரை அடையும்படி சொல்கிறது. அடைந்தபின் அப்போது என்ன தோன்றுகிறதோ அதைச் செய்யவே எண்ணுகிறேன். என்னை வாழ்த்துங்கள்!" முண்டன் சினத்துடன் "மூடா, நான் சொன்னவை உன் சித்தத்தில் படியவில்லையா என்ன? பெருந்துயர் உறுவாய். தணியா விழைவையும், அழியா வஞ்சத்தையும், மாற்றிலா தனிமையையும், எஞ்சும் வெறுமையையும் அன்றி எதையும் காமத்தால் அளிக்கவியலாது" என்றான்.

"அதற்கு மாற்று சொல்ல என்னிடம் ஒரு சொல்லும் இல்லை, மூத்தவரே" என்றான் பீமன். "ஆனால் செல்க என்றே என் உள்ளம் சொல்கிறது." முண்டன் தரையை தன் கையால் ஓங்கி அறைந்தான். பீமனின் உடல் அதிர்ந்தது. "அறிவிலி... நீ வெற்றுணர்வுகளால் அலைக்கழிக்கப்படும் சிறுதுரும்பு. சொல்வதை கேள்! இதைவிட பிறிதொரு நற்சொல் உனக்கு எவரும் சொல்லப்போவதில்லை." பீமன் "ஆம், இத்தருணத்தில் என் தெய்வமும் மூதாதையரும் நீங்களே. ஆயினும் என் உள்ளம் மாற்று சொல்லவில்லை" என்றான். தன் மார்பை ஓங்கி அறைந்து வெடிப்பொலி எழ முண்டன் உறுமினான். சினம் கொள்கையில் அவன் உடல் கனல்கொண்டு தலைமயிர் தழல்போலத் தெரிந்தது.

கைகளைக் கூப்பி நிலையமைந்த விழிகளுடன் பீமன் சொன்னான் "மூத்தவரே, என் உள்ளம் அமைந்திருப்பது நாவில்.

சித்தம் வாழ்வது வயிற்றில். என் புலன்களில் முதன்மையானது மூக்கு. அன்னைமுலைப்பாலின் மணம் கொண்டது அந்த இனிய மலர். அச்சுவையில் ஊறும் என் நா முடிவெடுத்துவிட்டது. ஆம் ஆம் என முழங்குகிறது என் வயிறு. என்னால் பிறிதொன்று எண்ண இயலாது." எழுந்து முண்டனின் கால்களைத் தொடுவதற்காக குனிந்தான்.

முண்டன் அவன் தலையை ஓங்கி உதைத்தான். தெறித்து மல்லாந்து மண் அறைந்து விழுந்து பீமன் மேலே நோக்க பேருருவம் கொண்டு எழுந்தான் முண்டன். "சித்தமற்றவன் நீ. உன்னிடம் சொல்லாடியது என் பிழை... என்னைக் கடந்து செல், முடிந்தால்!" அவன் காலடி எடுத்துவைத்து அணுகிய அதிர்வை மண்ணிலேயே பீமன் உணர்ந்தான். கால்களை உதைத்து பின்னுக்கு நகர்ந்தபடி அவன் முகத்தை அண்ணாந்து நோக்கினான். விண்சூடிய தலை உயரத்திலெங்கோ தெரிந்தது. ஆனால் சிறுதுளியும் அச்சம் எழவில்லை. எழுந்து தாள்பணியவே உள்ளம் விழைந்தது. அலையழிந்திருந்த உள்ளத்தில் செய்யவேண்டியதென்ன என்று தெளிந்தது.

பீமன் கைகளக் கூப்பியபடி அச்சொல்லை சொன்னான். திகைத்தவன்போல முண்டன் அசைவிழந்து நின்றான். தொலைவின் ஒலிக்கு என அவன் செவிமுனைகள் மெல்ல மடிந்தன. விழிகள் இருபக்கமும் விலகின. பீமன் நுண்சொல்லென அப்பெயரை உதடுக்குள் சொல்லிக்கொண்டே எழுந்தான். அஞ்சியவன்போல முண்டன் பின்னகர்ந்தான். பீமன் கைகூப்பியபடி அவனை நோக்கி சென்றான்.

"என் நாவிலெழுந்த இச்சொல்மேல் ஆணை, மூத்தவரே. விலகி வழிவிடுங்கள்" என்றான் பீமன். உடைந்த குரலில் முண்டன் "என்ன சொல்கிறாய்... என்ன சொல்கிறாய் என அறிவாயா?"

என்று கூவினான். பீமன். “மூத்தவரே, நீங்களும் நானும் ஒற்றைப்பெருங்கரத்தால் ஆடப்படும் நாற்களத்தின் எளிய காய்கள்... நம் வழிகள் வேறு. ஏனென்றால் நம் தலைவர்கள் வேறு” என்றான்.

முண்டன் சீற்றமும் துயருமாக “என் தலைவனின் பெயரை சொல்கிறாய்... அச்சொல்லால் என்னை கட்டி நிறுத்துகிறாய்” என்றான். “மூத்தவரே, நான் சொன்னது என் தலைவனின் பெயரை” என்றான் பீமன். “யார்?” என்று முண்டன் மூச்சொலியாக கேட்டான். “துவாரகையின் இளைய யாதவன். இந்த யுகத்தை சமைக்க எழுந்தவன்” என்றான் பீமன். விழி மலைக்க அசைவிழந்தபின் “உண்மையாகவா?” என்றான் முண்டன். “ஆம், கிருஷ்ணா என்றே நான் சொன்னேன்” என்றான் பீமன்.

முண்டன் தவிப்புடன் கைசுட்டி “இப்போது உன் உதடுகள் சொன்னது என் தலைவனின் பெயரை” என்றான். “ஆம், அப்பெயரை நீங்கள் அவ்வண்ணமே கேட்கமுடியும்” என்றான் பீமன். “மூத்தவரே, ஒன்றுபற்றி அதில் நின்ற நேர்வழியனின் அடியவர் நீங்கள். நீங்கள் புலன்வென்று அமையமுடியும். நானோ ஊழிச்சுழியென வளையும் நெறிகொண்டவனின் கைக்கருவி. கோதண்டம் அல்ல சுதர்சனம். என் இறைவனின் கையில் வேய்குழல் இருக்கையில் நான் எப்படி மணங்களில் இருந்து விடுபட இயலும்?”

முண்டன் தத்தளிப்புடன் தலையை அசைத்தான். “நான் உங்கள் இளையோன் அல்லவா? நீங்கள் முழுமெய் என அறிந்ததும் பேரன்பைத்தானே?” என்றான் பீமன். முண்டன் கண்கள் கனிய நோக்கி “ஆம், அதனாலேயே நான் இப்புவி விட்டு விலகமுடியாதவனானேன்” என்றான். “மூத்தவரே, அன்பில்

கனிந்திருக்கையில் இப்புவியைவிட இனியது பிறிதேது?” என்றான் பீமன். முண்டன் மெல்ல நகைத்து “உண்மை, கனிகளும் தளிர்களும் இனிக்கும் ஒரு காட்டில் வாழும் குரங்கு நான்” என்றான்.

பீமன் சிரித்து “நானும்” என்றான். “என் நாவுக்கு இன்றுவரை சுவையற்ற ஒன்று தட்டுப்பட்டதே இல்லை, மூத்தவரே.” முண்டன் “நீ அந்த புளித்த மண்டியை சுவைப்பதைக் கண்டு நானே திகைத்துவிட்டேன்” என்றான். முண்டன் பீமனின் தோளில் அறைய இருவரும் வெடித்து நகைத்தனர். விழி கசிய உடல் உலைய சிரித்து தளர்ந்து மூச்சிரைத்து ஓய்ந்தனர். “நாம் சற்று தேறல் அருந்தி மகிழ்ந்து விடைகொள்வோம், மூத்தவரே. இது வானோர் நோக்கித் திகைக்க விலங்குகள் முற்றுவகையில் திளைக்கும் தருணம் அல்லவா?” என்றான் பீமன். “அருகிலேயே இன்னொரு தேறல்குழி உள்ளது… வா” என்றான் முண்டன்.

இருவரும் ஊஊஊஊ என ஊளையிட்டபடி கிளைகள் வழியாக காட்டுக்குள் ஊடுருவிச் சென்றனர். முண்டன் கிளைமேல் அமர்ந்து எம்பி எம்பி அமைந்து ஹுஹுஹுஹு என கூச்சலிட்டான். பீமன் நெஞ்சில் அறைந்து வானை நோக்கி குரல் தொடுத்தான். காட்டுக்குள் எழுந்து நின்ற கரிய பாறைக்குழியில் தேங்கியிருந்த பழத்தேறலை முன்னரே குரங்குகள் சில உண்டுகொண்டிருந்தன. முண்டனைக் கண்டதும் அவை இரு கால்களில் எழுந்து ஹுஹுஹு என குரலெழுப்பி எம்பி குதித்தன. வாய்குவித்து நீட்டி ஹிஹிஹி என்றன. அவற்றின் முகங்கள் தேறல் மயக்கில் சிவந்திருந்தன.

வானிலிருந்து உதிர்ந்ததுபோல பாறைப் பரப்பெங்கும் குரங்குகள் மல்லாந்து அரைக்கண்மூடி கிடந்தன.

முண்டன் தேறல்குழியருகே சென்று “அருந்து… இது அமுதுக்கு நிகர்” என்றான். ஒரு குரங்கு “இவன் பெரியவன்” என்றது. இன்னொரு குரங்கு அவனை நோக்கி விரல்சுட்டி ஏதோ சொல்ல முயன்று விரல்தளர அப்படியே மயங்கியது. பீமன் அந்த மென்குழம்பை அங்கே கிடந்த இலையால் அள்ளி குடித்தான். முண்டன் பிறிதொரு காய்க்குடுவையால் அள்ளி அவனிடம் நீட்டி “அருந்துக!” என்றான். பின் குப்புற விழுந்து வாயாலேயே அதை இழுத்துக் குடித்தான். பீமன் இலையையும் குடுவையையும் வீசிவிட்டு தானும் குப்புற விழுந்து குடித்தான். கையை ஊன்றிக்குடிக்கத் தொடங்க வழுக்கி உள்ளே சென்றுவிழுந்தான்.

முண்டன் தரையை கையால் அறைந்தபடி உரக்க நகைத்தான். எழுந்து நின்று இரு கைகளாலும் விலாவைச் சுரண்டியபடி எம்பிஎம்பிக் குதித்து சிரித்தான். அத்தனை குரங்குகளும் சூழ நின்றபடி எம்பிக்குதித்து ஹுஹுஹு என கூச்சலிட்டன. முண்டன் முன்னால் வந்து பீமனை நோக்கி கைநீட்ட அவன் அந்தக் கையை பற்ற முயன்றான். அவனைப் பிடித்து மீண்டும் தேறல்குழம்புக்குள் தள்ளிவிட்டு முண்டன் எம்பிக்குதித்து சுழன்று அமைந்தான். மீண்டும் மீண்டும் அவன் பீமனை தள்ளிவிட்டு சிரிக்க அவனுக்குப் பின்னால் வந்த குரங்கு அவனை தள்ளிவிட்டது. அவனும் சறுக்கிச் சென்று தேறலில் விழுந்தான். தள்ளிவிட்ட குரங்கை பிறிதொன்று தள்ளிவிட்டது. பின்னர் இரு குரங்குகள் தேறலில் குதித்தன. மேலும் குரங்குகள் தேறலில் பாய்ந்தன.

அவை கூச்சலிட்டபடி எம்பிக்குதித்தும் மூழ்கியும் வாயால் அள்ளிக் குடித்தும் கொப்பளித்து துப்பியும் களியாட்டமிட்டன. ஓசைகேட்டு துயின்றுகொண்டிருந்த முதுகுரங்கு ஒன்று திரும்பி நோக்கி பற்களைக் காட்டி இளித்தபின் தலையைத் தூக்கமுயன்று முடியாமல் நாக்கை மட்டும் நீட்டி அருகே தெறித்த தேறல்துளியை நக்கியது. தேறல் கலங்கி சேறாகி தலைசுழலச்செய்யும் கெடுமணம் எழுப்பியது. அதில் விழுந்தும் வழுக்கித் தழுவியும் எழுந்தும் சறுக்கி மீண்டு விழுந்தும் அவை குழைந்தாடின.

பீமன் பாறைக்கரையைப் பற்றிக்கொண்டு மேலேற முயன்றான். வழுக்கி வழுக்கி விழுந்து மெல்ல தொற்றி ஏறி கரையிலிருந்த பாறையில் அமர்ந்தான். அவன் உடலில் இருந்து கொழுவிய தேறல் வழிந்தோடியது. முண்டன் ஒரே தாவலில் தேறலில் இருந்து எழுந்து அவனருகே வந்து நின்று உடலை உதறி துளிகளை சிதறடித்தான். பீமன் குரங்குகளை திரும்பி நோக்கி “புழுக்களைப்போல” என்றான். முண்டன் சிரித்து “புவியின் இன்பத்தை முற்றறியும் பேறுபெற்றவை புழுக்களே. அவற்றுக்கு வாயன்றி புலன் இல்லை. உண்பவையே உலகென்றும் ஆகிச் சூழ்ந்துள்ளன. அன்னையின் கருவிலும் முலையிலும் மட்டுமே வாழும் மகவுகள் போன்றவை” என்றான்.

“உள்ளும் புறமும் சுவை” என்றான் பீமன் தன் கைகளை நக்கியபடி. “ஆம், குருதிபோல. கொழுங்குருதியும் இதைப்போலவே சுவைகொண்டது என்பார்கள்” என்றான் முண்டன். பீமன் தலைதூக்கி நோக்கினான். “அச்சுவையும் அறிந்து மீள்க!” என்றான் முண்டன் அவன் விழிகளை நோக்கியபடி.

“நான் கிளைகளில் வாழ்கிறேன்” என்று முண்டன் சொன்னான். “என் தலைவன் முடிசூடி கோல்கொண்டு ஆளத் தொடங்கியபோதே நான் காட்டுக்குள் வந்துவிட்டேன். என் முன் தலைமுறைகள் இறந்தழிய எப்போதும் மாறாத இளமையுடன் என் குலம் இருந்துகொண்டிருந்தது. அவன் சரயுவில் உடலுதிர்த்தான் என நெடுங்காலம் கழித்து எவரோ சொல்லி அறிந்தேன். நான் துயர்கொள்ளாததைக் கண்டு அக்குரங்கு வியந்தது. என் கையிலிருந்த மாங்கனியை எடுத்துக்காட்டி நான் சொன்னேன், இவ்வினிமையில் அவன் இருக்கிறான் என்று. என்னுடன் அவன் என்றுமிருப்பான்.”

பீமனும் அவனும் கதலிவனம் செல்லும் மலைச்சரிவுப் பாதையின் தொடக்கத்தில் ஒரு மரத்தடியில் நின்றிருந்தனர். பொழுது விடியத் தொடங்கியிருந்தது. முந்தையநாள் மாலையொளி சிவப்பதற்குள்ளாகவே கள்மயக்கில் அவன் துயின்றிருந்தான். இரவில் பலமுறை விழித்துக்கொண்டபோது போர்வை என மிக அருகே விண்மீன்கள் செறிந்த வானம் தெரிந்தது. அரைத்துயிலில் விண்மீன்களை அள்ள அவன் கைகளை நீட்டி துழாவினான். மிக அருகே நின்றிருந்த ஒளிப்புள்ளியை தொட்டுவிட்டான். அதன் தண்மையை உணர்ந்து சிலிர்த்து விழித்துக்கொண்டான்.

அருகே குரங்குகள் ஒவ்வொன்றாக எழுந்து நான்கு கால்களில் நடந்து மரங்களை நோக்கி சென்றுகொண்டிருந்தன. சில குரங்குகள் சிற்றோடையில் இறங்கி புரண்டு உடலை கழுவிக்கொண்டன. குனிந்து நீர் அருந்தி முகமயிரில் சிலிர்த்த நீர்த்துளிகளுடன் குளிருக்கு மெய் விதிர்த்தன. அவன் ஓடையில் இறங்கி உடலைக் கழுவி தூய்மை செய்துகொண்டான். கனிமது விடாயை பெருக்குவது. இரவில்

பலமுறை விடாய் தாளாமல் அவன் எழுந்து தலை தூக்கமுடியாமல் விழுந்துகொண்டிருந்தான். நீரை குடிக்கக் குடிக்க உடலுக்குள் அனல் அவிந்துகொண்டிருந்தது.

அப்பால் முண்டன் நீராடி ஈரத்துடன் கரையில் நின்றுகொண்டிருப்பதைக் கண்டு அருகே சென்றான். குரங்குகள் கிளைகளில் தாவித்தொற்றி மேலேறி உச்சிக்கிளைகளில் கிழக்கு நோக்கி அமர்ந்துகொண்டன. வானம் இருண்டு விண்மீன்கள் மேலும் கூர்மைகொண்டிருந்தன. "செல்வோம்" என்றபின் முண்டன் நடக்க பீமன் தொடர்ந்தான். பாதையின் தொடக்கத்தை அடைந்ததும் அவன் நின்றான்.

"ராமன். ரமிப்பவன். ரமிக்கவைப்பவன். மனோரம்யன். சொல்லச்சொல்ல வளரும் சொல். தளிர்த்து தழைக்கிறது. பூத்து நிறைகிறது. கனிந்து இனிக்கிறது. பரவி முளைக்கிறது. அவன் எனச் சூழ்ந்திருக்கின்றன அனைத்தும். நான் எளிய சிறுபுழு" முண்டன் சொன்னான். "களிப்பூட்டும் வெறியூட்டும் மயக்கி கனவிலாழ்த்தும் இன்கடுந்தேறல் எனக்கு அவன் பெயர். அவன் தன் கதைகளை சூதருக்கும் குருதியை கொடிவழியினருக்கும் அளித்துச்சென்றான். எனக்கு அவன் பெயரே பெருங்கொடை. ஒழுகும் அலைக்கும் காலம் தொடாது எழுந்த மலைமுடி அச்சொல்."

முண்டன் சிலகணங்கள் விழிதாழ்த்தி நின்றபின் "நீ பிறிதொரு யுகத்தவன். உன் தலைவன் அளியனல்ல, ஆட்டுவிப்பவன்" என்றான். "செல்க, மைந்தா! ஆனால் அனைத்தையும் அறிந்துவிட்டுச் செல்க! வீடுபேறென்று யோகியர் அடைந்ததும் மெய்மையென்று ஞானியர் அறிந்ததும் உண்மை என்று நூலோர் சொல்வதும் உனக்கு ஒருபோதும் கைப்படப்போவதில்லை. உன்னிடம் இந்த மாமலர் மட்டும்

எப்போதும் இருந்துகொண்டிருக்கும். நறுமணமும் கெடுமணமும் கொண்டிருக்கும். அனலென எரியும், நிலவெனக் குளிரும். பிறிதெவரும் எந்நிலையிலும் அறியாத ஒருவனாக உன் உடலுக்குள் ஒளிந்து அந்த மலரை நெஞ்சில் சூடியிருப்பாய்."

"அது போதும் எனக்கு" என்று பீமன் சொன்னான். "செல்க, நீ வெல்வாய்!" என்றான் முண்டன். பீமன் குனிந்து அவன் கால்களில் எண்பொறியும் நிலம்நீள விழுந்து வணங்கினான். "எப்போதும் எளியவனாக இருக்கும் பேறுபெற்றவன் நீ, இளையோனே. உன்னுடன் தெய்வங்கள் இருக்கும்" என்றான் முண்டன். அங்கே இளஞ்சேற்றை காலால் கிண்டி புதைந்துகிடந்த கதாயுதம் ஒன்றை எடுத்தான். "இதை கொள்க... என் கையிலமைந்த படைக்கலம் இது." பீமன் அந்த கதாயுதத்தை நோக்கி ஒருகணம் திகைத்தான். அது அவன் வழக்கமாக வைத்திருக்கும் பெருங்கதாயுதத்தைவிட இருமடங்கு பெரியது.

திரும்பி முண்டனை நோக்கிவிட்டு அதை சென்று எடுத்துக்கொண்டான். எடை தோள்களை தெறிக்கச்செய்தபோதும் அவனால் அதை தூக்கி தோளிலேற்ற முடிந்தது. "உங்கள் கைகள் இவை, மூத்தவரே" என்றான். கதையுடன் உடல் வளைத்து மீண்டும் முண்டனை வணங்கியபின் நடக்கத் தொடங்கினான்.

சரிந்து மேலேறிய பாதையில் யானைகள் சற்றுமுன்னர்கூட சென்றிருப்பதை மிதிபட்ட சாணிக்குழம்பலில் இருந்து உணரமுடிந்தது. அவன் காலடிகள் எங்கெங்கோ எதிரொலித்து திரும்பிவந்துகொண்டிருந்தன. கருக்கிருட்டின் பரப்பே அவற்றை எதிரொலிக்கிறதோ என்று தோன்றியது. தன் உடலில்

எஞ்சியிருந்த கடுந்தேறலின் மணத்தை காற்று மெல்ல கரைத்தழிப்பதை உணர்ந்தான். உடல் உலர்ந்து குழல் பறக்கத் தொடங்கியதும் அந்த மணம் முழுமையாக மறைந்தது. பின்பு அவன் அந்த மலரின் மணத்தை அறியத் தொடங்கினான்.

இம்முறை அது செண்பகம் எனத் தோன்றியது. எத்தனை தொலைவுக்கு அது அவ்வண்ணம் தோன்றுகிறது என்று நோக்கியபடி நடந்தான். திரௌபதி செண்பகத்தை அர்ஜுனனுக்காக சூடுவதுண்டு. அனலென மூக்கில் எரிவது, பித்தெழுப்புவது. தருமனுக்கு அசோகம். தண்மை என மணத்தாலும் சொல்வது. அவனுக்குரியது எது? அந்த மணத்தை அவன் உணர்ந்தான். மந்தாரம். மிகமிக மென்மையானது. மணக்கிறதா என்றே ஐயமெழுப்புவது. மந்தாரமா? இது பாரிஜாதம் அல்லவா? பாரிஜாதத்தை எவர்பொருட்டு அவள் சூடுகிறாள்? அனைவரின்பொருட்டும். அல்லது அவளுக்காகவே.

விடிவெளிச்சம் துலங்கத் தொடங்கும்போது அவன் தொலைவில் கதலிவனத்தை பார்த்துவிட்டிருந்தான். நான்குபக்கமும் மலைகள் சூழ நடுவே ஒரு பெரிய ஏரிச்சதுப்பென விரிந்திருந்தது அந்த வட்டத்தாழ்நிலம். வாழைக்கூட்டங்கள் இலைசெறிந்து காற்றில் பச்சை நீர்ப்பரப்பென அலையடித்துக்கொண்டிருந்தன. மலைமடிப்புகளில் இருந்து இறங்கிய சிறிய ஓடைகள் வெண்வழிவென அதற்குள் சென்று மறைந்தன. நூற்றுக்கணக்கான பறவைகள் எழுந்து காலையொளியில் தண்பரப்பென துலங்கிய வானில் சுழன்றுகொண்டிருந்தன. மேலும் நடந்தபோது அவற்றின் கலைவொலி அலையை கேட்கவும் முடிந்தது.

அவன் புலன்கள் கூர்கொண்டிருந்தன. அங்கே காவலுக்கு குரோதவசர்கள் என்னும் கந்தர்வர்கள் அமைக்கப்பட்டிருக்கிறார்கள் என்று முண்டன் சொல்லியிருந்தான். “அவர்கள் உன்னுள் இருந்தே எழுபவர்கள் என்பதனால் உனக்கு அணுக்கமானவர்கள், இளையோனே. உன் ஆழ்ந்த வஞ்சங்களின் வடிவங்கள்.” அவன் மெல்ல காலடி எடுத்துவைத்து நடந்தான். விழிகள் துழாவிக்கொண்டே இருந்தன. ஓசைகள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக அறிந்தது செவி. அந்த மலர்மணம் ஆழம்கொண்டிருந்தது. மெல்லிய குருதிமணம் ஒன்றையும் சேர்த்துக்கொண்டு. குருதியில் நனைந்த செண்பகம். நிணம் மணக்கும் நிசாகந்தி. இதோ, ஊன் மணக்கும் அசோகம். சீழ்மணக்கும் பாரிஜாதம்.

நிழலசைவென ஓசையின்றி தோன்றி அவன் முன் நின்றவனை உடனே அவன் அடையாளம் கண்டுகொண்டான். அவன் தன் கதாயுதத்தால் தாக்குவதற்கு முன்னதாகவே தன் கதாயுதத்தை தலைக்குமேல் தூக்கிவிட்டான். அறைபடும் உலோகத்தின் உறுமலெழுந்ததும் களிவெறி அவனில் ஊறியது. புதைந்து மறைந்திருந்தவை அனைத்தும் முளைத்து பெருகியெழுந்தன. உரக்க நகைத்துக்கொண்டும் உறுமிக்கொண்டும் அவன் அந்தப் பேருருவனுடன் போரிட்டான்.

அவனை நுணுகி நோக்கமுடியவில்லை. நிழலென புகையென கரைந்து உருக்கொண்டு கரைந்துகொண்டிருந்தான். அவன் கதை மட்டும் வானிலிருந்து பாறை உதிர்வதுபோல அவனைத் தாக்கியது. அடிபட்டு வலிமுனகலுடன் பீமன் பின்னால் விழுந்தான். மீண்டும் மீண்டும் வந்து விழுந்த அடிகளை உடலைப்புரட்டி மண்ணில் விழச்செய்து தாவி எழுந்து திரும்ப அறைந்தான். மீண்டும் ஓர் அடி விழ அலறியபடி மண்ணில்

விழுந்தான். முகமெங்கும் சேறு அப்பியிருக்க அக்கணமே புரண்டமையால் அடுத்த அடிக்கு தலை சிதறாமல் தப்பினான்.

எழுந்து கால்பரப்பி நின்று கதைசுழற்றி அருகணைபவனை நோக்கினான். ஒவ்வொரு அசைவும் முன்பே அறிந்ததாக இருந்தது. அவன் கதைச் சுழற்சியைத் தடுக்க தலையைத் திருப்பியபோது பாரிஜாதத்தின் மணத்தை அகம் உணர்ந்தது. அப்போது ஒன்றை அறிந்தான், ஒரு நறுமணத்தை உள்ளம் அமைதியாகவே உள்வாங்கிக்கொள்ளமுடியும். அதை முகர்ந்தபடி கதையைச் சுழற்றியபோது அவனுடைய காலம் விரிந்து விரிந்து கணங்கள் ஒவ்வொன்றும் பலமடங்கு அகலம் கொண்டன. அவன் தலையை நோக்கி வந்த கதையின் ஒவ்வொரு சுழற்சியையும் துளித்துளியெனக் கண்டான்.

தன் தலையை விலக்கிக்கொண்டு கதையால் அவன் தோளை அடித்தான். அடிபட்டு அவன் விலகித்தெறிக்க அவன் தொடையை அறைந்து பிளக்கவைத்தான். தரையில் கிடந்து துடித்து கொந்தளித்த உடலை தாவிக்கடந்து எதிரே வந்தவனை சந்தித்தான். அதே பேருடல். ஆனால் அந்த விரைவுக்கு மாற்றாக வெறிகொண்டிருந்தான். எழுந்த மந்தாரத்தில் மயங்கி நிலைத்த உள்ளத்துடன் அவன் நெஞ்சை அறைந்து பிளந்தான். அவன் நிழல்பெருகியதுபோல குரோதவசர்கள் வந்தபடியே இருந்தனர். அவன் உள்ளம் அசோகத்தின் மணமாக அசைவற்றிருந்தது.

விழுந்தவர்கள் கருநிழல்களென மண்ணில் பதிந்து கிடக்க எதிரே வந்து நின்றிருந்தவனைக் கண்டு அவன் அகம் கொந்தளித்தது. “இளையோனே...” என அவன் கை நீட்டினான். “மூத்தவரே, தாங்கள்...” என பீமன் திகைப்பதற்குள் அடி விழுந்தது. அவனுடைய பயின்ற தலை தன்னை

ஒழிந்தமையால் தோளில் பட்டது அது. விழுந்து எழுந்ததும் மாமலர் மணத்தை மீண்டும் அடைந்தான். அதுவே இவையனைத்தும். அது அளிக்கும் மாயம் இது. அதுவன்றி பிறவற்றில் அமையலாகாது என் உள்ளம். அவன் எழுந்து தாவிச்சென்று அவன் தலையை அறைந்து உடைத்தான்.

தொடர்ந்து எழுந்தனர் மூவர். அவர்களை வென்றுகடந்ததும் வந்தவனைக் கண்டு மீண்டும் அவன் நிலையழிந்தான். வஞ்சம் பெருகி எழ கதைசுழற்றிச் சென்று ஓங்கி அறைந்தான். அறைகளை தன் கதையால் எளிதில் தடுத்து அவனை வீழ்த்தினான். ஒவ்வொரு அறையும் அவன் தசைகளை உடையச்செய்தது. தொடையிலும் இடக்கையிலும் எலும்புகள் முறிந்தன. அவன் மூக்கிலும் வாயிலும் குருதி பெருகியது. கையால் அதை வழித்து வீசியபடி எழுந்தான். பிடரித்துலா நிலையழிய தடுமாறி பக்கவாட்டில் விழுந்தான். அவன் விலாவில் விழுந்தது அடி.

உருண்டு எழுந்து நின்றபோது அறிந்தான் அவன் அந்த மலர்மணத்தில் விழி சொக்கியிருந்தான் என்று. நிலை, நிலைகொள் உள்ளமே, நிலைநிறுத்துக மூக்கே, நுனியில் குவிக என் விழைவே. அது நீலம். இனியது, ஆட்கொள்வது. பீமன் வேறெங்கோ இருந்தான். இது கனவு. கனவில் எவரும் இறப்பதில்லை. உதடுகளில் புன்னகையுடன் அவன் தன் கதையை வீசினான். மீண்டும் மீண்டும் கதையால் அறைந்தபடி முன்னேறினான். உன்னுடையது பாரிஜாதம். அறிவேன் அது பாரிஜாதம். இரு மலர்களின் போர் இது. தன் அடி அவன் தலைமேல் விழுவதை பீமன் கையின் பின்னடியால் உணர்ந்தான். குருதி சிதறி அவன் கைகளையும் தோளையும் வெம்மையாகத் தழுவி வழிந்தது. வாயில் உப்புகரித்தது. அவன்

தலைசிதறி பேருடல் விரிந்து நிலத்தில் கிடந்தான். நெடுங்கைகள், பெருந்தொடைகள், விரிந்த நெஞ்சு.

துயருடன் மூச்செறிந்து அவன் ஏறிட்டபோது எதிரே ஆடிப்பாவை என வந்தவனைக் கண்டான். மறு எண்ணமில்லாமல் பாய்ந்து அவன் நெஞ்சை அறைந்து வீழ்த்தினான். அவன் உடல்மேல் கால்வைத்து தலையை அடித்து சிதைத்தெறிந்தான். துடித்துத் துடித்தழியும் அவ்வுடலின் அதிர்வை தன் கால்களால் அறிந்தபடி நின்றான். அவன் உடல் அணைந்துகொண்டிருந்தது. கைகளிலும் கால்களிலும் இருந்து உயிர் வழிந்தோடுவதைப்போல் உணர்ந்தான். மீண்டும் ஓர் அடி எடுத்து வைத்தபோது கால்கள் வாழைத்தண்டுகள் போல் குளிர்ந்திருப்பதைக் கண்டான். மறுகாலை எடுப்பதற்குள் நிலையழிந்து மண்ணில் விழுந்தான்.

அவன் விழித்துக்கொண்டபோது உச்சிவெயில் ஏறியிருந்தது. எழுந்து தன் கதையை எடுத்தான். அதில் குருதியேதும் இருக்கவில்லை என்று உணர்ந்து தன் உடலை நோக்கினான். புண்களும் சிதைவுகளும் இல்லை என்று கண்டபின் திரும்பியபோது சடலங்களும் இல்லை என்று கண்டான். நீள்மூச்சுடன் கதையைத் தூக்கியபடி நடந்து வாழைச்செறிவுக்குள் நுழைந்தான். அங்கிருந்த வாழைகள் அனைத்தும் மிகப் பெரியவை. குளிர்ந்த வெண்ணிற அடித்தூர்கள் அவனால் கைசுற்றிப் பிடிக்கமுடியாத பருமன் கொண்டிருந்தன. காய்ந்த இலைகள் சடைகளெனத் தொங்கி காற்றில் ஓசையிட்டன. கிழிபட்ட இலைகள் தோரணங்கள்போல துடித்தன. புறாக்கூட்டம் காற்றிலேறும் ஒலி என அது கேட்டுக்கொண்டே இருந்தது.

உள்ளே செல்லுந்தோறும் இருட்டாக பசுமை அவனை மூடிக்கொண்டது. முழங்கால் புதையும் அச்சதுப்பு யானைச்செவி அசையும் காட்டுச்சேம்பும் உள்ளங்கைகள் விரித்த கூவையும் நீலமலர்க் கூவளமும் செறிந்து சிறுபூச்சிகளும் பச்சைத்தவளைகளும் காலடியசைவில் அஞ்சித் தெறிக்க சேற்றாவியின் வெம்மைமணத்துடன் அவனைச் சூழ்ந்தது. எடுத்த கால்குழிகள் வாய் என திறந்தன. அவற்றில் மண்புழுக்கள் நரம்புகளாக நெளிந்தன. சேற்றுநீர் ஊறி அக்குழிகள் விழிகளென்றாயின. இளஞ்செம்மை வரிபடர்ந்த வாழைகளின் தளிர்க்குழாய்களில் ஒளி தேங்கியிருந்தது. அன்னையருகே சிற்றிலை விரித்து நின்ற குழவிவாழைகள் செவியாட்டின.

அவனை இட்டுவந்த மணம் உருமாறி ஆழ்ந்த கெடுமணமாகியது. சேற்றுக்கெடுமணம். மட்கும் இலைகளின் கெடுமணம். நீர்ப்பாசியின் வழுக்கல் கெடுமணம். அனைத்தையும் தொடாமல் ஊடுருவி நெளிந்தது அந்தக் கூரிய கெடுமணம். ஊன்மணமா, தேங்கிய பால்மணமா? அவன் அந்தச் சிற்றாலயத்தை பார்த்துவிட்டான். அவன் இடையளவுக்கே உயரமிருந்தது. முன்பு அவன் கண்ட நான்கு ஆலயங்களின் அதே வடிவம். அதேபோல நீர்ப்பாசி படர்ந்த பச்சைக்கருமை. அதனருகே கிளைதாழ்த்தி மலர்செறிந்து நின்ற மரத்தையும் கண்டான்.

அருகணையும்தோறும் அந்த மரமே அவனை ஈர்த்தது. வேறெதையும் அறியாதவனாக அதன் கீழே சென்று நின்றான். தரையில் மலர்களேதும் உதிர்ந்திருக்கவில்லை. ஆனால் கிளைகள் முழுக்க மலர்கள் அடர்ந்திருந்தன. வழக்கமாக கிளைநுனிகளில் செண்டுகளென பூக்கும் மலர்களைப்போலன்றி

கிளைகளின் கணுக்களில் கொத்துகளாகச் செறிந்திருந்தன அந்த மலர்கள். பூவரசம்பூ போல இளமஞ்சள் நிறமானவை. ஆனால் முட்தோல் உதிர எஞ்சிய பலாச்சுளைகள்போல தோன்றின. சிறு மஞ்சள் குருவிகள் சிறகுகள் கூட்டி மொய்த்து தேனருந்துவதுபோல.

மூக்கை நிறைத்து சித்தத்தை செயலிழக்கச் செய்த அந்த மணத்தால் அவன் இயக்கப்பட்டான். அந்த மரத்தின் உடல் வாழைபோலவே நீருண்டு மென்மை கொண்டிருந்தது. அவன் எடையை அது தாளாமல் மெல்ல தழைந்தது. மெல்ல மெல்ல நகர்ந்து அவன் முதல் கணுவிலிருந்த கொத்தில் ஒரு மலரை தொட்டான். அக்கிளை முறிந்து சரிய நிலையழிந்து கீழே விழுந்தான். சேறு அவனை கைவிரித்து பற்றிக்கொண்டது. எழுந்து நின்றபோது அவன் கையில் ஒரு மலர் இருந்தது. அதன் உடைந்த காம்பில் இருந்து முலைக்கண்ணிலிருந்து என நான்கு சிறு வெண்நூல்களாக பால் பீரிட்டது.

அவன் அதை மூக்கருகே கொண்டுவந்தான். வாயூறச் செய்யும் மணம். சித்தம் பேதலிக்கச்செய்வது. உடல்தளர்ந்து அங்கேயே படுத்துவிடவேண்டுமென எண்ணவைப்பது. விழிகளைக் கொட்டி தன்னை நிலைப்படுத்தி திரும்பி நோக்கியபோது அந்தச் சிற்றாலயத்திற்குள் நின்றிருந்த சிறுசிலையின் விழிகளை சந்தித்தான்.

# மாமலர் - 95

**95. மழைமணம்**

குரங்குகள்தான் முதலில் பீமனை அடையாளம் கண்டுகொண்டன. அவன் காட்டின் எல்லைக்கு நெடுந்தொலைவில் ஒரு பாறையைக் கடந்து வந்தபோது காலையின் நீள்ஒளியில் அவன் நிழல் எழுந்து விரிந்திருந்தது. உச்சிக்கிளையிலிருந்த காவல்குரங்கு அவன் உருவைக் காண்பதற்கு முன் அந்நிழலைக் கண்டது. அதன் அசைவிலிருந்தே அது பீமன் எனத் தெளிந்தது. கிளையை உலுக்கியபடி எம்பி எம்பிக் குதித்து உப் உப் உப் உப் என்று கூச்சலிட்டது.

அவ்வொலியைக் கேட்டதுமே பெருங்குரங்குகள் அனைத்தும் பீமன் வந்துவிட்டதை உணர்ந்தன. மரங்களிலிருந்து பலாக்காய்கள் உதிர்வதுபோல நிலத்தில் குதித்து நான்கு கால்களில் பாய்ந்து விழுந்த மரங்களிலும் புதர்களிலும் தாவி ஏறி முன்னால் சென்றன. சிறியவை கிளைகளில் கைகளாலும் வாலாலும் பற்றி ஆடித் தாவி காற்றில் பறந்தன. அவை சென்ற அசைவால் காட்டுக்குள் கூரிய காற்று புகுந்து ஓடையென வழிவதைப்போல பசுமையின் அலை எழுந்தது.

கோதவனத்தின் எல்லையாக அமைந்த ஓடையின் கரையில் அவை ஒன்றன்பின் ஒன்றென நிரைவகுத்தன. அப்பகுதியே அவற்றின் உடல் கருமையால் பாறைக்கூட்டங்கள் மண்டியதுபோல ஆயிற்று. குட்டிகள் இரு கால்களில் எழுந்து நின்று வாய்மேல் கைவைத்து கண்களைச் சிமிட்டியபடி பொறுமையிழந்து நோக்கின. முதிய குரங்குகள் உடலைக்குவித்து அமர்ந்து தலைமேல் கைகளை வைத்தபடி காத்திருந்தன.

கோமதி இடப்பக்கம் ஒளியலைகளாக பெருகிச் சென்றுகொண்டிருந்தது. அதன் கரைச்சேற்றில் முதலைகள்

ஒதுங்கியிருக்க அவற்றின் மேல் சிறுகுருவிகள் எழுந்தும் அமர்ந்தும் கொத்திக்கொண்டிருந்தன. வெண்சால்வை பறந்தமைவதுபோல கொக்குக்கூட்டம் ஒன்று சேற்றுப்படுகைமேல் வந்து அமர்ந்தது. அவற்றின் வெண்ணிழல் நீருள் வந்து அவற்றை அணுகியது. நீர்ப்பரப்பில் மீன்கள் எழுந்து ஒளிவிட்டு விழுந்தமைந்துகொண்டிருந்தன. பீமன் முன்னரே குரங்குகளை கண்டுவிட்டான். அவன் உள்ளம் பாய்ந்து அவற்றுடன் சேர்ந்துவிட்டிருந்தது. உள எழுச்சியை ஒத்திப்போட அவன் பார்வையை ஆற்றைநோக்கி திருப்பிக்கொண்டு நடந்துவந்தான். ஆகவே நடை இயல்பற்றதாக இருந்தது.

அவன் அணுகியதும் இளங்குரங்கு ஒன்று எழுந்து நின்று ஹுஹுஹு என கூச்சலிட்டது. இளையவர்கள் கூச்சலிடத்தொடங்க அது பரவி அனைத்துக் குரங்குகளும் எழுந்தும் நின்றும் குரலெழுப்பின. முதிய குரங்குகள் தலைதாழ்த்தி பற்களைக் காட்டி ர்ர்ர்ர் என ஒலித்தன. குட்டிகள் உவகைதாளாமல் துள்ளிக்குதித்து திரும்பி ஓடித்தாவி அன்னையை கட்டிக்கொண்டு மீண்டும் பாய்ந்து நிலத்தில் விழுந்து தலைகீழாகச் சுழன்று வாலைச் சொடுக்கித் தூக்கி எழுந்து நின்று உதட்டை நீட்டி ஈஈஈ என ஓசையிட்டன.

அவன் தங்கள் எல்லைக்கு அருகே வந்ததும் ஒரு சிறுகுட்டி பாய்ந்து சென்று அவன்மேல் தொற்றி தோளிலேறிக்கொண்டது. அவன் தலைமயிரைப்பிடித்து உலுக்கி காதைக் கடித்தது. தோளிலிருந்து தலைமேல் ஏறி நின்று கைவிரித்து ஹுஹுஹு என கூச்சலிட்டது. பிற குட்டிகளும் சற்று தயங்கியபின் பாய்ந்து அவன் மேல் ஏறிக்கொண்டன. உடலெங்கும் குரங்குகளுடன் அவன் தள்ளாடியபடி நடந்தான்.

தோளில் தொங்கியவற்றை கைகளைச் சுழற்றி காற்றில் பறக்கவைத்தான். குரங்குகளின் ஒலியுடன் அவன் சிரிப்பொலியும் சேர்ந்து எழுந்தது.

கோதவனத்திற்குள் அவன் நுழைந்ததும் அத்தனை குரங்குகளும் சேர்ந்து கூச்சலிட்டு அவனைச் சூழ்ந்தன. ஒன்றன்மேல் ஒன்றென ஏறி அவனை தொட்டுத்தாவின. அவன் உடையைப்பிடித்து இழுத்தும் கால்களில் முத்தமிட்டும் கொண்டாடின. அவன் கூவியபடி ஓடிச்சென்று மரத்தில் தொற்றிக்கொண்டு கிளைகள் வழியாகவே சென்றான். அவனுடன் குரங்குப்படையும் ஓசையிட்டபடி சென்றது. கிளைகள் உலைந்து எழுந்தமைந்தன. கனிகள் உதிர்ந்தன. மான்கள் திகைத்து துள்ளிப்பாய பறவைகள் ஓசையுடன் இலைக்கூரைக்குமேல் எழுந்தன.

முனிவர்கள் குரங்குகளின் ஓசையை முன்னரே கேட்டிருந்தார்கள். என்ன என்று வந்து நோக்கியவர்கள் கடந்துசென்ற கிளையுலைவைக் கண்டனர். “காற்றுபோல செல்கிறார்கள்…” என்றார் சௌரபர். ஒரு முனிவர்மைந்தன் “பீமர்! பீமசேனர்” என கைசுட்டி கூச்சலிட்டான். அக்கணமே அத்தனை இளையோரும் அவனை கண்டுவிட்டனர். “மாவலர்! விருகோதரர்|!” என கூச்சல்கள் எழுந்தன. “எங்கே? எங்கே?” என பெண்கள் ஓடிவருவதற்குள் அவர்கள் கடந்துசென்றுவிட்டிருந்தார்கள்.

காட்டுக்குள் குரங்குகளின் ஓசையைக் கேட்டு தன் அறைக்குள் இருந்து தருமன் வெளியே வந்தபோது நகுலனும் சகதேவனும் வெளியே சென்று நோக்கிக்கொண்டிருந்தார்கள். திரௌபதி அடுமனையில் இருந்து கையைத் துடைத்தபடி ஓடிவந்து “அவர்தானா?” என்றாள். அவள் முகம் வியர்வையில்

பளபளத்தது. தலைமயிர் கலைந்து நெற்றியிலும் காதுகள்மீதும் சரிந்திருந்தது. நகுலன் “அவரேதான்... ஐயமில்லை. குரங்குகள் தெளிவாகவே சொல்கின்றன” என்றான்.

தருமன் “பலமுறை அவன் என நினைத்து ஓடிவந்திருக்கிறோம்” என்றார். “அப்போது அவர்தானா என்ற ஐயமும் எதிர்பார்ப்பும்தான் இருந்தது, மூத்தவரே. அவராக இருக்கலாகாதா என எண்ணினோம். இது அவரேதான்... உறுதியாகத் தெரிகிறது” என்றான் சகதேவன். திரௌபதி மெல்ல உடல் தளர்ந்து இடை ஒசிய மூங்கில் தூணைப் பற்றியபடி அதில் முகம் சாய்த்து நின்றாள். குடில்விளிம்புக்குச் சென்று நோக்கி நின்ற சகதேவன் “அதோ மூத்தவர்” என்றான். “தன் கூட்டத்துடன் கிளைகளினூடாக வருகிறார்.” நகுலன் எட்டிப்பார்த்துச் சிரித்து “அவர் உடல்மேல் ஏழு குட்டிகள் அமர்ந்திருக்கின்றன” என்றான். திரௌபதி புன்னகை புரிந்தாள்.

பீமன் குடில் முற்றத்தில் குரங்குகளுடன் குதித்தான். அவனைச் சூழ்ந்து குரங்குகள் விழுந்தபடியே இருந்தன. அவன் கொடிஏணியை அடைந்து இரண்டே தாவலில் மேலே வந்தான். அவன் தலைமேல் இருந்த குட்டிக்குரங்கு துள்ளி வந்து குடில்கூடத்தில் விழுந்து வாலைத்தூக்கியபடி ஈஈஈஈ என ஓசையிட்டு தன்னைத்தானே சுழன்றது. என்ன செய்வதென்றறியாமல் எம்பிக்குதிக்க அதன் வால் பலகையில் மாட்டிக்கொண்டது. அதை இழுத்தபின் அந்த வலி தருமனால்தான் என்பதுபோல அவரைப் பார்த்து ர்ர்ர்ர் என சீறி பற்களைக் காட்டியது.

குட்டிகள் உடல்விட்டு உதிர பீமன் வந்து நின்றான். கீழே விழுந்த குட்டிகள் திகைத்து பாய்ந்துசென்று நகுலன் மேல் ஏறிக்கொண்டன. உடனே அவனல்ல என உணர்ந்து

அவனிடமிருந்து தாவி மீண்டும் பீமனை அணுகி அவன்மேல் தொற்றின. ஒரு குட்டிக்குரங்கு நகுலனை நோக்கி சீறியது. பீமன் தருமனின் கால்களைத் தொட்டு சென்னிசூடி “வணங்குகிறேன், மூத்தவரே” என்றான். “நன்று! நீயும் ஒரு நிலம்காணலுக்குச் சென்று மீண்டுவிட்டாய்” என்றார் தருமன். பீமன் புன்னகைத்து “ஆம், நல்ல பயணம்” என்றான். குரங்குகள் கூரைவிளிம்பிலும் உத்தரங்களிலும் சாளரங்களிலும் தரையிலுமாக செறிந்திருந்தன.

“என்ன அடைந்தாய்?” என்று தருமன் கேட்டார். “அறியேன், ஆனால் சிலவற்றைத் துறந்தேன்” என்றான் பீமன். தருமன் ஒருகணம் கூர்ந்து நோக்கியபின் “நலம் விளைக!” என்று கைதூக்கி வாழ்த்தினார். “உன்னை மீண்டும் கண்டது உவகை அளிக்கிறது, இளையவனே. உன் இளையோன் இங்கே அருகிலுள்ள வேள்விச்சாலை ஒன்றுக்கு சென்றுள்ளான். சிலநாட்களில் அவன் மீள்வான். அதன்பின் நாம் இங்கிருந்து கிளம்பலாமென எண்ணுகிறேன். இங்கு வந்து நெடுநாட்களாகின்றன” என்றார். பீமன் மீண்டும் தலைவணங்கினான்.

தருமன் திரும்பி அறைக்குள் சென்றபின்னரே அவன் தம்பியரை நோக்கி திரும்பினான். குரங்குகள் அவன் காட்டுக்கு திரும்பப்போகிறான் என எண்ணி திரும்பிப் பாய சித்தமாயின. அவன் தம்பியரிடம் பேசக்கண்டு ஏமாற்றம் கொண்டு சலிப்புடன் முகம் வலித்தபடி அமர்ந்தன. நகுலனும் சகதேவனும் பீமன் கால்களைத் தொட்டு தலைசூடினர். அவன் அவர்களின் குழல்தொட்டு வாழ்த்தினான். நகுலனின் தோள்களை வளைத்து “பெருத்துவிட்டாய். இங்கே நல்லுணவு என நினைக்கிறேன்” என்றான். சகதேவன் “அடுமனை

எப்போதும் புகைந்துகொண்டே இருக்கிறது, மூத்தவரே” என்றான்.

பீமன் அப்போதுதான் திரௌபதியை பார்த்தான். அவள் விழிகள் விரிந்து அவனை நோக்கிக்கொண்டிருந்தன. இடமும் தருணமும் மறந்தவை. விருப்பு நீர்மையாக ஒளியாக நிறைந்தவை. நகுலன் “இன்று முனிவர்களின் இல்லங்களுக்குச் செல்வதாக ஒப்புக்கொண்டிருக்கிறோம், மூத்தவரே” என்றான். இருவரும் தலைவணங்கியபின் வெளியே சென்றனர். அவர்கள் செல்வதை நோக்கியபின் ஒரு முதுகுரங்கு அதேபோல ஏணி வழியாக கீழிறங்கிச் செல்ல குரங்குகள் அனைத்தும் ஒவ்வொன்றாக சென்றன.

பீமன் திரௌபதியின் அருகே அணுகி “நீ கேட்ட மலரை கொண்டுவந்துள்ளேன்…” என்றான். அவள் “கல்யாணசௌகந்திகமா?” என்றாள். “உண்மையில் நான் அதை மறந்தேபோனேன்… எங்கே?” பீமன் தன் இடைக்கச்சையிலிருந்த மூங்கில்குழாயை திறந்தான். அதற்குள் இருந்து அந்த மலரை வெளியே எடுத்தான். அப்போது கொய்யப்பட்டதுபோலிருந்தது அது. ஆனால் காம்பில் பால் உறைந்துவிட்டிருந்தது. அறையை நறுமணம் நிறைத்தது. அசோகமா நீலமா பாரிஜாதமா செண்பகமா? அல்ல, பிறிதொன்று. அவன் அதுவரை அறியாத மணம்.

வரும்வழியெங்கும் அந்த மணம் மாறிக்கொண்டே இருந்தது. அவன் தலைக்குமேல் அந்த மலர்மரம் நின்றுகொண்டிருப்பதுபோல எப்போதும் உடனிருந்தது. எண்ணங்களிலும் மணம் சேர்த்தது. துயில்கையில் புதிய மணமாக எழுந்து கனவுகளுக்குள் புகுந்தது. விழித்தெழுகையில் வந்த முதலெண்ணத்துடன் அந்த மணமும்

கலந்திருந்தது. ஒவ்வொருநாளும் அதை எடுத்து நோக்கி அந்த மலர்தானா என ஐயுற்றான். அத்தனை ஐயங்களுக்கும் சொல்லில் இடமிருந்தது, உள்ளத்தை அவை அடையவில்லை.

அவள் அதை குனிந்து நோக்கியபோது பெரிய இமைகள் சரிந்திருப்பதன் அழகையே அவன் பார்த்துக்கொண்டிருந்தான். இமைகள் எழ அவள் அவனை நோக்கி புன்னகைத்து "பாரிஜாதம்போல" என்றாள். அவன் புன்னகை செய்தான். "அந்த நறுமணம் உண்மையில் எப்படி இருந்தது என்று என்னால் நினைவுகூரவே இயலவில்லை. அன்று இரவு ஏதோ பொருளற்ற அக எழுச்சி ஒன்றை அடைந்தேன். இரவில் தனிமையில் கடந்தகால ஏக்கம் பெருகியெழுந்து ஆட்கொள்வது இந்த அகவையில் இயல்புதானே? அதுதான் அந்த மணம்போலும் என பின்னர் எண்ணிக்கொண்டேன். மாயமணம் ஒன்றுக்காக உங்களை ஏன் அனுப்பினேன் என எண்ணி வருந்திக்கொண்டே இருந்தேன்" என்றாள் திரௌபதி.

"அந்த மணத்தை நானும் உணர்ந்த ஒரு தருணம் அமைந்தது" என்றான் பீமன். "ஆம், அது நீங்கள் என் மீதுகொண்ட காதலால் அடைந்த ஓர் உச்சம். நம் இருவர் உள்ளங்களும் ஒன்றையே உணர்ந்தன." பீமன் புன்னகையுடன் "அதுவல்ல இந்த மணம் என்கிறாயா?" என்றான். அவள் தத்தளிப்புடன் "அறியேன். அந்த மணம் என்ன என்று நினைவுகூரவே என்னால் இயலவில்லை. இது அந்த மணம் என உங்களால் உறுதியாக உணரமுடிகிறதா?" என்றாள். பீமன் சிரித்து "ஆம் என்று இதுவரை நம்பியிருந்தேன். இப்போது நானும் ஐயம் கொள்கிறேன்" என்றான். "இந்த மணத்தை நோக்கி செல்லும் வழியில் பலவகையான மணங்களினூடாக என் அகமும் மூக்கும் கடந்துசென்றன."

“இதை அடைந்த உளநிலையே இதுவே என எண்ணவைத்ததா? அப்போது அடைந்த மணத்தைத்தான் இப்போது இந்த மலரில் அறிகிறேனா? உண்மையில் இந்த மலரை உன்னிடம் கொடுப்பதற்கு முந்தைய மணம் கொடுத்தபின்னர் மாறிவிட்டது என்று தோன்றுகிறது. பாரிஜாதம் என நீ சொன்னதுமே இது அவ்வாறு ஆகிவிட்டது.” அவள் மீண்டும் அதை முகர்ந்து பெருமூச்சுடன் “நெஞ்சம் அறியா ஏக்கத்தால் நிறைகிறது. மணங்களாக இங்கே நிறைந்திருப்பவை நாம் ஒருபோதும் அறியாத ஏதோ சில போலும். நாம் உணர்வுகளையும் நினைவுகளையும் அவற்றின்மேல் ஏற்றி அந்தப் பொருளையே அவை என உணர்கிறோமா?” என்றாள்.

பீமன் “சரி, இதை பேசிப்பேசி நாம் கீழிறங்கவேண்டியதில்லை. நான் உன்னிடம் சொன்னது அந்த மணமெழும் மலரை கொண்டுவருவேன் என. இது அடைகையிலோ கொய்கையிலோ கொணர்கையிலோ கொடுக்கையிலோ ஒரு கணமேனும் அந்த மலரென இருந்திருக்கிறது. நாம் மானுடர் செய்யக்கூடுவது இதுமட்டுமே” என்றான். அவள் புன்னகையுடன் “ஆம்” என்றபின் அதை மீண்டும் முகர்ந்து “செண்பகம்” என்றாள். “தலையில் சூடிக்கொள்” என்றான் பீமன். “ஒருநாள் சூடவா?” என்று திரௌபதி கேட்டாள். “வேண்டாம், இச்சிமிழுக்குள்ளேயே வைத்துக்கொள்கிறேன்.”

பீமன் “இது வாடாமலர் அல்ல. பால்கொண்ட மலர் என்பதனால் இத்தனைநாள் வாடாமலிருக்கிறது” என்றான். அவள் “இதன் மணம் சற்றேனும் உள்ளே எஞ்சியிருக்கும்” என்றபடி அதை அக்குழாய்க்குள் போட்டு மூடினாள். “நான் அடுமனைக்குச் செல்கிறேன். உங்களுக்காக சமைக்கவேண்டும். இளையவரே, இவர்களுக்காக சமைப்பதைப்போல

ஏமாற்றமூட்டும் விளையாட்டு பிறிதொன்றில்லை. இன்றுதான் என் கையும் உள்ளமும் நிறையும்படி சமைக்கவிருக்கிறேன்” என்றாள். பீமன் “நான் நீராடிவிட்டு வருகிறேன்” என்றான்.

பீமன் சோலைக்கு வந்தபோது நகுலன் அமைத்த பாத்தியில் சகதேவன் விதைகளைப்போட்டு மூடிக்கொண்டிருந்தான். கைகளைத் தூக்கி சோம்பல் முறித்தபடி வந்த பீமன் “நீராடவேண்டும்” என்றான். “ஆம், உங்கள் உடலெங்கும் குரங்குமணம்” என்றான் நகுலன். பீமன் அருகே குந்தி அமர்ந்தபடி “நாம் உடனே கிளம்புகிறோம் அல்லவா?” என்றான். “ஆம், விதை சேர்த்துவைத்திருந்தேன். இன்று விதைத்தால் கிளம்புவதற்குள் எட்டிலை கிளம்பியிருக்கும். அதற்குள் மழையும் தொடங்கிவிடும்” என்றான் நகுலன்.

பீமன் புன்னகைத்தான். “நாம் இங்கு கொய்து உண்டிருக்கிறோம், மூத்தவரே. ஆகவே விதைத்துச்செல்லும் கடன்கொண்டிருக்கிறோம்” என்றான் சகதேவன். “ஆம்” என்றபடி பீமன் எழுந்தான். “உங்கள் குலத்தார்தான் உண்ணப்போகிறார்கள்” என்று நகுலன் சிரித்துக்கொண்டே சுட்டிக்காட்டினான். அப்பால் சில குரங்குகள் மிகுந்த ஆர்வத்துடன் நோக்கி அமர்ந்திருந்தன. “விதைக்க சொல்லிக்கொடுத்துவிடாதே. உரிமைகொள்ளவும் கற்றுக்கொள்ளப் போகின்றன” என்றான் பீமன். அவன் சென்றபோது சகதேவன் “நானும் வருகிறேன், மூத்தவரே” என்று மண்வெட்டியுடன் எழுந்தான்.

பீமன் சுற்றிலுமிருந்த மரங்களை நோக்கிக்கொண்டு சென்றான். உடன் நடந்தபடி “மழைப்பறவை வந்திறங்கிவிட்டது, மூத்தவரே” என்றான் சகதேவன். காற்றில் தாவித்தாவி சுழன்று அமைந்துகொண்டிருந்த சிறு குருவிகளை அண்ணாந்து

நோக்கிய பீமன் “ஆம்” என்றான். “நாலைந்து நாட்களாகவே வேழாம்பல் மழைகேருகிறது” என்றான் சகதேவன். “பிற்பகல்களில் புழுக்கம் தாளமுடிவதில்லை. இருண்டு இறுகி கிழிந்துவிடும்போலிருக்கிறது வானம்.” காற்றில் நீரின் மணம் எழுந்தது. நீரோசையும் அலையொளியும் இலைத்தழைப்புக்கு அப்பால் கேட்டன.

அவர்கள் ஓடைக்கரையை அடைந்தனர். பீமன் தன் புலித்தோலாடையை கழற்றிவிட்டு உள்ளே அணிந்த தோல்கோவணத்துடன் ஓடை சுழித்துச்சென்ற குழியில் இறங்கினான். கரையில் அமர்ந்து முழங்கால்கள்மேல் கைகளை வைத்துக்கொண்ட சகதேவன் “நீங்கள் தேடிச்சென்றதை அடைந்துவிட்டீர்களா, மூத்தவரே?” என்றான். பீமன் “என் வரையில்” என்றான். “அதுபோதும்” என்று சகதேவன் சொன்னான். “ஒருவர் அறிந்த மெய்மை பிறருக்கல்ல என்றுதான் பிரம்மம் மானுடருடன் விளையாடுகிறது.” பீமன் “ஆம்” என சிரித்தபடி மூழ்கி எழுந்தான். குழல்கற்றைகளை அவிழ்த்துவிட்டு மீண்டும் நீரில் மூழ்கி எழுந்து விரலால் அவற்றை நீவி அலசினான்.

மீண்டும் நெடுநேரம் நீரில் மூழ்கிக்கிடந்தபின் எழுந்து “இளையோனே, நீர் சித்தத்தைக் குளிர்விக்கும்போது மேலும் தெளிவாகிறது. அந்த மணம்தான் நான் அறிந்தது, தேடிச்சென்றது, அவளுக்காக நான் ஏந்தியிருப்பது” என்றான். “அவளுக்கு அதை அளிக்கமுடியாதென்று இப்போது தோன்றுகிறது. எவளுக்கு எதை அளிப்பது? ஊர்வசி, அசோகசுந்தரி, தேவயானி, சர்மிஷ்டை…” அவன் நீரில் மீண்டும் மூழ்கி எழுந்தபோது அதே முகத்துடன் சகதேவன்

காத்திருந்தான். “உளறுகிறேனா?” என்றான் பீமன். “நான் மிகச்சரியாக புரிந்துகொள்கிறேன்” என்றான் சகதேவன்.

பீமன் கரையோர மென்மணலை அள்ளி உடலை தேய்த்துக்கழுவத் தொடங்கினான். “ஐந்தாவதாக நீங்கள் எவரைக் கண்டீர்கள், மூத்தவரே?” என்றான் சகதேவன். பீமன் ஒன்றும் சொல்லாமல் உடலை தேய்த்துக்கொண்டிருந்தான். அவன் மீண்டும் மூழ்கி எழுந்தபோது சகதேவன் சிரித்து “நன்று, நான் கேட்கப்போவதில்லை” என்றான். “ஆனால் நம் ஐவருக்கும் ஒருவருக்கு மட்டுமென ஓர் உள்ளமில்லை, மூத்தவரே” என்றான். பீமன் சிரித்தபடி “உண்மை” என்றான்.

“நான் நிமித்தநூல் கற்கச்சென்றபோது ஆசிரியர் ஒருநாள் என் கைகளை பற்றிக்கொண்டு நேற்று புலரியில் வந்த கனவில் நீ ஒரு குரங்கு என்றும் உனக்கு நான் நூல்சொல்வதாகவும் தெரிந்தது. அந்த நிமித்தத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நீ புரிந்துகொள்கிறாயா என்றார். ஆம் என்றேன்” என்றான் சகதேவன். பீமன் சிரித்து “மூத்தவரிலேயே குரங்கை கண்டுகொள்ள முடியும்போலும்” என்றான். “ஆம், அவர் நூல்விட்டு நூல்தாவுகையில்” என்று சகதேவன் சிரித்தான். பீமன் உடன் சேர்ந்து பெருநகைப்பெடுத்தான்.

கைகளால் தலையைக் கோதி நீரை உதிர்த்தபடி “அது மாமலர் என நான் அறிவேன். அதுபோதும் என நினைக்கிறேன்” என்றான் பீமன். “அந்த மணம் தேவியின் ஒரு தருணம். அந்தத் தருணத்தின் மலைமுனையிலிருந்து நீங்கள் எழுந்தீர்கள். மீண்டு வரும்போது அத்தருணம் அங்கில்லை” என்றான் சகதேவன். “ஆம்” என்று பீமன் சிரித்தபடி சொன்னான். “காலம் அப்படியே நிலைக்குமென்றால்தான் உணர்வுகளுக்கு மதிப்பு போலும்.”

சகதேவன் சிரித்த முகம் மாறுபட்டு தாழ்ந்த குரலில் "அவள் அந்த மலரை ஒருநாள் அறிவாள், மூத்தவரே" என்றான். பீமன் தன் மரவுரியை எடுத்து நீரில் முக்கியபடி நிமிர்ந்து நோக்கினான். "அதற்கு இன்னும் நெடுநாள் இருக்கிறது. பெருந்துயர்களை, வெறுமைவெளிகளைக் கடந்துசென்று அதை தொடுவாள். தெய்வத்தை நேர்முன் காணுதல்போல. உடல்திறந்து உயிர் எழுந்து பெருகி வான்நிறைப்பதுபோல" என்றான் சகதேவன். "அத்தருணத்தை அவளுக்கு நீங்கள் அளித்திருக்கிறீர்கள்."

தருமனின் அறைக்குள் நுழைந்த திரௌபதி பீமனிடம் "உணவு ஒருங்கிவிட்டது, இளையவரே" என்றாள். தருமன் "அனைவருக்கும்தானே?" என்றார். திரௌபதி "யானைக்கவளம் குருவிகளுக்கும்தான்" என்றபின் வளையல் ஒலிக்க சிரித்துக்கொண்டு "வருக!" என திரும்பிச்சென்றாள். தரையில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்த பீமன் எழுந்து "அச்சொல் அரக்குக்காட்டை பற்றவைப்பதுபோல பசியெழுப்பிவிட்டது" என்றான். "ஆம், நான் உண்ணும் பொழுது கடந்துவிட்டது. இன்று உனக்கான ஊன் சமையல். வா..." என தருமன் எழுந்தார்.

அடுமனையில் பெரிய ஈச்சம்பாயில் பீமனுக்கான அன்னம் குவிக்கப்பட்டிருந்தது. மரத்தொட்டியில் பன்றியின் ஊன்கறியும் இரு மண்தாலங்களில் எட்டு சுட்ட பன்றித்தொடைகளும் நெய்யுருகி குமிழிவெடித்து ஆவியெழ காத்திருந்தன. கைகளை உரசிக்கொண்ட பீமன் "நல்லுணவு என்பதை மறந்து நெடுநாளாயிற்று" என்றபடி அமர்ந்தான். தருமன் "மூடா, முறைப்படி நான் அமர்ந்தபின்னரே நீ அமரவேண்டும்" என்று சிரித்தார். "அதை இந்திரப்பிரஸ்தத்தில் பார்த்துக்கொள்வோம்.

பசிக்குமுன் முறையெது நெறியெது” என்றபடி அவன் பன்றித்தொடையை எடுத்து கடித்தான்.

“கேட்கவேண்டும் என எண்ணினேன். உன் பேச்சில் அது தவறித்தவறிச் சென்றது. உன்னுடன் வந்த முண்டன் எங்கே? வழியிலேயே கிளம்பிச்சென்றுவிட்டானா?” என்றார் தருமன். “ஆம், அவர் காற்றுபோல கட்டற்றவர்” என்றான் பீமன். “எனக்கு இறுதிவரை வழிகாட்டிவிட்டு விலகி காட்டுக்குள் சென்று மறைந்தார்.” தருமன் உணவை உண்டபடி “அவன் ஒரு குரங்கு என எனக்கு தோன்றிக்கொண்டே இருந்தது. அசைவுகளால் மட்டும் அல்ல. அவன் விழிகளில் குரங்குகளுக்கு மட்டுமே உரிய கூரிய ஒளி இருந்தது” என்றார்.

“அவன் எளிய மானுடன் அல்ல, இளையோனே. அவன் ஏதோ தெய்வம் உருமாறிவந்த வடிவு. அவனுக்கு நிகரான ஆற்றல் பிறிதில்லை என்று தோன்றியது. எனக்கு ஒரு கனவு. அதில் அவன் மாமலைபோல எழுந்து நிற்க அவன் காலடியில் ஒரு எறும்புபோல நான் நின்றிருக்கிறேன். சுற்றிலும் அஸ்தினபுரியும் இந்திரப்பிரஸ்தமும் கூழாங்கல்பரப்புபோல... அஞ்சி நடுங்கி விழித்துக்கொண்டு கைகூப்பி வணங்கினேன்” என்றார் தருமன். சகதேவன் “ஆம், அவர் காட்டுத்தெய்வம்தான்” என்றபின் பீமனை நோக்கி புன்னகை செய்தான்.

மீண்டும் மீண்டுமென கேட்டு பீமன் உண்டான். அவர்கள் உண்டு எழுந்தபின் எஞ்சிய எலும்புகளையும் எடுத்து உண்டான். “போதவில்லையா?” என்றாள் திரௌபதி. “எஞ்சியிருக்கிறதா?” என்று அவன் எழுந்து பெருங்கலத்தை நோக்கினான். அருகே சிறுகலத்தில் உணவு இருந்தது. “அது எனக்கு என எடுத்து வைத்தது” என்று அவள் சொன்னாள். “நீ உண், எனக்குப் போதும்” என்று பீமன் கையை நக்கினான். “உண்ணுங்கள்,

இளையவரே” என அவள் அதை எடுத்து அளித்தாள். “உனக்கு வேண்டாமா?” என அவன் தயங்க அவள் சிரித்து “நான் எனக்கென சற்று புல்லரிசிச்சோறு சமைக்கிறேன். எவ்வளவு நேரமாகிவிடப்போகிறது?” என்றாள்.

“சரி, கொடு” என்று அதையும் வாங்கி பருக்கையில்லாமல் நக்கி உண்டபின் ஏப்பம் விட்டபடி “நல்லுணவு” என்றான் பீமன். “நல்லுணவில் அது விளைந்த மண்ணின் மணம் இருக்கும்... நான் மண்ணில் புதைந்தவனாக உணர்கிறேன்.” கைகளை நீட்டி சோம்பல் முறித்தபின் “நான் நீட்டிப் படுத்து உறங்கியும் நெடுநாட்களாகின்றன. சூழுணர்வுள்ள துயில் இதுவரை” என்றான். படியிறங்கிச்சென்று கைகளைக் கழுவும்போதே அவன் கால்கள் துயிலில் தள்ளாடத் தொடங்கிவிட்டிருந்தன.

“துயில்கிறீர்களா?” என்றாள் திரௌபதி. “என்ன?” என்று அவன் கோட்டுவாயிட்டபடி கேட்டான். “உள்ளறையில் துயில்க!” என்றாள். “என்ன?” என்றான் பீமன். “ஒன்றுமில்லை” என அவள் சிரித்தாள். அவன் சுவரில் முட்டி கதவிலும் தோள் தட்டி நடந்து உள்ளறைக்குச் சென்றான். மூங்கில்மஞ்சத்தில் மரவுரி விரிக்கப்பட்டிருந்தது. தலையணைகள் இரண்டை எடுத்துப்போட்டுக்கொண்டு மஞ்சம் முனக எடையுடன் விழுந்து அக்கணமே துயிலத் தொடங்கினான். சாளரக்காற்றில் தன் தலைமுடி முகத்தின்மேல் அசைவதை இறுதியாக உணர்ந்தான்.

நிலம் முழுக்க நிறைந்திருந்தது அந்த மலர்மணம். அதன்மேல் அவன் நின்று துள்ளி சுழன்றமைந்து கூச்சலிட்டு கொந்தளித்துக்கொண்டிருந்தான். விழித்துக்கொண்டபோது அறைக்குள் இருள் நிறைந்திருந்தது. சாளரம் வழியாக குளிர்காற்று வீசிக்கொண்டிருந்தது. அறைக்குள் கொடியிலும்

கொக்கிகளிலும் தொங்கிய அத்தனை ஆடைகளும் பறந்து துடித்தன. காற்றில் மழைமண்ணின் மணம். ஊன்மணமா? உப்புமணமா? இளம்பாசியின் மணமா? கருக்குழவியின் புதிய குருதியின் மணமா? எங்கிருக்கிறோம் என எண்ணியபடி அசையாமல் படுத்திருந்தான். உடல் அப்போதும் துயின்றுகொண்டிருந்ததனால் கைகால்களில் இனிய உளைச்சல்போல ஓர் எடை ததும்பியது.

மூங்கில் இடைவெளிகளினூடாக வந்த அகல்சுடரின் செவ்வொளிச் சட்டங்கள் அவன் மேல் விழுந்து வகுந்து சுழன்றன. கையால் சுடரைப் பொத்தியபடி திரௌபதி உள்ளே வந்தாள். அவள் முகம் செவ்வொளியில் உருகுவதுபோலத் தெரிந்தது. அவள் உள்ளே வந்து கதவை மூடியதும் காற்றில் அகல் சுடர் எழுந்து படபடத்து அணைந்தது. அவள் மேலாடை பறந்து படபடத்தது. அவள் அவனை நோக்கி “விழித்துக்கொண்டாயிற்றா?” என்றாள். அவன் “ஆம்” என்றான். சிறிய மின்னலுக்குப்பின் மிகத் தொலைவில் வானத்தின் செருமலோசை.

“பேய்க்காற்று... மரக்கிளைகள் முறியும் ஓசை கேட்டுக்கொண்டே இருக்கிறது” என்றபடி அவள் அவனருகே வந்து மஞ்சத்தின் விளிம்பில் அமர்ந்து “விலகிக்கொள்ளுங்கள்” என்றாள். அவன் விலக அதில் நன்றாக அமர்ந்தபடி தன் இடையிலிருந்து அந்த மூங்கில் குழாயை எடுத்தாள். “பிச்சிபோல இதை முகர்ந்தபடியே இருக்கிறேன். இது எந்த மணம் என நினைவுகூர்ந்துவிட்டேன்” என்றாள். “ம்?” என்றான் பீமன். “இது எங்கள் காம்பில்யத்தின் இளவேனில்மாளிகையில் தென்கிழக்கு மூலையில் நின்ற நிசாகந்தி...” என்றாள். அவன் “ம்” என்றான்.

அவள் அவனருகே படுத்து அவன் தோள்களை கைகளால் வளைத்துத் தழுவியபடி துள்ளும் குரலில் “சிறுமியாக இருக்கையில் இளவேனில்நாட்களில் அங்கே சென்று தங்குவோம். இங்குபோலில்லை, அங்கே வேனிலில் புழுக்கம் மிகுதி. எல்லா சாளரங்களையும் திறந்து வைப்போம். இரவில் வெவ்வேறு மலர்மணங்களுடன் காற்று இரு திசைகளிலிருந்தும் சுற்றிக்கொண்டிருக்கும். இரண்டுவயதுவரை நான் தந்தையின் மஞ்சத்தில்தான் படுப்பது வழக்கம். அவர் மதுவுண்ட மயக்கில் முன்னரே துயின்றுவிடுவார். நானும் துயின்று கனவுக்குள் மலர்மணங்களை அறிந்துகொண்டிருப்பேன்” என்றாள்.

“இரவு செறிந்தபின்னர்தான் நிசாகந்தி மலரும்” என்றாள் திரௌபதி. அவள் குரல் இருட்டுக்குள் ஆழ்ந்து ஒலித்தது. அதன் சொற்களை காற்று அள்ளி அறைக்குள் தெளித்து விளையாடியது. “அதன் மணம் உயிருள்ளது. ஒரு யக்ஷி போல. நீண்ட குளிர்ந்த கைகளுடன் வந்து சூழ்ந்து பற்றிக்கொள்ளும். அச்சமும் உவகையுமாக உள்ளம் கொந்தளிக்கும். நான் கண்களை மூடிக்கொண்டு அதற்கு என்னை ஒப்புக்கொடுப்பேன். உடல் சிலிர்த்துக்கொண்டே இருக்கும்.”

பீமன் வெறுமனே “ம்” என்றான். “அதைப்பற்றி நான் மாயையிடம் அன்றி எவரிடமும் சொன்னதில்லை” என்றாள். பின்னர் அவன் முகத்தில் முத்தமிட்டாள். அவள் கைகள் அவன் உடல்மேல் இரு நாகங்கள் என நெளிந்தன. “நான் இப்போது எப்படி உணர்கிறேன் தெரியுமா?” மெல்லிய மின்னல் ஒன்று வெட்ட அவன் அவள் விழிகளை கண்டான். இரு

கைகளாலும் அவளை அள்ளி எடுத்துக்கொண்டான். இடியோசை தொடராக முழங்கி அமைந்தது.

வெறியுடன் முயங்கும்போது அவள் உதிரிச்சொற்களில் ஏதோ சொல்லிக்கொண்டே இருந்தாள். தன் உதடுகளால் அவள் அவன் முகத்தை அழுத்தி வருடியமையால் அச்சொற்கள் கசங்கிய மலர்களின் மணம் கொண்டிருந்தன. உடல்கள் அதிர்ந்து அதிர்ந்து ஒன்றையொன்று நிறைத்து அமைய வேறெங்கோ இருந்து மீண்டபோது அவன்மேல் தன் மென்குளிர் வியர்வை படிந்த உடலை அழுத்தியபடி அவள் சொன்னாள் "இழந்துகொண்டே செல்கிறேன், இளையவரே. இளமையை இழப்பதே பெண்ணின் பெருந்துயர்." பீமன் அவள் தோள்களை தடவினான். புறங்கழுத்தின் மென்மயிர்ப்பிசிறுகளை பிடித்து சுருட்டினான்.

"ஏக்கம் தாளாமல் நெஞ்சு தவிக்கிறது... நான் கற்ற காவியங்கள் எதைக்கொண்டும் இதை சொல்லிவிட முடியாது" என்று அவள் அவன் மார்பில் முகம்புதைத்து சொன்னாள். அவன் "ம்" என்றான். "இங்கிருந்து அனைத்தையும் அளித்துவிட்டால் அங்கு மீளமுடியும் என்றால் மாற்றெதையும் எண்ணமாட்டேன்." அவன் மீண்டும் "ம்" என்றான். "பிச்சிபோலப் பேசுகிறேன்..." என்றபின் அவள் அவன்மேல் தன் பெருமுலைகள் அழுந்த கை நீட்டி மறுபக்கம் மஞ்சத்தில் கிடந்த மூங்கில் குழாயை எடுத்து அப்படியே முகர்ந்தாள்.

"அதே மணம்தான்... திறக்கவே வேண்டாம்" என்றாள். குரல் மிகத் தாழ்ந்திருந்தது. "எண்ணிக்கொண்டாலே போதும்போல" என்றாள். அதை தன் மூக்குடன் உருட்டியபடி "ஏன் சென்றுகொண்டே இருக்கிறோம்?" என்றாள். அவள் விழிகள் மூடுவதை அவனால் இருளுக்குள் காணமுடிந்தது. மூச்சு

சீரடைந்தது. “தனிமையில்” என்றாள். உதடுகள் மெல்ல விரிசலிட்டன. மூச்சு வலுக்க முலைக்குவைகள் எழுந்தமைந்தன. விரல்கள் விரிந்து மூங்கில் குழாயை நழுவவிட்டன. அவன் அதை எடுத்து அப்பால் வைத்து அவளை மெல்ல தன் உடலில் இருந்து சரித்து மஞ்சத்தில் படுக்கச்செய்தான்.

அவன் அவளை நோக்கிக்கொண்டே இருந்தான். காற்று சுழன்று வீச தொலைவில் காட்டுமரங்களின் ஓலம் அலையலையென கேட்டது. மெல்லிய மின்னல். அவள் தன் குழல்விரிந்த கருநிழல்மேல் கிடந்தாள். மேலுதடு சற்றே வளைய அகவைகளை இழந்து குழவியென்றாகிவிட்டிருந்தாள். அனைத்தையும் வெள்ளிப்பரப்பென ஆக்கியபடி பெருமின்னல் ஒன்று அறையை அதிரச்செய்தது. பின் மிக அருகே பாறை ஒன்று வெடித்ததுபோல ஒலித்தது. அதன் எதிரொலி வானெங்கும் பரவியது.

அவள் உடல் அதிர்ந்தது. கண்கள் அதிர கைதுழாவி “இளையவரே...” என்றாள். அவன் குனிந்து “சொல்” என்றான். “என் தந்தையை உங்களால் மற்போரில் வெல்லமுடியுமா?” என்றாள். அக்குரல் சிறுமியின் உச்சரிப்புடன் இருந்தது. “ஆம்” என்றான். “களிப்போர் போதும்” என்றாள். “ஆம்” என்றான் பீமன். அவள் விழித்துக்கொள்ளவே இல்லை எனத் தெரிந்தது. மூச்சு சீராக ஓடிக்கொண்டிருந்தது. மீண்டும் ஒரு மின்னல். இடியோசைக்காக அவன் செவிக்கூர் காத்தது. இடியோசை எழுந்தபோது ஆம் ஆம் என்றது உள்ளம்.

எழுந்து சென்று காற்று பீரிட்ட சாளரத்தருகே நின்றான். தொலைவில் மரக்கூட்டங்கள்மேல் மழை அறைவதைக்

கேட்டான். பெருகிப்பெருகி வந்து தழுவிமூடிக்கொண்டது முதல்மழை.

[**மாமலர் நிறைவு]**